ஸ்ரீ

# கம்பராமாயணம்

## சுந்தரகாண்டம்

---

திருவல்லிக்கேணி

வை. மு. சடகோபராமாநுஜாசாரியரும்

சே. கிருஷ்ணமாசாரியரும்

வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியரும்

இயற்றிய

விரிவுரையுடன்

---

சென்னை : திருவல்லிக்கேணி

ஸக்ஸஸ் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

விலை ரூ ௫.

ரக்தாக்ஷி ௵]                    [1924 ௵

சே. கிருஷ்ணமாசாரியர்

தமிழ்ப்பண்டிதர்

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாய புஸ்தகசாலை

19. தென்னண்டை மாடவீதி

திருவல்லிக்கேணி.

## படலங்கள்.

# புஸ்தக விளம்பரம்.

| | ரூ. அ. |
|---|---|
| நாலாயிர திவ்யப்ரபந்தம் .... .... | ௧—௮—0 |
| தனித்தனி ஆயிரம் - ஒரு ரூபாய் வீதம் | |
| நித்யாநுஸந்தாநம் .... .... | 0—௧0—0 |
| திருமந்த்ரார்த்தம் .... .... | ௧—௮—0 |
| அஷ்டாதஸரஹஸ்யம் .... .... | ௨—0—0 |
| யதீந்த்ரப்ரவணப்ரபாவம் .... .... | ௧—0—0 |
| திருப்பாவை வ்யாக்யாநம் .... .... | ௨—0—0 |
| ஷை உரை .... .... | 0—௯—0 |
| ஆசார்யஹ்ருதயம் வ்யாக்யாநம் .... .... | ௨—௮—0 |
| ஸ்தோத்ரபாடம் .... .... | 0—௯—0 |
| முகுந்தமாலை உரையுடன் .... .... | 0—௬—0 |
| அஷ்டபிரபந்தம் விரிவுரையுடன் .... .... | ௫—௮—0 |
| கம்பராமாயணம் கிஷ்கிந்தாகாண்டம் உரையுடன் .... | ௪—௮—0 |
| பாலகாண்டம் ,, ... ... | (அச்சில்.) |
| நாலடியார் உரையுடன் .... .... | ௨—0—0 |
| நன்னூல் காண்டிகையுரை ... .... | ௧—௮—0 |
| வில்லிபாரதம் உத்தியோகபருவம் உரையுடன் .... | ௨—0—0 |
| சடகோபரந்தாதி உரையுடன் .... ... | 0—௧0—0 |
| சரசுவதியந்தாதி உரையுடன் .... .... | 0—௫—0 |
| திருவேங்கடக்கலம்பகம் உரையுடன் .... .... | 0—௧0—0 |
| அழகர்கலம்பகம் உரையுடன் .... .... | 0—௮—0 |

பகவத்விஷயம் [திருவாய்மொழி வ்யாக்யாநங்கள்] - இரண்டு பத்து வீதம் ௰ வால்யமாக அச்சிட்டு பயிண்டுசெய்து அனுப்பப்படும்; இப்போது ௩, ௪ - பத்துக்கள் அடங்கிய வால்யம் வெளியாயிருக்கிறது. முதலிரண்டு பத்துக்கள் அச்சு நடக்கின்றன. மற்றவையும் முறையே அச்சிடப்பட்டு வெளியாம். இவை மொத்தத்துக்கும், சந்தாதாரராகச் சேர்ந்து முன்பணமனுப்புபவர்க்கு ரூ. ௩0. இப்போது வேண்டுபவர்கள் ரூ. 15 - முதலிலும், மற்றவை பிறகு மூன்றுமாதங்களிலும் அனுப்பலாம். அவர்களுக்கு உடனே இந்த வால்யம் அனுப்பப்படும். மற்றவை முடியும் அவ்வப்போது அனுப்பப்படும்.

சே. கிருஷ்ணமாசாரியர்.
19. தென்னண்டை மாடவீதி,
திருவல்லிக்கேணி.

# கம்பர் வரலாறு. *

கம்பர், சோழநாட்டிலே திருவழுந்தூரில் நான்காம்வருணத்திற் பிறந்தவர்

இவர், இளமையில் தந்தை இறந்ததனால் போஷகரில்லாமல் தாயுடன் திருவெண்ணெய்நல்லூரிற் சடையப்பவள்ளலிடம் போய்ச்சேர்ந்து, அவரால் ஆதரிக்கப்பெற்று, அவர்வீட்டுப்பிள்ளைகட்குப் பாடசாலைக்குப் புத்தகமெடுத்துக்கொண்டுபோகின்றவராய் அவர்களுடன் படித்துவந்தனர்.

இவர்க்குச் சரசுவதிகடாக்ஷமும், கம்பரென்னும் பெயரும் உண்டானதைப்பற்றி ஒரு கதை உண்டு:—இவர் அங்ஙனம் பள்ளியிற் படித்துவரும் நாளில், உபாத்தியாயர், தமக்கு வைரபுரமென்னுங் கிராமத்திலுள்ள கம்பங்கொல்லைதினைக்கொல்லைகளைக் காப்பதற்காகத் தம்மிடத்திற் படிக்கும் பிள்ளைகளைத் தினம் ஒவ்வொருவராக அனுப்பும் முறைப்படி ஒருநாள் இப்பிள்ளையை அனுப்ப, இவரும் அன்றைக்காலைதொடங்கிக் கொல்லையிற் காத்துவந்து, நல்லவெயிலில் நித்திரைவந்ததனால், அக்கொல்லையினருகிலிருந்த காளிகோயிலிற் போய்ப் படுத்துத் தூங்கினர். தூங்குகையிற் கொல்லையில் ஒருகுதிரை வந்துமேய்வதாகக் கனாக்கண்டு எழுந்து பார்க்க, கனவிற்கண்டபடியே பயிரை அவ்வூராள்வோனாகிய காளிங்கராயனது குதிரை மேயக்கண்டு, அதனைத்துரத்தியும் அது போகாமையால் அஞ்சி நடுங்கிக் காளிகோயிலுக்கெதிரே போய் நின்று புலம்பினார். அதுகண்டு காளி கருணைகூர்ந்து பிரசன்னையாகி, 'பிள்ளாய்! அழாதே: உன்நாவை நீட்டு' என்றாள். இவர் அங்ஙனமே நீட்ட, தேவி அதில் ஒருயந்திரத்தையெழுதி அனுக்கிரகித்தனள். பின்பு இவர் மீண்டும் கொல்லையிற்போய்ப் பார்க்க, குதிரை அங்கேயேமேய்ந்துகொண்டிருந்தது. அப்பொழுது, காளிகாதேவியின் அநுக்கிரகத்தாற் சரசுவதிகடாக்ஷம்பெற்ற இவரது வாக்கினின்று, அதுகண்ட கோபத்தால், தற்செயலாக, "வாய்த்த வயிரபுர மாகாளியம்மே கேள், காய்த்த தினைப்புனத்துக் காலைவைத்துச்—சாய்த்துக், கதிரையாளத்தின்ற காளிங்கராயன், குதிரை மாளக் கொண்டுபோ" என்று ஒருகவி உண்டாயிற்று. அங்ஙனம் இவர் பாடியவுடன் அக்குதிரை கீழ்விழுந்து இறந்தது. அதனைக் கேட்டறிந்த உபாத்தியாயர் ஓடிவந்து பார்த்து, அதிகாரியின்கோபத்திற்கு ஆளாவோமேயென்று கலக்கமுற, இவர், முன்பாடிய வெண்பாவின் நான்காம் அடியை "குதிரை மீளக் கொண்டுவா" என்று மாற்றிப்பாட, மாண்டகுதிரை மீண்டெழுந்தது. காளிங்கராயன் இதனைக் கேள்வியுற்று, அக்காலத்தில் அரசுசெலுத்திவந்த குலோத்துங்கனென்னுஞ் சோழனுக்கு அறிவிக்க, அவன் அச்சிறுவனைத் தான் பார்க்கவேண்டுமென்று வருவித்தனன். அங்ஙனமே இவர் கோலுங் கையுமாய்ப் போயிருக்க, அவன், † 'இக்கம்பனு அங்ஙனஞ்செய்த

---

* இவர்வரலாற்றைப் பலர் பலவாறு கூறுவராயினும், பிற்காலத்துப் பிரசித்தமாக வழங்குகிறபடி மிக்கசுருக்கமாக இங்குக் குறிக்கப்படுகின்றது.

† கம்பன் = கம்புடையவன்; கம்பு = கொம்பு: உலகவழக்கு.

வன்?' என்றனன். இதனாலும், கம்பங்கொல்லையைக் காத்ததனாலும், இவர்க்குக் கம்பர் என்று பெயராயிற்று: இதற்கு வேறுசிலகாரணமும் கூறுவர்.

இவர் பின்பு சோழராஜனது ஸம்ஸ்தான வித்வான்களுக்குத் தலைவராகி இராஜசபைக்கு நாள்தோறும் சென்று சமயோசிதமாகப் பலகவிகள் பாடிப் பிரசங்கிக்கத் தலைப்பட்டு 'கவிச்சக்கரவர்த்தி' என்று பேர்பெற்றுப் புலமைசெலுத்திவந்தனர்.

இவர்க்கு அம்பிகாபதியென்று ஒருமகன் பிறந்து, அவனும் சிறந்தவித்வானாகி இவரோடு ராஜசபைக்கு நாடோறும் போய்ப் பெருமைபெற்றுவந்தனன்.

கம்பர் இராமாயணம்பாடியது, சடையப்பவள்ளலின் பெருமுயற்சியால்; எங்ஙனமெனின்,—அவர் மகாகவியாகிய கம்பரது புலமை விளங்குமாறு இவரை ஒருபிரபந்தம்பாடச்செய்யவேண்டு மென்று சோழராசனுக்கு அறிவிக்க, அவன் தனியே ஒருவரைப் பாடச்செய்தலினும் இருவரை ஒருசேரப் பாடும்படி செய்தாற் புலமைத்திறம் நன்றாகவிளங்கு மென நினைத்து, கம்பர் ஒட்டக்கூத்தர் இருவரையும் நோக்கி 'ஸ்ரீராமசரித்திரத்தைத் தமிழ்ப்பாவினாற் பாடிமுடிக்கவேண்டும்' எனக் கட்டளையிட்டனன். கம்பர் பலநாள்பாடாமலிருந்து, ஒட்டக்கூத்தர் சுந்தரகாண்டம்வரை பாடிமுடித்து யுத்தகாண்டம் பாடுகிறபோது மறுபடி அரசனால்தூண்டப்பட்டு, இராமாயணம்பாடினர். பாடுகையில் பிரதிதினம் இராப்பொழுதில் வடமொழிப்புலவர்களை வைத்துக்கொண்டு வால்மீகம் அத்யாத்மம் போதாயநம் முதலிய ராமாயணங்களையும், பலபுராணங்களையும் ஆராய்ச்சிசெய்து, பகற்பொழுதில் நாளொன்றுக்கு எழுநூறுபாடலாக யுத்தகாண்டம்வரை ஆறுகாண்டமும் பதினாயிரத்துச்சொச்சம் பாடல்களாற் பதினைந்துநாளிற் பாடிமுடித்தனர். அங்ஙனமிருக்கையில் ஒருநாள், கம்பர், ஒட்டக்கூத்தர்வீட்டுவாயிலின் வழியே போகும்போது, அவர் தமது இராமாயணம் கம்பராமாயணத்திற்குமுன் தலையெடாதென அறிந்து அதனைக் கிழித்தெறிந்துகொண்டிருக்கக் கண்டு, அவரிடம் சென்று, அதற்குள் யுத்தகாண்டம்வரை கிழிபட்டுப்போகவே, மிச்சமான உத்தரகாண்டத்தைக் கிழியாது வைத்திருக்க வேண்டிக்கொண்டார்; அதுவே கம்பராமாயணத்திற்கு ஏழாவது காண்டமாக வழங்கலாயிற்று.

கம்பர் இராமாயணத்தை ஸ்ரீரங்கத்தில் அரங்கேற்றக் கருதி அங்குச்சென்று ஸ்ரீவைஷ்ணவசமயாசாரியரான ஸ்ரீமந்நாதமுனிகளின் அநுமதிப்படி ஒருமண்டபகைங்கரியம் செய்துமுடித்துச் சுபதினத்திலே அரங்கேற்றத் தொடங்குகையில், நம்பெருமாளாகிய ஸ்ரீரங்கநாதன் அர்ச்சகமுகமாக ஆவிர்ப்பவித்து 'நம் சடகோபனைப் பாடினையோ? பாடினால்தான் நாம் உனது ராமாயணத்தைத் திருவுள்ளம்பற்றுவோம்: இல்லாவிடின், அது நமக்கு அங்கீகாரமாகாது' என்று அருளிச்செய்ய, அங்ஙனமே கம்பர் நூறு கட்டளைக்கலித்துறையில் சடகோபரந்தாதியைப் பாடினர். பின்பு, இராமாயணம், நாதமுனிகள் திருவோலக்கத்திலே மேட்டழகியசிங்கர் சிரக்கம்பஞ் செய்யுமாறு அரங்கேற்றப்பட்டது. அக்காலம் முதலியவற்றை,

"எண்ணிய * சகாத்த மெண்ணூற் றேழின்மேற் சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்ப நாடன்
பண்ணிய விராம காதை பங்குனி யத்த நாளிற்
கண்ணிய வரங்கர் முன்னே கவியரங் கேற்றினனே" எனக் காண்க.

இவர்செய்த நூல்கள் - இராமாயணம், சடகோபாந்தாதி, ஏரெழுபது, சிலையெழுபது, திருக்கைவழக்கம், சரசுவதியந்தாதி முதலியன.

இவர்காலத்து வித்வான்கள் - புகழேந்திப்புலவர், ஒட்டக்கூத்தர், ஔவை, பேராசிரியர், நேமிநாதர் முதலியோர்.

இவரது சமயம் - வைஷ்ணவம்.

இவர்சரித்திரவிவரத்தைத் தொண்டைமண்டலசதகம், தமிழ்நாவலர் சரிதை, பாண்டிமண்டலசதகம், சோழமண்டலசதகம், விநோதரசமஞ்சரி, புலவர்புராணம் முதலிய நூல்களிற் காணலாம்.

"வெண்பாவிற்புகழேந்தி பரணிக்கோர்சயங்கொண்டான் விருத்தமென்னு
மொண்பாவிலுயர்கம்பன் கோவையுலாவந்தாதிக்கொட்டக்கூத்தன்
கண்பாயகலம்பகத்திற்கிரட்டையர்கள் வசைபாடக்காளமேகம்
பண்பாகப் பகர்சந்தம் படிக்காசலா லொருவர் பகரொணாதே"

என்பதனால், விருத்தம்பாடுதலில் மிகச்சிறந்தவர் இவரென விளங்கும்.

'கம்பன்வீட்டுக் கட்டுத்தறியும் கவிசொல்லும்', 'கல்வியிற் பெரியன் கம்பன்' என்ற பழமொழிகள், இவரது கல்வித்திறத்தை மெச்சி வழங்கின.

---

* சகாத்தம் - சாலிவாகன சகாப்தம்; இப்பொழுது நடப்பது, ௧௮௪௭; ஆகவே, கம்பர்காலம் இப்பொழுதைக்கு ஆயிரம்வருஷங்கட்குமுன்பு என்க.

ஸ்ரீ

கடவுள் துணை.

# கம்பராமாயணம்.

கம்பரது ராமாயணம் என விரியும்; ஆறும்வேற்றுமைத்தொகை, செய்யுட் கிழமைப்பொருளது: "கபிலரகவல்" என்பதிற் போல. கம்பர்செய்த ராமாயணம் என்பது கருத்து. கம்பராற் செய்யப்பட்ட ராமாயணம் என மூன்றுருபும்பொருளும் உடன்தொக்கதொகையாகக் கொள்ளினும் இழுக்காது. "சிலவிகாரமா முயர்திணை" என்றதனால், நிலைமொழியீற்றுமெய் கெட்டது. 'ராமாயணம்' என்பது, முதலில் வால்மீகிமுனிவர் செய்த நூலுக்குப் பெயராய், அதன் வழிநூலாதலால் "முதனூல் கருத்தன் அளவு மிகுதி, பொருள் செய்வித்தோன் தன்மை முதல் நிமித்தினும், இடுகுறியானும் நூற்கு எய்தும் பெயரே" என்னுஞ் சூத்திரவிதிப்படி இத்தமிழ்நூலுக்கும் பெயராயிற்று. ராமாயணம் என்பது - ராம அயந என்ற இரண்டுமொழி சேர்ந்து தீர்க்கசந்திபெற்றது; இது ஒன்றன்பெயராதலால், வடநூல்விதிப்படி 'ராமாயணம்' என நிலைமொழியின் ரகாரத்தை நோக்கி வருமொழியின் நகாரம் ணகாரமாயிற்று. 'தனது நற்குணநற்செய்கைகளினாலும் திருமேனியழகினாலும் எல்லாரையும் மகிழ்விப்பவன்' என்பது, 'ராம' என்னுஞ் சொல்லுக்குப் பொருள்; சகல நற்குணங்களும் பொருந்தியவ னென்பது கருத்து. 'அயநம்' - அடைய அல்லது அறியக் கருவியாயுள்ளது. ஆகவே, இராமனை அடைய அல்லது அறியக் கருவியாயுள்ள நூல் என்பதாம். இராமனுடைய குணாதிவைபவங்களைத் தெரிவிக்கும் நூல் என்பது, திரண்டபொருள். 'அயநம்' - ஸ்தாநம்: அதாவது - விஷயம் எனப் பொருள்கொண்டு, இராமனை விஷயமாகவுடைய நூலெனக் கூறுதலும் ஒன்று. "ஸீதாயாஃசரிதம்மஹத்" என்று சிறையிருந்தவளேற்றம் சொல்லும் பிரபந்த மாகையாலே, ராமாயண மென்பதற்கு - ராமா அயநம் என்று பிரித்து, சீதையை அறிவிக்கும் பிரபந்தம் என்றும் பொருள்கூறுவர்: (ராமா - சீதை.)

இப் பொருட்டொடர்நிலைச்செய்யுளைக் கம்பர்செய்கின்ற காலத்திற்கு நூல் தொல்காப்பிய மாதலாலும், பிறர்கூறிய நூல்கள் நிரம்பிய இலக்கணத் தன அன்மையாலும், அந்நூலிற் கூறிய இலக்கணமே இதற்கு இலக்கண மென்று உணர்க. அந்நூலிற் செய்யுளியலில், ஆசிரியர், பா நான்கென்றும் அவற்றை அறம்பொருளின்பத்தாற்கூறுக வென்றும் கூறி, பின்பு, அம்மை முதலிய எட்டும் தொடர்நிலைச்செய்யுட்கு இலக்கணமென்று கூறுகின்ற இடத்து, "இழுமென் மொழியான் விழுமியது நுவலினும், பரந்தமொழியா னடிநிமிர்ந் தொழுகினும், தோலென மொழிப தொன்மொழிப் புலவர்'

என்னுஞ் சூத்திரத்தால், 'அறம் பொருள் இன்பம் வீடு என்னும் விழுமிய பொருள் பயப்பப் பழையதோர் கதைமேற் கூறின், அது தோல்' என்று கூறினமையின், இப்பெருங்காப்பியம் அங்ஙனங் கூறிய தோலா மென்று உணர்க.

இந்தப் பெருங்காப்பியத்தில், பிரதானமான ஸ்ரீராமசரித்திரத்தினாலும், அதனைத்தொடர்ந்த வாலிசுக்கிரீவாதியரது சரித்திரங்களாலும் - ஆசாரமும், சத்தியமும், தருமமும், கருணையும், வீரமும், கற்புநிலையும், உடன்பிறந்தோரொற்றுமையும், பழியச்சமும், அதருமத்தின்விளைவும், இழிசனரியற்கையும் முதலான ஸாமாந்ய தர்மங்களும்; ஸ்ரீராமபிரான் சகலகல்யாணகுணகணபரிபூர்ணமான பரத்வ மென்பதும், அவனைச்சரணமடைவதே எல்லாப் பயன்களையும் பெறும் உபாய மென்பதும், அடியார்கள் ஆசரிக்கவேண்டிய கைங்கரியம் முதலியவற்றின் முறைகளும் முதலான விசேஷதர்மங்களும் செம்பொருளாகவும் கருத்துப்பொருளாகவும் காட்டப்பட்டிருக்கின்றன.

[இவற்றுள், ஸ்ரீராமபிரான் பரத்வ மென்பது, "நீதியாய் முனிந்திடேல் நீயிங்கியாவர்க்கும், ஆதியா னறிந்தனெ னலங்கல்நேமியாய், வேதியாவிறுவதே யன்றி வெண்மதிப், பாதியான் பிடித்த வில் பற்றப் போதுமோ", "பொன்னுடை வனைகழற் பொலங்கொள் தாளினாய், மின்னுடை நேமியானுதல் மெய்ம்மையால், என்னுள னுலகினுக் கிடுக்கண் யான்தந்த, உன்னுடை வில்லு முன்னுரத் துக்கீடன்றால்," "எண்ணிய பொருளெலா மினிது முற்றுக, மண்ணிய மணிநிற வண்ண வண்டுழாய்க், கண்ணிய யாவர்க்குங் களைகணாகிய, புண்ணிய விடை" என ஸ்ரீபரசுராமனாலும், இராவணவதத்திற்கு அப்பால் பெருமாள் பிராட்டியைத் தீக்குதிக்கத் திருவுளம்பற்றியகாலத்து "மன்னர் தொல்குலத்தவ ரினத்துணை யொருமனித, னென்ன வுன்னலை யுன்னை நீ யிராமகே ளிதனைச், சொன்ன நான்மறைத் துணிவினிற் றுணிந்த மெய்த் துணிவு, நின்னலாதில்லை நின்னின்வேறுளதிலை நெடியோய்" என்று தொடங்கி "ஓங்காரப்பொருள் தேருவோர் தாமுன்னை யுணர்வோர், ஓங்காரப் பொருளென் றுணர்ந் திருவினை யுகுப்போர், ஓங்காரப்பொருளா மன்றெனன்றாழிசென்றாலும், ஓங்காரப்பொருளை பொருளென்கலா வுரவோர்" எனப் பிரமதேவனாலும், "உன்னை நீ யொன்று முணர்கிலை போலுமா லுரவோய், முன்னை யாதியா மூர்த்திநீ மூவகையுலகி, னன்னை சீதையா மாது நின்மார்பின் வந்தமைந்தாள்" என்று உருத்திரமூர்த்தியாலும் வெளியிடப்பட்டது. இனி, சித்திரகூடகிரியி லிருக்கையிலே, சீதாபிராட்டியாரின் திருமார்பைத் தீண்டிய காகாசுரனை முனிந்து பெருமாள் அயல்கல்லெழுபுல்லால் வேக வெம்படை விட, அஞ்சி நடுங்கி அயன்பதி முதலிய அண்மி எங்குமிடம் பெறாதே, எறிகடல்வாய் மீண்டேயும் வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவையாய், "ஐய நின்சரணஞ்சரண்" என்று அவன் அஞ்சி வையம்வந்து வணங்கிட, பெருமாள், திருவுள்ளமுவந்து, பிராட்டிதிறத்திலே பெரிய அபராதத்தைப் பண்ணின அந்தக்காகாசுரனைக் கடாக்ஷித்து "முந்துநின்குறையும் பொறைதந்தனம்" என்கையாலும்; கடற்கரையில் ஸ்ரீவிபீஷணாழ்வான் "கொற்றவ

சரண்" எனக் கூவிச் சரணாகதி பண்ண, "வெற்றியே பெறுக தோற்க வீக வீயாதுவாழ்க, பற்றுதலன்றியுண்டோ புகலெமைப்பகர்கின்றானே" என்று அவனுக்கு அபயப்பிரதானம் செய்தலாலும்; வேதோபப்ருஹ்மணமான ஸ்ரீ ராமாயணம் சரணாகதிவேத மென்பதும், ஸ்ரீராமபிரானே சரணாகதரக்ஷக னென்பதும் பெறப்படுமாறு அறிக.]

பெருங்காப்பிய விலக்கணத்தை, "பெருங்காப்பியநிலை பேசுங்காலை, வாழ்த்து வணக்கம் வருபொரு ளிவற்றினொன், றேற்புடைத் தாகி முன்வர வியன்று, நாற்பொருள் பயக்கும் நடைநெறித் தாகித், தன்னிகரில்லாத் தலை வனை யுடைத்தாய், மலை கடல் நாடு வளநகர் பருவம், இருசுடர்த்தோற்ற மென் றினையன புனைந்து, நன்மணம்புணர்தல் பொன்முடிகவித்தல், பூம் பொழில்நுகர்தல் புனல்விளையாடல், தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறு தல், புலவியிற்புலத்தல் கலவியிற்களித்த லென், றின்னன புனைந்த நன்ன டைத்தாகி, மந்திரந் தூது செல விகல் வென்றி, சந்தியில் தொடர்ந்து சருக்க மிலம்பகம், பரிச்சேத மென்னும் பான்மையின் விளங்கி, நெருங்கிய சுவை யும் பாவமும் விரும்பக், கற்றோர் புனையும் பெற்றிய தென்ப" என்னுந் தண்டி யலங்காரசூத்திரத்தால் அறிக. இவ்விலக்கணங்கள்பலவும் இவ்விராமாயணத் தில் வருவதை ஆங்காங்குக் காண்க.

இதிகாசம் புராணம் என்ற பகுப்பு இரண்டனுள், இராமாயணம் இதி காசத்தின்பாற்படும்; மகாபாரதமும் அப்படியே. உபதேசபரம்பரையில் வந்த ஒருவருடைய பழையசரித்திரமொன்றைப் பிரதானமாக எடுத்துப் பலகிளைக்கதைகளோடு புணர்த்து விரித்துக்கூறும் நூல் - இதிகாசமென்றும்; உலகத்தின் தோற்றம், ஒடுக்கம், முனிவர்கள் அரசர்கள் மரபு, அவர்கள் சரித்திரங்கள், மநுவந்தரம் என்னும் ஐந்துவிஷயங்களை விரவிக்கூறும் நூல் - புராணமென்றும் வேறுபாடு உணரத்தக்கது. [இதிகாசம் - பழைய ஒரு வர லாற்றை விரித்துக்கூறும் நூல். புராணம் - மேற்குறித்த ஐந்து இலக்கணங் களும் அமையப் பழைய பல வரலாறுகளை யுணர்த்தும் நூல்.] புராணம் - பிராம்மம் முதலாகப் பதினெட்டுவகைப்படும். இந்த இதிகாசபுராணங்கள், வேதத்தின்கருத்து இன்னதென்று நியாயப்பிரமாணங்களால் தேற்றிவிளக்கு தல்பற்றி, வேதத்துக்கு உபப்ருஹ்மணங்க ளென்று சொல்லப்படும்; உப ப்ருஹ்மண மென்றால், வளர்ப்பதென்று பொருளாம். இவற்றுள் புராணங் களினும் இதிகாசம் பிரபலமான பிரமாணமென்றும், அதுபற்றியே "இதி காசபுராணம்" என இதனை முன்னர்வைத்துக் கூறுவ தென்றும் கொள்வர்.

இராமாயணத்தை முதலில் வடமொழியிற் செய்தவர், வால்மீகிமகா முனிவர். இவர், ஸ்ரீராமபிரான் பூலோகத்தில் எழுந்தருளியிருக்கையிலேயே இராமாயணம் முழுவதையும் செய்தருளி, அவர் அசுவமேதயாகம் செய்யத் தொடங்கிய சந்தர்ப்பத்தில் அவர்சந்நிதியில் அரங்கேற்றினர். (ஆனால், பாலகாண்டம்முதல் யுத்தகாண்டம்ஈறாக ஆறுகாண்டங்களும் உத்தரகாண் டத்தில் அசுவமேதமளவுந்தான் இராமபிரான் சபையிற்கேட்டனர். உத்தர காண்டத்தில் எதிர்காலவரலாற்றை முனிவர் ஞானக்கண்ணினால் முந்தி

யறிந்துகூறியதான யற்றைப்பகுதியை அப்பெருமான் பிரமதேவன்சொற்படி ஏகாந்தத்திற் கேட்டனர்.) இந்நூல் நாரதமுனிவரது உபதேசத்தாலும், பிரமனது அநுக்கிரகத்தாலும் செய்யப்பட்டதாகையால், சிறந்தபிரமாணமாக வைதிகமதத்தவரெல்லாராலும் ஒப்புக்கொள்ளப்படுகின்றது. இது, ஸம்ஸ்க்ருதபாஷையில் ஆதிகாவியம். பின்பு பிறமுனிவரும் கவிஞரும் இதனைப் பலவகைக் காவியங்களாகவும், நாடகங்களாகவும் வடமொழியில் இயற்றினர். இவ்வாறே வேறுபாஷைகளிலும் அந்தந்த வித்துவான்கள் செய்யலாயினர். தமிழிற் சங்கத்துஇராமாயணமென்று ஒன்று இருந்ததாகச் சொல்வதேயன்றி, வழங்கிவருவது கம்பராமாயணந்தான். இராமாயணத்தின் முதலாறுகாண்டங்கள் கம்பராலும், ஏழாவது காண்டம் ஒட்டக்கூத்தராலும் வடமொழிவால்மீகிராமாயணத்தைப் பெரும்பாலுந் தழுவித் தமிழிற்பாடப்பட்டவை. சற்றேறக்குறையக் கம்பர்பாடல் - க0,ரு00; ஒட்டக்கூத்தர்பாடல் - க,ரு00; ஆக - கஉ,000. வடமொழி வால்மீகிராமாயணம், உச,000 - சுலோகங்களை யுடையது.

முதனூலாகிய வடமொழி வால்மீகிராமாயணத்தோடு அதன் வழிநூலாகிய இத்தமிழிராமாயணம் சிற்சிலவிடத்துச் சிறிதுசிறிது வேறுபடுதலும் உண்டு. அது, "முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப், பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி, அழியா மரபினது வழிநூ லாகும்" என்ற வழிநூலிலக்கணவிதிபற்றி இவ்வாசிரியராற் பிறநூல்மேற்கோள்கொண்டும் தமது கற்பனாசக்திகொண்டும் அமைக்கப்பட்டதெனக் கொள்ளவேண்டும். இப்படி மாறுபடுகின்ற இடத்து 'ஸ்ரீராமாயணத்தில் இல்லையேயாகிலும், இதிகாசாந்தர புராணாதிகளிலேயாதல், கல்பாந்தரத்திலேயாதல் உண்டென்று கொள்ளவேணும்' என ஆன்றோர் அருளிச்செய்து அமைத்திருத்தல் உணரத்தக்கது. இதிகாசாந்தரமாகிய மகாபாரதத்திலும், பாத்மம் வைஷ்ணவம் கூர்மம் முதலிய புராணங்களிலும், அத்யாத்மராமாயணம் முதலிய நூல்களிலும் இராமசரித்திரம் சிற்சிலவிடத்து வேறுபடக் கூறப்பட்டிருத்தல் காணலாம்.

இராமாயணம், அந்தந்தப்பாகத்துச் சரித்திரத்தின் முக்கியமான விஷயத்தைக் குறிக்குஞ் சொற்களால் பாலகாண்டம், அயோத்தியாகாண்டம், ஆரணியகாண்டம், கிஷ்கிந்தாகாண்டம், சுந்தரகாண்டம், யுத்தகாண்டம், உத்தரகாண்டம் எனப் பெயர்பெற்ற ஏழுகாண்டங்கள் அடங்கியது.

இத்தமிழிராமாயணம் - பெரும்பாலும் கலிவிருத்தங்களாலும், ஆசிரியவிருத்தங்களாலும், சிறுபான்மை கலிநிலைத்துறை தரவுகொச்சகக்கலிப்பா வஞ்சிவிருத்தம் வஞ்சித்துறைகளாலும் யாக்கப்பட்டுள்ளது.

---

ஐந்தாவது

# சுந்தரகாண்டம்.

இந்த வடமொழித் தொடர்மொழி, பண்புத்தொகை. சுந்தரமாகிய காண்டம் என விரியும். அழகிய பாகம் என்பது பொருள். சுந்தரம் - அழகு. காண்டம்-கூட்டம்; இப்பொதுப்பெயர் - இங்கு, சரித்திரத்தின் ஒருபாகத்தை யுணர்த்துஞ் செய்யுட்களின் கூட்டமென்று சிறப்பாகக் கொள்ளத்தக்கது. முதனூலாசிரியராகிய ஸ்ரீவால்மீகிமகாமுனிவர் இதற்கு முந்திய பாகங்களுக்கும் பிந்தியபாகங்களுக்கும் சரித்திரத்தின் பிரதான விஷயத்தைக் குறிக்குஞ் சொற்களாற் பெயரிட்டதுபோல இலங்கையில் நடந்த காரியங்களைச் சொல்லுகின்ற இக்காண்டத்துக்கு 'லங்காகாண்டம்' எனப் பெயரிடாமல் 'சுந்தரகாண்டம்' என்று பெயரிட்டது என்னையோ வெனின்,—மற்றைக் காண்டங்களின் கதைகளினும் இக்காண்டத்துக் கதை மனத்திற்கு மிகவும் உல்லாசகரமாகியும், ஸ்ரீராமனிடத்தில் மிக்க பக்தியுள்ள மெய்யடியாராகிய அநுமானுடைய மகிமையை நன்கு விளக்குவதாகியும் அழகியதாயிருத்தலால் என்று பெரியோர் சொல்வர். இனி, அநுமானுக்குச் சுந்தர னென்று பெயருண்மையால் அநுமான்செயலைக்கூறும் பாக மென்பாருமுளர்.

இக்காண்டம் - கடல்தாவுபடலம் முதல் திருவடிதொழுதபடலம் ஈறாக கரு - படலங்கள் அடங்கிய க,௩௫௭ - செய்யுளுள்ளது.

## கதைத் தொடர்ச்சி.

[இராமாயணகதை மிகப்பிரசித்தமானதாதலால், இக்காண்டத்துக்கு முன்கதைத்தொடர்ச்சி மிக்கசுருக்கமாக எழுதப்படுகின்றது.]

முன் ஒருகாலத்தில் தேவர்களெல்லாரும் இராவணன்முதலிய இராக்கதர்களின் உபத்திரவம் பொறுக்கமாட்டாமல் ஸ்ரீமகாவிஷ்ணுவைச் சரணமடைந்து, துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனம் செய்தருளுமாறு வேண்டினார்கள். அத்திருமால் அவ்வேண்டுகோளுக்கு இரங்கி லோகஸம்ரக்ஷணத்தின் பொருட்டுத் தனது அம்சத்தைக்கொண்டு நான்குருபமாகத் தசரதமகாராஜனிடத்தில் அவதரித்துத் தீயோரை யழித்து நல்லோரைப் பாதுகாப்பதாக அருளிச்செய்தான். இது நிற்க: இப்பரதகண்டத்துக் கோசலதேசத்திலே சரயூநதிக்கரையில் அயோத்தியாநகரத்திலே திரேதாயுகத்திற் சூரியகுலத்தில் உதித்து நிலவுலகம்முழுவதும் தனிச்செங்கோல் செலுத்திய தசரதசக்கரவர்த்தி தனக்கு அநேகஆயிரம் ஆண்டுகள்கழிந்தும் பலமனைவியர்களிருந்தும் புத்திரபாக்கியமில்லாமையினாலே மிகமனம்வருந்திக் குலகுருவாகிய வசிஷ்டமகாமுனிவனிடம் தனதுகுறையைக்கூறி அம்முனிவன்கட்டளைப்படி ருசியசிருங்கமுனிவனை அழைத்துவந்து அந்தக் கலைக்கோட்டுமாமுனிவனைக் கொண்டு அசுவமேதயாகமும் புத்திரகாமேஷ்டியும் செய்தான். அந்த யாகத்

தின்பயனாகச் சக்கரவர்த்தியின் பிரதானதருமபத்தினியர் மூவருள் கௌசல்யாதேவியினிடம் ஸ்ரீராமனும், கைகேயியினிடம் பரதனும், ஸுமித்திரையினிடம் இரட்டையராய் லக்ஷ்மணசத்துருக்கனரும் திருவவதாரஞ்செய்தார்கள். (இவர்களில் இராமபிரான், ஸ்ரீமந்நாராயணனது ஏழாவது திருவவதாரம். இளையபெருமாள், அத்திருமாலுக்குப் பலவகைக் கைங்கரியங்களைச் செய்கிற ஆதிசேஷனது அவதாரம். பரதாழ்வானும், சத்துருக்கனாழ்வானும்- சுதர்சந பாஞ்சஜந்ய மென்னும் திருமாலின் சக்கர சங்கங்களின் அவதாரம். ஆனாலும், லக்ஷ்மணன் முதலியோரிடமும் விஷ்ணுவின் அம்சம் இருந்தது. அதுபற்றியே, 'திருமால் நான்குருபமாக அவதரித்தனன்' என்பது.)

இராமபிரான், இளமையிலேயே விசுவாமித்திரமகாமுனிவனுடைய வேள்வியைப் பாதுகாத்தற்பொருட்டு அம்முனிவனது விருப்பத்தின்படி அவன்பின்னே இலக்குமணனுடன் செல்லுகையில், வழியிலெதிர்ப்பட்ட தாடகையென்னும் கொடிய அரக்கியையும், அந்த யாகத்தில் தீங்குவிளைக்க வந்த தாடகாகுமாரனான சுபாகு முதலிய பல அரக்கர்களையும் கொன்று, தாடகையின் மற்றொருகுமாரனான மாரீசனை வாயவ்யாஸ்திரத்தாற் கடலிலே தள்ளிவிட்டு, யாகத்தை நிறைவேற்றியபின் அம்முனிவனுடன் விதேகதேசத்து மிதிலாநகரத்துக்கு எழுந்தருளி, அங்கு ஜநகமகாராஜன் வளர்த்த மகளான சீதைக்குக் கந்யாசுல்கமாக வைக்கப்பட்ட சிவதநுசை எடுத்து வளைத்து முறித்து, இலக்குமியினது அவதாரமான அந்த ஜாநகியைத் திருக்கலியாணம் செய்துகொண்டான். அப்பொழுது அங்குச் சநகன் தான் பெற்ற மகளான ஊர்மிளையை லக்ஷ்மணனுக்கும், தன் தம்பி புத்திரிகளான மாண்டவி சுருதகீர்த்தி என்பவர்களைப் பரதசத்துருக்கர்களுக்கும் கொடுக்க, அவர்கட்கும் விவாகம் நிகழ்ந்தது. பின்பு மிதிலையினின்று மீண்டுவருகையில், வலியவந்து எதிரிட்ட பரசுராமனை ஸ்ரீராமன் வென்று செருக்கையடக்கி அனுப்பிவிட்டு, அயோத்தி சேர்ந்தனன்.

பின்பு இராமபிரான் தனது சிறியதாயான கைகேயிக்குத் தனது தந்தை கொடுத்திருந்த இரண்டுவரங்களையும் நிறைவேற்றுதனிமித்தம் அக்கைகேயியின்சொல்லால் அவள்மகனான பரதனுக்கு உரியதாம்படி இராச்சியத்தைத் தான் கைவிட்டுப் பதினான்குவருடம் வனவாசஞ்செய்ய உடன்பட்டு மனைவியாகிய சீதையோடும், தன்னைவிட்டுப்பிரியாத தம்பியான இலக்குமணனோடும் புறப்பட்டுக் குகனோடு தோழமைகொண்டு அவனுதவியாற் கங்கைகடந்து சித்திரகூடத்தில் வசிக்கையில், தந்தையிறந்த செய்தியை வந்துசொல்லி அயோத்திக்கு எழுந்தருளி அரசாளவேண்டுமென்று வேண்டிய பரதனுக்கு இன்சொற்கூறிப் பாதுகைகொடுத்து அனுப்பியபின், தண்டகாரணியஞ்சேர்ந்து விராதனைக் கொன்று சரபங்கமுனிவர்க்கு முத்தியளித்து அகத்தியரைத்தரிசித்துக் கோதாவரிநதிதீரத்திற் பஞ்சவடியாச்சிரமத்திலே வசிக்கும்போது, அரக்கர்தலைவனாய் இலங்கையில்வாழ்கின்ற இராவணனுடைய தங்கையான சூர்ப்பணகை வந்து இராமபிரானது திவ்வியசௌந்தரியத்தைக் கண்டு மிக்கஆசைகொண்டு தன்னைமணஞ்செய்துகொள்ளும்படி பலவாறுவேண்ட, அதற்கு அப்பெருமான் உடன்படாமல் உபேக்ஷித்தமைபற்றி, அவ்வரக்கி

'அருகிலிருக்கிற இந்தப்பெண்ணை அகற்றிவிட்டால் இராமன் என்னை மனைவியாகக் கொள்வன்' என்றுஎண்ணிச் சீதையைத் தனித்திருக்கிறசமயம்பார்த்துத் தூக்கிச்செல்லத்தொடங்க, அதுகண்ட இலக்குமணன் அவளுடைய மூக்கு முதலிய சிலஉறுப்புக்களை அறுத்ததுமன்றி, இங்ஙனம் மானபங்கப் பட்ட அவளுக்காகப் பரிந்துவந்த கரன் தூஷணன் முதலிய கொடியஇராக்கதர்பலரையும் இராமன் கொன்று ஒழித்தான். பின்பு இராவணன் சூர்ப்பணகையினால் தூண்டப்பட்டுச் சீதையினிடம்பெருங்காதல்கொண்டு சந்நியாசி வேஷம்பூண்டுவந்து, மாயையாற்பொன்மானுருவங்கொண்ட மாரீசனது சூழ்ச்சியினால் இராமலக்ஷ்மணரை அப்புறப்படுத்தி, சீதையைத் தனித்திருக்கிற சமயத்தில் வஞ்சனையாக எடுத்துப்போகுமளவில், முன்வந்து எதிர்த்த ஜடாயுவை வலியழித்துச்சென்று, இலங்கையில் அசோகவனத்தில் அரக்கியர்சூழச் சீதையைச் சிறைவைத்திட்டான்.

பிறகு சீதையைத்தேடிக்கொண்டு இலக்குமணனுடன்சென்ற ஸ்ரீராமன், சீதையின் நிலைமையைச் சிறிதுகூறி யிறந்த ஜடாயுவுக்குச் சரமக்கிரியை செய்து, கபந்தனைக் கொன்று சபரிக்கு முத்தியளித்துச் செல்லும் வழியில், எதிர்ப்பட்ட அநுமான்மூலமாகச் சுக்கிரீவனோடு நண்புகொண்டு, அவன் வேண்டுகோளின்படி, அவனது தமையனும் வாநரராசனும் இராவணனது நண்பனும் வலிமையிற்சிறந்தவனுமான வாலியைத் தந்திரமாகக்கொன்று சுக்கிரீவனைக் கிஷ்கிந்தைநகரத்துக்கு அரசனாக முடிசூட்டிவைத்தபின், அவ்வாநரராசன் சீதையைத்தேடுதற்பொருட்டு அநேக வாநரவீரர்களை ஆங்காங்குத் தூதனுப்ப, அங்ஙனம் இரண்டுவெள்ளம்வாநரசேனையுடன் தென்திசையிற் சென்ற அங்கதன் ஜாம்பவான் நீலன் அநுமான் முதலிய வீரர்கள் பலவிடங்களிலும் தேடிச் சீதையைக் காணாதபின்பு, ஜடாயுவின் தமையனான சம்பாதி சொல்ல இராவணன் சீதையை இலங்கையிற்சிறைவைத்திருத்தலை யுணர்ந்து, இலங்கைக்குச் செல்லுதற்பொருட்டுக் கடல்கடக்கும் வலிமையில் லோமென்று மற்றையோர்சொல்லியபிறகு, ஜாம்பவானாற் புகழ்ந்துதூண்டப் பட்ட அநுமான், தென்கடற்கரையிலிருக்கும் மகேந்திரமலையின்மீது ஏறி, இலங்கைசேர்தலினிமித்தம் அக்கடலைக்கடக்குமாறு பேருருவங்கொண்டு நின்றனனென்பதாம்.

---

முதலாவது

# கடறாவு படலம்.

இலங்கைசேருமாறு அநுமான் கடலைத் தாவிச்செல்லுஞ் செய்தியைக் கூறும் பாகமென்பது பொருள். இப்பன்மொழித்தொடரில், முன்னது - இரண்டாம்வேற்றுமைத்தொகையும், பின்னது - வினைத்தொகையுமாம். கடல்+தாவு=கடறாவு: தனிக்குறிலைச்சாராத லகரம் வேற்றுமையில் வந்த தகரம் றகரமாகத்திரிந்தவிடத்துக் கெட்டது; [“குறில்செறியாலள” என்ற சூத்திரத்து “பிற” என்ற மிகையால்.] தாவு+படலம்: முற்றியலுகரவீற்று வினைத்தொகையாதலின், வலி இயல்பாயிற்று. ‘காண்டம்’ என்றதற்குப் போலவே ‘படலம்’ என்கிற வடசொல்லுக்கும் கூட்டமென்றே பொருள்; ஆயினும், அது - சங்கேதத்தால், இங்கு, ஒரு பெரிய வகுப்பி னுட்பட்ட சிறிய பாகத்தைக் குறிக்கும்.

[கடவுள்வணக்கம்: ராமஸ்தோத்ரம்.]

அலங்கலிற்றோன்றும்பொய்ம்மையரவெனப்பூதமைந்தும்
விலங்கியவிகாரப்பாட்டின்வேறுபாடுற்றவீக்கங்
கலங்குவதெவரைக்கண்டாலவரென்பர்கைவிலேந்தி
யிலங்கையிற்பொருதாரன்றேமறைகளுக்கிறுதியாவார்.

இது, காப்புச்செய்யுள். இதனால், கவி தாம் பாடத்தொடங்கிய காண்டம் இடையூறில்லாமல் இனிதுமுடிதற்பொருட்டு, உயர்ந்தோர்வழக்கத்தின்படியே செய்யப்படும் கடவுள்வணக்கத்தை, மாநஸமாகவன்றி வாசிகமாகவும் கூறுகின்றார். நூலின்முகத்திற் கடவுள்வணக்கம்கூறியது அமையாதோ? காண்டந்தோறும் கூறவேண்டுமோ? எனின்,—ஆசிரியர் பதஞ்சலியார் ‘மங்களத்தை முதலிலும் இடையிலும் கடையிலுமுடைய நூல்கள் மிக்கசிறப்புடன்தோன்றும்’ என மாபாடியத்திற்கூறினாராதலின், இடையிலும் மங்களமாகக் கடவுள்வாழ்த்துக்கூறுதல் நலமாதலாலும், கல்விக்குப்பயன் கடவுளை வணங்குதலே யாதலாலும், நூல் ஒன்றேயாயினும் காண்டங்கள் பொருளால் வேறுபடுதலாலும், இவ்வாறு கூறினரென்க: (‘அஃதேல், ஒருநூற்கு எடுத்துக்கோடற்கண்ணே வணக்கஞ்சொல்லுத லன்றி அதிகாரந்தோறும் சொல்லியது என்னையோ வெனின்;—நூல் ஒன்றேயெனினும் அதிகாரங்கள் பொருளான் வேறுபடுதலானும், “ஆதியு மந்தமு நடுவு மங்கலம், ஓதிய முறைமையி னுரைப்பராயிடின், ஏதமி லிருநிலக்கிழத்தி யின்புற, நீதியம்பனுவல்கள் நிலவுமென்பவே” என்ப வாதலானும், ‘கற்றதனாற்பயன் குற்றமற்று முற்றுமுணர்ந்த ஒற்றைநற்றவன் பொற்றுளிணைமலர் போற்றல்’ என்பதனானும், சொன்னாரெனக் கொள்க’ என்னும் நன்னூற் பழையவுரை இங்கு நோக்கத்தக்கது.)

கடவுள்வணக்கம் இரண்டுவகைப்படும்; வழிபடுகடவுள்வணக்க மென்றும், ஏற்புடைக்கடவுள் வணக்க மென்றும். வழிபடுகடவுள்வணக்கமாவது - தாம் தாம் குலதெய்வமாகக்கொண்டு ஆராதிக்கின்ற கடவுளை வணங்குதல்;

இதற்கு உதாரணம் - வைஷ்ணவர் விஷ்ணுவையும், சைவர் சிவனையும், ஜைநர் ஜிநனையும், பௌத்தர் புத்தனையும் வணங்குதல் போல்வன. ஏற்புடைக்கடவுள் வணக்கமாவது - தாம்தாம் செய்யத்தொடங்கிய காரியத்துக்குத் தகுதியை யுடைய கடவுளை வணங்குதல்; இதற்கு உதாரணம் - பாகவதங்கூறுபவர் கிருஷ்ணனையும், கந்தபுராணஞ் சொல்பவர் சுப்பிரமணிய மூர்த்தியையும் வணங்குதல் போல்வன. ஸ்ரீவைஷ்ணவசம்பிரதாயத்தவரான இந்நூலாசிரிய ராற்கூறப்பட்ட இவ்வாழ்த்து, தமக்குவழிபடுகடவுளும் தாம்செய்யத்தொடங் கிய இதிகாசத்துக்கு ஏற்புடைக்கடவுளு மாகிய திருமாலின் திருவவதாரமான இராமபிரானைப் பற்றிய தென அறிக.

அலைகடல்நடுவண் ஓரனந்தன்மீமிசை மலையென விழிதுயில்வளரும் மா முகிலாய்ப் பரமபுருஷனாகிய மன்றலர்துளவினனே, கசரததுரகமாக்கடல் கொள்காவலன்தசரதனது மதலையாய், இம்மாண்கதைக்கோரிறையாய் ஸ்ரீராம னாகித் திருவவதரித்தனனே, கவிச்சக்ரவர்த்தியாகிய கம்பர், ஈடுமெடுப்பு மில்லாத இவ்வுத்தமநாயகன்விஷயமாகச் செய்யப்புக்க இப்பெருங்காப்பியத் திற்கு அவரையே வாழ்த்தல் வேண்டுதலின், காண்டந்தோறும் அவர்விஷய மாகவே கடவுள்வாழ்த்துக் கூறத்துணிந்து, பாலகாண்டத்தில் ஸ்வரூபோபாய புருஷார்த்தங்களைச் சொல்லுகிற முறையாலே மூன்றுகவிகளாற் கூறி, அயோத்தியாகாண்டத்தில் இக்காப்பியத்தலைவராகிய ஸ்ரீராமபிரான் ஸர்வேசு வர னென்று கூறி, ஆரணியகாண்டத்தில் அப்பெருமான் வேதம்முதலிய நூல் களாலும் பிரமன் முதலிய பெரியோர்களாலும் உணர்தற்கரிய பரவஸ்து வென்று கூறி, கிஷ்கிந்தாகாண்டத்தில் அப்பெருமான் சகலபிரபஞ்சத்தையும் தனக்குச் சரீரமாகக்கொண்டவ னென்றுகூறி, இக்காண்டத்தில் இக்கவியால் வஸ்துநிர்த்தேசரூபமங்களமுகத்தாலே பரம்பொருளே இராமனாகத் திருவவ தரித்து ராவணாதி ராக்ஷஸஸம்ஹாரம் செய்தவ னென்கிறார்.

(இதன்பொருள்.) அலங்கலில்-மாலையினிடத்தில், தோன்றும் - உண்டா கின்ற, பொய்ம்மை அரவு என - பாம்புஎன்ற பொய்யாகிய எண்ணம்போல, (விபரீதபுத்தியையுண்டாக்குவதும்); பூதம் ஐந்தும் - பஞ்சபூதங்களும், விலங் கிய - தனித்தனியேயிருக்குந் தம்தன்மையை விட்டுமாறி ஒன்றாகச்சேர்ந்த தனாலானதும், விகாரப்பாட்டின் - (அறுவகையாக) விகாரப்படுதலையுடைய தும், வேறுபாடு உற்ற - (தேவர் மனிதர் விலங்கு தாவரம் என்னும்) பாகு பாடுபொருந்தியதுமான, வீக்கம் - மிக்கபிறப்பு, எவரை கண்டால் - எவரைப் பார்த்தமாத்திரத்தில், கலங்குவது - ஒழிந்துவிடுமோ, மறைகளுக்கு இறுதி ஆவார் - வேதங்களின்முடிவான உபநிடதங்களிற் கூறப்படுகின்ற பொரு ளாயிருப்பவராகிய, அவர் அன்றே - அக்கடவுளே,—கை வில் ஏந்தி - கையிற் கோதண்டத்தையேந்திவந்து, இலங்கையில் பொருதார் - இலங்கையிற் (செ ன்று அரக்கருடன்) போர்புரிந்து அவரை வென்றவராவர், என்பர் - என்று சொல்வர், (உண்மையையுணர்ந்த தத்துவஞானிகள்); (என்றவாறு.)

இச்செய்யுளினால், வேதாந்தங்களின்முடிவிற் கூறப்பட்டுள்ள உண்மைப் பரம்பொருளே துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனம் செய்யுமாறு தசரதன் மதலையாய்த் திருவவதரித்துக் கானகத்திலுறைந்து சீதையைக் கவர்ந்ததை

வியாஜமாக்கொண்டு இலங்கையிற்சென்று ராக்ஷஸராஜனான இராவணனைத் தனது அம்புகளை யெய்து பொருது கொன்றவனென்ற உண்மையைக் கூறினாராயிற்று. ஆகவே, இராவணாதியரைப்போல அப்பெருமானை மானுடனென்று எண்ணி அழிந்தொழியாது, உண்மைப்பரம்பொருளே தனது சங்கற்பத்தால் இவ்வாறு திருவவதரித்தன னென்ற மெய்ப்பொருளைக் கடைப்பிடித்து அக்கடவுளே சரணமாக அவன்தாளிற்சேர்ந்து நற்கதிசேர்மினென உலகத்தவரை நோக்கி உபதேசித்ததாகவாவது, அவ்வாறானகடவுளை யான் வணங்குவே னென்றதாகவாவது கருதுக. வாழ்த்து, வணக்கம், தலைமைப்பொருளுரைத்தல் என்ற மூன்றுவகை மங்களங்களுள், இச்செய்யுள் மூன்றுவதன்பாற்படு மென்று அறிக. அன்றியும், இக்காண்டத்தில் இவ்வாறு கடவுள்வாழ்த்துக் கூறியதனால், இக்காண்டத்திற்கூறப்படுகின்ற அநுமானது செயலெல்லாம், இராமபிரான் கடல்கடந்து இலங்கையிற்புக்கு ராக்ஷஸஸம்ஹாரஞ் செய்யக் காரணமா மெனக் குறிப்பித்தவாறுமாயிற்று.

இச்செய்யுளில் திருமாலின் பரத்துவமும், சௌலப்பியமும் விளங்குதல் காண்க.

விபரீதஜ்ஞாநமெனினும், திரிபுணர்ச்சியெனினும் ஒக்கும்; அதாவது - உயிரல்லாத உடம்பில் உயிரென்ற எண்ணமும், கடவுளுக்கு அடிமைப்பட்ட உயிரை ஸ்வதந்திரமுடையதென்று எண்ணுதலும், பிறர்க்கு அடியவனல்லாத அவ்வுயிரைப் பிறர்க்கு அடியவ னென்று கருதுதலும், தலைமைத்தேவரல்லாதாரைத் தலைமைத்தேவரென்ற நினைப்பும், பரமபுருஷார்த்தமாகாத செல்வம் முதலியவற்றினிடத்துப் பரமபுருஷார்த்தமென்ற நோக்கமும், உபாயமாகமாட்டாத கர்மம்முதலியவற்றில் உபாயமென்ற சிந்தனையும் தொடக்கமானவை. மாலையைக்கண்டு பாம்பென மருளுதலைப்போன்ற திரிபுணர்ச்சிக்கு இடமாய் இவ்வுலகத்தில் உயிர்கட்கு உண்டாகிற பஞ்சபூதங்களினாலாகிய பிறப்பு, உண்மைப்பரம்பொருளின்வடிவத்தைக் காண்கின்றவர்கட்கு ஒழிந்துவிடு மென்க; "அப்பரம்பொருள் பார்க்கப்படுமாயின், இவ்வான்மாவினது மனத்திற் குவிந்துகிடக்கும் அஜ்ஞாநமும், அதன்காரியமான பலவகைச் சந்தேகங்களும், பிறப்பிற்குக்காரணமான இருவினைகளும் ஒழிந்துவிடும்" என்ற வடநூல்மேற்கோள் இங்குக் கருதத்தக்கது. ஐம்பூதங்களும் ஒன்றோடொன்றுசேர்வதனாலேயே இவ்வுலகம் தோன்றியுள்ளதென்பதை, "நிலந் தீ நீர் வளி விசும்போ டைந்துங், கலந்த மயக்க முலகம்" எனக் கூறிப்போந்தார் ஆசிரியர் தொல்காப்பியனாரும். ஐம்பெரும்பூதங்களும் அவ்வவ்வுடலுக்குத் தக்கபடி சேர்தலினாலேயே, தேவ திர்யங் மநுஷ்ய ஸ்தாவர சரீரங்கள் தோன்றுகின்றன வென்பது, நூற்கொள்கை. ஐம்பூதங்களாவன - நிலம் நீர் தீ காற்று வானம் என இவை: இவற்றை, முறையே, ப்ருதிவீ அப் தேஜஸ் வாயு ஆகாசம் என்பர் வடநூலார்.

வேதங்கள் கர்மகாண்டம் ஞானகாண்டம் என இருவகையாகப் பகுக்கப்பட்டுள்ளன; அவற்றில் முதலதாகிய கர்மகாண்டத்திற் கடவுளினது ஆராதந ஸ்வரூபமும், ஈற்றதாகிய ஞானகாண்டத்தில் ஆராத்யனான கடவுளின் ஸ்வ

ரூபமும் கூறப்பட்டுள்ளன வாதலால், கடவுளை 'மறைகளுக்கு இறுதியாவார்' என்றார்.

அலங்கல் - தொங்கியசைவது என மாலைக்குக் காரணக்குறி. பொய்ம்மை என்பதில், மை - பகுதிப்பொருள்விகுதி. விகாரப்பாடு - விகாரப்படுதல்; ஒருநிலையில் நிலைத்திராது மாறுபடுதலாகிய (இருத்தல், பிறத்தல், பருத்தல், வளர்தல், தேய்தல், அழிதல் என்ற உடலுக்கு உண்டாகின்ற அறுவகையான) விகாரங்கள். இவ்வறுவகைவிகாரங்கள், வடமொழியில் 'ஷட்பாவவிகாரம்' எனப்படும். வீக்கம் - கட்புலனும்படி பருத்துத்தோன்றுகின்ற உடல்: இங்கு, இலக்கணையால், பிறப்புக்கு ஆயிற்று; கடவுளைக் காணவே பிறப்பொழியு மெனக் கருத்துக்கொள்ளவேண்டியிருத்தலின், வீக்கம்-சாதியொருமை; (சாதியொருமையாவது - ஒருமையீறு தோன்ற நின்றேனும் தோன்றாது நின்றேனும் ஒருசொல் பன்மைப்பொருளை யுணர்த்திநிற்பது.) 'என்பர்' என்பதற்கு, எழுவாய் வருவிக்கப்பட்டது. இனி, சீவகசிந்தாமணியில் ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'என்ப - அசை: இது, புறனடையாற்கொள்க' என்று உரைத்தது இங்கும் ஒக்குமெனக் கொண்டு, என்பர் - அசை என்னவுமாம். இலங்கை - லங்கா என்ற வடசொல் ஆவீறு ஐயாகத் திரிந்து இகரத்தை முதலிற்பெற்று வந்தது. வேதங்கள் நான்காதலால், 'மறைகள்' எனப் பன்மையாற் கூறினார்: அவையாவன-ருக்,யஜுஸ், ஸாமம், அதர்வணம் என்பன; தைத்திரியம், பௌடியம், தலவகாரம், சாமம் எனக் கூறுவாரு முளர்; அன்றி, வேதத்திலேயே "அநந்தா வை வேதாঃ [வேதங்கள் எல்லையில்லாதன]" எனக் கூறியிருத்தலின் பன்மையாற் கூறினு மொன்றலு மொன்று. அன்று, ஏ என்ற இரண்டு எதிர்மறைகள் ஒருங்குசேர்ந்து தேற்றக்கருத்தை வற்புறுத்தின. 'பொய்ம்மை யாமென' என்பதும் பாடம்.

பஞ்சபூதங்களும் தம்மில்மாறுபடக்கலந்து பஞ்சீகரணப்பட்டுப் பரிணமமடைதலினால் வேறாகத்தோன்றுகின்ற ஸ்தூலமாகிய பிரபஞ்சம் எந்தப் பரமாத்மாவின் சொரூபத்தையுணர்ந்தாற் பழுதையினிடத்துத்தோன்றுகிற பாம்பென்னும் மயக்கம்போல இல்லையாகுமோ, அந்தப் பரமாத்மாவே கைவிலேந்தி இலங்கையிற்பொருதவரும் மறைகளுக்கு இறுதியாவாருமாவ ரென்று கூறுவர் (உணர்ந்தோர்) என்று இச்செய்யுளுக்குப் பொருள் கூறலும் உண்டு.

துறை - கடவுள்வாழ்த்து; தொல்காப்பியத்தில் "வாழ்த்தியல் வகையே நாற்பாற்கு முரித்தே" என்றதன்கண், 'வகை' என்றதனாற் கொண்ட அறுமுறைவாழ்த்தன்றித் தனக்கும் பிறர்க்கும் பயன்படும்படி "யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது" என்றதனால், முன்னிலையன்றியும் கடவுளை வாழ்த்துதலின், இக்கவி கடவுள்வாழ்த்தெனப் பெயர்பெற்றது; [அறுமுறை வாழ்த்தினுள் வாழ்த்தப்படும் பொருள்களாவன:—முனிவரும், பசுவும், பார்ப்பாரும், அரசரும், மழையும், நாடுமாம்.]

இதுமுதல் முப்பத்தொன்பது கவிகள் - முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும், மற்றை நான்கும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள்.

[பேருருவங்கொண்டுநின்ற அநுமான் வானுலகத்தைக்கண்டு அங்குச் சீதையில்லையென்பது கருதுதல்.]

க. ஆண்டகையாண்டவ்வானோர் துறக்கநாடருகர்கண்டா
னீண்டிதுதான்கொல்வேலையிலங்கையென்றையமெய்தா
வேண்டருவிண்ணுடென்னுமெய்ம்மைகண்டுள்ளமீட்டான்
காண்டகுதோகையும்பரில்லெனக்கருத்துட்கொண்டான்.

(இ - ள்.) ஆண்தகை - ஆண்மைக்குணமுள்ளவனாகிய அநுமான்,— ஆண்டு - அப்பொழுது, அ வானோர் துறக்கம் நாடு - அந்தத்தேவர்கள் வசிக்கின்ற சுவர்க்கலோகத்தை, அருகர் - சமீபத்திலே, கண்டான் - பார்த்தவனாய்,—'ஈண்டு இதுதான் - இங்கேகாணப்படுகின்ற இந்தநாடே, வேலை இலங்கைகொல் - கடலினாற்சூழப்பட்டுள்ள லங்காபுரியோ ?' என்று—, ஐயம் எய்தா - சந்தேகங்கொண்டு,—வேண்டு அரு விண்நாடு என்னும் மெய்ம்மை கண்டு - வேண்டிப்பெறுதற்கு அருமையான தேவலோக மிது வென்ற உண்மையைத் தெரிந்துகொண்டு,—'காண்தகு தோகை - பார்க்கத்தக்க [வடிவழகையுடைய] மயில்போலுஞ்சாயலையுடையவளான சீதை, உம்பர் - இம்மேலுலகத்திலே, இல் - இல்லை,' என - என்று, கருத்துள் கொண்டான் - மனத்தில் எண்ணியவனாய், உள்ளம் மீட்டான் - (அத்தேவலோகத்தைப்பார்ப்பதிற் செலுத்திய தனது) கருத்தை (அதனினின்றும்) மீட்பவனாயினான்; (எ - று.)

மகேந்திரமலையின்மீதேறிப் பேருருக்கொண்டுநின்ற அநுமான் தனக்குச் சமீபத்தில் தோன்றிய தேவலோகத்தைச் செல்வச்சிறப்பாலும் பொன்மயமாயிருத்தலாலும் இலங்கைமாநகரமோ வென முதலிற் சந்தேகித்து, பின்பு அங்குத் தேவர்கள்வசிப்பதனாலும் மேலிடத்திலிருப்பதனாலும் 'இது ராக்ஷஸராஜதானியாய்ப் பூலோகத்திலுள்ள இலங்கையன்று' என்று தெளிந்து, தனதுகண்ணுக்குத் தெரிந்தவரையிற் புலனாகாமையாலும், சீதை இலங்கையிலுள்ளாளெனச் சம்பாதி கூறியிருத்தலாலும், ராக்ஷஸராஜனான ராவணன் தனது பகைவராகிய தேவர்கள்மாத்திரமே வாழ்கின்ற இங்குச் சீதையைச் சிறைவையா னென்ற உறுதிப்பாட்டினாலும், மற்றும் அங்கு நாடிப்பார்ப்பதை யொழித்தன னென்பதாம்.

இச்செய்யுளில் தேவலோகத்தைக்கண்டு இலங்கையென்று ஐயுற்றுப் பின்னர்த் தெளிந்ததாகக் கூறியது, தெளிவைமுடிவிற்கொண்ட ஐயவணியின்பாற்படும். ஆண்டு - சீதை இலங்காபுரியிலிருப்பதைச் சம்பாதியின் வார்த்தையால் அறிந்தபின்பு ஆராய்பவான் புகழ அநுமான் உள்ளக்கிளர்ச்சிகொண்டு தான் போய்வருவதாகச் சொல்லி, வானரர்கள் வாழ்த்தத் தேவர்கள் மலர்மழைபொழிய எழுந்து மகேந்திரபருவதத்தின்மீதேறிக் கடலைக்கடக்க வேண்டுமெனக் கருத்துக்கொண்டு வானுறவோங்கிவளர்ந்து நின்ற அச்சமயத்தி லென்க. அநுமான் இவ்வாறு பேருருக்கொண்டுவளர்ந்தா னென்பதை, கிட்கிந்தாகாண்டத்து மகேந்திரப்படலத்தில் "பொருவருவேலைதாவும் புந்தியான் புவனந்தாய, பெருவடிவுயர்ந்த மாயோன் மேக்குறப்பெயர்ந்த

தாள்போல், உருவறிவடிவ னும்பரோங்கின னுவமையாலுந், திருவடி யென் னுந்தன்மை யாவர்க்குந் தெரியநின்றான்'' என்றதனுலும் அறிக.

ஆண்தகை - அன்மொழித்தொகை. 'அவ்வாறோர்' என்றவிடத்து அகரம் - பிரசித்தியைக் காட்டும்; உலகறிசுட்டு: செய்மைச்சுட்டுமாம். துறக்கம் - (இவ்வுலகசம்பந்தத்தைத்) துறந்து அடையத்தக்க இடம் எனக் காரணப்பொருள் பெறும்: இனி, ஸ்வர்க்கம் என்ற வடசொல்லின் சிதைவெனக் கூறுவாருமுளர். அருகர் - அருகு: குற்றியலுகரத்துக்கு 'அர்' - போலி. கொல்-ஐயம். எய்தா - உடன்பாட்டுவினையெச்சம். 'ஆண்டு' என்பதற்கு - அவ்விடத்தினின்று என்றும், 'வேண்டு அரு விண்நாடு' என்பதற்கு - (அனைவராலும்) விரும்பப்படுவதும் பெறுதற்கு அரியதுமான சுவர்க்கலோகமென்றும், தனக்கு இப்பொழுது வேண்டாததான சுவர்க்க மென்றும், 'காண்தகு தோகை' என்பதற்கு - தான் காணவேண்டியவளான சீதை யென்றும் பொருள்கொள்ளலாம். தோகை - இருமடியாகுபெயர். இல் - இல்லையென்பதன் விகாரம். 'அருகிற்கண்டான்' என்றும், 'காண்டகுங்கொள்கை' என்றும், 'கருத்திற்கொண்டான்' என்றும் பாடமுண்டு.

விலங்கினத்தைச் சார்ந்த வாநரமாகிய அநுமானை 'கண்டான்' முதலியனவாக உயர்திணையாற்கூறுதல் இலக்கணத்துக்கு ஒக்குமோ வெனின்,— உயர்திணை அஃறிணை என்ற பகுப்பிற்குக் காரணம் முறையே அறிவின் நிறைவும் குறைவுமே யாதலால், அவ்வறிவிற்குறைவின்றி ஐம்பொறியறிவோடு பகுத்தறிவையும் கொண்டு மனிதர்போலவே தொழில்திறமமைந்த தெய்வக்குரங்கை உயர்திணையின்பாற்படுத்துதல் ஒக்குமென்க; இத்தன்மை, மற்றை வாநரர்கட்கும், கரடியாகிய ஜாம்பவானுக்கும், கழுகுகளாகிய சம்பாதிசடாயுக்கட்கும், பெரியதிருவடியாகிய கருடாழ்வானுக்கும் பொருந்தும்: தொல்காப்பியத்து மரபியலில் உரைகாரர் ''மாவும் மாக்களும் ஐயறிவினவே'' என்ற சூத்திரத்தின்கீழ்க் குரங்கை விலங்கின மென்று பொதுவகையாற்கூறியவர்தாமே ''மக்கள்தாமே ஆறறிவுயிரே'' என்ற அடுத்த சூத்திரத்தின்கீழ் 'குரங்கு முதலாகிய விலங்கினுள் அறிவுடையன எனப்படும் மனவுணர்வுடையன உளவாயின் அவையும் ஈண்டு ஆறறிவுயிராய் அடங்கும்' என்றமை காண்க. 'ஒரோவழி அஃறிணைப்பொருள்கள் மொழியாற்பேசுவன உளவாயின், அது தெய்வத்தன்மைமுதலிய விசேடத்தா னன்றிப் பொருட்டன்மையானன்மையின், அமைத்துக்கொள்வது' என்ற இலக்கணவிளக்கச்சூறவளியும் இங்குக் காணத்தக்கது. அன்றியும், இவர்கள் வடிவில் மனிதரிற்சிறிதுவேறுபாட்டையே யுடையராயிருந்தன ரென்பதும் அறிக. (க)

[அநுமான் இலங்கையைக்கண்டு தோள்கொட்டியார்த்தல்.]

கண்டனனிலங்கைமூதூர்க்கடிபொழிற்கனகநாஞ்சின்
மண்டிலமதிலுங்கொற்றவாயிலுமணியிற்செய்த
வெண்டளக்கனகமாடவீதியும்பிறவுமெல்லா
மண்டமுந்திசைகளெட்டுநடுங்கத்தோள்கொட்டியார்த்தான்.

(இ - ள்.) (பின்னர் அநுமான்),—இலங்கை மூதூர் - இலங்கையென்ற பழமையான நகரத்தினது, கடி பொழில் - நறுமணம் வீசுகின்ற சோலையையும், கனகம் நாஞ்சில் மண்டிலம் மதிலும் - பொன்மயமான நாஞ்சிலென்னும் உறுப்புடைய வட்டமான மதிலையும், கொற்றம் வாயிலும் - வெற்றியைத்தெரிவிக்கின்ற [வெற்றிக்கொடிகள் நாட்டிய] நகரவாயிலையும், மணியின் செய்த வெள் தளம் கனகம் மாடம் வீதியும் - இரத்தினங்களிழைத்துச்செய்யப்பட்டனவும் வெண்ணிறமாக விளங்குகின்ற உபரிகைகளையுடையனவும் பொன்னினு லமைக்கப்பட்டனவுமான வீடுகளை (இருபுறத்திலுங்கொண்டுள்ள) வீதிகளையும், பிறவும் - இவையொழிந்த பிறவற்றையும், எல்லாம் - ஆகிய எல்லாவற்றையும், கண்டனன் - (அம்மலையின்மீது நின்றபடியே) பார்த்தான்; (அப்பொழுது), அண்டமும் - வானுலகமும், திசைகள் எட்டும் - எட்டுத்திக்குக்களும், நடுங்க - (அதிர்ச்சியினால்) நடுங்கும்படி, தோள் கொட்டி - (தனது) தோள்களை (க் கைகளால்) தட்டிக்கொண்டு, ஆர்த்தான் - ஆரவாரஞ்செய்தான்; (எ - று.)

மகேந்திரமலையின்மீது பெருவடிவங்கொண்டு நின்ற அநுமான் முதலில் மேலேநோக்கிச் சுவர்க்கத்தைக் கண்டபின்பு தனதுபார்வையைத் தாழச் செலுத்தவே தான் செல்லவேண்டிய இலங்கை புலப்பட, அதனைக் கண்டதனால் மகிழ்ந்து தனது தோள்களைக் கொட்டி ஆரவாரஞ்செய்தனனென்பதாம். வீரர்கள் மனக்கிளர்ச்சிகொண்டு தமதுபராக்கிரமந்தோன்ற ஒருகாரியத்தைச் செய்யத் தொடங்குவதற்கு முன்னர்த் தோள்தட்டி யாரவாரித்தல், இயல்பு.

'கடி' என்ற பலபொருள் குறிக்கும் ஓர் உரித்திரிசொல், இங்கு நறுமணமென்றபொருளில் வந்தது; இனி, காவல், விளக்கம், சிறப்பு, மிகுதி, புதுமை, ஆர்த்தல் என்ற பொருள்களும் இங்குஏற்கும். மணி - நவமணிப்பொது; தற்சமவடசொல். கநகம், மண்டலம், வீதீ, திஸா என்ற வடசொற்கள் திரிந்து நின்றன. நாஞ்சில், ஞாஞ்சில், ஞாயில் என்பன-ஒருபொருளன; ஒருவகை மதிலுறுப்புக்குப் பெயர்: 'எப்புழைக்கு ஞ்வா யெய்து மறையுஞ் சூட்டு' என்பர். அண்டமும் - இந்த அண்டகோளம் முழுவதும் எனினுமாம். மணி கனகம் என்று முன்னும் பின்னும் வருதற்கு ஏற்ப, 'வெள்' என்பதற்கு (சுண்ணாந்தீற்றியதனால்) 'வெண்மையான' எனப்பொருள்கூறாது, முத்துக்கள்பதித்தலால் வெண்மையான என்று உரைக்கலாம். தளம் - மேல்மாளிகை. 'பிறவும்' என்றது - கடைத்தெரு, குளம் முதலியவற்றை. எட்டுத்திசைகளாவன-நான்கு பெருந்திக்குக்களும், நான்கு மூலைத்திக்குக்களும். 'மண்டலமதில்', 'வெண்டளத்தளமாடவீதி', 'திசைகளெட்டுங்குலுங்க' என்ற பாடங்களும் காணப்படுகின்றன. (உ)

[இதுமுதல் பத்துக்கவிகள் - அநுமனது கால்கள் ஊன்றியழுந்த அதனால் அம்மலையிற் பலவகை நிகழ்ச்சியுண்டாதலைக் கூறும்.]

ஙூ. வன்றந்தவரிகொணுகம்வயங்கனலுமிழும்வாய
பொன்றந்தமுழைகடோறும்புறத்துராய்ப்புரண்டுபோவ

*நின்றந்தமில்லானூன்றநெரிந்துகீழழுந்திநீலக்*
*குன்றந்தன்வயிறுகீறிப்பிதுங்கினகுடர்கண்மான.*

(இ - ள்.) அந்தம் இல்லான்-அழிவில்லாதவனாகிய அவ்வநுமான், நின்று-(பேருருவத்துடன் அந்தமலையின்மீது) நின்றுகொண்டு, ஊன்ற - (தனது கால்களை) வைத்து அழுத்த, (அதனால்),—நீலம் குன்றம்-நீலநிறத்தையுடைய அம்மகேந்திரமலை, நெரிந்து - நொருங்கி, கீழ் அழுந்தி - கீழே அழுங்க, (அப்பொழுது),—தன் வயிறு கீறி பிதுங்கின குடர்கள் மான - தனது வயிறு கிண்டு வெளியிற்சரிந்த குடல்களை யொக்கும்படி,—பொன் தந்த முழைகள் தோறும் - பொன்மயமான (அம்மலையின்) குகைகளிலெல்லாம் வசிக்கின்ற, வல் தந்தம் வரி கொள் நாகம் - வலிய விஷப்பற்களையுடையனவும் இரேகைகளைக் கொண்டுள்ளவையுமான மலைப்பாம்புகள், வயங்கு அனல் உமிழும் வாய - எரிகிற விஷாக்கினியைக் கக்குகின்ற வாய்களையுடையனவாய், உராய்-உடற்புறத்து உராய்ந்துகொண்டு, புரண்டு புறத்து போவ - நெளிந்து வெளியே செல்வனவாயின ; (எ - று.)

ஊன்ற, குன்றம் நெரிந்து அழுந்தி [அழுந்த], நாகம், குடர்கள்மான, வாய உராய்ப்போவ என முடிபு காண்க. இச்செய்யுளிலுள்ள 'நின்று அந்தமில்லான் ஊன்ற' என்ற தொடர், அடுத்த ஒன்பது செய்யுள்களோடும் இயையும். *

கடலைக்கடக்குமாறு மகேந்திரமலையினுச்சியிற் பேருருவங்கொண்டு நின்ற அநுமான் தனதுகால்களால் அழுத்தியதனால் நொருங்கிப்போன அம்மலைக்குகையில் வசித்திருந்த பாம்புகள், அநுமானது உடற்பாரத்தைத் தாங்க முடியாமையால் அம்மலை வயிறுகிழிய வெளிப்பட்ட குடல்களோ வென்னும்படி அக்குகைப்புறத்துப் புரண்டுபோவனவாயின வென்பதாம். இவ்வருணனை, போஜமகாராஜன் செய்த சம்பூராமாயணத்திலும் கூறப்பட்டிருக்கின்றது; (அது வருமாறு:—' ததாநீம் த்ருடதரநிஹிதசரணதலநிஷ்பீட

* அனுமான் கடல்கடத்தற்குமுன் பேருருவங்கொண்டதனால் அவனது நான்குகால்களும் மலையில் அழுத்தியதை 'அந்தமில்லான்ஊன்ற' என்றார் ; அன்றி, இதனையே, கடல்கடக்கவேண்டுமென்றகருத்தினால் மேலெழுவதற்காகக் கால்கள் அழுத்திவைத்ததைக் கூறியதாகக் கொண்டால், மேல் கடு - ஆங் கவியில் "அலங்கருழ்மார்பன் முன்றுழ்ந்தடித்துணையழுத்தலோடும்" என வருவது கூறியதுகூறலா மென்க. அன்றியும், இங்கு அநுமான் பேருருவங்கொண்டபோது தனது நான்குகால்களையும் பதியவைத்திருந்தானென்றும், கடல்தாவ எழுகின்றபொழுது இரண்டுகால்களையே அழுத்திவைத்தா னென்றும் அறிக. ஸ்ரீவால்மீகிபகவானும் "நிஷ்ப்ரமாணஶரீரஸ்ஸந் லிலங்கயிஷுரர்ணவம் - பாஹுப்யாம்பீடயாமாஸ சரணாப்யாஞ்சபர்வதம்" என்று முதலிற்கூறி, பின்பு "பத்ப்யாம்த்ருடமவஸ்தாநம் க்ருத்வா......... ஊர்த்வமாநுத்பதிஷ்யந்" எனக் கூறியதும், (அங்கு 'பலவங்கமாநாம் சதுர்பிஸ் ஸஞ்சாராத்' என்ற வியாக்கியானமும்) கருதத்தக்கன.

நம் ஸோடு மக்ஷம: க்ஷமா'ருத்...கஹ்வர நிபிரீஸ நிஷ்ஸரத் ஸரீஸ்ருபதயா நிர்களிதாந்த்ரமால இவ" என்பது.) குகையினின்று வருந்திப் புரண்டுவெளிப் படுகிற நாகங்களை மலையின்குடல்களாகக் கற்பித்ததனால், இது - தன்மைத் தற்குறிப்பேற்றவணியாம்; இதனை, வடநூலார் ஸ்வரூபோத்ப்ரேக்ஷாலங்கார மென்பர். இச்செய்யுளில், நான்கடிகளிலும் முதலெழுத்துமாறுபட்டிருக்க இரண்டுமுதலிய சிலவெழுத்துக்கள் ஒன்றிநின்று பொருள்வேறுபட்டுவந் தது, திரிபுஎன்னுஞ் சொல்லணியாம்.

காளம், காளாத்திரி, யமன், யமதூதி எனப் பாம்பிற்கு நச்சுப்பற்கள் நான்காம். நாகம் - நகத்தில்வாழ்வது எனப் பொருள்படும் வடசொல்; நகம் - மரமும், மலையும். அனல் - அநல மென்ற வடசொல்லின் விகாரம். பொன் தந்த முழை - (நதிகளினின்று) பொன்னைத் தருகின்ற குகை யெனி னுமாம். பொன்று அந்த முழைகடோறும் புறத்துஉராய் என எடுத்து - (தாங்கள்) உயிரொடுக்குகின்ற அந்தக்குகைகடோறும் வெளியில் உராய்ந்து எனக்கூறலுமாம். உராய் = உராய்ந்து; முதனிலையே வினையெச்சப்பொருளில் வந்தது: "வரிப்புனைபந்து" என்னுமிடத்திற் போல. அநுமான், சிரஞ்சீவி கள் எழுவருள் ஒருவனாதலால், 'அந்தமில்லான்' எனப்பட்டான்: (மற்றை யோர் - அசுவத்தாமா, பலிசக்ரவர்த்தி, வியாசன், விபீஷணன், கிருபன், பரசு ராமன்.) குடர் = குடல்: லகரத்துக்கு ரகரம் போலியாகவந்தது. மான - இங்குத் தற்குறிப்பேற்றவுருபாய் நின்றது. 'வயங்கழல்', 'புரண்டுபோந்த', 'குன்றந்தவயிறு' என்றும் பாடமுண்டு. (௩.)

௪. புகலருமுழையுட்டுஞ்சும்பொங்குளைச்சீயம்பொன்றி
யுகலருங்குருதிகக்கியுள்ளுறநெரிந்தவூழி
னகலிரும்பரவைநாணவரற்றுறுகுரலவாகிப்
பகலொளிகரப்பவானைமறைத்தனபறவையெல்லாம்.

(இ - ள்.) புகல் அரு - நுழைவதற்கு அருமையாகிய [சிறிய வாயிலை யுடைய], முழையுள் - குகையிலே, துஞ்சும் - தூங்குகின்ற, பொங்கு உளை சீயம் - மிகுதியான பிடரிமயிரையுடைய சிங்கங்கள்,—உகல் அருங் குருதி கக்கி - சொரிதலையுடைய அருமையான இரத்தத்தைக் கக்கிக்கொண்டு, பொன்றி - உயிரொழிந்து, உள் உற - (மலைக்குகையின்) உள்ளிடங்களிலே யே, நெரிந்த - நொருங்கிப்போய்விட்டன; பறவை எல்லாம் - (அம்மலையின் மீதிருந்த) பறவைகளெல்லாம்,—ஊழின் - யுகாந்தகாலத்திலே, அகல் - (உலக முழுவதும்) பரவுகின்ற, இரும் பரவை - பெரிய சமுத்திரமும், நாண -(தமது பேரோசைக்குமுன்னே) வெள்கிப்பின்னிடும்படி, அரற்று உறு குரல ஆகி - அஞ்சிக் கதறுகின்ற பெருங்குரலையுடையனவாய், பகல் ஒளி கரப்ப - சூரி யனது ஒளி மறைந்துபோம்படி, வானை மறைத்தன - ஆகாயமுழுவதையும் (பரவி) மறைத்துவிட்டன; (எ - று.)

அநுமானது அடிகள் அழுத்துவதனால், அம்மலைக்குகைகளில் தூங்கிக் கொண்டிருந்த சிங்கங்களெல்லாம் அங்குநின்று வெளியே வரமாட்டாதன

வாய் நொருங்கி இரத்தத்தைக் கக்கிக்கொண்டு இறந்தன ; பறக்குந்தன்மையுள்ள பறவைகளோ, அம்மலைநொருங்குவதைக் கண்டு பேரிரைச்சலிட்டுக்கொண்டு எழுந்து சூரியனொளியும்மறையும்படி ஆகாயமுழுதும் பரவிப்பறந்தன என்பதாம்.

சீயம்-ஸிம்ஹ மென்ற வடசொல்லின் சிதைவு: இது - (மிருகங்களையெல்லாம்) ஹிம்ஸிப்பதென்று பொருள்படும். உகலருங் குருதி கக்கி - இதுவரையிற் சிந்தியிராத இரத்தத்தை இப்பொழுது சிந்திக்கொண்டு என்றுமாம். உள்ளுற - வெளியேவரமுடியாமல் உட்புறத்திலேயே யென்றபடி. பரந்துள்ளது, பறவை யெனக் கடலுக்குக் காரணக்குறி. பறவை - ஆகாயத்திற் பறப்பது. 'பகலொளிகரப்ப' என்பது - தொடர்பு இல்லாமலிருக்கவும் தொடர்புபடுத்துக்கூறுகிற தொடர்புயர்வுநவிற்சியணி ; இது, வடமொழியில் ஸம்பந்தாதிசயோக்தி யெனப்படும். 'புகலரு முழை' என்பதற்கு - (தாம்வசித்தலால் எந்தப்பிராணியும்) நுழையமாட்டாத குகையென்றும் பொருள்கொள்ளலாம். 'சீயம்பொங்கி', 'அகலரும்பறவை' என்பன - பாடபேதம். (௪)

௫. மொய்யுறுசெவிகடாவிமுதுகுறமுறைகாறள்ள
மையுறுவிசும்பினூடுநிமிர்ந்தவாலதியமஞ்சின்
மெய்யுறத்தழீஇயமெல்லென்பிடியொடும்வெருவலோடுங்
கையுறமரங்கள்சுற்றிப்பிளிறினகளிநல்யானை.

(இ - ள்.) களி நல் யானை - மதக்களிப்பையுடைய சிறந்த ஆண்யானைகள்,—மை உறு விசும்பினூடு நிமிர்ந்த வாலதிய - மேகங்கள் பொருந்திய ஆகாயத்தினிடத்தே [மேற்புறமாகத்]தூக்கிய வால்களையுடையனவாய், மஞ்சின் மெய் உற தழீஇய - மேகம்போலக் கருநிறமான (தமது) உடம்பை இறுகத்தழுவிக்கொண்ட, மெல்லென் பிடியொடும் - மென்மையான பெண்யானைகளுடனே,—வெருவலோடும் - அச்சத்தோடு, மொய் உறு செவி - வலிமைமிக்க (தமது) காதுகளை, முதுகு உற கடாவி - (தமது) முதுகின்புறத்திற் படும்படி யசைத்து, முறை கால் தள்ள - (அசைக்கின்ற ஒவ்வொரு) முறையிலும் காற்றுவீச, மரங்கள் கை உற சுற்றி - மரங்களை(த் தம்) துதிக்கையால் உறுதியாகச்சுற்றிக்கொண்டு, பிளிறின - வீரிட்டன ; (எ - று.)

பேருருவங்கொண்ட அநுமானது பாதங்கள் ஊன்றிய அதிர்ச்சியினால் அஞ்சிப் பெண்யானைகள் வாலையுயர்த்திக்கொண்டு ஓடிவந்து தம்மைத்தழுவிக்கொள்ள, ஆண்யானைகளும் அஞ்சித் தமதுசெவியையசைத்துநின்று மரங்களை இறுகப்பிடித்துக்கொண்டு வீரிட்டன வென்பதாம். தன்மைநவிற்சியணி. பெண்யானைகள் வாலையுயர்த்திக்கொண்டோடிவந்து ஆண்யானைகளைத் தழுவியதும், ஆண்யானைகள் காதையசைத்தபடி நின்று மரங்களைப்பற்றிக்கொண்டு பிளிறியதும் - அச்சத்தின் செயல்களாம்.

இனி, ஆண்யானைகளும் அவற்றைத் தழுவிய பெண்யானைகளும் அச்சத்தினாற் செவியசைத்து வாலெடுத்து மரங்களைப் பற்றிக்கொண்டு வீரிட்டன வென்ற கருத்துப்பட உரைத்தலுமாம். செவிகள் தாவி முதுகுஉற

முறைகால் தள்ள என்றுகொண்டு, செவிகள் அசைந்து முதுகிலேபொருந்தி ஒவ்வொருதரத்திலும் காற்றை வெளிவீச என்றுமாம். காது அசையுந்தோறும் காற்றுவீசுதலால், 'முறைகாறள்ள' என்றார். வாலதி - வடசொல். நிலையில்லாமையாற் பொய்யாகிய உடம்பை 'மெய்' என்பது - மங்கலவழக்கு. தழீஇய; சொல்லிசையளபெடை. பிடி - யானையின் பெண்மைப்பெயர்; "பிடியென்பெண்பெயர் யானைமேற்றே" என்றார் தொல்காப்பியனார்: இதன் ஆண், களிறு எனப்படும்; "வேழக்குரித்தே விதந்து களிறென்றல்" என்பது காண்க. பிடிக்கு மென்மை - எளிதில் அச்சங்கொள்ளுந்தன்மை. 'செவிகடாழ்ந்து', 'நிமிர்ந்தவான்மதியமஞ்ச', 'மெய்யொடுந்தழீஇய' என்பன - பாடபேதம். (௫)

௬. பொன்பிறழ்சிமயக்கோடுபொடியுறப்பொறியுஞ்சிந்த
மின்பிறழ்குடுமிக்குன்றம்வெரிநுறவிரியும்வேலை
புன்புறமயிரும்பூவாக்கட்புலம்புறத்துநாறு
வன்பறழ்வாயிற்கவ்விவல்லியமிரிந்தமாதோ.

(இ - ள்.) மின் பிறழ் குடுமி குன்றம் - மின்னல்போல் ஒளிவீசுகின்ற உச்சியையுடைய மகேந்திரமலையானது,—பொன் பிறழ் சிமயம் கோடு-பொன்மயமாக விளங்குகின்ற (தனது) சிகரம், பொடி உற - நீறாக,—பொறியும் சிந்த - தீப்பொறிபறக்குமாறு, வெரிந் உற விரியும் - (தன்) முதுகு மிகுதியாகப்பிளவுபடுகின்ற, வேலை - சமயத்தில்,—வல்லியம் - புலிகள்,—புல் புறம் மயிரும் பூவா - சிறிய உடம்புமயிர்களும் முளையாதனவும், கண் புலம் புறத்து நாறு - கண்கள்மலராதனவுமாயிருக்கின்ற, வல் பறழ் - வலிய (தமது) குட்டிகளை, வாயின் கவ்வி - வாயினாற் கவ்வி யெடுத்துக் கொண்டு, இரிந்த - நிலைகெட்டோடின; (எ - று.)—மாது, ஓ - ஈற்றசை.

அநுமானது அடிகளின் பாரத்தைப் பொறுக்கமாட்டாது சிகரம்பொடியாய்ப்போய்த் தீப்பொறிபறக்குமாறு அம்மலை பிளந்தசமயத்தில், அனற்பொறியையும் அவ்வோசையையும் கண்டு கேட்டதனால் அஞ்சிய புலிகள், மயிர்முளைக்காமலும் கண்பிரியாமலும் இருக்கின்ற தமதுசிறியகுட்டிகளை வாயிற்கவ்விக்கொண்டு நிலைகெட்டோடின வென்பதாம்.

குன்றம் பொடியுறப் பொறிசிந்த விரியும்வேலை, வல்லியம் பறழ்கவ்வி இரிந்த என்று இயையும். சிமயக்கோடு - மலைச்சிகரம்; ஒருபொருட்பன்மொழியுமாம். கட்புலம் புறத்துநாறாமை - கண்ணுகியஉறுப்பு வெளியில் தெரியாமை. நாறுதல் - தோன்றுதல். பூவாத பறழ், நாறாத பறழ் என்க. "நாயே பன்றி புலிமுய லுன்கு, மாயுங்காலைக் குருளையென்ப," "நரியுமற்றே நாடினர்கொளினே," "குட்டியும் பறழுங் கூற்றவண்வரையார்" என்பவற்றால், புலிக்குட்டியை 'பறழ்' என்றார். அப்பொழுதுதான் பிறந்தகுட்டி யென்றற்கு, 'புன்புறமயிரும்பூவாக் கட்புலம்புறத்துநாறாப் பறழ்' எனப்பட்டது. தன்மை நவிற்சியணி. 'வெரினுற நெரியும்வேலை' என்றும் பாடமுண்டு. (௬)

எ. தேக்குறுசிகரக்குன்றந்திரிந்துமெய்ந்நெரிந்துசிந்தத்
தூக்குறுதோலர்வாளர்துரிதத்தினெழுந்ததோற்றந்
தாக்குறுசெருவினேரார்தாளறவீசத்தாவி
மேக்குறவிசைத்தாரொன்னப்பொலிந்தனர்விஞ்சைவேந்தர்.

(இ - ள்.) தேக்கு உறு சிகரம் குன்றம் - தேக்குமரம்பொருந்திய உச்சி யோடுகூடிய அம்மகேந்திரமலையானது, திரிந்து - (அநுமனது பாதங்களின் பாரத்தால் தன்) நிலைமாறி, மெய் நெரிந்து - (தனது) உடல் நொருங்கி, சிந்த - சரிய,—(அதனால் அஞ்சிய), விஞ்சைவேந்தர் - வித்தியாதரவரசர்கள், தூக்குறு - (தமது கைகளில்) தாங்கிக்கொண்டிருக்கின்ற, தோலர் - கேடகமுடையவர்களாகவும், வாளர் - வாள்களையுடையவர்களாகவு மிருந்துகொண்டு, துரிதத்தின் - விரைவாக, எழுந்த - (வானத்தில்) உயரச்சென்ற, தோற்றம் - (தமது) தோற்றத்தால்,—தாக்குறு செருவில் - மோதிச்செய்கின்ற யுத்தத்திலே, நேரார் - (தமது) பகைவர், தாள் அற வீச - (தமது) கால்கள் அறுபடும்படி (ஆயுதங்களை)யெறிய, (அதற்குத் தப்புமாறு), மேக்கு உற தாவி - மேலெழுந்து, விசைத்தார் என்ன - வேகங்கொண்டு சென்றவரைப்போல, பொலிந்தனர் - விளங்கினார்கள்; (எ - று.)

அம்மகேந்திரமலை திடீரென நிலைகுலைந்து நொருங்கிச் சரிந்ததனால் அஞ்சிய வித்தியாதரவரசர்கள் தமது கைகளிற் கேடகத்தையும் வாளையும் எடுத்துக்கொண்டு விரைந்து மேலெழுந்த தோற்றம் - போர்க்களத்தில் தமது பகைவர் படைக்கலங்கொண்டு தமது கால்களைத் துணிக்கும்படி முயன்றபோது, தமதுகைகளில் ஆயுதமிருக்கவும், அதற்குத்தப்பியுய்யுமாறு, வீரர்கள் விரைந்துமேலெழும்பிச்செல்வதை யொத்திருந்தது என்பதாம்; உவமையணி. விஞ்சைவேந்தர் எழுந்த தோற்றத்தால் விசைத்தாரென்னப் பொலிந்தன ரென்க.

பின் னிரண்டடிக்கு - மோதுகின்ற போரிலே தமதுபகைவரது தாள்களைத் துணிக்குமாறு வீசுவதற்காகத் தாவி மேலே விரைந்து எழுந்தவர் போலப் பொலிந்தன ரென்றும் பொருள் கொள்ளலாம். தோல் - பகைவர்களெறியும் படைகள் தம்மீது படாதபடி தடுக்கவல்லதாகிய கேடகம்; தோற்பரிசை. துரிதம் - த்வரிதம் என்ற வடசொல்லின் விகாரம். விஞ்சைவேந்தர் - மாலிகாஞ்சனம்முதலிய மாயவித்தைகளில் வல்ல வித்தியாதரராஜர். விஞ்சை - வித்யா என்ற வடசொல்லின் சிதைவு: வித்யை, வித்தை, விச்சை, விஞ்சை யெனக் காண்க. விஞ்சை - அதனையுடையார்க்கு ஆகுபெயர். 'நேரார்' என்றவிடத்து 'நேர்ந்தார்' என்று பாடமுண்டு; எதிர்த்தவ ரென்பது அதன்பொருள். (எ)

அ. தாரகைசுடர்கண்மேகமென்றிவைதவிரத்தாழ்ந்து
பாரிடையழுந்துகின்றபடர்நெடும்பணிமாக்குன்றங்
கூருகிர்க்குவவுத்தோளான்கூம்பெனக்குமிழிபொங்க
வார்கலியழுவத்தாழுங்கலமெனலாயிற்றன்றே.

(இ - ள்.) (அநுமனது கால்களின் பாரத்தைப் பொறுக்கமுடியாமல்)—தாரகை - நக்ஷத்திரங்களும், சுடர்கள் - சூரியசந்திரர்களும், மேகம் - மேகங்களும், என்ற இவை—, தவிர - (தன்னிடத்தை) விட்டு (மேலே) செல்லுமாறு, தாழ்ந்து - (தான்) இறங்கி, பாரிடை அழுந்துகின்ற - பூமியிலே அழுங்கிப்போகின்ற, படர் நெடும் பனி மா குன்றம் - அகன்று நீண்டுள்ள குளிர்ந்த பெரிய அம்மகேந்திரமலையானது,—கூர் உகிர் குவவு தோளான் கூம்பு என - கூர்மையான நகங்களையும் திரண்டதோள்களையு முடையவனான அநுமான் பாய்மரம்போ லிருக்க, குமிழி பொங்க ஆர்கலி அழுவத்து ஆழும் - நீர்க்குமிழி மேலேயுண்டாகுமாறு சமுத்திரவெள்ளத்திலே முழுகிப்போகின்ற, கலம் - மரக்கலமாம், எனல் ஆயிற்று - என்றுசொல்லலாம்படியிருந்தது; (எ - று.)—அன்றே - ஈற்றசை.

பெருவடிவங்கொண்ட அநுமான் தன்மீதுஇருந்துகொண்டு கால்கள் வைத்ததைத் தாங்கமுடியாமல் அம்மகேந்திரமலை தன்மீதுதவழ்ந்துகொண்டிருந்த நக்ஷத்திரம்சூரியசந்திரர் மேகம் இவைகளெல்லாம் தன்னைவிட்டுத் தவிர்ந்து தனக்கு வெகுதூரம் அப்பால் மேலேயிருப்பனவாம்படி தான் மிகத் தாழ்ந்து பூமிக்குள் அழுந்திய தன்மை, ஒருமரக்கலம் மேலே பாய்மரந்தோன்ற நீர்க்குமிழியுண்டாகுமாறு கடலுக்குள்முழுகுவதையொத்திருந்தது என்பதாம்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பூமியை ஆர்கலியழுவமாகவும், அப்பூமியில் தாழ்ந்து உட்புகும் மகேந்திரமலையை அக்கடலில்முழுகிப்போகும் மரக்கலமாகவும், அம்மலைமீதுநின்ற அநுமானை அம்மரக்கலத்தின்மீதுள்ள பாய்மரமாகவும், அக்காலத்து மலையின்மேற்புறத்தில் தோன்றும் நக்ஷத்திரங்களையும் சுடர்களையும் அம்மரக்கலம் முழுகுங்காலத்துத் தோன்றும் நீர்க்குமிழிகளாகவும் கொள்க 'மேகந்தவிர' என்று கூறியது, இயற்கைபற்றியதேயன்றி, உவமையை நிறைத்தற்காகவன் றென்க.

தாரகை - தாரகா என்ற வடசொல்லின் விகாரம்: இதனால், சூரியசந்திரரொழிந்த மற்றைக்கிரகங்களையும் குறித்தவாறும். குமிழி - நீரிற்குமிழ்ப்பதெனக் காரணப்பொருள்படும். ஆர்கலி - கடல்; நிறைந்த ஓசையையுடையதென வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. கலம் - மரக்கலம். (அ)

௯. தாதுகுநறுமென்சந்தங்குங்குமங்குலிகந்தண்ணென்
போதுகுபொலன்றாதென்றித்தொடக்கத்தயாவும்பூசி
மீதுறுசுனைநீராடியருவியொடுலகின்வீழ்வ
வோதியகுன்றங்கீண்டுகுருதிநீர்சொரிந்தாலொத்த.

(இ - ள்.) மீது உறு சுனை நீர் - அம்மலையின்மீதுள்ள சுனைகளின் நீர்ப்பெருக்குக்கள்,—தாது - காவிக்கற்களும், உகு நறு மெல் சந்தம் - (மரங்களினின்று) ஒடிந்துகீழ்விழுந்துள்ள நறுமணமுடைய மெல்லிய செஞ்சந்தனக் கட்டைகளும், குங்குமம் - குங்குமப்பூக்களும், குலிகம் - இங்குலிகமும், தண்ணென் போது உகு பொலன் தாது - குளிர்ந்தமலர்களினின்று உதிர்ந்தபொன்னிறமான மகரந்தப்பொடிகளும், என்ற இ தொடக்கத்த யாவும் - என்ற

இவை முதலிய செந்நிறப்பொருள்கள் பலவற்றையும், பூசி - தன்மேற்பூசிக் கொண்டு, அருவியொடு ஆடி - (மற்றும் அம்மலையிலுள்ள) நீரருவிகளோடு சேர்ந்து, உலகின் வீழ்வ - பூமியில்விழுவனவாய்,—ஓதிய குன்றம் - (முன்பு) கூறப்பட்ட அம்மகேந்திரமலையானது, கீண்டு - வயிறுகிழிபட்டு, குருதி நீர் - இரத்தநீரை, சொரிந்தால் ஒத்த - சொரிவதை யொத்திருந்தன; (எ - று.)

அநுமான்கால்களால் நொருங்கிப் பொடியாய்விட்ட தாதுமுதலிய பொருள்களோடு சேர்ந்து செந்நிறமடைந்து அதிர்ச்சியால் மலையெங்கும் பாய்ந் தோடிய அருவிநீரோடும் சேர்ந்து வெளியேபெருகுகின்ற அம்மலைச்சுனையின் நீர்ப்பெருக்குக்கள், பேருருக்கொண்ட அநுமானது கால்களின் பாரத்தைப் பொறுமல் அம்மலை வயிறுகீண்டு இரத்தத்தைக் கக்குவதுபோன்றிருந்தன வென்பதாம்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. அன்றியும், சுனைநீர்கள் தாது முதலிய பிறபொருள்களின்செந்நிறத்தைப்பெற்றனவாகக் கூறியது, பிறிதின் குணம்பெறலணியாம்; இது, வடமொழியில் தத்குணாலங்கார மெனப்படும். "அநுமான் கடலைக்கடக்குமாறு கால்களையழுத்தியதைப் பொறுக்கமாட்டாத இம்மகேந்திரமலை, அகன்றதாழ்வரையெங்கும் அஞ்சியோடுகின்ற மான்களினது காற்குளம்புகளினுற் பிளப்புண்ட செங்காவிகளின் புழுதிகள் மேலெழப் பெறுதலால், இரத்தத்தைக் கக்குவதுபோன்றிருந்தது" என்று சம்பூ ராமாயணத்திற் போஜமகாராசன் கூறியது, இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

எளிதிற்பொடியாகு மென்றற்கு, 'மென்சந்தம்' என்றார். தாது - தூது - இரண்டாமடியில், தாது மகரந்தப்பொடியெனப் பொருள்படும் தென்மொழி. சந்தம் - சந்தனமென்ற வடசொல்லின் விகாரம். குங்குமம் - அதன்பூவுக்கு, முதலாகுபெயர். குலிகம் - இங்குலிக மென்பதன் முதற்குறை: அது, சாதிலிங்க மெனப்படும். போது - மலரும்பருவத்துஅரும்பு. பொன் + தாது = பொலன்தாது; "பொன்னென்கிளவியீறுகெட முறையின், முன்னர்த்தோன்றும் லகாரமகாரஞ், செய்யுண்மருங்கிற் றொடரியலான" என்னுஞ் சூத்திரவிதியோடு மகரனகரப்போலியும் பெற்றது. இனி, பிற்காலத்தார், பொன்னென்ற பொருளில் 'பொலம்' என்று தனியே ஒருசொல் கொள்வர்; அச்சொல் மகரனகரப்போலிபெற்று, 'பொலன்'என்று ஆயிற்று என்றலுமாம். 'சாந்தம்,' 'அருவிபோலுலகினம்வீழ்வ', 'குன்றங்கீறிக்குருதிநீர்சொரிவதொத்த' என்பன பாடபேதம்.

(கூ)

க0. கடலுறுமத்திதென்னக்கருவரை திரியுங்காலை
மிடலுறுபுலன்கள்வென்றமெய்த்தவர்விசும்பினுற்றார்
திடலுறுகிரியிற்றங்கள்செய்வினைமுற்றிமுற்றாது
டலுறுபாசம்வீசாதும்பர்செல்வாருமொத்தார்.

(இ - ள்.) 'இது—, கடல் உறும் மத்து - பாற்கடலிற்பொருந்திய மத்தாகிய மந்தரமலையேபோலும்,' என்ன - என்று (கண்டவர்) கூறும்படி, கருவரை திரியும் காலை - கருநிறமாயுள்ள அம்மகேந்திரமலை (அநுமானது திருவடிக ளழுத்துவதால்) சுழன்றபொழுது,—திடல் உறு கிரியில் - மேடாகப் பொருந்திய அம்மகேந்திரமலையி லிருந்துகொண்டு, மிடல் உறு புலன்கள்

வென்ற - வலிமை மிக்க ஐம்பொறிகளையும் (அதனதன்புலன்களிற் செல்லாதபடி) அடக்கிய, மெய் தவர்தாம் - உண்மையான தவத்தையுடைய இருடிகள், —தம் செய் வினை முற்றி முற்றுறாது - தாங்கள் செய்யத்தொடங்கிய தமது காரியங்களைப் பாதிமுடித்து முற்றும்முடியாமலே, விசும்பின் உற்றார் - ஆகாயத்திற் சென்றவர்களாய்,—உடல் உறு பாசம் வீசாது - உடம்பிற்பொருந்திய பாசத்தை ஒழியாமலே, உம்பர் செல்வாரும் - மேலுலகத்துக்குச் செல்பவர்களையும், ஒத்தார்—; (எ - று.)

அம்மகேந்திரமலை அநுமானது ஊன்றிய திருவடிப்பொறையை ஆற்றமாட்டாது முன்பு பாற்கடல் கடைந்த மந்தரகிரியைப் போலச் சுழலவே, அவ்வதிர்ச்சியினால், பாதிமுடிந்தும் முடியாமலும் அரைகுறையாய்த் தவஞ்செய்திருந்த இருடிகள் மேலெழுந்தது - தமதுபாசம்முற்றிலும்நீங்கப்பெறாமலிருப்பவர் இவ்வுடம்புடனேயே வானுலகத்துக்குச்செல்வதை யொத்திருந்ததென்பதாம்; தற்குறிப்பேற்றவணி. அங்கு அசைவற்றுத்தவஞ்செய்துகொண்டிருந்த யோகிகளையும் மலை சுழன்று மேலெழுப்பிய தென்க. வரைதிரியுங்காலை, தவர் விசும்பினுற்றார், பாசம்வீசாது உம்பர்செல்வா ரொத்தார் என இயையும்.

மத்து - மந்தமென்றவடசொல் சிதைந்தது. மனத்தைநல்வழியிற்செல்லவொட்டாது தடுத்துத் தீநெறியிற்செலுத்துமாறு மிகத் திண்ணியனவாதலால், 'மிடலுறு புலன்கள்' என்றார். புலன்கள் - இங்கு, இலக்கணையாற் பொறிகளையுணர்த்திற்று: ஐம்பொறிகளாவன - மெய், வாய், கண், மூக்கு, செவி. புலன்-புலம் என்பதன் இறுதிப்போலி. அவ்வாறு மலை திரிந்தகாலத்தும் தாம் தவநிலையினின்று விலகாது நின்றன ராதலால், அவர்களை 'மெய்த்தவர்' என்றார். திடல் - மிக்கஉயரம்; இதனை 'த்ருடம்' என்ற வடசொல்லின் விகாரமெனக் கொண்டால், திடல் உறு - வலிமை மிக்க எனப் பொருளாம். கிரி, பாசம் - வடசொற்கள். ஆசை - கயிறுபோல நின்று ஆன்மாவைக் கட்டுப்படுத்தலால், 'பாசம்'எனப்படும்; ஆகவே, இச்சொல் - உவமையாகுபெயராம்.

செல்வாரும், உம்மை - இசைநிறை. உயர்வுசிறப்பும்மையாகக் கொண்டு 'மெய்த்தவர்' என்றதனோடு கூட்டி, வலிமைமிக்க ஐம்புலவாசைகளை வென்று நிலைபெற்றதவத்தைச் செய்துகொண்டிருந்தவர்களும் (அஞ்சிக்கலங்கி நிலைகுலைந்து) வானத்திலெழுந்தவர்களாய், இவ்வுடம்புடனே சுவர்க்கலோகத்துக்குச்செல்லுதற்குத் தாம்செய்யவேண்டிய தவவேள்விச்சடங்குகளை அம்மலையிலிருந்து செய்தேனும் செய்யாமலேனும் இச்சரீர பாசபந்தத்தை யொழியாமலே இவ்வுடம்புடன் மேலுலகத்துக்குச்செல்பவரைப் போன்றன ரென்று உரைத்தலு மொன்று. புலன்கள்வென்ற மெய்த்தவரும் அஞ்சிச் சிதறும்படியிருந்தது, அப்பொழுது அம்மலையில் அநுமான் அடியூன்றுதலாலுண்டான மிக்ககுழப்ப மென்க. இதனை, இராவணன் வரையெடுத்தபடலத்தில் "சத்தவிருடிக்கணமகீப்பட வெழிற்றவமுனித்தலைவருஞ், சுத்தவிதயப்பிரமரிட்டருமிறப்பில்சுரர்கொத்தடையவும், பித்தருமதித்தவபத்தரு மெழிற்பிரமதத்தலைவருஞ், சித்தரு மியக்கரும் வெருக்கொளுயனத்த ரடையச்சிதறினார்" என்றாற்

போலக் கொள்க. ஸசரீரஸ்வர்க்ககமனத்தின் பொருட்டுச் சிலசடங்குகள் நூல்களிற் கூறப்பட்டுள்ளன. அவைசெய்யாமலே வேறுசக்திகளால் இவ்வுடம்புடன் சுவர்க்கம்போய்வந்தவரு முண்டு. உடலுறுபாசம்வீசியவர் இவ்வுடம்புடன் சுவர்க்கம்புகாது இதனை இங்குத்துறந்து சுத்தமான தேவசரீரத்துடன் உம்பர்செல்வ ரென்க.

துருவாசமுனிவனது சாபத்தால் தேவலோகத்துச் செல்வங்களெல்லாம் கடலிற்புக்கனவாக, பின்பு தேவர்கள் அவற்றை மீண்டும்பெறுதற்பொருட்டுத் திருமாலின் கட்டளைப்படியே மந்தரமலையை மத்தாகநாட்டி வாசுகியென்னும் மகாநாகத்தைக் கடைகயிறாகக்கொண்டு அந்நாகத்தின் தலைப்புறத்தை அசுரர்களும் வாற்புறத்தைத் தாங்களுமாகப் பற்றிக்கொண்டு வலிய இழுத்துப் பாற்கடலைக் கடைகையில், மந்தரமலை சுழன்றதென்க.

'கார்வரை', 'தக்தம்', 'மூற்றாவுடலுறு', 'உம்பர்ச்செல்வாரையொத்தார்' என்பன - பாடபேதங்கள். (கo)

கக. வெயிலியற்குன்றங்கீண்டுவெடித்தலுநடுக்கமெய்தி
மயிலியற்றேவிமார்கடழீஇக்கொளப்பொலிந்தவானோ
ரயிலெயிற்றரக்கனள்ளத்திரிந்தநாளணங்குபுல்லக்
கயிலையினிருந்ததேவைத்தனித்தனிக்கடுத்தல்செய்தார்.

(இ - ள்.) (அநுமான் அடியூன்றிய பாரத்தைப் பொறுக்கமுடியாமல்), **வெயில் இயல் குன்றம்** - சூரியகாந்திபோன்ற ஒளிபொருந்திய அம்மகேந்திரமலை, **கீண்டு** - பிளவுபட்டு, **வெடித்தலும்** - வெடித்ததாகவே,— **மயில் இயல் தேவிமார்கள்** - மயில்போன்ற சாயலையுடைய தமதுமனைவியர், **நடுக்கம் எய்தி** - (மிக்க அச்சத்தினால்) நடுக்கமடைந்து, **தழீஇக்கொள** - (தம்மை) இறுக அணைத்துக் கொள்ள, **பொலிந்த** - விளங்கிய, **வானோர்** - (அம்மலையின்மீது வசிக்கும்) தேவர்கள்,— **அயில் எயிறு அரக்கன்** - கூர்மையான பற்களையுடைய (ராவணனென்ற) ராக்ஷஸன், **அள்ள** - (தனதுகைகளைக்கொண்டு) அலட்சியமாகத்தூக்கியதனால், **திரிந்த** - (கயிலாயமலை) சுழற்சியையடைந்த, **நாள்** - அக்காலத்தில், **அணங்கு புல்ல** - (பார்வதியென்னும்) தெய்வமகள் (தன்னைத்) தழுவ, **கயிலையின் இருந்த** - (அக்) கைலாசகிரியில் வீற்றிருந்த, **தேவை** - சிவபெருமானை, **தனி தனி**—, **கடுத்தல் செய்தார்** - ஒத்திருந்தார்கள்; (எ - று.)

அம்மகேந்திரமலை அநுமானது உடற்பொறையை யாற்றாது திடீரெனக் கீறிவெடித்ததனால் மிக்கநடுக்கங்கொண்ட தமதுமனைவியரால் தழுவப்பெற்ற தேவர்கள் ஒவ்வொருவரும், இராவணன் கைலாசமலையைத்தூக்கியகாலத்தில் அஞ்சிப் பார்வதிதேவியால் தழுவப்பெற்ற சிவபிரானைத் தனித்தனி ஒத்திருந்தன ரென்பதாம்; உவமையணி.

**கைலையை யெடுத்த கதை:**—இராவணன் அளகாபுரிக்குச் சென்று குபேரனோடு எதிர்த்துப்பொருது அவனைவென்று அவனது புஷ்பகவிமானத்தைப்பறித்து அதன்மேலேறிக்கொண்டு கைலாசமலைக்குநேராக ஆகாயமார்க்கத்திலே விரைந்து மீண்டுவருகையில், அம்மலையின் மகிமையால் விமானம்

தடைப்பட்டுநிற்க, இராவணன் அதற்குக்காரண மின்னதென்று அறியாது நிகைக்கையில், நந்திதேவர் எதிரில்வந்து, 'சிவபிரானெழுந்தருளியிருக்கு மிடமான கயிலாயத்தின் பெருமை யிது' என்றுசொல்லவும், கேளாமல் அத்தசமுகன், 'எனதுபிரயாணத்துக்குத் தடையாகிய இம்மலையை இப்பொழுதே வேரோடுபறித்து எடுத்து அப்பாலெறிந்துவிட்டுத் தடையின்றி மேற்செல்வேன்' என்றுகூறி விமானத்தினின்று இறங்கித் தனது இருபதுகைகளையும் அம்மலையின்கீழ்க்கொடுத்து அதனைப் பெயர்த்து அசைக்க, அப்பொழுது பார்வதிதேவி அஞ்சிப் பரமசிவனைத்தழுவிக்கொள்ளவே, அதனைக்கண்ட உருத்திரமூர்த்தி சினந்து தன்கால்விரலாற் சிறிது அழுத்த, அரக்கன் மலையின் கீழ் அகப்பட்டுக் கைநசுங்கி மிகவருந்தி வெகுகாலம்புலம்பிப் பின்னர்ச் சாமவேதகானத்தாற் சிவனருளைப்பெற்று விடுபட்டன னென்பதாம்.

("சசால பார்வதீசாபி ததாஸ்லிஷ்டா மஹேஸ்வரம்" என்ற ஸ்ரீவால்மீகிராமாயணமும், "ஊடலைமறந் துமைமடந்தை யானைத் தனமுறத்தழுவினள்" என்ற ஒட்டக்கூத்தருத்தரகாண்டமும், "அருவியங்குன்ற மரக்கன் பெயர்ப்ப, வெருவிய வெற்பரையன்பாவை - பெருமா, னணியாக மாரத் தழுவினள் தான்முன், தணியாத வூடல் தணிந்து" எனப் பிறர்கூறியதும் காண்க.) அணங்கு - தேவி; அம்பிகை.

இரண்டாமடியில், இயல் - உவமவுருபு. தழீக்கொள = தழுவிக்கொள்ள: சொல்லிசையளபெடை. அரக்கன் - ரக்ஷஸ் என்ற வடமொழியின் விகாரம். அவன் அம்மலையை ஒருபொருளாகமதியாது எடுத்தமை தோன்ற, 'அள்ள' என்றார். 'மயிலியற்றளிர்க்கைமாதர்' என்றும் பாடமுண்டு. (கக)

கஉ. ஊறியநறவுமுற்றகுற்றமுமுணர்வையுண்ணச்
சீறியமனத்தர்தெய்வமடந்தையரூடறீர்வுற்
றாறினாரஞ்சுகின்றாரன்பரைத்தழுவியும்ப
ரேறினாரிட்டுநீத்தபைங்கிளிக்கிரங்குகின்றார்.

(இ - ள்.) ஊறிய நறவும் - (குடித்து) உடம்பிலூறிய மதுவும், உற்ற குற்றமும் - (கணவர் தம்விஷயத்திற்) செய்த பிழையும், உணர்வை உண்ண - (தமது) நல்லறிவைக் கெடுக்க, (அதனால்), சீறிய - (அக்கணவர்திறத்தில்) மிக்கசினங்கொண்ட, மனத்தர் - மனத்தையுடையவராகிய, தெய்வம் மடந்தையர் - தேவதாஸ்திரீகள்,—அஞ்சுகின்றார் - (அங்கு உண்டான அதிர்ச்சி முதலியவற்றால்) மிக்க அச்சங்கொண்டவராய், ஊடல் தீர்வுற்று - (தாம் கொண்டிருந்த) பிணக்கு நீங்கி, ஆறினார் - சினந்தணிந்து, அன்பரை தழுவி - (தமது) கணவரைத் தழுவிக்கொண்டு, உம்பர் ஏறினார் - வானத்தின்மீது ஏறி,—இட்டு நீத்த - (பரபரப்பினால் உடன் எடுத்துக்கொள்ளாது அம்மகேந்திரமலையிலேயே கூட்டில்) விட்டுவந்த, பைங் கிளிக்கு - (தமது) பசுநிறமான கிளியைக் குறித்து, இரங்குகின்றார் - வருந்துபவரானார்கள்; (எ - று.)

மதுபானமயக்கத்தில் தமதுகணவர்செய்த பிழையைக்குறித்து வெறிகொண்டு ஊடிய மகளிர், அம்மலை திடீரென அசைந்துவெடிப்பதைக் கண்டு

மனம் திடுக்குற்று உடனே தாம்கொண்டிருந்த சினம் நீங்கித் தம்கணவரைத் தழுவிக்கொண்டு ஆகாயத்திற்சென்று, பின்பு, பரபரப்பினால் மனந்தடுமாறி விட்டுவந்த கிளியைக்குறித்து வருந்தினார்களென்பதாம்.

பதிவிரதைகளாகிய அம்மாதர்கள் தம்கணவர்மீது சினந்ததற்கு அவர்கள் கள்ளுண்டதும் அவர்கள்விஷயத்திற் கணவர் பிழைசெய்ததும் காரணமாகுதலால், 'நறவும் உற்றகுற்றமும் உணர்வையுண்ண' என்றார். 'ஊறியநறவையுண்ட குற்றந் தம்முணர்வையுண்ண' என்றும் பாடமுண்டு. "வித்தியாதரர் தமதுமனைவியருடன் தாங்கள் குடிப்பதற்குஉரிய பொன்மயமான பாத்திரம்முதலியவற்றைப் பாநபூமியிலேயே போகட்டு ஆகாயத்திற்சென்றனர்" என முதனூலிற்கூறியிருத்தல்கொண்டு, இங்குத் தெய்வமடந்தையரென்றது, வித்தியாதரமகளிரை யென்னலாம். ஊடலாவது - இன்பநிலையில், அவ்வின்பத்தைமிகுவித்தற்பொருட்டு ஆடவரோடு மகளிர் பிணங்குதல்; இது, புலவியெனவும், பிரணயகலக மெனவும்படும். (அக்கோபம் இன்சொல்முதலிய வேறு உபாயங்களால் தணிக்கக்கூடியநிலையைக் கடந்தபொழுது, காலில்விழுதலாகிய உபாயத்தைக்கொண்டு அதனைத் தணிப்ப ரென்க.) 'சீறியமனத்தர் தெய்வமடந்தைய ரூடல்தீர்வுற்று ஆறினாஞ்சுகின்றா ரன்பரைத் தழுவி' என்றதை, "அதிகோபமொடுகூடநினையா, ஆடலைமறந் துமைமடந்தை யரனைத் தனமுறத்தழுவினாள்" என்றாற்போலக் கொள்க. ஊறிய நறவு - (பாளைமுதலியவற்றில்) சுரந்த மது வென்றுமாம்; நாட்படுதலால் முதிர்ந்து காரமேறும்படி மூங்கிற்குழலில்வார்த்தும் பூமியிற்புதைத்துவைத்தும் முற்றச்செய்யப்பட்ட மது வெனினுமாம். இட்டுநீத்த=நீத்திட்ட: விகுதிபிரித்துக்கூட்டல்.

[அக்காலத்துத் தேவர்முதலியோர் மலர்முதலியவற்றைத் தூவி விடைகொடுக்க, அநுமான் கடல்கடந்துமாறு விரைதல்.]

௧௯. இத்திறநிகழும்வேலையிமையவர்முனிவர்மற்றை
முத்திறத்துலகத்தாருமுறைமுறைவிரைவின்மொய்த்தார்
தொத்துறுமலருஞ்சாந்துஞ்சுண்ணமுமணியுந்தூவி
வித்தகசென்றீயென்றார்வீரனும்விரைவதானான்.

(இ - ள்.) இ திறம் நிகழும் வேலை - (அநுமானது அடிகள் அழுத்துவதனால்) இவ்வாறாகப் பலவகை நிகழ்ச்சிகள் தோன்றிய சமயத்திலே,— இமையவர் - தேவர்களும், முனிவர் - இருடிகளும், மற்றை முத் திறத்து உலகத்தாரும் - மற்றும் மூவுலகத்திலுள்ள பெரியோர்களும், முறை முறை விரைவின் மொய்த்தார் - வரிசைவரிசையாக விரைந்துவந்து (அநுமானை) நெருங்கியவர்களாய்,— தொத்து உறு மலரும் சாந்தும் சுண்ணமும் மணியும் தூவி - கொத்துக் கொத்தாகவுள்ள மலர்களையும் சந்தனத்தையும் வாசனைப்பொடிகளையும் இரத்தினங்களையும் (அவ்வநுமான்மீது) வாரியிறைத்து,— 'வித்தக - சதுரப்பாடுடையவனே! சென்றீ - போய்வருவாயாக,' என்றார் - என்று (அநுமானுக்கு) விடைகொடுத்தார்கள்; வீரனும் - அநுமானும், விரைவது ஆனான் - (கடலைக் கடந்துசெல்லுமாறு) மனத்தில் விரைவுகொள்பவனானான்; (எ - று.)

இமையவர்முதலியோர் அநுமானைநோக்கி 'வித்தக சென்றீ' என்றத னால், 'நீ சதுரப்பாடுடையவனாதலால், இக்கடல் நமக்கு எம்மாத்திர மென்று அலக்ஷ்யமாகக்கருதாமல் ஜாக்கிரதையுடன் செல்' என்று கூறினாராயிற்று; ஆகவே, இங்கு அநுமானை 'வித்தக' என்று விளித்தது - இவ்வாறு ஒருகருத் தைக் கொண்ட தாகுதலால், கருத்துடையடைகொளியணியின்பாற்படும்; இதனை, வடநூலார் பரிகராங்குராலங்கார மென்பர். இனி, வித்தகனென்ற சொல்லுக்குத் தூதனெனவும் ஒருபொருளுள்ளதனால், இராமதூதனே! என விளித்தாருமாம்; நவவியாகரணபண்டிதனே யென்றும் பொருள்படும். இமை யவர்முதலியோர் மலர்முதலியவற்றைத் தூவியது, தங்களுடைய உள்ளக் கிளர்ச்சியாலும், அநுமானைப் பின்னும் உற்சாக மூட்டுவதற்காகவு மென்க. மணி - முத்துமாம்.

சுண்ணம் - சூர்ண மென்ற வடசொல்லின் சிதைவு. சென்றீ - 'செல்' என்ற முன்னிலையேவலொருமைமுற்றுச்சொல் நகரவெழுத்துப்பேற்றையும், முன்னிலையசைச்சொல்லாகிய ஈகாரத்தையும் பெற்றுவந்தது; "முன்னிலை முன்னர் ஈயும் ஏயும், அந்நிலைமரபின் மெய்யூர்ந்துவருமே" என்பது நன்னூல். 'வித்தகசேறியென்றார்' என்றும் பாடமுண்டு: பொருள் இதுவே. விரைவ தானான் - விரைதலையுடையவனானான். (கங)

[நம்பர்கள் அநுமானைநோக்கி 'ஜாக்கிரதையாகச் செல்லவேண்டும்' என்றல்.]

கச. குறுமுனிகுடித்தவேலைகுப்புறுங்கொள்கைத்தாதல்
வெறுவிதுவிசயம்வைகும்விலங்கற்றோளலங்கல்வீர
சிறுவிதென்றிகழற்பாலையல்லைநீசேறியென்றா
வுறுவலித்துணைவர்சொன்னாரொருப்பட்டான்பொருப்பையொப்பான்.

(இ - ள்.) (அப்போது), உறு வலி துணைவர் - மிக்கவலிமையையுடைய வரான (அநுமானது) சினேகிதர்கள்,—(அவனைநோக்கி),—"விசயம் வைகும் - வெற்றிதங்கியுள்ளனவும், விலங்கல் - மலைபோன்றனவுமான, தோள் - தோள் களையும், அலங்கல் - வெற்றிமாலையையுமுடைய, வீர - வீரனே!—'குறுமுனி குடித்த - குறுகியவடிவமுள்ளவரான அகத்தியமுனிவர் (தமது அகங்கையினு லெடுத்துப்) பருகிய, வேலை - இந்தச்சமுத்திரம், குப்புறும் கொள்கைத்து ஆதல் - கடக்கவேண்டிய எண்ணத்திற்கு விஷயமாயிருப்பது, வெறுவிது - மிகவும்பிரயோசனமற்றது; (கடலைக் கடத்தலாகிய இக்காரியம்), சிறுவிது - (எமதுதிறத்துக்கு) மிகவும்எளியது', என்று—, இகழல் பாலை அல்லை - இகழத் தகாதவனாய் [அலக்ஷ்யமாகநினையாமல்], நீ—, சேறி - (கருத்துடன்) செல்வா யாக", என்னா - என்று, சொன்னார்—; பொருப்பை ஒப்பான் - மலையையொத் தவனான அநுமான், ஒருப்பட்டான் - (அதற்கு) உடன்பட்டவனானான்; (எ - று.)

அப்போது உடனிருந்த ஜாம்பவான் முதலியோர் அநுமானைநோக்கி 'வீரனே! முன்பு குறுமுனிவராகிய அகத்தியர் தமதுகையாலெடுத்துப்பருகிய இக்கடல், மிகப்பெருவடிவமுடையனக்கு எம்மாத்திரம்? இதனைக்கடப்பது

எனது பெருமைக்கு இழுக்காகுமே யன்றி, இதனாற் சிறிதேனும் ஏற்றமுண்டாகுமோ? என்று அலக்ஷ்யங்கொள்ளாமல், போகின்ற காரியம் பெரியதாகையால் அதனிடத்திற் கருத்துடனிருந்து அக்காரியத்தை முடித்துக்கொண்டு வா' என்றுகூறி விடையளிக்க, அநுமானும் அதற்கு உடன்பட்டன னென்பதாம். 'குறுமுனிகுடித்த' என்ற அடைமொழி, அக்கடல் அவமதித்தற்கு உரியது என்ற கருத்தைக் கொண்டிருத்தலால், கருத்துடையடைமொழியணி; இங்கு அகத்தியனை வேறுபெயராற்கூறாது 'குறுமுனி' என்ற பெயராற் கூறியது, அக்கடலைக்குடித்தவரோ பெரியமுனிவருமல்லர்; பார்வைக்கு மிகச் சிறியதோற்றமுடையவ ரொருவ ரென்ற கருத்தைத் தருவது - கருத்துடையடைகொளியணி. பின்னேயுள்ள கருத்துடையடைமொழியணிக்கு, முன்னேயுள்ள கருத்துடையடைகொளியணி அங்கமாக நிற்றலால், இஃது - உறுப்புறுப்பிக்கலவையணியாம்; இதனை, வடநூலார் அங்காங்கிபாவஸங்கராலங்கார மென்பர் 'சிறிதிதென்று' என்று பாடமோதுவாருமுளர். விஜயம் - விசேஷஜயம்.

இனி, இச்செய்யுளில் மற்றொருபொருளும் தோன்றுவதாகக் கூறுவர்; அது வருமாறு:—'குறு முனி - சிறிய யானைக்கன்று போன்றவனான இராமபிரான், குடித்து - (தனது ஆக்கினேயாஸ்திரத்தாற் கடலின்நீரை) வற்றச்செய்து, (அணைகட்டி), அவேலை - அந்தச்சமுத்திரத்தை, குப்புறும் - கடந்து (சீதையைமீட்கும்பொருட்டு உனது இலங்கைக்கு) வருவான்; கொள் - உனது கொள்கை [சீதையைக் கைக்கொள்ளலா மென்ற எண்ணம்], கைத்து ஆதல் - கைகூடுவதாவது, வெறுவிதே - அசாத்தியமான காரியமேயாம்; விசயம் வைகும் விலங்கல் - வெற்றிபொருந்திய கைலாசபர்வதத்தால், தோள் அலங்கல் - தோள் (நசுக்குண்டு) வருந்துதலையடைந்த, வீர - வீரனாகிய இராவணனே! சிறுவிது - (நீ பிறர்தாரத்தை விரும்பிக் கவர்ந்த இது) மிக்க இழிதொழிலாம்,' என்று—, இகழல் பாலை - (இராவணனைநோக்கி) இடித்துச்சொல்லி அவனை) இகழத்தக்கவனாகின்றாய் [இகழவேண்டு மென்றபடி]; நீ—, அல்லை - லோகமாதாவாகிய சீதையை, சேறி - அடைவாயாக,' என்று என்று, உறு வலி துணைவர் சொன்னார்—; (அதற்கு), பொருப்பையொப்பான் ஒருப்பட்டா னென்பதாம். முனி - யானைக்கன்றாதலை, "முனிக்குப் பொருகளிறு நீரூட்டும்" என்றவிடத்தும் காண்க; "முனியென்பது யானைக்கன்று முனிவன் வில் லகத்தி நாற்பேர்" என்பது நிகண்டு. இங்கு இராமனை வேறுபெயராற் குறியாது, 'குறுமுனி' என்ற பெயராற் கூறியது, முன்பு ஒரு குறுமுனிவனை அகத்தியனாற் பரிபவப்பட்டதுபோல இக்குறுமுனியினாலும் வலிமைதொலையு மென்று குறிப்பித்தற்காக வென்பர். இராவணன் குறுமுனியாற் பரிபவப்பட்டது - "தேவரெல்லாரும் கூடி, யாம் சேர இருத்தலின் மேருத் தாழ்ந்து தென்றிசை உயர்ந்தது; இதற்கு அகத்தியனாரே ஆண்டு இருத்தற்கு உரியர்' என்று அவரை வேண்டிக்கொள்ள, அவரும் தென்றிசைக்கண் போதுகின்றவர்...காடுகெடுத்து நாடாக்கிப் பொதியிலின்கண் இருந்து, இராவணனைக் கந்தருவத்தாற்பிணித்து இராக்கதரை ஆண்டு இயங்காமை விலக்கி" என்ற தொல்காப்பியப்பாயிரத்து நச்சினார்க்கினியருரையால்

னும், பத்துப்பாட்டுள் மதுரைக்காஞ்சியில் "தென்னவற்பெயரிய துன்னருந் துப்பிற், றொன்முதுகடவுள்" என்பதற்கு - 'இராவணனைத் தமிழ்நாட்டையாளாதபடி போக்கின கிட்டுதற்கரிய வலியினையுடைய பழமைமுதிர்ந்த அகத்தியன்' என்ற நச்சினார்க்கினியருரையாலும் விளங்கும். 'அல்லா' என்ற ஆவீறான வடசொல், அல்லையெனத் திரிந்தது; இரண்டாம்வேற்றுமையுருபு தொக்கது; அம்பா, அக்கா, அல்லா என்பன - வடமொழியில் மாத்ருவாசகம்.

[அநுமான் விசையாகப் பாயும்படி தனதுகால்களை அழுத்திவைத்தல்.]

௧௫. இலங்கையினளவிற்றன்றுவிவ்வுருவெடுத்ததோற்றம்
விலங்கவுமுளதன்றென் றுவிண்ணவர்வியந்துநோக்க
வலங்கலுழ்மார்பன் முன்றாழ்ந்தடித்துணையழுத்தலோடும்
பொலங்கெழுமலையுந்தாளும்பூதலம்புக்கமாதோ.

(இ - ள்.) அன்று - அக்காலத்தில்,—விண்ணவர் - தேவர்கள், 'எடுத்த இ உரு தோற்றம் - (இவன் இங்கு இப்பொழுது) கொண்டுள்ள இந்த உருவத்தின் காட்சியானது, இலங்கையின் அளவிற்று அன்று - இலங்கையளவையில்மாத்திரம் செல்வதற்காகவன்று; விலங்கவும் உளது - அதற்கு அப்பாலும் செல்வதற்காக ஏற்றுக்கொண்டதாம்,' என்று - என்று எண்ணி, வியந்து நோக்க - ஆச்சரியத்துடன் காணும்படி, (பேருருவத்தோடு எழுந்து நின்ற வனாய்),—அலங்கல் தாழ் மார்பன் - வெற்றிமாலை தொங்கப்பெற்ற மார்பையுடையவனான அநுமான், (கடலைக்கடக்கும்படி பாய்தற்காக), முன் தாழ்ந்து - முன்புறம் சாய்ந்து, அடி துணை அழுத்தலோடும் - (தனது) இரண்டுபாதங்களையும் பதியவைத்தவளவில்,—பொலம் கெழு மலையும் - பொன்மயமாக விளங்குகின்ற அம்மகேந்திரமலையும், தாளும் - (அதன்மேல் அழுத்திவைத்த அநுமானது) கால்களும், பூதலம் புக்க - பூமியிற்புதைந்தன; (எ - று.)—ஆல், மாது, ஓ - ஈற்றசைகள்.

'இவன் இத்துணைப்பெருவடிவமெடுத்தது, இலங்காபுரியளவையில் மாத்திரம் போவதற்கு அன்று; அதற்கு அப்பாலும் இவன் செல்லவேண்டியிருக்கின்றதுபோலும்' என்று தனதுபேருருவத்தைக் கண்டு தேவர்கள் வியந்து கூறுமாறு பெருவடிவமெடுத்த அநுமான் தாவிப்பாய்ந்து கடலைக்கடக்க வேணுமென்ற கருத்தினால் முன்தாழ்ந்து கால்களை யழுத்தவே, அதனைத் தாங்கமாட்டாத அம்மகேந்திரமலை பூமியில் அழுந்திப்போக, அதன்மீதிருந்த அநுமானது கால்களும் உடனழுந்தின வென்பதாம்; உடனிலை நவிற்சியணி; இது, வடமொழியில் ஸஹோக்தி யெனப்படும். 'விலங்கவுமுளதென்றென்று' என்ற பாடம் சிறக்கும். இளமையில் அநுமானுக்கு இந்திரன் வரமளித்தபோது பொற்றாமரைமலர்மாலையொன்றை யளித்தனனென்ன வரலாறு உள்ளதனால், 'அலங்கல்' என்றது அதனைக்குறித்ததாகவும் கொள்ளலாம். 'மார்பமுன்றாழ்ந்து' என்பதும் பாடம். (௧௫)

[அநுமான் கடல்கடக்க மேலெழுதல்.]

௧௬. வால்விசைத்தெடுத்துவன்றாண்மடக்கிமார்பொடுக்கிமானத்
தோள்விசைத்துணைகள்பொங்கக்கழுத்தினைச்சுருக்கித்தூண்டு

கால்விசைத்தடக்கைநீட்டிக்கட்புலங்கதுவாவண்ண
மேல்விசைத்தெழுந்தானுச்சிவிரிஞ்சனூடுரிஞ்சவீரன்.

(இ - ள்.) வீரன் - அநுமான்,—வால் விசைத்து எடுத்து - (தனது) வாலை வேகமாக உயரத்தூக்கியும், வல் தாள் மடக்கி - வலிமையுள்ள (தனது) கால்களை மடக்கியும், மார்பு ஒடுக்கி - மார்பைக் குறுக்கியும், மானம் விசை தோள் துணைகள் பொங்க - பெருமையையுடைய விரைவுள்ள தோள்களிரண்டும் பூரித்து உயருமாறு, கழுத்தினை சுருக்கி - கழுத்தைச் சுருக்கிக்கொண்டும், தூண்டும் கால் விசை தட கை நீட்டி - (தனது பாய்ச்சலுக்கு உதவியாய்த்) தூண்டுகின்ற காற்றின்வேகத்தைக் கொண்ட (தனது) பெரியகைகளை முன்னே நீளச்செலுத்தியும், உச்சி விரிஞ்சன் நாடு உரிஞ்ச - (தனது) தலை பிரமலோகத்தை அளாவ, கண்புலம் கதுவா வண்ணம் - (பிறர்) கண்களினாற் காணமுடியாதவாறு [மிக்கவுயரத்தில்], விசைத்து மேல் எழுந்தான் - வேகங்கொண்டு உயரஎழும்பினான்; (எ - று.)

அப்பொழுது அநுமான் வாலை உயரவெடுத்துக் கால்களை மடக்கி மார்பையொடுக்கித் தோள்களையுயர்த்திக் கழுத்தினைச்சுருக்கி இரண்டுகைகளையும் முன்நீட்டியபடியே உயரவெழுந்தனனென்பதாம். உயரத்தாவியெழுந்து செல்லும்போது நிகழுந் தன்மைகளை உள்ளபடி இனிமையாகக் கூறியிருத்தலால், இச்செய்யுள் - தன்மைநவிற்சியணியாம். கழுத்தினைத் தாழ்த்துக்கொள்ளும்போது தோள் உயர்தலும், அவ்வாறு தோள் உயர்கையில் மார்பு ஒடுங்குதலும் இயற்கை. தாவிப்பாயும்பொழுது வாலிலும் தோளிலும் விசையை அதிகமாகச்செலுத்தவேண்டியிருத்தலால், 'வால்விசைத்தெடுத்து' என்றும், 'விசைத்தோள்துணைகள்' என்றும் கூறினார். வால் - வாலம் என்ற வடசொல்லின் விகாரம். விரிஞ்சன் - (அன்னப்) பறவையால் தாங்கப்படுபவனென்றும், படைத்தற்கடவு ளென்றும் பொருள்படும் காரணக்குறியாகிய வடசொல். கண் புலம் - கண்ணாகிய இந்திரிய மென இருபெயரொட்டு. 'மடக்கிமார்பொடுக்கி', 'விரிஞ்சனூடுரிஞ்ச'—பிராசம். இரண்டாமடியில் 'தோள்விசை' என வந்தது, இனவெதுகை. 'தோள்விசைத்துணைகள்' என்று பாடமோதி, வேறு உரைப்பாருமுளர். 'கட்புலங் கதுவாவண்ணம் மேல் விசைத்து' என்பதற்கு - கண்களின காட்சிப்புலனுக்கு இலக்காகாதபடி அதிகமான வேகத்தைக்கொண்டு என்றலும் அமையும்; காண்பவர்களது கண்பார்வை எவ்வளவுதூரம் செல்லுமோ அதனைக் கடந்து செல்லுமாறு விரைவுகொண்டு என்க. மேல் கூக - ஆந் செய்யுளில் "அவன்கட்புலம்பிற்பட முந்துபோனான்" என வருவதும் காண்க. கதுவுதல் - பற்றுதல்: உரிஞ்சுதல் - உராய்தல். 'தூண்டிக், கால்விசைத்திமைப்பில்லோர்க்கும்' என்பது, பாடாந்தரம். (கக)

[அநுமான் சென்றவேகத்தால் அம்மலையினின்று மரம்முதலியனவும் உடன் எழுதல்.]

கஉ. ஆயவனெழுதலோடுமரும்பணைமரங்கடாமும்
வேயுயர்குன்றும்வென்றிவேழமும்பிறவுமெல்லா

நாயகன் பணியிதென்றுகளிர்கடலிலங்கைதாழும்
பாய்வனவென்னவானம்படர்ந்தனவெழுவமான.

(இ - ள்.) ஆயவன் எழுதலோடும் - இங்ஙனமாகிய அநுமான் உயர எழும்பியவுடனே,— அரும் பணை மரங்கள் தாமும் - அருமையான பருத்த கிளைகளையுடைய மரங்களும், வேய் உயர் குன்றும் - மூங்கில்கள் ஓங்கிவளரப்பெற்ற அம்மலையின் பெருங்கற்களும், வென்றி வேழமும் - (அம்மலையில்வாழ்கிற) வெல்லுந்தன்மையையுடைய யானைகளும், பிறவும் - மற்றுமுள்ள பொருள்களும், எல்லாம் - ஆகிய இவைகளெல்லாம்,—'இது நாயகன் பணி என்று - இவ்வாறு கடலைக்கடந்து இலங்கைக்குச்செல்லுதல் இராமபிரானுடைய கட்டளையாகுமென்று எண்ணி, களிர் கடல் இலங்கை தாழும் எழுவ மான பாய்வன - குளிர்ந்த கடல் சூழ்ந்துள்ள இலங்கையைநோக்கித் தாழும் எழுந்துசெல்வதையொக்கும்படி செல்லுகின்றன,' என்ன - என்று (காண்பவர்) சொல்லும்படி, வானம் படர்ந்தன - ஆகாயத்தை நோக்கித் தாவிச்செல்வனவாயின ; (எ - று.)

அநுமான்பாய்ந்துசென்ற விசையினால் மரங்களும் மலைப்பாறைகளும் அங்குள்ள யானை முதலிய பிறபிராணிகளும் உடனெழுந்து வானத்திற்படர்ந்தது, இராமபிரானதுகட்டளையைநன்குமதித்துத் தாமும் இலங்கையைநோக்கியெழுவதை யொத்திருந்தது என்பதாம். அநுமான் சென்ற விசையினால் மரங்கள் முதலியவை மேற்சென்றதற்கு, இராமபிரானது கட்டளையை நன்கு மதித்து மேலெழுந்ததாகக் காரணங் கற்பித்துக் கூறியது - ஏதுத்தற்குறிப்பேற்றவணியாம்.

கிளைகட்கு அருமை - இவ்வளவு பருமையும் நீட்சியு முடைய கிளைகள் வேறெங்கும் கிடைத்திடாமை; எட்டுதற்கருமையுமாம். நாயகன் - சராசரப் பொருள்கட்கெல்லாம் தலைவன். இது நாயகன்பணி என்று - இது இராம காரியமென்று அறிந்து என்றலுமாம். எழுவ - எழுவதுஎன்பதன் தொகுத்தல்; இரண்டனுருபு தொக்கது. மான - தற்குறிப்பேற்றவுருபு. மூன்றாமடியில் 'தாழும்' என்ற உம்மை - இறந்தது தழுவிய எச்சம் ; மற்றவை - எண்ணுப் பொருளன. 'பாய்வனவென்னவானம் படர்ந்தன வழுவமான' என்ற பாடத்துக்கு - பாய்வனபோல வானத்திற்சென்றனவாய்க் கடலில்வீழ்ந்திட்டன வென்று பொருளாம் ; அழுவம் ஆன எனப் பிரிக்க. (கஎ)

[அவ்வாறு அநுமானுடன் எழுந்த மரம்முதலியன கடலில்வீழ்தல்.]

கஅ. இசையுடையண்ணல்சென்றவேகத்தாலெழுந்தகுன்றும்
பசையுடைமரனுமாவும்பல்லுயிர்க்குலமும்வல்லே
திசையுறச்சென்றுசென்றுசெறிகடலிலங்கைசேரும்
விசையிலவாகத்தள்ளிவீழ்ந்தனவென்னவீழ்ந்த.

(இ - ள்.) இசை உடை அண்ணல் - கீர்த்திபெற்ற பெரியவனான அநுமான், சென்ற - தாவிப்போன, வேகத்தால்—, எழுந்த - உடனெழும்பிய, குன்றும் - மலைப்பாறைகளும், பசை உடை மரனும் - பசுமையையுடைய மரங்

களும், மாவும் - மிருகங்களும், பல் உயிர் குலமும் - மற்றும்பலவகைப்பட்ட பிராணிவர்க்கங்களும்,—வல்லே - விரைவாக, திசை உற சென்று சென்று - (அநுமான் செல்கின்ற) அத்தெற்குத்திக்கிற் பொருந்தும்படி போய்ப்போய், கடல் செறி இலங்கை சேரும் விசை இல ஆக - கடலினாற் சூழப்பட்ட இலங்கையை யடைவதற்கு வேண்டிய வேக மில்லாதனவாய், தள்ளி வீழ்ந்தன என்ன - தள்ளப்பட்டுக் கீழ்விழுந்தன போல, வீழ்ந்த - (கடலில் ஆங்காங்கு) விழுந்திட்டன; (எ - று.)

அநுமான்சென்றவிசையால் உடனெழுந்துசென்ற குன்று முதலான வை, அநுமானைப்போல இலங்கைசேரும் விசையில்லாமற் பிறரால் தள்ளப் பட்டனவோ வென்னும்படி இடையிலேயே கடலில்விழுந்திட்டன வென்க; இதுவும் - ஏதுத்தற்குறிப்பேற்றவணியே. விசையிலவாக வீழ்ந்தமைக்குத் தள்ளப்பட்டமையைக் காரணமாகக் கூறியமை காண்க. அண்ணல் - ஆண் பாற்சிறப்புப்பெயர். 'குன்று' என்றது - இங்கு, அம்மகேந்திரமலையின் பெருங்கற்களை; கீழ்ச்செய்யுளிலும் இவ்வாறே; "கல்லும்" என அடுத்தகவியில் வருதல் காண்க. இவைகளெல்லாம் விழுந்தது கடலி லென்பது, மேல் "புணரிபொங்கத் தூவின" என்பதனாலும் அமையும். சென்று சென்று - அடுக்கு, பன்மைபற்றியது. 'பல்லுயிர்க்குலம்' என்றது, அம்மலையில்வாழ்ந்த ஊர்வன முதலியவற்றை. 'தள்ளி வீழ்வன வென்ன' என்ற பாடத்துக்கு - தடுமாறி விழுவன போல வென்று பொருளாம். பசை - 'ஐ' விகுதி பெற்ற பண்புப்பெயராய்ப் பசுமையையுணர்த்தும்; பிசினுமாம். 'தாழ்ந்துவீழ்ந்தன' என்றும் பாடமுண்டு. (௧௮)

[அவ்வாறு கடலில்விழுந்த பிராணிகள்முதலியவற்றின் வருணனை.]

௧௯. மாவொடுமரனுங்கல்லும்வல்லியுமியாவுமற்றும்
போவதுபுரிந்தவீரன்விசையினாற்புணரிபொங்கத்
தூவினகீழுமேலுந்தூர்த்தனசுருதியன்ன
சேவகன்சீற்முன்னஞ்சேதுவுந்தெரிந்தமாதோ.

(இ - ள்.) போவது புரிந்த வீரன் விசையினால் - மேலெழுந்து செல்லத் தொடங்கிய அநுமானது வேகத்தினால், (அம்மலையின்மீ திருந்து உடன் செல்லத்தொடங்கிய), மாவொடு - மிருகங்களும், மரனும் - மரங்களும், கல்லும் - கற்களும், வல்லியும் - கொடிகளும், மற்றும் யாவும் - மற்றுமுள்ளன வான எல்லாப்பொருள்களும், புணரி பொங்க - சமுத்திரம் பொங்கும்படி, தூவின - விழுந்தனவாய், மேலும் கீழும் தூர்த்தன - (அச்சமுத்திரத்தை) மேற் புறத்திலும் கீழ்ப்புறத்திலும் தூரும்படிசெய்து, சுருதி அன்ன சேவகன் சீற்ற முன்னம் சேதுவும் தெரிந்த - வேதங்களையொத்த வில்வீரனாகிய இராம பிரான் (வந்து) கோபித்தற்குமுன்னமே யுண்டானதொரு சேதுவாகவும் காணப்பட்டன; (எ - று.)—மாது, ஓ - ஈற்றசை.

கீழ்க்கூறியபடி வரிசையாய் மரங்கள்முதலியவை விழுந்து கடலைத் தூர்க்கவே, இராமபிரான் சீறுவதற்கு முன்னமே சேது உண்டானாற்போலக் காணப்பட்டதென்பதாம். மரங்கள்முதலியவை விழுந்துகிடத்தலை, சேது

வுண்டானதாகக் கற்பித்துக்கூறியது - தற்குறிப்பேற்றவணி. இனி உண்டாகப்போகின்ற அந்தச்சேது இராமபிரான் சீறியபின்பு தோன்றுவது; இதுவோ சீறுமலிருக்கையிலேயே தோன்றியது என இவ்விரண்டற்கும் வேறுபாடு தோன்றக் கூறியது, வேற்றுமையணியின்பாற்படும்: இதனை, வடநூலார் வ்யதிரேகாலங்கார மென்பர். இனி நிகழப்போகின்ற சேதுவை அதற்கு முன்னமே நிகழ்ந்த இச்செயற்கு உவமையென்று கற்பித்ததாகக் கொள்வது, காலபேதவழுவாகாது: பிற்காலத்தவரான கவியினது கூற்றாதலி னென்க. சம்பூராமாயணத்தில் "அநுமான்சென்ற விசைபால் மரம் முதலியன கடலில் ஆங்காங்கு விழுந்திருப்பவை, இராமபிரான் இனிக்கட்டப்போகின்ற சேதுவுக்காக நூல்பிடிப்பதற்கு நாட்டிய முளைகள் போலும்" என இச்செய்யுளினும் சிறிது கருத்து வேறுபடக் கூறியுள்ளது.

இராமபிரான் சீறிச் சேதுகட்டிய வரலாறு:—கடல்கடந்து சென்கின்ற அநுமான் சீதையைக் கண்டு மீண்டுவந்து செய்திகூற, உடனே இராமபிரான் பெரிய வானரசேனையைச் சித்தப்படுத்திக்கொண்டு புறப்பட்டுத் தென்கடற்கரைசேர்ந்து ஏழுநாள் உபவாஸமாகக்கிடந்து வேண்டினவிடத்தும் வருணன் அப்பிரஸந்நனுனதனால் ஆக்கினேயாஸ்திரத்தைக்கொண்டு கடலையெரித்திடுமாறு தொடங்க, அஞ்சிச் சரணமடைந்த வருணன் சொல்லியபடி வாநரங்களைக்கொண்டு மலைகளைக்கொணர்ந்து அணைகட்டுவித்தன னென்பதாம்.

'வீரன் விசையினுற் போவது புரிந்த' என்று எடுத்து 'மா' முதலியவற்றோடு இயைத்தலுமாம். சுருதி = ஶ்ருதி; எழுதாக்கிளவியாய்க் குருசிஷ்ய கிரமத்திலேயே கேள்விமூலமாய் வருவதென வேதத்துக்குக் காரணக்குறி. சுருதியன்ன சேவகன் - வேதங்களைப்போலவே நித்தியனான வீரன்; ஒருவராலுஞ்செய்யப்படாது எப்பொழுதும் ஒருபடிப்பட்டிருக்கும் வேதம், பரப்பிரஹ்மத்தின் சொரூபமான இராமபிரானுக்கு உவமை. சேவகனென்பது வீரனென்னும் பொருளதாதலை, "சார்ங்கவிற்சேவகனே" எனப் பெரியார்பாசுரத்திலும் காண்க. இனி, 'சுருதியன்ன சேவகன்' என்பது அநுமானையே புணர்த்துவதாகக்கொண்டு, இராமபிரான் சீறியபின் சேது தோன்றிற்று; இராமதூதனான அநுமான் சீறுவதற்குமுன்னமே சேது தோன்றிற்று என நயம்படக் கருத்துக்கூறினுமாம்: பெரியதிருவடியை வேதச்சொரூபியெனக் கூறியிருத்தலால், சிறியதிருவடியாகிய அநுமானை 'சுருதியன்ன சேவகன்' என்னத்தகும்: "சுருதியன்ன மாருதி" என்பர் மேல் கிங்கரர்வதைப்படலத்தும். சேதுவும், உம்மை - உயர்வுசிறப்பு; இறந்ததுதழுவிய எச்சமுமாம். சேது - ஸேது: வடசொல்; அணை. (௧௧)

[தனது விரையினுற் கடல்கிழிய, அநுமான் நாகலோகத்தைக் காணுதல்.]

௨0. கிண்டதுவேலைநன்னீர்கீழுறக்கிடந்தநாகர்
வேண்டியவுலகமெங்கும்வெளிப்படமணிகண்மின்ன
வாண்டகையதனைநோக்கியாவிலுக்கரசர்வாழ்வுங்
காண்டகுதவத்தனானேனியானெனக்கருத்துட்கொண்டான்.

(இ - ள்.) வேலை நல் நீர் - சமுத்திரத்தின் மிக்கநீரானது, கீண்டது - (அநுமான்சென்ற விசையினாற்) கிழிபட்டது; (அதனால்), கீழ் உற கிடந்த - (அக்கடலின்) கீழாகப் பொருந்தியுள்ள, நாகர் வேண்டிய உலகம் எங்கும் - நாகசாதியார் விரும்பிவாழ்கின்ற பாதாளலோகம்முழுவதும், வெளிப்பட - வெளிப்பட்டுத்தோன்றவும், மணிகள் மின்ன - (அந்நாகங்களின் முடிமீதுள்ள) மாணிக்கங்கள் (அங்குப்) பிரகாசிக்கவும், ஆண்தகை - ஆண்மைக்குணமுள்ளவனான அநுமான், அதனை நோக்கி - அவ்விடத்தைப்பார்த்து,—'யான்—,— அரவினுக்கு அரசர் வாழ்வும் - சர்ப்பங்களுட்சிறந்தவர்கள் வசிக்கின்ற நாகலோகத்தையும், காண்தகு - பார்க்கத்தக்க, தவத்தன் ஆனேன் - புண்ணியத்தையுடையவனாய்விட்டேன்', என - என்று, கருத்துள் கொண்டான் - மனத்தி லெண்ணினான் ; (எ - று.)

அநுமான், தான்பாய்கின்ற விசையினாலே அந்தச்சமுத்திரம் கிழிபட்டுப் பாதாளலோகமும் வெளிப்பட்டு மாணிக்கங்களும் விளங்கக் கண்டு 'நாம் இந்த நாகலோகத்தையும் காணக் கிடைத்தது என்ன பாக்கியம் !' என மகிழ்ந்தனனென்பதாம். அநுமான் நாகலோகத்தை இன்னவாறு கண்டனனென்பதை 'கீண்டதுவேலைநன்னீர்' என்ற வாக்கியம் விளக்கிநிற்பது - தொடர்நிலைச் செய்யுட்குறியணியாம் ; இது, வடமொழியில் காவ்யலிங்க மெனப்படும்.

நாகர் - படமும் வாலு முடையராய் மனிதவடிவமும் தெய்வப்பிறப்புமாய்ப் பாதாளலோகத்தில் வசிக்கின்ற சர்ப்பசாதியார். வாழ்வு - வாழுமிடத்துக்குத் தொழிலாகுபெயர். சுவர்க்கலோகத்தைக்கண்டதுமாத்திரமன்றியென்ற பொருளைத் தருதலால், 'நாகர்வாழ்வும்' என்ற இடத்து, உம்மை - இறந்ததுதழுவிய எச்சப்பொருளது. காண் - முதனிலைத்தொழிற்பெயர் ; நான்கனுருபுத்தொகை. (உ0)

[அப்போது அநுமானைக் கண்ட நாகசாதியாரின் அச்சம்.]

உக. வெய்தின்வான்சிறையினானீர்வேலையைக்கிழியவீசி
நொய்தினமுதங்கொண்டநோன்மையேநுவலுநாக
ருய்துநாமென்பதென்னேயுறுவலிக்கலுழனூழி
னெய்தினனுமென்றஞ்சிமறுக்கமுற்றிரியல்போனார்.

(இ - ள்.) (கருடன்), வான் சிறையினால் - (தனது) பெரிய இறகுகளினால், நீர் வேலையை - ஜலமயமான சமுத்திரத்தை, கிழிய வெய்தின் வீசி - பிளவுபடும்படி பலமாக மோதி, (பின்பு அவ்வழியாகவே பாதாளலோகத்திற்கு), ஆர் அமுதம் நொய்தின் கொண்ட - கிடைத்தற்கு அருமையான தேவாமிருதத்தை விரைவிற் கவர்ந்துகொண்டுவந்த, நோன்மையே - வலிமையையே, நுவலும் - (அச்சத்தால் எப்பொழுதும்) பாராட்டிக்கூறுகிற, நாகர்—, (சமுத்திரஜலங்கிழியும்படி அநுமான் வேகமாகச்செல்லுகையில் அவனை நோக்கி),— 'உறு வலி கலுழன் - மிக்கவலிமையுள்ள (நமது பகைவனாகிய) கருடன், ஊழின் - (நமது) விதியினால், எய்தினன் ஆம் - வந்தவனாவான் ; (இனி), நாம் உய்தும் என்பது என்னே - நாம் பிழைத்திருப்போ மென்பதுதான் என்ன

நிச்சயம்?' என்று - என்றுசொல்லி, அஞ்சி - பயந்து, மறுக்கம் உற்று - மனக் கலக்கங்கொண்டு, இரியல் போனார் - (ஓரிடத்தில் நிலைத்தலின்றிச்) சிதறி யோடினார்கள் ; (எ - று.)

அநுமான் கடல்நீர்பிளவுபடும்படி விரைந்து ஓடிச்செல்வதைக் கண்டு, நாகசாதியார், 'முன்பு கருடன் கடல்கிழியும்படி சிறகடித்து அமிருதத்தைக் கொணர்ந்து அடிமையினின்று நீங்கி நம்மை நமது நா அறும்படி செய்து கொல்லத்தொடங்கினனே! அவனேவருகின்றதுபோலக் காண்கின்றதே! இனி எப்படி நாம் பிழைப்போம்?' என்று நடுங்கி நான்குபக்கங்களிலும் சிதறியோடினார்க ளென்பதாம் அநுமானைக்கண்டு கருடனென்று அஞ்சியதாகக் கூறியது - மயக்கவணி : வடநூலார், ப்ராந்திமதலங்கார மென்பர். 'வெய்துநின் அமுதங்கொண்ட நோன்மையே நுவலும்' என்ற அடைமொழி அந்நாகர் இரியல்போதற்கு உரியவரே யென்ற கருத்தைத் தெரிவிப்பது - கருத்துடையடை மொழியணி.

உய்தும் - இங்கு எதிர்காலங்காட்டும் 'தும்' விகுதிபெற்ற உளப்பாட்டுத்தன்மைப்பன்மைமுற்று. என்னே, ஏகாரம் - இரக்கம். கலுழன் - கருடன் என்ற வடசொல்லின் விகாரம். எய்தினன் - பெயர் ஆம் ஆகும், ஈற்று உயிர்மெய் சென்ற செய்யுமென்முற்று, இங்கு ஆண்பாலுக்கு வந்தது. மறுக்கம் - 'மறுகு' என்ற முதனிலையடியாப் பிறந்த தொழிற்பெயர்.

'சிறையிறகால் நீர்வேலையைக் கிழியவீசி நொய்தி னமுதங்கொண்ட கதை:—காசியபமுனிவரது மனைவியராகிய விநதைக்கும் கத்துருவுக்கும் வானத்திற் சென்ற உச்சைச்சிரவ மென்ற தேவலோகத்துக் குதிரையின் வாலினது நிறத்தைப்பற்றி யுண்டான விவாதத்தில் கத்துருவென்பவள் அக்குதிரையின்வாலைச் சுற்றிக்கொண்டு கருநிறமாகத் தோன்றுவிக்குமாறு தனது புதல்வராகிய கருநாகங்களை யேவிப் பந்தயத்தை வென்றனளாக, அதனால் அக்கத்துருவுக்கு அடிமையாய்விட்ட விநதையும் அவளது புதல்வனான கருடனும் கத்துருவையும் அவளது புதல்வரான நாகங்களையும் சுமந்து செல்லவேண்டிநேரிட, அதுகண்ட கருடன், அவ்வடிமையினின்று நீங்குமாறு அந்நாகங்களின்மொழிப்படியே அமிருதத்தைக் கொணருமாறு அங்குநின்று தேவலோகத்துக்குச்சென்று தேவர்களுடன்பொருது எல்லாரையும் வென்ற பொழுது, தேவேந்திரனது வேண்டுகோளினால் அமிருதத்தை மீட்கும் உபாயத்தை அவனுக்குக்கூறி, தான் சர்ப்பங்களையுண்ணுமாறு அத்தேவேந்திரனிடத்தினின்று வரமும் பெற்று, அங்குநின்று அமிருதத்தை யெடுத்து வந்து பாதாளலோகத்தையடைந்து அமிருதத்தைத் தருப்பையின்மீது அந்நாகங்களின்முன்னர் வைத்திட்டுத் தமது அடிமைத்தன்மையை நீக்கிக்கொண்டு அவர்களையெல்லாம் அமிருதத்தையுண்ணுதற்காக ஸ்நாநஞ்செய்து வரும்படி தந்திரமாகச் சொல்ல, அந்நாகங்கள் முழுகுவதற்குப் போயிருக்கையில், கருடனதுமொழியின்படியே தேவேந்திரன் அங்குவந்து அமிருதத்தையெடுத்துச் சென்றுவிடவே, முழுகச்சென்ற நாகங்கள் விரைந்துவந்துபார்த்து அமிருதமில்லாமையைக் கண்டு வருத்தத்தோடு அது வைத்திருந்த இடத்தை நக்கிய

தனால் அத்தருப்பை அவர்களது நாவை அறுத்துவிட, அவர்கள் பிளவுபட்ட நாவையுடையராய்க் கருடனது உபாயத்தை நினைந்து அச்சமும் நாணமுமுற்றுப் பெருந்துயரமு மடைந்தன ரென்பதாம். (உக)

[அநுமான் சென்ற விசையினால், கடல்நீர் இலங்கையில் மோதுதல்.]

உஉ. துள்ளியமகரமீன்கடிப்பறச்சுறவுதூங்க
வொள்ளியபனைமீன்றுஞ்சுந்திவலையவூழிக்காலின்
வள்ளுகிர்வீரன்செல்லும்விசைபொறாமறுகிவாரி
தள்ளியதிரைகண்முந்துற்றிலங்கைமேற்றவழ்ந்தமாதோ.

(இ - ள்.) (அப்போது),— வள் உகிர் வீரன் ஊழி காலின் செல்லும் விசை பொறா - கூரிய நகங்களையுடைய வீரனான அநுமான் யுகாந்தகாலத்துப் பெருங்காற்றுப்போல விரைந்து செல்லுகின்ற வேகத்தைத் தாங்கமுடியாமல்,— துள்ளிய - (சிறிதும் அடங்காது) துள்ளிக்கொண்டிருந்த, மகரம் - முதலையும், மீன்கள் - சாதாரணமீன்களும், துடிப்பு அற - (மரணவேதனையினால்) துள்ளுதல் ஒழியவும், சுறவு - சுறாமீன்கள், தூங்க - (ஓரிடத்தில்நிலையாது) ததகளிக்கவும், ஒள்ளிய பனைமீன் - ஒளியையுடைய பனைமீன்கள், துஞ்சும் - இறந்துபடுவதற்கு இடமான, திவலைய - நீர்த்துளிகளையுடைய, வாரி - சமுத்திரம், மறுகி - கலங்கி, தள்ளிய - வீசியடித்த, திரைகள் - அலைகள்,— முந்து உற்று - (அநுமானுக்கும்) முற்பட்டுச் சென்று, இலங்கைமேல் தவழ்ந்த - லங்காநகரத்தின்மேல் மோதின; (எ - று.)— மாது, ஓ - ஈற்றசை.

அநுமானது மிக்கவேகத்தா லெழுந்த காற்றினால், கடலினலைகள் அவனினும் முற்பட்டு இலங்கையில்மோதின என்பதாம். துடிப்பறத் தூங்கத் துஞ்சுந் திவலைய வாரி மறுகித்தள்ளிய திரைகள் முந்துற்றுத் தவழ்ந்த வென்க. 'தூங்க' என்பதற்கு - நிலைபெயரமாட்டாது ஓரிடத்திலேகிடக்க வென்றும், இறக்க வென்றும் பொருள்கொள்ளலாம். சுறவு - கடலிலேயே வாழ்வதொரு பெரிய மீனின்சாதி. பனைமீன் - யானைமீனெனப்படும் பெருமீன். இறத்தலைத் துஞ்சுதலென்பது, மங்கலவழக்கு; மீளவும் எழுந்திராத பெருந்தூக்கமென்க. துள்ளிய - துள்ளுமியல்பினவான வென்க. மேல் சுறவு பனைமீன் என வருதலால், 'மீன்' என்றது - அவையொழிந்த மீன்களைக் குறித்தது; அன்றி, மகரமாகிய மீனெனவுமாம். 'வீரன்செல்லும்விசைபொறா' என்றது - மகரமீன்கள் துடிப்பறுதல், சுறவுதூங்குதல், பனைமீன்துஞ்சுதல் என்பவற்றிற்கும், வாரிமறுகுதற்கும் காரணம். பொறா = பொறாமல்; ஈறுகெட்ட எதிர்மறைவினையெச்சம். 'துள்ளுறுமகரமீன்கடிப்புற', 'பனைமீன்றுஞ்ச', 'விசைபொர' என்றும் பாடம். (உஉ)

[இதுமுதல் ஒன்பது கவிகள் - ஆகாயத்திற் செல்லும் அநுமானது தோற்றத்தின் வருணனை.]

உ௩. இடுக்குறுபொருள்களொன்றுமெண்டிசைசுமந்தயானை
நடுக்குறவிசையிற்செல்லுநாயகன்றூதனாக
மெடுக்குறுகாலவன்காற்றிடியொடுமொடியவந்நாண்
முடுக்குறக்கடலிற்செல்லுமுத்தலைக்கிரியுமொத்தான்.

(இ - ள்.) (இவ்வாறு அநுமான் விசையாகச்செல்வதனால்), இடுக்குறு பொருள்கள் என் ஆம் - (உலகத்திலே) இடையிலுள்ள சராசரப்பொருள்கள் யாதாய்முடியுமோ? எண் திசை சுமந்த யானை - எட்டுத்திக்குக்களின் கடையெல்லையி லிருந்துகொண்டு (உலகத்தைத்) தாங்குகின்ற அஷ்டதிக்கஜங்களும், நடுக்கு உற - (அச்சத்தினால்) நடுக்கமடையும்படி, விசையின் செல்லும் - மிக்க வேகத்தோடு (ஆகாயமார்க்கமாகப்) போகின்ற, நாயகன் தூதன் - இராமபிரானது தூதனாகிய அநுமான்,—நாகம் எடுக்குறு காலம் - ஆதிசேஷனோடு பிரதிக்கினைசெய்த காலத்திலே, வல் காற்று - மிகக்கடுமையாக வீசிய வாயுவினால், இடியொடும் ஒடிய - (மேருகிரியின் மூன்றுசிகரங்கள்) பேரொலியோடு ஒடிந்துபோக, அ நாள் - அப்பொழுது, (அவ்வாயுவின் விசையினாலேயே), முடுக்குற கடலில் செல்லும் - வேகமாகத் தென்கடலிலே சென்று சேர்கின்ற, *மூத் தலைக் கிரியும் - திரிகூடபருவதத்தையும், ஒத்தான்—;(எ - று.)

அநுமான் சென்ற விசையினால் அஷ்டதிக்கஜங்களுமே கலங்கின வென்றால், மற்றைய சாதாரணமானபொருள்களின் நிலைமை யாதாகுமோ? இவ்வாறு மிக்கவிரைவுடன்செல்லும் அநுமான், முன்பு ஆதிசேஷனுடன் பிரதிஜ்ஞைசெய்து வாயுபகவான் விசையாகமோதியடிக்க ஒடிபட்டுத் தள்ளுண்ட மேருவின் சிகரமான திரிகூடபருவதம் தென்கடலைநோக்கிச் செல்வதுபோன் றிருந்தன னென்பதாம்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. 'அஷ்டதிக்கஜங்களுமே நடுங்கின வென்றால், மற்றைப்பொருள்களின் தன்மை எவ்வாறாய்த்தான் முடியுமோ?' என்று தண்டாபூபிகாநியாயம்படக் கூறியதனால், 'இடுக்குறுபொருள்களென்னாம் எண்டிசைசுமந்தயானை நடுக்குற விசையிற் செல்லும்' என்ற தொடர் - தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி; வடமொழியில் காவ்யார்த்தாபத்தி யெனப்படும்: [தண்டாபூபிகாநியாயமாவது - தடியை விழுங்கியமை கூறவே அதிற்கட்டியிருந்த பணியாரங்களை விழுங்கியமை தானே பெறப்படுதல் போல்வன.]

எண்திசை யானைகள்:—ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபௌமம், சுப்பிரதீகம் என்பன; இவை முறையே கிழக்குமுதலிய எட்டுத்திக்குக்களில் நின்று பூமியைத்தாங்குவன வென்று அறிக: (இவற்றிற்கு முறையே பிடியானைகள் - அபபிரமு, கபிலை, பிங்களை, அநுபமை, தாம்பிரபருணி, சுப்பிரதந்தி, அங்கனை, அஞ்சனாவதி யென்பன.) 'இடியொடும் ஒடிய' என்பதற்கு - இடித்தலினால்[முறித்தலினால்] ஒடிய எனக் கொள்ளினுமாம். நாகம் எடுக்குறு காலம் என்பதற்கு - ஆதிசேஷன் (தனது தலைகளைச் சுற்றே) தூக்கிய சமயத்தில் என்றும் பொருள் கூறலாம். 'நாகம் எடுக்குறு காலம் வல் காற்று இடியொடும்' என்பது - மேருமலையைப் பெயர்த்தற்கு உரிய காலத்துக் கடுங்காற்று மோதுதலினால் என்றும், ஆதிசேஷனைத் தலைபெயர்க்கத்தொடங்கிய வலிய காற்று வீசுதலினால் என்றும் பொருள்படும். மூத்தலை - 'த்ரிகூடம்' என்பதன் மொழிபெயர்ப்பு. அநுமானாகியமலைக்குத் தலையொன்றும் தோள்களிரண்டு மாகிய மூன்றையும் மூன்றுசிகர மெனக் கருதுக. 'காலம் என்பது தமிழ்ச்சொல்லேயாம்' எனக் கொண்டனர், நச்சினார்க்கினியர். (௨௩)

உச. கொட்புறுபுரவித்தெய்வக்கூர்நுதிக்குலிசத்தாற்குங்
கட்புலங்கதுவலாகாவேகத்தாற்கடலுமண்ணு
முட்பதங்கூட்டியண்டமுறவுளசெலவினொற்றைப்
புட்பகவிமானந்தானவ்விலங்கைமேற்போவதொத்த.

(இ - ள்.) கொட்பு உறு - மண்டலமாகப்போதலைப் பொருந்திய, புரவி - (உச்சைச்சிரவமென்னும்) வெள்ளைக்குதிரையையுடைய, தெய்வம் கூர் நுதி குலிசத்தாற்கும் - தெய்வத்தன்மையையும் கூரியநுனியையுமுடைய வச்சிராயுதத்தை யேந்தியவனான இந்திரனுக்கும், கண் புலம் கதுவல் ஆகா - கண்களினாற் காணமுடியாத, வேகத்தால் - வேகத்தோடு,—கடலும் மண்ணும் உள் பதம் கூட்டி - சமுத்திரமும் பூமியும் தனது கால்களினுள்ளே யாம்படி, அண்டம் உற உள - இவ்வண்டங்களையெல்லாம் ஒருங்கேகடக்குமாறு (தான்) கொண்டுள்ள, செலவின் - போக்கினால்,— (அவ்வநுமானது தோற்றம்),— ஒற்றை புட்பக விமானம் - தனிப்பட்ட புஷ்பகமென்ற விமானமானது, அ இலங்கைமேல் - அந்த இலங்காபுரியைநோக்கி, போவது - போவதை, ஒத்த(து) - ஒத்திருந்தது; (எ - று.)—தான் - அசை.

ஆயிரங்கண்ணனான இந்திரனும் காணமுடியாதபடி மிக்கவேகத்துடன் அநுமான் இலங்கைநோக்கிச்செல்வது, வெறும்புஷ்பகவிமானம் வானத்துப் போவதுபோன்றிருந்த தென்பதாம்; தற்குறிப்பேற்றவணி. கடல்கடக்கும் போது அநுமான் கொண்ட வேகம் பூமி சமுத்திரம் அண்டம் ஆகிய எல்லாவற்றையும் கடக்கத்தக்க அளவினதாயிருந்த தென்பது, 'வேகத்தாற் கடலுமண்ணு முட்பதங்கூட்டி யண்டமுறவுள செலவின்' என்றதன் கருத்து. "வீரன்முடுக்கியவேகம் வெய்யோரிலங்கையினளவன்று" என்பார் மேலும். விமானம் - தேவவூர்தி. புட்பகம்=புஷ்பகம்; வடசொல். தன்மேலேறியவர் நினைத்தவிடத்தில் அவர்நினைத்தபடி செல்லவல்லதான இது, குபேரனது தவத்துக்கு உவந்த பிரமதேவன் அவனுக்குத் தந்தது; இதனை, ராக்ஷஸராஜனான ராவணன் தான் திக்விஜயஞ்செய்தகாலத்தில் அவனிடத்தினின்று பறித்துக்கொண்டனன். அவ்விமானம் அடிக்கடி இராவணனை யேற்றுக்கொண்டு இலங்கையினின்று வெளியிலும், வெளிப்புறத்தினின்று இலங்கையிலும் செல்லுமாதலால், வெளிப்புறத்தினின்று இலங்கைக்குச் செல்லும் அது இலங்கையைநோக்கிச் செல்லும் அநுமானுக்கு உவமையாயிற்று. அநுமானொருவனே செல்பவனாதலால், அவனுக்கு, தன்மீது ஒருவருமின்றிச் செல்லும் புட்பகத்தை உவமைகூறினர். இனி, கடலும் மண்ணும் உள் பதம் கூட்டி - கடல்களையும் (கடல்சூழ்ந்த) உலகங்களையும் தனது உள்ளிடத்திலே சேரக்கொண்டு, அண்டம் உற உள செலவின் - ஆகாயத்தையளாவ உயர்ந்துசெல்லுதலையுடைய, ஒற்றை - ஒப்பற்றதான என்றும் பொருள் கொள்ளலாம்; புஷ்பகவிமானம், எத்தனைபேர் ஒருங்கு ஏறினும் அத்தனை பேர்க்கும் தான் வளர்ந்து இடங்கொடுக்குந் தெய்வத்தன்மையுடையது: உலகமனைத்தையும் தனதகத்தேகொள்ளும்படி மிகப்பெரிதாய் வளர்ந்து பறந்து செல்லும் புட்பகம், அநுமானது பெருவடிவுக்கு ஏற்ற உவமையாம். கொட்பு-

மண்டலகதி. 'கட்புலங்கதுவலாகா வேகத்தால்'—"கட்புலங்கதுவாவண்ணம்" என்றார் முன்னும். 'உட்படக்கூடியண்டம்' என்னும் பாடமுண்டு.

'போவதொத்தான்' என்ற பாடம், முன்பின்பாடல்களில் வரும் பயனிலைகளோடு ஒத்திருத்தலாற் சிறக்கும். (௨௪)

௨௫. விண்ணவரேத்தவேதமுனிவார்வியந்துவாழ்த்த
மண்ணவரிறைஞ்சச்செல்லுமாருதிமறமுட்கூர
வண்ணல்வாளரக்கன்றன்னையமுக்குவாமின்னமென்னாக்
கண்ணுதலொழியச்செல்லுங்கயிலையங்கிரியுமொத்தான்.

(இ - ள்.) விண்ணவர் ஏத்த - தேவர்கள் துதிக்கவும், வேதம் முனிவரர் வியந்து வாழ்த்த - வேதங்களில் வல்லவரான இருடிச்சிரேஷ்டர்கள் அதிசயித்து ஆசிசொல்லவும், மண்ணவர் இறைஞ்ச - இப்பூவுலகத்தவர் வணங்கவும், செல்லும் - (வானத்துச்) செல்லுகின்ற, மாருதி - அநுமான்,—மறம் உள் கூர - பகைமை மனத்தில் மிக்கதனால், 'அண்ணல் வாள் அரக்கன்தன்னை - பெருமையிற் சிறந்தவனான கொடிய ராக்ஷஸனாகிய ராவணனை, இன்னம் அமுக்குவாம் - இன்னமும் நசுக்குவோம்,' என்னா - என்று எண்ணி, கண் நுதல் ஒழிய செல்லும் - நெற்றிக்கண்ணனான சிவபிரானை விட்டுத் தனியேசெல்லுகின்ற, கயிலை அம் கிரியும் - அழகிய கைலாசமலையையும், ஒத்தான் - போன்றான்; (எ - று.)

பெருவடிவுகொண்ட அநுமான் இலங்கையைநோக்கிச் சென்றது, தன்னை முன்னொருகாற் பெயர்த்தெடுத்த இராவணனை அக்காலத்து அழுத்தியதோடு திருப்திப்படாமல் இன்னமும் அமுக்கவேண்டுமென்று கைலாசமலை அவன்மீது வயிரங்கொண்டு சிவபிரானின்றித் தனியேசெல்வதை யொத்திருந்த தென்பதாம்: இதுவும் - தற்குறிப்பேற்றவணி யே. தமது தகுதிக்கு ஏற்ப, விண்ணவர் ஏத்துதலும், முனிவரர் வாழ்த்துதலும், மண்ணவர் இறைஞ்சுதலும் செய்தன வென்க. தமதுபெரும்பகைவன் அழிதற்கு முதற்காரணமாயிருத்தலால், அநுமானை விண்ணவர் ஏத்துவாராயினர். திரிலோககண்டகனான இராவணனை நசுக்கியழிக்குந்திறத்தில் யாவரும் மனமகிழ்வ ரென்க. இன்னம் - முன்பு [இவன் கைலாசத்தைப் பெயர்த்தெடுக்கத் தொடங்கிய காலத்தில்] அழுத்தியது போதாமல் பின்னையும் மற்றொருதர மென்க. முன்னர்ச் சிவபிரான் இராவணன் சாமகானஞ்செய்ததற்கு உவந்து அவனைக் கால்தளர விட்டிட்டமை கருதி, இப்பொழுது அவனை யமுக்குதற்கு அப்பிரானின்றித் தான் தனியே சென்ற தென்க. இராவணனை யழிக்கக் கருதிச் செல்லும் சத்துவகுணப்பிரதானனான பெரிய அநுமானுக்கு, அங்ஙனங் கருதிச்செல்லும் வெள்ளிமலையாகிய கைலாசத்தை உவமைகூறுதல் சாலும். இப்பொழுது அநுமான் எவரையும் மேற்கொண்டு செல்லாமை, கருதத்தக்கது. மறம் - வைரம்; கறுவு.

மாருதி - வாயுவின்குமாரன்: வடமொழித்தத்திதாந்தநாமம்; மாருதன் - வாயு: கேசரியென்ற வாநரவீரனது மனைவியாகிய அஞ்சனாதேவியினிடத்தில்

வாயுதேவனருளால் இவ்வநுமான் தோன்றினனென உணர்க: இவன், வாயுவி னம்சத்தோடு ருத்திராம்சமு முடையவன். வாள் அரக்கன் - (சிவபிரானாற் கொடுக்கப்பட்ட சந்திரகாசமென்னும்) வாளாயுதத்தையுடைய இராவண னெனினுமாம். 'கயிலையங்கிரி' என்ற தொடரில், அம் - சாரியையுமாம். (௨௫)

௨௬. மாணியாம்வேடந்தாங்கிமலரயற்கறிவுமாண்டோ
ராணியாயுலகுக்கெல்லாமறம்பொருணிரப்புமண்ணல்
சேணுயர்நெடுநாடீர்ந்ததிரிதலைச்சிறுவன்றன்னைக்
காணியவிரைவிற்செல்லுங்கனகமால்வரையுமொத்தான்.

(இ - ள்.) மாணி ஆம் வேடம் தாங்கி பிரமசாரிவடிவங்கொண்டு, மலர் அயற்கு அறிவு மாண்டு - திருமாலினது (நாபீ) கமலத்தில் தோன்றிய பிரம தேவனினும் அறிவுமிக்கு, உலகுக்கு எல்லாம் ஓர் ஆணி ஆய் - உலகங்கட் கெல்லாம் ஓர் ஆதாரமாய், அறம் பொருள் நிரப்பும் - தருமமென்றபொருளைத் தழைக்கும்படி செய்யப்போகின்ற, அண்ணல் - பெருமையிற் சிறந்தவனாகிய அநுமான், (வானத்தில்தாவிச்செல்பவனாய்),—நெடு நாள் தீர்ந்த - (தான்) நெடுநாளாகப் பிரிந்திருக்கிற, சேண் உயர் திரிதலை சிறுவன் தன்னை - மிகவுயர்ந்த 'த்ரிகூடமலை' என்ற தனதுபுதல்வனை, காணிய - பார்த்தற்பொருட்டு, விரைவின் செல்லும் - வேகமாகப்போகின்ற, கனகம் மால் வரையும் - பொன் மயமான மகாமேருகிரியையும், ஒத்தான்—; (எ - று.)

பொன்னிறமான பெருவடிவமுள்ள அநுமான் தென்புறமாக இலங்கை நோக்கிச்சென்றது, வடபுறத்திலுள்ள பொன்மயமான மகாமேருமலை நெடு நாளைக்குமுன்பு தென்திசையிற்சென்ற தனது புதல்வனாகிய திரிகூடமலை யைக் காணச் செல்வதுபோன்றிருந்த தென்பதாம்; இதுவும், முற்செய்யு ளிற்கூறிய அணியே.

அநுமான் நித்தியப்பிரமசாரி யாதலால், அவனை 'மாணியாம்வேடந் தாங்கி' என்று விசேடித்தார். மலரயற்கு அறிவுமாண்டு = மலரயனினும் அறிவு மாட்சிமைப்பட்டு; நான்காம்வேற்றுமையுருபு ஐந்தாம்வேற்றுமைக்கு உரிய எல்லைப்பொருளில் வந்ததனால், உருபுமயக்கம். உலகத்தில் தருமத்தை அறக்கெடுத்து வருத்தும் ராவணாதிராக்ஷஸர் வதைக்கப்பட்டொழிதற்கு இவ் வநுமான் தூதுசெல்வதே முக்கியகாரணமாக நிற்றலால், இவன், 'ஆணியாயுல குக்கெல்லாம் அறம்பொருணிரப்பு மண்ணல்' எனப்பட்டான். இன்றியமை யாச் சிறப்புடைமை தோன்ற, அறம் பொரு ளெனப்பட்டது. இனி, அறம் பொருள் நிரப்பும் - அறத்தையும் பொருளையும் நிறையச்செய்யும் என்றும் கூறலாம்: திருக்குறளுரையிற் பொருட்பாலின் தொடக்கத்தில் பரிமேலழகர் 'பொருள், தன் துணைக்காரணமாய அரசனீதி கூறவே அடங்கும்' என்றது, இங்குக் கொள்ளத்தக்கது. ஆணி - அச்சாணி. திரிதலை - மூன்றுதலை. சேண் உயர் - ஒருபொருட்பன்மொழி. மேருமலையினது சிகரமே திரிகூடமென ஒரு மலையாய் நிற்றலின், அதனை, கனகமால்வரையின் சிறுவனெனக் கொண்டார். 'காணிய' - 'செய்யிய' என்னும் வாய்பாட்டு எதிர்காலவினையெச்சம். (௨௬)

௨௭. மழைகிழித்துதிரமீன்கண்மறிகடல்பாயவானங்
குழைவுறத்திசைகள்கீறமேருவுங்குலுங்கக்கோட்டின்
முழையுடைக்கிரிகண்முற்றமுடுக்குவான்முடிவுக்காலத்
தழிவுறக்கடுக்கும்வேகத்தாதையுமனையனானான்.

(இ - ள்.) மீன்கள் மழை கிழித்து உதிர - நக்ஷத்திரங்கள் மேகங்களைப் பிளந்துகொண்டு கீழேசிதறவும், மறி கடல் பாய - (அலை) மடங்குகின்ற சமுத்திரம் பொங்கியெழவும், வானம் குழைவுற - மேலுலகம் குழைந்து காட்டவும், திசைகள் கீற - திக்குகளெல்லாம் வெடிக்கவும், மேருவும் குலுங்க - மகாமேருகிரியும் நடுங்கவும், கோட்டின் முழை உடை கிரிகள் முற்ற - சிகரங்களையும் குகைகளையுமுடைய மற்றைச்சாதாரணமலைகளெல்லாம் வேர்பறிந்தழியவும், முடுக்குவான் - விரைந்துசெல்பவனாகிய அநுமான்,—முடிவு காலத்து - கற்பாந்த காலத்திலே, அழிவுற - (உலகம்) அழியும்படி, கடுக்கும் - விரைந்துவீசுகின்ற, வேகம் - வேகத்தையுடைய, தாதையும் - (தனது) தந்தையான வாயுதேவனையும், அனையன் ஆனான் - ஒத்தவனாயினான்; (எ - று.)

யாவும் அழியுங் கற்பாந்தகாலத்தில், நக்ஷத்திரங்கள் மேகமண்டலத்தைக்கிழித்தல் முதலியன நிகழுமாறு பெருங்காற்று வீசு மென்க. அந்நிகழ்ச்சிகளெல்லாம் தனதுவிசையால் தோன்றுமாறு செல்லும் அநுமானுக்கு, கற்பாந்தகாலத்து அப்பெருங்காற்றையே உவமைகூறினர். "தந்தையரொப்பர் மக்கள்" ஆதலால், வாயுகுமாரனுக்கு வாயுவுவமை ஏற்கும். 'மழை கிழித் துதிரு மீன்கள் மறிகடல் பாய' என்றும் பாடம் காணப்படுகின்றது. முடுக்குவான் - பெயர். தாதை - தாதஃ என்ற வடசொல் ஈறுதிரிந்தது. (௨௭)

௨௮. தடக்கைநாலைந்துபத்துத்தலைகளுமுடையான்றானே
யடக்கியைம்புலன்கள்வென்றதவப்பயனறுதலோடுங்
கெடக்குறியாகமாகங்கிழக்கெழுவழக்குநீங்கி
வடக்கெழுந்திலங்கைசெல்லும்பரிதிவானவனுமொத்தான்.

(இ - ள்.) நால் ஐந்து தட கை - பெரிய இருபதுகைகளையும், பத்து தலைகளும் - பத்துத்தலைகளையும், உடையான் தானே - உடையவனான இராவணன் தானே, ஐம்புலன்கள் அடக்கி வென்ற - (தனது) பஞ்சேந்திரியங்களையும் (ஐம்புலன்களிற்செல்லாதபடி) தடுத்துச் சயித்துச் செய்த, தவம் பயன் - தவத்தினது வலிமை, அறுதலோடும் - அழிந்தவுடனே [அழிந்துவிட்டதனால்],—கெட குறி ஆக - (இனி அவ்விராவணன்) அழிந்துபோவானென்பதற்கு அறிகுறியாக, மா கம் கிழக்கு எழு வழக்கு நீங்கி - பெரிய ஆகாயத்திலே கிழக்கேயுதி(த்து மேற்கே அத்தமி)க்கிற முறைமை நீங்கி, வடக்கு எழுந்து இலங்கை செல்லும் - வடக்கேயுதித்து (த் தெற்கேயுள்ள) இலங்கையை நோக்கிப் போகின்ற, பரிதி வானவனும் - சூரியபகவானையும், ஒத்தான்—; (எ - று.)

பெரியவொளிவடிவமுள்ள அநுமான் இலங்கையை நோக்கிச் சென்றது, இராவணனுக்கு நல்லகாலம் கழிந்துவிட்டதனால் இனி விரைவில் அவனுக்கு நேரப்போகிற அழிவுக்கு அறிகுறியான உற்பாதமாகச் சூரியபகவான் கிழக்

கேயுதித்து மேற்கே அத்தமித்தலாகிய தனது இயற்கையைவிட்டிட்டு வடக்கே யுதித்துத் தெற்கே செல்வது போன் றிருந்த தென்பதாம்; தற்குறிப்பேற்ற வணி. அநுமான் இலங்கைக்குச்சென்றது இராவணநாசத்துக்கு ஏதுவாத லால், இவ்வாறு கற்பித்தார்.

சூரியன் தனது இயற்கையில் தவறி வடக்கேயுதித்துத் தெற்கேசெல்லு தல் போல்வன - பின்னர்நேருந்தீங்கை, முன்னமேயறிவிக்கின்ற நிமித்தங்க ளான உற்பாதங்களாம். தென்கடலின் வடகரையிலுள்ள மகேந்திரகிரியி னின்று இலங்கைநோக்கி அநுமான் செல்லுதல், இலங்கைக்கு உற்பாதமாகச் சூரியன் வடக்கினின்று தெற்கே சென்றதாகத் தோன்று மென்க. இராவ ணன் தனதுதாயாகிய கேகசியின் சொற் கேட்டுக் கோகரணச்சிரமமடைந்து, கோடைக்காலத்துப் பஞ்சாக்கினிமத்தியிலும் கார்காலத்துத் தண்ணீர்நடுவிலும் நின்று நிராகாரனாய் மனத்தை ஒரேநிலையில்நிறுத்தி, ஓராயிரமாண்டிற்கு ஒவ் வொருதலையாகத் தனது தலைகளைக் கொய்து தீயில் ஓமஞ்செய்து வரங்கள் பெற்றதை, 'அடக்கியைம்புலன்களவென்ற தவப்பயன்' என்றார்; இராவண னது தவச்சிறப்பை, "ஓராயிரமாண்டுபவசித்துக்கழிந்தாலோரோர்தலையாகச், சீரார்சிரமொன்பதுந் தடிந்து செந்தீயிடை யோமம் புரிந்து, பேராவுபவாசத் தினனாய்ப் பின்புமோராயிரத்தாண்டில், தாரார்மற்றைத்தலைதடியாலுற்றான் பற்றித் தசக்கிரிவன்" என்ற உத்தரகாண்டச் செய்யுள்கொண்டு உணர லாம்.

நால்ஐந்து - நாலாகிய ஐந்து : பண்புத்தொகை ; எனவே, இருபதாயிற்று. மாகம் - மஹா கம் என்ற வடமொழியின் விகாரம். வழக்கு = வழக்கம்; 'வழ ங்கு' என்ற முதனிலைதிரிந்த தொழிற்பெயர். வானவன் - வானுலகத்தவன். பரிதிவானவன் - பரிதியாகிய வானவ னென்ன இருபெயரொட்டு. (உஅ)

உகூ. புறத்துறலஞ்சிவேறோராரணம்புக்குறைதல்போக்கி
மறத்தொழிலரக்கர்வாழுமாநகர்மனுவின்வந்த
திறத்தகையிராமனென்னுஞ்சேவகற்பற்றிச்செல்லு
மறத்தகையரசன்றிண்போராழியுமனையனானான்.

(இ - ள்.) (ஆகாயத்தில் தாவிச்செல்லுகின்ற அவ்வநுமான்),—மறம் தொழில் அரக்கர் வாழும் மா நகர்புறத்து உறல் அஞ்சி - பாவத்தொழிலை யுடைய ராக்ஷஸர்கள் வசிக்கின்ற இலங்காநகரத்தினிடத்திற் பொருந்திச் சேர் வதற்குப் பயப்பட்டு, வேறு ஓர் ஆரணம் புக்கு உறைதல் போக்கி - வேறொரு புகலிடத்தை யடைந்து வசித்தலைத் தவிர்த்து, மனுவின் வந்த திறம் தகை இராமன்என்னும் சேவகன் பற்றி - மநுகுலத்திற்பிறந்துள்ள வல்லமையையும் நற்குணத்தையுமுடைய இராமனென்கிற வீரனையே சரணமாக அடைந்து, செல்லும் - (இலங்கையைநோக்கிப்) போகின்ற, அறம் தகை அரசன் - தரு மத்தையே (தனக்கு உரிய) குணமாகக் கொண்ட அரசனது [தருமதேவதை யினது], திண் போர் ஆழியும் - வலிய போர்செய்தற்கு உரிய ஆஜ்ஞாசக்கரத் தையும், அனையன் ஆனான் - ஒத்திருந்தான் ; (எ - று.)

அநுமான் இலங்கைநோக்கிச் சென்றது, ராவணாதி ராக்ஷஸர்கள் தலையெடுத்தமையால் இவ்விலங்காபுரிக்குள் நுழைவதற்கும் அஞ்சி அதனை அறநீத்த தருமதேவதை இராமபிரானைச் சரணமடைந்து அவனையே பெருந்துணையாகப் பற்றிக்கொண்டு பின்பு தான் அந்நகரத்திற்செலுத்திய ஆஜ்ஞாசக்கரம் செல்வதை யொத்திருந்த தென்பதாம்; இதுவும் - தற்குறிப்பேற்றவணியே. ராவணாதியர் வாழ்கின்ற நகரத்தில் அடியோடு அழிந்த தருமம் இராமபிரானால்தான் மீண்டும் தலையெடுக்கப்போகின்ற தாதலால், 'புறத்துறலஞ்சி...இராமனென்னுஞ் சேவகற்பற்றிச்செல்லும் அறத்தகையரசன்' என்றார். இதனால், இராமபிரான் தர்மஸம்ஸ்தாபநத்திற்காகவே திருவவதரித்தன னென்றவாறு. தருமமூர்த்தியான இராமபிரானால் ஏவியனுப்பப்பட்டு அவன்கட்டளைகொண்டு செல்லும் தூதனாகிய அநுமான், அறஞ்செலுத்தும் ஆஜ்ஞாசக்கரம்போல்வ னென்க.

அரணம் - ஶரணம் என்ற வடசொல்லின் விகாரம். மநு - சூரியனது புதல்வன்: ஆதலால், 'வைவஸ்வதமநு' என்றும் வழங்கப்படுவன்; இவனே சூரியவம்சத்து முதலரசன்: மனு - இங்கு, அவனதுகுலத்திற்கு இலக்கணை. இனி, மனுவினிடத்தினின்று வந்த எனினுமாம். தருமத்தைத் தவிர்ந்தவரை அறக்கடவுளே அழிக்குமாதலால், அதன் ஆஜ்ஞாசக்கரம் 'போராழி' எனப்பட்டது. 'பேராழி' என்றும் பாடமுண்டு. இனி, 'புறத்துறைவஞ்சி' என்று பாடங்கொண்டு, புறத்து உறை வஞ்சி - (எப்போதும் இராமபிரானது) சமீபத்திலேயே வசிக்கின்ற வஞ்சிக்கொடிபோன்ற சீதாபிராட்டி, வேறு ஓர் அரணம் புக்கு உறைதல் - வேறொரு வாழிடத்திலே [இலங்கையில் அசோகவனிகையிலே] புகுந்துவாழ்தலினாலே, மறம் தொழில் அரக்கர் வாழும் (அந்த) மாநகரிலே, மனுவின் வந்த திறத்தகை இராமனென்னும், சேவகன்பற்றி - சேவகனுக்காக, போக்கி - செலுத்தப்பட்டு, செல்லும் - செல்லுகின்ற, அறத்தகை அரசன் திண் போர் ஆழியும் - தருமபரிபாலனத்தில் தகுதியுள்ள சுக்கிரீவமகாராஜனுடைய மிக்கவலிமைகொண்ட ஆஜ்ஞாசக்கரத்தையும், (அவ்வநுமான்), அனைய னான் எனப் பதவுரை கூறுதலுமுண்டு; புறத்து உறைவு அஞ்சி என்று பிரித்தால், வெளியே வசித்தற்குப் பயந்து என்று பொருளாம். இனி, முதல் மூன்று அடிகட்கு - இராவணபயத்தால் வெளிப்பட்டுத் தனியே நிற்கமாட்டாது பாதுகாவலுள்ள வேறோரிடத்திற் புக்கு வசிக்கவும் பெருது மநுகுலத்திலவதரித்த திவ்வியசக்தியையும் மகாகுணத்தையுமுடைய ஸ்ரீராமனையே துணையாகப்பற்றிக்கொண்டு (அவனது ஆதரவினால்) இலங்கைநகர்க்குச் செல்லவிருக்கின்ற தருமதேவதையினால் முந்திச்செலுத்தப்பட்ட சக்கரத்தையும் போன்றா னென்று பதவுரை கூறலும் தகும். 'மனுவின்வந்த' என்பது, மனிதனாய்த்தோன்றிய என்றும் பொருள்படும்; காசியபமுனிவரது மனைவியருள் மநுவென்பவளிடமிருந்து தோன்றியவர் மனித ரென்க: ("மநுர் மநுஷ்யாந் ஜநயத்" என்பது, ஸ்ரீவால்மீகிராமாயணம்.) மனிதர்தவிர மற்றைப்பிராணிகளால் இறவாதபடி வரம்பெற்றுள்ள இராவணனைக் கொல்லுதற்பொருட்டுத் திருமால் இராமனாக மனிதப்பிறப்பெடுத்துள்ளா னாதலால், அங்ஙனம் மனிதனாய் வந்தவனை

அறத்தகையரசன் பற்றுக்கோடாகக்கொண்டன னென்றல் சாலும்; வே ரோரரணம்புக்கு உறைதல் போக்கியதும் இதுபற்றியே. (உக)

ருO. கேழுலாமுழுநிலாவிற்கிளரொளியிருளைக்கீறப்
பாழிமாமேருநாணவிசும்புறப்படர்ந்ததோளா
னூழிசூழுலகமெல்லாமருங்கனன்முருங்கவுண்ணு
மூழிநாள்வடபாற்றோன்றுமுவாமுழுமதியுமொத்தான்.

(இ - ள்.) கேழ் உலாம் முழு நிலாவின் - ஒளிவிளங்குகின்ற நிறைந்த நிலாவைப்போல, கிளர் - விளங்குகின்ற, ஒளி - (தனது உடம்பின்) ஒளியானது, இருளை கீற - இருட்டை ஒழிக்க, பாழி மா மேரு நாண விசும்பு உற படர்ந்த - வலிமைபொருந்திய மகாமேருகிரியும் (ஒப்பாகமாட்டாமையால்) வெள்கும்படி ஆகாயத்தையளாவ உயர்ந்த, தோளான் - தோள்களையுடையவனான அநுமான்,—அருங் கனல் - பொறுத்தற்கரிய பெருந்தீயானது, ஊழி சூழ் உலகம் எல்லாம் முருங்க உண்ணும் கடலிநாற்சூழப்பட்ட இவ்வுலகங்கள்முழுவதும் அழியும்படி எரிக்கப்போகின்ற, ஊழிநாள் - கற்பாந்தகாலத்தில், வடபால் தோன்றும் - வடதிசையிற் காணப்படுகின்ற, உவா முழு மதியும் - பௌர்ணமியில் தோன்றுகிற பூர்ணசந்திரனையும், ஒத்தான்—; (எ-று.)

அநுமான், யுகாந்தகாலத்தில் வடபுறத்துத்தோன்றுஞ் சந்திரனை யொத்திருந்தன னென்பதாம். இலங்கைநோக்கிச்செல்லும்போது அநுமான் வடபுறத்தினின்று தெற்கேசெல்கின்றன னாதலால், அவனுக்கு வடபுறத்து உதிக்குஞ் சந்திரன் உவமையா மென்க. இதுவும் - தற்குறிப்பேற்றவணியே. மழை முதலியவற்றாற் கடலினீர்மிகாதபடி வடவையென்னும் பெண்குதிரையின் முகத்தினின்று அந்நீரை உறிஞ்சுகின்ற வடவைத்தீயானது யாவும்அழியும் பிரளயகாலத்தில், அங்குநின்று எழுந்து உலகங்களையெல்லாம் எரித்தழிக்கு மென்பதும், அப்பொழுது சூரியசந்திரர் முதலிய கிரகங்கள் தம்நிலைதவறி வேற்றுப்புலத்தில் உற்பாதமாகத்தோன்று மென்பதும், நூற்கொள்கை. (௩O).

ருக. அடலெலாந்திகிரிமாயற்கமைந்தனனாற்றல்காட்டக்
குடலெலாமவுணர்சிந்தக்குன்றெனக்குறித்துநின்ற
திடலெலாந்தொடர்ந்துசெல்லச்சேண்விசும்பொதுங்கத்தெய்வக்
கடலெலாங்கலங்கத்தாவுங்கலுழனுமனையனானான்.

(இ - ள்.) (அநுமான்),—திகிரி மாயற்கு - (சுதரிசனமென்கிற சக்கராயுதத்தையேந்துகின்ற மாயனாகிய திருமாலுக்கு, அடல் எலாம் அமைந்தனன் - தனதுவலிமைமுழுவதும் அடங்கினவனாயிருந்தும், ஆற்றல் காட்ட-(தனது) வலிமையை(த் தேவர்கட்கு)க் காட்டுமாறு,—அவுணர் குடல் எலாம் சிந்த - அசுரர்களது குடல்கள் சரியவும், குன்று என குறித்து நின்ற திடல் எலாம் தொடர்ந்து செல்ல - மலையென்று பெயர்கூறப்பட்டு நிற்கின்ற மேடுகளெல்லாம் (தனதுவிசையாற் பெயர்ந்து) உடன்தொடர்ந்துவரவும், சேண் விசும்பு ஒதுங்க - தூரத்திலுள்ள மேகங்களும் விலகிப்போகவும், தெய்வம் கடல்

எலாம் கலங்க - தெய்வத்தன்மையுள்ள எழுகடல்களும் நிலைகுலையவும், தாவும் - தாவிச்செல்லுகின்ற, கலுழனும் - கருடபகவானையும், அனையன் ஆனான் - ஒத்திருந்தான்; (எ - று.)

எப்பொழுதும் ஸ்ரீதிருமாலினுடனிருந்து அப்பெருமானுக்கு வாகனமாய் அடிமைசெய்தலால், கருடனுக்குப் பெரியதிருவடியென்றும், இராமாவதாரத்தில்மாத்திரம் அவ்வாறு உடனிருந்து உதவுதலால் அநுமானுக்குச் சிறியதிருவடியென்றும் வைஷ்ணவசம்பிரதாயத்தில் திருநாமம். அமிருதத்தைத் தேவருலகத்தினின்று கொணர்தற்காகத் தேவர்களுடன் போர்செய்யச்சென்ற பெரியதிருவடியாகிய கருடபகவானை, அமிருதத்தினுடன்தோன்றிய லக்ஷ்மியின்அம்சமான சீதாதேவியைக் காணச் சென்ற சிறியதிருவடியாகிய அநுமானுக்கு உவமைகூறினாரென நயம்காண்க. அவுணர்குடலைச் சிந்தியமை முதலியன, உபமானம் உபமேயம் என்ற இரண்டிடத்துக்கும் ஏற்கும்.

"முற்றுநீருலகமுற்றும் விழுங்குவான்முழங்கிமுந்நீ, ருற்றதேயெனினுமண்டமுடைந்துபோயுயர்ந்ததேனும், இற்றைநம்மருளு மெங்கோனேவலுமிரண்டுபாலுங், கற்றைவார்சிறைகளாகக் கலுழனிற்கடப்பல்காண்டிர்" என்று அநுமான் தானே தனக்குக் கருடனை உவமைகூறியதைக் கிட்கிந்தாகாண்டத்து மகேந்திரப்படலத்திற் காண்க.

அடல் எலாம் திகிரியென்பதை, எலாம்அடல்திகிரியென மாற்றி - எல்லாவற்றையும் அழிக்கவல்ல திகிரி யெனினுமாம். "அடலுலாந் திகிரிமாயற் கமைந்தன்னாற்றல்காட்ட' என்று பாடமானால், அடல்-வலிமையோடு என்க. 'காட்டத் தாவும் எனவும், சிந்தச் செல்ல ஒதுங்கக் கலங்கத் தாவும் எனவும் இயையும். கடலுக்குத் தெய்வத்தன்மை - கரையின்றியும் ஓரெல்லையில் அடங்கிநிற்றல். 'கடலெலாங்கடக்கத்தாவும்' என்பது பிரதிபேதம். (௩௧)

[அநுமான் வாலைத்தூக்கிக்கொண்டுசென்றதைப் பற்றிய வருணனை.

௩௨. நாலினோடுலகமூன்றுநடுக்குறவடுக்கிநாகர்
மேலின்மேனின்றகாறுஞ்சென்றகூலத்தின்விண்டு
காலினாலளந்தவானமுகட்டையுங்கடக்கக்கால
வாலினாலளந்தானென்றுவானவர்மருளச்சென்றான்.

(இ - ள்.) நாகர் மேலின் மேல் அடுக்கி நின்ற காறும் சென்ற கூலத்தின் - தேவர்களுடையனவாய் ஒன்றன்மேலொன்றாக அடுக்கப்பட்டு (ஆறு என்றகணக்கையுடையனவாய்) இருக்கின்ற (உலகங்களின்) பரப்புவரையிலும் உயர்ந்துசென்ற எல்லையினையுடையதும், விண்டு காலினால் அளந்த - ஸ்ரீமஹாவிஷ்ணுவினது ஒற்றைக்காலினால் அளக்கப்பட்டதுமான, வானம்முகட்டையும் - இவ்வண்டகடாகத்தையும், கடக்க - கடந்து, நாலினோடு உலகம் மூன்றும் நடுக்குற காலன் வாலினால் அளந்தான் - எழுலகங்களும் அஞ்சிநடுக்கமடையும்படி (இவ்வநுமான்) காலபாசத்தையொத்த (தனது) வாலினால் அளந்திட்டனன், என்று—, வானவர் மருள - தேவர்களும் திகைப்படையும்படி,

சென்றான் - (ஆகாயத்தின்மீதாகத் தனது வாலைத் தூக்கிக்கொண்டு) சென்றனன், (அநுமான்); (எ - று.)

'பூர்வத்திலே திருமால் தனது காலினால் அளந்த மேலுலகங்களையெல்லாம் இவன் தனது வாலினால் அளந்தான்' என்றுசொல்லித் தேவர்களும் திகைப்படையுமாறு அநுமான் வாலைத்தூக்கிக்கொண்டு சென்றனனென்பதாம். கூலம் - கரை; இங்கு - அண்டத்தின்மேற்புறம்: வடசொல். புவர்லோகம், ஸுவர்லோகம், மஹர்லோகம், ஜநலோகம், தபோலோகம், சத்தியலோகம் என மேலேயுள்ள தேவர்கள்வாழ்தற்குஉரிய ஆறுலோகங்களும் ஒன்றன்மேலொன்றாய் அடுக்காக நிற்பன வாதலால், 'அடுக்கி நாகர்மேலின்மேல் நின்றகாலும்' என்றார். அநுமனது வால் மேலுலகங்களிலெல்லாம் சென்றபோது 'இதுஎன்னோ?' என்று அவ்வுலகங்களிலுள்ளவர்கள் அஞ்சுவாராயினரென்க.

விண்டு - விஷ்ணு என்ற வடசொல்லின் சிதைவு; எங்கும் வியாபித்து நிற்பவனென்றபடி: இது, திருமாலினது ஐவகைநிலைகளுள் அந்தர்யாமித்வத்தைப் பற்றிய பெயராம். கம் - சுகம்: அதற்கு எதிரானது, அகம் - துக்கம்: அஃது இல்லாதது நாகம் எனச் சுவர்க்கத்திற்குக் காரணப்பெயர்; வடசொல். அதில்வசிப்பவரென்ற காரணத்தால், தேவர்கட்கு நாகரென்று பெயராம். காலன் - உயிர்களின் ஆயுட்காலத்தைக் கணக்கிட்டு அக்காலத்தில் இறுதியைச் செய்பவனென, யமனுக்குக் காரணக்குறி; இச்சொல், இலக்கணையால், அவனது பாசத்தை யுணர்த்திற்று. ஆகுபெயரால் இச்சொல் அஃறிணைப் பொருளை யுணர்த்தினும், சொல்நிலையால் உயர்திணைப்பெயரே யாதலால், இவ்விதியேற்கும்: அன்றி காலவால் - யமன்போல் (உயிர்கட்கு இறுதியைச் செய்வதான) வால் எனினுமாம்; மேல், அநுமான் இலங்கையில் தனதுவாலைக் கொண்டு பலவுயிர்களை யழித்தொழித்தல் காண்க. இனி, நாலினோடு உலகமூன்றும் நடுக்குற, நாகரது மேலின்மேல் அடுக்கிநின்ற, காலும் - எல்லைவரையிலும், சென்ற—, கூலத்தின் - வாலையுடைமையால், விண்டு அளந்த வானமுகட்டையும் வாலினாற் கடந்தானென்று வானவர்மருளச் சென்றானெனினுமாம்; இப்பொருளில், கூலம் - லாங்கூலமென்ற வடசொல்லின் முதற்குறை. 'அடுக்குநாகர்', 'சென்றகாலத்தின்' என்பன - பிரதிபேதம். ()

[இதுவும், அடுத்தகவியும் - அநுமானது வாலின் வருணனை.]

௯௯. விளித்துப்பின்வேலைதாவும்வீரன் வால்வேதமெய்க்கு
மளித்துப்பினனுமனென்னுமறந்துணைபெற்றதாயுங்
களித்துப்புன்றொழின்மேனின்றவரக்கர்கண்ணுறுவராமென்
றொளித்துப்பின்செல்லுங்காலபாசத்தையொத்ததன்றே.

(இ - ள்.) விளித்து - பேராரவாரஞ்செய்து, பின் - பிறகு, வேலைதாவும் - கடலைக்கடக்குமாறு செல்லுகின்ற, வீரன் - வீரனான அநுமானது, வால் - வாலானது,—வேதம் மெய்க்கும் அளி வேதங்களில் நிரூபித்துச் சொல்லப்படுகின்ற (திருமாலினவதாரமான இராமபிரானது) கருணையாகிய,

துப்பின் - வலிமையைப் பெற்றுள்ள, அனுமன் என்னும் அறம் - அநுமா னென்று சொல்லப்படுகின்ற தருமதேவதையை, துணை - (தனக்குத்) துணை யாக, பெற்றது ஆயும் - பெற்றிருந்தும்,—களித்து புல் தொழில்மேல் நின்ற அரக்கர் கண்ணுறுவர் ஆம் என்று - கர்வங்கொண்டு இழிதொழிலையேசெய் கின்ற ராக்ஷஸர்கள் (தன்னைப்) பார்க்கக்கூடுமென்று எண்ணி, ஒளித்து - மறைந்துகொண்டு, பின் செல்லும் - (அவ்வநுமானது) பின்புறத்திலேயே போகின்ற, கால பாசத்தை - யமனது பாசமென்ற ஆயுதத்தை, ஒத்தது—; (எ - று.)—அன்று, ஏ - ஈற்றசை; தேற்றமுமாம்.

அநுமானது வாலை, பாசமென்றது - உவமையணி. அப்பாசம் அநும னதுபின்னே யிருத்தற்கு, அரக்கரிடத்து அச்சத்தினால் முன்புறத்திலிருத் தற்கு அஞ்சிப் பின்னே அனுமனுடம்பின்மறைவில் ஒளித்துச்செல்வதாகக் காரணங் கற்பித்துக் கூறியது, தற்குறிப்பேற்றவணி. இதனால், அவ்விலங்கை யிலுள்ள அரக்கர்க்கு யமனும் அஞ்சிப் பதுங்கியுள்ளானென்பது தோன்றும். அநுமானையே அறமென்றது, இராமபிரான் துஷ்டநிக்கிரகஞ்செய்து அறத் தைநிலைநிறுத்துதற்குப் பேருதவியாயிருத்தலினாலென்க. அநுமனென்னும் அறம் - வஞ்சகவுயர்வுநவிற்சியணி; ஒருபொருள் வேறொன்றாக வழங்குமாறு தனது இயற்கைவடிவை மறைத்துநிற்கின்றதென்ற வாய்பாட்டாற் கூறுவது, இதன் இலக்கணம். காலபாசம் - வீசப்பட்டாரைத் தவறாது அழிக்கவல்ல யமனது கயிற்றின்வடிவமான ஒருவகைஆயுதம்; வடசொல். இனி அநுமான் இலங்கையிற்சென்று தனதுவாலினால் பலஅரக்கர்களைக் கட்டியும் எறிந்தும் அடித்தும் தவறாதுகொல்வதனால், அவ்வாலுக்கு அரக்கர்மேற்செல்லுங் கால பாசத்தை உவமைகூறுதல் ஏற்கும். கீழ் இரண்டாஞ் செய்யுளில் "அண்ட மூந் திசைகளெட்டு நடுங்கத் தோள்கொட்டி யார்த்தான்" என்றாராதலின், இங்கு 'ஒளித்துப் பின் வேலைதாவும் வீரன்' என்றார். மெய்த்தல் - உள்ளபடி உண்மைவிளங்கக்கூறுதல். அளி - திருவருள். அது, அநுமானுக்கு முக்கிய பலம். களித்தல் - கள்ளுண்ணுதலுமாம். புன்தொழில்மேல்நிற்றல் - இழி தொழில்செய்தலிலேயே நிலைநிற்றல்.

இராமபிரான் இவனே சீதையைக்காணுதற்கு உரியவனென மதித்து மற்றை வானரர்களினும் அநுமானிடத்து விசேட அபிமானங் கொண்டு பல வகை அடையாளங்களையும் சீதையினிடம் சொல்லுமாறு எடுத்துக்கூறித் தனதுமோதிரத்தையும் ஈந்தனனாதலால், 'அளித் துப்பி னனுமன்' என்றார். அனுமன் - ஹநுமாந் என்ற வடசொல்லின் விகாரம்; பிறந்தவுடனே இளஞ் சூரியனைக் கனிந்தபழமென்று கருதிப் பிடிக்கப் பாய்ந்தபொழுது அதனையறி ந்து கோபங்கொண்ட இந்திரனது வச்சிராயுதத்தால் அடிக்கப்பட்டுச் சிதைந்த கன்னமுடைமையால், இவனுக்கு இப்பெயர்; இது, இந்திரன் இட்டது: ஹநு - கன்னம், மாந் - வடமொழிப்பெயர்விகுதி; கன்னத்தில்விசேஷமுடை யவனென்பது, திரண்டபொருள். 'வெளித்துப்பின்,' 'அருந்துணை', 'கண் ணுறுவரென்ன்' என்பன - பாடபேதங்கள். (௫௫)

௫௬. மேருவைமுழுதுஞ்சூழ்ந்துமீதுற்றவேகநாகங்
காரிறத்தண்ணலேவக்கலுழன்வந்துற்றகாலை

சோர்வுறுமனத்ததாகிச்சுற்றியசுற்றுநீங்கிப்
பேர்வுறுகின்றவாறுமொத்ததப்பிறங்குபேர்வால்.

(இ - ள்.) அ பிறங்கு பேர் வால் - விளங்குகின்ற (அனுமனது) அந்தப் பெரிய வாலானது,—மேருவை - மேருமலையை, முழுதும் சூழ்ந்து - முற்றிலுஞ் சூழ்ந்துகொண்டு, மீது உற்ற - அதன்மேலும் கவிந்துகொண்டிருந்த, வேகம் நாகம் - மிக்கவலிமையுள்ள ஆதிசேஷனனது, கார் நிறத்து அண்ணல் ஏவ கலுழன் வந்து உற்ற காலை - கருநிறத்தையுடைய பெருமையிற் சிறந்தவனான திருமால் கட்டளையிட்டதனால் கருடன் வந்துசேர்ந்தபொழுது, சோர்வுறும் மனத்தது ஆகி - தளர்வடைந்த மனமுடையதாய் [தான் உறுதியாகச்சுற்றியிருந்ததைத் தளரவிடவேண்டுமென்ற எண்ணங்கொண்டு], சுற்றிய சுற்று நீங்கி - (மேருமலையைச்) சுற்றிக்கொண்டிருந்த சுற்றைத் தவிர்ந்திட்டு, பேர்வுறுகின்ற - அப்பாற் போகின்ற, ஆறும் - தன்மையையும், ஒத்தது—; (எ - று.)

அநுமானதுவாலானது, மேருவைச்சுற்றிக்கொண்டிருந்து கருடன் வந்த மாத்திரத்திற் பிரிந்துசெல்லுகின்ற நாகமோ வென்னும்படி விளங்கிற்று என்பதாம்; தற்குறிப்பேற்றவணி. அநுமானுக்கு - மேருமலையும், அவனது பின்புறத்தில் நீண்டுள்ள வாலுக்கு - மேருவைச்சுற்றுதலைத் தவிர்ந்து நீட்சிகொண்ட ஆதிசேஷனும் உவமையாம். வேகநாகம் - விஷவேகமுடைய பாம்புமாம். கார்நிறம் - காளமேகவண்ணமுமாம். அண்ணல் - எப்பொருள்கட்கும் இறைவன். கருடனைக்கண்டவளவில் அஞ்சி நிலைகுலைதல், பாம்புகளின் இயல்பு. (௩௪)

[இதுமுதல் மூன்றுகவிகள் - அனுமனதுவேகத்தின் வருணனை.]

௩௫. குன்றொடுகுணிக்குங்கொற்றக்குவவுத்தோட்குரக்குச்சீயஞ்
சென்றுறுவேகத்திண்காலெறிதரத்தேவர்வைகு
மின்றொடர்வானத்தானவிமானங்கள்விசையிற்றம்மி
லொன்றொடொன்றுடையத்தாக்கிமாக்கடலுற்றமாதோ.

(இ - ள்.) குன்றொடு குணிக்கும் - மலையோடு உவமை சொல்லத்தக்க, கொற்றம் - வெற்றிபொருந்திய, குவவு - திரண்டுள்ள, தோள் - தோள்களையுடைய, குரங்கு சீயம் - வாநரர்களுள் சிறந்த அநுமான், சென்று - (கடல் கடந்து) செல்லுதல்காரணமாக, உறு - உண்டான, வேகம் திண் கால் - வேகமுள்ள வலிய காற்று, எறிதர - வீசுதலினால்,—தேவர் வைகும் - தேவர்கள்தங்கியிருப்பவையும், மின் தொடர் - ஒளிவிளங்குகின்றவையும், வானத்து ஆன - (அப்பொழுது) வானத்திற்செல்பவையுமாகிய, விமானங்கள்—, விசையின் - விரைவாக, தம்மின் - தமக்குள்ளே, ஒன்றொடு ஒன்று உடைய தாக்கி - ஒன்றோடொன்று மோதியுடைந்து, மா கடல் உற்ற - பெரிய கடலிற் போய் விழுந்தன; (எ - று.)—மாது, ஓ - ஈற்றசைகள்.

அநுமான் கடலைக்கடக்குமாறு விரைந்துசெல்ல, அவ்விசையினாலுண்டாகுங் காற்றினால், அதிசயங்காணுமாறு வானத்தில்வந்த தேவர்களின்விமா

னங்கள் ஒன்றோடொன்று மோதியுடைந்து கடலில் விழுந்தன வென்ப தாம். இச்செய்யுள் - அநுமனது விசையை விளக்கவந்த தொடர்புயர்வுநவிற்சி யணி. பூமியில் மிக்க அதிசயம் யாதாயினும் நிகழும்போது அதனைக்காண்பதற்குத் தேவர்கள் வானத்தில் விமானமேறிவருவ ரெனக் கூறுதல், நூல் வழக்கு. "குணிக்குந்தோள், கொற்றத்தோள், குவவுத்தோள் எனவும், தேவர் வைகும் விமானங்கள், மின்தொடர் விமானங்கள், வானத்தான விமானங்கள் எனவும் இயையும். எறிதர விமானங்கள் உற்ற வென்க. சென்று - செல்ல என்ற காரணப்பொருட்செயவெனெச்சத்தின் திரிபு. விமானம் - வடசொல்; தேவரூர்தி; மேலுலகத்திலுள்ள தேவர்மாளிகைகளுமாம். 'சீயம்' என்றது, 'குரங்கு' என்றதனோடு சேர்ந்துநின்று சிறப்பை யுணர்த்திற்று; வாநரச் சிரேஷ்டனென்க: புலி, ஏறு முதலியனவும், இவ்வாறுவரும். 'குரக்குச்சீயம்'—"மாவும் யானையும் வாளுடைத் தானையும், பூவு நீரும் புனை தளிரும்மெனத், தாவு மள்ளிப்பிசையுந் துகைக்குமால், சேவகன் றெரிந்தேறிய சீயமே" என யுத்தகாண்டத்திற் கூறுவதும் காண்க. குரங்கு + சீயம் = குரக்குச்சீயம்; வேற்றுமையில் மென்றொடர் வன்றொடராயிற்று. (௪௫)

[விண்ணுலகமும் மண்ணுலகமும் அநுமனதுவேகத்திற்கு அஞ்சுதல்.]

௪௬. வலங்கையின்வயிரவேதிவைத்தவன்வைகுநாடுங்
கலங்குவதேகுவான்றன்கருத்தென்கொலென்னுங்கற்பான்
விலங்கயிலெயிற்றுவீரன்முடுக்கியவேகம்வெய்யோ
ரிலங்கையினளவன்றென்னவிம்பர்நாடிரிந்ததிப்பால்.

(இ - ள்.) வலம் கையின் - (தனது) வலக்கையிலே, வயிரம் எதி - வஜ்ரமென்று சொல்லப்படுகின்ற ஆயுதத்தை, வைத்தவன் - பிடித்திருப்பவனாகிய இந்திரன், வைகும் - தங்கியிருக்கின்ற, நாடும் - தேவலோகமும்,—ஏகுவான்தன் கருத்து என்கொல் என்னும் கற்பான் - ('கடலைத்தாவிச்) செல்லுகின்ற இவ்வநுமானது நினைவு யாதோ?' என்கிற எண்ணத்தினால், கலங்குவது - கலக்கமடைவதாயிற்று; இம்பர் நாடு - இந்தப்பூலோகமானது,—'விலங்கு அயில் எயிறு வீரன் - விலங்கியுள்ள கூர்மையான பற்களையுடைய வீரனாகிய அநுமான், முடுக்கிய - விரைந்துசெல்லுகின்ற, வேகம் - வேகமானது, வெய்யோர் இலங்கையின் அளவு அன்று - கொடியவரான ராக்ஷஸர்கள் வசிக்கின்ற இலங்கைவரையிலும்மாத்திரம் செல்வதற்கு உரிய அளவையுடையதன்று', என்ன - என்று எண்ணி, இப்பால் இரிந்தது - இப்பால் விலகியோடுவதாயிற்று; (எ - று.)

அநுமான் கடல்கடக்குமாறு முயன்றுசென்றபோது, 'இனி ராக்ஷஸ வதமாகிய நமதுகாரியம் இனிதுமுடியும்' என்று எண்ணி மகிழ்ந்திருந்த தேவர்கள், அநுமானது விசையைப் பார்த்து 'இவன் இலங்கைக்குச் செல்லுகின்றவன்போலக் காணப்படுகின்றிலனே!' என்று நினைந்து மனக்கலக்கங் கொண்டனர்; அவ்வாறே பூமியிலுள்ளவர்களும் 'இவன் கொண்டுள்ள வேகம் இலங்கைவரையிலும்மாத்திரம் செல்வதற்கு அன்று' என்று நினைந்து அஞ்சினரென்க. இச்செய்யுளும், கீழ்க்கவிபோலவே அநுமானதுவிசையை விளக்க

வந்த தொடர்புயர்வுநவிற்சியணி. 'இலங்கையினளவன்று' என்றது, இலங்கைக்கு அப்பாற் செல்வதாயுள்ள தென்றபடி; கீழ்ப்போந்த கஅ, கக - ஆஞ் செய்யுள்கள், இங்கு நோக்கத்தக்கன. அநுமான் இலங்கைத்தீவை நோக்கிச் செல்லச்செல்ல இந்தஜம்பூத்வீபம் விலகிப்பின்னிடைந்ததாகத் தோன்றுவதும், 'இம்பர்நாடிரிந்ததிப்பால்' என்று கற்பித்தற்குக் காரண மென்க. இலங்கையைநோக்கிச்செல்லும் அநுமான் தாழ்ந்துசெல்லாமல் மிக்கவுயரத்திலே செல்லுதலால், தன்மேற்பாய்தற்காகத் தன்னைநோக்கித்தான் வருகின்றனனோ வென்று தேவர்நாடு கலங்கியதாகவுங் கொள்ளலாம். இம்பர்நாடு இரிந்தது-இந்நிலவுலகமுழுவதும் அச்சத்தாற் கலங்கிய தென்றலுமாம். முதலிரண்டடியை இம்பர்நாட்டின் கருத்தாகக் கொண்டு உரைப்பாருமுளர். அநுமான் உயர்ந்து செல்லச்செல்ல இவ்வுலகம் இப்பால் இரிந்ததாகத்தோன்றுமியல்பு, கருதத்தக்கது.

வலம் கை - வெற்றிபொருந்திய கை யெனினுமாம். இந்திரன் தனது பகைவர்களை அழித்தொழிப்பதில் மிக்க கருத்துக்கொண்டு எப்பொழுதும் வச்சிராயுதத்தைக் கையிலேயே வைத்துளானென்ன வேதமும் கூறுதலால், அவனை 'வலங்கையில் வயிரவேதிவைத்தவன்' என்றார். இதுதைநயங்கருதி, வலக்கையென ஆகாது 'வலங்கை' என மகரம் ஙகரமாகத் திரிந்தது. வயிரம்=வஜ்ரம், எதி=ஹேதி: வடசொற்கள். வயிரவேதி - வயிரமாகிய எதியென இருபெயரொட்டுப்பண்புத்தொகை. 'நாடு' என்ற சொல் - இரண்டிடத்தும் அங்குள்ளாரைக்குறிக்கும்போது, இடவாகுபெயராம். என்கொல் - 'என்' என்பதே வினுப்பொருளுணர்த்தியதனால், கொல் - அசை. கற்பு - கற்றல்; இங்கு, இலக்கணையால், எண்ணமென்ற பொருளைத் தந்தது: கற்பனை. விலங்குதல் - கடைவாயினின்று வெளிப்பட்டுத் தெரிதலுமாம். இனி, விலங்கு என்பதை, விளங்குஎன்பதன் போலி யெனக் கொள்ளினுமாம். 'கலங்குறவேகுவான்', 'முடுகிய', 'இரிந்ததன்றே' என்பன பாடாந்தரங்கள். (ருகூ)

[அநுமானது விசையிறற் கடலிற் பலபிராணிகள் உயிரொழிதல்.]

ருஎ. ஓசனையுலப்பிலாதவுடம்பமைந் துடையவென்னத்
தேசமுநூலுஞ்சொல்லுந்திமிங்கிலகிலங்களோடு
மாசையையுற்றவேலைகலங்கவன் றண்ணல்யாக்கை
வீசியகாலின் வீந்துமிதந்தனமீன்களெல்லாம்.

(இ - ள்.) அன்று - (அநுமான் கடலைத்தாவிச் செல்லுகின்ற) அக்காலத்தில், அண்ணல் யாக்கை-பெருமையிற்சிறந்தவனை அவ்வநுமானுடைய உடம்பினின்றும், வீசிய—, காலின் - காற்றினால், ஆசையை உற்ற வேலை கலங்க - திக்குக்களினெல்லைவரையிலும் பொருந்தியுள்ள சமுத்திரமுழுவதும் குழப்பமடைய, (அதனால்),—'உலப்பு இலாத ஓசனை - அளவில்லாத [மிகப்பல] யோசனைதூரம், உடம்பு அமைந்து உடைய - உடம்புபொருந்தியுள்ளன" என்ன - என்று, தேசமும் - உலகத்திலுள்ளவர்களாலும், நூலும் - சாஸ்திரங்களாலும், சொல்லும் - சொல்லப்படுகின்ற, திமிங்கிலகிலங்களோடும் - திமிங்கிலகிலங்களும், மீன்கள் எல்லாம் - (மற்றுமுள்ள) எல்லாமீன்களும், வீந்து மிதந்தன - இறந்து மிதக்கலாயின; (எ - று.)

அநுமான்சென்ற விசையினாற் பெருங்காற்றுத் தோன்றவே, கடல் குழம்பி அதிலுள்ள மிக்கபேருருவத்தினையுடைய திமிங்கிலகிலங்களும் மற்று முள்ள மீன்களும் உயிரொழிந்து மிதந்தன வென்பதாம். கடலில் வாழும் பிராணிகளிற் பெரியவையோடு சிறியவையோடு வாசியற எல்லாம் ஒருங்கே மாய்ந்து மிதந்தன வென்பார், 'திமிங்கிலகிலங்களோடு மீன்களெல்லாம் வீந்து மிதந்தன' என்றார். திமியென்பது - கடல்வாழுயிர்களுள் ஒன்று: யானைமீனெனவும், பெருமீனெனவும் படும்; நூறுயோஜனை நீளமுள்ளது: அதனைவிழுங்குவது - திமிங்கிலம்; அதனையும் விழுங்குவது - திமிங்கிலகில மெனப்படும்: வடமொழிக் காரணப்பெயர். (அதனைவிழுங்குவதை 'திமிங் கிலகிலகிலம்' என்பர்.) சிறியதைப் பெரியது உண்பது, மீனின் இயல்பு. இது மிக்கபேருருவத்தினையுடையதென்பது உலகவழக்கிலும் நூல்வழக்கிலும் பிரசித்த மென்றற்கு, 'ஓசனையுலப்பிலாத வுடம்பமைந்துடைய வென்னத், தேசமு நாலுஞ் சொல்லுந் திமிங்கிலகிலம்' எனப்பட்டது. ("செலவுறுயானை மீனே திமி பெருமீனுமாம், மலைவுறுதிமிங்கிலம்பே ரானையைவிழுங்குமீனும், மிலைதிமிங்கிலகிலந்தான் மற்றதைவிழுங்குமீனே" என்ற சூடாமணிநிகண் டையும், "அஸ்தி மத்ஸ்யஸ் திமிர்நாம சதயோஜந மாயத:, திமிங்கிலகிலோ ப்யஸ்தி தத்கிலோப்யஸ்தி ஸாகரே" என்ற வடமொழி மேற்கோளையும் காண்க.)

ஓசனையுலப்பிலாத - பலயோசனையளவு நீண்டிருக்கிற. ஓசனை - யோஜ நா என்ற வடசொல்லின் விகாரம்; அது, நான்குகுரோசம் கொண்டது. ஆசை - ஆசா என்ற வடசொல் ஆவீறு ஐயாயிற்று. இனி, அன்று அண்ணல் வீசிய காலிற், ஓசனையுலப்பிலாத உடம்பு அமைந்துடைய என்னத் தேசமும் நாலும் சொல்லும் திமிங்கிலமும், கிலங்களோடு - திமிங்கிலகிலமும், வேலை கலங்க, ஆசையை உற்ற - வடகடலெல்லையைப் போய்ச் சேர்ந்தன; மீன்களெல்லாம் வீழ்ந்துமிதந்தன என உரைப்பாருமுளர். திமிங்கிலகிலங்க ளோடும் வேலை கலங்கும்படி அண்ணல் யாக்கைவீசிய காலினால் வீந்துமிதந் தன மீன்களெல்லாம் என்று யாற்றுநீர்ப்பொருளாக வுரைத்தலும் தகும். (௩௮)

[அனுமானது முன்னேநீட்டிய கைகளின் வருணனை.]

௩௯. பொருவருமுருவத்தன்னான்போகின்றபொழுதுவேகந்
தருவனதடக்கைதள்ளாநிமிர்ச்சியதம்முளொப்ப
வொருவருங்குணத்துவள்ளலோருயிர்த்தம்பியோடு
மிருவருமுன்னர்ச்சென்றாலொத்தவவ்விரண்டுபாலும்.

(இ - ள்.) பொருவு அரும் உருவத்து அன்னான் - ஒப்பிலாத வடிவத்தை யுடைய அந்த அநுமான், போகின்ற பொழுது—, வேகம் தருவன - விரை வைக்கொடுப்பனவும், தள்ளா நிமிர்ச்சிய - தளர்ச்சியடையாமல் நிமிர்ந்துள்ள வையும், தம்முள் ஒப்ப - தமக்குத்தாமே ஒப்பனவாயுமுள்ள, தட கை - நீண்ட கைகள்,—ஒருவு அருங் குணத்து வள்ளல் - நீங்குதலில்லாத நற்குணங்களை யுடைய வரையாதருளுமியல்பினனான இராமபிரானும், ஓர் உயிர் தம்பியோ டும் - (அப்பெருமானது) ஒப்பற்ற உயிர்போன்ற தம்பியான இளையபெருமா

னும் ஆகிய, இருவரும் - அந்த இரண்டுபேரும், அ இரண்டு பாலும் - அவ்வநு மானது இருபுறத்திலும், முன்னர் சென்றால் - முன்புபோனால் அதனை, ஒத்த - ஒத்தன ; (எ - று.)

அநுமானது முன்னேநீண்டுள்ள விரைவுகொண்ட இரண்டுகைகளும் அவ்வநுமனுக்கு முன்னே இராமலக்ஷ்மணரிருவரும் செல்வதை யொத்திருந்தன வென்பதாம் ; தற்குறிப்பேற்றவணி. ஆஜாநுபாஹுவான அநுமானுடைய கைகள் செயற்கரியசெயல்களையும் எளிதிற்செய்யவல்ல திறத்தன வாய்த் தம்முள் ஒத்துள்ளன வென்பதும், அநுமான் இராமலக்ஷ்மணர்களின் தெய்விகசக்தியை முன்னிட்டுக்கொண்டே இலங்கைநோக்கிச் செல்கின்றன னென்பதும், "வேதத்தின்முன்செல்க மெய்யுணர்ந்தோர் விரிஞ்சன் முதலோர், கோதற்ற ஞானக்கொழுந்தின்முன்செல்க..........தொல்லை மூலப்பரஞ்சுடரே" என்றபடி தத்துவஞானிகளின்முன்னே எம்பெருமான் எழுந்தருளுதலும் தோன்ற, இக்கற்பனை கூறின ரென்க. 'தம்முளொப்ப' என்றவிடத்து இயைபின்மையணி தோன்றுகின்ற தென்னலாம். ஒருவு அருங் குணம் - (அடியார்களை) நழுவவிடுதலில்லாத குண மெனினுமாம் ; அச்யுத னாதலின்.

'ஒத்த' என்பதற்கு, 'அதனை' எனச் செயப்படுபொருள் வருவிக்க; அன்றி, 'சென்றால்' என்பதை, தொழிற்பெயர்த்தன்மைப்பட்ட எதிர்காலவினை யெச்சமாகக் கொண்டு செயப்படுபொருளென வுரைத்தலு மொன்று. 'தம்பி யென்னும்' என்றும் பாடமுண்டு. (௬அ)

வேறு.

[அப்போது மைநாகமலை அநுமானையுபசரித்தற்குக் கடலினின்று வெளிவருதல்.]

௬௯. இந்நாகமன்னானெறிகாலெனவேகும்வேலை
திக்நாகமாவிற்செறிகீட்டிசைக்காவல்செய்யுங்
கைந்நாகமந்நாள்கடல்வந்ததோர்காட்சிதோன்ற
மைந்நாகமென்னுமலைவானுறவந்ததன்றே.

இதுமுதற் பன்னிரண்டு கவிகள் - குளகம்.

(இ - ள்.) இ நாகம் அன்னான் - மலைபோன்றவனான [அல்லது யானை போன்றவனான] இந்த அநுமான், எறி கால் என ஏகும் வேலை - வீசுகின்ற காற்றுப்போல விரைந்துசெல்லும்பொழுது,— திக் நாகம் மாவில் - திக்கஜங்களுள், செறி கீழ் திசை காவல் செய்யும் கை நாகம் - வலிமை மிக்கதும் கிழக்குத்திக்கி லிருந்து அத்திசையைத்தாங்குவதுமான துதிக்கையையுடைய (ஐராவதமென்னும்) யானை, அ நாள் - (பாற்கடல் கடைந்த) அந்தக்காலத்தில், கடல் வந்தது ஓர் காட்சி தோன்ற - அப்பாற்கடலினின்று எழுந்த தன்மைக்கு ஒப்பாக, மைந்நாகம் என்னும் மலை - மைநாகமென்ற மலையானது, வான் உற வந்தது - ஆகாயத்திற்பொருந்த (க்கடலினின்று எழுந்து) வந்தது; (எ - று.)— அன்றே - ஈற்றசை; தேற்றமுமாம்.

திருப்பாற்கடலினின்று ஐராவதயானை தோன்றியதுபோல இந்த உவர்க் கடலினின்று மைநாகமலை தோன்றிற் றென்பதாம்; உவமையணி. இக்ஷ்வாகுவம்சத்துத்தோன்றிய இராமபிரானது தூதனாகிய அநுமான் கடல்கடந்து இலங்கைக்குச் செல்லுமாறு தாவிவருவதை யறிந்தவனாய், இக்ஷ்வாகுவம் சத்திச்சாகரரால் தோண்டப்பட்ட சமுத்திரராஜன், அவ்வநுமானுக்கு ஏதேனும் உதவிசெய்யவேண்டுமெனக் கருதித் தனதகத்தே யொளித்திருந்த மைநாகமலையை நோக்கி 'இந்திரன் எல்லாமலைகளையும் சிறகரிந்தகாலத்தில் உன்னை என்னிடத்திற்சேருமாறு உதவிபுரிந்த வாயுதேவனது குமாரனாகிய அநுமான் இப்போது இராமதூதனாய் வருகின்றனனாதலால், அவனுக்கு உன்னாலாகும் உபசாரங்களைப் புரிவாய்' என்று கட்டளையிட, அந்த மைநாக மலை அங்ஙனமே அநுமானை உபசரிக்குமாறு கடலினின்று வெளித்தோன்றிற்று என *முதனூலினால் விவரம் காண்க: இத்தன்மை, மேல் ருச, ருரு, ருசு - ஆம் பாடல்களிற் புலனாம்.

ஏகும் வேலை வந்தது என இயையும். திக் + நாகம்=திங்நாகம்: வடமொழிப்புணர்ச்சி: இத்தொடர், திங்நாகமென விகாரப்பட்டது. கைந்நாகமெனவே, யானை யென்றதாயிற்று; நாதிக்கையுடைய மலையென்க: "கைம்மலை" என்றாற் போல. முதலடியில் 'இந்நாகமன்னான்' என்பதற்கு - (வலிமையிலும் விரைவிலும் திருமாலுக்குப் பலவாறு தொண்டு பூண்டொழுகுதலிலும்) ஆதிசேடனைப் போன்றவனாகிய அநுமான் என்று பொருள்கொண்டால், நான்கடியிலும் பொருள்வேறுபடுதலால் திரிபு என்னுஞ் சொல்லணி அமையும். நாக மென்ற வடசொல் - பாம்பைக்குறிக்கும்போது மரங்களில் அல்லது மலைகளில் வாழ்வது என்றும் (நகம் - மலையும், மரமும்), மலையைக் குறிக்கும்போது சலியாதது என்றும், யானையைக்குறிக்கும்போது மலைகளில் வாழ்வது என்றும் காரணப்பொருள் பெறும். நாகம் மா - யானையாகிய மிருகமென இருபெயரொட்டு. கீழ்த்திசை கீட்டிசையென மரூஉ. இப்புணர்ச்சிக்கு "பதினேந்தொடெண்ணிரண்டாய்த், தோன்றும் பின்னர்த் தகாரம்வரி னிரண்டுந் தொடர்பா, லான்ற வைந்தும்றடாம்" என்று வீரசோழிய நூலார் கூறினர். பாற்கடலினின்று ஐராவதம் வெளிவந்தது, துர்வாசமுனி சாபத்தாற் கடலிற் புக்கொளித்த தேவர்கள்செல்வமனைத்தையும் எடுத்தற்காக அதனைக் கடைந்தகாலத்தி லென்க. 'தென்னுக மண்ணிற்செறி கீழ்த் திசைகாவல்செய்யும்', 'அந்நாட்கடல்' என்பன, பிரதிபேதம்.

இதுமுதல் முப்பத்தாறு கவிகள் - பெரும்பாலும் மூன்றாஞ்சீரொன்று மாங்கனிச்சீரும், மற்றைநான்கும் மாச்சீர்களுமாகிய நெடிலடி நான்குகொண்ட கலிநிலைத்துறைகள். (ருக)

[இதுமுதற் பதினொருகவிகள் - மைநாகமலையின் வருணனை.]

சo. மீயோங்குசெம்பொன் முடியாயிரமின்னிமைப்ப
வேயாவீருவித்திரளுத்தரியத்தையொத்த
தீயோருளராகியதாலவர்தீமைதீர்ப்பான்
மாயோன்மகரக்கடனின்றெழுமாண்பதாகி.

(இ - ள்.) மீ ஓங்கு செம் பொன் முடி ஆயிரம் - மேற்புறமாக உயர்ந்திருக்கின்ற செம்பொன்மயமான ஆயிரஞ்சிகரங்கள், மின் இமைப்ப - ஒளி வீசவும், ஓயா அருவி திரள் - இடையறாது பெருகுகின்ற நீரருவிகளின் தொகுதிகள், உத்தரியத்தை ஒத்த - (தோளில்தரித்த) மேலாடைபோன்றன வாகவும்,—தீயோர் உளர் ஆகியதால் - (இராவணன் முதலிய) கொடியவர்கள் (இவ்வுலகத்தில்) தங்கியிருப்பதனால், அவர் தீமை - அக்கொடியவர்களால் நேர்கின்ற தீமைகளை, தீர்ப்பான் - நீக்குதற்பொருட்டு, மாயோன் - திருமால், மகரம் கடல்நின்று எழு - சுறாமீன்கள் நிறைந்த சமுத்திரத்தினின்று மேலெழுந்து வருகின்ற, மாண்பு ஆகி - தன்மையையுடையதாய்,—(எ - று.) —'மைந்நாகமென்னுமலை வானுற வந்தது' எனக் கீழ்க்கவியோடு தொடர்ந்து முடியும்: அடுத்த பத்துப் பாடல்களுக்கும் இங்ஙனமே முடிபுகாண்க. குளகச் செய்யுள்கள் மேற்கவியோடுதொடர்தலன்றிக் கீழ்க்கவியோடும் தொடர்தலுண்டென அறிக.

ஆயிரஞ்சிகரங்களையும் பொன்னிறமாய்த்தோன்றும் நீரருவிகளையுமுடைமையால், அந்த மைநாகமலை, ஆயிரமுடிகளையும் பீதாம்பரத்தையுமுடைய திருமாலை யொத்திருக்குமென்க: கடலினின்று மைநாகமலையெழுந்ததற்கு, அரக்கர்களாலாகிய தீமையைத் தீர்க்குமாறு கடலினின்று எழுகின்ற திருமாலை உவமையாகக் கற்பித்ததனால், இது - தற்குறிப்பேற்றவணி. இதனை உவமையெனக்கொண்டால், 'தீயோருளராகியதாலவர் தீமை தீர்ப்பான் கடனின்றெழு' என்ற அடைமொழி வெற்றெனத் தொடுத்தலாய்விடுமென நுண்ணிதின் உணர்க. இம்மைநாகமலை 'ஹிரண்யநாபம் [பொன்னைத் தன் நடுவிற்கொண்டது]' என்ற தன்பெயர்க்குஏற்பப் பொன்னை இடையிலுடையதாகையால் அப்பொன்மயமான இடங்களின்மீதெல்லாம் நீரருவிபாய்ந்து செல்லும்போது பொற்பட்டாடையாகிய பீதாம்பரத்தை யொத்திருக்குமென்க. திருமாலுக்குத் திருமுடிகள் ஆயிரமென்பதையும், அத்திருமால் பீதாம்பரத்தையுடையவனென்பதையும், முறையே "முடியாயிரம்", "ஆணிநிறப் பீதாம்பரனார்" என்பவைகொண்டும் உணர்க. திருமால் கடலிற் பள்ளிகொண்டுள்ளவனாதலால், 'மாயோன்கடனின்றெழு' என்றது ஏற்கும்.

'உத்தரியத்தையொப்ப' என்றபாடம் சிறக்கும். உத்தரியம் - உத்தரீயம்; மேலாடை; (அரையாடை 'அந்தரீயம்' எனப்படும்.) மாயோன் - மாயையையுடையவன்; மாயை - கூடாததையும் கூட்டுவிக்கும் திறம் [அகடிதகடநாசாமர்த்தியம்.] பிரபஞ்சகாரணமான பிரகிருதியும், ஆச்சரியகரமான குணஞ்செயல்களும், 'மாயை' எனப்படும். செம் பொன் - மாற்றுயர்ந்த பொன். (௪௦)

௪௧. நூலேந்துகேள்விநுகராப்புலனோக்கலுற்றார்
போலேந்திநின்றதனியாண்மெய்பொறாதுநீங்கக்
காலாழ்ந்தழுந்திக்கடல்புக்குழிஇக்கச்சமாகி
மாலேந்தவோங்குநெடுமந்தரமேயுமான.

(இ - ள்.) நூல் ஏந்து கேள்வி நுகரா - சாஸ்திரங்களிற் கூறியுள்ள கேட்டற்கு உரிய பொருள்களை (ப் பெரியோரிடத்திற்) கேட்டறியாமல்,

புலன் நோக்கல் உற்றார் போல் - (தமது ஐம்பொறிகளையும்) ஐம்புலன்களிடத்து அநுபவிக்கச் செலுத்திய சிறியோர்களைப் போல, ஏந்தி நின்ற தனியாள் மெய் பொறாது நீங்க - முதலிற்பொறுத்திருந்த ஒப்பற்ற பூமிதேவியானவள் (தனது) உடல்வலிமையைத் தாங்கமுடியாமல் விலகிப்போக, (அதனால்), கால் ஆழ்ந்து அழுந்தி - (தன்னுடைய) அடிப்பாகமும் (அப்பூமிதேவியுடனே) முழுகி அழுந்துமாறு, கடல் புக்க ஊழி - கடலிற் புகுந்த சமயத்தில், மால் கச்சம் ஆகி வந்த - திருமால் கூர்மாவதாரஞ்செய்து தாங்க, ஓங்கும் - மீண்டும் உயரவெழுந்த, நெடு மந்தரமும் - நீண்ட மந்தரமலையையும், மான - ஒப்பவும்,—(எ - று.)—முடிபு, கீழ்ச்செய்யுளிற் காட்டப்பட்டது.

கடலில்மூழ்கியிருந்த மைநாகமலை மீண்டும் எழுந்தது, பாற்கடல்கடைகையில் முதலிற் கடலில் மூழ்கியிருந்து கூர்மாவதாரங்கொண்ட திருமாலால் மேலெடுக்கப்பட்ட மந்தரமலையை யொத்திருந்த தென்பதாம். கடலிலிருந்து மேலெழுந்த தன்மை இரண்டிக்கும் ஒக்கு மென்க. நூல்களைக் கற்றறிந்த பெரியோரிடத்துச் சிறிதுங் கேளாத சிறியோர் ஐம்புலன்களைத் தாங்கள் மேற்கொண்டு சிறிதுபொழுதிற்குள் அப்புலன்களினுலேயே கேடுறுதல்போல, பூமிதேவியும் முதலில் மந்தரமலையைத் தாங்க ஒருப்பட்டுச் சிறிது பொழுதிற்குள் அப்பொறையைப் பொறுக்கமுடியாமல் அம்மந்தரமலையினுலே அழுந்திவிட்டன ளென்பது, முன்னிரண்டடியின் கருத்து. உபதேசமொழிகளை அநுபவமுடைய ஆசிரியர்பாற் கேட்டு அதனால் மெய்ப்பொருளையுணராதவர்கள் முதலில் ஆராய்ச்சியின்றித் தவவிரதங்களை மேற்கொண்டு பின்பு அவற்றைமுடியச்செலுத்தும் ஆற்றலின்றி விட்டிடு மியல்பு இங்கு உவமைகூறப்பட்ட தெனக் கொள்ளினும் ஏற்கும்; ("கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர், மற்றீண்டு வாராநெறி" என்றதனால், உயர்கதிபெறும் ஒழுக்கத்திற்குக் கேள்வி [சிரவணம்]முதற்காரணமாத லுணர்க.) இக்கவி, ஆங்காங்கு உபமானமுகத்தாலும், மற்றும் வேறுவகையினாலும் நீதிகளைப் போதிக்குந் தன்மை கருதத்தக்கது.

பொறுமையில் ஒப்பற்றவளாதலின், பூமிதேவியை 'தனியாள்' என்றார்; 'நின்றவனியாள்' என்று பாடமாயின், பூமியையுணர்த்துகிற 'அவநி' என்ற வடசொல் திரிந்து பெண்பாலுக்குஉரிய 'ஆள்'விகுதிபெறறுவந்த தெனக் கொள்க. புக்குழீஇ - இன்னிசையளபெடை. கச்சம் - ஆமை; கச்சபம் என்ற வடசொல்லின் விகாரம். 'நாகரார்புலனோக்கலுற்றார்', 'தனியாள்', 'மந்தரந் தன்னைமான' என்பன, பாடபேதம். (௪௧)

௪௨. தள்ளற்கருநற்சிறைமாடுதழைப்பொடோங்க
வெள்ளற்கருநன்னிறமெல்லியிலாதபுல்ல
வள்ளற்கடலைக்கெடநீக்கிமருந்துவவ்வி
யுள்ளூற்றெழுமோருவணத்தரசேயுமொத்த.

(இ - ள்.) தள்ளற்கு அரு நல் சிறை - நீக்குதற்கு அருமையான அழகிய சிறகுகள், மாடு - (தனது இரண்டு) பக்கத்திலும், தழைப்பொடு ஓங்க -

அ

தழைத்தோங்கவும்,—எள்ளற்கு அரு - பழித்தற்கு அரிய, எல்லை இலாத - (கண்களினாற்பார்த்து) அளவிடமுடியாத, நல் நிறம் - நல்ல உடம்பின்நிறம், புல்ல - பொருந்தவும்,—வள்ளல் கடலை கெட நீக்கி - பலவகை வளப்பங்களையுடைய சமுத்திரம் பிளவுபடும்படி அதனைக்கிழித்துக்கொண்டு, மருந்து வவ்வி உள் உற்று - (தேவலோகத்தினின்று) அமிருதத்தைக் கவர்ந்துகொண்டுவந்து அக்கடலினுட் புகுந்து (பாதாள லோகத்திற்குச் சென்று), எழும் - (அங்கு நின்று மீண்டும்) உயர எழுந்துவருகின்ற, ஓர் உவணத்து அரசும் - ஒப்பற்ற சுபர்ணனென்ற பெயரையுடைய (பறவைகட்கு) அரசனான கருடனையும், ஒத்த - ஒத்திருக்கின்ற,—(எ - று.)—'மைநாகமலை' என, ௩௬-ஆங் கவியின் எழுவாயோடு தொடரும்: முன்பின்கவிகளில் வருகின்ற செயவெனெச்சங்கட்கு ஏற்ப, இங்கும் 'ஒப்ப' எனச் செயவெனெச்சமாகப் பாடங்கொள்ளுதல் சிறக்கும்: அன்றி, இப்பொழுது உள்ள பாடம் எடுப்பழிவு [ப்ரக்ரமபங்கம்] என்ற குற்றத்திற்கு இடமாதல் காண்க.

இருபுறத்திலும் சிறகைப்பரப்பிக்கொண்டு நவரத்தினங்களாற் பலவகை வருணங்களையுடையதாய் இந்திரன் சிறகரிந்த காலத்துச் சமுத்திரத்தினுட் புக்கு மீண்டு இப்பொழுது கடலைக்கிழித்துக்கொண்டு மேலெழுந்த மைநாகமலை, இரண்டுசிறகுகளைப் பரப்பிக்கொண்டு கழுத்து இறகு மூக்கு கண் கால் முதலிய இடங்களிற் பலவகைநிறம்பொருந்தி அமுதங்கொண்டு பாதாளலோகத்திற்குச்சென்று மீண்டு அங்கிருந்து கடலைக் கிழித்துக்கொண்டு வந்த கருடபகவானைப் போன்ற தென்பதாம். கீழ் உக, ௩௪ - ஆஞ் செய்யுள்களில் அநுமானுக்குக் கருடனை உவமைகூறிய கவி, இங்கு மைநாகத்துக்குக் கருடனை உவமைகூறினர்.

தள்ளற்குஅரு சிறை - பிறரால் அழிக்கமுடியாத சிறை. கருடன் ஒருவராலும் கெடுக்கமுடியாதபடி மிக்கபலமுள்ளவனாதலாலும், பர்வதங்களெல்லாம் சிறகறுக்கப்பட்டபொழுது மைநாகமலை வெட்டுணாது தப்பியோடிச் சென்றதனாலும், 'தள்ளற்கு அரு நல்' என்ற அடைமொழி, கருடன் மைநாகமலை என்ற இரண்டின் சிறகிற்கும் ஏற்கும். உவணம்-ஸுபர்ணமென்ற வடசொல்லின் விகாரம்: அழகிய சிறகினையுடையதென்பது பொருள்; அத்து - சாரியை; உவணமாகிய அரசு என, இருபெயரொட்டு. இனி, ஸ்வர்ணமென்பது உவணமெனவிகாரப்பட்டதாக்கொண்டு, பொன்னிறத்தையுடைய அரசனெனக் கருடனைக் கூறிய தெனினுமாம். "ஓங்கோலை சங்க மொளிர்பவளம் வெண்முத்து, நீர்படு முப்பினோடைந்து" முதலிய பல வளங்களை யுடையதாய் அவற்றைக் கைம்மாறு கருதுதலின்றிப் பலர்க்கும் வரையாதுகொடுத்தல் பற்றி, 'வள்ளற்கடல்' எனப்பட்டது. 'எல்லையிலாதுபொங்க' என்றும் பாடமுண்டு.

(௩௨)

௩௩. ஆன்றநெடுநீரிடையாதியொடந்தமாகித்
தோன்றுதுநின்றனருடோன்றிடமுந்துதோன்று
மூன்றுமுலகத்திடைமுற்றுயிராயமற்று
மீன்றனையின்றசுவணத்தனியண்டமென்ன.

(இ - ள்.) ஆதியொடு - (எல்லாவுலகங்களையும் சிருஷ்டிகாலத்திற்) படைத்தவனும், அந்தம் ஆகி - (பிரளயகாலத்தில்) அழிப்பவனுமாய் நின்று, தோன்றாது நின்றான் - (தனது உண்மைவடிவு ஒருவராலும்) அறியப்படாமல் நின்றவனான திருமாலினது, அருள் - அநுக்கிரகமானது, தோன்றிட - உண்டாக,—ஆன்று ஆம் நெடு நீரிடை - பரந்துள்ள பெரிய ஜலத்திலே,— மூந்து தோன்றும் மூன்று ஆம் உலகத்திடை - முற்பட்டுத்தோன்றிய (மேல் கீழ் நடு என) மூன்றுவகையாகிய உலகங்களில், முற்று - நிறைந்துள்ள, உயிர் ஆய - உயிர்களையெல்லாம், மற்றும் - மீண்டும், ஈன்றானை - படைப்பவனாகிய பிரமதேவனை, ஈன்ற - பெற்ற, சுவணம் தனி அண்டம் என்ன - பொன்மயமான ஒப்பற்ற அண்டம் போலவும்,—(எ - று.)

திருமால் உலகங்களையெல்லாம் சிருஷ்டிப்பதற்காகப் பிரமனை யுண்டாக்குவதனிமித்தம் தனது சங்கற்பத்தால் தோன்றிய பெரும்புனலிடையில் தனது மலர்ந்தநாபீகமலத்தினின்று படைத்துவிடுத்த பொன்மயமான அண்டத்தை யொத்திருந்தது, சமுத்திரத்தில்தோன்றிய பொன்னிறமான அம்மைநாகமலை யென்பதாம். "எங்குமதத்துவ மெமக்குநீயளித்தி கண்ணென்ன, நீங்கிநின்றனை வழுத்தலு நிலவுபேரொளியா யோங்குமுன்னவ னவற்றினைப் பொருந்தியொன்றாக்க, வீங்குநீரினிற்பிறந்தது விளங்குபோண்டம்," "எங்குமாய்நிறைதெய்வமோடியற்றுறுகருமங், தங்குமிச்சையென்றுரைபெறுசத்திகளுடனே, யங்கொழுஞ்சுடரவிர்தருபொன்மயமாகிப், பொங்குமண்டத்தின் விராட்டெனப் பொலிந்தனன் புருடன்;" "பண்டைநான்மறைக்குமெட்டாப் பராற்பரனருளினானன், கெண்டகு தத்துவங்க ளிலங்கு பொன்னுருவமாகி, வெண்டிரைநீரி லண்டமாகவே விளங்கவந்த, வண்டத்துள் விராட்டுவெந்துற் றடல்கொடு வளர்ந்ததன்றே" என்ற பாகவதமும், "கடவுள் சிந்தித்துத் தனது சரீரத்தினின்று பலவகைப்பிராணிகளைப் படைக்கவிரும்பி முதலில் ஜலங்களை யுண்டாக்கினார்; அவற்றில் தனதுசக்திரூபமான விதையை யிட்டார்; அது, பொன்மயமான அண்டமாயிற்று; அதில் எல்லாவுலகங்களையும் படைக்கும் பிரமன் தோன்றினான்" என்ற மநுதர்மசாஸ்திரமும் இங்கு உணரத்தக்கன. அருள்தோன்றிட நெடுநீரிடை ஈன்ற சுவணத்தனியண்டம் என் இயையும்.

அருள் - அண்டம் உண்டாதற்குக் காரணமான கடவுளினுடைய சங்கல்பம். பிரளயகாலத்தில் மூலப்பிரகிருதியிலே உமைமெழுக்கிற்பொன்போலக் கிடந்த உயிர்களையெல்லாம் திருமால் எடுத்துத்தந்து அவ்வுயிர்கட்குக் கைகால் முதலிய உறுப்புக்களோடுகூடிய சரீரத்தைப் படைக்குமாறு பொன்னிறமான அவ்வண்டத்தில்தோன்றிய பிரமதேவனுக்குக் கட்டளையிட, அவன் பிரளயத்துக்குமுன்பு இருந்ததுபோலவே படைத்தனனாதலால், 'மூந்துதோன்று மூன்றுமுலகத்திடை முற்றுயிராயமற்றும் ஈன்றானை' என்றார். நித்தியமான உயிர்களை ஈனுதலாவது - உடம்புடன்கூட்டுகை.

'ஆதியொடு அந்தமாகி' என்றதில், காத்தலையும் உபலக்ஷணத்தால் அடக்கிக்கொள்க. திருமாலே பிரமனைப் படைக்கின்றானென்றும், தானான

தன்மையனுய்க் காக்கின்ரு னென்றும், சிவனுய் அழிக்கின்ரு னென்றும் நூல்கள் கூறும்; "ஆக்குமாறயனு முதலாக்கிய வுலகங், காக்குமாறு செங் கண்ணிறை கருணையங்கடலாம், வீக்குமாறரனும்" என்ருர் பாரதத்திலும். இனி, 'ஆதியொடந்தமாகி' என்பதற்கு - எல்லாப்பொருள்கட்கும் தான் முத லும் ஈறுமாய் என்றும்பொருள்கொள்ளலாம்; எல்லாபபொருள்களுக்தோன்று முன்னும் அவையனைத்தும் அழிந்தபின்னும் தான் நின்று தனக்கு ஓர் ஆதி யும் அந்தமுமில்லாமல் நித்யனுய்நிற்பவன் திருமால்என்பது கருத்து. தோன் ருதுநின்ருன் - வெளிதிற் கண்ணுக்குப்புலனுகாது நின்றவனுமாம். 'உயிராய மற்றும்' என்பதற்கு - உயிருள்ளவைகளையும் உயிரில்லாதவைகளையும் என்று உரைப்பாரு முளர்.

சுவணம் = ஸ்வர்ணம் : வடசொல். 'ஆன்ருழ்நெடுநீரிடை', 'முந்து தோன்றி', 'உலகத்தொடு முற்றுயிராயமுற்றும்' என்பன - சில்பிரதிகளிற் பாடம் காணப்படுகிறது. (௪௩)

௪௪. இந்நீரினென்னைத்தருமெந்தைதனைப்பெய்தியன்றிச்
செந்நீர்மைசெய்யேனெனச்சிந்தனைசெய்துநொய்தி
னந்நீரில்வந்துமுதலந்தணனுதிநாளம்
முந்நீரின்மூழ்கித்தவமுற்றிமுளைத்தவாபோல்.

(இ - ள்.) 'ஆதிநாள் - முற்காலத்திலே, இ நீரின் - இந்த ஜலத்தில், என்னை தரும் - என்னைப் படைத்த, எந்தையை - எனது தந்தையை, எய்தி அன்றி - பிரதியக்ஷமாக அடைந்தாலல்லாமல், செம் நீர்மை - செம்மையான நல்லசெய்கையை, செய்யேன்—', என - என்று, சிந்தனைசெய்து - எண்ணி,— முதல் அந்தணன் - முதலிலேதோன்றிய வேதியனுகிய பிரமதேவன், நொய் தின் - விரைவாக, அ நீரில் வந்து மூழ்கி - அந்தஜலத்திற்புக்கு முழுகியிருந்து, அ முந்நீரில் - அந்தச் சமுத்திரத்திலேயே, தவம் முற்றி - (அத்தந்தையைக் காணுமாறு) தவத்தைச்செய்து முடித்து, முளைத்த ஆ போல்-(பிறகு) மேலே யெழுந்த தன்மைபோலவும்,—(எ - று.)

கடலினின்றுவெளிவந்த மைநாகமலை, 'இந்தப் பெரிய வெள்ளத்திலே என்னையுண்டாக்கின எனதுபிதாவைப் பிரதியக்ஷமாகக் கண்டாலல்லாமல் நான்செய்யவேண்டிய காரியமொன்றையும் செய்கிலேன்' என்று நினைத்து அக்கடலினீரிலேயே முழுகியிருந்து தவஞ்செய்துமுடித்துப் பின்பு வெளி வந்த பிரமதேவனை யொத்திருந்த தென்பதாம்; உவமையணி. கடலினின்று வெளிவந்த பல முடிகளையுடைய மைநாகமலைக்கு, கடல்நீரில் முழுகியிருந்து வெளியெழுந்த நான்முகனுன பிரமன் உவமை.

("வெண்டிரைக் கனைகடனெடுவேலிசூழுலக, முண்டுமைத்தலைநாகபோ கத்தினிலுறங்குந், தண்டுழாய்முகிலுந்தியந்தடத்தினிற் றளைத்தாட், புண்ட ரீகமொன்றலர்ந்தது புவியெலாம்பூப்ப," "நீலமால்வரைநெற்றியிற்பொடித்த செங்கதிரே, போலவான்சுடர் பொழிதருமுளரியம்பொகுட்டின், மேலதாக வந்தெழுந்தது வெயில்விரிபசும்பொற், கோலமேவியகுலமறைமழலைவாய்க்

குழவி," "கொங்குவிம்மியகொழுமடற்றாமரைக்குழவி, யெங்குவந்தனமெவ்வு ழியிருந்தன மென்று, வங்கண்மாதிரமனைத்தையும் பார்த்தபார்ப்பத், திங் கள்போற்றிகழ்திருமுகநான்கெனச்சிறந்த," "ஒன்றுங்காண்கலனுறைந்தசெந் தாமரைகண்டான், பொன்றயங்குமிப்போதுவந்தெழுந்ததெங்கென்று, மன்ற லம்புயமாமலர்நாளத்தின்றுளையிற், சென்றுதேடலுற்றனன் றனிச்செங்க ணெட்டுடையான்," "சேயதாமரைமுதலவன் றேவர்தம்பருவ, மாயிரந்தனித் தேடியுங் காண்கில னலந்து, மீயெழுந்தனன் விரிமலர்ப்பொகுட்டுவீற்றிருந் தான், தூயமாதவந்துணிந்தனன் புரிந்தனன்றொழுதே," "காயும்வெஞ்சினக் கட்செவியரசுமேற்கவிப்ப, வாயிரம்பணாமணி பொழியலர்கதிர்க்கற்றைப், பாயலந்தில்வானுருவினன்கிடந்தபைந்துளவ, மாயவன்றனை மலர்விழிமகிழ் வுறக்கண்டான்," "கண்டுநெஞ்சகங்கனிந்து செங்கைம்மலர்கூப்பி, யண்ட கோடிகளனைத்தையும்படைத்தளித்தழிக்குங், கொண்டல்வண்ணனைக் குறித்த லொல்லாத்தனிமுதலைப், பண்டைநான்மறைப்பரமனைப் பரவினன் பணிந் தான்," "அருள்சுரந்தலையெறிசெழுந்தாமரையன்ன, திருநெடுங்கணானோக்கி யத்திருமறுமார்ப, னுரைசெய்ஞானம் வந்துறமுலகியாவையுநன்கு, தருதி நீ யிருந்தவம்புரிந்தென்றனன் கரந்தான்," "பெருகுதண்புனலலையினூற்பெரி தலைமலர்மேற், பொருவருந்தவமீட்டு நூறாண்டயன்புரிந்தான், மருவிஞானம் வந்துறக் கடுவெளியெறிபுனலைப், பருகியோங்குலகியாவுமம்மலர்வயிற்படைத் தான்" என்று பாகவதத்தில் மலரவன்றோற்றமுரைத்தவத்தியாயத்தில் வரு கின்ற செய்யுட்களை நோக்கி இச்செய்யுளின்கருத்தை உணர்க.)

'இந்நீரின்' என்பது, 'என்னைத்தரும்' என்பதனோடு இயையும்: அன்றி, என்னைத்தரும் எந்தையை இந்நீரின் எய்தியன்றி என இயைத்து, திருமால் மச்சாவதாரஞ்செய்தன னாதலால் அக்கடலை அவனுக்கு இருப்பிடமான நீரிற் காணுமாறு பிரமன் முன்னர்முழுகியிருந்து பின்னர்வெளிப்பட்டதை யொக்கு மெனக் கருத்துக்கூறுவாரு முளர்.

'செய்ந்நீர்மைசெய்யேன்' என்று பாடமாயின், செய்யவேண்டிய காரிய மொன்றையும் செய்யே னென்க. அந்நீரில் - (தான் நினைத்த) அப்படியே எனினுமாம். மூந்நீர் - படைத்தல் காத்தல் அழித்தல் என்ற மூன்று தன் மையை யுடையதென, இங்கு, சிருஷ்டிக்குக் காரணமாயிருந்த மஹாஸமுத் ரத்துக்குப் பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை; ஆற்று நீர் ஊற்றுநீர் வேற்றுநீ ராகிய மூன்று நீரை யுடைய தெனக் காரணப்பொ ருள் . கூறலாகாது.

'அந்நீரில்வந்த', 'ஆதிநாளின்' என்று சில ஏட்டுப்பிரதிகளிற் பாடம் காணப்படுகின்றது. (௪௪)

௪௫. பூவாளிடையூறுபுகுந்தபொறாதநெஞ்சிற்
றேவாமுனிசீறிடவாரிகுளித்தவெல்லா
மூவாமுதனாயகன்மீளமுயன்றவந்நாட்
டேவாசுரர்வேலையில்வந்தெழுதிங்களென்ன.

(இ - ள்.) பூவால் - (இலக்குமியினது) மலர்மாலையினால், புகுந்த - (இந்திரன்பவனிவரும்பொழுது) சேர்ந்த, இடையூறு - தீமையான செயலுக்கு, பொறாத நெஞ்சின் கோ ஆம் முனி - (எப்போதும்) பொறுக்குந்தன்மையில்லாத[மிக்ககோபம்பொருந்திய]மனத்தையுடைய சிறந்தவனான துருவாசமுனிவன், சீறிட - கோபித்ததனால், வாரி - கடலிலே, குளித்த - முழுகி மறைந்துபோன, எல்லாம் - (தேவலோகத்துச்) செல்வங்களெல்லாம், மீள - மீண்டு வருமாறு, மூவா முதல் நாயகன் - அழியாத முதற்கடவுளான திருமால், முயன்ற - முயற்சிசெய்த, அ நாள் - அந்தக்காலத்தில்,—தேவ அசுரர் வேலையில் - தேவர்களும் அசுரர்களும் கூடிக்கடைந்த திருப்பாற்கடலிலே, வந்து எழு - வந்துதோன்றிய, திங்கள் என்ன - சந்திரன் போலவும்,—(எ - று.)

கடலினின்றுதோன்றிய மைநாகமலை, தேவாசுரர்கள் கடைந்தகாலத்துப் பாற்கடலினின்று தோன்றிய சந்திரனை யொத்திருந்த தென்பதாம்.

இடையூறு நடுவில் உறுவது எனத் தீமைக்குக் காரணக்குறி; இங்கு, அதனைவிளைக்கும் செயலுக்கு ஆயிற்று. துருவாசமுனிவர் அளவிறந்தகோபமுடையவராதலால், 'பொறாதநெஞ்சிற் கோவாமுனி' என்றார். இதுபற்றியே, இவரைக் காளிதாசமகாகவி சாகுந்தளநாடகத்தில் "சுலபகோபரான மஹர்ஷி" என்றான்; வில்லிபுத்தூராரும் மகாபாரதத்தில் "சாபத்தாலுஞ் சாபமொழிதன்னாலும் வளருந் தவத்தாலும், கோபத்தாலும் பேர்படைத்த கொடியமுனிவன் துருவாசன்" என்றார். மற்றைமுனிவர்க்கெல்லாம் பிறரைச் சபிக்கத் தவம் குறையும்; இவரோ, அங்ஙனமன்றி, சபிக்கச்சபிக்கத் தவம் வளர்ந்துவருமாறு வரம்பெற்றுள்ளவர்; ஆதலால், எப்பொழுதும் பெருங்கோபங்கொண்டவராய்ச் சபிப்பது, இவர்க்கு இயல்பு; இவர், அத்திரிமுனிவரது புத்திரர். "மிகுதியான கோபத்தை யடக்கவல்லேனல்லேன் யான்" என்று இம்முனிவர்தாமே இலக்குமணனது முன்னிலையிற் கூறுவது, ஸ்ரீவால்மீகிராமாயணத்து உத்தரகாண்டத்திற் காணத்தக்கது; "கசட்டுறுமுனி" என்று பாலகாண்டத்திற் கம்பநாடர்கூறியதும் இக்குணம்பற்றியேயென்க. பூவால் இடையூறு புகுந்த நெஞ்சின் - மலர்மாலையை அவமதித்ததுகாரணமாக வருத்தங்கொண்ட மனத்தையுடைய, முனி என்றும் உரை கூறலாம். 'புகுந்த' என்பதை 'புகுந்தது' என்ற தொழிற்பெயரின் தொகுத்தல்விகாரமாகவும், 'கோவாமுனி' என்பதை 'கோவமுனி' என்றதன் நீட்டல்விகாரமாகவும் கொண்டு, ஒருமலர்காரணமாகத் தமதுமனப்போக்கிற்குத் தடைநேர்ந்ததைப் பொறாத மனத்தையுடைய கோபமுனிவராகிய துர்வாசர் சீறிச் சபித்ததனாற் கடல்நீரிலொளித்த பொருள்களெல்லா மென்று உரை கூறவும் தகும். இனி, கோவா என்று பிரித்து, (தேவர்களோடு) மனம்பொருந்தாத எனவும் பொருள்கூறுவர். 'குளித்த' என்பதைப் பெயரெச்சமாகவேனும், பலவின்பாற்பெயராகவேனும் கொள்க. மூவா=மூவாத; மூத்த என்பதன் எதிர்மறை.

மூவாமுதல்நாயகனும் தேவாசுரரும் முயன்ற அந்நாள் என்றும், மூவாமுதல்நாயகன் தேவாசுரரோடு முயன்ற அந்நாள் என்றும் பதவுரை

கூறலுமாம். 'புகுந்து', 'பொருந்து', 'வேலைகுளித்த', 'வேலைகுதித்த' என்றும் பாடமுண்டு. (௪௫)

௪௬. நிறங்குங்குமமொப்பனநீனிறம்வாய்த்தநீரி
னிறங்கும்பவளக்கொடிசுற்றினசெம்பொனேய்ந்த
பிறங்குஞ்சிகரப்படர்முன்றிறொறும்பிணேவோ
டுறங்கும்மகரங்களுயிர்ப்பொடுணர்ந்துலாவ.

(இ - ள்.) (ஒருபுறத்திலே), நிறம் - (தனது) நிறத்தினால், குங்குமம் - குங்குமப்பூவை, ஒப்பன - ஒத்திருப்பனவும்,—(மற்றொரு புறத்திலே), நீல் நிறம் வாய்த்த - கருநிறத்தைப் பொருந்தியிருப்பனவும்,—நீரின் இறங்கும் - நீரிலே வேர்வீழ்த்திய, பவளம் கொடி - பவழக்கொடியினால், சுற்றின - சுற்றிக்கொள்ளப்பெற்றிருப்பனவும்,—செம் பொன் ஏய்ந்த - செம்பொன் பொருந்தியனவுமான, பிறங்கும் சிகரம் - விளங்குகின்ற (தனது) சிகரங்களிலே, படர் - விசாலமாயுள்ள, முன்றில்தொறும் - முற்றங்களிலெல்லாம், பிணேவோடு உறங்கும் - (தமது) பெண்பால்களுடனே தூங்கிக்கொண்டிருந்த, மகரங்கள் - சுறாமீன்கள், உணர்ந்து - தூக்கம்தெளிந்து, உயிர்ப்பொடு உலாவ - பெருமூச்சோடு உலாவவும்,—(எ - று.)

அந்தமைநாகமலை நீரிற்கிடந்தமையால், சிலவிடங்களிற் பவழமும் செம்பொன்னும் பொருந்தியும் சிலவிடங்களிற் குங்குமநிறமாயும் மற்றுஞ்சிலவிடங்களில் நீலநிறமாயு முள்ள அம்மலைச்சிகரங்களின் மேலிடங்களிலே கவலையற்றுப் பெண்பால்களோடு உறங்கிக்கொண்டிருந்த மகரமீன்கள் இப்போது அம்மலை கடலினின்று வெளிப்போந்தமையால் துயில்நீங்கித் தத்தளிப்பனவாயின வென்பதாம். இனி, முன்னிரண்டடிகட்கு - நீலநிறமுள்ள நீரிலே வேரிறங்கிய பவளக்கொடிகள் சுற்றிக்கொண்டிருப்பதனால் குங்கும நிறத்தையொத்தனவாய்ச் செம்பொன்பொருந்திய சிகரம் என்று உரைகூறினுமாம். நீர்வாழுயிராதலால், அந்நீரினின்று வெளிப்பந்ததுபற்றி நெட்டுயிர்ப்புற்று வருந்தின வென்பார், 'உயிர்ப்பொடுலாவ' என்றார். நீரினின்று வெளிப்பட்டமாத்திரத்தில் துடித்துவருந்துதல், மீன்களின் இயல்பு. தன்மைநவிற்சியணி.

இல்முன் என்பது - இலக்கணப்போலியால், முன்றிலெனவந்தது: அது - இலக்கணையால், மேலிடத்தை யுணர்த்திற்று. இனி, சிகரங்களாகிய பரந்த வெறுநிலங்கள்தோறு மென்று பதப்பொருள்கொள்ளலு மொன்று. "பெண்ணும் பிணவு மக்கட்குரிய" என்ற தொல்காப்பியத்து மரபியற்சூத்திரத்தினுரையில் 'மக்கட்குரிய வெனவே, உரியவன்றி "துறுகல் விடரளைப் பிணவுப் பசிகூர்ந்தென" எனப் புலிமுதலியனவற்றிற்கும் கொள்க' என்றதனால், இங்கு, பெண்மகரம் பிண வெனப்பட்டது அமையும். 'வாய்ந்த', 'உணர்ந்துபோர' என்பன - பாடாந்தரம். (௪௬)

௪௭. கூன்கூன்முதிரிப்பிகுலைக்கநிரைத்தபாசி
வான்சூழ்மழையொப்பவயங்குபனிக்குமுன்றி

ருண்சூலநாளிற்றகைமுத்தமுயிர்த்தசங்க
மீன்சூழ்வருமம்முழுவெண்மதிவீறுகிற.

(இ - ள்.) கூன் சூல் முதிர் இப்பி குரைக்க - வளைந்த உடம்புடையன வாய்க் கருப்பம்முதிர்ந்த முத்துச்சிப்பிகள் ஒலிக்கவும், நிரைத்த பாசி - (பல காலமாக நீரிலேயே அமிழ்ந்திருந்ததனால் அம்மலையின்மேல்) வரிசையாகப் படர்ந்துள்ள பாசிகள், வான் சூழ் மழை ஒப்ப - வானத்திற் பரவிய மேகங்களை யொத்திருக்கவும், வயங்கு - விளங்குகின்ற, பளிங்கு முன்றில் - பளிக்குப் பாறையாலான (அம்மலையினது) முன்னிடங்களில், தான் —, சூலம் நாளில் - கருவுயிர்க்கவேண்டியகாலத்திலே, தகை முத்தம் உயிர்த்த - பெரிய முத்துக் களைப் பெற்ற, சங்கம் - சங்கானது, மீன் சூழ்வரும் அ வெள் முழு மதி வீறுகிற - நக்ஷத்திரங்களாற் சூழப்பட்டுள்ள அந்த வெண்ணிறமான பூர்ணசந்திரனது பெருமையைக் குலைக்கவும்,—(எ - று.)

முத்துச்சிப்பிகளினொலி மேககர்ச்சனையாகவும், பாசிகள் மேகங்களாக வும், பளிக்குப்பாறையினிடங்கள் நிலாப்பரவிய ஆகாயமாகவும், முத்துக்கள் நக்ஷத்திரங்களாகவும், சங்கு பூர்ணசந்திரனாகவு மிருக்க, இவ்வாறு, அந்த மைநாகமலை, சிலவிடங்களில் மேகம்தோன்றப்பெற்று, பூர்ணசந்திரனும் நக்ஷத் திரங்களும் விளங்குகின்ற ஆகாயத்தை யொத்திருந்த தென்பதாம்; தன்மைத் தற்குறிப்பேற்றவணி.

பாசி - 'பசுமை' என்ற பண்பினடியாப் பிறந்த பெயர்; இ - பெயர்விகுதி. சூலம், அம் - சாரியை; சூல என்று எடுத்து, குறிப்புப்பெயரெச்சமாகவும் கொள்ளலாம். 'அநாளில்' என்பது 'அந்நாளில்' எனத் தொக்கதாகக் கொண்டு, தான்சூல்கொண்டிருந்த முத்தத்தை அன்றைத்தினத்திலே யீன்ற சங்க மென்றலு மொன்று. பளிங்கு முன்றில் - படிகக்கல்மயமான வெறுநிலமு மாம். 'சூலினுளில்' என்றும் பாடமுண்டு. சங்கம் முத்துப்பிறக்கு மிடங்க ளிருபதில் ஒன்றாத லறிக. குரைக்க ஒப்ப வயங்கு என இயையும். மின்னு வது மீன் என நக்ஷத்திரத்திற்குக் காரணக்குறி; வானமாகிய கடலுக்கு இவை மீன்கள்போலுதலால், இப்பெயர் வந்ததெனக் கூறுவாருமுளர்: இவ்வாறு கொள்ளுமிடத்து, இச்சொல் - மீந மென்ற வடசொல்லின் விகாரம்: உவமை யாகுபெயரான் வந்த காரணக்குறி. (௬எ)

௬அ. பல்லாயிரமாயிரங்காசினம்பாடிமைக்குங்
கல்லார்சிமயத்தடங்கைத்தலநீண்டுகாட்டத்
தொல்லார்கலியுட்புகமூழ்கிவயங்குதோற்றத்
தெல்லாமணியீட்டமுகந்தெழுகின்றதென்ன.

(இ - ள்.) பல் ஆயிரம் ஆயிரம் - பலவாயிரக்கணக்கான, காசு இனம் - இரத்தினவகைகள், பாடு - தம்மிடங்களில், இமைக்கும் - ஒளி வீசப்பெற்ற, கல் ஆர் சிமயம் தடம் - கற்கள் மிகுதியாகப்பொருந்திய அம்மலையினது உச்சி யிடங்கள், கை தலம் நீண்டு காட்ட - கைகள்போல மேலோங்கித் தோன்று தலினால்,— தொல் ஆர்கலியுள் - பழமையாகிய சமுத்திரத்திலே, புக மூழ்கி -

உட்புகுமாறு முழுகி, வயங்கு தோற்றத்து எல்லாம் மணி ஈட்டம் முகந்து - விளங்குகின்ற ஒளியையுடைய இரத்தினவகைகளின் கூட்டங்களையெல்லாம் வாரியெடுத்துக்கொண்டு, எழுகின்றது என்ன - மேலே மீண்டும் உயர்ந்து வருகின்றது போலவும்,—(எ - று.)

கடலில்முழுகியிருந்த மைநாகமலை தனதுசிகரங்களிற் பலவகையிரத்தினங்களும் விளங்க வெளியேவந்தது, கடலிற்குளித்து இரத்தினங்களை யெடுப்பவன் தனதுகைகளிற் பலவகையிரத்தினங்களை வாரியெடுத்துக்கொண்டு மேலேவருவதனை யொத்திருந்த தென்பதாம்; இதுவும் - தன்மைத்தற்குறிப்பேற்றவணியே. மலையை முழுகுகின்றவனாகவும், மலைச்சிகரங்களை அவனது நீட்டியகைகளாகவும், சிகரங்களிலுள்ள இரத்தினங்களை அவன்கைகளிலுள்ள இரத்தினங்களாகவும் கொள்க. 'சாசினம்' என்றது - கோமேதகம், நீலம், பவழம், புஷ்யராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வயிரம், வைடூரியம் என்னும் நவரத்தினங்களைக் குறிக்கும். காட்ட - செயவெனெச்சம், காரணப்பொருளது. கடல் 'ரத்நாகரம் [இரத்தினங்கட்கு இருப்பிடம்]' ஆதலால், அதில்மூழ்கிப் பவழம் முத்து முதலியவற்றை யெடுத்தல், வழக்கம். சிகரம் நெடு கைத்தலம் என எடுத்து - சிகரங்களாகிய பெரிய கைகளினிடமெனினுமாம். 'முகந்தெழுவானுமென்ன' என்றும் பாடமுண்டு. (௪௮)

௪௯. மனையிற்பொலிமாகநெடுங்கொடிமாலையேய்ப்ப
வினையிற்றிரள்வெள்ளருவித்திரடூங்கிவீழ
நினைவிற்கடலூடெழலோடுமுணர்ந்துநீங்காச்
சுனையிற்பனைமீன்றிமிலோடுதொடர்ந்துதுள்ள.

(இ - ள்.) மனையில் பொலி மாகம் நெடுங் கொடி மாலை ஏய்ப்ப - உபரிகைகளிலே விளங்குகின்ற ஆகாயமளவும் நீண்டுள்ள துவசபடங்களின் வரிசைகட்கு ஒப்பாகுமாறு, வினையின் திரள் வெள் அருவி திரள் தூங்கி வீழ - முறைமையாகத்திரண்ட வெண்மையான அருவித்தொகுதிகள் அசைந்து பெருகவும்,—நினைவின் - (அநுமானுக்கு உதவவேண்டுமென்ற) எண்ணத்துடன், கடலூடு எழலோடும் - (அம்மலை) கடலினின்று வெளியே உயர எழுந்தவளவில், பனைமீன் - பனைமீன்களும், திமிலோடு - திமிலென்னும் மீன்களும், உணர்ந்து - (தமது அறிவினால்) தெரிந்துகொண்டு, நீங்கா சுனையில் - (ஒருபொழுதும்) நீர் வற்றுதலில்லாத சுனைகளிலே, தொடர்ந்து துள்ள - ஒருசேரத்துள்ளிவிழவும்,—(எ - று.)—இச்செய்யுளில், 'வீழ,' 'துள்ள' என்ற செயவெனெச்சங்களிரண்டும், கீழ் ௩௯ - ஆங் கவியிலுள்ள 'மைநாகமென்னுமலை வானுறவந்ததன்றே' என்றதனோடு தொடர்ந்து முடியும்.

அம்மலைச்சிகரங்களினின்று அருவிகள்பாய்ந்துபெருகுவது, உயர்ந்தமாடமாளிகைகளின்மேல் வானுறவோங்கிக் கொடிச்சீலைகள் அசைவதை யொத்திருந்த தென்பது, முன்னிரண்டடிகளின் கருத்து. வினையின் திரள் - புண்ணியச்செய்கைபோல் திரண்ட என்று உரைப்பினுமாம்; புண்ணியத்தை வெண்ணிறமாகக்கூறுதல் கவிசமய மாதலால், வெண்ணிறவருவித்திரட்குப்

புண்ணியத்திரளை உவமைகூறுதல் ஏற்குமெனக். இனி, வினையின் திரள் - ஊழ்வினைபோலத் திரண்ட என்று பதவுரைகூறி, ஊழ்வினை இடைவிடாது என்றும் உயிரைப்பற்றியிருப்பதுபோல அவ்வருவியும் இடைவிடாது என்றும் அம்மலையைப் பற்றிநிற்குமெனக் கூறுதலு மொன்று. வினையின் திரள் அருவி - செயற்கையால் திரண்டதுபோ லுள்ள அருவியெனினுமாம்; அருவி இயல்பில் திரண்டிருப்பது, செயற்கையாகக் கடைந்து திரட்டப்பட்டதுபோற் செவ்விதாயுள்ள தென்று கருத்து. 'நினைவின் கடலூடு எழுமேலோடும்' என்பதற்கு - நினைத்தமாத்திரத்திலே கடலினின்று எழுந்த வளவில் என்று உரை கூறலுமாம். மைநாகமலை கடலில்மூழ்கியிருந்தபோது அதன்சிகரங்களில் தங்கியிருந்த பனைமீனும் திமிலும் மலை வானுற எழவே 'இனி இங்குநிற்பின் நம்உயிர்க்குக் கேடுவரும்' எனக் கருதித் தப்பியுய்யுமாறு எண்ணி அங்குநின்று நீர்வற்றாத அம்மலைச்சுனைகளில் துள்ளிக்குதித்துப் பிழைத்தன வென்பது, பின்னிரண்டடியின் கருத்து.

'மாலை' என்ற ஆவீறுஐயான வடசொல்லுக்கு - வரிசையென்று பொருள். கடலூடு - 'ஊடு' என்ற ஏழாம்வேற்றுமையுருபு ஐந்தாம்வேற்றுமைக்கு உரிய நீக்கப்பொருளில் வந்ததனால், உருபுமயக்கம். பனை, திமில் என்பன - மீனின் சாதிபேதங்கள். (௪௯)

௫௦. கொடுநாலொடிரண்டுகுலப்பகைகுற்றமூன்றுஞ்
சுடுஞானமவெளிப்படவுய்த்ததுயக்கிலார்போல்
விடநாகமுழைத்தலைவிம்மலுழன்றுநீங்க
நெடுநாள்பொறையுற்றவுயிர்ப்புநிமிர்ந்துநிற்ப.

(இ - ள்.) கொடு - கொடுமையான, நாலொடு இரண்டு குலம் பகை - ஆறாகிய கூட்டமாயுள்ள பகைகளையும், குற்றம் மூன்றும் - முக்குற்றங்களையும், சுடு - அடியோடு அழிப்பதான, ஞானம் - நல்லுணர்வு, வெளிப்பட - தோன்றியதனால், உய்த்த துயக்கு இலார் போல் - முன்னேயிருந்த சந்தேகங்களெல்லாம் நீங்கிய ஞானிகள் போல,— விடம் நாகம் - விஷத்தையுடைய பாம்புகள்,— முழைத்தலை விம்மல் உழன்று - (அம்மலை நெடுங்காலமாக நீரினுள் முழுகியிருந்ததனால்) அதன்குகைகளில் இறுவரை மிக்கவருத்தத்தை யடைந்திருந்து,— நீங்க - (அம்மலை இப்போது) வெளியே வந்ததனால், நெடு நாள் பொறை உற்ற உயிர்ப்பு நிமிர்ந்து நிற்ப - வெகுநாளாகப் பந்தித்துக்கிடந்த சுவாசம் தடையின்றி வெளிவரப்பெற்றுநிற்கவும்,—(எ - று.)— இச்செய்யுளும், 'மைந்நாகமென்னுமலை வானுறவந்ததன்றே' என்பதனோடு தொடரும்; இச்செய்யுளோடு குளகம் முடிந்ததெனை அறிக.

முத்திபெறும் உபாயத்தை இன்னதெனவுணராது ஐயுற்றுக் காமம் முதலிய அறுபகைகளினாலும் முக்குற்றங்களினாலும் தாக்குண்டு வருந்தியவர் பின்னர் ஞானம் உதிக்க அதனால் அவ்வருத்தத்தினின்று நீங்குதல்போல, மைநாகமலை சமுத்திரத்தில் முழுகியிருந்தமையால் இயல்பாக மூச்சுவிட முடியாமற் சுவாசத்தை அடக்கிக்கொண்டிருந்த அம்மலைக்குகையில்வசிக்கும் பாம்புகள் இப்போது அம்மலை வெளியேவந்தவுடனே சுவாசத்தையடக்கும்

நிர்ப்பந்தத்தினின்று நீங்கிப் பெருமூச்சுவிட்டு முன்னேகொண்டவருத்தம் நீங்கி மகிழ்ந்தன வென்பதாம்; உவமையணி.

குலம் - கூட்டம், வர்க்கம். காமம்முதலியவை வடமொழியில் அரிஷட் வர்க்க மெனப்படுதலால், 'குலப்பகை' என்றார்; அவையாவன - காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதம் என்பன. (காமம் - தகாதவற்றில் விருப்பம். வெகுளி - அப்பொருள்பற்றிப் பிறர்மாட்டுக் கொள்ளுங் கோபம். கடும்பற்றுள்ளம் - வேண்டுமவற்றிற்கும் பொருள் கொடாமல் அதனை இறுகப்பிடித்தல்; லோபம். மானம் - மாத்ஸர்யம்: அஃதாவது - அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம்முன்னோர் தந்தை தாய் என்ற இவரை வணங்காமையும், முடிக்கப்படாதாயினும் கருதியது முடித்தே விடுதலும் முதலாயின. உவகை - தகாதவற்றைப்பெறுதலால் மனமகிழ்தல்; மோகம். மதம் - செல்வக்களிப்பு.) முக்குற்றங்களாவன - வித்தியாமதம், தனமதம், குலமதம் என்பன; இவை, 'முக்குறும்பு' எனவும்படும்: ஆணவம், மாயை, கன்மம் எனவும் கூறுதலுண்டு; ஐயம், திரிபு, அறியாமை என்பவற்றையும் கொள்ளலாம். 'விம்மலுழந்துவீங்கி' என்றும் பாடமுண்டு. (௫௦)

[அவ்வாறு கடலினின்று மேலெழுந்த மைநாகமலையைக்கண்டு அநுமான் சந்தேகித்தல்.]

௫க. எழுந்தோங்கிவிண்ணோடுமண்ணொக்கவிலங்குமாடி
யுழுந்தோடுகாலத்திடையும்பரினிம்பரெங்குங்
கொழுந்தோடிநின்றகொழுங்குன்றைவியந்துநோக்கி
யழுங்காமனத்தண்ணலிதென்கொலெனவயிர்த்தான்.

(இ - ள்.) அழுங்கா மனத்து அண்ணல் - எதற்குஞ்சலியாத மனத்தையுடைய அநுமான்,—இலங்கும் ஆடி உழுந்து ஓடு காலத்திடை - விளங்குகின்ற கண்ணாடியின்மீது இட்ட ஓர் உளுந்து உருள்கின்ற காலத்திற்குள்ளே, விண்ணோடு மண் ஒக்க எழுந்து - ஆகாயமும் பூமியும் ஒருங்கிசைக வியாபித்து, ஓங்கி - உயர்ந்து, உம்பரின் இம்பர் எங்கும் கொழுந்து ஓடி நின்ற - மேலும் கீழும் எல்லாப்பக்கமும் முடியும் அடியும் படர்ந்துநின்ற, கொழுங் குன்றை - செழிப்புள்ள அம்மைநாகமலையை, வியந்து நோக்கி - (திடீரெனமேலெழுந்ததனால்) ஆச்சரியத்தோடு பார்த்து,—இது என்கொல் என - 'இது என்னோ!' என்று, அயிர்த்தான் - சந்தேகித்தான்; (எ - று.)

அம்மைநாகமலை கடலினின்று வெளித்தோன்றி மேலும்கீழும்வியாபித்து நின்றதைக் கண்ட அநுமான், சிறிதும் அஞ்சாது முதலில் அதனை இன்னதெனவுணராது ஐயுற்றன னென்பதாம். மிக்கவிரைவைக்குறித்தற்கு, கண்ணாடியிலுழுந்துருளுங்காலத்திடை யென்றார். வழுவழுப்புள்ள கண்ணாடியின் மீது திரண்டவடிவமுடைய பொருளை யிட்டால் அது தட்டுத்தடையின்றி விரைந்துருளு மியல்பு, இங்கே கருதத்தக்கது. 'உம்பரினும்பரோங்கி', 'நெடுங்குன்றை' என்பன - பாடாந்தரம். அநுமான் அம்மலையைக்கண்டு அஞ்சாது நின்றன னென்பார், 'அழுங்காமனத்தண்ணல்' என்றார். உம்பர்க்கொ

முந்து - முடிச்சிகரம்: இம்பர்க்கொழுந்து - அடிவேர்; ஓடுதல் - படர்தல். எழுந்து - கடலினின்று மேலெழுந்து. (௰௧)

[அநுமான் அம்மலையைத் தனதுமார்பினால் தள்ளிவிட்டு, பின்னும் உயர்ந்துபோதல்.]

௫௨. நீர்மேற்படாரநெடுங்குன்றுநிமிர்ந்துநிற்றல்
சீர்மேற்படாதெனச்சிந்தையுணர்ந்துசெல்வான்
வேர்மேற்படவன்றலைகீழ்ப்படநூக்கிவிண்ணோ
ரூர்மேற்படக்கடிதும்பரின்மீதுயர்ந்தான்.

(இ - ள்.) செல்வான் - (கடலின்மீது தாவிச்) செல்லுகின்றவனான அநுமான், 'நெடுங் குன்று - பெரிய இம்மலை, நீர்மேல் படார - கடலின்மீது வெளிப்பட்டுவந்து, நிமிர்ந்து - மேலோங்கியிருத்தலால், நிற்றல் - (இங்குச் சற்றே இளைப்பாறும்படி) தங்குதல், சீர்மேல் படாது - (நமக்கு) நன்மையைத் தருவதாகாது,' என - என்று, சிந்தை உணர்ந்து - மனத்தினால் ஆராய்ந்தறிந்து,—வேர் மேல் பட - (அம்மலையின்) அடியானது மேற்புறமாகவும், வல் தலை கீழ் பட - உறுதியான சிகரம் கீழ்ப்புறமாகவும், (புரண்டுவிழும்படி), நூக்கி - (தனதுமார்பினால் அம்மலையைத்) தள்ளிவிட்டு,—(பிறகு), கடிது - விரைவாக, விண்ணோர் ஊர்மேல் படர - தேவர்களுடைய ஊரினளவு உயரத்திலே தனதுசெல்லுகை உளதாம்படி, உம்பரின்மீது - ஆகாயத்தின்மேல், உயர்ந்தான் - உயர்ந்துசென்றான்; (எ - று.)

அங்ஙனம் சந்தேகித்த அநுமான் அவ்வாறு கடலின் மேற்புறத்தில் தோன்றுவது ஒருமலை யென்று உணர்ந்தபின்பும் தான் கருமமேகண்ணாயிருப்பதனால் அதில்தங்கிப்போதல் தகாதென்று கொண்டு தான்செல்லும் வழியினிடையே தனக்குத் தடையாக உயர்ந்துநின்ற அம்மலையைத் தலைகீழாகவிழும்படி தனதுமார்பினால் தள்ளிவிட்டு முன்னையினும் மிக்குஉயர்ந்து செல்வானாயின னென்பதாம்.

செல்வான் உணர்ந்து நூக்கி உயர்ந்தான் என இயையும். முதனூலில் "உரஸா பாதயாமாஸ" எனக் கூறியுள்ளதனால், நூக்கி யென்பதற்கு - மார்பினால் தள்ளி யென உரைக்கப்பட்டது. இனி, நீர்மேல் - இந்தக்கடல் நீரின்மீது, படார - (என்னைச்) செல்லவொட்டாமல், நெடுங் குன்று - பெரிய இம்மலை, நிமிர்ந்து நிற்றல் - உயர்ந்துநிற்கின்றதனால், மேல் - இனி மேல், சீர் - சிறந்ததொழில் [கடல்கடத்தல்], படாது - நிறைவேறாது என்று பொருள்கூறுவாருமுளர்: முன்னையபொருளில், படார - உடன்பாட்டெச்சம்; பின்னையபொருளில், எதிர்மறைவினையெச்சம். 'நெடுங் குன்று - பெரிய இந்த மலை, நீர்மேல் படார நிமிர்ந்து நிற்றல் - நீரின்மீது பரந்து உயர்ந்து நிற்பது, சீர்மேல் படாது - (நமக்கு) நன்மையின்பாற்படாது,' என சிந்தை உணர்ந்து - என்று மனத்திற் கருதி யாலோசித்து என்று பொருள் கொள்ளவுந் தகும்; அம்மலையெழுச்சியைத் தனதுபோக்கிற்குத் தடையாகக் கருதினன் அநுமன் என்பது கருத்து: இவ்வுரை, மேல் ௬௪ -

ஆஞ் செய்யுளில் "வேற்றுப்புலத்தோனெனல்" எனவும், ருஅ - ஆஞ் செய்யுளில் "உரைத்தானுரையா விவ ஹாறில னென்ப துன்னி" எனவும் வருபவற்றோடு இயைபுடையதாகச் சிறக்கும். விண்ணோர் - சுவர்க்கலோகம். 'நீர்மேற்படர் நன்னெடுங்குன்ற நிமிர்ந்து' என்றும், 'நீர்மேற்படர் குன்றிது கோடுநிமிர்ந்துநிற்றற், சீர்மேற்படாது' என்றும், 'உம்பரினூடு பாய்ந்தான்' என்றும் பாடமுண்டு. (௫௨)

[உடனே மைநாகமலை அன்பினால் தொடர்ந்து மானுடவடிவங்கொண்டு அநுமானைநோக்கிக் கூறத்தொடங்குதல்.]

௫௩. உந்தாமுனுலைந்துயர்வேலையொளித்தகுன்றுஞ்
சிந்தாகுலமுற்றதுபின்னருந்தீர்விலன்பால்
வந்தோங்கியாண்டோர்சிறுமானிடவேடமாகி
யெந்தாயிதுகேளெனவின்னவிசைத்ததன்றே.

(இ - ள்.) உயர் வேலை ஒளித்த குன்றும் - அலைகளுயர்கின்ற சமுத்திரத்தில் (நெடுங்காலம்) ஒளித்துக்கிடந்த அந்தமைநாகமலையும்,—உந்தா முன் - (அவ்வாறு அநுமான்) தள்ளுவதற்கு முன்னமே [தள்ளியவுடனே யென்றபடி], உலைந்து - வருந்தி, சிந்தா ஆகுலம் உற்றது - மனத்துயரத்தை யடைந்ததாகி,—பின்னரும் - அவ்வாறு வருத்தமடைந்தபின்பும்,—தீர்வு இல் அன்பால் - நீங்குதலில்லாத அன்பினாலே, ஓங்கி வந்து - (அநுமான் செல்லுகின்ற உயரத்தளவும்) உயர்ந்து தொடர்ந்து, ஆண்டு ஓர் சிறு மானிடவேடம் ஆகி - அப்போது [அவ்விடத்தில்] சிறியதொரு மானுடவடிவங்கொண்டு,—(அநுமானை நோக்கி), 'எந்தாய் - எனதுஐயனே! இது - (நான் சொல்லுகின்ற) இதனை, கேள் - கேட்பாயாக', என - என்றுசொல்லி, (பின்பு), இன்ன - இவ்வார்த்தைகளை, இசைத்தது - சொல்லலாயிற்று; (எ - று.)—அவற்றை, அடுத்த நான்குகவிகளிற் காண்க. அன்றே - ஈற்றசை.

அப்போது அம்மைநாகமலை அநுமான் தன்னைவீழ்த்தியதனால் தான் மிக்கவேதனையையடைந்தும், அவன்மீது மிக்க அன்புகொண்டு மீண்டும் உயரவெழுந்து தொடர்ந்து ஒருமனிதவுருவமெடுத்து அநுமானையடுத்துச் சில பேசலாயிற் றென்பதாம். இது, முதனூலினாலும் விளங்கும். வேண்டியபடி வடிவுகொள்ளுதல், சித்திவிசேடம்; இது அம்மலைத்தெய்வத்துக்கு உளதென்க. உந்தாமுன் உலைந்து - விரைவின்மிகுதியை விளக்கவந்த மிகையுயர்வுநவிற்சியணி; இது, வடமொழியில் அத்யந்தாதிஶயோக்தி யெனப்படும்.

குன்றும்; உம்மை - கதைப்போக்குப்பற்றிய எச்சப்பொருளது. 'குன்றம்' என்றும் பாடமுண்டு. பின்னரும் - தான் வருத்தப்படுத்தப்பட்டபின்பும். அன்பிற்குக்காரணம், அநுமானது தந்தையாகிய வாயுபகவான் இந்திரனால் தனக்கு நேர்வதாயிருந்த ஆபத்தினின்று விடுவித்த செய்ந்நன்றியை மறவாமையினாலாகியது. மலையினுருவத்தை நோக்க மனிதவுருவம் மிகச்சிறியதாகுதலால், 'சிறுமானிடவேடம்' என்றார். மாநுஷன் - (காசியபமுனிவரது மனைவியருள்) மநுவென்பவளிடத்தினின்று தோன்றியவ னெனப் பொருள்படும் வடமொ

ழித் தத்திராந்தநாமம். அநுமானை மைநாகமலை 'எந்தாய்' என விளித்தது, உயர்வுபற்றி. 'இன்னதிசைத்தது' என்பதும் பாடம். மைநாகமலை கடலி னுள் மூழ்கியொளித்த விவரம், மேல்விளங்கும். (௩௩)

[இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்: மைநாகமலை அநுமானிடத்துத் தான் வந்த காரணத்தைக் கூறுதல்.]

௩௪. வேற்றுப்புலத்தோனெனலையவிலங்கலெல்லா
மாற்றுச்சிறைமென்றரிவச்சிரமாணவோச்ச
வீற்றுப்படநூறியவேலையின்வேலையுய்த்துக்
காற்றுக்கிறைவனெனைக்காத்தனனன்புகாக்க.

(இ - ள்.) ஐய - ஐயனே!—வேற்றுப் புலத்தோன் எனல் - (நீ என்னை) மாற்றாரது இனத்தைச் சேர்ந்தவனென்று நினையாதே; (மற்றுயாவனெனில்),—(முற்காலத்தில்), 'விலங்கல் எல்லாம் - மலைகளெல்லாம், மாறு சிறை - (பறந்துவந்து நினைத்தவிடங்களில் தங்கியழிப்பதனால் உலகத்தார்க்கு) மாறு யுள்ள இறகையுடையன', என்று - என்று நினைத்து, அரி - இந்திரனானவன், மாண - (உலகத்திற்கு) நன்மையுண்டாகுமாறு, வச்சிரம் ஓச்ச - (தனது கையிலுள்ள) வச்சிராயுதத்தை ஓங்கிவீசி, வீற்றுப்பட நூறிய - வேறுவேறாக அறுபடும்படி (மலைச்சிறகுகளை) அரிந்த, வேலையின் - சமயத்தில்,—காற்றுக்கு இறைவன் - வாயுதேவன், அன்பு காக்க - (நான் என்றைக்கும் அவனிடத்தில்) அன்புகொள்ளுமாறு, எனை - என்னை, வேலை உய்த்து - சமுத்திரத்தில் தள்ளிக்கொண்டு செலுத்தி, காத்தனன் - (எனது சிறகு அறுபடாதபடி) பாதுகாத்தான்; (எ - று.)

அநுமானே! உனதுகாரியத்தைச் செவ்வனே நிறைவேறவொட்டாது இடையூறுசெய்யப்புக்க பகைவரைச் சேர்ந்தவனென்று நீ என்னைக் கருதாதே; முன்பு கிருதயுகத்திலே மலைகளெல்லாம் இறகுடையனவாய்த் தாம்நினைத்தவிடங்களிலெல்லாம் பறந்துசென்று கண்டவிடங்களிலுந்தங்கி உலகத்திற்குப் பேரழிவைச்செய்ய, அக்காலத்துத் தேவர்களினுடைய வேண்டுகோளின்படியே இந்திரன் மலைகளையெல்லாம் தனதுவச்சிராயுதத்தைக்கொண்டு சிறகைத்துணிக்குமளவில், வாயுபகவான் அவ்வாபத்தினின்று தப்புமாறு என்னைத் தள்ளிக்கொண்டுவந்து இக்கடலில்விழுத்தினான்; ஆதலால், யான் அவ்வாயுதேவனிடத்து மிக்க அன்பு கொண்டுள்ளேன் என்று மைநாகமலை கூறிற்றென்பதாம்.

எனல் - எதிர்மறைவியங்கோள்; "மகனெனல்" என்னுமிடத்திற் போல. விலங்கல் - ஊர்க்கு ஒருபுறமாக விலகிநிற்பதெனப் பொருள்படும் காரணக்குறி; ("இருபுனலும் வாய்ந்தமலையும் வருபுனலும், வல்லரணும் நாட்டிற்குறுப்பு" என்ற திருக்குறளில் 'வாய்ந்தமலை' என்றவிடத்துப் பரிமேலழகர் இடையதன்றி ஒருபுடையதாதலை மலைக்கு வாய்ப்பாகக்கூறியமை உணர்க.) அரி - ஹரியென்ற வடசொல்லின் விகாரம்: (பகைவர்களை) அழிப்பவனென்பது பொருள். இனி, 'விலங்கல் எல்லாம் - மலைகளனைத்தையும், சிறை மாற்று -

இறகுகளை யறுத்துவிடுவாயாக,' என்று - என்று (தனது தெய்வப்படைக்கலத்தைநோக்கிக்) கட்டளைகூறி, அரி - இந்திரன், வச்சிரம் - வச்சிராயுதத்தை, மாண ஒச்ச - நன்றாகஉயரவெடுத்துப் பிரயோகிக்க, வீற்றுப்பட றுறியவேலையின் - (அவ்வாயுதம் மலைச்சிறகுகளை) வேறுபடும்படி வெட்டித்தள்ளிவந்த பொழுது, காற்றுக்கு இறைவன் - வாயுபகவான், (என்னிடம்) அன்புகொண்டுள்ளதனால், எனை வேலையுய்த்துக் காத்தனன் என்று பொருள்கூறவுந்தகும். மாற்றுச்சின்றை—தொல்காப்பியத்தில் எழுத்ததிகாரத்திலே தொகைமரபில் "உயிரீறாகிய முன்னிலைக்கிளவியும், புள்ளியிறுதி முன்னிலைக்கிளவியும், இயல்பாகுநவும் உறழ்பாகுநவுமென்று, ஆயீரியல வல்லெழுத்துவரினே" என்றதனையடுத்து "ஔவென வருஉ முயிரிறுசொல்லும், ஞநமவவென்னும் புள்ளியிறுதியும், குற்றியலுகரத்திறுதியுமுளப்பட, முற்றத்தோன்றா முன்னிலைமொழிக்கே" என்றதனால், ஏவலொருமைமுற்றின்முன் வலிமிக்கதென்க; அங்கு நச்சினார்க்கினியர், 'கூட்டுக் கொற்றா' என்று உதாரணங்காட்டியிருத்தலுணர்க. "ஏவல்முன் வல்லின மியல்பொடு விகற்பே" என்றார் நன்னூலாரும். வேலையின் வேலையுய்த்து - சொற்பின்வருநிலை. (௫௪)

௫௫. அன்னனருங்காதலனாதலினன்புதூண்ட
வென்னாலுனக்கீண்டுசெயற்கரிதாயதின்மை
பொன்னார்சிகரத்திடையாறினைபோதியேனு
முன்னாலுயர்ந்தேனுயர்விற்குமுயர்ந்ததோளாய்.

(இ - ள்.) உயர்விற்கும் உயர்ந்த தோளாய் - (மலைமுதலிய எப்பொருளின்) உயர்ச்சியினும் மேலாக உயர்ந்துள்ள தோள்களையுடையவனே!—(நீ), அன்னான் அருங்காதலன் ஆதலின் - (அவ்வாறு என்னைக்காத்த) அவ்வாயுதேவனது அருமையான குமாரனாதலால், அன்பு தூண்ட - (அவ்வாயுவினிடம் யான் கொண்டுள்ள) அன்பானது (என்னைத்) தூண்டுதல்பற்றி, என்னால் ஈண்டு உனக்கு செயற்கு - என்னால் இப்போது உனக்குச் செய்யப்படுதற்கு, அரிது ஆயது - மிகவும் அருமையான உபகாரம், இன்மை - இல்லாமலிருத்தலினால், பொன் ஆர் சிகரத்திடை - பொன்னிறமாக விளங்குகின்ற (எனது) உச்சியிலே, ஆறினை - இளைப்பாறினவனாய், போதியேனும் - நீ செல்வாயானாலும், உன்னால் உயர்ந்தேன் - (அம்மாத்திரத்தினால்) நின்னால் மேன்மைபெற்றவனாவேன்; (எ - று.)

மிகவுமுயர்ந்த தோள்களையுடையவனே! உனதுபெருமைக்கு ஏற்றவாறு என்னால் யாதோருபகாரமும் செய்ய இயலாதாயினும், முன்னே எனக்கு உபகாரஞ்செய்த வாயுதேவனது புதல்வனென்று உன்மீது அன்பு கொண்டு யான் கடலினின்று வெளிப்போந்துள்ளேனாதலால், நீ என்னை அவமதித்துப் போய்விடாது என்மீது சற்று இளைப்பாறிச் சென்றால், அதுவே எனக்கு மிக்கமேன்மையை விளைக்கும் என்று மானிடவடிவங்கொண்டுவந்த மைநாகமலை கூறிற் றென்பதாம். இதனால், ஒருவர் தக்கசமயத்திலே கைம்மாறுகருதாது ஒருவனுக்குப் பேருதவி செய்வாராயின், அவன் அதனை மறவாது,

அவரிடத்தன்றி அவரைச் சேர்ந்தவரிடத்தும் தான் நன்றியுள்ளவனாயிருக்க வேண்டுமென்ற முறைமை விளக்கப்பட்டது.

தூண்டச் செயற்கு என இயையும். உன்னால் உயர்ந்தேன் - உன்பொருட்டாகவே (கடலினின்று) வெளிவந்தேனென்றலுமொன்று. இவ்வுரைக்கு, தூண்ட உயர்ந்தேன் என முடிக்கலாம். 'செயற்குரித்தாயதன்மை', 'போதியென்றேயுன்னாவுயர்ந்தேன்' என்பவை - பிரதிபேதம். காதலன் - அன்பிற்கு இடமானவன்; மகன். அரிதாயது - பேருபகாரமென்றபடி. இன்மை = இன்மையால்; மூன்றாம்வேற்றுமைத்தொகை. (௫௫)

௫௬. கார்மேகவண்ணன்பணிபூண்டருங்காலின்மைந்தன்
தேர்வான்வருகின்றதுசீதையைத்தேவருய்யப்
பேர்வானயல்சேறியிதிற்பெறும்பேறிலென்ன
நீர்வேலையுமென்னையுரைத்ததுநீதிநின்றாய்

(இ - ள்.) நீதி நின்றாய் - நீதிநெறியில் தவறாதுநடப்பவனே!—'அருங் காலின் மைந்தன் - வாயுதேவனது அருமையான குமாரன் [அநுமான்], வருகின்றது - வருகின்ற செயல்,—கார் மேகம் வண்ணன் பணி பூண்டு - காளமேகம்போன்ற [கரிய] நிறத்தையுடையவனான இராமபிரானது கட்டளையை மேற்கொண்டு, தேவர் உய்ய - தேவர்களெல்லாம் (அரக்கர்களால் நேர்ந்த ஆபத்தினின்று) விடுபட்டுப்பிழைக்குமாறு, சீதையை தேர்வான் - சீதையைத் தேடுதற்பொருட்டு, (ஆகும்); (ஆதலால், அவன் தங்குமாறு), பேர் வான் அயல் சேறி - (நீ) பெரிய ஆகாயத்தினது அருகே செல்வாயாக; இதின் - இதனைக்காட்டிலும், பெறும் - (நீ) அடையக்கூடிய, பேறு - பாக்கியமானது, இல் - வேறு இல்லை,' என்ன - என்று,— நீர் வேலையும் - ஜலமயமான சமுத்திரமும், என்னை - என்னைநோக்கி, உரைத்தது - சொல்லிற்று; (எ - று.)

இதனால், மைநாகமலை, அநுமான்வருஞ்செய்தியைத் தான் தெரிந்த வகையைக் கூறுகின்றது: 'இராமபிரானது கட்டளைப்படி அநுமான் சீதையைத் தேடிக்கொண்டுவருகின்றானாதலால், அவன் இளைப்பாறும்படி நீ உயர்ந்துசெல்வாய்' எனச் சமுத்திரராஜன் எனக்குக் கூறியதனால் நான் வெளியேவந்தேனெனத் தான்வந்தகாரணத்தைத் தெரிவித்ததென்பதாம்.

வருகின்றது தேர்வான் (ஆகும்) என இயையும். 'பூண்டவன்..........வருகின்றது' என்ற பாடம் இனிது பொருள்படும். அநுமான் இப்போது சீதையைத் தேடும்படி இலங்கைநோக்கிச் செல்வது, பரம்பரையாக ராக்ஷஸ நாசத்துக்குக் காரணமாகுதலால், 'காலின்மைந்தன் தேர்வான் வருகின்றது சீதையைத் தேவருய்ய' எனப்பட்டது. ஸீதா என்ற வடசொல்லிற்கு- கலப்பையுழுபடைச்சாலென்று முதலிற் பொருள்; ஜநகமகாராஜா யாகஞ் செய்தற்குச் சாலையமைத்தற்பொருட்டு நிலத்தை உழுதபொழுது அப்படைச் சாலினின்று தோன்றியவளாதலால், பிராட்டிக்குச் சீதையென்று பெயராயிற்று: இடவாகுபெயராகிய காரணக்குறி. இத்திருநாமம், பிராட்டியாரது திருவவதாரச்சிறப்பை விளக்கும். பேர்வானென்பதை ஒருமொழியாகவே

கொண்டு, தேவர்களுய்யுமாறு செல்பவனை அநுமானுக்கு இடமாகும்படி செல்வாய் எனக் கூறவுந் தகும். (௬௬)

௬௭. நற்றாயினுநல்லனெனக்கிவனென்றுநாடி
யிற்றேயிறையெய்தினையேய்ந்ததுகோடியென்றாற்
பொற்றாரகன்மார்பதம்மில்லுழைவந்தபோதே
யுற்றார்செயன்மற்றுமுண்டோவெனவுற்றுரைத்தான்.

(இ - ள்.) பொன் தார் அகல் மார்ப - பொன்மயமான மாலையையணிந்த பரந்த மார்பையுடையவனே !—'எனக்கு—, இவன் - (இங்கு வந்திருக்கின்ற மலைவடிவாகிய) இவன், நல் தாயினும் நல்லன் - (தன்மக்களிடத்து மிக்க அன்பைக்கொண்டுள்ள) பெற்றதாயைக்காட்டிலும் நல்லவன்', என்று நாடி - என்று (நீ என்னைக்குறித்து) மனத்திற்கொண்டு, இற்றே - இப்பொழுதே, இறை எய்தினை - சற்றுநேரம் என்னிடத்தில்தங்கி இளைப்பாறியவனாய், என்னால் ஏய்ந்தது கோடி - என்னாற்செய்யக்கூடிய விருந்தை அங்கீகரிப்பாயாக; தம் இல்லுழை வந்தபோதே - தமது வீட்டிற்கு (ஒருவர்) வந்த சமயத்திலே, உற்றார் செயல் - மனம்பொருந்திய நண்பர் செய்யுஞ் செயல், மற்றும் உண்டோ - (இதனைத்தவிர) வேறேயு முளதோ?' என - என்று, உற்று - மனம்பொருந்தி, உரைத்தான் - சொன்னான்; (எ - று.)

நீ என்னைப் பெற்றதாயைப்பார்க்கிலும் அந்தரங்கமான நண்பையுடையவனென்றுநம்பி என்னிடத்தில்தங்கி யான்செய்யும் விருந்தை அங்கீகரிப்பாயாக வென மைநாகமலை அநுமானைவேண்டிற் றென்க. உறையுளும் உணவும் உதவுவதே உற்றாருடைய தொழிலென்பது, பின்னிரண்டடியிற் கூறியது. அநுமான் தன்னைப்பற்றி நினைக்கவேண்டிய வகையை, 'நற்றாயினும்நல்லனெனக்கு இவன்' என்று கூறிற்று. நற்றாய் - பெற்றதாய். 'இற்றேயிறையெய்தினன்' என்று பாடமாயின், நான் உன்னைக்குறித்து 'இவன் பெற்றதாயினும் நல்லவன்' என்று நாடி இப்பொழுதுவந்துள்ளேனாதலால், நீ என்மீது சற்றுநேரம் இளைப்பாறினவனாய் என்று பொருளாம். இற்று=இன்று என்பதன் வலித்தல்; ஏ-அசை; விரைவுகுறிப்பதுமாம். இற்றே - இவ்வாறாகவே யென்றுமொன்று. இளமையில் இந்திரன் பெயரிட்டு வரமளித்தபோது கொடுத்த பொற்றாமரைமலர்மாலையை யுடையானாதலால், அநுமான், 'பொற்றாரகன்மார்ப' என விளிக்கப்பட்டான்; கடு - ஆஞ் செய்யுளில் "அலங்கல்தாழ்மார்பன்" என்றதும் காண்க. உற்று - நெருங்கிநின்று எனினுமாம். ஈற்றடியிற் பிராஸம் காண்க. (௬௭)

[அநுமான் மைநாகமலையைத் தெளிந்தபின்பும் அப்பாற்செல்லநினைக் கையில், தனது அருகில் அம்மலை உயர்ந்துவருதலைக் காணுதல்.]

௬௮. உரைத்தானுரையாலிவனூறிலனென்பதுன்னி
விரைத்தாமரைவாண்முகம்விட்டுவிளங்குவீரன்
சிரித்தானளவேசிரித்துத்திசைசெல்லநோக்க
வரைத்தானெடும்பொற்குடுமித்தலைமாடுகண்டான்.

(இ - ள்.) விரை தாமரை முகம் வாள் விட்டு விளங்கு வீரன் - வாசனையையுடைய தாமரைமலர் போன்ற முகம் ஒளிவீசிவிளங்கப்பெற்ற பராக்கிரம சாலியான அநுமான்,—உரைத்தான் உரையால் - அப்படிக்கூறிய மைநாகமலையினுடைய பேச்சினால், இவன் ஊறு இலன் என்பது உன்னி - 'இவன் குற்றமில்லாதவன்' என்பதனை உளங்கொண்டு, அளவே சிரித்தான் - சிறிதளவாகச் சிரித்தான் [மந்தஹாஸஞ்செய்தான்]; சிரித்து - (அவ்வாறு) சிரித்து, திசை செல்ல நோக்க - (தான் போய்க்கொண்டிருந்த) திக்கையே மீண்டும்போகுமாறு பார்க்கையில்,—தாள் வரை நெடும் பொன் குடுமி தலை - அடிப்பாகத் தோடுகூடிய அம்மலையினது பெரிய பொன்மயமான சிகரமாகிய முடிப்பாகத்தை, மாடு - (தனது) சமீபத்திலே, கண்டான் - பார்த்தான்; (எ - று.)

அநுமான் மனிதவடிவாகவந்த அம்மைநாகமலையினது வார்த்தையினால் அம்மலையினது தன்மையைத்தேறி, மீண்டும் தான் தென்திசையிற்செல்லுமாறு கருதுகையில், முன்பு தன்னால் தலைகீழாகத் தள்ளப்பட்ட அம்மலை மீண்டும் தனது அருகில் தன்னுச்சிதோன்ற வந்திருந்ததைக் கண்டனனென்பதாம். இங்கு, நகை - முன்னர் அம்மலையைக்கண்டபோது வேற்றுப்புலத்தானோ வென்று சங்கித்துத் தாக்கியமையைப் பற்றியதென்க. ஆகவே, இது "எள்ளல் இளமை பேதைமை மடனென், றுள்ளப்பட்ட நகைநான் கென்ப" என்ற நால்வகை நகையினுள் பேதைமையின்பாற்படும். அன்பினாலாகிய மகிழ்ச்சி பற்றிய புன்சிரிப்புமாம். அளவுக்குமேற்சிரித்தல் பெருமிதமன் றாதலால், 'அளவேசிரித்தான்' என்றனரென்னலாம். 'விளங்க' என்பதும் பாடம். வாள் முகம் - (இயல்பிற்) பிரகாசமுடைய முகம், விட்டு - மலர்ந்து, விளங்கு என்றலுமாம். மைநாககிரி புருஷவடிவங்கொண்டு சென்று பேசியதனால், உயர்திணையாண்பாலாற் கூறப்பட்டது. 'திசை செல்ல நோக்கி' என்பதற்கு -(இங்ஙனம்பேசுகிற அப்புருஷனுள்ள) திசையைநோக்கிப் பார்வையைச் செலுத்த வென்று பொருள்கொள்ளுதல் சாலும். 'சிரித்ததிசைசெல்ல நோக்கி' என்பதும் பாடம்.

இச்செய்யுள், கீழ்ச்செய்யுளோடு அந்தாதித்தொடையாகத் தொடர்ந்து வந்தது. (ருஅ)

[அநுமான் மைநாகமலையை நோக்கிக் கூறிய உபசாரமொழி.]

ருகூ. வருந்தேனதுவென் றுணைவானவன்வைத்தகாத
லருந்தேனினியா துமென்னாசைநிரப்பினல்லாற்
பெருந்தேன்பொழிசாரனின்னன்புபிணித்தபோதே
யிருந்தேனுகர்ந்தேனிதினூங்கினியீவதுண்டே.

(இ - ள்.) வருந்தேன் - (யான் இவ்வாறு வெகுதூரஞ்செல்வதனால்) வருத்தமடையேன்; அது - அதற்குக்காரணம், என் துணை வானவன் வைத்த காதல் - எனக்கு (எல்லாக்காலத்திலும்) துணையாயிருக்கிற கடவுளான இராமபிரான் (என்னிடத்தில்) வைத்துள்ள அன்பாம்; என் ஆசை நிரப்பின் அல்லால் - எனது மனோரதம் நிறைவேறப்பெற்றா லல்லாமல், இனி - இப்பொ

முதல், யாதும் அருந்தேன் - (நான்) எதனையும் உண்ணமாட்டேன்; பெருந்தேன் பொழி - மிக்கதேனைச்சொரிகிற, சாரல் - பக்கங்களை [தாழ்வரைகளை] யுடைய, நின் - உனது, அன்பு - பிரீதியானது, பிணித்த போதே - (என்னிடம்) உண்டானபொழுதே, இருந்தேன் நுகர்ந்தேன் - (உன்மீது) தங்கி விருந்துண்டவனுனேன்; இதின் ஊங்கு - இந்த அன்பைக்காட்டிலும் மிக்கதாய், இனி - இன்னமும், ஈவது - (நீ எனக்குக்) கொடுக்கக்கூடியது, உண்டே. உண்டோ? [இல்லை யென்றபடி]; (எ - று.)

அப்போது அநுமான் மைநாகமலையை நோக்கி 'நான் இராமபிரானது அநுக்கிரகத்துக்குப் பாத்திரமாயிருப்பதனால், வழிச்செல்வதனால் இளைப்பாவது பசிதாகங்களாவது எனக்கு உண்டாகமாட்டா: அன்றியும், என்காரியத்தை முடித்தன்றியுண்பதில்லையென யான் விரதமும் கொண்டிருக்கின்றேன்: ஆதலால், நான் உன்னிடத்தே தங்கி உண்ணாவிடினும், உனது அன்பைக் கண்டு, தங்கி விருந்துண்டதனினும் மிகமகிழ்ந்தேன்' என, அம்மலையின் அன்பைக் கொண்டாடிக் கூறின னென்பதாம்.

உணர்ந்தபோதோடு உறங்கும்போதோடு வாசியற எப்போதும் அவனே எனக்குச்சரணமென்பான், 'என்துணைவானவன்' என்றான்; அநுமான் இராமபிரானைத் திருமாலினது திருவவதாரமென உண்மையுணர்ந்த தத்துவஞானியாதலால், இவ்வாறு கூறினான். 'என்துணைவானவன்வைத்தகாதல்' என்பதற்கு - எனக்குத்துணையாகிய வானவனிடத்தில் யான்வைத்த பக்தியால் என்றும், என்னிடத்தில் வானவன்வைத்த அன்பினால் என்றும் பொருள் கூறலாம்.* இச்செய்யுளின் முதலடியில் 'வருந்தேலது நின்துணைவானவன்' என்றும், மூன்றாமடியில் 'பெருந்தேன்பிழிசாலுநின்னன்பு' என்றும், நான்காமடியில் 'இதன்மேலினியீவதென்னோ' என்றும் பாடமோதுவாருமுளர்; அப்பாடத்தில், வருந்தேல் - நீ வருந்தாதே: அது - (நான்செல்லுகின்ற) அக்காரியம், நின்துணை வானவன் வைத்த காதல் - உன்னையொத்த [மனத்திற்களங்கமில்லாத] இராமபிரான் கொண்டுள்ள விருப்பத்தையுடையதாம் [நான்செய்யப்போகின்றது, இராமபிரான் மிகவும்விரும்பிய தொன்றும்] எனவும்; தேன் பிழி சாலும் - பிழிந்த தேனையொத்த, நின் அன்பு - உனது அன்போடு கூடிய மொழி எனவும் பொருளாம்: மற்றவை முன்போலவே. 'இனி' என்னும் இடைச்சொல் - இரண்டாமடியில், எதிர்காலங்காட்டாது நிகழ்காலங் குறித்துநின்றது. 'பெருந்தேன்பொழிசாரல்' என்பதை அன்மொழித்தொகையாகக்கொண்டு, மலையைநோக்கிய அண்மைவிளியென்றலு சாலும். 'இதனூங்கு' என்றும், 'நிரப்பியல்லால்' என்றும் சில பிரதிகளிற் பாடம் காண்கின்றன. (௬௯)

[இதுவும் அது.]

௭0. முன்பிற்பிறந்தாரிடையுள்ளவர்காதன்முற்றப்
பின்பிற்பிறந்தார்குணநன்றிதுபெற்றயாக்கைக்
கென்பிற்பிறந்தாயதொரூற்றமுண்டென்னலாமே
யன்பிற்பிறந்தாயதொர்பூசனையார்கணுண்டே.

(இ - ள்.) காதல் முற்ற - (இரப்போரது) ஆசை பூர்ணமாகும்படி (கொடுப்பதில்), முன்பில் சிறந்தார் - முன்னைச்சிறந்த முதல்வள்ளல்களும், இடை உள்ளவர் - இடைவள்ளல்களும், பின்பில் சிறந்தார் - கடைவள்ளல் களும், (மேற்கொண்டிருக்கின்ற), குணம் - அன்பாகிய குணமே, நன்று - மிகச்சிறந்தது; இது பெற்ற யாக்கைக்கு - இந்தஅன்பை (த்தன்னிடத்து) க்கொண்ட சரீரத்துக்கு, 'என்பின் சிறந்து ஆயது ஓர் ஊற்றம் - (ததீசிமுனி வர்கொடுத்த) எலும்பைக்காட்டிலும் சிறந்த ஓர் உறுதிப்பொருள், 'உண்டு - உளது', என்னல் ஆமே - என்றுசொல்லமுடியுமோ? (இங்ஙனம் உடம்பெலும் பையும் உதவுதற்குக் காரணமாயிருப்பதனால்), அன்பில் சிறந்து ஆயது - அன் பினும் சிறந்திருப்பதாகிய, ஓர் பூசனை - ஒப்பற்ற உபசாரம், யார்கண் உண்டு - யாரிடத்திலேதான் உள்ளது? [எவரிடத்துமில்லை யென்றபடி].

மூவகையாகச்சொல்லத்தக்க வள்ளல்களும் தாம் கொடைத்தொழிலை மேற்கொண்டிருப்பது, அன்பினாலேயே: ததீசிமுனிவர் தமதுமுதுகெலும் பை யளித்ததும் அன்பினாலேயே; இவ்வாறு தமது உடம்பையும் அளிக்கு மாறு இருத்தலால், அன்பைச் செலுத்துவதனினும் பிறர்மாட்டுச் செய்தற்கு உரிய உபசாரம் பிறிதொன்று இல்லை யென்பதாம். "மன்பெருஞ்சிறப்பினன் மாலைவெண்குடை, மின்பொழிமணிமுடிவேந்த னல்கென, என்பு மாங்களித் தன னிருந்தவத்தினோன், அன்பினார்யாதுமற்றருள்கலாததே" என்ற பாக வதச்செய்யுள், இங்கு நோக்கத்தக்கது.

பெறுதற்கு அரிய இம்மானுடயாக்கையைப் பெற்றதற்குப் பயன், அன் பினால் இவ்வுடம்பைக் கொடுத்தலினும் பிறிதொன்றில்லை யென்பது, மூன்று மடியின் கருத்து.

ததீசிமுனிவர் எலும்புகொடுத்த கதை:—துவஷ்டாவென்பவன் தன்புத் திரனாகியவிசுவரூபனை இந்திரன் கொன்றமைபற்றிக் கறுக்கொண்டு அவ்விந் திரனைக் கொல்லவேண்டுமென்ற கருத்தோடு ஒருவேள்வியியற்றி விருத்திரா சுரனென்பவனை யுண்டாக்கி இந்திரன்மேலேவ, அவ்விருத்திரன் மிக்கசினங் கொண்டு பொருதபொழுது அதற்கு ஆற்றாது இந்திரன் அஞ்சி விஷ்ணு வைச் சரணமடைய, அக்கடவுள் இந்திரனைநோக்கி 'பூர்வத்திற் பாற்கடல் கடைகையில் தேவர்களும் அசுரர்களும் ஆயுதங்களை யெல்லாம் ததீசிமுனிவ ரிடத்திற் சேர்க்க, அம்முனிவர், நெடுங்காலஞ்செல்லவும் ஒருவரும் வந்து ஆயுதங்களைப் பெற்றுக்கொள்ளாமைபற்றி, அவற்றை யெல்லாம் தம்தவவலி மைகொண்டு விழுங்கிவிட்டனர்; அவைகளெல்லாம் ஒன்றாய்த்திரண்டு அவரதுமுதுகின்தண்டாய்ப் பொருந்தின; அதனை வேண்டி வாங்குவையா யின், அது உனக்கு வச்சிராயுதமாய்ப் பகையழிப்பதற்கு உதவும்' என்று உபாயஞ்சொல்ல, இந்திரன் தேவர்களோடு அம்முனிவரது ஆச்சிரமத்தை யடைந்து தான்வந்தசெய்தியை அம்முனிவர்பக்கல் விண்ணப்பஞ்செய்ய அவர் மகிழ்ந்து தமது முதுகெலும்பை அவ்விந்திரன் பெறுமாறு தமதுசங்கற்பத்தி னால் உயிரைவிட்டிட, தேவேந்திரன் விசுவகர்மாவைக்கொண்டு அவ்வெலும் பை வச்சிராயுதமாகச் செய்து அதுகொண்டு அசுரவர்க்கமாகிய பகையை அழித்தனனென்பதாம்.

வேண்டாதிருக்கையில் வலியத் தாமேகொடுப்பவர் முதல்வள்ளல்களெனவும், வேண்டக்கொடுப்பவர்-இடைவள்ளல்களெனவும், புகழக்கொடுப்பவர்-கடைவள்ளல்களெனவும் கூறப்படுவர்; "உறுபொருள்தண்டாதீந்தும், வாரியிரந்தோர்க்கிட்டும் வளர்புகழ்திக்கவீந்தும், பேரியல்வையமெண்ணப்பெற்றனர் மூப்பாலாகும்" என்ற சூடாமணிநிகண்டையும் காண்க.

"அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா, ரென்பு முரியர் பிறர்க்கு," "அன்போடியைந்த வழக்கென்ப வாருயிர்க், கென்போ டியைந்த தொடர்பு" என்ற திருக்குறட் கருத்துக்களை அடியொற்றியது, இச்செய்யுள்.

இனி, இச்செய்யுட்கு - மூவகைவள்ளல்கட்கும் உரியகுணமாகிய இது [அன்பு] சிறந்தது; (உயிர்க்குஇடமாகப்) பெறப்படுகின்ற உடம்பிற்கு உரிய (எழுவகைத்தாதுக்களுள்) எலும்பினும் மேலாக வலிமையுடையதொன்று உள்ளதோ? [இல்லையே]; (அவ்வாறே), (உயிர்க்குஉரியகுணங்களுள்) அன்பினும் மேலாக மதித்துக்கொண்டாடத் தக்கதொன்று யாரிடத்தேனு முளதோ? [இல்லை] என்று பொருள்கூறுதலுமுண்டு; எடுத்துக்காட்டுவமையணி. "என்பிலதனை வெயில்போலக் காயுமே, அன்பிலதனை யறம்" என்ற திருக்குறளிலும் என்போடு அன்புக்கு ஒப்புமை காண்க 'யாங்கணுண்டே' என்ற பாடம், எவ்விடத்திலுளது? என்று பொருள்படும். (௯0)

[அநுமான் மைநாகமலைக்குச் சமாதானங்கூறி அப்பாற்செல்லுதல்.]

௯௧. ஈண்டியான்கடிதேகியிலங்கைவிலங்கலெய்தி
யாண்டானடிமைத்தொழிலாற்றலினாற்ற லுண்டேல்
மீண்டியானுகர்வென்னல்விருந்தெனவேண்டிமெய்ம்மை
பூண்டானவன்கட்புலம்பிற்படமுந்துபோனான்.

(இ - ள்.) மெய்ம்மை பூண்டான் - சத்தியத்தை மேற்கொண்டவனாகிய அநுமான்,—(மைநாகமலையைநோக்கி), 'யான் - நான், ஈண்டு - இப்பொழுது, கடிது ஏகி - விரைவாகச்சென்று, விலங்கல் இலங்கை எய்தி - திரிகூடமலையின்மீதிருக்கின்ற இலங்கையைச் சேர்ந்து,—ஆண்டான் அடிமை தொழில் - (என்னை) ஆட்கொண்டவனாகிய இராமபிரான் கட்டளையிட்ட தொழிலை, ஆற்றலின் - (எனது) வல்லமையினால், ஆற்றல் - செய்துமுடித்தல், உண்டேல் - நிகழ்ந்துவிடுமானால்,—(பின்பு), யான்—, மீண்டு - திரும்பிவந்து, நல் விருந்து - அன்போடுசெய்யப்படும் (உனது) விருந்தை, நுகர்வென் - உண்பேன்,' என - என்றுசொல்லி, வேண்டி - (அம்மைநாகத்தை அப்போது தான் தங்காது போவதைப்பற்றிச் சினவாதிருக்குமாறு) வேண்டிக்கொண்டு, அவன் கண் புலம் பின்பட - அம்மைநாகமலையினது கண்களினறிவு தனது பின்னே தொடர, முந்து போனான் - விரைந்து சென்றான்; (எ - று.)

அநுமான் 'இப்போது யான் சென்று காரியத்தை முடித்துக்கொண்டு மீண்டுவரும்போது உனதுவிருந்தை யேற்றுக்கொள்வேன்' என்று சொல்லி, அம்மைநாகமலை பார்த்துக்கொண்டிருக்கும்போதே சென்றன னென்பதாம். 'வேண்டி மெய்ம்மைபூண்டான் அவன்கட்புலம் பிற்பட முந்துபோனான்' என்

பதற்கு - தன்னை விரும்பி மெய்யான அன்பைக் கொண்டவனாகிய அம்மைநாக னது (நெடுந்தூரங்காண்கின்ற) கண்பார்வையும் தொடாது பின்வாங்கும்படி (அநுமான்) மிகவிரைந்துசென்றானெனக் கூறினுமாம்; மைநாகன் அன்புடன் பார்த்துக்கொண்டிருக்கையில் அவன்கண்ணுக்குஎட்டாததூரமளவு அதிவேக மாகச்சென்றுவிட்டனனனும மென்றவாறும்: கூ - ஆஞ் செய்யுளில் "கட் புலங் கதுவா வண்ணம், மேல்விசைத்தெழுந்தான்" என்று வந்ததும் காண்க. மெய்ம்மைபூணுதல் - திரிகரணசுத்தியுள்ள [உள்ளும்புறமுமொத்த] அன்பைக் கொள்ளுதல். வேண்டி மெய்ம்மைபூண்டான் - மெய்ம்மைபூண்டு வேண்டி னன் என விகுதிபிரித்துக்கூட்டலுமாம். இக்காண்டத்தின் ஈற்றதான திரு வடிதொழுதபடலத்தில், அநுமான் இலங்கையினின்று திரும்பிவரும்பொழுது "மைந்நாகமென்னநின்ற குன்றையு மரபினெய்திக், கைந்நாகமனையோனுற்ற துணர்த்தினன்" என வருதல் காண்க.

விருந்துக்கு நன்மை - அன்போடுஇடப்படுதல்; "ஆதரஸ் ஸப்தமோரஸ:" என்று அறுசுவையோடு அன்பும் ஏழாவதுசுவையாகச் சேர்த்துச் சொல்லப்படு தலால், அதனையுடைய உணவு சிறந்தது மென்பான், 'நல்விருந்து'என்றான் 'ஆற்றலுண்டே', 'மீண்டானுகர்வேனுன்', 'முன்புபோனான்' என்று பாட பேதமுண்டு. (கூக)

[அங்ஙனம் மிகவிரைந்துசெல்கின்ற அநுமானது வருணனை.]

கூஉ. செவ்வான்கதிருங்குளிர்திங்களுந்தேவர்வைகு
வெவ்வேறுவிமானமுமீனொடுமேகமற்று
மெவ்வாயுலகத்தவுமீண்டியிருந்ததம்மி
னொவ்வாதனவொத்திடவூழிவெங்காலுமொத்தான்.

(இ - ள்.) வான் - ஆகாயத்திலே, செம் கதிரும் - செந்நிறமான கிரணங் களையுடைய சூரியனும், குளிர் திங்களும் - குளிர்ந்த(கிரணங்களையுடைய)சந்திர னும், தேவர் வைகு வெவ்வேறு விமானமும் - தேவர்கள் வசித்திருக்கப்பெற்ற வேறுவேறு விமானங்களும், மீனொடு - நக்ஷத்திரங்களும், மேகம் - மேகங்க ளும், மற்றும் - மேலும், எ வாய் உலகத்தவும் [உலகத்துஎவ்வாயவும்] - உலகத் தில் எல்லாவிடங்களிலுமுள்ள பொருள்களும், (அப்போதைய அநுமானது வேகத்தினால்), ஈண்டி இருந்த - ஒன்றாகச்சேர்ந்திருந்தன; (இவ்வாறு தனது விசையினாற் சேராதவற்றையும் சேரச்செய்த அநுமான்), தம்மின் ஒவ்வாதன ஒத்திட - தமக்குள் ஒன்றோடொன்று சேராத பொருள்களெல்லாம் ஒன்றாகச் சேரும்படி (வீசுகின்ற), ஊழி வெம் காலும் - பிரளயகாலத்துப் பிரசண்ட மாருதத்தையும், ஒத்தான் - போல்பவனானான்; (எ - று.)

சூரியனுக்கு ஓரிடம், சந்திரனுக்கு ஓரிடம், நக்ஷத்திரங்கட்கு ஓரிடம், மேகங்கட்கு ஓரிட மென இவ்வாறு அவ்வப்பொருட்கு ஏற்பட்டிருந்த இட நிலைகளெல்லாம் அநுமனதுவேகத்தால் மாறிப்போய் எல்லாம் ஓரிடத்தில் திரண்டன வென்பதாம். மிக்கவேகமாகச்செல்லுகின்ற அநுமானுக்கு, அவ னதுதந்தையாகிய பிரசண்டமாருதத்தை உவமைகூறியது, ஏற்கும். 'எவ்வாய்

உலகத்த' என்னுமிடத்து, விகுதிபிரித்துக் கூட்டப்பட்டது. 'எவ்வாய்' என்ற விடத்து உள்ள எகரவினா - எஞ்சாமைப்பொருளைக் காட்டிற்று. 'வைகும்' என்பதும் பாடம். செவ்வான் கதிர் - சிவந்த பெரிய சூரிய னெனினுமாம். வேறு+வேறு = வெவ்வேறு: மரூஉமுடிபு. ஊழிவெங்காலினால் ஒவ்வாதன ஒத்தலை "உகத்தினீறுதோ றீரேழுலகத்துங் கடுங்கால் வந்து, நகத்தினொடுயர்நகங் களைநெருக்குமாபோல" என்ற வில்லிபுத்தூரார்பாரதத்தாலும் உணர்க. தம்மின் ஒவ்வாதன ஈண்டியிருந்த ஒத்திட என்றுஎடுத்து, தம்முட்சேராதனவாய் ஆங் காங்குப் பொருந்தியிருந்தவைகள் ஒருங்குசேர வென்று உரைப்பினுமாம். 'ஈண்டியிரிந்திட,' 'காற்றுமொத்தான்' என்று சிலபிரதிகள். (சுச)

[அநுமான் பாய்ந்துசெல்வதைக் கண்டு சூரியன் ஐயமுறுதல்.]

சுரு. நீர்மாக்கடன்மேனிமிர்கின்றநிமிர்ச்சிநோக்காப்
பார்மேற்றவழ்சேவடிபாய்நடவாப்பதத்தே
தேர்மேற்குதிகொண்டவனித்திறன்சிந்தைசெய்தா
னார்மேற்கொலென்றெண்ணியருக்கனுமையமுற்றான்.

(இ - ள்.) (அநுமான் ஆகாயத்திற் பாய்ந்துசென்ற அப்போது),—அருக் கனும் - சூரியனும்,—நீர் மா கடல்மேல் - ஜலமயமான பெரிய கடலின் மீது, நிமிர்கின்ற - (அவ்வநுமான்) உயர்ந்துசெல்லுகின்ற, நிமிர்ச்சி - வேகத் தை, நோக்கா - பார்த்து, 'சே அடி பாய் நடவா சிவந்தகால்களைப் பரவவைத்து நடக்கமுடியாத, பார்மேல் தவழ் பதத்தே - பூமியின்மேல்தவழக்கூடிய (குழந் தைப்) பருவத்திலேயே, தேர்மேல் குதி கொண்டவன் - (எனது) தேரின் மேற் குதித்த இவன், (இப்போது), ஆர்மேல் - யார்மேற்பாய்வதற்காக, இ திறன் சிந்தை செய்தான்கொல் - இவ்வாறு தாவுவதை யெண்ணினானோ?' என்று எண்ணி - என்று நினைத்து, ஐயம் உற்றான் - சந்தேகத்தைப் பொருந்தியவ னானான்; (எ - று.)

அநுமானது விசையைப் பார்த்த சூரியன் 'குழந்தைப்பருவத்திலேயே என்மீது பாய்ந்த இவன் வலிமைபெற்றுள்ள இப்பருவத்தில் பாய்கின்றானே; இது, யாரைக்குறித்தோ? முதிர்ந்தபருவத்தையடைந்த இவன் பாய்தலைத் தாங்கவல்லா ரொருவரு மில்லையே!' எனச் சங்கித்தன னென்க.

அநுமான் தேர்மேற்குதிகொண்ட வரலாறு:—கேசரியென்னும் வாநர வீரனது மனைவியாகிய அஞ்சனாதேவியினிடத்தில் அரக்கர்களை யழித்தற்கு உதவுதற்பொருட்டு வாயுதேவனது அருளால் உருத்திராம்சமாய்ப்பிறந்த அநு மான் பிறந்தவுடனே தனது தாயைநோக்கி 'எனக்குஇரை யாது?' என வினவ, அவளும் 'சோலையிலே முதிர்ந்து செந்நிறமடைந்த பழங்களெல்லாம் உனக்கு இரையாவன' என்றுசொல்லி அவனதுஉணவின்பொருட்டுக் கனிகொணர் தற்காகக் காட்டிற்குச்சென்றனளாக, அப்போது பசிபொறுக்கமாட்டாமல் இவ்வநுமான் காலையிலுதித்த சூரியவிம்பத்தைக் கனியெனக்கருதி அதனைக் கவருமாறு அச்சூரியனது தேரின்மேல்தாவிப்பாய, பின்னர் இவனாற்பேருதவி பெறவேண்டியிருப்பதை நோக்கிச் சூரியனும் சுடாதிருந்தன னென்பதாம்.

பாய் - 'பா' என்ற முதனிலையினடியாப்பிறந்த இறந்தகாலவினையெச்சம். பதம் - இடம்: இடப்பெயர்கள் சிலவிடத்துக் காலப்பொருளையுமுணர்த்துமென்க. குதி - முதனிலைத்தொழிற்பெயர். நிமிர்ச்சி - உயர்வுமாம். 'பதத்தென்' என்றும் பாடமுண்டு.

இனி, இச்செய்யுட்கு வேறோருரை வருமாறு:—பார்மேல் தவழ் - பூமியின்மேற்செல்லுதற்குஉரிய, சே அடி - சிவந்தஅடிகளை, பாய் நடவா - பரவிவைத்துநடக்கமுடியாத, பதத்தே - ஸ்தானமாகிய ஆகாயத்திலே, தேர்மேல் குதிகொண்டவன் - (சூரியனது) தேரின்மேலே கால்களில்லாமையாற் பாய்ந்தேறி நிலைத்திருப்பவனான அருணன், நீர்மாக்கடல்மேல் (அநுமான்) நிமிர்கின்ற நிமிர்ச்சி நோக்கி, '(இவ்வநுமான்), இ திறன் - இந்தவேகத்தை, ஆர்மேல் சிந்தைசெய்தான்கொல் - யார்க்காக உத்தேசித்திருக்கிறானோ?' என்று எண்ணி - என்றுநினைக்க, அருக்கனும்—, (அவ்வாறே), ஐயம் உற்றான்என்க; ஓரிடத்து நிலைத்துநில்லாத அருணனும் சூரியனும் அநுமானதுவேகத்தை இன்னதைப்பற்றியதென்று உணராமல் சந்தேகித்தன ரென்பதாம். இத்திறன் சிந்தைசெய்தான் - அனுமனது இவ்வகைவேகவலியைக்குறித்துச் சிந்திக்கலானான் என்றலுமாம். 'ஆர்மேற்கொலென்று' என்பதை மத்திமதீபமாக 'சிந்தைசெய்தான்' என்றதனோடும், 'எண்ணிஐயமுற்றான்' என்பதனோடும் இயைக்கவுந் தகும்.

"பின்னுங்கூறுவார் பிறந்தபோதே யிவன் பிதாவே, யன்னவேகத்தனாற் றலா லருக்கன்மேற்பாய்ந்தான், மன்னுமாருதி வளர்ந்தபின் மருவலரானோ, ரென்னதாகி யென்படுவரோ விவன்கையா லென்றார்", "ஈது வானவர் தானவர் முதலினோ ரியம்ப" என மேல் உத்தரகாண்டத்தில் வருவது, இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. (சுஙு)

[அநுமானது உயர்வின் வருணனை.]

சுசு. வாளொத்தொளிர்வாலெயிறாழின் மருங்கிமைப்ப
நீளொத்துயர்வானின்விசும்புநிரம்புமெய்யன்
கோளொத்தவன்மேனிவிசும்பிருகூறுசெய்த
நாளொத்ததுமேலொளிகீழிருளுற்றஞாலம்.

(இ - ள்.) வாள் ஒத்து ஒளிர் - வாளாயுதத்துக்கு ஒப்பாய்ப் பிரகாசிக்கின்ற, வால் எயிறு - வெண்மையான பற்கள், ஊழின் - வரிசையாயிருந்து மருங்கு இமைப்ப - பக்கங்களில் விளங்கிக்கொண்டிருக்க,—விசும்பு நிரம்பு மெய்யன் - ஆகாயமெல்லாம் (தனதுஒளியினால்) நிரம்பப்பெறுகின்ற உடம்பையுடையவனான சூரியனை, கோள் - (சிலகாலங்களில்) மறைத்துக்கொள்ளுந்தன்மையுடைய ராகுகேதுக்களை, ஒத்து - ஒத்ததாய், நீள் ஒத்து உயர் - (சூரியமண்டலத்தின்) உயரத்தினளவாகச் சரியாக உயர்ந்துள்ள, வானின் - வானினாலே, விசும்பு இரு கூறு செய்த - ஆகாயத்தை இரண்டுபாகமாகப் பிரிக்கின்ற, அவன் மேனி - (அவ்வனுமனது) உடம்பானது, நாள் ஒத்தது - ஒரு தினத்தை யொத்திருந்தது; (அப்போது), ஞாலம் - இப்பூமியினது, மேல் -

மேற்புறமானது, ஒளி - வெளிச்சத்தையும், கீழ் - கீழ்ப்புறமானது, இருள் - இருளையும், உற்ற - அடைந்தன; (எ - று.)

தாவிச்செல்லும்போது அநுமானது மேலேஉயர்ந்துநீண்டுள்ளவாலினுற் சூரியன் மறையவே எங்கும் இருள் மூடியதாக, அப்போது அநுமானதுதங் தங்களினுல் மேலிருள்மாத்திரம் இரிந்தோட, கீழிருள் அங்ஙனமே தங்கின் றது: இவ்வாறு விசும்பினிடையே இருந்துகொண்டு ஒளியையும் இருளையு முண்டாக்கிய அவ்வநுமனதுஉடல் ஒருதினத்தை யொத்ததாயிற்று என்ப தாம்: தினத்தில் ஒளியையுடையபகலும், இருளையுடையஇரவும் உண்டாதல் காண்க. ஒளியையும் இருளையும் உண்டாக்குவதனுல், மேனியை ஒருநாள் போலுமெனக் கற்பித்துக்கூறியது, தற்குறிப்பேற்றவணி. 'நாளொத்தது' என் பதனை, 'மேலொளிகீழிருளுற்றஞாலம்' என்ற வாக்கியம் சாதித்துநிற்பது - தொடர்நிலைச்செய்யுட்குறியணி.

சூரியனை மறைத்ததனுல் அநுமானதுவாலுக்குக் கோளை உவமைகூறி ஞர். சூரியனைக் கோள்மறைத்தலைப்பற்றிய கதை:— பாற்கடல்கடைகையில் உண்டான அமிருதத்தை யெடுத்துக்கொண்ட திருமால், மிகஅழகிய மோகினி யென்னும் பெண்வடிவத்தால் அசுரரை மயக்கித் தேவர்க்கே அந்தஅமிருதத் தைப் பங்கிட்டுக்கொடுத்துவருகையில், இராகுவென்னும் ஓர்அசுரன் தான் இருத்தற்குஉரிய அசுரர்கூட்டத்தை விட்டுத் தந்திரமாகத் தேவர்கூட்டத்தி னிடையிலே புக்குக் கையேற்று அமிருதத்தை வாங்கியுண்ண, அதனைச் சந் திரசூரியர் குறிப்பித்தமாத்திரத்தில் எம்பெருமான் அவனை அகப்பையால் அடித்துத் தலைவேறு உடல்வேருக்க, அமிருதமுண்டதனுல் உயிர்நீங்காத அந்தத் தலையும் உடம்பும் விஷ்ணுவின் அநுக்கிரகத்தால் இராகுகேதுக்க ளென இரண்டுகிரகங்களாகிச் சூரியன்முதலிய எழுகிரகங்களோடு சேர்ந்து, தம்மேற்கோள்சொன்ன சூரியசந்திரர்க்குப் பகையாய்ச் சிற்சிலகாலத்தில் அவர்களைப் பிடித்துக் கொள்ளுகின்றன வென்பதாம்.

விசும்புநிரம்புமெய்யன்கோள்ஒத்து நீள்ஒத்துஉயர் வாலின் விசும்புஇரு கூறுசெய்த எனவும், இமைப்ப செய்த மேனிஒத்ததெனவும் இயைக்க. இங் ஙனஞ்சென்று இயைவது, கொண்டுகூட்டுப்பொருள்கோளெனப்படும்; "யாப் படிபலவினுங் கோப்புடை மொழிகளை, யேற்புழி யிசைப்பது கொண்டுகூட் டே" என்றார் நன்னூலார்: இவ்வாறுவருவதனை, ஆசிரியர் தொல்காப்பியனார் "அகன்றுபொருள்கிடப்பினு மணுகியநிலையினு, மியன்றுபொருண்முடியத் தந்தனருணர்த்தன், மாட்டெனமொழிப்பாட்டியல் வழக்கின்" என்ற சூத்தி ரத்தினுல், நல்லிசைப்புலவர் செய்யுஞ் செய்யுட்களுக்கு உரிய மாட்டென்னும் உறுப்பு எனக் கூறினர். கீழ், மேல் என்ற இரண்டெழுவாயும் அடுக்கி, 'உற்ற' என்னும் பலவின்பால்முற்றை யேற்றன.

இனி, இச்செய்யுட்கு - வாளொத்துஒளிர் வாலெயிறு ஊழின்மருங்கு இமைப்ப விசும்பில்நிரம்பியமெய்யை [உடம்பை] யுடையவனும், நீளொத்து உயர்வாலினுலே (கேதுவென்ற) கிரகத்தை யொத்தவனுமாகிய அநுமானது உடம்பானது, ஆகாயத்தில் (பகல் இரவு என்ற) இரண்டுகூற்றையும் உண்

டாக்கிய தொருநாளை யொத்தது; (எவ்வாறெனில்), ஞாலம் மேல் ஒளியும் கீழ் இருளும் உற்ற என்றும் கூறலாம். சாதாரணமாக ஒருநாளின் ஒருபகுதி பகலும், மற்றொருபகுதி இரவுமாம்: அவ்வாறன்றி, இப்போது அநுமான் தான் வானத்திலிருந்துகொண்டு தனக்குமேலெல்லாம் ஒளியையும், கீழெல் லாம் இருளையும் உண்டாக்குவதனால், ஒரேகாலத்திற் பகலையும் இரவையும் கொண்டதொருநாளை யொத்திருந்தது அவ்வநுமானது உடம்பு என்றவாறு: இல்பொருளுவமை.

மற்றும், இச்செய்யுட்கு - வாளாயுதம்போன்றுவிளங்குகின்ற வெண் ணிறமானபற்கள் வரிசையாக வாயினிருபுறத்திலும் விளங்க அதனால் ஆகாய மெல்லாம் பிரகாசமுற்றன; நீளப்பொருந்தியுயர்ந்த வாலினால் வானமெங் கும் ஒளியால்நிரம்புகின்ற மேனியையுடையவனை சூரியனை இராகுபோல் மறைத்தவனை அநுமானது திருமேனியினால் வானத்தை இருகூறுசெய்த காலத்தை யொத்தாய் வானத்தின்கீழ்ப் பூமியெல்லாம் இருளடைந்தன வென்று பதவுரைகூறி, அநுமானது திருமேனியின் நீளத்தாலும் பருமை யாலும் நடுவிலேயமைந்தவு உள்ளதாதலால் ஆகாயம் இரண்டுகூறாகச் செய்தாற் போலாகிப் புவியெல்லாம் இருளாயின, தந்தவரிசையால் ஆகாயமெல்லாம் ஒளியாயின வென்று கருத்துரைப்பாருமுளர்.

விசும்புநிரம்புமெய்யன் - அநுமான் எனக் கொண்டும் உரைக்கலாம். இச் செய்யுள் மற்றும்பலவகையாகப் பொருள்படுகின்றது; அவற்றையெல்லாம் விரிப்பிற் பெருகு மாதலால், ஏற்றபெற்றி கண்டுகொள்க. 'தோளின்விசும்பு நிறைந்தமெய்யன்,' 'விசும்பிருகூறுசெய்யும்' என்பன, பாடபேதம். (கூ௯)

[தேவர்களுடையவேண்டுகோளின்படி சுரசையென்பவள் அனுமனது பலத்தைப் பரீக்ஷிக்க அரக்கியுருவெடுத்து வருதல்.]

கூ௫. மூன்றுற்றதலத்திடைமுற்றியதுன்பம்வீப்பா
னென்றுற்றுவந்தான்வலிமெய்ம்மையுணர்த்துநீயென்
றான்றுற்றவானோர்குறைநேரவரக்கியாகித்
தோன்றுற்றுநின்றாள்சுரசைப்பெயர்ச்சிந்தைதூயாள்.

(இ - ள்.) 'மூன்று உற்ற தலத்திடை - (சுவர்க்கம் மத்தியம் பாதாளம் என்று) மூவகையாகப் பொருந்திய உலகங்களிலும், முற்றிய - (இராக்கதர்க ளால்) மிகுதியாகநேர்ந்த, துன்பம் - துன்பத்தை, வீப்பான் - ஒழித்தற்காக, என்றுற்று - உடன்பட்டு, வந்தான் - வந்தவனாகிய அநுமானது, வலி - பலத் தைப்பற்றி, மெய்ம்மை - உண்மையாக, நீ உணர்த்து - நீ (எங்கட்கு) அறி விப்பாயாக,' என்று—, ஆன்று உற்ற வானோர் குறை நேர - மிகுதியாக ஆகாயத்திற்பொருந்திய தேவர்கள் வேண்டிக்கொள்ள, சுரசை பெயர் சிந்தை தூயாள் - சுரசையென்ற பேரைக்கொண்ட மனப்பரிசுத்தியையுடையவள், அரக்கி ஆகி - ராக்ஷஸிவடிவுகொண்டு, தோன்றுற்று நின்றாள் - (அனுமனது எதிரிற்) காணப்பட்டு நின்றாள்; (எ - று.)

பேருருவங்கொண்டு மகேந்திரமலையும்உட்புகுமாறு தாவியதும் மைநாக மலையை மார்பினால்வீழ்த்தியதுமாகிய இருமுறைகளில் அனுமனது பலத்

தைக் கண்கூடாகக்கண்டிருந்தும் தேவர்கள் 'தமது காரியம் பலிக்குமா?' என்ற அதிசங்கையினால் முழுநம்பிக்கையில்லாதவர்களாய், மீண்டும் அவனது பலத்தைச் சோதிக்குமாறு, நாகமாதாவான சுரசையென்பாளை யேவ, அவள் அரக்கிவடிவங்கொண்டு அனுமனெதிரில் வந்துநின்றன ளென்பதாம். சீதையைத் தேடிக்கண்டுவருவதாக உடன்பட்டுவந்ததையே, உபசாரவழக்கால், 'மூன்றுற்றதலத்திடைமுற்றியதுன்பம்வீப்பா னென்றுற்று வந்தான்' என்றனர். வலி மெய்ம்மை - வலியினுடைய மெய்ம்மையை [வாஸ்தவமான பலத்தை] யென்றுமாம். குறை நேர - தமதுகுறையைச் சொல்ல. 'அரக்கியாகி' என்பதை 'உணர்த்து' என்றதனோடு இயைத்தலுமாம். சிந்தைதூயாள் - இயல்பிலே மனத்திற் களங்கமில்லாதவள். (௬௫)

[இதுவும், அடுத்த கவியும் - அரக்கிவடிவங்கொண்ட சுரசை அநுமானை அதட்டியதைக் கூறும்.]

௬௬. பேழ்வாயொரரக்கியுருக்கொடுபெட்பினோங்கிக்
கோழ்வாயரியின்குலத்தாய்கொடுங்கூற்றுமுட்க
வாழ்வாயெனக்காமிடமாய்வருவாய்கொலென்னா
நீள்வாய்விசும்பின்றனதுச்சிநெருங்கநின்றாள்.

(இ - ள்.) (சுரசையென்பவள்),—பேழ் வாய் - பிளவுபட்ட [மிக அகன்ற] வாயையுடைய, ஓர் அரக்கி உரு கொடு - ஒரு ராக்ஷஸியின் வடிவத்தை எடுத்துக்கொண்டு, பெட்பின் - (அநுமானை யுண்ணவேண்டுமென்ற) ஆசையினாற்போல, ஓங்கி - உயர்ந்துநின்று,—(அநுமானைநோக்கி),—'கோழ் வாய் - கொழுப்புப்பொருந்திய, அரியின் குலத்தாய் - குரங்குக்குலத்திற் பிறந்தவனே! கொடுங்கூற்றும் உட்க வாழ்வாய் - கொடியயமனும் அஞ்சும்படி வாழுமவனே! எனக்கு ஆமிடம் ஆய் வருவாய்கொல் - எனக்குஏற்ற பக்ஷமாக வருபவனோ நீ', என்னா - என்றுசொல்லிக்கொண்டு, நீள் வாய் விசும்பின் தனது உச்சி நெருங்கி - உயர்ச்சிபொருந்திய ஆகாயத்திலே தனதுதலையானது முட்டுமாறு வளர்ந்து, நின்றாள்—; (எ - று.)

அச்சுரசை வானுறவோங்கிய ராக்ஷஸிரூபத்தைக் கொண்டு 'எனக்கு நீ இரைச்சிபோலும்' என அநுமானைப் பரிகசித்துக்கூறின ளென்க. கோழ் - கொழுமையென்ற பண்புப்பெயரின் விகாரம். ஆமிடம் - ஆமிஷம் என்ற வடசொல்லின் விகாரம்; மாம்ஸமென்பது பொருள்: "யானினியிதனுக்காமிடம்" எனக் கீழ் ஆரணியகாண்டத்திலும் இச்சொல் பயின்றுள்ளது. இச்சொல்லைத் தமிழ்மொழியாக்கொண்டு, ஆம் இடம் எனப்பிரித்து நலிந்து பொருள்கொள்ளுதல் பொருந்தா தென்க. 'ஆமுணவாய்' என்று பாடமோதுவாரு முளர். ஈற்றடி - இனவெதுகை. நெருங்கி யென்பதை நெருங்கவென எச்சத்திரிபாக்கியும் உரைக்கலாம். 'விசும்பிற்றனது' என்றும் பாடமுண்டு. பேழ்வாய் - திறந்த வாய். கீழ்ச்செய்யுளில் 'அரக்கியாகித்தோன்றுற்றுநின்றாள்' என்று தொகுத்துச்சுட்டியதன் வகுத்துக்காட்டல், இச்செய்யுள். இரண்டாமடியிலும், நான்காமடியிலும், 'வாய்' - வினைத்தொகை. 'கோள்வாய்', 'நீழ்வான்

விசும்புந்தன துச்சிநெருக்கி' என்றும் பாடமுண்டு. தன்னைப் பொருள்செய்யாது தன்முன்வந்தது கொழுப்பின்காரியமென்றும் சபலபுத்தியின்பயனென்றும் குறிப்பாள், 'கோழ்வாயரியின்குலத்தாய்' என்று விளித்தனளென்க. ()

கூஎ. தீயேயெனலாயபசிப்பிணிதீர்த்தல்செய்வா
யாயேவிரைவுற்றென்னையண்மினைவண்மையாள
நீயேயினிவந்தெனிணங்கொள்பிணங்கெயிற்றின்
வாயேபுகுவாய்வழிமற்றிலைவானினென்றாள்.

(இ-ள்.) (மற்றும் சுரசை அநுமானைநோக்கி),— 'வண்மை ஆள - வண்மையையுடையவனே! (நீ), தீயே எனல் ஆய - (இது) அக்கினியே போன்று உடம்பினையெரிக்கின்றது என்று சொல்லப்படுவதாகிய, பசி பிணி - (எனது) பசியாகிய நோயை, தீர்த்தல்செய்வாய் ஆயே - போக்குபவனாகியே, விரைவுற்று - விரைவாக, எனை அண்மினை - என்னை நெருங்கிவிட்டாய்போலும்; நீயே - (நான்பற்றவேண்டாமல்) நீ சுயமாகவே, இனி - இனிமேல், வந்து—, என் நிணம் கொள் பிணங்கு எயிற்றின் வாயே புகுவாய் - எனது மாம்சத்தைக்கொண்டுள்ள வளைந்த கோரபற்களையுடைய வாயினுள்ளே புகுவாயாக; வழி - (நீ தப்பிச்செல்லும்) வழி, வானின் - ஆகாயத்திலே, மற்று இலை வேறேயில்லை,' என்றாள் - என்றுகூறினாள்; (எ - று)

'நீ இங்குவந்தது எனதுபசியைத் தணித்தற்காகவே போலும்; இங்கேயோ நீ தப்பிச்செல்வதற்கு வேறுவழியுமில்லை: ஆதலால், எனது வாயில் நீதானே புகுவாயாக' என்றும் சுரசை கூறினளென்பதாம். இச்செய்யுளில் அநுமானைப் புகழ்ந்ததுபோலக் கூறியனவெல்லாம் அவனையிகழ்தற்பயத்தனவாதலால், வஞ்சப்புகழ்ச்சியணியாம்; இது, வடமொழியில் வ்யாஜஸ்துதியெனப்படும். அநுமான் தன்னுடம்பைத் தானேவந்து உணவாக வலிய வுதவுந் தன்மையனென்று குறித்து, அவனை 'வண்மையாள' என விளித்தாள்: முதல்வள்ளலே யென்றவாறு. வயிற்றிற்புகும் உணவுகளையெல்லாம் எரித்து ஒழிக்கின்ற ஜாடராக்கினியினாலேயே பசி விளைதல்பற்றியும், அஃது மூளுங்காலத்து உடம்பைத் தகித்து வருத்துதல்பற்றியும், 'பசித்தீ' எனபபடுதற்கு ஏற்ப, 'தீயேயெனலாய பசிப்பிணி' என்றாள்: இனி, இத்தொடர்க்கு-யானைத் தீயென்று சொல்லப்படுகின்ற பெரும்பசியை யுண்டாக்குகின்ற வியாதியையென்றும் பொருள்கொள்ளலாம். ஆயே - தாயே யென விளியாகவுமாம். நிணங்கொள்ளுதல் - இதற்குமுன்பு தின்ற பிராணிகளின் உடற்கொழுப்பு ஒட்டிக்கொண்டிருத்தல். என்எயிறு, நிணங்கொள்எயிறு, பிணங்குஎயிறு எனத் தனித்தனி இயையும். 'தீர்த்தல்செய்வா, னாயேவிரைவுற்றனை யன்பின்வழாமையான, நீயே' என்று சிலபிரதிகளிற் பாடம் காணப்படுகிறது. (கூஎ)

[அதற்கு அநுமனது மறுமொழி.]

கூஅ. பெண்பாலொருநீபசிப்பிழையொறுக்கநொந்தா
யுண்பாயெனதாக்கையையானுதவற்குநேர்வல்

விண்பாலவர்நாயகனேவலிழைத்துமீண்டா
னண்பாலெனச்சொல்லியநல்லறிவாளனக்கான்.

(இ - ள்.) 'பெண்பால் ஒரு நீ - ஒருபெண்ணாகிய நீ, பசி பீழை உறுக்க - பசியினாலாகிய துன்பம் (உன்னை) வருத்துதலினால், நொந்தாய் - வருந்தினாய்; விண்பாலவர் நாயகன் ஏவல் இழைத்து மீண்டால் - மேலுலகத்திலுள்ளவர்களான தேவர்கட்கெல்லாந் தலைவனாகிய இராமபிரானது கட்டளையைச் செய்துவிட்டு (நான்) மீண்டுவந்தால், (அப்போது), எனது ஆக்கையை - எனது உடம்பை, உண்பாய் - நீ உண்ணலாம்; யான் - நானும், உதவற்கு - (நீ உண்ணுமாறு) கொடுத்தற்கு, நேர்வல் - உடன்படுவேன்', என - என்று, நண்பால் சொல்லி - சிநேகத்தோடு சொல்லி, அ நல் அறிவாளன் - சிறந்த ஞானமுள்ளவனாகிய அவ்வநுமான், நக்கான் - சிரித்தான்; (எ - று.)

அப்போது அநுமான் அவளைநோக்கி 'நீ பசியினால் நொந்தாய்; ஆதலால் நீ என்னை உண்ணலாம்; ஆனால், இப்போது யான் இராமபிரானது கட்டளையைச் செய்யவேண்டியிருத்தலால், நான் போய் மீண்டுவந்து உனது விருப்பத்தின்படியே உணவாவேன்' எனக் கூறினனென்பதாம். இங்கு, அநுமான் சிரித்தது - அவளைக்கண்டு தான் அஞ்சவில்லையென்பதைத் தெரிவித்தற்கும், பெண்ணாகியநீ இவ்வாறு பெரும்பசிகொள்ளுதல் தகாதெனக் குறிப்பித்தற்குமாம்; ஆகவே, நகைநான்கனுள் இஃது - எள்ளலின்பாற்படுமென அறிக. சிநேகிதரிடத்துச் சொல்வதுபோல ஸஹஜமாகக்கூறினனென்பார், 'நண்பா லெனச்சொல்லி' என்றார். 'பெண்பாலொருநீ' என்ற விதப்பு, "பெண்ணென்றாற் பேயும் இரங்கும்" என்றபடி யாவரும் இரங்கத்தக்க பெண்பாலாருள் ஒருத்தியாகிய நீ பெரும்பசிகொண்டு மிகவருந்து தலை ஆண்மக்களிலொருவனான யான் தீர்த்தற்குக் கடமைப்பட்டுள்ளே னென்ன உலகியல்புதோன்றக் கூறியவாறும் நண்பால் நேர்வல் என்றலுமாம்.

பீழை - பீடா என்ற வடசொல்லின் சிதைவு. 'பெண்பாலொருநீ பசிப்பீழை யுறுத்தல் பேர' என்றும் பாடமுண்டு. 'அந்நல்லறிவாளன்' என்பது, 'அநல்லறிவாளன்' எனத் தொக்கது; சொல்லிய நல்லறிவாளன் என்றும் எடுக்கலாம். 'சொல்லின னல்லறிவாள னக்கான்' என்று சிலபிரதிகளிற் காணப்படுகின்றது. (௬௮)

[மீண்டும் சுரசை 'நின்னைத் தின்பேன்' என்றலும், அதற்கு அநுமான் 'வல்லவளாயின் செய்' என்றலும்.]

௬௯. காய்ந்தேழுலகங்களுங்காணநின்யாக்கைதன்னை
யாய்ந்தேபசிதீர்வெனின்னுணையென்றன்னள்சொன்ன
ளோர்ந்தானுமிகழ்ந்தொருவேனினதூழில்பேழ்வாய்
சேர்ந்தேகுகின்றேன்வலையாமெனிற்றின்னியென்றான்.

(இ - ள்.) 'காய்ந்து - (உன்னைக்) கொன்று, ஏழ் உலகங்களும் காண - ஏழுலகத்தவரும் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே, நின் யாக்கைதன்னை - உனது சரீரத்தை, ஆய்ந்து - ஆராய்ந்து, பசி தீர்வென் - (எனது) பசியைப்

போக்கிக்கொள்வேன்; நின் ஆணை - உன்மேல்ஆணை,' என்று—, அன்னன் - அந்தச் சுரசை, சொன்னாள்—; ஓர்ந்தானும் - எல்லாவற்றையு முணரும் அறிவினனாகிய அவ்வநுமானும், இகழ்ந்து - பரிகசித்து, 'ஒருவேன் - தனிமைப் பட்டிருக்கின்ற யான், நினது ஊழ் இல் பேழ் வாய் - உனது முறைப்படியில்லாத [மிக்ககோரமாயுள்ள] திறந்த வாயின் வழியாக, சேர்ந்து - புகுந்து, ஏகுகின்றேன் - போகின்றேன்; வலை ஆம் எனில் - நீ (என்னை விழுங்கும்) வல்லமையுடையவளானால், தின்னி - தின்பாய்,' என்றான் - என்றுகூறினான்.

காரியத்தை முடித்து மீண்டுவருகின்றே னென்று அநுமான் சொல்லவும் கேளாமல், அவ்வரக்கி 'உன்மே லாணை; நான் உன்னை இப்போது விழுங்கியேதீர்வேன்' என்று சொல்ல, அதற்கு அநுமான் 'நான் உன்வாயிற் புகுந்து செல்லுகின்றேன்; உனக்கு வல்லமையிருந்தால் என்னை விழுங்கு, பார்ப்போம்' என அலக்ஷ்யமாகக் கூறினனென்க. ''இங்கேவருபவர்கள் எனது வாயிற் புக்கன்றிப் போகக்கூடாது'' என்று முதனூலிற் கூறியதை யொட்டி, 'காய்ந் தேழுலகங்களுங் காண நின்யாக்கைதன்னையாய்ந்தே பசிதீர்வெனின்றேனை யென் றன்னள் சொன்னாள்' எனக் கூறினர். தனது செய்கையால் அவனை எளிதில் வென்றிடலா மென எண்ணியதிறேல், அவளை இகழ்ந்து கூறினன் அநுமனென்க.

'ஒருவேன்' - அஸஹாயசூரனாகிய யா னென்றவாறு; ஒன்று என்னும் எண்ணின்அடிச்சொல்லினடியாகப் பிறந்த தன்மையொருமைப்பெயர்: இனி, ஒருவேன் - (உனது விருப்பத்தைக்) கடந்துசெல்வேன் என்றுமாம்; ஒருவு என்ற வினைச்சொல் - முதனிலை. வலை - வல்லை யென்பதன் தொகுத்தல். காய்ந்து ஆய்ந்து பசிதீர்வென் என இயையும். காய்ந்து - கோபித்தெனக் கொண்டால், 'சொன்னாள்' என்பதனோடு இயைக்கலாம். இகழ்ந்து என்றான் என இயையும்; இகழ்ந்து ஒருவேன் என இயைத்து உரைப்பினுமாம். 'உண்டு' அல்லது 'தின்று' என்னாது 'ஆய்ந்து' என்றது, உனது உடம்பு எனக்கு முழுவுணவாதற்குப் போதா தென்ற குறிப்பு. இதுவும், 'தின்றேனை' என்றதும் - பரிகாசமாகக்கூறிய விகடவார்த்தை. 'வலையாம்' என்பதில், ஆம் - அசை. 'ஆர்ந்தேபசிதீர்வெனிதனை', 'ஓர்ந்தானுமுவந்தொருவேன்', 'சேர்ந்தேகுகின்றெனெனையாமெனிற்றின்றிடென்றான்' என்பன பாடாந்தரம். (௬௯)

[அப்போது அவள் அநுமானை விழுங்குமாறு தனது வாயை விரிக்க, அநுமானும் மிக்கபேருருவங் கொள்ளுதல்.]

௭0. அக்காலையரக்கியுமண்டமனந்தமாகப்
புக்காலுநிறையாதபுழைப்பெருவாய்திறந்து
விக்காதுவிழுங்குகின்றாளதுநோக்கிவீரன்
திக்காரவள்வாய்சிறிதாம்வகைசேணிணீண்டான்.

(இ - ள்.) அ காலை - அப்போது, அரக்கியும் - அந்த்ராக்ஷஸியும்,— அனந்தம் அண்டம் ஆக புக்கால் - அநேக அண்டங்கள் ஒருசேர வந்து புகுந்தாலும், நிறையாத - நிரம்பாத, பெரும் புழை வாய் திறந்து - மிகப்பெரிய

துவார்த்தையுடைய வாயை அகல விரித்துக்கொண்டு, விக்காது விழுங்க - விக்கலெடுக்காமல் [தடைப்படாமல்] விழுங்கும்படி, நின்றாள்—; அது நோக்கி - அதனைப் பார்த்து, வீரன் - வீரனாகிய அநுமான், திக்கு ஆர் அவள் வாய் சிறிது ஆம் வகை,- எல்லாத்திசைகளிலும் பரவிய அவளதுவாய் (தனது உருவத்திற்குமுன்னே) சிறியதாகுமாறு, சேணில் நீண்டான் - ஆகாயத்தில் நீண்டுவளர்ந்தான்; (எ - று.)

அநுமான் தானே அவள்வாயிற்புகுவதாக இசையவும், அவள் பின்னும் தனது வாயை அகலவிரித்ததைக் கண்டு சினங்கொண்டு அவளதுவாய்கொள்ளாதபடி மிக்கபேருருவத்துடன் வானுறவோங்கிவளர்ந்தன னென்பதாம்.

அண்டம் - உலகவுருண்டை: வடசொல். புக்கால் என்ற எச்சத்தின் பின் எதிர்மறையோடு சிறப்புப்பொருளையு முடைய உம்மை விகாரத்தால் தொக்கது; புக்காலு மென்பது பொருள். புழை - உட்டுளை; குகை போன்ற என்றலு மொன்று. வாயினுட்கொள்ளப்படும் உணவுத்திரளை பெரிதாயிருக்குமானால் விக்க லுண்டாதல்கூடும்: அதற்கு இடமின்றி அநுமனதுபேருருவத்தினும் தனதுவாய்மிகப்பெரிதாகத் தட்டின்றி எளிதில் விழுங்குமாறு நின்றன ளென்பார், 'விக்காது விழுங்க நின்றாள்' என்றார். அன்றி, 'விக்குதல்' என்பது, தான்கொண்டகாரியத்தைத் தடையின்றிச் செய்யமுடியாமல் எளிமைப்படுதலைக் காட்டு மென்னலுமாம்; "விக்கற்பொருதூதுவன்" என்னுமிடத்திலும் காண்க. திக்காரம் வள் வாய் என்று கொண்டு - (தனது பெருமையைப்) பழிக்கின்ற (அவளது) பெரியவாயென்று கூறுதலு மொன்று; திக்காரம் - வடசொல். சேணின் நீண்டான் - அகன்றுநீண்டான் எனினுமாம்; சேண் - அகலம்: இன் - சாரியை. 'திக்கு ஆர்' என்பது - (அநுமான் செல்லுந் தெற்குத்) திக்குமுழுவதும் நிரம்பிநிற்கின்ற என்றும் பொருள்படும். 'திக்காநெறிவாய்' என்றும் பாடமுளது. (எ0)

[அநுமான் சிறியவடிவங்கொண்டு அவள்வாயினிற்புக்குவெளியேவந்துவிட, வானோர் மலர்மழைதூவி வாழ்த்துதல்.]

எக. நீண்டானுடனேசுருங்காநிமிர்வாள்வயிற்றி
னூண்டானெனவுற்றொருயிர்ப்புயிராதமுன்னர்
மீண்டானதுகண்டனர்விண்ணுறைவோர்களெம்மை
யாண்டான்வலனென்றலர்தூய்நெடிதாசிசொன்னார்.

(இ - ள்.) நீண்டான் - அவ்வாறுவளர்ந்தவனான அநுமான், உடனே— சுருங்கா - (தன்னுடம்பு மிகச்சிறிதாகுமாறு) சுருங்கி, நிமிர்வாள் வயிற்றின் ஊண் தான் என உற்று - தன்னை அவ்வாறு ஓங்கியிருக்கின்ற சுரசையினது வயிற்றுக்கு உணவேயென்று (கண்டோர்) நினைக்கும்படி (அவள்வாயினுள்) தான்புகுந்து, ஓர் உயிர்ப்பு உயிராத முன்னர் மீண்டான் - ஒருமுறை மூச்சு விடுதற்குமுன்னமே [மிகவிரைவில்] வெளியேவந்துவிட்டான்; அது கண்டனர் - அவ்வதிசயத்தைப் பார்த்தவர்களாகிய, விண் உறைவோர்கள் - (வானத்தில் அப்போது வந்திருந்த) வானுலகத்தவரான தேவர்கள், எம்மை ஆண்

டான் வலன் என்று - 'நம்மை (ஆபத்தினின்றுவிடுவித்துப்) பாதுகாப்பவனாகிய இவன் (நம்காரியத்தை முடிப்பதில்) வல்லவனே' என்று சொல்லி, அலர் தூய் - புஷ்பங்களைத் தூவி, நெடிது ஆசி சொன்னார் - மிகுதியான வாழ்த்து மொழிகளைக் கூறினார்கள்; (எ - று.)

சுரசையினது செருக்கு அடங்குமாறு அவள்வாய்க்கு அடங்காதபடி ஓங்கிவளர்ந்த அநுமான், காலதாமதமாவதைக் கண்டு அவள்விருப்பிற்குத் தான் முன்னர் இசைந்துகூறியபடியே தனது உடலை மிகவுஞ்சுருக்கிக் கொண்டு அவள்வாயினுட் புக்கு அவள் அவ்வாயை மூடுவதற்கு முன்னமே மீண்டுவந்திட, அது கண்டு, அவனது பலத்தை யுணருமாறு அச்சுரசையை யேவிய தேவர்கள், மூன்றும்முறையிலும் அவனதுவல்லமையைக் கண்கூடாகக் கண்டதனால், 'இனி நாம் விரும்பிய ராக்ஷஸவதம் இவனுதவியால் முடிந்துவிடும்' என்று உறுதிகொண்டு அவனது திறத்தை மெச்சிப் பூமழைபொழிந்து அவனை வாழ்த்தின ரென்க. "அநுமான் கட்டைவிரலளவான வடிவங்கொண்டு அவள்வாயினுட் புக்கு மீண்டுவந்து 'உனது வரத்திற்கு மாறில்லாமல் உன்வயிற்றினுட் புகுந்து ஆயிற்று; இனி எனது காரியத்தை நாடிச் செல்வேன்' என்று அவளைத் தொழுதனன்" என, முதனூலிற் கூறியுள்ளது.

சுருங்கா - உடன்பாட்டெச்சம். இனி, எதிர்மறைவினையெச்சமாகக் கொண்டு 'சுருங்கா நிமிர்வாள்' எனக் கூட்டியுரைப்பின், அநுமான் தனது உடலைச் சுருக்கியது கூறப்படாததாய்விடு மாதலால், அவ்வுரை சிறவாது. ஆண்டான் - (தனதுசெய்கையால்) ஆளப்போகின்றவன்: தெளிவினால் எதிர்காலம் இறந்தகாலமாகச் சொல்லப்பட்ட காலவழுவமைதி. தூய் - 'தூவு' என்ற பகுதியினடியாப் பிறந்த செய்தென்னும்வாய்பாட்டு வினையெச்சம். ஊண்தான்—தான் - அசை யென்னவுமாம். 'ஒருயிர்ப்புயிராதமுன்னம்' என்றது, மிக்க காலநுட்பத்தைக் காட்டும்; "மூச்சுவிடுமுன்னே" என்றார் பிறரும். 'ஊண் தான் என உற்று ஓர் உயிர்ப்பு உயிராதமுன்னம் மீண்டான்' என்பதற்கு - உணவாகின்றேன் யான் என்று சொல்லிக்கொண்டே புகுந்து (அவள் தனது மிக அகன்ற வாயைச் சுருக்கி மூடுவதற்குள்ளே) அதிவிரைவாக வெளிப்போந்தன னென்று உரைக்கவும்படும். ஆண்டான் - அடிமைகொண்டவன்; எசமானன், தலைவன் எனினுமாம். இங்ஙனம் நினைத்தபடி வளர்தல் - 'மகிமா' என்ற யோகசித்தியும், சுருங்குதல் - 'அணிமா' என்ற யோகசித்தியுமாம்; இவை - எண்வகைச்சித்தியின்பாற்படும். 'நிமிர்வாயிடத்தின்', 'ஆண்டானிவனென்று' என்பன பாடபேதம். (எக)

[பின்பு சுரசை தனது உண்மைவடிவத்துடன் அவனைவாழ்த்திச்செல்ல, அநுமானும் அவளைப் புகழ்ந்துபோதல்.]

எஉ. மின்மேற்படர்சோனைமையனுடல்வீங்கிநீங்கத்
தன்மேனியளாயவடாயினுமன்புதாழ
வென்மேன்முடியாதனவென்றினிதேத்திநின்றாள்
பொன்மேனியனுநெடிதாசிபுனைந்துபோனான்.

(இ - ள்.) (அவ்வநுமான்), நோன்மையன் ஆய் - (தனது செய்கையையே) முக்கியவிரதமாக வுடையனாய்க்கொண்டு, மின் மேல் படர் உடல் வீங்கி - ஒளி மேலேபரம்புமாறு (மிக்கவொளி) உள்ள (தனது) உடம்பு (முன்பு தான் செல்லும்போது இருந்தபடியாகவே) பருத்து, நீங்க - தனதுவழியைநோக்கிப்போகுமாறு முயல,—(அப்போது), அவள் - அச்சுரசை, தன் மேனியள் ஆய் - (தான்கொண்டிருந்த ராக்ஷஸிவடிவத்தை யொழித்து நாகமாதாவாயுள்ள) தனது இயற்கைவடிவத்துடனே (அநுமானது எதிரிலே வந்து), தாயினும் அன்பு தாழ - (பெற்ற) தாயினும் அன்பு அதிகமாக,—மேல் முடியாதன என் என்று - 'இனிமேல் (உன்னால்) முடிக்கக்கூடாதனவான செய்கை எவைதாம் உள்ளன? [எவ்வகைத்தொழிலையும் நீ முடிக்கவல்லாய்]' என்றுசொல்லி, இனிது ஏத்தி நின்றாள் - இனிமையாகப் புகழ்ந்துகொண்டு நின்றாள்; பொன் மேனியனும் - அழகிய உடம்பையுடையவனான அநுமானும், நெடிது ஆசி புனைந்து - (அவளது) மிக்கவாழ்த்துக்களைப் பெற்றுக்கொண்டு, போனான்—; (எ - று.)

கட்டைவிரலினளவாகச் சிறுத்து அவளதுவாயினுட்புக்கு மீண்டுவந்த அநுமான் தனதுகருமமேகண்ணாகவுடையனாய் முன்போலவே பெருவடிவங்கொண்டு மீண்டும்போகத்தொடங்குகையில், அந்தச்சுரசையானவளும் தனது இயற்கைவடிவுடனே அவனது எதிரில் தோன்றி அவனைப்புகழ்ந்து வாழ்த்திச்செல்ல, அநுமானும் முன்போலவே போகலாயின னென்பதாம். 'மின் மேல் படர் நோன்மையன் ஆய்' என்பதற்கு - (திடீரென்று மிகப்பெரிதாகத் தோன்றி விளங்கி உடனே மிகச்சுருங்கிவிடுதலில்) மின்னலினும் அதிகமாக மிக்க ஆற்றலை யுடையவனாகி என்று உரைப்பினும் அமையும்; நோன்மை - சக்தி. நீங்க - (தன்வாயினின்று) நீங்கிவிட எனினுமாம். முடியாதன - (நினக்கு) நிறைவேறாதன. இனி, முன்னிரண்டடிக்கு வேறுவகையாக உரைத்தல், நலிந்துபொருள்கோடலாய் [க்லிஷ்டகல்பனையாய்] முடிதலாலும், முதனூலோடு மாறுபடுதலாலும், பொருந்தாது.

"தாயொக்கு மன்பின்" என்றபடி பெற்றதாய் அன்பிற் சிறத்தலால் 'தாயினு மன்பு தாழ' என்றார். பொன்மேனியன் - பொன்போன்ற உடம்பையுடையவ னென்றுமாம்; "காஞ்சநாத்ரி கமநீய விக்ரஹம்" என்பதும் காண்க. பொன்மேனியனும், நெடிது ஆசி - மிக்கவாழ்த்துக்களால், புனைந்து - (அந்தச்சுரசையைப்) புகழ்ந்துகூறி, போனானெனக் கூறுவாருமுளர். 'மின் மேற்படர் மெய்யினதானவள்வீக்கநீங்கி,' 'இனிதாசிபுனைந்து' என்று சில பிரதிகளின் பாடம். (எ௨)

[அநுமானதுசெய்கையைக் கண்ட பலரும் பலவகையாகக் கொண்டாடுதல்.]

எ௩. கீதங்களிசைத்தனர்கின்னரர்கீதநின்ற
பேதங்களியம்பினர்பேதையராடல்பின்னர்ப்
பூதங்கடொடர்ந்துபுகழ்ந்தனபூசுரேசர்
வேதங்களியம்பினர்தென்றல்விருந்துசெய்த.

(இ - ள்.) கின்னரர் - கின்னரர்கள், கீதங்கள் இசைத்தனர் - பாடல்களைப் பாடினார்கள்; பேதையர் - (தேவ) மாதர்கள், கீதம் நின்ற பேதங்கள் - பாடல்களிலுள்ள பலவகைவிகற்பங்களை, ஆடல் - நர்த்தனங்களைச் செய்து கொண்டே, இயம்பினர் - பாடினார்கள்; பூதங்கள் - பலவகைப்பிராணிகளும், பின்னர் தொடர்ந்து - (அநுமானது) பின்புறத்திலேயே தொடர்ந்துபோய், புகழ்ந்தன - (அவனைப்) புகழலாயின; பூசுர ஈசர் - பிராமணச்சிரேஷ்டர்கள் [ருஷிகள்], வேதங்கள் - வேதங்களை, இயம்பினர் - (அநுமானுக்கு மங்களமுண்டாகுமாறு) கூறினார்கள்; தென்றல் - தென்றற்காற்று, விருந்து செய்த - புதுமையாக வீசிற்று; (எ - று.)

அநுமான் அவ்வாறு பிறர்க்கரியசெயலைச் செய்தது கண்டு பலரும் பலவகையாகத் தமது மகிழ்ச்சியைக் காட்டின ரென்க. கின்னரர் - எப்பொழுதும் ஆணும் பெண்ணுமாய் இரட்டைப்பட்டுநின்று கின்னர மென்னும் வாத்தியம் கைக்கொண்டு பாடித்திரிவதொரு தேவசாதியார்; குதிரைமுகமும் மனிதவுடம்பு முடையவர். அந்தணர்கள் வேதங்களில் ஸ்வஸ்திவாசகமென்ற பாகத்தைப் பாராயணஞ்செய்தன ரென்க. 'பூதங்கள் தொடர்ந்து புகழ்ந்தன' என்பதற்கு - பூதகணங்கள் பின்தொடர்ந்து புகழ்ந்தன வென்றும் கூறுவர்; அநுமான் பூதகணநாதனான சிவபிரானது அம்சமாதலால். ஆடல் இயம்பினர் - மூன்றாம்வேற்றுமைத்தொகை; ஆடலோடு இயம்பின ரென்க. பின்னர் - மற்றும் எனினுமாம். தொடர்ந்து - ஆடல்பாடல்செய்பவர்களுடன் கூடி யென்றலுமொன்று. தென்றல் விருந்துசெய்த - 'இப்படிப்பட்ட இனிய காற்றை யான் இதுவரையிலும் கண்டதில்லை' என்று அநுமான் கொண்டாடும்படி தென்றற்காற்று மெல்லவீசிற்று. செய்த - செய்தது என்பதன் தொகுத்தல். தென்றல் - தெற்கிலிருந்து வரும் காற்று; அத்திசைநோக்கிச் செல்லும் அநுமான்முகத்திற்படக் குளிர்ந்துவீசி இளைப்பு இன்றுமாறு இனிமை செய்தலையே, தென்றல் விருந்துசெய்ததாகக் குறித்தார்: ("ஸிஷேவேச ததா வாயுஃ ராமகார்யார்த்தஸித்தயே" என்றார் ஸ்ரீ வால்மீகிபகவானும்.) எம்பெருமானுக்கு அடிமைசெய்யலுற்றால் தங்தையும் உபசரிக்கத்தக்க மேன்மையுண்டாகுமென்பது இங்குப் போதரு மென்பர். பூமிக்குத் தேவர்கள் போல விளங்குதலால், அந்தணர், வடமொழியில் 'பூஸுரர்' எனப்படுவர்: "நிலத்தேவர்" என்றார் பெரியாரும். 'பேதங்களிசைத்தன பேதையராடன் மிக்க,' 'விருந்துசெய்ய' என்பனவும் பாடம். (எ௩)

[இதுவும், அடுத்தகவியும் - குளகம்; அநுமான் இங்ஙனஞ்செல்ல, அப்போது அங்கு அங்காரதாரை வருதல்.]

எச. மந்தாரமுந்துமகரந்தமணந்தவாடை
செந்தாமரைவாண்முகத்திற்செறிவேர்சிதைப்பத்
தந்தாமுலகத்திடைவிஞ்சையர்பாணிதள்ளுங்
கந்தாரவீணைக்களிசெஞ்செவிக்காதுநங்க.

(இ - ள்.) மந்தாரம் - மந்தாரமலர்களின் மணத்தை, உந்து - வீசுவதான, மகரந்தம் மணந்த - மகரந்தப்பொடிகளை யடித்துக்கொண்டுவருகின்ற, வாடை -

தென்றற்காற்றானது, செம் தாமரை வாள் முகத்தில் - செந்தாமரைமலர் போன்ற ஒளிபொருந்திய (தனது) முகத்திலே, செறி - மிகுதியாகத்தோன்றிய, வேர் - வேர்வைநீரை, சிதைப்ப - ஒழிக்கவும்,—விஞ்சையர் - வித்தியாதரர்கள், தம் தாம் உலகத்திடை - தங்கள்தங்களுலகத்திலே யிருந்துகொண்டு, பாணி தள்ளும் - கைவிரல்களினால் தடவிவாசிக்கின்ற, வீணை - வீணையினது, கந்தாரம் களி - காந்தாரமென்னும் இசைப்பாட்டாகிய மதுவை, செம் செவி காது - மிக்க அழகினையுடைய (தனது) காது, நுங்க - இனிதாகப் பருகிக் கொண்டிருக்கவும்,—(அநுமான் வானத்திற்செல்லுகையில்), (எ - று.)—'அங்காரதாரை எழுந்தாள்' என அடுத்தகவியோடு தொடர்ந்து முடியும். அன்றி, கீழ்ச்செய்யுளில்வந்த முற்றுக்களையெல்லாம் எச்சமாக்கி அவற்றையும், இச்செய்யுளிலுள்ள 'சிதைப்ப', 'நுங்க' என்ற எச்சங்களையும் எ௨ - ஆஞ்செய்யுளிற்போந்த 'போனான்' என்ற முற்றோடு கூட்டி யுரைத்தலும் தகும்.

அநுமான் வானத்தில்மிக்கஉயரத்திற்செல்லுகின்றானென்பதை விளக்க, 'மந்தாரமுந்து வாடை' என்றார்; பின்னிரண்டடிக்கும் இவ்வாறே கருத்துக் காண்க. ஆகவே, இச்செய்யுள் - தொடர்புயர்வுநவிற்சியணியாம். முதலடி, வாயுவுக்கு 'கந்தவஹன்' என்று ஒருபெயர் இருத்தலை நன்குவிளக்கும். மந்தாரமென்பது - தேவலோகத்திலுள்ள ஐந்துதருக்களி லொன்று; (மற்றவை - ஸந்தாநம், பாரிஜாதம், கல்பகம், ஹரிசந்தனம் என்பன.) இந்த மரத்தின் பெயர் அதிலுள்ள மலரைக் குறித்தலால், முதலாகுபெயராம். 'வாடை' என்றது - வடக்குநோக்கி வீசுவதென்ற காரணத்தால், தென்றலைக்குறித்தது; இவ்வாறு கொள்ளாவிடின், "தென்றல்விருந்துசெய்த" என்று கீழ்க்கவியிற்கூறியதனோடு முரணும். மகரந்தம் - பூந்துகள். கந்தாரம் - காந்தாரமென்னும் வடமொழியின் விகாரம். வேர் - வேர்வையென்பதன் விகாரம்; முதனிலைத்தொழிலாகுபெயரெனினுமாம். வேர்சிதைத்தல் - வேர்வையை யுலர்த்தி இளைப்பையாற்றுதல். கீழ்ச்செய்யுளில் 'தென்றல்விருந்துசெய்த' என்று தொகுத்துச்சுட்டியதன் வகுத்துக்காட்டே விதுவென்க. "வாதங் கால் வளி மருத்து வாடையே பவனங் காற்று" என்ற நிகண்டின்படி வாடையென்பது காற்றுக்குப் பொதுப்பெயராகவும் வழங்குதலால் 'மந்தாரம் உந்து மகரந்தம் மணந்தவாடை' என்பதற்கு - மந்தாரமலர்களினின்று சிந்துகின்ற தேனோடு சம்பந்தப்பட்டு அதன்மணம் வீசுகின்ற (தேவலோகத்திலிருந்து கீழ்நோக்கிய) காற்று என்று பொருள் கொள்ளுதலும் கூடும். தம்உலகத்திடை விஞ்சையர்தாம் பாணிதள்ளும் என இயைப்பினுமாம். 'பாணிதள்ளும்' என்பதற்கு - தாளக்கிரமத்தில் காலந்தள்ளிப்பாடுகின்ற என்றும் பொருள்கொள்ளலாம். 'பாணி' என்ற கையின்பெயர்- ஆகுபெயராய், கையினால்ஒத்தறுத்து இடப்படுவதாகிய தாளத்தைக் குறிக்கும். காந்தாரம் - ஓர்பண். களி - களிப்பைச்செய்வது எனக் காரணக்குறி. முதலடியிற் பிராசங் காண்க (இச்செய்யுளின் முதலடி - வடமொழியில் ஒற்றெழுத்து நீங்கலாகப் பதினான்கெழுத்துக்களையுடைய சக்வரீசந்தசில் 'வசந்ததிலகம்' என்னும் விருத்தத்தின் இலக்கணத்துக்கு ஒப்ப அமைந்திருத்தல், கருதத்தக்கது.) செவி=செவ்வி; தொகுத்தல். இனியதேவகானத்தைக் கேட்குமாறு பாக்கியம்பெற்ற காது என்றற்கு, 'செஞ்செவிக்காது' எனப்பட்டதென்

னலாம்; (அநுமான், சங்கீதத்திலும் பாண்டித்தியமுடையவன்.) இனி, ஒரு பொருட்பன்மொழியாக, 'செவிக்காது' என்றதாகவும் கொள்ளலாம்.

'மலர்ந்தவாடை', 'பாணிதாழ,' 'வீணைத்தொனி செஞ்செவிக்காதுநுங்க' என்பன - பாடபேதம்.

இச்செய்யுளுக்குப்பின்பு

"பரவுக்குரல் பணிலக்குரல் பணையின்குரல் பறையின்
விரவுக்குரல் சுருதிக்குரல் விண்ணோர்களும் விரவா
வரவக்குல முயிருட்கிட வசனிக்குர லடுபோ
ருரவுக்கரு டனுமுட்கிட வுடனுட்கின வுலகம்"

என்று ஒரு செய்யுள் சிலபிரதிகளிற் காணப்படுகின்றது. (எ௪)

## வேறு.

எ௫. வெங்கார்நிறப்புணரிவேறேயுமொன்றைப்
பொங்கார்கலிப்புனறரப்பொலிவதேபோ
லிங்கார்கடத்திரெனேயென்றுவெழுந்தா
ளங்காரதாரைபெரிதாலாலமன்னாள்.

(இ - ள்.) ஆலாலம் பெரிது அன்னாள் - ஆலகாலவிஷத்தை மிகவும்ஒத்தவளான, அங்காரதாரை - அங்காரதாரை யென்பவள்,—(அநுமான் தன்மீதாகச்செல்வதைக் கண்டு சினந்து),—வெம் கார் நிறம் புணரி - (பார்ப்பதற்கு) அச்சந்தருகின்ற கருநிறமான சமுத்திரம், வேறும் ஒன்று பொங்கு புனல் ஆர் கலியை தர - பொங்குகின்ற நீர்மயமான வேறொருசமுத்திரத்தைப் பெற்றுவிட, பொலிவதேபோல் - (பழையசமுத்திரத்தின்மேற் புதிய அச்சமுத்திரம்) விளங்குவதுபோல,—'இங்கு - இப்பொழுது, எனை - என்னை, ஆர் கடத்திர் - யார் கடந்துசெல்கின்றீர்?' என்று - என்றுசொல்லிக்கொண்டு, எழுந்தாள் - (அக்கடலினின்று) மேலோங்கி நின்றாள்; (எ - று.)

அநுமான் மீண்டுஞ் சென்றுகொண்டிருக்கையில், அங்காரதாரையென்ற கொடியராக்ஷஸி, கடலின்மீது மற்றொருகடல் விளங்குவது போலத் தோன்றுமாறு, 'இங்கு யாரடா வருபவன்?' என்று அநுமானை அதட்டிக்கொண்டே கடலின்மீது அவனது வழிக்குக் குறுக்கே தோன்றின ளென்பதாம். கடலினின்றுவெளியெழுந்த அவளுக்கு, அக்கடலினால் உண்டாக்கப்பட்டு எழுந்ததொரு கடல் உவமையாதல் ஏற்கும். தற்குறிப்பேற்றவணி. கருநிறத்திலும் அளக்கலாகாத அளவிலும் உவமை.

தனக்குநேரே வானத்திற்செல்லுகின்ற பிராணியின்நிழலைத் தான்பிடித்த மாத்திரத்தில் அந்தப்பிராணி பிடிக்கப்பட்டதாம்படியான பேராற்றலுடையவளும் அதனாற் சாயாக்கிரகிணியென்று பேர்பெற்றவளும் ஸிம்ஹிகையென்று பெயருடையவளுமாய்க் கடலில்வாழ்ந்துகொண்டிருந்த இவள், அநுமான் கடல்கடந்துசென்றுகொண்டிருந்த இச்சமயத்தில், அவ்வநுமானது பெரிய நிழலைக் கடலிலேகண்டு, நெடுநாளாகவுள்ள தன்பசியைத் தீர்க்கப் போதுமான இரை இன்று கிடைத்ததென்று மகிழ்ந்து, அந்நிழலைப் பிடித்துக்கொண்டு

அநுமானது செல்கையைத் தவிர்த்து, அவனைத் தட்டிக்கொண்டே கடலினின்று வெளிவந்தனளென்க. இவளுக்கு அங்காரதாரையென்றும் ஒருபெயருண்டென்பதை "அங்காரதாரை சூடர்மாலை சூடி" என வரும் உத்தரகாண்டத்தினாலும் உணரலாம். இவ்வடசொற்றொடர்மொழி - தணலின் கொழுந்துபோலக் கொடியவளெனப் பொருள்படும். இவள் இராவணனுக்குக் கடலரணிலே ஒருகாவலாயுள்ளவளென்றும், இவளிருக்கின்ற இடத்துக்குச் சுற்றும் ஒருகாதவழிதூரத்திற்குள் எந்தப்பிராணியும் செல்லவியலாதென்றும் கூறுவர். ஆலாலம் - ஹாலாஹலமென்ற வடமொழியின் விகாரம்: இது, பாற்கடல் கடைந்தகாலத்தில் தேவர்களெல்லாம் அஞ்சியோடும்படி மிகக்கொடியதாய் அக்கடலினின்றுதோன்றியதொரு விஷம். பயங்கரமாய்க் கடலினின்றுஎழுந்த இவ்வரக்கிக்கு, அங்ஙனங் கடலினின்று எழுந்த அந்தவிஷம் உவமை. பெரிது ஆலாலம் அன்னாள் - பெரிய ஆலாலவிடத்தை யொத்தவளெனினுமாம். பாற்கடலினின்றுதோன்றிய ஆலாலம் இவட்கு உவமைபோதாதென்றுகொண்டு, (அதனினும்) பெரியதோர் ஆலாலத்தைப் போன்றவளென்றுருமாம். 'பிறிதாலாலமன்னாள்' என்ற பாடத்துக்கு - (பாற்கடலில்தோன்றிய ஆலாலமன்றி) வேறேஉவர்க்கடலினின்றெழுந்ததோர் ஆலாலம் போன்றவளென்க. பொங்குகின்ற ஆர்கலியின்நீர் வேறேயுமொரு வெங்காரிருப்புணரியைத் தரவென்று பதவுரைகூறவும் தகும். 'ஆர் கடத்திர்' என்றவிடத்து, 'யார்' என்ற வினாப்பெயரின் மரூஉவான 'ஆர்' என்றது - முன்னிலைப்பன்மைக்கு வந்தது; "யாரென் வினாவினைக்குறிப் புயர்முப்பால்" என நன்னூலார் கூறியபடி 'யார்' என்பது உயர்திணைப்படர்க்கைக்குமாத்திரம் உரியதன்றோ வெனின்:— அஃறிணையிருபாற்கண்ணும் ஏனையிடத்தினும் இலக்கியங்களிற்பயிலுதலால், எல்லாவற்றிற்கும் உரியதென்க: ஆனதுபற்றியே, "வேறில்லை யுண்டி யாரவேண்டுந்தகும் படும், வினைபெயரெச்சம் வியங்கோள்பதத்துந், திணைபாலிடமெலாஞ் சேல்லுமென்ப" என்பாராயினர், இலக்கணக்கொத்துடையார். இங்ஙனம் கொள்ளாவிடின், முன்னிலையிற்படர்க்கைவந்த இடவழுவமைதியெனவேண்டும். போல் எழுந்தாள் என இயையும். இங்கு - இவ்விடத்தில் எனவும்படும். 'கடத்திரெனவெண்ணுவெழுந்தாள்' என்றும் பாடமுண்டு.

இதுமுதற் பத்துக்கவிகள் - முதற்சீரும் நான்காஞ்சீரும் மாச்சீர்களும், மற்றையிரண்டும் காய்ச்சீர்களுமாகிய அளவடிநான்கு கொண்ட கலிவிருத்தங்கள். முதல்மூன்றையும் காய்ச்சீராகவும் பிரிக்கலாம். (எரு)

[இதுவும், அடுத்த கவியும் - அங்காரதாரையின் வருணனை.]

எசுு. காதக்கடுங்குறிகணக்கிறுதிகண்ணாள்
பாதச்சிலம்பினொலிவேலையொலிபம்ப
வேதக்கொழுஞ்சுடரைநாடிநெறிமேனா
ளோதத்தின்மேவுமதுகைடவரையொத்தாள்.

(இ - ள்.) காதம் கடுங் குறி - காததூரத்திலே (இருக்கும்பொருளையும்) விரைந்து குறித்தறிகின்ற, கணக்கு இறுதி கண்ணாள் - (அளவிடுதற்குப்பார்த்தால்) கணக்கேமுடிதலையுடைய கண்களையுடையவளான அவ்வரக்கி,—பாதம்

சிலம்பின் ஒலி வேலை ஒலி பம்ப - (தன்) கால்களிலணிந்துள்ள சிலம்பென்னும் அணியினது சத்தமானது சமுத்திரகோஷத்தைப்போலஒலிக்க,—மேல் நாள்-முற்காலத்தில், வேதம்கொழுஞ்சுடரை - வேதத்திற் பிரதிபாதிக்கப்பட்டுள்ள பரஞ்சோதியாகிய திருமாலை (எதிர்த்தற்கு), நெறி நாடி-வழிதேடிக்கொண்டு, ஓதத்தில் மேவும் - பிரளயக்கடலிற் போன, மதுகைடவரை - மது கைடபன் என்ற அசுரர்களை, ஒத்தாள் - ஒத்துவிளங்கினான்; (எ - று.)

அநுமானது சாயையை நாடிக் கடலின்மீதுசென்ற அங்காரதாரை திருமாலைநாடிப் பிரளயசமுத்திரத்தின்மீதுசென்ற மதுகைடபர்களை யொத்தன ளென்பதாம்; உவமையணி. பெருவடிவத்துக்குஏற்ப நெடுங்கண்களைப் பெற்றுக் காததூரத்திலிருக்கும்பொருளையும் நோக்கவல்லவளென்பது, 'காதங்கடுங் குழி கணக்கிறுதிகண்ணாள்' என்றதன் கருத்து. கொழுஞ்சுடர் - பண்புத்தொகையன்மொழி. பெருவடிவத்துக்குத் தக்கவாறே பெருஞ்சிலம்பு அணிந்திருத்தலின், அதனினின்று தோன்றும் ஒலி கடலோசைபோல எங்கும்நிறைவதாயிற்றென்க. வேதம் - (நன்மைதீமைகளை) அறிவிப்பதெனக் காரணப் பொருள்படும்.

மதுகைடவர் ஓதத்தின்மேவிய கதை:—பிரமதேவனது தினப்பிரளயத்தில் இவ்வுலகமெல்லாம் பெருங்கடலினால் எங்கும் நீர்மயமாயிருந்தபொழுது, அவ்வெள்ளத்தில் திருமால் ஆதிசேஷனாகியசயனத்தில் அமர்ந்திருக்கையில், அத்திருமாலினிடத்தினின்று ரஜஸ்தமோகுணங்களின் வடிவமாய்த் தோன்றி 'எம்மை நீ கொலைபுரிக என்று தம்வாயாற்சொல்லியபின்னரே தம்மைப் பிறர் கொல்லலாகும்' என்று வரம்பெற்ற மதுகைடபரென்ற அசுரரிருவரும், அப்பிரளயநீரைக் குழப்பிக்கொண்டு பேராரவாரத்துடன் சென்று பிரமதேவனைக் கண்டு அவனிடத்தினின்று வேதங்களையெல்லாம் பறித்துக்கொண்டு அப்பிரளயவெள்ளத்தில் மறைந்தனராக, அப்போது தான் செய்யவேண்டுவது இன்னதெனத்தேறாது திகைப்புக்கொண்ட அப்பிதாமகக்கடவுள் பின்னர்ச் சிறிது தெளிந்து திருமாலைத்துதித்துத் தனக்குநேர்ந்த ஆபத்தை முறையிட, அக்கடவுள் ஹயக்கிரீவாவதாரம்செய்து அக்கடலிற்புக்கு இனியதோர் இசையைப் பாட, அவ்வினியகீதத்தைக்கேட்ட அவ்வசுரர்கள் அவ்வேதங்களை ஓரிடத்து வைத்திட்டு அவ்வொலிவந்த வழியைப் பிடித்துச் செல்லுமளவில், திருமால் அவ்வேதங்களுள்ளவிடத்திற்சென்று அதனைக்கொணர்ந்து பிரமனுக்கு அளித்தருள, அப்போது ஒருவரையுங்காணாதவராய் வேதங்களும் எடுத்துக்கொண்டு போகப்பட்டதையுணர்ந்த அவ்வசுரர்கள் மிகச்சினந்து அரவணையிலறிதுயிலமரும் பரம்பொருளைக் கிட்டிப் போர்செய்யத்தொடங்கவே, திருமாலுக்கும் அவ்வசுரர்க்கும் வெற்றிதோல்விகளின்றி நெடுங்காலம் பெரும்போர் நிகழ்ந்ததாக, முடிவில் திருமாலைநோக்கி அவர்கள் 'உனது ஆற்றலுக்கு உவந்தோம்; வேண்டும்வரம்பெற்றுக்கொள்' என்ன, அக்கடவுள் 'யான் உம்மைக்கொல்லவேணும்' என்று வரம்வேண்ட, அவர்களும் அதற்கு இணங்குகையில், திருமாலும் 'உங்கட்கு வேண்டும் வரங்கொண்மின்' என்ன, 'ஒருவரும் இறவாத இடத்தில் நாங்கள் இறக்கவேண்டும்' என்று அவர்கள் வேண்ட, திருமாலும் அங்ஙனமே

வரமளித்துத் தனது துடையைக்கொண்டு அவர்களை இறுக்கிக்கொன்றிட்டன னென்பதாம். இவ்வரலாறு சிறிதுவேறுபடக் கூறுதலு முண்டு.

“மதுகைடவரென்பவர் வானவர்தம், பதிகைகொடுகெட்டவர் பண்டொரு நா, ளதிகைதவ ராழியனந்தனையும், விதிகைம்மிக மூட்டிய வெம்மையினோர்,” “நீராழியிழிந்து நெடுந்தகையைத் தாராயமரென்றனர் தாமொருநாள், ஆராழிய வண்ணலு மஃதிசையா, வாராவமர்செய்கெனவந்தனனால்” என்றுதொடங்கி மேல் யுத்தகாண்டத்திற் கூறுவதும் காண்க.

‘காதக் கடுங் குறி கணக்கு இறுதி கண்ணாள்’ என்பதற்கு - காததூரம் பார்வைசெல்வனவும் (அக்காதமென்னும்) எல்லையையே தமக்கு அளவாக வுடையனவுமான பெருங்கண்களை யுடையவளென்றலு மொன்று. சிலம்புவது சிலம்பு என்று பாததண்டைக்குக் காரணக்குறி; சிலம்புதல் - ஒலித்தல். வேலை யொலி பம்ப - கடலொலியினும் மிகுதியாக ஆரவாரிக்க வெனினுமாம். “உருவகவுவமையில் திணைசினைமுதல்கள், பிறழ்தலும் பிறவும் பேணினர்கொள லே,” “மிகுதலுங் குறைதலுந் தாழ்தலு முயர்தலும், பான்மாறுபடுதலும் பாகுபாடுடைய” என்பவாதலால், ஓரரக்கிக்கு மதுகைடபரிருவரை உவமைகூறிய இதில் ஆண்பால்பெண்பால்களும் ஒருமைப்பால்பன்மைப்பால்களும் மாறுபடுதல் அமையும் இவ்வாறுவருமிடங்கட்கெல்லாம் இதுகொள்க. ‘ஓதத்தினோடு’ என்பதும் பாடம். (௭௬)

௭௭. துண்டப்பிறைத்துணையெனச்சுடரெயிற்றாள்
கண்டத்திடைக்கறையுடைக்கடவுள்கைம்மா
முண்டத்துரித்தவுரியாண்முளரிவந்தா
னண்டத்தினுக்குறையமைத்தபிலவாயாள்.

(இ - ள்.) (மற்றும், அவள்,— துண்டம் பிறை துணை என சுடர் எயிற்றாள் - குறைச்சந்திரனாகிய பிறை ஒப்பாமென விளங்குகின்ற கோரப்பற்களை யுடையவளும்,— கண்டத்திடை கறை உடை கடவுள் - கழுத்தில் விஷக் கறையையுடைய பரமசிவன் போல, கை மா முண்டத்து உரித்த உரியாள் - துதிக்கையையுடைய யானையினது உடலினின்று உரித்தெடுத்த தோலைப் போர்த்துக்கொண்டிருப்பவளும்,— முளரி வந்தான் அண்டத்தினுக்கு அமைத்த உறை பிலம் வாயாள் - (திருமாலினது நாபீ) கமலத்துத் தோன்றிய பிரமதேவன் படைத்த உலகவுருண்டைக்கு ஏற்படுத்திய உறைபோன்றுள்ள பெருந் துவாரமான வாயையுடையவளுமாயிருந்தாள்; (எ - று.)

துண்டப்பிறை—“துண்டவெண்பிறை” என்றார் பெரியாரும்: (முழுமதி யாயிராது) துண்டமாயிருக்கின்ற பிறையென்க; இருபெயரொட்டு. இனி, முதலடிக்கு - சந்திரகண்டமாகிய பிறை யிரண்டுபோல விளங்குகின்ற வக்கிர தந்தங்களை யுடையவளென்றும் பொருள்கொள்ளலாம். முளரிவந்தான் அண்டம் - பிரமாண்டம். அண்டத்தினுக்கு உறையமைத்த - அண்டகோளமுழுவதும் கொள்ளுமாறு ஓர் உறையமைத்தாற்போன்ற வென்க. பிரமனால் அமைக்கப்பட்ட வென்றலுமாம். சுடரெயிறு - வினைத்தொகை. முண்டம் - தலையற்ற

உடம்பு. 'மூண்டத்துரித்தவுடையாள்', 'உறையமைத்தனையவாயாள்' என்பன பாடாந்தரம். 'மா' என்ற பொதுப்பெயர், 'கை' என்ற அடைமொழியால், யானையை உணர்த்திற்று. அவளது வாய் உலகவுருண்டையும் கொள்ளுமாறு மிகப்பரந்து அகன்றுள்ள தென்பது, 'முளரிவந்தானண்டத்தினுக் குறைய மைத்த பிலவாயாள்' என்பதன் கருத்து: தொடர்புயர்வுநவிற்சியணி. முளரி - முள்ளாகிய அரையை யுடையதெனத் தாமரைக்குக் காரணப்பெயர்; அரி - தண்டின் சுற்றுப்புறம். பாற்கடல்கடைகையில் அதனினின்றுதோன்றிய ஆலகாலவிஷத்தை யுண்டதனாற் கறுத்த கழுத்தை யுடையவனாதலின், சிவபிரான் 'கண்டத்திடைக் கறையுடைக்கடவுள்' எனப்பட்டான்.

கண்டத்திடைக் கறையுடைக்கடவுள் கைம்மாவுரிதரித்த கதை:—ஒரு காலத்தில் பரமசிவன், தவச்செருக்கினால் தன்னைமதியாத தாருகவனத்து முனிவர்களது கருவத்தைப் பங்கஞ்செய்யவும் அவர்கள்மனைவிமார்களின் கற்புநிலையைப் பரிசோதிக்கவும் கருதித் தான் ஒருவிடவடிவங்கொண்டு அவரில்லந்தோறும் சென்று பிக்ஷாடனஞ்செய்து, தன்னைநோக்கிக் காதல்கொண்ட அம்முனிபத்தினியாது கற்புநிலையைக் கெடச்செய்ய, அதுகண்டு பொறுமற் கோபமூண்ட அம்முனிவர்கள் அபிசாரவோமமொன்று செய்து, மந்திரபலத்தால் அவ்வேள்வித்தீயினின்று எழுந்தநாகங்கள், பூதங்கள், மான், புலி, யானை, முயலகன், வெண்டலை முதலியவற்றையும், அவ்வோமத்தீயையும் சிவனைக்கொன்றுவிடும்படி ஏவ, சிவபெருமான், தன்மேற்சீறிவந்த நாகங்களை ஆபரணங்களாகவும், பூதங்களைத் தனதுகணங்களாகவும் கொண்டு, மானை இடக்கையிலேந்தி, புலியைத் தோலையுரித்து உடுத்து, யானையைத் தோலையுரித்துப் போர்த்து, முயலகனை முதுகிற்காலாலூன்றி, வெண்டலையைக் கையிற்பற்றிச் சடைமேலணிந்து, நெருப்பை ஒருகையிலேந்தி, இங்ஙனமே அவற்றையெல்லாம் வலியடக்கிப் பயனிலவாகச்செய்துவிட்டனன் என்பதாம்.

[அநுமான் அரக்கியின்வரவை உணர்தல்.]

௭௮. நின்றாணிமிர்ந்தலைநெடுங்கடலினீர்தன்
வன்றாளலம்பமுடிவான்முகடுவவ்வ
வன்றாய்திறத்தவனறத்தையருளோடுந்
தின்றாளொருத்தியிவளென்பதுதெரிந்தான்.

(இ - ள்) (இவ்வாறு கடுந்தோற்றத்தையுடைய அங்காரதாரை),—அலைநெடுங் கடலின் நீர் தன் வல் தாள் அலம்ப - அலைகளையுடைய நீண்ட கடல் நீரானது தனது வலியகால்களைக் கழுவவும், முடி வான் முகடு வவ்வ-(தனது) தலையானது ஆகாயத்தினுச்சியில் முட்டவும், நிமிர்ந்து நின்றாள் - உயர்ந்து நின்றாள்; அன்று - அப்போது,—ஆய் திறத்தவன் - ஆராயுந்திறமுள்ளவனான அவ்வநுமான்,—'இவள்—, அறத்தை அருளோடும் தின்றாள் ஒருத்தி - அறத்தையும் அருளையும் அடியோடுவிழுங்கிவிட்ட ஒருத்தியாவள்,' என்பது-என்ற தன்மையை, தெரிந்தான் - தெரிந்துகொண்டான்; (எ - று.)"

அகாதமான சமுத்திரமும் குளப்படிநீர்போலுமாறும், தனது உச்சி வானத்தில் முட்டுமாறும் மிகப்பெருவடிவங்கொண்டு நின்றன ளென்பது, முன்

னிரண்டடிகளின்கருத்து. கீழ்க்கூறியவாறு தனதுசாயையைப்பிடித்துக் கடலினின்று வெளியேறிப் பேருருவங்கொண்டு நின்றவள் ஓர் அரக்கியாவளென அநுமான் உணர்ந்தனனென்க. 'அறத்தை அருளோடும் தின்றாள்'—அறத்தைத் தின்றவள் - தருமகாரியத்தைக் கெடுத்தவள்; அருளைத் தின்றவள் - இரக்கமற்றவள்: இஃது - உடனவிநிச்சியணி. அறத்தை யருளோடுந் தின்றாள்—தின்னப்படாதவற்றைத் தின்னப்படுவனபோலக் கூறிய மரபுவழுவமைதி. "அறனும், அருளுடையான் கண்ணதே யாகும்" என்றபடி அறஞ்செய்தற்கு அருள் மூலகாரணமாதலால், அறத்தை அடியோடு தின்றவளென்றவாறுமாம்; 'மரத்தை வேரோடும் பெயர்த்தான்' என்றாற்போல. 'நின்றாளெடுங் கடனிறைந்தநெடுநீர்' என்பது - பாடபேதம். (எஅ)

அவளைக் கொல்லுமாறு கருதி, அநுமான் ஒன்று கூறத் தொடங்குதல்.]

எகூ. பேழ்வாயகத்தலதுபேருலகமூடு
நீள்வானகத்தினிடையேகுநெறிநேரா
வாழ்வானணுக்கனவளாழ்பிலவயிற்றைப்
போழ்வானினைத்தினையவாய்மொழிபுகன்றான்.

(இ - ள்.) பேழ் வாயகத்து அலது - (அவ்வரக்கியினது) திறந்த வாயினுட் சென்றாலன்றி, பேர் உலகம் மூடும் நீள் வானகத்தினிடை - பெரிய பூமியைக் கவிந்துள்ள நீண்ட ஆகாயத்தினிடத்திலே, ஏகும் - (தான்) செல்வதற்கு உரிய, நெறி - வழியை, நேரா - காணாமல்,—(அநுமான்), ஆழ்வான் - (முதலில் துன்பத்தில்) முழுகியவனாய்,—(பின்பு தேறி),—அவள் ஆழ் பிலம் வயிற்றை போழ்வான் நினைத்து - (வாய்வழியாகப்புகுந்து) அவளது ஆழ்ந்த குகைபோன்றுள்ள வயிற்றைப் பிளக்குமாறு கருதி, அணுக்கன் - (அவளை) நெருங்கியவனாகி, இனைய வாய் மொழி புகன்றான் - இவ்வாறான வாய்வார்த்தையைக் கூறுபவனானான்; (எ - று.)—அதனை, அடுத்தகவியிற் காண்க.

வேறே செல்லும்வழியில்லாமையைக்கண்டு அநுமான் முதலில் மிகவருந்திப் பின்பு தெளிந்து அவளைக்கொல்லுமாறு கருதி ஒன்றுகூறினனென்க. அவ்வரக்கி மண்ணையும் விண்ணையும் வியாபித்து வாயைத் திறந்துகொண்டு நின்றதனால், 'பேழ்வாயகத்தலது பேருலகமூடும் நீள்வானகத்தினிடை யேகுநெறிநேரா' என்றார். நேரா = நேராமல்: ஈறுகெட்ட எதிர்மறைவினையெச்சம். அணுக்கன் - 'அணுகு' என்ற முதனிலைத்தொழிற்பெயரினடியாப்பிறந்த முற்றெச்சம்; அணுகுதலுடையவனாயென்க. இதனை 'நினைத்து' என்பதனோடு இயைத்து, அவள்வாயினுட்சேர்ந்தவனாய் அவள்வயிற்றைப் போழக் கருதியென்றலுமாம். கடல்மேற்செல்லுகின்ற தனது சாயையைக் கண்டு அந்நிழலைப்பிடித்து இழுக்க அநுமான் அவளை நெருங்கினனென்பார் 'அணுக்கன்' எனக் கூறினாரெனக் கொள்ளவுமாம். வாழ்வான் என்று எடுத்தும் உரைக்கலாம்; சிரஞ்சீவியாய்வாழ்பவனென்க. இரண்டாமடி - இனவெதுகை. 'அணுக்கன்' என்ற பாடத்துக்கு - வருத்தமுற்றவனென்பதுபொருள். 'வாய்மொழி' என்றவிடத்து, 'வாய்' என்றது - இனமில்லாத அடைமொழி: இயற்கைபற்றியது.

(எகூ)

[அநுமானது வார்த்தை.]

௮௦. சாயாவரந்தழுவினாய்தழியபின்னு
மோயாதுவந்தவிசைகண்டுணரகில்லாய்
வாயாலளந்துநெடுவான்வழியடைத்தாய்
நீயாரையென்னையிவணின்றநிலையென்றான்.

(இ - ள்.) 'சாயா வரம் தழுவினாய் - சாயையைப் பிடித்து இழுக்கும் வரத்தை யுடையாள்போலத் தோன்றுகின்றாய்; (நீ), தழிய பின்னும் - (என்னைப்) பிடித்திழுக்கவும், ஓயாது - சிறிதும் ஓய்வில்லாமல், வந்த - (யான்) செல்லுகின்ற, விசை - (எனது) வேகத்தை, கண்டு - பார்த்தும், உணரகில்லாய் - (எனதுபலத்தை) அறியும் வல்லமை யற்றிருக்கின்றாய்; வாயால் நெடு வான் அளந்து - வாயினால் நீண்ட ஆகாயத்தை யளாவிக்கொண்டு, வழி அடைத்தாய் - போகும்வழியை அடைத்துக்கொண்டு நிற்கின்றாய்; நீ யாரை - நீ யார்? இவண் நின்ற நிலை என்னை - (நீ) இங்கு நிற்கின்ற நிலை என்னகாரணம்பற்றியது?' என்றான் - என்று வினவினன், (அநுமான்); (எ - று.)

தனதுசாயையைப் பற்றி யிழுத்ததனால், அநுமான், அவளை 'சாயாவரந் தழுவினாய்' என்றான். 'நீ என்னைப்பற்றியிழுக்கவும் நான் சிறிதுஞ்சலியாது செல்வதனைக் கண்டும் என்னை நீ வெல்லலாமென்று எண்ணி எனது வழியைத் தடுக்கின்றனையே! இது என்ன பேதைமை?' என அநுமான் அவளை யிகழ்ந்து, பின்பு அவள்வரலாற்றை வினவின னென்பதாம். வானை வாயா லளத்தலாவது - ஆகாயத்தினளவாக வாயைத் திறந்துகொண்டிருத்தல். இனி, வாயா லளந்து - வாயினால் வீண்வார்த்தைகளைப்பேசி யென்றுமாம்: 'அளத்தல்' என்பது 'வீண்பேச்சுப்பேசுதல்' என்ற பொருளிலே வழங்குதல் காண்க. யாரை, ஐ - சாரியை. சாயாவரம் - அழியாத வரம்எனினுமாம். முன்னினபொருளில், வடமொழித்தொடர். தழிய - தழுவிய என்பதன் விகாரம்; "தமிழ்தழியசாயலவர்" எனச் சீவகசிந்தாமணியிலும் காண்க. நெடுவான்வழி வாயால் அளந்து அடைத்தாய் என்றலுமாம். (௮௦)

[அங்காரதாரையின் மறுமொழி.]

௮௧. பெண்பாலெனக்கருதுபெற்றியொழியுற்றால்
விண்பாலவர்க்குமுயிர்வீடுறுதன்மெய்யே
கண்பாலடுத்தவுயிர்காலன்வருமேனு
முண்பானருத்தியதேதாழிப்பரியதென்றாள்.

(இ - ள்.) (அதற்கு அவள் அநுமானைநோக்கி), '(நீ), பெண்பால் என கருது பெற்றி - (என்னை) பெண்ணென்றுநினைக்கின்ற நினைவை, ஒழி - விட்டிடு; உற்றால் - (எனது அருகில்) வந்திட்டால், விண்பாலவர்க்கும் - விண்ணுலகத்தவரான தேவர்கட்கும், உயிர் வீடுறுதல் - உயிரொழிதல், மெய்யே - தவறாது; காலன் வருமேனும் - யமனே (விடுவித்தற்கு) வருவனானாலும், கண் பால் அடுத்த உயிர் - (எனது) கண்ணெதிரில் அகப்பட்ட பிராணிகளை, உண்பான் - உண்ணும்படி (யான்கொள்ளுகின்ற), அருத்திஅது - (எனது) ஆசை

யை, ஒழிப்பு - போக்குவது, அரியது - அருமையானது,' என்றாள் - என்று (தன்நிலைமையைக்) கூறினாள்; (எ - று.)

நீ என்னைப் பெண்ணென்று அவமதிக்கவேண்டா; என்னையெதிர்த்தவர்கள் தேவர்களேயானாலும் இறந்தேவிடுவார்கள்; கொல்லுதற்கடவுளாகிய யமனேயானாலும் என்கைப்பட்டவுயிரை விடுவிக்க இயலாது என்று அவ்வரக்கி தன்நிலைமையைத் தெரிவித்தனளென்க. தான் பெண்ணாயிருந்தும் 'பெண்பாலெனக்கருதுபெற்றியொழி' என்றுகூறுகின்ற மறை - சாதாரண அபலையாயுள்ள ஒருபெண்ணன்று, வீரர்களையெல்லாம் எதிர்த்துஅழிக்கும் போராற்றல் வாய்ந்தவள் யான் என்ற பொருளைத் தரும். பின்னிரண்டடிகட்கு - 'கண்பாலடுத்தஉயிர் காலனுகவேயிருந்தாலும் அவனையும் கொன்றுதின்பேன்' என்றும் பொருள்கூறுதலுமாம். இனி, முதலடிக்கு - (என்னைப்) பெண்ணென்று நினைக்கிற தன்மையொழிந்து எதிர்த்தாலென்று உரைப்பாருமுளர்.

இனி, இச்செய்யுளில், அரக்கிக்கு அநுமானால் இனி நேரப்போகின்ற அழிவுக்கு ஏற்ப ஓர் அவலப்பொருளும் தோன்றும்; அது வருமாறு,—இப்போது என்னைக்கொண்டுபோக யமன் வந்திருந்தும், (பசிஅதிகமாயிருத்தலால்) என்கண்ணெதிரில் அகப்பட்ட உன்னை உண்ணவேணுமென்கிற ஆசைமாத்திரம் நீக்கமுடியாமலிருக்கின்றது; (ஆதலால், நான் உன்னைப்பற்றினேன்; ஆயினும்,) நீ என்னைப்'பெண்ணென்று விட்டிடாதே; அன்றியும், அழிவுகாலம் நேர்ந்தால், தேவர்கட்கும் உயிரொழிதல் நிச்சயம்; [யான் தெய்வபிறப்பினளாயினும் இப்போது அழிவுகாலம் குறுகிவிட்டதனால் இறப்பேன்] என்பதாம். (அக)

[அநுமான் அவள்வாயினுட்புகுந்து அவளதுஉடலைப் பீறிக்கொண்டு புறப்படுதல்.]

அஉ. திறந்தாளெயிற்றையவளண்ணலிடைசென்று
னறந்தானரற்றியதயர்த்தமரரெய்த்தா
ரிறந்தானெனக்கொடோரிமைப்பதனின்முன்னம்
பிறந்தானெனப்பெரியகோளரிபெயர்ந்தான்.

(இ - ள்.) அவள் - இவ்வாறுகூறிய அவ்வங்காரதாரை, (உடனே அநுமனைவிழுங்குமாறு), எயிற்றை - கோரப்பற்களையுடைய வாயை, திறந்தாள் - மிகப்பெரிதாகத் திறந்துகொண்டுநின்றாள்; அண்ணல் - பெருமையிற்சிறந்தவனான அநுமான், இடை சென்றான் - (அவளது)வாயில் நுழைந்து வயிற்றினுட்பிரவேசித்தான்; (அப்போது), இறந்தான் என கொடு - (அநுமான்) இறந்துவிட்டனனென்றுஎண்ணி, அறம்தான் - தருமதேவதையும், அரற்றியது - புலம்புவதாயிற்று; அமரர் - தேவர்களும், அயர்த்து எய்த்தார் - வருந்தியிளைத்தார்கள்; ஓர் இமைப்புஅதனின் முன்னம் - ஒருமாத்திரைப்பொழுதிற்குள், பெரிய கோள் அரி பிறந்தான் என - (தூணினின்று) மிக்கபெருந்தோற்றத்தையுடையனும் வலிமையையுடைய நரசிங்கமூர்த்தி தோன்றியதுபோல, பெயர்ந்தான் - (அவளது வயிற்றைப் பீறிக்கொண்டு) வெளிப்பட்டுவந்தனன், (அநுமான்); (எ - று.)

நரசிங்கமூர்த்தியாகிய திருமால் தூணைப்பிளந்துகொண்டு வெளிப்பட்டதுபோல, அவள்வாயினுட்புக்க அநுமானும் அவளதுவயிற்றைக் கூரிய கைந்நகங்களினாற் பிளந்துகொண்டு வெளிப்பட்டுவந்தனனென்பதாம்; உவமையணி. (போஜமஹாராஜனும் சம்பூராமாயணத்தில் இச்செய்தியைச் சொல்லுமிடத்து "ரதுநாததூதः சிச்சேத........நகைரः........ந்ருஸிம்ஹாம்ஹஃ பதி ஸிம்ஹிகாங்கம்" என்று கூறியுள்ளான்.) நரசிங்கமூர்த்தியை "கோளரி" என்றார் திருமங்கையாழ்வாரும். இனி, ஈற்றடிக்கு—பெரிய - பெருந்தோற்றத்தையுடைய, கோள் - மிடுக்கைக்கொண்ட, அரி - சிங்கம் போன்றவனான [அல்லது வாநரமாகிய] அநுமான், பிறந்தான்என - (புதியனாய்ப்) பிறந்தானென்று சொல்லும்படி, பெயர்ந்தான் - (அவளது வயிற்றினின்று) வெளிப்பட்டுவந்தா னெனக் கூறலுமாம். பெரியஆபத்தினின்று அரிதில்தப்பிவந்தால் மீளவும்பிறந்ததாகக் கூறுதல் உலகவழக்கு. அநுமனை லேயே தமதுதொழில் நிறைவேறுமென்று நம்பியிருந்த அறக்கடவுளும் தேவர்களும், அநுமான் அரக்கியின் வயிற்றினுட் புக்கதைக் காணவே, அழுங்கினரென்க. இமைப்பு - கண்ணிமைத்தல்: இங்கு, இயல்பில் ஒருகால் கண்ணிமைக்குங்காலத்திற்கு இலக்கணை. எயிறு - வாய்க்கு இலக்கணை. (அஉ)

[இதுவும், அடுத்தகவியும் - அவள்குடலைக் கைக்கொண்டு விளங்கிய அநுமனது தோற்றத்தை வருணிப்பன.

அரு. கள்வாயரக்கிகதறக்குடர்கணத்திற்
கொள்வார்தடக்கையின்விசும்பைமிசைகொண்டான்
முள்வாழ்பொருப்பின்முழைபெய்திமிகநொய்தி
னுள்வாளரக்கொடெழுதிண்கலுழனொத்தான்.

(இ - ள்.) கள் வாய் அரக்கி கதற - கள்பெருகிவழிகின்ற வாயையுடைய அந்தராக்ஷி கதறும்படியாக, கணத்தின் - ஒருநொடிப்பொழுதிலே, குடர்கொள் - (அவளது) குடலை (வயிற்றினின்று) பிடுங்கிக்கொண்ட, வார் தடகையின் - நீண்ட பெரிய கைகளோடு, விசும்பை மிசை கொண்டான் - ஆகாயத்தின்மீது தோன்றியவனான அவ்வநுமான்,—முள் வாழ் பொருப்பின் முழை எய்தி - முட்செடிகள் பொருந்தியுள்ள மலையினது குகைக்குட் புக்கு, உள் வாள் அர கொடு மிக நொய்தின் எழு - அக்குகையினுள்ளே கிடக்குங் கொடியபாம்புகளை எடுத்துக்கொண்டு அதிவிரைவாக மேலெழுகின்ற, திண் கலுழன் - வலிய கருடனை, ஒத்தான் - ஒத்துவிளங்கினான்; (எ - று.)

அவ்வரக்கியினது வாயிற் புக்கு அவளது குடல்களைப் பிடுங்கிக்கொண்டு அநுமான் மேலெழுந்தது, மலைக்குகையினுள் நுழைந்து அங்குவாழ்கின்ற பாம்புகளைத் தூக்கிக்கொண்டு கருடன் மேலெழுந்ததை யொத்திருந்த தென்பதாம். முள் - கூரிய கோரப்பற்களுக்கும், பொருப்பு - அவளது உடம்புக்கும், முழை - அவளது வாய்க்கும், பாம்பு - அவளது குடலுக்கும், கருடன் - அநுமானுக்கும் உவமை யெனக் காண்க. பெரியதிருவடியைச் சிறியதிருவடிக்கு உவமைகூறியிருப்பதை இந்நூலில் முன்னும் பின்னும் பலஇடங்களிற் காணலாம். விசும்பை = விசும்பினது: உருபுமயக்கம். அர = அரா. (அரு)

௮௪. சாகாவரத்தலைவரிற்றிலகமன்னா
னேகாவரக்கிகுடர்கொண்டுடனெழுந்தான்
மாகாலசைப்பவடமண்ணினுறவானோ
டாகாயமுற்றகதலிக்குவமையானான்.

(இ - ள்.) சாகா வரம் தலைவரில் திலகம் அன்னான் - நெடுநாள் சாகாத வரத்தைப் பெற்ற தலைவர்களில் [சிரஞ்சீவிகளில்] திலகம்போலச் சிறந்து தோன்றுபவனான அநுமான்,— ஏகா - (முற்கூறியவாறு அவளது வாயினுட்) புக்கு, அரக்கி குடர் கொண்டு - அவ்வரக்கியினது (வயிற்றைப் பீறிக்) குடலைப் பிடுங்கிக்கொண்டு, உடன் - உடனே, எழுந்தான் - உயரவெழுந்தவனாய்,— மா கால் அசைப்ப - பெருங்காற்று வீசியதனால், வடம் மண்ணின் உற - கயிறு பூமியிலிருந்து ஆகாயத்திலே பொருந்த, வானோடு ஆகாயம் உற்ற - வாலுடனே ஆகாயத்திற் பறத்தலைப்பொருந்திய, கதலிக்கு - காற்றாடிக்கு, உவமை ஆனான் - ஒப்பாகத் தோன்றினான்; (எ - று.)

கையினாற் கயிற்றைப்பிடித்துக்கொண்டு வால்கட்டியகாற்றாடியைத் தக்ககாற்று வீசும்போது வானில்விடுதல், இயற்கை. அங்காரதாரையின் வயிற்றைப் பீறிக்கொண்டு அவளது குடல் பூமியில்தொங்குமாறு வானத்தில் வாலுடனே அநுமான் மேலெழுந்தது, வால்கட்டியதொரு காற்றாடி விடப்படுவதை யொத்திருந்த தென்க. அநுமானுக்குக் காற்றாடிப்படமும், அவனது வாலுக்குக் காற்றாடியின்வாலும், தொங்குகின்றகுடலுக்குக் காற்றாடிச்சூத்திரமும், அக்குடலோடு தொடர்புபட்டுக் கீழ்வீழ்ந்துகிடக்கின்ற அங்காரதாரைக்குச் சூத்திரத்தைக் கையிற்கொண்டு அக்காற்றாடியை விடுபவனும் நிகரா மெனக் காண்க. திலகம் நெற்றிக்கு அழகுசெய்வதுபோலச் சிரஞ்சீவிகட்குச் சிறப்பைவிளைப்பவன் அநுமனென்க. ஒன்றன்பின்ஒன்றாக அடுத்தடுத்து மேன்மேல் ஆபத்துநேர்கையிலும் அவற்றிற்கெல்லாம் தப்பிப்பிழைத்தலால், அநுமான் சிரஞ்சீவிகளெழுவருள்ளும் சிறப்ப னென்க. 'சாகாம்ருகத்தலைவரில்' என்று பாடங்கொண்டால், குரக்குத்தலைவர்க்குள் என்று பொருளாம். சாகாம்ருகம் - மரக்கிளைகளிற் சஞ்சரிக்கும் மிருகம்: குரங்கு. மூன்றாமடிக்கு - கொடுங்காற்று வீசியதனால் அறுபட்டுக் கயிற்றுருண்டை பூமியில்விழுந்துகிடக்க என்றும் கொள்ளலாம்; இப்பொருளில், அவளது குடலுக்கு அறுபட்ட கயிற்றின்மிச்சமும், கீழ்விழுந்துகிடக்கும் அவளது உடலுக்குக் கயிற்றுருண்டையும் உவமையாம். காற்றாடி விடுபவர்கள் நூலுருண்டையிலிருந்து சிறிதுசிறிதாக நூலை வாங்கிவிடும் இயல்பு, கருதத்தக்கது. அநுமான்கைக்கொண்டகுடல் காற்றாடியின்முன்புறத்தில் கட்டும்வாலுக்கும், அநுமனது பூமியளவுந்தொங்கும்வால் மண்ணிலிருந்து விண்ணளவுந்தொடர்ச்சிப்படும் காற்றாடிக்கயிற்றுக்கும் ஒப்புமையென்பது பட உரைக்கவுந் தகும்.

வேறு.

[அதுகண்டு அசுரர்கள் வருந்த, விண்ணவர்முதலியோர் மகிழ்தல்.]

௮௫. ஆர்த்தனர்கள்வானவர்கடானவரழுங்கா
வேர்த்தனர்விரிஞ்சனும்வியந்துமலர்வெள்ளந்

தூர்த்தனனகன் கயிலையிற்றொலைவிலோனும்
பார்த்தனன்முனித்தலைவராசிகள்பகர்ந்தார்.

(இ - ள்.) (அநுமானது அச்செயலைக் கண்டு),—தானவர் - அசுரர்கள், அழுங்கா - மனம்வருந்தி, வேர்த்தனர் - (உடம்பு) வேர்த்தார்கள்; வானவர்கள் - தேவர்கள், ஆர்த்தனர்கள் - (மகிழ்ச்சியால்) ஆரவாரித்தார்கள்; விரிஞ்சனும் - பிரமதேவனும், வியந்து - கொண்டாடி, மலர் வெள்ளம் தூர்த்தனன் - பூமாரிபெய்து (கடலைத்) தூரும்படி செய்தான்; அகல் கயிலையில் தொலைவு இலோனும் - அகன்ற கைலாசகிரியில் வாழ்கின்ற அழிவில்லாதவனான சிவபிரானும், பார்த்தனன் - (ஆச்சரியத்தோடு) பார்த்தான்; முனி தலைவர் - ருஷிச்சிரேஷ்டர்கள், ஆசிகள் பகர்ந்தார் - வாழ்த்துக்கூறினார்கள்; (எ - று.)

தம்தம்தகுதிக்கு ஏற்ப அநுமானதுசெயலை அவரவர்கள் பாராட்டினரென்க. பிறர்க்குத் தீமைசெய்து தருமத்திற்குப் பகையாயிருக்குந்தன்மையில் அசுரரும் அரக்கரோடு ஒப்பாவராதலால், அநுமான் பிழைத்துவந்ததைக் காணவே, அவரும் மனமழுங்கி வேர்ப்பாராயினர். உடல்வேர்த்தல் - சோகத்தின் மெய்ப்பாடு. 'மலர் வெள்ளம் தூர்த்தனன்' என்றது, அதிசயோக்தி: இனி, இத்தொடர்க்கு - புஷ்பவர்ஷத்தை நிரம்பச்சொரிந்தான் என்றும் பதவுரைகூறலாம். 'தொலைவு இலோன்' என்றது - அழித்தற்றொழிற்கு இடமானவனென்றும் பொருள்படும்: சங்காரக்கடவுளென்றபடி; தொலைவிலோன் என்று பிரித்தால், (பகைவர்களை) அழிக்கின்ற வில்லையுடையவனென்று பொருளாம். 'வியந்து' என்றதை, 'பார்த்தனன்' என்பதனோடும் கூட்டுக. பார்த்தனன் - (தனது அம்சமான அவ்வநுமானது வீரச்செயலை) மகிழ்ச்சியோடு கண்குளிர நோக்கினனெனினுமாம்.

இக்கவி - நான்காஞ்சீரொன்று தேமாச்சீரும், மற்றைமூன்றும் கூவிளங்காய்ச்சீர்களுமாகிய அளவடி நான்குகொண்ட கலிவிருத்தம்.

இனி, 'ஆர்த்தார்', 'வேர்த்தார்,' 'தூர்த்தான்,' 'பார்த்தான்' என்று ஏட்டுப்பிரதிகளில் பாடம் காணப்படுகின்றது; அங்ஙனங்கொள்ளுமிடத்து, வேறுவகைக்கலிவிருத்தமாகாமல் ௭௫ - ஆங் கவிபோன்ற கலிவிருத்தமேயாமென உணர்க.

(௮௫)

## வேறு.

[சூரியனும் அச்செயலைக்கண்டு வியக்க, அநுமான் மீண்டும் எழுதல்.]

௮௬. மாண்டாளரக்கியவள்வாய்வயிறுகாறுங்
கீண்டானிமைப்பினிடைமேருகிரிகிழா
நீண்டான்வபக்கதிநிலைப்பினெடிதென்னப்
பூண்டானருக்கனுயர்வானின்வழிபோனான்.

(இ - ள்.) அவள் - அவ்வரக்கியினது, வாய் வயிறு காறும் - வாய் தொடங்கி வயிறுவரையிலும், கீண்டான் - (அவ்வநுமான்) பிளந்திட்டான்; (அதனால்), அரக்கி - (அங்காரதாரையென்னும்) அவ்விராக்ஷசி, மாண்டாள் - இறந்தொழிந்தாள்; (இதுநிற்க): (பின்பு அவ்வநுமானும்), உய்ட வானின்

வழி - உயர்ந்துள்ள ஆகாயமார்க்கமாகவே, போனான்—; (அப்போது), அருக்கன் - சூரியன், 'இமைப்பினிடை மேருகிரி கீழ் ஆ நீண்டான் - ஒருகணப்பொழுதிற்குள் (அங்காரதாரையின் வாயிற் புக்கு வயிற்றைப் பீறிக்கொண்டு வெளிவந்து)மேருவும்(தனது உயர்ச்சிக்குமுன்னே)தாழ்ந்ததாகுமாறு உயர்ந்து தோன்றியவனான இவ்வநுமானுடைய, வயம் கதி - வெற்றிபொருந்திய வேகமானது, நினைப்பின் நெடிது - மனோவேகத்தினும் மிக்கதாம்,' என்னா - என்று, பூண்டான் - சிறப்பாகக்கொண்டான்; (எ - று.)

அவ்வரக்கியைக்கொன்றபின்பு, அநுமான், மிக்கவேகத்தையுடைய சூரியனும் 'இவனதுவேகம் மனோவேகத்தினும் மிக்கது' என்று தன்னைக்கொண்டாடும்படி விரைந்துபோகலுற்றனனென்க. அரக்கியின்குடரைக்கொண்டு வானின்மிசைத் தோன்றியதைக் கூறிய கவி 'நீண்டான்' என்று இங்குக் கூறியது, நீண்டவகையை விவரித்தற்காகவும், நீண்டதனால் அவளிறந்தாளென்பதைத் தெரிவித்தற்காகவும் வந்த அநுவாதமாம்; கூறியதுகூறலன்று. 'மேருகிரி கீழா நீண்டான்' என்றது - ஒன்றன்குணத்தினால் மற்றொன்றற்குத் தாழ்வுநேர்வதாகக் கூறிய அகமலர்ச்சியணி; இது, வடமொழியில் உல்லாஸாலங்கார மெனப்படும்: இங்கு, அநுமானதுஉயர்வினால் மேருவுக்குத் தாழ்வு நிகழ்ந்ததாகக் கூறியமை காண்க. பூணுதல் - புனைந்துரைத்தல், அலங்கரித்துப்பேசுதல், வருணித்தல். சூரியன் தனதுமாணாக்கனான அநுமானது திறத்தைத் தனக்கோராபரணமாகக்கொண்டா னென்பது தோன்ற 'பூண்டான்' என்றன ரென உரைப்பாருமுளர்.

இனி, இச்செய்யுட்கு வேறொருவகையாகவும் பதவுரைகூறலாம்:— அது வருமாறு:—அரக்கி மாண்டாள் - அங்காரதாரை இறந்தவளாகும்படி, அவள் வயிறு வாய்காறும் கீண்டான் - அவளதுவயிற்றை வாய்வரையிலும் கிழித்து மேலெழுந்தவனான அநுமான், இமைப்பினிடை - ஓரிமைப்பொழுதினுள்ளே, மேருகிரி கீழ்ஆ நீண்டான் - மிகவுமுயர்ந்ததான மகாமேருகிரியும் கீழாகுமாறு உயர்ந்து, வய கதி - வலியவேகத்தை, நினைப்பின் நெடிது என்னா பூண்டான் - மனோவேகத்திலும் அதிகமாயிருக்குமாறு கொண்டு, அருக்கன் உயர் வானின் வழி போனான் - சூரியன்செல்லுகின்ற உயர்ந்த ஆகாயமார்க்கத்திலே சென்றான் [வானத்திற் சூரியன்செல்லும்வீதியினளவுஉயரத்திலே சென்றான்] எனக் காண்க. 'நெடிதென்னப்பூண்டான்' என்பதும் பாடம்.

இதுவும், அடுத்தகவியும் - எழு - ஆங் கவி போன்ற கலிவிருத்தம். (அசு)

[அநுமனது அப்போழுதைய எண்ணம்.]

அஎ. சொற்றார்கள்சொற்றதொகையல்லதுணையொன்றோ
முற்றாமுடிந்தநெடுவானினிடைமுந்நீ
ரிற்றாவியெற்றெனினும்யானினியிலங்கை
யுற்றால்விலங்குமிடையூறெனவுணர்ந்தான்.

(இ - ள்.) 'முந்நீர்-இச்சமுத்திரமானது, சொற்றார்கள் சொற்ற தொகை துணை ஒன்றோ - வருணித்துச்சொல்லுபவர்கள் கூறுகின்ற அளவைக்கு அடங்கியிருப்பதொரு பொருளோ? அல்லது—; (இவ்வாறான பெருங்

கடலைத்தாண்டுமாறு), முற்று முடிந்த நெடு வானினிடை - ஓரளவிலடங்காமல் மிக்க பரப்பைக்கொண்ட நீண்ட ஆகாயமார்க்கத்தில் (யான்செல்லும்போது), இற்று ஆவி எற்று எனினும் - இப்போது வந்ததுபோன்ற பிராணி எது வந்தாலும், (அதற்காகப் பின்னிடையாமல்), யான் - நான், இனி - இனிமேல், இலங்கை - இலங்கையை, (போய்ச்சேர்வேன்); உற்றால் - அவ்வாறு போய்ச்சேர்ந்துவிட்டால், இடையூறு - விக்கினங்களெல்லாம், விலங்கும் - ஒழிந்துபோய்விடும்,' என - என்று, உணர்ந்தான் - (அநுமான்) எண்ணினான்; (எ - று.)

இங்கும் இவ்வாறு பெரும்பிராணியினால் துன்பம்நேர்ந்ததனால் இன்னும் கடலின் அக்கரை குறுகவில்லையென்று தோன்றுகின்றது; ஆதலால், இதுபோலவே இன்னும் இடையூறுகள் பல உண்டாகக்கூடும்: எதுநேர்ந்தாலும் சரி, நான் கொண்ட காரியத்தில் மனஞ்சோராது எப்படியாவது இலங்கையையடைந்தேனானால், அப்பால் யாதொருதுன்பமுமின்றி என்காரியம் முற்றும் என்று அநுமான் நினைத்தனனென்க. வற்புறுத்துதற்பொருட்டு 'தொகைத்துணையொன்றோ? அல்ல' என வினாவும் விடையுமாகிய இரண்டு வாய்பாட்டாலும் கூறினார்; "முனிவர்சொற் பொய்க்குமோ பொய்யாதே" என்றாற் போல. இற்று - இகரச்சுட்டடியாப்பிறந்த குறிப்புவினையாலணையும்பெயர். ஆவி - உயிர்: பிராணிக்கு, இலக்கணை. எற்று - எகரவினாவடியாப்பிறந்த பெயர். 'எனின்' என்ற எச்சத்துக்கு ஏற்ற முடிக்குஞ்சொல் வருவித்து உரைக்கப்பட்டது.

இனி, இச்செய்யுட்கு வேறொருவகையாகவும் உரைகூறலாம்; எங்ஙனமெனின்,—துணை - (வானம் கடல் என்ற இவற்றின்) அளவு, சொற்றார்கள் சொற்ற தொகை ஒன்றோ - (கணக்குவகைகளை ஆராய்ந்து நூல்களிற்) கூறியவர்கள் கூறியுள்ள தொகைகளுள் ஒன்றில் அடங்குமோ? அல்ல - அடங்காது; முற்று முடிந்த - (அங்ஙனம்) வரையறுத்தற்கரியதாய் அமைந்துள்ள, நெடு வானினிடை முந்நீர் - பெரிய வானத்திலும் கடலிலும், இற்று ஆய் எற்று - இத்தன்மையதான பிராணி எத்துணையோ! எனினும் - அங்ஙனமிருந்தாலும், யான் இனி இலங்கை உற்றால் - நான் இனி (விரைந்து) இலங்கையிற்போய்ச்சேர்ந்துவிட்டால்தான், இடையூறு விலங்கும் - விக்கினம் நீங்கும், என உணர்ந்தான் - என்று ஆலோசித்தனன், (அநுமான்) எனக் காண்க. வேறு ஒப்புமைபெறாமையில் தம்மில்நிகராவனவும், எளிதில்வரையறுக்கஇயலாதனவும், தன்னால்தாவப்படுவனவுமான வானம் கடல் என்ற இரண்டுபொருள்களின் முழுப்பரப்பையும் அவை பலவகைப்பிராணிகட்கு இடமாயிருத்தலையும் குறித்து அநுமான் சிந்தித்து, 'இனி விரைவில் யான் இலங்கைசேர்ந்துவிட்டால்தான் இடையூறின்றாகும்' என்று நிச்சயித்தனனென்க. வானத்தி லிடையூறாய்நேர்ந்த சுரசையையும், கடலினின்று இடையூறாயெழுந்த அங்காரதாரையையும் கருதி, வானம் கடல் என்ற இரண்டினியல்பைக் குறித்தனன். இலங்கையிலுள்ள அரக்கர்களை வெல்லுதற்குரியராக மதித்திலனனுமனென்பதும் இதில்வெளியாம். 'முற்றுமுடிந்த,' 'நெடு' என்ற அடைமொழி

களை 'வான்,' 'முந்நீர்' என்ற இரண்டுக்கும் கூட்டுக. 'இடை' என்ற ஏழனுருபு, முந்நீரோடும் இயைக்கத்தக்கது. 'சொற்றார்கள்சொற்றதுணைபல தொகையதன்றே' என்றும் பாடமுண்டு. (௮௭)

## வேறு.

[அநுமான் 'ராமநாமஸ்மரணமே எல்லாத்துன்பங்களையும் போக்கும் உபாயம்' என நிச்சயித்தல்.]

௮௮. ஊறுகடிதூறுவனவூறிலறமுன்னாத்
தேறிலியரக்கர்புரிதீமையவைதீர
வேறுவகையாண்டையவிராமனெனவெல்லா
மாறுமதின்மாறுபிறிதில்லெனவலித்தான்.

(இ - ள்.) 'ஊறு இல் அறம் உன்னா - கெடுதலில்லாத தருமத்தை நினையாத, தேறிலி - தெளிவில்லாத, அரக்கர் - இராக்கதர்கள், புரி-செய்கின்ற, தீமை - பாவச்செய்கையால், கடிது ஊறு - மிக்க துன்பங்கள், ஊறுவன - (இடையே) உண்டாவனவாயின ; அவை - அத்தீமைகளெல்லாம், தீர - நீங்க, ஏறு வகை - (அத்துன்பங்களைக்) கடந்துஉய்யும் உபாயம், யாண்டைய - எங்கு உள்ளன? இராமன் என - இராமனென்று (ஒருகால்) சொல்ல, எல்லாம் மாறும் - எல்லாத்துன்பங்களும் நீங்கிவிடும் ; அதின் மாறு பிறிது இல் - (துன்பங்களை நீக்கிக்கொள்ளுதற்கு) அதனினும் வேறான உபாயம் ஒன்றுமில்லை,' என - என்று, வலித்தான் - (அந்தராமநாமஸ்மரணத்தையே) உறுதியாகக்கொண்டனன், (அநுமான்); (எ - று.)

எல்லாத்துன்பங்களையும் போக்குதற்குத் தக்கவுபாயம் ராமநாமஸ்மரணமேயென்று அறுதியிட்டு, அநுமான், தனக்கு ஒருவகைத்துன்பமும் வராது நீங்குமாறு அதனையே செய்தனனென்பதாம். இவ்வாறு கவி அநுமானது செய்தியைக் கூறும்முகத்தால் தமக்குள்ள ராமபக்தியை வெளியிட்டார். இராமனென வெல்லாம் மாறும்—"அடியார்படுதுயராயின வெல்லாம், நிலந்தருஞ்செய்யும்..........,...நாராயணாவென்னும்நாமம்" என்றதுபோலக் கொள்க ; "நன்மையுஞ் செல்வமு நாளு நல்குமே, தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே, சென்மமு மரணமு மின்றித் தீருமே, யிம்மையே யிராமவென் றிரண்டெழுத்தினால்" என்றார் பாயிரத்திலும். 'தீமையவைதீரஏறுவகையாண்டைய? அதின்மாறு பிறிதில்' என்ற இதுவும் - தாம் கூறுவதை வற்புறுத்துதற்பொருட்டாக வந்த வினாவிடைகளாமென்க. நற்பயன்விளைத்தலில் தவறாதென்பார், அறத்துக்கு 'ஊறில்' என்ற அடைமொழி கொடுத்தார். தாங்கள் ராமநாமபாராயணஞ்செய்தமாத்திரத்திலே சம்பாதிக்குச் சிறகு முளைத்துவளர்ந்ததைப் பிரதியக்ஷமாகக்கண்டவனாதலால், அநுமான், இங்ஙனம் தாரகமந்திரத்தின்மகிமையை யுணர்ந்தனனென்க. 'மாறும்' என்ற சொல்லின் ஆற்றலால், ஊறுகளும் தீமைகளும் செய்யும் எதிரிகட்கே யாகுமென்பதும் தோன்றும். இச்செய்யுளின் முதலடியிலும் நான்காமடியிலும் மடக்கு என்னுஞ் சொல்லணி காண்க. 'தேறலிலரக்கர்', 'இராமவென' என்பன - பாடாந்தரம். மூன்றாமடியில் வேறு வகை என்று எடுத்தல், மோனைக்கு முரணும். 'ஏறும்வகை' என்று சிலபிரதிகளிற் காணப்படுகிறது.

இனி, கடிது ஊறுவன - ஒன்றையடுத்துஒன்றாய் விரைவிலுண்டாவனவான, ஊறு - வழியில்நேரும்இடையூறுகளும், ஊறு இல் அறம் உன்றுதேறிலி அரக்கர் புரி தீமைஅவை - அழிவில்லாததருமத்தைச் சிந்தியாதவர்களும் தெளிந்த அறிவில்லாதவர்களுமாகிய இராக்கதர்கள் (இலங்கையிற்)செய்யுந் தீங்குகளும், தீர - நீங்க, ஏறு வகை - ஈட்டும் உபாயங்கள், யாண்டையை - (வேறு) எங்குஉள்ளன? 'இராமன்' என எல்லாம் மாயும் - 'இராமன்' என்று சொன்னமாத்திரத்தில் எல்லாத்துன்பங்களும் நீங்கிவிடும்; அதின் - அந்த ராமநாமோச்சாரணம் போல, மாறு - (துயரங்களைத்தடுக்கும்) பரிகாரமாவது, பிறிது இல் - வேறொன்றில்லை, என வலித்தான் - என்றுநினைத்து அந்த ராமநாமசங்கீர்த்தனத்தையே உறுதியாகக்கொண்டனன் (அநுமான்) என்றும் இச்செய்யுட்குப் பொருள்கூறலாம். மாறு - ஒப்புமாம்.

இக்கவி - மேல் அடி - ஆறு கவி போன்ற கலிவிருத்தம். (அஅ)

வேறு.

[அநுமான் இலங்கையைத்தவிர்ந்து பவளமலையிற் பாய்தல்.]

அகூ. தசும்புடைக்கனகநாஞ்சிற்கடிமதிறரித்துநோக்கா
னசும்புடைப்பிரசத்தெய்வக்கற்பகநாட்டையண்மி
விசும்பினைச்செல்லும்வீரன்விலங்கியிலங்கைமூதூர்ப்
பசுஞ்சுடர்ச்சோலைத்தாங்கோர்பவளமால்வரையிற்பாய்ந்தான்.

(இ - ள்.) அசும்பு உடை பிரசம் தெய்வம் கற்பகம் நாட்டை அண்மி விசும்பினை செல்லும் வீரன் - ஊற்றெடுத்துப்பாய்கின்ற தேனையுடைய தெய்வத்தன்மையுள்ள கற்பகவிருட்சங்களைக்கொண்ட தேவலோகத்தைச் சமீபித்து ஆகாயமார்க்கமாகச்செல்லுகின்ற வீரனாகிய அநுமான்,—கனகம் தசும்பு நாஞ்சில் உடை - பொன்மயமான கலசங்களையும் நாஞ்சிலென்னும் உறுப்பையும் உடைய, கடி மதில் - காவலுள்ள (இலங்காபுரியின்) மதிலில், தரித்து - தங்கி, நோக்கான் - (அவ்விலங்கையைப்) பார்த்தல்செய்யாதவனாய்,—இலங்கை மூதூர் வேறு விலங்கி - இலங்கையென்ற பழமையான அந்நகரத்திற்கு (நேரேசெல்லாது) சிறிது ஒதுங்கி,—ஆங்கு - அங்கேயுள்ள, பசுஞ் சுடர் சோலைத்து ஓர் மால் பவளம் வரையில் - பசுமையான சோலைகளையுடையதாகிய ஒப்பற்ற பெரிய பவளமலையின்மீது, பாய்ந்தான்—; (எ - று.)

ராமநாமோச்சாரணபலத்தால் இடையூறின்றி ஆகாயமார்க்கமாக மேலோங்கிச்செல்கின்ற அநுமான், இலங்கையின் மதிலின்மேலே இறங்கினால் அங்கு எவ்வகைப்பொறியினால் என்னதீங்குநேரிடுமோ வென்றும், அது எவ்வாறுகாக்கப்பட்டிருக்கின்றதோ வென்றும் கொண்ட எண்ணத்தினால் ஜாக்கிரதைப்பட்டு, அங்குஇறங்காது அதற்கு இப்பாலுள்ள பவளமலையிற் குதித்தனனென்பதாம்.

'கனகம்' என்ற அடைமொழியை, 'தசும்பு', 'நாஞ்சில்' என்ற இரண்டனோடும் கூட்டுக. முதலிலேயே இலங்கைமதிலின்மீது தங்காமலிருந்தது

அம்மதில் மிக்ககாவலையுடைமை கருதி யென்பார், 'கடிமதில்' என்றார். தேவ ருலகிலுள்ள ஐந்து விருக்ஷங்களுள் ஒன்று கற்பகமென்று சிறப்பாகச்சொல் லப்படுவதன்றி, ஐந்தும் கற்பகமென்றே பொதுவாகச் சொல்லப்படுவது முண்டு. கல்பகம் - தனதுநிழலையடைந்துவேண்டுவார் வேண்டியவற்றைக் கல் பிப்பது [உண்டாக்கிக்கொடுப்பது] எனக் காரணப்பொருள்படும் வடசொல். இவ்வாறு சிறப்புத்தன்மையையுடைய கற்பகமரமுடைமையால், அத்தேவ லோகம், 'கற்பகநாடு' எனப்பட்டது. கற்பகத்திற்குஉள்ள இத்தன்மையைக் கருதியே, அதற்கு 'தெய்வம்' என்ற அடைமொழி கொடுத்தார். 'தெய்வ நாடு' எனக் கூட்டவுமாம். தசும்பு - குடம்: இங்கு, கோபுரம்முதலிய இடங் களில் வைக்கப்படுகின்ற குடம்போன்ற உறுப்பாகிய கலசத்தை யுணர்த் திற்று. அசும்பு - ஊற்று. பிரசம் - தேன். இந்தமலை, முதனூலில் 'லம்பம்' என்ற பெயராற் கூறப்பட்டுள்ளது.

'தசும்பு உடை கனகம் நாஞ்சில்' என்பதற்கு - (மேலே) கலசத்தையு டைய பொன்மயமான நாஞ்சிலென்னும் மதிலுறுப்பு என்றும் பதப்பொருள் கூறலாம். 'தரித்து' என்ற எச்சம், நோக்குதல்வினையைக் கொள்ளும். 'தரித்தனோக்கான்' என்ற பாடம் - பாதுகாவலையுடைய இலங்காபுரியின்மதி லில் இறங்குதலைக் கருதானாய் என்று பொருள்படும். 'விலங்கி' என்ற சொல்லின் ஆற்றலால். இலங்கையிற்குதிப்பதாக முன்புஉத்தேசித்தபடி. அந்நகரத்துமதிலளவாக மேலேசென்றுவிட்ட அநுமான் இப்பொழுது வேறு வகையாக ஆலோசித்ததனாற் சிறிதுபின்வாங்கிப் பவளகிரிக்குநேரே இறங் கின னென்பது போதரும். கீழ் ருஉ - ஆஞ்செய்யுளில் "விண்ணினைநேர்மேற் படரக்கடிதிம்பரின்மீதுயர்ந்தான்" என்றும், ருசு - ஆஞ் செய்யுளில் "மந்தார முந்துமகரந்தமணந்தவாடை, செந்தாமரைவாண்முகத்திற்செறிவேர்சிதைய" என்றும், "தந்தாமுலகத்திடைவிஞ்சையர்பாணிதன்னோடு, கந்தாரவீணைக்கனி செஞ்செவிக்காதுநுங்க" என்றும், அக - ஆஞ் செய்யுளில் "அருக்கனுயர்வா னின்வழிபோனான்" என்றும் கூறிப்போந்தவர், இங்கு "கற்பகநாட்டை யண்மிவிசும்பிடைச்செல்லும்வீரன்" என்றார்.

இதுமுதல் இப்படலம்முடியுமளவுமுள்ள ஆறு கவிகள் - இக்காண்டத் தின் காப்புச்செய்யுள்போன்ற அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தங்கள்.

[அம்மலையின் அப்போதைநிலையைப்பற்றிய வருணனை.]

கூ0. மேக்குறச்செல்வோன்பாயவிலங்கிநீரிலங்கைவெற்பு
நாக்குறத்தங்குமிங்குந்தள்ளுறநுடங்குநோன்மை
போக்கினுக்கிடையூறுகப்புயலொடுபொதிந்தவாடை
தாக்குறத்தளர்ந்துசிந்துங்கலமெனத்தக்கதன்றே.

(இ - ள்.) மேக்கு உற செல்வோன் - மேலோங்கிச் செல்பவனாகிய அநுமான், விலங்கி பாய - (வானநெறியைவிட்டு) விலகி(த் தன்மீது) பாய்ந் ததனால், நீர் இலங்கை வெற்பு - (நாற்புறத்திலும் கடலின்) நீரினாற் சூழப்பட்ட இலங்காபுரியைச் சார்ந்ததான அப்பவளமலை, நாக்குறுத்து - அசைக்கப்பட்டு, அங்கும் இங்கும் தள்ளுற நுடங்கும் - அப்புறமும் இப்புறமு

மாகத் தள்ளாடிச் சலிக்கின்ற, நோன்மை - தன்மையானது,—'புயலொடு பொதிந்த வாடை - மழையோடுகூடிய பெருங்காற்றானது, போக்கினுக்கு இடையூறு ஆக தாக்குற - (தான்) போவதற்குத் தடையாக விசைகொண்டு மோத, (அதனால்) தளர்ந்து - தள்ளாடி, சிந்தும் - (தன்னிடத்திலுள்ளபொருள்களையெல்லாம்) கீழேசிந்துகிற, கலம் - மரக்கலமாகும்', என தக்கது - என்றுசொல்லும்படியிருந்தது ; (எ - று.)—அன்றே - ஈற்றசை.

அநுமான் விசையோடு வந்து தன்மேற்குதித்ததைத் தாங்கமாட்டாத அப்பவளமலை தள்ளாடித் தன்னிடத்திலுள்ளபொருள்களைச் சிந்துவது, புயல்காற்றுக்குப் பொறாது மரக்கலம் ஆடிப்போய்த் தன்னிடத்துப்பொருள்களைச் சிந்துவதுபோன்றிருந்த தென்பதாம் ; தற்சியணி : இது, வடமொழியில் நிதர்சநாலங்காரமெனப்படும்; உபமானத்துக்கும் உபமேயத்துக்கும் ஐக்கியத்தைச் சொல்லுதல், இவ்வணியி னிலக்கணம்; 'நோன்மை கலம் போலும்' என்னாது, நோன்மையையே கலமாகக்கூறியிருந்தலை நோக்குக. வெற்பின்நோன்மையைக் கலமெனக் கூறினாராயினும், வெற்பின்நோன்மை கலத்தின்நோன்மைபோலு மெனக் கருத்துக்காண்க. உபமானத்தில் 'சிந்தும்' என வந்ததனால், உபமேயத்திலும் மலை பொருள்களைச் சிந்து மெனக் கொள்க.

'வேலைமேலிலங்கைவெற்பு', 'தள்ளுறத்துளங்குநோன்மை', 'போக்குறற்கிடையூறாக', 'தகர்ந்துசாயுங்கலமெனலாயிற்றன்றே' என்பன - சிலபிரதிகளின் பாடம். சிந்துதல் - நிலைகுலைதலுமாம். வெற்பு விலங்கி - மலை நிலை பெயர்ந்து என்றலு மொன்று. கடலிடைத்தீவின்முன்புறத்திலேயுள்ள உயர்ந்த பெரிய மலைக்கு, கடலிடையுள்ள உயர்ந்த பெரிய மரக்கலம் உவமை ;' இது வாயுவினாற்சிதைதல் அது வாயுகுமாரனாற்சிதைதற்கு உவமை கூறப்பட்ட தென நயம்காண்க. மேக்குஉறச் செல்லுதல் - ஆகாயமார்க்கமாகச் செல்லுதல். 'விலங்கி' என்பதைக் கீழ்ச்செய்யுளிற் கூறியதன் அநுவாதமென்றால், ஒதுங்கியென்பது பொருள். புயல் - பெருங்காற்று : சிறப்புப் பெயர் ; வாடை - காற்று: பொதுப்பெயர். புயலொடுபொதிந்த வாடை - 'புயல்' என்ற சொல்லோடு தொடர்ந்த வாடை: எனவே, புயற்காற்றென்றதாயிற்று என்றும் கொள்ளலாம். (௧0)

[அநுமான் அம்மலையில் நின்று இலங்கையைக் காணுதல்.]

௧௧. மண்ணடியுற்றுமீதுவானுறவரம்பின்றன்மை
யெண்ணடியுற்றகுன்றத்தலத்துநின்றெய்தநோக்கி
விண்ணிடையுலகமென்னுமெல்லியன்மேனிநோக்கக்
கண்ணடிவைத்ததன்னவிலங்கையைத்தெரியக்கண்டான்.

(இ - ள்.) மண் - இந்நிலவுலகத்தினது, அடி - அடிப்பாகம் வரையிலும், உற்று - (தனது வேர்) ஊன்றப்பெற்று,—மீது - (தனது) உச்சி, வான் வரம்பின் தன்மை உற - வானுலகத்தின் எல்லைவரையிலும் பொருந்துமாறு, எண் - எண்ணியதுபோல (உயர்ந்துள்ள), அடி உற்ற - (இலங்கைக்கு) முன்னடியி

லுள்ளதான, குன்றம் தலத்து - அப்பவளமலையினிடத்தில், நின்று - நின்று கொண்டு, (அநுமான்), எய்த நோக்கி - உற்றுப்பார்ப்பவனாய்,—விண் இடை உலகம் என்னும் மெல்இயல் - வானத்திலுள்ள தேவலோகமாகிய பெண், மேனி நோக்க - (தனது) வடிவழகைப் பார்க்குமாறு, கண்ணடி வைத்தது அன்ன - நிலைக்கண்ணாடிவைத்ததுபோ லிருக்கின்ற, இலங்கையை - இலங் காநகரத்தை, தெரிய கண்டான் - நன்றாகப் பார்த்தான்; (எ - று.)

அங்ஙனம் பவளமலையிற்பாய்ந்துநின்ற அநுமானுக்கு வானுலகம் நிலைக் கண்ணாடியில் விளங்குவதுபோல இலங்கை தோன்றிற்று என்பதாம். நோக் கிக் கண்டான் என இயையும். பூமியினுடைய அடிப்பாகத்தின் எல்லையைக் கண்ட தான் வானுலகின் எல்லையையும் காணவேண்டுமென்று கருத்துக் கொண்டாற்போல அம்மலை உயர்ந்திருந்த தென்பது, முன்னிரண்டடியின் பொருள்; இஃது, ஏதுத்தற்குறிப்பேற்றவணி: இயற்கையில் உயர்ந்திருத்தற்கு ஒருகாரணங்கற்பித்தவாறு காண்க. வானுலகத்துக்குநேராகக் கீழே ஒருநிலைக் கண்ணாடி வைத்திருந்தால் அக்கண்ணாடியில் அது எவ்வாறு விளங்குமோ அதுபோன்றிருந்தது இலங்கையென்பது, பின்னிரண்டடியின் கருத்து; தன் மைத்தற்குறிப்பேற்றவணி: இதனை "குடவளைக்குலம் வயிறுளைந்தமணி கொழிக்கும், மடுவில் வானக் குருவுகாட்டியதுபோன் மதில்சூழ், கடிகொண் மாநகர்" என்ற நைடதத்தோடு ஒப்பிடுக. 'விண்ணிடையுலகமென்னு மெல்லி யல்' என்றார், "மண்மகள்" என்றாற் போல. கண்ணடி - கண்ணாடி யென்பு தன் குறுக்கல்விகாரம்.

மண் • அடியுறுதல் - கீழே மண்ணுலகமுள்ளவளவும் வேரூன்றுதல். எண் அடியுற்ற - எண்ணத்தை உள்ளுறக்கொண்ட வெனினுமாம். 'வானுறு வரம்பின்றன்மை,' 'குன்றினிடத்துநின்றுற்றுநோக்கி' என்று சிலபிரதிகள். மெல் இயல் - மென்மையான தன்மையையுடையவள் எனப் பெண்ணுக்குப் பண்புத்தொகையன்மொழி. தெரியக்காணுதல் - அதன் வகைகளெல்லாம் தோன்றக் காணுதல்; அங்ஙனங்கண்டமை, மேற்கூறுமாற்றால் நன்குவிளங் குதல் நோக்குக. (கக)

[இதுமுதல் மூன்று கவிகள் - அநுமான் இலங்கையைநோக்கி வியத்தல்.]

கஉ. நன்னகரதனைநோக்கிநளினக்கைமறித்துநாகர்
பொன்னகரிதனையொக்குமென்பதுபுல்லிதம்மா
வந்நகரிதனினன்றேயண்டத்தைமுழுதுமாள்வா
னிந்நகரிருந்துவாழ்வானிதுவெதற்கேதுவென்றான்.

(இ - ள்.) (அநுமான்),—நல் நகர்அதனை நோக்கி - அழகிய அந்தஇலங்கா புரியைப்பார்த்து, நளினம் கை மறித்து - தாமரைப்பூப்போன்ற (தனது) கை யை மடக்கிவைத்துக்கொண்டு,—'நாகர் பொன் நகர் - தேவர்கள்வாழ்கின்ற பொன்மயமான அமராவதிநகரம், இதனை ஒக்கும் - இந்தஇலங்கையை யொத் திருக்கும், என்பது - என்றுகூறுதலும், புல்லிது - அறிவீனமாம்; அம்மா - ஆச்சரியம்! (இப்படியிருக்க), அ நகர் இதனின் நன்றே - அவ்வமராவதிநகரம் (இதற்கு உவமையாகச்சொல்லும்படி) இந்நகரத்தினும் சிறந்ததாமோ? [ஆகா

தென்றபடி]; அண்டக்தை முழுதும் ஆள்வான் - எல்லாவுலகங்களையும் (தனது பராக்கிரமத்தால் வென்று தனக்குக்கீழ்ப்படுத்திக்கொண்டு) ஆள்பவனாகிய இராவணன், இ நகர் இருந்து வாழ்வான் - இவ்விலங்காபுரியி லிருந்து கொண்டு வாழ்கின்றவனாயிருக்கின்றான், இது - என்ற இதுவே, அதற்கு ஏது - பொன்னகரத்தினும் இலங்காபுரி உயர்ந்துள்ளதென்ற அவ்விஷயத்தை மெய்ப்பித்தற்கு ஏற்றகாரணமாகும்', என்றான் - என்றுகருதினான்; (எ - று.)

எல்லாவுலகங்களையும்வென்றவனான இராவணன், எந்தநகரம் எல்லாவற்றினுஞ்சிறந்துள்ளதோ அங்கேயே வாழ்வானாதலால், அவன்வாழ்கின்ற இவ்விலங்காபுரிக்குப் பொன்னகரம் ஈடாகாதெனத் தெற்றென்விளங்கும்; ஆகவே, இந்நகரத்திற்குப் பொன்னகரத்தை உபமானமாகச்சொல்வது, அறிவீனமென்பதாம். பொன்னகரத்தினிடத்துப் பிரசித்தமாயுள்ள உபமானத்தன்மையை மறுத்துக்கூறுவதனால், 'பொன்னகரிதனையொக்குமென்பது புல்லிது' என்ற வாக்கியம் - எதிர்நிலையணி: வடநூலார், பிரதீபாலங்காரமென்பர். உபமேயத்தினும் உபமானம் சிறந்திருத்தல்வேண்டு மென்ற அலங்காரநூலார் கொள்கைக்கு மாறாக உபமேயத்தை உபமானத்தினுஞ் சிறந்ததென்று கூறுவது, இதனிலக்கணம். பொன்னகரிதனையொக்குமென்பதும் புல்லிதென்றால், இதனின் நன்றன்று என்பது தானே அமையவும், முற்கூறியதை வற்புறுத்துவதற்கு, 'இதனின்நன்றே' என மீண்டும் எடுத்தோதினார். முன்னிரண்டுவாக்கியங்களை 'அண்டத்தைமுழுதுமாள்வான் இந்நகரிருந்து வாழ்வான், இது அதற்கு ஏது' என்ற வாக்கியம் சமர்த்தித்து நின்றது - தொடர்நிலைச்செய்யுட்குறியணி.

ஒருபொருளை வியந்து சொல்லும்போது கையைமடக்கித் தாடையில் வைத்துக்கொண்டு கூறுதல், சிறுபாலார்க்கு இயற்கையென்க. அம்மா - வியப்பிடைச்சொல்; இலங்காபுரியினது சிறப்பைக்குறித்து வியந்தவாறு: அடுத்த செய்யுளிலும் இதுகாண்க. 'அந்நகர் இதனின் நன்றே' என்றது, அந்தத்தேவநகரம் இவ்விலங்கைபோலச் சிறந்ததா? என்றும் பொருள்படும். இதனின் அன்றே எனப்பிரித்து, இதுபோலச் சிறந்ததன்றே யென்றலு மொன்று. இவ்விலங்கையினும் அவ்வமராவதி சிறந்ததாயிருக்குமானால், அண்டகோளமுழுவதையும் தனது அதீநமாகவுடையவனான இராவணன் அதனைத் தனக்கு இராஜதானியாகக்கொண்டு அங்கே யிருந்து அரசாளமாட்டானோ? என்பது, பின்னிரண்டடியின் போக்கு. (௬௨)

௬௩. மாண்டதோர்நலத்திற்றுமென் றுணர்த்துதல்வாய்மைத்தன்றால்
வேண்டியவேண்டினெய்திவெறுப்பின்றிவிழைந்ததுய்க்கு
மீண்டரும்போகவின்பமீறிலதியாண்டுக்கண்டா
மாண்டதுதுறக்கமஃதேயருமறைத்துணிவுமம்மா.

(இ - ள்.) '(தேவலோகம்), மாண்டது ஓர் நலத்திற்று ஆம் - மாட்சிமைப்பட்டதாகிய ஒப்பற்ற அழகையுடையதாம்', என்று உணர்த்துதல் - என்றுசொல்வது, வாய்மைத்து அன்று - மெய்யான வார்த்தை யன்று; வேண்டிய வேண்டின் எய்தி - வேண்டியபொருள்களையெல்லாம் வேண்டிய

படியே யடைந்து, விழைந்த வெறுப்பு இன்றி துய்க்கும் - (அங்ஙனம்) விரும்பிப்பெற்ற பொருள்களை வெறுப்பில்லாமல் அனுபவிக்கவல்ல, ஈண்டு அரும் போகம் இன்பம் - (வேறிடங்களிற்) கிடைத்தற்கு அரிய சுகாநுபவத்தை, ஈறு இலது - முடிவில்லாததாக, யாண்டு கண்டாம் - எவ்விடத்திற் பார்த்தோமோ, ஆண்டு அது துறக்கம் - அத்தன்மைத்தாகிய அவ்விடமே சுவர்க்கமாவது: அருமறை துணிவும் அஃதே - அருமையான வேதங்கள் துணிந்த கொள்கையும் அதுவேயாம்; (எ - று.)—ஆல் - ஈற்றசை; தேற்றமுமாம்.

விரும்பியவற்றையெல்லாம் பெறுதல் எந்த இடத்திற் கூடுமோ, அந்த இடந்தான் சுவர்க்கமென்று வேதங்களும் கூறுகின்றன வாதலாலும், தேவலோகம் எல்லாவற்றையும் அளிக்கவல்ல போகஸ்தாநமென்பது இப்போது பிரதியக்ஷத்திற்குமாறாய்ப் பொய்ம்மைப்படுதலாலும், இராவணன் ஆள்கின்ற இவ்விலங்காபுரியே எல்லாப்போகங்களையும் வேண்டியவர் வேண்டியபடி யடைதற்கு இடமாயிருத்தலாலும், இதுவே சுவர்க்கமா மென்றனனென்பதாம். தேவலோகத்திற்கு உரிய போகமளிக்குந் தன்மையை மறுத்து இலங்கையில் ஏற்றிக்கூறியது, அபநுதியணியின்பாற்படும். அதன் இலக்கணம் - "சிறப்பினும் பொருளினுங் குணத்தினு முண்மை, மறுத்துப பிறிதுரைப்ப தவஹ்நுதியாகும்" எனக் காண்க; இது, ஒழிப்பணி யெனவும்படும்.

இனி, மாண்டது ஓர் நலத்திற்று ஆம் என்று உணர்த்துதல் வாய்மைத்தன்று - மிகச்சிறந்த ஒருவகையானநன்மையைத் தான்தருவதாம் இவ்விலங்கையென்று சொல்லுதல் உண்மையாகாது என்றுமாம்; எல்லாநலங்களாலும் குறைவின்றிவிளங்குகின்ற இதனை ஒருவகையானநலத்தைக் கொண்டதென்று கூறுதல் இழுக்கே யென்றபடி. 'யாண்டுக்கண்டாம்' என்பதும் பாடம். 'ஈண்டு' என்றது-முதனிலைத்தொழிற்பெயர்; நான்காம்வேற்றுமைத்தொகை.

௬௪. உட்புலனெழுநூறென்பர்யோசனையுலகமூன்றிற்
றெட்புறுபொருள்களெல்லாமிதனுழைச்செறிந்தவென்றா
னுட்புலனுணங்குகேள்வி நுழைவிலரெனினுநோக்குங்
கட்புலன்வரம்பிற்றாமேகாட்சியுங்கரையிற்றாமே.

(இ - ள்.) உள் புலன் - (இவ்விலங்கையின்) உள்ளிடத்தினளவு, எழுநூறு யோசனை—, என்பர் - என்று கூறுவர், (உணர்ந்தோர்); உலகம் மூன்றில் - மூன்றுலகங்களிலும், தெட்பு உறு - உயர்வாகப் பொருந்திய, பொருள்கள் எல்லாம் - எல்லாப்பொருள்களும், இதனுழை செறிந்த - இந்த இலங்காபுரியிற் பொருந்தியுள்ளன, என்றால்—, நுண்புலன் நுணங்கு கேள்வி நுழைவிலர் எனினும் - நுட்பமாகிய அறிவைக்கொண்டு சூக்ஷ்மமாய்அறியத்தக்க கேள்வியினால் எல்லாப்பொருள்களையும் ஆராய்தலையுடையவரென்றாலும், (அவர்களும் இந்நகரத்துப் பொருள்களையெல்லாம் காணுந்திறமிலர்; ஏனெனில்),— நோக்கும் கண்புலன் வரம்புஇற்று ஆமே - பார்க்கின்ற (அவர்களது) கட்புலனும் வரம்பில்லாததாய் நீண்டிருக்குமோ? (அன்றியும்), காட்சியும் - இந்நகரத்திற்காணக்கூடிய விஷேதப்பொருளும், கரையிற்று ஆமே - ஓரெல்லையுடையதாகுமோ? (என்று எண்ணினன் அநுமான்); (எ - று.)

நலறிவுநிரம்பப்பெற்ற பேரறிவாளராயிருந்தாலும், அவர்களது கட்புல னும் ஏனையோரதுகட்புலன்போலவே ஒருவரம்பினையுடையதாய், அளவுபட் டிருத்தலால், மிக்கபரப்பினையுடைய இவ்விலங்காபுரியிலுள்ள எல்லையில்லாத காட்சிகளையெல்லாம் அப்பேரறிவாளரும் தமதுகண்கொண்டு முற்றக்காணுத லரிதென, இலங்காபுரியின்சிறப்பை அப்பவழமலையின்மீதிருந்த அநுமான் எண்ணினனென்க. இச்செய்யுட்கு, மேல் ஊர்தேடுபடலத்து சஉ-ஆஞ்செய் யுளிலுள்ள 'என்றனன்' என்பதனோடாவது, இப்படலத்து கஉ - ஆஞ்செய் யுளிலுள்ள 'என்றான்' என்பதை இங்குக்கூட்டியாவது முடிபு காண்க.

'என்றால்' என்ற செயினென்னும் வினையெச்சத்துக்கு முடிக்குஞ்சொல் வருவித்து உரைக்கப்பட்டது. 'நழைவிலர்' என்னுமிடத்து, இல் - சாரியை; "மழையுந், தவமிலா ரில்வழியில்லை" என்றவிடத்துப் போல: அன்றி, நழைவு இலர் என்றுபிரித்து, ஆராய்தல்தொழிலுக்கு இடமாகஇருப்பவர் என்றுமாம்; (இல் - இடம்;) எனவே, ஆராயுந்திறமுடையோர் என்றதாயிற்று. இனி, 'நழைவினர்' என்றும் பாடமுண்டு. பேரறிவாளராலும் காணமுடியாதென்ப தனை, 'கட்புலன்வரம்பிற்றாமே,' 'காட்சியுங்கரையிற்றாமே' என்ற வாக்கியங் கள் ஏதுவாய்நின்று சாதித்துநிற்பது - [illegible]. இனி, 'கட்புலன்வரம்பிற்றாமே' என்பதற்கு - கண்களின் காட்சிப்புலன் ஒரு வரை யறையுடையதாகுமே யென்றும், கண்ணாகிய பொறி இத்துணையென ஓரள வுடையதாகுமே யென்றும் உரைப்பாருமுளர்; அப்பொழுது, 'வரம்பிற்று' என்றது - உடன்பாட்டுக்குறிப்புமுற்று: ஏகாரம் - தேற்றம். அளவிறந்த பல கண்களும் அவற்றிற்கு வரம்பில்லாத காட்சியறிவும் இருந்தால்தான் இந்நகரம் முழுவதையும் காணுதல்கூடு மென்க. அங்ஙனம் எவர்க்கும் இல்லையாதலால் 'உட்புலன் எழுநூறுயோசனை' என்றலும் சரியாயிராது; [அளவு இன்னும் அதிகமாயிருக்கலாம்] என்பது உட்கோள். இனி, நோக்குங்கட்புலன்வரம்பிற் றாமே - காண்பவர்கண்பார்வைக்கு அடங்குவதா (இந்நகரின்காட்சி)? என் பர் ஒருசாரார். காட்சியும் கரை இற்று ஆமே காட்சியும் கரையில்லாததாகு மே யென்றலுமாம்.

ஸ்ரீவால்மீகிராமாயணத்துச் சுந்தரகாண்டத்தின் முதற்சருக்கத்திற்கூறிய செய்தி, கம்பராமாயணத்துச் சுந்தரகாண்டத்தின் முதற்படலமாகிய இதிற் கூறப்பட்டது.

இப்படலவரலாற்றின் சுருக்கத்தை, "அங்கண்வானுலகணவுமகேந்திர வரையினின்றனுமன், திங்கணீண்முடியுரிஞ்சச் செல்வுழிமகபதியொறுப்ப, மங்குல்சேர்வழிநீண்மறைந்தமைநாக மென்னுழையில், தங்கிப்போகென வத னைத்தடக்கையிற்றடவந்துபோனான்", "திரைசெய்தெண்கடன்முகட்டிற்கனு முனிற்செல்லுமாருதியைச், சுரசையென்பவள்தடுப்பத் தன்னுடைப்பேருடல் சுருக்கி, விரைவின்வாய்வழிப்போகி மெய்ந்நிழல்வவ்வுபேரரக்கி, குருதிவாயி டைப்புகுந்து குடல்பறித் திலங்கையிற்குதித்தான்" என்ற கூர்மபுராணச் செய்யுள்களிற் காணலாம்.

(கஎ)

## கடல்தாவுபடலம் முற்றிற்று.

## இரண்டாவது

# ஊர்தேடுபடலம்.

(அநுமான்) இலங்காபுரியிற் (சீதாபிராட்டியைத்) தேடிய செய்தியைக் கூறுகின்ற பாகம். ஊர்தேடு - இரண்டாம்வேற்றுமைத்தொகை. தேடுபடலம் - வினைத்தொகை.

அநுமான் தான் பவளமலையி லிருந்தபடியே திரிகூடகிரியின்மே லுள்ள இலங்காபுரியின் வளங்களைப் பார்த்து அவற்றைக்குறித்துப் பல வாறு கருதுதல், இதுமுதல் நாற்பத்தோருகவிகளிற் கூறப்படுகின்றது.

வேறு.

[இதுமுதல் எட்டுகவிகள் - அந்நகரத்து மாடமாளிகைகளின் வருணனை.]

க. பொன்கொண் டிழைத்தமணியைக்கொடுபொதிந்த
மின்கொண் டமைத்தவெயிலைக்கொடுசமைத்த
என்கொண் டியற்றியவெனத்தெரிகிலாத
வன்கொண்டல்விட்டுமதிமுட்டுவனமாடம்.

(இ - ள்.) வல் கொண்டல் விட்டு - வலிய மேகங்களைக்கடந்து அப்பாற் சென்று, மதி முட்டுவன - சந்திரனைத் தொடுவனவான, மாடம் - (இவ்விலங் காபுரியிலுள்ள) வீடுகள்,—பொன்கொண்டு இழைத்து மணியை கொடு பொதி ந்த - பொன்னைக்கொண்டுசெய்து (அதில்) இரத்தினங்களைக் கொண்டுவந்து பதிக்கப்பெற்றவையோ? (அல்லது), மின்கொண்டு அமைத்த - மின்னலைக் கொண்டு செய்யப்பட்டவையோ? வெயிலை கொடு சமைத்த - சூரியகாந்தி யைக்கொண்டு செய்யப்பட்டவையோ? என்கொண்டு இயற்றிய - (வேறு) எதனைக்கொண்டு செய்யப்பட்டவையோ? என - என்று சந்தேகித்தற்கு இடமாகி, தெரிகிலாத - உண்மையறியமுடியாம லிருக்கின்றன; (எ - று.)

இயல்பிற் பொன்னினாற்செய்யப்பட்டு இரத்தினங்கள்பதிப்பிக்கப்பெற் றுள்ள மிகவுயர்ந்த இவ்விலங்கைநகரத்து உபரிகைவீடுகள் அப்பொன்மணி களின்மிக்கவொளியினால் இன்னபடியென்றுசொல்லமுடியாமல் திகைக்கும் படியிருந்தனவென்க; ஐயவணி. 'வன்கொண்டல்விட்டு மதிமுட்டுவனமாடம்' என்றது, மேகமண்டலத்திலும்மேலாகவுயர்ந்து சந்திரமண்டலத்தைச்சார வுள்ள மாளிகைக ளென்றபடி; தொடர்புயர்வுநவிற்சியணி.

உலகமும் அதற்கு உறுதியாகிய அறம்பொருளின்பங்களும் நடத்தற்கு ஏதுவாகின்ற சிறப்புடைமை தோன்ற, 'வன்கொண்டல்' எனப்பட்டது; "கெடுப்பதூஉங் கெட்டார்க்குச்சார்வாய் மற்றாங்கே யெடுப்பதூஉ மெல்லா மழை" என மழையினது ஆற்றல் காண்க. 'பொன்கொண்டிழைத்த' என்றும் பாடமுண்டு.

இதுமுதல் மூன்றுகவிகள் - கீழ்ப்படலத்தின் எழுபத்தெட்டாம் கவி போன்ற கலிவிருத்தங்கள். (க)

உ. நாகாலயங்களொடுநாகருலகுந்தம்
பாகார்மருங்குதுயில்வென்னவுயர்பண்ப
வாகாயமஞ்சவகன்மேருவையனுக்கு
மாகால்வழங்குசிறுதென்றல்வரநின்ற.

(இ - ள்.) (மற்றும் இந்நகரத்துமாளிகைகள்),—நாக ஆலயங்களொடு - தேவர்களின்மாளிகைகளுடனே, நாகர் உலகும் - தேவலோகமும், தம் பாகு ஆர் மருங்கு துயில்வு - தமதுபாகமாய்ப்பொருந்திய இடத்திலே இனிது தங்கத்தக்கவை, என்ன என்று சொல்லும்படி, உயர் பண்ப - (தேவலோகத்திலும்) உயர்ந்த தன்மையையுடையன; ஆகாயம் அஞ்ச - வானத்திலுள்ளாரஞ்சும்படி, அகல் மேருவை அனுக்கும் - அகன்ற மகாமேருமலையை (க் கொடுமுடிபறித்து) வருத்திய, மா கால் - பெருமையையுடைய வாயுதேவனால், வழங்கு - இனிதாக அளிக்கப்படுகின்ற, சிறு தென்றல் - இளந்தென்றற்காற்று, வர - வரும்படி, நின்ற - உள்ளன; (எ - று.)

தேவர்கள்வசிக்கின்ற கிருகங்களுட்படத் தேவலோகம் தமதுபகுப்பாய்ப் பொருந்திய ஓரிடத்திலே [கீழ்நிலையிலே] இனிதுதங்கத்தக்கன வென்னும்படி மிக்க உயர்ச்சியுடையவை இந்நகரத்துமாளிகைக ளென்பது, முதலிரண்டடியின் கருத்து; தொடர்புயர்வுநவிற்சியணி. அம்மாளிகைகளின் மிக்கபரப்பும் இங்குத் தொனிக்கும். அங்ஙனம் அவை மிகவுயர்ந்திருந்தாலும், மிக்கவலிமையையுடைய வாயுதேவன் இராவணனிடத்து அச்சத்தால் அடங்கி மந்தமாருதமாக இனிதுவீசப்பெற்றிருந்தன வென்பது, பின்னிரண்டடியின் கருத்து.

இனி, இச்செய்யுளின் முன்னிரண்டடிக்கு - தேவலோகத்து மாளிகைகளும் பாதாளலோகத்துமாளிகைகளும் தமதுபாகத்திலே இனிதுதங்குதற்குரியவை [ஒருகோவையாகச்சொல்லத்தக்கன] என்னுமாறு மிகச்சிறந்துள்ளன (இந்நகரத்துமாளிகைகள்) என்றலுமொன்று; நாகர் - சுவர்க்கத்துவாழ்பவரும், நாகசாதியாரும். ஆலயம், உலகு - இலக்கணையால், மாளிகையை யுணர்த்தின. நாகர்களது ஆலயம், நாகாலயம்: தீர்க்கசந்திபெற்றது. பாகு - பாகமென்ற வடசொல்லின் விகாரம். ஆகாசம் அதிற்சஞ்சரிக்குந்தேவரைக் குறித்தலால், இங்கு இடவாகுபெயர். 'மாகால்வழங்குசிறுதென்றல்' என்றவிடத்து, முரண்தொடை காண்க. 'மருங்குமிலவென்ன' என்றும் பாடம். (உ)

ங. மாகாரின்மின்கொடிமடக்கினரடுக்கி
மீகாரமெங்கணுநறுந்துகள்விளக்கி
யாகாயகங்கையினையங்கையினினள்ளிப்
பாகாயசெஞ்சொலவர்வீசுபடுகாரம்.

(இ - ள்.) பாகு ஆய செம் சொலவர் - கருப்பஞ்சாற்றின் பாகுபோன்ற இனியசொற்களையுடையவர்களான (சிலதியரெனப்படுகின்ற) குற்றேவல்மக

ளிர், மா காரில் மின் கொடி மடக்கினர் அடுக்கி - பெரிய காளமேகங்களில் தோன்றுகின்ற மின்னற்கொடிகளைப் பிடித்துப்பிடித்துச் சேர்த்துத் துடைப் பக்கற்றையாகக்கொண்டு, (அதனால்), மீகாரம் எங்கணும் நறுந்துகள் விளக்கி - மேற்பக்கமெங்குமுள்ள சுகந்தப்பொடிகளை விளக்கித்தள்ளி, ஆகாயகங்கை யினை அம் கையினின் அள்ளி வீசு படு - ஆகாயகங்கைநீரை அழகிய(தங்கள்) கைகளால் முகந்துகொண்டுவந்து தெளிக்கப்பெற்ற, காரம் - வீடுகள், (இந் நகரத்து உள்ளவை); (எ - று.)

இராக்கதராஜனான இராவணனது ஆணைக்கு உட்பட்ட அந்நகரத்திற் குற்றேவல் மகளிர்களாகிய தேவஜாதிமாதர்கள் அவ்விடத்துமாளிகைகளில் பணிவிடைசெய்கின்றவிதம் இதில் வெளியாம். மேகத்துமின்னல்களைப்பிடித் துப்பிடித்துத் தொகுத்து வார்கோலாக்கி அவ்விளக்குமாறுகொண்டு குப்பை கூட்டியொதுக்கி ஆகாசகங்கைநீரைக்கொணர்ந்து தெளித்துத் தளத்தைச்செவ் வைப்படுத்துகின்றனரென்க; வீறுகோளணி. இராவணனதுநகரமாகிய அதி லேயுள்ள குற்றேவல்மகளிரின் ஆற்றலும், அந்நகரத்துமாளிகைகள் மேக மண்டலத்துமின்னல்களை எட்டிப்பிடித்துக்கொள்ளும்படியாகவும் ஆகாயகங் கைநீரை எட்டிமுகந்துகொள்ளும்படியாகவும் மிகவுயர்ந்துள்ளன வென்பதும், இதில் வெளியாம். அவ்விடத்து மாளிகைகளிலே சிந்தியிருக்கின்ற வாசனைப் பொடிகளொழிய வேறுதூசியில்லை யென்பதுபற்றி, 'மீகாரமெங்கணுநறுந் துகள்விளக்கி' எனப்பட்டது; இதனை, "நம்பொன்மேனி திமிர்ந்த தண்சாந்த மும், வம்புண்கோதையர்மாற்றுமயலரோ" என்றாற்போலக் கொள்க. மேனி திமிர்ந்த சந்தனத்தின்பொடி, கந்தப்பொடி, கதம்பப்பொடி, சூடியமலர்களி னின்றுசிந்திய மகரந்தப்பொடி என்ற யாவும், 'நறுந்துகள்' என்றதில் அடங் கும். இராவணன் தனதுபலத்தினால் தேவமாதரையே பணிப்பெண்களாகக் கொண்டிருத்தலால், 'பாகாயசெஞ்சொலவர்' என அக்குற்றேவல் மகளிரது சொல்லினிமை பாராட்டிக்கூறப்பட்டது.

மின்கொடி - கொடிபோன்ற மின்னல். மீ - மேல். காரம் - பக்கம். பாகு - வெல்லம், சர்க்கரை, கற்கண்டு. ஆய - உவமவுருபு. காரம் - அகார மென்ற வடசொல்லின் முதற்குறைவிகாரம்; அதன்பொருள், வீடென்பது. க்ருஹமென்றவடசொல் பிராகிருதத்திற் கரமெனச் சிதைந்துவழங்கு மாத லின் அது இங்குக் காரமென முதனீண்டுவந்ததெனினும் இழுக்காது. 'வீசுபட காரம்' என்ற பாடங் கொள்ளின், வீசுபடு அகாரம் என்று பிரிந்து இனிது பொருள்படும். ஏற்றசொல் வருவித்து முடிக்கப்பட்டது; அன்றி, இச்செய் யுளினீற்றிலுள்ள 'காரம்' என்ற பால்பகா அஃறிணைப்பெயரை முந்தியசெய் யுளில்வந்த 'பண்ப', 'நின்ற' என்ற முற்றுக்களுக்கு எழுவாயாகக்கொண்டு இரண்டுசெய்யுள்களையும் குளகமாக முடிப்பினுமாம். (௩)

## வேறு.

௪. பஞ்சியூட்டியபாட்டிசைக்கிண்கிணிப்பதுமஞ்
செஞ்செவிச்செழும்பவளத்தின்கொழுஞ்சுடர்சிதறி

மஞ்சினஞ்சன நிறமறைத்தரக்கியர்வடித்த
வஞ்சிலோதியோடுவமையவவர்க்குறுமுவமை.

(இ - ள்.) பஞ்சி ஊட்டிய - செம்பஞ்சுக்குழம்பு ஊட்டப்பெற்றவையும், பாட்டு இசை கிண்கிணி - இசைப்பாட்டுப்போலினிய ஒலியையுடைய கிங்கிணியென்னும் ஆபரணத்தை யணிந்தவையுமான, பதுமம் - செந்தாமரை மலர்போன்ற (இந்நகரத்து மாடமாளிகைகளிலுள்ள இராக்கதமாதர்களது) பாதங்கள், செம் செவி செழும் பவளத்தின் கொழுஞ் சுடர் சிதறி - செவ்வையான அழகையுடைய செழுமையான பவழம்போன்ற விரல்களின்மிகுதியான காந்தியை வீசி, மஞ்சின் அஞ்சனம் நிறம் மறைத்து - மேகங்களின் கருநிறத்தைப்போக்கிச் செந்நிறமாக்குதலால்,—அவர்க்கு உறும் உவமை - அவ்வரக்கியர்க்கு (மேனிநிறத்தில் இயற்கையாய்) ஏற்ற ஒப்புமையாகின்ற அந்தக்காள மேகங்கள்,—அரக்கியர் வடித்த அம் சில் ஓதியோடு உவமைய - அந்தஅரக்க மகளிர்களின் சிறந்த அழகிய வட்டமான ஆபரணத்தையணிந்த, கூந்தலோடு ஒப்பாவன; (எ - று.)

இயல்பில் மிக்ககருநிறமுடைமையால் அரக்கியர்க்கு மேனிநிறத்திலொப்புமையாகின்ற காளமேகங்கள், அவர்கள் இந்நகரத்துஉபரிகைகளி லுலாவும்போது அவர்களுடைய செம்பஞ்சுக்குழம்பூட்டப்பெற்ற செந்தாமரைமலர் போலச்சிவந்த கால்களிலமைந்த பவழத்துண்டுபோன்றவிரல்களினது செந்நிறவொளி வீசுதலால் தமதுகருநிறநீ மறைக்கப்பட்டுச் செந்நிறம்பூண்டு அவ்விராக்கதமாதரது செம்பட்ட மயிரோடொப்பாயின வென்பதாம். கால்களிலூட்டிய செம்பஞ்சின்செம்மையை மேகங்கள்பெற்றதாகக் கூறியது-பிறிதின்குணம்பெறுலணி. இராக்கதமாதர்களுடைய கால்விரல்களின் செந்நிறமிகுதியை வருணித்த இதில், அந்நகரத்துஉபரிகைகள் மேகமண்டலத்தையளாவி உயர்ந்துள்ளன வென்பது பெறப்படுதலும் காண்க. செந்தாமரைமலர் போன்ற பாதங்களை 'பதுமம்' எனவும், திரண்டபவழத்துண்டுபோன்ற விரல்களை 'பவளம்' எனவும் உபமேயத்தை உபமானமாகவே சொன்னது, உருவகவுயர்வுநவிற்சியணி- 'பஞ்சியூட்டிய,' 'பாட்டிசைக்கிண்கிணி' என்ற அடைமொழிகள், பதுமமென்றதன் பொருளை விளக்கின. பாட்டிசைக்கிண்கிணிப் பதுமம் - (கீதத்தோடொத்து நாட்டியஞ்செய்கின்றபொழுது) அப்பாடலின் அமைப்புக்கேற்ப ஒலித்தலையுடைய சதங்கைகளைத்தரித்த தாமரைமலர் போன்ற பாதங்க ளெனினுமாம்; "பதங்களிற் றண்ணுமை பாணிபண்ணுற, விதங்களின் விதிமுறை சதிமிதிப்பவர், மதங்கிய ரச்சதி வகுத்துக்காட்டுவ, சதங்கைகள்" என்று பாலகாண்டத்தில் அயோத்திமாநகரவருணனையில் வந்தமை காண்க. 'பாடமைகிண்கிணி' என்பதும் பாடம்.

பஞ்சியெனினும், பஞ்செனினும் ஒக்கும். கிங்கிணீ என்ற வடசொல்லுக்கு - கிஞ்சித்து [சிறிது] ஒலிப்பது என்று காரணப்பொருள் கூறுவர் அன்றி, கிண்கிண் என்று ஒலிப்பது கிண்கிணியெனக் காரணப்பெயராகவும் கொள்ளலாம். பவளத்தின்கொழுஞ்சுடரைச்சிதறுதற்குப் பதுமம் வினைமுதல். 'பதுமச்செஞ்செவி' என்ற பாடத்திற்கு, பாதபதுமங்களிலுள்ள விரற்பவ

ளங்களின் மிக்கவொளியானது வீசியென்க. அஞ்சனநிறம் - மைபோன்ற நிறம்; எனவே, கருமையாயிற்று. வடித்தசில் - பலஅணிகலங்களுள் தேர்ந்தெடுத்தணிந்த வட்டமாகிய முடியணி; சூடாமணி. ஓதி - மகளிரின் தலைமயிர். வடித்தஓதி என்றெடுத்து, வாரிவிட்ட கூந்தலெனினுமாம்.

இதுமுதற் பதினைந்துகவிகள் - முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் மாச்சீர்களும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய நெடிலடி நான்குகொண்ட கலிநிலைத்துறைகள். (௪)

௫. நானநாண்மலர்க்கற்பகநறுவிரைநாறப்
பானம்வாயுறவெறுத்ததாளாறுடைப்பறவை
தேனவாவினிரைச்செழுங்கழுநீர்த்துயில்செய்ய
வானயாறுதம்மரமியத்தலந்தொறுமடுத்த.

(இ - ள்.) நானம் கஸ்தூரிவாசனையுள்ள, நாள் - அன்றுமலர்ந்த [புதிய], கற்பகம் மலர் - கற்பகவிருக்ஷத்தினமலர்களின், நறு விரை - திவ்வியபரிமளம், நாற - (தமதுஉடம்பில்) வீசவும், பானம் வாய் உற - (அக்கற்பகமலர்களிற்) குடித்த தேன் (தேக்கெறிந்து) தம்வாயிற் பொருந்தவும், வெறுத்த - (கற்பகமலர்களின் நறுமணத்தையும் தேனையும் மிகுதியாகநுகர்ந்து தெவிட்டி அவற்றினிடம்) வெறுப்புக்கொண்ட, தாள் ஆறு உடை பறவை - ஆறுகால்களையுடைய பறவைகளாகிய வண்டுகள், தேன் அவா - வேற்றுத்தேனினிடத்து ஆசையினால், விரை செழுங் கழுநீர் துயில் செய்ய - நறுமணமுள்ள செழுமையான செங்கழுநீர்ப்பூவில்வந்து இனிதுதங்க, வானயாறு - ஆகாயகங்காநதியானது, தம் அரமியம் தலம் தொறும் மடுத்த - இந்நகரத்துமாளிகைகளின் நிலாமுற்றங்களிற் பாய்ந்துகொண்டிருக்கின்றன; (எ - று.)

இந்நகரத்து மாளிகைகளின் மிக்கவுயர்வைக் கருதுவார், அவற்றின்நிலாமுற்றங்களில் ஆகாயகங்காநதி பாய்கின்றதென்றார். தேவலோகத்துக்கற்பகதருவினதுமலர்களின் பரிமளத்தையும் தேனையும் மிகுதியாக நுகர்ந்து தெவிட்டிய வண்டுகள் அக்கோட்டுப்பூவைவெறுத்து வேற்றினமான நீர்ப்பூவின் தேனையவாவி ஆகாயகங்காநதியிலுள்ள செங்கழுநீர்மலர்களிற்சேர்ந்து இனிது தங்குகின்றன வென, அவ்வானயாற்றுநீர்ப்பூக்களின் சிறப்புக்கூறியவாறும்.

தாளாறுடைப்பறவை—வடமொழியில் 'ஷட்பதம்' எனவும், தென்மொழியில் 'அறுகால்' எனவும் படும். 'கழுநீர்துயில்செய்ய' என்பதற்கு - செங்கழுநீர்ப்பூவில் (தேனைமிகுதியாகக்குடித்து அக்குடிமயக்கத்தால்) தூங்குதலைச்செய்யவென்று பொருள்கொள்ளினுமாம். ஹர்ம்யம் என்ற வடசொல், செல்வர்கள்மாளிகையைக் குறிக்கும்; அது, தமிழில் அரமியமென விகாரப்பட்டு, வீட்டின்மேலுலாவும்வெளியாகிய நிலாமுற்றத்துக்கு வழங்குகின்றது. மடுத்த - மடுத்தது - தொகுத்தல்; இனி, இதனைப் பலவின்பால் முற்றாகவே கொண்டு, தமதுநிலாமுற்றங்களில் வானயாறுபாயப்பெற்றன (இந்நகரத்து மாளிகைகள்) என்று எழுவாய் வருவித்துமுடித்தல், சேர். 'அடுத்த' என்று எடுத்தல், மோனைத்தொடைக்கு மூரணும். இனி, மாடங்கள தோறும் வரிசையாக மேல்காட்டப்பெற்றுள்ள கொடிகளின் வெள்ளைச்சீலைகட்கு ஆகாய

கங்காநதியின்பெருக்கை உவமைகொண்டு, வானயாறு தமது நிலாமுற்றந் தோறும் பாயப்பெற்றன (இந்நகரத்துமாளிகைகள்) என்றதாகவும் உரைகூற லாம்; "புகலுகின்றமந்தாகினித்தரங்கமேபோல, வகல்விசும்பிடை மிடைவன நெடுங்கொடியாடை" என்ற வில்லிபுத்தூரார் பாரதத்தைக் காண்க.

'விரைநான்ற' என்றும், 'தேனவாம்விரைச்செங்கழுநீர்' என்றும், 'அர மியத்தலத்தொடேம்படுப்ப' என்றும் பாடம். (௫)

௬. குழலும்வீணையும்யாழுமென்றினையனகுழைய
மழலைமென்மொழிகிளிக்கிருந்தளிக்கின்றமகளிர்
சுழலுநன்னெடுந்தடமணிச்சுவர்தொறுந்துவன்று
நிழலுந்தம்மையுமெய்ம்மைநின்றறிவருநிலைய.

(இ - ள்.) குழலும் வீணையும் யாழும் என்று இனையன குழைய - புல்லாங்குழலும் வீணையும் யாழும் என்று இத்தன்மையனவான இன்னிசைக் கருவிகளின் ஒலியும் தோற்கும்படி, மெல் மழலை மொழி - மிகவும்இனிமை யான (தங்கள்) மழலைச்சொற்களை, இருந்து கிளிக்கு அளிக்கின்ற - மாளிகை களிலேயிருந்து (தாம்வளர்க்குங்) கிளிப்பிள்ளைகட்கு அன்போடுகற்றுக்கொடுக் கின்ற, மகளிர் - மாதர்களினுடைய, சுழலும் நல் நெடுந் தட மணி சுவர் தொறும் துவன்றும் நிழலும் - சுற்றிலுமுள்ள அழகிய உயர்ந்த பெரியஇரத் தினமயமான சுவர்களிலெல்லாம் தெரிகின்ற பிரதிபிம்பங்களையும், தம்மை யும் - அம்மகளிரையும், நின்று மெய்ம்மை அறிவு அரு - (பார்த்துத்) துணி வாக உண்மையுணர்தற்கு அருமையான, நிலைய - நிலைமையையுடையன, (இந் நகரத்து மாளிகைகள்); (எ - று.)

இந்நகரத்துமாளிகைகளின் சுவர்களெல்லாம் இரத்தினமயமானவை யாதலால், அவற்றில் மகளிருருவம் பிரதிபலிக்கின்றபோது காண்பவர் இன் னது மகளிரது நிஜரூபமென்றும இன்னது அதன் பிரதிபிம்பமென்றும் உண்மையறிதற்கரிதாகின்றதென்க. இங்கு, இயற்கைமகளிருருவத்துக்கும் மணிகளில்தோன்றும் பிரதிபிம்பமாகிய மகளிருருவத்துக்கும் ஒற்றுமைநயத் தாற் பேதந்தோன்றாமையைக் கூறியது - மறைவணி; இது, வடமொழியில் மீலிதாலங்காரமெனப்படும். முன்னிரண்டடியில், அம்மகளிரது சொற்களின் இனிமைமிகுதி தோன்றும். 'அளிக்கின்ற' என்ற சொல்லின் ஆற்றலால், கிளிகொஞ்சிப்பேசும்பேச்சினும் இம்மகளிரது மழலைச்சொல் மிகஇனிதென் பது போதரும்.

யாழ் - வீணையின் சாதிபேதம். குழல், வீணை, யாழ் என்பன - அவற் றின் ஒலிக்கு முதலாகுபெயர்; "குழலினிதியாழினிதென்ப" என்றவிடத்துப் போல. மழலை நிரம்பாமென்சொல்; இது, குதலையென்றும் கூறப்படும். சீவகசிந்தாமணியில் "மெய்பெறுவெழுத்துயிர்க்குமழலைவா யின்முறுவல், தையலாள்" என்றவிடத்து ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'மழலை எக்காலத்திற் குங் கூறுப' என்றதனால், மகளிரது குழவிப்பருவத்து இளஞ்சொல்லையே யன்றி அவரது எப்பருவத்துச்சொல்லையும் மழலையென்றல் மரபென உணர்க.

எற்றவெழுவாய் வருவித்து முடிக்கப்பட்டது. 'மெய்ம்மைகண்டறிவருநிலைய' என்பதும் பாடம். (சு)

ஏ. இனையமாடங்களிந்திரற்கமைவரவெடுத்த
மனையின்மாட்சியவென்னினச்சொல்லுமாசுண்ணு
மனையதாமெனினரக்கர்தந்திருவுக்குமளவை
நினையலாமன்றியுவமையுமன்னதாநிற்கும்.

(இ - ள்.) இனைய மாடங்கள் - இத்தன்மையனவான (இந்நகரத்து) வீடுகள், இந்திரற்கு அமைவர எடுத்த மனையின் மாட்சிய - தேவேந்திரன் வசித்தற்குத் தக்கஇடமாக அமையும்படி உயர்த்திக்கட்டிய அரண்மனைபோன்ற சிறப்பையுடையன, என்னின் - என்றுஒப்புமைகூறினால், அ சொல்லும் மாசு உண்ணும் - அங்ஙனஞ்சொல்லுகின்ற சொல்லும் (பொருளோடுபொருந்தாதாதலாற்) குற்றமடையும்; (இங்ஙனமன்றி), அனையது ஆம் எனின் - அங்ஙனம் இவ்வீடுகட்குத் தேவேந்திரனரண்மனையை ஒப்புமைகூறுவது சரிதானென்றால், அரக்கர்தம் திருவுக்கும் அளவை நினையல் ஆம் - இராக்கதர்களுடைய ஐசுவரியத்துக்கும் ஓரளவை எண்ணுதல்கூடும்: அன்றி - அதுமாத்திரமேயல்லாமல், உவமையும் - (அந்தஐசுவரியத்துக்கு) ஒப்புமையும், அன்னது ஆ நிற்கும் - அந்தன்மையதாகநிற்கும் [இந்திரனது பரமைசுவரிய மென்னலாம்படி நிற்குமென்றபடி]; (எ - று.)

இந்த்ரன்என்ற வடமொழிப்பெயர், பரமைசுவரியமுடையவனென்று பொருள்படும். இராக்கதர்கள்வசிக்கின்ற இலங்கைநகரத்து மாடமாளிகைகள் தேவேந்திரனது அரண்மனை போல்வனவென ஒப்புமைகூறினால் அச்சொற்றொடர் பொருட்குஏலாதாதலால் வெற்றெனத்தொடுத்தலென்னுங் குற்றத்திற்கிடமாகிநிற்குமென்பது,முன்னிரண்டடியின் தேர்ந்தபொருள். (இதனை, ஆரணியகாண்டத்தில் "வில்லொக்குநுதலென்றாலும் வேலொக்கும்விழியென்றாலும், பல்லொக்குமுத்தென்றாலும் பவளத்தையிதழென்றாலுஞ், சொல்லொக்கும்பொருளொவ்வாவாற் சொல்லலாமுவமையுண்டோ, நெல்லொக்கும் புல்லென்றாலு நேருரைத்தாகவற்றே" என்றாற்போலக் கொள்க.) இங்ஙனமன்றி, மாடங்கட்குக்கூறிய இந்திரனரண்மனையொப்புமை பொருந்துமென்றால், அம்மாளிகைகட்குஉடையவர்களாகிய அரக்கர்களது செல்வத்துக்கும் ஓர்அளவைஎண்ணலாம்; அன்றியும் அவ்வரக்கர் செல்வத்துக்கு ஒப்புமையும் இந்திரனதுஐசுவரியத்தைக் கூறலாகும் என்றது - அரக்கரதுசெல்வம் ஓரளவுபடாதென்பதையும், இந்திரனதுஐசுவரியம் ஓரளவிற்பட்டதென உபநிஷத்தினால்விளங்குவதையும் உட்கொண்டு கூறியதென்க. அரக்கர்திருவுக்கு அளவில்லாமையால் அதற்கு ஓர் ஒப்புமையும் அமையாது; அவர்கள் மாளிகைகட்கும் ஒப்புமையமையாது என்பது, இச்செய்யுளின் தாற்பரியம். இங்குப் பிரசித்தமாய் உபமானமாகக் கூறப்படுகிற தேவலோகத்து மனை, செல்வம் இவற்றினிடத்து உபமானத்தன்மையை மறுத்துக்கூறியது - எதிர்நிலையணி.

'அமைவுறவெடுத்துவனையுமாட்சிய' என்று பிரதிபேதம். (எ)

அ. மணிகளெத் துணைபெரியவுமா றிருமார்பி
னணியுங்காசினுக்ககன் றனவுளவெனலரிதாற்
றிணியுநன்னகர்த்திருமனைதெய்வமாத்தச்சன்
றுணிவின் வந்தனன்றொட்டழகிழைத்தவத்தொழில்கள்.

(இ - ள்.) மணிகள் எத் துணை பெரியவும் - எவ்வளவுசிறந்த இரத்தினங்களும், மால் திருமார்பின் அணியும் காசினுக்கு அகன்றன உள எனல் அரிது ஆல் - திருமால் தனது திருமார்பில்தரித்துள்ள (கௌஸ்துப) ரத்தினத்தினும் மேம்பட்டவையாகவுள்ளன வென்று சொல்லப்படுத லில்லையன்றோ; மா தெய்வத்தச்சன் - சிறந்த தேவசிற்பியான விச்சுவகன்மன், வந்தனன் - வந்து, துணிவின் - (மிகச்சிறந்ததொரு நகரத்தைச் செய்வே னென்ற) உறுதியுடனே, தொட்டு - தன் கைகளால் தொட்டு, அழகு தொழில்கள் இழைத்த - அழகியதாக வேலைத்திறங்களமைக்கப்பெற்றனவான, திணியும் நல் நகர் திருமனை - வலிமைகொண்ட அழகிய இவ்விலங்காபுரியி லுள்ள சிறந்த வீடுகளும், அவ் - அத்தன்மையனவேயாம் [தம்மினும்மேம்பட்டவையுளவெனலரிதாம்படி யிருந்தன வென்றபடி]; (எ - று.)— ஆல் - தேற்றம்.

உலகத்தில் எவ்வளவுசிறந்த இரத்தினங்க ளிருந்தாலும் அவை திருமால் மார்பில்தரித்துள்ள ஸ்ரீகௌஸ்துபமென்னுந் திவ்யரத்தினத்திலும் மேம்பட்டனவாகா வென்பது பிரசித்தம்; * அங்ஙனமே, மற்றைநகரங்களில் எவ்வளவு சிறந்த மாடமாளிகைகளிருந்தாலும் அவையெல்லாம் இவ்விலங்காபுரியிலே சிறந்ததெய்வத்தச்சனான விச்சுவகருமனால் தன்கைத்திறங்கொண்டு அழகியவேலைப்பாடுகளமைக்கப்பெற்ற சிறந்த மாளிகைகளினும் மேம்பட்டனவாகா என்பது, இதன்கருத்து; உவமையணி.

அவ் + தொழில்கள் = அத்தொழில்கள்: "வேற்றுமையல்வழி ஆய்தமாகும்" என்ற தொல்காப்பியவிதிப்படி சுட்டுப்பெயரீற்று வகரமெய் வலிவர ஆய்தமாகத் திரியத்தக்கதாயினும், அங்ஙனந்திரியாது வருமொழிமுதலில் மெல்லெழுத்துவந்தாற்போலவே வல்லெழுத்துவந்தபோதும் அவ்வெழுத்தாகத் திரிந்த இதனை, அச்சூத்திரத்து உரையிற்கோடலென்ற உத்தியினாலாவது, புள்ளிமயங்கியற்புறனடைகொண்டாவது முடித்துக்கொள்க. இங்ஙனங்கொள்ளாவிடின், இச்செய்யுளுக்குப் பயனிலையின்றாகிப் பொருளும் முடியும் இனிதின் அமையாமை உணர்க. அவ் - வகரமெய்யீற்றுச் * சுட்டடிப்பலவின்பாற்பெயர்; இது, இங்கு உவமவாசகமாய்நின்றது. திருமார்பு - திருமகளைத் தன்னிடத்தே கொண்ட மார்பு எனினுமாம். 'காசினுக்கு' என்

* "காஞ்சியிலவ்வரையனைத்துங் காயாவண்ணன்கடைந்தெடுத்த கவுத்துவத்தின் சீர்மைக்கொவ்வா, காசிமுதலாகியநன்னகரியெல்லாங் கார்மேனியருளாளர்கச்சிக்கொவ்வா, மாசில் மனந்தெளிமுனிவர்வகுத்ததெல்லா மாலுகந்தவாசிரியர்வார்த்தைக்கொவ்வா, வாசியறிந்திவையுரைத்தோம்வையத்துள்ளீர் வைப்பாகவிவைகொண்டுமகிழ்மினீரே."—தேசிகப்ரபந்தம் - அம்ருதாஸ்வாதினீ - கக.

பதில், நான்கனுருபு எல்லைப்பொருளில் வந்தது; வேற்றுமைமயக்கம். இனி யும்மனை என்று எடுத்து, நெருங்கியமாளிகை யென்றலு மொன்று. தச்சன் - தக்ஷனென்ற வடசொல்லின் விகாரம். தெய்வத்தச்சனான விசுவகர்மா பூர்வத் தில் இந்திரனுக்காக மிக்கசிறப்பாய்நிருமித்த இலங்காபுரியிலே மாலியவான் முதலிய பூர்விகராக்ஷசர்கள் குடியேற, அவர்களைத் திருமால் வென்றுதுரத்திய பின்பு, அந்நகரத்திலே குபேரன் வசிக்க, பிறகு அவனை அகற்றிவிட்டு இரா வணன் அரக்கர்களுடனே அதிற்குடியேறினனென அறிக. (அ)

[இலங்காபுரியின்பரப்பையும் அதிலுள்ள குதிரைச்சேனைமிகுதியையும் கொண்டாடுதல்.]

௯. வாழுமன்னுயிர்யாவையுமொருவழிவாழ
ஆழிநாயகன்றிருவயிறொத்துளதிவ்வூ
ராழியண்டத்தினருக்கன்றனலங்குதேர்ப்புரவி
யேழுமல்லனவீண்டுளகுதிரையுமெல்லாம்.

(இ - ள்.) இ ஊர் - இந்த இலங்காபுரியானது, வாழும் மன் உயிர் யாவை யும் ஒருவழி வாழ - (உலகத்தில்) வாழ்கின்ற நிலைபெற்ற பிராணிகளெல்லாம் ஒருங்கு (தன்னிடத்திலே) இனிது வசிக்கும்படி [மிகவிசாலமாய்], ஆழி நாய கன் திரு வயிறு ஒத்து உளது - உலகத்துக்கு இறைவனான திருமாலினது திருவயிற்றைப் போன்றுள்ளது; ஆழி அண்டத்தின் - வட்டவடிவமான அண்டம்முழுவதிலுமுள்ள, அருக்கன் தன் அலங்கு தேர் புரவி ஏழும் அல்லன குதிரையும் எல்லாம் - சூரியனது விளங்குகின்ற தேரிற்பூட்டிய குதிரைக ளேழுமல்லாதனவான குதிரைகளனைத்தும், ஈண்டு உள - இவ்விலங்காபுரி யிலே யுள்ளன; (எ - று.)

உலகம்முழுவதிலும் பொருந்திவாழ்கின்ற சகலபிராணிகளும் ஒருங்கு தன்னிடத்தில்வாழும்படி அதிவிசாலமாயிருத்தலால், இவ்விலங்காபுரி, பிர ளயகாலத்திற் சகலசராசரங்களையும் இனிதுகொள்கின்ற திருமாலின் திரு வயிறு போன்றுள்ளது என்பது, முன்னிரண்டடியின் பொருள்; பாலகாண் டத்தில் அயோத்திமாநகரவருணனையில் "ஊழியினிறுதியுறையுளோ யாதென வுரைப்பாம்" என்றது காண்க. அண்டம்முழுவதிலுமுள்ள குதிரைகளுள் சூரியனது தேரிற்பூட்டப்பட்டுள்ள எழுகுதிரைகள் தவிர மற்றைக்குதிரைக ளெல்லாம் இங்கு உள்ளன வென, அந்நகரத்துக்குதிரைச்சேனைகளின் மிகுதி யைக் கூறியவாறும். ஒற்றைச்சக்கரமுடைய சூரியனதுதேர்க்குக் குதிரைகள் ஏழென்றும், காயத்ரீ உஷ்ணிக் அநுஷ்டுப் ப்ருஹதி பங்க்தி த்ரிஷ்டுப் ஜகதி என்ற ஏழுசந்தசுகளுமே அக்குதிரைகளாக அமைந்துள்ளனவாதலால் அவை அப்பெயர்பெறு மென்றும் நூல்கள் கூறும். 'மன்னுயிர்யாவையும்' என்றது, பெரும்பான்மைபற்றியதா மென்பதை, பின்னிரண்டடிகளில் உதாரணமுகத் தால் விளக்கின ரென்க. ஓய்வு ஒழிவு இன்றிச் சிரமம்பாராட்டாமல் எப்பொ ழுதும் ஒருபடியாக இடைவிடாது விரைந்தோடும் வன்மை, அக்குதிரைகட் குச் சிறப்பு.

ஊழிநாயகன் - காலத்துக்குத் தலைவனெனினுமாம்; அழியாமுதல்வனென்பது கருத்து. ஆழியண்டம் - அண்டகோளம், உலகவுருண்டை. அலங்குதேர் - ஒருகணமேனும்நிற்றலின்றி இடைவிடாமல் எப்பொழுதுஞ் சஞ்சரிக்கின்ற தேர் என்றலுமாம். இச்செய்யுளின் முதலடிக்கு—மன் உயிர் யாவையும் - (உலகத்தில்) நிலைபெறுதலையுடைய சகலபிராணிகளும், ஒருவழி வாழும் - இந்தஓரிடத்தில்தானே அடங்கிவாழும்: வாழ - இவ்வாறுவாழ்தற்கு இடமாதலால் என்று பதவுரை கூறுவாருமுளர்.

இச்செய்யுள் "போரியைந்தன" என்று தொடங்கும் பதினோராம்பாடலுக்குப் பின் னிருத்தல் நலம்: அவ்வாறு இருப்பின், சதுரங்கங்களுள் யானை தேர் குதிரை என்ற மூன்றுவகைச்சேனையையும் முறைபடக் கூறியதாகும். (கூ)

[அந்நகரத்தின் செல்வஅதிகாரங்களைக் கொண்டாடுதல்.]

கo. மரமடங்கலுங்கற்பகமனையெலாங்கனக
மரமடந்தையர்சிலதியராக்கியர்க்கமர
ருரமடங்கிவந்துழையராயுழல்பவரொருவர்
தரமடங்குவதன்றிதுதவஞ்செய்ததவமால்.

(இ - ள்.) மரம் அடங்கலும் - (இந்நகரத்திலுள்ள) மரங்களெல்லாம், கற்பகம் - (வேண்டியவற்றையளிக்குஞ் சிறப்பினாற்) கற்பகவிருக்ஷங்களேயாம்; மனை எலாம் - (இந்நகரத்து) மாளிகைகளெல்லாம், கனகம் - பொன்மயமாயுள்ளன: அரக்கியர்க்கு - (இந்நகரத்தில்வாழ்கின்ற) இராக்கதமாதர்கட்கு, அரமடந்தையர் சிலதியர் - (தேவலோகத்து) அப்ஸரஸ்த்ரீகள் குற்றேவல் செய்யும் மகளிராயுள்ளார்; அமரர் - தேவர்கள், உரம் அடங்கிவந்து உழையர் ஆய் உழல்பவர் - தங்கள்வலிமை யொடுங்கிவந்து (இந்நகரத்து அரக்கர்கட்குக்) குற்றேவல்செய்பவராய் இங்குமங்கும் ஓடித்திரிகின்றனர்; இது - இவ்வளவுசிறப்பும், ஒருவர் தரம் அடங்குவது அன்று - ஒருவர்க்கு உரியதாக இயல்பிற் கூடுவதன்று; (ஆகவே இவ்வகைச்சிறப்பு), தவம் செய்த தவம் - (இராவணன்) தவஞ்செய்து பெற்ற பயனாகும்; (எ - று.)—ஆல் - ஈற்றசை; தேற்றமுமாம்.

கற்பகம் அடங்கலும் மரம் என்று எடுத்து, தேவலோகத்துக் கற்பகதருக்களெல்லாம் இந்நகரத்துமரங்களாயுள்ளன வென்றலுமாம்; அவற்றை இராவணன் தனது ஆற்றலாற் பெயர்த்துக் கொணர்ந்து இங்கு வைத்துள்ளானென்க. மேல் திருவடிதொழுதபடலத்தில் "வேலையுளிலங்கை யென்னும் விரிநக ரொருசார் விண்டோய், காலையு மாலைதானு மில்லதோர் கனகக்கற்பச், சோலையங்கதனில்" என வருதலும் காண்க. அப்ஸரமடந்தையர், அமரமடந்தையர், அரம்பைமடந்தையர் என்றவற்றில் ஏதேனுமொன்று அரமடந்தையர் என்று விகாரப்பட்டதெனக் கொள்க. உழையர் - அருகிலிருந்து ஏவல்செய்பவர். 'தவம்' என்ற சொல் இரண்டனுள், பிந்தியது - ஆகுபெயராய், பயனையுணர்த்திற்று. இனி, 'தவம்செய்த தவம்' என்பதற்கு - தீயினிடையேயிருந்து செய்த தவத்தினாலாகுமென்றும் பொருள்கொள்ளலாம்; இராவணன் ஆதி

யிற் பஞ்சாக்கினிமத்தியில் நின்று தவமியற்றியமை உணர்க. அன்றி, தவம் தான்செய்தவொருதவமா மென்றலு மொன்று; தவத்துக்குமேன்மையளிப்ப தென்க; மேல் திருவடிதொழுதபடலத்தில் "தவஞ்செய்ததவமாந் தையல்" என வருகின்றது. (௯0)

[யானைச்சேனை தேர்ச்சேனை மிகுதியைக் கொண்டாடுதல்.]

கக. போரியைந்தனதோற்றவென்றிகழ்தலிற்புறம்போய்
நேரியன்றவன்றிசைதொறுநின்றமாநிற்க
வாரியந்தனியைங்கரக்களிறுமோராழிச்
சூரியன்றனித்தேருமேயிந்நகர்தொகாத.

(இ-ள்.) போர் இயைந்தன தோற்ற என்று இகழ்தலின் - (முன்பு தன்னுடன்) போர்செய்தற்கு அமைந்தனவாய் (அங்ஙனஞ்செய்த போரில்) தோல்வியடைந்தன வென்று (இராவணன்) இகழ்ந்துவிட்டதனால், புறம் போய் நேர் இயன்ற வல் திசை தொறும் நின்ற - தூரத்தேசென்று நேரி தாய்ப்பொருந்திய வலிய எட்டுத்திசையெல்லைகளிலும் நின்ற, மா - யானைகள், நிற்க - கிடக்க: ஆரியம் தனி ஐங்கரம் களிறும் - மேன்மையான ஒப்பற்ற ஐந்துகைகளையுடைய விநாயகக்கடவுளாகிய யானையும், ஓர் ஆழி சூரியன் தனி தேருமே - ஒற்றைச்சக்கரத்தையுடைய ஒப்பற்ற சூரியனது தேரும் ஆகிய இவையே, இ நகர் தொகாத - இவ்விலங்காபுரியில் வந்து சேராதவை; (எ-று.)

கீழ் கூ - ஆஞ் செய்யுளில் 'பிரபஞ்சத்திலுள்ள குதிரைகளுட் சூரியன் தேர்க்குதிரைகளொழிலனைவெல்லாம் இந்நகரத்திலுள்ளன' என்று குதிரைச்சேனைமிகுதியைக் கூறினாற்போல, இச்செய்யுளில் பிரபஞ்சத்திலுள்ள யானைகளுட் கணபதியாகிய ஐங்கரக்களிறும் பிரபஞ்சத்திலுள்ள தேர்களுட் சூரியன்தேருமல்லாத யானைகள் தேர்க ளனைத்தும் இந்நகரத்திலுள்ளன வென்று, அவ்விடத்து யானைச்சேனை தேர்ச்சேனைகளின் மிகுதியைக் கூறினார். அங்ஙனங் கூறுமிடத்து, உலகத்தின்கீழ் எட்டுத்திசையெல்லைகளிலும் நின்று அதனைத் தாங்குகின்ற அஷ்டதிக்கஜங்கள் அவையவைநிற்கின்றவிடங்களில் ஆதாரமாய்நின்றுகொண்டிருந்தனவேயன்றி இங்குவரவில்லையேயென்ற ஆசங்கையைத் தாமேகொண்டு, அவை முன்பு இராவணனுடன் போர்செய்து தோல்வியுற்றனவாதலால் அவற்றை இராவணன் தனது சேனாங்கமாக நகரி னுட்கொள்ள விரும்பாது உபேக்ஷைசெய்து தள்ளிவிட்டமைபற்றியே அவை ஆங்காங்கு நின்றநிலையில்நிற்கின்றனவென்று அதற்குச்சமாதானம் கற்பித்துக் கூறினார்; ஏதுத்தற்குறிப்பேற்றவணி. 'மாநிற்க' என்றது, அந்தயானைகள் கிடக்கவென அலக்ஷ்யமாய்க் கூறியவாறு.

'மா' என்ற விலங்கின்பொதுப்பெயர், இங்குச் சிறப்பாய் யானையை உணர்த்திற்று. 'நிற்க' என்பது வியங்கோள்வினைமுற்றாகவேனும், செயவெனெச்சமாகவேனும் கொள்ளத்தக்கது. ஆர்யம் - வடசொல்; உயர்குலத்திற் பிறந்ததென்றும், நல்லொழுக்கமுடையதென்றும், சாரத்தக்கதென்றும் பொருள்படும். விநாயகர்க்கு இயல்பாகியநான்குகைகளோடு யானைவடிவத்துக்கு உரியதான

துதிக்கையுமாக ஐந்துகரங்கள் காண்க. சூரியனதுதேர் ஸம்வத்ஸரரூபமான ஒற்றைச்சக்கரத்தை யுடையதென்று நூல்கள்கூறும். இந்த யானை தேர்களின் மிக்கசிறப்புத் தோன்ற, இவையொவ்வொன்றுக்கும் 'தனி' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. ஆழி - வட்டவடிவமானது. 'புறம்போய் நேரியன்ற வல்திசைதொறும்நின்ற' என்பதற்கு - தோல்வியுற்ற தாம் யாவர்கண்ணுக்குமெட்டாதபடி ஒதுங்கிவசித்தற்கு ஏற்றனவாயமைந்த வலியதிசைகளின் கடையெல்லைகளில் நின்றவென்று உரைப்பினும் அமையும்.

'போரியன்றன' என்றும், 'ஆரியன்றவன்' என்றும் - சிலபிரதிகள். (கக)

[இராவணன் தேவர்களை யேவல்கொள்ளுகிற சிறப்பைக் கொண்டாடுதல்.]

கஉ. தேவரென்பவர்யாருமித்திருநகர்க்கிறைவற்
கேவல்செய்கிலாரேவரேயெண்வகையுருவின்
மூவர்தம்மினுமதிகனென்றாலவன்முயலுந
தாவின்மாதவமல்லதுபிறிதொன்றுதருமோ.

(இ - ள்.) தேவர் என்பவர் யாரும் - தேவர்களென்றுசொல்லப்படுகின்றவர்களனைவருள்ளும், இ திரு நகர்க்கு இறைவற்கு ஏவல்செய்கிலார் ஏவரே - இந்தச் சிறந்த இலங்கைநகரத்துக்குத் தலைவனான இராவணனுக்கு ஊழியஞ்செய்யாதவர் யாவர்தாம்? [எவருமில்லை யென்றபடி]; எண்வகை உருவின் மூவர்தம்மினும் அதிகன் என்றால் - எட்டுவகையான வடிவத்தையுடைய திரிமூர்த்திகளினும் மேம்பட்டவனாய் விளங்குகின்றனன் (அவ்விராவணன்) என்று சொன்னால், அவன் முயலும் தா இல் மா தவம் அல்லது பிறிது ஒன்று தருமோ - அவன் ஊக்கத்தோடுசெய்த அழிவற்ற பெரியதவமே அவனுக்கு இவ்வகையான மிக்கசிறப்பைத்தந்ததல்லாமல் வேறொன்று (இவ்வகையாற்றலைத்) தரவல்லதாகுமோ? [ஆகாதென்றபடி]; (எ - று.)

தேவர்களனைவரும் தனக்கு ஏவல்செய்யப்பெற்றுத் தலைமைத்தேவர்களான திரிமூர்த்திகளினும் மேலானவனென்று உயர்த்திச்சொல்லும்படி மிக்கசிறப்புற்ற இராவணனது அரிய பெரிய தவத்தின் ஆற்றலைக் கொண்டாடியவாறாம். "ஒன்னார்த்தெறலு முவந்தாரையாக்கலும், எண்ணிற் றவத்தான் வரும்," "ஆற்றலையுளதுமாதவமதன்றியே, வீற்றுமொன்றுளதென விளம்பலாகுமோ," "தவந்தனின்மிக்கதொன்றில்லை தாவில்சீர்த், தவந்தனைநேர்வது தானுமில்லையால், தவந்தனினரியதொன்றில்லை சாற்றிடில், தவந்தனக்கொப்பது தவமதாகுமோ," "நீடுறுதவமேயன்றி வலியது பிறிதொன்றுண்டோ," "தவமேயன்றி நெடும்பொருள் பிறவுமுண்டோ" என்று தவத்தினது ஆற்றல் காண்க.

எண்வகையுரு - நிலம், நீர், தீ, காற்று, வானம் என்ற ஐம்பெரும்பூதங்களும், சூரியனும் சந்திரனுமாகிய இருசுடரும், யஜமானனும் என்ற அஷ்டமூர்த்தி; இந்தமூர்த்தங்களெட்டும் சிவபிரானுக்கு உரியனவெனச் சிறப்பாக நூல்களிற் கூறப்பட்டிருப்பினும் ஒற்றுமைநயம்பற்றி உபசாரவழக்கால் அவற்றை மற்றையிருமூர்த்திகளுக்கும் ஏற்றிக்கூறினர்; இங்ஙனம் திரிமூர்த்திகளை

அபேதமாகக்கொண்டு கூறுதல், ஒருமரபு. 'அநேகமூர்த்தி' களில் அஷ்டமூர்த்திகள் அடங்குதலும் காண்க. இனி, எண் - (யாவராலும்) எண்ணப்படுகின்ற [அல்லது நன்குமதிக்கப்படுகின்ற], வகை - பலவகைப்பட்ட, உருவின் - வடிவங்களையுடைய என்று பொருள்கொள்ளலுமாம்; இப்பொருளில், எண்வகை - வினைத்தொகை: முந்தியபொருளிற் பண்புத்தொகை. மூவர் - தொகைக்குறிப்பு.

'ஏவல்செய்பவரேவரும்', 'மூவர்தம்மினு மொருவனிவ்வுழையுளான் முயலின்' என்பன - பிரதிபேதம். (கஉ)

[அவ்விடத்திலுள்ள பலவகையோசைகளைப் பாராட்டுதல்.]

கா. தழங்குபேரியினார்கலிதகைநெடுங்களிறு
முழங்குமோதையுமூரிநீர்முழக்கொடுமுழங்குங்
கொழுங்குழற்புதுக்குதலையர் நூபுரக்குரலின்
வழங்குமப்பெருந் துழனிகள்வயின்றொறுமறையும்.

(இ - ள்.) தழங்கு பேரியின் ஆர் கலி - ஒலிக்கின்ற பேரிகை வாத்தியத்தினது நிறைந்த [மிகுதியான] ஓசையும், தகை நெடுங் களிறு முழங்கும் ஓதையும் - அழகிய பெரிய யானைகள் கர்ச்சிக்கின்ற ஓசையும், மூரி நீர் முழக்கொடு முழங்கும் - கடலின் ஆரவாரத்தோடு மாறுபட்டு ஒலிக்கும்; கொழுங் குழல் புது குதலையர் - செழுமையான புல்லாங்குழலினிசைபோலினிய புதுமையாகிய குதலைச்சொற்களையுடைய மகளிரது, நூபுரம் - காற்சிலம்பணிகளின், குரலின் - ஓசையினால், வழங்கும் அ பெருந் துழனிகள் வயின்தொறும் மறையும் - கீழ்க்கூறப்பட்ட (அந்தப்பேரிகைமுழக்கம் முதலிய) பெரியவோசைகள் இடந்தோறும் அடங்கிப்போம்; (எ - று.)

ஒவ்வோரிடத்தையும் வருணிக்கும்பொழுது, ஆங்காங்குப் பலவகையோசைகள் பொருந்தியுள்ளனவென்று காட்டுதல், மரபு. பேரி - முரசு; பறைப்பொதுவு மாம். வாத்தியகோஷமும் யானைகளின் பிளிறலும் கடலொலியினும் மிக்குள்ளன வென்பது, முந்தியவாக்கியத்தின் பொருள். மகளிர் நடக்கிறபொழுதும் நாட்டியஞ்செய்கிறபொழுதும் அவர்களின் காற்சிலம்புகள் ஒலிக்கின்ற வொலி கீழ்க்கூறிய மூவகையொலிகளினும் பெரிதாயிருக்கு மென்பது, பிந்திய வாக்கியத்தின் கருத்து. இச்செய்யுளில், மேன்மேலுயர்ச்சியணி காண்க. கலி, ஓதை, முழக்கு, குதலை, குரல், துழனி என ஒருபொருள்குறிக்கும் பலசொற்கள் அமைந்ததனால், பொருட்பின்வருநிலையணியு முண்டு. இலங்கை கடல் சூழ்ந்த தீவாதலால், மூரிநீர்முழக்கும் கூறப்பட்டது.

மூரிநீர் - பெரியநீர்; எனவே, கடலாயிற்று. பழையநீ ரெனினுமாம்; "நீரையே முதலிற் படைத்தனர் கடவுள்" என நூல்கள் ஓதுதலால். வலிய நீரென்றலும் அமையும்; உலகத்தை ஆக்கல் அளித்தல் அழித்தல் தொழில்கள் கடலுக்கு உள்ளன வாதலின். புதுக்குதலை - "பழகப்பழகப்பாலும்புளிக்கும்" என்றபடியன்றிக் கேட்குந்தோறும் புதுமையாகவேதோன்றுகின்ற குதலைச்சொல் எனினுமாம். 'துவனிகள்' என்றும் பாடமுண்டு. (கங)

[தேர்ச்சாலைகளைக் கொண்டாடுதல்.]

**௧௪. மரகதத்தினுமற்றுளமணியினும்வனைந்த**
**குரகதத்தடந்தேரினமவைபயில்கொட்டி**
**லிரவிவெள்கநின்றிமைக்கின்றவியற்கையவென்றா**
**னரகமொக்குமானன்னெடுந்துறக்கமிந்நகர்க்கு.**

(இ - ள்.) மரகதத்தினும் - மரகதரத்தினங்களினாலும், மற்று உள மணியினும் மற்றுமுள்ள பலவகையிரத்தினங்களினாலும், வனைந்த - அழகாகச் செய்யப்பட்ட, குரகதம் தட தேர் இனம் அவை - (சிறந்த) குதிரைகள்பூட்டும் பெரியதேர்களின்கூட்டங்கள், பயில் - பொருந்திய, கொட்டில் - (இந்நகரத்தி லுள்ள) சாலைகள், இரவி வெள்க நின்று இமைக்கின்ற இயற்கைய - சூரியனும் நாணும்படி ஓங்கி நின்று விளங்குகின்ற இயல்பை யுடையன, என்றால்—, நல் நெடுந் துறக்கம் இ நகர்க்கு நரகம் ஒக்கும் ஆல் - சிறந்த பெரியசுவர்க்கலோக மும் இந்தநகரத்திற்குமுன் நரகத்தைப் போன்றதாகு மன்றோ; (எ - று.)

நவரத்தினகசிதமாய் மிகவும்விளங்குகின்ற தேர்க்கொட்டாரங்களையுடைய இந்நகரத்தினது மிக்கசெல்வச்சிறப்பை நோக்குமிடத்துச் சுவர்க்கலோகமும் வெறுக்கத்தக்கதாகுமென்பது கருத்து. துன்பநுகர்ச்சிக்கேயுரிய இடமாகிய நரகத்தினும் இன்பநுகர்ச்சிக்கேயுரிய இடமாகிய சுவர்க்கத்துக்கு எவ்வளவு மேம்பாடு உண்டோ, அவ்வளவு மேம்பாடு உண்டு, அச்சுவர்க்கத்தினும் இவ் விலங்கைக்கு என்பது போதரும். எனவே, இதற்குச் சுவர்க்கத்தை உவமை கூறுதல் அடாதென்பது தொனிக்கின்றது. ஒன்றன்குணத்தினால் மற்றொன் றற்குக் குற்றமுண்டாதலைச் சொல்லுதலாகிய அகமலர்ச்சியணி இதிற் காண்க: "அமராவதியுந் நரகா மந்தமாநகர்க்கே" என்றதனோடு இதனை ஒப் பிடுக. 'மரகதத்தினும் மற்றுளமணியினும் வனைந்த' என்றது - தேர்க்கும், தேர்க்கொட்டிலுக்கும் அடைமொழி. மரகதம்=மரதகம். மற்றுள மணி - கோமேதகம், நீலம், பவழம், புஷ்பராகம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம் என்பன.

குரகதம் என்ற வடசொல் - (வலிய ஒற்றைக்) குளம்புகளினால் (விரைந்து) செல்வது என்று பொருள்படும். தேர்க்கொட்டில் - ரதசாலை. தடம் என்று எடுத்து, இடம் என்றுகொண்டு, குதிரைகள் கட்டுமிடங்களும், தேர் கள் தங்குமிடங்களு மென்று உரைப்பாரு முளர். (௧௪)

[அந்நகரத்துஒளியைக் கொண்டாடுதல்.]

**௧௫. திருகுறுஞ்சினத்தரக்கருங்கருநிறந்தீர்ந்தா**
**ரருகுபோகின்றதிங்களுமறுவற்றதழகைப்**
**பருகுமிந்நகர்த்தன்னொளிபாய்தலிற்பசும்பொ**
**னுருகுகின்றதுபோன்றுளதுலகுசூழுவரி.**

(இ - ள்.) அழகை பருகும் இ நகர் தன் ஒளி பாய்தலின் - (தன்னைக் காண்பவர் தனது) அழகைப் பருகுவதுபோல உற்றுநோக்கிநுகரும்படியுள்ள இந்த இலங்காபுரியிலே (மாடமாளிகை கூடகோபுரம் மதில்முதலியவற்றில்)

நிறைந்த ஒளி சென்று பாய்தலினால்,— திருகும் சினத்து அரக்கரும் கரு நிறம் தீர்ந்தார் - (எப்பொழுதும் பிறரோடு) மாறுபடுதற்குக் காரணமான கோபத்தையுடைய (இந்நகரில்வாழ்கின்ற) இராக்கதர்களும் (தங்கள் இயற்கைக்) கரியநிறம் நீங்கப்பெற்று விளங்கினார்கள்; அருகு போகின்ற திங்களும் மறு அற்றது - அருகிற்செல்லுகின்ற சந்திரமண்டலமும் (தனது இயற்கைக்) களங்கம் நீங்கி விளங்குவதாயிற்று; உலகு சூழ் உவரி - உலகத்தைச் சூழ்ந்துள்ள கடல், பசும் பொன் உருகுகின்றது போன்று உளது (தனது இயற்கைக்கருநிறம் ஒழிந்து) மாற்றுயர்ந்த பொன் உருகுகின்றதுபோல் விளங்குவதாயிற்று; (எ - று.)

இது அந்நகரின் ஒளிமிகுதியை வருணித்தவாறாம். ஒரு பொருள் தன் குணத்தை நீத்து பிறிதொன்றன் குணத்தைப் பெறுதலாகிய பிறிதின்குணம் பெறலணி, இதில் உள்ளது (இங்கு நீத்தகுணம் - கருநிறம், பெற்றகுணம் - ஒளி.) இறுதிவாக்கியத்திலுள்ள 'அழகைப்பருகுமிந்நகர்தந்தவொளிபாய்தலின்' என்றதனை முதலிரண்டு வாக்கியங்களோடும் கூட்டுக; கடைநிலைத்தீவகம். இந்நகர் சந்திரமண்டலத்தளவும் உயர்ந்துள்ளதென்பது தோன்ற, 'அருகுபோகின்றதிங்கள்' எனப்பட்டது.

"பருகுவான்போல நோக்கி," "பருகுவனன்ன வருகாநோக்கமொடு" என்றாற்போல, 'அழகைப்பருகும்' எனப்பட்டது. இங்கு 'பருகு' என்றது உபசாரவழக்கு. இனி, அழகைமிகுதியாகக்கொண்ட என்ற பொருளில் 'அழகைப்பருகும்' என்றதாகக் கொள்ளுதலும் ஒன்று. 'உலகுசூழுவரி' என்பதற்கு - இவ்விலங்கைத்தீவைச் சூழ்ந்த நாற்புறத்துமுள்ள கடலென்று உரைப்பாருமுளர். 'உலகு' என்பது உலகத்தின் பகுதியையும் உணர்த்துதலை "மாயோன் மேய காடுறை யுலகமும்" என்ற தொல்காப்பியத்திலும் காண்க. (கஎ)

[அந்நகரத்துமாளிகைகளின் ஒளியைக் கொண்டாடுதல்.]

கஅ. அண்டமுற்றவும்வீங்கிருளகற்றுநின்றலரி
கண்டவாற்றினிக்கடிநகர்நெடுமனைக்கதிர்க
ளுண்டவாற்றினென்றுரைப்பரிதொப்பிடிற்றன்முன்
விண்டவாய்ச்சிறுமின்மினியென்னவும்விளங்கா.

(இ - ள்.) அண்டம் முற்றவும் வீங்கு இருள் நின்று அகற்றும் அலரி கண்ட ஆற்றின் - உலகமுழுவதும் நிறைந்த இருளைத் தான் நிலைபெற்று விலக்குகின்ற சூரியன் செய்கின்ற வகையோடு, இ கடி நகர் நெடு மனை கதிர்கள் உண்ட ஆற்றின் - சிறந்த இவ்விலங்காபுரியிலுள்ள உயர்ந்த மாளிகைகளின் கிரணங்கள் (அவ்விருள் முழுவதையும்) உண்டொழிக்கின்ற வகைக்கு, ஒன்று உரைப்பு அரிது - சிறிதும் ஒப்புமை சொல்ல இயலாது; ஒப்பு இடில் - (அங்ஙனமன்றி இவ்வொளிகட்கு அச்சூரியகிரணங்களை) உவமைகூறினால், (அவை), விண்ட வாய் சிறு மின்மினி தன்முன் என்னவும் விளங்கா - திறக்கின்றவாயையுடைய சிறியமின்மினிப்பூச்சி அச்சூரியன்முன் விளங்குகின்றவளவேனும் இவற்றின்முன் தாம் விளங்கமாட்டா; (எ - று.)

சூரியன் வானத்திலே உயரத்தில் நின்று தனது ஆயிரங்கிரணங்களைக் கொண்டு உலகத்து இருளை விலக்குகின்றனன்; இலங்கைநகரத்து மாளிகைகளின் ஒளிகள் தாம் இந்நிலவுலகத்தி லிருந்துகொண்டே உலகமுழுவதிலுமுள்ள இருள்முழுவதையும் பற்றற உண்டொழித்துவிடுகின்றன; ஆதலால், இவற்றிற்குத் தம்மில் ஒப்புமைசொல்ல இயலாது ; ஆராய்ச்சியின்றி ஒப்புமைகூறினுமேலோ, சூரியன்முன்னிலையில் மின்மினிப்பூச்சி விளங்குகின்றவளவேனும் அச்சூரியகிரணங்கள் இம்மாளிகையொளிகட்குமுன் விளங்கமாட்டா என்பதாம். "மதியாதவன் கதிர் மின்மினிபோலொளிர் வைகுந்தம்" என்றதனினும் மேலாக மதிக்கும்படி யுள்ளது இந்நகரினொளி யென்க. அக்கிரணம் இருளை அகற்றுவது, இவ்வொளி இருளையுண்பது என்ற வேறுபாடு ஊன்றியுணரற்பாலது: இங்கு, உபமான உபமேயங்கட்கு வேற்றுமைதோன்றக்கூறும் வேற்றுமையணி தொனித்தல் காண்க. அண்டம் ஆகாயமுமாம். விண்ட - ஒளிவிடுகின்ற எனினுமாம். கடி - பலபொருள் குறிக்கும் உரிச்சொல் ; அச்சம், அழகு, ஆரவாரம், இன்பம், ஒளி, களிப்பு, காவல், புதுமை, மணம் என்ற பொருள்களுநம் இங்கு அமையும். 'விளங்கான்' என்ற பாடத்துக்கு, சூரியன் - எழுவாய். 'தம்முனை' என்பதும் பாடம். (கசு)

[தேன்முதலியவற்றைச் சொல்லுதல்.]

கஎ. தேனுஞ்சாந்தமுமான்மதஞ்செறிநறுஞ்சேறும்
வானநாண்மலர்க்கற்பகமலர்களும்வயமாத்
தானவாரியுநீரொடுமடுத்தலிற்றழீஇய
மீனுந்தானுமோர்வெறிமணங்கமழுமாம்வேலை.

(இ - ள்.) தேனும் - (சூடியமலர்களினின்று சொரிகின்ற) மதுவும், சாந்தமும் - சந்தனமும், மான்மதம் செறி நறுஞ் சேறும் - கஸ்தூரியைக்கொண்டு செய்த களிப்புள்ள வாசனை வீசுகின்ற குழம்பும், வானம் நாள் மலர் கற்பகம் மலர்களும் - வானுலகத்திலுள்ள புதிது புதிதாக மலர்தலையுடைய கற்பகதருக்களின் மலர்களும், வய மா தான வாரியும் - வலிமைமிக்க யானைகளின் மதநீர்ப்பெருக்கும், நீரொடு மடுத்தலின் - கடல்நீரிற்பாய்ந்து அதனோடு மிகுதியாகக் கலத்தலினால், வேலை - அக்கடல், தானும் தழீஇய மீனும் ஓர் வெறி மணம் கமழும் ஆம் - அக்கடல் தானும் தன்னிடத்திற் பொருந்திய மீன்களும் (தமக்கு இயல்பான புலால்நாற்றம் ஒழிந்து) ஒப்பற்ற நறுமணம் வீசுவனவாம் ; (எ - று.)

இதனால், இந்நகரத்திலுள்ள தேன் முதலியவற்றின் மிகுதி கூறியவாறும்; வீறுகோளணி. பாலகாண்டத்தில் அயோத்தியாநகரவருணனையில் "புதுப்புனல்குடையுமாதர் பூவொடு நாவிபூத்த, கதுப்புறுவெறியோநாறுங் கருங்கடற்றரங்கம்" என்றது, இங்குக் காணத்தக்கது. 'நீரொடு மடுத்தலின்' என்பதற்கு - இந்நகரத்துமாதர்கள் ஸ்நானஞ்செய்கின்ற நீருடனே கலந்து பெருக்கெடுத்தோடிவந்து (கடலிற்) பாய்கின்றதனால் என்று உரைத்தலுமொன்று. சாந்தம் - சந்தன மென்ற வடசொல்லின் விகாரம். மான்மதம் - கஸ்தூரிமானினது கொழுப்பு; வடமொழியில் 'ம்ருகமதம்' எனப்படும். வய -

வலிமையுணர்த்துவதோ ருரிச்சொல்; "வயவலியாகும்" என்பது தொல்காப்பியத்து உரிச்சொல்லியற்சூத்திரம். வயமா - வலிமையையுடைய விலங்கு: எனவே, யானையாயிற்று. தானவாரி - மதமாகியநீரென இருபெயரொட்டு. வெறிமணம் - ஒருபொருட் பன்மொழி. ஆம் - அசை. (கஎ)

[இவ்வகைச்சிறப்பின் காரணத்தைக்குறித்து வியத்தல்.]

கஅ. தெய்வத்தச்சனைப்புகழ்துமோசெங்கண்வாளரக்கன்
மெய்யொத்தாற்றியதவத்தையேவியத்துமோவிரிஞ்ச
னையப்பாடிலாவரத்தையேமதித்துமோவறியாத்
தொய்யற்சிந்தையாம்யாவரையாதென்றுதுதிப்பாம்.

(இ - ள்.) தெய்வத்தச்சனை புகழ்துமோ - தேவசிற்பியான விச்சுவகருமாவைக் கொண்டாடிப் பேசுவோமோ? செம் கண் வாள் அரக்கன் மெய் ஒத்து ஆற்றிய தவத்தையே வியத்துமோ - கோபத்தாற்சிவந்த கண்களையுடைய கொடிய இராக்கதனான இராவணன் மெய்ம்மைதவறாமற்செய்த தவத்தையே அதிசயித்துப் புகழ்வோமோ? விரிஞ்சன் ஐயப்பாடு இலா வரத்தையே மதித்துமோ - பிரமனளித்த சந்தேகித்தற்கிடமில்லாத வரத்தின் பலத்தையே நன்குமதித்துப் பேசுவோமோ? அறியா தொய்யல் சிந்தை யாம் - (இன்னதைப் பாராட்டிப் பேசவேண்டுமென்று) அறியாமற்சோர்வுபடுகின்ற மனத்தையுடையோமான நாம், யாவரை யாது என்று துதிப்பாம் - (மேற்கூறிய மூவரில்) எவரை என்னவென்று துதிக்கவல்லோம்? [துதிக்கவல்லோமல்லோம் என்றபடி]; (எ-று.)

இங்ஙனம் ஒப்புயர்வற்ற மிக்கசிறப்பையுடைய இவ்விலங்காபுரியை நிருமித்தவன், தேவசிற்பியான விச்சுவகருமன்; இதில் அரசுவீற்றிருக்கின்ற இராவணன் இவ்வளவுசெல்வச்சிறப்பைப் பெற்றதற்குக் காரணம், அவன் உள்ளும்புறமும் ஒத்துத் திரிகரணசுத்தியுடன் நெடுநாள்செய்த அரியபெரிய தவமும், அதற்கு உவந்து பிரமனளித்த தவறாப்பெருவரமுமாம். ஆகவே, தெய்வத்தச்சன் இராவணன் பிரமன் என்ற மூவரும் துதிக்கத்தக்கவரென்க. வாள் - கொடுமைக்கு இலக்கணை. வாளரக்கன் - சிவபிரானிடத்தினின்றுபெற்ற சந்திரஹாஸமென்னுஞ் சிறந்தவாளாயுதத்தை யேந்திய அரக்கனெனினுமாம். மெய் ஒத்து - மனமொத்து என்னவுமாம். (கஅ)

## வேறு.

[வனம் உபவனம் என்ற இவற்றைக் கொண்டாடுதல்.

கசு. வானுநிலனும்பெறுமாறினிமற்றுமுண்டோ
கானும்பொழிலும்மிவைசெங்கனகத்தினானு
மேனைமணியாலுமியற்றியவேனும்யாவுந்
தேனும்மலருங்கனியுந்தரச்செய்தசெய்கை.

(இ - ள்.) கானும் பொழிலும் இவை - (இந்நகரத்தைச்சார்ந்த) காடுகளும் சோலைகளுமாகிய இவை, செம் கனகத்தினாலும் ஏனை மணியாலும் இயற்றிய எனும் - செம்பொன்னாலும் மற்றும் இரத்தினங்களினாலும் செய்யப்பட்ட

வையாயினும், யாவும் - அவையெல்லாம், தேனும் மலரும் கனியும் தர -(இயற்கைக் காடு சோலைகளி லுள்ள மரங்கள்போலத்) தேனையும் மலர்களையும் பழங்களையும் தரும்படியாக, செய்த - அமைத்திருக்கிற, செய்கை - விசித்திரமான செயலை, இனி மற்றும் நிலனும் வானும் பெறும் ஆறு உண்டோ - இந்நகரத்திலும் வேறான நிலவுலகமும் வானுலகமும் பெறும்வகை யுண்டோ? [இல்லையென்றபடி]; (எ - று.)

பொன்மணிகளா லியற்றப்பட்ட செயற்கைக்காடுகளும் சோலைகளும் இயற்கைமரங்கள்போலத் தேன்மலர்கனிகளைத் தருகின்ற அற்புதம் இந்நகரத்திலுள்ளதேயன்றி மற்றைநிலவுலகத்திலேனும் வானுலகத்திலேனும் எங்குமில்லை யென்பதாம்; தொடர்புயர்வுநவிற்சியணி. வானுந்நிலனும், பொழிலும்மிவை, ஈனைமணி, தேனும்மலர் என்பன - விரித்தல்விகாரம். செங்கனகம் - மாற்றுயர்ந்த பொன். இவ்வகைத்தெய்விக ஐசுவரியத்தை இவ்விராவணனேயன்றி மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் பெறுதலுண்டோ வென்றும் பொருள்கொள்ளலாம்.

இக்கவி - கிழ்ப்படலத்தின் முப்பத்தொன்பதாங் கவிபோன்ற கலிநிலைத்துறை. (கக)

வேறு.

[கோபுரத்தைக் கொண்டாடுதல்.]

உ0. நீரும்வையமுநெருப்புமேனிமிர்நெடுங்காலும்
வாரிவானமும்வழங்கலவாகுந்தம்வளர்ச்சி
யூரினிந்நெடுங்கோபுரத்துயர்ச்சிகண்டுணர்ந்தால்
மேருவெங்ஙனம்விளர்க்குமோமுழுமுற்றும்வெள்கி.

(இ - ள்.) நீரும் - ஜலமும், வையமும் - பூமியும், நெருப்பும் - அக்கினியும், மேல் நிமிர் நெடுங் காலும் - மேலேயுயர்கின்ற நெடிய வாயுவும், வாரி வானமும் - (இந்தநான்குபூதங்களும்) வருதற்கிடமான ஆகாயமும், (ஆகிய ஐம்பெரும்பூதங்களும்), தம் வளர்ச்சி வழங்கல ஆகும் - (இந்நகர்க்கோபுரத்தின் வளர்ச்சிக்குமுன்பு) தாம் தமதுவளர்ச்சியினைச் சிறப்பித்து வழங்கப்படாவாம்; (மற்றும்), ஊரின் இ நெடுங் கோபுரத்து உயர்ச்சி கண்டு உணர்ந்தால் - இந்தநகரத்திலுள்ள நெடியகோபுரத்தின் உயர்வைப பார்த்தறிந்தால், மேரு - மகாமேருகிரி, வெள்கி - வெட்கப்பட்டு, முழுமுற்றும் எங்ஙனம் விளர்க்குமோ - தனது உடம்புமுழுவதும் எவ்வாறு வெண்ணிறமடையுமோ! (எ - று.)

மிக்கவளர்ச்சியுடையனவென்று பிரசித்தமாகவழங்கப்படுகின்ற பஞ்சமகாபூதங்களும், தம்மினும்வளர்ச்சியுடையதாக இந்நகர்க்கோபுரம் ஏற்பட்டுவிட்டதனால் இனி அங்ஙனம் வளர்ச்சியில்மேம்பட்டனவாக வழங்கப்படா என்பது, முந்தியவாக்கியத்தின் பொருள். அக்கோபுரத்தின் உயர்வு, எண்பத்துநான்காயிரம் யோசனையுயர்வுள்ளதென்று சொல்லப்படுகிற மகாமேருகிரியும் மிகவும் வெட்கப்படும்படி அதனினும் அதிகப்பட்டுள்ளதென்பது,

பிந்திய வாக்கியத்தின் கருத்து. இதுவும் தொடர்புயர்வுநவிற்சியணியே. வெட்கத்தினால் மேனிநிறம்மாறுதல், இயற்கை; மேருவின் பொன்னிறம் ஒழிந்து வெண்ணிறமாகு மென்க. காரியகாரணமுறைப்படி வையம், நீர், நெருப்பு, கால், வானம் என்று பஞ்சபூதங்களை நிறுத்துதல் இயல்பாயினும், நீரை முதலில்நிறுத்தியது, "ஆதியிற் கடவுள் நீரையே படைத்தார்" என்றபடி அது முதலில்தோன்றிய சிறப்புப்பற்றி யென்க. வையம் - (பொருள்களை) வைக்குமிடமென நிலத்துக்குக் காரணக்குறி. வாரி - வருமிடம். மற்றை நான்குபூதங்களும் தங்குதற்கு இடமாகுதல் பற்றியும், அவற்றின் உற்பத்திக்கு மூலகாரணமாகுதல் பற்றியும், 'வாரிவானம்' எனப்பட்டது. கண்டுஉணர்ந்தால் - பார்த்து அதனுயர்வையும் தன்னுயர்வையும் ஆலோசித்தால் என்றலுமொன்று. 'தன்வளர்ச்சி' என்றும் பாடம்.

இதுமுதற் பதினொன்று கவிகள் - இப்படலத்தின் நான்காங் கவிபோன்ற விநிலைத்துறைகள். (உ0)

[மதிலின்ஒளியைத் தொகுத்துரைக்கும்.]

உக. முன்னம்யாவருமிராவணன்முனியுமென்றெண்ணிப்
பொன்னின்மாநகர்மீச்செலான்கதிரெனப்புகல்வார்
கன்னியாரையினொளியினிற்கண்வழுக்குறுத
லுன்னிநாடொறும்விலங்கினன்போதலையுணரா

(இ - ள்.) கன்னி ஆரையின் ஒளியினில் - அழிவில்லாத (இந்நகரத்து) மதிலின் ஒளியினால், கண் வழுக்குறுதல் - கண்ணொளி மழுங்குதலை, உன்னி - நினைத்து, நாள் தொறும் - தினந்தோறும், விலங்கினன் போதலை - விலகிச் செல்லுதலை, உணரா - அறியாமல்,—முன்னம் - நெடுநாளாக, யாவரும் - அனைவரும், இராவணன் முனியும் என்று எண்ணி கதிர் பொன்னின் மா நகர் மீ செலான் என புகல்வார் - 'இராவணன் கோபிப்பானென்று நினைத்து அஞ்சிச் சூரியன் பொன்மயமான பெரிய இந்நகரத்திற்குமேலே செல்லான்' என்று சொல்வார்கள்; (எ - று.)

மூவுலகத்தையும் வென்று அடக்கி அரசாளுகிற இராவணனிடத்து அச்சத்தாற் சூரியன் அவனது இலங்கைநகரத்திற்குமேலாக வானத்தே சென்று தனது உஷ்ணகிரணங்களை வீசுதற்குப் பின்வாங்கி அந்நகரத்தினும் விலகிச் செல்லுதலாகிய உண்மையை மறுத்து, அந்நகரத்தின் பொன்மயமான மதிலினது ஒளியினாற் கண்கூசுதல்பற்றி விலகிச்செல்வனென வேறொன்றை வகுத்துக் கூறியதனால், அவனுதியணியை அங்கமாகக்கொண்டுவந்த ஏதுத்தற்குறிப்பேற்றவணி; இலங்கைநகரத்து மதிலினது மிக்கஒளி, இங்ஙனம் புனைந்துரைக்கப்பட்டது. 'கதிரென்பர் புலவர்' என்று பாடமோதுவாருமுளர்.

ராவணன் என்ற வடமொழிப்பெயர் - கூச்சலிடுபவனென்றும், கூச்சலிடச்செய்பவனென்றும் பொருள்படும். சிவபிரானது கைலாசகிரியைப் பெயர்க்கத்தொடங்கி அதன்கீழ்த் தன்கைகள் அகப்பட்டு நசுக்குண்டபோது பேரிரைச்சலிட்டதனாலும், தான்செய்யும் பலதுன்பங்களினால் உலகத்தாரை

அலறிக் கதறச்செய்ததனாலும், இவனுக்கு இப்பெயர். இது, சிவபிரான் இட்டது. இனி, விசிரவமுனிவனது புதல்வனெனப் பொருள்படும் தத்திதாந்த நாமமெனக் கொள்ளுதலுமொன்று. இவன் - பிரமபுத்திரரான புலஸ்தியமகாமுனிவரது குமாரராகிய விசிரவமுனிவர்க்குக் கேகசியென்ற ராக்ஷஸஸ்திரீயினிடத்திற் பிறந்தவன்; (விசிரவமுனிவர்க்கு மூத்தமனைவியினிடம் பிறந்தவன், குபேரன்.) லங்காநகரத்தரசன்; திக்குவிசயஞ்செய்தவன். இவனது உடன்பிறந்தவர் - கும்பகர்ணன், சூர்ப்பணகை, விபீஷணன்:

கதிர் - ஒளி; ஆயிரங்கிரணங்களையுடையனான கதிரவனுக்குச் சினையாகு பெயர். கன்னி - அழிவின்மை. ஒளியினாற் கண்கூசிப் பார்வை மழுங்குதல், இயல்பு. உணரா = உணராமல். (உக)

[மதிலின் உயர்ச்சியைக் கொண்டாடுதல்.]

உஉ. தீயசெய்குநர்தேவராலனையவர்சேரும்
வாயிலல்லதோர்வரம்பமைக்குவனெனமதியாக்
காயமென்னுமக்கணக்கறுபதத்தையுங்கடக்க
வேயுநன்மதிலிட்டனன்கயிலையையெடுத்தான்.

(இ - ள்.) கயிலையை எடுத்தான் - (முன்பு) கைலாசகிரியைப் பெயர்த்தெடுத்த ஆற்றலையுடையவனான இராவணன்,—'தீய செய்குநர் தேவர் ஆல் - (இராக்கதர்களாகிய நமக்குத்) தீங்குகளைச் செய்யக்கூடியவர்கள் (தொன்றுதொட்டுப் பகைவர்களான) தேவர்களேயன்றோ: (ஆதலால்), அனையவர் சேரும் வாயில் அல்லது ஓர் வரம்பு அமைக்குவன் - அத்தேவர்கள் வரும்படியான வழியைக் கடந்ததாகிய ஓர் எல்லையை (நமது நகரத்துக்கு) அமைப்பேன்,' என மதியா - என்றுஎண்ணி,—காயம் என்னும் அ கணக்கு அறு பதத்தையும் கடக்க ஏயும் - அளவிறந்த அந்த [தேவர்கள் சஞ்சரிக்கின்ற] ஆகாயமென்கிற இடம்முழுவதையும் கடந்து மேலாகப்பொருந்திய, நல்மதில் - நல்லமதிலை, இட்டனன் - அமைத்துக்கொண்டனன்போலும்; (எ - று.)

வானத்தினெல்லை எவ்வளவுஉண்டோ அவ்வளவையுங்கடந்து உயர்ந்துள்ளது, இந்நகரத்து மதில்; அதற்கு, தேவசத்துருக்களாகிய இராக்கதர்கட்கு அரசனான இராவணன் தங்கட்குத் தேவர்கள் எப்பொழுதேனும் தீங்கு செய்பவராதல்கூடுமென்பது கருதி அவர்கள் வரும்வழியை யடைத்து வானவீதிகளனைத்துக்கும் மேலாகத் தனது நகர்க்காவற்சுற்றுமதிலை யமைத்தனனெனக் கற்பனைகூறியது - ஏதுத்தற்குறிப்பேற்றவணி. 'அமைக்குவம்' என்று சிலபிரதி. அம்மதிலினது மிக்க உயர்ச்சி, இங்ஙனம் புனைந்துரைக்கப்பட்டது. காயம் - ஆகாயமென்பதன் முதற்குறை விகாரம்.. அப் பதம் என இயையும். (உஉ)

[மதிலின் வலிமையைக் கொண்டாடுதல்.]

உ௩. கறங்குகால்புகாகதிரவனொளிபுகாமறலி
மறம்புகாதினிவானவர்புகாரென்கைவம்பே
திறம்புகாலத்துள்யாவையுஞ்சிதையினுஞ்சிதையா
வறம்புகாதிந்தவணிமதிட்கிடக்கைநின்றகத்தின்.

(இ - ள்.) இந்த அணி மதிள் கிடக்கை நின்று - இந்த அழகிய மதிலெல்லையைக் கடந்து, அகத்தின் - இந்நகரினுள்ளே, கறங்கு கால் புகா - சுழன்று வீசுமியல்புள்ள காற்றுக்களும் செல்லமாட்டா; கதிரவன் ஒளி புகா - (விலகிச் செல்லுகின்ற) சூரியனது கிரணங்களும் செல்லமாட்டா; மறலி மறம் புகாது-யமனுடைய கொடியதிறமும் செல்லமாட்டாது; இனி - இங்ஙனமாகின்ற போது, வானவர் புகார் என்கை வம்பே - 'தேவர்கள் இந்நகரினுட் செல்லத் திறமிலர்' என்றுசொல்லுதல் வீணேயாம்; திறம்பு காலத்துள் - (யாவும்) அழியுங் காலத்தில் [சர்வசங்காரகாலத்தில்], யாவையும் சிதையினும் - எல்லாப் பொருள்களும் அழிந்தாலும், சிதையா - தான் அழியாத, அறம் - தருமதேவதையும், புகாது - (இந்நகரினுட்) பிரவேசியாது; (எ - று.)

காற்றுநுழையவும் இடமில்லாதபடி அந்நகரத்துமதில் உயர்ந்தும் எங்குஞ் சந்துவிடாமற்செறிந்தும் அரியகாவலுடையதாயு மிருக்கின்றதென்பார், 'கறங்குகால்புகா' என்றார்; (பாலகாண்டத்தில் அயோத்திமாநகரத்து மதில் வருணனையில் "கொதுகி, னினத்தையு முவணத்திறையையு மியங்குங் காலையு மிதமலநினைவார், மனத்தையு மெறியும் பொறியுள வென்றால் மற்றினி யுணர்த்துவ தெவனோ" என்றதனோடு ஒப்பிடுக.) வானத்து வாயுமண்டலத்தினும் சூரியமண்டலத்தினும் ஓங்கியுள்ளது இம்மதிலென்பது, 'கறங்கு கால் புகா கதிரவனொளி புகா' என்றதனால் விளங்கிற்று. 'கதிரவனொளி புகா' என்றதில், சூரியனொளியினும் இம்மதிலினொளி மேம்பட்டுள்ளதென்பதும் தோன்றும். 'யமனதுவீரமும் இதனுட்புகாது' என்றது, அம்மதிலின் காவலுடைமையைக் காட்டும். எங்குந்தடையின்றிச் செல்லுகின்ற ஆற்றலையுடைய வாயுவும் சூரியனும் யமனுமே இம்மதிற்காவலைக்கடந்து இந்நகரினுட்செல்லா வென்றதனாலேயே, மற்றைத்தேவர்கள் செல்ல வல்லரல்லரென்பது தண்டாபூபிகாநியாயத்தாற் பெறப்படுதல்பற்றி, அதனைத் தனியே யெடுத்துக்கூறுதல் மிகைபடக்கூற லென்னுங் குற்றத்தின்பாற்படு மென்பார், 'இனி வானவர் புகாரென்கை வம்பே' என்றார்; இது - தொடர்நிலைச் செய்யுட்பொருட்பேறணியாம். நல்வினைகளை யொழித்துத் தீவினைகளைச் செய்கின்ற கொடும்பாதகனான இராவணனது ஆட்சியில் கொடிய அரக்கர்கள் வசிக்கின்ற இலங்கையில் தருமமென்பது சிறிதுமில்லாமையை, அம்மதிற்காவலினால் தருமதேவதை அந்நகரினுள் நுழையமாட்டாதெனக் கற்பித்துக்கூறியது, தற்குறிப்பேற்றத்தின்பாற்படும்.

பல்திசைகளினின்றும் வீசுதல்பற்றிக் காற்றுப் பலவகைப்படுதலால், 'கால்புகா' என்ப் பன்மையாற் கூறினர். மேகமண்டலத்தை நடத்துகின்ற ஆவஹமென்ற வாயுவும், சூரியமண்டலத்தை நடத்துகின்ற ப்ரவஹமென்ற வாயுவும், நக்ஷத்திரமண்டலத்தை நடத்துகின்ற உத்வஹமென்ற வாயுவும், சந்திரமண்டலத்தை நடத்துகின்ற ஸம்வஹமென்ற வாயுவும், கிரகமண்டலத்தை நடத்துகின்ற விவஹமென்ற வாயுவும், ஸப்தருஷிமண்டலத்தை நடத்துகின்ற பரிவஹமென்ற வாயுவும், துருவமண்டலத்தை நடத்துகின்ற பராவஹமென்ற வாயுவும் என வானத்தில் வாயுமண்டலங்கள் ஏழாயிருத்தலால், 'கால்

புகா' என்று பன்மையாற் கூறினுருமாம்; எனவே, அந்நகரத்துமதில் துருவ மண்டலத்தையுங் கடந்துள்ள தென்பது போதரும். கறங்குதல் - ஒலித்தலு மாம். மறல் - கொடுமை, கொலை, கோபம், திறமை, போர், வலி, வீரம்; அதனையுடையவன், மறலி.

இவ்வூரினுள்ளே தருமம் புகாதிருத்தலால் இவ்வூரவர் விரைவிலழிவுறு வரென்பது நிச்சயம்; ஆகவே, 'காற்று முதலிய தேவர்கள் இதனுட் புகார்' என்று இனிச்சொல்லுதல் வீணேயாமென அரக்கர்க்கு அமங்கலமாகின்ற ஒருபொருள் இச்செய்யுளில் தொனித்தல், உய்த்துணரற்பாலது. 'இந்த அணி மதிட்கிடக்கைநின்று' என்பதற்கு - இந்தஅழகிய மதிலெல்லை நிற்றலால் என்று உரைப்பாருமுளர்; (திருக்குறளில் ''வானின்றுலகம் வழங்கிவருத லால்'' என்றவிடத்து 'நின்று' என்பதற்கு 'இடையறாதுநிற்ப' எனப் பரிமே லழகர் உரைகூறி, 'நிற்பஎன்பது நின்று எனத் திரிந்துநின்றது' என்று இலக் கணமுரைத்தது காண்க.) 'வம்பே' என்பதற்கு - புதுமையோ? [அன்று] என்று உரைப்பர் ஒருசாரார்; இப்பொருளில், ஏ - எதிர்மறை. (உங)

[விமானசிகரத்தைக் கொண்டாடுதல்.]

உச. கொண்டவான்றிரைக்குரைகடலிடையதாய்க்குடுமி
யெண்டவாவிசும்பெட்டநின்றிமைக்கின்றவெழிலாற்
பண்டைநாகணைப்பள்ளியானுந்தியிற்பயந்த
வண்டமேபுமொத்திருந்ததிவ்வகனகரமைதி.

(இ - ள்.) (இந்நகரமானது), கொண்ட வான் திரை குரை கடல் இடை யது ஆய் - தன்னிடத்தேகொண்ட பெரியஅலைகளையுடைய ஒலிக்கின்ற கடலி னிடையே யுள்ளதாய், குடுமி எண் தவா விசும்பு எட்ட நின்று இமைக்கின்ற எழிலால் - (தன்னிடையேயுள்ள அரண்மனையின்) விமானசிகரம் ஒரெல்லை க்குஅடங்காத ஆகாயத்தை யளாவ உயர்ந்துவிளங்குகின்ற அழகையுடைமை யால்,—இ அகல் நகர் அமைதி - இந்த விசாலமான இலங்காபுரியின் அமை ப்பு, நாக அணை பள்ளியான் பண்டை உந்தியின் பயந்த அண்டமேயும் ஒத் திருந்தது - சர்ப்பராஜனாகிய ஆதிசேஷனாகிற சயனத்திலே படுத்தல்கொ ண்டு அறிதுயிலமர்கின்றவனான திருமால் ஆதிகாலத்தில் (தனது) நாபியி னின்று தோன்றுவித்த அண்டகோளத்தையும் போன்றுள்ளது; (எ - று.)

பெருங்கடலிடையே தோன்றியெழுந்து உயர்ந்துகாணப்பட்ட பிரமாண் டத்தை, தென்கடலிடையே மிகவுயர்ந்துகாணப்படுகின்ற இலங்கைநகர்க்கு ஒப்புமைகூறினார்; உவமையணி.

தவு - தபு என்பதன் மரூஉ. தவுதல் - அழிதல்; குறைதல். எண்தவா எண்ணுதற்குமாளாத என்க; வலிமைகெடாத எனினுமாம். 'இமைக்கின்ற வியல்பால்' என்பதும் பாடம். பண்டை - ஐயீற்றுடைக் குற்றுகரம். நாகணை- நாகவணை யென்பதன் தொகுத்தல். 'கொண்டல்வான்றிரை', 'இமைக்கின்ற வியல்பால்' என்பன - பாடாந்தரம். (உச)

[ஆடல்பாடலாதி விநோதங்களைக் கொண்டாடுதல்.]

உரு. பாடுவார்பலரென்னின் மற்றவரினும்பலரா
லாடுவார்கண் மற்றவரினும்பலருளரமைதி
கூடுவாரிடையின்னியங்கொட்டுவார்முட்டில்
வீடுகாண்குறுந்தேவரால்விழுநடங்காண்பார்.

(இ - ள்.) பாடுவார் பலர் என்னின் - (இந்நகரத்தில்) இசைபாடுகின்ற வர்கள் அநேகரென்றால், ஆடுவார்கள் அவரினும் பலர் - நாட்டியஞ்செய்கின்ற வர்கள் அப்பாடுகின்றவர்களினும் பலராவர்; அமைதி கூடு வார் இடை இன் இயம் கொட்டுவார் - (அந்நாட்டியத்திற்குஏற்ப,த் தாளவமைப்புப்பொருந்தி யதும் தோல்வாரினாற் கட்டப்பட்டதுமாகிய இனிமையான வாத்தியத்தை [மத்தளத்தை]த் தட்டிமுழக்குகின்றவர்கள், அவரினும் பலர் உளர் - அந்நாட் டியஞ்செய்பவர்களினும் பலராயுள்ளார்; முட்டில் வீடு காண்குறும் தேவரால் விழு நடம் காண்பார் - சிறையிலிருந்து விடுதல்பெற்ற தேவர்களைக்கொண்டு (இங்ஙனஞ்) சிறந்த நர்த்தனத்தைச் செய்வித்து வேடிக்கைபார்ப்பார்கள், (இராக்கதர்கள்); (எ - று.)—'மற்று' இரண்டும் - அசை; வினைமாற்றுமாம். ஆல் - அசை; தேற்றமுமாம்.

இலங்கையில் அரக்கர்கள் தம்மால் வென்று சிறைபிடித்துக் காவலில் வைக்கப்பட்டுள்ள தேவர்களுள் பாடுதல் ஆடுதல் மத்தளங்கொட்டுதல் என்ற வற்றில் வல்ல பலரைத் தாம் வேண்டும்பொழுதெல்லாம் சிறையினின்று விடுத்து அவர்களைக்கொண்டு இசைநாடகங்களை நடத்தித் தாம் அதனை விநோ தங்கண்டு மகிழ்வ ரென்பது கருத்து. முதல்மூன்றடிகளில், மேன்மேலுயர் ச்சியணி காண்க.

கூடு, இடை என்ற வினைத்தொகையிரண்டும் - இயத்துக்கு அடை மொழி. இயம் - வாச்சியப்பொதுப்பெயர்; இங்குச் சந்தர்ப்பத்தினால் மத்தளத் தைக் குறித்தது. விழு - விழுமமென்ற உரிச்சொல்லின் விகாரம். 'அமைதி கூடுவாரிடை' என்பதற்கு - சமயம் நேர்ந்து கூடியவர்களான சபையார்களின் நடுவிலே யென்று பொருள்கொண்டு, அதனை, பாடுவார் ஆடுவார் இயங் கொட்டுவார் என்ற மூன்றனோடும் கூட்டி யுரைத்தலு மொன்று. இவ்வாறு இசைநாடகங்களை நடத்துவார் அரக்கரென்று கொண்டு அங்குத் தாம் தாம் செய் யும் ஊழியங்களைக் குறைவின்றிச் சரிவரச்செய்து முடித்துவிடுதல்பெற்ற தேவர்களே அச்சிறந்தநாட்டியத்தை (வியந்து) காண்பார்கள் என்று இறுதி வாக்கியத்துக்குப் பொருளுரைப்பாரு முளர்; இப்பொருளில் 'தேவரால்' என் பதில், ஆல் - அசை: அந்நகரத்து அரக்கர்களுடைய பாடல் ஆடல் கொட்டல் கள் தேவர்கள் அதிசயிக்கத்தக்கனவென்பது கருத்து. அரக்கர்க்கு ஊழியஞ் செய்தலினின்று தாம்விடுதல்பெறும்வகையை யெதிர்பார்க்கின்ற தேவ ரென் றலுமாம். முட்டு இல் என்று பிரித்து, குறைவற்ற என்று பொருள்கொண்டு, தேவரோடு சேர்ப்பர் ஒருசாரார். 'எண்ணின்' என்றும் பாட முண்டு. (உரு)

[நடனச்சிறப்பைக் கோண்டாடுதல்.]

உசு. வானமாதரோடிகலுவர்விஞ்சையர்மகளி
ரானமாதரோடாடுவரியக்கியரவரைச்
சோனைவார்குழலரக்கியர்தொடர்குவர்தொடர்ந்தா
லேனைநாடியரருநடக்கிரியையாய்ந்திருப்பார்.

(இ - ள்.) (இவ்விலங்காபுரியில்), வானம் மாதரோடு - (மேற்கூறியவாறு நர்த்தனஞ்செய்கின்ற) தேவமாதர்களுடன், விஞ்சையர் மகளிர் - வித்தியாதர மாதர்கள், இகலுவர் மாறுபட்டு அவர்களினும் மேலாக நாட்டியஞ்செய்வர்; ஆன மாதரோடு - அங்ஙனமான வித்தியாதரமாதர்களுடன், இயக்கியர் - யக்ஷஸ்திரீகள், ஆடுவர் - (மாறுபட்டு அவர்களினும் மேலாக) நாட்டியஞ்செய்வர்; சோனை வார் குழல் அரக்கியர் - விடாப் பெருமழை பொழிகின்ற காளமேகம் போன்ற நீண்டகூந்தலையுடைய இராக்கதமாதர்கள், அவரை தொடர்குவர் - அந்த யக்ஷஸ்திரீகளோடு மாறுபட்டு அவர்களினுஞ்சிறப்பாக நாட்டியஞ்செய்வர்; தொடர்ந்தால் - அங்ஙனம் நாட்டியஞ்செய்யுமிடத்து, ஏனை நாடியர் மற்றைநாட்டு மகளிர்கள், அரு நடம் கிரியை ஆய்ந்திருப்பார் (அவர்களோடு எதிர்த்துத் தாம் நர்த்தனஞ்செய்யமாட்டாமல் அவர்களுடைய) அருமையான நர்த்தனத்தின் அடைவுகளை மனத்திலேலாராய்ந்து வியந்துகொண்டிருப்பார்கள்; (எ - று.)

இராக்கதமாதர்களுடைய அதிவிசித்திரமான நாட்டியத்திறம், இதிற் கூறப்பட்டது. இயக்கியர், அரக்கியர், நாடியர் என்பன - இயக்கர், அரக்கர், நாடர் என்றவற்றின் பெண்பால். மிக்ககருநிறமுடைமைக்குச் சோனைமேகம் உவமை கூறப்பட்டது. இனி, சோனை-சூடியமலர்களினின்று இடைவிடாத தேன்மழையைச் சொரிகின்ற, வார் குழல் - வாரியலங்கரிக்கப்பட்ட கூந்தல் எனினுமாம். தொடர்தல் - வாதுக்கு அழைத்தல். இனி, ஈற்றுவாக்கியத்துக்கு - அங்ஙனம் அரக்கியர் இகலி ஆடுமிடத்து மற்றை நாட்டுமாதர்கள் அருமையான நடனத்துக்கு அங்கமான செயல்களைத் தாம் ஆராய்ச்சியுடனே செய்துகொண்டு உதவுவார்கள் என்று பொருள்கொள்ளுதலுமொன்று. 'ஏனை நாகியர்' என்று ஓதுவாருமுளர். (உசு)

[நவநிதிகளைக் குற்றேவல்கொள்கின்ற சிறப்பைக் கொண்டாடுதல்.]

உஎ. இழையுமாலையுமாடையுஞ்சாந்தமுமேந்தி
யுழையரென்னநின்றுதவுநிதியங்களொருவர்
விழையும்போகமேயிங்கிதுவாய்கொண்டுவிளம்பிற்
குழையுநெஞ்சினனினையினுமாசென்றுகொள்ளும்.

(இ - ள்.) நிதியங்கள் - (நவ) நிதிகள்,—இழையும் - ஆபரணங்களையும், மாலையும் - பூமாலைகளையும், ஆடையும் - வஸ்திரங்களையும், சாந்தமும் - சந்தனத்தையும், ஏந்தி - தாம் எடுத்துக்கொண்டு, உழையர் என்ன நின்று உதவு பரிசாரகர்போல அருகில்நின்று (இந்நகரத்து அரக்கர்கட்கு வேண்டும்போதெல்

லாம் அவ்விழை முதலியவற்றைக்) கொடுப்பன; இங்கு இது - இவ்வூரிலுள்ள இவ்வகையானபோகம், ஒருவர் விழையும் போகமே - வேறொருவர் விரும்பத் தக்க போகமோ? [அன்று என்றபடி]: வாய்கொண்டு விளம்பின் - (இதனை) வாயினால் வருணித்துச்சொல்லத் தொடங்கினால், குழையும் - (அவ்வாய் சொல்லத்திறமில்லாமற்) குளறிப்போம்; நெஞ்சினால் நினையினும் - (இதனை வருணிக்கவேண்டுமென்று) மனத்தினால் நினைத்தாலும், மாசு என்று கொள்ளும் - (அக்கருத்துச் சிறிதுந்தகாததுபற்றி அங்ஙனம் நினைத்தலை அம்மனம் தனக்குக்) குற்றமாகக் கொள்ளும்; (எ - று.)

அந்நகரத்தவர்போகம் மற்றையெவர்க்கும் மனமொழிமெய்கட்கு எட்டாததென்பது விளக்கப்பட்டது. ("அதிசயமளிப்பதற்கருளறிந்துநற், புதுமலர்கற்பகத்தருவும் பொய்யிலாக், கதிர்நெடுமணிகளுங் கறவையான்களும், நிதிகளுமுறைமுறைநின்று நீட்டவே" என்று ஆரணியகாண்டத்திற் கூறியது காணத்தக்கது.) இவ்விலங்காபுரியில் ஒருவர் அநுபவிக்கின்ற போகமாகிய இதனையே வாயினாற்சொல்லுதலும் மனத்தினால் நினைத்தலும் முடியாதெனப் பின்னிரண்டடிகட்குப் பொருள் கூறலுமாம்: எனவே, இந்நகரத்திலுள்ள அனைவரும் அநுபவிக்கின்ற போகத்தை ஒருங்கே வருணித்துச்சொல்லுதலும் மனத்தினாலெண்ணுதலும் முடியாதென்பது, கருத்து. மகாபதுமம், பதுமம், சங்கம், மகரம், கச்சபம், முகுந்தம், குந்தம், நீலம், வரம் என நிதி ஒன்பது வகைப்படும். போகம்-சுகாநுபவம், செல்வம். 'வாய்கொடுவிளம்பின்' என்றும் சில பிரதிகள். (உஎ)

[நகரத்தின் அமைப்பைக் கொண்டாடுதல்.]

உஅ. பொன்னின்மால்வரைமேன்மணிபொழிந்தனன்பொருத்தி
யுன்னுநான்முகத்தொருவனின்றூழ்முறையுரைக்கப்
பன்னிநாள்பலபணியுழன்றரிதினிற்படைத்தான்
சொன்னவானவர்தச்சனுமிந்நகர்துதிப்பான்.

(இ - ள்.) உன்னும் - (இந்நகரம் இன்னபடி அமையவேண்டுமென்று) நினைத்த, நால் முகத்து ஒருவன் - நான்குமுகங்களையுடைய ஒப்பற்றவனான பிரமன், நின்று - அருகில்நின்று, ஊழ் முறை உரைக்க - செய்யவேண்டிய செயலை முறையே சொல்லிவர, சொன்ன வானவர் தச்சன் - கீழ்க்கூறப்பட்ட தேவசிற்பியான விச்சுவகருமன், பன்னி - ஆராய்ந்து, பொன்னின் மால் வரைமேல் மணி பொழிந்தனன் பொருத்தி - பொன்மயமான பெரிய மகா மேருகிரியிலுள்ள இரத்தினங்களை மிகுதியாகக்கொணர்ந்து சொரிந்து அவற்றை உரியஇடங்களிற்பதித்து, பல நாள் பணி உழன்று - அநேக நாள் சிரமப்பட்டு வேலைசெய்து, அரிதினின் - அருமையாக, துதிப்பான் இ நகர் படைத்தான் ஆம் - (யாவரும்) துதிக்கும்படி இவ்விலங்காபுரியை அமைத்தான்போலும்; (எ - று.)

இந்நகரத்தினது அதிவிசித்திரமான செய்கைத்திறத்தைக் கொண்டாடிக் கூறியது. இது, இங்ஙனஞ்செய்திருந்தாலன்றி இத்துணைச்சிறப்பு அமையாது

தென்றபடியாம். வடமொழியில் 'ரத்நஸாநு' என்பது மேருவின்பெயர்களி லொன்று: இரத்தினமயமான தாழ்வரைகளையுடைய தென்பது அதன்பொருள்; ஆனதுபற்றி, 'பொன்னின்மால்வரைமேல் மணி'எனப்பட்டது; மேல்-எழனுருபு. கீழ்ப்படலத்தின் ௨௫, ௨௬ - ஆஞ் செய்யுள்களிற் கூறியபடி, இலங்கைநகரத்துக்கு ஆதாரமான திரிகூடகிரி மேருவின் சிகரங்களி லொன்றாதலால், பொன்மயமான பெரியமலையின்மீது இரத்தினங்களை நிரம்பக் கொட்டி அவற்றைப் பொருந்தப்பதித்துப் படைத்தனனென்று உரைத்தலு மொன்று. பொழிந்து அனன் என்று பிரித்து, அனன் என்பதை அன்னனென்பதன் தொகுத்தலெனக்கொண்டு, பொன்மலைமேல் இரத்தின மழை சொரிந்தாற் போன்றவனாய்ப் பொற்றிரளின்மேல் இரத்தினங்களை மிகுதியாகப்பதித்து என்று உரைப்பாருமுளர். கீழ் ௧௮ - ஆஞ் செய்யுளைநோக்கி 'சொன்ன வானவர்தச்சன்' என்றார். 'தச்சனும்' என்றவிடத்து, தச்சன் நாம் என்றுபிரித்து, நாம் துதிப்பான் - நாம் கொண்டாடுமாறு என்று உரைப்பார் ஒருசாரார். 'உன்னும்' என்பதற்கு - (படைத்தற்கடவுளென அனைவராலும்) நினைக்கப்படுகின்ற என்றும் பொருள் கொள்ளலாம் (௨௮)

[யாழிசையையும் அகிற்புகையையும் கொண்டாடுதல்.]

௨௯. மகரவீணையின்மந்திரகீதத்தின்மறைந்த
சகரவேலையினார்கலிதிசைமுகன்றடவுஞ்
சிகரமாளிகைத்தலந்தொறுந்தெரிவையர்நிவந்த
வகருதூபத்தினழுந்தினமுகிற்குலமனைத்தும்.

(இ - ள்.) மகரவீணையின் மந்திரகீதத்தின் - (இந்நகரத்தவர்வாசிக்கின்ற) மகரவீணையினது கம்பீரமான இசையொலியால், சகர வேலையின் ஆர்கலி மறைந்த-சகரசக்கரவர்த்திபுதல்வர்களால் தோண்டப்பட்ட கடலினது நிறைந்த ஓசைகள் அடங்கிவிட்டன ; திசைமுகன் தடவும் சிகரம் மாளிகை தலம் தொறும் - (எல்லாவுலகங்களுள்ளும் மேலதான சத்தியலோகத்தில் வசிக்கின்ற) நான்முகனான பிரமன் கைகளால் தடவும்படி உயர்ந்துள்ள சிகரத்தையுடைய இந்நகரத்து மாடமாளிகைகளிலெல்லாம், தெரிவையர் நிவந்த - மகளிர் (தமது கூந்தல்முதலியவற்றிற்கு) மிகுதியாயூட்டிய, அகரு தூபத்தின் - அகிற்புகையால், முகில் குலம் அனைத்தும் அழுந்தின - (வானத்திற்செல்லுகின்ற) மேகக்கூட்டங்கள்யாவும் அடங்கிவிட்டன ; (எ - று.)

இச்செய்யுளில், கீதவொலியில் வேலையின் ஆர்கலி மறைந்ததாகவும், அகில்தூபத்தில் முகிற்குலம் அழுந்தியதாகவும் கூறியது மறைவணி. திசைமுகன்தடவுஞ் சிகரமாளிகை - தொடர்புயர்வுநவிற்சியணி. பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் என்ற நான்கனுட் பத்தொன்பது நரம்பு கட்டின மகரயாழ், இங்குக் கூறப்பட்டது ; "ஒன்றுமிருபது மொன்பதும் பத்துடனே, நின்ற பதினான்கும் பின்னேழுங் - குன்றாத, நால்வகையாழுக்கு நன்னரம்பு சொன்முறையே, மேல்வகைய நூலோர்விதி" என்றதனால், முறையே இவற்றிற்கு நரம்பு ௨௧, ௧௯, ௧௪, ௭ - என்க. மகரவீணை - மகர

வீணை - மகரமீன்வடிவமாக வேலைத்திறமமைக்கப்பெற்ற வீணை. 'மந்த்ரகீதம்' என்ற வடமொழித்தொடர் விகாரப்பட்டது. கலம், மந்த்ரம், தாரம் என்ற இசைவகைகளுள் மத்திமமாகிய மந்த்ரம், இங்குக் கூறப்பட்டது; கலம் - செவிக்கு இனியதும் எழுத்து நன்குவிளங்காததுமான தொனி; மந்த்ரம் - கம்பீரமான தொனி; தாரம் - அதிகமான தொனி. தடவும் சிகரம் - பெயரெச்சம், காரியப் பொருளது. 'தெரிவையர்' என்பது - இங்குப் பருவப்பெயராகாமல், மகளிரென்றமாத்திரமாய் நின்றது; அப்பருவத்துக்கு வயதெல்லை, இருபத்தாறுமுதல் முப்பத்தொன்றளவுமாம். அகருதூபம் - அகிற்கட்டையை யெரித்தலாலாகும் புகை; வடமொழித்தொடர். (உக)

[அரக்கர்களின் களிப்பைத் தெரிவித்தல்.]

௩௦. பளிக்குமாளிகைத்தலந்தொறுமிடந்தொறும்பசுந்தேன்
றுளிக்குங்கற்பகத்தண்ணறுஞ்சோலைகடோறு
மளிக்குந்தேறலுண்டாடுநர்பாடுநராகிக்
களிக்கின்றாரலாற்கவல்கின்றாரொருவரைக்காணேன்.

(இ - ள்.) (இந்நகரத்திலுள்ள), பளிங்கு மாளிகை தலம் தொறும் - ஸ்படிகக்கற்களினாலமைக்கப்பட்ட வீடுகளினிடங்களிலும், பசுந் தேன் துளிக்கும் கற்பகம் தண் நறுஞ் சோலைகள் தோறும் - புதிய தேனைச் சிந்துகின்ற கற்பகவிருக்ஷங்களையுடைய குளிர்ச்சியான சோலைகளிலும், இடந்தொறும் - மற்றும் பலவகையான இடங்களிலும், அளிக்கும் தேறல் உண்டு ஆடுநர் பாடுநர் ஆகி களிக்கின்றார் அலால் - (பரிசாரகர்களால்) கொண்டுவந்து கொடுக்கப்படுகிற மதுவைக் குடித்துக் கூத்தாடுகின்றவர்களும் இசைபாடுகின்றவர்களுமாய்க் களித்திருக்கின்ற அரக்கர்களை (க் காண்கின்றேனே) யல்லாமல், கவல்கின்றார் ஒருவரை காணேன் - (களிப்பின்றிக்) கவலையுடனிருக்கின்றவரான அரக்கரொருவரையும் காண்கின்றேனில்லை; (எ - று.)

இலங்கையிலுள்ள மிகப்பலரான அரக்கர்களனைவரும் கவலையின்றிக் கட்குடித்துக் களித்து ஆடல்பாடல்களைச்செய்துகொண்டு மகிழ்ந்திருக்கின்றனரேயன்றி, ஒருவரேனும் களிப்பின்றிக் கவலையுடையராயிருக்கவில்லை யென்பது; கருத்து.

'கற்பகச்சோலை'—கற்பகம்போலுள்ள சோலை யென்றுவது, தேவலோகத்துக்கற்பகதருக்களை இராவணனால் அங்குநின்று பெயர்த்து இங்குக்கொணர்ந்துநாட்டப்பட்டன வென்றுவது கொள்க. 'கலுழ்கின்றார்' என்றும் பாடம். (௩0)

[அவர்களதுபோகத்தைத் தெரிவித்தல்.]

௩௧. தேறன்மாந்தினர்தேனிசைமாந்தினர்செவ்வா
யூறன்மாந்தினரின்னுரைமாந்தினரூடல்
கூறன்மாந்தினரனையவர்த்தொழுதெழுகோபத்
தாறன்மாந்தினரரக்கியர்க்குயிரன்னவரக்கர்.

(இ - ள்.) அரக்கியர்க்கு உயிர் அன்ன அரக்கர் - (இந்நகரத்திலே) இராக்கதமாதர்கட்கு உயிர்போன்றவர்களான இராக்கதர்கள், தேறல் மாந்தினர் - (அம்மாதர்களாலளிக்கப்பட்ட) மதுவைப் பானஞ்செய்கின்றவர்களும், தேன் இசை மாந்தினர்-(அவர்கள் பாடுகின்ற) தேன்போலினிய கீதத்தை ஆவலோடு கேட்கின்றவர்களும், செவ் வாய் ஊறல் மாந்தினர் - (அவர்களுடைய) சிவந்த வாயிதழி லூறுகின்ற அமுதநீரை உட்கொள்ளுகின்றவர்களும், இன் உரை மாந்தினர் - (அவர்களுடைய) இனிமையான பேச்சை அன்புடன் கேட்கின்றவர்களும், ஊடல் கூறல் மாந்தினர் - (அவர்கள்) ஊடி அதனாற்கூறுங் கடுஞ் சொற்களையும் பிரியத்தோடு கேட்கின்றவர்களும், அனையவர் தொழுது - அங்ஙனம் ஊடிய அம்மாதர்களை (ஊடல்தீர) வணங்கி, எழு கோபத்து ஆறல் மாந்தினர் - (அவர்கட்கு) உண்டாயிருந்த கோபந்தெளிந்தநிலையை ஆசையோடு காண்கிறவர்களுமா யுள்ளார்; (எ - று.)

அந்நகரத்து அரக்கர்களும் அரக்கியர்களும் கவலையின்றிக் களித்துப் பல படியால் உல்லாசமாகவிருக்கின்றமையை இங்ஙனம் பாராட்டிக் கூறினர். மாந்துதல் - குடித்தல்; இது - இலக்கணையாய், ஆதரத்தோடு செவியுற்றும் கண்ணுற்றும் உட்கொள்ளுதலையும் உணர்த்திற்று. வாய் - இதழுக்கு இலக்கணை. வாயூறல் மாந்துதல் - அதரபானம். "ஊடுதல் காமத்திற்கின்பம் அதற்கின்பம், கூடி முயங்கப்பெறின்" என்பவாதலால், ஊடல்கூறல்மாந்துதலும் எழுகோபத்தாறல்மாந்துதலும் மகிழ்ச்சிக்குக் காரணமாயின. உயிரன்ன அரக்கர் - அன்புடைமையால் இன்றியமையாத கொழுநரென்க; பிராணநாயகர். அனையவர்த்தொழுது - "இயல்பின் விகாரம்." இச்செய்யுளில், 'மாந்தின' என்ற ஒருசொல் ஒருபொருளிலேயே பலமுறை வந்தது, சொற்பொருட்பின்வருநிலையணியாம். (௩௧)

[இதுவும் அது]

௩௨. எறித்தகுங்குமத்திளமுலையெழுதியதொழில்கள்
கறுத்தமேனியிற்பொலிந்தனருடலிற்களன்று
மறித்துநோக்கியர்மலரடிமஞ்சுளப்பஞ்சி
குறித்தகோலங்கள்பொலிந்தனவரக்கர்தங்குஞ்சி.

(இ - ள்.) (இந்நகரத்து இராக்கதர்கள்), எறித்த குங்குமத்து இளமுலை எழுதிய தொழில்கள் - செந்நிறவொளிவீசுகின்ற குங்குமப்பூவின் குழம்பைக் கொண்டு (அரக்கியர்களின்) இளமையான தனங்களிலே எழுதப்பட்டுள்ள சித்திரங்கள், கறுத்த மேனியில் பொலிந்தனர் -(அவர்களை இறுக ஆலிங்கனஞ்செய்கின்றபொழுது) தமது கருநிறமானவுடம்பிற் பதிந்துவிளங்கப்பெறுகின்றனர்; அரக்கர்தம் குஞ்சி - (அங்ஙனமாகிய) இராக்கதர்களது தலைமயிர்கள், ஊடலின் கனன்று மறித்து நோக்கியர் மலர் அடி மஞ்சுளம் பஞ்சி குறித்த கோலங்கள் பொலிந்தன - பிணங்கியதனாற்கொதித்து வேறுபாடாய்ப் பார்க்கின்றவர்களான அவ்வரக்கியரது செந்தாமரைமலர்போன்ற கால்களிலூட்டப்பட்டுள்ள அழகிய செம்பஞ்சுக்குழம்பு பட்ட அடையாளங்கள் விளங்கப்பெறுகின்றன; (எ - று.)

இங்ஙனத்து அரக்கர்கள்பக்கல் கூடலும் ஊடலும் அடுத்து நிகழ்கின்றமை, இதில் விளங்கும். அரக்கரும் அரக்கியரும் தழுவும்பொழுது, அரக்கியர்மார்பிற் செந்நிறமான குங்குமப்பூங்குழம்புகொண்டு எழுதப்பட்டுள்ள மகரிகாபத்திரங்கள் அரக்கரது கருநிறமானமார்பிற் பதிதல், முதல்வாக்கியத்திற் கூறப்பட்டது. அரக்கியர் ஊடல்கொண்டபொழுது கோபமிகுதியால் ("குஞ்சிமேலணிச்சம்மலர்கூட்டுணு, மஞ்சிலோதிய ரம்மலர்ச்சீறடி,...பணிக்கும்", "புலந்தவள்கொடியெனநடுங்கிப் பொன்னரிச், சிலம்பொடுமேகலையிழற்றச் சென்னிமே, லலங்கல்வாயடிமலரணிந்து குண்டல, மிலங்கப்போர்த்தினமலர் சிதறியேகினாள்" என்றபடி) அரக்கரது முடியில் தமது அடி படுமாறு உதைக்கையில் அவ்வடிகளிலூட்டிய செம்பஞ்சுக்குழம்பு அம்முடியிற்படிவது, பிந்திய வாக்கியத்திற் கூறிய பொருள். மாற்றுநிலையணி; இது வடமொழியில் பரிவ்ருத்த்யலங்கார மெனப்படும்; உயர்ந்ததையேனும் தாழ்ந்ததையேனும் ஒன்றைக்கொடுத்து மற்றொன்றை வாங்குதல், இதனிலக்கணம்: அரக்கர் ஆலிங்கனத்தையும் வணக்கத்தையும் அரக்கியர்க்குத் தந்து, அவரிடத்தினின்று முலைத்தொய்யிலையும் காற்செம்பஞ்சின்நிறத்தையும் பெற்றதாகக் கூறியது காண்க. இச்செய்யுளின் முன்னிரண்டடி - கூடலையும், பின்னிரண்டடி - ஊடலையும் கூறுவன. கருமையென்ற பண்பினடி, கறு என விகாரப்பட்டு, வினைத்தன்மையடையும். மஞ்சுளம் - வடசொல். குஞ்சி - ஆடவர்தலைமயிர். (ருஉ)

[மகளிரின் அழகைக் கொண்டாடுதல்.]

ருரு. விளரிச்சொல்லியர்வாயினன்வேலையுண்மிடைந்த
பவளக்காடெனப்பொலிந்ததுபடைநெடுங்கண்ணாற்
குவளைக்கோட்டகங்கடுத்ததுகுளிர்முகக்குழுவான்
முளரிக்கானமுமானதுமுழங்குநீரிலங்கை.

(இ - ள்.) முழங்கு நீர் இலங்கை - ஒலிக்கின்ற கடல்நீர்சூழ்ந்த இவ்விலங்காபுரியானது,—விளரி சொல்லியர் - விளரியென்னும் இசைபோலினிய சொற்களையுடையவர்களான மகளிரது, வாயினால் - (செந்நிறமான) வாயிதழ்களால், வேலையுள் மிடைந்த பவளம் காடு என பொலிந்தது - கடலில் மிகுதியாயுள்ள பவழத்தொகுதிபோல விளங்கிற்று; படை நெடுங் கண்ணால் - (அம்மகளிரது) வாளாயுதம்போற்கூரிய நீண்ட கண்களினால், குவளை கோட்டகம் கடுத்தது - கருங்குவளைமலர்கள்நிறைந்த நீர்நிலையைப் போன்றது; குளிர் முகம் குழுவால் - (அம்மாதர்களது) குளிர்ச்சியான [காணுதற்கு இனிய] முகங்களின்கூட்டத்தால், முளரி கானமும் ஆனது - செந்தாமரைக்காடுபோலவு மாயிற்று; (எ - று.)

ஒருபொருளினிடத்துப் பலதன்மைகளை ஆரோபித்துக் கூறியதனால், பலபடப்புனைவணி. மகளிரது வாய்க்குப் பவழம் - செந்நிறத்திலும், கண்களுக்கு வாட்படை - கூர்மையிலும், ஆடவர்நெஞ்சின் திண்மையை யொழித்தலிலும், கண்களுக்கு நீலோற்பலமலர் - கருமை மென்மை யழகுகளிலும், முகத்திற்குத் தாமரைமலர் - கண்டவர்களிக்கச்செய்யும் அழகிலும் உவ

மையெனக் காண்க. வடமொழியில் ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்னும் ஸப்தஸ்வரங்கள் - தமிழில் முறையே குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழிசை யெனப்படுதலால், விளரியென்றது - தைவதமென்னுஞ் சுர மென்னலாம். விளரியென ஓர்பண்ணும் உண்டு. பவளக்காடு - பவழக்கொடியின் தொகுதி. படைஎன்ற ஆயுதப்பொதுப்பெயர்க்கு - வேல் அம்பு என்ற பொருள்களும் இங்கு அமையும்; அவையும், கண்ணுக்கு உவமையாம். கடுத்தது, ஆனது - உவமவாசகம். தாமரைத்தொகுதியை 'தாமரைக்காடு' என்றல், மரபு. முழங்கு நீர் ஆரவாரிக்கின்ற நீர்: எனவே, கடலாயிற்று. (நூ)

## வேறு.

[அரக்கர்களின் பெருந்தொகையைக் கொண்டாடுதல்.]

நூச. எழுந்தனர் திரிந்துவைகுமிடத்ததாயின்றுகாறும்
கிழிந்திலதண்டமென்னுமிதனையேகிளப்பதல்லா
லழுந்திநின்றுவதென்னேயலருளோனாதியாக
வொழிந்தபேருயிர்களெல்லாமரக்கருக்குறையும்போதா.

(இ - ள்.) அண்டம்-அண்டகோளமானது, எழுந்தனர் திரிந்து வைகும் இடத்தது ஆய் - (இந்நகரத்திலுள்ள அரக்கர்களித்தனைபேரும்) மேலெழுந்து திரிந்து தங்குமிடத்தையுடையதாயிருந்தும், இன்று காறும் கிழிந்திலது- இன்றைநாளளவும் உடைந்து தகர்ந்திலது, என்னும் இதனையே - என்கிற இந்த வலியுடைமையையே, கிளப்பது அல்லால் - அதிசயமாகப் பாராட்டிச் சொல்வதல்லாமல், அழுந்தி நின்று ஆவது என்னே - (அவ்வரக்கர்களுடைய தொகை இவ்வளவென்று சொல்லமுடியாமையைக்குறித்து) வருந்திநிற்றலா லாகும் பயன் யாது ? [எதுவுமில்லை யென்றபடி]; அலர் உளோன் ஆதி ஆக ஒழிந்த பேர் உயிர்கள் எல்லாம் - தாமரைமலரில் வாழ்கின்றவனான பிரம தேவன் முதலாக மற்றுமுள்ள பெருந்தொகையாகிய பிராணிகளனைத்தும், அரக்கருக்கு உறையும் போதா - (இந்நகரத்திலுள்ள) அரக்கர்களின் தொகைக்கு உறையிடுதற்கும் போதமாட்டா ; (எ - று.)

உறையிடுதலாவது - பொருள்களைக் கணக்கிடும்போது ஞாபகத்தின் பொருட்டு ஒவ்வொருபெருந்தொகைக்கு ஒன்றாக இடுவதோர் இலக்கக்குறிப்பு. பிரமன் முதல் எறும்பீறாக உலகத்திலுள்ள உயிர்களெல்லாம் இந்நகரத்தி லுள்ள அரக்கர்களின் தொகைக்கு உறையிடவும் போதா வென்று அவ்வரக் கர்களின் தொகைமிகுதியை விளக்கியவாறு ; (மேல் உருக்காட்டு படலத் தில் "இராமன்கை, யம்பினுக்கும்படைத்தவேவரவரைநோக்கி னிவ்வரக்கர், வம்பின்முலையா யுறையிடவும் போதார் கணக்குவரம்புண்டோ" என்பதும், "அன்றுபட்டவர்க் குறையிடப்போதுமோ வநேகநாளினும் பட்டார்" என்ற வில்லிபுத்தூரார்பாரதமும், "தறையிடத்தேயுழலெல்லாப்பிறவிதமக்குமள, வுறையிடத் தேய்ந்திடு மிவ்வந்திவானத்துடுக்குலமே". என்ற திருவேங்க டத்தந்தாதியும், இங்கு நோக்கத்தக்கவை.) இங்ஙனம் அளவிறந்த அரக்கர்

கள் எழுந்துதிரிந்துதங்குதற்கு இடங்கொடுத்துக்கொண்டு அண்டகோளம் இதுவரை பிளவுபடாதிருந்ததைப்பற்றி வியக்கவேண்டுமேயன்றி இவர்கள் தொகை இத்தனையென்று தெரியாமையைக்குறித்து வருந்தவேண்டுவதில்லை யென்பது, முதல்வாக்கியத்தின் கருத்து. தொடர்புயர்வுநவிற்சி. இனி இவர்கள் இராமபாணத்தால் அழிவுறுவரென்பதனை உட்கொண்டு, 'இன்று காறும்' எனப்பட்டது. அழுந்தினின்று - ஆழ்ந்து ஆலோசித்து நிற்றலால் எனினுமாம்.

இதுமுதல் ஒன்பதுகவிகள் - கீழ்ப்படலத்தின் முதற்கவிபோன்ற அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (ரு௪)

[நகரத்தின் பரப்பைக் கொண்டாடுதல்.]

ருரு. காயத்தாற்பெரியர்வீரங்கணக்கிலருலகங்கல்லு
மாயத்தார்வரத்தின்றன்மையளவறுறாறிதறேற்று
மாயத்தார்நகர்க்கெங்கேனும்வரம்புமுண்டாமேமற்றோர்
தேயத்தார்தேயஞ்சேறல்தெருவிலோர்தெருவின்சேறல்.

(இ - ள்.) காயத்தால் பெரியர் - உடம்பினளவினாற் பெருமையுடையவர்களும், வீரம் கணக்கு இலர் - வீரத்தன்மையில் அளவில்லாதவர்களும், உலகம் கல்லும் ஆயத்தார் - உலகத்தை நாசஞ்செய்யச் சித்தராயிருப்பவர்களும், வரத்தின் தன்மை அளவு அற்றார் (தாம்பெற்றுள்ள) வரபலத்தின் சிறப்பில் ஓரளவில்லாதவர்களும், அறிதல் தேற்று மாயத்தார் - (எவரும்) அறிந்துகொள்ள முடியாத மாயையையுடையவர்களுமாகிய அரக்கர்கள் வசிக்கின்ற, நகர்க்கு - இந்நகரத்திற்கு, எங்கு ஏனும் வரம்பும் உண்டு ஆமே - எவ்வகையிலேனும் ஓரளவும் உள்ளதாகுமோ? [ஆகாதென்றபடி]; தெருவில் ஓர் தெருவின் சேறல் - (இவ்வூரில்) ஒருதெருவிலிருப்பவர் அதனினின்று வேறொருதெருவிற்குச் செல்லுதல், ஓர் தேயத்தார் மற்று தேயம் சேறல் - ஒருநாட்டிலுள்ளவர்கள் (அந்நாட்டினின்று) பிறிதொரு நாட்டிற்குச் செல்லுதல்போலாம்; (எ - று.)

உடம்பு, வீரம், முயற்சி, வரம், மாயை முதலிய ஒவ்வொன்றிலும் அளவற்றவர்களான இவ்வரக்கர்கள் வசிக்கின்ற இந்நகர்க்கு ஓரளவு இருத்தல் கூடியதோ? அன்று என்றது, முதல்வாக்கியத்தின் தேர்ந்தபொருள். ஒவ்வொரு தெருவும் மிக நீண்டுள்ள தென்பதனை, பிந்திய வாக்கியத்தில் உவமைமுகத்தால் விளக்கினர். தெருவிலோர் தெருவின் சேறல் மற்றோர்தேயத்தார் தேயஞ்சேறல்போலுமென்றது 'சேறல்' என உபமான உபமேயங்கட்கு ஐக்கியந் தோன்றச் சொன்னது, காட்சியணி. 'காயத்தாற் பெரியர்' என்பதற்கு - உடம்பினாற் பருமையுடையவர்களென்றும், 'உலகம்கல்லும் ஆயத்தார்' என்பதற்கு - உலகத்தை மேலுங் கீழும் பறிக்கும்படியான நீளத்தையுடையவர்களென்றும் உரைப்பாருமுளர்; இவ்வுரையில், ஆயம் - நீளம்: ஆயத மென்ற வடசொல்லின் விகாரம். முந்தினவுரையில், ஆயத்தமென்ற வடசொல் ஆயமென விகாரப்பட்டதென்க; யத்தனமென்பது பொருள். இனி, இதற்கு - உலகத்தைப் பெயர்த்தெடுக்கவல்ல [மிக்கவலிமையுள்ள] மகளிர்கூட்டத்தை யுடையவரென்று உரைகூறுதலுமுண்டு; (ஆயம்-மகளிர்கூட்டம்:) பாலகாண்டத்தில் நாட

கைவதைப்படலத்தில், "மண்ணுருத்தெடுப்பினுங் கடலைவாரினும், விண்ணு ருத்தெடுப்பினும் வேண்டிற்செய்கிற்பாள்" என்றதும், பிறவுங் காண்க.

அறிதல் தேற்றும் என்று எடுத்து, (இவ்வரக்கர்களின் அளவை) அறிய வல்லேமல்லோம் யாம் என்று உரைப்பர் ஒருசாரார். ஏ - எதிர்மறை. காயம் - வடசொல். எங்கேனும் - அகலம், நீளம், சுற்றளவு, உயரம் முத லிய எவ்வகையிலாயினு மென்றபடி. தெருவில் ஓர்தெருவின் என்று எடுத்து, ஒருவீதியினின்று மற்றொருவீதிக்கு என்று உரைக்கவும் இடமுண்டு. 'அவர்க் கெங்கேனும்' என்று பிரதிபேதம். (ரு.ரு)

[அரக்கர்களது பராக்கிரமத்தையும் போகத்தையும் கொண்டாடுதல்.]

ருசு. கழலிலாக்காலுங்காலனயிலிலாக்கையுங்காந்து
மழலிலாக்கண்ணுமில்லாவாடவரில்லையன்னார்
குழலுலாங்களிவண்டார்க்குங்குஞ்சியாற்பஞ்சிகுன்று
மழலையாழ்க்குதலைச்செவ்வாய்மாதருமில்லைமாதோ.

(இ - ள்.) கழல் இலா காலும் - வீரக்கழலணியாத கால்கட்கும், காலன் அயில் இலா கையும் - யமன்போன்ற வேலாயுதத்தை யேந்தாத கைகட்கும், காந்தும் அழல் இலா கண்ணும் - மூண்டெரிகின்ற நெருப்பில்லாத கண்கட்கும், இல் ஆ (க) - இடமாக, ஆடவர் இல்லை - (இந்நகரத்திற்) புருஷர்களில்லை; அன்னார் - அந்த ஆடவர்களுடைய, குழல் உலாம் களி வண்டு ஆர்க்கும் குஞ்சி யால் - இசைப்பாட்டுடனே திரிகின்ற களிப்பையுடைய வண்டுகள் ஆரவாரிக் கப்பெற்ற தலைமயிரினால், பஞ்சி குன்று - (தங்கள்கால்களிலூட்டிய) செம்பஞ் சுக்குழம்பு குலைவுபடாத, மழலை யாழ் குதலை செவ் வாய் மாதரும் - இனிய ஒலியையுடைய யாழினிசைபோ லினிமைதருகின்ற குதலைச்சொற்களைப் பேசுகின்ற சிவந்தவாயையுடைய மகளிரும், (இல்லை - (இந்நகரில்) இல்லை; (எ - று.)—மாது, ஓ - ஈற்றசை.

இந்நகரத்தவரான அரக்கரனைவரும் இயற்கைக்கோபகுணத்தால் 'கொள் ளிக்கண்ணர்', 'கொடுங்கண்ணர்' என்னும்படி கொதிக்கின்ற நெருப்பைச் சொரிகின்ற கண்களை யுடையவர்களாயும், தமது வீரத்துக்கு அறிகுறியாகக் காலிற் கழலென்னும் அணிகலத்தை அணிந்தவர்களாயும், கொடுமையால் எப் பொழுதும் போர்க்குச்சித்தராய்க் கையில் வேலேந்தியவர்களாயு மிருக்கின்றார்க ளென்பது, முதல்வாக்கியத்தின் கருத்து. கழலில்லாதகாலுக்கு இடமாக ஆட வரில்லை—அனைவரும் கழலுடையரா யிருக்கின்றன ரென்றபடி. இரண்டு எதிர்மறை, உடன்பாட்டை உணர்த்திற்று; பிறவும் இங்ஙனமேகாண்க. இனி, கழல் இல் ஆ - வீரக்கழலுக்கு இடமாக, காலும் - காலையும், காலன் அயில் இல் ஆ - கொடிய வேற்படைக்கு இடமாக, கையும் - கையையும், காந்தும் அழல் இல் ஆ - வெவ்விய நெருப்புக்கு இடமாக, கண்ணும் - கண்களையும், இல்லா - உடையராகாத, ஆடவர் - ஆண்மக்கள், இல்லை - (இந்நகரத்தில்) இல்லை என்று பதவுரை கூறினும் இக்கருத்து அமையும். இல் - இடம்; "இல் லில்லா ளில்லையென்ற விராசி சாவிடம் வீடாமே" என்பது, சூடாமணி

நிகண்டு. இனி, கழலில்லாத காலும் அயிலில்லாத கையும் அழலில்லாத கண்ணும் இல்லாத ஆடவரில்லையென்று பொருள்கொண்டால், மூன்று எதிர்மறை தொடர்ந்து எதிர்மறைப்பொருளையே விளைத்தலால், மேற்கூறியகருத்துச் சித்தியாதாம்; இந்நுட்பம், ஊன்றியுணரற்பாலது: அன்றி, இவ்வாறுபொருள் கொண்டு, இந்நகரத்து ஆடவர்கள் (தம்மோடெதிர்ப்பவ ரொருவருமின்மையால்) காலில் வீரக்கழலணிதலும் கையில் வேலேந்துதலும் கண்களிற் கோபாக்கினி கொள்ளுதலுமின்றி (உல்லாசமாக மகளிரோடு விளையாடிக்கொண்டு) இருக்கின்றார்களென்று கருத்துக்கொள்ளுதலுமொன்று; அனைவரும், கழலில்லாத கால் முதலியவற்றை யுடையராயிருக்கின்றன ரென்க.

மகளிர் ஊடியபொழுது அவ்வூடலைத்தணித்தற்பொருட்டுத் தமதுமுடி அவரடியிற்படுமாறு விழுந்து வணங்கும்பொழுதும், மகளிர் ஊடல்மிகுதியால் ஆடவர்களின்முடிமேல் தமது அடிபடுமாறு அவர்களை உதைக்கும்பொழுதும் ஆடவரது முடிபட்டு மகளிர்காற் செம்பஞ்சுக்குழம்பு குலைகின்றதென்பது, பிந்தியவாக்கியத்தின் கருத்து.

வேலுக்கு யமனுவமை, கொல்லக்கருதியவர்களைத் தவறாது கொல்லுதலி லென்க. இனி, 'காலவயில்' என்பது - யமன்கையிலுள்ள காலசூலம்போன்ற சூலாயுதமென்றும் பொருள்படும். குழல் - இசைப்பாட்டு. 'குழல்உலாம்' என்பதற்கு - வேய்ங்குழல்போல இன்னிசைசெய்துகொண்டு திரிகின்ற வென்றும், நெய்குழல்போல ஓய்வின்றியுலாவுகின்ற என்றும் பொருள்கொள்ளலாம். வண்டுகள் குஞ்சியில் (மொய்த்து) ஆர்த்தல், அங்குச்சூடியமலர்களின் தேனை யுண்ணவென்க. 'கண்ணுமுள்ளவாடவர்' என்றும், 'குழலுலாய்' என்றும் பாடமோதுவாருமுளர். (௯௬)

[யானைகளைக் கொண்டாடுதல்.]

௯எ. கள்ளுறக்கனிந்தபங்கியரக்கரைக்கடுத்தகாதற்
புள்ளுறத்தொடர்வமேனிபுலாலுறக்கடிதுபோவ,
வெள்ளுறப்பெயிற்றசெய்யதலையனகரியமெய்ய
வுள்ளுறக்களித்தகுன்றினுயர்ச்சியவோடையானை.

(இ - ள்.) காதல் புள் உற தொடர்வ - ஆசையோடு வண்டுகளினால் மிகுதியாகத் தொடரப்படுபவையும், மேனி புலால் உற கடிது போவ - உடம்பிற் புலால்நாற்றம்வீசும்படி விரைந்துசெல்பவையும், வெள் உறுப்பு எயிற்ற - வெண்ணிறமாய் வெளிப்பட்டுவிளங்குகிற உறுதியான தந்தங்களை யுடையவையும், செய்ய தலையன - செந்நிறமான தலைகளையுடையவையும், கரிய மெய்ய - கருநிறமான உடம்பையுடையவையும், உள் உற களித்த - மனத்தில் மிகுதியாகக் களிப்பையுடையவையும், குன்றின் உயர்ச்சிய - மலைபோன்ற உயர்வையுடையவையுமான, ஓடை யானை - நெற்றிப்பட்டத்தையணிந்த யானைகள்,—கள் உற கனிந்த பங்கி அரக்கரை கடுத்த - (சூடியமலர்களின்) தேன் பெருக வளர்ந்த செம்பட்ட மயிர்களையுடைய இராக்கதர்களைப் போலுள்ளன; (எ - று.)

இலங்கையிலுள்ள யானைகட்கு அந்நகரத்து அரக்கர்களோடு ஒப்புமை குறிக்கப்பட்டது; சிலேடையுவமையணி. மதநீரை யுண்ணுதற்பொருட்டு வண்டுகள் யானைகளைத் தொடரும் தரித்தமலர்மாலைகளிலுள்ள தேனைப் பருகுதற்பொருட்டு அவை அரக்கரையுந் தொடரும்; அவர்களுடைய கட்குடித்த வாயில் வண்டுமொய்த்தலும் இயல்பு: "ஈக்கள்வண்டொடுமொய்ப்ப........... வாக்குதேனுகர் மாக்கள்" என்றது காண்க. 'புள்' என்ற பறவைப்பொதுப் பெயர் சிறப்பாய், வண்டைக் குறித்தது. இனி, புள் - இங்கே பருந்து என்றும் கொள்ளலாம்; மதயானையினாற் கொல்லப்படும் பிராணிகளின் தசையையுண்ணலாமென்னும் அவாவினால் அதனைப் பருந்துகள்தொடரும்; ("மாறு காணுமதாய்நின்று மழையெனமுழங்குக், தாறுபாய் கரிவனகரிதண்டத்தைத் தடவிப, பாறுபின்செலக் காலெனச் செல்வது" என்றார் பாலகாண்டத்து வரைக்காட்சிப்படலத்தில்.) இக்காரணத்தால் அரக்கரையும் பருந்துகள்தொடரும். அரக்கர்க்குப் புள் தொடர்தல் - அவர்கள்பக்கல் மகளிரால் தூதுவிடப்பட்ட வண்டு கிளி முதலிய பறவைகள் தொடர்தலென உரைப்பர் ஒருசாரார். யானைக்குப் புலால் - மதநாற்றம்; பகைவரைக்கொன்றதனாலாகிய தசைநாற்றமுமாம். அரக்கர்க்குப் புலால் - தசையுண்ட நாற்றம். ஆகவே, புலாலுறக்கடிது போதல் இருபாலும் அமையும். யானைக்கு வெள்ளுறுப்பெயிறு - தந்தம்; அரக்கர்க்கு இருபுறமும் வெளியெழுந்து விளங்குகிற வலிய கோரப்பல். யானைக்குச் செய்ய தலை - செம்பட்டினாலாகிய முகபடாத்தை யணிதலினால்; மதங்கொண்டகாலத்தில் துதிக்கையாற் புழுதியையெடுத்துத் தானே தன்தலையிற் போகட்டுக்கொள்ளுதலாலுமாம்; முகத்தில் உத்தமவிலக்கணமாகிய செம்புள்ளிகளையுடைமையும் ஒன்று. அரக்கர்க்குச் செய்ய தலை - செம்பட்ட மயிருடைமையால். கரியமெய்யும், குன்றினுயர்ச்சியும் - இருபாற்கு மொக்கும். உள்ளுறக்களித்தல் - யானைக்கு மதமயக்கத்தால்; அரக்கர்க்கு மதுபானத்தால். களிதல் - முதிர்தல். பங்கி - ஆடவர் தலைமயிர். உறுப்பு - உறுதி. நீட்சியுள்ள எயிற்றையுடையனவென்றும், எயிறாகிய உறுப்பையுடையனவென்றும் உரைப்பாருமுளர்; உறுப்பு - அவயவம். மூன்றாமடியில் வெள், செய்ய, கரிய என மாறுபட்டசொற்கள் வந்தது, முரண்தொடை. ஓடை - நெற்றிப்பட்டம்; முகபடாம் 'சூழி' எனப்படும்: "விழுச்சூழிய விளங்கோடைய" என்ற மதுரைக்காஞ்சியைக் காண்க. நெற்றிப்பட்டம், அரக்கர்க்கும் ஏற்கும். 'கனிந்த' என்பதற்கு - கனிபோலச் சிவந்தவென்று உரைப்பாருமுளர். தேன் பெருகுதலாற் கனிவுகொண்ட தலைமயிரென்றலும் சாலும்; இயல்பில் நெறித்துள்ள அரக்கர் செம்பட்டமயிர்கள் தேனூறுதலால் நெகிழ்ச்சி பெற்றன வென்க. 'கள்ளுறக்களித்த பங்கி யரக்கர்' என்ற பாடத்துக்கு, கட்குடித்தலாற் களிப்புக்கொண்டவர்களும் செம்பட்டமயிருடையவர்களுமான அரக்க ரென்பது பொருள். (௫௭)

[அரக்கியரது நடைச்சிறப்பைக் கொண்டாடுதல்.]

௫௮. வள்ளிநுண் மருங்குலன்ன வானவர் மகளிருள்ளந்
தள்ளுறப்பாணிதள்ளா நடம்புரிதடங்கண் மாதர்

வெள்ளிவெண்முறுவறோன்றமடந்தையர்வெள்குகின்றார்
கள்ளிசையரக்கர்மாதர்களியிடுகுரவைகாண்பார்.

(இ - ள்.) வள்ளி அன்ன - பூங்கொடிபோன்ற, நுண் மருங்குல் - நுண்ணிய இடையையுடைய, வானவர் மகளிர் - தேவமாதர்களது, உள்ளம்-மனம், தள்ளுற - சோர்வடையும்படி, பாணி தள்ளா நடம் புரி - தாளக்கிரமந்தவறாத நாட்டியத்தைச்செய்கின்ற, தட கண் மாதர் - பெரியகண்களையுடைய இராக்கத மகளிர்களது, வெள்ளி வெள் முறுவல் - வெள்ளிபோல வெண்ணிறமாகவுள்ள புன்சிரிப்பு, தோன்ற - வெளிப்பட,—மடந்தையர் - அத் தேவமாதர்கள், வெள்குகின்றார் - (முன்நிற்றற்கு) வெட்கப்படுகின்றவர்களாய்,—கள் இசை அரக்கர் மாதர் களி இடு குரவை காண்பார் - கள்ளைக்குடித்த இராக்கதமாதர்கள் அக்களிப்பினாலாடுங் குரவைக்கூத்தை(ச் சென்று) காண்பார்கள்; (எ-று.)

ஆடல்பாடலாதிவிநோதங்களில் தேவமாதர்கள் மிகச்சிறந்தவரென்பது, பிரசித்தம்; அத்தெய்வமகளிர் இங்கு அரக்கர்க்கு ஊழியஞ்செய்கின்றபொழுது வேலையொழிந்தவேளைகளில் அரக்கியரது நர்த்தனத்தைக் கண்டு மகிழ்பவராவர்; நாட்டியசாஸ்திர விதிமுறைதவறாது தாளவடைவொத்து அவ்வரக்கியராடும் நாட்டியமானது, அத் தேவமாதர் தமக்கு இவ்வகை நாட்டியஞ் செய்யத் தெரியவில்லையே யென்பதுகுறித்து மனஞ்சோரும்படி அதிவிசித்திரமாயிருக்கும்; அதனை அத்தேவமாதர்கள் வியந்துபார்த்துக்கொண்டிருக்கின்றபொழுது, அவ்விராக்கதமகளிர் நாட்டியமுறைமையிற்செய்த புன்சிரிப்பைக் கண்ணுற்று, அதனைத் தங்களைப்பரிகசித்துச்சிரித்ததாகக்கருதி, அங்கு நிற்க வெட்கி, வேறிடத்தில் அரக்கியர் கட்குடித்துக்களித்து ஆடுங் குரவைக் கூத்தைக் காண்பார்கள் எனக் கருத்து விரித்து உரைத்துக்கொள்க. அவர்கள் கட்குடித்துமயங்கியாடுங்கூத்து அத்துணையாக விதிமுறைக்கு ஒத்திராதாதலின் அதனை நாணுதலின்றிக் காணலாமென்பது, அத்தேவமாதர்களுட்கோளென்க. அரக்கர் மாதர் - அரக்கரும் அரக்கியரும் என்னவுமாம்; உம்மைத்தொகை. 'மடந்தையர்' என்றது, சுட்டுமாத்திரமாய் நின்றது.

வள்ளி - வல்லீ யென்ற வடசொல்லின் விகாரம். வானவர்மகளிர்உள்ளம்-தேவமாதர்களதுமனங்கள், வள்ளிநுண்மருங்குல் அன்ன - (அவர்களுடைய) கொடிபோல் நுண்ணிய இடைபோன்றனவாய், தள்ளுற - தளருமபடி என்று பதவுரைகூறுதலு மொன்று. 'அன்ன' என்பது - முந்தினபொருளிற் குறிப்புப்பெயரெச்சம்; பிந்தியபொருளிற் பலவின்பாற் குறிப்புவினையாலணையும் பெயர் கைகொண்டு ஒத்தறுத்து இடப்படுந் தாளத்துக்கு இலக்கணை. இனி, 'பாணிதள்ளா' என்பதற்கு - பாட்டுக்குஏற்ற என்ற பொருளும் அமையும். மடந்தைய ரென்பது, இங்குப் பருவப்பெயராகாமல், மகளிரென்றமாத்திரமாய்நின்றது; அப்பருவத்துக்கு வயதெல்லை, பதினொன்றுமுதற் பதினான்குகளவுமாம். இசைதல் பொருந்துதல். குரவை - கைகோத்தாடுங் கூத்து; "குரவைக்கூத்தே கைகோத்தாடல்" என்பது, திவாகரம். கள் இசை அரக்கர் மாதர்-தேன்போலினிய சொற்களையுடைய இராக்கதமகளிர், களி இடு - கட்குடித்த களிப்பினாற் செய்கின்ற, குரவை என்று பதவுரைகூறவும்படும். இசை - சங்கீதமுமாம். (௩௮)

[செல்வமிகுதியைக் கொண்டாடுதல்.]

௩௯. ஒறுத்தலோ நிற்கமற் றெம்முயர் படைக்கொருங் கிவ்வூர்வந்
திறுத்தலு மெளிதா மற்றுய் யாவர்க்கு மியக்க முண்டே
கறுத்தவா ளரக்கி மாரு மரக்கருங் கழித்து வீசி
வெறுத்தபூண் வெறுக்கை யாலே தூருமிவ் வீதி யெல்லாம்.

(இ - ள்.) ஒறுத்தலோ நிற்க - (யாம் இந்நகரத்தை) அழித்தல் இருக்கட்டும்; எம் உயர் படைக்கு - எமது சிறந்த (வானர) சேனைக்கு, ஒருங்கு இ ஊர் வந்து இறுத்தலும் எளிது ஆம் - ஒருசேர இந்தவூர்க்குவந்து சேர்தலும் எளியதாகலாம்; மற்றும் - அங்ஙனம் வந்துசேர்ந்தாலும், யாவர்க்கும் இயக்கம் உண்டே - அவ்வானரர்கட்கெல்லாம் இவ்வூரில் அடிவைத்துச்செல்லுதல் உண்டாகுமோ? [உண்டாகா தென்றபடி]; (எனெனில்),—கறுத்த வாள் அரக்கிமாரும் அரக்கரும் கழித்து வீசி வெறுத்த பூண் வெறுக்கையாலே - கருநிறமுள்ள கொடிய இராக்கதிகளும் இராக்கதர்களும் கழற்றியெறிந்து வேண்டாவென்று வெறுத்துவிட்ட ஆபரணங்களின்மிகுதியால், இ வீதி எல்லாம் தூரும் - இந்நகரத்து வீதிகளெல்லாம் நிறைந்துகிடக்கின்றன; (எ - று.)—மற்று - வினைமாற்று; அவ்வொறுத்தலையல்லாமல் என்க.

மிக்கசெல்வத்தவரான இந்நகரத்துஅரக்கியரும் அரக்கரும் புதியஆபரணங்களையணியும்போது முன்பு தாம் அணிந்திருந்த பழைய ஆபரணங்களைக் கழற்றி இனி இவைவேண்டாவென்று வெறுத்து வீதியி லெறிகின்றனர்; அவ்வூரில் அனைவரும் பெருஞ்செல்வராதலால் அங்ஙனம் பிறர் கழித்துத் தெருவிலெறிந்தவற்றை எவரும் விரும்பியெடுத்துக்கொள்வாரில்லை. ஆகவே, அவ்வணிகலங்கள் அங்கங்குக்கிடந்து நடப்பவர்காலிலுறுத்துதலால், அத்தெருக்களில் நடத்தல் எவர்க்கும் அரிதாகின்றதென்க. ("அவிரிழைசுமக்கலாற்றாதங்கலார்பரிந்துநீத்த, திவளொளிமணியுமுத்துஞ் சிந்திய முன்றில்தோறுங், குவிமுலைக்கயவாய்ச்செங்கட் குடம்புரை செருத்தன் மேதி, கவையடிபெயர்ப்பமாழ்கிக் கால்தளர்ந்தொதுங்கு மன்றே" என்ற நைடதச்செய்யுள், இங்கு நோக்கத்தக்கது.) இது செல்வமிகுதியைச் சொல்லுதலால், வீறுகோளணி. நீராடுதல், ஊடுதல், கூடுதல், பாரமெனக்கருதுதல் இச்சமயங்களில் அணிகலங்களைக் கழற்றியெறிகின்றன ரென்றலு முண்டு. 'ஒறுத்தலோநிற்க' என்றது - இந்நகரத்தை நாம் அழிப்பதைக்குறித்துப் பின்பு ஆலோசித்துக்கொள்ளலாம்; இந்நகரில் நம்மவர் அடியிடுதலரிதென்கிறவிஷயம் இப்பொழுது சிந்திக்கத்தக்கதாகின்றது என்றபடி. 'இறுத்தலுமெளிதாம்' என்ற உம்மையால், கடல்கடந்து இங்குவந்து சேர்தலினும் இவ்வீதிகளில் அடியிட்டு நடத்தல் அரி தென்றவாறும். வெறுக்கை - வெறுக்கப்படுவது என மிகுதிக்குக் காரணக்குறியாம். எளிதா என்று எடுத்து, எளியதோ? [அன்று] அங்ஙனம் எளிதாகிலும் என்று உரைப்பாரு முளர். (௩௯)

[இதுவும் அது.]

௪௦. வடங்களுங் குழையும் பூணு மாலையுஞ் சாந்து மியானைக்
கடங்களுங் களிமா விலாழியுங் கணக்கி லாத

**விடங்களுமிடங்கடோறும்யாற்றொடுமெடுத்தவெல்லா
மடங்கியதென்னிலென்னேயாழியினாழ்ந்த துண்டோ.**

(இ - ள்.) இடங்களும் - (இந்நகரத்து) வீதியிடங்களிலெல்லாம்,—வடங்களும் - (கீழ்க்கூறியபடி அரக்கியர்களும் அரக்கர்களும் கழற்றியெறிந்த) பொன் மணிகளினாலாகிய ஆரங்களும், குழையும் - காதணிகளும், பூணும் - (மற்றை) ஆபரணங்களும், மாலையும் - பூமாலைகளும், சாந்தும் - (அவர்கள் தம்முடம்பினின்று வழித்தெறிந்த) சந்தனக்குழம்பும், யானை கடங்களும் - யானைகளின் கன்னங்களினின்று பெருகுகின்ற மதநீர்களும், கலினம் மா விலாழியும் - கடிவாளம்பூண்ட குதிரைகளின் வாயினின்று வழிகின்ற நுரையும், கணக்கு இலாத - எல்லையில்லாமலுள்ளவை ; இடங்கள்தோறும் யாற்றொடும் எடுத்த எல்லாம் - அவ்விடங்களெல்லாவற்றிலும் உண்டான நதிகளினால் எடுத்துக் கொண்டுபோகப்பட்ட அப்பொருள்களெல்லாம், அடங்கியது-(தன்னிடத்தே) அடங்கப்பெற்றது (கடல்), என்னில் - என்றால், என்னே ஆழியின் ஆழ்ந்தது உண்டோ - என்னே! கடல்போல ஆழ்ந்தஇடம் (வேறு) உண்டோ? [இல்லை யென்றபடி]; (எ - று.)

யானைகளின் மதநீரும் குதிரைகளின் வாய்நுரையும் விரவி வெள்ளமாகி ஆறுபட்டு ஆரம்முதலியவற்றை அடித்துக்கொண்டுசென்று கடலிற் சேர்கின்ற தென்க. "தாறுமாய்தறுகட்குன்றந் தடமதவருவிதாழ்ப்ப, ஆறுமாய்க் கலினமாவிலாழியாலழிந்தோராறாய்" என்று பாலகாண்டத்து மிதிலாபுரிவருணனையிற் கூறியது காண்க. இங்ஙனம் கொண்டு செலுத்தப்பட்ட மிகப்பலவாகிய பொருள்களனைத்தும் தன்னிடத்தி லடங்கப்பெற்றதனாற் கடல்போலாழ்ந்தது வேறில்லையென்று கடலின் ஆழமுடைமை கூறும்முகத்தால், வடம் முதலிய இலங்கைநகரத்துப் பொருள்களின்மிகுதி கூறியவாறும். 'என்னே' என்றது, வியப்பிநால்.

இவ்வூர்க் குப்பைகளெல்லாம் கொட்டும் பெரும்பள்ளம் கடலென்க. ஓ - எதிர்மறை. 'வடம்' என்றது, பொன்னினாலும், இரத்தினங்களினாலுமாகிய ஆரங்களை. கடம் - வடசொல் : யானைக்கன்னம்; அதனினின்று பெருகும் மதநீர்க்கு இடவாகுபெயர். கலினமா - கடிவாளம் பூண்ட விலங்கு : எனவே, குதிரையாயிற்று. எல்லாம் அடங்கியது ஆழி - இடத்துநிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றது. (௪௦)

[சேனைமிகுதியைக் கொண்டாடுதல்.]

௪௧. **விற்படைபெரிதென்கோயான்வேற்படைமிகுமென்கோயான்
மற்படையுளதென்கோயான்வாட்படைவலிதென்கோயான்
கற்பணந்தண்டுபிண்டிபாலமென்றினையகாந்து
நற்படையுடைத்தென்கோயானாயகற்குரைக்குநாளில்.**

(இ - ள்.) யான்—, நாயகற்கு உரைக்கும் நாளில் - (எல்லாப்பொருள்கட்கும்) இறைவனான ஸ்ரீராமபிரானிடம் சென்று (இந்நகரத்தின் சேனைபலத்தை) எடுத்துச்சொல்லும்பொழுது, வில் படை பெரிது என்கோ - வில்வீரர்களதுசேனை பெரியதென்று சொல்வேனோ? யான்—, வேல் படை மிகும்

என்கோ - வேல்வீரர்களது சேனை அதிகமென்று சொல்வேனோ? யான்—, மல் படை உளது என்கோ - மற்போரில்வல்ல வீரர்களது சேனை மிகுதியாயுள்ளதென்று சொல்வேனோ? யான்—, வாள் படை வலிது என்கோ - வாள்வீரர்களது சேனை மிகுதியாயுள்ளதென்று சொல்வேனோ? யான்—, கற்பணம் தண்டு பிண்டிபாலம் என்ற இனைய காந்தும் நல் படை உடைத்து என்கோ - கப்பணம் கதை பிண்டிபாலம் என்று இத்தன்மையனவான ஆயுதங்கள் விளங்கப்பெற்ற சிறந்த சேனை மிகுதியுடையதென்று சொல்வேனோ' (எ-று.)

இந்நகரில் ஒவ்வொருவகைச்சேனையும் மிகவும் அதிகமாயுள்ளதனால், அவற்றில் இன்னது பெரிதென்று அறிந்துசொல்லுதல் இயலாது என்பதாம். விற்படை - வில்லைக்கொண்டு போர்செய்தலில் தேர்ந்த அதனையேர்ந்தியுள்ளவர்களான வீரர்களின் தொகுதி; பிறவும் இங்ஙனமே காண்க. மல் - ஆயுதமெடாமல் உடல்வலிமைகொண்டு கை கால் முதலிய உறுப்புக்களால் தாக்கிச் செய்யும் போர். கற்பணமெனினும், கப்பணமெனினும் ஒக்கும்; அது, இரும்பால் ஆனைநெருஞ்சிமுள்ளாகப் பண்ணிய ஆயுதம். தண்டு - தண்டமென்ற வடசொல்லின் விகாரம். பிண்டிபாலமென்பது, ஓர் எறி ஆயுதம்: வடசொல்.

'விற்படைபெரிதென்கேனோ வேற்படைமிகுமென்கேனோ, மற்படை பெரிதென்கேனோ வாட்படைவலிதென்கேனோ", 'நற்படைபெரிதென்கேனோ' என்பன - பாடாந்தரம் (௪௧)

[அநுமான் உடம்பைச்சுருக்கிக்கொள்ளுதலும், சூரியன் அஸ்தமித்தலும்].

௪௨. என்றனனிலங்கைநோக்கியினையனபலவுமெண்ணி
நின்றவாளரக்கர்வந்துநேரினுநேர்வரென்னாத்
தன்றகையனையமேனிசுருக்கியச்சரளச்சாரற்
குன்றிடையிருந்தான்வெய்யோன்குரைகடல்குளிப்பதானான்.

(இ - ள்.) (அநுமான்),—இலங்கை நோக்கி என்றனன் இனையன பலவும் எண்ணி - இலங்கைநகரத்தைப் பார்த்து என்று இத்தன்மையனவான பலவற்றையும் நினைத்து,—நின்ற வாள் அரக்கர் வந்து நேரினும் நேர்வர் என்னா - '(இவ்வூரில்) நிலைபெற்றுள்ள கொடிய இராக்கதர்கள் (யான்வந்திருத்தலையறிந்து) வந்து (என்னை) எதிர்த்தாலும் எதிர்ப்பார்கள்' என்று நினைத்து, தன் தகை அனைய மேனி சுருக்கி - தனது பெரிய அவ்வுடம்பைச் சுருங்கச் செய்துகொண்டு, அ சரளம் சாரல் குன்றிடை இருந்தான் - அழகிய சாரல் களையுடைய அந்தப் பவழமலையிலே இருந்தனன்; (அச்சமயத்தில்), வெய்யோன் - சூரியன், குரை கடல் குளிப்பது ஆனான் - ஒலிக்கின்ற மேல்கடலில் மூழ்கி மறைபவனானான் [அஸ்தமித்தானென்றபடி]; (எ - று.)

அநுமான் தனது பெருவடிவத்தைச்சுருக்கிக்கொள்ளுதல் சூரியன் தனது கிரணங்களைச் சுருக்கிக்கொண்டு அஸ்தமித்தல் போலுமென்ற உவமை இங்குத் தொனிக்கின்றதென்னலாம். பொறுமையுடையனான அநுமான் குன்றிடையிருந்தான், வெய்யோன் கடல்குளிப்பதானான் எனத் தொடைமுரண் தோன்றுதலும் காண்க. 'தன்தகை அனைய மேனி' என்பதற்கு - தனது பெருமைக்கு ஏற்பக் கொண்ட பெருவடிவமென்று உரைகூறலுமாம். (௪௨)

## வேறு.

[இருள் செறிதல்]

௩௩. ஏய்வினையிறுதியிற்செல்வமெய்தினு
னாய்வினைமனத்திலானறிஞர்சொற்கொளான்
வீவினைநினைக்கிலாதொருவன்மெய்யிலான்
றீவினையெனவிருள்செறிந்ததெங்குமே.

(இ - ள்.) ஏய் வினை இறுதியின் செல்வம் எய்தினன் - தன்மனம்போன படிசெய்த கொடுஞ்செயலினால் (பிறர்க்கு) அழிவையுண்டாக்கி அதனால் செல்வத்தையடைந்தவனும், ஆய்வினை மனத்து இலான் - (இன்னது நல்லது இன்னது தீயது என்று) ஆராய்தலை மனத்திற்கொள்ளாதவனும், அறிஞர் சொல் கொளான் - (நல்லவற்றையும் தீயவற்றையும்) பகுத்தறியும் விவேகமுடையவர்கள் சொல்லுஞ் சொற்களை ஆதரத்தோடுகேட்டு உட்கொண்டு அவற்றின் படி நடவாதவனும், வீவினை நினைக்கிலான் - (தனக்குவரும்) கேட்டை யுணர்தலும் அதனைக்குறித்துச்சிந்தித்தலுமில்லாதவனும், மெய் இலான் - வாய்மை பேசுதலில்லாதவனுமான, ஒருவன் - ஒருவனது, தீவினை என - பாவம்செறிந்தாற்போல, எங்கும் இருள் செறிந்தது - எல்லாவிடத்திலும் இருள் அடர்ந்து மிக்கது; (எ - று.)

பாவத்தைக் கருநிறமுடையதென்றல் கவிமரபாதலால், அது இங்குக் கரியஇருளுக்கு உவமைகூறப்பட்டது; தற்குறிப்பேற்றவணி. 'ஒருவன்' என்றது, இராவணனை யென்னலாம். ஏய் வினை - தன்மனத்துக்கு இசைந்த வினை; கள்ளம், வஞ்சகம், போர் முதலியன. இனி, முதலடிக்கு - முன்புசெய்தமைந்த நல்வினையினால் எல்லையில்லாத செல்வத்தை யடைந்தவனென்று பொருள் கூறவும் படும். செல்வம் - (எவரிடத்தும் நிலைத்திராமல் நீங்கிச்) செல்லுந்தன்மையது என்று பொருள்படும் காரணக்குறி. 'ஒருவன்வெம்மையான்' என்னும் பாடம்.

இதுமுதற் பத்தொன்பது கவிகள் - பெரும்பாலும் மூன்றுஞ்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (௩௩)

[இதுமுதல் மூன்றுகவிகள் - இருளைப்பற்றிய வருணனை.]

௩௪. கரித்தமூன்றெயிலுடைக்கணிச்சிவானவ
னெரித்தலையந்தணரிழைத்தயானையை
யுரித்தபேருரிவையாலுலகுக்கோருறை
புரித்தனனெனப்பொலியும்பொற்பதே.

(இ - ள்.) எரித்த மூன்று எயில் உடை கணிச்சி வானவன் - எரித்த திரிபுரத்தையுடையவனும் மழுவென்னும் ஆயுதத்தையேந்தியவனுமான மகாதேவனாகிய சிவபிரான், அந்தணர் எரித்தலை இழைத்த யானையை உரித்த - (தாருகவனத்து) முனிவர்கள் வேள்வித்தீயினிடம் உண்டாக்கி யனுப்பிய யானையை உரித்தெடுத்த, பேர் உரிவையால் - பெரியதோலைக்கொண்டு, உலகுக்கு ஓர்

உறை புரித்தனன் ஆம் என - (தான்போர்த்துக்கொண்டது மாத்திரமன்றி) உலகமுழுவதுக்கும் ஓர்உறையைச் செய்தனன்போலுமென்று ஒப்புமைகூறும் படி, பொலியும் -(உலகமுழுவதையும்) போர்த்துள்ள, பொற்பது - மிகுதியை யுடையது, (அவ்விருள்); (எ - று.)—எழுவாய், வருவித்து முடிக்கப்பட்டது.

தன்மைத்தற்குறிப்பேற்றவணி. கருநிறமிகுதிபற்றிய கற்பனை இது. சிவ பிரானது போர்வையாகிய யானைத்தோலை வாங்கி அதுகொண்டு உலகமுழு வதுக்கும் ஒருபோர்வையை(ப் பிரமன்) அமைத்தனனென்னும்படி என்று உரைகூறலுமொன்று. எயில் - மதில்; பொன்மதில், வெள்ளிமதில், இரும்பு மதில் என்பவற்றையுடைய திரிபுரத்தைக் குறித்தது; இலக்கணை. கணிச்சி - சூலாயுதமுமாம் உரிக்கப்படுவது, உரிவை. புரித்தனன் = புரிந்தனன்: வலித் தல். ஈற்றடி - முற்றுமோனை. (சச)

சரு. அணங்கரவரசர்கோனளவிலாண்டெலாம்
பணங்களின்றலைதொறுமுயிர்த்தபாய்விட
முணங்கலிலுலகெலாமுறையினுண்டுவந்
திணங்கெரிபுகையொடுமெழுந்ததென்னவே.

இதுமுதல் மூன்றுகவிகள் - குளகம்.

(இ - ள்.) அணங்கு அரவு அரசர் கோன் - வருத்தத்தைச் செய்கின்ற நாகராஜர்கட்கு அரசனாகிய ஆதிசேஷன், அளவு இல் ஆண்டு எலாம் - அள வில்லாத [மிகப்பலவாய் இதுவரைகழிந்த] வருஷகாலங்களெல்லாம், பணங் களின் தலை தொறும் உயிர்த்த - படங்களையுடைய ஆயிரம்வாய்களினின்றும் சொரிந்த, பாய் விடம் - பரவுந்தன்மையுள்ள விஷமானது, உணங்கல் இல் உலகு எலாம் முறையின் உண்டு வந்து - குறைவில்லாத உலகமுழுவதையும் முறையே தனக்கு உள்ளாக்கிக்கொண்டுவந்து, இணங்கு எரி புகையொடும் எழுந்தது என்ன - தன்னோடு இயைபுடைய நெருப்புடனும் புகையுடனும் எழுந்து பரவியதுபோலவும்,—(எ - று.)— 'அவ்வழி அவ்விருள்பரந்த' என மேல் சஎ - ஆங் கவியோடு தொடரும்.

தற்குறிப்பேற்றவணி. மிக்ககருநிறமும் கொடுமையும் பற்றி, இருளுக்கு விஷம் ஒப்புமை கூறப்பட்டது. நிசாசரர்களாகிய இராக்கதர் இருளில் ஊக்கத் தோடு சஞ்சரித்து மற்றைப்பிராணிகட்குத் தீங்குசெய்தல்பற்றி, இருள் மிகக் கொடிதாகின்றது. மிகுதியாய்த்திரண்ட இருட்கு உவமையாக்குதற்பொருட்டு, சர்ப்பராஜனான ஆதிசேஷன் தனது ஆயிரம் முகங்களினின்று நெடுங்கால மாகச்சொரிந்த விஷத்தை எடுத்துக்கூறினார். சங்காரகாலத்தில் ஆதிசேஷன் அநேகவருஷகாலம் தன்சுவாசத்தினின்று விஷாக்கினியை வெளிவீசி அது கொண்டு உலகத்தை அழிக்குமென்ற கொள்கையும், இங்கு ஏற்கும். அரவு அரசர்கோன் - சர்ப்பங்களின் அரசர்க்கு அரசன்; நாகலோக சக்கரவர்த்தி யென்க. 'அரவரசர்' என்றது, வாசுகி முதலிய அஷ்டமகாநாகங்களை. 'அரவர சர்கோன்' என்பதற்கு - அஷ்டமகாநாகங்களும் அவர்கட்குத்தலைவனான ஆதிசேஷனு மென்று உரைத்தலுமொன்று. 'விஷாக்கினி' என்னும் வழக்குப் பற்றி எரியைக்கூறி, அதற்கு அங்கமாகிய புகையையும் உடன்கூறினார். உப

மேயமாகிய இருளோடு இயைபுடைய செவ்வானத்தைக் கருதி, உபமானத்தில் இணங்கெரி அமைக்கப்பட்டதென்க. இருள் உலகத்தைக் கவிந்துகொண்டமைபற்றி உபமானத்தில் 'உணங்கலிலுலகெலாம் முறையினுண்டுவந்து' எனப்பட்டது. முதலடி - முற்றுமோனை. (சஎ)

சஅ. வண்மைநீங்காநெடுமரபின்வந்தவன்
வெண்மைநீங்காதகற்புடையபேதையைத்
திண்மைநீங்காதவன்சிறைவைத்தானெனும்
வெண்மைநீங்கியபுகழ்விரிந்ததென்னவே.

(இ - ள்.) வண்மை நீங்கா நெடு மரபின் வந்தவன் - (வேண்டுவார்க்கு வேண்டுவனவற்றையளிக்கும்) ஔதாரியகுணம் நீங்காத சிறந்த சூரியகுலத்தில் தோன்றியவனான ஸ்ரீராமபிரானது (மனைவியாகிய), வெண்மை நீங்காத கற்பு உடைய பேதையை - மகளிர்க்குஉரிய நற்குணங்கள் நீங்காதவளும் பதிவிரதா தருமமுடையவளும் பேதைமைக்குண முள்ளவளுமான சீதாபிராட்டியை, திண்மை நீங்காதவன் சிறை வைத்தான் - வலிமைநீங்காதவனான இராவணன் காவலில் வைத்தான், எனும் - என்கிற, வெண்மை நீங்கிய புகழ் - வெண்ணிறமில்லாத கீர்த்தி [கருநிறமுள்ள அபகீர்த்தி], விரிந்தது என்னவே - உலகமுழுவதும் பரவியதுபோலவும்,—(எ - று.)—'அவ்வழி அவ்விருள் பரந்த' என, அடுத்த கவியோடு தொடரும்.

குற்றமற்றபுகழை வெண்ணிறமுடையதென்றும், அதற்குமாறான பழியைக் கருநிறமுடையதென்றும் கூறுதல் கவிமரபாதலால், ஸ்ரீராமபத்தினியான சீதையைக் காதலாற் கவர்ந்துகொண்டு சிறைவைத்தவனான இராவணனது பழி காரிருளுக்கு உவமைகூறப்பட்டது; தற்குறிப்பேற்றவணி. பழியும் அபகீர்த்தி என்று கூறப்படுதலால், அதனை 'வெண்மைநீங்கிய புகழ்' என்றனர்; இது, பிறகுறிப்பினைமாற்படும். கற்புநிலையுடைய பிறன்மனைவியைக் காதலித்து வலியக்கவர்ந்து தேசாந்தரத்திற் கொணர்ந்து சிறைவைத்தல் பெரும் பழிப்புக்கிடமாதலுணர்க.

சூரியகுலத்து அரசர்களனைவரும் வண்மையிற்சிறந்தவரென்பதை, பாலகாண்டத்துக் குலமுறைகிளத்துபடலங்கொண்டும் உணரலாம். நெடுமரபு - மகாகுலம். வெண்மை - மகடூஉக்குணம் நான்கு: நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்பன. (நாணம் - மகளிர்க்கு இயல்பாய்ப் பிறரைக்காண வெட்கமடையும் ஓர்தன்மை. மடம் - வேறொன்றை யறியாமை; குரவருணர்த்தக் கொண்டு, கொண்டதுவிடாமை; அறிந்தும் அறியாதுபோலிருக்குந் தன்மையும், கபடமின்மையுமாம். அச்சம் - பிறரைக்கண்டு அஞ்சுதல்; பெண்தன்மையாற் புதிய பொருள்கண்டவிடத்து அஞ்சுவது. பயிர்ப்பு - வேறொருவரின்பத்தை அருவருத்தல்: பயிலாதபொருளின்கண் வெறுப்புற்றுநிற்கும் நிலைமை; தன்கணவனல்லாதவரது ஆடைமுதலியன தன்மேற்படுதற்கும் அருவருத்தல்.) கற்பாவது - தன்கணவனைத் தெய்வமென்று உணர்வதோர் மேற்கோள்; பதிவிரதாதருமம். கொண்டானிற் சிறந்த தெய்வமில்லை யென்றும், அவனுக்கு இன்னவாறு நீ

குற்றேவல்செய்தொழுகு என்றும், தாய்தந்தையராலும் பிறராலும் கற்பிக்கப்பட்டு இவ்வொழுக்கம் உண்டாகி நிலைபெறுதலால், கற்பு எனப் பெயர் பெற்றது. "பேதைமையென்பது மாதர்க்கு அணிகலம்," "நுண்ணறிவுடையோர் நூலொடுபழகினும், பெண்ணறிவென்பது பெரும் பேதைமைத்தே" என்பவாதலால், சீதை 'பேதை' எனப்பட்டாள். மாயமானைப் பிடித்துத்தருமாறு வற்புறுத்திக் கணவனைவேண்டுதல்முதலியவற்றாற் சீதையினிடத்துப் பேதைமை ஆங்காங்கு விளங்குதல் காண்க. திண்மை - தேகபலம், மனோபலம், ஆயுதபலம், சேநாபலம் முதலியன. வண்மைநீங்கா நெடுமரபின்வந்தவன் - சிறந்த குணங்கள் நீங்காத பிரமவம்சத்திற் புலஸ்தியகுலத்திற் பிறந்தவனான இராவணன் என்று கொண்டு, திண்மைநீங்காத வல்சிறை என்று பிரித்து, மிகவலியசிறைச்சாலையென்று உரைப்பாரு முளர். 'சிறைவைத்தானென' என்று பிரதிபேதம். (சுசு)

[நிசாசரர்களாகிய அரக்கர்கள் இராவுதொடங்கியவுடன் எங்குந்திரிதல்.]

சஎ. அவ்வழியவ்விருள்பரந்தவாயிடை
யெவ்வழிமருங்கினுமரக்கரேகினார்
செவ்வழிமந்திரத்திசையராயினும்
வெவ்வழியிருடரமிதித்துமீச்செல்வார்.

(இ - ள்.) அ வழி அ இருள் பரந்த அ இடை - அவ்விடத்தில் அத்தன்மைத்தான இருள் பரவிய அச்சமயத்தில்,—அரக்கர் - இராக்கதர்கள்,—செவ்வழி மந்திரம் திசையர் ஆயினும் - நேராகக் குருசிஷ்யக்ரமத்தில் உபதேசபரம்பரையாய்ப்பெற்றுள்ள மந்திரத்தின் பலத்தால் (தாம் செல்லக்கருதிய) திசைக்கு(த் தடையின்றி)ப் பறந்துசெல்லவல்லராயினும், வெவ் வழி இருள் தர மிதித்து மீ செல்வார் - (தாம்செல்லுங்) கொடியவழியிலே இருள் செறிந்திருக்க அதனைமிதித்து மேற்செல்பவர்களாய், எ வழி மருங்கினும் ஏகினார் - எல்லாப்பக்கத்துவழிகளிலும் சென்றார்கள்; (எ - று.)

இராக்கதர் நிசாசரராதலால், இருள்பரந்த இரவிற் பலவிடங்கட்குப் செல்லலானார்கள். அங்ஙனம் மேலுலகங்களைநோக்கிச்செல்லப் புகுமிடத்து தாம்சேர்ந்த மந்திரசித்தியால் வானத்திற் பறந்துசெல்லும் ஆற்றல் தங்கட்கு அமைந்திருக்கவும் அங்ஙனஞ்செய்யவேண்டிய அவசியமின்றி, எங்குஞ் செறிந்து காணப்பட்ட இருளின்மீது கால்வைத்துப் படியேறுவார்போலேறி மேற்செல்வாராயின ரென்றார் "எய்தியதந்தகாரம், நீண்டற்கெளிதாய்ப் பல தேய்ப்பனதேய்க்கலாகி, வேண்டிற்காபத்திரத்தீர்த்து விழுத்தலாகிக், காண்டற்கினிதாய்ப் பலகந்துதிரட்டலாகி," "முருடீர்ந் துருட்டற்கெளிதென்பதென்" என்றபடி இருள் மிகத்திண்ணிய பரிசிக்கப்படுபொருள் போற் செறிந்துள்ள இயல்பு விளங்க, இக்கற்பனை கூறப்பட்டது; தற்குறிப்பேற்றம். இருளின் கருமை கொடுமைகளினும் தமதுகருமைகொடுமைகள மிக்கிருத்தலால் அதனைக்காற்கடைக்கொண்டு வென்று மேற்செல்வாரென்பதும், நான்காமடியில் தோன்றும். 'ஆயினும் வெவ்வழி இருள்தர' என்பதற்கு - (இவர்

கள் எவ்வழிச்செல்கின்றூர்களென்று) ஆராய்ந்துநோக்கினாலும் (அறியமுடியாதபடி) கொடியதன்மையாய் இருள்பரவ வென்று உரைப்பாருமுளர்; இருள்நிறங்கொண்ட அரக்கர்களை இருளிற்காணுத லரிதாம். (சஎ)

[இதுவும் அது.]

சஅ. இந்திரன்வளநகர்க்கேகுவாரிகற்
சந்திரனுலகினைச்சார்குவார்கலித்
தந்தகனுறையுளையணுகுவாரியல்
வெந்தொழிலரக்கனதேவன்மேயினார்.

(இ - ள்.) (அவ்விருளில் இராக்கதர்கள்),—இயல் வெம் தொழில் அரக்கனது ஏவல் மேயினார் - இயல்பிலமைந்த கொடுந்தொழிலையுடைய இராக்கதனை இராவணனது கட்டளையிற் பொருந்தியவர்களாய்,—இந்திரன் வளம் நகர்க்கு ஏகுவார் - செல்வவளம்நிறைந்த தேவேந்திரனது அமராவதிநகரத்தைக்குறித்துச் செல்பவர்களும், இகல் சந்திரன் உலகினை சார்குவார் - வலிமையையுடைய சந்திரனது உலகத்தைச் சேர்பவர்களும், கலித்து அந்தகன் உறையுளை அணுகுவார் - ஆரவாரஞ்செய்துகொண்டு யமனுடைய இருப்பிடத்தைச் சென்று சமீபிப்பவர்களுமாயினார்; (எ - று.)

ஒவ்வோரிடத்துக்குஞ் சிற்சிலராகச் சென்றனரென்க. இச்செய்யுளை 'எவ்வழிமருங்கினு மரக்கரேகினார்' என்றதன் விவரணமெனக் கொள்ளலாம். சீதையினிடம் காதல்நோய் கொண்ட இராவணனுக்குச் சந்திரன் அவ்வேதனையை மிகுவித்து வருத்தம் விளைத்தல் பற்றி அவனுக்கு 'இகல்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டதாகவும் கொள்ளலாம்; இகல் - பகைமை. யமனது நகரம், 'ஸம்யமிநீ' என்று பெயர்பெறும் அந்தம் - அழிவு; அதனை (ப்பிராணிகட்கு)ச் செய்பவன், அந்தகன்: வடசொல். (சஅ)

[தேவாதிமாதர்கள் இராவணனுக்குத் தத்தேவல்செய்தற்பொருட்டு விரைந்துவருதல்.]

சகூ. பொன்னகர்மடந்தையர்விஞ்சைப்பூவையர்
பன்னகவனிதையரியக்கர்பாவையர்
முன்னினபணிமுறைமாறமுந்துவார்
மின்னினமிடைந்தெனவிசும்பின்மீச்செல்வார்.

(இ - ள்.) பொன் நகர் மடந்தையர் - பொன்மயமான தேவலோகத்திலுள்ள தேவமாதர்களும், விஞ்சை பூவையர் - வித்தியாதரமகளிரும், பன்னக வனிதையர் - நாககன்னிகைகளும், இயக்கர் பாவையர் - யக்ஷஸ்திரீகளும்,—முன்னின பணி முறை மாற-(அரக்கர்கள்) நினைக்கின்ற செயல்களைக் (குறிப்பாலுணர்ந்து) கிரமமாகச்செய்தற்பொருட்டு, முந்துவார் - (ஒருவரினும் ஒருவர்) முற்பட்டு விரைந்து, மின் இனம் மிடைந்து என விசும்பின் மீ செல்வார் - மின்னல்களின்கூட்டம் நெருங்கினாற்போல ஆகாயமார்க்கமாய் (அவ்விரவிற்) செல்வார்கள்; (எ - று.)

மெல்லிதாய்த்தோன்றும் வடிவுக்கும், மிக்க தேககாந்திக்கும், விசும்பிற் செல்லுதற்கும் மின்னலுவமை கூறப்பட்டது. 'பந்நகவநிதா' என்ற வடமொழித்தொடர் விகாரப்பட்டது. பந்நகம் என்பது, பத் ந கம் என்று பிரிந்து, கால்களால் நடவாதது என்று காரணப்பொருள்பெறும். இவரும், பதினெட்டுத்தேவகணங்களி லொருவகைய ராதலால், விசும்பிற் செல்வர். இயக்கர் - யக்ஷரென்ற வடசொல்லின் சிதைவு பூவை - கிளி, நாகணவாய்ப் பறவை; அதுகொஞ்சுவதுபோல இன்சொற்பேசுபவர், பூவையர். பாவை - சித்திரப்பதுமை; அதுபோலழகியவர், பாவையர். உவமையணி. (௪௯)

[தேவகணத்து ஆடவர்களின் அங்ஙனம் வருதல்.]

௫௰. தேவருமவுணருஞ்செங்கணாகரு
மேவருமியக்கருமிஞ்சைவேந்தரும்
யாவரும்விசும்பிருளிரியவீண்டினார்
தாவரும்பணிமுறைதழுவுந்தன்மையார்.

(இ - ள்.) தேவரும் - தேவர்களும், அவுணரும் - அசுரர்களும், செம் கண் நாகரும் - சிவந்தகண்களையுடைய நாகசாதியாரும், மேவரும் இயக்கரும் - விரும்பத்தக்க [அழகையுடைய] யக்ஷர்களும், விஞ்சை வேந்தரும் - வித்தியாதரர்களும், யாவரும் - மற்றும் தேவகணத்தவ ரனைவரும்,—தா அரும் பணி முறை தழுவும் தன்மையார் - கெடுதலில்லாத குற்றேவல்களை (அரக்கர்களிடு கின்ற கட்டளை) முறைப்படி செய்யுந் தன்மையுடையவர்களாய், இருள் இரிய விசும்பு ஈண்டினார் - (தமதுதேககாந்தியால்) இருளழியும்படி ஆகாயமார்க்கமாக (இரவில் வந்து) திரளலானார்கள்; (எ - று.)

அரக்கர்கள் இரவுபகலாகப் பகல்இரவாக மாறுமொழுகு மியல்பின ராதலால், மற்றையோர் பகலின்தொடக்கத்தில் தொழில்முறை கொள்ளுதல் போல அவர்கள் இரவின்தொடக்கத்தில் தொழில்முறைகொள்வ ரென்பதனை உணர்க. கந்தர்வர், கருடர், கிந்நரர், கிம்புருஷர் முதலிய மற்றைத்தேவ கணத்தவர், 'யாவர்' என்றதில் அடங்குவர். "உருவமேலெழுதலாக வொளி யுமிழ்ந்திலங்குமேனி, பரிதியினியன்றதொக்கும் பன்மலர்க்கண்ணிவாடா" என்றபடி தேவர்கள் மேனியொளிகொண்டவ ராதலால், 'விசும்பிருளிரிய வீண்டினார்' என்றார். (௫௰)

[அவர்களின் விரைவு.]

௫௧. சித்திரபத்தியிற்றேவர்சென்றன
ரித்துணைதாழ்ந்தனமுனியுமென்றுத
முத்தினாங்களுமுடியின்மாலையு
முத்தரீயங்களுமிரியவோடுவார்.

(இ - ள்.) சித்திரம் பத்தியின் - சித்திரப்பாவைகளின் வரிசைபோல [நிலைகுலையாமல் அழகுஅமைய], சென்றனர் - தமது இயல்பின்படி மந்தகதி யாய்வந்தவர்களான, தேவர் - தேவர்கள், (சூரியன் அஸ்தமித்துச் சிறிது பொ

முதாய்விட்டதை யுணர்ந்து), 'இத் துணை தாழ்ந்தனம் - இவ்வளவு தாமதித்துவிட்டோமே; முனியும் - (இராவணன்) கோபங்கொள்வனே', என்று - என்றெண்ணி,—தம் - தங்களுடைய, முத்தின் ஆரங்களும் - முத்துமாலைகளும், முடியின் மாலையும் - மயிர்முடியிற்சூடிய மலர்மாலைகளும், உத்தரீயங்களும் - மேலாடைகளும், இரிய - நிலைகுலையும்படி, ஓடுவார் - ஓடுபவரானார்கள்; (எ - று.)

முக்தா என்பது - (சிப்பியினின்று) விடுபட்டது எனக் காரணப்பொருள் பெறும். இரிதல் - சரிந்துவிழுதல். 'சித்திரப்பத்தியின்', 'முடியுமாலையும்', 'சரியவோடுவர்' என்பன - பாடாந்தரம். (ருக)

[சந்திரனது தோற்றம்.]

ருஉ. தீண்டருந்தீவினைதீக்கத்தீந்துபோய்
மாண்டறவுலர்ந்ததுமாருதிப்பெய
ராண்டகைமாரிவந்தளிக்கவாயிடை
யீண்டறமுளைத்தெனமுளைத்ததிந்துவே.

(இ - ள்.) தீண்டு அரு - கையினால் தொடுதற்குந்தகாத, தீ வினை - (இராவணன்முதலிய அரக்கர்களினாலான) பாபகருமங்களாகிய கோடை, தீக்க - எரித்தலினால், தீந்து போய் - கரிந்துபோய், மாண்டு வலியொடுங்கி, அற உலர்ந்தது - மிகவும் உலர்ந்துவிட்டதான, அறம் - தருமமாகிய முளை, மாருதி பெயர் ஆண்தகை மாரி வந்து அளிக்க - அநுமானென்னும் பெயரையுடைய ஆண்மைக்குணங்களுள்ள வீரனாகிய மழை வந்து உதவிப் பாதுகாக்க, (அதனால்), ஆயிடை ஈண்டு முளைத்து என - அப்பொழுது இவ்விடத்தில் மீளவும் முளைத்தாற்போல, இந்து முளைத்தது - சந்திரன் உதித்து விளங்கிற்று.

உருவகத்தை அங்கமாகக்கொண்டுவந்த தற்குறிப்பேற்றவணி. தருமத்தை வெண்ணிறமுடையதென்றல், கவிமரபு; ஆதலால், சந்திரனுக்கு ஒப்புமை கூறப்பட்டது. அநுமான் கடல்கடந்து இலங்கையிற் பிரவேசித்தது முறையே இராவணன் முதலிய அரக்கர்களழியத் தருமந்தலையெடுத்தோங்குதற்குக் காரணமாதலை உணர்க. இடத்தையுணர்த்துஞ்சொற்கள் காலத்தையுமுணர்த்தும் வழக்குப்பற்றி, 'ஆயிடை' என்பதற்கு - அப்பொழுது என்று உரைக்கப்பட்டது. 'ஈண்டு' என்பது, இடைச்சொல். இனி, 'ஈண்டறம்' என்பதை வினைத்தொகையாகக்கொண்டு, (அனைவரும் விரும்பிச்) சேர்த்தக்க நல்வினையென்று பொருள்கொள்ளினுமாம்; தீவினைக்கு 'தீண்டரு' என்ற அடைமொழி கொடுத்ததற்கு ஏற்ப, நல்வினைக்கு 'ஈண்டு' என்ற அடைமொழி கொடுத்தனரென்க. (ருஉ)

[இதுவும், அடுத்தகவியும் - சந்திரனைப்பற்றிய வருணனை.]

ருங. வந்தனனிராகவன்றாதன்வாழ்ந்தன
னெந்தையேயிந்திரனுமென்றேமுரு
வந்தமில்கீட்டிசையளகவானுதற்
சுந்தரிமுகமெனப்பொலிந்துதோன்றிற்றே.

(இ - ள்.) 'இராகவன் தூதன் வந்தனன் - இராமபிரானது தூதனாகிய அநுமான் (இலங்கைக்கு) வந்துசேர்ந்தான்; (ஆதலால், இனி), எந்தை இந்திரனே வாழ்ந்தனன் ஆம் - எனது தலைவனாகிய இந்திரனே வாழ்வுபெற்றவனாவன்,' என்று - என்றெண்ணி, ஏம் உறு - மகிழ்ச்சியடைந்து, (அதனால்), அந்தம் இல் கீழ் திசை அளகம் வாள் நுதல் சுந்தரி - அழிதலில்லாத கிழக்குத் திக்காகிய கூந்தலையும் பிரகாசமான நெற்றியையுமுடைய அழகிய பெண்ணினது, முகம் என - முகம் (பொலிவுற்று விளங்கினாற்)போல, பொலிந்து தோன்றிற்று - (சந்திரன்) விளங்கிக்காணப்பட்டது; (எ - று.)

இராமதூதனான அநுமான் சீதைசிறையிருக்குமிடமாகிய இலங்கைக்கு வந்துசேர்ந்ததனால் இராவணன்முதலிய அரக்கர்கள் விரைவி லழிய அவர்களால் வருத்தமுற்றிருக்கிற எனது தலைவனான தேவேந்திரன் இனி வாழ்வு பெறுதல்கூடுமென்று எண்ணி அவ்விந்திரனுக்கு உரிய கிழக்குத்திசையாகிய பெண் மனமகிழ அம்மகிழ்ச்சியால் "அகத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம், கடுத்தது காட்டும் முகம்" என்றபடி அவளது முகமண்டலம் விளக்கமுற்றாற்போலக் கிழக்குத்திசையிற் சந்திரமண்டலம் விளங்கிற்று என்பதாம்; தற்குறிப்பேற்றவணி. இந்திரன் கிழக்குத்திக்குப்பாலகனாயிருத்தலும், வடமொழியில் திசையைக்குறிக்கின்ற சொற்களெல்லாம் பெண்பாலாதலும், திக்குக்கு உரிய தேவதை பெண்ணாதலும், முகத்திற்கும் சந்திரனுக்குமுள்ள ஒப்புமையும், இங்குக் கருதத்தக்கவை.

ராகவன் - ரகுவென்னும் அரசனது குலத்தில் உதித்தவன்; தத்திதாந்த நாமம்: ரகுவென்பவன் வண்மை வீரம் முதலிய குணவிசேடங்களிற் சிறப்புற்றவனாதலால், இராமபிரான், அவன்மரபுபற்றிவந்த பெயராற் கூறப்பட்டனன். 'வாழ்ந்தனன்' என்றது, விரைவும் தெளிவும் பற்றி எதிர்காலம் இறந்த காலமாகச்சொல்லப்பட்ட காலவழுவமைதி. 'எந்தையே இந்திரன்' என்ற விடத்து, பிரிநிலையேகாரம் பிரித்துக்கூட்டப்பட்டது. எந்தை ஏய் இந்திரன் என்றுபிரித்து, எனதுதலைவனாயமைந்த இந்திரனென்றலும் அமையும். அந்தம் இல் - எல்லையற்ற வென்றுமாம். கீட்டிசையாகிய சுந்தரியென இயையும். 'அளகவாணுதல்' என்றது, சுந்தரிக்கு அடைமொழி. 'ஏமுறும்' என்றும் பாடமுண்டு. .(௫௩)

௫௪. கற்றைவெண்கவரிபோற்கடலின்வெண்டிரை
சுற்றுநின்றலமரப்பொலிந்துதோன்றிற்று
எற்றதெம்பகையெனவெழுந்தவிந்திரன்
கொற்றவெண்குடையெனக்குளிர்வெண்டிங்களே.

(இ - ள்.) கடலின் வெள் திரை - கடலினது வெண்ணிறமான அலைகள், கற்றை வெள் கவரிபோல் - திரட்சியான வெண்சாமரங்கள்போல, சுற்றும் நின்று அலமர - சுற்றிலும்நின்று சுழன்றுவிழ,—எம் பகை இற்றது என எழுந்த இந்திரன் கொற்றம் வெள் குடை என - 'எமதுபகையாகிய இராக்கத வருக்கம் இனி அழிந்தது' என்று மகிழ்ச்சிகொண்டு வெளியேபுறப்பட்ட இந்திரனது வெண்கொற்றக் குடைபோல, குளிர் வெள் திங்கள் பொலிந்து

தோன்றிற்று - குளிர்ந்த வெண்ணிறமான சந்திரமண்டலம் விளங்கிக்காணப் பட்டது; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

இராமதூதனாகிய அநுமான் இலங்கைக்குவந்துசேர்ந்ததனை யறிந்த தேவ ராஜனான இந்திரன், இனி அரக்கர் விரைவிலழிவரென்ற நம்பிக்கையினால் உற்சாகங்கொண்டு இதுவரை அடங்கியொடுங்கி யிருந்ததுபோலன்றி இப் பொழுது உல்லாசமாகத் தனக்குரிய கிழக்குத்திசையினின்று வெளியே புறப் பட்டனனாக, அவனது ஒற்றைவெண்கொற்றக்குடை விளங்கினாற்போலச் சந்திரமண்டலம் கிழக்கில் விளங்கிற்று என்றும் அவனது வெண்சாமரைகள் சுழன்று வீசி விளங்கினாற்போல நிலாவிற் கடலின்வெண்டிரைகள் சுழன்று வீசிவிளங்கின என்றும் வருணனை கூறினார்; தற்குறிப்பேற்றவணி. சந்திர னது நிலாவில் மிக்கவெண்மையான தோற்றத்துடன் கடலினலை பொங்குதல், கருதத்தக்கது. வட்டவடிவிலும், வெண்ணிறமாய் விளங்கும் ஒளியிலும், தாப சாந்திசெய்து குளிர்ச்சியைத்தருதலிலும், வெண்கொற்றக்குடையுஞ் சந்திர மண்டலமும் ஒக்கும்.

கவரி - சமரீயென்ற வடசொல்லின் சிதைவு; இப்பெண்மானின்பெயர், அதன்வாலின் வெள்ளைமயிரினாலாகிய சாமரையைக் குறித்தது, இருமடியாகு பெயர். கொற்றவெண்குடை - வெற்றிக்கு அறிகுறியாகிய வெண்ணிறமான குடை. 'இற்றதெம்பகையென வெழுந்த விந்திரன்' என்பதை, 'கவரி' என்ற தனோடும் கூட்டுக. (ருச)

[நிலவின் தோற்றம்.]

ருரு. தெரிந்தொளிர்திங்கள்வெண்குடத்திறாற்றிரை
முரிந்துயர்பாற்கடன்முகந்துமூரிவான்
சொரிந்ததேயாமெனத்துளிமீனொடும்
விரிந்ததுவெண்ணிலாமேலுங்கீழுமே.

(இ - ள்.) மூரி வான் - பெரிய வானமாகிய ஒருபுருஷன், தெரிந்து ஒளிர் திங்கள் வெள் குடத்தினால் - தோன்றி விளங்குகின்ற சந்திரமண்டல மாகிய வெள்ளிக்குடத்தைக்கொண்டு, திரை முரிந்து உயர் பால் கடல் முக ந்து - அலைகளெழுந்து மடியப்பெற்ற பாற்கடலின்பாலை மொண்டெடுத்து, சொரிந்ததே ஆம் என - சொரிந்ததேயாகுமென்று சொல்லும்படி, வெள் நிலா - வெண்ணிறமான நிலவானது, துளி மீனொடும் - அந்தப்பால்துளிக ளெனத்தக்க விண்மீன்களாகிய நக்ஷத்திரங்களுடனே, மேலும் கீழும் விரிந் தது - வானத்திலும் பூமியிலும் எங்கும் பரவி விளங்கிற்று; (எ - று.)

தற்குறிப்பேற்றவணி. மேலுள்ள வானமாகிய புருஷன் சந்திரமண்டல மாகிய வெள்ளிக்குடத்தைக்கொண்டு பாற்கடலின்பாலை மொண்டெடுத்து மேல்நின்று சொரிய அந்தப்பால் அங்குநின்று பெருகி எங்கும்வழிந்தோடிப் பரவினாற்போல வெண்ணிறமான நிலா எங்கும்பரந்தது எனக் கற்பனைகூறிய

வாரும். அப்பொழுது வெண்மையாய் வானத்தில்விளங்குகின்ற விண்மீனெனப்படும் நக்ஷத்திரங்களை, அப்பால்சொரியும்போது சிதறித்தெறித்த பால் துளிகளாகக் கருதுக. நிலாவில் வெண்ணிறமாய்க் கடலிற்காணப்படுகிற மீன்களை அப்பாற்கடலின் மீன்களெனக்கருதலாமென்பதும், 'மேலுங்கீழுந்துள்ளி மீனொடும் விரிந்தது' என்றதில் தோன்றும்; அப்பொழுது, துள்ளி மீன் - துள்ளுமியல்புடைய மீன்க ளென்க. நக்ஷத்திரங்களையும் அங்ஙனஞ்சிதறி மேலெழுந்த மீன்க ளென்னலாம். 'முரிந்துயர்' என்றதை 'உயர்ந்துமுரி' என விகுதிபிரித்துக் கூட்டுக. இனி, அலைகள் மடிந்து எழப்பெற்ற வெனினுமாம். முரிதல் - ஒடிதல். (ருரு)

[இதுவும் அது.]

ருசு. அருந்தவன் சுரபியே யாதிவானமா
விரிந்தபேருதயமே மடிவெண்டிங்களா
வருந்தலின் முலைகதிர் வழங்கு தாரையாச்
சொரிந்தபா லொத்தது நிலவின் றோற்றமே.

(இ - ள்.) ஆதி வானமே - முதன்மையான ஆகாயமே, அருந் தவன் சுரபி ஆ - அருமையான தவத்தைச் செய்துள்ளவனாகிய வசிஷ்டமகாமுனிவனது காமதேனுவாக,—விரிந்த பேர் உதயமே - (கிரணங்கள்) விரிந்த பெரியசந்திரனுதிக்கின்ற இடமே, மடி (ஆ) - (அக்காமதேனுவினது) பாலுள்ள மடியாக,—வெள் திங்கள் - வெண்ணிறமான சந்திரனே, வருந்தல் இல் முலை ஆ - வருத்தப்பட்டுக்கறக்கவேண்டாத [எளிதிற்பால்சுரக்கின்ற] (அம்மடியின்கணுள்ள) முலைகளாக,— கதிர் - சந்திரகிரணங்களே, வழங்கு தாரை ஆ - சுரக்கின்ற பாலின்தாரையாக,—நிலவின் தோற்றம் - சந்திரிகையின் காட்சியானது, சொரிந்த பால் ஒத்தது - பெருகிவழிந்த பாலைப் போன்றது; (எ - று.)

இயைபுருவகவணியை அங்கமாகக்கொண்டுவந்த தன்மைத்தற்குறிப்பேற்றவணி. வெண்ணிறமும், குளிர்ச்சிதருதலும் பற்றி, நிலாப் பால்போலும்; "வால்வெண்ணில வுலகாரச்சுரக்கும் வெண்டிங்களென்னும், பால் வின்சுரவி சுரமுதிர்மாலை" என்ற திருவிருத்தம் இங்கு நோக்கத்தக்கது. பாற்கடல் கடைந்தபோது அதனினின்று தோன்றிய காமதேனுவென்னுந் தெய்வப்பசு வசிஷ்டமுனிவரிடம் வந்து அவரது ஆட்சிக்கு உட்பட்டுநின்றதாதலால், 'அருந்தவன் சுரபி' எனப்பட்டது. மற்றைநான்குபூதங்கட்கும் காரணமாய் முந்தித்தோன்றியதனால், 'ஆதிவானம்' என்றார். (ருசு)

[நக்ஷத்திர வருணனை.]

ருஎ. எண்ணுடையனுமன்மேலிழிந்தபூமழை
மண்ணிடைவீழ்கிலமறித்தும்போகில
வண்ணல்வாளரக்கனையஞ்சியாய்கதிர்
விண்ணிடைத்தங்கினபோன்றமீனெலாம்.

(இ - ள்.) மீன் எலாம் - நக்ஷத்திரங்களெல்லாம், எண் உடை அனுமன் மேல் - யாவரும் நன்குமதிக்கத்தக்க பெருமையையுடைய அனுமான்மேல்

இழிந்த - (தேவர்களாற் சொரியப்பட்டுச்) சிந்தியனவான, பூ மழை - புஷ்பவர்ஷங்கள்,—அண்ணல் வாள் அரக்கனை அஞ்சி - பெருமையையுடைய வாளாயுதத்தையேந்திய இராவணனுக்குப் பயந்து, மண்ணிடை வீழ்கில - பூமியில் விழாதனவாயும், மறித்தும் போகில - மீண்டும் மேற்செல்லாதனவாயும், ஆய் கதிர் விண்ணிடை தங்கின - தெளிவாகவிளங்குகின்ற(சூரியன்முதலிய) சுடர்கள் சஞ்சரித்தற்கிடமான வானத்தில் தங்கியவற்றை, போன்ற ஒத்தன.

வானத்தில் விளங்குகின்ற நக்ஷத்திரங்கள், இராமதூதனான அநுமான் மேல் தேவர்களால் மழைபோலச் சொரியப்பட்ட கற்பகமலர்கள் இராவணனிடத்து அச்சத்தால் தரையில்விழாமல் அந்தரத்தில் நின்றவற்றைப் போன்றனவென்க ; தற்குறிப்பேற்றவணி. "வானுடர்கூடி - முறைமுறையின், தாதிலகு பூத்தெளித்தாலொவ்வாதே தாழ்விசும்பின், மீதிலகித் தான்கிடக்கும்மீன்" என்ற பெரியதிருவந்தாதியும், "தாராகணம் மண்ணளந்தவந்நாள்.........உம்பர்தூவியதண்மலர் வீழ், தாரா கணமுநில்லா காற்றிற்சூழ் வளர்ந்தானுக்குமே" என்ற திருவரங்கத்தந்தாதியும் இங்கு ஒப்புநோக்கத்தக்கன. தேவர்களின்சம்பந்தமான அசேதனங்களும் இராவணனிடத்து அஞ்சுகின்றனவென, அவனது அதிபயங்கரமான தன்மை இங்கு வெளியாம். பற்பலநிறமுடையனவாக விளங்குகின்ற நக்ஷத்திரங்கள், பற்பலநிறமுள்ள மலர்கள்போலும். எண் உடை அனுமன் - கீழ்க்கூறியபடி பலவாறுசிந்தித்தலையுடைய அநுமானெனினுமாம். எண் - வலிமையுமாம். 'அச்சக்கிளவிக் கைந்து மிரண்டும், எச்சமிலவே பொருள்வயினான" என்றதுகொண்டு 'அரக்கனையஞ்சி' எனப்பட்டது. (௫௭)

[மல்லிகையரும்புகள் மலா, அவற்றில் வண்டுமொய்த்தல்.]

௫௮. எல்லியினிமிரிருட்குறையுமவ்விருள்
கல்லியநிலவின்வெண்முறியுங்கள்வன
புல்லியபகையெனப்பொருவபோன்றன
மல்லிகைமலர்தொறும்பொதிந்தவண்டெலாம்.

(இ - ள்) மல்லிகை மலர் தொறும் - மல்லிகைமலர்கள்தோறும், வண்டு - வண்டுகள், பொதிந்த - (தேனையுண்ணுதற்பொருட்டு) மொய்த்துப்பதிந்தனவாக, எலாம் - அவ்வண்டுகளும் வண்டுகளைக்கொண்ட மல்லிகைமலர்களும்,— எல்லியின் இமிர் இருள் குறையும் - இராப்பொழுதிற் செறிந்த இருளின் துண்டங்களும், அ இருள் கல்லிய நிலவின் வெள் முறியும் - அந்த இருளை அடியோடழிக்கவல்ல வெண்மையான நிலாவின் துண்டுகளும், புல்லிய பகை என - (ஒன்றை மற்றொன்று) தனக்குப்பொருந்திய பகையென்றுகருதி, கள்வன பொருவ - ஒன்றையொன்று கவருந் தன்மையனவாய்ப் போர்செய்வனவற்றை, போன்றன - ஒத்துள்ளன ; (எ - று.)

வெண்மையான மல்லிகையரும்புகள் மலர்கிறசமயத்தில் அவற்றிலுள்ள தேனை நுகரும் ஆசையாற் கருவண்டுகள் அம்மலர்களில் மொய்த்தனவாக, அவ்விரண்டும் ஒன்றையொன்று கவர்வனபோலத் தோன்றுகின்றன. அத்தோற்

றம், இரவில்அடர்கிற கரியஇருளின் துண்டுகளும் அவ்விருளைப்போக்கவல்ல வெள்ளியசந்திரகிரணத்துண்டுகளும் தம்மிற்பகைமைகொண்டு ஒன்றையொன்று கவ்வும்இயல்பினவாய்ப் போர்செய்வதை யொக்கு மென்பதாம் ; தற்குறிப்பேற்றவணி : மல்லிகைமலர்கள் - நிலவின் துண்டத்தையும், வண்டுகள் - இருளின் துண்டத்தையும், இவ்விரண்டும் தம்மிற்செறிந்திருத்தல் - அவ்விரண்டும் ஒன்றையொன்று பற்றிப்பொருவதையும் போலு மென்க. எல்லையில் நிமிர் என்றுபிரித்தும் உரைக்கலாம். நிமிர்தல் - நெருங்குதல், வளர்தல். கல்லுதல்- பெயர்த்தல். புல்லிய - இழிவான எனினுமாம். 'வதிந்தவண்டெலாம்' என்று பிரதிபேதம். (௫அ)

[நிலா எங்கும்பரவியமை.]

௫௯. வீசுறுபசுங்கதிர்க்கற்றைவெண்ணிலா
வாசுறவெங்கணுநுழைந்தளாயது
காசுறுகடிமதிலிலங்கைக்காவலூர்த்
தூசுறையிட்டதுபோன்றுதோன்றிற்றே.

(இ - ள்) வீசுறு பசுங் கதிர் - வீசுகின்ற குளிர்ச்சியான கிரணங்களையுடைய சந்திரனது, கற்றை - தொகுதியாகிய, வெள் நிலா - வெண்மையான நிலா, ஆசு உற எங்கணும் நுழைந்து அளாயது - விரைவாக (அந்நகரின்) எல்லாவிடத்திலும் புகுந்து கலந்திருக்கின்ற தோற்றமானது,—காசு உறு கடி மதில் இலங்கை - இரத்தினங்கள்பதித்த பாதுகாவலையுடைய மதில்கள் சூழ்ந்த இலங்காபுரியாகிய, காவல் ஊர் - (இராவணனது) பாதுகாப்பிலுள்ள அந்நகரத்திற்கு, தூசு உறை இட்டது - வெள்ளைவஸ்திரத்தைக்கொண்டு உறையமைத்துமூடியதை, போன்று - ஒத்து, தோன்றிற்று - விளங்கியது.

வெண்ணிறமான சந்திரிகை இலங்காபுரியெங்கும் நிறைந்தது, வெள்ளைவஸ்திரத்தினால் உறைசெய்து அந்நகரம்முழுவதும் மூடியதுபோ லிருந்ததென்பதாம் ; தற்குறிப்பேற்றவணி. "பொருவில்வெண்டுகில்கொடு பொதிந்ததென்னவே, பரிகெழுந்தேர்மிசைப் பானிலாவெழ" என்றது, இங்கு ஒரு சார் ஒப்புநோக்கத்தக்கது. பசுமை - குளிர்ச்சியின்மேலது. பசுங்கதிர் - பண்புத்தொகையன்மொழி. (௫௯)

[இதுவும் அது.]

௬0. இகழ்வருமபெருங்குணத்திராமனெய்ததோர்
பகழியின்மசலவெனவனுமன் பற்றினு
லகழ்புகுந்தரண்புகுந்திலங்கையன்னவன்
புகழ்புகுந்துலாயதோர்பொலிவும்போன்றதே.

(இ - ள்.) இகழ்வு அரும் பெருங் குணத்து இராமன் எய்தது - இகழ்ச்சிக்கு இடமில்லாத சிறந்த குணங்களையுடைய இராமபிரானாற் பிரயோகிக்கப்பட்டதான, ஓர் பகழியின் - ஓர் அம்பினது, செலவு என - செல்லுதலைபோல, அனுமன் பற்றினல் - அநுமான் இலங்கைக்குச் சென்று சேர அந்த

ஆதாரத்தைக் கொண்டு, அன்னவன் புகழ் - அந்த இராமபிரானது கீர்த்தி, அகழ் புகுந்து - (சூழ்ந்துள்ள கடலாகிய) அகழியைக் கடந்து, அரண் புகுந்து-மதிலையுங் கடந்து, இலங்கை புகுந்து - இலங்கையிற் பிரவேசித்து, உலாயது - எங்கும் பரந்துவிளங்கியதான, ஓர் பொலிவும் - ஓர் அழகையும், போன்றது - ஒத்தது, (அச்சந்திரிகையின் தோற்றம்); (எ - று.)—எழுவாய் வருவித்து முடிக்கப்பட்டது.

வெண்மையான நிலா அவ்விலங்கை முழுவதும் பரவி விளங்கிய தோற்றமானது, இராமதூதனான அநுமான் அவ்விராமபாணம்போலத் தடையின்றி விரைவாக இலங்கையையழிக்குமாறு அதிற்சென்றுசேர அதுமூலமாக அவ்விராமபிரானது கீர்த்தி அந்நகரம்முழுவதும் பரவிவிளங்கினாற் போன்றது என்றார்; தற்குறிப்பேற்றவணி. காப்பியங்களிலே கதாநாயகனது சிறப்புத்தோன்ற அவனது சம்பந்தமான பொருள்களைச் சிலவிடங்களில் உபமானமாக அமைத்தல் கவிமரபாதலால், நிலாவிற்கு இராமன்புகழையும், அநுமனது செல்லுகைக்கு இராமபாணஞ்செல்லுதலையும் உவமை கூறினார். இலங்கையிற் புகுதலினது அருமை தோன்ற, 'அகழ்புகுந்து அரண்புகுந்து இலங்கைபுகுந்து' எனப்பட்டது. உலாயது என்ற ஒன்றன்பாற்பெயரில், உலாவுஎன்ற பகுதி ஈறு தொக்கது. பெருங்குணம் - மகாகுணம். இகழ்வருங்பெருங்குணம் - ஹேயகுணமில்லாத திவ்வியகுணங்கள். (௬௦)

[அநுமான் இலங்கையினுட் செல்ல முயலுதல்.]

௬௧. அவ்வழியநுமனுமணுகலாம்வகை
யெவ்வழியென்பதையுணர்வினெண்ணினான்
செவ்வழியொதுக்கினன்றேவரேத்தப்போய்
வெவ்வழியரக்கரூர்மேவன்மேயினான்.

(இ - ள்.) அ வழி - அப்பொழுது, அநுமனும் - அநுமானும், அணுகல் ஆம் வகை எ வழி என்பதை உணர்வின் எண்ணினான் - இவ்விலங்காபுரியினுள் தான் சென்று சேரலாகும்வகை எவ்வாறு என்பதைக் குறித்து மனத்தில் ஆலோசித்தவனாய், செவ் வழி ஒதுக்கினன் - நேரானவழியை நிச்சயித்து, தேவர் ஏத்த போய் - தேவர்கள் துதிக்க (அப்பவளகிரியினின்று) புறப்பட்டுச்சென்று, வெவ் வழி அரக்கர் ஊர் மேவல் மேயினான் - கொடியவழியிற் செல்கின்ற இராக்கதரது இராசதானியான அந்நகரினுட் போகத்தொடங்குபவனானான்; (எ - று.)

'அணுகலாம்வகை எவ்வழிஎன்பதை உணர்வின் எண்ணினான்' என்பதற்கு - இந்நகரினுள் யான் சென்றுசேரலாம் வகை எந்தவழியினாலென்பதைத் தனது அறிவினால் ஆலோசித்தவனாய் என்றும் பதவுரைகூறலாம். செவ்வழி ஒதுக்குதல் - யாவருஞ்செல்லும் அந்நகர்க்கோபுரவாயிலின் வழியாய் உட்செல்வதாக நிச்சயித்தல். ஒதுக்குதல் - தீர்த்தல். அநுமான் செல்வது முறையே அரக்கரழியத் தேவர்கள்வாழ்தற்கு ஏதுவாவதனால், அதனைக்கருதித் தேவர்கள் அவனைத் துதிப்பவராயினர். 'செவ்வழி ஒதுக்கினன்' என்பதற்கு -

நேரானவழியிற்செல்லுதலை விலக்கினவனு மென்று உரைகூறுதல், பொருந் தாது; அநுமானுக்கு அக்கருத்துப் பின்னருண்டாவதாக மேல் எசு - ஆஞ் செய்யுளால் விளங்குதல் காண்க. இனி, 'செவ்வழியொழுக்கினன்' என்ற பாடம் சிறக்கும்; சன்மார்க்க மெனப்படுகிற நல்லொழுக்கவழியில் நடக்கு மியல்பினனான அநுமான் தீயொழுக்கவழியி லொழுகுகின்ற அரக்கரது ஊரி னுட் செல்லலாயின னென்க. (சுக)

## வேறு.

[அநுமான் இலங்கையின்மதிலை யணுகுதல்.]

சுஉ. ஆழியகழாகவரிதாயமரர்வாழு
மேழுலகின்மேலைவெளிகாறுமுகடேறிக்
கேழரியபொன்கொடுசமைத்தகிளர்வெள்ளத்
தூழிதிரிநாளுமுலையாமதிலையுற்றான்.

(இ - ள்.) ஆழி அகழ் ஆக - கடலே சுற்றிலும் அகழியாக இயல்பில் அமைய, அரிது ஆய் - (யாவர்க்குஞ் செல்லுதற்கு) அருமையானதாய், அமரர் வாழும் ஏழ் உலகின் மேலை வெளிகாறும் முகடு ஏறி - தேவர்கள்வாழ் கின்ற மேலேழுலகங்களின்மே லுள்ள வெளியிடமளவும் உச்சி உயர்ந்து, கேழ் அரிய பொன்கொடு சமைத்த - ஒப்பற்ற பொன்னைக்கொண்டு செய்யப் பட்டதும், கிளர் வெள்ளத்து ஊழி திரி நாளும் உலையா - கற்பாந்தகாலத்திற் பொங்கி யெழுகின்ற கடற்பெருக்கினால் உலகங்கள் நிலைகுலைகின்றகாலத்தி லும் அழியாததுமான, மதிலை - (அவ்விலங்காபுரியின்) மதிலை, உற்றான் - அடுத்தனன், (அநுமான்); (எ - று.)

சமைத்த, உலையா என்ற இரண்டுபெயரெச்சங்களும் - மதிலுக்கு அடை மொழி. வெளி - வானம். மேலைவெளிமுகடுகாறும் ஏறி என்று மொழி மாற்றினுமாம். கேழ் அரிய பொன் - மாற்றின்உயர்வினால் அருமையான பொன் என்றலுமாம்; கேழ் - உவமை, ஒளி, நிறம். 'கிளர் வெள்ளத்து ஊழிதிரிநாளுமுலையா மதில்' என்பதனை, பாலகாண்டத்து நாட்டுப்படலத்தில் "வீடுசேர நீர்வேலை கால்மடுத், தூடுபோரினும் முலைவிலாநலங், கூடு கோசலம்" என்றது போலக் கொள்க. கிளர் வெள்ளத்து ஊழிதிரிதல் - கற்பாந்தகாலத்தில் மகாப்பிரளயத்தினால் உலகங்களழிதல். மதிலையுறுதல் - மதிலினருகிற் போய்ச் சேர்தல். 'கேழரியமாமணியினிழைத்த' என்று பாடாந் தரம் உண்டு.

இதுமுதற் பதின்மூன்று கவிகள் - கீழ்ப்படலத்தின் அஉ - ஆங் கவி போன்ற கலிவிருத்தங்கள். (சுஉ)

[அநுமான் அம்மதிலின் உயர்ச்சியை வியத்தல்.]

சுங. கலங்கலில்கடுங்கதிர்கண்மீதுகடிதேகா
வலங்கலயில்வஞ்சகனையஞ்சியெனினன்று

விலங்கைமதிலிங்கிதனையேறலரிதென்றே
விலங்கியகல்கின்றனவிரைந்தெனவியந்தான்.

(இ - ள்.) கலங்கல் இல் கடுங் கதிர்கள் - நிலைகலங்குதலில்லாதனவும் விரைவையுடையனவுமான (சூரியன் முதலிய) விண்ணொளிகள், அலங்கல் அயில் வஞ்சகனை அஞ்சி - வெற்றிமாலையைத்தரித்த வேலாயுதத்தையுடைய வஞ்சகனை இராவணனுக்குப் பயந்து, மீது கடிது ஏகா -(அவன் வசிக்கின்ற இலங்காபுரியின்)மேல் விரைந்துசெல்லா, எனின் - என்று சொன்னால், அன்று- (அது) உண்மையான காரண மன்று; (பின்னை என்னையோ வெனின்,—) இங்கு இலங்கை மதில் இதனை ஏறல் அரிது என்றே விலங்கி விரைந்து அகல்கின்றன - இவ்விடத்திலுள்ள இவ்விலங்காபுரியின் மதிலைக் கடந்து மேற் செல்லுதல் தம்மாலாகாதென்று எண்ணி அதனாலேயே விலகி விரைந்து அப் பாற் செல்கின்றன, என - என்று எண்ணி, வியந்தான் - (அம்மதிலின் மிக்க உயர்ச்சியைக்குறித்து) ஆச்சரியப்பட்டனன், (அநுமான்); (எ - று.),—ஆல் - ஈற்றசை.

கீழ்ச்சென்ற உக - ஆங் கவியோடு இக்கவியை ஒப்புநோக்கி, அதற்கும் இதற்கு முள்ள ஒற்றுமைவேற்றுமைநயங்கள் உய்த்துணரற்பாலன. அணி, அச்செய்யுட்குக் கூறியதே. வெற்றிக்கு அறிகுறியானது, வாகைப் பூமாலை. சீதாபிராட்டியை வஞ்சனையாற் கவர்ந்து வந்ததும், மாயாபலமும் பற்றி, 'வஞ்சகன்' என்றார்; வடசொல். இங்கு இதனை - இவ்வாறு உயர்ந்து தோன்றுகிற இதனை யென்றலுமாம். (சுங)

[இதுவும் - அம்மதிலினை அநுமான் வியத்தல்.]

சுச. தெவ்வளவிலாதவிறைசேறலுளதென்றா
லவ்வளவதன்றரணமண்டமிடையாக
வெவ்வளவில்வெளியுண்டுவெளியீறுமதுவென்றா
வெவ்வளவரக்கனைமனக்கொளவியந்தான்.

(இ - ள்.) 'அளவு இலாத - அளவிறந்தனவான, தெவ் - பகைவர் கூட்டங்கள், இறை சேறல் - சென்றுதங்கும்படியாக, உளது - உள்ளது, அரணம்- இக்கரத்து மதில்,' என்றால் - என்று சொன்னால், அ அளவது அன்று - அவ்வளவோடு நிறுத்தக்கூடியதன்று; அண்டம் இடை ஆக எ அளவில் வெளி உண்டு - அண்டகோளம முழுவதன்நடுவினும் எவ்வளவு விசாலமுண்டோ அவ்வளவுவிசாலம் இம்மதிற்சுற்றினகத்தே உண்டு : ஈறும் அது - (இம்மதிலின்) உயர்ச்சிமுடிவெல்லையும் அவ்வண்டகோளத்தின் மேல்முகட்டினளவேயாம், என்று - என்று எண்ணி, (அநுமான்), வெவ் வளம் அரக்கனை மனம் கொள வியந்தான் - அந்நகர்த்தலைவனை கொடிய வலிமையுடைய இராவணனைக்குறித்துத் தன்மனத்திலே பொருந்த அதிசயித்தான்; (எ - று.)

மற்றைப்பிராணிகட்கெல்லாம் பகையும் எமது இறைவனை இராமபிரானுக்குப் பகையுமாகிய அரக்கரது அளவிறந்த திரள் உலகத்தில் எவ்வளவு உண்டோ, அவ்வளவும் புக்குத் தன்னிலடங்கும்படி யுள்ளது

அம்மதிற்சுற்று என்றால், அவ்வளவுமாத்திரமேபோதாது அதன்பெருமையை யுணர்த்துவதற்கு என்பது, முதல்வாக்கியத்தின் கருத்து. தெவ் - பகைமை: உரிச்சொல்; "தெவ்வுப் பகையாகும்" என்பது, தொல்காப்பியத்து உரிச்சொல்லியற்சூத்திரம். இது, பகைமையுடைய பிராணிகட்குப் பண்பாகு பெயர். பொருளால் உயர்திணையாயினும், சொன்னிலைபற்றி அஃறிணையாற் கூறப்பட்டது. 'இறைசேறல்' என்பதனை, சென்று இறுத்தல் என மொழி மாற்றிக்கொள்க. வளம் - செல்வவளமுமாம். வெவ் அளவு அரக்கனை என்று பிரித்து, கொடிய உயரம் பருமை வலிமை முதலியவற்றின் வரையறையை யுடைய இராவணனை யென்றலு மொன்று. இனி, முதல்வாக்கியத்துக்கு - அளவிறந்த பகைவர்கள் [வானவீரர்] கூடினால் இதனைக் கடந்துசெல்லுதல் சிறிது உண்டாகு மென்றால் அங்ஙனஞ்சொல்லத்தக்க அற்பவளவையுடையதன்று அம்மதில் என்று உரைப்பாரு முளர்; இப்பொருளில், இறை-சிறுமை.

[அநுமான் அந்நகரத்துவாயிலைப் பார்த்தல்]

௩௫. மடங்கலரியேறுமதமால்களிறுநாண
நடந்துதனியேபுகுதுநம்பிநனிமூதூ
ரடங்கரியதானையயிலந்தகனதானைக்
கடுந்திறலின்வாயனையவாயிலெதிர்கண்டான்.

(இ - ள்.) மடங்கல் அரி ஏறும் - (பிடரிமயிர்) மடங்குதலையுடைய ஆண் சிங்கமும், மதம் மால் களிறும் - மதங்கொண்ட பெரிய ஆண்யானையும், நாண - வெட்கமடையும்படி, தனியே நடந்து புகுதும் - (துணையொருவருமில்லாமல்) தானொருவனாகவே (கம்பீரமாக) நடந்து (அம்மதிலினருகிற்) செல்லுகின்ற, நம்பி - ஆடவரிற்சிறந்தவனான அநுமான், — அடங்கு அரிய தானை - (எண்ணிக்கைக்கு) அடங்குதலில்லாத (இராக்கத) சேனைகளையுடையதும், அயில் அந்தகனது ஆணை கடுந் திறலின் வாய் அனைய - சூலாயுதத்தையேந்திய யமனுடைய கட்டளைதவறாத கொடியவலிமையையுடைய வாயைப்போன்றதுமான, நனி மூது ஊர் வாயில் - பெரிய பழமையான அந்நகரத்தின் கோபுரவாயிலை, எதிர் கண்டான் - எதிரிற் பார்த்தான்; (எ - று.)

தனியேபுகுதும் நம்பி - அஸஹாயசூர னென்றபடி. நம்பி - ஆடவரிற் சிறந்தவன்; ஆண்பாற்சிறப்புப்பெயர்: நமக்குத்தலைவனென்றும், (யாவரும்) நம்பிச்சரணமடையத்தக்கவ னென்றும் இதற்குக் காரணப்பொருள் கூறலாம். முந்தியபொருளில்—நாம் என்ற பகுதி முதல்குறுகிற்று, பி - பெயர்விகுதி: பிந்தியபொருளில்—நம்பு - பகுதி, இ : செயப்படுபொருள்விகுதி. (இதன் பெண்பால் - நங்கை.) 'தானை,' 'அனைய'என்ற இரண்டும் - வாயிலுக்கு அடைமொழி. தானையை அந்தகனுக்கு அடைமொழியாக்குதலு மொன்று. யமனது விருப்பத்திற்கு ஏற்பப் பிராணிகளைக் கொன்றுதின்னத் திறந்த வா யென்று கற்பனைகூறுவார், 'அந்தகனது ஆணைக்கடுந்திறலின் வாய்' என்றார். இனி, அடங்கு அரிய தானை அயில் - அளவிறந்த (அரக்கரது) சேனைகளை உண்ணத் திறந்த, அந்தகனதுவாய் என்று பதவுரைகூறுதலு மொன்று. ஆணைக்

கடுந்திறலின் வாய் - எம்பெருமானது கட்டளையினாற் கொடியவலிமையைப் பெற்றவாய் என்றலுமாம்; "நெடுங்கடல்நிற்பதும் நாயிறுகாய்வதும் நிற்றலுங் கால், ஒடுங்கிடப்பதும் தண்கார்பொழிவதும் ஊழிதனிற், சுடுங்கனல் பற்றிச்சுடாதேயிருப்பதும் தம்மைபுனைந், தடுங்கனலாழியரங்கேசர்தந் திருவாணையினே" என்பது வேதாந்தப்பொருளாதலால். கணிகண்டான் என்று எடுத்து, நன்றாகப்பார்த்தான் என்றலுமாம். 'அடங்கரியதானவயில்' என்றும் பாடமுண்டு. (சுரு)

[இதுவும், அடுத்த கவியும் - அவ்வாயிலை அநுமான் வியத்தல்.]

சுசு. மேருவைநிறுத்திவெளிசெய்ததுகொல்விண்ணோ
ரூர்புகவமைத்தபடிகால்கொலுலகேழுஞ்
சோர்விலநிலைக்கநடுவிட்டதொருதூணோ
நீர்புகுகடற்குவழியோவெனநினைந்தான்.

(இ - ள்.) மேருவை நிறுத்தி வெளி செய்தது கொல் - (ஜம்பூத்வீபத்தின் நடுவிலுள்ள பொன்மலையாகிய) மகாமேருகிரியைக் கொண்டுவந்து இங்கு நிறுத்தி அதிற் பெரியதோரிடைவெளியை உண்டாக்கியதுதானோ? விண்ணோர் ஊர் புக அமைத்த படி கால் கொல் - தேவர்களுடைய ஊர்க்கு ஏறிச் செல்லுமாறு அமைத்த ஏணிக்கால்தானோ? உலகு ஏழும் சோர்வு இல நிலைக்க நடு இட்டது ஒரு தூணோ - ஏழுலகங்களும் தளர்வில்லாதனவாய் நிலைத்துநிற்கும்படி அவற்றிற்கு ஆதாரமாக நடுவில்நாட்டியதொரு தூண்தானோ? நீர் புகு கடற்கு வழியோ - கடல்நீர் முழுவதும் புகுந்துசெல்லுதற்குஇட்ட ஒருமதகு வழிதானோ? என நினைந்தான் - என்று (மிகப்பெரிதாய் யோங்கிய பொன்மயமான) அந்நகரத்து வாயிலைக்குறித்து நினைத்தனன், (அநுமான்); (எ - று.)

தற்குறிப்பேற்றவணி. படிக்காலென்பது படிகாலென மிகாதுநின்றது, செய்யுளோசையின்பொருட்டு. படிக்கால்-படிச்சட்டு. கொல் - ஐயம். (சுசு)

சுஎ. ஏழுலகின்வாழுமுயிர்யாவையுமெதிர்ந்தா
லூழின்முறையன்றியுடனேபுகுதலுண்டே
வாழியரியங்குவழியீதெனவகுத்தா
லாழியுளவேழினளவன்றுபகையென்றான்.

(இ - ள்.) ஏழ் உலகின் வாழும் உயிர் யாவையும் எதிர்ந்தால் - ஏழுவகைப்பட்ட உலகங்களிலும் வாழ்கின்ற உயிர்களெல்லாம் ஒருசேர (இராவணனை) எதிர்த்துவந்தாலும், ஊழின் முறை அன்றி உடனே புகுதல் உண்டே - ஒருவர்பின் ஒருவராக முறையேபுகுவதல்லாமல் அனைவரும் ஒருசேரப்புகுதல் (மிகஅகலமாயுள்ள இவ்வாயிலின்கண்) உண்டாகுமே; வாழியர் இயங்கு வழி ஈது என வகுத்தால் - (இந்நகரில்) வாழ்பவர்களான இராக்கதர்கள் தாம்வழக்கமாகச்செல்லும்வழி இதுவாக அமைத்துவைத்துள்ளாரென்றால், பகை ஆழி உள ஏழின் அளவு அன்று - (நமக்குப்)பகையான அவ்வரக்கரது திரள் கடல்களென்றுள்ள ஏழினளவில் அடங்குவதன்று [அதனினும் மிக்கதாம்], என்றான் - என்று எண்ணினான், (அநுமான்); (எ - று.)

ஏழுலகு - கீழேழும் மேலேழு மாகிய ஈரேழுலகங்கள். 'அவ்வுலகங்களனைத்திலும் வசிக்கின்ற உயிர்களெல்லாம் எதிர்ந்தால்' என்றதனால், இராவணன் சகலலோககண்டக னென்றவாறும்; அவனை அனைத்துயிரும் எதிர்த்தல் கூடுமென்க. ஊழ் - முறைமை. ஊழின்முறை - ஒருபொருட்பன்மொழி. சகலபிராணிகளும் ஒருங்குவந்தாலும் முறையாகவன்றி ஒருசேரத் தட்டுத் தடங்கலின்றி இனிதுசெல்லும்படி அதிவிசாலமாகவுள்ள இந்நகரத்துவாயிலின் பரப்பை நோக்கி, அதுகொண்டு, இந்நகரத்தில்வாழும் அரக்கர்களின்தொகை அளவிறந்ததென்பதனை அநுமானப்பிரமாணத்தால் ஊகித்தவாறும். இனி, மூன்றுமடிக்கு - நமதுசேனையில்வாழ்கின்ற வாநரவீரர்கள் வந்துசெல்லத்தக்க வழி இது வென்று நிச்சயித்தா னென உரைப்பாரு முளர். (௯௩)

[அவ்வாயில்காவலாளர்களை அநுமான் பார்த்தல்.]

௯௪. வெள்ளமொருநூறொடொருநூறுமுடைவீரக்
கள்ளவினைவெவ்வலியரக்கரிருகையு
முள்ளெயிறும்வாளுமுறமுன்னமுறைநின்று
ரெள்ளரியகாவலினையண்ணலுமெதிர்ந்தான்.

(இ - ள்.) வெள்ளம் ஒரு நூறொடு ஒரு நூறும் உடை - இருநூறுவெள்ளமென்னுந் தொகையையுடைய, வீரம் கள்ளம் வினை வெவ் வலி அரக்கர் - பராக்கிரமத்தையும் மாயையினாற்செய்யும் வஞ்சனையாகிய கொடுஞ்செயலையுமுடைய இராக்கதர்கள், இரு கையும் முள் எயிறும் வாளும் உற - (தமதுவாயின்) இரண்டுபக்கங்களிலும் முள்ளுப்போற்கூரிய கோரதந்தங்களும் இரண்டு கைகளிலும் ஆயுதங்களும் விளங்க, முன்னம் முறை நின்றார் - (அவ்வாயிலின) முன்னிடத்திலே முறைப்படி நின்றவர்களாய், எள் அரிய காவலினை - அசட்டையில்லாத பாதுகாவல் செய்தலை, அண்ணலும் எதிர்ந்தான் - பெருமையிற் சிறந்தவனான அநுமானும் எதிர்ப்பக்கண்டான்; (எ - று.)

வெள்ளம் - ஓர்பெருந்தொகை: மிகப்பல அக்ஷௌகிணி கொண்டது; (யானை ஒன்றும், தேர்ஒன்றும், குதிரைமூன்றும், காலாள் ஐந்தும் கொண்டது - பத்தி யெனப்படும்; அப்பத்தி மூன்றுபங்குகொண்டது - சேனாமுகம்; சேனாமுகம் மூன்று - குல்மம்; குல்மம் மூன்று - கணம்; கணம் மூன்று - வாகிநி; வாகிநி மூன்று - பிரதனை; பிரதனை மூன்று - சமூ; சமூ மூன்று - அநீகிநி; அநீகிநி பத்து - அக்ஷௌகிணி; (ஆதலால், அக்ஷௌகிணியென்பது - தேர் - ௨௧அ௭0, யானை - ௨௧அ௭0, குதிரை - ௬௫௬௧0, காலாள் - ௱௯௩௫0: ஆக, ௨௧அ௭00 - கொண்டதாம்.) அக்ஷௌகிணி எட்டுப்பங்குகொண்டது - ஏகம்; ஏகம் எட்டு - கோடி; கோடி எட்டு - சங்கம்; சங்கம் எட்டு - விந்தம்; விந்தம் எட்டு - குமுதம்; குமுதம் எட்டு - பதுமம்; பதுமம் எட்டு - நாடு; நாடு எட்டு - சமுத்திரம்; அந்தச்சமுத்திரம் எட்டுப்பங்குகொண்டது - வெள்ளம் என விவரம் காண்க.)

'இருகையும்' என்பதற்கு - எயிற்றோடு இயையவும் வாளோடு இயையவும் இருபொருள் கொள்ளப்பட்டது; இரட்டுறமொழிதல். எள்ளரிய காவல் -

(கடத்தற்கெளியதென்று பிறர்) அசட்டைபண்ணக்கூடாத பாதுகாப்பு எனினுமாம். வாள் - ஆயுதப்பொது. 'வாளுமுறைமின்ன' என்பதும் பாடம். (சுஅ)

[இதுவும், அடுத்தகவியும் - அக்காவலாளரின் இயல்பை விளக்கும்.]

சுகூ. சூலமழுவாளொடயில்தோமரமுலக்கை
காலவரிவிற்பகழிகற்பணமுசுண்டி
கோல்கணையநேமிகுலிசஞ்சுரிகைகுந்தம்
வாலமுதலாயுதம்வலித்தனர்வலத்தார்.

(இ - ள்.) வலத்தார் - (மற்றும் அங்குஉள்ள) பலசாலிகளான இராக்கதர்கள்,—சூலம் - சூலமும், மழு - மழுவும், வாளொடு - வாளும், அயில் - வேலும், தோமரம் - பேரீட்டியும், உலக்கை - இருப்புலக்கையும், காலன் வரி வில் பகழி - யமன்போன்ற [பிராணிகளைத் தவறாமற்கொல்லவல்ல] வில்லும் அம்பும், கற்பணம் - இருப்புநெரிஞ்சின்முள்ளும், முசுண்டி - முசுண்டியும், கோல் - தடியும், கணையம் - வளைதடியும், நேமி - சக்கரமும், குலிசம் - வச்சிரமும், சுரிகை - உடைவாளும், குந்தம் - கைவேலும், வாலம் - பிண்டிபாலமும், முதல் - முதலான, ஆயுதம் - படைக்கலங்களை, வலித்தனர் - உறுதியாக ஏந்தியுள்ளார்; (எ - று.)

சூலம் - முத்தலைவேல். மழு - எரியிரும்புப்படை; கோடாலிக்கும் இப்பெயருண்டு. வாள் - வாளமென்ற வடசொல்லின் விகாரம்; தனியே தமிழ்மொழியுமாம். ஒருபெயரின் ஒருபகுதியைக்கொண்டு அப்பெயர்முழுவதையும் குறிக்கும் வழக்குப்பற்றி, பிண்டிபால மென்ற வடசொல்லின் திரிபாகிய பிண்டிவாலத்தை வாலமென்றே குறித்தார்; இது, வடமொழியில் 'நாமைகதேசேநாமக்ரஹணம்' எனப்படும். முசுண்டி - ஆயுதவிசேஷம். பிண்டிவாலம் - இருப்புத்தடி யென்பர். 'பாலமுதலாயுதமெடுத்தனர்பரித்தார்' என்று பிரதிபேதம். (சுகூ)

எய. அங்குசநெடுங்கவணயிற்சிலைவழங்கும்
வெங்குசையபாசமுதல்வெய்யபயில்கையார்
செங்குருதியன்னசெறிகுஞ்சியர்சினத்தோர்
பங்குனிமலர்ந்தொளிர்பலாசவனமொப்பார்.

(இ - ள்.) (மற்றும் அங்குள்ள இராக்கதர்கள்),—அங்குசம் - மாவெட்டியும், நெடுங் கவண் - நீண்ட கல்லெறிகயிறும், அயில் சிலை வழங்கும் வெம் குசைய பாசம் - நுனியிற்கூர்மையையுடையதும் (வீசும்போது) ஒலியைச் செய்வதும் கொடியதும் தருப்பைபோலஅறுக்கவல்லதுமான (கயிற்றுவடிவமாகிய) பாசமும், முதல் - முதலான, வெய்ய - கொடியஆயுதங்கள், பயில் - பொருந்திய, கையார் - கைகளையுடையவர்கள்; குருதி அன்ன செறி செம் குஞ்சியர் - இரத்தம்போன்ற அடர்ந்த செம்பட்டமயிரை யுடையவர்கள்: சினத்தோர் - (கண்களும் முகமும் சிவக்கும்படியான) கோபாக்கினியை யுடையவர்கள்: (ஆதலால்), பங்குனி மலர்ந்து ஒளிர் பலாசவனம் ஒப்பார் -

பங்குனிமாதத்திற்பூப்பூத்துவிளங்குகிற செம்முருக்கமரக்காட்டையொத்திருப்பார்கள்; (எ - று.)

அங்குசம் - யானையின்காதில் மாட்டியிழுத்து அதனையடக்குங் கருவி; தோட்டியெனவும்படும். குசை - தருப்பை; அதன்மேற்பிறந்த குறிப்புப்பெயரெச்சம், 'குசைய'. உத்தரபல்குனி நக்ஷத்திரத்தோடு கூடிய பௌர்ணமாசியையுடைய மாசம், பங்குனி யெனப்படும்; வடநூலார் பால்குநமென்பர். ஈற்றடி - செந்நிறம்பற்றிய உவமை. 'அடற்சில' என்றும் பாடம். (எ0)

[மற்றும் அந்நகருள்ள காவற்சேனையை அநுமான் பார்த்தல்.]

எக. அளக்கவரிதாகியகணக்கொடயனிற்கும்
விளக்கினமிருட்டனைவிழுங்கிவெளிகால
வுளக்கடியகாலன்மனமுட்குமணிவாயில்
விளக்கமில்கடற்படையிருக்கையையெதிர்ந்தான்.

(இ - ள்.) அளக்க அரிது ஆகிய கணக்கொடு - இத்தனையென்று வரையறைசெய்ய இயலாததான [மிகப்பெரிய] தொகையுடனே, அயல் நிற்கும் - அவ்விடத்திலுள்ள, விளக்கு இனம் - விளக்குக்களின் கூட்டம், இருள்தனை விழுங்கி வெளி கால - இருளை விழுங்கி ஒளியையுமிழ, உளம் கடிய காலன் மனம் உட்கும் - மனத்திற்கடுமையையுடைய யமனும் (துணிந்து உட்புகமாட்டாமல்) மனமஞ்சிநிற்கும்படியான, மணி வாயில் - அழகிய (அவ்விலங்காபுரியின்) கோபுரவாயிலில், இளக்கம் இல் கடல் படை இருக்கையை - சோர்வில்லாத கடல்போற்பரந்த இராக்கதசேனை யிருத்தலை, எதிர்ந்தான் - (அநுமான்) பார்த்தான்; (எ - று.)

அயல் - இடம். விளக்கு - (பொருள்களை) விளங்கச்செய்வது எனத் தீபத்துக்குக் காரணக்குறி. 'இருள்தனைவிழுங்கி' என்றது - உண்ணுந்தன்மையதை உண்பதுபோலவும் உண்ணப்படாததை உண்ணப்படுவதுபோலவும் கூறிய மரபுவழுவமைதி; இருளைப் பற்றறவொழித்து என்றபடி. வெளி காலுதல் - வெளிச்சத்தை வீசுதல். 'இருள்தனைவிழுங்கி வெளிகால' என்றவிடத்து மாறுநிலையணி தோன்றுதல் காண்க. 'இருடனை' என்பது 'இருட்டனை' எனச் செய்யுளோசையின்பொருட்டு விரித்தல்விகாரம் பெற்றது. உளக்கடியகாலன் கடினசித்தமுடைய யமன். காலன் மனமுட்கும் வாயி லென்க. சிறிதும் இரக்கமில்லாத கல்நெஞ்சனாய்ப் பிராணிகளைத் தவறாமற்கொல்கின்ற யமனும் இராவணனிடத்து அச்சத்தால் அரக்கர்களுயிரைக் கவர்தற்பொருட்டு அந்நகர் வாயிலினுட்புகுதற்குத் தைரியமின்றி நிற்கின்றனனென்க, இராவணன் திக்குவிசயகாலத்தில் யமனையும் வென்றவனாத லுணர்க. அணிவாயில் என்றும் பிரிக்கலாம். மணிவாயில் - இரத்தினங்கள் பதித்துச்செய்த வாயிலுமாம். இளக்கம் முதனிலைதிரிந்த தொழிற்பெயர். (எக)

[அவ்வாயில்காவலைக்குறித்து அநுமான் வியத்தல்.]

எஉ. எவ்வமரரெவ்வவுணரெவ்வருளரொன்னே
கவ்வைமுதுவாயிலினெடுங்கடைகடப்பார்

தெவ்வரிவர்சேமமீதுசேவகனும்யாமும்
வெவ்வமர்தொடங்கிடினென்னாய்விளையுமென்றான்.

(இ - ள்.) 'என்னே - (இது) என்ன ஆச்சரியம்! கவ்வை முது - (அளவிறந்த அரக்கர்களின் கூட்டத்தால்) ஆரவாரம் மிக்க, நெடு - நீண்ட, வாயிலின் கடை - இவ்வாயிலினிடத்தை, கடப்பார் - கடந்துசெல்லவல்லவராய், எ அமரர் - எந்தத்தேவர்தாம், எ அவுணர் - எந்தஅசுரர்தாம், எவ்வர் - மற்றும் எவர்தாம், உளர் - இருக்கின்றனர்? [எவருமில்லை யென்றபடி]; தெவ்வர் இவர் சேமம் இது - பகைவர்களான இவ்வரக்கர்களது பாதுகாவல் இத்தன்மைத்தாயிருக்கின்றது; சேவகனும் யாமும் வெவ் அமர் தொடங்கிடின் - மகாவீரனான இராமபிரானும் வானரவீரர்களாகிய நாமும் (இனி இங்கு வந்து) கொடியபோர் தொடங்குமிடத்து, என் ஆய் விளையும் - யாதாய்முடியுமோ?' என்றான் - என்று எண்ணினான், (அநுமான்); (எ - று.)

தேவர் அசுரர் முதலியோரில் எவர்தாம் இக்காவலைக்கடந்து இவ்வாயிலினுட்செல்லமாட்டுவர் என்பது, முதலிரண்டடியின் பொருள். முதலடி - முற்றுமோனை. 'என்னே' என்றது, அவ்வாயிலின் கடுங்காவலை வியந்துகூறியவாறாம். எவ்வர் - எவர்என்பதன் விரித்தல்விகாரம். (௭௨)

[இக்காவல்கடந்துசெல்லக் காலம்நீட்டிக்குமென அநுமான் கருதுதல்.]

௭௩. கருங்கடல்கடப்பதரிதன்றுநகர்காவற்
பெருங்கடல்கடப்பதரிதெண்ணமிறைபேரி
னருங்கடன்முடிப்பதரிதாமமர்கிடைக்கி
னெருங்கமர்கிடக்குநெடுநாளெனநினைந்தான்.

(இ - ள்.) 'கருங் கடல் கடப்பது அரிது அன்று - கரியகடலைக் கடந்துவருவது அருமையானகாரியமன்று; நகர் காவல் பெருங் கடல் கடப்பது அரிது - இந்நகரத்தைப் பாதுகாவல்செய்துநிற்கின்ற பெரிய இச்சேனா சமுத்திரத்தை வென்று அப்பாற்செல்வதே அருமையானது; எண்ணம் இறைபேரின் - (நாம்) ஆலோசனையிற் சிறிது தவறினால், அருங் கடன் முடிப்பது அரிது ஆம் - (சீதையைத் தேடிக் கண்டு மீண்டுசென்று செய்தி சொல்லுதலாகிய நமது) அருமையான கடமையைச் செய்துமுடிப்பது அரியதாகும்; அமர் கிடைக்கின் - (இவர்களோடு நமக்குப்) போர்நேர்ந்தால், நெருங்கு அமர் நெடு நாள் கிடக்கும் - நெருங்கிய அந்தயுத்தம் நெடுநாளைக்கு இருக்குமே,' என நினைந்தான் - என்று எண்ணினான், (அநுமான்); (எ - று.)

செய்தகாரியத்தினும் செய்யவிருக்குங்காரியத்தைப் பெரிதெனமதித்தல் இயல்பாதலால், 'கடல்கடத்தலினும் அரியது, இவ்வாயில்காவற்சேனைப் பெருங்கடலைக் கடப்பது' எனக் கருதினன் அநுமான். கடலுக்கேனும் எல்லையுண்டு, இவ்வரக்கர்தொகுதிக்கோ எல்லையில்லை யென்னுங் கருத்தால், அது 'பெருங்கடல்' எனப்பட்டது. நாம் இவர்களோடு போர்தொடங்கிச்செய்து இத்தனைபேரையும் வென்றொழித்துவிட்டு இவ்வாயிலைக்கடந்து நகரினுட்புகுவதாக முயல்வோமாயின், முடிவு எங்ஙனமாவதாயினும் போரிலேயே

மிகப்பலநாள் கழியலாகும் ஆதலால், செவ்வையான ஆலோசனை யின்றி அதில் தலையிடுதல், இராமதூதனும் நாம்வந்த காரியத்தை முடிக்கும் கடமையை நிறைவேற்றுதற்கு இடையீடாகும் என்று கருதினன் அறிவிற் சிறந்தவனான அனுமனென்க. 'நனிகாவல்', 'பெருங்கடை கடப்பதரிதெண்ணி', 'அமர்விளைப்பர்' என்றும் பாடம். (எ௩)

[அநுமான் அவ்வாயிலின்வழியேசெல்லாது மதிலைக்கடந்துசெல்ல முயலுதல்.]

எ௪. வாயில்வழிசேறலரிதன்றியும்வலத்தோ
ராயிலவர்வைத்தவழியேகலழகன்றால்
காய்கதிரியக்கின்மதிலைக்கடிதுதாவிப்
போயிநகர்புக்கிடுவெனென்றோரயல்போனான்.

(இ - ள்.) 'வாயில் வழி சேறல் அரிது - (ஆதலால்) இந்தவாயிலின்வழியாகச் செல்லுதல் எளியதன்று; அன்றியும் - அல்லாமலும், ஆயில் - ஆராயுமிடத்து, வலத்தோர் - வல்லமைசாலிகளாயுள்ளவர்க்கு, அவர் வைத்த வழி ஏகல் - பிறர்வைத்துள்ள வழியாகச்செல்லுதல், அழகு அன்று - அழகியதன்று; ஆல் - ஆதலால், காய் கதிர் இயக்கு இல் மதிலை கடிது தாவி போய் - எரிக்கின்ற சூரியகிரணங்களும் கடந்துசெல்லமாட்டாத இம்மதிலை விரைவாகத் தாண்டிச்சென்று, இ நகர் புக்கிடுவென் - இந்நகரத்தினுட் பிரவேசிப்பேன்', என்று - என்றுநிச்சயித்து, ஓர் அயல் போனான் - (அம்மதிலின்) ஒருபுறத்தே சென்றனன், (அனுமான்); (எ - று.)

திறமையுள்ளவனான யான் பகைவரான அரக்கர் அமைத்துள்ள வாயிலின்வழியாய்ச்செல்லுதல் அழகன்று என்றும் கருதினனென்க. 'பகைவரது இருப்பிடத்தை வாயில்வழியாற் சேர்தலாகாது' என்ற நூற்கொள்கையும் இங்குக் கொண்டதாம். ஆயில் - 'ஆய்' என்ற பகுதியின் வினையெச்சம்; 'ஆ' என்ற பகுதியின் வினையெச்சமெனக்கொண்டு, வல்லமையுடையவரானால் என்றலுமாம் ஆல் - ஆதலால் என்பதன் விகாரம். இயக்கு - இயங்கு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். 'இந்நகர்' என்பது, 'இநகர்' எனத்தொகுத்தலாயிற்று. (எ௪)

வேறு.

[அந்த இலங்காதேவி அநுமானை வழிமறித்தல்.]

எ௫. நாணுளுந்தானல்கியகாவனனிமூதூர்
வாணுளங்காள்போவதின்மேலேவழிநின்று
நீணுமென்னுந்தோளுடையானைச்சுடரோனைக்
காணுவந்தகட்செவியென்னக்கனல்கண்ணாள்.

(இ - ள்.) நாள் நாளும் தான் நல்கிய காவல் - நெடுங்காலமாகத் தினந்தோறும் தான் அன்போடு செய்துவருகின்ற பாதுகாப்பிலுள்ள, நனி மூதூர் - மிகப்பெரிய (இலங்கையாகிய) அந்தப்பழவூரினது, வாழ் நாள் - ஆயுள்நாள்,

அ நாள் - அன்றைநாளில் முடிந்துபோவதனால்,—(அந்நகரதேவதை),— தூண் ஆம் என்னும் தோள் உடையானை - இவை தூண்களேயா மென்று சொல்லத்தக்க தோள்களை யுடையவனான அநுமானை, காணா - பார்த்து, சுடரோனை கண்டு வந்த கட்செவி என்ன கனல் கண்ணாள் - சூரியனைப்பார்த்துப் (பற்றிக்கொள்ள) வருகிற (இராகுகேதுவென்னும்) பாம்புபோலக் கோபாக்கினிசொலிக்கின்ற கண்களையுடையவளாய், போவதின் வழி மேலே நின்றாள் - (அங்ஙனம் அநுமான்)செல்லும் வழியிலே தடுத்துநிற்பவளானாள்; (எ - று.)

அன்றையிரவில் அநுமானால்வெளிக்கப்பட்டு அந்நகரம் அழியப்போவதனால், 'வாணாளந்நாள்' என்றார். அன்றி, தான் வாழ்ந்திருக்குங்காலத்தில் (தனதுஅநுமதியின்றி அநுமான் அந்நகரினுள்ளே) அன்றைக்குச்செல்லத் தொடங்கியதனால் அதனை அவள் வழிமறித்துநின்றாளென்றலுமாம். தான் (அந்நகரத்தில்) வாழும் நாள் அன்றைத்தினத்தில் முடிந்துபோவதனாலே அநுமனை வழிமறுத்தன ளென்றலு மொன்று. இனி, 'வாணாளன்னாள்' என்ற பாடம் சிறக்கும்; லங்கிணியென்றும் லங்காதேவியென்றும் சொல்லப்படுகிற இவள், அவ்விலங்கையைப் பாதுகாவல்செய்து நிற்கும் நகரதேவதை; லங்காதிதேவதை; இவள் வலியழிந்தால் இந்நகரமழியு மென்பது பிரமன் கட்டளையாதலால், இவளை 'அவ்வூரின் வாழ்நாள்போன்றவள்' என்றாரெனக. மேல் கூ௨ - ஆஞ் செய்யுள், இங்கு நோக்கத்தக்கது. இவள்வரலாறும், அங்ஙனமே விளங்கும்.

'நாளும்' என்ற உம்மை - முற்றும்மைபொருளது. வாணாள் = வாழ்நாள்: இது, மரூஉமுடிபு; இப்புணர்ச்சிக்கு விதி கூறியுள்ளார், வீரசோழியநூலுடையார். தோளுக்குத் தூணுவமை, திரண்டுருண்டு நீண்டு வலியதாய் நிற்றலில். காணா - உடன்பாட்டெச்சம்; இது, உபமேயத்திலும் கூட்டப்பட்டது. கட்செவி - கண்களேயே காதுகளாகவு முடையது என்று பொருள்படும் காரணக்குறி; அன்மொழித்தொகை: பார்த்தலும்கேட்டலுமாகிய புலனிரண்டும் கண்ணாகிய பொறியொன்றிலே பாம்புக்கு அமைந்திருக்கும் இயல்பு இங்குக் கருதத்தக்கது. வடநூலாரும் 'சக்ஷுஸ்ரவஸ்' என்பர். ஆகாயமார்க்கமாகச் செல்லுஞ் சூரியனைக் கண்டு சீறிக்கனன்று அவனைப்பற்றவரும் பாம்புவடிவான இராகுகேது, வானத்தில் தாவிச்செல்ல முயலும் அநுமனைக் கண்டு கோபித்துத் தீப்புறப்படவிழித்து அவனைத் தடுக்கவந்த இலங்கைமாதேவிக்கு உவமையாம். 'காணாவந்தாள்' என்று பிரதிபேதம்.

இதுமுதல் இருபத்தெட்டுக்கவிகள் - பெரும்பாலும் ஒன்று இரண்டு நான்காஞ் சீர்கள் மாச்சீர்களும், மூன்றாவது கூவிளச்சீரும், ஐந்தாவது புளிமாங்காய்ச்சீருமாகிய நெடிலடிநான்குகொண்ட கலிநிலைத்துறைகள். (எரு)

[அவ்விலங்காதேவியின் இயல்பு.]

எசு. எட்டுத்தோளாணு முகத்தானுலகேழுந்
தொட்டுப்பேருஞ்சோதிநிறத்தான்கமலக்கண்ணான்
முட்டிப்பேரின்மூவுலகத்தைமுதலோடுங்
கட்டிச்சீறுங்காவல்வலத்தாள்கடையில்லாள்.

(இ - ள்.) (அந்த இலங்கைமாதேவி),—எட்டு தோளாள் - எட்டுத்தோள்களை யுடையவள்; நாலு முகத்தாள் - நான்குமுகங்களை யுடையவள்; உலகு ஏழும் தொட்டு பேரும் சோதி நிறத்தாள் - ஏழுவகையுலகங்களிலும் போய் விளங்கி மீளுகின்ற பிரகாசமுள்ள உடம்பின்நிறத்தை யுடையவள்; சுழல் கண்ணாள் - வட்டமிடுகிற கண்ணின்கருவிழியை யுடையவள்; முட்டி பேரின்-பகைத்து மோதிவந்தால், மூ உலகத்தை - மூன்று உலகத்தவரையும், முதலோடும் கட்டி - அடியோடு கட்டிவிட்டு, சீறும் - (அதன்பின்னரும் அடங்காமற்) கோபிக்கின்ற, காவல் வலத்தாள் - பாதுகாவல்செய்தற்கேற்ற வலிமையையுடையவள்; கமை இல்லாள் - பொறுமையென்பது சிறிதுமில்லாதவள்; (எ - று.)

'உலகேழுந்தொட்டுப்பேரும்,' 'மூவுலகத்தை முதலோடுங்கட்டிச்சீறும்-' தொடர்புயர்வு நவிற்சியணி. 'உலகேழ்' என்றது, கீழேழ் மேலேழ் என்ற வகைபற்றி; 'மூவுலகம்' என்றது, மேல் கீழ் நடுவென்னும் நோக்கத்தால். கமை-க்ஷமா என்ற வடசொல்லின் விகாரம்; தெரிந்தாவது தெரியாமலாவது ஒருவர் தனக்குக் குற்றஞ்செய்தவிடத்துத் தான் அவர்க்குத் தீங்குசெய்யாது பொறுத்தல். 'பேரும்', பேரின்' என்பவை - பெயரும், பெயரின் என்பவற்றின் மரூஉ. 'போரின்' என்று சிலபிரதி. (எசு)

[அவளுடைய ஜாக்கிரதை.]

எஎ. பாராநின்றாளெண்டிசைதோறும்பலரப்பால்
வாராநின்றாரோவெனமாரிமழைபோ
லாராநின்றாணூபுரமச்சந்தருதாளாள்
வேராமெய்யாண்மின்னினிமைக்கும்மிளிர்பூணாள்.

(இ - ள்.) நூபுரம் அச்சம் தரு தாளாள் - (அணியப்பட்ட) சிலம்பென்னும் அணிகலம் (மிக்க ஓசையினாற் பிறர்க்கு) அச்சத்தை விளைவிக்கப் பெற்ற கால்களையுடையவளும், மின்னின் இமைக்கும் மிளிர் பூணாள் - மின்னல்போல மிகுதியாக ஒளிசெய்கின்ற ஆபரணங்களைத் தரித்துள்ளவளுமான அவ்விலங்கைமாதேவி,—பலர் அப்பால் வாராநின்றாரோ என எண் திசை தோறும் பாராநின்றாள் - (இவனுக்குத் துணையாக மற்றும்) பலர் தூரத்தில் வருகின்றார்களோ வென்று எட்டுத்திக்குக்களிலும் பார்க்கின்றவளும், மாரி மழையே போல் ஆராநின்றாள் - மழைபொழிகின்ற மேகம்போலக் கர்ச்சிக்கின்றவளும், வேர் ஆம் மெய்யாள் - (கோபத்தால்) வேர்வையுண்டாகப் பெற்ற உடம்பையுடையவளு மாயினாள்; (எ - று.)

இனி, 'பாராநின்றாள்' முதலிய அனைத்தையும் அவளியல்பாகக் கொண்டு உரைப்பாரு முளர். முதல்மூன்றடிகளிலும், ஆநின்று - நிகழ்கால இடைநிலை. ஆர்த்தல் - ஆரவாரித்தல். 'ஆராநின்ற' என்றும் பாடமுண்டு. நூபுரம் - வடசொல். வேர் - முதனிலைத்தொழிற்பெயர். இமைக்கும், மிளிர் - ஒருபொருட் பன்மொழி. (எஎ)

[இதுமுதல் மூன்றுகவிகள் - அவளியல்பை விளக்குவன.]

எஅ. வேல்வாள்சூலம்வெங்கதைபாசம்விளிசங்கங்
கோல்வாள்குந்தங்கொண்டகரத்தாள்வடகுன்றம்
போல்வாடிங்கட்போழினெயிற்றாள்புகைவாயிற்
கால்வாள்காணிற்காலனுமுட்குங்கதமிக்காள்.

(இ - ள்.) வேல்—, வாள்—, சூலம்—, வெம் கதை - கொடிய கதாயுதம், பாசம்—, விளி சங்கம் - முழக்கஞ்செய்கின்ற சங்கு, கோல் - தடி, வாள் குந்தம் - ஒளிபொருந்திய ஈட்டி, (என்கின்ற எட்டுப்படைக்கலங்களையும்), கொண்ட - தரித்த, கரத்தாள் - (எட்டுக்) கைகளையுடையவள்; வட குன்றம்போல்வாள் - (மிகப்பருத்து உயர்ந்துவிளங்குகின்ற பெருவடிவினால்) வடக்கின்கணுள்ள மகாமேருகிரியைப் போல்பவள்; திங்கள் போழின் எயிற்றாள் - சந்திரமண்டலத்தை இரண்டு துண்டாகப்பிளந்துவைத்த பிளவைகள்போன்ற கோரதந்தங்களையுடையவள்; வாயின் புகை கால்வாள் - வாயினாற் புகையைக் கக்குபவள்; காணின் காலனும் உட்கும் கதம் மிக்காள் - பார்த்தால் யமனும் அஞ்சும்படியான கோபம்மிக்கவள், (அவ்விலங்காதேவி); (எ - று.)

சங்கம் - வடசொல். தனதுபேரொலியால் அச்சத்தைவிளைத்துப் பகைவரையழித்தல்பற்றி, சங்கம் ஆயுதவகையிற் சேர்த்துக் கூறப்படும். 'கோல்' என்பதற்கு - அம்பு என்று பொருள்கொள்ளுதல், சிறப்பன்று; வில்லை ஒருகரத்திற்கொண்டதாக உடன்கூறாமையின். புகைவாயிற்காலுதல், உக்கிரமிகுதியால். இரண்டாமடியில், 'வாள்' உரிச்சொல்லாதலின், வாட்குந்தமெனத் திரியவில்லை; "இடையுரிவடசொலினியம்பியகொளாதவும்" என்றார் நன்னூலார். (எஅ)

எகூ. அஞ்சுவணத்தினுடையுடுத்தாளரவெல்லாம்
அஞ்சுவணத்தின்வேகமிகுத்தாளருளில்லாள்
அஞ்சுவணத்தினுத்தரியத்தாளலையாரும்
அஞ்சுவணத்தின்முத்தொளிராரத்தணிகொண்டாள்.

(இ - ள்.) அஞ்சு வணத்தின் - பஞ்சவர்ணங்களுள்ள, ஆடை - வஸ்திரத்தை, உடுத்தாள் - அரையில் தரித்தவள்; அரவு எல்லாம் அஞ்சு - நாகங்களனைத்தும் அஞ்சத்தக்க, உவணத்தின் - கருடனைப்போல, வேகம் மிகுத்தாள் - வேகம் மிக்கவள்; அருள் இல்லாள் - சீவகாருணியமில்லாதவள்; அம் சுவணத்தின் உத்தரியத்தாள் - அழகியபொன்னைக்கொண்டு தொழில்செய்த மேலாடையையுடையவள்; அலை ஆரும் - அலைகள் பொருந்திய, அம் - கடல்நீரில் தோன்றிய, சு - அழகிய, வண் - பெரிய, நத்தின் - சங்கிலுண்டான, முத்து - முத்துக்களினாற் செய்யப்பட்டு, ஒளிர் - விளங்குகிற, ஆரத்து - மாலையாகிய, அணி - ஆபரணத்தை, கொண்டாள் - தரித்துள்ளவள், (அவ்விலங்கிணி); (எ - று.)

அஞ்சு - ஐந்து என்பதன் மரூஉப்போலி. ஐந்துவர்ணம் - வெண்மை, கருமை, செம்மை, பொன்மை, பசுமை. வணம் - வர்ணமென்ற வடசொல்லின் சிதைவு. மகளிரும் ஈருடையுடுத்தல் மரபாதலால், இடையிலுடுக்கு

மாடையும் மேலாடையுமாக இரண்டுகூறினர். கருடனைக் கண்டமாத்திரத்திற் பாம்புகள் அஞ்சியொடுங்குதல் இயல்பு. உவணம், சுவணம் என்பன - ஸுபர்ணன், ஸ்வர்ணம் என்ற வடசொற்களின் விகாரம் ஈற்றடியில், ஸு, ஹாரம் - வடசொற்கள்

இச்செய்யுளின் அடிதோறும் முதலிற் சிலவெழுத்துகள் ஒன்றிநின்று வெவ்வேறுபொருள்விளைத்தது, யமகமெனனுஞ் சொல்லணி; இடையிட்டு வந்த முதல்முற்றுமடக்கு எனப்படும். (எ௬)

௮0. சிந்தாரத்தின்செச்சையணிந்தாள்தெளிநூல்யா
ழந்தாரத்தினேர்வருசொல்லாளறைதும்பி
கந்தாரத்தினின்னிசைபாடிக்களிகூரு
மந்தாரத்தின்மாலையலம்புமகுடத்தாள்.

(இ - ள்.) சிந்து - (வாசனை) வீசுகின்ற, ஆரத்தின் செச்சை - சந்தனக் குழம்பை, அணிந்தாள் - பூசியவள்; தெளி - தெளிவான, நூல் - சங்கீதசாஸ்திரத்தின் முறைமைக்கு ஏற்ற, யாழ் - வீணையில் வாசிக்கப்படுகிற, அம் தாரத்தின் - அழகிய தாரமென்னும் இசைக்கு, நேர் வரும் - ஒப்பாக அமைந்த, சொல்லாள் - சொற்களையுடையவள்; அறை தும்பி - ஒலிசெய்கின்ற வண்டுகள், கந்தாரத்தின் இன் இசை பாடி - காந்தாரமென்னும் பண்போல இனிமையான இசைப்பாட்டைப் பாடி, களி கூரும் - களிப்புமிகுதற்கிடமான, மந்தாரத்தின் மாலை - மந்தாரமென்னும் தேவதருவின் மலர்களாலாகிய மாலை, அலம்பும் - (சூட்டப்பட்டு) அசையப்பெற்ற, மகுடத்தாள் - முடியையுடையவள், (அந்நகரத்தேவதை); (எ - று.)

செச்சை - செஞ்சந்தனக்குழம்பு; இதனை 'சர்ச்சா' என்ற வடசொல்லின் சிதைவெனக் கொண்டால், பூசுதலென்ற பொருளாம். நூல் இங்கு, இசைநூல். கந்தாரம் - காந்தாரமென்பதன் குறுக்கல். மந்தாரம் - பஞ்சதேவதருக்களி லொன்று: வடசொல்; அதன்மலர்க்கு முதலாகுபெயர். அநுமானால் தெய்வநிலை குலைகின்ற சமயம் இதனை நெருங்கச் சமீபித்தமைபற்றி, இவள் சூடிய தெய்வமலர்மாலையில் வண்டுகள் மொய்த்தனவென்க; கீழ் எ௬ - ஆஞ் செய்யுளில் 'மேவா ஆம் மெய்யாள்' என்றதும் இதனால். "வண்டேயிழையே வள்ளிபூவே, கண்ணேயலமரலிமைப்பேயச்சமென், றன்னவைபிறவுமாங்கவ ணிகழ, நின்றவைகளையுங் கருவியென்ப" என்ற தொல்காப்பியங்கொண்டு தேவர்கள்மாலையில் வண்டு மொய்த்த லியல்பன்மை உணர்க. "எல்லைமூவைந்து நாள்களுளவென விமைக்குங் கண்ணும், நலமெலழின்மாலை வாடும்' என்ற சீவகசிந்தாமணிகொண்டு, தேவர்கட்குத் தெய்வநிலைகுலையுஞ்சமயம் சமீபிக்கின்றபொழுது தெய்விகக்குறிகள் நிலைகுலைதலை உணரலாகும். 'பண்ணிக் களிகூரும்' என்றும் பாடம்.

இச்செய்யுளில், அடிதோறும் முதலெழுத்துமாத்திரம் வேறுபட்டிருக்க, இரண்டாவதுமுதலிய சிலவெழுத்துக்கள் ஒன்றிநின்று பொருள்வேறுபட்டது, திரிபுஎன்னுஞ் சொல்லணியாம். (௮0)

[அவள் தன்னையெதிர்த்தலை அநுமான் காணுதல்.]

அக. எல்லாமுட்குமாழியிலங்கையிகன்மூதூர்
நல்லாளவ்வூர்வைகுறையொக்குநயனத்தா
ணில்லாய்நில்லாயென்றுரைநேர்வாணினையாமுன்
வல்லேசென்றாண்மாருதிகண்டான்வருகென்றான்.

(இ-ள்.) எல்லாம் உட்கும் - எல்லாப்பிராணிகளும் அஞ்சும்படியான, ஆழி இலங்கை - கடல்சூழ்ந்த இலங்கையாகிய, இகல் முது ஊர் - வலிமை கொண்ட பெரியஊர்க்கு, நல்லாள் - நன்மையைச்செய்பவளும், அ ஊர் வைகு உறை ஒக்கும் நயனத்தாள் - அந்தஊர் முழுவதுந்தங்கும்படியானதோருறையைப்போன்ற கண்களையுடையவளுமாகிய அத்தேவி, நில்லாய் நில்லாய்என்று உரை நேர்வாள் - 'நில் நில்' என்று (அநுமானைநோக்கி) அதட்டிக்கூறுபவளாய், நினையா முன் வல்லே சென்றாள் - நினைத்தற்குமுன்பு விரைவில் (அநுமானெதிரிற்) சென்றாள்; (அங்ஙனஞ் சென்ற அவளை), மாருதி கண்டான் - அநுமான் பார்த்து, வருக என்றான் - 'வருவாயாக' என்றுசொல்லித் தைரியத்துடன் அழைத்தான்; (எ - று.)

"எல்லாம்" என்பது, இருதிணைக்கும் பொது. நயநம் - வடசொல். 'அவ்வூர்வைகுறையொக்கு நயனத்தாள்' என்றது - மிகப்பெரியகண்களையுடையவளென்ற பொருளோடு, அவ்வூரைத் தனதுகண்ணினுட் கருமணிபோலவைத்துக் குறிக்கொண்டு பாதுகாப்பவளென்ற கருத்தையும் காட்டும். 'நில்லாய் நில்லாய்' என்ற அடுக்கு, கோபம்பற்றியது. நினையாமுன் வல்லே - மிக்க விரைவி லென்றபடி. இனி, நினையாமுன் சென்றாள், வல்லேவருக என்றான் என்று இயைத்தும் உரைக்கலாம். நில்லாய் நில்லாய் என்று உரை நேர்வாள் நினையா - 'நில்நில்' என்று வார்த்தைசொல்லவேணுமென்று நினைத்து, முன் - (அநுமானுக்கு) எதிரில், வல்லே சென்றாள் - விரைவிற்போனாள் என்று உரைப்பாருமுளர்; இவ்வுரைக்கு, 'நினையா' என்பது - உடன்பாட்டுவினையெச்சம்: முந்தினவுரைக்கு, ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். வருகென்றான் - தொகுத்தல். தான் எதிர்பாராத சமயத்தில் எவரேனும் வந்து திடீரென்று எதிர்த்தாலும் சிறிதும் பின்வாங்காது அவர்க்கு மாறுசெய்யுந் துணிவுடையவன் அநுமான் என்பது, இங்கு நன்குவிளங்கும். (அக)

[அவள் அநுமானை அதட்டுதல்.]

அஉ. ஆகாசெய்தாயஞ்சலைபோலுமுறிவில்லாய்
சாகாமூலந்தின்றுழல்வாய்பாற்சலமென்னும்
பாகாரிஞ்சிப்பொன்மதிறாவிப்பதையாதே
போகாயென்றாள்பொங்கனலென்னப்புகைகண்ணாள்.

(இ - ள்.) (அப்பொழுது அவ்விலங்காதேவி),—பொங்கு அனல் என்ன புகை கண்ணாள் - மூண்டெரியும் நெருப்புப்போல (உக்கிரகோபத்தாற்) புகைகின்ற கண்களையுடையவளாய், (அநுமானை நோக்கி), 'அறிவு இல்லாய் - அறிவில்லாதவனே! ஆகா செய்தாய் - தகுதியல்லாத காரியங்களைச் செய்

தாய்; அஞ்சலை போலும் - (அஞ்சவேண்டுவதற்கு) அஞ்சுவாயல்லைபோலும்; சாகா மூலம் தின்று உழல்வார்பால் - இலைகளையும் வேர்களையும் தின்று திரி பவரிடத்தில், சலம் என் ஆம் - (எனது)பெருங்கோபம் எதற்கு? பாகு ஆர்- சுண்ணச்சாந்தின்குழம்பு நிரம்பப்பூசப்பெற்ற, பொன் - அழகிய, இஞ்சி மதில் - இம்மதிலை, தாவி - கடக்கமுயன்று, பதையாது - விரைவுபடாமல், போகாய் - விலகிப்போ', என்றான் - என்று அதட்டிப்பேசினான்; (எ - று.)

'ஆகா' என்று பன்மையாற்கூறியது, கடல்கடந்து இங்குவந்ததையும், மதிலைத்தாவிக்கடந்துசெல்ல முயலுதலையும்; எதிர்மறைப்பலவின்பால் வினை யாலணையும்பெயர். 'அஞ்சலைபோலும் அறிவில்லாய்' என்றது, "அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ, தஞ்ச லறிவார் தொழில்' என்றபடி அஞ்சப் படுவதற்கு அஞ்சாது அசட்டுத்துணிவுகொண்டு தொழில்செய்யும் பேதை போலும் நீ யென்று இகழ்ந்தவாறாம். இரண்டாமடி - வலிமையைத் தரு கின்ற தசைமுதலியன உண்ணாது சாகமூலங்களைத் தின்று திரியும் வாநர ரான உங்கள்விஷயத்தில் அழிவுசெய்வதற்கு யான் சிறிது கோபங்கொள்ளு தலே போது மென்றபடி. 'உழல்வார்' என்றது, முன்னிலைப்படர்க்கை: இடவழுவமைதி. சலம் - தணியாக்கோபம். 'ஶாகமூலம்' என்ற வடமொ ழித்தொடர், எதுகைநோக்கி நீட்டல்விகாரம் பெற்றது. வாநரவீரரான உம் மிடத்தில் எனதுகோபம் பயன்படாது என மேல்வருந்தீங்கிற்கு ஏற்ற அமங்கலப்பொருளும் இவ்வார்த்தையில் அமைதல் காண்க. பாகுஆர் - அழகு அமைந்த எனினுமாம்; இப்பொருளில், 'பாகு' என்பது - பாங்கு என் பதன் விகாரம். இஞ்சி, மதில் ஒருபொருட்பன்மொழி 'தாவிப்பதையாது' என்றதை 'பதைத்துத்தாவாது' என்று விகுதிபிரித்துக்கூட்டலாம். 'பதை யாதே' என்பது, எதிர்மறையொருமையேவலாகக் கொள்ளுதற்கும் ஏற்கும். மதில்தாவிப்பதையாதே - மதிலைப்பாய்ந்துதாவி (என்னால் மோதப்பட்டுத்) துடியாமலே என்றலு மொன்று. 'ஆகாய்', 'பதையாதே' என்பன - பாடாந் தரம். பதை கண் - வினைத்தொகை. (அஉ)

[அநுமான் பணிவாயப்பேசுதல்.]

அங. களியாவுள் ளத்தண்ணன் மனத்திற்கதமுழ்க
விளியாநின் றேநீதிநலத்தின் வினையோர்வா
னெளியாவிவ் வூர்காணுநலத்தி னணைகின்றே
னெளியேனுற் றாலியாவது னக்கிங்கிழவென் றான்.

(இ - ள்.) களியா உள்ளத்து அண்ணல் - (பொருளின்பங்களினாலாகும்) களிப்பைக் கொள்ளாத மனத்தையுடைய பெரியோனான அநுமான்,—மனத் தில் கதம் மூழ்க - தன்மனத்திலுண்டாகின்ற கோபம் (வெளிப்படாது) உள் ளடங்கிநிற்க, நீதி நலத்தின் வினை ஓர்வான் - நல்ல நீதிமார்க்கத்தால் (அவ ளது)செயலை அறிதற்பொருட்டு,—விளியா நின்றே - ('வருக'என்று அவளை) அழைத்துநின்று, 'அளியால் இ ஊர் காணும் நலத்தின் அணைகின்றேன் - அன்போடு இந்தஊரைப்பார்க்கவேண்டுமென்னும் ஆசையால் வருகின்றேன் யான்; எளியேன் உற்றால் - எளியவனான யான் (இவ்வூரினுட்) சென்றால்,

இங்கு உனக்கு இழவு யாவது - இதனால் உனக்கு நஷ்டமென்ன?' என்றான் - என்றுசொன்னான்; (எ - று.)

அநுமான் நித்தியப்பிரமசாரியென்பது தோன்ற, 'களியாவுள்ளத்தனல்' என்றார். தன்வலிமைமிகுதியைக்கருதிச் செருக்கி அதனால் முதலிலேயே போர்தொடங்காமற் கோபத்தை அகத்தடக்கி நால்வகையுபாயங்களுள் முதலாகிய சாமோபாயத்தால் முபலுதல்பற்றியும், இங்ஙனங்கூறுதல் ஏற்கும். 'விளியாநின்று' என ஒருசொல்லாக எடுத்து, 'ஆநின்று' - நிகழ்காலவிடைநிலையென்றலு மொன்று.. இனி, இதற்கு வெளியே கோபங்காட்டாதுநின்று என்று உரைப்பாரு முளர். நீதிநலத்தின்வினையோர்தல் - எதிர்ப்பவளது நிலைமையை விரைவுபடாமல் ஆய்ந்துஉணர்தல். ஓர்வான் - எச்சம் இங்கு 'இழவு' என்ற சொற்பிரயோகம், அகத்திலடங்கிய கோபத்தின் காரியமெனத் தக்கது. யாவது - யாதுஎன்பதன் விரித்தல்; இதில், அ - சாரியையென்னலாம். 'கதமூள,' 'நலத்தால்' என்பன - சிலபிரதிகளிற் கண்டவை. (அ௩)

[அதற்கு அவள் சினந்து மறுமொழிகூறிச் சிரித்தல்.]

அ௪. என்னுமுன்னமேகெனவேகாதெதிர்மாற்றஞ்
சொன்னாயேநீயாவனடாதொல்புரமட்டா
னன்னாரேனுமஞ்சுவரெய்தற்களியுற்றா
லுன்னாலெய்துமூர்கொலிவ்வூரென்றுறநக்காள்.

(இ - ள்.) என்னா முன்னம் - என்று (அநுமான்) சொல்லாதமுன்னே [சொன்னவுடனே யென்றபடி],—(அவ்விலங்காதேவி அநுமானைநோக்கி),—ஏகு என ஏகாது - 'போ'என்று நான்சொல்லவும் போகாமல், எதிர்மாற்றம் சொன்னாயே - எதிர்வார்த்தைசொல்லிக்கொண்டு அஞ்சாது நிற்கின்றனையே! நீ யாவன் அடா - நீ யாரடா? தொல் புரம் அட்டான் அன்னார் ஏனும் - பழமையான திரிபுரத்தை யெரித்தவனாகிய சிவபிரானைப் போன்றவர்களேயானாலும், எய்தற்கு அஞ்சுவர் - (இவ்வூரினுள்) வருவதற்குப் பயப்படுவர்; அளி உற்றால் உன்னால் எய்தும் ஊர் கொல் இ ஊர் - நீ விருப்பங்கொண்டால் அவ்விருப்பத்தின்படியெல்லாம் உன்னாற்செல்லத்தக்கவூரோ இந்தவூர்?' என்று - என்றுசொல்லி, உற நக்காள் - (பரிகாசக்குறிப்புத்தோன்ற) மிகுதியாகச்சிரித்தாள்; (எ - று.)

அனைத்தையுமழிக்கும் உக்கிரமான ஆற்றலுடைமையின், உருத்திரமூர்த்தியை எடுத்துக்கூறினார். 'அடா' என்றது, அலக்ஷியமாகவிளித்தவில் உயர்திணையாண்பாற்கு வருவதோ ரிடைச்சொல்; (அடீஎன்பது, பெண்பாற்கண் வரும்.) இங்குக்கூறிய நகை, இகழ்ச்சிகாரணமாகப் பிறந்தது. கொல் - வினாவகையால், எதிர்மறைகாட்டும். எதிர்மாற்றம்-பிரதியுத்தரம். ஏகு என ஏகாது என்பதற்கு - (இவ்வாறு சமாதானமாகப்பேசிய அநுமானைநோக்கி) '(நீ) உட்புக்குப்பார்' என்றுசொல்லி(த் தான்) அப்பாற்செல்லாமல் என்றுமாம். (அ௪)

[அநுமான் சிரித்துத் தனதுதுணிவைக்கூறுதல்.]

அ௫. நக்கானைக்கண்டையன்மனத்தோர்நகைகொண்டா
னக்காய்நீயோர்யார்சொலவந்தாயுனதாவி

புக்காலேதாமோடலேயென்றாளினியிவ்வூர்
புக்காலன்றிப்போகிலெனென்றான்புகழ்கொண்டான்.

(இ - ள்.) நக்காளை - (அவ்வாறு) சிரித்தவளான அவளை, கண்டு - பார்த்து,—ஐயன் - சிறந்தவனான அநுமானும்,—மனத்து ஓர் நகை கொண்டான் - (இகழ்ச்சிக்குறிப்பான) கருத்தோடு ஒருவகைப்புன்சிரிப்பைக் கொண்டான்; (அதுகண்டு அவள்,) 'நக்காய் - (இங்ஙனஞ்) சிரித்தவனே ! நீ யார்—? யார் சொல வந்தாய் - எவர்செல்லச்சொல்ல (அச்சொற்படி) நீ வந்தாய்? உனது ஆவி உக்கால் எது ஆம் - உனதுஉயிர் (என்றால்) ஒழிந்துபோனால் (உனக்கு) யாதுபயன்? ஓடலே - இன்னும் ஓடிப்போகாமல் நிற்கின்றாயே!' என்றாள் - என்று அதட்டிக்கூறினாள்; (அதற்கு),—புகழ் கொண்டான் - கீர்த்திபெற்றவனான அநுமான், இனி இ ஊர் புக்கால் அன்றி போகிலென் என்றான் - 'இனி இந்தவூரினுட் சென்றாலல்லது வெளிச்செல்லேன்' என்று (தனது உறுதியை மறுமொழியாகக்) கூறினான்; (எ - று.)

ஐயன் - ஆர்யன் 'கொண்டானக்காளை' என்ற பாடத்துக்கு, அக்கால் - அப்பொழுது, என்று சொன்ன சொல - கொடுத்தல் தான் அவளைக்கொல்லுதல் தவறென்பது தோன்ற, 'உனதுஆவியுக்கா லேதாம்' என்றாள். 'இனி' என்றது, நீ இவ்வளவுகூறியபின்பு என்றபடி.

'ஓடலேயென்றாளினி யிவ்வூர்' என்றும் பாடமுண்டு; அதற்கு உரை:— சிரித்த அவளைப் பார்த்து, கீர்த்திபெற்றவனான அநுமான், குறுநகைகொண்டு, 'அக்காய் - அம்மா! நீயார்? யார்சொல்லவந்தாய்? உனது ஆவி உக்கால் எதாம்? ஓடலே' என்றான்; 'இனி இவ்வூர்புக்காலன்றிப் போகிலென்' என்றும் கூறினான் எனக் காண்க. தாயையுணர்த்துகின்ற 'அக்கா' என்ற வடசொல் - 'அக்கை' என ஆவீறுஐயாகி, அது பின்பு ஐ ஆய்என ஈறுதிரிந்து விளியாயிற்றென்க; பெரியவளேயென விளித்தவாறு. (அ௫)

[இலங்காதேவியின் சிந்தை.]

அ௬. வஞ்சங்கொண்டான்வானரமல்லன்வருகாலன்
றுஞ்சுங்கண்டாலென்னையிவன்சூழ்திரையாழி
நஞ்சங்கொண்டகண்ணுதலேப்போனகுகின்றா
னெஞ்சங்கண்டேகல்லெனநின்றேநினைவுற்றாள்.

(இ - ள்.) வானரம் அல்லன் - (இவன் உண்மையான) குரங்கல்லன்: வஞ்சம் கொண்டான் - வஞ்சனையால் இவ்வடிவுகொண்ட வேறொருவனாதல் வேண்டும்; வரு காலன் - (பிராணிகட்கு அழிவுசெய்தற்கு அந்தியகாலத்தில்) வருகின்ற யமனும், என்னை கண்டால் துஞ்சும் - என்னைப்பார்த்தால் ஒடுங்கி விடுவன்: (ஆதலால் இவன் வேற்றுருவங்கொண்டுவந்த யமனல்லன்; மற்று,) இவன்—, (என்னைக்கண்டு அஞ்சாதுநின்று), சூழ் திரை ஆழி நஞ்சம் கொண்ட கண்நுதலே போல் நகுகின்றான் - சுற்றிலுமுள்ள அலைகளையுடைய பாற்கடலில் தோன்றிய விஷத்தை உட்கொண்ட சிவபிரானைப்போலச் சிரிக்கின்றான்; (என்று), நெஞ்சம் கண்டே கல் என நின்றே நினைவு உற்றாள் -

(அவனது) மனவுறுதியைப் பார்த்து அதனால் (திடுக்கிட்டுக்) கற்போல அசைவின்றிநின்று ஆலோசிப்பவளானாள், (அந்த இலங்காதேவி); (எ - று.)

வாநர மென்ற வடசொல் - கொஞ்சங்குறைய மனிதன்போலுள்ள தென்று காரணப்பொருள்பெறும்; "மெய்தெரிபொருண்மே லன்மையும் விளம்புப" என்றதனால், 'இவன் வாநரமல்லன்' என்ற முடிபு அமையும்; துணிந்தபொருளின்மேல் மற்றொன்றல்லாததன்மை வைத்துக் கூறப்பட்டது. துஞ்சுதல் - இறத்தலும், சூழ்தல் - சுழலுதலுமாம். நஞ்சம் கொள்ளுதல் - விஷத்தையுண்டு கண்டத்தில் நிறுத்துதல். கண்ணுதல் - நெருப்புக் கண்ணை நெற்றியி லுடையவன். சிவபிரான் திரிபுரமெரித்தற்பொருட்டுச் சிரித்தமை, பிரசித்தம். நெஞ்சம் - அதன்வலிமைக்கு இலக்கணை. காணுதல் - உணர்தல். நகுகின்றான் என்றதன்பின் 'என்று' என வருவித்து, அதனை 'நினைவுற்றாள்' என்பதனோடு இயைத்து முடிபு காண்க. யமனினும் வலிய துணிவுடையவ னிவனென்பது, அவளுட்கோள். (அசு)

[இலங்காதேவி அநுமன்மேற் சூலத்தையெறிதல்.]

அஎ. கொல்வாமன்றேற்கோளுறுமிவ்வூரெனல்கொண்டாள்
வெல்வாய்நீயேவென்றியெனத்தன்விழிதோறும்
வல்வாய்தோறும்வெங்கனல்பொங்கமதில்வாயில்
செல்வாயென்றோர்மூவிலைவேலைச்செலவிட்டாள்.

(இ - ள்.) 'கொல்வாம் - (இவனைக்) கொல்லக்கடவோம்; அன்று எல் - அங்ஙனம் நாம்செய்யாமற்போனால், இ ஊர் கோள் உறும் - இந்த ஊர் (இவனால்) அழிவுடையும்', எனல் கொண்டாள் - என்று கருதினவளாய், (அநுமனை நோக்கி), வெல்வாய் நீயே வென்றி என - 'வெல்லவல்லவன் நீயேயானால் (என்னை இப்பொழுது) வெல்லக்கடவாய்' என்று சொல்லி, மதில் வாயில் செல்வாய் என்று '(நீ உட்செல்லவல்லவனானால்) இம்மதிலின்கணுள்ள கோபுரவாயிலின்வழியாகவே உட்செல்வாய்' என்றும் சொல்லி, — தன் விழிதோறும் வல் வாய் தோறும் வெம் கனல் பொங்க - தனது (எட்டுக்) கண்களிலும் வலிய (நான்கு) வாய்களிலும் வெவ்வியநெருப்பு மிகுதியாகஎழ, மூ இலை வேலை செல விட்டாள் - (தன்கையிலுள்ள) மூத்தலைச் சூலாயுதத்தை (அநுமான்மீது) செல்ல எறிந்தாள், (இலங்காதேவி); (எ - று.)

'கொல்வாம்' என்ற தனித்தன்மைப்பன்மை, செருக்குப்பற்றியது; அன்றியும், ஒவ்வொருவரும் தன்னைத்தானே நினைக்கும்பொழுது பன்மையாக நினைத்தல், பெரும்பான்மை இயல்பு. முதலடியில் - இவனை நாம் கொல்வோம்; அங்ஙனம் நம்மாற் கொல்லமுடியாதானால் இவனால் இந்தஊர் அழிவையடையும் என்ற நியதியை உட்கொண்டவளாய் என்ற கருத்தும் அமையும்; மேல் கூடு - ஆஞ் செய்யுளைக் காண்க. வென்றி - எவலொருமைமுற்று. 'மதில்வாயில்செல்வாய்' என்பதற்கு - (என்னைவென்றபின்பு நினது ஆற்றலுக்கு எவருமெதிரல்லாராதலாற்)பிறகுமதில்வாயிலின்வழியாகவே செல்வாய் என்றனளென்று கொள்ளுதலு மொன்று. 'நீ இம்மதிலின்வழியாய்ப்போவாய்' என்று இகழ்ச்சிக்குறிப்பாகிய எதிர்மறையிலக்கணையாற் கூறியதாகவும் கொள்ளலாம்; நீ போகமுடியா தென்றபடி. இலை - இலைவடிவமான நுனி.

[அச்சூலத்தை அநுமான் ஒடித்தெறிதல்.]

அரு. தடித்தாமென்னத்தன்னெதிர்செல்லுந்தழல்வேலைக்
கடித்தாநாகம்விண்ணின்முரிக்குங்கருளன்போ
லொடித்தான்கையாலும்பருவப்பவுயர்காலம்
பிடித்தானெஞ்சந்துண்ணெனவெண்ணம்பிழையாதாள்.

(இ - ள்) தடித்து ஆம் என்ன தன் எதிர் செல்லும் - மின்னலேயாமிது வென்று சொல்லும்படி தனது எதிரிலே வந்த, தழல் வேலை - நெருப்புச் சொலிக்கின்ற அந்தச்சூலாயுதத்தை,—(அநுமான்),—நாகம் கடித்தா விண்ணில் முரிக்கும் கருளன் போல் - சர்ப்பத்தை வாயினாற்கவ்விக்கொண்டு சென்று ஆகாயமார்க்கத்தில் துண்டுபடுத்துகின்ற கருடன்போல, உம்பர் உவப்ப - தேவர்கள் மகிழவும், உயர் காலம் பிடித்தாள் - நெடுங்காலமாக (அச்சூலத்தைக்) கையிற்பிடித்துள்ளவளும், எண்ணம் பிழையாதாள் - தான் நினைத்தகாரியந் தவறாதவளுமான அவ்விலங்காதேவி நெஞ்சம் துண்ணெனமனம் திடுக்கிடவும், கையால் ஒடித்தான் - தன்கைகளாற் பிடித்து ஒடித்தெறிந்தான்; (எ - று.)

உவமையணி தடித் - வடசொல். தழல்வேல் - நெருப்புப்போலக் கொடிய வேலுமாம். கருளன் - வடசொல் திரிபு. சிறியதிருவடியாகிய அநுமானுக்குப் பெரியதிருவடியாகிய கருடாழ்வானும், பிராணிகளைக்கொல்லுங் கொடிய நீண்ட சூலாயுதத்துக்கு நாகமும் உவமை. துண்ணெனல் - அச்சக்குறிப்பு. உம்பருவப்ப வேலைக் கையா லொடித்தான்; (அதுகண்டு), நெடுங் காலமாக அதனைப்பிடித்திருந்தவளான அவள் மனந்திடுக்கிடத் தனது எண்ணம் பலியாதவளானாள் என்றும் பொருள்கொள்ளலாம்; எண்ணம் - இச் சூலங்கொண்டே அவனைக் கொன்றொழித்துவிடலா மென்னுங் கருத்து. பிழைத்தல் - ஜீவித்தல்; முந்தினஉரைக்குத் தவறுதல். (அஅ)

[அநுமான் அவளது மற்றையாயுதங்களையும் பறித்தெறிதல்.]

அகூ. இற்றுச்சூலநீறெழுகாலத்தெரியொப்பாண்
மற்றுந்தெய்வப்பல்படைகொண்டுமலைவாண்மே
லுற்றுக்கையாலாயுதமெல்லாமொழியாமற்
பற்றிக்கொள்ளாவிண்ணிலெறிந்தான்பழியோர்வான்.

(இ - ள்.) சூலம் இற்று நீறு எழு காலத்து - (இங்ஙனம் தனது) சூலாயுதம் முறிந்து துகளாய்ப்போனபோது, எரி ஒப்பாள் - (இலங்காதேவி) நெருப்புப்போல(க் கோபத்தாற்) சொலிப்பவளாய், மற்று தெய்வம் பல் படை கொண்டு மலைவாள் - தெய்வத்தன்மையுள்ள மற்றைப்பலஆயுதங்களைக் கொண்டு போர்செய்பவளானாள்; (அதுகண்டு), பழி ஓர்வான் - (பெண்பாலாகியஇவளைக் கொல்லுதல்) பழிப்புக்கிடமா மென்று எண்ணுபவனான அநுமான், மேல் உற்று - அவள்மேற் பாய்ந்து, ஆயுதம எல்லாம் ஒழியாமல் கையால் பற்றி கொள்ளா - (அவள்கைகளிலிருந்த) ஆயுதங்களையெல்லாம் ஒன்றும் மிச்சமில்லாதபடி தன்கைகளாற் பிடித்துப்பறித்து, விண்ணில் எறிந்தான் - வானத்திற் செல்ல வீசியெறிந்துவிட்டான்; (எ - று.)

'மற்றுத் தெய்வப்பல்படை', 'ஆயுதமெல்லாம்' என்றது, எஅ - ஆஞ் செய்யுளிற்கூறிய வேல்முதலிய எட்டனுள் சூலமொழிந்த ஏழினையும். ஆயுதம் - வடசொல். அவளைக்கொல்லாமல் அஞ்சுவித்து வெல்லக்கருதினனாய் அவள்கையிற் படைக்கலங்களை இல்லையாக்கின னென்பார், 'பழியோர்வான்' என்றார்; மேல் கக - ஆஞ் செய்யுளையும் காண்க. அவ்வாறு தான் கைப்பற்றிய ஆயுதங்களை அவள்மேலெறியாமல் விண்ணிலெறிந்ததற்கு இதுகாரணமாகின்றதனால், கருத்துடை யடை கொளியணியென்னலாம். 'நீறெழுவோடும்', 'படைகொண்டேமலைவானை', 'பழியில்லான்' என்பன - பாடபேதம். (அக)

[அவள் அநுமானை அடிக்கவருதல்.]

கூ0. வழங்குந்தெய்வப்பல்படைகாணுண்மலைவான்மேன்
முழங்குமேகமென்னவுரப்பிமுதிர்கின்றாள்
கழங்கும்பந்துங்குன்றுகொடாடுங்கரமோச்சித்
தழங்குஞ்செந்தீச்சிந்தவடித்தாடகவில்லாள்.

(இ - ள்.) (பின்பு), தகவு இல்லாள் - தக்கநற்குணமாகிய பொறுமையில்லாதவளான அவ்விலங்காதேவி, வழங்கும் தெய்வம் பல் படை காணுள் - தான்பிரயோகிப்பதற்குஉரிய தெய்வத்தன்மையுள்ள பல ஆயுதங்களையும் தன்னிடத்திலில்லாதவளாய், முதிர்கின்றாள் - கோபம்மிக்கவளாகி, முழங்கும் மேகம் என்ன உரப்பி - இடிமுழங்குகின்ற மேகம்போல ஆரவாரஞ்செய்து (அநுமானை) அதட்டி, குன்று கழங்கும் பந்தும் கொடு ஆடும் கரம் ஓச்சி - மலைகளைக் கழற்காய்களாகவும் பந்துகளாகவும் கொண்டு ஆடவல்ல தன்கைகளை உயரவெடுத்து, (அவற்றால்), மலைவான்மேல் - தன்னையெதிர்த்துப்போர்செய்பவனான அவ்வநுமான்மீது, தழங்கும் செம் தீ சிந்த அடித்தாள் - ஒலித்துக்கொண்டெரிகின்ற செந்நிறமான நெருப்புப்பொறி சிதறும்படி அறைபவளானாள்; (எ - று.)

இனி, 'வழங்கும்' என்பதற்கு - (பிரமனால் தனக்கு) அளிக்கப்பட்டவென்று உரைப்பாருமுளர. 'முழங்குமேகம்' என்றவிடத்து, மகரவொற்று - விரித்தல். தீக்குச் செம்மை - இயற்கையடைமொழி; இனம்விலக்க வந்ததன்று. "தகுதியான்வென்றுவிடல்" என்றவிடத்து 'தகுதி' என்றதுபோல, இங்கு 'தகவு' என்பது-பொறுமை யென்றபொருளில் வந்தது; இச்சொற்கு - அறிவு, இரக்கம், உவமை என்ற பொருள்களும் உண்டு. 'முரிகின்றாள்' என்னும் பாடம். (கூ0)

[அநுமான் அவள்கைகளைப்பிடித்துக்கொண்டு அவளையடித்தல்.]

கூக. அடியாமுன்னமங்கையனைத்துமொருகையாற்
பிடியாவென்னேபெண்ணிவள்கொல்லிற்பிழையென்னு
வொடியாநெஞ்சத்தோரடிகொண்டானுயிரோடு
மிடியேறுண்டநாகமெனப்பாரிடைவீழ்ந்தாள்.

(இ - ள்.) அடியா முன்னம் - (அவ்வாறு தன்னை அவள்) அடித்தற்கு முன்பு, (அநுமான்), அம் கை அனைத்தும் ஒரு கையால் பிடியா - (அவளு

டைய) அழகியகைகளையெல்லாம் தனது ஒருகையினாற் சேரப்பிடித்து, 'என்னே - இது என்ன தருமசங்கடம்! பெண் இவள் - பெண்ணாயிருக்கின்றாள் இவள்; கொல்லின் பிழை - (இவளைக்) கொன்றால் ஸ்த்ரீஹத்திதோஷமாகின்றது,' என்று - என்றுஎண்ணி, ஓடியா நெஞ்சத்து ஓர் அடி கொண்டான் - உடையாதவலிமையையுடைய (அவளது) மார்பில் (தனது மற்றொருகையால்) ஓர் அறை அறைந்தான்; (அதனால் அவள்), இடிவுறு உண்ட நாகம் என-பேரிடி விழப்பெற்ற மலைபோல, உயிரோடும் பாரிடை வீழ்ந்தாள் - உயிருடன் தரையில் விழுந்தாள்; (எ - று.)

இங்ஙனம் வலியஎதிர்ப்பவளைக் கொல்லவேண்டுவது அவசியமாதலையும், அங்ஙனங்கொன்றாற் பெரும்பாதகமாதலையும் கருதி, 'என்னே!' என்று சிந்தித்து, அவளைக்கொல்லாது வலியொடுக்கி வெல்வானாயினனென்க; (பாலகாண்டத்துத் தாடகைவதைப்படலத்தில் "துண்ணெனும் வினைத்தொழில் தொடங்கியுளளேனும், பெண்ணெனமனத்திடைப் பெருந்தகைநினைந்தான்" என்றதும், ஆரணியகாண்டத்துச் சூர்ப்பணகைப்படலத்தில் "நில்லடி இயெனக்கடுகினன் பெண்ணெனநினைந்தான்" என்றதும், இங்கு நோக்கத்தக்கன.) 'ஓர்அடிகொண்டான்' என்பது - ஒருகாலையிட்டு உதைத்தானென்றும் பொருள்படுமாயினும், மேல் ௯௪ - ஆஞ் செய்யுளில் "கூரங்கொன்றுன்கை, கைத்தலமதனாற் றீண்டிக் காய்ந்தவன்று" என வருவதனை நோக்குமிடத்து அங்ஙனங்கொள்ளுதல் சிறவாமையுணர்க. உயிர்மாத்திரமேநிற்க வலிமைமுற்றும் ஒடுங்கி விழுந்தனளென்க. ஓடியா - (தன்னை அவள்) ஓடியாதபடி, முன்னம் - முன்னமே என்று உரைத்தலுமொன்று. நாகம்-சர்ப்பமுமாம். (௯௧)

[அடிபட்டுவிழுந்த அவள் எழுந்து சிலசொல்லத்தொடங்குதல்.]

௯௨. விழுந்தாணொந்தாள்வெங்குருதிச்செம்புனல்வெள்ளத்
தழுந்தாநின்றாணான்முகனார்தம்மருளன்றி
யெழுந்தாள்யாருமியாவையுமெல்லாவுலகத்துந்
தொழுந்தாள்வீரன்றூதுவன்முன்னின்றிவைசொன்னாள்.

(இ - ள்.) விழுந்தாள் - (அவ்வாறு) விழுந்தவளான அவ்விலங்காதேவி, நொந்தாள் - (உடலும் உள்ளமும்) வருந்தியவளும், வெம் குருதி செம் புனல் வெள்ளத்து அழுந்தாநின்றாள் - வெவ்விய (தனது) இரத்தமாகிய செந்நீர் வெள்ளத்தில் அழுந்திநின்றவளுமாய், நான்முகனார்தம் அருள்அன்றி-(முன்பு தனக்குப்) பிரமன்கட்டளையிட்டிருந்ததலை உள்ளத்திற்கொண்டு, எழுந்தாள் - எழுந்து, எல்லா உலகத்தும் யாரும் யாவையும் தொழும் தாள் வீரன் தூதுவன் முன் நின்று - சகலலோகங்களிலுமுள்ள உயர்திணையுயிர்களனைவரும் அஃறிணையுயிர்களனைத்தும் வணங்கப்பெற்ற திருவடிகளையுடைய வீரனான ஸ்ரீராமபிரானது தூதனாகிய அவ்வநுமானது எதிரில் நின்று, இவை சொன்னாள்-இவ்வார்த்தைகளைச் சொல்பவளானாள்; (எ - று.)—அவற்றை, அடுத்த மூன்று கவிகளிற் காண்க. நான்முகனார், 'ஆர்' விகுதி - உயர்த்தற்பொருளது. நான்முகன் - சதுர்முகன். 'அருளன்னி' என்று பிரதிபேதம். (௯௨)

வேறு.

[அவள் தன்னை இன்னளென்று தெரிவித்துப் பணிமொழி கூறுதல்.]

௩௩. ஐயகேள்வையநல்குமயனருளமைதியாக
வெய்தியிம்மூதூர்காப்பெனிலங்கைமாதேவியென்பேர்
செய்தொழிலிழுக்கியுள்ளந்திகைத்திந்தச்சிறுமைசெய்தே
னுய்தியென்றளித்தியாயினுணர்த்துவலுண்மையென்றாள்.

(இ - ள்.) 'ஐய கேள் - ஐயனே! (யான்சொல்வதை நீ) கேட்பாயாக: வையம் நல்கும் அயன் அருள் அமைதி ஆக - உலகங்களைப்படைத்த பிரமனது கட்டளை காரணமாக, இ முது ஊர் எய்தி காப்பென் - பழமையான இந்த ஊர்க்குவந்து (இதனைக்) காத்துவருகின்றேன்; இலங்கை மாதேவி என் பேர் - இலங்காதேவியென்பது எனது பெயர்; செய் தொழில் - யான்செய்யும் இந் நகர்க்காவற்றொழிலில் ஊக்கத்தால், இழுக்கி - (உன்விஷயத்திற் செய்யவேண்டிய பணிவு) தவறி, உள்ளம் திகைத்து இந்த சிறுமை செய்தேன் - மனமயங்கி இந்தச்சிறுதொழிலை (நினக்கு)ச் செய்தேன்; உய்தி என்று அளித்தி ஆயின் - (நீ என்னைக்கொல்லாமல் எனதுகுற்றத்தைப் பொறுத்தருளி) உயிர்வாழ்வாயாகவென்று (எனக்கு) அருள்செய்வையானால், உண்மை உணர்த்துவல் - மெய்ம்மையானதொரு செய்தியை (உனக்குத்) தெரிவிப்பேன்,' என்றாள் - என்றுசொன்னாள், (அவ்விலங்காதேவி); (எ - று.)—அவ்வுண்மை அடுத்தகவியில் விளங்கும்.

உயர்வுதோன்ற, 'ஐய' என விளித்தாள். இலங்கைமாதேவி என்பதில், மா - அசை; "உலோகமாபாலன்" என்றதிற்போல. 'இலங்கைமாதேவியென்பேன்' என்ற பாடம், இலங்கைமாதேவியென்று பெயர்சொல்லப்படுவேனெனப் பொருள்படும். 'செய்தொழிலிழுக்கி' என்பதற்கு - யான்செய்யுந்தொழிலில் தவறியென்று உரைத்தல். சிறப்பன்று. சிறுமை - அற்பமான செயல், இடையூறு, துன்பம். என்னை நீ கொல்வதில்லையென்று அருள்செய்வையானால் என்பது, 'உய்தியென்றளித்தியாயின்' என்றதன் கருத்து. 'காப்பணிலங்கையாவேனும் யானே,' 'உய்தியென்றுரைத்தியாயின்' என்று சில பிரதிகள்.

இதுமுதல் இருபத்தொன்பது கவிகள் - இக்காண்டத்தின் முதற்கவி போன்ற அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (௩௩)

[முன்பு பிரமன் அவளுக்குக் கூறிய கட்டளை.]

௩௪. எத்தனைகாலங்காப்பல்யானிந்தமூதூரென்று
முத்தனைவினவினேற்குமுரண்வலிக்குரங்கொன்றுன்னைக்
கைத்தலமதனாற்றீண்டிக்காய்ந்தவன்றென்னைக்காண்டி
சித்திரநகரம்பின்னைச்சிதைவதுதிண்ணமென்றான்.

(இ - ள்.) இந்த முது ஊர் எத்தனை காலம் காப்பல் யான் என்று 'பெரியஇந்நகரத்தை எவ்வளவுகாலம் காக்கக்கடவேன் யான்?' என்று, முத்தனை வினவினேற்கு - அந்நான்முகக்கடவுளை வினவின எனக்கு,—(அப்பிரமதேவன்),—'முரண் வலி குரங்கு ஒன்று - மிக்கவலிமையுடைய ஒரு குரங்கு,

உன்னை—, கைத்தலம்அதனல் தீண்டி காய்ந்த அன்று - தன்கைகளினல் தொட்டு வருத்தும் அந்நாளில், என்னை காண்டி - (அந்நகரத்தை விட்டுவந்து) என்னைப் பார்ப்பாய்; பின்னை - அதன்பின்பு, சித்திரம் நகரம் சிதைவது திண்ணம் - அழகிய அந்நகரம் அழிவது நிச்சயம்', என்ருன் - என்றுசொல்லி யருளினன்; (எ - று.)

'முத்தன்' - முத்திபெறுதற்குஉரியவ னென்றபடி. முக்தன் - வடசொல். முத்துப்போலருமையானவ னெனினுமாம். முரண், வலி - ஒருபொருட்பன்மொழி. 'காயும் அன்று' என்ற பொருளில் 'காய்ந்தஅன்று' என்றது, இயல்புபற்றிவந்த காலவழுவமைதியெனத் தக்கது; அங்ஙனங் காய்தல் தவருதென்ற நிச்சயம் தோன்ற இறந்தகாலத்தாற் கூறின னென்றலுமாம். சித்ரநகரம் - வடமொழித்தொடர். திண்ணம் - தவருது என்றபடி. இலங்காபுரியைக் காக்குமாறு தனக்குப பிரமன்கட்டளையிட்டபோது இத்தேவி இங்ஙனம் வினவின ளென்க. கையினல் தீண்டிக்காய்தல் - அடித்தல், அறைதல். என்னைக் காண்டி - என்பக்கல் வந்து சேர்வாய் என்றபடி. (கசு)

[அநுமானைப் புகழ்ந்து விடையளித்து அவள் செல்லுதல்.]

கஎ. அன்னதேமுடிந்ததையவறம்வெல்லும்பாவந்தோற்கு
மென்னுமீதியம்பவேண்டுந்தகையதோவினிமற்றுன்ன
லுன்னியவெல்லாமுற்றுமுனக்குமுற்ருததுண்டோ
பொன்னகர்புகுதியென்னுப்புகழ்ந்தவளிறைஞ்சிப்போனள்.

(இ - ள்.) 'ஐய - ஐயனே! அன்னதே முடிந்தது - அப்பிரமன்சொன்னபடியே யாயிற்று; அறம் வெல்லும் பாவம் தோற்கும் என்னும் ஈது இயம்ப வேண்டும் தகையதோ - 'தருமமே ஜயிக்கும் பாவம் தோல்வியடையும்' என்கிற இவ்வுண்மை புதிதாகச்சொல்லவேண்டுந் தன்மையதோ? [அன்று: பிரசித்த மென்றபடி]; இனி—, உன்னல் உன்னிய எல்லாம் முற்றும் - உன்னல் நினைக்கப்பட்ட காரியங்களெல்லாம் தடையின்றி நிறைவேறும்; உனக்கு முற்ருதது உண்டோ - (மிக்கஆற்றலையுடைய) உனக்கு முடியாததும் ஒன்று உளதோ? பொன் நகர் புகுதி - பொன்மயமான இந்நகரினுள்ளே (இனி உன் விருப்பத்தின் படி இனிது) செல்வாய்', என்ன - என்றுசொல்லி, அவள் - அந்தஇலங்காதேவி, புகழ்ந்து - (அநுமானைத்) துதித்து, இறைஞ்சி-வணங்கி, போனள் - (பிரமலோகத்துக்குச்) சென்றாள்; (எ - று.)—மற்று - வினைமாற்று.

'உனக்கு முற்ருதது உண்டோ' என்பதற்கு - உன்னலழிக்கப்படாத தொன்றுண்டோ வென்றும் பொருள்கொள்ளலாம். 'என்னுமதியம்ப', 'என்று புகன்றயனுலகம்புக்காள்' என்று பாடாந்தரம். (கஎ)

[அநுமான் மதிலேத்தாவி இலங்கையினுட் புகுதல்.]

கஅ. வீரனும்விரும்பிநோக்கிமெய்ம்மையேவிளையுமஃதென்
ருரியன்கமலபாதமகத்துறவணங்கியாண்டப்

பூரியரிலங்கைமூதூர்ப்பொன்மதிறாவிப்புக்கான்
சீரியபாலின்வேலைசிறுபிரைதெறித்ததன்னான்.

(இ - ள்.) வீரனும் - வீரனான அநுமானும், விரும்பி - (அதுகேட்டு) மகிழ்ச்சிகொண்டு, நோக்கி - (அவள்சொன்ன அச்சொல்லைக்குறித்து) ஆலோசித்து, மெய்ம்மையே விளையுமஃது என்று - உண்மையானநீதியே பலிப்பது என்றுஎண்ணி, ஆரியன் கமலம் பாதம் அகத்து உற வணங்கி - (யாவரும்) சரணமடையத்தக்கவனான இராமபிரானது தாமரைமலர்போன்ற திருவடிகளை மனத்திலே பொருந்தக்கொண்டு வணங்கி, ஆண்டு - அதன்பின்பு, அ பூரியர் இலங்கை மூது ஊர் பொன் மதில் தாவி - அந்தக் கீழ்மக்களான அரக்கர் வாழ்கிற இலங்கையென்னும் பெரியநகரத்தினது பொன்மயமான மதிலைத் தாண்டி, சீரிய பாலின் வேலை சிறு பிரை தெறித்தது அன்னான் புக்கான் - சிறந்தபாற்கடலிற் சிறிதுமோர் பிரையைப்போன்று (அந்நகரினுட்) பிரவேசித்தான்; (எ - று.)

பால்மிகுதியாயிருந்தாலும் அதிற்சிந்தியசிறிதுமோர் பிரை அப்பால்முழுவதையும் தன்மை திரித்துவிடுதல்போல, பெரிய அவ்விலங்காபுரியினுட் சிறுவடிவமுள்ள அவ்வநுமான் புக்கது அந்நகரமுழுவதையும் விகாரப்படுத்துதற்குக் காரணமாதலைக் கருதி, இவ்வொப்புமை கூறினார்; அநுமான் இனி அந்நகரமெங்கும் சென்றுசேர்தலையும் காட்டும் இவ்வுவமை யென்க. உவமையணி. 'மெய்ம்மையேவிளையுமஃது' என்றது, சத்தியமேஜயமென்ற கருத்து. அஃது மெய்ம்மையேவிளையும் என்று என மொழிமாற்றி, அவள்சொன்ன அச்செய்கை தவறாமலே நிகழுமென்று நம்பிக்கைகொண்டு என்றும் உரைக்கலாம். அகத்து உறவணங்குதல் - தியானித்து வந்தித்தல் (கூசு)

[அங்குஉள்ள வெளிச்சத்தை அநுமான் பார்த்துப் பகலோவெனக் கருதுதல்.]

கூஎ. வான்றொடர்மணியிற்செய்தமையறுமாடகோடி
யான்றபேரிருளைச்சீத்துப்பகல்செய்தவழகைநோக்கி
யூன்றியவுதயத்துச்சியொற்றைவாளுருளைத்தேரோன்
றோன்றினன்கொல்லோவென்னாவறிவனுந்துணுக்கங்கொண்டான்.

(இ - ள்.) வான் தொடர் - ஆகாயத்தையளாவியுயர்ந்தனவும், மணியின் செய்த - இரத்தினங்களினாற் செய்யப்பட்டனவுமான, மை அறு மாடகோடி - குற்றமற்ற (அந்நகரத்திலுள்ள) உபரிகைவீடுகளின் வரிசை, ஆன்ற பேர் இருளை சீத்து பகல் செய்த - (உலகத்திற்) பரவிய மிகுதியான இருளையொழித்து (இராத்திரிகாலத்திற்) பகல்போன்றவெளிச்சத்தைச் செய்துள்ள, அழகை—, நோக்கி - பார்த்து,—'வான் ஒற்றை உருளை தேரோன் - பெரிய ஒரு சக்கரமுள்ள தேரையுடையவனான சூரியன், ஊன்றிய உதயத்து உச்சி தோன்றினன் கொல்லோ - (கீழ்த்திசையில்) நிலைபெற்ற உதயகிரியினது சிகரத்தில் உதித்துவிட்டானோ?' என்னா - என்று எண்ணி,—அறிவனும் துணுக்கம் கொண்டான் - அறிவிற்சிறந்தவனான அநுமானும் திடுக்கிட்டான்.

இரவுதொடங்கிச் சிறிதுநாழிகையானமாத்திரத்திலே சூரியனுதிப்பதுண்டோ வென்று திடுக்கிட்டன னென்க. அந்நகர முழுவதிலும் சீதையைத் தேடிக்காணுதற்கு இரவை ஏற்றசமயமென்று கருதியிருந்தன னாதலின், அத்தொழியச் சூரியோதயம் விரைவில்நேர்தல்குறித்து வருந்தின னென்றும் கொள்க. அந்நகரத்து இரத்தினகசிதமான மாடமாளிகைகளின் ஒளியினாலாகிய வெளிச்சத்தைக் கண்டு அதனைச் சூரியகிரணத்தாலாகிய தென மயங்கின னென்றதனால், மயக்கவணி. அங்ஙனம் திரிபுணர்வுகொள்ளுதற்கு ஏலாதவன் காலவுணர்வையுடையவனான அநுமான் என்பது, 'அறிவனும்' என்றதனால் விளங்கிற்று. வான்தொடர், மணியிற் செய்த, மையறு என்ற மூன்றும் - மாடத்திற்கு அடைமொழி. மாடகோடி - மாளிகைகளின் சிகர கலச மென்றுமாம்; ஆகாயமார்க்கத்திற் செல்லுகின்ற எனினுமாம். 'துணுக்க முற்றான்' என்றும் பாடம். (கஎ)

[அந்நகரினொளியை அநுமான் கொண்டாடுதல்.]

கஅ. மொய்ம்மணிமாடமூதூர்முழுதிருளகற்றுந்தானே
மெய்ம்மையேயுணரினாணுமிகையெனவிலங்கிப்போனா
னிம்மதிலிலங்கைநாப்பணெய்துமேற்றன்பாலெய்து
மின்மினியல்லனோவெவ்வெயிற்கதிர்வேந்தனென்றான்.

(இ - ள்.) (இங்ஙனம் துணுக்கங்கொண்ட அநுமான் உடனே செவ்வையாய்ப்பார்த்து அவ்வெளிச்சத்தின் உண்மைக்காரணத்தை யுணர்ந்து),— 'மொய் மணி மாடம் மூதூர் - மிகுதியான இரத்தினங்கள் பதித்த உபரிகைவீடுகளையுடைய பெரிய இவ்விலங்காபுரியே, இருள் முழுது அகற்றும் - இருள்முழுவதையும் போக்கிவிடும்; (இவ்வியல்பை), அ வெயில் கதிர் வேந்தன் தானே - உஷ்ணகிரணங்களையுடையவனும் (சுடர்கட்கெல்லாம்) தலைவனுமான அச்சூரியன்தானே, மெய்ம்மையே உணரின் - உள்ளபடி கண்டறியுமிடத்து, நாண் ஆம் - வெட்கமடைவன்; (ஆதலால்), மிகை என விலங்கி போனான் - (இந்நகரத்திற்கு வெளிச்சந்தருவதற்குத் தான்) அநாவசியமென்று எண்ணி ஒதுங்கிச்செல்கின்றவனானான்; (இங்ஙனமன்றி), இ மதில் இலங்கை நாப்பண் எய்தும் ஏல் - மதில்சூழ்ந்த இவ்விலங்காபுரியின் நடுவில் வருவானானால், தன்பால் எய்தும் மின்மினி அல்லனோ - (அச்சூரியன்) தனது முன்னிலையில்வந்த மின்மினிப்பூச்சிபோலாகானோ" என்றான் என்று எண்ணினான்; (எ - று.)

இராவணனிடத்து அச்சத்தாற் சூரியன் இந்நகரத்திற்குநேராக மேலே வானத்திற்செல்லாமல் ஒதுங்கிச்செல்லுதற்கு, இங்கும் வேறொருகாரணம் கற்பித்துக்கூறப்பட்டது. இந்நகரத்திலுள்ள இரத்தினகசிதமான மாடமாளிகைகள்தாமே இருள்முழுவதையு மொழித்து மிகப்பெருஞ்சோதியாய் விளங்குதலைக் கண்டு, சூரியன்தான் இதனெதிரில் வருதற்கு வெள்கியும், இந்நகரத்துக்கு வெளிச்சந்தருதற்குத் தான் வேண்டுவதில்லையென்பதைக் கருதியும், விலகிச்சென்றன னென்க; என்றது, ஏதுத்தற்குறிப்பேற்றவணி. இச்செய்யுள், கீழ் கக - ஆஞ் செய்யுளோடு ஒருசார் ஒப்பிடத்தக்கது.

மொய் - கூட்டம். மூதூர் மணி மொய் மாடம் என்று மொழி மாற்றி, பெரியஇந்நகரிலுள்ள இரத்தினங்கள்நிறைந்த மாளிகைக ளென்று பதப்பொருள்கூறுதலு மொன்று 'மூதூர் முழுது - பெரிய இவ்விலங்காபுரி முழுவதும், தானே —, இருள் அகற்றும் - இருளைப்போக்கும்; மெய்ம்மையே உணரின் - (அவ்வியல்பை) உண்மையாக ஆலோசித்துப் பார்க்குமிடத்து, நாண் ஆம் - (நமக்கு)வெட்கத்துக்கு இடமாகும்; மிகை - (நாம்இந்நகரத்துக்கு) அதிகமே', என - என்றுகருதி, விலங்கி போனான் - விலகிப்போகின்றான் சூரியன் என்று பதப்பொருள்கூறுவர் ஒருசாரார். (கூஅ)

[இதுவும் அது.]

கூகூ. பொசிவுறுபசும்பொற்குன்றிற்பொன்மதிணடுவட்பூத்து
வசையறவிளங்குஞ்சோதிமணியினலமைந்தமாடத்
தசைவிலவிலங்கைமூதூராரிருளின்மையாலே
நிசிசரராயிற்றம்மாநெடுநகர்நிருதரெல்லாம்.

(இ - ள்.) நெடு நகர் நிருதர் எல்லாம் - பெரிய இவ்விலங்காபுரியிலுள்ள அரக்கரனைவரும், நிசிசரர் ஆயிற்று - இரவிற்சஞ்சரிக்கின்றவர்களாயினமை,— பொசிவு உறு பசும்பொன் குன்றின் - நெகிழுமியல்புள்ள மாற்றுயர்ந்தபொன் மயமான மகாமேருகிரிபோன்ற, பொன்மதில் - பொன் மயமாயோங்கிவிளங்கு கின்ற மதிலினது, நடுவண் - நடுவில், பூத்து - அழகியனவாயுண்டாகி, வசை அற விளங்கும் - குற்றமில்லாமல் விளங்குகின்ற, சோதி மணியின் அமைந்த மாடத்து - ஒளியுள்ள இரத்தினங்களினலமைந்த உபரிகைவீடுகளின்பிரகாசத்தால், அசைவு இல இலங்கை மூதூர் - அழிவில்லாத பெரிய இவ்விலங் காபுரியில், ஆர் இருள் இன்மையாலே - நிறையுமியல்புள்ள இருள் இல்லாத தனாலேயாம; அம்மா - ஆச்சரியம்! (எ - று.)

இராக்கதர் இயல்பிலே இரவில் வலிமைகொண்டு சஞ்சரிப்பவராயிருத் தற்கு, அவர்கள்வாழுமிடமாகிய இலங்காபுரியிற் பொன்மயமான மதில்களின் நடுவில் இரத்தினகசிதமாயுள்ள மாடமாளிகைகளின் ஒளியினால் அந்நகரில் இராத்திரியிலுமட்பட இருளில்லாமையினாலே யாகுமெனவொருகாரணம் கற் பித்தது, ஏதுத்தற்குறிப்பேற்றவணி. ("பொன்னூர்கழல்," "தாவில்பொன்,", "பொன்சொரிகதவு" என்றபடி) மிகவும்மாற்றுயர்ந்தபொன் நெகிழுமியல்பின தாதலால், 'பொசிவுறு பசும்பொன்' எனப்பட்டது. 'வசையறவிளங்கும்' என் றது - மணிக்கும், மாடத்துக்கும் அடைமொழியாகத்தக்கது. நிருதர் - நைருதர் என்ற வடசொல்லின் விகாரம்; அது - (தென்மேற்குத் திக்குப்பாலகனான) நிருருதியின் மரபினரென்று பொருள்படும்; தத்திதாந்தநாமம். 'அசைவிலிவ் விலங்கை' என்றும் பாடம். (கூகூ)

[அநுமான் வீதியின்நடுவிற்செல்லாமல் ஓரமாயச்செல்லுதல்.]

க00 என்றனனியம்பிவீதியே குதவிழுக்கமென்றுத்
தன்றகையனையமேனிசுருக்கிமாளிகையின்சாரல்

சென்றனனென்பமன்னோதேவருக்கமுதமீந்த
குன்றெனவயோத்திவேந்தன்புகழெனக்குவவுத்தோளான்.

(இ - ள்.) தேவருக்கு அமுதம் ஈந்த குன்று என - தேவர்கட்கு அமிருதத்தைக்கொடுத்த மந்தரகிரிபோலவும், அயோத்திவேந்தன் புகழ்என - அயோத்திமாநகரத்துக்குஉரிய அரசனாகும் இராமபிரானது கீர்த்திபோலவும், (ஓங்கி விளங்குகின்ற), குவவு தோளான் - திரண்டதோள்களையுடையவனான அநுமான்,—என்றனன் இயம்பி - என்று (இவ்வாறு தனக்குள்ளே) சொல்லிக்கொண்டு, வீதி வருதல் இழுக்கம் என்னா - 'வீதிகளின் நடுவே செல்லுதல் தகுதியன்று' என்று எண்ணி, தன் தகை அனைய மேனி சுருக்கி - தனது பெருந்தகைமைக்கு ஏற்பக் கம்பீரமானதோற்றமுடையதாயிருக்கின்ற உடம்பைச் சுருங்கச்செய்துகொண்டு, மாளிகையின் சாரல் சென்றனன் - (அவ்வீதிகளிலுள்ள) வீடுகளின் ஓரமாக(ப் பிராட்டியைத்தேடிக்கொண்டு) செல்பவனானான்; (எ - று.)—என்ப, மன், ஒ - அசைகள். என்ப - என்றுசொல்வர் (அறிந்தோர்) என்றும் கொள்ளலாம்.

இத்தன்மைத்தான வெளிச்சத்திலே தெருக்களின்நடுவில் தான்சென்றால் தன்னைப்பிறர் கவனித்துப்பார்த்து உணர்தல் கூடுமாதலின் அது தவறென்றுகருதி அங்ஙனஞ்செல்லாமல் வீடுகளின்நிழல் சாய்ந்திருக்கப்பெற்ற ஒருசாரோரமாகவே ஒதுங்கிச்சென்றனனென்க. கீழ் ௬௨ - ஆஞ் செய்யுளில் "தன்தகையனையமேனி சுருக்கி யச்சரளச்சாரற்குன்றிடையிருந்தான்" என்றவர் மீண்டும் இங்கு 'தன்தகையனையமேனி சுருக்கிச்சென்றனன்' என்றதனால், இடையே இலங்காதேவியோடு பொருகின்றபோதும் மதிலைத்தாவிக்கடந்துசென்றபோதும் தனதுஉடம்பை வளர்த்திக்கொண்டனனென்பது தோன்றும்; இங்ஙனங்கொள்ளாவிடின், கூறியதுகூறலாதல் காண்க. இனி, அதன் அநுவாதமிது வென்றலுமொன்று அப்பொழுது, அங்ஙனஞ்சுருக்கியிருந்தபடியே சென்றனனென்று விளக்குதற்கு மீளவும் இது கூறினரென வேண்டும். முன்பு மேனிசுருக்கியவன் இப்பொழுது இன்னும் அதனை மிகச்சுருக்கினனென்றற்கு இது கூறினரெனினும் ஒக்கும். கடல்கடத்தற்பொருட்டுத் தனதுவடிவத்தை மிகப்பெரிதாக வளர்த்திக்கொண்ட அநுமான் அந்த விசுவரூபத்தைஅடக்கித் தனது நிஜவடிவமாகியமையை அங்குக்கூறியவர், அவ்வநுமான் இலங்கையில் தன்னைப் பிறர் கண்டு பொருள்செய்யாதவண்ணம் மீளவும் உடம்பைச்சுருக்கி மிகச் சிறுவடிவங்கொண்டதனை இங்குக் கூறினரெனக் கொள்ளுதல், சேர்! முதனூலிலும் இருமுறை உடல்சுருக்கியமை கூறப்பட்டுள்ளது; இப்பொழுது பூனையளவாயினனென்றது, முதனூல். மந்தரகிரியை மத்தாகக்கொண்டு தேவர்கள் பாற்கடல்கடைந்தபொழுது அதனினின்று அமிருதம் எழுந்ததுபற்றி, 'தேவருக்கு அமுதமீந்த குன்று' எனப்பட்டது; உபசாரவழக்கு. அயோத்தி - அயோத்யா என்ற வடசொல்லின் விகாரம்; அது போர்செய்யக்கூடாததென்று பொருள்படும்; பிறரெவரும் பொருதுவெல்லமுடியாதபடி மதில் அகழி ஆயுதம் சேனை முதலியவற்றால் தக்கபாதுகாவலையுடையதென்பது கருத்து. இது, மூத்திதரும்நகரமேழு

னுள் முதலது. கதாநாயகனது சம்பந்தமான பொருளை உவமையாக அமைக்கும் மரபு, இங்கும் அமைந்தது. தசரதசக்கரவர்த்தியின் மூத்தகுமாரனும் மநுநீதிமுறைப்படி அரசுக்குஉரியவனுதலின், இராமபிரானை 'அயோத்தி வேந்தன்' என்றார்; தசரதசக்கரவர்த்தியென்று கொள்வாருமுளர். (க௦௦)

அநுமான் அங்குப் பலஇடங்களிற் சீதையைநாடிக்கொண்டு செல்லுதல்.]

க௦க. ஆத்துறுசாலைதோறுமானையின்கூடந்தோறு
மாத்துறுமாடந்தோறும்வாசியின்பந்திதோறுங்
காத்துறுகடைகடோறுங்கருங்கடல்கடந்தகாலாற்
பூத்தொறுமவாவிச்செல்லும்பொறிவரிவண்டிற்போனான்.

(இ-ள்) ஆ துறு சாலைதோறும் - பசுக்கள் கட்டப்பட்டிருக்கின்ற கொட்டகைகளிலும், ஆனையின் கூடம் தோறும் - யானைகள் கட்டப்பெற்றுள்ள இடங்களிலும், மா துறு மாடம் தோறும் - சேனையின் சதுரங்கங்களுட் பெரியனவான தேர்கள் நிற்கின்ற இடங்களிலும், வாசியின் பந்தி தோறும் - குதிரைகள் கட்டுகின்ற சாலைகளிலும், காத்து உறு கடைகள் தோறும் - காவல்செய்யப்பட்டு அமைந்த கடைகளிலும்,—கருங் கடல் கடந்த காலால் - கரிய கடலைத் தாண்டிவந்த (தனது) கால்களினால் (தாவி),—பூ தொறும் அவாவி செல்லும் பொறி வரி வண்டின் - மலர்களிலெல்லாம் (தேனை) விரும்பிச்செல்லுகின்ற உடற்புள்ளிகளையும் இசைப்பாட்டையுமுடைய வண்டுபோல, போனான் - (சீதையைத்தேடிக்கொண்டு) சென்றனன், (அநுமான்); (எ-று.)

உவமையணி. புஷ்பஸாரமாகிய தேனை மலர்கள்தோறும் அவைகெடாதபடி நாடிச்செல்லும்வண்டு, ஸாரநீவனுகியபிராட்டியை இடந்தோறும் அவை நலிவுபடாதபடி நாடிச்செல்லும் சிறுவடிவினனுன அநுமானுக்கு உவமை கூறப்பட்டது. ஆத்துறுசாலை - தொழுவம். துறுதல் - நெருங்குதல். யானை நிற்குமிடம், கூடமெனப்படும். குதிரைகட்டுஞ் சாலையைப் பந்தியென்ப. எளிதிற் சென்றமை தோன்ற, 'கருங்கடல்கடந்தகாலாற் போனான்' என்றார். முன்னும் பின்னும் நின்ற ஆனை வாசிகளின் பொருத்தத்திற்கு ஏற்ப, இடையில்நின்ற 'மா' என்பது, தேரெனக் கொள்ளப்பட்டது. இனி, மா துறு மாடம் - திருமகள் பொருந்தி வசிக்கின்ற வீடுகளென்றுங் கொள்ளலாம்; செல்வம் நிரம்பிய மாளிகைகளென்றவாறு: அழகுநிறைந்த மாடமுமாம். கடை - இடமும், கருமை - பெருமையுமாம். (க௦க)

[அப்போழுதை அநுமானது நிலைமை.]

க௦உ. பெரியநாளொளிகொணுனவிதமணிப்பித்திப்பத்தி
சொரியுமாநிழல்களாங்குச்சுற்றலாற்காலின்றோன்றல்
கரியனும்வெளியனுகிச்செய்யனுய்க்காட்டுங்காண்டற்
கரியனுமெளியனுய்த்தன்னகத்துறையழகனேபோல்.

(இ-ள்.) நாள் ஒளி கொள் - நக்ஷத்திரங்களின் ஒளியைக்கொண்டுள்ள, நானு விதம் - பலவகையான, பெரிய மணி - பெரிய இரத்தினங்களாலமைக்

கப்பட்ட, பித்தி பத்தி - சுவர்வரிசைகள், சொரியும் - வெளிவிடுகின்ற, மா நிழல்கள் - பெரிய ஒளிகள், ஆங்கு - அவ்வவ்விடத்தில், சுற்றலால் - சூழ்தலினால், — காலின் தோன்றல் வாயுகுமாரனான அநுமான், — காண்டற்கு அரியன் ஆய் எளியன் ஆய் தன் அகத்து உறை அழகனேபோல் - (பக்தியில்லாத பிறர்க்குக்) காணக்கூடாதவனாகியும் (பக்தியுள்ள அடியார்க்குக்) காணுதற்கு எளியவனாகியும் தனது மனத்தில் வீற்றிருக்கின்ற ஸர்வாங்க சுந்தரனாகிய திருமால் போலவே, — கரியன் ஆய் வெளியன் ஆகி செய்யன் ஆய் காட்டும் - (அங்கங்குச்செல்லும்போது) கருநிறமுடையவனும் வெண்ணிறமுடையவனும் செந்நிறமுடையவனும் தோன்றுவன்; (எ - று.)

நீலம் மரகதம் மாணிக்கம் பவழம் முத்து வயிரம் முதலிய நவரத்தினங்கள் பலவகைநிறமுடையன வென்பது வெளிப்படை; வானத்தில் விளங்குகின்ற நக்ஷத்திரங்கள் பலவேறுநிறமுடையனவென்பதும் பிரசித்தம்; ஆகவே, 'நக்ஷத்திரங்களினொளியைக்கொண்ட பலவகையிரத்தினங்கள்' எனப்பட்டன "நாண்மீனைத்தகைதாரகைகளை யாநவமணியுடன்" என்றார் வரந்தருவாரும். அநுமான் பிராட்டியைத்தேடிக்கொண்டு இலங்கையிற்பலவிடங்களிற் செல்கின்ற பொழுது நீலநிறவிரத்தினச்சுவர்களின் ஒளி தன்மேல் வீசுகின்றவிடத்துத் தான் நீலநிறமுடையவனும், வெண்ணிறவிரத்தினச்சுவர்களின் ஒளி தன் மேல்வீசுகின்றவிடத்துத் தான் வெண்ணிறமுடையவனும், செந்நிறவிரத்தினச்சுவர்களின் ஒளி தன்மேல்வீசுகின்றவிடத்துத் தான் செந்நிறமுடையவனும் தோன்றுவன். இதற்கு, அங்ஙனம் வெவ்வேறு நிறங்கொண்டவடிவமாய்த் தோன்றும் ஸ்ரீமகாவிஷ்ணுவை உவமைகூறினர். ஸ்ரீமந்நாராயணன் தேவர்கள் வேண்டுகோளின்படி நான்குவடிவமாய் அயோத்தியில் திருவவதரித்தவிடத்து இராமபிரானும் பரதாழ்வானும் கரியதிருமேனியையும், சத்துருக்கனாழ்வான் வெண்ணிறமான திருமேனியையும், இளையபெருமாள் செய்யதிருமேனியையுமுடையவராதல் காண்க. அன்றியும், மாயவனான எம்பெருமான், கிருதயுகத்திலுள்ளார் சத்துவகுணம் தலையெடுத்தவராதலால் அவர்களுக்கும்படி அக்காலத்தில் அக்குணத்துக்குரிய வெண்ணிறத்தைக்கொண்ட வடிவுடையவனும், திரேதாயுகத்திலுள்ளார் ரஜோகுணம்தலையெடுத்தவராகையால் அவர்களுக்கும்படி அக்காலத்தில் அக்குணத்துக்குரிய செந்நிறத்தைக் கொண்ட வடிவுடையவனும், துவாபரயுகத்திலுள்ளார் ரஜோகுணதமோகுணமிசிரராயிருக்கையால் அவர்களுடையருசிக்கு அநுகுணமாக அக்காலத்திலே சிவப்புமன்றி நீலமுமன்றியிருக்கும் பசுநிறத்தைக்கொண்ட வடிவுடையவனும், கலியுகத்திலுள்ளார் தமோகுணம் தலையெடுத்தவராகையால் அவர்களுக்கும்படி அக்காலத்தில் அக்குணத்துக்குரிய கருநிறத்தைக்கொண்ட வடிவுடையவனும் காட்சிதருவனென்பது, "பாலினீர்மை செம்பொனீர்மை பாசியின் பசும்புறம், போலுநீர்மை பொற்புடைத்தடத்து வண்டுவிண்டுலா, நீலநீர்மையென்றிவை நிறைந்த காலம் நான்குமாய்," "முன்னைவண்ணம் பாலின்வண்ணம் முழுதும்நிலைநின்ற, பின்னைவண்ணம்கொண்டல்வண்ணம் வண்ணமெண்ணுங்காற், பொன்னின்வண்ணம் மணியின்வண்ணம் புரையுந்திருமேனி," "திருவடிவிற்கருநெடுமால் சேயனென்றுந் திரேதைக்கண் வளையுருவாய்த் திகழ்ந்தா

னென்றும், பெருவடிவிற் கடலமுழ்த்துக்கொண்டகாலம் பெருமானைக் "கருநீல வண்ணன் தன்னை" என்ற பெரியார்பாசுரங்களால் விளங்கும்; அவற்றில், பசுமைகருமைகட்கு உள்ள சிறுவேறுபாட்டைப் பெரிதாகப்பாராட்டாது அபேதமாகக்கூறும் ஒற்றுமைநயம்பற்றிப் பசுமையை யொழித்து, கருமை வெண்மை செம்மை யென்ற மூன்றுநிறங்களையே எடுத்துக்கூறினாரெனக் கொள்க.

எம்பெருமான் காண்டற்கு அரியனும் எளியனுமாதலை, "பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக்கரியவித்தகன்" எனப் பெரியார்பணித்ததனாலு முணர்க. "என்றேனும், கட்கண்ணாற்காணாதவவ்வுருவை நெஞ்சென்னும், உட்கண்ணேற் காணு முணர்ந்து", 'சிந்தைதன்னுள் முந்திநிற்றிர் சிறிதுந்திருமேனி, யிந்தவண்ணமென்றுகாட்டீர் இந்தளூரீரே" என்றபடி எம்பெருமான் புறக்கண்ணாகிய ஊனக்கண்ணுக்குப் புலப்படாதவனாகியும் அகக்கண்ணாகிய ஞானக்கண்ணுக்குப் புலப்படுபவனாகியும் இருத்தல்பற்றியும் 'காண்டற்கரியனாய் எளியனாய்' என்றல் அமையும் அநுமான் எப்பொழுதும் இராமபிரானைத் தியானித்துக்கொண்டிருத்தலாலும், அன்பால் நினைபவரது உள்ளக்கமலத்தில் எம்பெருமான் வீற்றிருத்தலாலும், 'தன்னகத்துறை' எனப்பட்டது. "தோள் கண்டார் தோளேகண்டார் தொடுகழற்கமலமன்ன, தாள்கண்டார் தாளேகண்டார் தடக்கைகண்டாருமஃதே" என்றபடி எங்கும் அழகுநிரம்பியவனாதலால், 'அழகன்' எனப்பட்டான்; இராமனென்ற திருநாமமும் தனது திருமேனியழகினால் அனைவரையும் மகிழ்விப்பவனென்று பொருள்படுதல் காண்க. எம்பெருமான் "தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத், தம்மையே யொக்க வருள்செய்வ ராதலால்" ராமபாவனையுடையனான அநுமான் உட்கிடந்த வண்ணமே புறம்பொசிந்து காட்டுகின்றனனென ஒருவனைச் சமுத்தாரமையே இக்கற்பனை கூறினார் கம்பநாடரெனக். மேல் ௧௯௩, ௨௩௩ - ஆஞ் செய்யுள்களிலும் அநுமனுக்குத் திருமாலை உவமைகூறுவர்; அவற்றில் "தன்னுள்ளுறையு மழகனைப்போல்" என்பது, ஈங்கு ஒப்புநோக்கத்தக்கது. நாள் நாளைக்குறிக்கின்ற நக்ஷத்திரத்துக்கு [நாண்மீனுக்கு] ஆகுபெயர். பிறிதின்குறிப்பு வெளிப்படையாகக்கொண்டுவந்த உவமையணி. பின்னிரண்டடிகளில் தொடைமுரணும், யமகமும் காண்க. 'நிழலஞ்சங்கேசுற்றலால்' என்றும் பாடமுண்டு. (௧௦௨)

[இதுமுதற் பத்தொன்பது கவிகள் - குளகம்; அரக்கியர்முதலிய பற்பலரை அநுமான் பார்த்துக்கொண்டு செல்லுதல் கூறப்படுகின்றது.]

௧௦௩. கானகமயில்களென்னக்களிமடவன்னமென்ன
வானகமலப்போதுபொலிதரவரக்கர்மாதர்
தேனுகுசாளச்சோலைதெய்வநீராற்றிற்றெண்ணீர்
வானவர்மகளிராட்டமஞ்சனமாடுவாரை.

(இ - ள்.) தேன் உகு சாளம் சோலை - (மலர்களினின்றும் தேன்கூடுகளினின்றும்) தேன்பெருகப்பெற்ற இனிமையான பூஞ்சோலைகளிலே, வானவர் மகளிர் - தேவமாதர்கள், தெய்வம் நீர் ஆற்றின் தெள் நீர் - தெய்வத்

தன்மையுள்ள (ஆகாசகங்கா) நதியினின்று கொணர்ந்த தெளிவான நீரைக் கொண்டு, ஆட்ட - நீராட்ட, ஆனனம் கமலம் போது பொலிதர - (தங்கள்) முகமாகிய செந்தாமரைமலர் விளக்கமடைய, கான் அகம மயில்கள் என்ன - காட்டிலுள்ள மயில்கள் போலவும், களி மடம அன்னம் என்ன - களிப்பை யுடைய இளமையான அன்னப்பேடைகள் போலவும், மஞ்சனம் ஆடுவார் - நீராடுபவர்களான, அரக்கர் மாதரை - இராக்கதமகளிரையும்,—(எ - று.)— 'மயக்கற நாடி யேகும் மாருதி' என மேல் கல௬ - ஆஞ் செய்யுளோடு முடியும்; மேல் க0௩ - ஆங் கவி முதலியவற்றிலுள்ள 'பொத்துவாரை' முதலிய இரண் டாம்வேற்றுமைகளுக்கும் அச்செய்யுளிலுள்ள 'நாடி' என்றதே முடிக்குஞ் சொல்லாம.

தேவமாதர்கள் ஆகாயகங்கைநீரைக் குடங்களில்முகந்து கொண்டுவந்து அந்நீரினால் ஸ்நாநஞ்செய்விக்கப் பூஞ்சோலைகளிலே இருந்து இனிது நீராடி மகிழ்கின்ற இராக்கதமாதர்க்கு, காடுகளில் தன்னிச்சையாக இருந்துகொண்டு கார்காலத்துமழைபொழியக் களிக்கின்ற மயில்களும், நல்ல நீர்நிலையிலே இருந்து களித்துவிளையாடுகின்ற நீர்வாழ்பறவையாகிய அன்னமும் உவமை கூறப்பட்டன. சாயல்பற்றி மயிலும், நடைபற்றி அன்னமும் மகளிர்க்கு ஒப்புமை. இங்ஙனம் சிறந்த பரிசாரிகைகள் திவ்வியதீர்த்தங்கொண்டு தம்மை நீராட்டும்போது உண்டாகின்ற அகமகிழ்ச்சியாலாகிய முகமலர்ச்சியைப் பாராட்டி, 'ஆனனகமலம்போது பொலிதர' எனப்பட்டது; நீர்ப்பூவாகிய தாமரை நல்லநீர்நிலையில் மலர்ந்துவிளங்குமாறுபோல, நீராடுகையில் அம்மாதர் கள்முகம் மலர்ந்து பொலிந்த தென்க. முதலடியில் உவமையணியும், இரண் டாமடியில் உருவகவணியும் இருத்தலால், சேர்வையணி.

'அரக்கர்மாதர் மஞ்சனமாடுவாரை' என்றவிடத்து, மஞ்சனமாடுவார் அரக்கர்மாதரை என உருபுபிரித்துக் கூட்டப்பட்டது. 'சோலைத்தெய்வநீர்' என வலிமிக்க பாடமும் உண்டு. 'தெய்வநீராற்றுத் தெண்ணீர்' என்று சில பிரதிகள். (க0௩)

க0ச ஈட்டுவார்தவமலான்மற்றீட்டினுலியைவதின்மை
காட்டினார்விதியாரஃதுகாண்கிற்பார்காண்மினம்மா
பூட்டுவார்முலைபொறாதபொய்யிடைநையப்பூநீ
ராட்டுவாரமரர்மாதராடுவாரரக்கர்மாதர்.

(இ - ள்.) ஈட்டுவார் - நாடித்தொகுப்பவர், தவம் அலால் - தவத்தைச் செய்துசேர்த்தால் பெரும்பயனடையலாமே யல்லாமல், மற்று ஈட்டினுல் - (அத்தவத்தையன்றி) மற்றொன்றை நாடித்தொகுத்தால் அத்தேட்டத்தால், இயைவது இன்மை - (அவர்கட்கு) வருவதொரு நற்பயனில்லாமையை, விதியார் காட்டினார் - படைத்தற்கடவுள் (இச்செயலால்) தெரிவித்துள்ளார்; அஃது காண்கிற்பார் காண்மின் - அங்ஙனம் தவத்தாலடைந்த பெரும்பயனைப் பிரத்தியக்ஷமாகப் பார்க்கவிரும்புபவர் பாருங்கள்; வார் பூட்டு முலை பொறாத - கச்சணிந்த தனங்களின் பாரத்தைத் தாங்கமாட்டாத, பொய் இடை - உருவந் தோன்றாத [மிகநுண்ணிய] தங்கள் இடையானது, நைய - வருந்தும்படி,

அமரர் மாதர் - தேவஸ்திரீகள், பூ நீர் ஆட்டுவார் - நல்ல நீரைக்கொண்டு ஸ்நாநஞ்செய்விப்பார்கள்: அரக்கர் மாதர் - ராக்ஷஸஸ்திரீகள், ஆடுவார் - நீராடுவார்கள்; அம்மா - ஆச்சரியம்; (எ - று.)

சூலம்முதலியவற்றாற் சிறந்த தேவமாதர்கள் பரிசாரிகைகளா யமைந்து மெய்வருந்தி இராக்ஷதமாதர்க்குப் பணிவிடைசெய்வதற்குக் காரணம், இராவணன் முதலிய இராக்ஷதர்கள் செய்த தவத்தின் பெருமையே யாதலால், அத்தபோபலமகிமையை இங்ஙனம் பாராட்டிக் கூறினர்; ஆகவே, பலவகைமகளிரைக் கூறத்தொடங்கித் தெய்வநீராற்றிற்றெண்ணீர்வானவர் மகளிராட்ட அரக்கர்மாதர் மஞ்சனமாடுவாரைக் கூறியவிடத்து அங்ஙனமாடு தற்குக் காரணங்காட்டுவதாய்த் தவப்பெருமையைப் பாராட்டுகின்ற இச்செய்யுள் இடைப்பிறவரலாக நின்றதென்க. இங்ஙனம், கதைநிகழ்ச்சியைக் கூறுமிடத்து, அதனாற்போந்தபயனை ஆய்காய்ந்து உலகத்தாரைநோக்கிச் சொல்லிப்போதல், ஒருவகைக் கவிசமயம். தவத்தின் பெருமையை இப்படலத்தின் க0, கஉ, கஅ - ஆஞ் செய்யுள்களிலுங் காண்க. புண்ணியசரீரம் பெற்ற மேலுலகத்துத்தேவர்கள் செய்துள்ள நல்வினைப்பயனினும் பெரிது இவ்வுலகத்து இவ்வரக்கர்களியற்றிய தவப்பயனென்பது போதரும். இயற்கைப்படைப்பமைப்பில் இங்ஙனந் தவப்பெருமை விளங்குதலாலும், இராவணாதியர்க்கு இவ்வகைச்சிறப்பமைந்தது அவர்கள்செய்த அரிய பெரிய தவத்துக்கு உவந்த பிரமதேவன் அளித்த வரத்தினாலாதலால், 'காட்டினார் விதியார்' என்றார்.

விதியார் என்றவிடத்து, 'ஆர்' என்ற பன்மைவிகுதி - உயர்வுப்பொருளில் வந்தது. 'காண்கிற்பார் காண்மின்' என்றவிடத்து, முன்னிலையிற் படர்க்கை வந்த இடவழுவமைதி. அம்மா - வியப்பிடைச்சொல். பூட்டு - (ஆபரணங்களைத்) தரித்த. வார் - கச்சணிந்த முலை யென்றாம் புணர்வுவழக்கு கூறலாம். இடையினது மிக்கநுண்மையை விளக்குவார், 'பொய்யிடை' என்றார்; "பொய்யோ வெனு மிடையாள்" என்றார் அயோத்தியாகாண்டத்திலும். விரைந்தோடிச் சென்று மீளும் நடைவிரைவினாலும், நீர்நிரம்பிய பெரியகுடங்களை இடையிற்சாரவைத்துக்கொண்டு வருதலாலும், குனிந்துநீராட்டுதலாலு மாகின்ற அயர்ச்சிகள் பற்றி, நுண்ணிடை ஒசிந்து நைய மென்க. பூநீர் - தாமரை முதலிய தெய்வத்திருமலர்களின் திவ்வியபரிமளங்கொண்ட தீர்த்த மெனினுமாம்.

திருவள்ளுவனார் அறன்வலியுறுத்தலில், "அறத்தாறிதுவென வேண்டா சிவிகை, பொறுத்தானொடு ஊர்ந்தா னிடை" என்று அறத்தின்சிறப்பை எடுத்துக் காட்டினாற் போல, இங்கு இங்ஙனம் தவத்தின்சிறப்பை யெடுத்துக் காட்டினர். (க0௪)

க0௫. இலக்கணமாயிற்கேற்றவெழுவகைநரம்பினல்யா
ழலத்தகத்தளிர்க்கைநோவவளந்தெடுத்தமைந்தபாடல்
கலக்குறமுழங்கிற்றென் றுசேடியர்கன்னிமார்கண்
மலர்க்கையான்மாடத்தும்பர்மழைபின்வாய்பொத்துவாரை.

(இ - ள்.) 'இலக்கணம் மரபிற்கு ஏற்ற - (சங்கீதசாஸ்திரங்களிற் கூறிய) லக்ஷணக்கிரமத்திற்குத் தக்கபடியமைந்துள்ள, எழுவகை நரம்பின் - எழுவகைப் பட்ட ஸ்வரங்களுக்கு உரிய நரம்புகளையுடைய, நல் யாழ் - சிறந்த வீணையில், அலத்தகம் தளிர் கை நோவ அளந்து எடுத்த - செம்பஞ்சுக்குழம்பூட்டின தளிர்போன்ற கைவிரல்கள் வருந்தும்படி தாளப்பிரமாணந்தவறாமல் அளவு செய்து இசையெழுப்புதலால், அமைந்த - நிரம்பிய இலக்கணத்ததாயுண்டான, பாடல் - இசைப்பாட்டு, கலக்கு உற - கலக்கமடையும்படி, முழங்கிற்று - (இது) இடிமுழங்கியது', என்று - என்று (மேகத்தின்குற்றத்தை) மனத்திற் கொண்டு, மாடத்து உம்பர் மழையின் வாய் - உபரிகையின்மேலுள்ள மேகத்தினது வாயை, மலர் கையால் பொத்துவார் - தாமரைமலர்போன்ற (தமது) கைகளால் மூடுபவர்களாகிய, சேடியர் கன்னிமார்களை - குற்றேவல்செய்பவர்களான சிறுபெண்களையும்,—(எ - று.)

அவ்விலங்காபுரியின் மாடமாளிகைகள் மிகவுயர்ந்து வானத்தையளாவி நிற்றலால், அவற்றின் உபரிகைகளில் மேகங்கள் தங்கி இடிமுழங்குகின்றன; அம்முழக்கம் அம்மாடங்களில் இருந்து மாதர்கள் நூல்முறைதவறாமல் அருமையாய் வீணைவாசிக்கின்ற இசைபபாட்டிற்குத் தடையாகின்ற தென்பது பற்றி அஞ்சி அம்மேகங்களின்வாயை அம்மாளிகைகளிற் பணிப்பெண்களாயமைந்துள்ள இளமகளிர் விரைந்துசென்று தமதுமெல்லியகைகளால் மூடுகின்றன ரென்க. அந்நகரத்துமாடங்களின் மிக்க உயர்ச்சியேயாமே, அரக்கர்க்குக் குற்றேவலாளராயமைந்த இளமைப்பருவமுள்ள மெல்லியலார்க்கும் மேகத்தை வாயடக்கும்படியான ஆற்றல் அமைந்துள்ள தென்பதும் இதில் நன்கு விளங்கும். 'சேடி' என்ற சொல்லுக்கு வித்தியாதரருலகு என்று ஒரு பொருளுள்ளதனால், 'சேடியர்கன்னிமார்கள்' என்பதற்கு - வித்தியாதர கன்னிகைகளென்று பொருள் கொள்ளலுமாம்; அவர்கள் அங்கு அடிமைகளாயமர்ந்துள்ளா ரென்க.

எழுவகைநரம்பு - ஸரிகமபதநி என்ற எழுவெழுத்துக்களைத் தமக்கு உரியனவாகக்கொண்ட ஷட்ஜம் ரிஷபம் காந்தாரம் மத்யமம் பஞ்சமம் தைவதம் நிஷாதம் என்ற எழுஸ்வரங்களை இசைக்கின்ற தந்திரிகள்; இந்த இசைகளேழும், தமிழில் குரல் துத்தம் கைக்கிளை உழை இளி விளரி தாரம் எனப்படும். பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் என்ற நான்கினுள் ஏழுநரம்புகட்டின செங்கோட்டியாழ் இங்குக் குறிக்கப்பட்டதென்க; "ஒன்று மிருபது மோரேழ்மேற்பத்துடனே, நின்றபதினு றேழு நேடுங்காற்-குன்றாத, நால்வகையாழிற்கு நன்னரம்பு சொன்முறையே, மேல்வகைய நூலோர் விதி" என்பது காண்க: முறையே உக, கஎ, கசு, எ - நரம்புகளென்க. முக்கியமான காலபரிமாணமாகிய தாளவடைவு தவறாது வாசிக்கப்பட்ட இன்னிசை யென்பார், 'அளந்தெடுத்தமைந்த பாடல்' என்றார்; மேல் கஙஉ - ஆஞ் செய்யுளிலும் "அளந்த பாடல்" என்பர.

மென்மையும் செம்மையும் பற்றி, கைவிரலுக்குத் தளிர் உவமைகூறப்படும். இயல்பான தளிரின் மென்மையும் செம்மையும் இம்மாதர்கள்கைவிர

லின் மிக்கமென்மைக்கும் செம்மைக்கும் உவமையாதற்குப் போதாவென்று உட்கொண்டு, செம்பஞ்சுக்குழம்பூசின தளிரை உவமையாகக் கற்பித்தார். "அரக்கியல் செங்கழுநீரகவிதழ்போலுகிர்" என்ற சிந்தாமணி, இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. அன்றியும், கைவிரலின் இயற்கைச்செந்நிறத்துக்குத் தளிரின் இயற்கைச்செந்நிறம் உவமைபோதுமாயினும், வீணைவாசிக்கும்போது அதன் தந்திகளை மீட்டுதலாற் கைவிரல்களிலாகுஞ் செயற்கைச்செந்நிறத்துக்கு அதுபோதாதாகையால், செம்பஞ்சுக்குழம்பூட்டுதலாலாகுஞ் செயற்கைச்செந்நிறம் கற்பிக்கவேண்டியதாயிற்றென்க. 'கைநோவ எடுத்து' என்றதனால், அம்மாதர்கைகளின் மிக்க மென்மை போதரும்.

மரபு - சம்பிரதாயம். 'கன்னிமார்கள் பொத்துவாரை' என்பது, பொத்துவார் கன்னிமார்களை யென உருபுபிரித்துக் கூட்டப்பட்டது. 'அளந்தெடுத்தமைத்தபாடல், கலந்தமுழங்கநோக்கிக் கன்னியர்சேடிமார்கள்' என்பது, பாடாந்தரம். (௧௦௮)

௧௦௯. சந்தப்பூம்பந்தர்வேய்ந்ததமனியவரங்கிற்றத்தஞ்
சிந்தித்ததுதவுந்தெய்வமணிவிளக்கொளிருஞ்சேக்கை
வந்தொத்துந்துரிதமாக்கள்விளம்புந்தநெறிவழாமை
கந்தர்ப்பமகளிராடுநாடகங்காண்கின்றாரை.

(இ-ள்.) தம் தம் சிந்தித்தது உதவும் தெய்வமணி விளக்கு ஒளிரும் சேக்கை - அவரவர் நினைத்தபொருளைக் கொடுக்கின்ற தெய்வத்தன்மையுள்ள (சிந்தாமணியென்னுந்) தேவமணியாகிய விளக்கு விளங்கப்பெற்ற படுக்கையின் மேல் (சாய்ந்தபடியிருந்துகொண்டு),—சந்தம் பூ பந்தர் வேய்ந்த - அழகிய மலர்களினாலாகிய பந்தலை மேலேயிட்டு அலங்கரிக்கப்பெற்ற, தமனியம் அரங்கில் - பொன்மயமான நடனசாலையில், வந்து - அளவுடன்வந்து, ஒத்தும் துரிதம் மாக்கள் விளம்பும் தம் நெறி வழாமை - கைகளால் ஒற்றித் தாளமிடுகின்ற துருதமென்னும் விரைந்தலயவிசேஷத்தில்தேர்ந்த சனங்களாற் பாராட்டிக்கூறப்படுகின்ற தமது தாளப்பிரமாணவகைகள் தவறாமல், கந்தர்ப்பமகளிர் ஆடும் - கந்தருவஸ்திரீகள் ஆடுகின்ற, நாடகம் - நாட்டியத்தை, காண்கின்றாரை - பார்ப்பவர்களான இராக்கதமாதர்களையும்,—(எ - று.)

அழகியமலர்களாற் பந்தலிட்டலங்கரிக்கப்பெற்ற பொன்மயமான நடனசாலையில் தாளவடைவு சிறிதுந் தவறாமற் கந்தருவமாதர்களாடுகின்ற நாட்டியத்தை, சிந்தாமணியென்னுந் தெய்வமணியையே தீபமாகவைத்திருத்தலால் அதனொளிவீசப்பெற்ற மெத்தென்றபடுக்கையின்மீது சாய்ந்தபடியிருந்துகொண்டு பார்த்து உகந்து பொழுதுபோக்குகின்றனர், இராக்கதமாதரென்க. 'சேக்கை' என்ற ஏழாம்வேற்றுமைத்தொகை 'காண்கின்றாரை' என்பதனோடும், 'அரங்கில்' என்ற ஏழாம்வேற்றுமையுருபு 'வந்து' என்பதனோடும் இயையும். ஒத்துதல் - ஒத்துறுத்தல், தாளம்போடுதல்; உடன் வந்து பொருந்துதலுமாம். துரிதம் - த்ருதம் என்ற வடசொல்லின் சிதைவு. விளம்பிதம், மத்யம், த்ருதம் என்று லயக்கிரமம் மூன்றுவகைப்படும்; அவற்றில் காலதாமதங்கொண்டது விளம்பிதம்; காலவிரைவுகொண்டது த்ருதம்; இவற்றின் நடுத்தரமானதில

மத்திமம். இவற்றினுள் துருதத்தில் சேர்ந்த சனங்க ளென்றது, உபலக்ஷண வகையால் மற்றவற்றிலுஞ் சேர்ந்தவ ரென்றவாறும். சிறப்புப்பற்றி, துருதம் எடுத்துக்கூறப்பட்ட தென்க. அன்றி, சிறப்புப்பெயர் பொதுப்பொருளின் மேலதாகும் பாஷைநடைபற்றித் துருதமென்ற ஒருவகை லயவிசேஷத்தின் பெயர் பொதுப்பட லயக்கிரமமென்ற மாத்திரமாய் நின்றதென்றுங் கொள்ள லாம். இவைசேர்ந்த ஆடலாசிரியரது இயல்பையும், அரங்கினது இயல்பை யும், சிலப்பதிகாரம் முதலியவற்றிற் காணலாம். அரங்கு - கூத்தாடு மிடம்; ரங்கம் என்ற வடசொல்லின் விகாரம். நாடகம் கூத்து; வட சொல்: கதைதழுவிவருங் கூத்து, நாடகமெனச் சிறப்புவகையாற் கூறப் படும்.

தபநீயம் என்ற வடமொழி தமனியமென்றும், கந்தர்வர் என்ற வடமொழி கந்தர்ப்பரென்றும் சிதைந்தன. தபநீயம் - நெருப்பினால் தபிக்கப்பட்டு ஒளி விளங்குவது; மாற்றுயர்ந்தபொன்: "சுடச்சுடரும் பொன்." சிந்தாமணி யென்ற தேவரத்தினத்தின் பெயர்ப்பொருள் விளங்க, 'சிந்தஞ்சிந்தித்தது உதவுந் தெய்வமணி' எனப்பட்டது. கற்பகவிருக்ஷமும் காமதேனுவும் போல இதுவும் தன்னைச்சார்ந்தவர் நினைத்தவற்றைத் தருவது. இதனையே அரங்கில் தீபஸ்தானத்து வைத்துள்ளார் அரக்கரென்க. 'இங்கு 'மாக்கள்' என்றது - அறி விற்குறைந்த சனங்க ளெனச் சிறப்புவகையாற் பொருள்தாராது, பொதுப் படச் சனங்களென்றமாத்திரமாய் நின்றது. 'துரிதமாக்கள் விளம்பித நெறி வழாமை' என்ற பாடத்துக்கு நட்டுவர்களாற் குறிக்கப்பட்ட விளம்பிதமென்னும் லயவிசேஷத்தின் முறைமை தவறாமலென்று பொருள். 'வங்கொத்துத் துருதமாக்கள் விளம்பின நெறி வழாமல்' என்றும் பாட முண்டு.

(க00)

க00௧. திருத்தியபளிக்குவேதிதெள்ளியவேல்களென்னக்
கருத்தியல்புரைக்குமுண்கட்கருங்கயல்செம்மைகாட்ட
வருத்தியகொழுநர்தம்பால்வரம்பின்றிவளர்ந்தகாம
வருத்தியபயிர்க்குநீர்போலருநறவருந்துவாரை.

(இ - ள்.) திருத்திய பளிங்கு வேதி - அழகியனவாக அமைக்கப்பட்ட ஸ்படிகக்கற்களினாலாகிய மேடைகளில் (இருந்துகொண்டு),—கருத்து இயல்பு உரைக்கும் - மனத்திலுள்ள எண்ணங்களை வெளியேகாட்டுவனவும், உண் - மையுண்டனவுமான, கண் கருங் கயல் - கறுத்த கயல்மீன் போன்ற தங்கள் கண்கள், தெள்ளிய வேல்கள் என்ன செம்மை காட்ட - தெளிவான ஒளியுள்ள [வடித்த] வேற்படைகள்போலச் செந்நிறங்காட்டும்படி, வருத்திய கொழுநர் தம்பால் வரம்பு இன்றி வளர்ந்த காமம் அருத்திய பயிர்க்கு நீர் போல் - (தமது பிரிவினால் தங்களை) வருந்தும்படி செய்த தங்கள்கணவர்விஷயமாக அளவில் லாமல் மேன்மேல்வளர்ந்த தங்கள் காமவிருப்பமாகிய பயிர் செழித்தற்குத் தண்ணீர் (பாய்ச்சினாற்) போல, அரு நறவு அருந்துவாரை - கிடைத்தற்கு அருமையான [மிகச்சிறந்த] மதுவைப் பானஞ்செய்பவர்களாகிய இராக்கத மாதர்களையும்,—(எ - று.)

'வேதி' என்ற ஏழாம்வேற்றுமைத்தொகை, 'அருந்துவாரை' என்பது ணேடு இயையும். பளிங்குக்கல்மயமான திண்ணைகளி லிருந்துகொண்டு கட்குடிக்கின்றனர் இராக்கதமாதரென்க. மதுபானத்தாலாகுங் களிப்புக் காமத்தை வளர்ப்ப தென்பது, வெளிப்படை. கணவரைப்பிரிந்து காதல் நோய்கொண்டிருக்கின்ற சமயத்தில் இவர்கள் கள்ளுண்டு களிகொள்வது அக்காதல்நோயை மிகுவித்தல்பற்றி, 'வருத்தியகொழுநர்தம்பால் வரம்பின்றி வளர்ந்த காம வருத்தியாயிர்க்கு நீர்போ லருநறவருந்துவாரை' என்றார்; "தாமமுண்குழலிய ருண்ட தாநறை, யோமவெங்குழியுக நெய்யி னுள்ளுறை, காமவெங்கனலினைக் கனற்றிக்காட்டிற்றே" என்றார் பாலகாண்டத்து உண்டாட்டுப்படலத்தும் கட்குடியினாற் கண்சிவத்தல் இயல்பாதல் பற்றி, 'கட் கருங்கயல் செம்மைகாட்ட' எனப்பட்டது; உண்டாட்டுப்படலத்தில் "களித் திரளிதழ்மொழிசெம்மை கண்புக, நினைப்பதொன் றுரைப்பதொன்று மோர் நேரிழை" என்றதும், திருவிளையாடற்புராணத்தில் "வெவ்வியநறவமுண்ட விளங்கிழையொருத்தி கையிற், கவ்வியவாடிதன்னிற் கருங்கயனெடுங்கட்சேப் புங், கொவ்வைவாய்விளர்ப்பு நோக்கி" என்பதுங் காண்க. கூரிய வடிவும், தமது தாக்கினால் ஆடவர்நெஞ்சுபிளத்தலை அகற்றுந்திறமும் பற்றி, மகளிர் கண்ணுக்கு வேல் உவமைகூறப்படும்; அவ்வேல் பகைவர்ரத்தந்தோய்தலாற் செந்நிறங்கொண்டு காட்டுமாறு போல, இக்கண்கள் மதுபானத்தாற் செந்நிறங் கொண்டு காட்டுமென்க: உண்டாட்டுப் படலத்தில் "கண்களால் வடித்த வெங்குருதிவேல்விழிக்கு மாதர்" என்றதுங் காண்க. வருத்திய கொழுநர் - தாங்கள் ஊடல்கொள்ளும்படியான பிழையைச் செய்து அதுபற்றித் தாங்கள் பிணங்கும்படிபண்ணி அதனால் தங்களைவருந்தச்செய்த கணவ ரென்றலு மாம். இனி, (தாம் ஊடலாற்சினந்து) கருத்தியல்புரைக்கு முண்கட்கருங்கயலில் வேல்கொன்னச்செம்மைகாட்ட (அதனால்) வருத்தமுற்ற கணவர்விஷயமாக வெனலும் அமையும்; இவ்வுரையில், 'வருந்திய' - வருத்தப்பட்ட எனச்செயப் பாட்டுவினைப்பொருளில்வந்தசெய்வினை: கோபத்தினாற்கண்சிவத்தல்,இயல்பு.

'வேதித்தெள்ளிய' என வலிமிக்க பாடமும் உண்டு. தெள்ளிய - தேர்ந் தெடுக்கப்பட்ட எனினுமாம். திருவள்ளுவர் குறிப்பறிதலில் "பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின், வகைமை யுணர்வார்ப் பெறின்" என்றபடி கண்களின் பார்வைவேறுபாடுகளால் மனத்தின் விருப்புவெறுப்புக் கள் பிறரறியக்கூடியன வாதல்பற்றி, 'கருத்தியல்புரைக்குங் கண்' எனப்பட் டது. உரைக்குங் கண் - பேசாதது பேசுவதுபோலச் சொல்லப்பட்ட மரபு வழுவமைதி; "முகனுரைக்கு முணர்வின்ற வேட்கை" என்றாற்போல, "நெஞ் சத்தொளித்ததூஉ மாங்கே மிகும்" என்றவாறு கட்குடியினால் மனத்திற் கொண்டகளி மறைக்கமுடியாதபடி கண்களிலுண்டான செந்நிறத்தாலும் பார் வைவேறுபாட்டினாலும் பிறர்க்குப்புலனாதல் தோன்ற, 'கருத்தியல் புரைக்கு முண்கட்கருங்கயல் செம்மைகாட்ட' என்றார். உண்கண் - மையிட்ட கண்; ஆகவே, 'கட்கருங்கயல்' எனப்பட்டது. கட் கருங்கயல் - முன்பின்னு கத்தொக்க உவமத்தொகை. கண்ணுக்குக் கயல் - பிறழ்ச்சியில் உவமம். உவமையணி.

(கOஎ)

௧௦௫. கோதறுங்குவளைநாட்டங்கொழுநர்கணாட்டங்கொள்ளத்
தூதுளங்கனியைவென்றதுவர்த்தவாய்வெண்மைதோன்ற
மாதருமைந்தர்தாமுமொருவர்மேலொருவர்வைத்த
காதலங்கள்ளுண்டார்போன்முறைமுறைகளிக்கின்றாரை.

(இ - ள்.) கோது அறும் - குற்றமற்ற, குவளை நாட்டம் - நீலோற்பல மலர்போன்ற [கருமையான] (இராக்கதமாதர்களின்) கண்கள், கொழுநர்கள் நாட்டம் கொள்ள - தம்தம்கணவரான இராக்கதரது கண்களின் தன்மையைக் கொள்ளும்படியாகவும் [செந்நிறங்கொள்ளவும் என்றபடி], தூதுளம் கனியை வென்ற துவர்த்த வாய் - (தமது செந்நிறமிகுதியால்) தூதுளம்பழத்தைச் சயித்த சிவந்த வாய், வெண்மை தோன்ற - வெண்ணிறங்காட்டும்படியாகவும், மாதரும் மைந்தர்தாமும் ஒருவர்மேல் ஒருவர் வைத்த காதல் அம் கள் உண்டார் போல் முறை முறை களிக்கின்றாரை - மகளிரும் ஆடவரும் தம்முள் ஒருவர் மீது ஒருவர் கொண்டுள்ள ஆசையாகிய அழகிய [இனிய] கள்ளைக் குடிக்கின்றவர்போல மாறிமாறிக் கட்குடிக்கின்றவர்களான இராக்கத தம்பதிகளையும்,— (எ - று.)

கண் இயற்கைநிறம்மாறிச் சிவத்தலும், வாய் இயற்கைச்செந்நிறம் மாறி வெளுத்தலும், கட்குடியினாலாகுவன; கீழ்ச்செய்யுளினுரையிற் காட்டிய "கனித்திரளிதழ்", "வெவ்வியநறவமுண்ட" என்றதொடக்கத்து மேற்கோள்கள் இங்கும் நோக்கத்தக்கன: மேல் ௧௩௩ - ஆஞ் செய்யுளின் முதலடியையுங் காண்க கொள்ளிக்கண்ணன் கொங்கண்ணன் குருதிக்கண்ணன் என்னும்படி இராக்கதரில் ஆடவர் கண்கள் இயற்கையிலேயே சிவந்திருத்தலால், அவை கட்குடியினால் செயற்கைச்செந்நிறங்கொண்டது வேறுபடவிளங்காமை பற்றி, அதனை யெடுத்துக்கூறாமல், இராக்கதமாதரது இயற்கையிற்கரிய கண்கள் கட்குடியினாற் செயற்கைச்செந்நிறங் கொண்டதுமாத்திரத்தையே 'குவளைநாட்டங் கொழுநர்கணாட்டங் கொள்ள' என்று எடுத்துக்கூறினர்; அரக்கரில் மாதர்கண்களும் ஆடவர்கண்கள்போலச் செந்நிறமுடைய வென்பது கருத்து. சாமுத்திரிகசாஸ்திர முறைமைப்படி மகளிர்க்குரிய உத்தமவிலக்கணம் குறைவின்றி நிறையவாய்ந்த கண்களென்பார், அவற்றிற்கு 'கோதறும்' என்ற அடைமொழி கொடுத்தார். இரண்டாமடியிற் கூறிய செயற்கை, அரக்கரில் ஆடவர் மகளிர் என்னும் இருபாலார்க்கும் ஒக்கும் கட்குடித்தல் ஸ்திரீ புருஷவாஞ்சையை மிகுவித்து மனத்தைக்களிப்பித்தல்பற்றி, 'மாதருமைந்தர் தாமு மொருவர்மேலொருவர்வைத்த காதலங் கள்ளுண்டார்போல்' என உவமைகூறப்பட்டது; "சேக்கையின்பச்செருச்செருக்குஞ் சிந்தையா, ராக்கிய வமிழ்தெனவம்பொன்வள்ளத்து, வாக்கியபசுநறு மாந்தன்மேயினார்" என்று உண்டாட்டுப்படலத்திற் கூறியதுங் காண்க. உத்ஸாஹத்தைவிளைத்தல்பற்றி, காதலைக் கள்ளென்றார். மாதரும் மைந்தரும் மாறிமாறிப் போகம்நுகர்ந்து களிப்பதுபோல மாறிமாறிக் கட்குடித்துக் களிப்பவராயின ரென்பதும் அமையும்; கண்சிவப்பும், வாய்வெளுப்பும் கலவியினாலு மாகுவன: "இல விதழ்த்துவர்விடவெயிறதேனுக,..............கலவிசெய்கொழுநருங் கள்ளு

மொத்தவே" என்ற உண்டாட்டுப்படலத்தையும், "செய்யவாய்வெளுப்பக் கண்சிவப்புற,.........மங்கையர்சோர்தலாற், பொய்கை காதற்கொழுநரும் போன்றதே" என்ற நீர்விளையாட்டுப்படலத்தையும் நோக்குக. இனி, முதலடிக்கு - மகளிரது கண்களும் ஆடவரது கண்களும் கட்குடியினாலாகிய மதர்த்த நோக்கினமையால் ஒன்றையொன்று கவர என்ற பொருளும் பொருந்தும். ()

க0கூ. விற்படர்பவளப்பாதத் தலத்தகமெழுதிமேனி
பொற்பளவில்லாவாசப்புனைநறுங்கலவைபூசி
யற்புதவடிக்கண்வாளினஞ்சனமெழுதியந்தில்
கற்பகங்கொடுக்கவாங்கிக்கலன்றெரிந்தணிகின்றாரை.

(இ-ள்) அந்தில் - அவ்விடத்தில், கற்பகம் - கல்பகவிருக்ஷம் கொடுக்க - (தமக்கு வேண்டுவனவான செம்பஞ்சுக்குழம்பு முதலியவற்றை அப்பொழுதைக்கப்பொழுது) கொடுத்துதவ, வாங்கி - (அவற்றைப்) பெற்றுக்கொண்டு,— (அவற்றில்), அலத்தகம் - செம்பஞ்சுக்குழம்பை, வில் படர் பவளம் பாதத்து எழுதி - ஒளிபரவுவதான பவழம்போன்ற (தமது) கால்களில் தடவி,— பொற்பு பொலிவையும், அளவு இல்லா வாசம் - அளவற்ற நறுமணத்தையுமுடைய, புனை நறுங் கலவை - புதுமையான நல்ல கலவைச்சந்தனத்தை, மேனி பூசி - தமது உடம்பிற் பூசி,— அஞ்சனம் - மையை, அற்புதம் வடி கண் வாளின் எழுதி - (காண்பவர்க்கு) வியப்பைவிளைக்கின்ற கூரிய வாள்போன்ற (தமது) கண்களில் இட்டு,— கலன் - ஆபரணங்களை, தெரிந்து அணிகின்றாரை - தக்கனவாகத் தேர்ந்தெடுத்து (அணியுமிடங்களில்) அணிந்துகொள்கின்றவர்களான இராக்கத மாதர்களையும்,—(எ - று.)

தனது அருகில் வந்து வேண்டியோர்க்கு வேண்டுபவற்றையளிக்குமியல்பினதான தெய்வத்தன்மையுள்ள தேவலோகத்துக் கற்பகவிருக்ஷம் இந்திராதியரைவென்ற இராவணனால் மேலுலகத்தினின்று வலியக்கவர்ந்து இலங்கைக்குக்கொண்டுவரப்பட்டு அங்கு அரக்கர்கட்கு வேண்டும்பொருள்களையெல்லாம் அவர்கள் வேண்டுகின்ற அவ்வப்பொழுது அருகிற்சென்று கொடுத்துவர அவர்கள் அவற்றை அங்ஙனம்பெற்றுத் தமக்கு உரியபடி உபயோகித்துக் கோலஞ்செய்துகொள்கின்றனரென்க. 'அந்தில்கற்பகங்கொடுக்கவாங்கி' என்றது, 'அணிகின்றாரை' என்பதனோடுமாத்திரமன்றி, 'எழுதி' 'பூசி' 'எழுதி' என்றவற்றோடுங் கூட்டப்பட்டது; கடைநிலைத்தீவகம்.

கலவை - பலவகைவாசனைப்பொருளும் கலக்கப்பெற்றது. 'அலத்தகமெழுதி', 'அஞ்சனமெழுதி' என்றவற்றால், அணிகின்றவர் மாதரென்பது விளங்கும். கண்வாள் - வாட்கண்: முன்பின்னாகத்தொக்க உவமத்தொகை. வடிக்கண் - மாவடுப்போன்ற கண் எனினுமாம்; அவ்வடுவின் உட்பிளவு, கண்களுக்கு வடிவிலுவமையாம்: 'வடுப்பிளவனையகண்ணாள்" என்ற சிந்தாமணியைக் காண்க. கூரிய கண்களுக்கு மையிடுதல் வாட்படைக்கு நெய்பூசுதல் போலுமென்ற கருத்து, 'வடிக்கண்வாளினஞ்சனமெழுதி' என்றதனாற் போதரும்; மேல் ககஎ ஆஞ் செய்யுளில் "அஞ்சனவிழுதுவேய்ந்த கள்ளவாணெடுங்கணென்னும் வாள்" என்பது காண்க. அந்தில் - அசையுமாம்;

"அந்நிலாங்கசைநிலை யிடப்பொருளவ்வே" என்றார் நன்னூலார். 'அம்பொற் கற்பகம்' என்றும் பாட முண்டு. (௧0௯)

௧௧0. புலியடு மதுகைமைந்தர் புதுப்பிழை யுயிரைப்புக்கு
நலிவிட வமுதவாயா னஞ்சுயிர்த் தயிற்கணல்லார்
மெலிவுடை மருங்குன் மின்னி னலமரச் சிலம்பு விம்மி
யொலிபட வுதைக்குந்தோறு மயிர்புளகு தீக்கின்றாரை.

(இ - ள்.) புலி அடு மதுகை மைந்தர் - புலியையுங் கொல்லவல்ல வலிமையையுடைய ஆடவர்கள் செய்த, புது பிழை - புதியகுற்றம், புக்கு உயிரை நலிவிட - (தமது மனத்தினுட்) புகுந்து உயிரையும் மிகவருத்துதல்செய்ய, அயில் கண் நல்லார் - வேலாயுதம்போன்ற [கூரிய] கண்களையுடைய அழகிய இராக்கதமாதர், அமுதம் வாயால் நஞ்சு உயிர்த்து - அமிருதம்போலினிய தங்கள்வாயினால் விஷம்போலக் கொடுமையாகப் பெருமூச்சுவிட்டு, மெலிவு உடை மருங்குல் மின்னின் அலமர - நுண்ணியவடிவையுடைய தங்கள் இடையானது மின்னல்போலத் துவளும்படியாகவும், சிலம்பு விம்மி ஒலிபட - சிலம்பென்னுங் காலணி அசைந்து ஒலிக்கும்படியாகவும், உதைக்கும் தோறும் - உதைக்கும்பொழுதெல்லாம், மயிர் புளகு உதிக்கின்றாரை - மயிர் சிலிர்ப்பு (த் தமது உடம்பில்) உண்டாகப்பெறுகின்றவர்களான அரக்கர்களையும்,—(எ - று.)

அரக்கியர் தமது கணவரிடத்துப் பிறமாதரைச் சேர்தல் முதலிய குற்றங்களைக் கண்டவிடத்து மிக்கவருத்தமும் மிக்ககோபமுங் கொண்டு வெவ்விதாகப் பெருமூச்சுவிட்டு அக்கணவரைப் பலமுறை காலாலுதைக்க, அவ்வுதைபடுந்தோறும், அவ்வரக்கர், அம்மாதர் ஸ்பரிசத்தாலாகிய இன்பம்பற்றியும், இங்ஙனம் ஊடுதலாற் கூடலின்பஞ் சிறக்குமென்ற ஆனந்தநிச்சயத்தாலும், உடம்பில் மயிர்சிலிர்ப்பைப் பெறுகின்றனரென்க. மிகமெல்லியதாகிய அம்மாதரிடை அவர்கள் வலிகொண்டு உதைக்கும்பொழுது மிகத்துவளுதலை, 'மெலிவுடைமருங்குல் மின்னி னலமர' என்று குறித்தார். காலைகளால்வீசி உதைக்கும்பொழுது காலணி அசைந்தொலித்தல் இயல்பு. 'புலியடு மதுகை மைந்தர்' என்பதற்கு - புலிபோல(ப் பிறவுயிர்களை)க் கொல்லும் வலிமையுடைய ஆடவரென்றலும் அமையும். 'புலிபடு மதுகைமைந்தர்' என்ற பாடத்துக்கு - புலியினிடத்துள்ளவவ்வளவு வலிமையையுடைய ஆண்வீர ரென்பது பொருள். அமுதவாய் - அமிருதத்தையுடைய வாயெனினுமாம்; இதுவும் அதராமிருதத்தைக் கருதியது. இனி, 'அமுதவாயால் நச்சுயிர்த்த' என்பதற்கு - அமிருதம்போலினியசொற்களைப் பேசுகின்ற வாயினால் விஷம்போன்ற கடுஞ்சொற்களை வெளியிட்டு என்று உரைத்தலும் ஒன்று. உயிர்த்தல் - மூச்சுவிடுதலும், வெளியிடுதலும். இங்கு 'அயிற்கண்ணல்லார்' என்றது - அப்பொழுது அவர்கள் கொழுநரைச் சினந்துபார்க்கும் பார்வையின் கொடுமையை யுணர்த்துங் கருத்தினது; கருத்துடை யடைகோளியணி. மெலிவுடை மருங்குல் - (கூந்தற்பாரமுதலியன தாங்கமாட்டாது) மெலிதலையுடைய இடையாம். 'மயிர்ப்புளகு' என்பதும் பாடம். (௧௧0

௧௧௧. உள்ளுடைமயக்கா லுண்கண்சிவந்துவாய்வெண்மையூறித்
துள்ளிடைப்புருவங்கோட்டித்துடிப்பவேர்பொடிப்பத்தூய
வெள்ளிடைமருங்குலார்தம்மதிமுகம்வேறொன்றாகிக்
கள்ளிடைத்தோன்றநோக்கிக்கணவரைக்கவல்கின்றாரை.

(இ - ள்) உள் உடை மயக்கால் - (மதுபானத்தினால்) உள்ளேயுண்டான மயக்கத்தால், உண் கண் சிவந்து - மையுண்ட (தமது) கருங்கண்கள் செந்நிறமடையப்பெற்றும், வாய் வெண்மை ஊறி - (செந்நிறமான தமது) வாய் வெண்ணிறந்தோன்றப்பெற்றும், துள் இடை புருவம் கோட்டி - துடிக்கின்ற நடுவிடத்தையுடையனவாகப் புருவங்களை வளைத்தும், துடிப்ப - (கீழ்க்கூறிய கண் வாய் புருவங்கள்) துடிக்கவும், வேர் பொடிப்ப - வேர்வைநீரரும்பவும், தம் மதி முகம் - தமது சந்திரமண்டலம்போன்ற முகமானது, வேறு ஒன்று ஆகி கள் இடை தோன்ற - வேறொருவகையாய்க் கள்ளிலே தெரிய, நோக்கி - (அதனைக்) கண்ணுற்று, கணவரை கவல்கின்றார் - (தம்மை அடையாளங்காணமாட்டாது தம் கணவர் தடுமாறுவரேயென்று) அக்கொழுநரைக் குறித்துக் கவலைப்படுகின்றவர்களாகிய, தூய வெள் இடை மருங்குலாரை - சுத்தமான ஆகாயவெளிபோன்ற [வடிவுதோன்றாத] இடையையுடையவர்களான இராக்கதமாதர்களையும்,—(எ - று.)

கண்சிவத்தல், வாய்வெளுத்தல், புருவத்தை நெற்றியின்மேலேற நெறித்தல், கண் வாய் புருவங்கள் துடித்தல், வேர்வையரும்புதல் என்பன - கட்குடியினாலுண்டாகும் வேறுபாடுகள். இராக்கதமாதர் தாம் கட்குடித்துக்களித்தபோது தமதுமுகம் கண்சிவத்தல்முதலிய வேறுபாடுகளையடைந்து பிறிதொருமுகம்போலக் கள்ளிலே பிரதிபிம்பித்தலைக்கண்ணுற்று, இங்ஙனம் நமதுமுகம் மாறுபட்டிருத்தலால் நமதுகணவர் நம்மை அடையாளங்கண்டுபிடிக்கமாட்டாமல் தடுமாறுவரே யென்று அதுபற்றிக் கவலைப்படுகின்றன ரெனக் கருத்துக் காண்க; ("சாடியுள் நறவமுண்டாள் தன்னுருவேறுபாட்டை, ஆடியுள்நோக்கி நானோ வல்லனோ வெனைத்தான்கைக்கொணேன், போயினர்பிறருமுண்டோ வுயிரன்றென் வந்திங்கென்னைத, தேடினன் செய்கேனென்னைத் தேடித்தா சேடியென்றாள்" என்ற திருவிளையாடற் புராணம். இந்த ஒருசார் ஒப்புநோக்கத்தக்கது.) இனி, அம்மகளிர் தமது மாறுபட்டமுகத்தின் பிரதிபிம்பத்தைக் கள்ளிற்கண்டு குடிமயக்கத்தால் தம்மை அயல்மாதராகநினைத்துத் தம்மைச்சார நின்ற கணவரின் பிரதிபிம்பமும் அக்கள்ளில்தெரிதலை நோக்கித் தம் கணவர் வேற்றுமகளிரொடுசாரநிற்கின்றன ரென்றெண்ணி அவரது கூடாவொழுக்கத்தைக்குறித்துக் கவலைப்படுகின்றன ரெனக் கருத்துக்கொள்ளுதலும் அமையும்; (அப்பொழுது "களித்தவ ளொருத்திதன்றவாடியுட் கணவன்றன்பி, னொளித்தவ ளுருவுந்தானு நேர்பட வுருத்துநோக்கித், துளித்தகண் ணீராகி யேதிலாளோடோய்ச் கின்பங், குளித்தனை யிருத்தியோவென் றுரைத்தனள் கோபமூண்டாள்" என்ற திருவிளையாடற்புராணம், ஒருசார் ஒப்புநோக்கத்தக்கதாம்:) இப்பொருளுக்கு, 'உள்ளுடை மயக்கால்' என்பதை 'கவல்கின்றார்' என்பத

ளோடு இயைத்தல் இனிது. 'கணவரைக் கனல்கின்றாரை' என்று பாடமாயின், கணவரைக்குறித்துக் கோபிக்கின்றவரை யென்று பொருள்.

உடை - உடைய; தொகுத்தல்; வினைத்தொகையாகக்கொண்டு, உள் - மனத்தை, உடை - கெடுக்கின்ற, மயக்கால் - மயக்கத்தினால் என்றலுமொன்று. வேர் - முதனிலைத்தொழிலாகுபெயர். 'மருங்குலார் கவல்கின்றாரை' என்பது, கவல்கின்றார் மருங்குலாரை யென உருபுபிரித்துக்கூட்டப்பட்டது. மிகநுண்ணிய இடையையுடையாரென்பது, 'தூயவெள்ளிடைமருங்குலார்' என்பதன் கருத்து. (கககூ)

கஉ0. ஆலையின்மலையின்சாரன்முழையினிலமுதவாரிச்
சோலையிற்றுவசரில்லிற்சோனகர்மனையிற்றூய
வேலையிற்கொளவொண்ணுதவேற்கணார்குமுதச்செவ்வாய்
வாலெயிற்றூறுதீந்தேன்மாந்தினார்மயங்குவாரை.

(இ - ள்.) ஆலையில் - கரும்பாலையிலும், மலையின் சாரல் முழையினில் - மலைப்பக்கங்களிற் காணப்படுகின்ற குகையிலும், அமுதம் வாரி சோலையில் - இனியநீர்ப்பெருக்குப் பாயப்பெற்ற பூஞ்சோலையிலும், துவசர் இல்லில் - கள்விற்பவருடைய இடத்திலும், சோனகர் மனையில் - மிலேச்சருடைய வீட்டிலும், தூய வேலையில் - சுத்தமான பாற்கடலிலும், கொள ஒண்ணுத - பெறுதல் கூடாத, வேல் கணார் குமுதம் செம் வாய் வால் எயிறு ஊறு தீம் தேன் - வேலாயுதம்போன்ற கண்களையுடையவரான மகளிரது செவ்வாம்பல்மலர் போன்ற சிவந்த வாயிலும் வெண்மையான பற்களிலுஞ் சுரக்கின்ற இனிமையான தேனை, மாந்தினார் - பருகி, மயங்குவாரை (களிப்பினால்) மயங்கிக் கிடப்பவரான இராக்கதர்களையும்,—(எ - று)

அதராமிருதபானத்திலும் தந்தாமிருதபானத்திலு மாகிய ஆனந்தத்தால் மயங்கிக்கிடக்கின்றனர் இராக்கதர்களென்க. அவ்வமிருதங்களுக்கு, கரும்பாலையிற் கிடைக்கின்ற கருப்பஞ்சாறும், மலைச்சாரல்களில் ஒதுக்கிடத்திற் கட்டிய கூடுகளிற் கிடைக்கின்ற கற்றேனும், நீர்வளத்தாற்செழித்து வளர்கிற பூஞ்சோலையில் மலர்களினின்று கிடைக்கின்ற தேனும், தெங்குபனைமரங்களிலிருந்து கள்சொணர்ந்துவிற்பவரான சான்றாரது வீடுகடைகளிற் கிடைக்கின்ற கள்ளும், மதுபானம்மிக்கவர்களான மிலேச்சர்களது வீடுகளிற் கிடைக்கக்கூடிய மதுவர்க்கங்களும், பாற்கடலில் தோன்றிய வாருணியென்னும் மதுவும் தேவாமிருதமும், சிறிதும் ஒப்பாகமாட்டா: அவற்றினும் இவ்வமுதங்கள் மிகச்சிறந்தன என்ற கருத்தை 'ஆலையில் மலையின்சாரன்முழையினில் அமுதவாரிச், சோலையில் துவசரில்லில் சோனகர்மனையில் தூய வேலையிற் கொளவொண்ணுத வேற்கணார்குமுதச்செவ்வாய், வாலெயிற்றூறுதீந்தேன்' என்று விளக்கினர்.

கொளவொண்ணுத தேன் என இயையும். எயிற்றூறு தீந்தேன் - "எயிறு தேறுக" என்றார் உண்டாட்டுப்படலத்தும். இனி, 'வேற்கணார் குமுதச் செவ்வாய் வாலெயிற் றூறு தீந்தேன்' என்பதற்கு - மகளிரது சிவந்த அதரத்

தில் தமது கூரிய பற்களை வைத்தலாற் சுரக்கின்ற இனிய அமிருதம் என்று பதவுரைகூறலும் அமையும். சோலையின் செழுமையை விளக்குவார், 'அமுத வாரிச்சோலை' என்றார். சோனகம் - ஐம்பத்தாறுதேசங்களில் ஒன்று : பதினெண்பாஷைநிலங்களிலும் ஒன்று; அந்நாட்டவர், சோனகர். (௧௧உ)

௧௧௩. நலனுறுகணவர்தம்மைநவையுறப்பிரிந்துநல்கு
முலையுறுகலவைதீயமுள்ளிலா முளரிச்செங்கேழ்
மலர்மிசைமலர்பூத்தென்னமலர்க்கையால்வதனந்தாங்கி
புலவருமுயிரினோடுநெடிதிருந்துயிர்க்கின்றாரை.

(இ - ள்.) நலன் உறு கணவர்தம்மை - அழகுமிக்க (தமது) கணவரை, நவை உற பிரிந்து - (பிறமகளிரைக் காமுறுதல்முதலிய) குற்றம் (அவர்களிடத்து) நேர்ந்ததனால் ஊடிப்பிரிந்து,—(அவ்விரகதாபத்தால்), நல்கும் முலை உறு கலவை தீய - (சைத்தியோபசாரமாகத் தமதுதோழியரால்) பூசப்பட்ட (தமது) தனங்களிற் பொருந்திய கலவைச்சந்தனம் தீந்துபோக,—முள் இலா செம் கேழ் முளரி மலர்மிசை மலர் பூத்து என்ன-முட்களில்லாததொரு செந்நிறத்தாமரைமலரின்மேல் அத்தன்மைத்தான தாமரைமலரொன்று பூத்தாற்போல, மலர் கையால் வதனம் தாங்கி - விளக்கத்தையுடைய (தமது) கையொன்றினால் (தமது) முகத்தைத் தாங்கிக்கொண்டு, உலவு அரும் உயிரினோடு - போவதும் வருவதுமாய் உலாவுகின்ற அருமையான உயிருடனே, இருந்து நெடிது உயிர்க்கின்றாரை - பெருமூச்சுவிட்டுக்கொண்டிருக்கின்றவர்களான இராக்கதமாதர்களையும்,— எ - று.)

கணவரிடத்துநேர்ந்த குற்றங் காரணமாகத் தாம் பிணங்கிப் பிரிந்தவிடத்து, அப்பிரிவுத்துயரைப் பொறுக்கமாட்டாமல், அத்தாபமிகுதியால் தமது உடம்பிற்பூசிய கலவைச்சந்தனம் தீய, தமதுமுகத்தைத் தமதுகையொன்றிற் சாயவைத்துக்கொண்டு உயிர்தடுமாறப் பெருமூச்சுவிடுபவராய் வருந்துகின்றனர் இராக்கதமாதரென்க. கையின்மேல் தலையைவைத்துக்கொள்ளுதல், சிந்தை சோகங்களின் காரியம்: "ஒருகை முடியொடு கடகஞ்சேர்த்தி நெடிதுநினைந்து" என்றார் பிறரும். அயர்வினால் தலை நிற்கமாட்டாது சாய்தலால், அதனைக் கைகொடுத்துத் தாங்கவேண்டுவ தாயிற்றென்பதும் அறிக. மகளிர் கையும் முகமும் தனித்தனி செந்தாமரை மலர் போலுதலால், கையால் வதனந் தாங்குதற்கு முளரிச்செங்கேழ் மலர்மிசை மலர்பூத்தல் உவமைகூறப்பட்டது; இஃதுபோன்றுவமை: "வாண்முகம், பங்கயத்தை மற்றொர்பங்கயத்து வைத்த பான்மைபோ, லங்கைசேர்த்தி மைக்கணீலவாலிசிந்த வைகிய, மங்கை" என்றார் நைடததூலாரும். மலர்க்கை - விரல்கள் விரிதலையுடைய கையினெனினும் அமையும் 'மலர்மிசைமலர்பூத்தென்ன' என உவமை முன் வந்ததனால், மீண்டும் 'மலர்க்கையால்' என்பதற்கு - தாமரைமலர்போன்ற கையினால் என உரைத்தல் சிறவாது. 'வளைக்கையால்' என்றும் பாடமுண்டு. அம்மகளிரது முன்னங்கை மிக்கசெய்ப்புடைய தென்பதைக் காட்டுதற்கு, 'முள்ளிலாமுளரி' என உவமை வகுத்துக்கூறப்பட்டது; இப்பொழுது

மனமகிழ்ச்சியின்மையால் மயிர்சிலிர்ப்புப்பெருதது முன்னங்கை யென்பதும் போதரும்.

"உண்ணிலாவியதுயரம்பிடித்துந்த வாருயிர் நின் றூசலாட" என்றாற் போல, உயிர் உடம்பைவிட்டுப்போவதும் வருவதுமாய்த் தடுமாற என்பது, 'உலவருமுயிரினோடு' என்பதன் கருத்து; இதனால், விரகத்தால் மரணவேதனையுற்றன ரென்றவாறு. நெடிதுஉயிர்க்கின்றார் எனவுமியையும். இருந்து உயிர்க்கின்றாரை - உயிர்த்திருக்கின்றாரை என விகுதி பிரித்துக் கூட்டுக. நெடிது இருந்து உயிர்க்கின்றாரை - நெடும்பொழுது அசைவின்றியிருந்து பெருமூச்சுவிடுகின்றவரை யென்றுமாம். 'அலமரு முயிரினோடு நெடிதுயிர்த் தயர்கின்றாரை' என்ற பாடத்துக்கு - (மிக்க வருத்தத்தால்) அலைகின்ற உயிருடனே நெடும்பொழுது அக்கணவரையெதிர்பார்த்திருந்து சோர்கின்றவர்களை யென்பது பொருளாம். (௧௧௩)

> வதியங்கொழுநர்தம்பாலெய்தியசலத்தர்வைகுந்
> தாதியங்கமளிச்சேக்கையுயிரிலாவுடலிற்சார்வார்
> மாதுயர்க்காதறாண்டவழியின்மேல்வைத்தகண்ணார்
> தூதியர்முறுவனோக்கியுயிர்வந்து துடிக்கின்றாரை.

(இ - ள்.) வதி அம் கொழுநர்தம்பால் எய்திய சலத்தர் - (வில் வாள் முதலிய) ஆயுதங்களில் தேர்ந்த அழகிய (தமது) கணவர்மீது (ஊடலாற்) கொண்ட கோபமுடையவர்களாய், வைகும் தாது இயங்கு அமளி சேக்கை - தாம் தங்குகின்ற மலரிதழ்களாலான மெத்தையாகிய படுக்கையில், உயிர் இலா உடலின் சார்வார் உயிர்நீங்கிய உடல்போலத் தனியே) சார்ந்து படுப்பவராகி, மா துயர் காதல் தூண்ட - மிக்கதுன்பத்தைவிளைக்கின்ற ஆசை தூண்டுதலால், வழியின்மேல் வைத்த கண்ணார் - (தமதுகணவர் வரக்கூடிய) வழியின் மேற் செலுத்திய பார்வையையுடையவர்களாய், தூதியர் முறுவல் நோக்கி - (தம் கணவரால்) தூதுவிடப்பட்ட மகளிரது புன்சிரிப்பைப் பார்த்து, உயிர் வந்து - (அதனால் தமது) உயிர் மீண்டுவரப் பெறவும், துடிக்கின்றாரை - துடிக்கின்றவர்களான இராக்கதமாதர்களையும்,—(எ - று)

சில இராக்கதமாதர்கள், தமது கணவரிடத்து வேற்றுமகளிரைக் காமுறுதல் முதலிய குற்றங் கண்டபொழுது ஊடல்கொண்டு கோபித்து அக்கணவரைப்பிரிந்து தனியேசென்று, தங்கள் போகநுகர்ச்சியின்பொருட்டுக் காம் பரிந்த மலர்களினிதழ்களா லமைக்கப்பட்டிருந்த மெத்தென்ற சயனத்திற் பள்ளிகொள்ளும் பொழுது, தமது பிராணநாயகரைப் பிரிந்ததனாலாகிய துயர மிகுதியாற் சோர்ந்து, உயிர்நீங்கிய உடல்போலப் படுக்கையிற் சாய்ந்து விழுவாராயினர்; அவ்வாறு மூர்ச்சித்துவிழுந்தவர், இங்ஙனம் பெருந்துன்பத்தை விளைத்தற்குக் காரணமான ஆசை தூண்டுதலாற் சிறிதுதெளிந்து, தமதுகோபத்தைச் சமாதானப்படுத்தித் தம்மைத் தழுவுதற்குத் தமதுகணவர் வருவரோ வென்று அவர்வரக்கூடியவழியிற் கண்செலுத்துகையில், அதற்குள் அக்கணவரால் தமதுகோபந்தணித்தற்பொருட்டுத் தூதனுப்பப்பட்ட தோழியர் புன்முறுவலோடு தம்மைக்குறித்துவிரைந்துவருவதைக் கண்ணுற்று, இனிப்பிராணநாய

சிறந்தோராவர். அரக்கர் ஒருசார் தேவர்கள் முனிவர்கள் முதலிய நல்லோரை மிகநலிந்தவரினும், மற்றொருசார் தேவபூசை அக்நிஹோத்ரம் முதலிய வைதிககருமங்களையும் விடாது அநுஷ்டித்துவந்தனரென்பது, நூல்களாற் புலனாகின்றது; மேல் ௧௬௩ - ஆஞ் செய்யுளில் "தேவாலயங்கள்" என வருவதுங் காண்க.

சங்கு - அதனாலாகிய வளைக்குக் கருவியாகுபெயர். நூல் - அதுகொண்டு மணிகளைக்கோத்து அமைக்கப்பட்ட இடையணிக்கு இலக்கணை. பாதசாலகம் - இளம்பூவரும்பின் தொகுதிபோலத் தொழில்திறமமைக்கப்பட்டதொரு காலணிவிசேடம். முராஜம் - வாச்சியபேதம். 'தெய்வம்போற்றி' என்ற பாடம், மோனைக்குப் பொருந்தும். தேவமாதரின்கூந்தற்கு மலர்சூடுதல் முதலியவற்றாலாகுஞ் செயற்கைநறுமணமேயன்றி இயற்கைநறுமணமுமுண்டென்பது நூற்கொள்கையாதலால், 'கொங்கலர் கூந்தல்' என்றது இருவகைமணமும் அமைந்திருத்தலைக் கூறியதாம். அரம்பையர் - ரம்பை முதலியோர். 'மறிப்பலிவகுக்கின்றாரை' என்றபாடத்துக்கு - ஆடுபலியிடுபவர்களையென்று பொருள்; முந்தியபொருளில், பலி - பூசை; இப்பொருளில், பலி - தேவருணவு. பலி வகுத்தல் - பலியாக வெட்டுதலென்று உரைப்பர் ஒருசாரார். உறைதெய்வம் - வசிக்கின்ற தெய்வம்; வினைத்தொகை. (௧௧௮)

௧௧௯. இழைதொடர்வில்லும்வாளும்இருளொடுமலையயாணர்க்
குழைதொடர்நயனக்கூர்வேல்குமரர்நெஞ்சுருவக்கோட்டி
முழைதொடர்சங்கம்பேரிமுகிலெனமுழங்கமூரி
மழைதொடர்மஞ்ஞையென்னவிழாவொடுவருகின்றாரை.

(இ - ள்.) இழை தொடர் - (தாம் அணிந்துள்ள) ஆபரணங்களிலிருந்து வெளிவீசுவனவான, வில்லும் வாளும் - வில்லென்றும் வாளென்றுங் கூறப்படுகிற ஒளிகளாகிய விற்படையும் வாட்படையும், இருளொடு மலைய - இருளோடுபோர்செய்து அதனையொழிக்கவும்,—யாணர் குழை தொடர் நயனம் - அழகிய குழையென்னுங் காதணியளவும் நீளாவுகின்ற (தமது) கண்களாகிய, கூர் வேல் - கூரிய வேற்படைகளை, குமரர் நெஞ்சு உருவ கோட்டி - இளமைப்பருவமுடைய ஆடவர்களின் இதயத்தைத் துளைக்கும்படி செலுத்திக்கொண்டும்,—முழை தொடர் சங்கம் பேரி முகில் என முழங்க - உள்துளைபொருந்திய சங்கவாத்தியங்களும் பேரிகைகளும் மேகம்போல ஆரவாரஞ்செய்ய, (அவற்றைத்தொடர்ந்து), மூரி மழை தொடர் மஞ்ஞை என்ன - பெரியமேகங்களைத் தொடர்ந்துவருகின்ற மயில்கள்போல, விழாவொடு வருகின்றாரை - மங்கலச் சடங்குகளுடனே வருகின்றவர்களான இராக்கதமாதர்களையும்,—(எ - று.)

விவாகம்முதலிய மங்கலச்சடங்குகளின் சம்பந்தமாக ஊர்கோலம் வரும்பொழுது, சிலஇராக்கதமாதர்கள் தம்மை விசேஷமாக அலங்கரித்துக்கொண்டு அகக்களிப்புடனே உல்லாசமாக இனிது நடந்து உடனேவருகின்றனர்; அவ்வூர்கோலங்களில் சங்கு பேரி முதலியவாத்தியங்கள் மேகத்தினிடிமுழக்கம்போல முன்னேமுழங்கிச்செல்ல அதன்பின்னேவருகின்ற அம்மகளிர்க்கு, மேககோஷத்தைத் தொடர்ந்து பின்செல்லும் மயில்களை உவமைகூறினர். கார்

காலத்துமேககோஷத்தைக்கேட்டுக்களித்துக் கொண்டாட்டமடைதல், மயிலி னியல்பு. மகளிர்க்கு மயில் - சாயலிலும், நடையிலும் ஒப்புமை கூறப்படும்.

இம்மாதர்கள்வருகின்றபொழுது நிகழ்கின்ற சிலசெயல்களை, அவர்கள் வில்லும் வாளும் வேலுமாகிய சிறந்தபடைக்கலங்களைக்கொண்டு போர்த் தொழில்செய்துவருவதாக முதலிரண்டடிகளிற் கற்பித்தார். இலங்கையில் அரக்கரேயன்றி அரக்கியரும் எப்பொழுதும் படையெடுத்துப் போர்செய் கின்றனரெனச் சமத்காரமாகக்கூறியதாம். வில் வாள் என்ற சொற்கள் ஒளி யென்னும்பொருளனவாதல், "வெயிலும் நிலவும் வில்லும் வாளும்,............ கேழுங் காழுந் தேசுங் கிளரொளி" என்ற பிங்கலந்தை முதலியவற்றால் விளங்கும். அச்சொற்கள் ஆயுதப்பெயர்களாதல், வெளிப்படை. ஆகவே, பலவகையாபரணங்களினின்று வீசுகின்ற ஒளிகள் இருளையொழித்தலை, விற் படைவாட்படைகள் இருளொடுபோர்செய்வனவாகக் குறித்தார். 'வில்லும் வாளும்' என்றது, சிலேஷைநயம். மலைதல்வினைக்கு ஏற்ப, இருளை யானை யாகக் கருதுக; ஏகதேசரூபகம். காதுகளையளாவி நீண்டு வளர்ந்துள்ள கண்க ளென்பது, 'யாணர்க்குழைதொடர் நயனம்' என்றதன் கருத்து. அம்மகளிர் தமது கூரியகண்களின்பார்வையைச் செலுத்துகின்றபொழுது அப்பார்வை யழகிலீடுபட்டு யௌவனபுருஷர்கள் நெஞ்சம் புண்ணுறுவர்; அதனை, அவர்கள் கண்களாகியவேற்படைகளைக் குமரர்நெஞ்சுருவும்படி வீசுவதாகக் குறித்தார்.

யாணர் - புதுமையுமாம். முழை - மலைக்குகை; அதுபோன்ற பெரிய உள்துளையை இங்குக்குறித்தது; இலக்கணை. பேரி - துந்துபிவாத்தியம்; பறைவிசேடம். மூரி - வலிமையுமாம். உலகமும் அதற்கு உறுதியாகிய அறம் பொருளின்பங்களும் நடத்தற்கு ஏதுவாகின்ற சிறப்பு, மழைக்கு உண்டு. உருவகவணியும் சிலேடையணியுஞ் சேர்ந்துவந்த சேர்வையணி. (௧௧௬)

௧௧௭. பள்ளியின் மைந்தரோடூடிய பண்புநீங்கி
யொள்ளியகலவிப்பூச லுடற்றுதற்குருத்தநெஞ்சர்
மெள்ளவேயிமையைநீக்கியஞ்சன மிழுதுவேய்ந்த
கள்ளவாணெடுங்கணென்னும்வாளுறைகழிக்கின்றாரை.

(இ - ள்.) பள்ளியில் - படுக்கையில், மைந்தரோடும் ஊடிய பண்பு நீங்கி - (தமது) கணவரோடு பிணங்கிய குணத்தை விட்டு, ஒள்ளிய கலவி பூசல் உடற்று தற்கு உருத்த நெஞ்சர் - சிறந்த புணர்ச்சியாகிய போரைச் செய்தற்கு எழுந்த மனத்தையுடையவர்களாய், மெள்ளவே இமையை நீக்கி - மெல்லத் தமது கண் ணிமைகளைத் திறந்து, அஞ்சனம் இழுது வேய்ந்த கள்ளம் வாள் நெடுங் கண் என்னும் வாள் உறை கழிக்கின்றாரை - மையாகிய நெய் பூசப்பெற்ற வஞ்சனை யையும் ஒளியையுமுடைய நீண்ட தமது கண்களாகிய வாளாயுதங்களின் உறை யைக் கழற்றுபவர்களான இராக்கதமாதர்களையும்,—(எ - று.)

சில அரக்கியர் தமது கணவரும் தாமுமாக ஒருபடுக்கையிற் கூடியிருக் கின்றபொழுது அக்கூடலின்பம் சிறக்குமாறு தமதுகொழுநரிடத்து ஏதேனு மொருகுற்றத்தை ஏறிட்டு அதுவியாஜமாக மனஸ்தாபங்கொண்டு அவரோடு சேராது சிறிதுவிலகித் தனியேபடுத்துக் கண்மூடி யுறங்குவார்போ லிருப்பார்;

அங்ஙனம் தாம் காயப்பிணக்கு நுணுக்கத்தாற் பொய்யுறக்கங்கொண்டிருக்கையில், மனம் கலவியை நாடியதனால், அகத்திற் புலவி தணிந்து, தமது கொழுநர் தமதூடலைத் தீர்க்கும் முயற்சி யுடையராகின்றனரோவென்று நோக்கக் கருதி அவர் அறியாதவண்ணம் கண்களைச் சிறிது திறந்து பார்ப்பவராயினர் : அவ்வாறு கண்ணிமைகளை மெல்ல நீக்கிக் கண்களைக்கொண்டு பார்த்தல், வாட்படைகளை உறைகழித்து எடுத்து உருவுமாறுபோலிருந்ததென்க. அப்படி வஞ்சனையாக மெல்லத்திறந்த தலைவியர் கண்களினழகிலே அக்காதலியர்மேலேயே கண்ணுங்கருத்துமாயிருந்த அவ்வரக்கர் ஈடுபட்டு நெஞ்சுருகி நெகிழ்பவராயினரென்பதும் இங்குப்போதரும். இராக்கதசாதி எப்பொழுதும் கொடுமையை மேற்கொண்டதென்ற இயல்பை வெளியிடுவார், அம்மாதர்கள் தம் கணவரோடூடியபண்புநீங்கியபின்பும் கலவிப்போர்செய்யுங் கருத்தினராய்க் கண்ணென்னும் வாள்களை உறைகழித்து எடுக்கின்றனரென்றார். கண்ணாகிய வாளுக்கு இமை உறை யென்க. அதற்கு ஐயமே நெய்யாம். கொழுநர் அறியாதபடி மெல்லப்பார்த்து அவரியல்பை அறிய முயன்றமைபற்றி, 'கள்ளம்' என்ற அடைமொழி கண்ணுக்குக் கொடுக்கப்பட்டது. வாள் என்ற சொல் இரண்டனுள், முன்னது - ஒளி: உரிச்சொல்; பின்னது - ஆயுதம்: பெயர்ச்சொல். அணி, உருவகவிசேடம். (௧௧௭)

௧௧௮. ஓவியமனையமாதரூடினருணர்வோடுள்ள
மேவியகரணமற்றுங்கொழுநரோடொழியயாணர்த்
தூவியப்பேடையென்னமின்னெனத்துவளவேகி
யாவியுந்தாமுமேசென்றருங்கதவடைக்கின்றாரை.

(இ - ள்.) ஊடினர் - (தமது கணவரோடு) பிணங்கியவர்களாய் (அவர்களை விட்டுப்பிரிந்து),— உணர்வோடு - (அங்ஙனம் பிணங்கிய தமது) அறிவும், உள்ளம் - மனமும், மற்றும் மேவிய கரணம் - மற்றும் பொருந்திய (சித்தமும் அகங்காரமு மாகிய) அந்தக்கரணங்களும், [ஆக அகத்துறுப்பு நான்கும்], கொழுநரோடு ஒழிய - அந்தத் தமது கணவருடனே சென்றுவிட, மின் என துவள - மின்னல்போலத் (தமது உடம்பு) துவள, யாணர் தூவி அம் பேடை என்ன - அழகிய இறகுகளையுடைய அழகிய அன்னப்பேடை போல, ஏகி - (மெல்ல) நடந்து, ஆவியும் தாமுமே சென்று - தமது உயிருந் தாமுமாகவே (ஓரறையினுள்ளே) சென்று, அருங் கதவு அடைக்கின்றாரை - அருமையாகக் கதவுகளை மூடிக்கொள்ளுகின்றவர்களான, ஓவியம் அனைய மாதரை - சித்திரப்பிரதிமைபோன்ற [நிரம்பிய அழகுள்ள] இராக்கதமாதர்களையும்,—

கொழுநரிடத்துநேர்ந்த குற்றங் காரணமாக ஊடி அவர்களைப்பிரிந்தவிடத்தும், மகளிரது மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் அந்தக்கரணங்கள் நான்கும் அக்காதற்கணவரிடத்தே தங்கிவிட்டதனால், அம்மகளிர், உயிர் மாத்திரமே மிச்சப்பட்டவர்களாய், மின்னல்போல உடம்பு தள்ளாட அன்னப்பேடைபோல மந்தகதியாக நடந்து கோபகிருகத்தினுட்சென்று, விரையக் கதவுசார்த்தித் தாளிட்டுக்கொள்ளுதற்கும் வலியில்லாமற் சிரமப்பட்டு மெல்லக் கதவைச்சார்த்துகின்றனரென்க. அழகிற் குறைபாடு தோன்றுமளவும்

கலைத்துக்கலைத்துச் சீர்திருத்தி எழுதக்கூடியதாதலால், அங்ஙனம் எழுதிய சித்திரப்பாவை அழகிற் சிறந்ததாதல்பற்றி, அழகிய மகளிர்க்கு உவமை கூறப்படும்: இங்கு அது அழகுக்கேயன்றி அயர்ச்சியாற் செயலறுதற்கும் உவமையாகுமாறு உணர்க; மேல் கஎ0 - ஆங் கவி, நோக்கத்தக்கது. பேடை - பறவையின் பெண்மைப்பெயர்; 'தூவி' என்ற அடைமொழியினால், அன்னப்பேடையைக் குறித்தது: தூவி - அன்னச்சிறகு. 'மாதர் அடைக்கின்றாரை' என்பது, 'அடைக்கின்றார்மாதரை' யென உருபு பிரித்துக் கூட்டப்பட்டது. 'மின்னிடை துவள வேகி' என்று சில பிரதிகள். (ககஅ)

ககக. கின்னரமிதுனம்பாடவெண்மழைகிழித்துத்தோன்று
மின்னெனத்தாளம்வேய்ந்தவெண்ணிறவிமானமூர்ந்து
பன்னகமகளிர்சுற்றிப்பலாண்டிசைபரவப்பண்ணைப்
பொன்னகர்வீதிதோறும்புதுமனைபுகுகின்றாரை.

(இ - ள்) கின்னர மிதுனம் பாட - ஆணும்பெண்ணுமாகிய இரட்டையாய் நிற்கின்ற கின்னரரென்னுந் தேவசாதியார் கீதம்பாடவும், பன்னக மகளிர் சுற்றி பலாண்டு இசை பரவ - நாககன்னிகைகள் சூழ்ந்து வாழ்த்துப் பாடல்களைப் பாடிவாழ்த்தவும்,—வெள் மழை கிழித்து தோன்றும் மின் என - வெள்ளைமேகத்தைக் கிழித்துக்கொண்டு விளங்குகின்ற மின்னல்போல, தாளம் வேய்ந்த வெள் நிறம் விமானம் ஊர்ந்து - முத்துக்களால் அலங்கரித்துச்செய்யப்பட்ட வெண்ணிறமான விமானத்தில் ஏறி, பண்ணை - மகளிர் கூட்டத்துடனே, பொன் நகர் வீதிதோறும் - அழகிய அந்த இலங்காபுரியின் வீதிகளிலெல்லாம், புது மனை புகுகின்றாரை - புதிதாக(க் கணவர்) மனைக்குச் செல்கின்றவர்களான இராக்கதமங்கையரையும்,—(எ - று.)

பெண்வீட்டில் விவாகம்நடந்தேறியபின்பு அங்குநின்று சுபமுகூர்த்தத்திற் கணவர்மனைக்குச் செல்கின்ற கல்யாணப்பெண்கள், இங்குக் குறிக்கப்பட்டனர்: அங்ஙனஞ் செல்லுஞ் சடங்கு, க்ருஹப்ரவேச மெனப்படும். விமானம் - வானத்திற்பறந்துசெல்லுந் தெய்வத்தன்மையுள்ள தேவரூர்தி. வெண்ணிறவிமானத்திற்கு வெண்மழையும், மெல்லியராய் விளங்கும் மங்கையர்க்கு மின்னலும் உவமையாம். 'நீரையுட்கொண்டிராத வெண்மழையைக் கிழித்துத் தோன்றும் மின்னல்' என்றது - இல்பொருளுவமை. கின்னரரும், பன்னகரும்- பதினெண்தேவகணங்களிற் சேர்ந்தவர். பல்லாண்டு-பல் ஆண்டு: பலவருஷ காலம் வாழவேண்டு மென்று வாழ்த்தும் பாடல். 'புதுமனை புகுகின்றாரை' என்பதற்கு - 'புதிதாகக்கட்டப்பட்ட மாளிகைகட்குக் கிருகப்பிரவேசம் போகின்றவர்களை' யென்று பொருள்கொள்ளுதலு மொன்று. (ககக)

கஉ0. கோவையுங்குழையுமின்னக்கொண்டலின்முரசமார்ப்பத்
தேவர்வந்தாசிகூறமுனிவர்சோபனங்கள்செப்பப் [illegible]
பாவையர்குழாங்கள்சூழப்பாட்டொடுவானநாட்டுப்
பூவையர்பலாண்டுகூறப்புதுமணம்புணர்கின்றாரை.

(இ - ள்.) கொண்டலின் முரசம் ஆர்ப்ப - நீர்கொண்டமேகம் (இடி முழங்குமாறு) போல முரசவாத்தியங்கள் ஆரவாரிக்கவும், தேவர் வந்து ஆசி கூற - தேவர்கள் வந்து ஆசீர்வாதஞ்சொல்லவும், முனிவர் சோபனங்கள் செப்ப - இருடிகள் மங்கலவாழ்த்துக் கூறவும், பாவையர் குழாங்கள் பாட்டொடு சூழ - ரிஷிபத்நிகளின் கூட்டங்கள் பாட்டுப்பாடிக்கொண்டு சூழ்ந்து வரவும், வானம் நாடு பூவையர் பலாண்டு கூற - தேவலோகத்துப்பெண்கள் பல்லாண்டு பாடவும், கோவையும் குழையும் மின்ன புதுமணம் புணர்கின்றாரை - (கழுத்திலணிந்த) ஹாரங்களும் (காதிலணிந்த) குழையென்னும் அணிகளும் (தமது புடைபெயர்ச்சியால்) மின்னுமாறு புதிதாகக் கல்யாணஞ் செய்துகொள்ளுகின்றவர்களான இராக்கதர்களையும்,—(எ - று.)

கோவை - முத்து பவழம் முதலியவற்றைக் கோத்த அணிவடம். மின்ன மணம்புணர்கின்றார் என இயையும். பாவையர் - சித்திரப்பதுமைபோ லழகிய மகளிர். 'முனிவர்சோபனங்கள்செப்ப' என்றதை அடுத்துநின்றதனால், 'பாவையர்' என்பது முநிபத்நிகளென்று கொள்ளப்பட்டது. பூவை - கிளி அல்லது நாகணவாய்ப்பறவை; அதுபோன்றவர், பூவையர்: கொஞ்சிப்பேசும் இன்சொல்லில் உவமம். (கஉ0)

[சீதையைத்தேடிச் செல்லும் அநுமான் கும்பகர்ணனைப் பார்த்தல்.]

கஉக. இயக்கியரரக்கிமார்நாகியரெஞ்சில்விஞ்சை
முயற்கறைமலராத்திங்கண் முகத்தியர்முதலினோரை
மயக்கறநாடியேகுமாருதிமலையின்வைகுங்
கயக்கமிறுயிற்சிக்கும்பகருணனைக்கண்ணிற்கண்டான்.

(இ - ள்.) (மற்றும் பல வேறுவகைப்பட்ட தொழில்களை மேற்கொண்டு நிற்கின்றவர்களான), இயக்கியர் - யக்ஷஸ்திரீகளும், அரக்கிமார்கள் - ராக்ஷஸ ஸ்திரீகளும், நாகியர் - நாககன்னிகைகளும், எஞ்சு இல் - குறைவற்ற [நிறைந்த], விஞ்சை - மாயவித்தைகளில் தேர்ந்த [வித்தியாதரசாதியரான], முயல் கறை மலரா திங்கள் முகத்தியர் - முயலெனப்படுகின்ற களங்கம் விளங்காததொரு பூர்ணசந்திரன் (உண்டானால் அது) போன்ற முகத்தை யுடையவரான மாதர்களும், முதலினோரை - முதலானவர்களையும், மயக்கு அற நாடி - சந்தேகமில்லாதபடி நன்றாகப்பார்த்துக்கொண்டே, ஏகும் - செல்லுகின்ற, மாருதி - வாயுகுமாரனான அநுமான்,—மலையின் வைகும் - மலைபோலப் பெருவடிவமாய்ப்படுத்துள்ள, கயக்கம் இல் துயிற்சி கும்பகரு ணனை - கலக்கமில்லாத தூக்கத்தையுடைய கும்பகர்ணனை, கண்ணின் கண்டான் - தனது கண்களாற் பார்த்தான்; (எ - று.)

கும்பகர்ணன் என்ற வடமொழிப்பெயர்க்கு - குடம்போன்ற காதுகளை யுடையவனென்பது பொருள். இவன் தனது தமையன் தம்பிகளான இராவண விபீஷணர்களுட னிருந்து இளமையிற் பெருந்தவஞ்செய்து முடித்த பொழுது, இவனுக்கு வேண்டிய வரங்கொடுக்குமாறு பிரமதேவன் பிரதி யக்ஷமாக, அக்கடவுளை 'என்றும் யான் அழியாது நித்தியனாயிருத்தல்வேண்

டும்' என்று வரம்வேண்டத்தொடங்கிய இவன், தேவர்கள் விருப்பத்தின்படி தன்நாவில் வந்து நின்ற ஸரஸ்வதிதேவியின் சூழ்ச்சியால் 'என்றும் யான் நித்திரையுள்ளவனாயிருத்தல் வேண்டும்' என்று வரம் வேண்ட, அப்படியே அக்கடவுள் அநுக்கிரகித்ததனால், இவன் என்றும் நெடுந்தூக்கமுள்ளவனாய் விட்டனனென்பது வரலாறு; அதுபற்றி, 'மயக்கமில்துயிற்சிக் கும்பகருணன்' என்றார்: இவனது கடுந்தூக்கத்தின் கலக்கமின்மையை, மேல் யுத்த காண்டத்துக் கும்பகருணன் வதைப்படலத்திற் பரக்கக் காணலாம். தூக்கத்துக்குக் கலக்கமாவது - இடையிலெழுதல். அகக்கண்ணாற் காணுதலினும் வேறுபாடு தோன்ற, புறக்கண்ணாற் பார்த்தானென்பது விளங்க, 'கண்ணிற் கண்டான்' என்றார். மலையின்வைகுங் கும்பகருணனென்க. மலை - அவனது பருத்தோங்கிய வலிய பெரிய வடிவிற்கு உவமை; "நெடுவரைபோல்நீண்டவுருவன்" என்பர் உத்தரகாண்டத்தும்.

களங்கமுள்ளதான சந்திரமண்டலத்தைக் களங்கமற்ற வித்தியாதரமாதர் முகத்துக்கு உவமைகூறுதல் ஏலாமையால், களங்கமில்லாததொரு சந்திரமண்டலத்தை அதற்கு உவமையாகக் கற்பித்தார்: இல்பொருளுவமை; மேல் ககூஅ - ஆஞ் செய்யுளில் "முயற்கருங்கறைநீங்கிய மொய்ம்மதி, யயர்க்கும் வாண்முகத்தாரமுதன்னவ, ரியக்கர்மங்கையர்யாவரும்" என்பதும் காண்க. சந்திரனிடத்துள்ள களங்கத்தை முயலென்றல், ஒருவகைக் கவிசமயம்: மானென்றலு முண்டு. இவர்களிற் சீதையில்லை யென்று நன்றாக அறிந்து என்பார், 'மயக்கறநாடி' என்றார். (கஉ-க)

வேறு.

[கும்பகர்ணன் படுத்திருக்கின்ற மண்டபத்தின் இயல்பு.]

கஉஉ. ஓசனையேழகன்றுயர்ந்தவும்பரின்
வாசவன்மணிமுடிகவித்தமண்டப
மேசறவிளங்கியதிருளையெண்வகை
யாசையினிலைகெடவலைக்கலான்றது.

(இ - ள்.) ஓசனை ஏழ் அகன்று - எழுயோஜனை விசாலமுள்ளதாய், உயர்ந்த உம்பரின் - சிறந்த மேலுலகத்தில், வாசவன் மணி முடி கவித்த - இந்திரன் இரத்தினகிரீடஞ் சூட்டப்பெறுதற்கிடமான, மண்டபம்-மண்டபம் போல, ஏசு அற விளங்கியது - குற்றமில்லாமல் விளங்கிக்கொண்டிருப்பது; இருளை - இருட்டை, எண் வகை ஆசையில் நிலை கெட - எட்டுவகைத்திக்குக்களிலும் நிலைநில்லாமற்போம்படி, அலைக்கல் ஆன்றது - அழித்தல் பொருந்தியது; (எ - று.)—இச்செய்யுளிலுள்ள 'விளங்கியது,' 'ஆன்றது' என்ற தெரிநிலைமுற்றுக்களுக்கு 'கும்பகர்ணன் படுத்திருக்கின்ற மண்டபம்' என்று எழுவாய் வருவிக்க.

எழுயோசனைதூரம் விசாலமுள்ளதும், சிறந்த சுவர்க்கலோகத்தில் இந்திரனுக்குப் பட்டாபிஷேகம் நடந்த இடமுமான சுதர்மையென்னும் தேவசபாமண்டபம் போலச் சிற்பசாஸ்திர லக்ஷணத்தின்படி யாதொருகுற்றமு

மில்லாம லமைந்துள்ளது அம்மண்டப மென்றும், எட்டுத்திக்குக்களிலும் இருளென்பதில்லையாம்படி நெடுந்தூரம் விளங்கும் பிரகாசமுள்ளது அம்மண்டப மென்றும் கூறியதாம். இராவணனும் கும்பகர்ணனும் விபீஷணனும் தவஞ்செய்து வரம்பெற்று இலங்கையையடைந்தபின்பு வரபலத்தால் நித்திரையானது கும்பகர்ணனைப் பீடிக்க, அவன் 'எனக்குச் சுகமாய் நித்திரைசெய்யும்படியான தொரு மாளிகை நிருமித்துத் தரவேண்டும்' என்று அண்ணனிடஞ் சொல்ல, உடனே இராவணன் படிகக்கற்களினாலும் பொன்னாலும் அழகிதும் பெரியதும் பரந்ததுமான மாளிகையொன்று கட்டுவித்துக்கொடுத்தனன்; தம்பியும் அதிற்படுத்து நெடுங்காலந் துயில்வானாயினனென்பது, உத்தராமாயண வரலாறு. "தனியே நற்றவஞ்செய்து சாதித்துப் பெற்றதுயில் தன்னைச் சாரக், குனிசாபத் தசமுகனைக் கும்பகன்னன் தான்குறுகிக் கூறுவா னிங், கினிதாக வெனக்குறங்க வெழு மணிமண்டபஞ் சமைப்பி யென்னச் சொன்னான்," "தென்னிலங்கை மன்னவனுந் தெய்வதச்சனுக்குளவா றுரைப்பக் கேட்ட, வன்னவனு மகலமோ ரோசனையு மதற்கிரட்டி நீளம் பெற்ற, பொன்னணிமண்டப மொப்பாற் புவனத்தி னில்லதுசெய் தமைப்பக் கும்ப, கன்னனதுகண் டுவந்து நெடுங்காலங் கண்டுயிலா நின்ற காலை" என்றார் ஒட்டக்கூத்தரும். மேற்காட்டிய உத்தரகாண்டச்செய்யுளில் "அகலமோரோசனை" என வருதலால், இச்செய்யுளில் 'ஓசனையேழகன்று' என்றது, கும்பகர்ணன் தூங்குகின்ற மண்டபத்துக்கு அடைமொழியாக்கப்படாது, இந்திரன் மணிமுடிகவித்த மண்டபத்துக்கு அடைமொழியாக்கப்பட்டது.

வாஸவன் - வடசொல்: வசுக்கள் தலைவன்; அல்லது, ஐசுவரியமுடையவன்: வசு - தேவரிலொரு பகுப்பினரும், ஐசுவரியமும். முடிகவித்த மண்டபம் - பெயரெச்சம், இடப்பெயர்கொண்டது. எசு - இகழப்படுவது; எனவே, குற்றமாயிற்று. 'மண்டபமேசுறவிளங்கியது' என்ற பாடத்துக்கு - அத்தேவ மண்டபம் பழிப்படையும்படி அதனிலும் வெகுசிறப்பாக விளங்கியது இம் மண்டபமென்பது பொருள். 'உயர்ந்த' என்பதை மண்டபத்துக்கு அடைமொழியாக்கி, 'ஓசனையேழ்' என்றதை 'உயர்ந்த' என்பதனோடுங் கூட்டி, ஏழுயோசனைதூரம் அகலமுள்ளதாய் அவ்வளவு உயர்ந்துள்ள மண்டபமென்றலுமொன்று. 'உயர்ந்ததும்பரின்' என்று பிரதிபேதம்.

இதுமுதல் எட்டுக்கவிகள் - இப்படலத்தின் சுஎ - ஆங் கவிபோன்ற கலிவிருத்தங்கள். (கஉஉ)

[இதுமுதல் ஏழுகவிகள் - கும்பகர்ணன் தூங்கிக்கொண்டிருக்கின்ற நிலையை வருணிப்பன.]

கஉஈ அன்னதனடுவணோ ரமளிமீமிசைப்
பன்னகவாசெனப்பரவைதானெனத்
துன்னிருளொருவழித்தொக்கதாமென
வுன்னருந்தீவினையுருக்கொண்டென்னவே.

(இ - ள்.) அன்னதன் நடுவண் - அத்தன்மைத்தான மண்டபத்தின் நடுவிடத்திலே,—ஓர் அமளி மீமிசை - ஒருபடுக்கையின்மேல்,—பன்னகம் அரசு

என - சர்ப்பராஜனான ஆதிசேஷன் போலவும், பரவைதான் என - கடல் போலவும், தன் இருள் ஒருவழி தொக்கது ஆம் என - (உலகத்து) நெருங்குகின்ற இருளெல்லாம் ஓரிடத்திற் சேர்ந்திருந்தது போலவும், உன் அருந் தீவினை உரு கொண்டு என்னவே - நினைத்தற்குங் கூடாததான பாவங்கள் (திரண்டு) ஓர் ஆடவவடிவத்தைக் கொண்டாற் போலவும்,—(எ - று.)— 'உறக்கமெய்தினான்' என மேல் ௧௨௯ - ஆஞ் செய்யுளோடு தொடர்ந்து முடியும்; 'நடுவண்,' 'மீமிசை' என்றவற்றிற்கும் அதுவே முடிக்குஞ் சொல்.

மிசப்பரந்த நீண்ட வடிவில், ஆயிரந்தலைகளையுடைய ஆதிசேஷன் கும்பகர்ணனுக்கு உவமை. கரிய பெரிய வடிவத்தில், கடல் உவமை; அதுபற்றியே, 'இருளொருவழித்தொக்கதாமென' என்றும், 'தீவினையுருக்கொண்டென்னவே' என்றும் உவமை குறித்தார். இவ்வுவமைகளெல்லாம், அச்சந்தருதல்பற்றியும் ஏற்கும். பாவத்தைக் கருநிறமுடையதென்றல், கவிமரபு. அத்தீவினையின் மிக்க கொடுமையை விளக்குவார், அதற்கு 'உன்னரு' என்ற அடைமொழி கொடுத்தார். 'உன்னருந் தீவினை யுருக்கொண்டென்ன' என்ற உவமையால், கும்பகர்ணன் கொடிய தீவினைகளையே செய்பவனென்பதும் கூறியதாம்; "குத்துவாளை மிகவலிந்து கும்பகர்ணன் குவலயத்திற், சுத்தராய முனிவரையே கொன்றுதின்னத் தொடங்கினான்" என்று உத்தரகாண்டத்து வருவது காண்க.

உன் - உன்னுதற்கு; முதனிலைத்தொழிற்பெயர், நான்காம்வேற்றுமைத் தொகை. ஆம் - அசை. 'மீ' என்றாலும், 'மிசை' என்றாலும், மேலென்று பொருள்; அவைதொடர்ந்துவந்தது, ஒருபொருட்பன்மொழி: இவ்வாய்பாடு பற்றி, ஒருபொருட்பன்மொழியை 'மீமிசைச்சொல்' என வழங்குவது முண்டு.

௧௨௪. முன்னியகனைகடன் முழுகிமூவகைத
தன்னியல்சதியொடுதழுவித்தாதுகு
மன்னெடுங்கற்பகவனத்துள்வைகிய
வின்னிளந்தென்றல்வந்திழுகியேகவே.

(இ - ள்.) முன்னிய கனை கடல் முழுகி - முன்னுள்ள [அருகிலுள்ளதான] ஒலிக்கின்ற கடலில் தோய்ந்து எழுந்து, தன் இயல் மூ வகை கதியொடு தழுவி - தனக்குப் பொருந்திய மூன்றுவகையான நடைகளோடுங் கூடி, தாது உகு மன் நெடுங் கற்பகவனத்துள் வைகிய - மகரந்தப்பொடிகள் சிந்தப்பெற்ற நிலையான நீண்ட கற்பகச்சோலையில் தங்கிய, இன் இளந் தென்றல் - இனிய இளமையான தென்றற்காற்று, வந்து இழுகி ஏக - வந்து (தன்மீது) உராய்ந்துசெல்லவும்,—(எ - று.)—'உறக்கமெய்தினான்' என மேல் ௧௨௯ - ஆஞ் செய்யுளோடு தொடர்ந்து முடியும்.

கும்பகர்ணன் படுத்திருக்கிற மாளிகையில் இளந்தென்றற்காற்று இனிமையாக அவன்மேல் வீசிக்கொண்டிருத்தலை எடுத்துக் கூறினார். அக்காற்று அவ்விலங்காபுரியைச் சாரவுள்ள கடலிற் பட்டுக் குளிர்ச்சிபெற்று அதன் சிறுதிவலைகளை வீசிக்கொண்டுவருதலை விளக்குவார், 'முன்னிய கனைகடல்

முழுகி' என்றார். மூவகைக் கதி - மந்தகதி [மெதுவானநடை], த்வரிதகதி [விரைவானநடை], ஓட்டம் என்பன; "வெங்கதி நடையோ டோட்டம் வித முற விரைவிற் காட்டி" என்ற வில்லிபுத்தூரார் பாரதம் காணத்தக்கது. கற்பகவனம் - தேவலோகத்துக் கற்பகதருவை வலியக்கொணர்ந்து நாட்டப் பெற்ற இலங்கைநகரத்துச்சோலை யென்றாவது, தேவலோகத்து நந்தனவன மென்றேயாவது கொள்க. பிந்திக் கூறியபடி கொண்டால், அம்மாடமாளிகை யின் பலகணி தேவலோகத்தளவு உயரத்திலுள்ள தென்பது போதரும். தென்றற்காற்றின் நறுமணமுடைமையைக் காட்டுதற்கு, 'கற்பகவனத்துள் வைகிய' என்ற அடைமொழி கொடுத்தது; தெய்வக் கற்பக தருவின் மலர்களி லளைந்து அவற்றின் திவ்விய பரிமளத்தை வீசி வருகின்ற தென்க. முழுகி, தழுவி, வைகிய தென்ற லென இயையும். (௧௨௪)

௧௨௫. வானவர்மகளிர்கால்வருடமாமதி
யானனங்கண்டமண்டபத்துளாய்கதிர்க்
கானகுகாந்தமீக்கான்றகாமர்நீர்த்
தூநிறநறுந்தளிர்முகத்திற்றேற்றவே.

(இ - ள்.) வானவர் மகளிர் - தேவமாதர்கள், கால் வருட - (தனது) கால்களைப் பிடிக்கவும்,—மா மதி ஆனனம் கண்ட - (அவர்களுடைய) பூர்ண சந்திரன்போன்ற முகத்தைப் பார்த்த, மண்டபத்துள் ஆய் கதிர் கால் நகு காந்தம் - அந்த மண்டபத்திற் சிறந்த ஒளியையுடைய தூண்களாய் விளங்கு கின்ற சந்திரகாந்தக்கற்கள், மீ கான்ற - மேல்நின்று சொரிகின்ற, காமர் நீர் - அழகிய [இனிமையான] நீரினது, தூ நிறம் நறும் தளி - சுத்தமான நிறத்தை யுடைய நல்ல துளிகள், முகத்தில் தேற்ற - (தனது) முகத்தில் தெறிக்கவும், —(எ - று.)—'உறக்கமெய்திலன்' என மேல் ௧௨௯ ஆஞ் செய்யுளோடு தொடர்ந்து முடியும்.

சந்திர காந்தம் - சந்திரன்முன் நீர்கானுவதொரு கல்; "சந்திர னொளியிற் றண்ணீர் கால்வது, சந்திரகாந்த மெனப் பெயர் பெறுமே", "மேனிலாத் தொளிர் மாடத்தின் விழுத்தக நிரைத்த, பானிலா மணித் தசும்பினிற் றண் கதிர் பரப்பக், கானறும்புன னிறைதலும்" என்பன காண்க. கும்பகர்ணன் படுத்து உறங்கும்போது தேவஸ்திரீகள் அவனுக்குக் கால்பிடிக்கின்றனர்; அங்ஙனம் பாதசேவை பண்ணுகின்ற அம்மாதர்களின் முகமண்டலமாகிய சந்திரமண்டலத்தின் ஒளி வீசுதலால் அருகிலுள்ள சந்திரகாந்தக் கற்றூண்கள் மேலிருந்து நீர்சுரந் துமிழ, அந்நீர்த்துளிகள் காற்றினால் வீசப்பட்டு அக்கும்ப கர்ணனது முகத்தில் தெறித்து அவனுக்குக் குளிர்ச்சிசெய்கின்றன வென்க. ஆய் - தேர்ந்தெடுத்தமைத்த எனினுமாம்.

ஆனனங் கண்ட காந்தம் என இயையும். முகத்தைச் சந்திரனென்று மயங்கிச் சந்திரகாந்தம் நீர்கான்ற தென்றதனால், மயக்கவணி. காமர் - காமம் என்ற வடசொல்லின் விகாரம்; விரும்பத்தக்கதென்பது பொருள். (௧௨௫)

(இதுவும், அடுத்தகவியும் - கும்பகர்ணன் தூங்கும்போது விடுகின்ற சுவாசத்தின் வலிமையை விளக்கும்.)

கஉகூ. மூசியவுயிர்ப்பெனுமுடுகுவாதமும்
வாசலின்புறத்திடைநிறுவிவன்மையா
னாசியினளவையினடத்தக்கண்டவன்
கூசினன்குதித்தனன்விதிர்த்தகையினன்.

(இ - ள்.) மூசிய - (ஒன்றன்பின் ஒன்றாய்) நெருங்கிவருகின்ற, உயிர்ப்பு எனும் - (கும்பகர்ணனது) சுவாசமென்கிற, முடுகு வாதமும் - விரைவு கொண்ட [அல்லது வலிய] காற்றும், வாசலின் புறத்திடை நிறுவி - (அம் மண்டபத்தையடுத்துச் செல்லுகின்ற அநுமானை அப்பாற்செல்லவொட்டாது அம்மண்டபத்து) வாயிலின் வெளிப்புறத்தில் நிறுத்தி, நாசியின் அளவையின் வன்மையான் நடத்த - (அக்கும்பகர்ணனது) மூச்சுவரையில் வலிய இழுத்துக் கொண்டுசெல்ல,—கண்டவன் - (அதனை) பார்த்துணர்ந்தவனான அவ்வநுமான், கூசினன் - (அம்மூக்கினுள்ளே செல்லக்) கூசியவனாய், விதிர்த்த கையினன் குதித்தனன் - (அச்சத்தால்) நடுங்கிய கைகளையுடையவனாய் விலகி அப்பாற்குதித்தனன்; (எ - று.)

மிக்க வலிமையையுடைய அநுமான் வீதியோடு செல்லும்போது அவனை அப்பாற்செல்ல வியலாதபடி இம்மண்டபத்து வாசலுக்கு நேராக வெளியில் நிறுத்தி மூக்குவரையிலும் வலிய இழுத்துச்செல்லும் வலிமையதாயிருந்தது, அக்கும்பகர்ணனது மூச்சுக்காற்று என்பதாம். அநுமான் முன்ஜாக்கிரதைப் படாது அசட்டையாயிருந்திருப்பனாயின் அவன் மூக்கினுள்ளே சென்றிருப்ப னென்க. யுத்தகாண்டத்துக் கும்பகருணன் வதைப்படலத்தில் "திண்டிறல் வீரர்வாயில் திறத்தலும் சுவாதவாதம், மண்டுற வீரரெல்லாம் வருவது போவ தாகி" என்பது, இங்கு நோக்கத்தக்கது. கைநடுங்குதல், அச்சத்தினாலாகுவது

'மூசியவுயிர்ப்பு' என்ற சொற்சேர்க்கையால், மூசுவது மூச்சு என அச் சொல் காரணப்பொருள்பெறுவ தென்பது தோன்றுதலை உய்த்துணர்க. 'வன்மையான் நாசியின் அளவையின் நடத்த' என்பதற்கு - வலிமையையுடை யவனை அக்கும்பகர்ணனது மூக்கினளவாகச் செலுத்த என்று பொருள் கொள்ளுதலுமாம்: முந்தினபொருளில், 'வன்மையான்' எனபது - மூன்றாம் வேற்றுமைவிரி; இப்பொருளில், குறிப்புவினையாலணையும்பெயர். கண்டு அவன் என்று பிரித்தலுமாம். 'ஆசையின்புறத்திடையளவிவன்மையான்' என் றும், 'கூசினன்கொதித்தனன்' என்றும் பிரதிபேதம் உண்டு. (கஉகூ)

கஉஎ. பூழியின்றொகைவிசும்பணவப்போய்ப்புகுங்
கேழில்வெங்கிளர்கிடையுயிர்ப்புக்கேடிலா
வாழியவுலகெலாந்துடைக்குமாருத
மூழியின்வரவுபார்த்துழல்வதொத்ததே.

(இ - ள்.) பூழியின் தொகை விசும்பு அணவ - தூளியின் கூட்டம் (எழுந்து) ஆகாயத்தை யளாவிச்செல்லும்படி, போய் - (அக்கும்பகர்ணனது மூக்கினின்று) வெளியே சென்று, புகும் - (மீளவும் அம்மூக்கினுள்ளே வந்து) நுழைகின்ற,—கேழ் இல் - ஒப்பற்றதும், வெம் - கொடியதும், கிளர் - மேன்மேலெழுவதுமான, கிடை உயிர்ப்பு - (அக்கும்பகர்ணன்) படுத்துக் கொண்டு தூங்கும்போது விடுகிற சுவாசமானது,—கேடு இலா வாழிய உலகு எலாம் துடைக்கும் மாருதம் - அழிதலில்லாமல் நெடுங்காலம் நிலைபெற்று வாழ்தலையுடைய உலகங்களையெல்லாம் (கற்பாந்தகாலத்தில்) அழிப்பதான பிரசண்டவாயு, ஊழியின் வரவு பார்த்து உழல்வது - அவ்யுகாந்தகாலத்தின் வருகையை யெதிர்பார்த்து அதுவரையில் ஓரிடத்துச் சஞ்சரித்துக்கொண்டிருப்பதை, ஒத்தது - போன்றது; (எ - று.)—குளகச்செய்யுள்களின் நடுவில் இடைப்பிறவரலாகவந்த இவ்விரண்டுசெய்யுள்களின்பின் 'இங்ஙனம் ஆக' என்று வருவித்து, மேல் கஉகூ ஆஞ் செய்யுளில் 'உறக்கமெய்தினான்' என்பதனோடு முடிக்க.

உச்சுவாசமாக வெளியேசெல்லும்போது தெருக்களிலுள்ள புழுதிகளையெல்லாம் வாரியெழுப்பி ஆகாயத்தையளாவச் செலுத்திப் பிறகு நிச்சுவாசமாகத் திரும்பி மூக்கினுட்புகுவதான கும்பகர்ணனது சுவாசமானது, கற்பாந்தத்தில் மிகப் பெரிய சூறாவளியாக நெடுங்காலம் உலகமெங்கும் வீசி அவ்வுலகங்களையெல்லாம் அழிப்பதான சண்டமாருதம் அவ்வூழிக்காலத்தின் வரவை யெதிர்பார்த்துக்கொண்டு அதுவரை ஓரிடத்துச் சஞ்சரித்திருந்தாற் போன்ற தென்க. தற்குறிப்பேற்றவணி.

புகும் உயிர்ப்பு என இயையும். கேழில், வெம், கிளர் என்பனவும் - உயிர்ப்புக்கு அடைமொழிகளே. வாழிய - 'வாழ்' என்ற முதனிலைத்தொழிற் பெயரின்மேற் பிறந்த குறிப்புப்பெயரெச்சம். இனி, 'வாழிய' என்பதை அசையெனினும் அமையும். உயிர்ப்பு, எழுவாய். (கஉஎ)

கஉஅ. பகையெனமதியினைப்பகுத்துப்பாடுற
வகையில்பேழ்வாய்மடுத்தருந்துவானெனப்
புகையொடுமுழங்குபேருயிர்ப்புப்பொங்கிய
நகையிலாமுழுமுகத்தெயிறுநாறவே.

(இ - ள்.) மதியினை - பூர்ணசந்திரனை, பகை என - (அரக்கராகிய் தங்களுக்குப்) பகைவனென்று நினைத்து, பகுத்து - (அச்சந்திரமண்டலத்தை இரு கூறாகப்) பிளந்து, பாடு உற - (தனது வாயின் இரண்டு) பக்கத்திலும் பொருந்தும்படி, வகை இல் பேழ் வாய் மடுத்து - அழகியதாயிராத திறந்த (தனது) வாயில் இட்டு, அருந்துவான் என - உண்கின்றனன் (இவன்) என்று தோன்றும்படி,—புகையொடு - புகையுடனே, முழங்கு - ஒலிக்கின்ற, பேர் உயிர்ப்பு - பெரிய சுவாசம், பொங்கிய - மிகுதியாய் வரப்பெற்ற, நகை இலா முழு முகத்து - சிரிப்பில்லாத [எப்பொழுதுங் கடுமையேதோன்றுகின்ற] பெரிய முகத்தில், எயிறு நாற - வச்கிரதந்தங்கள் விளங்கவும்,—(எ - று.)—'உறக்க மெய்தினான்' என அடுத்தகவியோடு தொடர்ந்து முடியும்.

அருந்துவான் என எயிறுநாற என்க. வாயினிருபுறத்தும் வளைந்து வெண்ணிறமாய் வெளித்தோன்றுகின்ற கோரதந்தங்கள், சந்திரனது பிளவு போலும்; வடிவும் நிறமும் பற்றிய உவமை. இராக்கதராசனுக்கு அடுத்த தம்பியாகிய கும்பகர்ணன் சந்திரனிடத்துத் தேவர்களிலொருவனென்பது பற்றிப் பகைமைபாராட்டி அவனது வடிவை இருகூறாய்ப்பிளந்து தனது வாயிற்பெய்து தின்னத்தொடங்கும்போது அச்சந்திரதுண்டங்கள் அவனது திறந்த கடைவாயிரண்டிலும் சிறிது வெளியேதோன்றினாற்போலு மென்று அவனது கோரப்பற்களை உத்பிரேட்சித்தார்; தற்குறிப்பேற்றவணி.

சுவாசத்திற் புகையெழுதல், அவனது மிக்க கொடுமையால். முழங்குபே ருயிர்ப்பு - குறட்டை. உயிர்ப்புப்பொங்கிய முகமென்க. 'நகையிலா' என்ப தற்கு - ஒளியில்லாத என்று உரைப்பாரு முளர். அருந்துவான் - பெயர். பாடு உற பகுத்து - சரிபாதியாகப் பகுத்து என்றலுமாம்; பாடு - பக்கம் - பாகம்.

கஉக. தடைபுகுமந்திரந்தகைந்தநாகம்போ
லிடைபுகலரியதோருறக்கமெய்தினான்
கடையுகமுடிவெனுங்காலம்பார்த்தயற்
புடைபெயராநெடுங்கடலும்போலவே.

(இ - ள்.) தடை புகு மந்திரம்-தடைசெய்வதான மந்திரத்தால், தகைந்த-கட்டுப்பட்ட, நாகம் போல் - நல்லபாம்பு போலவும்,—கடையுகம் முடிவு எனும் காலம் பார்த்து - (கற்பத்தினது) கடைசியுகத்தின் முடிவென்கிற ஊழிக்காலத்தை எதிர்பார்த்துக்கொண்டு, அயல் புடை பெயரா - பக்கத்தி லெங்கும் பொங்கிவராமல் ஒருநிலையில் நிற்கின்ற, நெடுங் கடலும் போல - பெரிய கடலும் போலவும்,—இடை புகல் அரியது ஓர் உறக்கம் எய்தினான் - நடுவில் விழித்தலில்லாததொரு பெருந்தூக்கத்தை யடைந்திருந்தான், (அக் கும்பகர்ணன்); (எ - று.)

எல்லாவுயிர்களையும் பிடித்து எளிதிற் கொல்லக்கூடிய கும்பகர்ணன் தேவர்கள் முயற்சியினாலமைந்த வரத்தின் வசத்தால் எப்பொழுதும் பெருந் தூக்கத்தை யடைந்தமைபற்றிப் பிறர்க்குத் தீங்கு ஒன்றும் செய்யமாட்டா திருத்தற்கு, எவ்வுயிரையுந் தீண்டி யழிக்கவல்லதான பாம்பு ஸ்தம்பகமந்திரத் தாற் கட்டுப்பட்டுத் தன்னிச்சைப்படி செல்லமாட்டாது ஒடுங்கியிருத்தலும், பொங்கியெழுந்து உலகங்களின்மீது பரவி அவற்றை ஒருங்கு எளிதில் அழிக்கவல்லதான கடல் கற்பாந்தகாலம் வரையிலும் அங்ஙனஞ்செய்யாது கடவுளினாணைக்குக் கட்டுப்பட்டு ஒருநிலையி லடங்கிநிற்றலும் உவமை யெனக் காண்க. உவமையணி.

தடைபுகு மந்திரம் - பாம்பு தான் தடைப்படுதற்குக் காரணமான மந் திரம். புகு மந்திரம் - வினைத்தொகை, காரியப்பொருளது. இடை புகல் - இடையிற்புகுவது: எனவே, இடையூறுயிற்று; தூக்கத்திற்கு இடையூறுவது- விழித்தல். இடைபுகலரியதோ ருறக்கமெய்தினான் — முன்னும் (கஉக) "கலக்க மில் துயிற்சி" என்றார். பல சதுர்யுகங் கூடியது ஒருகற்ப மாதலால், அக்கற் பத்திற் கடைசிச் சதுர்யுகத்தின் இறுதியுகமான கலியுகத்தினது முடிவு 'கடை யுகமுடிவு' எனப்பட்டது; அக்காலம், கற்பாந்தகால மெனப்படும். (கஉக)

வேறு.

[அவனை இராவணனென் றெண்ணி அநுமான் பெருங்கோபங் கொள்ளுதல்.]

௧௩௦. ஆவதாகியதன்மையவரக்கனையரக்கர்
கோவெனாநின்றகுணமிலியிவனெனக்கொண்டான்
காவனாட்டங்கள்பொறியுகக்கனலெனக்கனன்றா
னேவனோவிவன்மூவரினொருவனாமீட்டான்.

(இ - ள்.) ஆவது ஆகிய தன்மைய அரக்கனை - அவ்வாறான தன்மையையுடைய அந்தராக்ஷஸனை, அரக்கர்கோ எனா நின்ற குணம் இலி இவன் என கொண்டான் - ராக்ஷஸராஜனென்று சொல்லப்பட்டு நிலைபெற்ற நற்குணஞ் சிறிதுமில்லாதவனான இராவணனிவனென்று நினைத்து, காவல் நாட்டங்கள் பொறி உக கனல் என கனன்றான் - (தன்னைச் சரணமடைந்தவர்களைப்) பாதுகாக்கவல்ல தன் கண்களினின்று தீப்பொறி சிந்துமாறு நெருப்புப் போலக் கோபித்தான்: (யாவனெனின்,—) இவன் மூவரின் ஏவனோ ஒருவன் ஆம் ஈட்டான் - இவன் திரிமூர்த்திகளுள் யாராயினுமொருவனென்று சொல்லத்தக்க பெருமையையுடையவனான அநுமான்; (எ - று.)

பலபராக்கிரமங்களிற் சிறந்தவனும், கம்பீரமான தோற்றமுடையவனுமான அநுமான் அயன் அரி அரன் என்னுந் திரிமூர்த்திகளி லொருவனென்று கருதும்படி யிருத்தல்பற்றியும், ருத்திராம்சமாதல்பற்றியும், 'ஏவனோ இவன் மூவரினொருவனா மீட்டான்' எனப்பட்டான். இனி, ஆவதாகிய தன்மைய அரக்கனை, ஈட்டான் ஆம் இவன் மூவரின் ஏவன் ஒருவனோ என - பலசாலியான இவன் (இராவணன் கும்பகர்ணன் விபீஷணனென்கிற சகோதரர்) மூவரில் எந்த ஒருவனோவென்று (முதலிற்) சந்தேகித்து, (பின்பு), அரக்கர் கோ எனா நின்ற குணமிலி இவன் என கொண்டான் - ராக்ஷஸராஜனென்று சொல்லப்பட்டு நின்ற [இராவணனாகிய] குணக்கேடனிவனென்று எண்ணி, காவல் நாட்டங்கள் கனற்பொறி உகக் கனன்றான் என்று பொருள் கூறுதலும் பொருந்தும்: இவ்வுரைக்கு - மூன்றாமடியிலுள்ள 'கனலென' என்பதில் 'என' என்பதை யெடுத்து நான்காமடியினிறுதியிற் கூட்டவும், 'கனல்' என்பதைப் பொறியோடு சேர்க்கவும், நான்காமடி முழுவதும் மொழிமாற்றவும், 'அநுமான்' என்ற எழுவாய் வருவிக்கவும் வேண்டும். முந்தினவுரையில், ஈடு - பெருமை, இவ்வுரையில், ஈடு - வலிமை; வடிவின் பெருமையுமாம்.

தனது அடியார்களை அருளொடு நோக்கிப் பாதுகாப்பன அநுமானுடைய திருக்கண்களென்பார், 'காவல் நாட்டங்கள்' என்றார். அங்ஙனம் அன்பர்கள் மீது குளிர்ந்தகடாக்ஷத்தைச் செய்யும் இயல்பினவான கண்கள் இப்பொழுது பகைவர்மீது சினந்து அனற்பொறிசொரிந்தன வென்க. எனவே, அநுமான் அடியாரையளிக்கவும் கொடியாரையழிக்கவும் வல்ல துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனசீலனென்பது போதரும். 'நின்ற' என்றது, குணமிலிக்கு அடைமொழி. காவல் நாட்டங்கள் என்று பிரிக்கவுமாம்.

இதுமுதற் பத்தொன்பது கவிகள் - இப்படலத்தின் நான்காங்கவி போன்ற கலிநிலைத்துறைகள். (௧௩௦)

[இராவணனல்லனென்று அறிந்து அநுமான் தணிதல்.]

௧௩௧. குறுகிநோக்கிமற்றவன் றலையொருபதுங்குறித்த
விறுகுதிண்புயமிருபதிங்கிவனிலனென்று
மறுகியேறியமுனிவெனும்வடவைவெங்கனலை
யறிவெனும்பெரும்பரவையம்புனலினாலவித்தான்.

(இ - ள்.) அவன் - அங்ஙனங் கோபித்த அநுமான்,—மற்று - பின்பு, குறுகி நோக்கி - அருகிற்சென்று பார்த்து,— தலை ஒருபதும் - பத்துத்தலைகளையும், குறித்த இறுகு திண் புயம்இருபது - (அப்பத்துத் தலைகளுக்கு ஈடாகக்) குறிக்கப்படுகிற நெருங்கிய வலிய இருபதுதோள்களையும், இங்கு இவன் - இங்குப் படுத்திருக்கின்ற இவ்வரக்கன், இலன் - உடையனல்லன், [ஆதலால் இராவணனல்லன்], என்று - என்று எண்ணி,—மறுகி ஏறிய முனிவு எனும் வடவை வெம் கனலை - மனத்தில் மாறுபடக் கருதியதனா லுண்டாகி வளர்ந்த கோபமாகிய வெவ்விய படபாமுகாக்கினியை, அறிவு எனும் பெரும் பரவை அம் புனலினால் அவித்தான் - தனது அறிவாகிய பெரிய கடலின் நீரினால் தணித்தான்; (எ - று.)

கும்பகர்ணனை இராவணனென்று மாறுபடவுணர்ந்ததனாலாகிய பெருங் கோபமானது, அவனிடம் பத்துத்தலைகளும் இருபதுதோள்களு மில்லாமை யைக்கண்டு இவன் இராவணனல்லனென்று உண்மையுணர்ந்ததனால் உடனே தணிந்ததென்க; அதற்கு, வடவாமுகாக்கினி கடல்நீரினால் ஒருநிலையில் அடங்கிநிற்றல் உவமை குறிக்கப்பட்டது. பின்னிரண்டடி - உருவகவணி. அநுமான் உத்தமபுருஷ னாதலால், அவன்மனத்தில் ஒருகாரணம்பற்றி யெழுந்த கோபமானது அக்காரணம் நீங்கியமாத்திரத்தில் தானே விரைவில் தணிந்தது, அக்கினிசம்பந்தத்தால் தண்ணீர்க்குஉண்டான சூடு அவ்வனலின் தொடர்பு நீங்கியமாத்திரத்தில் தானே தணிந்திடுதல் போலவென்க; "நெடுங்காலமோ டினு நீசர்வெகுளி, கெடுங்காலமின்றிப் பாக்கும்—அடுங்காலை, நீர்கொண்ட வெப்பம்போல் தானே தணியுமே, சீர்கொண்ட சான்றோர் சினம்" என்பது காண்க. விபரீதஞானத்தாலாகும் கொடுமைக்குப பரிகாரம் உண்மையுணர் வினாலாவதென்பது வெளிப்படை.

மற்று - வினைமாற்றும், அசையுமாம். அவன்தலையொருபதும் என்று எடுத்து, அவ்விராவணனுக்குஉரிய பத்துத்தலைகளுமென்று உரைத்தலு மொன்று. 'இருபது' என்பதில், எண்ணும்மை விகாரத்தால் தொக்கது. 'இருபது மிவற்கிலையொன்று' என்று பாடமோதுவர் ஒருசாரார். மறுகுதல் - மனத்தில் மாறுகக்கருதுதல். (௧௩௧)

[அநுமான் அப்பாற் செல்லுதல்.]

௧௩௨. அவித்துநின்றெறவனுயினுமாகவென்றங்கை
கவித்துநீங்கிடச்சிலபகலென்பதுகருதாச்
செவிக்குத்தேனெனவிராகவன்புகழினைத்திருத்துங்
கவிக்குநாயகனனையவனுறையுளைக்கடந்தான்.

(இ - ள்.) செவிக்கு தேன் என - (கேட்பவருடைய) காதுகளுக்கெல்லாம் தேன்போலினிமையா யிருக்குமாறு, இராகவன் புகழினை திருத்தும் - ரகுகுலத்தில் திருவவதரித்தவனான இராமபிரானது கீர்த்தியை மிகுவிக்கின்ற, கவிக்கு நாயகன் - குரங்குகட்குத் தலைவனாகிய அநுமான்,— அவித்து நின்று - (இவ்வாறு கோபத்தை) அடக்கிநின்று, எவன் ஆயினும் ஆக என்று அம் கை கவித்து - 'இவன் யாராயிருந்தாலும் இருக்கட்டும்' என்று (உதாசீனமாகத்) தனது அழகியகை யை யமைத்து, நீங்கிட சில பகல் என்பது கருதா - '(இவ்வரக்கன்) அழிதற்கு இன்னுஞ் சிலநாள்கள் உள்ளன' என்பதாகவும் எண்ணி, அனையவன் உறையுளை கடந்தான் - அக்கும்பகர்ணனது இருப்பிடத்தைக் கடந்து அப்பாற்சென்றான்; (எ - று.)

அங்கைகவித்தல் - உபேக்ஷையின் காரியம். இன்னுஞ் சிலநாள்களுக்குள் இராமன் இங்குவந்து எல்லாவரக்கரையுந் தொலைத்திடுவனென்பது உட்கோளாதலால், 'நீங்கிடச் சிலபகலென்பதுகருதா' எனப்பட்டது. பகல் - நாளுக்கு இலக்கணை.

ஸ்ரீராமபிரானது தருமபத்தினியான ஜாநகிப்பிராட்டியை ராக்ஷஸராஜனான ராவணன் காதலித்து வஞ்சனையால் வலியக்கவர்ந்துசென்று தனது நகரத்துச் சிறைவைத்தனனாக அத்தேவி இன்னவிடத்திலுள்ளாளென்று தெரியாமல் தேடித்திரிகின்றசமயத்தில் வாநரச்ரேஷ்டனான அநுமான் சென்று கடல்கடந்து இலங்கைபுகுந்து பிராட்டியைத்தேடிக் கண்டு செய்தியறிந்து பேசி மீண்டு இராமனிடம் அவள்செய்தியைச் சொல்லி அப்பெருமான் படையெடுத்துச்சென்று பகைபழிக்குமாறு உதவாதிருப்பின் அவ்விராமபிரானது கீர்த்தி நன்முடிவுடையதன்றாகிக் கேட்பவர்க்கு இனிமைபயவாது போய்விடுமாதலின், அங்ஙனம் ஆகாதபடி அப்புகழைப் பூர்த்திபாகுமாறு செவ்வைப்படுத்தியவன் சிறியதிருவடி யென்பது விளங்க, 'செவிக்குத்தேனென விராகவன்புகழினைத் திருத்துங் கவிக்குநாயகன்' என்றார். இவ்வகைப்பெருஞ்சிறப்பினனாதல்பற்றியே, அநுமான், "ராமாயண மஹாமாலாரத்நம்" எனப்படுவன். இனி, 'திருத்தும்' என்பதற்கு - திருந்தச்சொல்லும் என்றுகொண்டு, இராமபிரானது திவ்வியகீர்த்தியைப் பலருங்கேட்குமாறு எப்பொழுதும் பாராயணஞ்செய்கின்றவனான சிறந்தவாநரன் என்றலும் அமையும். அநுமான் இராமாயணம் ஒன்று இயற்றினனெனவுந் தெரிகின்றது. தேன் உண்பவர்நாவுக்கு இனிமைதருதல்போல, இராமபிரானது கீர்த்தியமிருதம் கேட்பவர்செவிக்கு இனிமைதருவதென்க; செவிவாயாக இனிதுகேட்டுக்களித்தல்காண்க. இராமபிரானது கீர்த்தியைத் தனது செவிகளுக்குத் தேனாக அழகிதாகக்கொள்ளும் வாநரத்தலைவனென்றலும் ஒன்று; 'எந்தஎந்த இடத்தில் இராமகதை சொல்லப்படுகின்றதோ அந்தஅந்த இடத்தில் அநுமான் தலைமேற்கூப்பியகையனாய் நின்று ஆனந்தக்கண்ணீர்ததும்ப அச்சரித்ராமிருதத்தைச் செவியிலேற்றுப் பருகிக் களிக்கின்றனன்' என்ப. கபி - வடசொல். மற்றைவாநரங்களெல்லாம் கிருதார்த்தமானது அநுமான் செய்த உதவியினாலேயே யாதலால், அவன், குரங்குகட்குத் தலைமைபெற்றனன். 'நீங்கிட' என்ற செயவெனெச்சத்துக்கு 'உள்ளன' என முற்று வருவித்து முடிக்கப்பட்டது, (௧௬உ)

[அநுமான் மற்றும் பல இடங்களில் தேடிச்செல்லுதல்.]

க௩௩. மாடகூடங்கண் மாளிகையொளிகைமகளி
ராடரங்குகளம்பலந்தேவராலயங்கள்
பாடல்வேதிகைபட்டிமண்டபமுதற்பலவு
நாடியேகினனிராகவன்புகழெனுநலத்தான்.

(இ - ள்.) மாட கூடங்கள் - மண்டபங்களின் சிகரங்களும், மாளிகை ஒளிகை - வீடுகளின் வரிசைகளும், மகளிர் ஆடு அரங்குகள் - மாதர்கள் நர்த்தனஞ்செய்கின்ற சாலைகளும், அம்பலம் - பலரும் வந்து கூடத்தக்க பொதுவிடங்களும், தேவர் ஆலயங்கள் - தேவாலயங்களும், பாடல் வேதிகை - (இனிதுவீற்றிருந்து) இசைபாடப்பெற்ற மேடைகளும், பட்டிமண்டபம் - கல்விபயிற்றும் மண்டபங்களும், முதல் - முதலான, பலவும் - பலஇடங்களிலும், நாடி - (பிராட்டியைத்) தேடிக்கொண்டு, ஏகினன் - சென்றான்: (யாவனெனில்,—) இராகவன் புகழ் எனும் நலத்தான் - இராமபிரானது கீர்த்தியே யென்று சொல்லத்தக்க சிறப்பையுடையவனான அநுமான்; எ - று.)

கூடம் - வடசொல்; மலையினுச்சி: இங்கு இலக்கணையாய், மேலிடத்தையுணர்த்திற்று. மாடகூடம் என்ற தொடரில், வருமொழி வடசொல்லாதலின், வலிஇயல்பாயிற்று. ஒளி - ஒழுங்கு; "நிலையணிக்குலத்திலொளி நீள்வகுத்தவொளிமேல், விரவுகைத்தலத்தில்" எனப் பாலகாண்டத்திலுங் காண்க. கையென்பதும் ஒழுங்கே. ஆகவே, 'ஒளிகை' என்பது ஒருபொருட் பன்மொழியாய்த் தொடர்ந்தது. இராவணன் காலத்திலும் இலங்கையில் தேவராலயங்களிருத்தற்குக் காரணம், கீழ் ௬௨ - ஆங்கவியிற் கூறியவாற்றால் விளங்கும். அன்றி, தேவர்கள் இராவணனுக்கு ஏவலாளராகி இலங்கையில் வந்து தங்கிவசிக்கின்ற இடங்களே தேவாலயங்களெனப்பட்டனவெனினுமாம். பட்டிமண்டபம் - கல்விபயிலுதற்கிடமான மண்டபம்; வித்தியாசாலை: "பன்னருங்கலைதெரி பட்டிமண்டபம்" என்றார் பாலகாண்டத்து நகரப்படலத்தும். இராமபிரானது புகழ் அநுமனுமேலேயே நிலைநின்றதென்பது, கீழ்க்கவியிற் கூறப்பட்டது. அங்ஙனம் இராமகீர்த்திக்கு முக்கியாதாரமாய் நின்ற அநுமானை, இராமபிரானது கீர்த்தியாகவே குறித்தனர், உபசாரவழக்கினால். நலத்தான் - நற்குணநற்செயல்களையுடையவனெனினுமாம். இராமபிரானது கீர்த்தியே ஒருபுருஷவடிவங்கொண்டாற்போன்றவனென்றகருத்தும் அமையும். நலத்தான்—அநுமானுக்குச் சுந்தரனென்று ஒருபெயர் வழங்குதலும் உணர்க. மாளிகையொளிகை யென்றவிடத்துப் பிராசங் காண்க. 'நாயகன் புகழெனுநலத்தான்' என்ற பாடத்துக்கும் பொருள் ஒன்றே. (க௩௩)

[அநுமான் எங்கும் உடபுகுந்து தேடிச்செல்லும் நிலைமை.]

க௩௪. மணிகொள்வாயிலுட்சாளரத்தாள்களின்மலரிற்,
கணிகொளுளைத்திரட்காலினும்புழைகயினுங்கலக்கு
நுணுகும்வீங்குமற்றவனிலையாவரோநுவல்வா
ரணுவின்மேருவினுழியாளெனச்செலுமனுமன்.

(இ - ள்.) அனுமன் - அநுமான்,—மணி கொள் வாயிலுள் - அழகு கொண்ட (அந்நகரத்துமாளிகைகளின்) வாயில்களினுள்ளும், சாளரம் தாள்களில் (அம்மாளிகைகளிலுள்ள) பலகணிகளின் சலாகைகளினுள்ளும், மலரில் - மலர்களினுள்ளும், கனி கொள் நாளத்தில் - ஊன்றிப்பார்த்து உணரத்தக்க பூந்தண்டுகளின் உட்டுளைகளிலும், காலினும் புகையினும் கலக்கும் - காற்றுப்போலவும் புகைபோலவும் நுண்ணிதிற்சென்று புக்குத்தேடுவான்; நுணுகும் வீங்கும் - (அந்தந்த இடத்தின் வழிக்குத் தக்கபடி) மிகச்சிறியவடிவங்கொள்வான் பெரியவடிவமுங்கொள்வான்; அவன் நிலை யாவரே நுவல்வார் - அவ்வநுமான் வேண்டியபடி வடிவங்கொள்ளுகின்ற நிலைமையின் சிறப்பை எவர்தாம் சொல்லமாட்டுவர்? [அத்திறமை எவரும் சொல்லிமுடிக்குந் தரத்ததன்று என்றபடி]; அணுவின் - மிகச்சிறுபொருளாகிய அணுவிலும், மேருவின் - மிகப்பெரும்பொருளாகிய மேருவிலும், ஆழியான் என - ஸ்ரீமந் நாராயணன் (உட்புகுந்து அந்தர்யாமியாயிருத்தல்) போல, செலும்- (அவ்வநுமன் எவ்வகைப்பொருளிலும் இடையீடின்றி) உட்செல்லவல்லன்; (எ - று.)

சிறுபொருள் பெரும்பொருளென்ற வேறுபாடின்றி எல்லாப்பொருளினுள்ளும் ஒருபடியாகப் புக்கு வியாபிக்கின்ற இயல்பு ஜகச்சரீரகனும் ஸர்வேச்வரனுமான திருமாலுக்கு உளதென்பது பிரசித்தம். அங்ஙனம் அந்தர்யாமியாகின்ற திருமாலினது நிலைமை இராமபிரானாகிய அப்பெருமானையே எப்பொழுதும் இடைவிடாது தியானிக்கின்ற மெய்யடியவனான அநுமனிடத்தும் அப்பரமனருளால் அமைந்ததுபோலுமென ஒருவகைச்சமத்காரந் தோன்ற, 'அணுவின் மேருவின் ஆழியானெனச் செலுமனுமன்' என்றனரென்னலாம். இப்படலத்து கOஉ - ஆஞ் செய்யுளும், ஈற்றுச்செய்யுளின் முதலிரண்டடிகளும் இங்கு ஒப்புநோக்கத்தக்கன. இனி, இச்செய்யுளின் ஈற்றடிக்கு—அணுவின் - அணுவவ்வளவு சூக்ஷ்மரூபமாயும், மேருவின் - மேருவவ்வளவு ஸ்தூலரூபமாயும், ஆழியான் என செலும் - திருமால்போலச் செல்கின்றான், அனுமன் என்று பொருள்கூறுவாருமுளர். அணிமா மகிமா முதலிய அஷ்டமகாசித்திகளில் மிகவும் நுண்ணியவடிவமாதல், அணிமா; மிகப்பெரியவடிவமாதல், மகிமா; இவ்வகைச்சித்திகள் யோகிகளிடத்தும் யோகேச்வரனான பகவானிடத்தும் உண்டு. அநுமான் யோகசித்தி கைவந்தவனாதலால், அவன்பக்கல் அவை உள. ஆனதுபற்றி, 'நுணுகும் வீங்கும்' என்றார். அந்தர்யாமித்வம் வாமநாவதாரம் விசுவரூபம் திரிவிக்கிரமாவதாரம் முதலிய சந்தர்ப்பங்களில் அணிமா மகிமா என்ற குணங்கள் திருமாலினிடத்து விளங்குதல் காண்க. ஆழியான் - சக்கராயுதத்தையுடையவன், கடலிற் பள்ளிகொண்டுள்ளவன், கடல்போற் கருநிறமானவன்.

மூன்றாமடியில் 'நுணுகும் வீங்கும்' என்ற முறைமைக்கு ஏற்ப, நான்காமடியில் 'அணுவின் மேருவின்' என நிறுத்தியது, முறைநிரனிறைப்பொருள்கோளின்பாற்படும். உருவமில்லாததாகிய காற்று மிகநுண்ணியதென்பது வெளிப்படை. புகை மிகநுண்ணியதென்பதை, "நீரினுநுண்ணிது நெய்யென்பர் நெய்யினும், யாருமறிவர் புகைநுட்பம்" என்ற நாலடியாரினாலும் அறிக. மாயைகளில் தேர்ந்தவனான இராவணன் சீதையை எவருஞ்சென்று

காணலாகாதபடி மிகநுண்ணிய இடத்தில் மறைத்துவைத்திருத்தலுங் கூடு மென்பதுபற்றி, மலர்களினுள்ளும் பூந்தண்டுகளினுட்டுளைகளிலும் புகுந்து தேடுபவனானான். 'காலினும் புகையினும் கலக்கும்' என்பதற்கு - காற்றைக் காட்டிலும் புகையைக்காட்டிலும் மிகநுண்ணியனாய் உட்புகுவானென்று பொருள்கூறுதலு மொன்று; மேல் கஉகூ - ஆஞ் செய்யுளைக் காண்க. காற்றி னுள்ளும் புகையினுள்ளும் ஊடுருவிச்செல்வ னென்று உரைப்பர் ஒருசாரார். காற்றோடு காற்றாயும் புகையோடு புகையாயுங் கலந்துசெல்வனென்று உரைத் தலு முண்டு. 'காலெனப் புகையெனக் கலக்கும்' என்று பாடாந்தரம். மணி கொள் - இரத்தினம்பதித்த என்றுமாம்; இந்த அடைமொழியைச் சாளரத்துக் குங் கூட்டலாம். சாளரத்தாள் - பலகணிக்கம்பி. கணி - முதனிலைத்தொழிற் பெயர்; கணித்தல் - குறித்துநோக்குதல். மற்று - வினைமாற்று. (கஙச)

[அநுமான் விபீஷணனது மாளிகையினுட் புகுதல்.]

கஙரு. ஏந்தலிவ்வகையெவ்வழிமருங்கினுமெய்திக்
காந்தண்மெல்விரன்மடந்தையர்யாரையுங்காண்பான்
வேந்தர்வேதியர்மேலுளோர்கீழுளோர்விரும்பப்
போந்தபுண்ணியன்கண்ணகன்கோயிலுட்புக்கான்.

(இ - ள்.) இ வகை - இவ்வாறு, எ வழி மருங்கினும் எய்தி - எவ்வகைப் பட்ட இடங்களிலுஞ் சென்று, காந்தள் மெல் விரல் மடந்தையர் யாரையும் காண்பான் - செங்காந்தள்மலரினிதழ்போன்ற மென்மையான கைவிரல்களை யுடைய மகளிரனைவரையும் பார்த்தற்குரியவனாகிய, ஏந்தல் - பெருமையிற் சிறந்தவனான அநுமான்,—வேந்தர் - அரசர்களும், வேதியர் - அந்தணர்களும், மேல் உளோர் - மேலுலகத்திலுள்ளவர்களும், கீழ் உளோர் - கீழுலகத்திலுள் ளவர்களும், விரும்ப - (தன்னை) விரும்பும்படி, போந்த - பிறந்த, புண்ணியன் - நல்வினைகளையேயுடையவனான விபீஷணனது, கண் அகல் கோயிலுள் - இட மகன்ற மாளிகையினுள்ளே, புக்கான் - சென்றான்; (எ - று.)

சீதையைத்தேடிக் கண்டுபிடிக்கவேண்டி, அவ்விலங்கையிலெங்குமுள்ள மாதர்களையெல்லாம் பார்ப்பவனாயினன் அநுமானென்க. ஏந்தல் - (யாவரி னும்) உயர்ந்தவன்; ஆண்பாற்சிறப்புப்பெயர். காந்தள் என்ற செடியின்பெயர்- முதலாகுபெயராய், அதன் பூவினிதழைக் குறித்தது. அகங்கைமுழுவதுக்கும் காந்தள்மலர் உவமையாகவே, அக்கைவிரலுக்கு அம்மலரினிதழ் உவமையாம். நிறமும் மென்மையும் வடிவும் பற்றிய உவமை. "காந்தண்முகிழ்விரல்", "துணிகதிர்வளைமுன்கைத்தொகுவிரல் செங்காந்தண், மணியரும்பு" என்று முன்னோர்கூறியிருத்தலால், காந்தளரும்பு கைவிரலுக்கு உவமையெனக்கொள் ளவுந்தகும். காண்பான் - பெயர்; காண்பவனாய் என முற்றெச்சமாகக்கொள் ளினும் இழுக்காது.

இராவணனது இளையதம்பியான விபீஷணன் வேதசாஸ்திரங்களிற் கூறிய நற்குணநற்செயல்களையே எப்பொழுதுமுடையவனாய்நின்று யாதோ ருயிர்க்கும் யாதொருதீங்குஞ்செய்யாது ஸர்வஜநமித்ரனாகி மூவுலகத்தார்க்கும் நன்மையேசெய்தல்பற்றி, 'வேந்தர் வேதியர் மேலுளோர் கீழுளோர் விரும்

பப்போந்த புண்ணியன்' என்றார்; மேல் உத்தரகாண்டத்தில் "மன்னுதவத்துப் புலத்தியன்றன் மரபு விளங்க மறைவிளங்கத், தன்னேரில்லாத் தந்தைக்குத் தக்கமகவாய்...........விளங்கும்புகழ்வீடணன் பிறந்தான்", "பொய்யுங்களவும் பாதகமும் பொல்லாவொழுக்கு மவைகடிந்து, மெய்யுந் தயாவுந் தருமமுடன் விளங்கும்பொறையு மிவைபூண்டு, செய்யுஞ்செயல்களவையெல்லாஞ் சிட்டர்செய்யுஞ்செயலாகி, யையன்புகழ்வீடணன் மறைகளறைந்தவறத்தின் வழி நின்றான்" என்றது முதலியவற்றால், விபீஷணனுடைய குணாதிசயங்களைக் காணலாம். அவன் பிரமனிடத்து வரம்வேண்டும்பொழுது 'எனக்கு எவ்வளவுசங்கடம் நேர்ந்தாலும் அதருமத்திற் புத்திசெல்லாதிருக்கவும், எதுசெய்தாலும் அதெல்லாம் தருமத்திற்கிணங்கிப் பயன்படவும் வேண்டும்' என்று இனியவரம் வேண்டிப் பெற்றவாறும் உணர்க. புண்ணியன் - புண்யாத்மா; நல்வினையே ஒருவடிவெடுத்தாற்போன்றவன்; பரிசுத்தமூர்த்தி யெனினுமாம். இவன்வசிக்கிற இடத்தை 'கோயில்' என்றதும் இவனதுசிறப்பை நோக்கியதென்னலாம். அகல் + கோயில் = அகன்கோயில்; லகரம் நிலைமொழியீற்று னகரமாகத்திரிந்தது: "குறில்செறியா லள" என்னும் நன்னூற்சூத்திரத்து 'பிற' என்றமிகையைக் காண்க. 'இவ்வழி யெவ்வழிமருங்கினும்' என்றும் பாடமுண்டு. (கஙஅ)

[அநுமான் விபீஷணனைச் சமீபித்து நோக்குதல்.]

கஙகூ. பளிக்குவேதிகைப்பவளத்தின்கூடத்திற்பசுந்தேன்
றுளிக்குங்கற்பகப்பந்தரிற்கருநிறத்தோரை
வெளித்துவைகுவதரிதெனவெண்ணிறமேவி
யொளித்துவாழ்கின்றதருமமன்னான்றனையுற்றான்.

(இ - ள்.) பசுந் தேன் துளிக்கும் கற்பகம் பந்தரில் - புதுமையான தேனை (மலர்களினின்று) சொரிகின்ற கற்பகவிருக்ஷங்கள் அடர்ந்து நிழல் செய்கின்ற இடத்திலே, பளிங்கு வேதிகை - படிகக்கற்களினாலாகிய மேடைகளையுடைய, பவளத்தின் கூடத்தில் - பவழமயமான அந்தமாளிகையில், கருநிறத்தோரை வெளித்து வைகுவது அரிது என - கருநிறமுள்ளவர்களான இராக்கதர்களின் முன்னிலையில் வெளிப்படையாய்(த் தனக்குரியதான) வெண்ணிறவடிவத்தைக்கொண்டு வாழ்வது கூடாதென்றெண்ணி, அவர் உரு மேவி - அவ்வரக்கர்களுக்குரிய கருநிறவடிவத்தை(த்தானும்) கொண்டு, ஒளித்து வாழ்கின்ற - (அவ்வரக்கர்களை) வஞ்சித்து மறைந்துவசிக்கின்ற, தருமம் - தருமத்தை, அன்னான்தனை - போன்றவனாகிய விபீஷணனை, உற்றான் - சமீபித்து நோக்கினன், (அநுமான்;) (எ - று)

தீவினைகளையே செய்யு மியல்பினனான கும்பகர்ணனைக் கீழ் கஉ௩-ஆஞ் செய்யுளில் "உன்னருந்தீவினை யுருக்கொண்டென்னவே" என்று வருணித்தாற்போல, தருமத்தையே செய்யு மியல்பினனான விபீஷணனை 'தருமமன்னான்' என்றார்; "நல்லறமூர்த்தியன்னான்" என்றாற் போல. "விபீஷணஸ்து தர்மாத்மா" எனப் பலவிடங்களிற் கூறுவர் வால்மீகிபகவானும். தருமம் வெண்ணிற வடிவமுடையது: விபீஷணனோ கருநிறமுடையான்; ஆனது

பற்றி, அத்தருமமானது கருநிறங்கொண்ட அரக்கர்களின்முன் தான் வெளிப் படையாய்த் தனக்குரிய வெண்ணிறவடிவத்தோடு வாழ்த லியலாதென்று எண்ணி அவர்கள்போலவே கருநிறவடிவங்கொண்டு அவர்கட்குத் தெரியாத படி உருக்கரந்து வசித்தாற் போன்றவனென்று கற்பித்தார்; தற்குறிப்பேற்ற வணி. அரக்கர்க்குத் தெரியாதபடி அந்நகரில் வேற்றுவடிவத்தோடு வசிப்பது இயலாதென்பது கருதித் தருமம் தானும் அவ்விராக்கத வடிவமொன்றைக் கொண்டு வசித்தாற் போன்றவ னென்பது கருத்து. அரக்கர்களில் இவனொரு வனே அறவினையாள னென்பது போதரும். 'கருநிறத்தோரை' என்பதை, 'ஒளித்து' என்பதனோடுங் கூட்டுக. வெளித்து - இரட்டுறமொழிதல். 'கரு நிறத்தோர்பால் வெளுத்துவைகுதலரிதென' என்று பிரதிபேதம்.

கற்பகப்பந்தரிற் பவளத்தின் கூடத்தில் வாழ்கின்ற என இயையும். கீழ் ௧0 - ஆஞ் செய்யுளில் "மரமடங்கலுங் கற்பகம்" என்றபடி இராவணனும் இராக்கதர்கள் செய்த பெருந்தவப்பயனால் இலங்கையில் மரங்களெல்லாம் கற்பகமாயிருத்தலால் திவ்வியமானதொரு பூஞ்சோலை, 'கற்பகப்பந்தர்' எனப்பட்டது. "இன்றளிர்க்கற்பகநறுந்தேனிடைதுளிக்கு நிழலிருக்கை" என்றபடி தேவேந்திரனது அரண்மனை அமராவதிநகரத்துக் கற்பகச்சோலையி னிடையே யிருத்தல்போல, ராக்ஷஸேந்திரனான விபீஷணனுழ்வானுடைய திருமாளிகை இலங்கையிற் கற்பகச்சோலையினிடையே யுள்ள தென்க. இனி, பவழமயமான கூடத்திற் படிகமயமான வேதிகையின்மீது தேன் துளிக்கின்ற கற்பகமலர்களா லாகிய பந்தலின்கீழ்ப் பள்ளிகொண்டிருக் கின்றவன் விபீஷண னெனக் கொள்ளினுமாம். உற்றான் - இரட்டுறமொழி தல். உற்றான் - கண்ணுற்றான். ஈற்றடியில் 'தருமமொப்பான்றனை' என்றும் பாடமுளது. (௧௩௬)

[அவனை நல்லனென்று அறிந்து அநுமான் அப்பாற்செல்லுதல்.]

௧௩௭. உற்றுநின் றவனுணர்வைத்தன் னுணர்வினானுணர்ந்தான்
குற்றமில்லதோர்குணமுளனிவனெனக்கொண்டான்
செற்றநீங்கியமனத்தினனொருசிறைசென்றான்
பொற்றைமாடங்கள்கோடியோர்நொடியிடைப்புக்கான்.

(இ - ள்.) உற்று நின்று - (இங்ஙனம் அநுமான் விபீஷணனைச்) சமீ பித்துப்பார்த்து நின்று, அவன் உணர்வை தன் உணர்வினால் உணர்ந்தான் - அவனது அறிவினியல்பைத் தனது நுண்ணறிவுகொண்டு ஆராய்ந்தறிந்து, குற்றம் இல்லது ஓர் குணம் உளன் இவன் என கொண்டான் - குற்றமற்ற நற்குணத்தையேயுடையவ னிவனென்று எண்ணியவனாய், செற்றம் நீங்கிய மனத்தினன் - (அதனால் அரக்கனாகிய அவன்விஷயத்திற்) கோபமில்லாத மனத்தையுடையவனாகி, ஒரு சிறை சென்றான் - (அம்மாளிகையைக்கடந்து) வேறொருபக்கத்திற் சென்று, பொற்றை மாடங்கள் கோடி ஓர் நொடியிடை புக்கான் - மலைபோன்ற [உயர்ந்த பெரிய] ஒருகோடி மாடமாளிகைகளுள் ஒருநொடிப்பொழுதிலே சென்றான்; (எ - று.)

மாடங்கள்கோடி ஓர்நொடியிடைப் புக்கான் - மிகப்பலவீடுகளினுள்ளே அதிவிரைவாகச் சென்று பிராட்டியைத் தேடினனென்க. திருமுருகாற்றுப் படையில் "இகலொடுசெற்றநீக்கிய மனத்தினர்" என்றவிடத்து நச்சினார்க்கினியர் 'பகைமை நெடுங்காலம் நிகழ்வது செற்றம்' என்று உரைத்தது உணரத்தக்கது. அவனுணர்வைத் தன்னுணர்வினு லுணர்ந்தான் - அவனது அறிவின் நல்லியல்பைத் தனதுமதிநுட்பத்தாற் குறிப்பாகவறிந்தன னென்க. 'ஒருதிசைசென்றான்' என்பது, பாடாந்தரம். (௬௨௭)

[அநுமான் இந்திரசித்தின் வீட்டுவாயிலிற் சேர்தல்.]

௬௩௮. முந்தரம்பையர்முதலினர்முழுமதிமுகத்துச்
சிந்துரம்பயில்வாய்ச்சியர்யாரையுந்தெரிந்து
மந்திரம்பலகடந்தவன்மனத்தின்முன்செல்வா
னிந்திரன்சிறையிருந்தவாயிலின்கடையெதிர்ந்தான்.

(இ - ள்.) (அங்ஙனம் கோடிக் கணக்கான மாடங்களில் மிகவிரைந்து புக்கு), முந்து அரம்பையர் முதலினர் - (அவ்விடங்களிலுள்ள) சிறந்ததேவ மாதர்கள் முதலியவர்களான, முழு மதி முகத்து சிந்துரம் பயில் வாய்ச்சியர் யாரையும் - பூர்ணசந்திரன்போன்ற முகத்தையும் செந்நிறம் பொருந்திய வாயையு முடையவர்களாகிய மகளிரனைவரையும், தெரிந்து - பார்த்து (இவர்களில் ஒருத்தியும் சீதையல்ல ளென்று) அறிந்துகொண்டு, மந்திரம் பல கடந்தவன் - அந்தமாளிகைகள்பலவற்றையுஞ் சென்றுகழித்தவனாய், மனத்தின் முன் செல்வான் - தன்மனதின்வேகத்துக்கும் முந்தி [மிகவிரைந்து] அப்பாற் செல்பவனான அநுமான், இந்திரன் சிறை இருந்தவாயிலின் கடை எதிர்ந்தான் - (முன்பு) தேவேந்திரன் சிறைகிடந்த (இந்திரசித்தினது வீட்டின்) கடைவாயிலைச் சேர்ந்தான்; (எ - று.)

மகளிர்முகமண்டலத்துக்குச் சந்திரமண்டலம், கண்டவர்மனத்தைக் களிக்கச்செய்தலில் உவமம். எவ்வளவுதூரத்திலுள்ள பொருளையும் நினைத்த மாத்திரத்தில் மனம் அவ்விடத்துச் சென்றுசேர்தலால், அது, மனோவேகமென விரைவிற்குச் சிறந்ததாக எடுத்துக்கூறப்படும். அதனினும் விரைவாகச் செல்பவனென்பது, 'மனத்தின்முன் செல்வான்' என்பதன் கருத்து. எந்தவிடத்திற் செல்லவேண்டுமென்று எண்ணினாலும் அங்ஙனம் எண்ணுதற்கு முன் அவ்விடத்திற்கு அப்பாற் சென்று சேர்கின்றனன் விரைவினு லென்க.

இராவணன் இராக்கதசேனையுடனே சென்று திக்குவிசயஞ்செய்கையிற் சுவர்க்கலோகத்தையடைந்து இந்திரனையெதிர்த்துப்போர்செய்தபொழுது அவனால் இந்திரனைச்சயிக்கமுடியாமற்போக, அச்சமயத்தில் அவன்மகனான மேகநாதன் மாயையால் மறைந்து பொருது இந்திரனைக் கலங்கச்செய்து அவனை மாயப்பாசத்தாற் கட்டிக்கொண்டுபோய் இலங்கையில் தனதுவீட்டு வாயிலிற் சிறைவைத்துப் பிறகு சிறைமீட்கவந்த பிரமனால் 'இந்திரஜித்' என்று ஒருசிறப்புப்பெயரிடப்பெற்றன னென்ற வரலாற்றுவிவரத்தை உத்தரகாண்டத்திற் காணலாம். ஆனதுபற்றி, அவன்மனைவாயில், 'இந்திரன்சிறையிருந்த வாயில்' எனப்பட்டது. கடைவாயிலெனினும், தலைவாயிலெனினும்

ஒக்கும்; முன்வாசல். இனி, வாயிலின்கடை - வாயிலின் இட மென்றலுமாம். எதிர்ந்தான் என்பது, நோக்கினனென்றும் பொருள்படும். 'கடந்தனன்' என்று சிலபிரதிகள். (௧௱௮)

[அநுமான் அவ்வாயிலில் மிகப்பலஅரக்கரின் பாதுகாவலைக் கடந்து உட்செல்லுதல்.]

௧௱௯. எதியேந்திய தடக்கையர்பிறையெயிறிலங்க
முதுரைப்பெருங்கதைகளும்பிதிர்களுமொழிவா
ரோதிலாயிரமாயிர முணர்விலியரக்கர்
காதுவெஞ்சினக்களியினர்காவலைக்கடந்தான்.

(இ - ள்.) எதி ஏந்திய தட கையர் - வாள்முதலிய ஆயுதங்களைக் கொண்ட பெரிய கைகளையுடையவர்களும், பிறை எயிறு இலங்க - பிறைச்சந்திரன் போன்ற வக்கிரதந்தங்கள் வெளியேவிளங்க [சிரித்தமுகத்தோடு], முதுஉரை பெருங் கதைகளும் பிதிர்களும் மொழிவார் - பழமொழிகளுடனே பெரிய சரித்திரங்களையும் விடுகதைகளையும் சொல்லிக்கொண்டிருக்கின்றவர்களும், காது வெம் சினம் களியினர் - (பகைவரைக்) கொல்லவல்ல கொடிய கோபத்தினாலாகிற யுத்தோற்சாகத்தையுடையவர்களுமான, ஓதில் ஆயிரம் ஆயிரம் உணர்வு இலி அரக்கர் - அளவுசொல்லுமிடத்து ஆயிரத்தாற்பெருக்கிய ஆயிர மென்னுந்தொகையுள்ள அறிவற்ற இராக்கதர்களின், காவலை - பாதுகாவலை, கடந்தான் - (அவ்விந்திரசித்தின்வீட்டுவாயிலிற் கடந்து அதனுள்ளே சென்றனன், (அநுமான்); (எ - று.)

முதுரை - முதுமொழி; அதனிலக்கணம் - "நுண்மையுஞ் சுருக்கமு மொளியுடைமையு, மென்மையு மென்றிவை விளங்கத் தோன்றிக், குறித்த பொருளை முடித்தற்கு வரூஉ, மேது நுதலிய முதுமொழி யான" எனத் தொல்காப்பியத்திற் காண்க. பெருங்கதை - தேவாசுரயுத்தம், க்ஷீராப்தி மதநம், பூர்விகராக்ஷசர்வரலாறு போல்வன. பிதிர் - ஒருசமயத்திற் கம்பர் ஒளவையாரைநோக்கி "ஒருகாலடீ நாலிலைப்பந்தலடீ" என்றுசொல்லி 'இதன் பொருளென்' என்று வினவியதும், அதற்கு ஒளவையார் "ஆரையடா சொன்னது" என்று விடைகூறியதும் போல்வன; (ஆரைக்கீரைமுதலின் காம்புகள் நான்குபிளவுபட்ட இலையையுடையனவாயிருக்கும்.) இராவணன் எதிரின்றி அரசாட்சிசெய்கின்ற அக்காலத்தில் அவன்மகனும் அவனினும் வலியவனுமான இந்திரசித்துக்கு மாறாய்த் துணிவுகொண்டு அவன்வீட்டு வாயிலினுட் செல்லவல்லவரொருவருமில்லையாகவே, அவ்வாயில்காவலர்க்குத் தம் கருமத்திற் கருத்துவைக்கவேண்டிய அவசியமில்லையாதல்பற்றி, அவர்கள் விநோதமாகப் பழமொழிகளையும் பெருங்கதைகளையும் பிதிர்களையும் ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டு பொழுதுபோக்குவரென்க.

ஆயிரமாயிரம் - பண்புத்தொகை. நூறாயிரம் - லக்ஷம்; ஆயிரமாயிரம் - பத்துலக்ஷம் எனக் காண்க. களி - போர்வெறி; கட்குடியினாலாகிய களிப்புமாம். அரக்கர் காது வெஞ்சினக் களியினர் காவல் - இராக்கதர்கள் எதிரிகளையழிக்குங் கொடுங்கோபத்தையும் போருக்கத்தையு முடையவர்களாய் அவ்

வாயிலிற் கடுமையாகப் பாதுகாவல்செய்து நிற்கின்ற நிலை. 'உறுவலியரக்கர்' என்றும் பாடமுண்டு. 'மூரண்வலி' என்று பாடங்கற்பித்தல், மோனைத் தொடைக்கு முரணும். (௬௩)

[அநுமான் இந்திரசித்தைப் பார்த்தல்.]

௬௪. முக்கணோக்கினன் முதன்மகனறுவகைமுகனுந்
திக்குநோக்கியபுயங்களுஞ்சிலகரந்தனையா
னொக்கநோக்கியர்குழாத்திடையுறங்குகின்றானைப்
புக்குநோக்கினன்புகைபுகாவாயிலும்புகுவான்.

(இ - ள்.) முக் கண் நோக்கினன் முதல் மகன் - மூன்று கண்களாற் பார்க்குமியல்பினனான பரமசிவனது சிறந்தகுமாரனாகிய முருகக்கடவுள், அறுவகை முகனும்-(தனக்கு)இயல்பாயுள்ள) ஆறுமுகங்களிலும், திக்குநோக்கிய புயங்களும் - திக்குக்களையளாவி வளர்ந்துள்ள (பன்னிரண்டு) தோள்களிலும், சில கரந்து அனையான் - சிலமறையப்பெற்றுவந்தாற் போன்றவனாய், ஒக்க நோக்கியர் குழாத்திடை உறங்குகின்றானை - (தனது அழகுக்குச்) சமமாக அழகுள்ளவர்களாகிய மாதர்களின் கூட்டத்தினிடையே தூங்குகின்றவனை இந்திரசித்தை, புக்கு நோக்கினன் - (அவன் வீட்டினுள்ளே) போய்ப் பார்த்தான்: (யாவனெனின்,—) புகை புகா வாயிலும் புகுவான் - புகைநுழையமாட்டாத வழியிலும் நுழைந்துசெல்லவல்லனான அநுமான்; (எ - று.)

சிவபிரானது இளையகுமாரனான முருகக்கடவுள், அழகிலும் பலபராக்கிரமங்களிலுஞ் சிறத்தலால், அவ்வியல்புகளில் இளவீரர்க்கு உவமைகூறப்படுவன். இராவணன்மகனும் மகாவீரனுமான இந்திரசித்து ஒருமுகத்தையும் இருகைகளையுமே யுடையனாயிருத்தலால், அவனை, 'ஆறுமுகங்களையும் பன்னிரண்டுகைகளையு முடையனான சுப்பிரமணியமூர்த்தி தனதுமுகங்களிலைந்தையும் கைகளிற் பத்தையும் மறைத்துக்கொண்டு ஒருமுகத்துடனும் இரண்டு கைகளுடனும் வந்தாற் போன்றனன்' என வருணித்தார்: தற்குறிப்பேற்றவணி.

முக்கண்நோக்கினன் - முகக்கணிரண்டோடு நெற்றிக்கண்ணொன்றையும் விழித்துப்பார்ப்பவன்; த்ரிநேத்ரன். கண் நோக்கு என்றவற்றை ஒருபொருட் பன்மொழியெனக்கொண்டு உரைக்கவுந்தகும். தேவசேனாபதியாய்த் தீயோரை யழித்து நல்லோரைக்காத்துப் புகழ்பெருமைகள்படைத்து அழகிலும் ஆற்றலிலுஞ் சிறத்தலால், முருகக்கடவுள், 'முதன்மகன்' எனப்பட்டான்; அன்றியும், சுப்பிரமணியனைத் திரிமூர்த்திகளினும் மேம்பட்டவனென்பது, அவனைத் தெய்வமாகக்கொண்ட கௌமாரசமயத்தாரது கொள்கை: அதனைத் திருமுருகாற்றுப்படையில் "பலர்புகழ்மூவருந் தலைவராக" என்றது முதலியவற்றாலுணரலாம்: அந்தந்தத் தேவரைக்குறித்துப் பிரஸ்தாபிக்கும்போது, அவ்வவரைத் தலைமைத்தெய்வமாகக் கொள்பவரது கோட்பாட்டின்படி சிறப்பித்துக் கூறுதல் மகாகவிகளியல்பாதலால், அதுபற்றி 'முதன்மகன்' என்றன ரெனலுமாம். இனி, "சுரன்முதல் வந்த வுரன்மாய் மாலை" என்றவிடத்துப்போல 'முதல்' என்பதை ஏழனுருபெனக்கொண்டு, முக்கணோக்கினனிடத்து(த்

தோன்றிய) மகனென்று உரைத்தலுமொன்று; அன்றி, முக்கண்நோக்கின் - மூன்றுகண்களையுடைய, நல் முதல் - சிவபிரானாகிய நல்ல தலைவனது, மகன் - குமாரனான முருகன் என்று பொருள்கூறினும் அமையும்: முதலென்னுஞ் சொல் முதல்வனென்னும் பொருளதாதலை, "சூர்முதல்தடிந்த" எனத் திருமுருகாற்றுப்படையிலுங் காண்க. முக்கணோக்கினனாகிய முதல்வனது மகனென்றும் பதவுரைகூறலாம். சிவபிரானது மூன்றாவதாவிழியாகிய நெற்றிக் கண்ணினின்று தோன்றிய அனற்பொறிகளே முருகக்கடவுளாயின வென்ற வரலாறு குறிப்பாய்த்தோன்ற, 'முக்கணோக்கினன் முதன்மகன்' என்றனனென்னலாம்.

"மாயிருண்ஞால மறுவின்றி விளங்கப், பல்கதிர்விரிந்தன் றொருமுகமொருமுகம், ஆர்வலரேத்த வமர்ந்தினிதொழுகிக், காதலினுவந்து வரங்கொடுத்தன்றே யொருமுகம், மந்திரவிதியின் மரபுளிவழாஅ, வந்தணர்வேள்வியோர்க்கும்மே யொருமுகம், எஞ்சியபொருள்களை யேமுறநாடித், திங்கள் போலத் திசைவிளக்கும்மே யொருமுகம், செறுநர்த்தேய்த்துச் செல்சமமுருக்கிக், கறுவுகொணெஞ்சமொடு களம்வேட்டன்றே யொருமுகம், குறவர்மடமகள் கொடிபோல்நுசுப்பின், மடவரல் வள்ளியொடு நகையமர்ந்தன்றே யாங்கம், மூவிருமுகனு முறைநவின்றொழுகலின்" என்ற திருமுருகாற்றுப்படையின்படி முருகக்கடவுளின் ஆறுமுகங்களும் தனித்தனி ஒவ்வொரு குறிப்புவிளங்க விருத்தல் தோன்ற, 'அறுவகைமுகன்' எனப்பட்டது. "மண்ணளவு பாதலமெலாஞ் சரண மாதிரவரைப்பு மிகுதோள், விண்ணளவெலா முடிகள்" என்றபடி முருகக்கடவுள் விசுவரூபங் கொள்ளுமிடத்து அவன் தோள்கள் திசைகளை யளாவி வளர்தலால், 'திக்குநோக்கியபுயங்கள்' என்றார்.

'நோக்கியர்' என்பதில், நோக்கு - கண்டாரால் விரும்பப்படுந் தன்மை: எனவே, அழகாம். ஒக்கநோக்கியர் - உருவம் குணம் குலம் செல்வம் முதலியவற்றில் இந்திரசித்தோடு ஒப்புமையுடைய மாளி ரென்னலாம். ஒக்க என்ற செயவெனெச்சம், 'நோக்கியர்' என்ற பெயரிற் பொதிந்துநின்ற 'உடையவர்' என்பதைக் கொள்ளும். "யாருமறிவர் புகைநுட்பம்" என்றபடி புகை மிகநுண்ணிய துவாரத்திலும் உட்புகுமியல்பின தென்பது வெளிப்படையாதலால், அதுபுகமாட்டாத சிறுவழியினுள்ளும் புகுபவனென, அநுமானது அணிமாவென்னுஞ் சித்தியின் காரியத்தை விளக்கினர். 'புகைபுகாவாயில்' என்ற சொற்சேர்க்கையால், எவ்விடத்தும் நுண்ணிதாய்ப்புகு மியல்பினதாதல்பற்றித் தூமத்துக்குப் புகையென்று பெயர் வந்ததென்ற காரணக்குறிப்புத் தோன்றுதல் உணர்க; "புகுமே புகையும், புகற்கரிய பூழை நுழைந்து" என்ற நாலடியாரிலும் இதுகாண்க. (கசo)

[அவனது உருவத்தோற்றத்தால் அவன்பக்கத்து அநுமன் பெருமதிப்புக் கொள்ளுதல்.]

கசக. வலையும்வாளெயிற்றரக்கனேகணிச்சியான்மகனோ
வலையில்வாளரியனையவன்யாவனோவறியே

னிளையவீ ரனுமேந்த லுமிருவரும்பலநா
ளுளையவுள்ளபோரிவனொடுமுளதெனவுணர்ந்தான்.

(இ - ள்.) அளையில் வாள் அரி அனையவன் - மலைக்குகையினுள் வாழ்கின்ற கொடிய சிங்கம் போன்றவனான இவன், — வளையும் வாள் எயிறு அரக்கனோ - வளைந்திருக்கின்ற பிரகாசமுள்ள கோரப்பற்களையுடைய இராக்கத குமரனோ? கணிச்சியான் மகனோ - மழுவாயுதத்தையுடையவனான சிவபிரானது குமாரனாகிய முருகக்கடவுளோ? யாவனோ யாரோ? அறியேன் - (நான்) அறிகின்றேனில்லை; இளைய வீரனும் - இளையபெருமாளும் [இலக்குமணனும்], ஏந்தலும் - தலைவனான இராமபிரானும், இருவரும் - ஆகிய இவ்விருவர்க்கும், பல நாள் - அநேகநாள், உளைய - சிரமமுண்டாம்படி, உள்ள - உளதாகின்ற, போர் - யுத்தம், இவனொடும் உளது - இவனோடும் உண்டாகும், என - என்று, உணர்ந்தான் - ஊகித்தனன், (அநுமான்); (எ - று.)

இருப்பிடம்பற்றியும் கோரதந்தமுடைமைபற்றியும் அரக்கனெனத்தக்கானாயினும் கம்பீரமான தோற்றத்தில் முருகவேள் போன்றிருத்தலால், ஐயத்துக்கு இடமாயிற்று. கீழ்ச்செய்யுளின் முன்னிரண்டடி - கவிக்கூற்றும், இச்செய்யுளில் 'கணிச்சியான்மகனோ' என்றது - அநுமானது உட்கோளுமாதலால், அதனோடு இது மாறுகொளக்கூறலாகாது. பிறகு இராமலக்குமணரிருவரும் இங்குவருப்போது இவனுடன் நெடுநாள் வருந்திப் பெரும்போரியற்றினால் இவனை வெல்லுதல்கூடுமேயன்றி எளிதில்வெல்ல இயலாதென்று, இவனதுதோற்றத்தால் ஆற்றலை உள்ளபடி கருதலாயினன், ஊகித்தலிற்சிறந்த நுண்ணுணர்வையுடைய அநுமனென்க. இங்ஙனமே பின்னர் இவனுடன் இருவர்க்கும் பெரும்போர்விளைதலை, மேல் யுத்தகாண்டத்திற் காணலாம். இளையவனான இவனுக்கு எற்றஎதிரி இளையபெருமாளேயென்று கருதியமை தோன்ற அவ்விளையவீரனை முதலிலெடுத்துக் கூறினனென்னலாம்; இந்திரசித்து இளையபெருமான்கையால் மாய்வதை யுத்தகாண்டத்திற் காண்க. பாசு [சோடாலி], சூலமென்ற படைக்கலங்களுக்கும் கணிச்சியென்றுபெயருண்டு; அவையும், சிவபிரானுக்கு உரியன. 'அளையில் வாள் அரி அனையவன்' என்பதற்கு - புற்றினுள்ளேவாழ்கின்ற கொடியநாகம் போன்றவனென்று பொருள் கூறலுமாம். 'வாழரி' என்பதும் பாடம். இச்செய்யுளின் ஈற்றடி, 'உளையும் வெஞ்சமமிவனுடனுளதென வுணர்ந்தான்' என்று சிலபிரதிகளிற் காணப்படுகின்றது.

(௯௪௧)

[இதுவும் அது.]

௧௪௨. இவனையின் றுணையுடையபோரிராவணனென்னோ
புவனமூன்றையும்வென்றதோர்பொருளெனப்புகறல்
சிவனைநான்முகத்தொருவனைத்திருநெடுமாலா
மவனையல்லவர்நிகர்ப்பவரென்பதுமறிவோ.

(இ - ள்.) இவனை - இத்தன்மையனான பெருவீரனை, இன் துணை உடைய- (தனக்கு) இனிமையைச்செய்யும் போர்த்துணைவனாகப் பெற்றுள்ள, போர் இராவணன் - தானும் போர்செய்தலில் தேர்ந்த இராவணன், புவனம் மூன்

றையும் வென்றது - மூன்றுஉலகங்களையும் வெற்றிகொண்டதை, ஓர்பொருள் என புகறல் - அரியதொருசெயலாகப் பாராட்டிக் கூறுதல், என்னே - எங்ஙனம் அமையும்! சிவனை - சிவபிரானையும், நால் முகத்து ஒருவனை - நான்கு முகங்களையுடைய ஒருமூர்த்தியான பிரமனையும், திரு நெடுமால் ஆம் அவனை, திருமகள்கணவனான மகாவிஷ்ணுவாகிய அம்முதற்கடவுளையும் [ஆகிய திரிமூர்த்திகளையும்], அல்லவர் - அல்லாத மற்றையோர், நிகர்ப்பவர் - (இவனை) ஒப்பவராவர், என்பதும் - என்றுசொல்வதும், அறிவோர் விவேகத்தின்காரியமாகுமோ? [ஆகாதென்றபடி]; (எ - று.)

இவன் அளவற்ற பலபராக்கிரமங்களை யுடையவனென்பதை இவனது கம்பீரமான தோற்றங்கொண்டு உணர்ந்தனனாதலால், இத்தன்மையனான மகாவீரன் போர்த்துணைவனாயிருக்கின்றபோது இராவணன் மூன்றுலகத்தாரையும்வென்றது ஒருபெருங்காரியமாகப் பாராட்டத்தக்கதன்றென்றுஎண்ணினன் அநுமன். தனித்தனியேனும் ஒருங்குசேர்ந்தேனும் திரிமூர்த்திகள் இவனுக்கு உவமையாதலுண்டேயன்றி, மற்றையோரை இவனுக்கு உவமையாகக்கற்பித்தல் அடாது என்பது. பின்னிரண்டடிகளின்கருத்து மூன்றாமடியிற்கூறிய திரிமூர்த்திகளின் முறைமை, காரியகாரணக்கிரமம்பற்றியதென்பர். 'திருநெடுமாலாம் அவன்' என அகரச்சுட்டாற் குறித்தது, சிறப்புப்பற்றி. திருநெடுமால் - ஸ்ரீமகாவிஷ்ணு.

புவனம் - இடவாகுபெயர். வைசேடிகர் பொருள் பண்பு தொழில் சாதி விசேடம் இயைபு என்பவற்றை அறுவகைப்பொருளென்றாற் போல, இங்குச் செயல் பொருளெனப்பட்டது. இச்செய்யுளின் நான்காமடி, 'அவனையல்லது நிகர்பிறரென்பதுமறிவோ' என்று சிலபிரதிகளி லுள்ளது. (க௪௨)

[இந்த வீணேநிற்பது தகுதியன்றென்று அநுமன் அப்பாற்செல்லுதல்.]

க௪௩ என்றுகைம்மறித் திடைநின்றுகாலத்தை யிகப்ப
தன்றுபோவதென் றாயிரமாயிரத் தடங்காத்
துன்றுமாளிகை யொளிகடுரிசறத் துருவிச்
சென்றுதேடினனிந்திரசித்தினைத் தீர்ந்தான்.

(இ - ள்.) என்று - என்றுநினைத்து, கைமறித்து - கையைமடக்கித் தாடையில் வைத்துக்கொண்டுவியந்து,—'இடை நின்று காலத்தை இகப்பது - இவ்விடத்தில்நின்று வீணேபொழுதுகழிப்பது, அன்று - தகுதியன்று: போவது - அப்பாற்செல்வதே (காரியம்),' என்று - என்றுஎண்ணி, இந்திரசித்தினை தீர்ந்தான் - இந்திரசித்தைவிட்டு அப்பாற்சென்றவனாய்,—ஆயிரம்ஆயிரத்து அடங்கா - பத்துலக்ஷமென்ற அளவிலும் அடங்காத, துன்றுமாளிகை - நெருங்கியவீடுகளின், ஒளிகள் - வரிசைகளில், துரிசு அற துருவி - (ஐயந்திரிபுகளாகிய) குற்றங்களில்லாதபடி (பிராட்டியைத்) தேடிக்கொண்டு, சென்று—, தேடினன் - (பின்னும்) தேடுபவனானான்; (எ - று.)

கைம்மறிப்பது ஒருபொருளைக்குறித்து ஆச்சரியப்படும்போது நிகழுங் குறிப்பாதல், கடல்தாவுபடலத்தின் கூ௨ - ஆஞ் செய்யுளிலுங் கூறப்பட்டது.

இனி, கைம்மறித்தல் - எதிர்மறுத்தற்குறியுமாம்; அங்கும் இங்ஙனங் காண்க. 'போவது' என்பதை வியங்கோள்முற்றாகவுங் கொள்ளலாம். துரிசு - குற்றம். "கற்க கசடற" என்றவிடத்து 'கசடு' என்பதுபோல. இங்குக் குற்றம் - சந்தேகவிபரீதங்கள். இந்திரசித்து - இராவணனுக்கு மந்தோதரியென்னும் பிரதானபத்தினியிடம் பிறந்த மூத்தகுமாரன்: இவனது இயற்பெயர், மேகநாதனென்பது; இவனுக்கு 'இந்திரசித்' என்ற பெயர், இந்திரனைச் சிறைமீட்க வந்த பிரமனளித்தது. இச்செய்யுளின் மூன்றாமடி, 'துன்றுமாளிகை துரிசறத்துருவினன்றொடர்ந்து' எனவும் வழங்குகின்றது. (கசங)

[அக்ஷன் அதிகாயன் முதலியோரது வீடுகளை அநுமான் கடத்தல்.]

கசச. அக்கன்மாளிகைகடந்துபோய்மேலதிகாயன்
றொக்கக்கோயிலும்பொருநர்களில்லமுந்துருவித்
தக்கமந்திரத்தலைவர்கண்மனைகளுந்தாவிப்
புக்குநீங்கினனிராகவன்கழலெனப்புகழோன்.

(இ - ள்.) அக்கன் மாளிகை கடந்து போய் - அக்ஷகுமாரனது வீட்டைக் கண்டு கழித்துச்சென்று,— மேல் - அதற்குமப்பால், அதிகாயன் தொக்க கோயிலும் - அதிகாயனென்பவன் பொருந்திவசிக்கின்ற சிறந்தவீட்டிலும், பொருநர்கள் இல்லமும் - (மற்றும்பல) போர்வீரர்களுடைய வீடுகளிலும், துருவி - (பிராட்டியைத்) தேடி,— தக்க மந்திரம் தலைவர்கள் மனைகளும் - தகுதியான ஆலோசனைக்குரிய தலைவர்களாகிய மந்திரிகளுடைய வீடுகளிலும், தாவி புக்கு - குதித்து உட்புகுந்தேடி, நீங்கினன் - மீள்பவனாயினான்:—(யாவனெனில்,—) இராகவன் கழல் என புகழோன் - இராமபிரானது திருவடியென்று கீர்த்திபெற்றவனான அநுமான்; (எ - று.)

எக்காலத்தும் எம்பெருமானுக்கு வாகனமாய்நின்று பணிவிடைபுரியுங் கருடாழ்வான்போலன்றி அநுமான் இராமாவதாரத்தில்மாத்திரம் வாகனமாய் நின்று பணிவிடை புரிதலால், அநுமானுக்கு 'சிறியதிருவடி' என்று ஒரு திருநாமம் வைஷ்ணவசம்பிரதாயத்தில் வழங்கும்; அப்பெயரை 'திருவடி' என்றே வழங்குதலு முண்டு: 'திருவடி' என்ற பொதுப்பெயர் இங்குச் சிறப்பாய்ச் சிறியதிருவடியைக் குறித்த தென்னலாம். வில்லிபுத்தூரார் பாரதத்தில் "திருவடி தன்னிரு சேவடியிற்போய்" என்பதையும், கிஷ்கிந்தாகாண்டத்தில் "பொருவருவேலைதாவும் புந்தியான் புவனந்தாய, பொருவடிவுயர்ந்த மாயோன் மேக்குறப்பெயர்ந்ததாள்போல், உருவறிவடிவினும்ப ரோங்கினனுவமையாலுந், திருவடியென்னுந்தன்மை யாவர்க்குந்தெரியநின்றான்" என்றதையும், இக்காண்டத்தில் மேல் 'திருவடிதொழுதபடலம்' என்பதையும் காண்க. திருவடி - திருவடித்தொண்டனென்றபடி. 'இராகவன்கழலெனப் புக்குநீங்கினன் புகழோன்' என்பதற்கு - திருமாலாகிய இராமபிரானது திருவடி (திரிவிக்கிரமாவதாரத்தில் எங்கும் பரவிச்சென்று மீண்டமை) போலக் கருதியவிடங்களிலெல்லாம் புக்கு நீங்கினன் கீர்த்திமானான அநுமானென்று பொருள்கூறலுமாம்.

அக்ஷன் - இந்திரசித்தினது தம்பி; மந்தோதரியினிடம் பிறந்த இளைய குமாரன். அதிகாயன் என்ற பெயர் - பெரிய உடம்புடையவனென்று பொருள்படும்; இவனும் இந்திரசித்தின் தம்பியே: இராவணனுக்குத் தான்யமாலினியென்னும் மனைவியினிடம் பிறந்தவன் இவன்; பூர்வத்தில் திருமாலாற் கொல்லப்பட்ட மதுகைடப ரென்னும் அசுரரிற் கைடபனது அம்சமானவன்: (கும்பகர்ணன், மதுவின் அம்சம்) தாவிப்புக்கு நீங்கினான் - கடந்து சென்று அப்பாற்போயினனெனினுமாம். 'இராகவன்கணையென' என்று பாடமோதி, இராமபாணம்போல (அதிவேகமாய்) என்று உரைப்பாருமுளர். 'தொக்க கோயிலுந் தம்பியரில்லமுந் துருவி,' 'மனைகளுந்தடவி,' 'இராகவன்சரமென' என்பன, பாடபேதம் (கசச)

[அநுமான் மற்றும் அந்தரங்கமானவிடங்களில் தேடக்கருதி நடுவகழியைச் சார்தல்.]

கசரு. இன்னராமிரும்பெரும்படைத்தலைவர்களிருக்கைப்
பொன்னின்மாளிகையாயிரகோடியும்புக்கான்
கன்னிமாநகர்ப்புறத்தகன்கரந்துறைகாண்பான்
சொன்னமூன்றினுநடுவணத்தகழியைத்தொடர்ந்தான்.

(இ - ள்.) இன்னர் ஆம் - இத்தன்மையரான, இரும் பெரும் படை தலைவர்கள் - மிகப்பெரிய சேனைகளின் தலைவர்கள், இருக்கை - இருக்கின்ற இடமாகிய, பொன்னின் மாளிகை ஆயிரகோடியும் - பொன்னினாலமைந்த ஆயிரகோடிக்கணக்கான வீடுகளிலும், புக்கான் - போய்(ச் சீதையை)த் தேடிய வனான அநுமான்,—கன்னி மா நகர் புறத்து - அழிவற்ற பெரிய அவ்விலங்காபுரியினிடத்து உள்ள, அகல் கரந்துறை - பரந்த மறைவிடமான இராவணனரண்மனையை, காண்பான் - பார்த்தற்பொருட்டு, சொன்ன மூன்றினும் நடுவணது அகழியை தொடர்ந்தான் - (சிற்பசாஸ்திரங்களிற்) கூறப்பட்டுள்ள மூன்று அகழிகளுள்ளும் நடுவிடத்திலுள்ளதான அகழியைச் சார்ந்தான்; எ-று.

புறநகர் இடைநகர் அகநகர் என்று நகரம் மூன்றுபகுப்பினதாக அமைக்கப்படும். அப்பகுப்பு ஒவ்வொன்றையுஞ் சூழ மதிலும் அதனைச்சார அகழியும் உண்டு. இங்ஙனம நூற்கொள்கையமைந்திருத்தலால், 'சொன்ன மூன்று' எனப்பட்டது. இனி, சொன்ன - சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற எனினுமாம். இலங்கையிற் புறநகரத்துமதிலைச் சார்ந்த அகழி, கடலேயாக இயல்பில் அமைந்தது; கீழ் கூஉ-ஆஞ் செய்யுளில் "ஆழியகழாகவரிதாய்......ஊழிதிரிநாளுமுலையா மதில்" என்றது காண்க. இது, இயற்கைஅரண்: மற்றவை-செயற்கை. அநுமான் அந்தப் புறவகழியையும் அதற்குஉள்ளிட்ட புறமதிலையுங் கடந்து புறநகரி லெங்கும் பிராட்டியைத் தேடியதை இதுவரையிற்கூறிய கவி, இனி அவ்வநுமான் அதற்கு உள்ளடங்கிய இடைநகர் அகநகர்களிற் சென்று தேடக் கருதி இடைநகரைச் சூழ்ந்த மதிலைச் சார்ந்துள்ள அகழியையடுத்தமை இங்குக் கூறினார். (அகநகரின் அகழிமதில்கள், மேல் கககக - ஆஞ் செய்யுளிற் கூறப்படும். ஆகவே, மூன்றுங் கூறினாராயிற்று.)

இராவணன் கோட்டை யென்று பிரசித்தமாகக்கூறும்படி இராவணன் வசிக்கின்ற இடம் புறத்தவர் அகத்துவருதலும் அகத்தவர் புறத்திற்செல்லுதலும் எளிதிலியலாதபடியும், இன்னவிடத்தி லின்னதன்மையதா யுள்ளதென்று புறநாட்டவர் எளிதிற் கண்டுணரலாகாதபடியும் அமைந்திருத்தல் பற்றி, 'கரந்துறை' எனப்பட்டது. கரந்துறை - கரந்து உறை; மறைவாயிருப்பது என்று பொருள். அவ்விடம், விசாலமாயிருத்தலால், 'அகன்கரந்துறை' என்றார். நகர்ப்புறத்து - நகரில்; புறம் - ஏழனுருபு: "உள் அகம் புறம் இல் இடப்பொருளுருபே" என்றார் நன்னூலாரும். இனி, நகர்ப்புறத்து - புறநகரத்திலிருந்து, நடுவணது அகழியைத் தொடர்ந்தான் என்றலுமாம். இப்பொருளில், புறநகர் நகர்ப்புறமென மொழிநிலைமாறியது, இலக்கணப்போலி. இனி, 'கரந்துறை' - சுருங்கை யெனப்படுகின்ற கரந்தகற்படை யென்று கொண்டு, பின்னிரண்டடிகளுக்கு - புறநகரத்திலிருந்து செல்லும் அகன்ற கரந்தகற்படையையுமுட்படப் பார்த்துச்செல்பவனான அநுமான் அந்நீர்வருவழியால் இடையகழியைச்சேர்ந்தன னென்றலு மொன்று; "நீணிலம்வகுத்து நீர்நிரந்துவந்திழிதரச், சேணிலத்தியற்றிய சித்திரச்சுருங்கை சேர், கோணிலத்துவெய்யவாங்கொடுஞ்சுறத்தடங்கிடங்கு" என்ற சிந்தாமணியும் 'நீர்நிரந்து வந்திழியும்படி நீணிலத்தைவெட்டிப் புறமதிலகழ்தொடங்கிப்படுத்த வழி சேர்ந்த கிடங்கு' என்ற அதனுரையும் காணத்தக்கன.

கன்னி - அழிவின்மை. இனி, கன்னி மாநகர் - கன்னிகைபோல எவருஞ்சேரவொண்ணாத மிக்க பாதுகாவலையுடைய பெருநகரமெனினுமாம்; தூர்க்கைபோலப் பாதுகாப்பையுடைய மகாநகர மென்றலுமாம். நடுவணது + அகழி - நடுவணத்தகழி; உயிர்த்தொடர்க்குற்றியலுகரத்தில் தகரவொற்றுச் சிறுபான்மை இரட்டிற்று: 'எருத்துமாடு' என்றாற் போல: "நெடிலோ டுயிர்த்தொடர்" என்ற நன்னூற்சூத்திரத்து 'மிகவே' என்பதைக் காண்க. அகழப்பட்டது அகழி யெனக் காரணக்குறி; அகழ் - பகுதி: அகழ்தல் - தோண்டுதல். ஆயிர கோடி - ஆயிரமாகிய கோடி யெனப் பண்புத்தொகை; ஆயிரத்தாற் பெருக்கிய கோடியென்பது கருத்து. இத்தொடரில் வருமொழி வடசொல்லாதலின், வலி இயல்பாயிற்று.

'கன்னிமாமதிற்புறத்தவன்கரந்துறைகாண்பான், சொன்னமூன்றினுணடுவணதகழியைத்தொடர்ந்தான்' என்ற பாடமும் உண்டு. (கச௩)

[அவ்வகழியின்பரப்பை அநுமான் நோக்குதல்.]

கசச. தனிக்கடக்களிறெனவொருதுணையிலான்றூய
பனிக்கடற்பெருங்கடவுடன்பரிபவந்துடைப்பா
னினிக்கடப்பதன்றேழ்கடல்கிடந்ததென்றிசைத்தான்
கனிக்கடற்கதிர்தொடர்ந்தவனகழியைக்கண்டான்.

(இ - ள்.) தனி கடம் களிறு என - ஒப்பற்ற மதயானை போல, ஒரு துணை இலான் - ஒருதுணையையும் வேண்டாதவனும், கடல் கதிர் - கீழ்கடலினின்று உதித்த சூரியனை, கனி தொடர்ந்தவன் - பழமென்றுகருதி(ப் பிடித்தற்கு)ப் பாய்ந்தவனுமான அநுமான்,—அகழியை கண்டான் - அந்த இடை

நகரகழியைப் பார்த்து,—'தாய - (என்னால்) தாண்டப்பட்ட, பனி கடல் - குளிர்ச்சியான கடலாகிய, பெருங் கடவுள்தன் - பெரிய தேவனுக்கு (யான் தாண்டியதனால்) நேர்ந்த, பரிபவம் - அவமானத்தை, துடைப்பான் - நீக்குதற் பொருட்டு, இனி கடப்பது அன்று ஏழ் கடல் கிடந்தது - இனி (என்னால்) தாண்டமுடியாததாய் ஏழுகடலும் ஒருசேர இவ்வாறு இயைந்துகிடந்தது,' என்று இசைத்தான் - என்று (தனக்குட்) சொல்லிக்கொண்டான்; (எ - று.)

ஜம்பூத்வீபத்துக்கும் இலங்கைத்தீவுக்கும் இடையிலுள்ளதும், உவர்க் கடலின் ஒருபகுதியும், எளிதிலேவருங்கடக்கவியலாததுமான கடலைத் தான் எளிதிற்கடந்ததைப்பற்றி அக்கடலாசனாகிய வருணனுக்கு நேர்ந்த அவமானத் தைப் போக்கவேண்டு மென்ற கருத்தினால், தான் அங்ஙனம் இனித்தாண்ட முடியாதபடி ஏழுகடல்களும் ஒருங்குகூடி இவ்வாறு இருந்ததாகு மென்று, அவ்விடை நகரகழியாகிய நீர்நிலையின் அருமைபெருமைகளை மனத்திற் பாராட்டினனாறும் மென்பதாம்; தற்குறிப்பேற்றவணி. வடமொழியில் வருணனுக்கு மஹாதேவனென்று ஒருபெயர் வழங்குதலால், அதன்மொழி பெயர்ப்பாக இங்கு அவனை 'பெருங்கடவுள்' என்றார். அவனுக்கு அப்பெயர மைந்தது, அவனது வடிவாகிய கடலினது ஒப்பற்றபரப்புப்பற்றி யென்க.

கனிக் கடற்கதிர் தொடர்ந்த வரலாறு, கடல்தாவுபடலத்தின் கூடு - ஆஞ் செய்யுளினுரையிற் கூறப்பட்டது; "பனியிறைற்படைபடைத்திரங்கி, யழுத ரற்றிய பாலக னன்னைமுன்னுமைத்த, பழமக்கிதுவா மெனப் பரிதிமேற் பாய்ந்தான்" என்னும் உத்தரகாண்டத்தையும் காண்க. ஒருதுணையிலான் - அஸஹாயசூரன். ஒவ்வொருகட்டிற்கு ஒவ்வொருயானை யூதபதியாய்நின்று பெருமையடைதல்பற்றி, அதனை உவமைகூறினார். 'கடப்பதன் றேழ்கடல் கிடந்தது' - பன்மையொருமைமயக்கம்; 'கண்ணிரண்டுஞ் சிவந்தது' என்றாற் போல. கடல் - சாதிபொருமையுமாம். (கசசுக)

[இதுவும் அது.]

கசஎ. பாழிநன்னெடுங்கிடங்கெனப்பகர்வரேற்பல்லோ
ரூழிகாலநின் றுலகெலாங்கல்லினுமுலவா
வாழிவெஞ்சினத்தரக்கனையஞ்சியாழ்கடல்க
ளேழுமிந்நகர்சூலாயதுகொலாமெனவிசைத்தான்.

(இ - ள்) 'பாழி - அகலமுள்ளதும், நல் - சிறந்ததும், நெடு - நீண்டது மான, கிடங்கு - அகழியாகும் (இது),' என - என்று, பகர்வர் ஏல் - (எவரே னும்) சொல்வராரனால்,—பல்லோர் - பலபேர், ஊழி காலம் நின்று - கற்ப காலமளவுங் கூடிநின்று [நெடுங்காலம்நின்று என்றபடி], உலகு எலாம் கல்லி னும் - நிலவுலகமுழுவதுந் தோண்டினாலும், உலவா - (இங்ஙனம்) முடிவு பெறமாட்டா [இவ்வளவு அகலமும் நீளமும் ஆழமும் உண்டாகா]: (ஆதலால், அகழியென்று கொள்ளற்பால தன்று இது; மற்று யாதோவெனின்,—) ஆழி வெம் சினத்து அரக்கனை - (கரிய பெரிய வடிவத்திற்) கடல்போன்றவனும் கொடியகோபமுள்ளவனுமான தலைமையரக்கனாகிய இராவணனுக்கு, அஞ்சி-

பயந்து, ஆழ் கடல்கள் ஏழும் இ நகர் சுலாயதுகொல் ஆம் - ஆழ்ந்த ஏழுகடல்களும் (ஒருங்குசேர்ந்து ஓர் அகழியாகி) இந்த இலங்காபுரியைச் சூழ்ந்ததுபோலும் இது, என இசைத்தான் - என்றும் (தனக்குட்) சொல்லிக்கொண்டனன், (அநுமான்); (எ - று.)

அகழியென்பது செயற்கைப்பொருளாதலால் எவரேனும் ஒருகாலத்தில் தோண்டியமைத்ததாயிருத்தல் வேண்டும்: உலகத்தில் எத்தனைபேர் ஒருங்குகூடி எவ்வளவுகாலம் தொடர்ச்சியாய் வேலைசெய்யக்கலைப்பட்டு நிலவுலகமுழுவதும் தோண்டினாலும் இவ்வளவு அகன்றும் நீண்டும் ஆழ்ந்துமுள்ள பெரிய நீர்நிலை அமையாதாதலால், இது செயற்கையகழியன்று என்றும், இராவணனிடத்து அச்சத்தால் ஏழுகடல்களும் ஒருங்குகூடி அவனது இடைநகர்க்கு இங்ஙனம் இயற்கையகழியாயமைந்திருத்தல்கூடு மென்றும் எண்ணினன் அநுமனென்க. காரணங்காட்டி ஒருபொருளினிடத்து அதன் உண்மைத்தன்மையை மறுத்து மற்றொருதன்மையை யேற்றிக் கூறியதனால், இது - காரணமேயோழிப்பணி; இதனை, வடநூலார் 'அபஹ்நுதியலங்கார' மென்பர்: "சிறப்பினும் பொருளினுங் குணத்தினு முண்மை மறுத்துப் பிறிதுரைப்பதவனுதியாகும்" என அதனிலக்கணங் காண்க; இது, பொருளவனுதி.

பாழி - ஆழமுமாம். ஆழி வெஞ்சினத்து - கடல்போற்பொங்கி உலகத்தையழிக்கவல்ல கொடுங்கோபத்தையுடையவனினுமாம். அமையா என்ற பொருளில், 'உலவா' என்றது - லக்ஷிதலக்ஷணை; உலத்தல் = முடிதல்: முடிதல் = அமைதல். "அச்சக்கிளவிக் கைந்து மிரண்டு, மெச்சமிலவே பொருள்வயினான" என்றதனால், 'அப்பனை யஞ்சி' என்றது அமையும். 'கிடங்கெனவுணர்வனோற்பல்பே ரூழிகாலநின்று' என்றும், 'சுலாயகொலாமென' என்றும் பிரதிபேத முண்டு. (கஎஎ)

[அவ்வகழியையடைந்த அநுமான் அதனைக் கடத்தற்கு அருமையைக் கருதுதல்.]

கஎஅ. ஆயதாகியவகன்புனலகழியையடைந்தான்
றூயவேலையினிருமடிவிசைகொடுதாவிப்
போயகாலத்தும்போக்கரிதென்பதுபுகன்று
னாயகன்புகழ்நடந்தபேருலகெலாநடந்தான்.

(இ - ள்.) ஆயது ஆகிய - அத்தன்மையதான, அகல் - அகன்ற, புனல் அகழியை - நீர்நிறைந்த அவ்வகழியை, அடைந்தான் - சேர்ந்தவனாய்,—'தூய வேலையின் இரு மடி விசை கொடு தாவி போய காலத்தும் - (முன்பு) தாண்டின கடலுக்காகக் கொண்ட வேகத்தினும் இரண்டுபங்கான வேகத்தைக் கொண்டு (யான்) தாண்டிப்போனபோதிலும், போக்கு அரிது - கடத்தற்கு அரியது (இவ்வகழி),' என்பது புகன்றான் - என்று (தனக்குட்) சொல்லிக்கொண்டனன்: (யாவனெனில்,—) நாயகன் புகழ் நடந்த பேர் உலகு எலாம் நடந்தான் - லோகநாயகனான இராமபிரானது கீர்த்தி சென்றுபரவிய பெரிய உலகங்களிலெல்லாம் (தானும் தனதுபுகழினாற்) சென்றவனான அநுமான்; (எ - று.)

முன்பு கடல்கடந்துவருதற்கு நாம் எவ்வளவுவேகங்கொண்டோமோ அதனினும் இரட்டிப்பான வேகங்கொண்டு சென்றாலும் இவ்வகழியைக்கடத்தல் முடியாதென்று எண்ணினன் அநுமனென்பது, இடையிரண்டடிகளின் கருத்து. தலைவனான இராமபிரானது கீர்த்தியோடு தூதனான அநுமானது கீர்த்தி ஒற்றுமைப்பட்டிருத்தலால், அவ்விராமகீர்த்திபரவிய உலகமுழுவதிலும் அநுமானதுபுகழுடம்பும் சென்றுள்ளதென்பது, நான்காமடியின் தாற்பரியம்; எனவே, இராமனோடொத்த கீர்த்திமான் அநுமனென்றதாம். இதற்கு - இராமகீர்த்தி பரவப்பெற்றதான உலகம்முழுவதிலும் நடந்து செல்லவல்லவனென்று கருத்துக்கூறுதலுமொன்று; அங்ஙனம் அவன் வல்லவனாதலை, இளமையிற் சூரியனுடன்சென்று அவனிடம் கல்விகற்றமை, இனிநிகழும் பெரும்போரில் மருந்துமலைகொணர்தல் முதலியவற்றாலுணர்க. முதலடி - முற்றுமோனை. (௧௪௮)

## வேறு.

[இதுமுதல் ஏழுகவிகள் - அவ்விடைநகரகழியின் வருணனை: கவிக்கூற்று.]

௧௪௯. மேக்குநால்வகைமேகமுங்கீழ்விழத்
தூக்கினாலன்னதோயத்ததாய்த்துய
ராக்கினான்படையன்னவகழியை
வாக்கினாலுரைவைக்கலுமாகுமோ.

(இ - ள்.) மேக்கு - மேலிடத்தில் [வானத்தில்] செல்லுகின்ற. நால்வகை மேகமும் - நான்குவகைப்பட்ட மேகங்களும், கீழ் விழ - (கீழிடமாகிய நிலவுலகத்திலுள்ள தன்னைக் கடலென்றுகருதி நீர்முகந்துகொள்ளுதற்பொருட்டுத் தன்னைநோக்கி) இறங்கிவருமாறு, தூக்கினால் அன்ன - தான் தலையெடுத்துக் காட்டினாற்போன்ற, தோயத்தது ஆய் - நீரையுடையதாய், துயர் ஆக்கினான் படை அன்ன - (உலகத்துக்குத்) துன்பத்தைச்செய்தவனான இராவணனது சேனையைப்போன்ற, அகழியை - அந்த அகழியின் இயல்பை, வாக்கினால் உரை வைக்கலும் - வாயினாலெடுத்துச்சொல்லுதலும், ஆகுமோ - முடியுமோ? [முடியாதென்றபடி]; (எ - று.)

கீழ் மூன்றுசெய்யுள்களில் அநுமான்கருதியகருத்துக்களாக அகழியின் பரப்பைக்கூறிய கவி, இதுமுதல் ஏழுகவிகளால் தம் வார்த்தையாக அவ்வகழியை வருணிக்கின்றார். அந்த அகழிவருணனையாகிய தனிப்பிரபந்தத்துக்கு இம்முதற்செய்யுள் அவையடக்கம்போன்று நிற்கும்; அதன்சிறப்பை வருணித்துச் சொல்லுதல் முடியாதென்றனராதலினென்க.

அவ்வகழியில் நிறைந்திருக்கின்ற நீர் அலைகளால் மேலெழுதலை, வானத்துச் செல்லுகின்ற மேகங்கள் தன்னைக் கடலென்றுகருதித் தன்னிடத்து நீர் முகக்கவருமாறு அவற்றிற்குத் தனது இருப்பைத் தலையெடுத்துக்காட்டுகின்ற வாறுபோன்றதெனவருணித்தார்; தற்குறிப்பேற்றவணி. தூக்குதல் = தலையை உயர்த்துதல். இனி, நால்வகைமேகங்களும் ஆகாயத்திலிருந்து கீழுலகத்தில் விழுந்திட அவற்றை மேல்நோக்கித் தூக்கினாற்போன்ற ஜலஸமிருத்தியுடைய

தாய் என்று உரைத்தலு முண்டு; மிக்க ஆழமுடையதாய் நீர்நிறைந்து அந்நக ரின்நாற்புறத்துமுள்ள அகழிகளை, கீழுலகிலிருந்து நான்குமேகங்களை மேலே தூக்கினாற்போ லிருந்தனவென்று உத்பிரேக்ஷித்தனரெனக் கருத்துக் காண்க. நால்வகை மேகம் - நான்குதிசைகளினின்றும் வரும் மேகங்கள். புஷ்கலாவர்த்தம்முதலிய நான்குமேகங்களென்றலு முண்டு; பழையதிருவிளையாடற்புராணத்து நான்மாடக்கூடலான திருவிளையாடலில் "புட்கலாவருத்தமுன்னா, வென்றிகொணான்கு மேகமேவந்தரை வாவழைத்தான்" என்றும், "தொல்லைப் புட்கலாவருத்தமுன்னா, நாடருங்காமரூபப்புயல்களை நான்குமாடக், கூடமதாகக்கற்பித்தருளினான்" என்றும், கடம்பவனபுராணத்தில் "வென்றிப்புட்கலா வருத்தமுதற்புயல்களனைக்கை" என்றும் கூறுதல் காண்க

இராவணன் சகலலோககண்டகனாய் எல்லாப்பிராணிகட்கும் துன்பஞ் செய்தலால், 'துயராக்கினான்' என்று ஒருபெயரிட்டுக் கூறப்பட்டான்; ராவணன் என்ற பெயர் - பிறர்கூச்சலிடுமாறு உபத்திரவஞ்செய்கின்றவனென்று பொருள்படுதலும் உணர்க. அவனது சேனை, தொகையிற்பெரியதும் வடிவத்திற்பரந்ததுமாயிருத்தலால், வெள்ளமென்றும், கடலென்றும் கூறப்படும்; அதனை, இங்கு அகழியின்பரப்புக்கு உவமையாக்கினர்: இதனால், கடத்தற் கருமையையுங் காட்டியதாம். முழுவதும் விரித்தெடுத்துச் சொல்லமுடியாதேனும் ஒருவாறு சிறிதுஎடுத்துக் கூறுதலாயினுங் கூடுமே: இவ்விஷயத்தில் அதுவும் இயலாதென்பார், 'வாக்கினாலுரைவைக்கலு மாகுமோ' என்றார்; 'உரைவைக்கல்' என்பது, ஒருசொல்தன்மைப்பட்டு, பேசத்தொடங்குதலென்றாகி, 'வாயினால்' என்றதற்கு முடிக்குஞ்சொல்லாய் நின்றது.

இதுமுதல் ஒன்பது கவிகள் - பெரும்பாலும் முதற்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய அளவடி நான்குகொண்ட கலிவிருத்தங்கள். (௧௪௯)

[அவ்வகழியிற் பலவகைநறுமணம்.]

௧௫0. ஆனைமும்மதமும்பரியாழியும்
வானமங்கையர்குங்குமவாரியு
நானமாதர்நறைக்குழலாவியுந்
தேனுமாரமுந்தேய்வையுநாறுமால்.

(இ - ள்.) ஆனை மும்மதமும் - யானைகளின் மூன்றுவகை மதஜலங்களும், பரி ஆழியும் - குதிரைகளின் வாய்நுரைநீரும், வானம் மங்கையர் குங்குமம் வாரியும் - தேவமாதர்கள்பூசிய குங்குமக்குழம்பும், மாதர் நானம் நறை குழல் ஆவியும் - (மற்றும்பல) மகளிரது கஸ்தூரிக்குழம்புதடவியதும் நறுமணமுள்ளதுமான கூந்தலுக்கு ஊட்டிய அகிற்புகையும், தேனும் - (மலர்களினின்று சொரிகின்ற)தேனும், ஆரமும் - சந்தனக்குழம்பும், தேய்வையும் - (மற்றும் அகில் தகரம் முதலிய வாசனைமரங்களின்) தேய்த்தபூச்சும், நாறும் - (தன்னிடத்து) மணம்வீசப்பெறும், (அவ்வகழிநீர்); (எ - று.)—ஆல்-ஈற்றசை.

அந்நகரிலுள்ள யானைகள் மூன்று உறுப்புக்களினின்று சொரிகின்ற மதஜலங்களும், குதிரைகளின் வாயினின்று வெளிப்படுகின்ற நுரைகளும் பெருக்கெடுத்து, அடுத்த பெரியநீர்நிலையாகிய அகழியிற் போய்ச்சேர்கின்றன; அதனால், அவற்றின்மணம் வீசுகின்றது அவ்வகழிநீர். அவ்விலங்கையில் வசிக்கின்ற தேவமாதர்களும் மற்றைமகளிரும் நீராடிய நீரெல்லாம் அவர்களுடலிற் பூசிய குங்குமக்குழம்பையும், சந்தனத்தேய்வையையும், மற்றுஞ்சில வாசனைத்தேய்வைகளையும், அவர்கள் கூந்தலுக்கு ஊட்டிய அகிற்புகையையும் அடித்துக்கொண்டு பெருகி அவ்வகழியிற் சேர்தலால், அக்குங்குமக்குழம்பு முதலியவற்றின் நறுமணமும் வீசுகின்றது அவ்வகழிநீர். அவ்வகழியிலுள்ள நீர்ப்பூக்களினின்று சொரிகின்ற தேன் அவ்வகழியிற்சேர்தலால், அதன் மணமும் நாறுகின்றது அந்நீர் எனக் கருத்து விரித்துக் கண்டுகொள்க. புறநகரகழியான கடலின் வருணனையாகிய இப்படலத்துப் பதினேழாஞ் செய்யுளும், நாற்பதாஞ் செய்யுளும், இங்கு ஒப்புநோக்கற்பாலன.

'நாறும்' என்ற வினைமுற்றுக்கு 'அகழிநீர்' என்ற தோன்றாஎழுவாய் வருவித்து முடிக்கப்பட்டது. அகழிநீர் ஆனைமதம் முதலியன நாறும் - இடத்து நிகழ்பொருளின்தொழில், இடத்தின்மேல் நின்றது [உபசார வழக்கு.] ஆழி விலாழி என்பது தன் விகாரம். குங்குமவாரி - குங்குமப்பூவையரைத்துக்கரைத்த குழம்பு. நானம் - கஸ்தூரி; அதனாலாகிய மயிர்ச்சாந்துக்கு இலக்கணை. தேய்வை - தேய்க்கப்பட்டது. ஆரம் மலரென்றும், தேய்வை - சந்தனத்தேய்வையென்றும் கொள்ளினுமாம்; அப்பொழுது, ஆரமென்ற பூமாலையின்பெயர் பூவிற்கு இலக்கணை. மும்மதம் - கர்ணமதம், கபோலமதம், பீஜமதம். 'நானமாதர்நறைச்குழலேவியும்' என்ற பாடத்துக்கு - நீராடிய மாதர்களின் நறுமணமுள்ள கூந்தலுட் பூசிய கஸ்தூரிச்சாந்தும் என்பது பொருள். (கஙo)

[அவ்வகழியிற் பலவகை நீர்ப்பறவைகளொலித்தல்.]

கரு௪. உன்னுநாரைமகன்றில்புதாவுளி
லன்னங்கோழிவண்டானங்களாழிப்புள்
கின்னரங்குரண்டங்கிலுக்கஞ்சிரல்
சென்னங்காகங்குணலஞ்சிலம்புமே.

(இ - ள்.) உன்னும் - (மீனுகிய இரையைத் தேடுங்) கருத்தையேயுடைய, நாரை - நாரைகளும், மகன்றில் - மகன்றில்களும், புதா - குருகுகளும், உளில் - உள்ளான்களும், அன்னம் - ஹம்ஸங்களும், கோழி - நீர்க்கோழிகளும், வண்டானங்கள் - பெருநாரைகளும், ஆழி புள் - சக்கரவாகங்களும், கின்னரம் - கின்னரங்களும், குரண்டம் - கொக்குக்களும், கிலுக்கம் - கிலுக்கங்களும், சிரல் - சிச்சிலியென்னும் மீன்குத்திக் குருவிகளும், சென்னம் - (நீர்ப்) பருந்துகளும், காகம் - (நீர்க்) காக்கைகளும், குணலம் - குணலங்களும், சிலம்பும் - (அவ்வகழிநீரில்) ஒலிக்கும்; (எ - று.)

இதிற் கூறியனவெல்லாம் நீர்வாழ்பறவைகளின் சாதிபேத மென்பது வெளிப்படை. இவற்றை இடையில் அடைமொழிகொடாமல் எதுகை

மோனைகளமையச் செய்யுளில் இயையவைத்தது, கவிசமத்காரம். உன்னுதல்- கருத்துடனிருத்தல். 'உன்னநாரை' என்ற பாடம், நீர்வாழ்பறவைகளாகிய நாரைமுதலியனவென்று பொருள்பட்டுச் சிறக்கும்; உன்னம் - நீர்வாழ்பறவைப்பொதுப்பெயர். மகன்றில் - அன்றிலில் ஒருசாதி; ஆணன்றிலென்பர் ஒருசாரார். (எப்பொழுதும் ஆணும் பெண்ணும் இணைபிரியாமல் இரட்டையாய் நிற்பது, அன்றிலின் இயல்பு.) ஆழிப்புள் - இரவில் இணைபிரிந்து பகலிற்கூடு மியல்பினதாகிய பறவைவிசேடம். ஆழி - சக்கரம்; அப்பெயராற் குறிக்கப்படுதல்பற்றி 'நேமிப்புள்' என்றாற்போல 'ஆழிப்புள்' எனப்பட்டது. காகமென்பது, காவென்று கத்துவதெனக் காரணப்பொருள் பெறும். சென்னம் - ச்யேநமென்ற வடசொல்லின் சிதைவெனத் தக்கது. ()

[மாதர்களின் அகிற்புகை முதலியன அவ்வகழியில் மிகுதியாகச் சேர்ந்திருத்தல்.]

கருஉ. நலத்தமாதர்நறையகிலுவியு
மலத்தகக்குழம்புஞ்செறிந்தாடிய
விலக்கணக்கரியோடிளமென்னடைக்
குலப்பிடிக்குமொரூடல்கொடுக்குமால்.

(இ - ள்.) நலத்த மாதர் - அழகுள்ள (அந்நகரத்து) மகளிரது, நறை அகில் - நறுமணமுள்ள அகிற்புகையும், நாவியும் - கஸ்தூரிப்புழுகும், அலத்தகம் குழம்பும் - செம்பஞ்சுக்குழம்பும், செறிந்து - (தன்னிடத்தில்) மிகுதியாகச் சேரப்பெற்றிருத்தலால்,— (அவ்வகழிநீரானது),— ஆடிய இலக்கணம் கரியோடு - (தன்னிடத்தில்) நீராடிய உத்தமவிலக்கணமமைந்த ஆண்யானைகளோடு, குலம் மெல் நடை இள பிடிக்கும் - உயர்ந்தஜாதியில் தோன்றிய மெதுவானநடையையுடைய இளமையான பெண்யானைகளுக்கும், ஓர் ஊடல் கொடுக்கும் - ஒருவகைப் பிணக்கை உண்டாக்கும்;(எ - று.)— ஆல் - ஈற்றசை.

அந்நகரில் வாழ்கின்ற மிகப்பலரான மகளிர் நீராடிய நீரெல்லாம், அம்மகளிர் தமது கூந்தலுக்கு மிகுதியாக ஊட்டியுள்ள அகிற்புகையையும், கூந்தலில் மிகுதியாகத் தடவியுள்ள மயிர்ச்சாந்தையும், கால்களிலூட்டியுள்ள செம்பஞ்சுக்குழம்பையுங் கரைத்துக்கொண்டு பெருகி அவ்வகழியில் வந்து சேர்தலால், அவ்வகழிநீரில் அவ்வகிற்புகைமுதலியன செறிந்துள்ளன ; ஆண்யானைகள் அவ்வகழிநீரில் மூழ்கியெழுந்துவருகின்றபொழுது அவ்வகிற்புகை முதலியன தம்மீது படியப்பெற்றுப் புதுமையான மணத்தையும், புழுதிபடிந்தாற்போன்ற நிறவேறுபாட்டையுங் கொள்ளுதலால், அவற்றைக் கண்ட பெண்யானைகள், தமக்கு உரிய அவ்வாண்யானைகளை வேறுபிடியானையோடு கலவிகொண்டு வந்தன வென்று மாறுபடக்கருதி, ஊடல்கொள்ளுமெனக் கருத்துணர்க. வேற்றுப் பெண்யானையோடு தொடர்புகொள்ளு மியல்பின வல்ல வென்பது தோன்ற, 'இலக்கணக்கரி' என்றார். 'இளமென்னடைக்குலப்பிடிக்கும்' என்றதனால், அப்பெண்யானைகள் உலகியல்பையறியுமுணர்வும் துணிவு

யில்லாத மிக்க இளமைப்பருவத்தனவும் உயர்குலத்தில் தோன்றியனவு மாத லால், தமது ஆண்செய்தபிழையை யுணரவும், உணர்ந்தாலும் அக்குற்றத்தைப் பாராட்டாது பொறுத்தலே யன்றி அப்பதியின்மீது சினம்பாராட்டவும் பயின்றனவல்ல வென்பது போதரும். உம்மை - உயர்வுசிறப்பு. அவற்றிற் கும் ஊடலுண்டாம்படி புதுமணத்தையும் வேற்றுநிறத்தையும் மிகுதியாகத் தருகின்றது இவ்வகழிநீ ரென்க. அந்நகரத்தூமாதரது மிகுதியும், செல்வச் சிறப்பும், இதில் வெளியாம்.

'அகிலாவியும்' என்ற பாடத்துக்கு - அகிற்புகை யென்பது பொருள். செறிந்து - செறிய என்ற எச்சத்தின் திரிபு; தன்பக்கல்வந்துசெறியப்பெற்று என்று பொருள் கொள்ளலுமாம். மென்னடை - மந்தகதி. (கஙஉ)

[அவ்வகழியில் தாமரைமலர்கள் குவிந்திருத்தல்.]

கஙங. நறவுநாறியநாணறுந்தாமரை
துறைகடோறுமுகிழ்த்தனதோன்றுமால்
சிறையினெய்தியசெல்விமுகத்தினோ
டுறவுதாமுடையாரொடுங்கார்களோ.

(இ - ள்.) நறவு நாறிய - தேனுடனே வாசனைவீசுகின்ற, நாள் - புதிய [அன்றுமலர்ந்த], நறுந் தாமரை - நல்ல தாமரைமலர்கள், துறைகள் தோறும்- (அவ்வகழியின்) இடங்கடோறும், முகிழ்த்தன தோன்றும் - (அவ்விராப்பொழு திற்) குவிந்தனவாய்க் காணப்படும்; சிறையின் எய்திய செல்வி முகத்தினோடு உறவு உடையார் - (இராவணனால்) சிறையில்வைக்கப்பட்டிருக்கின்ற சீதா பிராட்டியினது முகத்தினுடன் உறவுமுறையுள்ளவர்கள், தாம் ஒடுங்கார் களோ - (அம்முகம் வாடியிருக்கின்றபோது) தாமும் ஒடுங்காமலிருப்பர் களோ? [இரார் என்றபடி]; (எ - று)—ஆல் - ஈற்றசை.

அவ்வகழிநீரிலுள்ள செந்தாமரைமலர்கள் இயல்பாக இரவிற் குவிந்திருப் பதை, அவை ஜாநகிபிராட்டியின் திருமுகத்துக்கு உறவின மாதலால் சிறை வைக்கப்பட்டது காரணமாக அம்முகம் ஒடுங்கியபோது தாமும் ஒடுங்கிய தாகக் கற்பித்தார். முன்னிரண்டடியிற் கூறிய சிறப்புப்பொருளைப் பின்னிரண் டடியிற்கூறிய பொதுப்பொருள்கொண்டு சாதித்தலால், வேற்றுப்பொருள் வைப்பணி. முகத்துக்கும் செந்தாமரைமலர்க்கு முள்ள ஒப்புமை கருதி, அவை உறவினமாகக் குறிக்கப்பட்டன. அநுமான் அவ்வகழியை யடைந்த சம யம் இராப்பொழுது தாதலால், அப்பொழுது தாமரைமலர் குவிந்திருத்தலை வருணித்தன னென்க. எய்திய - சேர்ந்த. செல்வி - செல்வத்திற்குரிய தலைவி யான திருமகளின் அவதாரமானவள். (கஙங)

[அவ்வகழிநீர் பளிங்குபோலத் தெளிந்திருத்தல்.]

கஙச. பளிங்குசெற்றிக்குயிற்றியபாவொளி
விளிம்புமெள்ளமுமெய்தெரியாதுமேற்,
றெளிந்தசிந்தையருஞ்சிறியார்களோ
டளிந்தபோதறிதற்கெளிதாவரோ.

(இ - ள்.) பளிங்கு செற்றி குயிற்றிய - படிகக்கற்களைச் செதுக்கிப் பதிக்கப்பெற்ற, பாய் ஒளி விளிம்பும் - வீசுகின்ற ஒளியையுடைய (அவ்வகழி யின்) ஓரமும், வெள்ளமும் - (அவ்வகழியின்) நீரும், மேல் மெய் தெரியாது - மேல் தோற்றத்தில் வடிவம் வேறுபடக் காணப்படாதனவாயிருந்தன; தெளிந்த சிந்தையரும் - தெளிவுள்ள மனமுடையவர்களும், சிறியார்களோடு அளிந்தபோது - (உள்தெளிவில்லாத) சிறியவர்களுடன் கூடியபோது, அறி தற்கு எளிது ஆவரோ - எளிதில் வேறுபாடறியத்தக்கவ ராவரோ? [ஆகார் என்றபடி]; (எ - று.)

"ஈர்ந்தநுண்பளிங்கெனத் தெளிந்த வீர்ம்புனல்" என்றபடி பளிங்கும் தெளிவானநீரும் தம்மிலொப்புமையுடையன வென்பது வெளிப்படை. அவ் வகழியின் கரையிற் பளிங்குக் கற்பதித்த இடமானது, தன்னையடுத்த அவ் வகழிநீரோடு தான் வேறுபிரித்துக் காணப்படாததாயிருந்தது. இச்சிறப்புப் பொருளை, 'தெளிந்தசிந்தையரும் சிறியார்களோடு அளிந்தபோது அறிதற்கு எளிதாவரோ' என்ற பொதுப்பொருள்கொண்டு கவி சமத்காரமாகச் சாதித்த னர்; வேற்றுப்பொருள்வைப்பணி. பளிங்கு உள்ளும் புறமும் ஒப்பத் தெளிந் திருத்தலால் அதனைத் தெளிந்தசிந்தையராகவும், அகழிநீர் மேலேதெளிந் திருந்தாலும் உள்ளே தெளிவில்லாததும் பள்ளமடையிற்பாயு மியல்பினதும் கரைவிளிம்பிற்குக் கீழுள்ளதுமாதலால் அதனைச் சிறியார்களாகவும் கருதுக. அகழிநீர் உள்தெளிவிலதாதலை, பாலகாண்டத்தில் "அன்னமாமதிலுக் காழி மால்வரையை யலைகடல்சூழ்ந்தன வகழி, பொன்விலைமகளிர்மனமெனக் கீழ் போய்ப் புன்கவியெனத் தெளிவின்றி" என்றபடுத்துங் காண்க. அறிதற்கு எளிதாவரோ - தாம் வேறுபடுத்து அறிதற்கு எளியதன்மையையுடையராவார் என்றபடி; அவரோடு அபேதமாக மிகவும் ஒற்றுமைப்பட்டிருப்ப ரென்பது கருத்து. பளிங்குசெற்றிக் குயிற்றிய பாய்ஒளி விளிம்பும் வெள்ளமும் மெய் தெரியாது மேல்—"விளிம்புதெற்றி முற்றுவித்து வெள்ளிகட்டி யுள்ளுறப், பளிங்குபொற் றலத்தகட்டடுத்துறப் படுத்தலின், தளிர்ந்தகற் றலத்தொடச் சலத்தினைத் தனித்துறத், தெளிந்துணர்த்து கிற்று மென்றல் தேவராலு மாவதே" என்றார் பாலகாண்டத்தில் அயோத்திமாநகரத்து அகழிவருணனை யிலும்.

நன்னீரை 'வெள்ளம்' என்றல், மலையமானாட்டினின்று வந்து வழங்கிய திசைச்சொல். விளிம்பும் வெள்ளமும் மெய்தெரியாது - பன்மையொருமை மயக்கம்; வழுவமைதி: தனித்தனி தெரியா தென்க; ஒற்றுமைப்பட ஒரு மையாகக்கூறின னென்னலாம். மேல் தெளிந்த சிந்தையர் என்று எடுத்து, சிறப்பாய்த் தெளிந்த மனமுடையவ ரெனினுமாம். அளிதல் - உருகுதல், கனிதல்; இலக்கணையாய், சிநேகித்தலைக் குறித்தது. முன்னிரண்டடிகளிற் பளிங்கு விளிம்பையும் வெள்ளத்தையும் வைத்த முறைமைக்கு ஏற்ப மூன்று மடியில் தெளிந்தசிந்தையரையும் சிறியார்களையும் நிறுத்தியது, முறைநிர னிறைப்பொருள்கோளின்பாற்படும். இனி, நீரைத் தெளிந்தசிந்தையராக வும், பளிங்கைச் சிறியாராகவும் எதிர்நிரனிறைபடக் கொண்டு, அவ்

வகழிநீர் பளிங்குவிளிம்பையடுக்கும்போது அதனோடொற்றுமைப்படக்காணப் படுதலே; பின்னிரண்டடிகொண்டு சாதித்ததாகவுங் கொள்ளலாம்; அடுத்த பொருளின் தன்மையதாகும் பளிங்கு, அக்குணமுடைய சிறியராகக் கருது தற்கு ஏற்கும். (௧௫௪)

[அவ்வகழியிற் பலவகையிரத்தினங்கள் ஒளிவீசுதல்.]

௧௫௫. நீலமேமுதனன்மணிநித்தில
மேலகீழுபல்வேறொளிவீசலாற்
பாலின்வேலைமுதற்பலவேலையுங்
கால்கலந்தனவோவெனக்காட்டுமே.

(இ - ள்.) மேல கீழ - (அவ்வகழியின் கரைகளில் நீரளவுக்கு) மேலே பதிக்கப்பெற்றுள்ளனவும் கீழ்ப்பதிக்கப்பெற்றுள்ளனவு மாகிய, நீலமே முதல் நல் மணி - நீலரத்தினம் முதலிய சிறந்த (பலவகை) இரத்தினங்களும், நித்திலம் - முத்துக்களும், பல் வேறு ஒளி வீசலால் - (அந்நீரின்மேற்) பலவேறுவகைப்பட்ட ஒளியை வீசுதலினால்,—(அவ்வகழிநீரானது),—பாலின் வேலை முதல் பல வேலையும் கால் கலந்தனவோ என காட்டும் - பாற்கடல் முதலிய பலதிறக்கடல்களும் காற்றினால் ஒன்றுசேர்ந் திட்டனவோ வென்னும்படி தோன்றும்; (எ - று.)

அகழியின் விளிம்பிற் சிலவிடங்களில் மேலும்கீழும் பதிக்கப்பெற்றுள்ள நவரத்தினங்கள் பலவகையொளிகளை வீச, அவ்வொளிகளின் சம்பந்தத்தால் அவ்வகழியின் தெளிவானநீர் "சார்ந்தநுண்பளிங்கெனத்தெளிந்த வீர்ம்புனல், பேர்ந்தொளிர்நவமணிபடர்ந்தபித்திகை, சேர்ந்துழிச்சேர்ந்துழி நிறத்தைச் சேர்தலால்" என்றபடி பலவேறுநிறங்கொண்டு காணப்படுகின்றது: அதனை வெவ்வேறு நிறமுள்ள ஏழுகடல்களும் ஒருங்குசேர்ந்தாற்போலு மென உத்பிரேக்ஷித்தார்; தற்குறிப்பேற்றவணி. அவ்வகழியின் மிக்க பரப்பு, நீர்மிகுதி இவைகளும் இதனால் விளங்கும்.

பின்னர் 'நித்திலம்' என வருதலால், முன்னர் 'நீலமே முதல் நன்மணி' என்றது, நவரத்தினங்களுள் முத்தொழிந்த பிறவற்றையாம். கற்பாந்தகாலத்தில் ஊழிக்காற்றுவீசுதலால் ஏழுகடல்களும் தம்மிற் கலந்து பிரளயப்பெரு வெள்ளமாதலை உட்கொண்டு, 'கால்கலந்தன' என்றார்; மூன்றாம்வேற்றுமைத் தொகை. இனி, 'கைகூடுதல்,' 'கால்சீத்தல்' என்பனபோல 'கால்கலத்தல்' என்பதை ஒருசொல்லாகக்கொண்டு, கால் - தமிழுபசருக்கமென்றலுமொன்று. இச்செய்யுளின் இரண்டாமடி, 'மேலுயர்ந்தயன்மாவொளிவீசலால்' என்று சிலபிரதிகளி லுள்ளது. (௧௫௫)

[அநுமான் அவ்வகழியையும் அதனோடுசேர்ந்த மதிலையுங் கடந்து இடைநகரினூடு செல்லுதல்.]

௧௫௬. அன்னவேலையகழியையார்கலி
யென்னவேகடந்திஞ்சியும்பிற்படத்

துன்னருங்கடிமாநகர் துன்னினான்
பின்னரெய்திய தன்மையும்பேசுவாம்.

(இ - ள்.) அன்ன வேலை - அப்பொழுது,—(அநுமான்),—அகழியை - அவ்விடைநகரகழியை, ஆர்கலி என்னவே கடந்து - (முன்பு) கடலைக்கடந்து சென்றது) போலவே தாண்டிச்சென்று, இஞ்சியும் பின்பட - (அவ்வகழியைத் தாண்டும் விசையிலேயே அதனையடுத்த) மதிலும் (கடக்கப்பட்டுப்) பின்னேயாய்விட, துன் அரும் கடி மா நகர் துன்னினான் - (வெருநுங்) கிட்டுதற்கு அரிய காவலையுடைய பெரிய அவ்விடைநகரினுள்ளே சேர்ந்தான்; பின்னர் எய்திய தன்மையும் - பின்பு அங்குநிகழ்ந்த செய்திகளையும், பேசுவாம் - இனிச்சொல்வோம்; (எ - று.)—அவற்றை, அடுத்தகவி முதலாகக் காண்க. ஈற்றடி - கவிக்கூற்று. (கஙசு)

[அந்நடுநிசியில் அந்நுப் பலதெருக்களில் அநுமான் தேடுதல்.]

கஙஎ. கரியநாழிகைபாதியிற்காலனும்
வெருவியோடுமரக்கர்தம்வெம்பதி
யொருவனேயொருபன்னிருயோசனைத்
தெருவுமும்மைநூறாயிரந்தேடினான்.

(இ - ள்.) கரிய நாழிகை பாதியில் - அந்தராத்திரிப்பொழுதிலே, காலனும் வெருவி ஓடும் அரக்கர்தம் வெம்பதி - யமனும் அஞ்சியோடும்படியான இராக்கதர்கள் வாழ்கின்ற கொடிய அந்நகரில்,—ஒருவனே - (அநுமான் தான்) ஒருவனாகவே,—ஒரு பன்னிரு யோசனை - பன்னிரண்டுயோசனையளவுதூரமுள்ள, தெருவு மும்மை நூறாயிரம் - மூன்றுலக்ஷந் தெருக்களில், தேடினான் - (சீதையைத்) தேடலானான்; (எ - று.)

கரிய நாழிகை - இருளினாற் கருமையையுடைய பொழுது: என, இரவுக்கு ஒருபெயர் கூறினார்; "கரியநாழிகை யூழியிற் பெரியன கழியுமா றறியேனே" என்ற ஆழ்வாரருளிச்செயலிலும் 'கரியநாழிகை' என்றதொடர் இராப்பொழுதின்மேலதாதல் காண்க. நாழிகை - இருபத்திநான்கு நிமிஷங் கொண்ட நேரம்: இது, அந்நாழிகை பலவற்றைக் கொண்ட இரவுக்குச் சினையாகுபெயராக நின்றது. 'காலனும் வெருவியோடும்' என்றது - அரக்கர்க்கும், அவரூர்க்கும் அடைமொழியாகத்தக்கது; அவர்களும் அவர்களது நகரமும் மிக்க அச்சந்தருதலை விளக்கும். 'ஒருவனே' என்றது, அநுமானது அஸஹாயசூரத்தன்மையில் ஈடுபாடு. 'மும்மை' என்ற சொல் - மூன்றின் தன்மையையுணர்த்தாமல், மூன்றென்னும் எண்ணையே யுணர்த்தியது: "தெரிமாண்டமிழ் மும்மைத்தென்னம்பொருப்பன்" என்றவிடத்துப்போல; இதில் 'மை' என்பது பகுதிப்பொருள்விகுதியென்னும் ஸ்வார்த்தபாவதத்திதப்ரத்யயமாம். ()

வேறு.

[அந்நடுநிசிப்பொழுதில் அவ்விடை நகரிலிருந்த நிலைமைகளை இதுமுதல் அடுக்கவிகளிற் கூறுகின்றார்.]

கஙஅ. வேரியுமடங்கினநெடுங்கடல்விளம்பும்
பாரியுமடங்கினதடங்கியதுபாடல்

காரியமடங்கினர்கள்கம்மியர்கண்மும்மைத்
தூரியமடங்கினதொடங்கியதுறக்கம்.

(இ - ள்.) (அப்பொழுது நடுநிசியாய் விட்டதனால் அவ்விடத்தில்),— வேரியும் அடங்கின - மதுபானங்களும் ஓய்ந்துவிட்டன; நெடுங் கடல் விளம்பும் பாரியும் அடங்கினது - பெரிய கடல் (சத்திப்பது) போல (இராக்கதர்கள் உரத்தகுரலாக)ப் பேசுகின்ற பாரிப்பும் அடங்கிவிட்டது; பாடல் அடங்கியது - (அங்கங்குப் பாடுகின்ற) இசைப்பாட்டும் அடங்கிவிட்டது; கம்மியர்கள் காரியம் அடங்கினர்கள் - தொழிலாளிகளும் தம் தமது செய்தொழிலடங்கினார்கள்; மும்மை தூரியம் அடங்கின - மூன்றுவகைப்பட்ட வாத்தியங்களும் அடங்கிவிட்டன; உறக்கம் தொடங்கியது (யாவர்க்கும்) தூக்கம் தொடக்கமாயிற்று; (எ - று.)

"பேயுந்துயின்றதாற் பெரியாமம்," "ஏழுதம்விழிதுயின்றன" என்றபடி நள்ளிரவில் அனைத்துயிரும் துயிலுதல் இயல்பாதலால், அங்ஙனம் அப்பொழுது நிசாசராகிய அரக்கரும் தம் தம் செய்தொழிலோய்ந்து துயிலுதலைக் கூறுகின்றார். வேரி - கள்; இலக்கணையாய், அதனைக் குடித்தலின்மேல் நின்றது. பாரி - பாரிப்பு: சொற்பரப்பு; முதனிலைத்தொழிற்பெயர். கம்மியர்கள் காரிய மடங்கினர்கள் - "உயர்திணை தொடர்ந்த பொருண்முதலாறும், அதனொடுசார்த்தி னத்திணை முடிபின" என்றபடி வந்த திணைவழுவமைதி. கம்மம் - கர்மம்: தொழில்; அதனைச் செய்பவன் - கம்மி, கர்மீ: கம்மியர் - கம்மாளருமாம். மும்மைத் தூரியம் - மங்கலமுரசு, வெற்றிமுரசு, கொடைமுரசு. கீதாங்கம், நிருத்தாங்கம், உபயாங்கம் என்ற வாச்சியவகைமூன்றையுங் கொள்ளுதலுமாம்; கீதாங்கம் - கீதத்துக்கு வாசிப்பது; நிருத்தாங்கம் - நிருத்தத்துக்கு வாசிப்பது; உபயாங்கம் - இரண்டிற்கும் வாசிப்பது. தூரியம் - பறைப்பொது; வாத்தியப்பொதுவுமாம். 'நெடுங்களிவிளைக்கும் பாரியுமடங்கின' என்றும் பாடமுண்டு.

இதுமுதல் ஒன்பதுகவிகள் கடல்தாவுபடலத்தின் அரு-ஆங் கவிபோன்ற கலிவிருத்தங்கள். (கருஅ)

கருக. இறங்கினநிறங்கொள்பரியேமமுறவெங்குங்,
கறங்கினமறங்கொளெயில்காவலர்துடிக்கண்,
பிறங்கிணர்நறுங்குழலரன்பர்பிரியாதோ
ருறங்கினர்பிணங்கியெதிரூடினவரல்லார்.

(இ - ள்.) (அந்நள்ளிரவில்),—நிறம் கொள் பரி - நல்லநிறத்தைக் கொண்ட குதிரைகள், ஏமம் உற - இன்பமுண்டாக, இறங்கின - தலைசாய்ந்து தூங்கலாயின; மறம் கொள் எயில் காவலர் துடி கண் - வலிமைகொண்ட (அந்நகரத்து) மதில்காப்பவர்கள் அடிக்கின்ற துடியென்னும்பறையின் அடிக்குமிடங்கள், எங்கும் கறங்கின - எவ்விடத்தும் ஒலிசெய்தன; பிறங்கு இணர் நறும் குழலர் - விளங்குகின்ற பூங்கொத்துக்களைச் சூடிய வாசனைவீசுகின்ற கூந்தலையுடையவரான மகளிருள், அன்பர் பிரியாதோர் - தமது அன்புக்கிட

மான கணவரைப் பிரியாதவர்களும், பிணங்கி எதிர் ஊடினவர் அல்லார் - (அக்கணவரோடு) மனஸ்தாபப்பட்டு அவரெதிரிலே கோபங்காட்டியவர்களல்லாதவர்களும், உறங்கினர் - தூங்கினார்கள்; (எ - று.)

நிசாசரராகிய அரக்கர்கள் அந்நள்ளிரவில் ஓய்ந்து சஞ்சாரமின்றி யுறங்கததலைப்பட்டதனால், அவர்களேறுவனவாய் நிற்கின்ற குதிரைகளும் அப்பொழுது ஓய்வுபெற்று உறங்கத்தொடங்கியமை, முதல்வாக்கியத்திற் கூறப்பட்டது. வெமுற இறங்கின - இனிது துயின்றன வென்க. இனி, இறங்கின - தம்மேலேறிய அரக்க ரிறங்கப்பெற்றன வென்றலு மொன்று. "ஊக்கிய சொல்ல ரொலிக்குந் துடிக்குரலர், வீக்கிய கச்சையர் வேல்வாளர் —காக்க, இடையாமங் காவலர்கள் போந்தா ரிருளின், புடைவா யிருள்புடைத்தாற் போன்று" என்றபடி இடையாமக்காவலாளர் அந்நள்ளிரவில் எங்குஞ்சுற்றிவந்து முழக்குகின்ற துடியென்னும் வாத்தியத்தின் முழக்கத்தை இரண்டாவதுவாக்கியத்திற் கூறினர். மகளிரிற் கணவரைப்பிரிந்தவரும் கணவரோடு ஊடல்கொண்டவரும் விரகவேதனையால் அந்நள்ளிரவிலுமுட்படத் துயில் கொள்ளாது தவிக்க, கணவரோடுகூடிமகிழ்ந்த மற்றையோரெல்லாம் சுகமாகத் தூங்குகின்றன ரென்பது, மூன்றாம்வாக்கியத்தின் கருத்து. அன்பர்பிரியாதோராகிய பிறங்கிணர்நறுங்குழலாரிற் பிணங்கியெதிரூடினவரல்லா ருறங்கினரெனலுமமையும். கணவரை யுவப்பித்தற் பொருட்டு அம்மகளிர் முடிப்ப முடித்துத் தம்மை யலங்கரித்துள்ளா ராதலின், 'பிறங்கிணர்நறுங்குழலர்' எனப்பட்டனர். 'பிணங்கியெதிரூடினவர்' என்ற சொற்போக்கினால், கலவியிற் புலவிநுணுக்கங்கொண்டவ ரென்பது போதரும். இனி, பின்னிரண்டடிக்கு - நறுங்குழலரான மகளிரிலும் அவரது அன்பரான ஆடவரிலும் பிரியாதோரும் பிணங்கியெதிரூடினவரல்லாருமா யுள்ளார் உறங்கின ரென்று இருபாலாரது நிலைமையையுங் கூறியதாக வுரைக்கவும் இடமுண்டு. 'கண்' என்பது - வாத்தியத்தில் அடிக்கப்படுமிடமாதலை, "கடிப்பிடுகண் முரசம்" என நாலடியாரிலுங் காண்க. 'பிறங்கின நறுங்குழலர்' என்ற பாடத்துக்கு - விளங்குகின்ற நறுமணம்வீசுங் கூந்தலையுடையவ ரென்பது பொருள். இனி, 'பிறங்கினர்' என்ற பாடத்துக்கே வாசனைவீசுங்கூந்தலையுடையரான மகளிரிற் கணவரைப்பிரியாதவர (காமவின்பத்துடன்) விளங்கினார்களென்று தனிவாக்கியமாக்கி யுரையமைப்பாரு முளர். (கருக)

கசுo. | வடந்தருதடங்கொள்புயமைந்தர்கலவிப்போர்
கடந்தனரிடைந்தனர்களித்தமயில்போலு
மடந்தையர்கடந்தனமுகட்டிடைமயங்கிக்
கிடந்தனர்நடந்ததுபுணர்ச்சிதருசேதம்.

(இ - ள்.) (அந்நள்ளிரவில்),—வடம் தரு (பலவகை) ஆரங்களை யணிந்த, தடம் கொள் புயம் - பெருமைகொண்ட தோள்களையுடைய, மைந்தர் - இளமைமாறாத அரக்கர்கள், கலவி போர் கடந்தனர் - போகமாகிய போரைச் செய்துமுடித்தவர்களாய், இடைந்தனர் - ஓய்வுற்று, களித்த மயில்போலும் மடந்தையர்கள்தம் தனம் முகட்டிடை மயங்கி கிடந்தனர் - களிப்புக்கொண்ட

மயில்போன்ற (சாயலையுடைய) இளமகளிரின் பருத்ததனங்களின்மீது சோர்ந்துபடுப்பாராயினர்; புணர்ச்சி தரு கேதம் போகத்தாலாகிய இளைப்பு, நடந்தது - (அங்ஙனமே சிலநாழிகை தொடர்ச்சியாக) நிகழ்ந்தது; (எ - று.)

'புணர்ச்சியிறுதிக்கண் அவசத்தான் முலையிடைத்துயிலுந் துயிலை' இங்ஙனங் கூறினார். வடம் - முத்து பவழம் முதலிய இரத்தினங்களாலும், மலர்களாலு மாகிய மாலைகள்: இனி, வடம் தரு - வில்லின்நாண் இழுத்து அம்பெய்யும்போது படுதலால் அந்தழும்பு பெற்ற, தோள் என்றலு மொன்று. 'கடங்கொள்' என்று பாடமோதி, மதநீரைக்கொண்ட வென்று உரைப்பர் ஒருசாரார். மைந்தர் - திண்ணியரான ஆடவர், யௌவநபுருஷர். இடைதல் - பின்வாங்குதல், தன்வசந்தப்புதல், மெய்ம்மறத்தல். மடந்தையர்கள் - மடந்தைப்பருவமுடையவர்; அப்பருவத்துக்கு வயதெல்லை - பதினான்கு பிராயம்முதற் பததொன்பது பிராயமளவும். 'மடந்தையர்தடந்தனம்' என்ற பாடத்துக்கு - மகளிரது பருத்த தன மென்க. தனமுகட்டிடை - மலைச்சிகரம்போன்ற தனங்களினிடையே யென்னலாம். கேதம் - பரிச்சிரமம்; வடசொல். இனி, மைந்தர் - ஆடவர், கலவிப்போர் கடந்தனர் - போகமாகிய போரில் (மகளிரை) வென்றவர்களாய், இடைந்தனர் - (அப்போரில்) தோல்வியுற்றவர்களான [ஓய்வடைந்தவர்களான], களித்த மயில்போலும் மடந்தையர்கள்தம் - களிப்புற்ற மயில்போன்ற சாயலுள்ள மகளிரின், தனமுகட்டிடையே மயங்கிக்கிடந்தனர்; புணர்ச்சிதரு கேதம் (இருபாலார்க்கும் இவ்வாறு அந்நள்ளிரவில்) நடந்தது என்று உரைகூறலு மமையும். (௧௬0)

௧௬௧. வாமநறையின் றுறைமயங்கினர்மறந்தார்
காமநறையின் றிறநுகர்ந்தனர்களித்தார்
பூமணறைவண்டறையலங்கமளிபுக்கார்
தூமநறையின் றுறைபயின்றிலர் துயின்றார்.

(இ - ள்.) (அந்நள்ளிரவில்),—வாமம் - அழகிய [இனிமையான], நறையின் துறை - மதுபானவகைகளாகிய நீர்த்துறைகளில் மூழ்கியதனால், மயங்கினர் - மதிமயங்கி, மறந்தார் - மெய்ம்மறந்தவர்களும்,—தூமம் நறையின் துறை - (அகிற்புகைமுதலிய) புகைகளின் நறுமணமுள்ள இடத்தில், பூ மன் நறை வண்டு அறை அலங்கு அமளி - மலர்களில் மிகுதியாகப்பொருந்திய தேனினிட்டுத்து வண்டுகளொலிக்கப்பெற்ற விளங்குகின்ற படுக்கைகளில், புக்கார் - சேர்ந்து, காமம் நறையின் திறம் நுகர்ந்தனர் களித்தார் - சிற்றின்ப போகமாகிய மதுவின்வகைகளை யுண்டு களித்தவர்களும்,—பயின்றிலர் துயின்றார் - சஞ்சரிக்கமாட்டாதவர்களாய்த் தூங்கினார்கள்; (எ - று.)

கள்ளுண்டு களித்தவர்களும், அகில்முதலியவற்றின் நறும்புகைமணம் வீசுகின்ற பள்ளியறையிற் புஷ்பசயநத்திற் சிற்றின்பம்நுகர்ந்து களித்தவர்களும் ஒருங்காக அவசமுற்று இட்டகாலிட்டகையராய்க்கிடந்து துயிலுதல் கூறப்பட்டது. 'பூமணறைவண்டறையலங்கமளி' எனவே, மலர்ப்பள்ளியென்றதாயிற்று. 'வாமநறையின் துறை' என்ற சொற்போக்கில், சாக்தசம

யத்து வாமமென்னும்பகுப்பினர் உபயோகிக்கின்ற மதுவர்க்கமென்ற பொருளும் தோன்றும்; அவர்கள்மேற்கொள்ளும் அவ்வகையொழுக்கம், வாமாசாரமெனப்படும். அலங்கு அமளி - அசைகின்ற படுக்கை யெனக் கொண்டு, ஊசலின்மீது அமைத்த படுக்கை யென்றலு மொன்று; அதனை 'தூங்குமஞ்சம்' என்ப: ககூ - ஆஞ் செய்யுளிலுங் காண்க. மன்நறை, அலங்குஅமளி—வினைத்தொகைகள். 'மன்' என்பது, மிகுதியுணர்த்தும் இடைச்சொல்லாகவும் வழங்கும்; சீவகசிந்தாமணியில் "பூ மனும் புனைதலின்றி" என்பதற்கு - 'மிகவும் பூவும் புனைதலின்றி' என்று உரைகூறியமை காண்க. மன் - தலைமையானது என்றுகொண்டு, பூ மன் - ("மல்லன்மாலையின் மணமுளதேது வண்சாதி," "புஷ்பேஷு ஜாதீ" என்றபடி) புஷ்பச்ரேஷ்டமான ஜாதி மல்லிகைமலர்களினு லாகியதும் தேனில் வண்டுகள் ஆரவாரிப்பதுமான விளங்குகின்ற மெத்தை யென்றலு மொன்று. இனி, வாமநறையின் துறைமயங்கினராய்ப் பரவசமுற்று, காமநறையின் திறம்நுகர்ந்தனராய்க் களித்து, தாமநறையின் துறையில் பூமன்நறைவண்டு அறைஅலங்கு அமளியிற் புக்கு, வெளிச்சஞ்சரிப்பில்லாதவர்களாய், (பலர்) துயின்றார் என்று ஒருதொடர்ச்சியாகவும்; (சிலர்) வாமநறையின் துறை மயங்கினர் மறந்தார்; (சிலர்) காமநறையின் திறம்நுகர்ந்தனர் களித்தார்;(சிலர்)தாமநறையின் துறையில் அமளிபுக்குப் பயின்றிலர் துயின்றார் என்று வெவ்வேறுவாக்கியமாகவும் உரைப்பாரு முளர். (கசுக)

கசுஉ. பண்ணிமையடைத்தபலகட்பொருநர்பாடல்
விண்ணிமையடைத்தனவிளைந்தஇருள்வீணை,
தண்ணிமையடைத்தனதழங்கிசைவழங்குங்
கண்ணிமையடைத்தனவடைத்தனகபாடம்.

(இ - ள்.) (அந்நள்ளிரவில்),—பல கள் பொருநர் - கட்குடித்தாடும் பலவகைக்கூத்தர்களுடைய, பாடல் - பாட்டுக்கள், பண் இமை அடைத்த - இசைகளாகிய இமைகள் மூடப்பெற்றன [பாடற்பண்கள் அடங்கி ஒலித்தவில்லையாயின என்றபடி]; விளைந்த இருள் - முதிர்ந்தஇருளினால், விண் இமை அடைத்தன - வானத்தினிடங்கள் வெளிச்சம்சிறிதுமில்லாமற் கண் மூடின [மிகஇருண்டன]; வீணை - வீணைகள், தண் இமை அடைத்தன - குளிர்ந்த [இனிய] ஸ்வரஸ்தானமாகிய இமைகள் மூடப்பெற்றன [வாசித்தவில்லையாய் இசையொடுங்கின என்றபடி]; தழங்கு இசை வழங்கும் கண் - முழங்குகின்ற ஒலியைத் தருகின்ற வாச்சியங்களின் கண்கள், இமை அடைத்தன - அடிபட்டு ஒலித்த வில்லையாயின; கபாடம் அடைத்தன - (எங்கும்) கதவுகள் மூடப்பெற்றன ; (எ - று.)

ஒடுங்கின வென்ற பொருளில் 'கண்மூடின' என்றல், வழக்கு. கள்ளுண்டுகளித்துப்பாடியாடுங்கூத்தர்கள் அந்நடுநிசியில் வாயொடுங்கி உறங்குபவராயின ரென்பது, முதல்வாக்கியத்தின் கருத்து. பொருநர் - சிலவகையிசைக்கருவிகள்கொண்டு பாடும் ஒருவகைச்சாதியாருமாம்; அவர் ஏர்க்களம்பாடுநரும், போர்க்களம்பாடுநரும், பரணிபாடுநரு மெனப் பலராவ ரென்

பது, தொல்காப்பியவுரையால் விளங்கும். பல பொருந ரென்க; பல பாடலெனின், பலவகைப்பட்ட பாடலென்று ஆகும். இனி, பல கண் - பல விடங்களில்; பொருநர்பாடல் பண்ணிமையடைத்தன வென்றது மொன்று. இசைக்கருவியாகிய யாழில் இனிய இசையெழுமிடங்கள், 'தண் இமை' எனப்பட்டன. அதன் இமையடைத்த லாவது - ஒலியெழாமை. இமையடைத்தல் - கண்ணென்னும் மூறப்பின்செய லாதலால், ஒருவகைச்சமத்காரம் தோன்ற 'கண்ணிமையடைத்தன' என்றார். இவ்வகையான வாக்கியங்களுடன் 'அடைத்தன கபாடம்' என்றதையும் வைத்ததனால், வாயிலாகிய கண்ணுக்குக் கதவுகளை இமையெனக்கொண்டு, நடுநிசியில் வாயிற்கதவுகள் சாத்தப்பட்டதை அவ்விமையடைத்ததாகக் கொண்டாரென்ற கற்பனை தோன்றும்; "வயிர வரைகண்விழிப்பபோன்று மழைபுகளும், வயிரமணித்தாழ்கதவுவாயில்" எனச் சிந்தாமணியில் வாயிற்கதவுதிறத்தல் கண்விழித்தலாகக் கூறியமை காண்க. இச்செய்யுளின் அணி, உருவகவிசேஷம்; அதனுடன் சொற்பொருட்பின்வரு நிலையணியும் சேர்ந்துள்ளது. கண் - துளைக் கருவிகளாகிய வாச்சியங்க ளென்பாரு முளர். (ககஉ)

கக௩. விரிந்தனநரந்தமுதல்வெண்மலர்விளாகத்
துரிஞ்சவருதென்றலுயிரின்புடையுலாவச்
சொரிந்தனகருங்கண்வருதுள்ளிதருவெள்ள
மெரிந்தனபிரிந்தவர்தமெஞ்சுதலினெஞ்சம்.

(இ - ள்) விரிந்தன - மணம்வீசுவனவான, நரந்தம் முதல் - கஸ்தூரிப் புழுகுமுதலிய நறுமணப்பூச்சுக்களும், வெள் மலர் - வெண்ணிறமான மலர் மாலைகளும், விள் - விளங்கப்பெற்ற, ஆகத்து - (தமது) மார்பிலே, உரிஞ்ச - உராய, வரு - வருகின்ற, தென்றல் - தென்றற்காற்றானது, உயிரின் புடை உலாவ - உயிரின்மீது மோத,—பிரிந்தவர்தம் - (கணவரைப்) பிரிந்தவரான மகளிரது, கருங் கண் - கரிய கண்கள், வரு துள்ளி தரு வெள்ளம் - மேன்மேல்வருகின்ற துளிகளா லாகும் நீர்ப்பெருக்கை, சொரிந்தன - பொழிந்தன; எஞ்சுதல் இல் நெஞ்சம் - (அம்மகளிரது) யாதொரு குறைபாடுமில்லாத மனங்கள், எரிந்தன - (விரகதாபத்தால்) எரிந்தன; (எ-று.)

கீழ் கஙக - ஆஞ் செய்யுளிற் கூறியபடி நடுநிசியிலுமுட்பட உறக்கமின்றி விரகவேதனையால் வருந்தும் மகளிரது கண்கள் அந்நள்ளிரவில் நீர் சொரிதலையும், அவர்மனம் அப்பொழுது மிகத்தவித்தலையும், அக்காலத்து நிகழ்ச்சிகளாக இங்கு எடுத்துக்கூறினார். கூடினோர்க்கு இன்பந்தரும் பொருள்க ளெல்லாம் பிரிந்தார்க்குத் துன்பத்தைவிளைத்த லியல்பாதலால், குளிர்ந்த தென்றற்காற்று அப்பிரிந்தார்க்கு வருத்தத்தை மிகுவிக்கின்றது. அவ்வியல்பை, அவர்களுடம்பின்மீது தவழ்கிற தென்றற்காற்று அதனகத்துள்ள உயிரின்மீது அராவுவதாகக் குறித்தார். வெண்மலர் - மல்லிகை, முல்லை முதலியன. 'மென்மலர்' என்பதும் பாடம். மலர் - மாலைக்குக் கருவியாகுபெயர். முதலடிக்கு - மணம்வீசுவனவான கஸ்தூரிப்புழுகு முதலியவற்றைப் பூசியதும் வெண்ணிறமான மலர்மாலைகள் மலரப்பெற்றதுமான மார்பு என்று

பதவுரை கூறலுமாம். இப்பிரிவொன்றேயன்றி மற்றைப்படி அம்மகளிர்க்கு யாதொருமனக்குறையு மில்லை யென்பார், 'எஞ்சுதலில்நெஞ்சம்' என்றார். இனி, எஞ்சுதல் இல் நெஞ்சம் - ("எண்பதுகோடி நினைந்தெண்ணுவன" என்றபடி மிகப்பலவற்றை நினைநினைப்பதிற்) குறைவில்லாத மனமெனினுமாம். பிரிந்தவரது பண்மைபற்றி, 'நெஞ்சம் எரிந்தன' எனப் பன்மையாற் கூறப்பட்டது. 'எஞ்சுதனிநெஞ்சம' என்ற பாடத்துக்கு - வலியொடுங்கிய தனிப்பட்ட மன மென்பது பொருள். (௧௬௩)

௧௬௪. இளக்கரிழுதெஞ்சவிழுமெண்ணருவிளக்கைத்
துளக்கியது தென்றல்பகைசோரவுயர்வோரி
னளக்கரொடளக்கரியவாசையுறவீசா
விளக்கினம்விளக்குமணிமெய்யுறுவிளக்கம்.

(இ - ள்.) இளக்கர் இழுது எஞ்ச - இளகுதலையுடைய நெய் குறையவே, விழும் - அவிவனவான, எண் அரு விளக்கை - கணக்கிடமுடியாத [மிகப்பலவாகிய] விளக்குக்களை, தென்றல் - தென்றற்காற்றானது, பகை சோர உயர்வோரின் - பகைவர்கள் தளர்ச்சியடைய (அச்சமயம் பார்த்து அவர்களையழித்துத் தாம்) ஏற்றம்பெறுபவர்போல, துளக்கியது - அசைத்து அவித்துவிட்டது; மணி மெய் உறு விளக்கம் - (அங்கராகத்து மகளிரது) அழகிய உடம்பிற் பொருந்திய ஒளிகள், அளக்கரொடு அளக்க அரிய ஆசை உற வீசா - கடலையும் அளவிடவொண்ணாத திக்குக்களையும் அளாவ(த் தாம்) சென்று பரவி, விளக்கு இனம் விளக்கும் - தீபவர்க்கங்களாக (நின்று) இருளைப்போக்கும்.

அந்திமாலைப்பொழுதிலேற்றப்பட்ட விளக்குக்கள் இரவில் நெடுநேரம் எரிந்ததனால், அவ்விளக்குக்களிற் பெய்யப்பட்டிருந்த நெய் குறைந்துவிட்டது; குறையவே, அவ்விளக்குக்கள் அவியுந்தருணத்தனவாயின: அங்ஙனம்நடுநிசியில் நெய்குறைந்த விளக்குக்களின்மேல் தென்றற்காற்று வீசினமாத்திரத்தில் அவ்விளக்குக்கள் அவிந்துவிட்டன. மந்தமாருதமாகிய இளந்தென்றல் மெதுவாகவீசினாலும், நெய்குறைந்துவிட்ட விளக்குக்களாதலின், அங்ஙனம் எளிதில் அவிந்தன வென்க. அவ்வாறு அவியும் நிலைமையனவாயிருந்த விளக்குக்களின்மீது தான் வீசி அவற்றையவித்துவிட்ட தென்றலுக்கு, பகைவர் சோர்வடைந்த சமயம் பார்த்துக் கண்ணோட்டமின்றி அவர்கள்மேல் தாக்கி அவர்களை அறத்தொலைத்துத் தாம் மேம்பாடடையுஞ் சிலரை உவமைகூறினர். முன்னிரண்டடி - உவமையணி. வலியிழந்தவர்மேல் அச்சமயத்திற் போர்க்குச்சென்று அவரையழிக்காமல் அவர்க்கு உதவிசெய்து தழுவுவார்போன்று இரக்கங்காட்டி 'இன்றுபோய் நாளைவா' என்று விடுத்தல் இராமபிரான்போன்ற சுத்தவீரரின் தருமயுத்தவியல்பாக, அங்ஙனமன்றி எதிரிகளைச் சோர்வுற்றசமயம்பார்த்துக் கருணையின்றிக் கொல்லுதல் இராவணன்போன்ற அதருமயுத்தசாலிகளின் இயல்பாம். ஆகவே, 'பகைசோரவுயர்வோர்' என்றது - கொடிய அரக்கர்களைக் குறித்ததாம். ஓரோரிடத்து நிகழ்ச்சிகளை வருணிக்கும்பொழுது, அவ்வவ்விடத்தின் தலைவரை உவமைகுறித்தல், கவிமரபு. தென்திசையில்தோன்றிவளர்ந்தெழுந்து வடக்குநோக்கிவீசுவதான

தென்றற்காற்றின் கொடுமைக்கு, தென்னிலங்கைத்தீயினரான அரக்கரின் கொடுமையை உவமைகூறுதல் ஏற்குமாறு உணர்க. உயர்தல் - மேற்படுதல். காற்றின் தூய்மையை விளக்குக் கெடுப்பதுகொண்டு அது 'பகை' எனத் தகுமென்று உய்த்துணர்க.

"தணிமலர்த்திருமகள்தயங்குமாளிகை, யிணையொளிபரப்பிநின்றிருள் துரப்பன, திணிசுடர்நெய்யுடைத்தீவிளக்கமோ, மணிவிளக்கல்லன மகளிர் மேனியே" என்று பாலகாண்டத்து அயோத்திமாநகரவருணனையில் விளக்குவகைகளை யெடுத்துக்கூறியபடி, இவ்விலங்கைநகரத்து மகளிரின்மேனியிலுள்ள ஒளிவிளக்குப்போல இருளையொழித்து விளங்குதலைப்பின்னிரண்டடியிற் கூறுகின்றார். அச்சுடர்விளக்கு, செயற்கைப்பொருளாதலால், நெய்யாகிய உபகரணம் ஒழிந்தவிடத்துத் தான் ஒழிந்தது; இவ்வுடல்விளக்கமோ, இயற்கைப்பொருளாதலால், எப்பொழுதும் அழிவின்றி ஒருபடிப்பட விளங்கிற்று என வேறுபாடு உணர்க. ஒளியுடைப்பொருள்கள் நன்குவிளங்குதற்குப் பிறவொளிகளில்லாத நல்லஇருட்காலம் ஏற்றலால், அச்சுடர்விளக்குக்கள் அவிந்தசமயத்தில் இவ்வுடல்விளக்குக்கள் மிக நன்றாக விளங்கியமையை எடுத்துக்காட்டினர். அவ்விளக்கு அவிந்தவிடத்து இவ்விளக்குப் பகையின்றித் தனியே விளங்கிற் றென்க. நாற்புறத்துமுள்ள கடலையும் அதற்கும் அப்பாற்பட்ட திசையெல்லைகளையும் அளாவி நெடுந்தூரஞ்சென்று வீசுகின்றது இத்தேககாந்தி யென்பது, மூன்றாமடியில் விளக்கப்பட்டது. இனி, மூன்றாமடிக்கு - கடலோடு அளந்துஒப்பிடவொண்ணாத [கடலினும்பெரிய] காதல் (தன்னைக்கண்ணுறுவார்க்கு) உண்டாம்படி அம்மேனியொளி வீசி யென்றும் உரைகூறலாம். ஆசா என்ற வடசொல் - திசையையும், விருப்பத்தையுங் குறிக்கும். மணிமெய் - அழகிய உடம்புகள், உறு விளக்கம் வீசா - மிக்கவொளியைவீசி, விளக்கினம் போல விளக்கு மென்று முடிபுஅமைத்தலு மொன்று. அன்றி, மணி உறு விளக்கம் - இரத்தினங்களிற்பொருந்திய ஒளிகளும், மெய் உறு விளக்கம் - உடம்பிற்பொருந்திய ஒளிகளும், எங்கும்வீசி விளக்கினமாய்விளக்கு மென்று உரைவகுத்து, இரத்தினதீபம் தேககாந்தி யென்ற இரண்டையும் எடுத்துரைத்ததாகக் கொள்ளலுமாம். அம்மாளிகைகளிற் பதிக்கப்பட்டுள்ள இரத்தினங்கள் ஒளிவீசி இருள்போக்கி விளக்கினமாய் நிற்கின்றன வென்க: மேல் கஅ - ஆஞ் செய்யுளின் முன்னிரண்டடி, ஒருசார் ஒப்புநோக்கத்தக்கது. இனி, மெய்யுறு மணிவிளக்க மென்று மொழிமாற்றி, மகளிருடம்பிற்பொருந்திய இரத்தினாபரணங்களினொளிகளென்று உரைப்பாரு முளர். அணியென்றும் எடுக்கலாம். பின்னிரண்டடி - உயர்வுநவிற்சியணி.

தகளியிற்பெய்யும்போது நெய் இறுகியிருப்பினும், பின்னர் விளக்கு எரிகையில் அது இளகுதல் இயல்பாதலால், அத்தன்மை தோன்ற 'இளக்கரிழுது' எனப்பட்டது. 'எண்ணறு விளக்கை' என்ற பாடத்துக்கு - அளவற்ற விளக்குக்களை யென்க. பகை - பகைவர்க்குப் பண்பாகுபெயர். ('அளக்கரொடளக்கரிய' என்ற சொற்போக்குக்கொண்டு, 'அளக்கர்' என்ற கடலின்பெயர் - அளக்கவரியதென்னுங் காரணம்பற்றி வந்ததெனக் கருத

லாம்; 'காமமருவு' என்பது 'காமர்' எனத் தொகுத்தல்விகாரப்படுதல்போல, 'அளக்கவரு' என்பது 'அளக்கர்' எனச் சிதைந்துநிற்றல்கூடும்.) 'வீயாவிளக் கெனவிளங்கும்' என்ற பாடத்துக்கு - அவியாத விளக்குப்போல விளங்கு மென்க. (௧௧௪)

௧௧௫. நித்தநியமத்தொழிலராய்நிறையுஞானத்
துத்தமருறங்கினர்கள்யோகியர் துயின்றார்
மத்தமதவெங்களிறுறங்கினமயங்கும்
பித்தருமுறங்கினரினிப்பிறரிதென்னும்.

(இ - ள்.) நித்தம் நியமம் தொழிலர் ஆய் - நாள்தோறும் முறைதவறாமற்செய்யும் வைதிகச்செயல்களை யுடையவர்களாய், நிறையும் ஞானத்து - பரிபூர்ணமான ஆத்மஞானத்தையுடைய, உத்தமர் - மேலோர்களும், உறங்கினர்கள் - (அந்நகரியில்) தூங்கினார்கள்; யோகியர் - அஷ்டாங்கயோகநிலையில் நின்றவர்களும், துயின்றார் - தூங்கினார்கள்; மத்தம் மதம் வெம் களிறு - மயக்கத்தைத்தருகிற மதம்பிடித்த வெப்பங்கொண்ட யானைகளும், உறங்கின - தூங்கின; மயங்கும் பித்தரும் - மதிமயக்கங்கொண்டலைகிற பைத்தியக்காரர்களும், உறங்கினர் - தூங்கினார்கள்; (என்றால்), இனி—, பிறர் இது என் ஆம் - மற்றையோர் (அந்நகரியில்தூங்கினார்களென்னும்) இச்செய்தியைக் குறித்துச் சொல்லவேண்டுவ தென்னே? (எ - று.)

நித்தநியமத்தொழிலர் - தவறாது நித்தியகர்மாநுட்டானஞ்செய்பவர். நித்தியநியமத்தொழிலராய் நிறையுஞானத்து உத்தமர் - 'ஞானமனுட்டான மிவை நன்றுகவேயுடையார்.' பஞ்சகால அஷ்டகால பராயணரான அவர்கள் இராத்திரிபோஜநாநந்தரம் ஏகாந்தமாகஇருந்து ஐம்பொறிகளையடக்கிப் பிராணாயாமஞ்செய்து மனத்தைப் பரமபொருளினிடத்தே லயப்படுத்தித் தியானத்தோடு சயநித்தலாகிய யோககாலநியமத்தை யநுட்டிக்கும்போது இரவில் நெடுநேரமானதனால் நித்திரைகொண்டனரென்பது, முதலடியிற்கூறிய விஷயம். 'யோகியர் துயின்றார்' என்றது, நள்ளிரவு எவரையுஞ்சிறிதேனுந்துயில்கொள்ளச்செய்யுமியல்பின தென்பதைக் காட்டுதற்கு. மதத்தால்மயங்கி வெப்பங்கொண்ட யானைகட்கும், மதிமயக்கங்கொண்டலையும் பித்தர்க்கும் நித்திரைகொள்ளாமை இயல்பு. இந்தப்பிராணிகளும் துயில்கொண்டமை கூறவே, மற்றைப்பிராணிகள் துயில்கொண்டமை கூறவேண்டாதாயிற்று. இங்ஙனம் தண்டாபூபிகாந்யாயத்தாற் பொருளை விளக்குதல், தொடர்நிலைச்செய்யுட் பொருட்பேறணி.

'தொழின்முடித்து நெடுஞானத்துத்தம ருறங்கினர்கள்,' 'உறங்காப்பித்தருமுறங்கினரினிப்பிறர்களென்னும்' என்பன, இச்செய்யுளின் பாடபேதம்.

[அநுமான் அநகநகரத்தின் அகழிமதில்களைக் கடத்தல்.]

௧௧௬. ஆயபொழுதம்மதிலகத்தரசர்வைகுந்
தூயதெருவொன்றொடொருகோடிதுருவிப்போய்த்
தீயவனிருக்கையயல்செய்தவகழிஞ்சி
மேயதுகடந்தனன்வினைப்பகையைவென்றான்.

(இ - ள்.) ஆய பொழுது - அங்ஙனமாகிய அந்தநடுநிசிப்பொழுதில்,— வினை பகையை வென்றான் - இருவினைகளாகிய பகைகளைச் சயித்தவனான அநுமான்,— அ மதில் அகத்து - அந்தஇலங்கைநகரத்து மதிலுக்குள்ளாக, அரசர் வைகும் தூய தெரு ஒன்றொடு ஒரு கோடி தருவி போய் - அரசர்கள்வசிக்கின்ற சிறந்த இரண்டுகோடிதெருக்களில் (பிராட்டியைத்) தேடிக்கொண்டு சென்று,— தீயவன் இருக்கை அயல் - கொடியவனான இராவணனது இருப்பிடத்துக்கு அருகில், செய்த அகழ் இஞ்சி மேயது - செய்யப்பட்ட அகழியும் மதிலுமாய்ப் பொருந்திய இடத்தை, கடந்தனன் - தாண்டி உட்சென்றான்; (எ - று.)

அரசர்வைகும் தெரு - ராஜவீதி: இங்கு 'அரசர்' என்றது, இராவணன் சுற்றத்தாரை. தூய தெரு - சிற்பசாஸ்திரலக்ஷணத்தின்படி குற்றமின்றியமைந்த வீதி. அவ்விலங்காபுரியில் இராவணன்வசிக்கின்ற அகநகரைச்சார்ந்து புறத்தேயுள்ள மதிலும், அதனையடுத்த அகழியும், இங்குக் கூறப்பட்டன. அகழிமதில்கள் ஒன்றையொன்று அடுத்திருப்பன வாதலால், ஒற்றுமைநயம் தோன்ற 'அகழிஞ்சி மேயது' என ஒருமையாகக் கூறினார்; இங்ஙனம் ஒருமைப்படுத்திக்கூறியதனால், கீழ் கஙசு - ஆம் கவியிற் கூறியபடி இலங்கைநகரத்து அகழிமதில்களை ஒருதாண்டிற்கடந்து உட்சென்றமைபோலவே, இவ்வகழி மதில்களையும் ஒருபாய்ச்சலிற்கடந்து அப்பாற்சென்றன னென்பது தோன்றும். கீழ் கசஎ - ஆஞ் செய்யுளில் "சொன்னமூன்றினும்" எனக் குறிக்கப்பட்டவற்றுள் அகத்தது இது.

பலவகைத்தீங்கையும் விளைத்தல்பற்றி, வினை, பகை யெனப்பட்டது; "வினைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை, வீயாது பின்சென் றடும்" என்றார் திருவள்ளுவரும். "இருள்சே ரிருவினையுஞ் சேரா" என்றபடி, நல்வினையும் பிறப்பிற்கு ஏதுவாதலால், அதுவும் அடங்க, பொதுப்பட 'வினை' எனப்பட்டது. 'வினைப்பகையை வென்றான்' என்றதனால், அநுமான் சகல கருமங்களையும் போக்கி ஜீவன்முக்தனாய்ப் பரமுக்திப்பேற்றுக்கு உரிமைபூண்டுள்ளவ னென்றவாறும். இத்தொடர் - அகப்பகைவர்க்க மெனப்படுகின்ற காமம் கோபம் முதலிய குற்றங்களை யொழித்தவனென்றும் பொருள்படும். கடத்தற்கரிய வினைகளையே கடந்தவனுக்குப் பிறவற்றைக்கடத்தல் அரிதன்றென்பது தோன்ற, 'அகழிஞ்சிமேயதுகடந்தனன் வினைப்பகையை வென்றான்' என்றார். (கக௯)

## வேறு.

[இராவணன்மாளிகையைச் சுற்றி அவனுரிமைமகளிரின் மாளிகைக ளிருக்குமிடத்தை அநுமான் சமீபித்தல்.]

கஉஎ. போரியற்கையிராவணன்பொன்மனை
சீரியற்கைநிரம்பியதிங்களாத்
தாரகைக்குழுவிற்றழுவித்தொடர்
நாரியர்க்குறைவாயிடநண்ணினான்.

(இ - ள்.) போர் இயற்கை இராவணன் பொன் மனை - (யாவரோடும்) போர்செய்தலையே இயல்பாகவுடைய இராவணனது பொன்மயமான மாளிகை, சீர் இயற்கை நிரம்பிய திங்கள் ஆ - (தனது) அழகியவடிவம் நிரம்பியுள்ள சந்திரமண்டலமாக, தாரகை குழுவின தழுவி தொடர் - (அச்சந்திரனைச்சாரவுள்ள) நக்ஷத்திரங்களின் கூட்டம்போல (அவ்விராவணனிருகத்தை)ச் சார்ந்து சுற்றிலுந்தொடர்ச்சியாகவிருக்கின்ற, நாரியர்க்கு உறைவு ஆம் இடம் - (அவனுக்கு உரியவராகிய) மகளிர் வசிப்பனவான மாளிகைகளிருக்கின்றஇடத்தை, நண்ணினான் - சார்ந்தனன், (அநுமான்); (எ - று.)

அவ்வகநகரினிடையே மிகப்பெரியதான இராவணன்மாளிகை தலைமைபெற்றுவிளங்க அதனையடுத்துச் சுற்றிலும் அவனுக்கு உரிமைபூண்ட மகளிரின்கிருகங்களுள்ளன: அவற்றிற்கு, கலைநிரம்பிய பூர்ணசந்திரன் இடையிலேசிறந்துவிளங்க அதனைச்சுற்றிவிளங்குகின்ற அவன்மனைவியரெனப்படும் நக்ஷத்திரங்களை உவமைகூறினர்; உவமையணி. இராவணன் எங்கும் எப்பொழுதும் அனைவரையும் வலியப்போர்க்குஅழைத்துப் போர்செய்யுமியல்பினனாதலை, அவனது திக்குவிசயவரலாறு முதலியவற்றாலறிக. 'தாரகைக்குழுவிற்றழைத்தோங்கிய' என்று பிரதிபேதமுளது.

இதுமுதற் பின்மூன்று கவிகள் - இப்படலத்தின் கசசு - ஆங் கவி போன்ற கவிகள். (ககூஎ)

[அநுமான் அந்த யக்ஷஸ்திரீகளின் வீதியை யடைதல்.]

கசூஅ. முயற்கருங்கறைநீங்கியமொய்ம்மதி
யயர்க்கும்வாண்முகத்தாரமுதன்னவ
ரியக்கர்மங்கையர்யாவருமீண்டினார்
நயக்குமாளிகைவீதியைநண்ணினான்.

(இ - ள்.) முயல் கரு கறை நீங்கிய மொய் மதி - முயலெனப்படுகின்ற கரிய களங்கமில்லாததொரு (கலை) நிரம்பிய சந்திரன் உண்டானால் அதுவும், அயர்க்கும் - (ஒப்பாகமாட்டாமல்) சோர்வடையத்தக்க, வாள் முகத்து - ஒளியுள்ள முகத்தையுடைய, ஆர் அமுது அன்னவர் - கிடைத்தற்கரிய தேவாமிருதத்தைப் போன்றவர்களான, இயக்கர் மங்கையர் யாவரும் - யக்ஷஸ்திரீகளெல்லாரும், ஈண்டினார் - ஒருங்குசேர்ந்தவர்களாய், நயக்கும் - விரும்பிவசிக்கின்ற, மாளிகை - வீடுகளையுடைய, வீதியை - தெருவை, நண்ணினான் - அடைந்தனன், (அநுமான்); (எ - று.)

இராவணன் திக்குவிசயஞ்செய்து வருகின்றபொழுது ஆங்காங்கிருந்த யக்ஷர் கந்தர்வர் அசுரர் முதலிய பற்பலதேவஜாதிகன்னிகைகளை வலியக் கவர்ந்து தேரேற்றி இலங்கைக்குக்கொணர்ந்து தனக்கு உரிமையாக்கிக்கொண்டனனென்பதை, உத்தரராமாயணங்கொண்டும் உணரலாம். அரக்கியரிலும் பலரை மனைவியராக்கிக்கொண்டிருந்தனனென்பதும், நூல்களால் விளங்குகின்றது. அவர்களில் யக்ஷஸ்திரீகளின் மாசற்றமுகமண்டலம் களங்கமற்றசந்திரனும் வெள்குப்படி அழகுசிறந்துள்ளதென்றார். கீழ் கஉக - ஆஞ் செய்யுளில்

"மூயற்கறைமலராத் திங்கள் முகத்தியர்" எனப்பட்ட புறநகரத்து மாதரினும் அழகு சிறந்தவர், இராவணனுக்கு உரிமைபூண்ட இம்மகளிரென்பது விளங்கிற்று. சிந்தாமணியில் "அமிர்தன்னசாயல்வேந்தற்கமுதாய்" என்றவிடத்து நச்சினார்க்கினியர் 'அமிர்தம் கட்கினிதாகிய மென்மையும், தன்னை நுகர்ந்தார் பிறிது நுகராமல் தங்கச்சுட்டு மென்மையு முடைமையின், அமிர்தன்ன மென்மையென்றார்' என்றும், 'மறுமையிற் சென்றுபெறும் அமுதமும் இவளெனக் கொண்டு மயங்கினமை தோன்ற, மீட்டும் 'அமுதாய்' என்றார்' என்றும் உரைத்தவை, இங்கு 'ஆரமுதன்னவர்' என்றவிடத்துக் கொள்ளத் தக்கன. ஒரினத்தவராதலின் ஒருங்கிருந்தன ரென்பது விளங்க, 'இயக்கர்மங்கையர் யாவரு மீண்டினார்' என்றார். யக்ஷராஜன் குபேரனாதலால், அவனது நகரமாகிய அளகாபுரி, இயக்கர்கள் வசிக்குமிடமாம்; அங்குவாழும் இயக்கியர் இலங்காபுரியின் மாளிகைகளை விரும்பி அவற்றில் வசிக்கின்றன ரென்றதனால், தனபதியான குபேரனது அளகையினும் நலஞ்சிறந்தது அவன் தம்பியான இராவணனது இலங்கை யென்பது போதரும். 'யாவருமெய்தியே' என்பது பாடாந்தரம். (௧௩௭)

[அநுமான் அவ்வயநகர்தோறுந் தேடிச் சீதாபிராட்டியைத் தேடுதல்.]

௧௩௮. தழைந்தபொய்யொளிபெய்ம்மணித்தாழ்தொறு
மிழைந்தநூலினுமின்னிளங்காலினு
நுழைந்துநொய்தினின்மெய்யுறநோக்கினான்
விழைந்தவெவ்வினைவேரறவீசினான்.

(இ - ள்.) தழைந்த - மிகுதியான, பொய் ஒளி அடர்ந்த ஒளிகளை, பெய் - சொரிகின்ற, மணி தாழ்தொறும் - வயிரரத்தினமயமான திறவுகோல் செல்லுமிடங்களிலெல்லாம், இழைந்த நூலினும் இன் இளங் காலினும் நொய்தினில் மெய் உற நுழைந்து - இழைக்கப்பெற்ற [நுண்ணிய] நூலைக் காட்டிலும் இனிமையான இளங்காற்றைக் காட்டிலும் நுட்பமாகத் தன் வடிவ மமைய நுழைந்துசென்று, நோக்கினான் - பார்த்தனன்: (யாவனெனில்,—) விழைந்த - (பொருள்களினிடத்து) ஆசைகொள்ளுதலாகிய, வெம் வினை வேர் - கொடிய கருமங்களின் வேரை, அற வீசினான் - முழுவதும் போக்கியவனான அநுமான்; (எ - று.)

கதவுகள் சாத்திப் பூட்டிடப்பெற்ற இடங்களிலும் அக்கதவுகளில் திறவுகோல்செல்லும் வழியில் மிகநுண்ணிய வடிவத்தோடு நுழைந்துசென்று தேடின னென்க. வயிரரத்தினம் மிக வலியதாதலால், திறவுகோல் அதனாற் செய்யப்பட்டது. இதனால், அக்கதவுபூட்டுக்களின் வலிமையும், இலங்கையின் செல்வச்சிறப்பும் விளங்குத லுணர்க. 'மணி' என்ற நவமணிப்பொதுப் பெயர், இங்குச் சிறப்பினால் வயிரத்தின்மேல் நின்றது. தாழ் எனினும், தாள் எனினும் ஒக்கும். இங்கு, தாழக்கோல்செல்லுந் துவாரத்துக்கு இலக்கணை. இளங்கால் - சிறுகாற்று, மந்தமாருதம். நூலினும்-நூல்போலவும், காலினும் -

காற்றைப்போலவும் [அதிநுட்பமாய்], கொய்தினின் நுழைந்து - விரைவாகப் புகுந்து, மெய் உற நோக்கினன் - (அந்தந்த இடங்களை) உண்மை விளங்குமாறு நன்றாகப் பார்த்தான் என்று உரைப்பாருமுளர். முன் (கஅ௲) "மணிகொள் வாயிலுள்...... காலினும் புகையினுங் கலக்கும் நுணுகும்" என்றது, இங்கு நோக்கத்தக்கது.

"அவாவென்ப வெல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றுந், தவாஅப் பிறப்பீனும் வித்து" என்றபடி, பொருள்களினிடத்து உண்டாகும் ஆசை பிறப்புக்கு மூலகாரண மாகுதலால், அதனையொழித்தவ னென்ற பொருளில், 'விழைந்த வெவ்வினைவே றற வீசினன்' என்றார்; "ஆசை வேரறிந்து" என்றார் பிறரும். "பொருளாசை மண்ணாசை பூங்குழலார்போகத், திருளாசை" என்று குறிக்கப்படுகின்ற மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை யென்னும் மூவகை யாசைகளும், 'விழைந்த' என்றதில் அடங்கும் அவாவாகிய காரணத்தை யொழிக்கவே, காரியமாகிய இருவினைகளைச் செய்யாமையால், அக்கருமங்கள் காரணமாக வரும் பிறப்புக்களு மில்லையாம். வினையாகிய மரத்தின் விழைவாகிய வேரறும்படி வைராக்கியமாகிய வாளை வீசினவ னென்க. முன் (கசுசு) "வினைப்பகையை வென்றான்" என்றதனோடு இங்கு, "விழைந்த வெவ்வினைவே றற வீசினன்" என்பதற்கு உள்ள ஒற்றுமை வேற்றுமை நயங்களை உய்த்துணர்க.

ஈற்றடி-முற்றுமோனை. 'தழைந்தபேரொளி பொற்மணித்தலமொறும்,' 'மையறநோக்கினன்', 'விழைந்ததீவினை' என்பன, இச்செய்யுளின் பாடபேதம். (கசுக)

[இதுமுதல் ஒன்பது கவிகள் - அரக்கியர் அவ்வியக்கியர்நுந்த நிலைமையைக் கூறும்]

கஎ0. அத்திரம்புனையானையரக்கன்மேல்
வைத்தசிந்தையர்வாங்குமுயிர்ப்பினர்
பத்திரம்புரைநாட்டம்பதைப்புறச்
சித்திரங்களெனவிருந்தார்சிலர்.

(இ - ள்.) சிலர் - சில இயக்கமாதர்கள்,—அத்திரம் புனை யானை அரக்கன்மேல் - மலைகளை யொத்த யானைகளையுடைய இராவணனிடத்தில், வைத்த—, சிந்தையர் மனத்தையுடையவர்களும், வாங்கும் உயிர்ப்பினர் - விடுகின்ற பெருமூச்சையுடையவர்களுமாகி,—(பின்பு), பத்திரம் புரை நாட்டம் பதைப்பு அற-(தாமரைமலரின்) இதழை யொத்த தமது கண்க ளிமைத்தலில்லாமல், சித்திரங்கள் என இருந்தார் - (தம்மைக் கண்டவர் தம்மைச்) சித்திரப்பாவைகளென்று சொல்லும்படி அசைவற்றிருந்தார்கள்; (எ - று.)

இராவணன் சீதையினிடத்துக் காதல்கொண்ட காலம்முதல் பிறமகளிரெவரையும் சிறிதுங் காதலிப்பதில்லை; இச்செய்தி, "ஏகநாயகன்றேவியை யெதிர்ந்ததற்பின்னை, நாகர்வாழ்விடமுதலெனநான்முகன்வைகும், மாகமால் விசும்பீறெனநவெனவரைப்பிற், றோகையாதர்கள் மைந்தரிற்றேன்றினர்

சுற்ற" என்னும் பிணிவீட்டுபடலச் செய்யுளினாலும் விளங்கும்; ஆகவே, அவன் தனக்கு உரிமைபூண்ட மகளிரில் எவரிடத்தும் வந்துசேர்ந்திடானாக, அந்தந்த மகளிர் தம்தம் இருப்பிடத்தில் அவன் வரவைத் தினப்படியாய் ஆவலுடன் நெடுநேரம் எதிர்பார்த்திருந்து நம்பிக்கையளவும் வரக்காணாமையால் வருத்தமுற்றுப் பலவகைப்பான விரகவேதனைகளை யனுபவிப்பதை, இதுமுதல் ககூ௪ - ஆங் கவிவரையிலும் எடுத்துக் கூறுகின்றார்.

மூன்பு இயக்கியர்க்குச் சித்திரப்பாவை அழகில் மாத்திரம் உவமையாயிருந்தது; இப்போது கண்ணிமையாது அசைவறவிருத்தலிலும் உவமையாயிற்றென்க. கீழ் ககஅ - ஆங் கவியில் "ஓவியமனையமாதர்" என்றதும் காண்க. மன்மதாவஸ்தைகளுள் நினைப்பும் வெய்துயிர்த்திரங்கலும் மூர்ச்சையும் இங்குக் கூறப்பட்டன. 'வாங்கும் உயிர்ப்பினர்' என்பதற்கு - நீங்கிய மூச்சையுடையவரா யென்றலும் அமையும். 'வாங்குமுயிர்ப்பிலர்' என்ற பாடம், போவதும் வருவதுமாயிருக்கின்ற மூச்சு அடங்கியவர்களா யென்று பொருள்படும். அத்திரம் - அஸ்திரமென்ற வடசொல்லின் விகாரம். அத்திரமெனினும், அத்திரியெனினும் ஒக்கும். 'யானை யரக்கன்' என்பதற்கு - யானைபோன்ற அரக்கனெனப் பொருள்கொள்ளுமிடத்து, மலைபோன்ற யானையைப் போன்ற அரக்கனென்று உவமைக்கு உவமைகூறியதாகக் கொண்டால், அவ்வுரை பொருந்தாது; "அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே" என்ற தொல்காப்பியத்தைக் காண்க. புரை - உவமவுருபு. இனி, அத்திரம் புரை - (பகைவரெறிந்த) படைக்கலங்களினாலாகிய ஊறுபாடுகளை அலங்காரமாகக்கொண்ட, யானை அரக்கன் - யானைபோல் வலிய அரக்கன் என்றும் பொருள்கொள்ளலாம்; வீரர்க்கு விழுப்புண் அணிகலமாம்: அத்திரம் - அதனாலாகிய வடுவுக்கு இலக்கணை. புரை - உவமவுருபு. 'பத்திரம் புரை நாட்டம்' என்ற தொடர் - அம்புகளையொத்த கண்கள் என்றும் பொருள்படும். (கஎ0)

கஎக. வள்ளல்வெஞ்சரமாரனையஞ்சியோ
மெள்ளவேகனவின்பயன்வேண்டியோ
கள்ளமென்கொலறிந்திலங்கண்முகிழ்த்
துள்ளமின்றியுறங்குகின்றார்சிலர்.

(இ - ள்.) சிலர் - சில இயக்கமகளிர்,—வள்ளல் - வண்மைக்குணமுடையவனான, வெம் சரம் மாரனை - கொடிய அம்புகளையுடைய மன்மதனுக்கு, அஞ்சியோ - பயந்துதானோ, மெள்ளவே கனவு இன் பயன் வேண்டியோ - மெதுவாக நற்கனவாகிய இனிய பயனைப் பெற விரும்பித்தானோ, கள்ளம் என்கொல் அறிந்திலம் - (அம்மகளிரின்) வஞ்சனைக்கருத்து யாதோ? அறியோம்: கண் முகிழ்த்து - (தமது) கண்களை மூடிக்கொண்டு, உள்ளம் இன்றி உறங்குகின்றார் - அகத்தில் தூக்கமில்லாதிருக்கையில் வெளிக்குத் தூங்குவார் போல விருக்கின்றனர்; (எ - று.)

விரகவேதனையால் உள்ளுறத் துயில்கொள்ளாவிடினும், அயர்ச்சியினாலும் இரவில் நெடுநேரமாய்விட்டதனாலும் கண்மூடியுறங்குவார்போ லிருக்

கின்றனர், சில இயக்கியர்; அப்பொய்யுறக்கத்திற்கு இருவகையான காரணங்களை ஊகிக்கின்றார்: ஒன்று - தம்மீது கொடிய அம்புகளைப் பிரயோகித்துத் தம்மைக் கொல்லத் தொடங்கியிருக்கின்ற மன்மதன் தாம் உறங்குவார்போலிருந்தால் தருமயுத்த முறைப்படி தம்மேலம்பெய்து தம்மைக் கொல்லாமலிருப்பனென்று கருதுதல்; மற்றொன்று - இராவணன் வந்து தழுவுவதாகக் கனவுண்டாகுமாயின் அக்கனவுத்தோற்றத்தினாலாவது இனிமையடையலாமென்று கருதுதல். மார னென்ற வடமொழிப்பெயர் - (பிரிந்தவரை) மரணவேதனைப் படுத்துபவனென்று பொருள்படும். இவ்வகை மகாவீரனிடத்து, துயில் வகை நெறியாமையாகிய தருமசிந்தை யுள தென்பதுபற்றி, அவனுக்கு 'வள்ளல்' என்ற அடைமொழி கொடுத்தார். 'வள்ளல்வெஞ்சரத்தான்' என்பதற்கு - வரையறையின்றி மேன்மேற்சொரியுங் கொடிய அம்புகளையுடைய மன்மதனென்று உரைப்பாருமுளர். 'வள்ளல்வெஞ்சிலை' என்றும். 'மெள்ள வின்கனவின்பயன்' என்றும் பாடமுண்டு. (கஎக)

கஎஉ. பழுதின்மன்மதன்வெங்கணைபன்முறை
யுழுதகொங்கையருச லுயிர்ப்பின
ரழுதுசெய்வதென்னாணையரக்கனை
யெழுதலாங்கொலென்றெண்ணுகின்றார்சிலர்.

(இ - ள்.) சிலர் - சில யக்ஷஸ்திரீகள்,—பழுது இல் - பழுதுபடுதலில்லாத, மன்மதன் வெம் கணை - மன்மதனது கொடிய அம்புகள், பல் முறை உழுத - பலமுறை பாய்ந்துசெல்லப்பெற்ற, கொங்கையர் - தனங்களையுடையவரும், ஊசல் உயிர்ப்பினர் - ஊசலாடுகின்ற [போவதும் வருவதுமாயிருக்கின்ற] சுவாசத்தையுடையவர்களுமாய்,—'அழுது செய்வது என் - (நாம் வீணே) புலம்புவதனாற் செய்வது என்ன இருக்கின்றது? ஆணை அரக்கனை - (எவரும் தவறாதுசிரமேற்கொள்ளுந்) கட்டளையையுடைய இராவணனை, எழுதல் ஆம்கொல் - (சித்திரத்தில்) எழுதுதல் முடியுமோ" என்று எண்ணுகின்றார் - என்று நினைக்கின்றார்கள்; (எ - று.)

பிரிவுற்ற மகளிரிற் சிலர் கனவிலாவது இராவணனைச் சேர்ந்து மகிழக் கருதினாற்போல, இவர்கள் இராவணனது வடிவத்தைச் சித்திரத்திலெழுதி அதனைப்பார்த்து மகிழக்கருதி, அழகியதும் கம்பீரமானதோற்றமுடையதுமான அவ்வுருவம் நம்மால் எழுதுந்தரத்ததோ வென்று சிந்திக்கின்றனரென்க. அழுதலாலாகும்பயனொன்றுமில்லையென்பார், 'அழுதுசெய்வதென்' என்றார். ஆணையரக்கன் - (எங்குந் தடையின்றிச்செல்லுங்) கட்டளையையுடைய இராக்கதன். மன்மதபாணத்துக்குப் பழுதின்மை - எவ்வுயிரையுந் தவறாதுவருத்துதல். பல நாளாக [பத்துமாசகாலமாக] விரகவேதனை யுற்றிருத்தல்பற்றி, 'மன்மதன் வெங்கணை பன்முறையுழுத கொங்கையர்' எனப்பட்டனர். ஊசலுயிர்ப்பினர்- உயிர் தத்தளிக்கின்றவர்; "உண்ணிலாவிய துயரம் பிடித்துந்த வாருயிர்நின்றூசலாட" என்றாற்போலக் கொள்க. இனி, இச்செய்யுளுக்கு-சிலர், கொங்கைகளில் மன்மதபாணம் தைக்கப் பெருமூச்செறிந்து அழுது, 'இனிச்செய்

வது என்ன இருக்கின்றது? இராவணனுடைய உருவத்தைச் சித்திரத்திலெழுதலாவது செய்யலாமா?" என்று நினைக்கின்றனரெனப் பொருள்கூறுவாருமுளர். முந்தினவுரைக்கு 'அழுது' என்றது 'செய்வது' என்பதனோடும், இவ்வுரைக்கு 'எண்ணுகின்றார்' என்பதனோடும் இயையும்; முந்தினவுரையில், 'எழுதலாங்கொல்' என்றது - எழுதுதற்கருமைகாட்டும். 'மன்மதனெனக்கணை' என்றும் பாடம். (கஎஉ.)

கஎ௩. ஆவதொன்றருளாயெனதாவியைக்
கூவுகின்றிலைகூறலைசென்றெனாப்
பாவைபேசுவபோற்கண்பனிப்புறப்
பூவையோடும்புலம்புகின்றார்சிலர்.

(இ - ள்.) சிலர் - சிலஇயக்கியர்,—கண் பனிப்பு உற - (தமது) கண்கள் மிகுதியாக நீர்துளிக்க,—'எனது ஆவியை கூவுகின்றிலை - என்னுடைய உயிரை [எனது பிராணநாயகனான இராவணனை] இங்குவரும்படி (போய்) அழைக்கின்றாயில்லை; சென்று கூறலை - (என்செய்தியை என்கணவனிடத்திற்) போய்ச் சொல்லுகின்றாயுமில்லை; ஆவது ஒன்று அருளாய் - (இங்ஙனம் எனக்கு) ஆகவேண்டிய காரியமொன்றையும் என்பக்கல் இரக்கங்கொண்டு செய்யாதிருக்கின்றாய்', என என்று, பாவை பேசுவ போல் - சித்திரப்பிரதிமைகள் பேசுவனபோல, பூவையோடும் புலம்புகின்றார் - நாகணவாய்ப்பறவைகளை நோக்கிக் குறைசொல்லி அழுகின்றார்கள்; (எ - று.)

ஆவது ஒன்று - அநுகூலமானதொரு காரியம். இனி, 'ஆவதொன்றருளாய்' என்பதற்கு - உன்னால் ஆகக்கூடியதோருதவியையுஞ் செய்யமாட்டாயா? என்றும் பொருள்கூறலாம். ஆவிபோன்றவனை 'ஆவி' என்றது, உபசாரவழக்கு. பிரியில் தனிபேதரித்திருக்கமாட்டாத அன்புரிமையால், 'எனது ஆவியை' என்றனர். 'சென்று' என்றதை 'கூவுகின்றிலை' என்றதனோடுங் கூட்டுக. 'எனது' என ஒருமையாகக்கூறியதனால், தனித்தனி அவரவர் தாம் தாம்வளர்க்கும் பூவையை நோக்கி இங்ஙனஞ்சொல்லியிரங்குகின்றன ரென்க. சித்திரப்பிரதிமைபோலழகிய மகளிர் பேசுவதற்கு, 'பாவை பேசுவபோல்' என்று உவமைவகுத்தனர்; இல்பொருளுவமையணி. பனிப்பு - இடைவிடாது நீர்துளித்தல், உற மிக என்க. பூவை - கிளியுமாம். அருளாய் - முன்னிலையொருமையெதிர்மறைமுற்று. (கஎ௩.)

கஎ௪. ஈரத்தென்றலிழுகமெலிந்துதம்
பாரக்கொங்கையைப்பார்த்தனர்பாதகன்
வீரத்தோள்களின்வீக்கநினைந்துயிர்
சோரச்சோரத்துளங்குகின்றார்சிலர்.

(இ - ள்.) சிலர் - சில இயக்கப்பெண்கள்,—ஈரம் தென்றல் இழுக - (பிறர்க்குக்) குளிர்ச்சியைச்செய்யுந் தென்றற்காற்று(த் தம்மீது) உராய்ந்து செல்ல அதனால், மெலிந்து - வருந்தி, தம் பாரம் கொங்கையை பார்த்தனர் - தமது பருத்த தனங்களைப் பார்த்தவர்களாய், பாதகன் வீரம் தோள்களின் வீக்

கம் நினைந்து - (தாமெய்க்கூடாது) வருந்துபவனான இராவணனது போர்த் திறமமைந்த தோள்களின் பருமையைக் கருதி, உயிர் சோர சோர துளங்குகின்றார் - (தமது) உயிர் மெலியமெலியத் துடிக்கின்றார்கள்; (எ - று.)

"நோக்கிய நோக்கெனும் நுதிகொள் வேலிணை, ஆக்கிய மதுகையான் றோளி னாழ்ந்தன, வீக்கிய கனைகழல் வீரன் செங்கணும், தாக்கணங் கனையவள் தனத்தில் தைத்தவே" என்றபடி மகளிர்க்குத் தனம்போல ஆடவர்க்குத் தோள் வேட்கைவிளைக்குஞ் சிறந்தவுறுப்பாதலால், இம்மகளிர் தமது பருத்த கொங்கைகளைப் பார்த்தவுடன், அவை பயன்படும்படி தழுவுதற்குஉரிய இராவணனது பருத்ததோள்கள் அதுசெய்யாதுயிற்றலைக் கருதி, விரகவேதனையால் மரணாவஸ்தைப்படுகின்றனரென்க. சா வென்றல் இழுக என்று எடுத்து, (தமதுடம்பை)ச் சாவதாய்ப் [அழிவதாய்ச்] சென்றற்காற்று அவ்வுடம்பின்மீது உலாயவென்று பொருள்கூறினும் பொருந்தும்; கீழ்ப்போந்த கசு௩ - ஆஞ் செய்யுளின் முதலிரண்டடியைக் காண்க: இப்பொருளில், சா - செயவெனெச்சம். இன்பம்பெறுமல் வருத்தத்தை விளைப்பதுமாத்திரமாயிருத்தல் பற்றி, அவர்கள் தமது பருத்தகொங்கையை வீண்பாரமாகக் கருதுகின்றனரென்பதும் தோன்ற, 'பாரக்கொங்கை' எனப்பட்டது. பாதகன் - பாதகன் என்ற வடசொல்லின் விகாரம்: நலிபவனென்பது பொருள்; இனி, 'பாதகன்' என்பதைத் தற்சமவடசொல்லாகக்கொண்டு, தனக்குஉரிமைபூண்ட மகளிர் பலரிருக்கவும் பிறன்மனைவியை [சீதையை] விரும்புதலாகிய கொடியபாவச் செயலையுடையவனென்று உரைத்தலுமாம்; "அறனிற்கொண்ட தன்மனையாளையளித்தலக்கிலழுதிராகப் பிறனில்தேடும் பெரும்பாவி" என்றது காண்க. 'மெலிந்த' என்றும் பாடமுண்டு. (கஎ௪)

கஎ௫. நக்கசெம்மணிநாறியநாணிழல்
பக்கம்வீசுறுபள்ளியிற்பல்பக
லொக்கவாசையுலக்கவுலந்தவர்
செக்கர்வான்றருதிங்களொத்தார்சிலர்.

(இ - ள்.) சிலர் - சில இயக்கமாதர்,—நக்க - விளங்குகின்ற, செம் மணி - சிவந்த இரத்தினங்களினின்று, நாறிய - தோன்றிய, நாள் நிழல் - எந்நாளும் ஒருபடியாயுள்ள காந்திகள், பக்கம் வீசுறு - பக்கங்களில் வீசப்பெற்ற, பள்ளியில் - படுக்கையிலே, பல் பகல் ஒக்க ஆசை உலக்க உலந்தவர் - பலநாள்களாய் ஒரேவிதமாகத் தமதுஆசை வீணேயொழிதலால் மெலிந்து கிடப்பவர்களாய்,—செக்கர் வான் தரு திங்கள் ஒத்தார் - செவ்வானத்தில்தோன்றுகின்ற சந்திரனைப் போன்றிருந்தார்கள்; (எ - று.)

செம்மணி - பதுமராகம், மாணிக்கம். செந்நிறவிரத்தினங்கள் பதிக்கப்பெற்ற கட்டிலின்மேல அவ்விரத்தினங்களினொளிவீசுதலாற் செந்நிறமாய்விளங்கும் மெத்தையிலே நெடுநாளாகத் தொடர்ச்சியாயுள்ள விரகவேதனையால் மெலிந்து கிடக்கின்ற மகளிர்க்கு, அந்திமாலைப்பொழுதிற் செவ்வானத்தினிடையே காணப்படுகின்ற கலைகுறைந்தசந்திரனை உவமைகூறினார்; உவமை

யணி. சாயங்காலத்து மேற்றிசையிற்காணப்படுகின்ற செவ்வானத்தில் விளங்குஞ் சந்திரன் பிறையேயா மென்பது வெளிப்படை; மேல் (க௮உ) "அவிர் மதி நெற்றியாக வந்திவா னெக்கின் றாரும்" என்பதுங் காண்க. கலைகுறைந்த அது உடல்மெலிந்தமாதர்க்கு ஒப்புமையென உணர்க. நாள் நிழல் - எப்பொழுதும் புதுமையாயுள்ள ஒளி. (க௭௫)

க௭௬. வாளினாற்றெளிகற்பகவல்லியர்
தோளினாற்றிய தூங்கமளித்துயி
லாளினாற்செவியிற்புகநாமயாழ்த்
தேளினாற்றிகைப்பெய்துகின்றார்சிலர்.

(இ - ள்.) வாளினால் தெளி - ஒளியினால் தெளிவும்பெற்று விளங்குகின்ற, கற்பக வல்லியர் - கல்பகவிருக்ஷத்தைச் சார்ந்துபடருங் காமவல்லியென்னும் பொற்பூங்கொடி போன்றவர்களான, சிலர் - சில இயக்கமகளிர்,—தோளின் நாற்றிய - (விரகவேதனையால் மெலிவுற்ற தங்கள்) தோள்கள் (சோர்ந்தாடுவது)போல அசைந்தாடுமாறு கட்டியிருக்கின்ற, தூங்கு அமளி - தூங்குமஞ்சத்தில், துயில் ஆளினால் - தூங்கும்போது, செவியில் புக (பாடகர்வந்து பாடுகின்ற வீணைப்பாட்டுகீ) காதில்நுழைய, நாம யாழ் தேளினால் - அச்சந்தருகின்ற அவ்வீணையினிசையாகிய தேளினால், திகைப்பு எய்துகின்றார் - மயக்கமடைகின்றார்கள்; (எ - று.)

சில இயக்கமாதர்கள் விரகவேதனையால் வருந்திக்கொண்டிருக்கையில், நடுநிசியானதனால், படுத்துச் சிறிது துயிலுமியன் றுபார்ப்போமென்றெண்ணி, தூங்குமஞ்சத்தி லமைக்கப்பட்டுள்ள படுக்கையிற் சேர்வாராயினர். இம்மகளிர் இராவணனுக்கு உரிமைபூண்டு பெண்மையுற்றவராதலால், இவர்கட்கு இனிய தூக்கத்தை விளைக்குமாறு இவர்கள்மாளிகைக்குச் சென்று இவர்கள்செவிப்பட நாள்தோறும் இடையிரவில் வீணைவாசிக்கும்படி இராவணனாலேவப்பட்டிருந்த இன்னிசைப்பாடகர், தமவழக்கப்படி அச்சமயத்தில் அங்குவந்து வீணைவாசிக்கலானார்கள். அவ்யாழினிசை "தென்றற்கும் வீணைக்குஞ் சேமணிக்கும் ......அயர்ந்தாள்" என்றபடி காமோத்தீபகப்பொருள்களி லொன்றாதலால், அப்பிரிவுடைமகளிரின் காதிற்பட்டமாத்திரத்தில் அவர்கட்கு வருத்தத்தை மிகுவிக்க அதனால், தேள் கொட்டினாற்போல அவர்கள் மிக்கவருத்தத்தை யடைவாராயினரெனக் கருத்துவிவரங் காண்க.

தூங்கு அமளி - ஆடுமஞ்சம்: ஊசலாகஅமைத்த சயனம். அது தொங்கியசைந்தாடுதற்கு, அப்பிரிந்தமகளிரின் மெலிவுற்றதோள்க ளசைந்தாடுதலை உவமைகூறினார். நாற்றிய-தொங்கக்கட்டிய; தூங்குஅமளி, தூங்குதல் - தொங்குதல்: "தூங்குசிறைவாவல்" என்றவிடத்துப் போல. இனி, முன்னிரண்டடிக்கு - இயற்கைத்தேககாந்தியினால் விளங்குகின்றவர்களான காமவல்லி போன்ற தேவமாதர்கள் தங்கள் கைகளால் தொங்கவிட் டமைத்த தூங்குமஞ்சத்தி லென்று உரைப்பாருமுளர்.

யாழ் - அதன் இசைக்கு முதலாகுபெயர். நாம் - அச்சந்தருவதோருரிச்சொல்; "பேநா முருமென வரூஉங் கிளவி, மாமுறைமூன் று மச்சப்பொருள"

என்பது தொல்காப்பியம். இதன்மேல் அ - சாரியை; குறிப்புப்பெயரெச்ச விகுதியெனினும் இழுக்காது; நாமம் என்று எடுத்து, 'உரிச்சொல் ஈறுதிரிந்தது' என்பர் நச்சினார்க்கினியர். இனி, நாமம் யாழ் - பிரசித்திபெற்ற வீணையென்றலுமொன்று. அன்றி, யாழ் நாமம் தேனினூல் என்று மொழிமாற்றி, யாழிசையென்னும் பெயரையுடைய தேனிசை லென்று உரைப்பாருமுளர். செவியிற்புக நாமயாழ்த்தேனினூல் திளைப்பெய்துகின்றார்—மேல் கஎஉ - ஆங்கவியில் "அளந்த பாடல் வெவ்வரவு தஞ்செவிபுக வலமரலுறுகின்றார்" என்பதனோடு ஒப்பிடுக. நானினூல் - உருபுமயக்கம். 'செவியிற்புகுநாமயாழ்' என்று சில ஏட்டுப்பிரதிகளிற் பாடம் காணப்படுகின்றது. (கஎசு)

கஎஎ. கவ்வுதீக்கணைமேருவைக்கால்வளைத்
தெவ்வினான்மலையேந்தியவேந்துதோள்
வவ்வுசாந்துதம்மாமுலைவெளவிய
செவ்விகண்டுகுலாவுகின்றார்சிலர்.

(இ - ள்.) சிலர் - சில யக்ஷஸ்திரீகள்,— மேருவை கால் வளைத்து - (வில் வடிவங்கொண்ட) மகாமேருமலையை இருகோடிகளும் வளையச்செய்து, கவ்வு தீ கணை எவ்வினான் - (பட்டவிடத்திற்) பற்றுமியல்புள்ள அக்கினியை முனையாகவுடைய (திருமாலாகிய) அம்பை(த் திரிபுரசங்காரகாலத்தில்) பிரயோகித்தவனான சிவபிரானது, மலை - (இருப்பிடமாகிய) கைலாசகிரியை, ஏந்திய- பெயர்த்து உயரத்தூக்கிய ஏந்து தோள் - உயர்ந்த (இராவணனது) தோள்களில், வவ்வு - பூசப்பட்ட, சாந்து - சந்தனக்குழம்பை, தம் மா முலை வெளவிய - தங்களுடைய பருத்த தனங்கள் கவர்ந்துள்ள, செவ்வி - நிலைமைய, கண்டு - பார்த்து, குலாவுகின்றார் - மகிழ்கின்றார்கள்; (எ - று.)

சிலமகளிர், முன்பு தாம் இராவணனை ஆலிங்கனஞ் செய்தகாலத்தில் அவனதுதோள்களிற் பூசப்பட்டுள்ள சந்தனக்குழம்பு தமதுகொங்கைகளில் ஒட்டிக்கொண்டிருந்ததைப் பார்த்து, அந்தப் பழையஇன்பநிலையை ஞாபகத்திற்கொண்டு இந்தப்பிரிவுக்காலத்தில் ஒருவாறுமகிழ்ந்து பொழுதுபோக்குவாராயினரென்க. இராவணனைப்பிரிந்து பலநாட்காலமாயினும் அந்நாள்முதல் இவர்கள் பிரிவுத்துயரால் நீராடாமலேயிருக்கின்றனரென்பது, இதனாற் போதரும்; "நாள்பலவு, மெய்ம்மணுதமேனியும் வாராவுறக்கமு மாசுடையும்,புண்ணான்னெஞ்சும் புகைதாருயிர்ப்பும பொரிமுத்துமே" எனப் பிரிவாற்றாமைக்குரிய குறிகள் காண்க: (இராமவிரகத்தாற் பிராட்டி நெடுநாளாய் நீராடாதிருந்தனளென்பதை, மேற் காட்சிப்படலத்தில் "தூவியன்ன மென்புனலிடைத் தோய்கிலா மெய்யாள்" என்று கூறுதலுங் காண்க.) இது, கற்பிற்சிறந்த குலமாதரினியல்பு.

கணை எவ்வினான் என இயையும். எவ்வுதல் - எய்தல், செலுத்துதல்; இது, ஏவுதலென்பதன் விகாரம்: தனியே ஒருவினைப்பகுதியுமாம். எவ்வவெனினும் ஏவவெனினும் ஒத்தல்போல, எவ்வினானெனினும் ஏவினானெனினும் ஒக்கும். 'தீக்கணையெவ்வினான் மலையேந்தியதோள்' எனவே, இராவணன்

புய மென்றதாயிற்று. 'மலையேந்தியவேந்தரோன்' என்ற பாடத்துக்கு—ஏந்தல் - பெருமையிற்சிறந்தவனான இராவண னென்க.

ஒருவகைச்சமத்காரமமைய, 'மேருமலையை யெடுத்து வளைத்து அம்பு தொடுத்தவன் வீற்றிருக்கின்ற மலையைப் பெயர்த்தெடுத்த தோள்' என்றார்; இதனால், இராவணனது அளவிறந்த புஜபலம் விளங்கும். கால் - விற்சுழுந்து; தநுர்த்தண்டம். 'தம்மாமூலலையைங்கியசெவ்விகொண்ட' எனவும் பாடமுண்டு.

௧௭௫. கூடிநான்குயர்வேலையுங்கோக்கநின்
றாடினான்புகழுங்கைநரம்பினா
னாடிநாற்பெரும்பண்ணுநயப்புறப்
பாடினான்பெயர்பாடுகின்றார்சிலர்.

(இ - ள்.) சிலர் - சில இயக்கியர்,— உயர் - பொங்கியெழு மியல்புள்ள, நான்கு வேலையும் - நாற்றிசைக்கடல்களும், கூடி கோக்க தம்மில் நெருங்கிக் கலந்து பெருவெள்ளமாக, (அந்த மகாப்பிரளயகாலத்தில்), நின்று - (தான் அழியாது) நின்று, ஆடினான் - ஆனந்ததாண்டவஞ்செய்தவனான பரமசிவனுடைய, புகழ் - கீர்த்தியை, அம் கை நரம்பினால் - அழகிய தனது கையின் நரம்புகளைக்கொண்டு, நாடி - ஆராய்ந்து, நால் பெரும் பண்ணும் நயப்பு உற பாடினான் - நால்வகைப்பெரும்பண்களும் இனிமையடையும்படி பாடியவனான இராவணனுடைய, பெயர் - புகழை, பாடுகின்றார்-பாடுகின்றவரானார்கள்.

விரகவேதனையுற்ற மகளிர்சிலர், தமதுகணவனுடைய புகழைக் கூறும் பாட்டுக்களைப் பாடி அதனால் ஒருவாறு மகிழ்ச்சியுற்றுப் பொழுதுபோக்குவாராயின ரென்க. பெயர்பாடுதல் - நாமசங்கீர்த்தனமுமாம். கீழ்ச்செய்யுளில் 'மலையை வில்லாக ஏந்தியவனது மலையையேந்திய தோள்' என்றதுபோல, ஒருவகைச்சமத்காரமமைய, இங்கு 'ஆடினவனது புகழைப் பாடினவனது பெயரைப் பாடுகின்றனர்' என்றார். உயர் வேலை - அலையெழுகின்ற கடல். நான்கு உயர்வேலை - கீழ்கடல், தென்கடல், மேல்கடல், வடகடல். 'கூடி நான்குயர்வேலையுங் கோக்க நின்றாடினான்' என்றதனால், சிவபிரான் அழித்தற்றொழிற்கடவு ளென்பதையும், அப்பெருமானது அற்புதசக்தியையும் வெளியிட்டார். இராவணன் கைலாசகிரியைப் பெயர்த்தெடுக்கத்தொடங்கி நசுக்குண்டு நெடுநாள்புலம்புகின்றபொழுது, பிரஹஸ்தன்முதலிய மந்திரிகள் சொன்னதனால், தனது பத்துத்தலைகளி லொன்றைத் தடிந்து தனதுஇருபதுகைகளுள் ஒன்றுடன் சேர்த்து அக்கையின் நரம்புகளே தந்திரிகளாய் நிற்க வீணையாகஅமைத்து அச்செயற்கைச்சரீரவீணையைக்கொண்டு ஸாமவேதகானஞ்செய்து சிவபிரானை மகிழ்வித்து வரம்பெற்றன னென்பது வரலாறாதலால், 'ஆடினான்புகழுங்கைநரம்பினால் நாடிப்பாடினான்' என்றார். "வான்றிகழ்வெள்ளிவெற்பின் கீழுற்றுவருந்துகின்ற, வூன்றிகழ் வேலினானை யமைச்சர்தா முற்று நோக்கித், தேன்றிக ழிதழியான்றன் றிருச்செவிசார நின்கை, தான்றிகழ் வீணையாகப் பாடுதி சாம மென்றார்," "அன்னதே கருமமென்றெ வரக்கனு மறிவுட் கொண்டு, தன்னது தலையி லொன்றைத் தடிந்து தன்கையிற்

சேர்த்தி, யின்னவி னரம்பிற் றுத்தங் கிளைமுத லிசைக ளேழாற், யன்னருஞ் சாமகீதம் பரிவுடன் பாட லுற்றான்" என்னும் உத்தரகாண்டச்செய்யுள்கள் இங்கு நோக்கத்தக்கன. பெரும்பண் நான்கு - பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி என்பன. நாடி - விரும்பி யெனினுமாம். 'பாடினன்பெயர் பாடு கின்றார் பலர்' என்ற பாடம், மோனைத்தொடை சிறக்கும். (கஎஅ)

[அநுமான் இயக்கியர்வீதியைக்கடந்து அரக்கியர்வீதியைச் சேர்தல்.]

கஎகூ. இனையதன்மையியக்கியரெய்திய
மனையொராயிரமாயிரகோடியா
புனையவன்குலத்தாயிழையாரிட
நினைவினெய்தினனீதியினெய்தினான்.

(இ - ள்.) இனைய தன்மை - இப்படிப்பட்ட தன்மைகளையுடைய, இயக்கியர் - யக்ஷஸ்திரீகள், எய்திய - சேர்ந்துவசிக்கின்ற, மனை - வீடுகள், ஓர் ஆயிரம் ஆயிரகோடி ஆம் - ஆயிரத்தாற்பெருக்கிய ஆயிரகோடியென்னுந் தொகையனவாம்; (அவற்றைக்கடந்து),—நீதியின் எய்தினான் - நியாயமார்க்கத்திற் சேர்ந்தொழுகுபவனான அநுமான்,—அனையவன் குலத்து ஆயிழையார் இடம் - அவ்விராவணனதுகுலத்துமகளிர் [ராக்ஷஸஜாதி ஸ்திரீகள்] இருக்கின்ற இடத்தை, நினைவின் எய்தினன் - (தனது) விருப்பத்தின்படி அடைந்தான்; (எ - று.)

ஆயிழையார் - தேர்ந்தெடுத்தணிந்த [சிறந்த] ஆபரணங்களை யுடையவர். சிறிதுந்தடையில்லாமல் தான்நினைத்தபடி சென்றுசேர்ந்தன னென்பார், 'நினைவி னெய்தினன்' என்றார்; இத்தொடர்க்கு - தான்நினைத்தமாத்திரத்தில் [அதிவிரைவில்] சேர்ந்தன னென்றும் பொருள்கொள்ளலாம். நீதியின் எய்தினான் - நீதிசாஸ்திரமுறைப்படி உத்தமதூதனாய்ச் சென்றவனுமாம்; இத்தொடர் - முறையே [ஒன்றன்பின் ஒன்றாய்] அம்மாளிகைகளிற் சென்று தேடியவனான அநுமா னென்றும் பொருள்படும்: "காதுசேர் தாழ்குழையாய் கன்னித்துறைச்சேர்ப்ப, போதுசேர்தார்மார்பபோர்ச்செழிய—நீதியான், மண்ணமிர்தமங்கையர்தோண்மாற்றாரையேற்றார்க்கு, நுண்ணியவாயபொருள்" என்ற செய்யுளில், 'நீதியால்' என்றது - முறையே யென்று பொருள்படுதலும் உணர்க. 'இயக்கியரீண்டிய, மனையொராயிரமாயிரவ்வாயில்போய்' என்றும், 'ஆய்வளையாரிடம்' என்றும் பாடமுண்டு. (கஎகூ)

## வேறு.

[இதுமுதற் பன்னிரண்டு கவிகள்—ஒருதொடர்: அவற்றிற் பதினொரு கவிகள் - அநுமான்சென்ற அந்தநடுநிசியில் இராவணனுக்கு உரிமை பூண்ட அவ்வரக்கியர் பிரிவாற்றாமையுடனிருந்த பலவேறு நிலைமைகளை எடுத்துக்கூறும்.]

கஅ0. எரிசுடர்மணியின்செங்கேழிளவெயிலிடைவிடாது
விரியிருள்பருகிநாளும்விளக்கின்றிவிளங்குமாடத்

தரிவையர்குழுவுநீங்கவாசையுந்தாமுமேயா
யொருசிறையிருந்துபோனவுள்ளத்தோடூடுவாரும்.

(இ - ள்.) எரி - நெருப்புப்போலப்பரவி ஜ்வலிக்கின்ற, சுடர் - ஒளியை யுடைய, மணியின் - மாணிக்கங்களின், செம் கேழ் - செந்நிறமுள்ள காந்தி யாகிய, இள வெயில் - இளஞ்சூரியகிரணம், இடைவிடாது - நடுவிலொழிதலில்லாமல், விரி இருள் பருகி - பரவுமியல்பினதான இருளை உண்டிடுதலால், நாளும் விளக்கு இன்றி விளங்கும் - எந்நாளும் விளக்குவைத்தலில்லாமலே தாமேவிளங்குகின்ற, மாடத்து - மாளிகைகளில், அரிவையர் குழுவு நீங்க - (ஏவல்செய்பவர்களான) மகளிரது கூட்டம் (தம்மைவிட்டு) நீங்க, ஆசையும் தாமுமே ஆய் ஒரு சிறை இருந்து - (தாம்கொண்டுள்ள) காதலும் தாமுமேயாக ஒருபுறத்திலே இருந்துகொண்டு, போன உள்ளத்தோடு ஊடுவாரும் (தமதுகணவனான இராவணனிடத்துச்) சென்ற மனத்தோடு பிணங்குகின்றவர்களும்—, (எ - று.)

மன்மதாவத்தைகளுள் நினைப்பு ஒன்றுதலால், பிரிந்திருக்கின்றசமயத்தி லெல்லாம் காதலியரும் குலமகளிரு மான அரக்கியரது மனம் ஆசைநாயகனை. இராவணனிடத்தே செல்கின்றது; அதுபற்றி அவர்கள் அம்மனத்தைக் குறித்து 'நமதுகாதலனான அவன் நம்மைச் சிறிதேனும்பொருள்செய்யாது உபேக்ஷித்து நெடுநாளாய் நமக்கு முகங்கொடாது பிரிந்து நம்மை நினையாதிருக்க, நீமாத்திரம் அவனிடத்துச் செல்வதென்னே?' என்று மனஸ்தாபப் படுகின்றன ரென்க. (திருவள்ளுவர் காமத்துப்பாலில் நெஞ்சொடுகிளத்த லில் "பரிந்தவர்நல்காரென்றேங்கிப் பிரிந்தவர், பின்செல்வாய் பேதையென் னெஞ்சு" என்றும், நெஞ்சொடுபுலத்தலில் "அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவன் நெஞ்சே, நீ யெமக்கு ஆகாதது", "துன்பத்திற்கி யாரே துணையாவார் தாமுடைய, நெஞ்சந்துணையல்வழி" என்றும் கூறியன காண்க.) இரவில் நெடுநேரமானதனால் தோழியர் பரிசாரிகைகள் முதலிய பரிவாரமாகிய மகளி ரனைவரும் இத்தலைவியரைப் பிரிந்து துயில்கொள்ளச்சென்றனரென்பார் 'அரி வையர்குழுவுநீங்க' என்றும், இங்ஙனம் துணை எவருமில்லையாகத் தணியாத ஆசையுடனே ஒருபுறத்து ஒடுங்கியிருந்து வருந்தின ரென்பார் 'ஆசையுந் தாமுமேயா யொருசிறையிருந்து' என்றும் கூறினர். அன்றியும், விரகவேதனையுடையார் தமது காதல்நோய்மிகுதியைப் பிறர்காணுதற்கு நாணி அனைவரையும் அகற்றிவிட்டுத் தனியேயிருத்த லியல்பு; பிரிவாற்றாமைக்குரிய குறிகளுள் "தனியும் அறைபோனநெஞ்சமும் கண்டெனபரே" எனக் காண்க. 'அரிவையர்குழுவைநீக்கி' என்றும் பாடமுண்டு. அவர்கள்மாளிகைகளிற் பதிக்கப்பட்டிருக்கின்ற இரத்தினங்களின் சோதியே இருளையொழித்து விளங்குதலால், அம்மணிவிளக்கொழிய வேறுசுடர்விளக்கு அங்கு வேண்டா தாயிற்று.

இராவணனது குலமனைவியரான அரக்கியரது மாளிகைகளையும் அவர்களது நிலைமையையும் கூறுகின்ற இச்செய்யுளில் 'எரிசுடர்மணி' என்றும், 'நாளும் விளக்கின்றிவிளங்குமாடத்து' என்றும், 'அரிவையர்குழுவுநீங்க ஆசையுந்

தாழுமேயாய் ஒருசிறையிருந்து போனவுள்ளத்தோடேவரும்' என்றும் அமைந்தவை, அம்மாடங்கட்கு அநுமான் எரியூட்டுதலாலும் இராமபிரான் இராவணசங்காரஞ்செய்தலாலும் அவ்வரக்கியர்க்கு அதிசீக்கிரத்தில் நேருந் தீங்குகளைக் குறிக்கும் அமங்களச்சொற்களாமென உய்த்துணர்க.

இதுமுதற் பன்னிரண்டு கவிகள் - இக்காண்டத்தின் முதற்செய்யுள் போன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (கஅ0)

கஅக. நகையெரிக்கற்றைநெற்றிநாவிதோய்ந்தனையவோதி
புகையெனததும்பிசுற்றப்புதுமலர்பொங்குசேக்கை
பகையெனவேகியான்றபளிங்குடைச்சீதப்பள்ளி
மிகையொடுங்காதகாமவிம்மலின்வெதும்புவாரும்.

(இ - ள்.) நகை எரி கற்றை நெற்றி - பிரகாசமுள்ள அக்கினிச்சுவாலையின்மீது, நாவி தோய்ந்து அனைய - கஸ்தூரிப்பூழுகு பூசினாற் போன்ற, ஓதி - (தமது) கூந்தலில், புகை என தும்பி சுற்ற - புகைபோல வண்டுகள் சுழன்றுமொய்க்க, புது மலர் பொங்கு சேக்கை - புதிய [அன்றலர்ந்த] மலர்கள் பரப்பப்பெற்று விளங்குகின்ற படுக்கையை, பகை எனா - (தமக்கு) விரோதமாகக்கொண்டு, ஏகி - (அதனைவிட்டுச்) சென்று, ஆன்ற பளிங்கு உடை சீதம் பள்ளி - அமைந்த படிகக்கல்லினாலமைந்தலையுடைய குளிர்ந்த மேடையைப் படுக்கையாகக்கொண்டு அதிற்கிடந்து, மிகை ஒடுங்காத காமவிம்மலின் வெதும்புவாரும் - மேன்மேல்வளர்தல்தணியாத காமமிகுதியால் தவிப்பவர்களும்,—(எ - று.)

அரக்கியர் அக்கினிச்சுவாலைபோலச் செந்நிறமாய்விளங்குகின்ற தமது செம்பட்டமயிரின்மீது கஸ்தூரியினாலாகிய மயிர்ச்சாந்தை பூசியலங்கரித்துள்ளதனால், அவர்கள்கூந்தல் 'நகையெரிக்கற்றைநெற்றிநாவிதோய்ந்தனைய வோதி' எனப்பட்டது. நெற்றி - உச்சி, மேலிடம். இவர்கள் சென்று மலர்ப்பள்ளியிற்படுக்கும்போது அப்புதுமலர்களில்மொய்த்திருந்த வண்டுகள் எழுந்து இவர்கள்கூந்தலின்நறுமணத்தை நாடி இதில் வந்து மொய்ப்பனவாயின. இதனால், உத்தமஸ்திரீகளான இவர்களுடைய கூந்தலின் இயற்கை நறுமணம் மலர்மணத்தினும் மேம்பட்டுள்ள தென்பது போதரும். அன்றியும், மணமுடைப்பொருளொன்றில் மொய்த்திருக்கும்போது மணமுடைப்பொருள் வேறொன்று நேர்பட்டால் அதனை நாடிச்செல்லுதல், வண்டுகளினியல்பு. செம்பட்டமயிரின்மீது வண்டுகள் சூழ்ந்து மொய்த்தல் அக்கினிச்சுவாலையின் மீது புகைசூழ்ந்திருந்தாற் போலுமென்பார், 'ஓதிபுகையெனத் தும்பிசுற்ற' என்றார். இவர்கள்கூந்தலில்மொய்த்துள்ள வண்டுகள் இவர்கள் இடம்விட்டுப்பெயரும்பொழுது புடைபெயர்ந்து சுழலுதலையும் 'தும்பிசுற்ற' என்றதிற் குறித்தவாறும்.

விரகவேதனையுற்றார்க்குப் புஷ்பசயனம் காமோத்தீபகப்பொருளாய் அக்காதல்நோயை மிகுவித்தல்பற்றி, அதனைப் பகையென்று கருதி விட்டுச் செல்வாராயினர்; "மூத்தும் சுளபமும் தண்புனீரும் முயங்குமலர்த், தொத்

தும் குளிரியும் தூய்மலர்ப்பாயலும் சூழ்ந்துபுறஞ், கத்துங்கடலும் கதலியும் ஆலியும் கங்குலும் இப்பத்தும் பெரும்பகையாய்விட்டவா மொருபைந்தொடிக்கே" என்ற இரத்தினச்சுருக்கம் இங்குக் காணத்தக்கது. கூடியநிலையில் இன்பந்தரும் பொருள்கள் யாவும் கூடாதநிலையில் துன்பம் விளைக்குமென்க. இதுபற்றி மலர்ப்பள்ளியைவிட்டுக் குளிர்ச்சியையுடைய பளிங்குமயமான வெறுந்தரையிற் படுத்தவிடத்தும "நீருட்குளிப்பினுங் காமஞ்சுடுமே" என்றபடி காமதாபந்தணிய விரகில்லை யாகவே, வரையறையின்றி மேன்மேல் வளர்கின்ற அக்காதல்மிகுதியால் அங்கும் தவித்துக்கொண்டிருக்கின்றனர் அரக்கியரென்பதாம்.

நாவி - நாபி; மிருகநாபி. ஓதி - பெண்மயிர். வண்டுக்குப் புகை - நிறம் பற்றிய உவமை. மிசை - மிகுதல். அத்தன்மைகுறையாத என்வே, மேன்மேல் வளர்கின்ற என்றதாயிற்று. விம்மல் - மிகுதி. 'தோய்த்தனைய', 'மலர்ப்பொங்கு', 'பசையெனவெய்தி', 'யானாப்பளிங்கு', 'மிசையுயிரோடும்' என்பன - இச்செய்யுளின் பாடபேதம்.

இச்செய்யுளில், அரக்கியர்குழற்கற்றைக்கு எரிக்கற்றையையும், அத்தலைமயிரில் மொய்க்கும் வண்டுகட்குத் தீப்புகையையும் உவமைகூறியதும், அவர்கள் மலர்ப்பள்ளியிற்படுத்தலை விட்டு வெறுந்தரையிற் படுத்து ஆசைநோயால் தவிப்பவராயின ரென்றதும் அவர்கட்கு இனி விரைவில் நேரும் அமங்களத்துக்குச் சூசகமாதல் காண்க. (கஅக)

கஅஉ. சவிபடுதகைசால்வானந்தாரொருமேனியாகக்
குவியுமீனாரமாகமின்கொடிமருங்குலாகக்
கவிரொளிச்செக்கர்கற்றைமயோதியாமழையுண்கண்ணா
வவிர்மதிநெற்றியாகவந்திவானொக்கின்றாரும்.

(இ - ள்.) ஒரு மேனி தான் - ஒப்பற்ற [பெரிய] தங்களுடம்பே, சவிபடு தகை சால் வானம் ஆக - சூரியனொளிசாயப்பெற்ற பரப்பு மிக்க ஆகாயமாகவும்,—ஆரம் - (தாங்களணிந்துள்ள) முத்துமாலைகள், குவியும் மீன் ஆக - (அவ்வானத்தில்) திரண்டுவிளங்குகின்ற நக்ஷத்திரங்களாகவும்,—மருங்குல் - (தங்கள்) இடை, மின் கொடி ஆக - மின்னற்கொடியாகவும்,—கற்றை ஓதி - திரட்சியான (தங்கள) கூந்தல், கவிர் ஒளி செக்கர் ஆ - முருக்குமலரினொளிகொண்ட செவ்வானமாகவும்,—உண் கண் - மையுண்ட (தங்கள்) கண்கள், மழை ஆ - மேகமாகவும்,—நெற்றி - (தங்கள்) நெற்றி, அவிர் மதி ஆக - (மாலைப்பொழுதிற் செவ்வானத்தைச் சார்ந்து) விளங்குகின்ற பிறைச்சந்திரனாகவு மிருக்க,—அந்தி வான் ஒக்கின்றாரும் - (தாங்கள்) மாலைக்காலத்து ஆகாயத்தை யொத்திருக்கின்றவர்களும்,—(எ - று.)

அரக்கியரது உடம்புக்கு வானம் - கரிய பெரிய வடிவில் உவமம். இராவணனைப்பிரிந்த வருத்தத்தால் இவ்வரக்கமாதர் ஆபரணங்களையணிந்து விளங்காமைபற்றி, இவர்களுடம்புக்கு, சூரியனஸ்தமிக்கப்பெற்ற வானம் உவமை கூறப்பட்டது; கணவனைப்பிரிந்தகாலத்தில் தம்மை யலங்கரித்துக்கொள்

ளாமை, கற்புடைமகளிரியல்பு. சவி - வடசொல்: ஒளி; சிறப்பாய், இங்குச் சூரியனொளியைக் குறித்தது. இனி, சூரியனைக் குறிக்கின்ற 'ஸவிதா' என்ற வடசொல் சவியென விகாரப்பட்டதென்றலு மொன்று. படுதல் - சாய்தல், ஒழிதல். தகை - பெருமை. விரகதாபங்கொண்ட இவர்கள் அவ்வெப்பத்தைத் தணிக்கக் கருதிக் குளிர்ச்சிசெய்யு மியல்பினவான முத்துக்களைத் தமது உடம்பின்மீது தரித்தனரென்பது தோன்ற, ஆரமாத்திரத்தையே கூறினார்; விரகிணிகள் முத்தணிதலை, "வளைத்தடக்கைவெம்மைதீர வாரமேல்வளைத் ததில், தெளித்தவாசநீர்நிறைத்து முத்தணிந்த செவ்வியான்" என நைடதத்திலுங் காண்க. 'மின்கொடி மருங்குலாக' என்றதனால் விரகதாபத்தால் இவர்களது இடை மிக மெலிந்துள்ளதென்பதும், 'கவிரொளிர்ச்செக்கர்க் கற்றையோதியா' என்றதனால் இவர்கள் கூந்தலை வாரி முடித்து அலங்கரியாமை பற்றி அது படர்ந்துள்ளதென்பதும், 'மழையுண்கண்ணா' என்றதனால் இவர்கள் கண்ணுங்கண்ணீருமாயுள்ளாரென்பதும், 'அவிர்மதிநெற்றியாக' என்றதனால் இவர்கள்நெற்றி விரகசோகத்தால் ஒளிமழுங்கியுள்ளதென்பதும் போதரும். (மேற் காட்சிப்படலத்தில் "தழைத்தபொன்முலைத்தடங்கடந் தருவிபோய்த் தாழப், புழைத்தபோல நீர்நிரந்தரம் பொழிகின்ற பொலிவா, விழைச்சுநுண்ணியமருங்குலா ளிணைநெடுங்கண்கள், மழைக்கணென்பது காரணக்குறியென வகுத்தாள்" என்பதும், "புரிநரம்பிரங்குசொல்லி புருவவிற் குனித்தநோர், வருணவானிவிடுதல்போன் மழைக்கணம்பிறைக்குமே" என்ற நைடதமும் இங்கு நோக்கத்தக்கன.) இவ்வாக்கியர் பிரிவுத்துயரால் வருந்துபவரென்பது, இவற்றால் விளங்கிற்று. அந்திமாலையிற் செவ்வானத்து விளங்குஞ் சந்திரன் பிறைமயமாமென்பது வெளிப்படை; கீழ் கவிற்று - ஆஞ் செய்யுளையுங் காண்க. நெற்றிக்குப் பிறை - சிறுத்து வளைந்து விளங்கும் வடிவில் உவமை. செவ்வானத்தும் பிறை ஒளிமழுங்கிய தாதலால், அது, விரகிணிகளின் பொலிவிழந்த நெற்றிக்கு உவமையாதற்கு ஏற்கும். ஒளியால் முத்துக்கள் நக்ஷத்திரங்களையும், மெல்லியதாய் ஒல்கியொசிந்து விளங்குதலால் இடை மின்னற்கொடியையும், நிறத்தினாற் செம்பட்டமயிர் செவ்வானத்தையும், கருநிறத்தாலும் குளிர்ச்சியாலும் கண்ணீர்பொழிதலாலும் கண் நீர்கொண்டமேகத்தையும் போலும். செம்பட்டமயிரையுடைமை, அரக்கியர்க்கு இயல்பு. மேகத்தையுடைமை வானத்தினியல்பாதலால், அதனையுங் கூறினார். உவமையணி; 'ஆக' என்பது - உவமவுருபு. அன்றி, இயைபுருவகவணியை அங்கமாகக்கொண்டு வந்த உவமையணி யெனினும் இழுக்காது.

மீன் - விண்மீன். கொடிமருங்குல் மின்னாக - கொடிபோலத் துவண்ட இடை மின்னல்போன்றிருக்கவும் என்றும், ஓதி - கூந்தல், செக்கர்க்கற்றை ஆ - செவ்வானத்தின்தொகுதிபோன்றிருக்கவும் என்றும் பதவுரைகூறலுமாம். கவிர் - பலாசமரத்தின்பூ. அது செந்நிறமுடையதாதலால், 'அதனொளியையுடைய செக்கர்' என்றார். 'செக்கர்கற்றையோதியா' என்று வலிமிகாத பாடமும் உண்டு. 'அந்தியாளொக்கின்றாரும்' என்ற பாடத்துக்கு - மாலைச் சந்தியாகாலத்தைப் போல்கின்றவரு மென்பது பொருள். ஸந்த்யா என்ற

வடமொழி அப்பாஷையிற் பெண்பாற்சொல்லாதல்பற்றி, 'அந்நியாள்' எனப் பெண்பாலாக்கின ரென்க. 'மழைமொண்கண்ணார்' என்பதும் பாடம். (௧௮௨)

௧௮௩. பானலுண்கண்ணும்வண்ணப்படிமுறைமாறப்பண்ணைச்
சோனைபோன்றளிகள்பம்புஞ்சுரிகுழற்கற்றைசோர
மேனிமிர்ந்தெழுந்தமாடவெண்ணிலாமுன்றினண்ணி
வானமீன்கையின்வாரிமணிக்கழங்காடுவாரும்.

(இ - ள்.) மேல் நிமிர்ந்து எழுந்த-மேலேயோங்கியெழுந்த [மிகவுயர்ந்த], மாடம் - உபரிகைவீடுகளிலுள்ள, வெள் நிலா முன்றில் - வெண்மையான நிலா விளங்கும் முற்றத்தை, பண்ணை நண்ணி - தோழியரான மகளிரது கூட்டத்துடன் அடைந்து,—பானல் உண் கண்ணும் - நீலோற்பல மலர் போன்ற மையுண்ட கண்களும், வண்ணம் படி முறை மாற - (தமது) நிறம் முறைமையே மாறவும்,—சோனை போன்று அளி கள் பம்பும் - விடாப்பெரு மழைபோன்று பெருகுகின்ற தேன் மிக்க, சுரி குழல் கற்றை - நுனிசுருண்ட தலைமயிரின் தொகுதி, சோர - தளர்ந்துதாழவும்,—வானம் மீன் கையின் வாரி - ஆகாயத்து விளங்குகின்ற நக்ஷத்திரங்களைக் கைகளாற் சேர்த்தெடுத்து, மணி கழங்கு ஆடுவாரும் - அழகிய கழற்சிக்காய்களாகக் கொண்டு ஆடுகின்றவர்களும்,—(எ - று.)

இராவணனது பிரிவை யாற்றாமல் விரகதாபத்தால் வருந்துகின்ற அரக்கியரிற் சிலர், நள்ளிரவிலும் உட்படத் துயில்கொள்ளாமையால், அப்பொழுது ஏதேனுமொருதொழிலிற் கருத்தைச்செலுத்தி அதனால் ஒருவாறு பொழுது போக்கக் கருதி, தமது மாளிகைகளின் உபரிகையிலுள்ள நிலாமுற்றத்தைத் தாமும் தமது தோழியருமாக அடைந்து, அங்கு அருகிலிருக்கின்ற நக்ஷத்திரங்களிற் சிலவற்றைக் கைகளால் வாரியெடுத்து அவைகளைக் கழற்காய்களாகக்கொண்டு ஆடுகின்றன ரென்க. இதில், அம்மாடமாளிகைகள் நக்ஷத்திரமண்டலங்களையளாவி உயர்ந்துள்ளன வென்பதும், அரக்கியர் மிகப்பெரு வடிவமுடைய நக்ஷத்திரங்கள் பலவற்றை எளிதில் இடம்விட்டுப் பெயர்த்தெடுத்துச் சுவாதீனமாகக்கொண்டு ஆடுகருவியாக்கி ஆடவல்ல ஆற்றலுடையவ ரென்பதும் விளங்கும்.

நக்ஷத்திரங்கள் பலவேறுநிறமுடையன வென்பது பிரசித்தம்; கீழ் ௧௦௨ - ஆஞ் செய்யுளையுங் காண்க. அங்ஙனம் சில நக்ஷத்திரங்களைக் கைகளிற்கொண்டு அவற்றினிடத்துக் கண்பார்வையைவைத்து அவற்றை உயரச் செலுத்தி யாடுகையில் அவை ஒன்றன்பின் ஒன்றாக எழுந்து கண்களுக்கு நேராகச் சமீபித்துவரும்பொழுது அவற்றின் பல வேறுவகைப்பட்ட ஒளி மாறிமாறிப்பாயுந்தோறும் கண்களினிறம் மாறுபடுதலை, 'பானலுண்கண்ணும் வண்ணப்படிமுறைமாற' என எடுத்துக்காட்டினர். வண்ணப் படி - நிறமாகிய பண்பு என இருபெயரொட்டுப்பண்புத்தொகை; படி - குணம். அங்ஙனம் ஆடும்போது உண்டான சிறிது அயர்ச்சியாற் கூந்தல் சிறிதுசோர்தல், இரண்டாமடியில் எடுத்துக்கூறப்பட்டது. மணிக் கழங்கு - இரத்தினங்களாற் செய்த

காய்கள்போலச் செய்தவை யென்றுங் கொள்ளலாம்; நக்ஷத்திரங்களோ டொப்ப இரத்தினங்களிலும் பலவேறுநிறமுண்டென்பதும், கீழ் ௪0௨-ஆங் கவியால் விளங்கிற்று. பிரிவுக்காலத்தில் நிலவினால் தம்மைவருத்துகின்ற சந்திரனுக்குத் தாம் ஓர்ஊறுசெய்யக் கருதி நிலாமுற்றத்திற்சேர்ந்து அவனுக் குப் பிரிவுத்துயர்விளையுமாறு அவன்மனைவியராகிய நக்ஷத்திரங்களைக் கைக ளால் வாரியெடுத்துக் கழங்காடலாயின ரென ஒருகற்பனை கற்பிக்கவும் இட மிருத்தலை உய்த்துணர்க.

'கண்ணும்' என்ற உம்மை - இரண்டாமடியில் வருவதான கூந்தலை நோக்க எதிரதுதழுவியவெச்சம். வண்ணம் - வர்ணம். பணிலை - மகளிர் கூட்டம். அளிகள் - வினைத்தொகை; அளாதல் - வார்தல், ஒழுகுதல். கூந்த லில் தேன், சூடியமலர்களி லுள்ளது. நுனிசுருண்டிருத்தல் மகளிர்தலை மயிர்க்கு நல்லிலக்கண மாதலால், 'சுரிகுழல்' எனப்பட்டது; "கடைகுழன்ற கருங்குழல்கள்" என்றார் சிந்தாமணியாரும்: "கடைகுழன்றுவார்ந்தொழுகி" என்ற இரத்தினச்சுருக்கமும் காண்க. நிலாமுன்றில் - உபரிகையில் நில வெறிக்கும் வெளியாகிய முன்னிடம். 'சோனைபோன்றளிகள்பம்பும் சுரிகுழற் கற்றை' என்பதற்கு - விடாப்பெருமழைபொழியுங் காளமேகம்போன்று வண்டுகள் நிறையமொய்த்து ஆரவாரிக்கப்பெற்ற கடைசுருண்ட கூந்தலின் திரட்சி யென்று உரைப்பினும் அமையும். போன்றவளிகளென்பது 'போன் றளிகள்' எனத் தொக்கதென்று கொண்டு, சோனைமேகம்போன்ற கூந்த லெனலுமாம். இவ்விருபொருளிலும், சோனை யென்ற பெருமழையின் பெயர் - அம்மழைபொழியும் மேகத்துக்கு இலக்கணையாம். 'மேனிவந் தெழுந்த' என்று பிரதிபேதம்.

இச்செய்யுளிற்கூறிய கண் ஒளிமாறுதலும், கூந்தல்சோர்தலும், இனி அரக்கியர்க்கு நேரும் அமங்களத்துக்குச் சூசகமா யமைந்தன வென்னலாம். இங்ஙனமே முன்னும்பின்னும், கூறுக சிலவிடத்தும் உய்த்துணர்ந்துகொள்க.

௧௨௪. உழையுழைபரந்தவானயாற்றுநின் றும்பர்நாட்டுக்
குழைமுகத்தாயந்தந்தபுனல்குளிர்ப்பிலவென் றாடி
யிழைதொடுத்திலங்குமாடமிடைதடுமாறவேறி
மழைபொதுத்தொழுகுநீரான் மஞ்சனமாடுவாரும்.

(இ - ள்.) உழை உழை பரந்த - பலவிடங்களிற் பரவியுள்ள, வானயாறு நின்று - ஆகாசகங்கா நதியிலிருந்து, உம்பர் நாடு குழை முகத்து ஆயம் தந்த - தேவலோகத்தவர்களான குழையென்னுங் காதணியோடு விளங்கும் முகத்தை யுடைய பரிசாரிகைப் பெண்களின் கூட்டம் கொணர்ந்துகொடுத்த, புனல் - தீர்த்தங்கள், குளிர்ப்பு இல - குளிர்ச்சியில்லாதன, என்று - என்றுகொண்டு, ஆடி - (அதற்காக அத்தேவமாதர்களோடு) மநஸ்தாபப்பட்டு,— இழை தொடுத்து இலங்கும் மாடம் - இரத்தினங்களை யிழைத்தல்செய்யப்பட்டு விளங்குகின்ற (தமது) கிருகங்களின் உபரிகையின்மேல், இடை தடுமாற ஏறி - தமது இடை துவளும்படி ஏறி, மழை பொதுத்து - (தாமே) மேகங்

களை(க் கைகளால்) துளைத்து, ஒழுகும் நீரால் மஞ்சனம் ஆடுவோரும்-(அவற்றி லின்று) சொரிகின்ற நீரைக்கொண்டு நீராடுகின்றவர்களும்,—(எ - று.)

சில அரக்கியர், இராவணனது பிரிவினாலாகிய விரகதாபத்தால் தபிக்கின்ற நள்ளிரவிலே, குளிர்ச்சியான தீர்த்தத்தில் நீராடித் தாபந்தணியலாமென்று கருதி, தமக்குக் குற்றேவலாளராயமர்ந்துள்ள தேவமாதரைக் குளிர்ந்த நீர் கொணரும்படி ஏவ, அவர்கள் ஆகாசகங்காநதியிலிருந்து தீர்த்தங்கொணர்ந்து கொடுத்தனர்; அத்தீர்த்தம் மிக்க குளிர்ச்சியுடையதாயிருந்தும் "நீருட்குளிப்பினுங் காமஞ்சுடுமே" என்றபடி இவர்கள் தாபத்தைத் தணிக்க மாட்டாதாக, வெதும்புகின்ற அவ்வரக்கியர் அந்நீர் குளிர்ச்சியுடையதன்றென்று எண்ணி அதனைக் கொணர்ந்ததற்காகவும் குளிர்ந்தநீர் கொணராததற்காகவும் அப்பரிசாரிகைகளை வெறுத்து, தாமே அயர்ச்சியால் இடைதுவளுமாறு மிகவுயர்ந்த தமது மாளிகைகளின் உபரிகையின்மீது ஏறி அங்குச் சார்ந்துள்ள மேகங்களைக் கைகளாற்பொத்தி அவைசொரியும் நீரைக் ஸ்நானஞ்செய்கின்றனரென்க.

கீழ் ௫ - ஆஞ் செய்யுளிற் கூறியபடி தேவகங்காநதி மிகவுயர்ந்த இந்நகரத்து மாடமாளிகைகளின் நிலாமுற்றத்தைச் சார்ந்து செல்லுதல் தோன்ற, 'உழையுழைபரந்தவானயாறு' எனப்பட்டது. உழையுழை, அடுக்கு - தொடர்ப்பொருளது; இடந்தோறுமென்க. ஆயம் - மகளிர்கூட்டம், தோழியர்கூட்டம். 'உம்பர்நாட்டு ஆயம்' எனவே, தேவமாதரென்றாயிற்று. அவர்கள் அரக்கியர்க்குப் பணிப்பெண்களாயமைந்து ஆகாயகங்காநதியிலிருந்து தீர்த்தங்கொணர்ந்து உதவுதல், கீழ் ௧௦௩, ௧௪ - ஆஞ் செய்யுள்களிலுங் கூறப்பட்டது. அவர்கள் செல்வச்சிறப்பு மிக்கவராதலின் சிறந்த அணிகலங்களை யணிந்திருக்கின்றனரென்பது தோன்ற, 'குழைமுகத்து ஆயம்' என்றார்; இனி, இத்தொடர்க்கு - (தமது தலைமையும் இன்பநலமும் ஒழிய ஏவலாளராயினமை பற்றி) வாடிய முகத்தையுடைய மகளிரது திரளென்றும் பொருள்கொள்ளலாம். நீர் ஒன்றேயாயினும் அதனை முகந்துகொணர்ந்த பாத்திரங்களின் பன்மைபற்றி, 'புனல்குளிர்பபில' எனப்பன்மையாற் கூறப்பட்டது. இரத்தினகசிதமான மாடங்களென்பது, 'இழைதொடுத்திலங்குமாடம்' என்பதன் கருத்து. 'இடைதடுமாறவேறி' என்றதனால், அம்மாடங்களின் உயர்வும், இம்மகளிரின் மென்மையும், இவர்கள் விரகவேதனையாலயர்ந்திருத்தலும் புலனும். 'அம்மாடங்களிலேறி மழைபொத்துகின்றனர்' என்றதனால், மேகமண்டலத்தை யளாவியுயர்ந்துள்ள அம்மாடங்களைச் சார்ந்து மேகங்கள் தவழ்கின்றனவென்பது போதரும்; முன் (௧௫௩) "மலர்க்கையான் மாடத்தும்பர் மழையின் வாய்பொத்துவாரை" என்றதுங் காண்க. 'உழையுழைப்பரந்த', 'குழைமுகத்தவர்கடந்த', 'புனல்குளிர்ப்பிலதென்று,' 'மாடத்திடைதடுமாறவேறி' என்பன - இச்செய்யுளின் பாடபேதம். (௧௮௪)

௧௮௫. பன்னகவரசர்செங்கேழ்ப்பணாமணிவலிதிற்பற்றி
யின்னுயிர்க்கணவனீந்தானமெனவிருத்திவிஞ்சை

மன்னவர்முடியும்பூணுமாரமும்பணயமாகப்
பொன்னணிபலகைசூது துயில்கிலர்பொருகின்றாரும்.

(இ - ள்.) 'செம் கேழ் - செந்நிறமுள்ள, பன்னக அரசர் பணமணி - சர்ப்பராசர்களுடைய படத்தி லிருக்கின்ற மாணிக்கத்தை, இன் உயிர் கணவன் வலியின் பற்றி ஈந்தான் - (எமது) இனிய பிராணநாயகனான இராவணன் வலியிற்பறித்துக்கொணர்ந்து (எமக்குக்) கொடுத்தான்: ஆம் - (ஆதலால் அது) எம்மிடத்தே வைத்துக்கொள்ளுதற்கு உரியது,' என - என்று எண்ணி, இருத்தி - (அந்த நாகரத்தினத்தைமாத்திரம்) வைத்துக்கொண்டு, விஞ்சை மன்னவர் முடியும் ஆரமும் பூணும் பணயம் ஆக - வித்தியாதரராசர்களிடத்திலிருந்து (இராவணனால் வலியப்பறித்துக்) கொண்டுவந்து தரப்பட்ட அவர்களுடைய கிரீடங்களையும் ஆரங்களையும் மற்றையாபரணங்களையும் பந்தயமாக வைத்து, துயில்கிலர் - தூக்கமில்லாதவர்களாய், பொன் அணி பலகை - பொன்மயமான அழகிய பலகையில், சூது பொருகின்றாரும் - சூதாட்டமாடுகின்றவர்களும்,—(எ - று.)

இராவணனைப்பிரிந்த அரக்கியரிற் சிலர், அப்பிரிவாற்றாமைத் துயரால் நடுநிசியிலுமுட்படத் துயில்கொள்ளாமல் வருந்தும்போது, 'ஏதேனும் வேறு காரியத்திற் சிறிது கருத்தைச் செலுத்தி அதனால் ஒருவாறு பொழுதுபோக்கக் கருதித் தம்மில் ஒருவரோடொருவர் சூதாடுவாராயினரென்க. அங்ஙனம் ஆடுங்காலத்து, அவர்கள், முன்பு இராவணனால் நாகராசர் வித்தியாதரராசர் முதலியோரை வலிய எதிர்த்துப் பொருது வலியழித்துப் பிடித்து அவர்களிடமிருந்து பலாத்காரமாகக் கவர்ந்துகொண்டுவந்து அன்போடு தமக்குத் தரப்பட்டுள்ள பொருள்களுள் நாகரத்தினத்தைமாத்திரம் அதனருமைகருதி என்றும் தமக்கே யுரியதாக வைத்துக்கொண்டு மற்றவற்றையெல்லாம் பந்தயமாகவைத்து ஆடுகின்றனரென்க. இனி, இச்செய்யுளுக்கு 'பன்னகவரசர் செங்கேழ்ப்பணமணிவலியிற்பற்றி இன்னுயிர்க்கணவன் ஈந்தான்' என்று (நாகராசரது சிரோரத்தினத்தின் சிறப்பை யெடுத்துச்) சொல்லி அதனைப் பந்தயமாக வைத்து (இங்ஙனமே மற்றவற்றின் சிறப்பையும் எடுத்துச் சொல்லி) விஞ்சைமன்னவர் முடிமுதலியவற்றையும் பந்தயமாகவைத்துச் சூதாடுகின்றனரென்று பொருள்கொள்ளலுமாம்; இவ்வுரையில், 'ஆம்' என்பதற்கு - இது தக்க பந்தயமாகுமென்க.

செங்கேழ் - மாணிக்கத்துக்கு அடைமொழி. உயிர்க் கணவன் - உயிரோடொத்த கணவன்; உவமை - அன்புரிமையையும், இன்றியமையாமையையும் காட்டும். விஞ்சை - வித்தை: மாயவித்தை; அதனையுடைய வித்தியாதரர்க்குப் பண்பாகுபெயர். (சீவகசிந்தாமணியில் ''விஞ்சைக்கிறைவன்'' என்றவிடத்து, நச்சினார்க்கினியர் 'விஞ்சை - குணப்பண்பு பண்புடைப்பொருள்மேல்நின்ற ஆகுபெயர்' என்றது காண்க.) ஆரம் - பொன் மணி முதலியவற்றாலாகிய மார்பிலணிவடம். பலகை - சூதுகாய்களை வைக்கும் அறை வகுத்த பலகை. படைகளைக்கொண்டு செய்யும் போரில் வெற்றிதோல்விகளால் இராச்சியத்தைப் பெறுதலும் இழத்தலும் நிகழ்தல்போலச் சாய்களைக்கொண்டு செய்யுஞ்

சூதாட்டத்திலும் ஜயாபஜயங்காரணமாகப் பொருள்களைப் பெறுதலும் இழத்தலும் நேர்வதுபற்றி, சூதாடுதலைப் பொருதலாகக் கூறுதல் மரபு. சூதாட்டத்தில் ஒருவர் தமது காயைக்கொண்டு எதிரியின்காயை 'கொல், அடி, வெட்டு' என்று கூறிக் களைவதுபற்றியும், மாறுபாட்டுக்கு இடமாதல்பற்றியும், சூதாட்டம், 'போர்' எனத்தகும். 'வலியிற்பற்றியின்னுயிர்க்கணவனீந்தயாவையுங் கொடுத்து', 'பொன்னினம்பலகைச்சூதுதுயிலிலர்பொருகின்றாரும்' என்று பிரதிபோதம். (கஅ௫)

கஅசு. தென்னகுகுடமுழப்பாடல்சித்தியரிசைப்பத்தீஞ்சொற்
பன்னகமகளிர்வள்வார்த்தண்ணுமைபாணிபேணப்
பொன்னகர்த்தரளப்பந்தர்கற்பகப்பொதும்பர்பொற்றோ
ளின்னகையரம்பைமாரையாடல்கண்டிருக்கின்றாரும்.

(இ - ள்.) தென் நகு குடம் உள் - அழகாகவிளங்குகின்ற [இனிமையாக ஒலிக்கின்ற] குடமுழாவின் தாளவடைவுக்கு உட்பட்ட, பாடல் - இசைப்பாட்டுக்களை, சித்தியர் இசைப்ப - சித்தகன்னிகைகள் பாடவும்,—தீம் சொல் பன்னக மகளிர் - இனிமையான சொற்களையுடைய நாககன்னிகைகள், வள் வார் தண்ணுமை - வலிய தோற்கயிற்றினாற் கட்டப்பட்ட தண்ணுமையென்னும் முழாவை, பாணி பேண - கைகளாற் கருத்தோடு தட்டி முழக்கவும்,— கற்பகம் பொதும்பர் - கற்பகச்சோலையில், பொன் நகர் - பொன்மயமான மாளிகையில், தரளம் பந்தர் - முத்துக்களினால் வேயப்பட்ட பந்தலின்கீழ், பொன் தோள் இன் நகை அரம்பைமாரை - அழகிய தோள்களையும் இனிமையான புன்சிரிப்பையுமுடைய அப்ஸரஸ்திரீகளை, ஆடல் கண்டு - நர்த்தனஞ்செய்யச்சொல்லி அவ்வாட்டத்தைப் பார்த்துக்கொண்டு, இருக்கின்றாரும் - இருக்கின்றவர்களும்,—(எ - று.)

இராவணனைப்பிரிந்த விரகத்தால் இடையிரவிலுந் துயில்கொள்ளாத அரக்கியரிற் சிலர், வேறொன்றிற் கருத்தைச்செலுத்தி அதனால் ஒருவாறு பொழுதுபோக்குங் கருத்தினராய், பதினெண்தேவகணங்களுட் சித்தசாதிகன்னிகைகளையும் நாகசாதிகன்னிகைகளையுந் துணைக்கொண்டு அப்ஸரஸ்திரீகளை நாட்டியமாடச்சொல்லி அதனைப் பார்த்துக்கொண்டிருக்கின்றனரென்க.

குடம் - குடமுழா: இது, தோலாற்செய்யப்பட்ட கருவிகளுள் ஒன்றென்றும், எழுவகைமுழாக்களுள் உத்தமமான அகமுழாவின்பாற் பட்டதென்றும், தண்ணுமை - மத்திமமான அகப்புறமுழாவின்பாற் பட்டதென்றும் சிலப்பதிகாரவுரையாலுணரலாம். "தாழ்குரல்தண்ணுமை" என்றவிடத்து அவ்வுரைகாரர் 'இங்ஙனமாகிய கருவிகட்கெல்லாம் முதலாதல் நோக்கித் தண்ணுமையொன்றனையுமே கூறினார்' என்றதும் இங்குக் காணத்தக்கது. சித்தியர் - சித்தனென்பதன் பெண்பான்மை. நகர் - சிறந்தமாளிகைக்கு இலக்கணை. அபிநயங்களை அழகிதாகக் காட்டுதற்குத் தோளழகும், சிருங்காரரசப்பிரதானமான பாட்டுக்களின் பாவங்களை விளக்குதற்கு முகமலர்ச்சியும்

வேண்டுதல்பற்றி, அவற்றையுடைமையை 'பொற்றோள்', 'இன்னகை' என்ற அடைமொழிகளாற் காட்டினர். பொன் தோள் - பொன்னாபரணமணிந்த தோள்களும், இன் நகை - அழகிய பற்களுமாம். அரம்பைமாரை ஆடல்கண்டு, அரம்பைமா ராடலைக் கண்டு என்று உருபுபிரித்துக்கூட்டவுந் தகும். 'தென்ன வென் றமிர்தப்பாடல்'. 'பொதும்பர்ப்பொற்றோள்' என்பனவும் பாடம்.(கஅகூ)

கஅள. ஆணியிற்கிடந்தகாதலகஞ்சுடவருவிபுண்கண்
சேணுயருறக்கந்தீர்ந்தசிந்தையர்செய்வதோரார்
வீணையுங்குழலுந்தத்தமிடறும்வேற்றுமையுந்தீர்ந்த
பாணிகளளந்தபாடலமிழ்துகப்பாடுவாரும்.

(இ - ள்.) ஆணியின் கிடந்த காதல் - (அழுந்தத் தைத்த) இருப்பாணி போல (எளிதிற் பெயர்க்கலாகாதபடி தமது உள்ளத்தில்) ஊன்றிக்கிடக்கின்ற ஆசையானது, அகம் சுட - அந்தமனத்தைத் தவிக்கச்செய்ய, அதனல், அருவி உண் கண் - மலையருவிபோல நீர்பெருக்குகின்ற மையுண்ட கண்களில், சேண் உயர் உறக்கம் தீர்ந்த - மிக நெடுநாளாகத் தூங்குதலொழிந்த, சிந்தையர் - மனக்கவலையுடையவர்களான சில அரக்கியர், செய்வது ஓரார் - தாம் இன்னதுசெய்வதென்று அறியாதவர்களாய்,—வீணையும் குழலும் தம் தம் மிடறும் வேற்றுமையும் தீர்ந்த - யாழிசையும் புள்ளாங்குழலிசையும் தங்கள் சாரீரமும் (தம்மில் முழுவதும் ஒத்திருத்தலே யன்றி) வேறுபாடென்பது சிறிதுமில்லாத, பாணிகள் அளந்த பாடல் - கைகளால் தாளமொற்றி அளவு செய்யப்படுகின்ற பாடல்களை, அமிழ்து உக பாடுவாரும் - அமிருதம்போன்ற இனிமை மேன்மேற் சுரக்கும்படி பாடுகின்றவர்களும்,—(எ - று.)

நெடுநாளாகத் தொடர்ச்சிப்படுதலால் மனத்திலழுந்திய விரகாக்கினி காரணமாக நித்திராத்திரியிலுந் தூக்கங்கொள்ளாத அரக்கியரிற் சிலர், கீழ் கஅஅ - ஆஞ் செய்யுளிற் கூறியபடி தங்கள் கணவனாகிய இராவணன் விஷயமான கீர்த்தனங்களைப் பாடிப் பொழுதுபோக்குவாராயின ரென்க. இவர்களை இராவணன் பிரிந்ததற்குக் காரணம், அவன் சீதையினிடத்துக்கொண்ட காதல். அதற்கு இவர்கள் ஒன்றும் பரிகாரஞ்செய்யமாட்டிற்றில ரென்பதும், இவர்கள் செய்வதறியாது திகைத்தலுந் தோன்ற, 'செய்வதோரார்' என்றார். "தானே கழங்கமனை தண்கனைநீ ராடாள், தானே ரிசைபயிலாள் கைக்கிளியும்-மானினமும், பூவையையும் போற்றாள் பொருந்தவே பாங்கியருக், கேவல்புரியாள்களிப்ப தென்று" என்றபடி பிரிவாற்றாது வருந்தும் மகளிர்க்கு இசைபயிலாமை இயல்பாயிருக்கவும் அதற்குமாறாக இவர்கள் இசைபாடுவது அங்ஙனஞ் செய்வன தவிர்வன அறியாமையின லென்பதையும் பெறவைத்தார்; கீழ் (கஅடு) கழங்காடுதல், (கஅஅ) நீராடுதல் கூறியதும் இதுபற்றியே யென்க. இச்செய்யுளின் முன்னிரண்டடி - முன்னும்பின்னுங் காரணங்காட்டாத செய்யுள்களிலும் கூட்டத்தக்கது; எற்புழிக்கோடலென்னும் உத்தியால், சேண் உயர் உறக்கம் - (பிராணிகட்கு இன்றியமையாததாதல்பற்றி) மிகச்சிறந்த தூக்கமெனினுமாம்.

மன்மதாவத்தைகளுள் வெதுப்பு 'அகஞ்சுட' என்றதனாலும், நினைப்பு 'சிந்தையர்' என்றதனாலும் கூறப்பட்டன. இவர்கள் குரல் இன்னிசைக்கருவியின் இசையோ டொப்ப இனிமைவாய்ந்த தென்பதும், இசைக்கருவிகளின் நாதமும் சாரீரமும் வேறுபகுத்துக் காட்டாதபடி பாடுந்தரத்தினர் இவர்களென்பதும், இவர்கள்பாடல் தாளப்பிரமாணந் தவறாமலமைந்த தென்பதும், இனிமைமிக்க தென்பதும், பின்னிரண்டடிகளில் விளங்கின. வீணையும் குழலும் தத்தமிடறும் வேற்றுமையுந் தீர்ந்த பாடல்—சீவகசிந்தாமணியில் "இருங்கடற் பவளச்செவ்வாய் திறந்திவள்பாடினாளோ, நரம்பொடுவீணைநாவினவின்றதோ வென்று நைந்தார்", "விரல்கவர்ந் தெடுத்த கீதமிடறெனத் தெளிதல்தேற்றார்" என்றவை நோக்கத்தக்கன. மிடறு - கண்டம்; இங்கே, கண்டத்தொனி: வீணை, குழல் என்றவைபோல, மிடறு என்பதும் - இங்கு ஆகுபெயர். பாணிகளளந்த பாடல்—இப்படலத்தில் (கடுக) "அளந்தெடுத்தமைந்த பாடல்," (கசுஉ) "அளந்த பாடல்" என்பன காண்க. 'வேற்றுமையிற்றீர்ந்த, பாணித்தள்ளாதபாடல்' என்பது பாடாந்தரம். (கஅஎ)

கஅஅ. தண்டலைவாழையன்னகுறங்கிடையல்குற்றட்டிற்
கொண்டபூந்துகிலுங்கோவைகலைகளுஞ்சோரக்கூர்ங்கள்
ளுண்டலமந்தகண்ணோடூசலிட்டுலாவுகின்ற
குண்டலந்திருவில்வீசக்குரவையிற்குழற்றுவாரும்.

(இ - ள்.) தண்டலை வாழை அன்ன - தோட்டத்திலுள்ள வாழைமரத்தினது அடித்தண்டைப் போன்ற, குறங்கு - தொடைகளின், இடை - நடுவிலுள்ள, அல்குல் தட்டில் - அல்குலாகிய தட்டின்மீது, கொண்ட - தரித்த, பூ துகிலும் - அழகிய சேலையும், கோவை கலைகளும் - (பொன்மணிகளைக்) கோத்த இடையணியும் (அரைப்பட்டிகையென்னும்) இடையணியும், சோர - தளர்ந்துதாழும்படியும்,—ஊசலிட்டு உலாவுகின்ற - ஊஞ்சல்போலாடி யசைகின்ற, குண்டலம் - குண்டலமென்னுங் காதணி, திரு வில் வீச - அழகிய ஒளியை வீசும்படியும்,—கூர் கள் உண்டு அலமந்த கண்ணோடு - உறைப்புள்ள கள்ளைக் குடித்ததனால் மயங்கிச் சுழல்கின்ற கண்களுடனே, குரவையின் குழற்றுவாரும் - குரவைக்கூத்தாடி ஆரவாரிப்பவர்களும்,—(எ - று.)

இராவணனது பிரிவை யாற்றாது வருந்துகின்ற அரக்கியரிற் சிலர் வேறொருதொழிலிற் கருத்தைச்செலுத்தி ஒருவாறுபொழுதுபோக்க நினைத்தவராய், தாமும் தமது தோழியருமாக நின்று குரவைக்கூத்தாடிக் கொக்கரிக்கின்றன ரென்க. குரவை - கைகோத்தாடுங் கூத்து; "குரவைக்கூத்தே கைகோத்தாடல்" என்பது, திவாகரம். அன்றியும், இது, விநோதக்கூத்தின் வகைகளு ளொன் றென்றும், வரிக்கூத்தின் ஒருறுப் பென்றும், 'குரவையென்பது - காமமும் வென்றியும் பொருளாகக் குரவைச்செய்யுள் பாட்டாக எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனும் கைபிணைந்தாடுவது' என்றும் சிலப்பதிகாரவுரையால் தெரிகின்றது. இதனையாடும்போது அரையிலுடுத்த ஆடையும் கோவைகலைகளாகிய இடையணிகளும் நெகிழ்தலையும், குண்டல

மென்னுங் காதணி அசைந்து ஒளிவீசுதலையும் எடுத்துக் கூறினர். நன்றாக ஆடுதற்கு வேண்டிய உற்சாகத்தை யுண்டாக்கிக்கொள்ளுதற்பொருட்டு, காரமேற்றிய கள்ளைக் குடித்தனர். அதனாற் கண்கள் வட்டமிட்டன.

தண்டலை - தண் தலை: குளிர்ச்சியான இடத்தை யுடையது; பண்புத்தொகையன்மொழி. வாழை - 'வாழையடிவாழையாய் வாழ்ந்து' என்னும்படி தனது அடியில் தோன்றுங் கன்றுகளினால் தனது குலம் என்றும் இடையற்றுப்போகாதபடி வாழ்வது என்று பொருள்படுங் காரணக்குறி; வாழ் - பகுதி, ஐ - கருத்தாப்பொருள்விகுதி. தட்டு - தேர்த்தட்டுமாம். 'பூந்துகில்' என்றது - மெல்லிய ஆடை யென்றும், மலர்கள்போலச் சித்திரவேலைசெய்யப்பட்ட ஆடை யென்றும் பொருள்படும். கோவை - எண்கோவையாகிய மேகலை, ஒருகோவையாகிய காஞ்சி முதலியன. அலமந்த, அலமா - பகுதி. 'கோவைகலன்களுஞ் சோர,' 'அலமந்தகண்ணோர்,' 'குழறுவாரும்' என்பன, இச்செய்யுளின் பாடபேதம். (கஅஅ)

கஅகூ. நச்செனக்கொடியநாகக்கள்ளொடுகுருதிநக்கிப்
பிச்சரிற்பிதற்றியல்குற்பூந்துகில்கலாபம்பீறிக்
குச்சரித்திறத்திஞேசைகளங்கொளக்குழக்கொண்டீண்டிச்
சச்சரிப்பாணிகொட்டிநிறைதடுமாறுவாரும்.

(இ - ள்.) நாகம் நஞ்சு என கொடிய நல்லபாம்பின் விஷம்போலக் கொடுமையுடைய, கள்ளொடு - கள்ளையும், குருதி - (பலவகைப் பிராணிகளின்) இரத்தத்தையும், நக்கி - குடித்து, (அதனால் மிகுதியான மதிமயக்கத்தையும் வெறியையுங் கொண்டு),—குழு கொண்டு ஈண்டி - (தம்மிற்) கூட்டங்கொண்டு திரண்டு,—குச்சரி திறத்தின் ஓசை களம் கொள - குச்சரியென்னும் பண்வகை போன்ற இனியகுரல் தமது கண்டத்தில் தோன்ற, பிச்சரின் பிதற்றி - பைத்தியங்கொண்டவர்போல (வாயில்வந்தவற்றைச்) சொல்லிக்கொண்டு,—சச்சரி பாணி கொட்டி - சச்சரியென்னும் வாத்தியம்போலொலிபடத் தமது கைகளைத் தட்டி,—அல்குல் பூ துகில் கலாபம் பீறி - அல்குலின் மேலணிந்த மெல்லிய ஆடையும் கலாபமென்னும் அரைநூன்மாலையும் துணிபடுமாறு, நிறை தடுமாறுவாரும் - (தமது) நிறையென்னும் மகடூஉக்குணம் அழிபவர்களும்,—(எ - று.)

இராவணனது பிரிவை யாற்றாமல் வருந்துகின்ற அரக்கியரிற் சிலர், இன்னதுசெய்வதென்றறியாமையாலும், மனத்திற் செயற்கையானதோருற்சாகத்தை யுண்டாக்கிக்கொண்டு பொழுதுபோக்கக் கருதியும், தமது சாதி தருமத்துக்கேற்ப நாகத்தின் நஞ்சுபோல மிக்க மயக்கத்தை விளைக்கவல்ல கொடிய கள்ளையும் இரத்தத்தையுங் குடித்து, அதனால் அளவிறந்த மதிமயக்கத்தையும் வெறியையுங் கொண்டு, தம்மிற் பலர் ஒருங்குகூடி, தமது இனிய குரலாற் பித்தர்போலத் தோன்றியவற்றையெல்லாஞ் சொல்லிக்கொண்டு, கைகளால் தாளமிட்டு, உடுத்த ஆடையும் அதன்மேலணிந்த இடையணியும் பீறுமாறு தலைதெரியாமல் அடக்கமின்றிக் கூத்தாடுகின்றனரென்க. நிறை

யாவது - மனத்து அடக்கற்பாலனவற்றை யடக்குதல்; "நிறையெனப்படுவது மறைபிறரறியாமை" என்றார் பிறரும். அது தடுமாறுதலாவது - அடக்கவேண்டியவற்றை அடக்கமாட்டாது வாய்விடுதல். "நெஞ்சத், தொளித்ததூஉ மாங்கே மிகும்" என்றபடி அதிரகசியமானவற்றையும் வாய்விடுதல் களியின்காரியமாதலால், 'பிச்சரிற் பிதற்றி நிறைதடுமாறுவார்' என்றார். 'பூந்துகில் கலாபம் பீறி,' 'சச்சரிப்பாணிகொட்டி' என்றவற்றால், நிறைதடுமாறுதற்கு அடக்கமின்றி ஆடுதலளவுப் பொருள் கொள்ளப்பட்டது. குழுக்கொண்டு - (தமது தோழியரோடு) கூடி யெனினுமாம்.

நாகக் கள்ளொடு (பாற்கடலில்தோன்றிய வாருணியென்னுங்) தேவலோகத்து மதுவினுடனே யென்றலுமாம். குடித்து என்ற பொருளில் 'நக்கி' என்றது, ஒருபொருளின்வினையை மற்றொருபொருளின்மேலேற்றிய உபசார வழக்கு. பிச்சர் - பித்தரென்பதன் போலி. கலாபம் - இருபத்தைந்துகோவையுள்ள இடையணி; "எண்கோவைமேகலை காஞ்சியொருகோவை, பண்கொள் கலாபமிருபத்தைந்து கண்கொள் பருமம் பதினாறு மூப்பத் திரண்டு, விரிசிகை யென்றுணரற் பாற்று" எனக் காண்க. 'அல்குற்பூந்துகில்கலாபம்பீறி' என்பதற்கு - அல்குற்பரப்பின் பூரிப்பானது பூந்துகிலையும் கலாபத்தையும் பீற வென்றலும் ஒன்று. (க0கூ)

ககo. தயிர்நிறத் துறுகளுள்ளந்தளருறவறிவுதள்ளிப்
பயிர்வுறத்தெய்வமென்மேற்படிந்தது பார்மினென்று
வுயிருயிர்த்திரண்டுகையுமுச்சிமேலுயரநீட்டி
மயிர்சிலிர்த்துடலுங்கூசிவாய்விரித்தொடுங்குவாரும்.

(இ - ள்.) தயிர் நிறத்து உறு கள் - தயிரினது நிறத்தைப் பொருந்திய கள்ளானது, உள்ளம் தளர்உற - (பருகிய தங்கள்) மனத்தைத் தடுமாறச் செய்ய, (அதனால்), அறிவுதள்ளி - அறிவுமயங்கி,— பயிர்வு உற - ஆரவாரமுண்டாக, தெய்வம் என்மேல் படிந்தது பார்மின் என்று - 'தெய்வம் என்மேல் ஆவேசித்தது, பாருங்கள்' என்றுசொல்லிக்கொண்டு, உயிர் உயிர்த்து - பெருமூச்சுவிட்டு, இரண்டு கையும் உச்சிமேல் உயர நீட்டி - (தமது) இரண்டுகைகளையும் (குவித்துத்) தமது தலையின்மீது உயரநீட்டி, மயிர் சிலிர்த்து - மயிர்ச்சிலிர்ப்புக்கொண்டு, உடலும் கூசி - உடற்கூச்சத்தையும் அடைந்து, வாய் விரித்து - வாய்திறந்து ஆவென்றுகதறி, ஒடுங்குவாரும் - (பின்பு) ஓய்ந்துவிடுபவர்களும்,—(எ - று.)

கட்குடியர் தாம் அக்களியினால் மதிமயங்கிச்செய்யும பலவகைச் செயல்களைத் தம்மீது தெய்வம் ஆவேசித்ததனாலாகியனவென்று பெருமைப்படச் சொல்லிக்கொள்ளுதலுண்டு. 'பயிர்வுற' என்பதற்கு - (தம்மைக் காண்பவர்) அச்சமடைய வென்று உரைப்பாருமுளர். கூசி - நடுங்கி யெனினுமாம். நிறத்து உறு - அத்துச்சாரியைநிற்க இரண்டனுருபு தொக்கது. 'தயிர்நிறக் கள்ளுண்டுள்ளந்தள்ளத் தம்மறிவுதள்ளப், பயிருற', 'உடலங்கூசி' என்று பிரதிபேதமுண்டு. (ககo)

[அநுமான் அரக்கியர் வீதியையும், சித்தமாதர் வீதியையுங் கடந்து, வித்தியாதரமகளிர் வீதியைச் சேர்தல்.]

ககூக. இத்திறத்தரக்கிமார்களீரிருகோடியீட்டப்
பத்தியருறையுந்தெய்வப்படர்நெடுந்தெருவும்பார்த்தான்
சித்தியருறையுமாடத்தெருவும்பின்னாகச்சென்று
வுத்திசைவிஞ்சைமாதருறையுளைமுறையினுற்றான்.

(இ - ள்.) இ திறத்து - இவ்வகையான, அரக்கிமார்கள் - இராக்கத மாதர், ஈர் இரு கோடி ஈட்டம் பத்தியர் - நான்குகோடியென்னுந் தொகையுள்ள வரிசையான வீடுகளையுடையவர்களாய, உறையும் - வசிக்கின்ற, தெய்வம் - தெய்வத்தன்மையுள்ள, படர் நெடுந் தெருவும் - பரந்த நீண்ட வீதியையும், பார்த்தான் - பார்த்து [அங்கு எங்கும் சீதையைத்தேடி],—சித்தியர் உறையும் மாடம் தெருவும் பின் ஆக சென்றான் - ஸித்தஜாதி ஸ்திரீகள் வசிக்கின்ற வீடுகளையுடைய வீதியையும் தனக்குப்பின்புறமாய்விடும்படி சென்று கழித்து [அங்கும் சீதையைத் தேடி], உத் திசை அப்புறமான இடத்தில், விஞ்சைமாதர் உறையுளை - வித்தியாதரமாதர்கள் வசிக்கின்ற வீதியை, முறையின் உற்றான் - முறையே சேர்ந்தனன், (அநுமான்); (எ - று.)

தேவமாதர்களைப் பணிகொள்ளுந் தவப்பயன் மிக்க அரக்கமாதர் வசிக்கின்ற திவ்வியமான வீதியாதலால், அதற்கு 'தெய்வம்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. 'உத்திசை' என்பதில், உகரச்சுட்டு - அப்பாலென்ற பொருளை யுணர்த்திற்று. முறையின் உறுதல் - ஒவ்வோரிடமாகத் தேடிக்கொண்டு செல்லுதல். 'பத்தியினுறையுப் பத்திப படர்நெடுந்தெரு' என்பதும் பாடம். (ககூக)

வேறு.

[இதுமுதல் மூன்றுகவிகள் - அந்த அந்தப்புரத்தில் அவ்வித்தியாதர மாதர்களிருந்த நிலைமையைக் கூறும்.]

ககூஉ. வளர்ந்தகாதலர்மகரிகைநெடுமுடியரக்கனைவரக்காணார்
தளர்ந்தசிந்தைதம்மிடையினுநடுங்கிடவுயிரொடுதடுமாறிக்
களந்தவாநெடுங்கருவியிற்கைகளிற்செயிரியர்கலைக்கண்ணு
ளளந்தபாடல்வெவ்வரவுதஞ்செவிபுகவலமராலுறுகின்றார்.

(இ - ள்.) வளர்ந்த காதலர் - (தமது கணவனாகிய இராவணனிடத்து) அதிகமான ஆசையையுடையவர்களான சில வித்தியாதரமாதர்,—மகரிகை நெடு முடி அரக்கனை வர காணார் - சுறாமீனின் வடிவமமையச் சித்திரிக்கப்படு தலையுடைய நீண்ட கிரீடமுள்ள இராவணன் (தம்மிடத்து) வருதலைக் காணாதவர்களாய்,—தளர்ந்த சிந்தை தம் இடையினும் நடுங்கிட - சோர்வுற்ற (தமது) மனம் தமது இடையைக் காட்டிலும் அதிகமாகத் துடிக்க, உயிரொடு தடுமாறி - உயிரோடு தடுமாற்றங்கொண்டு,—செயிரியர் - (வீணை முதலிய வாத்தியங்களை இயக்கிப் பாடும்) பாடகர், களம் தவா நெடுங் கருவியின் - (தங்கள்)

சாரீரத்தோடு மாறுபடாத [ஒத்து இசைக்கின்ற] (யாழ் முதலிய) சிறந்த வாத்தியங்களில், கைகளின் - (தங்கள்) கைவிரல்களைக்கொண்டு, கலை கண்ணால் - நூல்களாகிய கண்களால் [சாஸ்திரமுறைமைப்படி], அளந்த - (தாளப் பிரமாணத்திற்கு ஏற்ப) அளவிட்டு எழுப்பிய, பாடல் - இசைப்பாட்டாகிய, வெம் அரவு - கொடிய பாம்பு, தம் செவி புக - தமது காதுகளில் நுழைய, அலமரல் உறுகின்றார் - (அதனைப் பொறுக்கமாட்டாமல்) கலக்கமடைகின்றார்கள்; (எ-று.)

சில வித்தியாதரமாதர்கள், இராவணனது பிரிவினாலாகிய விரகவேதனையோடு நின்று அவனது வரவை நிந்திசியளவும் எதிர்பார்த்தும் அவன் வரக்காணாமையால் தமது ஆசை பழுதுபட வருத்தம் மிக்கவராய், மனம்சோர்ந்து துடிக்க உயிர்நிலைதடுமாறத் தவிக்கின்றபொழுது, வழக்கப்படி பாடகர் வந்து இசையிலக்கணமுறைமை தவறாமல் இனிமையாக வாசிக்கும் யாழிசை செவிப்பட, அதனாற் பாம்புதீண்டினாற்போல மிக வருந்துவாராயினரெனக் கருத்து உணர்க. இச்செய்யுள், கீழ்ப்போந்த ௯௭௲ ஆஞ் செய்யுளோடு ஒப்புநோக்குதற்கு உரியது. மகரிகை யென்றது, கிரீடத்திலமைக்கப்பட்டதொரு தொழில் திறத்தை; அங்ஙனந் தொழிலமைக்கப்பட்ட நெற்றிப்பட்டமென்னும் அணிகலத்தை யாகவுமாம். இனி, 'மகரிகை நெடுமுடி யரக்கன்' என்பதற்கு - மகரதோரணம்போல நெடியவரிசையாக அமைந்துள்ள (பத்துத்) தலைகளையுடைய இராவணனென்றலும் அமையும். அரக்கனை வரக் காணார் - அரக்கன் வரவைக் காணார் என உருபுபிரித்துக் கூட்டுக; வினையெச்சம், தொழிற்பெயர்ப்பொருளில் வந்தது. 'தளர்ந்தசிந்தை தம் இடையினும் நடுங்கிட' என்றதனால், அவர்களிடையின் நுண்மையைப் பெறவைத்தார். களம் - கண்டம்; அதன் குரலுக்கு [சாரீரத்துக்கு] ஆகுபெயர். கலையை 'கண்' என்றது, இன்றியமையாச் சிறப்புப் பற்றி. பொருளினியல்பை உள்ளபடி காணுதற்குக் கருவியாதல்பற்றியும், இங்ஙனங் கூறத்தகும். பாடல்வெவ்வரவு தஞ்செவிபுக - உருவகம்; பாட்டானது கொடிய பாம்புபோலத் தமது செவித்துளையில் வந்து நுழைய வென்பது கருத்து. 'இடையினினுடங்கிட வுயிர்கொடுதடுமாறிக், கிளர்ந்தவாணெடுங்கருவியிற்கிளைகளிற் செயிரியர்களைகண்ணு, வளந்த,' 'அலமரவுயிர்க்கின்றார்' என்பன - பாடாந்தரம்.

இது முதற் பத்தொன்பது கவிகள் - பெரும்பாலும் முதற்சீர் மாச்சீரும், ஈற்றுச்சீர் மாங்காய்ச்சீரும், மற்றைநான்கும் விளச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (௧௧௨)

௧௧௩. புரியுநன்னெறிமுனிவரும்புலவரும்புகலிலாப்பொறைகூர
வெரியும்வெஞ்சினத்திகலடுகொடுந்திறலிராவணற்கெஞ்ஞான்றும்
பரியுநெஞ்சினரிவரெனவயிர்த்தோர்பகைகொடுபணித்திங்கள்
சொரியும்வெங்கதிர்துணைமுலைக்குவைசுடக்கொடிகளிற்றுடிக்கின்றார்.

(இ - ள்.) 'புரியும் - (பலராலும்) விரும்பப்படுகின்ற, நல் நெறி - சன்மார்க்கத்தி லொழுகுகிற, முனிவரும் - இருடிகளும், புலவரும் - தேவர்களும், புகல் இலா - சரணமாக அடைவதற்கு எவரையும்பெறாமல், பொறை கூர - மிகுதி

யாகப் பொறுத்துக்கொண்டிருக்க, எரியும் வெம் சினத்து இகல் அடு - மூண்டெழுகின்ற கொடிய கோபாக்கினியினால் (அவர்களுடைய) வலிமையை யழிக்கின்ற, கொடுந் திறல் - கொடிய வல்லமையையுடைய, இராவணற்கு - இராவணன்விஷயத்தில், எஞ்ஞான்றும் பரியும் - எப்பொழுதும் அன்புகொண்ட, நெஞ்சினர் - மனமுடையவர், இவர் - இம்மகளிர்,' என என்று எண்ணி, வயிர்த்தது ஓர் பகை கொடு - வயிரம்பற்றியதான ஒருபகைமையைக் கொண்டு, பனி திங்கள் சொரியும் - குளிர்ச்சியான சந்திரன் பொழிகின்ற, வெம் கதிர் - உஷ்ணகிரணங்கள், துணை முலை குவை சுட - குவிந்தெழுந்த இரண்டு தனங்களையும் எரிக்க, (அதனாற் சிலவித்தியாதரமாதர்கள்), கொடிகளின் துடிக்கின்றார் - (வெயிலினாற்) பூங்கொடிகள் (வாடுவது) போலத் துடிக்கின்றார்கள்; (எ-று.)

இராவணவிரகத்தாற் சிலவித்தியாதரமாதர்கள் வருந்துகின்ற போது, சந்திரகிரணங்கள் அவர்களுடம்பின்மீது பட, காமோத்தீபகமான அந்நிலாவின் தொடர்பால் அவர்கள் தீப்பட்டகொடிபோல மிகத்தவிப்பாராயினரென்க. பலர்க்குங் குளிர்ச்சியைச்செய்யு மியல்பினவான சந்திரகிரணங்கள் அவர்கட்கு வெப்பந்தருதற்கு ஒருகாரணங்கற்பிப்பார், 'இவ்வித்தியாதரமாதர்கள் தாம் தேவகணங்களிற் சேர்ந்தவராயிருந்தும் தேவகண்டகனும் ருஷிகண்டகனுமான கொடிய இராவணன்பக்கல் நெடுநாளாக மனப்பூர்வமாக அன்புகொண்டுள்ளாரென்பதுபற்றிச் சந்திரனாகிய தேவன் அவர்களிடம் கறுவுகொண்டு பகைமைமிக்கு அவர்கள்மேல் உஷ்ணகிரணத்தைச் சொரிகின்றான்' என்றார். 'வெங்கதிர்சுட' என்றது, கொடிகளாகிய உபமானத்திற்கும் கொள்ளத்தக்கது. 'துணை' என்பதற்கு - ஒன்றோடொன்று ஒத்த என்றும், வேறு ஒப்புமை பெறாது தமக்குத்தாமே சமமான என்றும் கொள்ளலாம். குவை - மேடு.

நன்னெறி புரியும் என மொழிமாற்றி, சன்மார்க்கத்தை யனுஷ்டிக்கிற வென்றலுமாம். புலம் - தேர்ந்த அறிவு: அதனையுடையவர் புலவர்; தேவர்களைக்குறிக்கின்ற 'விபுதர்' என்ற வடசொல்லும் இப்பொருளதே. புகல் இலா - கதியில்லாமல்; புகல் - அடைக்கலம்புகுமிடம்: இனி, புகல் இலா பொறை - சொல்லவொண்ணாத பொறுமை யெனினுமாம்; இவ்வுரையில், புகல் - முதனிலைத்தொழிற்பெயர். பொறை கூர்தல் - பொறுமைமிகுதல். பொறை - பொறுத்தல். 'எரியும்' என்ற அடைமொழியினால், சினம் தீயெனக் கொள்ளப்பட்டது. இராவணனை யெதிர்த்து அடக்கி அவனால் வருந்திய இருடிகளையும் தேவர்களையும் பாதுகாப்பவரெவரும் நெடுநாளாக நேரிடாமையால், அவன் தட்டுத்தடையின்றி யாவரையும் வருத்திவருகின்றனனென்பது, முதலிரண்டடியில் விளங்கிற்று. இராவணற்கு - இராவணன் விஷயமாக வென்க. (௧௧௯௩)

௧௧௯௪. சிறுகுகாலங்களூழிகளாம்வகைதிரிந்துசிந்தனைசிந்த
முறுகுகாதலின்வேதனையுழப்பவர்முயங்கினர்முலைமுன்றி
லிறுகுசாந்தமுமெழுதகிற்குறிகளுமின்னுயிர்ப்பொடுறுயிர
மறுகுவாட்கண்கள்சிவப்புறநோக்கினர்வயிர்த்தனலுயிர்க்கின்றார்.

(இ - ள்.) சிறுகு காலங்கள் ஊழிகள் ஆம் வகை - (நிமிஷம் நாழிகை முதலிய) சொற்பகாலங்களும் கற்பகாலங்கள்போல மிகநீண்டனவாகத்தோன்றும்படி, சிந்தனை திரிந்து சிந்த - மனம் மாறி நிலைகுலைய, மூறுகு காதலின் வேதனை உழப்பவர் - முதிர்ந்த காமநோயினால் வருந்துபவர்களும், முயங்கினர் - (முன்பு இராவணனைத்) தழுவியிருந்தவர்களுமான வித்தியாதரமாதர் சிலர்,—முலை முன்றில் - (தமது) தனங்களின்மேல், இறுகு சாந்தமும் - (முன்பு தம்மை அவன் ஆலிங்கனஞ் செய்தபொழுது அவனுடம்பு) அழுந்தப்பெற்ற சந்தனத்தையும், எழுது நல் குறிகளும் - (அம்முலைமுகட்டில் அவ்விராவணனால்) தொய்யிலெழுதப்பட்ட நல்ல அடையாளங்களையும், இன் உயிர் பொறை ஈர - (தமது இனிய உயிராகிய பாரத்தைப் பிளந்துவருத்தும்படியாகவும், மறுகு வாள் கண்கள் சிவப்பு உற - சுழலுகின்ற வாளாயுதம் போன்ற (தமது) கண்கள் (ஊடலாற்) செந்நிறங்கொள்ளும்படியாகவும், நோக்கினர் - பார்த்து, வயிர்த்தனர் - வயிரங்கொண்டு, உயிர்க்கின்றார் - பெருமூச்சு விடுகின்றார்கள்; (எ - று)

இராவணனுக்கு உரிமைபூண்டு அவனைத்தழுவியிருந்த வித்தியாதர மாதரிற் சிலர், நெடுநாளாக அவனைப்பிரிந்ததனால் வருந்துகின்றபொழுது, அவனைப் பிரிந்தநாள்முதல் நீராடுதலையொழிந்த தங்களுடம்பிற் கொங்கைகளின் மீது பூசப்பட்டிருந்த சந்தனக்குழம்பில் முன்பு அவன் இறுகத் தழுவியபோது அவனுடம்புபடிந்த சுவட்டையும், முன்பு அக்கொங்கைகளில் அவன் சந்தனக்குழம்புமுதலியனகொண்டு லீலையாக எழுதிய சித்திரக்கோலத்தையும் கண்டு, அதனால் முன்புகூடியிருந்த நிலையை நினைப்பூட்டப் பெற்றவர்களாகி, மிக வருந்தி; நெடுநாளாக அவன் தம்மைத் தழுவாது உபேக்ஷித்து வேற்று மாதினிடம்[சீதையினிடம்] காதல்கொண்டிருத்தல்பற்றி அவனிடத்துக் கோபமும் மாறுபாடும்கொண்டு பெருமூச்சுவிடுகின்றனரென்க. ("இது வோர்கங்கு லாயிரமூழிகளே ", "ஊழியிற்பெரிதால் நாழிகையென்னும் ஒண்சுடர் துயின்றதாலென்னும்", "ஊழிபலவோரிரவாயிற்றோ வென்னும்", 'இற்றைநீடிரவொன்,றஞ்சுகந் தத்தைவிளக்கும்"என்றபடி) கூடியநிலையில் ஒருகணமாகக் கழிகிற பொழுதானது பிரிந்தநிலையில் அநேகயுககாலமாக நீட்டித்துத் தோன்றுகின்றமைபற்றி, 'சிறுகுகாலங்களூழிகளாம்வகை' எனப்பட்டது. இங்ஙனந்தோன்றுதல் மனத்தின் திரிபு பற்றியே யென்பது விளங்க, 'திரிந்து சிந்தனை' என்றார்.

முன்றில் - முற்றம்; முன்னிடமென்றமாத்திரமாய் நின்றது. பிரிந்த நிலையில் உயிர்வைத்துக்கொண்டிருத்தலும் சுமையெனத் தோன்றுதலால், 'உயிர்ப்பொறை' என்றனர். பொறுக்கப்படுவது பொறை யெனச் சுமைக்குக் காரணக்குறி; பொறுத்தல் - சுமத்தல். உயிர்ப்பொறை - உயிரைத் தாங்குவது என்று கொண்டால், உடம்பு என்று ஆகும். கூரியனவாய் ஆடவரை வருத்துவனவான கண்கள் பிறழ்ச்சியையுடைமையால், அவற்றிற்கு, சுழற்றப்படுகிற வாட்படைகள் உவமைகூறப்பட்டன. 'எழுதுகிர்க்குறிகள்' என்றபாடத்துக்கு- எழுது உகிர் குறிகள் என்று பிரித்து, பதியவைத்த நகங்களினாலாகிய வடு வென்க. 'முயங்கிய முலை முன்றில்,' 'எழுதிய குறிகளும்' என்பன - பாடபேதங்கள். (கசுச)

[வித்தியாதரமாதர் வீதியைக் கடந்து செல்லும் அநுமான் மந்தோதரியின் மாளிகையைப் பார்த்தல்.]

கக௫. ஆயவிஞ்சையர்மடந்தையருறைவிடமாறிரண்டமைகோடி
தூயமாளிகைநெடுந்தெருத்திருவிப்போய்த்தொலைவின்மூன் றுலகிற்கு
நாயகன்பெருங்கோயிலைநண் ணுவான்கண்டனனளிர்திங்கள்
மாயநந்தியவாண்முகத்தொருதனிமயன்மகளுறைமாடம்.

(இ - ள்) ஆய - இவ்வாறான, விஞ்சையர் மடந்தையர் - வித்தியாதர மாதர்கள், உறைவு - வசிக்கப்பெற்ற, இடம் - இடமாகிய, ஆறு இரண்டு அமை கோடி தூய மாளிகை - பன்னிரண்டுகோடியென்னுந் தொகையுள்ள சுத்தமான வீடுகளையுடைய, நெடுந் தெரு - நீண்ட வீதிமுழுவதும், திருவி போய் -(பிராட்டியைத்) தேடிக்கொண்டு சென்று, தொலைவு இல் மூன்று உலகிற்கும் நாயகன் பெருங் கோயிலை நண்ணுவான் - அழிவில்லாத மூன்று உலகங்கட்குந் தலைவனான இராவணனது பெரிய அரண்மனையைச் சமீபிப்பவனான அநுமான்,—நளிர் திங்கள் மாய நந்திய - பெரிய [பூர்ண] சந்திரன் தோற்கும்படி விளங்குகின்ற, வாள் முகத்து - ஒளியுள்ள முகத்தையுடைய, ஒரு - ஒப்பற்ற, மயன் மகள் - மயனென்பவனது மகளாகிய மந்தோதரி, உறை - வசிக்கின்ற, தனி மாடம் - தனித்த மாளிகையை, கண்டனன் - பார்த்தான்; (எ - று.)

ஆறிரண்டு அமை கோடி - பன்னிரண்டாக அமைந்த கோடி. ஆறிரண்டு கோடி யமை மாளிகை யென மொழி மாறினுமாம். தூய மாளிகை - சிற்ப சாஸ்திரத்திற் கூறியபடி நல்லிலக்கணமமைந்த கிருகம். இவ்வுலகங்கள் கற்பந்தோறும் உள்ளனவாய்ப் பிரவாஹநித்ய மெனப்படுதலால், அவற்றிற்கு 'தொலைவுஇல்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. இராவணன் திக்குவிசயகாலத்தில் திரிலோகாதிபதியான இந்திரனைத் தன் மகனைக் கொண்டு வென்று அவனுரிமையைத் தான் உடையனானதனால், 'மூன்று உலகிற்கும் நாயகன்' எனப்பட்டான். அவனிருப்பிடத்தை 'பெருங்கோயில்' என்று சிறப்பித்துக் கூறியதும் இதுபற்றியே.

நளிர் திங்கள் - குளிர்ந்த சந்திர னெனினுமாம். சந்திரமண்டலத்தினும் மேலாகக் காண்பவர்க்கு மகிழ்ச்சியை விளைத்து விளங்கும் முக மென்பது, 'நளிர்திங்கள்மாய நந்திய வாண்முகம்' என்றதன் கருத்து. மந்தோதரி - இராவணனது பட்டமகிஷி; (தாந்யமாலினி முதலாக அவனுக்கு மற்றும் பலமனைவியரும் உண்டு:) அசுரத்தச்சனான மயனது மக ளிவள்; (இவளுடன் பிறந்த ஆடவர் - மாயாவி, துந்துபி யென்பார்:) அழகிற் சிறந்தவள்; பஞ்சகன்னிகைகளுள் ஒருத்தி: (மற்றையோர் - அகலிகை, திரௌபதி, சீதை, தாரை யென்பார்.) தனிப்பட்டுச் சிறந்து விளங்குதலால், 'தனிமாடம்'எனப்பட்டது. இனி, ஒரு தனி - ஒருபொருட்பன்மொழி யெனினுமாம். 'மயன்மகண் மணி மாடம்' என்றும் பாடம்.

(கக௫)

[அதனைச்சீதையைவைத்திருக்கும் மாளிகையோவென்று அநுமான்சங்கித்தல்.]

௧௧௯. கண்டுகண்ணொடுகருத்தொடுகடாவினன்காரணங்கடைநின்ற
துண்டுவேறொருசிறப்பெங்கணாயகர்க்குயிரினுமுரியாளைக் [லாம்
கொண்டுபோந்தவன்வைத்ததோருறையுள்கொல்குலமணிமனைக்கெல்
விண்டுவின்றடமார்பினின்மணியொத்ததிதுவெனவியப்புற்றான்.

(இ - ள்.) (அநுமான்),—கண்ணொடு கண்டு - (அந்தமாளிகையைக்) கண்களாற் பார்த்து, கருத்தொடு கடாவினன் - மனத்திலாராய்ந்து,—'காரணம் - (நாம்) இங்கு வருவதற்குக் காரணமாகிய பிராட்டியைத் தேடுதல், கடை நின்றது - பூர்த்தியாய்விட்டது போலும்: (எங்ஙனமெனின்,—)வேறு ஒரு சிறப்பு உண்டு - (எல்லாமாளிகையினும் இம்மாளிகையினிடத்துத்) தனியே ஒரு விசேஷ மிருக்கின்றது; (ஆதலின், இந்தமாளிகை), எங்கள் நாயகர்க்கு உயிரினும் உரியாளை கொண்டு போந்தவன் வைத்தது ஓர் உறையுள்கொல் - நமக்கெல்லாந் தலைவனான இராமபிரானுக்கு உயிரைக்காட்டிலுஞ் சிறந்த அன்புரிமையுடையவளாகிய சீதாபிராட்டியை யெடுத்துக் கொண்டுவந்தவனான இராவணன் (அவளை) வைத்திருக்கின்ற ஓரிடம்போலும்: மனை குலம் மணிக்கு எல்லாம் வீடுகளாகிய சிறந்த சாதிரத்தினங்களுக்கெல்லாம், விண்டுவின் தட மார்பினில் மணி ஒத்தது இது - திருமாலினது பரந்த திருமார்பி லணிந்த (கௌஸ்துபமென்னும்) இரத்தினத்தைப் போன்றுள்ளது இம்மாளிகை,' என - என்று, வியப்பு உற்றான் அதிசயித்தான்; (எ - று.)

இராவணனுக்கு உரிமைபூண்ட பற்பலவகை மாதர்கள் வசிக்கின்ற வீடுகளை யெல்லாம் பார்த்துச் சென்றவனான அநுமான், அவ்வீடுகளெல்லாவற்றினும் இம்மாளிகை மிகச்சிறந்து ஒப்பற்றதாய்த் தனிப்பட விருத்தலால், 'இராவணன் தான் இத்தனை மாதரையும் புறக்கணித்துப் பெரிதுங் காதலித்துக் கவர்ந்துசென்ற சீதையின் சிறப்புக்கு ஏற்றதாகத் தேர்ந்து அவளை வைத்திருக்கின்ற மாளிகைபோலும் இது' என்று சங்கித்து, அங்ஙனமாயின் தான் வந்த காரணம் பயன்பெறுதலால், அதனைக்குறித்து மகிழ்ச்சிகொண்டனனென்க. இரத்தினங்களிலெல்லாம் கௌஸ்துபம் சிறந்ததென்பது, இப்படலத்தின் எட்டாஞ்செய்யுளிலும் விளங்கியது.

கண்ணொடு கருத்தொடு என்றவற்றில், 'ஒடு' என்ற மூன்றனுருபு - கருவிப்பொருளில் வந்தது; "வாசியொடு குயின்ற தாசும் பட்டும்" என்றவிடத்துப்போல. புறக்கண்ணாகிய ஊனக்கண்களைக்கொண்டு கண்டு அகக்கண்ணாகிய ஞானக்கண்ணைக்கொண்டு ஆலோசிப்பவனாயின னென்பார், 'கண்டு கண்ணொடு கருத்தொடு கடாவினன்' என்றார். கடாவுதல் - வினவுதல், உசாவுதல், ஆராய்தல்; இனி, 'கண்ணொடு கருத்தொடு கடாவினன்' என்பதற்கு - தனது கண்களை மனத்தினுடனே கூட்டி ஆலோசித்தனனென்று உரைப்பாருமுளர். நாயகர் - உயர்வுப் பன்மை. 'நாயகற்கு' என்றும் பாடம். 'கொல்' என்ற இடைச்சொல் - இங்கு ஐயுறவுப்பொருளது. குலமணிமனைக்கெல்லாம் என்றுஎடுத்து, சிறந்தஇரத்தினங்கள் பதித்த வீடுகளுக்கெல்லா மென்று உரைத்தல் சிறவாது. விஷ்ணு வென்ற வடசொல், விண்டு வெனச் சிதைந்தது; அத்திருநாமம் - எங்கும் வியாபித்துள்ளவ னென்று

பொருள்படும். 'காரணங் கடைநின்றது' என்பதற்கு - 'நான் தேடிவந்ததற்குக் காரணமானபொருள் கடைசியில்நின்றது'என்று உரைத்தலும் அமையும்; மகளிரனைவருமிருக்கின்ற மாளிகைகட்கெல்லாம் அப்பாலிருந்தது பிராட்டியிருக்கின்ற மாளிகை யென்பது கருத்து: நான்தேடிவந்தபொருளாகிய பிராட்டியை முடிவிற்காணலாயிற் றென்க. 'விண்டுவின்றிருமார்பினில்' என்று சில பிரதிகளி லிருக்கின்றது. (கககக)

[அந்த மாளிகையில் மந்தோதரி படுத்துக்கொண்டிருக்கிற நிலைமையை இதுமுதல் மூன்று கவிகளிற் கூறுகின்றது.]

ககஎ. அரம்பைமேனைகைதிலோத்தமையுருப்பசியாதியர்மலர்க்காமன்
சரம்பெய்தூணிபோற்றளிரடிதாங்தொடச்சாமரைப்பணிமாறக்
கரும்பையுஞ்சுவைகைப்பித்தசொல்லியர்காமரங்கனியாழி
னரம்பினின்னிசைசெவிபுகநாசியிற்கற்பகவிரைநாற.

(இ - ள்.) அரம்பை - ரம்பையும், மேனகை - மேனகையும், திலோத்தமை - திலோத்தமையும், உருப்பசி - ஊர்வசியும், ஆதியர் - முதலான அப்ஸரஸ்திரீகள், காமன் மலர் சரம் பெய் தூணி போல் தளிர் அடி தொட - மன்மதனது புஷ்பபாணங்களை யிட்டுவைத்துள்ள அம்பறாத்தூணி போன்ற வடிவமுள்ளனவும் தளிர்போல் மெல்லியனவுமான (தனது) பாதங்களைப் பிடிக்கவும்,—தாம் சாமரை பணிமாற - அவ்வரம்பையர் தாம் வெண்சாமரஞ் சுழற்றிவீசவும்,—கரும்பையும் சுவை கைப்பித்த சொல்லியர் - கருப்பஞ்சாற்றையும் கைப்புச்சுவையுள்ளதென்று சொல்லும்படி மிக இனிமையாயுள்ள சொற்களையுடையவர்களான தேவமாதர் வாசிக்கின்ற, காமரம் கனி யாழின் - நாதமினிய வீணையினது, நரம்பின் - நரம்புகளினின்று எழுகின்ற, இன் இசை - இனிய கீதமானது, செவி புக - தன் காதுகளில் நுழையவும்,—கற்பகம் விரை - கல்பக விருக்ஷத்து மலர்களின் மணம், நாசியில் நாற - மூக்கிற் பரிமளிக்கவும்,—(எ - று.)—'துயில்வுறு நிலையிலே' என மேல் ககக - ஆங் கவியோடு தொடரும்; குளகம்.

மந்தோதரி படுத்துக் கொண்டிருக்கையில் அவளுக்கு உபசாரமாகத் தெய்வமங்கையரிற் சிலர் அவள் கால்களைப் பிடித்தலும், அம்மாதரிற் சிலர் அவட்கு உபசாரமாகவும் இராவணனது பட்டமகிஷியான அவளுக்கு ஏற்ற இராஜாங்க மரியாதையாகவும் சாமரம் வீசுதலும், அம்மகளிர்சிலர் அவள் கேட்டு ஆனந்தித்து இனிது துயில்கொள்ளுமாறு வீணைவாசித்தலும், அப்பெண்களிற் சிலர் அவள் மூக்கில் நன்மணம் வீசுமாறு அதற்கு நேராகக் கற்பகமலர்களை யேந்துதலும் கூறப்பட்டன. அரம்பை மேனகை திலோத்தமை யுருப்பசி யாதியர் அடிதொட—கீழ்க் கும்பகர்ணன் துயிலுதலைக் கூறுகையில் (கஉ௫) "வானவர்மகளிர் கால்வருட" என்றதுங் காண்க. அக் கும்பகர்ணன் துயிலுதலைக் கூறுமிடத்து கஉச - ஆஞ் செய்யுளிற் கூறியபடி கற்பகச்சோலையில் தவழ்ந்து அதன்மலர்களி லளைந்து அவற்றின் தெய்வத்திருமணத்தைக் கொண்ட காற்று அவள்மூக்குக்குநேராக நறுமணம்வீசுதலை 'நாசியிற் கற்பக விரைநாற' என்று குறித்ததாகக் கொள்ளுதலுமாம் அன்றி, உத்தமஜாதி ஸ்திரீ

களின் சுவாசத்தில் நறுமலர்மண மமைந்துள்ள தென்கிற நூற்கொள்கையின்படி இவளது மூச்சுக்காற்று வாசனைவீசுதலை அங்ஙனங் கூறினருமாம். (உயர்ந்தசாதிமாதரின் சுவாசம் நறுமணமுடைமையை, "புகரில் தென்மலை நறுங்குறடுரிஞ்சு பூந்தேய்வை, பகருமின்னுயிர்ப்பால் விரையூட்டினர்பகர்வார்;" "நீங்கரிய கூலமணி நீள்மறுகு தோறும், மாங்குயிலின் மென்குதலை மாலைபகர் மாதர், தேங்கமழுயிர்ப்பின்விரை சேர்த்தினர்கள் விற்கும், கோங்கமலர் சண்பகமென் கோதையினுங் கொள்வார்" என்ற நைடதத்தாலும் அறிக. "ஒண்மணம் பாடலங் குவளை, தண்ணறுமுளரி மல்லிகை நறுந்தண்சண்பகம் போல்வனவாகும்" என்பதும் காணத்தக்கது.

மகளிர்கணைக்காலுக்கு அம்பறாத்தூணி வடிவிலுவமையாதலை, "வேணுவுடன், சோகமூறும்பு பெய்தூணியும் வராற்கன்றும், காகளமும் போன்ற கணைக்கால்" என்ற உபயானசங்கிரகத்தாலும் உணர்க. "சேடாவ நாழிகையிற் புடைதிரண்டு தேனெய்பெய், வாடாத காம்பேபோற் கணைக்காலின் வனப்பினவே" என்பது, சிந்தாமணி. தம்மாலெய்யப்பட்டார்க்கு வேட்கைநோயை விளைக்கும் மன்மதனது மலரம்புகளைப் பெய்துள்ள தூணியை உவமையெடுத்துக்கூறியது, இது கண்டோர்க்கு வேட்கை விளைக்குமியல்பின தென்பதைக் காட்டுதற்கு. "பூங்கழைகுழைக்கும் வேனில்வேள்பகழிபொதிந்த பொன்னுவம் வெண்கொடிப்பத்,... ...தோழமைகொண்டன கணைக்கால்" என்று நைடதநூலார் கூறியதும் இவ்வியல்பு பற்றியே.

திலோத்தமை - ஆவீறுஐயான வடசொல்; உலகத்தில் அழகுடைமங்கையரது உடம்பிற் சிறந்த அழகை எள்ளளவு எள்ளளவாக எடுத்துத் திரட்டி அதுகொண்டு அமைக்கப்பட்ட பெண்ணாதலால், திலோத்தமையென்று பெயராயிற்று. திலம் - எள், உத்தமா - மேலானவள். தாமரைமலர், மாமலர், அசோகமலர், முல்லைமலர், நீலோற்பலமலர் என்ற ஐந்தும் மன்மதனுக்கு அம்புகளாதலால், 'மலர்க்காமன்சரம்' எனப்பட்டது. காமன் - அனைத்துயிர்க்கும் ஆசையைவிளைக்குந் தேவன்; அனைவராலும் விரும்பப்படும் அழகுடையவன். சாமரம்என்ற வடசொல், சாமரையென ஈறுதிரிந்தது; சமரமென்னும்மானின் வால்மயிர்கொண்டு செய்யப்பட்டதோர் இராஜ சின்னம்: தத்திதாந்தநாமம். கருப்பஞ்சாற்றினும் மிகவும் மதுரமான சொற்களை யுடையவளென்பது, 'கரும்பையுஞ்சுவைகைப்பித்தசொல்லியர்' என்பதன் கருத்து; கரும்பிரசம் நாவுக்கு எவ்வளவு இனிமையைத்தருகின்றதோ அவ்வளவினும் மிகவும் அதிகமாகச் செவிக்கு இனிமைதருஞ் சொற்களையுடையா ரென்க. உம் - உயர்வுசிறப்பு. கனி யாழ் - கனிந்த யாழ் என வினைத்தொகை. காமரம் - இசைப்பொது; ஒருவகைப்பண்ணுமாம் 'ஆதியாயலர்மாரன்,' 'கரும்பை யின்சுவைக்கைப்பித்த சொல்லியர்.' 'காமரங்கனிகின்ற' என்பன - பாடபேதம். (ககூஎ)

ககூஅ. விழைவுநீங்கியமேன்மையோராயினுங்கீழ்மையோர்வெகுளூற்றாற், பிழைகொணன்மைகொல்பெறுவதென்றையுறுபீழையாற் பெருந்தென்ற, லுழையர்கூவப்புக்கதெனப்பெயர்வதோருசவினுள தாகும், பழையம்யாமெனப்பண்பிலசெய்வரோபருணிதர்பயனோர்வார்.

(இ - ள்.) 'விழைவு நீங்கிய மேன்மையோர் ஆயினும் - (பொருள்களி னிடத்துப்) பற்றற்ற மேன்மைக்குணமுடையவரே யானாலும், கீழ்மையோர் வெகுள் உற்றால் - கீழ்மக்களுடைய கோபத்துக்கு இலக்கானால், பெறுவது- (அக்கோபத்தால் அம்மேலோர்) அடைவது, பிழைகொல் நன்மைகொல் - தீமையோ நன்மையோ,' என்று ஐயுறு - என்று சந்தேகிப்பதனாலாகிய, பீழை யால் - துன்பத்தால்,—பெருந் தென்றல் - பெருமையையுடைய தென்றற் காற்றானது,—உழையர் கூவ - (மந்தோதரியின்) ஏவலாளர் அழைக்க, புக்கு - அருகிற்சென்று, ஏது என - 'என்னகட்டளை?' என்று வினவி யறிந்துகொண்டு, பெயர்வது - பிறகு மீள்வதாய், ஓர் ஊசலின் உளது ஆகும் - ஓர்ஊஞ்சல் போலப் போவதும் வருவதுமா யிருக்கும்; பயன் ஓர்வார் - (தாம்செய்யுந் தொழில்களால் தமக்குவரும்) பயனை ஆராய்ந்தறிபவரான, பருவத்தர் - புத்தி மான்கள், பழையம் யாம் என - யாம் நெடுநாளாகப் பழக்கமுடையோமென்று கருதி, பண்பு இல செய்வரோ - தகுதியில்லாத காரியங்களைச் செய்வார் களோ? [செய்யார் என்றபடி]; (எ - று.)

மந்தோதரி படுத்துக்கொண்டிருக்கிற இடத்தில் தென்றற்காற்று அவட் குச் சுககரமாக வீசுதலை, இச்செய்யுளில் நன்குவிளக்குவாராயினர். பொருள் களுட் சிலவற்றினிடத்து விருப்பென்பதும் சிலவற்றினிடத்து வெறுப்பென் பதும் இல்லாமல் எல்லாபொருள்களின் மீதும் ஒருபடியாக வீசு மியல்புள்ள தென்றற்காற்று, அங்குத் தான் எங்ஙனம் வீசினால் மந்தோதரிக்கு உகப்பா யிருக்கு மென்பதைத் தெரிந்துகொண்டு அதற்கு ஏற்ப வீசுதற்பொருட்டு அவள் மாளிகைவாயிலிற் காத்துநின்று அவளது குற்றேவலாளர் தன்னைக் கூப்பிடும்போது உள்ளேசென்று அவள்குறிப்பை வினவித் தெரிந்துகொண்டு மீள்வதாய் இங்ஙனம் போவதும் வருவதுமாகி ஊஞ்சலின் தன்மையதாம். விருப்பு வெறுப்பறுதலாகிய மேன்மைக்குணத்தையுடைய காற்றும் இங்ஙனம் அங்கு அலைவதற்குக் காரணம், நற்குணமொன்றேனுமில்லாதவரும் ஒரு கட் டுக்கும் அடங்காதவருமான கீழ்மக்களின் கோபத்திற்கு இலக்கானால் எத் துணை மேலோரும் ஒருசமயத்தில் அவரால் தீமையடைதலுங் கூடுமென்ற சங்கையினால் நேர்ந்த துக்ககரமான அச்சமே யென்பதை முன்னிரண்டடிக ளில் விளக்கினர். இவ்வாறு முதல்மூன்றடிகளிற் கூறிய சிறப்புப்பொருளை நான்காமடியிற் கூறிய பொதுப்பொருள்கொண்டு சாதித்தது, வேற்றுப் பொருள்வைப்பணி. திருக்குறளில் அமைச்சியலில் மன்னரைச்சேர்ந் தொழுகலென்ற அதிகாரத்தில் "பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங் கெழுதகைமை கேடுதரும்" என்ற திருக்குறளை அடியொற்றியது இச்செய்யு ளின் ஈற்றடி யென்க. 'பண்பல' என்பதும் பாடம். அரசர் பொறுது செறும் பொழுதிற் பழமைநோக்கிக் கண்ணோடாது உயிரை வௌவுவராதலால், பொறுப்பரென்று அரசர்வெறுப்பன செய்யார் அரசரைச் சேர்ந்தொழுகும் அறிவுடையா ரென்பது கருத்து. ("பழைமை கடைப்பிடியார் கேண்மையும் பாரார், கிழமை பிறிதொன்றுங் கொள்ளார்—வெகுளின்மன், காதன்மை யுண்டே யிறைமாண்டார்க் கேதிலரு, மார்வலரு மில்லை யவர்க்கு" எனப் பின் னோர் கூறுவதுங் காண்க.) 'பழையம்யாமெனப் பண்பிலசெய்வரோ' என்ப

தற்கு - பிராயத்தால் முதிமையுடையோம் யாமென்று கருதி (அதனுலடங்காமல்) தகாதவைகளைச் செய்யாரென்று உரைப்பாரு முளர். இராக்கத ராசனை இராவணனுக்குச் செல்லுகையுள்ள கால மிதுவென்பதை யுணர்ந்து அதுபற்றி வாயுதேவன் அச்சங்கொண்டு, தனது தெய்வத்தன்மையையும் பெருமையாளாகத் தான் அவனுடன் பழகிய பழக்கத்தையும் பாராட்டாது, அவன் மனைவியி னேவலாளர் வாவென்றால் வருவதும் போவென்றாற் போவதுமாய் அடங்கியொழுகுவ னென்பது, இச்செய்யுளின் தேர்ந்தகருத்து.

விழைவு - கோபம் முதலிய குற்றங்களுக்கும் உபலக்ஷணம். 'வெகுள்வுற்றால்' என்பதும் பாடம். பீழை - பீடா என்ற வடசொல் சிதைந்தது. பருணிதர் - பரிணதர் என்ற வடசொல்லின் விகாரம்; ஞானபரிபாகமுடையவரென்பது பொருள். 'ஏகெனப்பெயர்வது' என்றபாடம் - அவ்வேவலாளர், 'அப்பாற்செல்' என்றுசொல்ல அங்ஙனம் மீள்வதாய் என்று பொருள் பட்டுச் சிறக்கும்.

குளகச்செய்யுள்களின் நடுவில் இடைப்பிறவரலாய்வந்த இச்செய்யுளை அடுத்தசெய்யுளின் முதலில் நிற்கின்ற 'இன்னதன்மையின்' என்றதனோடு இயைத்து, அதனை 'துயில்வுறு' என்பதனோடு தொடர்ச்சிப்படுத்தி, முடிபு காண்க. (௧௧அ)

[அவளைச் சீதையென்று ஐயுற்று அநுமான் வருந்துதல்.]

௧௧௯. இன்னதன்மையினெரிமணிவிளக்கங்களெழில்கெடப்பொலிகின்ற, தன்னதின்னொளிதழைப்புறத்துயில்வுறுதையலைத்தகைவில்லா, னன்னளாகியசானகியிவளெனவயிர்த்தகத்தெழுவெந்தீத், துன்னுமாருயிருடலொடுசுடுவதோர்துயருழந்திவைசொன்னான்.

(இ - ள்.) இன்ன தன்மையின் - இப்படிப்பட்ட தன்மையுடனும்,—எரிமணி விளக்கங்கள் எழில்கெட பொலிகின்ற தன்னது இன் ஒளி தழைப்பு உற - பிரகாசிக்கின்ற இரத்தினமயமான விளக்குக்கள் ஒளிகெடும்படி அவற்றினும் மிக்குவிளங்குகின்ற தனது இனிமையான தேககாந்தி எங்கும் செழித்துப் பரவவும், துயில்வு உறு - தூங்கிக்கொண்டிருக்கின்ற, தையலை - அழகியவளான மந்தோதரியை, தகைவு இல்லான் - தடையின்றிச் செல்பவனான அநுமான், (கண்டு), அன்னள் ஆகிய சானகி இவள் என அயிர்த்து - அத்தன்மையளானசீதாதேவி யிவளென்று சங்கித்து, (அதனால்),—அகத்து எழு வெம் தீ - மனத்தில் மூண்டெழுகின்ற வெவ்விய கோபாக்கினி, துன்னும் ஆர் உயிர் உடலொடு சுடுவது - பொருந்திய அருமையான தனதுஉயிரையும் உடம்பையும் எரிப்பதான, ஓர் துயர் - ஒப்பற்ற பெருந்துன்பத்தால், உழந்து - வருந்தி,—இவை சொன்னான் - இவ்வார்த்தைகளை(த்தனக்குட்) சொல்லிக்கொள்ளலானான்; (எ - று.) —அவற்றை, அடுத்தசெய்யுளிற் காண்க.

(௧௧௭) தொட, பணிமாற, புக, நாற, (௧௧அ, ௧௧௯)விழைவுநீங்கிய...... ......பயனோர்வார் இன்னதன்மையின், (௧௧௯)தழைப்புற, துயில்வுறு என ஒருதொடராகிய மூன்று செய்யுள்கட்கும் முடிபு அமையும்.

இரத்தினங்கள்கொண்டு விளக்குக்கலங்களை யமைத்து அவற்றி லேற்றிய எரிசுடர்விளக்குக்களும், இரத்தினங்களையே விளக்குக்களாக வைத்திருக்கும் மணிவிளக்குக்களும் ஆகிய இரண்டும், 'எரிமணிவிளக்கங்கள்' என்ற தொடரில் அடங்கும். எரிவிளக்கமும் மணிவிளக்கமு மாகியவை யெனத் தனித்தனி இயைத்தும் இவ்விரண்டையும் அடக்கலாம். ௧௬௬-ஆஞ் செய்யுளுரையிற் காட்டியபடி மூன்றுவகைப்பட்ட விளக்குக்களுள் தீவிளக்கம் மணிவிளக்கம் என்ற இரண்டினும் மேம்பட மந்தோதரியின் மேனிவிளக்கம் விளங்குகின்ற தென்றார். ஜாநகீ என்னும் வடமொழிப்பெயர், ஜநகமகாராசன் வளர்த்த மக ளென்று பொருள்படும்; தத்திதாந்தநாமம். தத்துவஞானத்திலும் வைதிக கருமாநுட்டானத்திலும் சிறந்து தருமத்தையே பிரதானமாகவுடையராய் ராஜரிஷிகளெனப்படுகிற ஜநகரது குலத்தில் வளர்ந்தவளெனச் சிறப்பை விளக்குவது இத்திருநாமம். 'அன்னளாகிய' என்றவிடத்து, அகரச்சுட்டு - உயர்வுகுறிப்பது. சுக்கிரீவ மகாராஜா வாநரர்களைத் திசைதோறும் பிராட்டியைத்தேடுதற்கு அனுப்பியபோது இராமபிரான் அநுமானைத் தனிப்படக்கொண்டு சீதையின் திருமேனியடையாளங்கள் பலவற்றை வகுத்துக்கூறியுள்ளா ராதலின், அவற்றைக் கருதி 'அன்னளாகிய சானகி' என்றதாகவுங் கொள்ளலாம்; அவ்வறிகுறிகளைக் கிட்கிந்தாகாண்டத்து நாடவிட்டபடலத்திற் பரக்கக்கூறிப்போந்தனர். இம்மந்தோதரியைச் சீதையென்று சங்கித்த அநுமான் அவள் இவ்விலங்கையில் அசநகரில் திவ்வியமான ஒரு மாளிகையிற் சிறிதுங் கவலையின்றிப் புஷ்பசயநத்திலே மகாசம்பிரமத்துடன் இனிது துயில்வதை உளத்திற்கொண்டு மிக்ககோபத்தையும் வருத்தத்தையும் அடைந்தன னென்க.

தகைவு - தளர்ச்சியுமாம். துன்னுதல் - இங்கு, ஒற்றுமைப்பட்டிருத்தல். 'துயிலுறு', 'உடலொடும்' என்பன - பாடபேதம். (௧௯௯)

[அநுமானது சிந்தை.]

௨௦௦. எற்புவான்றொடர்யாக்கையாற்பெறும்பயனிகந்தனெனிதுநிற்க
வற்புவான்றளையிற்பிறப்பதனொடுமிகந்துதன்னருந்தெய்வக்
கற்புநீங்கியகனங்குழையிவளெனிற்காகுத்தன்புகழோடும்
பொற்பும்யானுமிவ்விலங்கையுமாக்கரும்பொன்றுதுமின்றென்றான்.

(இ-ள்.) என்பு வான் தொடர் - எலும்பை முக்கிய ஆதாரமாகக்கொண்டு வளர்கின்ற, யாக்கையால் - உடம்பை யெடுத்ததனால், பெறும் - அடையும்படியான, பயன் - பயனை, இகந்தனென் - அடையாதொழிந்துவிட்டேன் யான்: இது நிற்க - (நான் உடம்பெடுத்த பயனை யடையாமற்போன) இத்தன்மை இருக்கட்டும்: அன்பு வான் தளை - அன்பென்கிற பெரிய பாசபந்தத்தையும், இல் பிறப்பு அதனொடும் - உயர்ந்த குலத்திற் பிறந்ததற்குரிய மேன்மையையும், இகந்து - போற்றாதுவிட்டு, தன் அருந் தெய்வம் கற்பு நீங்கிய - தனது அருமையான தெய்வத்தன்மையுள்ள கற்புநிலைமை யொழிந்த, கனங்குழை - சீதை, இவள்—, எனின் - என்றால்,—காகுத்தன் புகழோடும் - இராமபிரானது கீர்த்தியும், பொற்பும் - (அப்பெருமானது) பொலிவும், யானும்

இ இலங்கையும் - இந்த இலங்காபுரியும், அரக்கரும் - இராக்கதரும், இன்று பொன்றுதும் - இன்றைக்கே அழிவோம், என்றான் - என்று (தனக்குட்) சொல்லிக்கொண்டனன், (அநுமான்) ; (எ - று.)

ஒவ்வோருயிரும் ஏதேனுமோருடம்பையெடுத்து இவ்வுலகிற் பிறந்ததன் பயன் எம்பெருமானுக்குப் பணிவிடையை இனிதுசெய்து முடித்து அவனது திருவுள்ளத்துக்கு உகப்பைவிளைத்து அவனருட்குத் தான் இலக்காதலேயாம்; அங்ஙனம் திருமாலாகிய இராமபிரானுக்குச் சீதாபிராட்டியைத் தேடிக்கொடுத்தலாகிய கைங்கரியத்தைப் பூர்த்தியாகச்செய்து எனது ஜன்மத்தை ஸார்த்தமாக்கிக்கொள்ளத் தலைப்பட்ட யான், அப்பிராட்டி கற்புநிலை கலங்கியிருக்கக் கண்டேனாதலால், யான் மேற்கொண்ட தொண்டு இனிது முடியாமைபற்றி, எனது பிறப்பு வியர்த்தமே யாயிற்று. இங்ஙனம் நான் பேறு பெறுமற் போனதுமன்றி என்பது, முதலடியின் கருத்து.

பிராணநாயகனான இராமபிரானிடத்துப் பிராட்டி வைத்திருந்த அன்பு மனப்பூர்வமான மெய்யன்பாயிருக்குமாயின் அவள் கற்புநிலை கலங்கியிராளென்பதுபற்றி 'அற்புவான்தனையிகந்து தன் கற்பு நீங்கிய கனங்குழை' என்றும், ("இற்பிறந்தார் கண்ணேல்ல தில்லை யியல்பாகச், செப்பமும் நாணு மொருங்கு," "ஒழுக்கமும் வாய்மையும் நாணும் இம்மூன்றும், இழுக்கார் குடிப்பிறந்தார்," "அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார், குன்றுவ செய்தலிலர்," "சலம்பற்றிச் சால்பிலசெய்யார் மாசற்ற, குலம்பற்றி வாழ்து மென்பார்" என்றபடி) ஏக்காரணத்தாலும் எவ்வகை நிலையிலும் ஒருசிறிதும் ஒழுக்கந்தவறுமை உயர்குடிப்பிறந்தார்க்கு இயல்பாயிருக்க அதற்குமாறாக ஜநககுலத்தவளான இவள் கற்பொழுக்கமிழந்தனளென்று கொண்டு 'இற்பிறப்பதனொடுமிகந்து தன் கற்பு நீங்கிய கனங்குழை' என்றும் கூறினன். "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யு மழை," "கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி............பெய்யெனப் பெய்யு மழை" என்றபடி கடவுளிணையால் நிகழக்கூடிய செயல்களையும் தான் நிகழ்த்தவல்ல ஆற்றல் கற்புநிலைக்கு இருத்தலால் 'தெய்வக்கற்பு' என்றும், "பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந், திண்மை யுண்டாகப் பெறின்" என்றபடியுள்ள கற்புநலத்தின் சிறப்பைக் கருதி 'அருங்கற்பு' என்றும் கூறப்பட்டது.

"புகழ்புரிந்தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன், னேறுபோற் பீடுநடை" என்றபடி மனைவி கற்புநிலை கலங்கினுற் கணவனது புகழும் பெருமிதமும் ஒழிதல்பற்றி 'காகுத்தன் புகழோடும் பொற்பும் இன்றுபொன்றும்' என்றும், பிராட்டியை இங்ஙனம் நிலைகுலைந்திருக்கக் கண்டபின்பு தான் உயிரைத் திருப்பதிற் பயனில்லையென்பதுபற்றி 'யான் இன்று பொன்றுவென்' என்றும், இங்ஙனம் அவள் கற்பொழிதற்குக் காரணமான இராவணன் அத்தீவினைப்பயனல் பந்துமித்திரருடனும் ஊரோடும் தவருமல் விரைவில் ஒழிவனென்பது பற்றி 'இவ்விலங்கையும் அரக்கரும் இன்று பொன்றுவர்' என்றும் கருதினன் அநுமன். தான் கண்ணுற்றது இன்றைக்கே யாதலாலும்,

முன்னமே இவள் நிலைகலங்கியிருப்பின் அக்கொடிய வினையால் அரக்கர்க்கும் அவுணர்க்கும் அழிவு உண்டாயிருத்தல் கூடும் : அங்ஙனம் இதுவரை ஆகாமையால், இவ்வொழுக்கக்கேடு இன்றைக்கே நிகழ்ந்திருக்குமென்று கருதியமை பற்றியும், 'இன்று' என்றனன். இவ்வளவு சிந்தனையுங் கொண்டதற்குக் காரணம் கவலையின்றிக் கண்துயிலும் மந்தோதரியைச் சீதையென்று மாறாகக் கருதியமையென்பது, முந்தின செய்யுளால் விளங்கிற்று. இவள் கற்பு நிலை கலங்கிய சீதையாயிருப்பின், காகுத்தன் புகழ் முதலியன உடனே தவறுதழியுமென்று கருதினனென்க.

யாக்கையென்ற பெயர் - (எலும்பு தோல் தசை முதலிய எழுவகைத் தாதுக்களினால்) யாக்கப்பட்டது என்று காரணப்பொருள்பெறும் ; அவ்வேழு தாதுக்களுள் எலும்புக்கு உள்ள தலைமையைக் கருதி, 'எற்புவான்றொடர்யாக்கை' எனப்பட்டது. வான் - பெருமை, சிறப்பு. அன்பாவது - ஒருவரிடத்து மனமகிழ்ச்சி நிகழ்த்தி அம்மனத்தை மிகவும் பிணிப்பித்து நிற்கும் நேயமாதலால், 'அற்பு வான்தளை' என்றனர். காகுத்ஸ்தன் என்ற வடசொல் - ககுத்ஸ்தனென்ற அரசனது மரபிற் பிறந்தவனென்று பொருள்படும் ; தத்திதாந்தநாமம். சூரிய குலத்துப் புரஞ்ஜயனென்ற அரசன், தன் விருப்பத்தின்படி தனக்கு வாகனமாய் எருதுவடிவங்கொண்ட இந்திரனது ககுத் எனப்படுகிற முசுப்பின்மேலேறி வீற்றிருந்து அசுரனைப் பொருதழித்ததனால், ககுத்ஸ்தன் என்று ஒரு பெயர் பெற்றனன். 'புகழோடும்...... ...பொன்றுதும்'—தன்மையும் படர்க்கையும் அடுக்கித் தன்மைப்பன்மை முற்றைக் கொண்டன. 'இன்றுபொன்றுதும்' என்றது, விரைவுதோன்ற நின்றது. 'பயனிழந்தனன்' என்றும், 'அழிந்ததன்' என்றும், 'இழந்தருந்ததிபோலுங் கற்பு' என்றும், 'பொன்றவதின்றென்றான்' என்றும் பிரதிபேத முண்டு. (உ௦௦)

[சில காரணங்கொண்டு சீதையல்லளிவளென்று அநுமான் தெளிதல்]

உ௦௧. மானுயர்த்திருவடிவினளவளிவண்மாறுகொண்டனள்கூறிற்
றானியக்கியோதானவர்தையலோவையுறுந்தகையாளுள்
கானுயர்த்ததாரிராமன்மேனோக்கியகாதல்காரிகையார்க்கு
மீனுயர்த்தவன்மருங்குதான்மீளுமோநினைந்ததுமிகையென்றான்

(இ - ள்.) அவள் - அப்பிராட்டியோ, மானுயர் திரு வடிவினள் - அழகிய மனித ரூபமாயிருப்பவள் : இவள் - இவளோ, மாறு கொண்டனள் - மனிதஜாதியின் வேறான வடிவங் கொண்டிருக்கின்றாள் ; கூறின் - (இவளை இன்னளென்று குறிப்பிட்டுக்) கூறப்புகுமிடத்து, தான் இயக்கியோ தானவர் தையலோ ஐயுறும் தகை ஆனாள் - இவள்தான் யக்ஷஸ்திரீயோ அசுரஸ்திரீயோ(என்று)சந்தேகிக்கத்தக்கவளாயிருக்கின்றாள் ; காரிகையார்க்கு - மகளிர்க்கு கான் உயர்த்த தார் இராமன்மேல் நோக்கிய காதல் - நறுமணஞ்சிறந்த மலர் மாலையைத் தரித்த இராமபிரானது வடிவழகைக் கண்ணுற்று அப்பெருமான் பக்கல் கொண்ட ஆசை, மீன் உயர்த்தவன் மருங்குதான் மீளுமோ - மீனக்கொடியை உயரவெடுத்தவனான மன்மதனிடத்திலாவது திரும்பிச்செல்லுமோ ?

நினைந்தது மிகை - (இராவணனுக்கு உரிமைபூண்ட சீதையென்று இவளை யான் மாருகக்) கருதியது குற்றம், என்றான் - என்று எண்ணினன், (அநுமான்).

பூமியினின்று தோன்றி விதேக தேசத்து மிதிலாபுரி யரசனான ஜநகமகா ராஜனால் வளர்க்கப்பட்டுத் தசரத சக்கரவர்த்தி குமாரனான இராமபிரானுக்கு வாழ்க்கைப்பட்ட சீதை மனிதவடிவமாயுள்ளவ ளென்பது வெளிப்படை. திருமால் மனிதப்பிறப்பாய் ஸ்ரீராமாவதாரஞ் செய்தபொழுது திருமகள் மனிதப்பிறப்பாய்ச் சீதையாக அவதரித்தன ளென்பது பிரசித்தம். மண்டோதரி அசுரத்தச்சன் மகளென்பது, உத்தர ராமாயணத்தால் விளங்கும். "ராகவா உன் வடிவு கண்டால் மன்மதனும் மடவாராக வாதரஞ்செய்வன்," "ஸாக்ஷாந் மந்மதமந்மத:" என்றபடி அழகிற்சிறந்த ஆண்பாலான மன்மதனும் பெண்மையை அவாவும்படி அதிசௌந்தரியமுள்ள புருஷோத்தமனாகிய இராமபிரானது திருமேனியழகைக் கண்டு அதிலீடுபட்டு அவனைக் காதலித்த பெண்பாலார்க்குப் பிறகு அக்காதல் வேறுசோர வேறொரு புருஷனிடத்து மனஞ்செல்லமாட்டாதென்பது பற்றியும், இவள் பிராட்டியல்லளென்று நிச்சயித்தன னென்க.

மானுயர் - மாநுஷர் என்ற வடசொல்லின் விகாரம்; (காசியப முனிவரது மனைவியரில்) மநுவென்பவளது சந்ததியா ரென்பது பொருள் : தத்திதாந்த நாமம். காரிகையார் - அழகிய மகளிர். மீன் - அவ்வடிவமெழுதிய கொடிக்கு ஆகுபெயர். ஈற்றடியில், 'தான்' என்பது - உயர்வு சிறப்பு. மிகை - தவறு. 'கானுயிர்த்த' என்ற பாடத்துக்கு - வாசனை வீசுகின்ற வென்க. (௨௦௧)

[அநுமான் அவளது அங்கவிலக்கணங்கொண்டு அவட்கு நேருந் தீங்கைக் கருதுதல்.]

௨௦௨. இலக்கணங்களுஞ் சிலவுள வென்னினுமெல்லைசென் றிறுக்கில்லா, வலக்கணெய் துவதணியது ண்டென்றெடுத்தறைகுவதிவள்யாக்கை, மலர்க்கருங்குழல்சோர்ந்துவாய்வெரீஇச்சிலமாற்றங்கள்பறைகின்ரு, ளுலக்குமிங்கிவள் கணவனுமழிவுமிவ்வியனகர்க்குளதென்ருன்.

(இ - ள்.) இலக்கணங்களும சில உள என்னினும் - உத்தம ஸ்திரீ லக்ஷணங்கள் சில (இவளிடத்தில்) உள்ளனவாயிருந்தாலும், இவள் யாக்கை - இவளது உடம்பு, எல்லை சென்று இறுக்கில்லா அலக்கண் எய்துவது அணியது உண்டு என்று எடுத்து அறைகுவது - ஓரெல்லையிற்போய் முடியாத பெருந்தீங்கு (இவட்கு) நேர்வதாய்ச் சமீபித்துள்ளதென்று எடுத்துச் சொல்லுகின்றது; (மற்றும் இவள் தூங்கிக்கொண்டிருக்கையில்), மலர் கருங் குழல் சோர்ந்து - மலர்களைச்சூடிய கரியகூந்தல் அவிழ்ந்துகிடக்கப் பெற்றவளாய், வாய் வெரீஇ சில மாற்றங்கள் பறைகின்ருள் - வாய்குளறி மாறுபட்ட வார்த்தைகள் சிலவற்றைச் சொல்லுகின்ருள் : (அதனால்), இங்கு - இப்பொழுது [இனி விரைவில் என்றபடி], இவள் கணவனும் உலக்கும் - இவளுடைய கணவனும் இறப்பான் ; இ வியல் நகர்க்கும் அழிவு உளது - இந்தப் பெரிய நகரத்துக்கும் அழிவுண்டாம், என்ருன் - என்று எண்ணினன், (அனுமன்); (எ - று.)

உத்தமஸ்திரீகளுக்குரிய லக்ஷணங்களிற் சில இவளுடம்பிற் காணப்பட்டாலும், இப்பொழுது இவளுடம்பில் தோன்றுகின்ற அவலக்ஷணங்கள்

இவன் இவளொருத்திக்குள்ளே எல்லையில்லாத பெருந்துன்பத்தை யடைவனென்று தெரிவிக்கின்றன ; அன்றியும், இவள் தூங்கும்போது தலைமயிர் அவிழத் தீய சொற்களை வாய்பிதற்றுதலால், இவள் கணவனுக்கும் இவன் வசிப்பதும் அவன் ஆள்வதுமான இப்பெருநகரத்திற்கும் கேடு சமீபித்திருக்கின்றதாகத் தெரிகின்றது என்று எண்ணினன் அநுமனென்பதாம். அநுமான் அங்கவிலக்கண நூலாகிய சாமுத்திரிகசாஸ்திரத்தையும் சூரியபகவானிடத்திற் கற்றுத் தேர்ந்த மகா புத்திமானாதலால், இங்ஙனம் மண்டோதரியின் உடற்குறிகள் கொண்டு இனி அவட்கு நேருந் தீமைகளை ஊகித்து உணரலாயின னென்க.

'இலக்கணங்களும் சில வுளவென்னினும்' என்பதற்கு - (பிராட்டியினிடத்திலுள்ளனவாக இராமபிரான்சொன்ன) நல்லிலக்கணங்களிற் சில (இவளிடத்து) உள்ளனவானாலும் என்று பொருள் கொள்ளலுமாம் ; அந்நிலைமைகள், கிட்கிந்தாகாண்டத்து நாடவிட்டபடலத்திற் கூறப்பட்டன. இறுத்தல் - சேர்தல், தங்குதல். அலம் கண் - சஞ்சலமான கண்: கண் கலங்குதற்குக் காரணமான துன்பத்தின்மேல் நின்றது : காரணப்பொருளைக் காரியச்சொல்லாற் கூறிய உபசாரவழக்கு ; இடுக்கண், உறுகண், பழங்கண், புன்கண் என்ற துன்பப் பெயர்கட்கும் இங்ஙனங் காண்க. 'அறைகுவதிவள்யாக்கை' என்ற தொடரில், பேசாததைப் பேசுவதுபோலச் சொல்லும் மரபுவழுவமைதியும், இயல்புபற்றி வருங் காலவழுவமைதியும் இருத்தல் காண்க. வெருவுதல் - அஞ்சுதல் : இங்கு, அதன் காரியமான குழறுதலைக் குறித்தது ; இதுவும் உபசாரவழக்கு. 'அழிவுமிவ்வியனகர்க்குளது' என்றவிடத்தில், இறந்தது தழுவிய எச்சவும்மை பிரித்துக் கூட்டப்பட்டது. 'இவ்வுயர்நகர்க்கு' என்ற பாடம், மோனைத்தொடை சிறக்கும். (உ௬உ)

[பிறகு அநுமான் இராவணன் மாளிகையினுட் புகுதல்.]

உ௬௩. என்றுணர்ந்துநின்றேழுறுமிந்நிலை நிற்கவித்திறனென்னாப்
பின்றுசிந்தையன் பெயர்ந்தனனெடுமனைபிற்படப்பெருமேருக்
குன்றுகுன்றியதகையுறவோங்கியகொற்றமாளிகைதன்னிற்
சென்றுபுக்கனனிராவணற்கெடுப்பருங்கிரியெனத்திரடோளான்.

(இ - ள்.) என்று உணர்ந்து - என்று ஊகித்தறிந்து, நின்று ஏழுறும் இ நிலை இ திறன் நிற்க - (யான் அப்பாற்செல்லாமல் இங்கு) நின்று (இவள் சீதையோ அல்லளோ வென்று) கலக்கமடைகிற இந்த நிலைமை இவ்வளவோடு நிற்கட்டும், என்னா - என்று எண்ணி, பின்று சிந்தையன் - (அக்கலக்கத்தினின்று) மீண்ட மனத்தையுடையவனாய், நெடு மனை பின்பட பெயர்ந்தனன் - அந்தப்பெரியமாளிகை பின்னாய்விடும்படி அதனைக்கடந்து அப்பாற்சென்று, பெரு மேரு குன்று குன்றிய தகை உற ஓங்கிய கொற்றம் மாளிகைதன்னில் - மகாமேருகிரியும் குறுகியுள்ளதென்று சொல்லும்படி மிக உயர்ந்துள்ள வெற்றியமைந்த ஒரு மாளிகையிலே, சென்று புக்கனன் - போய்ச் சேர்ந்தான் : (யாவனெனில்,—) இராவணற்கு எடுப்பு அருங் கிரி என திரள் தோளான் - இராவணனுக்குப் பெயர்த்தெடுக்க முடியாததொரு கைலாசமலைபோலத் திரண்ட தோள்களையுடையவனான அநுமான் ; (எ - று.)

ஏமுறுதல் - இவளைச் சீதையென்று மயங்குதல்; ஏமம் - கலக்கம், மயக்கம். 'ஏமுறுமிந்நிலைநிற்கவித்திறன்' என்றது, பராமுகமாகக் கூறியது; யான் இங்ஙனம் ஐயமுற்றது சிறிதுந் தகுதியற்ற தென்றவாறு. பின்று சிந்தையன் - (அம்மாளிகையினின்று) மீண்ட மனத்தையுடையவ னெனினுமாம். குலகிரிகளிலொன்றும் மிகப் பெரியதுமான கைலாசமலை இவ்வநுமானது தோள்களுக்கு உவமைபோதாது; ஏனெனில், அம்மலை இராவணனால் எளிதில் நிலைபெயர்த்து எடுக்கப்பட்டது: இத்தோள்களோ அங்ஙனம் அவனால் எளிதில் நிலைபெயர்க்கப்படுவனவன்றி அவனது வலிமைநிலையைக் குலைப்பனவா மென்பதை யுட்கொண்டு, 'இராவணனுக்கு எடுக்கமுடியாததொரு கைலாசகிரிபோல' என்று அநுமனது தோள்களுக்கு இல்பொருளுவமை வகுத்துக் கூறினர். சிற்பசாஸ்திரவிலக்கணந்தவறாதபடி தெய்வத்தச்சனான விசுவகர்மனா லமைக்கப்பட்ட இவ்வரண்மனை தன்னில் வாழ்பவர்க்கு வெற்றிதரத்தக்க தென்பார், 'கொற்றமாளிகை' என்றார்; அன்றி, மாளிகைகளெல்லாவற்றினும் மேம்பட்டிருத்தலை இதற்கு வெற்றியெனக் கொண்டதாகவுமாம். 'மேருக்குன்று குன்றியாந்தகையுற' என்ற பாடத்துக்கு - (தனது பெருவடிவுக்குமுன்) மகா மேருகிரி ஒரு குன்றிமணியாந்தன்மையை யடைந்துவிடுமாறு மிகவுயர்ந்த அரண்மனையென்பது பொருள். குன்றிய தகையுறல் - குறுகிய தன்மையை யடைதல்.

[அப்பொழுது [illegible] [illegible] உற்பாதங்கள்.]

உ0ச. நிலந்துடித்தன நெடுவரைபொடித்தன நிருதர்தங்குலமாதர்
பொலந்துடிக்கமைமருங்குல்போற் கண்களும்புருவமும்பொற்றோளும்
வலந்துடித்தன மாதிரந்துடித்தன தடித்தின்றிமதிவானங்
கலந்திடித்தன வெடித்தன பூரணமங்கலகலசங்கள்.

(இ - ள்.) (அவ்வரண்மனையினுள்ளே அநுமான் புகுகபொழுது),—நிலம் துடித்தன - பூமியினிடங்கள் அதிர்ந்தன; நெடு வரை பொடித்தன - பெரிய மலைகள் பொடியாயுதிர்ந்தன; நிருதர் தம் குலம் மாதர் - ராக்ஷஸஜாதி ஸ்திரீகளுடைய, பொலம் துடிக்கு அமை மருங்குல் போல் - அழகியதும் உடுக்கைக்கு ஒப்பாக அமைந்ததுமான இடை (மிக்கநுட்பத்தால் துவண்டு நடுங்குவது) போல, கண்களும் - (அவ்வரக்கியரது) கண்களும், புருவமும் - புருவங்களும், பொன் தோளும் - அழகிய தோள்களும், வலம் துடித்தன - வலப்புறம் துடிப்பனவாயின; மாதிரம் துடித்தன - திக்குக்கள் அதிர்ச்சியுற்றன; மதி வானம் - சந்திரன் விளங்குகின்ற ஆகாயத்திலே, தடித்து இன்றி - மின்ன லில்லாமலிருக்கையில், கலந்து இடித்தன - பலவகையாக இடிமுழக்க முண்டாயின; பூரண மங்கல கலசங்கள் - மங்களகரமான பூர்ணகும்பங்கள், வெடித்தன - உடைந்தன; (எ - று.)

அந்தமாளிகையில் அநுமான்பிரவேசித்தது அதில்வசிக்கின்ற திரிலோகாதிபதியான இராவணனுக்குப் பெருந்தீங்குவிளையக் காரணமாகுதலால், அங்ஙனம் விரைவில் தீங்குநேர்தற்கு அறிகுறியான துர்நிமித்தங்கள் நிகழ்ந்தனவென்க. நிலந்துடித்தல் - பூகம்பம். நெடுவரை - குலபர்வதங்கள். துடியென்

னும் வாச்சியத்துக்கும் மகளிரிடைக்கும் ஒப்புமை-மேலும் கீழும் அகன்றிருக்க நடுச்சிறுத்திருக்கும் வடிவி லென்க. 'துடியைப்போன்ற இடை' என்னாது, 'துடிக்குஉபமானமாகஅமைந்த இடை' என்றது, மிகநுண்ணியவடிவில் அவ்விடைக்குஉள்ள சிறப்பை விளக்கும்; உபமேயத்தினும் உபமானம் பலமடங்கு சிறந்திருத்தல்வேண்டு மென்பது, அலங்காரநூலார்கொள்கை. அரக்கியரது இடையென்னுமுறுப்புக் கூந்தல்முதலியவற்றின் பாரத்தைத் தாங்கமாட்டாது துவண்டுநடுங்கும் இயற்கையைய, அம்மகளிரது கண்ணும் புருவமும் தோளும் வலந்துடிக்கின்ற செயற்கைக்கு உவமையாக அமைத்தனர். மகளிர்க்குக் கண் முதலியன வலந்துடித்தல், தீநிமித்தம். சந்திரன்விளங்குகின்ற ஆகாயமெனவே, மேகசஞ்சாரமில்லாதமென்றதாயிற்று; அங்ஙனமிருக்கையில் இடிமுழக்கமுண்டாதல் உற்பாதமாதலை, 'மேகங்கள்முழங்காமல் விண்ணதிர்ந் திட் டேர்சோளும் வெயிலைச்சூழ்ந்து, பூகம்பம்பிறந்து'' என்ற பாரதத்தாலும் அறிக; ''தடியுடைமுகிற்குலமின்றித் தாவில்வான், வெடிபடவதிருமால்'' என மேற்காட்சிப்படலத்து வருவதுங் காண்க. தொடர்ச்சியாய்ப் பலஇடிகள்இடித் தனவென்பது விளங்க, 'கலந்திடித்தன' என்றார். இனி, 'மதிவானம்' என்பதற்கு - சந்திரன்போல வெண்ணிறமான மேகங்க ளென்று பொருள்கொண்டு, நீர்கொள்ளாத வெள்ளைமேகங்கள் வானத்திற்சேர்ந்து இடிமுழங்கினவென்று உரைப்பாருமுளர். நீர்நிறைந்தகுடங்களை வாயிலில் வைத்திருத்தல், மங்கலங்களி லொன்று. அந்நிறைகுடங்கள் விண்டுவிரிதல் தீநிமித்தமென்பது, மேற்காட்சிப்படலத்தில் ''மங்கலகலசஞ் சிந்தின விரியுமால்'' எனபதனாலும் விளங்கும். பூர்ண மங்கல கலசம் - வடமொழித்தொடர் (உ௦௪)

[அவ்வுற்பாதங்களைக் கண்டு அநுமான் சிந்தித்தல்.]

உ௦ரு. புக்குநின் றுதன்புலன்கொடுநோக்கினன்பொருவருந்திருவுள்ள
நெக்குநின் றனனீங்குமந்தோவிந்தநெடுநகர்த்திருவென்னு
வெக்குலங்களின்யாவரேயாயினுமிருவினையெல்லோர்க்கு
மொக்குமூழ்முறையல்லதுவலியதொன்றில்லெனவுணர்வுற்றான்.

(இ - ள்.) புக்கு நின்று - (அநுமான் அவ்விராவணன் மாளிகையினுட்) போய்நின்று, தன் புலன்கொடு நோக்கினன் - (அப்பொழுது நிகழ்ந்த உற்பாதங்களைத்) தன்கண்களாற் பார்த்தவனும் (அவற்றைப்பற்றித்) தனது அறிவினால் ஆராய்ந்தவனுமாகி, (அதனால்), பொருவு அருந் திரு உள்ளம் நெக்கு நின்றனன் - ஒப்பற்ற தனது சிறந்தமனம் நெகிழப்பெற்று நின்று, அந்தோ இந்த நெடு நகர் திரு நீங்கும் என்னா - 'ஐயோ! இந்தப் பெரியநகரத்தினது ஐசுவரியம் நீங்கிப்போய்விடுமே!' என்று (தனக்குட்) சொல்லிக்கொண்டு,—'எ குலங்களின் யாவரே ஆயினும் - எந்தக்குலங்களிற்பிறந்த எவ்வகையோர்தாமானாலும், எல்லோர்க்கும் இருவினை ஒக்கும் - அனைவர்க்கும் புண்ணியபாவங்கள் (தவறுமற்பயனளித்தலிற்) சமமேயாம்; ஊழ் முறை அல்லது வலியது ஒன்று இல் - ஊழ்வினையின் ஒழுங்கே அனைத்தினும் வலியதல்லாமல் அதனினும்வலியது வேறொன்றில்லை', என உணர்வுஉற்றான் - என்றும் ஆலோசித்தனன், (அநுமான்); (எ - று.)

கீழ் உ0௫ - ஆஞ் செய்யுளில் "மாளிகைதன்னிற் சென்றுபுக்கனன்" என்றதன் தொடர்ச்சியாக இச்செய்யுளில் 'புக்குநின்று' என்றார். "இரட்டுற மொழிதல்' என்னும் உத்தியால், 'தன்புலன்கொடுநோக்கினன்' என்பதற்கு இருவகைப்பொருள் ஒருங்குகொள்ளப்பட்டது. இதற்குச் செயப்படுபொருள் - கீழ்ச் செய்யுளிற் கூறிய பலவகை யுற்பாதங்கள். புலன்என்ற சொல்லுக்கு - அறிவு, இந்திரியவுணர்ச்சி என்ற இருபொருளும் உண்டு. பொறியைப் புலனென்றல், ஒருவகை உபசாரவழக்கு. ஐம்பொறியையுங் குறிக்கக்கூடிய இப் பொதுப்பெயர் - பின் 'நோக்கினன்' என வருவதுபற்றி இங்குச் சிறப்பாய்க் கண்ணையுணர்த்திற்று. நோக்கினன் எனபதை பெயராகக்கொண்டு, நோக்கியவனுனை அநுமானென்ன இச்செய்யுளுக்கு எழுவாயாக்குதலுமாம். அந்தோ - இரக்கக்குறிப்பிடைச்சொல்; ஹந்த என்ற வடசொல்லின் சிதைவெனத் தக்கது. பகைவரது நகரத்தின் செல்வம் நீங்குமென்பது குறித்து நெகிழும்படியான அவ்வளவு இரக்கத்தை இயல்பில் உடைமைபற்றி, அநுமானது மனம், 'பொருவருந்திருவுள்ளம்' என்று சிறப்பித்துக் கூறப்பட்டது.

"ஊழிற்பெருவலியாவுள மற்றொன்று, சூழினுந் தான்முந்துறும்" என்ற திருக்குறளும், "சிறுகா பெருகா முறைபிறழ்ந்து வாரா, உறுகாலத் தூற்றாகா ஆமிடத்தே யாகும்" என்ற நாலடியாரும், ஊழின் வலிமையையும் முறைதவறாமையையும் விளக்கும். இந்நகர்த்தலைவனது நல்வினைப்பயனால் இந்நகரில் இதுவரை நெடுநாளாகச் செல்வம் நிலைபெற்றிருந்தது; அந்நல்வினைப்பயன் நீங்கத் தீவினைப்பயன் நுகருங்காலம் நேர்வதால், இந்நகரின் ஐசுவரியம் இனிக் குன்றும்; இங்ஙனம் அரசனுக்கும் நகர்க்கும் குடிகட்கும் நேருந் தீங்குக்கு அறிகுறியாக உற்பாதங்கள் விளைந்தன வென்று ஆலோசித்தனன் அநுமனென்க. 'புலன்கொளநோக்கினன்', 'நீங்குமன்றே' எனபன - பாடபேதம்.　(உ0௬)

[இதுமுதற் பன்னிரண்டு கவிகள் - குளகம்; அநுமான் இராவணனைப் பார்த்தலும், அவன்படுத்திருக்கின்ற நிலைமையும்.]

உ0௭. நூற்பெருங்கடனுணங்கியகேள்வியனோக்கினனியலோன்றாள்
வேற்பெருங்கடலபுடைபரந்தீண்டியவெள்ளிடைவியன்கோயிற்
பாற்பெருங்கடற்பன்மணிப்பஃறிரைப்பரப்புடைப்படர்வேலை
மாற்பெருங்கடல்வதிந்ததேயனையதோர்வனப்பினன்றுயில்வானை.

(இ - ள்.) நூல் பெருங் கடல் - சாஸ்திரங்களாகிய பெரிய கடல்களில் மூழ்கியவனும், நுணங்கிய கேள்வியன் - நுண்ணியனவான நூற்கேள்விகளையுடையவனுமாகிய அநுமான்,— இயல்-(ஓரிடத்தில் நில்லாமல் எப்பொழுதும்) உலாவுகின்ற, நோன் தாள் - வலிய கால்களையும், வேல் - (கையில்) வேற்படையையுமுடைய, பெருங் கடல் - பெரிய (இராக்கதரது காலாட்சேனையாகிய) சமுத்திரம், புடை பரந்து ஈண்டிய - எப்புறத்தும் பரவலாய்த் திரண்டிருக்கப்பெற்ற, வெள் இடை - வெளியிடஞ் சூழ்ந்த, வியல் கோயில் - விசாலமான அரண்மனையிலே,— பெரு பால் கடல் - பெரியபாற்கடலில், பல் மணி

பல் திரை பரப்பு உடை படர் வேலை பெரு மால் கடல் வதிந்ததே அனையது - பலஇரத்தினங்களை வீசுகின்ற பலஅலைகளின் பரப்பையுடையதும் பரந்த கரையுள்ளதுமான பெரியகருங்கடல் தங்கியிருந்தாற் போன்றதான, ஓர் வனப்பினன் - ஒரு அழகிய தோற்றமுடையவனும், துயில்வானை - (வெண்ணிற மலர்களாலாகிய படுக்கையில்) தூங்கிக்கொண்டிருப்பவனாகிய இராவணனை,— நோக்கினன் - பார்த்தான்; (எ - று.)

மிகவும் விசாலமான வெண்மலர்ப்பள்ளியிற் கரிய பெரிய வடிவமுடைய இராவணன் படுத்திருத்தல், பாற்கடலின்மீது ஒருகருங்கடல் தங்கினாற்போன்றிருக்கின்றதென்க; இஃது பொருளுவமையணி. வெண்மலர்களாலாகியபடுக்கையென்பது, மேல் (உ௯௨) "வெள்ளிவெண்சேக்கை" (உ௯௩) "பூவியலமளிமேலா" என்பவற்றால் விளங்கும். வியன்கோயில் துயில்வானை என இயையும். கற்றற்குரிய நூல்களைக் கற்றலாகிய கல்வியும், கேட்கப்படும் நூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக்கேட்டலாகிய கேள்வியும் ஆகிய இரண்டையுமுடையவன் அநுமனென்பதை, 'நூற்பெருங்கடல் நுணங்கியகேள்வியன்' என்றதனு லுணர்த்தினர். கல்வியினாலாகிய அறிவை வலியுறுத்துவதும் கல்வியறிவையுண்டாக்குவது மாதலால், கல்வியின்பின் கேள்வி நிறுத்தப்பட்டது. "கல்வி கரையில" ஆதல்பற்றி, 'நூற்பெருங்கடல்' என்றார். திருக்குறளில் "நுணங்கியகேள்வியர்" என்றவிடத்துப் பரிமேலழகர் 'கேட்கப்படுகின்ற பொருளினது நுண்மை கேள்விமேல் ஏற்றப்பட்டது' என்று விசேடவுரை கூறியது, இவ்விடத்திற்கும் அமையும். இராவணன் மாளிகையைச் சுற்றி வெறுநிலமாயுள்ளவிடத்தில் மிகப்பல காலாள்வீரர் திரண்டு வேலேந்தியவராய் உலாவிக்கொண்டே காவல்செய்கின்றன ரென்பது, 'இயல்நோன்தாள் வேற்பெருங்கடல் புடைபரந்தீண்டிய வெள்ளிடை வியன்கோயில்' என்றதனால் விளங்கிற்று. பெருங்கடல் - வீரர்குழாத்துக்கு உவமையாகுபெயர். 'இயல்நோன்தாள்', 'வேல்' என்ற அடைமொழிகள் - அதன்பொருளை வெளிப்படையாக்கின.

'பன்மணிப்பஃறிரைப்பரப்புடை,' 'படர்வேலை' என்றவை - கடலுக்கு அடைமொழிகள். கடல் இரத்தினாகரமாதலால், 'பன்மணி' என்ற விசேஷணம் ஏற்கும். உபமேயமாகிய இராவணன் பலவகை இரத்தினங்கள் பதித்த கிரீடங்களைத் தரித்தவனும் இருபதுகைகளைப் பரப்பிக்கொண்டும் படுத்திருத்தல், உபமானமாகிய கடலுக்குக் கொடுத்த அடைமொழியினால் தோன்றும். மேல் உ௯௩-ஆஞ் செய்யுளில் இவனுக்குத் திருமாலை உவமைகூறுகின்றா ராதலின். அதற்கேற்ப, இவன்படுக்கையைத் திருமால்பள்ளிகொள்ளு மிடமான திருப்பாற்கட லென்றன ரென்னலாம். மால் - கருமை; "மேகங் காற்றுப் பெருமை கருநிறம், சோழன் புதனெனச் சொற்றிடு மாலே" என்ற திவாகரங் காண்க. வதி - வஸி என்ற வடமொழிவினையடியின் விகாரம். 'விரிந்ததேயனையது' என்றும் பாடமுண்டு. பல்+திரை=பஃறிரை: ஆய்தக்குறுக்கம், கால்மாத்திரை. 'வளப்பினன்' என்ற பாடத்துக்கு, வளப்பமான தோற்றமுடையவனென்க.

(உ௦௬)

உ0எ. குழவிஞாயிறுகுன்றிவர்ந்தனையன குருமணிநெடுமோலி,
யிழைகளோடுநின் றிளவெயிலெறித்திட விரவெனும்பொருள்வீய,
முழைகொண்மேருவின்பொருட்டிடைக் கனகனைமுருக்கியமுரட்சீயந்,
தழைகொடோளொடுதலைபலபரப்பிமுன் றுயில்வதோர்தகையானை.

(இ - ள்.) குழவி ஞாயிறு குன்று இவர்ந்து அனையன - இளஞ்சூரியன் (உதய)கிரியின்மேல் ஏறியிருந்தாற் போன்றனவான, குரு மணி நெடு மோலி- பெரிய இரத்தினங்கள் பதித்த நீண்ட கிரீடங்கள், இழைகளோடு நின்று - (நெற்றிப்பட்டம் முதலிய மற்றை) ஆபரணங்களுடனே நின்று, இள வெயில் எறித்திட - இளவெயில்போன்ற செந்நிறவொளியை வீசவும்,—இரவு எனும் பொருள் வீய - (அதனால்) இராத்திரியென்கிற பதார்த்தம் அழிந்தொழியவும்,— முழை கொள் மேருவின் பொருட்டிடை - குகையைக்கொண்ட மேருமலையி னிடையே, முன் கனகனை முருக்கிய முரண் சீயம் - முன்பு இரணியனைக் கொன்ற வலிமையையுடைய நரசிங்கமூர்த்தி, தழை கொள் தோளொடு தலை பல பரப்பி - வளர்ச்சிகொண்ட பலதோள்களையும் பலதலைகளையும் பரப்பிக் கொண்டு, துயில்வது - தூங்குவதுபோன்ற, ஓர் தகையானை - ஒரு தகுதியை யுடையவனுமான இராவணனை,—(எ - று.)—'அநுமான்நோக்கினன்' எனக் கீழ்ச்செய்யுளோடு ஒரு தொடராக முடிக்க.

முன்னிரண்டடிகளில், இராவணனது கரிய பெரிய வடிவுக்கு - உதயகிரி யும், அவனது பத்துத்தலைகளுள் ஒவ்வொன்றன்மீதும் அணியப்பட்டுள்ள கிரீடத்துக்கு - அவ்வுதயகிரியின் சிகரத்திலேறி விளங்குகின்ற சூரியனும், அக் கிரீடம் வீசுகின்ற செந்நிறவொளிக்கு - அவ்விளஞ்சூரியனது ஒளியும் உவ மையெனக் காண்க. பின்னிரண்டடிகளில், பொன்மயமான பெரியமாளிகையி னிடையே ஓரிடத்தில் ராக்ஷஸராஜனை இராவணன் பத்துத்தலைகளையும் இருபதுகைகளையும் பரப்பிக்கொண்டு தூங்குதல் பொன்மயமான மேருமலை யின் குகையிலே விசுவரூபநரசிங்கமூர்த்தி பலதோள்களோடும் பலதலைகளோ டும் பள்ளிகொண்டிருந்தாற் போலுமென உவமைவகுத்தனர். இரணியன் மேருமலையில் அரசுவீற்றிருந்தனனென்பது, யுத்தகாண்டத்து இரணியன் வதைப்படலத்தில் "மேருமால்வரையுச்சிமே லரசுவீற்றிருக்கும்" என்பதனால் விளங்கும். ஆகவே, அவனதுவாயில்தூணினின்று வெளிப்பட்ட நரசிங்க மும் மேருமலையின்கண்ணதாயிற்று. முன்முருக்கிய என இயைக்கப்பட்டது. முன்துயில்வது என்றே இயைத்துப் பொருள்கொள்ளவுமாம்; அவ்விடத்தை அவன் தட்டியமாத்திரத்தில் அங்குநின்று எழுந்த நரசிங்கமானது, முன்னமே அம்மலையின் உள்ளிடமொன்றில் தூங்கிக்கொண்டிருந்தது இவனால் தட்டி யெழுப்பப்பட்டவாறுபோலத் தோன்றுத லுணர்க. அச்சிங்கம் இரணியனை அவன்பரிவாரமாய்நின்ற மிகப்பலஅசுரர்களையுங் கொல்லுதற்பொருட்டு விசுவ ரூபமாகத் தோன்றியபோது அநேகந் தலைகளையும் தோள்களையு முடையதா யிருந்தமை, நூல்களால் விளங்கும்.

குழவிஞாயிறு - பாலசூரியன். குழவி - இளமையையுடையது. குரு - நிறமுமாம். குருமணி - முழுமாணிக்கமுமாம்; சிவகசிந்தாமணியில் "ஆருதே

யிருள்பருகு மருமணி" என்றவிடத்து நச்சினார்க்கினியர் 'உதயகிரியிற் சிந் தூரவருவிவீழ்ந்த சிந்தூராகரத்திற் பிறந்து பதினாறுசதுர்யுகம் சிவப்பேறின முழுமாணிக்கம் இருளைக்கெடுத்தலின்' என்றது, இங்கு நோக்கத்தக்கது. மோலி - மௌலி யென்ற வடசொல்லின் விகாரம்; தலையின்பெயர், கிரீடத் துக்கு இலக்கணை: 'முடி' என்றது போல. இருள் இருந்தவிடந்தெரியாதபடி முழுவதும்அழிய வென்பது, 'இரவெனும் பொருள் வீய' என்றதன் கருத்து. பொருட்டு - மலை. மேருவின் பொருட்டு - மேருவாகிய மலை யென இருபெய ரொட்டு. 'மேருவென்பொருட்டு' என்ற பாடத்துக்கு - மேருவென்கிற மலை யென்று பொருள். இனி, பொகுட்டு - தாமரைக்கொட்டை யெனினுமாம். திருமாலின் திருநாபித்தாமரைமலர்க்கு மேருகிரி கொட்டையெனப்படுதலை, "புறக்குன்றுபுல்லிதழ் முந்நீர்பிரசம் பொருவில்செம்பொன், னிறக்குன்றுகன் னிகை யெண்கிரிதாது நிலமதனுட், பிறக்குந்துகள் முதுமாசுணநாளம் பிரமன் வண்டு, சிறக்குந்திகிரியரங்கேச ருந்திச்செழுமலர்க்கே" என்ற திருவரங் கத்துமாலையினாலும் உணர்க. பொன்னிறமுள்ளவனாயிருத்தல்பற்றி, ஹிரண்ய னென்று பெயர். ஹிரண்யம், கனகம் என்பன பொன்னின் பரியாயநாமங்களா தலால், இரணியனை 'கனகன்' என்றார். தழை - முதனிலைத்தொழிற்பெயர். 'பல' என்பதைத் தோளோடுங் கூட்டுக. முன் - முன்னிட்டுத்தெனினுமாம். தகை - பெருமை, மேன்மை; தன்மை யெனினுமாம். பலபராக்கிரமங்களிற் சிறந்த ஆண்மகனான இராவணனுக்கு நரசிங்கத்தை உவமைகூறினர். 'மேரு வின் முகட்டிடை' என்பதும் பாடம். (உ௦எ)

உ௦அ. ஆயபொற்றலத்தாய்வளையரம்பையராயிரரணிநின்று
தூயபொற்கவரித்திரளியக்கிடச்சுழிபடுபசுங்காற்றின்
வீயகற்பகத்தேன்றுளிவிராயனவீழ்தொறுநெடுமேனி
தீயநற்றொடிச்சீதையைநினைதொறுமுயிர்த்துயிர்தேய்வானை.

(இ - ள்.) பொன் ஆய தலத்து - பொன்மயமான உலகத்தில் [சுவர்க்க லோகத்தில்] வசிக்கின்ற, ஆய் வளை அரம்பையர் - தேர்ந்தெடுத்தணிந்த வளை யல்களையுடைய தேவமாதர்கள், ஆயிரர் - ஆயிரக்கணக்கானவர்கள், அணி நின்று - வரிசையாய் (இருபுறத்தும்) நின்று, தூய பொன் கவரி திரள் இயக்கிட - வெண்ணிறமானவையும் பொற்காம்பிட்டவையுமான சாமரைக்கற்றை களைச் சுழற்றிவீசுவதனால், சுழி படு - சுழற்சிபொருந்தவுண்டான, பசுங்காற் றின் - இளங்காற்றினால், கற்பகம் வீய தேன் துளி விராயன (வீழ்தொறும் - கற்பகமலர்களினிடத்து உள்ள தேனின் துளிகள் பல கலந்து (தனது உடம்பின்மேல்) விழும்போதெல்லாம், நெடு மேனி தீய - பெரிய (தனது) உட ம்பு வெதும்ப,—நல் தொடி சீதையை நினைதொறும் - சிறந்ததொடியென்னும் வளையலை யணிந்த சீதையை நினைக்கும்போதெல்லாம், உயிர்த்து - பெரு மூச்சுவிட்டு, உயிர்தேய்வானை - உயிரின் வலிமை தளர்பவனுமான இராவ ணனை,—(எ - று.)—'அநுமான் நோக்கினன்' எனக் கீழ் உ௦௬ - ஆஞ் செய்யு ளோடு இயைத்து முடிக்க.

காதல்நோய்கொண்டார்க்குக் குளிர்ந்தகாற்றும் மலர்களும் பனிநீரும் பகையாம்; ஆகவே, அப்ஸரஸ்திரீகள்பலர் ஒழுங்குபடநின்று சாமரங்களைச் சுழற்றி வீசுவதனாலாகிய சுழற்சிபொருந்திய இளங்காற்றினால் அருகிலிருக்கின்ற கற்பகவிருக்ஷத்து மலர்களிலுள்ள தேனினது துளிகள் பனிநீர்தெளித்தாற்போல இவனுடம்பின்மீது விழுந்தோறும் இவனுடம்பு தாபம்மிக்கதென்க. மன்மதாவஸ்தைகளுட் சுப்பிரயோகத்தின்பாற்பட்ட நினைப்பும், விப்பிரயோகமாகிய வெய்துயிர்த்திரங்கலும், சோகத்தின் பாற்பட்ட வெதுப்பும் இராவணனிடத்து நிகழ்தல் இங்கு எடுத்துக்கூறப்பட்டது.

பொன்மயமான இலங்காபுரியையும், அதிலுள்ள இராவணன்மாளிகையையும் 'ஆயபொற்றலத்து' என்று குறித்ததாகவுங் கொள்ளலாம். 'அணிநின்று' என்றது - அழகிதாய்நின்று என்றும், அணிமையாய் [சமீபத்தில் நெருங்கி] நின்று என்றும் பொருள்படும். பசுங் காற்று - மந்த மாருதம்; பசுமை - குளிர்ச்சியுமாம். தீயத் தேய்வானை யென இயையும். (உ0அ)

உ0௯. குழந்தைவெண்மதிக்குடுமியனெடுவரை குலுக்கியகுலத்தோளைக்
கழிந்துபுக்கிடைகரந்தனவனங்கன்வெங்கடுங்கணைபலபாய
வழுந்தவெஞ்சமத்துயர்திசையானையினொளிமருப்புற்றிற்ற
பழந்தழும்பினுக்கிடையிடையேசிலபசும்புண்களசும்பூற.

(இ - ள்.) அனங்கன் வெம் கடுங் கணை பல - மன்மதனது மிகக்கொடிய பலஅம்புகள், குழந்தை வெள் மதி குடுமியன் நெடு வரை குலுக்கிய குலம் தோளை - வெண்மையான இளஞ்சந்திரனை முடியிற்கொண்டவனாகிய சிவபிரானது இருப்பிடமான பெரியகைலாசகிரியை அசைத்துப் பெயர்த்தெடுத்த சிறந்த தனதுதோள்களை, இடை கரந்தன கழிந்து புக்கு பாய - நடுவில் தாம் சிறிதுபொழுது மறைந்தவையாய் ஊடுருவிச்சென்று பாய்தலால்,—உழந்த வெம் சமத்து உயர் திசை யானையின் ஒளி மருப்பு உற்று இற்ற பழந்தழும்பினுக்கு இடை இடையே - (முன்பு) வருந்திச்செய்த கொடியபோரிலே உயர்ந்ததிக்கஜங்களின் ஒளியுள்ள தந்தங்கள் பட்டு ஒடிந்ததனாலாகிய பழையவடுக்களுக்கு இடையிடையே, சில பசும் புண்கள் அசும்பு ஊற - சில புதிய புண்களுண்டாகிப் புலால்நீர்சுரந்து வடிந்துகொண்டிருக்கவும்,—(எ - று.)—'நெஞ்சுபாழ்பட்டானை' என அடுத்தகவியோடு இயைக்கலாம். '(அப்புண்களில்) தேன் துளி விராயனவீழ்தொறும் நெடுமேனிதீய' என முந்தினகவியோடு இயைத்தலும் ஒன்று; சில ஏட்டுப்பிரதிகளில் இச்செய்யுளும் இதற்குமுந்தினசெய்யுளும் முன்பின்னாக மாறியிருக்கக் காணலாம். அன்றி, கீழ் உ0௬ - ஆங் கவியிற் போந்த 'துயில்வானை நோக்கினன்' என்றதனோடு இயைத்து முடிப்பினும் அமையும்.

இராவணன் திக்விஜயஞ்செய்கின்றகாலத்தில் ஐராவதம்முதலிய திக்கஜங்களை யெதிர்த்தபொழுது, அவை கோபங்கொண்டு இவன்தோள்களில் தந்தங்களால் தாக்குகையில், மிக்கவலிமையையுடைய இவன்தோள்களை முழுவதும் ஊறுபடுத்தமாட்டாமற் சிறிதுஊறுபடுத்திய மாத்திரத்தில் அவைதாம்

துணியொடிந்திட்டன வென்க. தழும்பு - புண் ஆறிய வடு. அங்ஙனம் இக்கஜங்களினால் தமது கூரியதந்தங்கள்கொண்டு நன்றாகவூறுபடுத்தமாட்டாமற் போன இராவணன்தோள்களை மன்மதபாணங்கள் தைத்துத் துளைத்து முழுவதும்ஊடுருவிச்சென்றன வென்றதில், அனைத்துயிரையும் வெல்லவல்ல மன்மதனது மலராம்புகளின் ஆற்றலும், பேராற்றலையுடைய இராவணன் வலியழிந்துமிகவுங்காமவசப்பட்டன னென்பதும் தோன்றும். பழையபுண்களின் வடுக்களை 'பழந்தழும்பு' என்றும், அங்ஙனம் காழ்ப்பேறிய தழும்புகளின் இடையிடையே இப்பொழுது காமபாணங்கள்பாய்தலாற் புதியனவாயுண்டான பச்சைப்புண்களில் ஊனீர்சுரந்துவடிதலை 'பழந்தழும்பினுக் கிடையிடையே சிலபசும்புண்களசும்பூற' என்றும் கூறினர்.

குழந்தை யென்ற சொல் - இளமையுடையதென்று பொருள்படும்; குழ - இளமை, உரிச்சொல்: பகுதி; தை - பெயர்விகுதி. கழிந்துபுகுதல் - முழுவதுந் துளைத்து அப்பாற்செல்லுதல். அங்ஙனம் அம்புகள் ஊடுருவும்போது இடையே சிறிதுபொழுதுமறைதலை 'இடைகரந்தன' என்று கூறினர். சிவபிரான் யோகஞ்செய்துகொண்டிருக்கையில் அவன்மீது மலராம்புகளையெய்து அவனது தவத்தைக் கெடுக்கமுயன்று, அதுபற்றி அப்பெருமான் சினந்து விழித்த நெற்றிக்கண்ணின் நெருப்புக்கு இலக்காகி, உடம்புஎரிந்து சாம்பலாயொழியப்பெற்றமைபற்றி, மன்மதனுக்கு 'அநங்கன்' என்று பெயர்; வடசொல்: அங்கமில்லாதவன்; ந + அங்க = அநங்க: வடமொழிச்சந்தி ந - எதிர்மறைகுறிப்பது, அங்கம் - உடம்பு. வெம், கடு - ஒருபொருட்பன்மொழி. 'அனங்கவேள்கடுங்கணை' என்றும் பாடமுண்டு உழத்தல் - சிரமப்பட்டுச் செய்தல். சமம் - ஸமரமென்ற வடசொல்லின் விகாரம். 'இடைகலந்தன' என்பதும் பாடம். (௨௦௧)

௨௧௦. சாந்தளாவியகலவைமேற்றவழ்வுறுதண்டமிழ்ப்பசுந்தென்ற
லேந்துகாமவெங்கனலினுக்குமிழ்திட்டுருத்தியினுயிர்ப்பேறக்
காந்தண்மெல்விரற்சனகிமேன்மனமுதற்கரணங்கள்கடிதோடப்
பாந்தணீங்கியமுழையெனக்குழைவுறுநெஞ்சுபாழ்பட்டானை.

(இ - ள்.) கலவை அளாவிய சாந்து மேல் - (தனதுஉடம்பிற்பூசிய) பலவகை வாசனைப்பொருள்கள் கலக்கப்பெற்றதான சந்தனத்தின்மேல், தவழ்வுறு - மெதுவாக வீசுகின்ற, தண் தமிழ் பசுந் தென்றல் - குளிர்ந்த இனிய இளமையான தென்றற்காற்றானது, ஏந்து காமம் வெம் கனலினுக்கு உமிழ் - (அவ்விராவணன்) கொண்டுள்ள வெவ்வியகாமாக்கினி வளர்தற்பொருட்டு வீசுகின்ற, அதன் துருத்தியின் உயிர்ப்பு - தோல்துருத்தியினாலாகுங் காற்றாக, ஏற - மேன்மேற்செல்ல,—காந்தள் மெல் விரல் சனகிமேல் - செங்காந்தள் மலரினிதழ்போன்ற மென்மையான விரல்களையுடைய சீதையினிடத்திலே, மனம் முதல் கரணங்கள் கடிது ஓட - மனம் முதலிய அந்தக்கரணங்கள் விரைவாகச்சென்றுவிட அதனால், பாந்தள் நீங்கிய முழை என - பாம்புகள் நீங்கிப்போகப்பெற்ற புற்றுப்போல, குழைவு உறு நெஞ்சு பாழ்பட்டானை - நெகிழ்ச்சிபெற்ற உள்ளம் பாழாயிருக்கின்றவனுமான இராவணனை,—

(எ - று.)—'நோக்கினன்' எனக் கீழ் (௨௦௬) ஆங் கவியோடு முடிக்க. 'உயிர்ப் பேற' என்றதை 'பாழ்பட்டானை' என்றதனோடு இயைக்கலாம்; அன்றி, (௨௦௬) 'துயில்வானை நோக்கினன்' என்றதனோடு இயைத்துமுடித்தலுமாம்.

இராவணன் சீதையினிடத்துக்கொண்ட காமத்தால் தவிக்கின்றபொழுது அவனது உடலின் தாபம் தணிதற்பொருட்டு அவனது பரிஜநங்களிற் சிலர் அவனுடம்புமுழுவதுங் கலவைச்சந்தனக்குழம்பைப் பூசுவாராயினர்; அத்தாபந்தணித்தற்பொருட்டாகவே அவன்குறிப்பின்படி குளிர்ந்ததென்றற்காற்றும் அக்கலவைச்சந்தனத்தின்மேல் வீசுவதாயிற்று; அத்தென்றல் அவனது தாபத்தைத் தணிக்கமாட்டாமல் அதனை மேன்மேல் வளர்த்தலால், அத்தென்றற்காற்றை, காமமாகிய அக்கினி வளர்ந்தெரியுமாறு வீசுந் தோல்துருத்திக்காற்றாகக் குறித்தார்; தற்குறிப்பேற்றவணி. இராவணனது மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக்கரணங்கள் நான்கும் சீதையின்மேல் மிக விரைந்து சென்றுவிட்டமைபற்றி, அவனது இருதயஸ்தானம் பாழாய் விட்டது; அதற்கு, பாம்பு நீங்கிய புற்றை உவமை கூறினர். கொடுமையும் வக்கிரகதியிற் செல்லுதலும் பற்றி, இராவணனது அகத்துறுப்புக்கட்குப் பாம்பை உவமைகூறுதல் ஏற்கும். உள்ளுறுப்பாதலாற் குகையெனப்படுதல் பற்றி, நெஞ்சத்தை 'முழை' என்றல் பொருந்தும். புறத்துறுப்பாகிய உடலைச் சுட்டு உடனே ஆறிவிடுவதான நெருப்பினும் உள்ளத்தையெரித்து எளிதில் ஆறுததான இக்காமக்கனலுக்கு உள்ள கொடுமை தோன்ற 'காமவெங்கனல்' என்றும், உயர்குலத்திற் பிறந்தவளும் இராமபிரானது தருமபத்தினியும் பதிவிரதாசிரோமணியுமான சீதை தனக்குக்கிடைக்கமாட்டாளென்பதைப்பற்றிய ஆலோசனை சிறிதுமில்லாமலே இவனது அந்தக்கரணங்கள் ஒன்றன்மேலொன்றாய் அவளிடஞ்சென்ற பேதைமை விளங்க 'சனகிமேல் மனமுதற் கரணங்கள் கடிதோட' என்றும் கூறினர்.

'சாந்தளாவிய கலவைமேல்' என்பது, கலவையளாவிய சாந்துமேல் என அந்வயிக்கப்பட்டது; மொழிமாற்றுப்பொருள்கோள். கலவை - கூட்டுவர்க்கங்கள் கலந்த சந்தனம். 'தண்டமிழ்ப்பசுந்தென்றல்' என்ற தொடர் - குளிர்ச்சியான தமிழ்ப்பாஷைபோ லினிய தென்றலென்றும் பொருள்படும்; எல்லாப் பாஷைகளினும் தான் இனியதாதலால் 'தமிழ்' எனப் பெயர் பெற்ற அப்பாஷை, தென்றலுக்கு இனிமையில் உவமையாக அமையும். இனி, குளிர்ச்சியான தமிழ்ப்பாஷையோடு பிறந்துவருகிற இளந்தென்றலென்று உரைப்பாருமுளர்; தென்றலுக்குத் தென்மொழி உவமை. கைவிரலுக்குக் காந்தளரும்பும் உவமையாம்; "காந்தண்முகிழ்விரற் சீதைக்காகி" என்றார் பெரியாரும். (௨௧௦)

## வேறு.

௨௧௧. கொண்டபேருக்கமுளத்திசைதொறுங்குறித்துமேனுண்
மண்டியசெருவின்வீரத்தோள்களால்வாரிவாரி
யுண்டதுதெவிட்டிப்பேழ்வாய்க்கடைகடோறுமுழுகிப்பாயு
மண்டர்தம்புகழிற்றோன்றும்வெள்ளெயிற்றமைதியானை.

(இ - ள்.) கொண்ட பேர் ஊக்கம் மூள - தான் இயல்பாகக் கொண்டுள்ள பெரிய உற்சாகம் நாளடைவில் மேன்மேலதிகப்பட அதனால், திசைதொறும் குறித்து - எல்லாத்திக்குகளிலும் (உள்ள வீரர்களனைவரையும் தான் வெல்வதாக) எண்ணி, மேல்நாள் - முன்காலத்தில், மண்டிய - வலியச்சென்று உக்கிரமாகச்செய்த, செருவின்-போரில், வீரம் தோள்களால் வாரி வாரி - போர்த்திறமமைந்த (தனது) கைகளால் அள்ளியள்ளி யெடுத்து, உண்டது - (தனது வாய்களிற்பெய்து) உண்ணப்பட்டதாய், தெவிட்டி போய் வாய் கடைகள்தோறு ஒழுகி பாயும் - அளவிற்குமிஞ்சியமைபற்றித் திறந்த (தனது) வாய்களின் இரண்டு ஓரங்களிலும் பெருகி வழிகின்ற, அண்டர்தம் புகழின் - தேவர்களுடைய கீர்த்திபோல, தோன்றும் - விளங்குகின்ற, வெள் எயிறு அமைதியானை - வெண்ணிறமான கோரதந்தங்களின் தோற்றத்தை யுடையவனுமான இராவணனை,—(எ - று.)—(உ0௯ 'நோக்கினன்' என இயைக.

இராவணனுடைய பத்துமுகங்களிலுமுள்ள வாய்கள் பத்தில் ஒவ்வொன்றன் கோடியிரண்டிலும் வெளிப்பட்டு வளைந்து வெண்ணிறமாய் விளங்குங் கோரப்பற்கள், இங்கு வருணிக்கப்படுகின்றன. இயல்பிலேயே மகா தைரியசாலியான இராவணன் நாளடைவிற்பெற்ற வரபலம் முதலியன காரணமாக மேன்மேல் வளர்ந்த உள்ளக்கிளர்ச்சியால் திக்விஜயஞ்செய்வதாகத் தொடங்கிப் புறப்பட்டுப் பலவிடங்களிலுஞ்சென்று ஆங்காங்கு உள்ளாரை வலிய எதிர்த்துப் புஜபலங்கொண்டு பொருதுவென்று அஷ்டதிக்பாலகர் முதலிய தேவர்களுடைய வெண்ணிறமான கீர்த்தியைக் கைகளால் திரட்டியெடுத்து வாயினுட்பெய்து உண்ணும்போது அவ்வாய் கொள்ளாது நிறைந்து இருபுறத்தும் வழிந்த அக்கீர்த்திகள் போன்றன அக்கடைவாய்ப்பற்களென்று கற்பனைகூறினர்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பத்துத் திசைகளுக்கும் உரியவர்களான தேவர்களின் கீர்த்திகளை இருபது கைகளாலும் வாரியெடுத்துப் பத்து வாய்களிலும்பெய்து உட்கொள்ளும்போது ஒவ்வொருவாயினிருபுறத்தும ஒழுகி வழிந்த அக்கீர்த்திகள் போன்றன ஒவ்வொரு வாய்க்கும் இவ்விரண்டு வீதமாக அமைந்துள்ள இருபது பற்களுமெனக் கற்பனையின் நயங் காண்க. கீர்த்தியை வெண்ணிறமுடையதென்று கூறுங் கவிமரபும், ஒருவனது புகழை மற்றொருவன் வென்றொழித்தனனென்ற பொருளில் அதனை அவன் வாயிற்போட்டுக்கொண்டனனென்று கூறும் உலகவழக்கும் இவ்வருணனைக்கு மூலம். இராவணன் இங்ஙனம் வலிய வெற்றி கொண்டதனாலும் முழுவதும் அடங்கிவிடாது சிறிது சிறிது எஞ்சியுள்ளது தலைமைத் தேவர்களின் கீர்த்தியென்பது இதில் தொனிக்குமாறு காண்க. தோள்வலிமையாற் புகழைக் களைந்துகொண்டமை, கைகளால் வாரியுண்டதெனப்பட்டது.

ஊக்கமாவது மனம் மெலிதலின்றி வினைசெய்தலிற் கிளர்தல்: மனவெழுச்சி; இச்சொற்கு - முயற்சி, வலிமை என்ற பொருள்களும் உண்டு. மண்டுதல் - மேல்விழுதல், நெருங்குதல், மிகுதல் 'வீரத்தோள்' என்றது - அவயவியின் பண்பை அவயவத்தின்மேல் ஏற்றிக் கூறிய உபசாரவழக்கு. தோள் - கை; சிந்தாமணியில் "தோளுற் றொர்தெய்வந் துணையாய்" என்றவிடத்திற் போல.

இதுமுதல் ஐந்து கவிகள் - இக்காண்டத்தின் முதற்கவிபோன்ற அறுசீ ராசிரியவிருத்தங்கள். (உகக)

உகஉ. வெள்ளிவெண்சேக்கைவெந்துபொறியெழுவெதும்புமேனி
புள்ளிவெண்மொக்குளென்னப்பொடித்துவேர்கொதித்துப்பொ
கள்ளவிழ்மாலைத்தும்பிவண்டொடுங்கரிந்துசாம்ப [ங்கக்
வொள்ளிணர்மாலைதீயவுயிர்க்கின்றவுயிர்ப்பினானை.

(இ - ள்.) வெள்ளி வெள் சேக்கை - வெள்ளிபோல வெண்ணிறமாயுள்ள மலர்ப்படுக்கை, வெந்து—, பொறி எழ - தீப்பொறி கிளம்பும்படியாகவும், —வெதும்பு மேனி - தாபங்கொண்ட (தனது) உடம்பிலே, புள்ளி வெள் மொக்குள் என்ன - புள்ளிபுள்ளியாயெழுகிற வெண்ணிறமான கொப்புளம்போல, வேர் பொடித்து - வேர்வைநீரரும்பி, கொதித்து பொங்க - கொதிப்புக்கொண்டு பொங்கும்படியாகவும்,— கள் அவிழ் மாலை - தேன் சொரிகின்ற (தான் அணிந்த) மலர்மாலைகளில் மொய்க்கின்ற, தும்பி வண்டொடும் - தும்பிகளும் வண்டுக ளும், கரிந்து சாம்ப - கருகியழியும்படியாகவும்,— ஒள் இணர் மாலை - ஒளிய மைந்த பூங்கொத்துகளினாலாகிய தனது மாலைகள், தீய - தீந்துபோம்படியாக வும், உயிர்க்கின்ற - வெளிவிடுகின்ற, உயிர்ப்பினானை - பெருமூச்சையுடையவ னுமான இராவணனை,—(எ - று.)— உ௰௬) 'நோக்கினான்' என இயைக்க.

இராவணன் சீதையின் விஷயமாகக் கொண்ட காதல்நோயினால் வெய் துயிர்த்தல் இங்குக் கூறப்பட்டது. அவனது அப்பொழுதைய சுவாசத்தின் வெப்பமிகுதியாலாகும் நிகழ்ச்சிகளே, 'வெள்ளி வெண்சேக்கை வெந்துபொறி யெழுதல் முதலியன. வெள்ளிவெண்சேக்கை மல்லிகைமலர் முல்லை மலர் முதலிய வெண்ணிறமலர்களாலாகிய புஷ்பசயனமென்க; அடுத்த செய்யு ளில் "பூவியலமளிமேலா" என்பது காண்க. சேக்கை பொறியெழ - இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றது; உபசார வழக்கு. மொக் குள் - அரும்பு: வடிவில் ஒப்புமைபற்றி, கொப்புளத்தை யுணர்த்திற்று; உவமையாகுபெயர். 'மொக்குளென்ன' என்பதற்கு - நீர்க்குமிழிகள்போல என்று உரைப்பாருமுளர். பொறியெழ, பொங்க, சாம்ப, தீய இந்நான்கிற் கும் 'உயிர்க்கின்ற' என்பது - முடிக்குஞ்சொல். 'பொறியெழ' என்பதை 'வெதும்பு' என்பதனோடு இயைத்து உரைக்கவும் இடமுண்டு. தும்பி - வண் டின் சாதிபேதம். (உகஉ)

உக௩. தேவியனேமியானிற்சிந்தைமெய்த்திருவினேகப்
பூவியலமளிமேலாப்பொய்யுறக்குறங்குவானைக்
காவியங்கண்ணிதன்பாற்கண்ணியகாதனீரி
ஞவியையுயிர்ப்பென்றேதுமம்மியிட்டரைக்கின்றானை.

(இ - ள்.) தே இயல் நேமியானின் - தெய்வத்தன்மை பொருந்திய சக்கராயுதத்தையுடையவனான திருமால்போல,—சிந்தை மெய் திருவின் ஏக - தன்மனம் உண்மையான பிராட்டியினிடத்தே செல்ல, பூ இயல் அமளிமேல் ஆ-மலர்களாலமைக்கப்பட்ட படுக்கையின்மேலே [மலர்களின் தன்மையாகிய மென்மையமைந்த படுக்கையின்மேலே], பொய் உறக்கு உறங்குவானை-பொய்

யான தூக்கந் தூங்குகின்றவனும்,—காவி அம் கண்ணிதன்பால் கண்ணிய காதல் நீரின் - நீலோற்பலமலர்போன்ற அழகிய கண்களையுடையவளான சீதாபிராட்டியின் விஷயமாகக் கொண்ட ஆசையாகிய நீரினுதவியைக்கொண்டு, ஆவியை - தனது உயிரை, உயிர்ப்பு என்று ஓதும் அம்மி இட்டு அரைக்கின்றானை-பெருமூச்சென்று சொல்லப்படுகின்ற அம்மியிலே வைத்து அரைக்கின்றவனுமான இராவணனை,—(எ - று.)—(௨௦௬) 'நோக்கினன்'[1] என இயைக்க.

மெய்த் திரு - ஸாக்ஷாத் பிராட்டி யென்றபடி. "பித்தர் பனிமலர்மேற் பாவைக்கு" என்று பெரியார் பணிக்கும்படி தனது பட்டமகிஷியான திருமகளினிடத்து மிக்க ஆசைமயக்கங் கொண்டவனாய் அதனால் 'திருமால்' என்று திருநாமம்பெற்ற ஸ்ரீமந்நாராயணன் அப்பெரியபிராட்டியாரிடத்தே எப்பொழுதும் மனத்தைச் செலுத்துதலும், 'வாதாசநன்' என்னும்படி காற்றை உணவாகக் கொள்ளுமியல்பினனாதலாற் காற்றடைத்த மேத்தைபோல மெத்தென்றிருக்கிற ஆதிசேஷனாகிய சயனத்திலே அப்பெருமான் பள்ளிகொண்டு "உறங்குவான்போல் யோகுசெய்த பெருமானை" என்றபடி தூங்குகின்றவன் போல லோகரக்ஷண சிந்தைசெய்துகொண்டிருத்தலும் பிரசித்தம். அத்தூக்கம் - பொய்யுறக்கம், யோகநித்திரை, அறிதுயில், துயிலாத்துயில் எனப்படும். ஸாக்ஷாத் பிராட்டியின் திருவவதாரமான சீதையினிடத்தே எப்பொழுதும் மனத்தைச் செலுத்திக்கொண்டு அச்சிந்தையினால் தூக்கங்கொள்ளாமற் புஷ்பசயநத்திலே தூங்குவான்போலக் கண்மூடியுள்ளவனான இராவணனுக்கு அத்திருமாலை உவமை கூறினர். இங்கு உவமையணிக்கு 'பூவியலமளி' என்றவிடத்துச் சிலேடை உதவியாய் நின்றது.

சீதாதேவியை அக்கிரமமாகக் காதலித்த பெரும்பாவியான இராவணனுக்குத் திருமகள்கொழுநனான திருமாலைஉவமை கூறுதல் ஏற்குமோ வெனின்,— "மிகுதலுங் குறைதலுந் தாழ்தலு முயர்தலும், பான்மாறுபடுதலும் பாகுபாடுடைய" என்று அணிநூலார் அமைத்துள்ளாராதலின், இழிந்த பொருளுக்கு உயர்ந்த பொருளை உவமை கூறுதலும் ஒரோவிடத்திற் பொருந்துமென்க. அன்றியும், உபமேயத்தினும் உபமானம் நூறுமடங்கு சிறந்திருத்தல் வேண்டுமென்பது அலங்காரநூலார் துணிபாதலால், உபமானம் உயர்ந்து உபமேயம் தாழ்ந்து வருவதே பொருளைச் சிறப்பிக்கும்; இங்கு இராவணனது சிறப்பை யெடுத்துக் கூறு மிடமாதலின், அதற்கு ஏற்ப, திருமாலை உவமைகூறி அவனைச் சிறப்பித்தனர். மற்றும், அந்தணர்க்குப் பிரமனையும், அரசர்க்குத் திருமாலையும், வணிகர்க்குக் குபேரனையும் உவமை கூறுதல் கவிமரபாதல் பற்றியும், மூவுலகத்தையும் ஆள்கின்ற இராக்கதராசனான இராவணனுக்குத் திரிலோகாதிபதியும் காத்தற்றொழிற்கடவுளும் தேவாதிதேவனுமான திருமாலை உவமை கூறுதல் தகும். அல்லதூஉம், உவமையென்பது ஒருபுடையொத்து மற்றைப்புடை யொவ்வாதொழிவதே யாதலின், சில பொதுத்தன்மைகளைக் கொண்டு எப்பொருளுக்கும் எப்பொருளையும் உவமை கூறலாம். இவைநிற்க; "கற்பா ரிராமபிரானையல்லால் மற்றுங்கற்பரோ" என்று ஆழ்வார் அருளிச்செய்தபடி பகவத்குணானுபவத்தையே பொழுதுபோக்காகக்கொண்டு ராமகதாமிருதத்தைக் கூறிவந்த ராமபக்த சிகாமணியான கம்பநாடர், இப்படல்முழுவ

திலும் அக்குணவர்ணனத்துக்குச் சிறிதும் இடமின்றி ராக்ஷஸ ராஜதானி வர்ணனையே கூறும்படி நேர்ந்ததற்கு இரங்கி அவ்வாற்றாமை ஒருவாறுதீர ராமதூதனை அநுமானுக்குச் சிறந்த அடைமொழிகளையும் திருமாலுவமையையும் ஆங்காங்குக் கொடுத்துவந்து, அவ்வளவினால் திருப்தி பிறவாமல் இராவணனுக்கும் திருமாலை உவமையெடுத்துக் கூறலாயின னென்றலும் சாலும்.

'நேமியானின்' என்பதற்கு - சக்கரபாணியான திருமாலின் அவதாரமாகிய இராமபிரான் போல வென்று பொருள்கொள்ளுதலு மொன்று; பிராட்டியைப் பிரிந்துள்ளவனை அப்பெருமான் எப்பொழுதும் அத்தேவியார் பக்கல் சென்றமனத்தனாய்த் தூக்கம்பிடியாமல் உறங்குவான்போலக் கண்மூடிப் பள்ளிகொண்டிருத்தல் காண்க. அப்பொழுது 'பூ இயல் அமளிமேலா' என்பதற்கு - வெறுந்தரையாகிய பொருந்திய படுக்கையின்மேலே யென்று பொருள். பூ - வடசொல்; பூமி. காப்பியங்களிற் கதாநாயகனைப் பிறர்க்கு உவமைகூறுதல், ஒருசார் கவிமரபு. 'தேவியல்' என்றது, நேமியானுக்கு அடைமொழி; தலைமைத்தேவனாக அமைந்தவென்பது பொருள்; தே - தெய்வம். சீவகசிந்தாமணியில் "தேவாதிதேவன்" என்றவிடத்து நச்சினார்க்கினியர் 'தேவும் தெய்வத்துக்கு ஓர் பெயர்' என்றனர். இனி, நேமிக்கு அடைமொழியாகவுங் கொள்ளலாம். நித்தியாத்துமாக்களிலொருவனாயிருத்தலும் எம்பெருமானுக்கு ஆயுதகோடியில் நின்று அவன் கருதியபடியெல்லாம் சென்று அதிவிரைவிற் பகையழித்து மீளுதலும், ஆபரணகோடியில்நின்று அழகுசெய்தலும் முதலியன - திருவாழிக்குஉரிய தெய்வத்தன்மைகள். இனி, 'தேவியல் நேமியானின்' என்பதற்கு - 'தெய்வத்தன்மை பொருந்திய ஆஜ்ஞாசக்கரத்தையுடையவனான தசரதசக்கரவர்த்திபோல வென்று உரைப்பாரு முளர்; அவன் தனது மனம் மெய்த்திருவினிடத்து [உண்மையாகிய செல்வத்தைப் பாதுகாத்தலில்] செல்ல (முன்பு தான் கைகேயிக்கு வாக்களித்திருந்த வரங்களைத் தவறாது தருதற்குக் கட்டுப்பட்டவனாகிப்) பூவியலமளிமேல் வீழ்ந்து உறங்குவான்போல மூர்ச்சையடைந்தமை காண்க: ஆஜ்ஞாசக்கரத்துக்குத் தெய்வத்தன்மை - அரசன் ஓரிடத்தே உள்ளனாக அவனுறங்குகின்ற காலத்திலுமுட்பட எப்பொழுதுந் தான் உலகமுழுவதுஞ் சென்று உயிர்களைக் காத்தல்.

கண்ணிய - கண்ணுதல் - கருதுதல், குறித்தல். சிருங்காரரஸமென்பவாதலால், காதல் நீரெனத் தகும். 'அம்மி' என்றதில், உபலக்ஷணத்தாற் குழவியும் அடங்கிற்று. இராவணன் சீதையினிடத்துக் கொண்ட ஆசையினால் நெட்டுயிர்ப்பெறியுந்தோறும் உயிரின் வலிமை நெகிழ்தல்பற்றி, 'காவியங் கண்ணிதன்பாற் கண்ணிய காதல் நீரின் ஆவியையுயிர்ப்பென்றோதுமம்மியிட்டரைக்கின்றான்' என உருவகங் கூறினர். ஆவி - அரைக்கப்படுபொருள். நீர் பெய்து அரைத்தல், இயல்பு.　(௨௧௫)

௨௧௬. மிகுந்தகைநினைப்புமுற்றவுருவெளிப்பட்டவேலை
நகுந்தகைமுகத்தன் காதனடுக்குறுமெய்யன் வார்தே
னுகுந்தகைமொழியாண்முன்னமொருவகையுறையுளுள்ளே
புகுந்தனளன்றேயென்றுமயிர்புறம்பொடிக்கின்றானை.

(இ - ள்.) மிகும் தகை - மேன்மேல் வளருந் தன்மையையுடைய, நினைப்பு - (சீதையின் விஷயமான) சிந்தனை, முற்ற - மிகுதலால், உரு வெளிப்பட்ட வேலை - (அவளுடைய) வடிவம் தன் கண்ணெதிரிற் புலனானபொழுது, (அவ்வடிவத்தை உண்மையான சீதையென்று கருதி,) நகும் தகை முகத்தன் - சிரிக்கின்ற கம்பீரமான முகங்களையுடையவனும், காதல் நடுக்கு உறு மெய்யன் - ஆசையால் நடுக்கமடைகின்ற உடம்பையுடையவனுமாகி, 'வார் தேன் உகும் தகை மொழியாள் - மிகுதியான தேன் சிந்துகின்ற அழகிய சொற்களையுடையவளான சீதை, ஒருவகை - ஏதோ ஒருவகையால் (இணங்கி), உறையுளுள்ளே - (நான்) படுத்திருக்கின்ற அறையினுள்ளே, முன்னம் - (எனது) எதிரில், புகுந்தனள் அன்றே - வந்து சேர்ந்துவிட்டாளல்லவா?' என்று - என்று எண்ணி, புறம் மயிர் பொடிக்கின்றானை - தனது உடம்பின்மேலெல்லாம் மயிர் சிலிர்க்கப் பெறுகின்றவனுமான இராவணனை,—(எ - று.)—(௨0௬) 'நோக்கினன்' என இயைக்க.

மனத்தில் யாதொருபொருள் இடைவிடாது நினைக்கப்படுகின்றதோ அப்பொருள் அந்தப் பாவனையின் மிகுதியாற் கண்ணுக்கெதிரிற் காணப்பட்டாற்போலத் தோன்றுதல் இயல்பு. அது - உருவெளித்தோற்றமெனவும், உருவெளிப்பாடெனவும் கூறப்படும். இராவணன் எப்பொழுதும் இடைவிடாது சீதையையே நினைத்திருத்தலால், அவன் படுத்திருக்கும்போது அவளுருவம் அவனது கண்ணெதிரிற் புலனாயிற்று; அதனைக் காதல்மிகுதியுடையவனான அவன் பொய்த்தோற்றமென்று உணராது உண்மையான சீதையென்றே எண்ணி மகிழ்ச்சியாற் சிரிப்பையும் மயிர்சிலிர்ப்பையும், மோகத்தால் உடல் நடுக்கத்தையு முடையனாயினனென்க. சீதை தன்கருத்துக்கு இணங்குதற் பொருட்டுச் சாம தான பேத தண்டங்களாற் பலவகை முயற்சிசெய்து வந்தனனாதலால், அவற்றில் ஏதோ ஒருவகையினால் அவள் தன்னைச்சார்ந்தனளென்று மகிழ்வானாயினன். மயிர்சிலிர்த்தல், மகிழ்ச்சியினாலாகும் மெய்ப்பாடு. மிகுந் தகை நினைப்பு - வரம்புகடந்த தன்மையையுடைய எண்ணமென்றும், நகுந் தகை முகத்தன் - மலர்ந்த தன்மையுள்ள முகங்களை யுடையவனென்றும் கொள்ளலாம்.

முன்னம் - இடமுன். உறையுள் - இருப்பிடத்துக்குத் தொழிலாகுபெயர்; உள் - தொழிற்பெயர்விகுதி: உறை உள் எனப்பிரித்து, வினைத்தொகைநிலைத்தொடராகக் கொள்ளலுமாம். 'முன்னம்' என்றவிடத்து 'முன்னி' என்று பாடமுண்டு; ஆலோசித்து என்பது, அதன்பொருள். (௨௧௪)

௨௧௫. மென்றொழிற்கலாபமஞ்ஞைவேட்கைமீக்கூருமேனுங்
குன்றொழித்தொருமாக்குன்றினரிதிற்சேர்கொள்கைபோல
வன்றொழிற்கொற்றப்பொற்றோண்மணந்தருமயிலேயன்றோ
ரொன்றொழித்தொன்றினேகவரியதோரொழுக்கினானை. பரீ—

(இ - ள்.) மெல் தொழில் - நுட்பமான வேலைத்திறமமைந்த, கலாபம் - தோகையையுடைய, மஞ்ஞை - மயிலானது, வேட்கை மீக்கூருமேனும் - ஆசையை அதிகமாகக்கொண்டதாயினும், குன்று ஒழித்து ஒரு மா குன்றின் அரி

தின் சேர் தொன்மைபோல - (தானிருக்கின்ற) ஒருமலையைவிட்டு மற்றொரு பெரியமலைக்குச் சிரமத்தோடு சென்றுசேருந் தன்மைபோல,—அரு மயிலை அன்னார் - அருமையான மயில்போன்ற சாயலையுடையவர்களான மகளிர், வல் தொழில் கொற்றம் பொன் தோள் மணந்து - வலியசெயல்களைச் செய்ய வல்லதும் வெற்றிகொண்டதுமான அழகிய தனதுதோளைத் தழுவி, ஒன்று ஒழித்து ஒன்றின் ஏக அரியது - (அங்ஙனம் தாம் தழுவிய) ஒருதோளை விட்டு மற்றொருதோளிற் செல்லுதற்கு அரியதான, ஓர் ஒழுகஇணை - ஒப்பற்ற தோள்வரிசைகளை யுடையவனுமான இராவணனை,—(எ - று.)—(௨௦௯) 'நோக்கினன்' என இயைக்க.

உலகத்திலுள்ள பலமலைகளுள் ஒருமலையில் இனிதுவசிக்கின்ற மயில் அதனைவிட்டு மற்றொருமலையைச்சேர்ந்து அவ்விடத்தின் இனிமைகளை நுகருமாறு மிக்க விருப்பங் கொண்டதாயினும் இம்மலையினின்று அம்மலைக்குச் சென்றுசேர்தற்கு மிகவும் சிரமப்படுமியல்பை யுடையதாயிருக்கின்றது; அவ்வாறே இராவணனுடம்பில் இரட்டைவரிசையாயுள்ள தோள்களிருபதில் ஒன்றைத் தழுவி இன்பம்நுகர்ந்த மாதர் அத்தோளைவிட்டு மற்றொருதோளுக்குச்செல்லுதல் அரியதாகின்றதென்க; உவமையணி. ஒவ்வொருதோளே ஒவ்வொருத்தி தழுவியேய்தற்குப் போதுமானதென்பது தேர்ந்தகருத்து. அத்தோளினது பருமையுயர்வுவலிமைகளும், அத்தோள்களில் ஒன்றற்கொன்றுள்ள இடைவெளியின் மிகுதியும் பாராட்டப்பட்டவாறாம். மயில் - குறிஞ்சிநிலப்பறவை. ஓரிடத்தில் நெடுந்தூரம் பறந்துசெல்லமாட்டாமை, அதற்கு இயல்பு; அது அங்ஙனமாதற்குக் காரணம் தோகையின் பாரமென்பது தோன்ற, 'கலாபமஞ்ஞை' என்றார். அத்தோகையில் தெய்வச்செயலாய் இயற்கையாக அமைந்திருக்கின்ற கண்முதலியவற்றின் விசித்திரங்கள் செயற்கையாக மிகநுண்ணிதிற்செய்யுஞ் சித்திரவேலைப்பாடுகள்போல விருக்கின்ற அருமையைப் பாராட்டி, 'மென்றொழிற்கலாபம்' எனப்பட்டது; இது, மகளிர்கூந்தற்கு உவமையாகக் கொள்ளத்தக்கது. 'மணந்திடுமடந்தைமார்கட்கு' என்றும் பாடம். (௨௧௦)

## வேறு.

௨௧௧. தழுவாநின்றகருங்கடன்மீதுதயகிரியிற்சுடர்தயங்க
வெழுவானென்னமின்னிமைக்குமாரம்புரளுமியல்பிற்றாய்
முழுவானவராயுலகமொருமூன்றுங்காக்குமுதற்றேவர்
மழுவாணேமிகுலிசத்தின்வாய்மைதுடைத்தமார்பானை.

(இ - ள்.) தழுவா நின்ற கருங் கடல் மீது - சுற்றிலும் பரவியுள்ள கடலின்மேல், உதயகிரியில் - (உயர்ந்து காணப்படுகின்ற) உதயபருவதத்திலே, சுடர் தயங்க எழுவான் என்ன - (தனது ஆயிரங்) கிரணங்கள் விளங்க உதிப்பவனான சூரியன்போல, மின் இமைக்கும் ஆரம் புரளும் - ஒளிவிளங்குகின்ற இரத்தினஹாரம் புரளுகின்ற, இயல்பிற்று ஆய் - தன்மையையுடையதாய்,—முழு வானவர் ஆய் - தலைமைக்குணங்கள் மிக்க தேவர்களாய், உலகம் ஒரு மூன்றும் காக்கும் - மூன்று உலகங்களையும் பாதுகாக்கின்ற,

முதல் தேவர் - சிறந்த தேவர்களான சிவபிரான் திருமால் இந்திரன் என்பவர்களுடைய, மழு வாள் நேமி குலிசத்தின் - மழுவும் ஒளியுள்ள சக்கரமும் வச்சிரமுமாகிய ஆயுதங்களின், வாய்மை தவறாத வலிமையை, துடைத்த - போக்கிய, மார்பானை - மார்பையுடையவனுமான இராவணனை,—(எ - று).—(௨௧௬) கேட்கின்றனன் என இயைக்க.

இராவணனது கரிய பெரிய உடம்புக்கு - சுற்றிலுமுள்ள கருங்கடலும், அவ்வுடம்பில் உயர்ந்து பரந்து காணப்படுகின்ற மார்புக்கு - கீழ்கடலினிடையேயுள்ள உதயகிரியும், அம்மார்பில் ஒளிவீச அணியப்பட்டுப் புரண்டு விளங்கும் இரத்தினஹாரத்துக்கு - அவ்வுதயகிரியின்மீது தனது ஆயிரங் கிரணங்களும் பரவ உதித்துச் சஞ்சரிக்கத் தொடங்கி விளங்குஞ் சூரியனும் உவமையெனக்காண்க; உவமையணி. திரிமூர்த்திகளுட் போர்முயற்சியில்லாது வேதமோதிக்கொண்டிருப்பவனும் இராவணனது குலத்துக்கு ஆதிபுருஷனுமான பிரமனை நீக்கி, தேவராஜனாய்த் திரிலோகாதிபத்தியஞ் செய்யும் இந்திரனைக் கூட்டி, தவறாது பகையழிக்குமியல்பினவான அம்மூவரது படைக்கலங்களும் இவனது மார்பிற் பட்டு அதனை ஊறுபடுத்தமாட்டாமற் சிறப்பிழந்தன வென இராவணனது மார்பின் வலிமையை வருணித்தார். இராவணன் இவர்களால் வெல்லப்படாமை, இவ்வருணனைக்கு மூலம். மழு - சிவபிரானுக்கும், நேமி திருமாலுக்கும், குலிசம் - இந்திரனுக்கும் உரியன. "ஸுதர்சநம் பாஸ்கர கோடி துல்யம்," "ஆயிரங்கோடி திவாகரன்போ லொளிராழி" என்றபடி திருமாலின் சக்கராயுதம் மிக்க பிரகாசமுடையதாதலால், 'வாள்நேமி' என்று சிறப்பித்துக் கூறப்பட்டது.

தழுவாநின்ற - தழுவிநின்ற என்க. தழுவாநின்ற என்பதை ஒரு சொல்லாகக்கொண்டு, தழுவுகின்ற என நிகழ்காலப் பெயரெச்சமாக்குதலுமொன்று.

இக்கவி - மூன்றாஞ்சீரும் ஆறாஞ்சீரும் காய்ச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்குகொண்ட அறுசீராசிரிய விருத்தம். ()

வேறு.

௨௧௭. தோடுழுதண்டார்வண்டுந்திசையானைமதந்துதைந்தவண்டுஞ்சுற்றி
மாடுழுதநறுங்கலவைவயக்களிற்றின்சிந்தூரத்தைமாறுகொள்ளக்
கோடுழுதமார்பானைக்கொலையுழுதவடிவேலின்கொற்றமஞ்சித்
தாடொழுதபகைவேந்தர்முடியுழுததழும்பிருந்தசரணத்தானை.

(இ - ள்.) தண் தார் - குளிர்ச்சியான (தனது மார்பின்) மாலையிலுள்ள, தோடு - மலரிதழ்களில், உழு - கிண்டிமொய்த்துள்ள, வண்டும் - வண்டுகளும், திசை யானை மதம் துதைந்த வண்டும் - திக்கஜங்களின் மதநீரிலே நெருங்கி மொய்த்துள்ள வண்டுகளும், சுற்றி - சுழன்றெழுந்து, மாடு உழுத - பக்கங்களில் மொய்த்துக் கிளறுவனவாகும்படியும், நறுங் கலவை - வாசனை வீசுகின்ற (தனது மார்பிற் பூசிய) கலவைச்சந்தனம், வய களிற்றின் சிந்தூரத்தை மாறுகொள்ள - வலிமையையுடைய திக்கஜங்களின் முகத்திலணிந்த சிந்தூரத் திலகத்தை மாற்றிக்கொள்ளும்படியும், கோடு உழுத - (அத்திக்கஜங்

களின்) தந்தங்கள் பதிந்து கிளறப்பெற்ற, மார்பானை - மார்பையுடையவனும், —கொலை உழுத - கொலைசெய்யுமாறு பாய்ந்து கிளறுகின்ற, வடி வேலின் - (தனது) கூரிய வேலாயுதத்தினது, கொற்றம் - வெற்றிக்கு, அஞ்சி - பயந்து, தாள் தொழுத - (தனது) கால்களில் விழுந்து வணங்கிய, பகை வேந்தர் - பகையரசர்களது, முடி - கிரீடங்கள், உழுத - பட்டுத் தேய்த்தலினாலாகிய, தழும்பு - வடுக்கள், இருந்த - பொருந்திய, சரணத்தானை - கால்களையுடையவ னுமான இராவணனை,—(எ - று.)—(உ௦௬) 'அநுமான் நோக்கினன்' எனக் குளகச் செய்யுள்கட்கு முடிபு காண்க.

இராவணன் திக்குவிசய யாத்திரையில் திசைகளின் கடை யெல்லைகளி லே நின்று உலகத்தைத் தாங்குகின்ற அஷ்டதிக்கஜங்களை எதிர்த்தபொழுது, அவை தமது தந்தங்களைக்கொண்டு இவன் மார்பில் வலியத்தாக்கி ஊறுபடுத் துவன வாயின; அங்ஙனம் பாய்ந்து நெருங்கும்பொழுது, இராவணன் மார் பில் தரித்துள்ள மாலையின் மலரிதழ்களில் மொய்த்துக்கிடந்த வண்டுகளும் திக்கஜங்களின் கபோலமத ஜலத்தில் மொய்த்துக்கிடந்த வண்டுகளும் அஞ்சி இடம்விட்டுப் பெயர்ந்து பிறந்த புதுமணத்தினுள்ள அவாவினால் இம் மலர்வண்டுகள் அம்மதஜலத்தையும் அம்மத வண்டுகள் இம்மலரையும் நாடி மாறிச் சென்று, அத்தாக்குவிசையில் தாம் அகப்பட்டுக்கொள்ளாதபடி ஜாக்கிரதைப பட்டுப் பக்கங்களில் மொய்ப்பனவாயின. இக்கருத்தே 'தோடுழுதண்டார் வண்டும் திசையானை மதந்தோய்ந்தவண்டும் சுற்றி மாடு உழுத' என்றதனாற் போந்தது. அங்ஙனம் திக்குயானைகள் தந்தங்கள்கொண்டு இராவணன் மார் பிற் பாயும்போது, அம்மார்பிற் பூசிய கலவைச்சந்தனக்குழம்பு அவ்யானையின் முகத்திலும், அந்த யானையின் முகத்திலிட்டுள்ள சிந்தூரப்பொட்டு இவன் மார்பிலுமாக மாறிப்படிதல், 'நறுங்கலவை வயக்களிற்றின் சிந்தூரத்தை மாறு கொள்ள' என்றதனால் விளக்கப்பட்டது. மாற்றுநிலையணி யெனப்படும் பரிவர்த்தநாலங்காரம் இம்முதலிரண்டடிகளிலிருத்தல் காண்க; அதன் இலக் கணம்—"பொருள் பரிமாறுதல் பரிவர்த்தனையே" என்றார் தண்டியாசிரியர். இரண்டாமடியிலுள்ள 'உழுத' என்பது - பலவின்பாலிறந்தகாலமுற்று, எச் சத்தன்மையடைந்தது. இம்முற்றெச்சமும், 'கொள்ள' என்ற செயவெனெச்ச மும் அடுக்கி, உம்மை தொக்கதனால் வினைச்செவ்வெண்ணாகி, மூன்றாமடியி லுள்ள 'உழுத' என்ற பெயரெச்சத்தோடு இயையும். இனி, இரண்டாமடி யில் 'உழ' என்ற வினையெச்சம், வேண்டாவழிச்சாரியையாக இடையில் தக ரம்பெற்று 'உழுத' என நின்ற தென்றலு மொன்று. இனி, 'சுற்றி' என்ற செய்தெனெச்சத்தை 'சுற்ற' எனச் செயவெனெச்சமாகத்திரித்து அதனை 'தோடுழுத' என்றதனோடு இயைத்து, மாடு உழுத நறுங் கலவை - தன்னிடத் திற் பூசப்பட்ட நறிய கலவைச்சந்தன மென்றலுமாம். இராவணனது மார் பின்சிறப்புக் கீழ்ச் செய்யுளிற் கூறியதனோடு அமையாமையால், இச்செய்யுளி லும் அதனைக் கூறினார்.

இராவணன் தான் தனது யாமனுராகிய மயனிடத்தினின்று பெற்ற தெய் வத்தன்மையுள்ள வேலாயுதத்தினது தவறாப் பெருவலிமையைத் துணைக்

கொண்டு அரசர்களை யெதிர்த்துப் பொருதழித்து வெல்லத்தொடங்கியபொழுது அப்பகையரசர்களிற் பலர் அவ்வேலின் கொலைத்திறத்துக்கு அஞ்சிப் போரொழிந்து இவனைச் சரணமடைபவராய் இவன் கால்களில் தங்கள் முடி படும்படி விழுந்து ஸாஷ்டாங்கமாகத் தண்டனிடுகையில் அவர்கள் கிரீடங்கள் படுதலால் இவனடிகளில் தழும்புகளமைந்தனவென்பது, பின்னிரண்டடிகளிற் கூறப்பட்டது. இங்கு 'கொலையுழுத வடிவேலின் கொற்றம்' என்று சிறப்பித்துக் கூறப்பட்ட வேற்படையின் பெருமையை, மேல் யுத்தகாண்டத்து வேலேற்றுப்படலத்தில் "மயன்கொடுத்தது மகளொடு வயங்கனல் வேள்வி, யயன்படைத்தள சாழியுங் குலிசமு மனைய, துயர்ந்த கொற்றமு மூழியுங் கடந்துள தருவின்," "விட்டபோதினி லொருவனை வீட்டியே மீளும், பட்டபோ தவ னொன்முக னயினும் படுக்கும், வட்ட வேலது வலங்கொண்டு வாங்கினன்" என்றும், உத்தரகாண்டத்தில் "தாளார் தண்டாமரை யோன்றன் மேலேவிடினு மவனுயிர் கொண்டன்றி, மீளாவேலுங் கொடுத்து மயன்போக" என்றும் வருவனவற்றாலு முணர்க.

'சிந்தூரத்தை மாறுகொள்ள' என்பதற்கு - சிந்தூரப்பொட்டை யழிக்க வென்றலுமாம். இச்செய்யுளில் 'உழுத' என்ற சொல் ஒரு பொருளிலேயே பலமுறை வந்தது, சொற்பொருட்பின்வருநிலையணி. முதலடியில் 'தோடுழுத தார்வண்டு' என்று பாடமோதுவாரு முளர்.

இக்கவி - இறுதி யிரண்டுசீரும் மாச்சீர்களும், மற்றைநான்கும் காய்ச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்குகொண்ட அறுசீராசிரிய விருத்தம். (உகஎ)

வேறு.

[இராவணனைக்கண்ட அநுமனது கோபம்.]

உகஅ. கொண்டதோருருவமாயன் குறளினுங்குறுகநின்றான்
றிண்டலைபத்துந்தோள்களிருபதுந்தெரியநோக்கிக்
கண்டனன்காண்டலோடுங்கருத்தின்முன்காலச்செந்தீ
விண்டனகண்கள்கீண்டுவெடித்தனகீழுமேலும்.

(இ - ள்.) கொண்டது ஓர் உருவம் மாயன் குறளினும் குறுக நின்றான் - தான் கொண்டுள்ள ஒப்பற்ற வடிவம் (முன்பு) திருமால்கொண்ட வாமனவடிவத்தினுங் குறுகியதாயிருக்க நின்றவனான அநுமான், திண் தலை பத்தும் தோள்கள் இருபதும் தெரிய நோக்கி - (அங்ஙனம்படுத்துள்ள அவ்வரக்கனது) வலிய தலைகள் பத்தையும் தோள்கள் இருபதையும் நன்றாகப்பார்த்து, கண்டனன் - ('இவன் இராவணன்' என்று) தெரிந்துகொண்டான்; காண்டலோடும் - (அங்ஙனம்) அறிந்தமாத்திரத்தில், கருத்தின் முன் - (ஆலோசிக்கின்ற அவ்வநுமனது) மனத்திற்குமுன்னமே, கண்கள் காலம் செம் தீ விண்டன - (அவனது) கண்கள் செந்நிறமான காலாக்கினியை வெளிப்படுத்தின: (அந்த உக்கிரத்தால்), கீழும் மேலும் கீண்டு வெடித்தன - கீழுலகமும் மேலுலகமும் பிளந்து வெடிக்கலாயின; (எ - று.)

மகாபலி சக்கரவர்த்தியின் செருக்கை யடக்குதற்பொருட்டுத் திருமால் கொண்ட வாமனவடிவம் மிகச்சிறியதென்பதைக் கீழ்ப் பாலகாண்டத்தில் "பயந்தவர்களு மிகழ் குறளன்" என்று விளக்கிப்போந்தவர், இப்பொழுது அத்திருமாலினடியவனான அநுமான் பிராட்டியைத் தேடுதற் பொருட்டுக் கொண்ட வடிவம் அதனினுங் குறுகியதென்று அநுமனது அணிமாவென்னுஞ் சித்தியின் மகிமையை விளக்கினர். காணுதல் - நோக்கு அல்நோக்கம். படுத்திருந்தவனது பத்துத் தலைகளையும் இருபது கைகளையும் பார்த்து அவனை இராவணனென்று அறிந்த அநுமன் மனத்திற் கோபங்கொள்ளுதற்கு முன்னமே அவனது கண்கள் கற்பாந்தகாலத்து உலகங்களை யழித்தற்கு எழும் அக்கினிபோன்ற கொடிய அக்கினியைச் சொரிந்தன என்றது - காரணத்தின் முன் காரியம் நிகழ்ந்ததாகக் கூறியதாதலால், மிகையுயர்வுநவிற்சியணி; இது, விரைவை விளக்குவது. மனம் கோபத்தினால் எரிந்ததென்பதும் இதனாற்போதரும். அநுமான்கொண்ட அக்கோபத்தின் உக்கிரத்தால் மேல்கீழுலகங்கள் கீண்டு வெடித்தன எனவே, இந்நிலவுலகம் கீண்டு வெடித்ததென்பது, கூறாமலே தானே பெறப்பட்டது; அருத்தாபத்தி. இந்த வாக்கியம் - தொடர்புயர்வுநவிற்சியணி.

இக்கவி - இக்காண்டத்தின் முதற்கவிபோன்ற அறுசீராசிரியவிருத்தம்.

வேறு.

[அநுமான் இராவணனை யழிக்கக் கருதுதல்.]

உ௧௯. தோளாற்றலென்னாகுமேனிற்குஞ்சொல்லென்னாம்
வாளாற்றுகண்ணாளை வஞ்சித்தான்மணிமுடியென்
றாளாற்றலாலிடித்துத்தலைபத்துந்தகர்த்தென்ற
னாளாற்றல்காட்டேனேலடியேனாய்முடியேனே.

(இ - ள்.) தோள் ஆற்றல் என் ஆகும் - (இவனது) புயங்களின் வலிமை யாது பயன்படும்! மேல் நிற்கும் சொல் என் ஆம் - நெடுங்காலம் அழிவின்றி நிற்பதான இவனது புகழ்தான் யாதுபயன்படும்!! (இவ்விரண்டும் பயன்படாதபடி), வாள் ஆற்று கண்ணாளை வஞ்சித்தான் - வாளாயுதம்போன்ற கண்களையுடையவளான சீதையை வஞ்சனையாற் கவர்ந்துவந்தவனாகிய இவ்விராவணனுடைய, மணி முடி - இரத்தின கிரீடங்களை, என் தாள் ஆற்றலால் இடித்து - எனது கால்களின் வலிமையால் உதைத்துத்தள்ளி, தலை பத்தும் தகர்த்து - பத்துத் தலைகளையும் உடைத்து, என்தன் ஆள் ஆற்றல் காட்டேன் ஆல் - எனது ஆண்மைத்திறத்தைக் காண்பியாமற் போவேனாயின், அடியேன் ஆய் முடியேன் - நான் ராமதாஸனாய் (அவ்வடிமைத் தொழில்) நிறைவேறேன்; (எ - று.)—ஈற்று ஏகாரம் - தேற்றத்தோடு இரக்கம்.

நேரில்வந்து இராமபிரானை யெதிர்த்துப் புயவலிமைகொண்டு பொருது வென்று பிறகு அவனுரிமையான சீதையைக் கவர்தல்செய்யாது வஞ்சனையால் அப்பிராட்டியைக் கவர்ந்து சென்றமை இராவணனது புஜபலத்துக்கு மிக்க பழிப்பையே தரு மென்பதுபற்றி 'தோளாற்ற லென்னாகும்' என்றும், "எளிதெனவில்லிறப்பா னெய்து மெஞ்ஞான்றும், விளியாது நிற்கும் பழி"

என்றபடி பிறன்மனை நயப்பவன் புகழ்முழுவதையு மிழந்து அழிவின்றி எந்நாளும் நிலைநிற்கும் பெரும்பழியையே யடைதல்பற்றி 'மேனிற்குஞ் சொல் என்னும்' என்றும் பராமுகமாகக் கூறினர். மேல்நிற்கும் சொல் - மேன்மையாக நிற்குஞ் சொல் என்று கொண்டாலும், புகழ்மொழியையே குறிக்கும். சீவகசிந்தாமணியில் "வாளாற்றகண்ணாள்" என்றாற்போல, இங்கு 'வாளாற்று கண்ணாள்' என்றார்; கூரிய கண்களென்ற பொருளேயே யன்றி, தமது அழகிலீடுபட்டுக் காதல்கொண்ட இராவணன் அழிவதற்கு ஏதுவான கண்களென்ற பொருளையும் உட்கொண்டது. இத்தொடர். ஆற்று - உவம வுருபு. எனது தலைவனுக்குத் துரோகஞ் செய்தவனது தலைகளை யான் உடைத்து எனது பராக்கிரமத்தை வெளியிட்டால்தான் எனது அடிமைத்திறம் நிறைவுற்றதாமென்பது, இச்செய்யுளின் கருத்து 'காட்டேனல்' என்பதற்கு - காட்டாதிருக்கின்றேனுதலால் என்று உரைப்பாரு முளர். 'தகர்த்தின்றென், னாளாற்றல் காட்டேனேல்' என்ற பாடமும் அமையும்.

இதுமுதல் இப்படலம் முடியுமளவுமுள்ள பதினாறு கவிகள் - பெரும்பாலும் நாற்சீரும் காய்ச்சீராய் வந்த அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். இவற்றை நாற்சீர்நான்கடி நாலுகோர்க்க மென்றுமொன்று. (௨௧௯)

[இதுமுதல் அந்த.]

௨௨௦. நடித்துவாழ்தகைமையதோவடிமைதானன்னுதலைப்
பிடித்தவாளரக்கனோர்யான்கண்டும்பிழைப்பரோ
வொடித்துவான்றோளனைத்துந்தலைபத்துமுதைத்துருட்டி
முடித்திவ்வூர்முடித்தான்மேன்முடிவதெலாமுடிந்தொழிக.

(இ - ள்.) அடிமைதான் - (ஒருவர்க்கு) அடிமை செய்வதென்பது தான், நடித்து வாழ் தகைமையதோ - (அடியவன்போல) வெளிவேஷங் காட்டிப் பிழைக்கின்ற தன்மையோ டமைவதோ? [அன்று என்றபடி]; நல் நுதலை பிடித்த வாள் அரக்கனோர் - அழகிய நெற்றியையுடையவளான பிராட்டியை வஞ்சித்துக் கவர்ந்துவந்த கொடிய ராக்ஷஸன். யான் கண்டும் பிழைப்பரோ - (இராமபிரானது மெய்யடியவனான) நான் பார்த்த பின்பும் தப்பிப் பிழைத்திருக்கக்கடவனோ? (அவனது), வான் தோள் அனைத்தும் - பெரிய தோள்களையெல்லாம், ஒடித்து - (என் கைகளால்) ஒடித்து எறிந்து, தலை பத்தும் - பத்துத் தலைகளையும், உதைத்து - (என் கால்களால்) உதைத்துத்தள்ளி, உருட்டி - கீழேயுருளப்பண்ணி, முடித்து - (இங்ஙனம் அவனை யான்) கொன்று, இ ஊர் முடித்தால் - (அவனது நகரமான) இவ்விலங்காபுரியையும் அழித்துவிட்டால், மேல் - அதன்பிறகு, முடிவது எலாம் முடிந்து ஒழிக - நடப்பதெல்லாம் நடந்துதீர்க; (எ - று.)

அடியவன்போலப் புறத்தே பாவனைகாட்டிப் பாசாங்குசெய்து திரிவது உண்மையான அடிமைத்திற மாகா தென்பது, முதல் வாக்கியத்தின் கருத்து. எசமானனுக்குத் துரோகஞ்செய்தவனை அறத்தொலைத்தலே பூர்ணமான அடிமைத்திற மென்க. 'அரக்கனோர் பிழைப்பரோ' என்றது, இகழ்ச்சிப்பன்மை: 'உயர்சொல், குறிப்புநிலையின் இழிபுவிளக்கிற்று' என்பர் நச்சினார்க்கினியர்;

ராக்ஷஸப்பயலெலா இழித்தபடியாம். யான் கண்டும் - என் கண்ணெதிர்ப் பட்டபின்பும் என்றபடி. எனது தலைவனுக்குத் துரோகஞ் செய்தவனையும் அவனூரையும் யான் அழித்தபின்பு, அதனால் எனக்கு ஏதேனுந் தீங்குநேர்ந்தாலும் நேர்க, அதனால் ஒன்றுங் குற்றமில்லை யென்ற துணிவுபற்றி, 'மேல் முடிவதெலாம் முடிந்தொழிக' என்றான். இவனைக் கண்டு பிழைக்க விடுவது அடிமைத்திறமன்று. இவ்வளவுஞ்செய்தால்தான் அடிமைத்திறம் நிறைவுற்றதாகு மென்பது உட்கோள். (௨௨௦)

[கோபங்கொண்ட அநுமன் சிறிது ஆலோசித்து அக்கருத்தொழிதல்.]

௨௨௧. என்றூக்கியெயிறுகடித்திருகரனும்பிசைந்தெழுந்து
நின்றூக்கியுணர்ந்துரைப்பானேமியோன்பணியன்று
லொன்றூக்கியொன்றிழைத்தலுணர்வுடைமைக்குரித்தன்றால்
பின்றூக்கினிதுசாலப்பிழையாகுமெனப்பெயர்ந்தான்.

(இ - ள்.) என்று - என்றுஎண்ணி, ஊக்கி - யுத்தோற்சாகங்கொண்டு, எயிறு கடித்து - பற்களைக் கடித்து, இரு கரனும் பிசைந்து - இரண்டுகைகளையும் பிசைந்து, எழுந்து—, (பின்னர் அநுமான்), நின்று - சற்றுநின்று, ஊக்கி உணர்ந்து - முயன்று ஆலோசித்து, உரைப்பான் - தனக்குட் சொல்லிக் கொள்பவனாய்,—'நேமியோன் பணி அன்று - (நான் இராவணனையும் இலங்கையையும் அழிப்பது) இராமபிரானது கட்டளையன்று; (அன்றியும்), ஒன்று ஊக்கி ஒன்று இழைத்தல் - ஒருகாரியத்தைச் செய்யமுயன்று வேறொரு காரியத்தைச் செய்தல், உணர்வு உடைமைக்கு உரித்து அன்று - அறிவுடைமைக்கு உரிய செயலாகாது; பின் தூக்கின் - பின்பு ஆலோசிக்குமிடத்து, இது - (நான் இராவணனையும் இலங்கையையும் அழிக்கும்) இச்செயல், சால பிழை ஆகும் - பெரிதுங்குற்றமுடையதாகக்கூடும்', என - என்று சொல்லி, பெயர்ந்தான் - (அச்செயலினின்று) பின்வாங்குவனானான்; (எ - று.)—'ஆல்' இரண்டும் - தேற்றம்.

பற்களைக் கடித்தலும், கைகளைப் பிசைதலும் - கோபகாரியம். நேமியோன் - சக்கராயுதத்தையுடையவனான திருமால்: இங்கு, அவனது திருவவதாரமூர்த்தியான இராமபிரானைக் குறித்தது; ஆஜ்ஞாசக்கரத்தையுடையவனென்றுகொண்டு, சுக்கிரீவமகாராஜனைக் குறித்ததென்றலுமாம். பிராட்டியிருக்கின்ற இடத்தைத் தேடியறிந்து மீண்டுவந்து செய்தி சொல்லுதலே இவ்விருவர் கட்டளையுமா மென்பது, கிட்கிந்தாகாண்டத்தில் விளங்கிற்று. ஒன்றுஊக்கி ஒன்று இழைத்தல் - பிராட்டியைக்கண்டு செய்திசொல்லுதலாகிய ஒருகாரியத்தைச் செய்யத்தொடங்கிப் பகையழித்தலாகிய வேறொரு காரியத்தைச் செய்தல். பெயர்தல் - மீளுதல். (௨௨௧)

[இதுவும் அது.]

௨௨௨. ஆலம்பார்த்துண்டவன்போலாற்றலமைந்துளரெனினுஞ்
சீலம்பார்க்குரியோர்களெண்ணாதுசெய்பவோ
மூலம்பார்க்குறினுலகைமுற்றுவிக்குமுறைதெரினுங்
காலம்பார்த்திறைவேலைகடவாதகடலொத்தான்.

(இ - ள்.) பார்த்து ஆலம் உண்டவன் போல் - (தேவர்கள் படுகிற துன்பத்தைக்) கண்டு விஷத்தை யமுதுசெய்தவனான சிவபிரான்போல, ஆற்றல் அமைந்து உளர் எனினும் - வல்லமையமைந்துள்ளவராயினும், சீலம் பார்க்க உரியோர்கள் - தமக்கேற்ற ஒழுக்கமுறைமையைக் குறிக்கொண்டு பாதுகாக்க உரியவர்களான பெரியோர், எண்ணாது செய்வரோ - ஆலோசியாமல் (ஒரு காரியத்தைச்) செய்வார்களோ ? [செய்யார் என்றபடி]; (ஆகவே), மூலம்பார்க்குறின் - (தனது) தலைமையைப் பார்க்குமிடத்து, உலகை முற்றுவிக்கும் முறை தெரினும் - உலகமுழுவதையும் அழியச்செய்யுந் திறமை (தனக்கு உள்ளதென்று) தெரிந்திருந்தாலும், காலம் பார்த்து - (தான் அழித்தற்குஉரிய) கற்பாந்தகாலத்தின் வரவை எதிர்பார்த்துக்கொண்டு, இறை வேலை கடவாத-(அது வரையிலும்) சிறிதுங்கரைகடவாமல் அடங்கிநிற்கின்ற, கடல் - கடலை, ஒத்தான் - போன்றனன், (அநுமான்); (எ - று.)

இராவணனையும் இலங்கையையும் எளிதில்அழிக்கவல்ல திறமை தன்னிடமிருக்கவும் அனுமன் அதுசெய்யாது அதற்கேற்றகாலத்தைக் கருதி இதுசமயமன்றென்று அடங்கியதற்கு, அங்ஙனங் கடல் அடங்கியிருத்தலை உவமைகூறினர்; உவமையணி. இச்சிறப்புப்பொருளை, நல்லொழுக்கநெறியில் நிற்பவர் எவ்வகையாற்றலுடையரேனும் ஆலோசனையின்றி ஒருகாரியத்தைச் செய்யா ரென்ற பொதுப்பொருள்கொண்டு விளக்கியது, வேற்றுப்பொருள் வைப்பணி. இங்ஙனம் இரண்டணிகள் சேர்ந்துவந்தது - சேர்வையணி. காலத்தினாற் செய்த நன்றி யென்பது விளங்க, 'ஆலம் பார்த்து உண்டவன்' என்றார்; இது - அப்பெருமானது அற்புதசக்தியை விளக்கும். பார்க்கவுரியோர்கள் என்பது 'பார்க்குரியோர்கள்' என்றும், தெரியினென்பது 'தெரின்' என்றும் தொகுத்தல்விகாரமடைந்தன 'முறைத்தெனினும்' எனவும் பாடமுண்டு. இனி, 'மூலம்பார்க்குறின்' என்பதைத் தனியே முதலிலெடுத்து, (இராவணனைக் கொல்லத்துணிந்த அநுமான் அங்ஙனம்கொல்லாமல் விட்டிட்டதற்குக்) காரணம் (என்னவென்று) பார்க்குமிடத்து என்று உரைப்பாருமுளர். (உஉஉ)

[இதுவும் அது.]

உஉங. இற்றைப்போர்ப்பெருஞ்சீற்றமென்னோடுமுடிந்திடுக, கற்றைப்பூங்குழலாளைச்சிறைவைத்தகண்டகனை, முற்றப்போர்முடித்த தொருகுரங்கென்றான்முனிவீரன், கொற்றப்போர்ச்சிலைத்தொழிற்குக்குறைவுண்டாமெனக்குறைந்தான்.

(இ - ள்.) 'இற்றை போர் பெருஞ் சீற்றம் - இப்பொழுது (இராவணனோடு) போர்செய்யுமாறு (எனக்கு) உண்டான பெருங்கோபம், என்னோடு முடிந்திடுக - (பிறர்க்குப்புலனாகாமல்) என்மனத்திலேயே அடங்கிவிடக்கடவது; 'பூ கற்றை குழலாளை சிறை வைத்த கண்டகனை - மலர்களைச்சூடிய திரட்சியான கூந்தலை யுடையவளாகிய பிராட்டியைக் காவலில் வைத்த கொடியவனை [இராவணனை], முற்ற - அழியும்படி, ஒரு குரங்கு போர்முடித்தது - ஒருகுரங்கு போர்செய்துமுடித்தது,' என்றால் - என்றுசொல்லும்படியானால்,

மூளை வீரன் கொற்றம் போர் சிலை தொழிற்கு குறைவு உண்டு ஆம் - (அரக்கரைக்கொல்லுதற்கென்றே) மூண்டுநிற்கிற வீரனான ஸ்ரீராமனது வெற்றியைத்தரும் போரைச் செய்யவல்ல விற்றொழிற்றேர்ச்சிக்கு ஒருகுறைவு உண்டாகும்', என - என்றுஎண்ணியும், குறைந்தான் - அடங்கினன், (அநுமான்); (எ - று.)

தேர்ந்த ஆலோசனைசெய்யாதமுன்பு விரைந்தெழுந்த கோபம் காரியகாரியாகாது அடங்கிவிடவேண்டுமென்று கருதினனென்பது, முதலடியாற் போந்தது. நான் இப்பொழுது இராவணனைக் கொல்வேனேயாகில், 'தன் மனைவியை வஞ்சனையாற்கவர்ந்து சிறைவைத்த கொடியவனை இராமபிரான் தானே ஏற்றபடி தண்டித்துப் பழிதீர்த்துக்கொள்ளாதிருக்கையில் ஒருகுரங்கு புகுந்து அத்தொழில்செய்திட்டது' என்று பிரசித்தியுண்டாகி அப்பெருமானது திறமைக்குக் குறைபாடாய்முடியுமென்பது கருதியும் கோபந்தணிந்தனன் அனுமனென்க.

கண்டகம் - முள்; வடசொல்: அதுபோலப் பிறர்க்கு வருத்தஞ்செய்பவன், கண்டகன். மூளை வீரன் - வினைத்தொகை. தனது தலைவனது வில்வன்மைக்கு ஒருகுறை வாராமைப்பொருட்டுத் தான் குறைந்தனனென ஈற்றடியில் நயங் காண்க. அங்ஙனமாதல், சிறந்த அடிமைத்திறம். (உஉங)

[அநுமான் மற்றுமொன்றை ஊகந்தாலுணர்தல்.]

உஉச. அந்நிலையான் பெயர்ந்துணாப்பாலுய்வளைக்கையணியிழையா
ரிந்நிலையானுடன் றுயில்வாருளரல்லரிவனிலையும்
புன்னிலையகாமத்தாற்புலர்கின்றநிலைபூவை
நன்னிலையினுளளென்னுநலனெனக்குநல்குமால்.

(இ - ள்.) அந் நிலையான் - அவ்வாறு (கோபமடங்கித்) தன்நிலையில் நின்றவனான அநுமான், பெயர்ந்து உரைப்பான் மீளவும் (அடியில் வருமாறு தனக்குட்) சொல்லிக்கொள்வான்:—'ஆய் வளை கை அணி இழையார் - தேர்ந்தெடுத்த வளையல்களை பணிந்த கைகளையும் அழகிய மற்றும் பல ஆபரணங்களையுமுடையவரான மகளிரெவரும், இ நிலையானுடன் துயில்வார் உளர் அல்லர் - இந்தநிலைமையையுடையவனான இவ்விராவணனுடனே படுத்துத்தூங்குபவராயில்லை; இவன் நிலையும் - இவனது நிலைமையும், புல் நிலைய காமத்தால் புலர்கின்ற நிலை - இழிவான நிலைமையையுடைய காமவெப்பத்தால் தவிக்கின்ற நிலைமையாயிருக்கின்றது; (இந்நிலை), பூவை நல்நிலையில் உளள் என்னும் நலன் எனக்கு நல்கும் - சீதாபிராட்டி (இவனுக்கு இணங்காமற் பதிவிரதாதருமமாகிய) நல்லநிலையில் இருக்கின்றாளென்னும் நல்லசெய்தியை எனக்குச் சொல்லிக்கொடுக்கின்றது; (எ - று.)—ஆல் - ஈற்றசை; தேற்றமுமாம்.

சீதை இவன்கருத்துக்கு இசைந்திருப்பின் இவன் இங்ஙனம் மதநாவஸ்தையோடு தவித்துத் தனியேபடுத்திருக்கக் காரணமில்லை யென்பதை யுட்கொண்டு, இவன்நிலையால், பிராட்டியின் கற்பழியாத்தன்மையை அநுமானித்து அறிந்தனன் அநுமானென்க. 'அந்நிலையான் பெயர்ந்து' என்பதற்கு - அங்ஙனம் ஆலோசித்த [illegible] (இராவணனையழிக்கும் முய

ற்சியினின்று) மீண்டு என்று உரைப்பினுமாம்; அப்பொழுது, கீழ் ௨௪௪ - ஆஞ் செய்யுளில் "எனப்பெயர்ந்தான்" என்றதன் அநுவாதமாகும் இது. இங்கு, 'பெயர்ந்து' என்றதற்கு - அவ்விடம்விட்டுச்சென்று என்று உரைத்தலாகாது; மேற்செய்யுளில் "கோமனைபிற்படப்பெயர்ந்தான்" எனவருதலால். இவ்வளவு மகாசம்பிரமத்தோடு படுத்துள்ளவனுடனே யென்பதும், இங்ஙனம் காம தாபங்கொண்டுள்ளவனுடனே யென்பதும், 'இந்நிலையானுடன்' என்பதற்குக் கருத்தாகலாம். பிராட்டியை உயர்வுப்பன்மையால் 'ஆய்வளைக்கையணியிழையார்' என்றதாகக்கொண்டு, ஜாநகியார் இவனுடன் தூங்குபவராயில்லையென்று உரைத்தலும் ஒன்று. இழித்துரைக்கப்படும் ஒருதலைக்காமத்தா லென்பார் 'புன்னிலையகாமத்தால்' என்றார் நல்நிலை - கலங்காத கற்புநிலை. நல்கும் - தெரிவிக்கு மென்க. (௨௨௪)

[அங்கேயும் சீதை காணப்படாமையையறிந்து அநுமான் பலவாறு சிந்தித்தலை இதுமுதல் ஒன்பது கவிகளிற் கூறுகின்றார்.]

௨௨௫. என்றெண்ணிமீண்டினிஓர்பயனில்லையெனநினையாக்
குன்றன்னதோளவன்றன்கோமனைபிற்படப்பெயர்ந்தா
னின்றெண்ணியுன்னுவானந்தோவிந்நெடுநகரம்
பொன்றுன்னுமணிப்பூணாரிலரென்னப்பொருமுவான்.

(இ - ள்.) என்று எண்ணி - என்று ஆலோசித்து, இனி ஈண்டு ஓர் பயன் இல்லை என நினையா - இனி இங்கு (நிற்றலால்) ஒருபயனுமில்லையென்று நினைத்து, குன்று அன்ன தோளவன், தன் கோமனை பின்பட பெயர்ந்தான் - மலைபோன்ற தோள்களையுடையவனான இராவணனது அரண்மனை பின்னாம் படி அதனைக்கடந்து அப்பாற்சென்று, நின்று (அங்கு) நின்று, எண்ணி உன்னுவான் - சிந்தித்து ஆலோசிப்பவனாய்,—'அந்தோ - ஐயோ! இ நெடு நகரம் - இந்தப் பெரிய நகரத்தில், பொன் துன்னும் மணி பூணார் இலர் - பொன்னில் பதித்த இரத்தினங்களையுடைய ஆபரணங்களைத் தரித்தவரான சீதா பிராட்டியார் இல்லையே!' என்ன - என்று, பொருமுவான் - துக்கிப்பவனானான்; (எ - று.)—இது, தொகுத்துச்சுட்டல்; அடுத்த எட்டுக்கவிகளும் - இதன் வகுத்துக்காட்டலாம்.

கோமனை - சிறந்த மாளிகையுமாம். 'குன்றன்ன' என்ற அடைமொழியை 'கோமனை'க்குங் கூட்டலாம். பூணார் இலர் - உயர்வுப்பன்மை; வடநூலார் 'பூஜாயாம் பஹுவசநம்' என்பர். 'அந்தோவிந்நீணகரிற், பொன்றுன்னு மணிப்பூணாளிலளென்னப்பொருமினான்' என்று பிரதிபேதம். (௨௨௫)

௨௨௬. கொன்றானைகற்பழியாக்குலமகளைக்கொடுந்தொழிலாற்
றின்றானைவப்புறத்தேசெறித்தானைசிறையறியே
னென்றானுமுணரகிலேன்மீண்டினிப்போயென்னுரைக்கேன்
பொன்றாதபொழுதெனக்குக்கொடுந்துயரம்போகாதால்.

(இ - ள்.) கற்பு அழியா குலம் மகளை - (தன்கருத்துக்கு இணங்கிக்) கற்பழியாமற்போன உயர்குலத்துப்பிறந்த பெண்பாலான சீதையை, கொன்

ரூனே - (இராவணன்) கொன்றுவிட்டானோ? கொடுந் தொழிலால் - (மனித ரைத்தின்னுதலாகிய தங்கள் ஜாதிக்குஉரிய) கொடியசெயலால், தின்றானோ - (அவளைத்) தின்றுவிட்டானோ? அப்புறத்தே சிறை செறித்தானோ - (இந்த இலங்கைக்கு) அப்பால் (எங்கேனுங் கொண்டுபோய்ச்)சிறைக்காவலிற் பத்தி ரப்படுத்தி வைத்திருக்கின்றானோ? அறியேன் - (இந்தமூவகையில் உண்மை யாகநிகழ்ந்தது இன்னதென்று) அறிகின்றேனில்லை; ஒன்றானும் உணா கிலேன் - ஒருவகையாலும் அறியமாட்டாத யான், இனி மீண்டு போய் என் உரைக்கேன் - இனித் திரும்பிச்சென்று (இராமபிரானிடம்) யாதுசொல் வேன்? பொன்றாத பொழுது - (நான்) சாவாமலிருந்தால், எனக்கு - (சீதை யைத்தேடிவந்த) எனக்கு, கொடுந் துயரம் போகாது - கொடியதுன்பம் நீங்கு கின்றதில்லை; (எ - று)—ஆல் - ஈற்றசை; இரக்கமுமாம்.

கற்பழியாமை, கொல்லுதற்குந் தின்னுதற்குங் காரணமாகுதலால், ஸாபி ப்ராயவிசேஷணம்; கருத்துடையடைமொழியணி. கொடுந்தொழில் - நரமாம்ஸ பக்ஷணஞ்செய்தல். செறித்தல் - அடக்கிவைத்தல். ஒன்றானும் - பிரதியக்ஷம், அநுமானம், சப்தம் முதலிய பலவகைப்பிரமாணங்களுள் எந்த அளவையினு லாவது என்றபடி; ஒன்றானும் - சிறிதாயினும் என்றலுமாம். 'பொன்றாத பொழுது' என்பது, எதிர்காலவினையெச்சவாய்பாடுபட நின்றது. நான் இறப்ப தன்றித் துன்பம்நீங்கும்வழி யில்லையென்பது, ஈற்றடியின்பொருள். 'சேர்த் தானோசிறைசிறியே, ஒன்றாலுமுணர்கிலேன்' என்று பிரதிபேதம்.(உ௨௬)

உ௨௭. கண்டுவருமென்றிருக்குங்காகுத்தன் கவிகுலக்கோன்
கொண்டுவருமென்றிருக்கும்யானிழைத்தகோளிதுவால்
புண்டரிகநயனத்தான்பாலின்னம்போவேனோ
விண்டவரோடுடன்வீயாதியான்வாளாவிளிவேனோ.

(இ - ள்.) (என்னைக்குறித்து),—காகுத்தன் - இராமபிரான், கண்டு வரும் என்று இருக்கும் - '(இவன் சீதையைப்) பார்த்தேமீள்வன்' என்றுநினைத்திருப் பன்; கவி குலம் கோன் - குரங்குகளின் கூட்டத்துக்குத் தலைவனான சுக்கிரீ வன், கொண்டுவரும் என்று இருக்கும் - '(இவன் சீதையை) எடுத்துக்கொண்டு வருவன்'. என்று எண்ணியிருப்பன்; (அங்ஙனம் அவர்கள் மிக்கநம்பிக்கையுட னிருக்க), யான் இழைத்த கோள் இது - நான்செய்த செயலோ இங்ஙனம் பய னற்றதாயிருக்கின்றது; இன்னம் - இவ்வாறானபின்பு, புண்டரிகம் நயனத் தான்பால் போவேனோ - செந்தாமரைமலர்போலுந் திருக்கண்களையுடையவ னான இராமபிரானிடத்து யான் செல்லக்கடவேனோ! விண்டவரோடு உடன் வீயாது - (என்னோற்) பிரியப்பட்டவரான (அங்கதன் முதலான) வானரவீரர்கள் இறக்கமுயன்றபோது அவர்களுடனே இறந்தொழியாமல், யான் வாளா விளி வேனோ - நான் (இங்ஙனம்வந்து) வீண்பட்டு இறக்கக்கடவேனோ! (எ - று.) —ஆல் - ஈற்றசை.

'சீதையைத்தேடிக்கண்டு செய்தியறிந்துவா' என்பதே கட்டளையாயினும், 'இட்டுவாவென்றாற் சுட்டுவந்தபிள்ளை' என்னும்படி கட்டளையினும் அதிக மாகத் தொழில்செய்யவல்ல அநுமனது ஆற்றலை நெடுநாளாய் அறிந்துள்ள

னாதலின், கவிகுலக்கோன் 'கொண்டுவரும்' என்றிருக்குமென்க. அவன் அங்ஙனம் அநுமனது திறத்தை யறிந்திருத்தல், அவன் அநுமனை அனுப்பியபோது கூறிய வார்த்தைகளால் வெளியாம்; அவற்றை, கிஷ்கிந்தாகாண்டத்து நாடவிட்டபடலத்திற் காண்க. யான் இழைத்த கோள் இது - நான்வந்துசாதித்த காரியம் இத்தன்மையது. சீதையைத்தேடுதற்பொருட்டுத் தென்திசைநோக்கி யனுப்பப்பட்டு இரண்டுவெள்ளம் வாநரசேனையுடனே வந்த அநுமான் அங்கதன் ஜாம்பவான் முதலிய வீரர்கள் தமக்குச் சுக்கிரீவன் அளித்த ஒருமாதத் தவணையளவும் பலவிடங்களில் தேடிப்பார்த்தும் சீதையைக்காணாராய் 'இப் பயனில்செய்தியை மீண்டுசென்று சொல்லுதலினும் இறத்தலே நலம்' என்று பேசிக்கொண்டிருக்கையில், ஜடாயுவின் தமையனான சம்பாதிசமீபித்து 'சீதை இலங்கையிற்சிறைவைக்கப்பட்டிருக்கின்றாள்' என்றுசொன்ன வார்த்தையைக் கேட்டு ஆலோசித்து அநுமனை யனுப்ப, அவன் கடல்கடந்து வரலாயினனென்ற விவரம் கிஷ்கிந்தாகாண்டத்திற் பரக்கக்கூறப்பட்டது. வாளா - பயனின்மைகுறிப்பதோ ரிடைச்சொல். இனி, ஈற்றடிக்கு - பகைத்தவர்களான இவ்விராக்கதர்களைக் கொன்று அவர்களுடன் யானும் இறப்பேனே யல்லாமல் நான்மாத்திரம் சும்மா இறப்பேனோ? என்று உரைப்பாருமுளர். 'நயனத்தான் பாவினியான்போவேனோ' என்று பிரதிபேத முண்டு. (உ௨எ)

௨௨அ. கண்ணியநாள் கழிந்துளவாற்கண்டிலெனாற்கனங்குழையை
விண்ணடைதுமென்றுரையாண்டிருத்திவிரைந்தயா
னெண்ணியதுமுடிக்ககிலேன்யான்முடியா திருப்பேனோ
புண்ணியமென்றொருபொருளென்னுழைநின்றும்போயதால்.

(இ - ள்.) கண்ணிய நாள் கழிந்துஉள - (பிராட்டியைத் தேடிவருதற்குத் தவணையாகச் சுக்கிரீவனாற்) குறிக்கப்பட்ட நாள்களோ முன்னமே கழிந்து போயின; கனம் குழையை கண்டிலென் - பிராட்டியை (நான்) பார்த்தேனுமில்லை; விண் அடைதும் என்றுரை ஆண்டு இருத்தி விரைந்த யான் - 'இறந்து பரலோகமடைவோம்' என்று பிரயத்தனப்பட்ட அங்கதன் முதலான வீரர்களை அவ்விடத்திலேஇருக்கச்செய்து விரைவுகொண்டுவந்த யான், எண்ணியது முடிக்ககிலேன் - நினைத்துவந்தகாரியத்தை முடிக்கமாட்டாமற்போனேன்; யான் முடியாது இருப்பேனோ - (அங்ஙனமான)யான்(அத்தொழிலைப்) பூர்த்திசெய்யாது உயிர்வாழ்ந்திருப்பேனோ! புண்ணியம் என்ற ஒரு பொருள் என் உழைநின்றும் போயது - நல்வினையென்னும் ஒருபொருள் என்னிடத்தினின்று நீங்கிவிட்டதுபோலும்; (எ - று.)—'ஆல்' மூன்றும் - ஈற்றசை.

சுக்கிரீவன் தவணைகுறித்த ஒருமாதகாலம் கழிந்தும் சீதையைக்காணாமையால் யாமனைவரும் இறந்தொழிவோமென்று அங்கதன்முதலிய வீரர்களனைவரும் ஆலோசித்தபொழுது அநுமான் 'அத்தவணைகடந்துபோனாலும், நாம் பிராட்டியைக் கண்டு மீள்வோமாயின், சுக்கிரீவன் தவணைகடந்ததற்காகக் கோபிக்கமாட்டான்' என்று சொல்லிப் பிறகு சம்பாதியின்சொற்படி கடல் கடந்துவந்தனனாதலால், 'கண்ணியநாள்கழிந்துள' என்றதனை யடுத்து 'கண்டிலேனாற் கனங்குழையை' என்று இரங்கினன். 'கண்டிலமாற் கனங்குழையை

என்ற பாடத்துக்கு - முதலடியுமுட்பட வானரவீரர்வார்த்தையாம். 'யான்முடியா திருப்பேனோ' என்பதற்கு யான் இறவாமலிருப்பேனோ என்றும் பொருள் கொள்ளலாம். முடித்தல் - நிறைவேற்றுதல்; முடிதல் - இறத்தல். முந்தினவுரையில் 'முடியாது' என்பது - பிறவினையெதிர்மறை வினையெச்சமும், பிந்தினவுரையில் தன்வினையெதிர்மறை வினையெச்சமுமாம். நல்வினைப்பயன் சிறிதேனுமிருந்தால் இங்ஙனம் கருதியசெயல் கைகூடாமற்போகாதென்பது, ஈற்றடியி னுட்கோள். (௨௨௮)

௨௨௯. எழுநூறோசனைசூழ்ந்தெயில்கிடந்ததிவ்விலங்கை
வாழுமாமன்னுயிர்யான்காணாதனவில்லை
யூழியான்பெருந்தேவியொருவரையும்யான்காணே
னாழிதாயிடராழியிடைவீழ்ந்தழிவேனோ.

(இ - ள்.) எழுநூறு யோசனை சூழ்ந்து எயில் கிடந்தது - எழுநூறுயோசனையளவு சுற்றிலும் மதிலுள்ளதாகிய, இ இலங்கை - இந்த லங்காபுரியிலே, வாழும் - வசிக்கின்ற, மா மன் உயிர் - சிறந்த பெரிய பிராணிகளுள், யான் காணாத இல்லை - நான் பாராதவை எவையுமில்லை; ஊழியான் பெருந்தேவி ஒருவரையும் யான் காணேன் - உலகமனைத்துக்குந் தலைவனான ஸ்ரீராமபிரானது சிறந்த மனைவியாகிய சீதாபிராட்டியாரொருவரைமாத்திரம் நான் கண்டேனில்லை; (அங்ஙனங் காணாமல்), ஆழி தாய் இடர் ஆழியிடையே வீழ்ந்து அழிவேனோ - ஒருகடலைத் தாண்டிவந்து துன்பமாகிய கடலைக் கடக்கமாட்டாமல் அதில்விழுந்து அழிந்துவிடக்கடவேனோ! (எ - று.) - மற்று அசை.

'எழுநூறோசனை சூழ்ந்தெயில்கிடந்த திவ்விலங்கை'—''உட்புலனெழுநூறென்ப யோசனை'' என்று கடல்தாவுபடலத்தில் வந்ததுங் காண்க; இலங்கையின் சுற்றளவு, எழுநூறுயோசனைதூர மென்க. ஜாநகியார் இவ்விலங்கையிலிருந்தால், எல்லாவுயிர்களையுங் கண்ட யான் அவரைக் காணாதிருக்கக்கூடுமோவென்பது, இடையிரண்டடிகளின் கருத்து. மா மன் உயிர் - பெருமையுள்ளனவும் நிலைபெற்றனவுமான உயிரொன்றுகொண்டு, முறையே சரமும் அசரமுமானவையென்று உரைப்பாரு முளர். ஊழி - உலகம். இச்சொல்லுக்கு - காலம், ஊழ்வினையென்ற பொருள்களு மிருத்தலால் 'ஊழியான்'என்றதற்கு - காலத்துக்குத் தலைவனென்றும், விதிக்குத் தலைவனென்றும் பொருள்கொள்ளவுமாம். பெருந்தேவி - பெரியபிராட்டியார். இயற்கைக்கடலினும் இவ்விடர்க்கடல் பெரிதாயிற்றென்பது, ஈற்றடியாற் போதரும். (௨௨௯)

௨௩௦. வல்லரக்கன்றனைப்பற்றிவாயாறுகுருதியுகக்
கல்லரக்குங்கரதலத்தாற்காட்டென்றுகாண்கேனோ
வெல்லரக்குமயினுதிவேலிராவணனுமிவ்வூரு
மெல்லரக்கினுருக்கியுகவெந்தழலால்வேய்கேனோ.

(இ - ள்.) வல் அரக்கன்தனை பற்றி - கொடிய இராக்கதனான இராவணனைப் பிடித்து, வாய் ஆறு குருதி உக - (அவனது) வாய்வழியாக இரத்தம்

பெருக, கல் அரக்கும் கரதலத்தால் காட்டு என்று - கல்லையும் அழிக்கவல்ல (என்) கைகளால் '(பிராட்டியைக்) காட்டு' என்றுசொல்லி(க் கழுத்து அணங்களில் அறைந்து வருத்தி), காண்கேனே - (இந்த நிர்ப்பந்தத்தால் அவன் காட்டக்) காணக்கடவேனோ? (அன்றி), எல் அரக்கும் - சூரியனொளியையும் அழிக்கின்ற, அயில் நுதி வேல் - கூரியநுனியுள்ள வேலாயுதத்தையுடைய, இராவணனும்—, இ ஊரும் - இந்த லங்காபுரியும், மெல் அரக்கின் உருக்கி உக - மென்மையான அரக்குப்போல உருகிக் கரையும்படி, வெம் தழலால் வேய்கேனோ - வெவ்விய நெருப்பினால் மூடக்கடவேனோ? (எ - று.)

ஆறு - வழி; இனி, வாயினின்று குருதி உக - வாயினின்று ஆறுபோல இரத்தம்பெருக எனினுமாம். 'கரதலத்தால்' என்பதை, 'வல்லரக்கன்றனைப் பற்றி' என்றதனோடுங் கூட்டலாம். எல் - ஒளி; சிறப்பினால், சூரியனொளியைக் குறித்தது. மெல் அரக்கு - நெகிழுந்தன்மையதான அரக்கு என்றபடி. 'உருகியுக' என்பதும் பாடம். (உகூ0)

உகூக. வானவரேமுதலோரைவினவுவெனேல்வல்லரக்கன்
றானொருவனுளனாகவுரைசெய்யுந்தருக்கிலரா
லேனையர்களெங்குரைப்பாரெவ்வண்ணந்தெரிகேனோ
வூனழியாநீங்காதவுயிர்சுமந்தவுணர்விலேன்.

(இ - ள்.) வானவரே முதலோரை வினவுவென் எல் - தேவர்கள்முதலான நல்லவர்களை(க் கண்டு 'சீதையை இராவணன் எவ்விடத்திற் சிறைவைத்திருக்கின்றான்?' என்று)விசாரிப்பேனானால், (அவர்கள்), வல் அரக்கன் தான் ஒருவன் உளன் ஆக உரைசெய்யும் தருக்கு இலர் - கொடிய இராக்கதனான இராவணனொருத்தன் இருப்பதனால் (அவனுக்கு எதிராகச் சீதையிருக்கின்ற இடத்தை எனக்குச்) சொல்லும்படியான துணிவில்லாதவர்களா யிருக்கின்றார்கள்; ஏனையர்கள் எங்கு உரைப்பார் - மற்றையோர் [அசுரர்கள்முதலிய அவனைச்சேர்ந்தவர்கள்] (பிராட்டியிருக்குமிடத்தை) எங்ஙனஞ்சொல்வார்கள்? ஊன் அழிய-(இத்தன்மைத்தான கவலையினால்) உடம்பு சோர்வடைய, நீங்காத உயிர் சுமந்த நீங்கிப்போகாத உயிரைச் சுமந்துகொண்டிருக்கின்ற, உணர்வு இல்லேன் - அறிவில்லாதவனான யான், எ வண்ணம் தெரிகேனோ - எந்தவகையால் (சீதை நிலையைத்) தெரிந்துகொள்வேனோ! (எ - று.)— ஆல் - ஈற்றசை.

'வானவரேமுதலோரை' என்றது, தேவர்கள்முதலாக நமக்கு அநுகூலராயுள்ள சாதுசனங்களை யென்றவாறு. இனி, 'வானவரேமுதலோரை' என்பதற்கு - தேவர்கள்முதலிய விசேஷஜ்ஞரை யென்று கொண்டால், 'ஏனையர்கள்' என்றது - மற்றைச் சாமானியசனங்களென்று ஆகும். ஏ - உயர்வுசிறப்பு. உளனாக - உயிரோடிருக்குமளவு மென்றபடி. தருக்கு - தைரியம். 'சுமந்த' என்ற சொல்லின் ஆற்றலால், உயிர்வைத்துக்கொண்டிருத்தலை வீண் பாரமாகக் கருதினன் அநுமனென்பது தோன்றும். நான் இறவாமல் உயிர்வைத்துக்கொண்டிருத்தல் பேதைமை யென்பது பட, 'உணர்விலேன்' என்று தன்னைத்தானே வெறுத்துக்கொண்டனன். (உகூக)

உ௬உ. எருவைக்குமுதலாயசம்பாதியிலங்கையிலத்
திருவைக்கண்டனெனென்றனவனுரையுஞ்சிதைந்ததால்
தருவைக்குநெடுநகரைக்கடலிடையேகரையாதென்
னுருவைக்கொண்டின்னமுநானுளனாகியுழல்கேனோ ?

(இ - ள். எருவைக்கு முதல் ஆய சம்பாதி - கழுகுகளுக்குத் தலைவனான சம்பாதியென்பவன், இலங்கையில் அ திருவை கண்டனென் என்றான் - 'இலங்காபுரியிலே அந்தச் சீதாபிராட்டியைப் பார்க்கின்றேன் யான்' என்று சொன்னான்; அவன் உரையும் சிதைந்தது - அவனுடைய வார்த்தையும் பொய் யாய்ப்போயிற்று; தரு வைக்கும் நெடு நகரை (பிராட்டியை எனக்குப் புல னாகாதபடி தனது) அகத்தே மறைத்துவைத்திருக்கின்ற பெரிய இவ்விலங்கா புரியை, கடலிடையே கரையாது - இக்கடலிலே கரைத்துப் பிராட்டியைக் கண்டுபிடியாமல், இன்னமும் நான் என் உருவை கொண்டு உளென் ஆகி உழல் கேனோ - இன்னமும் நான் எனது உடம்பைக்கொண்டு பிழைத்திருக்கின்றவ னாய் (இங்ஙனம்) வருந்தக்கடவேனோ! (எ - று.)—ஆல் - ஈற்றசை.

ஸம்பாதி-சூரியசாரதியான அருணனது புதல்வன், ஜடாயுவின் தமையன். கழுகரசன் ஸம்பாதி ஜடாயு என்ற இருவரும் பூர்வத்தில் தேவலோகத்தைப் பார்க்கக் கருதி வானத்தி லுயரப் பறந்து செல்லுகையில், சமீபித்த சூரியனது கிரணங்கள், முன்னே பறந்துசென்ற ஜடாயுவை வெதுப்ப, அவன் 'அண்ணா! என்னைக் காப்பாற்று' என்று ஓலமிட, சம்பாதி அவனுக்கு மேலே பறந்து தன் சிறகிரண்டையும் விரித்து அவன்மேல் வெயில் தாக்காதபடி நிழல் செய்து தம்பி யைப்பாதுகாத்து அதனால் தனது இறகுகளும் உடம்பும் தீய்ந்து பூமியில் விழும் போது, சூரியபகவான் கண்டு கருணைகொண்டு, 'இனி ஒரு காலத்திற் சீதையைத் தேடிவரும் வாநரவீரர் உன்னைக்கண்டு ராமநாமோச்சாரணஞ் செய்தால் அப் பொழுது உனக்கு இறகுகள் வளரும்: நீ இனிது எழுந்திருப்பாய்' என்று அநுக் கிரகித்தனன். பிறகு, மகேந்திரகிரியின் சாரலில் மேலகஸாரங்க மகாருஷியின் ஆச்சிரமத்தருகில் விழுந்து, சிறகிழந்த வருத்தத்தாற் பிராணத்தியாகஞ் செய்து கொள்ள யத்தனிக்கையில், அந்த முனிவன் வந்து தேறுதல் கூறியதனால், சம் பாதி தம்பியைக் கழுகரசனுகுமாறு அனுப்பிவிட்டுத் தான் அங்கு உயிர்வைத் திருக்கலானான். இங்ஙனம் நெடுங்காலஞ்செல்ல, பின்பு சுக்கிரீவன் கட்டளைப் படி சீதையைத் தேடிக்கொண்டு தென்திசை நோக்கிச்சென்ற அநுமான் அங் கதன் முதலிய வாநரவீரர்கள் பலவிடங்களில் தேடிக் காணாராகி மகேந்திரமலை யைச்சார்ந்து 'தவணைகடந்து விட்டதனால், இனி நாம் வீணே உயிர்வைத்துக் கொண்டிருத்தலிற் பயனில்லை' என்று உயிர்விடத்துணிந்து பேசிக்கொண்டிருக் கையில் 'இன்னமும் சீதையைத் தேடிப்பார்ப்போம்; அவள் அகப்படாவிட்டால் முடிவில் அப்பிராட்டியினிமித்தமாய்ப் போரிலுயிர்துறந்த ஜடாயுவைப்போல நாமும் உயிர்நீத்தலே நலம்' என்று அநுமான்சொன்ன வார்த்தையைக் கேட்டுச் சம்பாதி தன் தம்பியின் மரணத்தினால் வருந்தி அருகில்வந்து அவர்களைவினவிச் செய்தியறிந்து அவர்களோடு அளவளாவி, அவர்கள் செய்த ராமநாமோச்சாரணத் தினால் இறகுமுளைக்கப்பெற்றவனாகி, அவர்கள் வந்[illegible]காரியத்தை வினவி, 'சீதை

யை இராவணன் தரையுடன் பெயர்த்தெடுத்துக்கொண்டுபோய் இலங்கையிற் சிறைவைத்திருக்கின்றான்; அதோ சீதை எனக்குத்தெரிகின்றாள்; அங்குச்சென்றால் நீங்கள் பார்க்கலாம்' என்று கூறிப்போயினன் என்ற விவரம், கிட்கிந்தா காண்டத்துச் சம்பாதிப்படலத்திற் பாக்கக்கூறப்பட்டது.

திரு - திருமகளின் அவதாரமான சீதை. கரு - கர்ப்பம்: நடு. இனி, கரு வைக்கும் என்பதற்கு - (இராவணன்முதலிய அரக்கர்களைத்) தனதிடத்தே வைத்துள்ள என்றும், பெருமைகொண்ட என்றும் பொருள்கூறலாம்; தெய்வத்தச்சனை விசுவகருமனால் நிருமிக்கப்பட்ட என்று உரைப்பாரு முளர். (உ௩உ)

௨௩௩. வடித்தாய்பூங்குழலாளை வானறியமண்ணறியப்
பிடித்தானிவ்வடலரக்கனெனுமாற்றம்பிழையாதா
லெடுத்தாழியிலங்கைதனையிருங்கடலினிட்டிவனை
முடித்தாலேயான்முடிதன்முறைமன்றவென்றுணர்வான்.

(இ - ள்.) 'வடித்து ஆய் பூ குழலாளை - தேர்ந்தெடுத்த மலர்களைச் சூடிய கூந்தலையுடையவளான சீதையை, வான் அறிய மண் அறிய - மேலுலகத்தார் அறியவும் இந்நிலவுலகத்தார் அறியவும், இ அடல் அரக்கன் பிடித்தான் - இந்தக் கொடிய ராக்கதன் [இராவணன்] கவர்ந்துசென்றான்', எனும் - என்று பிரசித்தமாயுள்ள, மாற்றம் - வார்த்தை, பிழையாது - தவறாது; ஆல் - ஆதலால், ஆழி இலங்கைதனை எடுத்து இருங் கடலின் இட்டு - கடல் சூழ்ந்த இவ்விலங்காபுரியைப் பெயர்த்து இந்தப்பெரியகடலினுள்ளே போகட்டு, இவனை முடித்தாலே - இவ்விராவணனை அழித்தபின்பே, யான் முடிதல் - நான் இறத்தல், மன்ற முறை - நிச்சயமாய் நியாயமாகும்', என்று உணர்வான் - என்று (தனக்குள்) ஆலோசிப்பவனாயினன், (அநுமான்); (எ - று.)

மலர்கள் பலவுளவாயினும் பிராட்டியினது கூந்தலின் தகுதிக்கு ஏற்ற மலர்களைத் தேடியெடுத்தலின் அருமை தோன்ற, 'வடித்து ஆய் பூ' எனப்பட்டது. வான், மண் - இடவாகுபெயர்கள். ஏ - தேற்றம். 'மன்ற' என்ற இடைச்சொல் தேற்றமுணர்த்துதலை, "மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும்" என்ற தொல்காப்பியத்தா லுணர்க. ஆல் - ஈற்றசை. (உ௩௩).

[அநுமான் அசோகவனத்தைப் பார்த்தல்.]

௨௩௪ எள்ளுறையுமொழியாமல்யாண்டையுமுளனாய்த்தன்
னுள்ளுறையுமழகனைப்போலெம்மருங்குமுலாவினான்
புள்ளுறையுய்யானத்தைபுறநோக்கியயல்போவான்
கள்ளுறையுமலர்ச்சோலையயலொன்றுகண்ணுற்றான்.

(இ - ள்.) எள் உறையும் ஒழியாமல் - ஓரெள்ளளவு இடமும் தப்பாமல், யாண்டையுளும் உளன் ஆய் - எல்லாவிடத்திலும் வியாபித்துள்ளவனாய், தன் உள் உறையும் - தனது மனத்திலும் வசிக்கின்ற, அழகனை போல் - ஸர்வாங்க சுந்தரனாகிய திருமாலைப்போல, எ மருங்கும் உலாவினான் - (அவ்விலங்கை

யில்) எல்லாவிடங்களிலுஞ்சென்று (பிராட்டியைத்) தேடியவனான அநுமான், —(இங்ஙனம் ஆலோசிக்கையில்), புள் உறை உய்யானத்தை உற நோக்கி - வண்டுகள் சஞ்சரிக்கப்பெற்ற சிங்காரப்பூஞ்சோலையையடைந்து தேடக்கருதி, அயல் போவான் - அப்பாற் செல்பவனாய், அயல் - சமீபத்தில், கள் உறையும் மலர் சோலை ஒன்று கண்ணுற்றான் - தேன்பொருந்திய மலர்களையுடைய ஒருசோலையைப் பார்த்தான்; (எ - று.)

"எங்கு முளன் கண்ணன்" என்றபடி எல்லாவிடங்களிலும் அந்தர்யாமியாய் வியாபித்திருப்பவனும் அநுமானால் இடைவிடாது மனத்திற்கொண்டு தியானிக்கப்படுபவனுமான ஸ்ரீமகாவிஷ்ணுவை இப்படலத்தின் ௧0௨, ௧௩௪-ஆஞ் செய்யுள்களிலும் அநுமனுக்கு உவமைகூறியவை காண்க; ௧0௨ ஆஞ் செய்யுளில் ஆங்காங்குச்செல்லுகையில் நிறம் மாறுபடுதற்கும், ௧௩௪ -ஆஞ் செய்யுளில் சிறுபொருளோடு பெரும்பொருளோடு வாசியற எதனுள்ளும் புகுதற்கும் உவமைகூறி, இங்கு, ஒரிடமும் மிச்சப்படாதபடி அகத்திலும் புறத்திலு மொப்ப எங்கும் வியாபித்தற்கு உவமைகூறுகின்றாராதலின், அவற்றோடு இது கூறியதுகூறலாகாது. இலங்கையிலுள்ள மாளிகைகளிலெல்லாம் பிராட்டியைத்தேடிமுடித்த அநுமான், பிறகு அந்நகரத்து உத்தியானவனத்திலுஞ்சென்று தேடவேண்டுமென்று கருதி அதனை நாடிச்செல்லுகையில், அசோகவனத்தைப் பார்த்தனனென்க. 'நோக்கி' என்றது, நோக்குஅல்நோக்கம். கண்ணுறுதல் - நோக்குதல்.

முதலடியில், உறை - இடம், உம் - இழிவுசிறப்பு. 'புள்' என்ற பறவைப் பொதுப்பெயர், சிறப்பாய், வண்டுக்கும் வழங்கும். உய்யானம் - உத்யாநமென்ற வடசொல்லின் சிதைவு; பலசனங்கட்கும் பொதுவான அரசனது சிங்காரப்பூஞ்சோலை. 'ஒருவனைப்போல்' என்றும், 'புள்ளுறையுமாவனத்தினதர்நோக்கிப்புறம் போவான்' என்றும் சிலபிரதிகளில் இருக்கின்றது. (௨௩௪)

இப்படலத்தின் முதல் ௪0 - செய்யுளளவும் 'நிலாத்தோற்றுபடலம்' என்றும், அதற்குமேல் ௩௫-செய்யுள்கள் 'இலங்காதேவிப்படலம்' என்றும், மற்றை ௧௩௩ - செய்யுள்கள் 'ஊர்தேடுபடலம்' என்றும் சில பிரதிகளிற் காணப்படுகின்றது.

---

மூன்றாவது

## காட்சிப்படலம்.

சிறியதிருவடி [அநுமான்] லங்காநகரத்தில் அசோகவனத்தில் சிம்சுபா விருக்ஷத்தின்கீழ் ராக்ஷசிகள்நடுவில் இருந்த சீதாபிராட்டியாரைக் கண்டு களித்த கதையை யுணர்த்தும் பாகம். இத்தொடர்மொழி, இரண்டனுருபும் பொருளும் உடன்தொக்கதொகை. காட்சி - காணுதல்; தொழிற்பெயர்.

[அநுமான் அப்போது மனத்தில் நினைத்தல்.]

க. மாடுநின்றவம்மணிமலர்ச்சோலையைமருவித்
தேடியவ்வழிகாண்பெனேற்றீருமென்சிறுமை
யூடுகண்டிலெனெனிற்பின்னருரியதொன்றில்லை
வீடுவென்மற்றிவ்விலங்கன்மேலிலங்கையைவீட்டி.

(இ - ள்.) மாடு நின்ற - அருகிற் பொருந்திய, அ - அந்த, மணி - அழகிய, மலர் சோலையை - பூந்தோட்டத்தை, மருவி அடைந்து, அ வழி - அவ்விடத்தில், தேடி காண்பென் எல் - தேடிச் (சீதையைப்) பார்ப்பேனாயின், என் சிறுமை - எனது துன்பம், தீரும் - நீங்கிவிடும்; ஊடு - அச்சோலையினுள்ளும், கண்டிலென் எனின் - (பிராட்டியைக்) காணாதவனானேனாயின், பின்னர் - பின்பு, உரியது ஒன்று இல்லை - (செய்தற்கு) உரிய தொழில் வேறு யாதும் இல்லை; இலங்கையை - லங்காநகரத்தை, இ விலங்கல் மேல் - இந்தத் திரிகூடமலையின்மேலே, வீட்டி - நாசப்படுத்தி, வீடுவேன் - (யானும்) உயிர்விடுவேன்; (எ - று)— 'வீடுவேன்' என்பது, வருங் கவியில் 'என்று' என்னும் வினையெச்சத்தோடு முடியும்.

இலங்கைமுழுவதும் தேடியுஞ் சீதையைக் காணாத அனுமான், அப்போது தேடாது மிச்சமாயுள்ள இடம் அசோகவனிகையேயென்று அறிந்து, 'சீதையை இங்குக் காணக்கூடும். அவ்வாறு கண்டால் என் மனத்துயரமெல்லாம் நீங்கும். ஒருகால் இங்கும் சீதாபிராட்டி காணப்படாளாயின், இனித் தேடுதற்குரிய இடமேயில்லை; ஆதலால், சீதையைக் காண்பாமென்ற எண்ணத்தையே ஒழித்துவிட்டு, இவ்விடத்தினின்று திரும்பவேண்டியதுதான்: சீதையைக்காணாமல் கொடுத்த தவணையும் கடந்து திரும்பிக் கிஷ்கிந்தையிலுள்ள சுக்கிரீவனைச் சேர்ந்து, அங்கே பலவகை வருத்தத்திற்கும் உள்ளாவதைவிட, சீதையைக்கவர்ந்த இராவணன் வசிக்கின்ற இலங்கைக்கே நாசமுண்டாகும்படி பழிவாங்கிச் சிறிது மனச்சாந்தியடைந்து, பின்பு உயிரைவிடுவதே எனக்குச் செய்தொழில்' என்று கருதினனென்பதாம்.

அம் மணி எனப் பிரித்து, அம் - அழகிய, மணி - நீலமணிபோலக் கரிய, சோலை என்றுமாம். சிறுமை - பிராட்டியைக் காணாமையால் உண்டானது. வீடுவேன் - நீட்டல்விகாரம். மற்று - வினைமாற்று. விலங்கல்மேல் இலங்கையை வீட்டுதல் - லங்காநகரத்தை அடியோடு பெயர்த்து எடுத்து மலையின்மேல் தூக்கி விழுத்தி அழித்தல்; இனி, மலையின்மேலுள்ள லங்கையை (வேறுபலவகைகளாலும்) அழித்து மீளுவேன் என்றுமாம்.

இதுமுதற் பதினெட்டுக்கவிகள் - முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் மாச்சீர்களும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய நெடிலடி நான்குகொண்ட (காப்பியக்) கலித்துறைகள். (க)

[அநுமான் அசோகவனிகையைச் சேர்தல்.]

உ. என்றுசோலைபுக்கெய்தினனிராகவன்றூத
னென்றிவானவர்பூமழைசொரிந்தனருவந்தா

ரன்றவாளரக்கன்சிறையவ்வழிவைத்த
துன்றலோதிதன்னிலையினைச்சொல்லுவான்றுணிந்தாம்.

(இ - ள்.) என்று - என்று (இவ்வாறு) எண்ணி நிச்சயித்து, இராகவன் தூதன் - ஸ்ரீராமனது தூதனாகிய திருவடி, சோலை - அசோகவனத்தை, புக்கு எய்தினன் - போய்ச் சேர்ந்தான்; (அப்பொழுது), வானவர் - தேவர்கள், ஒன்றி - ஒருங்குகூடிநின்று, பூ மழை சொரிந்தனர் - மலர்களை மழைபோல (அவ்வநுமான்மேற்) பொழிந்து, உவந்தார் - சந்தோஷித்தார்கள்; (இதுநிற்க), அ வாள் அரக்கன் - ஆயுதங்களையுடைய அந்த ராக்ஷசன் [ராவணன்], அ வழி - அந்தச் சோலையில், சிறை வைத்த - காவலில் வைத்திருந்த, துன்று அல் ஓதிதன் - நெருங்கின இருள்போலக் கரிய கூந்தலையுடைய பிராட்டியினது, அன்று நிலையினை - அப்பொழுதை நிலைமையை, சொல்லுவான் துணிந்தாம் - (யாம் இனிச்) சொல்லத்துணிந்தோம்; (எ - று.)—அது, மேல் இருபத்தேழுகவிகளாற் கூறுகின்றார்.

அநுமான் அசோகவனத்தைச் சேர்ந்தவுடன், அதுகண்ட தேவர்கள் இனி இவ்வநுமான் சீதையைக்காணுதல்மூலமாகத் தாம் நெடுநாளாக எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் இராவணவதம் விரைவில் நிறைவேறுமென்ற களிப்பினால் ராமதூதனான அநுமான்மீது பூமாரி பொழிந்தன ரென்பதாம். பின்னிரண்டடி - கவிக்கூற்று. வாள் - மேல்வில் முதலிய மற்றை ஆயுதங்களுக்கும் உபலக்ஷணம்; இனி, வாள்போலுங் கொடிய அரக்கனுமாம். (௨)

[இதுமுதல் இருபத்தேழு கவிகள் - அரக்கியர் நெருங்க, சீதை மெலிந்து வருந்தியிருத்தலைக் கூறும்.]

௩. வன்மருங்குல்வாளரக்கியர்நெருக்கவங்கிருந்தார்
கன்மருங்கெழுந்தென்றுமோர்துளிவரக்காணு
நன்மருந்துபோனலனறவுணங்கியநங்கை
மென்மருங்குல்போல்வேறுளவங்கமுமெலிந்தாள்.

(இ - ள்.) வல் மருங்குல் - வலிய இடையையுடைய, வாள் அரக்கியர் - வாளேந்திய ராக்ஷசிகள்பலர், அங்கு இருந்தார் - அவ்விடத்தில் (சீதையைச்சுற்றிலும்) இருந்தவர்களாய், நெருக்க - அச்சமுறுத்திவருத்த, (அதனால்), கல் மருங்கு எழுந்து - கல்லினிடையே தோன்றி, என்றும் ஓர் துளி வர காணா - எப்பொழுதும் ஒருதுளி நீராயினுந் தன்மேல் துளிக்கப்பெறாத, நல் மருந்து போல் - நல்ல சஞ்சீவிமருந்து போல, நலன் அற - அழகுகெட, உணங்கிய - வாடிய, நங்கை - சீதை, மெல் மருங்குல் போல் - மெல்லிய (தனது) இடை போல, வேறு உள அங்கமும் - வேறாகவுள்ள (கை கால் முதலிய) அவயவங்களும், மெலிந்தாள் - (மிக) இளைத்தாள்; (எ - று.)

சீதாபிராட்டி அரக்கியர்களினிடையே நெருக்குண்டு, பலவாதங்களையும் தனது நாயகனாகிய இராமபிரானது கருணையைப் பெறாமல் மிகவும் மெலிந்து கிடந்தன ளென்பதாம். முன்பு சீதாபிராட்டிக்கு மருங்குலிலுமாத்திரம் இருந்த

மெலிவு, இராமபிரானைப் பிரிந்துள்ள இந்நிலையில் அம்மருங்குலினிடத்திற் போலவே பருத்திருந்த மற்றை யவயவங்களிலும் பரவுவதாயிற்றென, ஒரு சமத்காரந் தோன்றக் கூறியவாறு.

மண்ணில் முளைத்த மருந்தாயின் மழைநீர்த்துளியும் வளர்த்தற்குச்சொரியும் நீர்த்துளியுஞ் சிறிதும்பெறுதாயினும் நிலத்தின் தண்மையாற் சற்றேதளிர்த்தல் கூடுமாதலால், அதனை ஒழித்தற்கு, 'கன்மருங்கெழுந்து' என்றார். மூலிகைக்குக் கல்போலப் பிராட்டிக்கு அரக்கியர் நிரம்பிய இலங்கை தளிர்த்தற்கு ஏற்ற இடமன்றென்றபடி. மருந்து எப்பொழுதும் மழைநீர்த்துளியையே எதிர்பார்த்திருத்தல்போலச் சானகி அல்லும்பகலும் அனவரதமும் இராகவபெருமானது கருணைமழையின் துளியினது வருகையையே பார்த்திருக்கின்றனளென்க. அவ்வாறு பார்த்திருந்தவள் இதுகாறும் வாரக்காணமையால் வேறுஉய்யுமாறின்றி உணங்கினாள். சீதைக்குச் சிறைக் காவல்செய்பவராதலால், 'வாளரக்கியர்' என்று ஆயுதங்கூறினார்; இனி, வாள் - சாதியடையாகவுமாம். நங்கை - பெண்ணிற்சிறந்தவள். அங்கமும், உம்மை - இறந்ததுதழுவிய எச்சப்பொருளோடு, உயர்வுசிறப்புப்பொருளும், முற்றுப்பொருளும் உடையது. (௩)

௪. துயிலெனக்கண்களிமைத்தலுமுகிழ்த்தலுந்துறந்தாள்
வெயிலிடைத்தந்தவிளக்கெனவொளியிலாமெய்யாள்
மயிலியற்குயின்மழலையாண்மானிளம்பேடை
யயிலெயிற்றுவெம்புலிக்குழாத்தகப்பட்டதன்னாள்.

(இ - ள்.) மயில் இயல் - மயில்போன்ற சாயலையும், குயில் மழலையாள் - குயிலின் குரல்போன்ற [இனிய] குதலைச்சொல்லையும் உடையவளாகிய பிராட்டி,—துயில் என - தூக்கமென்று, கண்கள் முகிழ்த்தலும் இமைத்தலும் - கண்களை மூடுதலையும் விழித்தலையும், துறந்தாள் - விட்டவளும்,—வெயிலிடை தந்த - வெயிலிலே ஏற்றி வைத்த, விளக்கு என - தீபம்போல, ஒளி இலா - பிரகாசமில்லாத, மெய்யாள் - உடம்பையுடையவளும் ஆகி,— அயில் எயிறு - கூர்மையான பற்களையுடைய, வெம் - கொடிய, புலி குழாத்து - புலிகளின் கூட்டத்தினிடையில், அகப்பட்டது - அகப்பட்டுக்கொண்டதாகிய, மான் இளபேடை - ஒரு இளைய பெண்மானை, அன்னாள் - ஒத்தாள்; (எ - று.)

சீதாபிராட்டி, இராமபிரானைவிட்டுப் பிரிந்ததனாலுண்டான விரகவேதனையினாற் சிறிதுங் கண்ணுறக்கமின்றி, நீராடுதல்முதலியன இல்லாமையால் மேனிநிறம் மழுங்கி, அரக்கியர்கூட்டத்தில் அகப்பட்டுத் துடித்தாளென்க. இமைத்தல் - இங்கே, கண்களின் மூடிய இமைகளைத் திறத்தல். துயிலெனக் கண்களிமைத்தலும் முகிழ்த்தலுந் துறந்தாள் - தூங்குவதன்பொருட்டாகக் கண்களை மூடித்திறத்தலை நீங்கினவள்: உறக்கமற்றவளென்றபடி. மழலை நிரம்பாமென்சொல். இனிமைமிகுதிபற்றி, மழலையென்றார். ("ஒட்டகங் குதிரை கழுதை மரையிவை, பெட்டை யென்னும் பெயர்க்கொடைக் குரிய"), "பேடையும் பெடையு நாடி னொன்றும்" என்னும் மரபியற்சூத்திரத்தால், 'மான்பேடை' எனப்பட்டது. அயில் - வேல்போன்ற என்றுமாம். புலிக்குழாம் - அரக்கிமார் கூட்டத்துக்கும், மான்பேடை - சானகிக்கும் உவமம். (௪)

ரு. விழுதல்விம்முதல்மெய்யுறவெதும்புதல்வெருவ
லெழுதலேங்குதலிரங்குதலிராமனையெண்ணித்
தொழுதல்சோருதல்துளங்குதலுயங்குதலுயிர்த்த
லழுதலன்றிமற்றயலொன்றுஞ்செய்குவதறியாள்.

(இ - ள்.) (சீதாபிராட்டி), இராமனை எண்ணி - ஸ்ரீராமபிரானை நினைத்து, விழுதல் - கீழே விழுதலும், விம்முதல் - வாய்விட்டுப் புலம்புதலும், மெய் உற வெதும்புதல் - உடம்பு மிகவும் வெம்மைகொள்ளுதலும், வெருவல் - அஞ்சுதலும், எழுதல் - எழுந்திருத்தலும், ஏங்குதல் - மனங்கலங்குதலும், இரங்குதல் - பரிதவித்தலும், தொழுதல் வணங்குதலும், சோருதல் - தளர்தலும், துளங்குதல் - நடுங்குதலும், துயர் உழந்து துன்பத்தால் வருந்தி, உயிர்த்தல் - பெருமூச்சுவிடுதலும், அழுதல் - கண்ணீர்விட்டு அழுதலும், அன்றி - ஆகிய இவையேயல்லாமல், மற்று அயல் ஒன்றும் - வேறே யாதொன்றும், செய்குவது - செய்யத்தக்கதொழிலை, அறியாள் அறியாதவளானாள்; (எ - று.)

சீதாபிராட்டி இராமனைப்பிரிந்தவருத்தத்தால் கீழ்விழுதல் விம்முதல் முதலியன செய்வாளாயின ளென்பதாம்; இங்கே பிராட்டியினிடத்து விழுதல்முதலிய செயல்கள் தாமரைநூற்றிதழைக் குத்தும்முறையால் ஒருகாலத்தில் நிகழ்ந்தனவாகக்கூறியது கூட்டவணியின் பாற்படும்: இதனை வடநூலார் ஸமுச்சயாலங்காரமென்பர். தொழுதல்-கைகூப்புதல், திக்குநோக்கித் தெண்டனிடுதல். மற்று - இடைச்சொல்; பிறிதென்னும் பொருளது. செய்குவது, கு - சாரியை. (ரு)

சு. தழைத்தபொன்முலைத்தடங்கடந்தருவிபோய்த்தாழப்
புழைத்தபோலநீர்நிரந்தரம்பொழிகின்றபொலிவா
லிழைக்குநுண்ணியமருங்குலாளிணைநெடுங்கண்கள்
மழைக்கணென்பதுகாரணக்குறியெனவகுத்தாள்.

(இ - ள்.) இழைக்கும் நுண்ணிய மருங்குலாள் - பஞ்சின் நூலிழையினும் நுட்பமாகிய [மிகச்சிறுத்த] இடையினையுடைய பிராட்டி,—இணை நெடு கண்கள் - (தனது) ஒன்றோடொன்று ஒத்த கண்களிரண்டினையும், மழை கண் என்பது - 'மழைக்கண்' என்று சொல்லுவது,—நீர் அருவி - கண்ணீர்வெள்ளங்கள், தழைத்த - ஓங்கிவளர்ந்த, பொன் - பொன்நிறமாகிய தேமலையுடைய, முலை தடம் - தனங்களாகிய மலைகளை, கடந்து - தாண்டிப்பெருகி, போய் - ஓடி, தாழ - கீழே விழும்படி, (அவ்வெள்ளங்களை), புழைத்த போல - துளையினின்று வழிவன போல, நிரந்தரம் - இடைவிடாமல் [எப்பொழுதும்], பொழிகின்ற - சொரிகின்ற, பொலிவால் - மிகுதியினாலே (வந்த), காரணக்குறி என - காரணப்பெயரென்று, வகுத்தாள் - தெரிவித்தாள்; (எ - று.)

மழைபோல மிக்க குளிர்ச்சியான இயல்புடைமையால் மகளிர்கண்களெல்லாம் 'மழைக்கண்' என்று வழங்கப்படும்; பிராட்டியின் கண்களோ எப்பொழுதும் இடையறாது நீர்மழையைப் பொழிதலால் 'மழைக்கண்' என்று சொல்லப்படும்படி யாயின வென்றபடி. மழைபோலக் குளிர்ந்திருத்தலால் மகளிரிற்

சேர்ந்த சீதாபிராட்டியின் கண்கட்கும் வந்த மழைக்கணென்ற பெயர்க்குக் கண்ணீர்மழைபொழிவதனால் வந்த பெயரென்று வேறொருவகையாகக் காரணங் காட்டியது - பிரிநிலைநவிற்சியணியாகும்; ஒருகாரணத்தால் வந்த பெயர்க்கு வேறொருகாரணப்பொருள் கற்பித்துக்கூறுவது - இதனிலக்கணம்; இதனை, வடநூலார் நிருக்தி யென்பர்.

பொன் - அதன்நிறமான சுணங்குக்கு உவமவாகுபெயர். அருவியென்றதற்கு ஏற்ப, தடம் - மலையென்று கொள்ளப்பட்டது. கண்ணீரருவி இரண்டாதலால், 'புழைத்தபோல' என உபமானத்தையும் பன்மையாகக் கூறினர். 'இணைக்கண்கள்' என்றதனால், பிராட்டியின் கண்களுக்கு வேறு உவமை இல்லையா தென்றபடி. காரணக்குறி - ஒருகாரணத்தால்வரும் பெயர்; இடுகுறிக்கு எதிர்மறை. (௬)

௭. அரியமஞ்சினோடஞ்சனமுதலின்மையதிகங்
கரியகாண்டலுங்கண்ணினீர்கடல்புகக்கலுழ்வா
ளுரியகாதலினொருவரோடொருவரைப்புலகிற்
பிரிவெனுந்துயருருவுகொண்டாலனபிணியாள்.

(இ - ள்.) உலகில் - உலகத்தில், உரிய காதலின் - தக்க அன்பினையுடைய, ஒருவரோடு ஒருவரை - தலைமகனையுந் தலைமகளையும், பிரிவு எனும் - (ஒருவர் ஒருவரை விட்டுப்) பிரிதலென்கிற, துயர் - துன்பம் [விரகவேதனை], உருவு கொண்டால் அன - ஒருவடிவத்தை எடுத்துவந்து காணப்பட்டாற்போன்ற, பிணியாள் - விரகநோயையுடையாளான சீதாபிராட்டி, அரிய - அருமையான, மஞ்சினோடு - மேகமும், அஞ்சனம் - மையும், முதல் - முதலிய, அதிகம் கரிய - மிகக் கறுப்புநிறமுடையனவாகிய, இமை - இப்பொருள்களை, காண்டலும் - பார்த்தமாத்திரத்தில், (இராமபிரானது திருமேனி நினைப்புக்கு வருவதனால்), கண்ணின் நீர் கடல் புக - கண்களினின்றும் (தாரையாகப் பெருகுகிற) நீர் (ஆறாகி ஓடிக்) கடலைச் சேரும்படி, கலுழ்வாள் - அழுவாள்; (எ - று.)

இராமபிரானைப் பிரிந்த சீதாபிராட்டி அத்தலைவனது உருவத்துக்குப் போலியான காளமேகம் அஞ்சனம் முதலிய பொருள்களைக் கண்டபோது, தன் கணவனது நினைப்பு மிகவே, அப்பிரானைப் பெறமுடியாததுபற்றி மிகவும் கண்ணீர் பெருக மிக்கவிரகவேதனை யடைந்தன ளென்பதாம். சீதாபிராட்டி தன்னைக் கண்டவர் 'இவள் பிரிவுத்துயர்கொண்டு வருந்துகின்றாள்' என்று உணருமாறு தோன்றுகின்றா ளென்பது, பின்னிரண்டடியின் கருத்து. இராகவனது திருமேனிக்கு ஒப்பாகச்சொல்லத்தக்க பேறுபெற்றமைபற்றி, 'அரிய மஞ்சு' என்றார். 'அரிய' என்பதனை அஞ்சனத்தோடுங் கூட்டுக. கரிய - பெயர். ஒற்றுமைநயம் பற்றி, 'பிரிவெனுந்துயர்' என, காரணத்தைக் காரியமாக உபசரித்தார். முதலடியிற் பிராசம் காண்க. (௭)

௮. துப்பினுற்செய்தகைகொடுகால்பெற்றதுளிமஞ்
சொப்பினுன்றனைநினைதொறுநெடுங்கண்களுகுத்த

வப்பினணைந்தருந் துயருயிர்ப்புடையாக்கை
வெப்பினாற்புலர்ந்தொருநிலையுறாதமென் றுகிலாள்.

(இ - ள்.) (பின்னுஞ் சீதாபிராட்டி), துப்பினால் செய்த - பவழத்தாலாகிய, கை கொடு - திருக்கைகளையுடைத்தாய், கால் பெற்ற - (பவழத்தாலாகிய) திருவடிகளையும் உடைத்தான, துளி மஞ்சு - மழைத்துளிகளைப்பெய்கிற காளமேகத்தை, ஒப்பினான்தனை - தனக்கு உபமானமாகவுடைய ஸ்ரீராமனை, நினைதொறும் - எண்ணும் பொழுதெல்லாம், நெடு கண்கள் - நீண்ட திருக்கண்கள், உகுத்த - சிந்தின, அப்பினால் - நீர்ப்பெருக்கினால், நனைந்து - ஈரமாகி, (உடனே), அரு துயர் - (பொறுத்தற்கு) அரிய துன்பத்தினையும், உயிர்ப்பு - (அத்துன்பத்தாலாகிய) பெருமூச்சையும், உடை - உடைய, யாக்கை - தன்உடம்பினது, வெப்பினால் - வெப்பத்தால், புலர்ந்து - உலர்ந்து, (இவ்வாறு அடிக்கடி நனைதலும் உலர்தலுமாயிருத்தலால்), ஒரு நிலை உறாத - (எப்பொழுதும்) ஒருதன்மையாயிராத, மெல் துகிலாள் - மெல்லிய ஆடையையுடையாள்; (எ - று.)

இராமபிரானது பிரிவினாற், சீதாபிராட்டிக்குத் துயர்க்கண்ணீரும் வெப்பமும் தோன்றியதை, இதனாற் கூறுகின்றாரென்க. சீதாபிராட்டியினது கண்களினின்று துயரக்கண்ணீர் ஆறாய்ப்பெருகுவதனால் அந்தப்பிராட்டியினது ஆடை நனைவதும், அப்பிராட்டியின் திருமேனிவெப்பத்தால் நனைந்த அந்த ஆடை உடனே உலர்வதுமாயிற் றென்பதாம். இதனால், சீதாபிராட்டி இலங்கையிலிருந்தபோது கண்ணீரில் தினந்தோறும் மூழ்குவாளாயினளென்று கூறியவாறாயிற்று. சீதாபிராட்டியின் ஆடைக்குக் கண்ணீரினால் நனைவதும், திருமேனியின் வெப்பத்தால் உடனே உலர்ந்து முன்போலாவதுமாகிய செயலைக் கூறியது - தோல்வுநப்பேறலணியின்பாற்படும்; ஒருபொருள் தனதுகுணத்தை யிழந்து மீண்டும் அதனைப்பெறுவதைக் கூறுவது - இவ்வணியினிலக்கணம்; வடநூலார் இதனை 'பூர்வரூபம்' என்பர். நனைதல் உலர்தல் என்ற செயலும் பண்பாகக் கொள்ளப்படலாம்.

'செய்த' என்பதனைக் கால்களோடுங் கூட்டுக. கைகால்களின் செம்மைநிறத்தின்மிகுதிபற்றி, 'துப்பினாற்செய்த' என்றார். முதலடி - இல்பொருளுவமை. மேகவுவமை - கருநிறமுடைமைக்கும், கைம்மாறுகருதாது உதவுந் கொடைக்குமென்க. 'துளிமஞ்சு' என்றது, திருக்கடைக்கண்களினின்று ஒழுகுகின்ற கருணைமழைத்துளியைக் கருதி. அப்பு - வடசொல்.

(அ)

௯. அரிதுபோகவோவிதிவலிகடத்தலென் றஞ்சிப்
பரிதிவானவன்குலத்தையும்பழியையும்பாராச்
சுருதிநாயகன்வருமவருமென்பதோர் துணிவாற்
கருதிமாதிரமனைத்தையுமளக்கின்றகண்ணாள்.

(இ - ள்.) 'போகவோ - (யான்) உயிர்நீங்குவேனாகவோவென்றால், விதி வலி கடத்தல் - ஊழ்வினையின் வலிமையை மீறுதல், அரிது - அருமையானது [கூடாதகாரியமாம்]', என்று - என்று எண்ணி, அஞ்சி - (உயிர்விடுதற்குப்) பயந்து [அரிதிற்பிழைத்திருந்து],- 'சுருதி நாயகன் - வேதங்களுக்குத்

தலைவனாகிய ஸ்ரீராமன், (எளிய என்பொருட்டு இங்கு வாரானாயினும்), பரிதி வானவன் குலத்தையும் - (தான் அவதரித்த) சூரியபகவானது திருக்குலத்தின் மேன்மையையும், பழியையும் - (அக்குலத்துக்கு இதுவரையுமின்றி இப்பொழுதுநேர்ந்த இப்பெரிய) பழியின் கீழ்மையையும், பாரா - ஆராய்ந்துபார்த்து, (அதை நீக்கவாயினும்), வரும் வரும் - விரைவிலேயே வருவார்', என்பது ஓர் துணிவால் - என்பதொரு நிச்சயத்தினால், கருதி - (அவ்வருகையையே) நினைத்து, மாதிரம் அனைத்தையும் அளக்கின்ற - எல்லாத்திக்குக்களையும் அளாவிப் பார்க்கின்ற, கண்ணாள் - திருக்கண்களையுடையாள்; (எ - று.)

'உயிர்விடுவதென்பது விதிமாண்டவர்க்கே இயலுமாதலால், என்போலியர்க்கு அதுவும் இயலாத காரியமே' என்று உயிர்துறத்தற்கும் அஞ்சியவளாய், சீதாபிராட்டி, 'எனது கணவனார் என்னை மீட்கவேணும்' என்று முயற்சிகொண்டு இவ்விடத்திற்கு வாராவிட்டாலும், 'தன்மனைவியையும் காக்கமுடியாத ஒருத்தன் சூரியகுலத்திற் பிறந்துள்ளானென்று பிறர் ஏசுவமென்பதற்காகவாவது இங்கே வரக்கூடும்' என்ற உறுதியான எண்ணத்தினால், எத்திசையாக அப்பிரான் வரக்கூடுமோ என்று அப்பிரானது வருகையையே நாற்புறத்திலும் எதிர்பார்த்து நிற்பவளாயினளென்பதாம். விதியாவது - முற்பிறப்புக்களிற் செய்த நல்வினை தீவினைகளின் பயன்களைச் செய்த உயிரே பிற்பிறப்பில் அடைந்து அனுபவிக்க வேண்டிய நியதி; விதி, ஊழ், கருமம் என்பன - ஒருபொருட்சொற்கள். வானவன் - தேவன். பழி - சூரியகுலத்து அரசனான இராமபிரானுக்குத் தன்மனைவியை இராக்கதராசனாகிய இராவணன் வஞ்சனையாற் கவர்ந்து சிறைவைத்திருந்தும் அப்பகைவனைக்கொன்று தன் மனைவியை மீட்காமையா லாகியது. சுருதிநாயகனென்பதற்கு - வேதங்களாற புகழப்படுபவனென்றும், வேதங்களை ஆதியில் வெளியிட்டவனென்றுங் கருத்துக்கொள்க. வரும்வரும், அடுக்கு - விரைவும் துணிவும் பற்றியது; செய்யுமென்முற்று, ஆண்பால். (௯)

௩0. கமையினடிருமுகத்தயல்கதுப்புறக்கவ்விச்
சுமையுடைக்கற்றைநிலத்திடைக்கிடந்ததூமதியை
யமையவாயிற்பெய்துமிழ்கின்றவயிலெயிற்றரவிற்
குமையுறத்திரண்டொருசடையாகியகுழலாள்.

(இ - ள்.) கமையினாள் - பொறுமையையுடையவள்; நிலத்திடை கிடந்த - பூமியிற்பொருந்திய, தூ மதியை - பரிசுத்தமான சந்திரனை, அமைய - நன்றாக அடங்கும்படி, வாயில் பெய்து - வாயினுள்ளேகொண்டு, உமிழ்கின்ற - மீண்டும் வெளிவிடுகின்ற, அயில் எயிறு அரவின் - கூர்மையானபற்களையுடைய (இராகுவென்னுங் கரும்) பாம்புபோல, திரு முகத்து அயல் - அழகிய முகத்தின் பக்கங்களில், கதுப்பு - கபோலங்களை, உற - நன்றாக, கவ்வி - பற்றி, சுமை உடை - பாரத்தையுடைய, கற்றை - தொகுதியான, குமை உற திரண்டு - நெருக்கமாக ஒன்றுகூடி, ஒரு சடை ஆகிய - ஒரே சடையாகத் திரிந்த, குழலாள் - கூந்தலையுடையாள்; (எ - று.)

முகம்மாத்திரந்தெரியக் கதுப்புமுதல் மயிர்த்திரள்நிரம்பி ஒற்றைப்பின்னலாகத் தொங்குஞ் சீதாபிராட்டியின்சடைக்கூந்தல் - சந்திரனைத் தனது வாயிற் பெய்துமீண்டும் உமிழ்கின்ற இராகுவைப்போலு மென்று குறித்தார்; தன்மைத் தற்குறிப்பேற்றவணி. திரண்டு சடையாகிய கற்றை குழலாள் என இயையும். கமை - க்ஷமா என்னும் வடமொழியின் திரிபு. திரு - கண்டாரால் விரும்பப் படுந் தன்மை; என்றது, அழகு. முகத்துக்கு மதி - குளிர்ச்சி அழகு கண்டவர் கண்களைக் களிப்பித்தல் ஒளி முதலியவற்றாலும், கூந்தலுக்கு ராகு - நீட்சி கருமைகளாலும் உவமை. மதி - கலைநிறைந்த பூர்ணசந்திரன். மதிக்குத் தூய்மை - மறுவின்மை. நிலத்திடைப் பொருந்தியதொரு களங்கமில்லாத பூர்ணசந்திரன் - சீதையின் திருமுகத்துக்கு இல்பொருளுவமை. கூந்தல் வாரி முடித்து அலங்கரித்தல் இல்லாமையால், சடையாயிற்று.　　　　(௧0)

௧௧. ஆவியந்துகில்புனைவதொன்றன்றிவேறறியாள்
தூவியன்னமென்புனலிடைத்தோய்கிலாமெய்யா
டேவுதெள்கடலமிழ்துகொண்டனங்கவேள்செய்த
வோவியம்புகையுண்டதேயொக்கின்றவுருவாள்.

(இ - ள்.) புனைவது - (தான் பழமையாக) உடுத்துக்கொண்டிருப்பதாகிய, ஆவி அம் துகில் ஒன்று அன்றி - புகைபோல மெல்லியதாகிய அழகிய ஆடை ஒன்றையேயல்லாமல், வேறு அறியாள் - வேறொரு ஆடையைக் கண்டறியாதவள்; தூவி - சிறகுகளையுடைய, அன்னம் - அன்னப்பறவைகள் (தங்குதற்கு உரிய), மென் புனலிடை - மென்மையாகிய தண்ணீரில், தோய்கிலா - ஸ்நானஞ் செய்யாத, மெய்யாள் - உடம்பையுடையவள்; (ஆதலால்), அனங்க வேள் - மன்மதன், தெள் கடல் - தெளிவாகிய பாற்கடலினின்று தோன்றின, தேவு - தெய்வத்தன்மையையுடைய, அமிழ்து கொண்டு - அமிருதத்தால், செய்த - தீட்டிய, ஓவியம் - சித்திரப்பிரதிமை, புகை உண்டது - புகையேறப்பெற்றதை, ஒக்கின்ற - ஒத்திருக்கிற, உருவாள் - ரூபத்தையுடையவள்; (எ - று.)

சீதாபிராட்டி அரையிலுடுத்த ஒற்றைத்துகிலோடும் பலநாளாகத் தண்ணீரில் மூழ்காமையால் மாசுபடிந்த மேனியோடும் அந்த அசோகவனிகையில் தங்கியிருந்தனளென்பதாம். இப்பிராட்டியை மன்மதன் அமுதுகொண்டுசெய்த ஓவிய மென்று உவமைகூறியது - கண்டவர் கண்ணையும் கருத்தையும் கவரும்மாதருடைய கட்டழகு கொண்டு ஆடவர்க்குக் காதல்விளைக்குமவன் அவனேயாதலா லென்க. 'ஒன்றன்றி' என்றதனால் - மேலாடையாகிய உத்தரீயத்தில் தனது ஆபரணங்களை முடிந்து சுக்கிரீவன்முதலிய வானரர்களது முன்னிலையிற் போகட்டதையும், 'வேறறியாள்' என்றதனால் - இராவணன் விலையுயர்ந்த பல ஆடையாபரணங்களைக் கொடுக்கக் காத்திருந்தனனாயினும் அவற்றுளொன்றையும் விரும்பினாளில்லை யென்பதையும் விளக்கினார். அமிருதத்துக்குத் தெய்வத்தன்மை-கண்ணுக்கினியதாயிருத்தலும், யாவராலும் விரும்பப்படுதலும், உண்டவரது மரணத்தை யொழித்தலும், தன்னைநுகர்ந்தவர் வேறொன்றைநுகராமல் தடுக்குந்தன்மையும், கிடைத்தற்கருமையும், மிக இனிய சுவையுடைமையும் முதலாயின. குமர

வேளை விலக்குதற்கு, அனங்கவேள் எனப்பட்டது. வேள் - ஆடவர்க்கும் மகளிர்க்கும் ஒருவர்க்கொருவர் விருப்பத்தை விளைப்பவன்; அன்றிக்கே, எல்லாராலும் விரும்பத்தக்க கட்டழகுடையவன்: [வேட்டல் - விரும்புதல்.] இது, காமன் என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு. ஏ - தேற்றம். மனத்திற்குத் திருப்தியுண்டாகிறமட்டும் கலைத்துக்கலைத்து மிக அழகியதாக எழுதப்படுதல்பற்றி, சித்திரப்பாவையை உவமை கூறினர். (கக)

கஉ. கண்டிலன்கொலாமிளவலுங்கலை கடனடுவ
ணுண்டிலங்கையென் றுணர்ந்திலருலகெலாமொறுப்பான்
கொண்டிருந்தமையறிகிலராமெனக்குழையாப்
புண்டிறந்ததினெரிநுழைந்தாலெனப்புகைவாள்.

(இ - ள்.) 'இளவலும் - இலக்குமணனும், கண்டிலன் கொல் ஆம் - (மானின்பின்னே தொடர்ந்துசென்ற தன் தமையனைக்) கண்டானில்லை போலும்; (கண்டனனாயினும்), உலகு எலாம் ஒறுப்பான் - எல்லாவுயிர்களையும் வருத்திவருகிற இராவணன், கொண்டுஇருந்தமை-(என்னை) எடுத்துக்கொண்டு போனதை, அறிகிலர் ஆம் - (இருவரும்) தெரிந்திலர்போலும்; (அறிந்தனராயினும்),கலை கடல் நடுவண் - ஒலிக்கின்ற கடலின் இடையிலே, இலங்கை உண்டு என்று - லங்காநகரம் உளதென்று, உணர்ந்திலர் - (அவ்விருவரும்) அறிந்திலர் போலும்'; என - என்று எண்ணி, குழையா - வருந்தி, புண் திறந்ததில் எரி நுழைந்தால் என - வாய்விட்ட புண்ணின் துளையிற் கனல் நுழைந்தாற்போல, புகைவாள் - மேன்மேல் மிக வருந்துவாள்; (எ - று.)

'இலக்குமணன் நான் இருந்த இடத்தைவிட்டு இராமபிரானுள்ளவிடத்தை நாடிச்சென்றனனே, அவன் அப்பிரானை ஒருகால் காணவில்லையோ? கண்டானாயின், பிறகு, இருவரும் சேர்ந்து என்னைத்தேடித் திரிந்து பார்க்கக்கூடும்; அங்ஙனம் தேடித்திரிந்தால், இராவணன் என்னைக்கவர்ந்துபோன செய்தி சடாயுவின் மூலமாக அவர்கட்குத் தெரிந்திருக்குமே. அங்ஙனம் அறிந்திருப்பின் யான் இருக்கின்ற இவ்விடத்தைச்சேர்ந்து அவர்கள் என்னை மீட்கவாராமலிருப்பாரோ! இராவணன் என்னைக்கவர்ந்துபோனசெய்தியை யுணர்ந்தாராயினும் இராவணன் என்னைவைத்திருப்பது கடலினிடையேயுள்ள இலங்கையென்று ஒருகால் உணரவில்லையோ! அங்ஙனம் உணராமலிருப்பின் யான் என்செய்வது!'' என்று இவ்வாறெல்லாம் எண்ணமிட்டுச் சீதாபிராட்டி திறந்தபுண்ணில் எரிகொள்ளி நுழைந்தாற்போல மிகவருந்துவாளாயினளென்பதாம். கொல், ஆம் என்பவை - ஐயப்பொருளோடு விகற்பப்பொருளையும் உணர்த்தின; இளவல் - இளமை; பண்புப்பெயர்: இளையபெருமாளுக்கு ஆகுபெயர். 'கொண்டிறந்தமை' என்றும் பாடம். (கஉ)

கங. மாண்டுபோயினளொருவைகட்காசன்மன்மற்றோர்

(இ - ள்.) 'எருவைகட்கு அரசன் - (என்னை இராவணன் எடுத்துவந்ததைப் பார்த்த) கழுகுகளுக்குத் தலைவராகிய ஜடாயு, மாண்டுபோயினன் மன் - இறந்து போய்விட்டார்போலும்; மற்றோர் - அவரொழிந்த மற்றையோர், என் நிலை - எனது நிலைமையை [இராவணன் எடுத்துவந்ததை], யாண்டை - எவ்வாறு, அறிவுறுப்பார்கள் - (இராமலட்சுமணர்களுக்குத்) தெரிவிக்கமாட்டுவார்கள்? (தெரிவிப்பவர் பிறரொருவரும் இல்லையாதலால்), இ பிறப்பில் - இந்த ஜன்மத்தில், காண்டலோ - (அவர்கள் என்னைக்) காணுதலோ, அரிது - அருமையானது,' என்று என்று - என்று பலவாறு நினைத்து, விம்முறும் - அழுவாள்; கலங்கும் - கலங்குவாள்; மீண்டு மீண்டு - மறுபடியும் மறுபடியும், எரி புக்கு நுழைந்தால் என - கனல் (புண்ணில்) நுழைந்துபுகுந்தாற்போல, மெலிவாள்- வருந்துவாள்; (எ-று.).

ஜடாயு - அருணனது புத்திரர்; சம்பாதியின் தம்பி: இவர் தசரத சக்கரவர்த்திக்குப் பலவுதவிகள்செய்து உயிர்த்தோழராகித் தமையனுயிருக்கும் முறைபற்றி, இவருக்கு வைஷ்ணவசம்பிரதாயத்தில் 'பெரியவுடையார்' என்று திருநாமம். இராவணன் சீதாபிராட்டியை எடுத்துக்கொண்டு வந்தபொழுது இவர் கண்டு அவனைத் தடுத்துப் போர்செய்து அவன் தேர்முதலியவற்றை அழித்துவிட்டபின் அவனால் சிறகறுக்கப்பட்டுக் கீழ்விழுந்தனராதலால், 'இராமலட்சுமணர்களைக் காண்பதற்கு முன்னமே மாண்டுபோயினனோ?' என்று சீதாபிராட்டி ஐயமுற்று, 'அவன் மாண்டிருப்பின் என் நிலைமையை அவர்கட்குத் தெளிய எடுத்துச்சொல்லக்கூடியவர்கள் வேறொருத்தரு மில்லையே! அங்ஙனமாயின், அவர்கள் நான் இங்கிருப்பதையுணர்ந்து என்னைக்கண்டு மீட்குமாறு வருவது எவ்வாறு இயலும்?' என்று கலங்கிப் புலம்பி மெலிவாளாயின ளென்பதாம். மன் எனனும் இடைச்சொல் - இங்கே ஐயமுணர்த்திற்று. யாண்டை - ஐகாரச்சாரியைபெற்றுவந்த குற்றியலுகரம். காண்டல் என்பதற்கு - நான் அவர்களைக் காணுதல் என்றும் பொருள்கொள்க. ஓ - உயர்வு சிறப்பு. (கங)

கச. என்னைநாயகனிளவலையெண்ணலாவினையேன்
சொன்னவார்த்தைகேட்டறிவிலெனத்துறந்தானோ
முன்னையூழ்வினைமுடிந்ததோவென்றென்றுமுறையாற்
பன்னவாய்புலர்ந்துணர்வுதேய்ந்தாருயிர்பதைப்பாள்.

(இ - ள்.) 'வினையேன் - தீவினையையுடைய யான், இளவலை - இளையபெருமாளை, எண்ணலா - (சிறிதும்) மதியாமல், சொன்ன—, வார்த்தை - கடுஞ்சொற்களை, கேட்டு - (அவர்சொல்லச்) செவியுற்று, அறிவு இலள் என - (இவள்) அறிவில்லாதவளென்று எண்ணி, நாயகன் - இராமபிரான், என்னை—, துறந்தானோ - வெறுத்துவிட்டாரோ? (அல்லது), முன்னை ஊழ்வினை முடிந்ததோ - முற்பிறப்பிற்செய்த கருமவசத்தினால் (இவ்வாறு) நேர்ந்ததோ!' என்று என்று - என்று இப்படி பலவாறு, முறையால் - ஒன்றன்பின் ஒன்றாக, பன்ன - சொல்வதனால், வாய் புலர்ந்து - நா வறண்டு, உணர்வு தேய்ந்து - அறிவு சோர்ந்து, ஆர் உயிர் பதைப்பாள் - அரிய உயிர் துடிப்பாள்; (எ - று.).

எண்ணலா வினையேன்-எண்ணி அளவிடுதற்கரிய தீவினையுடையேனென்றுமாம். 'சொன்னவார்த்தை'என்றது - இராமனம்பினாலெய்யப்பட்டு இறந்துபோக்

கருணத்தில் 'ஹா ஸீதா! லக்ஷ்மணா! என்று கூவிய மாயமானின் குரலைக் கேட்டுச் சீதை தன் நாயகனது குரலென்று நினைத்து இளையபெருமாள்சொன்ன தேறுதலைக் கேளாமல் அவரைத் தீயநினைப்புடையராக எண்ணி, "குற்றம் வீந்த குணத்தி னெங்கோமகன், மற்றை வாளரக்கன் புரி மாயையா, லிற்று வீந்தனனென்னவு மென்னயல், நிற்றியோ விளையோ யொருநீ" என்றும், "நின்றநின்னிலையிது நெறியிற்றன்று" என்றும், "ஒருபகல் பழகினு ருயிரை யீவரால் பெருமக னுலைவுறபெற்றி கேட்டுநீ, வெருவலை நின்றனை வேறெ னியானினி, எரியிடை வீழ்ந்துயி ரிறப்ப லீண்டு" என்றுங் கூறியவற்றை, நான் தனது தம்பியாகிய இலக்குமணனைத் தீச்சொற்கூறியது கேட்டு, 'இவ்வாறு அறிவிலியானவளை நாம் இனிக் கைவிடுவதே நலம்' என்று எனதுகணவன் துணிந்தானோ? இதுவோதான் என்விதி' என்று தனக்குநேர்ந்த வருத்தத்தைச் சொல்லி நாவறண்டு அறிவுசோர்ந்து, சீதாபிராட்டி உயிர்பதைப்பாளாயினளென்பதாம். ஓ - ஐயம். (௧௬)

௧௭. அருந்துமெல்லடகாரிடவருந்துமென்றழுங்கும்
விருந்துகண்டபோதென்னுறுமோவென்றுவிம்மும்
மருந்துமுண்டுகொல்யான்கொண்டநோய்க்கென்றுமயங்கு
மிருந்தமாநிலஞ்செல்லரித்திடவுமாண்டெழாதாள்.

(இ - ள்.) 'அருந்தும் - (காட்டில்) உண்ணப்படுகிற, மெல் அடகு - மென்மையான இலையுணவு முதலியவற்றை, ஆர் இட - யாவர் எடுத்துப் பரிமாற, அருந்தும் - (இராமபிரான்) அமுதுசெய்வார்,' என்று - என்றுஎண்ணி, அழுங்கும் - வருந்துவாள்; 'விருந்து கண்ட போது - விருந்தினரை வரக்கண்ட பொழுது, என் உறுமோ - (உபசரிப்பாரில்லையேயென்று) என்ன துன்பப்படுவாரோ!' என்று - என்று எண்ணி, விம்மும் - அழுவாள்; இருந்த மா நிலம் - தானிருந்த பெரிய இடம் முழுவதும், செல் அரித்திடவும் - கறையான் பிடித்து அரிக்கவும், ஆண்டு எழாதாள் - அவ்விடத்தைவிட்டு எழுந்திராதவளாய், 'யான் கொண்ட நோய்க்கு - நான் கொண்டிருக்கிற மனோவியாதிக்கு, மருந்தும் உண்டுகொல் - தீர்க்குமருந்தும் உளதாமோ?' என்று - என்று எண்ணி, மயங்கும் - மயங்குவாள்; (எ - று.)

உண்ணும்போது பரிமாறுவதற்கு மனைவியில்லாமையால் 'மெல்லடகு ஆர் இட அருந்தும்' என்றும், மனைவியோடு இல்லறத்தில் வாழ்பவனே "துறந்தார்க்குந் துவ்வாதவர்க்கும் * * * இல்வாழ்வானென்பான் றுணை" என்றபடி விருந்தினராகவரும் துறந்தார் முதலியோரை உபசரிக்கத்தக்கவனாதலால், மனைவியையிழந்த நிலையிலிருக்கிற இராமபிரானுக்கு விருந்தினரை உபசரித்தல் இயலாமை பற்றி 'விருந்துகண்டபோதென்னுறுமோ' என்றும் சீதாபிராட்டி கவல்பவளாயினளென்க. இராவணன் வைத்த விடத்தை விட்டுச் சலியாமல் அங்குத் தானே நிலையாக நிற்பவள் சீதாபிராட்டியென்பதை விளக்க, 'இருந்த மாநிலஞ் செல்லரித்திடவுமாண்டெழாதாள்' என்றார்; இது, உலகவழக்குநவிற்சியணியின்பாற்படும்; இதனை, வடநூலார் 'லோகோக்தி' என்பர். அடகு - காய் கனி கிழங்கு முதலிய மற்றை உணவுக்கும் உபலட்சணம். இவை, வனத்தில் வதியும்

முனிவர்க்கு உரிய உணவு. மெல் அடகு - பண்புத்தொகை; வினைத்தொகையாய், மெல்லுதற்குஉரிய அடகு என்றுமாம். என் உறுமோ - என்னை நினைப்பாரோ? என்றுமாம். எழாதாள் - முற்றெச்சம். மருந்தும், உம் - உயர்வு சிறப்பு. கொல் - ஐயம். (கரு)

கசு. வன்கண்வஞ்சனையரக்கரித்துணைப்பகல்வையார்
திின்பரென்னினிச்செயத்தக்கதென்றுதீர்ந்தானோ
தன்குலப்பொறைதன்பொறையெனத்தணிந்தானோ
வென்கொலெண்ணுவேனென்னுமங்கிராப்பகலில்லாள்.

(இ - ள்.) 'வன்கண் - கொடுந்தன்மையையும், வஞ்சனை - வஞ்சித்தலையு முடைய, அரக்கர் - இராட்சசர், இ துணை பகல் - இத்தனைநாள், வையார் - (சீதையை உயிரோடு) வைத்திருக்கமாட்டார்; தின்பர் - கொன்று தின்றே யிருப்பர்; இனி செய தக்கது என் - (நாம்) இனிமேற் செய்யத்தக்கது யாது? [ஒன்றுமில்லை],' என்று - என்று எண்ணி, தீர்ந்தானோ - (இராமபிரான் என்னைத் தேடுவதை) விட்டாரோ? (அன்றி), தன் குலம் பொறை - தான் பிறந்த சூரியகுலத்தாருக்கு இயல்பாயுள்ள பொறுமை, தன் பொறை - தனக்கும் வகிக்கத்தக்கதொரு குணமாம், என - என்று எண்ணி, தணிந்தானோ - (கோபந்) தணிந்துவிட்டாரோ? என் கொல் எண்ணுவேன் - என்னவென்று நினைப்பேன்? என்னும் இரா பகல் இல்லாள் - என்று இராத்திரியென்றும் பகலென்றும் வேறுபாடில்லாமல் [எப்பொழுதும்] கவலைப்படுவாள்; (எ - று.)

இராவணன் என்னைக் கவர்ந்து இலங்கையிற் கொண்டுபோனதை இராமபிரான் உணர்ந்தானாயினும், அவன் என்னை மீட்டுக்கொண்டுசெல்ல இங்கு வராமைக்குக் காரணம், இராக்கதர் மனிதரை யுண்ணுந்தன்மைய ராதலால் சீதையையும் விழுங்கியிருப்பரென்று எண்ணியதோ? அன்றி, 'சூரியகுலத்தார்க்கு இயற்கையானது பொறுமைக்குணம்' என்று எண்ணித் தன் மனைவியைக் கவர்ந்தவனிடத்தும் கோபங்கொள்ளாது வாளாவிருத்தலோ? என்று சீதாபிராட்டி எண்ணுவாளாயின ளென்பதாம். பொறையாவது - காரணம்பற்றியாவது அறியாமையாலாவது ஒருவன் தனக்குக் குற்றஞ்செய்தவிடத்துத் தான் அதனை அவனிடத்துச் செய்யாமற் பொறுத்தல்; பொறு - பகுதி, ஐ-தொழிற்பெயர்விகுதி. இரண்டாவதுபொறையில், ஐ - செயப்படுபொருள்விகுதி. அங்கு-அசை; அப்பொழுது, அவ்விடத்தில் என்றுமாம். (கசு)

கஎ பெற்றதாயருந்தம்பியும்பெயர்த்தும்வந்தெய்திக்
கொற்றமாநகர்கொண்டிறந்தார்களோகுறித்துச்
சொற்றவாண்டெலாமுறைந்தன்றியங்கர் தான்று
ஊற்றதுண்டெனப்படருழந்துருகநோயுறுவாள்.

(இ - ள்.) 'பெற்ற தாயரும் - பெற்ற தாய்மார்களும், தம்பியும் - அடுத்த தம்பியாகிய பரதாழ்வானும், பெயர்த்தும் வந்து எய்தி - மறுபடியும் வந்து சேர்ந்து, கொற்றம் மா நகர் - வெற்றியையுடைய சிறந்த அயோத்தியாபட்ட

னத்துக்கு, கொண்டு இறந்தார்களோ - (இராமபிரானை) அழைத்துக்கொண்டு போனார்களோ? (அவர்), குறித்து சொற்ற ஆண்டு எலாம் - (முன்னே கைகேயி) குறித்துச்சொன்ன பதினான்குவருஷகாலமுழுவதும், உறைந்து அன்றி - (வனத்தில்) வாசஞ்செய்தல்லாமல், அ நகர் துன்னான் - அந்த நகரத்திற்குச் செல்லமாட்டார்; உற்றது உண்டு - (இன்னும் வனத்தில்) இருப்பதே உளதாம்,' என்று - என்று எண்ணி, படர் உழந்து - துன்பத்தால் வருந்தி, உறாத நோய் உறுவாள் - (எவரும் ஒருநாளும்) அடையாத மனோவியாதியை அடைவாள்.

'முன்பு இராமபிரான் சித்திரகூடத்தில் இருக்கையில் தம்பியாகிய பரதன் தாய்மார்முதலியோரையும் உடனழைத்துக்கொண்டுவந்து அப்பிரானை நகரத்திற்குத் திரும்பிவரவேணுமென்று வேண்டியதுபோலவே, மறுபடியும் ஒருகால் அவர்கள் யாவரும் வந்து வேண்டி அயோத்திமாநகருக்கே இராமபிரானை இட்டுக்கொண்டு சென்றார்களோ!' என்பேமென்றால், பிதிருவாக்கியபரிபாலனத்தில் மிக்க ஊக்கமுள்ள அப்பிரான் ஒருகாலும் அவ்வாறுசெய்யான்; தான் முன்பு வாக்களித்தபடியே பதினான்குவருடமும் வனத்தில் வசித்தேதீர்வனென்று எண்ணி, அப்பிரானும் தானும் தனிப்பட்டுள்ள நிலைமைக்குச் சீதாபிராட்டி மிகவும் வருந்துவாளாயின ளென்பதாம். இனி, உற்றது உண்டு என்பதற்கு - (அவனுக்கு) நேர்ந்துள்ள விபத்து ஏதேனும் இருக்கவேணுமென்று பொருள்கொண்டு, அவ்விராமபிரான் தனது நகரத்திற்குத் திரும்பிப்போயிருக்கமாட்டான்; அவ்வாறாயின், அவன் இங்குவந்து என்னைமீட்டுக்கொண்டுபோகாததுபற்றி ஒருகால் அப்பிரானுக்கே ஏதேனும் ஆபத்து நேர்ந்திருக்கவேணுமென்று கருதி மிகவும் வருந்ினளென்று கருத்துக்கொள்ளலுமாம். கௌசல்யை கைகேயி சுமித்திரை முதலாகத் தசரதசக்கரவர்த்திக்கு மனைவிமார் பலராதலாலும், அவரனைவரும் இராமனிடத்திலே பெற்ற பிள்ளையினிடத்திற்போல இயல்பாக மிகுந்த அன்புடையவ ராதலாலும், 'பெற்றதாயர்' என்றாள். மா - பெரிய என்றுமாம். இறத்தல் - இங்கே, செல்லுதல். மூன்றாமடியால், இராமனது பிதிருவாக்கிய பரிபாலனத்தையும் சத்தியசங்கல்பத்துவத்தையுங் கருதினாள். (௬௭)

முரனெனத்தகுமொய்ம்பினோர்முன்பொருதவர்போல்
வரனுமாயமும்வஞ்சமும்வரம்பிலவல்லார்
பொரநிகழ்ந்ததோர்பூசலுண்டாமெனப்பொருமாக்
கரனெதிர்ந்ததுகண்டனளாமெனக்கவல்வாள்.

(இ - ள்.) 'முரன் என தகும் - முரன் என்கிற அசுரனென்று சொல்லத்தக்க, மொய்ம்பினோர் - தோள்வலியையுடையவர்களும், முன் பொருதவர் போல் - முன்னே (ஜநஸ்தானத்தில்) போர்செய்தவர்கள்போல, வரம்பு இல - அளவில்லாதனவாகிய, வரனும் - வரங்களும், மாயமும் - மாயைகளும், வஞ்சமும் - வஞ்சனைகளும், வல்லார் - வல்லவர்களுமாகிய அரக்கர், பொர - (வந்து) போர்செய்ய, நிகழ்ந்தது - நடக்கிறதாகிய, ஓர் பூசல் - ஒரு பெரும்போர், உண்டு ஆம் - உளதாயிருத்தல் கூடும்', என - என்று எண்ணி, பொருமா - துக்கித்து, கரன் எதிர்ந்தது - (முன்னே) கரன் (வந்து) எதிர்த்ததை, கண்டனள் ஆம் என-

(இப்பொழுதுங் கண்ணுக்கெதிரில்) கண்டவள்போல, கவல்வாள் - கவலைப்படு வாள்; (எ - று.)

ஒருகால் இராமபிரான் இலங்கையைநோக்கி வருகையில், முன்பு ஜநஸ்தா னத்தில் கரன் முதலிய பதினாலாயிரவர் அரக்கர்கள் போர்செய்ய வந்ததுபோல, மகாபலபராக்கிரமசாலிகளான அரக்கர்கள் இப்போதும் போர்செய்யுமாறு வந்து விட்டதனால்தான் அப்பிரான் இங்கு வரமுடியாமல் தடைப்பட்டதோ? என்று சீதாபிராட்டி எண்ணி அப்பிரான் கரனோடு போர்செய்தது நினைவுக்குவரப் பாவ னையின்மிகுதியால் அப்போரை எதிரிலேகண்டனள்போல மிகவும் வருந்துவா ளாயினளென்பதாம். முரன் - திருமாலாற் கொல்லப்பட்டானொரு பேராற்ற லுடைய அரக்கன்; இவனைக் கொன்றதுபற்றித் திருமாலுக்கு 'முராரி' என்று ஒரு திருநாமம். மாயம் - மாயா என்னும் வடசொல்லின்திரிபு; அவை - இல்லா ததை உள்ளதாகக் காட்டுதலும், உள்ளதை இல்லாததாக மறைத்தலும், ஒன்றை மற்றொன்றாக மாற்றிக்காண்பித்தலும் முதலாயின. கரன் என்பதற்கு - கடுமை யுள்ளவனென்று பொருள்; கரம் என்று கழுதைக்குப்பெயருண்மையால், கரன் என்பதை - பிறந்தகாலத்துக் கழுதைபோலக் கத்தியதனால் வந்தபெய ரென் றுங் கூறுவர். இவன், சூர்ப்பணகையின் மூக்கையுங் காதையும் இலக்குமணன் அறுத்ததைக் கேட்டுப் பல அரக்கரோடு வந்து எதிர்த்துப் போர்செய்து இராம னம்பினா லிறந்தான். கரனெதிர்ந்தகாலத்துச் சீதை கண்டு கவன்றதை "நின்றனை ளிருந்தாள் கண்ணீர் நிலனுறப் புலர்கின்றாள்பால்", "குழையுறு மதியம் பூத்த கொம்பனாள் குழைந்து சோர", "அனிக வெஞ்சமத் தாருயிர் போகத்தான், தனியிருந்த வுட லன்ன தையல்பால்" என்று ஆரணியகாண்டத்துக் கூறினர்.

வேறு.

௩௩. தெவ்மடங்கியசேணிலங்கைகயர்
தம்மடந்தையுன்றம்பியதாமென
மும்மடங்குபொலிந்தமுகத்தினன்
வெம்மடங்கலையுன்னிவெதும்புவாள்.

(இ - ள்.) கைகயர்தம் மடந்தை - கேகயநாட்டரசர்குலத்துமகளாகிய கை கேயி, 'தெவ் மடங்கிய சேண் நிலம் - பகை யொழிந்த பெரிய இராச்சியம், உன் தம்பியது ஆம் - உனது தம்பியாகிய பரதனுடையதாம், [உனக்கு இல்லை],' என - என்று சொல்ல, (சிறிதும் வருந்தாமல்), மும்மடங்கு பொலிந்த முகத்தி னன் - (முன்னிலும்) மூன்று பங்கு அதிகமாக மலர்ந்துவிளங்கிய முகத்தை யுடையவனாகிய, வெம் மடங்கலை - கொடிய ஆண்சிங்கம்போன்ற ஸ்ரீராமனது அப்பொழுதைய நிலைமையை, உன்னி - நினைத்து, வெதும்புவாள் - வாடுவாள்.

ஒருவரைப்பிரிந்துள்ள நிலையில் அவர்களது குணங்கள் நினைவுக்குவந்து பிரிவுத்துயரை மிகுவித்தல் இயல்பாதலால், இராமபிரானது சாந்தகுணத்தையும் அழுக்காறின்மையையும் தன் பக்கலினுந் தம்பிமார்பக்கல் மிக்க அன்புடைமை யையுங் கருதிச் சீதாபிராட்டி வருந்துவாளாயின ளென்க. மடங்கல்போன்றவனை

மடங்கலென்றது, உவமவாகுபெயர்; நடை வலிமை நோக்குத் தைரிய காம்பீரி யங்களால் உவமை. மடங்கலினது தன்மையை மடங்கலென்றது - பொருளாகு பெயர். ஆகவே, இச்சொல், இங்கே இருமடியாகுபெயர். முகத்தின் நன் என் றும் பிரித்து உரைக்கலாம். தெவ் + மடங்கிய = தெம்மடங்கிய; மகரம் வர வகரம் மகரமாகத் திரிந்தது.

இதுமுதற் பதினொரு கவிகள் - பெரும்பாலும் முதற்சீரொன்று மாச் சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய அளவடி நான்குகொண்ட **கலிவிருத் தங்கள்.** (௧௯)

**௨௦.** மெய்த்திருப்பதமேவென்றபோதினு
மித்திருத்துறந்தேகென்றபோதினுஞ்
சித்திரத்தினலர்ந்தசெந்தாமரை
யொத்திருக்குமுகத்தினையுன்னுவாள்.

(இ - ள்.) 'மெய் - உண்மையாகவே, திரு பதம் - சிறந்த (தனது) உலக முழுதாளும் பதவியை, மேவு - (நீ) அடைவாயாக', என்ற போதினும் - என்று (தசரதசக்ரவர்த்தி) சொன்னகாலத்தும், 'இ திரு - இவ்வரசாட்சிச்செல்வத்தை, துறந்து - விட்டு, ஏகு - (வனத்துக்குச்) செல்லு,' என்ற போதினும் - என்று (கைகேயி) சொன்னகாலத்தும், (ஒருபடியாக), சித்திரத்தின் அலர்ந்த செம் தாமரை ஒத்து இருக்கும் - சித்திரித்த உருவத்தில் மலர்ந்திருந்த சிவந்த தாமரை மலரைப் போன்று விளங்கின, முகத்தினை - (இராமபிரானது) திருமுகத்தை, உன்னுவாள் - நினைப்பாள்; (எ - று.)

இதனால், இராமனது இன்பதுன்பங்களில் விருப்பு வெறுப்பில்லாமல் இரண்டையும் ஒரு நிகரானவாகப் பாவிக்குந் தன்மையைக் கருதி வருந்தியவாறு. "இப்பொழுதெம்மனோராலியம்புதற்கெளிதேயாரும், செப்பருங்குணத்திராமன் திருமுகச்செவ்விநோக்கி, லொப்பதேமுன்புபின்பவ்வாசகமுணரக்கேட்ட, வப் பொழுதலர்ந்தசெந்தாமரையினைவென்றதம்மா" என்ற அயோத்தியாகாண்டச் செய்யுள் இங்கு அறியத்தக்கது. மேவு, ஏகு என்பவற்றில், ஏவலொருமை ஆய் விகுதி புணர்ந்து கெட்டது. (௨௦)

**௨௧.** தேங்குகங்கைத்திருமுடிச்செங்கணான்
வாங்குகோலவடவரைவார்சிலை
யேங்குமாத்திரத்திற்றிரண்டாய்விழ
வீங்குதோளைநினைந்துமெலிந்துளாள்.

(இ - ள்.) எங்கு மாத்திரத்து - இவர் வில்லைவளைப்பரோ வளைக்கமாட்டா ரோவென்று (ஜனகமகாராஜர்) சந்தேகித்தபொழுதில்,—கங்கை தேங்கு - ஆகாச கங்காநதி தங்கிய, திரு முடி - அழகிய ஜடாமுடியையும், செம் கணான் - சிவந்த மூன்றுகண்களையுமுடைய சிவன், வாங்கு - (கையில் எடுத்து)வளைத்த, கோலம் - அழகிய, வட வரை - வடக்கிலுள்ள மேருமலையின் அம்சமாகிய, வார் சிலை - நீண்ட வில், இரண்டு ஆய் இற்று விழ - இரண்டுதுண்டாய் ஒடிந்து விழும்படி,

வீங்கு - பருத்த, தோளை - (இராமனது) புஜத்தை, நினைந்து - எண்ணி, மெலிந்துளாள் - இளைத்தவளாவாள்; (எ - று.)

பரமசிவன் கங்கையைத் தனது திருமுடியில் தேங்கவைத்தது, கபிலமகாமுனிவரது கோபத்தீக்கு இரையாகிச் சாம்பரான சகரபுத்திரர் அறுபதினாயிரவரையும் நற்கதியடைவிக்க விரும்பிய அவர்வழித்தோன்றிய பகீரதனென்னுஞ் சூரியகுலத்தோன்றலது வேண்டுகோளால். மேரு எவ்விடத்துள்ளதென்றால் வடக்கிலுள்ளதென வேண்டுதலின், 'வடவரை' என அதனை விளங்கக்கூறினார். வரை என்னுங் கணுவின்பெயர் - அதனையுடைய மூங்கிலுக்குச் சினையாகுபெயராய், பின் அம்மூங்கில்விளையும் மலைக்குத் தானியாகுபெயராதலால், இருமடியாகுபெயர். மேரு சிவனுக்கு வில்லானது, திரிபுரசங்காரகாலத்தில். திரியம்பகமென்னும் பெயரையுடைய இச்சிவதனுசு, பரமசிவனால் ஜநகமகாராஜாவுக்குக் கொடுக்கப்பட்டு அவரால் இவ்வில்லை எடுத்துவளைத்தவர்க்குச் சீதையைக் கலியாணஞ்செய்துகொடுப்பதென்று கன்னியாசுல்கமாக ஏற்படுத்திவைக்கப்பட்டது. எனதுகணவனை இராமபிரான் இத்தகைய பெரியதோள்வலிமை பெற்றிருந்தும் அதனை என்விஷயத்திலும் சிறிது உபயோகித்து என்துயரைக் களைய வேண்டியதாயிருக்க, அவ்வாறுசெய்யாது உபேட்சிக்கின்றானேயென்பதைச் சீதாபிராட்டி நினைந்து வருந்துவாளாயினளென்க. ஆய், ய் - இறந்தகால வினையெச்சவிகுதி. (உக)

உஉ. இன்னலம்பரவேந்தற்கியற்றிய
பன்னலம்பதினாலாயிரம்படை
கன்னன்மூன்றிற்களம்படக்கால்வளை
வின்னலம்புகழ்ந்தேற்றிவெதும்புவாள்.

(இ - ள்.) அம்பரம் வேந்தற்கு - தேவலோகத்துக்குத் தலைவனாகிய இந்திரனுக்கு, இன்னல் - துன்பங்களை, இயற்றிய - செய்த, பல் நலம் - (வரபலம் புஜபலம் முதலிய) பலநன்மைகளையுடைய, பதினாலாயிரம் படை - (கரதூஷணாதியரோடு வந்த) பதினாலாயிரம் ரதாதிபதிகளதுகூட்டம், கன்னல் மூன்றில் - மூன்றுநாழிகைப்பொழுதிலே, களம் பட - போர்க்களத்தில் அழியும்படி, கால் வளை - இரண்டுகோடியும் வளைந்த, வில் - கோதண்டத்தினது, நலம் - சிறப்பை, புகழ்ந்து ஏற்றி - கொண்டாடி உயர்த்துச்சொல்லி, வெதும்புவாள் - வாடுவாள்.

இராமபிரானது ஒப்புயர்வில்லாத பெருவீரம் தனக்கு இதுவரையில் பயன்தராமைபற்றிச் சீதாபிராட்டி வெதும்புவாளாயினளென்க. அம்பரம் என்னும் ஆகாயத்தின்பெயர், அங்குள்ள சுவர்க்கலோகத்துக்கு இடவாகுபெயர். வேந்தன் என்னுஞ் சொல் இந்திரனென்னும் பொருளை உணர்த்துவதை "வேந்தனும் வேந்து கெடும்," "வேந்தன் மேய தீம்புன லுலகமும்' என்ற இடங்களிலுங் காண்க. (உஉ)

உங. ஆழநீர்க்கங்கையம்பிகடாவிய
வேழவேடனுக்கெம்பிநின்றம்பிநீ

*தோழன்மங்கைகொழுந்தியெனச்சொன்ன*
*வாழிநண்பினையுன்னிமயங்குவாள்.*

(இ - ள்.) ஆழம் நீர் - ஆழ்ந்திருப்பதான நீரையுடைய, கங்கை - கங்காநதியிலே, அம்பி கடாவிய - தோணியைச் செலுத்தின, ஏழை வேடனுக்கு - எளிய வேடர்குலத்தில்தோன்றிய குகப்பெருமானுக்கு, 'எம்பி - என்தம்பி, நின்தம்பி- உனது தம்பியாவன்; நீ தோழன் - நீ (எனக்குத்) தோழனாவை;மங்கை - சீதை, கொழுந்தி - (உனக்கு) மைத்துனியாவள்,' என - என்று, சொன்ன - (இராமன்) சொல்லியருளிய, நண்பினை - சிநேகதருமத்தை, உன்னி-நினைத்து, மயங்குவாள் - கலங்குவாள்; (எ - று.)—வாழி-அசை.

ஒருவர் துன்பமுற்று வருந்துகையில், அவரை அத்துன்பத்தினின்று விடுவித்தற்கு வேண்டிய குணங்கள் இரண்டு. அவற்றுள் முதலதாகிய மகாவீரத்தைப் பாராட்டிக் கூறிய சீதாபிராட்டி இரண்டாவதாகிய பெருங்கருணைத்தன்மையை இங்குப்பாராட்டிக்கூறிப் பேராற்றலோடு பெருங்கருணையும் படைத்த அப்பிரான் என்னை உபேட்சித்தற்குக் காரணம் என்னையோ? என்று மயங்குவாளாயினளென்பதாம்.

குகன் - கங்கையில் ஓடம்விடுபவனும், ஆயிரம்ஓடத்துக்குத்தலைவனும், கங்கைக்கரையிலுள்ள சிருங்கிபேரபுரத்திற்கு அதிபதியுமாகிய ஒருவேடத்தலைவன்; இராவணாதி ராக்ஷசசங்காரத்தின்பொருட்டுத் திருவவதரித்த இராமபிரான் வனவாசஞ்செய்யஉடன்பட்டு, மனைவியான சீதையோடும் தன்னைவிட்டுப்பிரியாததம்பியாகிய இலக்குமணனோடும் அயோத்தியாபுரியைநீங்கிக் கங்கைத்துறை சேர்கையில் குகன் இராமனைக் காணும்பொருட்டுக் காணிக்கைகளுடன் அருகில் வந்துசேர்ந்து வணங்கிநிற்க, ஸ்ரீராமன் அவனை நண்பனாக ஏற்று 'இங்கு இரு' என்றுசொல்லி மிக்கஅன்புடன் அவன் கொணர்ந்த காணிக்கைகளையும்உகந்து, 'இன்று நீ உனதுஊர்க்குச் சென்று நாளையுதயத்திற் கங்கைகடத்தற்கு ஓடங்கொண்டுவா' என்று நியமிக்க, அன்பிற்சிறந்தவனான அக்குகன் இராமனைவிட்டுப்பிரியமாட்டாதவனாய் 'இங்கேயேயிருந்து இயன்றஅடிமைசெய்வேன்'என்ன, இராமன் அதற்கு இணங்கி, 'யாதினும் இனியநண்ப! நம்முடன் இரு' என்று அனுமதிசெய்ய, குகன் தன்சேனைகளுடன் இராமனைச்சூழ்ந்து இராமுழுவதும் வில்லும்கையுமாகப் பாதுகாவல் செய்து நின்றனன். மறுநாளுதயத்தில் இராமன் குகனை ஓடங்கொண்டுவரச் சொன்னபோது குகன்பணிந்து 'நாங்கள் துணைசெய்ய நீங்கள் இவ்விடத்திலே வசித்தருளவேண்டும்' என்று வேண்ட, அதற்கு இராமன் உடன்படாது 'புண்ணியநதிகளில் ஸ்நாநமும் மகரிஷிகளின் சேவையும் செய்துகொண்டு சிலகாலம் கழித்தபின்பு உன்னிடம்வருவேன்' என்று சொல்லிப் பிறகு குகன் கொணர்ந்த ஓடத்திலேறிக் கங்கைகடந்து அப்பாற்செல்லத்தொடங்குகையில், குகன் மிக்கபரிவோடுவணங்கி 'அடியேனும் பணிவிடைகள்செய்துகொண்டு உடன்வந்து உதவுவேன்'என்றுவிண்ணப்பஞ்செய்ய, இராமபிரான் அதற்கும் இணங்காமல் 'என்மனைவியான இந்தச்சீதை உன்தோழி; என் தம்பியான இவ்விலக்குமணன் உன்தம்பியே; நீ எனதுஉயிர்த்தோழன்' என்றும், 'இதுவரை நாங்கள் உடன்பிறந்தவர் நால்வராயிருந்தோம்; இப்பொழுது உன்னு

டன் ஐந்துபேராயினோம்' என்றும் ஒற்றுமைநயம்தோன்றக் கூறி; 'உன்சுற்றத்தார் என்சுற்றத்தார்; அவர்கள் உன்னைப்பிரிந்து வருந்தலாகாது; ஆதலால், நீ இங்கேயேயிருந்து அவர்களைப் பாதுகாப்பாய்; அன்றியும், அயோத்தியாபுரி கெடாமைக்காக அங்குப் பரதனை வைத்தோம்; வழியடிகெடாதபடி இங்கே நீ நில். நான் மீண்டு வடக்குநோக்கி வரும்போது உன்னிடம் வருவேன்' என்றும் சொல்லிக் குகனை வலிவில்நிறுத்தினனென்பது, அயோத்தியாகாண்டத்தில் வந்தவாலாறு: "என்னுயி ரனையாய்நீ யிளவலுனிளையானிந், நன்னுதலவள்நின் கேள் நளிர்கடல் நிலமெல்லாம், உன்னுடையது நா னுன்தொழிலுரிமையினுள்ளேன்" என்று அயோத்தியாகாண்டத்தில் வந்துள்ளதும்; "ஏழையேதலன்கீழ் மகனென்னு திரங்கி மற்றவற்கின்னருள்சுரந்து, மாழைமான்மடநோக்கி யுன் தோழி யும்பி யெம்பியென் றொழிந்திலை யுகந்த, தோழ னீயெனக் கிங்கொழி யென்ற சொற்கள் வந்தடியேன்மனத் திருந்திட, ஆழிவண்ணநின் னடியிணை யடைந்தேன் அணிபொழிற் றிருவரங்கத்தம்மானே" எனப் பெரியார் பணித்ததும் காண்க.

கொழுந்தி - கொழுந்தனென்பதன் பெண்பால். திருமகள்கணவனும் சகலலோகநாயகனும் சக்கரவர்த்தித்திருமகனுமான இராமபிரானை நோக்குமிடத்து, சிருங்கிபேரபுராதிபதியான வேடர்தலைவன் வறியவனென்று சொல்லத்தடையில்லையாதலால்,குகனை 'ஏழை' என்றார்; இனி, "நுண்ணுணர்வின்மை வறுமை யஃதுடைமை, பண்ணப்பணைத்த பெருஞ்செல்வம்" என்பவாதலால், ஏழை என்ற சொல் அறிவில்லானென்றபொருளைத்தருமென்று கொள்ளுதலும் ஒன்று. ஒருவரையொருவர் நேசிக்குங்காலத்துப்பார்க்கின்ற கல்வி செல்வம் வீரம் புகழ் ஞானம் என்கிற சிறப்புக்களுள் ஒன்றும் இல்லாதவனென்பார், 'ஏழைவேடன்' என்றார். 'ஆழிநண்பினையுன்னியழுங்குவாள்' என்னும் பாடத்துக்கு - கடல்போலும் பெரிய நட்பை நினைத்து வருந்தத்தலைப்பட்டாளென்று உரைக்க. (௨௩)

௨௪. மெய்த்ததாதைவிரும்பினனீட்டிய
கைத்தலங்களைக்கைகளினீக்கிவே
றுய்த்தபோதுதருப்பையிலொண்பதம்
வைத்தவேதிகைச்செய்திமனங்கொள்வாள்.

(இ - ள்.) மெய்த்த - நல்லொழுக்கந்தவறாத, தாதை - தனது தந்தையாகிய ஜனகமகாராஜர், விரும்பினன் - விருப்பமுள்ளவராகி, நீட்டிய - பிடித்துக்கொடுத்த, கைத்தலங்களை - (தன்) கைகளை, கைகளின் நீக்கி - (அவரது) கைகளினின்றும் விடுவித்து, [இராமபிரான் தமது வலக்கையால் தனது இடக்கையைப் பற்றிக்கொண்டு], வேறு உய்த்த போது - வேறாகிய வைதிககாரியத்தை நடத்தும்பொழுது, தருப்பையில் - தருப்பையைப்போல, ஒள் - பரிசுத்தமாகிய, பதம் (தனது) வலக்காலை, வைத்த - (அவர் தமது வலக்கையாற் பிடித்து அம்மியின்மேல்) எடுத்துவைத்த, வேதிகை செய்தி - (விவாகத்தின்பொருட்டு இட்ட) வேதிகையில் நிகழ்ந்தசெய்கையை, மனம் கொள்வாள் - மனத்தில் எண்ணுவாள்.

இதனால், விவாககாலத்தில் நடந்த பாணிக்கிரகணத்தையும், அச்மாரோபணத்தையுங் கருதினாள். அன்போடு மணந்தவர் என்னை இப்போது நீத்து உறை

தல் தகுதியோ? என்பது, சீதையின் கருத்து. இனி, இக்கவிக்கு - தன் பிதாவா கிய ஜனகர் தமது கைகளால் இராமனது திருவடிகளைத் தொட்டுப் பாதபூசை செய்ய விரும்பி நீட்டின கைகளை இராமன் தனது கைகளால் நீக்கித் தருப்பை யை மேடைமேல் வைத்துப் பூசிக்கச்செய்த வைதிகநியமத்தை எண்ணுவா ளென்று உரைப்பாருமுளர். 'உண்பதம்' என்ற பாடத்துக்கு - அக்கினிதேவன் உண்ணுகின்ற உணவாகிய நெய்யை யெனப் பொருளுரைக்க. (உச)

௨௫. உரங்கொடேன்மலர்ச்சென்னியுரிமைசால்
வரங்கொள்பொன்முடிதம்பிவனைந்திலன்
றிரங்குசெஞ்சடைகட்டியசெய்வினைக்
கிரங்கியேங்குவதெண்ணியிரங்குவாள்.

(இ - ள்.) தம்பி - தமது தம்பியாகிய பரதாழ்வான், உரம் கொள் - சிறப் பைக் கொண்ட, தேன் மலர் - தேனினையுடைய பூக்களைச் சூடிய, சென்னி - சிரசில் தரித்தற்கு, உரிமை சால் - தகுதியமைந்த, வரம் கொள் - மேன்மையைக் கொண்ட, பொன் முடி - ஸ்வர்ணமயமான கிரீடத்தை, வனைந்திலன் - சூடாதவ னாய், திரங்கு செம் சடை கட்டிய - திரித்துவிட்ட சிவந்த ஜடையைத் தரித்த, செய் வினைக்கு - செய்தொழிலுக்காக, இரங்கி - (இராமபிரான்) மனமிரங்கி, ஏங்குவது-வருந்தியதை, எண்ணி - நினைத்து, இரங்குவாள் - தான் வருந்துவாள்.

இராமபிரானைக் காட்டிலிருந்து திருப்பியழைத்துவரவேணு மென்னுங் கருத்துக்கொண்டு, பரதன் சித்திரகூடத்தையடைந்து இராமபிரானைத்தரிசித்துத் தன்கருத்தைத்தெரிவிக்கையில், பரதன் முடிசூடாமல் தன்னைப்போலவே சடை முடிபுனைந்திருப்பது கண்டு இராமபிரான் இரங்கின னென்க. "வாதன் றுஞ்சி னான் வையமானையால், சாதந்ன்னதே மகுடந்தாங்கலாய், விரதவேடநீ யென் கொல் வேண்டுவான், பரதகூறு" என்று அயோத்தியாகாண்டத்தில் வந்துள்ளது, இங்குக் கருதத்தக்கது. ஏங்குவது - இயல்பினால் இறந்தகாலம் எதிர்காலமாகச் சொல்லப்பட்ட காலவழுவமைதி. வரம்கொள் - கைகேயி வரத்தினாற் கொண்ட என்றுமாம். (உ௫)

௨௬. பரித்தசெல்வமொழியப்படருநா
ளருத்திவேதியற்கான்குலமீந்தவன்
கருத்தினாசைக்கரையின்மைகண்டிறை
சிரித்தசெய்கைநினைத்தழுஞ்செய்கையாள்.

(இ - ள்.) பரித்த - தாம் தாங்குதற்குரிய, செல்வம் - அரசாட்சிச்செல்வம், ஒழிய - (தம்மை விட்டு) நீங்க, படரும் நாள் - (வனத்திற்குச்) செல்கிறநாளில், அருத்தி வேதியற்கு -(தானம்பெறவேணுமென்னும்) ஆசையையுடைய ஒருபிரா மணனுக்கு, ஆன் குலம் - பசுக்கூட்டங்களை, ஈந்து - தானஞ்செய்து, அவன்- அவ்வந்தணனது, கருத்தின் - மனத்திலேயுள்ள, ஆசை - ஆசைக்கு, கரை இன் மை - எல்லையில்லாததை, கண்டு - பார்த்து, இறை - (யாவர்க்குந்) தலைவராகிய இராமபிரான், சிரித்த - புன்சிரிப்புக்கொண்ட, செய்கை-செய்கையை, நினைத்து- எண்ணி, அழும்-அழுகிற, செய்கையாள்-செய்கையையுடையவளாவாள்; (எ-று)

இராமபிரான் தந்தைசொல் பொய்யாகாதவாறு கைகேயியின் கட்டளைப்படியே காட்டிற்குச் செல்லப் புறப்படும்போது யாத்திராதானம் செய்ய எண்ணி, வசிஷ்டமுனிவரின் புதல்வராகிய சுயஜ்ஞர் முதலியோர்க்குத் தனது இரத்தினம் அணிகலம் வாகனம் முதலிய பொருள்களைத் தானஞ்செய்ய, அப்போது திரிசடனென்ற முனிவன் தனது மனைவியால் தூண்டப்பட்டுத் தனது பேராசை தோன்ற யாசகனாய்வந்து இராமபிரானையணுகி யாசிக்க, அப்பிரான் மற்றைப் பொருள்கள் தானஞ்செய்யப்பட்டன வாதலால் எஞ்சியுள்ள பசுத்திரளை வேண்டியவளவுகொள்ளுமாறு புன்னகையோடு சொல்ல, அவ்வந்தணன் மேலாடையை அரையில் இறுகக்கட்டிக்கொண்டு ஒருதடியை வீசியெறிந்து அது விழுந்த இடம்வரையிலுமுள்ள பசுத்திரளைத் தனக்குத் தருமாறு வேண்ட, இராமபிரான் அவ்வாறே அவற்றை யளித்தன னென்பது, அயோத்தியாகாண்டத்து வரலாறு. பரிகாசஞ்செய்யுந்தன்மையை மேற்கொண்டபொழுதும் இராமபிரான் வேண்டுவார் வேண்டியதைத் தவறாது அளிப்பவனாதலால், 'என்விருப்பம் கெட உபேட்சித்தல் தகுதியோ?' என்று சீதை எங்கின ளென்க. வேதியன் - வேதங்களை ஓதுதல் ஓதுவித்தல்என்னும் இருதொழிலுக்கும் உரியவன்-அந்தணன்: இங்கே, திரிசடனென்பவனை யுணர்த்திற்று. 'வேதியர்க்கான்குலமீந்தவர்' என்னும் பாடத்திற்கு—வேதியர் அவர் என்பன - ஒருவரைக் கூறும் பன்மைக்கிளவி யென்க. இராமன் அந்தணர்க்கு இரத்தினம் அணி யானை முதலிய தன் பொருள்களையெல்லாம் அளித்தனனென்று கூறியிருத்தலால், வேதியர்கட்கு ஆன்குலத்தைச் சிரிப்போடு ஈந்தன னென்றல், அத்துணைச் சிறப்பின்று. (௨௬)

௨௭. மழுவின்வாளினின்மன்னரைமூவெழு
பொழுதினூறிப்புலவுறுபுண்ணினீர்
முழுகினான்றவமொய்ம்பொடுமூரிவில்
தழுவுமேன்மைநினைந்துயிர்சாம்புவாள்.

(இ - ள்.) மழுவின் வாளினின் - மழுவாகிய ஆயுதத்தினால், மன்னரை - அரசர்களை, மூ எழு பொழுதின் - இருபத்தொருமுறை, ஊறி - அழித்து, புலவு உறு புண்ணின் நீர் - (அவர்களது) புலால்நாற்றம் பொருந்திய ரத்தத்தில், முழுகினான் - ஸ்நானஞ்செய்து தருப்பணம்பண்ணின பரசுராமனது, தவம் மொய்ம்பொடு - தவத்தின் வலிமையோடு, மூரி வில் - வலிமையையுடைய (அவரது) வில்லை, தழுவும் - கொண்ட, மேன்மை - மேம்பாட்டை, நினைந்து - எண்ணி, உயிர் சாம்புவாள் - உயிரொடுங்குவாள்; (எ - று.)

இருபத்தொருமுறை பூலோகத்தைப் பிரதக்ஷிணஞ்செய்து ஆங்காங்குள்ள சகல க்ஷத்திரியர்களையுந் தமது கோடாலிப் படையாற் சங்கரித்து அவர்களிரத்தத்தால் ஸ்யமந்தபஞ்சகமென்று ஐந்துகுளங்க ளமைத்து அவற்றில் நீராடிக் கார்த்தவீரியார்ச்சுனனாற் கொல்லப்பட்ட தமது தந்தைக்குத் தருப்பணங் கொடுத்து முடித்த பரசுராமர், சீதாகலியாணம் முடிந்து தசரதசக்கரவர்த்தி மக்களோடும் மருகிகளோடும் அயோத்திக்கு மீண்டுசெல்லுகையில் எதிரில்வந்து 'முன் ஹரிஹரயுத்தத்தில் இற்றுப்போன சிவனது வில்லை முறித்த திறமையை

அறிந்தேன்; இந்த ஸ்ரீமகாவிஷ்ணுவினது வில்லை வளை' என்று ஒருதனுசைக் கையிற் கொடுக்க, ஸ்ரீராமர் உடனே அதனை வளைத்துக் கணைதொடுத்து 'இவ் வம்புக்கு இலக்கு என்?' என்று கேட்க, பார்க்கவராமர் அதற்கு இலக்காகத் தமது தபோபலமுழுவதையுங் கொடுக்க, ஸ்ரீராமர், பரசுராமர் க்ஷத்திரியவமிசத் தைக் கருவறுத்தவராயிருந்தாலும் வேதவித்தும் தவவிரதம்பூண்டவரு மாதல் பற்றி அவருயிரைக் கொல்லாமல் தவத்தைக்கவர்ந்த மாத்திரத்தோடு விடுத்தா ரென்பது கதை. எத்துணைவலியாரையும் அடக்குந்திறமை படைத்த இராம பிரானுக்கு, இவ்வரக்கரை யடக்கி மீட்டல் ஒரு பெரிய காரிய மன்றாதலால், 'என்னை உபேட்சிப்பது என்கொண்டு'என்று சீதை உயிர்சாம்புவாளாயினளென்க. மழு, பரசு, கோடாலி என்பன - ஒருபொருட்சொற்கள். வாளினின், இன் - ஐந்தனுருபு, ஏதுப்பொருள். 'வாளினன்' என்றும் பாடம். மூவெழுபொழுது - பண்புத்தொகை. மூரிவில் - பெரிய வில்லுமாம். (உஎ)

உஅ. ஏகவாளியவ்விந்திரன்காதன்மேற்
போகவேவியதுகண்பொடித்தநாட்
காகமுற்றுமோர்கண்ணிலவாக்கிய
வேகவென்றியைத்தன்றலைமேற்கொள்வாள்.

(இ - ள்.) அ இந்திரன் காதல்மேல் - காகவடிவமாய் வந்த இந்திரனது குமாரனாகிய ஜயந்தன்மேலே, போக - செல்லும்படி, ஏகம் வாளி - ஒப்பற்ற தொரு அம்பை, ஏவி - பிரயோகித்து, அது - அவ்வம்பு, கண் பொடித்த நாள் - (அக்காக்கையின்) கண்ணொன்றைப் போக்கடித்த நாள்முதல், காகம் முற்றும் - எல்லாக்காக்கைகளையும், ஓர் கண் இல ஆக்கிய - ஒரு கண் இல்லாதனவாகச் செய்த, வேகம் வென்றியை - உக்கிரமான சயத்தை, தன்தலைமேல்கொள்வாள் - தன்சிரசின்மேற்கொண்டு கொண்டாடுவாள்; (எ - று.)

என்திறத்திலே அபராதஞ்செய்த ஜயந்தனென்னுங் காகாசுரன்மீது அம்பு தொடுத்து அவனது அபராதத்தைப் போக்கின இராமபிரான் என்னையே கவர்ந்த மகாபராதியாகிய இவ்விராவணனைத் தனதுதிறத்தினால் அடக்கிவிடாது உபேட் சிக்கின்றனனே யென்பது, சீதையின் குறிப்பு. சித்திரகூடபருவதப்பிரதேசத் திலே பெருமாளும் பிராட்டியும் ஏகாந்தமாயிருக்கச்செய்தே, இந்திரன்மகனான ஜயந்தன், தமோகுணத்தாலே விவேகசூனியனாய், தேவவேஷத்தைமறைத்துக் காகவேஷத்தைப் பூண்டுகொண்டுவந்து, பெருமாளும் மடியிலே பள்ளிகொண் டருளாநிற்கச்செய்தே, தாயென்று அறியாதே, பிராட்டியாரது திருமார்பிலே குத்த, அவ்வளவிலே பெருமாள் உணர்ந்தருளி அதிகோபிஷ்டராய் ஒருதருப் பத்தையெடுத்து அதில் பிரமாஸ்திரத்தை யோஜித்து அதனை அந்தக்காகத்தின் மேலே செலுத்திவிட, அந்த அஸ்திரம் மந்தகதியாக விடப்படுகையாலே பின் தொடர்ந்து செல்ல, அதனைத் தப்பவழிதேடி மூன்றுறத் தமப்பனிடஞ் சென்ற வளவில் பிதாவாலும் மாதாவாலுங் கைவிடப்பட்டு, பந்துக்களானவர்கள் கைக்கொள்ளுவர்களோவென்று அவர்கள்பக்கலிலே சென்றவளவில் அவர் களாலுங் கைவிடப்பட்டவனாய், ரிஷிகள்தாங் கைக்கொள்ளுவர்களோவென்று

அவர்கள்பக்கலிலே சென்றவளவில் அவர்களுங் கைவிடுகையாலே, திறந்து கிடந்த வாசல்கள்தோறும் ஒருகால் நுழைந்தாற்போலே ஒன்பதின்கால் நுழைந்து, மூன்றுலோகங்களையும் வளைய வோடித் திரிந்தவிடத்திலும், ஒருவருங் கைக்கொள்ளாமையாலே, சிறிதுவுங் காலைக் கட்டிக் கொள்ளலாம்படியிருக்குங் கிருபாவானாகையாலே சரணியரான பெருமாள் குணத்தைச் சொல்லித் தனக்குவேறு புகலின்மையாலே சரணாகதனானமை தோற்றக் கூப்பிட, இப்படி சரணம் புகுகையாலே கிருபையால் பெருமாள் ரக்ஷித்தருளுகிறவளவில் காகத்துக்குப் பிராணப்பிரதானம்பண்ணி அஸ்திரத்துக்கு ஒரு கண்ணழிவு கற்பிக்கையாலே, முன்பு தலையறுப்பதாகத் தொடர்ந்த அந்த அஸ்திரந்தானே அதனுடைய ஒரு கண்ணை அறுத்துவிட்டதென்பது, இங்குக் குறித்த வரலாறு; "சித்திரகூடத்திருப்பச் சிறுகாக்கை முலைதீண்ட, அத்திரமே கொண்டெறிய வனைத்துலகுந் திரிந்தோடி, வித்தகனே யிராமாவோ நின்னபய மென்றழைப்ப, அத்திரமே யதன்கண்ணை யறுத்ததுமோ ரடையாளம்" என்றார் பெரியாரும்: இவ்வரலாற்றை மேல் சூடாமணிப்படலத்தில் எ௯ - ஆம் கவிமுதல் ஆறுகவியிற் காண்க. காதல் - அன்பு; அவ்வன்பு செய்யப்படுங் காதலனுக்கு ஆகுபெயர். காகம் - கா என்று கத்துவது. (௨௮)

௨௯. வெவ்விராதனைமேல்வருந்தீவினை
வவ்விமாற்றருஞ்சாபமுமாற்றிய
வவ்விராமனையுன்னித்தன்னாருயிர்
செவ்விராதுணர்வோய்ந்துடறேம்புவாள்.

(இ - ள்.) வெம் விராதனை - கொடிய விராதனது, மேல் வரும் - மேல்மேல் வருகின்ற, தீ வினை - பாபகருமத்தை, வவ்வி - நீக்கி, மாற்று அரு சாபமும் - நீக்குதற்கு அரிய (அவனது) சாபத்தையும், மாற்றிய - நீக்கியருளின, அ இராமனை - அந்த ஸ்ரீராமனியல்பை, உன்னி - நினைத்து, தன் ஆர் உயிர் - தனது அரியஉயிர், செவ் இராது - செவ்வே நில்லாமல், உணர்வு ஓய்ந்து - அறிவு ஒடுங்கி, உடல் தேம்புவாள் - உடம்புவருந்துவாள்; (எ - று.)

தம்பியை யிழித்துச்சொன்னதற்காக எனக்குநேர்ந்த குற்றத்தை நீக்கி என்னையும் பாதுகாக்கவேண்டியிருக்க, அவ்விராமபிரான் இதுவரையில் அவ்வாறு செய்யாமைபற்றிச் சீதாபிராட்டி உணர்வோய்ந்து உடல் தேம்புவாளாயினளென்க. விராதனென்னும் வடசொல்லுக்கு - மிகுதியாக அபராதஞ்செய்பவனென்று பொருள்; இவன் முன்பு தும்புருவென்னும்பெயருள்ள கந்தருவனாயிருந்து குபேரனது சாபத்தாற் பின்பு ராக்ஷஸனாகி வனத்தில் திரிந்துவந்தவன். இராமலட்சுமணர்கள் சீதையுடனே தண்டகாரணியத்திற் செல்லுகையில் இவ்வரக்கன் வந்து ஜானகியைத் தூக்கிக்கொள்ளக் கண்டு ராமலக்ஷ்மணர் எதிர்க்க அவன் அவளைவிட்டு இவர்களிருவரையுந் தூக்கிக்கொண்டுசெல்ல, இராகவவீரர்கள் அவனைத் தோள்களைவெட்டிக் கொன்றுவிட்டு அவன் தனது பிறப்பையுணர்த்தி வேண்டிக்கொண்டபடி பள்ளம்வெட்டிப் புதைத்துச்சென்றனர்; அவன் இவர்களைத் தோள்களின்மே லெழுந்தருளப்பண்ணிக்கொண்டு போனபொழு

தும் ஸ்ரீராமன் காலாலுதைத்துப் பள்ளத்தில்தள்ளியபொழுதும் இவர்கள் திருவடிகள் பட்ட பாக்கியத்தால் தீவினையெல்லாந்தீர்ந்து சாபமொழிந்து பூர்வஜன்மத்து நிஜரூபத்தைப் பெற்றுத் தன்னுலகஞ்சென்று இன்பமடைந்தா னென்பது, ஆரணியகாண்ட வரலாறு. (உக)

வேறு.

[திரிசடையன்றி மற்றை அரக்கியர் யாவரும் நள்ளிரவில் தூக்கத்தால் மயங்கிக்கிடத்தல்.]

௩௦. இருந்தனடிரிசடையென்னுமின்சொலிற்
றிருந்தினளொழியமற்றிருந்ததீவினை
யருந்திறலரக்கியரல்லுநள்ளுறப்
பொருந்தலுந்துயினறைக்களிபொருந்தினார்.

(இ - ள்.) இருந்தனள் - (சீதைக்கு) நல்லவளாக இருந்த, திரிசடை என்னும் - த்ரிஜடையென்கிற, இன் சொலில் திருந்தினள் ஒழிய - இனியசொற் சொல்லுதலிற் சீர்திருந்தின ராக்ஷஸியொருத்தி தவிர, மற்று இருந்த - இன்னங் காவலாகஇருந்த, தீவினை - கொடியசெய்கைகளையும், அரு திறல் - அளவிடுதற்கரிய வலிமையையுமுடைய, அரக்கியர் - ராக்ஷஸிகள்யாவரும், நள் அல்லு உற பொருந்தலும் - நடுஇராத்திரி வந்து சேர்ந்தவளவில், துயில் நறை களி பொருந்தினர் - தூக்கமாகிய மதுவையுண்டு அதனால் மயக்கமடைந்தனர்; (எ - று.)

மெய்ம்மறந்து தூங்கினர் என்றபடி. திரிசடை - விபீஷணரது திருமகள்; பிராட்டிபக்கல் மிகுந்த அன்புடையாள்: தந்தையைப்போல நற்குணநற்செய்கைகளையுடையவள்: இவள் சீதையின் வருத்தத்திற்கு மனப்பூர்வமாக வருந்துபவளாதலால், அவ்வருத்தமிகுதியால் நள்ளிரவிலும் சீதையைப்போலவே துயிலின்றி யிருந்தன ளென்க. அல்லு, உ - சாரியை. துயில் - முதனிலைத் தொழிற்பெயர். துயில்நறைக்களிபொருந்தினர் - கள்ளுண்டு களித்த மயக்கத்தால் தூக்கம் பொருந்தினர் என்றும் உரைப்பர்.

இதுமுதல் இப்படலம் முடிகிறவரையில் நாற்பத்தெட்டுக் கவிகள் பெரும்பாலும் மூன்றாஞ்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய கலிவிருத்தங்கள். (௩௦)

[சீதாபிராட்டி தனக்குத்தோன்றிய நன்னிமித்தத்தைத் திரிசடையினிடம் கூறத் தொடங்குதல்.]

௩௧. ஆயிடைத்திரிசடையென்னுமன்பினோ
டாயினுமினியவடன்னைநோக்கினோ
ரேயைநீகேட்டியென்றுணைவியாமெனா
மேயதோர்கட்டுரைவிளம்பன்மேயினாள்.

(இ-ள்.) அ இடை - அப்பொழுது, (பிராட்டி), தாயினும் இனியவள்-(தனக்குத்) தாயைக்காட்டிலும் நல்லவளாகிய, திரிசடை என்னும்-த்ரிஜடையென்கிற, அன்பினாள்தன்னை - (தன்பக்கல்) அன்புடையவளை, நோக்கினாள்-பார்த்து, 'நீ—, தூயை-பரிசுத்தகுணமுடையவள்; என் துணைவி ஆம் - எனக்குத் தோழியாவாய்; கேட்டி - (யான்சொல்வதைக்) கேட்பாயாக', எனா - என்றுசொல்லி, மேயது ஓர் கட்டு உரை - பொருந்திய தொரு நன்மொழியை, விளம்பல் மேயினாள் - சொல்லத் தொடங்கினாள்; (எ - று.)—அது மேல்நான்குகவிகளாற் கூறுகின்றார்.

அரக்கியர்யாவரும் உறக்கத்தினால் மயங்கிக்கிடக்கையில், இதுவே நம்மிடத்துப் பேரன்புள்ள திரிசடையோடு பேசுதற்கு ஏற்ற சமயம் என்று கருதி, சீதாபிராட்டி அவளோடு தனக்குத்தோன்றியுள்ள நன்னிமித்தத்தைக் கூறத் தொடங்கின ளென்பதாம். இச்செய்யுளின் முன்னிரண்டடிகட்கு, அரக்கியர்யாவரும் உறங்கியகாலத்தில், (சீதாபிராட்டியோடு கலந்துபேசுதற்குத் தக்ககாலம் இதுவே யென்று கருதி,) திரிசடையென்னும் அன்பினாள் தாயினும் இனியவளான சீதாபிராட்டியைப் பார்த்தாள்; (அக்குறிப்பையறிந்த அப்பிராட்டியும் அவளை நோக்கி) 'தூயைநீ கேட்டி' என்று சொல்லத்தொடங்கினாள் என்று உரைப்பினும் அமையும். ஆயிடை - சுட்டுநீண்டவிடத்து யகரம் தோன்றிற்று. (௩௧)

[இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்; சீதை திரிசடையினிடம் தனக்குநேர்ந்த நன்னிமித்தத்தினால் யாது பயன் விளையுமோவென்று ஐயுறுதல்.]

௩௨. நலந்துடிக்கின்றதோநான்செய்தீவினைச்
சலந்துடித்தின்னமுந்தருவதுண்மையோ,
பொலந்துடிமருங்குலாய்புருவங்கண்முதல்
வலந்துடிக்கின்றிலவருவதோர்கிலேன்.

(இ - ள்.) பொலன் துடி மருங்குலாய்-அழகிய உடுக்கைபோன்ற இடையையுடையவளே! நலம் - நன்மைதான், துடிக்கின்றதோ-(எனக்கு உண்டாக) விரைகின்றதோ? (அன்றி), நான்—, செய் - (முற்பிறப்பிற்) செய்த, தீவினை - பாவத்தின், சலம் - கொடுமை, துடித்து - அதிகப்பட்டு, இன்னமும் - இனிமேலும், தருவது - (வருத்தத்தைக்) கொடுப்பதுதான், உண்மையோ - உண்டாகுமோ? புருவம் கண் முதல் - புருவமுங் கண்ணும் முதலிய உறுப்புகள், வலம் துடிக்கின்றில - வலப்பக்கம் துடிக்கின்றனவில்லை [இடப்பக்கமே துடிக்கின்றன]; வருவது - (இக்குறியால்) இனிவருவதோர்பயனை, ஓர்கிலேன்-(யான்) இன்னதென்று அறிகிறேனில்லை; (எ - று.)

எனது இடக்கண் முதலியன துடிக்கின்றதனால், இனியேனும் எனக்கு நன்மையுண்டாகுமோ? அன்றித் தீவினைப்பயனே இங்ஙனம் தோன்றி எனக்கு ஒரு ஆசையை விளைத்து அதன்மூலமாக எனக்குத் துன்பத்தை மிகுவிக்கப் பார்க்கின்றதோ? இதனால் விளையப்போவது யாதோ? என்று சீதாபிராட்டி தனக்குத்தோன்றிய எண்ணத்தைத் தனது துணைவியான திரிசடையினிடம் தெரிவிக்கலாயின ளென்பதாம். முதலடியில், துடித்தல் - விரைவுக்குறிப்பு. இரண்டா

மடியில் துடித்தல்-மிகுதல். 'தீவினைசலந்துடித்து' என்று இயல்பான பாடமாயின், நான்செய்த தீவினையானது (எனக்கு நற்பயன் விரைவிற்சித்திக்கு மென்று கருதுமாறு) வஞ்சனையாக இடந்துடித்து, இனியும் எனக்குத் துன்பத்தைத்தான் விளைவிக்கப்போகின்றதோ? என்று பொருளுரைக்க. மகளிர்க்கு இடமும், ஆடவர்க்கு வலமும் துடிப்பது நன்னிமித்தமாகும். பொன் + துடி = பொலந்துடி; இந்தப் புணர்ச்சி "பொன்னென் கிளவி ஈறுகெட முறையின், முன்னர்த் தோன்றும் லகார மகாரஞ், செய்யுண் மருங்கிற் றொடரிய லான" என்னுந் தொல்காப்பியச்சூத்திர விதியால் முடிந்தது; நன்னூல்விதியின்படி பொலம் துடி எனப் பிரித்துப் புணர்க்க. துடி உவமை, மேலுங் கீழும் பருத்து நடுச்சிறுத்தலாகிய வடிவுபற்றியது. முதல - முதல் என்பதன் விகாரம். முதல என்றது, தோள் தொடை முதலியவற்றை. (௩௨)

௩௩. முனியொடுமிதிலையின்முதல்வன்முந்துநாட்
டுனியறுபுருவமுந்தோளுநாட்டமு
மினியனதுடித்தனவீண்டுமாண்டென
நனிதுடிக்கின்றனவாய்ந்துநல்குவாய்.

(இ - ள்.) முதல்வன் - நாயகனாகிய ஸ்ரீராமன், முனியொடு - விசுவாமித்திர முனிவருடனே, மிதிலையின் - மிதிலா பட்டணத்துக்கு, முந்தும் நாள் - வந்தபொழுது, துனி அறு புருவமும் - குற்றமற்ற (எனது) புருவமும், தோளும்—, நாட்டமும் - கண்ணும், இனியன - இனிமையைவிளைப்பனவாய், துடித்தன - (இடந்)துடித்தன; ஈண்டும் - இப்பொழுதும், ஆண்டு என - அப்பொழுது துடித்தாற்போலவே, நனி துடிக்கின்றன - நன்றாக (இடந்) துடிக்கின்றன;—ஆய்ந்து நல்குவாய் - (இதன்பயனை) ஆராய்ந்து (எனக்குச்) சொல்வாயாக; (எ - று.)

இராமபிரான் விசுவாமித்திரமுனிவரோடு முன்புமிதிலாபுரியிற்புகும்போது எனக்கு இடப்பக்கந் துடித்ததுபோலவே இப்போதும் இடந்துடிக்கின்றனவே! இவ்விலங்கையில் எனக்கு அவ்வாறான நன்மை யாதுவிளையும்? இதன்பயனை ஆராய்ந்து சொல்லுக என்று சீதாபிராட்டி திரிசடையை வேண்டினளென்க. மிதிலை - ஜனகமகாராஜாது நகர்; இச்சொல்லிற்கு - மிதி யென்பவரால் ஏற்படுத்தப்பட்டதென்பது பொருள்: நிமி சக்கரவர்த்தியின் உடலில் முனிவர் அரணியிட்டுக் கடைந்ததனாற் பிறந்தமைபற்றி, மிதி யென்று ஜனக குலத் தலைவருக்குப் பெயர். என - உவம வுருபு. நனி - மிகுதியுணர்த்தும் விசேடித்த உரிச்சொல். நல்குதல் - இடத்திற்கேற்ப, சொல்லுதலாயிற்று. (௩௩)

௩௪. மறந்தனெனிதுவுமோர்மாற்றங்கேட்டியா
லறந்தருசிந்தையென்னாவிநாயகன்
பிறந்தபார்முழுவதுந்தம்பியேபெறத்
துறந்துகான்புகுந்தநாள்வலந்துடித்ததே.

(இ - ள்.) மறந்தனென் - (முன்னே) சொல்ல மறந்தேன்; இதுவும் ஓர் மாற்றம் - இவ்வொரு வார்த்தையையும், கேட்டி - கேட்பாய்; அறம் தரு

சிந்தை - தருமமே பொருந்திய மனத்தையுடைய, என் ஆவி நாயகன் - எனது உயிரோடொத்த கொழுநராகிய இராமபிரான், பார் முழுவதும் - பூமிமுழுவதை யும், பிறந்த தம்பியே - தன்பின் பிறந்த அடுத்த தம்பியாகிய பரதனே, பெற - பெறும்படி, துறந்து - (அயோத்தியை) விட்டு, கான் புகுந்த நாள் - வனத்திற்கு வரும்பொழுது, வலம் துடித்தது - (புருவம்முதலியன) வலப்புறம் துடித்தது; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

கீழ்க்கவியில் தனக்கு முன்னே நன்மைவிளைந்தகாலத்தில் அதற்கு அறி குறியாக இடந்துடித்ததைக் கூறிய சீதாபிராட்டி, இக்கவியாலும் அடுத்தகவியா லும் தனக்குத் தீமை விளைந்தகாலங்களில் அவற்றிற்கு அறிகுறியாக வலந்துடித் ததைக் கூறுகின்றாள்; அவற்றுள், இச்செய்யுளில் தனதுகணவன் நாட்டை விட்டு வனத்திற்குப் போக விருக்கையில் அத்தீமையை முந்துற அறிவிக்கு மாறு தனக்கு வலந்துடித்ததைத் தெரிவிக்கின்றன வென்க. பிறந்த பார் என்று எடுத்து-தனக்கென்று சொல்ல உண்டான இராச்சிய மெனினும் அமையும். (௩௪)

௩௫. நஞ்சனையான்வனத்திழைத்தநாளிடை
வஞ்சனையால்வலந்துடித்தவாய்மையா
லெஞ்சல்வீண்டுதாமிடந்துடித்ததா
லஞ்சலென்றிரங்குதற்கடுப்பதியாதென்றாள்.

(இ - ள்.) நஞ்சு அனையான் - விஷம்போலக் கொடிய இராவணன், வஞ்சனை யால் - கபடத்தினாலே, வனத்து - தண்டகாரணியத்தில், இழைத்த நாளிடை - (எனக்குத் தீங்கு) செய்த பொழுதில், வலம் துடித்த - வலப்பக்கந் துடித்தன; (அப்பொழுதெல்லாம்), தாம் - இவ்வுறுப்புக்கள், வாய்மையால் - உண்மையாகிய விளைபயனால், எஞ்சல - குறையாதவை யாயின; ஈண்டு - இப்பொழுது, இடம் துடித்தது - இடப்புறந் துடித்தது; ஆல் - ஆதலால், அஞ்சல் என்று - பயப் படாதே என்று சொல்லி, இரங்குதற்கு - (என்பக்கல்) இரக்கங்கொள்ளுமாறு, அடுப்பது - வருவதாகிய செயல், யாது - எதுவோ? என்றாள் - என்று (பிராட்டி) சொன்னாள்; (எ - று.)

இடந்துடித்தால் தீமைவிளைவதும் வலந்துடித்தால் நன்மைவிளைவதும் இதற்கு முன்னெல்லாம் எனக்குத் தவறாது விளைந்தன; இப்போதோ எனக்கு இடம் துடிக்கின்றது; ஆனால், கடலிடையிலுள்ள இலங்காபுரியில் அரக்கரிடை யிலே அகப்பட்டுக்கிடக்கின்ற எனக்கு எந்த நன்மை உண்டாகக் கூடும்? இங்கு நன்மைவிளைதற்கு யாதொருவழியும் தெரியவில்லையே என்று ஏங்கிச் சீதா பிராட்டி திரிசடையினிடம் தெரிவித்தன ளென்க. பெண்களுக்கு இடந்துடித் தல் நற்குறி; வலந்துடித்தல் தீக்குறி.

இராவணன் தன்னை மணஞ்செய்யுமாறு பலபடி நயபயங்களால் வேண்டி யும் இணங்காத சீதையை இணங்குவிக்கும்படி அரக்கிமார்களை ஏவிச் செல்ல, அவர்களும் அவ்வாறே அச்சமுறுத்தி வற்புறுத்துகையில், சீதாபிராட்டி, தன்னை இராமன் தேடிமீட்க வாராமைக்குக் காரணங்களைப் பலவாகச் சங்கித்துத் தனது பாக்கியக்குறைவே காரணமென்று அறுதியிட்டு இனித் தனக்கு மரணமே

சரணமென்று நிச்சயிக்க, அதுபோது திரிசடை தான்கண்ட கனவுகளையும் அவற்றின் பயன்களையும் கூறிச் சீதையைத்தேற்றுகையில், சீதைக்கு நன்னிமித்தம் தோன்றின வென்று முதனூலிற் கூறப்பட்டுள்ளது. (௩௫)

**[சீதாபிராட்டியை நோக்கித் திரிசடை நற்பயன்விளையுமென்று பின்னும் கூறுதல்.]**

௩௬. என்றலுந்திரிசடையியைந்தசோபன
நன்றிதுநன்றெனநயந்தசிந்தையா
ளுன்றுணைக்கணவனையுறுதலுண்மையா
லின்றியுங்கேட்டியென்றறைதன்மேயினள்.

(இ - ள்.) என்றலும் - என்று (பிராட்டி) சொன்னவளவில், திரிசடை - த்ரிஜடையானவள், 'இயைந்த - (உனக்கு) உண்டான, சோபனம் இது - இம் மங்களக்குறி, நன்று நன்று - மிகவும் நன்மையைத்தருவதாம்,' என - என்று சொல்லி, (பின்பும்), நயந்த சிந்தையாள் - (பிராட்டியினிடத்து) அன்புவைத்த மனத்தையுடையவளாய், 'உன் துணை கணவனை - உனக்குத் துணையான கொழுநராகிய ஸ்ரீராமரை, உறுதல் - (நீ) சேர்தல், உண்மை - நிச்சயம்; அன்றியும் - இது வல்லாமலும், கேட்டி - (யான்சொல்வதைக்) கேட்பாயாக,' என்று - என்று சொல்லி, அறைதல் மேயினள் - சொல்லத் தொடங்கினள்; (எ-று.)—அதனை மேல் இரண்டுகவிகளாற் கூறுகின்றார்.

நன்று நன்று - அடுக்கு, துணிவு பற்றியது. நயந்தசிந்தையாள் - குறிப்பு முற்றெச்சம். (௩௬)

**[இதுவும், அடுத்தகவியும்-ஒருதொடர்; சீதாபிராட்டியினிடம் தான்கண்ட நன்னிமித்தத்தைத் திரிசடை எடுத்துக்காட்டுதல்.]**

௩௭. உன்னிறம்பசப்புறவுயிருயிர்ப்புற
வின்னிறத்தேனிசையினியநண்பினன்
மின்னிறமருங்குலாய்செவியின்மெல்லெனப்
பொன்னிறத்தும்பிவந்தூதிப்போயதால்.

(இ - ள்.) மின் நிறம் மருங்குலாய் - மின்னல்போன்ற தன்மையுள்ள இடையையுடையவளே! உன் நிறம் பசப்பு உற - உனது திருமேனியின் நிறம் பசுமைபெறும்படியாகவும், உயிர் உயிர்ப்பு உற - ஜீவன் பிழைத்தலைப்பெறும்படியாகவும், பொன் நிறம் தும்பி - பொன்னின் நிறத்தையுடையதொரு வண்டு, இனிய நண்பினல் - இனிமையான தன்மையினால், மெல்லென வந்து - மெதுவாக வந்து, இன் நிறம் - (கண்ணுக்கு) இனிய நிறத்தையுடைய, தேன் - (தான் உண்ணும்) தேன் போன்ற, இசை - பாட்டிசையை, செவியின் - (உனது) காதில், ஊதி - ஊதிவிட்டு, போயது - இப்பொழுது போயிற்று; (எ - று.)—ஆல் - அசை.

பொன்வண்டு செவியினிடத்தில் இன்னிசையை ஊதிச்சென்ற இது நல்ல குறியென்பதைக் குறிப்பித்தற்கு 'உன்னிறம் பசப்புற உயிருயிர்ப்புற' என்றார்.

௩௮. ஆயதுதேரினுன்னுவிநாயக
னேயதுதூதுவந்தெதிர்தலுண்மையாற்
றீயதுதீயவர்க்கெய்தறிண்ணமென்
வாயதுகேளெனமறித்துங்கூறுவாள்.

(இ - ள்.) ஆயது - அதனை, தேரின் - ஆலோசித்தால், உன் ஆவி நாயகன் - உனது பிராணநாயகன், ஏயது - ஏவியனுப்பின, தூது - தூதன், வந்து எதிர்தல் - (இங்கு) வந்து சேர்தல், உண்மை - நிச்சயமாம்; (அன்றியும்), தீயவர்க்கு - கொடுந்தன்மையுள்ள இராவணாதியர்க்கு, தீயது - கொடிய துன்பம், எய்தல் - வருதலும், திண்ணம் - உறுதியாம்; (அதற்கு அறிகுறியாக), என் வாயது - என்னிடம் நிகழ்ந்ததை, கேள்—, என - என்று சொல்லி, மறித்தும் கூறுவாள் - மீண்டுஞ் சொல்லுவாள், (திரிசடை); (எ - று.)

'எந்த நன்மையையும் எதிர்பார்த்தற்கிடமில்லாத இவ்வசோகவனிகையில் அரக்கரிடையே அகப்பட்டுத் தவிக்கின்ற உனக்கு இடந்துடிக்கின்றதனால் யாது நற்பயன் விளையும்?'' என்று ஐயுறவேண்டா; உனது திருமேனியில் நன்னிறமுண்டாகுமாறும் உன்னுயிர் தேறுதலடையுமாறும் பொன்னிறவண்டு இன்னிசையை உன் செவியிலே ஊதிச் சென்றதனால் அதன் பயனாக இப்போது உனது பிராணநாயகனாகிய ஸ்ரீராமனிடத்திலிருந்து ஒரு தூதுவன் வந்து செய்திசொல்லிவிட்டுப் போவானென்பது, தெற்றென விளங்குகின்றது; இதுவே, உனக்கு இடப்புறம் துடித்ததன் பயனாம்; அன்றியும், இவ்விராக்கதர்கட்குத் தீமைவிளையுமென்பதற்கு அறிகுறியாக இப்போது ஒரு கனவும் கண்டேன்; அதனை யான் கூறக் கேளென்று திரிசடை கூறலாயினளென்பதாம். (௩௮)

[திரிசடை தான் நம்கனுக்கண்டமையைச் சீதாபிராட்டியினிடம் எடுத்துக்கூறத் தொடங்குதல்.]

௩௯. துயிலிலதாதலிற்கனவுதோன்றல
வயில்விழியொருகனவமைந்துநோக்கினேன்
பயில்வனபழுதிலபழுதிநாடென
வெயிலினுமெய்யனவுரைத்தன்மேயினாள்.

(இ - ள்.) அயில் விழி - வேல்போலுங் கண்களையுடையவளே!— துயில் இலது ஆதலின் - (உனக்குத்) தூக்கமில்லையாதலால், கனவு தோன்றல - கனாக்கள் காணப்படுவனவில்லை; (யான்), ஒரு கனவு - ஒரு கனாவை, அமைந்து நோக்கினேன் - உண்டாகிக் காணப்பெற்றேன்; பழுது இ நாடு - குற்றமுள்ள இந்நாட்டில், பயில்வன - உண்டாகுங் கனாமுதலிய தோற்றங்கள், பழுது இல - பழுதுபடுகின்றனவில்லை, என - என்றுசொல்லி, வெயிலினும் மெய்யன - சூரியனைக்காட்டிலும் தவறாதனவாகிய சொற்களை, உரைத்தல் மேயினாள் - சொல்லத்தொடங்கினாள்; (எ - று.)

திரிசடை பிராட்டியை நோக்கி 'சீதையே! உனக்கு உறக்கமில்லாமையால் ஏன்னிமித்தமாத்திரம் தோன்றியனவேயன்றிக் கனாத்தோன்றவில்லை; அரக்கர்க்

குத் தீமைவிளையுமென்பதற்கும் உனக்கு நன்மையுண்டாகு மென்பதற்கும் அறிகுறியாக யான் ஒருகனாக் கண்டேன்; அதனைக் கேள்' என்று சொல்லிக் கூறத் தொடங்கின ளென்பதாம்.

இந்த நாடு குற்றமே நிறைந்ததாயினும் இதிற்காணும் கனாமாத்திரம் ஒரு போதும் பொய்க்காதென்பாள் 'பயில்வன பழுதில பழுதிநாடு' என்றாள். அயில் விழி - உவமைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை; அண்மைவிளியாதலின் இயல்பாயிற்று. இநாடு - இந்நாடுஎன்பதன் தொகுத்தல். 'பழுதினாடு' என்ற பாடத்துக்கு - பழுதுக்கு இல்லான [உறைவிடமான] (இந்த) நாட்டில் என்க. வெயில் - சூரியனுக்கு இலக்கணை. சூரியன் தான் உதித்தலும் அஸ்தமித்தலும் பொய்க்காதிருத்தலால், பொய்யல்லாத மெய்ச்சொல்லுக்குச் சூரியனை உவமைகூறுவர்; "காலைபன்ன சீர்சால் வாய்மொழி" என்ற பதிற்றுப்பத்தின் அடியையும், 'ஆதித்தனைப்போல் என்றுமொன்றும் தப்பாதாகிய மெய்ம்மொழி' என்ற அதனுரையையும் காண்க. இனி, ஒருசாரார் 'வெயிலினும் வெய்யன' என்ற பாடங்கொண்டு, 'சூரியகிரணத்தினும் விரும்பத்தகுந்த சொற்களை' என்று பொருளுரைத்து, நள்ளிரவில் அரக்கியரிடைப்பட்டு மிகவும் வருந்துகின்ற சீதைக்கு அவ்வருத்தம் சிறிதுநீங்குமாறு இனி விடிந்து தோன்றப்போகின்ற சூரியனைக்காட்டிலும் செவிக்கினிய சொற்கள் என்று கருத்துக்கொள்வர். இங்கு வெய்யன - கொடிய சொற்கள் என்று உரைத்தல், அத்துணைச் சிறவாது. (௩௯)

[இதுவும், அடுத்தகவியும் - ஒருதொடர்; திரிசடை, இராவணன்குலத்தோடு நாசமடைவதைக்குறிக்குங் கனாக்கண்டதைக் கூறுதல்.]

௪௦. எண்ணெய்பொன்முடிதொறுமிழுகியீறிலாத்
திண்ணெடுங்கழுதைபேய்பூண்டதேரின்மே
லண்ணலவ்விராவணனரத்தவாடைய
னண்ணினன்றென்புலநவையில்கற்பினாய்.

(இ - ள்.) நவை இல் கற்பினாய் - குற்றமில்லாத கற்புநிலைமையையுடையவளே!---அண்ணல் - பெருந்தன்மையையுடைய, அ இராவணன் - அந்த இராவணன், பொன் முடிதொறும் - அழகிய (தனது) பத்துத்தலைகளிலும், எண்ணெய் - எண்ணெயை, இழுகி - தேய்த்துக்கொண்டு, ஈறு இலா - அளவில்லாதனவாகிய, திண் நெடு கழுதை - வலிய பெரிய கழுதைகளும், பேய் - பேய்களும், பூண்ட - பூட்டப்பட்டுள்ள, தேரின்மேல் - தேரின்மேலேறிக் கொண்டு, அரத்தம் ஆடையன் - சிவந்த வஸ்திரத்தை உடுத்துக்கொண்டவனாய், தென் புலன் - தெற்குத் திக்கை நோக்கி, நண்ணினன் - சென்றான்; (எ - று.)

இராவணன் தனது பத்துத்தலைகளிலும் எண்ணெய்தேய்த்துக்கொண்டு கழுதையும் பேயும் பூட்டிய தேரின்மீதேறி, இரத்தவாடையுடன் தென்திசை நோக்கிச் செல்வதாகக் கனாக்கண்டேனென்று திரிசடை பிராட்டியினிடம் கூறினளென்க. "இல்லை கனாமுந்துறாதவினை" என்பவாதலால், இராவணனுக்குத் தீங்குநேர்வது கனவினால் முந்துறத் தெரிவிக்கப்பட்டது. வான்மீகிபக

வானும் இங்ஙனமே கூறியுள்ளார். எண்ணெய்-எள்ளிலிருந்து உண்டாகும் நெய், தைலம். அகரச்சுட்டு, பிரசித்தியைக் காட்டிற்று. அரத்தம் - ரக்தமென்பதன் விகாரம். (௪௰)

௪௧. மக்களுஞ் சுற்றமு மற்றுளோர்களும்
புக்கன ரப்புலம் போந்த தில்லையாற்
சிக்கற நோக்கினென் றீயவின் னமு
மிக்கன கேட்கென விளம்பன் மேயினாள்.

(இ - ள்.) 'மக்களும் - (அவனது) பிள்ளைகளும், சுற்றமும் - உறவினர்களும், மற்று உளோர்களும் - இன்னமுள்ள அரக்கர்களும், அ புலம் - அந்தத் திக்கை நோக்கியே, புக்கனர் - சென்றார்கள்; போந்தது இல்லை - திரும்பி வரக் கண்டதில்லை; சிக்கு அற - தவறுபடாமல், நோக்கினென் - பார்த்தேன்; இன்னமும்—, தீய - கொடியவை, மிக்கன - மிகுந்துள்ளவற்றை, கேட்க - கேட்பாயாக', என - என்று சொல்லி, விளம்பல் மேயினாள் - (அவற்றையும்) சொல்லத் தொடங்கினாள், (திரிசடை); (எ - று.)

அன்றியும், இராவணன் எந்தத்திசையாகச் சென்றானோ அந்தத் தென்திசை நோக்கியே அவனது மக்களும் சுற்றத்தாரும் திரும்பிவாராமலே செல்லக் கனாக்கண்டேன்; ஆதலால், வமிசநாசமாக இராவணன் அழிவது நிச்சயம்: இவற்றைத்தவிர இன்னும் சில கனாவும் கண்டேன்; அவற்றையும் கூறுவேனென்று திரிசடை கூறலாயினளென்க. (௪௧)

[திரிசடை பின்னும் தான்கண்ட கனவைக் கூறுதல்.]

ஆண்டகை யிராவணன் வளர்க்கு மவ்வன
லீண்டின விறந்தன வினங்கொள் செஞ்சிகைத்
தூண்டரு மணிவிளக் கழலுந் தொன்மனை
கீண்டதால் வானவே றெறியக் கீழைநாள்.

(இ - ள்.) ஆண் தகை - ஆண்மைக்குணத்தையுடைய, இராவணன்—, வளர்க்கும் - (நெய்முதலியன சொரிந்து) வளரச்செய்வனவாகிய, அ அனல் - அந்த ஓமாக்கினிகள், ஈண்டின - ஒன்று கூடினவாய் [ஒருசேர], இறந்த - அவிந்தன; இனம் கொள் - கூட்டத்தைக்கொண்ட, செம் சிகை - சிவந்த சுவாலையையுடைய, தூண்டு அரு - தூண்டுதல் வேண்டாத, மணி விளக்கு - இரத்தினமயமான தீபங்கள், அழலும் - விளங்கப்பெற்ற, தொல் மனை - (அவனது) பழமையான மாளிகை, கீழை நாள் - விடியற்காலத்தில், வானம் ஏறு எறிய - ஆகாயத்துப் பேரிடி இடித்துவிழுதலால், கீண்டது - இடிபட்டது; (எ - று.)

கீழ் இரண்டுகவிகளினால் இராவணன் வம்சநாசமாவதைச் சூசிப்பிக்குங் கனாக் கண்டதைக் கூறிய திரிசடை, இந்தச்செய்யுளினால் இனி இராவணனதுமாளிகை விரைவிலழிவதைக் குறிப்பிக்குங் கனாக்கண்டதைக் கூறுகின்றனளென்க. ஆண்டகை -ஆண்டகைமை; பராக்கிரமம். ஆகவநீயம், காருகபத்தியம், தக்ஷிணாக்கினி என்று ஓமாக்கினி மூன்றுவகைப்படுதலால் 'ஈண்டின இறந்த'

எனப் பன்மையாற் கூறப்பட்டது. அனல் - பால்பகாவஃறிணைப்பெயர். அ - பண்டறி சுட்டு. 'அவ்வனம்' என்னும் பாடத்துக்கு - இராவணன் வளர்ச்செய்த அசோகவனத்திலுள்ள மரங்கள் அழிந்தன வென்க. விளக்கு - பொருள்களை விளங்கச்செய்வதெனக் காரணப்பெயர்; வினைமுதற்பொருள் விகுதி புணர்ந்து கெட்டது. ஏறு - ஆண்பெயர்; வரேளறு, வேலேறு என்றாற்போல, 'வான வேறு' என்றார்: சிறந்ததை ஆணென்றல், மரபு; பேரிடியென்று கருத்து; ஆணைலபோல. 'கீழைநாள்' என்றதனால், இந்தக்கனா முழுவதும் இன்றை விடியலிற்கண்டது எனத் தெரிவித்தாள். விடியற்காலத்துக்கனா தவறாது விரை விற் பலிக்குமென்பது, நூற்றுணிபு. (௪௨)

[இனித் திரிசடை இலங்கையில் தோன்றும் உற்பாதங்களை ஆறுகவிகளாற் கூறுகின்றாள்.]

௪௩. பிடிமதம்பிறந்தனபிறங்குபேரியு
மிடியெனமுழங்குமாலிரட்டலின்றியே,
தடியுடைமுகிற்குலமின்றித்தாவில்வான்
வெடிபடவதிருமாலுதிருமீனெலாம்.

(இ - ள்.) பிடி மதம் பிறந்தன - பெண்யானைகள் மதமொழுகப்பெற்றன; பிறங்கு பேரியும் - விளங்குகின்ற முரசவாத்தியங்களும், இரட்டல் இன்றியே - அடித்தலில்லாமலே, இடி என - இடிபோலவே, முழங்கும் - தாமே கொடுமை யாக ஒலிக்கும்; தடி உடை - மின்னலையுடைய, முகில் குலம் - மேகக்கூட்டம், இன்றி - இல்லாமலே, தா இல் வான் - கெடுதலில்லாத ஆகாயம், வெடி பட - (அண்டமெல்லாம்) வெடிக்கும்படி, அதிரும் - இடியிடிக்கும்; மீன் எலாம் - நக்ஷத்திரங்களெல்லாம், உதிரும் - உதிர்ந்துவிழும்; (எ - று.)

பெண்யானை மதநீரொழுகப்பெறுவதும், பேரிகை அடிக்கப்படாமலே ஒலித்தலும், ஆகாயத்தில் முகிற்குலங்களில்லாமலே இடித்தலும், நட்சத்திரங் கள் உதிர்தலும், பின்வருந் தீங்கைத் தெரிவிக்கும் உற்பாதங்களென்க; மேலிற் கவிகளும் இங்ஙனமே காண்க. தடி - தடித் என்னும் வடமொழியின் விகாரம். தா - உரிச்சொல். மீன் - மின்னுவது என்னும் பொருளில் வினைமுதற்பொருள் விகுதி புணர்ந்துகெட்டு முதல்நீண்ட காரணப்பெயர். முதலடி - முற்றுமோனை.

௪௪. விற்பகலின்றியேயிரவுவிண்டற
வெற்பகவெரிந்துளதென்னத்தோன்றுமான்
மற்பகமலர்ந்ததோண்மைந்தர்சூடிய
கற்பகமாலையும்புலவுகாலுமால்.

(இ - ள்.) வில் - ஒளியையுடைய, பகல் - பகற்பொழுது, இன்றியே - இல்லாமலே [இராப்பொழுதிலே], இரவு விண்டு அற - இருள் நீங்கி ஒழி யும்படி, எல் - சூரியன், பக எரிந்துளது என்ன - பிளவுபட [பாதி] எரிந்து போனதுபோல, தோன்றும் - விளங்கும்; மல் பக - வலிமைமிக, மலர்ந்த - விளங்குகிற, தோள் - தோள்களையுடைய, மைந்தர் - வீரர்கள், சூடிய - தரித்த,

கற்பகம் மாலையும் - கல்பகவிருக்ஷங்களின் மலர்களால் தொடுத்த மாலைகளும், புலவு நாலும் - (நறுமணமின்றிப்) புலால்நாற்றம் வீசும்; (எ - று.)

இரவிலும் இருளொழியும்படி சூரியன் பாதிவடிவத்தோடு தோன்றுவதும், வீரர்கள் சூடிய கற்பகமலர்மாலைகள் புலால்நாற்றம் வீசுவதும் உற்பாதமாக உண்டாயின. இராவணனிடத்து அச்சத்தால் தேவர்கள் கொணர்ந்துகொடுத்த கற்பகமலர்மாலையை இராக்கதவீரர் அணிந்துள்ளாரென்க. இரவு - இருளுக்கு ஆகுபெயர். விண்டென்னும் வினையெச்சம், இங்கே தன்வினைப்பொருளது; விள்-பகுதி. மல் - மற்போருமாம். புலவு - ஊன்சம்பந்தமான துர்க்கந்தம். (௪௪)

௪௫. திரியுமாலிலங்கையுமதிலுந்திக்கெலா
மெரியுமாற்கந்தர்ப்பநகரமெங்கணுந்
தெரியுமான்மங்கலகலசஞ்சிந்தின,
விரியுமால்விளக்கினைவிழுங்குமாலிருள்.

(இ - ள்.) இலங்கையும் - இந்த லங்காபுரியும், மதிலும் - (அதனைச்சூழ்ந்த) மதில்களும், திரியும் - சுழலும்; திக்கு எலாம் - எல்லாத்திக்குக்களும், எரியும் - நெருப்புப்பற்றி எரியும்; கந்தர்ப்ப நகரம் - கந்தருவர்களது பட்டணம், எங்கணும் - எல்லாவிடத்தும், தெரியும் - காணப்படும்; மங்கல கலசம் - சுபகரமான பூர்ணகும்பங்கள், சிந்தின விரியும் - வாய்விரிந்தனவாகி உடையும்; இருள் - இருட்டு, விளக்கினை - தீபத்தை, விழுங்கும் - சூழ்ந்துமறைக்கும்; (எ - று.)

இலங்கையின் மதிலும் இலங்காபுரியும் திரிதலும், திக்குக்கள் எரிதலும், கந்தர்வநகரம் எங்கும் தெரிதலும், பூர்ணகும்பங்கள் வாய்விரிந்து உடைதலும், விளக்குக்கள் இருளைப் போக்கவேண்டியதாயிருக்க அந்நிலைமாறி இருள் விளக்கை விளங்கவொட்டாது தான் மேம்படுதலும் உற்பாதமாகத் தோன்றினவென்க. கந்தர்ப்பநகரம் - மாடமாளிகைகள் கூடகோபுரங்கள் முதலிய அமைந்துள்ள நகரம்போல ஆகாயத்தில் தோன்றி மறையுந்தன்மையது; இதனை, கபுரம்[ஆகாசபட்டணம்] என்றும் வழங்குவர். "ஸர்வதிக்ஷுத்தம்ஸததோத்திதம்ச பயதம் ந்ருபதிராஷ்ட்ராணாம்" [கந்தர்வநகரம் எல்லாத்திக்கிலும் எப்போதும் தோன்றுமாயின், அது அரசனுக்கும் தேசத்திற்கும் பேரச்சத்தை விளைக்கும்]" என்று மிகிரர் கூறியுள்ளதனால், எங்கணும் என்பதற்கு - இரட்டுறமொழிதலாக எல்லாவிடத்திலும் எல்லாப்போதிலும் என்று பொருள் கொள்ளலாம். கந்தர்வநகரீ - கந்தருப்பநகரமெனத் திரிந்தது; 'கந்தர்ப்பநகர மெங்கணுங் கரியும்' என்றுபாடங்கொண்டு, மன்மதன் வாசஞ்செய்யுமிடமாகிய சிங்காரப்பூஞ்சோலை அந்தப்புரம் முதலியவை தீந்துகாணப்படும் என்று பொருள் கொள்ளுதல் அத்துணைச் சிறப்பின்று. (௪௫)

௪௬. தோரணமுறிந்தனதுணியச்சூழிமால்
வாரணமுறியுமால்வலத்தவாண்மருப்
பூரணமந்திரத்தறிஞர்நாட்டிய
பூரணகுடத்துநீர்நறவுபொங்குமால்.

(இ - ள்.) தோரணம் - தோரணங்கள், முறிந்தன - ஒடிந்தனவாகி, துணிய - துண்டுபட,—சூழி - முகபடாத்தையுடைய, மால் - பெரிய, வாரணம் - யானைகள், வலத்த - வலிமையுள்ள, வாள் - ஒளியையுடைய, மருப்பு - தந்தங்கள், முறியும் - ஒடிபடும்; அறிஞர் - (வைதிககருமங்களை) அறிந்த அந்தணர், ஆரண மந்திரத்து - வேதமந்திரங்களைக்கொண்டு, நாட்டிய - பிரதிஷ்டித்த, பூரண குடத்து - நிறைந்த கும்பங்களிலுள்ள, நீர் - பரிசுத்த ஜலம், நறவு பொங்கும் - கள்ளாகிப் பொங்கும்; (எ - று.)—ஆல் - அசை.

தோரணம் முறிந்து துண்டுபடுதலும், யானைகள் பகையைக் குத்திக்கொல்லுந்தன்மைவாய்ந்த தமது வலிய தந்தங்கள் ஒடியப்பெறுதலும், வேதம்வல்ல அந்தணர் அபிமந்திரித்துவைத்த பூர்ணகும்பங்களின் சுத்தஜலம் கள்ளாய்ப்பொங்குதலும் உற்பாதமாக நிகழ்ந்தன வென்க. தோரணம் - ஆங்காங்கு அமைக்கப்படுவனவாகிய கட்டுவாயில்; இனி, இலைக்கணையால், மாவிலை முதலியவற்றாலமைந்த தோரணங்கள் கட்டப்பெறுந் தூண்கள் என்று பொருள்கூறுவாரும், தோரணம் - (ஆங்காங்கு) அலங்காரமாகக்கட்டிய தோரணங்கள், முறிந்தன - அறுந்து வீழ்ந்தன என்று கூறுவாருமுளர். சூழி - முகபடாம்; நெற்றிப்பட்டமன்று: அது,ஓடைஎனப்படும்; இவ்வேறுபாடு "விழுச்சூழிய விளங்கோடைய" என்னும் மதுரைக்காஞ்சியின் உரைநோக்கி அறிக. மால் வாரணம் - மதயக்கங்கொண்ட யானைகளுமாம். வலத்த மருப்பு - வலப்பக்கத்துத் தந்த மென்பாருமுளர். (சசு)

ச௭. விண்டொடர் மதியினைப் பிளந்து மீனெழும்
புண்டொடர் குருதியிற் பொழியும் போர்மழை,
தண்டொடு திகிரிவா டனுவென் றின்னன
மண்டமர் புரியுமா லாழி மாறுற.

(இ - ள்.) விண் தொடர் - ஆகாயத்திற் செல்கின்ற, மதியினை - சந்திரனை, பிளந்து - பிளந்துகொண்டு, மீன் - நக்ஷத்திரம், எழும் - புறப்படும்; போர் - (ஆகாயத்தில்) கவிந்துபரந்த, மழை - மேகங்கள், புண் தொடர் குருதியின் - விரணத்திலிருந்து வழியும் இரத்தத்தைக்கொண்டு, பொழியும் - மழைபெய்யும்; தண்டொடு - கதையும், திகிரி - சக்கரமும், வாள் - வாளும், தனு - வில்லும், என்று இன்னன - என்று இப்படிப்பட்ட ஆயுதங்கள், ஆழி மாறு உற - (பேரொலியால்) கடலோடு மாறுபடும்படி, மண்டு அமர் - மிகுந்தபோரை, புரியும் - தாமேசெய்யும்; (எ - று.)

'நட்சத்திரநாதன்' என்று பேர்பெறும்படி நட்சத்திரங்கட்கெல்லாந் தலைவனான சந்திரனை அந்த நட்சத்திரங்கள் மீறிப் பிளந்துகொண்டு எழுதலும், வானம் இரத்தமழைபொழிதலும், தண்டம் சக்கரம் முதலிய ஆயுதங்கள் பேரொலிபடத் தாமே ஒன்றோடொன்று போர்புரிதலும் உற்பாதமாகத் தோன்றின வென்க. 'மின்னெழும்' என்று பாடமாயின், மின்னல் தோன்றுமென்க. புண் தொடர் - குருதிக்கு அடைமொழி. குருதியைப்பொழியும் எனப் பொருள்கொண்டால் குருதியின் என்பதில், இன்சாரியைநிற்க இரண்டனுருபுதொக்கதென்க. போர் மழை - வினைத்தொகை. (ச௭)

௪௩. மங்கையர்மங்கலத்தாலிமற்றையோ
ரங்கையின்வாங்கினரெவருமன்றியே
கொங்கையின்வீழ்ந்தனகுறித்தவாற்றினு
லிங்கிதனற்புதமின்னுங்கேட்டியால்.

(இ - ள்.) மங்கையர் - பெண்களது, மங்கலம் தாலி - சுபமான தாலிகள், மற்றையோர் எவரும் - பிறரொருவரும், அம் கையின் வாங்கினர் அன்றியே - தமது அகங்கையால் அறுத்தனரல்லாமலே, கொங்கையின் (அவரவர்) தனங்களின்மேல், வீழ்ந்தன - தாமேவிழுந்தன; இங்கு குறித்த ஆற்றினுல் - இப்பொழுது சொன்ன முறைப்படியே, இதன் - இத்தீக்குறியினது, அற்புதம் - ஆச்சரியத்தை, இன்னும் - இன்னமும், கேட்டி - கேட்பாயாக; (எ - று.)

இராக்கதமகளிர் தமது கழுத்திலணிந்துள்ள மங்கலநாண்கள் பற்றியிழுப்பவரெவரும் இல்லாமலே தாமே அற்று அம்மகளிர் கொங்கைகளின்மேல் விழுகின்றன; இதுவும் ஓர் உற்பாதமே; இன்னும் கூறுகின்றேன் கேள் என்று பின்னும் திரிசடை கூறலாயின ளென்க. (௪௩)

[இராவணனுக்குத் தீங்கு உண்டாவதைக் குறிக்கும் தீக்குறியைத் திரிசடை கூறுதல்.]

௪௪. மன்னவன்றேவியம்மயன்மடந்தைதன்
பின்னவிழோதியும்பிறங்கிவீழ்ந்தன
துன்னிருஞ்சுடர்சுடச்சுறுக்கொண்டேறின
வின்னலுண்டெனுமிதற்கேதுவீதென.

(இ - ள்.) மன்னவன் தேவி - லங்காராஜனான இராவணனது மனைவியும், அம் மயன் மடந்தைதன் - அந்த மயனது மகளுமான மண்டோதரியினது, ஓதியும் - கூந்தல்மயிர்களும், பின் அவிழ் பிறங்கி வீழ்ந்தன - பின்னல் அவிழ்ந்து நிறைந்து விழுந்தன; (இன்னும் அவை), துன் இரு சுடர் சுட - (அருகில்) பொருந்திய பெரிய விளக்கின் சுவாலை பற்ற, சுறுக்கொண்டு ஏறின - சுறுசுறு வென்று விரைந்து வெந்தன; இன்னல் உண்டு எனும் இதற்கு - (கொடிய அரக்கர்களுக்கெல்லாம்) துன்பமுண்டாமென்று (நான்) சொன்னதற்கு, ஏது - காரணம், ஈது - இச்செயலுமாம், என - என்று, (எ-று.)—'இயம்பி' என மேற்கவியோடு முடியும்.

இராவணனது மனைவியான மண்டோதரியினது பின்னியகூந்தல் தானே அவிழ்ந்ததும், விளக்குச்சுடரில் சுறுக்குண்டு வெந்ததும் அவள் மங்கலநாணிழத்தலைத் தெரிவிக்குந் தீக்குறியா மென்றன ளென்பதாம். அ - உலகறிசுட்டு. அம் என எடுத்து - அழகிய எனினுமாம்: மயன் - அசுரர் தச்சன். பின் - முதனிலைத் தொழிற்பெயர். பின் - பின்னே, வீழ்ந்தன வென்றுமாம். சுறுக்கொண்டு - விரைந்துவேதற்குறிப்பு. ஓதியும், உம் - உயர்வுசிறப்பு; தாலியறுந்து வீழ்ந்ததல்லாமல் கூந்தலும் அவிழ்ந்து வீழ்ந்தது என இறந்ததுதழுவிய எச்சமாகவுமாம். ஈற்றடி - முற்றுமோனை. (௪௪)

[இதுமுதல் நான்கு கவிகளால், திரிசடை தான் பின்னுங்கண்ட கனவைக் கூறுதல்.]

௫௦. என்றனளியம்பிவேறிசைப்பக்கேட்டியா
லின்றிவணிப்பொழுதியைந்ததோர்கனா
வன்றுணைக்கோளரியிரண்டுமாறிலாக்
குன்றிடையுழுவையங்குழுக்கொண்டீண்டியே.

(இ - ள்.) என்றனள் இயம்பி - என்று இவ்வாறு சொல்லி, (பின்பு), வேறு இசைப்ப - வேறொன்று (நான்) சொல்ல, கேட்டி - கேட்பாயாக; இன்று - இன்றைக்கு, இவண் - இவ்விடத்தில், இப்பொழுது—, ஓர் கனா - ஒருசொப்பனம், இயைந்தது - உண்டாயிற்று; (அது என்னவென்றால்),—வல் - வலிய, துணை - ஒன்றுக்கொன்று துணையான, கோள் அரி இரண்டு - இரண்டு ஆண்சிங்கங்கள், மாறு இலா குன்றிடை - ஒப்பில்லாததொரு பெரியமலையிலே, அம் உழுவை குழு கொண்டு - கண்ணுக்கு அழகிதாகத்தோன்றுகின்ற புலிக்கூட்டத்தை(த் தமக்குத் துணையாக)க்கொண்டு, ஈண்டி - (அதனோடு) சேர்ந்து வந்து' (எ - று.)—இக்கவியில் 'ஈண்டி' என்பது, மேற்கவியில் 'கொன்ற' என்னும் வினையோடு முடியும்.

கீழ்ப்பாட்டினிறுதியில் 'எனா' என்று வந்ததனால், இப்பாட்டில் 'என்றனள்' என்றது - அனுவாதம்; அன்றிக்கே, எனா - அசையாகவுமாம். முன்சொன்ன கனா நிகழ்ந்த காலத்தை, கீழ் ௩௨ - ஆங் கவியில் 'கீழைநாள்' என்றதனாற் கூறியதனால், இனிச்சொல்லுங் கனா நிகழ்ந்த காலத்தையும் இடத்தையும் 'இன்றிவணிப்பொழுது' என்றதனாற் கூறினாள். இக்கனா நிகழ்ந்தது இவ்விடத்திலென்றதனால், முற்கனா நிகழ்ந்தது இவ்விடத்திலன்று தனது வீட்டிலென்று கொள்க. அரி - ஹரி என்னும் வடமொழியின் திரிபு; (யானை முதலிய பெரிய விலங்குகளையும்) ஹரிக்கவல்லதென்று பொருள்: ஹரித்தல் - அழித்தல். குன்றிடை ஈண்டி என இயையும்; குன்றிடை உழுவை என இயைந்தால், மலையில் வசிக்கும் புலிகளென்க. (௫௦)

௫௧. வாம்பிலாமதகரியுறையுமவ்வன
நிரம்புறவளைந்தனநெருக்கிநேர்ந்தன
குரம்பறுபிணம்படக்கொன்றமாறிலாப்
புரம்புகவிருந்ததோர்மயிலும்போயதால்.

(இ - ள்.) வாம்பு இலா - அளவில்லாத, மத கரி - மதத்தையுடைய யானைகள், உறையும் - வசிக்கின்ற, அ வனம் - அந்தக்காட்டை, நிரம்புஉற - நிரம்புதல் பொருந்த [இடைவிடாமல்], வளைந்தன - சூழ்ந்துகொண்டவையாய், நெருக்கி - வருத்தி, நேர்ந்தன - எதிர்த்து, குரம்பு அறு பிணம் பட - எல்லையில்லாத பிணங்கள் பொருந்தும்படி, கொன்ற - கொன்றன; இருந்தது ஓர் மயிலும் - (அவ்வனத்தில்) வந்திருந்ததொரு மயிலும், மாறு இலா - ஒப்பில்லாத, புரம் - (அச்சிங்கங்களது) நகரத்தை, புக - அடைதற்கு, போயது - (அவற்றுடன்) சென்றது; (எ - று.)

அரியிரண்டும் கொன்ற வென்க. இக்கனவினால், ராமலக்ஷ்மணர் பெருவலி யுள்ள வானரர்களைத் துணையாகக்கொண்டு இலங்கையைச் சார்ந்து அங்குள்ள அரக்கரையெல்லாம் கொன்று, சீதாபிராட்டியைச் சிறைமீட்டுத் தமது நகரத்துக் குத்திரும்பிச்செல்லுதல் குறிப்பிக்கப்படுதல் காண்க 'குன்றிடைஈண்டி' என் றதனால், அக்குன்றின்பக்கலிலுள்ள வனத்தை 'அவ்வனம்' என்று சுட்டினாள். வளைந்தன, நேர்ந்தன - முற்றெச்சம். கொன்ற - முற்று. அயோத்தியென்பதன் பொருளை உட்கொண்டு, மாறிலாப்புரம் - பகையில்லாத பட்டணமென்று கூறி யதுமாம். (௫௧)

௫௨. ஆயிரந்திருவிளக்கமையமாட்டிய
சேயொளிவிளக்கதொன்றேந்திச்செய்யவ
ணாயகன்றிருமனைநின்றுநண்ணுதன்
மேயினள்வீடணன்கோயின்மென்சொலாய்.

(இ - ள்.) மென் சொலாய் - மென்மையான சொற்களையுடையவளே!— ஆயிரம் திரு விளக்கு - ஆயிரம் அழகிய விளக்குக்களை, அமைய - எரியும்படி, மாட்டிய - கொளுத்திய, சேய் ஒளி விளக்குஅது ஒன்று - சிவந்த ஒளியை யுடையதொரு பெரு விளக்கை, ஏந்தி - கையிலெடுத்துக்கொண்டு, செய்யவள் - சிவந்தநிறமுடையவளொருத்தி, நாயகன் திரு மனைநின்று - ராக்ஷசராஜனாகிய ராவணனது அழகிய அரண்மனையினின்றும், வீடணன் கோயில் - விபீஷண னது அரண்மனையை, நண்ணுதல் மேயினள் - அடைதலானாள்; (எ - று.)

இது, ராஜ்யலக்ஷ்மி இராவணனுடைய மாளிகையிலிருந்து ஸ்ரீவிபீஷ ணாழ்வானுடைய மாளிகையைச் சார்தலைக் குறிப்பித்தல் காண்க. முதலடியில் விளக்கு - திரியிற் பற்றியெரியும் நெருப்புச்சுவாலை; இரண்டாமடியில் விளக்கு - அச்சுவாலைகள் பலவற்றிற்கு இடமான தண்டுக்கு ஆகுபெயர். 'செய்யவள்' என்றது, இலக்குமியை யென்னலாம். (௫௨)

௫௩. பொன்மனைபுக்கவப்பொருவில்போதினி
லென்னைநீயுணர்த்தினைமுடிந்ததில்லென
வன்னையேயதன்குறைகாணென்றாயிழை
யின்னமுந்துயில்கெனவிருகைகூப்பினாள்.

(இ - ள்.) பொன் மனை புக்க - (அப்பெண் என் தந்தையது) பொன்மய மான மாளிகையை அடைந்த, அ - அந்த, பொருவு இல் போதினில் - ஒப்பில் லாத சமயத்தில், நீ—, என்னை—, உணர்த்தினை - துயிலெழுப்பினாய்; (ஆத லால்), முடிந்தது இல் - (அக்கனா) முடிந்ததில்லை, என - என்று (திரிசடை) சொல்ல,—ஆயிழை-ஆராய்ந்து எடுத்தணிந்த ஆபரணங்களையுடைய பிராட்டி,— 'அன்னையே - தாயே! அதன் குறை காண் - அக்கனாவின் குறையைக் காண்பா யாக,' என்று - என்றுசொல்லி, இன்னமும் துயில்க என - (அதன்பொருட்டு) இன்னமுந் தூங்குவாயாகவென்றுஞ் சொல்லி, இரு கை கூப்பினாள் - (தனது) இரண்டு கைகளையுங் குவித்துத் தொழுதாள்; (எ - று.)

இவ்வாறு அனுகூலமான நற்குறிகளைக் கனுநிகழ்ச்சியால் முன்னமே அறிந்துகூறிய திரிசடையை நோக்கி, குறையாயுள்ள அந்தக் கனவை முற்றவும் அறியவேண்டு மென்று ஆதரங்கொண்ட சீதாபிராட்டி 'இனியும் உறங்கி அந்தக் கனவை முற்றவும் உணர்ந்து கூறுவாயாக' என்று சொல்லிக் கைகூப்பி வணங் கின ளென்பதாம். பொன் - இலக்குமிபோன்ற அவள், மனைபுக்க என்றுமாம். அன்னை என்றது, மரியாதைபற்றிவந்த மரபுவழுவமைதி; ஏ - விளியுருபு. இனி பிராட்டி துயில்க என்ன, திரிசடை கைகூப்பினு ளென்றுமாம். முதலடி - முற்று மோனை. (௩௩)

[அப்போது அநுமான் சீதையிருக்குமிடத்தைக் காணுதல்.]

௩௪. இவ்விடையண்ணலவ்விராமனேவிய
வெவ்விடையனையபோர்வீரத்தூதனு
மவ்விடையெய்தினனரிதினோக்குவா
னெவ்விடைமடந்தைதன்னிருக்கைநோக்கினான்.

(இ - ள்.) இ இடை - இப்படிப்பட்ட சமயத்தில், அண்ணல் - பெருந் தன்மையையுடைய, அ இராமன் - அந்த ஸ்ரீராமன், ஏவிய - அனுப்பின, வெம் விடை அனைய - கொடிய காளையைப் போன்ற, போர் - போரில்வல்ல, வீரம் - வீரத்தன்மையையுடைய, தூதனும் - தூதனாகிய அனுமானும்,— அரிதின் - அருமையாக, நோக்குவான் - பார்த்துவருபவனாய், அ இடை - அந்த இடத்தை, எய்தினன் - அடைந்து,—நொ இடை மடந்தைதன் - (மிகவும் மெல்லியதாதலால்) வருந்துகின்ற இடையையுடைய பிராட்டியின், இருக்கை - இருப்பிடத் தை, நோக்கினான் - பார்த்தான்; (எ - று.)

மேல் ௬௩ - ஆஞ் செய்யுளில் சீதையை அனுமான் நேரிற் கண்ட செய் தியைக் கூறுவதனால், ஆசிரியர் இச்செய்யுளில், சீதையிருக்கின்ற அசோக வனிகையைக் கண்டதையே கூறுகின்றனரென உணர்க. இராமபிரானது தூத னாய் இலங்கையிற் புகுந்து 'சீதையை எங்குக் காண்போம்?' என்னுங் கவலை யோடு ஓரிடத்தையும் விடாமல் உற்றுப்பார்த்துக்கொண்டுவருபவனாகிய அனு மான் சீதாபிராட்டி யெழுந்தருளியிருக்கின்ற அவ்வசோகவனிகையைக் காண லாயின னென்க. விடை - வ்ருஷம் என்னும் வடமொழியின் திரிபு: இது, கம் பீரமான தோற்றத்துக்கும் நடைக்கும் வலிமைக்கும் உவமை. நொவ்விடை - வினைத்தொகை; நொ என்னும் வினைப்பகுதியின்முன் இடையெழுத்து மிக்கது; [நன் - உயிர்-அ.] இடைக்கு 'வருத்தம் - மேலுங்கீழுமுள்ள பருத்த' உறுப்புக் களைப் பரித்தலினா லாகியது. (௩௪)

[துயிலினும் சோர்ந்துகிடந்த அரக்கியர் உணர்ந்தெழுந்து அப்பொழுது படைகளை யேந்திக்கொண்டு திரளுதல்.]

௩௫. அவ்வயினரக்கியரறிவுற்றம்மவோர்
செவ்வயிறுயினமைச்செகுத்ததீதெனா [illegible]
வெவ்வயின்மருங்கினுமெழுந்துவீங்கினார்
வெவ்வயின்மழுவெழுச்சூலவெங்கையார்.

(இ - ள்) அவயின் - அப்பொழுது, அரக்கியர் - (பிராட்டிக்குக் காவலாக வுள்ள) இராக்ஷசிகளெல்லாம்,—அறிவுற்று - தூக்கம் தெளிந்து, 'அம்ம - ஆச்சரியம்! ஓர் - ஒரு, செவ்வைஇல் - நன்மையில்லாத, துயில் ஈது - இந்தத் தூக்கம், நமை - நம்மை, செகுத்தது - கெடுத்தது', என்று - என்றுசொல்லி, எ வயின் மருங்கினும் - எல்லாப்பக்கங்களிலும், எழுந்து - எழுந்திருந்து,—வெம் - கொடிய, அயில் - வேலையும், மழு - மழுவையும், எழு - வளைதடியையும், சூலம் - சூலத்தையும் ஏந்தின, வெம் கையார் - கொடிய கைகளையுடையவர்களாய், வீங்கினார் - திரண்டார்கள்; (எ - று.)

சீதாபிராட்டியின் சிறைக்காவலாக இராவணனேவியுள்ள அரக்கியர் சற்றுக் கண்ணயர்ந்துகிடந்து திடீரென்று துயிலுணர்ந்தெழுந்து 'நமது அரசன் கட்டளைக்குமாறாகக் கண்ணுறங்கிவிட்டோமே!' என்று அஞ்சித் துணுக்குற்றுத் தமதுசெயலைப் பழித்திட்டு, வேல் மழு முதலிய படைகளைக் கைகளிலேந்திக் கொண்டு நாற்புறத்திலும் திரண்டனரென்க. முதலடி - முற்றுமோனை. அம்ம - வியப்பிடைச்சொல். செவ்வை - பண்புப்பெயர். (௫௫)

[இதுமுதல் ஐந்துகவிகள் - அவ்வரக்கிமார்களின் தன்மையைத் தெரிவிக்கும்.]

௫௬. வயிற்றிடைவாயினர் வளைந்தநெற்றியிற்
குயிற்றியவிழியினர் கொடியநோக்கினர்
எயிற்றினுக்கிடையிடை யானையாளிபேய்
துயிற்கொள்வெம்பிலனெனத் தொட்டவாயினர்.

(இ - ள்.) (அவ்வரக்கியருட் சிலர்), வயிற்றிடை - வயிற்றில், வாயினர் - வாயையுடையவர்கள்; வளைந்த - வளைவாகவுள்ள, நெற்றியில் - நெற்றிநடுவிலே, குயிற்றிய - (கடவுளால்) அமைக்கப்பட்ட, விழியினர் - கண்ணையுடையவர்கள்; கொடிய நோக்கினர் - பயங்கரமான பார்வையை யுடையவர்கள்; எயிற்றினுக்கு இடை இடை - பற்களுக்கு நடுவே நடுவே, யானை - யானைகளும், யாளி - யாளிகளும், பேய் - பேய்களும், துயில் கொள் - நித்திரைகொள்ளுகின்ற, வெம் - கொடிய, பிலன் என - மலைக்குகைபோல, தொட்ட - ஆழமாகவுள்ள, வாயினர் - வாயையுடையவர்கள்; (எ - று.)

அங்குள்ள அரக்கியர்யாவரும் கண்டமாத்திரத்தில் திடுக்கிட்டு அஞ்சும்படியான கோரரூபமுடையவ ரென்பது இங்கு விளங்கும். யாளி - யானையைக் கொல்வதும், சிங்கம்போல்வதும், துதிக்கையை யுடையதுமாகியதொரு மிருக விசேஷம். (௫௬)

௫௭. ஒருபதுகையினரொற்றைச்சென்னிய
ரிருபதுதலையினரிரண்டுகையினர்
வெருவருகோற்றத்தர்விகடவேடத்தர்
பருவரையெனமுலைபலவுநாற்றினர்.

(இ - ள்.) ஒரு பது கையினர்-பத்துக்கைகளையுடையவர், ஒற்றை சென்னியர் - ஒரு தலையையுடையவர்; இருபது தலையினர் - இருபது தலைகளையுடையவர், இரண்டு கையினர் - இரண்டு கைகளை யுடையவர்; வெருவரு தோற்றத்தர் - (யாவரும்) அஞ்சுதற்குக் காரணமான ரூபத்தையுடையவர்; விகட வேடத்தர் - வெவ்வேறுவகைப்பட்ட (ஆடைமுதலிய) கோலங்களையுடையவர்; பரு வரை என - பருத்த மலைகள் போல, முலை பலவும் - பலதனங்களும், நாற்றினர் - தொங்கப்பெற்றவர்; (எ - று.)

விகடவேடத்தர் - வேறுபட்ட [காண்டற்கு விகாரமாகிய] வடிவமுள்ளவரென்று பொருள்கூறலுமாம். வேடம் - வேஷம். நாற்றினர், நால்என்பதன் பிறவினையாகிய நாற்று - பகுதி. (௫எ)

௫௮. சூலம்வாள்சக்கரந்தோட்டிதோமரங்
காலவேல்கப்பணங்கற்றகையின
ராலமேயுருவுகொண்டனையமேனியர்
வாலமேதரித்தவன்வெருவும்வண்மையர்.

(இ - ள்.) சூலம் - முத்தலைவேலும், வாள் - வாளும், சக்கரம் - சக்கரமும், தோட்டி - அங்குசமும், தோமரம் - இருப்புலக்கையும், கால வேல் - யமனுக்கொப்பான பெருவேலும், கப்பணம் - கைவேலும், (ஆகிய இவ்வாயுதங்களைப் பிரயோகிப்பதற்கு), கற்ற - பழகிய, கையினர் - கையையுடையவர்கள்; ஆலமே - விஷந்தான், உருவு கொண்டு அனைய - பெண்வடிவமாகப் பரிணமித்தாற்போன்ற, மேனியர் - உடம்பின் கருநிறத்தையுடையவர்; வால் அம் தரித்தவன் - வெண்ணிறமுள்ள கங்காஜலத்தை(ச்சடையிற்) கொண்ட (சங்காரக்கடவுளாகிய) உருத்திரமூர்த்தியும், வெருவும் - அஞ்சும்படியான, வண்மையர் - வலியின் மிகுதியையுடையவர்; (எ - று.)

தோமரமென்று பேரீட்டிக்கும் பெயருண்டு. எல்லாப்பிராணிகளுக்கும் ஊழ்வினைக்கேற்பக் காலத்தை வரையறுத்தலால், காலன் என்று யமனுக்குப் பெயர். வேலுக்கு யமன் உவமை, பகைவரை அழித்தற்கு. கப்பணம் - இரும்பால் யானைநெருஞ்சிமுள்ளாகப் பண்ணியது என்பர் நச்சினார்க்கினியர். ஆலம் - ஹாலம். சக்கரம் - சக்ரம். தோட்டி - மாவெட்டி. அம - நீர். சர்வசங்காரக்கடவுளும் அஞ்சத்தக்கவரென்று அரக்கியரது மிக்ககொடுமையை ஈற்றடியில் விளக்கினர். (௫அ)

௫௯. கரிபரிவேங்கைமாக்கரடியாளிபே
யரிநரிநாயெனவணிமுகத்தினர்
வெரிநுறுமுகத்தினர்விழிகண்மூன்றினர்
புரிதருகொடுமையர்புகையும்வாயினர்.

(இ - ள்.) கரி - யானையும், பரி - குதிரையும், வேங்கை மா - புலியும், கரடி - கரடியும், யாளி - யாளியும், பேய் - பேயும், அரி - சிங்கமும், நரி - நரியும், நாய் - நாயும், என - ஆகிய இவைபோல, அணி - பொருந்திய, முகத்தினர் - முகத்தையுடையவர்; வெரிந் உறு - முதுகிலே பொருந்திய, முகத்

தினர் - முகத்தையுடையவர்; விழிகள் மூன்றினர் - மூன்றுகண்களையுடைய வர்; புரிதரு கொடுமையர் - செய்கின்ற கொடுந்தொழிலையே யுடையவர்; புகையும் வாயினர் - புகைகின்ற வாயையுடையவர்; (எ - று.)

அவ்வரக்கியர் யானைமுகம் குதிரைமுகம் முதலாகப் பலவகைக் கொடிய மிருகங்களின் முகங்கள் அமையப்பெற்று இவ்வாறு உடம்புகளுக்குத்தக்க முகம் அமையாமல் அருவருப்புக்கும் அச்சத்துக்கும் இடமான தோற்ற முடையவ ரென்பதாம். வேங்கைமா - வேங்கையாகிய விலங்கு என இருபெயரொட்டு. புரிதருகொடுமையர் என்பதனை "அருங்கேடன்" என்பதுபோலக் கொள்க; இனி, கொடுமைபுரிதருமவர் என விகுதிபிரித்துக் கூட்டுதலுமாம். (௩௯)

[துயிலுணர்ந்த அரக்கிமார் சீதாபிராட்டியைச் சூழ்ந்துகொள்ளுதல்.]

௬௦. எண்ணினுக்களவிடலரியவீட்டினர்
கண்ணினுக்களவிடலரியகாட்சியர்
பெண்ணெனப்பெயர்கொடுதிரியும்பெற்றியர்
துண்ணெனத்துயிலுணர்ந்தெழுந்துசுற்றினர்.

(இ - ள்.) எண்ணினுக்கு - மனத்திற்கும், அளவு இடல் அரிய - அளவிடு வதற்கருமையான, ஈட்டினர் - வலிமையையுடையவர்களும், கண்ணினுக்கு அளவு இடல் அரிய - கண்களுக்கு அளவிட அருமையான, காட்சியர் - தோற்ற முடையவர்களும், பெண் என பெயர் கொடு திரியும் - பெண்களென்று பெயர் வைத்துக்கொண்டு திரிகிற, பெற்றியர் - ஆண்தன்மை யுடையவர்களுமாகிய அரக்கிமார்,—துண் என - திடுக்கென்று, துயில் உணர்ந்து - தூக்கம் விழித்து, எழுந்து சுற்றினர் - எழுந்துவந்து (சீதையைச்)சுற்றிக்கொண்டார்கள்; (எ - று.)

ஈடு - பலம்; ஈட்டு என எடுத்துத் திரட்சியென்றும் கொள்ளலாம். துண்ணெனல் - அச்சத்தையும் விரைவையும் குறிக்கும். பெற்றி - பௌருஷம். (௬௦)

[அப்போது சீதை வருந்துதலும், அநுமான் ஆங்கு மரத்தின்மே லிருத்தலும்.]

௬௧. ஆயிடையுரையழிந்தழகன்றேவியுந்
தீயனையவர்முகநோக்கித்தேம்பினா
ணாயகன்றூதனும்விரைவினண்ணினா
னோய்விலதுயர்மரப்பணையினும்பரான்.

(இ - ள்.) அ இடை - அப்பொழுது, அழகன் தேவியும் - சர்வாங்கசுந்தர னாகிய இராமபிரானது மனைவியான சீதையும், உரை அழிந்து - பேச்சு ஒடுங்கி, தீ அனையவர் முகம் நோக்கி - நெருப்புப்போலக் கொடிய அவ்வரக்கிமாரது முகங் களைப் பார்த்து, தேம்பினாள் - வாடினாள்; நாயகன் தூதனும் - ஸ்ரீராமதூதனாகிய அனுமானும்,—விரைவில் நண்ணினான் - சீக்கிரத்தில் (அங்குவந்து) சேர்ந்த வனாய், ஓய்வு இலது உயர் மரம் பணையின் உம்பரான் - முடிவில்லாமல் உயர்ந்து வளர்ந்திருப்பதான ஒருமரத்தின் கிளையின்மே லுள்ளவனானான்; (எ - று.)

அரக்கியர்களின் கொடுமைக்கு அஞ்சிப் பிராட்டி ஒடுங்கியிருக்கையில், அநுமான் அங்குள்ளதொரு ஓங்கிய மரக்கிளையில் சிறிய வடிவத்தோடு எவர்க்குந் தெரியாதபடி மறைந்து பார்த்திருந்தன னென்பதாம். (கூக)

[அரக்கியர் ஆயுதங்களோடு திரண்டதன் காரணத்தை அநுமான் கருதுதல்.]

கூஉ. அரக்கியரயின்முதலேந்துமங்கையர்
நெருக்கியகுழுவினர்துயிலுநீங்கின
ரிருக்குநர்பலரிதற்கேதுவென்னெனப்
பொருக்கெனவவரிடைப்பொருந்தநோக்கினான்.

(இ - ள்.) 'அரக்கியர் பலர் - அநேக ராக்ஷசிகள், அயில் முதல் - வேல் முதலிய ஆயுதங்களை, ஏந்தும் - தரித்த, அம் கையர் - அகங்கைகளையுடையவர்களும், நெருக்கிய குழுவினர் - நெருக்கமுள்ள கூட்டமாகக் கூடினவரும், துயிலும் நீங்கினர் - தூக்கமும் தெளிந்தவர்களுமாய், இருக்குநர் - (இங்கே) இருக்கிறார்கள்; இதற்கு ஏது என் - இதற்குக் காரணமென்ன?' என - என்று சிந்தித்து, அவர் இடை - அவர்களுள்ள இடத்தை, பொருக்கென - விரைவாக, பொருந்த நோக்கினான் - உற்றுப்பார்த்தான், (திருவடி); (எ - று.)—பொருக்கென - விரைவுக் குறிப்பு

அரக்கியர் துயிலுணர்ந்துவந்து வேல்முதலிய படைகளைக் கையிற்கொண்டு சீதாபிராட்டியை நெருங்கிநிற்க, அதனைக்கண்ட அனுமான் 'இவர்கள் இங்ஙனம் செய்யக் காரணம் யாது?' என்ற எண்ணத்தோடு அவ்வரக்கியர்திரண்ட இடத்தை உற்றுப்பார்க்கலாயின னென்பதாம். (கூஉ)

[உற்றுப்பார்த்த அநுமான் அவர்கள் நடுவில் சீதாபிராட்டியைக் காணுதல்.]

கூரு. விரிமழைக்குலங்கிழித்தொளிருமின்னெனக்
கருநிறத்தரக்கியர்குழுவிற்கண்டனன்
னுருநிறத்தொருதனிக்கொண்டலூழியா
னிருநிறத்துற்றவெற்கியைந்தகாந்தத்தை

(இ - ள்.) உரு நிறத்து - திருமேனிநிறத்தினால், ஒரு தனி கொண்டல் - ஒப்பற்றதொரு நீர்கொண்ட மேகம்போன்ற, ஊழியான் - யுகாந்தகாலத்தும் அழியாத நிலைமையுள்ள திருமாலினது, இரு நிறத்து - பெரிய மார்பில், உற்ற - பொருந்திய, எற்கு இயைந்த - எனது பக்திக்கு ஏற்ற இடமாயுள்ள, காந்தத்தை - அழகியபொருளான இலக்குமியின் அவதாரமாகிய சீதாபிராட்டியை,—விரி - (ஆகாயத்திற்) பரவுகிற, மழை குலம் - கறுத்த மேகக்கூட்டத்தை, கிழித்து - (நடுவிற்) பிளந்துகொண்டு, ஒளிரும் - (அங்கு) விளங்குகிற, மின் என - மின்னலைப்போல, கரு நிறத்து அரக்கியர் குழுவின் - கரியநிறத்தையுடைய அரக்கிமார் கூட்டத்தினிடையில், கண்டனன் - பார்த்தனன், (அநுமான்); (எ - று.)

"அகலகில்லேனிறையு மென்று அலர்மேல்மங்கை யுறை மார்பு" என்ற வாறு ஒருநொடிப்பொழுதும் திருமாலின் திருமார்பை விட்டுப்பிரியாதவளாகிய இலக்குமியினது திருவவதாரமான சீதாபிராட்டி, கரியமேகக்கூட்டங்களைப் பிளந்துகொண்டு மின்னற்கொடி விளங்குவதுபோலக் கன்னங்கரேலென்று தோன்றுகின்ற அரக்கியர்கூட்டத்தின் நடுவில் விளங்குவதை அனுமன் கண்டன னென்பதாம். 'எற்கியைந்தகாந்தம்' என்பதனால், நூலாசிரியர் தாம் பிராட்டி பக்கல் வைத்துள்ள அதிசயத்தையும், அப்பிராட்டியினது ஒப்புயர்வில்லாத பேரழகையும் விளக்கினார். காந்தம் - அழகியபொருள்; இனி, மனத்தை ஈடுபடு மாறு இழுத்துக் கவர்வதுபற்றி, காந்தமென்ற் றெனினுமாம். மேகக்கூட்டம் - அரக்கியர் திரளுக்கும், மின்னல் - சீதைக்கும் உவமை. (௬௫)

[இதுவும், மேற்கவியும் - ஒருதொடர்: இவள் சீதையே யென்று நினைத்து, அநுமான் மிகமகிழ்தல்.]

௬௪. தொடற்கருமரக்கியர்காவல்சுற்றுளாண்
மடக்கொடிசீதையாமாதரேகொலாங்
கடற்றுணைநெடியதன்கண்ணினீர்ப்பெருந்
தடத்திடையிருந்ததோரன்னத்தன்மையாள்.

(இ - ள்.) தொடற்கு அரும் - தொடுவதற்குங் கூடாத [மிகப் பயங்கர மான அல்லது அருவருப்பைத்தருகிற], அரக்கியர் - அரக்கிமார்களால், காவல் சுற்றுளாள் - சுற்றிலுங் காவல்செய்யப்பட்டுள்ளவளாகிய, மட கொடி - இளைய பூங்கொடிபோன்ற இம்மகள், கடல் துணை நெடிய - கடலவ்வளவு பெரியன வாகிய, தன் கண்ணின் - தனது கண்களினின்றும் பெருகுகிற, நீர் - நீராகிய, பெரு தடத்திடை - பெரிய தடாகத்தினடுவில், இருந்தது - இருந்ததாகிய, ஓர் - ஒரு, அன்னம் - அன்னப்பேடுபோன்ற, தன்மையாள் - தன்மையையுடையவ ளாதலால் [இடைவிடாமற் கண்ணீர் வெள்ளத்தைப் பெருக்குதலால்], சீதை ஆம் மாதர் ஏ கொல் ஆம் - சீதாபிராட்டியாரேபோலும்; (எ - று.)

ஒருதடாகத்தின்நடுவில் அன்னப்பறவைதங்கியிருத்தல்போலத் தனதுமிகப் பரந்த கண்களினின்று நீர்வெள்ளம் பெருகித் தடாகமாக, அதன்நடுவே அரக்கி யர் சூழ்ந்து காவல்செய்ய இருக்கின்ற ளாதலால், இந்நங்கை, சீதாபிராட்டியாக வே இருக்கவேணு மென்று அனுமான் ஊகித்தன னென்பதாம். கடற்றுணை நெடியதன்கண் - "அஞ்சொற்களமுதிலள்ளிக்கொண்டவள் வதன மைதீர், கஞ் சத்தி னளவிற் றேனுங் கடலினும் பெரிய கண்கள்" என்றார் ஆரணியகாண்டத் தும். "தொடற்கரும்" என்னும் இச்செய்யுள்தொடங்கி, அடுத்தசெய்யுளில் 'தேவியே' என்பதுவரையில் அநுமான் தன்னுள்ளத்தில் நினைவது. (௬௪)

௬௫. வீடினதன்றறன்யானும்வீகலேன்
றேடினென்கண்டனென்றேவியேயென
வாடினன்பாடினனாண்டுமீண்டும்பாய்ந்
தோடினனுலாவினனுவகைத்தேனுண்டான்.

(இ - ள்.) 'அறன் - தருமம், வீடினது அன்று - அழிந்ததன்று; யானும் - நானும், வீகலேன் - (இனி) இறக்கமாட்டேன்; (ஏனென்றால்), தேடினென் - (பிராட்டியைத்) தேடிவந்த யான், கண்டனென் - (இப்பொழுது அவளைப்) பார்த்தேன்; தேவியே - இவள் பிராட்டியேயாம்,' என - என்றுதெளிந்து, (அநுமான்), உவகை தேன் உண்டான் - ஆனந்தமாகியமதுவைப்பருகியவனாகி, ஆடினன் - கூத்தாடினான், பாடினன் - கீதம்பாடினான்; ஆண்டும் ஈண்டும் பாய்ந்து ஓடினன் உலாவினன் - அங்கும் இங்கும் [எங்கும்] குதித்தோடி உலாவி னான்; (எ - று.)

கீழ்ச் சீதையைக் காணாதபொழுது தருமம்பொய்த்தது என்றும், தான் இறப்பதாகவும் கருதினனாதலால், இங்கு 'வீடினதன்றறன் யானும்வீகலேன்' என்றான். வீகலேன், வீ - பகுதி. தேடினென் - பெயர். ஏ - தேற்றம். (௬௫)

[இதுமுதற் பதினொருகவிகள் - அநுமான் தன்னுட் கூறும் வார்த்தை.]

௬௬. எள்ளருமுருவினல்லிலக்கணங்களும்
வள்ளறன் னுரையொடுமாறுகொண்டில
கள்ளவாளரக்கனற்கமலக்கண்ணனா
ருள்ளுறையுயிரினையொளித்துவைத்தவா.

இதுமுதல் பன்னிரண்டு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) எள் அரும் - நிந்தித்தற்குக் கூடாத, உருவின் - (இப்பிராட்டி) வடிவத்தின், நல் இலக்கணங்களும் - நல்ல லக்ஷணங்களெல்லாமும், வள்ளல்தன் உரையொடு - வரையாதுகொடுக்குந்தன்மையுள்ள இராமபிரான் அடையாளஞ் சொன்ன வார்த்தைகளோடு, மாறுகொண்டில - (சிறிதும்) வேறுபட்டனவில்லை; கள்ளம் வாள் அரக்கன் - வஞ்சனையையுடைய வாள்போலுங் கொடிய இராவணன், நல் கமலம் கண்ணனார் - அழகிய செந்தாமரைமலர்போலுந் திருக்கண்களையுடைய இராமனது, உள் உறை உயிரினை - உடம்பினுள்ளே தங்கிய உயிர் போன்ற பிராணநாயகியை, ஒளித்து வைத்த ஆ - (பிறர்க்குத் தெரியாமல்) மறைத்துவைத்த விதம், (என்னே!) (எ - று.)

இப்போது காணப்படுகின்ற இவளது வடிவம் - நல்லிலக்கணங்கள் யாவும் அமையப்பெற்று இராமபிரான் கூறியபடியே உள்ளது; இப்படி கட்டழகு அமைந்து இராமபிரானது உயிர்க்குச் சமமான இவளைப் பாவியான இராக்கதன் கவர்ந்துவந்து இங்கே ஒளித்துள்ளானே! என்று அநுமான் இரங்கிக்கூறினனென்பதாம். இலக்கணம் - வடமொழித்திரிபு. 'அவ்விலக்கணம்' என்றும் பாடம். உம்மை - முற்று. கண்ணனார் என்பதில், ஆர்விகுதி - உயர்வை உணர்த்திற்று. கமலக்கண்ணன் - புண்டரீகாக்ஷன். ஆ - ஆறு என்பதன் விகாரம். பின்னிரண்டடிகட்கு, முடிக்குஞ்சொல் வருவித்து உரைக்கப்பட்டது. வியத்தை யுணர்த்துகின்ற 'ஆறு' என்ற சொல் வருமிடங்களில் முடிக்குஞ்சொல் கூறப் படாது எஞ்சிநிற்பதை இலக்கியங்களிற் பலவிடத்துங் காணலாம். இது - இசை யெச்சம். (௬௬)

௬௭. மூவகையுலகையுமுறையினீக்கிய
பாவிதன்னுயிர்கொள்வானிழைத்தபண்பிதா
லாவதேயையமிலரவினீங்கிய
தேவனேயவனிவள்கமலச்செல்வியே.

(இ - ள்.) இது - (சீதையைச் சிறைவைத்த) இத்தொழில்,—மூவகை உலகையும் - (சுவர்க்கம் பூமி பாதாளம் என்னும்) மூன்று உலகங்களையும், முறையின் நீக்கிய - நல்லொழுக்கத்தினின்றும் விலகச்செய்த, பாவி - கொடுந்தொழிலுடையவனாகிய இராவணன், தன் உயிர் கொள்வான் - தனது உயிரை (இராமன்) வாங்கும்பொருட்டு, இழைத்த - செய்த, பண்பு - செயலாம்; ஆவதே - இவ்வாறு ஆவதிலே, ஐயம் இல் - சந்தேகமில்லை; அவன் - ஸ்ரீராமன், அரவின் நீங்கிய - (பரமபதத்தில்) ஆதிசேஷசயனத்தினின்றும் நீங்கிவந்து (இங்கு) அவதரித்த, தேவனே - ஸ்ரீமந்நாராயணனேயாவன்; இவள் - சீதை, கமலம் செல்வியே - செந்தாமரைமலரில் வீற்றிருக்கிற செல்வத்துக்கு உடையவளான ஸ்ரீமகாலக்ஷ்மியே யாவள்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

இராமபிரான் சீதை இவர்களது நல்லிலக்கணத்தை ஆராய்ந்துபார்த்தால், அப்பிரான் திருமாலினவதாரமும் இவள் இலக்குமியின் அவதாரமுமாகவே இருக்கவேணும்; இப்படிப்பட்டவர்களைப் பாவி இராவணன் பிரித்துவைத்தது தன்னுயிர்க்கு உலைவைத்துக்கொண்டதுதானென்று அநுமான் கருதினனென்க. உலகம் பதினான்காயிருக்க 'மூவகையுலகு' என்றது என்னையெனின்?—மேல் கீழ் நடு என்கிற நோக்கத்தாலென்க. இராவணன், எல்லாவுலகங்களிலுஞ் சென்று ஆங்காங்கு அவரவர் செய்யும் யாகம் தவம் தியானம் யோகம் முதலியவற்றிற்கெல்லாம் இடையூறு செய்தவனாதலால், 'முறையினீக்கிய பாவி' எனப்பட்டான். பாவி-பாபீ; பாபகருமமுடையவன். ஐயம் - பலதலையாய அறிவு. 'ஆவதேயையமில்' என்பதை மத்திமதீபமாகப் பின்வாக்கியத்திலுங் கூட்டலாம்.

௬௮. மாசுண்டமணியனாள்வயங்குவெங்கதிர்த்
தேசுண்டதிங்களுமென்னத்தேய்ந்துளாள்
காசுண்டகூந்தலாள்கற்புங்காவலும்
மாசுண்டதில்லையாலறத்துக்கீறுண்டோ.

(இ - ள்.) மாசு உண்ட - அழுக்குப்படிந்த, மணி - இரத்தினத்தை, அனாள் - ஒத்தவளும்,—வயங்கு - விளங்குகிற, வெம் கதிர் - வெம்மையாகிய கிரணங்களையுடைய சூரியனது, தேசு உண்ட - ஒளி படப்பெற்ற, திங்களும் என்ன - சந்திரன்போல [சூரியன்முன்னேநின்ற சந்திரன்போல], தேய்ந்து உளாள் - தேககாந்தி மழுங்கியுள்ளவளும்,—காசு உண்ட கூந்தலாள் - அழுக்குப்பிடித்த கூந்தலையுடையவளும் ஆகிய இத்தேவியின், கற்பும் - கற்புநிலையும், காவலும் - (அதினின்றும் வழுவாமல் தன்னைக்) காத்தலும், ஏசு உண்டது இல்லை - குற்றம் பொருந்தினதில்லை; அறத்துக்கு - தருமத்துக்கு, ஈறு - அழிவு, உண்டோ - உளதாகுமோ? [ஒருநாளும் உண்டாகாதென்றபடி]; (எ-று.)—ஆல் - தேற்றம்.

மாசுபடிந்த மணிபோல இவளுடம்பு புழுதிபடிந்து மாசுண்டும், சூரியன் முன்னின்ற சந்திரன்போலத் தேய்ந்து மிருந்தலோடு, இவள்கூந்தல் அழுக்குப்

பிடித்துமிருத்தலால், இவளது கற்பும் காவலும் ஏசுண்ணவில்லையென்பது தெற்றெனவிளங்கு மென்று அநுமான் கருதினனென்பதாம். கற்புங்காவலும் ஏசுண்ணுமையை விளக்குதலால், 'மாசுண்டமணியனாள்' என்பது முதலிய மூன்றும் ஸாபிப்பிராய விசேஷ்யங்கள்; - ஆகவே, கருத்துடையடைகோளியணியாம். வெங்கதிர் - பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை யென்றாயினும், கதிர் என்பதைச் சினையாகுபெய ரென்றாயினுங் கொள்க. திங்களும், உம்மை - இசைநிறை. கற்பும் காவலும் தனித்தனி ஏசுண்டதில்லையென்க (௬௮)

௬௯. புனைகழலிராகவன்புயத்தையோபுகழ்
வனிதையர்திலகத்தின்மனத்தின்மாண்மையோ
வனைகழலரசரின்வண்மைவீக்கிடுஞ்
சனகர்தங்குலத்தையோயாதைச்சாற்றுகேன்.

(இ - ள்.) புனை கழல் - அணிந்த வீரக்கழலையுடைய, இராகவன் - ஸ்ரீராமனது, புயத்தையோ - தோள்களையோ? புகழ் - (யாவராலும்) புகழத்தக்க, வனிதையர் திலகத்தின் - பெண்களுக்கெல்லாம் நெற்றியிலிடுந் திலகம்போல அழகு செய்தலாற் சிறந்த பிராட்டியின், மனத்தின் - நெஞ்சினது, மாண்மையோ - (கற்புநெறியில் நிற்றலாகிய) பெருங்குணத்தையோ? கழல் வனை - வீரக்கழலையணிந்த, அரசரின் - அரசர்கட்கு இருக்கவேண்டிய, வண்மை - உதாரகுணத்தை, வீக்கிடும் - (தன்னிடத்தில்) நிலையாகக்கொண்டுள்ள, சனகர்தம் - ஜனகமகாராஜரது, குலத்தையோ - வம்சத்தையோ? யாதை - (இவற்றுள்) எதை, சாற்றுகேன் - புகழ்ந்துசொல்லுவேன், (யான்)? (எ - று.)

இவ்வாறு நற்குணநற்செயல்களால் ஒப்புயர்வின்றி விளங்குகின்ற சீதாபிராட்டியைப் பெருமாறு பாக்கியஞ்செய்திருத்தலால் இராமபிரானது திருத்தோள்களும், ஒப்புயர்வின்றிச்சிறந்து விளங்குகின்ற இராமபிரானைச்சேர்ந்து மிக்கவருத்தம்நேர்ந்தும் தனது உறுதியினின்று சிறிதும்குறைவின்றிக் கற்பைக் காக்கின்ற திண்மை வாய்ந்திருத்தலால் சீதாபிராட்டியின் மாட்சிமைபெற்ற மனமும், இங்ஙனம் எல்லாப்படியாலும் மிகச்சிறந்த பெண்ணருங்கலத்தைப்பெற்றதனால் சனகர்தங்குலமும் புகழத்தக்கனவாயின வென்க. சீதாபிராட்டியின் கற்பு நிலை கெடாமைக்குக் காரணமான மனமாட்சியே சிறந்ததாதல்பற்றி, அதனை இச்செய்யுளில் நடுநாயகமாக அமைத்தனரென்க. (௬௯)

௭0. தேவரும்பிழைத்திலர்தெய்வவேதிய
ரேவருமபிழைத்திலரறமுமீறின்றால்
யாவதிங்கினிச்செயலரியதெம்பிராற்
காவவென்னடிமையும்பிழைத்தின்றுமன்றே.

(இ - ள்.) தேவரும் - தேவர்களும், பிழைத்திலர் - ஒருகுற்றமுஞ் செய்தாரில்லை; தெய்வம் வேதியர் எவரும் - (பூமிக்குத்) தேவர்களாகிய அந்தணர்களெல்லாரும், பிழைத்திலர் - ஒருதவறுஞ் செய்தாரில்லை; அறமும் - தருமமும், ஈறு இன்று - அழிவுடையதன்று; இனி - இனிமேல், எம் பிராற்கு - எமது தலைவனாகிய இராமபிரானுக்கு, இங்கு - இவ்வுலகத்தில், செயல் அரியது - செய்

தற்கு அரிய தொழில், யாவது - யாதுஉள்ளது? ஆவ - (எல்லாக்காரியங்களும்) கைகூடுவனவாம்; என் அடிமையும் - எனது அடிமைத்தனமும், பிழைத்தின்று ஆம் - தவறாததாம்; (எ - று.)—அன்று, ஓ - தேற்றம்.

சீதாபிராட்டி தனதுகற்புநிலையினின்று தவறியிருந்தால் அப்போது இராவணவதம் நேர்தற்கு இடமில்லாமல் தேவர்முதலியோர் பாவஞ்செய்தவர்போலத் துயரத்தை எப்போதும் அனுபவிக்க நேரிடும்: அப்பிராட்டி சிறிதும் தனது கற்புநெறியினின்று தவறவில்லையாதலால் தேவர்முதலியோர் 'பிழைத்திலர்' என்றும், இனி இராமபிரான் இராவணசங்காரஞ்செய்யத் தருமஞ்செழித்தோங்குமாதலால் 'அறமுமீறின்றால்' என்றும், இனி இராமபிரான் நினைத்தபடி எல்லாம் கைகூடுமாதலால் 'யாவதிங்கினிச் செயலரியது எம்பிராற்கு' என்றும், தான் செய்த அடிமைத்தொழில் இப்போது பெரும்பயன்விளைக்கு மென்பான் 'என்னடிமையும் பிழைத்தின்றாம்' என்றும் அநுமன் கருதினான். யாவது - யாது என்பதன் விரித்தல்விகாரம். பிரான் என்பதை - பிரபு என்னும் வடமொழியின் சிதைவென்பர். ஆவ என்பதை எதிர்கால ஒன்றன்பால் வினையாலணையும் பெயராகிய ஆவது என்பதன் விகாரமாகக் கொண்டால், எம்பிரானுக்கு ஆவதாகிய எனது அடிமை யென்க. (௭0)

௭௧. கேழிலாணிறையிறைகீண்டதாமெனி
னூழியான்முனிவெனும்பாழிமீக்கொள
வூழியினிறுதிவந்துறுமெனவுன்னினேன்
வாழியருலகினிவரம்பினாளெலாம்.

(இ - ள்.) கேழ் இலாள் - ஒப்பில்லாத சானகியினது, நிறை கற்புநிலைமை, இறை - சிறிது, கீண்டது ஆம் எனின் - சிதைந்ததாமானால், ஆழியான் - ஆஜ்ஞாசக்கரமுடைய ஸ்ரீராமனது, முனிவு எனும் - கோபமென்கிற, ஆழி - கடல், மீ கொள - மேலே பொங்கியெழ, ஊழியின் இறுதி - உலகமுழுவதுமழியும் யுகமுடிவுகாலம், வந்து உறும் என்று - வந்துநேரு மென்று, உன்னினேன் - எண்ணினேன்; (நிறை சிறிதும் தவறாமையால்), இனி—, உலகு - உலகங்கள், வரம்பு இல் நாள் எலாம் - எல்லையில்லாத காலதத்துவமுள்ள வளவும், வாழியர் - வாழக்கடவன; (எ - று.)

சிலமாதகாலமாகச் சீதாபிராட்டி தான் தனியே அரக்கரிடையில் அகப்பட்டதனால் ஒருகால் கற்புநிலையினின்று தவறுவளாயின், அப்போது இராமபிரானது சினக்கடல் பொங்கி உலகெல்லாம் அழித்தொழிந்துவிடுமேயென்று அஞ்சி யிருந்தேன்; இப்போது அவ்வாறு ஐயப்படுதற்கு ஏதுவில்லையென்று தெற்றெனவிளங்குதலால், இனி உலகம் யாதொருகுறையுமின்றி வாழ்வதாக என்று அநுமான் வாழ்த்தினா னென்க. நிறை - நெஞ்சைக் கற்புநெறியில் நிறுத்தல். க்ஷத்திரியகுலத்தில் அவதரித்ததனாலும், சக்கரவர்த்திதிருமகனாதலாலும், 'ஆழியான்' என்றார்; இனி, கடலிற் பள்ளிகொள்பவ னென்றும், கடல்போலுங் கரியதிருநிறமுடையவனென்றும், சுதரிசனமென்னுஞ் சக்கரமுடையவனென்றும் பொருள்கொள்ளலாம். வாழியர் - 'ர்' விகுதிபெறற் வியங்கோள்வினைமுற்று; இவ்விகுதி, இகர யகரங்களோடு கூடியே நிற்கும். (௭௧)

எ௨. வெங்கனன் முழுகியும் புலன்கள் வீக்கியு
நுங்குவ வருந்துவ நீக்கி நோற்றவ
ரெங்குளர் குலனில்வந் தில்லின் மாண்புடை
நங்கையர் மனத்தவ நவிலற் பாலதே.

(இ - ள்.) குலனில் வந்து - உயர்குலத்திற் பிறந்து, இல்லின் மாண்பு உடை - இல்லறத்திற்குரிய நற்குணநற்செய்கைகளை யுடைய, நங்கையர் - பெண்களது, மனம் தவம் - மனவுறுதியாகிய தவம், நவிலல்பாலதே - சொல்லி முடியுந்தன்மையுடையதோ? [அன்றென்றபடி]; (இவர்களுக்கு முன்), வெம் கனல் முழுகியும் - வெப்பமாகிய பஞ்சாக்கினியின் மத்தியில் நின்றும், புலன்கள் வீக்கியும் - ஐம்புலன்களை அடக்கியும், நுங்குவ அருந்துவ நீக்கி - குடிக்கத்தக்க நீர்முதலியவற்றையும் உண்ணத்தக்க சோறுமுதலியவற்றையும் ஒழித்து, நோற்றவர் - தவஞ்செய்தவர்கள், எங்கு உளர் - எங்கே உள்ளார்? (எ - று.)—ஏ - எதிர்மறை.

அருந்தவஞ்செய்தவர்களும் கற்புநிலைதவறாத மகளிர்க்கு ஈடாகா ரென்பதாம். தவசியரினும் கற்புநிலைதவறாத மகளிர் விஞ்சுதலை, தன்மீது எச்சமிட்ட கொக்கைத் தன் கண்பார்வையால் எரித்த கௌசிகனென்னும் அந்தணன், தனது பர்த்தாவுக்குப் பணிவிடைசெய்வதனால் பிச்சையிடாது தாமதித்த மங்கையினிடத்துச் சினங்கொண்டு பலிக்காமையால் அவளுக்குத் தாழ்ந்துபோன சரித்திரத்தாலும் அறியலாம். மாதவர் நோன்பினும் மங்கையர்நோன்பு மகிமையுள்ள தென்க. (எ௨)

பேணநோற் றதுமனைப் பிறவி பெண்மைபோ
னாணநோற் றுயர்ந்தது நங்கை தோன்றலா,
னீண்டுமா ணநோற்றீண் டிவளிருந் தவா றெலாங்
காணநோற் றிலனவன் கமலக் கண்களால்.

(இ - ள்.) நங்கை தோன்றலால் - இப்பிராட்டி தோன்றியதனால்,—பேண நோற்றது - (யாவரும் தன்னை) விரும்பும்படி தவஞ்செய்து உயர்ந்ததாகிய, மனை பிறவி - உயர்குடிப் பிறப்பும், பெண்மை - பெண்பிறப்பும், போல் - (என்னும் இவை) போல, நாணம் - (அப்பெண்களுக்கு உரிய குணங்களுட் சிறந்ததாகிய இலச்சையும், நோற்று உயர்ந்தது - தவஞ்செய்து சிறந்தது; இவள் - சீதை, ஈண்டு - இங்கே, மாண - மாட்சிமைப்பட, நோற்று (கணவனையே தியானித்தலாகிய) தவத்தைச் செய்து, இருந்த ஆறு எலாம் - இருந்தவிதத்தையெல்லாம், கமலம் கண்களால் - செந்தாமரைமலர்போலுந் தமது திருக்கண்களால், காண - பார்த்தற்கு, அவன் - இராமபிரான், நோற்றிலன் - தவஞ்செய்தானில்லை; (எ-று.)

இப்படிப்பட்ட கற்புநிலைமையையுடைய சீதையொருத்தி உலகத்தில் திருவவதரித்ததனாற் குடிப்பிறப்புக்கும் ஸ்திரீஜாதிக்கும் பெண்களுக்குரிய நாணம் முதலிய குணங்களுக்கும் ஒப்புயர்வில்லாத சிறப்பு உண்டாயிற்றென்பது, முதலிரண்டடிக்குக் கருத்து. இங்ஙனமுள்ள சீதாபிராட்டியை இராகவபிரான் தனது கண்களாற் பிரதியட்சமாகக் காணின் அப்போது அப்பிரானுக்குப் பெருமகிழ்ச்சி விளையு மாதலால், அம்மகிழ்ச்சியை அடையாமலிருப்பது அவனது தவக்குறையேபோலு மென்று அநுமான் கருதினனென்பதாம். (எ௩)

௭௪. முனிபவராக்கியர்முறையினீங்கினா
ரினியவட்டானலாதியாருமில்லையாற்
றனிமையும்பெண்மையுந்தவமுமின்னதே
வனிதையர்க்காகநல்லறத்தின்மாண்பெலாம்.

(இ - ள்.) அரக்கியர் - இராக்ஷசிகள், முனிபவர் கோபிப்பவராய், முறையின் நீங்கினார் - நீதியினின்றும் நீங்கினவராயுள்ளார்; இனியவள் - நல்லவள், தான் அலாது - தானொருத்தியேயல்லாமல், யாரும் இல்லை - எவருந்துணையில்லை; தனிமையும் - தனித்திருத்தலும், பெண்மையும் - பெண்தன்மையும், தவமும் - கற்பொழுக்கமும், இன்னதே - இப்படிப்பட்டதே; நல் அறத்தின் மாண்பு எலாம் - நல்லதருமத்தின் சிறந்த பயனனைத்தும், வனிதையர்க்கு ஆக - பெண்களுக்கே உண்டாகட்டும்; (எ - று.)

இங்கே நீதிதவறிய பல அரக்கியர் சீதாபிராட்டியைச் சூழ்ந்துகொண்டு மிகவும் வருத்துகின்றார்கள்; இவளுக்குத் துணையாக எவரேனும் உளரோவென்றால், ஒருவரும் இல்லை; இவ்வாறு இவர்களிடையே சீதாபிராட்டி தான் தனியே அகப்பட்டுக்கொண்டு மகளிர்க்குஉரிய நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் மகடூஉக்குணங்களிற் சிறிதுங்குறைபாடின்றித் தனதுகற்புநிலை சிறிதும்வழுவாது வருந்திக்காக்கின்றாள்; இவ்வளவு அருமைப்படவேண்டியிருத்தலால், இவ்வாறான மங்கையர்க்குத் தருமமே துணையாக நின்று யாதொருதுன்பமும் நேராதவாறு பாதுகாக்கவேண்டுமென்று வேண்டினன் அனுமான் என்க. இனி, அவள் என்றும் பிரித்துப் பொருள்கூறுவர். இனியவள்தானலாது யாருமில்லை- அந்தத் திரிசடையே அல்லாமல் இவட்கு இனியவள் வேறுயாருமில்லை என்று கூறலும் ஒன்று. இன்னதே என்பதில், ஏகாரம் - வியப்புத்தோன்ற நின்றது. (௭௪)

௭௫. தருமமேகாத்ததோசழக்கன்றன்வினைக்
கருமமேகாத்ததோகற்பின்காவலோ,
வருமையேயருமையேயாரிதாற்றுவா
ரொருமையேயெம்மனோர்க்குரைக்கற்பாலதோ.

(இ - ள்.) தருமமே - தருமந்தான், காத்ததோ - (இவள்மனத்தைத் தவறுபடாமற்) பாதுகாத்ததுவோ? (அன்றி), சழக்கன்தன் - குற்றங்களையுடைய இராவணனது, வினை கருமமே - தீவினைச்செய்கைதான், காத்ததோ—? (இவையன்றி), கற்பின் காவலோ - கற்பாற் காக்குங் காவல்தானோ? அருமையே அருமையே - (இவ்வாறு காத்தல்) மிக அருமையானதே, யார் இது ஆற்றுவார் - யாவர் இவ்வாறு பொறுக்கவல்லவர்? (இந்நோன்பு), எம் அனோர்க்கு - எம்மைப்போன்றவர்க்கு, ஒருமையே உரைக்கற்பாலதே - ஒருபடியாகவாயினுஞ் சொல்லுந்தன்மையுடையதோ? (எ - று.) —அன்று என்றபடி.

பெருங்காமுகனான இராவணன் சீதாபிராட்டியைத் தான்கவர்ந்துகொண்டு வந்திருந்தும் அவளைத் தீண்டமுடியாதபடி நேர்ந்துள்ள இச்செயல் தருமதேவதையின் செயலேயென்பான் 'தருமங்காத்ததோ' என்றும், இராவணன் தனது தீச்செயலினாற் பிறமகளிரை வலியத்தீண்ட முடியாதபடி சாபம் பெற்றுள்ளதே சீதாபிராட்டியைத் தீண்டாமல் தடைப்படுதற்குக் காரணமாதலால் 'வினைக்கரும

மே காத்ததோ' என்றும், சீதை தனக்குநேர்ந்துள்ள பலவகைத்துன்பங்களையும் கருதித் தனதுமனத்திண்மையினின்று சிறிது வழுவினளாயின், அப்போது எவராலும் ஒன்றுஞ்செய்ய இயலாதாகையால் அவள்கற்பே அவளைக்காத்ததென்பான், 'கற்பின் காவலோ' என்றும் அநுமான் கருதி, அவளது கற்புநிலையின் உறுதியைக் கொண்டாடுகின்றன னென்க. (எரு)

எசு. செல்வமோ வதுவவர் தீமையோ விது
வல்லினும்பகலினுமமரராட்செய்வா
ரொல்லுமோ வொருவர்க்கீ துறுகண்யா தினி
வெல்லுமோ தீவினையறத்தைமெய்ம்மையால்.

(இ-ள்.) செல்வமோ - (இராவணனது) ஐசுவரியமோ, அது அப்படிப்பட்டது; அவர் தீமையோ அவ்விராவணனாலேவப்பட்ட அரக்கியர் செய்யும் கொடுமையோ, இது - இப்படிப்பட்டது; அல்லினும் பகலினும் - இராத்திரியிலும் பகலிலும் [எப்பொழுதும்], அமரர் - தேவர்கள், ஆள் செய்வார் - (இராவணனுக்கு) அடிமைத்தொழில் செய்வார்கள்; ஈது இங்கே இவ்வாறு கற்புத்தவறாதிருத்தல், ஒருவர்க்கு - வேறொருத்தர்க்கு, ஒல்லுமோ - கூடுமோ? [கூடாது]; இனி யாது உறுகண் - இனிமேல் என்ன துன்பம் உள்ளது' [ஒரு துன்பமும் உண்டாகாது]; தீவினை - பாவம், அறத்தை - தருமத்தை, மெய்ம்மையால் - உண்மையாக, வெல்லுமோ - ஜயிக்கவல்லதோ' [அன்றென்றபடி.]

'அது' என்றது, கீழ் ஊர்தேடுபடலத்துக் கண்டதனை. 'இது' என்றது - இப்படலத்திற் கூறியதனை. அமரர் - மரணமில்லாதவர். 'ஒல்லுமோ ஒருவர்க்கீது' என்பதற்கு - இப்படிப்பட்டபாக்கியம் வேறொருவர்க்குக் கிடைக்குமோ' என்று பொருள்கூறுவாருமுளர். (எசு)

[அநுமான் இவ்வாறு கருதி, அந்த ஒரு பாகிளையில் மறைந்துநிற்க, இராவணன் தோன்றுதல்.]

எஎ. என்றிவையினையனவெண்ணிவண்ணவான்
பொன்றிணிநெடுமரப்பொதும்பர்புக்கவ
ணின்றனனவ்வழி நிகழ்ந்ததென்னெனிற்
றுன்றுபூஞ்சோலைவாயரக்கன்றோன்றினான்.

(இ-ள்.) என்று—, இவை - இவற்றையும், இனையன - இப்படிப்பட்ட இன்னும் பலவற்றையும், எண்ணி - (அநுமான்) சிந்தித்து, வண்ணம் - அழகிய, வான் - பெரிய, பொன் - பொன்மயமான, திணி - அடர்ந்த, நெடு - நீண்ட, மரம் - ஒருமரத்தினது? பொதும்பர் - இலைசெறிந்த கிளையில், புக்கு - போய், அவண் - அவ்விடத்தில், நின்றனன் - மறைந்து பார்த்திருந்தான்; அவ்வழி - அவ்விடத்தில் [அப்பொழுது], நிகழ்ந்தது - நடந்தது, என் எனின் - என்னவென்றால்,—துன்று பூ சோலைவாய் - நெருங்கிய பூக்களையுடைய அவ்வசோகவனிகையில், அரக்கன் - இராவணன், தோன்றினான் - வந்தான்; (எ-று.)

பொதும்பர் - பொதும்பு என்பதன் ஈற்றுப்போலி. சோலைவாய், வாய் - ஏழனுருபு. பூஞ்சோலை - பூப்பெயர்முன் இனமென்மை தோன்றிற்று. (எஎ)

காட்சிப்படலம் முற்றிற்று.

## நான்காவது

# நிந்தனைப் படலம்.

இராவணன் தன்னைநோக்கித் தகாத பலவார்த்தைகள் கூறக் கேட்ட சீதாபிராட்டி இராவணனைத் துரும்பாகக்கொண்டு பலபடி நிந்தித்துக் கூறிய செய்தியை விவரிக்கும் கூறுபாடு என்பது, இதன்பொருள்.

[இதுமுதல் பத்தொன்பது கவிகள் - குளகம்: இராவணன் அசோகவனிகையில் வருவதைப்பற்றிய வருணனை.]

க. சிகரவண்குடுமிநெடுவரையெவையுமொருவழித்திரண்டனசிவண
மகரிகைவயிரகுண்டலமலம்புந்திண்டிறற்றோள்புடைவயங்கச்
சகரவேலையினீர்தழுவியகதிரிற்றலைதொறுந்தலைதொறுந்தயங்கும்
வகையபன்மகுடமிளவெயிலெறிப்பக்கங்குலும்பகல்படவந்தான்.

(இ - ள்.) சிகரம் வள் குடுமி நெடு வரை எவையும் - சிகரமென்று சொல்லப்படுகின்ற வளப்பமுள்ள உச்சியோடுகூடிய நீண்ட மலைகள்பலவும், ஒரு வழி திரண்டன சிவண - ஓரிடத்தில் சேர்ந்தனபோல, வயிரம் மகரிகை குண்டலம் அலம்பும் திண் திறல் தோள் - வைரரத்தினங்களிழைத்துச்செய்யப்பட்ட மகர குண்டலங்கள் அசைந்தாடுகின்ற மிக்க வலிமையையுடைய இருபதுதோள்களும், புடை வயங்க - (தனது) இருபக்கத்திலும் விளங்கவும்,—சகரர் வேலையின் நீர் தழுவிய கதிரின் - சகரபுத்திரர்களால் தோண்டப்பட்ட சமுத்திரத்தினது நீரைச் சார்ந்துள்ள இளஞ்சூரியன்போல, தலை தொறும் தலை தொறும் தயங்கும் வகைய - ஒவ்வொருசிரசிலும் (அணியப்பட்டு) விளங்குகின்ற தன்மையையுடைய, பல் மகுடம் - பல [ஒருபது] கிரீடங்கள், இள வெயில் எறிப்ப - இளவெயிலை வீசுதலினால், கங்குலும் பகல் பட - (காரிருள் நிறைந்த) அந்த நள்ளிருட்பொழுதும் (ஒளிமிகுதியினால்) பகற்பொழுதாக விளங்கவும், வந்தான் - (இராவணன் சீதையிருந்த அந்தச் சோலையினிடம்) வந்தான்; (எ - று.)

இராவணன் பருத்துயர்ந்த இருபதுதோள்களையுடைமையால், அத்தோள் வரிசைகட்கு 'நெடுவரையெவையும் ஒருவழித்திரண்டனசிவண' என்று உவமை கூறினர். காதிலணிந்த குண்டலங்கள் தோளின்மீது அசைந்தாடுதல் இயல்பு. மகரிகைகுண்டலம் - சுறாமீன்வடிவமையச் செய்யப்பெற்ற குண்டலம். இருபது செவியிலுமணிந்திருக்கும் மகரகுண்டலங்கள் இராவணனது இருபதுதோள்களின்மேலும் தோன்றுமென்க. கருநிறமுள்ள இராவணன் தலைமீது அணியப்பட்டு விளங்குகின்ற ஒருபதுமகுடங்களுக்கு-கருநிறமுள்ள கடலின்மீது தழுவி விளங்கும் ஒருபது பாலசூரியர் இல்பொருளுவமையாவர். 'கங்குலும் பகல்பட' என்றது - இரத்தினகிரீடங்களின் ஒளிமிகுதியை விளக்கும் அதிசயோக்தி. சகரபுத்திரரால் கடல் தோண்டப்பட்டதாதலின், 'சகரவேலை' எனப்பட்டது. இச்செய்யுளிலுள்ள 'வந்தான்' என்ற வினைமுற்றே, மேல் பத்தொன்பதாங்கவி வரையிலுமுள்ள 'உதவ' முதலிய செயவெனெச்சங்கட்கும் முடிக்குஞ்சொல்லாம். சிவண வயங்க பகல்பட வந்தான் என இயையும்.

இதுமுதல் இருபத்தொரு கவிகள் - இரண்டு நான்கு எழாஞ்சீர்கள் மாச்சீர்களும், மற்றைநான்கும் விளச்சீர்களுமாகிவந்த எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தங்கள். (க)

௨. உருப்பசியுடைவாளெடுத்தனடொர _ரமேனகைவெள்ளடையுதவச்
செருப்பினைத்தாங்கித்திலோத்தமைசெல்லவரம்பையர்குழாம்புடை
கருப்புரஞ்சாந்தங்கலவையுமலருங்கலந்துமிழ்பரிமளகந்த [சுற்றக்
மருப்புடைப்பொருப்போர்மாதிரக்களிற்றின்வரிக்கைவாண்மூக்கிடைமடுப்ப

(இ - ள்.) உருப்பசி - ஊர்வசியென்பவள், உடைவாள் - இடையிற் செருகக்கூடிய வாளாயுதத்தை, எடுத்தனள் தொடர - எடுத்துக்கொண்டு (தன் பின்னே) வரவும்,—மேனகை - மேனகையென்பவள், வெள் அடை - வெற்றிலையை, உதவ - கொடுத்துக்கொண்டுவரவும்,—திலோத்தமை - திலோத்தமையென்பவள், செருப்பினை - செருப்பை, தாங்கி செல்ல-எடுத்துக்கொண்டு உடன் போகவும்,—அரம்பையர் குழாம் - மற்றைத் தேவமாதர்களின் கூட்டம், புடை சுற்ற - பக்கங்களிலே சூழ்ந்துவரவும்,—(தான் அணிந்துள்ள), கலவை கருப்புரம் சாந்தம் உம் - பச்சைக்கருப்புரஞ்சேர்ந்த கலவைச் சந்தனமும், மலரும் - மலர்மாலைகளும், (இவையிரண்டும்), கலந்து - ஒன்றுகூடி, உமிழ் - வெளிவீசுகின்ற, பரிமள கந்தம் - மிக்க நறுமணமானது, மருப்பு உடை - தந்தங்களையுடைய, பொருப்பு - மலைபோன்ற, ஓர் மாதிரம் களிற்றின் - ஒப்பற்ற திக்கஜத்தினது, வரி கை - புள்ளிகளையுடைய துதிக்கையிலுள்ள, வாள் மூக்கிடை - கூரிய மூக்கினில், மடுப்ப - நிறைந்து உட்செல்லவும்,—(எ - று.)—வந்தான்.

தனது செருக்கு வெளித்தோன்றுமாறு தேவமாதர்கள் பணிசெய்ய, இராவணன் மிக்க சம்பிரமத்தோடு வந்தன னென்க. இலங்கை தெற்குத்திக்கி லிருத்தலால், இங்கு, 'களிறு' என்றது - தெற்குத்திசையிலுள்ள 'வாமனம்' என்னும் திக்கஜத்தைக் குறிக்கு மென்னலாம். இனி, மாதிரக்களிறு என்பது பால்பகா வஃறிணைப்பெய ராதலால், அஷ்டதிக்கஜங்களையுங் குறிக்குமென்றலுமொன்று; இப்பொருளில் ஓர் - ஒப்பற்றனென்க. கலவைச்சாந்து மலர்இவற்றின் நறுமணம், மிக்கிருத்தல்பற்றி வெகுதூரத்திலிருக்குந் திக்கஜத்தின் மூக்கிலும் சென்றதென்க: இதுபற்றியே, பரிமளகந்தம் என ஒருபொருட்பன்மொழியாற் கூறினர். வெள்ளடை என்பது - பாக்கு முதலியமற்றையினத்தையும் உபலக்ஷணத்தாற் குறிக்கும். (௨)

௩. நானநெய்விளக்கநாலிருகோடிநங்கையரங்கையிலெடுப்ப
மேனிவந்தெழுந்தமணியுடையணியின்விரிகதிரிருளெலாம்விழுங்கக்
கான்முதற்றொடர்ந்தநூபுரஞ்சிலம்பக்கிண்கிணிகலையெடுங்கலிப்பப்
பானிறத்தன்னக்குழாம்படர்ந்தென்னப்படலமழலையும்பகா.

3.—(இ - ள்.) நால் இரு கோடி நங்கையர் - எட்டுக்கோடி மகளிர், நானம் நெய் விளக்கம் - புழுகுத்தைலம் விட்டு ஏற்றிய விளக்குக்களை, அம் கையில் எடுப்ப - அழகிய தமது கைகளி லேந்திவரவும்,— மேல் நிவந்து எழுந்த - (அம் மகளிரின்) உடம்புகளில் உயர்ந்துதோன்றுகின்ற, மணி உடை அணியின் விரி கதிர் - இரத்தினாபரணங்களினுடைய பரவுகின்ற ஒளியானது, இருள் எலாம் -

(அப்பொழுதுள்ள) இருள் முழுவதையும், விழுங்க - ஒழித்துவிடவும்,—கால் முதல் - (அம்மகளிரது) பாதங்களில், தொடர்ந்த - அணியப்பெற்ற, நூபுரம் - சிலம்புகள், சிலம்ப - ஒலித்தலினாலும், கிண்கிணி - சதங்கையணிகளும், கலையொடும் - (அரையிற்பூண்ட) மேகலாபரணமும், கலிப்ப - ஒலித்தலினாலும், பால் நிறத்து அன்னம் குழாம் படர்ந்து என்ன - பால்போலும் வெண்ணிறமுடைய அன்னப்பறவைகளின்கூட்டம் (இனிமையாக ஒலித்துக்கொண்டு) செல்வதுபோல, பல் பல மழலையும் - மிகப்பல இனிய ஒலிகளும், பகர - ஒலிக்கவும்,—(எ - று.)—வந்தான்.

தமது உடம்பிலணிந்துள்ள இரத்தினாபரணங்களின் ஒளியே அப்போது செறிந்துள்ள இருளைப் போக்க, மங்களார்த்தமாகக் கைகளிற் புழுகுநெய் யூற்றிய விளக்கை யேந்திக்கொண்டு, எட்டுக்கோடிமகளிர், இன்னொலிகளைச் செய்யும் அன்னக்கூட்டம் செல்வதுபோலத் தமது பாதங்களி லணிந்துள்ள நூபுரமும் கிண்கிணியும் இடையிலணிந்துள்ள மேகலாபரணமும் இன்னொலி செய்யுமாறு இராவணனைச்சூழ்ந்து நடந்துவந்தன ரென்க. நிரம்பாமென் சொல்லைக் குறிப்பதாகிய 'மழலை' என்பது - இலக்கணையால், இன்னோசையை உணர்த்திற்று. இனி, அம்மகளிர் நூபுரம் சிலம்பவும், கிண்கிணியும் மேகலையும் கலிப்பவும், அன்னக்கூட்டம் சூழ்ந்துவருவதுபோல் இனிய மழலைச்சொற்களைக் கூறிக்கொண்டு உடன்செல்ல வந்தான் என்று கூறினும் அமையும். முந்திய பொருளில் நூபுரம் முதலியவற்றின் ஒலிக்கு அன்னங்களின் இன்னொலியும், பிந்தியபொருளில் நூபுரம் முதலியவை யொலிக்க மெல்லெனநடக்கும் மகளிர்க்கு இன்னொலிசெய்யும் அன்னப்பறவையும் உவமை யெனக் காண்க.

நாலிருகோடிநங்கையர் - மிகப்பலமகளி ரென்றபடி. மேனி வந்து எழுந்த என்று பிரித்து உரைப்பாரு முளர். கான்முதல், முதல் - ஏழனுருபு. கலை - மேகலை யென்பதன் முதற்குறை. 'கலையொடுங்கலின' என்று பாடாந்தரம். (௩)

௪. அந்தரம்புகுந்ததுண்டெனமுனிவுற்றருந்துயினீங்கினனாண்டைச்
சந்திரவதனத்தருந்ததியிருந்ததண்ணறுஞ்சோலையின்றனையோ
மந்திரம்யாதோ யாரொடும்போமோ வென்றுமாமனமறுக்குறலா
லிந்திரன்முதலோரிமைப்பிலாநாட்டமுகிழ்த்தனருயிர்ப்பவிந்திருப்ப.

(இ - ள்.) '(இராவணன்), அந்தரம் புகுந்தது உண்டு என - (தனது கருத்திற்கு) இடையூறு நேர்ந்திருக்கிறது என்ற எண்ணத்தினால், முனிவு உற்று - கோபங்கொண்டு, அரு துயில் நீங்கினன் - (தனது) அருமையான தூக்கம் நீங்கப்பெற்றான்; (அதனால்), (இவனதுசிற்றம்), ஆண்டை - அங்குள்ள, சந்திர வதனத்து - பூர்ணசந்திரன்போலும் முகமுடைய, அருந்ததி - (மகாபதிவிரதையாகிய) அருந்ததிபோன்ற சீதாபிராட்டி, இருந்த - சிறையிருக்கின்ற, தண் நறு சோலையின் தனையோ - குளிர்ந்த வாசனையுள்ள

சோலைவரையிலும் நிற்குமோ? (அன்றி),' யாரொடும் போமோ - யார்வரையி லும் சென்று முடியுமோ ? (அதுவன்றி), மந்திரம் யாதோ - (இவன்) ஆலோ சனைதான் என்னவோ? என்று—, மா மனம் மறுக்குறலால் - பெரிய (தமது) மனம் கலக்கத்தை யடைவதனால், இந்திரன் முதலோர் - இந்திரன் முதலிய தேவர்கள், இமைப்பு இலா நாட்டம் முகிழ்த்தனர் - (தமது) இமையாக்கண்க ளும் மூடப்பெற்றவர்களாய், உயிர்ப்பு அவிந்து இருப்ப - மூச்சுக்காற்றும் அடங்கி நிற்கவும்,— (எ - று.)—வந்தான்.

அப்போது, இராவணன் காமபரவசனாகி உறக்கமும் ஒழிந்து, பிராட்டி தன்கருத்துக்கு இணங்காமையாற் சினம் பொங்கச் செல்வதைக் கண்ட இந்திரன்முதலிய தேவர்கள், 'இவனது இக்கோபம் சீதாபிராட்டி சிறை யிருக்கும் பூஞ்சோலையோடும் நிற்குமோ? அன்றி, இன்னும் யார்மீது செல்லு மோ? அல்லாவிடின், இவன்எண்ணந்தான் வேறு யாதோ?' என்று மனங் கலங்கி, மிக்க அச்சத்தினால் தமது இமையாக்கண்களும் மூட, மூச்சும்அடங்கி யிருந்தன ரென்பதாம். சீதாபிராட்டி தனக்கு இணங்காததுபற்றி, இரா வணனுக்கு முனிவும் துயிலொழிவும் நேர்ந்தன வென்க. 'கோபமானது இன்னது செய்யற்பாலது, இன்னது செய்யத்தகாதது' என்ற பகுத்தறிவைப் போக்கு மாதலால், 'யாரொடும்போமோ' என்று எண்ணவேண்டுவ தாயிற்று. இந்திரன் முதலிய தேவர்கள் இராமதூதனாகிய அனுமான் வந்திருப்பதை யறிந்திருத்தலால், இராவணன் சீதாபிராட்டியினிடம் வருவதைக் கண்டு, இவ்விராவணனும் அநுமான் வந்திருத்தலை யறிந்தனன்போலு மென்று கருதி அந்தரம்புகுந்த துண்டென வருவதாக எண்ணலாயின ரெனக் கூறுவாருமுளர். ஆண்டை - அகரச்சுட்டினடியாப் பிறந்து ஐகாரச்சாரியை பெற்ற இடப் பொருளுணர்நின்ற இடைச்சொல்: சுட்டு நீண்டே நிற்கும். (௪)

௫. நீனிறக்குன்றினெடி தினிற்றாழ்ந்தநீத்தவெள்ளருவியினிமிர்ந்த
பானிறப்பட்டின்மாலையுத்தரியம்பண்புறப்பசும்பொனாரத்தின்
மானிறப்புடவியுடையுறப்பரந்தவளர்கதிரிளவெயில்பொருவச் [க.
சூனிறக்கொண்மூக்கிழித்திடைதுடிக்குமின்னெனமார்பினூலிலங்க

(இ - ள்.) நீல் நிறம் குன்றின் - நீலநிறமுள்ள மலையிலிருந்து, நெடி தினில் தாழ்ந்த - நீளமாக இறங்குகின்ற, நீத்தம் வெள் அருவியின் - பெருக் காகிய வெண்ணிறமுள்ள அருவிபோல, நிமிர்ந்த பால் நிறம் பட்டின் மாலை உத்தரியம் - சிறந்த பால்போன்ற வெண்ணிறமுடைய பட்டினாலியன்ற மாலையாகத் தரித்த (தனது) மேலாடையானது, பண்பு உற - அழகு பெறவும்,— பசும் பொன் ஆரத்தின் மால் நிறம் - (தன் கழுத்திலே தரித்த) பசும் பொன்னா லியன்ற ஆரத்தினது சிறந்தநிறமானது, புடவி உடை உற பரந்த - பூமி தேவிக்கு ஆடையைப்போன்ற [பூமியைச்சுற்றியுள்ள] கடலிலே மிகவும் பர விய, வளர் கதிர் இள வெயில் - (ஆயிரமென்னும் தொகையுண்டாகும்படி) மிகுந்துள்ள கிரணங்களையுடைய சூரியனது இளவெயிலை, பொருவ - ஒத்

திருக்கவும்,— சூல் நிறம் கொண்மூ - கருக்கொண்டிருத்தலால் கருநிறம் படைத்த மேகத்தை, கிழித்து - பிளந்துகொண்டு, இடை துடிக்கும் - அதன் நடுவிலே அசைந்து தோன்றுகிற, மின் என - மின்னலைப்போல, மார்பில் நூல் - மார்பிலே யணிந்துள்ள பூணூலானது, துளங்க - விளங்கவும்,—(எ-று.)— வந்தான்.

வெண்பட்டாடையை மாலைபோலத் தரித்துக்கொண்டு, தான்பூண்ட பொன்னாரம் பளபளவென்று ஒளிவீசவும், மார்பில் மின்னலைப்போன்று பூணூல் விளங்கவும் இராவணன் வந்தனனென்க. கருநிறமுள்ள இராவண னுடம்பிற்கு - நீல்நிறக்குன்றும் கருங்கடலும் சூனிறக்கொண்மூவும் உவமை யெனவும்; அவ்வுடம்பின்மீது விளங்குகின்ற வெண்பட்டு உத்தரீயத்துக்கு - நீத்தவெள்ளருவியும், பசும் பொனாரத்தின் நிறத்துக்கு - சூரியனது இளவெயி லும், யஜ்ஞோபவீதத்திற்கு - மின்னற்கொடியும் உவமையெனவும் காண்க. உத்தரீயம் - மேலாடை: (அரையாடை - அந்தரீய மெனப்படும்.) வெண்ணிறப் பூணூலைக் கருநிறவுடம்பில் தரித்திருக்கையில் உடலின் கருநிறம் பிளவுபட் டுத்தோன்று மாதலால், அதற்கு எற்ப, உவமையில் 'கொண்மூக்கிழித்து' என்றார். வளர் கதிர் - வினைத்தொகைப்புறத்துபபிறந்த அன்மொழி- மானி றப்புடவி - எதுகைநோக்கிய வலித்தல். 'நெடிதுடன்சூழ்ந்த,' 'பசும்புரச் சாந்தம்,' 'புடவியிடையுறப்படர்ந்தவருகதிர்' என்பன பிரதிபேதம். (௫)

௬. தோடொறுந்தொடர்ந்தமகரிகைவயிரக்கிம்புரிவலயமாச்சுடர்க
ளொடொறுஞ்சுடருங்கலிகெழுவிசும்பினொளொடுகோளினைநக்கத் [க்
தாடொறுந்தொடர்ந்ததழங்குபொற்கழலின்றகையொளிநெடுநிலந்தடவ
கேடொறுந்தொடர்ந்தமுறுவல்வெண்ணிலவின்முகமலரிரவினுங்கிளர.

(இ - ள்.) தோள் தொறும் தொடர்ந்த - (இருபது) தோள்களிலும் ஒழுங்காக அணிந்துள்ள, மகரிகை - சுறாமீன்வடிவமமையச் செய்யப் பட்டனவும், வயிரம் - வயிரரத்தினங்களிழைத்தனவுமான, கிம்புரி வலயம் - தோளணியாகிய வலயங்களினது, மா சுடர்கள் - பேரொளிகள், கலி கெழு விசும்பில் - ஓசை விளங்கக் காரணமான ஆகாயத்திலே, நாள் தொறும்—, சுடரும்-விளங்குவனவான, நாளொடு - நக்ஷத்திரங்களையும், கோளினை - கிரகங்களையும், நக்க - போய்ப்பரிசிக்கவும்,—தாள் தொறும் தொடர்ந்த - இரண்டுகால்களிலுங் கட்டிய, தழங்கு - ஒலிக்கின்ற, பொன் கழலின் - பொன்னிலான வீரக்கழலின், தகை ஒளி - சிறந்த ஒளியானது, நெடு நிலம் - பெரியநிலத்தை, தடவ - தடவிக்கொண்டே செல்லவும்,—கேள்தொ றும் தொடர்ந்த - சுற்றத்தார் ஒவ்வொருவரிடத்தும் தொடர்ந்து செல்லுகின்ற, முறுவல் - புன்சிரிப்பாகிய, வெள் நிலவின் - வெண்ணிறமுள்ள நிலவினாலே, முகம் மலர் - முகமாகிய தாமரைமலர்கள், இரவினும் - அந்த இராப்பொழுதி லும், கிளர - விளங்கவும்,—(எ - று.)—வந்தான்.

இராவணன் செல்லும்போது தனது உயர்ந்த தோள்களில் அணிந்துள்ள வயிரவாகுவலயங்களின் ஒளி ஆகாசத்திலுள்ள கிரகநட்சத்திரங்களையும், கால்களிலணிந்துள்ள வீரக்கழலின் ஒளி அவன் நடந்துசெல்லுந் தரைமுழுவதையும் பொருந்துமென்க. அவ்வாறு இராவணன் செல்லுகையில் வழியிலெதிர்ப்படுகின்ற உறவினரைக் காணும்பொழுதெல்லாம் புன்முறுவல்செய்து முகமலர்ச்சிகாட்டுவதை, ஈற்றடியால் விளக்கினர். பகலில் சூரியனது வெயிலைக் காண்கையில் மலர்தல் தாமரைக்கு இயல்பாயிருக்க, இங்கு அதற்குமாறாக 'வெண்ணிலவின் முகமலர் இரவினும் கிளர' என்று கூறினர்: இது - வேற்றுமையணியை அங்கமாகக்கொண்டுவந்த உருவகவணியாம். ஆகாசம் சப்தத்தைத் தனக்குக் குணமாகவுடையதென்பது நூற்கொள்கை யாதலால், 'கலி கெழுவிசும்பு' எனப்பட்டது. மகரிகையென்று தனியே எடுத்து - காதிலணிந்துள்ள மகரகுண்டலமெனப் பொருள் கூறுவாரு முளர். கிம்புரிவலயம் - பூண்போல வடிவம்விளங்குகின்ற தோள்வளை யென்னலாம். (சு)

எ. தன்னிறத்தோடுமாறுதந்திமைக்குநீவியந்தழைபடவுடுத்த
பொன்னிறத்தூசுகருவரைமருங்கிற்றழுவியபுதுவெயில்பொருவ,
மின்னிறக்கதிர்சுற்றிபசும்பொன்விரற்றலையவிரொளிக்காசின்
கன்னிறக்கற்றைநெடுநிழல்பூத்தகற்பகமுழுவனங்கவின.

(இ - ள்.) தன் நிறத்தோடு மாறு தந்து இமைக்கும் - தனது உடம்பின் நிறத்தோடு மாறுபட்டு விளங்குகின்றதும், நீவி அம் தழை பட - முடிச்சும் அழகிய கொய்சகமும் பொருந்தும்படி, உடுத்த - (தன் அரையிலே) தரிக்கப்பட்டதுமான, பொன் நிறம் தூசு - பொன்மயமான வஸ்திரம் [பீதாம்பரம்], கரு வரை மருங்கில் - கருநிறமுள்ள மலையின் நடுவிடத்தில், தழுவிய - பொருந்திய, புது வெயில் - இளவெயிலை, பொருவ - ஒத்திருக்கவும்,—விரல் தலை - (தனது இருபது கைகளிலுமுள்ள) விரல்களில், மின் நிறம் கதிரின் சுற்றிய பசும் பொன் - மின்னலின் நிறம்போன்ற ஒளியோடு வட்டவடிவமாகச் சூழ்ந்துள்ள பசும்பொன்னாலியன்ற மோதிரங்களிலே (பதித்துள்ள), அவிர் ஒளி காசின் கல் - விளங்குகின்ற ஒளியையுடைய இரத்தினக்கற்களின், நிறம் கற்றை - ஒளித்தொகுதியானது, நெடு நிழல் பூத்த - பேரொளியோடு மலர்ந்துள்ள, கற்பகம் முழுவனம் - பெரிய கற்பகச்சோலைபோல, கவின - அழகுசெய்து விளங்கவும்,—(எ - று.)—வந்தான்.

அரையில் பீதாம்பரமும் கைவிரல்களில் இரத்தின மோதிரங்களும் விளங்க இராவணன் வந்தனனென்க. கருநிறமுள்ள அரையில் செம்பொற்றூசைத் தரித்திருத்தலால், 'தன்னிறத்தோடு மாறு தந்திமைக்குந் தூசு' என்றார். நீவி - வஸ்திரமுடிச்சு: வடசொல்: இது, இங்கே கச்சமென்ற பொருளைக் காட்டுமென்னலாம். தழை - தழைந்து தொங்குங் கொய்சகம்: வினைமுதற்பொருள் விகுதி புணர்ந்து கெட்ட பெயர். இரத்தினக்கற்களிழைத்துச்செய்யப்பட்ட செம்பொன்மோதிரங்களை நிறைய அணிந்

துள்ள கைவிரல்களுக்கு - பேரொளியோடு மலர்ந்துள்ள மலர்களையுடைய கற்பகவனத்தை உவமை கூறினர். பசும்பொன் - கருவியாகுபெயரால், மோதிரத்தை யுணர்த்திற்று. காசு - இரத்தினப்பொதுப்பெயர்: "மணிப் பொதுப்பேர் காசொடு மணவுமாகும்" என்பது, நிகண்டு. (எ)

அ. சன்னவீரத்தகோவைவெண்டாளமூழியினிறுதியிற்றனித்த [லிய
பொன்னெடுவரையிற்றோற்றியகோளுநாளுமொத்திடையிடைபொ
மின்னொளிமௌலியுதயமால்வரையின்மீப்படர்வெங்கதிர்ச்செல்வர்
பன்னிருவரினுமிருவரைத்தவிர்வுற்றுதித்தவோர்படியொளிபரப்ப.

(இ - ள்.) சன்னவீரத்த கோவை - (தான் அணிந்துள்ள) வெற்றிமாலையாகிய பொன்னாரத்திலே (பதிக்கப்பட்ட), வெள் தாளம் - வெண்மையான முத்துக்களானவை, ஊழியின் இறுதியில்-யுகாந்தகாலத்தில், தனித்த - தனிப்பட்டுநின்ற, நெடு பொன் வரையில் - நீண்ட பொன்மலையாகிய மேருவிலே, தோற்றிய - காணப்பட்ட, கோளும் - கிரகங்களையும், நாளும் - நட்சத்திரங்களையும், ஒத்து - போன்று, இடை இடை பொலிய - நடுவே நடுவே விளங்கவும்,—மின் ஒளி மௌலி - மின்னுகின்ற ஒளியையுடைய பத்துக் கிரீடங்கள் மால் உதயம் வரையின் மீ படர் - பெரிய உதயகிரியில் உதிக்கின்ற, வெம் கதிர் செல்வர் பன்னிருவரினும் - உஷ்ணகிரணங்களைச் செல்வமாகவுடைய ஆதித்தியர் பன்னிருவரிலே, இருவரை தவிர்வு உற்று - இரண்டு பேரையொழித்து, (மற்றைப்பதின்மர்), உதித்தது - ஒருசேரத் தோன்றிவிளங்குவதாகிய, ஓர் படி - ஒருதன்மையையொத்து, ஒளி பரப்ப - ஒளியை வீசவும்,— (எ - று.)—வந்தான்.

இராவணன் அணிந்துள்ள வெற்றிமாலையாகிய பொன்னாரத்தின் இடையிடையே பதித்துள்ள முத்துக்களுக்கு - யுகாந்த காலத்தில் தனிப்பட்டுள்ள மேருமலையின்மீது விளங்கும் கிரகநட்சத்திரங்களை முன்னிரண்டடியில் உவமையாக்கினர். அவ்விராவணன் தனது பத்துத்தலைகளிலும் அணிந்துள்ள இரத்தினகசிதமான பத்துக்கிரீடங்களுக்கு - உதயமலையில் ஏககாலத்தில் தோன்றுகின்ற பத்துச்சூரியரை உவமையாகக் குறித்தார்: இல்பொருளுவமையணி. பன்னிரண்டு மாதங்கட்கும் பன்னிருவர் சூரியர் உரியவரென்பது நூற்கொள்கை யாதலால், தசக்கிரீவனான இராவணனது பத்துக்கிரீடங்கட்கு உவமைகூறுமாறு அப்பன்னிருவரில் இருவரை விலக்கவேண்டியதாயிற்று. "துன்னுகோளினொடு தாரகை தொடுத்த நிழலிச், சன்னவீரம்" என்று கூறியது முன்னிரண்டடியிற் கருதத்தக்கது. (அ)

௯. பயிலெயிற்றிரட்டைப்பணைமருப்பொடியப்படியினிற்பரிபவஞ்சுமந்த
மயிலடித்தொழுக்கினையமாமதத்தமாதிரக்காவன்மால்யானை
கயிலையிற்றிண்டமுரண்டொடர்தடந்தோட்கனகனதுயர்வரங்கடந்த
வயிலெயிற்றரியின்சுவடுதன்கரத்தாலளைந்தமாக்கரியினின்றஞ்ச.

(இ - ள்.) பயில் எயிறு - பொருந்திய பற்களாகிய, இரட்டை - இரண்டாகிய, பணை மருப்பு - பருத்த தந்தங்கள், ஒடிய - (இராவணன் திக்குவிசயஞ் செய்த காலத்தில் அவனைத் தாக்கி) முறிந்ததனால், படியினில் - பூமியிலே, பரிபவம் சுமந்த - மிக்கஅவமானத்தைத் தாங்குவனவும்,—மயில் அடித்து ஒழுக்கின் - மயிலின்பாதம்போல (ஒழுங்கின்றிப்பெருகுகிற) பெருக்கத்தையுடைய, அனைய மா மதத்த - அப்படிப்பட்ட மிக்க மதநீரைக் கொண்டனவுமாகிய, மாதிரம் காவல் மால் யானை - திக்குக்களைக் காவல் செய்கின்ற பெரியதிக்கஜங்கள்,—கயிலையின் திரண்ட - கைலாசமலைபோலத் திரட்சியான, முரண் தொடர் - வலிமை பொருந்திய, தட தோள் - பெரிய தோள்களையுடைய, கனகனது - இரணியனது, உயர் வரம் - சிறந்தவரங்களை, கடந்த - வென்ற [பயனிலவாம்படி செய்த], அயில் எயிறு அரியின் - கூரிய பற்களையுடைய நரசிங்கத்தினது, சுவடு-அடிச்சுவட்டை, தன் கரத்தால் - தன் தும்பிக்கையால், அளைந்த—, மா கரியின் - பெரியயானைபோல, நின்று அஞ்ச- (ஒன்றுந்தோன்றாது) நிலைத்து நின்று பயப்படவும்,—(எ - று.)—வந்தான்

முன்பு திக்குவிசயகாலத்தில் இராவணனால் தந்தம் முறியப்பெற்ற திக்கஜங்கள் சிங்கத்தின்காற்சுவட்டைத் தும்பிக்கையால் தீண்டப்பெற்ற யானை போலப் பேரச்சங்கொள்ளும்படி இராவணன் வந்தனனென்பதாம். கவி, அச்சத்தின்மிகுதியை விளக்கவேண்டி, இரணியாசுரனைக் கொன்ற நரசிங்கத்தின் காற்சுவட்டைத் துதிக்கையாலளைந்த யானை யென்றார். தந்தம் முறிந்தது பார்ப்பவர்க்கு எப்போதும் அவ்யானைகளின் தோல்வி விளங்கும்படி யிருத்தலால், 'மருப்பொடியப் படியினிற் பரிபவஞ்சுமந்த' என்று மாதிரயானைக்கு அடைமொழி கொடுத்தார். இராவணன் திக்குவிசயஞ்செய்தகாலத்தில் ஐராவதம் முதலிய திக்கஜங்களை யெதிர்த்தபொழுது அவை கோபங்கொண்டு அவன் தோளில் தந்தங்களால் தாக்குகையில், மிக்கவலிமையுடைய அவன் தோள்களை ஊறுபடுத்த மாட்டாமல் அவை நுனிமுரிந்திட்டன வென்றும், பின்பு இராவணனும் போரில் அவற்றின்தந்தங்களை நன்றாக ஒடித்திட்டா னென்றும் உணர்க. "திக்கின்மாவெலாந்தொலைத்து", "நெருப்புபடியின் பொடிசிதறநிறைந்தமதத்திசையானை, மருப்பொடியப் பொருப்பிடியத் தோணிமிர்த்த வலியோனே," "திசையானை விசைகலங்கச் செருச்செய்து மருப்பொசித்த, விசையாலே நிறைந்தபுயத் திராவணவோ விராவணவோ" என வந்துள்ளமை காண்க. இரட்டைப்பணைமருப்பு - ஒவ்வொரு பக்கத்திலும் இரட்டையாக அமைந்துள்ள பருத்த (நான்கு) தந்தங்கள் என்னலாம். கனகன் - இரணியன் என்பதன் பரியாயம்: பொன்னிறமானவ னென்பது பொருள். கனகனது உயர்வரமென்றது - தனித்தனி தேவர் மனிதர் விலங்கு முதலிய பிராணிகளாலும் ஆயுதங்களாலும் பகலிலும் இரவிலும் பூமியிலும் வானத்திலும் வீட்டின் அகத்திலும் புறத்திலும் தனக்குமரணமில்லாதபடி பெற்றதை. (க)

௧௦. அங்கயற்கருங்கணியக்கியர்துயக்கிலரம்பையர்விஞ்சையர்க்கமைந்த
மங்கையர்நாகமடந்தையர்சித்தர்நாரியரரக்கியர்முதலாக்
குங்குமக்கொங்கைக்குவிமுலைகனிவாய்கோகிலந்துயர்ந்தமென்குதலை
மங்கையரீட்டமால்வரைதழீஇயமஞ்ஞைகுழுவெனமயங்க.

(இ - ள்.) அம் கயல் கரு கண் - அழகிய கெண்டைமீன் போன்ற கறுத்த கண்களையுடைய, இயக்கியர் - யக்ஷஸ்திரீகளும், துயக்கு இல் அரம்பையர் - சோர்வுபடுதலில்லாத அரம்பை முதலிய தேவதாஸ்திரீகளும், விஞ்சையர்க்கு அமைந்த மங்கையர் - வித்தியாதரர்கட்கு உரியவராகிய வித்தியாதரஸ்திரீகளும், நாகம் மடந்தையர் - நாகசாதி ஸ்திரீகளும், சித்தர் நாரியர் - ஸித்தஸ்திரீகளும், அரக்கியர் - ராக்ஷசஸ்திரீகளும், முதல் ஆ - முதலாகவுள்ளவராகிய,—குங்குமம் கொங்கை குவி முலை - குங்குமமணிதலால் நறுமணம்பொருந்திய குவிந்த முலைகளையும், கனி வாய் - கொவ்வைப்பழம் போலச் சிவந்த வாயையும், கோகிலம் துயர்ந்த மெல் குதலை - குயில்களும் வருந்துதற்குக்காரணமான [இனிமை மிக்க] மெல்லிய குதலைச்சொற்களையு முடைய, மங்கையர் - மகளிரது, ஈட்டம் - கூட்டமானது,—மால் வரை தழீஇய - பெரியதொரு மலையைச் சூழ்ந்துள்ள, அம மஞ்ஞை குழு என - அழகிய மயில்களின் கூட்டம்போல, மயங்க - கலந்துவரவும்,—(எ - று.)—வந்தான்.

இராவணனுக்கு அடிமைப்பட்டுள்ள இயக்கியர் முதலிய தெய்மசாதி மகளிர் அவனைச் சூழ்ந்துவருதற்கு, மலையைச் சூழ்ந்துள்ள மயிற்கூட்டத்தை உவமைகூறினர். கொங்கு - வாசனை: ஐ - சாரியை. 'குங்குமக்கொம்மைக் குவிமுலை' என்றும் பாடமுண்டு. சாதாரணமாக மகளிரின் குதலைச்சொல்லுக்கு உவமையாதற்கு ஏற்ற குயில் இம்மடந்தைமார்களின் குதலைக்கு ஒப்பாக மாட்டாமையால் வருந்து மென்க; இங்ஙனம் உவமையாதற்கு உரிய குயிலை உவமையாகாமையாலே துயரு மெனக் கூறியது - எதிர்நிலையணியாம்; இதனை, வடநூலார் - ப்ரதீபாலங்கார மென்பர். தழீஇய - தழுவிய: சொல்லிசையளபெடை. (௧௦)

௧௧. தொளையுறுபுழைவேய்த்தூக்கிசைக்கானந்துயலுறுவொருநிலைபடர
விளையவர்மிடறுமிந்நிலையிசைப்பக்கின்னரர்முறைநிறுத்தெடுத்த
கிளையுறுபாடல்சில்லரிபாண்டிற்றழுவியமுழவொடுகெழுமி
யலையுறுமரவுமமுதவாயுகுப்பவண்டூம்பையுமளப்ப.

(இ - ள்.) தொளை உறு - துளைசெய்யப்பெற்றுள்ள, புழை வேய் - (உட்புறத்தில்) இயற்கைத்துவாரத்தையுடைய வேய்ங்குழலினின்று உண்டாகின்ற, தூக்கு இசை கானம் - பாடலின் இனிய ராகமானது, துயல் உறு - பிறழ்தலில்லாமல், ஒரு நிலை படர - ஒத்துவருமாறு, இளையவர் மிடறும் - இளம்பெண்களுடைய (இனிய) குரலும், இ நிலை இசைப்ப - இந்தவேய்ங் குழலினிசையோடு ஒத்து ஒலிக்கவும்,—கின்னரர் - கின்னரசாதியார், முறை

நிறுத்து எடுத்த - கிரமமாக ஆராய்ந்து பாடத்தொடங்கிய, கிளை உறு பாடல் - (கின்னரமென்ற யாழின்) நரம்பினின்று வெளிப்படுகின்ற பாடலானது, சில்லரி - சில்லரியென்னும் வாச்சியவிசேஷமும், பாண்டில் - கஞ்சதாளமும், தழுவிய முழவொடு - மார்ச்சனைசெய்து ஒலியெழுப்பப்படுகின்ற மத்தளத் தொனியோடு, கெழுமி - ஒத்து, அளை உறும் அரவும் அமுது வாய் உகுப்ப - புற்றில் வாழ்கின்ற பாம்பும் (இந்த இன்னொலியைக் கேட்டுத் தனது விஷக் கொடுமை நீங்கி) அமிருதத்தை வாயிலிருந்து சொரியும்படி, அண்டமும் வையமும் அளப்ப - மேலுலகத்திலும் இந்தப் பூமியிலும் (இன்னோசை) பரவவும்,—(எ - று.)—வந்தான்.

அப்போது வாசிக்கப்படுகின்ற வேய்ங்குழலுக்கொப்ப இளமகளிர் தமது மிடற்றினால் இனிமையாகப் பாடிவரவும், கின்னரசாதியார் இன்னொலியைக் கேட்ட விஷப்பாம்புகளும் விஷத்தன்மைநீங்கி அமுதத்தைக் கக்கும்படி தமக்கு உரிய கின்னரமென்ற நரப்புக்கருவிகொண்டு இன்னோசை மண்ணிலும் விண்ணிலும் பரவுமாறு மற்றைச்சில்லரிமுதலிய இசைக்கருவிகளோடு ஒத்து ஒலிக்கவும் இராவணன் வந்தனனென்க. கின்னரர் - கின்னரமென்னும் இசைக்கருவிகொண்டு இசைபாடித்திரிபவராய்க் குதிரைமுகமுள்ளவராகிய தேவசாதியார். (௧௧)

௧௨. அன்னபூஞ்சதுக்கஞ்சாமரையுக்கமாதியாம்வரிசையிற்கமைந்த
வுன்னரும்பொன்னின்மணியினிற்புனைந்தவிழைக்குலமுழைக்குலமனைய
மின்னிடைசெவ்வாய்குவிமுலைபணைத்தோள்வீங்குதேரல்குலார்தாங்கி
நன்னிறக்காரின்வரவுகண்டுவக்குநாடகமயிலெனநடப்ப.

(இ - ள்.) அன்ன பூ சதுக்கம் - (இராவணன் செல்லுகின்ற) அப்படிப்பட்ட அழகிய நாற்புறமும்வந்துகூடுகின்றவீதியில்,—உன் அரும் பொன்னின் - நினைத்தற்கும் முடியாத [மிகச்சிறந்த] பொன்னினாலும், மணியினில் - இரத்தினங்களினாலும், புனைந்த - அழகாகச்செய்யப்பட்ட, இழை குலம் - ஆபரணங்களின் தொகுதிகளை [பலவகை யாபரணங்களை] யணிந்தவர்களும், உழை குலம் அனைய - மான்கூட்டங்களை யொத்தவர்களும், மின் இடை - மின்னல்போலத் (துவளுகின்ற) இடையையும், செம் வாய் - சிவந்த வாயையும், குவி முலை - குவிந்த தனங்களையும், வீங்கு பணை தோள் - பருத்த மூங்கில்போன்ற தோள்களையும், தேர் அல்குலார் - தேர்த்தட்டுப்போன்ற அல்குலையு முடையவர்களுமாகிய மகளிர்,—சாமரை - வெண்சாமரமும், உக்கம் - ஆலவட்டமும், ஆதி ஆம் - முதலியனவாகிய, வரிசையிற்கு அமைந்த - உபசாரத்திற்கு ஏற்றவைகளை, தாங்கி - ஏந்திக்கொண்டு, நல் நிறம் காரின் வரவு கண்டு உவக்கும் - மிக்க கருநிறத்தையுடைய கார்காலமேகத்தின் வருகையைக் கண்டு சந்தோஷிக்கின்ற, நாடகம் மயில் என - கூத்தாடுதலையுடைய மயில்போல, நடப்ப - கூட நடந்துவரவும்,—(எ - று.)—வந்தான்.

சாமரை ஆலவட்டம் முதலிய உபசாரஞ் செய்தற்குஉரிய கருவிகளை ஏந்தியவராய், அழகிய மகளிர் கார்மேகங் கண்ட மயில்போன்று மிக்க மகிழ்ச்சியோடு மெல்ல நடந்துவர, இராவணன் சென்றனன் என்க. சதுக்கம் = சதுஷ்கம்: நாற்சந்திகூடுமிடம். இழைக்குலம் அல்குலார், உழைக்குலமனைய அல்குலார் என இயையும். உழைக்குலம் - மருண்ட பார்வையிலும், மயில் - சாயலிலும் மகளிர்க்கு உவமையாம். துவிமுலை பணைத்தோள் - மூரண் தொடை

௧௩. தந்திரிநெறியிற்றாக்குறுகருவி தூக்கினரெழுவிதச்சுதியின் [யின்
முந்துறுகுணிலோடியைவுறுகுறட்டிற்சில்லரிப்பாண்டிலின்முறை
மந்தரகீதத்திசைப்பதந்தொடரவகையுறுகட்டளைவழாம
லந்தரவானத்தரம்பையர்கரும்பிற்பாடலாரருகுவந்தகவ. ஆட

(இ - ள்.) நெறியின் தாக்குறு கருவி தந்திரி - சாஸ்திரமுறைப்படி (விரல் கொண்டு) ஒலியெழுப்பப்படுகின்ற இசைக்கருவியாகிய தந்திரியாழை, எழுவிதம் சுதியின் - ஏழுவகைப்பட்ட இசையும் அமையும்படி, தூக்கினர் - விரலால் தெறித்து வாசிப்பவரும், கரும்பின் பாடலார் - கரும்பு போ லினிய வாய்ப்பாடலை யுடையவருமாகிய, அந்தரம் வானத்து அரம்பையர் - சுவர்க்கலோகத்தவரான தெய்வமகளிர்,—முந்துறு குணிலோடு இயைவுறு குறட்டின் - முன்புறத்தில அடிக்கப்படுகிற குறுந்தடியோடு பொருந்திய குறடு என்னும் தோற்கருவியும், சில்லரி பாண்டிலின் [பாண்டில் சில்லரியின்] - வட்டவடிவமாகிய சில்சில் என்று ஒலிக்கின்ற தோற்கருவியும், (ஆகியவற்றின்), முறையின் - முறைக்கு ஏற்பவும்,—மந்தாம் கீதத்து இசைப் பதம் தொடர - இனிய பாடல்களின் இராகஅமைப்பு ஒத்துவரவும்,—வகை உறு கட்டளை வழாமல் - (நடன சாஸ்திரத்திற் கூறியுள்ள) பலவகைப்பட்ட முறைமை தவறாமல், அருகு வந்து அகவ - (தனது) சமீபத்திலே வந்து நர்த்தனஞ் செய்யவும்,—(எ - று.)—வந்தான்.

தெய்வலோகத்து மகளிர் வாய்ப்பாடலுக்கும் இசைக்கருவிக்கும் தாளத்துக்கும் சிறிதும் தவறாமல் ஒத்து வருமாறு இராவணனது சமீபத்தில் அப்போது நர்த்தனஞ் செய்யலானார்கள் என்க. 'சில்லரிபாண்டிலின்' என்று பாடமாயின், சில்லரியும் பாண்டிலு மென்னலாம். சுதி = ஸ்ருதி. 'எழுவகைச் சுதியின்' என்றும் பாடம் காணப்படுகின்றது. சதி - தாளவொற்று. (௧௩)

௧௪. அந்தில்வேளனங்கனழல்படத்துரந்தவயின்முகப்பகழிவாயுறுத்த
வெந்துறுபுண்ணின்வேதுறைழந்தாங்குவெண்மதிப்பசுங்கதிர்விரவ
மந்தமாருதம்போய்மலர்தொறும்வாரிவயங்குநீர்மம்மரின்வருதேன்
சிந்துறுண்டுளியின்சீகரத்திவலையுருக்கியசெம்பெனத்தெறிப்ப.

(இ - ள்.) அந்தில் - அப்பொழுது,—அனங்கன் வேள் - உருவமில்லாதவனாகிய வேளென்னும் பெயரையுடைய மன்மதன், அழல் பட - நெருப்புத்

தோன்றும்படி, தூக்த - பிரயோகித்த, அயில் முகம் - கூர்மையான நுனியையுடைய, பகழி - அம்பு, வாய் - (தனது கூரிய) நுனியினால், அறுத்த - அறுபடும்படிசெய்து உண்டாக்கிய, வெந்துறு புண்ணின் - வெந்திருக்கிற புண்ணிலே, வேல் நுழைந்து ஆங்கு - வேல் ஊடுருவிச்சென்றாற்போல, வெள் மதி பசுங் கதிர் - வெள்ளிய சந்திரனது குளிர்ந்த கிரணம், விரவ - பொருந்தவும்,—மந்தம் மாருதம் - இளந்தென்றற்காற்றானது, போய் - (ஆங்காங்குச்) சென்று, மலர் தொறும் - புஷ்பங்களிலெல்லாம், வாரி வரு - வாரிக்கொண்டு வருகின்ற, வயங்கும் நீர் - விளங்குகின்ற நீர்த்தன்மையை யுடைய, தேன் - தேனினது, நுண் துளியின் சிந்து - சிறு துளியாகச் சிந்துந் தன்மையுள்ள, சீகரம் திவலை - மிகச்சிறிய திவலைகள், உருக்கிய செம்பு என - உருக்கப்பட்ட செம்பின்துளி சிந்துவதுபோல, மம்மரின் - மயக்கத்தோடு [காமமயக்கம்மிகும்படி], தெறிப்ப - மேலேசிந்தவும்,—(எ - று.)—வந்தான்.

இராவணன் வரும்போது, மன்மதபாணத்தினால் துளைக்கப்பட்டுள்ள அவனது உடற் புண்ணில் வெந்தபுண்ணில் வேலுருவியது போலக் காமோத்தீபகமான சந்திர கிரணங்கள் பட்டு வேதனையை மிகுவிக்க, உருக்கிய செம்பை யூற்றியதுபோல மந்தமாருதமானது புஷ்பங்களினின்று தேனை வாரிக்கொண்டு தெறித்த தென்க. சீகரத் திவலை - ஒருபொருட்பன்மொழி; இங்கே மிகச்சிறிய திவலை யென்ற பொருளைத் தந்தது. முருகவேளை விலக்குதற்கு 'வேளனங்கன்' என்றார். அந்தில் - அசையாகவுமாம். 'அந்தியினனங்கன்' என்றும் பாடம். (கசு)

கரு. இழைபுரைமருங்குலிறுமிறுமெனவுமிறுகலாவனமுலையிரட்டை
யுழைபுகுசெப்பினொளிதரமறைத்தவுத்தரியத்தினரொல்கிக்
குழைபுகுகமலங்கோட்டினர்நோக்குங்குறுநகைக்குமுதவாய்மகளிர்
மழைபுரைதடங்கட்செங்கடையீட்டமார்பினுந்தோளினுமலைய.

(இ - ள்.) 'இழை புரை - நூலிழையை யொத்த, மருங்குல் - (தமது) இடைகள், இறும் இறும் - முரிந்துபோய்விடும் முரிந்துபோய்விடும், எனவும் - என்று (காண்பவர்க்குத்) தோன்றினாலும், இறுகலா - ஒடுங்காது மேன்மேல் வளர்கின்ற, வனம் முலை இரட்டை - அழகிய இரண்டு ஸ்தனங்களும், உழை புகு செப்பின் ஒளிதர மறைத்த - உள்ளிடத்திற்புகுந்துள்ள இரண்டு செப்புக்கள்போல விளங்கும்படி (அவற்றைப்) போர்த்துள்ள, உத்தரியத்தினர் - மேலாடையுடையவர்களும்,—ஒல்கி - (தாங்கள்) மெலிவுதோன்ற நடந்து [நடந்தவண்ணமாக], குழை புகு கமலம் - (காதுகளிலணிந்த) குண்டலங்கள்வரையிற் செல்லுகின்ற தாமரைமலர்போன்ற (தமது) கண்களினால், கோட்டினர் நோக்கும் - (நாணத்தினால் நேராகப்பாராமல்) சாய்த்து நோக்குகின்றவர்களுமான, குறு நகை குமுதம் வாய் - புன்சிரிப்போடுகூடிய செவ்வாம்பல் மலர்போன்ற வாயையுடைய, மகளிர் - பெண்களது, மழை புரை - மேகத்தை யொத்த [குளிர்ச்சி மிகுந்த], தட செம் கண் கடை ஈட்டம் - பெரிய செவ்வரி

பரந்த கடைக்கண்பார்வைகளின் கூட்டம், மார்பினும்-(தனது) மார்பிலும், தோளினும் - தோள்களிலும், மலைய - சென்று பொருந்தவும்,—(எ-று.)—வந்தான்.

இராவணன் வருகையில், மகளிர் தமதுகடைக்கண்பார்வை கொண்டு பார்த்தன ரென்க. மிகவும் நுண்ணியதாயிருத்தல்பற்றி, மகளிரிடைக்கு நூலிழையை உவமைகூறுதல், மரபு. அப்படிப்பட்ட இடை துவளுமாறு மேன்மேல் விம்முகின்ற தனங்களின்மீது உத்தரியத்தை மகளிர் அணிந்திருக்கையில், அவை உட்புறத்துப் பொருந்திச் செப்புப்போலத் தோன்று மென்பது, முன்னிரண்டடியிற் கூறிய விஷயம். குழைபுகு கமலம் - காதளவும் நீண்ட கண்கள். கண்களை உவமையாகுபெயரால் 'கமலம்' என்றே கூறினர். 'நோக்கும்' என்ற பெயரெச்சம், 'மகளிர்' என்ற பெயரைக் கொண்டுமுடியும். (கரு)

கசு. மாலையுஞ்சாந்துங்கலவையும்பூணும்வயங்குநுண்டூசொடுகாசுஞ்
சோலையின்றொழுதிக்கற்பகத்தருவுநிதிகளுங்கொண்டுபின்றொடரப்
பாலின்வெண்பரவைத்திரைகருங்கிரிமேற்பரந்தெனச்சாமரைபதைப்ப
வேலைநின்றுயருமுயலில்வெண்மதியின்வெண்குடைமீதுறவிளங்க.

(இ - ள்.) தொழுதி சோலையின் - கூட்டமாகவுள்ள சோலையாகிய, கற்பகம் தருவும் - கற்பகவிருக்ஷமும், நிதிகளும் - (சங்கநிதிமுதலிய) நவநிதிகளும், —மாலையும் - மலர்மாலைகளையும், கலவை சாந்தும் - கலவைச்சந்தனத்தையும், பூணும் - ஆபரணங்களையும், வயங்கு நுண் தூசொடு - விளங்குகின்ற மெல்லிய வஸ்திரங்களையும், காசும் - இரத்தினங்களையும், கொண்டு - ஏந்திக்கொண்டு, பின் தொடர - (தன்) பின்னே தொடர்ந்து வரவும்,—வெள் பாலின் பரவை திரை - வெண்மைநிறமுள்ள பாற்கடலின் அலைகள், கரு கிரிமேல் - கருநிறமுள்ள மலையின்மேல், பரந்து என - பரவினாற்போல, சாமரை - வெண்சாமரங்கள், பதைப்ப - அசைந்துவீசவும்,—வேலைநின்று உயரும் - கடலினின்று வெளித்தோன்றுகின்ற, முயல் இல் வெள் மதியின் - முயற்கறையில்லாத வெள்ளிய பூர்ணசந்திரன்போன்ற, வெள் குடை - வெள்ளைக்குடையானது, மீது உற விளங்க - தலையின்மேல் விளங்கவும்,—(எ - று.)—வந்தான்.

இராவணன் தேவலோகத்தை வென்றமையால், அங்கிருந்த கற்பக விருக்ஷமும், நவநிதிகளும், அவ்விராவணனையடைந்து அவனுக்கு வேண்டிய பொருளை உதவலாயின. பாற்கடலினலை - வெண்சாமரைக்கும், கருங்கிரி - இராவணனதுடம்புக்கும் உவமையாகும். இராவணனுக்குப் பிடிக்கப்படுகின்ற ஒற்றைவெண்கொற்றக்குடைக்கு - முயலில்லாத வெண் மதி, இல்பொருளுவமையாம். சந்திரனிடத்துள்ள களங்கத்தை, முயலென்றும் மானென்றும் சேறென்றும் இப்படிப் பலபடியாகக் கூறுதல், கவிசமயம். சாந்தும், உம்மை - இசைநிறை. (கசு)

௧௭. ஆர்தருமகழியருவரையிலங்கையடிபெயர்த்திடுதொறுமழுந்தி
நேர்தரும்பரவைப்பிறழ்திரைதவழ்ந்துநெடுந்தடந்திசைதொறுநிமிரச்
சார்தருங்கடுவினெயிறுடைப்பகுவாயனந்தனுந்தலைதடுமாற
மூரிநீராடையிருநிலமடந்தைமுதுகுளுக்குற்றனண்முரல.

(இ - ள்.) அடி பெயர்த்து இடு தொறும் - (தனது) கால்களை மாறி மாறி வைக்கும் பொழுதெல்லாம்,—ஆர்தரும் அகழி - நீர்நிரம்பியுள்ள (கடலாகிய) அகழியையுடைய, அரு வரை இலங்கை - திரிகூடமலையின்மீதுள்ள இலங்காநகரமானது, அழுந்தி - (மிக்கபாரத்தினால்) குழிவடைந்து, (அதனால்), நேர்தரும் - இலங்கையைச் சூழ்ந்திருக்கிற, பரவை - கடலினது, பிறழ் - மடங்கியடிக்கிற, திரை - அலைகள், தவழ்ந்து - பாய்ந்து, நெடு தட திசைதொறும் - நீண்ட பெரிய (அந்நகரத்தின்) திக்குக்களிலெல்லாம், நிமிர - மிகுந்து பரவவும்,—சார்தரும் கடுவின் எயிறு உடை—(தன்னிடத்துப்) பொருந்திய விஷப்பற்களையுடைய, பகு வாய் - திறந்த வாயோடுகூடிய, அனந்தனும் - ஆதிசேஷனும், தலை தடுமாற - (பாரமிகுதியைப் பொறுக்கமாட்டாமையால் ஆயிரந்) தலைகளும் வருந்தவும்,—மூரி நீர் ஆடை - வலியநீரைக்கொண்ட கடலை ஆடையாகவுடைய, இரு நிலம் மடந்தை - பெரிய பூமிதேவி, முதுகு உளுக்குற்றனள் - (பாரந்தாங்கமாட்டாமல்) முதுகு நொந்தவளாய், முரல - வாய்விட்டலறவும்,—(எ - று.)—வந்தான்.

இராவணன் கால்களை மாறி மாறி வைத்து நடக்கும்போது அவனது ஒற்றையொற்றைக்கால் அழுத்துவதனால் இலங்கை பள்ளமாக, அப்போது சுற்றிலுமுள்ள கடலின்நீர் உள்ளேபுகுவதாயிற் றெனவும், பூமியின் கீழிருந்து தனது ஆயிரந்தலைகளையுங்கொண்டு தாங்குகின்ற ஆதிசேஷனும் அவனது உடற்சுமையைத் தாங்கமாட்டாது தலைதடுமாறலாயின னெனவும், பூமிதேவியும் அவ்வாறே அப்பார மிகுதியைத் தாங்கமாட்டாமல் வாய்விட்டலறலாயின ளெனவும் இராவணன் நடக்கும்போது அவனது உடற்பொறையை உயர்வுநவிற்சிவகையால் வருணித்தன ரென்க. (௧௭)

௧௮. கேடகத்தோடுமழுவெழுச்சூலமங்குசங்கப்பணங்கிடுகோ
டாடகச்சுடர்வாளயில்சிலைகுலிசமுதலியவாயுதமனைத்துந்
தாடகைக்கிரட்டியெறுழ்வலிக்கமைந்ததகைமையர்தடவரைபொறுங்குஞ்
சூடகத்தடக்கைச்சுடுசினத்தடுபோரரக்கியர்தலைதொறுஞ்சுமப்ப.

(இ - ள்.) தாடகைக்கு இரட்டி எறுழ் வலிக்கு அமைந்த தகைமையர் - தாடகையைக்காட்டிலும் இருமடங்குமிக்க பெருவலிமைபொருந்திய தன்மையையுடையவர்களாகிய, தட வரை பொறுக்கும் - பெரிய மலையையும் தாங்கவல்ல, சூடகம் தட கை - வளையல்களையணிந்த பெரியகைகளைக்கொண்டு, சுடு சினத்து அடு போர் - பொங்கியெரிகின்ற கோபத்தினால் (பகைவரைக்)

கொல்லும்படியான போரைச் செய்யவல்ல, அரக்கியர் - இராட்சசஸ்திரீகள்,— கேடகத்தோடு - பரிசையும், மழு - எரியிரும்புப்படையும், எழு - இருப்புலக்கையும், சூலம் - முத்தலைச்சூலமும், அங்குசம் - மாவெட்டியும், கப்பணம் - இருப்புநெருஞ்சிமுள்ளாயுதமும், கிடுகோடு - கிடுகும், ஆடகம் சுடர் - பொன் போல் ஒளிவீசுகின்ற, வாள் - வாளும், அயில் - வேலும், சிலை - வில்லும், குலிசம் - வச்சிரமும், முதலிய - முதலான, ஆயுதம் அனைத்தும் - ஆயுதங்களை யெல்லாம், தலைதொறும்-(தமது) சிரசுகளிலெல்லாம்,சுமப்ப - தாங்கிவரவும்,— (எ - று.)—வந்தான்.

'இராவணன் எப்பொழுது எந்த ஆயுதத்தை வேண்டுவனோ அப்போது அதனைத் தரவேணும்' என்ற கருத்தால், அரக்கியர் எல்லா வாயுதங்களையும் தாங்கிக்கொண்டு இராவணன் வரும்போது உடன்வருவாராயினரென்க. பெண்கள் வசிக்கின்ற இடத்திற் செல்வதனால்,பெண்பணியாளர் படைக்கலங்களைத் தாங்கலாயினர். கேடகம், கிடுகு என்பன - பகைவரது படைக்கலங்களைத் தம்மேற்படவொட்டாது தடுக்கவல்ல கருவிவிசேடங்கள். கேடகம் கிடுகு என்பன வெவ்வேறாகவும் கூறப்படுதலை "போர்மயிர்க்கேடகம் புளகத் தோற்பரம், வார்மயிர்க்கிடுகொடு" என்ற சிந்தாமணியிலும் காண்க. 'கப்பணம்- இரும்பால் யானைநெருஞ்சிமுள்ளாகப் பண்ணியது' என்பர், ஆசிரியர் நச்சினார்க்கினியர். முதலிய - குறிப்புப் பெயரெச்சம். எழும் வலி - ஒருபொருட் பன்மொழி.                (கஅ)

கக. விரிதளிர்முகைபூக்கொம்படைமுதல்வேரிவையெலாமணிபொனல்விரிந்த
  தருவுயர்சோலைதிசைதொறுங்கரியத்தழலுமிழுயிர்ப்புமுன்றவழத்
  திருமகளிருந்ததிசையறிந்திருந்துந்திகைப்புறுசிந்தையன்கெடுத்த
  தொருமணிநெடும்பற்பலபற்றலையரவினுமைபுதொறுமுழைதொறுமுலாவ

(இ - ள்.) விரி தளிர் - மேன்மேல் தோன்றிவிரிகின்ற தளிரும், முகை- அரும்பும், பூ - மலரும், கொம்பு - கொம்பும், அடை - இலையும், வேர் - வேரும் (என்ற சினைப்பொருள்களும்), முதல் - முதற்பொருளும், இவை எலாம் - ஆகிய இவைமுழுவதும், அணி பொனல் விரிந்த - அழகிய செம்பொன்மய மாகப்பரந்துள்ள, தரு உயர் சோலை - மரங்கள் உயர்ந்துள்ள அசோகவனம், திசைதொறும் கரிய - நாற்புறங்களிலும் தீந்துபோம்படி, தழல் உமிழ் - நெருப்புச்சுவாலையை வீசுகின்ற, உயிர்ப்பு - (தனது) பெருமூச்சு, முன் தவழ- முன்புறத்திற் செல்லவும்,—திருமகள் இருந்த திசை - இலக்குமியின் அமிசமான சீதாபிராட்டி இருந்த இடத்தை, அறிந்து இருந்தும், திகைப்பு உறு சிந்தையன் - தெரியாமல் மயங்குதல் பொருந்திய மனமுடையவனாகி, (அவளைத் தேடிக்கொண்டு), ஒரு மணி - (தனது) ஒப்பற்ற மாணிக்கத்தை, கெடுத்தது - இழந்ததான, நெடு பல் பல் தலை அரவின் - நீண்டபற்களையும் பல

தலைகளையுமுடைய சர்ப்பம்போல, உழைதொறும் உழைதொறும் - பற்பல இடங்களிலும், உலாவ - (தன்மனஞ்) செல்லவும்,—(எ - று.)—வந்தான்.

சீதை தனக்குக்கிடையாமையால் மனவெதுப்புடனே சோலையிலுள்ள மரங்கள் யாவும் தீந்துபோகுமாறு பெருமூச்செறிந்துகொண்டு, சீதை தங்கியிருக்கிற இடம் தெரிந்திருந்தும் காமமயக்கத்தினால் அதனைமறந்து அவளைத் தேடியவண்ணம் தன்மனம் மாணிக்கத்தைக்கெடுத்த சர்ப்பம்போலப் பல திசைகளிலும் வருந்திச்செல்ல இராவணன் வந்தனனென்க. தனதுமணியை இழந்த நாகம் அதனைத்தேடிக்கொண்டு வருந்துமென்பதை "அருமணியிழந்தோர்நாகம் அலமருகின்றது" என்ற சிந்தாமணியிலுங் காண்க. பல்+தலை= பஃறலை, "குறில்வழி லளத் தவ்வணையி னாய்தம், ஆகவும் பெறூஉம் அல்வழியானே" என்ற விதியினால், தனிக்குறிலைச்சார்ந்த லகரம் ஆய்தமாகத் திரிந்தது. (௧௯).

[இராவணன் வருவதைக் கண்ட அநுமான் மறைந்திருத்தல்.]

௨௦. இனையதோர்தன்மையெறுழ்வலியரக்கரேந்தல்வந்தெய்துகின்றானை
யனையதோர்தன்மையஞ்சனைசிறுவன்கண்டனனமைவுறநோக்கி
வினையமுஞ்செயலுமேல்விளைபொருளுமிவ்வழிவிளங்குமென்றெண்ணி
வனைகழலிராமன்பெரும்பெயரோதியிருந்தனன்வந்தயன்மறைந்தே.

(இ - ள்.) இனையது ஓர் தன்மை - இப்படிப்பட்ட தன்மையோடு, எறுழ் வலி அரக்கர் ஏந்தல் - மிக்கவலிமையையுடைய ராக்ஷஸ ராஜனாகி, வந்து எய்துகின்றானை - வந்து சேர்கின்ற அவ்விராவணனை, அனையது ஓர் தன்மை - அங்கு நிகழ்வதைப்பார்த்துக்கொண்டிருந்த தன்மையுள்ள, அஞ்சனை சிறுவன் - அஞ்சனாதேவியின் குமாரனாகிய அனுமான், கண்டனன் - கண்ணினாற்கண்டு, அமைவு உற நோக்கி - தான் என்னசெய்யவேண்டுமென்று மனத்தினாற் செவ்வனே ஆலோசித்து, 'வினையமும் - (இவ்வரக்கனது) வஞ்சனைக்குணமும், செயலும் - செய்கையும், மேல் விளை பொருளும் - அதற்குப்பின் (சீதாபிராட்டியினால்) நடக்கும் காரியமும், இவ்வழி - இந்த இடத்தில் [இப்போது], விளங்கும் - தெரியவரும்,' என்று எண்ணி—, கழல் வனை இராமன் பெரும் பெயர் ஓதி - வீரக்கழலைப்புனைந்துள்ள இராமபிரானது பெருமை பெற்ற திருநாமத்தை உச்சரித்துக்கொண்டு, அயல் வந்து - முன்னிருந்த விடத்தை விட்டுச் சிறிது அப்பால் நெருங்கவந்து, மறைந்து இருந்தனன்—; (எ - று.)

அனுமான் அப்போது இராவணன் அங்குவந்ததனால், இனி நடக்குஞ் செயலை நன்கு கவனிக்கவேணுமென்று நினைத்து, அவற்றையெல்லாம் நன்றாகக்காணுமாறு அருகில் வந்து அவ்விராவணன் முதலியோர் தான் இருப்பதை உணராவண்ணம் மறைந்துநின்றனனென்பதாம். (௨௦).

[அப்போது சீதை அஞ்சுதல்]

௨௧. ஆயிடை யரக்க ரரம்பையர் குழுவு மல்லவும் வேறய லகல [விப்
மேயினன்பெண்ணின்விளக்கெனுந்தகையா ளிருந்துழி யாண்டவள்வெரு
போயின வுயிர ளாமெ்ன நடுங்கிப் பொறிவரியெறுழ்வலி புகைக்கண்
காய்சின வுழுவை தின்னிய வந்த கலையிளம் பிணையெனக் கரைந்தாள்.

(இ - ள்.) அ இடை - அப்பொழுது, அரம்பையர் குழுவும் - (தன்னுடன் வந்த) தெய்வமகளிர் கூட்டமும், அல்லவும் - மற்றையோர்திரளும், வேறு அயல் அகல - தனியே அப்பால் விலகி நிற்க,—அரக்கன் - இராவணன், பெண்ணின் விளக்கு எனும் தகையாள் - பெண்களுக்குள் விளக்குப்போன்றவளாகிய பிராட்டி, இருந்த உழி - இருந்த இடத்தில், மேயினன் - சென்றுஅடைந்தான்; ஆண்டு - அப்பொழுது, அவள் - அப்பிராட்டி, வெருவி - அஞ்சி, போயின உயிரள் ஆம் என - உயிர் நீங்கினவள்போல, நடுங்கி - நடுக்கங்கொண்டு, பொறி - புள்ளிகளையும், வரி - கோடுகளையும், எறுழ் வலி - மிக்க வலிமையையும், காய் சினம் - வெதும்புகின்ற கோபத்தையும், புகை கண் - (அந்தக்கோபாக்கினியின்) புகைதோன்றப்பெற்ற கண்களையுமுடைய, உழுவை - புலி, தின்னிய - (தன்னை) உண்ணும்பொருட்டு, வந்த - வரப்பெற்ற, கலை இளம் பிணை என - ஆண் மானினது இளமையாகிய பெண்மான் போல, கரைந்தாள் - உடலுருகினாள்.

உடன்வந்த பரிவாரமெல்லாம் அப்பால்அகல, இராவணன் தனியே பிராட்டியினிடம் சென்று சேர, அவள் அவனைக்கண்டு கடும்புலியைக்கண்டு அஞ்சி நடுங்கும் பெண்மான்போல அஞ்சிநடுநடுங்கி உடல்கரைந்தன ளென்ப தாம். அல்லவும் என்றது - சீதைக்குக் காவலாக இருந்தஅரக்க மகளிர் திரளைக் காட்டும். (௨௧)

வேறு.

[அனுமான் அவ்விருவர்நிலைமையையும் காணுதல்.]

௨௨. கூசி யாவி குலைவுறு வாளையு
மாசை யாலுயி ராசழி வானையுங்
காசில் கண்ணிணை சான்றெனக் கண்டன
னூச லாடி யுளையு முளத்தினான்.

(இ - ள்.) கூசி - (அச்சத்தினால்) உடல்நடுங்கி, ஆவி குலைவுறுவாளையும் - உயிரும்நடுங்குகின்ற சீதையையும், ஆசையால் - காமமோகத்தினால், உயிர் ஆசு அழிவானையும் - உயிர் கட்டுக்குலைபவனாகிய இராவணனையும், காசு இல் கண் இணை சான்று என - குற்றமற்ற (தனது) கண்களிரண்டும் சாட்சியாக [பிரத்தியட்சமாக], கண்டனன் - பார்த்தவனாகி,—(அனுமான்), ஊசல் ஆடி உளையும் உளத்தினான் - தத்தளித்துவருந்துகின்ற மனமுடையவனானான்; (எ - று.)

இராவணன் காமமயக்கங்கொண்டு உடன்வந்தவர்யாவரும் விலகி அப் பாற்செல்லத் தான் தனியனாகி அங்கு வந்திருப்பதையும், சீதை துணையின்

நீச் செய்வதுதெரியாது நடுநடுங்கி உயிர்கரைவதையும் கண்கூடாகக் கண்ட அனுமான், 'இந்தநிலையில் யாதுநடக்குமோ' என்று மனம் தத்தளித்து நிற்க லாயினனென்பதாம். ஆசு - கட்டு: விரைவுஎன்று கொள்வாரு முளர்.

இது முதல் பதினறுகவிகள் - பெரும்பாலும் முதற்சீர் மாச்சீரும், மற்றை மூன்றும் விளச்சீர்களு மாகிய கலிவிருத்தங்கள். (௨௨)

[அநுமான் வாழ்த்து.]

௨௩. வாழிசானகிவாழியிராகவன்,
வாழிநான்மறைவாழியரந்தணர்,
வாழிநல்லறமென்றுறவாழ்த்தினு
னூழிதோறும்புதிதுறுங்கீர்த்தியான்.

(இ - ள்.) 'சானகி - சீதாபிராட்டி, வாழி - (இவ்விராவணனால் யாதொரு தீங்கும் நேராமல்) வாழக்கடவள்; இராகவன் - இராமபிரான், வாழி - (சீதை குறைவின்றி வாழ்வதனால் தானும்) வாழக்கடவன்; நால் மறை - (அவனது கீர்த்தியைப் பரக்க ஓதுகின்ற) நான்குவேதங்களும், வாழி - வாழக்கடவன; அந்தணர் - (அந்தவேதத்தை ஓதுதல் முதலிய செயலால் உலகத்துக்கு நன்மையை விளைக்கின்ற) பிராமணர், வாழியர் - வாழக்கடவர்; நல் அறம் - (அந்த வேதங்களிற்கூறிய) நல்லதருமங்களெல்லாம், வாழி—,'என்று—,உற வாழ்த்தினன் - மனப்பூர்வமாக வாழ்த்துக்கூறினன்;—(யாவனென்னில்),—ஊழி தோறும் புதிது உறும் கீர்த்தியான் - யுகந்தோறும் மேன்மேற் புதிதாகவளர்கின்ற,கீர்த்தியையுடைய அனுமான்; (எ - று.)

அப்போது 'இராவணனாற் சீதைக்கு ஏதேனும் தீங்கு நேருமோ!' என்று எண்ணி அஞ்சிக் கலங்கிய அனுமான், அக்காலத்துத் தன்னாற் செய்யலாவதொரு பரிகாரம் தோன்றாமையால், இவ்வாறு வாழ்த்துக்கூறலாயினனென்க. (௨௩)

[அப்போது இராவணன் சீதையை வேண்டுதல்.]

௨௪. அவ்விடத்தருகெய்தியரக்கன்று
னெவ்விடத்தெனக்கின்னருளீவது
நொவ்விடைக்குயிலேநுவல்கென்றனன்
வெவ்விடத்தையமிழ்தெனவேண்டுவான்.

(இ - ள்.) வெம் விடத்தை அமிழ்து என வேண்டுவான் - உயிரைக்கொல்லுந்தன்மையுள்ள கொடியவிஷத்தை அமிருதமாகநினைத்து விரும்புகின்றவனாகிய, அரக்கன் - இராவணன், அ இடத்து - அங்கே, அருகு எய்தி - (சீதாபிராட்டியின்) சமீபத்தில் வந்து, 'நொ இடை குயிலே - வருந்துகின்ற இடையையுடைய குயில்போன்றவளே! எ இடத்து - எப்போது, எனக்கு—, இன் அருள் ஈவது - (நீ) இன்னருள் செய்வது? நுவல்க - சொல்வாயாக,' என்றனன்,— (எ - று.)—தான் - அசை. படர்க்கைப் பெயருமாம்.

சீதாபிராட்டியை இராவணன் விரும்புவது - கொல்லுந் தன்மையுள்ள விடத்தை 'இதனை விரும்பி யுண்டால், இது நமது உயிரை வாங்கிவிடும்' என்று கருதாமல், 'அமுதம்போல் இனிமையைத்தரும்' என்று மாறுபாடாகக்கருதி வேண்டுவதை ஒக்கு மென்பது, ஈற்றடியிற் கூறிய பொருள். சீதையை இன்னருள் ஈயுமாறு விரும்புகின்றவனை வெவ்விடத்தை அமிழ்தென வேண்டுவானாகக் கூறியது - காட்சியணி: இதனால், சீதாபிராட்டியினால் இராவணனுக்கு மரணம்நேர்வது திண்ணமெனக் குறிப்பித்தவாறு. (உ௪)

[கவிக்கூற்று.]

உரு. ஈசற்காயினுமீடழிவுற்றிறை
வாசிப்பாடழியாதமனத்தினு
னாசைப்பாடுமந்நாணுமடர்ந்திடக்
கூசிக்கூசியிவையனகூறினான்.

(இ - ள்.) ஈசற்கு ஆயினும் - (தனது வழிபடுதெய்வமாகிய) சிவபெருமானிடத்திலும், ஈடு அழிவுற்று - (தனது) வலிமை குறையப் பெற்று, இறை - சிறிதும், வாசிப்பாடு - (தனது) பெருமிதம், அழியாத - குறையப்பெறாத, மனத்தினான் - மனத்தையுடையவனாகிய இராவணன்,—ஆசைப்பாடும் - (பிராட்டியின் மேற் கொண்டுள்ள) பெருங்காதலும், அ நாணும் - அப்படிப்பட்ட (தனது) நாணமும், அடர்த்திட - (தன்னை) வருத்த, கூசி கூசி - (மனத்திற்) கூச்சங்கொண்டு, இனையன - இப்படிப்பட்ட வணக்க மொழிகளை, கூறினான் - (அரிதிற்) சொன்னான்; (எ - று.)—அவற்றை அடுத்த பன்னிரண்டு கவிகளிற் காண்க.

தனது வழிபடுதெய்வ மாகிய சிவபெருமானிடத்திலும் தனது பெருமைக்குக் குறைவாக வணங்க விரும்பாத இராவணன், அப்போது சீதாபிராட்டியினிடங்கொண்ட பெருங்காதல் அவளிடத்துத் தாழ்ந்து போகுமாறு தூண்ட 'ஒருபெண்ணினிடத்திலா நாம் தாழ்ந்துபோவது?' என்ற நாணம் மற்றொரு பக்கம் இழுக்க, அவஸ்தைப்பட்டு மெல்ல மெல்லப் பின்வருமாறு நயந்து கூறலாயின னென்பதாம். (உரு)

[இதுமுதற் பன்னிரண்டு கவிகள் - இராவணன்
சீதாபிராட்டியினிடம் நயந்துகூறுவதைத் தெரிவிக்கும்.]

உசா. இன்றிறந்தனநாளையிறந்தன
வென்றிறந்தருந்தன்மையிதாலெனைக்
கொன்றிறந்தபின்கூடுதியோகுழை
சென்றிறங்கிமறந்தருசெங்கணாய்.

(இ - ள்.) குழை சென்று இறங்கி - குழையென்னுங் காதணிவரையிற் போய்ப் பாய்ந்து, மறம் தரு - கொடுமை செய்கின்ற, செம் கணாய் - சிவந்த

கண்களையுடையவளே!—இன்று இறந்தன - இன்றைவரையிலும் நாள்கள் கழிந்தன; நாளை இறந்தன - இனியும் அவ்வாறே கழிவதாயிருக்கின்றன; என் திறம் - என்விஷயத்தில், தரும் - (நீ) செய்கின்ற, தன்மை—, இது ஆல் - இவ்வாறாக இருக்கின்றது: (இப்பொழுது எனக்குத் தோன்றியிருக்கிற இக்காம நோய்), எனை கொன்று இறந்த பின் - என்னைக் கொன்றுவிட்ட பிறகு, கூடுதியோ - (என்னைச்) சேர இருக்கின்றாயோ? (எ-று.)

நீ அருள் செய்யாமையால் இதுவரையிலும் ஒவ்வொருநாளாக வீணே கழிந்திட்டன; இனியும் அவ்வாறுதான் கழியு மென்று தோன்றுகின்றது; இப்போது எனக்கு உண்டாகியிருக்கும் காமநோயினால் யான் இறந்தழிந்த பிறகே நீ என்னைக் கூடுவாய்போலு மென்று இராவணன் மிகவும் வருந்திக் கூறினனென்க. 'கொன்றிறந்தபின் கூடுதியோ' என்றது - நீ இப்பிறவியில் என்னைக் கூடமாட்டாய்போலு மென்ற குறிப்பு. நாளையிறந்தன - இயல்பினால் எதிர்காலம் இறந்தகால மாகக் கூறப்பட்ட காலவழுவமைதி. (உசு)

உஎ. உலகமொன்றிரண்டொருங்கோம்புமெ
னலகில்செல்வத்தரசியலாணையிற்
றிலகமேயுன்றிறத்தனங்கன்றரு
கலகமல்லதெளிமையுங்காண்டியோ.

(இ - ள்.) திலகமே - திலகம்போலச் சிறந்தவளே! உலகம் ஒன்றிரண்டு - மூன்று உலகங்களையும், ஒருங்கு ஓம்பும்-ஒருசேர [முழுதும்] அரசாட்சிசெய்கின்ற, என் - எனது, அலகு இல் செல்வத்து - எல்லையில்லாத ஐசுவரியத்தையுடைய, அரசு இயல் - ராஜாங்கத்திலே செல்லுகின்ற, ஆணையில் - கட்டளையிலே, உன் திறத்து அனங்கன் தரு கலகம் அல்லது - உன்விஷயமாக (எனக்கு) மன்மதன் உண்டாக்கிய போரேயல்லாமல், எளிமையும் - (எனக்கு) இழிவைத் தரக்கூடிய (ஏதேனும் ஒரு) செயலையும், காண்டியோ - பார்ப்பாயோ? (எ - று.)

சுவர்க்கம் பூமி பாதாளம் என்ற இந்த மூன்றுஉலகத்திலும் எனதுஆணை தட்டுத்தடையின்றி எளிமைப்படாமற் செல்வதாயிருக்க, மன்மதன் உன்விஷயமாகச் செய்கின்ற இந்த ஒரு போராட்டத்தில் யான் எளிமைப்படவேண்டியதாயிருக்கின்றதே! நீ உனது அருள்நோக்கால் இதனைத் தவிர்க்கலாகாதோ? என்று இரங்கிக்கூறினன் இராவணனென்க. இச்செய்யுளில்—இல் திலகமே - (இருக்கின்ற) வீட்டுக்குத் திலகம்போன்றவளே! அரசியல் ஆணை - எனது அரசாட்சியின்மேல் ஆணை; உன்திறத்து அனங்கன் தரு கலகம் அல்லது - (இராமபிரானைப் பிரிந்திருத்தலால்) உனக்கு மன்மதன் உண்டாக்குகின்ற இக்கலக்கம் விரைவில் இல்லாமற் போய்விட, எளிமையும் காண்டியோ - எளிதாக ஸ்ரீராமபிரானை அடைவதையும் பெறுவாய்போலும் என்ற மற்றொரு பொருளும் இராவணன் வசனத்தில் தோன்று மென்பர் ஒருசாரார். அரசு இயல் ஆணையில் திலகமே என்று எடுத்து - எனது ராஜாங்கத்தின் கட்டளை

செல்லுமிடத்திற்குள் (இப்போது) திலகம்போல் விளங்குபவளே! என்றும், உன்திறத்த அனங்கன் தரு கலகம் அல்லது எளிமையும் என்பதற்கு - உன் விஷயமாக மன்மதன் உண்டாக்கிய கலகத்தோடு நான் அதனால் எளிமைப்படு வதையும் என்றும் கூறலும் ஒன்று. (உ௭)

உ௮. பூந்தண்வார்குழற்பொற்கொழுந்தேபுக
ழேந்துசெல்வமிகழ்ந்தனையின்னுயிர்க்
காந்தன்மாண்டிலன்காடுகடந்துபோய்
வாழ்ந்தவாழ்வதுமானுடர்வாழ்வன்றே.

(இ - ள்.) பூ தண் வார் குழல் பொன் கொழுந்தே - பூவையணிந்துள்ள நீண்ட கூந்தலையுடைய பொன்மயமான கொழுந்து போன்றவளே! புகழ் ஏந்து - கீர்த்தி மிகுந்த, செல்வம் - (எனது) ஐசுவரியத்தை, இகழ்ந்தனை - விரும்பாமல் உபேக்ஷித்தாய்; இன் உயிர் காந்தன் - உனது இனிய பிராணநாயகன், மாண்டிலன் - இறந்துபோகாமல் [அரிதில் உயிர்வைத்துக்கொண்டு], காடு கடந்து போய் - (தான் இப்போது வசிக்கின்ற) காட்டை நீங்கிச்சென்று, வாழ்ந்த - வாழ இருக்கின்ற, வாழ்வு அது - அந்தவாழ்வு, மானுடர் வாழ்வு அன்றே - அற்பமான மனிதர்வாழ்க்கை தானே; (எ - று.)

'திரிலோகத்தையும் ஆள்கின்ற எனது செல்வத்தை இகழ்கின்றாய்; ஒருகால் பிராணனைத்தப்பித்துக்கொண்டு காடுகடந்து அயோத்திசென்று மீண்டும் அரசாட்சி பெற்ற கணவனோடு நீ வாழ்வதாயிருந்தாலும், அதுவும் வலிமை செல்வம் ஆயுள் முதலியவற்றில் மிகவும் எம்மிலும் இழிந்த மானுடவாழ்க்கை தானே; அதனையா நீ விரும்புவது? எனது செல்வவாழ்க்கையை இகழ்ந்து இழிந்த அவ்வாழ்க்கையை விரும்புவதில் யாதுபயன்?' என்று இராவணன் தனதுவாழ்க்கைச்சிறப்பையும், இராமனது வாழ்க்கையின் சிறுமையையும் எடுத்துக்காட்டினனென்க. வாழ்ந்த - இயல்பினால், எதிர்காலம் இறந்தகாலமாகச் சொல்லப்பட்ட காலவழுவமைதி. (உ௮)

உ௯. நோற்கின்றார்களுநுண்பொருணுண்ணிதின்
பார்க்கின்றாரும்பெறும்பயன்பார்த்தியேல்
வார்க்குன்றாமுலையென்சொன்மவுலியா
லேற்கின்றாரொடுடனுறையின்பமால்.

(இ - ள்) வார் குன்றா முலை - கச்சுக்குள் அடங்காத [மிகப்பருத்த] தனங்களையுடையவளே!—நோற்கின்றார்களும் - பெருந்தவஞ்செய்கின்ற இருடியர்களும், நுண் பொருள் - சூட்சுமமான நூற்பொருளை, நுண்ணிதின் - சூட்சுமமாக, பார்க்கின்றாரும் - ஆராய்கின்ற மகான்களும், பெறும் - அடைகின்ற, பயன் - பயனை, பார்த்தி எல் - (நீ உனது புத்தியினால்) சிறிது ஆராய்ந்து காண்பாயானால்,—என் சொல் - எனதுகட்டளையை, மவுலியால் ஏற்கின்றாரொடு - (தமது) சிரசால் அங்கீகரிக்கின்ற தேவர்களுடனே, உடன் உறை - ஒருங்கே வசிக்கின்ற, இன்பம் - இன்பமேயாகும் (என்பது பெறப்படும்); (எ - று.)

ருஷிகளும் தத்துவசாஸ்திரிகளும் என் பணியைத் தலையாலேற்று நடக்கின்ற பிரமன் முதலிய தேவர்களோடு ஒருலகத்தில் வாழ்தலாகிற இன்பத்தையே நாடுகிறார்கள்; அப்படிப்பட்ட தேவர்களினும் மேம்பட்டுள்ள நான் உன்னிடத்து மிகவும் வேண்டவும் நீ உபேட்சிப்பது தகுதியோ? என்று இராவணன் கூறினனென்க. வார் குன்று ஆம் முலை என்று எடுத்து - கச்சணிந்த மலைபோன்ற தனங்களையுடையாய் என்று கூறலுமாம். (உக)

௩௦. பொருளும்யாழும்விளரியும்பூவையு
மருளுநாளுமழலைவழங்குவாய்
தெருளுநான்முகன்செய்ததுன்சிந்தையி
னருளுமின்மருங்கும்மரிதாக்கியோ.

(இ - ள்.) பொருளும் - (உலகத்துப்) பொருள்களுள் மிகச் சிறந்தனவாகிய குழந்தையும், யாழும் - வீணையும், விளரியும் - விளரியென்ற பண்ணும், பூவையும் - நாகணவாய்ப் பறவையும், (என்னும் இவை), மருளும் - (இணையாகாமல்) பின்வாங்குகின்ற, மழலை - குதலைச்சொற்களை, நாளும் - எப்பொழுதும், வழங்குவாய் - சொல்பவளே! தெருளும்-அறிந்த, நான்முகன் - நான்குமுகங்களையுடைய பிரமதேவன், செய்தது - (உன்னைப்) படைத்தது,—உன் சிந்தையின் - உன்மனத்திலே, அருளும் - இரக்கத்தையும், மின் மருங்கும் - மின்னல்போல் துவண்டு தோன்றுந் தன்மையுள்ள இடையையும், அரிது ஆக்கியோ - இல்லாமலாக்கிவிட்டுத் தானோ? (எ - று.)

பூவை முதலியவையும் இணையாகாமற் பின்வாங்குகின்ற இனியகுதலைச் சொல்லுடையவளே! உன்னைப் பாதாதிகேசாந்தமாக அவயவங்களையெல்லாம் மிகவும்அழகாகப்படைத்த பிரமன் உன்உடம்பில் இடையில்லாமல் சிருட்டித்தது போலவே மனத்தில் அருளுமில்லாமற் படைத்துவிட்டானோ? உனக்கு அருள் இருப்பின் நீ என்மீது இரக்கங்கொண்டு என்விருப்பத்திற்கு இணங்க யான் வாழ்ந்திடுவேன் என்று இராவணன் வேண்டியவாறு. "தம்பொருளென்ப தம்மக்கள்" என்றவாறு உலகத்துப் பொருள்களுள் குழந்தையென்ற பொருள் மிகச்சிறத்தலால், அதனை 'பொருள்' என்றே கூறினார். "மெய்பெறு வெழுத்துயிர்க்கு மழலைவா யின்புறுவல், தையலாள்" என்ற சிந்தாமணிக்கும், "மழலை - எக்காலத்திற்கும் கூறுப" என்ற அதன்உரைக்கும் ஏற்ப 'நாளும் மழலை வழங்குவாய்' என்றார். அருளில்லாமையைக் கூறவேண்டிய இவ்விடத்தில், சீதையின் இடையின்மையாகிய அப்ரஸ்துதத்தையும் உடன் கூறினது - விளக்கணியின்பாற்படும். (௩௦)

௩௧. ஈண்டுநாளுமிளமையுமீண்டில
மாண்டுமாண்டுபிறிதுறுமாலைய
வேண்டுநாள்வெறிதேகவிளிந்தாலினி
யாண்டுவாழ்வவ்விடருழன்றாழ்தியோ.

(இ - ள்.) ஈண்டும் நாளும் - (கழிகின்ற உனது) வாழ் நாள்களும், இளமையும் - (விஷயசுகத்தை யனுபவித்தற்குஉரிய உனது) யௌவனமும், மீண்டில - (சென்றவை) மீண்டுவருவனவல்ல ; மாண்டு மாண்டு - (அவை) சிறிதுசிறிதாகக் கழிந்துபோய், பிறிது உறும் மாலைய - ஒழிந்துபோகின்ற தன்மையையுடையன ; வேண்டும் நாள் - விரும்பி (இன்பம்) அனுபவித்தற்கு உரிய யௌவனகாலம், வெறிதே - (இவ்வாறு இன்பத்தை அனுபவித்தல் இல்லாமல்) வீணாகவே, விளிந்தால் - கழிந்தொழியுமானால், இனி - இனிமேல், வாழ்வு - சுகமனுபவிப்பது, யாண்டு - எப்போதோ? அ இடர் - அந்த மிக்க பெருந்துன்பத்தில் தானே, உழன்று - வருந்தி, ஆழ்தியோ - மூழ்கிவிடக் கடவாயோ? (எ - று.)

ஆயுள்நாட்களும் இளமையும் சிறிதுசிறிதாகக் கழிந்துபோகின்றன ; அவ்வாறு கழிவனவற்றை எவராலும் மீட்கஇயலாது: இன்பத்தை நுகர்தற்கு உரிய இவ்விளமையை வெறிதே கழித்துவிட்டால், அப்புறம் இளமையொழிந்த முதுமைப் பருவத்திலா இன்பம் நுகரப்போகின்றாய்? அன்றி, ஆயுள் முழுதும், இப்போழ்துபோலவே துன்பத்தில்தானே மூழ்கிக்கிடப்பதாகவே கருதியிருக்கின்றாயோ? என்று இராவணன் கூறினனென்க. ஈண்டில என்று பிரித்துப் பொருள்கூறலு மொன்று. (௩௧)

௩௨. இழவெனக்குயிர்க்கெய்தினுமெய்துக
குழைமுகத்துநின்சிந்தனைகோடினற்
பழகநிற்புறும்பண்பிவைகாமத்தோ
டழகினுக்கினியாருளராவரோ.

(இ - ள்.) குழை முகத்து - (இன்பம்அனுபவியாமையால்) வாடுகின்ற முகத்தையுடைய, நின் - உனது, சிந்தனை - எண்ணம், கோடினல் - (என்மீது இரங்காது) மாறுபட்டால், (அதனால் யான் உயிர் தாங்கமாட்டாது இறந்துபடுவேன் ; அவ்வாறு), இழவு - நாசம், எனக்கு உயிர்க்கு - எனது உயிர்க்கு, எய்தினும் எய்துக - நேர்ந்தாலும் நேரட்டும் ; (அதுஒருபெரிதல்ல); பழக நிற்பு உறும் - (உன்னோடு) பழகுமாறு நிலையாக உள்ள, பண்பு இவை - இப்படிப்பட்ட குணங்களும், காமத்தோடு - காமமும் ஆகியவற்றோடு, அழகினுக்கு இனியார் - (உனது) அழகுக்கு ஏற்றவாறு அமைந்த நல்லஆடவர், உளர் ஆவரோ - (என்னைத் தவிர) வேறு யாவரேனும் இருப்பார்களோ? [எவரும் இல்லை என்றபடி] ; (எ - று.)

நீ என்மீது கருணைபுரியாமல் மாறுபட்டால், அதனால் யான் இறந்தொழிவது திண்ணம் ; அவ்வாறு யான் இறந்திட்டால், பிறகு உனது அழகுக்கு ஏற்ற நற்குணம் முதலியவை அமையப்பெற்ற என்னைப்போன்ற வேறு ஆடவர் உனக்குக் கிடைப்பாரோ? என்று இராவணன் கூறினனென்க. இனியார் என்று பிரித்தும் உரைக்கலாம். (௩௨)

௬௬. பெண்மையும்மழகும்பிறழாமனத்
திண்மையும்முதல்யாவையுஞ்செய்யவாய்க்
கண்மையும்பொருந்திக்கருணைப்படர்
வண்மையென்கொல்சனகரின்மாண்டவா.

(இ - ள்.) பெண்மையும் - பெண்தன்மையும், அழகும் - (அதற்குஏற்ற) அழகும், பிறழா மனம் திண்மையும் - தவறாத மனவுறுதியும், முதல் - முதலான, யாவையும் - எல்லா நற்குணங்களும், செய்ய ஆய் - நல்லனவாகி அமைந்திருந்தும், கண்மையும் - தாக்ஷிணியமும், கருணை பொருந்தி படர் வண்மை (உம்) - அருள் பொருந்துவதனால் உண்டாகின்ற ஈகைக்குணமும், சனகர் இல் - சனகமகாராசனது வம்சத்தில், மாண்ட ஆ(று) - ஒழிந்துபோனவகை, என் கொல் - யாதுகாரணமோ? (எ - று.)

மிகவும் உத்தமமான சனகவம்சத்திற் பிறந்த சீதைக்கு அழகுமுதலிய யாவும் குறைவில்லாமல் அமைந்திருந்தும், தாட்சிணியமும் அதன்பயனாகத் தோன்றும் ஈகைக்குணமும் இல்லாமலொழிந்தது யாதுகாரணம் பற்றியோ? என்றனனென்பதாம். இந்தச்சீதைக்குத் தாட்சிண்ணிய மிருப்பினும் என்னிடத்து இரங்கி எனது விருப்பத்தை நிறைவேற்றவேண்டும்; ஈகைக் குணமிருப்பினும் யான் வேண்டுவதைத் தரவேண்டும்; எனது விருப்பத்தை நிறைவேற்றாமல் உபேட்சித்தலால், சீதைக்கு அவ்விரண்டும் இல்லையென்றான். (௬௬)

(௬௭.) வீட்டுங்காலத்தலறியமெய்க்குரல்
கேட்டுங்காண்டற்கிருத்திகொல்கிளிளைநீ
நாட்டுங்காலெனெடுநல்லறத்தின்பய
னூட்டுங்காலத்திகழ்வதுறுங்கொலோ.

(இ - ள்.) கிள்ளை - கிளிபோன்றவளே! வீட்டும் காலத்து - (இராமனை நான்) கொன்றபோது, அலறிய - ஓலமிட்டுக் கூவிய, மெய் குரல் - (ஹா ஸீதே! ஹா லக்ஷ்மணா! என்ற) உண்மையான குரலை, கேட்டும் - (காதாரக்) கேட்டிருந்தும், (அது மாரீசன்குரல்! இராமன் இன்னும் யாதொரு தீங்குமின்றிப் பிழைத்திருக்கின்றான் என்று நம்பிக்கைகொண்டு), காண்டற்கு - (அவ்விராமனைப்) பார்க்கப் போகிறோமென்றே, நீ இருத்தி கொல் - நீ இருக்கின்றாயோ? நாட்டும் கால் - நிலையாகச் சொல்லுமிடத்தில், — நெடு நல் அறத்தின் பயன் - மிகச்சிறந்த புண்ணியத்தின் பலனை, ஊட்டும் காலத்து - அனுபவிக்கும்படி (விதி) கூட்டியபோது, இகழ்வது - (அதனை வேண்டாமென்று) அவமதிப்பது, உறும் கொலோ - தக்கதாகுமோ? (எ - று.)

நான் உன்னைக்கொணர்தற்கு முன்னமே உனது கணவனாகிய இராமன் மாண்டுபோனான்; அவன் இறக்கும்போது 'ஹா ஸீதே! லக்ஷ்மணா!' என்று கூறியதையும் நீ காதாரக்கேட்டிருக்கின்றாய்; அப்படியிருக்க, அப்பொழுது நீ கேட்ட குரலைப் பொய்க்குரலென்று கருதி, இராமனைக் கூடவேண்டுமென்று

கருதுகின்றாயே! இது என்ன பேதைமை? உனது நல்விதி என்னை உன்னிடத்துக் கூட்டியிருக்க, அந்த நற்பயனை அவமதித்து நீ என்னை உபேட்சிப்பது தகுதியோ? என்று இராவணன் கூறினனென்க. ஓகாரம் - இரக்கம்.

ருடு. தக்கதென்னுயிர்வீடெனிற்றாழ்கிலா
தொக்கசெல்வமுலையுமொருத்திநீ
புக்குயர்ந்ததெனும்புகழ்போக்கிவே
றுக்கதென்னுமுறுபழிகோடியோ.

(இ - ள்.) என் உயிர் வீடு - (என்மீது நீ அருள்புரியாததனால்) எனது உயிர்நாசமடைதல், தக்கது எனின் - நேர்படுமாயின், தாழ்கிலாது - தாமதமில்லாமல் [உடனே], ஒக்க - ஒருசேர, செல்வம் - (எனது) ஐசுவரியம்முழுதும், உலையும் - அழிந்துவிடும்; 'ஒருத்தி நீ - ஒப்பற்ற நீ, புக்கு - (இராவணனிடம்) சேர்ந்ததனால், உயர்ந்தது - (அவனதுசெல்வம்) வளர்வதாயிற்று', எனும் - என்கிற, புகழ் - கீர்த்தியையும், போக்கி - (பெறாமல்) ஒழித்து, வேறு - அதற்கு மாறாக, உக்கது - (சீதைபுக்கதனால் இராவணன் செல்வம்) ஒழிந்தது, என்னும் - என்கின்ற, உறு பழி - பெரும்பழியை, கோடியோ - கொள்ளக்கடவாயோ? (எ - று.)

நீ அருளாதொழியின் அதனால் யான் இறக்க எனதுசெல்வம் அழிந்துவிடும்; நீ என்மீது அருள்புரிந்தாலோ, எனது செல்வம் மேன்மேல் வளரும். ஆகவே, என்மீது அருள்செய்து அதனால் எனது செல்வத்தை வளர்த்தாயென்ற பெரும்புகழையும் அடைதல் தகுதியாயிருக்க, அதனைவிட்டு, யானும் எனது செல்வமும் அழியுமாறு செய்து அதனால் பெரும் பழியைக் கொள்ளுதல் நினக்கு ஏற்குமோ? என்று இராவணன் கூறினனென்க. (ருடு)

ருகூ. தேவர்தேவியர்சேவடிகைதொழுந்
தாவின்மூவுலகின்றனிநாயக
மேவுகின்றது நின்கண்விலக்கினை
யாவரேழையர்நின்னினிலங்கிழாய்.

(இ - ள்.) இலங்கு இழாய் - விளங்குகின்ற ஆபரணங்களை யணிந்தவளே! தேவர் - தேவர்களும், தேவியர் - அத்தேவரது மனைவிமார்களும், சே அடி கைதொழும் - (உனது) சிவந்தபாதங்களைக் கைகூப்பிவணங்கும்படியான, தா இல் - அழிதலில்லாத, மூ உலகின் தனி நாயகம் - மூன்று உலகங்களுக்கும் ஒப்பற்ற தலைமை, நின்கண் - உன்னிடத்து, மேவுகின்றது - வருவதாயிருப்பதனை, விலக்கினை - வேண்டாவென்று விலக்கினாய்; நின்னின் - உன்போல, ஏழையர் - அறிவில்லாதவர், யாவர் - யாவருளர்? (எ - று.)

நீ என்னிடத்து அருள்புரிந்தாயாயின், என்வசத்திலுள்ள மூவுலகத்தாட்சியும் உனக்குக் கீழடங்கியதாகிவிடும்; அப்படி வலிவில் வருவதாயிருக்கின்ற பெருஞ் செல்வத்தை மறுக்கின்றாயே! உன்னைவிட அறிவில்லாதவர் யாவர்? என்று இராவணன் பழித்துக் கூறினனென்க. (ருகூ)

ஆட்சி

௩எ. குடிமை மூன்று லகுஞ்செயுங் கொற்றத்தெ
னடிமை கோடி யருளுதி யாலெனு
முடியின் மீது முகிழ்த்துயர் கையினன்
படியின் மேல்விழுந் தான்பழி பார்க்கலான்.

(இ- ள்.) பழி பார்க்கலான் - (பிறர்மனைவியை நயத்தலினால் தனக்கு நேரும்) அபகீர்த்தியைச் சிறிதும் கருதாத இராவணன்,—'மூன்று உலகும் குடிமை செயும் கொற்றத்து - மூவுலகத்துள்ளாரையும் கீழ்வாழுங்குடியாகச் செய்துள்ள வெற்றியைக்கொண்ட, என் அடிமை - எனது அடிமைத் தன்மையை, கோடி அருளுதி - அருளுடனே அங்கீகரிப்பாய்', எனு - என்று, முடியின் மீது - தனது தலையின்மேல், முகிழ்த்து உயர் கையினன் - குவித்து உயர்ந்த கைகளையுடையவனாய், படியின்மேல் விழுந்தான் - தரையின்மீது விழுந்து வணங்கினான்; (எ - று.)

இராவணன் திரிலோகாதிபதியாகிய என்னை ஆட்கொள்ளவேணுமென்று தலையின்மேற் கைகூப்பிச் சீதாபிராட்டியை வேண்டிக்கொண்டு ஸாஷ்டாங்கமாக விழுந்துவணங்கின னென்பதாம். (௩எ)

வேறு.

[அப்போது சீதை கடுங்கோபத்துடன் கூறத் தொடங்குதல்.]

௩அ. காய்ந்தன சலாகை யன்ன வுரைவந்து கதுவா முன்னந்
தீய்ந்தன செவிக ளுள்ளந் திரிந்தது சிவந்த சோரி
பாய்ந்தன கண்க ளொன்றும் பரிந்தில ளுயிர்க்கும் பெண்மைக்
கேய்ந்தன வல்லா வெய்ய மாற்றங்க ளினைய சொன்னாள்.

(இ - ள்.) காய்ந்தன சலாகை அன்ன - நெருப்பிற் பழுக்கக்காய்ந்தனவாகிய நாராசங்களைப் போன்ற, உரை - (இராவணனது) வார்த்தைகள், வந்து கதுவா முன்னம் - வந்து நுழைதற்குமுன்னமே, செவிகள் - பிராட்டியின் காதுகள், தீய்ந்தன - (கொடுமை தாங்கமாட்டாமல்) எரிந்துபோயின [மிகவும் வருந்தின என்றபடி]; (பெருஞ்சினத்தினால்), உள்ளம் திரிந்தது - மனம் (சாந்தமானநிலையினின்று) மாறுபட்டது; கண்கள் - இரண்டுகண்ணிலும், சிவந்த சோரி - செந்நிறமான இரத்தம், பாய்ந்தன - ஒழுகின; (அப்போது), உயிர்க்கும் - (தனது) உயிரைப்பற்றியும், ஒன்றும் பரிந்திலள் - (இவ்வாறு கூறுவதுபற்றி இராவணனால் என்னதீங்குநேருமோ? என்று) சிறிதும் வருந்தாதவளாய், பெண்மைக்கு ஏய்ந்தன அல்லா - பெண்தன்மைக்குத் தகுந்தன வல்லாத, வெய்ய மாற்றங்கள் இனைய - இத்தகைய கொடுஞ்சொற்களை, சொன்னாள் - (இராவணனைநோக்கிக்) கூறலாயினாள்; (எ - று.)—அதனை அடுத்த இருபத்தொருகவிகளிற் காண்க.

காய்ந்த இருப்புநாராசம்போன்ற இராவணனது வார்த்தையைக் கேட்ட வுடனே, சீதை, அடங்காதகோபங்கொண்டு தனதுஉயிரையும் லக்ஷயஞ்செய் யாமல், மஹாவீரர்கள்பேசுவதுபோல மிகவும்கடுமையாக அவ்விராவணனை நோக்கிக் கூறலாயின ளென்பதாம். (௩அ)

[இதுமுதல் இருபத்தொருகவிகள் - சீதை இராவணனை நோக்கிக் கூறுவன.]

௩௯. மல்லடுதிரடோள்வஞ்சன்மனம்பிறிதாகும்வண்ணங்
கல்லொடுந்தொடர்ந்தநெஞ்சங்கற்பின்மேற்கண்டதுண்டோ
இல்லொடுந்தொடர்ந்தமாதர்க்கெய்வனவல்லவெய்ய
சொல்லிதுதெரியக்கேட்டி துரும்பெனக்கனன்றுசொன்னாள்.

(இ - ள்.) (சீதை இராவணனை ஒருதுரும்பாக மதித்து), துரும்பு - துரும் பே! வெய்ய சொல் - (நீ கூறிய) கடுஞ்சொற்கள், இல்லொடும் தொடர்ந்த மாதர்க்கு - இல்லறத்தோடுங் கூடிவாழ்கின்ற மகளிர்களுக்கு, எய்வன அல்ல - தகுதியற்றவையாம்; கல்லொடும் தொடர்ந்த நெஞ்சம் - கல்லோடு ஒத்த மனம் (உண்டானதற்கு), கற்பின்மேல் - கற்பைக்காட்டிலும் வே றொன்று, கண்டது உண்டோ - காரணமாவது உள்ளதோ? இது தெரிய கேட்டி - இப்போது நான்கூறுவதைத் தெரியும்படி [நன்றாக] கேட்பாயாக, என - என்று, மல் அடு திரள் தோள் வஞ்சன் மனம் பிறிது ஆகும் வண் ணம் - மற்போரினால் (பகைவரைக்) கொல்லவல்ல திரண்ட தோள்களையுடைய வஞ்சகனை இராவணனது மனம் மாறுபடும்படி, கனன்று - கடுங்கோபங் கொண்டு, சொன்னாள் - பின்னும் கூறலானாள்; (எ - று.)

பிராட்டி இராவணனது முகத்தை நேரிற்பார்க்கவும் விருப்பங்கொள்ளாது கீழேகிடக்கின்ற துரும்பை எடுத்து இடையேபோகட்டு, அவனை அத்துரும் பாக மதித்து முன்னிலைப்படுத்தி, 'மகளிர் மனம் கண்டபடி கெடாது உறுதியா யிருப்பதற்குக் கற்பென்பதே சிறந்த கருவியாகும்; அப்படிப்பட்ட கற்பைப் பூண்ட என்போலியர்க்கு ஒலாதவற்றைப் பிதற்றுகின்றாய்; நான் சொல் வதைக் கேள்' என்று அவன்மனத்தில் உறைக்கும்படி கோபத்துடன் சில கூறத்தொடங்கினளென்று இதன் கருத்தை விரித்துக் கூறுக. 'இயைந்தன வல்லவென்றன்', 'தெளியக்கேட்டி' என்பன பாடாந்தரம். (௩௯)

௪0. மேருவைஉருவல்வேண்டின்விண்பிளந்தேகல்வேண்டின்
ஈரேழுபுவனம்யாவுமுற்றுவித்திடுதல்வேண்டின்
ஆரியன்பகழிவல்லதறிந்திருந்தறிவிலாதாய்
சீரியவல்லசொல்லித்தலைபத்துஞ்சிந்துவாயோ.

(இ - ள்.) அறிவு இலாதாய் - அறிவற்றவனே!—மேருவை - மேருமலை யை, உருவல் வேண்டின் - துளைக்க விரும்பினாலும்,—விண் - ஆகாயத்தை, பிளந்து ஏகல் வேண்டின் - கிழித்துக்கொண்டு அப்புறஞ் செல்லவேண்டு மென்றாலும்,—ஈர் எழு புவனம் யாவும் - பதினான்குலோகங்கள் முழுவதையும்,

முற்றுவித்திடுதல் வேண்டின் - அழிக்கவேண்டுமென்று விரும்பினாலும்,— (இவற்றையெல்லாம் செய்ய), ஆரியன் பகழி - இராமபிரானுடைய பாணம், வல்லது - வல்லமையுள்ளது; அறிந்து இருந்து - (இதனை நீ) தெரிந்திருந்தும், சீரிய அல்ல சொல்லி - சிறப்பில்லாத வார்த்தைகளைச் சொல்லி, தலை பத்தும் சிந்துவாயோ - உனது பத்துத்தலைகளையும் சிதறிவிடக்கடவாயோ? (எ - று.)

இராமபிரானது ஆற்றலை அறிந்திருந்தும் அறிவில்லாது தகுதியற்றவார்த்தையைக் கூறி, உனது உயிரையிழக்க விருக்கிறாயோ? என்று சீதை கூறினளென்க. ஓகாரம் - இரக்கப்பொருளது. இராமபிரானது போராற்றலைச் சீதாபிராட்டி முதல்மூன்றடிகளால் விளக்கினாள். (௪0)

௪௧. அஞ்சினை யாதலானன் றாரியனற்றநோக்கி
வஞ்சனைமானொன்றேவிமாயையான்மறைத்துவந்தா
யுய்ஞ்சனைபோதியாயின்விடுதியுன்குலத்துக்கெல்லா
நஞ்சினையெதிர்ந்தபோதுநோக்குமேநினதுநாட்டம்.

(இ - ள்.) அஞ்சினை ஆதலான் - (இராமபிரானிடத்து நீ) அச்சங்கொண்டாயாதலால், அன்று - அக்காலத்தில், வஞ்சனை மான் ஒன்று ஏவி - மாயமான குணமுள்ள ஒருமானை ஏவிவிட்டு, (அதன்பின்னே இராமபிரான் தொடர்ந்து சென்றானாக), ஆரியன் அற்றம் நோக்கி - இராமபிரானில்லாத அச்சமயம் பார்த்து, மாயையால் - வஞ்சனைக் குணத்தினால், மறைத்து வந்தாய் - (உனது வடிவத்தை) மறைத்து (எவரும் நம்புவதற்கு உரிய சந்யாசி வேஷங்கொண்டு என்னைக் கவர) வந்தாய்; உய்ஞ்சனை போதி ஆயின் - (இப்பொழுது) பிழைத்துப்போக வேண்டுமென்னுங் கருத்தை யுடையையானால், விடுதி - (என்னை இராமபிரானிடத்திற் கொண்டுபோய்) விட்டிடு; (நீ அவ்வாறு செய்யாமலிருப்பின் என்னை மீட்குமாறு அவ்விராமபிரான் இங்குத் தானே வருவர்); உன் குலத்துக்கு எல்லாம் நஞ்சினை - உனதுவம்சமுழும் முடிக்கும் விஷம்போன்றவனான அவ்விராமபிரானை, எதிர்ந்த போது - (போர்செய்ய) எதிரிடும்போது, நினது நாட்டம் - உனது கண்கள், நோக்குமே - (அப்பிரானுடைய எதிரே நின்று) காணத்தான் முடியுமோ? (எ - று.)

இராமபிரானிடத்து அச்சத்தினால் வீரத்தோடு எதிர்நின்று தொழில் செய்யமாட்டாமல் மாயமானை ஏவி அப்பிரானைப் பிரித்து நான் தனிப்பட்ட அச்சமயத்தில் மாறுவேடம் பூண்டுவந்து வஞ்சித்து என்னைக் கவர்ந்தாய்; நீ இப்போது உயிர்பிழைத்திருக்க விரும்புவாயாயின் என்னைக் கொண்டுபோய் அவ்விராமபிரானிடமே விட்டிடு; விட்டிடாயாயின், எதிரிட்டுச் செய்ய வேண்டிய போரில் அப்பிரானது எதிரே நிற்கத்தான் உன்னால் முடியுமோ? என்று சீதை கூறினளென்க. "பெருமாள்கண்வட்டத்திலே நின்று நீ தப்புவையோ? புலிமுன்னே நிற்கும் நாய்போலே பதினாலாயிரம்பேரைத் தனியே நின்று கொன்று குறையாடின தனிவீரத்துக்கு ப்ரதிக்ரியையாக மாரீசனைக்கொண்டு நீ பண்ணின க்ரித்ரிமத்திலே கண்டிலோமோ? அவ்வாண்

புலிகள் நாற்றம் கெட்டுகின்றால், பின்பன்றோ உன்வெற்றியும் ஆண்பிள்ளைத் தனமுங் காணலாம்" என்ற தனிஸ்லோகவாக்கியங்கள் இங்குக் காணத்தக்கன. உன்குலத்துக்கெல்லாம் நஞ்சினை என்பதற்கு - உனது குலம்முழுதுக்கும் நஞ்சு போன்ற என்னை, எதிர்ந்தபோது நோக்குமே நினது நாட்டம் - எதிரில்வந்த போது உனதுகண்கொண்டு கூசாது பார்க்கக்கடவையோ? என்று உரைத்து, உனதுகண்களால் என்னை நேர்நின்றுபார்த்தலால் உனதுகுலத்துக்கே நாசம் விளையுமென்று கூறியதாகக் கருத்துக் கொள்ளலும் ஒன்று. அற்றம் - நீங்கின சமயம்: 'அறு' என்னும் முதனிலையடியாகப்பிறந்த தொழிற்பெயர், ஆகுபெயராய்வந்தது. (௪௧)

௪௨. பத்துளதலையுந்தோளும்பலபலபகழி தூவி
வித்தகவில்லினாற்குத்திருவிளையாடற்கேற்ற
சித்திரவிலக்கமாகுமல்லதுசெருவிலேற்குஞ்
சத்தியைபோலுமேனாள்சடாயுவாற்றரையின்வீழ்ந்தாய்.

(இ - ள்.) மேல் நாள் - முற்காலத்தில் [நீ என்னைக்கவர்ந்துசென்ற சமயத்தில்],—சடாயுவால் தரையின் வீழ்ந்தாய் - சடாயுவினாலே (அடிபட்டு மூர்ச்சையாகிப்) பூமியில் விழுந்தவனே! பத்து உள தலையும் - உனதுபத்தாகவுள்ள தலைகளும், தோளும் - தோள்களும்,—பல பல பகழி தூவி - மிகப்பல அம்புகளைப் பிரயோகித்து, வித்தகம் வில்லினாற்கு - வில்வித்தையில்தேர்ந்த இராமபிரானுக்கு, திருவிளையாடற்கு ஏற்ற - திருவிளையாடல் செய்தற்குத் தகுந்த, சித்திரம் இலக்கம் ஆகும் அல்லது - விசித்திரமான இலட்சியப் பொருள் ஆகுமே யல்லாமல், செருவில் - போரில், ஏற்கும் - எதிர்த்துப் போர்செய்கின்ற, சத்தியை போலும் - நீ வலிமையுள்ளவனாவாய்போலும் ?

கிழப்பறவையாகிய சடாயுவுக்கே முன்னே நின்று பொரமாட்டாமல் மூர்ச்சித்துக் கீழ்விழுந்திட்ட நீ பேராற்றல்படைத்த இராமபிரானுக்குமுன்னே நின்று போர்செய்யும் வல்லமையுள்ளவனாவாயோ ? உனக்கு இராமபிரானை எதிர்த்து நிற்றற்கு ஏற்ற வல்லமை சிறிதும் இல்லை; உனது பத்துத்தலைகளும் இருபதுதோள்களும் அப்பிரான் அலட்சியமாகச் செய்யும்போரில் அவனது அம்புக்கு விசித்திரமான இலக்கு ஆகத்தான் வேண்டு மென்று சீதை கூறினளென்பதாம். ஏற்கும் சத்தியைபோலும் என்ற இடத்து, 'போலும்' என்ற ஒப்பில்போலி - சொல்லுவான் குறிப்பினாலாகிய குரல்வேறுபாட்டினால் ஏற்படும் வினாவகையால், ஏற்குஞ் சத்தியையுடையவனல்லை யென்ற பொருளைக் காட்டும். சித்திர இலக்கம் - இதற்குமுன் பார்த்திராத லட்சியம். சத்தியை - சத்தி யென்னும் பகுதியினடியாப் பிறந்த முன்னிலைக்குறிப்பு முற்று. இராவணன் சடாயுவினால் அடிபட்டு மூர்ச்சித்துவிழுந்ததைக் கீழ் ஆரணியகாண்டத்தில் "மாச்சிச் சிரம் பாய்ந்தவன் மார்பினும் தோள்கண் மேலும், ஓச்சிச் சிறகாற் புடைத்தான் கடித்தா னுலையா, மூச்சிற்ற விராவணனும் முடிசாய்ந் திருந்தான்" என்றதனால் அறியலாம். (௪௨)

௪௩. தோற்றனைபறவைக்கன்றுதுள்ளுநீர்வெள்ளஞ்சென்னி
யேற்றவன்வாளால்வென்றாயன்றெனினிறத்தியன்றே
நோற்றநோன்புடையவாழ்நாள்வரமிவைநுனித்தவெல்லாங்
கூற்றினுக்கன்றேவீரன்சரத்திற்குங்குறித்ததுண்டோ.

(இ - ள்.) அன்று - முன்னாளில், பறவைக்கு-(சடாயுவென்னும்) பட்சிக்கு, தோற்றனை - தோற்றுப்போனாய்; (அப்படியிருந்தும்), துள்ளும் நீர் வெள்ளம்- பொங்கிப் பாய்கின்ற நீர்ப்பெருக்கையுடைய கங்காநதியை, சென்னி ஏற்ற வன் - (தனது) சிரசிற் கொண்டுள்ள சிவபிரானது, வாளால் - (சந்திரஹாஸ மென்னும்) வாளாயுதத்தினால், வென்றாய் - (அந்தச் சடாயுவைக் கொன்று) வெற்றிபெற்றாய்; அன்று எனின் - அந்தவாளினுதவி யில்லாவிட்டால், அன்றே இறத்தி - அப்பொழுதே செத்துப்போயிருப்பாய்; நோற்ற நோன்பு உடைய - செய்த தவத்தின் பயனாக (உனக்குக்) கிடைத்த, வாழ் நாள் - (கோடிக்கணக்கான) ஆயுள்நாளும், வரம் - பின்னும் வரபலங்களும்; (ஆகிய), இவை நுனித்த எல்லாம் - குறித்துக் கூறிய இவையாவும், கூற்றினுக்கு அன்றே - யமதேவனால் உனக்கு ஒரு துன்பமும் நேரிடாமலிருத்தற்கு அல்லவோ? வீரன் சரத்திற்கும் குறித்தது உண்டோ - (அந்த உனது வரங்கள் முழுதும்) இராம பிரானது அம்புகளாலும் யாதொரு தீங்கும் நேராமலிருப்பதைக் குறிப்பன வாகுமோ? (எ - று.)

உனதுவலிமையையொடுக்கிய சடாயுவைச் சிவபெருமான் உனக்குத்தந்த வா ளாயுதத்தைக் கொண்டு வென்றாயேயல்லாமல், அந்தவாள் இல்லாவிட்டால் நீ அப்போதே இறந்திருப்பாயல்லவோ? வரபலமே யல்லாமல் இவ்வாறு உடல் வலிமையில்லாத நீ தவஞ்செய்து தேவர்களிடம் நீண்டஆயுள் முதலிய வரபலங் களைப் பெற்றாயென்றாலும் அந்தவரங்கள் யாவும் யமன் தானே உன்னைக் கொண்டுபோவதைத் தடுக்குமே யல்லாமல் மானிடனாகத் திருவவதரித்துள்ள இராமபிரானது பாணத்தைத் தடுக்கும் வல்லமையுடையனவல்லவே என்று சீதை கூறினளென்க. எல்லாரும் யமன்வாய் வீழ, நீ இராமபிரானது அம் பின்வாயில் வீழ்வா யென்கிறாள் சீதை யென்க. "அன்னகாலையயன் மீமுன்றி யவனைநோக்கியருந்தவத்தி, னின்னையொப்பார் நீயன்றி யொருவரில்லை நின் கரத்தான், முன்னமரிந்ததலையெல்லாம் முன்புபோல முளைத்திடுக," "பின் னும் சொல்லும் பிதாமகன்றான் பெருநுதவத்து நீயிங்குச், சொன்ன சொன்ன வரந்தருவேன் சொல்லென்றுரைக்கத் தொல்லுலகில், மன்னுமனிசர்தமைப் பொருளாய் மனத்தினினையான் வாளரக்கனுன்னு பொருளொன்றொழியாமல் வேண்ட விரிஞ்சனுவந்தளித்தான்," "மூவகையுலகுமாள முறைநூற்றுக் கோடியாண்டும், எவ்வகைப்பகையும் வெல்லும் சந்திரவாளு மீந்தான்" என்ப வற்றால் பிரமதேவனும் சிவபிரானும் இராவணனுக்கு வரங்கள் அளித்தமையை அறிக. (௪௩)

௪௪. பெற்றுடைவரனுநாளும்பிறந்துடையுரனும்பின்னு
மற்றுடையெவையுந்தந்தமலரயன்முதலோர்வார்த்தை
விற்றொடையிராமன்கோத்துவிடுதலும்விலக்குண்டெல்லா
மிற்றிடைந்திறுதன்மெய்யேவிளக்கின்முன்னிருளுண்டாமோ.

(இ - ள்.) பெற்று உடை - நீ பெற்றுள்ள, வரனும்—, காளும் - வாழ் நாளும், பிறந்து உடை உரனும் - (உன்னிடத்து) உண்டாயிருக்கின்ற பலமும், பின்னும் உடை மற்று எவையும் - இன்னும் நீ அடைந்துள்ள மற்றை விஞ்சைகளும், (ஆகிய இவற்றையெல்லாம்), தந்த - (உனக்குக்) கொடுத்த, மலர் அயன் முதலோர்- தாமரைமலரில் வாழ்கின்ற பிரமதேவன் முதலியோரது, வார்த்தை- வார்த்தைகள், எல்லாம்- யாவும்,—இராமன்—, வில் தொடை கோத்து விடுதலும் - (தனது) வில்லில் அம்பைத்தொடுத்து விட்டவளவிலே, விலக்குண்டு - விலக்கப்பட்டு, இற்று இடைந்து இறுதல் - துண்டாகிப் பின்வாங்கி யழிதல், மெய்யே - சத்தியமேயாகும்; விளக்கின்முன்—, இருள் உண்டாமோ - இருள் நிற்குமோ? (எ - று.)

அவ்விராமபிரான் அம்பெய்தவளவிலே உனது வரபலமும் மந்திரசக்தியும் தேஹபலமும் மாயாபலமும் மற்றும் அனைத்தும் வலியழிந்திடு மென்பதாம். இராமபிரானது அம்புக்கு முன்னே இராவணனது வரபலம் முதலியன நிற்கமாட்டாத்தன்மைக்கு விளக்கின்முன் இருள்நிற்கமாட்டாமையை உவமையாக எடுத்துக் காட்டினார்; எடுத்துக்காட்டுவமையணி. "புரம்பற்றியபோர் விடையோனருளால், வரம்பெற்றவு மற்றுளவிஞ்சைகளு, முரம்பெற்றனவாவனவுண்மையிலேனன், சரம்பற்றியசாபம் விடுந்தனையே" என்ற சடாயுவின் வார்த்தை இங்கு ஒப்புநோக்கத் தக்கது. (௯௪)

௪௫. குன்றுநீ யெடுத்த நாட்டன் சேவடிக் கொழுந்தா லுன்னை
வென்றவன் புரங்கள் வேவத் தனிச்சரந் துரந்த மேரு
வென்றுணைக் கணவ னூற்றற் குரனிலா திற்று வீழ்ந்த
வன்றெழுந் துயர்ந்த வோசை கேட்டிலை போலு மம்மா.

(இ - ள்.) குன்று - கைலாசமலையை, நீ—, எடுத்த நாள் - (வேரோடு பறித்து) எடுத்த காலத்தில், தன் சே அடி கொழுந்தால் - தனது சிவந்த பாதங்களின் விரலால், உன்னை—, வென்றவன் - (அமுத்தி) வென்றவனாகிய சிவன், புரங்கள் வேவ - திரிபுரங்களும் பற்றியெரியும்படி, தனி சரம் துரந்த - ஒப்பில்லாத பாணத்தை விடுவதற்கு இடமாக இருந்த, மேரு - மேருமலையாகிய வில் [சிவதனுசு], என் துணை கணவன் ஆற்றற்கு - எனக்கு உற்றதுணையான நாயகனது வலிமையைத் தாங்குவதற்கு, உரன் இலாது - (ஏற்ற) வலிமையில்லாமல், இற்று வீழ்ந்த - முறிந்துவிழுந்த, அன்று - அப்பொழுது, எழுந்து - தோன்றி, உயர்ந்த - எங்கும்பரவிய, ஓசை - பேரொலியை, கேட்டிலை போலும் - நீ கேட்கவில்லைபோலும்; (எ - று.)

நீ திக்குவிஜயத்திற்குச் சென்றபோது கயிலை உனது பயணத்துக்குத் தடையாகி வழியிடையே கிடந்த தென்ற காரணத்தால் நீ சினந்து பிடுங்கி அப்பா லெறிந்துவிடுவதென்று தொடங்கியபோது தனது பாதத்தின் விரலால் உனதுவலிமையை யொடுக்கிய சிவபெருமானது வில்லும் எனது கணவனான இராமபிரானது ஆற்றலைத் தாங்கமாட்டாது முறிந்திட்டதை, அப்பொழுது

தோன்றிய பேரொலியினால் நீ உணர்ந்திருக்கலாம்; அப்படியிருக்க, நீ இராமபிரானது பேராற்றலை யுணராகில்லாது தாறுமாறாகப் பிதற்றுதலால் அது உன்செவியிற் படவில்லைபோல் தோன்றுகின்றதென்று சீதாபிராட்டி கூறினளென்க. அம்மா - வியப்பிடைச்சொல்; உலகமெங்கும் பரவிய அந்தவில்லிறுசையை, இராவணன் செவியில் மாத்திரம் வீழாமையைக் குறித்து வியந்தவாறு. திரிபுரசங்கார காலத்தில் மேருமலை சிவபெருமானுக்கு வில்லாக அமைந்ததனால், சீதா விவாக காலத்திற் கந்யாசுல்கமாக ஏற்பட்ட சிவதநுசையும் அபேதமாக அம்மேருவாகவே கூறினாள். (௪௫)

வேறு.

௪௬. மலையெடுத் தெண்டிசை காக்கு மாக்களை
நிலைகெடுத் தேனென்று மாற்ற நேருநீ
சிலையெடுத் திளையவ னிற்கச் சேர்ந்திலை
தலையெடுத் தின்னமு மகளிர்த் தாழ்தியோ.

(இ - ள்.) 'மலை எடுத்து - கைலாசமலையைப் பேர்த்தெடுத்து, எண் திசை காக்கும் மாக்களை - எட்டுத்திக்குக்களையும் (ஆங்காங்கு நின்றுகொண்டு) பாதுகாக்கிற திக்கஜங்களை, நிலைகெடுத்தேன் - நிலைகலங்கச் செய்தவென்றேன்', எனும் மாற்றம் - என்கிற வீரவார்த்தையை, நேரும் - சொல்லிக்கொண்டு திரிகிற, நீ—, சிலை எடுத்து - வில்லையேந்திக்கொண்டு, இளையவன் - இளையபெருமாள், நிற்க - நிற்கும்போது, சேர்ந்திலை - வாராமல் பின்வாங்கினாய்; (அப்படிப்பட்ட நீ), இன்னமும்—, தலை எடுத்து - (மகாவீரன் போலத்) தலைதூக்கிக்கொண்டு, மகளிர் தாழ்தியோ - பெண்களின் கால்விலும் வீழ்க்கடவையோ? (எ - று.)

'மலையையெடுத்தேன், அஷ்டதிக்கஜங்களைவென்றேன்'என்று வீரம்பேசுகிற நீ எங்கள் இளையபெருமாள் கையிலே வில்லையேந்தி நிற்கையில் அங்கே வந்து அவரை வெல்லத்தக்க நிர்வாகமில்லாமல் அவரில்லாதபடி தந்திரஞ்செய்து என்னைக் கவர்ந்து வந்து நானும் ஒரு வீரனென்று இன்னமும் இறுமாப்புத்தோன்றத் தலைநிமிர்த்துக்கொண்டு திரிகின்றாயே! அங்ஙிலைக்கு மாறாகப் பெண்ணின் காலிலும் விழுகின்றாயே! உனது வீரம் என்ன வீரம்? என்று சீதாபிராட்டி இராவணனை இகழ்ந்தனளென்க. மகளிர்த் தாழ்தியோ என்றவிடத்து - புருஷோத்தமனாகிய இராமபிரானது தாளில் வீழ்ந்து உய்யலாமே என்ற பொருள் தொனிக்கும். 'ஆற்றனேருநீ,' 'மகளிற்றாழ்தியோ' என்பன பாடாந்தரம்.

இதுமுதல் எழுகவிகள் - மூன்றாஞ்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய கலிவிருத்தங்கள். (௪௬)

௪௭. ஏழைநின்றெளித் துறையின்னதாமெனா
வாழியெங்கோமகனறியவந்தநா
ளாழியுமிலங்கையுமழியத்தாழுமோ
வூழியுந்தியுமுன்னுயிரொடோயுமோ.

(இ - ள்.) ஏழை - அறிவில்லாதவனே! நின் ஒளித்த உறை - நீ ஒளிந்து வாழ்கின்ற உறைவிடம், இன்னது ஆம் - இதுவாகும், என - என்று, எம் கோமகன் - எமது தலைவனாகிய இராமபிரான், அறிய - தெரிந்துகொண்டு, வந்த நாள் - இங்கே வரப்போகின்ற காலத்தில், ஆழியும் - (இலங்கையைச் சூழ்ந்துள்ள) இந்தக் கடலும், இலங்கையும் - இலங்காபட்டணமும், அழிய - அழிந்துபோக, தாழுமோ - (அவ்வளவோடு அப்பெருமானது கோபம்) அடங்குமோ? ஊழியும் - ஊழிக்காலத்துத்தோன்றுகின்ற காலாக்கினியையும், தீயும் - தீந்துபோம்படி செய்யவல்ல, (மிக்கபராக்கிரமமுள்ள), உன் உயிரொடு - உனது உயிரையும் வாங்கித்தான், ஓயுமோ - அடங்குமோ? (எ - று.)

நீ என்னை ஒளித்துக் கொணர்ந்து சிறைவைத்து மறைந்துவாழும் இவ்விடத்தை எனது தலைவனான ஸ்ரீராமன் தெரிந்துகொண்டு நாளைக்கே வருவான்; அப்போது அப்பரமனது கோபாக்கினி என்னைச் சிறைவைத்துள்ள இவ்விலங்கையையும், அதனைச் சூழ்ந்துள்ள கடலையும் அழித்து அவற்றோடுதான் சாந்த மடையுமோ? சாந்தமடையாது; இவ்விலங்காதிபதியாகிய உன்னையும் அழித்துத்தான் சாந்தமடையும் என்று சீதை கூறினளென்பதாம். வாழி - அசை. மூன்றுமடியிலுள்ள உம்மைகள் - எண்ணுப்பொருளன. ஊழி - ஊழிக்காலத்துத் தீக்கு ஆகுபெயர். உம்மை - உயர்வுசிறப்பு. (௪எ)

௪அ. வெஞ்சின வரக்கரை விளித்து வீயுமோ
வஞ்சனை நீசெய வள்ளல் சீற்றத்தா
லெஞ்சலி லுலகெலா மெஞ்சு மெஞ்சுமென்
றஞ்சுகின் றேனிதற் கறனுஞ் சான்றரோ.

(இ - ள்.) (இன்னும் அப்பரமனது கோபம்), வெம் சினம் அரக்கரை - கொடிய கோபத்தையுடைய இராட்சசரை, விளித்து - கொன்று, வீயுமோ - (அவ்வளவோடேயாவது) அடங்குமோ? (அடங்காது); நீ - நீ ஒருத்தன், வஞ்சனை செய - வஞ்சனைத்தொழிலைச் செய்துவிட [மோசமாக என்னைக் கவர்ந்து சிறையில் வைத்திட], (அதன்பயனாக), வள்ளல் சீற்றத்தால் - உதார குணமுள்ள இராமபிரானது கோபத்தினால், எஞ்சல் இல் உலகு எலாம் - யாதொரு குறைவுமில்லாத உலகம் முழுவதும், எஞ்சும் எஞ்சும் - அழிந்துபோய்விடுமே! என்று —, அஞ்சுகின்றேன் —; இதற்கு - இவ்வாறு நான் அஞ்சுவதற்கு, அறனும் - தருமதேவதையும், சான்று - சாட்சியாகும்; (எ - று.) — அரோ - ஈற்றசை.

எனது நாயகனுடைய கோபம் உன்னைமாத்திரமேயன்றி உன் இனத்தவரான அரக்கரையெல்லாம் கொன்றாலும் அடங்காது; இப்படி நீ ஒருவன் செய்த அநியாயத்தினால் இவ்வுலகமெல்லாம் அழிந்துவிடுமே யென்று தருமதேவதை சாட்சியாக நான் அஞ்சுகின்றே னென்று சீதாபிராட்டி கருணைமிகுதியால் இரங்கிக் கூறினளென்க. "ஏக: பாபாநி குருதே - பலம் புங்க்தே மஹாஜந: [ஒருவன் தீச்செயலைப்புரிகிறான்; அதன்பயனை மஹாஜநங்கள் அநுபவிக்கின்றனர்]" என்பது, இங்குக் கருதத்தக்கது. எஞ்சும் எஞ்சும் என்ற அடுக்கு - துணிவுப்பொருளது. (௪அ)

சகூ. அங்கண்மாஞாலமும்விசும்புமஞ்சவாழ்
வெங்கணாய்புன்றொழில்விலக்கிமேற்கொளாய்
செங்கண்மாலுநான்முகன்சிவனென்றேகொலோ
வெங்களையக்னையுநினைந்ததேழைநீ.

(இ - ள்.) அம் கண் மா ஞாலமும் - அழகிய இடத்தையுடைய பெரிய நிலவுலகத்திலுள்ளவர்களும், விசும்பும் - வானுலகத்திலுள்ளவர்களும், அஞ்ச - அஞ்சும்படி, வாழ் - வாழ்கின்ற, வெம் கணாய் - கொடுமையுள்ளவனே! ஏழை - புத்தியில்லாதவனே! தொழில் - (நீ மேற்கொண்டுள்ள) இழிதொழிலை, விலக்கி - நீக்கி, மேல் கொளாய் - மேன்மையான தொழிலைக் கைக்கொள்ள வில்லை; செம் கண் மால் - சிவந்த கண்களையுடைய திருமாலும், நான்முகன் - நான்கு முகங்களையுடைய பிரமதேவனும், சிவன் - சிவபெருமானும், என்றே கொலோ - என்ற இவர்களைப்போலச் சாமானியமாகவோ, எங்கள் நாயகனையும் - எமது தலைவனாகிய இராமபிரானையும், நீ நினைந்தது - நீ கருதியிருப்பது? (எ - று.)

மேலுலகத்தாரும் நிலவுலகத்தாரும் அஞ்சும்படி கொடுந்தொழிலையுடையாய்! நீ செய்கிற அதிக்கிரமமான செயல்களுக்குத் திரிமூர்த்திகளாலும் ஒன்றும் மாறுசெய்ய இயலவில்லை யாதலால், எமது தலைவனும் அவர்களைப் போலவே ஒன்றுஞ்செய்ய இயலாது என்று நீ கருதுவது பெரும்பேதைமை; எமது தலைவர் திரிமூர்த்திகளினும் மிகவும்மேம்பட்டவ ராதலால், உனது அதிக்கிரமச் செயலுக்கு இனி விரைவில்தானே அவரால் ஏற்ற தண்டனை கிடைக்கு மென்று கூறின னென்பதாம். 'விலக்க மேற்கொளாய்' என்று பாடமோதி, விலக்கவும் (நீக்கச்செயலை) மேற்கொண்டுள்ளாய் என்று உரை கூறுவாரு முளர். 'மேற்கொளா' என்றும் பாடம். (சகூ)

ருO. மானுயரிவரெனமனங்கொண்டாயெனிற்
கானுயர்வரைநிகர்கார்த்தவீரியன்
றானொருமனிதனாற்றளர்ந்துளானெனிற்
றேனுயர்தெரியலான்றன்மைதேர்தியால்.

(இ - ள்.) 'இவர் - இந்த எனதுதலைவர், மானுயர் - மனிதர்', என - என்று, மனம் கொண்டாய் எனின் - மனத்தினால் (அலட்சியமாக) நினைத்தாயாயின், கான் - காட்டில், உயர் - உயர்ந்து தோன்றுகின்ற, வரை நிகர் - மலையை யொத்த, கார்த்தவீரியன் தான் - கார்த்தவீரியார்ச்சுனன், ஒரு மனிதனால் - (பரசுராமனென்னும்) ஒரு மனிதனாலே, தளர்ந்து உளான் எனின் - வலியொடுங்கினனென்றால், (அப்பரசுராமனையும் வலியொடுக்கின), தேன் உயர் தெரியலான் தன்மை - தேன்நிறைந்த மலர்மாலையை யணிந்த இராமபிரானது தன்மையை, தேர்தி - ஆலோசித்துப்பார்; (எ - று.)

ஒருகால் நீ எனதுதலைவனைக்குறித்து மானுடன்தானே யென்று அலட்சியமாகக் கருதக்கூடும்: முன்னொருகாலத்து உனது இருபதுதோள்களையும் பிடித்துக் கட்டிச் சிறையிலிட்ட கார்த்தவீரியார்ச்சுனனது ஆயிரந்தோள்களை

யும் தனது கோடாலியினால் துணித்துத் தள்ளிய பாசுராமன் மனிதன்தானே! அப்படிப்பட்ட பரசுராமனையும் எனது தலைவர் தமதுதோள்வலியால் வென்றனரென்றால் இவரை ஒருமனிதனென்று சாமானியமாகக் கருதுதல்கூடுமோ? என்று சீதை கூறினளென்க. மானுயர்-மாநுஷர் என்ற வடமொழியின் விகாரம். கார்த்தவீரியன் - க்ருதவீர்யனது மகனென்று பொருள் படுந் தத்திதாந்த நாமம்.

இராவணன் திக்குவிசயஞ்செய்துவருகிறபோது கார்த்தவீரியார்ச்சுனனது மாகிஷ்மதிநகரத்துக்குச் சென்று போர்செய்ய முயலுகையில், அங்குஉள்ளார் 'எங்களரசன் தனக்குஉரிய மாதர்களுடனேபோய் நருமதையாற்றில் ஜலக்கிரீடை செய்கின்றான்' என்றுசொன்னதனால் அவ்விராவணன் அங்கிருந்து நருமதையாற்றைச் சேர்ந்து அதில் நீராடிக் கரையில் மணலாற் சிவலிங்கத்தையமைத்துப் பிரதிஷ்டைசெய்து பூசிக்கும்பொழுது, அந்தயாற்றில் மேற்கே இறங்கியுள்ள கார்த்தவீரியார்ச்சுனன் தனது நீர்விளையாடலுக்கு அந்நீர்ப்பெருக்குப் போதாதென்ற கருத்தினால் அந்நீரைத் தனதுஆயிரங்கைகளுள் ஐந்நூற்றினால் தடுத்து நீரைமிகுவித்து மற்றை ஐந்நூறு கைகளைக்கொண்டு பலவகைவிளையாட்டுக்கள் நிகழ்த்துகின்றதனால் எதிர்வெள்ளமாகப் பொங்கி வருகிற நீர்ப்பெருக்குத் தனதுசிவலிங்கத்தை நிலைகுலையச்செய்ய, அதனாற் கோபங்கொண்டு அவ்விராவணன் இராக்கதசேனையுடனே சென்று கார்த்தவீரியார்ச்சுனனையெதிர்த்துப் போர்செய்கையில், அவன் தனது ஆயிரங்கைகளுள் இருபதினால் இராவணனது இருபதுகைகளைப் பற்றி மற்றையகைகளால் அவனைப் பலவாறு வருத்திக் கொண்டுபோய்ச் சிறையில் வைத்திட, அதனை விபீஷணனால் அறிந்த அவன்பாட்டனாராகிய புலஸ்தியமகாமுனிவர் அவ்வருச்சுனனிடம் வந்து வேண்டி அவனுக்கு இராவணஜித் என்ற பெரும்பெயரைக் கொடுத்து இராவணனைச் சிறைவிடுவித்துச் சென்றனரென்பதும்; இவ்வருச்சுனன் ஒருகாலத்தில் சேனையுடனே வனத்திற்சென்று வேட்டையாடிப் பரசுராமனது தந்தையான ஜமதக்கினிமுனிவரது ஆச்சிரமத்தை யடைந்து அவரநுமதியால் அங்கு விருந்துண்டு மகிழ்ந்து மீளுகையில், அவரிடமிருந்த காமதேனு அவருக்குப் பல வளங்களையும் எளிதிற் சுரந்தளித்தமை கண்டு அதனிடம் ஆசைகொண்டு அப்பசுவை அவரநுமதியில்லாமல் வலியக்கவர்ந்து போக, அதனையறிந்த அப்பரசுராமன் பெருங்கோபங்கொண்டு ஆயுதங்களுடனேசென்று கார்த்தவீரியார்ச்சுனனுடனே போர்செய்து அவனைப் பதினொரு அக்ஷௌஹிணிசேனையுடனே நிலைகுலைத்து அவனது ஆயிரந்தோள்களையும் தலையையும் தமதுகோடாலிப்படையால் வெட்டி வீழ்த்தி வெற்றிகொண்டாரென்பதும் இங்கு அறியத்தக்கன. (௫0)

௫௧. இருவரொன்றிகழ்ந்தனையென்னின்யாண்டெடல்லை
யொருவனன்றேயுலகழிக்குமூழியான்
செருவருங்காலையென்மெய்ம்மைதேர்தியாற்
பொருவருந்திருவிழுந்தாயம்பொன்றுவாய்.

௫௨

(இ - ள்.) அநாயம் - அநியாயத்திலே, பொருவு அரும் திரு - ஒப்பில்லாத (நினது) ஐசுவரியத்தை, இழந்து—, பொன்றுவாய் - அழிய இருக்கின்றவனே! இருவர் என்று - (ராமலக்ஷ்மணர்களை வேறு துணையற்ற) இருவர் மாத்திரந்தானே யென்று, இகழ்ந்தனை என்னின் - அலட்சியஞ் செய்தாயானால் - யாண்டு எல்லை - யுகத்தின்முடிவில், உலகு அழிக்கும் ஊழியான் - உலகங்களையெல்லாம் அழிப்பவனான சங்காரக்கடவுள், ஒருவன் அன்றே - ஒருவன்மாத்திரமேயல்லவோ? செரு வரும் காலை - (இனிப்) போர் நிகழும்போது, என் மெய்ம்மை - யான் உண்மை கூறினேனென்பதை, தேர்தி - (நீ) உணர்வாய்; (எ - று.)—ஆல் - ஈற்றசை; தேற்றமுமாம்.

'ஒருகால் சீதையாகிய என்னை மீட்க ராமலக்ஷ்மணர்கள் இருவர்தானே வேறொருதுணையில்லாமல் வரப்போகிறார்கள்' என்று நீ அலட்சியமாகக் கருதலாம்; அப்படி நினைப்பது தவறு; சருவசங்காரகாலத்தில் ஒருகடவுள்தானே உலகம்முழுவதையும் அழிக்கின்றான்? அவனுக்கு அப்போது யாவரேனும் துணையுண்டோ? யுத்தம்நேரும்போது அவர் உன்னை மிகஎளிதில்வெல்லவல்லவரென்ற உண்மை உனக்கே புலப்படுமென்றனளென்பதாம். அநாயம் - அந்யாயம் என்பதன் விகாரம். (ருக)

ருஉ. பொற்கணான் றம்பியென் றினைய போர்த்தொழில்
விற்கொணாண் பொருவுதோ ளவுணர் வேறுளார்
நற்கணார் நல்லறந் துறந்த நாளினு
மிற்கணா லிறந்தில ரிறந்து நீங்கினார்.

(இ - ள்.) பொன் கணான் - இரணியாட்சனும், தம்பி - அவனது தம்பியாகிய இரணியகசிபுவும், என்று—, இனைய - இத்தன்மையரான, போர் தொழில் - போர்செய்கின்ற தொழிலிலே, வில் கொள் நாண் பொருவு தோள் - வில்லிற்பூட்டிய நாண் உராய்ந்து தழும்பேறிய தோள்களையுடைய, வேறு உளார் அவுணர் - மற்றுமுள்ள ராக்ஷசர்கள், நல் கண் ஆர் நல் அறம் துறந்த நாளின் உம் - நல்லவழியிற்பொருந்திய சிறந்த தருமத்தைத் தவறினகாலத்தும் [அவ்வசுரர்கள் தருமம்தவறித் தீயவழியிற்சென்றார்களாயினும்], இல் கணால் இறந்திலர் - (பிறர்) மனைவியின்விஷயத்தில் (உன்போல) வரம்பு கடந்து நடவாதவர்களாகியே, இறந்து நீங்கினார் - இறந்தொழிந்தார்கள்; (எ - று.)

முற்காலத்தில் இரணியாட்சன் முதலிய பல அசுரர்கள் தருமநெறிதவறி அதருமஞ்செய்து இறந்தொழிந்தார்களாயினும், அவர்கள் உன்னைப்போலப் பிறர்மனைவியர்விஷயத்தில் தீங்குபுரியவில்லையென்று ளென்க. இதனால், இராவணா! நீ இரணியாக்ஷன்முதலிய அசுரர்களைக்காட்டிலும் கொடியவனென்று அவனைப் பழித்தவாறு. இரணியாக்ஷன் என்ற வடமொழிக்கு ஏற்பப் பரியாயமாகத் தமிழ்ச்சொற்களை யமைத்து 'பொற்கணான்' என்றார். இரணியாக்ஷன்- இந்தப் பூமியையே பாயாகச் சுருட்டிக் கொண்டு போய்ப் பிரளயப் பெருங்

கடலிற் புக்கொளித்து, வராஹாவதாரஞ் செய்த திருமாலாற் கொல்லப்பட்ட வன். அவன்தம்பியாகிய இரணியகசிபு - நான்தான் தெய்வமென்று சொல்லி, கடைசியாக நரசிங்காவதாரஞ்செய்த திருமாலாற் கொல்லப்பட்டவன். நற்க ணோர் நல்லறம் என்பதற்கு - மஹாஞானவான்களான பெரியோர்களால் நிர்ண யிக்கப்பட்ட தருமம் என்று கொள்ளினுமாம்; கண் - ஞானம். இல் - மனை விக்கு ஆகுபெயர்; கண் - மூலம். இறத்தல் - வரம்புகடத்தலும், சாதலும். (ருஉ)

## வேறு.

ருங. பூவிலோனாதி யாகப் புலன்கள்போ நெறியிற் போகாத்
தேவரோ வவுணர் தாமோ நிலைநின்று வினையிற் றீர்ந்தா
ரேவலெவ் வுலகுஞ் செய்யச் செல்வநிற் கிசைந்த தென்றாற்
பாவமோ முன்னீ செய்த தருமமோ தெரியப் பாராய்.

(இ - ள்.) பூ இலோன் ஆதி ஆக - (திருமாலினது நாபீ) கமலத்தை(த் த னக்கு) இருப்பிடமாக வுடைய பிரமன்முதலாக, புலன்கள் போம் நெறியில் போகா - (சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற) ஐம்புலன்களின்வழியிற் செல்லாத [ஐம்பொறிகளையும் சப்தாதி விஷயங்களிலே செலுத்தாமல் தமதுமனத்தை அடக்கியாளுகின்ற], தேவரோ - தேவர்களோ, அவுணர்தா மோ - அசுரர்களோ, நிலைநின்று - நிலைத்திருந்து [அழியாமல்], வினையின் தீர்ந்தார் - பாவங்களினின்று நீங்கியுள்ளார்? [தேவர்களே ஜிதேந்த்ரி யர்களாதலால் நல்வினைப்பயனை யனுபவித்த வண்ணம் நீடித்து நிற் கிறார்கள் என்றபடி]; (புண்ணியம் நன்மையை விளைக்கு மென்பதற்கு வேறுஉதாரணம் தேடவேண்டுமோ?) எ உலகும் - எல்லாவுலகத்தாரும், ஏவல் செய்ய - (உனது) கட்டளைக்கு அடங்கி நடக்கும்படி, செல்வம் - பெரும்பாக் கியம், நிற்கு இசைந்தது என்றால் - உன்னிடத்தில்தானே அமைந்திருக்கு மானால், (அது), பாவமோ - பாவத்தின்பயனாக விளைந்ததோ? (அன்றி), முன் நீ செய்த தருமமோ - முற்காலத்தில் [உனது இளம்பிராயத்தில்] நீ செய்த தருமச்செயலின் பயனாக விளைந்ததோ? தெரிய பாராய் - (இதனை) நன்றாக விளங்க ஆலோசித்துப்பார்; (எ - று.)

அசுரர்கள் தமது தீவினையால் அழிந்துவிட, பிரமன் முதலிய எல்லாத் தேவர்களும் நீடித்த ஆயுளைப் பெற்றுப் போகங்களை யனுபவித்தற்குக் கார ணம் அவர்கள் செய்த தருமமே; இவ்வளவுதூரம் அவர்களைப்பற்றிச் சொல்லு வானேன்? உனக்கு இப்போதுகிடைத்துள்ள பாக்கியம் நீ இளமையிற் செய்த புண்ணியத்தின்பயனாகித்தான் தோன்றியிருக்கின்றதென்று உனக்கே தெரியாதா? அப்படியிருக்க, நீ ஏன் இப்போது பாவகாரியங்களைச்செய்து அழிந்துபோக வழிதேடுகின்றாயென்று சீதை அவ்விராவணனுக்கு நன்மதி கூறினளென்க. "அத்யுத்கடை: புண்யபாபை: இஹைவ பலம் அச்நுதே [ஒருவன் பாவத்தையேனும் புண்ணியத்தையேனும் மிகச்செய்தானாயின், அவன் இப்பிறப்பில்தானே அவற்றின்பயனை நுகர்வான்]" என்றபடி நீ இளம்

பிராயத்திற் செய்த பெரும்புண்ணியத்தின் பயனாக உனக்குக் கிடைத்துள்ள பெரும்பாக்கியம், எந்த அசுரராலுஞ் இதுவரையிற் செய்யப்படாத பெரும் பாதகமாகிய பிறர்மனைவியை விரும்புதலாகிற இப்பெரும்பாதகத்தால் அழிந்து விடுமே! இதனை ஆலோசித்துப் பார்க்கவேண்டாமா? என்ற கருத்து ஈற்றடியில் தோன்றும். 'செல்வநிற்கீந்ததோராய்' என்றும் பாடம். (௫௩)

௫௪. இப்பெருஞ்செல்வநின்கணீந்தபேரீசன்யாண்டு
மப்பெருஞ்செல்வந்துய்ப்பானின்றுமாதவத்தினன்றே
யொப்பருந்திருவுநீங்கியுறவொடுமுலக்கவுன்னித்
தப்புதியறத்தையேழாய்தருமத்தைக்காமியாதே.

(இ - ள்.) இ பெருஞ் செல்வம் - இப்படிப்பட்ட பெரிய செல்வத்தை, நின்கண் ஈந்த - உனக்குக் கொடுத்த, பேர் ஈசன் - பெருமையுள்ள சிவபெருமான், யாண்டும் - எப்பொழுதும், அ பெரும் செல்வம் - அப்படிப்பட்ட பெருஞ்செல்வத்தை, துய்ப்பான் - அனுபவிப்பவனாவது, இன்றும் - இப்போதும், மா தவத்தின் அன்றே - பெருந்தவத்தில் நிலைநிற்றலா லல்லவோ? ஏழாய் - அறிவில்லாதவனே! ஒப்பு அரு திருவும் நீங்கி - ஒப்பில்லாத உனது பெருஞ்செல்வமும் ஒழிந்து, உறவொடும் உலக்க - (உனது) சுற்றத்தாரோடும் அழியும்படி, உன்னி - நினைத்து, தருமத்தை காமியாது - தரும வழியில் நடத்தலை விரும்பாமல், அறத்தை தப்புதி - அந்தத்தருமத்தைத் தப்பிநடக்கிறாய்; (எ - று.)

மஹத்தான ஐசுவரியமுடையவ னென்பது பற்றி, சிவபெருமானுக்கு 'ஈசன்' என்று பெயர். சிவபெருமான் உன்போலியர்க்கு வேண்டிய பெருவரங்களை அளிக்குமாறு பெருஞ்சிறப்புடையவனாயிருத்தற்குக் காரணம் அவன் எப்போதும் தருமநெறியில் தவறாது நிற்றலினாலேயேயாம்; இதனால், தேவர்களான அவர்கட்கும் தருமநெறிதவறாது நிற்கவேண்டுவது இன்றியமையாததென்று தெளிவாக ஏற்பட, நீ தருமத்தைவிரும்பாமல் தவவலிமையாற் பெற்ற ஐசுவரியத்தையும் இழந்து பந்துமித்திரரோடு அழிய வழி தேடுகின்றனையே! இது என்ன அறிவீனம்!! என்று சீதாபிராட்டி இராவணனுக்குக் கட்டுரை கூறின ளென்க. மாதவத்தின் நின்று அன்றேஎன்று எடுத்து - பெருந் தவத்தில் நிலைத்துநிற்றலினா லல்லவா? என்றும் பொருள்கூறலாம். இனி, முதலிரண்டடிக்கு - பேரீசன் நின்கண் இப்பெருஞ்செல்வம் ஈந்த(து), (நீ), யாண்டும் - எப்போதும், மாதவத்தின் நின்று அப்பெருஞ்செல்வம் 'துய்ப்பான் [துய்க்கும்பொருட்டு] அன்றே' என்று பொருளுரைத்து, அப்படிப்பட்ட செல்வம் முதலியன அழியும்படி தருமத்தைத் தவறலாமோ? என்று உரைகாணலுமாம். 'நினது மாதவத்தினன்றே' என்று பாடமோதி, பொருள்காணுவாரு முளர். வற்புறுத்தற்பொருட்டு உடன்பாட்டுமுகத்தினாலும் எதிர்மறை முகத்தினாலுமாக 'தப்புதியறத்தை', 'தருமத்தை காமியாதே' என்று கூறினாள். 'ஈந்தபேரின்னம்', 'செல்வத்துய்ப்பானின்றுமாதவத்தனன்றே' 'திருவினீங்கி', 'உலக்கமுன்னி' என்பன பாடாந்தரம். (௫௪)

௫௫. மறந்திறம்பாததோலாவலியின ரெனினுமாண்டா
ரறந்திறம்பினருமக்கட்கருடிறம்பினருமன்றே;
பிறந்திறந்துழலும்பாசப்பிணக்குடைப்பிணியிற்றீர்ந்தார்
துறந்தரும்பகைகண்மூன்றுந்துடைத்தவர்பிறர்யார்சொல்லாய்.

(இ-ள்.) மறம் திறம்பாத - வீரத்தினின்று வழுவாத, தோலா - (எவரிடத்தும்) தோல்வியடையாத, வலியினர்-பலமுள்ளவர், எனினும்- ஆனாலும், அறம் திறம்பினரும்-தருமமார்க்கந் தவறினவர்களும், மக்கட்கு அருள் திறம்பினரும்-மனிதர்கள்விஷயத்தில் இரக்கமில்லாதவர்களும், மாண்டார் அன்றே - (அத்தீவினையினால்) இறந்தொழிவார்களல்லவா? துறந்து - (பற்றுக்களை) நீங்கி, அரு பகைகள் மூன்றும் - (அழித்தற்கு) அரிய (காமம் வெகுளி மயக்கம் என்ற) மூன்று உட்பகைகளையும், துடைத்தவர் - போக்கினவர்கள்,—பிறந்து இறந்து உழலும் - பிறந்து இறந்து அலைகிற, பாசம் பிணக்கு உடை - பாசமாகிய பந்தத்தையுடைய, பிணியின் - (இந்த ஸம்ஸாரமாகிற) நோயினின்று, தீர்ந்தார் (அன்றே) - நீங்கினவரல்லவோ? பிறர் யார் - (பாசபந்தமாகிற பிணியினின்று தீர்ந்தவர்) வேறு யாவர்? சொல்லாய் - (இதனை) நீ சொல்வாயாக; (எ - று.)

மிக்கவலிமையுள்ளவரானாலும், தருமந்தவறினவர்களும் அருளற்றவர்களும் அத்தீவினைப்பயனால் இறந்தொழிந்தவர்களேயாவர்; காமம் வெகுளி மயக்கம் என்னும்உட்பகைகளை யொழித்தவர்களே, அவ்வகைப்பிறவித்துன்பத்தினின்று நீங்கி ஈடேறுவார்க ளென்றன னென்க: இதனால், நீ எவ்வளவு பலசாலியாயிருந்தபோதிலும் அறமும் அருளும் அற்ற செயலைச் செய்வதனால் இறந்தழிவது திண்ணம்; பிறத்தல் இறத்தல் என்ற இந்தப் பாசபந்தபிணியினின்று நீ ஈடேற விரும்பினால், காமம் வெகுளி மயக்கம்என்ற உட்பகைகளை உடனே யொழிக்கவேணு மென்று உபதேசித்தவாறு. மாண்டார் - தெளிவினால், எதிர்காலம் இறந்தகாலமாகச் சொல்லப்பட்ட காலவழுவமைதி. இனி, மாண்டார் - மாட்சிமைப்பட்டவரென்று கொண்டு, மாண்டாரது அறத்தை என்று இயைத்து, அன்று - (பிணியில்தீர்ந்தார்) அல்லர் என்று பொருள் கூறிலுமொன்று; இப்பொருளில், ஏகாரம் - அசை. முன்னைய பொருளில், ஏகாரம் - எதிர்மறைப்பொருளைக் காட்ட, அன்று என்ற எதிர்மறைச்சொல்லும் சேர்ந்து தேற்றப்பொருளைக் காட்டிற் றென்னவேண்டும். (௫௫)

௫௬. தென்றமிழுரைத்தோன்முன்னாத்தீதுதீர்முனிவர்யாரும்
புன்றொழிலரக்கர்க்காற்றேநோற்கிலம்புகுந்தபோதே
கொன்றருணின்னாலன்னார்குறைவதுசரதங்கோவே
யென்றனர்யானேகேட்டேனீயிதற்கியைவசெய்தாய்.

(இ - ள்.) புகுந்த போது - (இராமபிரான் தண்டகாரணியத்திற்) பிரவேசித்தபொழுது, தென் தமிழ் உரைத்தோன் முன் ஆ - இனிய தமிழ்ப்பாஷை

யை வளர்த்த அகத்தியமுனிவர் முதலாக, தீது தீர் முனிவர் யாரும் - குற்ற மற்ற (தண்டகாரணியவாசிகளான) இருடியர் யாவரும், (இராமபிரானைநோக்கி), 'கோவே - எமதுதலைவனே! புல் தொழில் அரக்கர்க்கு - இழிதொழிலையுடைய அரக்கர்செய்கின்ற உபத்திரவத்தைப் பொறுத்தற்கு, ஆற்றேம் - வல்லமையுடையோ மல்லோம்; நோற்கிலம் - தவஞ்செய்யவும் முடியாதவரானோம்; கொன்றருள் - (அவ்வரக்கர்களையெல்லாம்) கொன்று (எங்கட்கு) அருள்செய்யவேணும்; நின்னால் - உன்னால், அன்னார் - அந்தராக்ஷஸர்கள், குறைவது - அழிந்தொழிவது, சரதம் - நிச்சயம்,' என்றனர் - என்று முறையிட்டார்கள்; யானே கேட்டேன் - (அவ்விருடியரின்முறையீட்டை) நானே நேரிற்கேட்டுள்ளேன்; நீ—, இதற்கு - இந்தமுறையீட்டுக்கு, இயைவ - தக்க கொடுஞ்செயல்களையே, செய்தாய் - செய்துள்ளாய்; (எ - று.)

இராமபிரான் தண்டகாரணியத்திற் புகுந்தபோது அங்கு வசிக்கின்ற முனிவர்யாவரும் திரண்டு இராமபிரானைச் சரணமடைந்து அரக்கர்செய்யுங் கொடுமைகளைக் கூறி முறையிட்டு, அவர்களை யழித்துவிடவேணு மென்று பிரார்த்தித்தார்கள்; அதற்குத் தக அரக்கர் யாவரும் சமூலமாக ஒழியும்படி நீ காரியஞ்செய்துவருகிறாய்; ஆதலால், இப்போது நீயும் உன்னைச்சேர்ந்த அரக்கர்யாவரும் அழிந்தொழிவது திண்ண மென்று சீதாபிராட்டி கூறினளென்க. "ஈண்டுறைதியைய வினியிவ்வயினிருந்தால், வேண்டியன மாதவம் விரும்பின முடிப்பாய், தூண்டுசின வாளிருதர் தோன்றிபுள ரென்றால், மாண்டுகெமலைந் தெமர் மனத்துயர் துடைப்பாய்"என்று அகத்தியமுனிவரும், "இரக்கமென்றொரு பொருளிலாத நெஞ்சினர், அரக்கரென்றுளர்சில அறத்தினீங்கினார், நெருக்கவும்யாம்படர் நெறியலாநெறி, துரக்கவுமருந்தவத்துறையுணீங்கினேம்" என்றுதொடங்கி, "உருளுடைநேமியாலுலகையோம்பிய, பொருளுடைமன்னவன் புதல்வ போக்கிலா, இருளுடைவைகலே மிரவிதோன்றினை, யருளுடை வீரநின் னபயம்யாம்" என்பது முதலியாக மற்றைமுனிவர்களும் கீழ்ஆரணியகாண்டத்துக் கூறியது காண்க. 'தென்தமிழிசைத்தோன்' 'முன்னுள்' என்றும் பாடம். (நிகூ)

நிஎ. உன்னையுங்கேட்டுமற்றுன் னூற்றமுமுடையநாளும்
பின்னையிவ்வரக்கர்சேனைப் பெருமையுமுனிவர்பேணிச்
சொன்னபினுங்கைமூக்குமும்பியர்தோளுந்தாளுஞ்
சின்னபின்னங்கள்செய்தவதனைநீசிந்தியாயோ.

(இ - ள்.) உன்னை கேட்டு உம் - உன்னைப்பற்றிக் கூறியதைக் கேள்வியுற்றபின்பும், உன் ஊற்றமும் - உனதுவலிமையும், உடைய நாளும் - நீ பெற்றுள்ள ஆயுள்வலிமையும், பின்னை - பின்னையும், இ அரக்கர் சேனை பெருமையும் - இந்த இராட்சசர்களுடைய சேனையின் பெருக்கத்தையும், முனிவர் - (தண்டகாரணியவாசிகளான) ருஷிகள், பேணி சொன்னபின் - மிகவிரும்பிக் கூறியபின்பும், உங்கை - உன்தங்கையாகிய சூர்ப்பணகி யினுடைய, மூக்கும் -

மூக்கு முதலிய உறுப்புக்களையும், உம்பியர் - உனது தம்பிமார்களாகிய கரன்முதலியோரது, தோளும - தோள்களையும், தாளும் - கால்களையும், சின்ன பின்னங்கள் செய்த - துண்டுதுண்டாக வெட்டிய, அதனை - அச்செய்தியை, நீ சிந்தியாயோ - நீ நினைக்கமாட்டாயோ? (எ - று.)

தண்டகாரணியவாசிகளான முனிவர்களின் மூலமாக உனதுவரலாறுமுழுதும் அறிந்த பின்பே இராமபிரான் உன்னைச் சிறிதும் பொருள்செய்யாது உனது தங்கை சூர்ப்பணகையினது மூக்குமுதலிய உறுப்புக்களை யறுத்ததையும், அவளது தூண்டுதலினால் பெருஞ்சேனைகளோடு எதிர்த்துவந்த உனது தம்பியரான கரன் முதலியோரை மிகஎளிதில் வெகுவிரைவில் அழித்ததையும், நீ சிந்தித்துப் பார்க்கவில்லையோ? நீ சிந்தித்துப்பார்த்திருந்தால், இவ்வாறு இராமபிரானைப்பற்றி அஞ்சாது தீச்செயலைச்செய்தலும் கடுஞ்சொற்களைச் சொல்லுதலும் செய்யமாட்டா யென்பதாம். இராவணனது வலிமை முதலியவற்றைத் தண்டகாரணியவாசிகளான முனிவர்கள் கூறினா ரென்பதை, இங்கு அநுவாதமுகத்தாற் கவி கூறுகின்றன ரென்க. இராமபிரான் அரக்கரால் தமக்குநேர்ந்துள்ள தீங்கையெல்லாம் போக்குவ னென்பது பற்றி, அப்பரமனிடத்து முனிவர்கள் இராவணன்செயலை மிக்கஆதரத்தோடு சொன்னா ரென்பார், 'பேணிச் சொன்னபின்' என்றார். (௫எ)

௫அ. ஆயிரந்தடக்கையானின்னைநான்குகரமும்பற்றி
வாய்வழிகுருதிசோரக்குத்திவான்சிறையில்வைத்த
தூயவன்வயிரதோள்கடுணித்தவன்றொலைந்தமாற்ற
நீயறிந்திலையோவேகுநெறியறிந்திலாதநீசா.

(இ - ள்.) ஏகும் நெறி அறிந்து இலாத நீசா - செல்லவேண்டிய சன்மார்க்கத்தை இன்னதென்று அறிந்திராத இழிகுணமுடையவனே! நின் - உனது, ஐந்நான்கு கரமும் - இருபதுகைகளையும், பற்றி - பிடித்துக்கொண்டு, வாய் வழி குருதி சோர - (உனது) வாயின் வழியாக இரத்தஞ் சொரியும்படி, குத்தி—, வான் சிறையில் வைத்த - பெருஞ்சிறையில் (உன்னை) அடைத்த, தூயவன் - சுத்தவீரனை, ஆயிரம் தட கையான் - பெரிய ஆயிரங்கைகளையுடையவனாகிய கார்த்தவீரியார்ச்சுனனது, வயிரம் தோள்கள் - பெருவலிமையுடைத்த தோள்களை, துணித்தவன் - வெட்டித்தள்ளியவனாகிய பரசுராமன், தொலைந்த - (இவ்விராமபிரானால்) வலியழிந்த, மாற்றம் - செய்தியை, அறிந்திலையோ—? (எ - று.)

தோள்வலியையடக்கி உன்னைக் கார்த்தவீரியார்ச்சுனன் பிடித்துச் சிறையில் வைத்தான்; பரசுராமன் அப்படிப்பட்டவனது ஆயிரந்தோள்களையும் சிதைத்து உயிரொழித்தான்; அப்படிப்பட்ட பரசுராமனை எமது இராமபிரானுக்குமுன் வலியழிந்து ஒடுங்கிவிட்டானே; இது உனக்குத் தெரியாதோ? அதனை யறிந்தபின்பும் வழியல்லாவழியிற் சென்று மாளக்கடவாயோ! என்று சீதை கூறினா ளென்பதாம். இங்கு, இராவணனினும் மேம்பட்டவன் கார்த்த

வீரியன்; அவனினும் மேம்பட்டவன் பரசுராமன்; அவனையும் அடக்கி மேம்பட்டவன் இராமபிரான் என்று அப்பெருமானது பெருமையை விளக்கியது - மேன்மேலுயர்ச்சியணி; இதனை, வடநூலார் ஸாரலங்காரமென்பர். (௫௮)

௫௯. கடிக்கும்வல் லரவுங் கேட்கு மந்திரங் களிக்கின் றோயை
யடிக்குமீ தடாதென் றான்ற வேதுவோ டறிவு காட்டி
யிடிக்குந ரில்லை யுள்ளா ரெண்ணிய தெண்ணி யுன்னை
முடிக்குந ரென்ற போது முடிவன்றி முடிவ துண்டோ.

(இ - ள்.) கடிக்கும் வல் அரவும் - கடித்துக்கொல்லவல்ல கொடிய ஸர்ப்பமும், மந்திரம் - மந்திரத்தை, கேட்கும் - கேட்டு அடங்கிநடக்கும்; (அதுபோல, நீயும் ஏற்ற மந்திரம் கூறுவாரிருப்பின் அதற்குக் கட்டுப்பட்டு நடப்பாய்;) களிக்கின்றோயை - (யதேச்சையாகக்) களிப்புக்கொண்டு திரிகின்ற உன்னை, 'ஈது அடுக்கும் - இது தக்கது, (ஈது) அடாது - இது தகாது,' என்று—, ஆன்ற ஏதுவோடு - சிறந்த காரணங்களுடனே, அறிவு - நல்லறிவை, காட்டி-எடுத்துத்தெரிவித்து, இடிக்குநர்-(உனக்கு) நன்மதியை யிடித்துச் சொல்லுபவர், இல்லை - ஒருவருமில்லை; உள்ளார்-உன்னிடம் இருப்பவர்களோ, எண்ணியது எண்ணி - (நீ) நினைத்ததையே தாமும் நினைத்து, (தாங்கள் ஆராய்ந்து நற்புத்தி எதனையும் சொல்லாமல்), உன்னை முடிக்குநர் - உன்னை யழிப்பவராயிருக்கிறார்கள், என்ற போது - என்றால், முடிவு அன்றி - (உனக்கு) நாசம் நேரிடுமேயல்லாமல், முடிவது உண்டோ - முடியுந்தொழில் வேறு உளதோ? (எ - று.)

விஷஸர்ப்பமும் மந்திரத்துக்குக் கட்டுப்பட்டு நடப்பதாயிருப்பதுபோல, நீயும் மந்திரத்துக்குக் கட்டுப்பட்டு நடக்கக்கூடு மென்றாலும், இப்போது உன்னைச்சுற்றி நன்மந்திரிகள் எவருமில்லாதொழிய, உள்ளவர்கள் உன்னோடு ஒருமனமுடையராய், உன்னையழிக்கக்காத்திருக்கிறார்கள்: அதனால், உனக்கு நாசமுண்டாகுமே தவிர நன்மை யுண்டாகா தென்று கூறியவாறாயிற்று. 'ஈது' என்பது - முன்னும் பின்னும் சென்று இயைதலால், மத்திமதீபமாம். மந்திரம் என்பது - ஆலோசனையென்பதையும், மறைமந்திரமென்ற பொருளையுங் காட்டும். 'இல்லையுன்னுவெண்ணியது,' 'முடிக்கின்றபோது' முன்னின் என்பன - பாடாந்தரம். (௫௯)

## வேறு.

[இராவணனுக்குக் கோபம் மிகுதல்.]

௬0. என்ற தத்துறை கேட்டலு மிருபது நயன
மின்றி றப்பன வொத்தன வெயில்விடு பகுவாய்
குன்றி றத்தெழித் தாரப்பினன் குறிப்பதென் காமன்
றன்றி றத்தையுங் கடந்தது சீற்றத்தின் றகைமை.

(இ - ள்.) என்று—, அறம் துறை - தரும மார்க்கத்தை, கேட்டலும் - (பிராட்டி சொல்லக்) கேட்டவுடனே, (இராவணனது), இருபது நயனம் - இருபதுகண்களும், மின் திறப்பன ஒத்தன - மின்னல்தோன்றுவதை யொத்திருந்தன [கண்களில் நெருப்புப்பொறி பறந்தன என்றபடி]; வெயில் விடு பகு வாய் - உக்கிரத்தை வெளிக்காட்டுகிற பிளந்துள்ள (தனது) ஒருபதுவாய்களாலே, குன்று - மலைகளும், இற - இற்றுவிழும்படி, தெழித்து உரப்பினன் - அதட்டி யாரவாரித்தான்; குறிப்பது என் - (நாம்) சொல்லுதற்கு யாது உளது? சீற்றத்தின் தகைமை - (அவனது) கோபத்தின் தன்மை, காமன் தன் திறத்தையும் கடந்தது - மன்மதனது வல்லமையையும் மீறிவிட்டது; (எ - று.)

இப்படிச் சீதாபிராட்டி இராவணனைநோக்கித் தருமோபதேசஞ் செய்யவே, அவன் அது தனக்கு அநிஷ்டமாயிருத்தலாலே பொறுக்காமல், சீதாபிராட்டியினிடம் தான் கொண்ட காதலையும் மறந்து கடுங்கோபங்கொண்டு தனது இருபது கண்களிலும் நெருப்புப்பொறி பறக்கத் தனதுபத்துவாய்களினாலும் அப்பிராட்டியை அதட்டி அச்சுறுத்தினனென்பதாம். காமத்தையும் கோபம் வென்றுவிட்ட வியப்பை 'குறிப்பதென்?' என்பதனால் விளக்கினர்.

இதுமுதல் ஐந்துகவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் மாச்சீர்களும், மற்றை மூன்றும் விளச்சீர்களுமாகிய நெடிலடி நான்குகொண்ட கலிநிலைத்துறைகள். (சுO)

[இராவணனது சீற்றமும் காதலும்.]

சுக. வளர்ந்தநாணினன்மாதிரமனைத்தையுமறைவித்
தளந்ததோளினனனல்சொரிகண்ணினனிவளைப்
பிளந்துதின்பெனென்றுடன்றனன்பெயர்ந்தனன்பெயரான்
கிளர்ந்தசீற்றமுங்காதலுமெதிரெதிர்கிடைப்ப.

(இ - ள்.) (இராவணன்), வளர்ந்த நாணினன் - மேன்மேல் வளர்கின்ற வெட்கத்தையுடையவனும், (அப்போது மூண்ட கோபத்தினால்), மாதிரம் அனைத்தையும் - திக்குக்களையெல்லாம், மறைவித்து - மறையச்செய்து, அளந்த - அளாவுகின்ற, தோளினன் - தோள்களையுடையவனும், அனல் சொரி கண்ணினன் - நெருப்பைக்கக்குகின்ற கண்களையுடையவனுமாய், 'இவளை—, பிளந்து தின்பென்—', என்று - என்றுசொல்லி, உடன்றனன் - கோபித்து, கிளர்ந்த - (இப்படிப்) பொங்கியெழுந்த, சீற்றமும் - கோபமும், காதலும் - (பிராட்டியினிடத்துக்கொண்ட) ஆசையும், எதிர் எதிர் கிடைப்ப - மாறிமாறித்தோன்ற, பெயர்ந்தனன் பெயரான் - (அப்பிராட்டியுள்ள இடத்தை நோக்கிச்) செல்லுதலும் செல்லாமலிருத்தலு முடையவனானான்; (எ - று.)

'ஒருபெண் இப்படித்தனக்குப்புத்தி கூறுமாறு ஆயிற்றே!' என்று நினைக்க நினைக்க ஒருபால் வெட்கம் மேலிட்டு, மற்றொருபால் தனது கருத்து ஈடேறாமையாற் கோபம் மிக, அதனால் தோள்கள் வளரக் கண்கள் நெருப்புப்பொறி

பறக்க, 'இவளைப் பிளந்து தின்பேன்' என்று எழுந்து, அப்பிராட்டியினிடங் கொண்ட மோகத்தினால் அடியெழாமற் சிறிதுபின்வாங்க இவ்வாறு ஒன்றும் செய்யமாட்டாது தவித்தனன் இராவணனென்பதாம். கீழ்ச்செய்யுளில் இராவணனது சினம் காதலைவென்றிட்டமையைக் கூறினவர் இச்செய்யுளில் அஃது சிறிதுகுறைய, காதலும் சீற்றமும் ஒத்துநிலையின வாயினமையைக் கூறினரென்க. 'உடன்றவன்' என்ற பாடத்தில், உடன்று அவன் என்று பிரித்தற்கும் இடமுண்டு. (கூக)

[அப்பொழுது அநுமான் கொண்ட சிந்தனை.]

கூஉ. அன்னகாலையி னநுமனு மருந்ததிக் கற்பி
னென்னையாளுடை நாயகன் றேவியை யென்முன்
சொன்னநீசன்கை தொடுவதன் முன்றுகைத் துழக்கிப்
பின்னைநின்றது செய்குவெ னென்பது பிடித்தான்.

(இ - ள்.) அநுமனும் —, அன்ன காலையின் - அப்பொழுது, — 'அருந்ததி கற்பின் - அருந்ததிபோன்ற பதிவிரதாதருமத்தையுடைய, என்னை ஆள் உடை நாயகன் தேவியை - என்னையாட்கொண்டுள்ள தலைவனாகிய இராமபிரானது மனைவியாகிய இச்சீதாபிராட்டியை, என்முன் - எனக்கு எதிரில், சொன்ன - தாறுமாறாகப்பேசிய, நீசன் - இழிதன்மையுடைய இவ்விராவணன், கை தொடுவதன்முன் - (தன்) கையினாற் பரிசிப்பதற்குமுன்னமே, துகைத்து உழக்கி - (அவனைக் காலினால்) மிதித்து வருத்தி, பின்னை - அதன்பின்பு, நின்றது - செய்யவேண்டுவதான செயலை, செய்குவென் - செய்வேன்,' என்பது - என்பதை, பிடித்தான் - மனத்தில் நினைத்தான்; (எ - று.)

இராவணன் 'சீதையைப் பிளந்து தின்பேன்' என்று சினந்ததைக் கண்ட அநுமான் 'ஒருகால் இராவணன் அவ்வாறே செய்திடுவனோ?' என்று அஞ்சி, 'அவ்வாறு செய்யத் தொடங்குமுன் நான் இவனை ஒழித்துவிடவேண்டும்' என்று கருதினனென்பதாம். 'பின்னைநின்றது' என்றது - சீதையைச் சிறை மீட்டலையென்னலாம். (கூஉ)

[இதுவும் அது.]

கூங. தனியினின்றவன் றலைபத்துங் கடிதுகத் தாக்கிப்
பனியின் வேலையி லிலங்கையைக் கீழுறப் பாய்ச்சிப்
புனிதமா தவத் தணங்கினைச் சுமந்தனன் போவா
னினிதி தென்பது நினைந்தனன் கரம்பிசைந் திருந்தான்.

(இ - ள்.) (பின்னும் அநுமான்), — 'தனியில் நின்றவன் - தனியனாய் நிற்கின்றவனான இவ்விராவணனது, தலை பத்தும் - பத்துத்தலைகளையும், கடிது உக - விரைவிற் சிந்தும்படி, தாக்கி - மோதியடித்து, பனியின் வேலையில் - குளிர்ச்சி பொருந்திய சமுத்திரத்தில், இலங்கையை - இவ்விலங்காபட்டணத்தை, கீழ் உற - கீழேஅழுந்தும்படி, பாய்ச்சி - போகச்செய்து, புனிதம் மா

தவத்து அணங்கினை - பரிசுத்தமான பெருந்தவத்தையுடைய பிராட்டியை, சுமந்தனன் - எழுந்தருளப்பண்ணிக்கொண்டு, இனிதின் - சுகமாக, போவான்- போதலே, (தக்கது)', என்பது - என்பதை, நினைந்தனன் - எண்ணினவனாய், கரம் பிசைந்து இருந்தான் - கைகளைப் பிசைந்துகொண்டிருந்தான்; (எ - று.)

மரத்தின்மேலேயிருந்த அனுமான், இராவணனது கடுஞ்சொற்களைக் கேட்டுச் சீற்றமிகுந்து, 'இப்போதே நாம் இவனது பத்துத்தலைகளையும் சிதறவடித்து, இலங்கையைக் கடலினுள்ளே மூழ்கவடித்து, இப்பிராட்டியை எழுந்தருளப்பண்ணிக்கொண்டு போகலாமா? அவ்வாறு செய்வது ஒருகால் இராமபிரானது திருவுள்ளத்துக்குப் பாங்கு அல்லாமலும் அப்பெருமானது பெருமைக்குக் குறைவாகவும் இருக்குமோ?' என்று நினைத்துச் செய்வது உறுதிப்படாமற் கவலையினாற் கையைப் பிசைந்துகொண்டிருந்தனனென்பதாம். (சுரு)

[இராவணனது சினம் காதலால் தணிந்துவிட, மீண்டும் அவன் கூறத்தொடங்குதல்.]

சுசு. ஆண்ட வாளரக் கன்கனன் றண்டத்தை யழிப்பான்
மூண்ட காலவெந் தீயென முற்றிய சீற்ற
நீண்ட காதனீர் நீத்தத்தின் வீவுறு நிலையின்
மீண்டு நின்றொரு தன்மையா லிவையிவை விளம்பும்.

(இ - ள்.) ஆண்டு - அப்பொழுது, அ வாள் அரக்கன் - வாள்போற்கொடிய அந்த இராவணன்—, கனன்று - உக்கிரங்கொண்டு, அண்டத்தை அழிப்பான் - உலகத்தையழிக்கும்பொருட்டு, மூண்ட - கிளம்பின, காலம் வெம் தீ என - கொடிய காலாக்கினிபோல, முற்றிய - முதிர்ந்துநின்ற, சீற்றம் - (தனது) கோபாக்கினியானது, நீண்ட காதல் நீர் நீத்தத்தின் - மிகுந்த காமமாகிய நீர்வெள்ளத்தினால், வீவுறும் நிலையின் - அவிகின்ற தன்மையிலே, மீண்டு- திரும்பிவந்து, நின்று—, ஒரு தன்மையால் - ஒப்பற்ற (காதல்) தன்மையினால், இவை இவை விளம்பும் - பின்வருவனவற்றைக் கூறுவானாயினன்; (எ - று.)—அவற்றை, அடுத்த எட்டுச்செய்யுளிற் காண்க.

யுகாந்தகாலத்தில் உலகங்களையெல்லாம் எரித்து அழிக்கின்ற காலாக்கினிபோல இராவணனுக்குச் சீதாபிராட்டியினிடம் தோன்றிய கோபாக்கினியானது காதல்வெள்ளத்தினால் அடியோடு அழிந்துவிட, உடனே அவ்விராவணன் மீண்டுவந்து சில கூறத்தொடங்கின னென்பதாம்.

அவாளரக்கன், வசரமெய் - தொகுத்தல். பிரளயகாலத்திலே பூமியைத் தாங்குகின்ற ஆதிசேஷனுடைய ஆயிரம் முகங்களிலிருந்து வெளிவரும் மிகப்பெரிய மூச்சுக்காற்றிலிருந்து காலாக்கினியு ருத்திரமூர்த்தி யுண்டாகிக் கோபாவேசத்தோடு விஷாக்கினிச்சுவாலைகளினால் அதியுக்கிரமாய் உலகங்களையெல்லாம் எரித்திடுவ ரென்பதும், கடலினிடையே யுள்ளதான வடவாமுகாக்கினியும் அச்சமயத்தில் வெளிக்கிளம்பி உலகங்களை யெரிக்கு மென்

பதம் நூற்கொள்கை. காதலே நீர்தீத்தம் என்று உருவகஞ் செய்ததற்கு ஏற்பச் சிற்றத்தை அக்கினியாகக் கொள்க. (சுச)

வேறு.

[இதுமுதல் எட்டுக்கவிகள் - இராவணன் சீதையைநோக்கி மீண்டுங்கூறுவன.]

சுரு. கொல்வெனென்றுடன்றேனுன்னைக்கொல்கிலன்குறித்துச்சொன்ன
சொல்லுள வவற்றுக் கெல்லாங் காரணந் தெரியச் சொல்லி
னொல்வதீ தொல்லா தீதென் றெனக்குமொன் றுலகத் துண்டே
வெல்வதுந் தோற்ற றானும் விளையாட்டின் விளைந்த மேனாள்.

(இ - ள்.) கொல்வென் என்று - (யான் உன்னைக்) கொன்றிடுவேனென்று, உடன்றேன் - சினங்கொண்டேன்; (அப்படிச் சினங்கொண்டும் இப்போது), உன்னை கொல்கிலன் - (நான் உன்னிடத்துக்கொண்ட அன்பினால்) உன்னைக் கொல்லமாட்டுகின்றிலேன்; குறித்து சொன்ன - என்னைப்பற்றி நீ இழிவாகப் பேசிய, சொல் - சொற்கள், உள - உண்மையாகவே யுள்ளன; அவற்றுக்கு எல்லாம் - அவைகளுக்கெல்லாம், காரணம் - காரணத்தை, தெரிய சொல்லின் - விளங்கும்படி சொல்வதானால்,—உலகத்து - இவ்வுலகத்தில், எனக்கும்—, 'ஒல்வது ஈது - எளிதிற்செய்தற்கு உரியது இத்தொழில்: ஒல்லாது ஈது - செய்யமுடியாதது இது', என்று—,ஒன்று உண்டோ - ஒன்று உள்ளதோ? மேல்நாள் - முன்னாளில், வெல்வதும் - (நான்) வெற்றியடைந்ததும், தோற்றல் தானும் - (நான்) தோல்வியடைந்ததும், விளையாட்டின் - விளையாட்டாகவே, விளைந்த - நேர்ந்தன; (எ - று.)

'நான் உன்னைக் கொல்லவேணுமென்று கடுங்கோபங் கொண்டும் உன்மீதுள்ள மோகத்தினால் அவ்வாறு செய்யத்துணியாதவனானேன்; நீ இப்போது என்னைப்பற்றி இழித்துக்கூறினாய்; அவை உண்மையாக நிகழ்ந்தவைதாம்: ஆனால், அவை எனது வல்லமையின்மையினால் நிகழ்ந்தனவல்ல; விளையாட்டுத் தன்மையால் நிகழ்ந்தவை; எனக்கு இவ்வுலகத்தில் முடியாத காரியம் எதுவுமில்லை' என்று இராவணன் சீதையை நோக்கிக் கூறினனென்பதாம். சீதை இராவணனைக் குறித்துச் சொன்ன பழிப்புச்சொற்கள் - இளையவன் இல்லாத சமயம்பார்த்துத் தன்னைத்தூக்கிச்சென்றது, சடாயுவின்சிறையினால் அடிபட்டு வீழ்ந்தது, கார்த்தவீரியார்ச்சுனனிடத்திற் பிடிபட்டது என்பவை. இராவணன் கொல்வேனென்று உடன்றதை "இவளைப் பிளந்து தின்பேனென வுடன்றனன்" என்று அறுபத்தோராங்கவியிற் காண்க.

இதுமுதற் பதினொருகவிகள் - முப்பத்தெட்டாங்கவிபோன்ற அறுசீராசிரிய விருத்தங்கள். (சுரு)

சுசு. ஒன்றுகேளுரைக்கநிற்கோருயிரெனவுரியோன்றன்னைக்
கொன்றுகோளிழைத்தானீநின்னுயிர்விடிற்கூற்றங்கூடு
மென்றனருயிருநீங்குமென்பதையையவெண்ணி
யன்றுநான்வஞ்சஞ்செய்ததாரெனக்கமரினேர்வார்.

(இ - ள்.) உரைக்க - (நான்) சொல்ல, ஒன்று - ஒருவிஷயத்தை, கேள் - கேட்பாயாக:—'நிற்கு - உனக்கு, ஓர் உயிர் என - ஒப்பற்ற பிராணன்போல, உரியோன்தன்னை - கணவனான இராமனை, கொன்று - கொலைசெய்து, கோள் இழைத்தால் - (உன்னைக்) கவர்ந்துகொண்டுவந்தால், நீ—, (அதற்காக), நின் உயிர் விடின் - உனதுஉயிரை (விடுதல்கூடும்; அவ்வாறு) விடுவாயானால், கூற்றம் கூடும் - (அப்போது என்னுயிரைக் கொள்ளும்படி) யமன் (வருவான்); (அதனால்), என்தன் ஆர் உயிரும் நீங்கும்—[நானும் இறந்தொழிவேன்]', என்பதை - என்கிற இந்தஒருவிஷயத்தையே, இயைய எண்ணி - பொருந்த ஆலோசித்து, அன்று - முன்னாளில், நான் வஞ்சம் செய்தது - நான் (உன்னை) வஞ்சனையாற் கவர்ந்துவந்த செயல் நிகழ்ந்தது; (அது காரணமேயன்றி வஞ்சனையாகக் கவர்ந்து சென்றதற்கு வேறுகாரணமில்லை;) அமரில் - போரில், எனக்கு—, நேர்வார் - எதிரில்நிற்பவர், ஆர் - எவர்? (எ - று.)

சீதை தன்னைப்பற்றிக் குறைகூறியவற்றில் முதன்மையான ஒருவிஷயத்திற்கு, இராவணன் இதனாற் சமாதானங் கூறுகின்றனன். 'நான் இராமனோடு எதிர்நின்று பொருது கொன்று உன்னைக் கவர்ந்துவந்திருந்தால், அப்போது, அவனிடத்துப் பேரன்புவைத்திருத்தலால் நீ ஒருகால் உயிர்விடுதல் கூடும்: அம்மாத்திரத்தில் உன்மீது மோகங்கொண்ட என்னுயிரும் போய்விடுமென்ற இவ்வொன்றை நினைத்தே நான் ராமலக்ஷ்மணர்களை விட்டுப் பிரித்து உன்னைக் கவர்ந்துவந்தேன்' என்று இராவணன் வஞ்சனையாற் கவர்ந்துவந்ததற்குக் காரணம் எடுத்துக்காட்டினனென்க. 'யாரெனக்கு அமரில் நேர்வார்' என்றதனால், தான் வஞ்சனையாற் கவர்ந்துவந்ததற்குத் தனதுவலியின்மை காரணமன்று என்று தெரிவித்தபடி. (௬௬)

௬௭. மானென்பதறிந்துபோனமானுடராவார்மீண்டி
யானென்பதறிந்தால்வாராரேழைமையெண்ணிநோக்க
றேனென்பதறிந்தசொல்லாய்தேவர்தாம்யாவரேயெங்
கோனென்பதறிந்தபின்னைத்திறம்புவார்குறையினல்லால்.

(இ - ள்.) தேன் என்பது அறிந்த சொல்லாய் - தேனைப்போன்ற சொற்களையுடையவளே! மான் என்பது அறிந்து - (மாரீசன் மாயமானாகிவந்ததை உணரமாட்டாமல்) உண்மையான மானென்றேகருதி, போன - பின்தொடர்ந்து சென்ற, மானுடர் ஆவார் - (வலிமையற்ற) மனிதரான ராமலக்ஷ்மணர், மீண்டு - திரும்பி, யான் என்பது அறிந்தால் - (சீதையைக் கவர்ந்து சென்றவன்) இராவணனென்று தெரிந்துகொண்டால், வாரார் - (உன்னைமீட்கும்பொருட்டு இங்கு) வரமாட்டார்கள்; எண்ணி - (அவர்கள் வருவார்களென்று) நினைத்து, நோக்கல் - எதிர்பார்ப்பது, ஏழைமை - (உனது) அறியாமையேயாகும்; எம் கோன் என்பது - (சீதையைக்கவர்ந்துசென்றவன்) தமது தலைவனாகிய நான் என்பதை, அறிந்த பின்னை - உணர்ந்தபின்பு, குறையின் அல்லால் - பின்வாங்குவதேயல்லாமல், திறம்புவார் - மாறுபட்டுப்பொருபவர்களான, தேவர்தாம் - தேவர்கள்தாம், யாவர் - யாவருளர்? [ஒருவருமில்லை யென்றபடி]; (எ - று.)

இராமலட்சுமணர் உன்னை இங்குநின்று மீட்டுக்கொண்டுபோமாறு வருவ ரென்று உனது அறியாமையினால் நீ கருதுகின்றாய்; உன்னை எடுத்துக் கொண்டுபோனவன் நானென்பதை யுணர்ந்தால், தேவர்களேயாயினும், 'எமது தலைவன்' என்று சொல்லிக்கொண்டு பின்வாங்குவாரேயல்லாமல், என்னோடு எதிர்த்துநிற்கமாட்டார்களே! அப்படியிருக்க, கேவலம் மனிதரான அவர்கள் இங்கு வருவது எவ்வாறு இயலும்? இயலவே இயலாது என்று இராவணன் சீதையை நோக்கிக் கூறினனென்க. "ஏழைநின்னெளித்துறை" என்பது முதலியவற்றால், இராமபிரான் லக்ஷ்மணனுடன்வந்து தன்னைமீட்பானென்று நம்பிச் சீதாபிராட்டி கூறியவற்றிற்கு மாறு கூறியவாறு. 'நோக்கல்' என்பதை எதிர்மறை முற்றாகக் கொண்டு, ஏழைமையினால் இராமலக்ஷ்மணர் வருவா ரென்று கருதி அவரை எதிர்பாராதே என்று பொருள்கூறினுமாம். மூன்றா மடியில், அறிந்த - உவமவுருபு. என்பது - பகுதிப்பொருள்விகுதி. (கஎ)

கஅ. வென்றோருமிருப்பயார்க்குமேலவர்விளிவிலாதோ
ரென்றோருமிருப்பவன்றேயிந்திரனேவல்செய்ய
வொன்றாதவுலகமூன்றுமுணர்கின்றவொருவன்யானே
மென்றோளாயிதற்குவேறோர்காரணம்விரிப்பதுண்டோ.

(இ - ள்.) மெல் தோளாய் - மெல்லிய தோள்களையுடையவளே! வென் றோரும் - (என்னை) வென்றதாக நீ கூறினவர்களும், இருப்ப - இருக்கட்டும்; விளிவு இலாதோர் - அழிவு இல்லாதவர்களாகி, யார்க்கும் மேலவர் என்றோரும்- எல்லார்க்கும் மேலானவரென்று சொல்லப்படுகின்ற திரிமூர்த்திகளும், இருப்ப - கிடக்கட்டும்; அன்றே - அன்று தொடங்கியே [வெகுநாள்முன்பு தொடங்கியே], இந்திரன் - தேவராசனான இந்திரன், ஏவல் செய்ய - ஊழி யஞ்செய்யுமாறு, ஒன்றாத - ஒருபடிப்பட்டிராத, உலகம் மூன்றும் - மூன்று உலகத்தாரும், உணர்கின்ற - ('இவனே எல்லாரினும் உயர்ந்தவன்' என்று) தெரிந்து கொள்ளுகின்ற, ஒருவன் - ஒப்பற்றவன், யானே - நானொருவனே யல்லவோ? இதற்கு - (இப்படிப்பட்ட எனது) பெருமைக்கு, வேறு ஓர் காரணம் - வேறொரு ஏதுவை, விரிப்பது - விவரித்துச் சொல்லவேண்டியது, உண்டோ - உள்ளதோ? (எ - று.)

கார்த்தவீரியன் முதலிய சிலர் என்னை வென்றிருக்கிறார்களென்று சொன்னாய்; த்ரிமூர்த்திகளை உயர்ந்தவரென்று நாட்டிலுள்ளவர்கள் சொல்லுகிறார்கள்; இவர்களுள் என்போல த்ரிலோகாதிபதியான தேவேந்திரன் ஊழியஞ் செய்ய மூன்றுலோகத்திலும் ப்ரஸித்திபெற்றவர் யாவரேனும் உண்டோ? அப்படியில்லாமையால் அவர்கள்யாவரினும் நானே உயர்ந்தவ னென்பதற்கு வேறுகாரணம் காட்டவேண்டுமோ? என்று இராவணன் தான் யாவரினும் உயர்ந்தவ னென்பதைத் தெரிவித்தவாறு. யார்க்கும்மேலவர் விளிவிலாதோர் என்றோரும் என்பதற்கு - த்ரிமூர்த்திகளினும் உயர்ந்தவராய் (ப்பகைவர்க ளால்) அழிவில்லாதவரென்று நீ கருதுகின்ற ராமலக்ஷ்மணரென்று கூறினு

மாம். இருப்ப - வியங்கோள்முற்று; இதில், ப் - எழுத்துப்பேறு, அ - வியங்கோள்விகுதி. (௬௮)

௬௯. மூவருந்தேவர்தாமுமுரணுகமுற்றுங்கொற்றம்
பாவைநின்பொருட்டினாலோர்பழிபெறப்பயன்றீர்நோன்பி
னாவியின்மனிதர்தம்மைமடுகிலேனவரையீண்டுக்
கூவிநின்றேவல்கொள்வென்காணுதிகுதலைச்சொல்லாய்.

(இ - ள்.) குதலை சொல்லாய் - மழலைச்சொற்களையுடையவளே! பாவை - சித்திரப்பிரதிமைபோன்றவளே! மூவரும் - திரிமூர்த்திகளும், தேவர் தாமும் - மற்றைத்தேவர்களும், முரண் உக -வலிமை யொழியும்படி, முற்றும் - நிரம்பக்கிடைத்துள்ள, கொற்றம் - (எனது) வெற்றியானது, நின்பொருட்டினால் - உன்நிமித்தமாக, ஓர் பழி பெற - மிக்க அபகீர்த்தியை யடையும்படி, பயன் தீர் நோன்பின் - பயனற்ற விரதங்களையுடைய, ஆவி இல்-வலிமையற்ற, மனிதர்தம்மை - (இராமன் லக்ஷ்மணன் என்ற) அவ்விரண்டு மனிதர்களையும், அடுகிலேன் - கொல்லமாட்டேன்; அவரை - அவ்விருவரையும், ஈண்டு - இங்கே, கூவி நின்று - அழைத்து, ஏவல் கொள்வென் - பணிவிடை செய்யுமாறு செய்வேன்; காணுதி - (எனது) திறமையைப் பார்; (எ - று.)

திரிமூர்த்திகளையும் மற்றைத்தேவரையும் வென்ற எனக்கு இந்தஇரண்டு மனிதரைக் கொன்றொழிப்பது ஒருபெரியகாரியமன்று; ஆனால், நான் அப்படிச்செய்வது எனதுவீரத்துக்குப் பழியாகுமாதலால் அவ்வாறு செய்யவிரும்பவில்லை; இப்போது அவர்களைக் கொல்லாமலே எனது வீரத்தினால் அவர்களைப் பிடித்துக்கொணர்ந்து அடிமையாகக்கொள்வேனென்று தனதுவீரம்தோன்றக் கூறியவாறு. கூவிநின்று, நில் - துணைவினை. (௬௯)

௭0. சிற்றியற்சிறுமையாற்றல்சிறுதொழின்மறவரோடு
முற்றியதாவில்வீரமுனிவென்கண்விளையாதேனு
மிற்றையிற்பகலினெய்திஇருவரையொருகையாலே
பற்றினென்கொணருந்தன்மைகாணுதிபழிப்பிலாதாய்.

(இ - ள்.) பழிப்பு இலாதாய் - குற்றமற்றவளே! சிறு இயல் - அற்பத்தன்மையும், சிறுமை ஆற்றல் - அற்பபலமும், சிறு தொழில் - அற்பச்செய்கையுமுடைய, மறவரோடு - அற்பவீரரான ராமலக்ஷ்மணர் விஷயத்தில், முற்றிய - முதிர்ந்த, தா இல் - குற்றமில்லாத, வீரம் - வீரத்தினால் தோன்றுகின்ற, முனிவு - கோபம், என்கண் - என்னிடத்து, விளையாது எனும் - உண்டாகாதென்றாலும், (நான் அவர்களை உபேட்சித் திருப்பதைக் காரணமாகக்கொண்டு என்னை வலியற்றவ னென்று நீ கருதுவதனால்), இற்றையின் பகலின் - இன்றைப் பகற்பொழுதிலேயே, எய்தி - (அவர்களுள்ளவிடஞ்) சென்று, இருவரை - அவ்விருவரையும், (எனது பத்தொன்பதுகைகளும் வேலையில்லாமலிருக்க), ஒரு கையாலே—, பற்றினென் கொணரும் தன்மை - பிடித்துக்கொண்டுவரும் வேடிக்கையை, காணுதி - பார்ப்பாய்; (எ - று.)

மூவுலகங்களையும் எளிதில்வென்ற எனதுவீரத்துக்கு இழுக்காகுமென்று யான் இதுவரையில் அற்பவீரரான அந்த ராமலக்ஷ்மணர்மீது கோபங்கொள்ளாதிருந்தேன்; அதுபற்றி என்னைக் குறைவாக நீ மதித்தலால், நான் இப்போதே சென்று அவ்விருவரையும் எனது ஒற்றைக்கையினாலேயே பிடித்துக் கொண்டுவருகின்றேன்; பார் என்று இராவணன் கூறினனென்க. (௭0)

௭௧. பதவியமனிதரேனும்பைந்தொடிநின்னைத்தந்த
வுதவியையுணரநோக்கினுயிர்க்கொலைக்குரியரல்லர்
சிதைவுறலவர்க்குவேண்டிற்செய்திறன்சேர்ந்ததெண்ணி
னிதனினக்கீதேயாகினியற்றுவல்காண்டியின்னும்.

(இ - ள்.) பைந்தொடி - பசுமையான வளையலையணிந்தவளே! பதவிய - (நான் தின்னுவதற்குப்) பக்குவமான, மனிதர் எனும் - மனிதர்களேயானாலும், (ராமலக்ஷ்மணர்கள்),—நின்னை - உன்னை, தந்த - (எனக்குச்) கொடுத்த, உதவியை - உபகாரத்தை, உணர நோக்கின் - நன்றாக ஆலோசித்தால், உயிர் கொலைக்கு - உயிரைக்கொல்லுதற்கு, உரியர் அல்லர் - ஏற்றவராகார்; (அதற்கு மாறாக), அவர்க்கு - அவ்விருவர்க்கும், சிதைவு உறல் - அழிவுநேர்தலை, வேண்டின் - (நீ) விரும்பினால், செய் திறன் சேர்ந்தது அது எண்ணின் - (நான்) இனிச் செய்யப்போவதை ஆலோசித்து அது (அவ்வாறே நிகழவேண்டுமென்று) விரும்பினால்,—நினக்கு இதன் ஈதே ஆகின் - உனக்கு நன்மை இதுவே யாகுமானால், இயற்றுவல் - (நான்) அவ்வாறே செய்வேன் [ராமலக்ஷ்மணர்களைக் கொல்வேன்], காண்டி - (இதனைப்) பார்: இன்னும் - இதன் மேலும்,—(எ - று.)—இச்செய்யுளிலுள்ள 'இன்னும்' என்ற சொல் - அடுத்த கவியில் 'அயோத்தி நண்ணி' என்பதனோடு தொடரும்.

உன்னை எனக்குக் கொடுத்தவரென்ற நன்றியறிதலினால் நான் இதுவரையில் ராமலக்ஷ்மணர்களைக் கொல்லப் பின்வாங்கினேன்; இவ்வளவுகாலம் சென்றும் நீ எனக்கு இணங்காமையால், இனி உனக்கு விருப்பத்தைச் செய்ய வேணுமென்ற என் கருத்தை மாற்றி, இப்போது நான் அவர்களைக் கொல்வேனென்பதாம். நீ இதுவரையில் எனக்கு இணங்காமையால், நான் ராமலக்ஷ்மணர்களை இனிக் கொல்வேனென்பதை யுணர்ந்து அதனையே நீ உனக்கு இதமென்று கருதினாற்போலத் தோன்றுகின்றதென்று, தான் சீதையை மருட்டியாவது இணங்குவிக்கலாமென்று இராவணன் பின்னிரண்டடிகளால் கூறுகின்றனனென்க; அடுத்தசெய்யுளும் இக்கருத்தேபற்றிவரும். (௭௧)

௭௨. பள்ளநீரயோத்திநண்ணிப்பரதனைமுதலினோராண்
டுள்ளவர்தம்மையெல்லாமுயிர்குடித்தூழித்தீயின்
வெள்ளநீர்மிதிலையோரைவேரறுத்தெளிதினெய்திக்
கொள்வெனின்னுயிருமென்னையறிந்திலைதுறைந்தநாளோய்

(இ - ள்.) குறைந்த நாளோய் - வாழ்நாள் குறைந்தவளே! [இறக்குங் காலம் நெருங்கப்பெற்றவளே!] (நான்), பள்ளம் நீர் அயோத்தி நண்ணி - ஆழமான நீருள்ள அயோத்தியாபட்டணத்தை யடைந்து, ஆண்டு உள்ளவர் பரதனே முதலினோர்தம்மை எல்லாம் - அங்குள்ளவரான பரதன் முதலிய எல்லாரையும், உயிர் குடித்து - உயிரை வதைத்து, ஊழி தீயின் - யுகாந்தகாலத்து அக்கினிபோல, வெள்ளம் நீர் மிதிலையோரை - பிரவாகமான நீரையுடைய மிதிலையிலுள்ளவரையும், வேர் அறுத்து - அடியோடு ஒழித்து, எளிதின் எய்தி - சுலபமாக (இங்கு)வந்து, நின் உயிரும் - உனது பிராணனையும், கொள்வேன் - வாங்கிவிடுவேன்; என்னை அறிந்திலை - எனது பராக்கிரமத்தை (இன்னதென்று) அறிந்தாயில்லை; (எ - று.)

இராமலக்ஷ்மணரைக் கொல்வதோடு நில்லாமல், அவர்கள்பிறந்த ஊரான அயோத்தியிலுள்ள பரதன்முதலியோரையும் நீ பிறந்த ஊரான மிதிலையிலுள்ளவரையும் வேரோடழித்து, அப்போதும் இணங்காயாயின் உன்னையும் கொன்றுவிடுவே னென்று இராவணன் சீதைக்கு அச்சமுறுத்தின னென்க.

[இராவணன் சீதையை அச்சுறுத்திச் செல்லுதல்].

௭௩. ஈதுரைத்தழன்றுபொங்கியெரிகதிர்வாளைநோக்கித்
தீதுயிர்க்கிழைக்குநாளுந்திங்களோரிரண்டிற்றேய்ந்த
தாதலினின்றதெண்ணென்றறிந்தவாறறிவாயென்னுப்
போதரிக்கண்ணினாளையகத்துவைத்துரப்பிப்போனான்.

(இ - ள்.) ஈது - இவ்வாறுனசொல்லை, உரைத்து - சொல்லி, (இராவணன்), அழன்று பொங்கி - மிகவுங் கோபித்து, எரி கதிர் வாளை நோக்கி - (தனது) விளங்குகின்ற ஒளியையுடைய வாளாயுதத்தைப் பார்த்து, (மீண்டும் சீதாபிராட்டியை நோக்கி, 'நீ இணங்காவிட்டால்'), உயிர்க்கு - (உனது)உயிருக்கு, தீது இழைக்கும் - தீமையைச் செய்யவேண்டிய [உன்னைக் கொல்லவேண்டிய], நாளும் - நாளும், திங்கள் ஓர் இரண்டில் - இரண்டுமாதகாலத்திற்குள், தேய்ந்தது - முடிந்துவிடும்; ஆதலின் - ஆகையால், நின்றது - இனி உனக்கு நேர இருப்பதை, எண் - ஆலோசித்துப்பார்', என்று - என்றும், 'அறிந்த ஆறு - புத்திமான்கள் ஆலோசிக்கின்ற முறையில், அறிவாய் - (இப்போது செய்யத் தக்கதை) ஆலோசித்துப்பார்,' என்னு - என்றுஞ்சொல்லி, (இராவணன்), போது அரி கண்ணினாளை - செந்தாமரைமலர் போன்றனவும் செவ்வரி பரந்தனவுமான கண்களையுடைய பிராட்டியை, அகத்து வைத்து - (தன்) மனத்தில் எண்ணியவண்ணம், உரப்பி - (பலவாறு) அதட்டிவிட்டு, போனான் - அவ்விடத்தைவிட்டுச் சென்றான்; (எ - று.)

இராவணன் சீதாபிராட்டியைக் கவர்ந்துவந்து தன்விருப்பத்தை அவளிடத்துத் தெரிவித்தபோது அன்னாள் இணங்காது பழித்துப்பேச, அப்

பொழுது அவ்விராவணன் கடுங்கோபங்கொண்டு ["ஸ்ருணுமைதிலி! மத்வாக்யம் மாஸாந்த்வாதசபாமிநி ! - காலேநாநேந நாப்யேஷி, யதிமாம் சாருஹாஸிநி! - ததஸ் த்வாம் ப்ராதராஸார்த்தம், ஸூதாஸ் சேத்ஸ்யந்தி லேஸஸ:"] "சீதையே ! நான் சொல்வதைக் கேள்; பன்னிரண்டுமாதகாலம் நான்பொறுத்துப்பார்ப்பேன்; அதற்குள் நீ என்னை யடையாவிட்டால், பாசகர் என்னுடைய காலையுணவுக்காக உன்னைக் கண்டம்கண்டமாக வெட்டிவிடுவார்கள்" என்று கூறியிருத்தலால், இப்போது கிட்டத்தட்டப் பத்துமாதங்கள் கழிந்ததுபற்றி, அவ்விராவணன் 'நான் உனக்கு முன்னமே தவணையாகக் குறித்த காலத்தில் இரண்டு மாதங்கள்தான் மிச்சமாக வுள்ளன; அதற்குள் நீ எனக்கு இணங்கினால் சரி, இல்லாவிட்டால் உனக்கு என்ன நேருமென்பதை ஆலோசித்துப்பார்' என்று அதட்டிவிட்டுப் போயினதாகக் கூறின சென்க. ஸ்ரீவால்மீகத்தில் இந்தச்சந்தர்ப்பத்தில் இராவணன் "த்வெளமாஸௌ ரக்ஷிதவ்யௌ மே, யோவதிஸ்தே மயாக்ருத: - ததஸ்ஸயநமாரோஹ மம த்வம் வரவர்ணிநி, ஊர்த்வம் த்வாப்யாந்து மாஸாப்யாம் பர்த்தாரம் மாமநிச்சதீம் - மமத்வாம் ப்ராதராஸார்த்தம் ஆலபந்தேமஹாநஸே ! [நான் உனக்கு முன்பு குறித்துள்ளபடி இன்னும் இரண்டு மாதங்கள் வரையில் பார்த்திருக்க வேண்டும். சிறந்தவடிவழகுடையவளே ! அதற்குள்ளாவது நீ எனது படுக்கையை யேறுக. இரண்டுமாதம் கழிந்துவிட்டாலோ தாமதமின்றி அடுத்தநாள் பகலில்தானே என்னைக் கணவனாக விரும்பாத உன்னைப் பாசகர் எனது காலைப்போசனத்திற்காகக் கொல்வார்கள்" என்று கூறியது இங்கு ஒப்புநோக்கத்தக்கது. வாளைநோக்கியது அதற்குள் நீ இணங்காவிட்டால் இந்தவாளே உன்னைக் கொல்லுமென்று தெரிவித்தற்கு. சீதையை எப்பொழுதும் நினைத்த வண்ணமாகவே இராவணன் இருக்கின்றானென்பார், 'போதரிக்கண்ணினாளை யகத்துவைத்து' என்றார்; இனி, பிராட்டியை அரக்கியருடைய நடுவில் வைத்து என்று கூறலு மொன்று. தேய்ந்தது, நின்றது என்பவை - இயல்பினால் எதிர்காலங்கள் இறந்தகாலங்களாகக் கூறப்பட்ட காலவழுவமைதிகள். 'திங்களுமிரண்டிற்றீர்ந்த', 'அறிதியென்னு' என்பன பாடாந்தரம். (எங)

[இராவணன் 'சீதையை எப்படியாவது வசப்படுத்தவேண்டும்' என்று அரக்கியர்க்குக் கட்டளையிட்டுச் செல்லுதல்.]

எச. அஞ்சுவித்தானு மொன்றறிவுறத்தேற்றியானும்
வஞ்சியிற்செவ்வியாளைவசித்தென்பால்வருவீரென்றே
னஞ்சுமக்காவெனென்னுநகையிலாமுகத்துப்பேழ்வாய்
வெஞ்சினத்தரக்கிமார்க்குவேறுறவுணர்த்திப்போனான்.

(இ - ள்.) (பின்பு இராவணன்),—'வஞ்சியின் செவ்வியாளை - வஞ்சிக்கொடிபோல் அழகுள்ள சீதையை, அஞ்சுவித்து ஆனும் - பயப்படுத்தியாவது, அறிவு உற - (அவளுக்கு) நல்லறிவு உண்டாகும்படி, தேற்றி ஆனும் - சமா

தானவார்த்தை கூறியாவது, ஒன்றால் - ஏதேனும் ஒருவகையால், வசித்து - வசப்படுத்தி, (பிறகு), என்பால் - என்னிடத்தில், வருவீர் - (எனக்கு அதனைத் தெரிவிக்குமாறு) வாருங்கள்: அன்று எல் - (அவ்வாறுசெய்ய உங்களால்) ஆகாது ஆனால், உமக்கு நஞ்சு ஆவென் - (நான்) உங்கட்கு விஷம்போலக் கொடியவனாவேன்,' என்று—, நகை இலா முகத்து பேழ் வாய் வெம் சினத்து அரக்கிமார்க்கு - சிரிப்பில்லாத [எப்போதும் கடுமையையேயுடைய] முகத்தையும் பிளவுபட்டவாயையும் கடுங்கோபத்தையுமுடைய ராக்ஷஸ ஸ்திரீகளுக்கு, வேறு உற உணர்த்தி - தனியாகக் கூறிவிட்டு, போனான் - (தன் னிருப்பிடம் நோக்கிச்) சென்றான்; (எ - று.)

'எப்படியாவது சீதையை வசப்படுத்தாவிட்டால் நான் உங்களைக் கொல் வேன்' என்று அரக்கிமாரைத் தனியேயழைத்துக் கட்டளையிட்டு, இராவணன் சென்றனனென்க. ஆனும் = ஆயினும்: விகாரம். வசித்து - வசம் என்ற வடமொழியினடியாப்பிறந்த இறந்தகாலவினையெச்சம். 'அன்றால்' என்ற பாடத்துக்கு, ஆல் - ஆனால் என்பதன் விகாரம். (எச)

[அரக்கிமார்கள் தம் தமக்குத் தோன்றியவாறு சீதையை அதட்டிக் கூறத் தொடங்குதல்.]

எரு. போயினனரக்கன் பின்னைப் பொங்கரா நுங்கிக் கான்ற
தூயவெண் மதியை யொத்த தோகையைத் தொடர்ந்து சுற்றித்
தீயுவல் லரக்கி மார்க டெழீஇத் தெழித்து ரப்பிச் சிந்தை
மேயின வண்ண மெல்லாம் விளம்புவ ருடன்று மிக்கார்.

(இ - ள்.) அரக்கன் போயினன் - இராவணன் (தன்னிடத்திற்குப்) போய்விட்டான்; பின்னை - பின்பு, பொங்கு அரா - சீறுந் தன்மையுள்ள இராகு, நுங்கி கான்ற - விழுங்கி வெளியுமிழ்ந்த, தூய வெள் மதியை ஒத்த - பரிசுத்தமாய் வெண்ணிறமான பூர்ணசந்திரனைப் போன்றவளும், தோகையை - மயில்போன்ற சாயலையுடையவளுமான சீதாபிராட்டியை,—மிக்கார் - மிகப் பலராகிய, தீய வல் அரக்கிமார்கள் - மிகக் கொடிய ராக்ஷசஸ்திரீகள், தொடர்ந்து சுற்றி - ஒருசேரச் சூழ்ந்தபடி, உடன்று - மிகவும் கோபங் கொண்டு, தெழீஇ தெழித்து உரப்பி - மிக்கபேரொலியுண்டாகுமாறு அதட்டி, சிந்தை மேயின வண்ணம் எல்லாம் - தங்கள் மனம் போன விதமெல்லாம், விளம்புவர் - கூறலானார்கள்; (எ - று.)—அவற்றை, மேலே நான்கு கவிகளிற் காண்க.

இராவணனால் அச்சுறுத்திக் கூறப்பெற்று விடப்பட்ட சீதாபிராட்டிக்கு, இராகுவினால் உட்கொள்ளப்பட்டுக் கக்கப்பெற்ற சந்திரன் உவமையாவன். தோகையென்ற வாலின் பெயர் - அதனையுடைய மயிலுக்குச் சினையாகு பெயராகி, அதுபோன்ற சாயலுள்ள சீதாபிராட்டிக்கு உவமையாகுபெயராதலால், இச்சொல் - இருமடியாகுபெயர். (எரு)

வே று.

[இதுமுதல் நான்குகவிகள் - அரக்கியர் தம்தமக்குத்தோன்றியவாறு சீதையைக் கடிந்துகூறுதல்.]

எசு. முன்முன் னின்றார் கண்கனல் சிந்த முடுகுற்றார்
மின்மின் னென்னுஞ் சூலமும் வேலு மிவையோச்சிக்
கொன்மின் கொன்மின் கொன்று குறைத்துக் குடராரத்
தின்மின் றின்மி னென்று தெழித்தார சிலரெல்லாம்.

(இ - ள்.) சிலர் எல்லாம் - அரக்கிமார்களிற் சிலர்,—முன் முன் நின்றார்- (ஒருத்தியைவிட மற்றொருத்தி சீதையைக் கடிவதில்) முற்பட்டுநின்றவராய், கண் கனல் சிந்த - தமது கண்களினின்று நெருப்புப்பொறி பறக்க, முடுகுற்றார்-விரைந்தவர்களாய், மின் மின் என்னும் சூலமும் வேலும் இவை-பளிச்சுப் பளிச்சென்று ஒளிவீசுகிற சூலாயுதமும் வேற்படையும் என்ற இவைகளை, ஓச்சி - உயரத் தூக்கிக்கொண்டு, கொன்மின் கொன்மின் கொன்று குறைத்து குடர்ஆர தின்மின் தின்மின் என்று - இவளைக்கொல்லுங்கள் கொல்லுங் களென்றும் (இவளைச்) கண்டம் கண்டமாக்கிக் கொன்று வயிறுநிறையத் தின்னுங்கள் தின்னுங்களென்றும் கூறி, தெழித்தார்-அதட்டினார்கள்; (எ - று.)

இதுமுதல் இப்படலம் முடியுமளவும் - பெரும்பாலும் ஒன்று இரண்டு நான்காஞ் சீர்கள் மாச்சீர்களும், மூன்றாஞ்சீரொன்று விளச்சீரும், ஐந்தாஞ்சீ ரொன்று காய்ச்சீரு மாகி வந்த நெடிலடிநான்கு கொண்ட கலிநிலைத் துறைகள். (எசு)

எஎ. வையந்தந்தநான்முகன்மைந்தன்மகன்மைந்த
னையன்வேதமாயிரம்வல்லோனறிவாளன்
மெய்யன்புன்பால்வைத்துளதல்லால்வினைவென்றோன்
செய்யும்புன்மையாதுகொலென்றார்சிலரெல்லாம்.

(இ - ள்.) சிலர் எல்லாம்—, —வையம் தந்த - உலகத்தைப் படைத்த, நான்முகன் - நான்கு முகங்களையுடைய பிரமதேவனது, மைந்தன் - குமாரனாகிய புலஸ்தியமுனிவனுக்கு, மகன்-குமாரனான விசிரவமுனிவனது, மைந்தன்- குமாரனும், ஐயன் - (மூவுலகுக்குந்) தலைவனும், வேதம் ஆயிரம் வல்லோன் - ஆயிரஞ்சாகைகளாக வுள்ள சாமவேதத்தில் மிகவும் வல்லவனும், அறிவாளன் - பேரறிவுடையவனும், வினை வென்றோன் - (தவஞ்செய்து) தீவினைகளையொழித்தவனுமான ராவணன், உன்பால் - உன்னிடத்தில், மெய் அன்பு - உண்மையான பிரீதியை, வைத்து உளது அல்லால் - வைத்திருப்பதல்லாமல், செய்யும் புன்மை - செய்துள்ள இழிதொழில்கள், யாது கொல் - யாதுதான்? என்றார் - என்று கூறினார்கள்; (எ - று.)

பலவகையாலுஞ் சிறப்புப்பெற்ற இராவணன் உன்மீது உண்மையான அன்பை வைத்தானென்றால், அது அவனது மேன்மையைக் காட்டுமேயன்றி, அவனுக்குக் குற்றமாகாது; அப்படிப்பட்டவன் அன்புவைக்கவும், நீ அதனைப் பாராட்டாதது உனது புன்மையேயாமென்று சீதாபிராட்டியை நோக்கிக் கூறிய வாறு. முதலடியினால் இராவணனது உயர்குடிப்பிறப்பையும், இரண்டாவது அடியினால் அவனது கல்வியறிவையும், 'வினைவென்றோன்' என்றதனால் அவனது செயலின் தூய்மையையும் அரக்கியர் விளக்கினர். யாதுகொல், கொல் - அசை. (எஎ)

எஅ. மண்ணிற்றீயமானுயர்தத்தம்வழியோடும்
பெண்ணிற்றீயோய்நின்முதன்மாயும்பிணிசெய்தாய்
புண்ணிற்கோலிட்டாலனசொல்லிப்பொதுநோக்கா
லெண்ணிக்காணாய்மெய்ம்மையுமென்றார்சிலரெல்லாம்.

(இ - ள்.) சிலர் எல்லாம்—,—பெண்ணில் தீயோய் - பெண்களிற் கொடியவளே!—புண்ணில் - புண்ணிலே, கோல் இட்டால் அன - கோலைக்கொண்டு குத்தினாற்போன்ற கொடுஞ்சொற்களை, சொல்லி - (எமது அரசனை நோக்கிச்) சொல்லி, மண்ணில் - இவ்வுலகத்தில், மானுயர் - மனிதர்கள், தம் தம் வழியோடும் - தங்கள் தங்கள் வம்சத்துடனே, தீய - அழிந்துபோகுமாறு, நின் முதல் மாயும் - உனது உடலும் அழியும்படியான, பிணி - நோய்போற் கொடிய செயலை, செய்தாய் - செய்துவிட்டாய்; பொதுநோக்கால் - (பட்சபாதமில்லாத) பொதுத்தன்மையால், மெய்ம்மையும்-உண்மையையும், எண்ணி காணாய்- ஆலோசித்துப்பார்க்கின்றாயில்லை, என்றார் - என்று கூறினார்கள்; (எ - று.)

நீ புண்ணிற் கோலிட்டது போலக் கொடுஞ்சொற்களைச் சொல்லிப் பட்சபாதங்கொண்டு உண்மையையுங் கண்டறியமாட்டாமல் உலகத்து மானிடவர்க்கமே அழியும்படிக்கும் உனதுஉடம்பும் ஒழியும்படிக்கும் தீம்பு செய்துகொண்டாயே! உனது அறிவீனத்தை என்னென்று சொல்வது! என்று சில அரக்கியர் கூறினரென்க. இனி, முதலடிக்கு—(உன்னிடத்து மெய்யன்புள்ள இராவணனிடம் விருப்பங்கொள்வதைவிட்டு), இந்தப்பூமியிலே அற்பமனிதர்கள் பின்னேயே நாடிச் செல்லுகிற, பெண்ணில் தீயோய்! என்று பொருள் காணுவாருமுளர். (எஅ)

எகூ. புக்கவழிக்கும்போந்தவழிக்கும்புகைவெந்தீ
யொக்கவிதைப்பாயுற்றனையன்றேவுணர்வில்லா
யிக்கணமிற்றாய்முந்தினமெல்லாமினிவாழாய்
சிக்கவுரைத்தேமென்றுமெழித்தார்சிலரெல்லாம்,

(இ - ள்.) சிலர் எல்லாம்—, —'உணர்வு இல்லாய்-விவேகமில்லாதவளே! (நீ), புக்க வழிக்கும் - புகுந்தகுலத்துக்கும், போந்த வழிக்கும்-பிறந்தகுலத்துக்

கும், புகை வெந் தீ ஒக்க விதைப்பாய் உற்றனை அன்றே - புகைகின்ற கொடுநெருப்பை ஒருசேர வாரியிறைக்கும்படி பொருந்தினையல்லவோ? இ கணம் இற்றாய் - (நாங்கள் கூறும் வழியில் நடவாவிட்டால்) இப்போதே நீ இறப்பது நிச்சயம்; இனி வாழாய் - இனிமேல் நீ (இவ்வுலகத்தில்) உயிருடன் இருக்கமாட்டாய்; முந்தினம் - (நாங்கள்) முற்பட்டு, எல்லாம் - எல்லா விஷயத்தையும், சிக்க உரைத்தேம், - (உன்மனத்திற்) பதியும்படி செவ்வனே கூறினோம்,' என்று—, தெழித்தார் - அதட்டிக் கூறினர்கள்; (எ - று.)

நீ செய்கின்ற செயலால் உனது புக்ககமும் பிறந்தகமும் அழிய நீயும் இனிமேல் வாழாமல் இப்போதே இறந்துபடுவாய்; இது திண்ணம்: இதனை முன்னமே யறிந்து உனக்குக் கூறுகின்றோமென்று சிலஅரக்கியர் அதட்டினரென்க. விதைப்பாய் - வினையாலணையும் பெயர். இற்றாய் - தெளிவினால் எதிர்காலம் இறந்தகாலமாகவந்த வழுவமைதி. முந்தினம் - முற்றெச்சம்.(எக)

[சீதாபிராட்டி தனக்குநேர்ந்துள்ள நிலைமைக்கு வருந்துதல்.]

௪0. கொல்வானுற்றபெற்றிமையாதுங்குறையாதாள்
வெல்வானங்கோன்றின்னுமின்வம்மென்பவர்மெய்யும்
வல்வாய்வெய்யோனேவலுமெல்லாமனம்வைத்தா
ணல்லாணல்லகண்கள்கலுழ்ந்தேநகுகின்றாள்.

(இ - ள்.) கொல்வான் உற்ற - (அரக்கியர் தன்னைக்) கொல்லுமாறு தொடங்கிய, பெற்றிமை - கொடுந்தன்மையினால், யாதும் குறையாதாள் - (தனது மனவுறுதியினின்று) சிறிதுங் குறையாதவளாகிய, நல்லாள் - சீதாபிராட்டி,—'நம் கோன் - நமது தலைவனாகிய இராவணன், வெல்வான் - (எப்போதும்) வெற்றிபெற்று மேம்படுபவனாயிருக்கின்றான்; (ஆகையால், அவ்விராவணனது கட்டளைப்படி), தின்னுமின் - (நமது சொல்லுக்கு இணங்கி வராத இவளைத்) தின்னுங்கள்; வம் - வாருங்கள்', என்பவர் - என்று அதட்டிக் கூறுகிற அரக்கியரது, மெய்யும் - உடம்பின்பரபரப்பையும், வல் வாய் வெய்யோன் ஏவலும் - வலிமைவாய்ந்த கொடியவனான இராவணனுடைய கட்டளையையும், எல்லாம் - (ஆகிய) இவற்றையெல்லாம், மனம் வைத்தாள் - மனத்தில் எண்ணி, நல்ல கண்கள் கலுழ்ந்து ஏ - அழகியகண்களினால் நீரைப் பெருக்கிக்கொண்டே, நகுகின்றாள் - (தனக்கு நேர்ந்துள்ள நிலைமைக்குச்) சிரிப்பவளானாள்; (எ - று.)

அரக்கியர் பலவகையால் தன்னை அதட்டவும் சீதாபிராட்டி இராமனைத் தவிர வேறு எவரையும் மனத்திற் கருதாமை யாகிற தன் உறுதியினின்று சிறிதும் பின்வாங்காமல், அரக்கிமார் தன்னை விழுங்குபவர் போன்று அதட்டிக்கொண்டு மேல்விழுவதையும் இராவணன் தன்னை இவ்வண்ணம் அதட்டுமாறு அவ்வரக்கிமார்க்கு ஏவியுள்ளதையும் மனத்திலெண்ணித் துயரம் உன்

ளடங்காமையாற் கண்ணீர்பெருக அவலச் சிரிப்புச் சிரிக்கலாயின ளென்ப தாம். வெல்வான் நங்கோன் என்பதற்கு - (நாம் இந்தச் சீதையை வசப்படுத்த மேன்மேலும் முயலாவிட்டால்) நமது அரசனாகிய இராவணன் நம்மைக்கொல் வானென்றும், மெய்யும் - மெய்யே கொல்ல வருவதையும் என்றும் உரைப்பாரு முளர். 'கொல்வானுற்றோர்', 'குறைபாதார்' என்பன பாடாந்தரம். எந்தக்கடைக் கண் பார்வையினால் உலகத்தவர் நல்வாழ்ச்சி பெறுவரோ, அத்தகைய கண்கள் இப்போது துயரமுற்று வருந்துவன வாயினவே! என்ற இரக்கந் தோன்ற 'நல்ல கண்கள் கலுழ்ந்து' என்றார். நகை - அவலம் பற்றியது. (௮0)

[இதுவும், அடுத்த கவியும் - அப்போது திரிசடையின் மொழியினால் அரக்கமார் அடங்குதல்.]

௮௧. இன்னோரன்னவெய்தியகாலத்திடைநின்றாள்
முன்னேசொன்னேன்கண்டகனாவின்முடிவம்மா
பின்னேவாளாபேதுறவீரேற்பிழையென்றா
ளன்னேநன்றென்றாரவரெல்லாமறிவுற்றார்.

(இ - ள்.) இன்னோர் அன்ன - இப்படிப்பட்ட தன்மைகள், எய்திய காலத்திடை - நேர்ந்த பொழுதில், நின்றாள் - அங்குநின்றவளாகிய திரிசடை, (பிராட்டியைநோக்கி), 'அம்மா - தாயே! கண்ட கனாவின் முடிவு - நான் கண்ட கனாவினது பயனை, முன்னே சொன்னேன் - முன்னமே (உம்மிடத்துச்) சொல்லியிருக்கின்றேன்; பின்னே - அதன்பிறகு [இப்போது], வாளா-வீணாக, பேதுறுவீரேல் - கலங்குவீரானால், பிழை - (அது உமது தகைமைக்குக்) குறை வாகும்', என்றாள் - என்றுசொல்லி (மீண்டும் சீதையை)த் தேற்றினாள்; அவர் எல்லாம் - (அதுகேட்ட) அரக்கியரெல்லாரும், அறிவுற்றார் - (அந்தத் திரிசடை கூறியதை (விசாரித்துத்) தெரிந்துகொண்டு (திரிசடையைநோக்கி), 'அன்னே - தாயே! நன்று - நல்லது', என்றார் - என்று உடன்பட்டுச் சொன்னார் கள்; (எ - று.)

இப்படிச் சீதாபிராட்டி வருந்தும்போது, அருகிலிருந்த திரிசடை அப் பிராட்டியை நோக்கி 'நான் முன்னமே கண்ட கனாவின் பயனைக் கூறியிருந் தும் என்பேச்சை நம்பி ஆறியிராமல் இங்ஙனம் வருந்துவது தகுதியோ?' என்று கூறி, மீண்டும் அச்சீதாபிராட்டியைச் சமாதானப்படுத்தினாள். அப் போது அதனைக் கேட்டறிந்த அரக்கியரும் திரிசடையின் பேச்சை அங்கீ கரித்தார்க ளென்பதாம். நன்று என்பது - உடன்பாட்டைக் குறிப்பிக்கும். இனி, முன்னிரண்டடிகளால், திரிசடை சீதாபிராட்டியைச் சமாதானப்படுத் தியதாகக் கொண்டு, மூன்றாமடியால், பிராட்டியைப் பேதைமைக்குணங் கொண்டு மருட்டினீரானால் அது உங்கட்கும் பெருங்குற்றமாய் முடியு மென்று அரக்கியரை நோக்கிக் கூறியதாக உரைத்தலும் ஒன்று. 'அன்னே நன்றென் றேவலெல்லாரும் வினவுற்றார்' என்பதும் பாடம். (௮௧)

அஉ. அறிந்தா ரன்ன முச்சடை யென்பா ளவள்சொல்லப்
பிறிந்தார் சீற்ற மன்னனை யஞ்சிப் பிறிதில்லார்
செறிந்தா ராய தீவினை யன்னார் தெறலெண்ணார்
நெறிந்தா ரோதிப் பேதையு மாவி நிலைநின்றாள்.

(இ-ள்.) மன்னனை அஞ்சி-(தமது) அரசனாகிய இராவணனுக்குப் பயந்து, பிறிது இல்லார் - (அவனது கட்டளையன்றி) வேறொன்றையும் அறியாதவர்களும், செறிந்தார் ஆய தீவினை அன்னார் - மிகவும் நெருங்கினவாகிற தீவினையை யொத்தவர்களுமாகிய அவ்வரக்கிமார்கள், அன்ன முச்சடை என்பாள் அவள் சொல்ல - அந்தத்திரிசடையென்பவள் சொல்லியதனால், அறிந்தார் - நல்லுணர்ச்சி பெற்றவர்களாய், சீற்றம் பிறிந்தார் - (தாம் கொண்ட) கோபத்தினின்றும் மாறி, தெறல்எண்ணார் - (அப்பிராட்டிக்கு) அச்சமுறுத்துவதை நினையாமல் விட்டிட்டார்கள்; (அப்போது), நெறிந்து ஆர் ஓதி பேதையும் - நெறிப்புக்கொண்டுள்ள கூந்தலையுடைய பிராட்டியும், ஆவி நிலை நின்றாள் - (சிறிதுவருத்தம் நீங்கி) தன்னுயிர் நிலைத்திருக்கப்பெற்றாள்; (எ - று.)

திரிசடையின் சொல்லைத் தேர்ந்தறிந்த அரக்கியர் தாம் பிராட்டியை வருத்துவதை யொழிந்து நிற்க, அப்பிராட்டி சற்றுத் துயரொழிந்து ஆவி தரித்திருக்கப்பெற்றன ளென்பதாம். 'பிறிதில்லா' என்றும் பாடம். (அஉ)

நிந்தனைப்படலம் முற்றிற்று.

---

## ஐந்தாவது
## உருக்காட்டு படலம்.

அநுமான் பிராட்டியின் அருகிற் சென்று தனது வடிவத்தைக் காட்டி இராமபிரானது செய்தியைத் தெரிவித்துத் தனது பெரியஉருவத்தையும் காண பித்த வரலாற்றைக் கூறும் பாகம். உரு - ரூபம் என்ற வடசொல்லின் சிதைவு.

[சீதையைக் காணவிரும்பிய அநுமான் அவளைக்காவல்செய்கிற அரக்கியரை மந்திரபலத்தால் உறங்கச்செய்தல்.]

க. காண்டற் கொத்த காலமு மீதே தெறுகாவ
றாண்டற் கொத்த சிந்தையி னாருந் துயில்கில்லார்
வேண்டத் துஞ்சா ரென்றொரு விஞ்சை வினைசெய்தான்
மாண்டற் குற்றா ராமென வெல்லா மயர்வுற்றார்.

(இ-ள்.) 'காண்டற்கு ஒத்த காலமும் ஈதே - (நான் பிராட்டியைக்) காணத் தக்க சமயமும் இதுவேயாம்; தெறு காவல் தாண்டற்கு ஒத்த சிந்தையினாரும் - வருத்தி நெருக்குகிற காவலைச் செய்தற்குப் பொருந்திய மனத்தையுடைய அரக்கியரும், துயில்கில்லார் - தூங்குகின்றாரில்லை: வேண்ட துஞ்சார் - (தூங்க வேண்டுமென்று யான்) விரும்புகிறமாத்திரத்தால் (இவர்கள்) தூங்கமாட்டார்,' என்று - என்று (அநுமான்) ஆலோசித்து, (அவ்வரக்கியரை உறங்கச்செய்வத னிமித்தம்), ஒரு விஞ்சை வினை செய்தான் - ஒரு மாயவித்தையைச் செய் தான்; (செய்யவே), எல்லாம் - அரக்கியர்யாவரும், மாண்டற்கு உற்றார் என - இறத்தற்குக் காலம்நேர்ந்தவர்போல, மயர்வு உற்றார் - மயக்கமடைந்தார்கள்; (எ-று.)—ஆம் - அசை.

அரக்கியரால் வருத்தப்பட்டு மிகமனங்கலங்கிய சீதை திரிசடை தேற்ற அவள் வார்த்தையை நம்பிச் சிறிது தேறியிருக்குஞ் சமய மாதலால், அந்தத் திரிசடையின் வார்த்தைக்கு இணங்க இப்பொழுதே நானும் சென்று இராம பிரானது வரலாற்றைத் தெரிவித்தல் தக்கதா மென்று அநுமான் சீதையைக் காணவேண்டினா னென்க. அரக்கியர் இராவணனது குற்றேவன்மகளி ராத லின், அவனாணைகடவாது சீதையைவருத்துபவர்களாய்ச் சிறைசெய்யுந் தம் தொழிலில் நிலைநின்று உறங்காது நிற்ப ரென்பான், 'தெறுகாவல்தாண்டற் கொத்த சிந்தையினாரும் துயில்கில்லார்' என்றான்; அடுத்த கவியிலும் 'துஞ் சாதார்' என்பர். அரக்கியர் கண்விழித்திருக்கையில் தான் சென்று பிராட்டி யுடன் பேச அவர்கள் விடாராதலாலும், இரகசியம் வெளிப்பட்டுவிடு மாதலா லும், அநுமான் மந்திரபலத்தால் அவர்களை உறங்கும்படி செய்தன னென்க.

தெறு சிந்தையினார் என இயையும். விஞ்சை - வித்யா என்ற வடசொல் லின் திரிபு; வித்யை, வித்தை, விச்சை, விஞ்சை யெனக் காண்க. விஞ்சை

வினைசெய்தல்-ஒருமந்திரத்தை உச்சரித்து அதன்வலிமையால் தான் நினைத்த காரியத்தை முடித்துக்கொள்ளுதல். மயர்வு - 'வு' விகுதி பெற்ற தொழிற்பெயர். அயர்வுற்றார் என்று பிரித்தல், மோனைத்தொடைக்குச் சிறவாது.

இதுவும், அடுத்த கவியும் - மூன்றாஞ்சீர் விளச்சீரும், ஈற்றுச்சீர் புளிமாங்காய்ச்சீரும், மற்றைமூன்றும் மாச்சீர்களுமாய் வந்த நெடிலடி நான்கு கொண்ட கலிநிலைத்துறைகள்; காப்பியக்கலித்துறையென்பதும் இது. (௧)

[அரக்கியர் உறங்குகையில், பிராட்டி சோகிக்கத்தொடங்குதல்.]

௨. துஞ்சா தாருந் துஞ்சுதல் கண்டா டுயராற்றா
ணெஞ்சா லொன்று முய்வழி காணா ணெகுகின்றா
ளஞ்சா நின்றாள் பன்னெடு நாளு மழிவுற்றா
ளெஞ்சா வன்பா லின்னப கர்ந்தாங் கிடருற்றாள்.

(இ-ள்.) பல் நெடு நாளும் அழிவுற்றாள் - மிகப்பலநாளாக வருந்துபவளான பிராட்டி,—துஞ்சாதாரும் துஞ்சுதல் கண்டாள் - ஒருநாளும் தூங்காதவர்களான ராக்ஷசிகளும் (அன்று) தூங்கினதைப்பார்த்து, துயர் ஆற்றாள் - (தனக்கு நேர்ந்த) துன்பத்தை இன்னமும் பொறுக்கமாட்டாதவளாய், உய் வழி ஒன்றும் நெஞ்சால் காணாள் - (அத்துன்பத்தினின்று) தப்பும்வழி சிறிதும் தன்மனத்தால் அறியாதவளாய், நெகுகின்றாள் - மனமுறிந்து, அஞ்சாநின்றாள் - அஞ்சுகிறவளாய்,—எஞ்சா அன்பால் - குறையாத [மேன்மேல்மிகுகிற] (இராமனிடத்துஉள்ள) அன்பினால், இன்ன பகர்ந்து - இவ்வார்த்தைகளைச் சொல்லி, ஆங்கு - அப்பொழுது, இடர் உற்றாள் - துன்பப்படுபவளானாள்; (எ-று.)— அவற்றை, அடுத்த கவிகளிற் காண்க.

அருகிலிருந்த அரக்கியர்யாவரும் உறங்கத் தன்மனத்திற்கு வேற்றிடத்திற் போக்கில்லாமையால், இராமனைப்பிரிந்ததனால் நேர்ந்த துன்பம் சீதைக்கு மிகுவதாயிற்று. துஞ்சாதாரும் துஞ்சுதல் - மாறுபட்டசொற்கள் வந்தது, தொடைமுரண். உம்மை - உயர்வுசிறப்பு. 'வினைப்பகுதி வேண்டியபொருளை விளக்கும்' என்பதுபற்றி, காணுதல் - இங்கு ஆராய்தலென்னும் பொருளது; ஒன்றற்கு உரியதொழிலை மற்றொன்றன்மே லேற்றிய உபசாரவழக்குமாம்: நெஞ்சென்னும் உட்கண்ணாற் காணுதலென்க. பல் நெடு - ஒருபொருட்பன்மொழி. அழிவுற்றாள் - பெயர். (௨)

[இதுமுதல் ஏழு கவிகள் - பிராட்டியின் புலம்பலைக் கூறும்.]

வேறு.

௩. கருமே கநெடுங் கடல்கா ரனையான்
றருமே தனியே னெனதா ருயிர்தா
னுருமே றுறழ்வெஞ் சிலைநா ணொலிதான்
வருமே யுரையாய் வலியார் வலியே.

(இ-ள்.) வலி ஆர் வலியே - (தடுக்கப்படாது அனுபவித்தே தீரவேண்டிய) வலிமைபொருந்திய (என்) விதியே! கரு மேகம் - கருநிறமுள்ள மேகத்தையும், நெடுங் கடல் - பெரிய கடலையும், கார் - இருளையும், அனையான் - ஒத்த (திருமேனிநிறத்தையுடைய) இராமபிரான், தனியேன் எனது ஆர் உயிர் - (தன்னைவிட்டுப் பிரிந்ததனால்) தனியேயிருந்து வருந்துகிற என்னுடைய அருமையான உயிரை, தருமே - (இங்குவந்துகூடி அழியாமல்) நிலைபெறச்செய்தருளுவனோ? உரும் ஏறு உறழ் வெம் சிலை நாண் ஒலி - பேரிடிமுழக்கத்தையொத்த (பகைவர்க்குப்) பயங்கரமான (அவனது) வில்நாணியின் தொனியானது, வருமே - இங்கு வருமா? உரையாய் - சொல்வாயாக; (எ-று.)

தான்இருக்கிற இவ்விடத்தைத் தெரிந்துகொண்டு இராமபிரான் கடல்கடந்துவந்து பகைதொலைக்கச் செய்யும் தனுஷ்டங்காரம் தனக்கு ஆறுதலையுண்டாக்கு மாதலால், அப்பெரும்பேற்றைச் சீதை எதிர்நோக்குபவளாயினள். "ஊழிற் பெருவலி யாவுள" என்றபடி எல்லாவற்றினும் மிக்க வலியுள்ளதாதலால், விதியை 'வலி' என்றே கூறினர். "மற்றொன்று சூழினுந் தான்முந்துறும்" ஆதலால், 'வலிஆர்வலி' எனப்பட்டது. முதலடியிற் கூறிய உவமைகள், நிறம்பற்றியன; அன்றியும், மேகம் - கைம்மாறு கருதாது கருணைமழைபொழிதலிலும், கடல்- உலகத்தைக்காக்குந்தொழிலிலும், திருமாலின் அவதாரமான இராமபிரானுக்கு ஒப்புமையாம். இருளை எம்பெருமான் திருமேனிக்கு உவமைகூறுதலை, "ராத்திரிமேனியம்மான் பைம்பொன்வேங்கடவன்" என ஆன்றோர்மொழியிலுங் காண்க. இனி, 'கார்நெடுங்கடலெண இயைத்தலுமாம். அன்றி, கரியமேகமும், நெடியகடலு மாகிய இவற்றைக் கருநிறத்தில்ஒத்தவனென்றலு மொன்று. தருமே, வருமே, ஏகாரங்கள் - வினாப்பொருளோடு, அத்தொழில்களின் கிடைத்தற் கருமையையும் உணர்த்திநின்றன. ஏறு - ஆண்மைப்பெயர்; பெரியதையும் சிறந்ததையும் ஏறென்றல், மரபு. வெம் - (பகையொழித்தலால் என்னல்) விரும்பப்படுகிற எனினுமாம்; "வெம்மை வேண்டல்" என்றார் தொல்காப்பியனார். இராமபிரானது வில், கோதண்டமெனப்படும். நாணொலி - குணத்தொனி, தநுஷ்டங்காரம். பொறுக்கவொண்ணாத்துயரம் நேர்ந்தகாலத்து விதியை நிந்தித்துப் புலம்புதல், இயற்கை. 'தான்' இரண்டும் - அசை.

இது முதல் எட்டுக் கவிகள் - பெரும்பாலும் நாற்சீரும் மாச்சீராய் வந்த அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். அன்றி, 'கருமேகநெடுங்கடல் காரனையான்' என இவ்வாறுபிரித்து, பெரும்பாலும் முதற்சீர் மாங்கனிச்சீரும், இரண்டாவது கூவிளச்சீரும், மூன்றாவது கூவிளங்காய்ச்சீருமாகிய சிந்தடி நான்கு கொண்ட வஞ்சிவிருத்த மெனக் கொள்ளினும் இழுக்காது. (௫)

௬. கல்லாமதியேகதிர்வாணிலவே
செல்லாவிரவேசிறுகாவிருளே
யெல்லாமெனையேமுனிவீர்நினையா
வில்லாளனையாதும்விளித்திலிரோ.

(இ - ள்.) கல்லா மதியே - படியாதவனான[மூடனான] சந்திரனே ! கதிர் வாள் நிலவே - மிக்கஒளியையுடைய நிலாவே ! செல்லா இரவே - (விரைவிற்) கழியாத இராப்பொழுதே ! சிறுகா இருளே - குறையாமற் பெருகுகிற அந்தகாரமே ! எல்லாம் - நீங்களெல்லாரும், எனையே - (இராமபிரானைப்பிரிந்து வருந்தும் பெண்பாலான) என்னையே, முனிவீர் - கோபித்துவருத்துவீர் ; நினையா - (என்னைச் சிறிதும்) எண்ணாத, வில் ஆளனை - வில்வீரனான இராமபிரானை, யாதும் விளித்திலிரோ - சிறிதும் வருத்தமாட்டீர்களோ ? (எ - று.)

அவ்விராமபிரானை வருத்துவீராயின், பிரிவாற்றாமையால் உடனேவந்து அவன் என்னை அணைவான் : மகாவீரனான அவனையும் வென்றுவசப்படுத்தினால் அப்போது உங்கள்திறமை பயன்பெற்றதாகும் என்றபடி. 'வில்லாளன்' என்றதனால், அவனது வில்வன்மைக்கு நீவிர் அஞ்சினீர்போலும் என்றவாறு. அன்றியும், உங்கள்திறத்தைச் செலுத்துதற்கு ஏற்ற வலிமையுடையவனை விட்டு அபலையாகிய என்னை வருத்துதல் நீதியன்றென்பதாம். பெண்ணை வருத்துதல் பெரும்பாவமென்று உணராது தன்னைவருத்துதலால், சீதை, சந்திரனை 'கல்லாமதி' என இகழ்ந்தனள். சந்திரன்முதலிய பொருள்கள் விரகிகளுக்குக் காமோத்தீபகமாய்ப் பெருந்துயரை விளைக்கும். இனி, கல் ஆம் மதி என்று பிரித்து, உதயபருவதத்தில் தோன்றுகிற மதி யென்றலும் ஒன்று. 'கல்லாமதி' என்ற இதில், கல்நெஞ்சுடையமதி யென்ற பொருளும் தொனிக்கும். கதிர் வாள் - ஒருபொருட்பன்மொழி. விரகிகளை மிகவும் வருத்துதலில் நிலவிற்கு உள்ள ஆற்றலைத் தோற்றுவித்தற்கு, விசேஷணத்தின்மேல் விசேஷணங்கொடுத்துக் கூறினாள். விரகிகளுக்கு ஓரிரவே பலயுகம்போலத் தோன்றுமாதலால், 'செல்லாவிரவே சிறுகாவிருளே' என்றாள். 'எல்லாம் எனையேமுனிவீர்' என்றது, உங்களுக்குள் ஒன்றினது திறலுக்கும் ஈடுகொடுக்கமாட்டாத என்னையொருத்தியையே நீங்கள் இத்தனைபோ ஒன்றுசேர்ந்து வருத்துவது உங்கட்கு மிக இழிவாமென்று குறிப்பித்தபடி ; இது, கூட்டணி : ஒவ்வொன்றுமே தனித்தனி போதுமான வல்லமையுள்ள காரணங்கள்பல ஒருதொழிலை நிகழ்த்துவனவாகக் கூறுதல், இதன் இலக்கணம் : இதனை வடநூலார் ஸமுச்சயாலங்கார மென்பர். 'நினையா' என்றதில், நான் உங்கள்வசப்பட்டும் சிறிதும்பயனில்லை யென்பதும், உங்கள்தொழில் அவனிடத்திலேயே செய்யத்தக்கதென்பதும் விளங்கும். 'யாதும் விளித்திலிரோ' என்றதனால், நீங்கள்செய்யும் வேதனையெல்லாம் அவனிடத்தும் பயன்பெறாதனவாயினவோ வென்று தனக்குஉண்டான சந்தேகத்தையும் குறிப்பாகத் தெரிவித்தனள். இது, கேளாதவற்றைக் கேட்பன போலச் சொன்ன மரபுவழுவமைதி; மேலதற்கும் இஃது ஒக்கும். (௪)

ரு. தழல்வீசவுலாய்வருவாடைதழீஇ
யழல்வீரெனதாவியறிந்திலிரோ
நிழல்வீரையனாருடனீர்நெடுநா
ளுழல்வீர்கொடியீருரையாடிலிரோ.

௪டு

(இ-ள்.) கொடியீர் - பூங்கொடிகளே! தழல் வீச - நெருப்புச்சுவாலை எரிய, உலாய் வரு-உலாவிவருகிற, வாடை - வடகாற்றை, தழீஇ-துணையாகக் கொண்டு, அழல்வீர் - (என்னை) வருத்துகின்றீர்கள்; எனது ஆவி அறிந்திலிரோ - எனதுஉயிரின்நிலைமையை (நீங்கள் சற்றும்) அறியவில்லையோ? நிழல் வீரை அனுருடன் - (தனது) தேககாந்தியாற் கடலையொத்த இராமபிரானுடனே, நெடு நாள் உழல்வீர் - பலகாலமாக வனத்திற் பயில்கிற, நீர்-நீங்கள், உரையாடிலிரோ - (என்குறையைச்) சொல்லமாட்டீர்களோ? (எ - று.)

நீங்கள் எனது நட்பினராயிருத்தலால் எனதுதுன்பத்தைநீக்குவது நுமதுகடமையாயிருக்க, இராமபிரானைப்பிரிந்து உயிர்நீங்குந்தருணத்தி லிருக்கும் என் நிலைமையை அறிந்திருந்தும் எனக்குச் சிறிதும் தேற்றுதலைச் செய்யாது எனக்குத்துன்பஞ்செய்யுந்தன்மையுள்ள காற்றைத் துணையாகக் கொண்டு இவ்வாறு என்னை வருத்துதல் நுமக்குத் தக்கதோ? என்னை இங்ஙனம் வருத்தாது, உங்களோடு நெடுநாள்பழகியுள்ள அப்பிரானிடத்து நீவிர் தூதுசென்று என்நிலைமையைச் சொல்லவேண்டு மெனச் சீதை பூங்கொடிகளை நோக்கிக் குறையிரந்து வேண்டியபடி. பூங்கொடிகள் மகளிர்க்கு உவமைப்பொருளாதலால், அவற்றைத் தன்சுற்றம்போல்வைத்துக் கூறினாள். காற்றுமுதலிய காமோத்தீபகப்பொருள்கள் தண்ணியனவாயினும் பிரிந்தாரை வெவ்வியனவாய் வருத்துதலால், 'தழல்வீசவுலாய் வருவாடை' என்றாள். 'வாடைதழீஇயழல்வீர்' என்றதனால், இராமபிரான் எழுந்தருளியிருக்கிற திக்கிலிருந்து வருகிற காற்றைக் கொடிகள் தழுவியதைக் கண்டு பொறாமையுற்றதை வெளியிட்டாள்போலும். வாடை - வடக்கிலிருந்து வருங் காற்று; இனி, வடக்கிற்செல்லுங்காற்றென்று உரைத்துத் தென்றலென்றுங் கொள்ளலாம். எனதுஆவி யறிந்திலிரோ என்பதற்கு-எனதுபிராணநாயகன் இன்னுனென்று உங்கட்குத்தெரியாதோ? என்றும் உரைகூறலாம். வீரை - கடல்; "வீரை யன்னவமே யத்தி வெள்ளம் சாகரமே யாழி" என்பது நிகண்டு. கொடியென்னுஞ் சாதியொற்றுமைபற்றி, 'வீரையனுருடன் நீர் நெடுநாள் உழல்வீர்' என்றது. 'கொடியீர்' என்பதில், கொடுந்தன்மையுடையீ ரென்பது தொனி. கொடியீர் - கொடியார் என்பதன் விளி; 'ஆர்'என்னும் பலர்பால்விகுதி, உயர்வு பற்றி அஃறிணைக்கு வந்தது; இணைவழுவமைதி. (௬)

ள. வாராதொழியானெனும்வுண்மையினு
லோராயிரகோடியிடர்க்குடையேன்
றீராவொருநாள்வலிசேவகனே
நாராயணனேதனிநாயகனே.

இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ-ள்.) ஒரு நாள் வலி தீரா - ஒருபொழுதும் வலிமை குறையப் பெறாத, சேவகனே - மகாவீரனே! நாராயணனே - நாராயணனென்னுந் திருநாமமுடையவனே! தனி நாயகனே - ஒப்பற்ற தலைவனே! வாராது ஒழி

யான் எனும் வண்மையினால் - (எனது பிராணநாயகன்) வராமலிருக்கமாட்டா னென்கிற (அவனுடைய) உதாரகுணத்தை நோக்கியே, ஓர் ஆயிர கோடி இடர்க்கு உடையேன் - (எனக்கு இப்பொழுது நேர்ந்துள்ள) மிகப்பலவாகிய துன்பங்கட்கும் உயிர்நீங்காதிருக்கிறேன், (யான்); (எ - று.)

இல்லாவிட்டால் முன்னரே பிராணத்தியாகஞ் செய்திருப்பே னென்பது, இசையெச்சம். 'வாராதொழியான்' என்றது, முன்னிலையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி. தன்னை அலட்சியஞ்செய்தா னென்பதனா லுண்டான ஊடலின் மிகுதியால் முன்னிலையாகக் கூறுதலை யொழித்துப் படர்க்கையாற் கூறினா ளென்றுங் கொள்க. எதிரிலில்லாத இராமனை இங்ஙனம் சீதை விளித்துக்கூறினது, தனது மனத்திற்குப் புலனாய்நின்றமையா லென்க. இனி, 'சேவகனே' முதலிய மூன்று பெயர்களிலு முள்ள ஏகாரத்தை இசை நிறையாக்கி, சேவகனும் நாராயணனு மாகிய தனிநாயகன் வாராதொழியான் என வழாநிலையாக் கூறுதலும் பொருந்தும். வாராதொழியான் - இரண்டு எதிர்மறைகள் ஓர்உடன்பாட்டை வற்புறுத்தி நின்றன. ஓராயிரகோடி - மிகப் பலவாகியஎண்ணிற்கு ஒன்று காட்டியவாறு. உடையேன் - உடை என்னும் வினையடியாப் பிறந்த எதிர்மறைமுற்று; 'உடைவேன்' என்றும் பாடம். 'ஒருநாள்' என்பதில், இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. சேவகன்- வீரன்; "சார்ங்கவிற்சேவகன்" என்றார் பெரியாரும். நாராயணன் - நார— அயனன்: தீர்க்கசந்திபெற்ற வடமொழித்தொடர்; சிருஷ்டிப்பொருள்கட் கெல்லாம் சேர்விடமானவ னென்றும், சிருஷ்டிப்பொருள்களைத் தனக்குச் சேர்விடமாகவுடையவனென்றும், பிரளயகாலப்பெருங்கடல்நீரைத் தனக்கு இருப்பிடமாகவுடையவனென்றும் பொருள்படும். 'தனிநாயகன்' என்றது, தேவர் முதலிய யாவர்க்கும் தலைவராகிய திரிமூர்த்திகளுள்ளும் மேலானவ னென்றபடி; "முதலாவார் மூவரே யம்மூவருள்ளும், முதலாவான் மூரிநீர் வண்ணன்" என்றது காண்க. (௬)

௭. தருவொன்றியகானடைவாய்தவிர்நீ
வருவென்சிலநாளினின்மாநகர்வா
யிருவென்றனையின்னருடானிதுவே
லொருவென்றனியாவியையுண்ணுதியோ.

(இ - ள்.) (வனத்திற்குப் புறப்படும்பொழுது நீ என்னை நோக்கி), 'நீ—, தரு ஒன்றிய கான் அடைவாய் - மரங்கள் பொருந்திய காட்டிற்கு (என்னுடன்) வரவிரும்புகின்றாய் : தவிர் - (அவ்விருப்பத்தை) ஒழிப்பாயாக்; சில நாளினில் - சிலநாள்களுக்குள்ளே, வருவென் - (வனத்தினின்று இவ்விடத்தில்) வந்து சேர்வேன் : மா நகர்வாய் - இந்தப் பெரிய பட்டணத்தில்தானே, இரு - தங்கியிரு', என்றனை - என்றுகூறினாய் ; இன் அருள் தான் - இனிய கருணை யோடுகூடிய உன்கட்டளைதான். இது எல் - இங்ஙனமாயின், ஒருவென் தனி ஆவியை உண்ணுதியோ - (உன்னைவிட்டுத்) தனியே யிருக்கிற எனது வேறு கதியில்லாத உயிரை (நீ) வருத்துவாயோ ? (எ-று.)

காட்டிற்குச் செல்லவிருக்கையில் என்னை நோக்கி 'காட்டிற் பலவகைத்துன்பங்க ளுள்ளன; ஆதலால், நீ இங்கேயே இனிது இரு; நான் சிலநாள்களுள் மீண்டுவருவேன்' என என்னை அவ்வருத்தத்திற்கும் உள்ளாக்கலாகாதென்று மிக்ககருணைகொண்டு கூறி, நான் அரக்கர்கைப்பட்டு இவ்வாறு பெருந்துயாமுறுகையிலும் இங்குவந்து உதவாது வருத்துதல் உனக்குத் தகுதியோ? எனச் சீதை நொந்துகூறியவாறு; "கருவி மாமழைக் கற்கடங் கண்டு நான், வருவெ னீண்டு வருந்தலை நீ யென்றான்", "வல்லரக்கரின் மால்வரை போய்விழுந், தல்லரக்கி னுருக்கழல் காட்டயற், கல்லரக்குங் கடுமைய வல்ல நின், சில்லரக்குண்ட சேவடிப்போ தென்றான்" என்ற அயோத்தியா காண்டச்செய்யுள்கள் இங்கு அறியத்தக்கன. யான் உனதுகட்டளையைக் கடந்து உடன்புறப்பட்டு வந்ததனாலேயே நீ என்பக்கல் இவ்வாறு கருணை தவறினாய்போலும் என்பதும் கருத்து. அடைவாய் என்பதை அடையவிரும்பு பவளே என விளியாகவுங் கொள்ளலாம். 'மாநகர்வாய்' என்பதை மத்திமதீப மாக் கொண்டு, முன்னுள்ள 'வருவென்' என்றதனோடும், பின்னுள்ள 'இரு' என்பதனோடும் கூட்டுக. அயோத்தி முத்திதரும் நகரம் ஏழனுள் ஒன்றாதலால், 'மாநகர்' எனப்பட்டது. ஆவியை உண்ணுதி - மரபுவழுவமைதி; "உண்டற்குரிய வல்லாப்பொருளை, யுண்டதுபோலக் கூறலு மரபே" என்பது, தொல்காப்பியம். (எ)

அ. பேணும்முணர்வேயுயிரேபெருநா
ணாணின்றுழல்வீர்தனிநாயகனைக்
காணுந்துணையுங்கழிவீரலிர்நான்
பூணும்பழியோடுபொருந்துவதோ.

(இ - ள்.) பேணும் உணர்வே-விரும்பிக்காக்கப்படுகிற (எனது) அறிவே! உயிரே-(என்) உயிரே! பெரு நாள் - பலநாளாக, நாண் இன்று - வெட்கமில்லாமல், உழல்வீர் - (என்னைவிட்டு) நீங்காமல் (என்னோடு நீங்களும்) அலைகிறீர்கள்; தனி நாயகனை - ஒப்பற்ற தலைவனான இராமபிரானை, காணும் துணையும் - (யான்) பார்க்குமளவும், கழிவீர் அலிர் - நீங்கமாட்டீர்போலும்: நான்—, பூணும் பழியோடு - வருகிற பழியுடனே, பொருந்துவதோ - சேர்வது தகுதியோ? (எ - று.)

நாயகனை இனிக்காணுதல் அரிதாதலால், அவனைப்பிரிந்தும் உணர்வோடு நெடுநாள் உயிர்த்திருந்தா ளென்னும்பழி எனக்குவருவது நிச்சயம்; அங்ஙனம் அப்பழியை நான் அடையாமலிருக்கும்படி நீவிர் என்னைவிட்டு நீங்கினால் அதுவே நமக்குத் தகுதியாம்; நீங்கள் உற்றதுணைவராயிருந்தும் எனக்குப் பழிவரும்படி செய்தல் நமக்கு உசிதமல்லவே எனச் சீதை உயிருடனிருப்பதை மிகையாக எண்ணிக் கூறின ளென்க. இனி, நான்காமடிக்கு - நான் அடையும்பழியை நீங்களும் அடையப்போகிறீர்களோ? என்றுங் கருத்துக் கொள்வர். இராமனைவிட்டுப்பிரிந்தபின்பும் இறவாதிருத்தல் பழிப்புக்கிட மா

தலால், 'நாணின்றுழல்வீர்' என்றாள். இன்று - இன்றி என்னும் எதிர்மறைக் குறிப்பு வினையெச்சம் ஈறுதிரிந்துநின்றது ; இனி, முற்றெச்சமாக் கொள்ளுதலும் நேராம். (அ)

க. முடியாமுடிமன்னன்முடிந்திடவும்
படியேழுநெடுந்துயர்பாவிடவும்
மடியாநெறிவந்துவனம்புகுதுங்
கொடியார்வருமென்றுகுலாவுவதோ.

(இ - ள்.) முடியா - (வேறொருவகையாலும்) இறவாத, முடி மன்னன் - கிரீடத்தையுடைய தசரதசக்கரவர்த்தி, முடிந்திடவும் - இறந்தொழியும் படியும், படி ஏழும்-ஏழுஉலகங்களிலும், நெடுந் துயர் - மிக்கதுன்பம், பாவிடவும் - பரவும்படியும், மடியாநெறி - முடியாத [மிகநீண்ட] வழியிலே, வந்து—, வனம் புகுதும் - வனத்திற் பிரவேசித்த, கொடியார் - கொடுந்தன்மையையுடையவர், வரும் - இங்கே வந்து எனதுதுயரைத் தணிப்பார், என்று - என்று எண்ணி, குலாவுவதோ-(யான்) மகிழ்ந்துவாழ்வது தகுதியோ? (எ - று.)

வேறெவ்வாற்றானும் இறவாத [மிகவலியனான]' தந்தையையும் தனது பிரிவாற் கொன்று, எல்லாவுலகத்தவரையும் துன்பத்திற்குள்ளாக்கி வனத்திற்குச்சென்ற இரக்கமில்லாக்கல்நெஞ்சன் என்பக்கலில்மாத்திரம் இரங்குவனென்றெண்ணுவது பெரும்பேதைமையாமென்பது கருத்து. ஆதலின், உயிரையொழித்து இத்துன்பத்தினின்று நீங்குவதே தகுதி யென்பது, குறிப்பு. முடியா - (மூத்தமகனாகிய இராமபிரானுக்குப் பட்டாபிஷேகஞ்செய்வதாக நினைத்த காரியத்தை) நிறைவேற்றாத என்றும், முடி ஆம் எனப்பிரித்து எல்லாவரசர்கட்குந் தலைவராகிய [சக்கரவர்த்தியான] என்றும், முடிமுடியா என இயைத்து(ப் பிள்ளைக்குப் பட்டாபிஷேகம் செய்து) முடிசூட்டாத என்றும் பொருள்கூறலாம். முடியா முடிமன்னன் முடிந்திடவும் - மாறுபட்ட சொற்கள் வந்தது, தொடைமுரண். இவ்வடியில் பிராச மென்னுஞ் சொல்லணியும் அமைந்திருத்தல் காண்க. படி - பூமியென்னும் பொருளை யுணர்த்தும் இச்சொல், உலகமென்றமாத்திரமாய் நின்றது ; சிறப்புப்பெயர் பொதுப்பொருளைக் குறித்தது, ஒருவகை இலக்கணை. படியேழ் - பூலோகம் புவர்லோகம் சுவர்லோகம் மகர்லோகம் ஜநலோகம் தபோலோகம் சத்தியலோகம் என்னும் மேலுலகங்கள் ஏழும், அதலம் விதலம் சுதலம் தராதலம் ரசாதலம் மகாதலம் பாதாளம் என்னுங் கீழுலகங்கள் ஏழும் எனக் கொள்க; ஜம்புபிலட்சம் குசம் கிரௌஞ்சம் சாகம் சால்மலி புஷ்கரம் என்னும் ஏழுதீவுகளென்றுங் கொள்ளலாம். 'கொடியார்' என்றது, நிஷ்டூரவார்த்தை; கோபத்தினால் ஆண்பால் பலர்பாலாகக் கூறப்பட்ட பால்வழுவமைதி; இச்சொல், சொல்லாற் பலர்பாலாயினும் பொருளால் ஆண்பாலாதலால், 'வரும்' என்னும் செய்யுமென்முற்றைக் கொண்டவழாநிலையேயாம் : "பல்லோர்படர்க்கை முன்னிலை தன்மையிற், செல்லாதாகுஞ் செய்யுமென் முற்றே" என்னும் விதிக்கு மாறுபட்டதன்றாதலின். (க)

[சீதை தான் இறப்பதே தகுதியென்று தீர்மானித்தல்.]

க௦. என்றென் றுயிர்விம் மியிருந் தழிவாண்
மின்றன் னுமருங் குல்விளங் கிழையா
ளொன்றென் னுயிருண் டெனினுண் டிடர்யான்
பொன்றும் பொழுதே புகழ்பூ ணுமெனா.

(இ-ள்.) மின் தன்னு மருங்குல் - மின்னலைப் போன்ற இடையையும், விளங்கு இழையாள் - பிரகாசிக்கிற ஆபரணங்களையுமுடைய சீதை, என்று என்று - எனப் பலவாறாகக்கூறி, உயிர் விம்மி - பெருமூச்சுவிட்டு, இருந்து - (இருந்தவிடத்தைவிட்டுப்பெயராமல்) நிலையாயிருந்து, அழிவாள் - வருந்துபவளாய், 'என் உயிர் ஒன்று உண்டு எனின் - எனது உயிரொன்று (உடம்பில்) உள்ளதாமானல் [உயிருள்ளமட்டும்], இடர் உண்டு - (கூடவே) துன்பமும் உளதாகும்: யான் பொன்றும் பொழுதே - நான் இறக்கும்பொழுதுதான், புகழ் பூணும் - (எனது துன்பங்கள் ஒழிந்து) கீர்த்தி (எனக்கு) உண்டாம்', எனா - என்று எண்ணி, (எ-று.)—'எனா' என்பது, மேல் உக-ஆங் கவியில் 'எய்தினள்' என்பதனோடு முடியும்.

பின் 'புகழ்பூணும்' என்பதற்கு ஏற்ப, முன் 'இடர்உண்டு' என்பதற்கு - துன்பத்திற்குக்காரணமான பழி யுண்டு என்றுங்கொள்ளலாம். என்றுஎன்று - அடுக்கு, மிகுதிப்பொருளில் வந்தது. உயிர் - உயிர்ப்பு, மூச்சு. சீதையினிடைக்கு மின்னல் உவமை - மெல்லியதாய் ஒல்கிஒசிந்து விளங்குதலில். தன்னு - உவமவுருபு. இழை - இரத்தினங்களிழைத்துச் செய்யப்படுவதெனக் காரணக்குறி. உயிர்சுமந்து பழியுடனிருத்தலினும், அவ்வுயிரையொழித்துப் புகழ்பெறுதலே சிறந்தது என்பது கருத்து. (க௦)

[இதுமுதற் பத்துக் கவிகள் – பிறநூரில் தான் வசிக்கநேர்ந்ததைக்குறித்துச் சீதை பலவாறு வெறுத்துக்கூறுதல்.]

வேறு.

கக. பொறையிருந் தாற்றியென் னுயிரும் போற்றினே
னறையிருங் கழலவற் காணு மாசையா
னிறையிரும் பல்பக னிருதர் சேனைகர்
சிறையிருந் தேனையப் புனிதன் நீண்டுமோ.

(இ-ள்.) அறை இருங் கழலவன் - ஒலிக்கிற பெரிய வீரக்கழலையணிந்த இராமபிரானை, காணும் - (நான்) காணலாகுமென்கிற, ஆசையால் - விருப்பத்தினால், இருந்து - (இங்கே) இருந்து, பொறை ஆற்றி - (எல்லாத்துன்பங்களையும்) பொறுத்தல்செய்து, என் உயிரும் - எனது உயிரையும், போற்றினேன் - (போகவொட்டாது) பாதுகாத்துவைத்திருந்தேன்; (ஆயினும்),

நிறை இரும் பல் பகல் - நிறைந்த மிகப்பலநாளாக, நிருதர் நீள் நகர் - அரக்கரது பெரியபட்டணத்தில், சிறை இருந்தேனை - சிறைப்பட்டிருந்த என்னை, அப் புனிதன் - பரிசுத்தகுணமுள்ள அந்த ஸ்ரீராமன், மீண்டுமோ - (மீண்டும்) அங்கீகரிப்பனோ? [அங்கீகரியான் என்றபடி]; (எ - று.)

இராமபிரானிடத்துள்ள வேட்கைமிகுதியால், என்மீதுள்ள குற்றத்தை நான் சிறிதும் கருதாது அவன் வந்து சிறைமீட்ப னென்று எண்ணி உயிர் வைத்திருந்தேன்; அவன் மிகப்பரிசுத்தமூர்த்தியாதலால், அரக்கரூரில் வசித்துப் பெருங்குற்றமுடையளான என்னை அங்கீகரிக்கும் எண்ண மில்லாமை பற்றியே இதுவரையும் வந்திலன்போலும்; ஆதலின், இனி யான் உயிர்வைத்திருத்தலிற் பயனில்லை யெனக் கருதின ளென்றவாறு. இராமபிரான், இங்கு வாராமைக்குக் காரணம் அரக்கரிடத்துஅச்சத்தினாலன் றென்பாள், அவனை 'அறைபிருங்கழலவன்' என்றாள். என்உயிர் - உடைமையும் உடையதும் வேறாகாத ஒற்றுமைக்கிழமைப்பொருளில் வந்த ஆறும்வேற்றுமைத்தொகை. கழல்-வீரர்காலணி; "வீரத்தின்வீக்கிய, கழலே யாடவர் காலிசை யணிவடம்." காணும் ஆசை - பெயரெச்சம், காரியப்பொருளது. நிருதர்-நைருதர் என்ற வடமொழியின் திரிபு; நிருருதியென்னுந் திக்பாலகனது மரபில் தோன்றியவ ரென்பது பொருள்.

இதுமுதற் பதினைந்து கவிகள் - பெரும்பாலும் மூன்றுஞ்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (கக)

௧௨. உன்னினர்பிறரெனவுணர்ந்துமுய்ந்தவர்
சொன்னனசொன்னனசெவியிற்றாங்கவு
மன்னுயிர்காத்திருங்காலம்வைகினே
னென்னின்வேறரக்கியர்யாண்டையார்கொலோ.

(இ - ள்.) பிறர் உன்னினர் என உணர்ந்தும் - பரபுருஷர்கள் (என்னை) விரும்பினாரென்று அறிந்தபின்பும், உய்ந்து - (இறவாமல்) பிழைத்திருந்து, அவர் சொன்னன சொன்னன செவியில் தாங்கவும் - அவ்வரக்கர்கள் (என்னைப்பற்றிப்) பலபடிகூறிய கடுஞ்சொற்களெல்லாம் (எனது) காதிலே தங்கி நிற்கவும், மன் உயிர் காத்து - நிலையான தன்மையுள்ள (எனது) உயிரை விடாமற்காத்திருந்து, இருங் காலம் வைகினேன் - பலகாலம் வாழ்ந்தேன்; (ஆதலால்), என்னின் வேறு அரக்கியர் - (இப்படிப்பட்ட) என்னைக்காட்டிலும் கொடிய வேறு ராக்ஷசிகள், யாண்டையார்கொலோ - எவ்விடத்தில் உளரோ? [எங்கும் இரார் என்றபடி]; (எ - று.)

தன்னைப் பரபுருஷர் விரும்பினமையும், பிறர்கூறிய கடுஞ்சொற்களும் என்ற ஒவ்வொன்றே நான்உயிர்விடுவதற்குப்போதுமான இரண்டுகாரணங்களாயிருந்தும் பழிக்குச் சிறிதும் அஞ்சாது உயிர்வைத்துக்கொண்டு அவ்வரக்கிய

ருடன் ஒருங்குவசித்திருந்தமையால், சீதை 'என்னின்வேறரக்கியர் யாண்டையார்' என்றாள். உயிர்வைத்திருத்தல் பெரும்பழிக்குக்காரண மென்பது கருத்து. அவர்சொன்னசொன்னன - தன்னைமணந்துகொள்ளும்படி இராவணன் தானேசொன்னவையும், பிறரைக்கொண்டு இதமாகவும் கடுமையாகவும் சொல்வித்தவையும். அடுக்கு - மிகுதிப்பொருளது. உயிர் தான்ஆதாரமாக்கொண்டுள்ள உடம்பு அழிந்தாலும் தான் அழியாது வேறுடலைப் பற்றிநிற்குந்தன்மையதாதலால், 'மன்னுயிர்' எனப்பட்டது. வைகினேன் என்னின் என்றுஎடுத்து, வாழ்ந்திருந்தேனென்றால் என்றுகூறுவாருமுளர். அரக்கியர் - ரக்ஷஸ் என்னும் வடசொல்லின் விகாரமான அரக்கன்என்பதன் பெண்பாலாகிய அரக்கி என்பது 'அர்' என்னும் பலர்பால்விகுதி பெற்று நின்றது. யாண்டையார் என்பதில், யாண்டு என்பது - ஐகாரச்சாரியைபெற்றது: இச்சொல்லே வினைப்பொருள்குறித்துநின்றமையின், கொல் ஓ என்பன - அசைநிலையாய் வாக்கியாலங்காரமாக வந்தன. (கஉ)

கங. சொற்பிரியாப்பழிசுமந்துதூங்குவே
னற்பிறப்புடைமையுநாணுநன்றரோ
கற்புடைமடந்தையர்கதையுளோர்கடா
மிற்பிரிந்துய்ந்தவர்யாவர்யானலால்.

(இ - ள்.) சொல் பிரியா பழி - சொல்லுதல்நீங்காத நிந்தையை, சுமந்து - ஏற்றுக்கொண்டு, தூங்குவேன் - கவலையற்றிருக்கின்ற எனது, நல் பிறப்பு உடைமையும் - உயர்குடியிற்பிறத்தலையுடையளா யிருக்குந்தன்மையும், நாணும் - நாணுடைமையும், நன்று - மிகநன்றாயுள்ளது! கதை உளோர்கள் - சரித்திரங்களிற் சம்பந்தப்பட்டுள்ளவர்களாகிய, கற்பு உடை மடந்தையர் - பதிவிரதாதருமத்தையுடைய பெண்களுள், இல் பிரிந்து உய்ந்தவர் - இல்வாழ்க்கைக்குஉரிய கணவனைப் பிரிந்து பிழைத்திருந்தவர், யான் அலால் - யானொருத்தியேயல்லாமல், யாவர் - வேறுயாவர் உளர்? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)—அரோ, தாம் - ஈற்றசைகள்; செய்யுளினிறுதியிலன்றி, வாக்கியத்தினிறுதியிலும், அடியினிறுதியிலும் வருவனவும் ஈற்றசையேயாம்.

கற்புடைமடந்தையர்க்குத் தமதுஉயிரினும் கணவனே சிறந்தவ னென்பது கருத்து. காலம்போம் வார்த்தைநிற்கு மாதலால், 'சொற்பிரியாப்பழி' எனப்பட்டது; சொல்உள்ளகாலம்மட்டும் பழிநீங்கா தென்பதாம். தூங்குவேன் - காரணத்தைக் காரியமாகக்கூறிய உபசாரவழக்கு; கவலையற்றவர்க்கே தூக்கமுண்டாதல் இயல்பு. இனி, இதற்கு - சோர்ந்திருப்பே னென்றும் பொருள்கொள்வர். சீதை ஒருபெண்ணினது கருப்பத்தினின்று பிறவாமல் நிலத்தினின்று தோன்றி அயோநிஜையென்னுஞ் சிறப்புப் பெற்றிருத்தலும், கர்மயோகத்தினால் மிக்கமேன்மையடைந்துள்ள ராஜரிஷியான ஜநகமகாராஜனை வளர்த்ததந்தையாகவுடைமையும் வாய்ந்துள்ளவ ளாதலால், நற்பிறப்புடையவளாவள்; இம்மேன்மைகள், நற்குணநற்செய்கைக ளில்லாமையால்,

இகழும்படியாயின வென்க. நன்று - இகழ்ச்சிபற்றிய பிறகுறிப்பு. நாணுவது - தமக்குஒவ்வாதகாரியங்களில் மனமொடுங்குதல். உடைமையும் நாணும் நன்று - பன்மையொருமைமயக்கம்; தனித்தனி நன்று என இயைக்க. கற்பாவது - கொண்டானிற் சிறந்த தெய்வம் இல்லையெனவும் அவனை இன்னவாறே வழிபடுகவெனவும் தாய்தந்தையர் கற்பித்தலாலும், அந்தணரிடத்தும் சான்றோர்மாட்டும் ஐயர்பாங்கிலும் கடவுளரைக்குறித்தும் ஒழுகும் ஒழுக்கத்தைக் கணவன் கற்பித்தலாலும் உண்டாவது. மடந்தை - பருவப்பெயராகாமல் பெண்என்றமாத்திரமாய் நின்றது; அப்பருவத்துக்கு வயதெல்லை - பதினொன்கு முதற் பத்தொன்பதளவுமாம். இல் - கணவனுக்கு ஆகுபெயர். (௧௩)

௧௪. பிறர்மனையெய்தியபெண்ணைப்பேணுத
றிறனலதென்றுயிர்க்கிறைவன்றீர்ந்தனன்
புறனலரவனுறப்போதுபோக்கியா
னறனலதியற்றிவேறென்கொண்டாற்றுகேன்.

(இ - ள்.) 'பிறர் மனை எய்திய - அயலார்வீட்டிற் சேர்ந்த, பெண்ணை - ஒருபெண்ணை, பேணுதல் - (பின்னும்) விரும்பிக் கொணர்ந்துவைத்துக்கொள்ளுதல், திறன் அலது - தகுதியன்று,' என்று - என்று நினைத்து, உயிர்க்கு இறைவன் - (எனது) பிராணநாயகனான இராமபிரான், தீர்ந்தனன் - (என்னை மீட்டுக்கொண்டுசெல்ல நினையாது) கைவிட்டுப்போனான்; அவன் - அவ்விராமபிரான், புறன் - அயலாரிடத்தில், அலர் உற - பழிகேட்க, யான்—, அறன் அலது இயற்றி - தருமமல்லாததைச் செய்துகொண்டு, போது போக்கி - வீண்காலங்கழித்து, வேறு என் கொண்டு - வேறே எந்தநன்மையை எதிர்பார்த்துக்கொண்டு, ஆற்றுகேன் - உயிர்வைத்திருப்பேன்? (எ-று.)

யான் உயிர்நீங்கினால், 'மனைவியை மாற்றான் கொண்டான்' என்னும் பழியும் இராமபிரானுக்கு ஒருவாறுநீங்கும்; யானும் பதிவிரதைகட்குஉரிய கடமையில் தவறாதவளாவேன் எனச் சீதை கருதினா ளென்க. அலர் என்பது - பலரும் அறிந்து எடுத்துத்தூற்றும் பழிமொழி. இனி, 'புறனலரவனுற' என்பதற்கு - அந்தஇராமபிரான் வெளியில் [பிறமகளிரிடத்துப்] பலரும் அறிந்து பழிதூற்றும்படியான இன்பத்தை யடைய என்றும் பொருள்கொள்ளலாம். 'அறனலதியற்றி' என்றது, நாயகனைப்பிரிந்து தனியே பிறர்மனையில் தான் நெடுநாள் வாழ்ந்ததை. (௧௪)

௧௫. எப்பொழுதிப்பெரும்பழியினெய்தினே
னப்பொழுதேயுயிர்துறக்குமாணையே
னொப்பரும்பெருமறுவுலகமோதயான்
றுப்புழிந்துய்வதுதுறக்கந்தன்னவோ.

(இ - ள்.) எ பொழுது இ பெரும் பழியின் எய்தினேன் - எப்போது இந்தப்பெரியபழிப்புக்கு உள்ளானேனோ, அ பொழுதே உயிர் துறக்கும் ஆணை

யேன் - அப்பொழுதுதானே பிராணனை விடவேண்டிய நியதியுள்ளேனாகிய, யான் - நான்,—உலகம் ஒப்பு அரும் பெரு மறு ஒத - உலகத்தவர் (என்னைப் பற்றி) ஒப்பில்லாத பெரிய பழிச்சொற்களைச் சொல்லும்படி, துப்பு அழிந்து உய்வது - பெருமைகெட்டு உயிர்வாழ்ந்திருப்பது, துறக்கம் துன்னவோ - சுவர்க்கம்பெறவோ? (எ - று.)

இம்மையில் இன்பமனுபவிக்கப்பெறாத பாவியாகிய எனக்கு மறுமையின்பம் கிடைப்பதுதானும் அரிதே யென்றபடி. தீச்செயலையுடைய தனக்குப் பழிவந்ததுபோலவே பாவமும் வருமென்று சீதை கவன்றனளென்க. முன்னிரண்டடி - வடமொழிநடை. துறக்கம் - இவ்வுலகத்தைத் துறந்து பெறும் பதவி யெனப் பொருள்படுங் காரணக்குறி. ஆணை - ஆஜ்ஞா என்ற வடசொல்லின் சிதைவு. "உலகமென்பது உயர்ந்தோர்மாட்டே" என்ற தொல்காப்பியத்தால், இச்சொல், உயர்ந்தோரைக் குறித்துநிற்கும். (கரு)

கசு. அன்பழிசிந்தையராயவாடவர்
வன்பழிசுமக்கினுஞ்சுமக்கவானுயர்
துன்பழிபெரும்புகழ்க்குலத்துட்டோன்றினே
னென்பழிதுடைப்பவரென்னின்யாவரே.

(இ - ள்.) அன்பு அழி சிந்தையர் ஆய ஆடவர் - (என்னிடத்தில்) அன்புஇல்லாத மனத்தையுடைய ஆண்மக்களாகிய இராமலக்ஷ்மணர், வல் பழி சுமக்கினும் சுமக்க - கொடிய பழியை ஏற்றுக்கொண்டாலும் ஏற்றுக்கொள்க: வான் உயர் - வான்போல் உயர்ந்த, துன்பு அழி - துன்பத்தை அனுபவித்தறியாத, பெரும் புகழ் - மிக்ககீர்த்தியையுடைய, குலத்துள் - (சனக மகாராசனது) வம்சத்தில், தோன்றினேன் - பிறந்துவளர்ந்தவளான, என் - எனக்கு (உண்டாயிருக்கிற), பழி - (பிறரகத்தில்வசிக்கிறாளென்ற) பழியை, துடைப்பவர் - போக்குபவர், என்னின் யாவர் - என்னையல்லது வேறு யாவர் உளர்? [துன்பம்நீக்கிக் காத்தற்குஉரிய ஆடவர் உபேக்ஷித்தமையால் யானே என்பழியை நீக்கிக்கொள்ளல் தகுதி யென்றபடி]; (எ - று.)

இராமலக்ஷ்மணர் என்பக்கல் அன்பில்லாதிருந்தமையால் அக்குற்றத்தின்பயனாக அவர்கள் 'அந்தோ! பாவம்! ஒருபெண் அநாதையாய்க் காப்பாரின்றி உயிரிழந்தனளே! க்ஷத்திரியகுலத்தில்தோன்றி மாற்றான்கைப்பட்ட ஓர்பெண்ணையும் காக்க வலியில்லாத இவர் என்ன வீரர்? மிக்ககன்னெஞ்சர் போலும்' என உலகத்தார் தூற்றும் பழிச்சொல்லைப் பெறும்படி நான் உயிர்நீத்து, இதுவரையிற் பழியென்பதில்லாத என்குலத்துக்கு என்னால் ஒரு பழியுமுண்டாகாதபடி செய்துகொள்வேன் எனப் பிராட்டி கருதியவாறு. அவர்கள்மீதுள்ள வெறுப்பினால் பெயர்கூறவும் மனமில்லாது 'ஆடவர்' என்றாள். 'ஆடவர் வன்பழிசுமக்கினும் சுமக்க' என்றவிடத்து, அதனைப்போக்கிக்கொள்ளும் ஆற்றல் அவர்க்குஉள்ளமையால் அவர்கள் பழியைப்பெற்றாலும் பெறலாமென்ற கருத்தும் தோன்றும். ராமலக்ஷ்மணர் இங்குவந்து தன்னை

மீட்டு 'மனைவியை மாற்றான்கையிற் பறிகொடுத்தார்கள்' என்ற பழிக்கு உள்ளாகாது நிற்கவேண்டு மென்பதை நினைந்தே சீதை இதுவரையிலும் தான் இறவாது உயிர்வைத்திருந்தன ளென்பது, 'சுமக்கினுஞ் சுமக்க' என்றதில் தொனிக்கும். வானுயர்குலம் - மிகச்சிறந்த குலம்: "வானுயர் தோற்றம்' என்பது - 'வான்றோய்குடி' என்றாற்போல இலக்கணைவழக்கு" என்ற பரிமேலழகருரை இங்கு அறியத்தக்கது. சனகவம்சத்தில் இதுவரையில் என்போல் ஒருவரும் துன்பமனுபவித்ததில்லை யென்பாள், அக்குலத்துக்கு 'துன்பழி' என்ற அடைமொழி கொடுத்தாள்; இனி, இதற்கு - குற்றமற்ற என்று கூறினுமாம். "தமக்கு மருத்துவர் தாம்" என்றபடி ஒவ்வொருவரும் தம்தம்மைத் தாமே பாதுகாத்துக்கொள்ளுதற்கு உரியரேயன்றிப் பிறருதவியைத் தேடுதல் தகுதியன்றாதலால், 'என்பழிதுடைப்பவர் என்னின் யாவரே' என்று ளென்னலாம். (கசு)

கஎ. வஞ்சனைமானின்பின்மன்னைப்போக்கியென்
மஞ்சனைவைதுபின்வழிக்கொள்வாயெனா
நஞ்சனையானகம்புகுந்தநங்கையா
னுய்ஞ்சனென்னிருத்தலுமுலகங்கொள்ளுமோ.

(இ - ள்.) வஞ்சனை மானின் பின் - கபடமாய்வந்த மாயமானின் பின்னே, மன்னை - நாயகனாகிய இராமபிரானை, போக்கி - அனுப்பிவிட்டு, என் மஞ்சனை - எனது மைத்துனப்பிள்ளையாகிய லக்ஷ்மணனையும், வைது - கடுஞ்சொற்கூறி, பின் வழி கொள்வாய் எனா - (அவ்விராமபிரான்) சென்றவிடத்துக்குச் செல்வா யென்று அனுப்பிவிட்டு, நஞ்சு அனையான் அகம் புகுந்த - விஷத்தையொத்த [மிகக்கொடிய] இராவணனது வீட்டில் வந்துசேர்ந்த, நங்கை - பெண்ணாகிய, யான் —, உய்ஞ்சனென் இருத்தலும் - பிழைத்திருத்தலையும், உலகம் கொள்ளுமோ - உலகத்தார் (நேரிதென்று) உடன்படுவார்களோ? [அங்கீகரியார் என்றபடி]; (எ - று.)

கீழ்த் தன்னைமீட்கவில்லை யென்று ராமலக்ஷ்மணர்மீது குற்றங்கூறிய சீதை, தன்மீதுள்ள குற்றத்தை நிரூபித்து, இதனாலும் தான் உயிர்விடுதலையே தகுதி யெனக் கருதின ளென்க. 'வஞ்சனைமான்' என்றது, இங்கு மாரீசனை. இவன், மிக்கமாயையில் வல்ல ஓர்அரக்கன்; சர்ச்சரனென்னும் யக்ஷனது புத்திரனான சுகேதுவின் மகளாகிய தாடகைக்கும் சுந்தனென்னும் இயக்கர் தலைவனுக்கும் புதல்வன்; சுபாகுவின் உடன்பிறந்தவன்; தாடகையும் சுபாகுமாரீசர்களும் அகஸ்தியரதுசாபத்தால் அரக்கராயினர். இராமன் தண்டகாரணியத்திற் பஞ்சவடியில் வசிக்கையில், சூர்ப்பணகையின்தூண்டுதலாற் சீதையை வஞ்சனையாகக்கவரவேண்டு மென்று எண்ணங்கொண்ட இராவணன், தனக்குமாமன்முறைகொண்டவனான மாரீசனைத் துணையாக வரவேண்டுமென்று வேண்ட, இராமனாற்றலை இருமுறைஉணர்ந்த மாரீசன் பலவாறுதடுத்தும் இராவணன் கேளாமல் மிக்கசினங்கொண்டதனால், அதற்கு

அஞ்சி மாரீசன் மாயையாற் பொன்மானுருவங்கொண்டு சீதையின்எதிரிற் சென்று உலாவுகையில், அவள் அதனைப்பிடித்துத்தரும்படி இராமனைப் பிரார்த்திக்க, இலக்குமணன் இதுபொய்ம்மானென்று உண்மைகூறித் தடுக்கவும், கேளாமற் பிராட்டி மீண்டும்நிர்ப்பந்திக்கவே, இராமன் அதனைப்பிடித்தற்குத் தொடர்ந்துசென்றபோது, அது அப்பிரான்கையில் அகப்படாமல் ஓட்டங் காட்டி அவனை நெடுந்தூரம் கொண்டுவந்துவிட, அதனை யுணர்ந்து இராமன் மாயமானென்று துணிந்து அதன்மேல் அம்பெய்ய, அம்மாரீசன் அம்புபட்டு விழுகையில் தன்மெய்வடிவங்கொண்டு 'ஹாஸீதா! ஹா லக்ஷ்மணா!' என்று இராமன்குரலாற் சத்தமிட்டு விழுந்துஇறக்க, அக்குரலைக் கேட்டவுடனே அவ்வரக்கன்வஞ்சனையை யுணர்ந்த இலக்குமணன் வாளா இருக்க, அவ்வுண்மையை யுணராமல், சீதை, இராமனுக்கு அபாயம்நேர்ந்ததென்றே கருதிப் புரண்டுஅழுது, அதுதீர்த்தற்பொருட்டுத் தன்னைவிட்டுச்செல்லாத இலக்குமணன்மேற் குறைகூறவே, இலக்குமணன் இராமனது பலபராக்கிரமங்களை யெடுத்துக்கூறி உண்மையுணர்த்தவும், கேளாமல் சானகி இலக்குமணனைப் பலவாறுபழித்து நெருப்பில் விழத்தொடங்கலும், அதனை மறுத்து இளைய பெருமாள் விடைபெற்றுச்சென்றவுடனே, சீதை தனித்திருந்த சமயம் பார்த்து இராவணன் சந்யாசிவடிவங்கொண்டு வந்து பிராட்டியைக் கவர்ந்துசென்றனனென்பது, வரலாறு.

மைத்துனனை 'மஞ்சன்' என்றது, அன்புபற்றிய மரபுவழுவமைதி. இலக்குமணன் "வையமீந்தும், போகாவுயிர்த்தாயர் நம்பூங்குழற்சீதை யென்றே, யேகாய்" எனத் தன்தாயான சுமித்திரை சொன்னபடியே நடந்துவந்தவனதலால், அதற்குஏற்ப, சீதை, அவனை 'மஞ்சன்' என்று ஒன்னலாம். சீதை இலக்குமணனை வைதது, "குற்றம்வீந்தகுணத்தி னெங்கோமகன், மற்றை வாளரக்கன் புரிமாயையா, லிற்றுவீழ்ந்தன னென்னவு மென்னயல், நிற்றியோ விளையோயொருநீ," "நின்றநின்னிலையிது நெறியிற்றன்று," "ஒருபகல்பழகினுருயிரையீவரால், பெருமகனுலைவுறு பெற்றி கேட்டு நீ, வெருவலை நின்றனை வேறென் யானினி, யெரியிடைவிழுந்துயிரிறப்பனீண்டு" என்றவிடங்களிற் காண்க. மன் - பெருமை; அதனையுடைய மன்னனுக்குப் பண்பாகுபெயர். வழிக்கொள்ளுதல் - பிரயாணப்படுதல். 'நங்கை' என வேண்டாதுகூறியது, இவையெல்லாம் பெண்ணுக்குரிய குணங்களுக்கு முற்றும்மாறுபட்டவை யென்பதைக் குறித்தற்கு. இரண்டாமடி - மூவிறுமோனை. (கஎ)

கஅ. வல்லியன்மறவர்தம்வடிவிற்றீர்பவர்
வெல்லினும்வெல்கபோர்விளிந்துவீடுக
வில்லியலறத்தையானிறந்துவாழ்ந்தபின்
சொல்லியவென்பழியவரைச்சுற்றுமோ.

(இ - ள்.) வல் இயல் மறவர் - வலிமை பொருந்திய வீரராகிய இராமலக்ஷ்மணர், தம் வடிவின் தீர்பவர் - (சீதையைக்கவர்ந்தவரைத் தாம்தீர்த்தா

ரில்லையென்று) தமக்குவரும்பழியினின்றும் நீங்குபவராய், போர் வெல்லினும் வெல்க - (வந்துபொருது அரக்கரைப்) போரிற் சயித்தாலும் சயிக்கட்டும்: (அன்றி), விளிந்து வீடுக - இறந்துபோனாலும் போகட்டும்; யான்—, இல் இயல் அறத்தை - இல்வாழ்க்கைக்குஉரிய தருமத்தை, இறந்து - கடந்து, வாழ்ந்த பின் - (இவ்வாறு பிறரூரில்) உயிர்வாழ்ந்தபின்பு, சொல்லிய என் பழி - (உலகத்தவரால் தூற்றிச்) சொல்லப்படுகிற எனது பழி, அவரை சுற்றுமோ - அவரைத் தொடருமோ? (எ-று.)—தொடராது; என்னையே தொடரு மாதலால், அதனைப்போக்கிக்கொள்ள யானே உபாயந்தேடவேண்டு மென்றபடி.

என்பழியை நீக்கிக்கொள்ள யான் உயிர்துறக்கின்றேன்: அவர்கள் தமது பழியை நீக்கிக்கொள்ள இங்குவந்து அரக்கரோடு போர்செய்து வென்றால் வெல்லட்டும்; அன்றி, அப்பழியுடனேயே இறந்தாலும் இறக்கட்டும் எனச் சீதை உபேக்ஷித்துக் கூறியவாறு. மறம் - வீரம்: அதனையுடையவர், மறவர். விளிந்து வீடுகஎன்பதற்கு-போரில் இறந்தாலும் இறக்கட்டும் எனக் கூறுவாரும் உளர். சொல்லியஎன் - (அவ்விருவரையும் என்னைவிட்டுப் பிரிந்துபோம்படி) சொன்ன எனது என்றுமாம். இச்செய்யுளிலும் இரண்டாம்அடி - முற்று மோனை.

(கஅ)

வருந்தலின்மானமாவனையமாட்சியர்
பெருந்தவமடந்தையர்முன்புபேதையேன்
கருந்தனிமுகிலினைப்பிரிந்துகள்வரூ
ரிருந்தவளிவளெனவேசநிற்பெனோ.

(இ - ள்.) மானம் வருந்தலில் - (தமது) மானத்துக்கு ஒருவருத்தம் நேர்ந்த விடத்து [அவமானம் நேருமாயின்], மா அனைய - கவரிமானைப் போன்ற [தமது உயிரை விடுகின்ற], மாட்சியர் - மேன்மையையுடையவர்களாகிய, பெருந் தவம் மடந்தையர் முன்பு - எல்லாத்தவங்களினுஞ் சிறந்த (பாதிவிரத்ய மாகிற) தவத்தையுடைய மகளிர்முன்னே, பேதையேன் - அறிவில்லாத யான், 'இவள் - இச்சீதை, கரு தனி முகிலினை - கரிய ஒப்பற்ற மேகம் போன்ற இராமபிரானை, பிரிந்து - விட்டுநீங்கி, கள்வர் ஊர் இருந்தவள் - மாயச்செய்கையையுடையவராகிய அரக்காது ஊரில் (பலநாள்) உயிர்வாழ்ந் திருந்தவள்', என - என்று, ஏச - (அம்மகளிர் என்னைப்) பழித்துச்சொல்லும் படி, நிற்பெனோ - உயிர்சுமந்துவாழ்வேனோ? (எ - று.)—வாழ்தல் தகுதியன்று என்பதாம்.

தன்மயிர்த்திரளில் ஒருமயிர்நீங்கினாலும் அக்குறையைப்பொறுமற் பேரவ மானமெனக்கொண்டு பின்பு உயிர்வாழாது உடனே இறந்துவிடுதல், கவரி யென்னும் மானின் சாதிக்கு இயல்பு; "மயிர்தான் பலன்படா மாவிற்குக் கூற் றம்", "மானநோக்கிற் கவரிமாவனைய நீரார்," "மயிர்நீப்பின் வாழாக் கவரி மாவன்னா, ருயிர்நீப்பர் மானம்வரின்" என்பன காண்க. மானமாவது - எப்பொ

மூதும் தம்நிலையினின்று தாழாமையும், ஊழ்வினையால் தாழ்வு வந்தவிடத்து உயிர்வாழாமையுமாம். உயிரும் மானமும் உடனில்லாமைக்கண், பின்னும் போவதாகியஉயிரை நீத்து என்றும்நிற்பதாகிய மானத்தையே எய்துவர் என்பதாம். 'மா' என்னும் உவமை, அவர்க்கு அஃது இயற்கையே, செயற்கையன்று என்பதை விளக்கிநின்றது. முகில் - உவமவாகுபெயர். (கக)

உ௦. அற்புதனரக்கர்தம்வருக்கமாசற
விற்பணிகொண்டருஞ்சிறையின்மீட்டநா
ளிற்புகத்தக்கலையென்னின்யானுடைக்
கற்பினையெப்பரிசிழைத்துக்காட்டுகேன்.

(இ - ள்.) அற்புதன்-ஆச்சரியகரமான திருக்கலியாணகுணங்களையுடைய இராமபிரான், வில் பணிகொண்டு - வில்லின்தொழிலைக்கொண்டு, அரக்கர் தம் வருக்கம் ஆசற - ராக்ஷசர்கூட்டமெல்லாம் அடியோடுமுடியும்படி, (போர் செய்துகொன்று வென்று), அருஞ் சிறையின் மீட்ட நாள் -(மீட்பதற்கு) அருமையான சிறைக்காவலினின்று (என்னை) மீளச்செய்யுங்காலத்தில், இல் புக தக்கலை-'நீ என்வீட்டுக்கு வரத் தகுதியுடையவளல்லை', என்னின் - என்று சொல்லித் தடுத்தால், (அப்பொழுது), யான் உடை கற்பினை - யானுடைமையாகக்கொண்டுள்ள கற்புநிலைமையை, எ பரிசு இழைத்து காட்டுகேன் - எவ்விதமாக நிரூபித்துக் காண்பிப்பேன்? (எ - று.)—காட்டவகையில்லையே யென்பது கருத்து.

இங்ஙனமே மீட்சிப்படலத்தில் இராமன்கூறுதல் காண்க. எதிர்கால வரலாற்றை முன்னரே குறிப்பித்தல், ஒருவகைக்கவிசமயம். "ஆதலிற் புறத்தினி யாருக்காக வென், கோதறுதவத்தினைக் கூறிக்காட்டுகேன்" என்ற மீட்சிப்படலத்துஅடிகள், இங்கு ஒப்புநோக்கத்தக்கன. ஆசறுதல் - ஒருசொல்; அழுக்கறுதல், ஏக்கறுதல் என்பனபோல. பணிகொண்டு, கொண்டு - மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபு. மீட்ட - இயல்பினால் எதிர்காலம் இறந்தகாலமாக வந்த கால வழுவமைதி. (உ௦)

[பிராட்டி உயிர்விடத்துணிந்து குருக்கத்திப்புதரை யடைதல்.]

உக. ஆதலானிறத்தலேயறத்தினாறெனாச்
சாதல்காப்பவருமென்றவத்திற்சாம்பினா
ரீதலாதிடமும்வேறில்லையென்றொரு
போதுலாமாதவிப்பொதும்பரெய்தினாள்.

(இ - ள்.) 'ஆதலான் - ஆதலால், இறத்தலே - சாதலே, அறத்தின் ஆறு - தருமத்தின் முறைமையாம்,' எனா - என்று எண்ணி, 'சாதல் காப்பவரும் - (நான்) இறத்தலைத் தடுப்பவராகிய அரக்கியரும், என் தவத்தின் - எனது நல்வினைப்பயனால், சாம்பினார் - (இப்பொழுது) உறங்கிக்கிடக்கின்றார்கள்: ஈது அலாது இடமும் வேறு இல்லை - இதுவல்லாமல் (உயிரைத்துறக்கத்தக்க

சமயமும் வேறு கிடைக்காது,' என்று - என்று நினைந்து, போது உலாம் - மலர்கள் அசையப்பெற்ற, ஒரு மாதவி பொதும்பர் - ஒரு குருக்கத்திமரச்செறிவை, எய்தினாள் - (சீதை) சென்று சேர்ந்தாள்; (எ - று.)

ஆதலான் - இராமபிரான் ஒருகால் மீட்கவந்தால் அப்பொழுது எனது கற்புநிலையை எவ்வாற்றாலும் பிரதியக்ஷமாக்க முடியாமையால் என்றபடி. காத்தல் - இங்குத் தடுத்தலின்மேல் நின்றது. அநுமானது மந்திரபலத்தால் அரக்கியர் உறங்கிக்கிடத்தலைச் சீதை உணராளாதலால், தனது நல்வினைப் பயனால் இங்ஙனம் ஆயினதென் றெண்ணினாள். தான் இறக்கத் துணிந்ததும், அதற்குஅநுகூலமாக அரக்கியர் உறங்கிக்கிடத்தலும் ஒருங்கே நிகழ்ந்துள்ளமையால், 'ஈதலாதிடமும் வேறில்லை' என்றாள். போது - மலரும்பருவத்து அரும்பு. மாதவி - வடசொல். பொதும்பர் - புதர். மூன்றாமடி - முற்றுமோனை. சீதை சிம்சுபாமரத்தின்கிளையை அடைந்து, தன்னுடைய கூந்தலினால் சுருக்கிட்டு உயிர்விட விரும்பினள் என முதனூலிற் கூறப்பட்டுள்ளது. (உக)

[அநுமான்|சீதையைச் சென்று கிட்டித் தன்வரலாறு கூறுதல்.]

உஉ. கண்டனனனுமனுங்கருத்துமெண்ணினான்
கொண்டனன்றுணுக்கமெய்தீண்டக்கூசுவா
னண்டர்நாயகனருடூதன்யானெனாத்
தொண்டைவாய்மயிலினைத்தொழுதுதோன்றினான்.

(இ - ள்.) அனுமனும் - அநுமானும், கண்டனன் - (சீதை அங்குச்சென்றதைக்) கண்டவனாய், கருத்தும் எண்ணினான் - (அவளது) எண்ணத்தையும் ஆலோசித்தறிந்து, துணுக்கம் கொண்டனன் - அச்சங்கொண்டு, மெய் தீண்ட கூசுவான் - (அப்பிராட்டியின்) திருமேனியைத் தொட்டுவிலக்குதற்கு மனங்கூசினவனாய், அண்டர் நாயகன் அருள் தூதன் யான் எனா - 'தேவர்கட்கெல்லாந் தலைவனாகிய இராமபிரான் அனுப்பியருளிய தூதனாவேன் யான்' என்றுசொல்லிக்கொண்டே, தொண்டை வாய் மயிலினை தொழுது - கோவைப்பழம்போற் சிவந்த அதரத்தையுடையளான மயில்போலுஞ்சாயலையுடைய பிராட்டியைத் தொழுதுகொண்டே, தோன்றினான் - (தன்உருவைக்காட்டி) எதிர்நின்றான் ; (எ - று.) ——

சிம்சுபாவிருக்ஷத்தின் இலைச்செறிவில் மறைந்துநின்று சீதையின்நிலையைப் பார்த்திருந்த அநுமான் அவள் தன்உயிரையொழிக்கத் துணிந்ததையறிந்து அங்குநின்று இறங்கிச் சீதையினிடம் வந்து தன்னை இன்னானென்று அறிவித்தன னென்க. அநுமான் தன்னை இராமனதுசம்பந்தம்பெற்றவனென வெளியிட்டது, சீதைக்குத் தன்னிடம் ஐயமுண்டாகாமைப்பொருட்டு. சீதை உயிர்விடத்துணிந்ததை யறிந்த அநுமான், என்செய்வதெனப் பலவகையாக ஆலோசித்துப் பின்பு மறைந்தபடியே மனிதவாக்கினால் இராமனது வரலாற்றை ஆதிதொடங்கிக்கூறித் தன்னையும் இன்னானெனத், தெரிவித்தானென

முதனூல் கூறும். அனுமன் - ஹநுமாந் என்ற வடசொல்லின் விகாரம்; இவன் பிறந்தவுடனே இளஞ்சூரியனைக் கனிந்தபழமென்று கருதிப் பிடிக்கப்பாய்ந்த பொழுது, அதனையறிந்து கோபங்கொண்ட இந்திரனது வச்சிராயுதத்தினால் அடிக்கப்பட்டுச் சிதைந்த கன்னமுடையவனானதனால், இவனுக்கு இப்பெயர் வந்தது: இப்பெயர், கன்னத்தில் விசேஷமுடையவனென்று பொருள்படும்; ஹநு - கன்னம், மாந்-வடமொழிப்பெயர்விகுதி. இப்பெயர் இந்திரனால் இடப் பட்டது; இவன், கேசரியென்னும் வாநரவீரனது மனைவியாகிய அஞ்சனை யென்பவளிடத்து வாயுபகவானனுக்கிரகத்தாற் பிறந்தவன் என அறிக. இதனால், இவனுக்கு மாருதியென்றும், ஆஞ்சனேயனென்றும் பெயர். இவன் வாயுவின் அம்சமும், சிவபிரானது அம்சமுமாவன். துணுக்கம் - அசதியில் நேர்ந்த மனத்தடுமாற்றம். தீண்டியெடுத்து உதவவேண்டிய இந்நிலையிலும் அநுமான் சீதையை மெய்தீண்டக்கூசியது, அவளது பாதிவ்ரத்ய அக்கினி எரித்திடு மென்ற அச்சத்தினாற்போலும். தொண்டை - கொடியின் பெயர், அதன் கனிக்கு முதலாகுபெயர். மயில் - அதுபோன்றசாயலையுடைய சீதைக்கு உவமையாகுபெயர். தொழாநின்று என்பது, தொழுது எனத் திரிந்துநின்றது; "தொழுதெழுவாள்" என்ற திருக்குறளிற் போல. (உஉ)

உ௩. அடைந்தனெனடியனேனிராமனாணையாற்
குடைந்துலகனைத்தையுநாடுங்கொட்பினான்
மிடைந்தவருலப்பிலர்தவத்தைமேவலான்
மடந்தைநின்சேவடிவந்துநோக்கினேன்.

(இ-ள்.) மடந்தை - மடந்தையே! அடியேன் - (நினது) அடியவனாகிய யான், இராமன் ஆணையால் - இராமபிரானது கட்டளையால், அடைந்தனென் - (இங்கு) வந்துசேர்ந்தேன்; உலகு அனைத்தையும் - எல்லாவுலகங்களையும், குடைந்து - அரித்து [சிறிதிடமும் விடாது செவ்வையாக], நாடும்-(உன்னைத் தேடிப்பார்க்கவேண்டு மென்கிற, கொட்பினால் - கோட்பாட்டினால், மிடைந்த வர் - (ஆங்காங்கு) நெருங்கிச்சென்ற வாநரவீரர், உலப்பு இலர் - முடிவில்லா தவராவர்; (அவர்களுள் யான்), தவத்தை மேவலால் - (முற்பிறப்பில்) நல்வி னையைச் செய்திருந்ததனால், நின் சே அடி - உனது சிவந்த திருவடிகளை, வந்து நோக்கினேன் - இங்குவந்து தரிசிக்கப்பெற்றேன்; (எ - று.)

கொட்பு - கொள்கை; 'பு'விகுதிபெற்ற தொழிற்பெயர். 'தவத்தை மேவ லால்' என்றதனால், மற்றைத்தூதர்யாவரும் என்னைப்போல உன்னைக்காணத் தவஞ்செய்தவ ரல்லர் என்றதாம். மடந்தை - அண்மைவிளி. (உ௩)

[அநுமான் இராமன்வாராமைக்குக் காரணங்கூறல்.]

உ௪. ஈண்டுநீயிருந்ததையிடரின்வைகுறு
மாண்டகையறிந்திலனதற்குக்காரணம்

வேண்டுமேயரக்கர்தம்வருக்கம்வேரொடு
மாண்டிலவீதலான்மாறுவேறுண்டோ.

(இ - ள்.) ஈண்டு - இங்கே, நீ—, இருந்தமை - இருப்பதை, இடரின் வைகுறும் ஆண்தகை - (உன்னைப்பிரிந்ததனாலாகிய) துன்பத்தில் தங்கியிருக்கிற ஆண்மைக்குணமுள்ள இராமபிரான், அறிந்திலன் - அறிந்தானில்லை: அதற்கு காரணம்-அங்ஙனம் அறியானென்பதற்குக் காரணம் [தகுந்தசாக்ஷியும்], வேண்டுமே-சொல்லவேண்டுமோ? [தானேவிளங்குதலால் சொல்லவேண்டா என்றபடி]; (அச்சாக்ஷி), அரக்கர்தம் வருக்கம் - ராக்ஷசர்கூட்டம், வேரொடு மாண்டில - அடியோடு அழிந்தனவில்லையென்பதே: ஈது அலால் - இதுவேயல்லாமல், மாறு - (இதற்கு) மாறாக, வேறு - வேறுசாட்சியும், உண்டோ - உள்ளதோ? [இல்லை]; (எ-று.)—இதனால், இராமபிரான் இலங்கையில்வந்து தன்னை மீட்டுக்கொண்டு செல்லாமையைப்பற்றிச் சீதை பலவாறாகக்கொண்ட சங்கையை அநுமான் ஒழித்தனன்.

ராக்ஷசராசதானியாகிய இவ்விலங்கையில் நீ இருப்பதை இராமபிரான் அறிந்திருப்பானானால் அப்பொழுதே சகலராக்ஷசரையும் சங்காரஞ்செய்திருப்பான்; அதுசெய்யக் காணாமையாலே, அவன் அறிந்திலனென்று ஊகித்துணரலாம் என்பதாம். பிரிவுத்துயர் மகாவீரனை இராமபிரானையும் வருத்துமென்பான், 'இடரின் வைகுறு மாண்டகை' என்றான். (உச)

[அநுமான் தன்னைப்பற்றிச் சந்தேகிக்கவேண்டா வென்றல்.]

உரு. ஐயுற லுளதடை யாள மாரியன்
மெய்யுற வுணர்த்திய வுரையும் வேறுள
கையுறு நெல்லியங் கனியிற் காண்டியா
னெய்யுறு விளக்கனாய் நினையல் வேறென்றான்.

(இ - ள்.) நெய் உறு விளக்கு அனாய் - நெய்நிறையவார்க்கப்பட்டுள்ள விளக்குப்போன்ற திருமேனிவிளக்கத்தையுடையவளே! ஐயுறல் - (என்விஷயத்தில்) சந்தேகங்கொள்ளவேண்டா: அடையாளம் உளது - (உனதுசந்தேகத்தை நீக்கத்தக்க இராமபிரான்கொடுத்தருளிய) அடையாளம் (என்னிடத்தில்) உளது: ஆரியன்-பெரியோனாகிய இராமபிரான், மெய் உற-உண்மைவிளங்கும்படி, உணர்த்திய - சொல்லியனுப்பின, உரையும் - (அடையாள) வார்த்தைகளும், வேறு உள - வேறேஉள்ளன: (அவற்றையெல்லாங்கொண்டு), கை உறு நெல்லி அம் கனியின் - உள்ளங்கையிற்பொருந்திய அழகிய நெல்லிக்கனியைப்போல, காண்டி-(நீ என்னை ஐயமற) உணர்வாயாக: வேறு நினையல்- (என்னைப்பற்றி) வேறுவகையாக எண்ணவேண்டா, என்றான்-என்றுகூறினன், (அநுமான்); (எ-று.)—ஆல் - ஈற்றசை.

'அடையாளம் உளது' என்றது, இராமனதுபெயர்பொறித்த மோதிரத்தை. 'உணர்த்தியவுரையும் வேறுள' என்றது, இராமபிரானுக்கும் சீதைக்கும் தெரிந்

தள்ளவையான கீழ்நடந்துள்ள சிலவரலாறுகளை; அவற்றை இப்படலத்தின் ௬௦ - ஆம் செய்யுள்முதலாக அநுமான் கூறுமாறு காண்க. கையுறு நெல்லி யங்கனி - கரதலாமலக மெனப்படும்; இது, முற்றும் நன்றாக விளங்குதலில் உவமம். ஐயுறல், நினையல் - எதிர்மறைவியங்கோள்; "மகனெனல்" என்ப திற்போல. ஐயுறல் - ஐயமுறல் என்பதன் தொகுத்தல். ஆர்யன் - வடசொல். அனை - தொகுத்தல்; தாயே யென்றும் பொருள்படும். வேறுநினையல் - இராவணன் என்னை ஏமாற்றுதற்காக இவ்வண்ணம் இராமதூதனென்றுபோலிப் பேரிட்டுக்கொண்டு வந்துள்ளானோ என்று சங்கிக்கவேண்டா என்றபடி. (உரு)

வேறு.

[இதுமுதல் மூன்று கவிகள்-ஒருதொடர்: சீதை அநுமானைப்பற்றி முதலிற்பல வாறுசங்கித்து ஒருவாறுதேறிப் பின்னர் யாரென்று அவனை வினவுதல்.]

உ௬. என்றவ னிறைஞ்ச நோக்கி யிரக்கமு முனிவு மெய்தி
நின்றவ னிருத னல்ல னெறிநின்று பொறிக ளைந்தும்
வென்றவ னல்ல னாகில் விண்ணவ னாக வேண்டும்
நன்றுணர் வுரையன் றூய னவையிலன் போலு மென்னா.

(இ - ள்.) என்று - என்றுஇவ்வாறுகூறி, அவன் - அவ்வநுமான், இறைஞ்ச - வணங்கிநிற்க,—(பிராட்டி), நோக்கி - (அவனைப்)பார்த்து, இரக்கமும் முனிவும் எய்தி-கருணையையும்கோபத்தையும் (ஒருங்கு) அடைந்து, 'நின்றவன் -(எதிரில்) நின்றவன், நிருதன் அல்லன்-ராக்ஷசனல்லன்: நெறி நின்று பொறிகள் ஐந்தும் வென்றவன் - நல்லொழுக்கத்தில் தவறாதுநின்று பஞ் சேந்திரியங்களையும் அடக்கிச்சயித்த முனிவனுமவன்: அல்லன் ஆகில் - அப்படி யல்லாவிட்டால், விண்ணவன் ஆக வேண்டும் - தேவனாயிருக்கக்கூடும்: (ஏனெனின்,—இவன்), நன்று உணர்வு உரையன் - நல்லறிவைப்புலப்படுத்து கிற சொற்களையுடையவனும், தூயன் - பரிசுத்தமனமுடையவனும், நவை இலன் போலும் - குற்றமில்லாதவொழிலுடையவனுமாவன்போலும்', என்னா- என்றுஎண்ணி,-(எ-று.)—இக்கவியிலுள்ள 'என்னா' என்பது,உஅ-ஆங்கவியில் 'எனநினைத்து என்னா என்றாள்' எனத் தொடர்ந்து முடியும்.

வந்தவன் இராமபிரானது திருநாமத்தைச் சொல்லிவந்தமைபற்றி மனங்கனிந்து இரக்கத்தையும், இராவணனே இவ்வாறு மாறுவேடம்பூண்டு வஞ்சனைக்கருத்துடன் வந்துள்ளா னெனக் கருதியமைபற்றிக் கோபத்தையும் சீதை முதலில் ஒருங்கேகொண்டன ளென்க. பொறிகளைந்து - மெய் வாய் கண் மூக்குச் செவி என்பன. நெறிநின்று பொறிகளைந்தும் வெல்லுதல் - தனது நல்லுணர்வினால் மனத்தை நல்வழிப்படுத்திப் பொறிகளின்வழியே ஐம்புலன்களிற் போகவொட்டாது தடுத்தல்; இத்தன்மையன், ஜிதேந்திரிய னெனப்படுவன்: பிராணிகளை அகப்படுத்தும் யந்திரங்கள்போல மனத்தை யகப்படுத்துதலின், இந்திரியங்கள் பொறிக ளெனப்படு மென்பர். உம்மை -

இனைத்தென்றறிபொருளில் வந்த முற்றும்மை. வந்தவன், மனம் வாக்குக் காய மென்னும் திரிகரணங்களும் ஒத்துத் தூயனாகப்பெற்றவன் என்பது, நான்காமடியில் விளங்கும். இத்தன்மை பெரியோர்கட்கே அமையு மென்ப தை, "மனம்வேறு சொல்வேறு மன்னுதொழில்வேறு, வினைவேறுபட்டவர் பால் மேவும்—மனமே, மனமொன்று சொல்லொன்று வான்பொருளு மொன் றே, கனமொன்று மேலவர்தங்கண்" என்பதனாலும் அறிக. இரண்டு மூன்று மடிகளிற் கூறியவற்றை ஈற்றடி சமர்த்தித்துநிற்பது, தொடர்நிலைச்செய்யுட் குறியணி; இதனை வடநூலார் காவ்யலிங்க மென்பர். போலும் - ஒப்பில் போலி: உவமைப்பொருளுணர்த்தாத 'போல்' என்னுஞ் சொல்; இது, உரை யசையாய் வாக்கியாலங்காரமாய் நின்றது: "ஒப்பில்போலியும் அப்பொருட் டாகும்" என்பது தொல்காப்பியம்.

இதுமுதற் பதின்மூன்று கவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ் சீரும் விளச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (உசு)

உஎ. அரக்கனேயாகவேறோரமரனேயாகவன்றிக்
குரக்கினத்தலைவனேதானாகுககொடுமையாக,
இரக்கமேயாகவந்திங்கெம்பிரானாமஞ்சொல்லி
யுருக்கினனுணர்வைத்தந்தானுயிரிதினுதவியுண்டோ.

(இ-ள்.)(இவன்), அரக்கனே ஆக - ராக்ஷசனேயானாலும் ஆகட்டும்: வேறு ஓர் அமரனே ஆக - அன்றி ஒருதேவனானாலும் ஆகட்டும்: அன்றி - அல் லாமல், குரங்கு இனம் தலைவனேதான் ஆகுக - (இப்பொழுதுகாணப்படுகிற படி) குரங்குக்கூட்டத்துக்குத் தலைவனேயானாலும் ஆகட்டும்: (இவனால் விளை வது), கொடுமை ஆக - தீமையேயானாலும் ஆகட்டும்: இரக்கமே ஆக - மன மிரங்கிச்செய்யும் நன்மையேயானாலும் ஆகட்டும்: இங்கு வந்து - இவ்விடத் தில் [எனதுஎதிரில்] வந்து, எம் பிரான் நாமம் சொல்லி - எனதுதலைவனாகிய ஸ்ரீராமனது திருநாமத்தைச் சொல்லி, உணர்வை உருக்கினன் - என்அறிவை உருகச்செய்து, உயிர் தந்தான் - (போகிற) உயிரை (ப் போகவொட்டாது காப்பாற்றி) த் தந்தான்: இதின் உதவி உண்டோ - இதைக்காட்டிலும் (செய் யத்தக்கதோர்) உபகாரமும் உளதோ? [இல்லை யென்றபடி]; (எ-று.)—எல் லாவுதவியினும் உயிருதவியே பெரிய தென்பதாம்.

இச்செய்யுளினால், சீதை இராமபிரானிடத்துக் கொண்டுள்ள பேரன்பு நன்குவிளங்கும். உயிர்விடத்துணிந்த சீதைக்கு அநுமான் தக்ககாலத்தில் எதிர்பாராது வந்து ராமநாமோச்சாரணத்தாற் பிராணாபாயத்தைநீக்கின னாத லால், சீதை அவ்வுதவியை நன்கு மதித்து 'இதினுதவியுண்டோ' என்றாள். 'அரக்கனே' முதலியவற்றிலுள்ள ஏகாரங்கள்-பிரிநிலையோடுதேற்றப்பொருளை யுணர்த்தும். 'ஆக', 'ஆகுக' என்ற வியங்கோள்வினைமுற்றுக்கள்-விகற்பப்பொ

ருளன. ஆக என்பது பலமுறைஅடுக்கிவந்தது, சொற்பொருட்பின்வருநிலை யணி. அமரன் - (பாற்கடலினின்று தோன்றிய அமிருதத்தைப் பானம்பண்ணி னதனால்) மரணமில்லாதவன். முதலடி - தொடைமுரண். (உஎ)

உஅ, எனநினைத்தெய்தநோக்கியிரங்குமெனுள்ளங்கள்ள
மனனகத்துடையராயவஞ்சகர்மாற்றமல்ல
னினைவுடைச்சொற்கள்கண்ணீர்நிலம்புகப்புலம்பாநின்றான்
வினவுதற்குரியனென்னாவீரநீயாவனென்றாள்.

(இ-ள்.) என நினைத்து - என்று எண்ணி, எய்த நோக்கி - (அநுமானைச்) செவ்வையாகப் பார்த்து, 'என்உள்ளம் - எனதுமனம், இரங்கும் - (இவன் விஷயத்தில்) இரங்குகின்றது; (இவன்), மனன் அகத்து கள்ளம் உடையர் ஆய - (தமது) மனத்திற் கபடத்தையுடையவராகிய, வஞ்சகர் - வஞ்சகத்தை யுடைய அரக்கரது, மாற்றம் - வார்த்தைபோன்ற வார்த்தையை, அல்லன் - உடையவனல்லன்; நினைவு உடை சொற்கள் - (நல்ல) எண்ணத்தையுடைய சொற்களோடு, கண் நீர் நிலம் புக - கண்ணினீர் பூமியிற்பெருகும்படி, புலம்பாநின்றான் - (எனதுவருத்தத்தைப்பார்த்துப் பொறாது) பிரலாபிக்கிறான்; (ஆதலால்), வினவுதற்கு உரியன்-(நீ யாவனென்று நான்) விசாரித்தற்கு உரிய வனாவன், 'என்னா - என்று எண்ணி, 'வீர - வீரனே! நீ—,யாவன் - யார்?' என்றாள் - என்று வினவினாள்; (எ-று.)

"ஸதாம்ஹி ஸந்தேஹபதேஷு வஸ்துஷு ப்ரமாண மந்த:கரண ப்ரவ்ருத்தய: [நல்லோர்க்குச் சந்தேகாஸ்பதமான விஷயங்களில் மனப்போக்குக்களே நிர்ணயிப்பதற்கு உரிய அறிகுறியாம்]"என்பவாதலால், சீதை, அநுமான் மீது தன்மனமிரங்கித் தெளிந்தமையையும் தான் வினவத்தகுதியுடையனாதற்கு அறிகுறியாகக் கொண்டனள். நினைவுடைச் சொற்கள் - எண்ணத்தின் நன்மையைப் புலப்படுத்துஞ் சொற்கள் என்றபடி. "அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர், புன்கணீர் பூசல் தரும்" என்றபடி தம்மால் அன்பு செய்யப்பட்டாரது துன்பங் கண்டவழி அன்புடையாரதுகண் பொழிகின்ற புல்லியகண்ணீரே உள்நின்ற அன்பினை வெளிப்படுத்து மாதலால், அவ்வாறு கண்ணீர்பெருகநின்ற அநுமானைச் சீதை தன்னிடத்துஅன்புடையனாகக் கருதின ளென்க. பிரத்யக்ஷபிரமாணத்தால் அன்புடைமையை அறிய முடியாமையால், அநுமானபிரமாணத்தால் அறிந்தன ளென்க. நிலம்-சலியாதுநிற்பது எனக் காரணக்குறி; அசலா, ஸ்திரா முதலிய வடமொழிப்பெயர்களையுங் காண்க.

இதுமுதல் இவ்விருத்தம் முடியுமளவும் பெரும்பாலும் எல்லாச்செய்யுளிலும்இருக்கும் பிராசமென்னுஞ் சொல்லணி, நுண்ணிதின்உணரத்தக்கது.

[இதுமுதல் எட்டுக் கவிகள் - அநுமான் தான் அங்குவந்த வரலாற்றைச் சீதைக்கு விவரித்துக்கூறுதலை யுணர்த்தும்.]

உகூ. ஆயசொற்றலைமேற்கொண்டவங்கையனன்னைநின்னைத்
தூயவன்பிரிந்தபின்புதேடியதூணைவன்றெல்லைக்

காய்கதிர்ச்செல்வன்மைந்தன்கவிக்குலமவற்றுக்கெல்லா
நாயகன்சுக்கிரீவனென்றுளனவையிற்றீர்ந்தான்.

(இ-ள்.) ஆய சொல்-அந்தப்பிராட்டிவார்த்தையையும், அம்கை - (தனது) அழகியகைகளையும், தலைமேல் கொண்டவன் - தலைமேற்கொண்டவனாய்,—(அநுமான் சீதையை நோக்கி),—அன்னை - தாயே! நின்னை - உன்னை, தூயவன் - பரிசுத்தகுணமுடைய இராமபிரான்,பிரிந்த பின்பு—,தேடிய-தேடிப் பெற்ற, துணைவன் - சிநேகிதனும், தொலைகாய் கதிர் செல்வன் மைந்தன் - பழமையான சுடுகிற கிரணங்களைச் செல்வமாகவுடைய சூரியனது குமாரனும், கவி குலம் அவற்றுக்கு எல்லாம் நாயகன் - குரங்குக்கூட்டங்கட்கெல்லாந் தலைவனும், நவையின் தீர்ந்தான் - குற்றத்தினின்று நீங்கினவனுமாகிய, சுக்கிரீவன் என்று - சுக்கிரீவனென்று பெயர்சொல்லப்பட்டு, உளன் - (ஒருவன்) உள்ளான்; (எ - று.)

பிராட்டிவார்த்தையைச் சிரஸாவகித்துக் கௌரவித்துக் கைகளைத் தலைமேற் குவித்துத் திரியங்க நமஸ்காரஞ் செய்துகொண்டு அநுமான் விடைகூறுவானாயின னென்பது, முதலடியின் கருத்து. 'தலைமேற்கொண்ட' என்பது - முன்னுள்ள 'ஆயசொல்' என்பதனோடும், பின்னுள்ள 'அங்கை' என்பதனோடும் சென்றுஇயைவது, இடைநிலைத்தீவகம். தலைமேற்கொண்ட அங்கையன் - அங்கைதலைமேற்கொண்டவன் என விகுதிபிரித்துக்கூட்டப்பட்டது. சாபத்தாற் பெண்வடிவமடைந்த ருக்ஷரஜஸ் என்னும் பெண்குரங்கின் கழுத்தினழகைக் கண்டு காமுற்ற சூரியனுக்கு அதனிடத்தில் தோன்றியவன், சுக்கிரீவனென உணர்க. சுக்கிரீவன் சூரியனது அம்சமாவனென்பதை, பாலகாண்டத்தில் "இரவி மற்றெனது கூறு அங்கவற்கிளையவ னென்றோத" என்றதனால் அறிக. ஸுக்ரீவன்என்னும் வடமொழிக்கு - அழகியகழுத்தையுடையவ னென்பது அவயவப்பொருள். கவி - கபி யென்னும் வடசொல்லின் திரிபு. நவையிற்றீர்ந்தான் என்பதற்கு - குற்றமற்றவனென்று கருத்து. (௨௯)

௩௦. மற்றவன்முன்னோனந்நாளிராவணன்வலிதன்வாலி
னிற்றுகக்கட்டிஎட்டுத்திசையினுமெழுந்துபாய்ந்த
வெற்றியன்றேவர்வேண்டவேலையைவிலங்கன்மத்திற்
சுற்றியநாகந்தேயவமுதெழக்கடைந்ததோளான்.

(இ - ள்.) அவன் முன்னோன் - அச்சுக்கிரீவனுக்கு மூத்தவனாகிய வாலி,—அ நாள்-முற்காலத்தில், இராவணன் வலி இற்று உக - இராவணனது பலம்முழுவதும் அழிந்தொழியும்படி, தன் வாலின் கட்டி - தனதுவாலினால் (அவனை) இறுக்கிப்பிணித்துக்கொண்டே, எட்டு திசையினும் - எட்டுத்திக்குகளிலும், எழுந்து பாய்ந்த - தாவிச்சென்ற, வெற்றியன் - சயத்தையுடையவன்; தேவர் வேண்ட - தேவர்கள் பிரார்த்தித்ததனால், வேலையை - திருப்பாற்கடலை, விலங்கல் மத்தில் சுற்றிய நாகம் தேய அமுது எழ கடைந்த - மந்தரகிரியாகிய

மத்திலே (கடைகயிறாகச்) சுற்றின (வாசுகியென்னும்) பாம்பு உடம்பு தேயும் படியும் அமிருதம்தோன்றும்படியும் கடைந்த, தோளான் - தோள்வலிமையை யுடையவன்; (எ - று.)—மற்று - அசை.

முன்னோன் - முன்பிறந்தவன்; தமையன். ருக்ஷராஜஸ்என்னும் பெண் குரங்கின் வாலைக் கண்டு காதல்கொண்ட இந்திரனுக்கு அதனிடத்திற் பிறந்தவன், வாலியெனப் பெயர்பெற்றான். அந்நாள் - இராவணன் திக்விசயஞ் செய்துவந்தகாலத்தில். ராவணன் என்ற வடமொழிப்பெயர் - கூச்சலிடுபவ னென்றும், கூச்சலிடச்செய்பவ னென்றும் பொருள்படும்; சிவபிரானது கைலாசமலையைப் பெயர்க்கத்தொடங்கி அதன்கீழ்த் தன்கைகள் அகப்பட்டு நசுங்குண்டபோது பேரிரைச்சலிட்டதனாலும், தனதுகொடியசெய்கைகளால் உலகத்தைக் கதறச்செய்ததனாலும், இவனுக்கு இப்பெயர். எட்டுத் திசை - கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு என்பன. நாகம் என்பதற்கு-கால்களால் நடவாத தென்றும், மலைகளில் அல்லது மரங்களில் வாசஞ்செய்வ தென்றும் பொருள். மத்து - மந்தம் என்னும் வடமொழியின் திரிபு: கடைகருவி யென்று பொருள். அமுது, அம்ருதம்; சாவாமருந்து.

இராவணன் ஒருகாலத்தில் வாலியோடு போர்செய்யும்பொருட்டுக் கிட்கிந்தாபட்டணஞ்சேர்ந்து அப்போது அவன் அங்குஇல்லை யென்றும், வழக்கப்படி நாற்கடலிலும் நீராடி நித்தியகருமம்முடிக்கச் சென்றுள்ளா னென்றும் அறிந்து, தென்கடற்கரைக்குச் சென்று, அங்கு மந்திரஜபஞ்செய்து கொண்டிருக்கிற வாலியைப் பார்த்து, அவனைத் தந்திரமாக எளிதிற்பிடித்துக் கொள்ளும்பொருட்டு அடியோசைப்படாமல் மெதுவாய்நடந்து அவன்பின்னே சேர, அதனைக் கீழ்க்கண்ணாற்கண்ட வாலி, ஜாக்கிரதைப்பட்டு, கிட்ட வந்து தன்னைக்கட்டியவுடனே இராவணனைக் கைகளால் இடுக்கி வாலினாற் சுற்றிக்கொண்டபடியே ஆகாயமார்க்கமாய்ச்சென்று மற்றைக்கடல்களிலுஞ் சேர்ந்து நியமங்களை நிறைவேற்றிக்கொண்டு தனது நகரமடைந்து இவனைக் கீழே உதறின னென்று அறிக. தேவர்களும் அசுரர்களும் ஒருங்கு கூடிச் சாவா மருந்தாகிய அமிருதத்தைப் பெறுமாறு மந்தரமலையை மத்தாகநாட்டி வாசுகி நாகத்தைக் கடைகயிறாகப்பூட்டிச் சந்திரனை அடைதூணாகநிறுத்திப் பாற்கடலைக் கடையமுயல்கையில், இருதிறத்தாரும் அதனைக்கடையும்வலிமையிலராய் ஒடுங்கிநிற்குமளவிலே, வாநராசனும் தேவேந்திரகுமாரனும் மகாபலசாலியுமான வாலி தான் நாள்தோறும் பலகடல்களிலுஞ் சென்று வைதிக நித்தியகருமங்களை முடித்துவரும் வழக்கப்படி பாற்கடல் சென்றுசேர, தேவர்கள் அவனை வேண்டிக்கொள்ள, அவன் சுராசுரர்களை விலக்கிவிட்டுத் தான்ஒருவனாகவே இருகைகளாலும் வாசுகியின்தலையையும் வாலையும் பிடித்து வலியஇழுத்து விரைவிற் கடையவே, அமிருதமெழுந்த தென்பது கதை; (இவ்வரலாறு முதனூலாகிய ஸ்ரீவால்மீகிராமாயணத்தில் இல்லையாயினும் புராணாந்தரங்களிலேல்யாதல், கல்பாந்தரத்திலேயாதல் உண்டென்று கொள்ள

வேண்டும்: நல்லிசைப்புலவராகிய கம்பர் கூறியிருத்தலால்). "கழறு தேவரோ டவுணர் கண்ணினின், றழலு மந்தரத் திருவு தேய முன்,னழலுங் கோளரா வகடு தேய்விடச், சுழலும் வேலையைக் கடையுந் தோளினன்" என்ற கிட்கிந் தாகாண்டச்செய்யுளையும் நோக்குக. "கடலைச் சுராசுரர்க்கமுதெழக் கடைந்த வீரியன்" என்பர் ஒட்டக்கூத்தர் உத்தரகாண்டத்திலும். இச்சரித்திரத்தைக் காஞ்சிப்புராணத்து மணிகண்டேசுரப்படலத்திற் பரக்கக்காணலாம். (௩௦)

௩க. அன்னவன்றன்னையுங்கோனம்பொன்றாலாவிவாங்கிப்
பின்னவற்கரசுநல்கித்துணையெனப்பிடித்தானங்கண்
மன்னவன்றனக்குநாயேன்மந்திரத்துள்ளேன்வானி
னன்னெடுங்காலின்மைந்தனுமநுமனென்பேன்.

(இ-ள்.) அன்னவன் தன்னை - அப்படிப்பட்ட வாலியை, உம் கோன் - உமதுநாயகனாகிய இராமபிரான், அம்பு ஒன்றால் - ஓரம்பினால், ஆவி வாங்கி - உயிரைக் கவர்ந்து [கொன்று], பின்னவற்கு அரசு நல்கி - அவன்தம்பியாகிய சுக்கிரீவனுக்கு இராச்சியத்தைக் கொடுத்து, துணை என பிடித்தான் - (உன்னைத்தேடுதற்கு அவனையே) துணையாகக் கொண்டான்: நாயேன்-நாய்போற் கடைப்பட்ட நான், நங்கள் மன்னவன்தனக்கு - எங்கள் அரசனான அச் சுக்கிரீவனுக்கு, மந்திரத்து உள்ளேன்-ஆலோசனைச்சபையி லுள்ளவன்: வானின் நல் நெடுங் காலின் மைந்தன் - ஆகாயத்திலுலாவுகிற நல்ல நீண்ட வாயுதேவனது புத்திரன்: நாமமும் - (எனது) பெயரும், அநுமன் என்பேன் - அநுமா னென்று சொல்லப்படுவேன்; (எ - று.)

கீழ் வாலியை 'வேலையமுதெழக் கடைந்த தோளான்' என்றும், 'இராவணன்வலி தன்வாலினிற்றுகக் கட்டி யெட்டுத்திசையினு மெழுந்துபாய்ந்த வெற்றியன்' என்றும் சிறப்பித்துக்கூறி, இங்கு 'அன்னவன்தன்னையுங்கோனம் பொன்றா லாவிவாங்கி' என்றுகூறியதன் நோக்கம், இராவணனையழித்துத் தன்னைமீட்கும் ஆற்றல் இராமனுக்கு உண்டோ இல்லையோ என்னும் ஐயம் சீதைக்கு நிகழாதவாறு தேற்றுதற் கென்க. பின்னவன் - பின்பிறந்தவன்: தம்பி; தமையன், முன்னவ னெனப்படுவன். பிடித்தல் - உறுதியாக நம்புதல். அநுமான் தன்னை 'நாயேன்' என்று கூறியதனால், அவனது செருக்கின்மையும் மிக்கஅடக்கமுடைமையும் வெளியாம். மந்திரத்துள்ளேன் - மந்திரித் தொழில்செய்பவன். 'அநுமனென்றான்' என்றும் பாடம். (௩க)

௩உ. எழுபதுவெள்ளங்கொண்ட வெண்ணனவுலகமெல்லாந்
தழுவிநின்றெடுப்பவேலைதனித்தனிகடக்குந்தாள
குழுவினவுங்கோன்செய்யக்குறித்ததுகுறிப்பினுன்னி
வழுவிலசெய்தற்கொத்தவாநரம்வானினீண்ட.

(இ - ள்.) எழுபது வெள்ளம் கொண்ட எண்ணன - எழுபதுவெள்ள மென்னுந் தொகையைக் கொண்டவையும், உலகம் எல்லாம் தழுவி நின்று

எடுப்ப - எல்லாவுலகங்களையும் ஒருசேரக் கைகளால் எடுக்கவல்லவையும், வேலை தனி தனி கடக்கும் தாள - கடலைத் தனித்தனியே தாண்டவல்ல கால்களையுடையவையும், வானின் நீண்ட - ஆகாயத்தினும் உயர்ந்தவையு மான, வாநரம் - குரங்குகள்,—உம் கோன் செய்ய குறித்தது - உமதுதலைவ ஞகிய இராமபிரான் செய்யநினைத்ததை, குறிப்பின் உன்னி - (முகம் கண் புருவம் முதலியவற்றின்) குறிப்பினுல் ஆராய்ந்தறிந்து, வழு இல செய்தற்கு- (அக்காரியங்களைத்) தவறுதனவாய்ச் செய்தற்கு, ஒத்த - மனம்ஒருமித்தவை யாய், குழுவின - கூடியுள்ளன; (எ - று.)

அநுமான், துணைவலிச்சிறப்பை அறிவித்தற்கு, வாநரங்களின் வலிமை முதலியவற்றை எடுத்துக்கூறின னென்க. வெள்ளம் - ஓர் பெருந்தொகை; மிகப்பல அக்ஷௌகிணி கொண்டது; (யானை ஒன்றும், தேர் ஒன்றும், குதிரை மூன்றும், காலாள் ஐந்துங் கொண்டது - பத்தி யெனப்படும்; அப்பத்தி மூன்று பங்குகொண்டது - சேனுமுகம்; சேனுமுகம்மூன்று - குல்மம், குல்மம் மூன்று- கணம்; கணம் மூன்று-வாகிநி; வாகிநி மூன்று-பிரதனை; பிரதனை மூன்று-சமூ; சமூ மூன்று-அநீகிநி; அநீகிநி பத்து - அக்ஷௌகிணி; (ஆகையினுல், அக்ஷௌ கிணியென்பது - தேர் உகஅஎ௦, யானை உகஅஎ௦, குதிரை கூருகூக௦, கா லாள் க௦கூருரு௦: ஆக, உகஅஎ௳௦ - கொண்டதாம்.) அக்ஷௌகிணி எட்டுப் பங்குகொண்டது - ஏகம்; ஏகம் எட்டு - கோடி; கோடி எட்டு - சங்கம்; சங்கம் எட்டு-விந்தம்; விந்தம் எட்டு - குமுதம்; குமுதம் எட்டு - பதுமம்; பதுமம் எட்டு-நாடு; நாடு எட்டு - சமுத்திரம்; அந்தச் சமுத்திரம் எட்டுப்பங்குகொண் டது-வெள்ளம் எனக் காண்க. குறிப்பு - இங்கித மெனப்படும். வாநரம்என்ப தற்கு, சற்றேறக்குறைய மனிதனையொத்தது என அவயவப்பொருள். (ருஉ)

ருரு. துப்புறுபரவையேழுஞ்சூழ்ந்தபாரேழுமாழ்ந்த
வொப்புறுநாகர்நாடுமும்பரினிம்பர்காறு
மிப்புறந்தேடிநின்னையெதிர்ந்திலவென்னினண்டத்
தப்புறம்போயுந்தேடவவதியினமைந்துபோன.

(இ-ள்.)(அவற்றிற் பலவாநரங்கள்),—துப்பு உறு பரவை ஏழும் - பவழக் கொடிபொருந்தப்பெற்ற ஏழுகடல்களிலும், சூழ்ந்த - (அக்கடல்களாற்) சூழப் பட்டுள்ள, பார் ஏழும் - ஏழுதீவுகளிலுமாக, இம்பர் காறும் - இந்தப்பூமியி லும், ஆழ்ந்த ஒப்பு உறு நாகர் நாடும் - கீழேஆழ்ந்துள்ள (தனக்குத் தன்னையே) உவமையாகக்கொண்ட நாகலோகமாகிய பாதாளத்திலும், உம்பரின் - மேலு லகத்திலுமாக, இ புறம்-இவ்வண்டத்தில், தேடி-தேடிப்பார்த்து, நின்னை—, எதிர்ந்தில என்னின் - காணப்பெறுதனவாயின், அண்டத்து அப்புறம் உம்- இவ்வண்டத்துக்கு அப்பாலுள்ள பகிரண்டங்களிலும், போய் தேட - சென்று தேடிப்பார்க்கும்படி, அவதியின் அமைந்து - ஒருகாலவெல்லையை உடன் பட்டு, போன - (அதற்குள்தேடிவருவதாகச்) சென்றுள்ளன; (எ - று.)

திப்புறு - கடலுக்கு இயற்கையடை; வலிமைமிக்க என்றுமாம். பரவை - பரவியிருப்பது. கடல் எழ் - உவர்நீர், கருப்பஞ்சாறு, மது, நெய், தயிர், பால், நன்னீர் இவற்றின்மயமானவை. பார் என்னும் சொல் - நிலவுலகம் முழுதையு மேயன்றித் தன்கட் கூறுபட்ட நிலங்களை உணர்த்திநின்றது; "மாயோன் மேய காடுறை யுலகம்" என்றவிடத்து 'உலகம்' என்னுஞ் சொற் போல. நாகரா வார் - படமும் வாலு முடையராய் மனிதவடிவும் தெய்வப்பிறப்பு மாகிய தொரு சர்ப்பசாதியார். 'நாகர்நாடு' என்றது - கீழேழுலகங்களையும், 'உம்பர்' என்றது - பூமிக்குமேலுள்ள ஆறு உலகங்களையும் உபலக்ஷணத்தாற் குறிக்கும். இந்தப் பதினான்குஉலகமுஞ் சேர்ந்ததே ஓரண்ட மெனப்படுவது. அவதி - (கால) எல்லை; வடசொல். அவதியின் அமைந்தமையை, "ஒருமதி முற்றுறுத முன் முற்றுதி ரிவ்விடைக், கொற்றவாகையினீர்" என்று சீதையைநாடவிட்ட போது வாநரங்களைநோக்கிச் சுக்கிரீவனிட்ட கட்டளையினால் அறிக. (௩௩)

௩௪. புன்றொழிலரக்கன்கொண்டுபோந்தநாள்பொதிந்துதூசிற்
குன்றினெம்மருங்கினிட்டவணிகலக்குறியினாலே
வென்றியானடியன்றன்னைவேறுகொண்டிருந்துகூறித்
தென்றிசைசேறியென்றானவனருள்சிதைவதாமோ.

(இ - ள்.) புல் தொழில் அரக்கன் கொண்டு போந்த நாள் - இழிதொழிலையுடைய ராக்ஷசனாகிய இராவணன் (உன்னை) எடுத்துக்கொண்டுசென்ற காலத்தில், (நீ), தூசின் பொதிந்து - ஆடையில் முடிந்து, குன்றின் எம்மருங்கின் இட்ட - (ரிசியமூக) பருவதத்தில் எமதுஅருகிலே போகட்ட, அணிகலம் - திருவாபரணங்களின், குறியினால் - குறிப்பினால் [அவ்வாபரணங்களை நான் எடுத்துக்காட்டிச் சொன்ன அடையாளத்தினால்], வென்றியான் - வெற்றியையுடைய இராமபிரான், அடியன் தன்னை-(தனது) அடியவனாகிய என்னை, வேறு கொண்டு இருந்து-தனியே அழைத்து வேறிடத்தில் வைத்துக்கொண்டிருந்து, கூறி – (சிலவார்த்தைகள்) சொல்லி, தென் திசை சேறி என்றான்- '(நீ) தெற்குத் திக்கை நோக்கிச் செல்வாயாக' என்று (எனக்குக்) கட்டளையிட்டருளினான்: அவன் அருள் சிதைவது ஆமோ – அவனது கருணை பழுதுபடுவதாகுமோ? (எ - று.) — ஆகா தாதலால், அடியேன் உன்னை இங்குக் காணப்பெற்றேன் என்பதாம்.

சீதை சீலையில் முடிந்தெறிந்த அணிகலன்களை அநுமான் தந்து தன் மனத்துக்குத் தேறுதலை யுண்டாக்கினமைபற்றி, இராமபிரான் அவ்வநுமான் மீது மற்றையோரிடத்திலும் மிக்கநம்புதலையுடையனாயின னென்க. பிறன் மனைவியைக் கவர்ந்தமையால், இராவணன், 'புன்றொழிலரக்கன்' எனப்பட்டான். வென்றியான் அநுமானை வேறுகொண்டிருந்து கூறினமையை, கிஷ்கிந்தா காண்டத்து நாடவிட்டபடலத்துக் காண்க; இதுபற்றியே, அநுமான் முன் தன்னை 'அருளேன்' என்று உரைத்ததும். அப்பொழுது கூறியன - அடையாள வார்த்தைகள். போந்த - புகுந்த என்பதன் மரூஉ. அணிகலம் - அணியும் கலன். (௩௪)

௩௫. கொற்றவற்காண்டிக்காட்டிக்கொடுத்தபோதடுத்ததன்மை
பெற்றியினுணர்தற்பாற்றோவுயிர்நிலைபிறிதுமுண்டோ
விற்றைநாளளவுமன்றுவென்றுநீயிழித்துநீத்த
மற்றைநல்லணிகள்காணுன்மங்கலங்காத்தமன்னே.

(இ - ள்.) அன்னே - தாயே! கொற்றவற்கு - வெற்றியையுடைய இராம பிரானுக்கு, ஆண்டு - (சுக்கிரீவனோடு நட்புக்கொண்ட) அப்பொழுது, காட்டி கொடுத்த போது - (நான் ஆபரணங்களை எடுத்துக்) காண்பித்து (அவன்கை யிற்) கொடுத்த சமயத்தில், அடுத்த தன்மை - (அப்பிரானுக்கு) நேர்ந்த நிலை மை, பெற்றியின் - (நான் இப்பொழுது சொல்லும்) வகையினால், உணர்தல் பாற்றோ - அறியத்தக்க தன்மையுடையதோ? [அன்று, கண்டிருந்தால்தான் உணரமுடியும் என்றபடி]; உயிர் நிலை - (அப்பிரானது) உயிர் (உடம்பை விட்டுநீங்காமல்) நிற்றற்குக் காரணம், பிறிதும் உண்டோ - (அவ்வாபரணங் களையன்றி) வேறொன்றும் உள்ளதோ? [இல்லை]; நீ—, அன்று - அந்நாளில், இழித்து நீத்த - சுழற்றியெறிந்த, மற்றை நல் அணிகள் - மற்றைச் சிறந்த ஆபரணங்களே, உன் மங்கலம் - உனது மங்கலநாணை [திருமங்கலியத்தை], இற்றை நாள் அளவும் - இன்றைத்தினமட்டும், காத்த - காப்பாற்றின; (எ - று.)—மன் ஒ - ஈற்றசை.

தன்வரலாறுகூறிவந்த அநுமான் இடையில் இராமபிரானதுசெய்தியை இடைப்பிறவரலாக்கூறினான், இராமபிரான் தன்மீது மிக்க அன்புடையனென அறிந்து சீதை மனந்தேறியிருத்தற்பொருட்டும், தான் இராமபிரானுக்கு அந்த ரங்கன் எனச் சீதைக்கு உணர்த்துதற்பொருட்டுமென்க. அவ்வாபரணங்களைக் கண்டதனாலேயே உன்னைப்பிரிந்து இத்தனைநாளாயும் இராமபிரான் உயிர் வைத்திருக்கின்றனன்; காணாவிடின் அன்றேஉயிரிழந்திருப்ப னென்பதாம். இராமன் இறந்துபடுவ னென்பதை வாயினாற்சொல்லக்கூசி 'உன்மங்கலங் காத் த'என வேறுவகையாக் கூறினது, பிறிதினவிற்சியணி; ஒன்றை இயல்பாகக் கூறாமல் வேறுவகையாற் கூறுவது, இவ்வணியின் இலக்கணம்: இதனை வட நூலார் பர்யாயோக்த மென்பர். ஆண்டு - அவ்விடத்தில் [ரிசியமூககிரியில்] என்றுமாம். மற்றைஎன்னும் இடைச்சொல் -சுட்டியதற்கு இனமான பொரு ளுள்ளது. அணி - அணியப்படுவ தென்னும் பொருளிற் செயப்படுபொருள் விகுதி புணர்ந்து கெட்ட பெயர். காண் - தேற்றம்; முன்னிலையசையாகவு மாம். மங்கலம் - இலக்கணை வழக்கு. (௩௫)

௩௬. ஆயவன்றன்மைநிற்கவங்கதன்வாலிமைந்த
னேயவன்றென்பால்வெள்ளமிரண்டினோடெழுந்துசேனை
மேயினபடர்ந்துதிரவனையவன்விடுத்தானென்னைப்
பாய்புனலிலங்கைமூதூர்க்கென்றனன்பழியைவென்றான்.

(இ - ள்.) ஆயவன் தன்மை நிற்க - அந்தஇராமபிரானது தன்மை (இவ்வாறு) இருக்கட்டும்: வாலி மைந்தன் - வாலியின்புதல்வனாகிய, அங்கதன்-அங்கதனென்பவன், ஏயவன் - (இராமபிரான்கட்டளைப்படி சுக்கிரீவனால்) ஏவப்பட்டவனாய், தென்பால் - தெற்குத்திக்கை நோக்கி, இரண்டு வெள்ளம் சேனையோடு எழுந்து படர்ந்து - இரண்டுவெள்ளமென்னுந் தொகையுடைய சேனையுடனே (கிஷ்கிந்தாநகரத்தினின்று) புறப்பட்டுச்சென்று,—மேயின - பொருந்திவந்தனவான அந்தச்சேனைகள், தீர - (கடலைக்கண்டு) பின்வாங்கிநிற்க,—அனையவன் - அந்த அங்கதன், என்னை—, பாய் புனல் இலங்கை மூதூர்க்கு - பாயும் இயல்புள்ள கடல்நீரால் சூழப்பட்ட பழமையான இலங்காநகரத்திற்கு, விடுத்தான் - அனுப்பினான், என்றனன் - என்று கூறினான்: (யாவனெனில்,—) பழியை வென்றான் - பழிக்கப்படுவனவாகிய (காமம் முதலிய) குற்றங்களைச் சயித்தவனான அனுமான்; (எ - று.)

கடல்கடந்து இலங்கைசென்று செய்திதெரிந்து மீண்டுவரும் வலிமை தமக்கு இல்லாமையை அங்கதன் முதலிய வானரவீரர் தெரிந்துசொல்ல, பின்னர் ஜாம்பவான் தூண்டியதனால் அநுமான் கடல்கடக்க உடன்பட்டனனென்க. ப்ரஸக்தாநுப்ரஸக்தமாக [தொட்டதைத்தொட்டுக்] கீழ் இராமபிரானதுவரலாற்றை யுணர்த்தினமையால், 'ஆயவன்றன்மை நிற்க' என வேண்டிற்று. அங்கதன் - வாலிக்குத் தாரையினிடம்பிறந்த குமாரன். தெற்கு நோக்கிச்சென்ற வானரவீரர்க்குத் தலைவனான இவ்வங்கதன் தன்னைஏவாநிருக்கவும், அநுமான் தன்னை ஏவினதாகக் கூறினது, தான்கடல்கடக்கச்செல்கையில் அதற்கு உடன்பட்டிருந்தமைபற்றி. வாலி-வாலில் வலிமையுடையவனென்றும், வாலினின்றுபிறந்தவனென்றும் பொருள்படும். சேனை - வானரசேனை. பாய் - புனலுக்கு இயற்கை யடைமொழி. பழிக்கப்படுவனவற்றை 'பழி' என்றார். காமம்முதலியன உட்பகையாதலால், அவற்றை அடக்குவதன் அருமை தோன்ற, 'வென்றான்' என்றார்; இனி, பிராட்டிக்கு நேரும் பழியை நீக்கினவன் என்றுமாம். (௩௬)

[அநுமான்வார்த்தையைக் கேட்டு மகிழ்ந்த சீதை அவனைநோக்கி 'இராமபிரான்திருமேனியழகைக் கூறு' என்றல்.]

௩௭. எய்தவனுரைத்தலோடுமெழுந்துபேருவகையேற
வெய்துறலொடுங்குமேனிவானுறவிம்மியோங்கி
யுய்தல்வந்துற்றதோவென்றருவிநீரொழுகுகண்ணா
ளையசொல்லையன்மேனியெப்படிக்கறிதியென்றாள்.

(இ - ள்.) எய்து அவன்-(தூதாக)வந்த அவ்வநுமான், உரைத்தலோடும் (இவ்வாறு) கூறினமாத்திரத்தில்,—(சீதை), பேர் உவகை எழுந்து ஏற - (தன் மனத்திற்) பெருங்களிப்பு உண்டாகி வளர, வெய்து உறல் ஒடுங்கும் மேனி வான் உற விம்மி ஓங்கி - வெப்பமுடையதாகிய துன்பத்தை யடைந்ததனால் வாடிப்போன தன்உடம்பு பருமையையடையும்படி பூரித்து உயர்ந்து, உய்தல் வந்து உற்றதோ என்று - '(துன்பம்நீங்கி) உயிர்பிழைக்குங்காலமும்

(எனக்கு) வந்து பொருந்தியதோ!' என்று வியந்துகூறி, நீர் அருவி ஒழுகு கண்ணாள் - கண்ணீர் அருவிநீர்ப்பெருக்குப்போலப் பெருகுகின்ற கண்களையுடையவளாய், 'ஐய - பெரியவனே! ஐயன் மேனி - இராமபிரானது திருமேனியை, எப்படிக்கு அறிதி - எந்தவிதமாக அறிகிறாய்? சொல் - சொல்வாயாக,' என்றாள் - என்றுவினவினாள்; (எ - று.)

எய்தஅவன் - வினைத்தொகை. பேருவகை - பரமாநந்தம். வெய்து - வெம்மையுடையது; எனவே, துன்பமாயிற்று. வான் - பருமைக்கு இலக்கணை. பிரிவினால் மெலிந்துகிடந்த மேனி பூரித்தமையை அதிசயோக்திவகையால் 'வானுறவிம்மியோங்கி' என்றா ரென்னலாம். ஓகாரம் - மகிழ்ச்சி. இங்குக் கூறிய கண்ணீர், ஆநந்தபாஷ்பம். ஆர்ய என்னும் வடமொழி - பிராகிருத பாஷையில் அய்ய என்று ஆகி, தமிழில் ஐய என நிற்கும். ஐயசொல் ஐயன் மேனி என்பதற்கு, அழகியசொற்களையுடைய இராமபிரானது திருமேனியென்றுமாம். தனதுகண்ணாற்காண இப்பொழுது கூடாவிடினும் கேட்டாவது சிறிதுமகிழலா மென்னுங் கருத்தோடு 'எப்படிக்கு அறிதி' என வினவினளென்க; அதில், அவ்வநுமானது தன்மையைப் பரீக்ஷிக்குமாறும் விளங்கும்.

[அநுமான் இராமபிரானது திருமேனியழகை வர்ணிக்கத் தொடங்குதல்.]

௩௮. படியெடுத் துரைத்துக் காட்டும் படித்தன்று படிவம் பண்பின்
முடிவுள வுவம மெல்லா மிலக்கண மொழியு முன்னர்த்
துடியிடை யடையா ளத்தின் றொடரவை தொடர்தி யென்னா
வடிமுதன் முடியின் காறு மறிவுற வநுமன் சொல்வான்.

(இ - ள்.) 'துடி இடை - உடுக்கைபோன்ற இடையையுடையவளே! படிவம் - (இராமபிரானது) திருமேனி, படி எடுத்து உரைத்து காட்டும் படித்து அன்று - உபமானம் எடுத்துச் சொல்லிக்காட்டுந் தன்மையை யுடையதன்று [ஒப்பற்றதென்றபடி]: (ஏனெனில்,—) பண்பின் முடிவு உள உவமம் எல்லாம் - (தமது இயற்கைக்குணங்களில் சிறிதுங்குறைவுபடாது) நிறைந்துள்ள உபமானப்பொருள்கள் யாவும், முன்னர் - (இராமபிரானது திருவுருவத்தின்) முன்னே, இலக்கணம் ஒழியும் - (தம்தமது) உவமைத்தன்மை குன்றி நிற்கப்பெறும் [உவமையாகமாட்டா]; (ஆகையால்), அடையாளத்தின் தொடர் அவை - (யான் கூறிவரும்) அடையாளங்களின் தொடர்ச்சியைக் கொண்டே, தொடர்தி - (அவ்வடிவத்தின் அமைதியைப்பற்றி எனதுகருத்து இவ்வாறென்று) ஊகித்துணர்வாய்', என்னா - என்றுசொல்லி, அநுமன் - அநுமான், அடி முதல் முடியின் காறும் - திருவடிமுதல் திருமுடி ஈறாக, அறிவுற - (சீதை) அறிந்துகொள்ளும்படி, சொல்வான் - சொல்பவனானான்; (எ - று)—அவற்றை, மேல் இருபதுகவிகளிற் காண்க.

'படியெடுத்துரைத்துக்காட்டும்படித்தன்று' என்ற முதல்வாக்கியத்தைப் பின்வாக்கியம் சமர்த்தித்துநின்றது, தொடர்நிலைச் செய்யுட்குறியணி. பண்

பு - உவமையாவதற்குஉரிய குணம். தமக்கு இருக்கவேண்டிய குணங்களிற் சிறிதும்குறைபாடின்றி நிறைந்திருப்பினும், உபமானப்பொருள்கள், இராமபிரானது திருவுருவத்திற்கு உபமானமாயிருக்குந்தன்மையைத் தாங்கள் சிறிதும் பெறமாட்டா என்பது, இரண்டாமடியின் கருத்து; இதனால், இராமபிரானது திருவுருவப்பொலிவு நன்கு விளங்கும். துடியிடை - அன்மொழித் தொகை; அண்மைவிளியாதலின், இயல்பு. 'பண்பின்··· தொடர்தி' என்பதற்கு - குணங்களில் எல்லையுள்ளவையாகிய பலஉபமானங்களால் (அத்திருமேனியின்) லக்ஷணங்களை யான் சொல்லுமுன்னே [சொல்லிவரும் அப்பொழுதப்பொழுதே] அவ்வடையாளங்களினால் அறியத்தக்க அத்திருவவயவங்களை அறிவாயாக என்றலும் ஒன்று. அடிமுதல் முடியின்காறும் - பாதாதிகேசபரியந்தம். தேவர்களைப் பாதாதிகேசபரியந்தமும், மனிதர்களைக் கேசாதிபாதபரியந்தமுமாகக் கூறுதல், மரபு. இராமபிரான் திருமாலின் திருவவதாரமாதலால், அப்பிரானைப்பற்றிப் பாதாதியாகக் கூறத் தொடங்கினான். இனிக் கூறப்படும் இராம வர்ணனையாகிய பிரபந்தத்துக்கு இச்செய்யுள் அவையடக்கமாய் அமைந்த தென்னலாம். (௩௨)

## வேறு.

[திருவடிச் சிறப்பு.]

௩௩. சேயிதழ்த் தாமரை யென்று சேணுளோ
ரேயின ரதன்றுணை யெளிய தில்லையா
னாயகன் றிருவடி குறித்து நாட்டுறிற்
பாய்திரைப் பவளமுங் குவளைப் பண்பினாம்.

(இ-ள்.) சேண் உளோர் - உயர்ச்சியையுடைய வித்துவான்கள், சேய் இதழ் தாமரை என்று ஏயினர் - (பாதங்கட்கு உவமைப்பொருள்) சிவந்த இதழ்களையுடைய [செந்] தாமரைமலரென்று நியமித்துவைத்தார்கள்: நாயகன் திரு அடி குறித்து நாட்டுறின் - இராமபிரானது திருவடிகளை உத்தேசித்து (உவமையை) நிலைநிறுத்தத் தொடங்கினால், அதன் துணை எளியது இல்லை - அச்செந்தாமரைமலரினளவு தாழ்வுடைய பொருள் ஒன்றும் இல்லை [திருவடிகட்குமுன் அச்செந்தாமரைமலர் மிகவுந்தாழ்ந்ததாம் என்றபடி]; (அன்றியும்), பாய் திரை பவளமும் - பாய்கின்ற அலைகளையுடைய கடலில் தோன்றுகிற பவழமும், குவளை பண்பின் ஆம் - (அத்திருவடியின் செம்மைக்கு முன்) நீலோற்பலமலர்போலக்கருநிறமுடையதாம்; (எ - று.)—ஆல்-ஈற்றசை.

இராமபிரானது திருவடிக்குத் தாமரையும் பவழமும் ஒப்பாகா என்பதாம்; எதிர்நிலையணி; மேல்வருவனவற்றிலும் இங்ஙனமே அணிகொள்க; இது வடமொழியில் ப்ரதீப மெனப்படும்: உபமானத்துக்குக் குறைவுதோன்றச் சொல்லுதல், இவ்வணியின் இலக்கணம். செம்மைமென்மைகளால் தாமரையும், நிறத்தால் பவழமும் அடிக்கு உவமையாக் கூறப்படும். மூன்றமடியை

மத்திமதீபமாக முன்பின்வாக்கியம் இரண்டிலுங் கூட்டுக. 'பவளமும் குவளைப்பணியும்' என்றது, பவழத்தோடு கருநெய்தல்மலர்க்கு நிறத்தில் எவ்வளவுவேறுபாடுஉண்டோ, அவ்வளவு வேறுபாடு, இராமபிரானது திருவடியின் செந்நிறத்தோடு பவழத்தின் செந்நிறத்திற்கு உண்டு என்றவாறு. சேண் - உயர்ச்சிக்கு இலக்கணை. சேணுளோர் - வானத்திலுள்ளவராகிய தேவர் என்பாரு முளர். அதன் துணை எளியது இல்லை என்பதற்கு - அக்கருத்து மிக இழிந்ததா மென்றும் உரைக்கலாம்.

இதுமுதற் பதின்மூன்று கவிகள் - இப்படலத்தின் பதினோராங் கவி போன்ற கலிவிருத்தங்கள். (௩௯)

[திருவடிவிரல்களின் சிறப்பு.]

௪௦. தளங்கெழுகற்பகமுகிழுந்தண்டுறை
யிளங்கொடிப்பவளமுங்கிடக்கவென்னவை
துளங்கொளிவிரற்கெதிருதிக்குஞ்சூரிய
னிளங்கதிரொக்கினுமொக்குமேந்திழாய்.

(இ - ள்.) ஏந்து இழாய் - தரித்த ஆபரணங்களையுடையவளே! தளம் கெழு கற்பகம் முகிழும் - இதழ்களோடுகூடிவிளங்குகின்ற கற்பகவிருக்ஷங்களின் செவ்வரும்புகளும், தண் துறை இளங் கொடி பவளமும் - குளிர்ந்தகடனீர்த்துறையில் தோன்றுகிற இளமையான பவழக்கொடியும், கிடக்க - இருக்கட்டும்: அவை என் - அவற்றாற் பயன் என்ன? [அவை திருவடிவிரல்களுக்குச் சிறிதும் உவமையாகா என்றபடி]; உதிக்கும்-உதயமலையில் தோன்றுகின்ற, இள சூரியன் - இளஞ்சூரியனது, கதிர் - கிரணங்கள், துளங்கு ஒளி விரற்கு - விளங்கும்ஒளியையுடைய (இராமபிரானது) திருவடிவிரல்களுக்கு, எதிர் ஒக்கினும் ஒக்கும் - உவமையாக (ஒருகால்) பொருந்தினும் பொருந்தும்; (எ - று.)—எனவே, அதுவும் தக்க உவமையன் றென்பதாம்.

கல்பகம் - (வேண்டுவோர் வேண்டுவனவற்றை அவர்கள் நினைத்த மாத்திரத்திற்) கற்பிப்பது [உண்டாகச்செய்வது] என்று அவயவப்பொருள். இது, தேவதருக்கள் ஐந்தனுள் ஒன்று; (மற்றவை - சந்தானம், பாரிசாதம், மந்தாரம், அரிசந்தனம் என்பன.) 'கிடக்க' என்றது, அலட்சியத்தைக் குறிக்கும் ஒரு சொல்விழுக்காடு. ஒக்கினும், உம்மை - ஒப்பாகப் பொருந்துதலின் அருமையை விளக்கிநின்றது. (௪௦)

[திருவடிவிரல் நகங்களின் சிறப்பு.]

௪௧. சிறியவும்பெரியவுமாகித்திங்களோ
மறுவிலபத்துளவல்லமற்றினி
யெறிசுடர்வயிரமோதிரட்சியெய்தில
வறிகிலெனுகிர்க்கியானுவமமாவன.

(இ - ள்.) சிறியவும் - (சில) சிறியனவாயிருப்பவையும், பெரியவும் - (சில) பெரியனவாயிருப்பவையும், ஆகி - இவ்வாறு வெவ்வேறு வகைப்பட்ட வடிவையுடையனவாய், மறு இல - களங்கமில்லாதனவாகிய, திங்கள் பத்து ஓ - பத்துச் சந்திரமண்டலங்களோ, உள அல்ல - (உலகத்தில்) உள்ளனவல்ல; இனி—, எறி சுடர் வயிரமோ - வீசுகின்ற ஒளியையுடைய வச்சிரமென்னும் இரத்தினமோ, திரட்சி எய்தில - திரண்டவடிவத்தை அடைந்தனவில்லை; (ஆதலால்), உகிர்க்கு - (அப்பிரானது) திருவடிவிரல் நகங்களுக்கு, உவமம் ஆவன - உபமானமாவதற்கு ஏற்ற பொருள்களை, யான்—, அறிகிலென் - அறிகிறேனில்லை; (எ - று.)

சிறியனவும் பெரியனவுமான வடிவமுடையனவும் களங்கம் நீங்கினவுமாகி ஒருங்குகூடி நிலத்தில் விளங்குகிற பத்துப் பூர்ணசந்திரர்களும், இயல்பிலே திரண்டவடிவுள்ள பத்து வயிரக்கற்களும் உளவாயின் அவை திருவடி நகங்கட்கு ஒருபடியொப்பாம் என்ற கருத்து அமையக் கூறியிருத்தலால், இச்செய்யுளில் உய்த்துணரவைப்பணி தொனிக்கும். மற்று - அசை. சிறியவும் பெரியவும், - தொடை முரண். (௪௧)

[புறவடியின் சிறப்பு.]

௪௨. பொருந்திலநிலனொடும்போந்துகானிடை
வருந்தினவெனினதுநூலைமாறுகொண்
டிருந்ததுநின்றதுபுவனம்யாவையு
மொருங்குடன்புணர்வதுரைக்கற்பாலதோ.

(இ - ள்.) நிலனொடு பொருந்தில - (அயோத்தியிலிருந்தபொழுது) தரையில் நடவாதிருந்த திருவடிகள், (பின்பு), கானிடை போந்து வருந்தின எனின் - காட்டில் நடந்துசென்று வருத்தமுற்றன வென்றாலும், அது - (அப்பாதங்களின்) புறவடி, நூலை மாறுகொண்டு இருந்தது - புத்தகத்தை ஒப்பாகக் கொண்டிருந்தது; (மேலும்), புவனம் யாவையும் - எல்லாவுலகத்தவரும், ஒருங்கு உடன் புணர்வது - ஒருசேர வீழ்ந்து சரணமடையப்படுவதாய், நின்றது—; உரைக்கற்பாலதோ - (அதன்சிறப்புச்) சொல்லத்தக்க அளவுடையதோ? [அன்று என்றபடி]; (எ - று.)

'பொருந்தில நிலனொடு' என்றதில், இராமபிரானது தெய்வத்தன்மையும் வெளியாம்; கால்நிலந்தோயாமை தெய்வத்தன்மையாதல் காண்க. அது - சாதியொருமை. ஒருவகை ஏட்டுச்சுவடி, புறவடிக்கு வடிவில் உவமை; "நாடும் புறவடியே நன்கமைந்த புத்தகமும்," "நூலெழுது புத்தகம் ஆமை புறவடியொப்பாம்" என்பவற்றாலும் அறிக. இனி, ஸாமுத்திரிகசாஸ்திர லக்ஷணத்தையுங் கடந்து அதிக விலக்ஷணமாயுள்ள தென்றும் பொருள்கொள்ளலாம். நூல் - உவமையாகுபெயர். 'இனி', 'நூல்' என்ற சொற்குப் பொருளுரைக்கப்படும்: நூல்போறலின், நூலென்ப; பாவைபோல்வாளை 'பாவை' என்றதுபோல.

நூல்போறலென்பது-நுண்ணிய பலவாய பஞ்சின் நுனிகளாற் கைவன்மகளேத் தனது செயற்கைநலந் தோன்ற ஒரிழைப்படுத்தலாம், உலகத்து நூல் நூற்ற லென்பது: அவ்வாறே சுகிர்ந்து பரந்த சொற்பரவைகளாற் பெரும்புலவன் தனது உணர்வுமாட்சியின் பிண்டம் படலம் ஒத்துச் சூத்திரம் என்னும் யாப்பு நடைபடக் கோத்தலாயிற்று நூல் செய்தலாவது; அவ்வகை நூற்கப்படு தலின், நூலெனப்பட்டது. இனி, ஒரு சாரார், நூல்போலச் செப்பஞ்செய்த லின் நூலென்ப. இனி, தந்திரமென்னும் வடமொழிப்பொருளை நூலென வழங்குதல் தமிழ்வழக்கெனக் கொள்க. இது, 'நூல்' என்ற சொற்குப் பொருள்' என்ற இறையனாரகப் பொருளுரை இங்கு அறியத்தக்கது. புணர்வஃது - புணர்வது என்பதன் விரித்தல் விகாரம். இங்கு ஆய்தம் உயிர்போலநின்றது- இச்செய்யுட்குத் திருவடியின் சிறப்பைத் தெரிவிப்பதாகப் பொருள் கூறுதல் பொருந்தாது; முன்னரே [௩௧-ஆம் கவியில்] கூறியுள்ளதனால். (௪௨)

[கணைக்கால்களின் சிறப்பு]

௪௩. தாங்கணைப்பணிலமும்வளையுந்தாங்கரா
வீங்கணைப்பள்ளியானெனினும்வேறினிப்
பூங்கணைக்காற்கொருபரிசுதான்பொரு
மாங்கணைக்காவமோவாவதன்னையே.

(இ - ள்.) அன்னையே - தாயே! இனி—, அணை தாங்கு பணிலமும் - கடற்கரையில் தங்கும் இயல்புள்ள சங்கத்தையும், வளையும் - சக்கரத்தையும், தாங்கு-(திருக்கைகளில்) தரித்துள்ள, அரா வீங்கு அணை பள்ளியான் எனினும்- ஆதிசேஷனை (க்காற்றுநிறைந்து) உள்பூரித்துள்ள படுக்கை மெத்தையாக வுடைய திருமாலே சொன்னாயினும், பொரும் கணைக்கு ஆம் ஆவம் - போர் செய்யும் அம்புகட்கு இருப்பிடமாகிய அம்பறாத்தூணி, பூ கணைக்காற்கு - (இராமபிரானது) அழகிய திருக்கணைக்கால்களுக்கு, ஒரு பரிசுதான் ஆவது ஓ - (முழுவதும் ஒப்பாகாவிடினும்) ஒருபடியாகவாவது ஒப்பாகவல்லதோ? வேறு - வல்லதன்று; (எ - று.)—கணைக்கால் - முழங்காலின் கீழிடம்.

இனி, இச்செய்யுளுக்கு, கணைக்காற்கு ஒப்புமை சொல்லுமிடத்து அராப் பள்ளியான் எனினும் [திருமாலின் திருக்கணைக்காலேயானாலும்] வேறு ஒரு பரிசுதான் பொரும் [நேரான உவமையாகாது]; அதுவே அங்ஙனமானபோது, இனி அதற்கு அம்பறாத்தூணி உவமையாவதற்கு ஏற்றதாகுமோ? எனத் தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணியும் தோன்றுமாறு பொருள் கூறலும் பொருந்தும். இப்பொருளில், பொரும் என்பது - பொருவும் என்ற செய்யு மெனெச்சத்தின் விகாரம்; வீங்கணைப்பள்ளியான் எனினும் என்பதற்கு - திரு மாலின் அம்பறாத் தூணியேயாயினும் என்றும் உரை கூறலாம். கணைக்காலுக் கும் அம்பறாத் தூணிக்கும் ஒப்புமை, வடிவில். அணை-கரைப்பொது. அணை தாங்கு-பணிலத்துக்குச் சாதியடை. தாங்கு - தங்கு என்பதன் நீட்டல். திருமா லினது சங்கசக்கரங்கள் - முறையே பாஞ்சஜந்யமென்றும், சுதர்சநமென்றும்

பெயர் பெறும். சங்கத்தை இடப்பால்மேற்கரத்திலும், சக்கரத்தை வலப்பால் மேற்கரத்திலும் திருமால் தாங்கியுள்ளானென வறிக. இவை பகைவரையழிக்க நேர்கையில் ஆயுதங்களாகவும், மற்றைக்காலங்களில் ஆபரணங்களாகவும் நிற்கும். வளை - வட்டமாகவளைந்த வடிவுடையது எனச் சக்கரத்துக்குக் காரணக்குறி. காற்றை உணவாக உட்கொள்ளும் ஆதிசேஷனைப் படுக்கை மெத்தையாக வுடைமையால், திருமாலை 'வீங்கணைப்பள்ளியான்' என்றார். அணைப்பள்ளி - இருபெயரொட்டு. இச்செய்யுளில், திரிபு என்னுஞ் சொல்லணி காண்க.

[தொடைகளின் சிறப்பு.]

சச. அறங்கிளர்பறவையினரசனாடெழிற்
பிறங்கெருத்தனையனபெயரும்பெற்றுடை
மறங்கிளர்மதகரிகரமுநாணின
குறங்கினுக்குவமையிவ்வுலகிற்கூடுமோ.

(இ - ள்.) (இராமபிரானது திருத்தொடைகள்),—அறம் கிளர் பறவையின் அரசன் - தருமசொரூபியாய் விளங்குகின்றவனும் பறவைகட்கு அரசனுமான கருடபகவானது, ஆடு எழில் - நிரம்பிய அழகையுடைய, பிறங்கு எருத்து - விளங்குகிற பிடரியை, அனையன - ஒத்துவிளங்குகின்றன; பெயரும் பெற்று உடை -(திக்கஜங்களென்று) பெரும்பெயரையும் படைத்துள்ள, மறம் கிளர் - வலிமைமிகுந்த, மதம் - மதத்தையுடைய, கரி-யானைகளின், கரமும்-துதிக்கைகளும், நாணின - (அத்தொடைகட்கு ஒப்புமையாகமாட்டாது) வெட்க மடைந்தன; குறங்கினுக்கு - (இப்படிப்பட்ட) தொடைகளுக்கு, உவமை - (வேறு) உபமானம், இ உலகில் கூடுமோ - இந்தவுலகத்திற் கிடைக்குமோ? [கிடைக்காது என்றபடி]; (எ - று.)

பறவையின் அரசன் - பக்ஷிராஜன்; காசியபமுனிவர்க்கு விநதையினிடம் தோன்றியவன்; சூரிய சாரதியான அருணனது தம்பி; திருமாலுக்கு வாகனமும் துவசமுமாயிருப்பவன். இவனை 'பெரிய திருவடி' என வழங்குவது, வைஷ்ணவசம்பிரதாயம். (அநுமான், 'சிறியதிருவடி' எனப்படுவன்.) பறவை - பறப்பது; ஐ-வினைமுதற்பொருள் விகுதி. கருடபகவான் வேதசொரூபியாதலால், 'அறங்கிளர் பறவையினரசன்' எனப்பட்டான். எழில் - எழுச்சியுமாம்; அதாவது - வளர்ந்தமைந்தபருவத்தும் இதுவளர்ந்துமாறியதன்றி இன்னும் வளருமென்பதுபோன்று காட்டுதல். கரிகரம் என்பது - பூர்வபதமும் உத்தரபதமும் சமானார்த்தக மென்பார்க்கு "வெருவந்த செய்தொழுகும் வெங்கோலன்", "அடியளந்தான் தாஅயதெல்லாம்", "கோடாத செங்கோல்" என்பனபோல, முன்னது - கேவலபத மாத்திரையாய் நின்றதென்க; பணிபணம், வம்சகரீரம், கரிகலபம் என்பனவும் இவ்வாறே. கரிகரம் - திரட்சியாலும், நீட்சியாலும் உவமை. கரி - கரத்தையுடையது; (கரம் - துதிக்கை.) பரமபதத்தில் எழுந்தருளியிருக்கிற பெரிய திருவடியின் பிடரியையே உவமை கூறியதனால், 'குறங்கினுக்கு உவமை இவ்வுலகிற் கூடுமோ' என்றான், பொன்மயமாக

விளங்குதலால், அவனது பிடரி 'பிறங்கெருத்து' எனப்பட்டது. 'பிறங்கெருத்தனையது' என்ற பாடத்துக்கு - எருத்தும் அத்தன்மையதே [ஒப்பாகாமையால் வெள்கினதே] எனப் பொருள் காண்க. (௪௪)

[திருவுந்தியின் சிறப்பு.]

௪௫. வலஞ்சுழித்தொழுகுநீர்வழங்குகங்கையின்
பொலஞ்சுழியென்றலும்புன்மைபூவொடு
நிலஞ்சுழித்தெழுமணியுந்திநேரினி
யிலஞ்சியும்போலும்வேறுவமையாண்டரோ.

(இ - ள்.) பூவொடு - தாமரைப்பூவோடு, நிலம் சுழித்து எழும் - எல்லாவுலகங்களும் ஒன்றுகூடி உண்டாகப்பெற்ற, மணி உந்தி - அழகிய கொப்பூழுக்கு,(உவமை),வலம் சுழித்து ஒழுகும் நீர் கங்கையின் வழங்கு பொலம் சுழி - வலப்பக்கமாய்ச் சுழிக்கப்பெற்றுப் பெருகுகிற நீரையுடைய கங்காநதியிற் பொருந்திய அழகிய நீர்ச்சுழியாம், என்றலும்- என்று சொல்லுதலும், புன்மை- இழிவாம்: இனி—, இலஞ்சியும் - மகிழம்பூவும், நேர் போலும் - (அதற்கு) ஒப்புப்போலும்! [அதுவும் ஒவ்வாது]; வேறு உவமை யாண்டு - (இதற்கு) வேறே உபமானம் எவ்விடத்தில் உள்ளது? (எ - று.)—அரோ - ஈற்றசை.

இராமபிரான் திருமாலின் திருவவதார மாதலால், அவனது திருநாபி, 'பூவொடு நிலஞ்சுழித்து எழு மணியுந்தி' எனப்பட்டது. மகாப்பிரளயம்நீங்கின, பின்பு திருமாலின் சங்கற்பத்தினால் அவனது திருநாபியினின்று ஒரு தாமரை மலர் தோன்ற, அதனினின்று பல அண்டங்கள் வெளிப்பட்டன வென்பது, நூற்கொள்கை. உந்தி வலஞ்சுழிந்துள்ள தென்பதனை விளக்குதற்கு, அதன் உபமானத்தை, 'வலஞ்சுழித்தொழுகுநீர்க்கங்கையின்சுழி' என்றார். 'கங்கையின் சுழி' என்றது, கம்பீரத்தோடு மிக்க தூய்மையுடைமையையும் விளக்குதற்கு: சீவகசிந்தாமணியில் "அங்கைபோல் வயிறணிந்த வலஞ்சுழியமைகொப்பூழ், கங்கையின்சுழி யலைக்கும்" என்றவிடத்து ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'கங்கை குலந்தூய்மைக்குக் கூறினார்' என்றது, இங்கு உணரத்தக்கது. பொன்+சுழி= பொலஞ்சுழி; இப்புணர்ச்சி, "பொன்னென் கிளவி யீறுகெட முறையின், முன்னர்த்தோன்றும் லகார மகாரஞ், செய்யுண்மருங்கிற் றொடரியலான" என்ற தொல்காப்பிய விதியால் அமைந்தது; இனி, பொலம் என்று தனியாக ஒருசொற்கொள்ளுதல், பிற்காலத்தார் கொள்கை. அடைமொழியில்லாமல் 'பூ' என்று குறித்தால், அது, பூக்களுட்சிறந்த தாமரையையே குறிக்கும்; "பூவிற்குத் தாமரையே", "பூவெனப்படுவது பொறிவாழ்பூவே", "பூவினுக்கருங்கலம் பொங்கு தாமரை" என்பன காண்க. இங்கு, 'நிலம்' என்றது, பல உலகங்கள் கூடிய அண்டவுருண்டையை. இலஞ்சி - மகிழமரம்; "வகுளமே யிலஞ்சியென்ப மகிழாம்" என்பது நிகண்டு: இது - இங்கு, அதன் மலர்க்கு முதலாகு பெயர். உம் - இழிவு சிறப்பு. 'நேர்போலும்' என்பது - பிறகுறிப்புப்பற்றிய எதிர்மறையிலக்கணையாய், நேரன்றென்று பொருள்படும்; இனி, ஒலிவேறு

பாட்டால் எதிர்மறைப்பொருளுணர்த்தியதாகவும் கொள்ள இடமுண்டு. (இங்ஙனம் ஒலிவேறுபாட்டால் பொருள்வேறுபடுவதை வடநூலார் 'காகு' என்பர்.) (௪௫)

[திருமார்பின் சிறப்பு.]

௪௬. பொருவருமரகதப்பொலங்கொண்மால்வரை
வெருவுறவிரிந்துயர்விலங்கலாகத்தைப்
பிரிவறநோற்றனளென்னிற்பின்னையத்
திருவினிற்றிருவுளார்யாவர்தெய்வமே.

(இ - ள்.) தெய்வமே - குலதெய்வம் போன்றவளே! (இலக்குமி),—பொருவு அரு - ஒப்பில்லாத, பொலம் கொள் - அழகைக் கொண்ட, மால்-பெரிய, மரகதம்-மரகதரத்தினமயமான, வரை - மலை, வெருவுற - அஞ்சும்படி, விரிந்து உயர்-(அதனினும்)அகன்று வளர்ந்துள்ள, விலங்கல் ஆகத்தை - மலைபோன்ற [எதற்கும் சலியாத] இராமபிரானது திருமார்பை, பிரிவு அற - பிரிதலில்லாமல் (எப்பொழுதும் கூடிவாழும்படி), நோற்றனள் - தவஞ்செய்தாள், என்னின் - என்றால், பின்னை - பின்பு, அ திருவினில் - அந்த இலக்குமியினும், திரு உளார்-மேன்மையுடையவர், யாவர் - எவர் உளர்? [எவருமில்லை]; (எ-று.)

பொருவரு என்பதில், அருமை-இன்மை குறித்துநின்றது; "உறற்பால நீண்டாவிடுதலரிது" என்னுமிடத்துப் போல. மரகதம் - பச்சையிரத்தினம். வரை என்னுங் கணுவின் பெயர் அதனையுடைய மூங்கிற்குச் சினையாகு பெயரும், பின் அது விளையும் மலைக்குத் தானியாகுபெயருமாய் வந்ததனால், இருமடியாகுபெயர். விலங்கல் - இராமபிரானுக்கு உவமையாகு பெயர். திரு- எல்லாராலும் விரும்பப்படும் பேரழகுடையவளென இலக்குமிக்குக் காரணக் குறி. இங்ஙனம் பெருமையையுடைய அவ்விலக்குமியும் இத்திருமார்பின் சிறப்பு நோக்கி இதனைவிட்டுப் பிரியாதிருக்குமாறு பெருந்தவஞ்செய்தன ளென்றால், இத்திருமார்பிற்கு ஒத்ததும் மிக்கதும் இல்லையென்பது, தானே பெறப்படும். இச்செய்யுளில், இலக்குமியின் சிறப்பைக் கூறியதாகத் தோன் றினும், சந்தர்ப்பத்தை நோக்கித் திருமார்பின் சிறப்பையே கூறியதாகக் கருத்துக்கொள்க. 'நோற்றிலள்' என்ற பாடத்துக்கு - திருமால் திருமகளை விட்டுப் பிரிந்து இராமனாகத் திருவவதரித்ததும், அவ்விராமபிரானைத் திரு மகளின் அவதாரமான சீதை இப்பொழுது பிரிந்திருத்தலும் பற்றி அங்ஙனங் கூறியதென்க. (௪௬)

[திருக்கைகளின் சிறப்பு.]

௪௭. நீடுறுகிட்டிசைநின்றயானையின்
கோடுறுகரமெனச்சிறிதுகூறலாந்
தோடுறுமலரெனச்சுரும்புசுற்றுறுந்
தாடொடுதடக்கைவேறுவமைசாலுமே.

(இ - ள்.) தோடு உறு மலர் என - இதழ்கள் நெருங்கிய செந்தாமரை மலரென்று எண்ணி, சுரும்பு சுற்று அறு-வண்டுகள் சுழன்று மொய்த்தலை நீங்காத, தாள் தொடு தட கை - முழந்தாளை அளாவியுள்ள பெரிய (இராமபிரானது) திருக்கைகள்,—கீழ் திசை நின்ற யானையின் - கிழக்குத்திக்கில்நின்ற (ஐராவதமென்னும்) திக்கஜத்தினது, கோடு உறு - தந்தங்கள் பொருந்திய, நீடு உறு - நீண்டுள்ள, கரம் - துதிக்கையை ஒத்திருக்கும், என -என்று, சிறிது கூறலாம்- சற்றே (ஒருபடி உவமை) சொல்லலாம்; (என்றால்), வேறு உவமை சாலுமே - வேறே உபமானம் சொல்லத்தகுமோ? [தகாது என்றபடி]; (எ - று.)—ஈற்று ஏகாரம் - எதிர்மறை.

கீழ்+திசை=கீட்டிசை; இப்புணர்ச்சி "பதினோங்கெதா டெண்ணிரண்டாயத், தோன்றுடற் பின்னர்த் தகாரம்வரி னிரண்டுந் தொடர்பா, லான்றவைந்தாமுடலாம்" என்னும் வீரசோழிய விதியால் அமைந்தது; இனி, நிலைமொழியீற்று ழகரத்துக்கு ளகரம் போலியாய்ப் பின் இரண்டும் டகரமாத் திரிந்ததெனினும் அமையும்; மரூஉவுமாம். திசையானை - திக்கஜங்கள்; அவை- ஐராவதம், புண்டரீகம், வாமநம், குமுதம், அஞ்சநம், புஷ்பதந்தம், சார்வபௌமம், சுப்பிரதீகம் என்பன: இவற்றைக் கிழக்கு முதலாக முறையே கொள்க. கோடுறு - கரத்துக்கு இயற்கையடை. சுற்றறுத் தடக்கையென இயையும். வண்டு திருக்கைகளைத் தாமரைமலரென மயங்கியதாகக் கூறியதனால், மூன்றாமடி - மயக்கவணியாம்; இதனை வடநூலார் ப்ராந்திமதலங்காரமென்பர். தாள் - இங்கே முழந்தாள். சுற்றறு என்பதைத் தாளுக்கு அடையாக் கொள்ளுதலும் பொருந்தும். கைகள் செந்தாமரை மலர்போலச் சிவந்திருத்தலும், முழந்தாள்வரையில் நீண்டிருத்தலும், உத்தம புருஷலக்ஷணம். தாள்தொடுதடக்கை - ஆஜாநுபாஹு. தட-உரிச்சொல்; "தடவும் கயவும் நளியும் பெருமை" என்பது தொல்காப்பியம். (௪௭)

[திருக்கைந் நகங்களின் சிறப்பு.]

௪௮. பச்சிலைத்தாமரைபகல்கண்டாலெனக்
கைச்செறிமுகிழுகிர்கனகனென்பவன்
வச்சிரயாக்கைவகிர்ந்தவன்றொழி
னிச்சயமன்றெனினியைபீக்குமே.

(இ-ள்.) பசு இலை - பசுமையான இலைகளையுடைய, தாமரை - செந்தாமரையின், முகிழ் - அரும்பு, பகல் கண்டால் என - சூரியனைக் கண்டாற்போல [சூரியனொளியால் மலர்ந்த செந்தாமரை மலர்போல], (விளங்குகிற), கை - (இராமபிரானது) திருக்கைகளில், செறி - பொருந்திய, உகிர் - நகங்கள், —கனகன் என்பவன் வச்சிரம் யாக்கையை வகிர்ந்த வல் தொழில்-(இவ்விராமபிரான் நரசிங்காவதாரத்தில்) இரணியனென்னும் அசுரனுடைய வச்சிரம் போலுறுதியான உடம்பை இடந்த வலியசெய்கை, நிச்சயம் அன்று எனின்-

உண்மையோ அன்றோ என (எவராயினும் சந்தேகப்பட்டால், ஐயம் - (அவர்களுடைய) சந்தேகத்தை, நீக்கும் - நீங்கச்செய்யும்; (எ-று.)—வ - தேற்றம்.

இராமபிரானது திருக்கைந்நகங்கள் இரணியனதுமார்பை யிடந்தகாலத்து அவ்வசுரனது இரத்தத்தாற் சிவந்தனபோல எப்பொழுதும் சிவந்துள்ளன வென்பதாம். இராமபிரானும் திருமாலின் அவதார மாதலால், இங்ஙனங் கூறியது. பொன்னிறமுள்ளவனுதல்பற்றி வந்த இரணியனென்ற பெயர்க்குப் பரியாயமாக 'கனகன்' என்றார். (கனகம், இரணியம் - பொன்.) சூரியனைக் கண்டவுடன் மலர்தல், தாமரைக்கு இயல்பு வச்சிரம் - வஜ்ரம். இது வலிக்கு உவமையுமாம். யாக்கை - (தோல் எலும்பு முதலியவற்றால்) யாக்கப்படுவது என உடம்புக்குக் காரணக்குறி; யாத்தல் - கட்டுதல்.

கனகனென்பவனது வச்சிரயாக்கையை வகிர்ந்த கதை:—தனித்தனி தேவர் மனிதர் விலங்கு முதலிய பிராணிகளாலும் ஆயுதங்களாலும் பகலிலும் இரவிலும் பூமியிலும் வானத்திலும் வீட்டின் அகத்திலும் புறத்திலும் தனக்கு மாணமில்லாதபடி வரம்பெற்றவனும், இரணியாக்கனது உடன்பிறந்தவனுமான இரணியன் தேவர் முதலிய எல்லார்க்கும் கொடுமையியற்றித் தன்னையே கடவுளாக அனைவரும் வணங்கும்படி செய்து வருகையில், அவனது மகனான பிரகலாதாழ்வான் இளமை தொடங்கி மகாவிஷ்ணுபக்தனாய்த் தந்தையின் கட்டளைப்படி முதலில் அவன் பெயர்சொல்லிக் கல்விகற்காமல் நாராயண நாமம் சொல்லிவரவே, கடுங்கோபங்கொண்ட இரணியன் பிரகலாதனைத் தன் வழிப்படுத்துவதற்குப் பலவாறு முயன்றபின், அங்ஙனம் வழிப்படாத அவனைக் கொல்லுதற்கு என்ன உபாயஞ்செய்தும் அவன் பகவானருளால் இறந்திலனாக, ஒருநாள் சாயங்காலத்தில் தந்தை மைந்தனை நோக்கி 'நீ சொல்லும் நாராயணனென்பான் எங்கு உளன்? காட்டு' என்ன, அப்பிள்ளை "சாணினுமுளனோர் தன்மையணுவினைச் சதகூறிட்ட, கோணினுமுளன் மாமேருக்குன்றினுமுளன் இந்நின்ற, தூணினுமுளன் நீசொன்ன சொல்லினுமுளன்" என்று சொல்ல, உடனே இரணியன் 'இங்கு உளனோ?' என்று சொல்லி எதிரிலிருந்த தூணைப் புடைக்க, அதனினின்று திருமால் மனிதவுருவமும் சிங்கவடிவமுங் கலந்த நரசிங்கமூர்த்தியாய்த்தோன்றி இரணியனைப்பிடித்து வாயிற்படியில் தன்மடிமீது வைத்துக்கொண்டு தனது திருக்கைந்நகங்களால் அவன் மார்பைப் பிளந்து அழித்திட்டுப் பிரகலாதனுக்கு அருள்செய்தனன் என்பதாம். (௪௮)

[திருத்தோள்களின் சிறப்பு.]

௪௯. திரண்டில வொளியில திருவின் சேர்வில,
முரண்டரு மேருவின் முரிய முரிநாண்
புரண்டில புகழில பொருப் பென்றுன்றுபோன்
றிரண்டில புயங்களுக் குவம மேற்குமோ.

(இ - ள்.) (இராமபிரானது திருத்தோள்கள்போல, மலைகள்), திரண்டில - நன்கு திரண்டுள்ளனவில்லை; ஒளி இல - ஒளியையுடையனவில்லை;

திருவின் சேர்வு இல - ஜயலக்ஷ்மியின்சேர்க்கையை யுடையனவில்லை; முரண் தரு மேரு வில் முரிய மூரி நாண் புரண்டில - வலிமை பொருந்திய மகா மேருகிரியாகிய வில் [சிவதநுசு] ஒடியும்படி வலியநாணி புரளப்பெற்றன வில்லை; புகழ் இல - கீர்த்தியையுடையனவில்லை; ஒன்று போன்று இரண்டு இல - ஒன்றைப்போல இரண்டு இல்லை; (ஆதலால்), புயங்களுக்கு - அத் திருத்தோள்களுக்கு, பொருப்பு என்று உவமம்-மலைபோலு மென்று உவமை கூறுதல், எற்குமோ - பொருந்துமோ? (எ-று.)—பொருந்தா தென்பதாம்.

இச்செய்யுளில் உபமானமாகிய மலையினும் உபமேயமாகிய தோள்களுக் குச் சிறப்புக் கூறியிருப்பது, வேற்றுமையணி; வடநூலார் வ்யதிரேகாலங்கார மென்பர். மூரி - பழமையும், பெருமையுமாம். இராமபிரான் தனதுதோள்வலி யால் மிகச்சிறந்தசிவதநுசை முறித்தவாறுபோல மலைகளிலொன்றும் முறி யாமையாலும், இத்தோள்களுக்கு உவமையாகா தென்பது, கருத்து.

இராமபிரான் சிவதநுசை முறித்த கதை :—முன்னொருகாலத்தில் தெய் வத்தச்சனான விசுவகர்மனால் நிருமிக்கப்பட்ட மிகவலிய இரண்டுவிற்களில் ஒன்றை ஸ்ரீமகாவிஷ்ணுவும் மற்றொன்றைப் பரமசிவனும் எடுத்துக்கொண் டார்கள்: அவற்றில், சிவபிரானுடைய வில், மகாமேருகிரியின் அம்சமுடை யது; அதனைக்கொண்டு அப்பெருமான் திரிபுரசங்காரமும் தக்ஷயாகவி நாசமுஞ் செய்திட்டான்; பின்பு ஒரு சமயத்தில் அவ்விற்களில் எதுசிறந்த தென்று அறியவிரும்பிய தேவர்களின் வேண்டுகோளினால் ஹரிஹரர்கள் தம்மிற் போர்செய்கையில், சிவபிரான் எடுத்த வில் முறியவே, போர் நிறுத்தப் பட்டது: அவ்வில்லை அப்பெருமான் நிமிகுலத்துத்தேவராதனென்னும் மகா ராசனிடம் ஒப்பிக்க, அவ்வரசன் அதனை வெகுஜாக்கிரதையாகப் பாதுகாத்து வந்தான்; பின்பு அக்குலத்தில் தோன்றிய சனகனென்னும் அரசன் யாகசாலை யமைத்தற்காகப் பூமியை உழுதபொழுது அவ்வுழுபடைச்சாலில் தோன்றிய லக்ஷ்மியம்சமான பெண்ணை அவ்வரசன் தனதுமகளாகக் கொண்டு சீதை யென்று பெயரிட்டு வளர்த்து 'இச்சிவதநுசை யெடுத்து வளைத்து நாணேற் றினவனுக்கே இம்மகளைக் கொடுப்பேன்' என்று அதனைக் கந்யாசுல்கமாக நியமிக்க, பற்பலர் முயன்றும் முடியாதபின், திருமாலின் திருவவதாரமான இராமபிரான் அவ்வில்லை யெடுத்து வளைத்து நாணேற்றுகையில் அவ்வில் முறிந்தது என்பதாம். மலைகளெல்லாவற்றினுஞ் சிறந்த வில்வடிவங்கொண்ட மேருமலையையே இத்தோள்கள் முறித்தன வென்றால், சாதாரணமான மலையை இவற்றிற்கு உவமையாகக்கூறுதல் சிறிதும் தகாது என்றவாறு. ஒரு மலை மற்றொரு மலையை முறித்துவிழுத்தாது என்பது, தொனி. (சுக)

[திருக்கழுத்தின் சிறப்பு.]

**ருo.** கடற்படுபணிலமுங்கன்னிப்பூகமு
மிடற்றினுக்குவமையென்றுரைக்குமெல்லியோ
ருடற்படவொண்ணுமோவுரகப்பள்ளியா
னிடத்துறைசங்கமொன்றிருக்கவெங்களால்.

மொழியல் பாற்று - உவமையெடுத்துக்கூறுந் தரத்தது? (எ - று.)—ஏ - ஈற்றசை.

தாமரைமலர் இராமபிரானது திருவாய்க்குத் தன்னை உவமையாகச் சொல்ல நாணுகின்றது; இனி, பவழத்தை உவமையாகக்கூறலாமென்றால், அதுவும், குளிர்ந்த இன்சொற்களைச் சொல்லாமையோடு புன்சிரிப்பும் கொண்டிலது; ஆதலால், இவ்விருபொருளும் அப்பிரானது வாய்க்கு ஒரு சிறிதும் உவமையாகா வென்பதாம். உபமானமாகிய பவளத்தினும் உபமேயமாகிய திருவாய்க்கு மேன்மையைத்தெரிவித்தலால், பின்னிரண்டடி - வேற்றுமையணி; இது, வடமொழியில், வ்யதிரேகாலங்கார மெனப்படும். ஆம்பல், அகில் என்பன அவற்றின்குழம்பிற்கு ஆகுபெயர்; இவ்விரண்டும் பஞ்சவிரையினுட்பட்டவை யென அறிக; (மற்றவை - கோட்டம், துருக்கம், தகரம்.) அமலன் என்பதற்கு - இயல்பாகத் தன்னிடம் குற்றமில்லாதவனென்பது மாத்திரமேயன்றி, தனக்குச் சரீரமான சராசரங்களின் குற்றமும் சிறிதும் தன்னிடத்தில் தட்டாதவனென்றும் பொருள். 'நாரமுண்டு' என்பது - தாமரையின்செழிப்பு மிகுதிக்குக் காரணமான நீர்வளத்தின் இருப்பைக் கூறியபடி. நாரம் - கடவுளால் (முதலில்) படைக்கப்பட்டது என நீர்க்குக் காரணக்குறி; வடசொல்; (நரன் - திருமால்.) 'வெண்முறுவல்' 'என்றது, சிரிக்குங்காலத்துப் பற்களின் வெள்ளொளி சிறிது வெளித்தோன்றுதலால். நாணும் - (இழிந்த பொருளை உவமை கூறியதனால் வாய்) நாணங்கொள்ளும் எனினுமாம்.

இக்கவி-இப்படலத்தின் உகூ-ஆம கவிபோன்ற அறுசீராசிரிய விருத்தம்.

வேறு.

[பற்களின் சிறப்பு]

௫௩. முத்தங் கொல்லோ முழுநிலவின் முறியின் றிறனோ முறையமுதச், சொத்தின் றுள்ளி வெள்ளியினந் தொடுத்த கொல்லோ துறையறத்தின், வித்து முளைத்த வங்குரங்கொல் வேறே சிலகொன் மெய்ம்முகிழ்த்த. தொத்தின் றொகைகொல் யாதென்று பல்லுக் குவமை சொல்லுகேன்.

(இ - ள்.) பல்லுக்கு - (இராமபிரானது) திருப்பற்களுக்கு, உவமை - உபமானம்,—முத்தம் கொல் ஓ - முத்துக்களோ? முழு நிலவின் முறியின் திறனோ - பூர்ணசந்திரனது துண்டங்களின் வரிசையோ? வெள்ளி அமுதம் சொத்தின் துள்ளி இனம் முறை தொடுத்த கொல் ஓ - வெண்ணிறத்தையுடைய தேவாமிருதமாகிய பொருளினுடையதுளிகளின் கூட்டம் வரிசைப்படத்தொடுத்துவைத்தவையோ? துறை அறத்தின் வித்து முளைத்த அங்குரம் கொல் - பலவழிகளாலுஞ் செய்யப்படுகிற தருமத்தினது விதையினின்று தோன்றிய முளையோ? மெய் முகிழ்த்த தொத்தின் தொகை கொல் - சத்தியமாகிய மரத்தில் அரும்பின அரும்புகளின் தொகுதியோ? வேறே சில கொல் - மற்றுஞ்சிலவாகிய முல்லையரும்பு மயிலிறகினடி முதலியவைகளோ?

யாது என்று சொல்லுகேன் - எதுவென்று (உவமைப்பொருளை நிருணயித்துச்) சொல்லவல்லேன் (யான்)? (எ - று.)

இச்செய்யுளிற்கூறிய உவமைகள், வெண்ணிறம்பற்றியன. முக்தா - (சிப்பியினின்று) விடப்பட்டதென்று பொருள். நிலவு-சந்திரனுக்கு ஆகுபெயர். முறி - துண்டு. பூர்ணசந்திரன் பல்லுக்கு உவமையாக ஏலாமையால், அச்சந்திரனைக் கூறுக்கிய துண்டங்களோ வெனக் குறித்தார். இனி, நிலவின் முறியின் திறனோ என்பதற்கு - நிலவின் கொழுந்துகளின் வகைகளோ? என்றுமாம். சொத்து - ஸ்வம் என்ற வடசொல்லின் சிதைவு. துள்ளி - துளியென்பதன் விரித்தல். தருமத்தையும் சத்தியத்தையும் வெண்ணிறமுடையதாக் கூறுதல் கவிமரபாதலால், தருமத்தின் முளையையும், சத்தியமாகிய மரத்தின் அரும்பையும், வெண்ணிறமுடைய பற்களுக்கு உவமைகூறினார். தருமமும் சத்தியமும் மிகப்பெரியன வாதலால், அவை சிறியபற்களுக்கு உவமமாகாவென்று கொண்டு, முறையே அவற்றின் முளையையும் அரும்பையும் ஒப்புமையாகக் கற்பித்தனர்போலும். 'தொத்து' என்றதற்கு ஏற்ப, மெய் - மரமென்று கொள்ளப்பட்டது. 'கொல்' என்பதை முறையமுதச் சொத்தின் துள்ளிகொல், வெள்ளியினம்தொடுத்தகொல்என்று தனித்தனி கூட்டி யுரைப்பினுமாம். அறம் - (செய்யவேண்டியவை இவையென நூல்களால்) வரையறுக்கப்பட்டது எனத் தருமத்திற்குக் காரணக்குறி. வித்து - செயப்படுபொருள் விகுதி புணர்ந்துகெட்ட பெயர்; வித்துதல் - விதைத்தல். தொத்து என்னும் பூங்கொத்தின் பெயர், இலக்கணையால், அரும்பை யுணர்த்திற்று. ஆங்காங்குவரும் பிராசமென்னுஞ் சொல்லணி உற்றுநோக்கத்தக்கது.

இதுமுதல் ஏழு கவிகள் - பெரும்பாலும் மூன்றாஞ்சீரும் ஆறாஞ்சீரும் காய்ச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (௫௩)

[திருமூக்கின் சிறப்பு.]

௫௪. எள்ளாநிலத்திந்திரநீலத்தெழுந்தகொழுந்துமரகதத்தின்
விள்ளாமுழுமாநிழற்பிழம்பும்வேண்டவேண்டுமேனியதோ
தள்ளாவோதிகோபத்தைக்கவ்வவந்துசார்ந்ததுவுங்
கொள்ளாவள்ளறிருமூக்கிற்குவமைபின்னுங்குணிப்பாமோ.

(இ - ள்.) (இராமபிரானது திருமூக்கு),—எள்ளா நிலத்து இந்திரநீலத்து எழுந்த கொழுந்தும் - இகழப்படாத நல்லநிலத்தில் தோன்றிய இந்திரநீலரத்தினத்தினின்று உண்டான ஒளிக்கொழுந்தும், மரகதத்தின் விள்ளா முழு மா நிழல் பிழம்பும் - மரகதரத்தினத்தினது நீங்காத திரண்ட ஒளியின் திரட்சியும், வேண்ட - (தாம் உவமையாகத் தன்னை) விரும்ப, வேண்டும் - (தான் அவற்றை உவமையாகக்கொள்ள) விரும்புகிற, மேனியதோ - தன்மையை யுடையதோ? [அன்று என்றபடி]; கோபத்தை - இந்திரகோபத்தை, தள்ளா - விடாமல், கவ்வ - பிடித்தற்கு, வந்து சார்ந்தது - அருகில்வந்து சேர்ந்ததாகிய,

சில உறுப்புக்களை அறுத்திட்ட ராமலக்ஷ்மணர்மீது கறுக்கொண்டு சென்று கரன்காலில் விழுந்து புலம்பி முறையிட, அவன், மிகப்பெரிய சேனையோடும், அறுபதுலக்ஷம்படைவீரரோடும், சேனைத்தலைவர் பதினால்வரோடும், தூஷணன் திரிசிரா என்னும் முக்கியசேனாதிபதிகளோடும் புறப்பட்டுச் செருக்கி விரைந்து வந்து போர்தொடங்குகையில், இராமன், பர்ணசாலையினின்று போர்க்கோலங்கொண்டு வெளிப்பட்ட லக்ஷ்மணனை விலக்கிச் சீதைக்குக்காவலாக வைத்துவிட்டு, தான் தனியே எதிர்த்துச்சென்று பெரும்போர்செய்து பலரையும்அழித்து முடிவிற் கரனையுந் துணித்துவெற்றி கொண்டனனென்க.

சுரம் - ஜ்வரம்; வெப்பமுடையதெனக் காட்டைக் குறிக்கும். கவந்தம் - கபந்தம்; தொழிலுடன்கூடிய தலையற்றஉடல். "ஆனையாயிரந் தேர்பதினாயிரமடர்பரியொருகோடி, சேனைகாவலராயிரம்பேர் படிற் செழுங்கவந்த மொன்றாடும்," "அநேகமாயிரம்பேர்படக் கவந்தமொன்றாடும்," "பேரொத்த வாயிரம் பேர் மடிந்தாற் பிறக்குங் கவந்தம், நேரொத்த வாடும்" என்றபடி சேனையில் மிகப்பெரியதொகை இறந்தபொழுது கவந்தம் எழுந்துகூத்தாடு மென்றல், மரபு. படை - இங்கே, தொகுதிக்கு இலக்கணை. இராமனது சிலை, கோதண்ட மெனப்படும். வானவர் - வானத்திலுள்ளவர்: தேவர். முனிவர் - மௌநசீலர்; சம்சாரபாசபந்தத்தை முனிந்து [வெறுத்து] விட்டவரெனக் காரணங் கூறலாகாது; வடமொழியாதலின். அறன் - மகரனகரப்போலி. இனிக் கட்டு அழிந்தது - தெளிவுபற்றி எதிர்காலம் இறந்தகாலமாக் கூறிய கால வழுவமைதி. ச்ருதி என்னும் வடசொல்லுக்கு - குருசிஷ்ய கிரமத்திற் காண பரம்பரையாகவருவது என்பது பொருள்; இதனால், இது, எழுதாக்கிளவி யெனவும் ஒருபெயர்பெறும். ஈரிரண்டு - பண்புத்தொகை. ஈரிரண்டு சுருதி - இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பன; இனி, தைத்திரியம், பௌடியம், தலவகாரம், யசுர், சாமம் என்பனவுமாம். கோடி—கொள் - பகுதி. (ருரு).

[திருநெற்றியின் சிறப்பு.]

ருசு. வருநாட்டோன்றுந்தனிமறுவும்வளர்வுந்தேய்வும்வாளரவ
மொருநாட்கவ்வுமுறுகோளும்பிறப்பும்பிறப்புமொழிவுற்று
லிருநாற்பகலினிலங்குமதியலங்கலிருளினெழினிழற்கீழ்ப்
பெருநாணிற்பினவனெற்றிப்பெற்றித்தாகப்பெறுமன்றே.

(இ - ள்.) இரு நால் பகலின் - அஷ்டமியென்னும் எட்டாந்திதியில், இலங்கு - விளங்குகிற, மதி - அர்த்தசந்திரன்,—வரு நாள் தோன்றும் தனி மறுவும் - தான் உதயமாம்போதே உடன் தெரிகிறதொரு களங்கமும், வளர்வும் - (சிலகாலத்தில்) வளர்தலும், தேய்வும் - (சிலகாலத்திற்) குறைதலும், வாள் அரவம் ஒரு நாள் கவ்வும் உறுகோளும் - வாள்போலக்கொடிய பாம்பினாற் சிலகாலத்திற் பற்றப்படுகிற துன்பமும், இறப்பும் - அஸ்தமநமும், பிறப்பும் - உதயமும், ஒழிவுஉற்றால் - நீங்கப்பெற்று,—அலங்கல் இருளின் - அசைகின்ற இருட்டின் எழில் நிழல்கீழ் - அழகிய நிழலில், பெரு நாள் - மிகப்பலகாலம்,

எப்பொழுதும்], நிற்பின் - நின்றால்,—அவன் நெற்றி பெற்றித்து ஆக பெறும்- அவ்விராமபிரானது திருநெற்றியின் தன்மையை யுடையதாகப் பெறும்; (எ - று.)—மன், ஓ - ஈற்றசை.

அஷ்டமீசந்திரன்ஒன்று இயல்பாகக் களங்கம் நீங்கி வளர்வுதேய்வுகளில்லாமல் சிலகாலத்துஉண்டாகுங் கிரகணமு மின்றி உதயாஸ்தமநமுமில்லாததாய் என்றும் ஒருபடியாய் இருளின்கீழ் நிலையாக நிற்குமானால், அந்தப் பாதிச்சந்திரன் இராமபிரானது திருநெற்றிக்கு உவமையாம்; அப்படிப்பட்டதொன்று உலகத்தில் இல்லாமையாலே, தனக்குத்தானே உவமையாவதன்றி அப்பிரானது நெற்றிக்கு உவமைப்பொருளில்லை யென்பதாம். இங்கு உபமேயமாகிய முகத்திற்கு உபமானமாகிய பிறைச்சந்திரனினும் மேன்மைகூறியது, வேற்றுமையணி. 'வருநாள் தோன்றுந் தனிமறு' என்றது, அக்களங்கம் எப்பொழுதும் சந்திரனைவிட்டுநீங்காமல் உடனிருக்குந்தன்மையை உணர்த்துதற்கு, சந்திரனைப் பாம்பு பிடிப்பது, கிரகண மெனப்படும். கிரகணகாலங்களிற் சூரியனைமறைக்கின்ற சந்திரனது சாயையையும், சந்திரனை மறைக்கின்ற பூமியின்சாயையையும் இராகுகேதுக்களென்னும் கரும்பாம்பு செம்பாம்புகளாகக் கூறும் புராணவழக்குப்பற்றி, இங்ஙனம் கூறியது. பூர்ண சந்திரனுக்கு உள்ள வாளரவுகவ்வுதலைக் குறைச்சந்திரன்மேலேற்றிக் கூறியது, ஒருவகை உபசாரவழக்கு. இராமபிரானது கருநிறமுள்ள திருக்குழற்கற்றையின்கீழ் விளங்குந் திருநெற்றிக்கு, எந்நாளும் இருளின்கீழ்ப் பொருந்தும் மதியையே உவமைகூறலா மென்க. பகலிலும் இருத்தலால், குறைமதி, என்றும் இருளின்கீழ் நில்லாததாகும். அசைகின்ற திருக்குழலுக்கு, அலங்கலிருள் உவமம். வாள் - வாள மென்னும் வடமொழியின் சிதைவு. இருநாற்பகல் - பண்புத்தொகை. நிழற்கீழ், கீழ் - ஏழனுருபு.

சந்திரனை அரவுகவ்வுதலைப்பற்றிய கதை:—துருவாசமுனி சாபத்தாற் கடலிற் புக்கொளித்த தேவலோகத்துச்செல்வங்களை மீண்டும் பெறும்பொருட்டுத் திருமாலின்கட்டளையால் தேவர்கள் அசுரர்களைத் துணைக்கொண்டு பாற்கடலைக் கடைகையில் உண்டான அமிருதத்தை அத்திருமால் தான் எடுத்து மிக அழகிய மோகினியென்னும் பெண்வடிவத்தால் அசுரர்களை மயக்கித் தேவர்கட்குப் பங்கிட்டுக் கொடுத்தருள்கையில், இராகுவென்னும் அசுரன் தான் இருத்தற்குஉரிய அசுரர்கூட்டத்தை விட்டு அமரர்கூட்டத்தினிடையிலே புக்குக் கையேற்று அமிருதத்தை வாங்கியுண்ண, அதனைச் சூரிய சந்திரர் குறிப்பித்த மாத்திரத்தில் எம்பெருமான் அவனை அகப்பையாலடித்துத் தலைவேறு உடல்வேறாக்க, அமிருதமுண்டதனால் உயிர்நீங்காத அந்தத் தலையும் உடம்பும் விஷ்ணுவின் அநுக்கிரகத்தால் ராகுகேதுக்களென இரண்டு கிரகங்களாகிச் சூரியன்முதலிய எழு கிரகங்களோடுஞ் சேர்ந்து, தம்மேற் கோள்சொன்ன சூரியசந்திரர்க்குப் பகையாய்ச் சிற்சில காலத்தில் அவர்களைப் பிடித்துக்கொள்கின்றன வென்பது.　　(ருசு)

[திருக்குழலின் சிறப்பு.]

௫௭. நீண்டுகுழன் றுநெய்த்திருண்டுநெறிந்துசெறிந்துநெடுநீலம்
பூண்டுபுரிந்துசரிந்துகடைசுருண்டுபுகையுநறும்பூவும்
வேண்டுமல்லவெனத்தெய்வவெறியேகமழுநறுங்குஞ்சி
யீண்டுசடையாயினதென்றான்மழையென்றுரைத்தலிழிபன்றோ.

(இ - ள்.) நீண்டு - நீட்சியுடையதாய், குழன்று - திரண்டு, நெய்த்து - வழுவழுப்புப்பொருந்தி, இருண்டு - கறுத்து, நெறிந்து - ஒழுங்குபட்டு, செறிந்து - அடர்ந்து, நெடுநீலம் பூண்டு - மிக்ககருநிறத்தை இயற்கைக்குணமாக்கொண்டு, புரிந்து - முறுக்குப்பட்டு, சரிந்து - (பின்னே) தாழ்ந்து, கடை சுருண்டு - நுனி சுருளப்பெற்று, புகையும் நறும் பூவும் வேண்டும் அல்ல என - (அகில் முதலியவற்றின் வாசனைப்) புகையும் நல்லமணமுடையபூக்களும் வேண்டுவனவல்ல வென்னும்படி, தெய்வம் வெறியே கமழும் - தெய்வத்தன்மையையுடைய இயற்கைமணமே வீசுகிற, நறுங் குஞ்சி - (இராமபிரானது) நல்ல திருக்குழல், ஈண்டு சடை ஆயினது - இப்பொழுது திரண்டசடையாய்விட்டது, என்றால் -, மழை என்று உரைத்தல் - மேகம் (அதற்கு உவமை) என்று சொல்லுதல், இழிபு அன்றோ - தாழ்வன்றோ? [தாழ்வேயாம் என்றபடி]; (எ - று.)

'ஈண்டு' என்றது, வனவாசஞ்செய்யும் இப்பொழுது என்றவாறு. இங்குக்கூறிய இப்பொழுது சடையாயுள்ள இராமபிரானது திருக்குழலினது தன்மைகள் மேகத்திற்குச் சிறிதுமில்லையாதலால், அம்மேகம் உவமையாகாது என்பதாம். நெய்த்து - எண்ணெய் தடவப்பெற்று என்றுங் கொள்ளலாம். உத்தமசாதியரான ஆடவர்மகளிரது தலைமயிர்கள் இயற்கைமணமுடையனவாமென்பது, நூற்றுணிபு. திருக்குழலின் இயற்கைமணம், இதற்குமேல் வாசனையூட்டமுடியாதவாறு பூ புகை முதலியவற்றினும் மிக்குள்ளதென்பது, மூன்றாமடியின் கருத்து. குஞ்சி - ஆண்மயிர்: பங்கி, குடுமி, சிகை என்பனவும் இவ்வாறே. (அளகம், ஓதி, கூந்தல், ஐம்பால், கோதை என்பன - பெண்மயிரின் பெயராம்.) சடை - ஜடா என்னும் வடசொல் திரிபு. "நெய்த்துக் கருகி நெறித்துவிடும் பூமாலை, வைத்துக் கடைகுழன்று வார்ந்தொழுகி - மொய்த்தளிகள், சூழ்ந்து வடிவம்பலம்பித் துஞ்சுடைத்தா யூட்டுபுகை, வாழ்ந்து தகரங் கமழுமால்" என்ற இரத்தினச்சுருக்கச்செய்யுள் இங்குக் கருதத்தக்கது. (௫௭)

[நடையின் சிறப்பு)

௫௮. புல்லலேற்றதிருமகளும்பூவும்பொருந்தப்புவியேழு
மெல்லையேற்றநெடுஞ்செல்வமெதிர்ந்தஞான்றுமஃதின்றி
யல்லலேற்றகானகத்துமழியாநடையையிழிவான
மல்லலேற்றினுளதென்றான்மத்தயானைவருந்தாதோ.

(இ - ள்) புல்லல் ஏற்ற - (தன்னிடம் வந்து) சேர்தலை விரும்பிய, திருமகளும் - இலக்குமியும், பூவும் - பூமிதேவியும், பொருந்த - வந்து (தன்னி

டத்திற்) பொருந்தும்படி,புவி ஏழும் எல்லை ஏற்ற நெடுஞ்செல்வம் - ஏழுதீவுக ளையும் தனக்கு எல்லையாகக்கொண்ட பெரியசெல்வத்தை, எதிர்ந்த ஞான்றும் - (தசரதசக்கரவர்த்தி கொடுக்கத் தான்பெற) இணங்கிய பொழுதும், அஃது இன்றி - அச்செல்வம் கிடைத்தல் இல்லையாய், அல்லல் ஏற்ற கானகத்தும் - துன்பத்தைத்தருவதான காட்டில் வந்தபொழுதும், அழியா - தன் தன்மைமாறாத, நடையை - (இராமபிரானது) நடையை,— இழிவு ஆன-இழிந்ததாகிய, மல்லல் ஏற்றின் - வலிமையயுடைய காளையினிடத்து, உளது - உள்ளது, என்றால் - என்றுசொன்னால், மத்தம் யானை - மதம்பிடித்த யானை, வருந்தாதோ - வருத்தமடையாதோ? (எ - று.)

இன்பம்நேர்ந்தகாலத்தும் துன்பம்நேர்ந்தகாலத்தும் என்றும் ஒருபடியா யுள்ள இராமபிரானது கம்பீரமான பெருமிதநடைக்கு, இன்பதுன்பங்களில் ஒருபடியாயிராத எருதினது நடையை உவமைகூறினால், அப்படிப்பட்ட நடையையுடைய களிற்றியானை தன்னை உவமைகூறவில்லையேயென்று வருந்துமாதலால், இவ்விரண்டையும் உவமைகூறுதல் பொருந்தா தென்பதாம் இராமபிரான் நாடுதுறந்து காட்டிற்குச்செல்வதைப்பற்றிச் சிறிதும் வேறுபாடுறாதிருந்தன னென்பதை, "இப்பொழு தெம்மனோரா லியம்புதற் கெளிதே யாருஞ், செப்பருங் குணத்திராமன் றிருமுகச் செவ்வி நோக்கி, னொப்பதே முன்பு பின்பவ் வாசக முணரக்கேட்ட, வப்பொழு தலர்ந்த செந்தாமரையினை வென்ற தம்மா" என்ற அயோத்தியாகாண்டச்செய்யுள்கொண்டு அறியலாம். இங்ஙனம் இன்பதுன்பங்களை ஒருநிகராகநினைப்பது, பெரியோரியல்பு; "வாட்டிறன்மன்னவன் கமலவாண்முக, மீட்டறுமரசியலிழந்தபோதினும், பாட்டளிக்கூந்தல் வேந்தவையிற் பைந்தொடை, சூட்டியஞான்றினுந் துலங்குகின்றதே" என்றார் நைடதநூலாரும்.

பு - வடசொல். 'நெடுஞ்செல்வம்' என்றது, உலகமுழுதாளும் சக்கரவர்த்திபதவியை. கானகத்து அல்லலேற்றஞான்று என்றும் கூட்டலாம். மல்லல் . உரிச்சொல்; "மல்லல் வளனே" என்பது, தொல்காப்பியம். ஏறு - ஆண்பாற்பெயர்; "எருமையும் மரையும் பெற்றமு மன்ன" என்றதனால், 'ஏறு' என்றார். புவி என்னும் வடமொழி - அம்மொழியில் ஏழாம்வேற்றுமைவிரி. ஏறு - ஆண்சிங்கமுமாம். 'இழிவான' என்பதற்கு - (நடைச்சிறப்பில் யானையினும்) இழிந்ததான என்றும் பொருள்கொள்ளலாம். (ருஅ)

[இராமபிரான் கூறிய அடையாளமொழிகளை அநுமான் சீதைக்கு
[எடுத்துக்கூறத்தொடங்குதல்.]

ருகூ. இன்ன மொழிய வம்மொழிகேட் டரியி னிட்ட மெழு
கென்னத்,தன்னை யறியா தயர்வாளைத் தரையின் வணங்கி நாயகனார்,
சொன்ன குறியுண் டடையாளச் சொல்லு முளவா லவைதோகை,
யன்ன நடையாய் கேட்டென்ன வறிய வறைவா னயினான்.

(இ - ள்.) இன்ன மொழிய - இவ்வார்த்தைகளை (அநுமான்) சொல்ல, அ மொழி கேட்டு - அச்சொற்களைச் செவியேற்று, எரியின் இட்ட மெழுகு என்ன - நெருப்பிலே போகட்ட மெழுகு போல, தன்னை அறியாது அயர்வாளை - தன்னைத்தான் அறியாமல் [தன்வசந்தப்பிப் பரவசமாய்த்] தளர்கிற பிராட்டியை, (அநுமான்), தரையின் வணங்கி - பூமியிலே விழுந்து [சாஷ்டாங்கமாகத்] தண்டனிட்டு, 'நாயகனார் சொன்ன குறி உண்டு-(உனதுகணவனாகிய) இராமபிரான் (என்னிடம்) சொல்லியனுப்பிய குறிப்புக்களும் உண்டு: அடையாளம் சொல்லும் உள - அடையாளமான வார்த்தைகளும் உள்ளன: அவை - அவற்றை, தோகை - மயில்போலுஞ் சாயலையுடையவளே! அன்னம் நடையாய் - அன்னம்போன்ற நடையையுடையவளே! கேட்க - (நீ) கேட்பாயாக,' என்ன - என்றுசொல்லி, அறிய - தெரியும்படி, அறைவான் ஆயினன் - (அவற்றைச்) சொல்பவனாயினான்; (எ - று.)—அவற்றை, மேற் கூறுகின்றார். ஆல் - அசை.

'சொன்ன குறி' என்றது, சீதையின் திருமேனியடையாளங்களைக் கூறியதை. 'சொன்னகுறிஉண்டு' என்பதற்கு - ஸ்வர்ணமயமான அடையாளமாயுள்ள மோதிர முண்டென்றும் பொருள் கொள்ளலாம்; [சொன்னம் = ஸ்வர்ணம்.] தோகையென்னும் மயிலிறகின்பெயர் - அதனையுடைய மயிலுக்குச் சினையாகுபெயராய், அதுபோன்றவளுக்கு உவமையாகுபெய ராதலால், இருமடியாகுபெயர். இனி, "மயில்கண்டன்ன மடநடைமகளிர்," "மயிலெனப் போந்து," "மணிமயிற்றொழில்," "நடைமயிலே" என முன்னோர் மயிலை நடைக்கு உவமையாக்கூறியிருத்தலால், தோகை அன்னம் நடையாய் - மயிலையும் அன்னத்தையும் போன்ற நடையையுடையவளே! என்றும் பொருள் கொள்ளலாம். (௬௯)

வேறு

[இதுமுதல் மூன்று கவிகள் - அவ்வடையாளச்சொற்கள் இன்னவென அநுமான் சீதையினிடம் விண்ணப்பித்தல்.]

௭௦. நடத்தலரி தாகுநெறி நாள்கள்சில தாயர்க்
கடுத்தபணி செய்திவணி ருத்தியென வச்சொற்
குடுத்ததுகி லோடுமுயி ருக்கவுட லோடு
மெடுத்தமுனி வோடுமய னின்றதும் ஷைப்பாய்.

(இ - ள்.) 'நெறி - காட்டுவழி, நடத்தல் அரிது ஆகும் - (நீ) நடந்துசெல்லுதற்கு அரியதாகும்: நாள்கள் சில - (நான் வனத்துக்குப்போய் வரும்)நாள்களோ சிலவாம்: (அதுவரையில்), தாயர்க்கு அடுத்த பணி செய்து இவண் இருத்தி - (என்) தாய்மார்க்குத் தக்க பணிவிடைகளைச் செய்துகொண்டு இங்கேயே [அயோத்தியிலேயே] இருப்பாய்', என - என்று(நான்)சொல்ல, அ சொற்கு - அந்தச்சொல்லைக் கேட்டும், உடுத்த துகிலோடும் - உடுத்த வஸ்திரத்துடனேயும், உயிர் உக்க உடலோடும்-உயிர்நீங்கினதுபோன்ற உடம்

புடனேயும், எடுத்த முனிவோடும்-(என்னிடத்திற்) கொண்டகோபத்துடனே யும், அயல் நின்றதும்-(என்) அருகில் (அச்சீதை) நின்றதையும், இசைப்பாய் - (நீ அவட்கு அடையாளமாகச்) சொல்வாய்; (எ-று.)—இங்ஙனம் இராமபிரான் தன்னிடத்துக் கூறியதை அநுமான் சீதையினிடத்து விண்ணப்பிக்கின்றனன்.

"முன்புநானறிகிலா முனிவெநடுங்கானிலே, யென்பினே போதுவான் நினைதியோ வேழைநீ, யின்பமா யாருயிர்க்கினியை யாயினை யினித், துன்பமாய் முடிதியோ வென்றதுஞ் சொல்லுவாய்", "ஆனபோரரசிழந் தடவிசேர்வா யுனக், கியானலாதனவெலா மினியவோ வினியெனு, மீனுலாநெடுமலர்க் கண்கணீர்விழ விழுந், தானிலாவுயிரின் வெந்துயர்வதும் முறைசெய்வாய்" என்ற நாடவிட்டபடலச்செய்யுள்களின் பொருளநுவாதம் இது. பதினன்குவருஷ மாயிருக்கவும் 'நாள்கள்சில' என்று இராமன் கூறினது, 'அக்காலவெல்லை யை மிகஎளிதிற்கழித்து வெகுவிரைவில் மீண்டுவருவேன்' என்று அப்பிராட் டிக்குத் தேறுதல்கூறியவாறும். இராமபிரான் கௌசல்யையைநோக்கி "எத் தனைக்குள வாண்டுக ளீண்டவை, பத்துநாலும் பகலலவோ வென்றான்" என் றதுங் காண்க. மனிதர்க்கு ஒருவருஷம் தேவர்க்கு ஒருநாளாதலும் கருதற்பா லது. தாயர் - கௌசல்யை முதலியோர். 'உடுத்ததுகிலோடும் அயல்நின்றது' என்றது, அப்பிரானுக்குமுன்னே தான் காட்டுக்குப்புறப்படச் சித்தமாய் நின்றது என்றபடி; உடுத்ததுகிலோடும் என்றது - உலகவழக்கு. "அனைய வேலை யகன்மனை யெய்தினள், புனையுஞ் சீரந் துணிந்து புனைந்தனள், நினை வில் வள்ளல்பின் வந்தயல் நின்றனள், பனையி னீள்கரம் பற்றிய கையினாள்" என்றார் அயோத்தியாகாண்டத்தில். இராமபிரான்சொன்ன வார்த்தையைக் கேட்டுப் பொறாது தோன்றின வருத்தத்தின் மிகுதியையும், அச்சத்தின் மிகுதியையும் விளக்க, 'உயிருக்கவுடல்' என்றது.

இதுமுதற் பதினொரு கவிகள் - பெரும்பாலும் ஈற்றுச்சீரொன்று மாச் சீரும், மற்றைமூன்றும் விளங்காய்ச்சீர்களுமாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (௬௦)

௬௧. நீண்டமுடிவேந்தனருளேந்திநிறைசெல்வம்
பூண்டதனைநீங்கிநெறிபோதலுறுநாளி
னாண்டநகராரையொடுவாயில்கலாமுன்
யாண்டையதுகானெனவிசைத்ததுமிசைப்பாய்.

(இ - ள்.) நீண்ட முடி வேந்தன் அருள் ஏந்தி - நீட்சியான கிரீடத்தை யுடைய தசரதசக்கரவர்த்தியின் ஆஜ்ஞையைத் தலைமேற்கொண்டு, நிறை செல்வம்பூண்டு - நிரம்பிய (உலகமுழுதாளுஞ்) சிறப்பை (முதலில்) ஏற்றுக் கொண்டு, (பின்பு), அதனை நீங்கி - அச்செல்வத்தைக் (கைகேயிகட்டளையாற்) கைவிட்டு, நெறி போதல் உறு நாளின் - (காட்டுக்குச்செல்லப்) பிரயாணம் புறப்பட்டபொழுது, ஆண்ட நகர் ஆரையொடு வாயில் அகலாமுன் - (நான்) ஆளுதற்குஉரிய அவ்வயோத்தியாபுரியின் மதிலோடுகூடிய கோட்டைவாயி

லைக் கடந்துவருவதற்கு முன்னமே, கான் யாண்டையது என இசைத்ததும் - (என்னைநோக்கிச் சீதை) 'காடு எவ்விடத்தி லுள்ளது?' என வினவியதையும், இசைப்பாய் - (நீ அவட்கு அடையாளமாகச்) சொல்வாய்; (எ - று.)

''மல்லன்மாநகர்துறந் தேகுநாண் மதிதொடுங், கல்லின்மாமதின்மணிக் கடைகடந்திடுதன்முன், னெல்லைதீர்வரிய வெங்கானம் யாதோ வெனுச், சொல்லினு ளஃதெலா முணரநீ சொல்லுவாய்'' என்ற செய்யுளின் அநுவாதம் இது. இதனால், பிராட்டியினது கணவன் திருமனையையேயன்றி வெறொன் றையும் அறியாத தன்மையும், சௌகுமார்யமும், பேதைமையும் வெளியாம். இராச்சியத்தையாள்வதில் விருப்பாவது வெறுப்பாவது தனக்கு இல்லைபாயி னும் பித்ருவாக்யபரிபாலனஞ் செய்வதே தனக்கு மேலானதரும மெனக் கருதித் தான் முன்பு அதற்கு உடன்பட்டன னென்பான் 'வேந்தனருளேந்தி நிறைசெல்வம் பூண்டு' என்றான்; ''தாதை யப்பரிசுரைசெயத் தாமரைக்கண் ணன், காதலுற்றில னிகழ்ந்திலன் கடனிதென் றுணர்ந்து, யாது கொற்றவ னேவிய ததுசெய லன்றோ, நீதி யெற்கென நினைந்து தன்பணி தலைநின்றான்'', ''தெருளுடை மனத்து மன்ன னேவலிற் றிறம்ப வஞ்சி, யிருளுடையுலகந் தாங்குமின்னலுக் கியைந்துநின்று, னுருளுடைச் சகடம்பூண்ட வுடையவ னுய்த்த காரே, றருளுடை யொருவனீக்க வப்பிணியவிழ்ந்த தொத்தான்'' என்ற அயோத்தியாகாண்டச் செய்யுள்களையுங் காண்க. நீண்டமுடி - வம்ச பரம்பரையாகவந்த கிரீடமுமாம். நெறிபோதல் - பிரயாணப்படுதல். ஆரை - மதில். (௬௧)

௬௨. எள்ளரியதேர்தருசுமந்திரனிசைப்பாய்
வள்ளன்மொழிவாசகமனத்துயர்மறந்தாள்
கிள்ளையொடுபூவைகள்கிளர்த்தல்கிளவென்னும்
பிள்ளையொடுதன்றிறமுணர்த்துதிபெயர்த்தும்.

(இ - ள்.) 'எள் அரிய தேர் தரு சுமந்திரன் - இகழ்வதற்கு அருமையான [ஒருகுற்றமுமில்லாத] இரதத்தை ஓட்டுகிற சுமந்திரனே! வள்ளல் மொழி வாசகம் - இராமபிரான் தேறுதல்கூறிய வார்த்தைகளால், மனம் துயர் மறந் தாள் - (சீதை) மனத்திலுள்ள துன்பத்தை நீங்கினவளாக, இசைப்பாய் - நீ சொல்வாய்: கிள்ளையொடு பூவைகள் - (நான்வளர்த்த)கிளிகளையும்,நாகணவாய்ப் பறவைகளையும், கிளர்த்தல்-வளர்க்கவேண்டியவகையையும், கிள - சொல்வாய்', என்னும் - என்று (அயோத்தியிலுள்ள ஊர்மிளைமுதலியோர்க்கு வனத்திலி ருந்து சுமந்திரனிடம் செய்தி) சொல்லியனுப்பின, பிள்ளையொடு - இளமைக் குணமுடைய அச்சீதையோடு, தன் திறம் - அவள் இவ்வாறுசொன்ன செய் தியை, பெயர்த்தும் - மீண்டும், உணர்த்துதி - (அவளுக்கு அடையாளமாகச்) சொல்வாய்; (எ - று.)

ஸுமந்த்ரன் என்னும் வடசொல்லுக்கு-நல்ல ஆலோசனையுடையவனென் றுபொருள்; இவன், தசரதனுக்கு வம்சபரம்பரையாய் வந்த மந்திரியும் சாரதி

யுமா யுள்ளவன்; ('இராசாங்கத்துப்பொருள் வரவுசெலவுகளைக் கவனிக்கும் பிரதான உத்தியோகஸ்தனுக்கு 'சுமந்திரன் என்று பெயர்' என வடமொழிநீதி நூல்கள்கூறும்; இவன், மந்திரிக்குச்சிறிதுதாழ்ந்தவன்.) இச்சொல், அண்மை விளியாதலின், இயல்பாய்நின்றது. மனத்துயர், நாட்டைவிட்டுக் காட்டுக்குச் சென்றதனா லாகியது. இனி, இரண்டாமடிக்கு - தசரதசக்கரவர்த்தி வனத் திற்குப் போம்படி சொன்ன வார்த்தையா லாகிய மனத்துன்பத்தை நீங்கினா னென்றும் பொருள்கூறலாம். பிள்ளை - ஆண் பெண் என்ற இருபாற்கும் பொதுவாகவரும் இளமைப்பெயர்; "தவழ்பவைதாமு மவற்றோரன்ன" என்னுந் தொல்காப்பியச்சூத்திரத்து 'தாமும்' என்றதனால், இது சிறுபான்மை உயர்திணைக்கும் உரியதாய்வரு மென்க. 'கிளத்தல்' என்ற பாடத்துக்கு - பேச்சுச்சொல்லிக்கொடுத்த லென்று பொருள். கிளிகளையும் நாகணவாய்ப் பறவைகளையும் இன்னுணவூட்டி வளர்த்து அவற்றிற்குப் பேச்சுப்பயிற்றுவித் தல், தலைவியரின் தன்மை. சீதை இவ்வாறுசொன்னது, நாட்டைவிட்டுச் சிறிதுதூரம்சென்றதும் சுமந்திரனை அனுப்பிவிட்டபொழுது; "அன்னவள் கூறுவா ளரசர்க் கத்தையர்க், கென்னுடைவணக்க முன் னியம்பி யானுடைப், பொன்னிறப்பூவையுங் கிளியும் போற்றுகென், றன்னுமென் றங்கையர்க் குணர்த்துவா யென்றாள்" என்றார் அயோத்தியாகாண்டத்தில். இச்செய்யு ளுக்கு வேறுவகையாகவும் பொருள்கொள்ளலாம். (சுஉ)

[அநுமான் இராமபிரானது மோதிரத்தைச் சீதைக்குக் காட்டுதல்.]

சுங. மீட்டுமுரைவேண்டுவனவில்லையெனமெய்ப்பேர்
தீட்டியதுதீட்டரியசெய்கையதுசெவ்வே
நீட்டுதெனநேர்ந்தனனெனாநெடியகையாற்
காட்டினனோராழியதுவாணுதலிகண்டாள்.

(இ - ள்.) மீட்டும் உரை வேண்டுவன இல்லை என - மீண்டும்மீண்டும் (அடையாளமாகச்) சொல்லவேண்டுமவை இல்லை என்று எண்ணி,—'(இராம பிரான்), மெய் பேர் தீட்டியது - (தனது) உண்மையான திருப்பெயர் எழுதப் பெற்றுள்ளதும், தீட்டு அரிய செய்கையது - (சித்திரத்திலும்) எழுதுதற்கரிய வேலைத்திறமுடையதுமாகிய, இது - இம்மோதிரத்தை, செவ்வே நீட்டு - நேராக(ச் சீதைகைபிற்) கொடுப்பாய், என - என்றுசொல்லி, நேர்ந்தனன் - (இம் மோதிரத்தைக்) கொடுத்தான்,' எனா - என்றுசொல்லி, (அநுமான்), நெடிய கையால் - நீண்ட (தனது) கைகளால், ஓர் ஆழி-ஒருமோதிரத்தை, காட்டினன் - (எடுத்துக்) காண்பித்தான்: அது - அதனை, வாள் நுதலி - ஒளிபொருந்திய நெற்றியையுடைய சீதை, கண்டாள்—; (எ - று.)

பல அடையாளமொழிகள் கூறுவதனினும் சிறந்த அடையாளமாகிய மோதிரத்தை யெடுத்துக்காட்டுதலே நன்றென்று கருதி அநுமான் ராமநாமாங் கிதமோதிரத்தைச் சீதைக்குக் காட்டின னென்றவாறு. "மைத்தகுமாமலர்க்குழ லாய் வைதேவி விண்ணப்பம், ஒத்தபுகழ்வானரக்கோ னுடனிருந்து நினைத்

தேட, அத்தகுசீ ரயோத்தியர்கோ னடையாளமிவை மொழிந்தான், இத் தகையாலடையாள மீதவன்கைமோதிரமே" என்பது, பெரியாழ்வார் திருமொழி. அநுமான் தன்னை மெய்ப்பித்தற்காக இராமனது பழையவரலாறுகளை யெல்லாம் சீதையினிடம் எடுத்துச்சொன்னதாக முதனூலிற் கூறியுள்ளது. "நன்மையுஞ் செல்வமு நாளு நல்குமே, தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே, சென்மமு மரணமு மின்றித் தீருமே, யிம்மையே ராமவென் றிரண் டெழுத்தினால்" என்றபடி பலவகைப் பயன்களுக்குங் காரணமான மகிமை யுடைத்தாயிருத்தலால், ராமநாமம், 'மெய்ப்பேர்' எனப்பட்டது. பேர் - பெயர் என்பதன் மரூஉ. தீட்டரியசெய்கையது என்பதற்கு - (ஒருவராலுஞ்) செய்ய முடியாதது என்றும் உரைக்கலாம். ஆழி - வட்டவடிவுடைய மோதிரத்துக்கு, இலக்கணை. இரண்டாமடி - முற்றுமோனை. (சுரு)

[இதுமுதல் ஆறுகவிகள்-அநுமன்கண்ட சீதையின்தன்மையைத் தெரிவிக்கும்.]

சுசா. இறந்தனர்பிறந்தபயனெய்தினர்கொலென்கோ
மறந்தனரறிந்துணர்வுவந்தனர்கொலென்கோ
துறந்தவுயிர்வந்திடைதொடர்ந்ததுகொலென்கோ
திறந்தெரிவதென்னைகொனன்னுதலிசெய்கை.

(இ - ள்.) நல் நுதலி இசெய்கை - அழகிய நெற்றியையுடைய பிராட்டியினது (பெறுதற்கரிய மோதிரத்தைப் பெற்றுமகிழும்) இச்செய்கைக்கு, (உபமானம்),—இறந்தனர் பிறந்த பயன் எய்தினர்கொல் என்கோ - (மனிதப்பிறப்பெடுத்ததற்குப்பயனும் மறுமைக்கு உதவும் தவம் முதலிய நற்கருமங்களைச் செய்யாமலே) இறந்தவர்கள் பிறப்பின்பயனாகிய அவற்றை(த் தற்செயலாய்)ப் பெற்றார்கள் என்றுசொல்வேனோ? மறந்தனர் அறிந்து உணர்வு வந்தனர்கொல் என்கோ - (ஒன்றை) மறந்துவிட்டவர் மீண்டும் ஞாபகமுண்டாகி அவ்வறிவுவந்து கூடப்பெற்றனர் என்று சொல்வேனோ? துறந்த உயிர் வந்து இடை தொடர்ந்ததுகொல் என்கோ - (உடம்பை) விட்டுநீங்கிச்சென்ற உயிர் (மீண்டும் அவ்வுடம்பினிடையே) வந்து சேர்ந்தது என்று சொல்வேனோ? திறம் தெரிவது என்னைகொல் - (இன்னும் உவமையாதற்கு) ஏற்றசெய்கையை (யான்) தெரிந்துசொல்வது எவ்வாறோ? (எ - று.)

பிறந்தபயனின்றியிறந்தவர் பிறந்தபயன் பெற்றதுபோலவும், மறந்தவர் மீண்டும் ஞாபகத்தைப்பெற்றதுபோலவும், இறந்த உயிர் மீண்டும் உடம்பில் வந்து சேரப்பெற்றது போலவும், பிராட்டி பெருமாளது மோதிரத்தைப் பெற்று மகிழ்ந்தனள் என்பதாம். இது, கவிக்கூற்று. ஐயத்தற்குறிப்பேற்றவணி. கொல் - ஐயம். என்கு - தன்மையொருமைமுற்று; 'கு' விகுதி எதிர்காலங்காட்டிற்று: ஓ - வினா. எவன் என்னும் வினாவினைக்குறிப்புமுற்றின் விகாரமாகிய என் என்பது, ஐகாரச்சாரியைபெற்று, 'என்னை' என நின்றது.

கூரு. இழந்தமணிபுற்றரவெதிர்ந்ததெனலானாள்,
பழந்தனமிழந்தனபடைத்தவரையொத்தாள்,
குழந்தையையுயிர்த்தமலடிக்குவமைகொண்டா
ளுழந்துவிழிபெற்றதொருயிர்ப்பொறையுமொத்தாள். டுடுக

(இ - ள்.) (இன்னும் அச்சீதை), இழந்த மணி எதிர்ந்தது புற்று அரவு எனல் ஆனாள் - தான்இழந்த மாணிக்கத்தை மீளவும்பெற்றதாகிய புற்றிலுள்ளபாம்பு என்று உவமைசொல்லத்தக்கவளானாள்; இழந்தன பழந் தனம் படைத்தவரை ஒத்தாள் - இழந்தனவாகிய பழமையானசெல்வங்களை மீண்டும் பெற்றவரைப் போன்றாள்; குழந்தையை உயிர்த்த மலடிக்கு உவமை கொண்டாள் - குழந்தையைப் பெற்றெடுத்த பிள்ளையில்லாதிருந்தவளுக்கு ஒப்பாகப் பொருந்தினாள்; உழந்து விழி பெற்றது ஓர் உயிர்ப்பொறையும் ஒத்தாள் - (கண்ணில்லாமல்) வருந்திப் பின்பு கண்ணைப்பெற்றதாகிய ஒருடம்பையும் போன்றாள்; (எ - று.)

உவமையணி. குழந்தை - இளமையையுடையதெனக் காரணப்பெயர்; குழ - இளமை: உரிச்சொல்; "மழவும் குழவும் இளமைப் பொருள;" தை - பெயர் விகுதி. குழந்தையைப்பெற்ற பிறகு மலடித்தன்மை நீங்கியதாயினும், 'மலடி' என்றுகூறினது, முன்னிருந்த தன்மையை நோக்கி; இது, பூதபூர்வ வ்யவஹார மெனப்படும். உயிர்ப்பொறை - உயிரைத்தாங்குவது என உடம்புக்குக் காரணக்குறி. (கூரு)

கூகூ. வாங்கினண்முலைக்குவையில்வைத்தனள்சிரத்தாற்
றாங்கினண்மலர்க்கண்மிசையொத்தினடந்தோள்
வீங்கினண்மெலிந்தனள்குளிர்ந்தனள்வெதுப்போ
டேங்கினளுயிர்த்தனளிதின்னதெனலாமே.

(இ - ள்.) (பிராட்டி அந்தமோதிரத்தை), வாங்கினள் - (அநுமான்கையினின்றும் தன்கையில்) வாங்கி, முலை குவையில் - (தனது) தனங்களின்முகட்டிலே, வைத்தனள் - வைத்துக்கொண்டாள்; சிரத்தால் தாங்கினள் - தலைமேல் வகித்துக்கொண்டாள்; மலர் கண்மிசை ஒத்தினள் - தாமரைமலர்போன்ற (தனது) கண்களில் ஒத்திக்கொண்டாள்; தட தோள் வீங்கினள் - (தனது) பெரியதோள்கள் பூரிக்கப்பெற்றாள்; மெலிந்தனள் - இளைத்தாள்; குளிர்ந்தனள் - அகங்குளிர்ந்தாள்; வெதுப்போடு ஏங்கினள் - வாட்டத்தோடு ஏக்கமடைந்தாள்; உயிர்த்தனள் - பெருமூச்சுவிட்டாள்; இது இன்னது எனல் ஆமே - (அவள்அடைந்த) இந்நிலைமை இப்படிப்பட்டதென்று சொல்வதற்கு ஆகுமோ? [ஆகாது என்றபடி]; (எ - று.)

"திக்குநிறைபுகழாளன் றீவேள்விச் சென்றநாள், மிக்கபெருஞ்சபை நடுவே வில்லிறுத்தான் மோதிரங்கண், டொக்குமாலடையாள மநுமானென்

றுச்சிமேல், வைத்துக்கொண் டுகந்தனளால் மலர்க்குழலாள் சீதையுமே" என்றார் பெரியாழ்வாரும். மூன்றாமடி-தோரணைமரண். 'தடந்தோள்' என்றார், மகளிர்தோள்பருத்திருத்தல் மரபாதலின். தோள் வீங்கினள் - உயர்திணை தொடர்ந்த சினை அத்திணை முடிபைக் கொண்ட திணைவழுவமைதி. வெதுப்பு - முதனிலைதிரிந்ததொழிற்பெயர். ஒருங்கே சீதை பலதொழில் செய்ததாகக் கூறினது, கூட்டவணி; இது, வடமொழியில் ஸமுச்சயாலங்கார மெனப்படும். (சுசு)

சுஎ. மோக்குமுலைவைத்துறமுயங்குமொளிர்நன்னீர்
நீக்கிநிறைகண்ணிணைததும்பநெடுநீள
நோக்குநுவலக்கருதுமொன்றுநுவல்கில்லாள்
மேக்குநிமிர்விம்மலள்விழுங்கலுறுகின்றாள்.

(இ - ள்.) (பின்னும் பிராட்டி அம்மோதிரத்தை),—மோக்கும் - மோந்து பார்ப்பாள் ; முலை வைத்து - (தனது) தனங்களின்மேல் வைத்துக்கொண்டு, உற முயங்கும்-நன்றாகத் தழுவுவாள் ; கண் இணை நிறை ஒளிர் நல் நீர் நீக்கி - இரண்டுகண்களிலும் நிறைந்துவிளங்குகிற மிக்ககண்ணீரை நன்றாய்த்துடைத்துவிட்டு, ததும்ப-(மீண்டும் கண்ணீர்) தளும்பும்படி, நெடு நீளம் நோக்கும் - வெகுநேரம் பார்ப்பாள் ; நுவல கருதும் - (அதனோடு ஏதேனும்) பேசக் கருதுவாள் ; ஒன்றும் நுவல்கில்லாள் - (பின்)ஒன்றும் பேசாள் ; மேக்கு நிமிர் விம்மலள் - மேன்மேன்மிகுகிற பூரிப்பையுடையவளாய், விழுங்கல் உறுகின்றாள் - (அதனை வாயால்) விழுங்கத்தொடங்குவாள்; (எ - று.)

'மோக்கும்' முதலிய செய்யுமென்முற்றுக்கள், இந்தப் பெண்பாலில் வந்தன. மோக்கும்,மோ - முதனிலை. இந்தக்கூறியவை, மகிழ்ச்சிமிகுதிபற்றி நேர்ந்தவை. "வெங்கடுங்கால்பொர மேக்குநோக்கிய, பொங்கிரும்பாற்கடற் றரங்கம் போலுமே" எனப் பாலகாண்டத்திலும், மேக்குஎன்பது - மேல்என்னும் பொருளில் வந்திருத்தல் காண்க. (சுஎ)

சுஅ. நீண்டவிழிநேரிழைதன்மின்னினிறமெல்லாம்
பூண்டதொளிர்பொன்னனையபொம்மனிறமெய்யே
யாண்டகைதன்மோதிரமடுத்தபொருளெல்லாந்
தீண்டளவில்வேதிகைசெய்தெய்வமணிகொல்லோ.

(இ - ள்.) நீண்ட வழி நேர் இழைதன் - (காதளவும்) நீண்ட கண்களையும் அழகிய ஆபரணங்களையு முடைய பிராட்டியினது, மின்னின் நிறம் எல்லாம் - மின்னல்போன்ற திருமேனிமுழுவதும், (அம்மோதிரத்தின் ஒளியால்), ஒளிர் பொன் அனைய - விளங்குகின்ற பொன்னை யொத்த, பொம்மல் நிறம் - பொலிவுள்ள நிறத்தை, பூண்டது - அடைந்தது : (ஆதலால்), மெய்யே - உண்மையாக, ஆண்தகைதன் மோதிரம் - ஆண்மைக்குணமுள்ள இராமபிரானது மோதிரம், அடுத்த பொருள் எல்லாம் தீண்டளவில் வேதிகை

செய் தெய்வம் மணி கொல் ஓ - (தன்னைச்) சேர்ந்த எல்லாப்பொருள்களையும் தான்படுகிறமாத்திரத்தில் (மாற்றுயர்ந்தபொன்னாக) வேறுபடுத்துகிற தெய்வத்தன்மையுடைய (ஸ்பர்சவேதியென்னும்) ரசகுளிகைதானோ? (எ-று.)

முன்னிரண்டடிகளில், சீதையின் மின்னின்நிறமானஉடம்பு மோதிரத்தின் ஒளியால் உயர்ந்தபொன்னிறம்பெற்றதெனக் கூறினது, பிறிதின்குணம் பெறலணி; இதனை வடநூலார் தத்குணாலங்கார மென்பர். பின்னிரண்டடி- தன்மைத்தற்குறிப்பேற்றவணி. 'மெய்யே' என்றது, தற்குறிப்பேற்றவணியின் உருபாய்நின்றது. முதலடியிலுள்ள 'எல்லாம்' என்பது - ஒருபொருளின் பலவிடம் குறித்துநின்றது; இதனை, எஞ்சாமைப்பொருளதாய் வருவதோர் உரிச்சொல் என்பாரு முளர். மூன்றாமடியிலுள்ள 'எல்லாம்' என்பது - பொருட்பன்மை குறித்தது. நேரிழை, ஆண்தகை - அன்மொழித் தொகைகள். வேதிகை - வேதிகா: (உருவத்தை) வேறுபடுத்துவது. (௯௮)

௯௯. இருந்துபசியாலிடருழந்தவர்களெய்து
மருந்துமமுதாகியதறத்தவரையண்மும்
விருந்துமெனலாகியதுவீயுமுயிர்மீளு
மருந்துமெனலாகியதுவாழிமணியாழி.

(இ - ள்.) (பிராட்டிக்கு),—மணி ஆழி - அழகிய அம்மோதிரம்,—பசியால் இருந்து இடர் உழந்தவர்கள் - பசியினால் துன்பப்பட்டுக்கொண்டிருந்தவர்கள், எய்தும் - பெற்ற, அருந்தும் அமுது ஆகியது - உண்ணுதற்கேற்ற உணவை யொத்தது; அறத்தவரை அண்மும் - இல்லறவொழுக்கந்தவறாதவரை வந்தடைந்த, விருந்தும் எனல் ஆகியது - விருந்தாளியை ஒத்ததென்றும் சொல்லலாம்படியாயிற்று; வீயும் உயிர் மீளும் - இறந்தஉயிர் மீண்டும் பிழைத்தற்குக் காரணமான, மருந்தும் எனல் ஆகியது - (மிருதசஞ்சீவினியென்னும்) மருந்தையும் ஒத்தது என்னலாம்படியாயிற்று; வாழி - (அத்திருவாழி கண்ணெச்சில்படாமே காலதத்துவமுள்ளளவும்) வாழ்வதாக; (எ - று.)

'இடருழந்திருந்தவர்கள்' என விகுதிபிரித்துக்கூட்டப்பட்டது. அமுது - தேவாமிருதம்போ லினிய உணவு. 'அறத்தவர்' என்றது, இங்கே, இல்லறத்தாரைக் குறிக்கும்; தம்மிடம்வந்த விருந்தினரைக் கண்டு அகமகிழ்ந்து எதிர்கொண்டு மிக்கஅன்புடன் இன்சொற்கூறி உபசரித்தற்கு உரியவர் அவரே யாதலால். விருந்து - புதுமை: புதிதாய்வந்தவர்க்குப் பண்பாகுபெயர். 'வீயுமுயிர்மீளும்மருந்துமெனலாகியது' என்றது, பிராட்டி பிராணாபாயத்தினின்று நீங்கக் காரணமானதனால். கண்டவுடன் பேருவகைவிளைத்தலில், இங்குக் கூறியன உவமையாம். மணியாழி - இரத்தினம்பதித்த மோதிரமுமாம். வாழிய என்னும் வியங்கோள்வினைமுற்று, ஈறுகெட்டு 'வாழி' என நின்றது.

(௯௯)

[சீதை அநுமான்செய்த நன்றியைப் பாராட்டி முகமன்கூறத்தொடங்குதல்.]

எ0. இத்தகைய ளாகியு யிரேமுற விளங்கு
முத்தநகை யாள்விழியி னாலிமுலை முன்றிற்
றத்தியுக மென்குதலை தள்ளவுயிர் தந்தா
யுத்தமவெ னாவினைய வாசகமு ரைத்தாள்.

(இ - ள்.) இ தகையள் ஆகி - இப்படிப்பட்ட தன்மையுடையவளாய், உயிர் ஏமுற - உயிர் இன்பமடைய, விளங்கும் - விளங்குகிற, முத்தம் நகையாள் - முத்துப்போன்ற பற்களையுடைய பிராட்டி,—விழியின் ஆலி - கண்ணின் நீர்த்துளிகள், முலை முன்றில் - தனங்களின்மேல்முகட்டில், தத்தி உக - பாய்ந்தொழுக, மென் குதலை தள்ள - மென்மையான மழலைச்சொற்கள் குழறும்படி, (அநுமானை நோக்கி), 'உத்தம - (யாவரினுஞ்) சிறந்தவனே! உயிர் தந்தாய் - (எனக்கு நீ) உயிரைக் கொடுத்தாய்', எனா - என்று, இனைய வாசகம் - இப்படிப்பட்ட வார்த்தைகளை, உரைத்தாள் - சொல்வாளாயினாள்; (எ - று.)—அதனை, அடுத்தகவியிற் காண்க.

உயிரேமுறவிளங்கும் முத்தநகையாள் - இனித் தனது பிராணநாயகனை எளிதிற்கூடலாமென்று மனத்துக்கொண்ட பேருவகையை வெளிப்படுத்தும் புன்சிரிப்பினால் விளங்கும் பற்களையுடையாள் என்றவாறு. ஏமுற - எமுற என்பதன் விகாரம். விழியின் ஆலி - மழைபோலப் பெருகிவழியுங் கண்ணீர்ப் பெருக்கு. குதலை - நிரம்பாத மென்சொல். தள்ளுதல் - தடுமாறுதல்; சொல் தடுமாறுதற்குக் காரணம், களிப்பு மேலிடுதல். (எ0)

வேறு.

[சீதை அநுமானைப் புகழ்ந்துகூறுதல்.]

எக. மும்மையா முலகந் தந்த முதல்வற்கு முதல்வன் றூதாய்ச்
செம்மையா லுயிர்தந் தாய்க்குச் செயலென்னா லெளிய துண்டே
யம்மையா யத்த னாய வப்பனே யருளின் வாழ்வே
யிம்மையே மறுமை தானு நல்கினை யிசையோ டென்றாள்.

(இ - ள்.) (சீதை அநுமானை நோக்கி), 'மும்மை ஆம் உலகம் தந்த முதல்வற்கும் முதல்வன் தூது ஆய் - மூன்றுவகைப்பட்ட உலகங்களையெல்லாம் படைத்த (யாவர்க்கும்) முதலிலுள்ளவனான பிரமதேவனுக்கும் காரணனாகிய (திருமாலின் திருவவதாரமான) இராமபிரானது தூதனாய் வந்து, உயிர் செம்மையால் தந்தாய்க்கு - (எனது) உயிரை நன்மையாக (எனக்கு)க் கொடுத்த உனக்கு, என்னால் செயல் எளியது உண்டே - என்னால் எளிதிற் செய்யக்கூடியதொரு கைம்மாறும் உளதோ? [இல்லை யென்றபடி]; அம்மை ஆய் அத்தன் ஆய அப்பனே - (எனக்குத்) தாயாகித் தந்தையுமாகிய தலைவனே! அருளின்

வாழ்வே - கருணைக்கு இருப்பிடமாகவுள்ளவனே ! (நீ எனக்கு), இம்மையே - இவ்வுலகத்தில் அனுபவிக்கும் இன்பத்தையும், மறுமைதானும் - (இறந்து சென்று) மறுவுலகத்தில் அனுபவிக்கும் இன்பத்தையும், இசையோடு - கீர்த்தியையும், நல்கினை - கொடுத்தாய்,' என்றாள் - என்றுகூறினாள் ; (எ - று.)

மும்மையாமுலகு - சுவர்க்க மத்திய பாதாளம்: இங்கு, 'சுவர்க்கம்'என்றதில் மேலாறுலகங்களும், 'பாதாளம்' என்றதில் கீழேழுலகங்களும் அடங்கும். உலகம் - உலகவுருண்டை ; அண்டகோளம். அன்றி, கிருதகம் அகிருதகம் கிருதகாகிருதகம் என்ற மூவகையுலகங்களுமாம் ; (இவற்றுள், கிருதகம் - தினப்பிரளயத்தில் அழிகிற கீழேழுலகங்களும், மேலேழுலகங்களில் பூலோகம் புவர்லோகம் சுவர்லோகம் என்பனவும். அகிருதகம் - தினப்பிரளயத்தில் அழியாத ஜநலோகம் தபோலோகம் சத்தியலோகம் என்ற மூன்றுமேலுலகங்கள். கிருதகாகிருதகம் - தினப்பிரளயத்திற் பாதியழிந்தும் பாதியழியாமலுமிருக்கும் மகர்லோகம்.) மும்மை என்பது - இங்கே எண்ணின் தன்மையென்ற பொருளைக் குறியாமல் எண்ணின்மேல் நின்றது ; "தெரிமாண்டமிழ் மும்மைத்தென்னம்பொருப்பன்", "இருமைவகை" என்பவற்றிற்போல. உலகந்தந்த முதல்வற்குமுதல்வன் = "முதலாவார் மூவரே யம்மூவருள்ளும், முதலாவான் மூரிநீர்வண்ணன்," "முதலாந் திருவுருவ மூன்றென்பர் ஒன்றே, முதலாகு மூன்றுக்கு மென்பர்"என்பன, ஆன்றோர் அருளிச்செயல்கள். இனி, முதலடிக்கு - மூன்று உலகங்களையுங் காத்த யாவர்க்குந்தலைவனாகிய தசரத சக்கரவர்த்திக்கு மூத்தகுமாரனை இராமபிரானது தூதனாய் என்றும் உரைக்கலாம். தூது - தூதனுக்குப் பண்பாகுபெயர். தான் இறக்கத் துணிவுகொண்டு நின்ற சமயத்தில் எதிர்ப்பட்டு அடையாளங்களால் தெளிவித்துத் தன்னைப் பிராணாபாயத்தினின்று நீக்கினமையால், சீதை அநுமனை 'உயிர்தந்தாய்' என்றாள். இனி, எனது பிராணநாயகனைக் கொடுத்த உனக்கு என்றுமாம் : இராமபிரானது அடையாளங்களைக் கொடுத்ததையே அப்பிரானையே கொணர்ந்துகொடுத்ததாக் கருதினளாதலாலும், தான் அப்பிரானையடைவதற்கு இவனே பிரதானகாரணமாய் நிற்பதனாலும் இங்ஙனங் கூறினாள். இப்போது அநுமான் செய்தது காலத்தினாற் பயன்கருதாது செய்யாமற்செய்த உதவி யாதலால், 'செயலென்னுலெளியதுண்டே' என்றாள் : "செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும், வானகமு மாற்ற லரிது" முதலியன இங்கு அறியத்தக்கன. ஏ - எதிர்மறை. தந்தாய் - முன்னிலை யொருமைத் தெரிநிலை வினையாலணையும் பெயர்.

மக்களிடத்து அன்புடைமையில் தந்தையினும் தாய் பலமடங்கு சிறந்தவளாதலால், 'அம்மையாய்' என முன்னர்க் கூறினாள். அம்மை - அம்பா என்னும் வடசொல்லின் திரிபு. இம்மை, மறுமை - ஆகுபெயர்கள். இராமபிரானது செய்திகூறி உயிரைப்பிழைப்பித்ததனால் இம்மையின்பத்தையும், செய்தற்குச் சித்தமாயிருந்த பெருநரகத்திற்குக்காரணமான தற்கொலையை யொழித்ததனால் மறுமையின்பத்தையும், மாற்றான்கைப்பட்டு உழன்று அழிந்தா ளென்று

உலகத்தார் தூற்றும் பழியைப் போக்கியதனால் புகழையும் அநுமான் சீதைக்கு அளித்தவனாவன். இசை - செயப்படுபொருள்விகுதி புணர்ந்து கெட்ட பெயர்; 'கீர்த்தி' என்னும் வடமொழியின் பொருள்கொண்டது. இசையாவது - அறத்தின்வழுவாதார்க்கு இம்மைப்பயனாகி இவ்வுலகின்கண் நிகழ்ந்து இறவாதுநிற்கும் கீர்த்தி.

இதுமுதற் பதின்மூன்று கவிகள் - இப்படலத்தின் உக - ஆங் கவி போன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (எக)

[சீதை அனுமானை வாழ்த்துதல்.]

எஉ. பாழியபணைத்தோள்வீர துணையிலேன்பரிவுதீர்த்த
வாழியவள்ளலேயான்மறுவிலாமனத்தேனென்னி
னூழியோர்பகலாயோதும்யாண்டெலாமுலகமேழு
மேழும்வீவுற்றஞான்றுமின்றெனவிருத்தியென்றாள்.

(இ - ள்.) 'பாழிய பணை தோள் வீர-வலிமைபொருந்திய பருத்த தோள்களையுடைய வீரனே! துணை இலேன் பரிவு தீர்த்த வள்ளலே - ஒருதுணையுமில்லாத என்னுடைய துன்பத்தை நீக்கின வரையாமலருளுந் தன்மையையுடையவனே! வாழிய - (நீ) வாழ்வாயாக: யான்—,மறு இலா மனத்தேன் என்னின் - (கற்புநிலையிற்) களங்கமில்லாத மனத்தையுடையேனானால், ஊழி ஓர் பகல் ஆய் ஓதும் யாண்டு எலாம் - பலயுககாலங்கள் ஒருதினமாய்ச் சொல்லப்படுகிற (பிரமனதுஆயுளாகிய) வருஷங்களெல்லாவற்றிலும் [பிரமபிரளயபரியந்தமும்], உலகம் ஏழும் ஏழும் வீவு உற்ற ஞான்றும் - பதினான்கு உலகங்களும் அழிவடைந்தபொழுதும், இன்று என இருத்தி - இன்றைத்தினத்தில் இருப்பதுபோலவே [என்றும் ஒருபடிப்படச் சிரஞ்சீவியாய்] வாழ்ந்திருப்பாயாக', என்றாள் - என்று (சீதை அநுமானுக்கு) அநுக்கிரகித்தாள்; (எ - று.)

பாழிய - குறிப்புப்பெயரெச்சம். வாழிய - வியங்கோள்வினைமுற்று; வாழிய இருத்தி யெனக் கூட்டியுரைத்தலுமாம்: இப்பொருளில், வாழிய - செய்யியவென்னும்வாய்பாட்டெச்சம். எல்லாவற்றினுஞ்சிறந்த உயிரைத் தந்தமை பற்றி, 'வள்ளலே' என விளித்தாள். மறு - கெட்டஎண்ணம். மனிதர்க்கு ஒரு வருஷம் தேவர்க்கு ஒருநாளெனக்கொண்டு தேவமானத்தாற் கணக்கிடப்பட்ட ஆயிரம்சதுர்யுகம் பிரமனுக்கு ஒரு பகலாம்; அப்பகலின்முடிவிலுண்டாகும் பிரளயத்திற் கீழேழுலகங்களும் மேலேழுலகங்களில் முதல் மூன்றும் நான்காவதிற்பாதியும் கடல்கொள்ளப்பட்டு அழிய மற்றை மூன்றரையுலகங்களே அழிவின்றி நிற்கும்; இத்தன்மையான பகலின் அளவுகொண்ட இரவும் கழியப் பிரமனுக்கு ஒருதினமாம்: அவ்வாறு தொகையிடப்பெற்ற நாள்களினாலாகிய நூறுவருஷங்கள் கழிந்தபின்பு ஒருபிரமனுக்கு ஆயுள் முடியும். அப்பொழுது உண்டாகும் மகாப்பிரளயத்திலே எல்லாவுலகங்களும் அழியுமெண உணர்க.

(எஉ)

[சீதை இராமபிரானது வரலாற்றை வினவ, அநுமான் கூறத் தொடங்குதல்.]

எங. மீண்டுரைவிளம்பலுற்றாள்விழுமியகுணத்தோய்வீரன்
யாண்டையானிளவலோடுமெவ்வழியெய்திற்றுன்னை
யாண்டகையடியேன்செய்கையார்சொலவறிந்ததென்றாள்
தூண்டிரடடந்தோளானுமுற்றதுசோறலுற்றான்.

(இ - ள்.) (சீதை அநுமானை நோக்கி), மீண்டு உரை விளம்பல் உற்றாள் - மறுபடியும் சிலவார்த்தைசொல்லத் தொடங்கினவளாய்,—'விழுமிய குணத்தோய் - சிறந்த நற்குணங்களையுடையவனே! வீரன் - மகாவீரனாகிய இராமபிரான், இளவலோடும் - இளையபெருமாளுடனே, யாண்டையான் - எவ்விடத்தி லுள்ளான்? உன்னை எய்திற்று எ வழி - உன்னை (அவன்) அடைந்தது எவ்விடத்தில்? ஆண்தகை அடியேன் செய்கை யார் சொல அறிந்தது - பராக்கிரமமுடைய இராமபிரானுக்கு என்னை இராவணன் எடுத்துவந்த செய்தி எவர்சொல்லத் தெரிந்தது?' என்றாள் - என்று வினவினாள்; தூண் திரள் தட தோளானும் - தூண்போலத் திரண்டுள்ள பெரியதோள்களையுடைய அநுமானும், உற்றது சோறல் உற்றான் - நடந்ததைச் சொல்லத்தொடங்கினான்; (எ - று.)—அதனை, மேல் உ௧ - கவிகளிற் காண்க.

விழுமிய - விழுமம் என்னும் உரிச்சொல்லினடியாப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம். இராமபிரானுக்குச் சிறியவனாதலால், இலக்குமணன் 'இளவல்' எனப்பட்டான்; 'இளையபெருமாள்' என இவனுக்கு வைஷ்ணவசம்பிரதாயத்தில் ஒருபெயர்இருத்தலும்காண்க. சீதை, தனக்குஇராமபிரானிடமுள்ளபணிவை 'அடியேன்' என்றதனால் வெளியிட்டாள். அநுமானிடத்துப் பணிவிறைக்கூறினளெனக் கொள்ளுதல் பொருந்தாமையை உய்த்துணர்க. சோறல் - தொழிற்பெயர்; சொல் - பகுதி. (எங)

[இதுமுதல் இருபத்தோரு கவிகள் - அநுமானது விடை.]

எச. உழைக்குலத்தீயமாயவுருவுகொண்டுறுதல்செய்தான்
மழைக்கருநிறத்துமாயவரக்கன்மாரீசனென்பா
னிழைத்தடமார்பத்தண்ணலெய்யப்போய்வையஞ்சேர்வா
னழைத்ததவ்வோசையுன்னைமயக்குதற்கரக்கன்சொல்ல.

(இ - ள்.) அரக்கன் - இராவணன், சொல்ல - சொன்னதனால்,—மழை கரு நிறத்து மாயம் அரக்கன் மாரீசன் என்பான் - மேகம்போலக் கரியநிறத்தையுடைய வஞ்சனைத்தன்மையுள்ள இராக்கதனாகிய மாரீசனென்பவன், தீய மாயம் குலம் உழை உருவு கொண்டு உறுதல்செய்தான் - கொடியமாயையினாலாகிய சிறந்த மானினுருவத்தை யடைந்து (நீ இருந்த அவ்வனத்

தில்) வந்து,—இழை தட மார்பத்து அண்ணல் போய் எய்ய - ஆபரணங்களை யணிந்த பெரியதிருமார்பையுடைய புருஷோத்தமனான இராமபிரான் (அவனை உண்மையானமானென்று எண்ணி உனதுவேண்டுகோளின்ற் பிடித்தற்குப்) பின்தொடர்ந்துசென்று (பிறகு மாயமானென்று துணிந்து அம்பை) எய்த தனால், வையம் சேர்வான் - இறந்து கீழ்விழுபவனாய் [மானுருவம் நீங்கி அரக்கவடிவத்துடன் கீழ்விழும்பொழுது], உன்னை மயக்குதற்கு - உன்னை மயங்கச்செய்யும்பொருட்டு, அழைத்தது - கூப்பிட்டதாம்: அ ஓசை - ('ஹாஸீதா! ஹா லக்ஷ்மணா!!') என்று இராமன்குரலாற் கேட்ட அவ்வோசை.

வரலாறு, கீழ்க்கூறப்பட்டது. 'மாரீசனென்பான்'—என்பான் - முதல் வேற்றுமைச் சொல்லுருபு. 'இழைத்தடமார்பு'என்றது, அப்பொழுது ஆபரணமில்லையாயினும் முன்னும் பின்னு முள்ள நிலையைக் கருதி ; இனி, இழை - பூணூலுமாம். அண்ணல் - ஆண்பாற்சிறப்புப்பெயர். வையம் - பொருள்களை வைத்தற்குஉரிய இடமெனப் பூமிக்குக் காரணக்குறி. உன்னை மயக்குதற்கு - இராமபிரான்துன்பமுற்றானென்று நீ மயங்கும்படி என்றவாறு; இனி, உன்னை மயக்குதற்கு அரக்கன்சொல்ல என்று கூட்டி, உன்மனத்தை மயக்கும்படி பொன்மானாகவேண்டும் என்று இராவணன் கட்டளையிட என்றலுமாம். (எச)

எ௫. இக்குரலிளவல்கேளாதொழிகெனவிறைவனிட்டான்
மெய்க்குரல்சாபம்பின்னைவிளைந்ததுவிதியின்மெய்ம்மை
பொய்க்குரலன்றுபோலாம்பொருள்பின்னர்ப்பயக்குமென்பான்
கைக்குரல்வரிவில்லானுமிளையவன்வரவுகண்டான்.

(இ - ள்.) 'இ குரல் - இந்த (மாயமானின்) குரலை, இளவல் - (எனது) தம்பியாகிய இலக்குமணன், கேளாது ஒழிக - கேட்டுநம்பாமலிருப்பானாக', என - என்றுஎண்ணி, இறைவன் - தலைவனாகிய இராமபிரான், பின்னை - உடனே, சாபம் - (தன்கையிலுள்ள) வில்லினால், மெய் குரல் இட்டான் - உண்மையான தொனியை உண்டாக்கினான் : (உண்டாகச்செய்தும்), விதியின் மெய்ம்மை விளைந்தது - ஊழ்வினையின் உண்மை (இவ்வாறு) பலித்து விட்டது ; 'பொய் குரல் அன்று போல் ஆம் - (அந்தமாயமானினது) பொய் யானகுரல் வீண்குரலாகாதுபோலும் : பின்னர் பொருள் பயக்கும் - உடனே (யாதாயினுமொரு தீங்கான) காரியத்தை உண்டாக்கக்கூடும்,' என்பான் - என்றுஎண்ணித் திரும்பி விரைந்துவருகிறவனான, கை குரல் வரி வில்லானும் - கையிற்பிடித்த ஒலியோடுகூடிய கட்டமைந்த கோதண்டத்தையுடைய இராமபிரானும், இளையவன் வரவு கண்டான் - இலக்குமணன் (தன்னை நோக்கி) வருவதைப் பார்த்தான் ; (எ - று.)

இராமபிரான் 'இம்மானின்குரலைக்கேட்டு என்னுடைய குரலென்று மயங்கி லக்ஷ்மணன் கவலைப்படாதிருக்கும்பொருட்டு எனது நிலைமையை அவனுக்கு ஒருவகையால் தெரிவிக்கவேண்டும்' என்று எண்ணி உடனே தனது வில்லின்நாணொலியை எழுப்பினான் என்க. 'விளைந்தது விதியின்

மெய்ம்மை' என்றது, சீதைக்குக் காவலாயிருந்த இலக்குமணன் பிரிதலையும், அச்சமயம்நோக்கி இராவணன் சீதையைக் கவர்ந்துசென்றதையும் குறிக்கும். இத்தொடர் - காரணமுகத்தாற் காரியத்தைப் பெறவைத்த புனைவிலி புகழ்ச்சியணியாம்; இதனை வடநூலார் அப்ரஸ்துதப்ரசம்ஸாலங்கார மென்பர். பின்னிரண்டடியின்கருத்தை "மாள்வதே பொருளாக வந்தானலன், சூழ்வதோர்பொருளுண் டிவன்சொல்லினுள், மூள்வதேத மது முடியாமுன, மீள்வதே நல னென்றவன் மீண்டனன்", "துண்ணெனு மவ்வுரை தொடரத் தோகையும், பெண்ணெனும் பேதைமை மயக்கப் பேதுறு, வுண்ணிறை சோருமென் றுசலாடு மக், கண்ணனு மிளவலைக் கண்ணுற்றானரோ" என்ற ஆரணியகாண்டச்செய்யுள்களால் நன்குஉணர்க. இராமபிரான் திரும்பி வரும்பொழுது அடிக்கடி நாமொலியை எழுப்பிவருவது தோன்ற, 'கைக் குரல்வரிவில்லான்' என்றது. 'கேளாது' என்பதில், கேட்டல் - இலக்கணையால், கேட்டு (இராமன்குரலை) நம்புதலை யுணர்த்திற்று. இனி, முதலிரண்டடிக்கு-இந்தமான்குரலை இலக்குமணன் கேளாதிருக்கவென்று இராமபிரான் தனது மெய்ம்மையான குரலாற் சாபமிட்டான்: பின்னை விதியின்மெய்ம்மை இவ்வாறுவிளைந்தது என்றுஉரைத்தல் பொருந்தாது: அப்பொருளில், இராமபிரான் இட்ட சாபம் பலியாதொழிந்ததென அவனுக்கு ஓரிழிவு தோன்றுதலால்; அன்றியும், 'சாபம்'என்ற சொல் - நிக்கிரகம் [தீமையுண்டாகவேண்டுமென்று முனிவர்முதலிய பெரியோர் வெகுண்டுகூறும் மொழி] என்னும் பொருளதாதலால், இப்பொருளில் வாரா தென்க. ஒழிதென - தொகுத்தல். போலாம் - ஒப்பில்போலி; உவமைப்பொருளில்வாராத போல்என்னுஞ் சொல்: "ஒப்பில்போலியும் அப்பொருட்டாகும்" என்பது, தொல்காப்பியம். வரவு - தொழிற்பெயர். (எ௫)

எ௬. கண்டபினிளையவீரன்முகத்தினாற்கருத்தையோர்ந்த
புண்டரிகக்கணனுமுற்றதுபுகலக்கேட்டான்
வண்டுறைசாலைவந்தானின்றிருவடிவுகாணா
னுண்டுயிரிருந்தானின்னலுழப்பதற்கேதுவொன்றோ.

(இ - ள்.) கண்ட பின் - பார்த்தவுடனே, இளைய வீரன் முகத்தினால் கருத்தை ஓர்ந்த - இலக்குமணனது முகத்தின் குறிப்பினால் (அவனது) மனக்கருத்தைத் தெரிந்துகொண்ட, புண்டரிகம் கணனும் - தாமரைமலர்போலுந் திருக்கண்களையுடைய இராமபிரானும், உற்றது புகல கேட்டான் - நடந்த செய்தியை (அவ்விலக்குமணன்) சொல்லத் தான் கேட்டவனாய், வண்டு உறை சாலை வந்தான் - (பூக்களில் வந்து) வண்டுகள்மொய்க்கின்ற பர்ணசாலைக்கு வந்து, நின் திருவடிவு காணான் - உனது அழகியவடிவத்தைக் காணாது, உண்டு உயிர் இருந்தான் - (மிக்கசோகத்தினால்) உயிர்உண்டோ இல்லையோ எனறு (கண்டோர்) சந்தேகிக்கும்படி மிகச்சோர்ந்திருந்தான்; இன்னல் உழப்பதற்கு ஏது ஒன்றோ - (இவ்வாறு) துன்பமனுபவித்தற்கு வேறொருகாரணமும் வேண்டுமோ? [இவ்வொருகாரணமே போதுமன்றோ என்றபடி]; (எ-று.)

மனைவியைப்பிரிதல் பெருந்துயர்க்குக் காரணமாதலால், இராமபிரான் சீதையைப் பர்ணசாலையிற் காணாது இறந்துபடுவதுபோன்ற பெருந்துன்ப மடைந்தன னென்க. 'இன்னலுழப்பதற்கேதுவொன்றே' என்றது, முன் வாக்கியத்தைச் சமர்த்தித்து நின்றதனால், தொடர்நிலைச்செய்யுட்குறியணி யாம். "அடுத்ததுகாட்டும் பளிங்குபோல் நெஞ்சங், கடுத்தது காட்டும் முகம்", "முன்னம், முகம்போல முன்னுரைப்பதில்," "முகனுரைக்கு முண்ணின்ற வேட்கை" என்றபடி மனத்தின்நினைப்பை முன்னே தெரிவிப்பது முகம் போல வேறில்லை யாதலால், 'முகத்தினாற் கருத்தை யோர்ந்த' என்றார்; இங் கே 'கோசலதேசத்திலுள்ளவர் குறிப்பறிதலில் வல்லவர்' என்னும் பொரு ளுள்ள "இங்கிதஜ்ஞாஸ்து கோஸலா:" என்ற வடநூல்மேற்கோள் அறியத் தக்கது: "குறிப்பினாலுணருங் கொள்கையான்" என்பர் மேல் திருவடிதொழுத படலத்தும். கருத்து - இராமபிரான்கட்டளையைக் கடந்து பிராட்டியின் விருப்பத்தினால் அப்பிராட்டியைத் தனியேவிட்டு வரலாயிற்றே என இலக் குமணன் கொண்ட கவலை. புண்டரீகம்என்பது - வெண்டாமரைக்குப் பெய ராக நிகண்டினுட் கூறப்பட்டிருப்பினும் இங்கே இராமபிரானது திருக்கண் களுக்கு உவமைகூறப்பட்டிருப்பதனால், தகுதிநோக்கிச் செந்தாமரையெனக் கொள்க. உற்றது - மான்குரலைச் செவியுற்று மயங்கிச் சீதை கடுஞ்சொற் கூறி வற்புறுத்தித் தன்னை யனுப்பியது. 'வண்டுறை' என்னும் அடைமொழி, சாலையின் வாய்ப்பை விளக்கிற்று; இனி, வண் துறை எனப்பிரித்து, வளப்ப மான இடத்தையுடைய [வாஸயோக்கியமான] பர்ணசாலை யென்றலு மொ ன்று. சாலை - தழைகளாலமைந்த குடிசை. உயிர் உண்டு இருந்தான் - அரி தில் உயிர்பிழைத்திருந்தன னென்க. ஈற்றடிக்கு - உயிர் உடையனா யிரு க்கும் ஒருவன் துன்பமனுபவிப்பதற்கு வேறொருகாரணமும் வேணடுமோ? இவ்வொன்றே அமையும் எனப் பொதுப்பொருளாகக் கூறலுமாம். இனி, இரா மன் உன்னைக் காணானாயின்பும் இறவாது உயிர்த்துநின்றான், துன்பமனு பவிப்பதற்கு ஒருவழிதானோ? [பலவழிகள் உள] (ஆதலால், இராமபிரானுக்கு உயிர் நீங்கிற்றில்லை) என்றுமாம். (எசு)

எஎ. தேண்டிநேர்கண்டேன்வாழி தீதிலனெங்கோனாகம்
பூண்டமெய்யுயிரேபோகப்பொய்யுயிர்போலநின்ற
வாண்டகைநெஞ்சினின்றுமகன்றிலையழிவுண்டாமோ
வீண்டுநீயிருந்தாயாண்டங்கெவ்வுயிர்விடுமிராமன்.

(இ - ள்.) தேண்டி - (உன்னை நான்) தேடிவந்து, நேர் கண்டேன் - பிர தியக்ஷமாக (இங்கே எதிரிற்) காணப்பெற்றேன்; வாழி - வாழ்வாயாக: எம் கோன் - எமது தலைவனாகிய இராமபிரான், தீது இலன் - ஒருதீங்கையும் அடையாமலிருக்கிறான்; ஆகம் பூண்ட மெய் உயிரே போக - (தனது)உடம் பிற்பொருந்திய உண்மையான உயிரேயாகிய நீ நீங்கிப்போனதனால், பொய் உயிர் போல நின்ற - பொய்யாகியஉயிரையுடையவன்போல விருக்கிற, ஆண்

தகை - ஆண்மைக்குணமுள்ள இராமபிரானது, நெஞ்சில்நின்றும் - மனத்தி லிருந்து, அகன்றிலை - (நீ ஒருபொழுதும்) நீங்கினுயில்லை [அப்பிரான் உன் னையே எப்பொழுதும் கருதியிருக்கிருன் என்றபடி]; (அப்படி நீ நீங்காது அவன்மனத்திலேயே தங்கியிருத்தலால்), அழிவு உண்டாமோ-(அவனுக்கு) அழிவு உளதாகுமோ? [உளதாகாது என்றபடி]; (அன்றியும்), நீ - (அவ னுக்கு உயிர்போன்றுள்ள)நீ, ஈண்டு இருந்தாய் - இங்கே [இலங்கையில்] இருந்தாய்; (ஆதலால்), இராமன்—,அங்கு - அங்கே [வனத்தில்], யாண்டு - எவ்வாறு, எ உயிர் விடும் - எந்தஉயிரை விடுவான்? (எ - று.)

இச்செய்யுள், வருந்துகிற சீதையைத் தேற்றவந்த இடைப்பிறவரல். தேண்டி-தேடி யென்பதன் விரித்தல். வாழி - வாழிய வென்னும் யகரவீற்று வியங்கோள் ஈறுகெட்டுநின்றது; இதில், இ - சாரியை. வரையறைகடந்த மிக்கபேரழகையும் உத்தமகுணங்களெல்லாவற்றையு முடைய பிராட்டிக்கு, அநுமான்,தன்குரங்குக்கண்ணுற் கண்டமையாற் கண்ணெச்சில்பட்டு ஏதேனும் தீங்குவிளையுமோ வென்று தன்மனத்தில் திடுக்கென்றுஉண்டான சங்கையால், அந்தத்திருஷ்டிதோஷம் உண்டாகாதிருக்க வேண்டு மென்று ‘வாழி’ என வாழ்த்தினன். இங்ஙனம் உயர்ந்தோரைக் கீழோர் வாழ்த்துதல், பொங்கும் பரிவையுடைய பெரியபக்தர்களின் மரபு. மிக்க விருப்பத்தின்மேலீட்டினல் அவசியமில்லாதவிடத்திலும் பயசங்கை யுண்டாதல், இயல்பு. இராமபிரான் சீதையைத் தனதுஉயிராகவே பாவித்திருந்தானென்பது, இரண்டாமடியிற் பெறப்படும்; "அர்த்தோவா ஏஷஆத்மந:, யத்பத்நீ [மனைவியென்பவள் புருஷனது பாதியுயிராவள்]" என்று உத்தமமான மனைவியைக் கணவனுக்கு உயிராகக் கூறியிருத்தலும் காண்க. நீ இராமபிரானைவிட்டு இலங்கையில் தனித்திருந்தபோதிலும் அப்பிரான்மனத்தைவிட்டுச் சிறிதும் நீங்காததனல், அவன் உயிர்விட்டானில்லை: அன்றியும், உன்னைத்தவிர அவனுக்கு வேறு உயிரு மில்லை யாதலால், உயிரான உன்னைத் தன்னிடம் உடையனுகப்பெருத அப்பிரான் எவ்வாறு உயிர்விடுவது? என்றவாறு; உன்னிடத்து அப்பிரான் கொண்டுள்ள காதலே அவனுடையஉயிரைக் காத்துநிற்கின்றதென்பது, கருத்து. இவ்வார்த்தைகளால், அநுமானது சொல்வன்மை நன்குவிளங்கும். (௭௭)

௭௮. அந்நிலையாயவண்ணலாண்டுநின்றன்னைநின்னைத்
துன்னிருங்கானும்யாறுமலைகளுந்தொடர்ந்துநாடி
யின்னுயிரினறியேகுமியந்திரப்படிவமொப்பான்
றன்னுயிர்புகழ்க்குவிற்றசடாயுவைவந்துசார்ந்தான்.

(இ - ள்.) அன்னை - தாயே! அ நிலை ஆய - அப்படிப்பட்டதன்மையை யுடையவனுகிய, அண்ணல் - இராமபிரான், ஆண்டுநின்று - அந்தப்பர்ண சாலையிலிருந்து, துன் இருங் கானும் - நெருங்கிய பெரிய காடுகளிலும், யாறும் - ஆறுகளிலும், மலைகளும் - மலைகளிலும், தொடர்ந்து - போய், நின்னை நாடி - உன்னைத் தேடிக்கொண்டு, இன் உயிர் இன்றி ஏகும் இயந்திரம் படி

வம் ஒப்பான் - இனிப்படியிரில்லாமலே செல்லுகிற யந்திரம்அமைத்த பிரதி மையை யொத்து நடப்பவனும், தன் உயிர் புகழ்க்கு விற்ற சடாயுவை - தனதுஉயிரைப் புகழ்பெறும்பொருட்டு ஒழித்த ஜடாயுவென்பவனை, வந்து சார்ந்தான் - வந்துசேர்ந்தான் ; (எ - று.)

அன்னை - அண்மைவிளி. இயந்திரம் - யந்த்ரம் : இராமபிரான் சீதை யின்பிரிவினால் அறிவழிந்திருந்தமையால், அவனுக்கு, இன்னுயிரின்றியேகும் இயந்திரப்படிவத்தை ஒப்புமைகூறினார். இராவணன் சீதையைக்கவர்ந்து செல்கையில் அவனைத்தடுத்தத் தன்னாலியன்றமட்டும் போர்செய்து தம்மவரிட முள்ள அன்பினால் அவர்பொருட்டு உயிர்விட்டவனாதலால், சடாயுவை, 'தன் னுயிர்புகழ்க்குவிற்றசடாயு' என்றார். இராமபிரான் சடாயுவிடம் சென்றுசேர் கையில் அவன் குற்றுயிருடையனாயினும் 'உயிர்விற்ற' என்று இறந்தகாலத் தாற் கூறினது, தெளிவினால். இனி, 'தன்னுயிர்புகழ்க்குவிற்ற' என்பதைச் சடாயுவுக்கு இயற்கையடைமொழியாக் கொள்ளினுமாம். தன்னுயிர் புகழ்க்கு விற்றல் - தனது உயிராகிய பொருளைக் கொடுத்துப் புகழாகிய பண்டத்தைக் கொள்ளுதல் ; ஏகதேசவுருவகம். விற்ற, வில்-முதனிலை. சடாயு - ஜடாயு ; பலமயிர்கள் சேர்த்துத் திரித்த சடைபோன்ற ஆயுளுடையவன் என்பது பொருள் ; மிக்க ஆயுளுடையவனென்பது, கருத்து. இனி, இதற்கு - இறகில் உயிரையுடையவனென்றும், சடையையுடையவனென்றும் பொருள்கூறுவாரு முளர். சூரியசாரதியான அருணனுடைய புத்திரனும், சம்பாதியினது தம்பியு மாகிய இவன், தசரதசக்கரவர்த்திக்கு உயிர்த்தோழனாயிருந்து பின்பு தசரத குமாரர்களான ராமலக்ஷ்மணர்களைத் தண்டகாரணியத்திற் கண்டு அவர்களைத் தனதுபுத்திரர் போலவே பாவித்து அன்புபாராட்ட, அவர்களும் தசரதனிலும் வயசுமுதிர்ந்த இவனைத் தமது பெரியதந்தையாகப் பாவித்துவந்தனராதலால், வைஷ்ணவசம்பிரதாயத்தில் 'பெரியவுடையார்'என்று இவனுக்கு ஒரு திரு நாமம் வழங்கும். இவன் இராவணனோடு எதிர்த்துச்செய்த போரில் அடிபட்டு இறகொடிந்து வீழ்ந்தவுடனே இறந்திடாமல் இராமலக்ஷ்மணர்க்குச் செய்தி யறிவித்தபின்னரே இறக்கக் கருதிச் சிறிதுபொழுது அரிதின்உயிர்தாங்கி யிருந்தனனென அறிக. (எஅ)

எகூ. வந்தவன்மேனிநோக்கிவானுயர் துயரின்வைகி
யெந்தைநீயுற்றதன்மையியம்பெனவிலங்கைவேந்தன்
சுந்தரிநின்னைச்செய்தவஞ்சனைசொல்லச்சொல்ல
வெந்தனவுலகமென்னநிமிர்ந்ததுசீற்றவெந்தீ.

(இ - ள்.) சுந்தரி - கட்டழகுடையவளே ! வந்து - (இராமபிரான் அங்கு) வந்து, அவன் மேனி நோக்கி - (இராவணனால் அடிபட்டுக் குற்றயிருடன் கிடந்த) அந்தச்சடாயுவினது உடம்பைப் பார்த்து, வான் உயர் துயரின் வைகி - மிகவும்அதிகமான துக்கத்தில் அழுந்தி, 'எந்தை - எமதுதந்தையே ! நீ உற்ற தன்மை - நீ (இந்நிலைமையை) அடைந்த வகையை, இயம்பு - சொல் வாயாக,' என - என்றுவினவ,(அதற்குச் சடாயு), இலங்கை வேந்தன் நின்னை

செய்த வஞ்சனை சொல்ல சொல்ல - இலங்கைக்கு அரசனான இராவணன் உன்னை வஞ்சித்துக்கவர்ந்துசென்றதைச் சொல்லும்பொழுதே, சீற்றம் வெம் தீ - கோபமாகிற கொடியஅக்கினி, உலகம் வெந்தன என்ன - எல்லாவுலகங்களும் வெந்துபோனவையாகு மென்று (கண்டோர்) அஞ்சும்படி, நிமிர்ந்தது - (அப்பிரானுக்கு) மிகுதியாக உண்டாயிற்று; (எ - று.)

"கூறின மாற்றஞ் சென்று செவித்துளை குறுகாமுன்ன, மூறின வுதிரஞ் செங்க ணுயிர்த்தன வுயிர்ப்புச் செந்தீ, யேறின புருவ மேன்மே லிரிந்தன சுடர்க ளெங்கும், கீறின தண்டகோளம் கிழிந்தன கிரிக ளெல்லாம்" என்றார் கீழ் ஆரணியகாண்டத்துச் சடாயு வுயிர்நீத்த படலத்தில். வானுயர் - ஒரு பொருட்பன்மொழியுமாம். எந்தை - எந்தந்தை யென்பதன் மரூஉ; யாம் - பகுதி, தை - முறைப்பெயர்விகுதியுமாம். ஸுந்தரி என்ற வடசொல்லுக்கு - அழகியவயிற்றையுடையவ ளென்பது பொருள்; ஈயீறு இகரமாயிற்று: அண்மைவிளியாதலின், இயல்பு. சொல்லச் சொல்ல - அடுக்கு, தொடர்ச்சிப் பொருளது. வெந்தன - தெளிவுபற்றிவந்த காலவழுவமைதி. கோபத்தைத் தீயாக உருவகப்படுத்தியது, மிக்ககொடுமைபற்றி. சீற்றம், சீறு - முதனிலை.

௩௦. சீறியிவ்வுலகமூன்றுந் தீந்துகச்சினவாயம்பா
னூறுவெனென்றுகைவிலோக்கியகாலைநோக்கி
யூறொருசிறியோன்செய்யமுனிதியோவுலகையுள்ள
மாறுதியென்றுதாதையாற்றலிற்சீற்றமாறி.

(இ - ள்.) (இராமபிரான்), சீறி - (இவ்வாறு) கோபித்து, 'இ உலகம் மூன்றும் தீந்து உக - இந்தமூன்றுஉலகங்களும் கரிந்து நீறாய்ப்போம்படி, சினம் வாய் அம்பால் - கோபங்கொண்ட முனையையுடைய அம்பினால், நூறுவென்-அழிப்பேன்,' என்று - என்றுசொல்லி, கை வில் நோக்கிய காலை - (தனது)கையிலுள்ள கோதண்டமென்ற வில்லைப் பார்த்தபொழுது,—தாதை - தந்தைமுறைமையையுடைய அச்சடாயு, நோக்கி - (அதனைப்)பார்த்து, 'ஒரு சிறியோன் - அற்பனொருத்தன், ஊறு செய்ய - (உனக்குத்) துன்பஞ்செய்ய, (அதற்காக), உலகை முனிதியோ - (யாதொருகுற்றமுஞ்செய்யாத) எல்லாவுலகங்களையும் கோபித்து அழிக்கக்கடவையோ? [கோபித்தல் தகுதியன்று என்றபடி]; (ஆகையால்), உள்ளம் ஆறுதி - மனந்தணிவாயாக,' என்று - என்றுசொல்லி, ஆற்றலின் - சமாதானப்படுத்தினதனால், சீற்றம் ஆறி - அக்கோபந் தணிந்து,(எ-று.)— 'ஆறி'என்பது, அடுத்தகவியில் 'என்ன' என்பதனோடு தொடர்ந்து முடியும்.

'சீறி......நூறுவென்'—"பெண்டனியொருத்திதன்னைப் பேதைவாளரக்கன் பற்றிக், கொண்டனனேக நீ யிக்கோளுறக் குலுங்கல்செல்லா, வெண்டிசையிறுதியான வுலகங்களிவற்றை யின்னே, கண்டவானவர்களோடுங் களையுமா றின்று காண்டி" என்பது, ஆரணியகாண்டம். அம்பைவிடப்புகுகிற தனது கோபத்தை, அம்பின்மே லேற்றி, 'சினவாயம்பு' என்றான்; உபசாரவழக்கு: அன்றியும், அம்புசெல்லும்போது கோபத்துடன் செல்வதுபோலத்

தோன்றுதல் இயற்கை யென்பதையும் உணர்க. 'ஊறுஒருசிறியோன்செய்ய முனிதியோ' என்பதை, "ஒருவனிங் கிடுக்கண்செய்ய, வென்றருமுலகை மாய்த்தல் விதியன்றால்" என்பதனோடு ஒப்பிடுக. சடாயு இராமபிரானைத்தேற் றியதை "வம்பிழைகொங்கைவஞ்சி வனத்திடைத் தமியள் வைகக், கொம்பிழை மானின்பின்போய்க் குலப்பழி கூட்டிக்கொண்டீ, ரம்பிழைவரிவிற் செங்கை யையன்மீ ராயுங்காலே, யும்பிழையென்பதல்லா லுலகஞ்செய்பிழையுமுண் டோ" என்றுகூறுதல் முதலியவற்றால் உணர்க. ஓகாரம் - தகுதியின்மை குறிக் கும். உலகு-சாதியொருமை. உள்ளம் மாறுதி, சீற்றம் யாறிஎன்றும் பிரிக்கலாம்.

அக. எவ்வழியேகியுற்றான்யாண்டையா னுறையுள்யாது
செவ்வியோய்கூறுகென்னச்செப்புவா னுற்றசெவ்வி
வெவ்வியல்விதியின்கோட்பால் வீடினன்கழுகின்வேந்த
னெவ்வியவரிவிற்செங்கையிருவருமிடரின்வீழ்ந்தார்.

(இ - ள்.) 'செவ்வியோய் - நன்மைக்குணமுடையவனே ! (அவ்வரக் கன்), எ வழி ஏகி உற்றான் - எவ்வழியாகப் போய்ச்சேர்ந்தான் ? யாண்டை யான்) - எவ்வுலகத்தி லுள்ளவன்? உறையுள் யாது - (அவனது) இருப்பிடம் எது? கூறுக - சொல்வாயாக', என்ன- என்று (இராமபிரான் சடாயுவை நோக்கி) வினவ,—செப்புவான் உற்ற செவ்வி - (அதற்கு உத்தரஞ்) சொல்லத் தொடங்கியபொழுது, கழுகின் வேந்தன் - கழுகுகட்கு அரசனாகிய அச் சடாயு, வெம் இயல் விதியின் கோட்பால் - கொடுந்தன்மையையுடைய விதி யின் வசத்தினால், வீடினன் - (அவ்விவரங்களை முற்றும்சொல்லாமலே) உயிர் நீங்கினான் ; எவ்விய வரி வில் செம் கை இருவரும் - (அம்புகளை) ஏவுதற்கு உரிய கட்டமைந்த வில்லை யேந்திய சிவந்ததிருக்கைகளையுடைய இராம லக்ஷ்மணர்இருவரும், இடரின் வீழ்ந்தார் - துன்பத்தில் அழுந்தினார்கள்.

"போய தவ்வரக்க னெங்கே புகலெனப் புள்ளின்வேந்த, னேய்வினை னுணர்வுந்தேய வுரைத்தில னுயிருந்தீர்ந்தான்" என்பது, ஆரணியகாண்டம். உறையுள்-உறைதல், வசிக்குமிடத்தையுணர்த்தினது,தொழிலாகுபெயர்; இனி, உறை-உறைகின்ற. உள்-இடம் என வினைத்தொகையாகவுமாம். கூறுகென்ன— தொகுத்தல். விதி - ஊழ்வினை; வடசொல். விதியின்கோட்பு - மரணமடைய வேண்டிய காலம். எவ்விய - ஏவிய என்பது எதுகைநயம்நோக்கிக் குறுக்கலும் விரித்தலும் பெற்றது. இனி, ஏவ்வம் என்னும் பகுதியி னடியாப் பிறந்த எச்ச மாக்கொண்டு, (பகைவர்க்குத்) துன்பஞ்செய்கிற என்றுமாம். கை சிவந்திருத் தல், உத்தமபுருஷலக்ஷணம். (அக)

அஉ. அயர்த்தவரரிதிற்றேறியாண்டொழிற்றுறைதக்காண்டுச்
செயத்தகுகடன்மையாவுந்தேவருமருளச்செய்தார்
கயத்தொழிலரக்கன்றன்னைநாடிநாங்காண்டுமென்னுப்
புயற்றொடுகுடுமிக்குன்றுங்கானமுங்கடந்துபோனார்.

(இ - ள்.) அயர்த்தவர் - (இவ்வாறு) துன்பப்பட்ட இராமலக்ஷ்மணரிருவரும், அரிதின் தேறி - அருமையாக (அத்துன்பத்தினின்று) தெளிந்து, ஆண் தொழில் தாதைக்கு-ஆண்மைக்குணமுள்ள செய்கையையுடைய தமக்குத் தந்தைமுறையான சடாயுவுக்கு, ஆண்டு- (இறந்த) அப்பொழுது [அவ்விடத்தில்], செய தகு கடன்மை யாவும் - செய்யத்தக்க கடமையாகிய சரமகிரியைகளெல்லாவற்றையும், தேவரும் மருள - தேவர்களும் (கண்டு) வியக்கும்படி, செய்தார் - செய்துமுடித்து, (பின்பு), 'கய தொழில் அரக்கன் தன்னை - இழிவாகிய தொழிலையுடைய இராவணனை, நாம்—, நாடி காண்டும்- தேடிக்கண்டுபிடிப்போம்', என்று - என்றுஎண்ணி, புயல் தொடு குடுமி குன்றம் - மேகமண்டலத்தையளாவிய சிகரங்களையுடைய மலைகளையும், கானமும் - காடுகளையும், கடந்து போனார் - தாண்டிச்சென்றார்கள்; (எ-று.)

சீதையைப்பிரிந்ததும், தந்தைமுறையிலுள்ள சடாயு தமக்காகஇறந்ததும், இராவணன்செய்தி தெரிந்துகொள்ளமுடியாமற்போனதும் ஆகிய பொறுக்கவொண்ணாத மூவகைப்பெருந்துயரத்தினாற் பீடிக்கப்பட்டன ராதலின், அரிதின் தேறவேண்டுவதாயிற்று. சீதையை இராவணன் கவர்ந்துசென்றபோது அதனைக்கண்டு மனம்பொறாது அவன் மிக்கவலியுள்ளவனென்று அறிந்தும் அவனோடெதிர்த்து மிக்கவீரத்துடன்பொருது அவனது துவசம் குண்டலம் கிரீடம் கவசம் வில் சாரதி தேர்க்குதிரைகள் தேர் அம்பறாத்தூணி முதலியவற்றைச் சிதைத்து முடிவில் அவனெறிந்த தெய்வவாளினாற் சிறகறுபட்டு இறந்தன னாதலால், அவ்வீரத்தொழிலைப் பாராட்டி, சடாயுவை, 'ஆண்டொழில்தாதை' என்றான். செயத்தகு கடன்கள் - தகநஸம்ஸ்காரம் முதலியன. தேவாதிதேவனான இராமபிரானது கையினாற் சரமகிரியைபெறும்படி இச்சடாயுவின்பாக்கியம் இருந்தபடி என்னே! என்று தேவர்களும் வியந்தன ரென்க; இனி, சரமகிரியைகளின் சிறப்பினாலாகவுமாம்: அன்றி, ஒருகழுகுக்கு இவ்விருவரும் அந்திமக்கிரியை செய்வதன் காரணம் யாது என உணராது திகைத்தன ரென்றலுமொன்று. தேவர்மருளுதல் கூறவே, மற்றையோர் மருளுதல் தானே பெறப்படும். கயமை - கீழ்மை. இராமலக்ஷ்மணரைப் பிரியும்படி சூழ்ச்சிசெய்து தனது வீரத்தினாலுமன்றிக் கேவலம் வஞ்சனையாற் சீதையைக் கவர்ந்துசென்ற நீசத்தன்மையுடையவ னாதலால், இராவணனை 'கயத்தொழிலரக்கன்' என்றான். 'புயல்தொடுகுடுமி' என்றது, மலையின் உயர்வை விளக்கவந்த தொடர்புயர்வுநவிற்சியணி. (அஉ)

அங. அவ்வழி நின்னைக் காணா தயர்த்தவ ரரிதிற் றேறிச்
செவ்வழி நயனஞ் செல்லு நெடுவழி சேறு செய்ய
வெவ்வழ லுற்ற மெல்லெண் மெழுகென வழியு மெய்ய
ரிவ்வழி யினைய பன்னி யறிவழிந் திரங்க லுற்றான்.

(இ - ள்.) அ வழி - அவ்விடங்களிலெல்லாம், நின்னை காணாது-உன்னைப் பார்க்கப்பெறாமல், அயர்த்தவர் - வருந்தின அவ்விராமலக்ஷ்மணர், அரிதின்

தேறி - அருமையாக அவ்வருத்தந் தெளிந்து,—செவ் வழி நயனம் - செம்மைமிகுந்த (தமது) திருக்கண்களால், செல்லும் நெடு வழி - (தாம்) போகின்ற பெரியவழியை, சேறு செய்ய - (அவற்றினின்றுபெருகுகிற நீரைக்கொண்டு) சேறாக்கிக்கொண்டிருக்க,—வெம் அழல் உற்ற மெல் என் மெழுகு என அழியும் மெய்யன் - வெப்பத்தையுடைய நெருப்பிற் போகட்ட மென்மைக் குணமுடைய மெழுக்குப் போலக் கரைகிற உடம்பையுடையனாகிய இராமபிரான், இ வழி - இவ்வாறு, இனைய பன்னி - இத்தன்மையான வார்த்தைகளைச் சொல்லி, அறிவு அழிந்து - அறிவுகலங்கி, இரங்கல் உற்றான் - சோகிக்கத்தொடங்கினான்; (எ - று.)—அவற்றை, மேல் நான்குகவிகளிற் கூறுகின்றார்.

செவ் அழி நயனம் எனப் பிரித்து, செம்மை [பொலிவு] அழிந்த கண்களெனினுமாம். மெழுகு - அரக்கு. மெழுகுக்கு மென்மை - தீயிற்பட்டதும் இளகுந்தன்மை. உபமானத்தில் 'அழல்' என்பதற்கு ஏற்ப, சோகத்தை உபமேயமாகக் கொள்க. 'நயனம்நெடுவழிசேறுசெய்ய' என்றது, துயரின் மிகுதியை விளக்கும். (அ௩)

வேறு.

அச. கன்மத் தைஞாலத் தவராருள ரேக டப்பார்
பொன்மொய்த் ததோளான் மயல்கொண்டு புலன்கள் வேறாய்
நன்மத் தைநாகத் தயல்சூடிய நம்ப னேபோ
லுன்மத் தனானன் றனையொன்று முணர்ந்தி லாதான்.

(இ - ள்.) ஞாலத்தவர் - இந்நிலவுலகத்திலுள்ளவர்களுள், கன்மத்தை - ஊழ்வினைப்பயனை, கடப்பார் - கடக்கவல்லவர், ஆர் உளர் - யாவர் இருக்கின்றனர்? [எவராலும் கடக்கமுடியாது என்றபடி];பொன் மொய்த்த தோளான் - வீரலக்ஷ்மிதங்கிய திருத்தோள்களையுடைய இராமபிரான், மயல் கொண்டு - புத்திமயக்க மடைந்து, புலன்கள் வேறு ஆய் - ஐம்புலன்களும் தத்தம் நிலைமைமாறப்பெற்று, தனை ஒன்றும் உணர்ந்திலாதான் - தன்னை(த்தான்) சிறிதும் உணராதவனாய் [தன்வசந்தப்பிப் பரவசப்பட்டு],—நல் மத்தை - நல்ல ஊமத்தம்பூவை, நாகத்து அயல் - (ஆபரணமாகத் தலையிலணிந்த) பாம்புகளின் பக்கத்தில், சூடிய - அணிந்த, நம்பனே போல் - சிவபிரான் போல, உன்மத்தன் ஆனான் - பித்தம்பிடித்தவனானான் ; (எ - று.)

பொன்மொய்த்த தோளான் - அழகுநிறைந்ததோள்களையுடையவனென்றுமாம். இனி, பொன் - கருவியாகுபெயராய், பொன்னாபரணங்களையணிந்த தோள்களையுடையவனெனினுமாம். 'மயல்கொண்டு புலன்கள்வேறாய்'என்ற தொடரை உபமானமாகிய நம்பனுக்கும் கூட்டுக. சிவபிரான் இங்ஙனமாயினமை, பிரமனதுசிரசைக்கொய்து அதுதன்கையிற்பற்ற வருந்திப்பிச்சையெடுத்த போது. மத்தை - ஊமத்தை ; முதற்குறைவிகாரம்: பூவிற்கு முதலாகுபெயர். ஊமத்தைக்கு நன்மை - சிவபிரானாற் சூடப்படும் பேறு பெற்றமை. நம்பன் - (அடியார்களால்) நம்பிச்சரணமடையப்படுபவன்; இனி, நமக்குஇன்னானென்

னும் பொருள்பட வருவதோர் உயர்ச்சிச்சொல்லாகவுமாம். 'தனையொன்று முணர்ந்திலாதான்' என்பதற்கு - தானும் தன்தன்மையைச் சிறிதும் அறியப் பெறாதவன் என்று உரைத்து, தோளானுக்கு அடைமொழியாகவுங் கொள்ள லாம்; "தனக்குந் தன்தன்மையறிவரியானை" என்றார் பெரியாரும். இராம பிரான் பரம்பொருளான கடவுளாயிருந்தும் இவ்வாறு சீதையின்பிரிவுக்கு வருந்தியது, தான் கொண்டுள்ள மநுஷ்யபாவனையின் மிகுதியா லென்க. இச் செய்யுள் - வேற்றுப்பொருள்வைப்பணி: இது, வடமொழியில் அர்த்தாந் தரந்யாஸாலங்கார மெனப்படும்; முதலடியிற் கூறிய பொதுப்பொருளால் பின் னடிகளிற்கூறுஞ் சிறப்புப்பொருளைச் சாதித்துள்ளமை காண்க. இவ்வணி யோடு உவமையணியும் திலதண்டுலந்யாயத்தாற் சேர்ந்துவந்தது, சேர்வை யணியாம்.

சிவபிரான் நாகஞ்சூடிய கதை:—தவச்செருக்கினால் தன்னைமதியாத தாருகவனத்துமுனிவர்களுடைய கருவத்தைச் சிவபிரான் பங்கஞ்செய்ய, அங்ஙனம் மானபங்கப்பட்ட அம்முனிவர்கள் ஒருயாகம்செய்து மந்திரபலத் தால் அவ்வோமத்தீயினின்று எழுந்த நாகங்களைச் சிவன்மேலேவ, அவ்வாறே சீறிக் கொல்லவந்த நாகங்களை அப்பிரான் வலியடக்கி ஆபரணங்களாக அணிந் தனன் என்பதாம்.

இதுமுதற் பதினொரு கவிகள் - பெரும்பாலும் மூன்றுஞ்சீர் மாங்கனிச் சீரும், மற்றை நான்கும் மாச்சீர்களுமாகி வந்த நெடிலடி நான்கு கொண்ட கலிநிலைத்துறைகள். (௮௪)

௮௫. போதாயினபோதுனதண்புனலாடல்பொய்யோ
சீதாபவளக்கொடியன்னவட்டேடியென்க
ணீதாதருகிற்றிலையேனெருப்பாதியென்னாக்
கோதாவரியைச்சினங்கொண்டனன்கொண்டலொப்பான்.

(இ - ள்.) 'போது ஆயின போது - சூரியோதயமானபொழுது, பவளம் கொடி - பவழக்கொடிபோன்ற, சீதா - சீதை, உன தண் புனல் ஆடல் - உனது குளிர்ந்தநீரில் முழுகுவது, பொய்யோ - பொய்யாகுமோ? [மெய்யே யாம்]; (ஆதலால்), நீ—, அன்னவள் தேடி - அச்சீதையைத் தேடி, என்கண் தா - என்னிடம் கொணர்ந்துகொடு; தருகிற்றிலை எல் - (அங்ஙனம்) கொடா மற்போவாயானால், நெருப்பு ஆதி - (எனது அம்பினால்) நெருப்பாய் வெந்து விடுவாய்,' என்னா - என்றுசொல்லி, கொண்டல் ஒப்பான் - காளமேகம் போன்ற இராமபிரான், கோதாவரியை - கோதாவரிநதியை நோக்கி, சினம் கொண்டனன் - கோபங்கொண்டான்; (எ-று.)

பஞ்சவடியி லிருந்தபொழுது நாடோறும் காலையில் கோதாவரியில் சீதை நீராடும்வழக்கத்தைக் கொண்டிருந்ததனால், அந்நதிக்குச் சீதையின்நிலை மை தெரியுமென்று இராமபிரான் அதனை வினவுவானாயினன். பிரிவுத்துயர் மிகுதியால் வருந்துகின்றவர்கள், பிரிந்தபொருளோடு சிறிதுசம்பந்தப்பட்ட பொருள்களை நோக்கி இரங்கிக்கூறுதல், மரபு. ஸீதா - வடமொழி ஆவீறு

ஐயாகாமல் நின்றது. ஆதி - முன்னிலையொருமைமுற்று. கொண்டல் - நீர் கொண்டது. (அரு)

அசு. குன்றேகடிதோடினைகோமளக்கொம்பரன்ன
தென்றேவியைக்காட்டுதிகாட்டலையென்னினிவ்வாம்
பொன்றேயமையும்முனுடைக்குலமுள்ளவெல்லா
மின்றேபிளவாவெரியாக்கரியாக்கவென்றான்.

(இ - ள்.) 'குன்றே - மலையே! கடிது ஓடினை - விரைவில் ஓடிவந்து, கோமளம் கொம்பர் அன்ன என் தேவியை காட்டுதி - அழகிய பூங்கொம்பு போன்ற எனதுமனைவியாகிய சீதையைக் காண்பிப்பாயாக: காட்டலை என்னின் - காண்பியாமற்போவாயானால், உன் உடை குலம் உள்ள எல்லாம் - உன்னுடைய இனங்களாகவுள்ள மலைகளெல்லாவற்றையும், இன்றே - இப்பொழுதே, பிளவா - பிளந்து, எரியா - எரித்து, கரி ஆக்க - கரியாகச்செய்வதற்கு, இ அம்பு ஒன்றே அமையும் - (எனது)இந்த அம்பு ஒன்றே போதும்', என்றான் - என்றுகூறினான், (இராமபிரான்) ; (எ - று.)

இடம்விட்டுப்பெயராத அசலமாகிய மலையை நோக்கி 'கடிதோடினை காட்டுதி' என்று இராமபிரான் கூறினது, பிரிவுத்துயரினால் தோன்றிய மதிமயக்கத்தாலாகிய மிக்கமனத்தடுமாற்றத்தினாலென்க. கோமளம் - மென்மையுமாம். கரி - கருமையையுடையது, அல்லது கரிந்தது : காரணக்குறி. (அசு)

அஎ. பொன்மானுருவாற்சிலமாயைபுணர்க்கவன்றோ
வென்மானகல்வுற்றனளிப்பொழுதென்கணென்னா
நன்மான்களைநோக்கிநுந்நாமமுமாய்ப்பெனின்றே
வின்மாண்கொலைவாளியினென்றுவெகுண்டுநின்றான்.

(இ - ள்.) '(மாரீசனென்பவன்), பொன் மான் உருவால் - பொன்மயமான மானின் வடிவத்தைக் கொண்டு, சில மாயை - சில வஞ்சனைகளை, புணர்க்க அன்றோ - செய்ததனாலல்லவோ, என் மான் - எனது மான்போன்ற மனைவி, இப்பொழுது—, என்கண் அகல்வுற்றனள் - என்னிடத்தினின்று பிரிந்து நீங்கினாள்,' என்னா - என்று எண்ணி, நல் மான்களை நோக்கி - (காட்டிலுள்ள) அழகிய மான்களைப் பார்த்து, 'இன்றே - இப்பொழுதே, வில் மாண் கொலை வாளியின் - வில்லினால் எய்யப்படுகிற மாட்சிமையையுடைய கொல்லுதல்தொழிலில்வல்ல (எனது) அம்பினால், நும் நாமமும் - உங்கள்பெயரையும், மாய்ப்பென் - (உலகத்தில் இல்லையாம்படி நான்) ஒழிப்பேன்', என்று - என்று சொல்லி, வெகுண்டு நின்றான் - (அவற்றின்மீது) கோபித்துநின்றனன், (இராமபிரான்); (எ - று.)

மாரீசன் தான் மாயமாக மான்வடிவுகொண்டு வந்து சீதையின் பிரிவுக்குக் காரணமாய் நின்றதனால், மானினங்களின்மீதெல்லாம் இராமபிரானுக்குப் பெருஞ் சினமுண்டாயிற்று; (இதனை, தனது தந்தையான பரீக்ஷித்து மகாரா

சன் பாம்புதீண்டி இறந்தனனென்ற காரணத்தினால், அவன் மைந்தனான ஜநமேஜய மகாராசன் பாம்பினங்களெல்லாவற்றின்மீதும் பகைகொண்டு அவற்றைக் கொல்லுதற்குச் சர்ப்பயாகம் செய்யத் தொடங்கியமைபோலக் கொள்க.) இச்செய்யுள், அதிமலர்ச்சியணியின்பாற்படும்; வடநூலார் உல்லாஸாலங்காரமென்பர்: இதன் இலக்கணம், ஒன்றனது குற்றநற்றங்களால் மற்றொன்றற்கு அவை உளவாகச் சொல்லுதல். இங்கே மாயமான்வடிவங்கொண்ட மாரீசனது குற்றத்தினால் எல்லா மான்களின்மீதும் அக்குற்றத்தை ஏற்றிக்கூறியமை காண்க. மான் - உவமையாகுபெயர்; மருண்ட பார்வையில் உவமம். 'நல்மான்கள்' என்றது, அவற்றின் குற்றமற்ற தன்மையை விளக்கிற்றென்னலாம். பிராட்டியால் வளர்க்கப்பட்டுத் தனக்கு இதமாயிருந்த மான்களையும் வெகுண்டானென்பார் 'நன்மான்களை' என்றாரென்றுங் கொள்ளலாம். நாமமும் மாய்ப்பென் - கருவற அடியோடு அழிப்பேன் என்றபடி. வாளிக்கு மாணபு - மிக்க கூர்மையுடைமையும், குறிதப்பாமையும். மாயையாவது - உள்ளதை இல்லாததாகவும், இல்லாததை உள்ளதாகவும், ஒன்றை மற்றொன்றாகவும் காட்டும் சக்தி.

(அஎ)

அஅ. வேறுற்றமனத்தவனின்னதொர்விம்மனோவ
வாறுற்றநெஞ்சிற்றனதாருயிராயதம்பி
கூறுற்றசொல்லென்றுளகோதறுநன்மருந்தாற்
றேறுற்றுயிர்பெற்றியல்புஞ்சிலசொல்லலுற்றான்.

(இ - ள்.) (இராமபிரான்), வேறு உற்ற மனத்தவன் - வேறுபட்ட மனத்தையுடையவனாய் [மனத்தின் இயற்கைநிலை மாறி], இன்னது ஓர் விம்மல் நோவ - இப்படிப்பட்டதொரு துன்பத்தினால் வருந்த, (பின்பு). ஆறுற்ற நெஞ்சின் தனது ஆர் உயிர் ஆய தம்பி கூறுற்ற சொல் என்று உள கோது அறு நல் மருந்தால் - தணிந்த மனத்தையுடைய தனது அரிய உயிர்போன்ற தம்பியாகிய லக்ஷ்மணன் சொன்ன வார்த்தையென்றுள்ள குற்றமில்லாத நல்ல மருந்தினால், தேறுற்று - தெளிவடைந்து, உயிர் பெற்ற - உயிர் பெற்றபின் நடந்த, சில இயல்பும் - சில தன்மைகளையும், சொல்லல் உற்றான் - சொல்லத் தொடங்கினன், (அநுமான்); (எ - று.)

இச்செய்யுள், அநுமானதுவார்த்தையில் இடைப்பிறவரலாகவந்த கவிக்கூற்று. ஆறு உற்ற நெஞ்சின் - சன்மார்க்கத்திற் பொருந்திய மனத்தையுடைய என்றுமாம். சொல்லென்றுள - சொல்லாகிய என்றபடி. இராமபிரானது மனோவியாதியை நீக்கினமையின், இலக்குமணனது சொல்லை 'நன்மருந்து' என்றது. கீழ் இராமபிரான் உயிர் நீங்கும்படியான துன்பத்தை யடைந்தமை தோன்ற, இங்கு, 'உயிர்பெற்ற' என்றார். பெற்றியல்பு - விகாரம். 'சொல்லலுற்றேன்' என்றும் பாடம்.

(அஅ)

அகூ. வந்தானிளையானொடுவானுயர்தேரின்வைகு
நந்தாவிளக்கின்வருமெங்குலநாதன்வாழுஞ்
சந்தார்தடங்குன்றினிற்றன்னுயிர்க்காதலோனுஞ்
செந்தாமரைக்கண்ணனுநட்டனர்தேவருய்ய.

(இ - ள்.) வான் - ஆகாயத்தில், உயர் தேரின் - சிறந்த தேரிலே, வைகும் - செல்லுகின்ற, நந்தா விளக்கின் - கெடாதசுடராகிய சூரியனிடத்தினின்றும், வரும் - தோன்றின, எம் குலம் நாதன் - எங்கள் குலத்துக்குத் தலைவனாகிய சுக்கிரீவன், வாழும் - வாழ்கிற, சந்து ஆர் தட குன்றினில் - சந்தனமரங்கள் நிறைந்துள்ள பெரிய (ருசியமூக) பருவதத்தில், இளையானொடு வந்தான் - (இராமபிரான்) இலக்குமணனுடனே (சீதையைத் தேடிக்கொண்டு) வந்துசேர்ந்தான்; (அங்கு), செம் தாமரை கண்ணனும் - செந்தாமரைமலர் போன்ற திருக்கண்களையுடைய அவ்விராமபிரானும், தன் உயிர் காதலோனும் - அவனது பிராணசிநேகிதனாகிய சுக்கிரீவனும், தேவர் உய்ய - தேவர்கள் துன்பம்நீங்கும்படி, நட்டனர் - சிநேகித்தார்கள்; (எ - று.)

சூரியனது தேர்க்கு உயர்வு - ஒற்றைச்சக்கரமுடையதாதலும், ஓய்வில்லாமல் அந்தரத்தில் திரிந்துகொண்டிருந்தும் சிறிதும் கெடாததாதலும் முதலியன. சூரியன் தான் ஆயிரங்கிரணங்களையுடையனாய் மற்றைச்சுடர்களாகிய சந்திர அக்கினிகட்குத் தன் ஒளியைக் கொடுத்துத் தான் என்றும் ஒருபடிப்பட அக்கிரணங்களிற் குறைவின்றி விளங்குதலால், அவனை 'நந்தாவிளக்கு' என்றார்; இது - அடையடுத்தவாகுபெயர். சந்து - சந்தநமென்ற வடசொல்லின் சிதைவு. 'தன்னுயிர்க்காதலோன்' என்றது, சிநேகித்தது முதல் உள்ள நிலைமையைக் கருதி. இனி, தடங்குன்றினில் தன்னுயிர்க்காதலோன் என்பதற்கு - (வாலியின்வலிமைக்கு அஞ்சி அவன்வரக்கூடாததாகிய) ருசியமூக பருவதத்தில் தங்கித் தன் உயிர் அழியாதபடி காக்கவிரும்பியவன் என்றும் பொருள்கூறலாம். (ருசியமூகபருவதத்தில் வாலி வந்தால் உயிரிழக்கும்படி மதங்கமுனிவர் சாபமிட்டுள்ளனரென அறிக.) இராமசுக்கிரீவரது சிநேகம், தேவர்க்குப் பகைவர்களாகிய இராவணாதி ராக்ஷசர்களது சங்காரத்துக்குப் பிரதானகாரணமாதலால், 'தேவருய்ய நட்டனர்' என்றார். (அகூ)

கூo. உண்டாயதுமுற்றதுமுற்றுமுணர்த்தியுள்ளம்
புண்டானெனநோயுறவிம்முறுகின்றபோழ்தி
னெண்டானிழந்திட்டனனேந்திழையாங்கள்காட்டக்
கண்டானுயர்வேதமும்போதமுங்காண்கிலாதான்.

(இ - ள்.) உயர் வேதமும் - சிறந்தவேதங்களாலும், போதமும் - ஞானத்தாலும், காண்கிலாதான் - அறியக்கூடாத தன்மையையுடைய இராமபிரான், —உண்டாயதும் - (தனக்கு) நேர்ந்த துன்பத்தையும், உற்றதும் - (அத்துன்

பம்நீங்கும்பொருட்டுத் தான் அங்கு) வந்ததையும், முற்றும் உணர்த்தி - முழுவதும் சொல்லி,—உள்ளம் - மனம், புண் தான் என - புண்பட்டதே யென்னும்படி, நோய் உற - மநோவியாதி மிக, விம்முறுகின்ற போழ்தின் - சோகிக்கிறபொழுதில்,—ஏந்து இழை - (நீ) தரித்த ஆபரணங்களை, யாங்கள் - நாங்கள், காட்ட - எடுத்துக்காண்பிக்க, கண்டான் - பார்த்து, எண் இழந்திட்டனன்- அறிவை யிழந்தான் [மூர்ச்சித்தான் என்றபடி]; (எ - று.)

உண்டாயது - சீதாவிரகம். சீதையின் ஆபரணங்களை அநுமான் சுக்கிரீவனுடன் இருந்து எடுத்துக்காட்டினதனால், 'யாங்கள்காட்ட' என்றான். இவ்விஷயத்தை அநுமான் மீண்டுங் கூறினது, கதைத்தொடர்ச்சிபற்றி யென்க. வேதம் என்னும் சொல்லுக்கு - (செய்யத்தக்கவற்றையும் தகாதவற்றையும் விதிவிலக்குக்களால்) தெரிவிப்பது என்று பொருள். வேதமும் போதமும் காண்கிலாதான் என்பதற்கு - சிந்தையும் மொழியும் செல்லா நிலைமையையுடையவனென்பது கருத்து. தான் - அசை. ஈற்றடியில் 'கண்டான்', 'காண்கிலாதான்' என மாறுபட்டசொற்கள் வந்தது, தொடைமுரண். (௬௦)

௬௧. தணிகின்றநஞ்சொற்றொடர்தன்மையத்தன்மைதன்னைத்
துணிகொண்டிலங்குஞ்சுடர்வேலவன்றூயநின்க
ணணிகண்டுழியேயமுதந்தெளித்தாலுமாறாப்
பிணிகொண்டதுபண்டுண்டாயினும்பேர்ப்பதன்றால்.

(இ - ள்.) தணிகின்ற - (இராமபிரானது மூர்ச்சையைத்) தணித்தற்காகக் கூறிய, நம் சொல் - எங்களுடைய சொற்கள், தொடர் தன்மை - (அப்பிரானது செவியிற்) செல்வதனால், அ தன்மைதன்னை துணிகொண்டு - அவ்வறிவிழந்த தன்மை நீங்கி, இலங்கும் - உயிர்பெற்று விளங்கும், சுடர் வேலவன் - ஒளியையுடைய வேற்படையையுடைய இராமபிரான், தூய நின்கண் அணி கண்டுழியே - தூய்மையையுடைய உன்னிடத்தில் இருந்தனவாகிய [உனது] ஆபரணங்களைப் பார்த்தபொழுதே,—அமுதம் தெளித்தாலும் ஆறா - (சாவாமருந்தாகிய) அமிருதத்தை (உடம்பின்மீது) தெளித்தாலும் தணியாத, பிணி - பெருநோய், கொண்டது - (அவனை) அடைந்தது: அது பண்டு உண்டு ஆயினும் - அப்பிணி முன்னமேதொடங்கி உள்ளதானாலும், பேர்ப்பது அன்று - நீக்கத்தக்கதொன்றன்று; (எ - று.)

உன்னைப்பிரிந்தநாள் முதல் இராமபிரானுக்கு உண்டான துன்பநோய் நீ கழற்றியெறிந்துவிட்டுப்போன ஆபரணங்களைக் கண்டபின் அமிருதந்தெளித்தாலும் ஆறாதபடி முதிர்ந்து மூர்ச்சையையும் உண்டாக்கிவிட்டது; பின்பு நாங்கள் எத்தனையோ சமாதானவார்த்தைகள் சொன்னபோதிலும் அவற்றால் அப்பிரானது மூர்ச்சைநோய்மாத்திரம் ஒருவாறு நீங்கிற்றேயல்லாமல் நெடுநாளாயுள்ள மனப்பிணி தீர்ந்தபடியில்லை யென்பது கருத்து. தணிகின்ற - தணிக்கின்ற; பிறவினைப்பொருளில்வந்த தன்வினை: இனி, தாழ்ந்து சொல்லு

கின்ற என்றுமாம். சுக்கிரீவன் முதலியோரையுங் கூட்டி உளப்பாட்டுத்தன்மைப்பன்மையாக 'நம்சொல்' என்றான். அத்தன்மை - கீழ்க்கவியிற் கூறிய 'எண்டானிழந்திட்டதன்மை.' துணி கொண்டு - துணித்தலைக் கொண்டு: துணித்தல் - ஒழித்தல். இலங்கும் வேலவன் என இயையும். இங்கே, வேல் என்றது, ஆயுதமாத்திரமாய் நின்றது. (௬௧)

௬௨. அயர்வுற்றரிதிற்றெளிந்தம்மலைக்கப்புறத்தோர்
றுயர்பொற்கிரியுற்றுளன்வாலியென்றோங்கலொப்பான்
றுயருற்றவிராவணன்வாலிடைப்பண்டுதூங்க
மயர்வுற்றபொருப்பொடுமால்கடறாவிவந்தான்.

இதுவும், மேற்கவியும் - குளகம்.

(இ - ள்.) அயர்வு உற்று - (இராமபிரான் அவ்வாறுயுள்ள மனப்பிணியினாற்) சோர்வடைந்து, அரிதின் தெளிந்து - (பின்) அருமையாகத்தேறி,— அம் மலைக்கு அப் புறத்து ஓர் உயர் பொன் கிரி உற்று உளன்-அந்த ருசியமூக பருவதத்துக்கு அப்பாலுள்ளதோர் உயர்ந்த அழகிய (கிஷ்கிந்தமென்னும்) மலையிற் பொருந்தியுள்ளவனும்,—வாலி என்று - வாலியென்று பெயர்சொல்லப்பட்டு, ஓங்கல் ஒப்பான் - மலையையொத்திருப்பவனும்,—துயர் உற்ற இராவணன் வாலிடை பண்டு தூங்க - (சீ)துன்பமுறுதற்குக் காரணமான இராவணன் (தனது) வாலிலே முன்னொருகாலத்தில் (கட்டுப்பட்டுத்) தொங்கும்படி, மயர்வு உற்ற பொருப்பொடு மால் கடல் தாவி வந்தான் - (கண்டவர்) மயக்கமடைவதற்குக் காரணமான மலைகளையும் பெரிய கடல்களையும் (தன் வழக்கப்படியே) தாண்டிவந்தவனும், (எ - று.)—'ஆயானை' என மேற் கவியோடு இயையும்.

தெளிந்து என்னும் வினையெச்சம், மேற்கவியில் 'உயிர்வாங்கி' என்பதைக் கொண்டுமுடியும். பொற் கிரி - பொன்னையுடைய மலை யென்றுமாம். ஓங்கல் - உயர்ந்திருப்பது என மலைக்குக் காரணப்பெயர். 'உற்ற' என்னும் பெயரெச்சம் - இரண்டிடத்தும், காரியப்பொருளது. இனி, துயருற்ற இராவணன் என்பதற்கு - (தனது எண்ணம் நிறைவேறாது தான் வாலியினிடத்து அகப்பட்டுக்கொண்டமையால்) துன்பத்தையடைந்த என்றும் கொள்ளலாம். பண்டு அ இராவணன் துயருற்று வாலிடைத் தூங்க என்றுமாம். பண்டு - இறந்தகாலங் குறித்து வருவதோர் இடைச்சொல். தூங்குதல் என்பது - தொங்குதல் என்னும் பொருளதாதலை, "தூங்குகையா னோங்குநடைய", "தூங்குசிறை வாவல்" என்னுமிடங்களிலுங் காணலாம். 'மயர்வுற்ற பொருப்பு' என்பது - மலையின் உயர்ச்சியை விளக்கிற்று. (௬௨)

௬௩. ஆயானையொரம்பினிலாருயிர்வாங்கியன்பிற்
றாயான்வயினவ்வரசீந்தவன்சுற்றுசேனை
மேயான்வருவானெனவிட்டனன்மேவுகாறு
மேயானிருந்தானிடைதிங்களிரண்டிரண்டும்.

(இ - ள்.) ஆயானை - ஆகிய அவனை, (இராமபிரான்),—ஓர் அம்பினில் - ஒருபாணத்தினால், ஆர் உயிர் வாங்கி - அருமையான உயிரைக் கவர்ந்து [கொன்றுவிட்டு],— அன்பின் தூயான்வயின் - (தன்னிடத்தில்) அன்பு கொண்டுள்ள பரிசுத்தகுணமுடைய சுக்கிரீவன்பக்கல், அ அரசு - அந்த (வாலியினது) இராச்சியத்தை, ஈந்து - கொடுத்து,—' அவன் - அச்சுக்கிரீவன், சுற்று சேனை மேயான் - சூழ்ந்த சேனைகளோடு கூடியவனாய், வருவான் - (மழைக்காலங் கழிந்தபின் ஜாநகியைத் தேடும்பொருட்டு) வரக்கடவனாக,' என - என்றுசொல்லி, விட்டனன் - (அச்சுக்கிரீவனை) அனுப்பிவிட்டு, மேவு காறும் - (அவன்) வருமளவும், திங்கள் இரண்டு இரண்டும் - நான்குமாத காலம், இடை - அவ்விடத்தில், ஏயான் இருந்தான் - பொருந்தியிருந்தான்.

சுக்கிரீவனை 'அன்பிற் றூயான்' என்று குறித்ததனால், தூயனல்லாத வாலியை இராமபிரான் கொன்றனனென்பது பெறப்படும். (தனதுகுற்றத்தைப் பொறுக்கவேண்டுமென்று சுக்கிரீவன் வேண்டவும் மறுத்து அவனது மனைவியை அபகரித்துக்கொண்டு அவனைத் தேயத்திலும் தங்கவொட்டாது துரத்தினமையால், வாலி குற்றமுடையனாவன்.) ஏயான் விட்டனன் என இயைத்து, ஏவிவிட்டு என்றுமாம். 'திங்கள் இரண்டிரண்டும்' என்றது, "மேவுகாறும்' என்பதன் விவரணம். அமாவாசைக்கு அமாவாசை ஒருமாசமெனக்கொண்டு சந்திரசம்பந்தத்தாற் காலவரையறைசெய்கிற சாந்திரமாநபக்ஷீதியாய் 'திங்கள்' என்று மாசத்துக்கு ஒருபெயர். (கூ)

கூச. பிற்கூ டியசே னைபெருந்திசை பின்ன வாக
விற்கூ டுநுதற் றிருநின்னிடை மேவ வேவித்
தெற்கூ டுருவக் கடிதேவினன் சேர்ந்த தென்ன
முற்கூ டியகூ றினன் காலமொர் மூன்றும் வல்லான்.

(இ - ள்.) வில் கூடும் நுதல் திரு - வில்லையொத்த நெற்றியையுடைய இலக்குமியின் அம்சமானவளே! பின் - (அந்நான்குமாசகாலத்தின்) பின்பு, கூடிய - (சுக்கிரீவன்கட்டளையால் வந்து) சேர்ந்த, சேனை - சேனைகளை, பெருந்திசை பின்ன ஆக நின்னிடை மேவ - பெரியதிக்குகள் (தமக்குப்) பின்னுள்ளனவாம்படி [நான்கு திக்குகளுக்கு அப்பாலும் செல்லும்படி] நீ இருக்குமிடத்தைத் தேடிச்சென்று அடையுமாறு, ஏவி - அனுப்பிவிட்டு, தெற்கு ஊடுருவ - தெற்குத்திக்கிற் செல்லும்படி, கடிது ஏவினன் - விரைவாக (என்னை இராமபிரான்) அனுப்பினான்; சேர்ந்தது - (இது நான் இவ்விடம்வந்து) சேர்ந்த வரலாறாகும், என்ன - என்று, முன் கூடிய - முன்னே நடந்த வரலாறுகளையெல்லாம், கூறினன் - சொல்லி முடித்தான்; (யாவனெனின்,—) காலம் ஓர்மூன்றும் வல்லான் - மூன்று காலத்து வரலாறுகளையும் அறியவல்ல அநுமான்; (எ - று.)

'கூடிய' என்னும் சொல் இரண்டனுள், முன்னது - பெயரெச்சம்: பின்னது - பலவின்பால்வினையாலணையும்பெயர். பெருந்திசை பின்னவாக - திக்

குக்களின்எல்லையைக்கடந்து என்றபடி. கூடும் - உவமவுருபு. நெற்றிக்கு வில் உவமை, வடிவில். நுதல் - புருவமுமாம். இனி, வில் என்பதை உவமையாகு பெயராக்கொண்டு, விற்கள்போன்ற புருவங்கள் பொருந்திய நெற்றி யென்று மாம். ஸ்ரீமகாவிஷ்ணு இராமனாகத் திருவவதரித்தபொழுது ஸ்ரீமகாலக்ஷ்மியே சீதையாக அவதரித்தன ளாதலால், அப்பிராட்டியை 'திரு' என்றே கூறினார். இச்சொல், அண்மைவிளியாதலின், இயல்பாய் நின்றது. கால மோர் மூன்றும் வல்லான் - இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் என்ற முக்காலத்து வரலாறு களையும் உணரவல்லவன்; திரிகாலஞானி. காலம் - இங்கு ஆகுபெயராய், அக்காலத்து நிகழும் வரலாறுகளை உணர்த்தி நின்றது. (கச)

வே று.

[இராமபிரானது வருத்தத்தை நினைந்து சீதை துயருறுதல்.]

கரு. அன்பின னிவ்வுரை யுணர்த்த வாரியன்
வன்பொறை நெஞ்சினன் வருத்த முன்னுவா
ளென்புற வுருகின ளிரங்கி யேங்கின
டுன்பமு முவகையுஞ் சுமந்த வுள்ளத்தாள்.

(இ - ள்.) அன்பினன் - அன்புள்ளவனாகிய அநுமான், இ உரைஉணர்த்த - இவ்வார்த்தைகளைச் சொல்ல,—ஆரியன் - உயர்குலத்தில் தோன்றியவனும், வல் பொறை நெஞ்சினன் - மிக்க பொறுமையைக் கொண்ட மனத்தையுடைய வனு மாகிய இராமபிரானது, வருத்தம் - வருத்தத்தை, உன்னுவாள் - நினைத்து, (சீதை), துன்பமும் உவகையும் சுமந்த உள்ளத்தாள் - துயரத்தையும் மகிழ்ச்சியையும் அடைந்த மனத்தையுடையவளாய், என்பு உற உருகினள் - எலும்பு மிகக் கரைந்து, இரங்கி - மனமிரங்கி, ஏங்கினள்-ஏக்கமுற்றாள்; (எ-று.)

இராமபிரானது வருத்தத்தை அநுமான் சொல்லக் கேட்டதனால் சீதை அப்பிரானது துயர்க்காக மனவருத்தத்தையும், தனது பிரிவை யாற்றாமல் இராமபிரான் வருந்துகின்றா னென்பதை உணர்ந்தமையால் இனி அவன் விரைவில்வந்துஅடைவா னென மகிழ்ச்சியையும் ஒருங்கே மிகுதியாக அடைந் தன ளென்க. அன்பு - ஸ்ரீராமபக்தி. 'வன்பொறை நெஞ்சினன் வருத்தம்' என்ற தொடரில், இங்ஙனம் பொறுமைக்குணமுடைய இராமபிரானுக்கு இவ் வளவு பெருந்துயரம் நேர்வது தகாது என்பது தொனிக்கும். துன்பமும் உவகையும் - தொடைமுரண். அநுமானதுவார்த்தையைக் கேட்டவுடன் சீதை க்கு மனத்தில் துன்பமும் உவகையும் மிகுதியாக உண்டாயின வென்பார், 'சுமந்தவுள்ளத்தாள்' என்றார்.

இதுமுதற் பதினொன்குகவிகள் - இப்படலத்தின் பதினோராங்கவிபோன்ற கலிவிருத்தங்கள். (கரு)

[கடல்கடந்ததைப்பற்றிச் சீதை அநுமானை வினவுதல்.]

௬௬. நையுறுசிந்தையணயனவாரியின்
றொய்யல்வெஞ்சுழியிடைச்சுழிக்குமேனிய
ளையநீயளப்பருமளக்கர்நீந்தினை
யெய்தியதெப்பரிசியம்புவாயென்றாள்.

(இ - ள்.) (சீதை),—நையுறு சிந்தையள் - உருகுகிற மனத்தையுடையவளும், நயனம் வாரியின் தொய்யல் வெம் சுழியிடை சுழிக்கும் மேனியள் - கண்ணீர்ப்பெருக்கினாலாகிய சேற்றிலுண்டான பயங்கரமான நீர்ச்சுழியிற் சுழல்கிற உடம்பை யுடையவளு மாகி, (அநுமானை நோக்கி), 'ஐய - ஐயனே! நீ—,அளப்பு அரும் அளக்கர் நீந்தினை - அளவிடுவதற்கு அரிய கடலைக் கடந்து, எய்தியது - இங்கே வந்தது, எப் பரிசு - எவ்வாறு? இயம்புவாய் - சொல்வாயாக,' என்றாள் - என்று வினவினாள்; (எ - று.)

கண்ணீர்ப்பெருக்கினாற் சீதையிருந்தவிடமெல்லாம் சேறுபட்டு நீர்ச்சுழியுண்டாயிற் றென்பதை முன்னிரண்டடியிற் கூறினார். தொய்யல் - சேறு. கண்ணீர், சோகத்தினாலும் உவகையினாலும் உண்டானது. "தெற்கூடுருவக் கடிதேவினன்சேர்ந்தது" என்று அநுமான் கூறியதில், சீதை சிறிது ஐயங்கொண்டு இங்ஙனம் வினவுபவ ளாயின ளென்க. (௬௬)

[அதற்கு அநுமானது விடை.]

௬௭. சுருங்கிடையுன்னொருதுணைவன்றூயதா
ளொருங்குடையுணர்வினோரொய்வின்மாயையின்
பெருங்கடல்கடந்தனர்பெயரும்பெற்றிபோற்
கருங்கடல்கடந்தனன்காலினாலென்றான்.

(இ - ள்.) (அதற்கு அநுமான்), 'சுருங்கு இடை - நுட்பமான இடையையுடையவளே! உன் ஒரு துணைவன் - உனது ஒப்பற்ற நாயகனாகிய இராமபிரானது, தூய தாள் - தூய்மையையுடைய திருவடிகளை, ஒருங்கு உடை உணர்வினோர் - தியானித்தலையுடைய அறிவினராகிய ஞானிகள், ஒய்வு இல் மாயையின் பெருங் கடல் கடந்தனர் பெயரும் பெற்றிபோல் - ஒழிதலில்லாத மாயையாகிய பெரியகடலைத் தாண்டிச்செல்லுந் தன்மை போல, காலினால் - (எனது) கால்களால், கருங் கடல் - கரிய இக்கடலை, கடந்தனன் - (எளிதில்) தாண்டி வந்தேன்,' என்றான் - என்று (விடை)கூறினான்; (எ - று.)

சுருங்கிடை - வினைத்தொகையன்மொழி; இடைசுருங்கியிருத்தல், உத்தமவிலக்கணம். தாளுக்குத் தூய்மை - எத்துணைப்பாவமுடையாராயினும் தம்மை யடைந்தாரைப் பிறவிக்கடலினின்று கடத்துவித்தல். ஒருங்குதல் - சேர்தல்; இங்கே, இடைவிடாது நினைத்தல்: ஒருங்கு உடை என்பது - ஒருசேரக்கொண்டுள்ள என்றும் பொருள்படும். முதல்மூன்றடிகளில் "பிறவிப்

பெருங்கடல் நீந்துவர் நீந்தார், ிறைவனடி சேராதார்" என்ற திருக்குறளின் கருத்து அமைந்திருத்தல் காண்க. ஒருவர் மனம் மாயைக்கு வசப்பட்டபோது பொருள்களின்நிலைமையை உள்ளபடியறியுந் தத்துவஞானம் தோன்றுகின்ற தில்லை; ஆகவே, நிலையுள்ளபொருள்களை நிலையில்லாதன வென்றும், நிலையில்லாதபொருள்களை நிலையுள்ளனவென்றும் மாறுபட அறியும் விபரீதஞானம் தலையெடுக்கும்: அதனாலேயே நித்தியமான ஆத்துமாவுக்கு யாதொருசம்பந்தமும் படாமல் அநித்தியமான தேகத்தையே பற்றிய தாய்முதலியோரிடத்துச் சுற்றத்தவ ரென்ற பொய்யபிமானம் உண்டாய் நிலைநிற்கும்; இவ்வகையான மாயையைக் கடத்தல் எம்பெருமானது திருவடியை நம்பிச் சரணமடைபவர்க்கே இயலும்; "மம மாயா துரத்யயா, மாமேவ யே ப்ரபத்யந்தே மாயா மேதாம் தரந்திதே[எனதுமாயை கடத்தற்கு அரியது; என்னையே யாவர் சரணமாக அடைகின்றார்களோ, அவர்களே இம்மாயையைக்கடக்கின்றார்கள்]"என ஸ்ரீ கிருஷ்ணபகவான் கீதையில் அருளிச்செய்துள்ளமை காண்க. கடத்தற் கருமை பற்றி,மாயையைக் கடலாக உருவகப்படுத்தினர்.உவமையணி.இராமபிரானது திருவடிபலத்தினாலேயே யான் கடலைக்கடந்தே னென்பது கருத்து. (கஎ)

['இச்சிறியவடிவத்துடன் நீ கடலைக்கடந்தது எவ்வாறு"எனச் சீதை மீண்டும் அநுமனை வினவுதல்.]

கஅ. இத்துணைச்சிறியதோரெண்ணில்யாக்கையை
தத்தினைகடலதுதவத்தினாயதோ
சித்தியினியன்றதோசெப்புவாயென்றாண்
முத்தநு நிலவினுமுறுவன்முற்றினாள்.

(இ - ள்.) முத்தினும் - முத்தைக்காட்டிலும், நிலவினும் - சந்திரகாந்தியைக்காட்டிலும், முறுவல் முற்றினாள் - பற்களின் ஒளி மிகுந்துள்ளவளான பிராட்டி, (அநுமானைநோக்கி), 'இ துணை சிறியது ஓர் எண் இல் யாக்கையை - இவ்வளவுசிறியதாகிய (பிறரால்)மதிக்கப்படாத உடம்பையுடைய நீ, கடல் தத்தினை - சமுத்திரத்தைத் தாண்டிவந்தாய்: அது - அச்செய்கை, தவத்தின் ஆயதோ - (நீ செய்துள்ள) தபோபலத்தினா லாகியதோ? சித்தியின் இயன்றதோ - (அன்றி)மந்திரசித்தியின்வல்லமையா லமைந்ததோ?செப்புவாய் - (இதன்உண்மையை எனக்குச்) சொல்வாயாக,' என்றாள் - என்றுவினவினாள்.

யாக்கையை - முன்னிலையொருமைக் குறிப்பு வினையாலணையும்பெயர்; ஐ - முன்னிலைவிகுதி. சித்தி - ஸித்தி; அணிமா முதலிய அஷ்டமகாசித்திகள்; (அவையாவன - அணிமா, மகிமா, கரிமா, லகிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், ஈசத்வம், வசித்வம் என்பன.) பற்களின் வெள்ளொளிக்கு முத்தையும் நிலவையும் உவமைகூறுதல், கவிசமயம். முறுவல் - சிரிப்பினொளியாகவுமாம்.

(கஅ)

[அநுமான் பேருருவங்கொள்ளுதல்.]

௯௯. சுட்டினனின்றனன்றொழுதகையினன்
விட்டுயர்தோளினன்விசும்பின்மேக்குய
ரெட்டருநெடுமுகடெய்திநீளுமேன்
முட்டுமென் றுருவொடுவளைந்தமூர்த்தியான்.

(இ - ள்.) (அநுமான்), தொழுத கையினன் - கூப்பிய கைகளை யுடைய வனும், விட்டு உயர் தோளினன் - வெளிப்பட்டு உயர்ந்துள்ள தோள்களை யுடையவனும், விசும்பின் - ஆகாயத்தினது, மேக்கு உயர் - மேலேஉயர்ந்த, எட்டு அரு நெடு முகடு - (பிறரால்) எட்டுதற்கு அருமையான நீண்ட உச்சியை, எய்தி - அடைந்து, நீளும் எல் முட்டும் என்று உருவொடு வளைந்த - பின்னும் நீண்டுசென்றால் தலையில் தாக்கு மென்று எண்ணி (அதனாலாகிய) அச்சத்தோடு வணங்கின, மூர்த்தியான் - வடிவத்தையுடையவனுமாய், சுட்டினன் நின்றனன் - (தன் பேருருவத்தைப் பிராட்டிக்குப்) பிரதியக்ஷமாகக் காட்டிநின்றான்; (எ - று.)

அநுமான் தான் எண்ணியபடியெல்லாம் உருவமெடுக்கவல்ல தன்மை யுடையானென்பதை "பிறியாவறத்தி னனுமான் வளர்ச்சி பெருமேருவிற் பெரியனாஞ், சிறிதாமெனக்குமெனின் மேனி யற்பவணுவானதிற் சிறியனா, முறுகாரணத்தி னளவா முருக்கொ ளுயர்வீரன்" என்ற ஒட்டக்கூத்தருத் தரகாண்டச்செய்யுளாலும் அறியலாம். பிராட்டியினிடத்து வணக்கத்தைக் காட்டுமாறு அநுமான் வணங்கின உருவமுடையனா யிருந்தமையை, நிமிர்ந்து நின்றால் ஆகாயத்தின் மேல்முகடு முட்டு மென்று அதற்குஅஞ்சி வணங்கின தாகக் குறித்தார்; ஏதுத்தற்குறிப்பேற்றவணி; இதில் தற்குறிப்பேற்றத்தின் உருபு தொக்குநின்றது. உரு - அச்சமுணர்த்தும் உரிச்சொல்; "உரு உட்காகும்" என்பது, தொல்காப்பியம். விட்டுஉயர் தோள் - மிகஓங்கி வளர்ந்த தோள். அநுமான் சீதையினிடத்து 'நான் உன்னையெடுத்துக்கொண்டு கடல் கடந்துசென்று இராமபிரானிடம் சேர்வேன்: அநுமதிகொடு' என்றுகூற, அப்பிராட்டி 'இத்தனைச்சிறியஉருவத்தையுடைய நீ எங்ஙனம் என்னைக் கொண்டு கடல்கடப்பாய்?' என்று வினவ, உடனே அநுமான் தனது பேருருவத்தைக் காட்டினனென முதனூலிற் கூறியுள்ளது. (௯௯)

[இதுமுதல் ஆறுகவிகள் - அநுமானது பேருருவத்தின் வருணனை.]

௧௦௦. செவ்வழிப்பெருமையென்றுரைக்குஞ்செம்மைதான்
வெவ்வழிப்பூதமோரைந்தின்மேலதோ
வவ்வழித்தன்றெனினநுமன்பாலதோ
வெவ்வழித்தாகுமென்றெண்ணுமீட்டதே.

(இ - ள்.) 'செம் வழி பெருமை என்று உரைக்கும் செம்மை - நல்ல குணமாகிய பெருந்தன்மையென்றுசொல்லப்படுகிற குணம், வெம் வழி

பூதம் ஓர் ஐந்தின் மேலதோ - கடுமையாகிய தன்மையையுடைய பஞ்ச பூதங்களினிடத்தில் உள்ளதோ? அ வழித்து அன்று எனின் - அவ்விடத்தி லுள்ளதன் றென்றால், அநுமன் பாலதோ - அநுமானிடத்தி லுள்ளதோ? எ வழித்து ஆகும் - (இவ்விரண்டனுள்) எதனிடத்தி லுள்ளதாம்?' என்று—, எண்ணும் - நினைக்கும்படியான, ஈட்டது - பெருமையையுடையது, (அவ் வுருவம்); (எ - று.)

மிகப்பெருந்தோற்றமுடைமையில் அநுமானதுஉருவமும் பஞ்சபூதங் களின் உருவமும் விகற்பிக்கலாம்படியிருந்தன வென்க. பூதமோரைந்து - நிலம் நீர் தீ காற்று விசும்பு என்பன. பூதம் - வடசொல். தான் - அசை. (௧00)

௧0௧. ஒத்துயர்கனகவான்கிரியினோங்கிய
மெய்த்துறுமரந்தொறுமின்மினிக்குல
மொய்த்துளவாமெனமுன்னும்பின்னருந்
தொத்தினதாரகைமயிரின்சுற்றெலாம்.

(இ - ள்.) ஒத்து உயர் - (தன்னைத்தானே) ஒத்து (எல்லாமலைகளினும்) உயர்ந்துள்ள, கனகம் வான் கிரியின் - பொன்மயமான பெரிய மேரு மலையில், ஓங்கிய - உயர்ந்துவளர்ந்த, மெய் துறு - தம்வடிவம் (ஒன்றோ டொன்று) நெருங்கிய, மரம் தொறும் - மரங்கள்தோறும், மின்மினி குலம் - மின்மினிப்பூச்சியின்கூட்டம், மொய்த்து உள ஆம் என - நெருங்கியுள்ளன போல,—தாரகை - நக்ஷத்திரங்கள், மயிரின் சுற்று எலாம் - (ஆகாயத்தை யளாவிவளர்ந்த அநுமானது உடம்பிலுள்ள) மயிரின் சுற்றிடமெங்கும், முன் னும் பின்னரும் - முன்னேயும் பின்னேயும், தொத்தின - ஒட்டிக்கொண்டன.

மேருமலை - அநுமானது திருமேனிக்கும், அதில் அடர்ந்துள்ள மரங் கள் - அத்திருமேனியிலுள்ள மயிர்களுக்கும், அம்மரங்களில்மொய்க்கிற மின் மினிக்கூட்டம் - அம்மயிர்களில்ஒட்டுகிற நக்ஷத்திரக்கூட்டத்துக்கும் உவமை யெனக் காண்க; தன்மைந்தப்தற்பேறறவுவமையணி. மேருமலையென் பது - பூமியைத்தாங்குவதும் அதன்நடுவிலுள்ளதும் மிகப்பெரியது மாகிய தொருபொன்மலை. மின்மினி-இருளில்மின்னுவதொரு பறக்கும்பூச்சி. (௧0௧)

௧0௨. கண்டலமறிவொடுகடந்தகாட்சியன்
விண்டலமிருபுடைவிளங்குமெய்ம்மையக்
குண்டலமிரண்டுமக்கோளின்மாச்சுடர்
மண்டலமிரண்டொடுமாறுகொண்டவே.

(இ - ள்.) கண் தலம் அறிவொடு கடந்த காட்சியன் - கண்களினிடத் தையும் அறிவையும் மேலிட்டுச்சென்ற தோற்றத்தை யுடைய அவ்வநுமா னது, இரு புடை விண் தலம் விளங்கும் மெய்ம்மை அ குண்டலம் இரண்டும் - இரண்டுபக்கங்களிலும் [காதுகளிலே] ஆகாயத்தினிடத்தில் விளங்குகின்ற தன்மையையுடைய அந்த இரண்டு குண்டலங்களும்,—அ கோளின் - அந்த [ஆகாயத்திலுள்ள] நவக்கிரகங்களுள், மா சுடர் மண்டலம் இரண்டொடு -

மிக்க ஒளியையுடைய (சூரியமண்டலம் சந்திரமண்டலம் என்கிற) இரண்டோ டும், மாறுகொண்ட - பகைமைகொண்டன [ஒத்தன என்றபடி]; (எ - று.)

பிரத்யக்ஷப்பிரமாணத்தாலும், அநுமானப்பிரமாணத்தாலும் அறிய வொண்ணாதபடி அநுமான் பேருருவமாய் வளர்ந்தனனென்றவாறு. இச்செய்யுளில் அநுமானது குண்டலங்களை வருணித்துள்ளதாகத் தோன்றினும், அவனது பேருருவத்தையே வருணித்ததாகக் கருத்துக்கொள்க. இவ்வநுமானது குண்டலமணியும் காதுகள் ஆகாயத்திற் சூரியசந்திரமண்டலஸ்தானங்களில் நின்றனவென்க. உவமையணி. கோள் - க்ரஹமென்னும் வடமொழிப்பெயரின் பொருள்கொண்டது. (நவக்கிரகங்களாவன - ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, இராகு, கேது என்பன.) மற்றையேழுகிரகங்களினும் சூரியசந்திரர் மிக்கவொளியையுடையராதல்பற்றி, 'மாச்சுடர் மண்டலம்' என்றார். (௧௦௨)

௧௦௩. ஏணிலவொருகுரங்கீதென்றெண்ணலா
வாணியையநுமனையமையநோக்குவான்
சேணுயர்பெருமையோர்திறத்ததன்றென
நாணுறுமுலகெலாமளந்தநாயகன்.

(இ - ள்.) உலகு எலாம் அளந்த நாயகன் - (திரிவிக்கிரமாவதாரஞ் செய்து தனது திருவடிகளால்) எல்லாவுலகங்களையும் அளவிட்ட யாவர்க்குந் தலைவனாகிய திருமால்,—ஏண் இல ஒரு குரங்கு ஈது என்று எண்ணலா - வலிமையில்லாத ஒருகுரங்கு இது வென்று (அலக்ஷ்யமாக) நினைக்கக்கூடாத, ஆணியை - அச்சாணிபோலுள்ளவனாகிய, அநுமனை - அநுமானை, அமைய நோக்குவான் - நன்றாகப் பார்த்து, 'சேண் உயர் பெருமை - மிகவும்உயர்ந்த பெருந்தன்மை, ஓர் திறத்தது அன்று - ஓரிடத்திலேயே யுள்ளதன்று,' என - என்றுஎண்ணி, நாண் உறும் - நாணமடைபவனானான்; (எ - று.)

அநுமான்கொண்ட பேருருவம் திருமாலினது திரிவிக்கிரமாவதாரகாலத்திற்கொண்ட திருவுருவத்தை யொத்திருந்தது என்பது கருத்து. இச்செய்யுள், பிறிதினவிசேஷணியின்பாற் படும்; ஒன்றை இயல்பாகக்கூறாமல் வேறுவகையாகக் கூறுவது, இதன்இலக்கணம். ஏண் - பெருமையென்றுமாம். தேரினது சக்கரங்களைக் கோத்த மரத்தில் அச்சக்கரங் கழலாமல் கடையிற் செருகுகின்ற ஆணி பெரியபாரங்களையெல்லாங் கொண்டுசெலுத்துகின்ற வலிமையுடையதா யிருத்தல்போலப் பெரியகாரியங்களையெல்லாஞ் செய்துமுடிக்கும் வலிமையுடையவ னென்பார், அநுமனை 'ஆணி' என்றார்; "மாணியாம் படிவமன்று மற்றிவன் வடிவ மைந்த, வாணியிவ்வுலகுக்கெல்லா மென்னலா மாற்றற்கேற்ற, சேணுயர்பெருமைதன்னைச் சிக்கறத்தெளிந்தேன்" என்றார் கிஷ்கிந்தா காண்டத்திலும். நோக்குவான் - முற்றெச்சம். சேணுயர் - ஒருபொருட்பன்மொழி. இதுவரையில் தானொருவனே கொண்டுள்ள பெரிய வடிவத்தை அநுமானும் இப்பொழுது கொண்டனனாதலால், திருமால், ஓர் திறத்த

தன்றெனு நாணமுறுவானுயினன். ஓர்திறத்ததன்று-அறிந்துசொல்லுந்தரத்ததுஅன்று என்றுமாம். நாணுறும் - செய்யுமென்முற்று, ஆண்பாலுக்கு வந்தது.

கoச. எண்டிசைமருங்கினுமுலகம்யாவினுந்
தண்டலிலுயிரெலாந்தன்னைநோக்கின
வண்டமென்றதினுறையமரர்யாரையுங்
கண்டனன்றானுந்தன்கமலக்கண்களால்.

(இ - ள்.) (அப்பொழுது), எண் திசை மருங்கினும் - எட்டுத்திக்குக்களினிடத்திலும், உலகம் யாவினும் - எல்லாவுலகங்களினிடத்திலும், தண்டல் இல்-நீங்குதலில்லாத [உள்ள], உயிர் எலாம் - எல்லாப்பிராணிகளும், தன்னை நோக்கின-(அநுமானுகிய)தன்னைப்பார்த்தன; அண்டம் என்றதின் உறை-மேலுலகத்தில் வசிக்கிற, அமரர் யாரையும்-தேவர்களெல்லாரையும், தானும்-அவ்வநுமானும், தன் கமலம் கண்களால் - தனது தாமரைமலர்போன்ற திருக்கண்களால், கண்டனன் - பார்த்தான்; (எ - று.)

உயிரென்பது, உயிரையுடைய ஜந்துக்களை ; இது,ஒருவகையிலக்கணை. அண்டம - உலகவுருண்டை; இங்கு மேலுலகம். இச்செய்யுள், அநுமானது பேருருவத்தை விளக்கவந்த உயர்வுநவிற்சியணி. கமலம்-நீரை அலங்கரிப்பது எனக் காரணக்குறி. (கoச)

கoரு. எழுந்துயர்நெடுந்தகையிரண்டுபாதமு
மழுந்துறவழுத்தலினிலங்கையாழ்கடல்
விழுந்ததுநிலமிசைவிரிந்தவெண்டிரை
தழைந்தனபுரண்டனமீனந்தாமெலாம்.

(இ - ள்.) எழுந்து உயர்-மேலேறுங்கிவளர்ந்த, நெடுந் தகை - பெருமைக்குணத்தையுடைய அநுமான், இரண்டு பாதமும் அழுந்துற அழுத்தலின் - (தனது) இரண்டுகால்களையும் (நிலத்தில்) அழுந்தும்படி அழுத்தியதனால், இலங்கை—, ஆழ் கடல் - ஆழமாகிய சமுத்திரத்தில், விழுந்தது - அழுந்தியது; (அதனால்), நிலம்மிசை- அப்பூமியின்மேல், வெள் திரை-(கடலினது) வெண்மையான அலைகள், விரிந்த - பரவின; மீனம்தாம்எலாம் - மீன்களெல்லாம், தழைந்தன புரண்டன-(அவ்விலங்கையின்மேல்) மிகுதியாகப் புரளலாயின;(எ - று.)

இச்செய்யுளும் - தொடர்புயர்வுநவிற்சியணியே. நெடுந்தகை - பண்புத்தொகையன்மொழி. (கoரு)

[சீதை அநுமானைநோக்கிப்பேருருவத்தையடக்கிக்கொள்ளவேண்டுதல்.]

கoகூ. வஞ்சியம்மருங்குலம்மறுவில்கற்பினுள்
கஞ்சமும்புரைரவனகழலுங்கண்டிலா
டுஞ்சினராக்கரென்றுவக்குஞ்சூழ்ச்சியா
ளஞ்சினெனிவ்வுருவடங்குவாயென்றாள்.

(இ - ள்.) வஞ்சி அம் மருங்குல் அ மறு இல் கற்பினள் - வஞ்சிக்கொடி போன்ற[நுண்ணிய] அழகிய இடையையும் குற்றமில்லாத கற்புநிலைமையையும் உடைய அச்சீதை,—கஞ்சமும் புரைவன கழலும் - செந்தாமரைமலரை யொத்திருப்பனவான (அநுமானது) பாதங்களையும், கண்டிலாள் - காணமுடியாதவளாய்,—அரக்கர் துஞ்சினர் என்று உவக்கும் சூழ்ச்சியாள் - 'ராக்ஷசரெல்லாம் இனி இறந்தவராவர்' என்றுஎண்ணி மகிழ்கிற ஆலோசனையையுடையவளாய், (அநுமானை நோக்கி), 'இ உரு - (உனது) இப்பேருருவத்திற்கு, அஞ்சினென் - (நான்) பயந்தேன்: அடங்குவாய் - (இவ்வுருவம்) ஒடுங்கப்பெறுவாயாக,' என்றாள் - என்று வேண்டினாள்; (எ - று.)

மெல்லிதாய் ஒல்கியொசியுந் தன்மையில் இடைக்கு நீர்வஞ்சிக்கொடி உவமைகூறப்படும். கஞ்சம் - நீரில்முளைப்பதுஎன்று பொருள்; கம்- நீர், ஜம்- உண்டாவது; இது, காரணங்கருதியபொழுது அல்லி ஆம்பல் குவளை நெய்தல் முதலிய நீர்ப்பூங்கொடிகள் பலவற்றிற்குச் செல்லுமாயினும், காரணங் கருதாது இடுகுறியளவாய்த் தாமரைக்கே செல்லுதலால், காரணவிடுகுறிப்பெயராம்; இதனை, வடநூலார், யோகரூட மென்பர். இக்கொடியின்பெயர் - அதன்மலர்க்கு முதலாகுபெயர்; இதுபோல்வனவற்றை முதலுக்கும் சினைக்கும் பொதுவென்பாருமுளர். இது, அடிக்குச் செம்மைமென்மையழகுகளில் உவமையா மென்க. துஞ்சுதல்- தூங்குதல்: மீண்டும் எழுந்திராத பெருந்தூக்க மென்க; இறத்தலைத் துஞ்சுத லென்பது, மங்கலவழக்கு. துஞ்சினர்-தெளிவு பற்றி எதிர்காலம் இறந்தகாலமாக் குறிக்கப்பட்டகாலவழுவமைதி. இப்பேருருவத்தைக் கண்டதும்,இவ்வநுமானால் ராக்ஷசசங்காரம் நேர்வது திண்ணம் எனச் சீதை துணிந்தன ளென்க. 'அஞ்சினென் இவ்வுரு' என்று சீதை கூறியதனால், அவளிடத்தில்உள்ள மகளிர்க்குணம்நான்கனுள் அச்சம்என்னும் குணம் வெளியிடப்பட்டதாம். 'இவ்வுரு' என்பது 'அஞ்சினென்' என்பதனோடும், 'அடங்குவாய்' என்பதனோடும் சென்று இயைவது, இடைநிலைவிளக்கு [மத்யமதீபம்]. இவ்வுருஅஞ்சினென் என்பதை - இவ்வுருவினின்றுஅஞ்சினென் என்றும், இவ்வுருவை அஞ்சினென் என்றும் விரிக்கலாம்; "அச்சக்கிளவிக்கு ஐந்துமிரண்டும், எச்சமிலவே பொருள்வயினான"என்பது, தொல்காப்பியம். இவ்வுருவுக்கு அஞ்சினேன் என்பது, உலகவழக்கு. (க௦௬)

[இதுவும் அது.]

௧௦௭. முழுவதூமிவ்வுருக்காணமுற்றிய
குழுவிலதுலகினிக்குறுகுவாயென்று
ளெழுவினுமெழிலிலங்கிராமன்றோள்களைத்
தழுவினளாமெனத்தளிர்க்குந்தன்மையாள்.

(இ - ள்.) எழுவினும் எழில் இலங்கு இராமன் தோள்களை தழுவினள் ஆம் என தளிர்க்கும் தன்மையாள் - தூணைக்காட்டிலும் எழுச்சிவிளங்குகிற இராமபிரானது திருத்தோள்களைத் தழுவியணைத்தவள்போலக் களிக்கின்ற தன்மை

யையுடையவளாகிய சீதை, 'உலகு - உலகம், இ உரு முழுவதும் காண - (உனது) இந்தப்பெருவடிவம்முழுவதையும் பார்ப்பதற்கு, முற்றிய - வல்லமை முதிர்ந்துள்ள, குழு - (பிராணியின்) கூட்டத்தை, இலது - உடையதன்று: (ஆதலின்), இனி—, குறுகுவாய் - ஒடுங்குவாயாக,' என்றாள் - என்று வேண்டினாள் ; (எ - று.)

கீழ்க்கவியிற்கூறிய 'இவ்வுருவடங்குவாய்' என்றதொன்றையே மீண்டும்இக் கவியில் வேறுவகையாக [காரணங்காட்டி] விவரித்துக்கூறியதனால், கூறியது கூற லென்னுங் குற்றத்துக்கு இடமின்மை காண்க; இவ்வாறுகூறுவதை, மற்றைச் சிறந்தகவிகளிடத்துங் காணலாம். அநுமானது பேருருவத்தைக் கண்டவுடனே சீதை அவ்வநுமான்திறத்துக்கொண்டிருந்த சந்தேகம்முழுவதும்நீங்கப்பெற்று'இவன் இராமதூதனே:இனி விரைவில் இராமபிரான் இங்குவந்து பகைவென்று என்னைச் சிறைமீட்பது நிச்சயம்' என்றுஎண்ணி மிகமகிழ்ந்தன ளென்பது, பின்னிரண்டடியின் கருத்து. அநுமானது இப்பெருவடிவத்தை அஞ்சாதுகாணவல்ல மனவுறுதி உலகத்துப்பிராணிகளொன்றுக்குமில்லை யென்பது,'இவ்வுருக்காணமுற்றியகுழுவிலதுலகு' என்பதன் தேர்ந்த பொருள். இராமபிரானது திருத்தோள்கட்குத் தூண், பருத்து உயர்ந்து உருண்டு திரண்டு நீண்டு சலியாதுநிற்றலில் உவமமாகுந் தரத்ததன்றென்க. (கoஎ)

[அநுமான் தன் பேருருவத்தை அடக்கிக்கொள்ளுதல்.]

கoஅ. ஆண்டகை யநுமனு மருள தாமெனா
மீண்டனன் விசும்பெனும் பதத்தை மீச்செல்வான்
காண்டலுக் குரியதோ ருருவங் காட்டினான்
றூண்டரு விளக்கனை யினைய சொல்லினாள்.

(இ - ள்.) விசும்பு எனும்பதத்தை மீ செல்வான்-ஆகாயமென்னுமிடத்தையுங் கடந்து மேலே வளர்ந்துசெல்பவனாகிய, ஆண்தகை அநுமனும்-ஆண்மைக் குணத்தையுடைய அநுமானும்,அருள்அது ஆம் எனா - (உனது) நியமனபபடியேயாம்(நான் நடப்பது)'என்றுசொல்லி, மீண்டனன்-(வளாவதினின்று)ஒடுங்கினவனாய்[சுருங்கி],காண்டலுக்கு உரியது ஓர் உருவம் காட்டினான்-பார்ப்பதற்குத் தக்கதொரு(சாதாரண வாநர)ரூபத்தை(த் தான்கொண்டு) காட்டினான்; (அப்பொழுது), தூண்டு அரு விளக்கு அனாள் - தூண்டுதல்வேண்டாத தீபம் போன்றவளாகிய பிராட்டி, இனைய- இவ்வார்த்தைகளை, சொல்லினாள்-சொல்லுபவளானாள்;(எ - று.)—அவற்றை, மேல் ஐந்துகவிகளிற் காண்க.

அருளதாம் - அங்கீகாரத்தைக் காட்டும் பணிவுமொழி. முதலடி - முற்றுமோனை. தூண்டரு, அருமை - இன்மைகுறித்து நின்றது. தூண்டரு விளக்கு - நந்தாவிளக்கு; எப்பொழுதும் ஒருபடிப்பட விளங்கிநிற்றலில் உவமம். (கoஅ)

வேறு.

[இதுமுதல் ஐந்து கவிகள் - சீதை அநுமானைப் புனைந்துரைத்தல்.]

௧0௯. இடந்தா யுலகை மலையோடு மெடுத்தாய் விசும்பை யிவை சுமக்கும், படந்தா ழரவை யொருகரத்தாற் பறித்தா யெனினும் பயனின்று, நடந்தா யிடையே யென்றாலு நாணா நினக்கு நளிர்கடலைக், கடந்தா யென்றா லென்னாகுங் காற்றா மன்ன கடுமையாய்.

(இ - ள்.) காற்று ஆம் அன்ன கடுமையாய் - வாயுவைப்போன்ற வேகத்தையுடையவனே! உலகை மலையோடும் இடந்தாய் (எனினும்) - இந்நிலவுலகத்தைப் பருவதங்களுடனே பெயர்த்தா யென்றாலும், விசும்பை எடுத்தாய் (எனினும்) - மேலுலகத்தைப் பெயர்த்தெடுத்துத்தூக்கினு யென்றாலும், இவை சுமக்கும் படம் தாழ் அரவை ஒருகரத்தால் பறித்தாய் எனினும் - இவ்வுலகங்களையெல்லாந் தாங்குகிற படம்பொருந்திய ஆதிசேஷனை ஒருகையாலே யிழுத்தா யென்றாலும், இடையே நடந்தாய் என்றாலும் - இக்கடலினிடத்தே நடந்துவந்தா யென்றாலும், நினக்கு பயன் இன்று - (உனது திறமைக்குப்) பயனுவதோர் சிறப்பாகாது: நாண் ஆம் - வெட்கத்தையே தருவதாம்; (ஆகவே), நளிர் கடலை கடந்தாய் என்றால் - குளிர்ந்தகடலைத் தாண்டிவந்தா யென்றால், என் ஆகும் - (அதனால் உனதுதிறத்துக்கு) என்ன மேம்பாடு உண்டாம்? (எ - று.)— ஆல் - ஈற்றசை.

மிகப்பெரியதொழிலையும் மிகஎளிதில் முடிக்கவல்ல பேராற்றலுடையானுக்கு, சாதாரணமான ஒருசிறுதொழில் செய்தலைக்கொண்டு புகழையுண்டாக்கமுயலுதல் அவனதுபுகழ்க்கு இழுக்காவதன்றிச் சிறிதும்மேம்பாட்டையுண்டாக்காதவாறுபோல, உலகையிடத்தல் முதலிய பெருந்தொழில்களையும் மிக எளிதிற்செய்யவல்லபேராற்றலுடையஅநுமானுக்கு, கடலைக்கடந்துவந்தானென்றுகூறுதல் ஒருசிறிதும் சிறப்பாகாதுஎன்றவாறு. இச்செய்யுளின் ஈற்றடியை, "அலைத்துலகு மனைத்துயிரு மமைத்தளித்துத் துடைப்பது நீ, நினைத்த விளையாட்டென்றால் நின்பெருமை களவாமோ," "கருதரிய வுயிர்க்குயிராய்க் கரந்தெங்கும் பரந்துறையும், ஒருதனிநாயக மென்று லுன்புகழ்க்கு வரம்பாமோ" என்றவற்றோடு ஒப்பிடுக. உலகையிடத்தல் முதலிய பெருந்தொழில்களே அநுமானுக்கு ஒருமேன்மையுண்டாக்காதிருக்க, கடலைக்கடத்தலில் அவனுக்கு என்னமேன்மை? என, ஒருபொருளைச் சொல்லி அதுகொண்டு கைமுதிகநியாய மென்னும் தண்டாபூபிகாநியாயத்தால் மற்றொருபொருளைச் சாதித்திருத்தலால், இச்செய்யுள், தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணியாம்; இதனை வடநூலார் காவ்யார்த்தாபத்தியலங்கார மென்பர். (கைமுதிகநியாயமாவது - "மங்கைமுகம் திங்களையே வாட்டிற்று அறைதுவதேன், பங்கயமென் போது படும் பாடு" என்றாற்போல 'சொல்லவேண்டுவதென்ன?' என்னும் வாய்பாடு அமையக் கூறுதல். இதுவே தண்டாபூபிகாநியாய மெனப்படுவதும்; ஒருதண்டம் அபகரிக்கப்பட்டமை கூறுதலால், அதிற்கட்டிவைத்த அப்பம்முதலிய உணவு அபகரிக்கப்பட்டமை தானே

விளங்குதலெனப் பொருள்காண்க.) ஆதிசேஷன் ஆயிரந்தலைகளுடன் இழிருந்து உலகங்களைத் தாங்குகின்றன னென்பது, நூற்கொள்கை. 'நளிகடல்' என்ற பாடத்துக்கு - பெரியகட லென்க. தந்தையே மைந்தனாகப் பிறக்கின்றா னென்பது நூல்வழக்காதலால், அநுமானுக்குத் தந்தையாகிய வாயுவையே உவமைகூறுதல் ஏற்கும். கடுமை - வலிமையுமாம்.

இதுமுதல் இப்படலம் முடியுமளவும் ஒன்பது கவிகள் - இப்படலத்தின் ஐம்பத்துமூன்றாங் கவி போன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (௧௦௯)

௧௧௦. ஆழிநெடுங்கையாண்டகைதனருளும்புகழுமழிவின்றி
யூழிபலவுநிலைநிறுத்தற்கொருவனீயேயுளையானாய்
பாழிநெடுந்தோள்வீராநின்பெருமைக்கேற்பப்பகையிலங்கை
யேழுகடற்குமப்புறத்ததாகா திருந்ததிழிபன்றோ.

(இ - ள்.) பாழி நெடுந் தோள் வீரா - வலிமையையுடைய நீண்டதோள்களையுடைய வீரனே! ஆழி நெடுங் கை ஆண்தகைதன் - ஆஜ்ஞாசக்கரத்தை யேந்திய நீண்டகைகளையுடைய ஆண்மைக்குணமுள்ள இராமபிரானது, அருளும் - கருணையும், புகழும் - கீர்த்தியும், அழிவு இன்றி - அழிதலில்லாமல், ஊழி பலவும் - பலகற்பகாலமளவும், நிலை நிறுத்தற்கு - நிலைபெறச்செய்வதற்கு, நீ ஒருவனே - நீ ஒருத்தனே, உளை ஆனாய் - உள்ளவனானாய்; நின் பெருமைக்கு ஏற்ப - உனதுபெருமைக்குத் தக்கபடி, பகை இலங்கை - பகைவர்களுடைய இந்தலங்காநகரம், எழு கடற்கும் அப்புறத்தது ஆகாது இருந்தது - எழுகடல்களுக்கும் அப்பாலுள்ளதாகாமல் (இவ்வுவரிநீர்க்கடலினிடையே) இருந்தது, இழிபு அன்றோ - (உனது பெருமைக்கு) ஓர் இழிவல்லவோ?

(எ - று.)—எழுகடல்களையும் ஒருங்கேகடக்கும் வல்லமையை யுடையவன் அநுமா னென்பது, குறிப்பு.

இந்த இலங்கை இங்கு இராமல் எழ்கடல்கட்கும் அப்பா லிருக்குமானால், உன்பெருமை நன்றாகவிளங்கு மென்றபடி. எழுகடல்களையும் எளிதிற் கடக்கவல்ல உனக்கு இவ்வொருகடலின் சிறியதொருபாகத்தைக் கடத்தல் ஒருசிறப்பன்று என்றாள். இராமபிரான் தற்காலத்தில் அரசுரிமைபூணாவிடினும், அரசிற்குஉரியவ னென்னுங் காரணம்பற்றி, 'ஆழிநெடுங்கையாண்டகை' எனப்பட்டான். இனி, ஆழி நெடுங் கை என்பதற்கு - மோதிரத்தையணிந்த (முழந்தாளளவும்நீண்ட) கை யென்றுமாம். ஆழி - சக்கராயுத மென்றும், சக்கரரேகை யென்றுங் கொள்ளலுமாம். பூமண்டலத்தை யாளும் அரசர்க்குக் கையிற் சக்கரரேகை யிருத்தல், உத்தமலக்ஷணம். இராமபிரான் சீதையினிடத்து அருளுடையவனாயிருத்தல் அநுமான் தூதனாய்வந்ததனால்தான் விளங்குமாதலாலும், இராவணாதியரைச்சங்கரித்துப் பிராட்டியையடைந்து புகழ்பெறுதற்கும் ஜாநகியுள்ளவிடத்தையறிந்துவந்த அநுமான்தானே பிரதானகாரணமாவனாதலாலும், 'ஆண்டகைத னருளும் புகழு மழிவின்றி யூழிபலவும் நிலைநிறுத்தற்கு ஒருவன்நீயே யுளையானாய்' என்றது. ஊழி - பிரமனாயுள். 'பருமை' என்றும் பாடம்.

(௧௧௦)

ககக. அறிவுமீதேயுருவீதேயாற்றலீதேயரும்புலத்தின்
செறிவுமீதேசெயலீதேதேற்றமீதேதேற்றத்தி
னெறியுமீதேநினைவீதேநீதியீதேநினக்கென்றால்
வெறியரன்றேகுணங்களானவிரிஞ்சன்முதலாமேலானோர்.

(இ - ள்.) நினக்கு - உனக்கு,—அறிவும் - ஞானமும், ஈதே - இப்படிப் பட்டதேயாம்; உரு - வடிவமும், ஈதே—; ஆற்றல் - வல்லமையும், ஈதே—; அரும் புலத்தின் செறிவும் - (அடக்குவதற்கு) அரிய ஐம்புலங்களை யடக்குந்தன்மையும், ஈதே—; செயல் - செய்யுந்தொழிலும், ஈதே—; தேற்றம் - மனத்தெளிவும், ஈதே—; தேற்றத்தின் நெறியும் - அத்தெளிவின் பயனும், ஈதே—; நினைவு - எண்ணமும், ஈதே—; நீதி - முறைமையும், ஈதே—: என்றால் - என்றுசொன்னால், விரிஞ்சன் முதல் ஆம் மேலானோர் - பிரமன்முதலிய மேலோர், குணங்களான் வெறியர் அன்றே - நற்குணங்களால் வெறுமையுடையவ [குணங்களில்லாதவ] ரன்றோ? (எ - று.)

எல்லாநற்குணங்களும் உன்னிடத்து ஒருங்கேகூடியமைந்திருத்தலால், நீ யாவரினுஞ் சிறந்தவ னென்றபடி. ஈதே என்பதற்கு - இதுவே சிறந்ததென்றும், இதுவல்லது வேறு இல்லை யென்றும், எல்லாம் ஒன்றற்கொன்று ஒத்து அவ்வவற்றின்முடிவெல்லையையடைந்துள்ளன வென்றும் கருத்துக்கொள்க. இச்செய்யுளின் முதல்மூன்றடிகளை "உண்மைக்கிவனே வலிக்கிவனே யுறவுக்கிவனே யுரைக்கிவனே, திண்மைக்கிவனே நெறிக்கிவனே தேசுக்கிவனே சிலைக்கிவனே, வண்மைக்கிவனே" என்பதனோடு ஒப்பிடுக. பயனை, 'நெறி' என்றார், காரணத்தின்பின்னே நிகழ்வதாதலின். பிரமன் முதலியோர் இங்குக் கூறியவற்றிற் சிலகுணங்களையும் சிறிதே யுடையராதலின், இவ்வெல்லாக்குணங்களையும் ஒருங்கேயுடைய அநுமானுடன் ஒப்புநோக்குமிடத்து அவர்கள் சூரியனுக்குமுன் மின்மினிபோலக் குணமிலார்போலவே தோற்றுவரென்பார், 'வெறியரன்றே குணங்களான் விரிஞ்சன் முதலா மேலானோர்' என்றார். ஐம்புலத்தின் செறிவு - பஞ்சேந்திரியங்களையும் அதனதன்விஷயங்களாயுள்ள ஐம்புலங்களிற் போகவொட்டாது தடுத்தல். ஐம்புலங்களாவன— மெய்யின்புலனான ஊறும் [ஸ்பர்சமும்], வாயின்புலனான சுவையும் [ரசமும்], கண்ணின்புலனான ஒளியும் [ரூபமும்], மூக்கின்பலனான நாற்றமும் [கந்தமும்], செவியின்புலனான ஓசையும் [சப்தமும்] என்பன. விரிஞ்சனென்பது - (அன்னப்)பறவையாற் சுமக்கப்படுபவனென்றும், பஞ்சபூதங்களைப்படைப்பவனென்றும் அவயவப்பொருள்படும்; வடசொல். (ககக)

ககஉ. மின்னேரெயிற்றுவல்லரக்கர்வீக்கநோக்கிவீரற்குப்
பின்னேபிறந்தானல்லதோர்துணையிலாதபிழைநோக்கி
யுன்னுநின்றேயுடைகின்றேனொழிந்தேனையமுயிருயிர்த்தே
னென்னேநிருதரென்னுவரிவனேயெங்கோன்றுணையென்றால்.

(இ - ள்.) மின் நேர் எயிறு வல் அரக்கர் வீக்கம் நோக்கி - மின்னலை யொத்த பற்களையுடைய வலிய ராக்ஷசர்களின் பெருக்கத்தைப் பார்த்து, வீரற்கு பின்னே பிறந்தான் அல்லது ஓர் துணை இலாத பிழை நோக்கி - மகா வீர னாகிய இராமபிரானுக்குப் பின்பிறந்ததம்பியாகிய இலக்குமணனொருவனை யன்றி வேறொருதுணையுமில்லாத குறைவையும் பார்த்து, உன்னுகின்றேன் - (இவ்விராமபிரான் எவ்வாறு அரக்கரையெல்லாம் வெல்வா னென்று) ஆலோசித்துக்கொண்டே, உடைகின்றேன் - மனங்கலங்குகிற யான், ஐயம் ஒழிந் தேன் - இப்பொழுது நீ துணையாக நேரபட்டமையால்) அச்சந்தேகம் நீங்கப் பெற்றேன் [நீ துணையாகநிற்றலால் அப்பிரான்பகைவெல்வது நிச்சய மென்ற படி]; உயிர் உயிர்த்தேன் - பிராணாபாயத்தினின்று நீங்கப்பெற்றேன்; என்னே - (எனக்கு இனி) என்னகுறை யுளது? இவனே எம் கோன் துணை என்றால் - இப்படிப்பட்ட மகாபுருஷனே எனதுநாயகனுக்குச் சகாயனாகவுற் பட்டா னென்றால், நிருதர் - அரக்கர்கள், என் ஆவர் - யாதாகுவர்? (எ - று.) —எளிதில்வெல்லப்பட்டு அடியோடுஅழிவ ரென்றபடி.

அரக்கரது கோரப்பல்லுக்கு மின்னல் - ஒளிபற்றிய உவமை. நேர் - உவமவுருபு. மின் ஏர் என்றும் பிரிக்கலாம். 'வல்'என்ற அடைமொழி, அரக் கர்களின் தேகபலம் மநோபலம் வரபலம் ஆயுதபலம் முதலிய அனைத்தையுங் குறித்துநின்றது. இவன் என்றது, இங்கு முன்னிலையிற் படர்க்கை வந்த இடவழுவமைதி; உயர்வை விளக்கிநின்றது. இனி, இக்கவி சீதை அநுமானை முன்னிலைப்படுத்தாது அவனைப்பற்றித் தன் மனத்திற் சிறப்பாகக்கருதிய படியைக் கூறுவதெனக்கொள்ளின், இச்சொல் - வழாநிலையேயாம். என்னே - வியப்பிடைச்சொல் என்னவுமாம். (ககஉ)

கக௩. மாண்டேனெனினும்பழுதன்றேயின்றேமாயச்சிறைநின்று
மீண்டேனென்னையொறுத்தாரைக்குலங்களோடும்வேரறுத்தேன்
பூண்டேனெங்கோன்பொலங்கழலும்புகழேயன்றிப்புன்பழியுந்
தீண்டேனென்றுமனமகிழ்ந்தாடிருவின்முகத்துத்திருவன்னாள்.

(இ - ள்.) மாண்டேன் எனினும் பழுது அன்றே - இனி இறந்துபோவே னாலும் (எனக்கு) ஒருகுற்ற மின்றாம்; என்னை ஒறுத்தாரை - என்னைவருத் தப்படுத்திய அரக்கரை, குலங்களோடும் - வம்சங்களுடனே, வேர் அறுத் தேன் - வேரோடு அழியச்செய்தவளானேன்; இன்றே - இப்பொழுதே, மாயம் சிறைநின்றும் - வஞ்சனையாலாகிய (அரக்கரின்) காவலினின்றும், மீண் டேன் - நீங்கினவளுமானேன்; எம் கோன் பொலம் கழலும் - எனதுகணவ னுடைய அழகியதிருவடிகளையும், பூண்டேன் - அடைந்துவிட்டேன்; (இனி), புகழே அன்றி - கீர்த்தியைப்பெறுவேனையல்லாமல், புன் பழியும் தீண்டேன் - இழிவான பழியை அடையவும் மாட்டேன், என்று - என்றுசொல்லி, மனம் மகிழ்ந்தாள் - மனங்களிக்கப்பெற்றாள்: (யாவளெனின்,—) திரு வில் முகத்து திரு அன்னாள் - அழகையும் ஒளியையுமுடைய முகத்தையுடைய இலக்குமியை யொத்தவளாகிய சீதை; (எ - று.)

இராமபிரான் தன்னிடத்து வெறுப்புக்கொள்ளாமல் மிக்கவிருப்போடு அநுமானைத் தூதனுப்பியகாரணத்தால் அப்பிரான் வந்து தன்னை மீட்கவில்லையென்று தான் இதுவரையிற் கொண்டிருந்த மனக்குறை நீங்கப்பெற்றுச் சீதை இனித் தான் இறந்தாலும் பழுதில்லை யென்று கருதின ளென்க. அநுமான்வருவதற்குமுன் தான் இறந்திருப்பின் பழுதாகவே முடிந்திருக்கு மென்பது, சீதையின் உட்கோள். இராமபிரான் இங்குவந்து அரக்கர்குலத்தை வேரோடுஅழித்து என்னைச்சிறைமீட்டு அரக்கரூரில்வசித்த பழிக்கு உள்ளாக்காதபடி என்னைச்சேர்த்துக்கொள்வது திண்ண மென்பாள், அறுத்தேன், மீண்டேன்,பூண்டேன், தீண்டேன் என்றாள்; தெளிவுபற்றி எதிர்காலம் இறந்தகாலமாக்கூறியது,காலவழுவமைதி. 'ஒறுத்தாரைக் குலங்களோடும்வேரறுத்தேன்' எனத் தன்தொழிலாகவே கூறினது, தான்சிறையிருந்ததே ராக்ஷசநாசத்துக்குப் பிரதாநகாரண மென்பதுபற்றி. இனி, 'மாண்டேனெனினும்பழுதன்றே' என்பதற்கு-யான் முன்னே இறந்திருப்பேனானால் (அம்மரணம்) வீணேயாகுமன்றே? என்றுமாம். பொலங்கழல்-பொன்னாலாகிய வீரக்கழலையுடைய திருவடி யெனினுமாம். (கக௩)

[சீதை புகழ்ந்துகூறியதற்கு அநுமான் நாணிச் சிலகூறுதல்.]

கக௪. அண்ணற்பெரியோனடிவணங்கியறியவுரைப்பானருந்ததியே
வண்ணக்கடலினிடைக்கிடந்தமணலிற்பலரால்வானரத்தி
னெண்ணற்கரியபடைத்தலைவரிராமற்கடியாரியானவர்தம்
பண்ணைக்கொருவனெனப்போந்தேனேவக்கடவபணிசெய்வேன்.

(இ - ள்.) (அச்சீதையின் வார்த்தையைக் கேட்டு), அண்ணல் பெரியோன் - மிகவும்பெருந்தன்மையையுடைய அநுமான், அடி வணங்கி - (அப்பிராட்டியின்) திருவடிகளை நமஸ்கரித்து, (அவளைநோக்கி), அறிய உரைப்பான் - தெரியச்சொல்வானாயினான்:—'அருந்ததியே - அருந்ததிக்கொப்பானவளே! இராமற்கு அடியார் - இராமபிரானுக்கு அடியவர்களாகிய, எண்ணற்கு அரிய வானரத்தின் படைத்தலைவர் - எண்ணுதற்குஅருமையான குரங்குகக்கூட்டங்கட்குத் தலைவர்கள், வண்ணம் கடலினிடை கிடந்த மணலில் பலர் - அழகிய கடலிற் பொருந்திய மணலினும் அநேகராவர்; யான் - நான், அவர் தம் பண்ணைக்கு - அவ்வாநரர்களின் கூட்டத்திற்குள், ஒருவன் என - ஒருத்தனாக, போந்தேன் - வந்தவனாவேன்;ஏவக்கடவ பணி செய்வேன்-(இராமபிரான்) ஏவியருளிய கட்டளையைச் செய்யுந் தன்மையுடையேன்.

அண்ணல், பெரியோன் - ஒருபொருட்பன்மொழி. உருவினாலும் அறிவினாலும் பெரியவ னென்பது தோன்ற, 'அண்ணற்பெரியோன்' என்றாரென்னலாம். அருந்ததி - வசிஷ்டமகாமுனிவரது மனைவி; இவள் பதிவிரதாதருமத்திற் சிறத்தலால், கற்புடைமாதர்க்கு உவமைகூறப்படுவள்; வேறேயாரினும் இவட்குச் சிறப்பு - மற்றையிடங்களில்மாத்திரமேயன்றி நக்ஷத்திரநிலையிலும் கணவனைவிட்டுப் பிரியாது உடனிருத்தல். சீதையை அருந்ததியே யென விளித்தது, உவமையாகுபெயரால். அளவிறந்தமைக்குக் கடலின்

மணலை எடுத்துக்கூறுதல், கவிசமயம்; "நினைப்பான்புகிற் கடலைக்கவினுண் மணலிற் பலர்," "ஆர்த்தவாழித்தூளியின்தொகைய," "சிந்துவின்கட் செறிமணல்" முதலியன காண்க. எண்ணற்கரிய என்பது - இரட்டுறமொழிதலால், எண்ணுவதற்கும் நினைப்பதற்கும் அரிய எனப் பொருள்படும். ஏவக்கடவ பணி செய்வேன் - (அவ்வாநரர்களெல்லாம்) ஏவுந் தொழிலைச் செய்வேனென்றுமாம். (௧௧௪).

[இதுமுதல் மூன்று கவிகள் - வாநரர்களின் சிறப்பு.]

௧௧௫. வெள்ளமேழுபத்துளதால்வீரன்சேனையிவ்வேலை
பள்ளமொருகைநீரள்ளிக்குடிக்கச்சாலும்பான்மையதோ
கள்ளவரக்கர்கடியிலங்கைகாணாதொழிந்ததாலன்றோ
வுள்ளதுணையுமுளதாவதறிந்தபின்னுமுளதாமோ.

(இ - ள்.) வீரன் சேனை - இராமபிரானது வாநரசைநியம், வெள்ளம் எழுபத்து உளது-எழுபதுவெள்ளமென்னுந் தொகையையுடையது; இ வேலை பள்ளம் நீர் - இந்தக்கடலின் ஆழமாகிய நீர்முழுவதும், ஒரு கை அள்ளி குடிக்க சாலும் பான்மையதோ - (அவ்வாநரங்கட்கு) ஒருகையினால் எடுத்துக் குடிப்பதற்காயினும் போதுந் தன்மையையுடையதோ? [அன்று என்றபடி]; கள்ளம் அரக்கர் - வஞ்சனையையுடைய ராக்ஷசரது, கடி இலங்கை - காவலையுடைய லங்காபட்டணம், காணாது ஒழிந்ததால் அன்றோ - (இன்னவிடத்திலுள்ளதென்று) காணப்படாமற்போனதனா லல்லவோ, உள்ள துணையும் - இந்நாள்மட்டும், உளது ஆவது - அழியாம லிருப்பது; அறிந்தபின்னும் - (இவ்விடத்திலுள்ளதென்று) தெரிந்தபின்பும் [இனிமேலும்], உளது ஆமோ - அழியாமலிருப்பதாமோ? [ஆகாது]; (எ - று.)—ஆல் - அசை.

வீரன் - சுக்கிரீவனுமாம். இரண்டாமடி - வானரக்கூட்டத்தின் மிகுதியையும் ஆற்றலையுங் குறிக்கவந்த உயர்வுநவிற்சியணி. ஓகாரங்கள் - வினாவகையால், எதிர்மறையை யுணர்த்திநின்றன. கடி - உரிச்சொல். (௧௧௫).

௧௧௬. வாலியிளவலவன்மைந்தன்மயிந்தன்றுமிந்தன்வயக்குமுத
னீலனிடபன்குமுதாக்கன்பனசன்சரபனெடுஞ்சாம்பன்
காலனனையதுன்மருடன்காம்பன்கவயன்கவயாக்கன்
ஞாலமறியுநற்சங்கன்வினதன்றுவிந்தனளவென்பான்.

இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) வாலி இளவல் - வாலியின்தம்பியான சுக்கிரீவனும், அவன் மைந்தன் - அவ்வாலியின்புதல்வனான அங்கதனும், மயிந்தன் - மைந்தனும், துமிந்தன் - த்விவிதனும், வய குமுதன் - வெற்றியையுடைய குமுதனும், நீலன் - நீலனும், இடபன் - ருஷபனும், குமுதாக்கன் - குமுதாக்ஷனும், பனசன் - பநசனும், சரபன் - சரபனும், நெடுஞ் சாம்பன் - பெரிய ஜாம்பவானும், காலன் அனைய துன்மருடன் - யமன்போன்ற துர்மர்ஷனும், காம்பன் - காம்ப

னும், கவயன் - கவயனும், கவயாக்கன் - கவயாக்ஷனும், ஞாலம் அறியும் நல் சங்கன் - உலகமெல்லாம் அறியும் நன்மையையுடைய சங்கனும், விநதன் - விநதனும், துவிந்தன் - துவிந்தனும், நளன் என்பான் - நளனென்பவனும், (எ-று.)

மயிந்தன் துமிந்தன் - மைந்த த்விவிதர்; இவர், இரட்டையரான அசுவினீதேவர்களின் புதல்வர். குமுதன் - ஆம்பல்போன்ற நிறமுடையவன். நீலன் - நீலநிறமுடைய ஒரு வாநரன்; இவன், அக்கினியின் அம்சமானவன். இடபன் - ருஷபன்; காளைபோன்றவன். குமுதாக்கன் - ஆம்பல்போலுங் கண்களையுடையவன். சரபன் - சரபம்போன்றவன்; (சரபம் - சிங்கத்தைக் கொல்லவல்லதும் எட்டுக்கால்களையுடையது மாகிய ஒரு பறவை; இதனை மிருக மென்பாரு முளர்.) சாம்பன் - ஜாம்பவாந் என்பதன் விகாரம்; இவன், பிரமனது கொட்டாவியினின்று அவனம்சமாய்க் கரடிவடிவமாய்ப் பிறந்தவன்; இவன், மிக்கமூத்தவனாதலால், 'நெடுஞ்சாம்பன்' எனப்பட்டான். காலன் - பிராணிகளின் ஆயுளெல்லையைக் கணக்கிட்டுக் கொல்லுதல்தொழிலுடையவனாதல்பற்றி யமனுக்கு வந்த காரணக்குறி. துர்மர்ஷன் - (பகைவர்களாற்) பொறுக்கவொண்ணாக் கோபமுடையவன். கவயன் - காட்டுப்பசுவைப் போன்றவன். கவயாக்ஷன் - காட்டுப்பசுவின் கண்போலுங் கண்களுடையவன். ஞாலமறியும் நன்மை - புகழ். சங்கன் - சங்குநிறமானவன். விநதன் - வணக்கமுடையவன். நளன் - சந்திரனம்சமான ஒருவாநரன். (கககூ)

ககஎ. தம்பன் றாமந் தனிப்பேரோன் றதியின் வதனன் சதவலியென், றிம்ப ருலகோ டெவ்வுலகு மெடுக்கு மிடுக்க ரிராமன்கை, யம்பி னுதவும் படைத்தலைவ ரவரை நோக்கி னிவ்வரக்கர், வம்பின் முலையா யுறையிடவும் போதார் கணக்கு வரம்புண்டோ.

(இ - ள்.) தம்பன் - ஸ்தம்பனும், தூமன் தனி பேரோன் - தூமனென்னும் ஒப்பற்றபெயரையுடையவனும், ததியின் வதனன் - ததிமுகனும், சதவலி - சதவலியும், என்று - என்றுபெயர்சொல்லப்பட்ட, இராமன்கைஅம்பின்உதவும் - இராமபிரானது கையினால் விடப்படுகிற அம்புபோல(க் குறிதப்பாமற்சென்று பகைவரைத் தவறாமற்கொன்று)உதவுகிற, படை தலைவர் - சேனைத்தலைவர்கள், இம்பர் உலகோடு - இவ்வுலகத்தையும், எ உலகும் - மற்றெல்லாவுலகங்களையும், எடுக்கும் - பெயர்த்துத்தூக்கவல்ல, மிடுக்கர் - வலிமையையுடையவராவர்; வம்பின் முலையாய் - கச்சணிந்த தனமுடையவளே! அவரை நோக்கின் - அவ்வாநரர்களைப் பார்த்தால், இ அரக்கர் - இந்தராக்ஷசர்களெல்லாம், உறை இடவும் போதார் - (அவர்கள்தொகைக்கு) உறையிடவும் போதமாட்டார்கள்; கணக்கு வரம்பு உண்டோ - (அவ்வாநரசேனைக்கு) ஓர்எண்ணளவு உளதோ? [இல்லை யென்றபடி]; (எ-று.)—என்று இராமபிரானது துணைவலியை அநுமான் பிராட்டியினிடம் தெளிவாகக் கூறிமுடித்தன னென்க.

தம்பன் - தம்பம்போன்றவன். தூமன் - புகைநிறமானவன். சதவலி - பலதோல்மடிப்புக்களையுடையவன். ததிமுகன் என்னும் பெயரை 'ததியின் வதனன்'என்றார். ததிமுகன் - தயிர்போல் வெள்ளியமுகமுடையவன். வம்பு -

வாசனையுமாம். உறையிடுதலாவது-பொருள்களைக்கணக்கிடும்போது ஞாபகத்தின்பொருட்டு ஒவ்வொரு பெருந்தொகைக்கு ஒன்றாக இடுவதோர் இலக்கக் குறிப்பு; இவ்விலங்கையிலுள்ள அரக்கர்களின் தொகை இராமபிரானுக்குச் சேனையாகவுள்ள வாநரவீரர்களின் தொகைக்கு உறையிடவும் போதாதென்று, வாநரசேனையின் தொகைமிகுதியை விளக்கியவாறு. உறையிடுதலின் தன்மையை, "தறையிடத்தே யுழ லெல்லாப்பிறவி தமக்கு மள, வுறையிடத் தேய்ந்திடு மிவ்வந்திவானத் துடுக்குலமே", "அன்றுபட்டவர்க் குறையிடப் போதுமோ வநேகநாளினும் பட்டார்" என்றாற்போல்வனவற்றிற் கண்டு உணர்க. (௧௧௭)

உருக்காட்டுபடலம் முற்றிற்று.

---

## ஆறாவது
## சூளாமணிப் படலம்.

பிராட்டி தான்வைத்திருந்த சூளாமணியை இராமபிரானிடம் கொண்டு போய்த்தரும்படி அநுமானிடம் அடையாளமாகக் கொடுத்த வரலாற்றைக் கூறுகின்ற பாகம். சூளாமணி - சூடாமணி; இது, வடநூல்முறைப்படிவந்த டகரளகரப்போலி. இது,சூளா மணி என்னும் இரண்டுவடமொழிகள்கூடிநின்ற தொகைநிலைத்தொடர்மொழி. இதனை ஏழாம்வேற்றுமையுருபும்பயனுமுடன் தொக்கதொகையென்றால் தலையிலணியும்மணியென்றும், ஆறாம்வேற்றுமைத் தொகை யென்றால் தலையினதுசம்பந்தமான மணி யென்றும் விரிந்து பொருள்படும். இது,ஒருவகைத்தலையணி.சூடா-தலைமயிர்முடி, மணி-இரத்தினம்.

வேறு.

[அநுமான் சீதையை இராமபிரானிடஞ் சேர்ப்பிக்கக் கருதுதல்.]

௧. உண்டுதுணை யென்னவெளி தோவுலகி னம்மா
புண்டரிகை போலுமிவ ளின்னல்புரி கின்றா
ளண்டமுத னாயகன தாவியனை யாளைக்
கொண்டகல்வ தேகரும மென்றுணர்வு கொண்டான்.

(இ - ள்.) (என்றுசொன்ன் அநுமான்), 'இன்னல் புரிகின்றாள் - துன்பமனுபவிப்பவளும், அண்டம் முதல் நாயகனது ஆவி அனையாள் - உலகங்கட்கெல்லாம் முதல்தலைவனாகிய இராமபிரானது உயிரை யொத்தவளுமாகிய, புண்டரிகை போலும் இவளை-இலக்குமிபோன்ற இப்பிராட்டியை, கொண்டு - எடுத்துக்கொண்டு, அகல்வதே - (அப்பிரானிடம்) செல்வதே, கருமம் - (இப்பொழுது நான்)செய்யவேண்டிய தொழிலாம்,' என்று உணர்வு கொண்டான் - என்றுஎண்ணினான்; (இவ்வநுமானுக்கு), உலகின் - லோகத்தில், துணை - வேறு உவமை, உண்டு—,என்ன - என்றுசொல்ல, எளிதோ - எளியதோ? [அன்று, தனக்குத்தானே உவமையாவன் என்றபடி]; அம்மா - ஆச்சரியம்!'

(எ - று.)—அம்ம என்னும் வியப்பிடைச்சொல், அம்மா என ஈறுதிரிந்துநின்றது; அநுமானது தைரியத்தைப்பற்றி வியந்தவாறு.

முதலடி - கவிக்கூற்று. அநுமான் ஒப்புயர்வற்றவனாதலால், இவ்வருந்தொழிலைச் செய்யக்கருதினனென்பதாம். முதலடியைப் பின்மூன்றடிகள் சமர்த்தித்துநின்றது, தொடர்நிலைச்செய்யுட்குறியணி. புண்டரிகை - செந்தாமரைமலரில் வாழும் இலக்குமி. 'உலகி லென்றோ' என்ற பாடத்துக்கு - கீழ்ச்சொன்ன வாநரசேனைக்கு உலகத்தில் ஓர் அளவு உண்டோ வென்று அநுமான்சொல்லி யெனப் பொருள் காண்க.

இதுமுதற் பத்துக் கவிகள் - கீழ்ப்படலத்தின் அறுபதாங் கவி போன்ற கலிவிருத்தங்கள். (க)

[இதுமுதல் ஒன்பதுகவிகள்-பிராட்டியினிடத்து அநுமான் விண்ணப்பித்ததைக் கூறும்.]

உ. கேட்டியடியேனுரைமுனிந்தருளல்கேளார்
வீட்டியிடுமேலவனைவேறல்வினையன்று
ஈட்டியினியென்பலவிராமனெதிர்நின்னைக்
காட்டியடிதாழ்வெனிதுகாண்டியிதுகாலம்.

(இ - ள்.) (அநுமான் சீதையைநோக்கி), அடியேன் உரை-அடியவனான எனது வார்த்தையை, கேட்டி - கேட்பாயாக: முனிந்தருளல் - கோபிக்க வேண்டாம்: கேளார் வீட்டியிடும் மேலவனை வேறல் வினை அன்று - பகைவர்களை நாசஞ்செய்யுந்தன்மையுள்ள சிறப்பையுடைய இராவணனை வெல்லுதல் (இப்பொழுது செய்யவேண்டிய) காரிய மன்று; இனி பல ஈட்டி என் - இப்பொழுது பலவார்த்தைகளைத்திரட்டிச்சொல்லி யாதுபயன்? இராமன் எதிர் நின்னை காட்டி அடி தாழ்வென் - இராமபிரானதுமுன்னிலையில் உன்னைக் கொண்டுபோய்ச்சேர்த்து (அப்பிரானது) திருவடிகளை வணங்குவேன்; இது காண்டி-இந்த எனதுசெய்கையைக் காண்பாயாக; இது காலம் - இச்செய்கையே இக்காலத்திற்கு ஏற்றதாம்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

சீதையை எடுத்துக்கொண்டு செல்வதாகத் தான் கூறப்புகுவது சீதையின் மனத்துக்கு இவன் இராவணனோ வென ஐயமுண்டாக்கக் கூடியதாகையாலும், 'இராமபிரானிட்ட கட்டளைக்கு உட்படாமல் சுவதந்திரமாக இருத்தலாலும், மகாபதிவிரதையான சீதையைத் தான்எடுத்துச்செல்வது தகுதியற்றதாகத் தோன்றுதலாலும், 'முனிந்தருளல்' என்றான். அடியேன் - இராமபிரானது பக்தனாகிய நான்; இது - அடிமையென்னும் பண்பினடியாகப் பிறந்து தாழ்வுப்பொருள்தந்துநின்ற தன்மையொருமைப்பெயர். முனிந்தருளல் என்னும் எதிர்மறைவியங்கோளில், அருள் - துணைவினை. கேளார் - சொன்னவார்த்தையைக்கேட்டுநடவாதவர்; யோகக்ஷேமங்களைக் கேளாதவர்; எனவே, பகைவராயிற்று. 'கேளான்' என்ற பாடத்துக்கு - கேளான் வீட்டியிடுமேல் அவனை எனப்பிரித்து, பகைவனாகியஇராவணன் உன்னைக்கொன்று

விடுவானுனல் பின்பு அவனைவெல்லுதல் காரியமன்று என்று பொருள்படும். காரியம் பிரதானமே யன்றி வீரியம் பிரதானமன் றென்பான் 'மேலவனை வேறல் வினையன்று' என்றான். வினையன்று - ஒருபெருங்காரியமன்று என்று மாம். 'மேலவனை' என்றவிடத்து 'மேவலனை' என்றும் பாடம். இது காலம் என்பதற்கு - இதுவே (அதற்குஏற்ற) சமய மெனக் கூறினுமாம்; இப் பொழுதே யென்றுமாம். (உ)

ஙூ. பொன்றிணிபொலங்கொடியென்மென்மயிர்பொருந்தித்
துன்றியபுயத்தினிதிருக்கதுயர்விட்டா
யின்றுயில்விளைக்கவொரிமைப்பினிறைவைகுங்
குன்றிடையுனைக்கொடுகுதிப்பெனிடைகொள்ளேன்.

(இ - ள்.) பொன் திணி பொலம் கொடி - பொன்மயமான அழகிய பூங் கொடிபோன்றவளே! என்-எனது, மெல் மயிர் பொருந்தி துன்றிய புயத்து- மென்மையான மயிர்கள் நெருங்கியிருக்கப்பெற்ற தோள்களின்மேல், இனிது இருக்க - இனிமையாக (நீ ஏறி) வீற்றிருந்து, துயர் விட்டாய் இன் துயில் விளைக்க - துன்பம்நீங்கி இனிமையான தூக்கத்தைக் கொள்வாயாக; (நான்), உனை கொடு - உன்னை எடுத்துக்கொண்டு, இடை கொள்ளேன் - நடுவில் தங்காது, ஓர் இமைப்பின் - ஒருநொடிப்பொழுதினுள்ளே, இறை வைகும் குன்றிடை-இராமபிரான்எழுந்தருளியுள்ள மலையிலே, குதிப்பென்—;(எ-று.)

பொன்திணி பொலங்கொடி - பொன்னுலகமான தேவலோகத்திலே கற்பகத்தைச் சார்ந்துள்ள காமவல்லி. என் மென்மயிர் பொருந்தித் துன்றிய புயம் - இதனை மெத்தையாகக் கொள் என்பது, குறிப்பு. இருக்க, விட்டாய், கொள்ளேன் - முற்றெச்சங்கள். இமைப்பு - ஒருமனிதன் இயல்பாகக் கண்க ளின் இதழ்களை ஒருகால் மூடித்திறத்தற்கு வேண்டும் பொழுது; இது, ஒருமாத் திரை யெனப்படும். இறைமை - தலைமை: அதனையுடையவன், இறை; பண்பாகுபெயர். இனி, யாவர்மனத்திலும் இறுப்பவன் [தங்குபவன்]:கடவுள் என் றுமாம். இறைவைகும் குன்று - மதங்கமலை. (ங)

ச. அறிந்திடையரக்கர்தொடர்வார்களுளராமேன்
முறிந்துதிரநூறியெதிரென்சினமுடிப்பே
னெறிந்தகுழனின்னிலைமைகண்டுநெடியோன்பால்
வெறுங்கைபெயரேனொருவராலும்விளியாதேன்.

(இ - ள்.) நெறிந்த குழல் - நெறித்த கூந்தலையுடையவளே! அறிந்து- (நான் உன்னை எடுத்துக்கொண்டுபோவதைத்) தெரிந்து, இடை-நடுவழியிலே, தொடர்வார்கள் அரக்கர் - பின்தொடர்ந்து போர்க்குவருபவர்களான இராக் கதர்கள், உளர் ஆம் எல் - உள்ளாரானல், ஒருவராலும் விளியாதேன்-எவராலும் கொல்லப்படமாட்டாத நான், எதிர்-(அவர்களை)எதிர்த்து, முறிந்து உதிர நூறி- அழிந்துசிதறும்படி நாசஞ்செய்து, என் சினம் முடிப்பேன் - எனது கோபத் தையும் தீர்த்துக்கொள்வேன்; நின் நிலைமை கண்டும் - உனது நிலைமையைக்

கண்ணுற்கண்டுவைத்தபின்பும், நெடியோன்பால் - பெருந்தன்மையுடைய இராமபிரானிடம், வெறுங்கை பெயரேன் - (உன்னை உடன்கொண்டுசெல்வே னேயன்றி) வெறுங்கையுடனே திரும்பிப்போகேன்; (எ - று.)

'உளராமேல்' என்ற சொல்லின் ஆற்றலால், ஒருவரும் அறியாதபடி செல்லவல்லேன் யான் என்று குறிப்பித்தவாறும். ஆம்-அசை. எதிர்த்து என் னும் வினையெச்சம் விகுதிமுதலியனதொக்கு 'எதிர்' என நின்றது; "வரிப் புனைபந்து" என்பதில், 'வரி' என்பதுபோல. குழல் - குழலையுடைய பிராட்டிக் குச் சினையாகுபெயர். நெறிந்தகுழல் எனபதனை அன்மொழித்தொகையாகக் கொள்ளலாகாது: வேற்றுமைத்தொகை முதலிய ஐந்தனுள் ஒன்றன்புறத்தும் பிறவாமையின். இவ்விடத்து, "நெறிந்தகருங்குழல் மடவாய்" என்ற பெரி யார்பாசுரமும், 'நெறித்துக் கருகின குழலையும் மடப்பத்தையுமுடையவளே! கோரைமயிராயிராதே சுருண்டு கடையளவும்செல்ல இருண்டிருக்கையிறே குழலுக்கு ஏற்றம்; இதுதான் பூர்வத்திற்படியையிட்டுச் சொல்லுகிறான்' என்ற அதன் வியாக்கியானமும் உணரத்தக்கன. நின்நிலைமை கண்டும் - அரக்கியர் களின்கைப்பட்டு யாதொருதுணையுமின்றிக் காட்டுத்தீயினிடை யகப்பட்ட மான்போல் மிகத்தவிக்கும் உனது தன்மையைப் பார்த்தும் என்றவாறும். எனவே, நான் உன்னை உபேக்ஷித்துச்செல்லுதல் சிறிதும்தகுதியன்று என்பது, தொனி. நெடியோன் - திரிவிக்கிரமனாய் நீண்டவ னென்றுமாம்.

'அரசன் தெய்வம் குரு இவர்களிடத்து வெறுங்கையுடனே செல்ல லாகாது' என்பது நூற்கொள்கை யாதலால், தெய்வமும் அரசனு மாகிய இராமபிரானிடத்து அவனுகந்த மிகச்சிறந்த பொருளான உன்னைக் கொண் டன்றி வெறுங்கையுடனே நான் மீண்டுசெல்வது முறைமையன் றென்பான் 'நெடியோன்பால் வெறுங்கைபெயரேன்' என்றான். விளியாதேன் - தோலா தேன்என்னும் பொருள்படும். நான் உன்னையெடுத்துக்கொண்டு செல்கை யில் அரக்கர்கள் பின்தொடர்ந்து போர்செய்து என்னைஅழித்தால் என்செய் வது? என நீ கவலவேண்டா; நான் மிக்கபலமுள்ளவனும் சிரஞ்சீவியு மாத லால், நானே இறவாமலே வெல்வேன் என்ற ஸாபிப்பிராயவிசேஷ்யமாதலால், 'ஒருவராலும் விளியாதேன்' என்பது - கருத்துடையடைகொளியணியாம்; இதனை வடநூலார் பரிகராங்குராலங்கார மென்பர். இனி, விளியாதேன்என் பதை முற்றாகவுங்கொள்ளலாம். அநுமான்சிரஞ்சீவியாயிருக்குமாறு பிரமனிடம் வரம் பெற்றுள்ளவனாதலால், தன்னை இங்ஙனம் கூறினான்; "தாதாவுரைக்கு மென்பிரமதண்டாற்றானுஞ் சாவின்றி, மேதாவியுமா யொருநாளும் விளியா னாளு முறுகவென" என்றார் ஒட்டக்கூத்தர் உத்தரகாண்டத்தில். (௪)

௫. இலங்கையொடுமேருகிரிகொலென்னினுமிடந்தென்
வலங்கொளொருகைத்தலையில்வைத்தெதிர்தடுப்பான்
விலங்கினரைநூறிவரிவெஞ்சிலையினோர்தம்
பொலங்கொள்கழற்குவெனிதன்னைபொருளன்றால்.

(இ - ள்.) அன்னை - தாயே! 'இலங்கையொடும் - இந்தலங்காபட்டணத் தோடும், ஏகுதி கொல் - (என்னை எடுத்துக்கொண்டு) செல்ல வல்லையோ? என்னினும் - என்று கூறினாலும், (அவ்வாறே), இடந்து - (இவ்விலங்கையைப்) பேர்த்தெடுத்து, என் வலம் கொள் ஒரு கைத்தலையில் வைத்து - எனது பலம் பொருந்திய ஒருகைத்தலத்தில் வைத்துக்கொண்டு, எதிர் தடுப்பான் விலங்கினரை நூறி - எதிரில் தடுக்கும்பொருட்டு வருகிற இராக்கதரையெல்லாம் (மற்றொருகையாற்) பொடியாக்கிவிட்டு, வரி வெம் சிலையினோர்தம் பொலம் கொள் கழல் தாழ்குவென் - கட்டமைந்த கொடிய விற்களையுடைய இராமலக்ஷ்மணர் களது அழகுகொண்ட திருவடிகளில் சாஷ்டாங்கமாக விழுந்து தண்டனிடுவேன்; (இவ்வளவுவலிமையையுடைய எனக்கு), இது - (உன்னைத் தோளின் மீது எடுத்துச்செல்லும்) இச்சிறுதொழில், பொருள் அன்று - ஒருபொருட் டன்று; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி. கொல் - வினா. வலங்கொள் ஒரு கைத்தலையில் - வலக்கையில் என்றுமாம். இது - லங்கையைப்பேர்த்தெடுத்துச் செல்லுந் தொழி லென்றுமாம். அன்னை - அண்மைவிளி. கைத்தலை - தோளுமாம். (௫)

௬. அருந்ததியுரைத்தியழகற்கருகுசென்றுன்
மருந்தனையதேவிநெடுவஞ்சர்சிறைவைப்பிற்
பெருந்துயரினோடுமொருவீடுபெறலில்லா
திருந்தனளெனப்பகரினென்னடிமையென்னாம்.

(இ - ள்.) அருந்ததி - அருந்ததிபோல்பவளே! அழகற்கு அருகு சென்று - பேரழகனான இராமபிரானிடஞ் சென்று, 'உன் - உனது, மருந்து அனைய தேவி - தேவாமிருதம்போன்ற மனைவி, நெடு வஞ்சர் சிறை வைப்பில் - மிக்க வஞ்சனையையுடைய அரக்கர்களின் சிறைச்சாலையில், ஒரு வீடு பெறல் இல்லாது - ஒருவகையாலும் விடுதலையடையும் உபாயத்தைப் பெறாமல், பெருந் துயரினோடும் இருந்தனள் - மிக்க துன்பத்துடனே யிருக்கின்றாள்', 'என பகரின் - என்று நான்) சொல்வேனாயின், என் அடிமை - எனது அடிமைத் தொழில், என் ஆம் - யாது பயன்பெறும்? உரைத்தி - சொல்வாயாக; (எ - று.)

தலைவனுக்கு உகப்பான தொழில் செய்தலே அடியவனுக்குக் கடமை யாதலால், அதனைச்செய்து உன்னைமீட்காத என்அடிமை சிறிதும்பயன் படாது என்பதாம். 'சேஷிக்கு' அதிசயத்தை விளைக்கை, சேஷபூதனுக்கு ஸ்வரூபலாபமும், ப்ராப்யமும்' என்ற பெரியோர்வாக்கையும் நோக்குக. இராமபிரானுக்குத் தெவிட்டாத மிக்கஇனிமை விளைத்தலில், சீதைக்கு அமிருதம் உவமை. (௬)

௭. புண்டொடர்வகற்றியபுயத்திறொடுபுக்கேன்
விண்டவர்வலத்தையும்விரித்துரைசெய்கேனோ
கொண்டுவருகிற்றிலெனுயிர்க்குறுதிகொண்டேன்
கண்டுவருகிற்றிலெனெனக்கழறுகேனோ.

(இ - ள்.) புண் தொடர்வு அகற்றிய-புண்படுதலை நீங்கிய, புயத்தினொடு- தோள்களுடனே, புக்கேன் - (யான் இராமபிரானிடம்) சென்றவனாய், விண்டவர் வலத்தையும் - (நமது) பகைவர்களுடைய பலத்தையெல்லாம், விரித்து உரை செய்கேனோ - விவரித்துச் சொல்வேனோ? 'கொண்டு வருகிற்றிலென் - (பிராட்டியை) உடன்கொண்டுவந்தே னில்லை: உயிர்க்கு உறுதி கொண்டேன்-(எனது) உயிர்க்கு நன்மையையே தேடிக்கொண்டேன்: கண்டு வருகிற்றிலென் - (பிராட்டியைச் செவ்வையாகக்) கண்டுவந்தேனு மில்லை,' என கழறுகேனோ - என்று சொல்வேனோ? (எ - று.)

உன்னை நான் உடன்கொண்டு செல்லாவிடின் உன்னைக்கண்டதனாலா கிய பயன்தானும் இல்லை; நான் இராமபிரானிடம்சென்று பகைவர்களின் வலிமையையெல்லாம் விவரித்துச்சொல்வதற்காகவோ இப்போது இங்குவந் தது? அவ்வலிமைதானும் எனக்கு எவ்வாறு செவ்வையாய்த் தெரியும்?உன்னை நானெடுத்துக்கொண்டுபோக அப்பொழுது அவர்கள் எதிர்த்துவந்தாலன்றோ அவர்கள்வலிமை எனக்குத் தெரியும்? உன்னை நான் கொண்டுசெல்லாவிட் டால், என்உயிர்க்கு ஏதாவது ஒருதீங்குநேருமோ வென்று சங்கித்து அவ்வு யிர்க்கு நன்மையைச் செய்துகொண்டவனேயன்றி, இராமபிரானுக்கும் உனக்கும் ஒருநன்மையும் செய்தவனல்லேன் என்றவாறும். 'புண்தொடர்வகற் றிய புயம்'என்றது, இதுவரையிலும் ஒருபொழுதும் பகைவர்களால் ஊறு படாமையை விளக்கிற் றென்னவுமாம். விண்டவர் - மனம்வேறுபட்டவர்: என்றது, பகைவரை; 'உயிர்க்குறுதிகொண்டேன்' என்பதை, 'கொண்டு வருகிற்றிலென்' என்பதனோடும், 'கண்டுவருகிற்றிலென்' என்பதனோடும் இயைத்து மத்யமதீப மாகப் பொருள் காண்க. கண்டுவருகிற்றிலென் - நன்றாகக்கண்டால் ஒருவேளை பகைவர்கள் எனது உயிர்க்கு என்னதீங்குசெய் வார்களோ வென்றுஅஞ்சிஅதுதானும் செய்தேனில்லை யென்றபடி. கழறுகே னோ என்ற ஓகாரம் - சொல்வது தகுதியல்லவே யென்று இரங்கியபடியைக் காட்டும். இவ்வாறெல்லாஞ் சொல்லுதலின் இழிவுதோன்ற, 'கழறுகேனோ' என்றான்; (கழறுதல் - பிதற்றுதல்.) "விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கி னுள், வைக்குந்தன் னாளை யெடுத்து" என்ற திருக்குறள், இங்கு முதலடிக்கு மேற்கோளாகத்தக்கது. (எ)

அ. இருக்குமதில்சூழ்கடியிலங்கையையிமைப்பி
னுருக்கியெரியாவிகலரக்கரையுமொன்றா
முருக்கிநிருதக்குலமுடித்துவினைமுற்றிப்
பொருக்கவகல்கென்னினுமதின்றுபுரிகின்றேன்.

(இ - ள்.) இருக்கும் - (நீ) தங்கியுள்ள, மதில் சூழ் கடி இலங்கையை - மதில்களினாற் சூழப்பட்ட காவலையுடைய இலங்காபுரியை, இமைப்பின் - நொடிபொழுதினுள்ளே, உருக்கி எரியா - (நெருப்பால்) எரித்து உருகச் செய்து,—இகல் அரக்கரையும் - (இங்குள்ள) வலிமையையுடைய ராக்ஷசர்

களையும், ஒன்று ஆ முருக்கி - ஒருசேர அழித்து, நிருதர் குலம் முடித்து - அரக்கர்குலத்தையும் வேரோடு அழித்து, வினை முற்றி - போர்த்தொழிலை முடித்துக்கொண்டு, பொருக்க - விரைவாக, அகல்க - செல்வாயாக, என்னினும் - என்று (நீ) கட்டளையிட்டாலும், அது - அச்செய்கையையும், இன்று - இப்பொழுதே, புரிகின்றேன் - செய்துமுடிக்கின்றேன்; (எ - று.)

இருக்கும் இலங்கை யென இயையும். வினை முற்றி - வந்தகாரியத்தை முடித்துக்கொண்டு என்றுமாம். பொருக்க - விரைவுக்குறிப்பிடைச்சொல். (அ)

௯. இந்துநுதனின்னொடு மெய்திகல்வீரன்
சிந்தையுறுவெந்துயர் தவிர்ந்துதெளிவோடு
மந்தமிலரக்கர்குலமற்றவிய நூறி
நந்தலில்புவிக்கணிடர் களைதனன்றால்.

(இ - ள்.) இந்து நுதல் - சந்திரன்போன்ற நெற்றியையுடையவளே! இகல் வீரன் - வலிமையையுடைய வீரனாகிய இராமபிரான், நின்னொடு இயைய எய்தி - (நான் உன்னை எடுத்துக்கொண்டுபோக) உன்னோடு இப்பொழுதுகூடி, சிந்தை உறு வெம் துயர் தவிர்ந்து - மனத்திற் பொருந்திய கொடிய துயரம் நீங்கப்பெற்று, தெளிவோடும் - மனத்தெளிவுடனே, பின் - பின்பு (இங்கு வந்து), அந்தம் இல் அரக்கர் குலம் அற்று அவிய நூறி - முடிவில்லாத [மிக்க தொகுதியாயுள்ள] அரக்கர்கூட்டத்தை அழிந்தொழியும்படி நீறாக்கி, நந்தல் இல் புவிக்கண் இடர் களைதல் - அழிதலில்லாத இவ்வுலகத்துக்கு (அவர்களால் நேர்ந்த) துன்பத்தைத் தீர்ப்பது, நன்று - நல்லதாம்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

'இப்போது தான் அநுமானோடுமீண்டுவிட்டால் இராமபிரானால் துஷ்டநிக்கிரகம் நடப்பது எவ்வாறு?' என்று சீதைக்கு உண்டாகக்கூடிய சந்தேகத்தை அநுமான் இவ்வாறுசொல்லி யொழித்தனனென்க. இந்து நுதல் - உவமைத்தொகையன்மொழி. இயைய எய்தி - உடனே மீண்டும் இவ்விலங்கைக்கு வந்து எனவுமாம். அந்தம் இல் - அழகில்லாத என்றுமாம். (௯)

௧0. வேறினி விளம்பவுள தன்றுவிதி யாலிப்
பேறுபெற வென்கணரு டந்தருளு பின்போ
யாறுதுய ரஞ்சொலிள வஞ்சியடி யனேறு
ளேறுகடி தென்றுதொழு தின்னடிப ணிந்தான்.

(இ - ள்.) 'அம் சொல் இள வஞ்சி - அழகியசொற்களையுடைய இளமையான வஞ்சிக்கொடிபோன்றவளே! இனி வேறு விளம்ப உளது அன்று - இனி வேறோர் ஆக்ஷேபமும் (நீ) சொல்லத்தக்கதன்று: விதியால் - (முன்செய்துள்ள) நல்வினைப்பயனால், இ பேறு பெற - (உன்னை இராமபிரானிடத்திற் சேர்த்த லென்ற) இப்படிப்பட்ட பாக்கியத்தை (யான்) பெறும்படி, என்கண் - என்னிடத்தில், அருள் தந்தருளு - கிருபைசெய்தருள்வாயாக; பின் - (நான் எடுத்துக்கொண்டுபோன) பின்பு, போய் - (இராமபிரானிடம் நீ) சென்று, துயர் ஆறு - துன்பந்தணியப்பெறுவாயாக: அடியன் தோள் - என்னுடையதோ

ளின்மேல், (இப்பொழுது), கடிது எறு-விரைவில் ஏறியருள்வாயாக', என்று-என்று விண்ணப்பஞ்செய்து, தொழுது இன் அடி பணிந்தான் - கைகுவித்துக் கொண்டே (பிராட்டியினது) இனியதிருவடிகளை வணங்கினன், (அநுமான்).

'உளதின்று' என்ற பாடத்துக்கு - இனி வேறொன்றும் நான் சொல்லத் தக்கதில்லை யென்று பொருள். விதியால் - உனதுகட்டளையால் என்றுமாம். இப்பேறு - அநுமான் சீதையைச் சிறைமீட்டு இராமபிரானிடம் வந்தானென்பது. அடிக்கு இனிமை - கண்ணுக்கு இனியதாயிருத்தல்; அழகு. நீ என் தோளின்மீது எறிக்கொண்டால், இராமபிரானைச் சென்றுசேர்ந்து, இப்பொழுதுபடுந் துன்பத்தினின்று நீங்கிச் சுகமடையலாம் என்பது கருத்து. (கO)

வேறு.

[சீதை அநுமான்வார்த்தைக்கு உடன்படாது சில கூறுதல்.]

கக. ஏய நன்மொழி யெய்தவி ளம்பிய
தாயின் முன்னிய கன்றனை யான்றனை
யாய தன்மைய ரியதன் றுமெனத்
தூய மென்சொ லினையன சொல்லினாள்.

(இ - ள்.) எய - தகுதியான, நல் மொழி - நல்ல வார்த்தைகளை, எய்த விளம்பிய - (செவியிற்) பொருந்தும்படி கூறின, தாயின் முன்னிய கன்று அனையான்தனை - தாய்ப்பசுவிற்குமுன் சென்று நின்ற கன்றை யொத்த அநுமானை (நோக்கி, பிராட்டி),—'ஆய தன்மை - (கீழ் இவன் கூறிய) அப்படிப்பட்ட செய்கை, அரியது அன்று ஆம் - (இவனுக்குச் செய்வதற்கு) அருமையானதொன்று அல்லாகும்,' என - என்று எண்ணி, இனையன - இத்தன்மையனவாகிய, தூய - குற்றமற்றனவான, மெல் சொல் - மென்மையான வார்த்தைகளை, சொல்லினாள் - சொல்பவளானாள்; (எ - று.)—அவற்றை, மேற் பதினைந்துகவிகளிற் காண்க.

'தாயின்முன்னிய கன்றனையான்' என்றது, அநுமானது களிப்புமிகுதியைக் குறிக்கும். தாய்ப்பசு - லோகமாதாவான பிராட்டிக்கும், கன்று - அநுமானுக்கும் உவமையாம். 'தூய' என்றார், அப்பிராட்டி சொல்லும் வார்த்தைகள் அவளதுகற்புநிலைமைக்குத் தக்கிருந்தனவா மென்றற்கு. மென்சொல் என்பதைப் பிராட்டிக்கு அன்மொழித்தொகையாக்கி, சொல்லினாள்என்பதற்கு எழுவாயாகக் கொள்ளலு மொன்று.

இது முதல் இருபத்தெழு கவிகள் - முதற்சீர் மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (கக)

கஉ. அரியதன் றுநின் னுற்றலுக்கேற்றதே
தெரியவெண்ணினைசெய்வதுஞ்செய்தியே
யுரியதன்றெனவோர்கின்றதுண்டதென்
பெரியபேதைமைச்சின்மதிப்பெண்மையால்.

(இ - ள்.) அரியது அன்று - (இது உனக்குச் செய்தற்கு) அருமையான தொழிலொன்றன்று; நின் ஆற்றலுக்கு ஏற்றதே தெரிய எண்ணினை - உனது வல்லமைக்குத் தக்கதையே (செய்ய) நன்கு ஆலோசித்துள்ளாய்; செய்வதும் - (நீ) செய்வதாகச் சொன்னதையும், செய்தியே - செய்தேமுடிக்கவல்லாய்; (ஆயினும்), என் - எனது, பெரிய பேதைமை சில் மதி பெண்மையால் - மிக்க அறியாமையையும் சிற்றறிவையுமுடைய பெண்தன்மையால், உரியது அன்று என - (நீ சொன்னகாரியம்) தக்கதன் றென்று, ஓர்கின்றது அது - ஆலோசிக்கிறதொன்று, உண்டு - (உனது எண்ணத்துக்குமாறாக) உள்ளது; (எ - று.)—அது, மேல் விவரித்துக் கூறப்படும்.

நீ என்னைஎடுத்துச்செல்வதாகச் சொன்னது காலத்துக்கும் உனதுஆற்றலுக்கும் தக்கதாயினும் அது எனதுபெண்புத்திக்கு நேரிதாகத் தோன்றவில்லை யென்றன ளென்க. உரியதன்றென வோர்கின்ற துண்டென், பெரிய பேதைமைச் சின்மதி—மாறுபட்டசொற்கள் வந்தது, தொடைமுரண். சுற்றடியில் "பேதைமை யென்பது மாதர்க்கணிகலம்," "நுண்ணுணர்வுடையோர் நூலொடு பழகினும், பெண்ணறிவென்பது பெரும்பேதைமைத்தே" என்பன நோக்கத்தக்கவை. (கஉ)

கங. வேலையின்னிடையேவந்துவெய்யவர்
கோலிவெஞ்சரநின்னொடுங்கோத்தபோ
தாலமன்னவர்க்கல்லையெற்கல்லையாற்
சாலவுந்தடுமாறுந்தனிமையோய்.

(இ - ள்.) (என்னை நீ எடுத்துக்கொண்டுசெல்கையில்), வேலையின் இடையே - சமுத்திரத்தின்மத்தியில் [கடலுக்குநேராக மேலே நீ செல்லும்போது], வெய்யவர் - கொடுந்தன்மையையுடைய அரக்கர், வந்து - (உன்னைப் பின்தொடர்ந்து) வந்து, கோலி - (உன்னை) வளைத்துக்கொண்டு, நின்னொடும் - உன்னோடு, வெம் சரம் - கொடிய அம்புகளை, கோத்த போது - தொடுத்து எதிர்த்துப்போர்செய்யும்போது, ஆலம்அன்னவர்க்குஅல்லை - விஷம்போன்ற ராக்ஷசர்களுடன் எதிர்த்துப் போர்செய்யவும் முடியாமல், எற்கு அல்லை - என்னைக்காப்பாற்றவும் முடியாமல், சாலவும் - மிகவும், தடுமாறும் - மனங்கலங்குகிற, தனிமையோய் - தனித்திருக்குந் தன்மையையுடையவனுவாய்; (எ - று.)

நீ வேறுதுணையின்றித் தனிப்பட்டவனுயிருத்தலால், இடைவழியில் அரக்கரை யெதிர்த்து அழித்தலும், என்மீது அவ்வரக்கரதுஅம்பு படாமல் என்னை இடையூறின்றிக்காத்தலும் ஆகிய இரண்டையும் ஒருங்குசெய்யமாட்டாமல் தடுமாறுவாய் என்றபடி. ஆலம் - பிறரைக்கொல்லுந் தன்மையாலும், கருநிறத்தாலும் அரக்கர்க்கு உவமை. 'அல்லை' என்னும் எதிர்மறைமுன்னிலை யொருமைக் குறிப்புமுற்றெச்சம் இரண்டும்-விகற்பப்பொருளன. மூன்றுமடி முற்றுமோனை. (கங)

கச. அன்றியும்பிறி துள்ளதொனறாரியன்
வென்றிவெஞ்சிலைமாசுணும்வேறினி
நன்றியென்பதம்வஞ்சித்தநாய்களி
னின்றவஞ்சனை நீயுநினைந்தியோ.

(இ - ள்.) அன்றியும் - கீழ்ச்சொன்ன காரண மல்லாமலும், பிறிது ஒன்று உள்ளது- (என்னை எடுத்துச்செல்லக்கூடாமைக்கு) வேறொரு காரணமும் இருக்கின்றது: (அது என்னவென்றால்,—)ஆரியன் - இராமபிரானது, வென்றி வெம் சிலை - வெற்றியையுடைய கொடிய வில், மாசு உணும் - (மனைவியை மீட்க வில்லையென்னும்) பழிப்பை யடையும் (என்பதாம்) ; (இப்படி எல்லாவகையாலும் அச்செய்கை குற்றத்துக்கு இடமாயிருத்தலால்), இனி வேறு நன்றி என் - (அதில்) இனி வேறு என்னநன்மை உள்ளது?[ஒருநன்மையு மில்லை யென்றபடி]; பதம் - பக்குவமானசோற்றை, வஞ்சித்த - வஞ்சனைசெய்து எடுத்துக்கொண்டுசெல்கிற,நாய்களின் - நாய்கள்போல, நின்ற வஞ்சனை - பொருந்திய வஞ்சனைத்தொழிலை,நீயும்—,நினைந்தியோ - நினைக்கக்கடவையோ? (எ - று.) —நினைத்தல் சிறிதும்தகுதியன் றென்பதாம்.

நீயும்,உம்.-(அரக்கனேயன்றி நீயும் என)எச்சப்பொருளோடு,(இராமதூதனாப்சிறப்புப்பெற்றுள்ள நீயும்என)உயர்வுசிறப்புப்பொருளையுந் தரும். இராவணன் என்னைப் பிறர்க்குத்தெரியாது வஞ்சித்து எடுத்துவந்ததுபோல நீயும் பிறர்க்குத் தெரியாது இங்கிருந்து என்னை யெடுத்துச்செல்லுதல் இழிதொழிலா மென்பது கருத்து. நீ என்னைஎடுத்துச்சென்றால் அது, அசகாயசூரனான இராமபிரானுக்கு, 'தன்பொருளைத்தானும் மீட்கவல்லமையில்லாதவன்' என்ற ஒரு பெரும்பழிப்பை விளைக்குமாதலால், தலைவனான அவனுக்கு இவ்வாறான பழியை உண்டாக்குதல் அடியவனான உனக்குத் தகுதியன்று என்று பிராட்டி தடுத்தன ளென்க. வில் மாசுணும் - உடையவன் தன்மையை உடைமைமேல் ஏற்றிக்கூறிய உபசாரவழக்கு. இனி வேறு - இனி வேறொன்றும் உள்ளது ; நன்றி என் பதம் வஞ்சித்த நாய்களின் - நிரபராதியான என்னை இருப்பிடத்தினின்று வஞ்சித்துக் கவர்ந்துவந்த நாய்போறகடைப்பட்ட அரக்கர்போல என்றும் பொருள்கொள்ளலாம். ஓகாரம் - தகுதியின்மை குறித்துநின்றது. (கச)

கரு. கொண்டபோரினுங்கொற்றவன்விற்றொழி
லண்டரேவருநோக்கவென்னாக்கையைக்
கண்டபோரரக்கன்விழிகாசங்க
ளுண்டபோதன்றியானுளனாவனோ.

(இ - ள்.) கொண்ட போரின் - மேற்கொண்டு செய்யப்போகிற யுத்தத்தில், உம் கொற்றவன் - உங்கள் தலைவனாகிய இராமபிரானது, வில் தொழில் - வில் தொழிலின் வல்லமையை, அண்டர் எவரும் - (ஆகாயத்து நின்று போர் காண்கிற) தேவர்களெல்லாரும், நோக்க - பார்த்துக்கொண்டிருக்கையில்,—

என் ஆக்கையை கண்ட போர் அரக்கன் விழி - (பதிவிரதையான) எனதுடம்பைக் காதல் கொண்டு) நோக்கின போரில்வல்ல இராவணனது கண்களை, காகங்கள் - காக்கைகள், உண்ட போது அன்றி - குத்தித்தின்றபோதல்லாமல், யான் - நான், உளென் ஆவெனோ - உயிருள்ளவளாவேனோ? (எ - று.)

எனக்குத்தீங்கு இழைத்த இராவணனது தலைகள் இராமபிரானது அம்புகளால் அற்றுக் கீழ்உருண்டு காக்கைகள் குத்தித்தின்றால்தான் என்மனத்துயர் தணிந்து உயிர்நிலைபெறுமேயன்றி, அங்ஙனமாகாதவரையில் மனக்கொதிப்பு அடங்காது; எனது உயிர் இருந்தாலும் இல்லாதது போன்றதேயாம் என்பது, கருத்து. சீதை இராவணன்மீது இவ்வளவு சினங்கொண்டு கூறினது, அவளது கற்பின் உறுதியை விளக்கும். சீதையைக் காதல்கொண்டு நோக்கின இராவணனது கண்கட்குத் தண்டனை காக்கைகளாற் குத்தப்படுதலே; பிறன் மனைவியினிடம் காதல் கொள்வார்க்குப் பிராணாந்தமான துன்பமே முடிவான பயனென்பது இதனாற் போதரும். மற்றை வானரங்களையுங் கூட்டி உளப்பாட்டுமுன்னிலைப் பன்மையாக 'உங் கொற்றவன்' என்றாள். 'உம்' என்ற சொல்லின் ஆற்றலால், உங்கள் தலைவனுக்குப் புகழுண்டாம்படி நீ முயலவேண்டாவோ வென்று குறிப்பித்தவாறும். 'எங்கொற்றவன்' என்ற பாடமும் கொள்ளலாம். பூமியிற் போர் நிகழ்கையில் தேவர்கள் ஆகாயத்தில் நின்று அப்போரைக் காணுதல், மரபு. நோக்கக் காகங்கள் கொண்டபோது என இயையும். கண்கள் இருபதாதல் தோன்ற, 'காகங்கள்' எனப் பன்மையாகக் கூறினாள். போரில் நும் என்றும் பிரிக்கலாம். (௧௫)

௧௬. வெற்றிநாணுடைவில்லியர்விற்றொழின்
முற்றநாணிலரக்கியர்மூக்கொடு
மற்றநாணினராயினபோதன்றிப்
பெற்றநாணமும்பெற்றியதாகுமோ.

(இ-ள்.) வெற்றி நாண் உடை வில்லியர் - ஜயத்தைத்தருகின்ற நாணியையுடைய வில்லை யேந்திய இராமலக்ஷ்மணர், வில் தொழில் - (தமது) வில்லினாற் செய்யும் போர்த்தொழிலை, முற்ற-நிறைவேற்ற [போரிற் பகைவர்களையெல்லாம் கொல்ல], (அதனால்), நாண் இல் அரக்கியர் - வெட்கங்கெட்ட ராக்ஷசிகளெல்லாம், மூக்கொடும் - (சூர்ப்பணகையின்) மூக்கு அறுப்பட்டதனோடு ஒப்ப, அற்ற நாணினர் ஆயின போது அன்றி - அறுபட்ட மங்கலநாணையுடையவ ராயினபோ தல்லாமல், பெற்ற நாணமும்-(நான்) இயற்கையாகக் கொண்டுள்ள நாணமென்னுங் குணமும், பெற்றியது ஆகுமோ - பெருமை யுடையதாமோ? [ஆகாது என்றபடி]; (எ-று.)

நாண் என்றது, மற்றைப் பெண்குணங்க ளெல்லாவற்றிற்கும் உபலக்ஷணம். நான் உத்தம பத்தினியாயின் அரக்கர்கள் யாவரும் இராம லக்ஷ்மணரது அம்புகளினால் இறக்கக்கடவ ரென்பது, கருத்து. எனது நாண் மற்றை

காணை [அரக்கியரின் மாங்கலியத்லதை]ப் பொருதென்பது, தொனி. என்றெருத்தியை வருத்தியதன்பயனாக, அரக்கியரெல்லாம் தம்கணவரை யிழந்து வருத்த முறக்கடவரென்பாள் 'அரக்கியர் அற்ற நாணினாராயின போதன்றிப் பெற்ற நாணமும் பெற்றியதாகுமோ' என்றாள். அற்ற நாணினர் - வடமொழி நடை; நாணற்றவர் என விகுதிபிரித்துக் கூட்டலுமாம். அரக்கியர் மூக்கொடும் அற்ற நாணினர் - முன்னமே அரக்கியருள் ஒருத்தியான சூர்ப்பணகைக்கு மூக்கு அறுபட்டுள்ளது; அதனோடு இப்பொழுது மற்றை யரக்கியர் யாவர்க்கும் மங்கல நாண் அறுபட வேண்டு மென்றபடி; இது, உடனவிற்சியணி. இங்கே 'மூக்கு' என்றது, அறுபட்ட மற்றை யுறுப்புக்களுக்கும் உபலக்ஷணம். (கசு)

கஎ. பொற்பிறங்கலிலங்கைபொருந்தல
ரெற்புமால்வரையாகிலதேயெனி
னிற்பிறப்பொழுக்குமிழுக்கமில்
கற்பும்யான்பிறர்க்கெங்ஙனங்காட்டுகேன்.

(இ - ள்.) பொன் பிறங்கல் இலங்கை - பொன்மயமான (திரிகூட மென்னும்) மலையின்மே லுள்ள லங்கா பட்டணம், பொருந்தலர் என்பு மால் வரை-பகைவர்களாகிய அரக்கரது பெரிய எலும்பு மலையை யுடையதாக, ஆகிலதே எனின் - ஆகாமற்போமே யானால், இல் பிறப்பும் - (எனது) உயர்குடிப் பிறப்பையும், ஒழுக்கும் - நன்னடக்கையையும், இழுக்கம் இல் கற்பும் - வழுவுதலில்லாத கற்புநிலைமையையும், யான்—, பிறர்க்கு - அயலார்க்கு, எங்ஙனம் காட்டுகேன் - எவ்வாறு காண்பிப்பேன்? (எ-று.)—காண்பிக்க வழியில்லை யென்றதாம்.

அரக்கர்களெல்லாம் அழிந்தால்தான் எனதுகுடிப்பிறப்பு முதலியன விளங்கு மென்றாள். 'பத்தினிவதை பொல்லாது' என்ற உலகவழக்கு, இங்கு நோக்கத்தக்கது. பிறங்கல் - விளங்குவது; வெகுதூரத்திலுள்ளாராலும் காணப்படுவதுபற்றி, மலைக்குக் காரணப்பெயர். வாயுபகவானுக்கும் ஆதிசேஷனுக்கும் "நமக்குள் யார் பலசாலி?" என்று விவாதமுண்டாக, ஆதிசேஷன் தனது ஆயிரம் படங்களாலும் மேருவின் ஆயிரம்சிகரங்களையும் கவிந்து காத்து நின்றபொழுது, வாயுபகவான் வேகமாக மோதி வீழ்த்தித் தள்ளிய பொன்மயமான அம்மேரு மலையின் மூன்று சிகரங்களே திரிகூடமலையாயின என்ற வரலாறுபற்றி, அது இங்கு 'பொற்பிறங்கல்' எனப்பட்டது. பொருந்தலர்- மனமிணங்காதவர். (கஎ)

கஅ. அல்லன்மாக்களிலங்கையதாகுமோ
வெல்லைநீத்தவுலகங்கள்யாவுமென்
சொல்லினாற்சுடுவேனதுதூயவன்
வில்லினாற்றற்குமாசென்றுவீசினேன்.

(இ - ள்.) அல்லல் மாக்கள் இலங்கையது ஆகுமோ - (பிறர்க்குத்) துன்பஞ்செய்யுந் தன்மையுள்ள ராக்ஷசர்களுடைய இலங்கா புரியை மட்டுமோ? எல்லை நீத்த உலகங்கள் யாவும் - கணக்கில்லாத எல்லா வுலகங்களையும், என் சொல்லினால் - எனது சாபவார்த்தையினாலே, சுடுவேன் - எரித்தழித்திருப்பேன்; அது - அவ்வாறு செய்தல், தூயவன் வில்லின் ஆற்றற்கு மாசு - பரிசுத்த மூர்த்தியாகிய இராம பிரானது வில்தொழில் வன்மைக்குக் குறைவையுண்டாக்கும், என்று-என்று எண்ணி, வீசினேன் - அவ்வாறு செய்யா தொழிந்தேன்; (எ - று.)

அரக்கர்களை யெல்லாம் அழித்துச் சிறைமீளும் வல்லமை எனக்கு இருந்தும் நான் இராமபிரானுக்கு மேன்மை விளைக்க வேண்டியே அங்ஙனஞ் செய்யாது அடங்கி யிருத்தல் போல, உனக்கு என்னை யெடுத்துச் செல்லும் வல்லமை யிருந்தும் நீயும் அடங்கி யிருத்தலே முறைமையாகு மென்று சீதை அநுமானுக்குக் கூறினளென்க. அரக்கரை அறிவில்லாத மிருகங்கள் போன்றவ ரென்பார், 'மாக்கள்' என்றார். மாக்களெனப்படுவார் - மனவுணர்ச்சியில்லாமல் ஐம்பொறியறிவு மாத்திரமே யுடைய விலங்கு போன்ற ஒருசார் மானிடங்கள்; மக்களாவார் - ஐம்பொறியுணர்வோடு மனவறிவு முடையவர்: விவேகிகளான மனிதர். இவ்வேறுபாட்டை "மாவும் மாக்களும் ஐயறிவினவே," "மக்கள்தாமே ஆறறிவுயிரே" என்னுந் தொல்காப்பியச்சூத்திரங்களால் அறிக. சொல் - வெகுண்டு கூறும் மொழி; சாபம். (௧௮)

௧௯. வேறுமுண்டுரைகேளதுமெய்ம்மையோ
யேறுசேவகன்மேனியல்லாலிடை
யாறுமைம்பொறிநின்னையுமாணெனக்
கூறுமிவ்வுருத்தீண்டுதல்கூடுமோ.

(இ-ள்.) 'மெய்ம்மையோய் - சத்தியகுணமுடையவனே! வேறு உரையும் உண்டு - (நீ எடுத்துச்செலலக்கூடாமைக்கு) வேறொருகாரணமும் உண்டு: அதுகேள்-அதனைக்கேட்பாயாக: (அது என்னவெனின்—),ஐம் பொறி ஆறும் நின்னையும்-பஞ்சேந்திரியங்களும் அடங்கியிருக்கப்பெற்ற உன்னையும், ஆண் என கூறும் - ஆண்மக னென்று சொல்லும் (இவ்வுலகம்); (ஆதலால்), ஏறு சேவகன் - உயர்ந்த மகாவீரனாகிய இராமபிரானது, மேனி அல்லால் - திருமேனியைப் (பரிசிப்பதே) யல்லாமல், இடை - நடுவில்,இ உரு-இந்த(உனது) உருவத்தை, தீண்டுதல் - (நான்) பரிசித்தல், கூடுமோ - தகுமோ? [தகாது.]

பஞ்சேந்திரியநிக்கிரகஞ் செய்தவனாயினும் நீயும் ஆண்பாலுள் அடங்கினவனாதலால், பரபுருஷனைத்தொடுத லென்ற குற்றம் எனக்கு உண்டாகுமாறு உன்தோளின்மீது ஏறுதல் தகாது என்பதாம். இச்செய்யுளினால், சீதையினது பயிர்ப்பு என்னும் மகளிர்க்குணம் இனிது விளங்கும்; (பயிர்ப்பாவது - தகாதவற்றில் அருவருப்புக்கொள்ளுதல்.) சீதை தான் இதுவரையிலுங் கூறி

வந்த காரணங்கள்போலாது இப்பொழுது கூறுவது முக்கியமானதும், கற்பு நிலைக்கு இன்றியமையாததுமாகு மென்பாள், 'வேறுமுண்டுரை' என்றாள். இனி, ஏறு சேவகன் என்றது - உவமைத்தொகையாய், ஆண்சிங்கம் போன்ற வீரனென்றும் பொருள்படும். "ஏறுசேவகனுர்க்கு" என்றார்பெரியாரும். (௧௯)

௨0. தீண்டுவானெனினித்தனைசேண்பக
லீண்டுமோவுயிர்மெய்யினிமைப்பின்முன்
மாண்டுதீர்வனென்றே நிலம்வன்மையாற்
கீண்டுகொண்டெழுந்தேகினன்கீழ்மையான்.

(இ-ள்.) கீழ்மையான் - அற்பகுணமுடைய இராவணன், தீண்டுவான் எனின் - (என்னைத் தொட்டிருப்பானானால், இத்தனை சேண் பகல் - இவ்வளவு நெடுங்காலம், உயிர் மெய்யின் ஈண்டுமோ - (அவனது) உயிர் உடம்பிற் பொருந்தியிருக்குமோ? [இராது, அப்பொழுதே இறந்திருப்பான் என்றபடி]; (அவன் முன்பு என்னை எடுத்துவரும்பொழுது), இமைப்பின் முன் மாண்டு தீர்வன் என்றே - ('நான் இவளைப் பலாத்காரமாகத் தொட்டால்) நொடிப்பொழுதினுள்ளே உயிர்நீங்கிவிடுவேன்' என்று எண்ணியே, வன்மையால்- (தனது) வலிமையால், நிலம் கீண்டுகொண்டு எழுந்து ஏகினன் - தரையோடு பெயர்த்து (என்னை) எடுத்துக்கொண்டு புறப்பட்டுச் சென்றான்; (எ - று.)— சீதை தான் பரபுருஷனைத் தீண்டுதல் தகாதென்றதன்மே லுண்டாகும் ஐயத்தை இச்செய்யுளினால் நீக்குகின்றாள்.

" ஆண்டாயிடை தீயவ னுயிழையைத், தீண்டாலெனு மேலுரை சிந்தை செயாத்,தூண்டானெனலா முயர்தோள்வலியாற், கீண்டானிலம் யோசனை கீழொடுமேல்", "கொண்டா னுயர்தேர்மிசை" என்றார் ஆரணியகாண்டத்திலும்; "தருபதஞ் சமைந்த முக்கோற் றபதவடிவங் கொள்ளாத், திருவினை நிலத்தோ டேந்தித் தென்றிசை யிலங்கை புக்கான்" என்பர் மேலும். இவ்வாறு முதனூலாகிய ஸ்ரீவால்மீகிராமாயணத்திற் கூறப்பட்ட தில்லையாகிலும், பிறநூல் மேற்கோள்கொண்டு இங்ஙனம் கூறினார்போலும். இப்படி முதனூலுக்குச் சிறிதுவேறுபடுத்திக்கூறுவதும் வழிநூலிலக்கணமாதலை, "முன்னோர் நூலின் முடிபொருங்கொத்துப், பின்னோன்வேண்டும் விகற்பங் கூறி, யழியா மரபினது வழிநூலாகும்"என்ற சூத்திரத்தினாலும் அறிக. கீண்டு, கீள் - முதனிலை. இனி,இக்கவிக்கு-என்னை இராவணன் தொட்டிருப்பானானால் இத்தனை நாள் என்னுயிர் உடம்பில் தங்குமோ? என்னை வலியத்தொட்டால் நான் உயிர் விடுவே னென்று எண்ணியே அவன் என்னை நிலத்தோடு கொண்டேகினன் என்றும் உரைக்கலாம். பிறர்மனைவியை நயக்கும் பாவமுடையா னதலின், இராவணனை 'கீழ்மையான்'என்றாள். (௨0)

உக. மேவுசிந்தையின்மாதரைமெய்தொடிற்
றேவுவன்றலைசிந்துக நீயெனப்
பூவின்வந்தபுராதனனேபுகல்
சாவமுண்டெனதாருயிர்தந்ததால்.

(இ-ள்.) 'மேவு சிந்தை இல் மாதரை - தன்னைக் கூட விரும்புகிற எண்ண மில்லாத பெண்களை, மெய் தொடின் - (இராவணன் பலாத்காரமாக) உடம்பைத் தொடுவானானால், தீது- அக்குற்றத்திற்சாக, தேவு வல் தலை- தெய்வத்தன்மையையுடைய (அவனது) வலிய (பத்துத்) தலைகளும், சிந்துக - (மீண்டும் முளையாதபடி) சிதறிவிடுவனவாக,' என - என்று, பூவின் வந்த புராதனனே புகல் - (திருமாலின் நாபித்) தாமரை மலரில் தோன்றிய பழமையான பிரமதேவன்தானே சொல்லியுள்ள, சாவம் - சாபம், உண்டு - (இராவணனுக்கு) உளது; (அச்சாபம்), எனது ஆர் உயிர் தந்தது - எனது அரிய உயிரைப் (போகவொட்டாது) காத்து நின்றது; (எ-று.)—இதனால், இராவணன் நிலத்துடன் கீண்டுகொண்டெழுந்ததற்குக் காரணங் கூறினாள். ஆல்-ஈற்றசை.

அச்சாபமில்லாவிட்டால் என்னை அவ்விராவணன் கற்பழிக்க முயல்வானாதலால், யான் அப்பொழுதே உயிர்நீத்திருப்பே னென்றதாம். இராவணனது தலைகளுக்குத் தெய்வத்தன்மை-அறுக்க அறுக்கப் பிரமனது அநுக்கிரகத்தால் மீண்டும் முளைத்தல். திருமாலினதுசங்கல்பத்தால் அவனது திருநாபியினின்று உண்டான தாமரைமலரிற் பிரமன் தோன்றினா னென்பது, நூற்கொள்கை. பிதாமக னென்னும் ஒருபெயர்பற்றி, பிரமனை 'புராதனன்' என்றார். புராதநன், சாபம் - வடசொற்கள். முன்னொருகாலத்திலே பிரமனை வந்தனஞ் செய்யும் பொருட்டு அவனது இருப்பிடத்தைக்குறித்துச் சென்றுகொண்டிருந்த புஞ்சிகஸ்தலை யென்னும் அப்ஸரஸ்திரீயை ஆகாசமார்க்கத்திலே கண்ணுற்ற இராவணன் அவளைக்காதலித்து வலியக்கற்பழிக்க, அங்ஙனம் கலங்கினநிலையோடு பிரமனிருக்கையைச்சார்ந்த அவளை நோக்கின நான்முகக் கடவுள் நிகழ்ந்ததையுணர்ந்து கடுங்கோபங்கொண்டு இராவணனைக்குறித்து 'இனி நீ அயல்மாதை வலியக்கற்பழிப்பையாயின், அப்பொழுதே உன்தலை நூறுகப்பிளந்து அழிக' எனச் சபித்திட்டனன் என்ற வரலாறு இங்கு உணரத்தக்கது. இதனை ஸ்ரீ வால்மீகிராமாயணத்து யுத்தகாண்டத்தில் பதின்மூன்றாஞ்சருக்கத்திற் காண்க. மேல் திருவடிதொழுதபடலத்தில் (௬௫) "மண்ணொடுங்கொண்டுபோனான் வாளுயர்கற்பினாள்தன், புண்ணியமேனிதீண்டவஞ்சுவா னுலகம் பூத்த, கண்ணகன் கமலத்தண்ணல் கருத்திலாட்டொடுதல் கண்ணி, னெண்ணருங்கூறுய்மாய்தி யென்றதோர்மொழியுண்டென்பான்" என்பதுங் காண்க. இராவணன் திக்விஜயஞ்செய்தபோது தேவலோகத்துக்குச்செல்லப் புறப்பட்டுக் குபேரனது அளகாபுரியினருகிற் செல்லுகையில், குபேரன் மகனான நளகூபரனை நோக்கிச் செல்லும் அவனது காமக் கிழத்தியான அரம்பையைக் கண்டு காமுற்று அவளை

வலியப்பிடித்துக் கற்பழித்தவளவிலே, அவள் வருந்திச் சினந்து இராவணனை நோக்கி 'இனி நீ எந்தமகளிரையேனும் அவருடன்பாடின்றி வலியத்தீண்டின் அவரது கற்பின்கனலால் எரிந்தழிவாய்' என்று சபித்ததுமன்றி, அச்செய்தியை யறிந்த நளகூபரனும் 'இனி இராவணன் ஒருவர்க்கு உரிய மாதரை வலியத்தீண்டுவானாயின் தலை வெடித்து இறக்கக்கடவன்' என்று சபித்தனன் என ஒருவரலாறு உத்தரகாண்டத்திற் கூறப்பட்டிருப்பினும், அது, இவ்விடத்துக்குப் பொருந்தாது; 'பூவின்வந்த புராதனனே புகல் சாவம்' என்றதனால். அன்றியும், இராவணனுக்குமுன் வலியற்றவனும் இராவணனுக்கு மகன் முறையாகிறவனுமான நளகூபரனும் அவனதுகாமக்கிழத்தியான ரம்பையும் சபித்த சாபங்கள் இராவணன்விஷயத்திலே பலிக்கமாட்டாதனவாக, அவற்றைப் பொருள்செய்யாமல் இராவணன் புஞ்சிகஸ்தலையைப் பலாத்கரித்து அதன்பின் பிரமகக்கடவுளிட்டசாபத்திற்கே அஞ்சுவானாயின னென்பதையும் அறிக. 'சிந்துக தீர்கெதன' என்ற பாடத்துக்கு, தீர்ந்துசிந்துக [சிந்தித்தீர்க] என்க. (உக)

உஉ. அன்னசாவமுளதெனவாண்மையான்
மின்னுமௌலியன்மெய்ம்மையன்வீடணன்
கன்னியென்வயின்வைத்தகருணையாள்
சொன்னதுண்டுதுனுக்கமகற்றுவாள்.

(இ-ள்.) அன்ன சாவம் உளது என - அப்படிப்பட்ட சாபமொன்று (இராவணனுக்கு) உண்டென்று,—ஆண்மையான் - பராக்கிரமமுள்ளவனும், மின்னும் மௌலியன்-ஒளிவிளங்குகிற கிரீடத்தை யுடையவனும், மெய்ம்மையன்-சத்தியத்தையுடையவனுமாகிய, வீடணன் - விபீஷணனது, கன்னி - மகளாகிய திரிசடை, என்வயின் வைத்த கருணையாள் - என்னிடம் வைத்த அருளையுடையவள், துனுக்கம் அகற்றுவாள் - (எனது) அச்சத்தைப் போக்குபவளாய், சொன்னது—, உண்டு—; (எ-று.)—இராவணனுக்குநேர்ந்துள்ள சாபவரலாற்றைத் தான் அறிந்தவகையைச் சீதை இதனாற் கூறினாள்.

உளது எனச் சொன்னது உண்டு என இயையும். ஆண்மையான் என்றதில், இலங்கையை யாளுதற்கு உரியவ னென்ற ஒருபொருளும் தொனிக்கும்; இங்ஙனம் எதிர்காலவரலாற்றை உய்த்துணரவைத்தல், மகாகவிகளின் இயற்கை. மௌலியென்னுந் தலையின்பெயர்-அதில்அணியுங் கிரீடத்துக்கு இடவாகு பெயர்; 'முடி' என்பது போல. வீடணன் = விபீஷணன்; இவன், இராவணனது இளந்தம்பி; மிக்க நற்குணமுடையவன்; வலியக் கவர்ந்துவந்த சீதையை விட்டுவிடும்படி தான் பலவாறு நல்லறிவுகூறியும் இராவணன் கேளாமையால், இவன் அவனைத் துறந்து இராமபிரானைச் சரணமடைந்து இராவண வதத்தின்பொருட்டு அப்பிரானுக்குத் துணையாய்நின்றனன்; விபீஷணன் என்ற சொல்-(பகைவர்க்குப்) பலவாறு பயங்கரனாகவுள்ளவனென்று பொருள்

படும்; இனி, பயங்கரனல்லாதவ னென்று உரைத்தலு மொன்று. வீடண னுடைய கன்னியின் பெயர், திரிசடையென்பது. இவளும் இவளது தாயும் அரக்கியரால் சீதை வருத்தப்படுகையில் அவட்குத் தேற்றரவுகூறி உற்ற துணையாயிருந்தனரென்க. துணுக்கம் - இராவணன் பலாத்காரஞ்செய்வானோ வென்ற எண்ணத்தினாலாகிய அச்சம். (உஉ)

உ௩. ஆயதுண்மையினானுமன்றெனின்
மாய்வென்மன்றவறம்வழுவாதென்று
நாயகன்வலியெண்ணியுநானுடைத்
தூய்மைகாட்டவுமித்துணை தூங்கினேன்.

(இ-ள்.) ஆயது உண்மையின்-அந்தச்சாபம் உள்ளதனால்,—நானும்—,— அறம் வழுவாது என்றும் - தருமம் (ஒருபொழுதும்) தவறாதென்று துணிவு கொண்டும், நாயகன் வலி எண்ணியும்-இராமபிரானது பராக்கிரமத்தை நோக்கியும், நான் உடை தூய்மை காட்டவும் - நான்கொண்டுள்ள (கற்புநிலையின்) பரிசுத்தியைத் தெரிவிக்கவுமே, இ துணை தூங்கினேன்—இவ்வளவுகாலம் உயிரோடு தங்கினேன்; அது அன்று எனின் - அச்சாப மில்லாவிட்டால், மன்ற - நிச்சயமாக, மாய்வென் - முன்னமே இறந்திருப்பேன் ; (எ - று.).

இதுமுதல் மூன்றுகவிகளால், சீதை தான் கற்புநிலையில் உறுதி கொண்டிருந்ததை, அநுமான் இராமபிரானிடத்துத் தக்க சமயத்திற் சொல்லக்கூடு மென்ற நோக்கத்துடன் கூறுகின்றாள்.

நானும் என்ற உம்மை - கணவனைப்பிரிந்து உயிர்பிழைக்குந்தன்மை யில்லாத மகாபதிவிரதை யென்ற பொருளைத் தருதலால், உயர்வுசிறப்பு. மன்றஎன்னும்இடைச்சொல், தெளிவுப்பொருள்குறிக்கும்;"மன்றவென்கிளவி தேற்றஞ்செய்யும்" என்பது, தொல்காப்பியம். (உ௩)

உ௪. ஆண்டுநின்றுமரக்கனகழ்ந்துகொண்
டீண்டுவைத்ததிளவலியற்றிய
நீண்டசாலையொடுநிலைநின்றது
காண்டியையநின்மெய்யுணர்கண்களால்.

(இ-ள்.) ஆண்டுநின்றும் - அத்தண்டகாரணியத்தினின்றும், அரக்கன் - இராவணன், அகழ்ந்து கொண்டு - (நிலத்தோடு) பேர்த்தெடுத்துக் கொண்டுவந்து, ஈண்டு வைத்தது - இவ்விலங்கையில் வைத்த இவ்விடம், இளவல் இயற்றிய நீண்ட சாலையொடும் - இளையபெருமாள் (அங்கு) அமைத்த பெரிய பர்ணசாலையினுடனே, நிலை நின்றது - பொருந்தியுள்ளது; ஐய - சிறந்தவனே! மெய் உணர் நின் கண்களால் - உண்மையைக் கண்டறியவல்ல உனது கண்களைக்கொண்டு, காண்டி - (இதனைப்) பார்ப்பாயாக; (எ-று.)

ஆண்டு - அவ்விடம். இதனால், இராவணன் தன்னை நிலத்தோடுபேர்த்து எடுத்துவந்தா னென்றதைச் சீதை அநுமானுக்குக் கண்கூடாகக்காட்டின ளென்க. சாலை - பர்ணசாலை. "அனையதோர்தன்மையா லவ்வருவிநீராற்றின் பாங்கர்ப், பனிதருபடிவப் பஞ்சவடியெனும் பருவச்சோலைத், தனியிடமதனை நண்ணித் தம்பியாற் சமைக்கப்பட்ட, வினியபூஞ்சாலையெய்தி யிருந்தன னிராம னிப்பால்" என்பது, ஆரணியகாண்டம். (௨௪)

௨௫. நீர்விலேனிதொருபகலுஞ்சிலை
வீரன்மேனியைமானுமிவ்வீங்குநீர்
நாரநாண்மலர்ப்பொய்கையைநண்ணுவேன்
சோருமாருயிர்காக்குந்துணிவினால்.

(இ-ள்.) இது - இவ்விடத்தை, ஒரு பகலும் - ஒருபொழுதும், நீர்வு இலேன் - (யான்) விட்டுநீங்குகிறே னில்லை; சிலை வீரன் மேனியை மானும் - கோதண்டத்தையுடைய சுத்தவீரனாகிய இராமபிரானது திருமேனியை ஒத்திருக்கிற, இ - இந்த, வீங்கு நீர் நாரம் - மேலெழுகின்ற தன்மைகொண்ட நீரையுடைய, நாள் மலர் - புதிய[அன்று மலர்ந்த] தாமரைப்பூக்களையுடைய, பொய்கையை - தடாகத்தை, சோரும் ஆர் உயிர் காக்கும் துணிவினால் - தளர்கிற எனதுஉயிரைக் காத்தல்வேண்டுமென்ற எண்ணத்தினால், நண்ணுவேன் - (சிற்சிலகாலத்தில்) அடைவேன்; (எ-று.)

நான் இந்தஇடத்தைவிட்டு எங்கும் செல்வதில்லை; சிற்சிலசமயங்களில் உயிரழியாமலிருக்கும்பொருட்டு நீர்பருகுதற்கும் இளைப்பாறுதற்கும் இக் குளத்துக்குமாத்திரம் வருவதுண்டு; இந்தக்குளம் இராமபிரான்திருமேனியின் தன்மையைத் தான்காட்டி எனதுதுயரத்தைச் சிறிது ஆற்றுமாதலாலும் இதனை நண்ணுவேன் என்று ளென்க. இப்பொய்கையை என இயையும். 'வீங்குநீர் நாரம்' என்றது, அலையெழுச்சியைக் கருதி. "வாய் கண் கை யுந்தி பதம் கோகனகம்"என்றபடி திருக்கண்கள் திருக்கைகள் திருவடிகள் திருநாபி முதலிய பல உறுப்புக்கள்போலத் தாமரைமலர்இருக்க, பசுஞ்சாமத்திருமேனி நிறத்தைத் தெளிவானநீரும் அதிலுள்ள தாமரையிலைகளும் போலுதலால், 'வீரன்மேனியைமானும் வீங்குநீர்நாரநாண்மலர்ப்பொய்கை' எனப்பட்டது: "மாயக்கூத்தா வாமனா வினையேன்கண்ணா கண்கைகால், தூயசெய்யமலர்களாச் சோதிச்செவ்வாய்முகிழதாச், சாயல்சாமத்திருமேனி தண்பாசடையாத் தாமரைநீள், வாசத்தடம்போல் வருவானே யொருநாள் காணவாராயே" என்ற பெரியார்பாசுரம் இங்குக் கருதத்தக்கது. இராமபிரானது திருமேனிக்கு உபமானப்பொருளாகிய மலர்ப்பொய்கையை மாறாக இங்கு உபமேயமாக்கியது, எதிர்நிலையணி. நாரம் - வடசொல். (௨௫)

௨௬. ஆதலானதுகாரியமன்னறய
வேதநாயகன்பாலினிமீண்டனை
போதல்காரியமென்றனள்பூவையக்
கோதிலானுமினையனகூறினான்.

(இ - ள்.) ஆதலான் - ஆகையால், அது - (நீ செய்யநினைத்த) அத்தொழில், காரியம் அன்று - செய்யத்தக்கதன்று; ஐய - ஐயனே! இனி—, வேதம் நாயகன்பால் - வேதங்கட்குத்தலைவனாகிய இராமபிரானிடத்தில், மீண்டனை போதல் - (நீ) திரும்பிச்செல்லுதலே, காரியம் - செய்தொழிலாம், என்றனள் - என்றுகூறினாள்: (யாவளெனின்,-) பூவை-கிளிபோன்ற பிராட்டி; (அதுகேட்டு), அ கோது இலானும் - குற்றமில்லாத அவ்வநுமானும், இனையன கூறினான் - இவற்றைச் சொல்வானானான்; (எ-று.)—அவற்றை, அடுத்தகவிகளிற் காண்க.

'அது' - தன்னை அநுமான் தன்தோளின்மீது எடுத்துக்கொண்டு செல்வது. வேதநாயகன்-வேதப்பிரதிபாத்திய னென்றபடி. திருமாலின் திருவவதாரமாதலால், இராமபிரான் இங்ஙனங் கூறப்பட்டான். பூவை - உவமவாகுபெயர்; செவிக்கு இனிய சொல்லுடைமையில் உவமம். கோது - இங்குப் பிராட்டியின் கட்டளையைக் கடத்த லென்னலாம். (உ௬)

[அநுமான் சீதையின்வார்த்தையை அங்கீகரித்துச் சொல்லுதல்.]

உ௭. நன்றுநன்றிவ்வுலகுடைநாயகன்
றன்றுணைப்பெருந்தேவிதவத்தொழி
லென்றுசிந்தைகளித்துவந்தேத்தினு
னின்றசங்கையிடரொடுநீங்கினன்.

(இ - ள்.) நின்ற சங்கை - (மனத்திற்) கொண்டுள்ள சந்தேகமும், இடரொடு - (அதனாலாகிய) துன்பமும், நீங்கினன் - நீங்கினவனாகிய அநுமான், —(சீதையை நோக்கி), 'இ உலகு உடை நாயகன் தன் - இந்த உலகங்களெல்லாவற்றையும் அடிமையாகவுடைய தலைவனாகிய இராமபிரானது, துணை பெருந் தேவி - (இல்வாழ்க்கைக்குத்) துணையாகிய சிறந்தமனைவியாகிய சீதாதேவியே! தவம் தொழில் - (உனது) தவச்செய்கை, நன்று நன்று - மிகவும் நன்றாயுள்ளது!' என்று - என்று வியந்துகூறி, சிந்தை களித்து உவந்து - மனம் மிகவும் களிக்கப்பெற்று, ஏத்தினன்-(பிராட்டியை) மிகுதியாகக் கொண்டாடிக் கூறினான்; (எ - று.)

நன்று நன்று - அடுக்கு, உவகைபற்றியது. திருமாலின் திருவவதாரமென்பதனைக் குறிப்பித்தற்கு, இராமபிரானை 'இவ்வுலகுடைநாயகன்' என்றார்; சக்கரவர்த்தித் திருமகனாதலாற் கூறினா ரென்றுமாம். பெருந்தேவி - பருவத்தாலும் ஒழுக்கத்தாலும் நற்குடிப்பிறப்பாலும் இராமபிரானது பெருமைக்குத் தகுதியான தேவீ யென்றபடி; "தோணிந்த வயோத்தியர்கோன் பெருந்தேவீ" என்றார் பெரியாரும். அவ்விடத்து 'ஒருசிறுத்தேவியுண்டாய்ப் பெருந்தேவியென்கிற தன்றே; பெருமாள் ஏகதாரவ்ரத ராகையாலே' என ஆன்றோர் அருளிச்செய்த விசேடவுரை இங்கு அறியத்தக்கது. சீதைக்குத் தவமாவது - இராமபிரானையே எப்பொழுதும் இடைவிடாது மனத்திற் கொண்டிருத்தல்; கற்பொழுக்கமுமாம். இனி, முன்னிலையிற படர்க்கைவந்த இடவழுவமைதியாகக் கொண்டு, பெருந்தேவியாகியஉனது தவத்தொழில் எனக் கூறினுமாம். அநுமான் சிந்தை மிகஉவந்தது, தான் பிராட்டியைக் கற்பு

நிலையிற் சிறிதுங்குறைபாடில்லாதவளாகக் கண்டமைபற்றித் தான்பட்டபாடு முழுதும் இராமபிரான்திறத்து வீணாகாது ஸபலமா முடிந்ததென்பதை எண்ணியதனு லென்க. களித்து உவந்து - ஒருபொருட்பன்மொழிகள். சங்கை. இராவணன் பிராட்டியைத் தீண்டியிருப்பனே வென்ற ஐயம். (௬௭)

[அநுமான் சீதையைத் தேற்றி 'இராமபிரானிடம் சொல்லவேண்டுவது யாது?' என்று வினவுதல்.]

௨௮. இருளுஞாலமிராவணனுலிது
தெருளுநீயினிச்சில்பகறங்குறின்
மருளுமன்னவற்கியான்சொலும்வாசக
மருளுவாயென்றடியினிறைஞ்சினன்.

(இ - ள்.) 'நீ—, இனி சில் பகல் தங்குறின் - இன்னும் சிலநாள்மாத்திரம் [இராமபிரான் செய்திதெரிந்து இங்குவரும்வரையில்] (இங்கே) தங்கியிருந்தால்,—இராவணனுல் இருளும் இது ஞாலம் - இராவணனுல் (நல்லொழுக்கங்கெட்டு) இருளடைந்திருக்கிற இவ்வுலகமுழுதும், தெருளும் - தெளிவுபெறும்; மருளும் மன்னவற்கு - (உன்னைப்பிரிந்ததனுல்) மயக்கங்கொண்டிருக்கிற இராமபிரானுக்கு, யான் சொலும் வாசகம் - யான் போய்ச் சொல்லவேண்டும் வார்த்தையை, அருளுவாய் - (நீ) சொல்லியருள்வாயாக,' என்று - என்று (பின்னும்) விண்ணப்பித்து, (அநுமான்), அடியின் இறைஞ்சினன் - (அச் சீதாபிராட்டியினது) திருவடிகளில் விழுந்து வணங்கினுன்; (எ - று.)

இன்னம் சிலநாளைக்குள் இராமபிரான் லக்ஷ்மணனேடும் வாநரசைநியத்தோடும் இவ்விலங்கைக்கு வந்து ராக்ஷசஸம்ஹாரஞ்செய்து, இராவணனுல் அழிப்புண்ட தருமத்தையும் உலகத்தில் நிலைநிறுத்துவான்; அவன் வருமளவும் நீ பொறுத்திருக்கவேண்டும் என்பது, முன்னிரண்டடிகளின் கருத்து. களையெடுத்தமாத்திரத்திற் பயிர் செழித்தல்போல, துஷ்டநிக்கிரகஞ் செய்தமாத்திரத்தில் உலகத்தில் தருமம் நிலைபெறு மென்க. 'இராவணவதம் விரைவில் நடக்கும்'எனக் கூறவேண்டியவிடத்து, அதன்பயனுகிய உலகம் தெருளுதலைக் கூறினது, காரணத்தைக் காரியமுகத்தாற் கூறிய பிறிதுமொழிதலென்னும் அணியாம். (௬௮)

[இதுமுதற் பத்துக் கவிகள் - சீதை அநுமானைநோக்கிக் கூறியவை.]

௨௯. இன்னுமீண்டொருதிங்களிருப்பல்யா
னின்னைநோக்கிப்பகர்ந்ததுநீதியோய்
பின்னையாவிபிடிக்கின்றிலேனந்த
மன்னனுணையிதனைமனக்கொணீ.

(இ - ள்.) நீதியோய் - நன்னெறியுடையவனே! இன்னும் ஒரு திங்கள் - இன்னமும் ஒருமாசகாலம், யான்—, ஈண்டு இருப்பல் - இவ்விலங்கையிலே உயிரோடிருப்பேன்; (அதற்குள் இராமபிரான் இங்கு வாராவிடின்), பின்னை -

அதன்பின்பு, அந்த மன்னன் ஆணை - அந்த இராமபிரான்மேல் ஆணை ! ஆவி பிடிக்கின்றிலேன் - உயிர்வைத்திருக்கமாட்டேன் ; நின்னை நோக்கி பகர்ந்தது - உன்னைப்பார்த்து (நான்) சொன்னதாகிய, இதனை - இவ்வார்த்தையை, நீ—, மனம் கொள் - மனத்திற் பதியவைப்பாய் ; (எ - று.)

'பின்னை யாவி பிடிக்கின்றிலேன்'— "மாஸாதூர்த்வம் நஜீவிஷ்யே" என்ற முதனூலின் மொழிபெயர்ப்பு. சக்கரவர்த்தித்திருமக னென்பான், 'மன்னன்' என்றாள். தான்கொண்ட கருத்தின் உறுதியை வற்புறுத்த, 'ஆணை' எனச் சபதமிட்டுக் கூறினாள். இதனை மனக்கொள் - ஒருமாசம்கழிந்தபிறகு நான் உயிர்வைத்திரே னென்பதை மறவாமல் இராமபிரானிடத்து விண்ணப் பிக்கவேண்டு மெனச் சீதை வேண்டியபடி. (உக)

௩௦. ஆரந்தாழ் திருமார்பற்கமைந்ததோர்
தாரந்தானலளேனுந்தயாவெனு
மீரந்தானகத்தில்லையென்றாலுந்தன்
வீரங்காத்தலைவேண்டென்றுவேண்டுவாய்.

(இ - ள்.) (யான்), ஆரம் தாழ் திரு மார்பற்கு - மாலைகள்தொங்கப்பெற்ற அழகிய மார்பையுடைய இராமபிரானுக்கு, அமைந்தது - ஏற்றவளாகிய, ஓர் தாரம் தான் அலள் எனும் - ஒருமனைவி யல்லளாயினும், தயா எனும் ஈரம் தான் அகத்து இல்லை என்றாலும் - (என்னைப்பற்றித்) தயையென்கிற குளிர்ச்சி (அவ்விராமபிரானது மனத்தில்) இல்லையாயினும், தன் வீரம் காத்தலை - தனது வீரத்தன்மையை (த் தவறுபடாமற்) காப்பதையாயினும், வேண்டு - விரும்புவாயாக, என்று வேண்டுவாய் - என்றுசொல்லி (அவனை நான் பிரார்த்தித்ததாகப்) பிரார்த்திப்பாய் ; (எ - று.)

இராமபிரான் இதுவரையிலுந் தன்னைச் சிறைமீட்கவில்லை யென்ற சினத்தினால், சீதை இங்ஙனம் நிட்டூரமாகக் கூறின ளென்க. ஆரம் - ஹாரம்; மாலைப்பொது ; சந்தனமுமாம். திருமார்பு - இலக்குமி வசிக்கின்ற மார்பு எனினுமாம். 'ஆரந்தாழ் மார்பன்' என்றது, வனத்துக்குவருவதன்முன்னுள்ள நிலைமையைக் கருதி. தாரம்என்ற சொல்லின் தன்மைக்கு ஏற்ப, 'அமைந்தது' என அஃறிணையாற் கூறினது ; இச்சொல், வடமொழியில் எப்பொழுதும் பன்மையாகவே நின்று 'தாரா:'என வழங்கும். (௩௦)

௩௧. ஏத்தும்வென்றியிளையவற்கீதொரு
வார்த்தைகூறுதிமன்னருளாலெனைக்
காத்திருந்தவற்கேகடனென்றிடை
கோத்தவெஞ்சிறைவீடென்றுகூறுவாய்.

(இ - ள்.) ஏத்தும் வென்றி இளையவற்கு - (யாவராலும்) கொண்டாடப் படுகிற வெற்றியையுடைய லக்ஷ்மணனுக்கு, ஈது ஒரு வார்த்தை - இவ்வொரு வார்த்தையை, கூறுதி - சொல்வாய்: (அது என்னவென்றால்,—) மன் அரு

ளால் - பெருமையையுடைய இராமபிரானது கட்டளையால், எனை - என்னை, காத்து இருந்தவற்கே - (பஞ்சவடியிற்) காவல்செய்துகொண்டிருந்த அவ்வி லக்குமணனுக்கே, இடை கோத்த வெம் சிறை வீடு - நடுவில்நேர்ந்த கொடிய சிறையினின்றும் (என்னை) விடுவித்தல், கடன் - கடமையாம், என்று—, கூறுவாய் - சொல்லிவேண்டுவாய்; (எ - று.)

மன் - பண்பாகுபெயர். மூன்றுமடியில், 'என்று' - அசை. இராமபிரான் சீதையின்வேண்டுகோளின்படி மானின்பின்னேசென்றபோது இலக்குமணன் சீதையைக்காக்க உடன்பட்டிருந்தன னென்க. 'மன்னருளால் எனைக் காத்திருந்தவற்கே (இப்பொழுதும் காத்தல்) கடன்'என்று ஈதொருவார்த்தை கூறுதி, '(ஆதலால்) இடைகோத்த வெஞ்சிறையினின்றும் (என்னை), வீடு - மீட்பாயாக' என்றும் கூறுவாய் என்றும் உரைக்கலாம். 'கடனென்று' என்றும் பாடம். (ருக)

ருஉ. திங்களொன்றினென்செய்தவந்தீர்ந்ததா
லிங்குவந்திலனேயெனின்யாணர்நீர்க்
கங்கையாற்றங்கரையடியேற்குத்தன்
செங்கையாற்கடன்செய்கென்றுசெப்புவாய்.

(இ - ள்.) திங்கள் ஒன்றின் - இன்னும் ஒருமாசகாலத்தோடு, என் செய் தவம் - யான் கொண்டுள்ள விரதம், தீர்ந்தது - முடிந்துவிடும்; ஆல் - ஆத லால், (அவ்வொருமாசத்திற்குள்), இங்கு வந்திலனே எனின் . (அவ்விராம பிரான்) இங்கு வாராமற்போவானே யானால், யாணர் நீர் கங்கை யாறு அம் கரை - புதுவருவாய்நீரை யுடைய கங்காநதியின் அழகிய கரையிலே, அடி யேற்கு - (தனது) அடியவளாகிய எனக்கு, தன் செம் கையால் - தனது சிவந்த கையினால், கடன் செய்க - செய்யவேண்டிய அந்திமகிரியைகளைச் செய்து முடிப்பாயாக, என்று—, செப்புவாய் - (இராமபிரானுக்கு நீ) சொல் வாய்; (எ - று.)

ஒருமாசத்திற்குள் அவன்வாரானாயின் தான் உயிர்விடுதல் திண்ண மென் பதை இவ்வாறு சீதை உறுதியாய்க்கூறினாள். யாணர்-அழகுமாம். செய் தவம்- ஒருமாசகாலம் உயிர் பிழைத்திருப்பதாகக் கொண்ட கொள்கை. கடன் - நீர்க் கடன்; தர்ப்பணம்; ஜலாஞ்சலி யெனப்படும். (ருஉ)

ருரு. சிறக்குமாமியர்மூவர்க்குஞ்சீதையாண்
டிறக்கின்றதொழுதாளெனுமின்னசொ
லறத்தினாயகனபாலருளின்மையான்
மறக்குமாயினுநீமறவேலையா.

(இ - ள்.) ஐயா - ஐயனே! அறத்தின் நாயகன்பால் - தருமத்துக்குத் தலைவனாகிய இராமபிரானிடத்து, அருள் இன்மையால் - (என்னைக்காக்க வேண்டு மென்னும்) கருணை யில்லாமையால், மறக்கும் ஆயினும் - (அவன்

என்னை) மறந்துவிடுவானாலும், சிறக்கும் மாமியர் மூவர்க்கும் - சிறந்த (எனது) மாமிமார் மூன்று பேர்க்கும், சீதை—, ஆண்டு இறக்கின்றாள் - இலங்கையில் மரணமடைகின்றவள், தொழுதாள் - (அப்பொழுது உங்களை) வணங்கினாள்,' எனும் - என்கிற, இன்ன சொல் - இந்தவார்த்தையை, நீ மறவேல் - நீ (சொல்ல) மறக்காதே; (எ - று.)

இராமபிரான் வனவாசங்கழித்து அயோத்திசேர்கையில், அவன் என் மீது அருளில்லாமையால் என்னைப்பற்றிக் கருதானாயினும், நீயாவது என் மாமிமாரிடத்து எனது வணக்கத்தைத் தெரிவிக்கவேண்டுமென்று சீதை அநுமானை வேண்டியபடி. மாமியர் மூவர் - கோசலை, சுமித்திரை, கைகேயி என்பவர். தர்மஸம்ஸ்தாபநம்பண்ணப் பிறந்தவனாதலால், இராமபிரானை, 'அறத்தின் நாயகன்' என்றார். இங்கே 'அறத்தின் நாயகன்' என்றது, தன்னை உபேக்ஷித்தமையாலாகிய துயரம் காரணமாக வந்த வெறுப்புப்பற்றிப் போலும். (௩௩)

௩௪. வந்தெனைக்கரம்பற்றியவைகல்வா
யிந்தவிப்பிறவிக்கிருமாதரைச்
சிந்தையாலுந்தொடேனென்றசெவ்வரந்
தந்தவார்த்தைதிருச்செவிசாற்றுவாய்.

(இ - ள்.) வந்து - (மிதிலாநகரத்துக்கு) வந்து, எனை கரம் பற்றிய - என்னை மணஞ்செய்துகொண்ட, வைகல்வாய் - அந்தநாளில், 'இந்த இ பிறவிக்கு - இவ்வுலகத்தில் எடுத்த இப்பிறப்பில், இரு மாதரை - (உன்னையன்றி) இரண்டாமவளான ஒருத்தியை, சிந்தையாலும் தொடேன் - மனத்தினாலும் எண்ணேன்', என்ற—, செம் வரம் - நல்லவரத்தை, தந்த - (எனக்குக்) கொடுத்தருளிய, வார்த்தை - செய்தியை, திரு செவி - (இராமபிரானது) திருச்செவிகளில், சாற்றுவாய் - (நீ) சொல்வாயாக; (எ - று.)

தான் பிறன்கைப்பட்டமைபற்றி இராமபிரான் ஒருகால் தன்னை உபேக்ஷித்து வேறுமணஞ்செய்துகொள்வனோ வென்னும் ஐயத்தினால், சீதை, அப்பிரான் முன்கூறியுள்ள வார்த்தையை அறிவுறுத்துமாறு அநுமானுக்குக் கூறினள். கல்யாணத்திற்கு 'பாணிக்கிரகணம் [கைபிடித்தல்]' என ஒருபெயருள்ளதனால், மணஞ்செய்துகொண்ட என்ற பொருளில் 'கரம்பற்றிய' என்றார். வைகல் - கழிந்துசெல்வதெனத் தினத்துக்குக் காரணக்குறி. சிந்தையால் தொடுதல் - எண்ணுதல்; அதனையும் செய்யேனெனவே, உடம்பினால் தீண்டாமை கைமுதிகநியாயத்தால் தானே பெறப்படும். பிறவிக்கு - உருபு மயக்கம். (௩௪)

௩௫. ஈண்டுநானிருந்தின்னுயிர்மாயினு
மீண்டுவந்துபிறந்துதன்மேனியைத்
தீண்டலாவதொர்தீவினைதீர்வரம்
வேண்டினாடொழுதென்றுவிளம்புவாய்.

(இ-ள்.) நான்—, ஈண்டு இருந்து - (இராமபிரானாற் சிறை மீட்கப்படாமல்) இவ்விலங்கையிலேயே இருந்து, இன் உயிர் மாயினும் - இனியஉயிர் நீங்கப்பெற்றாலும், மீண்டு வந்து பிறந்து - மற்றொருசன்மமெடுத்து (இவ்வுலகத்திலே) வந்து தோன்றி, தன் மேனியை-அப்பிரானது திருமேனியையே, தீண்டல் ஆவது - தழுவும்படியான, ஓர் தீவினை தீர் வரம் - குற்றம் நீங்கிய தொரு வரத்தை (த் தரும்படி), தொழுது வேண்டினாள் - (சீதை) நமஸ்கரித்து வேண்டிக் கொண்டாள், என்று—, விளம்புவாய் - (இராமபிரானிடத்து) விண்ணப்பிப்பாயாக; (எ - று.)

வரம் - வேண்டுவன கொள்ளுதல். "மன்னவனே யிப்பிறப்பிற் கண்டுமணந்திலனே, வின்னமொருபிறப்பிலாகிலு மேழையேன், தன்னந்தனியேயிருந்து தவமாற்றியுமுன், பொன்னகல முள்ளுருகப் புல்லாதொழிவேனோ" என்ற பாடல் இங்கு ஞாபகத்துக்கு வருகின்றது. (ருரு)

ருசு. அரசுவீற்றிருந்தாளவுமாய்மணிப்
புரசையானையின்வீதியிற்போகவும்
விரசுகோலங்கள்காணவிதியிலே
னுரைசெய்தென்னையென்னூழ்வினையுன்னுவேன்.

(இ-ள்.) வீற்றிருந்து - (இராமபிரான்) சிறப்புடன் இருந்து, அரசு ஆளவும் - இராச்சியத்தை ஆட்சிசெய்யவும்,—ஆய் மணி - ஆராய்ந்தெடுத்த [சிறந்த] மணிகளையும், புரசை - கழுத்திடுகயிற்றையுமுடைய, யானையின் - பட்டத்துயானையின்மேல் (ஏறி), வீதியில் போகவும் - (அயோத்தியாபட்டணத்து) வீதிகளிற் பவனிவரவும்,—விரசு கோலங்கள் - (அப்பொழுதப்பொழுது) கொள்ளுகின்ற திருக்கோலங்களை, காண - கண்டுகளித்தற்கு, விதி இலேன் - நல்வினையில்லாதவளான யான், உரைசெய்து என்னை - (பலவார்த்தைகள்) சொல்லிப் பயனென்ன? என் ஊழ் வினை உன்னுவேன் - யான் முன்செய்துள்ள விதியை நினைத்து வருந்துவேன்; (எ - று.)

ஆளவும், போகவும், காண, விதிஇலேன் என இயைக்க. இராமபிரான் மீண்டு அயோத்திசேர்ந்து அரசாளுதலைமேற்கொண்டு பலவகைச்சிறப்புக்களையும் அநுபவித்தலைக் கண்டுகளிக்கும் நல்வினையை முற்பிறப்பிற்செய்யாது 'என்னைச் சிறைமீட்கவில்லை'என்று யான் பலவகையாகப் பிறர்மீது குற்றங்கூறுவதிற் பயனில்லை யெனச் சீதை தன்விதியைநொந்து கூறியவாறு. வீறு - வேறொருவர்க்கில்லாத சிறப்பு. மணி-யானையின்இருமருங்கிலும் தொங்கும்படி கட்டியுள்ள அடிக்கும்மணி. புரசை - யானைக்கழுத்திடுகயிறு. கோலம் - அலங்காரம். (ருசு)

ருஎ. தன்னை நோக்கி யுலகந் தளர்தற்கு
மன்னை நோய்க்கும் பரதனங் காற்றுறு
மின்ன ஞெய்க்குமங் கேகுவ தன்றியே
யென்னை நோக்கியிங் கெங்ஙன மெய்துமோ.

(இ - ள்.) (இராமபிரான்),—தன்னை நோக்கி உலகம் தளர்தற்கும் - தன்னை [தான் நகரத்தைவிட்டு வனத்துக்கு வந்ததை]க் குறித்து உலகத்தார் வருந்துதற்கும், அன்னை நோய்க்கும் - தாயினது துன்பத்துக்கும், பரதன் அங்கு ஆற்றும் இன்னல் நோய்க்கும் - பரதாழ்வான் நந்திக்கிராமத்தில் அனுபவித்துவருகிற துன்பமாகிற மனோவியாதிக்கும், (ஆகிய இவற்றையெல்லாம் தீர்க்கும்பொருட்டு), அங்கு ஏகுவது அன்றியே - அயோத்திக்குச் செல்வதே யல்லாமல், என்னை நோக்கி இங்கு எங்ஙனம் எய்துமோ - யான் ஒருத்தி படுந்துன்பத்தை நினைத்து இவ்விடத்திற்கு எவ்வாறு வருவனோ? [வரமாட்டான் என்றபடி]; (எ - று.)

ஒவ்வொன்றே போதுமான பலகாரணங்களுள்ளதனால், இராமபிரான் இங்குவாராது அயோத்திக்கே செல்வனென்று சீதை சங்கையுற்றுக் கூறினளென்க. 'பரதனங்காற்றுறு மின்னல்நோய்' என்றது, "ஆமெனி லேழிரண்டாண்டி லேயநீ,நாமநீர் நெடுநகர் நண்ணி நாளிலங், கோமுறைபுரிகிலையென்னிற் கூடெரிச், சாமிது சரத நின்னாணை சாற்றினேன்" என்று சபதஞ்செய்து பரதன்தானும் இராமபிரான் போலவே தவவேடங்கொண்டு அவனது வரவை எதிர்நோக்கி வருத்தத்தோடிருத்தலை. பரதன்-பாரமுடையவன்; பரம் - பாரம்; லௌகிகவைதிக காரியங்களை நிர்வகிக்கவல்லவ னென்பது கருத்து. இராச்சிய பாரத்தை இராமபிரான் திருவடிநிலைக்குச் சூட்டி யாண்டவ னென்றுங் கொள்ளலாம். இனி, இராமன் வனத்தில் வசிக்கையில் தசரதனும் இறந்துபோக அராஜகமாய்ப்போன இராச்சியபாரத்தைப் பரிக்கும் வல்லமையுடையானென்று ஞானதிருஷ்டியால் முன்னமே யுணர்ந்த வசிஷ்டரால் இப்பெயர் தசரதன் புத்திரனான இவனுக்கு இடப்பட்டது என்றுங் கூறுவர். அன்னை-கௌசல்யை. (௩எ)

## வேறு.

௩அ. எந்தையாய் முதலிய கிளைஞர் யார்க்குமென்
வந்தனை விளம்புதி கவியின் மன்னனைச்
சுந்தரத் தோளனைத் தொடர்ந்து காத்துப்போ
யந்தமி னெடுநகர்க் கரசனாக் கென்பாய்.

(இ - ள்.) எந்தை - எனது தந்தையான ஜநகமகாராசனும், யாய் - தாயும், முதலிய - முதலான, கிளைஞர் யார்க்கும் - சுற்றத்தவர் எல்லார்க்கும், என் வந்தனை - எனது வணக்கத்தை, விளம்புதி - சொல்வாயாக; கவியின் மன்னனை - வாநரங்கட்கு அரசனான சுக்கிரீவனை நோக்கி சுந்தரம் தோளனை - அழகிய திருத்தோள்களையுடைய இராமபிரானை, தொடர்ந்து - விடாதுபின் தொடர்ந்து, காத்து - காப்பாற்றிக்கொண்டு, போய்—, அந்தம் இல் நெடுநகர்க்கு - (பகைவரால்), அழிதலில்லாத பெரிய அயோத்தியாபுரிக்கு, அரசன் ஆக்கு - அரசனாக முடிசூட்டி வைப்பாய், என்பாய் - என்று சொல்வாயாக.

கவியின்மன்னனை என்பாய் என இயைக்க. சுந்தரத்தோளன் - ஸுந்தர பாஹு. அயோத்தி யென்னுஞ் சொல்லுக்கு - பகைவரால் யுத்தஞ்செய்து வெல்லமுடியாத தென்று பொருளாதலால், அக்கருத்துப்பற்றி, 'அந்தமில் நெடுநகர்' என்றார்; இனி, எல்லையில்லாத பெரிய நகர மெனினுமாம்.

இதுவும், அடுத்த கவியும் - கீழ்ப்படலத்தின் பதினோராங்கவி போன்ற கலிவிருத்தங்கள். (௩அ)

[அதுகேட்டு அநுமான் பிராட்டியைப் பலகூறித் தேற்றுதல்.]

௩௯. இத்திற மினையன வியம்ப வின்னுநீர்
தத்துற லொழிந்திலீர் தைய லீரெனு
மெத்திறத் தேதுவு மியைந்த வின்னுரை
யொத்தன தெரிவுற வுணர்த்தி னனரோ.

(இ - ள்.) இ திறம் - இவ்வகையாக, இனையன - இவ்வார்த்தைகளை, இயம்ப-(சீதை) சொல்ல, (கேட்டு, அநுமான்), 'தையலீர் அழகுடையவரே! நீர்—, இன்னும்—, தத்துஉறல் ஒழிந்திலீர் - துன்பப்படுதலை விட்டீரில்லை', எனு - என்று சொல்லி,— எ திறத்து ஏதுவும் இயைந்த - எல்லாவகைப் பட்ட காரணமும் பொருந்தியவையும், ஒத்தன - (தன் நிலைக்குத்) தக்கவையுமாகிய, இன் உரை - இனிய வார்த்தைகளை, தெரிவுற-(பிராட்டி) அறியும்படி, உணர்த்தினன் - சொல்வானாயினான்; (எ - று.)—அவற்றை, மேல் முப்பத்தைந்துகவிகளிற் கூறுகின்றார். அரோ - ஈற்றசை.

முதலடியும், மூன்றாமடியும் - மூற்றுமோனை. ஒழிந்திலீர் - முன்னிலைப் பன்மையெதிர்மறையிறந்தகாலவினைமுற்று. தையல்-அழகு. தையலீர் - தையலார் என்பதன் ஈற்றயல் திரிந்தது, விளியுருபு. (௩௯)

வேறு.

௪0. வீவாய் நீயிவண் மெய்யஃதே
யோய்வா னின்னுயி ருய்வானும்
போய்வா னந்நகர் புக்கன்றே
வேய்வான் மௌலியு மெய்யன்றே.

(இ - ள்.) நீ—, இவண் - இவ்விலங்கையிலேயே, மெய்அஃதே - உண்மையாக, வீவாய் - இறப்பாயாம்; ஓய்வான் - (உன்னைவிட்டுப் பிரிந்ததனாலாகிய துயரினால்) உயிர்தளர்பவனாகிய இராமபிரான், இன் உயிர் உய்வான் ஆம்- (நீ இறந்தபின்பும்) இனியஉயிர் பிழைத்திருப்பானும்; போய்-(காட்டைவிட்டுச்) சென்று, வான் அ நகர் - பெருமையையுடைய அவ்வயோத்தியாபட்டணத்தை, புக்கு - அடைந்து, மௌலியும் வேய்வான் அன்றே - கிரீடத்தையும் சூட்டிக்கொள்வானன்றோ? மெய் அன்றே - (இவையெல்லாம்) உண்மையல்லவோ? (எ - று.)

இவை ஒருபொழுதும் உண்மையாகா. ஒருமாதகாலத்திற்குள் தவறாமல் இராமபிரான் இங்கேவந்து உன்னைச் சிறைமீட்டு அணைவான்; ஆதலால், நீ உயிர்விடும்படி நேராது. நீ உயிர்விட்டால் பின்பு இராமபிரான் பிழைத்திருப்பானோ? பிழைத்திருந்து ஊர்க்குத்தான் செல்வானோ? சென்று முடிதான் சூடுவானோ? இவற்றில் ஒன்றும் நடவாது என்பதாம். எதிர்மறையணி. கேட்போருள்ளம் மகிழுமாறு உடன்பாட்டுச் சொல்லால் எதிர்மறைப் பொருளைப் பெறவைத்தல், இவ்வணியின் இலக்கணம். அன்று ஓ என்ற இரண்டு எதிர்மறைகள் சேர்ந்து ஓர்உடன்பாட்டை வற்புறுத்தின. இக்கவியிலும், அடுத்தகவியிலும் உள்ள 'ஆம்' என்னும் சொற்கள் - வியப்புப்பொருளோடு அலட்சியத்தையுங் குறிக்கும்; "அடுப்பனோ மளகையை யறிவின் மானுடன், தொடுப்பனோம் பொருசரஞ் சூழ்ந்தசேனையைப், படுப்பனோ மதுகொடு பதுமந் தன்னைவந், தெடுப்பனோ மென்பெய ரிராசராசனும்" என்னுமிடத்தும் இச்சொல் இவ்வாறுவருதல் காண்க. அஃதே என்றதில், தேற்றப்பொருளுள்ள ஏகாரம் - பிறகுறிப்புவகையால் எதிர்மறைகுறித்தது. இதிலுள்ள ஆய்தம், மெய்போல் ஒலித்தது; அலகிட்டுக் காண்க.

இதுமுதற் பதினொன்கு கவிகள் - பெரும்பாலும் முதற்சீர் மாச்சீரும், இரண்டாஞ்சீர் கூவிளச்சீரும், மூன்றாஞ்சீர் தேமாங்காய்ச்சீருமாகிய சிந்தடி நான்கு கொண்ட வஞ்சிவிருத்தங்கள். (௪௦)

சக. கைத்தோடுஞ்சிறைகற்போயை
வைத்தோனின்னுயிர்வாழ்வானும்
பொய்த்தோரில்லிகள்போவாரா
மித்தோடொப்பதியாதுண்டே.

(இ - ள்.) கைத்து ஓடும் - (யாவரும்) வெறுத்து விலகிஓடிப்போகநினைக்கும்படியான [மிகக்கொடிய], சிறை - காவலிலே, கற்போயை - கற்புநிலை சிறிதுந்தவறாத உன்னை, வைத்தோன் - வைத்திட்ட இராவணன், இன் உயிர் வாழ்வான் ஆம் - இனியஉயிரோடு பிழைத்துவாழ்வனாம்; ஓர் வில்லிகள் - ஒப்பற்ற வில்லையுடைய இராமலக்ஷ்மணர், பொய்த்து - (தமது க்ஷத்திரியதருமத்தினின்று) பின்வாங்கி, போவார் ஆம் - போய்விடுவார்களாம்; இத்தோடு ஒப்பது யாது உண்டே - இந்தவார்த்தையோடு ஒப்பது எது உண்டு? (எ-று.)—இது மிகவும் அசம்பாவித மென்றதாம்.

இங்கு, "அன்னையானவரு மிருவரா முதலளித்த தந்தையர்களைவராம், பின்னையாசைகொடு குருகுலத்துரிமை பெறுவரா மொருபிறப்பி லோர், மின்னையா மவர்களைவரும் பரிவினோடு தனித்தனி விரும்புவார், என்னையா மவரொ டொருகுலத்தரசனென்ப தம்ம வினை யென்கொலாம்" என்ற செய்யுள் கருதத்தக்கது. கற்போய் - முன்னிலையொருமைக் குறிப்பு வினையாலணையும்பெயர். இத்தோடு என்பது எதுகை நோக்கி இத்தோடு என விரித்தல்விகாரமாயிற்று. அதருமஞ் செய்தவன் வாழ்தலும், தருமத்தைத் தாபிக்கப்பிறந்த

வர்கள் அங்ஙனஞ்செய்யாது தருமத்தினின்று தவறுதலும் நிகழா வென்பது கருத்து. 'ஓர்வில்லிகள்' என்றது, அவர் அங்ஙனம் பொய்த்துப்போகார் என்பதை விளக்கவந்த ஸாபிப்ராயவிசேஷ்யமாதலால், கருத்துடையடைகோளியணியாம். (சக)

சஉ. நல்லோய்நின்னைநலிந்தோரைக்
கொல்லோமெம்முயிர்கொண்டங்கே
யெல்லோருஞ்செலவெங்கோனும்
வில்லோடுஞ்செலவேண்டாவோ.

(இ-ள்.) நல்லோய் - நற்குண நற்செய்கையையுடையவளே! எல்லோரும் - நாங்களெல்லோரும், நின்னை நலிந்தோரை - உன்னை வருத்திய அரக்கரை, கொல்லோம் - கொல்லாதவர்களாய், எம் உயிர் கொண்டு - எங்களுயிர்க்கு யாதொரு தீங்கு மில்லாமற் பாதுகாத்துக்கொண்டு, அங்கே - இராமபிரானிடத்தில்,செல - போக,—எம் கோனும் - எங்கள் தலைவனாகிய இராமபிரானும், வில்லோடும் - (தனது) கோதண்டத்துடனே, செல வேண்டாவோ - (அயோத்திக்குத் திரும்பிப்) போகவேண்டாவோ? (எ - று.)

ராக்ஷசசங்காரஞ் செய்யாமல் நாங்கள் பின் தொடர்ந்துவர இராமபிரான் அயோத்திக்கு மீண்டுசெல்லுதல் மிகவும் இழிவாம்; ஆதலால், அரக்கரைக் கொன்றன்றி மீண்டுசெல்லோம் என்பது கருத்து. அவன் எங்களைத்துணையாக்கொண்டது, பகைவெல்லாது அயோத்திக்குத் திரும்பிச்செல்லத்தானோ வென்பது குறிப்பு. 'வில்லோடும்' என்றது, வில்லுக்குப் பயன் இராவணனுயிர்சங்காரமேயன்றி வேறன் றென்பதை விளக்கிற்று. அங்ஙனஞ்செய்யாவிடின் அது சுமையா மென்பது, தொனி. நல்லாள் என்பதன் விளியாகிய நல்லாய் என்பதில் ஈற்றயல் ஆகாரம் ஓகாரமாய் நின்றது. நல்லோய் - அழகியவளே யென்றுமாம். 'எம்' என்றது, மற்றைவானரவீரரையும் உளப்படுத்தி. எல்லோரும் - தன்மையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி. இச்செய்யுள்-பிறகுறிப்பின்பாற்படும். (சஉ)

ச௩. நீந்தாவின்னலினீந்தாமே
தேய்ந்தாறாதபெருஞ்செல்வ
மீந்தானுக்குனையீயாதே
யோய்ந்தாலெம்மினுயர்ந்தாரார்.

(இ-ள்.) நீந்தா இன்னலின் - கடப்பதற்கு அரிய துன்பக்கடலிடையே, நீந்தாமே - (நாங்கள் அகப்பட்டு) வருந்தாதபடி, தேய்ந்து ஆறாத பெருஞ் செல்வம் - குறைந்தொழியாத மிக்கசெல்வத்தை, ஈந்தானுக்கு - (எங்கட்குக்) கொடுத்தருளிய இராமபிரானுக்கு, உனை - உன்னை, ஈயாதே - (கொண்டுபோய்க்) கொடாதபடி, ஓய்ந்தால் - (நாங்கள்) நீங்கினால், எம்மின் உயர்ந்தார் யார் - எங்களினும் உயர்ந்தவர் யாவர் உளர்? (எ - று.)

'பெருஞ்செல்வம்' என்றது, வாலியைக்கொன்று சுக்கிரீவனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்து அரசுகொடுத்து முடிசூட்டியதை. நீந்தா இன்னல்-வாலியினாலுண்டான பெருந்துன்பம்; இதிலுள்ள எதிர்மறை - இன்மைகுறியாது அருமைகுறித்துநின்றது; "காட்டாதனவெல்லாங் காட்டி" என்றவிடத்துப் போல. நீந்தா என்ற அடைமொழிக்கு ஏற்ப, இன்னலைக் கடலாகக் கொள்க; இது, ஏகதேசவுருவகத்தின்பாற்படும். இவ்வாறு பேருதவிசெய்தவனை இராமபிரானிடத்து உன்னைக் கொண்டுசேர்த்தலாகிய இச்சிற்றுதவியையாவது நாங்கள் செய்யாவிடின், உய்தியில்லாததோர் பெருங்குற்றமாகிய செய்ந்நன்றிமறந்த லென்ற குற்றத்திற்கு உட்பட்டு மிக்கதாழ்மையையடைவோ மென்று அநுமான் கூறினனெனச. இராமபிரான் சுக்கிரீவனுக்குச் செய்த உபகாரத்தைத் தமக்குச்செய்த உதவிபோலப் பாராட்டி அநுமான் கூறியதனால், அவ்வாநர வீரர்கட்கு உள்ள இராஜவிசுவாசம் நன்குவிளங்கும். எம்மினுயர்ந்தார் யார் - பிறகுறிப்புப்பற்றிய எதிர்மறையிலக்கணையால், எங்களினும் இழிந்தவரில்லை என்று பொருள்படும். இனி, முதலடிக்கு - கடத்தற்கு அரிய துயர்க்கடலை (இராமபிரான்) கடவாதபடி யென்று பொருளுரைத்து, 'ஓய்ந்தால்' என்பதனோடு கூட்டுதலுமாம். (௪௩)

௪௪. நன்றாய்நல்வினைநல்லோரைத்
தின்றார்தங்குடர்பேய்தின்னக்
கொன்றாலல்லதுகொள்ளே
னென்றானுக்கிவையேலாவோ.

(இ - ள்.) 'நல் வினை-நல்ல (யாகம் தவம் முதலிய) செய்கைகளை, நன்று ஆய் - செவ்வையாக ஆராய்ந்து செய்கிற, நல்லோரை - நல்லொழுக்கமுடைய முனிவர்களை, தின்றார்தம் - கொன்றுதின்கிற ராக்ஷசர்களுடைய, குடர் - குடல்களை, பேய் -பேய்கள், தின்ன - தின்னும்படி, கொன்றால் அல்லது - கொன்றாலல்லாமல், நாடு - (எனது) கோசலநாட்டை, கொள்ளேன் - சேரேன்', என்றானுக்கு - என்று (தண்டகாரணியத்தில் முனிவர்கட்கு) வாக்குதத்தஞ்செய்த இராமபிரானுக்கு, இவை - (அரக்கரைப் போரிற்கொல்லுதலும் உன்னை மீட்டுக் கொண்டுபோதலுமாகிய) இச்செய்கைகள், ஏலாவோ-செய்தற்கு இயலாதனவாகுமோ? [எளிதில்இயல்வனவாம் என்றபடி]; (எ - று.)

நன்றாய்த் தின்றார் என்று இயைத்து உரைப்பினுமாம். ஏலாவோ, ஓ - எதிர்மறை. இனி, இவை ஏலாவோ என்பதற்கு - நீ சொன்னவை யெல்லாம் ஏற்காவோ?[ஏலா என்றபடி] என்றுமாம். இராமபிரான் அரக்கரைக்கொல்வதாக முனிவர்க்கு வாக்கு அளித்ததை "புகல்புகுந்திலரேற் புறத்தணடத்தி, னகல்வரேனு மென்னம்பொடும் வீழ்வரால், தகவில்துன்பந் தவிருதிர் நீரெனப், பகலவன்குல மைந்தன் பணிக்கின்றான்" என்றது முதலாகக் கூறியுள்ளதனால் அறிக. (௪௪)

௪௫. மாட்டாதார்சிறைவைத்தோயை
மீட்டாமென்கிலமீள்வாமே
நாட்டார்நல்லவர்நன்னூலுங்
கேட்டாரிவ்வுரைகேட்பாரோ.

(இ-ள்.) மாட்டாதார் - (சொன்னபடி கேட்டு) இணங்கிவாராத பகைவர்களால், சிறை வைத்தோயை - சிறையில்வைக்கப்பட்டுள்ள உன்னை, மீட்டாம் - மீட்டுக்கொண்டு வந்தோம், என்கிலம் - என்றசிறப்பைப் பெறுமல், மீள்வாம் எல்—(நாங்கள்) திரும்பிப்போய்விடுவோமானல், - நாட்டார்-நாட்டிலுள்ளவர்களான, நல்லவர் - நல்லவர்களாயுள்ள சாதாரணசனங்களும், நல்நூலும் கேட்டார் - நல்லசாஸ்திரங்களைக் கேட்டறிந்த பெரியோர்களும், இவ்வுரை கேட்பாரோ-இந்தவார்த்தையைக் கேட்டு அங்கீகரிப்பார்களோ? (எ-று.)

அங்கீகரியாமல் இகழ்வ ரென்றபடி. வைத்தோயை - செயப்பாட்டுவினைப் பொருளில் வந்த செய்வினை. 'இவ்வுரை'—பிராட்டியை மீட்கமாட்டாமற் போனுரென்னுஞ் சொல். மூன்முமடி - முற்றுமோனை. நூலும், உம்மை - உயர்வுசிறப்பு. மாட்டாதார் - வலிமையில்லாதவர் எனினுமாம். (௪௫)

௪௬. பூண்டாள்கற்புடையாள்பொய்யா
டீண்டாவஞ்சகர்தீண்டாமுன்
மாண்டாளென்றுமனந்தேறி
மீண்டால்வீரம்விளங்காதோ.

(இ-ள்.) கற்பு உடையாள் - பதிவிரதாதருமத்தை யுடையவளும், பூண்டாள் - (அவ்வொழுக்கத்தையே) ஆபரணமாகக் கொண்டவளுமாகிய மனைவி, பொய்யாள் - (அக்கற்புநிலையினின்றும்) சிறிதும் தவருதவளாய், தீண்டா வஞ்சகர் தீண்டா முன் - தொடவுங்கூடாத [மகாபாவிகளான] வஞ்சனையையுடைய அரக்கர் (தன்னைத்) தீண்டுவதற்கு முன்னமே, மாண்டாள் - இறந்தாள், என்று - என்றுகேட்டு, மனம் தேறி - மனந்தெளிந்து, மீண்டால் - (பகைவரை நாசஞ்செய்யாது தம்மூர்க்குத்) திரும்பிச் சென்றால், வீரம் - (இராமபிரானது) வீரத்தனம், விளங்காதோ - விளங்கமாட்டாதோ? (எ-று.)

இங்ஙனம் மீளுதல் மகாவீரனுகிய இராமபிரானுக்குப் பேரவமானந் தருவதொன்ருமாதலால், ஒருபொழுதும் அவன் அவ்வாறு செய்யான் என்பதாம். நீ இறப்பினும் பகைதொலையாது மீளக்கூடாத இராமபிரான், நீ உயிருடனே கற்புநிலையிற் சிறிதுங்குறைபாடின்றியிருக்கையில் உபேக்ஷித்துத் திரும்புதல், எங்ஙனம் அவனுக்குத் தகுதியாம்? ஆகையால், அப்பிரான் பகைதொலைத்து உன்னைச்சிறைமீட்டே செல்வ னென்றவாறு. பூணுதலென்னும்வினைக்கு ஏற்ப, கற்பு, ஆபரணமாகக்கொள்ளப்பட்டது. மனந்தேறுதல்-தனதுமனைவி கற்புநிலை தவறினளில்லை யெனத் தெரிந்ததனுல். விளங்காது

ஒ - இரண்டு எதிர்மறை ஓர் உடன்பாட்டுப்பொருளை வற்புறுத்தி நின்றன: விளங்கும் என்பது பொருள். அது, இங்கு எதிர்மறையிலக்கணையாகிய பிற குறிப்புவகையால், சிறிதும் விளங்காது என்றதாம். (சசு)

சஎ. கெட்டேனீயுயிர்கேதத்தால்
விட்டாயென்றிடின்மெல்லம்பா
லொட்டாரோடுலகோரேழுஞ்
சுட்டாலுந்தொலையாவன்றே.

(இ-ள்.) கெட்டேன்—! நீ—, உயிர் - பிராணனை, கேதத்தால் - மிக்க சோகத்தினால், விட்டாய் - விட்டிட்டாய், என்றிடின் - என்றால், மெல் அம்பால் - மென்மையான அம்புகளால், ஒட்டாரோடு - பகைவர்களுடனே, உலகு ஓர் ஏழும் - ஏழுலகங்களையும், சுட்டாலும் - எரித்தழித்தாலும், தொலையா அன்றே - (இராமபிரானுக்குப் பழியும் பாவமும்) நீங்காதனவா மல்லவோ? (எ - று.)

கெட்டேன் - இரக்கத்தாற் சொல்லுஞ் சொல்; இச்சொல் இவ்வாறு வருதலை "கேளா ராயர்குலத்தவர் இப்பழி கெட்டேன் வாழ்வில்லை" என்னும் பெரியாழ்வார்திருமொழியிலுங் காண்க. 'கெட்டே நீ' என்ற பாடத்துக்கு, நீ கேதத்தால் உயிர்கெட்டேவிட்டாய் என்றிடின் என இயைத்துப் பொருள் காண்க. மெல்லம்பு என்றது, பகைவருயிரைத் தாம் வருந்தாமல் எளிதில் மென்மையாக வாங்கும் அம்பு என்றபடி; நுட்பமான [கூர்மையான] அம்பு என்றுமாம். அன்றியும், இவ்வரக்கரை யெல்லாம் அழித்தற்கு இராமபிரான் வல்லம்புதொடுக்கவேண்டா, அவனது மெல்லம்பே அமையுமென்றுங் கருத்துக் கொள்ளலாம். இனி, பகைவருயிரை மென்று தின்னும் அம்பு என்றுமாம். ஒட்டார் - (தம்மோடு) சேராதவர். இராமபிரான் உன்னைமீட்காது உயிர்விடும்படி உபேக்ஷித்தால், அது, எவ்வகையாலும் என்றும் அழியாத பெரும்பழியை விளைக்குமென்பதாம். (சஎ)

சஅ. முன்னேகொல்பவன்மூவுலகும்
பொன்னேயோங்கியபோர்வில்லா
னென்னேநின்னிலையீதென்றாற்
பின்னேசெம்மைபிடிப்பானோ.

(இ - ள்.) பொன்னே - இலக்குமியின் அம்சமானவளே! ஓங்கிய போர் வில்லான் - மிக்க போர்க்கு உரிய கோதண்டத்தை யுடைய இராமபிரான், முன்னே - (உன்னை இராவணன் எடுத்துவருவதற்கு) முன்னமே, மூ உலகும் - மூன்று லோகங்களிலுமுள்ள ராக்ஷசர்களையும், கொல்பவன் - கொல்லுங் கொள்கையை யுடையவன்: (அப்படிப்பட்டவன்), நின் நிலை ஈது என்றால் - உனது நிலைமை இப்படிப்பட்டதென்று சொன்னால், பின்னே - பின்பு, செம்மை பிடிப்பானோ - சாந்தகுணத்தை மேற்கொள்வானோ? என்னே - (உனது பேச்சு) மிக்க வியப்பாயுள்ளது? (எ - று.)

உலகு - இடவாகுபெயர். பொன் - உவமவாகுபெயருமாம். இனி, பொன் வய் என்று பதம்பிரித்து, இரண்டாமடிக்கு - வீரலக்ஷ்மி சிறந்துவீற்றிருக்கப்பெற்ற போர்வில்லையுடையா னென்றுமாம். என்னே - வியப்புக் குறிப்பு. ஓகாரம் - சாந்தகுணத்தை மேற்கொள்ளா னென்னும் பொருளைத் தந்ததனால், எதிர்மறை. இராமபிரான் ராக்ஷசவதஞ்செய்ய முன்னமே உத்தேசித்திருந்ததை, தண்டகாரணியத்து முனிவர்க்கு அபயமளித்துள்ளதனாலும் அறியலாம். காரணமில்லாமலிருக்கையிலேயே அரக்கரைக் கொல்ல நினைத்துள்ளவன் தக்ககாரணம் அகப்பட்டபொழுது விட்டிடுவானோ என்பது, கருத்து; தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி; கைமுதிகநியாயந் தோன்றக் கூறியுள்ளமை காண்க. (சஅ)

சகூ. கோளாருருயிர்கோளோடு
மூளாவெஞ்சினமுற்றுகா
மீளாவேலயல்வேறுண்டோ
மாளாதோபுவிவானோடும்.

(இ - ள்.) மூளா வெம் சினம் - (தக்ககாரணமில்லாமல்) உண்டாகாத (இராமபிரானது) கொடிய கோபம், கோள் ஆர் உயிர் கோளோடும் - வலிமையையுடைய அரக்கர்களது உயிரைக்கொள்ளுதல் மாத்திரத்தோடும், முற்று ஆகா - தணியாவாம்; மீளா வல் - (அங்ஙனம்) தணிவுபெறு வாயின், அயல் வேறு உண்டோ - (அதற்கு இலக்காக) வேறு யாதாயினும் உள்ளதோ? புவி வானோடும் மாளாதோ - இந்நிலவுலகம் மேலுலகத்துடனே அழியாதோ? [அழியும் என்றபடி]; (எ - று.)

இராமபிரானது கடுஞ்சினம் அரக்கர்களை மாத்திரமேயன்றி அனைத்துலகையும் அழிக்கவல்லது என்பதாம். கோள் - வலிமை. இனி, கோளானர் - (சீதாபிராட்டியை எடுத்துக்கொண்டு போய்த் தனக்கு) இடையூறுசெய்பவ ரெனினுமாம். உயிர்கோள் - வதம். "குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேயுங் காத்த லரிது" என்பவாதலால், 'மூளாவெஞ்சின முற்றுகா' என்றார். அரக்கர் பலராதலால் அவர்கள்விஷயமாகத் தனித்தனி உண்டாகுங் கோபமும் இடம்நோக்கிப் பல வாதலால், 'சினமுற்றுகா,' 'மீளா வேல்' எனப் பன்மையாகக் கூறினா ரென்க. (சகூ)

ருo. தாழித்தண்கடறம்மோடு
மேழுக்கேழுலகெல்லாமன்
றாழிக்கையவனம்பம்மா
வூழித்தீயெனவுண்ணாவோ.

(இ - ள்.) ஆழி கையவன் - மோதிரமணிந்த திருக்கையையுடைய இராமபிரானது, அம்பு - பாணங்கள்,—தாழி தண் கடல்தம்மோடும் - ஆழ்ந்திருத்தலை

யுடைய குளிர்ந்த கடல்களெல்லாவற்றோடும், ஏழுக்கு ஏழ் உலகு எல்லாம் - பதினான்கு லோகங்கள் முழுவதையும், அன்று . அந்நாளில் [உன் நிலைமையை யுணரும்பொழுது], ஊழி தீ என - பிரளயகாலத்து அக்கினி போல, உண்ணுமோ - அழிக்கமாட்டாவோ? (எ - று.)

எல்லாவுலகங்களையும் நிச்சயமாய் அழிக்கு மென்றபடி. தாழி, இ - பகுதிப்பொருள்விகுதி; "உருளி மாமதி யோட்டொழித்தோங்கிய, வெருளி மாடங்கண்மேற் றுயிலெய்தலின்" என்னுஞ் சிந்தாமணியிற் போல. இனி, தாழ் இத் தண்கடல் என இகரத்தைச் சுட்டாகவும் எடுக்கலாம். ஏழுக்கு ஏழ் - ஏழுடன் கூடிய ஏழு. 'ஏழ்' - ழகரமெய்யீற்றுப்பெய ரென்பது, தொல்காப்பியனார்கொள்கை; நன்னூலார் முதலாயினோர் ஏழு என்னும் முற்றியலுகர வீற்றுப்பெயர் விகாரப்பட்டு அவ்வாறு நிற்கு மென்பர். ஆழி - ஆஜ்ஞாசக்கர மும், சக்கரரேகையுமாம். அம்மா - வியப்பிடைச்சொல்; இராமபிரானது அம்புகளின் தொழிலைப்பற்றி வியந்தவாறு. இனி, இதற்கு - தாயே என்று விளியாகவும் பொருள் கூறுவர்; கேட்பாயாக என்றுமாம். அம்பு உலகெல்லாம் உண்ணுமோ - உண்ணுதலை உண்பதுபோலவும், உண்ணப்படாததை உண்ணப்படுவது போலவும் கூறிய மரபுவழுவமைதி; "உண்டற்குரிய வல்லாப் பொருளை, உண்டனபோலக் கூறலுமரபே" என்ற தொல்காப்பியச்சூத்திரத் துக்கு, ஆசிரியர் நச்சினார்க்கினியர் செய்வினையாகவும் செயப்பாட்டுவினை யாகவும் பொருள்கூறியிருத்தல் காண்க. கடலினிடையேயுள்ள வடவைத்தீ யுகாந்தகாலத்தில் அக்கடலினின்று வெளிப்பட்டு உலகங்களைச் சுட்டு அழிக்கு மென்பது, நூற்கொள்கை. (௫०)

௫௧. படுத்தான்வானவர்பற்றாரைத்
தடுத்தான்றீவினைதக்கோரை
யெடுத்தானல்வினையெந்நாளுங்
கொடுத்தானென்றிசைகொள்ளாயோ.

(இ - ள்.) (இராமபிரான்),—வானவர் பற்றாரை - தேவர்கட்குப் பகைவ ராகிய (இராவணாதி) ராக்ஷசர்களை, படுத்தான் - கொன்றான்; தீவினை - (அவர் களுடைய) தீச்செயல்களையெல்லாம், தடுத்தான் - (இனிஉண்டாகாதபடி) விலக்கினான்; தக்கோரை - (ஞான அநுட்டானங்களினால்) மேன்மைபெற்ற முனிவர் முதலியோரை, எடுத்தான் - காத்தான்; நல்வினை - புண்ணியத் தொழில்களை, எ நாளும் - எப்பொழுதும், கொடுத்தான் - (உலகத்தார் செய்யும் படி) கொடுத்தருளினான், என்ற - என்று பலவகையாகக் கூறப்படுகின்ற, இசை - புகழை, கொள்ளாயோ - (நிச்சயமாக அப்பிரான் பெறுவ னென்று நீ) எண்ணமாட்டாயோ? (எ - று.)—எண்ணவேண்டும் என்பதாம்.

'படுத்தான்' முதலிய இறந்தகாலங்கள் - விரைவும் தெளிவும் பற்றியன. பற்றார் - மனம்பொருந்தாதவர். எடுத்தல் - காத்தலென்னும் பொருளதாதலை,

"எடுப்பின், கிளையுட்கழிந்தாரெடுக்க" என்ற நான்மணிக்கடிகையிலுங் காண்க. இச்செய்யுளில், அவதாரத்தின் காரியங்களான துஷ்ட நிக்கிரகமும், சிஷ்ட பரிபாலநமும், தர்மஸம்ஸ்தாபநமும் இனி இராமபிரான் செய்வது திண்ணமெனக் கூறியவாறு. இனி, இக்கவிக்கு - வானவர் பற்றுரைப் படுத்தான், தக்கோர்க்கு வருந் தீவினையைத் தடுத்தான், நல்வினை எடுத்தான், எந்நாளும் இசை [புகழைக்] கொடுத்தான் என்று கொள்ளாயோ என்றும் பொருள் கொள்ளலாம். (ருக)

ருஉ. சின்னாணீயிடர்தீராதா
யின்னுவைகலி னெல்லோரு
நன்னாள்காணுதனன்றன்றோ
வுன்னுனல்லறமுண்டானால்.

(இ - ள்.) உன்னால் நல் அறம் உண்டானால் - உன்னாலே நல்ல தருமம் நிலைபெறுவதாயிருந்தால்,—நீ—, சில் நாள் - சிலநாள்கள், இடர் தீராதாய் - துன்பம் நீங்கப்பெறாதவளாய், இன்னு - அத்துன்பத்துடனே, வைகலின் - தங்கியிருத்தலினாலே, எல்லோரும் - (உலகத்தவர்) யாவரையும், நல் நாள் - (தமக்கு) நல்லகாலத்தை, காணுதல் - காணச்செய்தல், நன்று அன்றோ - (உனக்கு) நல்லதன்றோ? (எ - று.)—நல்லதேயாம் என்றபடி.

ஒருவர் தாம் வருந்தியாயினும் பிறர்க்கு நன்மையையுண்டாக்குதல், அவர்க்கு மிக்கபுண்ணியந் தருமென்க. நீ அரக்கனாற் கவரப்பட்டு இங்கே சிலகாலம் துன்பமனுபவிப்பதனாலேயே இராமபிரான் விரைவில்வந்து அரக்கரையெல்லாம் அழித்துத் தருமத்தை நிலைநிறுத்தி உலகங்களைக் காத்தருள்வன்; ஆகையால், நீ சிலநாள் துன்பமனுபவித்தலே துஷ்டநிக்கிரகத்துக்கும் சிஷ்டபரிபாலநத்துக்கும் தர்மஸம்ஸ்தாபநத்துக்கும் காரணமா மென்றபடி. இன்னு என்பதை இன்னவாறு என்பதன் விகாரமாகக் கொண்டு, இவ்வாறு தங்குதலினால் என்றும் உரைக்கலாம். காணுதல் - பிறவினைப்பொருளில்வந்த தன்வினை; இதனை வடநூலார் 'அந்தர்ப்பாவிதணிச்' என்பர். (ருஉ)

ருங. புளிக்குங் கண்டகர் புண்ணீருட்
குளிக்கும் பேய்குடை யுந்தோறு
மொளிக்குந் தேவரு வந்துள்ளங்
களிக்குந் நல்வினை காணுயோ.

(இ - ள்.) புளிக்கும் - (யாவரும்) வெறுக்கத்தக்க, கண்டகர் - முள்ளுப் போலக் கொடிய அரக்கர்களது, புண் நீருள் - இரத்தவெள்ளத்தில், குளிக்கும் - முழுகுகிற, பேய் - பேய்கள், குடையும் தோறும் - ஜலக்கிரீடை செய்யும்பொழுதெல்லாம்,—ஒளிக்கும் தேவர் - (இராவணனிடத்துப்பயத்தால் தாம் இருக்கிறவிடமும் தெரியாமல்)மறைந்திருந்த தேவர்கள், (அச்சமொழிந்து வெளியில்வந்து அதனைக் கண்டு), உள்ளம் உவந்து - மனம்மகிழ்ந்து, களிக்

கும் - செருக்கடைகிற, நல்வினை - நல்ல செய்கையை, காணுயோ - (நீ) காண மாட்டாயோ? (எ - று.)—ஓ - எதிர்மறை; விரைவிற் காண்பா யென்பதாம்-
புளிக்கும் என்பதைக் கண்டகர்க்கும், புண்ணீருக்கும் அடைமொழியாக் கொள்ளலாம். புண்ணீர் - விரணத்திலிருந்து வழியும் நீர். புளித்தல் - செருக்குத லாகவுமாம். ஒளிக்கும் - தேககாந்தியால விளங்குகின்ற என்பாரு முளர்.

வேறு.

ருச. ஊழியி னிறுதியி னுருமெ றிந்தெனக்
கேழ்கிளர் சுடுகணை கிழித்த புண்பொழி
தாழிருங் குருதியிற் றரங்க வேலைக
ளேழுமொன் ருகநின் றிரைப்பக் காண்டியால்.

(இ - ள்.) ஊழியின் இறுதியின் உரும் எறிந்து என - யுகாந்தகாலத்தில் இடிவிழுந்தாற் போல, கேழ் கிளர் சுடு கணை கிழித்த - ஒளிவிளங்குகிற (பகைவர்களை) அழிக்கும் (இராமபிரானது) அம்புகள் தைத்துப் பிளந்ததனு லுண்டான, புண் - விரணத்தினின்றும், பொழி - சொரிகிற, தாழ் இருங் குருதியின் - ஆழமான மிக்க இரத்தப்பெருக்கினுல், தரங்கம் வேலைகள் ஏழும் ஒன்று ஆக நின்று - அலைகளையுடைய ஏழுகடல்களும் ஒருசேரக்கூடிநின்று, இரைப்ப - பேரொலிசெய்வதை, காண்டி - (நீ விரைவிற்) பார்ப்பாய்; (எ - று.)

இச்செய்யுளில், வருங்காலத்து நிகழ்வதனை நேரிற்காண்பதுபோலக்கூறி யுள்ளது, நிகழ்வினவிப்பியணி; வடநூலார் பாவிக மென்பர். அடுத்தசெய்யுள்களிலும் இங்ஙனமே காண்க. பின்னிரண்டடி - உயர்வுநவிற்சியணி. இடிசெறிதல் - கணைகிழித்தற்கு உவமை. சுடு கணை - வடித்த கணை யென்றுமாம். கிழித்த புண் - பெயரெச்சம், காரணப்பொருளது; 'சங்குசுட்ட சுண்ணும்பு' என்றவிடத்துப் போல. தாழ் - இழிவான என்றுமாம்.

இதுமுதல் இருபத்தொரு கவிகள் - கீழ்ப்படலத்தின் பதிஞேராங்கவி போன்ற கலிவிருத்தங்கள். (ருச)

ருரு. சூலியம்பெருவயிறலைத்துச்சோர்வுறு
மாலியங்கண்ணியாறுத்துநீத்தன
வாலியுங்கடப்பருவானுயர்
தாலியம்பெருமலைத்யங்கக்காண்டியால்.

(இ - ள்.) சூலி அம் பெரு வயிறு அலைத்து - கர்ப்பத்தையுடைய அழகிய (தமது) பெரிய வயிற்றைப் பிசைந்துகொண்டு, சோர்வு உறும் - தளர்ச்சியடைகிற, ஆலி அம் கண்ணியர் - நீர்த்துளியைக்கொண்ட அழகிய கண்களையுடைய அரக்கியர், அறுத்து நீத்தன - அறுத்துப்போகட்டனவான, தாலி - தாலிகளாலாகிய, அம் - அழகிய, வான் உயர் பெரு மலை - ஆகாயத்தையளாவி உயர்ந்த பெரியமலைகள், வாலியும் கடப்பு அரு வனப்ப - வாலியினுலும்

தாண்டுவதற்குஅரிய வளர்ச்சியினை யுடையனவாய், தயங்க - விளங்குவதை, காண்டி—; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

சூலி, இ - உடைமைப் பொருள் விகுதி. மூன்றடிகளிலுள்ள 'அம்' என் பதனைச் சாரியையாக் கொள்ளுதல் நேர். 'சூலிரும்' என்றும் பாடம். வாலி யும், உம் - உயர்வுசிறப்பு; அது, எல்லாமலைகளையும் எளிதிற் கடக்கவல்ல வாலியினது ஆற்றலைத் தோற்றுவித்தது. மிக்க சங்கடகாலத்தில் வயிற்றைப் பிசைவது, இயல்பு. தாலி மலைபோலக்குவியு மென்று, இராமபிரான் கணை களால் இறந்துபடும் அரக்கரின் மிகுதியை விளக்கியவாறு. (ருரு)

ருசா. விண்ணினீளியநெடுங்கழுதும்வெஞ்சிறை
யெண்ணினீளியபெரும்பறவையீட்டமும்
புண்ணினீர்ப்புணரியிற்படிந்துபூவையர்
கண்ணினீராற்றினிற்குளிப்பக்காண்டியால்.

(இ - ள்.) விண்ணின் நீளிய நெடுங் கழுதும் - ஆகாயத்தினும் உயர்ந்தவை யாகிய நீண்ட பேய்களும், எண்ணின் நீளிய வெம் சிறை பெரும் பறவை ஈட்டமும் - தொகையில் அதிகப்பட்டனவாகிய கொடிய இறகுகளையுடைய (கழுகுமுதலிய) பெரிய பறவைகளின் கூட்டமும், புண்ணின்நீர் புணரியில் படிந்து - (ராக்ஷசர்களுடைய) இரத்தவெள்ளமாகிய கடலில் முழுகி, பூவை யர் கண்ணின் நீர் ஆற்றினில் குளிப்ப - அரக்கியரது கண்ணீர்ப்பெருக்காகிய நதியில் நீராடுவதை, காண்டி—; (எ - று.)

கடலில் நீராடியவர், அவ்வுவர்ப்பும் மணலும் உடம்பினின்றும் ஒழியும் பொருட்டு, உடனே நல்லநீரில் முழுகுதல், இயல்பு. உருவகவணி. புணரி - (நதிகளோடு) புணர்வது எனக் காரணக்குறி; இதுபற்றியே, கடலுக்கு வடமொழியில் 'நதீபதி' என ஒருபெயர். நீளிய - நீள் என்னும் பகுதியடியாப் பிறந்த இறந்தகாலப் பெயரெச்சம். பூவையர் - மகளிரென்னும் மாத்திரை யாய் நின்றது; அரக்கியரைக் குறித்தலால். கிளிபோன்றவ ரென்று இச்சொற் குப் பொருள். (ருசா)

ருஎ. கரம்பயின்முரசினங்கறங்கக்கைதொடர்
நரம்பினுமிமிழிசைநவிலநாடக
மரம்பையராடியவரங்கினுண்டொழிற்
குரங்குகண்முறைமுறைகுனிப்பக்காண்டியால்.

(இ - ள்.) கரம் பயில் முரசு இனம் கறங்க - கைகளினால் அடிக்கப்படு கிற மிருதங்கங்களின்வகைகள் ஒலிக்கவும், கை தொடர் நரம்பினும் இமிழ் இசை நவில - கையினால் தடவி வாசிக்கப்படுகிற யாழ்நரம்பின் ஒலியினும் இனியதாகிய பாட்டிசை பொருந்தவும், அரம்பையர் நாடகம் ஆடிய - ரம்பை முதலிய தேவமாதர்கள் நர்த்தனஞ்செய்த, அரங்கின் - (லங்காபட்டணத்து)

நாடகசாலைகளில், (அத்தன்மை மாறி), ஆண் தொழில் குரங்குகள் முறை முறை குனிப்ப - பராக்கிரமத்தையுடைய வாநரங்கள் வரிசைவரிசையாக நின்று (போர்வென்ற மகிழ்ச்சியாற்) கூத்தாடுவதை, காண்டி—; (எ - று.)

முரசு என்னும் வாத்தியப் பொதுப்பெயர், இங்கே சிறப்பாய், முழவை யுணர்த்திற்று. நரம்பு - ஒலிக்கு ஆகுபெயர். உம் - உயர்வுசிறப்பு. இராவண னிடத்து உள்ள அச்சத்தால், தேவமாதர்கள் அவனதுசபையில் ஆடுவா ராயின ரென்க. இச்செய்யுள் - முறைபிறழ்படர்ச்சியணியாம்; இதன் இலக்கணம், ஒன்றின்தன்மை மாறி வேறொருதன்மை யடைவதாகக் கூறுதல். இங்கு, அரம்பை முதலியோர் ஆடும் நாடகசாலைகள் அத்தன்மைமாறிக் குரங்குகள் ஆடப் பெறுமெனக் கூறியிருத்தல் காண்க. நரம்பினும் இமிழ் இசை நவில - யாழ் நரம்புகளினின்றும் ஒலிக்கின்ற கீதம் பயில எனினுமாம். (கஎ)

ரு௭. புரையுறுபுன்றொழிலரக்கர்புண்பொழி
திரையுறுகுருதியாறீர்ப்பச்செல்வன
வரையுறுபிணப்பெரும்பிறக்கமண்டின
கரையுறுநெடுங்கடறூர்ப்பக்காண்டியால்.

(இ - ள்.) 'புரை உறு - குற்றம் மிகுந்த, புல் தொழில் - இழிதொழில் களையுடைய, அரக்கர் - ராக்ஷசர்களது, புண் - புண்களினின்று, பொழி - வழிகிற, குருதி - இரத்தமாகிய, திரை உறு ஆறு - அலைகள் பொருந்திய நதி, ஈர்ப்ப - இழுப்பதனால், செல்வன - செல்பவையான, வரை உறு பிணம் பெரு பிறக்கம் - மலைகளையொத்த பிணங்களின் பெரியஉருவம், மண்டின - நெருங்கி யவையாய், கரை உறு நெடுங் கடல் - கரையை மோதுகிற பெரிய கடலை, தூர்ப்ப - நிரப்புவதை, காண்டி—; (எ - று.)

பிறக்கம் - பிறங்குவது; பிறங்குதல் - விளங்குதல். இரண்டாமடி - உரு வகவணி. பின்னிரண்டடிகள் . உவமை யணியை அங்கமாகக்கொண்டு வந்த உயர்வுநவிற்சியணி. இவ்விரண்டணியும் பேதப்பட வந்தது, சேர்வையணி யாம். பெரும்பிறக்கம் - பெருங்குவியலுமாம். (கஅ)

ருகூ. வினையுடையரக்கராமிருந்தைவெந்துகச்
சனகியென்றொருதழனடுவேட்டங்கலா
லனகன்கையம்பெனுமளவிலூதையாற்
கனகநீடிலங்கைநின்றுருகக்காண்டியால்.

(இ - ள்.) வினை உடை அரக்கர் ஆம் இருந்தை வெந்து உக - கொடுந் தொழில்களையுடைய ராக்ஷசர்களாகிய கரிகள் வெந்துபோம்படி, சனகி என்ற ஒரு தழல் நடுவண் தங்கலால் - சீதை யென்ற ஓர் அக்கினி நடுவில் தங்குதலி னாலே, அனகன் கை அம்பு எனும் அளவு இல் ஊதையால் - குற்றமற்ற இராமபிரானது கையினால் விடப்படுகிற அம்பாகிய அளவில்லாத [மிக்க]

பெருங்காற்றினால், நீடு இலங்கை கனகம் - பெரிய லங்காபுரியாகிற பொன், நின்று உருக - நிலைபட்டு உருகுவதை, காண்டி—; (எ - று.)

கருநிறமுடைமையால் அரக்கரைக் கரியாகவும், சிவந்த ஒளியாலும் தூய் மையினாலும் தன்கற்புநிலையாற் கொடியவரை யெரித்தழிக்குந் தன்மையாலும் ஜாநகியைத் தழலாகவும், விரைந்துவருந்தன்மையாலும் சீதையின் கற்பாகிய தழலுக்கு மேன்மையை விளைத்தலாலும் இராமபிரானது அம்பைக் காற்றாக வும், பொன்மயமானதாதலால் இலங்கையைப் பொன்னாகவும் உருவகப்படுத் தினார்; முற்றுருவகவணி. காற்றினால் நெருப்புவளர்தல், இயல்பு. வினை - பாவமுமாம். இருந்தை - கரி. 'சனகியென்றொருதழல்' என்ற விதப்பு, உலகத்து நெருப்புச்சுடுவது தன்னைத் தொட்டவரையே, இந்நெருப்புத் தன் னைத் தொட முயல்வாரையுஞ் சுட்டெரிக்கு மென்பதைக் காட்டிற்று. என் றொரு - விகாரம். ஒரு - ஒப்பற்ற எனினுமாம். அநகன் - குற்றமில்லாத வன்; அகம் - குற்றம்: ந அக - என்று பிரிக்க. அளவிலூதை - சண்ட மாருத மென்றபடி. கநகம் - வடசொல். இலங்கை இராமபிரானது அமபு களால் அரக்கர்களோடு விரைவில் அழியு மென்பதாம். (கூக)

சுo. தாக்கிகலிராவணன்றலையிற்றாவின
பாக்கியமனையநின்பழிப்பின்மேனியை
நோக்கியகண்களை நுதிகொண்மூக்கினாற்
காக்கைகள்கவர்ந்துகொண்டுண்ணக்காண்டியால்.

(இ - ள்.) காக்கைகள்—, தாக்கு இகல் இராவணன் தலையில் தாவின - (யாவரையும்) மோதுகின்ற வலிமையையுடைய இராவணன் (இராமனம்பு களால் இறந்துகீழ்விழுந்தபொழுது அவனுடைய) தலைகளிலே தாவியனவாய், பாக்கியம் அனைய நின் பழிப்பு இல் மேனியை நோக்கிய கண்களை - (நல் லோர்கள் செய்த) நல்வினைப்பயன் போன்ற உனது குற்றமற்ற திருமேனி யைப் பார்த்த (இருபது) கண்களையும், நுதிகொள் மூக்கினால் கவர்ந்துகொண்டு- கூர்மையைக்கொண்டுள்ள (தமது)மூக்குக்களாற் பறித்துக்கொண்டு, உண்ண - உண்பதை, காண்டி—; (எ - று.)

கீழ் "என்னை ஈக்கையைக், கண்ட போரரக்கன் விழி காகங்கள், உண்ட போதன்றி யா னுளனாவனோ"என்று சீதை கூறியதற்கு ஏற்ப,அநுமான் அங்ஙனமேயாகு மென இதனால் உறுதிகூறினா னென்க. சீதை, சிறையிரு ந்து, துஷ்டநிக்கிரகம் நடத்தற்குத் தான் காரணமாகுதலால், 'பாக்கியமனைய நின்' என்றா னென்க. (சுo)

சுக. மேலுறவிராவணற்கழிந்துவெள்கிய
நீலுறுதிசைக்கரிதிரிந்துநிற்பன
வாலுறவனையவன்றலையைவவ்வலிற்
காலுறுகணைகடிந்திடுவகாண்டியால்.

(இ - ள்.) மேல் - முற்காலத்திலே, உற - மிகுதியாக, இராவணற்கு - இராவணனுக்கு, அழிந்து - தோற்று, வெள்கிய - வெட்கமுற்ற, திரிந்து நிற்பன - (அதனால் முகங்காட்டாமற்) புறங்காட்டிநிற்பனவாகிய, நீல் உறு திசை கரி - நீலநிறம்பொருந்திய திக்கஜங்களின், வால் - வாலிலே, உற - பொருந்தும்படி, கால் உறு கணை - வாயுவேகம் பொருந்திய (இராமபிரானது) அம்புகள், அனையவன் தலையை - அவ்விராவணனது தலைகளை, வவ்வலின் - (தாம்) அறுத்தலினால், கடிந்திடுவ - விலக்கித்தள்ளுவனவற்றை, காண்டி—.

இராவணனோடு எதிர்த்துப்பொருது அவன் வலிமைக்குமுன் நிற்கமாட்டாமல் தோற்றோடிப் புறங்கொடுத்த திக்கஜங்களின் வாற்புறத்திலேயே அவ்விராவணன்தலைகள் சிதறிவிழும்படி இராமபிரானது அம்புகள் விரைவிலேயே அழித்துத்தள்ளு மென்பதாம். உற அழிந்து எனவும், வாலுறக் கடிந்திடுவ எனவும் இயையும். கால் - அதன்வேகத்துக்கு இலக்கணை. காலுறுகணை - காற்றை யொத்த அம்பு என்றுமாம்; உறு - உவமவுருபு. (கூக)

கூஉ. நீர்த்தெழுகணைமழைவழங்கநீலவான்
வேர்த்ததென்றிடையிடைவீசுந்துசுபோற்
போர்த்தெழுபொலங்கொடியிலங்கைப்பூழியோ
டார்த்தெழுகழுதிரைத்தாடக்காண்டியால்.

(இ - ள்.) 'நீலம் வான் - நீலநிறத்தையுடைய ஆகாயம்; வேர்த்தது - வேர்வையடைந்தது', என்று-என்றெண்ணி, (அவ்வேர்வையைப் போக்குவதற்கு), இடை இடை வீசும் - அங்கங்கே விசிறுகின்ற, துசு போல் - வஸ்திரங்கள் போல, போர்த்து எழு - நிறைந்துதோன்றுகிற, பொலம் கொடி - அழகிய கொடிச்சீலைகளை யுடைய, இலங்கை - லங்காநகரியில், எழு கணை - விளங்குகிற அம்புகளை, மழை நீர்த்து - மழையின்தன்மையுடையனவாக [மழைபோல], வழங்க - (இராமபிரான்) பிரயோகிப்பதனால், (தம்தமக்கு மிக்க இரை கிடைக்கு மென்று அகமகிழ்ந்து), ஆர்த்து எழு - ஆரவாரித்து எழுகிற, கழுது-பேய்கள்] பூழியோடு - புழுதிகளுடனே [பூமியினின்று தூளிகள் மேலே கிளம்ப], இரைத்து ஆட - கொக்கரித்துக் கூத்தாடுவதை காண்டி—க்; (எ - று.)

மேகம் நீர்த்துளி பொழிவதனை, நீலவான் வேர்த்ததாகக் குறித்தார். இயல்பாக வனத்திற் கொடியாடுவதனை, ஆகாயத்துக்கு உண்டான வேர்வையைப் போக்குவதற்காக விசுறுவனவாகக் கூறியது - பயன்தற்குறிப்பேற்றவணி. வேர்வையுண்டானால் வஸ்திரத்தினால் விசிறுதல், இயல்பு. துசு - துவசபடத்துக்கு உவமை. பூழியோடு ஆர்த்தெழு கழுது இரைத்தாட என்பது -உடனிகழ்ச்சியணி. கணை - சாதியொருமை. (கூஉ)

கூங. நீணிறவரக்கர்தங்குருதிநீத்தநீர்
வேலைமிக்காற்றொடுமீளவேலைசூழ்
ஞாலமுற்றுங்கடையுகத்துநச்சருங்
காலனும்வெறுத்துயிர்காலக்காண்டியால்.

(இ - ள்.) நீல் நிறம் - கருநிறத்தையுடைய, அரக்கர்தம் - இராக்கதர்களுடைய, குருதி நீத்தம் - இரத்தவெள்ளத்தால், நீர் வேலை - (உப்பு)நீர்க்கடல், மிக்கு - நிரம்பி, ஆற்றொடு - அவ்விரத்தநதிகளின்வழியே, மீள - திரும்புவதையும்,—வேலை சூழ் - கடல்களாற் சூழப்பட்ட, ஞாலம் - உலகம், முற்றும் - முடிந்துபோகிற, கடையுகத்தும் - யுகாந்தகாலத்திலும், நச்சு அறு - (உயிர்களைத்தின்பதில்) விருப்பம் நீங்காத, காலனும் - யமனும், வெறுத்து - (எத்தனையுயிர்களைக் கொன்றுதின்பதென்று) வெறுப்படைந்துநின்று, உயிர் கால-(தான்முன்தின்ற) உயிர்களைக் கக்கிவெளிப்படுத்துவதையும், காண்டி —.

இச்செய்யுள், இறந்து படும் அரக்கர்களின் மிகுதியை விளக்கவந்த தொடர்புயர்வு நவிற்சியணி. அளவுக்கு மிஞ்சி மிகுதியாக உணவைக்கொண்டால் கொண்ட உணவு வெளிப்படுதல், இயல்பு. காலனும் என்ற உம்மை - அவனுக்கு உயிர்கொள்வதிலுள்ள விருப்பின் மிகுதியை விளக்கும். உயிரை யமன் தின்பதாகக் கூறுதல் கவிமரபு. இனி, உயிர் கால என்பதற்கு - (ஓய்ந்து) பெருமூச்சுவிட என்றும் பொருள்கூறலாம். நச்சு - முதனிலைத் தொழிற்பெயர். இரட்டுறமொழிதல் என்னும் உத்தியால், ஆறு என்பதற்கு - வழியென்றும், நதியென்றும் இருவகையாகப் பொருள்கொள்ளப்பட்டது. (௬௩)

௬௪. அணங்கிளமகளிரொடரக்கராடுறு
மணங்கிளர்கற்பகச்சோலைவாவிவாய்ப்
பிணங்குறுவான்முறைபிடித்துமாலைய
கணங்கொடுகுரக்கினங்குளிப்பக்காண்டியால்.

(இ - ள்.) அரக்கர்—, அணங்கு இள மகளிரொடு - தெய்வப்பெண் போன்ற [அழகிய] இளைய ராக்ஷச ஸ்திரீகளுடனே, ஆடுறு - ஜலக்கிரீடை செய்தற்கு இடமான, மணம் கிளர் கற்பகம் சோலை வாவிவாய் - வாசனை மிகுந்த கற்பக விருக்ஷத்தையுடைய சோலையிலுள்ள குளங்களில்,—குரங்கு இனம் - குரங்குக் கூட்டங்கள், பிணங்குறு வால் - சிறிது வளைந்த வால்களை, முறை பிடித்து - முறையே [ஒன்றன் வாலை மற்றொன்றாகப்] பிடித்துக் கொண்டு, மாலைய கணம் கொடு - ஒழுங்காகிய கூட்டமாக, குளிப்ப - நீராடுவதை, காண்டி—; (எ - று.)

முறையிற்படர்ச்சியணி; அரக்கர் தமது ஸ்திரீகளோடு ஜலக்கிரீடை செய்யும் வாவி, குரங்குக்கூட்டங்கள் குளிக்கும் வாவியாக மாறுவதெனக் கூறியுள்ளமை காண்க. ஆடுறு வாவி என்க. இராவணன் தனது சேனையோடு வானுலகத்துக்குச் சென்று தேவர்களோடு பொருது இந்திரனை வென்றபொழுது அங்குள்ள கற்பக விருக்ஷம் இலங்கையிற் கொணர்ந்து வைக்கப்பட்டதனால், 'அரக்கராடுறு கற்பகச்சோலை வாவி' எனப்பட்டது. குரங்குகள் ஒன்றையொன்று தொடர்ச்சியாக வாலைப்பிடித்துக்கொண்டு கூட்டமாய்க்குளித்தல், அவற்றிற்கு நீரில் இறங்குவதிலுள்ள அச்சத்தாலென்க. (௬௪)

௬௫. செப்புறலென்பலதெய்வவாளிக
ளிப்புறத்தரக்கரைமுருக்கியேகின
முப்புறத்துலகையுமுடிக்கமூட்டலா
லப்புறத்தரக்கருமவியக்காண்டியால்.

(இ - ள்.) பல செப்புறல் என் - (இனி நடக்குஞ் செய்கையைப்பற்றிப்) பலவாகச் சொல்லவேண்டுவது என்ன? தெய்வம் வாளிகள் - தெய்வத்தன்மையையுடைய அஸ்திரங்களே,—இ புறத்து அரக்கரை முருக்கி - இவ்விலங்கையிலுள்ள ராக்ஷசர்களைக் கொன்று, ஏகின - அப்பாற்சென்றவையாய், முப் புறத்து உலகையும் முடிக்க - மூன்றுலோகங்களிலுமுள்ள அரக்கர்களை யெல்லாங் கொல்லும்படி, மூட்டலால் - (இராமபிரான்) பிரயோகித்தலினால்,— அ புறத்து அரக்கரும் அவிய - மற்றையவிடங்களிலுள்ள அரக்கர்களுமுட்பட அழிவதை, காண்டி—; (எ - று.)

வாளிகளை மூட்டலால் அவியக் காண்டி யென இயையும். அரக்கரும், உம்மை - இறந்தது தழுவியது. தெய்வ வாளிகள் - பிரமன் முதலியோரைத் தெய்வமாகக்கொண்ட அம்புகள்; தெய்வத்தன்மையையுடைய பாணங்களு மாம்: அவற்றிற்குத் தெய்வத்தன்மை - இலக்கைத் தவறாது அழித்தல். (௬௫)

௬௬. ஈண்டொருதிங்களிவ்விடரின்வைகுதல்
வேண்டுவதன்றுநான்விரைவின்வீரனைக்
காண்டலேகுறைவுபின்காலம்வேண்டுமோ
வாண்டகையினியொருபொழுதுமாற்றுமோ.

(இ - ள்.) ஈண்டு - இவ்விலங்கையில், ஒரு திங்கள் - (இன்னும்) ஒரு மாதகாலம் முடிய, இ இடரின் வைகுதல் - (இப்பொழுது அநுபவிக்கின்ற) இப்படிப்பட்ட துன்பத்தில் (நீ) தங்குதல், வேண்டுவது அன்று - வேண்டுவ தில்லை; நான்—, விரைவின் - சீக்கிரத்தில், வீரனை - இராமபிரானை, காண்டலே - பார்ப்பதுவே, குறைவு - குறைவாம் [வேண்டுவதாம்]; பின் - (பார்த்த) பின்பு, காலம் வேண்டுமோ - (அப்பிரான் மீட்கவருவதற்குத் தவணையான) காலவளவு வேண்டியதில்லை; ஆண் தகை - ஆண்மைக்குணமுடைய இராமபிரான், இனி - (நான கண்டு செய்திசொன்ன) பின்பு, ஒருபொழுதும் - ஒரு கணமாயினும், ஆற்றுமோ - (உன்னைச் சிறைமீட்கப் புறப்படத்) தாமதித்திருப்பனோ? (எ - று.)

"இன்னு மீண்டொரு திங்க ளிருப்பல் யான்" என ஒருமாதகாலம் இத் துயரத்தைப் பொறுத்துச் சிறையிருப்பே னென்று நீ கூறியவாறு அத்துணைக்காலத்தவணையும் வேண்டுவதில்லை; நான் இங்கிருந்து சென்று அப்பிரானைக் கண்டவுடனே உன்னைச்சிறைமீட்க அவ்விராமபிரான் இவ்விடம் வந்து சேர்வான்; நான் வழிகடத்தற்குச் செல்லும். சிலதினங்கள் மாத்திரமே நீ பொறுத்திருக்கவேண்டு மென்பதாம். பொழுது - இங்கு, மிகச்சிறிய காலமாகிய நொடியின்மேல் நின்றது. (௬௬)

சுஎ. ஆவியுண்டென்னுமீதுண்டுன்னருயிர்ச்
சேவகன்றிருவுருத்தீண்டத்தீதிலாப்
பூவிலைதளிரிலைபொரிந்துவெந்திலாக்
காவிலைகொடியிலைநெடியகானெலாம்.

(இ - ள்.) ஆவி உண்டு என்னும் ஈது உண்டு - (இராமபிரானுக்கு) உயிர் உள்ளது என்கிற இந்தச்சொல்மாத்திரந்தான் உண்டு; நெடிய கான் எலாம் - (அப்பிரான்செல்லுகின்ற இடைவழியி லுள்ள) பெரியகாடுகள் முழுதும், உன் ஆர் உயிர் சேவகன் திரு உரு தீண்ட - உனது அரியஉயிர் போன்ற மகாவீரனாகிய இராமபிரானது அழகிய திருமேனி மேற்படுவதனால், தீது இலா - தீந்துபோத வில்லையான, பூ - பூக்கள், இலை - இல்லை; தளிர் - தளிர்கள், இலை—; பொரிந்து வெந்திலா - பொரிப்பொரியாய் வெந்துபோகாத, கா - சோலைகள், இலை—; கொடி - கொடிகளும், இலை—; (எ - று.)

உன்னைப்பிரிந்த விரகவேதனையால் இராமபிரானுக்கு உண்டான தேக தாபத்தினால் அவன்செல்லுங் காடுகளி லுள்ள பூ தளிர் மரம் கொடி முதலியனவெல்லாம் வெந்து தீந்து கரிந்து போகின்றன வென்பதாம். உனது பிரிவினால் இவ்வளவு தாபத்தை யடைந்தவன் உன்னைச் சிறிதும் உபேக்ஷியானென்பது, கருத்து. 'ஆவியுண்டென்னுமீதுண்டு' என்றதனால், பிரிவுத்துயரால் அப்பிரானுக்கு உண்டாயுள்ள மூர்ச்சையைக் குறிப்பித்தவாறும். 'தீதிலா' என்பதைத் தளிரோடும், 'பொரிந்து வெந்திலா' என்பதைக் கொடியோடுங் கூட்டுக. 'திருவுருத் தீண்ட' என்பது பூமுதலியன தீந்துபோகின்றன என்பதைச் சமர்த்தித்து நிற்பது, தொடர்நிலைச் செய்யுட்குறியணி. கா - ஆகு பெயராய், மரமென்றுமாம். (சுஎ)

சுஅ. சோகம்வந்துறுவதுதெளிவுதோய்ந்தன்றோ
மேகம்வந்திடித்துவந்துருமுவீழ்கினு
மாகமும்புயங்களுமழுந்தவைந்தலை
நாகம்வந்தடர்ப்பினுமுணர்வுநாறுமோ.

(இ - ள்.) சோகம் வந்து உறுவது - மனத்துன்பம் வந்து பொருந்துவது, தெளிவு தோய்ந்து அன்றோ - ஞாபகம் பொருந்தியிருந்தா லல்லவோ? மேகம் வந்து உருமு இடித்து வந்து வீழ்கினும் - மேகங்கள் (ஆகாயத்திற்கிளம்பி) வந்து இடிஇடித்துக்கொண்டே மேலேவந்து விழுவதாயிருந்தாலும், ஐந்தலை நாகம் வந்து ஆகமும் புயங்களும் அழுந்த அடர்ப்பினும் - ஐந்துதலைகளையுடைய பாம்பு (சீறி) வந்து (தன்னுடைய) மார்பிலும் தோள்களிலும் (பற்கள்) பதியும்படி நன்றாகக்கடித்து வருத்துவதாயிருந்தாலும், உணர்வு நாறுமோ - (இராமபிரானுக்குப்) பிரஜ்ஞை தோன்றுமோ? [தோன்றுவதில்லையென்றபடி]; (எ - று.)

ஞாபகம் உள்ளபொழுது உடைாகிற துயரத்திற்கே சோகமென்று பெய ராம்; இராமபிரானுக்கு, இடியிடித்தாலும் பாம்பு தீண்டினுலுங்கூட உணர்வு உண்டாவதில்லை யாதலால், அவனுக்கு இப்பொழுது நேர்ந்துள்ளது, சோக மெனப்படாது மூர்ச்சை யெனப்படும் என்பது, கருத்து. 'ஆவியுண்டென்னு மீதுண்டு' எனக் கீழ்க்கவியிற்கூறிய இராமபிரானது மூர்ச்சாவஸ்தையை இக்கவியால் விவரித்துக் கூறினுன் ; இதனுல், இராமபிரான் உன்னைப்பற்றிக் கொண்டுள்ள வருத்தம் நீ அவற்காகப்படுகிற வருத்தத்தினும் மிக்க தென்ற வாறும். 'ஐந்தலைநாகம்' என்றார், கடித்து வருத்தும் போதுள்ள கொடுமையின் மிகுதியை விளக்க. வந்து - காற்றுமாம். (சு அ)

சுகூ. மத்துறுதயிரெனவந்துசென்றிடை
தத்துறுமுயிரொடுபுலன்கடள்ளுறும்
பித்துநின்பிரிவினிற்பிறந்தவேதனை
யெத்தனையுளவவையெண்ணுமீட்டவோ.

(இ - ள்.) மத்து உறு தயிர் என - மத்தினுற்கடையப்படுகிற தயிர்போல, வந்து - (உடம்பினுள்ளே) வந்தும், சென்று - (வெளியிற்) போயும், இடை - நடுவே, தத்துறும் - தடுமாறுகிற, உயிரொடு - உயிரும், புலன்கள் - ஐம்புலன் களும், தள்ளுறும் - சோர்வடைதலினுலாகிய, பித்து - பைத்தியமும்,—நின் பிரிவினின் பிறந்த வேதனை - உன்னைவிட்டுப்பிரிந்ததனு லாகிய மற்றைத் துன்பங்களும், எ தனை உள - எவ்வளவு உள்ளனவோ, அவை - அவைகளெல் லாம், எண்ணும் ஈட்டவோ - எண்ணிச்சொல்லுந் தன்மையை யுடையனவோ? [அல்ல]; (எ - று.)

உனது பிரிவினுல் இராமபிரானுக்கு அளவிடற்கரிய துன்பங்கள் உண் டாயுள்ளன என்றவாறும் ; எனவே, உன்னை அப்பிரான் விரைவில் வந்து சிறைமீட்பனெனப் பிராட்டியை அநுமான் தேற்றின னென்பது குறிப்பு. மத்துறு தயிர் - கலக்கத்திற்கு உவமை. (சுகூ)

எ௦. இந்நிலையுடையவன்றரிக்குமென்றியேன்
மெய்ந்நிலையுணர்ந்துழிமிடைந்ததீதெனிற்
பொய்ந்நிலைகாண்டியான்புகன்றயாவுமுன்
கைந்நிலைநெல்லியங்கனியிற்காட்டுகேன்.

(இ - ள்.) 'இ நிலை உடையவன்-(உன்னைப்பிரிந்ததனுல்) இப்படிப்பட்ட நிலைமையை யடைந்துள்ள இராமபிரான், தரிக்கும் - (என்னைவிட்டு) உயிர் வாழ்ந்திருப்பான்,' என்றி எல் - என்று (நீ) சொல்வாயே யானுல், மெய் நிலை உணர்ந்த உழி மிடைந்தது ஈது எனின் - (அப்பிரானுடைய) உடம்பின் தன் மையை ஆலோசிக்கு மிடத்துப் பொருந்தியது இதுவாதலால், பொய் நிலை - (நீ சொல்வது) பொய்பொருந்தியதாம்; யான் புகன்ற யாவும் - நான் சொன் னவை எல்லாவற்றையும், உன் கை நிலை நெல்லி அம் கனியின் - உனது

கையிற்பொருந்திய அழகிய நெல்லிக்கனிபோல, காட்டுகேன் - (நான் உனக்குக் கண்கூடாகக்) காண்பிப்பேன்; காண்டி - (நீ அவற்றைக்) காண்பாயாக.

என்றி - முன்னிலையொருமை இறந்தகாலவினைமுற்று. ஈது என்றது - கீழ்க்கூறிய வெதுப்பு, மூர்ச்சை, பித்து முதலியவற்றை. யாவும் முன் என்றும் பிரிக்கலாம். புகன்ற யாவும் - இராமபிரானது வெற்றியும், அரக்கரது அழிவும், அதனாலுண்டாகும் சம்பிரமங்களும். மெய்ந் நிலை - உண்மை நிலையுமாம். (எ0)

எக. தீர்த்தனுங்கவிக்குலத்திறையுந்தேவிநின்
வார்த்தைகேட்டுவப்பதன்முன்னர்மாக்கட
றூர்த்தனவிலங்கையைச்சூழுமாக்குரங்
கார்த்ததுகேட்டுவந்திருத்தியன்னைநீ.

(இ - ள்.) அன்னை - தாயே! தேவி - (இராமபிரானது) பத்நியே! தீர்த்தனும் - பரிசுத்தமூர்த்தியாகிய இராமபிரானும், கவி குலத்து இறையும் - குரங்குக்கூட்டங்கட்குத் தலைவனான சுக்கிரீவனும், நின் வார்த்தை கேட்டு - உனது வரலாற்றைச் செவியேற்று, உவப்பதன் முன்னர் - மகிழ்வதற்கு முன்னமே [மிகவிரைவில் என்றபடி], மா கடல் தூர்த்தன - பெரிய கடலைத் தூர்த்துவிட்டு, இலங்கையை சூழும் - லங்காபுரியை முற்றுகைசெய்கிற, மா குரங்கு - பெரிய குரங்குகள், ஆர்த்தது - ஆரவாரித்தலை, கேட்டு—, நீ—, உவந்து இருத்தி - மகிழ்ந்திருக்கப்போகிறாய்; (எ - று.)

இச்செய்யுளில், வாநரங்கள் கடலைத்தூர்த்து இலங்கையை முற்றுகைசெய்தலைக் கூறினான். சுக்கிரீவனுக்கு வைஷ்ணவசம்பிரதாயத்தில் 'மஹாராஜர்' என்று ஒரு திருநாமம். தூர்த்தல் - நிரப்பி மேடாக்குதல். குரங்கு - சாதியொருமை. ஆர்த்தது - தெளிவும் விரைவும் பற்றிய காலவழுவமைதி. சீதையினது வரலாற்றை இராமசுக்கிரீவர் கேட்பதற்கு முன்னமே கடலைத்தூர்த்துக் குரங்குகள் இலங்கையை முற்றுகைசெய்து ஆரவாரிக்குமெனெ, காரணம் நிகழ்வதற்குமுன்னமே அதன் காரியம் நிகழ்வதாகக் கூறியது - மிகையுயர்வு நவிற்சியணியாம். (எக)

எஉ. எண்ணரும்பெரும்படைநாளையிந்நகர்
நண்ணியபொழுதுநடுவணங்கைநீ
விண்ணுறக்கருளன்மேல்விளங்கும்விண்டுவிற்
கண்ணனைபெண்ணெடுவெரிநிற்காண்டியால்.

(இ - ள்.) நங்கை - பெண்களிற் சிறந்தவளே! எண் அரும் பெரும் படை - கணக்கிடுதற்குஅரிய [மிக்க] பெரிய வாநரசேனைகள், நாளை - நாளைக்கே, இ நகர் - இந்தப்பட்டணத்திற்கு, நண்ணிய பொழுது - வந்துசேர்ந்த பொழுது, அது நடுவண் - அந்தச்சேனையின் நடுவிலே, விண் உற கருளன் மேல் விளங்கும் விண்டுவின் - ஆகாயத்திலே பொருந்தக் கருடபகவான்மீது

எழுந்தருளி விளங்குகின்ற திருமாலைப் போல, கண்ணனை - இராமபிரானை, என் நெடு வெரிநில் - எனது பெரிய பிடரியின்மேல், நீ காண்டி - நீ பார்க்கப் போகின்றாய்; (எ - று.)

'நாளை' என்றது, மிக்கவிரைவுகுறித்தற்கு; (இது, ஒரு சொல்விழுக்காடு:) 'நண்ணிய' என்றதும் இவ்வாறே. கருளன் = கருடன்; டகரளகரப்போலி பெற்ற வடசொல். விண்டு - விஷ்ணு என்னும் வடமொழியின் சிதைவு; (எல்லாவிடத்திலும் அந்தர்யாமியாய்) வியாபித்துநிற்பவன் என்று பொருள். கரியோனென்னும் பொருளதாகிய க்ருஷ்ண னென்னும் வடமொழி, பிராகிருதமாய்ச் சிதைந்து 'கண்ணன்' என வந்தது; இது, இங்கே, அவதாரப் பெயரன்றி வந்த காரணப்பெயர். இனி, கண்ணோட்டமுடையவ னென்றும், கண்போன்றவ னென்றும் கொள்ளலாம். (எஉ)

எ௩. அங்கதன்றோண்மிசையிளவலம்மலை
பொங்குவெங்கதிரெனப்பொலியப்போர்ப்படை
யிங்குவந்திறுக்குநீயிடருமையமுஞ்
சங்கையுநீங்குதிதனிமைநீங்குவாய்.

(இ - ள்.) அங்கதன் தோள்மிசை - அங்கதனது தோளின்மேல், இளவல் - இளையபெருமாள், அ மலை பொங்கு வெம் கதிர் என - அந்த உதயகிரியில் விளங்குகிற உஷ்ணமாகிய கிரணங்களையுடைய சூரியன் போல, பொலிய - விளங்க,—போர் படை - யுத்தத்துக்குச் சித்தமான வாநரசைநியம், இங்கு வந்து இறுக்கும் - இங்கே [இவ்விலங்கையில்] வந்து இறங்கித்தங்கும்; (ஆகையால்), நீ—, இடரும் - (இப்பொழுது கொண்டுள்ள) துன்பத்தையும், ஐயமும் - (இராமபிரான் வருவனோ வரமாட்டானோ வென்கிற) சந்தேகத்தையும், சங்கையும் - (அப்பிரான் பகைவெல்வனோ மாட்டானோ வென்கிற) சங்கையையும், நீங்குதி - தவிர்வாயாக: தனிமை நீங்குவாய் - (நீ நாயகனைப் பிரிந்து) தனித்திருத்தலையும் (இனி விரைவில்) நீங்கப்பெறுவாய்; (எ - று.)

அ - உலகறிசுட்டு; அம் எனப்பிரித்து, அழகிய எனினுமாம். (எ௩)

எச. குராவருங் குழலியிக் குறித்த நாளினே
விராவரு நெடுஞ்சிறை மீட்கி லானெனிற்
பாரவரும் பழியொடும் பாவம் பற்றுதற்
கிராவண னவனிவ னிராம னென்றனன்.

(இ - ள்.) குரா வரும் குழலி - குராமலர்கள் வாசனைவீசுகிற கூந்தலையுடையவளே! இ குறித்த நாளினே - (நீ) குறிப்பிட்ட இவ்வொருமாசகாலத்துள்ளே, விராவரும் நெடுஞ் சிறை மீட்கிலான் எனின் - இங்குப்பொருந்தியுள்ள பெரியசிறைக்காவலினின்று (உன்னை) அப்பிரான் மீட்காமற்போவானானால், பாரவரும்பழியொடும் பாவம் பற்றுதற்கு - பரவிவருகிற பழியும்

பாவமும் தொடர்தற்கு, அவன் இராவணன் - இராமபிரானே இராவணனு வான்; இவன் இராமன் - இவ்விராவணனே இராமனுவான், என்றனன் - என்று கூறிமுடித்தனன், (அநுமான்); (எ - று.)

இன்னும் ஒரு மாசகாலத்திற்குள் உன்னைச் சிறைமீட்கானாயின், இராம பிரான், இராவணனே மிகநல்லவ னென்னும்படி அவனிலும் மிக்க கொடியவ னென்பதாம். குரா - மருதோன்றிமரம்; குரவகமென்னும் வடமொழியின் திரிபு: மலருக்கு ஆகுபெயர். குராவருங் குழலி என்றது, முன்நிலைமையைக் கருதிய விளி: இனி, இயற்கையிலே அம்மலரின் மணமுள்ள கூந்தலெனி னுமாம். விராவரும், பராவரும் என்பவை - விராவிவரும், பராவிவரும் என்ற வற்றின் விகாரங்கள்; இனி, விராவுஅரு, பராவுஅரு எனப் பிரித்து, பொருந்து தற்கு அரியசிறையென்றும், சொல்லுதற்கு அரிய பழியென்றும் உரைக்கலாம்.

வேறு.

[அநுமான்வார்த்தையைக் கேட்டு மகிழ்ந்து சீதை சிலகூறத்தொடங்குதல்.]

எரு. ஆக விம்மொழி யாசில கேட்டறி வுற்று
ளோகை கொண்டு களிக்கும னத்தளு யர்ந்தாள்
போகை நன்றிவ னென்பது புந்தியின் வைத்தா
டோகை யுஞ்சில வாசக மின்னன சொன்னாள்.

(இ - ள்.) ஆக - இவ்வாறாக, ஆசு இல - குற்றமில்லாதனவாகிய, இ மொழி - இவ்வார்த்தைகளை, தோகையும் - மயில்போலுஞ் சாயலையுடைய பிராட்டியும், கேட்டு—, அறிவு உற்றாள் - அறிவுதெளிந்தவளாய், ஓகை கொண்டு - மகிழ்ச்சியடைந்து, களிக்கும் - சந்தோஷிக்கின்ற, மனத்தள் - மனத்தையுடையவளாய், உயர்ந்தாள் - உடம்புபூரித்து, இவன் போகை நன்று என்பது புந்தியின் வைத்தாள் - இவ்வநுமான் (இராமபிரானிடம் விரைவிற்) போய்ச்சேர்வதே (தனக்கு) நன்மையுண்டாதற்குக்காரணம் என்று மனத்தில் எண்ணி, இன்னன சிலவாசகம் - இப்படிப்பட்ட சில வார்த்தைகளை, சொன்னாள் - சொல்லாளானாள்; (எ - று.)

சீதை, அநுமான்வார்த்தையைக் கேட்டு, அவன் சொல்வன யாவும் உண் மையேயா மென்று துணிந்து, அவன் இராமபிரானிடம் எவ்வளவு விரைவிற் செல்வனோ அவ்வளவு விரைவில் தனக்கு நன்மையுண்டாகு மென்றெண்ணி அவனுக்கு விடைகொடுக்குங் கருத்துடன், அப்பிரானிடத்து விண்ணப்பிக்க வேண்டிய சில அடையாளமொழிகளைக் கூறுபவளாயின ளென்க. ஓகை - உவகையென்பதன் மரூஉ. உயர்ந்தாள் - சிறந்தவளாகிய, தோகைபோல்வா ளென்றுமாம்.

இதுமுதல் இப்படலம் முடியுமளவும் பதினைந்துகவிகள் - பெரும்பா லும் முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் மாச்சீர்களும், மற்றைமூன்றும் கூவிளச்சீர் களுமாகிய நெடிலடி நான்கு கொண்ட கலிநிலைத்துறைகள். (எகு)

[சீதை 'நான்கூறும் சிலவார்த்தைகளை இராமபிரானிடம் விண்ணப்பிக்கவேண்டும்' என்றல்.]

எசு. சேறியையவிரைந்தனைதீயவைமெயல்லாம்
வேறியானினியொன்றும்விளம்பலென்மேலோய்
கூறுகின்றனமுன்குறியுற்றனகோமாற்
கேறுமென்றவைசொல்லெனவின்னவிசைப்பாள்.

(இ - ள்.) ஐய - ஐயனே! மேலோய் - மேன்மைக்குணமுடையவனே! விரைந்தனை சேறி - (இங்கிருந்து இராமபிரானிடம்) விரைந்துசெல்வாயாக: தீயவை எல்லாம் வேறி - (இடையிலே நேரும்) தீங்குகளையெல்லாம் வெல்வாயாக: இனி யான் ஒன்றும் விளம்பலென் - இப்பொழுது நான் (அதிகமாக வேறு) ஒன்றும் சொல்லப்போகிறதில்லை; கூறுகின்றன - (நான் இப்பொழுது) சொல்லுகின்றனவும், முன் உற்றன - முன்னே நிகழ்ந்தனவுமாகிய, குறி - அடையாளங்கள், கோமாற்கு - எனது தலைவனாகிய இராமபிரானுக்கு, ஏறும் - சம்மதமாம், என்று - என்ற காரணத்தால், அவை சொல் என - அவற்றை (அப்பிரானிடத்து) விண்ணப்பிப்பாய் என்று சொல்லி, இன்ன இசைப்பாள் - இவ்வார்த்தைகளைக் கூறுபவளானாள்; (எ - று.)—அவற்றை, அடுத்த எழுகவிகளிற் காண்க.

அநுமானிடம் தான் கொண்டுள்ள மிக்க அன்பினால் வழியில் அவனுக்கு யாதோரிடையூறும் நிகழாதிருக்கவேண்டு மென்பாள் 'தீயவையெல்லாம் வேறி' என்றாள். 'கோமாற்கு ஏறுமென்று அவைசொல்' என்றதனால், கீழ் அப்பிரானைப்பற்றித் தான் வெறுப்புடன் கூறியவற்றைக் கூறவேண்டா வென்று குறிப்பாக விலக்கியவாறு. (எசு)

[இதுமுதல் ஏழு கவிகள் - சீதைகூறிய அடையாளம்.]

எஎ. நாகமொன்றியநல்வரையின்றலைமேனா
ளாகம்வந்தெனையள்ளுகிர்வாளினளைந்த
காகமொன்றைமுனிந்தயல்கல்லெழுபுல்லால்
வேகவெம்படைவிட்டதுமெல்லவிரிப்பாய்.

(இ - ள்.) மேல் நாள் - முற்காலத்தில் [வனவாசஞ் செய்யத்தொடங்கிய காலத்தில்], நாகம் ஒன்றிய நல் வரையின்தலை - மேலுலகத்தையளாவிய [மிகஉயர்ந்த] அழகிய சித்திரகூடபருவதத்திலே, வந்து - (அருகில்) வந்து எனை - என்னுடைய, ஆகம் - மார்பை, அள் உகிர் வாளின் - கூர்மையான வாள் போன்ற (தனது) மூக்கினால், அளைந்த - குத்தின, காகம் ஒன்றை - ஒரு காக்கையை, முனிந்து - கோபித்து, அயல் கல் எழு புல்லால் - அருகிற் கல்லினிடையே முளைத்த புல்லைக்கொண்டு, வேகம் வெம் படை - விரைவையுடைய உக்கிரமான பிரமாஸ்திரத்தை, விட்டது - (இராமபிரான்) பிரயோ

சித்ததை, மெல்ல விரிப்பாய் - மெதுவாக (அப்பிரானுக்கு நான்சொன்னே னென்று அடையாளஞ்) சொல்வாய்; (எ - று.)—இதுமுதல் ஆறுகவிகளில் காகாசுர விருத்தாந்தம் கூறப்படுகின்றது.

நாகமொன்றிய நல்வரை - சுரபுன்னைமரங்கள் பொருந்திய மலை யென்றுமாம். உகிர் என்பதற்கு - இடத்திற்கு ஏற்ப, மூக்கு எனப்பட்டது. இனி, கூரிய கால்நகத்தாற் கீறிய என உரைப்பாரு முளர். அங்குக் கிடந்ததொரு புல்லையெடுத்து அதிற் பிரமாஸ்திரத்தை அமைத்து விட்டதனால், 'புல்லால் வேகவெம்படை விட்டது' எனப்பட்டது; 'வல்லவனுக்குப் புல்லு மாயுதம்' என்னும் பழமொழி இதுபற்றி வந்த தென்க. (எஎ)

எஅ. அங்கதஞ்சிநடுங்கியயனபதியண்மி
யிங்குநின்வரவென்னவெனக்கனல்வெய்த
மங்கைபங்கனொடெண்டிசையுஞ்செலமற்றோர்
தங்கடங்களிடங்கண்மறுத்தமைதைப்பாய்.

(இ - ள்.) அங்கு - அப்பொழுது, அது - அக்காகம், அஞ்சி - (தன்னைப் பின்தொடர்ந்து கொல்லவருகிற அந்த அம்புக்குப்) பயந்து, நடுங்கி - (அவ்வச்சத்தால் உடம்பு) நடுங்கி, அயன் பதி அண்மி - பிரமலோகத்தை யடைந்து,—(அப்பொழுது பிரமதேவன்), இங்கு நின் வரவு என்ன என கனல்வு எய்த - 'இங்கே உனது வருகை என்ன?' என்றுசொல்லிக் கோபங்கொள்ள,—மங்கை பங்கனொடு எண் திசையும் செல - உமாதேவியை (த் தனதுஇட)ப்பக்கத்திற் கொண்ட சிவபிரானிடத்தும் மற்றும் எட்டுத்திருக்களிலும் செல்ல,—மற்றோர் - அவர்களெல்லாம், தங்கள் தங்கள் இடங்கள் மறுத்தமை - தங்கள் தங்கள் இடங்கட்கு (வராதே யென்று அக்காகத்தைத்) தடுத்ததை, தைப்பாய் - (அப்பிரானது மனத்திற்) பொருந்தச் சொல்வாய்; (எ - று.)

அது அஞ்சி - அதற்கு [அவ்வஸ்திரத்திற்கு]ப் பயந்து என்றுமாம். அயன் - அஜன் என்னும் வடமொழியின் திரிபு; ஸ்ரீமகாவிஷ்ணுவினிடத்தினின்று தோன்றியவ னென்று பொருள்: அன்றி, (நாட்டார்போலப்) பிறவாதவ னென்று மாம். அந்த அஸ்திரம் மந்தகதியாக விடப்பட்ட தாகையாலே பின்தொடர்ந்துசென்ற தென அறிக. அக்காகத்தின் வருகையைத் தாம் ஏற்றுக்கொண்டால் தமக்கும் என்ன அபாயம் வருமோ வென்று அஞ்சி இங்ஙனம் யாவரும் கைவிடுவாராயினர். 'எண்டிசை' என்றது, அஷ்டதிக்பாலகரைக் கருதி. (எஅ)

எகூ. இந்திரன்றருமைந்தனுறுந்துயர்யாவு
மந்தரத்தினினின்றவர்கண்டினியந்தோ
வெந்தைதன்சரணன்றியொர்தஞ்சமுமின்றால்
வந்தவன்சரண்வீழ்கெனவுற்றதும்வைப்பாய்.

(இ - ள்.) இந்திரன் தரு மைந்தன் - தேவேந்திரன்பெற்ற பிள்ளையாகிய சயந்தனது வடிவமான அக்காகம், உறும் துயர் யாவும் - அடைகிற துன்பம் முழுவதையும், அந்தரத்தினில் நின்றவர்- ஆகாயத்திற்பொருந்திய தேவர்களெல்லாம், கண்டு - பார்த்து, 'அந்தோ - ஐயோ! இனி - இப்பொழுது, எந்தைதன் சரண் அன்றி - எமதுதலைவனுகிய இராமபிரானது திருவடிகளே யல்லாமல், ஓர் தஞ்சமும் இன்று - வேறொரு ரக்ஷகமும் (உனக்கு) இல்லை: ஆல்- ஆதலால், அவன் சரண் வந்து வீழ்க - அப்பிரானது திருவடிகளிற் போய் விழுவாயாக,' என - என்றுசொல்ல, உற்றதும் - (அக்காகம் இராமபிரானிடம்) மீண்டுவந்ததையும், வைப்பாய் - மனத்திற்பொருந்தச் சொல்வாய்; (எ - று.)

இந்திரன் - பரமைசுவரியமுடையவ னெனப் பொருள்படும் காரணக்குறி. அந்தோ-இரக்கக்குறிப்பிடைச்சொல். எந்தைதன்சரணன்றி யொர்தஞ்சமுமின்று - இராமபிரானே சரணாகத ரக்ஷக னென்றபடி. (எக).

௮௦. ஐயநின்சரணஞ்சரணென்றவனஞ்சி
வையம்வந்துவணங்கிடவள்ளன்மகிழ்ந்தே
வெய்யவன்கணிரண்டொடுபோகெனவிட்ட
தெய்வவெம்படையுற்றுளதன்மைதெரிப்பாய்.

(இ - ள்.) அவன் - (இராமபிரானிடத்து வந்த) அந்தச்சயந்தன், அஞ்சி - பயந்து, வையம் வந்து - பூலோகத்துக்கு வந்து, 'ஐய - தலைவனே! நின் சரணம் - உனது திருவடிகளே, சரண் - (எனக்கு) ரக்ஷகமாம்', என்று - என்றுசொல்லிக்கொண்டே, வணங்கிட - (திருவடிகளில் விழுந்து) வணங்க, வள்ளல் - வரையாதருளுந்தன்மையையுடைய இராமபிரான், மகிழ்ந்து-திருவுள்ள முவந்து, வெய்யவன் கண் இரண்டொடு போகு என - 'கொடிய இக்காகத்தினது இரண்டாவதுகண்ணைக் கவர்தலோடு (நீ) போ' என்று (அஸ்திரத்தை) நியமிக்க,—விட்ட தெய்வம் வெம் படை - (இராமபிரான் தான் முன்னே) பிரயோகித்த தெய்வத்தன்மையையுடைய அவ்வஸ்திரம், உற்றுள தன்மை - (அவ்வாறே கண்விழிக ளிரண்டனுள் ஒன்றைப் பறித்துக்கொண்டு) சென்ற தன்மையை, தெரிப்பாய் - தெரியச்சொல்வாயாக; (எ - று.)

தன்பக்கல் மிகப்பெரிதும் அபசாரப்பட்டவனும் பின்பு தன்னைவந்து சரணமடைந்தமாத்திரத்தில் அவன்குற்றத்தைப் பொறுத்த பெருங்கருணையுடைமை தோன்ற, இராமபிரானை 'வள்ளல்' என்றார். ஐய - அண்மைவிளி.

௮௧. எந்தைநின்சரணஞ்சரணென்றவிதன்னுன்
முந்துநின்குறையும்பொறைதந்தனமுந்துன்
சந்தமொன்றுகொடித்திரள்கண்கடமக்கே
வந்தொர்நன்மணிநிற்கெனவைத்ததும்வைப்பாய்.

(இ - ள்.) 'எந்தை - தலைவனே! நின் சரணம் - உனது திருவடிகளே, சரண் - (எனக்கு) ரக்ஷகமாம்,' என்ற இதன்னுல்- என்று (தான் சரணாகதனுன

மை தோற்றச்) சொன்ன இதனால், 'முந்து நின் குறையும் - முன்னே நீ செய்த குற்றத்தையும், பொறை தந்தனம் - பொறுத்தல் செய்தோம் : முந்து-எதிரி லுள்ள, உன் - உனது, சந்தம் - வடிவத்தை, ஒன்று - பொருந்திய, கொடி - காக்கைகளின், திரள் - கூட்டத்தினுடைய, கண்கள்தமக்கே - இரண்டுகண் களுக்கும், ஓர் நல் மணி - நல்ல கருவிழி யொன்றுதானே, வந்து நிற்க - உலாவிவந்து நிற்பதாக,' என - என்று, வைத்ததும் - (இராமபிரான்) அநுக் கிரகித்ததையும், வைப்பாய் - (அப்பிரானிடத்து அடையாள மொழிகளாகக்) கூறுவாய்; (எ - று.)

இதனால் - விரித்தல்விகாரம். "ஏகஃ பாபாநி குருதே பலம் புங்க்தே மஹாஜநஃ [ஒருவன் குற்றஞ்செய்கிறான் அதன்பயனைப் பலரும் அனுபவிக் கின்றனர்]" என்றபடி ஜயந்தனென்னுங் காகாசுரனொருவன் செய்த குற்றத் தின் பயனாக எல்லாக் காகங்களும் ஒரு கருவிழியை யிழந்தன வென்க.

"சித்திரகூடத்திருப்பச் சிறுகாக்கை முலை தீண்ட, அத்திரமேகொண் டெறிய வனைத்துலகுந் திரிந்தோடி, வித்தகனே யிராமாவோ நின்னபய மென்றழைப்ப, வத்திரமே யதன்கண்ணை யறுத்தது மோரடையாளம்" என் பது, பெரியார் பாசுரம். இந்தக் காகாசுரவிருத்தாந்தத்தினால், இராமபிரானது சரணாகதவாற்சல்யம் நன்கு புலனாம். (அக)

அஉ. வேகம்விண்டுசயந்தன்வணங்கி விசும்பிற்
போகவண்டர்கள்கண்டலர்கொண்டுபொழிந்தார்
நாகநம்பனிளங்கிளை நன்குணராத
பாகுதங்கியவென்றியினின்சொல்பணிப்பாய்.

(இ - ள்.) சயந்தன்—, வேகம் விண்டு - (தான் முன்கொண்ட) அச்சம் நீங்கி, வணங்கி - (இராமபிரானை) நமஸ்கரித்து, விசும்பில் போக - வானுல கத்திற் செல்ல,— அண்டர்கள் - தேவர்கள், கண்டு - (அதனைப்) பார்த்து, அலர்கொண்டு பொழிந்தார் - பூக்களைக்கொண்டு மழைபொழிந்தார்கள்; நா கம் நம்பன் இளங் கிளை-யானைபோன்ற [கம்பீரனான] இராமபிரானது இளைய தம்பியாகிய இலக்குமணனும், நன்கு உணராத - நன்றாய் அறியாத, வென் றியின் - இவ்வெற்றியைப்பற்றிய, பாகு தங்கிய இன் சொல் - கருப்பஞ்சாற் றின்சுவைபொருந்திய இனியசொல்லை, பணிப்பாய் - (நான்சொன்னபடியே அப்பிரானிடத்தில் அடையாளஞ்) சொல்வாயாக ; (எ-று.)

காகாசுரவிருத்தாந்தம் மிக்க ஏகாந்தத்தில் இருவருமான சேர்த்தியிலே நடந்த வரலா றாதலால்,இலக்குமணனுக்கும் தெரியாததாயிற்று; ஆகையால், இவ்வரலாற்றைக் கூறின், அநுமான் சீதையைக்கண்டுதான் வந்தன னென இராமபிரான் நிர்ணயித்தல் கூடும்; ஆதலால், இவ்வரலாறே அடையாளமா கக் கூறுவதற்கு ஏற்றதா மென்றவாறு. வேகம் விண்டு - அலைந்தவேகம் ஒழிந்து என்றுமாம். தேவர்கள் பூமாரிபொழிந்தது, சரணாகதரிடத்து வாத்ஸல்

யங்கொண்டு பெரும்பிழையையும் பொறுக்கின்ற இராமபிரானது ஸௌசீல்யகுணத்தைப் பாராட்டியும், தமது தலைவனான இந்திரனது குமாரன் தனக்கு நேர்ந்த ஆபத்தினின்று தப்பி உயிர்பிழைத்தமை கருதியுமென்க. நம்பன் - தலைவன். நாகம் - மலையில் வாழ்வதென யானைக்குக் காரணக்குறி; (நகம் - மலை:) வடமொழித்தத்திதாந்தநாமம். இனி, நாகம்என்பதை இளங்கிளைக்கு அடைமொழியாக்கி, ஆதிசேஷனது அம்சமான இளையபெருமாள் எனினுமாம். இளங்கிளை - தம்பி. பாகு தங்கிய வென்றி - தோளிற்பொருந்திய வெற்றியைப்பற்றிய வெனவுமாம்: இப்பொருளில், பாஹு - வடசொல்.

அரு. என்னொரின்னுயிர்மென்கிளிக்கியார்பெயரீகேன்
மன்னவென்றலுமாசறுகைகயன்மாதன்
அன்னைதன்பெயராகெனவன்பினொடந்நாள்
சொன்னமெய்ம்மொழிசொல்லுதிமெய்ம்மைதொடர்ந்தோய்.

(இ - ள்.) மெய்ம்மைதொடர்ந்தோய் - உண்மையானவழியை அநுசரிப்பவனே! 'மன்ன - நாயகனே! என் ஓர் இன் உயிர் மெல் கிளிக்கு - எனது ஒப்பற்றஇனிய உயிர்போன்ற [அருமையான] மென்மையானகிளிப்பிள்ளைக்கு, யார் பெயர் ஈகேன் - யார்பெயரை இடுகிறது?'' என்றலும் - என்று (நான்) கேட்டவளவில், 'என் அன்னை - எனதுதாயாகிய, மாசு அறு - குற்றமற்ற, கைகயன் மாதுதன் - கேகயதேசத்தரசனது புதல்வியாகிய கைகேயியினது, பெயர் - பேர், ஆக - வைக்கக்கடவது,' என - என்று, அன்பினொடு - அன்புடனே, அ நாள் - அந்தநாளில் [அயோத்தியிலிருக்கும்பொழுது], சொன்ன - (இராமபிரான் எனக்குக்) கட்டளையிட்டருளிய, மெய் மொழி - மெய்ம்மையான வார்த்தையையும், சொல்லுதி - (அடையாளமாகச்) சொல்வாய்; (எ - று.)

இதனால், இராமபிரான் கைகேயியினிடத்துத் தான்கொண்டிருந்த மெய்யன்பு நன்கு வெளியாகின்றது. மாது - அழகு: அதனையுடையவளுக்கு ஆகுபெயர். (அரு)

[இதுவும், அடுத்தகவியும்-ஒருதொடர்; சீதை தனதுஆடையினின்று சூளாமணியை யெடுக்க, அதன்ஒளியைக்கண்டு அநுமான் திகைத்தல்.]

அசு. என்றுரைத்தினிதித்தனைபேரடையாள
மொன்றுணர்த்துவதில்லெனவெண்ணியுணர்ந்தா
டன்றிருத்துகிலிற்பொதிவுற்றதுதானே
வென்றதச்சுடர்மேலொடுகீழுறமெய்யால்.

(இ - ள்.) (பிராட்டி), — என்று - என (இவ்வாறு அடையாளமொழிகளை அநுமானிடத்து)க் கூறி, இத்தனை பேர் அடையாளம் இனிது உரைத்து ஒன்று உணர்த்துவது இல் என எண்ணி உணர்ந்தாள் - இவ்வளவு சிறந்த அடையாளங்களை இனிமையாகச் சொன்னபின்பு (இனி அடையாளவார்த்

தையாக) ஒன்றுஞ் சொல்லவேண்டுவதில்லை யென்று ஆலோசித்தறிந்தவ ளாய், (உடனே), தன் திரு துகிலில் பொதிவுற்றது - தான் உடுத்துள்ள அழ கியஆடையில் முடியப்பட்டுள்ளதும், மெய்யால் மேலொடு கீழ் உற அ சுடர் தானே வென்றது - (தனது) வடிவத்தால் மேலுலகமும் கீழுலகமும் பொருந்தி விளங்க (ச் சூரியன் முதலிய) அச்சுடர்களையெல்லாம் தானொன்றே ஜயித் ததுமாகிய, (எ - று.)—'அன்னது' என மேற்கவியோடு இயையும்.

சீதை, ருசியமூககிரியில் வாநரர்கூட்டத்தின்நடுவில் விழும்படி தனது ஆபரணங்களையெல்லாம் ஒருசீலையில்முடிந்து எறிந்தபொழுது தனதுசூளா மணியைமாத்திரம் எடுத்து 'இது, சமயத்தில் உபயோகப்படும்' என்ற எண் ணத்துடன் தன்துணியில் முடிந்து வைத்திருந்தன ளென அறிக. இதனால், பிராட்டியினது வருங்காலத்தைப்பற்றி ஆராய்ந்து தொழில்செய்யுந்தன்மை வெளியாம். அச்சுடர், அகரச்சுட்டு - பிரசித்தியைக் காட்டிற்று. (அச)

அரு. வாங்கினாடன்மலர்க்கையினன்னதுமுன்னா
வீங்கினனவ்வனுமனு மென்கொலிதென்னா
வீங்கினன்வியந்தானுலகேழும்விழுங்கித்
தூங்குகாரிருண்முற்றுமிரிந்ததுசுற்றும்.

(இ - ள்.) அன்னது - அச்சூடாமணியை, தன் மலர் கையின் வாங்கி னாள் - தனது தாமரைமலர்போன்ற [மென்மையான] கையில் எடுத்தாள், (சீதா பிராட்டி); அ அனுமனும் - அந்த அநுமானும், இது என்கொல் என்னா முன்னா - இது என்ன வென்று எண்ணி, ஏங்கினன் - திகைத்து, வீங்கினன் - உடம்புபூரித்து, வியந்தான் - ஆச்சரியப்பட்டான்; (பிராட்டி அதனைக் கை யில் எடுத்தபொழுது அதன் ஒளியால்), உலகு ஏழும் விழுங்கி தூங்கு கார் இருள் முற்றும் - ஏழுலகங்களையும் உட்கொண்டு தங்குகிற கரியஇருள் முழு வதும், சுற்றும் இரிந்தது - சுற்றிலும் ஓடிப்போய்விட்டது; (எ - று.)

உலகேழும்விழுங்கித்தூங்குகாரிருண் முற்று மிரிந்தது - தொடர்புயர்வு நவிற்சியணி; அதன் ஒளிமிகுதியை விளக்கிற்று. அநுமான், அம்மணியின்ஒளி மிகுதியைக்கண்டு இதுஎன்கொலென்றெண்ணித் தியங்குபவனாயின னென்க.

[இதுவும், அடுத்தகவியும் - சூளாமணியின் சிறப்பு.]

அசு. மஞ்சலங்கொளியோனுமிம்மாநகர்வந்தா
னஞ்சலன்னெனவெங்கணரக்கரயிர்த்தார்
சஞ்சலப்புரிசக்கரவாகமுடன்றூழ்
கஞ்சமும்மலர்வுற்றனகாந்தினகாந்தம்.

(இ - ள்.) (அப்பொழுது அம்மணியின்ஒளியால்), 'மஞ்சு அலங்கு ஒளி யோனும் - மேகமண்டலத்துக்குமேல் விளங்குகின்ற ஒளியையுடைய சூரிய னும், அஞ்சலன் - பயப்படாதவனாய், இ மா நகர் - இந்தப்பெரியபட்டணத்

திலே, வந்தான் - வந்தான்போலும்', என - என்று, வெம் கண் அரக்கர் - பயங்கரமான கண்களையுடைய இராக்கதர், அயிர்த்தார் - சந்தேகித்தார்கள்; (அந்நகரத்திற் சூரியன்வருகை எப்பொழுதும் இல்லாமையால்), சஞ்சலம் புரி சக்கரவாகமுடன் - (துணையோடுகூடாமல் எப்பொழுதும்) வருத்தமடைந்துள்ள சக்கரவாகப்பட்சிகளும், தாழ் கஞ்சமும் - (எப்பொழுதும் மலராமற்) குவிந்தேயுள்ள தாமரைமலர்களும், மலர்வு உற்றன - மலர்ச்சியடைந்தன; காந்தம் - சூரியகாந்தக்கற்கள், காந்தின - தீயுமிழ்ந்தன; (எ - று.)

'மஞ்சலங்கொளியோன்...வந்தான்...என' என்பதை, 'மலர்வுற்றன' 'காந்தின' என்பவற்றோடுங் கூட்டுக. இராவணனிடத்திலுள்ள அச்சத்தினால் இலங்கையிற் பலகாலமாகச் சூரியன் விளங்குவதில்லை யாதலால், இங்ஙனங் கூறியது. சூளாமணியினொளியைச் சூரியனொளி யென்று அரக்கர் முதலியோர் மயங்கியதாகக் கூறியது, மயக்கவணியாம்: இச்சூளாமணியினொளியைக்கண்டு சூரியனதுஒளி யென்று மயங்கிய அரக்கர், 'நம் அரசனிடத்து அச்சத்தினால் இத்தனைநாள் விளங்காத சூரியன் இன்று அச்சமின்றி விளங்குவதனால், இச்சூரியனுக்கு என்ன துணைவலிமை யுண்டாயிற்றோ? நமக்குப் பெரும் பகைவர் உண்டாய் விட்டாரோ!' என்ற எண்ணத்தினால் அயிர்ப்பாராயினரென்க. சக்கரவாகப்பறவைகள் இரவெல்லாம் பிரிந்திருந்து பகலில் சூரியவெளிச்சத்தில் ஆணும் பெண்ணுங் கூடிக் குலாவுதலும், சூரியனொளியைக் கண்டமாத்திரத்தில் தாமரை மலர்தலும், சூரியகாந்தமென்னுங் கல் சூரியனொளியால் தீயைக் கக்குதலும், இயல்பு. சக்கரவாகம் மலர்வுறுதல்-(பேடையுடன்கூடி) அகமகிழ்தல்; தாமரை மலர்வுறுதல - விகஸித்தல். சக்கரவாகமுடன் தாழ்கஞ்சமும் மலர்வுற்றல் - சிலேடையை மூலமாகக்கொண்டு வந்த அபேதாத்யவஸாயம் [வேறுபட்டிருக்கவும் அதனை ஒன்றாகக்கருதுதல்] பற்றிய உடனவிற்சியணி. மயக்கணிவயை இவ்வணி அங்கமாகக் கொண்டிருப்பது, உறுப்புறுப்பிக்கலவையணி. மஞ்சுஎன்பதை மைந்துஎன்பதன் முழுப்போலியாகக் கொண்டு, மஞ்சலங் கொளியோன் - இளஞ்சூரியனென்றுமாம். காந்தமென்னும் பொதுப்பெயர், சூரியனொளியாற் காந்தின என்றதன் குறிப்பால், சூரியகாந்தத்தை உணர்த்திற்று. (அசு)

அஎ. கூந்தன்மென்மழைகொண்முகின்மேலெழுகோளின்
வேந்ததன்னதுமெல்லியறன்னெழின்மேனி
சேந்ததந்தமில்சேவகன்சேவடியென்னக்
காந்துகின்றதுகாட்டினனம்மாருதிகண்டான்.

(இ - ள்.) மழை கொள் - குளிர்ச்சியைக் கொண்ட, மெல் கூந்தல் - மெல்லிய (பிராட்டியின்) கூந்தலாகிய, முகில்மேல்-மேகத்தின்மேலே, எழு - விளங்குகிற, கோளின் வேந்து அது - நவக்கிரகங்களுள் தலைவனாகிய சூரியனை, அன்னது - ஒத்திருப்பதும்,—மெல் இயல்தன் - மென்மையான தன்மையையுடைய பிராட்டியினது, எழில் மேனி - அழகிய திருமேனி போல,

சேந்தது - சிவந்துள்ளதும்,—அந்தம் இல் - (திருக்கலியாணகுணங்களுக்கு) ஓர் எல்லையில்லாத, சேவகன் - வீரனுகிய இராமபிரானது, சேஅடி என்ன - சிவந்த திருவடிகள்போல, காந்துகின்றது - விளங்குகின்றதுமாகிய அச்சூளாமணியை, காட்டினள் - (பிராட்டி) காண்பித்தாள்; மாருதி - அநுமான், கண்டான் - பார்த்தான் ; (எ - று.)

'மழைகொள்' என்பதை, முகிலுக்குங் கூட்டுக. தேவர்களை உயர்திணையாகவும். அஃறிணையாகவும் கூறலா யாதலால், 'கோளின்வேந்தது' எனச் சூரியனை அஃறிணையாற்கூறினர். வேந்து-பண்பாகுபெயராய், அதனையுடைய வனை யுணர்த்திற்று; வேந்து - அரசத்தன்மை: 'அது'-பகுதிப்பொருள் விகுதி. மெல்லியல் - பண்புத்தொகையன்மொழி. மாருதி - வாயுபுத்திரன் : தத்திதாந்த நாமம்; (மாருதன் - வாயு.) மேகம் - கூந்தலுக்கும், சூரியன் - சூளாமணிக்கும் உவமை. இவ்வுவமை கூறியது, இம்மணியைக் கூந்தலிலணிந்தா லுண்டாகும் நிலைமையைக் கருதி. உருவகவணியை அங்கமாகக் கொண்டுவந்த உவமையணி.

[சீதை அநுமானிடத்து அச்சூளாமணியைக் கொடுத்தல்.]

அஅ. சூடையின் மணிகண் மணியொப் பதுதொன்னா
ளாடையின் கணிருந் ததுபே ரடையாள
நாடி வந்தென தின்னுயிர் நல்கிய நம்பா
கோடி யென்று கொடுத்தனள் மெய்ப்புகழ் கொண்டாள்.

(இ - ள்.) 'நாடி வந்து - (என்னைத்) தேடிவந்து, எனது இன் உயிர் நல்கிய நம்பா - என்னுடைய இனியபிராணனைக் கொடுத்த ஆடவரிற்சிறந்தவனே ! கண்மணி ஒப்பது - கண்ணின் கருவிழியையொத்து அருமையானதும், தொல் நாள் ஆடையின்கண் இருந்தது - பலநாளாக (எனது) ஆடையில் முடிந்து வைக்கப்பட்டிருந்தது மாகிய, சூடையின் மணி - இச்சூளாமணியை, பேர் அடையாளம் - பெரிய அடையாளமாய், கோடி - கொள்வாயாக,' என்று-என்று சொல்லி, மெய் புகழ் கொண்டாள் - உண்மையானகீர்த்தியைக் கொண்ட பிராட்டி, கொடுத்தனள் - (அதனை அநுமானிடத்துக்) கொடுத்தாள் ; (எ - று.)

தொன்னாள் - இராவணன் எடுத்துவந்த நாள் முதல். அநுமானை ' நாடி வந்து எனதுஇன்னுயிர் நல்கிய நம்பா' என விளித்ததனால், சீதையின் செய்ந் நன்றிமறவாத்தன்மை விளங்கும். நம்பா - நம்பன் என்பதன் விளி. ' பேரடையாளம் ' என்றாள், ஒருத்தராலும் மறுக்கவொண்ணாத அடையாள மென்பது பற்றி. (அஅ)

[அச்சூளாமணியைப்பெற்றுக்கொண்டு அநுமான் விடைபெற்றுச் செல்லுதல்.]

அகூ. தொழுது வாங்கினன் சுற்றிய துசினன் முற்றப்
பழுது றுவகை பந்தனை செய்தனன் வந்தித்
தழுது மும்மை வலங்கொடி றைஞ்சின னன்போ
டெழுது பாவையு மேத்தின னேகின னிப்பால்.

(இ - ள்.) (அநுமான்), தொழுது - (பிராட்டியை) வணங்கி, வாங்கினன் - (அதனை) வாங்கிக்கொண்டு, முற்ற - முடிய [இராமபிரானிடம் கொடுக்குமளவும்], பழுது உறு வகை - ஒருபழுதும் உண்டாகாதபடி, சுற்றிய தூசினன் - (தனது) ஆடையிற் சுற்றிமுடிந்து, பத்தனை செய்தனன் - பத்திரப்படுத்தி, வந்தித்து - (அச்சூடாமணியை) நமஸ்கரித்து, அழுது - (அப்பிராட்டியின் தன்மையைக் கருதிப) புலம்பி, மும்மை வலம்கொடு - (அப்பிராட்டியை) மூன்றுதரம் பிரதக்ஷிணஞ்செய்து, இறைஞ்சினன் - வணங்கினான்; எழுது பாவையும் - சித்திரத்தில் எழுதிய பிரதிமைபோல மிக்கஅழகிய பிராட்டியும், அன்போடு - அன்புடனே, ஏத்தினள் - (அவ்வநுமானுக்கு) ஆசீர்வாதஞ்செய்தாள்; (அநுமான்), இ பால் ஏகினன் - பின்பு திரும்பினான்; (எ - று.)

அநுமான் சூளாமணியைப் பத்திரப்படுத்திப் பின்பு சீதையினிடத்து விடைபெற்றுக்கொண்டு அவ்விடத்தினின்று புறப்பட்டன னென்றவாறு. வலங்கொள்ளுதல் - வலமாகவருதல். பழுதுறுவகை - இடைவழியிற் கீழ் விழுந்திடாதபடி. ஏகினன் - மீண்டான்; இப்பால் - பின்பு என மேற்படலத்துக்குத் தோற்றுவாயாகவுமாம். (அக)

சூளாமணிப்படலம் முற்றிற்று.

---

ஏழாவது

## பொழிலிறுத்த படலம்.

அநுமான் தன்வருகையை இராவணனுக்குத் தெரிவிப்பதன் பொருட்டுச் சீதாபிராட்டியைச் சிறைவைத்துள்ள அசோகவனிகை யெனப்படும் பொழிலை யழித்த செயலை யுணர்த்தும் பாகம்.

[அப்போது அநுமான் தனக்குள் ஒன்று ஆலோசிக்கத்தொடங்குதல்.]

க. நெறிக்கொடு வடக்குற நினைப்பினி னிமிர்ந்தான்
பொறிக்குல மலர்ப்பொழி லிடைக்கடிது போவான்
சிறுத்தொழின் முடித்தகற றீதென நினைந்தான்
மறித்துமொர்செயற்குரிய காரியம தித்தான்.

(இ - ள்.) நெறி கொடு - (தான் இனிச் செல்லவேண்டிய) வழியைக் கருதி, வடக்கு உற - வடக்குத்திக்காகப் போகுமாறு, நினைப்பினில் - நினைத்ததனால், (அதற்குஏற்ப), நிமிர்ந்தான் - பெரிய வடிவத்தைக் கொண்ட அநுமான், —பொறி குலம் மலர் பொழிலிடை - இலக்குமியினம்சமான சீதாபிராட்டி தங்கியுள்ள தொகுதியான மலர்களையுடைய அந்தஅசோகவனத்தின் நடுவாக, கடிது போவான் - விரைந்து செல்பவனாய் [விரைந்து செல்லும்போது], 'சிறு தொழில் முடித்து அகறல் - (பிராட்டியைக்கண்டு பேசுதலாகிய இந்த) அற்பகாரியத்தை மாத்திரம் செய்து முடித்துவிட்டுத் திரும்பிச்செல்லுதல், தீது - (எனது ஆண்மைக்குக) குறைவாகும்,' எனல் - என்ற இந்தவிஷயத்

தை, தெரிந்தான் - (மனத்தில்) ஆலோசித்தவனாய்,—மறித்தும் - மீண்டும், செயற்கு உரிய ஓர் காரியம் - செய்தற்கு உரிய ஒருகாரியத்தை, மதித்தான் - (செய்யவேண்டுமென்று) எண்ணினான் ; (எ - று.)—அவ்வாறு எண்ணுவதை அடுத்த ஆறுகவிகளிற் காண்க.

சீதையினிடத்து விடைபெற்று அப்பாற்செல்ல நினைத்த அநுமான் அங்ஙனம் செல்லுதற்குஏற்ற வடிவத்தைக் கொண்டு வடதிசைநோக்கி அசோக வனிகை நடுவாகத் திரும்பிச் செல்லுகையில், பிராட்டியைக் கண்டு பேசிப் போவதாகிய இந்த அற்பத் தொழிலோடு திரும்பிவிடுவது நமது ஆண்மைக்கு இழுக்காகும்; ஆகவே, நமது ஆண்மையைப் பகைவர் மதிக்குமாறு ஒரு பெருங் காரியத்தைச் செய்து போதலே தகுதியென்று மனத்திற் கருதினனென்பதாம். "எழுத்துச்செல்வ மிலாஞ்சனைதீருமகள்···பொடித்தெழுநண் சிறு கனலிவை பொறியே" என்ற பிங்கலந்தையாலும் பொறியென்பது இலக்கு மிக்குப் பெயராத லுணர்க. இனி, பொறியென்பதை ஆகுபெயரெனக் கொண்டு, பொறிக்குலம் - புள்ளிகளையுடைய வண்டுகளின் கூட்ட மெனக் கொள்ளுதலும் ஒன்று.

இதுமுதல் இருபத்திரண்டு கவிகள் - ஈற்றுச்சீரொன்று மாச்சீரும், மற் றைமூன்றும் காய்ச்சீர்களுமாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங் கள். இவற்றை வேறுவகையாகச் சீர்பிரித்துக்கூறுதற்கும் இடமுண்டு. (க)

[இதுமுதல் ஆறுக்விகள் - அநுமானுடைய ஆலோசனையைத் தெரிவிக்கும்.]

உ. ஈனமுறுபற்றலரையெற்றியெயின்மூதூர்
மீனநிலயத்திடுகவீசிவிழிமானை
மானவன்மலர்க்கழலின்வைத்திலெனென்றா
லானபொழுதெப்பரிசினடியனாவேன்.

இதுமுதல் வழுகவிகள் - ஒரு தொடர்.

(இ - ள்.) ஈனம் உறு - இழிதொழில் மிகுந்த, பற்றலரை - (இங்குள்ள) பகைவர்களாகிய அரக்கர்களையெல்லாம், எற்றி - அடித்துக்கொன்று, எயில் முது ஊர் - மதில்சூழ்ந்த பெரிய இந்த இலங்காபுரியை, மீனநிலயத்தின் உக வீசி - சமுத்திரத்திற் போய்விழும்படி வீசியெறிந்து, விழி மானை - பார்வை யில் மானையொத்த பிராட்டியை, மானவன் மலர் கழலில் வைத்திலென் என்றால்-மநுவம்சத்தில்தோன்றிய இராமபிரானது தாமரைமலர்போன்ற திரு வடிகளிலே கொண்டு சேர்க்காமற்போவேனேயானால், ஆன பொழுது - அப் போது, எ பரிசில் - எந்தவகையால், நான் அடியன் ஆவேன் - நான் அடிய வனாகப் பெறுவேன் ? (எ - று.)

தலைவனது விருப்பத்தை நிறைவேற்றுதலே அடியவனுக்கு ஏற்ற தொழிலா மாதலால், இராமபிரான்விஷயத்தில் தீங்குபுரிந்த இவ்வரக்கர்களை இவர் வாழுமிடத்தோடு அழித்துச் சீதாபிராட்டியை அவ்விராமபிரானிடத்திற்

சேர்த்தால்தான் தன் அடிமை நிலைநிற்கு மென முதலிற் கருதினன் அநுமா னென்க. மீனநிலயம் - பலவகையான மீன்களுக்கும் வாழுமிடமாதல் பற்றி, கடலுக்கு வந்த காரணப்பெயர். (உ)

ங. வஞ்சனையரக்கனைநெருக்கிநெடுவாலா
லஞ்சினுடனஞ்சுதலைதோளுறவசைத்தே
வெஞ்சிறையில்வைத்துமிலென்வென்றுமிலெனென்று
றஞ்சமொருவர்க்கொருவரென்றறகுமன்றோ.

(இ - ள்.) வஞ்சனை அரக்கனை - (சீதையைக் கவர்ந்து சென்ற) கபடத் தொழிலையுடைய அரக்கனாகிய இராவணனை, நெடு வாலால் - (எனது) நீண்ட வாலினாலே, அஞ்சினுடன் அஞ்சு தலை தோள் - பத்துத்தலைகளும் (இருபது) தோள்களும், உற - ஒன்று சேரும்படி, நெருக்கி அசைத்து - நெருக்கிக்கட்டி, வெம் சிறையில் - கொடிய சிறைக்காவலில், வைத்தும் இலென் - வைத்தலும் செய்திலேன்; (அவ்வளவு செய்யாவிட்டாலும்), வென்றும் இலென் - அவ்வி ராவணனைப் போரில் வெல்லுதலும் செய்திலேன், என்றல்—, ஒருவர்க்கு ஒருவர் தஞ்சம் என்றல் - ஒருத்தருக்கு ஒருத்தர் உதவிசெய்பவராத லென்பது, தகும் அன்றே - தகுதியுடையதாகுமல்லவோ? [தகுதியுடையதாகாதென்ற படி]; (எ - று.)

சீதையைத் தான் சிறைமீட்டுக் கொடுத்தால், அப்போது, 'தன்மனைவியை மாற்றான் கவர்ந்து செல்ல மீட்கமுடியாது இராமன் வருந்திநின்ற நிலையில், ஒருஎளிய வானரசாதியான் மீட்டுக் கொடுத்தான்' என்ற வார்த்தை உலகிற் பரவுமாயின், அது மகாவீரனான இராமபிரானது பெருமைக்கு இழுக்காகும் என்று கருதிய அநுமான், எங்களரசனாகிய சுக்கிரீவனும் இராமபிரானும் ஒருவர்க் கொருவர் உதவிபுரியவேண்டு மென்றே நட்புக் கொண்டனராதலால், அதற்கேற்பச் சுக்கிரீவனைச் சேர்ந்தவனான யான் இராமபிரானது மனைவியைக் கவர்ந்த இராவணனைச் சிறைவைத்தலோ, அல்லது போர்செய்து வெல்லுதலோ இவ்விரண்டில் ஏதேனுஞ் செய்தால், அது தகுதியுடையதாகு மேயன்றி ஒன்றுஞ் செய்யாது வாளா திரும்பிச்செல்வது தகுதியுடையதாகா தென்று கருதின னென்க: 'தகு மன்றோ' என்பது - இங்குப் பிறகுறிப்பால், தகாததேயாகு மென்ற பொருளைக் காட்டிற்று. (ங)

ச. கண்டநிருதக்கடல்கலக்கினன்வலத்திற்
றிண்டிறலரக்கனுமிருக்கவொர்திறத்தின்
மண்டவுதரத்தவண்மலர்க்குழல்பிடித்துக்
கொண்டுசிறைவைத்திடுதலிற்குறைவதுண்டோ.

(இ - ள்.) வலத்தில் - (என்னுடைய) பலத்தினால், கண்ட நிருதர் கடல்- கண்ணுக்கு எதிர்ப்படுகிற அரக்கர் கூட்டத்தை, கலக்கினன் - கலங்கச்செய்து, —திண் திறல் அரக்கனும் இருக்க - மிக்கவலிமையையுடைய இராவணனும்

பார்த்துக்கொண்டிருக்கையில், ஓர் திறத்தின் - ஒப்பற்ற (எனது) சாமர்த்தியத்தினால், மண்டவுதரத்தவள் - (அவனது) பட்டமகிஷியான மந்தோதரியின், மலர் குழல் பிடித்து கொண்டு - புஷ்பங்களையணிந்த கூந்தலைப்பிடித்து இழுத்துக்கொண்டுபோய், சிறை வைத்திடுதலில் - சிறைவைப்பதில், குறைவது உண்டோ - குறைவு உள்ளதோ? (எ - று.)

'பழிக்குப்பழிவாங்குமாறு இராவணனைச் சிறைவைத்தல் அல்லது வெல்லுத லென்பதைத் தான் செய்வதும் மஹாவீரனான அவ்விராமபிரானது பெருமைக்குக் குறைவு தருவதேயாம்' என்று எண்ணிய அநுமான் அக்கருத்தைவிட்டு, 'இவ்விராவணன் ஸ்ரீராமனது பத்தினியாகிய சீதாபிராட்டியை வஞ்சனையாற்கவர்ந்துசென்று சிறைவைத்துள்ளானாதலால், இவனைச் சேர்ந்தவர்களாய் எதிர்த்துவருகிற அரக்கரை முறியடித்து இவன் பார்த்துக்கொண்டிருக்கையில்தானே இவனது பட்டமகிஷியான மந்தோதரியின் கூந்தலைப் பிடித்து இழுத்துக் கொண்டுபோய்ச் சிறைவைத்து இவ்வாறு பழிக்குப்பழிவாங்கினால் மாத்திரம் எனது செய்கை நிறைவுற்றதாகுமேயன்றி அவ்வாறு செய்யாவிடின் என்செயல் குறைவுற்றதாகவே யிருக்குமென்று அநுமான் கருதினனென்க. மந்த உதர என்ற இரண்டுசொற்கள் சேர்ந்த 'மந்தோதரி' என்பதில், இந்நூலாசிரியர் 'மந்த' என்பதை எதுகை நோக்கி 'மண்ட' எனத் திரித்தும், வடமொழி விதிப்படி குணசந்தி கொள்ளாமல் வகரவுடம்படுமெய் புணர்த்தும், வடமொழியிற் பெண்பாற்கு உரிய ஈகாரத்துக்குப் பதிலாக 'அள்' என்ற விகுதி சேர்த்தும் 'மண்டவுதரத்தவள்' என்றார்; மந்தோதரியென்பது - சிறுகிய வயிற்றையுடையவளென்று பொருள்படும். (ச)

௫. மீட்டுமினியெண்ணும்வினைவேறுளதன்று
ஓட்டியிவ்வரக்கரையுலைத்துரிமையெல்லாங்
காட்டுமிதுவேகருமமன்னவர்கடும்போர்
மூட்டும்வகையாதுகொலென்றுமுயல்கின்றான்.

(இ - ள்.) இவ் அரக்கரை - இந்த ராக்ஷஸர்களையெல்லாம், உலைத்து வருத்தி, ஓட்டி - ஓடச்செய்து, உரிமை எல்லாம் - (எனக்குஉள்ள) அடிமை முறை முழுவதையும், காட்டும் - வெளிப்படையாகக் காட்டுகின்ற, இதுவே—, கருமம் - செய்யவேண்டிய காரியமாகும்; இனி - இனிமேல், மீட்டும் - மறுபடியும், எண்ணும் வினை - ஆலோசிக்கவேண்டிய தொழில், வேறும் உளது அன்று - வேறொன்று மில்லை; ஆல் - ஆதலால், அன்னவர் - அந்தஅரக்கரை, கடும் போர் மூட்டும் வகை - கொடியபோரில் மூளச்செய்யும்விதம், யாவது கொல் - யாதாகுமோ? என்று—, முயல்கின்றான் - (அதற்கு உரிய உபாயத்தை) ஆலோசிக்கலாயினன், (அநுமான்); (எ - று.)

'சீதாபிராட்டியைக் கவர்ந்து சிறைவைத்தது இராவணன்மீது பெருங்குற்றமெனக் கூறுகின்ற நாம் அவ்விராவணனது பத்தினியைத் தூக்கிக்கொண்டு வந்து சிறைவைத்தல்தான் நியாயமாகுமோ?' என்ற ஓராலோசனை கொண்ட

அநுமான், 'நாம் இப்போது இவ்வரக்கர்களை யெல்லாம் வலியப் போர்க்கு அழைத்து வருத்தி தூரத்துவதன்மூலமாக இராமபிரானுடைய வலிமைச் சிறப்பைக் காட்டுவதே செய்தொழில்: வேறு வகையாக ஆலோசிப்பதிற் பயனில்லை' என்று நிச்சயித்து, 'இவ்வரக்கர்களைப் போர்க்கு இழுப்பதற்கு உபாயம் யாது?' என்று சிந்திப்பவனாயின னென்க. உலைத்து உயிரோட்டுதல் - வருத்தி அவர்களுயிரை யமபட்டணத்துக்கு அனுப்புத லென்னலாம்; 'அரக்கர் மேல் வருவர்வந்தால்···முருக்கி யுயிருண்பல்' என மேல்வருவது காண்க. (ரு)

சு. இப்பொழிலினைக்கடிதிறுக்குவெனிறுத்தா
லப்பெரியபூசல்செவிசார்தலுமரக்கர்
வெப்புறுசினத்தரெதிர்மேல்வருவர்வந்தா
றுப்புறமுருக்கியுயிருண்பலிதுசூதால்.

(இ - ள்.) இ பொழிலினை - இந்தச் சோலையை, கடிது இறுக்குவென் - விரைவில் முறித்தழிப்பேன்; இறுத்தால் - (அவ்வாறு) முறித்தழித்தால், அ பெரிய பூசல் - (அதனால்தோன்றும்) அந்தப் பேரொலி, செவி சார்தலும் - (தமது) காதிற் பட்டவுடனே, அரக்கர் - ராக்ஷஸர்கள், வெப்பு உறு சினத்தர் - கொடுமைமிக்க கோபமுடையவராய், எதிர் மேல் வருவர் - எதிர்த்து என் மேற் போர்க்குவருவார்கள்; வந்தால்—, துப்பு உற முருக்கி - (என்) வலிமையைக்கொண்டு அவர்களையழித்து, உயிர்உண்பல் - அவர்களுயிரை வாங்குவேன்; இது - இவ்வாறுசெய்வதே, சூது - (நான் இப்போது செய்யவேண்டிய) உபாயமுள்ளசெயலாம்; (எ - று.)—ஆல் - அசை ; தேற்றமுமாம்.

'அரக்கரைப் போரில் மூட்டுவதற்கு வகை யாது?' என்று ஆலோசனைகொண்ட அநுமான், இதனாலும் அடுத்த செய்யுளினாலும் அதற்கு ஏற்ற உபாயத்தைத் தனக்குள் நிச்சயித்துக் கொள்கின்றன னென்க. (சு)

எ. வந்தவர்கள்வந்தவர்கண்மீள்கிலர்மடிந்தால்
வெந்திறலரக்கனும்விலக்கருவலத்தான்
முந்துமெனினன்னவன்முடித்தலையிடித்தென்
சிந்தையுறுகோபமுமவித்தினிதுசெல்வேன்.

(இ - ள்) வந்தவர்கள் வந்தவர்கள் - (என்மீது எதிர்த்துப் போர்க்கு) வருகின்ற அரக்கர்யாவரும், மீள்கிலர் - திரும்பிச்செல்லாதவர்களாய், மடிந்தால்—, (பின்பு), வெம் திறல் அரக்கனும் - கொடிய வலிமையையுடைய இராவணனும், விலக்க அரு வலத்தால் - (எவராலும்) விலக்கமுடியாத பலத்துடனே, முந்தும் - (என்மீது போர்க்கு) முற்பட்டு வருவான்; எனின் - அவ்வாறு வந்தானானால், அன்னவன் முடி தலை இடித்து - அவ்விராவணனது கிரீடமணிந்த தலைகளிற் குட்டி, என் சிந்தை உறு கோபமும் அவித்து - எனது மனத்திலேயுள்ள கோபத்தையும் தணியச்செய்து, இனிது செல்வேன் - சுகமாக (இராமபிரானுள்ள விடத்திற்குப் பின்பு) மீண்டு செல்வேன்; (எ-று.)

இராவணவனது காவற்சோலையாகிய அசோகவனிகையை நான் அழித்த அக்காரணம்பற்றி என்மேற் போர்க்கு வருகின்ற அரக்கர்களையெல்லாம் கொன்றுகொண்டேவந்தால் இறுதியாக இராவணனே பொரும்படி வருவான்; அச்சமயத்தில் அவனது பத்துத்தலைகளை யிடித்தேனானால் அப்போதுதான் என்சினம் தணியும்; அதன்பிறகு மீண்டு செல்வதே மனத்திற்கு மகிழ்ச்சியைத் தருமென்று அநுமான் நிச்சயித்தன னென்க. முடித்தலை யிடித்து என்பதற்கு - முடித்தலைகளை நறுக்கிப்போகட்டு என்று பொருள்காண்பாரு முளர். 'முடித்தலை முசித்து' என்ற பாடத்துக்கு - முடிகளையணிந்த தலைகளை முட்டாக்கிடச்செய்து என்று பொருளாம். (எ)

[அநுமான் அசோகவனத்தை யழித்தல்.]

அ. என்றுநினையாவிரவிசந்திரனியங்கும்
குன்றமிருதோளனையதன்னுருவுகொண்டா
னன்றுலகெயிற்றிடைகொளேனமெனலானான்
றுன்றுகடிகாவினையடிக்கொடுதுகைத்தான்.

(இ - ள்.) என்று நினையா - என்று மனத்தி லெண்ணி, (அநுமான்), இரவி சந்திரன் இயங்கும் குன்றம் அனைய இரு தோள் - சூரியசந்திரர்கள் வலம்வருகின்ற மேருமலையை யொத்த இரண்டு தோள்களையுடைய, தன் உருவு - தனது பெரியவடிவத்தை, கொண்டான் - எடுத்துக் கொண்டு,— அன்று - முற்காலத்தில், [இரணியாக்ஷன் பூமியைச் சுருட்டிக்கொண்டு சென்ற போது], உலகு - இவ்வுலகத்தை, எயிற்றிடை கொள் - (குத்தியெடுத்துத் தனது) தந்தத்திலே கொண்டுவந்த, ஏனம் - மகாவராகமே, எனல் ஆனான் - என்று உவமைசொல்லத் தக்கவனாய், துன்று கடி காவினை - (மரங்கள்) அடர்ந்த காவலுள்ள அசோகவனத்தை, அடிக்கொடு - (தனது) கால்களால், துகைத்தான்—; (எ - று.)

அநுமான் பேருருவங்கொண்டு அவ்வனத்தைத் துகைக்க லாயின னென்க. அநுமான்கொண்ட பேருருவத்துக்கு, உலகத்தை யிடக்குமாறு திருமால் கொண்ட மகாவராகரூபத்தை உவமைகூறினர். சூரியசந்திரர் மகாமேருமலையை வலம்வருகின்றன ரென்பது, நூற்கொள்கை. இரவிசந்திரனியங்கும் குன்றம் இருதோள் என்பதற்கு - சூரிய சந்திரர் உதித்து அஸ்தமிக்கின்ற உதயகிரிமுதல் அஸ்தகிரிவரையிற்பரவியுள்ள இரண்டு தோள்களையுடைய என்று கூறுவாரு முளர். இராவணனுடைய காவற்காடு என்பதை யுணர்த்த 'கடி கா' என்றார். கடியென்பது - காப்பு முதலிய பல பொருள் குறிக்கும் உரிச்சொல். (அ)

[இதுமுதல் மூப்பத்தோருகவிகள் - அநுமான் துகைத்ததனால் அச்சோலை யுற்றபட்ட தன்மையை வருணிப்பன.]

கூ. முடிந்தனபிளந்தனமுரிந்தனநெரிந்த
மடிந்தனபொடிந்தனமறிந்தனமுறிந்த
விடிந்தனதகர்ந்தனவெரிந்தனகரிந்த
வொடிந்தனவொசிந்தனவுதிர்ந்தனபிதிர்ந்த.

(இ - ள்.) (அப்போது அந்தச் சோலையிலுள்ள மரங்களிற் சிலச்சில),— முடிந்தன - அழிந்துபோயின; பிளந்தன - பிளவுபட்டன; முறிந்தன - முறிந்துபோயின; நெரிந்த - நொருங்கிப்போயின; மடிந்தன - தலைசாய்ந்தன; பொடிந்தன - பொடியாய்விட்டன; மறிந்தன - (கிளைகள்) மடங்கிவிட்டன; முறிந்த - சிதைந்துபோயின; இடிந்தன - இடிபட்டுப்போயின; தகர்ந்தன - உடைந்து போயின; எரிந்தன - பற்றியெரிந்து விட்டன; கரிந்த - கருகிப்போயின; ஒடிந்தன - ஒடிந்துபோயின; லசிந்தன - துவண்டுபோயின; உதிர்ந்தன—; பிதிர்ந்த - சின்னபின்னப்பட்டன; (எ - று.) (கூ).

கo. வேரொடுமறிந்தசில வெந்தசிலவிண்ணிற்
காரொடுசெறிந்தசிலகாலினொடுவேலைத்
தூரொடுபறிந்தசிலதும்பியொடுவானோ
ரூரொடுமலைந்தசிலவுக்கசிலநெக்க.

(இ - ள்.) சில - சிலமரங்கள், வேரொடு மறிந்த - வேரோடு கீழ்விழுந்தன; சில—, வெந்த - வெந்துபோயின; சில—, விண்ணில் - ஆகாசத்தில், காரொடு-மேகத்தோடு, செறிந்த-நெருங்கின; சில—, காலினொடு - காற்றினால், வேலை - சமுத்திரத்தில், தூரொடு பறிந்த- புதராகச்சென்று வீழ்ந்தன; சில—, தும்பியொடு - வண்டுகளுடனே, வானோர் ஊரொடு மலைந்த-தேவலோகத்திலே சென்றுமோதின ; சில—, நெக்க உக்க - பிளந்து சிதறிப்போயின;(எ - று.)

'காரொடு மறிந்த', 'தூரொடு மறிந்த', 'ஊரொடுமறிந்த' என்பன பாடாந்தரங்கள். (கo)

கக. சோனைமுதன்மற்றவைசுழற்றியதிசைப்போ
ரானைநுகரக்குளகுமானவடிபற்றா
மேனிமிரவிட்டனவிசும்பின்வழிமீப்போய்
வானவர்கணந்தனவனத்தையுமடித்த.

(இ - ள்.) சோனை முதல் - மேகத்தைத் தன்னிடத்திற் கொண்ட, சுழற்றிய - (அநுமான் தன்கைகளாற்) சுழற்றியெறிந்த, மற்றுஅவை - மற்றுஞ் சில மரங்கள்,—திசை போர் ஆனை - எட்டுத்திக்குக்களிலுந்தங்கியுள்ள போர்செய்யும் வலிமையமைந்த திக்கஜங்கள், நுகர - உண்ணும்படி, குளகு உம் ஆன - இலையுணவுமாயின ; (அன்றியும்), அடி பற்றா - அடியைப் பிடித்துக்கொண்டு, மேல் நிமிர விட்டன - வானத்திற் செல்லும்படி (மற்றும் அநுமான்) வீசியெறிந்த சிலமரங்கள், விசும்பின் வழி - ஆகாயமார்க்கமாய், மீ போய் - மேலே சென்று, வானவர்கள் நந்தனவனத்தையும் - தேவர்களுடைய சிங்காரப் பூஞ்சோலையையும், மடித்த - அழித்தன ; (எ - று.)

அநுமான் அப்போது தன் கையினாற் பற்றிச் சுழற்றி ஆங்காங்குப் பக்கங்களில் வீசியெறிந்த மரங்களிற் சில எட்டுத்திக்குக்களி னெல்லை

யில் நின்றுகொண்டு பூமியைத் தாங்குகின்ற அஷ்டதிக்கஜங்கட்கு உணவாக மேற்புறமாகி வீசிய மற்றுஞ் சிலமரங்கள் ஆகாயமார்க்கமாகத் தேவலோகத்திற் சென்று அங்குள்ள நந்தனவனத்தையும் அழித்தன வென்பதாம். சோலைமுதல் மற்றவை யென்றதனால், அம்மரங்கள் மேகமண்டலமளவும் ஓங்கிவளர்ந்துள்ளன என்று தெரிவித்தவாறு. குளகு - விலங்கினுணவு. (௧௧)

௧௨. அலைந்தனகடற்றிரையரக்கரகன்மாடங்
குலைந்துகவிடிந்தனகுலக்கிரிகளோடு
மலைந்துபொடியுற்றனமயங்கிநெடுவானத்
துலைந்துவிழுமீனினொடுவெண்மலருதிர்ந்த.

(இ - ள்.) (அநுமான் வீசியெறிந்த சிலமரங்களினால்), கடல் திரை - கடலின் அலைகள், அலைந்தன—; அரக்கர் அகல் மாடம் - ராக்ஷசரது விசாலமான வீடுகள், குலைந்து உக - நிலைகெட்டு விழும்படி, இடிந்தன - இடிந்து போயின; (வீசியெறிந்த மரங்களிற் சில), குலம் கிரிகளோடு - குலபர்வதங்களோடு, மலைந்து - மோதி, பொடியுற்றன - பொடியாய்ச் சிந்தின; (வீசியெறியப்பட்ட சிலமரங்களினுடைய), வெள் மலர் - வெண்ணிறமான மலர்கள், நெடுவானத்து உலைந்து விழும் - (அம்மரங்கள் பட்ட விசையினாற்) பெரியவானத்தினின்று நிலைகலங்கி விழுகின்ற, மீனினொடு-நட்சத்திரங்களுடனே, மயங்கி-கலந்து, உதிர்ந்த - கீழே சிந்தின; (எ - று.)

அநுமான் பக்கங்களில் வீசியெறிந்த சிலமரங்களால் கடலின்அலைகள் கிளர்ந்தனவும் அரக்கரின் மாளிகை இடிந்து விழுந்தனவுமாக, சிலமரங்கள் குலகிரிகளில் மோதிப் பொடியாய்விழ, வானத்தை நோக்கி வீசியெறிந்த மற்றுஞ் சிலமரங்களால் நட்சத்திரங்கள் நிலைகுலைந்து விழத் தொடங்குகையில் அம்(மரங்)களின் மலர்களும் உடன்கலந்து விழலாயின வென்பதாம். (௧௨)

௧௩. முடக்குநெடுவேரொடுமுகந்துலகமுற்றுங்
கடக்கும்வகைவீசினகளித்ததிசையானை
மடப்பிடியினுக்குதவமையினிமிர்கையைத்
திடுக்கியனவொத்தனவெயிற்றினிடைஞால்வ.

(இ - ள்.) முடக்கும் நெடு வேரொடு - வளைந்துள்ள நீண்டவேருடனே, முகந்து - பிடுங்கி, உலகம் முற்றும் கடக்கும் வகை - எல்லாவுலகத்தையும் கடந்து மேற்செல்லும்படி, வீசின-(அநுமானால்) வீசியெறியப்பட்ட சிலமரங்கள், (அங்குநின்று கீழ் வீழ்வதற்குத் தொடங்கி), களித்த திசை யானை - மதக்களிப்புக் கொண்ட திக்கஜங்களினுடைய, எயிற்றினிடை-தந்தங்களின் நடுவிலே, ஞால்வ - தொங்குவனவாகி,—மடம் பிடியினுக்கு உதவ - (தமது) இளமையுள்ள பெண்யானைகட்குக் கொடுக்கும்படி, (அத்திசையானைகள்), மையின் நிமிர் கை வைத்து இடுக்கியன ஒத்தன - மேகமண்டலம் வரையிலும் உயருந் தன்மையுள்ள (தமது) துதிக்கையில் இடுக்கிவைத்துக்கொண்டனவான மரங்களைப்போல் தோன்றின; (எ - று.)

அநுமான் மேலநோக்கி வீசியெறிந்த மரங்களிற் சில திக்கஜங்களின் தந்தங்களிற் சிக்கிக்கொண்டனவாய், அந்தத் திக்கஜங்கள் தமது பெண்யானை கட்டு உண்ணும்படி ஒடித்துக் கொடுக்கும் தழைப்புனலைப் போன்றன வென்பதாம். தன்மைத்தற்குறிப்பேற்றவணி. 'முடக்க நெடுவாரொடு' என்றும் பாடம். (கங)

கச. விஞ்சையுலகத்தினு மியக்கர்மலைமேலுந்
துஞ்சுதலில்வானவர் துறக்கநகரத்தும்
பஞ்சியடி வஞ்சியர்கண் மொய்த்தனர்பறித்தார்
நஞ்சமனையானுடைய சோலையின றும்பூ.

(இ - ள்.) (அநுமான் வீசியெறிந்த மரங்களிற் சிற்சில விஞ்சையருலகம் முதலிய விடத்துச் செல்வதனால்),—நஞ்சம் அனையானுடைய சோலையின் - விஷத்தையொத்த [மிகக் கொடியவனான] இராவணனுடைய பூஞ்சோலையின், நறு பூ - நறுமணமுள்ள மலர்களை,—விஞ்சை உலகத்திலும் - வித்தியாதரர்கள் வாழ்கின்ற உலகத்திலும், இயக்கர் மலைமேலும் - யட்சர்கள்வாழ்கின்ற மலைகளிலும், துஞ்சுதல் இல் வானவர் துறக்கம் நகரத்தும் - (அமிருதமுண்டதனால்) இறத்தலென்பது இல்லாத தேவர்கள் வாழ்கின்ற சுவர்க்கலோகத்திலும், (வாழ்பவர்களான), பஞ்சி அடி வஞ்சியர்கள் - செம்பஞ்சுக்குழம்பூட்டிய பாதங்களையுடைய வஞ்சிக்கொடிபோன்ற மகளிர், மொய்த்தனர் - நெருங்கிவந்து, பறித்தார்—; (எ - று.)

இராவணனது பூந்தோட்டத்து மலர்களை விஞ்சைமகளிர் முதலியோர் பறிக்கும்வண்ணம் அநுமான் மரங்களை எப்புறத்திலும் வீசியெறிந்தனனென்க. (கச)

கரு. பொன்றிணிமணிப்பருமரன் றிசைகள் போவ
மின்றிரிவ வொத்தன வெயிற்கதிரு மொத்த
வொன்றினொ டொன்றிடை புடைத்துதிர வூழின்
றந்திர ளொடுக்கிவிழு தாரகையு மொத்த.

(இ - ள்.) பொன் திணி மணி பரு மரன் - பொன்னாலும் வலிய இரத்தினங்களாலும் இயன்ற பருத்த மரங்கள், திசைகள் போவ - பலதிக்குக்களிலுஞ் செல்வனவாய், மின் திரிவ ஒத்தன - மின்னல்கள் திரிவனவற்றை ஒத்தன; (அன்றியும்), வெயில் கதிரும் ஒத்த - சூரியனுடைய பிரகாசத்தையும் ஒத்தன; ஒன்றினொடும் ஒன்று இடை புடைத்து உதிர - (அநுமான் வீசியெறிந்ததனால் வானத்திற் செல்லும்போது அவ்வகையான மரங்கள்) ஒன்றோடொன்று நடுவழியில் தாக்கி உதிர்வதனால், ஊழின் - கற்பமுடிவில், தம் திரள் ஒடுக்கி விழு - தமது கூட்டங்கள் ஒடுக்கங்கொண்டு விழுகின்ற, தாரகையும் - நட்சத்திரங்களையும், ஒத்த - ஒத்தன; (எ - று.)

வானத்திலும் மற்றைத்திக்குக்களிலும் அநுமான் வீசியெறிந்ததனால் திரிகின்ற பொன்மரங்கள் மின்னலையும், மணிமரங்கள் சூரியகிரணத்தையும், ஒன்றினோடொன்று மோதிப் பொடியாய் விழுகின்ற அவ்வகை மரங்கள் வானத்தில்

தாம் இருக்கும் இடத்தைவிட்டுப் பெயர்ந்து உதிர்கின்ற நட்சத்திரங்களையும் ஒத்தன வென்பதாம். தந்திரள் ஒடுக்கிவிழுதல் - தாம் வானத்தில் திரளாயிருக்கின்ற நிலை குலைந்து அங்குநின்று வீழ்தல். பொன்மரங்கள் மின்னலையும், மணிமரங்கள் வெயிற்கதிரையும் ஒத்தன வென முறையே சென்று இயைவது - முறைநிரனிறைப்பொருள்கோள். 'பொன்றின பயப்பயமரன்' என்றும், 'தன்றிரளொழுக்கிவிழு' என்றும் பாடாந்தரங்கள். (கரு)

கசா. புள்ளினொடுவண்டுமிஞிறுங்கடிகொள்பூவுங்
கள்ளுமுகையுந்தளிர்களோடினியகாயும்
வெள்ளநெடுவேலையிடைமீனினம்விழுங்கித்
துள்ளினமரன்படநெரிந்தனதுடித்த.

(இ - ள்.) (அநுமான் வீசியெறிந்த மரங்களிலுள்ளனவான), புள்ளினொடு - பறவைகளையும் வண்டும்-வண்டுகளையும், மிஞிறும்-மிஞிறுகளையும், கடி கொள் பூவும் - நறுமணமுள்ள மலர்களையும், கள்ளும் - தேனையும், முகையும் - அரும்புகளையும், தளிர்களோடு - துளிர்களையும், இனிய காயும் - இன்சுவையுள்ள காய்களையும், வெள்ளம் நெடு வேலையிடை - நீர்ப்பெருக்கையுடைய நீண்ட கடலிலே, மீன் இனம் - மீன்கூட்டங்கள், விழுங்கி - உட்கொண்டு, துள்ளின - (மனக்களிப்பால்) துள்ளிக் குதிக்கலாயின; (பிறகு), மரன் பட - (வீழ்ந்த) மரங்கள் தம்மேற்பட்டதனால், நெரிந்தன - நசுங்கினவாகி, துடித்த - பதைபதைக்கலாயின; (எ - று.)

அநுமான் பிடுங்கி வீசியெறியுமாறு சுழற்றிய மரங்களிலிருந்த பறவை முதலியவை அவ்விசையினால் கடலிற்சென்று விழ, அவைகளைத் தின்று களித்த மீன்கள் பின் அம்மரங்கள் வீழ்ந்தபோது உடல்நொருங்கித் துடித்தன வென்பதாம். கடலில் விழுந்த பறவை முதலியவற்றை விழுங்கவந்த மீனினங்கள் பின்பு மரங்கள் விழுதலால் நெரிந்தன என்ற இதனில், தனக்கு விருப்பமானதைப் பெறுகையில் அநிஷ்டமான ஒன்று விளைதலாகிற **தகுதியின்மையணி** தோன்றுமாறு காண்க. இதனை வடநூலார் விஷமாலங்கார மென்பர். (கசா)

கஎ. தூவியமலர்த்தொகைசுமந்துதிசைதோறும்
பூவின்மணநாறுவபுலால்கமழ்கிலாத
தேவியர்களோடுமுயர்தேவரினிதாடு
மாவியெனவாயதிரையார்கலிகளம்மா.

(இ - ள்.) தூவிய மலர் தொகை சுமந்து - சிதறின மலர்களின் கூட்டங்களைத் தாங்கி, திசை தோறும் பூவின் மணம் நாறுவ - எங்கும் அம்மலர்களின் மணமே வீசுவனவாய், (அதனால்), புலால் கமழ்கிலாத - புலால்நாற்றம் வீசாமலடங்கியுள்ளனவான, திரை ஆர்கலிகள் - அலைகளையுடைய கடல்கள்,— உயர் தேவர் - சிறந்ததேவர்கள், தேவியர்களோடும் - (தமது) மனைவிமாருட

னே, இனிது ஆடும் - சந்தோஷமாக நீர்விளையாடுகின்ற, ஆவி எனல் ஆய - (தாமரை முதலிய நீர்ப்பூக்கள் நிறைந்த) குளங்களென்று சொல்லத்தக்கன வாயின; (எ . று.)—அம்மா - வியப்பிடைச்சொல்.

அநுமான் மரங்களை வீசியெறிகையில், அம்மரங்களிலிருந்து தம்மிடத்து உதிர்ந்த நறுமலர்களினால் சமுத்திரங்களும் தம்முடைய இயற்கையான புலால் நாற்றம் ஒழிந்து அம்மலர்களின் நறுமணம் விஞ்சப்பெற்று, தேவர்கள் நீராடுகின்ற நீர்நிலைகளைப் போன்றன வென்பதாம். இச்செய்யுளில் சமுத்திரம் தன்குணமாகிய புலால்நாற்ற மொழிந்து, தேவர்களின் நீர்நிலைகளின் குணமாகிய பூவின்மணம் விஞ்சியதாகக் கூறியது - பிறிதின்குணம்பெறலணி. இதனால், அக்கடல்களில் விழுந்த நறுமலர்களின் மிகுதி தொனிக்கும். (கஎ)

கஅ. இடந்தமணிவேதியுமிறுத்தகடிகாவுந்
தொடர்ந்தனதுரந்தனபடிந்துநெறிதூரக்
கடந்துசெலவென்பதுகடந்தவிருகாலா
னடந்துசெலலாகுமெனலாகியதுநன்னீர்.

(இ - ள்.) இடந்த மணி வேதியும் - (அநுமான்) பெயர்த்தெறிந்த இரத்தினமயமான மேடைகளும், இறுத்த கடி காவும் - (அவ்வநுமான்) முறித்த காவலுள்ள சோலையின் மரங்களும், தொடர்ந்தன துரந்தன - தொடர்ந்து வேகமாகச்சென்றனவாய், படிந்து - (கடலிலே) ஒழுங்காக விழுந்து, நெறி தூர - வழியுண்டாம்படி தூர்ந்துவிட்டதனால், கடந்து செலவு என்பது - தாண்டியே செல்லுதற்கு உரியதென்று சொல்லத்தக்கதாயிருந்த, நல் நீர் - (நறுமலர்களால்) மணங்கொண்ட கடலானது, கடந்த இரு காலால் - (வானத்தின்வழியாய்க்) கடந்து சென்ற (அநுமானது) இரண்டுகால்களாலும், நடந்து செலல் ஆகும் எனல் ஆகியது - நடந்து செல்லுதற்கு உரியதாகு மென்று சொல்லும்படியாயிற்று ; (எ - று.)

அநுமான் இடித்தும் ஒடித்தும் எறிந்த மேடைகளாலும் மரங்களாலும் கடல் தூர்ந்து நடந்துசெல்லும் நிலமாயிற்றென்று வருணித்தவாறு. 'தொடர்ந்தன தொடர்ந்தன' என்றும் பாடம். (கஅ)

கசூ. வேனில்விளையாடுசுடரோனினொளிவிம்மும்
வானினிடைவீசியவரும்பனைமரத்தாற்
றானவர்கண்மாளிகைதகர்ந்துபொடியாய
வானவிடியாலொடியுமால்வரைகண்மான.

(இ - ள்.) வேனில் விளையாடு சுடரோனின் - கோடைக்காலத்தில் மிகுதியாகக் காய்கின்ற சூரியனைப்போல, ஒளி விம்மும் - ஒளி மிகுகின்ற, வானினிடை வீசிய வரும் பனை மரத்தால் - ஆகாசத்தில் வீசியெறிந்தனவாய் வருகின்ற பருத்த மரங்களினால், தானவர்கள் மாளிகை - (அவ்விலங்கையிலுள்ள)

அரக்கரது வீடுகள், வானம் இடியால் ஒடியும் மால் வரைகள் மான - ஆகாயத்தி லுள்ள இடியால் உடைந்த பெரியமலைகளைப்போல, தகர்ந்து பொடி ஆய - இடிந்து பொடிபட்டன; (எ - று.)

மரங்களால் தாக்குண்டுவிழுந்த அரக்கர்மாளிகைகளுக்கு, இடிகளால் தாக் குண்டு விழுகின்ற மலைகள் ஒப்பாமென்க. ஒளிவிம்மும் மரம் எனக் கூட்டுக. மிக்கபிரகாசமுடையன வென்றற்கு, வேனில் விளையாடு சுடரோனை அம்மரங் கட்கு உவமை கூறினர். பொன்னாலும் மணிகளாலும் மரங்கள் இயன்றுள்ள தனால், அவை ஒளிவீசின. மான - செயவெனெச்சம். (கக)

௨0. எண்ணிறருகோடிகளெறிந்தனசெறிந்தே
தண்ணெனன்மழைபோலிடைதழைந்ததுசலத்தா
லண்ணலனுமானடலிராவணனதந்நா
ளிண்ணினொருசோலையுளதாமெனவிதித்தான்.

(இ - ள்.) அ நாள் - அக்காலத்தில், எறிந்தன - (தான்) பிடுங்கி யெறிந் தன வான, எண் இல் தரு கோடிகள் - அளவிறந்த மரங்களின் கூட்டங்கள், செறிந்து - நெருங்கி, தண்ணென் மழை போல் - குளிர்ந்துள்ள மேகம்போல, இடை தழைந்தது - (வானினிடத்தில்) தழைந்து தோன்றியதனால்,—அண் ணல் அனுமான் - பெருமை பொருந்திய அநுமான்,—சலத்தால் - கோபத் தால், 'அடல் இராவணனது ஒரு சோலை - வலிமைபொருந்திய இராவண னுடைய ஒப்பற்ற அந்த அசோகவனிகை யென்னுஞ் சோலை - விண்ணின் உளது ஆம் - ஆகாசத்திலுள்ளதாயிற்று',' என - என்று (கண்டவர்) கூறும்படி, விதித்தான் - செய்தான் ; (எ - று.)

அநுமான் வீசியெறிந்த மரங்கள், வானத்திற் செறிந்து 'இவ்வநுமான் இராவணன்மீது கோபத்தினால் பூமியின்மீது இருந்த இந்தச் சோலையை வானத்தினிடத்திலுள்ளதாம்படி செய்துவிட்டான் என்று கண்டவர் சொல் லுமாறு விளங்கின வென்பதாம். தற்குறிப்பேற்றவணி. மேலிரண்டுசெய்யுள் களிலும் இவ்வணி காண்க. இதனால், சோலையிலுள்ள மரங்களெல்லாவற் றையும் அநுமான் பிடுங்கியெறிந்தா னென்பது, பெறப்படும். 'தண்ணமழை போல்', 'விண்ணுமொருசோலை' என்பன பாடாந்தரங்கள். (௨0)

௨க. தேனுறைதுளிப்பநிறைபுட்பலசிலம்பப்
பூநிறைமணித்தருவிசும்பினிடையேபோய்
மேன்முறைநெருக்கவொளிவாளொடுவில்வீச
வானிடைநடாயநெடுமானமொலான.

(இ - ள்.) தேன் உறை துளிப்ப - தேன்துளிகள் சிதறவும், நிறை புள் பல சிலம்ப-நிறைந்துள்ள பலபறவைகள் ஒலிக்கவும், பூ நிறை மணி தரு - மலர்கள் நிறைந்த இரத்தின மயமான மரங்கள், விசும்பினிடையே போய் - ஆகாயத் தினிடத்தேசென்று, மேல் - அந்தவானத்தில், முறை நெருக்க- வரிசைவரிசை யாக நெருக்குவதனால்,—வாளொடு வில் ஒளி வீச - வாள்போலவும் வில்போல

வும் ஒளியை வெளிக்காலும்படி, வானிடை நடாய - வானத்திற் செலுத்தப் படுகின்ற, நெடு மானம் - நீண்ட விமானங்கள், எனல் ஆன - என்றுசொல்லத் தக்கனவாயின; (எ - று.)

அநுமான் வானில் வீசியெறிந்தனவான புஷ்பங்கள் நிறைந்த இரத்தின மரங்கள், வானத்தில் நெருங்கிச் செல்லுகின்ற புஷ்பகவிமானங்கள் போன்று, வாளைப்போலவும் வில்லைப்போலவும் பேரொளிவீசின வென்பதாம். 'வானிடைநடக்கும்' என்றும் பாடம். மானம் - விமான மென்பதன் முதற்குறை. நடாய = நடாவிய. (உக)

உஉ. சாகநெடு மாப்பணை தழைத்தன தனிப்போர்
நாகமனை யானெறிய மேனிமிர்வ நானா
மாகநெடு வானிடையி ழிந்துபுனல் வாரு
மேகமென லாயநெடு மாகடலின் வீழ்வ.

(இ - ள்.) தனி போர் நாகம் அனையான் எறிய - ஒப்பற்ற போர்செய்த வில்வல்ல யானையைப்போன்ற அநுமான் வீசி யெறிந்ததனால், நெடு மா பணை தழைத்தன - நீண்ட பெரிய கிளைகள் தழைத்துள்ளனவான, சாகம் - தேக்கமரங்கள், மேல் நிமிர்வ - வானத்தில் உயரச்சென்றனவாய், நெடு மா கடலின் வீழ்வ - மிகப்பெரிய கடலில் வீழ்பவை,—மாகம் நெடு வானிடை - மிகப் பெரிய ஆகாயத்திலிருந்து, இழிந்து - கீழிறங்கி, புனல் வாரும் - கடல்நீரை முகப்பனவான, நானா மேகம் எனல் ஆய - பலமேகங்களென்று சொல்லத் தக்கனவாயின; (எ - று.)

அநுமானால் வீசியெறியப்பட்டு வானத்திற் சென்று கடலில்வீழ்ந்த தேக்கமரங்கள் - வானவழியிற்சென்று கடலிலிறங்கி நீர்பருகுகின்ற மேகங்களை யொத்தன வென்பதாம். மாக வான் - ஒருபொருட்பன்மொழி. 'மேனிமிர்வநாளும்' என்பது பிரதிபேதம். (உஉ)

வேறு.

உங. ஊன முற்றிடை மண்ணி னுதித்தவர்
ஞான முற்றுபு நண்ணினர் வீடெனத்
தான கற்பகத் தண்டரு விண்டலம்
போன புக்கன முன்னுறை பொன்னகர்.

(இ - ள்.) ஊனம் உற்று - பாவத்தைச் செய்து, (அதன்பயனாக), இடை மண்ணின் - நடுவுலகமாகிய பூமியில், உதித்தவர் - தோன்றிய தேவர்கள், ஞானம் முற்றுபு - நன்ஞானம் நிறையப்பெற்று, வீடு நண்ணினர் என - (இவ்வுலகினின்று) விடுதலைபெற்று மேலுலகத்தை யடைந்தவர்போல,—தானம் கற்பகம் தண் தரு - ஈகைக்குணமுடைய கற்பக மெனப்படுகின்ற குளிர்ந்த மரங்கள், விண் தலம் போன - வானவழியாகச் சென்றனவாய், முன் உறை பொன் நகர் - தாம் முன்புஇருந்த பொன்மயமான சுவர்க்கலோகத்தில், புக்கன - போய்ச்சேர்ந்தன; (எ - று.)

பாவத்தினாற் பூமியில் வந்து பிறந்த தேவர்கள் ஞானம் நிறையப்பெற்றுத் தமது பாவம் நீங்கி, மீண்டும் தமது உலகையே சேர்ந்ததுபோல, பூர்வத்தில் இராவணனாற் கொண்டுவரப்பெற்று இலங்கையில் நாட்டப்பட்ட கற்பக விருக்ஷங்கள் அநுமான் பிடுங்கியெறிதலால் தாம் முன்னிருந்த தேவலோகத்தில்தானே போய்ச்சேர்ந்தன வென்பதாம். (அஷ்டவசுக்கள் முதலியோர் தமது தீவினைப்பயனால் வீடுமன் முதலியோராகப் பிறந்து நன்ஞானம் பிறந்து நல்லுலகையடைந்தனர் முதலிய சரித்திரங்களை, இங்குக் கூறியதற்கு மேற்கோளாகக் காணலாம்.) இனி, பாவத்தினால் இம்மண்ணிற் பிறந்தவர் நன்ஞானம் உதிக்கப்பெற்று இந்தச் சம்சாரத்தை விட்டு வீட்டுலகத்தைச் சேர்வதுபோல, இம்மண்ணுலகத்தில் இராவணனாற் கொண்டுவரப்பட்டு இலங்கையிலிருந்த கற்பகமரங்கள் அநுமானுடைய சம்பந்தத்தால் இவ்விலங்கையைவிட்டுச் சுவர்க்கலோகத்தைச் சேர்ந்தன என்று கூறினுமாம். தேவதருக்கள் ஐந்தனுள் ஒன்றன்பெயராகிய கற்பகமென்ற சொல், பொதுவாகத் தேவதருக்கள் ஐந்தையும் காட்டுவது முண்டு. 'ஞானமுற்றிட,' 'கற்பகத் தண்டலை' என்பன - பாடாந்தரங்கள்.

இதுமுதற் பதினேழு கவிகள் - முதற்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய கலிவிருத்தங்கள். (உ௩)

உச. மணிகொள் குட்டிமமட்டித் துமண்டபந்
துணிபடுத்தயல்வாவிகதூர்த் தொளிர்
திணிசுவர்த்தலஞ்சிந்திச் செயற்கரும்
பணிபடுத் துயர்குன்றம் படுத்தரோ.

இதுமுதல் மூன்றுகவிகள் - ஒரு தொடர்.

(இ - ள்.) (அநுமான்),—மணி கொள் குட்டிமம் - இரத்தினங்கள் பதிக்கப்பட்ட திண்ணைகளை, மட்டித்து - தகர்த்து, மண்டபம் - மண்டபங்களை, துணிபடுத்து - துணடுதுண்டாக உடைத்து, அயல் - அருகிலுள்ள, வாவிகள் - குளங்களை, தூர்த்து—, ஒளிர் - விளங்குகின்ற, திணி - செறிந்த, சுவர் தலம் - சுவர்களினிடங்களை, சிந்தி - இடித்துத்தள்ளி, உயர் குன்றம் படுத்து - உயர்ந்த குன்றுகளையும் அழித்து, (இவ்வாறு), செயற்கு அரு - செய்தற்கு அருமையான, பணி - வேலைகளை, படுத்து - செய்து, (எ - று.)—'வேங்கை செற்று' என அடுத்த கவியோடு தொடரும்.

இச்செய்யுட்கு - அநுமான் குட்டிமம் மண்டபம் முதலியவற்றை யிடித்து அவைகளை ஒருமலைபோலக் குவித்து என்றும் கூறினுமாம். குன்றம் - செய்குன்ற மென்றலு மொன்று. 'குன்றம் பகுத்தரோ' என்றும் பாடமுண்டு. (உச)

உரு. வேங்கைசெற்றுமராமரம்வேர்பறித்
தோங்குகற்பகம்பூவொடொடித்துராய்ப்
பாங்கர்ச்சண்பகப்பத்திபறித்தயன்
மாங்கனிப்பணைமட்டித்துமாற்றியே.

(இ - ள்.) வேங்கை - வேங்கை மரங்களை, செற்று - அழித்து, மராமரம் - ஸாலவிருட்சங்களை, வேர் பறித்து - வேரோடு பிடுங்கியெறிந்து, ஓங்கு கற்

பகம் - உயர்ந்துவள்ர்ந்த கற்பகமரங்களை, பூவொடு ஒடித்து - மலர்களுடனே முறித்து, உராய் - விரைந்து, பாங்கர் சண்பகம் பத்தி பறித்து - பக்கத்தி லுள்ள சண்பகமரங்களின் வரிசைகளைப் பிடுங்கியெறிந்து, அயல் - அருகி லுள்ள, மாங் கனி பணை - மாம்பழங்கள் நிறைந்த கிளைகளை, மட்டித்து - முறித்து, மாற்றி - நிலைமாறச்செய்ய, (எ-று.)—'நந்தனங்கள் கலங்கி நடுங்க, தகர்ந்தன' என அடுத்த கவியோடு தொடரும். மாற்றி=மாற்ற; எச்சத்திரிபு.

உசு. சந்தனங்கடகர்ந்தனதாள்பட
விந்தனங்களின்வெந்தெரிசிந்திட
முந்தனங்கவசந்தன்முகங்கெட
நந்தனங்கள்கலங்கிநடுங்கவே.

(இ - ள்.) (அப்போது), தாள் பட - (அவ்வநுமானது) கால்கள் பட்டத னல்,—முந்து அனங்கம் வசந்தன் - முற்காலத்தில்தானே சரீரத்தையிழந்த மன்மதனது, முகம்—,கெட - (துயரத்தினற்) பொலிவழியும்படி, நந்தனங் கள் - பூஞ்சோலைகள், கலங்கி நடுங்க - நிலைகுலைந்து நடுக்கமடைய,—சந்தனங் கள் - (ஆங்குள்ள) சந்தனமரங்கள், இந்தனங்களின் வெந்து - விறகுகள்போல எரிந்து, எரி சிந்திட - நெருப்புச்சுவாலை வீசினவண்ணம், தகர்ந்தன - அழிந் தன; (எ - று.)

மன்மதன் உல்லாசமாக இருத்தற்குஉரிய நந்தவனங்கள் நிலைகுலைந்த தனல், அவனதுமுகம் பொலிவழிந்த தென்க. அநங்கம், ந அங்கம் - மன்மதன் தன்முழுவலியுஞ் செலுத்திச் சஞ்சரித்தற்குரிய காலம் வேனிற்பருவமே யாத லால், அவனுக்கு 'வேனிலான்' என்று பெயரிருத்தல்போல, 'வஸந்தன்' என் றும் ஒருபெயர் கூறப்பட்டது. 'முந்தனங்கன் வசந்தன்' என்றும் பாட முண்டு. (உசு)

உஎ. காமரங்களிவண்டுகலங்கிட
மாமரங்கண்மடிந்தனமண்ணொடு
தாமரங்கவரங்குதகர்ந்துகப்
பூமரங்களெரிந்துபொரிந்தவே.

(இ - ள்.) காமரம் களி வண்டு - காமரமென்னும் பண்ணைப் பாடுகின்ற களிப்புள்ள வண்டுகள், கலங்கிட - கலங்கும்படி, மா மரங்கள்—, மண்ணொடு மடிந்தன - மண்ணோடு மண்ணாக விழுந்துபோயின; அரங்கு - நாடகசாலைகள், அரங்க - அழியவும், உக - கீழ்விழவும், பூ மரங்கள் - மலர்மரங்கள், தகர்ந்து - முறிந்து, எரிந்து பொரிந்த - (ஒன்றோடொன்று மோதிய விசையினல்) எரிந்து பொரிந்துபோயின ; (எ - று.)—தாம் - அசை. (உஎ)

உஅ. குழையுங்கொம்புங்கொடியுங்குயிற்குலம்
விழையுந்தண்டளிர்ச்சூழலுமென்மலர்ப்
புழையும்வாசப்பொதும்பும்பொலன்கொடேன்
மழையும்வண்டுமயிலுமடிந்தவே.

(இ - ள்.) குழையும் கொம்பும் - வளையுந்தன்மையுள்ள பூங்கொம்புகளும், கொடியும் - பூங்கொடிகளும், குயில் குலம் விழையும் தண் தளிர் சூழலும் - குயில்களின் கூட்டம் விரும்புதற்கு இடமான குளிர்ச்சியாகிய தளிர்களையுடைய இடங்களும், மெல் மலர் புழையும் - மெல்லிய மலர்களைக்கொண்ட (அச் சோலையிலுள்ள) நுழைவாயில்களும், வாசம் பொதும்பும் - வாசனையுள்ள புதர்களும், பொலன் கொள் தேன் மழையும் - அழகுபொருந்திய தேன்மழையும், வண்டும் - வண்டுகளும், மயிலும் - மயில்களும், மடிந்த - அழிந்து போயின; (எ - று.)

அநுமானாற் சின்னபின்னப்படுத்தப்பட்ட சோலையில் குழை கொம்பு முதலியன அழிந்தன வென்க. (உஅ)

உகூ. பவளமாக்கொடி வீசினபன்மழை
துவளுமின்னெனச் சுற்றிடச்சூழ்வரை
திவளும்பொற்பணை மாமரஞ்சேர்ந்தன
கவளயானையினோடையிற்காந்தவே.

(இ - ள்.) வீசின - (அநுமானால்) வீசியெறியப்பட்டனவான, மா பவளம் கொடி - சிறந்த பவழக்கொடிகள், பல் மழை துவளும் மின் என - பலமேகங்களில் துவண்டு தோன்றுகின்ற மின்னல்கள்போல, சூழ் வரை - (அங்கே) சூழ்ந்திருந்த மலைகளில், சுற்றிட - சுற்றிக்கொள்ள,—கவளம் யானையின் ஓடையின் காந்த - கவளமாக உண்ணுந்தன்மையுள்ள யானைகளின் நெற்றிப் பட்டம்போலப் பிரகாசிக்கும்படி, திவளும் பொன் பணை மா மரம் சேர்ந்தன - விளங்குகின்ற பொன்மயமான கிளைகளையுடைய மாமரங்கள் (அநுமானால் வீசியெறியப்பட்டனவாய்) அங்குச் சேர்ந்தன; (எ - று.)

அநுமான் வீசியெறிந்த பவழக்கொடிகள் ஆங்குள்ள மலைகளின்மீது விழ, அவை மேகத்தில் விளங்கும் மின்னல்போலத் தோன்ற, மலைகளின்மீது வீசியெறியப்பட்ட பொன்மயமான மாமரங்கள் யானையின் நெற்றியில் விளங்கும் பட்டம்போலத் தோன்றின வென்பதாம். மலைகளுக்கு மேகமும் யானையும், பவளக்கொடிகட்கு மின்னல்களும், பொன்மரங்களுக்கு நெற்றிப் பட்டமும் உவமை யெனக் காண்க. (உகூ)

௩0. பறவையார்த்தெழுமோசையும்பன்மர
மிறலெடுத்தவிடிக்குரலோசையு
மறவனார்த்தெழுமோசையுமண்டத்தின்
புறநிலத்தினுங்கைம்மிகப்போயதே.

(இ - ள்.) (அந்தவேளையில்), பறவை ஆர்த்து எழும் ஓசையும் - பலவகைப் பறவைகள் ஆரவாரித்தெழுகின்ற ஓசையும், பல் மரம் இறல் எடுத்த இடி குரல் ஓசையும் - பலவகை மரங்களும் முறியத்தொடங்கியதனாலுண்டான இடிக்

குரலையொத்த ஓசையும், அறவன் ஆர்த்து எழும் ஓசையும் - தருமஸ்வரூபியான அநுமான் ஆரவாரித்ததனாலுண்டாகிய ஓசையும், அண்டத்தின் புறம் நிலத்தினும் - இவ்வுலகவுருண்டையின் வெளிநிலத்திலும், கைம்மிக போயது - மிகுதியாகப் போய்ப் பரவிற்று; (எ - று.)

இதனால், அப்போது பேரொலியெழுந்ததைக் கூறினரென்க. கைம்மிக, கை - தமிழுபசருக்கம். 'புறநிலத்தையும்' என்றும் பாடம். (கூ௦)

கூக. பாடலம்படர் கோங்கொடும்பண்ணிசைப்
பாடலம்பணிவண்டொடும்புள்ளிரைப்
பாடலம்புயர் வேலையிற் பாய்ந்தன
பாடலம்பெறப்புள்ளினம்பாறவே.

(இ - ள்.) படர் கோங்கொடும் - (ஆகாயத்தளவும்) உயர்ந்துவளர்ந்துள்ள கோங்குமரங்களும், பாடலம் - பாதிரிமரங்களும், பண் இசை பாடல் அம் பனி வண்டொடு - சிறப்பித்துக்கூறப்படுகின்ற இசைப்பாடலைக்கொண்ட அழகிய குளிர்ந்த வண்டுகளுடனே, புள் இனம் - (அம்மரங்களிலுள்ள) பறவைகளின் கூட்டங்கள், பாடு அலம் பெற - துன்பத்தை மிகுதியாக அடையவும், பாற - சிதறிக்கெடவும், பல் திரை பாடு அலம்பு உயர் வேலையில் - பல அலைகள் (கரைப்) பக்கங்களிலே ஒலிக்கின்ற பெரிய கடலிலே, பாய்ந்தன - விழுந்தன; (எ - று.)

அநுமான் வீசியெறிந்த கோங்கமரங்களும் பாதிரிமரங்களும் தம்மீது மொய்க்கின்ற வண்டுகள் பெருந்துன்பமடையவும், தம்மிடத்து வாழ்கின்ற பறவைகள் சிதறியோடவும், கடலிற் போய் விழுந்தன வென்பதாம். இச்செய்யுளில் யமக மென்னுஞ் சொல்லணி காண்க. அடுத்த சில செய்யுள்களிலும் இது காணலாம். இனி, பாடலம்பெற என்பதற்கு - செந்நிறம் அடைய என்று பொருள்கூறி, வீசியெறிந்த இம்மரங்கள் போய்விழுதலால் அதிலுள்ள உயிர்களெல்லாம் இரத்தத்தைக் கக்கிக்கொண்டு இறத்தலாற் கடல் கலங்கிச் செந்நிறத்தையடைந்தது என்று கருத்துக்கூறுவர். 'புள்ளினம்பார்ப்பொடே' என்றும் பாடமுண்டு. (கூக)

கூஉ. வண்டலம்புநலாற்றின்மராமரம்
வண்டலம்புனலாற்றின்மடிந்தன
விண்டலம்புகநீங்கியவெண்புனல்
விண்டலம்புகநீண்மரம்வீழ்ந்தவே.

(இ - ள்.) வண்டு அலம்பு - வண்டுகள் ஒலிக்கப்பெற்ற, நல் ஆற்றில் - அழகிய சாலையி லிருந்த, மராமரம் - மாமரங்கள், (அப்போது), வண்டல் அம் புனல் ஆற்றில் - வண்டலைக்கொண்ட அழகிய நீர்நிறைந்த காவிரியாற்றிலே, மடிந்தன - போய்விழுந்தன; விண் தலம் புக நீள் மரம் - வானத்தினிடத்திற்போய்ச்சேரும்படி நீண்டுவளர்ந்த வேறுசிலமரங்கள், விண்டு அலம்பு கம் நீங்கிய வெள் புனல் - திருமாலின் திருவடிகளைப் (பிரமதேவன்) கழுவிய

தனுல்தோன்றி வானத்தினின்று இப்பூமியிலிறங்கிவந்த வெண்மையான நீரை யுடைய கங்கையாற்றிலே, வீழ்ந்த - வீழ்ந்தன ; (எ - று.)

அநுமானால் வீசியெறியப்பட்ட மராமரங்கள் காவிரியாற்றில் விழ, வேறு சிலமரங்கள் கங்கையாற்றில் விழுந்தன வென்பதாம். கங்கையுடன் சேர்த்துக் கூறியிருத்தலாலும், "வண்டல் பாய் பொன்னி" என்றபடி வண்டலை யுடைய தாகக் கவிகளாற் கூறப்படுவது அதுவேயாதலாலும், 'வண்டலம்புனலாறு' என் பதற்கு - காவிரியாறு எனப் பொருள் கொள்ளப்பட்டது. திரிவிக்கிரமாவதார காலத்திற் சத்தியலோகத்துச்சென்ற திருமாலின் திருவடியைப் பிரமதேவன் தன்கைக்கமண்டலதீர்த்தங்கொண்டு சுழுவி விளக்க, அப்பரமனது அந்த ஸ்ரீ பாததீர்த்தமே கங்காநதியாகப் பெருகிய தென்பதை மூன்றமடியால் விளக்கி னர். விண்டு - விஷ்ணு; எங்கும் வியாபித்திருப்பவ னென்பது, அவயவப்பொ ருள். கம் - ஆகாசம்: வடசொல். 'விண்டலம்புக நீங்கிய மென்புனல்' என்றும் பாடமுண்டு. திரிபு யமகங்களில் பொதுநகரத்துக்கும் சிறப்புனகரத்துக்கும் வேறு பாடுகருதாது ஒற்றுமையாகக் கருதுவது கவிசமயமாகுமென்பது, இச் செய்யுளின் முன்னிரண்டடிகளிற் கவனிக்கத்தக்கது. (கஉ)

கூரு. தாமரைத்தடம்பொய்கைசெஞ்சந்தனந்
தாமரைத்தனவொத்ததுகைத்தலின்
காமரக்களிவண்டொடுங்கள்ளொடுங்
காமரக்கடல்பூக்கடல்கண்டவே.

(இ - ள்.) துகைத்தலின் - (அனுமான் வீசியெறிந்த மரங்கள் சென்று) குழப்பியதனால், தட தாமரை பொய்கை - பெரிய தாமரைத்தடாகங்கள், செஞ் சந்தனம் தாம் அரைத்தன ஒத்த - செஞ்சந்தனக்கட்டையை யரைத்துக் கரைத்தாற்போல் தோன்றின; (அன்றியும்), கா மரம் கடல் - அசோக வனி கையிலிருந்த மரங்கள் போய் விழப்பெற்ற கடல்கள்,—காமரம் களி வண்டொ டும் - காமரமென்னும் இசை பாடுகின்ற மதக்களிப்புள்ள வண்டுகளோடும், கள்ளொடும - தேனோடுங்கூடி, பூக்கடல் - மலர்கள் நிரம்பிய கடலாக, கண் டன - காணப்பட்டன; (எ - று.)

அனுமான் வீசியெறிந்த மரங்களாற் குழம்பிய தாமரைப் பொய்கைகள் செஞ்சந்தனக்குழம்பைக் கரைத்தாற்போலத் தோன்ற, அவ்வகை மலர்மரங்கள் பல வீழப்பெற்ற கடல்கள் எங்குப்பார்த்தாலும் வண்டுகளும் தேன்களும் நிரம்பிய மலர்மயமாகவே காணப்பட்டன வென்பதாம். 'துகைத்தலின்' என்பது —மத்திமதீபமாக முன்வாக்கியத்தோடும் பின்வாக்கியத்தோடும் இயையத்தக்கது. இனி, பின்னிரண்டடிகட்கு—துகைத்தலின் - (அனுமான்) துகைத்தலினால், கா மரம் - அசோகவனிகை யென்னுஞ் சோலையிலுள்ள மரங் கள், கடல் - லவண சமுத்திரத்தை, காமரக் களி வண்டொடும் கள்ளொடும், பூக்கடல் கண்ட - புஷ்பக்கடலாகச் செய்தன என்று உரைத்தலு முண்டு. இப்பொருளில், நான்காமடியில் 'காமரங்கடல்' என வாற்பாலது எதுகை

நயம் நோக்கி 'காமரக்கடல்' என வலித்தல்விகாரம் பெற்றுவந்த தென்க. ஒத்தது உகைத்தலின் என்று பிரித்துக் கூறினுமாம். 'பூக்கடல் கண்டதே' என்றும் பாடமுண்டு. (கூகூ)

கூச. சிந்துவாரந்திசைதொறுஞ்சென்றன
சிந்துவாரம்புரைதிரைசேர்ந்தன
தந்துவாரம்புதவொடுதாளறத்
தந்துவாரந்துகள்படச்சாய்ந்தவே.

(இ - ள்.) (அனுமான் பிடுங்கி வீசியெறிந்ததனால்), சிந்துவாரம் - நொச்சி மரங்கள், திசைதொறும் சென்றன - நான்குதிக்குக்களிலுஞ் சென்றனவாய், சிந்து வார் அம் புரை திரை சேர்ந்தன-சமுத்திரத்தின் நீண்ட அழகிய உயர்ந்த அலைகளிற் சேர்ந்திட்டன; (அன்றியும்), ஆரம் - சந்தனமரங்கள், தம் துவாரம் புதவொடு தாள் அற தந்து - அரக்கர்தமது வாயில்கள் கதவும் தாழ்ப்பாள்களும் முறிந்துபோம்படி (அவ்வரக்கர் மாளிகைகளின்மேல்) வீசியெறியப்பட்டு, துகள் பட - (அவைகள்) துகளாய்ப்போம்படி, சாய்ந்த - விழுந்தன; (எ - று.)

அநுமான் வீசியெறிந்ததனால் நொச்சிமரங்கள் சமுத்திரத்தில் விழ, அரக்கர் மாளிகை வாயில்கள் இடிந்து துகளாய் விடும்படி சந்தனமரங்கள் அவற்றின்மேல் விழுந்தன என்பதாம். திசைதொறுஞ் சென்றன என்பதற்கு-நான்கு திக்குக்களிலும் செவ்வனே தழைத்துவளர்ந்தனவான, சிந்துவாரம் எனினுமாம். தந்துவாரம் - குற்றியலுகரம் உயிர்வரக் கெடாது வகரவுடம்படுமெய் பெற்று நின்றதென்க. இனி, இச்செய்யுளுக்கு—(அனுமான் வீசியெறிந்ததனால் நொச்சிமரங்கள் (சமுத்திரத்தின்) உயர்ந்த அலைகளிற் சேர்ந்தனவாய் (அச் செயலினால்) பொங்குகின்ற சமுத்திரம் திசைதோறும் சென்றனவாய், வார் அம் புதவொடு தாள் அறும்படி செய்து, தம் துவாரம் துகள் பட - அரக்கரது வாயில்கள் துகளாய் அழியும்படி, சாய்ந்தன - அலைமடங்கி வீழ்ந்தன என்று உரைப்பாரும், பின்னும் வேறுவகையாகப் பொருள் கூறுவாருமுளர். 'திரைசேர்ந்தென', 'தந்துவாரம்புரைபட', 'வரைபட' என்பன பாடாந்தரங்கள். (கூச)

கூரு. நந்தவானத்துநாண்மலர்நாறின
நந்தவானத்துநாண்மலர்நாறின
சிந்தவானந்திரிந்துகச்செம்மணி
சிந்தவானந்திரிந்ததிரைக்கடல்.

(இ - ள்.) (அநுமான் வீசியெறிந்ததனால்), நாறின - நறுமணம் வீசுவனவாகிய, நந்தவானத்து நாள் மலர் - நந்தவனத்துமலர்மரங்களிலுள்ள அன்று பூத்த மலர்கள், வானத்து - ஆகாயத்தில், நந்த - மிகுதியாக, மலர் - விளங்குகின்ற, நாள் - நட்சத்திரங்கள்போல, நாறின - விளங்கின; சிந்து - புளிய

மரங்கள், அ வானம் திரிந்து உக - (ஆகாயத்திற்) சுழன்று (சகரபுத்திரர் தோண்டின) பள்ளமாகிய அச்சமுத்திரத்திலே விழ, (அதனால் அச்சமடைந்து), வால் நந்து - வெண்ணிறமுள்ள சங்குகள், திரை கடல் - அலைகளையுடைய அக்கடலில், செம் மணி - (தமது கர்ப்பத்திலுள்ள) அழகிய முத்துக்களை, சிந்த - சிந்தும்படி, இரிந்த - நிலைகெட்டு ஓடின; (எ - று.)

மலர்மரங்களை வீசியெறிந்தபோது, அம்மரங்களின் மலர்கள் நட்சத்திர மண்டலம் வரையிற் சென்று அந் நட்சத்திரம் போலவே விளங்க, மற்றும் வீசியெறிந்த புளியமரங்கள் கடலில் விழவே அஞ்சி அங்குள்ள சங்குப்பூச்சிகள் தமது கர்ப்பங் கலங்கி முத்துக்களைச் சிந்திக்கொண்டே நிலைகெட்டு ஓடின என்பதாம். நந்தவனமென்பது முதலடியில் நட்டல்விகாரம் பெற்று வந்தது. 'நாறின' என்றவிடத்து, இயல்பினால் நிகழ்காலம் இறந்தகாலமாக வந்தது; காலவழுவமைதி. நாள் - இலக்கணையால், நட்சத்திரங்களைக் குறித்தது. சிந்து - சிஞ்சா என்ற வடசொல்லின் திரிபென்பர்: புளியமரம். வானம் - பறித்தகுழி.

ஙசா. புல்லும்பொற்பணைப்பன்மணிப் பொன்மரங்
கொல்லுமிப்பொழுதேயெனுஞ் சொன்மையா
லெல்லியிட்டுவிளக்கியவிந்திரன்
வில்லுமொத்தனவிண்ணுறவீசின.

(இ - ள்.) விண் உற வீசின - ஆகாயத்திலே பொருந்தும்படி (அநுமானால்) வீசியெறியப்பட்டனவான, பொன் பணை புல்லும் - அழகியகிளைகள் பொருந்திய, பல் மணி பொன் மரம் - பலவகைமணிகளாலும் பொன்னாலு மியன்ற மரங்கள்,—'இ பொழுதே—, கொல்லும - (அநுமான் அரக்கர் பலரையும்) கொல்லுவான்,' எனும் - என்கின்ற, சொன்மையால் - எண்ணத்தினால், எல்லி இட்டு விளக்கிய - இராத்திரியிலே (உத்பாதமாக) உண்டாக்கி விளங்கச் செய்த, இந்திரன் வில்லும் - இந்திரதநுசையும், ஒத்தன—; (எ - று.)

அநுமான் வானத்தில் வீசியெறிந்த பொன்மணிமரங்கள், 'விரைவில் அரக்கர்பலரும் கொல்லப்படுவோர்கள்' எனபதை முன்னே அறிவிக்கும் உத்பாதமாக இரவில் இந்திரதநுசு தோன்றியதுபோல் விளங்கின வென்பதாம். இந்திரதநுசு பகலில் தோன்றுவதே இயல்பாதலால், இரவில் தோன்றுவது உத்பாதமா மென்க. 'வில்லும்' என்றவிடத்து உம்மை - முன்னம் வந்துள்ள வருணனைகளை நோக்கிய இறந்ததுதழுவிய எச்சப்பொருளது. (ஙசா)

ஙஎ. மயக்கில்பொற்குலவல்லிகள்வாரிநே
ரியக்குறத்திசைதோறுமெறிந்தன
வெயிற்கதிர்க்கற்றையற்றுறவீழ்ந்தன
புயற்கடற்றலைபுக்கனபோல்வன.

(இ - ள்.) வாரி நேர் இயக்கு உற - கடலுக்குநேராகச்சென்று வீழும்படி, திசை தோறும் எறிந்தன - எல்லாத்திசைகளிலும் வீசியெறியப்பட்டன

வாகிய, மயக்கு இல் பொன் குலம் வல்லிகள் - ஒளிமழுங்குதலில்லாத பொன் மயமான கூட்டமாயுள்ள கொடிகள்,—வெயில் கதிர் கற்றை - சூரியகிரணங் களின் தொகுதி, அற்று - அறுபட்டு, உற வீழ்ந்தன - (நிலவுலகத்திற்) பொருந்த வீழ்ந்தனவாகி, புயல் கடல்தலை - மேகங்கள் படிந்து நீர்பருகுகின்ற கடலினிடத்து, புக்கன போல்வன - புகுந்தவற்றையொப்பனவாயின; (எ - று.)

அநுமான் வீசியெறிந்த பொற்கொடிகளின் கூட்டம் - அறுபட்ட சூரிய கிரணக்கற்றைகளையும், அவை கடலில் வீழ்ந்தவை - சூரிய கிரணங்கள் கடலிற் புக்கதையும் போன்றனவென்க; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. இனி, பொற் கொடிகள் கடலில் விழுந்தவை - மேகங்கள் நீர்பருகுதற்குக் கடலிற் புக்கன போலுமென்று உரைப்பாரு முளர். இவ்வுரையில் பொற்கொடிகளுக்கு மேகம் உவமையாகுதல் அத்துணைச் சிறவாமை யுணர்க. (௯௭)

௯௮. ஆனைத்தானமுமாடலரங்கமும்
பானத்தானமும்பாய்பரிப்பந்தியு
மேனைத்தாரணிதேரொடுமிற்றன
கானத்தார்தருவண்ணல்கடாவவே.

(இ - ள்.) அண்ணல் - பெருமைபொருந்திய அநுமான், கானத்து ஆர் தரு - அசோகவனத்தில் நிறைந்துள்ள மரங்களை, கடாவ - (வேரோடு பிடுங்கி) வீசியெறிய அதனால்,—ஆனை தானமும் - யானைகளைக்கட்டியுள்ள சாலைகளும், ஆடல் அரங்கமும் - நடனசாலைகளும், பானம் தானமும் - மதுபானஞ் செய் யும் இடங்களும், பாய் பரி பந்தியும் - பாய்ந்து ஓடுந் தன்மையுள்ள குதிரை களைக் கட்டு மிடங்களும், ஏனை - மற்றுமுள்ள, தார் அணி தேரொடும் - சிறு மணிகள் கட்டிய தேரோடும், இற்றன - முரிந்தொழிந்தன ; (எ - று.)

கானத்து ஆர்தரு - காட்டில் தங்குகின்ற [வானர சாதியைச் சேர்ந்த] என்றும், தார் அணி தேர் - படைவகுப்பை யலங்கரிக்கிற தேர் என்றும் உரைப்பினுமாம். (௯௮)

௯௯. பெரிய மாமர மும்பெருங் குன்றமு
மிரிய வீசலி னிந்நெடும் பொன்மதி
னெரிய மாடநெ ருப்பெழ நீறெழு
விரியல் போனவி லங்கையு மெங்கணும்.

(இ - ள்.) மா பெரிய மரமும் - மிகப்பெரிய மரங்களையும், பெருங் குன்றமும் - பெரிய மலைகளையும், இரிய வீசலின் - நிலைகெடப் பெயர்த்து வீசி யெறிந்ததனால்,—இ நெடும் பொன் மதில் - இந்த [இலங்கையிலுள்ள] நீண்ட பொன்மதில்கள், நெரிய - நெரிந்துவிழவும், மாடம் - மாளிகைகள், நெருப்பு எழ நீறு எழ - நெருப்புத்தோன்றிச் சாம்பராய்ப் போகவும், எங் கணும் - எல்லாவிடத்திலும், இலங்கையும் - இலங்காபுரியும், இரியல்போன - நிலைகெட்டு அழிந்தன; (எ - று.)

அநுமான் வீசியெறிந்ததனால், மரங்களும் குன்றுகளும் அழிந்ததுபோல வே, அவைகள் போய்விழுந்ததனால் இலங்கையின் மதிள்களும் மாளிகைகளும் வெந்து சாம்பராய் அழிந்தொழிந்தன வென்பதாம். (ங௯)

வேறு.

[சந்திராஸ்தமன வருணனை.]

சம. தொண்டையங் கனிவாய்ச் சீதை துயக்கினு லென்னைச் சுட்டாய்
விண்டவா னவர்தம் முன்னே விரிபொழி லிறுத்து வீசக்
கண்டனை நின்று யென்று காணுமே லரக்கன் காய்த
லுண்டெனா வெருவி னன்போ லொளித்தன னுடுவின் கோமான்.

(இ - ள்.) 'அம் தொண்டை கனி வாய் - அழகிய கொவ்வைக் கனியைப் போன்ற வாயையுடைய, சீதை - சீதையினுடைய, துயக்கினல் - சம்பந்தத்தால் [நிமித்தமாக], என்னை சுட்டாய்—; விண்ட வானவர்தம் முன்னே-(என்னிடத்துப்) பகைமைகொண்ட தேவர்கட்கு எதிரில், விரி பொழில் - பரந்தசோலையை, இறுத்து வீச - (ஒருகுரங்கு) முறித்து வீசியெறியவும், கண்டனை நின்றாய் - (அதற்குப் பரிகாரம் தேடாமல் வேடிக்கை) பார்த்துக்கொண்டிருந்தாய், என்று-என்று கருதி, அரக்கன்-இராவணன், காணும் எல்-ஆலோசிப்பானேயானல், காய்தல் உண்டு-(என்மீது) கோபங்கொள்ளுதல் நிச்சயம்', என - என்று கருதி, வெருவினன் போல் - அஞ்சினவன்போல, உடுவின் கோமான்- நட்சத்திரங்கட்குத் தலைவனாகிய சந்திரன், ஒளித்தனன் - (அஸ்தகிரியில்) மறைந்தான் ; (எ - று.)

இங்கு இயற்கையாகச் சந்திரன் அஸ்தமித்தற்கு, தான் இங்கு இருந்தால் தன்னைச் சுட்டதற்காகவும், அநுமான் சோலையை முறித்ததை வெறுமனே கண்டுகொண்டிருந்ததற்காகவும் இராவணன் கோபிப்பானே வென்று அஞ்சி மறைந்ததாகக் காரணங்கற்பித்துக் கூறியது - ஏதுத்தற்குறிப்பேற்றவணி. சந்திரன் காமோத்தீபகப் பொருள்களுள் முக்கியமான ஒன்று ஆதலால், சீதையின் காரணமாகக் காமவேதனைப்படுகின்ற இராவணனைச் சுட்டன னென்க.

இதுமுதல் இப்படலம் முடியுமளவும் - முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (சம)

[அநுமான் வீசியேறிந்த சோலையால் உலகம் விளங்குதல்.]

சக. காசறுமணியும்பொன்னுங்காந்தமுங்களுல்வதாய
மாசறுமரங்களாகக்குயிற்றியமதனச்சோலை
யாசைகடோறுமையன்கைகளாலள்ளியள்ளி
வீசியவிளக்கலாலேவிளங்கினவுலகமெல்லாம்.

(இ - ள்.) காசு அறு - குற்றமில்லாத, மணியும் - இரத்தினங்களும், பொன்னும்—, காந்தமும் - சூரியகாந்தம் சந்திரகாந்தம் என்னும் கற்களும்,

(ஆகிய இவற்றால்), கஞல்வது ஆய - விளங்குவதான, மாசு அறு மரங்கள் ஆக - குற்றமற்ற விருட்சங்களாக, குயிற்றிய - முழுவதும் இயன்ற, மதனம் சோலை - மதக்களிப்பையுண்டாக்கவல்ல அந்தச்சோலை மரங்கள், ஆசைகள் தோறும் - திக்குக்களிலெல்லாம், ஐயன்-அநுமான், கைகளால் அள்ளி அள்ளி - இரண்டு கைகளாலும் பெயர்த்தெடுத்து, வீசிய - வீசப்பெற்றனவாய், விளக்கலாலே - பிரகாசத்தை யுண்டாக்குதலாலே, உலகம் எல்லாம் - உலகம் முழுதும், விளங்கின—; (எ - று.)

சந்திரன் அஸ்தமித்த பின்பும், அநுமான் வீசியெறிந்த பிரகாசமுள்ள மரங்களால், உலகம் முழுதும் விளங்கலாயின வென்பதாம். இருளில் ஒளிக்குக் காரணமாகிய சந்திரன் அஸ்தமித்த பின்பும் ஒளிதோன்றுதலாகிய காரியம் நிகழ்ந்ததாகக்கூறிய இதில், விபாவனை யென்னும் பிறிதாராய்ச்சியணி தொனித்தல் காண்க. மதனச்சோலை - மன்மதனுக்கு இருப்பிடமான சோலை. அநுமான் அசோகவனிகையை முறித்து நாசமாக்கிய செய்தியை ஸ்ரீவால்மீகி பகவான் ஏழு சுலோகங்களாற் சுருக்கமாகக் கூறியுள்ளார். அதனைக் கம்பர் தமது கற்பனாசக்தியால் விரித்துக்கூறியுள்ளா ரென அறிக. (௪௧)

[மிருகபட்சிகளின் நிலைமை.]

௪௨. கதறினவெருவியுள்ளங்கலங்கினவிலங்குகண்கள்
குதறினபறவைவேலைகுளித்தனகுளித்திலாத
பதறினபதைத்தவானிற்பறந்தனபறந்துபார்வீழ்ந்
துதறினசிறையமீளவொடுக்கினவுலந்துபோன.

(இ - ள்.) விலங்கு-(அவ்வனத்திலிருந்த) மிருகசாதிகள், வெருவி - அச்சங்கொண்டு, உள்ளம் கலங்கின - மனங்கலங்கினவும், கதறின - பெருங்கூச்சலிட்டனவுமாகி, (மரங்கள் பற்றி யெரிதலால்), கண்கள் குதறின-கண்கள் கலங்கப்பெற்றன; பறவை - பட்சிசாதிகள், வேலை குளித்தன - கடலில் விழுந்திட்டன; குளித்திலாத - அவ்வாறு விழாத பறவைகள், பதறின பதைத்த - மிகவுந்துடித்து, வானில் பறந்தன - வானிற் பறக்க ஆரம்பித்து, பறந்து-சிறிது தூரம்பறந்து, பார் வீழ்ந்து - (மேலேபறக்கமுடியாமற்) பூமியிலே விழுந்து, சிறையை உதறின - சிறகுகளையுதறிக்கொண்டு, மீள - பின்னும், ஒடுக்கின - (அச்சிறகுகளை) ஒடுக்கிக்கொண்டனவாய், உலந்துபோன - அழிந்துபோயின.

அநுமான் மரங்களைப் பிடுங்கியெறிந்ததனா லுண்டான சம்பிரமத்தினால் மிருகங்களும் பட்சிகளும் நிலைகலங்கி வருந்திப் பலவகையாய் அவஸ்தையை யடைந்தன வென்பதாம். (௪௨)

[சிலபறவைகளின்நிலை.]

௪௩. தோட்டொடுந்துதைந்ததெய்வமரந்தொறுந்தொடுத்தபுட்டங்
கூட்டொடுந்துறக்கம்புக்ககுன்றெனக்குவவுத்திண்டோள்
சேட்டகன்பரிதிமார்பன்சீறியுந்தீண்டறன்னான்
மீட்டவன்கருணைசெய்தாற்பெறும்பதம்விளம்பலாமோ.

(இ - ள்.) தோட்டொடும் துதைந்த - இதழ்களையுடைய மலர்களோடு நிறைந்த, தெய்வம் மரம் தொறும் - தெய்வத்தன்மையுள்ள மரங்களின் மீதெல்லாம், தொடுத்த - கட்டப்பட்டுள்ள, தம் கூட்டொடும் - தமது கூடுக ளுடனே, குன்று என குவவு திண் தோள் - மலைபோலத் திரண்ட வலிய தோள்களையுடைய, சேடு அகல் பரிதி மார்பன் - அழகோடு பரந்த சூரியன் போல் விளங்குகின்ற மார்பையுடையவனை அநுமான், சீறி நீண்டல் தன் னுலும் - கோபித்துத் தொட்டதனுலும், புள் - பறவைகள், துறக்கம் புக்க - சுவர்க்கலோகத்தை யடைந்தன; (என்றவாறு), அவன் - அவ்வநுமான், மீட்டு - (கோபத்தை) மாற்றி, கருணை செய்தால் - அருள் புரிந்து பரிசித்தானுனால், பெறும் - அடையக்கூடிய, பதம் - பதவியை, விளம்பல் ஆமோ - (நம்மாற்) சொல்ல முடியுமோ? [மிகப்பெரும்பதவி கிடைக்கு மென்றபடி]; (எ - று.)

அநுமான் மரங்களைப் பிடுங்கி மேலெறிந்தபோது, அம்மரங்களிலிருந்த பற வைகள் தமதுகூட்டோடும் வானுலகத்திற் சேர்ந்ததை வருணிப்பது, இக்கவி. அநுமான் கோபத்தோடு பரிசித்ததன் பயனுகவே, பறவைகட்குச் சுவர்க்க லோகம் கிடைத்த தென்றால், அவ்வாறுசினங்கொள்ளாமல் அருளுடனே பரிசித்திருந்தால் அவைகட்குப் பெரும் பதவி கிடைப்பது நிச்சய மென்று கைமுதிகநியாயம் படக் கூறியது - தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி யாம். 'தீண்டவங்நாள்' என்றும் பாடம். (சரு)

[சீதை தங்கியிருந்த மரமொன்றும் அழிக்கப்படாதிருத்தல்.]

சச. பொய்ம்முறையரக்கர்காக்கும்புள்ளுறைபுதுமென்சோலை
விம்முறுமுள்ளத்தன்னமிருக்குமவ்விருக்கமொன்று
மும்முறையுலகமெல்லா முற்றுறமுடிவதான
வம்முறையையன்வைகுமாலெனநின்றதம்மா.

(இ - ள்.) பொய் முறை அரக்கர் காக்கும் - பொய்ம்மையே ஒழுக்கமாக க்கொண்டுள்ள இராட்சதர்கள் பாதுகாக்கின்ற, புள் உறை புது மெல் சோலை - பறவைகள் வசிக்கின்ற புதுமையையுடைய [அதிசயிக்கத்தக்க] கண்ணுக்கி னிய அந்த அசோகவனத்தில், விம்முறும் உள்ளத்து அன்னம் இருக்கும் - வருந்திக்கொண்டிருக்கின்ற மனத்தையுடைய அன்னப் பறவை போன்ற சீதாபிராட்டி தங்கியிருக்கின்ற, அ விருக்கம் ஒன்றும் - அந்தமரம் ஒன்றுமாத் திரம், மு முறை உலகம் எல்லாம் - மூன்றுவகைப்பட்ட உலகங்கள் முழுதும், முற்றுற முடிவது ஆன - அழியும்படி முடிவுபெறுகின்ற, அ முறை - அக்கா லத்தில் [பிரளயகாலத்தில்], ஐயன் வைகும் - திருமால் தங்குகின்ற, ஆல் என - ஆலமரம்போல, நின்றது - ஊறுபடாமல் நிற்பதாயிற்று; (எ - று.)

அம்மா - வியப்பிடைச்சொல்; ஈற்றசையுமாம்.

'புள்ளுறு நறுமென்சோலை,' 'அம்முறையமரன்வைகும்' என்பன பாடாந் தரங்கள். மற்றைமரங்களெல்லாம் அழிய, பிராட்டி தங்கியிருந்த மரம்மாத்திரம் அழியாமலிருந்ததற்கு - யாவும் அழியும் பிரளயகாலத்தில் திருமால் பள்ளி கொள்ளுமாறு ஆல்மாத்திரம் நிற்பதை உவமை கூறினர். (சச)

[சூரியோதயவருணனை.]

௪௫. உறுசுடர்ச்சூடைக்காசவ்வுயிரினையுயிரொப்பானுக்
கறிகுறியாகவிட்டாளாதலானவறியளந்தோ
செறிகுழற்சீதைக்கென்றோர்சிகாமணிதெரிந்துவாங்கி
யெறிகடலீவதென்னவெழுந்தனனிரவியென்பான்.

(இ - ள்.) 'உறு சுடர் - மிக்க வொளியையுடைய, சூடை காசு அ உயிரினை - உயிர்போற் சிறந்ததாகிய சூடாமணியை, உயிர் ஒப்பானுக்கு - பிராண நாயகனுக்கு, அறிகுறி ஆக - (தன்னை அநுமான் கண்டதற்கு) அடையாளமாக, விட்டாள் - (சீதை) கொடுத்தனுப்பிவிட்டாள்; ஆதலால்—, அந்தோ - ஐயோ! வறியள் - (இப்போது) ஓராபரணமும் இல்லாதவளாயினாள்', என்று - என்று நினைத்து, எறி கடல் - அலையெறியும் தன்மையுள்ள கடல், செறி குழல் சீதைக்கு - நெருங்கிய கூந்தலையுடைய சீதாபிராட்டிக்கு, ஓர் சிகாமணி - ஒப்பற்ற சிகையிலணிந்து கொள்ளுதற்கு உரிய இரத்தினத்தை, தெரிந்து வாங்கி - ஆராய்ந்து தேடி வாங்கி, ஈவது என்ன - கொடுப்பதுபோல, இரவி என்பான் - சூரியன், எழுந்தனன் - (அக்கடலினின்று) தோன்றினான்; (எ - று.)

கடலிலிருந்து இயற்கையாகச் சூரியன் எழுந்ததை, கவி, 'தன் மகளான லக்ஷ்மீதேவியின் அம்சமான சீதாபிராட்டி தன்னிடத்து இருந்த ஆபரணங்களையெல்லாம் முன்னமே கழற்றியெறிந்துவிட்டு மிச்சமாகவைத்துக்கொண்டிருந்த சூடாமணி யொன்றையும் இப்போது தன்னை அநுமான் கண்டதற்கு அறிகுறியாகக் கொடுத்துவிட்டுத் தான் ஓராபரணமும் இல்லாமல் வறியவளாய் விட்டனளே! என்று இரங்கிச் சமுத்திரராசன் ஒருசூடாமணியைக் கொடுத்தனன்போலும்' என வருணித்தார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. சூடைக்காசு, சிகாமணி - ஒரு பொருளன. 'சூடைக்காசை யுயிரினுக்குயிரொப்பானுக்கு' என்னும் பாடத்தில், உயிரினுக்குயிரொப்பான் - அந்தராத்மாவாயிருப்பவனான இராமனென்க. செறிகுழல் - சடையாகச் செறிந்த கூந்தலென்னலாம். (௪௫)

[மரங்களை யெல்லாம் அழித்துவிட்டு அநுமான் தனியே நிற்றல்.]

௪௬. தாழிரும்பொழில்களெல்லாந்துடைத்தொருதமியனின்றா
னேழினோடேழுநாடுமளந்தவனெனலுமாறா
வூழியினடுவணின்றவருவரைக்கரசுமொத்தா
னூழியினிறுதிக்காலத்துருத்திரமூர்த்தியொத்தான்.

(இ - ள்.) தாழ் இரும் பொழில்கள் எல்லாம் துடைத்து - தழைத்த பெரிய சோலை முழுவதையும் அழித்து, ஒரு தமியன் நின்றான் - தான் ஒரு தனியே நின்ற அநுமான்,—எழினோடு எழு நாடும் - மேலேழ் கீழேழ் என்ற பதினான்கு உலகங்களையும், அளந்தவன் - (தனது இரண்டுதிருவடிகளினாலும்) அளந்து கொண்டவனான திரிவிக்கிரமமூர்த்தி, எனலும் ஆனான் - என்று சொல்லுதற்

ரும் தக்கவனுனன்; ஆழியின் நடுவண் நின்ற அரு வரைக்கு அரசு உம் ஒத்தான்-பாற்(கடல் கடைகையில் அக்)கடலின் நடுவே (கடைகிற மத்தாக) நின்ற (அளவகாணுதற்கு) அரிய சிறந்த மலையாகிய மந்தரமலையையும் போன்றான்; ஊழியின் இறுதி காலத்து உருத்திரமூர்த்தி ஒத்தான் - கற்பாந்தகாலத்தில் உலகத்தையெல்லாம் அழித்துவிட்டு நிற்கின்ற உருத்திரமூர்த்தியையும் போன்றான்; (எ - று.)

அப்போது தனியே நின்ற அநுமானுக்கு மிகப்பேருருவங் கொண்டதனுல் திரிவிக்கிரமமூர்த்தியும், அரக்கராகிற கடலைக் குழப்பப் போவதனுல் மந்தரமலையும், எல்லாவற்றையும் அழித்து நிற்றலால் உருத்திரமூர்த்தியும் உவமையாவ ரென்க. (சசு)

[அநுமானைக்கண்டு அஞ்சிய அரக்கியர் அவனைக்குறித்துச் சீதையை வினவுதல்.]

சஎ. இன்னனநிகழும்வேலையரக்கியரெழுந்துபொங்கிப்
பொன்மலையென்னநின்றபுனிதனைப்புகன்றுநோக்கி
யன்னையீதென்னைமேனியார்கொலென்றச்சமுற்றார்
நன்னுதறன்னைநோக்கியறிதியோநங்கையென்றார்.

(இ - ள்.) இன்னன நிகழும் வேலை - இச்செயல்கள் நடக்கும்பொழுது, அரக்கியர் - (அங்கு உறங்கிக்கிடந்த) அரக்கிமார்கள்,—எழுந்து - உறக்கந்தெளிந்து விழித்தெழுந்து, பொங்கி - (நிகழ்ந்தசெயலைக்கண்டு) மனங்கொதித்து, பொன் மலை என்ன நின்ற புனிதனை - பொன்மயமான மேருமலை போலப் (பெருந்தோற்றத்தோடு) எதிரில்நின்ற பரிசுத்தனுகிய அநுமானைக்குறித்து, 'அன்னை ஈது என்னை மேனி - அம்மா! இங்குத்தோன்றுவது என்ன வடிவம்! யார் கொல் - இவர் யாரோ?' என்று புகன்று நோக்கி - என்று சொல்லிக்கொண்டு (அவனைப்) பார்த்து, அச்சம் உற்றார் - பயங்கொண்டவர்களாய்,—(பிறகு), நல் நுதல்தன்னை நோக்கி - அழகிய நெற்றியையுடைய சீதையைப் பார்த்து, 'நங்கை - பெண்ணே! அறிதியோ-(இவனை இன்னுனென்று நீ) அறிந்துள்ளாயோ?' என்றார் - என்று வினவினார்கள்; (எ - று.) (சஎ)

அநுமான் செய்த விஞ்சைமகிமையால் உறங்கிக்கிடந்த அரக்கியர்கள் அத்துயிலினின்று நீங்கிக் கண்விழித்தெழுந்து தாம் இருந்த அசோகவனிகை முழுதும் அலங்கோலமாய்க் கிடப்பதையும் பெருவடிவத்தோடு அநுமான் நிற்பதையும் கண்டு, வியப்பும் அச்சமும் ஒருங்கேகொண்டு, அவனைக் குறித்துச் சீதையை வினவின ரென்க. அநுமானது விஞ்சைவினையினுல் அரக்கியர் சோர்ந்து துஞ்சினு ரென்பதைக் கீழ் உருக்காட்டுபடலத்தில் "ஒரு விஞ்சைவினை செய்தான், மாண்டற்குற்றாரெனை வெல்லா மயர்வுற்றார்" என்று கூறியிருப்பதும், திருவடிதொழுத படலத்தில் இராமபிரானிடத்துப் பிராட்டியைக் கண்ட செய்தியை அநுமான் சொல்லுஞ் சமயத்தில் "அவரெலா மென் மந்திரத்துறங்கியிற்றார்" என்று வருவதுங் காண்க. பொன்மலையென்ன நின்ற

புனிதன் - "காஞ்சனாத்ரி கமநீயவிக்ரஹம்···மாருதிம்" என்று அநுமானைப்பற்றிய தியானஸ்லோகத்தில் வருதல் காண்க. அன்னை - 'அம்மா' என்பது போல அச்சமும் வியப்பும் குறிக்கும் இடைச்சொல். மூன்றுமடிக்கு, அரக்கியர் திரிசடையை நோக்கி வினவியதாகப் பொருளுரைத்தல் முதனூலுக்கு ஒவ்வாது. (சஎ)

[சீதாபிராட்டி கூறும் உத்தரம்.]

சஅ. தீயவர்தீயசெய்தறீயவர்தெரியினல்லாற்
றூயவர்துணிதலுண்டேநும்முடைச்சூழலெல்லா
மாயமானெனப்தவம்மானிளையவனரக்கர்செய்த
மாயமென்றுரைக்கவேயும்மெய்யெனமையல்கொண்டேன்.

(இ - ள்.) தீயவர் தீய செய்தல் - கொடுமையையுடைய அரக்கர் கொடிய மாயத்தொழில்களைச் செய்வதை, தீயவர் தெரியின் அல்லால்-(அவர்களைப்போன்ற) கொடியவரே தெரிந்துகொண்டால் கொள்ளலாமேயல்லாமல், நும்முடை சூழல் எல்லாம்-(கொடிய அரக்கவர்க்கத்தவராகிய) உங்களுடைய மாயச்செயல்களையெல்லாம், தூயவர் துணிதல் உண்டே - (என்போன்ற) நல்லவர் நிச்சயமாகத் தெரிந்துகொள்ளுதல் கூடுமோ? [கூடாதென்றபடி]; ஆய மான் எய்த - (முன்பு வனத்தில் மாரீசனென்ற) அரக்கனாகிய மான்வடிவங் கொண்டவன் (என்னெதிரில்) வர, அ மான் - அந்த மானைக்குறித்து, இளையவன் - இலட்சுமணன், 'அரக்கர் செய்த மாயம் - ராக்ஷஸர் செய்த மாயச்செயலாகும் (இது),' என்று—, உரைக்கவேயும் - சொல்லச் செய்தேயும், (அவனது வார்த்தையை நம்பாமல்), மெய் எனா - (அதனை) மெய்யான மானென்றே, மையல் கொண்டேன் - (அதன்மீது) விருப்பங்கொண்டு (இராமனைப்பற்றித்தரும்படி) கேட்டேன்; (எ - று.) - 'என்றனள்' என அடுத்த கவியோடு தொடரும்.

அரக்கருடைய மாயத்தைத் தெரியாமையினால்தான், எனக்கு இந்தக்கதி நேர்ந்தது: தெரியும்வல்லமையைப் பெற்றிருப்பேனாயின், இளையபெருமாள் வார்த்தையை நம்பி இவ்வாறான துன்பத்துக்கு இரையாகாமல் கவலையின்றியிருந்திருப்பேனே; தீய அரக்கவர்க்கத்தாருடைய மாயச்செயல் தீக்குணமுடைய நும்போலியரான அரக்கவர்க்கத்தாராலன்றி, என்போன்ற தூயகுணமுடையவரால் ஒருகாலும் தெளியமுடியாதென்பதாம். எனவே, இப்போது இங்குவந்து பேருருவத்துடன் தோன்றுகின்றவனும், மாயத்தினால் வேற்றுருக் கொண்டுவந்துள்ள அரக்கனைபோலும் என்று கூறியவாறாயிற்று. அநுமானைப்பற்றி உணர்ந்திருந்தும் சீதை மனமார இவ்வாறு பொய்சொன்னது,—உயிர்போகும் நிலை நேரிடுகையிற் பொய்சொல்லலாம்' என்று தருமசாஸ்திரங்கள் கூறுவதனாலாகுமென்பர்: "பொய்ம்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த, நன்மை பயக்குமெனின்" என்ற திருக்குறளும் இங்குக் கருதத்தக்கது. "தீயவர்தீயசெய்தல் தீயவர் தெரியினல்லால் தூயவர் துணிதலுண்டே" என்று பொதுவாகக்கூறியதை, பின்னிரண்டடிகளால் தன்னுடைய வரலாற்றையே எடுத்துக்காட்டாகக்கொண்டு சமர்த்தித்தனளென்க; இது - வேற்றுப்பொருள்வைப்பணியின்பாற்படும். (சஅ)

[அப்போது அநுமான் ஓமமண்டபத்தைக் கண்டு அதனைப் பற்றி யெறியக் கருதுதல்.]

சகூ. என்றனளரக்கிமார்கள்வயிறலைத்திரியல்போகிக்
குன்றமுமுலகும்வானுங்கடல்களுங்குலையவோட
நின்றதோர்சமித்தங்கண்டானீக்குவலிதனையென்னாத்
தன்றடக்கைகணீட்டிப்பற்றினன்றாதையொப்பான்.

(இ-ள்.) என்றனள் - என்று (சீதாபிராட்டி அரக்கியர்க்கு மறுமொழி) கூறினள்; (அதுகேட்டு), அரக்கிமார்கள்—,வயிறு அலைத்து - வயிற்றிலடித்துக் கொண்டு, இரியல் போகி - (பேரச்சத்தினால்) நிலைகுலைந்து, குன்றமும் உலகும் வானும் கடல்களும் குலைய ஓட - மலைகளும் இந்நிலவுலகமும் வானமும் சமுத்திரங்களும் (அப்போது உண்டான அதிர்ச்சியினால்) நடுங்கும்படி ஓடா நிற்க,—தாதை ஒப்பான் - (வலிமையில் தனது) தந்தையான வாயுதேவனை யொப்பவனான அநுமான், நின்றது - (அங்கு) உள்ளதான, ஓர் சமித்தம் - ஒரு ஓம மண்டபத்தை, கண்டான் - பார்த்து, 'இதனை - இம்மண்டபத்தை, நீக்குவல் - ஒழித்துவிடுவேன்,' என்னா - என்று நினைத்து, தன் தடக்கைகள் நீட்டி - தனது பெரியகைகளை நீட்டி, பற்றினன் - (பிடுங்கி யெறிவதற்காக அதனை) உறுதியாகப் பிடித்தனன்; (எ - று.)

சீதாபிராட்டி அநுமானைக்குறித்துத் தனக்கு யாதொன்றுந் தெரியாதென்று சொல்லிவிடவே, அரக்கியர் அவ்வநுமானது தோற்றத்துக்கு மிகவும் அஞ்சி மலைமுதலியன அதிரும்படி நிலைகுலைந்து ஓடினராக, அநுமான் அங்குப் புலப்பட்ட ஓமமண்டபத்தைப் பிடுங்கி யெறியுமாறு கருதி அதனை வலியப் பற்றினனென்பதாம்.

அரக்கியர் சீதாபிராட்டியினிடம் அநுமானைக்குறித்து வினவ, அப்பிராட்டி 'பாம்பின் காலைப் பாம்பே அறியுமாறுபோல, அரக்கர்மாயம் நும்போல்வார்க்குத் தெரியுமேதவிர என்னைப்போன்றவர்கட்குத் தெரியுமோ? தெரியவே தெரியாது' என்று மறுமொழி சொல்லிவிட, அது கேட்ட அரக்கியர் அஞ்சி எல்லாத்திசைகளிலும் ஓடினராக, அவர்களிற் சிலர் அநுமான் வந்து பிராட்டியினுடன் பேசிவிட்டு அசோகவனிகையை யழித்துத் தோரணவாயிலில் தங்கியுள்ள செய்தியை இராவணனிடம் தெரிவிக்க, தோரணத்தின்மீதிருந்த அவ்வநுமானைப் பொருது வெல்லும்படி கிங்கரரென்னும் வீரர்களை அவ்விராவணன் ஏவினனென்று ஸ்ரீவால்மீகத்திற் கூறியுள்ளது. (சகூ)

[இதுமுதல் மூன்றுகவிகள் - கவிக்கூற்று: அம்மண்டபத்தின் வருணனை.]

ருo. கண்கொளவரிதுபொன்னாற்கொளவரிதுதிண்கா
லெண்கொளவரிதிராமனிருள்கொளவரிதுமாக
விண்கொளநிவந்தமேருவென்குறவெம்பியுள்ளம்
புண்கொளவுயர்ந்ததிப்பார்பொறைகொளவரிதுபோலாம்.

(இ - ள்.) (அம்மண்டபம்), கண் கொள அரிது - (ஒளி வேலைப்பாடு பரப்பு என்ற இவற்றை மிகுதியாகவுடைமையால் எவராலும்) கண்கொண்டு

பார்க்கமுடியாது: மீது கால் கொள அரிது - (காவற்சிறப்பினால்) அதனிடத்து (எவராலும்) கால் வைக்கவும் முடியாது; திண் கால் எண்கொள அரிது - (அம்மண்டபத்திலுள்ள) வலிய தூண்களை எண்ணிக் கணக்கிடுதலும் (எவர்க்கும்) அரியது; இராவும் இருள் கொள அரிது - இராப் பொழுதிலும் இருளினால் கொள்ளமுடியாது; மாகம் விண் கொள நிவந்த மேரு - மிகப்பெரிய ஆகாயத்தினிடமெல்லாங் கொள்ளும்படி உயர்ந்துள்ள மேருமலையானது, வெள்குற-நாணம் அடையும்படியும், உள்ளம் வெதும்பி புண் கொள - மனம் நொந்து புண்படும்படியும், உயர்ந்தது—; இ பார் பொறை கொள அரிது போலும் - இந்தப்பூமியும் (அதன்) பெருஞ்சுமையைத் தாங்குவதென்பது முடியாத செயல்போலும்; (எ - று.)

'நாகவிண்' 'பொறைகொளவெளி துபோலாம்' என்பன பாடாந்தரங்கள்.

ருக. பொங்கொளிநெடுநாளீட்டிப்புதியபால்பொழிவதொக்குந்
திங்களைநக்குகின்றவிருளெலாம்வாரித்தின்ற
வங்கைபத்திரட்டியான்றனாணையாலழகுமானப்
பங்கயத்தொருவன்றானேபசும்பொன்னாற்படைத்ததம்மா.

(இ - ள்.) (அன்றியும், அம்மண்டபம்),—நெடு நாள் - பலநாள்கள் [பதினைந்து நாள்கள்], பொங்கு ஒளி - மேன்மேல் விஞ்சிவருகின்ற பிரகாசத்தை, ஈட்டி - சம்பாதித்து, புதிய பால் பொழிவது ஒக்கும் - புதியபாலைச் சொரிவது போன்ற [நிலாவை வீசுகின்ற], திங்களை - சந்திரனையும், நக்குகின்ற - தீண்டுவதான, இருள் எலாம் - (களங்கமெனப்படுகின்ற) இருட்டு முழுவதையும், வாரி தின்ன - அள்ளித்தின்னும்படி [போக்கும்படி], அம் கை பத்து இரட்டியான் தன் ஆணையால் - அழகிய இருபது கைகளையுடையவனான இராவணனது கட்டளையினால், அழகு மான - அழகு பொருந்தும்படி, பங்கயத்து ஒருவன் - (திருமாலின் நாபீ) கமலத்தை வாழிடமாகவுடைய பிரமதேவன், தானே - (வேறொருவரையேவாமல்) சுயமாகவே, பசும் பொனால் படைத்தது - பசும் பொன்னினாற் செய்ததாகும்! (எ-று.)—அம்மா - வியப்பிடைச்சொல்: அம்மண்டபத்தின் ஒளிச்சிறப்பை வியந்தவாறு.

சுக்கிலபட்சத்துப் பிரதமைமுதல் தினந்தோறும் ஒவ்வொரு கலையாகப் பூர்ணிமையளவும் வளர்ந்து ஒளிபெற்று நிலவை வீசுவதனால், பூர்ண சந்திரனை 'பொங்கொளி நெடுநாளீட்டிப் புதியபால் பொழிவதொக்குந் திங்கள்' என்றார். அப்படிப்பட்ட சந்திரனிடத்தும் நீங்காதுபற்றியுள்ள களங்கமாகிய இருளையெல்லாம் தன்ஒளிமிகுதியாற் போக்குவது என அம்மண்டபத்தின் ஒளிமிகுதி கூறியவாறு. சந்திரனிடத்துள்ள களங்கத்தைப் போக்குந் தன்மை அம்மண்டபத்திற்கு இல்லாதிருக்கவும், உள்ளதாகக்கூறியது - தொடர்புயர்வு நவிற்சியணியின்பாற் படும். சந்திரனுக்கும் போக்குதற்குஅரிய செறிந்த இருளையெல்லாம் போக்குவது இம்மண்டபமென முதலிரண்டடிகட்குக் கருத்துக் கூறுவாருமுளர். 'பொங்கொளி நெடுநாளீட்டி' என்றும், 'வாரித்தின்ற' என்றும் :பிரதிபேதம்.

(ருக)

ருஉ. தூணெலாஞ்சுடருங்காசுசுற்றெலாமுத்தஞ்சொன்னம்
பேணலாமணியின்பத்திபிடரெலாமொளிகள்விம்மச்
சேணெலாம்விரியுங்கற்றைச்சேயொளிச்செல்வற்கேயும்
பூணலாமெம்மனோராற்புகழலாம்புதுமைத்தன்றே.

(இ-ள்.) தூண் எலாம் - (அம்மண்டபத்தின்) தூண்களெல்லாம், சுடரும் காசு - ஒளிவிளங்குகின்ற இரத்தினத்தினு லியன்றவை; சுற்று எலாம் - (அதன்) சுற்றுப்பக்கமெல்லாம், முத்தம் சொன்னம் - முத்துக்களாலும் சொர்ணத்தாலும் இயன்றவை; பிடர் எலாம் - பின்பக்கமெல்லாம், பேணல் ஆம் மணியின் பத்தி - விரும்புதற்கு இடமான இரத்தினங்களின் வரிசையா லியன்றவை; (இவ்வாறு), ஒளிகள் விம்ம - பிரகாசங்கள் மிகுதலால், (அம் மண்டபமானது), சேண் எலாம் விரியும் கற்றை சேய் ஒளி செல்வற்கு ஏஉம் - ஆகாய முழுதும் பரவுகின்ற தொகுதியான சிவந்தஒளியையே செல்வமாகக்கொண்ட சூரியனுக்கும், பூணல் ஆம் - ஆபரணமாக அணிதற்கு உரியதாம்; (அங்ஙனஞ் சிறப்புற்று இருத்தலால்),—எம்அனோரால் - எம்மைப்போன்றவர்களால், புகழல் ஆம் புதுமைத்து அன்று - புகழ்ந்து சொல்லுதற்கு உரிய புதுமையை யுடையதன்று; [எம்மைப்போன்றவரால் அம்மண்டபத்தை வியந்து கூறுதல் இயலாதென்றபடி]; (எ - று.)

பலவகை இரத்தினங்களாலியன்ற அம்மண்டபம் பேரொளிவடிவான சூரியனுக்கும் விளக்கத்தைத் தரும் ஓராபரணமாகுந் தன்மையதாதலால், அதன் சிறப்பை வருணித்துச் சொல்ல முடியாதென்றவாறு. 'பேணலாமணியின் பித்திப் பிடரெலாம்' என்றும் பாடமுண்டு: பித்தி - சுவர். (ருஉ)

[இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்: அநுமான் அம்மண்டபத்தை யெடுத்து இலங்கையின்மீது எறிந்து அழித்தல்.]

ருங. வெள்ளியங்கிரியைப்பண்டவ்வெந்தொழிலரக்கன்வேரோ
டள்ளினனென்னக்கேட்டானத்தொழிற்கிழிவுதோன்றப்
புள்ளிமாமேருவென்னும்பொன்மலையெடுப்பான்போல
வள்ளுகிர்த்தடக்கைதன்னான்மண்ணின்றும்வாங்கியண்ணல்.

(இ - ள்.) பண்டு - முற்காலத்தில், வெள்ளி அம் கிரியை - அழகிய வெள்ளிமலையாகிய கைலாசத்தை, அ வெம் தொழில் அரக்கன் - கொடுந்தொழிலையுடைய அவ்விராவணன், வேரோடு அள்ளினன் என்ன - வேரோடு பறித்தெடுத்தனனென்று (உலகத்தார்) கூற, கேட்டான் - கேள்விப்பட்டவனாய்,— அண்ணல் - பெருமையிற் சிறந்தவனாகிய அநுமான்,—அ தொழிற்கு இழிவு தோன்ற - அந்தச்செயலுக்குக் குறைவுஉண்டாகும்படி, மா மேரு என்னும் புள்ளி பொன் மலை எடுப்பான் போல - மஹாமேருவென்று சொல்லப்படும் பெருமைபெற்ற பொன்மலையைப் பெயர்த்தெடுப்பவன் போல, வள் உகிர் தட கைதன்னால் - கூரிய நகங்களையுடைய (தனது) பெரிய கைகளால், மண்ணின்றும் - தரையிலிருந்து, வாங்கி - பெயர்த்தெடுத்து, (எ - று.)—'விட்டனனிலங்கைதன்மேல்' என அடுத்த கவியோடு தொடரும்.

அநுமான் அம்மண்டபத்தைப் பெயர்த்தெடுத்தது - வெள்ளிமலையாகிய கைலாஸத்தை இராவணன் பெயர்த்தெடுத்ததைக் கேள்வியுற்று, அத்தொழிற்கு இழிவுதோன்றுமாறு அதனினும் பெரியதும் சிறந்ததுமாகிய மகாமேருவென்னும் பொன்மலையைப் பெயர்த்தெடுத்ததுபோலுமென வருணித்தார்: தற்குறிப்பேற்றவணி. இதனால், அம்மண்டபத்தின் பெருந்தோற்றமும் சிறப்பும் பெறப்படும். 'வள்ளுகிர்த்தடக்கை நீட்டி' என்றும், 'தொழிற்கழிவுதோன்ற' என்றும் பாடமுண்டு. (ருங)

ருச. விட்டனனிலங்கைதன்மேல்விண்ணுறவிரிந்தமாடம்
பட்டனபொடிகளானபகுத்தனபாங்குநின்ற
சுட்டனபொறிகள்பின்னைத்துளங்கினரரக்கர்தாமுங்
கெட்டனர்வீரரம்மாபிழைப்பரோகேடுசூழ்ந்தார்.

(இ - ள்.) இலங்கைதன்மேல் விட்டனன் - இலங்காபுரியின்மீது எறிந்தான்; (அதனால்), விண் உற விரிந்த மாடம் - வானத்தை யளாவும்படி பரவியிருந்த வீடுகள், பட்டன - மோதப்பட்டனவாய், பகுத்தன - பிளவுபட்டு, பொடிகள் ஆன - பொடிகளாய்விட்டன; (மண்டபம் மாடங்களோடு மோதும்போது தோன்றிய), பொறிகள் - நெருப்புப்பொறிகள், பாங்கு நின்ற சுட்டன - பக்கங்களிலுள்ள பொருள்களையெல்லாம் சுட்டெரித்தன; பின்னை - பின்பு, வீரர் அரக்கர்தாமும் - (எதற்குங்கலங்காத) ராக்ஷஸ வீரர்களும், துளங்கினர் - அஞ்சி நடுங்கினவராய், கெட்டனர் - அழிந்தொழிந்தார்கள்; அம்மா - ஆச்சரியம்! கேடு சூழ்ந்தார் - (பிறர்க்குத்) தீங்கு செய்வதையே எப்போதுஞ் சிந்திப்பவரான தீயோர், பிழைப்பரோ - (அந்தத்தீவினைப்பயனை யனுபவியாது) தப்புவார்களோ? (எ - று.)

அனுமானெறிந்த அவ்வோமமண்டபத்தினால் இலங்கையிலுள்ள மாடமாளிகைகள் தகர்ந்து பொடிகளாக, அப்போது தோன்றிய நெருப்புப்பொறிகளாற் பக்கங்களிலுள்ள பொருள்கள்யாவும் சுடப்பட்டொழிய, அங்குள்ள ராக்ஷஸவீரர்களும் அஞ்சி நடுங்கிக் கெட்டன ரென்பதாம். அரக்கர் கெட்டொழிந்தன ரென்ற சிறப்புப்பொருளை 'கேடுசூழ்ந்தார் பிழைப்பரோ' என்ற பொதுப்பொருள் கொண்டு விளக்கியது - வேற்றுப்பொருள் வைப்பணியின்பாற் படும். பிழைப்பரோ - உயிர்தப்புவரோ எனினுமாம். அம்மா என்ற வியப்பிடைச்சொல் - அரக்கர்க்கும் இவ்வாறு ஆபத்துக்காலம் நேர்ந்தது குறித்து வியந்தமையை விளக்கும். (ருச)

[பருவத்தேவர் அஞ்சியோடி இராவணனைச் சார்தல்.]

ருரு. நீரிடுதுகிலரச்சர்நெருப்பிடுநெஞ்சர்நெக்குப்
பீரிடுமுருவர்தெற்றிப்பிணங்கிடுதாளர்பேழ்வா
யூரிடுபூசலாரவுளைத்தனரோடியுற்றார்
பாரிடுபழுவச்சோலைபாரிக்கும்பருவத்தேவர்.

(இ-ள்.) பார் இடு பழுவம் சோலை பாலிக்கும் பருவம் தேவர் - லங்கா பூமியில் வைத்து வளர்த்துள்ள பெருஞ்சோலையை [அசோகவனத்தைப்] பாது காக்கின்ற ஆறுபருவங்கட்கு முரிய தேவர்கள்,—நீர் இடு துகிலர் [துகில் இடு நீரர்]—உடுத்த வஸ்திரத்தில்தானே சிறுநீர் விட்டுக் கொண்டவர்களும், அச்சம் செருடபு இடு நெஞ்சர் - பயமாகிய நெருப்பு மூளப்பெற்ற மனமுடையவர்களும், நெக்கு பீரிடும் உருவர் - (அநுமான் மரங்களைப் பிடுங்குகையில் தம் மீது மரக்கிளை முதலியனபடுதலால்) பிளந்து இரத்தம்வடிகின்ற உடம்பை யுடையவர்களும், தெற்றி பிணங்கிடு தாளர் - (நடைதாமல்) பின்னிக்கொண்டு (ஒன்றோடொன்று) மோதுகின்ற கால்களையுடையவர்களும். பேழ் வாய் இடு பூசல் ஊர் ஆர உளைத்தனர் - (தமது) திறந்தவாய்களினாற் செய்கின்ற பேரார வாரம் ஊரில் நிறையும்படி கூவியிடுபவர்களுமாகி, ஓடி உற்றார் - ஓடி (இராவணனைச்) சமீபித்தார்கள்; (எ - று.)

ஆறு இருதுக்களுக்கு முரியவர்களாய் அந்த அசோகவனத்தைப் பாது காத்துக்கொண்டிருந்த தேவர்கள், பயாக்கினியினால் மனத்திலே மூள, உடுத்த ஆடையில் சிறுநீர் விட்டபடி கால்கள் தடுமாறி முட்டித்தள்ள அலறி ஊளையிட்ட வண்ணம் ஓடி இராவணனுள்ள இடத்தைச் சேர்ந்தனரென்பதாம். இவ்வாறு அவர்கள் ஓடிச் சென்றது இராவணனுக்கு அநுமானது செயலையுணர்த்துதற்காக என்பது. மேலே பேரப்படும். பருவத்தேவர் - வேனில் முதலிய ஆறு பருவங்கட்கும் உரிய அதிதேவதைகளான தேவர்கள். இத்தேவர்கள் இராவணன் எவ்வெப்போது எத்தன்மையதான பருவத்தை விரும்புகின்றானோ, அவ்வப் பருவத்தை அவன் விருப்பத்தின்படி அவ்வப்போது உண்டாக்குவதன் பொருட்டு அந்தச்சோலையைப் பாதுகாத்த வண்ணம் அங்குத்தானே வாழ்கின்றனரென்க. இனி, எப்போதும் ஆறு இருதுக்களுக்கும் உரிய மலர் காய் கனி முதலியவற்றைத் தரும்படி ஆறு இருதுக்களுக்கு உரிய தேவதைகளும், இராவணனிடத்து அச்சத்தினால் அங்கு வாழ்கின்றனரென்னலுமாம். இராவணன் இருதுக்களைத் தன் விருப்பத்தின்படி ஆட்டுவிக்கும் திறலுடையவனென்பதை, மாரீசன் வதைப்படலத்துங் காணலாம். 'ஆரவுழைத் தனரோடியுற்றார்', 'பல்வச்சோலை' என்பன பாடாந்தரங்கள். (ருரு)

[இதுவும், அடுத்த கவியும் - சோலைகாவலர் அநுமான்செய்தியை இராவணனிடத்து முறையிடுதல்.]

ருசு. அரிபடுசீற்றத்தான்றனருகுசென்றடியின்வீழ்ந்தார்
கரிபடுதிசையினின்றகாவலைக்காவல்கொண்டோர்
கிரிபடுகுவவுத்திண்டோட்குரக்கினாற்கிழிக்கப்பட்ட
வெரிபடுதுகிலினெய்த்தினிற்றதுயரகத்தினின்றார்.

(இ - ள்.) அரி படு சீற்றத்தான்தன் அருகு சென்று - அரிந்து போகடும் படியான [மிக்க] கோபத்தைக்கொண்ட இராவணனுடைய சமீபத்திற் போய், அடியின் வீழ்ந்தார் - (அவனது) பாதங்களில் விழுந்து, (அவனைநோக்கி),

'கரி படு திசையின் நீண்ட காவலா - திக்கஜங்கள் வாழ்கின்ற திசைகளின் எல்லை வரையிலும் தடையின்றிச் செல்லுகின்ற காவலையுடைய அரசனே! காவல் ஆற்றேம் - (இப்போது சோலையைப்) பாதுகாக்கும் வல்லமையற்றவர்களானேம்; கிரி படு குவவு திண் தோள் குரங்கு - மலைபோலத் திரண்ட வலிய தோள்களையுடைய ஒரு குரங்கு, இடை கிழித்து வீச - சோலையினிடையிற் புகுந்து (மரங்களை) முறித்து வீசுதலினால், கடி கா - (நாங்கள்) பாதுகாத்துவந்த சோலை, எரி படு துகிலின் - நெருப்புப்பட்ட ஆடை போல, நொய்தின் இற்றது - விரைவில் அழிந்திட்டது,' என்றார் - என்று கூறினார்கள், (அத்தேவர்கள்); (எ - று.)

அரிபடுசீற்றம் - "அரிசினத்தால்" என்றார் பெரியாரும்; இனி, சிங்கம் போன்ற கோப மெனினுமாம். கிரிபடு குரங்கு என்று இயைத்து, மலையில் வாழுந் தன்மையுள்ள குரங்கு எனினுமாம். நெருப்பிற்பட்ட துகில், விரைவில் அழிதற்கு உவமை. நொய்தின் - இலேசாக எனினுமாம். (டுசு)

டுஎ. சொல்லிட வெளியதன்றாற்சோலையைக்காலிற்கையிற்
புல்லொடுதுகளுமின்றிப்பொடிபடநூறிப்பொன்னால்
வில்லிடுவோமந்தன்னைவேரொடுவாங்கிவீசச்
சில்லிடமொழியத்தெய்வவிலங்கையுஞ்சிதைந்ததென்றார்.

(இ - ள்.) (பின்னும் அவர்கள் அவ்விராவணனை நோக்கி) 'சொல்லிட எளியது அன்று - (அந்தக்குரங்கு செய்த அநர்த்தச்செயல் எங்களால்) சொல்லுதற்கு எளியதல்ல; சோலையை - அசோகவனத்தை, காலின் - கால்களாலும், கையின் - கைகளாலும், புல்லொடு துகளும் இன்றி - புற்களும் (அவற்றின் மீது ஒட்டிக்கொண்டிருக்குந்) தூசியுங்கூட இராமல், பொடிபட நூறி - பொடியாம்படிஅழித்து, பொன்னால் வில்இடு ஓமம் தன்னை வேரொடு வாங்கி வீச - பொன்னினாற் கட்டப்பட்டிருத்தலால் ஒளிவீசுகின்ற ஓமமண்டபத்தை அடியோடு பறித்து எறிந்ததனால், தெய்வம் இலங்கையும் - தெய்வத் தன்மையையுடைய இலங்காபட்டணமும், சில் இடம் ஒழிய - மிகச்சிறிய பாகம் மாத்திரம் அழிபடாமல் நிற்க, சிதைந்தது - (பெரும்பாலும்) அழிந்துவிட்டது,' என்றார்—; (எ - று.)

அரக்கர்கட்கு வாழிடமான இலங்காபுரியை 'தெய்வவிலங்கை' என்றார்; அரக்கரும் பதினெண்தேவகணங்களுள் ஒருவராதல் காண்க. (டுஎ)

[அது கேட்டு இராவணன் பரிகசித்துக் கூறுதல்.]

டுஅ. ஆடகத்தருவின்சோலைபொடிபடுத்தரக்கர்காக்குந்
தேடருமோமம்வாங்கியிலங்கையுஞ்சிதைத்ததம்மா
கோடரமொன்றேநன்றிதிராக்கதர்கொற்றஞ்சொற்றன்
மூடருமொழியாரென்னமன்னனுமுறுவல்செய்தான்.

(இ - ள்.) (வந்த அந்தப்பருவத்தேவர்களை நோக்கி இராவணன்),—'கோடரம் ஒன்றே - ஒரு குரங்குதானே, ஆடகம் தருவின்சோலை - பொன்மயமான விருட்சங்களையுடைய சோலையை, பொடி படுத்து - நீறாக்கி, அரக்கர் காக்கும் - ராக்ஷஸர்கள் பாதுகாத்து வருகின்ற, தேடு அரும் ஓமம் - எங்குத் தேடினும் காணுதற்கு அரிய [மிக அபூர்வமான] ஓமமண்டபத்தை, வாங்கி - வேரோடு பிடுங்கி, இலங்கையும் சிதைத்தது — இலங்கா நகரத்தையும் அழித்துவிட்டது; அம்மா - ஆச்சரியம்! இது - இவ்வாறு கூறியதான, இராக்கதர் கொற்றம்-இராக்கதர்களுடைய வெற்றி, நன்று - மிகவும் நன்றாயிருந்தது! சொற்றல் - (இப்படிப்பட்ட) பேச்சை, மூடரும் மொழியார் - (என்னெதிரில்) அறிவீனருஞ் சொல்லமாட்டார்கள்,' என்ன - என்று, மன்னனும் - ராக்ஷஸராஜனான ராவணனும், முறுவல் செய்தான் - பரிகாசமாகச் சிரித்தான்; (எ — று.)

முதலிரண்டடிகளால், பருவத்தேவர்கள் கூறியதை இராவணன் அநுவதித்து, இராக்கதர்க்கு நேர்ந்ததாகக் கூறிய தோல்வியைக்குறித்துப் பிறகுறிப்புவகையாகக் கொண்டாடிக் கூறியபின் அத்தேவர்களை நோக்கி'உங்களைப்போல என்னெதிரில் இராக்கதர்க்குத் தோல்வி நிகழ்ந்ததென்று இப்படிப் பொய்யாகப் பேசுவார் எவருமில்லை' என்று அத்தேவர்களின் பேச்சை நம்பாமல் அவர்களை யதட்டினனென்க. சொற்றல் - தொழிற்பெயர்; சொல்லியது என்க. (௯அ)

[பருவத்தேவர் அனுமான்திறத்தைப் பின்னும் வியந்து கூறுதல்.]

ருகூ. தேவர்கள்பின்னுமன்னவதனுருச்சுமக்குந்திண்மைப்
பூவலயத்தையன்றோபுகழ்வதுபுலவர்போற்று
மூவரினொருவனென்றுபுகல்கினுமுடிவிலாத
வேயமக்குரங்கையையகாணுதியின்னேயென்றார்.

(இ - ள்.) தேவர்கள் - பருவத் தேவர்கள், பின்னும்—,(இராவணனை நோக்கி), 'மன்ன - அரசனே! அதன் உரு - அந்தக்குரங்கின் உடம்பை, சுமக்கும் - தாங்கவல்ல, திண்மை - வலிமையையுடைய, பூவலயத்தை யன்றோ - பூமண்டலத்தையல்லவா, புகழ்வது - புகழவேண்டுவது; புலவர் போற்றும் - தேவர்கள் வாழ்த்துகின்ற, மூவரின்-திரிமூர்த்திகளிலே, ஒருவன்-ஒருவனுவன் (இவன்), என்று புகல்கினும் - என்று கூறினாலும், முடிவு இலாத(து) - (அக்குரங்கின்) பெருமை சொல்லி முடியாததாகும்; ஐய - ஐயனே! அ குரங்கை - அந்தக் குரங்கின் வலிமையைக்குறித்து, ஏவம் - (நாங்கள் கூறிய) இப்படித்தான் (என்பதை), இன்னே - இப்பொழுதே, காணுதி - காண்பாய்,' என்றார் - என்று கூறினார்கள்; (எ - று.)

'பெருவலிமைபெற்ற அந்தக்குரங்கைச் சுமப்பதனால் இந்தப்பூமியையே புகழவேண்டும்; அந்தக்குரங்கின் வலிமையைக் காணுமளவில் திரிமூர்த்திகளில் ஒருவனே இவ்வாறு குரங்கின் வடிவுகொண்டு வந்துள்ளா னென்று சொன்னாலும், போதாது; இப்படி அந்தக்குரங்கு பெருவலிமைபடைத்துள்ள

தென்பதை இனி நீ காண்பாய்' என்று தம்மைப் பரிகசித்துக்கூறிய இராவணனை நோக்கி அந்தப் பருவத்தேவர் கூறினரென்பதாம். புலவர்போற்றும் - வித்துவான்கள் கொண்டாடுகின்ற எனினுமாம். ஏவம் - இப்படித்தான் என்று பொருள்படும் வடமொழி யிடைச்சொல். இனி, ஏவமென்பதைத் துன்பமென்று பொருளுள்ள எவ்வமென்பதன் சிதைவு எனக்கொண்டு, முடிவு இலாத ஏவம் என இயைத்து - (இந்தக்குரங்கைத் திரிமூர்த்திகளில் ஒருவனென்று சொல்லுவது) முடிவில்லாத துன்பத்திற்கே காரணம் [பொருத்தமற்றதாகும்] என்று உரைப்பாருமுளர். அன்றி, 'ஏ' என்னும் வினாவிடைச் சொற்பகுதியினடியாகப் பிறந்த தன்மைப்பன்மைக்குறிப்புமுற்றாகக்கொண்டு - (அவனைப் புகழ்ந்துகூறுதற்கு நாங்கள்) எத்தன்மையுடையேம்? [எங்களால் அவன் வலிமையை முடியப்புகழ்ந்து கூறுதல் இயலாது] என்று உரைத்தலும் ஒன்று. 'மூவருமொன்ருய்நின்று புகலினு முடிவிலாத, ஏவமாமலைக்குரங்கைக் காணுதியின்னமென்றார்' என்று பிரதிபேதம். (௫௯)

[அநுமானது ஆரவாரம்.]

௬0. மண்டலங் கிழிந்த வாயின் மறிகடன் மோழை மண்ட
வெண்டிசை சுமந்த மாவுந் தேவரு மிரியல் போகத்
தொண்டைவா யரக்கி மார்கள் சூல்வயி றுடைந்து சோர
வண்டமும் பிளந்து விண்ட தாமென வனுமனார்த்தான்.

(இ - ள்.) மண் தலம் கிழிந்த வாயில் மறி கடல் மோழை மண்ட - (அதிர்ச்சியினால்) பூமியினது கிழிபட்ட இடத்தின் வழியாக அலைமடங்கியடிக்கிற கடலின் நீர் மோழையாகப் பாய்ந்து நிறையவும், எண் திசை சுமந்த மாவும் தேவரும் இரியல் போக - எட்டுத்திக்குக்களையுந் தாங்குகின்ற திக்கஜங்களும் தேவர்களும் (அஞ்சி) நிலைகெட்டோடவும்,—தொண்டை வாய் அரக்கிமார்கள் வயிறு சூல் உடைந்து சோர - கொவ்வைக்கனிபோற் சிவந்த அதரத்தையுடைய அரக்கியர்கள் தமது வயிற்றிலுள்ள கருச் சிதைந்து தளரவும், அண்டமும் பிளந்து விண்டது ஆம் என - இந்தவுலகவுருண்டையே வெடித்துப் பிளவுபட்ட தென்னும்படி, அநுமன்—, ஆர்த்தான - ஆரவாரஞ் செய்தான்; (எ - று.)

அரக்கர் தான் இருக்குமிடத்தையறிந்து தன்னோடு பொரவரவேணுமென்ற கருத்தினால் அநுமான் ஆரவாரித்தனனென்க. 'இவ்வுலகவுருண்டையே பிளவு பட்டதனாலாகிய ஓசையோ!' என்று கேட்பவர் நினைக்கும்படி அநுமான் பேராரவாரஞ் செய்ததனால், பூமி கிழிந்து அவ்வாய்வழியாகக் கடல் நீர் மோழைபாய, அஷ்டதிக்கஜங்களும் கலங்கி நிலைகெட, கர்ப்பிணிகளாகிய அரக்கியர் தம் கருச் சிதையப் பெற்றனரென்க. 'மண்டலங் கிழிந்ததென்ன' என்றும் பாடம். (௬0)

பொழிலிறுத்தபடலம் முற்றிற்று.

———

# எட்டாவது

# கிங்கரர்வதைப்படலம்.

அநுமான் கிங்கரரென்னும் அரக்கரைக் கொன்ற செய்தியைக் கூறும் படலமென்பது, பொருள். 'கிங்கிலியர் வதைப்படலம்' என்று சில பிரதிகளிற் காணப்படுகின்றது.

[அநுமான்செய்த ஆரவாரம் இராவணனுடைய காதில் விழுதல்.]

க. அருவரை முழையின் முட்டு மசனியி னிடிப்பு மாழி
வெருவரு முழக்கு மீசன் வில்லிறு மொலியு மென்னக்
குருமணி மகுட கோடி முடித்தலை குலுங்கும் வண்ண
மிருபது செவியி னூடு நுழைந்தது வெழுந்த வோசை.

(இ - ள்.) அரு வரை முழையில் முட்டும் - பெரிய மலையின் குகையிலே போய்த்தாக்குகின்ற, அசனியின் இடிப்பும் - இடியின் முழக்கமும், வெருவரு ஆழி முழக்கும் - (பிரளயகாலத்தில்) அச்சமுண்டாம்படி தோன்றுகின்ற கடலின்ஓசையும், ஈசன் வில் இறும் ஒலியும் - சிவபிரானது வில் ஒடிபட்டதனால் தோன்றிய ஓசையும், என்ன - ஒக்கும்படி, குரு மணி மகுடம் கோடி முடி தலை குலுங்கும் வண்ணம் - பருத்த மணிகளழுத்திய (பத்துக்) கிரீடங்களை வரிசையாக அணிந்த மயிர்முடியையுடைய பத்துத் தலைகளும் அசையும்படி, எழுந்த - (எங்கும்) பரந்தெழுந்த, ஓசை - (அநுமானது) அந்தக்கர்ஜ்ஜனையோசை, இருபது செவியினூடும் - (இராவணனது) இருபதுகாதுகளிலும், நுழைந்தது—; (எ - று.)

கிங்கரரென்னும் பெயர்படைத்த எண்பதினாயிரவரான இராக்கதர் பல்வகைப்படைக்கலங்கள்கொண்டு அநுமானைத் தாக்கி யெதிர்த்து நின்றபோது, அநுமான் "மகாபலவானான இராமர் வெல்கிறார், மகாபலவானான இலட்சுமணரும் வெல்கிறார்; இராகவரால் பாதுகாக்கப்பட்டுள்ள சுக்கிரீவ மகாராஜா வெல்கிறார், கோசல தேசத்துக்குத் தலைவராகி எளிதில் தொழில் செய்யவல்ல இராமருக்கு அடியவன் நான்; அநுமானென்பது என்பெயர்; பகைவர் சேனைகளை அறத்தொலைக்க வல்லேன்; மாருதனது புதல்வன் யான். ஆயிரக்கணக்கான மரங்களையும் கற்களையும் எறிந்து பொருகிற என்னுடனே போரில் ஆயிரம் இராவணர்களாலும் எதிர்நிற்க முடியாது; இவ்விலங்காபுரியை உபத்திரவித்துச் சீதாபிராட்டியைச் சேவித்து எல்லாவரக்கரும் பார்த்துக்கொண்டிருக்கையில்தானே வந்தகாரியம் கைகூடப்பெற்றவனாய் மீண்டு செல்லப் போகின்றேன்" என்று வாலினாற் பூமியிற்புடைத்த வண்ணம் பெருஞ்சத்தமுண்டாகும்படி கர்ஜ்ஜித்தா னென்று ஸ்ரீவால்மீகி பகவான் கூறியுள்ளார்.

அனுமானது கர்ஜ்ஜனையொலிக்கு - மலைக்குகையில் தாக்கும் இடியினோசையும், பிரளயகாலத்திற் பொங்குங் கடலினொலியும், இராமபிரான் முறித்த சிவதனுசினொலியும் உவமையாம். அவ்வொலி இராவணனும் அச்சத்தினால் நிலைகுலுங்கும்படி இருந்ததென்க. நுழைந்ததல்வெழுந்தவோசை - பிராசம்.

இதுமுதல் பதினைந்து கவிகள் - கீழ்ப்படலத்து நாற்பதாங்கவிமுதல் வந்த விருத்தம் போன்றவை. (க)

[அநுமானைப்பற்றிக்கோணருமாறு இராவணன் பலரை யேவுதல்.]

௨. புல்லியமுறுவறோன்றப்பொறுமையுஞ்சிறிதுபொங்க
வெல்லையிலாற்றன்மாக்களெண்ணிறந்தாரையேவி
வல்லையினகலாவண்ணம்வானையும்வழியைமாற்றிக்
கொல்லலீர்குரங்கைநொய்திற்பற்றுதிர்கொணர்திரென்றான்.

(இ - ள்.) (இராவணன்),— புல்லிய முறுவல் தோன்ற - புன்சிரிப்பு உண்டாகவும், பொறுமையும் சிறிது பொங்க - பொறுமைக்குணம் சிறிது தோன்றவும், எல்லை இல் ஆற்றல் மாக்கள் எண் இறந்தாரை ஏவி - கணக்கில்லாத வலிமையையுடைய அநேகவீரர்களை ஏவியனுப்பி, 'அகலா வண்ணம் - (அக்குரங்கு) தப்பிப் போகாதபடி, வான் வழியையும் மாற்றி - ஆகாசமார்க்கத்தையும் தடுத்துக்கொண்டு நின்று, கொல்லலீர் - கொல்லாதவர்களாய், குரங்கை—, வல்லையின் - விரைவிலே, நொய்தின் - இலேசாய், பற்றுதிர் கொணர்திர் - பிடித்துக்கொண்டுவாருங்கள்,' என்றான் - என்று கட்டளையிட்டான்; (எ - று.)

குரங்கு என்ற அலட்சியத்தாற் பரிகாசச் சிரிப்பும், அரக்கரூரிலும் இவ்வாறு பரிபவத்தை விளைத்தமையாற் பொறுமையும் அநுமான் திறத்து இராவணனுக்கு நிகழ்ந்தன வென்க. அநுமான் மாற்றானிடத்தினின்று இலங்கையின் செய்தியை யறிந்து செல்ல வந்த ஒற்றனாதலால், அவ்வாறு வந்த ஒற்றனைக் கொல்லுதல் முறைமையன்று என்பது பற்றியும், அவன் மூலமாகத் தன் மாற்றான் செய்தியை உணரக்கருதியும் 'கொல்லலீர் குரங்கை நொய்திற் பற்றுதிர் கொணர்திர்' என்று கிங்கரர்க்கு இராவணன் கட்டளையிடலாயினன். மாக்கள் - அரக்கவீரர். (௨)

[அநுமானைப் பிடித்துக்கோணருமாறு பலஅரக்கர் புறப்படுதல்.]

௩. சூலம்வாண்முசலங்கூர்வேறோமரந்தண்டுபிண்டி
பாலமேமுதலாவுள்ளபடைக்கலம்பரித்தகைய
ராலமேயனையமெய்யரகலிடமழிவுசெய்யுங்
காலமேலெழுந்தமூரிக்கடலெனக்கடிதுசெல்வார்.

(இ - ள்.) சூலம் - சூலாயுதமும், வாள் - வாளாயுதமும், முசலம் - உலக்கையும், கூர் வேல் - கூரிய வேலாயுதமும், தோமரம் - தோமரமென்னும் ஆயுதமும், தண்டு - தண்டாயுதமும், பிண்டிபாலமே - பிண்டி

பாலமும், முதல் ஆ உள்ள - முதலான, படைக்கலம் - ஆயுதங்களை, பரித்த - தாங்கிய, கையர் - கையையுடையவர்களும், ஆலமே அனைய மெய்யர் - விஷத்தை யொத்துக் கறுத்த உடம்பையுடையவர்களுமான பல அரக்கர்கள்,—அகல் இடம் அழிவு செய்யும் காலம் - பூமிப்பரப்பு முழுவதை யும் அழித்துவிடுதலையுடைய பிரளயகாலத்தில், மேல் எழுந்த - பொங்கி கிளம்பின, மூரி கடல் என - வலிய கடல்போல, கடிது செல்வார் - (அந்த அநுமானைப் பிடித்து இராவணனிடம் கொணரும்பொருட்டு) விரைந்து செல் வாராயினர்; (எ - று.)

'படைத்தகையர்' என்று பாடாந்தரம். (ங)

[இதுமுதல் நான்கு கவிகள் - ஒருதொடர்; அவ்வரக்கரின் வருணனை.]

ச. நானிலமதனினுண்டுபோரெனநவிலினச்சொற்
றேனினுங்களிப்புச்செய்யுஞ்சிந்தையர்தெரிந்துமென்னிற்
கானினும்பெரியரோசைகடலினும்பெரியர்கீர்த்தி
வானினும்பெரியர்மேனிமலையினும்பெரியர்மாதோ.

(இ - ள்.) (அவ்வரக்கர்),—நானிலம் அதனின் - இந்நிலவுலகத்தில், போர் உண்டு என நவிலின் - போர் நிகழுமென்று சொன்ன மாத்திரத்தில், அ சொல் தேனினும் களிப்பு செய்யும் சிந்தையர் - அந்தச்சொல் மதுவை யுண்டால் தோன்றும் களிப்பைவிட மிக்க களிப்பைச் செய்கின்ற மனத்தை யுடையவர்கள்; தெரிந்தும் என்னின் - (அவர்களின் தன்மையைத்) தெரிந்து அறிவிப்போமென்றால்,—கானினும் பெரியர் - (நெருக்கம் பரப்பு முதலிய வற்றால்) காட்டைக் காட்டிலும் பெரியவர்; ஓசை கடலினும் பெரியர் - (அவர் கள் செய்யும்) ஆரவாரத்தாற் கடலினும் விஞ்சினவர்; கீர்த்தி வானினும் பெரியர் - (தமது) புகழால் ஆகாயத்தைக்காட்டிலும் பெரியவர்; மேனி மலை யினும் பெரியர் - உடம்பின் தோற்றத்தினால் மலையைக்காட்டிலும் பெரியவர்; (எ - று.)—மாது, ஓ - ஈற்றசைகள்.

அவ்வரக்கரின் பரப்பு முதலியவற்றிற்கு உலகத்திற் பெரும் பொருள் களாகிய காடு முதலியனவே உவமையாவதல்லது வேறு உவமைப்பொருள் இல்லை யென்க. அரக்கர் ஓசை பெரியர், கீர்த்தி பெரியர், மேனி பெரியர் - "உயர்திணை தொடர்ந்த பொருள் முதலாறு, மதனொடு சார்த்தி னத்திணை முடிபின" என்பதன்படி வந்த திணைவழுவமைதிகள். 'பெரியர்' என்ற சொல் பல்முறை வந்தது - சொற்பொருட்பின்வருநிலையணி. (ச)

ரு. திருகுறுஞ்சினத்துத்தேவர்தானவரென்னுந்தெவ்வ
ரிருகுறும்பெறிந்துநின்றவிசையினர்வசையென்றெண்ணிப்
பொருகுறும்பொன்றுவென்றுபுணர்வதுபூவுண்வாழ்க்கை
யொருகுறுங்குரங்கென்றெண்ணிநெடிதுநாணுழக்குநெஞ்சர்.

(இ - ள்.) (அன்றியும்),—திருகுறும் சினத்து - மாறுபாடு கொண்ட கோபத்தையுடைய, தேவர் - தேவர்களும், தானவர் - அசுரர்களும், என்னும் -

என்று கூறப்படுகின்ற, தெவ்வர் இரு குறம்பு - பகைவராகிய இருவகைக் குறும்புகளையும், எறிந்து நின்ற - ஒழித்துள்ள, இசையினர் - கீர்த்தியை யுடையவர்; 'பொரு குறும்பு ஒன்று வகை என்று எண்ணி - (தம்மோடு) பொருகின்ற ஒரு சிறுபகை (யிருப்பதும்) பழிப்பென்று நினைத்து, வென்று புணர்வது - (அதனைப்போக்கி)வெல்லுமாறு நேர்ந்திருப்பது, பூ உண் வாழ்க்கை ஒரு குறு குரங்கு - பூமுதலியவற்றை யுண்டு வாழ்தலையுடைய [சாகபட்சி யான] அற்பமாகிய ஒரு குரங்காகும்', என்று எண்ணி - என்று நினைத்து, நெடிது நாண் உழக்கும் - மிகவும் வெட்கத்தால் வருந்துகின்ற, நெஞ்சர் - மனத்தையுடையவர்; (எ - று.)

தேவர் அசுரர் என்ற இவர்களையே அற்பப்பகையாக எண்ணி எளிதில் வென்ற அவ்வரக்கர்க்கு, இப்போது ஒரு அற்பக்குரங்குடன் பொரும்படி நேர்ந்ததே யென்று நினைக்க நினைக்க நாணம் மிகுதியாகத் தோன்றுமென்க. குறும்பு - சிறுபகை. பூ - இலை முதலிய சாகபதார்த்தங்கட்கு உபலட்சணம். மாமிசத்தை மிகுதியாகவுண்ணுதலால் 'பிசிதாசனர்' என்று பெயர்படைத்த அரக்கர்கட்கு ஏற்ற பகையன்று என்பதை விளக்க, 'பூவுண்வாழ்க்கைக் குரங்கு' எனப்பட்டது. 'பொருகுறும்பென்று' என்றும் பாடம். (௫)

௬. கட்டியவாளரிட்டகவசத்தர்கழலர்திக்கைத்
தட்டியதோளர்மேகந்தடவியகையர்வானை
யெட்டியமுடியர்தாளாலிடறியபொருப்பரீட்டிக்
கொட்டியபேரியென்னமழையெனக்குமுறுஞ்சொல்லார்.

(இ - ள்.) கட்டிய வாளர் - (அரையிற்) கட்டிய வாளாயுதத்தையுடையவர்கள்; இட்ட கவசத்தர் - (உடம்பிலே) தரித்த கவசமுடையவர்கள்; (இட்ட) கழலர் - (காலிற்) பூண்ட வீரக்கழலையுடையவர்கள்; திக்கை தட்டிய தோளர் - திசைகளின்எல்லையை முட்டிய தோள்களையுடையவர்கள்; மேகம் தடவிய கையர் - மேகத்தைப் பரிசிக்கவல்ல கைகளையுடையவர்கள்; வானை எட்டிய முடியர் - ஆகாயத்தின் மேலெல்லையை முட்டுகின்ற தலையையுடையவர்கள்; தாளால் இடறிய பொருப்பர் - கால்களால் இடறிய மலைகளை யுடையவர்கள் [மலைகளைக் கால்களால் இடறித்தள்ளக்கூடியவர்கள்]; ஈட்டி கொட்டிய பேரி என்ன மழை என குமுறும் சொல்லார் - ஒருங்கே சேர்த்து முழக்கப்பட்ட பேரிகைபோலவும் மேகத்தின் இடிபோலவும் முழங்குகின்ற சொற்களை யுடையவர்கள்; (எ - று.) (௬)

௭. வானவரெறிந்ததெய்வவடுபடைவடுக்கண்மற்றைத்
தானவர்துரந்தவேதித்தழும்பொடுதயங்குந்தோளர்
யானையும்பிடியும்வாரியிடுங்கயவாயர்நின்ற
கூனல்வெண்பிறையிற்றோன்றுமெயிற்றினர்கொதிக்குங்கண்ணர்.

(இ - ள்.) வானவர் எறிந்த தெய்வம் அடு படை வடுக்கள் - தேவர்கள் பிரயோகித்த தெய்வத்தன்மையுள்ள கொல்லவல்ல ஆயுதங்களா லுண்டான

தழும்புகளும், மற்றை தானவர் துரந்த எதி தழும்பொடு - (அத்தேவரினும்) வேறான அசுரர்கள் பிரயோகித்த ஆயுதங்களின் தழும்புகளும், தயங்கும் - விளங்குகிற, தோளர் - தோள்களையுடையவர்கள்; யானையும் பிடியும் வாரி இடும் சய வாயர் - ஆண்யானைகளையும் பெண்யானைகளையும் வாரியுண்ணு கின்ற பெரிய வாயையுடையவர்கள்; ஈன்ற கூன வெள் பிறையின் தோன் றும் எயிற்றினர் - புதிதாகத் தோன்றிய [இளைய] வளைவுள்ள வெண்மை யான பிறைச்சந்திரன்போற் காணப்படுகின்ற பற்களையுடையவர்கள்; கோ கும் கண்ணர் - கோபம்பொங்குகின்ற கண்களையுடையவர்கள்; (எ - று.)

கூன - குறிப்புப் பெயரெச்சம்; 'கூனல்' என்றும் பாடமுண்டு. (எ)

[இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்; அரக்கவீரர் படைக்கலங்கொண்டு போர்செய்யச்செல்லுதல்.]

அ. சக்கரமுலக்கைதண்டுதாரைவாள்பரிகஞ்சங்கு
முற்கரமுசுண்டிபிண்டிபாலம்வேல்சூலமுட்கோல்
பொற்கரக்குலிசம்பாசம்புகர்மழுவெழுபொற்குந்தம்
விற்கருங்கணைவிட்டேறுகழுக்கடையெழுக்கண்மின்ன.

(இ - ள்.) சக்கரம் - சக்கராயுதங்களும், உலக்கை - உலக்கைகளும், தண்டு - கதாயுதங்களும், தாரை வாள் - கூர் நுனியையுடைய வாளாயுதங் களும், பரிகம் - இருப்புவளைதடிகளும், சங்கு - சங்கங்களும், முற்கரம் - சம்மட்டிகளும், முசுண்டி - முசுண்டியென்னும் ஆயுதங்களும், பிண்டிபாலம் - எறியீட்டிகளும், வேல் - வேல்களும், சூலம் - சூலங்களும், முள்கோல் - முட் கோல்களும், பொன் கரம் குலிசம் - அழகிய ஒளிவீசுகின்ற வச்சிராயுதங் களும், பாசம் - கயிற்றின் வடிவமான ஆயுதங்களும், புகர் மழு - ஒளியுள்ள மழுக்களும், எழு பொன் குந்தம் - மேலெழுந்து தோன்றுகின்ற அழகிய ஈட்டிகளும், வில் - விற்களும், கருங் கணை - பெரிய அம்புகளும், விட்டேறு - வீசியெறிதற்குரிய விட்டேறென்னும் ஆயுதங்களும், கழு கடை எழுக்கள் - கூர்நுனியையுடைய இருப்புத்தடிகளும், மின்ன - பிரகாசிக்க, (எ - று.)— 'முடுகுகின்றார்' என அடுத்த கவியோடு தொடரும். (அ)

கூ. பொன்னின்றுகளுஞ்தெய்வப்பூணினர்பொருப்புத்தோளர்
மின்னின்றபடையுங்கண்ணும்வெயில்விரிக்கின்றமெய்ய
ரென்னென்றார்க்கென்னென்னென்றுரெய்தியதறிந்திலாதார்
முன்னின்றார்முதுகுதீயப்பின்னின்றார்முடுகுகின்றார்.

(இ - ள்.) பொன் நின்று களும் தெய்வம் பூணினர் - பொன்னானது நிறைந்து விளங்குகின்ற தெய்வத்தன்மையுள்ள ஆபரணங்களைப் பூண்டவர் களும், மின் நின்ற படையும் கண்ணும் வெயில் விரிக்கின்ற மெய்யர் - ஒளி பொருந்திய ஆயுதங்களும் (கோபாக்கினியைக்கொண்ட) கண்களும் வெயில் போலும் காந்தியை வீசப்பெற்ற உடம்புடையவர்களும், பொருப்பு தோளர் -

மலைபோலப் பருத்தோங்கிய தோள்களையுடையவர்களுமான அவ்வரக்க வீரர்களுள், பின் நின்றார் - பின்னேநின்ற அரக்கவீரர்கள்,—என் என்றார்க்கு என் என்றார் - 'ஏன் நெட்டித் தள்ளுகின்றீர்கள்?' என்றுகேட்கும் முன்னே நிற்பவர்களுக்கு ('நீங்கள் போகாமல் நிற்பது) என் என்?' என்று மறுமாற்றஞ் சொல்பவர்களாய், எய்தியது அறிந்திலாதார் - முன்னே செல்லஇடமில்லாமையால் அவர்கள் அவ்வாறு போகாமல் நிற்பதை யறிந்துகொள்ளாதவர்களாய், முன் நின்றார் முதுகு தீய - (தமக்கு) முன்னே நிற்கின்றவர்களின் முதுகின்புறம் (தமதுகோபாக்கினியினால்) தீந்துபோம்படி, முடுகுகின்றார் - விரையலானார்கள்; (எ - று.)

அநுமானைப் பிடித்துக்கொணரும்படி இராவணன் கட்டளையாற் செல்லுகின்ற அரக்கவீரர்கள் மிக்கபெருந்திரளாக இருந்ததனால், தமக்குமுன்னேயிருப்பவர்கள் செல்ல இடங்கிடையாமையால் தடைப்பட்டுநிற்க, அதனையுணராமற் பின்னேயிருப்பவர்கள், நெட்டித்தள்ள 'ஏன் தள்ளுகின்றீர்கள்?' என்று முன்னே நிற்பவர் கேட்க, அவர்களைநோக்கி 'நீங்கள் ஏன் செல்லாது நிற்கின்றீர்கள்? செல்லாது நிற்கின்றீர்கள்?' என்று மறுமொழி சொல்லிக் கொண்டே, தமது கண்களின் கோபாக்கினி அவர்கள்முதுகிலே யுறைக்க விரையலானார்களென்பதாம். (கூ)

[பின்னும் அவ்வரக்கரின் வருணனை.]

கO. வெய்துறு படையின் மின்னர் வில்லினர் வீசு காலர்
மையுறு விசும்பிற் றோன்று மேனியர் மடிக்கும் வாயர்
கைபரந் துலகும் பொங்கிக் கடையுக முடியுங் காலைப்
பெய்யவென் றெழுந்த மாரிக் குவமைசால் பெருமை பெற்றார்.

(இ - ள்.) மடிக்கும் வாயர் - (கோபத்தால்) மடிக்கின்ற உதட்டையுடையவர்களாகிய அரக்கவீரர்கள்,—வெய்து உறு படையின் மின்னர் - கொடுமை மிகுந்த ஆயுதங்களாலே மின்னலையுடையவர்களும், வில்லினர் - வில்லையுடையவர்களும், வீசு காலர் - வீசுகின்ற பூசுக்காற்றையுடையவர்களும் [பெருமூச்செறிபவர்களும்,] மை உறு விசும்பின் தோன்றும் மேனியர் - கருநிறம் பொருந்திய வானத்திற் காணப்படுகின்ற உடம்பையுடையவர்களுமாய்,—கைபரந்து - எங்கும் பரவி, உலகு பொங்கி - உலகு முழுவதும் (சமுத்திரம்) பெருக்கெடுத்து, கடையுகம் முடியும் காலை - யுகாந்தகாலம் வந்து முடியும்போது, பெய்ய என்று எழுந்த - பெருமழை பொழியுமாறு கிளம்பின, மாரிக்கு - மேகத்துக்கு, உவமை சால பெருமை பெற்றார் - உவமையாதற்கு ஏற்ற பெருமையைப் பெற்றார்கள்; (எ - று.)

அவ்வரக்கவீரர்கள் யுகாந்தகாலத்தில் வானத்துத் தோன்றுகின்ற மேகக்கூட்டத்தை யொத்தனரென்பதாம். மின்னல் இந்திரதநுசு பெருங்காற்று கருநிறவுடம்புடன் ஆகாயத்துத்தோன்றுதல் முதலிய பலதன்மைகளால் மேகம் அரக்கர்க்கு உவமையாதற்கு ஏற்கு மென்க. விசும்பில் தோன்றும் - விசும்பு போலத் தோன்றுகின்ற என்றுமாம். (கO)

[அநுமானால் நேர்ந்த அவமானத்தை நினைத்து, அரக்கவீரர் அவன்மீது விரைந்து செல்லுதல்.]

கக. பனியுறுசெயலைசிந்தியோமமும்பறித்ததம்மா
தனியொருகுரங்குபோலாநன்றுநந்தருக்கென்கின்று
றினியொருபழிமற்றுண்டோவிதனினென்றிரைத்துப்பொங்கி
முனிவுறுமனத்திற்றாவிமுந்துறமுடுகுகின்றார்.

(இ - ள்.) 'பனி உறு செயலை சிந்தி - குளிர்ச்சி பொருந்திய அசோகவனத்தை யழித்து, ஓமமும் பறித்தது - ஓமமண்டபத்தையும் அடியோடுபெயர்த்து அழித்தது, தனி ஒரு குரங்குபோல் ஆம் - தனியாய் வந்த ஒருகுரங்காகும்; அம்மா - ஆச்சரியம்! நம் தருக்கு - நமது வீரச்செருக்கு, நன்று - நன்றாயிருந்தது!" என்கின்றார் - என்று சுருதுகின்றவர்களாய்,—(அவ்வரக்கவீரர்கள்), 'இதனின் - (இப்பொழுது ஒரு குரங்கினால் நேர்ந்த) இதனைக்காட்டிலும் (மிக்க), மற்று ஒரு பழி-வேறொரு அவமானம், இனி - இன்னும், உண்டோ - (நமக்கு) உள்ளதோ? [இதுவே மிக்க பேரவமானம்தருவதாகு மென்றபடி],என்று—,'இரைத்து-கர்ஜ்ஜித்து, பொங்கி - கொதித்து, முனிவுறு மனத்தின் - சினங்கொண்ட மனத்தோடு, தாவி முந்துற முடுகுகின்றார் - தாவி (ஒருவரையொருவர்) முற்பட விரைந்து செல்பவரானார்கள்; (எ - று.)

ஒருபோதும் அவமானப்படாத அரக்கவீரர் புதிதாக அநுமானால் தமக்கு நேர்ந்த அவமானத்தை நினைந்து ரோஷங்கொண்டவர்களாய், அவ்வவமானம் தம்மைத் தாண்ட, ஒருவரினொருவர் முற்படலானார்க ளென்பதாம். மனத்தின் தாவி - மனோவேகத்துடன் சென்று என்று உரைப்பினுமாம். குரங்குபோலாம், போல் - ஒப்பில்போலி. அசோகுஎன்னும் பொருளுள்ள 'செயலை' என்ற சொல், இலக்கணையால் அசோகவனத்தை யுணர்த்திற்று. (கக)

[இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்; அவ்வரக்கர் போராவாரத்தோடு அநுமான்மீது போர்செய்யச் செல்வதைத் தெரிவிக்கும்.]

கஉ. எற்றுறுமுரசும்வின்னாணேறவிட்டெடுத்தவார்ப்புஞ்
சுற்றுறுகழலுஞ்சங்குந்தெழிதெழித்துரப்புஞ்சொல்லு
முற்றுடனொன்றாயோங்கியொலித்தெழுந்தூழிப்போர்வி
னற்றின்ரக்கடல்களேழுமெமைகளொருவடக்க.

(இ - ள்.) எற்றுறு முரசும் - எறிகின்ற முரசத்தினோசையும், வில் நாண் ஏற விட்டு எடுத்த ஆர்ப்பும் - வில்லிலே நாணை யேற்றிப் பூட்டி (அதனைத் தட்டி) யெழுப்பிய ஆரவாரமும், சுற்றுறு கழலும் - (காலிற்) சுற்றிக்கட்டிய வீரக்கழலினின்று தோன்றிய ஓசையும், சங்கும் - (முழக்குகின்ற) சங்கத்தின் நாதமும், தெழிதெழித்து உரப்பும் சொல்லும் - ஆரவாரித்து அதட்டிக்கூறுகின்ற சொற்களில் தோன்றிய ஓசையும், (ஆகிய இவ்வொலிகளெல்லாம்), உடன் ஒன்று ஆய் உற்று ஓங்கி ஒலித்து எழுந்து - மாறுபட்டுப் பின்பு ஒன்றாகச்சேர்ந்து மிகப்பேரொலியாகிக் கிளம்பி, ஊழி பேர்வில் - யுகாந்தகாலத்

தில், நல் திரை கடல்களோடு - பெரிய அலைகளையுடைய சமுத்திரகோஷத்தையும், மழைகளை - மழைகளினிடிமுழக்கங்களையும், நா அடக்க - ஒலியடங்கும்படிசெய்ய, - (எ - று.)—'செல்கின்றாரும்' என அடுத்த கவியோடு தொடரும்.

அவ்வரக்கர் போரெழுந்துசென்றபோது பல்வகையொலிகள் தோன்றியமை இந்தச்செய்யுளில் விளக்கப்பட்டது. கடு. முரசு முதலியவை - அவற்றினின்று எழும் ஒலிக்கு முதலாகுபெயர்கள். (கஉ)

கங. தெருவிடமில்லென் றெண்ணி வானிடைச் செல்கின் றாரும்
புருவமுஞ் சிலையுங் கோட்டிப் புகையுயிர்த் துயிர்க்கின் றாரு
மொருவரி னொருவர் முந்தி முறைமறுத் துருக்கின் றாரும்
விரிவில திலங்கை யென்று வழிபெறார் விளிக்கின் றாரும்.

(இ - ள்.) தெரு இடம் இல் என்று எண்ணி - தெருவிலே (நடந்து செல்வதற்கு) இடம் போதாது என்று நினைத்து, வானிடை செல்கின்றாரும் - ஆகாயத்தினிடத்திலுஞ் செல்லுகின்றவர்களும், புருவமும் சிலையும் கோட்டி புகை உயிர்த்து உயிர்க்கின்றாரும் - (தமது) புருவங்களையும் கையிற்கொண்ட) வில்லையும் ஒருசேரவளைத்து வைத்தவண்ணம் (கோபாக்கினியாற்) புகையை வெளிப்படுத்திக்கொண்டு பெருமூச்சு விடுகின்றவர்களும், ஒருவரின் ஒருவர் முந்தி முறை மறுத்து உருக்கின்றாரும் - (வரிசையாகச்செல்பவரில்) ஒருவரினும் ஒருவர் முற்பட்டு முறை தவறியதனால் (முறைதவறியவர்மீது) கோபங்கொள்ளுகின்றவர்களும், வழி பெறார் இலங்கை விரிவு இலது என்று விளிக்கின்றாரும் - இலங்காபுரி (இவ்வீரர்கள்செல்லுதற்கு ஏற்ற) பரப்புடையதன்று என்று (தாராளமாகச்செல்லுவதற்கு) வழிகிடைக்கப் பெறாதவர்களாய்க் கதறுகின்றவர்களும்; (எ - று.)

முறைமறுத்து - உறவுமுறைபாராட்டாமல் என்னலு மொன்று. (கங)

கச. வாளுறை விதிர்க்கின் றாரும் வாயினை மடிக்கின் றாருந்
தோளுறத் தட்டிக் கல்லைத் துகள்படத் துகைக்கின் றாருந்
தாள்பெயர்த் திடம்பெ றாது தருக்கினர் நெருக்கு வாருங்
கோள்வளை யெயிறு தின்று தீயெனக் கொதிக்கின் றாரும்.

(இ - ள்.) வாள் உறை விதிர்க்கின்றாரும் - வாள்களை உறைகளிலிருந்து எடுத்து அசைப்பவர்களும், வாயினை மடிக்கின்றாரும் - உதடுகளைத் (தமது கோபந்தோன்ற) மடிக்கின்றவர்களும், தோள் உற தட்டி கல்லை துகள் படதுகைக்கின்றாரும் - (தமது வீரந்தோன்றத்) தோள்களை உரப்பாகத்தட்டிப் பெருங்கற்களையும் துகளாம்படி துகைத்துவிடுபவர்களும், தாள் பெயர்த்து இடம் பெறாது தருக்கினர் நெருக்குவாரும் - தாள்களைத்தூக்கி(ப் பிறகு அதனை வைத்தற்கு) இடங்கிடைக்காமற் செருக்குக்கொண்டு நெருக்குகின்றவர்களும், கோள் வளை எயிறு தின்று தீ என கொதிக்கின்றாரும் - பலமுள்ள வளைவான பற்களைக் கடித்து நெருப்புப்போலக் கொதிக்கின்றவர்களுமாகிய,—(எ - று.) 'அனைவரும்' என்று முடிக்க. (கச)

வேறு.

கரு. அனைவரு மலையென நின்றா ரளவறு படைகள்ப யின்றா
ரனைவரு மமரி னுயர்ந்தா ரகலிட நெளியநடந்தா
ரனைவரும் வரனின மைந்தா ரசனியி னணிகள ணிந்தா
ரனைவரு மமரரை வென்றா ரசுரரை யுயிரைய யின்றார்.

(இ - ள்.) அனைவரும் - யாவரும், மலை என நின்றார் - மலைபோல எதற்குஞ் சலியாது நிற்பவர்; அளவு அறு படைகள் பயின்றார் - மிகப்பல ஆயுதங்களைப் பழகினவர்கள்; அனைவரும் —, அமரின் உயர்ந்தார் - போர்செய்வதிற் சிறந்தவர்கள்; அனைவரும் —, வரனின் அமைந்தார் - வரபலம்பொருந்தப் பெற்றவர்கள்; அசனியின் அணிகள் அணிந்தார் - வச்சிராயுதம்போலப் பேரொளிவீசுகின்ற ஆபரணங்களைப் பூண்டவர்கள்; அமரரை வென்றார் - தேவர்களை வென்றவர்களும், அசுரரை உயிரை அயின்றார் - அசுரரது உயிரைக் கொன்றுதின்றவர்களுமாகிய, அனைவரும் - அவ்வரக்கவீரர்யாவரும், அகலிடம் நெளிய நடந்தார் - (பாரமிகுதியால்) இந்தப்பூமி நெளியும்படி (அநுமானுள்ளவிடம் நோக்கி) நடந்தார்கள்; (எ - று.)

அரக்கவீரரில் ஒவ்வொருத்தர்க்கும் மலையெனநிற்றல் முதலிய தன்மைகள் நிரம்பியிருந்தன வென்பதை வற்புறுத்தும்பொருட்டு, 'அனைவரும்' என்பதைப் பன்முறை கூறினார். அசனி வச்சிராயுதத்துக்குப் பெயராதலை "அசனி வச்சிரப்படை யாகும்மே" என்ற பிங்கலந்தையாலும் அறிக. அசுரரை உயிரை அயின்றார் - இரண்டுசெயப்படுபொருள் வந்த செய்வினை; இவ்வாறு வருவது 'த்விகர்மகர்த்தரிப்ரயோகம்' என்று வடமொழியிற் பெயர்பெறும். 'அசுரரை வேரொடுதின்றார்' என்றும் பாடம்.

இதுமுதற் பதினைந்து கவிகள் - மூன்றும் ஆறும் மாச்சீர்களும், மற்றை நான்கும் விளச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்குகொண்ட அறுசீராசிரிய விருத்தங்கள். (கரு)

[இதுவும் அடுத்த கவியும் - அவ்வரக்கவீரரின் வலிமையைத் தெரிவிக்கும்.]

கசு. குறுகின தவமுயலம்பொற் குரைகழ லுரகரும்வன் போர்
முறுகினபொழுதி னுடைந்தார் முதுகிடை முதுவல்பயின்று
நிறுகினநிதிகிழவன் பெரியவர் கெடவளகையெயறிந்தார்
தெறுகுநரின்மையர் வன்றேருடைனவுறவுலகு திரிந்தார்.

(இ - ள்.) குறுகின தவம் முயல் - (இவ்வரக்கரைப் பொருது வெல்வதற்கு ஏற்றவாறு மிக்க பெருந்தவத்தைச்செய்யாது) அற்பமான தவத்தைச் செய்த, அம் பொன் குரை கழல் உரகரும் - அழகிய பொன்னாற்செய்த ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த நாகசாதியாரும், வல் போர் முறுகின பொழுதின் உடைந்தார் - (இவ்வரக்கரோடு) வலிய யுத்தம் மும்முரமாக நடந்தபொழுதில் (இவ்வரக்கரிடத்துத்) தோற்றவர்களாய், (முதுகுகாட்டி ஓடும்பொழுது), முதுகு இடை

முறுவல் பயின்றார் - (அவர்கள்) முதுகுகாட்டுதலைக் கண்டு பரிகாசமாகச் சிரித்தவர்கள்; இறுகின நிதி கிழவன் பேர் இசை கெட - மிகுந்த செல்வங்கட்குத் தலைவனான குபேரனது பெருங்கீர்த்தியும் அழியும்படி, அளகை எறிந்தார் - (அவனது) அளகாபட்டணத்தையும் (தமது படைக்கலங்கொண்டு) மோதினவர்கள்; தெறுகுநர் இன்மையர் - (தம்மோடு) மாறுபட்டுப் பொருபவரைப் பெறாதவராய், வல் தோள் தினவு உற - (தமது) வலியதோள்கள் தினவுண்டாக, உலகு திரிந்தார் - உலகத்தில் (தம்மோடு பொருமாறு எவரேனுங் கிடைப்பரோ? என்று தேடிக்கொண்டு) திரியுந்தன்மையுள்ளவர்கள்; (அவ்வரக்கர்கள்); (எ - று.)

உரகர் - தேவசாதியுள் ஒருவகையார். அளகை - இராவணனது தமையனான குபேரனுடைய இராசதானி. இவ்வரக்கரை எதிர்த்து வெல்லும்படி நல்வினை செய்யாதவராய் இவரிடத்துத் தோற்று முதுகுகொடுத்தனராதலின், அவ்வாறான உரகரை 'குறுகினதவமுயல் ·····உரகர்' என்றார். உரகரும், உம் - உயர்வுசிறப்பு. அவ்வுரகவீரர் தம்மோடு எதிர்த்துப்பொருது முன்னிற்கமாட்டாதுஅஞ்சி முதுகு கொடுத்தோட, அப்போது அவர்கள் அஞ்சியோடுவது கண்டு 'என்னே இவர்கள் வலிமை !!' என்று அவ்வுரகரைக்குறித்து எள்ளல்நகைதோன்றச் சிரிக்கலாயினர் இவ்வரக்கவீர ரென்பது, முன்னிரண்டடிகளிற் றிகூய பொருள். 'குறுகினகவசரும் மின்போற்குரைகழலுரகரும்' என்று பாடங் கொண்டு - குறைதலான சட்டையிட்டிருக்கிற சித்தரும் மின்போலொளிவிட்டுச் சத்திக்கிற வீரக்கழலையணிந்த உரகசாதியாரும் என்று பொருளுரைத்து, அவ்விருவரையும் முதுகுகொடுத்து ஓடுமாறு பெருவீரங்காட்டினவர் அரக்கவீரர் எனக் கருத்துக்கூறுவாருமுளர். (௧௬)

௧௭. வரைகளையிடறுமினென்றான்மறிகடல்பருகுமினென்று
லிரவியைவிழவிடுமென்றாலெழுமழைபிழியுமினென்று
லரவினதரசனையொன்றேதரையினொடரையுமினென்றாற்
றரையினையெடுமெடுமென்றாலொருவரதமைதல்சமைந்தார்.

(இ - ள்.) (அன்றியும்), வரைகளை இடறுமின் என்றால் - மலைகளையிடறித் தள்ளுங்களென்றாலும், மறி கடல் பருகுமின் என்றால் - (அலை) மடங்குகின்ற கடல்நீரைக் குடித்துவிடுங்களென்றாலும், இரவியை விழ விடும் என்றால் - (வானத்திற் சஞ்சரிக்கின்ற) சூரியனைக் கீழேவிழும்படி தள்ளிவிடுங்களென்றாலும், எழு மழை பிழியுமின் என்றால் - (வானத்திற்) செல்லுகின்ற மேகங்களைப் பிழிந்துவிடுங்களென்றாலும், அரவினது அரசனை தரையினொடு அரையுமின் என்றால் - சர்ப்பராசனான ஆதிசேஷனைத் தரையோடு தரையாக அரைத்துவிடுங்களென்றாலும், தரையினை எடும் எடும் என்றால் - இந்தப் பூமியைப் பெயர்த்தெடுத்துவிடுங்கள் பெயர்த்தெடுத்துவிடுங்களென்று சொன்னாலும், ஒருவர் அது அமைதல் சமைந்தார் - (இவ்வரக்கவீரர்களுள்) ஒருத்தரே அவ்வத்தொழிலைச் செய்துமுடித்தற்குத் தக்கவர்; ஒன்றே - (இவர்கள் வல்லமை) இவ்வளவு மாத்திரமேயோ? (எ - று.)

இவர்கள் வல்லமை இவ்வளவோடு அடங்காதென்றபடி. எழுமழை - ஸப்தமேகமுமாம். அரவினை யரசினை யொன்றோ என்றே எடுத்து - அரவி னுக்கு அரசனாகிய ஆதிசேஷனை மாத்திரமோ? (அவன்போன்ற) அஷ்டமகா நாகங்களையும், தரையோடு அரையுமின் என்றாலும் அதையும் செய்யவல்லவர் என்னலுமாம். வரைகளை யிடறுமின் எனறால், ஒருவர் அது அமைதல் சமைந்தாரென்று தனித்தனி முடியும்; அதுபற்றியே, 'அது' என்று ஒருமையாற் கூறினது. (கஎ)

[அரக்கவீரர் அநுமானைநோக்கி வருதல்.]

கஅ. தூளியினிமிர்படலம்போயிமையவர்விழிதுறவெம்போர்
மீளியினினமெனவன்றாள்விசைப்புலிநிரையெனவிண்போ
யாளியினணியெனவன்றேலலைகடல்விடமெனவஞ்சா
வாளியின்விசைகொடுதிண்கார்வரைவருவனவெனவந்தார்.

(இ - ள்.) திமிர் தூளியின் படலம் போய் இமையவர் விழி துற - (அரக்க வீரர் விரைந்துசெல்வதால்) மேலேகிளம்புகிற புழுதியின்தொகுதி வியாபித்து மேலுலகிலுள்ள தேவர்களது கண்விழிகளைத் தூர்த்துவிட,— வெம் போர் மீளியின் இனம் என - கொடிய போர்செய்தற்குஉரிய வலிமைத்தொகுதியே உருவெடுத்துவந்தாற்போலவும், வல் தாள் விசை புலி நிரை என - வலிமையுள்ள கால்களால் விரைந்துசெல்லுகின்ற புலிக்கூட்டங்கள் போலவும், விண் தோய் ஆளியின் அணி என - ஆகாயத்திற் பாய்ந்து செல்லுகின்ற சிங்கங்களின் வரிசை போலவும், அன்றேல் - (இவைகள்) அல்லாவிட்டால், அலை கடல் விடம் என - அலைகின்ற பாற்கடலினின்று தோன்றிய விஷம்போலவும், அஞ்சா - சிறிதும் அச்சமென்பதைக் கொள்ளாமல், வாளியின் விசை கொடு - பாணத்தின் வேகத்தைக்கொண்டு, திண் கார் வரை வருவன என - வலிய மேகங்கள் மலையை நோக்கி வருவன போல, வந்தார் - அநுமானை நோக்கி (அவ் வரக்கவீரர்) வந்தார்கள்; (எ - று.)

விழிதுற வந்தார் என இயையும். திண்கார்வரை வருவன என்று - வலிய கரி மலைகள் நடந்துவருவனபோல என்று உரைப்பாருமுண்டு. (கஅ)

[அரக்கவீரர் அநுமானுள்ள பொழிலைச் சூழ்தல்.]

கசு. பொறிதரவிழியுயிரொன்றேபுகைதரவுகவயிலொளியின்போற்
செறிதரவுருமதிர்கின்றார்திசைதொறுமிசைகொடுசென்று
நெறிதருகடையுகவன்காலிடறியவருமினமெனப்போய்
மறிதரமழையகல்விண்போல்வடிவுறுபொழிலைவளைந்தார்.

(இ - ள்.) விழி - (தமது) கண்களினின்று, பொறி தர - நெருப்புப் பொறி பறக்கவும், உயிர் ஒன்றே - மூச்சுக்காற்று மாத்திரமோ? (அதனோடு), புகை - புகையும், உக - வெளிப்படவும், அயில் ஒளியின் போல் செறிதர - வேலாயுதங்கள் ஒளியையுடைய மின்னலைப்போல நெருங்கிவரவும், உரும்

அதிர்கின்றார்-இடிபோலக் கர்ச்சிக்கின்றவர்களும், திசைதொறும் விசை கொடு சென்றார் - திக்குக்களிலெல்லாம் வேகமாகச் சென்றவர்களுமாகிய அவ்வரக்க வீரர்கள்,—கடை யுகம் எறிதரு வல் கால் இடறிட - (தாம் செல்லுகின்ற வேகத்தாலே) யுகாந்தகாலத்தில் வீசுகின்ற கொடிய பெருங்காற்று (த்தோன்றி) வீசியடிக்கவும்,—உருமின் இனம் போய் மறிதர - இடிகளின் கூட்டம் (இவர்கள் செய்யும் ஆரவாரத்துக்கு முன்னே தலையெடுக்காமல்) தலைமடங்கவும்,—மழை அகல் விண்போல் - மேகசஞ்சாரமற்ற ஆகாசம் போல, வடிவு அழி பொழிலை - தன்னுருவம் அழிந்துகிடந்த அசோகவனத்தை, வளைந்தார் - சூழ்ந்துகொண்டார்கள் ; (எ - று.)

அநுமானால் மரங்கள் பலவும் அழிந்து வெற்றிடமான அசோகவனத்துக்கு, மழை நீங்கிய ஆகாயம் உவமை. பொறிதர உக செறிதர இடறிட மறிதர வளைந்தார் என இயையும். (௧௯)

[அநுமான் அரக்கவீரர் வருவதைக் காணுதல்.]

௨௦. வயிரொலிவளையொலிவன்கார்மழையொலிமுரசொலிமண்பா
லுயிருலைவுறநிமிரும்போருறுமொலிசெவியினுணர்ந்தான்
வெயில்விரிகதிரவனும்போய்வெருவிடவெளியிடைவிண்டோய்
கயிலையின்மலையெனநின்றானையவர்வருதொழில்கண்டான்.

(இ - ள்.) வெயில் விரி கதிரவனும் போய் வெருவிட [வெருவிப்போய் விட] - வெயிலை வீசுகின்ற சூரியனும் அஞ்சிவிலகிப்போய்விட, வெளியிடை - திறந்த வெளியான இடத்தில், விண் தோய் கயிலையின் மலை என - ஆகாயத்தை யளாவிய கைலாச மலைபோல, நின்றான் - நின்றவனாகிய அநுமான்,— வயிர் ஒலி - ஊதுகொம்பின் ஓசையையும், வளை ஒலி - சங்கின் ஓசையையும், வல் கார் மழை ஒலி முரசு ஒலி - வலிய கார்காலத்து மேகமுழக்கம் போன்ற பேரிகையின் ஓசையுமாகிய, மண்பால் உயிர் உலைவு உற நிமிரும் போர் உறும் ஒலி - தரையினிடத்துள்ள பிராணிகள் யாவும் நடுங்கும்படி மிக்குத்தோன்றுகின்ற போர்செய்வதைக் குறிப்பிக்கின்ற ஓசைகளை, செவியின் உணர்ந்தான் - காதினாற் கேட்டு (அரக்கவீரர் தன்மீது வருவதை) அறிந்தவனாய், (பின்பு), அனையவர் வரு தொழில் கண்டான் - அவ்வரக்கவீரர் வருவதைக் கண்டான் ; (எ - று.)

போருக்குரிய பறை முதலியவற்றை முழக்கிக்கொண்டு அரக்கவீரர் வருவதை, அநுமான் அப்போது தன்காதில்வீழ்ந்த பேராரவாரத்தால் முதலில் தெரிந்துகொண்டு, பிறகு அவர் வருகையைக் கண்ணினால் நேரே கண்டனனென்பதாம். இளம் பருவத்திலேயே தன்னைத் தாவிப்பிடித்த அநுமான் ஓங்கி நிற்பது கண்டு மீண்டும் தன்னைப்பற்றிக்கொள்வானோ? என்று சூரியன் அஞ்சினனென்க: அன்றி, வெருவிட என்பதை 'வரு' என்பதனோடு சேர்த்து, அரக்கவீரர் பெருந்திரளாக வருவதனால், அப்போது அவர்கள் பாதங்களினால் மேலெழுப்பப்படுகிற தூளி சூரியனை அடியோடு மறைப்பதுபற்றி, அரக்கவீரர் வருதொழிலால் கதிரவன் வெருவலாயினனென்னலுமாம். (௨௦)

[அநுமான் தனது ஆலோசனை பலித்ததற்கு மகிழ்தல்.]

உக. இதவியலிதுவெனமுந்தேயியைவுறவினிதுதெரிந்தான்
பதவியலறிவுபயந்தாலதினலபயனுளதுண்டோ
சிதவியல்கடிபொழிலொன்றேசிதறியசெயறருதிண்போ
ருதவியலினிதினுவந்தானெவரினுமதிகமுயர்ந்தான்.

(இ - ள்.) எவரினும் அதிகம் உயர்ந்தான் - எல்லாரைக்காட்டிலும் மிகச் சிறந்தவனாகிய அநுமான்,—'இது இதம் இயல் - (அசோகவனத்தை முறிக்கின்ற) இதுதான் இதமான செயல்,' என - என்று, முந்தே - முன்னமே, இயைவுற இனிது தெரிந்தான் - பொருத்தமாக நன்கு அறிந்தான்; பதம் இயல் அறிவு பயந்தால் - பக்குவமான தன்மையையுடைய அறிவுதோன்றினால், அதின் நல பயன் உளது உண்டோ - அதைக்காட்டிலும் நல்ல பயனுள்ளது வேறு உண்டோ? [இல்லை யென்றபடி]; கடி பொழில் சிதவு இயல் ஒன்றே - காவலுள்ள அசோகவனத்தை அழித்த செயலொன்று தானே, சிதறிய செயல் தரு திண் போர் உதவு இயல் - (அரக்கவீரர்) தோற்றோடுகின்ற செயலை யுண்டாக்கக் கூடிய வலிய போரைத் தோற்றுவித்த இந்தத் தன்மையைக் குறித்து, இனிதின் உவந்தான் - மிகுதியாகச் சந்தோஷித்தான; (எ - று.)

முதலிரண்டடி - கவிக்கூற்று. "இப்பொழிலினைக் கடிதிறுக்குவெனிறுத்தா, லப்பெரிய பூசல் செவிசார்தலு மரக்கர், வெப்புறுசினத்த ரெதிர்மேல்வருவர் வந்தால், துப்புற முருக்கி யுயிருண்பலிதுகருதால்" என்று கிழ்ப் பொழிலிறுத்தபடலத்தில் அநுமான் ஆராய்ந்து தீர்மானித்தபடியே நிகழ்வது பற்றி, 'இதவியலிதுவென முந்தே யியைவுற வினிது தெரிந்தான்' என்றார். 'அநுமான் தன்னுடைய முதிர்ந்த அறிவினால் ஆராய்ந்து தீர்மானித்தது, இனியபயனையே விளைத்தது' என்ற சிறப்புப் பொருளை 'பதவியலறிவு பயந்தால் அதினலபயனுளது உண்டோ' என்ற பொதுப்பொருள் கொண்டு சமர்த்தித்தார்; இது - வேற்றுப்பொருள்வைப்பணியின்பாற்படும். அநுமான் தான் நினைத்தபடியே அசோகவனத்தை முறித்த செயல் அரக்கவீரர் பலரும் முறிந்தழியும்படி பெரும்போரை விளைத்ததற்கு மனமுவந்தானென்பது, பின்னிரண்டடிகளிற் கூறிய விஷயம். (உக)

[இதுவும், அடுத்தகவியும் - அரக்கவீரர் படைக்கலங்களை யெறிந்த வண்ணம் அநுமானை நெருங்குதலைக் கூறும்.]

உஉ. இவனிவனிவனெனநின்றாரிதுவெனமுதலியெதிர்ந்தா
பவனனின்முடுகிநடந்தார்பகலிரவுறமிடைகின்றார்
புவனியுமலையும்விசும்பும்பொருவருநகருமுடன்போர்
துவனியிலதிரவிடம்போற்சுடர்விடுபடைகடுரந்தார்.

(இ - ள்.) பகல் இரவு உற மிடைகின்றார் - பகற்பொழுதிலேயே இராப்பொழுது தோன்றும்படி நெருங்குபவராகிய மிகக்கருநிறமுள்ள அவ்வரக்கவீரர்கள்,—இவன் இவன் இவன் என நின்றார் - (இவ்வனத்தை யழித்தவன்) இவன்தான் இவன்தான் இவன்தான் என்று குறிப்பித்துக் காட்டுபவர்களாய்,

இது என முதலி எதிர்ந்தார் - (நாம் செய்யவேண்டுவது, இவனைப்பிடிக்கின்ற) இச்செயலே என்று முற்பட்டு எதிர்த்து, பவனனின் முடுகி நடந்தார் - வாயுவைப்போல விரைந்து நடந்தவர்களாய், புவனியும் மலையும் விசும்பும் பொரு அருநகரும் - நிலவுலகமும் அதனிலுள்ளமலைகளும் ஆகாசமும் ஒப்பில்லாத அந்த இலங்காபட்டணமும் ஆகிய இவை, உடன் போர் துவனியில் அதிர - ஒருசேரப் போர்முழக்கத்தினாலே அதிர்ச்சியடைய, விடம்போல் - விஷம்போல(த் தவறாமற் கொல்லவல்லனவாய்), சுடர் விடு - ஒளி வீசுகின்ற, படைகள் - ஆயுதங்களை, தூரந்தார் - (அநுமான்மீது) பிரயோகித்தார்கள்; (எ - று.)—துவனி - த்வநி; வடசொல். (௨௨)

௨௩. மழைகளுமறிகடலும்போய்மதமறமுரசமறைந்தார்
முழைகளினிதழ்கடிறந்தார்முதுபுகைகதுவமுனிந்தார்
பிழையிலபடவரவின்றோள்பிடருறவடியிடுகின்றார்
கழைதொடர்வனமெரியுண்டாலெனவெறிபடைஞர்கலந்தார்.

(இ - ள்.) மழைகளும் மறி கடலும் மதம் போய் அற - மேகங்களினிடிகளும் அலைமடங்குகின்ற கடல்களின் கோஷமும் (பேராரவாரமுடைமையால் தாம் கொண்ட) செருக்குக் கெட்டு ஒழியும்படி [அவற்றினும் மிக்க ஒலியுண்டாகுமாறு], முரசம் அறைந்தார் - பேரிகைகளைக் கொட்டிமுழக்குபவர்களும், முழைகளின் இதழ்கள் திறந்தார் - மலைக்குகைகள்போலத் தோன்றும்வண்ணம் வாய்களைத் திறந்து கொண்டிருப்பவர்களும், முது புகை கதுவ முனிந்தார் - மிக்க புகை சம்பிக்கொள்ளும்படி பெருஞ்சினங்கொண்டவர்களும், பிழை இல படம் அரவின் தோள் பிடர் உற அடி இடுகின்றார் - குற்றமற்ற படங்களையுடைய ஆதிசேஷனது தோள்களும் பிடரியும் (பாரமிகுதியைச் சுமக்க முடியாமையால்) ஒன்றாய்விடும்படி கால்களைப் பெயர்த்து வைப்பவர்களுமாகி, கழை தொடர் வனம் எரி உண்டால் என - மூங்கில்கள் தங்கியிருக்கப்பெற்ற காடு தீப்பற்றியெரிந்தாற்போல [மூங்கிற்காட்டில் நாற்புறத்திலும் பற்றி மூளுந் தீப்போல], எறி படைஞர் - வீசுகின்ற ஆயுதங்களையுடைய அவ்வரக்கவீரர்கள், கலந்தார் - (அநுமான் மீது) ஒருங்கு திரண்டார்கள்; (எ - று.)

'முழைகளினிருள்கள் திறந்தார்' என்ற பாடத்துக்கு - மலைக்குகைகளிலிருந்து திறந்து வெளிவிட்ட இருள்போன்ற [மிகக்கறுத்த] உருவமுடையவர் என்று பொருளாம் 'எரிபடைஞர்' என்ற பாடத்துக்கு - மூங்கிற்காட்டிலே தீப்பற்றியெரிந்தாற்போல் ஜ்வலிக்கின்ற ஆயுதங்களையுடையவ ரென்று பொருள் காணலாம். (௨௩)

[அநுமான் அரக்கவீரரை யெதிர்க்குமாறு ஒருமரத்தைக் கையிற்கொண்டு நிற்றல்.]

௨௪. அறவனுமதனையறிந்தானருகினினழகினமைந்தா
ரிறவினினுதவுநெடுந்தாருயர்மரமொருகையினேந்தா
னுறவருதுணையெனவன்றேவுதவியவதனையுவந்தா
னிறைகடல்கடையுநெடுந்தாண்மலையெனநடுவணிமிர்ந்தான்.

(இ - ள்.) அறவனும் - தருமசொரூபியாகிய அநுமானும், அதனை அறிந்தான் .(அரக்கர் தன்னைச்சூழ்ந்துகலந்த) அந்தச்செயலை யறிந்து, அருகினின் அழகின் அமைந்தார் இறவினின் உதவு - தன்னருகே இனிதான யுத்தவேஷத்தோடு சூழ்ந்துகொண்ட அரக்கரின் மரணத்துக்குத் துணையாக உதவக்கூடிய, தார் நெடு உயர் மரம் - நீண்ட ஒழுங்கான மிகவும்ஓங்கிய மரமொன்றை, ஒரு கை இயைந்தான் - (தனது) ஒருகையி லெடுத்துக் கொண்டு, உற வரு துணை என அன்றே - 'மனத்திற்கு ஏற்ப உதவிசெய்ய வருகின்ற ஒரு துணைவன்போல வல்லவோ (இது உள்ளது' என்று), உதவிய அதனை - (தனக்குத் தக்கசமயத்திலே) உதவுமாறு கிடைத்த அம்மரத்தைப் பற்றி, உவந்தான் - சந்தோஷித்தவனாய்,—நிறை கடல் கடையும் - (பால்) நிறைந்த கடலைக் கடைதற்கு உரிய, நெடு தாள் மலை என - நீண்ட அடியையுடைய மந்தரமலையைப்போல, நடுவண் நிமிர்ந்தான் - (அவ்வரக்கர்களின் நடுவிலே உயர்ந்து தோன்றினான்; (எ - று.)

மற்றை மரங்கள்போல வெகுதூரத்தில் விழுந்திடாமல் தவறி அருகில் தானே விழுந்து அரக்கர்களையழித்தொழிக்கும்படி தக்க சமயத்தில் உதவினமைபற்றி, அம்மரத்தை அநுமான் வியந்தனனென்க. தனக்கென்று ஒரு நன்மையையும் நாடாமல் தருமத்துக்கே பாடுபடுபவன் இவ்வநுமானென்பார், அவனை 'அறவன்' என்றார். அரக்கர்கடலைச் கலக்கபோவதால், அநுமானுக்கு மந்தரமலை உவமையாதற்கு ஏற்கும்: 'இறவரு வயிர நெடுந்தோளொழுடனை மரமிக வன்கால், உறவருதுணையெனவொன்றே யுதவிய வதனை யுவந்தான்' என்ற பாடத்துக்கு - தக்க காலத்தில் தோளும் மரமும் பாதங்களும் தக்க துணையாகுமென்று கருதி, அவற்றுள் ஒன்றான அந்த மரம் உதவியதற்குச் சந்தோஷித்தானென்ற கருத்துப்படப் பொருளுரைக்க. 'இறவினினுதவு நெடுந்தோள்' என்றும் பாட முண்டு. (உ௪)

[இதுமுதற் பதினொரு கவிகள்-அரக்கவீரர் பலபடியாக அழிந்துபோனதைத் தெரிவிக்கும்.]

உரு. பருவரைபுரைவனவன்றோள்பனிமலையருவிநெடுங்கால்
சொரிவனபலவெனமண்டோய்துறைபொருகுருதிசொரிந்தா
ரொருவரையொருவர்தொடர்ந்தாருயர்தலையுடையவுருண்டா
ரருவரைநெரியவிழும்பேரசனியுமசையவறைந்தான்.

(இ - ள்.) (அவ்வநுமான்),—அரு வரை நெரிய விழும் - பெரியமலைகளும் சிதைந்துபோம்படி விழுகின்ற, பேர் அசனியும் - பெரிய இடியும், அசைய - (தாக்கின விசையைக் கண்டு) பின்வாங்கும்படி, அறைந்தான் - (அம்மரத்தைக்கொண்டு அரக்கவீரர்களை) அடித்தான்; (அதனால் அவர்களிற் சிலர்), பனி மலை - குளிர்ந்த மலைகள், அருவி நெடு கால் பல சொரிவன என - அருவியினாலான நீண்டவாய்க்கால்கள் பலவற்றைச் சொரிவன போல, பருவரை புரைவன வல் தோள் - பெரிய மலைகளையொப்பனவான வலிய தோள்

களினால், மண் தோய் துறை பொரு குருதி சொரிந்தார் - தரையிற் பொருந்திய நீர்த்துறைகளிலே போய்ப் பாய்கின்ற இரத்தநீரைச் சொரிந்தவர்களாய், ஒருவரை ஒருவர் தொடர்ந்தார் - (அச்சத்தினால்) ஒருத்தரை ஒருத்தர் பற்றிக்கொண்டு, உயர் தலை உடைய உருண்டார் - உத்தமாங்கமான தலைகள் (மரத்தினால்தாக்குண்டு) உடைந்து இறந்தொழிந்தார்கள்; (எ - று.)

தோள்களுக்கு மலைகளும், அத்தோள்கள் சொரிகின்ற இரத்தப்பெருக்குக்கு அம்மலைகளின் அருவிநீர்க்கால்களும் உவமையாம். (௨௫)

௨௬. பறைபுரைவிழிகள்பறிந்தார்படியிடைநெடிதுபடிந்தார்
பிறைபுரையெயிறுமிழந்தார்பிடரொடுதலைகள்பிளந்தார்
குறையுயிர்சிதறநெரிந்தார்குடரொடுகுருதிகுழைந்தார்
முறைமுறைபடைகளெறிந்தார்முடையுடன்மறியமுறிந்தார்.

(இ - ள்.) (இன்னுஞ் சிலவீரர்கள்), முறை முறை படைகள் எறிந்தார் - (அநுமானை வெல்லக்கருதி) முறையாக நின்று ஆயுதங்களை (அவன்மேல்) எறிந்து, (அவ்வநுமானால் தாவுகள்), பறை புரை விழிகள் பறிந்தார் - பறைகளைப்போன்ற கண்விழிகள் பறியுண்டு, படி யிடை நெடிது படிந்தார் - தரையின்மீது நீள விழுந்தவர்களாய், பிறை புரை எயிறும் இழந்தார் - பிறைச்சந்திரன்போன்ற பற்களையும் இழந்து, பிடரொடு தலைகள் பிளந்தார் - பிடரியும் தலைகளும் பிளக்கப்பெற்று, குறை உயிர் சிதற நெரிந்தார் - குற்றுயிரும் சிதறிப்போம்படி மிதிபட்டு நெரிந்து, குடரொடு குருதி குழைந்தார் - குடலும் இரத்தமும் ஒன்றோடொன்று குழைந்து போகப்பெற்று, (இவ்வாறு), முடை உடல் மறிய - முடைநாற்ற முள்ள (தமது) உடம்புகள் அழியும்படி, முறிந்தார் - முறியப்பெற்றார்கள்; (எ - று.) (௨௬)

௨௭. புடையொடுவிடுகனலின்காய்பொறியிடைமயிர்கள்புகைந்தார்
தொடையொடுமுதுகுதுணிந்தார்சுழிபடுகுருதிசொரிந்தார்
படையிடையொடியநெடுந்தோள்பறிதரவயிறுதிறந்தா
ரிடையிடைமலையின்விழுந்தாரிகல்பொரமுடுகியெழுந்தார்.

(இ - ள்.) இகல் பொர முடுகி எழுந்தார் - போர் செய்யும்படி விரைந்து எழுந்த சில வீரர்கள்,—புடையொடு விடு கனலின் காய் பொறியிடை மயிர்கள் புகைந்தார் - தாக்குகையில் வெளிப்படுகின்ற அக்கினியினுடைய எரிக்கின்ற தீப்பொறிகளிலே மயிர்கள் புகையப்பெற்று, தொடையொடு முதுகு துணிந்தார் - தொடையும் முதுகும் அறுபட்டவர்களாய், சுழிபடு குருதி சொரிந்தார் - சுழிகளுண்டாகின்ற இரத்தவெள்ளத்தைக் கக்கிக்கொண்டு,— படை இடை ஒடிய - (தாம் கையிற்கொண்ட) படைக்கலம் நடுவே முறியவும், நெடு தோள் பறிதர - (தமது) நீண்ட தோள்கள் வேறுபட்டுப் போகவும், வயிறு திறந்தார் - (தம்) வயிறும் பிளக்கப்பெற்றவர்களாய், இடை இடை மலையின் விழுந்தார் - அங்கங்கே மலைபோல விழுந்திட்டார்கள்; (எ - று.) (௨௭)

௨௮. புதைபடவிருளின்மிடைந்தார்பொடியிடைநெடிதுபுரண்டார்
விதைபடுமுயிரர்விழுந்தார்விளிவொடுவிழியுமிழந்தார்
கதையொடுமுதிரமலைந்தார்கணைபொழிசிலையர்கலந்தா
ருதைபடவுரனுநெரிந்தாருதரொடுகுருதியுமிழ்ந்தார்.

(இ - ள்.) கதையொடு - கதாயுதத்துடனே, முதிர மலைந்தார் - நன்றாகப் போர்செய்தவர்களும், கணை பொழி சிலையர் - அம்புகளைச் சொரிகின்ற விற்களையுடையவர்களுமாகி, புதை பட இருளின் மிடைந்தார் கலந்தார் - (பொருள்களியாவும்) மறையும்படி இருளைப்போன்று (கறுத்தவடிவத்துடனே) நெருங்கிக் கலந்துவந்த சிலஅரக்கவீரர்,—உதைபட - (அநுமானுடைய) உதை பட்டமாத்திரத்தில், உரனும் நெரிந்தார் - மார்பு நொருங்கப் பெற்றவர்களும், விளிவொடு விழியும் இழந்தார் - வீரகோஷமும் விழியும் இழந்தவர்களும், உதரொடு குருதி உமிழ்ந்தார் - நடுக்கத்தோடு இரத்தத்தைக் கக்குகின்றவர்களுமாகி, பொடியிடை நெடிது புரண்டார் - புழுதியிலே நெடுநேரம் (பதைபதைத்துப்) புரண்டு, விதை படும் உயிரர் விழுந்தார் - விதைகள்போலச் சிதறிப் போய்விட்ட உயிரை யுடையவர்களாய் வெற்றுடலாய் விழுந்திட்டார்கள்.

உதறு - முதனிலைத் தொழிற்பெயர். 'உதரொடு குருதி யுமிழ்ந்தார்' என்ற பாடத்துக்கு, உதர் என்பதை உதரமென்ற வடசொல்லின் விகார மெனக் கொண்டு, வயிற்றுடனே இரத்தத்தையும் உமிழ்ந்தார்களென்க. விளிவு - வீரர்கள் செய்கின்ற ஆரவாரம்; சாவு என்று கொள்வதிற் பொருட்பொருத்த மின்மை யறிக. (௨௮)

௨௯. அயலயன் மலையொ டறைந்தா னடுபகை யளகை யடைந்தார்
வியலிட மறைய விரிந்தார் மிசையுல கடைய மிடைந்தார்
புயலெறி கடலின் விழுந்தார் புடைபுடை சிதைவொடு சென்றா
ருயர்வுற விசையி னெறிந்தா னுடலொடு முலகு துறந்தார்.

(இ-ள்.) (அநுமான்),—(அரக்கவீரர்களை), அயல் அயல் மலையொடு அறைந்தான் - அருகேயருகேயுள்ள மலைகளின்மீது வீசியெறிந்தான்; (அதனால் அவர்களிற்சிலர்), அடு பகை அளகை அடைந்தார் - கொல்லவல்ல பகைமையையுடைய குபேரன் வாழ்கின்ற அளகாபட்டணத்தை யடைந்தார்கள்; (வேறு சிலர்), வியல் இடம் மறைய விரிந்தார் - ஆகாயத்தினிடம் மறைந்து போம்படி பரவினார்கள்; (மற்றுஞ் சிலர்), மிசை உலகு அடைய மிடைந்தார் - மேலுலகம் முழுதும் நெருங்கினார்கள்; (பின்னுஞ்சிலர்), புயல் தொடு கடலின் விழுந்தார் - மேகங்கள் (நீரை)முகக்கின்ற கடலிலே போய் விழுந்தார்கள்; (வேறுசிலர்), புடைபுடை சிதைவொடு சென்றார் - நாற்புறங்களும் உடல்சிதைந்து போய்விட்டார்கள்; (மற்றுஞ் சிலரை), உயர்வுஉற விசையின் எறிந்தான் - மேலே போம்படி வேகமாக எறிந்தான்: (அதனால் அவர்கள்), உடலொடும் உலகு துறந்தார் - தங்களுடம்புடனே இந்த வுலகத்தைத் துறந்து (சுவர்க்கலோகஞ்) சேர்ந்தார்கள்; (எ - று.)

வியல் - வியத் என்ற வடசொல்லின் சிதைவு. இனி, தமிழ் மொழி யென்றே கொண்டு, வியலிடம் மறைய என்பதற்கு - அகன்ற பூமியினிடம் மறையும்படி யெனினுமாம். உடலொடும் உலகு துறந்தார் என்பதற்கு - உடலையும் உலகையும் விட்டனர் [தம் உடல் பூமியிற் கிடக்க இவ்வுலகத்தை விட்டு வீரசுவர்க்கத்துக்குச் சென்றார்கள்] என்று கூறுவாரு முளர். (௪௯)

வேறு.

௫0. பற்றித் தாளொடு தோள்பறித் தெறிந்தனன் பாரி
னிற்ற வெஞ்சிறை வெற்பின மாமெனக் கிடந்தார்
கொற்ற வாலிடைக் கொடுந்தொழி லரக்கரை யடங்கச்
சுற்றி வீசலிற் பம்பர மாமெனச் சுழன்றார்.

(இ - ள்.) (அநுமான்),— பற்றி - (அரக்கர்களைப்) பிடித்து, தாளொடு தோள் பறித்து - கால்களையும் கைகளையும் பிடுங்கி, எறிந்தனன் - (கைகால்கள் நீங்கின அவர்களை) வீசி யெறிந்தான்; (அவர்கள்), இற்ற வெம் சிறை வெற்பு இனம் ஆம் என - அறுபட்ட வேகத்துக்குக் காரணமான இறகுகளையுடைய மலைகளின் கூட்டம் போல, பாரின் கிடந்தார் - பூமியிலே விழுந்துகிடந்தார்கள்; (பின்னும்), கொற்றம் வாலிடை அடங்க - வெற்றி பொருந்திய தனது வாலிலே அடங்கிக்கிடக்கும்படி, சுற்றி—, கொடு தொழில் அரக்கரை - கொடிய தொழிலையுடைய ராக்ஷசர் சிலரை, வீசலின் - வீசி யெறிதலினால், (அவர்கள்), பம்பரம் ஆம் என சுழன்றார் - பம்பரம்போலச் சுழன்றார்கள்.

கைகால்கள் பறிக்கப்பட்டு முண்டமாய்க்கிடந்த அரக்கர் கூட்டத்துக்குச் சிறகுகளை யிழந்த மலைகளின் கூட்டமும், வாலினால் சுற்றி வீசி யெறிந்ததனால் சுழல்கின்ற அவ்வரக்கர்கட்குக் கயிற்றினால் சுற்றிவீசியெறியப்பட்டு ஆடுகின்ற பம்பரங்களும் உவமையாம். பாரின் எறிந்தனன் என்ன இயைக்கவுமாம்.

இதுமுதல் இருபத்தெட்டுக்கவிகள் - முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் மாச்சீர்களும், மற்றை மூன்றும் விளச்சீர்களு மாகி வந்த நெடிலடி நான்குகொண்ட கலிநிலைத்துறைகள். (௫0)

௫௧. வாள்களிற்றனவிற்றனவரிசிலைவயிரத்
தோள்களிற்றனவிற்றனசுடர்மழுச்சூலம்
நாள்களிற்றனவிற்றனநகையெயிற்றிட்டந்
தாள்களிற்றனவிற்றனபடையுடைத்தடக்கை.

(இ - ள்.) (அநுமான் தாக்கியதனால்), (சில அரக்கர்களுடைய), வாள்கள் - வாளாயுதங்கள், இற்றன - ஒடிந்துபோயின, வரி சிலை - கட்டமைந்த விற்கள், இற்றன—; சுடர் மழு சூலம் - ஒளியுள்ள மழுக்களும் சூலங்களும், இற்றன—; (அன்றியும்), வயிரம் தோள்கள் - உறுதிபொருந்திய தோள்கள்,

இற்றன—; நகை எயிறு ஈட்டம் - வெள்ளொளி விளங்குகின்ற பற்களின் கூட்டம், இற்றன—; தாள்கள் இற்றன—; படை உடை நடை கை - ஆயுதங்களைப் பிடித்துக்கொண்டுள்ள பெரிய கைகள், இற்றன—; (முடிவாக), நாள்கள் - ஆயுள் நாள்களும், இற்றன - முடிந்து போயின; (எ - று.) (௬௧)

௬௨. தெறித்தவன்றலைதெறித்தனசெறிசுடர்க்கவசந்
தெறித்தனபைங்கழல்தெறித்தனசிலம்பொடுபொலந்தார்
தெறித்தபன்மணிதெறித்தனபெரும்பொறித்திறங்க
டெறித்தகுண்டலந்தெறித்தனகண்மணிசிதறி.

(இ - ள்.) (அன்றியும்), (சில அரக்கவீரர்களுடைய), வல் தலை - வலிய தலைகள், தெறித்த - அப்பால் விழுந்தன; செறி சுடர் கவசம் - நிறைந்த ஒளியுள்ள கவசங்கள், தெறித்தன—; பைங் கழல் - பசும்பொன்னினாலாகிய வீரக்கழல்கள், தெறித்த—; பொலம் தார் - பொன்னரி மாலைகள், சிலம்பொடு - ஓசையோடு, தெறித்தன—; மணி - (ஆபரணங்களிலழுத்தியுள்ள) பலவகையிரத்தினங்கள், தெறித்த—; பெரும பொறி திறங்கள்-பெரிய தீப்பொறிகளின் வகைகள், தெறித்தன—; குண்டலம் - குண்டலங்கள், தெறித்த—; கண் மணி - கண்ணின் கருவிழிகள், சிதறி—, தெறித்தன—; (எ - று.)

தெறித்த - 'அ' சாரியைபெறாத முற்று; அடுத்த செய்யுளில் 'உக்க' என்பதும் இவ்வாறே. (௬௨)

௬௩. உக்கபற்குவையுக்கனதுவக்கெலும்புநீறுற்
றுக்கமுற்கரமுக்கனமுசண்டிகளுடைவுற்
றுக்கசக்கரமுக்கனவுடறிறந்துயிர்க
ளுக்ககப்பணமுக்கனவுயர்மணிமகுடம்.

(இ - ள்.) (மேலும்), முற்கரம் - (அவர்களிற் சிலரேந்திய) சம்மட்டிகள், உக்க—; முசுண்டிகள் - முசுண்டியென்னும் ஆயுதங்கள், உடைவுற்று - ஒடிந்து, உக்கன—; சக்கரம் - சக்கரமென்னும் ஆயுதங்கள், உக்க—; கப்பணம் - கப்பணங்கள், உக்க—; உயர் மணி மகுடம் - சிறந்த இரத்தின கிரீடங்கள், உக்கன—; பல் குவை - பற்களின கூட்டம், உக்க—; எலும்பு உதிர்வுற்று - எலும்புகள் பொடிபொடியாய்ப்போய், துவக்கு - சருமம், உக்கன—; (மற்றும் அவ்வரக்கர்களிற் சிலருடைய), உடல் திறந்து - உடல்கள் பிளக்கப்பட்டு, உயிர்கள்—, உக்கன—; (எ - று.)

கப்பணம் - இரும்பினால் நெருஞ்சிமுள்வடிவாகச் செய்யப்பட்டுத் தரையிலே யெறியப்படுவது. (௬௩)

௬௪. தாள்களாற்பலர்நடைக்கைகளாற்பலர்தாக்குந்
தோள்களாற்பலர்சுடர்விழியாற்பலர்தொடருங்
கோள்களாற்பலர்குத்துகளாற்பலர்தத்தம்
வாள்களாற்பலர்மரங்களினாற்பலர்மடிந்தார்.

(இ - ள்.) (அநுமானுடைய), தாள்களால் - கால்களினால், பலர்-பலரும்,—தட கைகளால்—, பலர்—, தாக்கும் தோள்களால் - மோதுகின்ற தோள்களினால், பலர்—, சுடர் விழியால் - நெருப்பைக் கக்குகின்ற கண்களினால் விழித்துப்பார்த்ததினால், பலர்—, தொடரும் கோள்களால் - மேன்மேல் மிகுகின்ற வலிமையைக் காணுதலினால், பலர்—, குத்துகளால்—, பலர்—, தம் தம் வாள்களால் - தம் தமது (கைகளிலுள்ள) வாள்களை (அநுமான் பிடுங்கித்) தம்மீது வீசுதலினால், பலர்—, மரங்களினால் பலர்—, மடிந்தார் - இறந்தார்கள்; (எ - று.)

கோள் - பற்றிக்கொள்ளுத லென்பாரு முளர். (௩௪)

௩௫. ஈர்க்கப்பட்டனர்சிலர்சிலரிடிப்புண்டுபட்டார்
பேர்க்கப்பட்டனர்சிலர்சிலர்பிடியுண்டுபட்டா
ரார்க்கப்பட்டனர்சிலர்சிலரடியுண்டுபட்டார்
பார்க்கப்பட்டனர்சிலர்சிலர்பயமுண்டுபட்டார்.

(இ - ள்.) (அநுமானால்), சிலர்—, ஈர்க்க - பிடித்திழுத்தலினால், பட்டனர் - இறந்தார்கள்; சிலர்—, இடிப்புண்டு - மோதப்பட்டு, பட்டார்—; சிலர்—, பேர்க்க - இருந்த இடத்தை விட்டு அப்புறப்படுத்த, பட்டனர்—; சிலர்—, பிடியுண்டு, பிடிக்கப்பட்டு, பட்டார்—; ஆர்க்க - ஆரவாரித்தலினால், பட்டனர்—, சிலர்—, அடியுண்டு - அடிபட்டு, பட்டார்—; சிலர்—, பார்க்க - உறுக்கிப் பார்த்தலினால், பட்டனர்—; சிலர்—, பயமுண்டு - அச்சங்கொண்டு, பட்டார்—; (எ - று.)

ஆர்க்க - பிடித்துக்கட்டுதலினால் எனினுமாம். (௩௫)

[இதுமுதல் மூன்றுகவிகள்-அநுமான்செய்த போர்த்திறத்தைத் தெரிவிக்கும்.]

௩௬. ஓடிக்கொன்றனன்சிலவரையுடலுடறோறுங்
கூடிக்கொன்றனன்சிலவரைக்கொடிநெடுமரத்தாற்
சாடிக்கொன்றனன்சிலவரைப்பிணந்தொறுந்தடவித்
தேடிக்கொன்றனன்சிலவரைக்கறங்கெனத்திரிவான்.

(இ - ள்.) கறங்கு என திரிவான் - காற்றாடி போலத் திரிபவனாய், (சில அரக்கர்களை), உடல் உடல் தோறும் ஓடி - ஒவ்வொருத்தர் இருக்குமிடத்திலும் ஓடிப்போய், கொன்றனன் - கொன்றான்; சிலவரை—, கொடி நெடு மரத்தால் - கொடிகள் படர்ந்த பெரிய மரத்தினால், கூடி - நெருங்கி, கொன்றனன்—; சிலவரை—, சாடி கொன்றனன் - அடித்துக் கொன்றான்; பிணம் தொறும் - பிணக்குவியல்களினிடையே, சிலவரை - (பதுங்கியிருந்த) சிலரை, தடவி தேடி - தேடிக்கண்டுபிடித்து, கொன்றனன்—; (எ - று.)

உடலுடல் தோறும் கூடிக் கொன்றனன் என்பதற்கு - அவ்வவ்வரக்கர்களின் உடம்புகள்தோறும் தான் சூட்சுமவடிவுகொண்டு உட்புகுந்து (உடனே பெரிய வடிவமெடுத்து) அவ்வவ்வீரருடலைப் பிளந்து வெளிவந்து கொன்றானென்றும்; கொடி நெடு மரத்தால் என்பதற்கு - நீண்ட துவசங்கட்டிய மரக்கொம்பினால் என்றும் பொருள்கூறலு முண்டு. (௩௬)

௫௭. முட்டினார்படமுட்டினான்முறைமுறைமுடுகிக்
கிட்டினார்படக்கிட்டினான்கிரியெனநெருங்கிக்
கட்டினார்படக்கட்டினான்கைகளின்மெய்யிற்
றட்டினார்படத்தட்டினான்மலையெனத்தருவான்.

(இ - ள்.) மலை என தருவான் - மலையென்று சொல்லத்தக்கவனாகிய பேருருவத்துடனிருந்த அநுமான்,—முட்டினார் பட முட்டினான் - (தன்னை) முட்டினவர்கள் இறக்கும்படி (தான் அவரை) முட்டினான்; முறை முறை முடுகி கிட்டினார் பட கிட்டினான் - வரிசைவரிசையாக விரைந்து (தன்னை) நெருங்கி வருபவர்கள் இறக்கும்படி (தானும் அவரை) நெருங்கினான்; கிரி என நெருங்கி கட்டினார் பட கட்டினான் - மலைபோன்றவராய் நெருங்கிவந்து (தமது கைகளால் தன்னைக்) கட்டினவர்கள் இறக்கும்படி (தானும் அவரைக்) கட்டினான்; கைகளின் மெய்யின் தட்டினார் பட தட்டினான் - (தம்) கைகளினால் (தனது) உடம்பில் தட்டினவர்கள் இறக்கும்படி (தான் அவர்களைத்) தட்டி விட்டான்; (எ - று.)

கைகளின் மெய்யில் தட்டினார் என்பதற்கு - வீரத்திற்கு அறிகுறியாகத் தம்மைகளைக்கொண்டு தமது தோள்களிலும் தொடைகளிலும் தட்டினவர்களைத் தனது கைகளினால் தட்டிக் கொன்றானென்று கொள்ளலுமாம். இதனால், எவ்வெவ்வாரக்கவீரர் எவ்வெவ்வாறு தன்னோடு பொர வந்தனரோ, அவரவருடன் அவ்வவ்வாறே பொருது அவர்களைக் கொன்றானென அநுமான் சமயத்தனு செய்த வகையைச் சிறப்பித்துக் கூறினாரென்க. (௫௭)

௫௮. மறக்கினுங்கொல்லுமுணரினுங்கொல்லுமால்விசும்பிற்
பறக்கினுங்கொல்லும்படரினுங்கொல்லுமின்படைக்கை
நிறக்கருங்கழலரக்கர்கணெறிதொறும்பொறிகள்
பிறக்கநின்றெறிபடைகளைத்தடக்கையாற்பிசையும்.

(இ - ள்.) (பின்னும் அவ்வநுமான்),—(அரக்கவீரர்களை), மறக்கினும் - (தன்னை நினையாமல்) மறந்தாலும், கொல்லும் - கொன்றுவிடுவான்; உணரினும் - (தன்னை எப்போதும் மறவாமல்) மனத்திலேயேகருதிக்கொண்டிருந்தாலும், கொல்லும்—; மால் விசும்பில் பறக்கினும் - பெரிய ஆகாசத்திற் பறந்து சென்றாலும், கொல்லும்—; படரினும் - (நிலத்தின்மீது) நடந்து சென்றாலும், கொல்லும்—; மின் படை கை - ஒளிபொருந்திய ஆயுதங்களேந்திய கையையும், நிறம் கருங் கழல் - நல்லநிறத்தையுடைய பெரிய வீரக் கழலையு மணிந்த, அரக்கர்கள்—; நெறிதொறும் - வழிகளிலெல்லாம், பொறிகள் பிறக்க நின்று - தீப்பொறிகள் தோன்றும்படி நின்றுகொண்டு, எறி படைகளை - (தன்மீது) எறிந்த ஆயுதங்களை யெல்லாம், தட கையால் பிசையும் - பெரிய தனது கைகளாற் பிசைந்து பொடிபொடியாக்கி விடுவான்; (எ - று.)

எத்தொழிலை மேற்கொண்டிருந்தாலும், அரக்கர்களைத் தவறாது அநுமான் கொல்பவனென்பதை வற்புறுத்த 'மறக்கினும் கொல்லும், உணரினுங் கொல்லும்' என்றார். 'நெரிதொறும்' என்றும் பாடம். (௬௮)

[படுகளச்சிறப்பு.]

௬௯. சேறும்வண்டலுமூளையுநிணமுமாய்த்திணிய
நீறுசேர்நெடுந்தெருவெலாநீத்தமாய்நிரம்ப
வாறுபோல்வருங்குருதியவ்வனுமனலலைப்புண்
டீறில்வாய்தொறுமுமிழ்வதேயொத்ததவ்விலங்கை.

(இ - ள்.) மூளையும் நிணமும் - (அரக்கவீரருடைய) மூளைகளும் கொழுப்புக்களும், சேறும் வண்டலும் ஆய் திணிய - சேறும் வண்டலும் போன்று செருங்கவும், நீறு சேர் நெடு தெரு எலாம் - புழுதி நிறைந்த நீண்ட தெருக்கள் முழுதும், நீத்தம் ஆய் நிரம்ப - வெள்ளமாகி நிறையவும், ஆறு போல் வரும் - ஆற்றைப்போலப் பெருகியோடுகின்ற, குருதி - இரத்த வெள்ளத்திலே, அ இலங்கை - அந்த இலங்காபட்டணமானது, அ அனுமனல் அலைப்புண்டு - அந்த அநுமானால் அலைக்கப்பட்டு, ஈறு இல் வாய் தொறும் - முடிவில்லாத [பலவான] வாயில்கள் தோறும், உமிழ்வது - (இரத்தத்தைக்) கக்குவதை, ஒத்தது—; (எ - று.)

சேறும் வண்டலும் நிறைந்திருக்கப்பெற்றதுபோல மூளையும் நிணமும் நிறைந்து தெருக்களின் வழியாகப் பெருகி இலங்காதுவாரங்களினாலே வழிந்து வெளிப்படுகிற ரக்தநதியின் தோற்றம், இலங்காபட்டணமே அநுமானால் அலைக்கப்பட்டுத் தனது வாய்களினாலெல்லாம் இரத்தத்தைக் கக்குவது போன்றிருந்த தென்பதாம்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. (௬௯)

[இதுமுதல் ஆறுகவிகள் - மீண்டும் அநுமான் போர்செய்த திறமையைத் தெரிவிக்கும்.]

௭௦. கருதுகாலினுங்கையினும்வாலினுங்கட்டிச்
சுருதியேயன்னமாருதிமரத்திடைதூரப்பா
னிருதரெந்திரத்திடுகரும்பாமெனநெரிவார்
குருதிசாறெனப்பாய்வதுகுரைகடற்கூனில்.

(இ - ள்.) சுருதியே அன்ன மாருதி - வேதத்தையே யொத்த (உண்மையையேயுடைய) அநுமான்,— கருது காலினும் - நினைக்கக்கூடிய ஒருகண காலத்திற்குள்ளாக, கையினும் வாலினும் கட்டி - கைகளினாலும் வாலினாலும் (சில அரக்கரைச்) சேர்த்துக்கட்டி, மரத்திடை தூரப்பான் - மரத்தின்மீது எறிபவனாக,—(அப்போது), நிருதர் - (அவ்வாறு எறியப்பட்ட) இராட்சசவீரர், எந்திரத்து இடு கரும்பு ஆம் என - ஆலையிலேயிட்டு ஆட்டுகிற கரும்புபோல், நெரிவார் - (உடம்பு)நொருங்கிப்போகலானார்கள்; குருதி - (அவர்களது உடம்பிலிருந்து பெருகுகின்ற) இரத்தம், சாறு என - கருப்பஞ்சாறுபோல, குரை கடல் கூனில் - சப்திக்கின்ற சமுத்திரமாகிய ஒருவகைப்பாத்திரத்தில், பாய்வது-பாய்கின்றதாகும்; (எ - று.)

அநுமான் தனது கைகளாலும் வால்களாலும் கட்டி அரக்கவீரர் சிலரை மரத்தின்மீது எறிய, அவர்களுடம்புகள் ஆலையிலிட்ட கரும்புபோல நொருங்கி அந்தக்கரும்புகளிலிருந்து சாறுபெருகுவதுபோல, அவ்வுடம்பினின்று பெருகுகின்ற இரத்தம் சமுத்திரத்திற்போய்ப் பாயலாயிற் றென்பதாம். காலினும் - கால்களினாலுமெனினுமாம். 'கருதிவாலினுங் காலினுங் கடிகையிற் கட்டி' என்றும் பாடம். (௪0)

௪௧. எடுத்தரக்கரையெறிதலுமவருடலெற்றக்
கொடித்திண்மாளிகையிடிந்தனமண்டபங்குலைந்த
தடக்கையானைகண்மறிந்தனகோபுரந்தகர்ந்த
பிடிக்குலங்களும்புரவியுமவிந்தனபெரிய.

(இ - ள்.) (அநுமான்), அரக்கரை - (சில) இராட்சசரை, எடுத்து எறிதலும் - தூக்கி யெறிந்தமாத்திரத்தில், அவர் உடல் எற்ற - அவ்வரக்கரது உடம்புகள் மோத, (அதனால்), கொடி திண் மாளிகை இடிந்தன - கொடிகள் கட்டின வலிய உப்பரிகைவீடுகள் இடிந்துபோயின; மண்டபம் குலைந்த - மண்டபங்கள் நிலைகுலைந்தழிந்தன; தட கை யானைகள் - பெரிய துதிக்கைகளையுடையயானைகள், மறிந்தன - மடங்கி வீழ்ந்து இறந்தன; கோபுரம் தகர்ந்த - கோபுரங்கள் இடிந்து வீழ்ந்தன; பெரிய பிடி குலங்களும புரவியும் அவிந்தன - பெரியனவான பெண்யானைக்கூட்டங்களும் குதிரைகளும் அழிந்தன. (௪௧)

௪௨. தத்தமாடங்கடம்முடலாற்சிலர்தகர்த்தார்
தத்தமாதரைத்தங்கழலாற்சிலர்சமைத்தார்
தத்தமாக்களைத்தம்படையாற்சிலர்தடிந்தா
ரெற்றிமாருதிதடக்கைகளான்விசித்தெறிய.

(இ - ள்.) மாருதி - அநுமான், தட கைகளால் எற்றி விசித்து எறிய - (தனது) நீண்ட கைகளினால் அடித்துக் கட்டித் தூக்கியெறிதலினால்,—சிலர் - சில அரக்கர்கள், தம் உடலால் - தமது உடம்புகளினால், தம் தம் மாடங்கள் - தங்கள் தங்கள் வீடுகளை, தகர்த்தார் - உடைத்தார்கள்; சிலர்—, தம் கழலால் - தமது கால்களால், தம் தம் மாதரை - தங்கள்தங்கள் மனைவிமார்களை, சமைத்தார் - அழித்தார்கள்; சிலர்—, தம் படையால் - தமது (கைகளிலுள்ள) ஆயுதங்களினால், தம் தம் மாக்களை - தங்கள் தங்கள் குழந்தைகளை, தடிந்தார் - கொன்றார்கள்; (எ - று.)

அநுமான் சிற்சில அரக்கவீரரை அடித்துக் கட்டித் தூக்கி யெறிய, அவர்கள் தமது மாளிகையின்மீது விழுந்து அவற்றை யழித்தும், விழும்போது தமது கால்கள் தம்மனைவியரின்மீது படுதலால் அவர்களை யழித்தும், தம் கையிலுள்ள ஆயுதங்கள் தம்மக்கள்மீதுபடுதலால் அவர்களையழித்தும் இவ்வாறு விழலாயின ரென்பதாம். இந்தச்செய்யுளில் அவ்வநுமான் அரக்கரைக் கொண்டே அவர்களுக்கு உரிய பொருள்களை யழியச்செய்தனனென அநு

மான் பொருத விசித்திரத்தைப் பாராட்டிக் கூறியவாறு. மாக்கள் - மக்க ளென்பதன் நீட்டல். 'இனி மாக்களை - தமது குதிரைகளை யென்னவுமாம். 'எத்தி மாருதி தடக்கைகளா லெடுத்தெறிய' என்ற பாடத்துக்கு, எத்தி யென்பது ஏத்தி யென்பதன் குறுக்க லென்க. அநுமான் இராமநாமத்தைச் சொல்லித் துதித்துத் தனது கைகளால் அரக்கவீரரை யெடுத்தெறிய என்று பொருள். (௪௨)

௪௩. ஆடன்மாக்களிறனையவனரக்கியர்க்கருளி
வீடுநோக்கியேசெல்கென்றுசிலவரைவிட்டான்
கூடினார்க்கவருயிரெனச்சிலவரைக்கொடுத்தா
னாடினார்க்கவர்மனைதொறுஞ்சிலவரையுய்த்தான்.

(இ - ள்.) ஆடல் மா களிறு அனையவன் - அசைந்தாடுந் தன்மையை யுடைய பெரிய ஆண்யானையைப் போன்றவனாகிய அநுமான்,—அரக்கியர்க்கு அருளி - (சில) அரக்கியர் (படுகின்ற துயரத்தைக் கண்டு அவர்களிடத்துக்) கருணைகொண்டு, வீடு நோக்கி செல்க என்று—, சிலவரை - சில அரக்கரை, விட்டான் - (கொல்லாது) உயிரோடு விட்டிட்டான்; கூடினார்க்கு - (கணவரை) அப்போதுதான் சேர்ந்தவராகிய இளம்பெண்கட்கு, அவர் உயிர் என - அம் மாதர்கட்கு உயிர்போன்று இருப்பவரென்ற (இரக்கங்கொண்ட) எண்ணத் தினால், சிலவரை கொடுத்தான்—; ஊடினார்க்கு - (தம்மோடு சொல்லாது எங்கேயோ போய்விட்டா ரென்று தம்கணவரைப்பற்றி மாறுபாடாக நினைத்து) ஊடல்கொண்ட அரக்கமகளிர்க்கு (இரங்கி), அவர் மனைதொறும் - அவர்வீடுதோறும், (அவர்களது கணவர் போய்ச் சேரும்படி), சிலவரை,— சிலரை,— உய்த்தான் - அனுப்பிவிட்டான்; (எ - று.)

இதனால், வீரத்திலும் அநுமானுக்கு இருந்த இரக்கத்தைக் கவி விளக்கினார். இனி, விட்டான், கொடுத்தான், உய்த்தான் என்ற முற்றுக்களுக்கு- வீசி யெறிந்தானென்று கருத்துப்பொருள்கொண்டு, வீடுமுதலிய இடங்களிற்போய் விழும்படி அநுமான் எறிந்ததைக் கவி இவ்வாறு வருணிக்கின்றன ரென்னலு மொன்று. (௪௩)

௪௪. தருவெலாமுடறெற்றியெலாமுடல்சதுக்கத்
துருவெலாமுடலுவரியெலாமுடலுள்ளூர்க்
கருவெலாமுடல்காயமெலாமுடலரக்கர்
தெருவெலாமுடறேயமெலாமுடல்சிதற.

(இ - ள்.) (அநுமான் அரக்கவீரர்பலரையும் வீசியெறிந்ததனால்), சிதற - (நாற்புறத்திலுஞ்) சிதறண்டு,—தரு எலாம் - மரங்களிலெல்லாம், உடல் - (அவ்வரக்கவீரரின்) உடல்களும்,—தெற்றி எலாம் - தெருத்திண்ணைகளி லெல்லாம், உடல்—, சதுக்கத்து உரு எலாம் - நாற்சந்திகூடும் இடங்களிலெல் லாம், உடல்—, உவரி எலாம் - கடல் முழுவதும், உடல்—, உள் ஊர் கரு எலாம் - உள்ளூரின் நடுவிடமுழுவதும், உடல்—, காயம் எலாம் - ஆகாயமுழு

வதும், உடல்--,அரக்கர் தெரு எலாம் - அரக்கருடைய தெருக்களிலெல்லாம், உடல்--,தேயம் எலாம் - அந்த இலங்காபிரதேசம் முழுவதிலும், உடல்- உடல்களுமாகி, (நிரம்பிக்கிடந்தன); (எ - று.)

இதனால் எங்கும் அரக்கருடைய உயிர்கழிந்த வெற்றுடம்புகள் கிடந்தமையைக் கவி வருணிக்கின்றனர். சதுக்கம் - சதுஷ்கம்: கரு - கர்ப்பம்: வடசொற்கள். காயம் - ஆகாயமென்பதன் முதற்குறை. அரக்கர் என்பதை, 'உடல்' என்ற சொற்களோடெல்லாம் கூட்டலுமாம். (௪௪)

௪௫. ஊனெலாமுயிர் கவருறுங்காலனேய்ந்துலந்தான்
யானெலாரையுமாருதிசாடனைதவிரான்
மீனெலாமுயிர் மேகமெலாமுயிர் மேன்மேல்
வானெலாமுயிர் மற்றுமெலாமுயிர் சுற்றி.

(இ - ள்.) மாருதி - அநுமான், தான் - தான் ஒருத்தனுகவே, எலாரையும் - (எதிர்ப்பட்ட) அரக்கர்யாவரையும், சாடனை - மோதியடிக்குந்தொழிலினின்று, தவிரான் - (இன்னும்) நீங்காதவனாயினன் [மேன்மேற் கொன்று கொண்டிருக்கிறான்]; (இந்தச் சமயத்தில்), ஊன் எலாம் உயிர் கவர்வுறும் காலன் - உடம்புகளிலிருந்து உயிரைக் கவர்ந்துசெல்லவேண்டிய யமன், (போரில் மாள்பவர் மிகப் பலராய்விட்டதனால் தனது அத்தொழிலைச் செய்ய மாட்டாமல்), ஓய்ந்து - தளர்ந்து, உலந்தான - வலிமை கெட்டான்; (அதனால் எடுத்துக் கொண்டுபோவார் எவருமில்லாமல்), சுற்றி - (அவ்வூரின் பல விடங்களிலும்) சூழ்ந்துகொண்டு,--- மீன எலாம் - நட்சத்திரமண்டிலம் முழுவதும், உயிர் - உயிராகவும், மேகம் எலாம் - மேகமண்டலமெல்லாம், உயிர்--, மேன்மேல் வான் எலாம் - மிகவுயரத்திலுள்ள ஆகாயத்தினிடம் முழுதும், உயிர்--, மற்றும் எலாம் - மற்றுமுள்ள இடைவெளிகளிலெல்லாம், உயிர் - உயிராகவும், (நிரம்பிக்கிடந்தன); (எ - று.)

உடல் பலவிடங்களிலுங் கிடந்தமைக் கீழ்க்கவியில் வருணித்துக்கூறிய கவி, இச்செய்யுளினால், உயிரைக் கவர்ந்து செல்லவேண்டிய யமனும் தனது அத்தொழிலைச் செய்யமுடியாமல் ஓய்ந்து விடவே, அநுமானுற் கொல்லப்பட்ட அரக்கவீரரின் பிராணன்கள் எடுத்துச்செல்வாரில்லாமல் வானம் முதலிய பலவிடத்தும் நிரம்பிக்கிடந்தன என்று வருணித்தார்; தொடர்புயர்வு நவிற்சியணி; இதனால் அளவற்ற அரக்கவீரர் இறந்தன ரென்பது பெறப்படும். (௪௫)

[இதுமுதல் நான்குகவிகள் - அநுமானும் அவனைச் சூழ்ந்துகொண்டு நிற்கும் அரக்கரும் என்ற இவர்களது வருணனையைக் கூறும்.]

௪௬. ஆகவிச்செருவிளைவுறுமமைதியினரக்கர்
மோகமுற்றனராரமெனமுறைமுறைமுனிந்தார்
மாகமுற்றவுமாதிரமுற்றவும்வளைந்தார்
மேகமொத்தனர்மாருதிவெய்யவனொத்தான்.

(இ - ள்.) ஆக - இவ்வாறு, இ செரு விளைவுறும் அமைதியின் - இப்போர் நடக்கும் பொழுது, — அரக்கர் - (சில) அரக்கர்கள், மோகம் உற்றனர் ஆம் என - அறிவு மயக்கங்கொண்டவர்போல, முறை முறை முனிந்தார் - மேன் மேற் கோபங்கொண்டு, மாகம் முற்றவும் மாதிரம் முற்றவும் வளைந்தார் - பெரிய வானினிடம் முழுவதும் திக்குக்கள் முழுவதும் சூழ்ந்து கொண்டவ ராய், மேகம் ஒத்தனர் - கறுத்த மேகத்தை யொத்துத் தோன்றினார்கள் ; (அவர்களின் நடுவேயிருந்த), மாருதி - அநுமான், வெய்யவன் ஒத்தான் - சூரி யன் போன்றான் ; (எ - று.)

பலபடியாகச்சிதறண்டு போன அரக்கர் இப்போது சினங்கொள்வது அஜ்ஞாநத்தின் செயலா மென்பார், 'மோகமுற்றனராமென முனிந்தார்' என் றார். பற்பலவேளையில் விலகிப்போதலும் சிற்சிலவேளையிற் சூரியனைக் கவிந் து மூடிக்கொள்ளுதலு முடைய மேகம் - அநுமானிடத்துப் பலகால் அடி யுண்டு விலகிப்போய் இப்போது அவனைக் கவிந்து கொண்ட கறுத்த அரக்கவீரர்க்கு உவமை யாதற்கு ஏற்கும். இப்போது அரக்கவீரராற் கவியப்பட்டாலும் வெகு விரைவில் அவ்வரக்கவீரர்கள் விலகிப் போய்விட இவ்வநுமான் பிரதாபத்தோடு விளங்குவ னென்பதை விளக்க, அநுமானுக் குச் சூரியனை உவமை கூறினார். (ச௬)

ச௭. அடலரக்கருமார்த்தலினலைத்தலினயராப்
படைபெருத்துயர்பெருமையிற்கருமையிற்பொலிவின்
மிடலயிற்படைமீனெனவிலங்கலிற்கலங்குங்
கடனிகர்த்தனர்மாருதிமந்தரங்கடுத்தான்.

(இ - ள்.) ஆர்த்தலின் - ஆரவாரித்தலினாலும் அலைத்தலின் - வருத்துத லினாலும் [அலையுடைமையினாலும்], அயரா புடை பெருத்து உயர் பெருமை யின் - (கண்டவர்) சோரும்படி எப்புறமும் பருத்து உயர்ந்துதோன்றுகின்ற பெருந்தோற்ற முடைமையாலும், கருமையின் பொலிவின் - கருநிறத்தோடு விளங்குவதனாலும், மிடல் அயில் படை மீன் என விலங்கலின் - வலிமைபொ ருந்திய வேல் முதலிய ஆயுதங்கள் மீன்கள்போல விட்டுவிட்டுப் பிரகாசித்தலி னாலும்,—அடல் அரக்கரும் - வலிமை கொண்ட ராக்ஷஸர்களும், கலங்கும் கடல் நிகர்த்தனர் - (கடையும் போது) கலங்குவதான சமுத்திரத்தை யொத் தார்கள் ; மாருதி - அநுமான், மந்தரம் கடுத்தான் - (அக்கடலைக் கலக்குகின்ற) மந்தரமலையை யொத்தான் ; (எ - று.)

**உவமையணி.** ஆர்த்தல், அலைத்தல், பெருந்தோற்றமுடைமை, கருமை, மீன்விலங்குதல் என்ற தன்மை அரக்கரிடத்தும் கடலினிடத்தும் பொருந் தும் பொதுத்தன்மையாம். அலைத்தல் என்ற இடத்துச் சிலேடையும், படைமீன் என்றஇடத்து உருவகமும் இவ்வுவமைக்கு உபகாரப்பட்டன. கலங்கும் கடல், எனவந்ததற்கு ஏற்ப, கலக்கும் மந்தரம் என்க. 'அமராப்புடை பெருத்து' 'மிடலியற்படை' என்பன பாடாந்தரங்கள். (ச௭)

௪௫. கரதலத்தினுங்காலினும்வாலினுங்கதுவ
நிரைமணித்தலைநெரிந்துகச்சாய்ந்துயிர்நீப்பார்
சுரர்நடுக்குறவமுதுகொண்டெழுந்தநாடொடரு
முரகரொத்தனரநுமனுங்கலுழனையொத்தான்.

(இ - ள்.) கரதலத்தினும் - கைகளினாலும், காலினும் - கால்களினாலும், வாலினும் - வால்களினாலும், கதுவ - பற்றுதலினால்,— நிரை மணி தலை நெரிந்து உக சாய்ந்து உயிர் நீப்பார் - வரிசையான அழகிய [இரத்தினங்கள்பதிக்கப்பெற்ற] (தமது) தலைகள் நெரிந்து சிந்துதலினால் (மண்மீது) விழுந்து உயிரை விடுபவரான அரக்கர்கள்—, சுரர் நடுக்கு உற - தேவர்கள் நடுங்கும்படி, அமுது கொண்டு எழுந்த நாள் - கருடன் அமுதத்தைக் கவர்ந்து கொண்டுவந்த காலத்தில், தொடரும் - (அந்த அமுதத்தைக் கவரவொட்டாமல் அங்குக்காவலாய்த்) தொடர்ந்துநின்ற, உரகர் - உரகரை, ஒத்தனர் - ஒத்தார்கள்; அநுமனும் - அநுமானும், கலுழனை - (அவர்களை வலியழித்த) கருடனையே, ஒத்தான்—; (எ - று.)

கருடன் தனது தாயான விநதையின் அடிமைத்தன்மையை யொழிக்கக் கருதித் தேவர்களுடன் பொருது!வென்று அந்தத் தேவலோகத்து இருந்த அமிருதத்தை எடுத்து வருமுயல்கையில் அதற்குக் காவலாயுள்ளவராய்த் திருஷ்டிவிஷமுள்ளவர்களும் நெருப்புப் பொறி பறக்கின்ற கண்களையுடையவரும் பெருவலிமைபடைத்தவரும் மிகக்கொடியவரும் கண்களினாலேயே சுட்டெரிக்க வல்லவருமான இரண்டுஉரகர்கள் கண்கொட்டாமல் எதிர்த்துநிற்பது கண்டு, இவர்களைநாம் எவ்வாறு வெல்வது? என்றுஆலோசித்துத்தனது இறகுகளினால் அவர்கள் கண்களைப் புழுதி நிரம்பும்படி செய்து, அவர்கள் கண்கள் தெரியாத சமயத்தில் அவர்களைக் கண்டதுண்டமாக்கிப் பிறகு அமுதத்தைக் கவர்ந்தானென்ற செய்தி, மஹாபாரதத்தில் ஆதிபர்வத்திற் கூறப்பட்டிருக்கின்றது. அன்றியும், அநுசாஸநபர்வத்தில் அமுதத்துக்குக் காவலாக இருந்த அக்கினியை மந்தவேகமுள்ளவனாகச் செய்து அவனைக் கடந்து, காவலாளராயிருந்த அரக்கரைக் கொன்று. பிறகு சூழ்ந்துகொண்டிருந்த வீரர்களைக் கோன்றிட்டுக் காவலாயிருந்த சக்கரத்தின் ஜாலத்தையும் பிளந்து தேவலோகத்திலிருந்த அமுதத்தைக் கருடன் கவர்ந்து சென்றதாகக் கூறப்பட்டிருக்கின்றது. உரகர் - ஸர்ப்பசாதியார். (௪௫)

௪௬. மானமுற்றதம்பகையினான்முனிவுற்றுவளைந்த
மீனுடைக்கடலுலகினிலுளவெலாமிடைந்த
வூனறக்கொன்றுகைக்கவுமொழிவிலாநிருத
ரானையொத்தனரானரியொத்தனனநுமன்.

(இ - ள்.) மானம் உற்ற - செருக்கைக்கொண்ட, தம் பகையினால் - தமது பகைமைக்குணத்தினாலே, முனிவுற்று - கோபித்துக்கொண்டு, வளைந்த - (அநுமானைச்) சூழ்ந்துகொண்டவரும், மீன் உடை கடல் உலகினில் உள எலாம் மிடைந்த - மீன்களையுடைய கடலினாற்சூழப்பட்ட உலக

கத்திலே [இலங்கையிலே] யுள்ள இடம்முழுவதிலும் நெருங்கியிருப்பவரும், ஊன் அற கொன்று துலைக்கவும் ஒழிவு இலா - (கண்ணிற் கண்டவர்) உடம்புகளையெல்லாம் அழித்தொழிக்கவும் அழிந்திடாமற் பெருகித் தோன்றுபவருமான, நிருதர் - அரக்கர், ஆனை ஒத்தனர் - யானைகளையொத்தார்கள்; அனுமன்—, ஆள் அரி ஒத்தனன் - (மிருகங்களை) ஆளுந் தன்மையுள்ள (மிருகேந்திரனை) சிங்கத்தைப் போன்றான்; (எ - று.)

கேவலம் தமது செருக்கினாற் பகைமை கொண்டு சினந்து அநுமானை வளைந்துகொண்டவரெனவும், இலங்கை முழுதும் நெருங்கி இருப்பவரெனவும், எவ்வளவு கொன்றாலும் ஒழிந்திடாது பெருகித் தோன்றுபவரெனவும் அரக்கரை முதல் மூன்றடிகளினாற் கூறினார். வளைந்த மிடைந்த ஒழிவிலா நிருதர் என்க. அப்படி அந்நிருதர் மிகப்பலராயிருந்தும் இவ்வநுமான் அவர்களையெல்லாம் பின்வாங்காது அழிக்கும் ஆற்றலுடையானென்பதை விளக்க, அவ்வரக்கர்க்கு யானைத்திரளையும், அநுமானுக்குச் சிங்கத்தையும் உவமை கூறினர். (சகூ)

[அநுமானது விழுப்புண்.]

ரு0. எய்தவெற்றினவெறிந்தனவீர்த்தனவிகலின்
பொய்தகுத்தினபொதுத்தனதொளைத்தனபோழ்ந்த
கொய்தசுற்றினபற்றினகுடைந்தனபொலிந்த
ஐயன்மற்பெரும்புயத்தனபுண்ணளப்பரிதால்.

(இ - ள்.) எய்த - எய்தவற்றினாலும், எற்றின - அடித்தவைகளினாலும், எறிந்தன - வீசியெறிந்தவற்றாலும், ஈர்த்தன - அறுத்தவற்றினாலும், இகலின் பொய்த - மாறுபாட்டோடு சொரிந்தவற்றினாலும், குத்தின - குத்தினவற்றாலும், பொதுத்தன - பொத்தினவற்றாலும், தொளைத்தன - தொளைத்தவற்றாலும், போழ்ந்த - பிளந்தவற்றாலும், கொய்த - தறித்தவற்றாலும், சுற்றின - வளைந்துகொண்டு பந்தப்படுத்தினவற்றாலும், பற்றின - பிடித்துக்கொண்டவற்றாலும், குடைந்தன - உட்புகுந்து குடைந்தவற்றாலும், பொலிந்த - விளங்கித்தோன்றுகின்ற, ஐயன் மல் பெரும் புயத்தன - பெரியோனாகிய அநுமானது வலிமைபொருந்திய பெரிய தோள்களிலுள்ளனவான, புண் - புண்களை, அளப்பு - (இவ்வளவென்று) கணக்கிடுதல், அரிது - (எவர்க்கும்) முடியாததாம்; (எ - று.)—ஆல் - ஈற்றசை; வியப்புமாம்.

அரக்கரது அம்புமுதலியவற்றால் அநுமானது புயங்களில் தோன்றிய புண்கள் அளவிடமுடியா என்று கூறி, இந்நிலையில், அவன் அவ்வூறுபாட்டைச் சிறிதும் இலட்சியஞ் செய்யாமல் அரக்கரை மிக எளிதில் அழிக்கின்ற வீரத்தைப் பெற வைத்தார். "விழுப்புண்படாதநாளெல்லாம் வழுக்கினுள், வைக்கும் தன்னாளை யெடுத்து" என்றபடி விழுப்புண் படுதலே வீரர்க்குச் சிறப்பாதலால், விழுப்புண்ணைப் பாராட்டிக்கூறிய முகத்தால் அநுமனது கீர்த்தியை வெளியிட்டவாறு. (ரு0)

[வானோர் அனுமானைப் புகழ்தல்.]

௫க. கார்க்கருந்தடங்கடல்களுமழைமுகிற்கணனும்
வேர்க்கவெஞ்செருவிளைத்தெழும்வெள்ளெயிற்றரக்கர்
போர்க்குழாம்படிபூசலினையனைப்புகழ்வுற்
றார்க்கும்விண்ணவரமலையேயுயர்ந்ததன்றமரில்.

(இ - ள்.) கார் கரு தட கடல்களும் - மிகக்கரிய பெரிய (அலை மோது கின்ற) சமுத்திரங்களும், மழை முகில் கணனும் - மழைபெய்கிற மேகக் கூட்டங்களும், வேர்க்க - மனம் புழுங்கும்படி [பின்னடையும்படி], வெம் செரு விளைத்து - கொடிய போரை யுண்டாக்கி, எழும் - மேன்மேற் கிளம்புகின்ற, வெள் எயிறு அரக்கர் - வெண்மையான கோரப்பற்களை யுடைய அரக்கர்களின், போர் குழாம் - போர் வரிசைகளில், படி - தோன்று கிற, பூசலின் - போராரவாரத்தைக்காட்டிலும் ஐயனை புகழ்வுற்று ஆர்க்கும் விண்ணவர் அமலையே - அநுமானைக் கொண்டாடி ஆரவாரிக்கின்ற தேவர்க ளது ஆரவாரமே. அன்று அமரில் - அந்தப்போரில், உயர்ந்தது - மிக்கிருந்தது.

மோதுதலையும் அம்புமழைதூவுதலையுமுடைய செருவைக் காணவே, முறையே அத்தொழில்களையுடைய கடல்களும் மேகங்களும் தம்மினும் அரக் கர்போர் விஞ்சியிருத்தல்பற்றித் தாம் பின்வாங்கின வென்க. தமது பகை வர்களாகிய அரக்கவீரரைப் பெரிதும் கொன்றொழிப்பது கண்டு தேவர்கள் அநுமானை மிகவும் வாழ்த்துவாராயினர். மோதுதலும் அம்புபொழிதலும் என்ற இவற்றில் கடல் முகில் என்ற இவற்றை அரக்கர் விஞ்சினராக, அங்ங னம் அரக்கர்பொருகையிலுண்டாகின்ற போராரவாரத்தினும் அவ்வரக்கர்க் குச் சிறிதும் பின்னிடையாது மேன்மேல் வெற்றியுண்டாகுமாறு பொருகின்ற அநுமானது திறத்தைக் கண்டு புகழ்கின்ற தேவர்களின்புகழொலியே மிக்குத் தோன்றிற்று என்ற இதில். ஒன்றினும் ஒன்று விஞ்சித் தோன்றுவ தாகிய மேன்மேலுயர்ச்சியணி காண்க: இதனை, வடநூலார் ஸாராலங்கார மென்பர். (௫க)

[தேவர்முதலியோர் அநுமான்மீது பூமாரி பொழிதல்.]

௫உ. மேவும்வெஞ்சினத்தரக்கர்கண்முறைமுறைவிசையா
லெவும்பல்படையெத்தனைகோடிகளெனினுந்
தூவுந்தேவருமகரிருமுனிவருஞ்சொரிந்த
பூவும்புண்களுந்தெரிந்திலமாருதியுடத்தில்.

(இ - ள்.) மேவும் - (போருக்கு) வந்த, வெம் சினத்து அரக்கர்கள் - கொடிய கோபமுள்ள இராட்சசர்கள், முறை முறை - வரிசை வரிசையாக [மாறி மாறி], விசையால் எவும் - வேகத்தோடு விடுகின்ற, பல் படை - பல வகைப்பட்ட ஆயுதங்கள், எத்தனை கோடிகள் எனினும் - மிகப்பல கோடிக

னாலும் (அவற்றாலுண்டாகின்ற), புண்களும்—,—தூவும் தேவரும் - (இன்பத்தையே) அநுபவிக்கின்ற தேவர்களும், மகளிரும் - (அவரது) மனைவி மார்களும், முனிவரும் - தேவவிருடியரும், சொரிந்த - (போர் காணவேணு மென்று ஆகாயத்தில் வந்து) பொழிந்த, பூவும் - மலர்களும்,—மாருதி புயத்தில் - அநுமானது தோள்களில், தெரிந்தில - வேற்றுமைதெரியாதபடி ஒரு சேர விளங்கின; (எ - று.)

அநுமான் தன் தோளின்மீது அரக்கவீரரெறிந்த பலகோடிக்கணக்கான படைக்கலங்களாற் றோன்றிய புண்ணை, தேவர் முதலியோர் சொரிந்த மலர்கள்போலவே கருதினனென்பது, இங்குப் பெறப்படும். இதனால், அநுமானது பெருவீரத்தன்மை தொனிக்கும். 'து' என்னும் முதனிலை யடியாப் பிறந்த செய்யுமென்னும் எச்சமாகிய 'தூவும்' என்பது 'தூவும்' என நீண்டு வந்தது. இனி, இச்செய்யுளுக்கு வேறுவகையாகக் கருத்துக் கூறுவது பொருந்துமாயிற் கொள்க. (௫௨.)

[அநுமானது சோர்வின்மையும், அரக்கர்கள் மடிதலும்.]

௫௩. பெயர்க்குஞ்சாரிகைகறங்கெனத்திசைதொறும்பெயர்வி
னுயர்க்கும்விண்மிசையோங்கலின்மண்ணின்வந்துறலி
னயர்த்துவீழ்ந்தனரழிந்தனரரக்கராயுள்ளோர்
வெயர்த்திலன்மிசையுயிர்த்திலனல்லறவீரன்.

(இ - ள்.) நல் அறம் வீரன் - சிறந்த தருமத்தி லூற்றமுள்ள வீரனான அநுமான்,—பெயர்க்கும் சாரிகை கறங்கு என திசை தொறும் பெயர்வின் - இடம்விட்டு விரைந்து செல்லுதற்குரிய சாரிகைத்தொழிலிற் காற்றாடி போல எட்டுத்திக்குக்களிலும் பெயர்ந்துசெல்வதனாலும், உயர்க்கும் விண் மிசை ஓங்கலின் - ஓங்கிய ஆகாயத்தின்மீது உயரச்செல்வதனாலும், மண்ணின் வந்து உறலின் - தரையில் வந்து பொருந்துவதனாலும்,—அரக்கர் ஆய் உள்ளோர் - இராக்கதவீரர்கள், அயர்த்து வீழ்ந்தனர் அழிந்தனர் - சோர்ந்து வீழ்ந்து அழிந்தார்கள்; (அவ்வநுமானோ), மிசை - தன்னுடம்பில், வெயர்த்திலன் - (இவ்வளவு போரிற் சிரமப்பட்டும்) வேர்த்தல்தானும் கொண்டானில்லை; உயிர்த்திலன் - மூச்சுத்தானும் விட்டானில்லை; (எ - று.)

அநுமான் எட்டுத்திக்குக்களிலும் ஆகாயத்திலும் பூமியிலுமாக எங்கும் திரிந்து அரக்கரையெல்லாம் அழித்தும், அதனாற் சிறிதும் தான் சிரமம் பாராட்டினா னில்லை யென்பதாம். (௫௩)

[கவிக்கூற்று: அரக்கரது வீரத்தன்மையின் பாராட்டு.]

௫௪. எஞ்சலக்கணத்தறிந்திலமிராவணனேவ
நஞ்சமுண்டவராமெனவனுமன்மேனடந்தார்
துஞ்சினாரல்லதியாவருமறத்தொடுந்தொலைவுற்
றஞ்சினாரில்லையரக்கரில்வீரர்மற்றியாரே.

(இ - ள்.) இராவணன் ஏவ - இராவணன் கட்டளையிட்டு அனுப்ப, நஞ்சம் உண்டவர் ஆம் என அநுமன்மேல் நடந்தார் - விஷத்தையுண்டவர் போன்று அநுமான்மீது (போர்க்கச்) சென்ற அரக்கவீரர்கள், எஞ்சல் - (தொகையினுற்) குறைதலே, அ கணத்து - அந்த இறுதிக்ஷணம் வரையிலும், அறிந்திலம் - அறிந்தோமில்லை; யாவரும் - எல்லாவரக்கரும், துஞ்சினர் அல்லது - (எதிர்த்துப் போர் செய்து) இறந்தார்களே யல்லாமல், மறத்தொடும் தொலைவு உற்று அஞ்சினர் இல்லை - பராக்கிரமத்திற் குறைந்து அஞ்சி முதுகுகொடுத்தோடிப்போனவ ரில்லை; அரக்கரின் வீரர் மற்று யாரே - (இப்படிப்பட்ட) அரக்கர்களைக்காட்டிலுஞ் சிறந்தவீரர் வேறு யாவர்தாம்? (எ - று.)

இராவணன் ஏவச் சென்ற அரக்கவீரர்களில் உயிர்மேலாசைகொண்டு ஒருவராவது முதுகுகொடுத்து ஓடாமல் யாவரும் எதிர்த்துப் போர்செய்தே ஒழிந்தனர்; ஆகவே இவரே பெருவீர ரென்று வியந்தவாறு. அநுமான்மீது போர்செய்யச் செல்பவர் நஞ்சமுண்டவர்போல இறப்பது திண்ண மென்பதும், இவ்வரக்கர் நஞ்சமுண்டவர்போல மதிமயங்கி யிருந்ததனால்தான் அநுமான்மீது பொரச்சென்றன ரென்பதும் தோன்ற, 'நஞ்சமுண்டவராமென வநுமன்மேல் நடந்தார்' என்றார்.                (ருச)

[இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்; நந்தவனத்தைப் பாதுகாப்போர் கிங்கரர் மடிந்ததை இராவணனுக்கு உணர்த்துதல்.]

ருரு. வந்தகிங்கரரேயெனுமாத்திரைமடிந்தார்
நந்தவானத்துநாயகரோடினர்நடுங்கிப்
பிந்துகாலினர்கையினர்பெரும்பயம்பிடரி
யுந்தவாயிரம்பிணக்குவைமேல்விழுந்துளைவார்.

(இ - ள்.) வந்த கிங்கரர் - (அநுமான்மேற் போர்க்கு) வந்த கிங்கரரென்னப்படும் அரக்கவீரர் யாவரும், ஏயெனும் மாத்திரை - இரண்டு மாத்திரைப் பொழுதிற்குள் [மிக விரைவில்], மடிந்தார் - இறந்துவிட்டார்கள்; (உடனே), நந்தவானத்து நாயகர் - நந்தவனத்தைப் பாதுகாப்பவர், ஓடினர் - விரைந்து செல்பவராய், நடுங்கி பிந்து காலினர் கையினர் - நடுங்கிப் பின்வாங்குகின்ற கால் கைகளையுடையவராய், பெரும் பயம் பிடரின் உந்த - மிக்க அச்சம் கழுத்தைப் பிடித்துத் தள்ளிக்கொண்டுசெல்ல, ஆயிரம் பிணம் குவைமேல் விழுந்து - ஆயிரக்கணக்கான பிணக்குவியலின்மேலே விழுந்து, உளைவார் - வருந்துபவராய்,— (எ - று.)—'விளைவிளுற்றனர்' என அடுத்த கவியோடு தொடரும்.

ஏ என்பது இரண்டு மாத்திரையுள்ள நெட்டெழுத்தாதலால், ஏயெனு மாத்திரையென்பது - இரண்டு மாத்திரைப்பொழுது ஆயிற்று. தங்கள் காவலெல்லைக்குள் நிகழ்ந்த செய லாதலால் அதனைத் தெரிவியாவிட்டால் 'தம்மீது சினந்து கொள்வானே' என்ற அச்சம் ஒருபால் தூண்டவும், இராவண

னிடத்து அவனுக்கு நேர்ந்த தோல்விச்செய்லைத் தெரிவிக்கையில் அவன் வெகுள்வானே யென்றதை நினைக்க அச்சத்தால் ஒருபால் கைகால்கள் நடுநடுங்கவும், இடைவழிகளிலுள்ள பிணக்குவியல்களின்மேல் இடறி விழுந்த வண்ணம் நந்தவனத்தைப்பாதுகாப்போர் விரைந்து செல்வாராயின ரென்க. நந்தவானத்து = நந்தவனத்து. நந்தவனத்து நாயகர் - "பாரிடு பழுவச் சோலை பாலிக்கும் பருவத்தேவர்." (௫௫)

௫௬. விரைவினுற்றனர்விம்மலுற்றியாதொன்றும்விளம்பார்
கரதலத்தினுற்பட்டதுங்கட்டுரைக்கின்றார்
தரையினிற்கிலர்திசைதொறுநோக்கினர்சலிப்பா
ரரசன்மற்றவரலக்கணேயுரைத்திடவறிந்தான்.

(இ - ள்.) விரைவின் உற்றனர் - (இராவணனெதிரில்) விரைவாக வந்து சேர்ந்தவர்களாய்,—விம்மல் உற்று - ஏக்கங்கொண்டு, யாது ஒன்றும் விளம்பார் - (வாயினால்) யாதொருவார்த்தையுங் கூறமாட்டாதவராய், பட்டதும் - நேர்ந்ததெல்லாவற்றையும், கரதலத்தினால் கட்டுரைக்கின்றார் - கைகளின் சைகைகளாற் குறிப்பித்துக் காட்டி, தரையில் நிற்கிலர் - நிலத்திற் பொருந்தி நிற்கமாட்டாமலும், திசைதொறும் நோக்கினர் - நான்குதிக்குக்களையும் மருண்டுபார்த்தவண்ணமு மிருப்பாராய், சலிப்பார் - நடுநடுங்குபவரானார்கள்; அரசன் - (அதுகண்ட) ராக்ஷஸராஜனான இராவணன், அவர் அலக்கணே உரைத்திட அறிந்தான் - அவர்கள்படுகின்ற வருத்தமே (தனக்கு நேர்ந்த தோல்வியைத்) தெரிவிக்க உணர்ந்தான்; (எ - று.)—மற்று - அசை.

செய்தியை யுணர்த்தச் சென்ற நந்தவனத்துநாயகர் விரைந்து இராவணனைச் சேர்ந்து, நிகழ்ந்த செய்தியைச் சொல்ல நாவெழாமல் கைச்சைகையினால் செய்தியை யுணர்த்தி, நிற்கமாட்டாமலும் நாற்புறமும் மருண்டுபார்த்த வண்ணமும் நடுங்கினவராக, அவர்கள் படுகின்ற அவஸ்தையினாலேயே தான் ஏவிய கிங்கரவீரரால் தனக்குத் தோல்வியே நேர்ந்ததென்பதை இராவணன் உணர்ந்தானென்பதாம். (௫௬)

[இராவணன் கிங்கரர் தோற்ற வகையை வினவுதல்.]

௫௭. இறந்து நீங்கினரோவின்றெனுணையையிகழ்ந்து
துறந்து நீங்கினரோவென்றி வெஞ்சமர் தொலைந்தார்
மறந்து நீங்கினரோவென்கொல் வந்ததென்றுரைத்தா
னிறஞ்செருக்குற வாய்தொறு நெருப்புமிழ்கின்றான்.

(இ - ள்.) நிறம் செருக்கு உற வாய் தொறும் நெருப்பு உமிழ்கின்றான் - (தன்னுடைய) கருநிறம் விளக்கமடையும்படி பத்துவாய்களினாலும் (சினத்தினால் செந்நிறமான) நெருப்பைக் கக்குகின்றவனான இராவணன்,—(செய்தி சொல்லவந்த பருவத்தேவரைநோக்கி), (யான் ஏவிய கிங்கரரென்னும் வீரர்), இறந்து நீங்கினரோ - (போரிலே தம்முயிரைப் பலிகொடுத்து) ஒழிந்

தார்களோ? இன்று என் ஆணையை இகழ்ந்து துறந்து நீங்கினரோ - இப்போது நான் இட்ட கட்டளையை (ஒரு குரங்குடனே போர் செய்வது? என்ற எண்ணத்தினால்) அலட்சியஞ்செய்து (போர் செய்தலைத்) தவிர்ந்து நீங்கிப்போனார்களோ? அன்றி - அல்லாமல், வெம் சமர் தொலைந்தார் மறந்து நீங்கினரோ - கொடிய போரில் (எதிர்த்துப் பொரமாட்டாமல்) தோற்றவர்களாய் (த் தமது மனைவி மக்கள் முதலியோரையும்) மறந்து எங்கேனும் போய்விட்டார்களோ? வந்தது என் சொல் - நேர்ந்தது யாது?' என்று—, உரைத்தான் - (அந்த நந்தவனத்து நாயகரைப் பார்த்து) வினவினான்; (எ - று.)

'கிங்கரவீரர் தோற்றது - சண்டையில் மாண்டுபோதல் முதலிய மூன்று வகையில் எந்த வகையால் நிகழ்ந்தது?' என்று இராவணன் வந்தவர்களை வினவினனென்க. இராவணனுடைய கருநிறத்தோடு வாயினின்று உமிழ்கின்ற நெருப்பின் செந்நிறம் கலக்கையில், அவனது அந்தக் கருநிறம் செருக்கித் தோன்றுமென்க. (௫௭)

வேறு.

[வந்தவர்கள் கூறிய விடை.]

௫௮. சலந்தலைக் கொண்டன ராய தன்மையா
ரலந்திலர் செருக்களத் தஞ்சி னாரலர்
புலந்தெரி பொய்க்கரி புகலும் புன்கணோர்
குலங்களி னவிந்தனர் குரங்கி னாலென்றார்.

(இ - ள்.) (அதற்கு, வந்த அவர்கள்),—'சலம் தலை கொண்டனர் ஆய தன்மையார் - கோபம் தலைக்கேறப்பெற்றவராகிய அந்தக் கிங்கரர்கள், அலந்திலர் - ('ஒரு சிறுகுரங்கோடு பொருவதோ?' என்று) வருந்தியோடிப் போனாரு மல்லர்; செரு களத்து அஞ்சினார் அலர் - போர்க்களத்தில் எதிர்த்துப் பொரமுடியாது பயந்து முதுகுகொடுத்து ஓடிப்போனாரு மல்லர்; புலம் தெரி பொய் கரி புகலும் புன்கணோர் குலங்களின் - (தம்) புத்திக்குப் (பொய்யென்று) தெரிந்த பொய்ச்சாட்சியை சொன்ன இழிகுணமுடையோரின் வமிசங்கள் அழிதல்போல, குரங்கினால் - (எதிர்த்துநின்ற) ஒரு குரங்கினாலேயே, அவிந்தனர் - (யாவரும்) அழிந்தொழிந்தார்கள்,' என்றார் - என்று மறுமொழி கூறினார்கள்; (எ - று.)

இராவணன் விகற்பித்து வினவிய மூன்று வினாக்களுள் இரண்டை மறுத்து, பொருது இறந்தே நீங்கின ரென்று அவர்கள் மறுமொழி கூறினரென்க. காவியத்தின்நோக்கம் படிப்போர்க்கு நல்லொழுக்கத்தைப் புகட்டுவதே யாதலால், இங்கே மனமாரப் பொய்க்கரி கூறுவோர் வம்சநாசமாவரென்று உபமானமுகமாகத் தெரிவித்து, அவ்வழியாற் பொய்க்கரி கூறுதலின் கொடுமையைக் கவி விளக்கினார்.

இதுமுதல் நான்கு கவிகள் - மூன்றாஞ் சீரொன்று மாச்சீரும், மற்றை மூன்றும் விளச்சீர்களு மாகி வந்த கலிவிருத்தங்கள். (௫௮)

[இராவணன் செய்தியுணர்த்தியவர்மீது சினத்தல்.]

௫௯. ஏவலின் எய்தினர் இருந்த எண்டிசைத்
தேவரை நோக்கினன் நாணுஞ்சிந்தையான்
யாவது என்று அறிந்திலிர் போலும் என்றான்
மூவகையுலகையும் விழுங்க மூள்கின்றான்.

(இ - ள்) மூ வகை உலகையும் விழுங்க மூள்கின்றான் - மூன்றுவகைப் பட்ட உலகங்களையும் விழுங்குவதற்குத் தொடங்குபவன்போன்ற [மிக்க சினங்கொண்ட] இராவணன்,—ஏவலின் எய்தினர் - (தன்) கட்டளையினால் வந்தவர்களாய், இருந்த - அருகே நின்றுகொண்டிருந்த, எண் திசை தேவரை - அஷ்டதிக்குப்பாலகர்களை, நோக்கினன் - பார்த்து, நாணும் சிந்தையான் - (தனக்குப் பகைவரான திக்குப்பாலகரெதிரில் அரக்கர் தோற்றதைச் சொன்னதற்காக) மிகவும்வெட்கங்கொண்ட மனமுடையவனாய்,—(செய்தி சொன்னவர்களைநோக்கி), (அவர்கள் வார்த்தையைப் பொய்யென்று கருதினன் போன்று), 'யாவது என்று அறிந்திலிர் போலும் - (நடந்தது) இன்னதென்று அறியவில்லைபோல் தோன்றுகின்றது,' என்றான் - என்று அதட்டிக் கூறினான்; (எ - று.)— ஆல் - அசை.

தனது ஏவலைக் கேட்டற்காக அப்போது அங்கு வந்திருந்த திக்குப் பாலகரின் முன்னிலையிலே தனக்கு நேர்ந்த அவமானத்தைக் கேட்டதனால் வெட்கம் மிகுந்து அதனை மறைக்கும் பொருட்டுச் செய்தி சொன்னவர்களை நோக்கி 'உங்கட்கு நடந்தது இன்னதென்று தெரியாததுபோல் தோன்றுகின்றது; அப்படியிருக்க, என் தாறுமாறாகச் சொல்லுகின்றீர்கள்?' என்று இராவணன் அதட்டிக் கூறினனென்க. முதலடி - மூப்புமோனை. (௫௯)

[இராவணன் மீண்டும் அதுகுறித்து வினவுதல்.]

௬௦. மீட்டு அவர் உரைத்திலர் பயத்தின் விம்முவார்
தோட்டு அலர் இனமலர்த் தொங்கல் மோலியான்
வீட்டியது அரக்கரை என்னும் வெவ்வுரை
கேட்டதோ கண்டதோ கிளத்துவீர் என்றான்.

(இ - ள்.) மீட்டு - மறுபடியும். அவர் - அந்தச்சோலையின் காவற்காரர், உரைத்திலர் - (மறுமொழி) கூறாதவர்களாய், பயத்தின் விம்முவார் - அச்சத்தினால் நடுங்குவாரானார்கள்; தோடு அலர் இனம் மலர் தொங்கல் மோலியான் - இதழ்களோடு விரிகின்ற பலவகை மலர்கொண்டு தொடுத்த மாலையையணிந்த சிரசையுடைய இராவணன்,—(செய்தி சொன்ன அவர்களை நோக்கி), 'அரக்கரை வீட்டியது என்னும் வெம் உரை - '(குரங்கொன்று போரவந்த) அரக்கரையெல்லாம் கொன்றுவிட்டது' என்ற இந்தக் கொடுமையான வார்த்தை, கேட்டதோ - (அயலார் சொல்ல நீங்கள்) கேட்டுச்சொன்னதோ? (அன்றி), கண்டதோ - (நீங்களே நேரிற்) பார்த்துச் சொன்னதோ? கிளத்துவீர் - சொல்லுங்கள்,' என்றான் - என்று மீண்டும் வினவினான்; (௬0)

[அவர்கள் கூறிய விடை.]

சுக. கண்டன மொருபுடை நின்று கண்களாற்
றெண்டிரைக் கடலென வளைந்த சேனையை
மண்டலந் திரிந்தொரு மரத்தி னலடித்
துண்டதக் குரங்கின மொழிவ தன்றென்றார்.

(இ - ள்) (அவர்கள் இராவணனை நோக்கி),—'ஒரு புடை நின்று - ஒரு பக்கத்திலே [ஒதுக்கமாக] இருந்து, கண்களால் கண்டனம் - (நிகழ்ந்தது முழுவதையும் எங்கள்) கண்களால் நேராகப் பார்த்தோம்; அ குரங்கு - (அசோகவனத்தை யழித்த) அந்தக் குரங்கானது, தெள் திரை கடல் என வளைந்த சேனையை - தெளிவான அலைகளையுடைய கடல்போலத் (தன்னைச்) சூழ்ந்துகொண்ட ராக்ஷஸ சேனையை, மண்டலம் திரிந்து - எப்புறத்தும் வளைந்து சுழன்றுசுழன்றுசஞ்சரித்து, ஒரு மரத்தினல் - (தன்கையிற்கொண்ட) ஒருமரத்தினலே, அடித்து—, உண்டது - உயிரைவாங்கிவிட்டது; இனம் ஒழிவது அன்று - இன்னும் (அது அவ்விடத்தைவிட்டு) நீங்கிப்போகவில்லை,' என்றார் - என்று கூறினர்கள்; (எ - று.) (சுக)

கிங்கரர்வதைப்படலம் முற்றிற்று.

---

ஒன்பதாவது

# சம்புமாலிவதைப்படலம்.

இராவணன் கட்டளையால் அநுமானைப் பற்றிக் கொணருமாறு பொருதற்குச் சென்ற சம்புமாலி யென்பவனது வதையைக் கூறும் பகுதி யென்று பொருள்.

வேறு.

[சம்புமாலியென்பவனை நோக்கி அநுமானைப் பற்றிக்கொணருமாறு இராவணன் கட்டளையிடுதல்.]

க. கூம்பின கையனின் றகுன்றெனக் குவவுத்திண்டோட்
பாம்பிவர் தறுகட் சம்பு மாலியென் பவனைப் பாரா
வாம்பரித் தானை யோடு வளைத்ததன் பற்றை மாற்றித்
தாம்பினிற் பற்றித் தந்தென் மனத்தினைத் தணித்தி யென்றான்.

(இ - ள்.) (இராவணன்),—கூம்பின கையன் நின்ற - (என்ன கட்டளையிடப் போகின்றானே? என்று) கூப்பிய கையையுடையவனாய்(த் தனக்கு எதிரில்) நின்றுகொண்டிருந்த, குன்று என குவவு திண் தோள் பாம்பு இவர் தறுகண் சம்புமாலிஎன்பவனை - மலைபோலத் திரண்ட வலிய தோள்களையும் பாம்பின்தன்மையைக் கொண்ட [சீறுந்தன்மையைக் கொண்ட] அஞ்சாமைக்குணத்தையுமுடைய சம்புமாலி யென்னும் அரக்கனை, பாரா - பார்த்து,— '(நீ), வாம் பரி தானையோடு - தாவிச்செல்கின்ற குதிரையைக்

கொண்டுள்ள சேனையுடனே (போய்), வளைத்து - (அந்தக் குரங்கைச்) சூழ்ந்து கொண்டு, அதன் மறனை மாற்றி - அந்தக்குரங்கின் வலியை யடக்கி, தாம்பினில் பற்றி - கயிற்றினாலே கட்டி, தந்து - (என்னிடம்) கொண்டுவந்து விட்டு, என் மனம் சினம் தணித்தி - என் மனத்திலுள்ள கோபத்தைத் தணியச் செய்வாய்,' என்றான்—; (எ - று.)

இதுமுதல் இருபத்திரண்டு கவிகள் - கிங்கரர்வதைப்படலத்தின் முதற்கவிபோன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (க)

[இராவணன் தன்னையேவினதற்காக மிகமகிழ்ந்து, சம்புமாலி புறப்படுதல்.]

உ. ஆயவன்வணங்கியையவளப்பருமரக்கர்முன்னர்
நீயிதுமுடித்தியென்றுநேர்ந்தனைநினைவினெண்ணி
ஏயினையென்னப்பெற்றாலென்னின்யாருயர்ந்தாரென்னாப்
போயினனிலங்கைவேந்தன்போர்ச்சினம்போவதொப்பான்.

(இ - ள்.) ஆயவன் - அந்தச் சம்புமாலி,— வணங்கி—, (இராவணனை நோக்கி), 'ஐய - தலைவனே! அளப்பு அரும் அரக்கர் முன்னர் - அளவிட முடியாத [மிகப்பல] இராட்சசர்களிருக்கையில் அவர்களெதிரே, நினைவின் எண்ணி நேர்ந்தனை - மனத்தில் ஆலோசித்துச் சம்மதித்தவனாய், நீ இது முடித்தி என்று - (அவர்களையெல்லாம் ஏவாமல் என்னை நோக்கி) 'நீ இதனைச் செய்து முடிப்பாய்' என்று, ஏயினை - கட்டளையிட்டாய், என்ன பெற்றால் - என்று கூறும் பாக்கியத்தைப் பெற்றேனானால், என்னின் யார் உயர்ந்தார் - என்னைக்காட்டிலுஞ் சிறப்புப்பெற்றவர் யாவர்?' என்னா - என்று கூறி, இலங்கை வேந்தன் போர் சினம் போவது ஒப்பான் - இலங்காராசனான இராவணனது போர்செய்தற்கு உரிய சினம் ஒருருவெடுத்துப் போவது போன்றவனாய், போயினன் - போனான்; (எ - று.)

'வீர மளக்கரு மளக்கர் முன்னர்' என்ற பாடத்துக்கு - வீரத்தையுடைய அளத்தற்கு அரிய சமுத்திரம்போன்ற அரக்கரெதிரில் என்று பொருள். இராவணன் தன்னைத் தனியே விசேஷித்துக் கட்டளையிட்டதைச் சம்புமாலி பேறாகக் கருதினனென்க. (உ)

[சம்புமாலி பலவகைச் சேனையோடும் புறப்படுதல்.]

ந. தன்னுடைத்தானையோடுந்தயமுகன்றருகென்றேய
மன்னுடைச்சேனையோடுந்தானைதவந்தீந்தவாளின்
மின்னுடைப்பரவையோடும்வேறுளோர்சிறப்பின்விட்ட
பின்னுடையணிகத்தோடும்பெயர்ந்தனன்பெரும்போர்பெற்றான்.

(இ - ள்.) பெரும் போர் பெற்றான் - பெரும்போர்செய்யும் பாக்கியத்தை (இராவணனது கட்டளையாற்) பெற்ற சம்புமாலி,— தன்னுடை தானையோடும் - தனக்கு உரியதான சேனையுடனும், தயமுகன் தருக என்று ஏய மன்னுடை சேனையோடும் - இராவணன் '(இவனுடன்) அனுப்புக' என்று

(தன் ஏவலாளர்க்குக்) கட்டளையிட (அவர்கள் அனுப்பிய) பெருமை பெற்ற சேனையுடனும், தாதை வந்து ஈந்த வாளின் மின் உடை பரவையோடும் - (தனது) தகப்பன் கொடுத்த வாளாயுதத்தினால் விளக்கம்பெற்ற சேனா சமுத்திரத்தோடும், வேறு உளோர் சிறப்பின் விட்ட பின்னுடை அனிகத்தோடும் - மற்றுமுள்ளவர்களான நண்பர்கள் மிகுதியாக அனுப்பிய பின்னுமுள்ள சேனையோடும், பெயர்ந்தனன் - போனான்; (எ - று.)

சம்புமாலி போர்க்குப் போனதைக் கீழ்க்கவியிற் சுருங்கக்கூறிய கவி, இச்செய்யுளில் விரித்துக் கூறினரென்க. இவ்வாறு வேறுபாடு இருத்தலால்தான், கூறியதுகூற லென்னுங் குற்றத்திற்கு இடமில்லையாயிற்று. தாதை வந்தீந்த பரவை, மின்னுடைப் பரவையென இயையும். வந்து - சொல் விழுக்காட்டால் வந்தது. சம்புமாலி யென்பவன், பிரகத்தனது புத்திரன். (௩)

[இதுவும், அடுத்த கவியும்-அந்தச் சம்புமாலியோடு நால்வகைச் சேனையுஞ் சென்றதைத் தெரிவிக்கும்.]

௪. உருமொத்தமுழக்கிற்செங்கண் வெள்ளெயிற்றோடைநெற்றிப்
பருமித்தகிரியிற்றோன்றும்வேழமும்பதுமத்தண்ண
லிருமித்தவெழிலிமுற்றிற்றென்னலாநிலையநேமிச்
சொரிமுத்தமாலைசூழுந்துகிற்கொடித்தடந்தேர்சுற்ற.

இதுமுதல் ஆறு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) உரும் ஒத்த முழக்கின் - இடிபோன்ற பிளிறலையும், செங்கண் - (கோபக்குறி தோன்றச்) சிவந்துள்ள கண்களையும், வெள் எயிறு - வெண்மையான தந்தங்களையும், ஓடை நெற்றி - பட்டமணிந்த நெற்றியையுமுடைய, கிரியில் தோன்றும் - மலைபோலத் தோன்றுகின்ற, பருமித்த - (போர்க்குரிய) அலங்காரத்தைக் கொண்ட, வேழமும் - யானைகளும்,—பதுமத்து அண்ணல் நிருமித்த எழிலி முற்றிற்று என்னல் ஆம் நிலைய - தாமரைமலரில்வாழ்கின்ற பிரமதேவன் படைத்த மேகங்கள் ஒருங்கே முடிவாக வந்துள்ளன என்று சொல்லத்தக்க நிலைமையையுடைய, நேமி - சக்கரங்களையும், சொரி முத்தம் மாலை சூழும் துகில் கொடி - (ஒளியைச்) சொரிகின்ற முத்தமாலைகள் சூழப்பெற்ற துகிற்கொடியையுமுடையனவான, தட தேர் - பெரிய தேர்களும், சுற்ற - சூழ்ந்து வரவும்,—(எ - று.)—'குழுவ' என அடுத்த கவியோடு தொடரும்.

முழக்கின் செங்கண் வெள்ளெயிறு ஓடைநெற்றி வேழம் எனவும், பருமித்த வேழம் எனவும், கிரியிற்றோன்றும் வேழம் எனவும் இயையும். எழிலி - சாதியொருமை; எழு மேகங்களும் ஒருங்கே திரண்டாற்போன்ற தோற்றமுடையன, அங்கு வந்த தேர்களென்க. அன்றி, வேழமும் எழிலி முற்றிற்றென்லாம் நிலையினவாக என்று உரைப்பினுமாம். இனி, மூன்றாமடிக்கு - மேகமண்டலம்வரையில் உயர்ந்துள்ளதென்று சொல்லத்தக்க தன்மையைக் கொண்ட சக்கரத்தையுடைய தடந்தேர் என்னலுமாம். நிலையதேர், நேமித்

தேர், துகிற்கொடித்தேர் என இயையும். நேமிசொரி என்ற இயல்பான பாடத்துக்கு - கடல் வெளிப்படுத்தின முத்தம் என்க. செங்கண் வெள் ளெயிறு - முரண்தொடை. 'பருமித்த கதியிற்றேன்றும்,' 'சிறுகொடித் தடந் தேர்' என்பன பாடாந்தரம். (௪)

௫. காற்றினைமருங்கிற்கட்டிக்கால்வகுத் துயிருங்கூட்டிக்
கூற்றினையேற்றியன்னகுலப்பரிகுழுவக்குன்றின்
றூற்றினினெழுப்பியாண்டுத்தொகுத்தனசுழல்பைங்கண்ண
வேற்றினப்புலியேறென்னவியந்தெழும்பதாதியீட்டம்.

(இ - ள்.) காற்றினை - காற்றை, மருங்கில் கட்டி கால் வகுத்து - நான்கு பக்கத்திலுங் கட்டி (நான்கு)கால்களையு முண்டாக்கி, உயிரும் கூட்டி - உயி ரையுஞ் சேர்த்து, கூற்றினை ஏற்றி அன்ன - யமனை மேலே யேற்றப்பெற்றாற் போன்றுள்ள [வீரரைத் தம்மீது கொண்ட], குலம் பரி - நல்ல சாதிக் குதிரைகள், குழுவ - கூட்டமாகத் தொடரவும்,—வியந்து எழும் பதாதி ஈட்டம் - மனமகிழ்ச்சி கொண்டு (போர்க்குப்) புறப்படுகின்ற காலாள்களின் கூட்டம், குன்றின் தூற்றினின் எழுப்பி ஆண்டு தொகுத்தன - மலைப்புதர்களி லிருந்து எழுப்பி அந்தப் போர்க்களத்திலே ஒன்றுசேர்த்தனவும், சுழல் பைங் கண்ண - சுழல்கின்ற பசுமையான கண்களையுடையனவுமான, வேறு இனம் புலி ஏறு என்ன - வெவ்வேறு வகையான ஆண்புலிகள் போலத் தோன்ற வும்,—(எ - று.)— 'வயங்க' என அடுத்த கவியோடு தொடரும்.

குதிரைகள் வேகமாகச் செல்வன வென்பதை விளக்க, 'காற்றினை மருங்கிற் கட்டிக் கால்வகுத் துயிருங்கூட்டி யன்ன குலப்பரி' என்றார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. வீரர்கள் அந்தப்பரிகளின்மேலே யுள்ளா ரென்பதை விளக்க, 'கூற்றினை யேற்றியன்ன' என்று உபமான முகத்தாற் கூறினார்; இது - பிறிதுமொழிதலணி. கொடுமை வலிமைகள் நிறைந்தன வென்பதை விளக்க, பதாதிக் கூட்டத்துக்கு, தூற்றினின் எழுப்பித் தொகுத்த புலிக்கூட்டத்தை உவமை கூறினார். புலியேறென்ன என்பதை வியந்து எழும் என்பதனோடு சேர்த்து - புலியேறு போலப் போரிலுற்சாகத்துடனே யெழு கின்ற பதாதிக்கூட்டம், தழுவ என வருவித்து முடித்தலுமாம். அன்றி, புலியேறென்னப் பதாதியீட்டம் வியந்தெழும் என முற்றாக்கி யுரைப்பாரு முளர். (௫)

[பலவகை ஆயுதங்கள் நிறைதல்.]

௬. தோமரமுலக்கைகூர்வாள்சுடர்மழுக்குலிசந்தோட்டி
தாமரந்தின்றகூர்வேறழலொளிவட்டஞ்சாபங்
காமர்தண்டெழுக்கள்காந்துங்கப்பணங்காலபாச
மாமரம்வலயம்வெங்கோன்முதலியவயங்கமாதோ.

(இ - ள்.) தோமரம்—, உலக்கை—, கூர் வாள்—, சுடர் மழு - ஒளிவீசு கின்ற எரியிரும்புப்படை, குலிசம் - வச்சிராயுதம், தோட்டி - அங்குசம்,

அரம் தின்ற கூர் வேல் - அரத்தினால் அராவப்பட்ட கூரிய வேலாயுதம், தழல் ஒளி வட்டம் - நெருப்பின் சுவாலையையுடைய சக்கரம், சாபம் - வில், காமர் தண்டு - அழகிய தண்டாயுதம், எழுக்கள் - இருப்புத்தண்டுகள், கார்ந்தும் கப்பணம் - பிரகாசிக்கின்றஇருப்புநெரிஞ்சிமுட்படைகள், காலபாசம் - யமனுக்கு உரிய கயிற்றின்வடிவான ஆயுதங்கள், மா மரம் - பெரிய மரங்கள், வலயம் - வளையங்கள், வெம் கோல் - கொடிய அம்புகள், முதலிய - முதலிய பல ஆயுதங்கள், வயங்க - விளங்கவும்,—(எ-று.)— 'திசைதொறுஞ் செறிவ செல்ல' என அடுத்த கவியோடு தொடரும். தாம் - அசை. மாது ஓ - ஈற்றசை. (௬)

[பல்வகைப் பதாகைகள் செறிதல்.]

௭. எத்தியவயில்வேல்குந்தமெழுக்கழுமுதலவேந்திக்
குத்தியதிளைப்பமீதிற்குழுவினமழைமாக்கொண்மூப்
பொத்துருபொருவினன்னீர்சொரிவனபோவபோலச்
சித்திரப்பதாகைவட்டந்திசைதொறுஞ்செறிவசெல்ல.

(இ - ள்.) எத்திய - கொண்டாடுதற்கு உரிய, அயில் வேல் - கூரிய வேலாயுதங்களும், குந்தம் - எறியீட்டிகளும், எழு - இருப்புத்தடிகளும், கழு - கழுக்களும், முதல - முதலிய ஆயுதங்களை, ஏந்தி - தரித்து,—(சேனைகள்), குத்திய - (அவ்வாயுதங்களாற்) குத்தியனவாகி, திளைப்ப - நெருங்கிச் செல்ல, (அப்போது),மீதில் குழுவின மழை மா கொண்மூ-வானத்தின்மீதுகூட்டமாகக் கூடியுள்ள (சேனைகளின் ஆயுதங்களாற் குத்தப்பட்ட) மழைபெய்யு) தருணத்திலுள்ள கரிய மேகம், பொத்து உரு பொரு இல் நல் நீர் சொரிவன போவ போல - (ஆயுதங்கள்) பொத்தின (வாயினின்று) வெளியில் வருகிற ஒப்பற்ற நல்லநீரைச் சொரிவனவாய்ச் செல்வனபோல, சித்திரம் பதாகை ஈட்டம் - விசித்திரமான கொடிகளின்கூட்டம், திசைதொறும் செறிவ செல்ல - எல்லாத்திக்குக்களிலும் நெருங்கப்பெற்றனவாய்ச் செல்லவும்,—(எ - று.)— 'பல்லியம்துவைப்ப' என அடுத்த கவியோடு தொடரும்.

சேனைகளில் நெருங்கப் பதாகைகள் பிடிக்கப்பட்டுச் சென்ற தோற்றம் - சேனைகள் தாங்கிச் செல்லுகின்ற ஆயுதங்களாற் பொத்துண்ட மேகங்கள் நீர்த்தாரைகளைச் சொரிந்துகொண்டு செல்லுகின்ற தோற்றத்தைப் போலு மென்று வருணித்தார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. வானத்தில்தோன்றும் பதாகைகட்கு மேகமும், சேனைகள் தாங்கிச்செல்வனவான அப்பதாகைகள்கட்டப்பட்டுள்ள மூங்கில்களுக்குப் பொத்துண்ட வாயினின்று சொரியும் நீர்த்தாரைகளும் உவமையாம். வரிசை வரிசையாகச் சேனையின் பதாகைகள் சென்றுகொண்டே யிருப்பதனால், நீர்த்தாரைகளைச் சொரிகின்றனவாய்ச் செல்வனவான மேகங்கள் உவமையாயின. சேனை செல்லுமிடத்தில் பெருந்தாரையாக நீர் வீழ்வதற்குக் காரணங் கூறவேண்டி, 'அயில்வேல் குந்தமெழுக்கழுமுதல வேந்திக் குத்திய' என்றார். பலநிறமுள்ளனவாகத் தோன்றும் சித்திரப் பதாகைகட்கு, அவ்வகையான மேகங்கள் உபமான மென்னலாம். எத்

திய - எத்திய என்பதன் குறுக்கல்; இவ்வாறு கொள்ளாமற் பகைவரை ஏமாற்றிக் கொல்லவல்ல என்று உரைப்பினுமாம். 'மழைமாக் கொண்டல்' என்றும் பாடம். (எ)

[அச்சேனையில் பலவித ஒலிகள் மிகுதல்.]

அ. பல்லியந் துவைப்பநன்மாப்பணிலங்கண் முரலப்பொன்றேர்ச்
சில்லிகளிடிப்பவாசிசிரித்திடச்செறிபொற்றாரும்
வில்லுநின்றிசைப்பயானைமுழக்கம்விட்டார்ப்பவிண்டோய்
பொல்லொலிவானிற்றேவருரைதெரிவொழிக்கமன்னோ.

(இ - ள்.) பல் இயம் துவைப்ப - பலவகை வாத்தியங்கள் ஒலிக்கவும், நல் மா பணிலங்கள் முரல - அழகிய பெரிய சங்குகள் சத்திக்கவும், பொன் தேர் சில்லிகள் இடிப்ப - பொன்மயமான தேரின் சக்கரங்கள் (புரண்டு செல்வதனால்) ஒலியையுண்டாக்கவும், வாசி சிரித்திட - குதிரைகள் கனைக்கவும், செறி பொன் தாரும் வில்லும் நின்று இசைப்ப - நெருங்கிய பொன்மயமான கிண்கிணிமாலைகளும் வில்லும் நிலையாகநின்று ஒலிக்கவும், யானை விட்டு முழக்கம் ஆர்ப்ப - யானைகள் வாய்விட்டுப் பிளிறுதலைச் செய்யவும், விண் தோய் ஒல் ஒலி - (இவ்வாறு தோன்றி) ஆகாயத்திற் சென்ற ஒல்லென்னும் ஒலிகள், வானில் தேவர் உரை தெரிவு ஒழிக்க - வானத்திலுள்ள தேவர்கள் (ஒருவரோடொருவர் பேசும்) பேச்சைத் தெரியவொட்டாமல் அடக்கிவிடவும், (எ-று.)— மன் ஓ - ஈற்றசைகள். 'அன்னவன் சேனைசெல்ல' என அடுத்த கவியோடு தொடரும்.

பூமியில் அரக்கர் சேனையில் தோன்றிய பல்வகை யொலிகள் வானத்திற் சென்று தேவர்கள் ஒருவரோடொருவர் பேசுவதைத் தெரியவொட்டாமற் செய்தன எனத் தொடர்புயர்வுநவிற்சியணி வகையால் ஒலியின் மிகுதியைத் தெரிவித்தார். (அ)

[தூளியெழுச்சி.]

கூ. மின்னருகிரிகள்யாவுமேருவின்விளங்கித்தோன்றத்
தொன்னகர்பிறவுமெல்லாம்பொலிந்தனநறக்கமென்ன
வன்னவன்சேனைசெல்லவார்கலியிலங்கையாய
பொன்னகர்தகர்ந்துபொங்கியார்த்தெழுதூளிபோர்க்க.

(இ - ள்.) அன்னவன் - அந்தச் சம்புமாலியினது, சேனை—, செல்ல - செல்லுதலினால்,—ஆர்கலி இலங்கை ஆய பொன் நகர்-கடலினாற் சூழப்பட்ட இலங்கையென்கிற பொன்நகரமானது, தகர்ந்து - உடைபட்டு, பொங்கி ஆர்த்து எழு - மிகவும் நிறைந்து கிளம்புகின்ற, தூளி - புழுதி, போர்க்க -(தம் மீது) படிதலால்,—மின் நகு கிரிகள் யாவும் - ஒளிவிளங்குகின்ற சாதாரண மலைகளெல்லாம், மேருவின் விளங்கி தோன்ற - பொன்மயமான மேருமலை

போலப் பிரகாசங்கொண்டு விளங்குதலால், தொல் நகர் பிற எல்லாமும் - பழைய மற்றைப் பட்டணங்களெல்லாம், துறக்கம் என்ன - பொன்னுலகமான சுவர்க்கலோகம்போலவும், பொலிந்தன - விளங்கின; (எ - று.)

சம்புமாலியின் சேனைகள் பொன்மயமான இலங்காபட்டணத்திற் சென்றபோது, அவைகளின் தாள்களினால் மேலெழுந்த பொற் புழுதிகள் படிதலால் சாதாரண மலைகளும் மேருமலைபோல் விளங்க, அப்புழுதி படியப்பெற்ற நகரங்கள் யாவும் சுவர்க்கலோகம்போலப் பொன்மயமாய்விளங்கின வென்பதாம். சாதாரணமலைகள் பொன்மலைகளின் தன்மையையும் பிறநகர்கள் பொன்நகரின் தன்மையையு மடைந்தன என்ற இடங்களில், பிறிதின்குணம் பெறலணி காண்க; இதனை வடநூலார் தத்குணாலங்கார மென்பர். செல்ல தோன்ற என்னப் பொலிந்தன என முடியும். (க)

[சம்புமாலியின் நால்வகைச்சேனையின் அளவு.]

கo. ஆயிரமைந்தொடைந்தாமாழியந்தடந்தேரத்தேர்க்
கேயினவிரட்டியானையானையினிரட்டிபாய்மா
போயினபதாதிசொன்னபுரவியினிரட்டிபோலாந்
தீயவன்றடந்தேர்சுற்றித்தெற்றெனச்சென்றசேனை.

(இ - ள்.) தீயவன் தட தேர் சுற்றி தெற்றென சென்ற சேனை - கொடியவனான சம்புமாலியினது பெரியதேரைச் சூழ்ந்துகொண்டு விரைவாகச் சென்ற அரக்கசேனை(யின் அளவைப்பற்றிக் கூறுமிடத்து),—ஆழி அம் தட தேர் - சக்கரங்களையுடைய அழகிய பெரிய தேர்கள், ஐந்தொடு ஐந்து ஆயிரம் ஆம் - பதினாயிரமாகும்; ஏயின யானை - (அங்குப்) பொருந்திய யானைகள், அ தேர்க்கு இரட்டி - அத்தேர்த்தொகையினும் இரட்டிப்புள்ளதாகும் [இருபதினாயிரமாகும்], பாய் மா - குதிரைகள், யானையின் இரட்டி - யானைகளின் தொகையினும் இருமடங்கு ஆகும் [நாற்பதினாயிரமாகும்]; போயின பதாதி - சென்ற காலாட்சேனை, சொன்ன - (கீழ்க்) கூறப்பட்ட, புரவியின் - குதிரைகளின் தொகையைக்காட்டிலும், இரட்டி - இருமடங்காகும் [எண்பதினாயிரமாகும்]; (எ - று.)—போல், ஆம் - அசைகள். (கo)

[தேர்வீரரின் வருணனை.]

கக. வின்மறைக்கிழவர்நானாவிஞ்சையர்வரத்தின்மிக்கார்
வன்மறக்கண்ணராற்றலவரம்பிலாவயிரத்தோளார்
தொன்மறக்குலத்தர்தூணிதூக்கியபுறத்தர்மார்பின்
கன்மறைத்தொளிருஞ்செம்பொற்கவசத்தர்கடுந்தேராட்கள்.

(இ- ள்.) கடு தேர் ஆட்கள் - (அச்சேனையிலுள்ள) கொடியதேர்வீரர்கள்,— வில் மறை கிழவர் - தநுர்வேதத்தில் தெரிந்தவர்கள்; நானா விஞ்சையர் - பலவித மாயவித்தையில் வல்லவர்கள்; வரத்தின் மிக்கார் - மிக்க வரம்பெற்றவர்கள்; வல்மறம் கண்ணர் - கொடிய வீரத்தைத் தெரிவிக்கின்ற கண்களையுடையவர்

கள்; வரம்பு இலா ஆற்றல் வயிரம் தோளார் - அளவில்லாத வலிமையையுடைய உறுதியான தோள்களையுடையவர்கள்; தொல் மறம் குலத்தர் - பழமையான வீரக்குடியிற் பிறந்தவர்கள்; தூணி தூக்கிய புறத்தர் - அம்பறாத்தூணி கட்டிய முதுகையுடையவர்; மார்பின் கல் மறைத்து ஒளிரும் செம்பொன் கவசத்தர் - மார்பாகிய கல்லை வெளிக்காட்டாமல் மறைத்துக்கொண்டுவிளங்குகின்ற செம்பொற்கவசத்தைப் பூண்டவர்கள்; (எ - று.) (௧௧)

[யானைப்பாகரின் வருணனை.]

௧௨. பொருதிசையானையூரும்புனிதனைப்பொருவும்பொற்பர்
சுரிபடைத்தொழிலுமற்றையங்குசத்தொழிலுந்தொக்கார்
நிருதியிற்பிறந்தவீரர்நெருப்பிடைப்பரப்புங்கண்ணர்
பரிதியிற்பொலியுமெய்யர்படுமதக்களிற்றின்பாகர்.

(இ - ள்.) மதம் படு களிற்றின் பாகர் - மதம்பொருந்திய ஆண்யானையின் பாகர்கள்,—பொரு திசை யானை ஊரும் புனிதனை பொருவும் பொற்பர் - போர்செய்யுந் தன்மையுள்ள (கிழக்குத்) திக்கின் யானையாகிய ஐராவதத்தை ஏறிச் செலுத்துகின்ற பரிசுத்தனை இந்திரனையொத்த அழகுடையவர்கள்; சுரி படை தொழிலும் மற்றை அங்குசம் தொழிலும் தொக்கார் - வாள் முதலிய ஆயுதவித்தையையும் மற்றை அங்குசத்தைக் கொண்டு யானை யோட்டுந் தொழிலையும் ஒருங்கேயுணர்ந்தவர்; நிருதியின் பிறந்த வீரர் - நிருருதியென்னுந் தென்மேற்குத் திக்குப்பாலகனது வம்சத்திற் பிறந்த வீரர்கள்; நெருப்பு இடை பரப்பும் கண்ணர் - நெருப்புப்பொறிகளை இடையிடையே பரப்புகின்ற கண்களையுடையவர்கள்; பரிதியின் பொலியும் மெய்யர் - சூரியனைப்போலப் பிரதாபம்விளங்கும் உடம்பையுடையவர்கள்; (எ - று.) (௧௨)

[குதிரைவீரர்களின் வருணனை.]

௧௩. ஏர்கெழுதிசையுஞ்சாரிபதினெட்டுமியல்பினெண்ணிப்
போர்கெழுபடையுங்கற்றவித்தகப்புலவர்போரிற்
றேர்கெழுமறவர்யானைச்சேவகர்சிரத்திற்செல்லுந்
தார்கெழுபுரவியென்னுந்தம்மனந்தாவப்போனார்.

(இ - ள்.) ஏர் கெழு திசையும் - அழகு மிகுந்த (தாம் செல்லவேண்டிய) இடத்தின் தன்மையையும், சாரி பதினெட்டும் - பதினெட்டுச் சாரியையும், இயல்பின் எண்ணி - நன்றாக ஆராய்ந்து, போர் கெழு படையும் கற்ற - போர்க்குச் சிறந்த ஆயுத வித்தையையும் கற்றறிந்த, வித்தகம் புலவர் - விவேகத்திற் சிறந்த அறிஞரான குதிரை வீரர், கெழு தேர் மறவர் - சிறந்த தேர் வீரர்களும், யானை சேவகர் - யானைவீரர்களும், (ஆகிய இவர்களது), சிரத்தில் - தலைகளிலே, செல்லும் - (தமது வேகத்தினால்) அடிவைத்துச் செல்லுகின்ற, தார் கெழு புரவி என்னும் - கிண்கிணிமாலையையணிந்த குதிரைகளென்கிற, தம் மனம் - தமது மனங்கள், தாவ - பாய்ந்துசெல்ல, போரில் போனார் - யுத்தகளத்திற் சென்றார்கள்; (எ - று.)

குதிரைச்சாரிகள் பதினெட்டையும் ஆயுதவித்தைகளையும் கற்றுத் தேர்ந்த குதிரைவீரர், தம்மனவிருப்பத்தின்படி தாவிச் செல்லுங் குதிரைகளின்மீது அந்த யுத்தகளத்திற் சென்றன ரென்பதாம். 'குதிரைவீரர் போனார்' என்று இந்தச் செய்யுளில் கூறியதற்கு ஏற்ப, கீழிரண்டு செய்யுட்களிலும் தேர்வீரர் யானைவீரர்களும் போரிற் போனா ரென்று கொள்க. தேர் யானை இவற்றைவிட விஞ்சிய வேகமுடையன குதிரைக ளென்பதும், யானை தேர்களால் வழி மறைக்கப்பட்டிருப்பினும் அதனைப் பாராட்டாது அவற்றைத் தாண்டிச்செல்லுந் திறத்தன குதிரைக ளென்பதும் மூன்றுமடியிற் பெறப்படும். "ஐந்து கதியும் பதினெட்டுச் சாரியையும்" என்றார், புறப்பொருள்வெண்பாமாலையிலும். (௧௩)

[நால்வகைச் சேனையோடு சம்புமாலி போர்க்குச் செல்லுதல்.]

௧௪. அந்நெடுந்தானைசுற்றவமரரைபயஞ்சுற்றப்
பொன்னெடுந்தேரிற்போனான்பொருப்பிடைநெருப்பிற்பொங்கித்
தன்னெடுங்கண்கள்காந்தத்தாழ்பெருங்கவசமார்பின்
மின்னிடைவெயிலும்வீசவில்லிடுமெயிற்றுவீரன்.

(இ - ள்.) வில் இடும் எயிறு வீரன் - ஒளி வீசுகின்ற கோரப்பற்களையுடைய வீரனான சம்புமாலி,—அ நெடு தானை சுற்ற - அவ்வாறான பெரியநால்வகைச்சேனைகளும் (தன்னைச்) சூழ்ந்துவரவும், அமரரை அச்சம் சுற்ற - தேவர்களைப் பயம் சுற்றிக்கொள்ளவும்,—தன் நெடு கண்கள் காந்த - தனது நீண்டகண்கள் கோபத்தால் ஜ்வலிக்கவும், மார்பின் தாழ் பெருகவசம் மின்இடை வெயிலும் வீச - மார்பில்தங்கிய பெரியகவசம் பிரகாசித்து மின்னலும் வெயிலும் போன்ற ஒளியை வீசவும், பொருப்பிடை நெருப்பின்-மலையினிடையிலேயுள்ள நெருப்புப்போல, பொங்கி - சினங்கொண்டு, பொன் நெடு தேரில் போனான் - பொன்மயமான பெரியதேரில் ஏறிச்சென்றான்; (எ - று.)

சம்புமாலி போகும் மிடுக்கைக் கண்டு, ஒருகால் அனுமானுக்குத் தோல்வி நேருமோ? என்று தேவர்கள் அஞ்சுவாராயினரென்க. தேரின்நடுவிலே மிக்க சினங்கொண்டு தங்கியிருந்த சம்புமாலிக்குப் பொருப்பி னிடையி லுள்ள நெருப்பு உவமையாம். (௧௪)

[அநுமான் அரக்கர்வரவை யெதிர்நோக்கிக்கொண்டு அவ்வனத்தின்வெளிவாயிலில் நிற்றல்.]

௧௫. நந்தனவனத்துனின்றநாயகன்றூதன்றானும்
வந்திலரரக்கரென்னுமனத்தினன்வழியைநோக்கிச்
சந்திரன்முதலவானமீனெலாந்தழுவநின்ற
விந்திரதனுவிற்றோன்றுங்கோரணமிவர்ந்துநின்றான்.

(இ - ள்.) நந்தனவனத்துள் நின்ற நாயகன் தூதன்தானும் - (அந்தவேளையிலே) அசோகவனமென்னுஞ்சிங்காரத்தோட்டத்துள்ளிருந்தஇராமதூதனாகிய அநுமானும்,—அரக்கர்வந்திலர் என்னும் மனத்தினன்-(நம்மோடுபோர்செய்யுமாறு இன்னும்) இராக்கதவீரர் வரவில்லையே யென்ற கருத்தையுடையவனாய், வழியை நோக்கி-(அவர்கள் வருவதற்குஉரிய)வழியை எதிர்நோக்கிக்கொண்டு,

சந்திரன் முதல-சந்திரன் முதலாகிய கிரகங்களும், வானம் மீன் எலாம்-வானத்தி லுள்ள நட்சத்திரங்கள் எல்லாமும், தழுவ நின்ற-எட்டும்படி உயர்ந்துநிற்கின்ற, (பல்வகையிரத்தினங்கள் இழைத்திருப்பதனால்), இந்திர தனுவின்தோன்றும் - (பலவகை நிறங்களையுடைய) இந்திரதனுசுபோல விளங்குகின்ற, தோரணம் - (அப்பூஞ்சோலையின்) வெளிவாயிலில். இவர்ந்து நின்றான் - ஏறியிருந்தான்; (எ-று.)

முதல-பெயர். மூன்றாமடி-அந்தவாயிலின் உயர்ச்சிமிகுதியை விளக்கும். (கரு)

[அங்குநின்ற அநுமான் வருணனை.]

கசு. கேழிருமணியும்பொன்னும்விசும்பிருள்கிழித்துவீங்க
ஆழிருங்கதிர்களோடுந்தோரணத்தும்பர்மேலான்
சூழிருங்கதிர்களெல்லாந்தோற்றிடச்சுடருஞ்சோதி
யாழியினடுவட்டோன்றுமருக்கனேயனையனானான்.

(இ-ள்.) கேழ் இரு மணியும் பொன்னும் விசும்பு இருள் கிழித்து வீங்க-நல்லநிறமுள்ள பெரியஇரத்தினங்களும் பொன்னும் வானத்திலுள்ள இருளைப்போக்கி(ச்சாம்) மிக்கவிளங்குதலாலே,—ஊழ் இருங் கதிர்களோடும்-முறைமுறையே தோன்றுகின்ற (அந்தஇரத்தினம் பொன் என்றவற்றின்) மிக்ககிரணங்களுடனே, தோரணத்து உம்பர் மேலான் - அந்தத்தோரணவாயிலின் (நடுவே) மிக்க மேலான இடத்தி லுள்ளவனாகிய அநுமான்,—சூழ் இருங் கதிர்கள் எல்லாம்தோற்றிட - (தன்னைச்சுற்றிலும்பெரிய ஆயிரங்கிரணங்களும் தோன்றி விளங்க, ஆழியின் நடுவண் தோன்றும் - சமுத்திரத்தின் நடுமுசட்டிலே காணப்படுகின்ற, சுடரும் சோதி அருக்கன் - பேரொளியையுடைய சூரியனை, அனையன் ஆனான் - ஒப்பவனானான்; (எ-று.)

மிகவும் பரந்த தோரணத்திற்கு அவ்வாறுள்ள சமுத்திரமும், தோரணவாயிலில் இழைத்த பொன் மணி இவற்றின் ஒளி தன்னைச்சுற்றிவிளங்கத் தான் அவற்றினாற் சூழப்பட்டு அத்தோரணத்தின்நடுமுகட்டிலிருக்கும் அநுமானுக்குத் தனது ஆயிரங்கிரணங்களும் தன்னைச்சுற்றிவிளங்கச் சமுத்திரத்தின் நடுமுகட்டில் தோன்றுஞ் சூரியனும் உவமையாம். தன்மைத்தற்குறிப்பேற்றவணி. சுடருஞ்சோதி யென்பதை ஆழிக்கே கூட்டி - இரத்திநாகரமென்றுபேர்பெறும் படி பலவகையிரத்தினங்களினாற் பேரொளிவிளங்கும் பரந்த கடல் என்று பொருளுரைத்து, பொன் இரத்தினம் என்ற இவற்றினால் விளங்குந் தோரணத்துக்கு அக்கடல் உவமையெனவும், தன்னுடல்முழுவதும் புண்பட்டு அதனாற் செந்நிறங்கொண்டு விளங்கும் அநுமானுக்குத் தன் செந்நிறக்கதிர்களோடுவிளங்கும் பாலசூரியன் உவமையெனவும் கூறலுமாம். (கசு)

[அநுமான் ஆரவாரித்தல்.]

கஎ. செல்லொடுமேகஞ்சிந்தத்திரைக்கடல்சிலம்பத்திரக்
கல்லெனகிடந்தநாகமுயிரொடுவிடமுங்காலக்
கொல்லியலரக்கர்நெஞ்சிற்குடிபுகவச்சம்வீரன்
வில்லெனவிடிக்கவிண்ணோர்நடுக்குறவீரனார்த்தான்.

(இ - ள்.) மேகம் செல்லொடு சிந்த - மேகங்கள் இடியுடனே சிதறவும், திரை கடல் சிலைப்பு தீர - அலைகளையுடைய கடல் (தன்) பேரொலியடங்கவும், கல் அளை கிடந்த நாகம் உயிரொடு விடமும் கால - மலைகளின் நடுவேயிருக்கும் புற்றுக்களிலுள்ள பாம்புகள் (அஞ்சித்) தமது உயிருடனே விடத்தையுங் கக்கவும், கொல் இயல் அரக்கர் நெஞ்சில் அச்சம் குடிபுக - கொல்லுந்தன்மைபொருந்திய அரக்கருடைய மனத்திலே பயம் நிலையாயுண்டாகவும், விண்ணோர் நடுக்குற - தேவர்களும் (திடீரென்று கேட்டதனால்) மனந்துணுக்குறவும், வீரன் வில் என இடிக்க - மகாவீரனான் ஸ்ரீராமன் வில் நாணியைத் தெறித்தாற்போன்ற பேரொலியுண்டாம்படி, வீரன் - அநுமான், ஆர்த்தான் —; (எ - று.) (௧௭)

[அநுமான் தோள் கொட்டுதல்.]

௧௮. நின்றன திசைக்கண் வேழநெடுங்களிச் செருக்குநீங்கத்
தென்றிசைநமனுமுள்ளந் துணுக்கெனச் சிந்தவானிற்
பொன்றலின் மீன்களெல்லாம் பூவெனவுதிரப் பூவுங்
குன்றமும் பிளக்க வேலை துளக்குறக் கொட்டினான் றோள்.

(இ - ள்.) திசைக்கண் நின்றன வேழம் நெடுங் களி செருக்கு நீங்க - எட்டுத் திக்குக்களிலும் நிற்பனவான யானைகள் (தமது) மிக்க மதக்களிப்பு நீங்கவும், தென் திசை நமனும் உள்ளம் சிந்தி துணுக்கென - தெற்குத்திக்குப்பாலகனாகிய யமனும் மனமுறிந்து திடுக்கிடவும், — (அப்போது தோன்றிய அதிர்ச்சியினால்), வானில் பொன்றல் இல் மீன்கள் எல்லாம் பூ என உதிர - ஆகாசத்தில் அழிவில்லாமல் நிற்கின்ற நட்சத்திரங்களெல்லாம் நிலைபெயர்ந்து மலர்களுதிர்வதுபோலக் கீழே சிந்தவும், — பூவும் குன்றமும் பிளக்க - பூமியும் மலைகளும் பிளவுபடவும், வேலை துளக்குற - சமுத்திரமும் நிலைகலங்கவும், தோள் கொட்டினான் - (தன்) தோளை (அநுமான்) தட்டினான்; (எ - று.) (௧௮)

[அரக்கரும் ஆரவாரித்து அநுமானுள்ளவிடத்துச் செல்லமுடியாது நிற்றல்.]

௧௯. அவ்வழியரக்கரெல்லா மலைநெடுங்கடலினார்த்தார்
செவ்வழிச் சேறலாற்றார் பிணப்பெருங்குன்றந் தெற்றி
வெவ்வழி குருதிவெள்ளம் புடைமிடைந் துயர்ந்து வீங்க
வெவ்வழிச் சேறுமென்றார் தமருடம்பிடறி வீழ்வார்.

(இ - ள்.) அ வழி - அப்போது, அரக்கர் எல்லாம் - (போரச்சென்ற) அரக்கர் யாவரும், அலை நெடுங் கடலின் ஆர்த்தார் - அலைகளையுடைய நீண்ட கடல்போல ஆரவாரித்து, தமர் உடம்பு இடறி வீழ்வார் - தமது உறவினர்களினுடைய பிணங்களின்மேல் இடறிவிழுபவர்களாய், பிணம் பெருங் குன்றம் தெற்றி - (போகின்ற வழியிலே) பெரியபிணமலைகள் கிடந்து தம்மை(ப்போகவொட்டாது) தடுத்தலாலும், வெம் வழி குருதி வெள்ளம் புடை மிடைந்து உயர்ந்து வீங்க - வெம்மையுடனே பெருகுகின்ற இரத்தப்பெருக்கு (ப்போகும்) இடங்களிலெல்லாம் நெருங்கி மிக்குப் பெருகுவதனாலும், செம்வழி சேறல் ஆற்றார் - (அநுமானுள்ளவிடத்துக்

குச்) செம்மையான வழியிலே செல்லமுடியாதவர்களாய் [நேர்வழிகிடைக்கப் பெறாதவர்களாய்], எ வழி சேறும் என்றார் - நாம் எந்தவழியாற் போய்ச்சேருவோமென்று (செல்லும்வழிதெரியாது) திகைத்தார்கள்; (எ - று.) (கக)

[சம்புமாலி அணிவகுத்துநெருங்க, அநுமான் மகிழ்தல்.]

உ0. ஆண்டுநின் றரக்கன்வெவ்வே றணிவகுத் தனிகந்தன்னை
மூண்டிரு புடையுமுன்னு முறைமுறை மூசவேவித்
தூண்டினன் றானுந்திண்டேர் தோரணத் திருந்ததோன்றல்
வேண்டியதெதிர்ந்தானென்ன வீங்கினன் விசயத்திண்டோள்.

(இ - ள்.) அரக்கன் - சம்புமாலி,—ஆண்டுநின்று - அங்கிருந்து, அனிகம்தன்னை - (தன்)சேனையை, வெவ்வேறு அணி வகுத்து - வெவ்வேறு அணியாகப் பிரித்து, இரு புடையும் முன்னும் முறை முறை மூண்டு மூச ஏவி - (அநுமானது) இரண்டு பக்கங்களிலும் எதிரிலும் முறைமுறையாக மூண்டு நெருங்கும்படி கட்டளையிட்டு, தானும் திண் தேர் தூண்டினன் - தானும்(தனது)வலியதேரைச் செலுத்திக்கொண்டுசென்றான்; (அப்பொழுது), தோரணத்து இருந்த தோன்றல் - (அரக்கர்வருகைதைக்கண்ட) தோரணத்தின்மீதிருந்த அநுமான், வேண்டியது எதிர்ந்தான் என்ன - தானெதிர்பார்த்ததைப் பெற்ற காரணத்தினால், விசயம் திண் தோள் வீங்கினன் - வெற்றிபொருந்திய வலியதோள்கள் பூரிக்கப்பெற்றான்; (எ - று.)

அநுமான் அரக்கர்வருகையை எதிர்பார்த்திருந்தானென்பதை "நாயகன் தூதன்றானும்,வந்திலராக்கரென்னும்மனத்தினன் வழியைநோக்கி, * * * தோரணமிவர்ந்து நின்றான" என்று கீழ்க்கூறியதற்கு ஏற்ப, 'வேண்டியதெதிர்ந்தானென்ன' என்றார். போரெனில் தோள் பூரித்தல், வீரர்க்கு இயல்பு. (உ0)

[அநுமானும் போர்க்குச் சித்தனாக நிற்றல்.]

உக. ஐயனுமமைந்துநின்றானாழியானளவினாம
நெய்சுடர்விளக்கிற்றோன்றுநெற்றியேநெற்றியாக
மொய்ம்மயிர்ச்சேனைபொங்கமுரணயிலுகிர்வாண்மொய்த்த
கைகளேகைகளாகக்கடைக்குழைதிருவாலாக.

(இ - ள்.) ஐயனும்-பெரியோனாகிய அநுமானும், ஆழியான்-சக்கராயுதபாணியாகிய திருமாலினது,(அடிமையைக்குறிப்பிக்கின்ற),அளவின் நாமம்-பெருமையையுடைய திருமணகாப்பு,நெய் சுடர் விளக்கின்[விளக்கு சுடரின்]தோன்றும்-நெய்தோயப்பெற்று அதனிடையேதோன்றுகின்ற தீபச்சுவாலைபோல விளங்குகின்ற, நெற்றியே-தனதுநெற்றியே, நெற்றி ஆக - முன்னணிச் சேனையாகவும்,—மொய் மயிர் சேனை பொங்க முரண் அயில் உகிர் வாள் மொய்த்த கைகளே - நெருங்கிய மயிர்த்திரள் சிலிர்க்கும்படி மாறுபடுகின்ற கூரிய நகங்களாகிய வாளாயுதங்கள் நெருங்கப்பெற்ற(தனது)இரண்டுகைகளே, கைகள் ஆக-பக்கசேனையாகவும், திருவால் - (தனது)சிறந்தவால்,கடை கூழை ஆக - பின்னணிச் சேனையாகவும் (அமைந்துநிற்க), அமைந்து நின்றான் - (இவ்வாறு தன்னையே அணிவகுத்துக்கொண்டு போர்க்குச்)சித்தமாய்நின்றான்; (எ - று.)

அநுமான் தன்உறுப்புக்களாற் பொருதற்குச் சித்தனாக இருந்ததை, கவி, சம்புமாலி அணிவகுத்துவருவதை நோக்கி அநுமானும் தன்உறுப்புக்களையே அணிவகுத்து நின்றானாக வருணித்தார்; உருவகத்தை அங்கமாகக்கொண்டுவந்த தற்குறிப்பேற்றவணி. திருமண்காப்பினிடையே ஸ்ரீசூர்ணம் செந்நிறமாகப்பிரகாசிப்பதுநோக்கி, வெண்ணிறமுள்ளதிருமண்காப்புக்குத் தோய்ந்தநெய்யையும், ஸ்ரீசூர்ணத்துக்கு அந்தநெய்யினிடையே மேலெழுந்து விளங்குகின்ற தீபச்சுவாலையையும் உவமைகூறினர். ஸ்ரீவால்மீகிமுனிவர் இவ்வாறுஎங்கும்கூறாதிருக்கவும் கம்பர் இவ்வாறு கூறியதனால், கம்பர் திருமண்காப்புதரிக்கின்ற வைணவரென்பது, பெறப்படும். மயிர்ச்சேனை - மயிர்த்தொகுதி. கைந்நகங்களாற் பொருகையில் அப்போதுதோன்றுகின்ற மனவெழுச்சியால் மயிர் சிலிர்ப்பதுபற்றி, 'மயிர்ச்சேனைபொங்க' என்றார். 'மயிர்ச்சேனைபொங்க' என்பதற்கு - மயிராகிய நடுவணிச்சேனைகள் பொங்கவும் என்று கூறுவது சிறக்குமேற்கொள்க. (௨௧)

[அரக்கர்கள் அநுமான்மேற் படைக்கலங்களை விடுதல்.]

௨௨. வயிர்கள்வால் வளைகள் விம்ம வரிசிலை சிலைப்ப மாயப்
பயிர்களார்ப் பெடுப்ப மூரிப் பல்லியங் குமுறப் பற்றிச்
செயிர்கொள்வா ளரக்கர் சீற்றஞ் செருக்கினர் படைகள் சிந்தி
வெயில்கள்போ லொளிகள் வீச வீரன்மேற் கடிது விட்டார்.

(இ - ள்.) செயிர்கொள் வாள் அரக்கர் - பகைமைகொண்ட கொடிய அரக்கர்கள், சீற்றம் செருக்கினர் - கோபம் மிஞ்சியவராய், -வயிர்கள் வால் வளைகள் விம்ம - ஊதுகொம்புகளும் வெள்ளியசங்கங்களும் ஒலிக்கவும்,—வரி சிலை சிலைப்ப - கட்டமைந்த விற்கள் நாணொலியையுண்டாக்கவும், மூரி பல்இயம் குமுற - பெரிய பலவாத்தியங்கள் கோஷிக்கவும், மாயம் பயிர்கள் ஆர்ப்பு எடுப்ப - வஞ்சனைக்குணமாகிய பயிர்கள் (மகிழ்ச்சிகொண்டு) ஆரவாரஞ் செய்யவும்,— படைகள் - ஆயுதங்களை, பற்றி-கையிலெடுத்து, வெயில்கள் போல் ஒளிகள் வீச—, வீரன்மேல் - அநுமான்மேல், கடிது சிந்தி விட்டார் - விரைவாக நாற்புறமும் பிரயோகித்தார்கள்: (எ - று.)

அரக்கர் வலிமைகொண்டு பொருவதுபற்றி மாயப்பயிர்கள் ஆர்ப்பெடுக்கலாயின. (௨௨)

வேறு.

[இதுமுதல் மூன்றுகவிகள் - அநுமான் உக்கிரமாகப் பொருதலைக் கூறும்.]

௨௩. கருங்கட லரக்கர்தம் படைக்கலங் கரத்தாற்
பெருங்கட லுறப்புடைத் திறுத்துகப் பிசைந்தான்
விரிந்தன பொறிக்குல நெருப்பென வெகுண்டாண்
டிருந்தவன் கிடந்ததோ ரெழுத்தெரிந் தெடுத்தான்.

(இ - ள்.) ஆண்டு இருந்தவன் - அந்தத் தோரணத்தின்மீது இருந்த அநுமான்,—கரத்தால் - (தன்) கைகளாலே, கருங் கடல் அரக்கர்தம் படைக்

கலம் - கருநிறமுள்ள கடல்போற் பரந்த அரக்கவீரர்களெறிந்த ஆயுதங்களை, பெருங் கடல் உற புடைத்து - பெரிய கடலிற் போய் விழும்படி அடித்தும், இறுத்து - முறித்தும், உக - (இவ்வாறு பயனிலவாகச்) சிதறிப்போம்படி, பிசைந்தான் - வலியழித்து விட்டான்; (அச்செய்கையால்), பொறி குலம் விரிந்தன - தீப்பொறிகளின் கூட்டம் எங்கும் பரவலாயின; (அப்போது அவன்), நெருப்பு என வெகுண்டு - பற்றியெரிகிற அக்கினிபோலப் பெருஞ் சினம் மூண்டு, கிடந்தது ஓர் எழு - அங்குக்கிடந்த ஒரு இருப்புத் தடியை, தெரிந்து எடுத்தான் - கண்டெடுத்தான் ; (எ - று.)

அத்தோரணத்தின் குறுக்கே பாய்ச்சப்படுகின்ற பரிக மெனப்படும் இருப்புஉழலைமரத்தைப் போர் செய்யுமாறு அனுமான் எடுத்துக்கொண்டன னென்னலாம்.

இதுமுதற் பதினெட்டுக் கவிகள் - முதல் மூன்றுசீர்கள் விளச்சீர்களும், நான்காஞ்சீரொன்று மாச்சீரு மாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத் தங்கள். (உகூ)

உச. இருந்தனனெழுந்தனனிழிந்தனனுயர்ந்தான்
திரிந்தனன்புரிந்தனனெனநனிதெரியார்
விரிந்தவர்குவிந்தவர்விலங்கினர்கலந்தார்
பொருந்தினர்நெருங்கினர்களம்படப்புடைத்தான்.

(இ - ள்.) 'இருந்தனன் - (தோரணத்தின்மேல்) உட்கார்ந்திருந்தான், எழுந்தனன்—, இழிந்தனன் - கீழிறங்கினன், உயர்ந்தான் —, திரிந்தனன் - (தம்நடுவே) திரிந்தான், புரிந்தனன் - போர்புரிந்தான்,' என - என்று, நனி தெரியார் - (அவ்வநுமானைப்பற்றி) நன்கு தெரிந்துகொள்ளமாட்டாதவர்களாய்,— விரிந்தவர் - பரவிநின்றவர்களும், குவிந்தவர் - ஒருங்கு திரண்டிருந்தவர்களும், விலங்கினர் - ஒதுங்கி நின்றவர்களும், கலந்தார் - (சண்டையில்) மூண்டு நின் றவர்களுமாக, பொருந்தினர் - பொருந்தின அரக்கர் யாவரும்,—நெருங்கினர் களம் பட - போர்க்களத்தில் நெருங்கி யழியும்படி, புடைத்தான் - (அநுமான் அந்த எழுவைக்கொண்டு) அடித்துத் தள்ளினன் ; (எ - று.) (உச)

உரு. எறிந்தனவெய்தனவிடியுருமெனமேற்
செறிந்தனபடைக்கலமிடக்கையிற்சிதைத்தான்
முறிந்தனதெறுங்கரிமுடிந்தனதடந்தேர்
மறிந்தனபரிநிரைவலக்கையின்மலைந்தான்.

(இ - ள்.) (அநுமான்),—எறிந்தன - (தன்மீது) வீசியெறியப்பட்டனவும், எய்தன - எய்யப்பட்டனவுமாகிய, இடி உரும் என மேல் செறிந்தன படைக் கலம் - பேரிடிபோலத் தன்மேல் நெருங்கிவந்தனவான ஆயுதங்களையெல்லாம், இடக் கையில் சிதைத்தான் - (தனது) இடக்கையால் அழித்துத் தள்ளுபவ னாய், வலக் கையில் மலைந்தான் - தன் வலக்கையினால் போர்செய்யலானான்

(அதனால்), தெறும் கரி முறிந்தன - அழிக்குந் தன்மையுள்ள யானைகள் முறிந்து போயின; தட தேர் முடிந்தன - பெரிய தேர்கள் சிதைந்துபோயின; பரி நிரை மறிந்தன - குதிரைகளின் கூட்டம் கீழ்வீழ்ந்தழிந்தன; (எ - று.)

இதனால், அநுமான் தன் பகைவர் வீசும படைக்கலங்களையெல்லாம் தன் இடக்கையால் போக்கிவிட்டு, தன் வலக்கையிற் கொண்டுள்ள படைக்கலத்தால் தான் எதிரிகளின் கஜரததுரகங்களை யழித்தமையைக் கூறினார். இதனால், அநுமானது இருகைகளும் ஒருசேரப் போரில் விரைந்து தொழில் செய்த திறமை பெறப்படும். (உ௫)

[யானைகள் அழிதல்.]

உ௬. இழந்தனநெடுங்கொடியிழந்தனவிருங்கோ
டிழந்தனநெடுங்கரமிழந்தனவியன்றா
ளிழந்தனமுழங்கொலியிழந்தனமதம்பா
டிழந்தனபெருங்கதமிருங்கவுளியானை.

(இ - ள்.) (அநுமானால் அடிக்கப்பட்டு), இருங் கவுள் யானை - (வீரர்கள் ஏறிவந்த) மதம்பெருகும் கன்னத்தையுடைய யானைகள், நெடு கொடி - (தம்மேற் பிடிக்கப்பட்ட) பெரிய கொடிகளை, இழந்தன—; இரு கோடு - பெரிய தந்தங்களை, இழந்தன—; நெடு கரம் - பெரிய கைகளை, இழந்தன—; வியன் தாள் - பெரிய கால்களை, இழந்தன—; முழங்கு ஒலி - வீறிடுகின்ற ஒலியை, இழந்தன—; மதம் பாடு - மதம் ஒழுகுதலை, இழந்தன—; பெரு கதம் - மிக்க கோபத்தை, இழந்தன—; (எ - று.)—யானையின்மீது கொடியெடுத்தல் வழக்கம். சொற்பொருட்பின்வருநிலையணி. (உ௬)

[தேர்கள் அழிதல்.]

உ௭. நெரிந்தனதடஞ்சுவர்நெரிந்தனபெரும்பார்
நெரிந்தனநுகம்புடைநெரிந்தனவதன்கா
னெரிந்தனகொடிஞ்சில்கனெரிந்தனவியன்றார்
நெரிந்தனகடும்பரிநெரிந்தனநெடுந்தேர்.

(இ - ள்.) (வீரர்களேறிவந்த தேர்களினுடைய), தட சுவர் - பெரிய சுற்றுப்பக்கங்கள், நெரிந்தன - நொருங்கிப் போயின; பெரு பார் - பெரிய பார்கள், நெரிந்தன—; நுகம் - நுகத்தடிகள், புடை - பக்கங்களிலே, நெரிந்தன—; அதன் கால் - அத்தேர்களின சக்கரங்கள், நெரிந்தன—; கொடிஞ்சில்கள் - மேல்தட்டுக்கள், நெரிந்தன—; வியன் தார் - (தேரில்கட்டப்பட்டுள்ள) சிறந்த சிறுமணிகள், நெரிந்தன—; கடும் பரி - (அவற்றிற்பூட்டப்பட்டுள்ள) வேகமான குதிரைகள், நெரிந்தன—; (முடிவாக), நெடு தேர் - பெரிய தேர்களே, நெரிந்தன—; (எ - று.)

அதன் - சாதியொருமை. பார் - அடிப்பரப்பென்பாருமுளர். (உ௭)

[குதிரைகள் அழிதல்.]

உ௮. ஒடிந்தனவுருண்டனவுலந்தனபுலந்த
விடிந்தனவெரிந்தனநெரிந்தனவெழுந்த
மடிந்தனமறிந்தனமுறிந்தனமலைபோற்
படிந்தனமுடிந்தனகிடந்தனபரிமா.

(இ - ள்.) ஒடிந்தன - கழுத்து ஒடிந்தன (சில); உருண்டன - உருளலாயின (சில); உலந்தன - உயிர்போயின (சில); புலந்த - துன்பப்படுவன (சில); இடிந்தன - இடிபட்டன (சில); எரிந்தன - வெந்துபோயின (சில); நெரிந்தன - எலும்புகள் நொறுங்கிப்போயின (சில); எழுந்த - மேலிடத்துச் சென்றன (சில); மடிந்தன மறிந்தன - இறந்துபோய்க் கீழ்விழுந்தன (சில); முறிந்தன மலை போல் படிந்தன - கால்முறிந்தனவான (சில) குதிரைகள் (இந்திரனால் இறகுமுறிக்கப்பட்ட மலைகள்போலப்) பூமியிற் படிந்துகிடந்தன; பரிமா - (வீரர்களேறிவந்த) குதிரைகள், கிடந்தன முடிந்தன - (இவ்வாறு தம்முடைய கதி) முடியப்பெற்றுக் கிடந்தன; (எ - று.) (உ௮)

[பதாதிகள் அழிதல்.]

உ௯. வெருண்டனர்வியந்தனர்விழுந்தனரெழுந்தார்
மருண்டனர்மயங்கினர்மறிந்தனரிறந்தா
ருருண்டனருலைந்தனருளைழத்தனர்பிழைத்தார்
சுருண்டனர்புரண்டனர்தொலைந்தனர்மலைந்தார்.

(இ - ள்.) மலைந்தார் - (அநுமானோடு வந்து) போர் செய்த பதாதிகளிற் பலர்,—வெருண்டனர் - (அநுமானது திறத்தைக் கண்டு) அச்சங்கொண்டு, வியந்தனர் - கொண்டாடினவர்களாய், விழுந்தனர் எழுந்தார் - (மூர்ச்சித்துக்) கீழே வீழ்ந்து (பிறகு) தெளிந்தெழுந்து, மருண்டனர் - மருட்சிகொண்டு, மயங்கினர் - பத்திமாறுபட்டமடைந்து, உலைந்தனர் - வருந்தி, மறிந்தனர் - மீண்டும்போர்செய்பவராய், இறந்தார் - உயிரொழியப்பெற்று, உருண்டனர் - தலையுருண்டார்கள்; பிழைத்தார் - (அவ்வாறு இறவாமல்) உயிர்தப்பியவர்கள்,— உழைத்தனர் - மிக்க வருத்தமடைந்து, சுருண்டனர் - (தமது உறுப்புக்கள்) சுருளப்பெற்று, புரண்டனர் தொலைந்தனர் - (பூமியிற்) புரண்டவராய் வலிகெட்டுஓடிவிட்டனர்; (எ - று.) (உ௯)

[இதுமுதல் ஒன்பதுகவிகள் - அநுமான் போர்செய்தவகையை விவரித்துக்கூறும்.]

௩௦. கரிகொடுகரிகளைக்களப்படப்புடைத்தான்
பரிகொடுபரிகளைத்தலத்திடைப்படுத்தான்
வரிசிலைவயவரைவயவரின்மடித்தா
னிரைமணித்தேர்களைத்தேர்களினிரைத்தான்.

(இ - ள்.) (அநுமான்),—கரி கொடு - யானைகளைக்கொண்டு, கரிகளை - யானைகளை, களம் பட - போர்க்களத்தில் இறந்துவீழும்படி, புடைத்தான் - அடித்துக்கொன்றான்; பரி கொடு பரிகளை தலத்திடை படுத்தான் - குதிரைகளைக்கொண்டே குதிரைகளை அந்தயுத்தபூமியில் வீழ்த்திக்கொன்றான்; வரி சிலை வயவரை வயவரின் மடித்தான் - கட்டமைந்தவில்லையுடைய காலாள் வீரரைக் காலாள்வீரரைக்கொண்டே மடியச்செய்தான்; நிரை மணி தேர்களை தேர்களின் நிரைத்தான் - வரிசையாக மணிகள்கட்டிய தேர்களை (அவ்வாறான) தேர்களைக்கொண்டே அழித்துக்குவித்தான்; (எ - று.)

இந்தச்செய்யுளால், நால்வகைச் சேனைகளையும் அவ்வச்சேனைகளையே தன் போர்க்கருவியாகக்கொண்டு அநுமான் அழித்த தன்மையை விவரித்தார். (௧௦)

௧௧. மூளையுமுதிரமுமுழங்கிருங்குழம்பாய்
மீளிருங்குழைபடக்கரிவிழுந்தழுந்தத்
தாளொடுந்தலையுகத்தடநெடுங்கிரிபோற்
றோளொடுநிருதரைவாளொடுந்துகைத்தான்.

(இ - ள்.) தாளொடு தலை உம் உக - கால்களும் தலைகளும் சிதறிவிழவும், தட நெடு கிரி போல் தோளொடு - பெரிய நீண்ட மலைபோன்ற தோள்களோடும், வாளொடும் - (அவர்கையிற்கொண்ட) வாளுடனும், மூளையும் உதிரமும் - அவர்களதுமூளைகளும இரத்தமும், முழங்கு இரு குழம்பு ஆய் - கொதிக்கின்ற மிக்க குழம்புஆகி, மீள் இருங் குழை பட - (கண்டவர்அஞ்சி) மீள்கின்ற மிகக குழைசேறாய்விட, (அதில்), கரி விழுந்து அழுந்த - யானைகள் விழுந்து அழுந்தும்படி, நிருதரை துகைத்தான் - இராட்சசவீரரைத் (தனதுகால்களால்) துகைத்திட்டான், (அநுமான்); (எ - று.)

அநுமான் அரக்கவீரரைத் துகைத்துக் கொன்றதனால், அவர்களுடைய மூளையும் இரத்தமும் குழம்புபோன்று யானைகளும வழுக்கிவீழ்ந்தழுந்துங் குழை சேறாயின வென்க. (௧௧)

௧௨. மல்லொடுமலைமலைத்தோளரைவளைவாய்ப்
பல்லொடுநெடுங்கரப்பகட்டொடும்பருந்தாள்
வில்லொடுமயிலொடும்விறலொடும்விளிக்குஞ்
சொல்லொடுமுயிரொடுநிலத்தொடுந்துகைத்தான்.

(இ - ள்.) (அன்றியும் அநுமான்), மல்லொடு மலை மலை தோளரை - வலிமையோடு பொருகின்ற மலைபோன்ற தோள்களையுடை வீரர்களை, வாய் வளை பல்லொடும் - (அவர்களுடைய) வாயிலுள்ள வளைந்தபற்களோடும், நெடு கரம் பகட்டொடும் - (அவர்களேறிச்செல்லும்) நீண்ட துதிக்கையையுடைய ஆண்யானைகளோடும், பரு தாள் வில்லொடும் அயிலொடும் - (அவர்கள்கையிற்கொண்ட) பருமையான அடியையுடைய வில்லுடனும்வேலுடனும், விறலொடும் விளிக்கும் சொல்லொடும் -

பராக்கிரமத்தோடு கூவுகிற சொற்களுடனும்,உயிரொடும்-உயிருடனும்(அழியும் படி),நிலத்தொடும் துகைத்தான்-பூமியோடுபூமியாய் அழுந்த மிதித்தொழித் தான்; (எ-று.)

யானைமேலேறிக்கொண்டு வில் வேல் என்னும் படைக்கலமேந்தி வீராவாத த்துடன் வந்த அரக்கவீரரை, அவருடைய உடல் முதலியனவெல்லாம் போம்படி துகைத்துக் கொன்றனன் அநுமா னென்பதாம். 'வெயிலொடும்விரிக்கும்' என்றும் பாடம். (௬௨)

௬௩. புகைநெடும்பொறிபுகுந் திசைதொறும்பொலிந்தான்
சிகைநெடுஞ்சுடர்விடுந் தேர்தொறுஞ்சென்றான்
றகைநெடுங்கரிதொறும்பரிதொறுஞ்சரித்தா
னகைநெடும்படைதொறுந் தலைதொறுநடந்தான்.

(இ - ள்.) புகை நெடும் பொறி புகும் திசைதொறும் பொலிந்தான்-புகையோ டுகூடிய நீண்ட நெருப்புப்பொறி [கோபாக்கினி] செல்லுமிடங்களிலெல்லாம் போய்விளங்குபவனாகிய அநுமான்,—சிகை நெடுஞ் சுடர் விடும் தேர்தொறும் சென்றான்-சிகரத்தையுடைய மிக்கஒளியை வெளிவீசுகின்ற தேர்கள்தோறும் போனான்; (அன்றியும்),தகை நெடு கரி தொறும் பரிதொறும்சரித்தான்-தகையுந் தன்மையுள்ள யானைகளினிடங்களிலும் குதிரைகளினிடங்களிலும் சஞ்சரித் தான்; (அல்லாமலும்), நகை நெடு படைதொறும்-வீரர்கள் (கையிற்கொண்ட) விளங்குகின்ற நீண்டஆயுதங்களினிடங்களிலும், தலைதொறும் - (அவர்களது) சிரசிலும், நடந்தான்—;(எ - று.)

முதலடியில் தொகுத்துக்கூறியதை, மற்றைமூன்றடிகளினால் விவரித்துக் கூறினரென்க. அநுமான் தனது கோபத்துக்கு இலக்கான சதுரங்கசேனைகளி டத்தும் அவற்றை யழித்தொழிக்கச் சென்றன னென்றவாறு. (௬௩)

௬௪. வென்றிவெம்புரவியின்வெரிநினும்விரவார்
மன்றலந்தாரணிமார்பினுமணித்தே
ரொன்றினின்றொன்றினு முயர்மதமழைதாழ்
குன்றினுங்கடையுகத்துருமெனக்குதித்தான்.

(இ - ள்.)வென்றி வெம் புரவியின் வெரிநினும்-வெற்றியையுடைய வேக மாகச்செல்லுந்தன்மையுள்ள குதிரைகளின் முதுகுகளிலும்,விரவார் மன்றல் அம் தார் அணி மார்பினும்-பகைவரான அரக்கவீரரது நறுமணமுள்ள அழகிய மாலையணிந்த மார்புகளினிடங்களிலும், மணிதேர் ஒன்றினின்று ஒன்றினும்-மணிகள் கட்டிய தேர்கள் ஒன்றிலிருந்து மற்றொன்றினிடத்திலும், உயர் மதம் மழை தாழ் குன்றினும்-ஓங்கியுள்ள மதமழைபொழிகின்ற மலைபோன்ற யானை களினிடங்களிலும், கடை உகத்து உரும் என-யுகாந்தகாலத்து இடிபோல, குதித்தான்–;(எ - று.)

கீழ்ச்செய்யுளிற்கூறியதையே இங்கு வேறொருவகையாக விளக்கினர். அநுமான் நால்வகைச்சேனைகளின்மீதும் யுகாந்தகாலத்து இடிவிழுவதுபோல அவை அடியோடு நாசமாம்படி குதித்தன னென்பதாம். (௬௪)

௩௫. பிரிவருமொருபெருங்கோலெனப்பெயரா
விருவினை துடைத்தவரறிவெனவெவர்க்கும்
வருமுலைவிலைக்கெனமதித்தனர்வழங்குந்
தெரிவையர்மனமெனக்கறங்கெனத்திரிந்தான்.

(இ - ள்.) (அப்போது அநுமான்),—பிரிவு அரு ஒரு பெரு கோல் என - (எங்கும்) நீங்காது செல்லவல்ல ஒப்பற்ற செங்கோல்போலவும், பெயரா இருவினை துடைத்தவர் அறிவு என - நீக்கமுடியாத (நல்வினை தீவினை என்ற) இருவினைகளையும் ஒழித்த பெரியோரது அறிவுபோலவும், எவர்க்கும் வரு முலை விலைக்கு என மதித்தனர் வழங்கும் தெரிவையர் மனம் என - (இன்னார் இனையார் என்று பாராமல்) யாவருக்கும் உள்ளகின்ற (தமது) ஸ்தநங்களை விலைப்பொருள்பொருட்டே நன்குமதித்துத் தருகின்ற வேசைப்பெண்களின் மனம்போலவும், கறங்கு என - காற்றாடிபோலவும், திரிந்தான் - (அவ்வரக்கரைக் கொல்லுமாறு) திரிந்துகொண்டிருந்தான்; (எ - று.)

அரசனுடைய செங்கோல், அனைவரையும் காக்கும்பொருட்டு எங்குந் திரிதல், இயல்பு. பெரியோர்களின் அறிவு எவ்வளவு நண்ணியபொருளாயினும் அறியுமாறு தட்டுத்தடையின்றிச் செல்லவல்லது. வேசையரதுமனம் பணத்தையே பெரிதாகஎண்ணிப் பெரிதுந் திரியுந் தன்மையுள்ளது. காற்றாடியின்தன்மையோ கண்கூடானது. இவைகளெல்லாம் அய்யுத்தகளத்திலே தட்டுத்தடையின்றிச் சுழன்றுசென்றுகொண்டிருந்த அநுமனுக்கு உவமையாதற்கு ஏற்கும்.

௩௬. அண்ணலவ்வரியினுக்கடியவரவன்சீர்
நண்ணுவரெனும்பொருளையறத்தெரிப்பான்
மண்ணினும்விசும்பினுமருங்கினும்வலித்தார்
கண்ணினுமனத்தினுந்தனித்தனிகலந்தான்.

(இ - ள்.) அண்ணல் - பெருமையிற்சிறந்தோனாகிய அநுமான், அ அரியினுக்கு அடியவர் அவன் சீர் நண்ணுவர் எனும் பொருள் - (முதற்கடவுளென்றுபிரசித்தனான) அந்தத் திருமாலின்பக்தர்கள் அவனுடைய சிறப்பை [சாரூப்பியத்தை]ப் பெறுவரென்னும் விஷயத்தை, நவை அற தெரிப்பான் - குற்றமில்லாமல் (செவ்வனே) தெரிவிப்பவனாய்,—மண்ணினும் - பூமியிலும், விசும்பினும் - ஆகாயத்திலும், மருங்கினும் - திக்குக்களிலும், வலித்தார் கண்ணினும் மனத்தினும் - வலிமைகொண்டபொருத அரக்கருடைய கண்ணுக்குளதிரிலும் மனத்திலும், தனி தனி கலந்தான் - தனித்தனியே கலந்துவிளங்கினான்; (எ - று.)

திருமாலின் அன்பர் அவனது ஸாரூப்யத்தைப் (ஸாரூப்யம் - ஒத்தவடிவுமுடைமை) பெறுவரென்பதை 'நிரஞ்ஜந: பரமம் ஸாம்யம் உபைதி [பகவானையடைதலினால் குற்றமற்றவன் அவனோடு பரமஸாம்யத்தை அடைவான்] முதலிய ஸ்ருதிவாக்கியங்களிலும் கூறியுள்ளமை காண்க. "மணியாழிவண்ணனுகந்தாரைத் தன்வடிவாக்குமென்றே, துணியாழிய மறைசொல்லும்" என்றார், பிள்ளைப்பெருமாளையங்காரும். திருமாலினடியார்க்கு அப்பரமனது சாரூப்பியம்

சித்திக்கு மென்பதை, இந்தஉலகத்தாரும் கண்கூடாகக்கண்டு அறியும்படி, அத்திருமாலினது அடியவனாகிய அநுமான், அந்தர்யாமியான அத்திருமால் எங்கும்பரந்துஉறைதல்போல அந்தப்போர்க்களத்தில் எங்கும் தட்டுத்தடையின்றிச்சென்று இருப்பவனாயினனென்றார். இச்செய்யுளில் திருமாலடியார் சாரூப்பியம்பெறுவரென்ற நற்பொருளை அநுமான் பிறர்க்குத் தன்னடக்கையாற் காட்டினனென்று கூறிய இதில்,தன்செய்கையால் நற்பொருளைப்பிறருக்குப் போதிப்பதாகிய காட்சியணியின்வகை இருத்தல் காண்க. (௫௬)

௫௭. கொடித்தடந்தேரொடுங்குரகதக்குழுவை
யடித்தொருதடக்கையினிலத்தினிட்டரைத்தா
னிடித்துநின்றதிர்கதத்தெயிற்றுவன்பொருப்பைப்
பிடித்தொருதடக்கையினுயிருகப்பிழிந்தான்.

(இ - ள்.) கொடி தட தேரொடும் - கொடிகட்டிய பெரியதேருடனே, குரகதம் குழுவை - குதிரைக்கூட்டங்களை, ஒரு தட கையின் - (தனது) பெரிய ஒரு கையால், அடித்து—, நிலத்தின் இட்டு அரைத்தான் - தரையிற்போகட்டுத் தேய்த்தான்; கதத்து இடித்து நின்று அதிர் எயிறு வன் பொருப்பை - சினத்தினாற் கர்ஜ்ஜித்துநின்று பேரொலிசெய்கிற தந்தங்களையுடைய வலிய மலைபோன்ற யானைகளை, ஒரு தட கையின் - (தனது) மற்றொருபெரியகையினால், பிடித்து—, உயிர் உக - (அவற்றின்) உயிர் போய்விடும்படி, பிழிந்தான்—; (எ - று.) (௫௭)

௫௮. கறுத்தெழுநிறத்தினரெயிற்றினர்கயிற்றார்
செறுத்தெரிவிழிப்பவர்சிகைக்கழுவலத்தார்
மறுத்தெழுமறலிகளிவரெனவதிர்ந்தா
ரொறுத்துருத்திரனெனத்தனித்தனியுதைத்தான்.

(இ - ள்.) கறுத்து எழு நிறத்தினர் - கறுத்துத்தோன்றுகிற நிறமுடையவர்களும், எயிற்றினர் - கோரப்பற்களையுடையவர்களும், கயிற்றார் - பாசாயுதத்தைக்கொண்டவர்களும், செறுத்து எரி விழிப்பவர் - கோபித்து நெருப்புப்போலச் கொடுமையாகவிழிப்பவர்களும், சிகை கழு வலத்தார் - கூர் நுனியையுடைய கழுவென்னும்படையினாலான வலிமையமைந்தவர்களும், மறுத்து எழு மறலிகள் இவர் என அதிர்ந்தார் - பகைமைபாராட்டிக் கிளம்புகின்ற யமன்களே இவரென்னும்படி பெருமுழக்கஞ்செய்பவர்களுமான அரக்கவீரரை, தனித்தனி—, ஒறுத்து - (தன் கோபத்திற்கு ஏற்கத்) தண்டித்து, உருத்திரன் என - (அழித்தற்கடவுளான) சிவன்போல, உதைத்தான் - உதைத்தொழித்தான்; (எ - று.)

[இதுவும், அடுத்தகவியும் - சேனைகள்அழிந்த தன்மையைத் தெரிவிக்கும்.]

௫௯. சக்கரந்தோமரமுலக்கைதண்டயில்வாண்
மிக்கனதேர்பரிகுடைகொடிவிரவி
யுக்கனகுருதியம்பெருந்திரையுருட்டிப்
புக்கனகடலிடைநெடுங்கரப்பூட்கை.

(இ - ள்.) சக்கரம் - சக்கரங்களும், தோமரம் - தோமரங்களும், உலக்கை - உலக்கைகளும், தண்டு - கதைகளும், அயில் வாள் - கூரியவாள்களும், மிக்கன தேர் - மிகப்பலவான தேர்களும், பரி - குதிரைகளும், குடை - குடைகளும், கொடி - கொடிகளும், விரவி - ஒன்று கலந்து, உக்கன - (போர்க்களத்து) வீழ்ந்து கிடந்தன; குருதி பெரு திரை - (அந்தப்போர்க்களத்திலுண்டான) இரத்த வெள்ளத்தின் பெரிய அலைகள், நெடு கரம் பூட்கை - நீண்ட துதிக்கையை யுடைய யானைகளை, உருட்டி - உருட்டிக்கொண்டு, கடலிடை புக்கன - சமுத்திரத்தினிடத்துப் போய்ச்சேர்ந்தன; (எ - று.)

பூட்கை - துவாரமுடையகையதென்னும் பொருளுள்ள புழைக்கையென்பதன் மரூஉ. அம் - சாரியை. (௩௯)

௪௦. எட்டின விசும்பினை யெழுப்பட வெழுந்த
முட்டின மலைகளை முயங்கின திசையை
யொட்டின வொன்றையொன் றாடித் துடைந்து
தட்டுமுட் டாடின தலையொடு தலைகள்.

(இ - ள்.) எழு பட எழுந்த - (அநுமான்வீசிய) எழுவென்னும்படைக்கலம் பட்டதனால் (உடம்பை விட்டு வேறாகி) எழுந்தனவான, தலைகள்,— விசும்பினை எட்டின - ஆகாயத்தை யளாவினவும், மலைகளை முட்டின - மலைகளின்மீது மோதியனவும், திசையை முயங்கின - திக்குக்களைத் தழுவியனவும், ஒன்றை ஒன்று ஒட்டின - ஒன்றோடொன்று சேர்ந்தனவுமாகி, ஊடு அடித்து உடைந்து - போர்க்களத்தில் அடிபட்டு உடைந்துபோய், தலையொடு தட்டு முட்டு ஆடின - (முன்னமே போர்க்களத்தில் விழுந்து கிடந்த) சிரசுகளோடு தட்டுமுட்டுப் பொருள்போல இங்குமங்குஞ் சிதறிக் கிடந்தன; (எ-று.)
'ஊடடித்துடைந்து' என்றும் பாடம். (௪௦)

வேறு.

[சம்புமாலி தனிப்பட்டுச் சீற்றங்கொள்ளுதல்.]

௪௧. கானை காவல் வேழக் கணங்கள் கதவா ளரிகொன்ற
வானை யெய்தத் தனியே நின்ற மதமால் வரையொப்பான்
றேனை புரைகண் கனலே சொரியச் சீற்றஞ் செருக்கினான்
றானே யானான் சம்பு மாலி காலன் றன்மையான்.

(இ - ள்.) காலன் தன்மையான் - யமன் போன்ற கொடியதன்மையை யுடையவனாகிய, சம்புமாலி—,—கதம் வாள் அரி கொன்ற கானே காவல் வேழம் கணங்கள் வானே எய்த - கோபத்தையும் கொடுமையையுமுடைய சிங்கத்தினாற் கொல்லப்பட்டனவாய்க் காட்டையே (தங்கட்கு உரிய) வாழிடமாகக் கொண்ட யானைக்கூட்டங்கள் விண்ணுலகத்தைச் சேர [இறக்க],— தனியே நின்ற - தனிப்பட்டு நின்ற, மதம் மால் வரை ஒப்பான் - மதமயக்கங் கொண்ட மலைபோன்ற யானையை யொத்து, தானே ஆனான் - (தன்னோடுவந்தவ

ரெல்லாம் இறக்கத்) தான் ஒருவனே எஞ்சி நின்றவனாய், தேனே புரை கண் கனலே சொரிய சீற்றம் செருக்கினான் - தேன்போலச்சிவந்த கண்கள் நெருப் புப்பொறியை வெளிப்படுத்தச் சினம் விஞ்சினான்; (எ - று.)

அநுமானால் தன்னோடு வந்தவர்யாவரும் கொல்லப்பட்டுத் தான் தனித்து நின்ற ஜம்புமாலிக்கு - சிங்கத்தினால் தன்னுடைய யூதங்களெல்லாம் கொல்லப் பட்டுத் தான் தனித்துநின்ற யூதபதி உவமையாகும்.

இது முதல் இப்படலம் முடியுமளவும் பதினொருகவிகள் - பெரும்பாலும் ஈற்றுச்சீரொன்று காய்ச்சீர்களும், மற்றையைந்தும் மாச்சீருமாகி வந்த கழி நெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரிய விருத்தங்கள். (௪௧)

[சம்புமாலி முயன்று போர்க்கு விரைதல்.]

௪௨. காற்றிற்கடியகலினப்புரவிநிருதர்களத்துக்கா
ராற்றுக்குருதிநிணத்தோடடுத்தவள்ளற்பெருங்கொள்ளைச்
சேற்றிற்செல்லாத்தேராழியாழுநிலைதேரா
வீற்றுச்செல்லும்வெளியோவில்லையளியன்விரைகின்றான்.

(இ - ள்.) காற்றின் கடிய கலினம் புரவி நிருதர் களத்து உக்கார் - காற்றைக்காட்டிலும் விரைந்து செல்வனவான கடிவாளம்பூண்ட குதிரைச் சேனையையுடைய இராக்கதவீரர்கள் போர்க்களத்தில் மாண்டார்கள்; குருதி ஆறு நிணத்தோடு அடுத்த - (அங்குத்தோன்றிய) இரத்தப்பெருக்கு நிணத்தோடு சேர்ந்ததனாலுண்டான, பெரு கொள்ளை அள்ளல் சேற்றில் - மிகவும் அதிகமாகவுள்ள குழைசேற்றிலே, செல்லா - செல்லமாட்டாமல், தேரின் ஆழி ஆழும் - (தனது) தேர்ச்சக்கரங்கள் புதைகின்ற, நிலை - தன்மையை, தேரா - தேர்ந்தும், வீற்று செல்லும் - (அவ்விடத்தை விட்டுத்) தனிப்பட்டுச் செல்லக் கூடிய, வெளியோ - வெற்றிடமோ, இல்லை—;(இவ்வாறு இருக்கவும்), விரைகின்றான் - (போர்க்கு அந்தச்சம்புமாலி) விரைபவனானான்; அளியன் - (இவன் மிகவும்) இரங்கத்தக்கான்; (எ - று.)

கூடவந்தவர்கள் யாவரும் இறந்தொழிய, தனது ஒற்றைத் தேரும் நிணச் சேற்றிற் செல்லமாட்டாமற் சக்கரம் புதையாநிற்க, விரைந்து செல்லுதற்கு உரிய வெற்றிடம் ஒன்றும் கிடையாமலிருக்கையில், தன் மனம் போர்க்கு விரைகின்ற சம்புமாலியின் நிலைமைக்கு இரங்கி, கவி 'அளியன்' என்றார். (௪௨)

[அநுமான் சம்புமாலியினிடத்து இரக்கங்காட்டிக் கூறுதல்.]

௪௩. ஏதியொன்றுற்றெறுபஃதோவெய்யபோருயிர்கோட
னீதியன்றுனுடன்வந்தாரைக்காக்குதியில்லாய்
சாதியன்றேற்பிறர்செய்தியைப்பின்றனிநின்றாய்
போதியென்றான்பூத்தமரம்போற்புண்ணாற்பொலிகின்றான்.

(இ - ள்.) பூத்த மரம் போல் புண்ணால் பொலிகின்றான் - பூப்பூத்துள்ள மரம்போல (அரக்கர் தன்மீதுஎறிந்த படைக்கலங்களால் தோன்றிய) புண்

களால் விளங்குபவனான அநுமான்,—(அந்தச்சம்புமாலியைநோக்கி), 'ஏதி ஒன்று-(உனக்குஉள்ள) ஆயுதமும் ஒன்றே; தேரும் அஃது - தேரும் அவ்வாறான தே [ஒன்றேயுள்ளது]; உடன் வந்தாரை காக்கும நிலைஇல்லாய்-கூடவந்தவரைக் காப்பாற்றும் வல்லமையில்லாதவனான நீ, அவர் பின் தனி நின்றாய் - அவர்இறந்தபிறகு நீ தனிப்பட்டுநின்றுவிட்டாய்; (நீ என்னோடு இப்போது போர்செய்ய வருவாயானால்), சாதி - இறப்பாய்; (இதுநிச்சயம்); அன்று எல் பிறிது என் செய்தி - இறப்பதல்லாமல் வேறு என்ன செய்யமாட்டுவாய்? எளியோர் உயிர் கோடல் - எளிமைப்பட்ட [வலிகுறைந்த] (உன்னைப் போன்ற) வரின் உயிரை வாங்குதல், நீதி அன்று - நியாயமல்ல; (ஆதலால் இப்போது உன்னை விடுகின்றேன்); போதி - (நீ) திரும்பிச்செல்வாய,' என்றான் - என்று (இரக்கந்) தோன்றக் கூறினான்; (எ - று.)—முன்னைய ஆல் இரண்டும், இரக்கம்; மூன்றாவது - தேற்றம்.

அநுமான் தனிப்பட்டு வந்த அந்தச் சம்புமாலியினிடத்து இரக்கங் கொண்டு போர் செய்வதை நிறுத்திச் செல்லும்படி கூறினனென்க. இங்ஙனம் பகைவனிடத்து அருள்கொண்டு அவனை விடுதல் தழிஞ்சி யென்னும் புறத்துறையாம்; அது - வலியிழந்தவர் மேற் போர்க்குச் செல்லாமல் அவர்க்கு உதவிசெய்து தழுவுவது. இதனால், இவ்வநுமானது கருணை விளங்கும். (சங)

[சம்புமாலி சினந்து அநுமான்மீது பல அம்புக ளெய்தல்.]

சச. நன்றுநன் றுன்கருணை யென்றென் நெருப்புநக நக்கான்
போன்றவா ரொருவனென் றெண்ணினை போலுமென்னை யென்றே
வன்றிண் சிலையின் வயிரக்கா லால்வடித் துணைசுடர் வாளி
யொன்றுபத்து நூறுநூறாயிர முமுறவுதைப்பித்தான்.

(இ - ள்.) (சம்புமாலி அநுமானை நோக்கி), 'உன் கருணை - நீ என்மீது காட்டும் இரக்கம், நன்று நன்று - மிக நன்றாயுள்ளது'! என்னா - என்று சொல்லி, நெருப்பு உக நக்கான் - நெருப்பு வெளிப்படச் சிரித்தவனாய், 'என்னை போன்றவாரின் ஒருவன் என்று எய்ய போலும் - என்னைப் போரிலிறப்ப வருவான் ஒருவனென்று எளிதாக நினைத்தாய் போலும்', என்னா - என்று கூறி,—வல் திண் சிலையின் வயிரம் காலால் - மிகவும் வலிய வில்லினது உறுதி பொருந்திய தண்டத்தின் வலிமையால், வடி துணை சுடர் வாளி - காய்ச்சியடித்துக் கூர்மைசெய்தலையுடைய வலிய ஒளியுள்ள அம்புகளை, ஒன்று பத்து நூறு ஆயிரமும்-ஒன்றும பத்தும் நூறும் நூறாயிரமு மென்ற கணக்குப்படும்படி, உதைப்பித்தான் - செல்லும்படி செய்தான்; (எ - று.)

'நீ என் விஷயத்திற் கருணையுள்ளவன்போற் பேசியது, என் மனத்திற் பொத்தி நான் வருந்துதற்காகவே யல்லது நல்ல எண்ணத்தினாலன்றென்பது தெரிகின்றது; மேலும், என்னை மற்றவர்போலவே எளிதிலழிக்கத்தக்கவனென்று அலட்சியமாகக் கருதினாய் போலும்' என்று சினந்து அநுமான்மீது பல அம்புகளை யெய்தினன் சம்புமாலி யென்க. தநுர்த்தண்டம் உறுதியாக

இருந்தால்தான் மேன்மேலும் அம்புகளைத் தொடுத்து விடுக்க இயலுமாதலால், 'சிலையின் வயிரக்காலால்' என்றார். போலும் - உரையசை. நன்றுநன்றுன்கருணை - பிறகுறிப்பு. (சச)

[அநுமான் சம்புமாலியெய்த அம்புகளை எழுவால் விலக்குதல்.]

சரு. செய்திசெய்திசிலைகைக்கொண்டால்வெறுங்கைதிரிவோரை
நொய்தின்வெல்வதரிதோவென்றுமுறுவலுகநக்கா
னய்யனங்குமிங்குங்காலாலழியுமழையென்ன
வெய்தவெய்தபகழியெல்லாமெழுவால்வழுவித்தான்.

(இ - ள்.) (சம்புமாலியைநோக்கி), 'சிலை கை கொண்டால் - (நீ)வில்லைக் கையிற்கொண்டால், வெறு கை திரிவோரை - (ஆயுதமில்லாமல்) வெறுங் கையோடு திரிபவர்களுடன், செய்தி செய்தி - நன்குபோர்புரிவாய்; (இப்போது நான் வெறுங்கையுடனிராமல் எழுவைக் கொண்டிருத்தலால் என்னுடன் உன்னாற்பொரமுடியாது'); நொய்தின் வெல்வது அரிதோ - (கையில் எழுவைக் கொண்டுள்ள நான் உன்னை) எளிதாக வெல்வது அருமையான செயலோ?' என்று - என்று (தன்வீரம் தோன்றச்) சொல்லி,முறுவல் உக நக்கான் - பற்கள் வெளித்தோன்றச் சிரித்தவனாகி, அய்யன்-அநுமான்,—காலால் - காற்றினாலே, அங்கும் இங்கும் அழியும் - நாற்புறமும் சிதறிப்போகின்ற, மழை என்ன - மழைபோல, எய்த எய்த பகழி எல்லாம் - (சம்புமாலி தன்)மேலெய்த அம்புகளை யெல்லாம், எழுவால் - (தன்கையிற்கொண்ட) பரிகத்தால், வழுவித்தான் - (தன்மீதுபடாது அப்பாற்போகும்படி) தவறச் செய்தான்; (எ - று.)

இனி, சிலையைக் கைக்கொண்டால் - கைக்கொண்டிருத்தலால், நிராயுதபாணியாகிய என்போல்வாரை விரைவில் வெல்வது (உன்போல்வார்க்கு) அருமையோ? [அருமையன்று]; ஆதலால், நீ நன்கு போர் புரிக என்று, நிராயுதனாயிருக்குந் தன்மீது சம்புமாலி அம்பை யெய்ததற்காக அவனை அநுமான் பரிகசித்துக் கூறியதாகக் கருத்துக்கொள்ளவுமாம். இங்ஙனம் கருத்துக் கூறுமிடத்துச் சம்புமாலி அம்பை எய்யத்தொடங்குகையில் அனுமான் எழுவைக் கைக்கொள்ளாதிருந்து பிறகு அதனைக் கைக்கொண்டனனென்று கொள்க. (சரு)

[சம்புமாலி சினந்து அனுமான்கையிலிருந்த எழுவை அறுத்துவிழ்த்துதல்.]

சசு. முற்றமுனிந்தானிருதன்முனியாமுன்னும்பின்னுஞ்சென்
றுற்றபகழியுருதுமுறியாவுதிர்கின்றதையுன்னாச்
சுற்றுநெடுந்தேரோட்டித்தொடர்ந்தான்றொடருந்துறைகாணான்
வெற்றவெழுவைமழுவாயம்பாலறுத்துவிழ்த்தினான்.

(இ - ள்.) நிருதன் - சம்புமாலியென்னும்அரக்கன், முற்ற முனிந்தான் - மிகவும் கோபங்கொண்டான்; முனியா - (அவ்வாறு)கோபித்து, முன்னும்

பின்னும் சென்று உற்ற பகழி உருது முறியா உதிர்கின்றதை உன்னு - தன்னுற்பிரயோகிக்கப்பட்டுமுன்னும்பின்னும் [பலஇடங்களிலும்](அநுமான்மேல்) நெருங்கிய அம்புகள் (அவனைத் தாக்கமாட்டாமல்)முறிந்துகீழ்வீழ்வதை நினைத்து, சுற்றும் நெடு தேர் ஓட்டி தொடர்ந்தான் - (அவ்வநுமானைச்)சுற்றிலும் தனதுபெரியதேரைச்செலுத்திநெருங்கப் பார்த்து,தொடரும் துறை காணான் - (அவனை)நெருங்கிச்செல்லும் வழியைப் பெருமல், வெற்ற எழுவை - (இதுவரையிலும்)வென்றுவந்த அந்தப்பரிகத்தை, மழு வாய் அம்பால் அறுத்து வீழ்த்தினன் - மழுப்போன்ற நுனியையுடைய அம்பினால் அறுத்துத் தள்ளினன்; (எ - று.)

அநுமானைத் தேரினால் தொடரும் வழி கிடைக்காமைக்குக் காரணம், எங்கும் பிணைக்குவியல் செறிந்திருந்த லெனக. வெற்ற - வென்றஎன்பதன்வலித்தல். வெற்றம்என்றே ஒருசொல் கொள்ளினுமாம்; வெற்றியென்றுபொருள். வெற்ற - வெறுமையான என்று உரைப்பதிற் சிறப்பின்மை யறிக. (௪௬)

[அநுமான் சம்புமாலியைக் கொல்லுதல்.]

௪௭. சலித்தானையன்கையாலெய்யுஞ்சரத்தையுகச்சாடி
யொலித்தாரமார்கண்டாரார்ப்பத்தேரினுட்புக்குக்
கலித்தான்சிலேயைக்கையால்வாங்கிக்கழுத்தினிடையிட்டு
வலித்தான்பகுவாய்மடித்துமலைபோற்றலைமண்ணிடைவீழ.

(இ - ள்.) ஐயன் - அநுமான், சலித்தான் - (தன்கையெழு அறுத்து வீழ்த்தப்பட்டதனாற் சற்று) மனஞ் சலித்து, (உடனே), எய்யும் சரத்தை - (சம்புமாலி) தன்மீது எய்கின்ற அம்புகளையெல்லாம், கையால் உக சாடி - (தன்)கைகளினாலேயே உதிர்ந்துபோம்படி மோதித்தள்ளி,—ஒலி தார் அமரர் கண்டார் ஆர்ப்ப - தழைத்தலையுடைய மாலையை யணிந்த தேவர்கள் கண்டு ஆரவாரிக்கும்படி, தேரினுள் புக்கு - (சம்புமாலியினது) தேரினுள்ளே பாய்ந்து புகுந்து, கலித்தான் சிலையை - வீரகோஷஞ் செய்து கொண்டிருந்தவனாகிய அந்தச சம்புமாலியினது வில்லை, கையால் வாங்கி - (தன்) கையினாற் பிடுங்கிக் கொண்டு,தலை பகு வாய் மடித்து மண்ணிடை மலை போல் வீழ-(அவ்வாரக்கனது) தலை பிளவுபட்ட வாயை மடித்துக்கொண்டே தரையிலே மலைபோல விழும்படி, கழுத்தினிடை இட்டு வலித்தான் - (அவனது) கழுத்திலே மாட்டி யிழுத்தான்; (எ - று.)

இனி, முதலடிக்கு - அநுமான் (எதிரியெய்கின்ற அம்புகளை விலக்குதற்கு எழு இல்லாமையால்) தன்கையினால்தானே சம்புமாலி யெய்யும் அம்புகளெல்லாம் உகும்படி மோதி மோதி மனஞ் சலித்துப்போய் என்று பொருள் கூறி, இனி அவ்வாறு செய்யவேண்டாதபடி, அவன்தேரினுட் குதித்து அவன் வில்லை அவன்கழுத்தில் மாட்டிச் சிரத்தை யறுத்தா னென்னலுமாம்.ஒலித்தல்-தழைத்தல். 'மடித்த' என்றும் பாடம். (௪௭)

[அநுமான் செய்த செயலைக் கண்ட காவல்தேவர் இராவணனிடம் செய்தி சொல்லச் செல்லுதல்.]

௪௮. குதித்துத்தேருங்கோல்கொளாளும்பரியுங்குழம்பாக
மிதித்துப்பெயர்த்துநெடுந்தோரணத்தைவீரன்மேற்கொண்டான்
கதித்துப்பழிந்துகழிந்தார்பெருமைகண்டுகளத்தஞ்சி
யுதித்துப்புலர்ந்ததோல்போலுருவத்தமரரோடினார்.

(இ - ள்.) வீரன் - அநுமான்,—குதித்து - (தேரினின்று வெளியே)குதித்து, தேரும் கோல் கொள் ஆளும் பரியும் குழம்பு ஆக மிதித்து - (அவ்வரக்கன்) தேரும் அதனை உளவுகோலைக்கொண்டு செலுத்துஞ் சாரதியும் (அதனிற் பூட்டிய) குதிரைகளும் குழம்பாகப் போய்விடும்படி காலினால் மிதித்து (அழித்து), பெயர்த்தும் - மீண்டும், நெடு தோரணத்தை மேற்கொண்டான் - பெரிய தோரணவாயிலின்மீது ஏறியிருந்தான்; உதித்து புலர்ந்த தோல் போல் உருவத்து அமரர் - மேலுக்குமாத்திரம்பருத்து உள்ளேவறண்டுபோன தோல் போன்ற வடிவத்தையுடைய காவலாளிகளான தேவர்கள், கதி துப்பு அழிந்து கழிந்தார் பெருமை கண்டு-விரைவுள்ள(தமது) வலிமையழிந்து இறந்துபோன அரக்கரது பெருந்தொகையைப் பார்த்து, அஞ்சி - (இச்செய்தியை இராவணனிடத்துச்சொல்லவேணுமேயென்று) பயந்து, களத்து ஓடினார் - அந்தப் போர்க்களத்தினின்று (இராவணன்மாளிகையைநோக்கி) விரைந்து சென்றார்கள்; (எ - று.)

சோலையைக்காக்கின்ற தேவர்கள் மனத்தினுள் இராவணனிடத்துப் பணிசெய்யவேண்டியிருக்கலை நினைந்து புலர்ந்திருந்தாலும் வெளிக்குமகிழ்ந் திருப்பவர் போன்றிருந்தன ரென்பது - 'உதித்துப் புலர்ந்த தோல்போ லுருவத் தமரர்' என்றதன் கருத்து. 'கணத்தஞ்சி' என்றும் பாடம். (௪௮)

[கவிக்கூற்று.]

௪௯. பரிந்துபுலம்புமகளிர்காணக்கணவர்பிணம்பற்றி
விரிந்தகுருதிப்பேராறீர்த்துமனைகடொறும்வீச
விரிந்ததிலங்கையெழுந்ததழுகையின்றிங்கிவனாலே
சரிந்ததரக்கர்வலியென்றெண்ணியறமுந்தளிர்த்ததால்.

(இ - ள்.) விரிந்த குருதி பேர் ஆறு - பரவிச்செல்கின்ற பெரிய இரத்தப் பெருக்கானது, பரிந்து புலம்பும் மகளிர் காண - (தம்கணவரையிழந்ததனால்) இரங்கிப்புலம்புகின்ற இராக்கதமகளிர் காணுமாறு, கணவர் பிணம் பற்றி ஈர்த்து மனைகள் தொறும் வீச - (அவரவருடைய) கணவராகிய பிணங்களைப் பிடித்திழுத்துக்கொண்டு வீடுகள்தோறும் தள்ளும்படி, இலங்கை இரிந்தது - இலங்காபுரி இவ்வாறு நிலைகுலைந்தது; அழுகை எழுந்தது - (அவ்வூரெங்கும்) புலம்பும் ஒலி மிக்கது; 'இன்று - இன்றையதினம், இங்கு - இவ்விடத்தில், இவனாலே - இவ்வநுமானாலே, அரக்கர் வலி சரிந்தது - அரக்கருடைய வலிமை ஒழிந்துவிட்டது,' என்று எண்ணி - என்று நினைத்து, அறமும் - தருமதேவதையும், தளிர்த்தது - மனங்களித்தது; (எ - று.)—ஆல் - ஈற்றசை. (௪௯)

[சம்புமாலி இறந்ததைப் பருவத்தேவர் இராவணனிடத்துச் சொல்லுதல்.]

ருo. புக்காரமரர்பொலந்தாரரக்கன்பொருவில்பெருங்கோயில்
விக்காநின்றார்விளம்பலாற்றார்வெருவிவிம்முவார்
நக்கானரக்கனடுங்கலென்றானையநமரெல்லா
முக்கார்சம்புமாலியுலந்தானென்றேகுரங்கென்றார்.

(இ - ள்.) அமரர் - (செய்தி சொல்லுமாறு ஓடின) தேவர்கள்,—பொலம் தார் அரக்கன் பொரு இல் பெரு கோயில் புக்கார் - பொன்னரிமாலையையணிந்த இராவணனது ஒப்பற்ற பெரிய அரண்மனையினுட் புகுந்து, விளம்பல் ஆற்றார் - (இராவணனிடத்து நடந்தசெய்தியைச்) சொல்லுதற்கு அச்சத்தினால் வாயெழாமல், விக்கா நின்றார் - விக்கிவிக்கியழுதுகொண்டுநின்று, வெருவி விம்முவார் - அஞ்சியேங்குவாரானார்கள்; அரக்கன் - (அதுகண்ட) இராவணன், நக்கான் - சிரித்து, நடுங்கல் என்றான் - அஞ்சவேண்டாவென்று அவருக்குத் தைரியஞ் சொன்னான்; (பின்பு அவர் இராவணனை நோக்கி), 'ஐய - ஐயனே! நமர் எல்லாம் - நம்மைச்சேர்ந்தவர்யாவரும், உக்கார் - (அநுமானோடு செய்தபோரில்) இறந்தொழிந்தார்கள்; சம்புமாலி - சம்புமாலியும், உலந்தான் - இறந்துபோனான்; ஒன்றே குரங்கு - இவ்வளவெல்லாம் செய்தது ஒரு குரங்குதான்,' என்றார் - என்று செய்தியைத்தெரிவித்தார்கள்; (எ - று.) (ருo)

[செய்தியுணர்ந்த இராவணன் தானே அநுமானிடத்துச்செல்லமுயல பஞ்சசேனாபதிகள் கூறத்தொடங்குதல்.]

ருக. என்னு மளவி னெரிந்து வீங்கி யெழுந்த வெகுளியா
னுன்ன வுன்ன வுதிரக் குமிழி விழியூ டுமிழ்கின்றான்
சொன்ன குரங்கை யானே பிடிப்பன் கடிது தொடர்ந்தென்றா
னன்ன துணர்ந்த சேனைத் தலைவ ரைவ ரறிவித்தார்.

(இ - ள்.) என்னும் அளவின் - என்று அவர்கள் கூறியபோது, எரிந்து வீங்கி எழுந்த வெகுளியான் - பற்றியெரிந்து மிகுதியாகக்கிளம்பின கோபத்தையுடைய இராவணன்,—உன்ன உன்ன உதிரம் குமிழி விழி ஊடு உமிழ்கின்றான் - நடந்தசெய்தியை நினைக்குந்தோறும் இரத்தக்குமிழிகளைக் கண்களின் வழியாகக் கக்கிக்கொண்டு, சொன்ன குரங்கை யானே கடிது தொடர்ந்து பிடிப்பன் - '(இவர்கள்) சொல்லிய குரங்கை யானே விரைந்துசென்று பிடிப்பேன்', என்றான் - என்றுசொல்ல,—அன்னது உணர்ந்த - அது தெரிந்த, சேனை தலைவர் ஐவர் - பஞ்சசேனாபதிகள், அறிவித்தார் - (பின் வருமாறு) தெரிவிக்கலானார்கள்; (எ - று.)—அதனை, அடுத்த படலத்து முதல் நான்குசெய்யுள்களிற் காண்க.

பஞ்சசேனாபதிகள் - விரூபாட்சன், யூபாட்சன், துர்த்தர்ஷன், பிரகஸ்தன், பாசகர்ணன் என்ற இவர். (ருக)

சம்புமாலிவதைப்படலம் முற்றிற்று.

பத்தாவது

# பஞ்சசேனாபதிகள்வதைப்படலம்.

ஐந்துசேனாபதிகளையும் அநுமான் கொன்றதைக் கூறும் பாகம். ஐந்து சேனாபதிகள் இன்னாரென்பது கீழ்க்கூறப்பட்டது.

[இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்: தானே குரங்கைப்பிடித்துவருமாறு எழுந்த இராவணனை விலக்கித் தம்மையேவுமாறு பஞ்சசேனாபதிகள் வேண்ட, அவன் இசைதல்.]

க. சிலந்தி யுண்பதோர் குரங்கின்மேற் சேறியேற் றிறலோய்
கலந்த போரிடைக் கட்புலன் கடுங்கனல் கதுவ
வுலந்த மால்வரை யருவியா றொழுக்கற்ற வொக்கப்
புலர்ந்த மாமதம் பூக்குமன் றேதிசைப் பூட்கை.

(இ - ள்.) (பஞ்சசேனாபதிகள் இராவணனை நோக்கிக் கூறுவார்):— திறலோய் - பராக்கிரமமமைந்தவனே! (நீ), சிலந்தி உண்பது ஓர் குரங்கின் மேல் சேறி ஏல் - சிலந்தியென்னும் பூச்சியைப் பிடித்துத்தின்று சீவிப்பதாகிய ஒரு குரங்கின்மேலே போர்செய்யச் செல்வாயானால்,—திசை பூட்கை - திக்கயங்கள், கண் புலன் கடுங் கனல் கதுவ - கண்களிலிருந்து கொடிய நெருப்புப்பொறி பறக்க, கலந்த போரிடை - (உன்னோடு) எதிர்த்துச்செய்த போரில், உலந்த மால் வரை அருவி யாறு ஒழுக்கு அற்ற ஒக்க - (மழைபொழியாமையால்) வறண்டுபோன பெரியமலைகள் (தம்மிடத்து இடையறாது பெருகுகின்ற) அருவிநீர்ப்பெருக்கு அற்றுப்போனவையை யொத்திருக்குமாறு, புலர்ந்த - (உன்னாலடிபட்டு வலிமைகுறைந்தமையால்) அற்றுப்போன, மா மதம் - மிக்க மதநீர், பூக்கும் அன்றே - (மீண்டும்) தோன்றப்பெறுமல்லவா? (எ - று.)

முன்பு தம்மை யெதிர்த்து வலிதொலைத்த இராவணன் அற்பஜந்துவாகிய ஒருகுரங்கைத் தன்னுடைய பணியாளரைக்கொண்டு எளிதில் வெல்லமுடியாமல் எதிரிட்டுத் தானே போர்செய்யச் செல்ல நேர்ந்த தாழ்ந்தநிலைமையைக் கருதி, 'இனி இவ்விராவணனால் நம்மை யெதிர்க்கமுடியாது' என்று கருதுவதனால் திக்கஜங்கள் முன்புகொண்டிருந்த அச்சம் நீங்கி மதம்பெருகப்பெறு மென்க. அநுமானை ஒரு அற்ப சந்து என்று கூறுதற்காக, 'சிலந்தியுண்பதோர்குரங்கு' என்றனர். சிலந்தி - ஒருமர மென்பாரு முளர். நீரருவிப் பெருக்கு நீங்கிய மலை - மதநீர்ப்பெருக்கு அற்ற திக்கஜங்கட்கு உவமையாம்.

இதுமுதற் பத்தொன்பதுகவிகள் - கிங்கரர்வதைப்படலத்தின் முப்பதாங் கவிபோன்ற கலிநிலைத் துறைகள். (க)

உ. இலங்குவெஞ்சினத்தஞ்சிறையெறுழ்வலிக்கலுழ
னுலங்கின்மேலெழுந்தென்னநீகுரங்கின்மேலுருத்தா
லலங்கன்மாலைநின்புயநினைந்தலனுநன்பகலுங்
குலுங்கும்வன்றுயர்நீங்குமால்வெள்ளியங்குன்றம்.

(இ - ள்) இலங்கு வெம் சினத்து - விளங்குகின்ற [வெளித்தெரிகின்ற] கடுங்கோபத்தையும், அம் சிறை - அழகிய இறகுகளையும், எறுழ் வலி - மிக்கவலிமையையுமுடைய, கலுழன் - கருடன், உலங்கின்மேல் எழுந்து என்ன - கொசுகின்மேலே (போர்செய்ய) எழுந்தாற்போல, நீ குரங்கின் மேல் உருத்தால் - நீ அற்பக்குரங்கின்மேற் கோபித்துச்சென்றால்,—வெள்ளி அம் குன்றம் - (முன்பு உன்னாற் பெயர்த்தெடுக்கப்பட்ட) கைலாசகிரியானது, அலங்கல் மாலை நின் புயம் நினைந்து அல்லும் நல் பகலும் குலுங்கும் வல் துயர் - தொங்கியசையும் வெற்றிமாலையையணிந்த உனது தோள்வலிமையை நினைத்து இரவும் பகலும் அஞ்சிநடுங்குகின்ற வலிய துயரத்தினின்று, நீங்கும் - நீங்கப்பெறும்; (எ - று.)—ஆல் - ஈற்றசை; தேற்றமுமாம்.

இப்போது உன்னுடைய பரிவாரங்களைக்கொண்டு வெல்லமுடியாமல் நீயே குரங்கின்மீது பொரச்சென்றால், நீ வலியற்றவனென்று நினைந்து, முன்பு உன்னாற்பெயர்த்தெடுக்கப்பட்டு எளிமைப்பட்ட கைலாசகிரியானது, உன்னிடத்துக்கொண்டிருந்த அச்சம் ஒழியுமல்லவோ? ஆகவே, நீ உன்வலிமைக்கு இழுக்காம்படி அற்பக்குரங்கின்மேற் சினந்துபொரச்செல்லுதல் தகாது: எம்போலியரை யேவுதலே தகுதி யென்று உணர்த்தியவாறும். 'உலங்கின்மேலுருத்தென்ன' என்றும், 'உருக்கின்' என்றும் பாடம். (உ)

௩. உறுவதென்கொலோவுரனழிவென்பதொன்றுடையார்
பெறுவதியாதொன்றுங்காண்கிலர்கேட்கிலர்பெயர்ந்தார்
சிறுமையீதொப்பதியாதுநீகுரங்கின்மேற்சேறின்
முறுவல்பூக்குமன்றேநின்றமூவர்க்குமுகங்கள்.

(இ - ள்.) நீ குரங்கின்மேல் சேறின் - நீ ஒருகுரங்கின்மீது கோபித்துப் பொரச்சென்றால்,—(அப்போது), உரன் அழிவு என்பது ஒன்று உடையார் - (உன்னோடெதிர்த்துப்பொருது தமது) வலிமையழிதலையுடையவராய், பெறுவது யாது ஒன்றும் காண்கிலர் - (உன்னோடெதிர்த்துநிற்றலால்)தாங்கள்பெறக்கூடிய நன்மையொன்றும் [சிறிதுவெற்றியுங்] காணப்பெறாதவராய்,கேட்கிலர்- (உன்பெயர்) கேட்கவும் அஞ்சினவராய், பெயர்ந்தார் - நிலைகெட்டோடியவரான, நின்ற மூவர்க்கும் - ஒடுங்கிநின்ற திரிமூர்த்திகட்கும், முகங்கள் — முறுவல் பூக்கும் அன்றே - 'உன்னைப்பற்றி)இகழ்ச்சிச்சிரிப்புத் தோன்றுமல்லவோ? ஈது ஒப்பது சிறுமை யாது - இதை யொப்பதாகிய தாழ்மையை விளைக்குஞ் செயல் வேறுயாதுஉளது? உறுவது என் கொலோ - (இதனால் உனக்கு) வாக்கடவதான நன்மைதான் யாதோ? (எ - று.)

நீ ஒரு எளிய குரங்கின்மேற் பொரச்சென்றால், அதனால், உன்னிடத்துத்தோற்று வலியழிந்த திரிமூர்த்திகள் இகழ்ந்து சிரிப்பது தவிர, நீ பெறக்கூடிய பயன் யாதொன்று மில்லை யென்பதாம். 'வானிழிவு' என்றும் பாடமுண்டு. (௩)

௪. அன்றியும்முனக்காளின்மைதோன்றுமாலரச
வென்றியில்லவர்மெல்லியோர்தமைச்செலவிட்டாய்
நன்றியின்றொன்றுகாண்டியேலெமைச்செலநயத்தி
யென்றுகைதொழு திறைஞ்சினரரக்கனுமிசைந்தான்.

(இ - ள்.) அரச - (எம்முடைய) அரசனே! அன்றியும் - அல்லாமலும், உனக்கு ஆள் இன்மை தோன்றும் - உனக்குத் துணைவலிமை யில்லையென்று பிறர்நினைக்கும்படியாகும்; (முனபெல்லாம்), வென்றி இல்லவர் மெல்லியோர் தமை செல விட்டாய் - வென்றிபெறத்தக்க வலிமையற்றவராய் மெலிந்தவரான அரக்கரை (அநுமான்மேற் போர்க்குச்) செல்லும்படி யேவினாய்; இன்று நன்றி ஒன்று காண்டி எல் - இப்பொழுது ஒரு நன்மையை விரும்புவையேயானால், எமை செல நயத்தி - எம்மை அக்குரங்கோடு போர்க்குச்செல்ல விரும்புவாய், என்று—, கைதொழுது இறைஞ்சினர் - (அந்தப்பஞ்சசேனாபதிகள்) கைகூப்பிவணங்கினார்கள்; அரக்கனும் இசைந்தான் - இராவணனும் சம்மதித்தான்; (எ - று.)—ஆல் - தேற்றம்.

வலிமை நிரம்பிய எம்போலியரைப் போர்க்கு அனுப்பாமல், வலியற்றவரை அநுமான்மீது போர்க்கு அனுப்பியதனால் அவர்கள் இறந்தொழிந்தார்கள்; அதுகொண்டு 'பிற அரக்கரை யனுப்பினால் அவ்வநுமானை வெல்ல முடியாது' என்று நினைத்து அற்பக்குரங்கின்மேல் நீ போருக்குச் செல்லுதல், உனக்கு மிக்க எளிமையைத் தரும்: அன்றியும், உனக்குத் துணைவலியற்றதாகப் பிறர் நினைக்கும்படியும் ஆகும்: ஆகையால், நீ அந்தக் குரங்கை வெல்வது அருமையென்று நினைத்துப போர்க்குச்செல்லாமல், எங்களையனுப்புவதே உனக்கு நன்மையாமென்று இவ்வாறு பஞ்சசேனாபதிகள் வணங்கி இராவணனிடஞ்சொல்ல, அதற்கு அவனும் இசைந்தனனென்பதாம். (௪)

[இராவணனிடத்து அநுமதிபெற்ற பஞ்சசேனாபதிகள் வெளிப்பட்டு, சதுரங்கசேனைகளோடு அரக்காவருமாறு கட்டளையிடுதல்.]

ரு. உலகமூன்றிற்குமுதன்மைபெற்றோரெனவுயர்ந்தார்
திலகமண்ணுறவணங்கினர்கோயிலிற்றீர்ந்தா
ரலகில்தேர்பரிகரியொடாண்மிடைந்தபோரரக்கர்
தொலைவிலாதனகதுமெனவருகெனச்சொன்னார்.

(இ - ள்.) உலகம் மூன்றிற்கும் முதன்மை பெற்றோர் என உயர்ந்தார் - மூவுலகங்கட்குந் தலைமையையடைந்தவர்போலப் பெருமைபெற்றவராகிய பஞ்சசேனாபதிகள்,—திலகம் மண் உற வணங்கினர் - (தமது) நெற்றித் திலகம் தரையிற்படும்படி (சாஷ்டாங்கமாகவிழுந்து இராவணனை) நமஸ்கரித்தவர்களாய்,—கோயிலின் தீர்ந்தார் - அரண்மனையினின்று வெளிவந்து,— 'தொலைவு இலாதன - (எளிதில்) அழிதலில்லாதனவாகிய, அலகு இல் தேர் பரி கரியொடு ஆள் - எண்ணிறந்த தேர்களும் குதிரைகளும் யானைகளும் காலாட்படைகளும் (ஆகிய சதுரங்கசேனைகளோடு), மிடைந்த - நெருங்கிய,

போர் அரக்கர் - போர் செய்யவல்ல ராக்ஷஸவீரர்கள், கதுமென வருக - விரைவாக வரக்கடவர்', என - என்று, சொன்னார் - கட்டளையிட்டார்கள்; (எ - று.)

முதலடி - பஞ்சசேனாபதிகளின் சிறப்பைத் தெரிவிக்கும். 'உலகமூன்றுந் தம்முடைமைபெற்றாரென வுவந்தார்' என்ற பாடம் - இராவணன் தம்மை நோக்கி அநுமானோடு பொரச் செல்லுமாறு கட்டளையிட்டதனால் இவ்வுலகம் மூன்றையுமே தம்முடைய சொத்தாகப் பெற்றாற்போலப் பெருங்களிப்புக் கொண்ட அச்சேனாபதிகள் என்று பொருள்படும். 'யானையொடாண்மிடைந்தரக்கர்', 'யானையொடடைந்தபோரரக்கர்,' 'தொலைவிலாதது' என்பன பாடாந்தரங்கள். (௫)

[அக்கட்டளையை வள்ளுவர் தெரிவிக்க, சேனைதிரளுதல்.]

௬. ஆனைமேன்முரசறைந்தனர்வள்ளுவருரைத்தார்
பேனைவேலையிற்புடைபரந்ததுபெருஞ்சேனை
சோனைமாமழைமுகிலெனப்போர்பணைதுவைத்த
மீனவானிடைமின்னெனப்படைக்கலம்மிடைந்த.

(இ - ள்.) வள்ளுவர் - பறையறைவோர், ஆனைமேல் முரசு அறைந்தனர் உரைத்தார் - (பஞ்சசேனாபதிகளின்கட்டளையைத் தெரிவிக்குமாறு) யானையின் மீது முரசவாத்தியத்தையேற்றியடித்து (ச் செய்தி) தெரிவித்தார்கள்; (உடனே),—பெருஞ் சேனை - பெரிய ராக்ஷசசேனை, பேனம் வேலையில் - நுரையையுடைய கடல்போல, புடை பரந்தது - எல்லாப்பக்கங்களிலும் பரவலாயிற்று; சோனை மா மழை முகில் என - விடாப்பெருமழை பொழிகின்ற மேகம்போல, போர் பணை துவைத்த - யுத்தபேரிகைகள் ஒலித்தன; மீனம் வானிடை மின் என - நட்சத்திரங்கள்விளங்குகின்ற ஆகாயத்தினிடத்துத் தோன்றும் மின்னல்போல, படைக்கலம் மிடைந்த - ஆயுதங்கள் நிறைந்து விளங்கின; (எ - று.)

பஞ்சசேனாபதிகளின்கட்டளையை வள்ளுவர் பறையறைந்து தெரிவித்த மாத்திரத்தில், ராக்ஷசசேனை, சதுரங்கபலங்களோடு யுத்தவாத்தியங்கள் பேரிடி போலமுழங்க, மின்னல்போன்று பளபளவென்றுவிளங்கும் ஆயுதங்களோடு பலவிடங்களிலும் திரளலாயிற்றென்பதாம். 'வள்ளுவரழைத்தார்', 'வள்ளுவரறைந்தார்' எனவும், 'போர்ப்பணைதுவைப்ப' எனவும், 'மீனவானிடைவில்லென' 'மீனவானின் வானிடைவில்லென' எனவும் பாடங்கள் உண்டு. (௬)

[அப்போது வானத்துத்தோன்றிய வெண்கொடிகளின் வருணனை.]

௭. தானைமாக்கொடிமழைபொதுத்துயர்நெடுந்தாள
மானமாற்றருமாருதிமுனியநாணுலந்து
போனமாற்றலர்புகழெனக்கால்பொரப்புரண்ட
வானயாற்றுவெண்டிரையெனவரம்பிலபரந்த.

(இ - ள்.) மழை பொதுத்து உயர் நெடுந் தாள - மேகத்தைக்குத்துமாறு உயர்ந்துநீண்ட கால்களையுடையனவும், வானம் யாறு வெள் திரை என வரம்பு இல பரந்த - ஆகாசகங்காநதியின் வெண்மைநிறமுள்ளஅலைபோலப் பலவாக

வுள்ளனவுமான, தானை மா கொடி - சேனையினிடையே பிடிக்கப்படுகிற பெரிய வெண்ணிறக்கொடிகள்,—மாற்ற அரு மானம் மாருதி - (ஒருவராலும்) போக்குதற்கு முடியாத பெருமையையுடைய அநுமான், முனிய - கோபித்துப் போர்செய்ய அதனால், நாள் உலந்து போன - ஆயுள் ஒழிந்து இறந்து வீர சுவர்க்கஞ்சென்ற, மாற்றலர் - (அவனது) பகைவரான அரக்கரது, புகழ் என - கீர்த்திபோல,—கால் பொர - காற்றுமோதுதலால், புரண்ட - (படபடவென்று அடித்துக்கொண்டு) அசைந்தாடின; (எ - று.)

ஆகாயத்தில் வெண்ணிறத்தோற்றத்துடன் அசைந்தாடுகின்ற கொடியை - போரிற் பின்னிடாது எதிர்த்துநின்று அநுமானதுகையால் இறந்தொழிந்து வீரசுவர்க்கஞ்சேர்ந்த அரக்கவீரரது புகழ்போலுமெனக் குறித்தார்; தற்குறிப்பேற்றவணி. புகழை வெண்ணிறமாகக்கூறுதல் கவிசமயம். தாள் - துவஜதண்டம். தானை மாக்கொடி என்பதற்கு - வெண்ணிறத்துகிலினாலியன்ற பெருங்கொடியெனினுமாம். 'கூனன் மாக்கொடி', 'நெடுங்கோல' என்று பிரதிபேதம். (எ)

[சதுரங்கசேனைகள் போர்க்கோலங் கொள்ளுதல்.]

அ. விரவுபொற்கழல்விசித்தனர்வெரிநுற்றுவிளங்கச்
சரமொடுக்கினபுட்டிலுஞ்சாத்தினர்சமையக்
கருவிபுக்கனரரக்கர்மாபல்லணங்கவினப்
புரவியிட்டதேர்பூட்டினபருமித்தபூட்கை.

(இ - ள்.) அரக்கர் - இராட்சசவீரர்,—விரவு பொன் கழல் விசித்தனர் - (வீரத்துக்குஅறிகுறியாகப்) பொருந்திய பொன்னாற்செய்த வீரக்கழலைத் தாள்களிற் கட்டி, சரம் ஒடுக்கின புட்டிலும் சமைய வெரிந் உற்று விளங்க சாத்தினர் - அம்புகளை உள்ளேகொண்ட தூணீரங்களை இனிதுபடியும்படி முதுகிற்பொருந்திவிளங்குமாறு தரித்து, கருவி புக்கனர் - கவசத்தையும் பூண்டனர்; புரவி - குதிரைகள், மா பல்லணம் கவின இட்ட - சிறந்த சேணங்கள் விளங்கும்படி அணியப்பட்டன; தேர் பூட்டின - தேர்கள் சித்தஞ்செய்யப்பட்டன; பூட்கை பருமித்த - யானைகள் அலங்கரிக்கப்பட்டன ; (எ - று.)

கருவி கவச மென்னும்பொருளதாதலை, "இளைஞருங்கருவிமூசினார்" என்ற சிந்தாமணியிலுங் காண்க. இனி, இட்ட தேர் மா பல்லணம் கவின புரவி பூட்டின என்று இயைத்து - அங்குக்கொணரப்பட்ட தேர்கள் சிறந்த அலங்காரங்கள் விளங்கக் குதிரைகள் பூட்டப்பெற்றன என்று உரைத்தலுமொன்று. 'போர்க்கழல்......வெரிநுற' என்றும், 'கவினப்புரவி' என்றும், 'தேர்பூட்டினார்' என்றும் பாடம். (அ)

[கஜரததுரகங்களால் தோன்றிய நிகழ்ச்சிகள்.]

கூ. ஆறுசெய்தனவானையின்மதங்களவ்வாற்றைச்
சேறுசெய்தனதேர்களின்சில்லியச்சேற்றை
நீறுசெய்தனபுரவியின்குரமற்றந்நீற்றை
வீறுசெய்தனவப்பரிக்கவினமாவிலாழி.

(இ - ள்.) ஆனையின் மதங்கள் - யானைகளின் மத ஜலங்கள், (தாங்கள் செல்லுகின்ற இடத்தை), ஆறு செய்தன - ஆறாக்கிவிட்டன; அ ஆற்றை - அந்த மதநீரினால்தோன்றிய நதியை, தேர்களின் சில்லி - தேர்களின் சக்கரங்கள், (தாம் ஓடித் தாளியை யெழுப்பி மதநீர்நதியில் விழச்செய்து), சேறு செய்தன - (அம்மதநதியைச்) சேறாக்கின; அ சேற்றை—, புரவியின் குரம் - குதிரைகளின் குளம்புகள், நீறு செய்தன - (அவற்றின்மீது விரைவாக வோடுவதனால் அச்சேறுகளைப்) புழுதியாகப் பண்ணின; அ நீற்றை - அந்தத் தூளிகளை, அ பரி கலினம் மா விலாழி - அந்தக்குதிரைகளின் கடிவாளம்பூண்ட வாயிலிருந்துவழிகின்ற பெருநுரைகள், வீறு செய்தன - மறுபடியும் வேறுபடியாகக் குழைசேறாக்கின; (எ - று)—மற்று - அசை.

ஆனைமுதலியவை அந்தச்சேனையில் மிக்கிருந்தன வென்று தொனிக்கும் பொருட்டு வீறுகோளணி யென்னும உதாத்தாலங்காரம் பட, இவ்வாறு வருணித்தார். (௯)

[அப்போது தோன்றிய பேரொலி.]

௧௦. வழங்குதேர்களினிடிப்பொடுவாசியினார்ப்பு
முழங்குவெங்களிற்றதிர்ச்சியுமொய்கழலொலியுந்
தழங்குபல்லியத்தமலையுங்கடையுகத்தாழி
விழுங்குமோதையின்மும்மடங்கெழுந்ததுமுடுகி.

(இ - ள்.) வழங்கு தேர்களின் இடிப்பொடு - விரைந்து செல்லுகின்ற தேர்களினொலியும், வாசியின் ஆர்ப்பும் - குதிரைகளின் கனைப்பொலியும், முழங்கு வெம் களிறு அதிர்ச்சியும் - பிளிறுந்தன்மையுள்ள கொடிய ஆண் யானைகளின் கர்ச்சனையும், மொய் கழல் ஒலியும - (வீரர்கள் கால்களிற்) கட்டிய வீரக்கழலினோசையும், தழங்கு பல் இயத்து அமலையும் - ஒலிக்குந்தன்மையுள்ள பலவாச்சியங்களின் பேரொலியும், (ஒருங்கு கூடி), கடை யுகத்து - யுகாந்தகாலத்திலே, ஆழி முழங்கும் ஓதையின் - (பொங்குகிற) கடலில் ஒலிக்கின்ற ஓசையைக்காட்டிலும், மும் மடங்கு - மூன்றுமடங்குஅதிகமாக, முடுகி எழுந்தது - விரைந்து தோன்றிற்று; (எ - று.)

'எழுந்தது விரைந்து' என்றும் பாடம். ஒலிப்பொருளுள்ள இடிப்புமுதலிய பலசொற்கள் வந்தது - பொருட்பின்வருநிலையணியாம். (௧௦)

[திரண்டசதுரங்கசேனையின் அளவு.]

௧௧. ஆழித்தேர்த்தொகையைம்பதினாயிரமஃதே
சூழிப்பூட்கைக்குத்தொகையவற்றிரட்டியின்றொகைய
ஆழிக்காற்றன்னபுரவிமற்றவற்றினுக்கிரட்டி
பாழித்தோணெடும்படைக்கலப்பதாதியின்பகுதி.

(இ - ள்.) ஆழி தேர் தொகை - சக்கரங்களையுடைய தேர்களின் எண், ஐம்பதினாயிரம் - ஐம்பதினாயிரமென்னும் அளவினதாம்; சூழி பூட்கைக்கு - முகபடாத்தையணிந்த யானைகளுக்கும், தொகை - அளவு, அஃதே - கீழ்க்கூறிய

தேரின் அளவேயாகும்; ஊழி காற்று அன்ன பரவி - யுகாந்தகாலத்திலே தோன்றுகின்ற பெருங்காற்றுப்போன்ற (வேகமுடைய) குதிரைகள்,—அவற்று இரட்டியின் தொகைய - கீழ்க்கூறிய ரதகஜங்களைக்காட்டிலும் இருமடங்கான எண்ணையுடையனவாம் [லக்ஷமென்னும் அளவினதாம்]; பாழி தோள் நெடும் படைக்கலம் பதாதியின் பகுதி - வலிமைபொருந்திய தோள்களையும் சிறந்த ஆயுதங்களையுமுடைய காலாள்வீரரின் அளவு, அவற்றினுக்கு இரட்டி - இரண்டு லக்ஷமாகும்; (எ - று.) (கக)

[படைகளின் நெருக்கம்.]

கஉ. கூய்த்தருந்தொறுந்தருந்தொறுந்தானைவெங்குழுவின்
னீத்தம்வந்துவந்தியங்கிடமின்றிநெருங்கக்
காய்த்தமைந்தவெங்கதிர்ப்படையொன்றொன்றுகதுவித்
தேய்த்தெழுந்தனபொறிக்குலமழைக்குலந்தீய.

இதுமுதல் மூன்று கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) கூய் தரும் தொறும் தரும் தொறும் - (சேனாபதிகளால்) கூப்பிடப்பட்டு வருவிக்கும் போதெல்லாம், வெம் தானை குழுவின் நீத்தம் - கொடிய சேனைக்கூட்டத்தின் பெருக்கு, வந்துவந்து—, இயங்கிடம் இடன் இன்றி - சஞ்சரித்தற்கு உரிய இடமில்லாதபடி, நெருங்க - திரளவும்,—காய்த்து அமைந்த வெம் கதிர் படை - (உலைக்களத்தில்)காய்ச்சிக் கூர்செய்யப்பட்ட(கண்கூசும்படி) கொடுமையான ஒளியுள்ள ஆயுதங்கள், ஒன்று ஒன்று கதுவி தேய்த்து - ஒன்றோடொன்று உராய்ந்து தேய்த்தலினால், எழுந்தன - தோன்றியனவான, பொறி குலம் - நெருப்புப்பொறிகளின் கூட்டத்தினால், மழை குலம் தீய - மேகங்களின் கூட்டம் கருகவும்,—(எ - று.)— நெருங்க தீய என்ற செயவெனெச்சங்கள் - உடனிகழ்ச்சிப்பொருளனவாய், கரு - ஆஞ்செய்யுளிலுள்ள 'இரங்கினர்' என்றதனோடு முடியும்: அடுத்த செய்யுளிலும் இங்ஙனமே காண்க. மழைக்குலந்தீயப் பொறிக்குலமெழுந்தன என்று இச்செய்யுளிலேயே முடித்தலு மொன்று.

சேனைவீரர்கள் வருவித்த சேனைத்தொகுதிகள் சலிப்பதற்கும் இடமில்லாமல் நெருங்க, அப்போது அச்சேனையிலுள்ள ஆயுதங்கள் ஒன்றோடொன்று உராய்ந்து மழைக்குலம் தீந்துபோகும்படி நெருப்புப்பொறிகள் தோன்றி எங்கும்பரவின வென்பதாம். பதாதிகள் தாங்குதற்கு உரியனவான கதிர்ப்படையைக் குறித்துப் பின்னிரண்டடிகளில் வருணித்திருத்தலால், முதலடியிற்கூறியுள்ள 'தானை வெங்குழு' என்றது - பதாதியைச் சுட்டு மென்னலாம். (கஉ)

[யானைச் சேனை.]

கங. பண்மணிக்குலயானையின்புடைதொறும்பரந்த
வொண்மணிக்குலமழையிடையுருமெனவொலிப்பக்
கண்மணிக்குலங்கனலெனக்காந்துவகதுப்பின்
றண்மணிக்குலமழையெழுகதிரெனத்தழைப்ப.

(இ - ள்.) பண் மணி குலம் யானையின் புடைதொறும் பார்த்த ஒள் மணி குலம் - போர்க்குரிய அலங்காரமமைந்த அழகிய சிறந்த யானைகளின் பக்கங்களிலே பரவியுள்ள அழகிய மணிகளின் கூட்டம், மழையிடை உரும் என ஒலிப்ப - மேகங்களில் தோன்றுகின்ற இடியோசைபோலப் பேரொலி செய்யவும்,—கனல் என காந்துவ - நெருப்புப்போலச் செந்நிறவொளியோடு பிரகாசிப்பன வாகிய, கண் மணி குலம் - கண்களிலுள்ள கருவிழிக்கூட்டமும், கதுப்பின் தண் மணி குலம் - கன்னங்களிலணியப்பட்டுள்ள (ஆபரணங்களிலுள்ள)குளிர்ந்த இரத்தினக்கூட்டங்களும்,மழை எழு கதிர் என தழைப்ப - காளமேகத்தினிடத்துத்தோன்றுகின்ற சூரியன்போல ஒளிவீசவும்,—(எ - று.)— 'இரங்கினர்' என்க.

கருநிறமுள்ள யானைகளின் பக்கங்களிலே தொங்குகின்ற மணிகள் மேகத்தினிடத்தில் தோன்றுகின்ற இடிபோலப் பேரொலிசெய்ய, அவ்யானைகளின் கோபத்தினாற் செந்நிறமடைந்த கண்மணிகளும், அவற்றின் கன்னங்களில் அணிந்த ஆபரணவிரத்தினங்களும் காளமேகத்தில் தோன்றுஞ் சூரியன்போலப் பிரகாசித்தன வென்று வருணித்தவாறு. மணியென்பது - முதலடியில் அழகென்ற பொருளையும், இரண்டாமடியில் அடிக்கின்றகண்டை என்ற பொருளையும், மூன்றாமடியில் கண்மணி யென்ற பொருளையும், நான்காமடியில் இரத்தின மென்ற பொருளையும் காட்டியது - சொற்பின்வருநிலையணியின்பாற் படும். 'கனலெனக் காந்துவ' என்ற தொடர் - முன்னுள்ள 'கண்மணி' என்பதனோடும், பின்னுள்ள 'தண்மணி' என்பதனோடும் இயையும்; இடைநிலைத்தீவகம். 'தழைப்ப' என்பதை முற்றெனக்கொண்டு, முடித்துவிடுதலும் ஒன்று. 'பண்மணிக்குலம் யானையில' என்றும், 'காந்துவ மார்பின்' என்றும் பிரதிபேதம். (க௫)

[புறப்பட்ட அரக்கவீரரை மனைவிமக்கள்முதலியோர் தடுத்து இரங்குதல்.]

க௪. தொக்கதாம்படைசுரிகுழன்மடந்தையர்தொடிக்கை
மக்கடாயர்மற்றியாவருந்தடுத்தனர்மறுகி
யொக்கவேகுதுங்குரங்கினுக்குயிர்தரவொருவர்
புக்குமீண்டிலரென்றழுதிரங்கினர்புலம்பி.

(இ - ள்:) (அப்போது), தொக்கது ஆம் படை - திரண்டதான இராக்கத சேனையிலேயுள்ள வீரர்களை, சுரி குழல் மடந்தையர் - நுனி சுருண்ட கூந்தலையுடைய (அவர்களுடைய) மனைவிமார்களும், தொடி கை மக்கள் - வளையலையணிந்த கைகளையுடைய மக்களும், தாயர் — தாய்மார்களும், மற்று யாவரும் - மற்றுமுள்ள சுற்றத்தவரும், மறுகி - மனங்கலங்கி, தடுத்தனர் - (போர்செய்யச்செல்வதை முதலில்) தடுத்துச்சொல்லி, (அவ்வீரர்கள் தம் சொல்லைக்கேளாமல் செல்லத்தொடங்கியதனால் பின்னும் அவர்களை நோக்கி), 'புக்கு ஒருவர் மீண்டிலர் - (குரங்கோடு யுத்தத்திற்குச்) சென்று ஒருவராவது திரும்பிவந்தாரில்லை; குரங்கினுக்கு உயிர் தர - (இப்போது வந்துள்ள) குரங்கு

க்குப் பிராணனைப் பலிகொடுக்கும்படி, ஒக்க வருதும் - (நாம் எல்லோரும்) ஒருமிக்கச் செல்வோம்', என்று - என்று சொல்லி, அழுது புலம்பி இரங்கினர் - ஓவென்று கதறியழலானார்கள்; (எ - று.)

'அநுமானுடன்போர்க்குச்சென்றால் பிழைத்து மீண்டுவருதல் இயலாது' என்று துணிந்ததனாற் போர்க்குச்செல்லும் வீரரைத் தடுத்துச் சொல்லிய மனைவி மக்கள் முதலியோர் அவ்வீரர்கள் பிடிவாதமாகப் போர்க்குச்செல்லத் தொடங்கவே, அவர்கள் இறக்கத் தமது உயிரைத் தாம் வைத்திருக்க மனமில்லாமல் 'உமது உயிரோடு எங்களுயிரையும் வானரம்கொள்ளுமாறு கொடுப்போம்' என்று மிகவும் கதறிப் புலம்பலாயின ரென்க. 'தொக்கரக்கர்தம்' 'தொக்கதம்படை' என்றும், 'யாவருந்தொடர்ந்தனர்' என்றும், 'ஒக்கவேகுவர்' என்றும் பிரதிபேதம். (கச)

[பஞ்சசேனாபதிகள் திரண்ட தம் சேனையோடு செல்லுதல்.]

கரு. கைபரந்தெழுசேனையங்கடலிடைக்கலந்தார்
செய்கைதாம்வருந்தேரிடைக்கதிரெனச்செல்வார்
மெய்கலந்தமானிகர்வருமுவமையைவென்றா
ரைவரும்பெரும்பூதமோரைந்துமொத்தமைந்தார்.

(இ - ள்.) மெய் கலந்த மால் நிகர் வரும் உவமையை வென்றார் - உடம்பு பெற்றுள்ள மேகத்தை உவமையாகச் சொல்லுகின்ற உவமைத்தன்மையை வென்றவர்களும் [சாதாரணமாக உவமையாகச்சொல்லப்படுங் காளமேகத்தினும் பெருவடிவுபடைத்தவரும்], பெரும் பூதம் ஓர் ஐந்தும் ஒத்து அமைந்தார் - ஐம்பெரும் பூதங்களையும் உவமையாகக் கொண்டு ஒன்று சேர்ந்துள்ளவருமாகிய, ஐவரும் - பஞ்சசேனாபதிகளும்,—கை பரந்து எழு சேனை அம் கடலிடை கலந்தார் - (தமது) பக்கங்களிற் பரவி யெழுகின்ற கடல் போன்ற சேனையின் நடுவிற் சேர்ந்தவர்களாய்,—செய்கை தாம் வரும் தேரிடை கதிர் என - விசித்திரமான செய்கை [தன்மை] பொருந்தியுள்ள தேரின்மீது வருகின்ற சூரியன்போல, செல்வார் - விரைந்து செல்பவரானார்கள்; (எ - று.)

இவ்வுலகத்துப் பொருள் யாவும் பஞ்சபூதங்களின் சேர்க்கையாலே யியன்றவை யென்பது நூற்கொள்கை. உலகத்திற் காரியப்படுதற்குப் பஞ்சபூதங்களும் ஒன்று சேர்தல் போல, இந்தப் பஞ்சசேனாபதிகளும் போர்த்தொழில் நிகழ்தற்கு ஒன்றுசேர்ந்தன ரென்பது, ஈற்றடியின் கருத்து. (கரு)

[இது முதல் ஒன்பது கவிகள் - ஒருதொடர்;
பஞ்ச சேனாபதிகளின் வருணனை.]

கசா. முந்தியம்பலகறங்கிடமுறைமுறைபொறிகள்
சிந்தியம்புறுகொடுஞ்சிலையுருமெனத்தெறிப்பார்
வந்தியம்புறுமுனிவர்க்குமமரர்க்கும்வலியா
ரிந்தியம்பகையாயவையைந்துமொத்தியைந்தார்.

(இ - ள்.) (அந்தப் பஞ்ச சேனாதிபதிகள்), முந்து இயம் பல கறங்கிட - முன்புறத்திலே பலவகையான போர்க்கு உரிய வாத்தியங்கள் ஒலிக்க,— முறை முறை பொறிகள் சிந்தி - வரிசை வரிசையாகக் கோபாக்கினியினால் நெருப்புப் பொறிகளைச் சிந்திக்கொண்டு, அம்பு உறு கொடு சிலை உரும் என தெறிப்பார் - அம்பு பூட்டிய (தமது) வளைந்த விற்களை இடிபோல நாணைத் தெறித்துப் பேரொலி யெழுப்புபவர்களாய்,—வந்து இயம்புறு முனிவர்க்கும் அமரர்க்கும் - (தம்மிடத்து) வந்து அறிவுகூறுகிற முனிவர்களுக்கும் தேவர்களுக்கும், வலி ஆர் பகை ஆயவை இந்தியம் ஐந்தும் ஒத்து இயைந்தார் - வலிமை பொருந்திய உட்பகையான பஞ்சேந்திரியங்களையும் ஒத்து (உபத்திரவஞ் செய்பவர்களாய்ப்) பொருந்தினவர்கள்; (எ - று.)

தங்கட்கு நல்லறிவு கூறுபவர்களா யிருந்தும் அவ்வுபதேசமொழியைக் கேளாமல், முனிவர்கட்கும் தேவர்கட்கும் எப்போதும் உட்பகையான பஞ்சேந்திரியங்களைப் போல உபத்திரவஞ் செய்கின்றவர்களான பஞ்சசேனாபதிகள்; பல போர்ப்பறைகள் முழங்க, கோபாக்கினிப்பொறி சிந்த, இடிமுழக்கம்போலக் குணத்தொனி செய்துகொண்டு போர்க்கு வந்தார்க ளென்றவாறு. உவமை - தொகையிலும் பேரிடர் செய்தலிலு மென்க.　(௧௬)

௧௭. வாசவன்வயக்குலிசமும்வருணன்வன்கயிறு
மேசிறென்றிசைக்கிழவன்றனெரிமுனையெழுவு
மீசன்வன்றனிச்சூலமுமென்றிவையொன்று
மூசிபோல்வதோர்வடுச்செயாநெடும்புயமுடையார்.

(இ - ள்.) (அன்றியும், அவர்கள்),— வாசவன் வய குலிசமும் - இந்திரனுடைய வலிய வச்சிராயுதமும், வருணன் வல் கயிறும் - வருணதேவனுடைய வலிய பாசாயுதமும், ஏசு இல் தென் திசை கிழவன்தன் எரி முனை எழுவும் - குற்றமற்ற தெற்குத்திக்குக்குரிய யமனுடைய நெருப்பை முனையிலுடைய தண்டாயுதமும், ஈசன் வல் தனி சூலமும் - சிவபெருமானது வலிய ஒப்பற்ற சூலாயுதமும், என்ற இவை - என்ற இவைகளில், ஒன்றும் - எதுவும், ஊசி போல்வது ஓர் வடு - ஊசி குத்துகிற அளவான ஒரு வடுவையேனும், செயா - செய்யமாட்டாத, நெடு புயம் - பெரிய தோள்களை, உடையார் - படைத்தவர்கள்; (எ - று.)

இந்திரன் முதலிய தேவர்களின் வச்சிராயுதம் முதலிய தெய்வப்படைகளில் ஏதுவும் ஒரு ஊசியினாலுண்டாகக் கூடிய உபத்திரவத்தையுஞ் செய்யமாட்டாத புஜபலத்தை யுடையவ ரென்று அந்தப் பஞ்சசேனாபதிகளின் வலிமையை வருணித்தவாறு. 'ஊசிபோலதோர்வடு' என்றும் பாடம்.　(௧௭)

௧௮. சூர்தடிந்தவன்மயிலிடைப்பறித்தவன்றோகை
பார்பயந்தவனன்னத்தினிறகிடைப்பறித்த
சூரிவெஞ்சிறகிடையிட்டுத்தொடுத்தனமுறுக்கி
வீரசூடிகைநெற்றியினயலிட்டுவிசித்தார்.

(இ - ள்.) (மற்றும் அவர்கள்),—சூர் தடிந்தவன் - சூரபத்மனைக் கொன்ற சுப்பிரமணியக் கடவுளின் (வாகனமான), மயிலிடை - மயிலின் வாலினிடத்தினின்று, பறித்த - பிய்த்த, வல் தோகை - வலிய இறகுகளையும், பார் பயந்தவன் அன்னத்தின் இறகிடை பறித்த தூரி வெம் சிறகு - பூமியைப் படைக்குங் கடவுளான பிரமதேவனது வாகனமாகிய அன்னப்பறவையினது இறகிலிருந்து பிய்த்த வலிய அழகிய சிறகுகளையும், இடை இட்டு முறுக்கி தொடுத்தன - நடுநடுவே வைத்து முறுக்கித் தொடுத்தனவான, வீரகுடிகை - வீரத்துக்கு அறிகுறியான சுட்டியை, நெற்றியின் அயல் இட்டு விசித்தார் - நெற்றியினிடத்திலே வைத்துக் கட்டிக்கொண்டிருப்பவர்கள் ; (எ - று.)

தமது வீரத்தினால் சுப்பிரமணியக்கடவுளையும் பிரமதேவனையும் வென்று, அவ்வெற்றிக்கு அறிகுறியாக அவர்களது வாகனங்களான மயில் அன்னம் என்றவற்றின் சிறகுகளிலிருந்து பறித்த இறகு சட்டைகளைக் கொண்டு முறுக்கிய கயிற்றிலே இடையிட்டுத் தொடுத்த வீரச்சுட்டியை நெற்றியில் அணிந்துள்ளன ரென்க. 'வீரகுடிகை கயிறிட்டு நெற்றியின் வசித்தார்' என்றும் பாடம். (கஅ)

ககூ. பொன்றி ணிந்ததோ ளிராவணன் மார்பொடும் பொருத
வன்றி றந்தகோ டரிந்திடு மழகுறு குழையர்
நின்ற வன்றிசை நெடுங்களி யானையி னெற்றி
மின்றி ணிந்தன வோடையின் வீரபட் டத்தர்.

(இ - ள்.) (பின்னும், அவர்கள்),— பொன் திணிந்த தோள் இராவணன் - பொன்னாபரணங்கள் நிறைந்த தோள்களையுடைய இராவணனது, மார்பொடும் - மார்புடனே, பொருத - தாக்கியதனால், அன்று - (இராவணன் திக்குவிசயஞ் செய்த) அக்காலத்தில், இறந்த - ஒடிந்துபோன, கோடு - (திக்கஜங்களின்) தந்தங்களை, அரிந்திடும் - பின்னும் அறுத்து அவற்றைக் கொண்டு செய்த, அழகுறு - அழகுபொருந்திய, குழையர் - காதணியையுடையவர்கள்; (அன்றியும்), திசை நின்ற வல் நெடு களி யானையின் - எட்டுத் திக்குகளிலும் (அவ்வத் திசையைத் தாங்குமாறு) நிற்கின்ற வலிய பெரிய மதக்களிப்புக்கொண்ட (ஐராவதம்) முதலிய திக்கஜங்களினது, நெற்றி - நெற்றிகளிலணிந்த, மின் திணிந்த(து) அ(ன்)ன ஓடையின் வீரபட்டத்தர் - மின்னல்கள் நெருங்கி நின்றாற்போன்ற மிக்கவொளியையுடைய முகபடாத்தை வீரபட்டமாக அணிந்தவர்கள் ; (எ - று.)

இராவணனோடு போர்செய்து முனைமுறிந்த திக்கஜங்களின் தந்தங்களைத் தமது வீரத்தினால் அறுத்துத் தமது வெற்றிக்கு அறிகுறியாக அவற்றினாற் காதணி செய்துகொண்டும், அந்தத்திக்கஜங்களின் முகபடாத்தைக் கவர்ந்து அவற்றையே வீரபட்டமாகத் தரித்துக்கொண்டும் இருப்பவ ரென்று பஞ்சசேனாபதிகளின் வீரச்சிறப்பை விளக்கியவாறு. (ககூ)

## வே று.

உ0. நிதிநெடுங் கிழவனை நெருக்கி நீணகர்ப்
பதியொடும் பெருந்திருப் பறித்த பண்டைநாள்
விதியொடு மன்னவன் விழுந்து வெந்நிடப்
பொதியொடும் வாரிய பொலன்கொள் பூணினர்.

(இ - ள்.) நிதி நெடு கிழவனை - நவநிதி நாயகனுகிய குபேரனை, நெருக்கி- போரில் வலியழித்து, நீள் நகர் பதியொடும் - (அவனது) வாசத்தானமாகிய பெரிய பட்டணத்திலிருந்து, பெரு திரு பறித்த - (அவனது) பெருஞ்செல் வத்தை (இராவணன்) கவர்ந்து கொண்ட, பண்டை நாள் - முற்காலத்தில், அன்னவன் விதியொடும் விழுந்து வெந்நிட - அந்தக்குபேரன் தீவினைப்பய னல் (போரில்) தோற்று முதுகுகொடுத்தோட, (அப்போது), பொதியொடும் வாரிய பொலன் கொள் பூணினர் - பெருமூட்டையாக வாரிக்கொண்டுசென்ற பொன்னுபரணங்களை யுடையவர்கள்; (எ - று.)

இராவணன் திக்குவிசயஞ் செய்து வருகையில் குபேரனுேடு பொருது அவனை வலியழித்து முதுகுகொடுத்து ஓடச்செய்கையில், இந்தப் பஞ்சசேனு பதிகள் அவ்விராவணனது வெற்றிக்குத் துணையாயிருந்து அந்தக்குபேரபட் டணத்திலிருந்து அவனுடைய ஆபரணங்களை யெல்லாம் மூட்டையாக வாரி வந்து அணிந்துள்ளா ரென்றவாறு. பதியொடு - பதியினின்று: வேற்றுமை மயக்கம்.

இதுமுதல் இருபத்தேழுகவிகள் - பெரும்பாலும் மூன்றுஞ்சீ ரொன்று மாச்சீரும், மற்றை மூன்றும விளச்சீர்களு மாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள்.

(உ0)

உக. இந்திரனிசையிழந்தேகுவானிகற்
றந்திமுன்கடாவினன்முடுகத்தாமதன்
மந்தரவாலடிபிடித்துவல்லையே
லுந்துதிநீயெனவலித்தவூற்றத்தார்.

(இ - ள்.) இந்திரன் - தேவேந்திரன், (அரக்கரோடுபோர்செய்யமாட்டா மல் தோற்று), இசை இழந்து - (தனது) புகழ் கெட்டு, ஏகுவான் - (முதுகு கொடுத்துச்) செல்பவனுகி, இகல் தந்தி முன் கடாவினன் முடுக - வலிமை பொருந்திய (தனது ஐராவத மென்னும்) யானையை முன்னே வேகமாகச் செலுத்திக்கொண்டு விரைந்துசெல்ல,—தாம்—, மந்தரம் அதன் - மந்தர மலைபோன்ற அந்தயானையினது, வால் அடி - வாலின் அடிப்புறத்தை, பிடி த்து - (தமதுகையினுல் இறுகப்)பற்றிக் கொண்டு, வல்லை எல் நீ உந்துதி - 'வல்லமையுள்ளவனுனுல் நீ செலுத்திக்கொண்டு போவாய்,' என - என்று, வலித்த - மேற்செல்ல வொட்டாமல் இழுத்துக்கொண்டுநின்ற, ஊற்றத் தார் - பெருவலிபடைத்தவர்; (எ - று.)

தேவேந்திரனுக்கு இராவணனோடு போர் நேர்ந்த காலத்தில் அவனுடைய சேனாபதிகளாயிருந்த இவ்வரக்கர்கள் அந்த இந்திரன் தோற்று முதுகு கொடுத்துத் தனது யானையை விரைவாகச் செலுத்தி யோடப் பார்க்க, அப்போது அவ்யானையின் அடிவாலைத் தமது கையாற் பற்றிநின்று 'நீ செலுத்து, பார்ப்போம்' என்று அவ்யானையை ஓடவொட்டாது தடுத்த பெருவலியுடையவ ரென்பதாம். கீழ்ச்செய்யுளில் குபேரனைவென்று தோற்றோடு மாறு செய்ததைக் கூறியவர் இந்தச்செய்யுளில் இந்திரன் தோல்வியுறுமாறு செய்ததைக் கூறினர். அடுத்த செய்யுளில் யமனை வென்று விளங்கியமையைக் கூறுவர். 'வலிந்த' என்றும் பாடம். (உக)

உஉ. பானிறத்தந்தணன் பணியனாகிநின்
கோனினைத்திலனெனவுலகங்கூறலு
நீனிறத்திராவணன்முனிவுநீக்குவான்
காலனைக்காலினிற்கையிற்கட்டினார்.

(இ - ள்.) உலகம் - இலங்கையிலுள்ளார், அந்தணன் பணியன் ஆகி - முதலந்தணனாகிய பிரமதேவனது சட்டளையின்படி நடப்பவனாய், (யமனானவன்), பால் நிறுத்து - (உயிர்களின்) விதியைச் சீர்தூக்கிப்பார்த்து, (இவ்விலங்கையிலுள்ளார்க்கும் அவரவர் விதியின்படி ஆயுட்காலத்தை நடப்பிப்பவனாய்), நின் கோல் நினைத்திலன் - (இவ்விலங்கை த்ரிலோகாதிபதியாகிய இராவணனை) உன்னுடைய கோலுக்கு உட்பட்ட தென்பதை நினைத்தானில்லை', என - என்று, கூறலும் - (இராவணனிடத்திற்) சொல்லுதலும்,— (அதுகேட்டு இராவணன் சினங்கொள்ளவே), நீல் நிறத்து இராவணன் முனிவு நீக்குவான் - கருநிறமுள்ள அவ்விராவணனது கோபத்தைப் போக்கும்பொருட்டு, காலனை - யமனையும், காலினில் கையில் கட்டினார் - கால்களிலும் கைகளிலும் கட்டிச் சிறையிலேவைத்தவர்கள் (இவர்கள்); (எ - று.)

உலகமென்ற பெயர் "மாயோன்மேயகாடுறையுலகமும்" என்ற இடத்திற்போல உலகத்தின் ஏகதேசத்தை யுணர்த்துவதால், இலங்கையைக் காட்டி, பிறகு அங்குள்ள இராக்கதர்க்கு ஆகிவந்தது. 'பானிறத்தந்தணன் பணியனாயினும்' என்றும் பாடம். ஈற்றடி - முற்றுமோனை. (உஉ)

உங. மலைகளைநகுந்தடமார்பர்மால்கட
லலைகளைநகுநெடுந்தோளரந்தகன்
கொலைகளைநகுநெடுங்கொலையர்கொல்லனூ
துலைகளைநகுமனலுமிழுங்கண்ணினார்.

(இ - ள்.) (அவர்கள்), மலைகளை நகும் தட மார்பர் - மலைகளைப் பரிகசிக்கின்ற பரந்த மார்பையுடையவர்கள்; மால் கடல் அலைகளை நகும் நெடுந் தோளர் - பெரியகடலினலைகளைப் பரிகசிக்கின்ற நீண்ட தோள்களையுடையவர்கள்; அந்தகன் கொலைகளை நகும் நெடுங் கொலையர் - யமனது கொலைத்தொழிலைப் பரிகசிக்கின்ற பெருங்கொலைத்தொழிலையுடையவர்கள்; கொல்லன் ஊது

உலகங்களை நகும் அனல் உமிழும் கண்ணினார் - கொல்ல னூதுகின்ற உலைக் களங்களைப் பரிகசிக்கின்றனவாய் நெருப்பை வெளிக்கக்குகின்ற கண்களை யுடையவர்கள் ; (எ - று.)

இவ்வரக்கர்களுடைய மார்புமுதலியவை மலைமுதலியவற்றினும் விஞ்சி யவை யென்பது, இங்குப் பெறப்படும். தோளர் - கையையுடையவ ரென்றல், ஏற்கும்; தோள்என்பது கையெ ன்னும் பொருளில் வருதலை " தோளுற்றொரர் தெய்வம் துணையாய்த் துயர்தீர்த்தவாறும்" என்ற இடத்துங் காண்க. (உ௩)

உச. தோல்கிளர்திசைதொறுமுலகைச்சுற்றிய
சால்கிளர்முழங்கெரிதழங்கியேறினுங்
கால்கிளர்ந்தடிப்பினுங்காலங்கையுற
மால்கடல்கிளரினுஞ்சரிக்கும்வன்மையார்.

(இ - ள்.) காலம் கையுற - யுகாந்தகாலம் தோன்றும்படி,—சால் கிளர் முழங்கு எரி - மிகுதியாக விளங்குகின்ற சபுலவொலியோடு கூடிய வடவாமு காக்கினியானது,—உலகை சுற்றிய - உலகுமுழுவதையும் (எரிக்கும்படி) சூழ்ந்து கொள்ளும்பொருட்டு, தோல் கிளர் திசைதொறும் - திக்கஜங்கள் நிற்கின்ற எல்லாத்திக்குக்களிலும், தழங்கி - பேரொலிசெய்துகொண்டு, ஏறினும் - பரவினாலும்,—கால் கிளர்ந்து அடிப்பினும் - சண்டமாருதம் மேன் மேலோங்கி வீசியடித்தாலும்,—மால் கடல் கிளரினும் - பெரிய கடல் பொங்கிவந்தாலும், சரிக்கும் - (அவற்றையெல்லாம்) வலியொடுக்கவல்ல, வன்மை யார் - வலிமையையுடையவர்கள் ; (எ - று.)

யுகாந்தகாலத்திலே முதலில் ஆதிசேஷனுடைய ஆயிரம் முகங்களினின் றும் மிகப்பெரிய மூச்சுக்காற்று எழுந்து உலகத்துப்பிராணிகள் உலர்ந்து போமாறு வீசு மென்பதும்; கடலிடையேயுள்ளதான படபாமுகாக்கினியும் அச்சமயத்தில் வெளிக்கிளம்பி உலகங்களை எரிக்கு மென்பதும்; பிறகு, அண்ட கடாகத்திற்கு வெளியேயுள்ளதான பெரும்புறக்கடலின் வெள்ளம் பிரவே சித்து உலகங்களையெல்லாம் அழித்திடுமென்பதும் நூற்கொள்கை. மால்கடல் - பெரும்புறக்கடல். சரித்தல் - சரியச்செய்தல்: வலியொடுங்கச்செய்தல். இனி, சரிக்கும் என்பதற்கு - சஞ்சரிக்கின்ற என்று பொருள்கூறி, அவ்வரக்கர்கள் யுகாந்தகாலம்தோன்றும்படி முழங்கெரிமுதலியன எரித்தல்முதலியவற்றைச் செய்யும்போது சிறிதும் அச்சமில்லாமற் சஞ்சரிக்கும் மனவன்மையுடைய வர் என்று கூறுவாரு முளர். 'கால்கிளர்ந்தோங்கனும்' என்றும் பாடம். (உச)

[பஞ்சசேனாபதிகள் தன்னைச்சூழ்ந்துகொண்டு அணிவகுத்துநிற்க, அநுமான் அவர்கள் நிலைமையைக் காணுதல்.]

உரு. இவ்வகையினைவருமெழுந்ததானையர்
மொய்கிளர்தோரணமதனைமுற்றினார்
கையொடுகையுறவணியுங்கட்டினா
ரையனுமவர்நிலையமையநோக்கினான்.

(இ - ள்.) இ வகை அனைவரும் - இவ்வாறுள்ள அந்தப் பஞ்சசேனாபதிகள்,—எழுந்த தானையர் - சேனையோடும் புறப்பட்டவர்களாய், மொய் கிளர் தோரணம் அதனை - வலிமையோடு நிற்கின்ற (அநுமானுள்ள) அந்தத்தோரண வாயிலை, முற்றினர் - சூழ்ந்துகொண்டு, கையொடு கை உற அணியும் கட்டினர் - எல்லாப்புறத்திலும் பொருந்தியிருக்குமாறு (தமது சேனைகளை) அணிவகுப்பதுஞ் செய்தார்கள்; ஐயனும் - அநுமானும், அவர் நிலை - அந்த அரக்கர்களின் செயலை, அமைய நோக்கினன் - நன்றாகப்பார்த்தான்; (எ - று.)

எழுந்த தானையர் - வடமொழிநடை: எழுச்சிபெற்ற சேனையையுடையவரென்க. கை - பக்கம்: சேனையின் பிரிவு எனினுமாம். (௨௫)

[அது கண்ட தேவர்களின் மனநிலை.]

௨௬. அரக்கரதாற்றலுமளவில்சேனையின்
றருக்குமம்மாருதிதனிமைத்தன்மையும்
பொருக்கெனநோக்கியபுரந்தராதிய
ரிரக்கமுமவலமுந்துளக்குமெய்தினார்.

(இ - ள்.) அரக்கரது ஆற்றலும் - (அநுமானைச் சூழ்ந்துகொண்ட) பஞ்சசேனாபதிகளது வல்லமையையும், அளவு இல் சேனையின் தருக்கும் - எல்லையில்லாத சேனையினது கர்வத்தையும், அ மாருதி தனிமை தன்மையும் - (அவர்களின் நடுவேயுள்ள) அந்த அநுமானது தனிப்பட்ட நிலைமையையும், பொருக்கென நோக்கிய - திடீரென்று பார்த்த, புரந்தர ஆதியர் - இந்திரன் முதலிய தேவர்கள், இரக்கமும் - (அநுமானிடத்துக்) கருணையையும், அவலமும் - துன்பத்தையும், துளக்கும் - அச்சத்தையும், எய்தினார் - அடைந்தார்கள்.

அரக்கரது பெருஞ்சேனைநடுவே அநுமான் அகப்பட்டுக்கொண்டதைக் கண்டதனால் இரக்கமும், 'ஒரு கால் இவ்வநுமானுக்கு ஏதேனும் தீங்குநேருமோ' என்று கருதியதனால் துன்பமும் அச்சமும் இந்திரன் முதலிய தேவர்கட்குத் தோன்றினவென்க. (௨௬)

[அநுமான் அரக்கச்சேனையை அலட்சியமாகப்பார்த்தல்.]

௨௭. இற்றனரரக்கரிப்பகலுளேயெனுக்
கற்றுணர்மாருதிகளிக்குஞ்சிந்தையான்
முற்றுறச்சுலாவியமுடிவிறானையைச்
சுற்றுறநோக்கித்தன்றோளைநோக்கினான்.

(இ - ள்.) கற்று உணர் மாருதி - (பலநூல்களையும்) கற்றுத்தேர்ந்த அநுமான்,—அரக்கர் இ பகலுளே இற்றனர் எனு களிக்கும் சிந்தையான் - இவ்வரக்கர்கள் இன்றொருபகற்குள்ளே அழிவது தேற்றமென்று நினைத்து (அதனால்) மகிழ்கின்ற மனமுள்ளவனாய்,— முற்று உற சுலாவிய முடிவு இல் தானையை - (தன்னை) முற்றவும் சூழ்ந்துகொண்ட எல்லைகாண்பதற்கு அரிய (அரக்கப்) பெருஞ்சேனையை, சுற்று உற நோக்கி - நான்கு பக்கத்திலும் நன்றாகப்பார்த்து, தன் தோளை நோக்கினான் - தனது தோள்களையும் பார்த்தான்.

மாருதிக்கு 'கற்றனர்' என்ற அடைமொழி கொடுத்ததனால், அவ்வநுமான் எதையும் சரியானபடி ஆலோசனைசெய்து தீர்மானிக்கவல்லவனென்பது பெறப்படும். தோள்வலிகொண்டே அரக்கர்யாவரையும் தொலைக்கப் போவதனால், தானையை நோக்கித் தோளை நோக்கினனென்க. இற்றனர் - தெளிவினாலும் விரைவினாலும் எதிர்காலம் இறந்தகாலமாகக் கூறப்பட்ட காலவழுவமைதி. (உஎ)

[அரக்கர்கள் அநுமானைப்பற்றிக் கருதுதல்.]

உஅ. புன்றலைக்குரங்கிதுபோலுமாலமர்
வென்றதுவிண்ணவர்புகழைவேரொடுந்
தின்றவல்லரக்கரைத்திருகித்தின்றதா
லென்றனரயிர்த்தனர்நிருதரெண்ணிலார்.

(இ - ள்.) எண் இலார் நிருதர் - (அங்கிருந்த) கணக்கில்லாத அரக்கர்கள்,—'புல் தலை குரங்கு இது - இழிவான தலையையுடைய இக்குரங்கு ஒன்றுதான், மால் அமர் வென்றது - (இதுகாறும் நடந்த) பெரும்போரில் வெற்றிகொண்டதாய், விண்ணவர் புகழை வேரொடும் தின்ற வல் அரக்கரை திருகி தின்றது போலும் - (தேவர்களை வென்று அத்) தேவர்களின் கீர்த்தியை அடியோடு ஒழித்த வலியஅரக்கர்களை முறித்தழித்ததுபோலும்', என்றனர் - என்று, அயிர்த்தனர் - ஐயங்கொண்டார்கள்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

அநுமான் தனிப்பட்டவனாய்ச் சிறியவடிவோடு இருத்தலைக் கண்ட அரக்கர்கள், 'இவனொருவனே கீழ்நடந்தபோர்களில் மிகப்பலஅரக்கர்களை அழித்திருப்பனோ?' என்று ஐயங்கொண்டனரென்பதாம். இனி, தேவர்களையெல்லாம்வலியடக்கிய மகாசமர்த்தரான அரக்கர்களையெல்லாம், இது வென்றதே! இது குரங்குதானோ? என்று சந்தேகித்தனரென்று பொருள்கொள்ளலுமாம்; இதற்கு - இது குரங்கன்று: குரங்கின்வடிவுகொண்டதொரு கடவுளாயிருக்கவேண்டுமென்பது அரக்கருடைய கருத்தென்னலாம். போலும் - ஒப்பில்போலி. (உஅ)

[அநுமான் பெருவடிவங்கொள்ளுதல்.]

உகூ. ஆயிடையநுமனுமமரர்கோனகர்
வாயினின்றவ்வழிக்கொணர்ந்துவைத்தமாச்
சேயொளித்தோரணத்தும்பர்ச்சேணெடு
மீயுயர்விசும்பையுங்கடக்கவீங்கினான்.

(இ - ள்.) அ இடை - அப்பொழுது, அநுமனும்—, அமரர் கோன் நகர் வாயில் நின்று - தேவேந்திரனது நகரமான அமராவதிப்பட்டணத்தின் வாசலிலிருந்து, அ வழி கொணர்ந்து வைத்த - அவ்விடத்து [அசோகவனிகையின் வாயிலில்] கொணர்ந்து வைக்கப்பட்ட, மா சேய் ஒளி தோரணத்து - மிக்க செந்நிறத்தையுடைய தோரணத்தின், உம்பர் - மேலே (இருந்தபடியே), சேண் நெடு மீ உயர் விசும்பையும் கடக்க - மிகநெடுந்தூரமாக மேலேயுயர்ந்

துள்ள ஆகாசத்தையும் கடந்துசெல்லுமாறு, வீங்கினன் - உடல்பெருக்கப் பெற்றான் [பெருவடிவங் கொண்டான் என்றபடி]; (எ - று.)

தோரணம் - அரசர் செல்லுமாறு இயற்றப்படுஞ் செய்வாயில். செம்மை ஒளி - சேயொளி. (௪௯)

[அரக்கர் அநுமான்மீது படைவழங்குதல்.]

௫0. வீங்கியவீரனைவியந்துநோக்கிய
தீங்கியலரக்கருந்திருகினார்சினம்
வாங்கியசிலையினர்வழங்கினார்படை
யேங்கியசங்கினமிடித்தபேரியே.

(இ - ள்.) வீங்கிய வீரனை - (அவ்வாறு) பெருவடிவு கொண்ட அநுமானை, வியந்து நோக்கிய - மருண்டு பார்த்த, தீங்கு இயல் அரக்கரும் - (பிறர்க்குத்) தீமைசெய்தலையே (தம்முடைய) இயல்பாகக்கொண்ட அரக்கர்களும், சினம் திருகினார் - கோபம்மிகுந்தவர்களாய்,—வாங்கிய சிலையினர் - வில்லை வளைத்து, படை வழங்கினார் - (அநுமான்மீது) அம்புகளைப் பிரயோகித்தார்கள்; (அப் பொழுது), சங்கு இனம் ஏங்கிய - சங்குகளின் கூட்டம் ஒலித்தன; பேரி இடித்த - முரசங்கள் பேரொலி செய்தன; (எ - று.)

வீரர்கட்கு உற்சாகம்மிகுதற்பொருட்டுச் சங்கம் முதலியவற்றைப் போர்க்களத்தில் முழக்குதல், மரபு. 'தீங்குடையரக்கரும்.' 'வாங்கினரிவர்சிலை', 'சங்கின்று' என்பன பாடாந்தரங்கள். (௫0)

[அப்படைகள் அநுமானை ஒன்றுஞ் செய்யமாட்டாமை.]

௫௧. எறிந்தனரெய்தனரெண்ணிறந்தன
பொறிந்தெழுபடைக்கலமரக்கர்போக்கினார்
செறிந்தனமயிர்ப்புறத்தினைவுதீர்வுறச்
சொறிந்தனவெனவிருந்தையன்றூங்கினான்.

(இ - ள்.) அரக்கர் - ராக்ஷஸர்கள், எண் இறந்தன பொறிந்து எழு படைக்கலம் - கணக்கிறந்த [மிகப்பல] வான அனற்பொறிகளைக் கக்கிக்கொண்டு எழுகின்ற ஆயுதங்களை, எறிந்தனர் எய்தனர் போக்கினார் - (அநுமான்மீது) எறிதலையும் எய்தலையுஞ் செய்பவராய்ச் செலுத்தினார்கள்; (அவை), மயிர் புறம் செறிந்தன - (உடலின் மேற்புறத்திலுள்ள) மயிர்களின்மீது நெருங்கியனவாய், தினவு தீர்வுற சொறிந்தன என் - தினவு தீரும்படி சொறிந்தாற்போன்றிருக்க, இருந்து - சுகமாகஇருந்து, ஐயன் - அநுமான், தூங்கினான் - கண்ணுறங்குபவன்போல(ஆனந்தத்தினால்) கண்மூடிக்கொண்டிருந்தான்; (எ - று.)

அநுமான்மீது அரக்கர்எறிந்த ஆயுதங்கள் அவனுக்கு ஊறுசெய்யமாட்டாமையன்றிக்கே, தினவுக்குஇதமாகச் சொறிந்தாற்போன்றிருக்க, அநுமான் அவ்வானந்தத்தால் கண்மூடிக்கொண்டு இனிதாக இருந்தன னென்பதாம். அநுமானை ஊறுபடுத்தவேணு மென்ற கருத்துடன் பிரயோகித்த படைக்கலங்கள், தினவுதீர இன்பத்தை விளைத்ததாகக் கூறிய இதில், விருப்பத்தைப் பெற

வேணுமென்று முயல்பவர்கு அவ்விருப்பங் கைகூடாமையன்றியே அநிஷ்டமும் கூடுவதாகிய தகுதியின்மையணி இருத்தல் காண்க : இதனை, வடநூலார் விஷமாலங்கார மென்பர். 'எண்ணிறந்தனர்,' 'தீர்தர' என்பன - பாடாந்தரம்.

[அரக்கரையழிக்குமாறு இருப்புத்தூணை அனுமான் ஏந்துதல்.]

௬௨. உற்றுடனரக்கருமுருத்துடன்றனர்
செற்றுறநெருக்கினர்செருக்குசிந்தையார்
மற்றையர்வரும்பரிசிவரைவல்விரைந்
தெற்றுவனெனவெழுவனுமனேந்தினன்.

(இ - ள்) அரக்கரும்—, செருக்கு சிந்தையார் - வீரச்செருக்கைக் கொண்ட மனமுடையவர்களாய்,—உடன் உற்று - ஒருசேரப் பொருந்தி உருத்து - கோபித்து, உடன்றனர் - மாறுபட்டவர்களாய், செற்றுற - அழியுமாறு (கருதி), நெருக்கினர் - (அநுமானை) மோதினார்கள்; (அப்போது), அனுமன்—,—'மற்றையர் வரும் பரிசு - மற்றமுள்ள அரக்கரும் போர்செய்ய வரும் விதமாக, இவரை - இங்குள்ள அரக்கர்களை, வல் விரைந்து - மிகவிரைவாக, எற்றுவன் - அடித்து அழிப்பேன்', என - என்று எண்ணி, எழு - (அங்கிருந்த தொரு) இருப்புத்தூணை, ஏந்தினன் - கையிலெடுத்துக்கொண்டான்,; (எ - று.)

'உற்றடன்றரக்கரு முருத்துடற்றினர்', 'செருக்குஞ் சிந்தையர்', 'எழுந் தனுமனேய்தினன்' என்பன பாடாந்தரங்கள். (௬௨)

[இதுமுதல் ஏழுகவிகள் - அனுமானதுபோரை விவரிக்கும்.]

௬௩. ஊக்கியபடைகளுமுருத்தவீரருந்
தாக்கியபரிகளுந்தடுத்ததேர்களு
மேக்குயர்கொடியுடைமேகமாலைபோ
றூக்கியகரிகளும்புரளநூக்கினன்.

(இ - ள்.) (அநுமான் அந்த எழுவைக்கொண்டு),—ஊக்கிய - (அரக்கர்கள் தன்மீது) பிரயோகித்த, படைகளும் - ஆயுதங்களும், உருத்த வீரரும் - சினந்துவந்த வீரர்களும், தாக்கிய பரிகளும் - தாக்குமாறு வந்த குதிரைகளும், தடுத்த தேர்களும் - (தன் விருப்பின்படி இருக்கவொட்டாமல்) தடையாய் வந்த தேர்களும், மேக்கு உயர் கொடி உடை மேகம் மாலை போல் தூக்கிய கரிகளும் - (தம்)மீது உயர்த்திய கொடியையுடையனவும் மேகங்களின் வரிசை போன்றனவுமான (தன்மீது) செலுத்தப்பட்ட யானைகளும், புரள - (மண்மீது வீழ்ந்து) புரண்டழியும்படி, நூக்கினன் - அடித்துத்தள்ளினான்; (எ - று.)

யானையின்மீது கொடிவைக்கப்படுதல் மரபு : இதனை, "கோல்பொரு கொடுஞ்சிலை குருதிவெம்படை, மேலவரடக்குப வேழமேறலின், மாலிரு விசும்பிடை மணந்தவொண்கொடி, கால்பொருகதலிகைக் கானமொத்தவே" என்ற இடத்துங் காண்க. கீழ்ச்செய்யுளில் வந்த 'அனுமன்' என்பதே இச் செய்யுட்கும், மேல்வரும் ஆறுசெய்யுள்களுக்கும் எழுவாயாம். (௬௩)

கூச. வார்மதக்கரிகளின்கோடுவாங்கிமாத்
தேர்படப்புடைக்குமத்தேரின்சில்லியால்
வீரரையுருட்டுமவ்வீரர்வாளினாற்
றாருடைப்புரவியைத்துணியத்தாக்குமால்.

(இ - ள்.) வார் மதம் கரிகளின் கோடு வாங்கி - பெருகுகிற மதநீரை யுடைய யானைகளின் தந்தத்தைப் பறித்து, (அவற்றைக்கொண்டு), மா தேர் பட புடைக்கும் - பெரியதேர்கள் சிதையும்படி மோதுவான்; அ தேரின் சில்லி யால் - (அங்ஙனம் தான் சிதைத்த) தேர்களின் சக்கரங்களைக்கொண்டு, வீரரை உருட்டும் - போர்வீரர்களை உருண்டுவிழச் செய்வான்; அ வீரர் வாளினால் - அவ்வாறுஉருண்டுவிழுந்த அரக்கவீரரது கைவாள்களைக்கொண்டு, தார் உடை புரவியை துணிய தாக்கும் - கிண்கிணி மாலைபூண்ட குதிரைகளைத் துணிபட்டு விழும்படி வெட்டுவான்; (எ - று.)— ஆல் - ஈற்றசை.

ஒன்றைப்பற்றிக் கீழ்ச்சொன்னதை விட்டுச் செல்வதாகிப் பலபொருள் களை மேன்மேல் அமைத்துக்கொண்டு செல்வதாகிய ஏகாவளியென்னும் அலங்காரம் இந்தச் செய்யுளில் இருத்தல் காண்க : இது - ஒற்றைமணிமாலை யெனப்படும். (கூச)

கூரு. இரண்டுதேரிரண்டுகைத்தலத்துமேந்திவே
றிரண்டுமால்யானைபட்டுருளவெற்றுமா
லிரண்டுமால்யானையையிரண்டினேந்திவே
றிரண்டுபாலினும்வரும்பரியையெற்றுமால்.

(இ - ள்.) இரண்டு தேர் இரண்டு கைத்தலத்தும் ஏந்தி - இரண்டு தேர் களை(த் தனது) இரண்டு கைகளிலும் எடுத்துக்கொண்டு,வேறு இரண்டு மால் யானை பட்டு உருள எற்றும் - வேறான பெரிய இரண்டுயானைகள் இறந்து பட்டு உருளும்படி மோதுவான்; இரண்டு மால் யானை கை இரண்டின் ஏந்தி- இரண்டு பெரியயானைகளை (த் தனது)இரண்டுகைகளிலும் எடுத்துக்கொண்டு, வேறு இரண்டு பாலினும் வரும் பரியை எற்றும் - வேறாக இரண்டுபக்கங்களி லும் வருகிற குதிரைகளை மோதுவான்; (எ - று.)—ஆல் - அசைகள்.

இதுவும் - முன்னைய அணியே. முதலடியில் 'கைத்தலமு மேந்த' என்றும், இரண்டாமடியில் 'இரண்டுபாலினும் வருங் கரியை யெற்றி வேறு' என்றும் பாடம் காணப்படுகின்றன. (கூரு)

கூசு. மாயிருநெடுவரைவாங்கிமண்ணினிட்
டாயிரந்தேர்படவரைக்குமாலழித்
தாயிரங்களிற்றையோர்மாத்திருலடித்
தேயெனுமாத்திரையெற்றிமுற்றுமால்.

(இ - ள்.) மா இரு நெடு வரை வாங்கி - மிகப்பெரிய நீண்ட மலையொன் றைப் பேர்த்தெடுத்து, (அதனைக்கொண்டு), ஆயிரம்தேர் பட - ஆயிரந் தேர்கள்

அழியும்படி, அழித்து - சிதைத்து, மண்ணின் இட்டு அரைக்கும் - பூமியின் மேல்வைத்து அரைத்துவிடுவான்; ஆயிரம் களிற்றை - ஆயிரம் யானைகளை, ஓர் மரத்தினால் - (அங்குள்ள) ஒருமரத்தைக்கொண்டு, ஏயெனும் மாத்திரை எற்றி அடித்து - ஒரு மாத்திரைப்பொழுதிற்குள் தாக்கியடித்து, முற்றும் - உயிரொழியச் செய்வான், (எ - று.)—'ஏயெனுமாத்திரத்து' என்றும் பாடம். (கசு)

கஎ. உதைக்கும்வெங்கரிகளையுழக்குந்தேர்களை
மதிக்கும்வன்புரவியைத்தேய்க்கும்வீரரை
யதுக்கும்வல்லெழுவினாலரைக்குமண்ணிடைக்
குதிக்கும்வன்றலையிடைக்கடிக்குங்குத்துமால்.

(இ - ள்.) வெம் கரிகளை உதைக்கும் - கொடிய யானைகளை (த் தன் காலினால்) உதைப்பான்; தேர்களை உழக்கும் - தேர்களைச் சிதைப்பான்; மதிக்கும் வல் புரவியை - (யாவரும்) மதிக்கின்ற வலிய குதிரைகளை, தேய்க்கும் - தேய்த்துவிடுவான்; அதுக்கும் வல் எழுவினால் வீரரை மண்ணிடை அரைக்கும் - வலியழிக்கவல்ல வலிய இருப்புத்தூணினால் இராக்கதவீரரைத் தரையிலிட்டு அரைப்பான்; வல் தலையிடை குதிக்கும் - (யானை முதலியவற்றின்) வலிய தலைகளின்மேற் குதிப்பான்; கடிக்கும் - கடிப்பான்; குத்தும் - குத்துவான்.

'மிதிக்கும் வன்புரவியை', 'மதிக்கும்வல்லெழுவினால்', 'வன்றலைகளை' என்பன பாடாந்தரம். (கஎ)

கஅ. விசையின்மான்றேர்களுங்களிறும்விட்டகன்
றிசையுமாகாயமுஞ்செறியச்சிந்துமாற்
குசைகொள்பாய்பரியொடுங்கொற்றவேலொடும்
பிசையுமாலரக்கரைப்பெருங்கரங்களால்.

(இ - ள்.) விசையின் மான் தேர்களும் - வேகத்தோடுகூடிய குதிரைகள் கட்டிய தேர்களையும், களிறும் - யானைகளையும், அகல் திசையும் ஆகாயமும் செறிய - அகன்ற திக்கினிடங்களும் ஆகாசமும் நெருங்கும்படி, விட்டு சிந்தும் - வீசியெறிவான்; குசை கொள் பாய் பரியொடும் - (ஏறிவருவனவாகிக்) கடிவாளத்தைக் கொண்டு பாய்ந்துசெல்லுந் தன்மையுள்ள குதிரைகளுடனும், கொற்றம் வேலொடும். (கையிற்பிடித்த) வெற்றிபொருந்திய வேலாயுதத்துடனும், அரக்கரை - இராக்கதவீரர்களை, பெருங் கரங்களால் - தனது பெரிய கைகளினால், பிசையும் - பிசைந்துவிடுவான்; (எ - று.)

நால்வகைச் சேனைகளுள் யானைகளையும் தேர்களையும் வானத்தில் வீசியெறிந்தும், குதிரைகளையும் வீரர்களையும் கைகளினாற் பிசைந்தும் அழித்தனனென்க. அகல்+திசை=அகன்றிசை; வல்லினம்வர லகரம் னகரமாகத் திரிந்தது; "குறில்செறியா ல ள" என்றசூத்திரத்து 'பிற' என்ற மிகையால். (கஅ)

[இதுமுதல் நான்குகவிகளால் - முறையே, அநுமான் கடலில் வீழ்த்திய சதுரங்க வருணனை கூறப்படுகின்றது.]

௫௯. தீயுறுபொறியுடைச்செங்கண்வெங்கைமா
மீயுறத்தடக்கையால்வீரன்வீசுதோ
றாய்பெருங்கொடியனகடலினாழ்வன
பாயுடைநெடுங்கலம்படுவபோன்றவே.

(இ - ள்.) உறு தீ பொறி உடை செங் கண் வெங் கை மா - மிக்க நெருப்புப்பொறிகளையுடைய சிவந்த கண்களைக்கொண்ட வெவ்விய யானைகள், வீரன் தட கையால் மீ உற வீசு தோறு - அநுமான் (தன்) பெரிய கைகளைக் கொண்டு ஆகாயத்தின்மீது பொருந்தும்படி வீசியெறியுந்தோறும், ஆய் பெருங் கொடியன கடலின் ஆழ்வன - சிறந்த பெரிய கொடிகளையுடையன வாகிக் கடலில் விழுபவை,—பாய் உடை நெடு கலம் படுவ போன்ற - பாய் மரங்களையுடைய நெடிய மரக்கலங்கள் கடலில் மூழ்குவனவற்றை யொத்திருந்தன; (எ - று.)

அநுமானல் ஆகாசத்தில் வீசியெறியப்பட்டுத் தம்மீதுநாட்டிய கொடிகளோடு கடலில் விழுந்து முழுகிவிடுகின்ற யானைகள் - அந்நிலையில் பாய்மரங்களோடு கடலில் அமிழும் மரக்கலங்களைப் போலுமென வருணித்தார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. 'தீயுறு' என்பதை செங்கண்ணேடும் 'பொறியுடை' என்பதைக் கைம்மாவோடும் இயைத்து, பொறியுடை - செம்புள்ளிகளையுடைய எனினுமாம். கைம்மா என வரவேண்டுவது செய்யுளின்பம் நோக்கி மகரமெய் தொக்குவந்தது. 'வேங்கைமா' என்பது ஏட்டுப்பிரதிகளைப் படிக்கத் தெரியாமையால் நேர்ந்த பாடமாகும். (௫௯)

௬௦. தாரொடுமுருளொடுந்தடக்கையாற்றனி
வீரன்விட்டெறிந்தனகடலின்வீழ்வன
வாரியினெழுஞ்சுடர்க்கடவுள்வானவன்
றேரினைநிகர்த்தனபுரவித்தேர்களே.

(இ - ள்.) தனி வீரன் - ஒப்பற்ற வீரனாகிய அநுமான், தட கையால் விட்டு எறிந்தன - (தனது) பெரிய கைகளால் வீசியெறியப்பட்டனவாகி, கடலின் வீழ்வன - கடலிற்சென்று விழுகின்றனவான, தாரொடும் உருளொடும் புரவி தேர்கள் - கிண்கிணிமாலையோடும் சக்கரத்தோடுங் கூடியனவாய்க் குதிரைகள்பூட்டப்பட்ட தேர்கள்,—வாரியின் எழும் - கடலில் உதிக்கின்ற, சுடர் கடவுள் வானவன் - ஆயிரங்கிரணங்களையுடைய சூரியபகவானாகிய தேவனுடைய, தேரினை—, நிகர்த்தன - ஒத்தன; (எ - று.)

கடலில் விழுத்திய தேர்கள் - கடலினின்று தோன்றுஞ் சூரியன்தேரை யொத்தன வென்க. வாரி - கடலுக்கு, இலக்கணை. (௬௦)

சக. மீயுறவிண்ணிடைமுட்டிவீழ்வன
வாய்பெருந்திரைக்கடலழுவத்தாழ்வன
வோய்வனபுரவிவாயுதிரங்கால்வன
வாயிடையெரியுடைவடவைபோன்றவே.

(இ - ள்.) (அநுமானால் வீசியெறியப்பட்டு), மீ உற விண்ணிடை முட்டி - மேலேபொருந்தும்படி ஆகாசம்வரையிற்சென்று தடைப்பட்டு, வீழ்வன - அங்குநின்று கீழேவீழ்வனவும், ஆய் பெரு திரை கடல் அழுவத்து ஆழ்வன - சிறந்தபெரிய அலைகளையுடைய கடற்பரப்பிலே அமிழ்வனவும், ஓய்வன - வலியொடுங்கியனவும், வாய் உதிரம் கால்வன - (தம்) வாயினின்று இரத்த நீரை வெளிச்சிந்துவனவுமான, புரவி - குதிரைகள், வாயிடை எரி உடை வடவை போன்ற - வாயிலே அக்கினியையுடைய வடவையென்னும் பெண்குதிரையை யொத்தன; (எ - று.)

வடவை யென்பது - மழை யாற்றுவெள்ளம் முதலியவற்றால் கடலில் நீர் மிகாதபடி கடலினிடையேயிருந்து அந்நீரையுறிஞ்சுமாறு தன்முகத்தில் அக்கினியைக்கொண்டதொரு பெண்குதிரை யென்று நூல்கள் கூறும். முகத்திற் செந்நீரைக்கொண்டு கடலினிடையே விழுந்த குதிரைகட்கு - செந்தீயைத் தம்முகத்திற்கொண்ட வடவையை உவமையாகக் குறித்தார்; தன்மைத் தற்குறிப்பேற்றவணி. (சக)

சஉ. வரிந்துறவல்லிதிற்சுற்றிவாலினால்
விரிந்துறவீசலிற்கடலின்வீழ்குநர்
திரிந்தனர்செறிகயிற்றரவினாற்றிரி
யருந்திறன்மந்தரமனையராயினார்.

(இ - ள்.) வாலினால் - (அநுமானது) வாலினால், வல்லிதின் சுற்றி உற வரிந்து - பலமாகச்சுற்றி இறுகக்கட்டப்பட்டு, விரிந்து உற வீசலின் - வெகுதூரஞ் செல்லும்படி வீசியெறிதலினால், கடலின் வீழ்குநர் திரிந்தனர் - சமுத்திரத்தில்விழுந்தவராய்ச் சுழல்கின்ற அரக்கவீரர்கள்,— கயிறு செறி அரவினால் திரி அரு திறல் மந்தரம் அனையர் ஆயினார் - கயிறாகப்பொருந்திய வாசுகியென்னும் நாகத்தாலே சுழல்வதான மிக்கதிண்மையையுடைய மந்தரமலையை யொப்பவரானார்கள்; (எ - று.)

கடலில்விழுந்து சுழல்கிற அரக்கவீரர்க்கு - பாற்கடலிற் சுழன்ற மந்தரமலை உவமையாயிற்று; இதுவும் - முன்னைய அணியே. (சஉ)

[இரத்தப்பெருக்கின் வருணனை.]

சங. வீரன்வன்றடக்கையாலெடுத்துவீசிய
வார்மதக்களிற்றினிற்றேரின்வாசியின்
மூரிவெங்கடல்புகக்கடிதின்மூழ்கின
வூரின்வெங்குருதியாறரைபவோடின.

(இ - ள்.) ஊறின் வெம் குருதி யாறு - விரைந்துசெல்லுதலையுடைய உஷ்ணமான இரத்தப்பெருக்குக்கள்,—வீரன் வல் தட கையால் எடுத்து வீசிய - அநுமான் வலிய பெரியகைகளால் எடுத்துவீசியெறிந்த, வார் மதம் களிற்றினில் - ஒழுகுகின்ற மதநீரையுடைய யானைகளினும், தேரின் - தேர்களினும், வாசியின் - குதிரைகளினும், மூரி வெம் கடல் புக கடிதின் முந்தின - வலிய அச்சந்தருகிற கடலிலே சென்றுவிழும்படி மிகவும்விரைந்தனவாய், இரைப்ப ஓடின - பேரொலியுடையனவாய் ஓடின ; (எ - று.)

அநுமான்வீசியெறிந்த யானைமுதலியன கடலிற்சென்று வீழ்தற்குமுன்னே அவற்றின் இரத்தப்பெருக்குக்கள் சென்று வீழ்ந்தன வென்றபடி. 'வார் மதகரியினில்', 'ஈர்ப்பவோடின' என்பன - பாடாந்தரம். (௪௩)

[பிணக்குவியல்களின் வருணனை.]

௪௪. பிறைக்கடையெயிற்றனபிலத்தின்வாயன
கறைப்புனல்பொறிகளோடுமிழுங்கண்ணன
வுறைத்தபுபடையனவுதிர்ந்தயாக்கைகண்
மறைத்தனமகரதோரணத்தைவானுற.

(இ - ள்.) கடை பிறை எயிற்றன - வாயின்இருபுறத்தோரங்களிலும் பிறைச்சந்திரன்போன்ற பற்களையுடையனவும், பிலத்தின் வாயன - குகை போன்ற வாய்களையுடையனவும், கறை புனல் பொறிகளோடு உமிழும் கண்ணன - கறைபடிந்தன்மையுள்ள இரத்தநீரையும் நெருப்புப் பொறிகளையும் வெளிவிடுகின்ற கண்களையுடையனவும், உறை தபு படையன - உறைகளினின்று நீக்கியெடுத்த ஆயுதங்கள் பொத்துகொள்ளப்பெற்றனவுமான, உதிர்ந்த யாக்கைகள் - உயிரொழிந்து கீழ்விழுந்துள்ள பிணக்குவியல்கள், வான் உற - ஆகாயத்தையளாவ, மகரதோரணத்தை - மகரத்தின்வடிவம் அமைந்துள்ள அந்தத்தோரணவாயிலை, மறைத்தன - மூடிவிட்டன; (எ - று.)

பிணங்கள் மிகவுந்திரண்டிருந்ததனால், தோரணவாயிலை மறைத்தன வென்க; இதனால், பிணக்குவியலின் மிகுதியை விளக்கியவாறு. 'உறைப்புறு படையின வுதிரயாக்கைகள்' என்றும் பாடம். (௪௪)

[கவிக்கூற்று.]

௪௫. குன்றுளமரமுளகுலங்கொள்பேரெழு
வொன்றலபலவுளவுயிருண்பானுள
னன்றினர்பலருளரையன்கையினிற்
பொன்றுவதல்லதுபுறத்துப்போவரோ.

(இ - ள்.) (படைக்கலமாக உதவுமாறு), குன்று உள மரம் உள குலம் கொள் பேர் எழு ஒன்று அல பல உள - மலைகளும் மரங்களும் சிறப்புப்பொருந்திய பெரிய எழுக்களும் என்றஇவை பலவாகவுள்ளன; உயிர் உண்பான் உளன் - (இறந்த) உயிரைக்கொண்டுபோகுமாறு யமனும் சித்தமாகவுள்ளான்; அன்றினர்

பலர்உளர் - சினந்துபோர்செய்யுமாறு அரக்கவீரர்பலரும் இருக்கின்றனர்; (இப்படியிருப்பதனுல்), ஐயன் கையினில் பொன்றுவது அல்லது - அநுமான்கையினுல் (அவ்வரக்கர்) இறந்தொழிதலன்றி, புறத்து போவரோ - உயிர்தப்பிச்செல்வாரோ? [செல்லா ரென்றபடி;] (எ - று.)

அரக்கவீரர் இறந்தொழிதற்கு வேண்டியன யாவும் நிரம்பியிருத்தலால், அவர்கள் யாவரும் இறந்தொழிதலில் வியப்பில்லையென்று தெரிவித்தவாறு 'ஐயன் கையுள' என்றும் பாடம். (சரு)

[அநுமான் அரக்கர்யாவரையும் அழித்தொழித்தல்.]

சசு. முழுமுதற் கண்ணுதன் முருகன் றாதைகை
மழுவெனப் பொலிந்தொளிர் வயிர வான்றனி
யெழுவினிற் பொலங்கழ லரக்கரீண்டிய
குழுவினைக் களப்படக் கொன்று நீக்கினன்.

(இ - ள்.) (அநுமான்),—முழுமுதல் - முதல்மூர்த்திகளிற்சேர்ந்தவனுகிய, கண் நுதல் - (நெருப்புக்) கண்ணை நெற்றியிலேகொண்ட, முருகன் தாதை - முருகக்கடவுளின் தந்தையாகிய சிவபிரானது, கை மழு என - கையிலேந்திய மழுவாயுதம்போல, பொலிந்து ஒளிர் - மிக்குவிளங்குகிற, வயிரம் - உறுதியான, வான் தனி எழுவினில் - சிறந்த ஒப்பற்ற இருப்புத்தூணினுல், பொலம் கழல் அரக்கர் ஈண்டிய குழுவினை - அழகிய வீரக்கழலையணிந்த அரக்கருடைய நெருங்கிய கூட்டத்தை, களம் பட கொன்று நீக்கினன் - போர்க்களத்திலே இறந்துவீழுமாறு கொன்றொழித்தான்; (எ - று.)

சிவபெருமானது அமிசமாய்த்தோன்றிய அநுமான் கைக்கொண்ட எழுவுக்கு - அந்தச சிவபிரான் கையிற்கொண்ட மழு உவமையாதற்கு ஏற்கும். 'குழுவினைக் கரிப்பட' என்றும் பாடம். (சசு)

வேறு.

[தமதுசேனைகள்யாவும் அழிவுற, பஞ்சசேனுபதிகள் தாமே போர்செய்யுமாறு அநுமானை நெருங்கிவருதல்.]

சஎ. உலந்தது தானையு வந்தன ரும்பர்
அலந்தலை யுற்றதவ் வாழியி லங்கை
கலந்தத ழுங்குர லின்கட லோதை
வலந்தரு தோளவ ரைவரும் வந்தார்.

(இ - ள்.) தானை உலந்தது - (பஞ்சசேனுபதிகளின்) சேனைமுழுவதும் அழிந்திட்டது; (அதுகண்டு), உம்பர் உவந்தனர் - (முன்பு இரக்கமும் அவலமும் துளக்கும் எய்திய) தேவர்கள் (அவை நீங்கி) மனமகிழ்ந்தார்கள்; அ ஆழி இலங்கை - கடல்சூழ்ந்த அவ்விலங்காநகரம், அலந்தலை உற்றது - குழப்பமடைந்தது; அழும் குரலின் கடல் ஓதை கலந்தது - (இலங்கையிலுள்ளாரது) அழுகுரலாகிய கடலோசையானது எங்கும் பரவிற்று; (அப்போது), வலம் தரு தோளவர் ஐவரும் - (இதுவரையில்)வெற்றிபொருந்திய தோளையுடையவராகிய பஞ்சசேனுபதிகளும், வந்தார் - (அநுமான்மீது நெருங்கி) வந்தார்கள்; (எ - று.)

அலந்தலையென்ற சொல் கலக்கமென்ற பொருளில் வருதலை "ஐயபுழுதி யுடம்பளைக்கிவள்பேச்சு மலந்தலையாய்" என்ற இடத்துங் காண்க. 'கலந்தத ழுங்குரல் கண்டவர்நின்ற' என்றும் பாடம்.

இது முதற் பதினெழுகவிகள் - பெரும்பாலும் முதல் மூன்றுசீர்கள் விளச் சீர்களும், ஈற்றுச்சீரொன்று மாச்சீருமாகிவந்த அளவடிநான்குகொண்ட கலிவிருத்தங்கள். (௪௪)

[அந்தப் பஞ்சசேனாபதிகள் அரிதிற்சென்று அனுமானை நெருங்கி அம்புமழைபொழிதல்.]

௪௫. ஈர்த்தெழு செம்புன லெக்கரி ழுக்கத்
தேர்த்துணை யாழிய ழுந்தினர் சென்று
ஆர்த்தன ராயிர மாயிர மம்பாற்
றூர்த்தன ரஞ்சனை தோன்றலு நின்றான்.

(இ - ள்.) ஈர்த்து எழு செம் புனல் எக்கர் இழுக்க - (பிணக்குவியல்களை) இழுத்துக்கொண்டு செல்லுகின்ற இரத்த வெள்ளத்தினிடையே யுள்ள மேடுகள் (சக்கரங்களைத் தம்மிடத்துப்) புதையச்செய்ய, தேர் துணை ஆழி அழுந்தினர் சென்று - தேர்செல்வதற்கு உதவியாயுள்ள தேர்ச்சக்கரங்கள் புதையப் பெற்றவர்களாய், (அநுமானை ஐவரும் கிட்டி), ஆர்த்தனர் - ஆரவாரஞ்செய்து, ஆயிரம் ஆயிரம் அம்பால் - பல ஆயிரக்கணக்கான அம்புகளினால், தூர்த்தனர் - (அநுமானுடல் முழுவதையும்) மறைத்தார்கள்; அஞ்சனை தோன்றலும் - அஞ்சனாதேவியின் குமாரனாகிய அநுமானும், நின்றான் - (சலியாது) நின்றான்; (எ - று.) (௪௫)

[அநுமான் சேனாபதிகள்எய்தஅம்புகளையழிய, பின்பு ஒருத்தனுடைய தேர்ப்பொறியைச்சிதைத்தல்.]

௪௬. எய்தகடுங்கணை யாவையு மெய்தா
தொய்தக லும்படி கைகளி னூறாப்
பொய்தகவொன்று பொருந்து நெடுந்தேர்
செய்தகடும்பொறி யொன்று சிதைத்தான்.

(இ - ள்.) எய்த - (தன்மேற் பஞ்சசேனாபதிகள்) பிரயோகித்த, கடுங் கணை யாவையும் - கொடிய அம்புகளெல்லாவற்றையும், எய்தா தொய்து அகலும்படி - தன்மேற்படாமல் எளிதில் ஒழிந்துபோம்படி, கைகளின் நூறா - (தனது) கைகளினாற் பிசைந்துவிட்டு, (பிறகு அநுமான்), நெடுந் தேர் - (பஞ்ச சேனாபதிகளுள்ஒருவனது)பெரிய தேரிலே,—பொய்து அகடு ஒன்று பொருந்தி - துளைக்கப்பட்டு மத்தியில் நாட்டப்பட்டதாகிப் பொருந்தி, செய்த - செய்திருந்த, கடும் பொறி ஒன்று - விரைந்துசெல்லுதற்கு உரிய யந்திரமொன்றை, சிதைத்தான் - அழித்தான்; (எ - று.)

தன்மேற் பஞ்சசேனாபதிகள் மிகுதியாகப்பொழிந்த அம்புமழைகளைத் தன்மேற் படாதபடி தன்கைகளினாலேயே பிசைந்தொழித்து, பின்பு அநுமான் அந்தப்பஞ்சசேனாபதிகளை யழிக்கக் கருதி, அவர்களுள் ஒருவனது தேரின் இயந்திரத்தைச் சிதைத்தன னென்பதாம். தேர்ப்பொறி - சக்கரம் எனக் கொள்ளுதலு முண்டு. பஞ்சசேனாபதிகள் அநுமானைச் சூழ்ந்துகொண்டு பொருகையில், அவர்களுள் ஒருவனான துர்த்தரனென்பவன் அநுமானைத்தாக்கிப் பேரொலிசெய்தவண்ணம் வானத்திலெழுந்து அவ்வநுமான்மீது அம்பு மழைகளைப் பொழிய, அப்போது அநுமான் இடி வீழ்வதுபோல அந்தத் தேரில் தாவிக்குதித்துக் குதிரை முதலியவற்றை யழிக்க, அந்தத்தேரினின்று உயிர்நீங்கியவனாய்த் துர்த்தரன் நிலத்தில் விழுந்திட்டா னென்று முதனூலிற் கூறியுள்ளது. (௪௯)

[இதுவும், அடுத்த கவியும் - அநுமான் துர்த்தரனென்ற சேனாபதியோடு போர்நது அவனையழித்தலைத் தெரிவிக்கும்.]

௫௦. உற்றுறுதேர்சிதையாமுனுயர்ந்தான்
முற்றினவீரனைவானின்முனிந்தான்
பொற்றிரணீளெழுவொன்றுபொறுத்தா
னெற்றினனஃதவன்வில்லினிளேற்றான்.

(இ - ள்.) உற்று உறு தேர் சிதையா முன் - ஓடிக்கொண்டேயிருந்த (தனது)தேர் அழிவதற்குமுன்னமே, [அழிந்தவுடனே மிகவிரைவில்],—உயர்ந்தான் - (அத்தேரினின்று) வானத்திற் கிளம்பினவனாகிய, முற்றின வீரனை - சிறந்த வீரனாகிய அந்தத்துர்த்தரனென்ற அரக்கனை,—(அநுமான்),—வானில் முனிந்தான் - வானத்திலிருக்கும்போதே (அவன்மீது) கோபங்கொண்டு, பொன் திரள் நீள் எழு ஒன்று பொறுத்தான் - கரும்பொன்னால் [இரும்பினால்] இயன்ற திரண்ட நீண்ட தூணொன்றைத் தான் தாங்கினவனாய், எற்றினன் - அடித்தான்; அஃது - அந்த இருப்புத்தூணை, அவன் - அவ்வரக்கன், வில்லினின் ஏற்றான் - (தன்) வில்லினால் எதிர்த்துத் தாக்கினான்; (எ - று.)

முற்றின வீரனை - அநுமானை என்றுகொண்டு உரைக்கவும் இடமுண்டு. (௫௦)

௫௧. முறிந்ததுமூரிவில்முறியேகொ
டெறிந்தவரக்கனோர்வெற்பையெடுத்தா
னறிந்தமனத்தவனவ்வெழுவேகொ
டெறிந்தவரக்கனையின்னுயிருண்டான்.

(இ - ள்.) (அப்பொழுது,) மூரி வில் - (எழுவை யெதிர்த்த அரக்கனுடைய) வலிய வில்லானது, முறிந்தது - (அவ்வெழுவினால் தாக்கப்பட்டு) முறிந்திட்டது; எறிந்த அரக்கன் - (அநுமானால்) தாக்கப்பட்ட துர்த்தரனென்ற அந்த அரக்கன்,—அ முறியே கொடு - (தனதுவில்) முறிந்த அந்தக்காரணத்தினால், (போர் செய்யும்படி), ஓர் வெற்பை எடுத்தான் - (அப்போது) ஒரு

மலையை யெடுத்து (அநுமான்மீது) எறிந்தான்; அறிந்த மனத்தவன் - (போர்த் தொழிலை) அறிந்தமனத்தையுடையவனுன அந்த அநுமான்,—அ எழுவே கொடு- (தனதுகையிற்கொண்டிருந்த) அந்த இருப்புத்தூணைக் கொண்டே, எறிந்த அரக்கனை - (தன்மீது மலையை) வீசியெறிந்த அந்தத் தூர்த்தனென்ற அரக்கனை, இன் உயிர் உண்டான் - கொன்முன்; (எ - று.) (ருக)

[இதுவும், அடுத்த கவியும் - மற்றைநான்கு சேனுபதிகளும் அநுமானும் பொருந்தமையைக் கூறும்.]

ருஉ. ஒழிந்தவர்நால்வருமூழியுருத்த
கொழுந்துறுதீயெனவெஞ்சிலைகோலாப்
பொழிந்தனர்வாளிபுகைந்தனகண்கள்
விழுந்தனசோரியவ்வீரன்மணித்தோள்.

(இ - ள்.) ஒழிந்தவர் நால்வரும் - (தூர்த்தனை) யொழிந்த மற்று நான்கு சேனுபதிகளும்,—ஊழி - கற்பாந்தகாலத்தில், உருத்த - உக்கிரங்கொண்டு வெளிக்கிளம்பின, கொழுந்து உறு தீ என - ஜ்வாலைபொருந்திய நெருப்புப் போல (ச் சீறி), வெஞ் சிலை கோலா - கொடிய (தமது) விற்களை வளைத்து, வாளி பொழிந்தனர் - அம்புகளை (அநுமான்மீது) சொரிந்தார்கள்; கண்கள் புகைந்தன - (அவ்வரக்கருடைய) கண்கள் (கோபத்தினால்) புகைகக்கின; அ வீரன் மணி தோள் - அழகிய வீரனுகிய அனுமானது அழகிய தோள்களிலிருந்து, சோரி விழுந்தன - இரத்தம் ஒழுகலாயின; (எ - று.)

'தீயென வெய்துற', 'கோடபர்', என்றும் பாடமுண்டு. (ருஉ)

ருங. ஆயிடைவீரனுமுள்ளமழன்றான்
மாயவரக்கர்வலத்தையுணர்ந்தான்
மீயெரியுய்ப்பதொர்கற்செலவிட்டான்
தீயவரச்சிலையைப்பொடிசெய்தார்.

(இ - ள்.) அ இடை - அப்போது, வீரனும் - அநுமானும், உள்ளம் அழன்றான் - மனங்கொதித்தவனுய்,— மாயம் அரக்கர் வலத்தை உணர்ந்தான் - வஞ்சனையையுடைய அரக்கரது வலிமையை யறிந்து, எரி மீ உய்ப்பது ஓர் கல் செல விட்டான் - நெருப்பை மேலே உமிழ்வதான ஒருகற்பாறையை (அவர்கள்மீது தாக்குமாறு) வீசிவிட்டான்; தீயவர் - கொடிய அச்சேனுபதிகள், அ சிலையை பொடி செய்தார் - அந்தக்கல்லை நீறுக்கிவிட்டார்கள்; (எ - று.) (ருங)

[இதுமுதல் மூன்றுகவிகள் - அநுமான் அவர்களுள் ஒருவனை அழித்தமையைக் கூறும்.]

ருச. தொடுத்ததொடுத்தசரங்கடுரந்த
வடுத்தகன்மார்பினமுழ்ந்தியகன்ற
மிடற்றெழிலான்விடுதேரொடுதொய்தி
னெடுத்தொருவன்றனைவிண்ணினெறிந்தான்.

(இ - ள்.) தொடுத்த தொடுத்த சரங்கள் - (அவ்வரக்கர்கள் மேன்மேல் வில்லில்) தொடுத்தவிட்ட அம்புகள், துரந்த - (அங்குநின்று) வெளிப்பட்டனவாய், அகல் மார்பின் அடுத்து அழுந்தி அற்ற - (அநுமானது) பரந்தமார்பிலே பொருந்தித்தைத்து அப்பாற்சென்றன; (அப்போது), மிடல் தொழிலான் - வலிமையுடனே போர்த்தொழில்செய்கின்ற அநுமான்,— ஒருவன்தனை - (நான்குசேனாபதியருள்) ஒருவனை, விடு தேரொடு மெய்தின் எடுத்து - (அவன்) செலுத்திவந்த தேருடனே விரைவாகஎடுத்து, விண்ணின் எறிந்தான் - ஆகாயத்தில் வீசினான்; (எ - று.)

அநுமானால் வீசியெறியப்பட்டவன், விரூபாட்சனென்னலாம். 'அடுத்தன மார்பினழுந்தியனன்ற,' 'தேரொடுமெய்தி' என்பன பாடாந்தரங்கள். ()

௫௫. எய்ந்தெழுதேரிமிழ்விண்ணினையெல்லா
நீந்தியகோடிநிமிர்ந்ததுவேக
போய்ந்தநுவீழ்வதன்முன்னுயர்பாரிற்
பாய்ந்தவன்மேலுடன்மாருதிபாய்ந்தான்.

(இ - ள்.) எய்ந்து எழு தேர் - (அநுமானால்) எடுத்து எறியப்பட்ட அந்தத்தேரானது, இமிழ் விண்ணினை எல்லாம் - ஒலியைக்குணமாகக்கொண்ட ஆகாசத்தினிடம் முழுவதிலும், கடிது நீந்தியது - விரைந்து கடந்ததாகி, நிமிர்ந்தது வேகம் ஓய்ந்தது வீழ்வதன் முன் - (தனது) மிகுந்ததான வேகம் ஓய்ந்து போய்க் கீழ்வீழ்வதற்குமுன்னமே, உயர் பாரில் பாய்ந்தவன் மேல் - சிறந்தபூமியிலே குதித்தவனாகிய அந்தவிரூபாட்சனென்ற அரக்கன்மேல், உடன் - உடனே, மாருதி - அநுமான், பாய்ந்தான்—; (எ - று.)

ஆகாசம் சப்தத்தைக் குணமாகக்கொண்டதென நூல்கள் கூறுதலால், 'இமிழ் விண்' எனப்பட்டது. 'எய்ந்தெழுதேருமவ்விண்ணினை யெல்லாம்' என்றும் பாடம். (௫௫)

௫௬. மதித்தகளிற்றினின்வாளரியேறு
கதித்துப்பாய்வதுபோற்கதிகொண்டு
குதித்தனன்மால்வரைமேனிகுழம்ப
மிதித்தனன்வெஞ்சினவீரருள்வீரன்.

(இ - ள்.) மதித்த களிற்றினில் - மதங்கொண்ட ஆண்யானையின்மேல், வாள் அரி ஏறு கதித்து பாய்வது போல் - கொடிய ஆண்சிங்கம் வேகங்கொண்டு பாய்வதுபோல,—வெஞ்சினம் வீரருள் வீரன் - கொடுங்கோபமுள்ள வீராதிவீரனாகிய அநுமான், கதி கொண்டு குதித்தனன் - விரைவாக அந்த விரூபாட்சன்மேற் குதித்தவனாய், மால் வரை மேனி குழம்ப மிதித்தனன் - பெரியமலைபோன்ற (அவ்வரக்கனுடைய) உடம்பு சிதைந்து இரத்தக்குழம்பும்படி துவைத்துக்கொன்றிட்டான்; (எ - று.)

'கதிர்த்தது', 'குதித்தவன் மால்வரைதோள்கள்' என்பன பாடாந்தரங்கள்.

[இதுமுதல் ஆறுகவிகள் - அநுமான் பின்னும் இரண்டு சேனாபதிகளைப் போர்செய்து தொலைத்தலைக் கூறும்.]

ருஎ. மூண்டசினத்தவர்மூவர்முனிந்தார்
தூண்டியதேரர்சரங்கடுரந்தார்
வேண்டியவெஞ்சமம்வேறுவிளைப்பார்
யாண்டினியேகுதியென்றெதிர்சென்றார்.

(இ - ள்.) மூண்ட சினத்தவர் மூவர் - கோபம்மூண்ட மூன்றுசேனைபதிகள், முனிந்தார் - கோபங்கொண்டு, தூண்டிய தேரர் - (தமது) தேரைச் செலுத்தினவர்களாய், சரங்கள் துரந்தார் - (அநுமான்மீது) அம்புகளைத் தொடுத்தவர்களாய், வேண்டிய வெம் சமம் வேறு விளைப்பார் - (தாங்கள்) விரும்பிய கொடியபோரை வேறாக [புதிதாக] மீண்டுஞ் செய்யத்தொடங்கியவர்களாய், இனி யாண்டு ஏகுதி என்று - 'இப்போது நீ எங்கு ஓடப்பார்க்கிறாய்?' என்று சொல்லிக்கொண்டே, எதிர் சென்றார் - (அநுமானை) எதிர்த்துச் சென்றார்கள்.

இம்மூவர் பெயர் - முறையே, யூபாட்சன், ப்ரகஸன், பாஸகர்ணன் என்பது. 'சினத்தினர்', 'யாண்டினியேகுவது' என்பன பாடாந்தரம். (ருஎ)

ருஅ. திரண்டுயர்தோளிணையஞ்சனைசிங்க
மரண்டருவிண்ணுறைவார்களுமஞ்ச
முரண்டருதேரவையாண்டொருமூன்றி
னிரண்டையிரண்டுகையிற்கொடெழுந்தான்.

(இ - ள்.) திரண்டு உயர் தோள் இணை அஞ்சனை சிங்கம் - பருத்துஉயர்ந்த இரண்டுதோள்களையுடைய ஆஞ்சநேயன்,—அரண் தரு விண் உறைவார்களும் அஞ்ச-காவலையுடைய தேவலோகத்தில்வாழ்பவரான தேவர்களும் அஞ்சும்படி, முரண்தரு-(தன்னோடு)மாறுபட்ட, தேர் அவை ஒரு மூன்றின் - மூன்று தேர்களுக்குள்ளே, இரண்டை - இரண்டுதேர்களை, ஆண்டு - அப்போது, இரண்டு கையில் கொடு எழுந்தான் - (தனது) இரண்டுகைகளிலே யெடுத்துக் கொண்டு கிளம்பினான்; (எ - று.)

இரண்டுதேர்களையும் இரண்டுகழற்காய்போல மிகஇலேசாகத் தன் இரு கைகளிலுங் கொண்டு அநுமான் எழுந்தனனென்க. இனி, போரின் கொடுமையைக் கண்டு தேவர்கள்அஞ்சினா ரென்னலுமாம். 'மருண்டு விசும்புறைவோர்களுமஞ்ச' என்றும் பாடம் காண்கிறது. 'இரண்டும்' என்றும் பாடம். ()

ருகூ. தூங்கியபாய்பரிசூதருலந்தார்
வீங்கியதோளவர்விண்ணின்விசைத்தா
ராங்கதுகண்டவர்போயகலாமு
னோங்கியமாருதியொல்லையினுற்றான்.

(இ - ள்.) (அப்படி அநுமான் எழுந்தவிசையினால்),—தூங்கிய பாய் பரி சூதர் - (அத்தேர்களிற்)கட்டப்பட்டுள்ள பாய்ந்துசெல்லுங்குதிரைகளும் பாகர்

களும், உலைந்தார் - உயிரொழிந்தார்கள்; வீங்கிய தோளவர் - பருத்ததோள்களையுடைய அவ்வரக்கசேனாபதிகள் இருவரும், விண்ணின் விசைத்தார் - (அத்தேரினின்று) ஆகாயத்தில் விரைந்துசென்றார்கள்; ஆங்கு - அப்போது, அது கண்டு - அவர்கள் வானத்திற்செல்வதைக் கண்டு, அவர் போய் அகலா முன் - அவ்வரக்கர்கள் (வானத்திற்சென்று)மறைந்து நீங்குவதற்குமுன்னமே, ஓங்கிய மாருதி - பெருவடிவுபடைத்த அநுமான், ஒல்லையின் உற்றான் - விரைவில் (அவர்களைச்சென்று) கிட்டினான்; (எ - று.)

பரிகூத ருலைந்தார் - அஃறிணையும் உயர்திணையும் விரவி, சிறப்பினால் உயர்திணைமுடிபைக் கொண்ட திணைவழுவமைதி. 'ஓங்கினன்மாருதி' என்பதும் பாடம். (௪௯)

௫௦. காணிமிர்வெஞ்சிலைகையினிறுத்தா
னனவர் தூணியும்வாளுமகைத்தா
னேனையவெம்படையில்லவரெஞ்சார்
வானிடைநின்றுயர்மல்லின்மலைந்தார்.

(இ - ள்.) (சென்றுகிட்டின அநுமான்),—கால் நிமிர் வெம் சிலை கையின் இறுத்தான் - நீண்டகழுத்தையுடைய கொடியவிற்களைக் கையினால் முறித்தான்; (அன்றியும்), ஆனவர் தூணியும் வாளும் அகைத்தான - அவ்வரக்கருடைய அம்பறாத்தூணிகளையும் வாள்களையும் சின்னபின்னப்படுத்தினான்; ஏனைய வெம் படை இல்லவர் - மற்றும்வேறே ஒருஆயுதமும் இல்லாதவரான அவ்வரக்கரிருவரும்,—எஞ்சார் - பின்வாங்காதவர்களாய், வானிடைநின்று - ஆகாயத்திலிருந்துகொண்டே, உயர் மல்லின மலைந்தார் - சிறந்தமற்போரினால் (அநுமானோடு) பொருதார்கள்; (எ - று.)

ஆயுதங்கொண்டுபொருதற்குத் தம்மிடத்துள்ள படைகள்யாவும் அநுமானால்தொலைந்திட்டதனால் அவ்வரக்கர்கள் அநுமானோடு மற்போர் பொரலாயினரென்க. மற்போர் - ஆயுதமின்றிஉடல்வலிமைகொண்டுசெய்யும்போர். 'ஆனவர்தூணியுமம்புமிறுத்தான்' என்றும் பாடம். (௫௦)

௫௧. வெள்ளெயிற்றர்கறுத்துயர்மெய்யர்
பிள்ளவிரித்தபிலப்பெருவாயர்
கொள்ளவுருத்தடர்கோளரவொத்தா
ரொள்ளிகல்வீரனருக்கனையொத்தான்.

(இ - ள்.) வெள்ளை எயிற்றர் - வெண்மையான பற்களையுடையவர்களும், கறுத்து உயர் மெய்யர் - கறுத்து உயர்ந்த உடம்பையுடையவர்களும், பிள்ள விரித்த பிலம் பெரு வாயர் - விரியும்படிதிறந்த குகைபோன்ற பெரியவாயையுடையவர்களுமான அவ்வரக்கரிருவரும்,—கொள்ள உருத்து அடர் கோள் அரவு - உட்கொள்ளும்படி [க்ரஸிக்கும்படி] கோபித்துநெருங்குகின்ற வலிய இராகுகேதுக்களென்னும் பாம்புகளை, ஒத்தார்—; ஒள் இகல் வீரன் - மிக்க

பராக்கிரமத்தையுடைய வீரனாகிய அநுமான், அருக்கனை ஒத்தான் - சூரியனைப் போன்றான்; (எ - று.)

முதலில் இராகுகேதுக்களால் சூரியன் விழுங்கப்படுவதுபோலத் தோன்றினாலும் பிறகு உட்கொள்ளப்படாமல் ஒளியோடுவிளங்குவதுபோல, முதலில் இவ்வரக்கரிருவரால் அநுமான் தாக்கப்பட்டாலும், உடனே, அவர்களை வென்று விளங்குவ னென்பது கருத்து. மேற்செய்யுளில் இவ்விவரங் காண்க. வெள்ளையெயிற்றர் கறுத்துயர் மெய்யர் - முரண்டொடை. (சுக)

சுஉ. தாம்பெனவாலின் வரிந்துயர் தாளோ
டேம்பலிலாரிரு தோள்களிறுத்தான்
பாம்பெனநீங்கினர்பட்டனர் வீழ்ந்தா
ராம்பனெடும்பகைபோல்பவனின்றான்.

(இ - ள்.) தாம்பு என - கயிறுபோல, வாலின் - (தனது) வாலினாலே, வரிந்து - கட்டி, ஏம்பல் இலார் - சிறிதும் சலியாது போர்செய்த அவ்வரக்க வீரருடைய, உயர் தாளோடு இரு தோள்கள் - நீண்ட கால்களையும் தோள்களையும், இறுத்தான் - (அநுமான்) முறித்தான்; (அவ்வரக்கரிருவர்களும்), பாம்பு என நீங்கினர் - (சூரியனைக்கிரசிக்கின்ற இராகுகேதுக்களென்னும் பாம்புகள் நீங்குவது)போல (அநுமானை) நீங்கி, பட்டனர் வீழ்ந்தார் - இறந்து வீழ்ந்தார்கள்; ஆம்பல் நெடும்பகை போல்பவன் - ஆம்பலென்னும் நீர்ப்பூவுக்குப் பகைவனான சூரியனை யொத்த அநுமான், நின்றான் - (தான் யாதோருபாதியுமின்றி) விளங்கிநின்றான்; (எ - று.) (சுஉ)

[எஞ்சிய சேனாபதியையும் அநுமான் ஒழித்தல்.]

சுங. நின்றனனேனையனின்றது கண்டான்
குன்றிடைவாவுறுகோளரி போல
மின்றிரி வன்றலை மீது குதித்தான்
பொன்றிய வன்புவிதேரொடு புக்கான்.

(இ - ள்.) ஏனையன் நின்றனன் - ஒழிந்த மற்றொருவனாகிய சேனாபதி எதிர்த்துநின்றான்; நின்றது - (அவ்வாறு தன்னை) எதிர்த்துநின்றதை, கண்டான் - கண்டவனாகிய அநுமான் — குன்றிடை வாவுறு கோள் அரி போல - மலையின்மேல் தாவிப்பாய்கிற வலிய சிங்கம்போல, மின் திரி வல் தலைமீது - ஒளிவீசுகின்ற (அவ்வரக்கனது) வலிய தலையின்மேல், குதித்தான் —; அவன் - அவ்வரக்கன், பொன்றி - இறந்து, புவி - பூமியில், தேரொடு புக்கான் - தேரோடுஅழுந்தி இறந்திட்டான்; (எ - று.)

இவ்வரக்கன்பெயர் பாசகர்ண னென்னலாம். அநுமான் தன்னோடு எதிர்த்துநின்ற பாசகர்ணனென்ற அரக்கன்தலைமீது குதிக்க, அவ்விசையினால் அவ்வரக்கன் தரையில் தேரோடு புதைந்து அழிந்தன னென்றவாறு. (

வேறு

[கவிக்கூற்று : பஞ்சசேனாபதிகள் அநுமானால் இறந்ததைப்பற்றிய வருணனை.]

சுச. வஞ்சமுங் களவும் வெஃகி வழியலா வழிமே லோடி
நஞ்சினுங் கொடிய ராகி நவைசெயற் குரிய நீரார்
வெஞ்சின வரக்க ரைவ ரொருவனே வெல்லப் பட்டா
ரஞ்செனும் புலன்க ளொத்தா ரவனுநல் லறிவை யொத்தான்.

(இ - ள்.) வஞ்சமும் களவும் வெஃகி - வஞ்சனையையும் களவுத்தொழிலையும் விரும்பி, வழி அலா வழிமேல் ஓடி - நீதியல்லாத தீயவழியிற் சென்று, நஞ்சினும் கொடியர் ஆகி - விஷத்தினும் கொடுமையையுடையவர்களாய், நவைசெயற்கு உரிய நீரார் – (பிறர்க்குத்) தீங்குசெய்தலையே உரியகுணமாகக் கொண்டதன்மையுடையவர்களாய், வெல்லப்பட்டார் - (அநுமானால்) வெல்லப் பட்டவரான, வெம் சினம் அரக்கர் ஐவர் - கடுங்கோபமுடைய அரக்கராகிய பஞ்சசேனாபதிகள், அஞ்சு எனும் புலன்கள் ஒத்தார் - பஞ்சேந்திரியங்களைப் போன்றார்கள்; ஒருவனே அவனும் - தனிவீரனாய் (அவ்வைவரையும் வென்ற) அநுமானும், நல் அறிவை ஒத்தான் - சிறந்த அறிவைப்போன்றான்; (எ - று.)

பெருவீரனாய்த்தனிப்பட்டவனை அநுமான் மிகக்கொடியராய் வெல்வதற்குஅரிய பஞ்சசேனாபதிகளை வென்றதற்கு - தீயவழியிலேயே செல்லுந் தன்மையனவாய் அடக்கமுடியாத பஞ்சேந்திரியங்களையும் எளிதில் வெல்லுந் தத்துவவுணர்ச்சியை உவமை கூறினார். 'வெல்லப்பட்ட அஞ்செனும்புலன்கள்' என்றும் பாடமுண்டு. புலன் - பொறிக்கு, இலக்கணை.

இதுமுதல் அடுத்தபடலம் உ௯ - ஆங் கவிவரையில் முப்பத்தொருகவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும், மற்றை நான்குசீரும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்குகொண்ட அறுசீராசிரிய விருத்தங்கள். (சுச)

[அரக்கர்யாவரும் போரில் இறந்தொழிந்ததைக் காவலாளர்யாவரும் காணுதல்.]

சுரு. நெய்தலையுற்றவேற்கைநிருதரச்செருவினேர்ந்தா
ருய்தலையுற்றுமீண்டாரொருவருமில்லையுள்ளார்
கைதலைப்பூசல்பொங்கக்கடுகினர்காலனுட்கு
மைவருமுலந்ததன்மையனைவருமமையக்கண்டார்.

(இ - ள்.) உள்ளார் அனைவரும் - (அந்தச்சோலையிற்) காவலாகவுள்ளவர்களான பருவத்தேவர்யாவரும்,--அ செருவில் - அந்தப்போரில், நேர்ந்தார்-(போர் செய்யும்படி தம்மோடு) வந்தவர்களாய், நெய் தலை உற்ற வேல் கை நிருதர் - நெய்யை முனையிலே பூசப்பெற்ற வேலாயுதத்தைக் கையிலேந்திய அரக்கர்களில், உய்தலை உற்று - உயிர்பிழைத்தலைப் பொருந்தி, மீண்டார் - திரும்பி

(ஊர்க்கு)ச்சென்றவர்கள், ஒருவரும் இல்லை - ஒருவருமில்லையாகி, கைதலை பூசல் பொங்க கடுகினர் - அணிவகுப்பில் பேராரவாரம்மிகும்படி விரைந்துபோர்க்கு வந்தவர்களாகிய, காலன் உட்கும் ஐவரும் - யமனும் அஞ்சும்படி கொடுந்தன்மையுடைய பஞ்சசேனாபதிகளும், உலந்த தன்மை - அழிந்துபோனதை, அமையகண்டார் - பிரதயட்சமாகப் பார்த்தார்கள்; (எ - று.)

பொழிலுக்குக்காவலாளிகளாயிருந்த பருவத்தேவர்கள் போர்க்குவந்த பஞ்சசேனாபதிகள் தமது துணைப்படையுடனே யாவரும் இறந்துபோனதைப் பிரதியட்சமாகக்கண்டனரென்க. எதுகைநயம் நோக்கி 'கைதலை'என இயல்பாயிற்று: கை - படைவகுப்பு. இச்செய்யுட்கு வேறுவகையாகப் பொருள்கூறுவது பொருந்துமாயிற் கொள்க. (சுரு)

[இதுவும், அடுத்த கவியும் - பஞ்சசேனாபதிகள் சேனையோடு ஒழிந்ததைச் சோலைகாப்போர் இராவணனிடத்துத் தெரிவித்தல்.]

சுசு. இறக்குறுமின்னேநம்மையிக்குரங்கென்னவேங்கி
மறக்குறுகின்றநெஞ்சின்மாதரைவைதுநோக்கி
யுறக்குறுசொல்லானூழித்தீயெனவுலகமேழுஞ்
சுறக்கொளநோக்குவான்றன்செவித்தொளைதீயச்சொன்னார்.

(இ - ள்.) (யாவரும் இறந்ததைக் கண்கூடாகக் கண்ட காவலாளிகளான பருவத்தேவர்கள்);—'இ குரங்கு - இந்தக்குரங்கானது, (நாம இங்குத்தானே இருந்தால்), நம்மை இன்னே இறுசகுறும் - நம்மையும் இப்பொழுத்த முறித்துக்கொன்றுவிடும்', என்ன - என்று கருதுதலால், ஏங்கி - ஏக்கங்கொண்டு, (அவ்விடத்தைவிட்டு இராவணனுள்ள இடத்திற்குச் சென்று),— மறக்குறுகின்ற நெஞ்சின் மாதரை - (சீதையினிடத்துள்ள காதலால் தம்மைக்கண்ணெடுத்துப்பாராமலிருப்பதுபற்றிக்) கலக்கங்கொண்ட மனத்தையுடைய மாதர்களை, வைது நோக்கி - திட்டியவண்ணம் பார்த்து, உறுக்குறு சொல்லான் - கடுஞ்சொற்கூறுபவனாய், ஊழி தீ என உலகம் எழும் சுறுக்கொள நோக்குவான்தன் - கற்பாந்தகாலத்து அக்கினிபோல உலகமேழும் தீந்துபோம்படி கடும்பார்வைபார்த்துக்கொண்டிருப்பவனாகிய இராவணனது, செவி தொளை - காதுகளின் துவாரங்கள், தீய - தீந்துபோம்படி [கர்ணகடூரமாக], சொன்னார் - (பஞ்சசேனாபதிகளிறந்ததைக்) கூறலானார்கள்; (எ - று.)—இதன் விவரத்தை அடுத்த செய்யுளிற் காண்க.

பொழிலிறுத்தல் கிங்கரர்வதை முதலியவற்றை இராவணனிடத்துக்கூறியதுபோலவே, பருவத்தேவர்கள், பஞ்சசேனாபதிகள்இறந்ததையும் கூறலானார்களென்க. எழுவாய், வருவித்துஉரைக்க. 'மறக்குறுகின்ற......நோக்குவான்'என்ற தொடர் - இராவணனைக் காட்டும். முதலடி - பருவத்தேவர் அநுமானிடத்துஅஞ்சியமையைக் காட்டும். முதலடியில் - 'இறக்குறுமின்னே நம்மைக்குரங்கெனவிரங்கியேங்கி' என்றும் பாடமுண்டு. 'உறுக்குறு சொல்லர்' என்றுபாடங்கொண்டு, சில அரக்கர் என்று எழுவாய் வருவித்து—'நம்மை இப்

போதே இக்குரங்கு வென்றுவிடுமென்று மனமறுகி ஏங்கித் துக்கிக்கின்ற ராக்ஷஸஸ்திரீகளைப் பார்த்துக் கோபித்து அதட்டுஞ் சொல்லராய் வைது விட்டு, சில அரக்கர்கள் ஓடிவந்து, ஊழித்தீயைப்போல எழுவகைப்பட்ட உலகங்களும் எரியும்படி உக்கிரதிருஷ்டியாகப்பார்த்துக்கொண்டு கோபமே ஒருவடிவமெடுத்தாற்போலிருந்த இராவணனுடைய செவித்தொளைகள்வெந்து தீயும்படி பஞ்சசேனாபதிகள்இறந்தசெய்தியைச் சொல்லத்தலைப்பட்டார்கள்' என்று உரைகூறுவாருமுளர்; அவ்வகைப்பாடம்பொருந்துமாயிற் கொள்க. ()

சுஎ. தானையுமுலந்ததைவர் தலைவருஞ்சமைந்தார்தாக்கப்
போனபின்மீள்வேம்யாமேயதுவும்போர்புரிகிலாமை
வானையும்வென்றுளோரைவல்லையின்மடியநூறி
யேனையரின்மைசோம்பியிருந்ததக்குரங்குமென்றார்.

(இ - ள்.) தாக்க - (அந்தக்குரங்கு)தாக்கியதனால்,— தானையும் உலந்தது - சேனையும் அழிந்தது; ஐவர் தலைவரும் - பஞ்சசேனாபதிகளும், சமைந்தார் - இறந்தொழிந்தார்கள்; போன பின் - இவ்வாறானபிறகு, மீள்வேம் - (அங்குநின்று) மீண்டுவந்தோமும், யாமே - (அச்சோலைக்குக் காவலாளிகளான) நாங்களே; அதுவும் - அவ்வாறு நாங்கள் உயிர்தப்பியதும், போர் புரிகிலாமை - (அக்குரங்கு எங்களிடம்வந்து) போர்புரியாமையினாலேயாகும்; (இப்போது), அக்குரங்கும் - அந்தக்குரங்கோவென்றால், வானையும் வென்று உளோரை வல்லையில் மடிய நூறி - ஆகாயத்திலுள்ளதேவர்களையும் ஜயித்தவரான பஞ்சசேனாபதிகளையும் விரைவாகஉயிரொழியும்படிகொன்று, ஏனையர் இன்மை - (தன்னோடு) போர்செய்பவர் எவரும்இல்லாமையால், சோம்பி இருந்தது - செய்தொழிலில்லாமல் சோம்பல்கொண்டு இருக்கின்றது, என்றார் - என்று செய்தி தெரிவித்தார்கள்; (எ - று.)

'தானையுமுலந்ததையா', 'போனபினோடியாருமெய்தும்' என்பன பாடாந்தரம். என்றார் என்ற முற்றுக்கு எழுவாய் வருவித்துஉரைக்க. (சுஎ)

பஞ்சசேனாபதிகள் வதைப்படலம் முற்றிற்று.

---

பதினோராவது

## அட்சகுமாரன்வதைப்படலம்.

இராவணனதுகுமாரனான அட்சனென்பவன் அநுமானாற் கொல்லப்பட்டதைக் கூறும் பாகம்.

[அநுமானோடு போர ஒருப்பட்ட இராவணனைத் தடுத்து அட்சகுமாரன் தன்னை அனுப்ப வேண்டுதல்.]

க. கேட்டலும்வெகுளிவெந்தீக்கிளர்ந்தெழுமுயிர்ப்பனாகித்
தோட்டலர்தெரியன்மாலைவண்டொடுஞ்சுறுக்கொண்டேற
வூட்டரக்குண்டபோலுநயனத்தானெருப்பட்டானைத்
தாட்டுணைதொழுதுமைந்தனடுத்திடைதருதியென்றான்.

(இ - ள்.) கேட்டலும் - (பருவத்தேவர்கள்கூறிய வார்த்தையைக்) கேட்டவுடனே, வெகுளி வெம் தீ கிளர்ந்து எழும் உயிர்ப்பன் ஆகி - கொடியகோபாக்கினியாற் பொங்கிவருகின்ற பெருமூச்சையுடையனாய்,— தோடு அலர் தெரியல் மாலை வண்டொடும் சுறுக்கொண்டு ஏற - இதழ்கள்மலரப்பெற்ற மலர்களைக்கொண்டுதொடுக்கப்பட்ட விளங்குவதான மார்பின்மாலை (அதனிடத்து மொய்க்கின்ற) வண்டுகளுடனே தீந்துவிட, ஊட்டு அரக்கு உண்ட போலும் நயனத்தான் - நிறப்பெற்ற அரக்குப் படியப்பெற்றனபோன்றுள்ளனவான [மிகச்சிவந்த] கண்களையுடையவனாகி, ஒருப்பட்டானை - (அநுமான்மீது போர்க்குச்செல்ல) உடன்பட்டுச் சித்தனாயிருந்த இராவணனை,— மைந்தன் - அட்சகுமாரன்,— தாள் துணை தொழுது - (அவனது) இரண்டுபாதங்களிலும் வணங்கி, தடுத்து - (அவ்விராவணனைப்) போகவொட்டாமல் நிறுத்தி, இடை தருதி - ('நான் சென்று அநுமானைவென்றுவருமாறு எனக்கு) இடந் தருவாயாக', என்றான் - என்றுவேண்டினான்; (எ - று.)

'பஞ்சசேனாபதிகளும் இறந்துவிட்டனர்' என்ற செய்தியைக் கேட்ட மாத்திரத்தில், மனத்திற்பொங்கியெழுந்த கோபாக்கினியாற் பெருமூச்சுத் தோன்றவும், மார்பிலணிந்த மாலை அதனிடத்துமொய்க்கும் வண்டுகளுடனே கரிந்துபோகவும், கண்கள் செவ்வரக்கு ஊட்டப்பட்டனபோலச் சிவந்து தோன்றவும், இனி எவரையும் அனுப்பாமல் தானே அனுமானோடுபொருவதாக நிச்சயித்து அதற்குஏற்ப முயலும் இராவணனைநோக்கி, அவன் தநயனான அட்சகுமாரன் அவன்காலில்விழுந்து அச்செயலில் தன்னையேவுமாறு வேண்டிக்கொண்டனனென்பதாம். இந்த அட்சகுமாரன் தானியமாலினியென்பவளிடம் இராவணனுக்குப் பிறந்த மகனாவன்; கம்பர் மந்தோதரிமகனென்றே எண்ணுமாறு இந்தப்படலத்துக் கூறுகின்றார். இடை தடுத்து - நடுவே தடுத்து, தருதி - விடைதருவா யென்றுகூறுதலும், 'இறைதருதி' என்றுபாடங்கொண்டு-விடைதருவாயென்று பொருள்கூறுதலு முண்டு. 'கிளர்ந்தெழவிலங்கண்மார்பில்' என்றும் பாடம். (க)

[இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்: அட்சகுமாரன் முன்னர்க் கூறியதையே வேறுவகையாற் கூறுதல்.]

உ. முக்கணானூர்தியன்றேன்மூன்றுலகடியிற்றாயோ
னொக்கவூர்பறவையன்றேலவன்றயிலுரகமன்றேற்
றிக்கயமல்லதேற்புன்குரங்கின்மேற்சேறிபோலா
மிக்கடனடியேற்கீதியிருத்தியீண்டினிதினெந்தாய்.

(இ - ள்.) எந்தாய் - எனது தந்தையே! (நம்மோடு பொருவது),— முக்கணான் ஊர்தி அன்றேல் - மூன்றுகண்களைப்படைத்த கடவுளாகிய சிவபெருமானது வாகனமாகிய இடபமன்றாயின்,— மூன்று உலகு அடியின் தாயோன் ஒக்க ஊர் பறவை அன்று எல் - மூவுலகங்களையும் (தனது திருவடிகளினால்) தாவியளந்தவனாகிய திருமால் எப்போதுமாக ஏறிச்செலுத்துகின்ற கருடப்பறவை

யன்றாயின், அவன் துயில் உரகம் அன்று எல் - அத்திருமால் கண்வளர்கிற ஆதிசேஷனன்றாகில், திக் கயம் அல்லது எல் - திக்குக்களைத் தாங்குகின்ற அஷ்டதிக்கஜங்களு மன்றாயின்,— புல் குரங்கின்மேல் சேறி போல் ஆம் - (உன்னுடைய ஆற்றலுக்குச் சிறிதும் ஏற்றதல்லாத) இழிந்த ஒரு குரங்கின் மேற் (போர்க்குச்) செல்வாய்போலும்; (நீ போரச்செல்வது சிறிதுந்தகுதி யன்று); இ கடன் - இந்தக்கடமையை, அடியேற்கு ஈதி- எனக்குத்தந்து, ஈண்டு இனிதின இருத்தி - இங்கே சுகமாக இருப்பாயாக; (எ - று.)

பெருவீரனை நீ உனக்குஏற்றவலிமைபடைத்த பெருவீரருடனே பொரு வதே தகுதி; அவ்வாறு பொருதற்கு வீரர்வராது விலங்கோடு பொருவதென்றா லும், சிவபெருமானுடைய வாகனமாகிய விருஷபமோ, அன்றித் திருமாலின் வாகனமாகிய கருடனோ, அல்லாவிடின் அப்பரமன் பள்ளிகொள்ளும் ஆதி சேடனோ, அவைகளெல்லாம் அன்றாயின் திக்கஜங்களுள் ஒன்றோ, இவற்றுள் எதுவாக இருப்பினும் பொருதாலும் பொரலாம்; ஒருவிதத்திலும் மேம்பாடு பெறாத அற்பக்குரங்குடனே மகாவீரனை நீ போரச்செல்வது உனது ஆற்ற லுக்குச் சிறிதேனும் ஏற்குமோ? ஏலாது; ஆகவே,இந்தஅற்பத்தொழிலைப்புரியு மாறு எனக்குக் கட்டளைகொடுத்துவிட்டு, நீ 'இவனால், இக்குரங்கைவெல்லுதல் முடியுமோமுடியாதோ? என்ற சங்கைசிறிதுமின்றிஇங்கே இனிது இருப்பாய்' என அட்சகுமாரன் இராவணனை வேண்டிக்கொண்டானென்க. 'ஊர்தி யன்றே,' 'பறவையன்றே', 'உரகமன்றே,' 'திக்கயமல்லவாகில்' என்பன பாடாந்தரம். (உ)

[அட்சகுமாரன் தன்னையேவவேண்டுமென்பதற்குக் காரணங் காட்டுதல்.]

௩. அண்டர்கோன் றன்னைப்பற்றித்தருகெனவடியேனிற்கக்
கொண்டனை யென்முன் றன்னைப்பணியெனநெஞ்சங்கோட
லுண்டதுதீருமன்றேயுரனிலாக்குரங்கொன்றேனு
மண்டிசைவென்றநீயேயேவுதியென்னையென்றான்.

(இ - ள்.) 'அடியேன் நிற்க - நான் (உனதுகட்டளையை முடித்தற்குச் சித் தமாக) இருக்கையில், (என்னையேவாமல்),—அண்டர் கோன் தன்னை பற்றி தருக என - தேவராசனான இந்திரனைப் பிடித்துவருவாயென் றுசொல்லி, என் முன் தன்னை பணி கொண்டனை - என் தமையனான இந்திரசித்தினிடத்துத் (தேவராசனைப்பிடித்துவருவதாகியஅத்)தொழிலை வாங்கிக்கொண்டாய்', என - என்று, நெஞ்சம் கோடல் உண்டு - மனத்திற்கொண்ட குறையொன்று (என க்கு) உள்ளது; உரன் இலா குரங்கு ஒன்று எனும் - (இப்போது நான் எதிர்த்து வெல்லப்போவது) வலிமையில்லாத தொரு குரங்கேயாயினும், (அதனை வென்றுவருமாறு எனக்குக் கட்டளையிட்டாயாயின்), அது தீரும் அன்றே - அந்த மனக்குறை (ஒருவாறு) நீங்குமல்லவோ? (ஆதலால்), என்னை—,எண் திசை வென்ற நீயே - திக்விசயஞ்செய்த நீயே, ஏவுதி - (அக்குரங்கைவென்று

வருக்தொழிலில்) ஏவுவாயாக.' என்றான் - என்று (இராவணனை) வேண்டிக் கொண்டான், (அட்சகுமாரன்); (எ - று.)—'நெஞ்சங்கொண்டது' என்றும் பாடம். (௩)

[இதுவும், அடுத்த கவியும் - அட்சகுமாரன் தான் குரங்கை வென்றுவருவதாக உறுதிகூறுதல்.]

௪. கொய்தளிர்கோதும்வாழ்க்கைக்கோடரத்துருவுகொண்டு
கைதவமியற்றியீண்டோர்சிறுபழியிழைக்குங்கற்பா
னெய்தினனிமையாமுக்கணீசனேயென்றபோது
நொய்தினின்வென்றுபற்றித்தருகுவெனடியினுன்பால்.

இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) இமையா முக் கண் ஈசன் - இமைத்தலில்லாத மூன்றுகண்களையுடைய சிவபிரானே, கைதவம் இயற்றி ஈண்டு ஓர் சிறு பழி இழைக்கும் கற்பன்-வஞ்சனைசெய்து இந்தஇலங்காபுரியில் ஒரு சிறிய அகௌரவத்தை விளைக்கக்கூடிய காரியத்தைச் செய்யவேண்டுமென்கிற நினைவினால், கொய் தளிர் கோதும் வாழ்க்கை கோடரத்து உருவு கொண்டு எய்தினன் - கொய்தற்குஉரிய தளிர்களைக் கோதியுண்கிற உயிர்வாழ்க்கையையுடைய (அற்பக்) குரங்கினது வடிவத்தைக்கொண்டு வந்துள்ளான், என்றபோதும் - என்றாலும், (அவ்வாறு குரங்கின் வடிவுகொண்ட சிவனையும்), நொய்தினின் வென்று - இலேசாக வென்று, நொடியின் பற்றி உன்பால் தருகுவென் - வெகுவிரைவிற் பிடித்து உன்னிடம் கொணர்ந்துவிட்டிடுவேன்; (எ - று.)

சிவபெருமானுடைய மூன்றுகண்களில் நெற்றிக்கண் திறவாமல் மூடியிருத்தலாலும், மற்றையிரண்டுகண்களும் அப்பெருமானது தெய்வத்தன்மைக்குஏற்ப மூடாமல் திறந்தே யிருத்தலாலும், 'இமையா முக்கண்' எனப்பட்டதென்க. பழி - அபகீர்த்திக்கு இடமான செயல்: ஒரு அற்பப்பிராணியால் அரக்கர்பலர்மடிந்தாரென்பது. 'கைதவங்கண்ணி' என்றும் பாடம். (௪)

௫. தண்டத்தூணதனிற்றோன்றுங்கோளரிசுடர்வெண்கோட்டு
மண்டொத்தநிமிராண்கேழலாயினுமலைதலாற்றா
தண்டத்தைக்கடந்துபோக்கியப்புறத்தகலினன்பாற்
றண்டத்தைவிடுதியன்றேநின்வயிற்றந்திலேனேல்.

(இ - ள்.) தண்டம் தூண் அதனில் தோன்றும் கோள் அரி (ஆயினும்) - மரத்துண்டினாலாகிய கம்பத்திலிருந்து தோன்றிய வலிமையையுடைய நரசிங்கமேயாயிருந்தாலும், வெள்சுடர்கோடு மண் தொத்த நிமிர் ஆண் கேழல் ஆயினும் - வெள்ளொளிபொருந்திய கோரப்பல்லிலே பூமி (ஒருதுகள்போல) ஒட்டிக்கொள்ளும்படி ஓங்கிவளர்ந்த வராகமேயானாலும், (அவையும்), மலைதல் ஆற்றா - (என்னோடு) பொருதற்குத் தரமுடையனவல்ல; (இப்போது நம்மூரில்வந்து

பொருகின்ற அக்குரங்கு), (என்கையில் அகப்படாமல்),—பொங்கி அண்டத்தை கடந்து அ புறத்து அகலின் - கிளர்ந்தெழுந்து இவ்வுலகவுருண்டையைத்தாண்டி அப்பாற் சென்றுவிட்டால், (அதனால்), நின்வயின் தந்திலேன் எல் - (அதனை) உன்னிடம் கொணர்ந்து நிற்கவைக்காமற்போவேனாயின், அன்றே - அப்போதே, என்பால் தண்டத்தை இடுதி - என்னிடம் தக்க தண்டனையை விதிப்பாய்; (எ - று.)

முன்னிரண்டடிகட்கு - நரசிங்கத்தின் அம்சமாகவேனும் வராகத்தின் அம்சமாகவேனும் இந்தக்குரங்கு இருந்தாலும் சரி, இதனால் என்னோடு பொர முடியாது என்று கருதத்துக் கொள்ளினுமாம். வெண்கோட்டு மண்தோய்த்த நிமிர் ஆண்கேழல் - "பன்றியாய்ப் படியெடுத்த பாழியாயென்பரது - வென்றியா ருனதெயிற்றின் மென்றுகள்போன்றிருந்ததால்" என்றது காண்க. (௫)

[அட்சகுமாரன் இராவணனிடத்து விடைபெற்றுப் புறப்படுதல்.]

௬. எனவிவையியம்பிவிடையீதியெனவிறைஞ்சிநின்ற
வனைகழல்வயிரத்திண்டோண்மைந்தனைமகிழ்ந்துநோக்கித்
துனைபரித்தேர்மேலேறிச்சேறியென்றினையசொன்னான்
புனைமலர்த்தாரினானும்போரணியணிந்துபோனான்.

(இ - ள்.) எனா இவை இயம்பி - என்று இவ்வார்த்தைகளைச் சொல்லி, 'விடை ஈதி - (எனக்கு) விடைகொடுப்பாய்', என - என்று, இறைஞ்சி நின்ற - வணங்கி(த்தன் முன்னே) நிற்கிற, வனை கழல வயிரம் திண் தோள் மைந்தனை - கட்டியவீரக்கழலையும் மிகவலிய தோள்களையுமுடைய அட்சகுமாரனை,—(இராவணன்),—மகிழ்ந்து நோக்கி—, 'துனை பரி தேர்மேல ஏறி சேறி - விரைந்து செல்லுகின்ற குதிரைகள்பூட்டிய தேரின்மேலேறிச் செல்வாய்,' என்று—, இனைய சொன்னான் - இவ்வாறாகச் சொன்னான்; மலர் புனை தாரினானும் - மலர் கொண்டுதொடுக்கப்பட்ட மாலையையணிந்த அட்சகுமாரனும், போர் அணி அணிந்து போனான் - போர்க்கோலங்கொண்டு புறப்பட்டான்; (எ - று.)

தான் குரங்கை எப்படியிருந்தாலும் வென்றுவருவேனெனத் தன்மகன் உறுதிகூறியதனால், அதுகேட்ட இராவணன் அவனை மகிழ்ந்து நோக்கிப் பொருமாறு விடைகொடுத்தனனென்க. (௬)

[அட்சகுமாரன் தேர்மேலேறுதல்.]

௭. இறினனென்னமன்னேவிந்திரனிகலினிட்ட
நாறொருநூறுபூண்டநொறில்வயப்புரவிநோன்றேர்
கூறினரரக்கராசிகுமுறினமுரசக்கொண்மூ
ஆறினவுரவுத்தானையூழிபேர்கடலையொப்ப.

(இ - ள்.) இகலின் - (முன் நிகழ்ந்த) போரில், இந்திரன் இட்ட - தேவேந்திரன் கொடுத்துப்போய்விட்டதும், நொறில் வய புரவி நூறொரு நூறு பூண்ட - விரைவுள்ள வெற்றிபெற்ற இருநூறுகுதிரைகள் பூட்டப்பட்

லுள்ளதுமான, கோன் தேர் - வலிய தேரின்மீது, ஏறினன் - (அந்த அட்சகுமாரன்) ஏறினன்; (அப்போது), அரக்கர் ஆசி கூறினர் - அரக்கர்கள் ஆசீர்வாதஞ் சொன்னார்கள்; முரசம் கொண்மூ குமுறின - முரசவாத்தியங்களாகிய மேகங்கள் முழங்கின; ஊழி பேர் கடலை ஒப்ப - யுகாந்தகாலத்தில் நிலை பெயர்ந்து வருகின்ற சமுத்திரத்தைப்போல, உரவு தானை - வலிய சேனை, ஊறின - மேன்மேற் சுரந்து (அவ்வரக்கக்குமாரனைப்) பின்பற்றிவரலாயின; (எ - று.)—என்ப, மன், ஓ - அசைகள். (எ)

[அட்சகுமாரனோடு சென்ற நால்வகைச்சேனையின் மிகுதி.]

அ. பொருகடன்மகரமெண்ணினெண்ணலாம்பூட்கைபொங்கித்
திரிவனமீன்களெண்ணினெண்ணலாஞ்செம்பொற்றிண்டே
ருருவுறுமணலையெண்ணினெண்ணலாமுரவுத்தானை
வருதிரைமரபினெண்ணினெண்ணலாம்வாவும்வாசி.

(இ - ள்.) (அந்த அட்சகுமாரனோடு சென்ற நால்வகைச் சேனைகளில்),— பூட்கை – யானைச் சேனையை, பொரு கடல் மகரம் எண்ணின் எண்ணல் ஆம் - (அலைகள்) மோதுகின்ற கடலிலுள்ள சுறாமீன்களை எண்ணக்கூடுமானால் எண்ணமுடியும், செம் பொன் திண் தேர் - செம்பொன்மயமான வலியதேர்களை, பொங்கி திரிவன மீன்கள் எண்ணின் எண்ணல் ஆம் - (அந்தக் கடலில்) செருக்கித் திரிவனவாகிய மீன்களை எண்ணமுடியுமானால் எண்ணமுடியும்; உரவு தானை - வலிமைபொருந்திய காலாட்சேனையை, உரு உறு மணலை எண்ணின் எண்ணல் ஆம் - அந்தக்கடலிலே (ஒன்றோடொன்று ஒட்டாது) தனித்தனியேயுள்ள மணலை எண்ணக்கூடுமானால் எண்ணமுடியும்; வாவும் வாசி - தாவிச்செல்லுங் குதிரைகளை, மரபின் வரு திரை எண்ணின் எண்ணல் ஆம் - (அந்தக் கடலில்) முறைமுறையாகவருகிற அலைகளை எண்ணக்கூடுமானால் எண்ணமுடியும்; (எ - று.)

கடலிலுள்ள மகரம் முதலியவற்றை எண்ணுதல் அரியதாதல்போல அந்த அட்சகுமாரனோடுசென்ற நால்வகைச் சேனைகளையும் எண்ணுதல் அருமையாகு மென்க. சேனையை அளவிடுதல் முடியாதென்பதை வற்புறுத்தும் பொருட்டுக் கடலிலுள்ள மகரம்முதலியவற்றை யெண்ணினால், அப்போது இந்தச்சேனையை யெண்ணலாமென்று கூறிய இது - உய்த்துணர்வைப்பு என்னும் அணியாம்; இதனை, வடநூலார் ஸம்பாவநாலங்கார மென்பர். வேறொரு பொருள் சித்திப்பதற்காக 'இப்படியிருந்தால் இன்னது ஆகும்' என்ற வாய்பாடு படக் கூறுவது, இவ்வணியின் இலக்கணம். இங்குக்கூறிய வருணனையில் அந்த நால்வகைப்படைகளுங்கூடிய சேனைக்குச் சமுத்திரமும், அதனிடத்துள்ள யானைகட்கு அக்கடலிலுள்ள சுறாமீன்களும், தேர்த்திரளுக்கு மீன்திரளும், குதிரைகட்கு அலைகளும், காலாட்படைக்கு மணலும் உவமையாதல் பெறப்படும். (அ)

[இதுவும், அடுத்த கவியும் - பலஅரக்கக்குமரர் படைத்துணையாகச் செல்லுதலைத் தெரிவிக்கும்.]

௯. ஆறிரண்டடுத்தவெண்ணினாயிரங்குமரராவி
வேறிலாத்தோழர்வென்றியரக்கர்தம்வேந்தர்மைந்த
ரேறியதேரார்சூழ்ந்தாரிறுதியின்யாவுமுண்பான்
சீறியகாலத்தீயின்செறிசுடர்ச்சிகைகளன்னார்.

(இ - ள்.) இறுதியின் யாவும் உண்பான் - யுகாந்தகாலத்தில் (உலகத்துப் பொருள்களை) எல்லாம் அழிக்கும்பொருட்டு, சீறிய - பொங்கிக்கிளர்ந்த, காலம் தீயின் - யுகாந்தகாலாக்கினியினுடைய, செறி சுடர் சிகைகள் - நெருங்கிய ஒளியையுடைய சுவாலைகளை, அன்னார் - ஒத்தவர்களும், ஆவி வேறு இலா தோழர் - (உடல் வேறேயன்றித்) தம்முயிர் (அட்சகுமாரனைவிட) வேறாக இல்லாத நண்பரும், வென்றி அரக்கர்தம வேந்தர் மைந்தர் - வெற்றியையுடைய ராக்ஷஸராஜவம்சத்துப்பிறந்த வீரரின் புத்திரர்களுமாகிய, ஆறு இரண்டு அடுத்த எண்ணின் ஆயிரம் குமரர் - பன்னீராயிரங் குமாரர்கள், ஏறிய தேரார் சூழ்ந்தார் - தேரின்மீது ஏறிக்கொண்டு (அந்தஅட்சகுமாரனைச்) சூழ்ந்துகொண்டுசென்றார்கள்; (எ - று.) (௯)

௯௰. மந்திரக்கிழவர்மைந்தர்மதிநெறியமைச்சர்மக்க
டந்திரத்தலைவரீன்றதனயர்கள்பிறருந்தாதைக்
கந்தரத்தரம்பைமாரிற்றோன்றினராதியாயோ
ரெந்திரத்தேரார்சூழ்ந்தாரிரண்டிலக்கம்வீரர்.

(இ - ள்.) மந்திரம் கிழவர் மைந்தர் - (முன்பு சமயங்களில் ஆலோசனை சொல்லுபவர்களாயிருந்த) மந்திரிமாரது குமாரர்களும், மதி நெறி அமைச்சர் மக்கள் - புத்தியும் அரசநீதியு முணர்ந்த அமைச்சராயிருப்பவரது குமாரர்களும், தந்திரம் தலைவர் ஈன்ற தனயர்கள் - சேனாதிபதிகள் பெற்றுவளர்த்த குமாரர்களும், தாதைக்கு அந்தரத்து அரம்பைமாரில் தோன்றினர் ஆதி ஆயோர் பிறரும் - இவ்வட்சகுமாரனது தந்தையாகிய இராவணனுக்குத் தேவமங்கையரிடம் பிறந்த புத்திரர் முதலிய பிறரும் ஆகிய, ஈர் இரண்டு இலக்கம் வீரர் - நாலுலட்சம்வீரர்கள், எந்திரம் தேரார் - எந்திரமுள்ள தேர்மீது ஏறியவர்களாய், சூழ்ந்தார் - (அவ்வட்சகுமாரனுக்குப் படைத்துணையாகச்) சூழ்ந்துவந்தார்கள்.

மந்திரக்கிழவர் என்பது - இறந்துவிட்ட மந்திரிமாரையும், அமைச்சர் என்பது - அப்போது மந்திரித்தொழிலிலிருப்பவரையும் காட்டுமெனக. இனி, மந்திரக்கிழவர் என்பது - விசேஷ காலங்களில் ஆலோசனை சொல்பவரையும், அமைச்சரென்பது - எப்போதும் உடனிருந்து ராசாங்ககாரியத்தைப்பார்ப்பவரையும் காட்டு மென்னலுமாம். மந்திரக்கிழவர் முதலாகக் கூறியவர் நால்வராதலால், ஒவ்வொருவகையினரின் குமாரரும் ஓரிலட்சமாக நாலுலக்ஷம் வீரரெனக. (௯௰)

[அச்சேனையின் பல்வகைப் படைகள்.]

கக. தோமரமுலக்கைசூலஞ்சுடர்மழுகுலிசந்தோட்டி
யேமருவரிவில்வேல்கோலீட்டிவாளெழுவிட்டேறு
மாமரம்வீசுபாசம்வளையயில்வயிரத்தண்டு
காமருகணையங்குந்தங்கப்பணங்காலநேமி.

இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) தோமரம்—, உலக்கை—, சூலம்—, சுடர் - ஒளியையுடைய, மழு—, குலிசம் - வச்சிராயுதம், தோட்டி - அங்குசம், ஏ மரு வரி வில் - அம்புபொருந்திய கட்டமைந்த விற்கள், வேல்—, கோல்—, ஈட்டி—, வாள்—, எழு—, விட்டேறு—, மாமரம் - பெரிய மரங்கள், வீசு - வீசியெறிதற்குரிய, பாசம்—, வளை - வளையம், அயில் - கூர்மையையுடைய, வயிரம் - உறுதியான, தண்டு—, காமரு - அழகுபொருந்திய, கணையம் - வளைதடி, குந்தம் - கைவேல், கப்பணம் - யானை நெருஞ்சிமுள், காலம் நேமி - தவறுமற் றொல்லவல்ல சக்கராயுதம், (எ - று.)— 'என்றிவைமுதல' என அடுத்த கவியோடு தொடரும்.

விட்டேறு - விட்டெறியும் ஓராயுதம். 'பாசமெழுமுளை' என்றும்பாடம். எழுமுளை - எழுகின்ற முளை யென்க. (கக)

[சேனை செல்கையில் நேர்ந்த நிகழ்ச்சி.]

கஉ. என்றிவைமுதலவாயவெழிற்கிழ்படைகளீண்டி
மின்றிரண்டனையவாகிவெயிலொடுநிலவுவீசத்
துன்றிருந்தூளிபொங்கித்துறுதலாலிறுதிசெல்லாப்
பொன்றிணியுலகமானபூதலம்வாழிமாதோ.

(இ - ள்.) என்று இவை முதல ஆய - என்றுசொல்லப்படுகிற இவை முதலாகவுள்ள, எழில் திகழ் படைகள் - (துருப்பிடியாமல்) அழகாகவிளங்குகின்ற ஆயுதங்கள், ஈண்டி - நெருங்கியதனால், மின் திரண்ட (து) அனைய ஆகி - மின்னல்கள் ஒருசேரத்திரண்டாற்போன்று, வெயிலொடு நிலவு வீச - வெயிலையும் நிலாவையும் வெளிப்படுத்துக்கொண்டிருக்க,— துன்று இரு தூளி பொங்கி துறுதலால் - நெருங்கிய மிக்க தூளிகள் மேலெழுந்து (வானத்தில்) நெருங்கியதனால், பூதலம் - பூமியானது,—இறுதி செல்லா பொன் திணி உலகம் ஆன - அழிவடையாத பொன்னுலியன்ற தேவலோக மாயின; (எ - று.)—வாழி, மாது ஓ - அசைகள்.

பெருஞ்சேனைகள் செல்வதனால் பூதலத்திலுள்ள புழுதிகளெல்லாம் மேலேபோய்விட, பல்வகையாயுதங்களினால் எங்கும் பேரொளியுடன் விளங்கிய அந்தஇடம் மண்மயமன்றிப் பொன்மயமாய் விளங்குகின்ற தேவலோகம்போன்ற தென்க; பிறிதின்குணம் பெறலணி. தன்குணத்தைவிட்டுச் சிறந்த பிறிதின்குணத்தைப் பெறுதல், அதன் இலக்கணம். 'பூதலமெவையுமாதோ' என்றும்பாடம். 'பொன்றிணியுலகமெல்லாம பூதலமாய மாதோ' என்ற பாடத்துக்கு- சேனைசெல்லுதலாற் புழுதிகளெல்லாம் கிளம்பி வானுலகத்திற் படிந்திட்

டதனால், அந்தப்பொன்மயமான வானுலகம் மண்ணுலகமாயின என்ற பொரு ளாம்; இப்பொருளில் முன்னிரண்டடிகள் சேனைகள் கைக்கொண்டிருந்த ஆயு தங்களின் தன்மையைக் கூறுவனவேயன்றி, இந்தவருணனைக்காக வந்தனவல்ல வென்க. (கஉ)

[இதுமுதல் ஐந்து கவிகள் - ஒருதொடர்; மிக்கதுடம்பாரத்தோடு படையெடுத்து அட்சகுமாரன்வருதலை அநுமான் காணுதல்.]

கங. காகமுங்கழுகும்பேயுங்காலனுங்கணக்கில்காலஞ்
சேகுறவினையிற்செய்ததீமையுந்தொடர்ந்துசெல்லப்
பாகியல்கிளவிசெவ்வாய்ப்படைவிழிபணைத்தவேய்த்தோட்
டோகையர்மனமுந்தொக்கதும்பியுந்தொடர்ந்துசுற்ற.

(இ - ள்.) காகமும்—, கழுகும்—, பேயும்—, காலனும் - யமனும், கணக்கு இல் காலம் சேகு உற வினையின் செய்த தீமையும் - பலகாலம் உறுதிபொருந் தத் தமது செயலாற்செய்த பாவமும், தொடர்ந்து செல்ல - பின்தொடர்ந்து வரவும்,—பாகு இயல் கிளவி செம் வாய் - பாகின் தன்மைபொருந்திய [இனி மையான] சொற்களையுடைய செந்நிற வாயையும், படை வழி - வேலாயுதம் போன்ற கண்களையும், பணைத்த வேய் தோள் - பருத்தமூங்கில்போன்ற தோள் களையுமுடைய, தோகையர் - மயில்போன்ற சாயலையுடைய அரக்கமகளிரது, மனமும்—, தொக்க தும்பியும் - தொகுதியான வண்டுக்கூட்டங்களும், தொடர் ந்து சுற்ற - சுற்றிலுந் தொடர்ந்துவரவும், —(எ - று.)—'மாற்றங்க ளொழிப்ப' என அடுத்த கவியோடு தொடரும்.

அநுமானாற் கொல்லப்படப்போகின்ற அரக்கருயிரைக் கவர்ந்துசெல்லு தற்கு யமனும், போர்க்களத்தில் வீழும் பிணங்களைப் பிடுங்கித்தின்பதற்குக் காகம்முதலியனவும் தொடர்ந்துசென்றன வென்க. அரக்கர் தாம் பலகாலமாகச் செய்துவந்த தீவினை இப்போது பலித்து இவ்வரக்கர் தோல்வியுற்று அழிவ ரென்பதை விளக்க, கவி 'கணக்கில்காலம் * * * செய்த தீமையுந் தொடர்ந்து செல்ல' என்றார். அரக்கமாதர் காதலிக்குமாறு அழகுபடைத்தவ னென்பதை விளக்க 'தோகையர் மனம் தொடர்ந்து சுற்ற' என்றார். பூமாலையினிடத்துள்ள தேனைப் பருகவிரும்பி வண்டுகள் தொடர்ந்துசெல்லு மென்க. தொக்க தும்பி யும் தொடர்ந்து சுற்ற என்பதற்கு - இவனைக்காதலித்த மகளிர் தூதாக விட்ட வண்டுகளும் தொடர்ந்துசுற்ற என்று கருத்துக்கொள்ளினுமாம். "சங்கக்கேய் செங்கைநல்லார் விடுத்தன சுரும்பின்சாலம், கொங்கெங்கே யெங்கேயென்று தனித்தனி குடையுந்தாரான்" என்றது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. (கங)

கசு. உழைக்குலநோக்கினர்களுலந்தவர்க்குரியமாத
ரழைத்தழுகுரலின்வேலையமலையினரவச்சேனை
தழைத்தெழுமொலியினாற்பல்லியந்துவைத்தலால்விண்
மழைக்குரலிடியிற்சொன்னமாற்றங்களொழிப்பமன்னோ.

(இ - ள்) உலந்தவர்க்கு உரிய மாதர் - (முன்னேநிகழ்ந்தபோரில்) இறந்த அரக்கர்கட்குஉரிய மனைவியராகிய, உழை குலம் நோக்கினர்கள் - மான்கூட்டம்போன்ற (மருண்ட) பார்வையையுடைய அரக்கியர், அழைத்து அழு குரலின்- (தமதுகணவரைக்)கூப்பிட்டு அழுகின்ற குரலினாலும், வேலை அமலையின்- சமுத்திரகோஷத்தினாலும், அரவம் சேனை தழைத்து எழும் ஒலியின் - ஆரவாரஞ்செய்கின்ற சேனைகள் திரண்டுசெல்வதனால் நிகழ்ந்த ஒலியினாலும், நானா பல்இயம் துவைத்தலால் - பலவகைவாத்தியங்கள்சப்தித்தலாலும், விண் மழை குரல் இடியின் சொன்ன - வானத்திலுள்ள மேகத்தின் தொனியாகிய இடிபோல(ப் பேரொலியுண்டாகுமாறு) பேசின, மாற்றங்கள் - வார்த்தைகள், ஒழிப்ப - (பிறர்க்குக் கேளாமல்) அடங்கிவிடவும்,— (எ - று.)— 'விழுங்க' என அடுத்த கவியோடு தொடரும் - மன் ஓ - ஈற்றசை.

இதனால் அப்போது தோன்றிய பேரொலியை வருணித்தவாறு. அட்சகுமாரனுக்குத் தீநிமித்தமாக அழுகுரல் தோன்றியதை முதலிற் காட்டினார். 'ஆறுப்பல்லியம்' என்றும் பிரிக்கலாம். ஒழிப்ப - தன்வினைப்பொருளில்வந்த பிறவினை. (கச)

கரு. வெயிற்கரமணிகள்வீசும்விரிகதிர்விழுங்கவெய்ய
வயிற்கரமணிகள்காலுமவிரொளிபருகவஃகா
வெயிற்றிளம்பிறைகளீன்றவிலங்கொளியொதுங்கயாண
ருயிர்க்குலவிரவுமன்றுபகலன்றென்றுணர்வுதோன்ற.

(இ - ள்.) வெயில் கரம் மணிகள் - வெயிலைப்போன்ற ஒளிவீசுகின்ற (ஆபரணங்களிலுள்ள) இரத்தினங்கள், வீசும் விரி கதிர் விழுங்க - (உலகமுழுதும்) பரவுகின்ற பரந்த சூரியகிரணத்தை யடக்கவும்,— வெய்ய அயில் கரம் - கொடிய வேலாயுதங்களினால்தோன்றுகின்ற காந்தியினாலே, மணிகள் காலும் அவிர் ஒளி பருக - (ஆபரணங்களிலிழைத்த) இரத்தினங்கள் வெளிவீசுகின்ற விளங்குகின்ற ஒளியையடக்குமாறு,—அஃகா - (ஒளியினால்) குறையாத, எயிறு இளம் பிறைகள் - பற்களாகிய இளம்பிறைகள், ஈன்ற - வெளிவிடுகின்ற, இலங்கு ஒளி - விளங்குகின்ற ஒளி, ஒதுங்க - மறையவும்,— (இவ்வாறு இருத்தலால்), உயிர்க்கு - பிராணிகட்கு, உலவு இரவும் அன்று - (இது உலகத்திலே) தோன்றுகின்ற இராக்காலமும்அன்று, பகல்அன்று - (அவ்வாறே உலகத்துத் தோன்றும்) பகலும் அன்று,என்று —,யாணர் - புதுமையாக, உணர்வுதோன்ற - ஒருணர்ச்சியுண்டாகவும்,— (எ - று.)— இடத்துத் துன்ன என அடுத்த கவியோடு தொடரும்.

அப்போது பகற்காலமானமையால் சூரியன் வெயில்வீச, அதனை அரக்கர் அணிந்திருந்த ஆபரணங்களிலுள்ள அரதனங்களின் ஒளி அடக்கிற்று; அந்த ஆபரணவிரத்தினங்களினொளியையும் பிரகாசியாதபடி அவ்வரக்கரின் கோரப்பற்கள் பிறைச்சந்திரனது நிலவுபோன்ற ஒளியை வீசின; அந்த எயிற்று நிலவு விளங்காதவாறு வேற்படைகள் ஒளிவீசலாயின; இவ்வாறு சூரியனது வெயிலும் எயிற்றுப்பிறையின்நிலவும் விளங்காமல் அடக்கிவிட்டதனால் பிரா

ணிவர்க்கங்கள் அந்தக்காலத்தைப் பகலென்றாவது இரவென்றாவது நினைக்க இடமில்லாமற் போயிற்றென்க. 'மணிகள் காலும் அவிரொளி பருக அலைகா' என்ற தொடர் - எயிற்றிளம்பிறைக்கு அடைமொழி. மணிக்கரத்தினாற் பகலும் அயிற்காத்தினால் எயிற்றிளம்பிறையி னிலங்கொளியும் மறைந்தனவாகக் கூறியது - மறைவணியாம். இதனை,மீலிதாலங்காரமென்பர், வடநூலார். இச்செய்யுளுக்கு வேறுவகையாகப் பொருளுரைப்பாரு முளர்; அவை, அலங்காரநூலார்கொள்கைக்கு ஏற்குமேற் கொள்க. (க௫)

க௬. ஓங்கிருந்தடந்தேர்பூண்டவுளைவயப்புரவியொல்கித்
தூங்கினவீழத்தோளுங்கண்களுமிடத்துத்துள்ள
வீங்கினமேகமெங்குங்குருதிநீர்த்துள்ளிவீழ்ப்ப
வேங்கினகாகமார்ப்பவிருளில்விண்ணிடிப்பமாதோ.

(இ - ள்.) ஓங்கு இரு தட தேர் பூண்ட - உயர்ந்துள்ள மிகப்பெரிய தேர்களிற் கட்டப்பட்ட, உளை வய புரவி - பிடரிமயிரையுடைய வலிய குதிரைகள், ஒல்கி தூங்கின வீழ - சோர்ந்து தூங்கிவிழவும்,—தோளும்கண்களும் இடத்து துள்ள - (ராட்சசவீரரது) தோள்களும் கண்களும் இடப்பக்கத்தில் துடிக்கவும்,—வீங்கின மேகம் எங்கும் குருதி நீர் துள்ளி வீழ்ப்ப - மிக்குள்ள மேகங்கள் எவ்விடத்தும் இரத்தநீர்த்துளியைச் சொரியவும்,—ஏங்கின காகம் ஆர்ப்ப - ஏங்கியிருந்த காகங்கள் (மகிழ்ச்சிகொண்டு) ஆரவாரிக்கவும்,—இருள் இல விண் இடிப்ப - மேகசஞ்சாரத்தினாலாகிய இருட்டு இல்லாத ஆகாசத்தினின்று இடி ரென்று இடிவிழவும்,—(எ - று.)—மாது ஓ - ஈற்றசை. 'வெள்ளவெஞ்சேனை சூழ......தோன்றும் கள்ளவிழலங்கலானைக் காற்றினசேய் வரவுகண்டான்' என அடுத்த கவியோடு முடியும்.

தேரிற் பூட்டப்பட்டு ஓடிக்கொண்டிருக்குங் குதிரைகள் சோர்ந்து தூங்கிவிழுதலும், வீரர்களுடைய இடத்தோள்களும் இடக்கண்களும் துடித்தலும், மேகங்கள் இரத்தநீர்த்துளியைத் தூவுதலும், காகங்கள் கத்துதலும், வானத்தில் மேகமில்லாதபொழுது இடியுண்டாதலும் அட்சகுமாரனுக்கு இனி வரும் ஆபத்தை விளக்குந் தூர்க்குறிகளாம். 'தூங்கினவீரர்தோளும்' என்றும் பாடமுண்டு. இருளில் காகம் ஆர்ப்ப என்று இயைத்து, கூட்டில் அடங்கியிருக்கவேண்டும் பொழுதாகிய இரவில்தானே காகங்கள் கத்தினது அபசகுனமென்பாரு முளர். (க௬)

க௭. வெள்ளவெஞ்சேனைசூழவிண்ணுளோர்வெருவிவிம்ம
வுள்ளநொந்தனுங்கிவெய்யகூற்றமுமுறுவதுன்னத்
துள்ளியசூழல்கட்பேய்கடோள்புடைத்தார்ப்பத்தோன்றுங்
கள்ளவிழலங்கலானைக்காற்றின்சேய்வரவுகண்டான்.

(இ - ள்.) வெள்ளம் வெம் சேனை சூழ - வெள்ளமென்னுங் கணக்கான [பெருந்தொகையுள்ள] கொடிய சேனை (தன்னைச்) சூழ்ந்துவரவும்,—(அது

கண்டு), விண் உளோர் வெருவி விம்ம - தேவர்கள் அஞ்சிக்கலங்கவும்,— வெய்ய கூற்றமும் - கொடிய யமனும், உள்ளம் நொந்து அனுங்கி - மிகவும் மனம்வருந்தி, உறுவது உன்ன - இனி நடக்கவேண்டுவதைப்பற்றி ஆலோசிக்கவும், துள்ளிய சுழல் கண் பேய்கள் - (தமக்கு உணவு வயிறு நிறையும்படி கிடைக்கப்போகின்றதென்ற காரணத்தால்) துள்ளுகின்றனவான சுழல்கின்ற கண்களையுடைய பேய்கள், தோள் புடைத்து ஆர்ப்ப - (தமது) தோள்களைத் தட்டிக்கொண்டு ஆரவாரிக்கவும், தோன்றும் - (இவ்வாறு சம்பிரமத்துடனே) வருகின்ற, கள் அவிழ் அலங்கலான் வரவை - தேனொடுமலர்கின்ற, மலர்கொண்டு தொடுத்த மாலையை யணிந்த அக்ஷகுமாரனது வருகையை, காற்றின் சேய் - வாயுகுமாரனான அநுமான், கண்டான்—; (எ - று.) (௧௭)

[இதுவும், அடுத்த கவியும் - போர்க்குவந்தவனைக் கண்ட அநுமானது மகிழ்ச்சியைத் தெரிவிக்கும்.]

௧௮. இந்திரசித்தோமற்றவ்விராவணனேயோவென்னாச்
சிந்தையினுவகைகொண்டுமுனிவுற்றகுரக்குச்சீயம்
வந்தனன்முடிந்ததன்றோமனக்கருத்தென்னவாழ்த்திச்
சுந்தரத்தோளைநோக்கியிராமனைத்தொழுதுசொன்னான்.

(இ - ள்.) முனிவு உற்ற குரங்கு சீயம் - பெருங்கோபங் கொண்டுள்ள சிறந்தவானரனான அநுமான்,—'(இப்போது போர்க்கு வருபவன்), இந்திரசித்தோ - (இராவணனது குமாரனான) இந்திரசித்தோ? மற்று அ இராவணனேயோ - அன்றி அந்த இராவணன்தானோ, வந்தனன் - போர்க்குவந்துள்ளான், என்னா - என்று கருதி, சிந்தையின் உவகை கொண்டு - மனத்திற் சந்தோஷங்கொண்டு,—'மனம் கருத்து முடிந்தது அன்றோ - (எனது) எண்ணம் நிறைவேறிவிட்டதன்றோ', என்ன - என்று சொல்லி, வாழ்த்தி - (இராமனை) வாழ்த்திவிட்டு, இராமனை தொழுது - இராமபிரானை (த்திக்குநோக்கி) த் தண்டன் சமர்ப்பித்து, சுந்தரம் தோளை நோக்கி - (தனது) அழகிய தோள்களைப் பார்த்து, சொன்னான் - கூறுவானாயினன்; (எ - று.)—அதனை அடுத்த கவியிற் காண்க.

"வந்தவர்கள் வந்தவர்கள் மீள்கிலர் மடிந்தால், வெந்திற லரக்கனும் விலக்கரு வலத்தால், முந்துமெனி னன்னவன் முடித்தலை முசித்தென், சிந்தையுறு கோபமு மவித்தினிது செல்வேன்" என்று கீழ்ப் பொழிலிறுத்தபடலத்திற் கூறியபடி அநுமான் தான் பொழிலை யிறுத்தற்குக் காரணம் - அதுகாரணமாகத் தன்னொடு இராவணன் பொரவர அவனை வெல்லவேணு மென்பதேயாதலால், இப்போதுவந்தவன் இராவணனினும் விஞ்சிய இந்திரசித்தோ? அல்லது அந்த இராவணன்தானோ? என்று எண்ணங்கொண்டதனால், மிக மகிழ்ந்து, தனது விருப்பத்தை நிறைவேற்றுங்கடவுளாகிய இராமபிரானை அப்போது வணங்கிவாழ்த்தி, செருக்குத்தோன்றத் தனதுவீரத்தோளை நோக்கலாயின னென்க. 'இராவணன்றானோ' என்றும் பாடம். (௧௮)

௧௯. எண்ணியவிருவர்தம்முளொருவனல்யான்முன்செய்த
புண்ணியமுளதாலெங்கோன்றவத்தொடும்பொருந்தினனே
நண்ணினனானுநின்றேன்காலனுநணுகிநின்றான்
கண்ணியகருமமின்றேமுடிக்குவென்கடிதினென்றான்.

இதுமுதல் மூன்று கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) எண்ணிய இருவர்தம்முள் ஒருவன் ஆல் - (இங்குவருபவன்) நான் நினைத்த (இராவணன் இந்திரசித்து என்ற) இருவருள் ஒருவன் தான்; யான் முன் செய்த புண்ணியம் உளது ஆல் - யான் முற்பிறப்பிற்செய்த புண்ணியப்பயனும் எனக்கு உள்ளதே; எம் கோன் தவத்தொடும் பொருந்தினன் - எமது தலைவனாகிய இராமபிரானும் நல்வினைப்பயனுடன் பொருந்தியவனானான்; யானும் நண்ணினன் நின்றேன் - (பலஅரக்கர்களையும் கொன்றிட்ட) நானும் (இவனைக் கொல்லுமாறு) சித்தனாக நிற்கின்றேன்; காலனும் நணுகி நின்றான் - (இவனுயிரைக் கொண்டுபோவதற்கு) யமனும் நெருங்கி நிற்கிறான்; கண்ணிய கருமம் - நினைத்த காரியத்தை, கடிதின் - விரைவாக, இன்றே - இப்போதே, முடிக்குவென் - முடித்துவிடுவேன்,' என்றான - என்றுசொன்னான், (அநுமான்); (எ - று.)

எங்கோன் - சுக்கிரீவன் எனினுமாம். பொருந்தினனே, ஏகாரம் - தேற்றம். 'கருமமின்றே முற்றுவல்' என்றும் பாடம். இச்செய்யுள், அநுமானுடைய வீரவாத மெனக.　　　(௧௯)

[அநுமான் வந்தவனை இன்னானென்று தெரியாது ஐயுறுதல்.]

௨௦. பழியிலதுருவென்றாலும்பலதலையரக்கனல்லன்
விழிகளாயிரமுங்கொண்டவேந்தைவென்றானுமல்லன்
மொழியின்மற்றவர்க்குமேலான்முரண்டொடாழின்முருகனல்ல
னழிவிலொண்குமரன்யாரோவஞ்சனக்குன்றமனனான்.

(இ - ள்.) (பின்னும் இவன்), (நான் முன் எண்ணியபடி), பல் தலை அரக்கன் அல்லன் - பத்துததலைகளையுடைய இராவணனல்லன்; விழிகள் ஆயிரமும் கொண்ட வேந்தை வென்றானும் அல்லன - ஆயிரமகண்களையுடைய இந்திரனைச் சயித்த இந்திரசித்து மல்லன; மொழியின் - (இவனை இன்னனென்று) கூறத்தொடங்குமிடத்து, மற்றவர்க்கு மேலான் - இராவணன் இந்திரசித்து என்ற இருவர்க்கும் மேற்பட்டவன போலத் தோன்றுகின்றான்; உரு - (இவனது) உருவம், பழி இலது - குற்றமற்றது; என்றாலும் - ஆயினும், முரண் தொழில் முருகன் அல்லன் - போர்த்தொழிலையுடைய முருகக்கடவுளுமல்லன; அஞ்சனம் குன்றம் அன்னான் - நீலமலைபோன்ற பெருவடிவமபடைத்தவனான, அழிவு இல் ஒள் குமரன் - போரில்பினவாங்குதலில்லாத இவ்வீரன, யாரோ—!

தூரத்தில் வந்தவனைக் கண்டபோது, அவன்வருகின்ற ஆடம்பரத்தினால் அவனை இந்திரசித்தோ? இராவணனோ? என்று சந்தேகித்த அநுமான், அவன் நெருங்கி வரவே, இராவணன் இந்திரசித்துஎன்பவர்க்குஉரிய பத்துததலைமுதலிய அடையாளங்களைக் காணாமையால் அவர்களல்லவென்று அறுதியிட்டு, பேர

முகுடைமையால் முருகக்கடவுளோ என்று சங்கித்து, ஆறுமுகமில்லாமையால் அவனுமல்ல னென்று தெளிந்து, பேரழகும் பெருவலியும் படைத்த அவனை இன்னானென்று உணரமாட்டாதவ னாயினன் என்க. (௨௰)

[அட்சகுமாரன் அநுமானைக் கண்டு அலட்சியமாகக் கூறுதல்.]

௨௧. என்றவனுவந்துவிண்டோயிந்திரசாபமென்ன
நின்றதோரணத்தினும்பரிருந்ததோர்நீதியானை
வன்றொழிலரக்கனோக்கிவாளெயிறிலங்கநக்கான்
கொன்றதிக்குரங்குபோலாமரக்கர்தங்குழாத்தையென்றான்.

(இ - ள்.) என்றவன் - என்று கூறினவனாகி, உவந்து - (பெருவீரன் போர்க்கு வருவதனால்) மனமகிழ்ந்து, விண் தோய் இந்திரசாபம் என்ன நின்ற தோரணத்தின் உம்பர் - வானத்திற்பொருந்திய இந்திரவில்லைப்போலப் பல நிறத்துடன் விளங்குவதான தோரணவாசலின்மீது, இருந்தது - தங்கியிருந்ததாகிய, ஓர் நீதியானை - ஒருதன்மையையுடைய அவ்வநுமானை, வல் தொழில் அரக்கன் - கொடுந்தொழிலையுடைய அட்சகுமாரன், நோக்கி - பார்த்து, வாள் எயிறு இலங்க நக்கான் - ஒளியுள்ள(தனது)பற்கள் வெளித்தெரியும்படி பரிகாசமாகச் சிரித்தவனாய், அரக்கர்தம் குழாத்தை கொன்றது இ குரங்குபோல் ஆம் - 'அரக்கர் கூட்டத்தையெல்லாம் கொன்றது இந்தச்சிறுகுரங்குபோலும்', என்றான் - என்று வியப்பும் அலட்சியமும் தோன்றக் கூறினான்; (எ - று.) (௨௧)

[குரங்கென அலட்சியஞ்செய்யக்கூடாதென்று சாரதி எடுத்துக்காட்டுதல்.]

௨௨. அன்னதாமச்சொற்கேட்டசாரதியையகேண்மோ
வின்னதாமென்னலாமோவுலகியலிகழலம்மா
மன்னனோடெதிர்ந்தவாலிகுரங்கென்றான்மற்றுமுண்டோ
சொன்னதுதுணிவிற்கொண்டுசேறியென்றுணரச்சொன்னான்.

(இ - ள்.) அன்னது ஆம் அ சொல் - அப்படி (அட்சகுமான்) கூறியதான அவ்வார்த்தையை, கேட்ட—, சாரதி - (அவனது) சாரதி,— (அட்சகுமாரனை நோக்கி),—'ஐய—! கேண்மோ - (நான் சொல்வதைக்) கேட்பாயாக; உலகு இயல்-உலகத்தில் நிகழும் இயல்பை, இன்னது ஆம் என்னல் ஆமோ - (இது) இப்படிப்பட்டதாகுமென்று நிச்சயித்துக்கூறமுடியுமோ? (ஆகையால்), இகழல் - (தோற்றமாத்திரத்தைக்கொண்டு இது ஒருசிறுகுரங்கென்று) இகழ வேண்டா; மன்னனோடு - (நமது) அரசனாகிய இராவணனோடு, எதிர்ந்த - எதிர்த்துநின்றுவென்ற, வாலி - வாலியென்பவனை, குரங்கு என்றால் - ஒரு குரங்கேயாகுமென்றால், மற்றும் உண்டோ - மேலும் (நாம் சொல்லவேண்டுவது) ஏதேனும் உள்ளதோ? சொன்னது - (நான் இப்போது) சொன்னதை, துணிவின் கொண்டு - உறுதியாகக்கொண்டு, (இது அற்பக்குரங்கு என்று அலட்சியங் கொள்ளாமல் இதைவெல்லவேணுமேயென்ற கவலையுடனே), சேறி - செல்வாய்,' என்று—, உணர - (அவன்) மனத்திற் படும்படி, சொன்னான்—; (எ - று.) —அம்மா - வியப்பிடைச்சொல்.

'இன்னதாமென்னலாமோ', 'இகழ்தல்' என்றும் பாடமுண்டு. (௨௨)

[அட்சகுமாரன் செய்த பிரதிஜ்ஞை.]

உரு. விடந்திரண்டனையமெய்யானவ்வுரைவிளம்பக்கேளா
விடம்புகுந்தினையசெய்தவிதனொடுசீற்றமெஞ்சத்
தொடர்ந்துசென்றுலகமூன்றுந்துருவினனொழிவுறாமற்
கடந்துபின்குரங்கென்றோதுங்கருவையுங்களைவெனென்றான்.

(இ - ள்.) விடம் திரண்டு அனைய மெய்யான் - விடமே ஒரு அரக்கவடிவு கொண்டாற்போன்றுள்ள [கறுத்துள்ள] அட்சகுமாரன்,—அ உரை விளம்ப கேளா - (சாரதி) அந்தவார்த்தையைச் சொல்லக் கேட்டு, (அவனை நோக்கி),—'இடம் புகுந்து இனைய செய்த - நமது இருப்பிடத்தில்வந்து இவ்வளவு கொடுந்தொழில்களைச் செய்த, இதனொடு - இந்தக் குரங்கை யழித்தமாத்திரத்தால், சீற்றம் எஞ்ச - என்கோபம் அடங்காமல் எஞ்சிநிற்றலால், பின் - (இதைக்கொன்ற) பிறகு, தொடர்ந்துசென்று - (இப்போரை இக்குரங்கைக்கொன்ற இம்மட்டோடு நிறுத்தாமல்) தொடர்ந்துபோய், உலகம் மூன்றும் துருவினன் - மூவுலகங்களிலும் (குரங்கு எங்கே யிருக்கிறது எங்கேயிருக்கிறது என்று) தேடினவனாய், ஒழிவுறாமல் கடந்து - (சிறிதிடமும்) விடாமல் முற்றும் ஆராய்ந்து, குரங்கு என்று ஓதும் கருவையும் - கர்ப்பத்தில் இருந்தாலும் குரங்கு என்றால் அந்தக்கருவையும், களைவென் - அழித்தொழிப்பேன்', என்றான் - என்று (தன் துணிவை) எடுத்துச் சொன்னான்; (எ - று.)

நம்முடையவூரில்வந்து வனபங்கஞ்செய்து அம்மட்டோடு நில்லாமல் மிகப் பல அரக்கரையும் அழித்து நமக்குப்பேரவமானத்தையுண்டாக்கியதனால் இக்குரங்கைக் கொல்வதோடு நில்லாமல், என்கோபம் மூள்வதனால், இவ்வளவு கொடுமைசெய்த இவ்வானரத்தின் சாதியையும் மூவுலகிலும்தேடித்தேடிச் சென்று இந்தச்சாதியின் கருவோடு அழித்து இம்மூவுலகிலும் குரங்கு என்றபேரேயில்லாமற்செய்துவிடுவேனென்று அட்சகுமாரன் சாரதியைநோக்கித் தன் துணிவை யெடுத்துக் கூறினனென்க. இனி, இச்செய்யுட்கு—விடம்திரண்டு அனைய மெய்யான் - சாரதி, அவ்வுரைவிளம்ப, கேளா - (அட்சகுமாரன்)கேட்டு, (அக்குமாரன்), அவனை நோக்கி (ஒருகால் இந்தக்குரங்கு நான் எதிர்த்துப் போர்செய்கையில் முன்னிற்கமாட்டாது கைக்கு எட்டாதபடி ஓடிவிட்டாலும்) உலகம் மூன்றும் ஒழிவுறாமல் இதனொடு தொடர்ந்து சென்று துருவினனாய் (இதனைக்)கடந்து - கொன்று, பின் - பின்னும், சீற்றம் - (என்) கோபம், எஞ்ச - (அடங்காமல்) மிஞ்சியிருத்தலால், குரங்குஎன்று ஓதும் கருவையும் களைவேன் என்று கூறியதாக உரைப்பினுமாம். (உரு)

[இனி அரக்கச்சேனைக்கும் அநுமானுக்கும் நடந்த போர்.]

உசு. ஆர்த்தெழுந்தரக்கர்சேனையஞ்சனைக்குரியகுன்றைப்
போர்த்தனபொழிந்ததம்மாபொருபடைப்பருவமாரி
வேர்த்தனர்திசைகாப்பாளர்சலித்தனவிண்ணுமண்ணுந்
தார்த்தனிவீரன்றானுந்தனிமையும்வரமேற்சார்ந்தான்.

(இ - ள்.) அரக்கர் சேனை - இராட்சசசேனையானது, ஆர்த்து எழுந்து - ஆரவாரத்துடனே கிளம்பி, அஞ்சனைக்கு உரிய குன்றை - அஞ்சனாதேவிகுமாரனான மலைபோன்ற அநுமானை, போர்த்தது - சூழ்ந்துகொண்டதாய், பொரு படை பருவம் மாரி பொழிந்தது - போர்செய்கின்ற ஆயுதங்களாகிய பருவகாலத்துமழையைச் சொரிந்தது; (அதுகண்ட), திசை காப்பாளர் - (எட்டுத்) திக்கையும் காக்கின்ற தேவர்கள், வேர்த்தனர் - (அச்சத்தினால்) உடல்வேர்க்கலானார்கள்; விண்ணும் மண்ணும் - விண்ணுலகமும் மண்ணுலகமும், சலித்த - (பொருகின்றவேகத்தினால்) அதிரலாயின; தார் தனி வீரன்தானும் - வெற்றிமாலையையணிவதற்குஉரிய வீரனாகிய அநுமானும், தனிமையும் வர - தனிமையென்பது தன்னோடுவர [தான் தனியனாய்], மேல் சார்ந்தான் - (அச்சேனையின் மீது பொருமாறு) சேர்ந்தான்; (எ - று.)

'சலித்தது விண்ணும் மண்ணும்' என்ற பாடம் - வழுவமைதி. (உ௪)

உரு. எறிந்தனர்நிருதர்வெய்தினெய்தனபடைகள்யாவு
முறிந்தனவீரன்மேனிமுட்டினமுகரயானை
மறிந்தனமடிந்ததேரும்வாவுமாக்குழுவுமாவி
பிறிந்தனவரம்பில்யாக்கையிலங்கைதன்னிலையிற்பேர.

(இ - ள்.) நிருதர் எறிந்தனர் - அரக்கர்கள் (பலவகையாயுதங்களை அநுமான்மேற்) பிரயோகித்தார்கள்; வெய்தின் எய்தன படைகள் யாவும் - கொடுமையாகப் பிரயோகித்த அவ்வாயுதங்களெல்லாம், வீரன் மேனி முட்டின - அநுமான்உடம்பின்மீது பட்டனவாய், முறிந்தன—; (அநுமான் அப்போது எதிர்த்துப்பொருததனால்), முகரம் யானை - பேரொலிசெய்கின்ற யானைச் சேனைகள், மறிந்தன-உயிரழிந்தன; தேரும் மடிந்த - தேர்களும் அழிந்தன; வாவும் மா குழுவும் - தாவிச்செல்லுகின்ற குதிரைகளின் கூட்டமும், வரம்பு இல் யாக்கை - வரம்பில்லாத தம்முடம்பு, இலங்கைதன் நிலையில பேர - இலங்கையினிடத்தே பிரிந்துவீழ்ந்திருக்க, ஆவி பிறிந்தன - தாம் உயிர்நீங்கின; (எ - று.)

அரக்கரெய்தஆயுதங்கள் அநுமானை ஊறுபடுத்தமாட்டாமற் போக, இவனுடைய வல்லமையால்அரக்கர்சேனை அழிந்தபடியைக் கூறினார். 'மாக்குழுவும்மற்றும்மொறிந்தன' என்ற பாடத்துக்கு - மற்றுமுள்ள காலாட்களும் உயிரொழிந்து வரிசைவரிசையாக வீழ்ந்துகிடந்தன என்று பொருளாம். 'இலங்கைதன்னிலையிற்பேர' என்பதற்கு - படைகள் இறந்துவீழ்ந்திட்டதனால் அந்தப்பாரத்தைத் தாங்கமாட்டாமல் இலங்கை நிலைகுலைய என்று கூறலுமாம். (உரு)

உசு. காயெரிபுனிபுற்கானிற்கலந்தெனக்காற்றின்செம்ம
லேயெனுமளவிற்கொல்லுநிருதர்க்கோரெல்லையில்லை
போயவருயிரும்போகித்தென்புலம்படர்தல்பொய்யா
வாயிரகோடிதூதருளர்கொலோநமனுக்கம்மா.

(இ - ள்.) காய் எரி - பற்றியெரியுந்தன்மையுள்ள நெருப்பானது, முனி புல் கானில் கலந்து என - உலர்ந்தபுற்களின் தொகுதியிலே சேர்ந்தாற்போல,

காற்றின் செம்மல் - வாயுபுத்திரனாகிய அநுமான், எயெனும் அளவில் - வெகு விரைவில், கொல்லும் - கொல்லுகிற, நிருதர்க்கு - அரக்கர்கட்கு, ஓர் எல்லை இல்லை - ஓரளவில்லை; போயவர் உயிரும்- (யுத்தத்திறகுப்)போனவர்களின்உயிரும், போகி - (உடம்பைவிடடுப்) போய், தென்புலம் படர்தல் பொய்யா - தென்திசையிலுள்ள யமலோகத்துக்குச் செல்லுதலினின்றும் தவறமாட்டா; (இவ்வாறு இறந்தஉயிர்களையெல்லாம் கொண்டுபோகும்படி), நமனுக்கு - யமனுக்கு, ஆயிரகோடி தூதர் உளர்கொலோ—? அம்மா - ஆச்சரியம்! (எ - று.)

அநுமானுக்கு எரியும், அரக்கர்க்கு முளிபுற்களும் உவமை. 'பொய்யாது' என்ற பாடத்துக்கு - படர்தல் என்பதை எழுவாயாக்கி உரைக்க. (உசு)

உஎ. வரவுற்றார் வாரா நின்றார் வந்தனர் வரம்பில் வெம்போர்
பொரவுற்ற பொழுதும் வீரன் மும்மடங் காற்றல் பொங்கி
யெரியிற்போய்க் கதிரோ னூழி யிறுதியி னென்ன லானா
னுரவுத்தோ ளரக்க ரெல்லா மென்பிலா வுயிர்க ளொத்தார்.

(இ - ள்.) வர உற்றார் - (இனி) வருமாறு இருப்பவர்களும், வாராநின்றார் - வந்துகொண்டிருப்பவர்களும், வந்தனர் - முன்னமே வந்திட்டவர்களும், (ஆகிய யாவரும்), வரம்பு இல் வெம் போர் பொர உற்ற பொழுதும் - எல்லையில்லாத கொடியபோரைச் செய்யத்தொடங்கின பொழுதும்,—வீரன் - அநுமான்,— ஆற்றல் மும்மடங்கு பொங்கி - (தன்) வலிமை (முன்னையினும்) மூன்றுமடங்கு அதிகமாகப் பொருந்தி, எரியின் போய் - எரிக்குந்தன்மை மிக்கு, ஊழி இறுதியின் கதிரோன் என்னல் ஆனான் - யுகாந்தகாலத்துத்தோன்றும் சூரியன் போல விளங்கினான்; உரவு தோள் அரக்கர் எல்லாம் - (அவனோடு பொருதற்கு வந்த) வலிமைபொருந்திய தோள்களையுடைய அரக்கர்யாவரும், என்பு இலா உயிர்கள் ஒத்தார் - உடம்புஎலும்பில்லாத பிராணிகளையொத்து (அதனால்) எரிக்கப்பட்டார்கள்; (எ - று.)

"என்பிலதனை வெயில்போலக்காயும்" என்றபடி எலும்பில்லாத பிராணியை வெயில் அழிக்குந் தன்மையதாதலால். எரிக்கின்ற அநுமானுக்குச் சூரியனையும் எரிபடுகின்ற அரக்கர்க்கு என்பில்லாவுயிரையும் உவமை கூறினார்: இவ்வுவமையால், அநுமான் அறத்தின்வடிவின னென்பதும், அரக்கர் அன்பில்லாதவ ரென்பதும் தொனிக்கும். வரவுற்றார், வாராநின்றார் என்ற இவரையும் எடுத்துக் கூறியது - வந்தவர்போலவே இவர்களும் அழிவரென்ற தெளிவுபற்றி. (உஎ)

வேறு.

உஅ. பிள்ளைப்பட்டன நுதலோடைக்கரிபிறழ்பொற்றேர்பரிபிழையாம
லள்ளப்பட்டழிகுருதிப்பொருபுனலாறுகப்படிசேறாக
வள்ளப்பட்டனமகரக்கடலெனமதில்சுற்றியபதிமறலிக்கோர்
கொள்ளைப்பட்டுளவுயிரென்னும்படிகொன்றானைம்புலன்வென்றானே.

(இ - ள்.) அள்ளப்பட்டு அழி குருதி பொரு புனல் - (வருகின்றபிராணிகளையெல்லாம்) அள்ளிக்கொண்டு மிக்குள்ள இரத்தத்தின் பெருவெள்ளம்,

**ஆறு ஆக** - ஆறுபோலிருக்க, பிள்ளப்பட்டன - உடல்பிய்க்கப்பட்டனவான, **நுதல் ஓடை கரி** - நெற்றியில் வீரப்பட்ட மணிந்த யானைகளும், பிறழ் பொன் **தேர் பரி** - (யுத்தத்திற்) செல்லுகின்ற தேர்களும் குதிரைகளும், பிழையாமல் **படி சேறு ஆக** - (அவ்வாற்றிற்) படிந்த குழைசேறாய்விடும்படி,—ஐம்புலன் **வென்றான்** - பஞ்சேந்திரியநிக்கிரகம் செய்தவனான அநுமான்,— வள்ளம் பட்டன மகரம் கடல் மதில் என சுற்றிய பதி - தோணிகள் பொருந்தியதாகிய மகர மீன்கள் நிறைந்துள்ள கடல் மதிலாகும்படி சூழ்ந்துள்ள இலங்காநகரத்திலுள்ள, உயிர் - பிராணிகள்யாவும, மறலிக்கு ஓர் கொள்ளைப்பட்டு உள என்னும் படி - யமனுக்குப் பெருங்கொள்ளையிலகப்பட்டுள்ளனவென்று (கண்டவர்) கூறுமாறு, கொன்றான்—;(எ - று.)

ஏற்கவே நடந்த பெரும்போரினால் இரத்தநீர் ஆறாய்ப் பெருகாநிற்க, அந்த ஆற்றிலே இப்போது பொரவந்த ரதகஜதுரகங்கள் அழிந்து சேறாய்விடுமாறுசெய்து, அநுமான் இலங்கையிலுள்ள யமன பெருங்கொள்ளை கொள்ளும்படி புரிந்தன னென்பதாம். இலங்கை நீரரணுள்ளதாய் எவராலும் இடட வொண்ணாத தென்பதை, மூன்றாமடி தெரிவிக்கும். அநுமான் நித்தியபிரமசாரியாதலால், அவனை 'ஐம்புலன்வென்றான்' என்றார். மூன்றாமடியில், 'அள்ளற்பட்டன' என்ற பாடம் மோனைத்தொடைக்குச் சிறவாது.

இது முதற் பதினன்கு கவிகள் - இரண்டு நான்கு ஆறு ஐஞ்சீர்கள் விளச்சீர்களும், ஈற்றுச்சீரொன்று காய்ச்சீரும், மற்றைமூன்றும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எழுசீராசிரிய விருத்தங்கள். (உஅ)

உகூ. தேரேபட்டன வென்றார் சிலர் சிலர் செறுகட் செம்முக வயிரத்தோட்
பேரேபட்டன வென்றார் சிலர் சிலர் பரியேபட்டன பெரிதென்றார்
காரேபட்டன நுதலோடைக்கடகரியேபட்டன கடிதென்றார்
நேரேபட்டனர்படமாட்டே தனிநில்லாவுயிரொடு நின்றோரே.

(இ - ள்.) நேரே பட்டனர் பட - (பின் வாங்காது தாம) நேரேசென்று (அநுமானோடு பொருது) இறந்தவர் இறந்து கொண்டிருக்க, (அங்ஙனம நேரே சென்று பொரமாட்டாமல்), மாடே - (ஒதுக்கமான) பக்கங்களில, நில்லா உயிரொடு தனி நின்றோர் - (அந்தக் கடும்போரைக் காணுதல் மாத்திரத்தாலேயே) உடலில் நிற்கமாட்டாது நுவிக்கின்ற உயிருடனே தனியே நின்றவர்களில்,—சிலர்—,—தேரே பட்டன என்றார் - தேர்களே அழிந்தன என்றார்கள்; சிலர்—, செறுகண் செம் முகம வயிரம் தோள பேரே பட்டன என்றார் - அழிக்கவல்ல (கடும்பார்வையையுடைய) கண்களையும் (இரத்தம் குழம்பிச்) சிவந்த முகங்களையும் உறுதியான தோள்களையு முடைய காலாட்படைகளே யிறந்தன என்றார்கள்; சிலர்—, பெரிது பரியே பட்டன என்றார் - குதிரைகளே மிகுதியாக அழிந்தன என்றார்கள்; சிலர்—, காரே பட்டன நுதல் ஓடை கடம் கரியே கடிது பட்டன என்றார் - மேகத்தை யொத்தனவாகிய நெற்றிப பட்டத்தையும் மதநீரையுமுடைய யானைகளே விரைவாக அழிந்தன என்றார்கள்; (எ- று.)

நேரேபொருஞ்சுத்தவீரர்கள் அநுமானோடு பொருது மாளுகையில், அங்ஙனஞ்சென்றுபொருதற்கு ஏற்ற மனவலியில்லாமையால் போரச்செல்லாமலும் இராவணனிடத்து அச்சத்தினால் ஊரில் நிற்கமாட்டாமல் போர்க்களத்தில்வந்துமுள்ள சிற்சிலர் அங்குத்தானே ஒதுக்கமான ஓரிடத்தில் தங்கி, நால்வகைப்படையும் இறப்பதைக் கண்டு பேசிய வண்ணம் அந்தக்கடும்போரைக் காணுதற்கும் மனம்பொறாமல் உயிர் தவிக்கலாயின ரென்பதாம். 'நேரே பட்டவர்பட மாடேபட நில்லாவுயிர்கொடு' என்றும் பாடம். (சகூ)

ருO. ஆழிப்பொருபடைநிருதப்பெருவலியடலோராய்மகளடுபேழ்வாய்த்
தாழிப்படுதயிரொத்தார்மாருதிதனிமத்தென்பதோர்தகையானோ
னேழிப்புவனமுமிடைவாழுயிர்களுமெறிவேலிளையவரினமாக
வூழிப்பெயர்வதோர்புனலொத்தாரனலொத்தான்மாருதமொத்தானே.

(இ - ள்.) ஆழி பொரு படை நிருதர் பெரு வலி அடலோர் - கடல்போற்பரந்த போர்செய்கின்ற ஆயுதங்களையுடைய அரக்கராகிய மிக்கவலிமை படைத்த வீரர்கள்,— ஆய் மகள் - இடைப்பெண், (பாலைக் காய்ச்சித் தோய்த்த), பேழ் வாய் தாழி படு - அகன்ற வாயையுடைய தாழியிலே பொருந்திய, தயிர் - தயிரை, ஒத்தார்—; மாருதி - அநுமான், தனி மத்து என்பது ஓர் தகை ஆனான் - ஒப்பற்ற மத்தென்றுசொல்லத்தகுந்த தன்மையைப் பொருந்தினான்; ஏழ் இ புவனமும் - இந்த எழுலோகங்களிலும், இடை வாழ் - நெருங்கி வாழ்கின்ற, உயிர்களும் - பிராணிகளெல்லாம், எறி வேல் இளையவர் இனம் ஆக - எறிகின்ற வேலாயுதத்தைக் கொண்ட இராட்சச வீரர்களின் திரளாகவே தோன்ற, (அவ்வரக்கவீரர்கள்), ஊழி பெயர்வது ஓர் புனல் ஒத்தார் - யுகாந்த காலத்திற் பொங்கிவருந் தன்மையுள்ள கடல்வெள்ளத்தை யொத்தார்கள்; மாருதம் ஒத்தான் - (உடல்வலிமையால்) வாயுபகவானையொப்பவனான அநுமான், அனல் ஒத்தான் - (அக்கடல்நீர்ப்பெருக்கை மிகவொட்டாது உறிஞ்சுகின்ற) படபாமுகாக்கினியைப் போன்றான்; (எ - று.)

போர்க்களத்தினிடையேநிற்கின்ற அநுமானால் அரக்கர் கலக்கப்படுதல் பற்றி அவ்வரக்கர்க்குக் கடைதாழியிலுள்ள தயிரும், அநுமானுக்குக் கடைமத்தும் உவமையாமென்க. அப்போது எங்குப்பார்த்தாலும் அரக்கவீரரைத் தவிர வேறொரு பிராணி காணப்படாமையால், 'ஏழிப்புவனமு மிடைவாழுயிர்களும் எறிவேல் இளையவரினமாக' எனப்பட்டது. ஏழிப்புவனமும் - ஏழுதீவுகளாகவுள்ள இந்தப் பூமிமுழுதும் என்று கூறுதல ஏற்கும். (ருO)

[இனி அநுமானுக்கும் அட்சகுமாரனுக்கும் நிகழும் போர்.]

ருக. கொன்றானுடன்வருதழுவைச்சிலர்பலர்குறைநின்றாருடல்குலைகின்றார்
பின்றாநின்றனவுதிரப்பெருநதிபெருகாநின்றனவருகாறு
நின்றார்நின்றிலர்தனிநின்றானொருநேமித்தேரொடுமவனேரே
சென்றான்வன்றிறலயில்வாயம்புகடெரிகின்றான்விழியெரிகின்றான்.

(இ - ள்.) வரு குழுவை - (தன்மேற் போர்க்குவருகின்ற) அரக்கர்திரளை, உடன் - உடனுக்குடனே, கொன்றான் - (அநுமான்) கொன்றான்; (அதனால்), சிலர் - சில அரக்கவீரர்கள், குறைகின்றார் - இறந்தொழிந்தார்கள்; (அப்போது), உதிரம் பெரு நதி பெருகாநின்றன - இரத்தப்பெருநதிகள் பெருகின; பலர் - பலஅரக்கவீரர், உடல் குலைகின்றார் - உடம்பு நடுங்குபவராய், பின்றுகின்றனர் - (போர்செய்யப்) பின்வாங்கினவர்களாக,— அருகு நின்றார் ஆரும் நின்றிலர் - (அட்சகுமாரனுக்குத் துணையாக) அருகில்நின்றவர்கள் எவரும் நிற்கமாட்டாமல் ஓடி மறைந்திட்டார்கள்; தனி நின்றான் - (துணையில்லாமல்) தனிப்பட்டவனாகிய அட்சகுமாரனே, விழி எரிகின்றான் - (கோபத்தினால்) கண்களில் நெருப்புப்பொறி பறக்கப்பெற்றவனும், வல் திறல் அயில் வாய் அம்புகள் தெரிகின்றான் - (அநுமான்மேலெய்யும்பொருட்டு) மிக்கவலியுள்ள கூர்மை பொருந்திய அம்புகளைத் தேர்ந்தெடுப்பவனு மாகி, ஒரு நேமி தேரொடும் - சக்கரத்தாற் செல்வதான (தன்) ஒற்றைத்தேருடனே, அவன் நேரே சென்றான் - அவ்வநுமானுடைய எதிரே சென்றான்; (எ - று.)

'பெருகாநின்றனவருகாக' என்றும் பாடம். தெரிகின்றான் விழியெரிகின்றான் - பிராசம். (௯௧)

௯௨. உற்றானிந் திரசித்துக் கிளையவனொருநாளே பலருயி ருண்ணக்
கற்றானும்முகமெதிர் வைத்தான துகண்டார் விண்ணவர்கசிவுற்றா
ரெற்றோமாருதி நிலையென்பா ரினியிமையா விழியினையிவையொன்றே
பெற்றோநல்லது பெற்றோமென்றனர் பிறியாதெதிரெதிர்செறிகின்றார்.

(இ - ள்) இந்திரசித்துக்கு இளையவன் - இந்திரசித்தின் தம்பியாகிய அட்சகுமாரன், உற்றான் - (அநுமானுக்குநேரே) வந்தான்; ஒரு நாளே பலர் உயிர் உண்ண கற்றானும் - ஒரு தினத்தில்தானே பல லட்சக்கணக்கான வீரருயிர்களையழிக்கப் பழகியவனாகிய அநுமானும், முகம் எதிர் வைத்தான் - அவனுக்கு அபிமுகனானான்; அது கண்டார் விண்ணவர் - அதனைக்கண்ட தேவர்கள், கசிவுற்றார் - மனமிரங்கினவர்களும், மாருதி நிலை எற்று ஆம் - அநுமான்நிலை யாதாகுமோ? என்பார் - என்று மனத்தில் தனக்குத் தானே கூறுபவருமாகி, இனி - இப்பொழுது, இவை இமையா விழியினை ஒன்றே பெற்றோம் - இந்தஇமையாக்கண்களையுடைமையாகிற ஒருசிறப்பைப் பெற்றிருக்கின்ற நாங்கள், (இவ்விருவரும் பொருகின்ற போர்விநோதத்தைக் காணுமாறு), நல்லது பெற்றோம் - நன்மையைப்பெற்றவரானோம், என்றனர் - என்றுகூறுபவர்களாய், பிறியாது எதிர் எதிர் செல்கின்றார் - (ஒருவரை விட்டு ஒருவர்) பிரியாமல் (அப்போரைக் காணும்பொருட்டு வானத்தில்) அவ்விருவர்க்கும் எதிராகப் போய் நின்றார்கள்; (எ - று.)

அட்சகுமாரன் அநுமானுடன் வெகுஉக்கிரமாகப் போர்செய்யும்படி நெருங்கினபோது, தேவர்கள் தாம் இமையாக்கண்களைப் பெற்றதற்காக உவந்து அப்போரைக் காணுமாறு அவர்கட்கு எதிராக வானத்திற் சென்றார்க

-னென்பதாம். அல்லதுபெற்றுமென்ற பாடத்துக்கு - அட்சகுமாரன் பெருஞ் சினங்கொண்டு வெகுகடுமையாகப்போர்செய்வது கண்ட விண்ணவர் அநுமா னுக்கு ஒருகால் அபஜயம் நேருமோ வென்று அவனிடத்துள்ள பரிவினாலே அஞ்சியவர்களாய், தாம் இமையாக்கண்ணைப் பெற்றது அந்தக்கோரத்தைக் காணுதற்குக் காரணமாயிருக்குமாதல்பற்றி, நாம் இமையாக் கண்களையோ பெற்றோம்? துன்பத்தையே பெற்றோம் என்றன ரென்று பொருள்காண்க. 'ஒருகாலே' என்றும், 'எற்றேமாருதிக்கிலே' என்றும் பாடாந்தரம். (௩௨)

௩௩. எய்தான்வாளிகளெரிவாயுமிழ்வனவீரேழெதிரவைபார்சோரப்
பொய்தான்மணியெழுவொன்றாலன்றதுபொடியாயுதிர்வுறவடிவாளி
வெய்தாயினபலவிட்டான்வீரனும்வேறோர்படையிலன்மாறாவெங்
கைதானேபொருபடையாகத்தொடர்காலார்தேரதன்மேலானான்.

(இ - ள்.) (அப்போது அட்சகுமாரன்), எரி வாய் உமிழ்வன ஈர் ஏழ் வாளிகள் - நெருப்புப் பொறிகளைத் தம்மிடத்தினின்று கக்குவனவான பதினான்கு அம்புகளை, எய்தான் - (அநுமான்மேற்) பிரயோகித்தான்; (அநுமான்), எதிர் - மாறாக, அவை - அந்தஅம்புகளை, மணி எழு ஒன்றால் - (தான் கையிற்கொண்ட) அழகிய இருப்புத்தண்டினாலே, பார் சோர - பூமியிலே விழும்படி, பொய்தான் - பயனிலவாகச்செய்தான்; அன்று - அப்பொழுது, அது - அந்த எழு, பொடி ஆய் உதிர்வு உற - பொடியாய்ச்சிதறிப்போமபடி, வெய்து ஆயின பல வடி வாளி - கொடுமையான பல கூரிய அம்புகளை, விட்டான் - (அவ்வட்சகுமாரன்) பிரயோகித்தான்; வீரனும் - அநுமானும்,—வேறு ஓர் படை இலன் - வேறொரு ஆயுதம் இல்லாதவனாய், மாறு ஆ - அவ்வம்புகட்கு மாறாக, வெம் கை தானே பொரு படை ஆக - (தனது) கொடிய கைகளே போர்செய்கின்ற படைக்கலமாக(க் கொண்டு அவற்றையழித்து), தொடர் கால் ஆர் தேர்அதன்மேல் ஆனான் - தொடர்ந்துள்ள [பலவான] சக்கரங்கள் பொருந்திய (அந்தஅட்சகுமாரனுடைய) தேரின்மேற் பாய்ந்து தங்கினான்; (எ - று.) (௩௩)

௩௪. தேரிற்சென்றெதிர்கோல்கொள்வானுயிர்தின்றானப்பொருசெறிதிண்டேர்
பாரிற்சென்றது பரிபட்டனவவன்வரிவிற்சிந்தியபகழிக்கோன்
மாரிற்சென்றனசிலபொற்றோளிடைமறைவுற்றனசிலமறவோனு
நேரிற்சென்றவன்வயிரக்குனிசிலைபற்றிக்கொண்டெதிருறநின்றான்.

(இ - ள்.) (பாய்ந்த அநுமான்), தேரில் சென்று -(அட்சகுமாரனது) தேரின் மேல் நின்று, எதிர் கோல் கொள்வான் உயிர் தின்றான் - எதிரேயுள்ள உளவு கோலைக்கையிற்கொண்டுள்ள சாரதியின் உயிரை யொழித்தான்; (பின்னும் அநுமான் தன் கையால் நொருக்கியதனால்),—அ பொரு செறி திண் தேர் - போர் செய்து நெருங்குகின்ற அந்த வலியதேர், பாரில் சென்றது - (சின்ன பின்னப்பட்டுத்) தரையில் விழுந்திட்டது; பரி பட்டன - குதிரைகளும் இறந் தொழிந்தன; அவன் வரி வில் சிந்திய பகழி கோல் - அந்தஅட்சகுமாரன்

(தனது) கட்டமைந்த வில்லினின்று பிரயோகித்த அம்புகளில, சில—,மார்பில் சென்றன - (அநுமானது) மார்பிற் பாய்ந்தன; சில —,பொன் தோளிடை மறைவுற்றன - அழகிய தோளின்மேற் பாய்ந்து மறைந்திட்டன; மறவோனும் - வீரனை அநுமானும், (தன்மார்பிலும் தோள்களிலும் அட்சகுமாரன் எய்த அம்புகளை இலட்சியஞ்செய்யாமல்),—நேரில் சென்று - (அவ்வட்சகுமாரனது) எதிரிலே போய் நின்று, அவன் வயிரக்குனி சிலை பற்றிக்கொண்டு - (அம்புகளை அவன் இனி எய்யமுடியாதபடி) அவ்வட்சகுமாரனது வலிய வளைந்த வில்லைப் பிடித்துக்கொண்டு, எதிர்உற நின்றான் - அவனெதிரிலே நின்றான்.

௬௫. ஒருகையாலவன்வயிரத்திண்சிலையுற்றுப்பற்றலுமாருதிவேறொ
ரிருகையாலிவன்வலியாமுன்னமதிற்றேடியதிவர்பொற்றோளான்
சுரிகையாலவனுருவிக்குத்தலுமதனைச்சொற்கொடுவந்தூதன்
பொருகையாலிடைபிரிவித்தான்கதிர்பொறியோடும்படிபறியாவே.

(இ - ள்) ஒரு கையால் அவன் வயிரம் திண் சிலை உற்று பற்றலும் - (அவ்வாறு) அநுமான் (தனது) ஒருகையினால் அவ்வட்சகுமாரனது மிகவலிய வில்லை உறுதியாகப் பிடித்துக்கொண்டவுடனே,—உரவோன் வேறும் - வலிய வனாகிய இவ்வட்சகுமாரனும், இரு கையால் வலியா முன்னம் - (அவ்வில்லை அநுமானிடத்தினின்று மீட்கும்படி தனது) இரண்டு கைகளினாலும் பிடித்திழுக்க அப்போது உடனே, அது இற்று ஒடியாது - அவ்வில் முறிந்து போய் விட்டது ; இவர் பொன் தோளான் - (தன்மேல்) வந்த அழகிய தோள்களையுடைய அவ்வநுமானை, அவன் - அட்சகுமாரன், சுரிகையால் உருவி குத்தலும் - (உறையினின்று எடுத்து) உடைவாளினாற் குத்தத்தொடங்கவும், அதனை - அந்தஉடைவாளை,—சொல் கொடு வரு தூதன் - (இராமபிரானது) சொல்லை(ச் சீதாபிராட்டியினிடம் சொல்லுமாறு) கொண்டுவந்த தூதனாகிய அவ்வநுமான்,— பொரு கையால் - போர்செய்கின்ற (தனது) கையினாலே, கதிர் பொறி ஓடும் படி பறியா - (பிடுங்கின விசையினால்) மிக்க நெருப்புப்பொறி எங்கும்பறந்து செல்லும்படி பறித்து, இடை பிரிவித்தான் - (தன்மேற்படுவதற்கு முன்னம்) நடுவழியிலேயே பொடியாயுதிரும்படி செய்தான் ; (எ - று.)

'ஒருகையாலவன் வயிரத்திண்சிலையுற்றுப்பற்றலும்' என்றது - அநுவாதம். 'வயிரச்சிலையினை', 'சுரிகைவாளெதிர்' என்பன பாடாந்தரம். (௬௫)

௬௬. வாளாலேபொரலுற்றானிற்றதுமண்சேராமுனம்வயிரத்திண்
டோளாலேபொரமுடுகிப்புக்கிடைதழுவிக்கோடலுமுடன்முற்று
நீளாரயிலெனமயிர்தைத்திடமணிநெடுவாலவனுடனிமிர்வுற்று
மீளாவகையுடைசுற்றிக்கொண்டதுபற்றிக்கொண்டனன்மேலானான்.

(இ - ள்.) வாளாலே பொரல் உற்றான் - வாளினாற்போர்செய்யத்தொடங்கிய அட்சகுமாரன், அது இற்று மண் சேரா முனம் - (கீழ்க்கூறியவாறு) அந்தச்சுரிகை பொடியாகிப் பூமியில்விழுவதற்குமுன்னம், வயிரம் திண் தோளாலே பொர - மிக்கவலிய (தன்) தோள்களினாலேயே போர்செய்யும்படி, முடுகி இடை

புக்கு - விரைந்து அநுமானிடத்துச்சென்று, தழுவிக்கோடலும் - (அவ்வநுமானைத்) தழுவிக்கொள்ள முயன்றபோது, உடல் முற்றும் - (தனது) உடம்பு முழுதும், நீள் ஆர் அயில் என மயிர் தைத்திட - நீட்சி பொருந்திய வேலாயுதம் போல் மயிர் பொத்தும்படி, மணி நெடு வால் - (அநுமானது) அழகிய நீண்ட வால், அவன் உடலை நிமிர்வுற்று மீளா வகை புடை சுற்றிக்கொண்டது - அவ்வட்சகுமாரனது உடம்பு நிமிர்ந்து வரவொட்டாது (உடம்பின்) எல்லாப்பக்கங்களிலும் சுற்றிக்கொண்டது ; பற்றிக்கொண்டனன் மேல் ஆனான் - (இவ்வாறு அட்சகுமாரனை அநுமான்) பிடித்துக்கொண்டு அவன்மேல் ஏறிக்கொண்டான் ; (எ - று.)

'மண்சேர்வதனின்முன்,' 'தழுவிக்கோடலும் வழுவிப்போய்' என்பன பாடாந்தரம்.　　(௯௬)

௯௭. பற்றிக்கொண்டவன்வடிவாளெனவொளிர்பல்லிற்றுகநிமிர்படர்கையா
லெற்றிக்கொண்டலினிடைநின்றுமிழ்சுடரினமின்னினம்விழுவனவென்ன
முற்றிக்குண்டலமுதலாமணியுகமுறைமுநாலாவிவர்குடர்நாலக்
கொற்றத்திண்சுவல்வயிரக்கைகொடுகுத்திப்புடையொருகுதிகொண்டான்.

(இ - ள்.) பற்றிக்கொண்டவன் - (தன்வாலினாலே) பற்றிக்கொண்டவனான அநுமான்,—வடி வாள் என ஒளிர் பல் இற்று உக நிமிர் படர் கையால் எற்றி - கூரிய வாள்போலவிளங்குகின்ற பற்கள் உதிரும்படி ஓங்கிச்சென்ற தன் கையினால் கன்னத்தில் அறைந்து, (பின்பு), கொண்டலின் இடை நின்று உமிழ் சுடரின மின் இனம் விழுவன என்ன - மேகத்தினின்று வெளிவருகின்ற ஒளியையுடைய மின்னற்கூட்டம் விழுவனபோல, குண்டலம் முதல் ஆம் மணி முற்றி உக - (காதிலணிந்திருந்த) குண்டலம் முதலிய இரத்தினாபரணங்களிற் பொருந்திய மணிகள் முழுவதும்சிந்திவிடவும், முறை நாலா இவர் குடர் நால - வயிற்றிலே தொங்காமற் பிணிப்புடன் தங்கியிருந்த குடல்கள் சரிந்துவிடவும், கொற்றம் திண் சுவல் வயிரம் கைகொடு - (இதுவரையிலும்) வெற்றிபொருந்தியிருந்த வலிய (அவ்வட்சகுமாரன்) பிடரியை வலிமை பொருந்திய (தன்) ஒற்றைக்கையினாற் பிடித்துக்கொண்டு, (மற்றொருகையால்), குத்தி - பலகுத்துக்குத்தி, புடை ஒரு குதிகொண்டான் - (அவனுடலினின்று) பக்கத்திலே அநுமான் ஒருகுதி குதித்தான் ; (எ - று.)　　(௯௭)

[அநுமான் அட்சகுமாரனை யொழித்தல்.]

௯௮. நீத்தாயோடினவுதிரப்பெருநதிநீராகச்சில்லைபாராகப்
போய்த்தாழ்செறிதசையரிசிந்தினபடிபொங்கப்பொருமுயிர்போகாமுன்
மீத்தாநிமிர்சுடர்வயிரக்கைகொடுபிடியாவிண்ணொடுமண்காணத்
தேய்த்தானாழியினுலகேழ்தேயினுமொருதன்புகழிறைதேயாதான்.

(இ - ள்.) (அப்போது), நீத்து ஆய் ஓடின உதிரம் பெருநதி - வெள்ளமாகப் பெருகிய இரத்தப்பெருநதியே, நீர் ஆக - (அரைக்கும்போது வேண்

டிய) ஜலமாகவும்,—பார்-பொருகளமே, சிலை ஆக - அம்மிக்கல்லாகவும், போய் தாழ் செறி தசை - (உடம்பினின்று) வெளிப்பட்டுக் கீழ்விழுந்த (அவ்வட்சகுமாரனது) நெருங்கிய சதையே, அரி சிந்தினபடி பொங்க - (அம்மிக்கல்லிலிடப்படுகிற அரைப்பதற்காக எடுத்துவைத்த) ஊறலரிசிபோல மேன்மேற் பொங்க, (தசை நீங்கிய அவ்வரக்கனது உடற் பகுதியைக் குழவியாகக்கொண்டு), பொரும் உயிர் போகாமுன் - போர்செய்கின்ற அவ்வரக்கனுயிர் போகா முன்னம், மீத்து ஆ திமிர் சுடர் வயிரக் கைகொடு பிடியா - (குழவியின் இருபுறத்து) மேற் பக்கத்திலுமாக திமிர்கின்ற ஒளிபொருந்திய உறுதியான கைகளினாற் பிடித்து, விண்ணொடு மண் காண - மேலுலகத்தாரும் நிலவுலகத்தாரும் காணும்படி, தேய்த்தான் - அரைத்தான்; (யாவனெனின்), ஊழியின் உலகு எழ் தேயினும் ஒரு தன்புகழ் இறை தேயாதான் - யுகாந்தகாலத்தில் எழுலகங்களும் அழிந்தாலும் ஒப்பற்ற தனது புகழ் சிறிதும் குறைவுபடாத அநுமான்; (எ - று.)

எழுலகங்களும் அழிகின்ற ஊழிக்காலத்திலும் அழியாத கீர்த்தியையுடைய அநுமான், பிரவாசமாகப் பெருகி யோடுகின்ற உதிரமே நீராகவும், பூமியே அம்மிக்கல்லாகவும், அட்சகுமாரனுடைய மாமிசாதிகளே அரைக்கவேண்டிய அரிசியாகவும், அவனுடைய தசை நீங்கிய உடற்பகுதியே குழவிக்கல்லாகவும் கொண்டு, சுவர்க்கலோகத்தாரும் பூலோகத்தாருங் காணும்படி தமது கையினாலே அரைத்துத்தேய்த்து ஒழித்தானென்பதாம். (௬அ)

[இதுமுதல் மூன்றுகவிகள் - போருக்குஇறவாத அரக்கர் ஓடிய செய்தியைத் தெரிவிக்கும்.]

௬௯. புண்டாழ்குருதியின்வெள்ளத்துயிர்கொடுபுக்கார்சிலர்சிலர்பொறிபேயின்
பண்டாரத்திடையிட்டார்தம்முடல்பட்டார்சிலர்சிலர்பயமூரத்
திண்டாடித்திசையறியாமறுகினர்செற்றார்சிலர்சிலர்செலவற்றார்
கண்டார்கண்டதொர்திசையேவிசைகொடுகால்விட்டார்படைகைவிட்டார்.

(இ - ள்.) சிலர் - (உயிரொழிஞ்சிய அரக்கரிற்) சிலர்,—புண் தாழ் குருதியின் வெள்ளத்து உயிர்கொடு புக்கார் - புண்களிலிருந்து பெருகுகின்ற இரத்தவெள்ளத்தில் உயிரோடு புகுந்து ஒளித்துக்கொண்டார்; சிலர்,—பொறி பேயின் பண்டாரத்திடை தம் உடல் இட்டார் - (போர்க்களத்தில்) நிறைந்துள்ள பேய்களின் பொக்கிஷமாகிய பிணக்குவியலில் (தமது) உடலையும் போகட்டார் [பிணத்தோடு பிணம்போலவிழுந்து கிடந்தார்கள்]; சிலர்,—பட்டார் - (அச்சத்தினால்) இறந்தார்கள்; சிலர்,—பயம் ஊர்த திண்டாடி திசை அறியா மறுகினர் செற்றார் - பயமானது தூண்ட அலைச்சற்பட்டுத் திக்குத்தெரியாமற் கலங்கினவர்களாய் வலியொடுங்கினார்கள்; சிலர்,—செலவு அற்றார் - போகமாட்டாமற் கலங்கினார்கள்; கண்டார் கண்டது ஓர் திசையே - கண்டவர் கண்டதிசைகளிலேயெல்லாம், படை கை விட்டார் - ஆயுதங்களைக்கைந்நழுவவிட்டவர்களாகி, விசைகொடு கால் விட்டார் - வேகத்தோடு ஓடலானார்கள்; (எ - று.)

௪௦. மீனாய்வேலையுற்றார்சிலர்சிலர்பசுவாய்வழிதொறுமேய்வுற்றா
ரூனார்பறவையின்வடிவுற்றார்சிலர்சிலர்நான்மறையவருருவானார்
மானார்கண்ணிளமடவாராயினர்முன்னேதங்குழல்வகிர்வுற்றா
ரானார்சிலர்சிலரையாநின்சரணென்றார்நின்றவரரியென்றார்.

(இ - ள்) சிலர்—, மீன் ஆய் - மீனுருவங்கொண்டு, வேலை உற்றார் - சமுத்திரத்தைச் சேர்ந்தார்கள்; சிலர்—, பசு ஆய் - பசுக்களின்வடிவங்கொண்டு, வழி தொறும் மேய்வு உற்றார் - வழிகள்தோறும் மேயத்தொடங்கினார்கள்; சிலர்— —ஊன் ஆர் பறவையின் வடிவு உற்றார் - மாமிசத்தைக் கொத்தித் தின்னுகின்ற பட்சிகளின்வடிவத்தைக் கொண்டார்; சிலர்—, நால் மறையவர் உரு ஆனார் - பிராமணர்வடிவங்கொண்டுநின்றார்கள்; சிலர்—, மான் ஆர் கண் இள மடவார் ஆயினர் - மான்போன்றகண்கள்படைத்த இளையமகளிர்போன்ற வடிவமுடையவராய், முன்னே தம் குழல் வகிர்வு உற்றார் ஆனார் - அநுமானெதிரிலே தமதுகூந்தலை வகிர்ந்துகொண்டுநின்றார்கள்; சிலர்—, ஐயா நின் சரண் என்றார் - ஐயனே நாங்கள் உன்னடைக்கலம் என்றார்கள்; சிலர் - (வேறு சிலர்), நின்றவர் அரி என்றார் - 'நாங்கள் உமது பகைஞரல்லோம்; (இங்கே) நிற்பவரே உமது பகைஞர்' என்றார்கள்; (எ - று.)

அரக்கர் வேண்டியவுருக்கொள்ளவல்லவராதலால், மீன்முதலானவடிவங் கொண்டனரென்க. 'மடவாராயிவன்முன்னே' என்றும் பாடம். (௪௦)

௪௧. தந்தாரமுமுறுகிளையுந்தமையெதிர்தழுவுந்தொறுநுமதமரல்லேம்
வந்தேம்வானவரென்றேகினர்சிலர்சிலர்மானுயரெனவாய்விட்டார்
மந்தாரங்கிளர்பொழில்வாய்வண்டுகளானார்சிலர்சிலர்மருள்கொண்டா
ரிந்தாரெயிறுகளிறவித்தார்சிலரெரிபோற்குஞ்சியையிருள்வித்தார்.

(இ - ள்.) சிலர் - வேறுசில அரக்கர், தம் தாரமும் உறு கிளையும் - தமது மனைவிமாரும் நெருங்கின உறவுமுறையாரும், தமை எதிர் தழுவும் தொறும் - (அநுமானிடத்து அச்சத்தினால் எதிரேவந்து) தழுவிக்கொள்ளும்போதெல்லாம், (தாமும் அச்சங்கொண்டிருத்தலால் தம்மைமறைக்கவேண்டி), (தம்மை), 'நுமதமர் அல்லேம் - (நாங்கள்) உமதுசுற்றத்தாரல்லேம்; வந்தேம் - வந்தநாங்கள், வானவர் - தேவர்கள்,' என்று - என்றுசொல்லிவிட்டு, ஏகினர் -(அப்பாற்) போய்விட்டார்கள்; சிலர் —, மானுயர் என வாய்விட்டார் - (உமது சுற்றத்தாரான அரக்கரல்லோம், நாங்கள்) மனிதரென்றுசொன்னார்கள்; சிலர்—, மந்தாரம் கிளர் பொழில்வாய் - மந்தாரமென்ற தேவவிருட்சம்விளங்குகின்ற சோலையினிடத்தில், வண்டுகள் ஆனார் - வண்டுகளின் உருவங்கொண்டு சென்றார்கள்; சிலர்—, மருள் கொண்டார் - (செய்யவேண்டுவது இன்னதெனத்தோன்றாமல்) மயங்குகின்றார்கள்; சிலர்—, (தமது அரக்கவடிவத்தை மாற்றும்பொரு

ட்டு), இந்து ஆர் எயிறுகள் இறுவித்தார் - பிறைச்சந்திரன்போன்ற (தமது) கோரதந்தங்களை ஒடித்திட்டு, எரி போல் குஞ்சியை - நெருப்புப்போலச் செந்நிறமுள்ள (தம்)மயிரை [செம்பட்ட மயிரை], இருள்வித்தார் - கருமையாகச் செய்துகொண்டார்கள் ; (எ - று)

மந்தாரம் - தேவதருக்கள் ஐந்தனுள் ஒன்று ; இது - மற்றைத்தேவதருக்களுக்கும் உபலட்சணம். (௪௧)

வேறு.

[அழுகை யொலி.]

௪௨. குண்டலக் குழைமுகக் குங்குமக் கொங்கையார்
வண்டலைத் தெழுகுழற் கற்றைகால் வருடவாய்
விண்டலத் தகவிரைக் குமுதவாய் விரிதலா
லண்டமுற் றுளதவ் வமுதபே ரமலையே.

(இ - ள்) குண்டலம் குழைமுகம் - குண்டலமென்றகாதணியணிந்த செவியையுடைய முகத்தையுடைய, குங்குமம் கொங்கையார் - குங்குமக்குழம்பை யணிந்த ஸ்தநங்களையுடைத்தவரான இராக்ஷதமகளிர்,—வண்டு அலைத்து எழு குழல் கற்றை கால்வருடஆய் - வண்டுகளை அலையச்செய்துமேலெழும்பப்பெற்ற தமது கூந்தற்றொகுதி அவிழ்ந்து கால்களின்மேல்விழுந்து புரண்டுகொண்டிருக்கும்படியாகி, விரை குமுதம் அலத்தகம் வாய் - நறுமணமுள்ள ஆம்பல்போன்ற செம்பஞ்சூட்டிய தமதுவாய்கள், விண்டு விரிதலால் - திறந்து விரிவதனாலே, அ ஊர் அழுத பேர் அமலை - அந்த இலங்கையிலுள்ளார் அழுத பெருங்குலோசை, அண்டம் உற்று உளது - மேலுலகம்வரையில் எட்டிற்று ; (எ - று.)

அரக்கியர் கால்களிற்படும்படி தமதுகூந்தலை விரித்துக்கொண்டு பேரோலாரந்தோன்ற அழுதன ரென்பதாம். அலத்தகம் வாய்க்கும் ஊட்டப்படுதலை "அம்மலரடியுங்கையு மணிகிளர் பவளவாயும், செம்மலர்நுதலு நகவுந் திருந்தொளி யுகிரோடங்கேழ், விம்மிதப்பட்டுவீழ வலத்தகமெழுதியிட்டாள்" என்ற சிந்தாமணியினாலும் அறிக.

இதுமுதல் ஏழு கவிகள் - நான்குசீரும் விளச்சீராய்வந்த அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (௪௨)

[இதுமுதல் ஐந்துகவிகள் - அரக்கமாதர் துயரப்படுவதைக் கூறும்.]

௪௩. கதிரெழுந்தனையசெந்திருமுகக்கணவன்மா
ரெதிரெழுந்தடிவிழுந்தழுதுசோரிளநலா
ரதிகலங்கோதைசேரோதியோடன்றவூ
ருதிரமுங்கெதிரிலாதிடைபரந்தொழுகியே.

(இ - ள்.) கதிர் எழுந்த அனைய செம் திரு முகம் கணவன்மார் - சூரியோதயமானாற்போன்ற சிவந்த அழகியமுகங்களையுடைய தமது நாயகருடைய,

எதிர்-முன்னே, எழுந்து - போய், அடி விழுந்து அழுது சோர் - கால்களில்விழுந்து அழுது சோர்கின்ற, இள நலார் - இளம்பெண்களுடைய, அதி நலம் கோதைசேர் ஓதியோடு - மிக்கஅழகுள்ள மாலையையணிந்த கூந்தலுடனே, அன்று அ ஊர் உதிரமும்- அப்பொழுது அந்நகரிற்பெருகுகின்ற இரத்தமும்,பரந்து ஒழுகி-பரவிப் பெருகி, இடை - வேற்றுமை, தெரிகிலாது - அறியமுடியாதபடியாயிற்று ;(எ- று.)

இளநலார் ஓதியும் இரத்தமும் செந்நிறமாக இருத்தலால், வேற்றுமை தெரியாததாயிற றென்க. ஓதிக்கும் உதிரத்துக்கும் வேறுபாடு தோன்றாமை கூறியது -மறைவணியாம் ; இதனை, வடநூலார் மீலிதாலங்காரமென்பர். (௪௩)

௪௪. தாவில்வெஞ்செருநிலத்திடையுலந்தவர்தமே
லோவியம்புரைநலார்விழுதொறுஞ்சிலருயிர்த்
தேவுகண்களுநிமைத்திலர்களாமிதுவெலா
மாவியொன்றுடலிரண்டாயதாலேகொலாம்.

(இ - ள்.)தா இல் - குற்றமற்ற, வெம்செருநிலத்திடை - கொடிய போர்க்களத்திலே, உலந்தவர் தம்மேல - இறந்த வீரர்களின்மீது, ஓவியம்புரை நலார் சிலர் - சித்திரபதுமைபோன்ற அழகிய சிலமகளிர், விழு தொறும் - விழும்போதெல்லாம், உயிர்த்து - மூச்சுவிட்டு, ஏவு கண்களும் இமைத்திலர்கள் ஆம் - அம்புபோன்ற கண்களும் இமையாதவரானார்கள்; இது எலாம் - இவ்வாறான செயலெல்லாம், ஆவி ஒன்று உடல் இரண்டு ஆயதாலே கொல் ஆம் - உயிரொன்று உடம்பிரண்டு ஆன படியினாலேதான்போலும் ; (எ - று.)

மகளிர் இறந்த தம்கணவர்மீது விழுந்து அழுகையில் மூர்ச்சித்து உயிர்ப்பும் கண்ணிமைத்தலும் இல்லாதவ ராயின ரென்க; இவ்வாறு இம்மகளிரும இறந்த கணவர்போல உயிர்ப்பில்லாமலும் கண்ணிமையாமலும் இருந்ததற்குக் காரணம் - புருஷனுக்கும் மனைவிக்கும் உடலிரண்டாயிருந்தும் ஆவி ஒன்றாயிருத்தலினாலேதானோ எனக் கவி உத்ப்ரேட்சிக்கின்றார்; இவ்வாறு உயிர்ப்பில்லாமை கண்ணிமையாமை என்றவற்றிற்குக் காரணமல்லாததைக் காரணமாக்கிக் கூறியது - ஏதுத்தற்குறிப்பேற்றவணியாம். (௪௪)

௪௫. ஓடினாருயிர்களுநாடுடல்கள்போனுநவியால்
வீடினார்வீடினார்மிடையுடற்குவைகள்வாய்
நாடினார்மடநலார்நவையிலாநண்பரைக்
கூடினாருடினாரும்பர்வாழ்கொம்பனார்.

(இ - ள்.) மடம் நலார் - மடப்பத்தையுடைய மகளிராகிய அரக்கியர், உயிர்கள் நாடு உடல்கள் போல் - உயிர்களைத்தேடுகின்ற உடல்கள்போல,

ஓடினார் - (தமது கணவரைத் தேடிக்கொண்டு) ஓடினவராய், வீடினார் மிடை உடல் குவைகள் வாய் - இறந்துவீழ்ந்துள்ள அரக்கரின் நெருங்கிய பிணக் குவியலின்நடுவில், நாடினார் - கண்டுபிடித்து,-- உதவியால் - (அவர்க்குச்செய்துள்ள) உதவியை நினைத்தலால், வீடினார் - இறந்தொழிந்து(வீரசுவர்க்கத்தை யடைந்து), நவை இலா(த) நண்பரை-குற்றமற்ற தம்கணவரை,கூடினார்-(அங்கு) சேரப்பெற்றார்கள்; உம்பர் வாழ் கொம்பு அனார் - (அவ்வீரசுவர்க்கஞ்சேர்ந்த அக்கணவர்களையே தழுவிப) தேவலோகத்துவாழ்கின்ற பூங்கொம்பு போன்ற அரமகளிர், ஊடினார் - பிணங்கினார்கள்; (எ - று.)

தமது கணவரைத் தேடிச்சென்ற அரக்கியர்சிலர் போர்க்களத்தில்இறந்து வீழ்ந்துகிடந்த தமது கணவருடலைக்கண்டு அவர்களைத்தழுவி அவரிடத்துத் தாம்வைத்திருந்த பேரன்பினால் தாமும் இறந்து, கணவன் புகுந்த உலகத்தை யடைந்து அங்குங்கூடினார்களாக, அதுகண்ட தேவமகளிர் பிணங்கினரென்பதாம். (சரு)

சசு. தீட்டுவாளனையகட்டெரிவையோர்திருவனா
ளாட்டிநின்றயர்வதோரறுதலைக்குறையினைக்
கூட்டிநீயோருயிர்த்துணைவனெங்கோவினைக்
காட்டுவாயாதியென்றழுதுகைகூப்பினாள்.

(இ - ள்.) தீட்டு வாள் அனைய கண் - தீட்டிக்கூராக்கப்பெற்ற வாள்போன்ற கண்களையுடைய, திரு அனாள் ஓர் தெரிவை - இலக்குமிபோன்ற ஓர் அரக்கப் பெண், ஆட்டிநின்று - கூத்தாடுதற்றொழிலை மேற்கொண்டிருந்து, அயர்வது - சோர்ந்துபோன, ஓர் அறு தலை குறையினை - தலையற்றதொரு கபந்தத்தை, கூட்டி-(தலையோடு)சேர்த்து,(அதனை நோக்கி), நீ—, ஓர் உயிர் துணைவன் - ஒப்பற்ற பிராணநாயகனை, எம் கோவினை - எனது தலைவனை, காட்டுவாய் ஆதி - காட்டுபவளாகக் கடவாய், என்று—, அழுது—, கைகூப்பினாள்—.

"ஆனையாயிரம் தேர்பதினாயிரம் அடர்பரியொருகோடி, சேனைகாவலராயிரம் பேர்படிற் செழுங்கவந்த மொன்றாடும்", "அனேகமாயிரம் பேர்படக் கவந்தமொன்றாடும்," "பேரொத்தவாயிரம்பேர் மடிந்தாற் பிறக்கும் கவந்தம் நேரொத்தவாடும்" என்றபடி பலவீரர் பட்டொழிந்தால், அப்போது தலையற்ற உடற்குறையாகிய கவந்தம் எழுந்து ஆடு மெனக் கூறுவது, நூல்களின்மரபு; அவ்வாறான கவந்தத்தோடு தலையினைப் பொருத்தி, ஓர் அரக்க மாது துயரத்தினால் விவேகம் இல்லாமையால், என்தலைமகனைக் காட்ட வேணு 'மென்று அதனை இரந்தன ளென்க. (சசு)

சஎ. ஏந்திழையலையோரெழுதருங்கொம்பனாள்
காந்தனின்றாடுவானுடற்கவந்தத்தினை
வேந்தனீயலைநிலைப்விடுதியானடமெனாப்
பூந்தளிர்க்கைகளான்மெய்புறப்புல்லினாள்.

(இ - ள்) எழுத அரு ஓர் கொம்பு அனாள் - (சித்திரத்தில்) எழுத முடியாத [மிக்கஅழகுள்ள] பூங்கொம்புபோன்ற ஓர் இராக்கதப்பெண், தலையை ஏந்தினாள் - இறந்த கணவன் தலையைக் கையிற்கொண்டு, நின்று ஆடுவாள் காந்தன் உடல் கவந்தத்தினை - நின்று கூத்தாடுகின்ற கணவனது உடற்குறையைப்பார்த்து, 'வேந்தன் - கணவனே! நீ—, அலசினாய் - (வெகுநேரம் ஆடியதனால்) இளைத்தாய்; (இனி), நடம் விடுதி - கூத்தாடுதலைவிடுவாய்', என்று—, பூந்தளிர் கைகளால் - மலரையும் தளிரையும்போன்ற மெல்லிய தன்கைகளினால், மெய் - (அக்கணவனுடைய) உடலை, உற புல்லினாள் - இறுகத்தழுவிக்கொண்டாள்; (எ - று.)  (சஎ)

[முதலிரண்டடிகள் - அரக்கியரின் செயலையும், பின்னிரண்டடிகள் - பருவத்தேவர் இராவணனிடம் செய்தி சொல்லச் சென்றமையையும் கூறும்.]

சஅ. நாடினார் நாடியே நனைவருங் கொம்பனார்
வாடினார் கணவர்தம் மார்புறத் தழுவியே
வீடினா ரவ்வயின் வெருவிவிண் ணவர்கடாம்
மோடினா ரரசன்மாட் டணுகிநின் றுரைசெய்வார்.

(இ - ள்.) நாடினார் - (தங்கணவரைத்) தேடினவர்களாகிய, நனை வரும் கொம்பு அனார் - அரும்புகள் தோன்றுகின்ற பூங்கொம்புபோன்ற அரக்கமகளிர், நாடி - தேடியடைந்து, வாடினார் - சோர்ந்தவர்களாய், கணவர்தம் மார்பு உற தழுவி - இறந்தகணவரதுமார்புகளை இறுகத்தழுவிக்கொண்டு, வீடினார் - (தாங்களும்) இறந்தொழிந்தார்கள்; அ வயின் - அப்பொழுது, விண்ணவர்கள்தாம் - (பொழிலுக்குக் காவலான) பருவத் தேவர்கள், வெருவி - அச்சங்கொண்டு ஓடிச்சென்று, அரசன்மாடு அணுகி நின்று உரை செய்வார் - அரசனான இராவணனிடத்திற்போய் நின்றுகொண்டே நடந்தசெய்தியை [அட்சகுமாரன் இறந்திட்டதை]ச் சொல்லலானார்கள்; (எ - று.)  (சஅ)

வேறு.

[அவ்வேளையில் மந்தோதரி அழுதல்]

சகூ. கயன்மகிழ் கண்ணிணை கலுழி கான்றுகப்
புயன்மகிழ் புரிகுழல் பொடியு ளாழ்வுற
வயன்மகன் மகன்மக னடியின் வீழ்ந்தனண்
மயன்மகள் வயிறலைத் தலறி மாழ்கினாள்.

(இ-ள்) மயன் மகள் - (அசுரசிற்பியான) மயனது குமாரியாகிய மண்டோதரி, கயல் மகிழ் கண் இணை கலுழி கான்று உக - கயல்மீன்போன்ற (தனது) இரண்டுகண்களிலிருந்தும் நீர் வழிந்து பெருகவும்,—புயல் மகிழ் புரி குழல் பொடி அளாவுற - காளமேகத்தைத்தோற்கச்செய்த முறுக்கிவிட்ட கூந்தல் மண்ணின் புழுதியிலே புரளவும், அயன் மகன் மகன் மகன் - பிரமகுமாரனான புலஸ்தியனது குமாரனான விச்சிரவசுவினுடைய குமாரனான இராவணனது, அடியின் - பாதங்களில், வீழ்ந்தனள் - வீழ்ந்தவளாய், வயிறு அலைத்து அலறி மாழ்கினாள் - வயிற்றிலடித்துக்கொண்டு கதறிப்புலம்பினாள்; (எ - று.)

இறந்தவன் சக்களத்திகுமாரனாயினும் அவனையும் தன்மகன்போலவே பாவித்து, இங்ஙனம் குமாரன் இறக்கக் காரணமாயிருந்த இராவணனதுதாள்களில் மண்டோதரி விழுந்து அழுதனளென்க. இச்செய்யுளை நோக்குமிடத்துக் கம்பர் அட்சகுமாரனை மண்டோதரிகுமாரனெனவே கொண்டு கூறுகின்றனரோவென்று தோன்றுகின்றது.

இதுவும், அடுத்த கவியும் - மூன்றாஞ்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீருமாகிய அளவடிநான்குகொண்ட கலிவிருத்தங்கள். (சகூ)

[யாவரும் புலம்புதல்.]

ருo. தாவருந் திருநகர்த் தையலார் முதல்
ஏவரு மிடைவிழுந் திரங்கி யேங்கினார்
காவலன் கான்மிசை விழுந் தேகாவன்மாத்
தேவரு மழுதனர் களிக்குஞ் சிந்தையார்.

(இ - ள்.) தா அரு திரு நகர் தையலார் முதல் ஏவரும் - குற்றமற்ற அழகிய இலங்காநகரத்திலே மகளிர் முதலிய எல்லாரும், இடை விழுந்து இரங்கி ஏங்கினார் - (இராவணனுடைய) பாதத்தினிடத்தில் விழுந்து இரக்கங்கொண்டு அழுதார்கள்; காவல் மா தேவரும் - சேனையைப்பாதுகாத்தலைமேற்கொண்ட சிறந்த பருவத்தேவரும், களிக்கும் சிந்தையார் - (இராவணனுக்கு நேர்ந்த அபஜயத்தினால்) மகிழ்கின்ற மனமுடையவர்களாயினும், காவலன் கால் மிசை விழுந்து அழுதனர் - இராவணனது பாதங்களில் விழுந்து அழுதார்கள்; (எ-று.)

இரண்டாமடி - முற்றுமோனை. (சo)

அட்சகுமாரன்வதைப்படலம் முற்றிற்று.

---

பன்னிரண்டாவது

# பாசப் படலம்.

இந்திரசித்து அநுமானைப் பாசத்தாற்கட்டியசெய்தியைக் கூறும் பாகம். இங்கு 'பாசம்' என்றது, பெரும்பாம்புவடிவுகொண்டு அநுமானைக் கட்டுகிற பிரமாஸ்திரத்தை. பாசம் - கயிறு: வடசொல். கயிறுபோலச் சுற்றிக் கட்டுதலால், பிரமாஸ்திரம், பாச மெனப்பட்டது; மேல் யுத்தகாண்டத்தில் "நாக பாசம்" என்பதுங் காண்க. பாசப்படலம் - பாசத்தைப்பற்றிய படலம் என இரண்டனுருபும்பயனுந்தொக்கதொகை; பாசத்தினது சம்பந்தமான படலம் என்று ஆறும்வேற்றுமைத்தொகையாகவிரித்து, விஷயமாகவுடைமையையே இங்கு ஆறும்வேற்றுமைப்பொருளாகிய சம்பந்த மெனக் கொண்டு, பாசத்தின்விஷயமான பாக மென்று கருத்து உரைப்பினுமாம். பாசம்+படலம்= பாசப்படலம். மவ்வீறு ஒற்றழிந்து உயிரீறொத்து விதியின்நின்ற உயிர்முன் வல்லெழுத்து மிக்கது. 'காண்டம்' என்றதற்குப் போலவே 'படலம்' என்கிற வடசொல்லுக்கும் கூட்டமென்றே பொருள்; ஆயினும், அது - சங்கேதத்தால், இங்கு, ஒருபெரியவகுப்பினுட்பட்ட சிறிய பாகத்தைக் குறிக்கும்.

[அக்ஷகுமாரனைக்கொன்ற செய்தி கேள்வியுற்ற இந்திரஜித்து
அநுமான்மீது பெருங்கோபங்கொள்ளுதல்.]

க. அவ்வழி யவ்வுரை கேட்ட வாண்டகை
வெவ்விழி யெரியுக வெகுளி வீங்கினா
னெவ்வழி யுலகமுங் குலைய விந்திரத்
தெவ்வழி தரவுயர் விசயச் சீர்த்தியான்.

(இ - ள்.) அ வழி - அப்பொழுது, அ உரை கேட்ட - (அக்ஷகுமாரனை அநுமான் கொன்றனனென்ற) அந்தவார்த்தையைக் கேள்வியுற்ற, ஆண்தகை - ஆண்மைக்குணமுடையவனாகிய, இந்திரன் தெவ் அழிதர உயர் விசயம் சீர்த்தியான் - இந்திரனாகியபகைவன் வலியழியுமாறு உயர்ந்தவெற்றியைக்கொண்ட பெரும்புகழுடையவனான இந்திரசித்து,—வெவ் விழி எரி உக - பயங்கரமான தனதுகண்களினின்று நெருப்புச் சிந்தவும், எ வழி உலகமும் குலைய - எல்லாவிடங்களிலுமுள்ள உலகங்களும் நடுங்கவும், வெகுளி வீங்கினன் - கோபம் மிகப்பெற்றான்; (எ - று.)

ஆண்தகை - பண்புத்தொகையன்மொழி. இந்த்ரன் என்ற வடசொல்- பரமைசுவரியமுடையவனென்றுகாரணப்பொருள்பெறும். "தெவ்வுப் பகையாகும்" என்ற தொல்காப்பியத்து உரிச்சொல்லியற் சூத்திரத்தால், 'தெவ்' என்பது - பகைமையுணர்த்துவதோ ருரிச்சொல்லா மென்று அறிக; அது, பண்பாகுபெயராய், பகைவனைக் குறித்தது. விஜயம் - விசேஷஜயம்: வடசொல். "சீர்த்தி மிகுபுகழ்" என்ற தொல்காப்பிய வுரியியற்சூத்திரத்தால், சீர்த்தியென்பது மிக்கபுகழையுணர்த்துவதோ ருரிச்சொல்லா மென விளங்கும்; ஆகவே, புகழ்மாத்திரத்தை யுணர்த்துகிற கீர்த்தியென்ற வடசொல்லின் விகார மன்றென்று உணர்க. 'விசயச்செய்கையான்' என்பதும் பாடம்.

*இந்திரசித்து* - இராவணனுக்கு மந்தோதரியினிடம் பிறந்த மூத்தகுமாரன்; (அங்ஙனம்பிறந்த இளையகுமாரன், அக்ஷன்.) இந்திரஜித்தின் இயற்பெயர், மேகநாதனென்பது. இவனுக்கு இந்திரசித்தென்ற பெயர், இந்திரனைச் சிறைமீட்கவந்த பிரமனளித்தது. இராவணன் திக்குவிசயஞ்செய்கையிற் சுவர்க்கலோகத்தையடைந்து இந்திரனையெதிர்த்துப்போர்செய்தபொழுது, இராவணனால் இந்திரனைச் சயிக்கமுடியாத சமயத்தில், அவன் மகனான மேகநாதன் மாயையால் மறைந்துபொருது இந்திரனைக் கலங்கச்செய்து அவனை மாயப்பாசத்தாற் கட்டிக்கொண்டுபோய் இலங்கையிற் சிறைவைத்திட, அதனையுணர்ந்த பிரமதேவன் தேவர்கள்சூழ அங்குவந்து இராவணனைநோக்கி 'இந்திரனைச்சயித்ததனால், உன்மகனுக்கு 'இந்திரஜித்' என்று இனிப் பெயர்வழங்குக' என உபசாரவார்த்தைகூறி அம்மகனுக்கு வரமுமளித்து இந்திரனைச் சிறைமீட்டுக்கொண்டுசென்றனனென்பது வரலாறு. "பிதுச்சதகுணம் புத்ர:" என்றபடி, பகைவெல்லுதலில் தந்தையான இராவணனினும் பலமடங்கு சிறந்த மைந்தனென்பது தோன்ற. 'இந்திரத் தெவ்வழிதரவுயர்விசயச்சீர்த்தியான்' என்றார். 'எவ்வழியுலகமுங் குலைய' என்பதை 'வெருளினீங்கினான்' என்பதனோடு இயைக்காமல் 'இந்திரத்தெவ்வழிதர' என்பதனோடு இயைப்பினும் அமையும்; திரிலோகாதிபதியான இந்திரன் நிலைகுலையும்போது, அவனாட்சிக்குஉட்பட்ட உலகமெல்லாம் நிலைகுலையுமாதலால்.

இதுமுதல் மூன்றுகவிகள் - பெரும்பாலும் மூன்றுஞ்சீரொன்றுமாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய அளவடிநான்குகொண்ட கலிவிருத்தங்கள். (க)

[இந்திரசித்து மனக்கோதிப்புடன் போர்குறித்து உக்கிரமாகஎழுதல்.]

உ. அரஞ்சுடர் வேற்றனதனுசனிற்றசொ
லுரஞ்சுடவெரியுயிர்த்தொருவனோங்கினான்
புரஞ்சுடவரிசிலைப்பொருப்புவாங்கிய
பரஞ்சுடரொருவனைப்பொருவும்பான்மையான்

(இ - ள்.) ஒருவன் - ஒப்பற்றவனான அந்த இந்திரசித்து,—அரம் சுடர் வேல் தனது அனுசன் இற்ற சொல் உரம் சுட - அரமென்னும் வாள்விசேடத்தால் (அராவப்பட்டு) விளங்குகிற வேலாயுதத்தையுடைய தனது தம்பியான அக்ஷகுமாரன் இறந்தானென்ற வார்த்தை தன்மனத்தை யெரித்தலால், எரி உயிர்த்து - நெருப்புப்புறப்பட (க் கோபதாபத்தால் வெவ்விதாக) ப்பெருமூச்சுவிட்டுக்கொண்டு,—புரம் சுட - திரிபுரத்தை யெரிப்பதற்கு, வரி சிலை பொருப்பு வாங்கிய-கட்டமைந்தவில்லாகிய மகாமேருகிரியை வளைத்த, பரம் சுடர் ஒருவனை - எல்லாவொளிகளினும் மேம்பட்ட ஒளிவடிவமமைந்த திரிமூர்த்திகளிலொருவனான சிவபிரானை, பொருவும் - ஒக்கின்ற, பான்மையான் - தன்மையையுடையவனாய், ஓங்கினான் - எழுந்தான்; (எ - று.)

போர்குறித்து எழுகிற இந்திரசித்துக்கு, திரிபுரமெரிக்கப் புறப்பட்ட சங்காரக்கடவுளான உருத்திரமூர்த்தியை உவமைகூறியது, பயங்கரமான

தோற்றத்துக்கு என்க. 'அரஞ்சுடர்வேல்' என்பதனை, சீவகசிந்தாமணியில் "வாளரந்துடைத்தவைவேல்" என்றாற்போலக் கொள்க. அரம் - ஒருவகை வாள்; இரும்புமுதலியவற்றை அராவுங் கருவி. வெல்வது வேல்எனக் காரணக்குறி. இது, மற்றை ஆயுதங்கட்கும் உபலக்ஷணம். அழித்தற்றொழிற்கடவுளான சிவபிரானுக்கும் பிராணிகட்கு அழிவுசெய்பவனான யமனுக்கும் முதலவேல் ஆயுதமாதலாலும், கொடிய அசுரர்களை அழித்தற்கென்று அவதரித்த அறுமுகக்கடவுட்கு வேல் படையாதலாலும், பகையழித்தற்கு வேல் சிறந்ததென்ற கருத்துக்கொண்டு அதனைப் பிரதானமாகவைத்துப் பேட்டும் பான்மை கூறுதல் கவிகளியல்பு. அநுஜன் என்ற வடமொழி - பின்பிறந்தவனென்று பொருள்படும். 'சுட' என்ற செயவெனெச்சம் - இரண்டாமடியிற் காரணப்பொருளதாதலால் இறந்தகாலமும், மூன்றுமடியிற் காரியப்பொருளதாதலால் எதிர்காலமுமாம். ஒருவன்-அத்விதீயன். பரஞ்சுடர் - பரஞ்சோதி.

கீழ்ச்செய்யுள் இந்திரசித்தின் கோபரசத்தையும், இச்செய்யுள் அதனோடு சோகரசமுங் கொண்டு அவன் போர்குறித்து எழுந்ததையுங் கூறுதலால், கீழ்ச்செய்யுளோடு இச்செய்யுள் கூறியது கூற லென்னுங் குற்றத்தின் பாற்படாது; அன்றியும், ஒருவிஷயத்தையே பலவாறு கூறிவிளக்குதல் கவித்திறமாம். இனி, கீழ்ச்செய்யுளோடு இச்செய்யுளைக் குளகமாக்கி அவ்விடத்து அக்ஷகுமாரனிறந்தா னென்ற வார்த்தையைக் கேட்ட ஆண்மையிற் சிறந்தவனான இராவணன் கண்கள் தீச்சொரியவும் எல்லாவுலகமும் நடுங்கவும் அதிககோபங்கொண்டான்: (அச்சமயத்தில்) முன்பு இந்திரனைவென்று மிக்க வெற்றியும் புகழும் படைத்தவனான ஒப்பற்ற இந்திரசித்து தன்தம்பிமாண்டனனென்ற சொல் வந்து செவிப்பட்டு நெஞ்சைச்சுடத் தீக்காலுமாறு பெருமூச்செறிந்துகொண்டு திரிபுரதகனஞ்செய்யும்படி மகாமேருவை வில்லாகவளைத்த உருத்திரமூர்த்திபோல மிக்க உக்கிரங்கொண்டு எழுந்தான் என்று உரைப்பாரு முளர். (உ)

[இந்திரசித்து தேரேறுதலும், பெருந்தூரோடு வீரவாதங் கூறுதலும்.]

௩. ஏறினன் விசும்பினுக் கெல்லை காட்டுவ
ஆறிரு நூறுபேய் பூண்ட வாழித்தேர்
கூறின கூறின சொற்கள் கோத்தலாற்
கீறின நெடுந்திசை பிளந்த தண்டமே.

(இ - ள்.) விசும்பினுக்கு எல்லை காட்டுவ - வானத்தினது மேலெல்லையை (இவ்வளவேயென்று தமது மிக்க உயர்ச்சியினால்) காண்பிப்பனவையான, ஆறு இரு நூறு பேய் - ஆயிரத்திருநூறுபேய்கள், பூண்ட - பூட்டப்பெற்றுள்ளதான, ஆழி தேர் - (வலிய) சக்கரங்களமைந்த ஒருதேரில், ஏறினன் - (இந்திரசித்து) ஏறினான்; கூறின கூறின - (அங்ஙனம்ஏறியஅவன்) மிகுதியாகச்சொன்ன, சொற்கள் - வீரவார்த்தைகள், கோத்தலால் - ஒருசேரக் கூடி மோதியதனால், நெடுந் திசை கீறின - நீண்டதிக்குக்கள் பிளவுபட்டன; அண்டம் பிளந்தது - அண்டகோளமும் பிளவுபட்டது; (எ - று.)

'விசும்பினுக்கு எல்லைகாட்டுவ' என்றது, தந்துறிப்பேற்றவணி. ஆகாயத்தின் உயரம் எவ்வளவு உண்டோ அதுவரையிலும் உயர்ந்துள்ளவையென்பது கருத்து. 'காட்டுவது' என்ற பாடம், தேர்க்கு அடைமொழியாய் அதன் உயரமிகுதியை விளக்கும். ஆறிருநூறு பேய் - பண்புத்தொகைப்பன்மொழித் தொடர். ஆழித்தேர் - சக்கரத்திலுற்சிறந்த தேர். ஆழி - வட்டவடிவுடையது. 'கூறின கூறின' என்ற அடுக்கு, மிகுதிப்பொருளது. பின்னிரண்டடி - இந்திரஜித்து வீரவாதங்கூறிய பெருங்குரலினாலாகிய அதிர்ச்சியை விளக்கவந்த உயர்வுநவிற்சியணி. (௩)

வேறு.

[அதிபயங்கரமான இந்திரசித்தின் ஆடம்பரம்.]

௪. ஆர்த்தன கழலுந் தாரும் பேரியு மசனி யஞ்ச
வேர்த்துயிர் குலைய மேனி வெதும்பின னமரர் வேந்தன்
சீர்த்தது போரு மென்னுத் தேவர்க்குந் தேவ ராய
மூர்த்திக டாமுந் தத்தம் யோகத்தின் முயற்சி விட்டார்.

(இ - ள்.) (மற்றும் இந்திரசித்தினது). கழலும் - வீரக்கழலும், தாரும் - வீரகிண்கிணியும், பேரியும் - யுத்தவாத்தியங்களும், அசனி அஞ்ச ஆர்த்தன - இடியும் அஞ்சிப்பின்னிடும்படி மிகுதியாக ஒலித்தன; (அம்முழக்கத்தைக் கேட்டு), அமரர் வேந்தன் - தேவராஜனான இந்திரன், உயிர் குலைய மேனி வேர்த்து வெதும்பினன் - (என்னாகுமோ வென்ற அச்சத்தால்) உயிர்நடுங்க உடல் வியர்த்துத் தவிப்புற்றான்; தேவர்க்கும் தேவர் ஆய மூர்த்திகள்தாமும் - எல்லாத்தேவர்கட்குந் தலைமைத்தேவர்களான அயன் அரி அரன் என்னுந் திரிமூர்த்திகளும், போரும் சீர்த்தது என்னு - 'யுத்தம் வலிமைப்பட்டது' என்று எண்ணி, (அக்கவலையினால்), தத்தம் யோகத்தின் முயற்சி விட்டார் - தம்தம்செய்தொழிலின் முயற்சியைக் கைவிட்டார்கள் [படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் தம்தம்தொழில்களை யொழிந்து நின்றார்கள் என்றபடி.]

கழல் - வீரர்கள் தமது வீரத்துக்கு அறிகுறியாகக் காலிலணிவதோர் ஆபரணம். தார் - கிண்கிணிமாலை; மூன்றாற்றுப் பொருபடையுமாம். அதாவது - முன்னணிச்சேனை; அது - கொடிப்படையெனவும் தூசிப்படையெனவும்படும். தார் என்பதற்கு - படை, படைவகுப்பு என்ற பொருள்களுமுண்டு. மாலையென்று பொருள்கொண்டால், போர்க்கு அறிகுறியாக அவனணிந்த தும்பைப்பூமாலை தன்னிடத்து மொய்க்கும் வண்டுகளினொலியால்ஆரவாரித்ததென்று கொள்ளவேண்டும். பேரி - முரசம், துந்துபி; இங்கு, போர்ப்பறையென்ற மாத்திரமாய் நின்றது. தேவர்க்குந்தேவர் - தேவாதிதேவர். உம்மை - உயர்வுசிறப்பு. தேவர்க்குந் தேவராய மூர்த்திகள் - பிரம விஷ்ணு ருத்திரர். மூர்த்திகள் - பெரியோர். யோகம் - உத்தியோகம். இச்செய்யுள் - இந்திரசித்தின் யுத்தாடம்பரத்தை விளக்குகிற உயர்வுநவிற்சியணி.

இதுமுதல் இருபது கவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களு மாகிய கழிநெடிலடி

நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். இவற்றில், மூன்றும் ஆறுஞ் சீர்கள் தேமாச்சீர்களாகவே நிற்கும். (ச)

[இந்திரசித்தின் வீரக்கருத்தும், அதுபற்றிய செயலும்.]

ரு. தம்பியையுன் னுந்தோ றுந்தாரைநீர் ததும்புங்கண்ணான்
வம்பியல்சிலையைநோக்கிவாய்மடித் துருத்துநக்கான்
கொம்பியன்மாயவாழ்க்கைக்குரங்கினாற்குரங்காவாற்ற
லெம்பியோதேய்ந்தானெந்தைபுகழன்றோதேய்ந்ததென்றான்.

(இ - ள்.) தம்பியை உன்னுந்தோறும் தாரை நீர் ததும்பும் கண்ணான் - தன்தம்பியான அக்ஷகுமாரனிறந்த செய்தியை நினைக்கும் பொழுதெல்லாம் (அவனிடத்து அன்பினாலாகிய சோகத்தால்) தாரைதாரையாக நீர்தளும்பிப் பெருகுங் கண்களை யுடையவனாகிய இந்திரசித்து,—'கொம்பு இயல் மாய வாழ்க்கை - மரக்கொம்புகளிலே சஞ்சரிக்கிற நிலையில்லாத வாழ்வையுடைய, குரங்கினால் - இந்த ஒருகுரங்கினால், குரங்கா ஆற்றல் எம்பியோ தேய்ந்தான் - (எப்பொழுதுந்) தாழாதவலிமையையுடைய என்தம்பியான அக்ஷனோ மெலிவுற்றழிந்தான்? [அல்லன்]: எந்தை புகழ் அன்றோ தேய்ந்தது - என்தந்தையான இராவணனது கீர்த்தியன்றோ மெலிவுற்று அழிந்தது,' என்றான் - என்று எண்ணினவனாய்,—வம்புஇயல் சிலையைநோக்கி - போர்த்தொழிலுக்கு ஏற்ற தன்வில்லைப் பார்த்து, உருத்து வாய் மடித்து நக்கான் - (அநுமான் மீது) கோபித்து (அதனால்) தனது உதட்டை மடித்துக் கடித்துக்கொண்டு சிரித்தான்; (எ - று.)

'குரங்கினால் எம்பியோ தேய்ந்தான், எந்தை புகழன்றோ தேய்ந்தது' என்றது - ஒழிப்பணியெனப்படுகிற அபஹ்நுதியலங்காரம். இதன் இலக்கணம் - ஓர் உண்மைத்தன்மையை மறுத்து மற்றொருதன்மையை ஏற்றிக்கூறுதல். இங்கு, எம்பிதேய்ந்தானல்லன் என ஒருதொழிலுண்மையை மறுத்து, எந்தைபுகழே தேய்ந்தது எனப் பிறிதொரு தன்மையை ஏற்றிக்கூறியவாறு காண்க. "சிறப்பினும் பொருளினுங் குணத்தினு முண்மை, மறுத்துப் பிறிதுரைப்ப தவநுதியாகும்" என்ற தண்டியலங்கார சூத்திரத்து 'அவநுதி' என்றது 'ஆகும்' என்ற மிகையினால் விளையவநுதி கொள்ளப்பட்டமை யுணர்க. ஓ - எதிர்மறை. அன்றோ - தேற்றம். ஓரிடமின்றிக காடுகளிலும் மலைகளிலும் மரக்கிளைகளில் திரிந்துவாழுந் தன்மையதான எளியதொரு குரங்கு இராவணகுமாரனான அக்ஷனைக் கொன்றது, அவ்விராவணன் திக்குவிசயஞ் செய்து எல்லாவுலகத்தும் பரப்பிய புகழுக்கு அழிவு செய்வதாதல் காண்க. குரங்கினது எளிமை தோன்ற, 'கொம்பியல் மாயவாழ்க்கை' என்றான். மரக்கொம்புகளிற் சஞ்சரித்தலால், குரங்குக்கு, வடமொழியில் 'சாகாம்ருகம்' என ஒரு பெயரிருத்தல் உணரத்தக்கது. மாயவாழ்க்கை - பொய் வாழ்வு; மறைந்துவாழ்தல் எனினுமாம்; வஞ்சகவாழ்வென்றுங் கொள்ளலாம். மகா மாயாவியான இந்திரசித்தும், 'மாயவாழ்க்கைக்குரங்கு' என்று வெறுத்து உரைக்கும்படி மிக்கிருந்தது அநுமான் மாயையில்லெல்ல அரக்கர்பலரை எளி

திற் பொருந்து தொலேத்த திறமென்க. குரங்குதல் - வளேதலாதலே "இலேப் பொழில் குரங்கின" எனச் சீவகசிந்தாமணியிலுங் காண்க. குரங்கு என்ற சொல்லே, கருத்திலும் செயலிலும் நேர்மையின்றிப் பலவிகற்பங்கொண்ட கோணுத லுடைமைபற்றி வந்த பெய ரென்னலாம். ஆகவே, 'குரங்கினுற் குரங்கா' என்றவிடத்துச் சொல்நிலேயால் முரண்தொடை தோன்றுதல் காண்க; "மொழியினும் பொருளினும் முரணுதல் முரணே" என்றார் ஆசிரியர் தொல்காப்பியனுர்.

இங்குக்கூறிய நகை - வீரத்து எழுந்த வெகுளிநகை. வாய்மடித்தல் - கோபச்செயல். 'தாரா' என்ற வடமொழி, 'தாரை' என விகாரப்பட்டது. 'வம்பியல்சிலே' என்பதற்கு - நெடுநாளாகப் போர்கிடையாமையால் அம்பு தொடுத்தலின்றி வீணுகவிருக்கிற விலலென்று உரைப்பாருமுளர். என்றான் என்பதற்கு - என்று (தனது படைவீரர்கள் முன்னிலேயிற்) கூறினுனென்றும் உரைக்கலாம். (ரு)

[இந்திரசித்தைச் சார்ந்த சேனையின் மிகுதி.]

கூ. வேறிரண்டனவும்வில்லுமிடைந்தவும்வெற்பென்றாலுங்
கூறிரண்டாக்கும்வாட்கைக்குழுவையுங்குணிக்கலாற்றேஞ்
சேறிரண்டருகுசெய்யுஞ்செறிமதச்சிறுகண்யானை
யாறிரண்டஞ்சுநூற்றினிரட்டிதேர்த்தொகையுமஃதே.

(இ - ள்.) வேல் திரண்டனவும் - வேல்வீரர்களாக வந்துகூடிய பதாதிச் சேனேகளேயும், வில்லு மிடைந்தவும் - விற்பாளிகளாகவந்து நெருங்கிய பதாதிச்சேனேகளேயும், வெற்பு என்றாலும் கூறு இரண்டு ஆக்கும் வாள் கை குழுவையும் - மலேகளே எதிரிகளென்றால் அவற்றையும் இரண்டு துண்டாகத்துணிக்கவல்ல வாளாயுதத்தை யேந்திய கையையுடைய பதாதிகளின் கூட்டத்தையும், குணிக்கல் ஆற்றேம் - இவ்வளவென்று தொகையிடவல்லே மல்லேம்; இரண்டு அருகு சேறு செய்யும் செறி மதம் - இருபுறத்திலும் (பொழிந்து நிலத்தைச்) சேருக்குகிற மதநீர்ப்பெருக்கையும், சிறுகண் -(சிறிய கண்களேயுமுடைய, யானே - யானேகளின் தொகை, ஆறு இரண்டு அஞ்சுநூற்றின் இரட்டி - பன்னீராயிரமாம்; தேர் தொகையும் அஃதே - தேர்களின் அளவும் அவ்வளவே [பன்னீராயிரமே]; (எ - று.)

"ஒத்தவில்வேல்வாள்யானேஉயர்பரிதேரோடாறே" என்ற அறுவகைப் படைகளுள் வேற்படை, விற்படை, வாட்படை, யானேப்படை, தேர்ப்படை என்ற ஐந்தையும் இக்கவியிற்கூறி, குதிரைப்படையை அடுத்தகவியில் 'ஆய மா' எனக் கூறுவர். யானே தேர் குதிரைகட்கு 'பன்னிரண்டாயிரம்' என்று தொகைகூறி, மற்றைக் காலாள்வீரர்வகை மூன்றிற்கும் தொகை குறிக்க வல்லோமல்லோ மென்று அளவின்மை கூறினுர். 'குணிக்கலாற்றேம்' என்றது, கவிக்கூற்று; தன்மைப்பன்மை, கவிகளுக்கு உரிய இயல்புபற்றியது. இந்திரசித்து கோபங்கொண்டு எழுந்து தேரேறி வீரவாதங் கூறியமாத்திரத்தில் அவனது குறிப்பையறிந்து தொழில்செய்யுஞ் சேனேகள் போர்க்குச் சித்தமாய்ப் போர்ப்பறைமுழக்கம் முதலியவற்றோடு உடனெழுந்தனவென்க.

'வெற்பென்றாலும் கூறிரண்டாக்கும்' என்றது - வாளாயுதத்தின் மிக்க கூர்மையையும், 'சேறிரண்டருகுசெய்யும்' என்ற அடைமொழி - மதசலத்தின் மிகுதியையும் உணர்த்தும். குணிக்க வென்ற தொழிற்பெயர் - வடமொழித்தாதுவினடியாப் பிறந்தது. குணநம் - எண்கூட்டிப் பெருக்குதல். அரசயானையினிலக்கணத்தில் "தீயுமிழ்சிறுகணுஞ் செம்புகருமுடைத்தாய்" என்றதனால், கண்சிறுத்திருத்தல் உத்தமயானையிலக்கணமாதலுணர்க. 'நூற்றினிரட்டி' என்பதை ஆறும்வேற்றுமைத் தொகையாகவுங் கொள்ளலாம்; இன் - சாரியை. அஞ்சு - ஐந்து என்பதன் முழுப்போலி. ஈற்று ஏகாரம் - தேற்றம். வேற்படை சிறத்தலால், முற்கூறப்பட்டது. (௬)

[இந்திரசித்து இராவணன்மாளிகையிற் செல்லுதல்.]

௭. ஆயமாத்தானை தான்வந்தணமிய தணமவேனைத்
தீயவாணிருதர் வேந்தர் சேர்ந்தவர் சேரத் தேரி
னேயெனுமளவின் வந்தானிராவணனிருந்த யாணர்
வாயின்மேய்க் கோயில் புக்கானருவிசோர் வயிரக்கண்ணான்.

(இ - ள்.) ஆய - அவ்வாறே ஆகிய [பன்னீராயிரமென்னுந் தொகையளவினவாய்த் திரண்ட], மா தானை - குதிரைச்சேனையும், வந்து அணமியது - வந்து (இந்திரசித்தினருகிற்) கூடிற்று; அணம - (அங்ஙனம் அறுவகைப்படையும்) வந்துகூடவும்,—ஏனை - மற்றும், தீய வாள் நிருதர் வேந்தர் - கொடிய வாளாயுதத்தையேந்திய இராக்கத (சேனா) த்தலைவர்கள், சேர்ந்தவர் சேர - திரண்டு (தன்அருகில்) வந்துசேரவும்,—அருவி சோர் வயிரம் கண்ணான் - (தம்பியிறந்தசோகத்தால்) மலையருவிபோல இடையறாது நீரொழுகுகின்றனவும் (அநுமான்மீது உண்டான) கோபம் வெளிப்படுவனவுமாகிய கண்களையுடையவனான இந்திரசித்து, ஏயெனும் அளவின்-விரைவிலே, தேரின் வந்தான் - தேர்மீது வந்து, இராவணன் இருந்த யாணர் வாயில் மேய் கோயில் புக்கான் - இராவணன்வசித்திருந்த அழகிய வாயில் பொருந்திய அரண்மனையுட் சென்றான்; (எ - று.)—தான் - அசை.

ஆய மா தானை என்பதற்கு - (அங்ஙனம்) திரண்ட பெரிய சேனையென்று உரைப்பாருமுளர். ஆயம் மா தானை என்று பதம்பிரித்து, தொகுதிப்பட்ட சிறந்தசேனை யெனினும் அமையும். இப்பொருள்களில், 'மா' என்பது - 'மஹா' என்ற வடசொல்லின் விகாரம். கொடியவர்களாகிய அரக்கர்கள் பிராணிகட்குத் தீங்குசெய்தற்பொருட்டு எப்பொழுதும் கையில் வாளேந்திநிற்றல் இயல்பாதலால், 'வாள்' என்பது, அரக்கர்க்குச் சாதியடைமொழியாய்க் கூட்டிவழங்கப்படும். இங்கு 'நிருதர்வேந்தர்' என்றது, அரக்கர்களிற் படைத்தலைவராயுள்ளாரை. சேர்தல் - தம்மில்திரளுதலும், வந்து சமீபித்தலும். ஏயெனுமளவின் - ஏஎன்றுசொல்வதற்குள்; இது "இம்மென்னுமுன்னே," "அம்மென்றால்" என்பனபோல விரைவுகுறிப்பதாம்.

ராவணன் என்ற வடமொழிப்பெயர் - கூச்சலிடுபவனென்றும், கூச்சலிடச்செய்பவனென்றும் பொருள்படும். சிவபிரானது கைலாசகிரியைப்

பெயர்க்கத்தொடங்கி அதன்கீழ்த் தன்கைகள் அகப்பட்டு நசுங்குண்டபோது பேரிரைச்சலிட்டதனாலும், தனதுகொடியசெய்கைகளால் உலகத்தைக் கத றச்செய்ததனாலும், இவனுக்கு இப்பெயர் இது, சிவபிரான் இட்டது. இனி, விசிரவமுனிவனது புதல்வனெனப் பொருள்படும் தத்திதாந்தநாமமெனக் கொள்ளுதலு மொன்று. இவன் - பிரமபுத்திரரான புலஸ்தியமாமுனிவரது குமாரராகிய விசிரவமுனிவர்க்குக் கேகசியென்னும் ராக்ஷஸஸ்திரீயினிடத் திற் பிறந்தவன்; (விசிரவமுனிவர்க்கு மூத்தமனைவியிடம் பிறந்தவன், குபே ரன்.) லங்காநகரத்தரசன்; திக்குவிசயஞ் செய்தவன்.

'யாணர்வாயில்' என்பதற்கு - எப்பொழுதும் புதிதாகவேயிருக்கும்படி செவ்வைசெய்து அலங்கரிக்கப்பட்டுள்ள வாயில் என்றுமாம்; யாணர் - புதுமை: "யாணரே புதுமை தச்சர் எய்தியவனப்பு நன்மை" என்ற நிகண் டைக் காண்க. "பகைமையும் கேண்மையும் கண்ணுரைக்கும்" என்றபடி, வெகுளிக்குறிப்புக் கண்பார்வையில் தோன்றுதலால், 'வயிரக்கண்ணன்' என்றார். (எ)

[இந்திரசித்து இராவணனிடம் பேசத்தொடங்குதல்.]

அ தாளிணை விழுந்தான் றம்பிக் கிரங்கினன் றறுகணானுந்
தோளிணை பற்றி யேந்தித் தழுவின னழுது சோர்ந்தான்
வாளிணை நெடுங்கண் மாதர் வயிறலைத் தலறி மாழ்க
மீளிபோன் மொய்ம்பி னானும் விலக்கினன் விளம்ப லுற்றான்.

(இ - ள்.) (இராவணன்மாளிகையினுட் சென்ற இந்திரசித்து), தாள் இணை விழுந்தான்-(அவனுடைய) இரண்டுகால்களிலும் விழுந்து [வணங்கி], தம்பிக்கு இரங்கினன் - தம்பியான அக்ஷகுமார னிறந்ததற்காகச் சோகித் துப்புலம்பினன்; தறுகணானும் - அஞ்சாமையையுடையவனான இராவண னும், தோள் இணை பற்றி ஏந்தி தழுவினன் - (இந்திரசித்தின்) தோள்களிர ண்டையும் பிடித்து எடுத்து (அவனை)க் கட்டியணைத்துக் கொண்டு, அழுது சோர்ந்தான் - புலம்பிச்சோகித்தான்; (அப்பொழுது), வாள் இணை நெடுங் கண் மாதர் - வாளாயுதத்துக்குச் சமானமான நீண்டகண்களையுடைய (மண் டோதரிமுதலிய) மகளிர், வயிறு அலைத்து அலறி மாழ்க - வயிற்றிலடித்துக் கொண்டு கதறிவருந்த, மீளி போல் மொய்ம்பினானும் விலக்கினன் விளம்பல் உற்றான்-சிங்கம்போன்ற வலிமையுடையவனான இந்திரசித்தும் (அவர்களை) விலக்கி (த் தந்தையைநோக்கி) ஒன்றுசொல்லத்தொடங்கினன்; (எ - று.)— அதனை, அடுத்த நான்குகவிகளிற் காண்க.

தாளிணை - உபயபாதம். தறுகணன் - எதற்கும் அஞ்சாத கொடியவன். மாதர்கண்ணுக்கு வாள் உவமை - கூர்மையிலும், ஆடவரை வருத்துதலி லும். 'நெடுங்கண்ணார்தம்' என்பதும் பாடம். 'மீளிபோல் மொய்ம்பினான்' என்பதற்கு - அரசனை இராவணன்போலவே வலிமை யுடையவனாகிய அவன்மகனென்றும் பொருள்கொள்ளலாம். (அ)

[இதுமுதல் மூன்றுகவிகள் - இந்திரசித்து இராவணனை நோக்கிச்
சில கூறுதல்.]

௯. ஒன்றுநீயுறுதியோராயுற்றிருந்துளையகிற்றி
வன்றிறற்குரங்கினாற்றன்மரபுளியுணர்ந்துமன்னா
சென்றுநீர்பொருதிரென்றுதிறத்திறஞ்செலுத்தித்தேயக்
கொன்றனைநீயேயன்றேயரக்கர்தங்குழுவையென்றான்.

(இ-ள்.) மன்னா-அரசனே! நீ—, உறுதி ஒன்றும் ஓராய் - பிறர்வலிமை யைக்குறித்துச் சிறிதும் ஆலோசிக்கின்றாயில்லை; உற்று இருந்து உளைய கிற்றி - துன்பத்தையடைந்து நின்று (அதன்பின்பு) வருந்துகின்றாய்; வல் திறல் குரங்கின் ஆற்றல் - கொடியவலிமையையுடைய குரங்கினது வல்ல மையை, மரபுளி உணர்ந்தும் - (கடல்கடந்துவந்து அசோகவனத்தை யழித் ததுமுதலாக) முறைமையாக அறிந்திருந்தும், நீர் சென்று பொருதிர் என்று திறம் திறம் செலுத்தி - 'நீங்கள் போய்ப் போர்செய்வீர்கள்' என்று ஏவி வரிசைவரிசையாக அனுப்பி, நீயே அன்றே அரக்கர்தம் குழுவை தேய கொன்றனை - நீயேயன்றோ இராக்கதர்களுடைய கூட்டத்தைக் குறைந் தொழியும்படி கொன்றுவிட்டாய், என்றான் - என்று (இந்திரசித்து இராவ ணனை நோக்கிக்) கூறினான்; (எ - று.)

இனி, முதலடிக்கு - நன்மைவிளைப்பதொன்றையும் ஆலோசியாமற் சும் மாவிருந்து நீ துன்பப்படுகின்றாய் என்று உரைப்பினுமாம். மரபுளி - முறைத் தினால்; 'உளி' என்ற ஏழனுருபு மூன்றனுருபின்பொருளில் வந்தது; உருபு மயக்கம். (திருக்குறளில், "இயல்புளிக் கோலோச்சு மன்னவன்" என்ற விடத்துப் பரிமேலழகர், 'இயல்புளி' என்பதற்கு 'இயல்பால்' என்று பொரு ளெழுதி, 'உளி என்பது - மூன்றாவதன் பொருள்படுவதோ ரிடைச்சொல்' என்பர். "மந்திரவிதியின் மரபுளிவழா" என்புழி முறைமையின் வழுவாத அந்தணரென ஐந்தாவது விரிதலானும், "இயல்புளிக் கோலோச்சு மன்ன வன்" என்புழி 'முறைமையிலே செங்கோல் நடாத்தும் என ஏழனுருபுவிரித லானும், உளியென்பது மூன்றனுருபின்பொருள்பட வந்ததன்று; பகுதிப் பொருள்விகுதியாய் நின்று தனக்கேற்ற உருபை ஏற்றுநின்றது' என்பது, தொல்காப்பிய நச்சினார்க்கினியருரை.) 'மரபு நீயுணர்ந்து மன்னோ' என்ற பாடத்துக்கு, அன்னோ எனப் பிரித்துக் கழிவிரக்கமாகக் கொள்க. திறம் - கூறுபாடு, பாகம். அன்றே - தேற்றம்.

கடத்தற்கு அரிய மிக்ககாவலையுடைய இவ்விலங்காபுரியினுள்ளே ஒரு குரங்கு வந்து சிறிதும் அச்சமின்றி அசோகவனத்தையழித்துத் தன்னையெ திர்த்துமாக்களையும் அழிக்கத் தலைப்பட்டதென்றமாத்திரத்தால் அக்குரங் கின்வல்லமையை நன்றாக அறியலாயிருந்தும், அதனை வலியடக்கிவெல்லுந் திறமுள்ள என்னை அதனோடு எதிர்க்கச்செல்லுமாறு ஏவாமல் வேறுபல இராக்கதவீரர்களை ஏவினது, நெருப்புச்சுடுமென்று அறிந்திருந்தும் அதிற் கைவைத்தல் வைப்பவரதுபிழையேயாதல்போல ஏவின உனது பிழையே

யாகும் என இராவணனைநோக்கி இந்திரசித்து கூறினனென்க. இச்செய்யுளை மேல் யுத்தகாண்டத்து நாகபாசப்படலத்தில் "கொன்றாரவரோகொலைசூழ்கென நீகொடுத்தாய், வன்றானையர் மானுடர் வன்மையறிந்து மன்றோ, என்றானுமெனைச் செலவேவலையிற்றதென்றோ, நின்றானெடிதுன்னிமுனிந்து நெருப்புயிர்ப்பான்" என வரும் இந்திரசித்தின் வார்த்தையோடு ஒப்பிடுக. இவற்றால், தந்தையான இராவணனை நோக்கி 'நீ தேர்ந்த ஆலோசனையில்லாதவன்' என்றலும், தான் மிகச்சிறந்தவீரனென்ற கருத்தை அத்தந்தையின் முன்னிலையிலேயே எடுத்துச் சொல்லுதலும் ஆகிய செருக்குத்தொழில்கள் இந்திரசித்துக்கு இயல்பென விளங்கும். (௯)

௬௦. கிங்கரர்சம்புமாலிகேடிலாவைவரென்றிப்
பைங்கழலரக்கரோடுமுடன்சென்றபகுதிச்சேனை
யிங்கொருவருமீண்டார்தாமில்லையேற்குரங்கதெந்தாய்
சங்கரனயன்மாலென்பார்தாமெனுந்தகையதாமே.

(இ - ள்.) எந்தாய் - என்தந்தையே! கிங்கரர் - கிங்கரரென்னும் போர் வீரர்களும், சம்புமாலி - ஜம்புமாலியென்பவனும், கேடு இலா ஐவர் - அழிதலில்லாத பஞ்சசேனாபதிகளும், என்ற—, இ பைங் கழல் அரக்கரோடும் - பசுமையான வீரக்கழலையுடைய இந்த இராக்கதர்களுடனே, உடன் சென்ற - கூடிச்சென்ற, பகுதி சேனை - சேனையின் பாகங்களில், ஒருவரும் இங்கு மீண்டார் இல்லை ஏல் - ஒருவரேனும் இங்குத் திரும்பி வந்தவரில்லை யென்றால், குரங்கு அது - அக்குரங்கு, சங்கரன் அயன் மால் என்பார்தாம் எனும் தகையது ஆமே - உருத்திரன் பிரமன் திருமால் என்னும் திரிமூர்த்திகளின் சொரூபமே யென்று கருதத்தக்க பெருமையுள்ளதாமன்றோ? (எ - று.)

கிங்கரர் என்ற வடசொல் - ஏவியதொழில் யாதாயினும் அதனைச் செய்பவரென்று காரணப்பொருள்பட்டு, ஏவலாளரைக் குறிக்கும். ஜம்புமாலீ - இராவணனுக்கு மாமனும் பிரதானமந்திரியு மான பிரகஸ்தனுடைய புத்திரன்; இவ்வடமொழிப்பெயர் - நாவல்மாலையையுடையவ னென்று பொருள்படும். 'ஐவர்' என்றது, இங்குத் தொகைக்குறிப்பு; விரூபாக்ஷன், யூபாக்ஷன், துர்த்தரன், ப்ரகஸன், பாஸகர்ணன் என்ற ஐந்து சேனைத்தலைவர்களைக் குறிக்கும். கேடு - போரில் தோற்றலும், அழிதலும். பசும்பொன்னாலாகிய கழலென்பார், 'பைங்கழல்' என்றார். 'சங்கரன் அயன் மால்'என்றது,காரிய காரணம்பற்றிய முறைமை. சங்கரன் என்ற வடசொல் - அடியார்க்கு இன்பத்தைச் செய்பவனென்றும் (சம் - சுகம்), அஜன் என்ற வடசொல் - திருமாலினிடந் தோன்றியவ னென்றும் (அ - திருமால்) பொருள்படும். மால் - பெருமை, உயிர்களிடத்து அன்பு, திருமகளினிடம் காதல், மாயை இவற்றையுடையவன். ஈற்று ஏகாரம் - தேற்றம். கேடிலா என்ற அடைமொழியைக் கிங்கரர்க்கும் சம்புமாலிக்கும் கூட்டலாம்.

தோலாவென்றியுடைய கிங்கரரும் சம்புமாலியும் பஞ்சசேனாபதிகளும் ஆகிய இந்த இராக்கதவீரர்களையும் இவர்களுடன் சென்ற இராக்கதசேனைகளையும் ஒருவரேனும் மீண்டுவரவொட்டாதபடி ஒரு குரங்கு கொன்றுவிட்ட

தென்றால், அந்தக்குரங்கை என்னவென்றுநினைக்கவேண்டியது? திரிமூர்த்தி சொரூபமென்று நினைக்கவேண்டியதன்றோ என்பது கருத்து. இனி, ஈற்ற டிக்கு - திரிமூர்த்திகளே யென்றுதான் சொல்லத்தக்கதாமோ? என்று பத வுரைகொண்டு, அவர்கட்கு இவ்வகைத்திறமின்மையால் அவர்களென்று சொன்னாலும் சரியாகாதென்று கருத்துரைப்பாரு முளர்; இப்பொருளில், ஈற்று ஏகாரம் - எதிர்மறை: அக்குரங்கு திரிமூர்த்திகளினும் மேம்பட்டதாகு மென்பது, இதன் தாற்பரியம்.　　　　(கo)

கக. திக்கயவலியுமேனாடிரிபுரந்தீயச்செற்ற
முக்கணன்கயிலேயோடுமுலகொருமூன்றும்வென்றா
யக்கனைக்கொன்றுநின்றகுரங்கினையாற்றல்காண்டி-
புக்கினிவென்றுமென்றாற்புலம்பன்றிப்புலமைத்தாமோ.

(இ - ள்.) திக் கயம் வலியும் - அஷ்டதிக்கஜங்களின் வலிமையையும், மேல் நாள் திரிபுரம் தீய செற்ற முக்கணன் கயிலேயோடும் - முன்னொரு காலத்திலே முப்புரத்தையும் எரியும்படி அழித்திட்ட திரிநேத்திரனை சிவ பிரானது கைலாசகிரியையும், உலகு ஒரு மூன்றும் - மூன்று உலகங்களையும், வென்றாய் - சயித்தவனான நீ, (இப்பொழுது), அக்கனை கொன்று நின்ற குரங்கினை ஆற்றல் காண்டி - அக்ஷகுமாரனைக் கொன்று தான்சோர்வுறாது நின்ற இக்குரங்கை (வெல்ல முதலிலேயே முயலாமல் அதனைத் தன்வலிமை காட்டும்படி விட்டு அதனை) இவ்வளவுவலிமையுடையதென்று பரீக்ஷைபார்க் கிறாய்; இனி - கிங்கரர்முதலிய இவ்வளவுபேரையும் அக்குரங்கு கொன்ற பின்பு, புக்கு வென்றும் என்றால் - போய் (அதனை நாம்) வெல்வோமென்று சொன்னால் (அவ்வார்த்தை), புலம்பு அன்றி புலமைத்து ஆமோ-பிதற்றொலி யாகக் கருதப்படுமே யன்றி அறிவுடைய வார்த்தையாகுமோ? [ஆகாதே என்றபடி]; (எ - று.)

முதலிலேயே வெல்லாமல் தலைக்கு ஏறவிட்டு நம்மவர்க்கு அழிவு விளைத்தபின்பு இனி வெல்வோமென்றால், அச்சொல் நன்குமதிப்பைப் பெறாது என்பதாம். ஈற்றடிக்கு - இனிப்போய் வெல்வோமாயினும் முத லில் நம்மவர்பலர்க்கு அழிவுநேர்ந்ததனாலாகிய சோகத்துக்கும் அவமா னத்துக்கும் பரிஹாரமில்லை யாதலால் நாம்செய்தசெயல் அறிவுடையசெய லின்பாற்படாது என்று கருத்துஉரைப்பினும் அமையும். ஐராவதம் புண்ட ரீகம் வாமநம் குமுதம் அஞ்சநம் புஷ்பதந்தம் சார்வபௌமம் சுப்ரதீகம் என்ற எட்டுயானைகளும் கிழக்குமுதலாக முறையே எட்டுத்திக்குக்களிலும் கீழ்நின்று பூமியைத் தாங்குதலால், திக்கஜமென்று பெயர்பெறும். அவ்வட மொழித்தொடர், திக்கயமென்று விகாரப்பட்டது. இராவணன் திக்குவிச யஞ்செய்தகாலத்தில் திக்கஜங்களை யெதிர்த்து அவற்றின்தந்தங்களை யொ டித்து அவற்றை வலிதொலைத்து வென்றனனென அறிக. மேல்நாள் - பூர்வ காலத்தில். த்ரிபுரம் - வடமொழித்தொடர்; பொன் வெள்ளி இரும்பு என் னும்இவற்றாலாகிய மதிலையுடைய மூன்றுபட்டணம். முக்கணன்-இயற்கைக் கண் இரண்டும் நெற்றிக்கண் ஒன்று மாகிய மூன்றுகண்களை யுடையவன்.

**உலகு ஒருமூன்று** - சுவர்க்கம் பூமி பாதாளம் என்பன. இராவணன் திக்குவிசயகாலத்தில் மூவுலகத்துமுள்ள அரசரனைவரையும் வென்றதனாலும், திரிலோகாதிபதியான தேவேந்திரனை வென்றிட்டதனாலும், உலக மூன்றையும் வென்றவனானான். "திக்கின்மா வெலாந் தொலைத்து வெள்ளி மலையெடுத் துலகமூன்றுங் காவலான்" என்று கீழ் ஆரணியகாண்டத்திற் சூர்ப்பணகை கூறியதுங் காண்க. அக்கன் - வடசொற்சிதைவு. 'ஆற்றல் காண்டி' என்பது, பரீக்ஷைபார்க்கிறா யென்று பொருள்பட்டு, ஒருசொல்தன்மையுற்று, 'குரங்கினை' என்ற செயப்படுபொருளுக்கு முடிக்குஞ் சொல்லாய்நின்றது: ஆடவிட்டு நாடகம்பார்ப்பதுபோல இக்குரங்கை அது மனம் போனபடியெல்லாம் பலசெயல்கள் செய்யும்படி விட்டு வேடிக்கை பார்க்கின்றனை யென்பதாம். திரிபுரம் - பண்புத்தொகை; வினைத்தொகையாகக் கொண்டு, (ஆகாயமார்க்கத்திலே)திரிகிற புரம் எனினுமாம். (௬௧)

[இந்திரசித்து இராவணனுக்கு உறுதிகூறிப் போர்க்குச்செல்லுதல்.]

௬௨. ஆயினுமையதொழிற்குரங்கையானே
யேயெனுமளவிற்பற்றித்தருகுவெனிடரென்றொன்று
நீயினியுழக்கற்பாலையல்லைநீடிருத்தியென்னாப்
போயினனமரர்கோவைப்புகழொடுகொண்டுபோந்தான்.

(இ - ள்.) 'ஆயினும் - ஆனாலும், ஐய - ஐயனே! [தந்தையே!], ஆண் தொழில் குரங்கை - ஆண்மைத்தொழில்செய்கிற இக்குரங்கை, யானே - நானே (சென்று), ஏ எனும் அளவில் - அதிசீக்கிரத்தில், தொய்தின் பற்றி தருகுவென் - எளிதிற் பிடித்துக் கொடுப்பேன்; இடர் என்ற ஒன்றும் நீ இனி உழக்கற்பாலை அல்லை - இனிமேல் நீ துன்பம் ஒருசிறிதையும் அனுபவித்துவருந்தத்தக்கவனல்லை; நீடு இருத்தி - நீண்டகாலம் இனிதுவாழ்ந்திருப்பாயாக,' என்னா - என்று (இராவணனைநோக்கி உறுதிமொழி கூறிவிட்டு), போயினன் - (அநுமானைநோக்கிச்) சென்றான்: (யாவனெனில்),— அமரர் கோவை புகழொடு கொண்டு போந்தான் - தேவராசனான இந்திரனை அவனதுகீர்த்தியுட்பட அடக்கிக் கட்டிக்கொண்டுவந்தவனான இந்திரசித்து.

தொய்தின் - சிரமமின்றி, அலக்ஷியமாக. ஆண்தொழில் - பராக்கிரமச் செயல். உழக்கற்பாலை - உழத்தலாகிய பான்மையுடையாய். உழக்கல் என்பதை உழக்கு என்றவினைப்பகுதியின் தொழிற்பெயரெனக்கொண்டு, துன்பமென்ற ஒன்றினாலும் கலங்கத்தக்காயல்லை யென்று பொருள்கொள்ளுதலுமொன்று; உழக்குதல் - கலக்கம். நீடு இருத்தி = நீடூழிவாழ்க; மிக்க அன்பினால் மைந்தன் தந்தைக்கு வாழ்த்துக் கூறினன். 'நீடு' என்ற வினைப்பகுதி தானே பெயர்த்தன்மைப்பட்டு நெடுங்காலத்தை யுணர்த்திற்று. அமரர்கோவைக் கொண்டு புகழொடு போந்தான் என்று இயைத்து, தேவேந்திரனைப் பற்றிக்கொண்டு அவ்வெற்றியினாலாகிய கீர்த்தியைப் பெற்று மீண்டுவந்தவனென்று உரைப்பினும் அமையும். போந்தான் - பெயர். (௬௨)

[இந்திரசித்தை வந்துஅடுத்த சேனையின் பரப்பு.]

கரு. உடைந்தவலிருணோற்றுப்பலுருக்கொடக்கதிர்க்குழாங்கண்
மிடைந்தனமிலேச்சியாங்குமெய்யணிபலவுமின்னக்
குடைந்துவெம்பகைவருண்டோய்கொற்றப்போர்வாள்வில்வீச
வடைந்தகாரரக்கர்தானையகலிடமிடமின்றென்ன.

(இ - ள்.) உடைந்த - (முன்பு சூரியனுக்குத்) தோற்றுப்போன, வல் இருள் - வலியஇருட்டு, நோற்று - (அச்சூரியனைத் தான்வெல்லுதற்பொருட்டுத்) தவஞ்செய்து (அத்தவத்தின்பயனாக), பல் உரு கொடு - பலவுருவங்களைக் கொண்டு, அ கதிர் குழாங்கள் மிடைந்தன மிலேச்சி ஆங்கு - அந்தச் சூரியனதுகிரணங்களின் கூட்டங்களை நெருக்கமுள்ளனவாக (த் தாமகவர்ந்து) அணிந்துகொண்டாற்போல, மெய் அணி பலவும் மின்ன - (இருள்நிறமான) தம்உடம்பில் தரித்த ஆபரணங்கள் பலவும் பிரகாசிக்கவும்,— குடைந்து வெம் பகைவர் ஊன் தோய் கொற்றம் போர் வாள் - அழுந்திக் கொடியபகைவருடைய தசையிற் பாயு மியல்புள்ளனவும் வெற்றியைத்தரும் போரைச் செய்யவல்லனவுமான வாளாயுதங்கள், வில் வீச - ஒளியைவீசவும், —கார் அரக்கர் தானை - கருநிறமுள்ள இராக்கதர்கள்கூடிய சேனைகள், அகல் இடம் இடம் இன்று என்ன அடைந்த - விசாலமான பூமியில் இடம்போதாதென்று சொல்லும்படி (இந்திரசித்தை) அடுத்துவந்து கூடின; (எ - று.)

இராக்கதர்களுடைய கருநிறமுள்ள உடம்புகளில் அணியப்பட்ட பலவகையாபரணங்கள் நன்குவிளங்குவதை, முன்பு சூரியனுக்குத்தோற்ற வலிய இருள் பின்பு தான் அச்சூரியனைவெல்லத் தவஞ்செய்து பலவடிவங்கொண்டு வென்று அச்சூரியனொளிக்கற்றைகளைத் தம்மேல் அடர்த்தியாகத் தரித்திருந்தாற்போலு மென வருணித்தார்; தற்குறிப்பேற்றவணி. ஆங்கு - உவமவுருபு. நிலையில்லாமையாற் பொய்யாகிய உடலை 'மெய்' என்றல், மங்கலவழக்கு. அணியப்படுவது அணியெனக் காரணப்பொதுப்பெயர். பகைவர் பகைமையுடையவர். அகலிடம் - வினைத்தொகை; அகன்ற இடம் என விரியும். 'அகலிடம் இடமின்று என்ன' என்பதற்கு - பரந்த பூமிமுழுவதிலும் வெற்றிடமில்லை யென்று சொல்லும்படி யென்றும் பொருள்கொள்ளலாம். நான்காமடி - உயர்வுநவிற்சியணி. (கரு)

[பெரிய இராக்கதசேனை சூழ அதன் நடுவில் இந்திரசித்து நின்றநிலை.]

கச. ஆழியந்தேருமாவுமரக்கருமுருக்குஞ்செங்கட்
சூழிவெங்கோபமாவுந்துவன்றியநிருதர்சேனை
பூழிவெங்கடலிற்சுற்றவொருதனிநடுவணின்ற
பாழிமாமேருவொத்தான்வீரத்தின்பான்மைதீர்ப்பான்.

(இ - ள்.) ஆழி அம் தேரும் - சக்கரங்களினாற் சிறந்த அழகிய தேர்களும், மாவும் - குதிரைகளும், அரக்கரும் - காலாள்களாகிய இராக்கதர்களும், உருக்கும் செம் கண் சூழி வெம் கோபம் மாவும் - கோபித்து நோக்குகிற சிவ

ந்தகண்களை யுடையனவும் முகபடாத்தை யணிந்தனவும் கொடிய கோப முள்ளனவுமான யானைகளுமாக, துவன்றிய - கூடிநிறைந்த, நிருதர் சேனை - இராக்கதசேனைகள், ஊழி வெம் கடலின் சுற்ற - பிரளயகாலத்துக் கொதித் துப்பொங்குகிற கடல்போலத் தனது சுற்றிலும் வந்துநிற்க, (ஒருதனி நடு வண் நின்ற) - ஒப்பற்ற தனியனாய் அவ்வரக்கர் சேனைநடுவிலே நின்ற, வீரத் தின் பான்மை தீர்ப்பான் - வீரத்தன்மைக்கு உரிய கடமையைச் செய்து தீர்க் கப்புறப்பட்டவனான இந்திரசித்து, ஒரு தனி நடுவண் நின்ற - அப்பிரளயப் பெருங்கடலின் நடுவில் தன்னந்தனியே நின்ற, பாழி மா மேரு - வலிமை யையுடைய மகாமேருகிரியை, ஒத்தான் - போன்றான்; (எ - று.)

உவமையணி; சேனையின் மிக்கபரப்பையும், ஆரவாரத்தையும், அணி யணியாகவந்து சூழ்தலையும், அச்சந்தருந்தோற்றத்தையும், இந்திரசித்தின் வலிமையையும், பருத்து ஓங்கிய வடிவின் காட்சியையும் விளக்கும். வீரர்க்கு உரிய ஊர்திகளுட் சிறத்தலால், தேர் முதலில் நிறுத்தப்பட்டது. சதுரங்கங் களில் தான் ஓர் அங்கமாதலேயன்றி மற்றோரங்கமாகிய தேரைச் செலுத்து வதுமாதலால், தேரின்பின் குதிரையை நிறுத்தினர். 'துரக பதாதி' எனக் குதிரைப்படையை யடுத்துக் காலாட்படையைக் கூறுதல், மரபு. "யானை யுடைய படைகாண்டல் முன்னினிதே", "படை தனக்கி யானைவனப்பாகும்" என்று கூறப்படுகிற யானைச்சேனையின் விளக்கந் தோன்ற, அதனை அடை மொழிகொடுத்துத் தனியே நிறுத்தினர். ஆழித்தேர் - வலிய சக்கரங்களை யுடைய தேர். 'மா' என்பது - குதிரைச்சிறப்புப்பெயரும், விலங்கின் பொ துப்பெயருமாம். 'உருக்குஞ்செங்கட்சூழி வெங்கோபமா' எனவே, யானையா யிற்று. உருக்கும் என்ற தெரிநிலைப்பெயரெச்சத்தில், உரு - பகுதி. முருக் கும் என்று எடுத்து, பகையழிக்குங் குறிப்புத் தோன்றுகிற என உரைப்பினு மாம்; முருக்கு - முருங்கு என்பதன் மெலிவலியான பிறவினை. முருங்குதல் - அழிதல். 'உறுக்கும்' என்ற பாடத்துக்கும், கோபிக்கு மென்பதே பொரு ளாம்; உறுக்கு - பகுதி. கண்சிவத்தல் - கோபத்தின் காரியம். சூழி - முக படாம்; நெற்றிப்பட்டமன்று; அது, ஓடை யெனப்படும். "யானை, யறிந்தறிந் தும் பாகனையே கொல்லும்" என்றபடி கோபக்கறவுடையதாதலால், 'வெம் கோபம்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது; "களிறனைய சீற்றத்தான்" எனக் கோபத்துக்கு யானையை உவமை கூறுதலுங் காண்க.

கோபம், வீரம் - வடசொற்கள். கற்பாந்தகாலத்திற் கடல் பொங்கியெழு ந்துபரவி உலகத்தை மூடியழித்தல், இயல்பு. ஒருதனி - ஒருபொருட் பன் மொழி. நடுவண் என்பதில், அண் - இடப்பொருள்காட்டும் விகுதி; அவண், இவண், எவண் என்பவற்றிலும் இது. ஒருதனி நடுவண்நின்ற என்ற விசே ஷணம், உபமேயம் உபமானம் என்ற இரண்டற்கும் கூட்டப்பட்டது. பழிக் குப்பழிவாங்கிப் பகையழித்தலாகிய வீரர்செயலைச் செய்பவனாய்த் தன்தம்பி யைக்கொன்றவனை வலியடக்கப் பிரயாணப்பட்டவ னென்பார், 'வீரத்தின் பான்மைதீர்ப்பான்' என்றார்; பிறரது வீரத்தன்மையை வென்றொழிப்பவ னென்றும் பொருள்கொள்ளலாம். (கச)

[இந்திரசித்து அனுமானுடைய திறமையைக் கொண்டாடுதல்.]

கரு. சென்றனனென்பமன்னோதிசைகளோடுலகமெல்லாம்
வென்றவனிவனென்றாலும்வீரத்தேநின்றவீர
னன்றதுகண்டவாழியனுமனையமரினாற்ற
னன்றெனவுவகைகொண்டான்யாவருநடுக்கமுற்றார்.

(இ - ள்.) சென்றனன் - (இந்திரசித்து இவ்வாறு புறப்பட்டுப் போர்க்குச்) சென்றான்; வீரத்தே நின்ற வீரன் - வீரத்தன்மையிலே நிலைபெற்றுள்ள மகாவீரனான அந்த இந்திரசித்து, திசைகளோடு உலகம் எல்லாம் வென்றவன் இவன் என்றாலும் - எட்டுத்திசை யெல்லையுமுட்பட உலகங்களையெல்லாம் தான் வென்றவனாயினும், அன்று அது கண்ட ஆழி அனுமனை - அந்நாளில் அவ்வாறு போர்செய்து நின்ற ஆழ்ந்த கருத்துடையனான அநுமானைக் குறித்து, அமரின் ஆற்றல் நன்று என உவகை கொண்டான் - '(இவனது) போர்வல்லமை நன்றாயுள்ளது' என்று மகிழ்ச்சிகொண்டான்; யாவரும் - (அதுகண்ட) எல்லாரும், நடுக்கம் உற்றார் - (இது என்னோவென்று) அச்சமுற்றார்கள்: (எ - று.)

என்ப - அசை. (ஆசிரியர் நச்சினார்க்கினியர் சீவகசிந்தாமணியுரையில் 'என்ப - அசை; இது புறனடையாற் கொள்க: இவ்விதி மேலுங் கொள்க' என்றதும், தொல்காப்பியத்துச் சொல்லதிகாரத்து "கிளந்தவல்ல வேறு பிற தோன்றினும், கிளந்தவற்றியலா னுணர்ந்தனர் கொளலே" என்ற இடைச்சொல்லியற் புறனடைச்சூத்திரத்தின் உரையில் "புனற்கன்னிகொண் டிழிந்ததென்பவே" என, 'என்ப' அசைநிலையாய் வந்தது' என்றதுங் காண்க.) மன்னோ - ஈற்றசை. செய்யுளினிறுதியில் வருவதேயன்றி, செய்யுளடியினிறுதியிலும் ஒருவாக்கியத்தின் வினைமுற்றை யடுத்தும் வரும் இடைச்சொல்லும் பொருள்தராதாயின் ஈற்றசை யெனப்படும்.

வீரர்செயலின் அருமைபெருமைகளையறிந்து பாராட்டவல்லவர் வீரரே யாதலால், வீரத்தேநின்ற வீரனான இந்திரசித்து அநுமனது அமரினாற்றலை நன்றென்று கொண்டாடினனென்க. 'வீரத்தே நின்றவீரன்' என்ற விசேஷ்யம் ஒருகருத்தின் குறிப்பை யுட்கொண்டதாகுதலால், கருத்துடையடை கொளியணியாம். "முற்பகற்கண்டான் பிறன்கேடு" என்றவிடத்துப்போல 'அதுகண்ட' என்றவிடத்துக் காணுதல் - செய்தலென்னும் பொருளில் வந்தது; 'திருநகரங்கண்டபடலம்' என்றவிடத்தும் இது காண்க. ஆழி என்ற பெயரில், இ-கருத்தாப்பொருள் விகுதி. (கம்பீரத்தன்மையிற்) கடல்போன்ற அநுமான்எனினும், கடல்கடந்துவந்த அநுமான் எனினும் அமையும். வாழி என்றுஎடுத்து, அசையென்றலு மொன்று. அநுமன் - ஹநுமாந் என்ற வடசொல்லின் விகாரம்; இப்பெயர்-கன்னத்தில் விசேஷ முடையவனென்று பொருள்படும்: ஹநு - கன்னம், மாந் - வடமொழிப் பெயர்விகுதி. இவன், பிறந்தவுடனே இளஞ்சூரியனைக் கனிந்தபழமென்றுகருதிப் பிடிக்கப்பாய்ந்த பொழுது, அதனையறிந்து கோபங்கொண்ட இந்திரன் வச்சிராயுதத்தினு

லடிக்க, அவ்வடிபட்டுச் சிதைந்த கன்னமுடையவனானதனால், இவனுக்கு இப்பெயர் வந்தது; இது, இந்திரன் இட்டது.

திசை - திசா என்ற வடசொல் ஆவீறு ஐயாயிற்று. வீரத்தே, ஏ - பிரிநிலை: இசைநிறையுமாம். அன்று, அதுஎன்ற சுட்டுக்கள் - மேற்கூறிய நிகழ்ச்சிபற்றியன. அமர் - ஸமரம் என்ற வடசொல்லின் சிதைவு; சமர், சமம் எனவும் வரும். 'யாவரும்' என்றவிடத்து, யாவினா - எஞ்சாமைப்பொருளது. அன்று அதுகண்ட என்பதை வீரனென்பதனோடு இயைத்து, அப்பொழுது அப்போர்க்களத்தைப் பார்த்த என்று உரைத்தலுமொன்று. என்றாலும் என்பதை என்று ஆலும் எனப்பிரித்து, எல்லா வுலகங்களையும் வென்றவனிவனென்று கொண்டாடப்படுகிற வீரனென உரைப்பாருமுளர். 'யானைதொட்டாலும், பாம்புமோந்தாலும், அரசன் நகைத்தாலும், துர்ச்சனன் மரியாதை பண்ணினாலும் உயிர்ச்சேதம் வரும்' என்பது நீதியாதலால், துஷ்டனான இந்திரசித்து அநுமானது போராற்றலை நன்றென்று கொண்டாடியமை கண்ட அனைவரும் இது என்ன பிரமாதத்தை விளைக்குமோ வென்று அஞ்சி உள்ளமும் உடலும் நடுங்குவாராயினரென்க. (கரு)

[இதுவும், அடுத்தகவியும்-இந்திரசித்து சிந்தைகொண்டதை யுணர்த்தும்.]

கசு. இலைகுலாம்பூணினானுமிரும்பிணக்குருதியீரத்
தலைசில்வெம்படைகடெற்றியளவிடற்கரியவாகி
மலைகளுங்கடலும்யாறுங்கானமும்பெற்றுமற்றோ
ருலகமேயொத்ததம்மாபோர்ப்பெருங்களமென்றான்.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) இலை குலாம் பூணினானும் - இலைவடிவமாகத் தொழில் செய்யப்பட்டு விளங்குகிற ஆபரணங்களை யுடையவனான இந்திரசித்தும்,—'இரும் பிணம் குருதி ஈரத்து - மிகுதியான பிணங்களையுடைய இரத்தவெள்ளத்தில், அலகு இல் வெம் படைகள் தெற்றி - அளவில்லாத கொடிய ஆயுதங்கள் அலைக்கப்பெறுதலால், போர் பெருங் களம் - பெரிய யுத்தகளமானது, அளவு இடற்கு அரிய ஆகி மலைகளும் கடலும் யாறும் கானமும் பெற்று - அளவுசெய்யக் கூடாதனவாக [மிகப்பலவாக] மலைகளையும் கடல்களையும் நதிகளையும் காடுகளையும் ஒருங்குபெற்று, மற்று ஓர் உலகமே ஒத்தது-வேறோருலகம்போலத் தோன்றுகின்றதே; அம்மா - ஆச்சரியம்!' என்று உன்னா - என்று எண்ணி, (எ - று.)—'நெஞ்சில் விம்மல்கொண்டான்' என அடுத்த கவியோடு தொடர்ந்து முடியும்.

பிணங்களை மலைகளாகவும், இரத்தவெள்ளத்தைக் கடல்களும் நதிகளுமாகவும், ஆயுதங்களைக் காடாகவும் கருதுக. அம்மா - வியப்பிடைச்சொல். 'பூணினானும்' என்ற உம்மை - கதைத்தொடர்புபற்றியதாதலால், இறந்தது தழுவிய எச்சத்தின் பாற்படும்; உயர்வுசிறப்பாகக்கொண்டு, எதற்குங் கலங்காத நெஞ்சுறுதியுள்ளவனும் மனத்திற் சிறிது கலக்கங்கொண்டான் என்றலுமொன்று.

கஎ. வெப்படைகில்லாநெஞ்சிற்சிறியதோர்விம்மல்கொண்டா
னப்படைவேலையன்னபெருமையராற்றலோடு
மொப்படைகில்லாரெல்லாமுலந்தனர்குரங்குமொன்றே
யெப்படைகொண்டுவெல்வதிராமன்வந்தெதிர்க்கினென்றான்.

(இ - ள்.) வெப்பு அடைகில்லா நெஞ்சில் - (இதுவரையிலும் தமக்கு யாதொருதுயரும் நேர்ந்ததில்லையாதலால்) தவிப்படையாததான தன் மனத்திலே, சிறியது ஓர் விம்மல் கொண்டான் - சிறிது ஏக்கங்கொண்டான்; (மற்றும்), அப்பு அடை வேலை அன்ன பெருமையர் - நீர் நிறைந்த கடல் போன்ற [அளவிடற்கு அரிய] பெருமையுடையவர்களும், ஆற்றலோடும் ஒப்பு அடைகில்லார் - தமது வல்லமைக்கு உவமை பெறாதவர்களும் ஆகிய இராக்கதவீரர்கள், எல்லாம் - எல்லாரும், உலந்தனர் - அழிந்தார்கள்; குரங்கும் ஒன்றே - (இவ்வளவுபேரையும் அழித்திட்டது வானரமோ ஒன்றுதான்; இராமன் வந்து எதிர்க்கின் - (இனி) இராமன் வந்து எதிர்த்தால், எ படை கொண்டு வெல்வது - (அவனை நாம்) எந்தச்சேனையினுதவி கொண்டு சயிப்பது?' என்றான் - என்றும் சிந்தை கொண்டான், (இந்திரசித்து); (எ - று.)

வெப்பு - 'பு' விகுதி பெற்ற பண்புப்பெயர். 'குரங்குமொன்று' என்ற உம்மை - முந்தின வாக்கியத்தை நோக்கி இறந்தது தழுவிய எச்சமாம்; ஏகாரம் - ஒன்று என்ற எண்ணின் இழிவை விளக்கும். (கஎ)

[இந்திரசித்து இராக்கதவீரர்கள் இறந்துகிடத்தலை நோக்கி ரோஷங்கொள்ளுதல்.]

கஅ. கண்ணனாருயிரேயொப்பார்கைப்படைக்கலத்திற்காப்பா
ரெண்ணலாந்தகைமையில்லாரிறந்திடைக்கிடந்தார்தம்மை
மண்ணுளேநோக்கிநின்றுவாய்மடித்துருத்துமாயாப்
புண்ணுளேகோலிட்டன்னமானத்தாற்புழுங்குகின்றான்.

(இ - ள்.) கண் அனோர்-(சிறந்த அங்கமாகுதலால் தமக்குக்)கண்போன்றவர்களும், உயிரே ஒப்பார் - (இன்றியமையாமையாலும் அன்புக்கு இடமாதலாலும் தமக்கு) உயிரையே போல்பவர்களும், கை படைக்கலத்தின் காப்பார் - தாம்தாம் கைம்தரித்துள்ள ஆயுதங்களைக்கொண்டு (பொருது பகையழித்துத் தம்மவர்களைக்) காப்பவர்களும், எண்ணல் ஆம் தகைமை இல்லார் - எண்ணுதற்கு உரிய அளவு இல்லாதவர்களும் [அளவிறந்தவர்களும்] ஆய், இறந்து இடை கிடந்தார் தம்மை - (அநுமானால்) உயிர்நீத்து அவ்விடத்திலே விழுந்துகிடந்த இராக்கதவீரர்களை, மண்ணுளே நோக்கி - அந்தயுத்தபூமியிலே பார்த்து, நின்று-(அங்கங்கே) நின்று, வாய் மடித்து உருத்து-உதட்டை மடித்துக் கடித்துக்கொண்டு கோபித்து, மாயா புண்ணுளே கோல் இட்டு அன்ன மானத்தால் புழுங்குகின்றான் - ஆறாத புண்ணிலே கோலை யிட்டுக் குத்தினாற்போன்ற ரோஷத்தாற் கொதிக்கின்றவனானான், (இந்திரசித்து).

'கைப்படைக் கலத்தின் காப்பார்' என்பதற்கு - கையிலுள்ள ஆயுதம் போலப் பாதுகாப்பவ ரென்று உரைப்பாரு முளர். தம்தம்கைவசத்திலுள்ள ஆயுதத்தைப் பாதுகாப்பதுபோலத் தம்மவர்களை யுத்தகளத்திலே எளிதிற் பாதுகாப்பவரென்று உரைப்பர் ஒருசாரார். 'எண்ணலாந்தகைமையில்லார்' என்பது - நினைத்தற்குமியலாத பெருமையுடையவ ரென்றும் பொருள்படும். அங்ஙன மிறந்தவர்களைப் பார்க்கப்பார்க்க மனஸ்தாபம் மிகுதலால், அதற்குப் புண்ணிலேகோலிட்டதனாலாகும் வருத்தத்தை உவமை கூறினார். இடை - தான் போகின்ற வழியிடையே என்றபடி. மாநம் - அபிமாநம்: வடசொல். இட்டு - இட்டால் என்ற எச்சத்தின் திரிபு; 'இட்டதன்ன' என்பது 'இட்டன்ன' எனத் தொக்கதென்றலு மொன்று. (கஅ)

[இந்திரசித்து தன்னை வெறுத்துக்கொள்ளுதல்.]

கக. கானிடையத்தைக்குற்றகுற்றமுங்கரனார்பாடும்
யானுடையெம்பிவீந்தவிடுக்கணும்பிறவுமெல்லா
மானிடரிருவராலும்வானரமொன்றினாலு
மானிடத்துளவென்வீரமழகிற்றேயம்மவென்றான்.

(இ - ள்.) கானிடை - காட்டிலே [தண்டகாரணியத்திலே], அத்தைக்கு உற்ற - (எனது) அத்தையான சூர்ப்பணகைக்கு நேர்ந்த, குற்றமும் - உறுப்புக்குறையாகிய பரிபவமும், கரனார் பாடும் - கரன் இறந்ததும், யான் உடை எம்பி வீந்த இடுக்கணும் - யான் உடைமையாகப்பாராட்டிவந்த எனது தம்பியான அக்ஷகுமாரன் இறந்ததனாலாகிய துன்பமும், பிறவும் - மற்றவைகளும், எல்லாம் - ஆகிய யாவும், மானிடர் இருவராலும் வாநரம் ஒன்றினாலும் ஆனிடத்து - இராமலக்ஷ்மணர்களாலும் ஒரு குரங்கினாலுமே உண்டாயினவென்றால், என்னுடைய வீரம் அழகிற்றே - (இராக்கதராசகுமாரனான) என்னிடத்து உள்ள பராக்கிரமம் அழகுடையதே! அம்ம - ஆச்சரியம்!! என்றான் - என்றும் எண்ணினான், (இந்திரசித்து); (எ - று.)

அத்தை - தந்தையுடன் பிறந்தவள்; இங்கு, இராவணன் தங்கையான சூர்ப்பணகை. குற்றம் - அங்கபங்கம்; இதன்விவரம், கதைத்தொடர்ச்சியில் விளக்கப்பட்டது. கரன் என்ற பெயர் - கொடியவ னென்று பொருள்படும்: இவன் - இராவணனுக்குத் தம்பிமுறையாகின்றவன்; பூர்வகராக்ஷஸசிரேஷ்டனான சுமாலியின் மகளும், இராவணன்தாயான கேகசியின் தங்கையும், இராவணனது தந்தையான விசிரவமுனிவரையே கணவனாக அடைந்தவளும், இங்குக்காட்டிய இருமுறையினாலும் இராவணனுக்குச் சிறியதாயுமாகிய கும்பீநசியின் குமாரன்; தண்டகாரணியத்திலே சூர்ப்பணகை வசிப்பதற்கென்று இராவணன் வரையறுத்த ஜநஸ்தாநமென்னு மிராச்சியத்தில் அவளுக்குப் பாதுகாவலாகவும், அவளிட்ட கட்டளைப்படி நடப்பதற்காகவும் இராவணனால் நியமித்துவைக்கப்பட்ட பெரியஇராக்கதசேனைக்கு முதல்தலைவன். இராமலக்ஷ்மணரிடத்துக் கறுக்கொண்டு சென்ற சூர்ப்பணகையால் தூண்டப்பட்டுக் கரன் மிகப்பெரிய சேனையோடும், அறுபதுலக்ஷம் படைவீரர்

களோடும், பதினாலாயிரம் ரதாதிபதிகளோடும், சேனைத்தலைவர் பதினால்வரோ டும், தூஷணன் திரிசிரசு என்னும் முப்பெருஞ்சேனாதிபதிகளோடும் வந்து எதிர்க்க, இராமன் இலக்குமணனைச் சீதைக்குக்காவலாக வைத்துவிட்டுத் தான் தனியே நின்று பொருது அவர்களனைவரையும் கொன்றிட்டனனென்பது, கீழ் ஆரணியகாண்டத்தில் விரித்து உரைக்கப்பட்டது.

கரனார் என்ற பெயரில், 'ஆர்' என்ற பலர்பால்விகுதி - உயர்த்தற்பொருளில் வந்தது. தனக்குச் சிற்றப்பன் முறையாதலாலும், பலபராக்கிரமங்களிற் சிறத்தலாலும், 'கரனார்' என்று உயர்த்திக்கருதினான். பாடு - படுதல்: படு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். எம்பியென்றது தம்பியென்றதன் திரமாய் நின்றதெனக்கொண்டு, 'யானுடை' என்பதற்கு - என்னுடைய என்று உரைப்பாருமுளர்; இப்பொருளில், உடைய என்ற ஆறாம்வேற்றுமைச்சொல்லுருபு விகாரப்பட்டதென்க. என்னைத் தமையனாகப் படைத்த என்தம்பி யென்பர் ஒருசாரார். வீந்த இடுக்கண் - வீந்ததனாலாகிய இடுக்கண்; பெயரெச்சம், காரணப்பொருளது. 'இடுக்கணென்பது-மலர்ந்தநோக்கமின்றி மையல்நோக்கம்பட வரும் இடுக்கண்' என்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் உரைத்தமைகொண்டு, இடுக்கண் என்பது இடுங்கு கண் என்பதன் விகாரமென்றும், அக்காரியத்தின் பெயர் காரணத்தின்மேலதாய் நின்று கண் இடுங்குதற்குக் காரணமான துன்பத்தை யுணர்த்து மென்றும் உணரலாம். 'பிற' என்றது - தாடகைவதை முதலாக மாரீசன் வதை இடையாகப் பஞ்சசேனாபதிகள் வதை கடையாக சேர்ந்த பல இராக்கதவதத்தையும் அசோகவன பங்கத்தையும் குறிக்கும். அத்தைகைய உற்ற குற்றம் மானிடரிருவரில் இலக்குமணனாலும், கரனார் பாடு இராமனாலும், எம்பி வீந்த இடுக்கண் வானரத்தினாலும் ஆயின. 'பிற' என்றவற்றுக்குக் கருத்தா ஏற்றபடி கண்டுகொள்க. மாதவர் என்ற வடசொல் - (காசியபமுனிவர்மனைவியரிலொருத்தியான) மநுவின் மரபின ரென்றும், வாநரம் என்ற வடசொல் - (சற்றேறக்குறைய) மனிதனைப்போலுள்ள தென்றும் காரணப்பொருள்படும். 'ஆனவிடத்து' என்பது, 'ஆனிடத்து' எனத் தொக்கது. 'அழுகிற்று' என்றது - பிறகுறிப்புவகையாகிய எதிர்மறையிலக்கணையால், அழுகுடையதன்று என்ற கருத்தைக் கொண்டது. தேற்றேகாரமும், அம்ம வென்ற வியப்பிடைச்சொல்லும், இங்கு இகழ்ச்சிக்குறிப்பினவே.　　(கக)

[இந்திரஜித்து தான்செல்லும் போர்க்களத்திற் பலபிணங்களினிடையே தன்தம்பியினுடம்பைக்காணுதல்.]

௨௦. நீப்புண்டவுயிரவாகிநெருப்புண்டநிறத்திற்றோன்றி
யீர்ப்புண்டற்கரியவாயபிணக்குவடிடறச்செல்வான்
றேய்ப்புண்டதம்பியாக்கைசிவப்புண்டகண்கடமயிற்
காய்ப்புண்டசெம்பிற்றோன்றக்கறுப்புண்டமனத்தன்கண்டான்.

(இ - ள்.) நீப்புண்ட உயிர ஆகி - நீங்குதலடைந்த உயிரையுடையவையாய், நெருப்பு உண்ட நிறத்தில் தோன்றி - நெருப்புக்கொண்ட நிறத்தை

புடையவையாய்க் காணப்பட்டு [இரத்தப்பெருக்கினூற் செந்நிறமுள்ளவை யாய்], ஈர்ப்பு உண்டற்கு அரிய ஆய - (வடிவத்தின் பருமையாலும் கனத்தி னூலும் இரத்தவெள்ளத்தினூல்) இழுக்கப்படுதற்குக் கூடாதனவான, பிணம் குவடு - பிணங்களாகிய மலைகள், இடற - (தனதுதேர்ச்சக்கரங்களில்) தட் டித்தடுக்க, செல்வான் - (போர்க்களவழியே) செல்பவனூன இந்திரசித்து. —தேய்ப்பு உண்ட தம்பி யாக்கை - தேய்க்கப்பட்டுள்ள தன்தம்பியான அக்ஷ னது (உயிர்நீத்த) உடம்பை, சிவப்பு உண்ட கண்கள் தீயில் காய்ப்பு உண்ட செம்பின் தோன்ற - (கோபத்தினூற்) செந்நிறங்கொண்ட தன் கண் கள் நெருப்பிற்காய்ச்சப்பட்ட செம்புபோல விளங்க, கறுப்பு உண்ட மனத் தன் கண்டான் - கோபங்கொண்ட மனத்தையுடையவனூய் நோக்கினூன்.

நீப்புஉண்ட உயிராகி - உயிர்நீக்கப்பெற்றவையாய் என்றபடி. 'பிணக்கு வடு' என்றது - பிணங்களின் பருமையையும் தொகுதியையும் உணர்த்தும். செல்வான் - பெயர். அக்ஷனை அநுமான் தரையில் தேய்த்து அழித்திட்டமை பற்றி, 'தேய்ப்பு உண்ட தம்பியாக்கை' எனப்பட்டது. அதனைக் கீழ் அட்சகுமா ரன்வதைப்படலத்தில், "நீத்தாரோயாடின உதிரப்பெருநதி நீராகச் சிலைபாரா கப், போய்த்தாழ்செறிதசை அரிசிக்கினைபடி பொங்கப் பொருமுயிர் போகா முன், மீத்தானிமிர் சுடர்வாளொத்தசைகொடு பிடியா விண்ணெனூடு மண்காணத், தேய்த்தா ஞூழியினுலைசெய்... ...ருகன் பசுமிறைதேயாதான்" எனக் காண்க. செம்பு - தாமிரமென்னும் ... ...றம். கறுப்புக் கோபமாதலை "கறுப் புஞ் சிவப்பும் வெகுளிப்பொருள" என்ற தொல்காப்பிய வுரிச்சொல்லியற் சூத்திரத்தா லறிக. 'பிணக்குவடிடறச்செல்வான்' என்றதனூல், தேர் இனிது செல்லுதற் கியலாதபடி பிணக்குவை மிக்கிருந்த தென்பது தோன்றும். 'பிணக்குவடு' என்றது, உருவகம். 'சிவப்புண்டகண்கள் தீயிற்காய்ப்புண்ட செம்பின்தோன்ற' என்றது, உவமை. '-ண்ட' என்ற சொல் ஒருபொருளி லேயே பலமுறை வந்தது, சொற்பொருட்பின்வருநிலையணி. (௨௦)

[அதுகண்ட இந்திரசித்தின் சோகமும் கோபமும்.]

௨௧. தாருகன்குருதியன்ன குருதியிற் றனிமாச்சீயங் கூருகிர்கீளைத்த கொற்றக்கனகன்மெய்க்குழம்பிற்றேன்றத் தேருகக்கையின்வீரச்சிலையுகவயிரச்செங்க ணீருகக்குருதிசிந்தநெருப்புகவயிர்த்துநின்றான்.

(இ - ள்.) தாருகன் குருதி அன்ன குருதியில் - தாருகாசுரனுடைய இரத்தப்பெருக்குப் போன்ற இரத்தவெள்ளத்திலே, தனி மா சீயம் கூர் உகிர் கிளைத்த கொற்றம் கனகன் மெய் ... ...ின் தோன்ற - ஒப்பற்ற பெரிய நரசிங்கமூர்த்தியாற் கூரிய நகங்கொண்டு கிண்டப்பட்டுக் அலையப்பட்ட வெற்றியையுடைய இரணியாசுரனது உடம்பு (குழம்பிக்கிடந்தது) போல(த் தன்தம்பியின் உடம்பு குழம்பி)க் காணப்பட,—(அதுகண்ட இந்திரசித்து), தேர் உக - (அவ்விடத்தே) தன்தேரும் அழுந்திநிற்க, கையின் வீரம் சிலை உக - கையிலேந்திய வெற்றியைத்தருவதான வில்லும் நழுவ, வயிரம் செம் கண் நீர் உக குருதி சிந்த நெருப்பு உக வயிர்த்து நின்றான் - கோபத்தாற்

சிவந்த தன்கண்களினின்று நீரும் இரத்தமும் நெருப்பும் சொரிய வைரங் கொண்டு நின்றான்; (எ - று.)

தாரகனென்றபெயரே தாருகனென்றும் வழங்கும்; இவன், அசுரேசன் மகளாகிய மாயையென்னும் மறுபெயருள்ள சுரசையென்பவள் காசியபமகா முனிவரருளாற் பெற்ற புதல்வர் மூவரில் சூரபதுமனுக்கும் சிங்கமுகனுக்கும் இளையவன்; யானைமுகத்தோடு பிறந்தவன்; தேவர்தச்சனான விசுவகர்மாவி னாற் பூலோகத்திலே ஜம்பூத்வீபத்தில் ஏமகூடமலைக்கு அருகில் நிருமித்துக் கொடுக்கப்பட்ட மாயமாபுரியென்னும் நகரத்தில் அரசாண்டுகொண்டிருந்த வன். சூரபதுமன் முதலிய மூவரும் சிவபிரானைக்குறித்து யாகமுந் தவமுஞ் செய்து அப்பரமனருளால் அளவிறந்தவரங்களைப் பெற்றுச் செருக்குற்றுத் தமதுகுருவாகிய சுக்கிரபகவானது தீயவுபதேசத்தாற் கொடுமைகொண்டு பலவாயிரம் அசுரர்களோடு கூடிச்சென்று போர்செய்து இந்திரன் முதலிய தேவர்களனைவரையும் வென்று பற்பலவகையாக உலகத்தை வருத்திவருமள வில். அத்துன்பம் பொறுக்கலாற்றாத தேவர்கள் கைலாயமடைந்து பரமசிவ னைத்தொழுது துதிசெய்து, 'தேவரீரைப்போல ஒருபுத்திரனை யுண்டாக்கி அக்குமாரனால் அசுரர்களையழித்து எங்கள்துன்பத்தைப் போக்கிக் காத்தரு ளல்வேண்டும்' என்று பிரார்த்திக்க, சிவபிரான் அவ்வேண்டுகோளுக்கு இர ங்கி, குமாரக்கடவுளை யுண்டாக்கி அனுப்பியருள, அக்கடவுள் வீரபாகுதேவர் முதலான சிவகுமாரர்களோடும் மற்றும்பல லக்ஷம்வீரர்களுடனும், சகலதேவர் களோடும் போய் யுத்தஞ்செய்து அவ்வசுரர்களனைவரையு மழித்திடுமாறு பிரயாணப்பட்டுச் சூரபதுமனது மகேந்திரநகரத்தை நோக்கிச் செல்லும் வழி யிடையில் வானுறவோங்கிய கிரௌஞ்சகிரியைக் கண்டு தேவர்கள் திகைத்திட லும், நாரதமுனிவர் கூறியதனால் அம்மலையில் ஒருசார் மாயமாபுரியிலே சூர பதுமனது தம்பியான தாரகன் பல அசுரசேனையுடனே இருத்தலை யறிந்து, முருகக்கடவுள் வீரபாகுவைச் சேனையோடு போர்க்கு அனுப்ப. அவ்வசுரராச னும் சேனையுடன் வந்து போர்செய்கையில், அசுரர்கள் அழிய, யானைமுக முள்ள அத்தாரகாசுரன் கடும்போர் புரிந்து பூதகணங்களை யழித்து முடிவில் முன்நிற்கமாட்டாமல் அம்மலையிலே ஒருகுகையில் ஒளித்திடுதலும், தொடர் ந்துசென்ற வீரவாகு முதலியோர் பலர் அக்குகையினுள்ளே அம்மலையின் மாயையால் மயங்கினராக, அத்தா[illegible]ர்களம்புகுந்து பூதகணங்களை வருத்தித்துரத்த, இச்செய்திகளை நா[illegible] முனிவர் சொல்லக் கேட்டு முருக வேள் சேனையுடன்சென்று போர்செய்து அவ்வசுரனது துதிக்கையையும் தந்தங்களையும் துணித்து அவனது சேனைகளை யழிக்கையில், அவன் அக் கிரௌஞ்சமலையுடன்கூடிப் பலமாயைகள்புரிய, ஆறுமுகமூர்த்தி வேலாயுதத் தையெறிந்து அம்மலையையும் அவ்வசுரனையும் அழித்து, மயங்கிக்கிடந்த தனது வீரர்களையெல்லாம் தனது திவ்யசக்தியால் எழுப்பி யழைத்துக் கொண்டு அப்பாற் செல்பவனாயினனென்பது வரலாறு. அத்தாரகாசுரனது உடம்பினின்றுவழிந்த இரத்தப்பெருக்கின் மிகுதியை "வீழுற்றிடலும் விழு செம்புனல் வெள்ளமிக்கே. தாழுற்றபாரிற்புகுந்தே புடைசார்தலுற்ற, பாழிக் கடலிற்பரிமாமுகம்பட்ட செந்தீச், சூழிக்களிற்றின் வதனத்தினுந் தோன்று

மென்ன", "தந்தியின் வதனங்கொண்ட தாரகவவுணன்மார்பிற், சிந்து று குருதிச்செந்நீர் திரைபொருதலைத்துவீசி, அந்தமினீத்தமாகியயிற்படையட்ட குன்றில், வந்திடுபூழைபுக்கு மறிகடல்மடுத்ததன்றே" என்ற கந்தபுராணச் செய்யுள்களாலும் காண்க. அன்றியும், தேவர்களும் அசுரர்களும் கூடிப் பாற் கடல்கடைந்தபோது உண்டாகிய அமிருதத்தைத் திருமால் தேவர்கட்கே கொடுத்து அசுரர்களை மோகினிவடிவத்தால் மயக்கியமைபற்றி அசுரர்கள் கடுஞ்சினங்கொண்டு தேவர்களோடு எதிர்த்துச்செய்த போரில் முருகக்கடவு ளால் அழிக்கப்பட்ட தாருகனென்ற அசுரனொருவனும், காளியாற் சங்காரஞ் செய்யப்பட்ட தாருகனென்ற அசுரனொருவனும் உண்டு.

பொன்நிறமுள்ளவனுதல் பற்றிவந்த 'ஹிரண்யன்' என்ற பெயர்க்குப் பரியாயநாமமாக 'கனகன்' என்றார். கநகம் ஹிரண்யம் என்ற வடசொற்கள், பொன்னின் பெயர்களாம். கனகனைப் பிளந்த கதை:—தனித்தனி தேவர் மனிதர் விலங்கு முதலிய பிராணிகளாலும் ஆயுதங்களாலும் பகலிலும் இர விலும் பூமியிலும் வானத்திலும் வீட்டின் அகத்திலும் புறத்திலும் தனக்கு மரணமில்லாதபடி வரம்பெற்றவனும், இரணியாக்கனது உடன்பிறந்தவனு மான இரணியன் தேவர்முதலியயாவர்க்கும் கொடுமையியற்றித் தன்னையே கடவுளாக அனைவரும் வணங்கும்படி செய்துவருகையில், அவனது மகனான பிரகலாதாழ்வான், இளமைதொடங்கி மகாவிஷ்ணுபக்தனாய், தந்தையின் கட்டளைப்படி முதலில் அவன்பெயர்சொல்லிக் கல்விகற்காமல், அதற்கு மாறாக நாராயணநாமஞ் சொல்லிவரவே, கடுங்கோபங்கொண்ட இரணியன் பிரகலாதனைத் தன்வழிப்படுத்துதற்குப் பலவாறு முயன்றபின், அங்ஙனம் வழிப்படாத அவனைக் கொல்லுதற்கு என்னவுபாயஞ்செய்தும் அவன் பகவா னருளா லிறந்திலனாக, ஒருநாள் சாயங்காலத்தில் தந்தை மைந்தனைநோக்கி 'நீசொல்லும் நாராயணனென்பவன் எங்குஉளன்? காட்டு' என்ன, "சாணினு முள ளோர்தன்மையணுவினைச் சதகூறிட்ட, கோணினுமுளன் மாமேருக் குன்றினுமுளன் இந்நின்ற, தூணினுமுளன் நீசொன்ன சொல்லினுமுளன்" என்றுசொல்ல, உடனே இரணியன் 'இங்கு உளனோ?' என்று சொல்லி எதிரிலிருந்த தூணைப் புடைக்க, அதனினின்று திருமால் அவன்பெற்ற வரங் கட்கெல்லாம் விலக்காம்படி உடனே அந்த மாலைப்பொழுதிலே மனிதவுருவ முஞ் சிங்கவடிவமுங் கலந்த நரசிங்கமூர்த்தியாய்த் தோன்றி இரணியனைப் பிடித்து வாயிற்படியில் தன்மடிமீது வைத்துக்கொண்டு தனது திருக்கைந் நகங்களால் அவன்மார்பைப் பிளந்து அழித்திட்டுப் பிரகலாதனுக்கு அருள் செய்தனன் என்பதாம்.

'நெருப்புகவுயிர்த்து நின்றான்' என்ற பாடத்துக்கு, உயிர்த்துநின்றான்- பெருமூச்சுவிட்டு நின்றனனென்க. (உக)

[இந்திரசித்து அநுமனைக்குறித்துப் புலம்புதல்.]

உஉ. வெவ்விலையயில்வேலுந்தைவெம்மையைக்கருதிநோக்கி
வவ்வுதல்கூற்றுமாற்றான்மாறுமாறுலகின்வாழ்வா
ரவ்வுலகத்துளாருமஞ்சுவரொளிக்கவையா
வெவ்வுலகத்தையுற்றாயெம்மைநீத்தெளிதினெந்தாய்,

(இ - ள்.) எந்தாய் - எமது ஐயனே! வெவ் இலை அயில் வேல் - வெவ்வியதும் [பகைவர்க்கு அச்சந்தருவதும்] அரசிலைவடிவமாகத் தொழில்செய்யப்பட்டதுமான கூரியவேலாயுதத்தையுடைய, உந்தை - உன்தந்தையினது, வெம்மையை - கோபத்தை, கருதி நோக்கி - ஆலோசித்துப்பார்த்து, கூற்றும் - யமனும், வவ்வுதல் ஆற்றான் - (உனது உயிரைக்) கவரவல்லனல்லன்; மாறு மாறு உலகின் வாழ்வார் - மற்றும் வெவ்வேறு உலகங்களில் வாழ்பவர்களான, அ உலகத்து உளாரும் - அந்தந்த உலகத்துச் சனங்களும், அஞ்சுவர் - பயப்படுவார்கள்; (ஆகவே), ஐயா - ஐயனே! ஒளிக்க - (நீதானே) ஒளித்துக்கொள்ளும்படி, எம்மை நீத்து எளிதின் எ உலகத்தை உற்றாய் - எங்களை (இங்கு) விட்டு எளிதிலே எந்த உலகத்தைச் சேர்ந்தனையோ? (எ - று.)— என்றுசொல்லி இந்திரசித்து புலம்பினான்' எனச் சொற்கள் வருவித்து முடிக்கவேண்டும்.

'வெவ்விலையயில்வேலுந்தை வெம்மையைக் கருதிநோக்கி' என்பதனை, 'அவ்வுலகத்துளாருமஞ்சுவர்' என்பதனோடுங் கூட்டுக; இது, முதனிலைத்தீபகம். 'பிராணிசங்காரகர்த்தாவான யமனும் இராவணபயத்தால் உன்னைக் கொல்ல அஞ்சுவன்; மற்றை அனைவரும் அப்படியே; இங்ஙனம் உன்னைக் கொல்லவல்லவரெவருமில்லை; நீதானே விளையாட்டுவகையால் எங்கட்குப் புலப்படாது ஒளித்துக்கொள்ளுதற்கு எந்த உலகத்திலேனும் சென்றனை போலும்' என்று இந்திரசித்து அக்ஷனைக்குறித்து அன்பினால் கலங்கிப் பிரலாபித்தனனென்க. தமையன் தம்பியை 'ஐயா' என்றும், 'எந்தாய்' என்றும் விளித்தது, அன்புபற்றிய மரபுவழுவமைதி. கூற்றும், அவ்வுலகத்துளாரும் என்ற உம்மைகள் - ஒன்றையொன்று நோக்கி எதிரதும் இறந்ததுந் தழுவிய எச்சமாம்; இவை எண்ணும்பொருளனவாகா; தனித்தனி வாக்கியங்களில் வந்ததனால். ஒளிக்க அஞ்சுவர் என்று கூட்டி, உன்னை ஒளித்துக் கொண்டு செல்லுதற்கு அஞ்சுவர் என்று உரைப்பாருமுளர். இங்கு நோக்குதல் - நோக்கல்நோக்கம்; அதாவது - உள்ளத்தாற் குறித்துப்பார்த்தல்.　　　　(உஉ)

[இந்திரசித்துக்குச் சோகத்தினுங் கோபம் மிகுதல்.]

உ௩. ஆற்றல னனைய னாகி யறிவழிந் தயரும் வேலை
சீற்றமென் றொன்று தானே மேனிமிர் செலவிற் றாகித்
தோற்றிய துன்ப நோயை யுள்ளுறத் துரந்த தம்மா
வேற்றஞ்சா லாணி யாணி யெதிர்செலக் கடாய தென்ன.

(இ - ள்.) (இந்திரசித்து), ஆற்றலன் - [ப்ராத்ருசோகத்தைப்] பொறுக்கமாட்டாதவனாய், அனையன் ஆகி - அத்தன்மையனாகி [கீழ்க்கூறியவாறு நிலைகலங்கி யென்றபடி], அறிவு அழிந்து அயரும் வேலை - அறிவுமயங்கிச் சோர்வடையுஞ் சமயத்தில்,—சீற்றம் என்ற ஒன்று தானே - (தன்தம்பியைக் கொன்ற வாநரத்தின்மே லுண்டான) கோபமென்கிற ஒருகுணமே, மேல் நிமிர் செலவிற்று ஆகி - மேன்மேற் பொங்கியெழுந்தன்மையை யுடையதாய், ஏற்றம் சால் ஆணி ஆணி எதிர் செல கடாயது என்ன - (முன்னேதைத்து) ஏறுதல்பொருந்திய ஓர் ஆணியின்மேல் மற்றோராணியை (அவ்வாணி) உள்

ளடங்குமாறு அறைந்தாற்போல, தோற்றிய துன்பம் நோயை உள்உற துரந்தது - (அக்ஷனிறந்ததனால் அவ்விந்திரசித்தின் மனத்தில்) உண்டான சோகமாகிய பிணியை உள்ளேயடங்கும்படி செலுத்தி அடக்கிவிட்டது; அம்மா - ஆச்சரியம்! (எ - று.)

ஓரிடத்தில் ஆணியின்மேல் ஆணியை யடித்தால், பிந்தி அடிக்கும் ஆணி முந்தியடிக்கப்பட்டுள்ள ஆணியை உள்ளே செலுத்திவிடுதல்போல, தம்பி இறந்தனனென்றதனால் இந்திரசித்தின்மனத்தில் முதலிலுண்டான சோகத்தை அத்தம்பியைக்கொன்ற அநுமான்மீது உடனே உண்டான கோபம் உள்ளடக்கிவிட்டதென்பதாம். எனவே, சோகரஸமடங்க ரௌத்ரரஸம் அப்பொழுது அவனிடத்து மிக்கதனால் அவன் மூர்ச்சை யொழிந்தனனென்க. இங்ஙனம் சோகரஸத்தை யடக்கும்படி அதிகப்பட்ட கோபரசத்தின் கொடுமையை 'அம்மா!' என்று வியந்தவாறு. ஆற்றலன் - எதிர்மறை முற்றெச்சம்; இயற்கையில் மிக்க [illegible]மையுடையனான அவ்விந்திரசித்து என்றுமாம். ஆற்றல்-வல்லமை. [illegible]ன் எ என்ற இடைச்சொற்களில், ஒன்று-தேற்றம்; மற்றொன்று - பிரிநிலை. துன்பம் மனநோவியாதியாதலால் 'நோய்' எனப்பட்டது. நோய் - தொழிற்பெயர்; இதில், நோ என்பதன் விகாரமான நோ - பகுதி; ய் - தொழிற்பெயர்விகுதி என்னவேண்டும். கடாயது = கடாவியது. உவமையணி. என்ன - உவமவுருபு. 'ஆணிக்காணி யெதிர்செலக் கடாயதென்ன' என்ற பாடம் வேறுவகையாகப் பொருள்படும். முதலடியில் 'ஆற்றலனாகியன்பால்' என்றும் பாடமுண்டு. (உங)

வேறு.

[இந்திரசித்தை அநுமான் பார்த்தல்.]

உச. ஈண்டிவை நிகழ்வுழி யிரவி தேரெனத்
தூண்டுறு தேரின்மேற் றோன்றுந் தோன்றலை
மூண்டுமுப் புரஞ்சுட முடுகு மீசனின்
ஆண்டகை வினைகழ லநுமனோக்கினான்.

(இ - ள்.) ஈண்டு - இவ்விடத்தில், இவை - இச்செயல்கள், நிகழ்வுழி - நடக்கும்போது,—இரவி தேர் என தூண்டுறு தேரின்மேல் தோன்றும் தோன்றலை - சூரியனது தேர்போல விரைவிற்செலுத்தப்பட்டு வருகிற தேரின்மீது காணப்படுகிற இராவணகுமாரனை இந்திரசித்தை,— மூண்டு முப்புரம் சுட முடுகும் ஈசனின் - கோபங்கொண்டு திரிபுரத்தை யெரித்தற்கு வந்து சமீபித்த சிவபிரான் போன்ற, ஆண் தகை - ஆண்மைக்குணமுள்ளவனான, வினை கழல் அநுமன் - கட்டிய வீரக்கழலையுடைய அநுமான், நோக்கினான் - பார்த்தான்; (எ - று.)

ஈண்டு - இண்டு என்ற சுட்டு நீண்டது. 'தூண்டுறு' என்ற வினைத்தொகை, இங்குச் செயப்பாட்டு வினைப் பொருளில் வந்தது. தோன்றல் - தோன்றியவன்: குமாரன்; அல்லது, பெருமையிற் சிறந்தவன்: ஆண்பாற் சிறப்புப்பெயர்; யாவரினுஞ் சிறந்துதோன்றுபவ னென்க. விரைவும் வலி

மையுந் தோன்ற, இந்திரசித்தின் தேர்க்குச் சூரியன்தேர் உவமை கூறப்பட்டது; இதில், எளிதிற்பகையழிக்குந்திறம் மிக்க ஒளியுடைமை அனைவரையும்மிகத்தபித்தல் என்னு மிவற்றால், இந்திரசித்து சூரியனே டொப்பானென்பதுந் தோன்றும். ஈசன் என்ற வடசொல் - ஈசுவரியமுடையவனென்று பொருள்படும். பலபராக்கிரமங்களிலும். பகைவர்க்கு அச்சந்தருந்தோற்றத்திலும் அநுமானுக்குச் சிவபிரான் உவமை: "புரார் மற்றியானே வாதசே யெனப் புகன்றான்" என்று பாலகாண்டத்திலும், "ஆதித்திருவெழுத்தைந் துடைத்தாயு மராவணிந்தும், சோதித்திருக்கண்கள் மூன்றுடன் தோன்றும் சுருதிசொன்ன, நீதிக்கிசையடவா மனிதனை நேமிகொண்டு, வாதித் தருளும்பெருமா ளரங்கர்தம் வாகனமே" என்று திருவரங்கத்துமாலையிலுங் கூறியபடி அநுமான் ருத்ராம்சமுடையனாதலால், அவர்க்கு அப்பெருமானை உவமைகூறுதல் ஏற்கும். இனி, அநுமான் இலங்கையை யெரிப்பதனால், அவர்க்கு 'மூண்டுமுப்புரஞ்சுட மூடுகுமீசன்' உவமை கூறப்பட்டனவென்க; "திருவின் பெருமான் விட்ட வாகனம் போய்த் தொல்லாழிநீரைக் கடந்தது தாளிற்சுடரிரண்டுஞ் செல்லாதவூரைத் திரிபுரங்கண்டது" என்பர் திருவரங்கத்துமாலையிலும். ஈசனின்தோன்றும் என்று இயைத்து, திரிபுரமெரிக்கவருகிற சிவபிரான்போல விளங்குகிற இந்திரசித்தை யென்று உரைப்பாருமுளர்; அவ்வுரைக்கு, இது, கீழ்க்காண்டச் செய்யுளின் அநுவாதமாம்.

விலங்கினமாகிய வானரசாதியில் தோன்றிய அநுமானை உயர்திணையாகக்கூறுதல் ஒக்குமோவெனின்.—உயர்திணை அஃறிணை என்ற பகுப்பிற்குக் காரணம் முறையே அறிவின் நிறைவுங் குறைவுமே யாதலால், அவ்வறிவிற் குறைவின்றி ஐம்பொறியறிவோடு மனத்தறிவையுங் கொண்டு மனிதர்போலவே தொழில்திறமமைந்த வாயுபுத்திரனை தெய்வக்குரங்கை உயர்திணையின்பாற்படுத்துதல் ஒக்குமென்க; மற்றும் வானரசாதியாகிய வாலி சுக்கிரீவன் முதலியோரையும். கரடியாகிய சாம்பவானையும், பறவையாகிய கருடஜடாயுசம்பாதிகளையும் உயர்திணையாக வழங்குதல் காண்க.

இக்கவி - இப்படலத்தின் முதற்கவிபோன்ற கலிவிருத்தம். (உச)

வேறு.

[இதுமுதல் மூன்று கவிகள் - ஒரு தொடர்: இந்திரசித்தைப்பார்த்த அநுமானது ஆலோசனை.]

உரு. வென்றேனிதன்முன் சிலவீரரை யென்னும் வெம்மை
யன்றே முடுகிக் கடிதெய்த வழைத்த தம்மா
வொன்றோ வினிவெல் லுதறோற்ப நடித்த துள்ள
தின்றோ சமையும் மிவனிந்திர சித்த னென்பான்.

(இ-ள்.) இதன்முன் சிலவீரரை வென்றேன் என்னும் வெம்மைஅன்றே- இதற்குமுன்னே சிலவீரர்களை நான்சயித்தேன் என்கிற கடிய செயலன்றோ, முடுகி கடிது எய்த அழைத்தது - மிக்கவிரைவாக வரும்படி (இவனை) இங்குக் கூப்பிட்டதாயிற்று; அம்மா - ஆச்சரியம்! இனி வெல்லுதல் தோற்பது

ஒன்றே அடுத்தது உள்ளது - இனி (இவனோடுபொருது இவனை) வெல்லுதல் (அன்றி இவனிடம்) தோற்றல் என்ற இரண்டிலொன்றே சமீபித்ததாயுள்ளது; இன்றே சமையும் - (அவ்விரண்டிலொன்று) இன்றைத்தினத்திலேயே நிகழ்ந்து முடியும்; இவன் இந்திரசித்து என்பான் - இதோ வருகிற இவன் இந்திரசித்தென்று சிறப்பித்துச் சொல்லப்படுபவன்; (எ - று.)

முடுகிக் கடிது - ஒருபொருட்பன்மொழி. கடிது - கடுமையென்னும் பண்பினடியாகப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்புமுற்றெச்ச வினையுரி. இதற்கு முன்பு யான் சில வீரர்களை வென்றேனென்பதனாலாகிய கொடியகோபமன்றோ முடுகி விரைவாகவரும்படி இவனைத் தூண்டிற்று என்று உரைப்பினும் அமையும். அம்மா னெம் பகுதி ஏற்றதையாகவுங் கொள்ளலாம். இந்திரசித்து - வடசொல் விகாரம்; இந்திரசித்து வென்பான் - குற்றியலுகரம் சிறுபான்மை உயிர்வரக்கெடாது நின்று விதியால் வகரவுடம்படுமெய் பெற்றது. என்பான் = எனப்படுவோன்; செயப்படுபொருள், வினைமுதல்போலக் கூறப்பட்டது; 'இந்திரசித்து' என்பது சிறப்புப்பெயர் என்றது. 'ஊரெனப்படுவது உறையூர்" என்றாற்போலச் சிறப்புப் பொருள் தந்து நின்றது. பிரசித்தியினால் இராவணகுமாரனை இந்திரசித்தின் பராக்கிரமத்தைக் கேள்வியுற்றுணர்ந்துள்ள அநுமான் தனது நுண்ணறிவால் இவன் அவனேயென்று உள்ளபடி ஊகித்தறிந்தனனென்க.

இது முதல் மூன்று கவிகள் - பெரும்பாலும் மூன்றாஞ்சீரொன்று மாங்கனிச்சீரும், மற்றை மூன்றும் மாச்சீர்களுமாகிய நெடிலடிநான்குகொண்ட கலிநிலைத்துறைகள்; காப்பியக்கலித்துறை யெனவும், விருத்தக்கலித்துறை யெனவும் படும். (உ௫)

உசு. கட்டேறு நறுங்கமழ் கண்ணியிக்காளையென்கைப்
பட்டாலதுவேயவ்விராவணன்பாடுமாகுங்
கெட்டோமெனவெண்ணியக்கேடருங்கற்பினாளை
விட்டேகுமதன்றியரக்கருங்வெம்மைதீர்வார்.

(இ - ள்.) கட்டு ஏறும் - (மலர்களைக்கொண்டு) கட்டுதலமைந்த, நறுங் கமழ் கண்ணி - மிகமணம்வீசுகிற மாலையை யணிந்த, இக் காளை - இந்த இளவீரன், என் கை பட்டால் - என்கையா லிறந்தால், அதுவே அ இராவணன் பாடும் ஆகும் - அச்செயலே அந்த இராவணனுக்கும் கேடுவிளைத்ததாம்; (ஆகவே அவ்விராவணன்), கெட்டோம் என எண்ணி - யாம் இனித் தவறாமல் அழிவோமென்று நினைத்து, அ கேடு அருங் கற்பினாளை விட்டு ஏகும் - கெடுதலில்லாத பதிவிரதாதருமத்தையுடையவளான அச்சீதையை (இராமபிரானிடங்) கொணர்ந்துவிட்டுச் செல்வான்; அது அன்றி - அதுவு மல்லாமல், அரக்கரும் வெம்மை தீர்வார் - இராக்கதரெல்லாருமே செருக்கடங்கித் தம்தம் கொடுமை யொழிவர்; (எ - று.)

எல்லாவரக்கர்களோடுங் கூடிச் சென்று வலிய எதிர்த்துப் பொருத இராவணனால் வெல்ல முடியாதவனான இந்திரனைச் சயித்திட்டவனாகிய அவனை நான் அழித்துவிட்டால், அவ்வொருசெயலினாலேயே இராவணன்

அச்சங்கொண்டு பிராட்டியை விட்டிடுவான்; மற்றையரக்கர்களும் வலியொடுங்கினராய் இனிக் கொடுஞ்செயல் செய்யார் என்று அநுமான் கருதினனென்க. ஒருவர்கைவசப்பட்டு அடங்குதற்கு அரிய கொழுத்த துள்ளுகாளை போன்ற இவன் என்கையிற் பட்டானானால் அதுவே அந்த இராவணன் மாண்டதற்கு நேரா மென்பதும் உட்கோள். 'கட்டெறு' என்பதற்கு - உறுதி மிக்க என்று பொருள்கொண்டு, அதனைக் காளைக்கு அடைமொழியாக்குதலு மொன்று. கள் தேறு எனப் பிரித்து, தேறு - தெளிந்த, கள் - தேனையுடைய கண்ணி என்பாருமுளர். நறுங்கமழ் - ஒருபொருட்பன்மொழி. கெட்டோம் என்ற இறந்தகாலம், தெளிவுபற்றியது; கெட்டோம் என்றது - இயற்கைத் தனித்தன்மைப்பன்மை; மற்றையரக்கரையும் உளப்படுத்தியதாகக் கொள்ளவும் இடமுண்டு. காளை - இளவெருது; இங்கு அது போன்ற வீரனுக்கு உவமையாகுபெயர்: நடைவலிமைகாம்பீரியங்களில் உவமம். "மனக்கவலை மாற்ற லரிது", "உறற்பால, தீண்டாவிடு தலரிது" என்றவிடங்களிற் போல, 'கேடருங்கற்பினாள்' என்றவிடத்து அருமை - இன்மைமேல் நின்றது. கற்பாவது - தன்கணவனைத் தெய்வமென்று கொண்டு அதற்கு ஏற்ப ஒழுகும் ஒழுக்கம்: பாதிவ்ரத்யம்; கொண்டானிற் சிறந்த தெய்வமில்லை யென்றும், குலமகட்கழகு கொழுநனைப் பேணுதலென்றும், அவனுக்கு இன்னவாறு நீ குற்றேவல்செய்து ஒழுகு என்றும் இளமை தொடங்கித் தாய்தந்தையராலும் பிறராலுங் கற்பிக்கப்பட்டு இவ்வொழுக்கம் உண்டாகி நிலைபெறுதலால், 'கற்பு' என்று காரணப்பெயர்பெற்றதென்பர். 'ஏகுமது' என ஒருசொல்லாக்கொண்டு தொழிற்பெயரின் தன்மையதாக்குதலு மொன்று. (உ௬)

உஎ. ஒன்றேயிதனான்வருமூதியமொண்மையானைக்
கொன்றேனெனினிந்திரனுந்துயர்கோளுநீங்கு
மின்றேகடிகெட்டதராக்கதரிலங்கையானே
வென்றேனவிராவணன்றன்னையும்வேரொடென்றான்.

(இ - ள்.) இதனான் வரும் ஊதியம் ஒன்றோ - இவ்விந்திரசித்தைக்கொல்லும் இச்செயலால் வரும் இலாபம் ஒன்றுதானோ? [இல்லை: பல என்றபடி]; (அவை யாவையோவெனின்) — ஒண்மையானைக் கொன்றேன்எனின் - ஒளியுள்ளவனான இவ்விந்திரசித்தைக் கொன்றேனானால், இந்திரனும் துயர்கோளும் நீங்கும் - (முன்பு இவனால் வென்று சிறைப்பட்டவனான) இந்திரனும் துன்பங்கொண்டிருத்தலை யொழிவான்; (மற்றும்) இராக்கதர் இலங்கை இன்றே கடி கெட்டது - இராக்கதர்களுடைய (இராசதானியான) இவ்விலங்காபுரி இப்பொழுதே காவலொழிந்ததாம்; யானே அ இராவணன் தன்னையும் வேரொடு வென்றேன் - நானே அந்த இராவணனையும் வேரோடு வென்றவனாவேன், என்றான் - என்று எண்ணினன், (அநுமான்); (எ - று.)

கோள்-கொள் என்ற முதனிலைதிரிந்த தொழிற்பெயர். ஒண்மை=ஒளி, திருக்குறளில், "ஒளி யொருவற்குள்ள வெறுக்கை" என்றவிடத்துப் பரிமேலழகர் 'ஒளி - தான் உளனாய காலத்து மிக்குத்தோன்றுதலுடைமை; "ஒளிநிறு ஞேங்குபுகழ்செய்யான்" என்றார் பிறரும்' என்றது, இங்குக் கொள்ளத்

தக்கது. ஒண்மையான் - பிறராற் செயற்கு அரியன செய்வோமென்று கருதும் ஊக்கமிகுதியை யுடையா னென்றபடி. இன்று - இடைச்சொல். கடி - உரிச்சொல். அவ்விராவணனெனபது. 'அவிராவணன்' எனத் தொக்கது; கீழ்ச்செய்யுளிலும் இது காண்க. வேரொடு - வம்சத்தோட னென்றபடி; இலக்கணை. 'இன்றே குடிகெட்ட தாக்கரிலங்கைமூதூர்' எனவும் பாட முண்டு.

[போர்தொடங்கிய அரக்கர்களை அநுமான் எதிர்த்தல்.]

உஅ. அக்காலையரக்கருமானையுந் தேருமாவு
மூக்காலுலகம்மொருமூன்றையும் வென்றுமுற்றிப்
புக்கானின்முன்புகுதுயர்பூசலைப்பெருக்கும்வேலை
மிக்கானும்வெகுண்டோர்மராமரங்கொண்டுமிக்கான்.

(இ - ள்.) அ காலை - அப்பொழுது, அரக்கரும் - இராக்கதர்களும், ஆனையும் தேரும் மாவும் - (அவர்களுடைய) யானைகளும் தேர்களும் குதிரைகளும், உலகம் ஒரு மூன்றையும் மூக்கால் வென்று முற்றி புக்கானின் முன் புக்கு - மூவகையுலகங்களையும் (ஒருமுறைக்கு மூன்று முறையாக (மிக்க இளமையிலேயே) சயித்துப் பின்பு பருவம் நிரம்பினவனான அவ்விந்திரசித்துக்கு முன்னே வந்து, உயர் பூசல் பெருக்கும் வேலை - மிக்கபோராரவாரத்தை அதிகமாக விளைக்கும்போது,—மிக்கானும் - பெரியோனான அநுமானும், வெகுண்டு - கோபித்து ஓர் மராமரம் கொண்டு - ஒருஸாலவிருக்ஷத்தைப் பெயர்த்துக் கையிற்கொண்டு, மிக்கான் - போர்த்தொழில் மிக்கவனானான்; (எ - று.)

அரக்கரென்றது - யானைதேர்குதிரைகளின்மே லேறிய வீரர்களையும், காலாள் வீரர்களையும் குறிக்கும். முற்றுதல் - பருவம் முதிர்தல்; வன்மைமிகுத லென்றும், வளைத்து வருத லென்றும் பொருள்படும். முன் - இடமுன். (கீழ் உரு - ஆஞ்செய்யுளில் 'இதன் முன்'என்றவிடத்துக் காலமுன்.) பூசல் - போர், பேரொலி. மிக்கான் - பல [illegible] ரமங்களினாலும் ஸ்ரீராமபக்தியாலும் மிக்கவன்; "செயற்கரியசெய்வார் பெரியர்" என்றபடி பிறரார் செய்தற்கு அருமையான பலதொழில்களைச் செய்து பெருமையுற்றவன். மராமரம் - ஆச்சாமரம். ஈற்றிலுள்ள 'மிக்கான்' என்பதற்கு - கோபாவேசத்தோடு உடல்பூரித்தான் [அதாவது - பெருவடிவங்கொண்டான்] என்று உரைப்பினும் அமையும். (உஅ)

[இந்திரசித்துடன் சென்ற சதுரங்கசேனை அநுமானால் அழிக்கப்படுதலை இதுமுதல் நான்குகவிகளிற் கூறுகிறார்.]

உகூ. உதைப்புண் டனயா னையுருண்டன யானை யொன்றோ
மிதிப்புண் டனயா னைவிழுந்தன யானை மேன்மேற்
புதைப்புண் டனயா னைபுரண்டன யானை போரால்
வதைப்புண் டனயா னைமறிந்தன யானை மண்மேல்.

(இ - ள்.) (அரக்கர்சேனையில்), யானை - சிலயானைகள், உதைப்புண்டன - (அநுமானால்) உதைக்கப்பட்டன; யானை - மற்றுஞ் சில யானைகள்,

உருண்டன -(அநுமானாற் கைகால்கள் கொண்டு மோதப்பட்டுக் கீழ்விழுந்து) உருளலாயின; ஒன்றோ - இதுமாத்திரமோ? யானை - வேறு சில யானைகள், மிதிப்புண்டன - (அநுமானால்) மிதிக்கப்பட்டன; யானை - பிறவுஞ் சில யானைகள், மேல் மேல் விழுந்தன - (அநுமானால் தள்ளப்பட்டு) ஒன்றன்மே லொன்றாக விழுந்திட்டன; யானை—, புதைப்புண்டன - (அநுமானால் தாக்கப்பட்டுத் தரையிற்) புதைபட்டன; யானை—, புரண்டன - முன்பின்னாகவும் மேல் கீழாகவும் நிலைமாறின; யானை—, போரால் வதைப்புண்டன - (அநுமான் செய்த பலவகை) யுத்தத்தாற் கொலையடைந்தன; யானை—, மண்மேல் மறிந்தன - அந்த யுத்தபூமியிற் சாய்ந்திட்டன; (எ - று.)

திருக்குறளில், "அறனென்றோ ஆன்றவொழுக்கு," "பொய்படுமொன்றோ புனைபூணும்" என்ற விடங்களிற் பரிமேலழகர் 'ஒன்றோ வென்பது-எண்ணிடைச்சொல்' என்றது, இங்குங் கொள்ளத்தக்கது. 'உதையுண்டன,' 'மிதியுண்டன,' 'புதையுண்டன,' 'வதையுண்டன'எனவும் பாடம் காணப்படுகிறது. (உக)

வேறு.

௫0. முடிந்த தேர்க்குல முறிந்தன தேர்க்குல முரணிற்
றிடிந்த தேர்க்குல மிற்றன தேர்க்குல மச்சிற்
றொடிந்த தேர்க்குல முக்கன தேர்க்குல நெக்குப்
படிந்த தேர்க்குலம் பறிந்தன தேர்க்குலம் படியில்.

(இ - ள்.) (அநுமானால் அழிக்கப்பட்டு), தேர் குலம் - சிலதேர்க்கூட்டங்கள், முடிந்த - முற்றுமழிந்தன; தேர்க்குலம்—, முறிந்தன - (சிற்சில பகுதிகள்) முறிபட்டன; தேர்க் குலம்—, முரண் இற்று இடிந்த - தம் வலிமையொழிந்து இடிபட்டன [சிதைந்தன என்றபடி]; தேர்க்குலம்—, இற்றன - கூட்டுவாய்கள் நெக்குவிட்டன; தேர்க்குலம்—, அச்சு இற்று ஒடிந்த - அச்சுமுறிந்து ஒடியப்பற்றன; தேர்க்குலம்—, உக்கன - பொடியாய் உதிர்ந்தன; தேர்க்குலம்—, நெக்கு படிந்த - சிதைந்து கீழ்விழுந்தன; தேர்க்குலம்—, படியில் பறிந்தன - தரையிற் சாய்ந்தன; (எ - று.)

அச்சு - சக்கரங்கோக்கும் மரம்: அக்ஷம் என்ற வடசொல்லின் சிதைவு.

இதுமுதல் இப்படலம் முடியுமளவும் முப்பத்துநான்கு கவிகள் - பெரும்பாலும் மூச்சீரும் ஐந்தாஞ்சீரும் மாச்சீர்களும், மற்றை மூன்றும் விளச்சீர்களுமாகிய நெடிலடி நான்குகொண்ட கலிநிலைத்துறைகள். (௫0)

௫௧. சிரனெரிந்தவுங்கண்மணிசிதைந்தவுஞ்செறிதா
டரனெரிந்தவுமுதுகிறச்சாய்ந்தவுந்தார்ப்பூ
ணுரனெரிந்தவுமுதிரங்களுமிழ்ந்தவுமொண்பொற்
குரனெரிந்தவுங்கொடுங்கழுத்திழந்தவுங்குதிரை.

(இ - ள்.) (அநுமானால் அழிக்கப்பட்டு), குதிரை - குதிரைகள்,—சிரன் நெரிந்தவும் - தலைநொருங்கியவையும், கண் மணி சிதைந்தவும் - கண்களின் கருவிழிகள் சிதையப்பெற்றவையும், செறி தாள் தரன் நெரிந்தவும்-வலிமைபொ

மிக்க கால்களின் தொகுதி நொருக்கப்பெற்றவையும், முதுகு இற சாய்ந்தவும் - முதுகு ஒடியக் கீழே சாய்ந்தவையும், தார் பூண் உரன் நெரிந்தவும் - கிண்கிணிமாலையாகிய ஆபரணத்தை யணிந்த மார்பு நொருக்கப்பெற்றவையும, உதிரங்கள் உமிழ்ந்தவும் - இரத்தப்பெருக்குக்களைக் கக்கியவையும் ஒள் பொன் குரன் நெரிந்தவும் - பிரகாசமான பொற்சதங்கையை யணிந்த காற்குளம்புகள் நொருக்கப் பெற்றவையும், கொடுங் கழுத்து இழந்தவும் - வளைவான கழுத்தை யிழந்தவையு மாயின; (எ - று.)

'செறிதாள் தரன்நெரிந்த' என்பதற்கு - நெருங்கியகால்களின் வலிமை ஒழியப்பெற்றனவென்று உரைப்பாருமுளர். கொடுமை வளைவாதலை 'கொடுங்கை,' 'கொடுங்கோல்.' 'கொடுமரம்' என்பவற்றிலுங் காண்க. பொன் - அதனாலாகிய ஆபரணத்துக்குக் கருவியாகுபெயர். 'தார்பூணுரன்' என்ற பாடத்துக்கு, தாரைப்பூண்ட உரமென்க. (௯க)

௯உ பிடியுண்டார்களும்பிளத்தலுண்டார்களும்பெருந்தோ
ளொடியுண்டார்களுந்தலையுடைந்தார்களுமுருவக்
கடியுண்டார்களுங்கழுத்திழந்தார்களுங்கரத்தா
லடியுண்டார்களுமச்சமுண்டார்களுமரக்கர்.

(இ - ள்.) அரக்கர் - இராக்கதர்கள்,— பிடியுண்டார்களும் - (அநுமானாற்) பிடிக்கப்பட்டவர்களும், பிளத்தலுண்டார்களும் - உடல் பிளக்கப்பட்டவர்களும், பெருந் தோள் ஒடியுண்டார்களும் - பெரியதோள்கள் ஒடிபட்டவர்களும், தலை உடைந்தார்களும் - தலையுடைந்தவர்களும், உருவ கடியுண்டார்களும் - (பற்கள்) ஊடுருவும்படி முழுதுங்கடிக்கப்பட்டவர்களும், கழுத்து இழந்தார்களும் - கழுத்தை யிழந்தவர்களும், கரத்தால் அடியுண்டார்களும் - கைகளால் அடிக்கப்பட்டவர்களும், அச்சமுண்டார்களும் - பயங்கொண்டவர்களு மானார்கள்; (எ - று.)

'பிடியுண்டார்கள்' முதலியவற்றில், கள் - விகுதிமேல்விகுதி. பிடியுண்டார்கள், ஒடியுண்டார்கள், கடியுண்டார்கள், அடியுண்டார்கள் என்றவற்றில், உண் - செயப்பாட்டுவினைப்பொருளுணர்த்தும் இடைநிலை; இதனை விகுதியென்றலு முண்டு. 'உருவங்கடியுண்டார்களும்' என்பதும் பாடம்.

நால்வகைப் படைகளிலுள்ள யானைமுதலிய வாகனங்களும், அவற்றிலேறியவரும் காலாள்களுமாகிய அரக்கர்களும் அநுமானாற் பலவாறு சின்னபின்னப்பட்டுச் சிதைந்தழிந்தமை நான்குகவிகளில் முறையே விவரிக்கப்பட்டது. (௯உ)

[அரக்கர்கள் பிரயோகித்த ஆயுதங்கள் அநுமானுடம்பைச் சிறிதும் ஊறுபடுத்தமாட்டாமை.]

௯௩. வட்டவெஞ்சிலையோட்டியவாளியும்வயவர்
விட்டவிட்டவெம்படைகளும்வீரன்மேல்வீழ்ந்த
சுட்டவல்லிரும்படைகலைச்சுடுகலாதனபோற்
பட்டபட்டனதிசையொடுபொறியொடும்பரந்த,

(இ - ள்.) வயவர் - இராக்கதவீரர்கள், வட்டம் வெம் சிலை ஓட்டிய - நன்குவளைக்கப்பட்ட கொடியவிற்களினின்று செலுத்திய, வாளியும் - அம்புகளும், விட்ட விட்ட வெம் படைகளும் - மற்றும் மிகுதியாகப் பிரயோகித்த கொடிய ஆயுதங்களும், வீரன்மேல் வீழ்ந்த - மகாவீரனான அநுமான்மேல் விழுந்தவையாய், சுட்ட வல் இரும்பு அடைகலை சுடுகலாதன போல் - நெருப்பிற்காய்ந்த வலிய இரும்புகள் பட்டடையைச் சுடமாட்டாதனபோல (அநுமானுடம்பைச் சிறிதும் ஊறுபடுத்தமாட்டாதவையாய்), பட்ட பட்டன திசையொடும் பொறியொடும் பரந்த - (அவ்வுடம்பிற்) பட்டபட்ட விடங்களிலெல்லாம் நெருப்புப்பொறிகள் எழ அவற்றுடன் தாமும் தெறித்துச்சிதறிப் போயின; (எ - று.)

உவமையணி. அடைகல் - கம்மப்பட்டடை; அதாவது-கம்மாளர் பொன் முதலியவற்றை வைத்து அடிப்பதற்கும் வெட்டுதற்கும் ஆதாரமாயிருப்பதொரு கருவி. தீயிலிட்டுக் காய்ச்சப்பட்ட இரும்பைப் பட்டடையின்மேல் வைக்கும்போது அக்காய்ந்த இரும்பு அப்பட்டடையைச் சுடாதாகப் பின்பு அவ்விரும்பு அடிபடுதற்கும் வெட்டுப்படுதற்கும் அப்பட்டடை இடமாதல் போலவே, வடிக்கப்பட்ட கூரியஅம்புகள் அநுமானுடம்பிற் பட்டும் அதனை ஒன்றுஞ் சிதைவுபடுத்தாவாக அவ்வுடம்பு அவ்வாயுதங்கள் பொடிபடுதற்கு இடமாய் நின்றது என உவமையின் நயங் காண்க. இரும்பினாலாகிய உளி கொண்டு வெட்டுகையிற் கல்லினின்று தீப்பொறி எழுமாறு போல, எஃகினாலாகிய பலவகை ஆயுதங்கள் மிக வலிய அனுமானுடம்பிற் பட்டவளவிலே அனற்பொறி யெழுந்தன.

வட்டம் - விருத்தம் என்ற வடசொல்லின் சிதைவு. 'விட்ட விட்ட' என்ற அடுக்கு, மிகுதி பற்றியது. 'பட்ட பட்டன' என்ற அடுக்கு, தொழிற்பொருளது. 'திசையொடும்' என்ற விடத்து, மூன்றனுருபுக்கு - திசையில் என ஏழனுருபின் பொருள் கொள்க; உருபு மயக்கம். தேவர்கள் முதலியோரால் நினைத்தற்கும் இயலாத வலிமையையுடைய இராவணனாற் பரிபாலிக்கப்படுகிற இலங்கையை யழித்தல் முதலான செயற்கரிய செயல்களைச் செய்து தன் வீரத்தை நிலைநிறுத்தியவ னென்பார், 'வீரன்' என்றார்; தான் ஊறுபடாமலே பல அரக்கர்களைக் கொன்றிட்ட ஆற்றலுடையானென்க.　　　(ரு௩)

[இந்திரசித்து அநுமான்மேல் முதலில் எய்த அம்புகள் பயனற்றுப்படுதல்.]

ருச. சிகையெழுஞ்சுடர்வாளிகளிந்திரசித்து
மிகையெழுஞ்சினத்தநுமன்மேல்விட்டனவெந்து
புகையெழுந்தனவொிந்தனகரிந்தனபோக
நகையெழுந்தனவழிந்தனவானுளோர்நாட்டம்.

(இ - ள்.) இந்திரசித்து—, மிகை எழும் சினத்து அநுமன்மேல் - மிகுதியாக மேல் மேல் மூண்டெழுகிற கோபாக்கினியையுடைய அநுமான்மேலே, விட்டன - (தூரத்திலிருந்து) தொடுத்து விட்டவையாகிய, சிகை எழும்

சுடர் வாளிகள் - சுவாலைகளுண்டாகி விளங்கும் ஒளியையுடைய அம்புகள், (அநுமானுடம்பிற் பட்டவளவிலே), வெந்து புகை எழுந்தன - வெந்து புகை கிளம்பப் பெற்றவையும். எரிந்தன - எரிபட்டொழிந்தவையும், கரிந்தன - தீந்துபோனவையுமாய், போக - அவனுடம்பைச் சிறிதும் ஊறுபடுத்தா தொழியவே, நகை எழுந்தன - (அது கண்ட அவ்விந்திரசித்துக்குக் கோபத்தாற்) சிரிப்பு உண்டாயின: (அக்கோபச் சிரிப்பைக் கண்டமாத்திரத்திலே), வான் உளோர் நாட்டம் அழிந்தன - (இனி என்னாகுமோ வென்று அஞ்சி மனங்கலங்கியதனால்) தேவர்களுடைய கண்கள் கலக்க மடைந்தன; (எ - று.)

இங்குக்கூறிய சிரிப்பு, வீரத்து எழுந்த வெகுளிநகை; வீராட்டஹாஸ மெனப்படும். கண்கலங்குதல் - மனத்துயரத்தின் காரியம். வானுளோர் - தேவலோகத்திலுள்ளவர்; ஆகாயமார்க்கத்தில் வந்து நின்று போர் காண்பவர். வாள்-கூர்மை அல்லது ஒளி: அதனை யுடையது வாளியெனக் காரணக் குறி: இ - பெயர்விகுதி. புகை - சிறிய துவாரத்திலுஞ் சென்று புகுவது என்று காரணப்பொருள்படும்: ஐ - கருத்தாப்பொருள் விகுதி: ("நீரினும் நுண்ணிது நெய்யென்பர் நெய்யினும் யாருமறிவர் புகைநுட்பம் - தேரின், நிரப்பிடும்பையாளன் புகுமே புகையும். புகற்கரிய பூழை நுழைந்து" என்றது நோக்கத் தக்கது.) நாட்டம் - நாடுதற் கருவி: நாடுதல் - பார்த்தல். சிகை யெழுஞ் சுடர் வாளிகள் - நெருப்பைக் கக்குகின்ற ஒள்ளிய அம்புகள் எனினுமாம். இந்திரசித்தின் அம்புகள் அனுமானுடம்பிற் பட்டவளவிலே வெந்து புகை யெழுந்தனவும் எரிந்தனவும் கரிந்தனவுமாய்ப் போதற்குக் காரணம் அவ்வநுமான் கொண்ட பெருங்கோபாக்கினியினால் அவனுடம்பில் மிக்கதாபமென்பது பட, 'மிகை யெழுஞ் சினத்து அநுமன்' என்றார். இங்கு விசேஷணம் ஒரு கருத்தை யுட்கொண்டதனால். கருத்துடையடைமொழியணி. (௩௪)

[இந்திரசித்து கோபத்தோடு அநுமானை நெருங்குதல்.]

௩௫. தேரும்யானையும்புரவியுமரக்கருஞ்சிந்திப்
பாரின்வீழ்தலுந்தானொருதனிநின்றபணைத்தோள்
வீரவீரனுமுறுவலும்வெகுளியும்வீங்க
வாரும்வாருமென்றழைக்கின்றவநுமன்மேல்வந்தான்.

(இ - ள்.) தேரும் - (தனது) தேர்களும். யானையும் - யானைகளும், புரவியும் - குதிரைகளும், அரக்கரும் - இராக்கதவீரர்களும், (ஆகச் சதுரங்க சேனைகள்யாவும்), சிந்தி பாரின் வீழ்தலும் - (அநுமானால் அழிக்கப்பட்டுச்) சிதறித் தரையில் விழுந்திடவே, தான் ஒரு தனி நின்ற - (வேறு ஒருதுணையுமில்லாமல்) தான் ஒருவன்மாத்திரமே தன்னந்தனியனாய் எஞ்சிநின்ற, பணை தோள் வீரவீரனும் - பருத்த தோள்களையுடைய மகாவீரனான இந்திரசித்தும்,—முறுவலும் வெகுளியும் வீங்க - சிரிப்பும் (அதற்குக்காரணமான) கோபமும் அதிகப்பட,—வாரும் வாரும் என்று அழைக்கின்ற அநுமன்மேல்

வந்தான் - 'வாருங்கள் வாருங்கள்' என்று (அரக்கரையெல்லாம் வலியப் போர்க்கு) அழைக்கிற அநுமான்மேல் வந்து நெருங்கினன் [அநுமானைக் குறித்து வந்து சமீபித்தான் என்றபடி]; (எ - று.)

'தேரும் யானையும் புரவியும் அரக்கரும்' என்ற முறைமை, நால்வகைப் படையினது சிறப்பின் தகுதி பற்றியது; வடநூலாரும் 'ரதகஜதுரகபதாதி' என்பர். யானையை முதலாகவைத்து எண்ணுதல், தமிழ்நூலார் கொள்கை. வீரவீரன் - வீரர்களிற் சிறந்தவீரன். அடுக்கு - உவகையும் விரைவும் பற்றியது. இந்திரசித்து ஒருவனையே அநுமான் இகழ்ச்சிப்பன்மையாக 'வாரும் வாரும்' என்று அழைத்தன னெனவுங் கொள்ளலாம்; தொல்காப்பியத்தில் "ஒருவரைக்கூறும் பன்மைக்கிளவியும், ஒன்றனைக்கூறும் பன்மைக்கிளவியும், ஒன்றனைக்கூறும் பன்மைக்கிளவியும், வழக்கினாகிய வுயர்சொற்கிளவி, இலக்கண மருங்கிற் சொல்லாறல்ல" என்றவிடத்து நச்சினார்க்கினியர், 'தாம்வந்தார் தொண்டனார்' என்பது, உயர்சொல் குறிப்புநிலையின் இழிபு விளக்கிற்று' என்றது. இங்கு நோக்கத்தக்கது. இங்ஙனம் 'வாரும் வாரும்' என்று அழைத்தல், அநுமானது யுத்தோற்சாகத்தைக் காட்டும்; கீழ்ப் பல அரக்கரைக்கொன்றும் அநுமான் போர்த்தினவு தீர்ந்திலனென்க. வீங்க வந்தான் என இயையும் முறவலும் வெகுளியும் வீங்க அழைக்கின்ற என்று அநுமானுக்கு இயைத்தலு மொன்று. (௫௮)

[இந்திரசித்து தனது வில்லின் நாணியைக் கைவிரலால் தெறித்துப் பேரொலி யெழுப்புதல்.]

௫௯. புரந்தரன்றலைபொதிரெறிந்திடப்புயல்வானிற்
பரந்தபல்லுருமேற்றினம்வெறித்துயிர்பதைப்ப
நிரந்தரந்தலைநெடுநிலஞ்சுமந்தபேருரகன்
சிரந்துளங்கிடவரக்கன்வெஞ்சிலைநாண்டெறித்தான்.

(இ - ள்.) புரந்தரன் தலை - இந்திரனுடைய சிரசு, பொதிர் எறிந்திட - அஞ்சி அதிர்ந்து மிகநடுங்கவும்,—புயல் வானில் பரந்த - நீர்கொண்ட காள மேகங்களில் மிகுதியாய் எழுகிற, பல் உரும் ஏறு இனம் - பலபேரிடிகளின் கூட்டம், வெறித்து உயிர் பதைப்ப - அச்சத்தால் மயக்கங்கொண்டு உயிர்நடுங்கவும்,—நிரந்தரம் - இடைவிடாமல் [எப்போதும்], தலை - தனது தலைகளால், நெடு நிலம் சுமந்த - பெரிய உலகத்தை(க் கீழேயிருந்து) தாங்குகிற, பேர் உரகன் - சர்ப்பராஜனான பெரிய ஆதிசேஷனது, சிரம் - ஆயிரந்தலைகளும், துளங்கிட - அச்சத்தால் நடுங்கவும்,—அரக்கன் - இராக்கதனான இந்திர சித்து, வெம் சிலை நாண் தெறித்தான் - தனது கொடியவில்லின் நாணியைக் கைவிரலால் தெறித்து ஒலியெழுப்பினன்; (எ - று.)

அவ்வின்னொலியின்மிகுதியாலாகிய அதிர்ச்சியையும அச்சத்தையும் வர்ணனை வகையாற் கூறினார்; உயர்வுநவிற்சியணி. புரந்தரன் என்ற வட சொல் - பகைவர்களுடைய நகரங்களையும் உடலையும் அழிப்பவ னென்று

காரணப்பொருள்பெறும்; புரம் - பட்டணமும், உடம்பும். வான் - ஆகாயம்; அதிற்சஞ்சரிக்கிற மேகத்துக்கு இடவாகுபெயர். ஏறு-ஆண்பாற்பெயர்; பெரியதையும் சிறந்ததையும் 'ஏறு' என்றல், மரபு. 'உருமேற்றினம் வெறித்து உயிர்பதைப்ப' என்றது, ஒருவகை மரபுவழுவமைதி. உரகன் - (கால்களில்லாமையால்) மார்பினால் ஊர்ந்து செல்பவன்; உரஸ் - மார்பு. சிலையை நாண் தெறித்தான் - சிலைநாணைத் தெறித்தானென உருபு பிரித்துக் கூட்டுக. சிலையென்பது சிலையினது என்று பொருள்பட்டு உருபுமயக்கமாமெனினும் அமையும். வெறித்து - திடுக்கிட்டுத் திகைத்து எனினுமாம்.

"விரிசிறைநாகம் விடருளதேனும், உருமின்கடுஞ்சினஞ் சேணின்று முட்கும்" என்றபடி, வானத்து எழுகிற மேகத்தின் இடிமுழக்கத்தைச் செவியுற்றவளவிலே வளைகளிலுள்ள நாகங்கள் அஞ்சியழிதல் இயல்பாதலால், அவ்விடியும் அஞ்சும்படி மிக்கதான இந்திரசித்தின் வின்னாணொலிமுழக்கத்தைக்கேட்டமாத்திரத்திலே அனைத்துலகுக்குங் கீழிருந்து உலகத்தைத்தாங்குகிற சர்ப்பராசனும் நடுங்குவனென்க. இந்திரசித்தின் வின்னாணொலி கேட்டவளவிலே இந்திரன் இன்னும் எனக்கு என்னாகுமோ வென்று அஞ்சி நடுங்குவன். மேகவாகனனான இந்திரனுக்கு அச்சந்தரும் நாணொலிக்கு அவ்விந்திரனது கொடியாகிய இடியும் அஞ்சுமென்றல் தகுதியுடைத்து. (௩௬)

[அதற்குமேலாக அநுமான் தோள்தட்டி ஒலியெழுப்புதல்.]

௩௭. ஆண்டநாயகன் றூதனு மயனுடையண்டங்
கீண்டதாமெனக் கிரியுகநெடுநிலங்கிழிய
நீண்டமாதிரம் வெடிபடவவனெடுஞ்சிலையிற்
பூண்டநாணிறத் தன்னெழிற்றோள்களைப் புடைத்தான்.

(இ - ள்.) ஆண்ட நாயகன் தூதனும் - (எல்லாவுயிர்களையும்) அடிமைகொண்டருளுகிற தலைவனான இராமபிரானது தூதனாகிய அநுமானும்,— (அவ்வொலிக்கு எதிராக).—அயனுடை அண்டம் கீண்டது ஆம் என - இந்தப்பிரமாண்டம் முழுவதும் பிளந்ததாகுமென்று சொல்லும்படியாகவும், கிரி உக - மலைகள் பொடிபொடியாய்ச் சிதறும்படியாகவும், நெடு நிலம் கிழிய - நீண்ட பூமி பிளக்கவும், நீண்ட மாதிரம் வெடிபட - நெடியதிசைகள் பிளவு படவும், அவன் நெடுஞ் சிலையில் பூண்ட நாண் இற - அவ்விந்திரசித்தினது நீண்ட வில்லிற் பூட்டிய நாணும் அறும்படியும், தன் எழில் தோள்களை புடைத்தான் - தனது அழகிய தோள்களைத் தட்டினான்; (எ - று.)

அண்டங்கீண்டதாதல் முதலியன, அத்தோட்புடைப்பொலி மிகுதி சென்று தாக்குதலாலாகும் அதிர்ச்சியினாலென்க. ஆண்ட நாயகன் - எம்பெருமான். அயனுடை அண்டம் - பிரமனுடைய அண்டம்; பிரமனுடனே படைக்கப்பட்ட அண்டம் என்றபடி. எழில் - வளர்ச்சியுமாம்; 'இல்' விகுதி பெற்ற தொழிற்பெயர்: எழுச்சி யென்க. (௩௭)

[இந்திரசித்து வீரவாதங் கூறுதல்.]

௩௮. நல்லைநல்லையிஞ் ஞாலத்துநின்னொக்கநல்லா
ரில்லையில்லையா லெறுழ்வலிக்கியாரொடுமிகல
வல்லைவல்லையின் றுகுநீபடைத்துளவாழ்நாட்
கெல்லையெல்லையென் றிந்திரசித்துவுமிசைத்தான்.

(இ - ள்.) நல்லை நல்லை - (நீ) மிகவும்சமர்த்தன்: இ ஞாலத்துள் நின் ஒக்க நல்லார் இல்லை இல்லை - இந்நிலவுலகத்தில் உனக்குச் சமானமாகச் சமர்த்தர்கள் இல்லை இல்லை; எறுழ் வலிக்கு - மிக்க வலிமைத்திறத்தில், யாரொடும் இகல வல்லை வல்லை - (நீ) எல்லாருடனும் மாறுபடுதற்கு மிகவும் வல்லவன்; (ஆயினும்), இன்று நீ படைத்துள வாழ்நாட்கு எல்லை எல்லை ஆகும் - இன்றைத்தினமானது நீ பெற்றிருக்கிற ஆயுளுக்கு முடிவெல்லையாகும் முடிவெல்லையாகும், என்று இந்திரசித்துவும் இசைத்தான் - என்று இந்திரசித்து (அநுமானைநோக்கி) வீரவாதமுங் கூறினன்; (எ - று.)—ஆல் - அசை.

வேறுலகங்களில் உன்னைப்போலச் சமர்த்தர்களும் உன்னைக்காட்டிலுஞ் சமர்த்தர்களும் உளர் என்பது தொனிக்க, 'இஞ்ஞாலத்துள் நின்னொக்க நல்லார் இல்லையில்லை' என்றான்; யான் மூவுலகத்துவீரனைவரையும் திறங்கண்டு வென்றுள்ளேன் என்பது, குறிப்பு. நல்லைநல்லை. வல்லைவல்லை என்ற அடுக்குக்கள்-மிகுதிப்பொருளன; இல்லையில்லை. எல்லையெல்லை என்ற அடுக்குக்கள் - தேற்றம்; எல்லாம் இகழ்ச்சிக்குறிப்பின்பயத்தன. "எறுழ் வலியாகும்" என்ற தொல்காப்பியத்து உரிச்சொல்லியற் சூத்திரத்தால், எறுழ் என்பது - வலிமையுணர்த்துவதோ ருரிச்சொல்லென அறிக. எறுழ் வலி - ஒருபொருட்பன்மொழி. பிறரோடு வைத்து நோக்குமிடத்து நீ ஒப்புயர்வற்ற வீரனென விளங்குவையேயாயினும், நான் உன்னை இன்றைக்குத் தவறாது கொன்றிடுவேனென்று வீரவாதங்கூறினனென்க. 'எறுழ்வலிக்கு யாரொடும்இகலவல்லைவல்லை' என்பதற்கு-பலபராக்கிரமங்களைக்கொண்டஎத்திறத்தாரோடும் விரைந்துபோர்செய்ய வல்லாய் நீ என்று உரைப்பினும் அமையும்.()

[அதற்குமேலாக அநுமான் வீரவாதஞ்செய்தல்.]

௩௯. நாளுக்கெல்லையுநிருதராயுலகத்தைநலியுங்
கோளுக்கெல்லையுங்கொடுந்தொழிற்கெல்லையுங்கொடியீர்
வாளுக்கெல்லையும்வந்தனவகைகொடுவந்தேன்
றோளுக்கெல்லையொன்றில்லையென்றநுமனுஞ்சொன்னான்.

(இ - ள்.) கொடியீர் - கொடியவர்களே! நாளுக்கு எல்லையும்-(உங்கள்) வாழ்நாளுக்கு முடிவும், நிருதர் ஆய் உலகத்தை நலியும் கோளுக்கு எல்லையும் - அரக்கர்களாய் உலகத்தை வருத்துகிற (உங்கள்) கொள்கைக்கு முடிவும், கொடுந் தொழிற்கு எல்லையும் - (உங்கள்) கொடியசெயலுக்கு முடிவும், வாளுக்கு எல்லையும் - உங்கள் ஆயுதங்கட்கு முடிவும், வந்தன - இப்பொ

ழுது வரலாயின; வகை கொடு வந்தேன் - அதற்குஉரிய திறமையைக் கொண்டே நான் இங்குவந்துள்ளேன்; தோளுக்கு எல்லை ஒன்று இல்லை - என் தோள்களின் வலிமைக்கு முடிவு சிறிதும் உண்டாகாது, என்று அநுமனும் சொன்னான் - என்று அநுமானும் வீரவாதங்கூறினான்; (எ - று.)

'உனதுவாழ்நாளுக்கு முடிவு இன்றைக்காகும்' என்று இந்திரசித்து அநுமானைநோக்கிக் கூறியதற்கு, அநுமான், 'உங்களனைவருடைய வாழ்நாள் முதலிய பலவற்றுக்கும் இப்பொழுது முடிவு ஆகுமாறு வந்துள்ளேன் யான்' என்று கூறினனென்க. 'கொடியீர்' என்ற பன்மை, இராவணன் முதலியோரை உளப்படுத்தியது. இந்திரசித்தொருவனைநோக்கியே இகழ்ச்சிக்குறிப்புத்தோன்றப் பன்மையாற் கூறியதாகக் கொள்ளினுமாம். கோள்-தீமையும், வலிமையுமாம். வகை - உபாயமுமாம். வாள் - இங்கு ஆயுதப்பொதுவாய் நின்றது; சிறப்புப்பெயர், பொதுப்பொருளின்மேலது. "உலகமென்பது உயர்ந்தோர் மாட்டே" என்பதுபற்றி 'உலகத்தை நலியும்' என்பதற்கு - உயர்ந்தவர்களை வருத்தும் என்று பொருள்கொள்ளுதலும் ஒன்று. தோள் - அதன்வலிமைக்கு ஆகுபெயர். (௩௯)

[இந்திரசித்து அநுமான்மேல் அம்புகளை எய்தல்.]

௪௰. இச்சிரத்தைத்தொலைப்பெனென் றிந்திரன்பகைஞன்
பச்சிரத்தம்வந்தொழுகிடவானவர்பதைப்ப
வச்சிரத்தினும்வலியனவயிரவான்கணைக
ளச்சிரத்தினுமார்பினுமழுத்தலுமநுமன்.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) (அதுகேட்டு), இந்திரன் பகைஞன் - இந்திரசித்தானவன், இ சிரத்தைத் தொலைப்பென் என்று -(இக்குரங்கினது) இந்த உறுதியான நம்பிக்கையை யழித்திடக்கடவேனென்று கருதி, அ சிரத்தினும் மார்பினும்- அந்த அநுமானுடைய தலையிலும் மார்பிலும், பசு இரத்தம் வந்து ஒழுகிட - புதிய இரத்தம் வெளிப்பட்டுப்பெருகும்படியாகவும், வானவர் பதைப்ப - (அதுகண்டு) தேவர்கள் துடிக்கும்படியாகவும், வச்சிரத்தினும்வலியனவயிரம் வான் கணைகள் - (இந்திரனது) வச்சிராயுதத்தைக்காட்டிலும் வலிமையுடையனவான கூர்மைகொண்ட பெரிய [சிறந்த] அம்புகளை, அழுத்தலும் - அழுந்த எய்தபோது,— அநுமன் - அநுமான், (எ - று.)—'நெடுஞ்சினங் கொண்டான் நிமிர்ந்தான்' என அடுத்தகவியோடு தொடர்ந்து முடியும்.

இந்திரன்பகைஞன் - இந்திரசத்ரு; இந்திரனைப் பகைத்து வென்றவனென்க. "கூர்பற்றியவென்குலிசத்தாற் கூறுபடுபுண்வடுத்தீர்க" என்றபடி, இந்திரன் தனதுவச்சிராயுதத்தினால் துயருறாதிருக்குமாறு அநுமானுக்கு வரமளித்துள்ளானாதலால், அவ்வநுமானுடம்பில் ஊறுபடுத்திய இந்திரசித்தின் அம்புகளை வச்சிரத்தினும் வலியன வென்றல் தகும்; அன்றியும், இந்திரனை வென்றவனது கணைகளை அவ்விந்திரனது வச்சிராயுதத்தினும் வலியனவென்னத் தட்டில்லை. இங்குப் பசுமை, புதுமையின்மேலது. 'பச்சிரத்

தம் வந்து ஒழுகிட' என்றதனால், இதுவரையில் ஒருபோதும் அநுமானது உடம்பு ஊறுபட்டு இரத்தஞ் சொரிந்ததில்லையென்பது விளங்கும். வான வர்பதைத்தல், அநுமான் அழிய இந்திரசித்து வென்றிடுவனோ வென்னும் அச்சத்தால். வான் - உரிச்சொல். (௪௦)

[யோகபலத்தால் அனுமான் பெருவடிவுகொள்ளுதல்.]

௪௧. குறிதுவானென்றுகுறைந்திலனெடுஞ்சினங்கொண்டான்
மறியும்வெண்டிரைமாகடலுலகெலாம்வழங்கிச்
சிறியதாய்சொன்னதிருமொழிசென்னியிற்சூடி
நெறியினின்றதன்னாயகன்புகழெனநிமிர்ந்தான்.

(இ - ள்.) நெடுஞ்சினம் கொண்டான் - மிக்க கோபங்கொண்டு,—வான் குறிது என்று குறைந்திலன் - ஆகாயம் உயர்வுபோதாது என்று தன்வடிவி னுயர்வு குறைகாதவனாய் [வானமுகட்டினும் மேலாக வளர்பவனாய் என்ற படி],—சிறிய தாய் சொன்ன திரு மொழி - தனதுசிறியதாயான கைகேயி சொன்ன திருவார்த்தையை, சென்னியில் சூடி - தனதுதலைமேற்கொண்டு [சிரஸா வகித்துக் கௌரவித்து], மறியும் வெள் திரை மா கடல் உலகு எலாம் வழங்கி - மடங்குகிற வெண்மையான அலைகளையுடைய பெரியகட லினாற் சூழப்பட்ட நிலவுலகமுழுவதையும் (அச்சிறியதாயின்மகனான பரத னுக்குக்) கொடுத்து, நெறியில் நின்ற - (மாத்ருவாக்கியபரிபாலன மாகிய) நல்லொழுக்கவழியிலே நிலைநின்ற, தன் நாயகன் - தனது தலைவனான இராம பிரானது, புகழ் என - கீர்த்தி (வானூறாக ஓங்கிவளர்தல்) போல, நிமிர்ந்தான் - உயர்ந்துவளர்ந்தான்; (எ - று.)—குறைந்திலன்நிமிர்ந்தான் என இயையும்.

காப்பியங்களிலே கதாநாயகனது சிறப்புத் தோன்ற அவனது சம்பந்த மான பொருள்களைச் சிற்சிலவிடங்களில் உபமானமாக அமைத்துக் கூறுதல் கவிமரபாதலால், அநுமானதுவடிவின் வளர்ச்சிக்கு இராமபிரானது புகழின் வளர்ச்சியை உவமைகூறினார். சீதாகலியாணத்தின்பிறகு தசரதசக்கரவர்த்தி இராமபிரானுக்குப் பட்டாபிஷேகஞ்செய்ய யத்தனிக்கையில் மந்தரைசூழ்ச் சியால் மனங்கலக்கப்பட்ட கைகேயி தன்கொழுநரான தசரதரை நோக்கி முன்பு அவர் தனக்குக் கொடுத்திருந்த இரண்டுவரங்கட்குப் பயனாகத் தன் மகனான பரதனுக்குப் பட்டங்கட்டவும் கௌசல்யைமகனான இராமனைப் பதினான்குவருஷம் வனஞ்செலுத்தவும் வேண்டுமென்று சொல்லி வற்புறு த்த, அதுகேட்டு வருந்தின தசரதர் சத்தியவாதியாதலால் முன்பு அவட்கு வரங்கொடுத்திருந்த சொல்லைத் தவறமாட்டாமலும், இராமன்பக்கல் தமக்கு உள்ள மிக்க அன்பினால் அவ்வரத்தை நிறைவேற்றுமாறு அவனை வனத்துக் குச்செல்லச்சொல்லவும் மாட்டாமலும் கலங்கி வாய்திறவாதிருக்கிற சமயத் தில், கைகேயி இராமனை வரவழைத்து 'பிள்ளாய்! உங்கள்தந்தை பரதனுக்கு நாடுகொடுத்துப் பதினான்குவருடம் உன்னைக் காடேறப் போகச் சொல்லு கிறார்' என்றுசொல்ல, அச்சொல்லைத் தலைமேற்கொண்டு அந்த மாற்றாந்தா யின்வார்த்தையையும், அவட்குத் தனதுதந்தை கொடுத்திருந்த வரங்களையும்

தவருது நிறைவேற்றி மாத்ருபித்ரு வாக்கிய பரிபாலனஞ் செய்தல்நிமித்தம் இராமபிரான் இலக்குமணனேடும் சீதையோடும் அயோத்தியைவிட்டு நீங்கி நடந்து வனவாசஞ்சென்றன னென்ற வரலாறு. கீழ் அயோத்தியாகாண்டத்தில் விரித்துரைக்கப்பட்டது.

இங்கு 'எல்லாம்' என்பது - ஒருபொருளின் பலவிடங் குறித்து நின்றது; இதனை 'எஞ்சாமைப்பொருளதோ ருரிச்சொல்' என்பாருமுளர். நிலவுலகமுழுதையும் ஆண்ட தசரதசக்கரவர்த்தியின் குமாரனுதலால், 'உலகெலாம்' எனப்பட்டது. இராமபிரானைச் சிரமேற்கொள்ளப்படும் பெருமையைப் பெற்றதனுல், கைகேயியின் கொடியசொல்லை 'திருமொழி'என்ருர்; அன்றி, திருவிழத்தற்குக் காரணமாகும் மொழியைத் திருமொழி யென்று, இகழ்ச்சிக்குறிப்பாகிய எதிர்மறையிலக்கணை வகையாற் கூறினதுமாம். நெறி - சந்மார்க்கம். நெறியில் நின்ற என்பதற்கு - மரவுரியையுஞ் சடைமுடியையுந் தரித்துத் தவவொழுக்கவழியிலே நின்றவென்று உரைத்தலு மொன்று. நாயகன் - ஸ்வாமி. (௪௧)

[அநுமான்கொண்ட பெருவடிவைக் கண்டு இந்திரசித்து ஆச்சரியப்படுதல்.]

௪௨. பாகமல்லதுகண்டிலனநுமனைப்பார்த்தான்
மாகவன்றிசைபத்தொடும்வரம்பிலாவுலகிற்
கேகநாதனையெறழ்வலித்தோள்பிடித்தீர்த்த
மேகநாதனுமயங்கினனெனவியந்தான்.

(இ - ள்.) மாகம் வல் திசை பத்தொடும் - பெரிய வானம் முதலிய வலிய பத்துத்திக்குக்களுடனே, வரம்பு இலா உலகிற்கு - அளவற்ற உலகங்கட்கெல்லாம், ஏக நாதனை - தனித்தலைவனுன இந்திரனை, எறழ் வலி தோள் பிடித்து ஈர்த்த - மிக்கவலிமையையுடைய தோள்களைப் பிடித்து இறுக்கிக் கட்டிய, மேகநாதனும் - மேகநாதனென்னும் இயற்பெயருடையவனுன இந்திரசித்தும்,—அநுமனை பார்த்தான் - அநுமானைப் பார்த்து. பாகம் அல்லது கண்டிலன் - (அவ்வடிவத்தின்) ஒரு பகுதியைக் கண்டனனேயன்றி (மற்று) முழுவதையுங் காணமாட்டாதவனுய், மயங்கினன் ஆம் என வியந்தான் - 'திகைப்புற்ருன்' என்று (தன்னைக் கண்டவர்) சொல்லும்படி அதிசயித்தான்; (எ - று.)

பாகமல்லது கண்டில னநுமனைப் பார்த்தான்—அநுமானது பேருருவத்தைச் சீதைகண்டசெய்தி கூறியவிடத்து "கஞ்சமும் புரைவன கழலுங் கண்டிலாள்" என்றதும், அதனைப் பிற்காலத்தில் வீமன் காணுதல் கூறுமிடத்துப் பாரதத்தில் "காலளவல்லது கண்டிலன் வீமன்" என்பதுங் காண்க. இந்திரன் திரிலோகாதிபதியாதலால், 'திசைபத்தொடும் வரம்பிலா வுலகிற்கு ஏகநாதன்' எனப்பட்டான். திசைபத்து - மேல் கீழ்என்ற இரண்டும், மற்ற எட்டுமாம். மேல் உத்தரகாண்டத்தில் "வந்துபிறந்திடு மைந்தன் மழையிடித்ததென வாய்விட்டழுதலோடும், மைந்தனைத்தான் வலிமேகநாதனெனப் பேரிட்டா னிலங்கைமன்னன்" என்பதனுல், மேகநாத னென்ற

பெயரின் பொருளையும் (நாதம் - ஒலி), "செய்வதொன்றறியாது சிந்தை கலங்கி யிந்திரனின்றிடக், கையுமெய்யுமகப்படத் தெறுகாலபாச மிதா மெனும், வெய்யபாசமுறப்பிணித்தனன் மேகநாதன்" என்பதனால் அவன் இந்திரனைப் பிடித்துக்கட்டின செய்தியையும் அறிக. மாகம் - மஹாகம் என்ற வடசொல்லின் விகாரம். ஆம் - அசை. கண்டிலன் வியந்தான் என இயையும். (சஉ)

[அநுமான் இந்திரசித்தின் தேர்க்குதிரைகளையும் பாகனையும் அழித்தல்.]

சரு. நீண்டவீரனுநெடுந்தடங்கைகளைநீட்டி
ஈண்டுவெஞ்சரமெய்தனவெய்திடாவண்ணம்
மீண்டுபோய்விழவீசியாங்கவன்மிடற்றடந்தேர்
பூண்டமாவொடுசாரதிதரைப்படப்புடைத்தான்.

(இ - ள்.) நீண்ட வீரனும் - (அங்ஙனம்) பெருவடிவங்கொண்டுவளர்ந்த வீரனான அநுமானும்,— நெடுந் தட கைகளை நீட்டி - நீண்ட பெரிய தன் கைகளை எதிரிலே நீளச்செலுத்தி, எய்தன ஈண்டு வெம்சரம் எய்திடாவண்ணம் மீண்டு போய் விழ வீசி - (இந்திரசித்தினால்) எய்யப்பட்டவையாய் மேன்மேல் வருகிற கொடியஅம்புகள் தன்னுடம்பிற்படாதபடி (அவற்றைக் கைப்பற்றி அவை) திரும்பி அவன்மேற் போய் விழுமாறு வீசி யெறிந்து விட்டு, ஆங்கு-அதன் பின்பு, அவன் மிடல் தட தேர் பூண்ட மாவொடு-அவனது வலிமையுள்ள பெரியதேரிற் கட்டிய குதிரைகளையும், சாரதி - தேர்ப் பாகனையும், தரை பட புடைத்தான் - கீழ்விழுந் திறக்குமாறு அடித்திட் டான்; (எ - று.)

இங்கு 'மா' என்றது, அவனது தேரிற் குதிரைகளுக்கு ஈடாகக் கட் டப்பட்டுள்ள பேய்களை; இலக்கணை; (கீழ் ௩ - ஆங் கவியைக் காண்க.) 'பூண்ட பேயொடு' என்றும் பாடங் காணப்படுகின்றது. தட - பெருமை யுணர்த்தும் உரிச்சொல்; "தடவுங் கயவும் நளியும் பெருமை" என்பது தொல்காப்பியம். ஈண்டு சரம் - வினைத்தொகை. 'ஆங்கு' - அசையுமாம். தரை என்ற சொல் - (பொருள்களைத்) தரிப்பது என்று காரணப்பொருள் பெறும். (சரு)

[இந்திரசித்து வேறொருதேரின்மீது ஏறி அநுமான்மேல் அம்பு எய்தல்.]

சச. ஊழிக்காற்றன்னவொருபரித்தேரவனுதவப்
பாழித்தோளவனத்தடந்தேர்மிசைப்பாய்ந்தா
னூழிப்பல்படையனையவளப்பருஞ்சரத்தால்
வாழிப்போர்வலிமாருதிமேனியைமறைத்தான்.

(இ - ள்.) (இங்ஙனம் தேர்க்குதிரைகளும் சாரதியும் அழிந்துவிடவே), ஊழி காற்று அன்ன ஒரு பரி தேர் அவண் உதவ - கற்பாந்தகாலத்துப் பிர சண்டமாருதத்தைப் போன்ற குதிரைகள் பூட்டிய வேறொருதேரை அப் பொழுது [அவ்விடத்தில்] (வேறொருதேர்ப்பாகன் அருகிற் செலுத்திக்கொ

ண்டுவந்து) உதவ, பாழி தோளவன் - வலிமையுள்ள தோள்களையுடையவனை இந்திரசித்து, அ தட தேர்மிசை பாய்ந்தான் - (இந்தத்தேரினின்று) அந்தப் பெரியதேரின்மீது பாய்ந்து ஏறி, ஆழி பல் படை அனையன அளப்பு அருஞ் சரத்தால் - அநேகம் சக்கராயுதங்களைப் போன்றனவான அளவிடுதற்கு அரிய [மிகப்பல]அம்புகளினால், வாழ் இ போர் வலி மாருதி மேனியை மறைத்தான் - (எப்பொழுதும் அழிவின்றி) வாழ்பவனும் இப்படிப்பட்ட [கீழ்க்கூறிய] யுத்தசாமர்த்தியத்தையுடையவனு மான அநுமானது உடம்பை மூடினான்; (எ - று.)

அநுமானது உடம்பு மறையும்படி மிகுதியாகப் பாணப்பிரயோகஞ்செய்தன னென்பதாம். ஊழி - பிரளயகாலம். அக்காலத்திற் பெருங்காற்று எழுந்து விசையொடுவீசி உலகத்தையழிக்கு மென்க. ஊழிக்காற்று, பரிக்கும் தேர்க்கும் உவமையாகத்தக்கது; விரைவிலும் கொடுமையிலும் உவமம். ஒரு தேர் என இயையும்; இது, இந்திரசித்தினுடன் வந்த சேமத்தேர்களி லொன்று. பாழி - பெருமையுமாம். பிரமன்முதலிய தேவர்களனைவரும் தம் தமது படைக்கலத்தால் அழியாதபடி அநுமானுக்கு வரமளித்துள்ளா ராதலால், அவனையழித்தற்கு எய்த இந்திரசித்தின் அம்புகட்குத் தேவாதிதேவனான திருமாலின் சக்கராயுதத்தை உவமை கூறுதல் ஏற்கும். 'பலசக்கராயுதம்' என்றது, இல்பொருளுவமை. ஆழி - வட்டவடிவுடையது என்றும், (பகைவரை) அழிப்பது என்றும் காரணப்பொருள்பெறும். அநுமான் சிரஞ்சீவியாதலால், அவனுக்கு 'வாழ்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது; (அசுவத்தாமா, பலிசக்கரவர்த்தி, வியாசமாமுனிவன், அநுமான், விபீஷணன், கிருபாசாரியன், பரசுராமன் என எழுவர் சிரஞ்சீவியர்.) போர்வலி - யுத்தபலம். பரி - (உடையானைப்)பரிப்பது எனப் பொருள்படுங் காரணக்குறி; 'வாஹம்' என்ற குதிரையின் வடமொழிப்பெயரும் இப்பொருள்படுதல் காண்க. (௪௪)

[அநுமான் பாய்ந்து இந்திரசித்தின் வில்லை முறித்தல்.]

௪௫. உற்றவாளிக ளுரத்தடங்கின வுகவுதறிக்
கொற்றமாருதியனையவன் றேர்மிசைக்குதித்துப்
பற்றிவன்கையாற்பறித்தெழுந் துலகெலாம்பலகால்
முற்றவென்றபோர் மூரிவெஞ்சிலையினை முறித்தான்.

(இ - ள்.) கொற்றம் மாருதி - வெற்றியையுடைய வாயுகுமாரனான அநுமான்,—உற்ற - வந்துபட்டவையாய், உரத்து அடங்கின - தன்மார்பிற் பதிந்தவைகளான, வாளிகள் - (இந்திரசித்தின்) அம்புகளெல்லாம், உக - கீழே சிந்திவிழும்படி, உதறு - உதறித்தள்ளிவிட்டு, அனையவன் தேர்மிசை குதித்து - அவ்விந்திரசித்தின் தேரின்மேல் எழும்பிப்பாய்ந்து, உலகு எலாம் பல கால் முற்ற வென்ற போர் மூரி வெம் சிலையினை - உலகங்களையெல்லாம் பலமுறை முடியச்சயித்த போர்வலிமையையுடைய கொடிய(அவனது) வில்லை, வல் கையால் பற்றி பறித்து - (தனது) வலியகையினாற் பிடித்துப்

பிடுங்கிக்கொண்டு, எழுந்து - எழும்பி வெளியே வந்து, முறித்தான் - (அவ் வில்லைக்) கைகளால் ஒடித்தெறிந்துவிட்டான்; (எ - று.)

உதறுதல் - சிதற அசைத்து வீசுதல். இடங்கொடாமல் தள்ளுதல். 'தந் தையே மைந்தனுகின்றன்' என்ற நூல்வழக்குப்பற்றி, தந்தையான வாயு போன்ற மிக்கவலிமையுடைய மைந்தனை அநுமான் என்பது தோன்ற, 'மாருதி' என்ற பெயராற் கூறினர். 'உலகங்களைப்பல நாலுமுற்றவென்ற'— முன்னும் (உஅ-ஆங் கவியில்) "மூன்று உலகம் ஒரு மூன்றையும் வென்று முற்றி" என்றார். ஊற்றி - வலிமை; பெருமையும் படுமையுமாம். (சுரு)

[உடனே இந்திரசித்து வேறொரு வில்லைப் பெற்றுக்கொண்டு போர்தொடங்குதல்.]

௬௬. முறிந்தவில்லின் [illegible]
மறிந்து போரிடைவழிக் [illegible]
செறிந்தவான் பெருமலை [illegible]
வெறிந்தவிந்திரன் இட்ட வார்சிலை [illegible]

(இ - ள்.) முறிந்த [illegible] வடிவன் முன்னர் - வில்முறிபடுவதற்கு [illegible] முன்னே, —(இந்திரசித்து [illegible]) யுத்தத் தில் தோற்றுப்போய் [illegible] வான்பெரு மலைகளை சிறகு அற செயிரா எறிந்த [illegible] - வச்சிராயுதமென்கிற பிர காசமுள்ள தனது ஆயுதத்தைக்கொண்டு வலிமைமிக்க [illegible] பெரியமலை களை இறகுகளற்றுப்போம்படி கோபங்கொண்டு துணித்தவனான தேவேந் திரன், இட்ட - இறையாகக்கொடுத்த [[illegible] என்றபடி], வார் சிலை யினை - நீண்டவில்லை. எடுத்தான் - கையிற்பற்றிக் கொண்டான்; (எ - று.)

'முடிவதன்முன்னர் எடுத்தான்' என்றும், [illegible] இந் திரன்' என்றும் கூட்டுக. படையால் எறிந்த, [illegible]. சிறகு அற எறிந்த, செயிரா எறிந்த என்று இயையும். அந்த வில் ஒடிக்கப்பட்டவுடனே வேறவில் லெடுத்துக்கொண்டா னென்ற [illegible] காட்டுதற்கு, 'முறிந்தவில்லின் வளைவைப்போய் முடிவதன்முன்னர் எடுத்தான்' என்றார். இதில், அவ்வில்லொடித்த வல்லோனை மிக [illegible] அவ்வில்லின் வலிமையும் விளங்கும். ஒசைமுடிவதன்முன்னர் - ஒலி அடங்குவதற்குமுன் னமே. போரிடைமறிந்து வழிக்கொள்வானை இந்திரன் இட்ட வார்சிலை— "வன்றூள் வயிரச்சிலை வாங்கினன் [illegible]," "வயிரநெடுமால் வரைகொண்டு மலர்க்கண்வந்தான், செயிரொன்று முருவதை யிந்திரற் கென்று செய்த, வுயர்வெஞ்சிலை யச்சிலைபண்டவன் றன்னையோட்டித், துய ரின்றலைத்திவன் கொண்டது தோற்றுதீ ரல்" என்பர் மேல் யுத்தகாண் டத்து நாகபாசப்படலத்தும். வழிக்கொள்ளுதல் = வழிப்படுதல், அகப்படு தல், உட்படுதல்; இங்கு இந்திரசித்தின் கைகளிற் சிக்குதல். போரிடைமறி ந்து வழிக்கொள்வான் என்பதற்கு - போரில்தோற்றுப் புறங்கொடுத்து மீண்டோடுபவனென்றும், 'இட்ட' என்பதற்கு - போகட்டுச்சென்ற என்றும்

உரைப்பாருமுளர்; அவ்வுரைக்கு, வழிக்கொள்ளுதல் - பிரயாணப்படுதல். இனி, வாட்படை - கூரிய ஆயுதம் என்னுமாம். வான் - வானத்தையளாவிய என்றபடி. 'மற்ந்துபாரிடை வழிக்கொளா' என்றும் பாடமுண்டு.

மலைகளைச்சிறகறுத்தகதை:—பூர்வகாலத்தில் மலைகளெல்லாம் பறவைகள்போல இறகுடையனவாயிருந்து அவற்றைக்கொண்டு உலகமெங்கும் பறந்துதிரிந்து பலவிடங்களிலும் உட்கார்ந்து அவ்வவ்விடங்களை யெல்லாம் ஆங்காங்குள்ள பிராணிகளுடனே அழித்துவர, அதனை முனிவர்முதலியோரா லறிந்த திரிலோகாதிபதியான தேவேந்திரன் சினந்துசென்று தனது வச்சிராயுதத்தால் அவற்றின் சிறகுகளை அறுத்துத்தள்ளிவிட்டனன் என்பதாம்.

இச்செய்யுள் - முந்தினசெய்யுளோடு அந்தாதித்தொடை யுடையது; மேல் ௬௧, ௬௨, ௬௩, ௬௪, ௬௦-ஆங் கவிகளையும் இங்ஙனங் காண்க. (௬௬)

[இந்திரசித்து எய்த அம்புகளினால் அநுமான் சிறிதுதளர்தல்.]

௬௭. நூறுநூறுபோர்வாளியூர்தொடைநொடிநொய்தின்
மாறில்வெஞ்சினத்திராவணன்மகன்சிலைவளைத்தா
னூறுதன்னெடுமேனியிற்பலபடவொல்கி
யேறுசேவகன்றூதனுஞ்சிறிதுபோதிருந்தான்.

(இ - ள்.) மாறு இல் வெஞ்சினத்து இராவணன் மகன் - (எப்பொழுதும்) மாறுதலில்லாத கொடிய கோபமுள்ள இராவணனுடைய புத்திரனை இந்திரசித்து போர் வாளி நூறு நூறு ஊர் தொடை நொடு - போரிற்சிறக்கிற நூறு நூறு அம்புகளை ஒருதொடுப்பிலேகொண்டு [தொடுக்குந்தரம் ஒவ்வொன்றிலும் நூற்றுக்கணக்கான அம்புகளைத் தொடுப்பவனாய் என்றபடி], நொய்தின் - விரைவில், சிலை வளைத்தான் - அவ்வில்லை வளைத்து எய்தான்; (அந்த மிகப்பல அம்புகளினால்), தன் நெடு மேனியில் - தனது பெரிய உடம்பிலே, ஊறு பல பட - பலபுண்கள் உண்டாக, (அதனால்), ஏறு சேவகன் தூதனும் - (அனைவரினுஞ்) சிறந்த வீரனான ஸ்ரீராமபிரானது தூதனாகிய அநுமானும், சிறிதுபோது ஒல்கி இருந்தான் - சிறிதுபொழுது தளர்ந்து ஓய்ந்திருந்தான்.

நூறுநூறு என்பதற்கு - பதினாயிரமென்று உரைப்பாருமுளர்; அவ்வுரைக்கு - நூறாகியநூறு எனப் பண்புத்தொகையாக விரித்து, நூற்றினாற் பெருக்கிய நூறு என்க. தொடை - தொடுக்குந்தரம். மாறு - மாறுதல். 'மாறில் வெஞ்சினத்து' என்ற அடைமொழி - இராவணனுக்கும் அவன் மகனுக்கும் ஏற்கும். மாறு இல் - ஒப்பில்லாத என்னினுமாம். எய்தல் என்ற காரியத்தை 'சிலைவளைத்தல்' என்ற காரணச்சொல்லாற் கூறியது, உபசாரவழக்கு. ஏறுசேவகன் - மகாவீரன்; வினைத்தொகை: உவமைத்தொகையாக, ஆண்சிங்கம் போன்ற வீரனென்று உரைப்பாருமுளர். சேவகனென்ற சொல் வீரனென்னும்பொருளில் வருதலை "சார்ங்கவிற்சேவகன்" எனப் பெரியார்திருமொழியிலுங் காண்க. ஒல்கியிருத்தல் - ஆயாசமுற்றிருத்தல். (௬௭)

[அநுமான் உடனே அயர்ச்சிதீர்ந்து ஒருமரத்தினால் இந்திரசித்தின் தலையி லடித்தல்.]

சஅ ஆர்த்தவானவராவலங்கொளீஇ யறிவழிந்தார்
பார்த்தமாருதிதாருவொன் றங்கையிற்பற்றித்
தூர்த்தவாளிகண்முறைமுறை துணிபடச்சுற்றிப்
போர்த்தபொன்னெடுமணிமுடித் தலையிடைப்புடைத்தான்.

(இ - ள்.) ஆர்த்த வானவர் - (முதலில் அநுமான் இந்திரசித்தின் வில்லை முறித்திட்டமைகண்டு மகிழ்ச்சியால்) ஆரவாரஞ்செய்த தேவர்கள், ஆவலம் கொளீஇ அறிவு அழிந்தார் - (உடனே அநுமான் இந்திரசித்தின் அம்புகளால் ஊறுபட்டு அயர்வுற்றதனைப் பார்த்து) துன்பங்கொண்டு அறிவுகலங்கினார்கள்; பார்த்த மாருதி - அதுகண்ட அநுமான், (உடனே அயர்ச்சிதீர்ந்து), தாரு ஒன்று அம் கையில் பற்றி - ஒருமரத்தை(த் தனது) அழகிய கையிலே எடுத்துக்கொண்டு, தூர்த்த வாளிகள் முறைமுறை துணிபட சுற்றி - (இந்திரசித்து) எய்துநிரப்புகிற அம்புகளெல்லாம் வரிசைவரிசையாகத் துண்டுபட்டொழியும்படி (அந்தமரத்தைச்) சுழற்றி, பொன் மணி நெடு முடி போர்த்த தலையிடை புடைத்தான் - பொன்னினாற்செய்யப்பட்டு மாணிக்கங்கள்பதிக்கப்பெற்ற நீண்ட கிரீடத்தைத்தரித்த (இந்திரசித்தின்) தலைமேல் (அம்மரத்தைக்கொண்டே) அடித்தான்; (எ - று.)

ஆவலம் - அவலம் என்பதன் நீட்டல்விகாரம்; கிலேசம்; துயரம் என்று பொருள். கொளீஇ = கொண்டு. 'ஆகுலங்கொண் டறிவழிந்தார்' என்பதும் பாடம். மயிர்முடியப்படுவதுபற்றி. சிரசுக்கு 'முடி' என்று பெயர். அது - இடவாகுபெயராய், சிரசிலணியுங் கிரீடத்தைக் குறித்தது. (சஅ)

[இந்திரசித்து தலையிலடிபட்டுத் தாங்கல்.]

சகூ. பாரமாமரமுடியுடைத் தலையிடைப்படலுந்
தாரையின்னெடுங்கற்றைகள் சொரிவன தயங்க
வாரமால்வரையருவியின் வழிகொழுங்குருதி
சோரநின்றுடறளங்கினனமரரைத்தொலைத்தான்.

(இ - ள்.) பாரம் மா மரம் - கனமுள்ள பெரிய அந்தமரம், முடி உடை தலையிடை படலும் - கிரீடத்தையுடைய தன் தலையின்மேற் பட்டவளவிலே, நெடுங்கற்றைகள் தாரையின் சொரிவன தயங்க - (அக்கிரீடத்திலுள்ள மாணிக்கங்களின்) நீண்டஒளித்தொகுதிகள் ஒழுங்காக மேற்சொரிவனவற்றைப் போன்று விளங்கும்படி, மால் வரை அருவியின் வழிகொழுங் குருதி ஆர சோர - பெரியமலையிலிருந்து வருகிற நீருவிபோல வழிகிற கொழுமையான இரத்தம் மிகுதியாகப்பெருக, நின்று உடல் தளங்கினன் -(ஒன்றுஞ் செய்யமாட்டாது) அயர்ச்சியுற்று நின்று உடம்பு நடுங்கினான்: (யாவனெனில்),—அமரரை தொலைத்தான் - தேவர்களை வென்றிட்டவனான இந்திரசித்து; (எ - று.)

இரண்டாமடிக்கு - தலையிலுள்ள நீண்ட செம்பட்டமயிர்த்தொகுதிகள் ஒழுங்காகக் கீழ்விழுவனபோன்று விளங்கவென்று உரைப்பினும் அமையும். கற்றை - கதிர்த்தொகுதியும், மயிர்த்தொகுதியும். கிரீடத்திலுள்ள செந்நிற மான மாணிக்கங்களின் நீண்ட ஒளித்தொகுதிகள் கீழ்நோக்கிவிழுவதும், தலையிலுள்ள செம்பட்டமயிர்த்தொகுதி அவிழ்ந்து உடம்பின்மேல்விழுத லும், இரத்தினகிரீடத்தையணிந்த சிரசிலிருந்து மிக்குவழிகிற இரத்தப்பெரு க்குக்கட்கு உவமையாதற்கு ஏற்கும்; இனி, மழைத்தாரைகளின் நீண்ட தொகுதிகள் சொரிவனபோலவென்றலும் ஒன்று. ஆரச்சோர என இயை யும். உடல் துளங்கினன் - உடல் கலங்கினன் எனினுமாம். 'உளந்துளங் கினன்' என்றும் பாடமுண்டு. (சக)

[இந்திரசித்து அயர்ச்சிதீர்ந்து மீண்டும் அநுமான்மேல் அம்புஎய்தல்.]

ருo. நின்றுபோதம்வந்துறுதலுநிறைபிறையெயிற்றைத்
தின்றுதேவருமுனிவருமவுணருந்திகைப்பக்
குன்றுபோனெடுமாருதியாகமுங்குலுங்க
வொன்றுபோல்வனவாயிரம்பகழிகோத்துய்த்தான்.

(இ-ள்.) நின்று - (அங்ஙனமே இந்திரசித்து சிறிதுபொழுது) அயர்ச்சி யுற்றுநின்று, போதம் வந்து உறுதலும் - (பின்பு) அறிவு வந்து கூடினவள விலே, நிறை பிறை எயிற்றை தின்று - தன்வாயில் நிறைந்துள்ளனவும் பிறைச்சந்திரன்போன்றனவுமான பற்களைக் கடித்து, தேவரும் முனிவரும் அவுணரும் திகைப்ப - (போர்காண்கிற) தேவர்களும் தேவரிஷிகளும் அசு ரர்களும் திகைப்படைய, குன்று போல் நெடு மாருதி ஆகமும் குலுங்க - மலைபோன்ற [வலியபெரிய] உயர்ந்தவடிவமுள்ள அநுமானுடைய உடம்பும் நிலைகலங்கும்படி, ஒன்று போல்வன ஆயிரம் பகழி கோத்து உய்த்தான் - ஒன்றுபோலவே எல்லாம் உள்ளனவான ஆயிரம் அம்புகளைத் தொடர்ச்சியா கத் தொடுத்துவிட்டான்; (எ - று.)

நிறை பிறை என்ற இரண்டும், எயிற்றுக்கு அடைமொழி. நிறையெ யிறு - வினைத்தொகை. பிறையெயிறு - உவமத்தொகை. பிறை - கலைகுறை ந்த சந்திரன். பிறப்பது பிறையெனக் காரணக்குறி; 'பிற' என்ற பகுதியின் ஈற்று அகரம் தொகுத்தல்விகாரமடைந்தது. கோரப்பல்லுக்கு, பிறை - வெண்மையிலும் ஒளியிலும் வளைந்தவடிவிலும் உவமம். பற்களைக்கடித்தல், கோபக்குறி. முனிவர்களும் அசுரர்களும் பதினெட்டுத்தேவகணங்களிற் சேர் ந்தவர்களாதலால், தேவர்களோடொப்பப் போர்காண்பவராகக் கூறப்பட்ட னர். 'குன்று போல்' என்ற உவமை, மாருதிக்கும் அவனது ஆகத்துக்கும் ஏற்கும். (ருo)

[அநுமான் இந்திரசித்தைத் தேரோடு எடுத்துஎறிதல்.]

ருக. உய்த்தவெஞ்சரமுரத்தினுங்கரத்தினுமொளிப்பக்
கைத்தசிந்தையன்மாருதிநனிதவகனன்றான்
வித்தகன்சிலைவிடுகணைவிசையினுங்கடுகி
யத்தடம்பெருந்தேரொடுமெடுத்தெறிந்தார்த்தான்.

(இ - ள்.) உய்த்த வெம் சரம் - (அங்ஙனம் இந்திரசித்து) செலுத்திய கொடிய அம்புகள், உரத்திலும் கரத்திலும் ஒளிப்ப - (தனது) மார்பிலும் கைகளிலும் அழுந்த, மாருதி - அநுமான், கைத்த சிந்தையன்-(இப்படி இவனோடு எவ்வளவுநேரம் போர்செய்வது என்று) வெறுத்த மனமுடையவனாய், நனி நவ கனன்றான் - மிகவும் அதிகமாகக் கோபித்து, வித்தகன் சிலை விடு கணை விசையினும் கடுகி - ஞானசொரூபியான ஸ்ரீராமபிரானது வில்லினால் எய்யப்படுகிற அம்பின் வேகத்தைக்காட்டிலும் வேகமாகப் பாய்ந்து, அ தட பெருந் தேரொடும் எடுத்து எறிந்து ஆர்த்தான் - அந்த மிகப்பெரிய தேருடனே (இந்திரசித்தைத்) தூக்கி மேலேஎறிந்து (களிப்பினால்) ஆரவாரஞ் செய்தான்: (எ - று.)

நனி தவ, தடம் பெரு - ஒருபொருட்பன்மொழிகள்; இவ்விரண்டும், மிகுதிப்பொருளுணர்த்தும் உரிச்சொற்கள். காப்பியத்தலைவனான இராமபிரானது கோதண்டத்தா லெய்யப்படுகிற அம்பினது வேகம் பிரசித்த மாதலால், 'அதனினும் வேகமாகப் பாய்ந்து' என இராமதூதனது வேகத்தை விளக்கினார். ஆர்த்தான் - தனது செய்திறம் தோன்றக் கொக்கரித்துக்கர்ச்சித்தான் என்றபடி. (௫௧)

[இந்திரசித்து தேருடன் வானத்தில் நெடுந்தூரஞ்சென்று கீழ்வீழ்தல்.]

௫௨. கண்ணின்மீச்சென்றவிமையிடைக்கலப்பதன்முன்னை
யெண்ணின்மீச்சென்றவெறுழ்வலித்திறலுடையிகலோன்
புண்ணின்மீச்சென்றபொழிபுனல்பசும்புலால்பொடிப்ப
விண்ணின்மீச்சென்றுதேரொடும்பார்மிசைவிழுந்தான்.

(இ - ள்.) கண்ணின் மீ சென்ற இமை இடை கலப்பதன் முன்னை - கண்களின்மேலுள்ள இமை கீழிமையிலே வந்துகூடுவதன்முன்னே [கண்ணிமைப்பொழுதாகிய ஒருமாத்திரைப்பொழுதினுள்ளே என்றபடி], எண்ணின் மீ சென்ற எறுழ் வலி திறல் உடை இகலோன் - அளவுக்குமேற்சென்ற [வரம்புகடந்த] மிக்கபலத்தையும் பராக்கிரமத்தையு முடைய பகைவனான இந்திரசித்து, தேரொடும் விண்ணின் மீ சென்று - (அநுமான் எடுத்தெறிந்த விசையினால்) தேரோடு வானத்தின்மேலெல்லையிற் போய், புண்ணின் மீ சென்று பொழி புனல் பசும் புலால் பொடிப்ப பார்மிசை விழுந்தான் - புண்களின்மேலே பெருகிவழிகிற இரத்தம் புதிய புலால்நாற்றத்தோடு வெளிப்படும்படி தரையில் விழுந்திட்டான்; (எ - று.)

'எண்ணின்மீச்சென்ற' என்பதற்கு - மனத்திற்கு எட்டாது அதனெல்லையைக்கடந்துபோயுள்ள வென்று உரைத்தலு மொன்று. 'புண்ணின்மீச்சென்றுபொழிபுனல்' - புண்ணீர். இனி, மூன்றாமடிக்கு - புண்களின்வழியாக இரத்தமும் புதியதசையும் வெளிப்படும்படி என்று உரைப்பினும் அமையும். (௫௨)

[இந்திரசித்து வானத்தில் எழுதலும்,அநுமான் அவனுடைய சேமத் தேர்களை யெல்லாம் சிதைத்தலும்.]

௫௩. விழுந்துபா ரடையாமுனமின்னெனும்எயிற்று
னெழுந்துமா விசும்பெய்தின னிடையவன்படையிற்
செழுந்தண்மாமணித் தேர்க்குலம்யாவையுஞ்சிதைய
வுழுந்துபேர்வதன்முன்னெடுமாருதியுதைத்தான்.

(இ - ள்-) விழுந்து பார் அடையா முனம் - தேரோடுகீழ்விழுந்து பூமியைச் சேர்தற்குமுன்னே, மின் எனும் எயிற்றன் - மின்னல்போல விளங்கும் பற்களையுடையவனான இந்திரசித்து, எழுந்து மா விசும்பு எய்தினன் - (சின்னபின்னப்படுகிற அத்தேரினின்று) எழும்பிக் கரிய ஆகாயத்திற் சேர்ந்தான்; இடை - (இங்ஙனம் தேரோடு வானத்திற்சென்று கீழ்விழுந்து மீண்டும் அவன்மாத்திரம் வானத்திலெழுகிற பொழுதின்) இடையிலே, நெடு மாருதி - பெருவடிவமுடைய அநுமான், அவன் படையில் செழுந் தண் மா மணி தேர் குலம் யாவையும் சிதைய - அவனுடைய சேனையிலுள்ள பெரிய குளிர்ந்த சிறந்த இரத்தினங்கள்பதித்த தேர்க்கூட்டங்களெல்லாம் சிதையும்படி, உழுந்து பேர்வதன்முன் உதைத்தான் - ஓர் உளுந்து உருளுமளவினுள்ளே [வெகுவிரைவிலே] உதைத்து அழித்தான்; (எ - று.)

இந்திரசித்து தேரில் இருந்து போர்செய்யுமளவும் அவனைவெல்லுதல் முடியாதென்ற நோக்கத்தால் அநுமான் அவனேறியுள்ள தேர் சிதையுமாறு அதனை யெடுத்து வானத்திலெறிந்ததுமன்றி அத்தேர் கீழ்விழுதற்குமுன்பு மற்றைச்சேமத்தேர்களையும் உதைத்துச் சிதைத்திட்டனனென்க. 'விழுந்து பாரடையாமுனம்' என்பதும், 'உழுந்துபேர்வதன்முன்' என்பதும் - விரைவைக் காட்டும்: உயர்வுநவிற்சி. உழுந்து - நவதானியங்களிலொன்று. தண் மணி - குளிர்ந்த ஒளியுள்ள இரத்தினம். (௫௩)

[பின்பு இந்திரசித்து பிரமாஸ்திரத்தைப் பிரயோகிக்கக் கருதுதல்.]

௫௪. ஏறுதேரிலனெதிர்நிற்குமுரணிலனெரியிற்
சீறுவெஞ்சினந்திருகின்றான்றிரிவானும்
வேறுசெய்வதோர்வினைபிறிதின்மையின்விரிஞ்சன்
மாறிலாப்பெரும்படைக்கலந்தொடுப்பதாய்மதித்தான்.

(இ - ள்.) ஏறு தேர் இலன் - (தான் மீண்டும்) ஏறுதற்கு ஒருதேர் இல்லாதவனும், எதிர் நிற்கும் முரண் இலன் மீளவும் அநுமானெதிரிலே நின்று போர்செய்தற்கு உரிய வலிமையில்லாதவனுமாய், எரியின் சீறு வெம் சினம் திருகின்றான் திரிவானும் - நெருப்புப்போலத் தபிக்கிற வெவ்வியகோபத்தால் மாறுபடுகின்றவனாய் (வானத்திற்) சஞ்சரிப்பவனுமான இந்திரசித்தும், வேறு செய்வது ஓர் வினை பிறிது இன்மையின் - (அநுமானுக்கு) மாறாகத் தான்செய்யத்தக்க செயல் வேறொன்றும் இல்லாமையினால், மாறு இலா பெரும் விரிஞ்சன் படைக்கலம் தொடுப்பது ஆய் மதித்தான் - எதிரில்லாத

தான பெருமையையுடைய பிரமனது அஸ்திரத்தை (அநுமான்மேல்) தொடு த்துவிடுவதாக நினைத்தான்; (எ - று.)

விரிஞ்சன் என்ற வடமொழிப்பெயர் - (பிராணிகளைப்) படைக்கின்றவ னென்றும், அன்னப்பறவையாற் சுமக்கப்படுகின்றவ னென்றும் (வி - பற வை) காரணப்பொருள்பெறும். மாறு இலா - ஒப்பில்லாத எனினுமாம். 'எதிர்நிற்குமூாளிலன்' என்றும் பாட முண்டு; உரன் - வலிமை. (ருச)

[இந்திரசித்து பிரமாஸ்திரத்தைப் பூசித்து எடுத்தல்.]

ருரு பூவும்பூநிறவயினியுந்தீபமும்புகையுந்
தாவில்பாவனையாற்கொடுத்தருச்சனைசமைத்தான்
றேவியாவையுமுலகமுந்திருத்தியதெய்வக்
கோவினான்முகன்படைக்கலந்தடக்கையிற்கொண்டான்.

(இ - ள்.) பூவும் - மலர்களையும், புகையும் - தூபத்தையும், தீபமும் - தீபத்தையும், பூ நிறம் அயினியும் - பூநிறமுள்ள வெண்சோறாகிய நைவேத்தி யத்தையும், தா இல் பாவனையால் கொடுத்து - தவறுதலில்லாத தியான வகையினால் சமர்ப்பித்து, அருச்சனை சமைத்தான் - (பிரமாஸ்திரத்துக்குப்) பூசைசெய்து, தேவு யாவையும் உலகமும் திருத்திய தெய்வம் கோவில் நான்முகன் படைக்கலம் தட கையில் கொண்டான் - தெய்வங்களெல்லா வற்றையும் உலகங்களையும் ஒழுங்காகப்படைத்த தெய்வத்தன்மையுள்ள (திருமாலின் திருநாபிக்கமலமாகிய) சிறந்த இடத்தில் தோன்றி வசிக்கிற பிரமனது அஸ்திரத்தைத் தனது பெரியகையி லெடுத்துக்கொண்டான், (இந்திரசித்து); (எ - று.)

ஷோடசோபசாரங்களில் புஷ்பம் தூபம் தீபம் நைவேத்யம் என்ற நான் கைக் கூறினது, பிறவற்றிற்கும் உபலக்ஷணம்; (உபலக்ஷணமாவது-ஒருசொல் ஒழிந்த தன்இனத்தையுங் குறிப்பது.)செய்யுளாதலின், உபசார வகைகளை முறைபிறழ வைத்தார். வெண்ணிறமலர் சிறத்தல்பற்றி, வெண்ணிறம் 'பூநி றம்' எனப்பட்டது. உபசாரங்களைப் பிரதிபக்ஷமாகக் கொணர்ந்துகொடுத் துப் பூஜித்தற்கு அப்பொழுது சந்தர்ப்பமில்லை யாதலால், மானஸமாகக்கொ ண்டு அவற்றைச்சமர்ப்பித்துப் பூசைசெய்தன னென்க. தீபம் - விளக்கு. பாவனை - மனத்தில் ஊன்றிய சிந்தனை. தே - தேவசப்தபவம்; அது, 'தேவு' என உகரச்சாரியை பெற்றது; 'தேவியாவையு முலகமுந் திருத்திய தெய்வக் கோவில் நான்முகன்' - "தெய்வநான்முகக்கொழுமுளையீன்று, முக்கணீச னொடுதேவுபலநுதலி, மூவுலகம்விளைத்த வுந்தி" என்ற ஆழ்வாரருளிச்செய லைக் காண்க. தேவர்களை இருதிணையாகவுங் கூறலாமாதலால், 'தேவியாவை யும்' என அஃறிணையாற் கூறின ரென்க. தேவகணங்களெல்லாவற்றையும் என்றும் உரைக்கலாம்; தேவர்களையும் மற்றை எல்லாச் சராசரங்களையும் என்று உரைப்பினும் அமையும். 'தேவும்யாவையும்' என்பதும் பாடம். நான்முகன் - நான்கு முகமுடையவன். நான்முகன்படைக்கலம் -பிரமனைத் தெய்வமாகவுடைய அஸ்திரம்: பிரமனாற் கொடுத்தருளப்பட்ட அஸ்திரம். தட - உரிச்சொல். இங்கு 'தடக்கை' என்றது, வலக்கையை. (ருரு)

[இந்திரசித்து அனுமான்மீது பிரமாஸ்திரத்தைப் பிரயோகித்தல்.]

ருசு. கொண்டகொற்றவெஞ்சிலைநெடுநாணொடுகூட்டிச்
சண்டவேகத்தமாருதிதோளொடுஞ்சார்த்தி
மண்டுளங்கிடமாதிரந்துளங்கிடமதிதோய்
விண்டுளங்கிடமேருவுந்துளங்கிடவிட்டான்.

(இ - ள்.) கொண்ட - (முன்னமே இடக்கையிற்) பிடித்துள்ள, கொற்றம் வெம் சிலை - (முன்பு பலபோர்களில்) வெற்றிபெற்ற கொடியவில்லினது, நெடு நாணொடு - நீண்டநாணியுடனே, கூட்டி (அந்தப்பிரமாஸ்திரத்தைச்) சேர்த்து [வில்லில் அந்த அம்பைத் தொடுத்து என்றபடி], சண்ட வேகத்த மாருதி தோளொடும் சார்த்தி - கொடியவேகமுள்ள அநுமானுடைய தோள்களுடனே இயைத்து [அநுமன்தோள்களை இலக்காக்குறித்து என்றபடி],—மண் துளங்கிட - பூமி நடுங்கவும், மாதிரம் துளங்கிட எட்டுத்திசைகளும் நடுங்கவும், மதி தோய் விண் துளங்கிட - சந்திரன்பொருந்திய மேலுலகம் நடுங்கவும், மேருவும் துளங்கிட - (பூமியின் நடுவிலுள்ளதான) மகாமேருகிரியும் நடுங்கவும், விட்டான் - (அதனை) எய்தான் [பிரயோகித்தான்]; (எ - று.)

'மண் துளங்கிட மாதிரந்துளங்கிட மதிதோய்விண் துளங்கிட' என்றது - பத்துத்திசைகளும் அதிர்ச்சியாலும் அச்சத்தாலும் கம்பிக்க என்றபடி. 'மேருவுந்துளங்கிட' என்றது - அசைதலில்லாமையால் அசலமெனப்படுகிற மலைகளுட் பெரியதான மகாமேருவும் நிலைகுலைந்து அசைய என்றவாறு. முதலடிக்கு - வில்லைவளைத்து நாணேற்றியென்று உரைப்பாருமுளர். சண்டவேகம் - வடமொழித்தொடர். 'தோளொடுஞ்சாத்தி' என்றும் பாடமுண்டு. மதி - (பலராலும்) நன்குமதிக்கப்படுவது எனப் பொருள்படுங் காரணக்குறி; மது - அமிருதகிரணம்: அதனையுடையது மதி என்பர் ஒருசாரார். சந்திரனைக் கூறினது, மற்றைக் கிரகநக்ஷத்திரதாரகைகளுக்கும் உபலக்ஷணம். தெய்வத்தன்மையுள்ள அஸ்திரத்தை அநுமானுடைய தோள்களைக்கட்டுமாறு அபிமந்திரித்து விட்டனன் இந்திரசித்து என்க. (ருசு)

[அந்தஅஸ்திரம் நாகவடிவமாய் அனுமானது தோள்களைக் கட்டுதல்.]

ருஎ. தணிப்பரும்பெரும்படைக்கலந்தழலுமிழ்தறுகட்
பணிக்குலங்களுக்கரசினதுருவினைப்பற்றித்
துணுக்கமுற்றுயர்கலுழனுநடுக்குறச்சுற்றிப்
பிணித்ததப்பெருமாருதிதோள்களைப்பிறங்க.

(இ - ள்.) தணிப்பு அரும் பெரும் படைக்கலம் - (எவராலும்) அடக்குதற்குஅரியதான பெரிய அந்தஅஸ்திரமானது,—தழல் உமிழ் தறுகண் பணிக் குலங்களுக்கு அரசினது உருவினை பற்றி - (கொடுமைமிகுதியால்) நெருப்பைச்சொரிகின்ற அச்சந்தருங்கண்களையுடையபாம்புக்கூட்டங்களுக்கு அதிபதியான ஒருமகாநாகத்தினது வடிவத்தைத் தான்கொண்டு,— உயர் கலுழனும் துணுக்கம் உற்று நடுக்குஉற - சிறந்தகருடனும் திடுக்கிட்டுநடுக்க

மடையும்படி., அ பெரு மாருதி தோள்களை - அந்தப் பெரிய அநுமானுடைய தோள்களை, சுற்றி - சூழ்ந்து, பிறங்க பிணித்தது - நன்றாகக்கட்டியது [இறுகக்கட்டிற்று என்றபடி]; (எ - று.)

தறுகண் - கொடுங்கண்; தறுகண்மை - அஞ்சாமையுமாம். பணம் - படம்: அதனையுடையது பணி எனப் பாம்புக்குக் காரணக்குறி; அது, பணி யென ஈமீறு இகரமாயிற்று. சருடன் என்ற வடசொல், கலுழன் எனச் சிதைந்தது. பாம்புகளை எளிதில் அழிக்குந் தன்மையதான கருடனும் இப் பெரும்பாம்பின் வடிவத்தைக் கண்டு அஞ்சி நடுங்குமெனை. நாகவடிவுகொண்ட பிரமாஸ்திரத்தின் சிறப்பைக் கூறியவாறாம். பிறங்கப் பிணித்தது - (தன்வடிவு அத்தோள்களிலே பதிந்து) விளங்கும்படி அழுந்தக்கட்டியது எனினுமாம்: அன்றி, பிறங்க - (அஸ்திர மகிமையால் தனது உருவம் திவ்விய ஒளிகொண்டு) பிரகாசிக்க என்றலுமாம். (ருஎ)

[அதனால் அநுமான் சாய்தல்.]

ருஅ. திண்ணென்யாக்கையைத்திசைமுகன்படைசென்றிறுக
அண்ணன்மாருதியன்றுதன்பின்சென்றவறத்தின்
கண்ணினீரொடுங்கனகத்தோரணத்தொடுங்கடைநா
டண்ணென்மாமதிகோளொடுஞ்சாய்ந்தெனச்சாய்ந்தான்.

(இ - ள்.) திண்ணென் யாக்கையை - உறுதியுள்ள (அநுமானுடைய) உடம்பை, திசைமுகன் படை சென்று இறுக - அந்தப்பிரமாஸ்திரம் போய்ச் சுற்றிக் கட்டவே,—அண்ணல் மாருதி - பெருமையையுடைய அநுமான்,— கடைநாள் - கற்பாந்தகாலத்திலே, தண்ணென் மா மதி கோளொடும் சாய்ந்தென - குளிர்ச்சியான பெரிய சந்திரன் (ராகுவென்கிற) பாம்புடனே (வானத்தினின்று தரையில் வீழ்வதுபோல,— அன்று தன்பின் சென்ற அறத்தின் கண்ணின் நீரொடும் - அன்றைத்தினத்தில் முன்பின்னே வந்த தருமதேவதையின் கண்களினின்று பெருகிய நீரோடு, கனகத்தோரணத்தொடும் சாய்ந்தான் - பொன்மயமான (அசோகவனத்து) வெளிவாயிலுடனே தன்னுடம்பு படியுமாறு சாய்ந்து விழலானான்; (எ - று.)

தோரணம் - வெளிவாயில். அசோகவனத்து வெளிவாயிலில் நின்று அரக்கர்களோடெல்லாம் பொருது அவர்களை அழித்த அநுமான் பிரமாஸ்திரத்தாற் கட்டுப்பட்டு அவ்விடத்திலே சாய்ந்திட்டனனென்பார், 'கனக தோரணத்தொடும் சாய்ந்தான்' என்றார் அவ்வெளிவாயிலிலே சாய்ந்திடலானானென உருபுமயக்கமாகக் கருத்துக்கொள்க. தயை சத்தியம் பரிசுத்தி முதலிய நற்குணங்களில்லாதபடி ராக்ஷசராசனான இராவணன் அரசாட்சி செலுத்திவருகிற இலங்காபுரியில் வெகுகாலமாக நுழையாதிருந்த தருமதேவதையானது, சீதையிருக்கிறவிடத்தை நாடிக்கண்டு இராமனுக்குச் செய்தி கூறி அவனுக்குத் துணைநின்று அரக்கர்களையெல்லாம் அழிக்கப்போகிற அநுமான் அவ்விலங்கையிற் பிரவேசிக்கும்போது தானும் இனிச்செல்லலா மென்று அவன்பின்னே தொடர்ந்து சென்றதாதலால், 'அன்று தன்பின்

சென்ற அறம்' எனப்பட்டது; மேலும் (கூஉ - ஆஞ் செய்யுளில்), "அறத்துக்கு ஆங்கு ஒருதனித்துணையாநின்ற அநுமன்" என்பது காண்க. இங்ஙனம் தான்சிறிது தலையெடுக்கலாமென்று சமயம்பார்த்து அநுமானுடனே சென்ற அறக்கடவுள் அங்கு அவன் பிரமாஸ்திரத்தாற் கட்டுப்பட்டுச் சாய்தலைக் கண்டு வருந்திப் புலம்பிக் கண்ணீர்பெருக்கிய தென்பார், 'அறத்தின் கண்ணினீரொடுஞ் சாய்ந்தான்' என உடனிகழ்ச்சியணிதோன்றக் கூறினர். கற்பாந்தகாலத்திலே கிரகநக்ஷத்திரதாரகைகள் வானத்தினின்று தவறிக் கீழ் விழுந்திடுதல், இயல்பு. மாமதி - பூர்ணசந்திரன். கலைநிறைந்து விளங்குகிற சந்திரமண்டலம் - திவ்வியவொளியுடன் விளங்குகிற அநுமானது பெரிய வடிவுக்கும், சந்திரனைப்பற்றிக்கொள்கிற பாம்புவடிவமான ராகு - அநுமானுடம்பைச் சூழ்ந்துகட்டிய நாகபாசத்துக்கும் உவமை.

ஒவ்வொருசமயத்தில் சந்திரனைமறைக்கிற பூமியின்சாயையும், சூரியனைமறைக்கிற சந்திரனதுசாயையு மாகிய இராகு கேது வென்னும் சாயாகிரகங்களைக் கரும்பாம்பு செம்பாம்புகளாகக் கூறுதல், கவிசமயம். அன்றியும், பாற்கடல்கடைகையி லுண்டான அமிருதத்தை எடுத்துக்கொண்ட திருமால் மிக அழகிய மோகினியென்னும் பெண்வடிவத்தால் அசுரர்களை மயக்கித் தேவர்கட்குமாத்திரம் அமிருதத்தைப் பங்கிட்டுக்கொடுத்து வருகையில், இராகுவென்னும் ஓர் அசுரன் தான் இருத்தற்கு உரிய அசுரர்கூட்டத்தை விட்டுத் தந்திரமாகத் தேவர்கோட்டியினிடையிலேபுக்குக் கையேற்று அமிருதத்தை வாங்கியுண்ண, அதனைச் சந்திரசூரியர்கள் குறிப்பித்தமாத்திரத்தில் எம்பெருமான் அவனை அசப்பையாலடித்துத் தலைவேறு உடல்வேறாக்க, அமிருதமுண்டதனால் உயிர்நீங்காத அத்தலையும் உடலும் விஷ்ணுவின் அனுக்கிரகத்தால் இராகுகேதுக்களென இரண்டுகிரகங்களாகிச் சூரியன் முதலிய எழுகிரகங்களோடு சேர்ந்து, தம்மேற்கோள்சொன்ன சந்திராதித்தர்க்குப் பகையாய்ப் பாம்புவடிவுகொண்டு சிற்சிலகாலத்தில் அவர்களைக் கௌவுகின்றன வென ஒருபுராணகதையும் உண்டு. இங்ஙனம் மறைக்கிற அல்லது பற்றுகிற காலமே கிரஹணகால மெனப்படுகின்றது.

திண்ணெனல் - வலிமைக்குறிப்பு. தண்ணெனல் - குளிர்ச்சிக்குறிப்பு. சந்திரன் சீதகிரணனுதலால், 'தண்ணென்மாமதி' எனப்பட்டான். திசைமுகன் - நான்குதிசையையும் நோக்கிய நான்கு முக முடையவன். கநகதோரணம் - வடமொழித்தொடர். (ருஅ)

[பிரமாஸ்திரத்துக்குக் கட்டுப்பட்டுச்சாய்ந்த அனுமானை வலியொடுங்கினனென்று இந்திரசித்து எண்ணுதல்.]

ருகூ. சாய்ந்தமாருதிசதுமுகன்படையெனுந்தன்மை
யாய்ந்துமற்றிதனுணையையவமதித்தகற
லேய்ந்ததன்றெனவெண்ணினன்கண்முகிழ்த்திருந்தா
னேய்ந்ததாமிவன்வலியெனவரக்கன்வந்துற்றான்.

(இ - ள்.) சாய்ந்த மாருதி - (இங்ஙனம்) கீழ்விழுந்த அநுமான்,—சதுமுகன் படை எனும் தன்மை ஆய்ந்து - (தன்மேற் பிரயோகிக்கப் பட்டது)

பிரமாஸ்திரமென்னுந் தன்மையை ஆராய்ந்தறிந்து, இதன் ஆணையை அவமதித்து அகறல் ஏய்ந்தது அன்றெனெ எண்ணினன் - தெய்வத்தன்மையுள்ள இந்த அஸ்திரத்தின் கட்டளையை அலக்ஷ்யஞ்செய்து இதனைவிட்டு விலகுதல் தக்கதன்று என்று எண்ணினவனாய், கண் முகிழ்த்து இருந்தான் - (அந்த அஸ்திரத்துக்குக் கட்டுப்பட்டுக்) கண்களை மூடிக்கொண்டிருந்தான்; (அது கண்டு), அரக்கன் - இந்திரசித்து, இவன் வலி ஓய்ந்தது ஆம் என வந்து உற்றான் - 'இவ்வானரனுடைய வலிமை ஒழிந்துவிட்டது' என்று எண்ணி அருகில் வந்து நெருங்கினான்; (எ - று.)

சதுர்முகன் - வடசொல்; நான்முகனென்பது பொருள். மற்று, ஆம் - அசைகள். மற்று - வினைமாற்றும், ஆம் - தேற்றமுமாம். அவமதித்து என்றதில். 'அவ' என்றது - எதிர்மறைப்பொருள் குறிக்கும் வடமொழியுபசருக்கம். வரபலத்தாற் பிரமாஸ்திரத்தையுங் கடக்கும் வல்லமையுடையனாயினும், அநுமான், தேவர்களைப் பெருமைப்படுத்தவேண்டு மென்னும் பெருந்தகைமையினால், தெய்விகசக்தியுள்ள அஸ்திரத்துக்கு வசப்பட்டிருந்தனனென்க.

[அரக்கர்கள் வந்து திரண்டு ஆரவாரித்தல்.]

கூo. உற்றகாலையி னுயிர்கொடு திசைதொறு மொதுங்கி
யற்றநோக்கினர் நிற்கின்றவா ளெயிற் றரக்கர்
சுற்றும்வந்துடல் சுற்றிய தொளையெயிற் றரவைப்
பற்றியீர்த்தன ரார்த்தனர் தெழித்தனர் பலரால்.

(இ - ள்.) உற்ற காலையின் - (அங்ஙனம் இந்திரசித்து) வந்து சமீபித்தபோது,—உயிர் கொடு திசைதொறும் ஒதுங்கி அற்றம் நோக்கினர் நிற்கின்ற வாள் எயிறு அரக்கர் பலர் - (அநுமானுடைய போரைப் பொறுக்கமாட்டாமல்) அரிதில் உயிர் தப்பி எல்லாத்திக்குக்களிலும் ஓடி ஒளித்து (அவ்வநுமானுக்குச்) சோர்வுநேருஞ் சமயத்தை எதிர்பார்த்து நிற்கின்றவர்களான வாள் போலுங்கூரிய பற்களையுடைய பல இராக்கதர்கள், சுற்றும் வந்து - எல்லாத் திசைகளினின்றும் வந்து அவ்வநுமானைச் சூழ்ந்துநின்று, உடல் சுற்றிய தொளை எயிறு அரவை பற்றி ஈர்த்தனர் - அவ்வநுமானுடம்பைச் சூழ்ந்துள்ளதான துவாரம்பொருந்திய பற்களையுடைய அந்தப்பாம்பைப் பிடித்து இழுத்தார்கள்; தெழித்தனர் - (அவ்வநுமானை) அதட்டினார்கள், ஆர்த்தனர் - (மகிழ்ச்சியால்) ஆரவாரித்தார்கள்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

'உற்றகாலையிற் சுற்றும்வந்து' என்று இயையும். 'உற்றகாலையின் உயிர்கொடு திசைதொறும் ஒதுங்கி' என்று இயைத்து, அநுமானால் தமக்குஅழிவு நேர்ந்தசமயத்தில் உயிர்தப்பியோடி என்று உரைப்பினுமாம். வாள் எயிறு - ஒளியையுடைய பற்களுமாம். தொளையெனினும், துளையெனினும் ஒக்கும். அரவைப் பற்றி ஈர்த்தனர் - அப்பாம்பின்வாலைப் பிடித்திழுத்து அநுமானுடம்பை இறுக்குவாராயின ரென்க. ஈர்த்தனர் ஆர்த்தனர் - இழுத்துக் கட்டினார்கள், தெழித்தனர் - (மகிழ்ச்சியாற்) பேரொலிசெய்தார்கள் என்றும் பதப்பொருள் கூறலாம்.

(கூo)

[இதுவும், அடுத்த கவியும் - அப்போழுதை நிலைமையின் வருணனை.]

சுக. குரக்குநல்வலங்குறைந்ததென்றாவலங்கொட்டி
யிரைக்குமாநகரெறிகடலொத்ததெம்மருங்குந்
திரைக்குமாசுணம்வாசுகியொத்ததுதேவ
ரரக்கரொத்தனர்மந்தரமொத்தனனநுமன்.

(இ - ள்.) குரக்கு நல் வலம் குறைந்தது என்று - இக்குரங்கினது மிக்க வலிமை ஒடுங்கிவிட்டதென்று எண்ணிக் களித்து, ஆவலம் கொட்டி - (எதிரியையிகழ்தற்குறிப்புத் தோன்ற) வாயினால் ஒருவகை ஒலிசெய்து கூத்தாடி, இரைக்கும் - (அரக்கர்களனைவரும்) ஆரவாரிக்கப்பெற்ற, மா நகர் - பெரிய அந்த இலங்காபுரியானது, எறி கடல் ஒத்தது - அலைவீசியொலிக்கின்ற (பாற்)கடலைப் போன்றது; எம்மருங்கும் திரைக்கும் மாசுணம் - (அநுமானை) எல்லாப்பக்கங்களிலும் சுற்றி இறுக்குகிற அஸ்திரமாகிய அப்பெரும்பாம்பானது, வாசுகி ஒத்தது - வாசுகியென்னும் மகாநாகத்தைப் போன்றது; அரக்கர் - (அந்நாகபாசத்தைப் பிடித்திழுக்கிற) இராக்கதர்கள், தேவர் ஒத்தனர் - (வாசுகியைப்பிடித்து இழுத்த) தேவர்களைப் போன்றார்கள்; அநுமன் - (நாகபாசத்தாற்கட்டப்பட்ட) அநுமான், மந்தரம் ஒத்தனன் - (வாசுகியாற்சுற்றப்பட்ட) மந்தரகிரியைப் போன்றான்; (எ - று.)

உவமையணி. "ஒன்று பெரிதாகும்" என்ற தொல்காப்பியவுரிச்சொல்லியற்சூத்திரத்தைத் தழுவி, 'நல்வலம்' என்பதற்கு - மிக்க வலிமையென்று உரைக்கப்பட்டது. வலம் - பலம் என்ற வடசொல்லின் விகாரம். 'ஆவலம் கொட்டுதல்' என்பது - தோற்றவர்க்கு அவமானந்தோன்ற வென்றவர் வாயினால் ஒருவகைச்சத்தத்தையெழுப்பி ஆடுதல்; இது இப்பொருளதாதலை "ஆனதங்கை வாய்சேர்த்தி யாவலங்கொட்டியார்த்தார்" என வில்லிபுத்தூரார்பாரதத்துங் காண்க. இலங்கையைப் பாற்கடலோடு உவமித்ததற்கேற்ப, அந்நகரைக் கலக்குகின்ற அநுமானுக்குக் கடல்கடைகிற மந்தரகிரியை உவமைகூறியமை சாலும். இவ்வரக்கரும் அத்தேவரும் பாம்பின் வாலைப் பற்றி இழுத்தவராதலும் கருதத்தக்கது.

முன்னொருகாலத்தில் இவ்வண்டகோளத்துக்கு அப்புறத்திலுள்ள விஷ்ணுலோகத்துச்சென்று திருமகளைப்புகழ்ந்துபாடி அவளால் ஒருபூமாலை பிரசாதிக்கப்பெற்ற ஒருவித்தியாதரமகள், மகிழ்ச்சியோடு அம்மாலையைத் தன் கைவீணையில் தரித்துக்கொண்டு பிரமலோகவழியாய் மீண்டு வருகையில், துர்வாசமகாமுனி எதிர்ப்பட்டு அவளை வணங்கித்துதிக்க, அவ்விஞ்சைமங்கை அம்மாலையை அம்முனிவனுக்கு அளித்திட்டாள். அதன்பெருமையையுணர்ந்து அதனைச் சிரமேற்கொண்ட அம்முனிவன், ஆனந்தத்தோடு தேவலோகத்துக்குவந்து மிக்க உல்லாசமாக ஐராவதயானையின்மேற் பவனிவந்துகொண்டிருந்த இந்திரனுக்கு அம்மாலையைக் கைநீட்டிக்கொடுக்க, அவன் அதனை அங்குசத்தால் வாங்கி யானையின் பிடரியின்மேல் வைத்தவளவில் அம்மதக்களிறு அதனைத் துதிக்கையாற் பிடித்து இழுத்துக் கீழெறிந்து

காலால் மிதித்துத் துவைத்தது. அதுகண்டு முனிவரன் கடுங்கோபங்கொண்டு 'இங்ஙனஞ் செல்வச்செருக்குற்ற நினது ஐசுவரியங்களெல்லாம் கடலில் ஒளித்துவிடக்கடவன' என்று சாபங்கொடுக்க, உடனே தேவர்செல்வம் யாவும் ஒழிந்தன. ஒழியவே, அசுரர் வந்து பொருது அமரரை வெல்வாராயினர். பின்பு இந்திரன் தேவர்களோடு திருமாலைச்சரணமடைந்து அப்பிரான் அபயமளித்துக் கட்டளையிட்டபடி அசுரர்களையுந் துணைக்கொண்டு மந்தரமலையை மத்தாகநாட்டி வாசுகியென்னும் பாம்பைக் கடைகயிறாகப்பூட்டி அப்பாம்பின்வாலைத் தாங்களும் அதன்தலையை அசுரர்களுமாகப் பிடித்து இழுத்து அந்தப்பாற்கடலைக் கடைந்தனரென்பது, இங்கு அறியவேண்டிய கதை. (௬௧)

௬௨. கறுத்தமாசுணங்கனகமாமேனியைக்கட்ட
வறத்துக்காங்கொருதனித்துணையாநின்றவனுமன்
மறத்துமாருதம்பொருதநாள்வாளராவரசு
புறத்துச்சுற்றியமேருமால்வரையையும்போன்றான்.

(இ - ள்.) கறுத்த மாசுணம் - கருநிறமுள்ள அப்பெரும்பாம்பு, கனகம் மா மேனியை கட்ட - பொன்னிறமான பெரிய தனது உடம்பைச் சூழ்ந்து கட்ட,— அறத்துக்கு ஆங்கு ஒரு தனி துணை ஆ நின்ற அனுமன் - தர்மதேவதைக்கு அவ்விலங்காபுரியில் தாமொருவனே துணைவனாக நின்றவனான அவ்வநுமான்,—மறத்து மாருதம் பொருத நாள் - வலிமையோடு காற்றுவீசியடித்தகாலத்து, வாள் அரா அரசு புறத்து சுற்றிய - ஒளியை யுடைய சர்ப்பராசனான ஆதிசேஷனால் எப்புறத்துஞ் சூழப்பட்ட, மால் மேரு வரையையும் - மகாமேருகிரியையும், போன்றான் -ஒத்தான்; (எ - று.)

இதுவும் உவமையணி. அநுமான் பொன்னொத்தமேனிய னாதலால், அவனுக்குப் பொன்மயமான மேருமலையை உவமைகூறியமை சாலும்; ("காஞ்சநாத்ரிகமநீயவிக்ரஹம்" என்ற வடமொழிமேற்கோள் இங்குக்கருதத்தக்கது.) பெருவடிவமுள்ள அவனைச் சூழ்ந்து இறுக்கிய பெரும்பாம்புக்கு, மகாமேருகிரியை வளைத்துக் கவிந்து இறுக்கிய ஆதிசேஷனை உவமைகூறினர். கறுத்தமாசுணம் - கோபித்த பாம்பு எனினுமாம்; சீறுதலும் கறுக்கொள்ளுதலும் நாகத்தி னியல்பு. கனகம் ஆம் மேனி என்று பிரித்தும் உரைக்கலாம். ஆ - ஆக என்பதன் விகாரம். மறம் - பகைவெல்லுங்கருத்துமாம். வாள் அராவரசு - கொடிய சர்ப்பராசன் எனினுமாம். 'அராவரசு' என்ற விடத்து, குறிய்தன்கீழ் ஆகாரம் குறுகாது நின்றது. மால்-பெருமை; உரிச்சொல். வரையையும் என்ற உம்மை - கீழ்க்கவியைநோக்கி இறந்தது தழுவிய எச்சம்.

பின்னிரண்டடியிற் குறித்த கதை:—முன்னொருகாலத்தில் வாயுதேவனுக்கும் ஆதிசேஷனுக்கும் தமக்குள் யார்பலசாலியென்று விவாதமுண்டாக, அதனைப்பரீக்ஷித்தறிதற்பொருட்டு வாயுதேவன் மேருமலையின்சிகரத்தைப் பெயர்த்துத்தள்ளுவ தென்றும், ஆதிசேஷன் அதுபெயராவொட்டாமற் காத்துக்கொள்வ தென்றும் கோட்பாடு உண்டாகி, அங்ஙனமே அவ்விருவரும்

தேவர்முதலியோரது முன்னிலையில் தம்தம்வலிமையைக் காட்டத்தொடங்கியபொழுது ஆதிசேஷன் மேருகிரியை வளைந்து தனது ஆயிரம்படங்களாலும் அம்மலையின் ஆயிரம் சிகரங்களையும் கவித்துக்கொண்டு பெயரவொட்டாமல் வெகுநேரம் காக்க, பின்பு வாயுதேவன் தனதுவலிமையினால் அம்மலைச்சிகரங்களில் மூன்றைப் பெயர்த்துக்கொண்டுபோய்த் தென்திசையில் தள்ளிவிட்டனனென்பதாம். (சுஉ)

[அரக்கர்களிப்பு.]

சுங. வந்தி ரைத்தனர் மைந்தரு மகளிரு மழைபோ
லந்த ரத்தினும் விசும்பினுந் திசைதொறு மார்ப்பார்
முந்தி யுற்றதோ ருவகைக்கோர் கரையிலை மொழியி
னிந்தி ரன்பிணிப் புண்டநா ளொத்ததவ் விலங்கை.

(இ - ள்.) மைந்தரும் - (இராக்கதர்களில்) ஆடவர்களும், வந்து இரைத்தனர் - (அப்பொழுது அங்கு) வந்து ஆரவாரஞ்செய்தார்கள்; மகளிரும் - பெண்பாலாரும், அந்தரத்தினும் விசும்பினும் திசைதொறும் மழை போல் ஆர்ப்பார் - வானத்திலும் மேலுலகத்திலும் எட்டுத்திக்குகளிலும் (ஒலிபரவும்படி)மேகங்கள்(இடிமுழங்குவது)போல ஆரவாரிப்பவரானார்கள்; உற்றது ஓர் உவகைக்கு - (இங்ஙனம் அப்பொழுது இராக்கதர்களெல்லாரும்) கொண்டு பாராட்டிய ஒப்பற்ற மகிழ்ச்சிக்கு, ஓர் கரை இலை - ஓர் எல்லையில்லை; மொழியின் - (அதற்கு ஒப்புமை) கூறுமிடத்து, அ இலங்கை - அப்பொழுது அந்த இலங்காபுரியானது, முந்தி இந்திரன் பிணிப்புண்ட நாள் ஒத்தது - முன்பு தேவேந்திரன் (மேகநாதன்கையிற்) கட்டுப்பட்டநாளிற் களிப்படைந்தது போன்றது; (எ - று.)

மைந்து - வலிமை; அதனையுடையவர், மைந்தர். அந்தரம் - நிலவுலகத்துக்கும் மேலுலகத்துக்கும் நடுவிடம்; வடசொல். விசும்பு என்ற ஆகாயத்தின் பெயர், அங்கு உள்ள தேவலோகத்துக்கு இடவாகுபெயராம். கரையென்றதற்கு ஏற்ப, உவகையைக் கடலாகக்கொள்க. மேகநாதன் தேவேந்திரனைப் பிடித்துக்கட்டிக் கொண்டுவந்தபோது இலங்காநகரத்து அரக்கர்கள் எப்படி சந்தோஷித்தார்களோ அப்படியே அவன் அநுமானைப் பிடித்துக்கட்டிய இப்போதும் சந்தோஷித்தார்கள் என்பதாம். இந்திரசித்தின் திறமையினாலாகிய மகிழ்ச்சிக்கு அவன் திறமையினாலாகிய வேறொரு மகிழ்ச்சியே உவமையாகத்தகுமன்றி வேறு உவமை எலாதென்பது தொனிக்க, "மொழியின் இந்திரன் பிணிப்புண்ட நாளொத்தது"என்றார். தேவாம்சமான வாநரர்களிற் சிரேஷ்டனான அநுமானுக்குத் தேவராசனான இந்திரனோடு ஒப்புமைஏற்கும். முந்திப் பிணிப்புண்ட என்று இயைக்கப்பட்டது. முந்தி உற்றது என்று இயைத்து, இனி அவ்வரக்கர்கள் அடையுந் துன்பத்துக்கு முன்னே நேர்ந்தான ஒருமகிழ்ச்சிக்கு என்று உரைப்பாருமுளர்; அத்துன்பத்தை மேல் 'இலங்கை யெரியூட்டுபடலம்' முதலாகக் காண்க. (சுங)

பாசப்படலம் முற்றிற்று.



பதின்மூன்றாவது

# பிணிவீட்டுபடலம்.

கட்டு விடுவித்த செய்தியைக் கூறும் பாக மென்று பொருள்படும். பாம்பு வடிவுகொண்ட பிரமாஸ்திரமாகிய பாசத்தினு லுண்டான அநுமானது உடற்பிணிப்பை இந்திரசித்து விடுவித்த செய்தியும், பின்பு அரக்கர்கள் பல கயிறுகள்கொண்டு கட்டிய பந்தத்தை அநுமான் தானே விடுவித்துக்கொண்ட செய்தியும் இப்படலத்துக் கூறப்படுகின்றன. பிணி வீட்டு படல மென மூன்று சொற்கள் தொடர்ந்த இரண்டுசந்தியில், முன்னது - இரண்டாம் வேற்றுமைத்தொகை; பின்னது - வினைத்தொகையாகக்கொண்டு கருத்த மைக்கத்தக்கது. பிணி - முதனிலைத்தொழிற்பெயர். வீட்டு - விடு என்பதன் விகாரமான வீடு என்ற வினைப்பகுதியின் பிறவினை; இடையிலே தன் ஒற்று இரட்டியது, பிறவினைக்குறி. வீட்டுப்படலம் என்ற பாடத்துக்கு, விடுவித் ததையுணர்த்தும்பாக மென, இரண்டனுருபும் பயனுந் தொக்க தொகையா கப் பொருள்காண்க. எட்டுப்பிரதிகள் பலவற்றில், 'பிணிவிடுபடலம்' என்று உள்ளது; அது, (அநுமான்) கட்டுநீங்கிய பாக மென்று இனிதுபொருள் படும்.

வேறு.

[இதுமுதல் ஐந்து கவிகள் - கட்டுப்பட்ட அநுமானைக் கண்ட அரக்கர்களின் பலவகைநிலைமையைக் கூறும்.]

க. எய்யுமி னீருமி னெறிமின் போழுமின்
கொய்யுமின் குடரினைக் கூறு கூறுகள்
செய்யுமி னுலகிடைத் தேய்மின் றின்னுமி
னுய்யுமே லில்லைநம் முயிரென் றோடுவார்.

(இ - ள்.) எய்யுமின் - (இந்தக்கொடியகுரங்கை) அம்புகொண்டு எய் யுங்கள்; ஈருமின் - கத்தியால் வெட்டுங்கள்; எறிமின் - ஈட்டியாற் குத்துங் கள்; போழுமின் - கோடாலியாற் பிளவுங்கள்; குடரினை கொய்யுமின் - (இதன்) குடலைப்பறித்திடுங்கள்; கூறு கூறுகள் செய்யுமின் - (இதனைப்)பல துண்டுகளாகச் செய்யுங்கள்; உலகிடை தேய்மின் - (இதனைப்பிடித்துத்) தரையிலே தேய்த்து அழியுங்கள்; தின்னுமின் - (இதன்உடற்றசையைத்) தின்னுங்கள்; உய்யும்எல் நம் உயிர் இல்லை - (இனி இது) பிழைக்குமானால் நமதுஉயிர் இல்லாததாகும்: என்று - என்றுசொல்லிக்கொண்டு, ஓடுவார் - (பலஇராக்கதர்கள்) ஓடிவருவார்கள்; (எ - று.)

கூறுகூறு என்றவிடத்து,அடுக்கு - பன்மைகுறிக்கும். பலகூறுகள் செய்தல் - சின்னபின்னப்படுத்தல். உலகிடைத்தேய்த்தல் - தரையிலிட்டு அரைத்தலுமாம். இது பிழைத்தால் நம்மையெல்லாந் தவறாதுகொன்றிடு மென்பது, அவர்கள்கொண்டகருத்து. அரக்கர்களுடைய வெகுளிக்கொதிப்பு

விளக்குதலால், இச்செய்யுள், உருத்திரச்சுவைக்கு உதாரணமாகத்தக்கது. இரண்டாமடி - முற்றுமோனை.

இதுமுதல் முப்பது கவிகள் - கீழ்ப்படலத்தின் முதற்கவி போன்ற கலிவிருத்தங்கள். (க)

உ. மைத்தடங்கண்ணியர் மைந்தர் யாவரும்
பைத்தலையரவெனக் கனன்று பைதலை
யித்தனைபொழுதுகொண் டிருப்பதோவெனு
மொய்த்தனர் கொலைசெயமுயல்கின்றார்சிலர்.

(இ - ள்.) மை தட கண்ணியர் - மையிட்ட பெரிய கண்களையுடையவர்களான * மகளிரும், மைந்தர் - ஆடவரும், யாவரும் - ஆகிய எல்லாரும், பை தலை அரவு என கனன்று - படமுள்ள தலையையுடைய நாகம்போலச் சீற்றங்கொள்ள, சிலர் - (அவர்களிற்) சிலபேர், பைதலை இத்தனை பொழுது கொண்டு இருப்பதோ எனு - 'இந்தக் குரங்குப்பயலை இவ்வளவு நேரம் உயிருடன் வைத்துக்கொண்டிருப்பதோ' என்று எண்ணியும் சொல்லியும், மொய்த்தனர் கொலை செய முயல்கின்றார் - திரண்டுவந்துநெருங்கி (அநுமானை)க்கொல்ல யத்தனஞ்செய்கின்றவராளுர்கள்; (எ - று.)

கனன்று = கனல: எச்சத்திரிபு. இனி, 'மைத்தடங்கண்ணியர் மைந்தர் யாவரும்' என்பதை முந்தினசெய்யுளோடு குளகமாக்கி 'ஓடுவார்' என்பதனோடு இயைத்துவிட்டால், கனன்றுஎன்பதைத் திரிக்கவேண்டுவதில்லை. பைதல் - சிறுவன் என்றபடி: இகழ்ச்சி தோன்ற எளிதுபடக் கூறியது; துஷ்டப்பயலென்க. (உ)

௩. நச்சடைபடைகளானவியுமீட்டதோ
வச்சிரமுடன்மறிகடலின்வாய்மடுத்
துச்சியினழுத்துமினுருத்ததின்றெனி
னிச்சிடையிடுமெனக்கிளக்கின்றார்சிலர்.

(இ - ள்.) (இக்குரங்கு), நஞ்சு அடை படைகளால் - விஷந்தடவிய ஆயுதங்களைக்கொண்டு, நவியும் ஈட்டதோ - வருத்திக்கொல்லப்படத்தக்கதோ? [கொல்லமுடியாது என்றபடி]; (ஆகவே), வச்சிரமுடன் மறி கடலின் வாய் மடுத்து - வச்சிராயுதத்தை இதன்தலையில்வைத்து அதனுடனே (இக்குரங்கை)அலைமடங்கப்பெற்ற கடலிலே போகட்டு, உருத்து உச்சியின் அழுத்துமின் - கோபாவேசங்கொண்டு [உக்கிரமானவேகத்தோடு] இதன்உச்சந்தலையிலே (அவ்வச்சிராயுதமுட்பட மீண்டும்மேலெழாதபடி எல்லாரும்) அழுத்திடுங்கள்; அது இன்று எனின் - அங்ஙனமில்லையானல், கிச்சிடை இடும் - இதனை நெருப்பிற்போகட்டுக் கொல்லுங்கள், என கிளக்கின்றார் சிலர் - என்று சில அரக்கர்கள் சொல்லுகின்றார்கள்; (எ - று.)

நஞ்சு - நச்சு என மென்றொடர் வன்றொடராயிற்று. உருத்தது இன்று எனின் என்று பிரித்து, இன்று உருத்ததுஎனின் - இப்பொழுது கோபங்

கொண்டதானால் என்று உரைப்பாருமுளர். இச்சு செருப்பாதலை, "எரிகின்ற இச்சிலுருக்கிட்டுய்த்தன னென்னை" என ஆரணியகாண்டத்திலும் காண்க. 'நச்சுறுபடைகளால்' என்றும் பாடமுண்டு. (௩)

௪. எந்தையையெம்பியையெம்முனோர்களைத்
தந்தனைபோகெனத்தடுக்கின்றார்பல
ரந்தரத்தமரர்தமாணையாலிவன்
வந்ததென்றுயிர்கொளமறுகினார்பலர்.

(இ - ள்.) 'எந்தையை - (உன்னால் உயிர்கவரப்பட்ட) எமது தந்தையையும், எம்பியை - எமது தம்பியையும், எம் முனோர்களை - எமது தமையன்மார்களையும்,—தந்தனை - மீளக்கொணர்ந்துகொடுத்து, போகு - அப்பாற்செல்', என தடுக்கின்றார் பலர் - என்றுசொல்லிப் பல அரக்கர்கள் (அநுமானை) மறித்துக்கொள்பவரானார்கள்; 'இவன் வந்தது - இந்த ஆண்குரங்கு இங்கு வந்தசெயல், அந்தரத்து அமரர்தம் ஆணையால் - வானுலகத்திலுள்ள தேவர்களுடைய கட்டளையினாலாகும்', என்று - என்றுமாறாகஎண்ணி, உயிர் கொள மறுகினார் பலர் - அத்தேவர்களுயிரைக் கொள்ளுமாறு மனம்மாறுபட்டார்கள் பல அரக்கர்கள்; (எ - று.)

பல அரக்கர்களுடைய தந்தையர் தம்பியர் தமையன்மார்களை அநுமான் கீழ்நிகழ்ந்த போர்களிற் கொன்றிட்டனனாதலால், அவர்களையிழந்த மக்களும் தமையன்மாரும் தம்பியருமான பல்அரக்கர்கள் 'உன்னால் உயிர்கவரப்பட்ட எமது அஃபுடைச் சுற்றத்தார்களை மீளக்கொணர்ந்துகொடு' என்று அநுமானை மறித்துக்கொண்டன ரென்க. இவன் இங்குவந்தது மேலுலகத்திலுள்ள தேவர்களின் கட்டளையினா லாதலால், அவர்கள் சொன்னது செய்யும் ஏவலாளாய் வந்த இவனைக் கொல்வதிற் பயனில்லை, இவனை இங்ஙனஞ் செய்யுமாறு ஏவியனுப்பிய அத்தேவர்களையே கொல்லவேண்டுமென்று பல அரக்கர்கள் கருதின ரென்க. இவனைக்கொல்லுமாறு முதலிற்கொண்ட கருத்து உடனே ஆலோசித்ததில் மாறிவிட்டதனால், 'மறுகினார்' என்றார்; மறுகுதல் - புரளுதல்: இவன்வந்தது தேவர்கள் கட்டளையா லாதலால் இவனையே விய தேவர்களைக் கொல்லவேண்டுமேயன்றி, ஏவலாளாய் வந்த இவனைக் கொல்லலாகாதென்றெண்ணி இவனுயிரைக் கவர்தற்குப் பின்வாங்கினார்களென்றும்; தேவர்கள் கட்டளையால் வந்த அவர்கள் படைவீரனான இவனைக் கொல்லுமாறு மனங்கலங்கினார்க ளென்றும் உரைகூறலாம். உயிர்கொள - கொல்ல. 'இவண்வந்தது' என்றும் பாடமுண்டு. (௪)

௫. ஓங்கலம்பெருவலியுயிரினன்பரை
நீங்கலமின்றெனநீங்கினாயினி
யேங்கலமிவன்சிரத்திருந்தலாற்றிரு
வாங்கலமென்றழுமாதரார்பலர்.

(இ - ள்.) ஓங்கல் அம் பெரு வலி - மலைபோன்ற மிக்க வலிமையை யுடைய, உயிரின் அன்பரை - (எமது) உயிர்போன்ற அன்புடைய கணவரை, நீங்கலம் - இதுவரையிலும் பிரிந்திலோம்; இன்றுநீங்கினும் - இன்றைத் தினம் முதலாகப் பிரிவதானாலும்; இனி ஏங்கலம் - இங்ஙனம் பிரிவுநேர்ந்து விட்டபின்பு அப்பிரிவுக்காக ஏங்கிக்கிடவாமல், இவன் சிரத்து இருந்து அலால் திரு வாங்கலம் - (அப்பிரிவை விளைத்தவனான இவன் சிதையுமாறு) இவன் தலையின்மேல் ஏறியிருந்தே திருமங்கலியத்தை வாங்குவோம், என்று - என்றுசொல்லி, அழும் - புலம்புகின்ற, மாதரார் பலர் - இராக்கதமகளிர் அநேகர்; (எ - று.)

கொடிய இராக்கதசாதியிற்பிறந்த மகளிராதலால், நேர்ந்தசோகத்தையே நெடும்பொழுது பாராட்டிக் கொண்டிராமற் கறுவுகொண்டு பழிவாங்குங் கருத்துடையராயினரென்க. ஓங்கல் - உயர்ச்சி; உயர்வுடையதான மலைக்குத் தொழிலாகுபெயர்; இக்காரணப்பெயர், யானைக்கும் வழங்கும். பெருவலி - மகாபலம். 'ஓங்கலம்பெருவலி' என்றவிடத்து, அம் - சாரியை. உயிரினன்பர் - பிராணநாயகர். 'இருந்தலால் திருவாங்கலம்' என்றவிடத்து, இரண்டு எதிர்மறை சேர்ந்து உடன்பாட்டுப்பொருளை யுணர்த்தித் தேற்றக்கருத்தை விளக்கிற்று. திருவாங்குதல் - தாலியறுத்தல். திருஎன்ற இலக்குமியின் பெயர், ஆகுபெயராய், லக்ஷ்மீகரமான மங்கலநாணைக் குறித்தது. "மாதர் காதல்" என்ற தொல்காப்பியத்தின்படி விருப்பத்தை யுணர்த்துகிற மாதர் என்ற உரிச்சொல் - ஆகுபெயராய், விரும்பப்படும் அழகுடைய மகளிரைக் குறிக்கும்; இதன்மேல், ஆர் - பலர்பால் விகுதி. 'யாங்களு மிவன்சிரமற்ற லாற்றிரு, வாங்கலமென்றழு மாதரார்' என்னும் பாடமுண்டு. (௫)

[இராக்கதர்களின் பேராரவாரம்.]

சூ. கொண்டனரெதிர்செலுங்கொற்றமாநக
ரண்டமுற்றதுநெடிதார்க்குமார்ப்பது
கண்டமுற்றுளவருங்கணவர்க்கேங்கிய
குண்டலமுகத்தியர்க்குவகைகூரவே.

(இ - ள்.) கொண்டனர் எதிர் செலும் - (நாகபாசத்தைப்பற்றி அநுமானை) இழுத்துக்கொண்டு செல்பவர்களுக்கு எதிரிலே (வேடிக்கைபார்க்க) வருகிற, கொற்றம் மா நகர் - வெற்றியையுடைய அந்தப் பெரிய லங்காபுரியானது [இலங்கையிலுள்ள அரக்கர்களனைவரும் என்றபடி], நெடிது ஆர்க்கும் - மிகுதியாக ஆரவாரஞ்செய்கிற; ஆர்ப்பு அது - அந்த ஆரவாரமானது,— கண்டம் உற்று உள அருங் கணவர்க்கு ஏங்கிய குண்டலம் முகத்தியர்க்கு உவகை கூர - (அநுமானால்) துண்டுபட்டு அழிவடைந்த அருமையான தங்கள் கணவர்களைக்குறித்துச் சோகிக்கிற குண்டலமென்னுங் காதணியினால் விளங்கும் முகத்தை யுடையவர்களான இராக்கதமகளிர்க்கு மகிழ்ச்சிமிகுமாறு, அண்டம் உற்றது - உலகம் முழுவதும் பரவிற்று; (எ - று.)

கொண்டனர் எதிர்செலும் - அநுமானை இழுத்துக்கொண்டு வருகிறவர்களை மகிழ்ச்சியோடு எதிர்கொள்ளுகிற என்றும் கொள்க. இங்குக் தொற்றம்- அநுமானைப் பிடித்ததனு லானது. அண்டம் உற்றது - ஆகாயத்தை யளாவிற்று எனினுமாம். தங்கள் கணவரைக் கொன்றிட்ட அநுமானைக் கட்டியிழுத்துவருகிற செய்தியைக் கண்டு மகிழ்ச்சிகொண்டு ஆரவாரிக்கிற பேரொலியைக் கேட்டதனுல், கணவரையிழந்த ராக்ஷஸஸ்திரீகள் சோகம் ஒழிந்து சந்தோஷங்கொள்வாராயின ரென்க. 'கண்டமற்றுலந்த தங்கணவர்க்கு' என்றும், 'முகத்தியரோகை கூறவே' என்றும் பாடமுண்டு. (சு)

[அநுமான் தன்னுற்சிதைபட்ட மாடமாளிகைகளைப் பார்த்துக்கொண்டே இலங்கையின் வீதிவழியாகச் செல்லுதல்.]

எ வடியுடைக்கனற்படைவயவர்மால்கரி
கொடியுடைத்தேர்பரிகொண்டுவீசலி
னிடிபடச்சிதைந்தமால்வரையினில்லெலாம்
பொடிபடக்கிடந்தனகண்டுபோயினுன்.

(இ - ள்.) வடி உடை கனல் படை வயவர் - கூர்மையையுடைய நெருப்புப்போலக் கொடிய ஆயுதங்களைத் தரித்த வீரர்களையும், மால் கரி - பெரிய யானைகளையும், கொடி உடை தேர் - துவசத்தையுடைய தேர்களையும், பரி - குதிரைகளையும், கொண்டு வீசலின் - தான் கையிலெடுத்து வீசியெறிந்ததனுல், இடி பட சிதைந்த மால் வரையின் - (தம்மேல்) இடிவிழுதலாற் சிதைவுபட்ட பெரியமலைகள்போல, பொடி பட கிடந்தன - பொடிப்பொடியாக நொறுங்கிக்கிடந்தனவான, இல் எலாம் - (இலங்கைமாநகரத்து) வீடுகளையெல்லாம், கண்டு - (மகிழ்ச்சியோடு) பார்த்துக்கொண்டே, போயினுன்- (அநுமான் அந்நகரத்து வீதிகளின் வழியாய்ச்) சென்றுன்; (எ - று.)

அரக்கர்கள் நாகபாசத்தைப்பற்றித் தன்னையிழுத்துக்கொண்டு செல்லுமளவில் அநுமான் அந்நகரத்து மாளிகைகளின் அலங்கோலநிலைமையைப் பார்த்துக்கொண்டே போயின னென்க. வடி - வடித்தல்; நெருப்பிலிட்டுக் காய்ச்சியடித்தல்; முதனிலைத்தொழிற்பெயர். தான் சேர்ந்தவிடத்தை யழித்தலால், ஆயுதங்கட்கு நெருப்பு உவமை. கனற்படை - கொடுமை மிகுதியால் தீயைச்சொரிகிற படைஎனினுமாம். "வய வலியாகும்" என்ற தொல்காப்பியத்தின்படி 'வய' என்பது - வலிமையுணர்த்துவதோ ருரிச்சொல்லாம்; அதனையுடையவர், வயவர். கரம் - கை; இங்கே, துதிக்கை; அதனையுடையது கரீ எனக் காரணக்குறி; அவ்வடசொல், கரியென ஈயிறு இகரமாயிற்று; இதற்குக் கருமையையுடையதெனக் காரணப்பொருள் கூறலாகாது, வடமொழித் திரிபாதலின். நால்வகைச்சேனையுள்ளும் உயர்திணையாதலின் காலாளை முதலிற்கூறி, மற்றை அஃறிணைமூன்றில் மதத்தினுற்கதஞ்சிறந்து தானும்போர் செய்வதாதல்பற்றி, யானையை அதனையடுத்துக்கூறினுர். தேர்குதிரைகளில், தேர், வீரர்க்குச் சிறந்த ஊர்தியாதலால், முந்தி நிறுத்தப்பட்டது. (எ)

[இதுமுதல் நான்கு கவிகள் - மற்றும்பல அரக்கர்களின் பலவகை நிலைமையைக் கூறும்.]

அ. முயிறலைத்தெழுமுதுமரத்தின்மொய்ம்புதோள்
கயிறலைப்புண்டதுகண்டுகாண்கிலா
தெயிறலைத்தெழுமிதழரக்கரேழையர்
வயிறலைத்திரியலின்மயங்கினார்பலர்.

(இ - ள்.) கண்டு - (அநுமானைப்)பார்த்து. முயிறு அலைத்து எழும் முது மரத்தின் மொய்ம்புதோள் கயிறு அலைப்புண்டது காண்கிலாது - எறும்புகள் விரைந்துவந்து மேலேறிச்சஞ்சரித்துச் சூழ்ந்து மொய்க்கப்பெற்ற பழமையான [பெரிய] மரம்போல (அவ்வநுமானுடைய) வலிமையுள்ள தோள்கள் நாகபாசத்தாற் கட்டுப்பட்டிருப்பதைப் பார்த்திடாமல், ஏழையர் வயிறு அலைத்து இரியலின் - பேதையரான ராக்ஷஸஸ்திரீகள் (அக்குரங்கு இங்கும் வந்துவிட்டதே யென்று அஞ்சி வருந்தித்) தங்கள்வயிற்றைப் பிசைந்துகொண்டு ஓடுகிறதனால், எயிறு அலைத்து எழும் இதழ் அரக்கர் பலர் மயங்கினார் - கோரப்பற்கள் வாயினுள்ளிருந்து மோதிவந்து வெளியேதோன்றப்பெற்ற உதட்டையுடைய பல இராக்கதர்கள் (இன்னும் இக்குரங்கு பயங்கரமானசெயல் யாதுசெய்யத் தொடங்கிவிட்டதோ என்று) திகைப்புற்றார்கள்; (எ - று.)

மேல்நோக்காக மரத்தைப்பார்ப்பவர்கட்கு அம்மரம் தெரியுமேயன்றி அதன்மேலிடம் முழுதுஞ் சூழ்ந்து நிறைந்துநிற்கிற எறும்புகளின் வரிசை தெரியாதவாறுபோல, அநுமானை மேல்நோக்காகப்பார்த்த இராக்கதஸ்திரீகள் அவன்தோள்களிற் பிணித்துள்ள நாகபாசத்தை நுட்பமாக நோக்கினாரில்லை யென்க. நுண்ணிதாகநோக்கி உண்மையையுணராது மிக்க அச்சமுற்றதற்குக் காரணம் மகளிர்க்குரிய மடமையென்னுங் குணமென்பது தோன்ற, 'ஏழையர்' என்றார். வயிறு அலைத்தல் - வயிற்றிலடித்துக்கொள்ளுதலுமாம்; இவை சோகத்தின் காரியம். அரக்கர்கள் தம்மகளிரிடத்துள்ள அன்புமிகுதியால், அவர்கள் வயிறலைத்து ஓடுதலைக் கண்டமாத்திரத்திலே அதற்குக்காரணம் இன்னதென்று விசாரித்தறியாமலே தாம்மதிமயங்கினரென்க. முயிறு - ஒருவகை எறும்பு. முதுமர மெனவே, பெரியமரமென்றதாயிற்று. மொய்ம்பு தோள் என வேற்றுமைப்புணர்ச்சியில் செய்யுளோசைநயம் நோக்கி இயல்பாய் நின்றது. 'எயிறலைத்தெழும் இதழ்' என்ற அடைமொழி, இராக்கதர்களுடைய கோரரூபத்தை விளக்கும். இரியல் - அஞ்சிநிலைகெட்டு ஓடல். 'எயிறலைத்தழுதெழுமரக்கர்' என்றும் பாடமுண்டு. (அ)

ஆர்ப்புறவஞ்சினாரடங்கினார்பலர்
போர்ப்புறச்செயலினைப்புகல்கின்றார்பலர்
பார்ப்புறப்பார்ப்புறப்பயத்தினிற்பதைத்
தூர்ப்புறத்திரியலுற்றோடுவார்பலர்.

(இ - ள்.) ஆர்ப்பு உற அஞ்சினர் அடங்கினர் பலர் - (இதுவரையில் அநுமான்செய்த செயல்களா லுண்டான அச்சத்தால் இப்பொழுதும்) ஆரவாரஞ்செய்தற்குப் பயந்து அடங்கியிருந்தார்கள் பலஇராக்கதர்கள்; போர்ப்புறம் செயலினை புகல்கின்றார் பலர் - (அவ்வநுமான்) போரிற்செய்த செயல்களைச் சொல்லுகின்றார்கள் பல இராக்கதர்கள்; பார்ப்புற பார்ப்புற பயத்தினால் பதைத்து ஊர்ப்புறத்து இரியல் உற்று ஓடுவார் பலர் - (அவ்வநுமானைப்) பார்க்குந்தோறும் அச்சத்தினால் துடிதுடித்து ஊர்க்குவெளியே சிதறியோடுபவரானார்கள் பல இராக்கதர்கள்; (எ - று.)

இனி, முதலடிக்கு - அநுமான் ஆரவாரஞ்செய்தலால் தாம் அஞ்சி அடங்கினர் பல அரக்கர் என்று உரைத்தல் பொருந்தாது. 'போர்ப்புறம்' என்றவிடத்து, புறம் - ஏழனுருபு; "உள் அகம் புறம் இல் இடப்பொருளுருபே" என்பது நன்னூல். பார்ப்புறப் பார்ப்புற - அடுக்கு, தொறுப்பொருளது. 'செயலினைப்புகழ்கின்றார்' என்பதும் பாடம்.　(௬)

௪0.　காந்துறுகதவெயிற்றரவின்கட்டொரு
பூந்துணர்சேர்த்தெனப்பொலியும்வாண்முகந்
தேர்ந்துறுபொருள்பெறவெண்ணிச்செய்யுமின்
வேந்துறல்பழுதெனவிளம்புவார்சிலர்.

(இ - ள்.) காந்துறு - (எப்போதும்) கோபதாபங்கொள்வதும், கதழ் - கொடுமையுள்ளதும், எயிறு - (விஷப்)பற்களை யுடையதுமான, அரவின் - பாம்பினாலாகிய, கட்டு—, ஒரு பூ துணர் சேர்த்து என - ஒரு பூமாலைகொண்டு கட்டினதுபோல் ஆக, வாள் முகம் பொலியும் - (இக்குரங்கினது) ஒளியுள்ள முகம் விளக்கமுற்றிருக்கின்றது; (ஆதலால்), தேர்ந்து - விரைவுபடாது ஆலோசித்து, உறு பொருள் பெற எண்ணி - நல்ல பயனைப் பெறுமாறு சிந்தித்து, செய்யுமின் - (அதற்கப்பால் செய்யவேண்டிய காரியத்தைச்) செய்யுங்கள்; வேந்து உறல் பழுது - (விரைந்து இதனை) அரசனிடத்திற் கொண்டுசேர்தல் பயனுடையதன்று, என - என்று, விளம்புவார் சிலர் - சில அரக்கர்கள் சொல்வார்கள்; (எ - று.)

"அடுத்ததுகாட்டும் பளிங்குபோல் நெஞ்சங், கடுத்ததுகாட்டும் முகம்" என்றபடி, மனத்திலுள்ள நிலைமை முகத்தின்குறிப்பிலே தெரியுமன்றோ; இப்பொழுது இக்குரங்கின்முகம் சிறிதும்வாட்டமடையாமல் நன்குவிளக்கமுற்றிருக்கின்றதே: ஆதலால், இதற்கு நாகபாசபந்தம் ஒருபூமாலைகொண்டு கட்டியவாறுபோலச் சிறிதேனும் துன்பந்தந்திலது; இங்ஙனம் வலியொடுங் காததை விரைவில் அரசனிடங்கொண்டு சேர்தல் தகுதியன்று; ஆதலால், விரையாது நீர்க்காலோசனைசெய்து நன்மையுண்டாகும் வழியை யுணர்ந்து அதற்கு ஏற்பத் தொழில்செய்யுங்கள் என்று பிறர்பலரையும் நோக்கிக் கூறினர் சில அரக்கரென்க. இங்ஙனம் நுண்ணிதினுணர்ந்து அதனைக் கூறுந்திறமுடையார் பலரன்றிச் சிலரே யாதலால், 'எனவிளம்புவார் சிலர்' என்றார்; அடுத்தசெய்யுளில் 'தொழுகின்றார்சிலர்' என்பதற்கும் இங்ஙனமே காண்

காந்துதல் - வெதும்புதல்; உறு - துணைவினை. பூந்துணர் - பூங்கொத்து: இங்கு, அதனாலாகிய மாலைக்குக் கருவியாகுபெயர். பழுது - வீண்; குற்றமுமாம். 'காந்துறுகதழ்எயிறு' என்பதற்கு - அக்கினிச்சுவாலைவீசுகிற உக்கிரமான பற்களென்றும் பொருள்கொள்ளலாம். 'தேர்ந்துஎண்ணி' என்பதை - நன்றாக ஆலோசித்து என ஒருபொருட்பன்மொழியாகக் கொள்ளினுமாம். 'காந்துகட்டழலெயிறு' என்றும், 'பூந்துணரசைத்தென' என்றும் பாடமுண்டு. (௧0)

௧௧. ஒளிவருநாகத்துக்கொல்கியன்றுத
னிளிவரலின்றுபின்னெண்ணம்வேறெனாக்
களிவருசிந்தையாற்காண்டிநங்களைச்
சுளிகிலையாமெனத்தொழுகின்றார்சிலர்.

(இ - ள்.) 'இன்று - இப்பொழுது, தன் இளிவரல் - இக்குரங்கு மேற்கொண்டிருக்கிற எளிமைத்தன்மை, ஒளி வரு நாகத்துக்கு ஒல்கி அன்று - பிரகாசம்பொருந்திய நாகபாசத்துக்குத் தளர்ந்ததனாலன்று: பின் எண்ணம் வேறு - மற்று இக்குரங்கு கொண்ட ஆலோசனை வேறாகும்: எனா - என்று ஊகித்துணர்ந்து,—(அவ்வநுமானை நோக்கி),—'களி வரு சிந்தையால் நங்களை காண்டி - மகிழ்ச்சிபொருந்திய மனத்தோடு எங்களைப்பார்ப்பாய், சுளிகிலை - எங்களைக் கோபியாதே', என - என்றுசொல்லி வேண்டி, தொழுகின்றார் சிலர் சில அரக்கர்கள் (அவனைக்) கைகூப்பி வணங்குகின்றவரானார்கள்; (எ - று.)—ஆம் - அசை.

'தன்இளிவரல் இன்று' என்பதற்கு - இக்குரங்கு தானாகவே கொண்ட வலிமைக் குறைவு இல்லையென்றும் 'பின்எண்ணம் வேறு' என்பதற்கு - இனிச் செய்யவேண்டுங் காரியத்தைக்குறித்து இக்குரங்கு கொண்ட ஆலோசனை வேறு என்றும் உரைப்பினும் அமையும்; முந்தினவுரைக்கு 'இன்று' என்பது - இடைச்சொல்லும், பிந்தினவுரைக்கு 'இல்' என்னும் எதிர்மறைப் பண்பபடியாய்பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு முற்றுமாம். 'சிந்தையால்' என்றவிடத்து, 'ஆல்' என்ற மூன்றனுருபு, அடைமொழிப் பொருளில் வந்தது; அன்புகொண்ட மனத்தை யுடையையாய் என்றபடி. 'நங்களை' என்பதை மத்திமதீபமாக, 'சுளிகிலை' என்பதனோடுங் கூட்டுக. (௧௧)

[நாகபாசத்தைப்பற்றி அநுமானை இழுத்துக்கொண்டு செல்லும் அரக்கர்களின் தொகையும் வலிமையும்.]

௧௨. பைங்கழலநுமனைப்பிணித்தபாந்தளைக்
கிங்கரரொருபுடைகிளர்ந்துபற்றினா
ரைம்பதினாயிரரளவிலாற்றலர்
மொய்ம்பினினெறழ்வலிக்கருளன்மும்மையார்.

(இ - ள்.) அளவு இல் ஆற்றலர் - அளவற்ற வலிமையுடையவர்களும், மொய்ம்பினின் எறழ் வலி கருளன் மும்மையார் - தம்தம் புஜபலத்தால் மிக்கவலிமையுள்ள கருடனினும் மூன்றுமடங்கு மிக்கவர்களுமான, கிங்கரர்

ஐம்பதினாயிரர் - ஏவலாளர் ஐம்பதினாயிரம்பேர், ஒரு புடை கிளர்ந்து - ஒரு பக்கத்தில் வந்து கூடிநிறைந்து, பைங் கழல் அநுமனை பிணித்த பாந்தளை பற்றினர் - பசுமையான வீரக்கழலையுடைய அநுமானைக் கட்டியுள்ள பாம்பைப் பிடித்து இழுத்துக்கொண்டு போகலானார்கள்; (எ - று.)

'ஒருபுடை கிளர்ந்து பாந்தளைப் பற்றினர்' என்றதனால், வாற்பக்கத்தைமாத்திரம் பிடித்துக்கொண்டன ரென்க. ஒருபுடையென்றதனானே மற்றொருபுடைக்கும் அவ்வளவினரேயென்று கொள்வாருமுளர். மிக்கவலிமையுடைய அநுமானை இழுத்துக்கொண்டு செல்லுதற்கு இத்தனைபேர் வேண்டிற்றென்க. கருடன் என்ற வடசொல், கருளன் என்று விகாரப்பட்டது; இவன் - பறவைகட்கு அரசன்; காசியபமகாமுனிவரருளால் தோன்றினவனும், அவர்மனைவியருள் விநதையினால் வளர்க்கப்பட்டவனுமான குமாரன்; பலபராக்கிரமங்களிற் சிறந்தவன்; திருமாலுக்கு வாகனமாயுள்ளான். கிளர்ந்து - உற்சாகங்கொண்டு எனினுமாம்.

இச்செய்யுளில் இனவெதுகை காண்க.　　　(கஉ)

[மற்றும் பல அரக்கர்கள் கருதியது.]

கங. திண்டிறலரக்கர்தஞ்செருக்குச்சிந்துவான்
றண்டலிற்றன்னுருக்கரந்ததன்மையான்
மண்டமர்தொடங்கினன்வானரத்துருக்
கொண்டனனந்தகன்கொல்லென்றார்பலர்.

(இ - ள்.) அந்தகன் - யமன், திண் திறல் அரக்கர்தம் செருக்கு சிந்துவான் - பலபராக்கிரமங்களையுடைய இராக்கதர்களது கருவத்தை யடக்க(க் கருதி), தண்டல் இல் தன் உரு கரந்த தன்மையான் - அழிதலில்லாத தனதுவடிவத்தை மறைத்துக்கொண்டவனாய், வானரத்து உரு கொண்டனன் - குரங்குவடிவத்தைக் கொண்டு, மண்டு அமர் தொடங்கினன் கொல் - மிக்கபோரைத் தொடங்கிச் செய்தனனோ? என்றார் பலர் - என்று எண்ணுதலுஞ் சொல்லுதலு மானார்கள் பல இராக்கதர்கள்; (எ - று.)

தானான தன்மையில் அரக்கர்களை வெல்லவும் கொல்லவும் மாட்டாமல் முன்பு இராவணனது திக்விஜயயாத்திரையில் அவனுக்கு முன்நிற்கமாட்டாதுமறைந்துபோய்விட்டவனான யமன், 'அவ்வரக்கர்களைவென்றும் கொன்றும் வலியடக்கிக் கருவபங்கஞ்செய்யவேண்டுமென்னுங் கறுவுகொண்டவனாதலின், அதற்கு உரிய சமயம் பார்த்து, இப்பொழுது, தனது நிஜரூபமான தேவஜன்மம் தேவர்களாற் கொல்லலாகாதபடி வரபலங்களைப்பெற்றுள்ள அரக்கரை யழித்தற்கு உதவாமையாலும், முன்பு தோல்வியுற்ற தேவவடிவத்தோடு மீளவும் அவர்கள்முன்னிலையில் வருதற்கு வெள்கியும், அத்தேவசரீரத்தைவிட்டு, "குரங்குமுகமென்றெனையிகழ்ந்த வுனிலங்கைநகரிற், குரங்குகள்புகுந்து நனிகொன்றிடுக நின்குலனை" என்று நந்திகேசுவரன் இராவணனுக்கு இட்ட சாபத்தை யனுசரித்து வாநரவடிவங்கொண்டு இங்

னம் வந்து போர்தொடங்கிவிட்டனனோ வென்று அநுமானைக்குறித்துப் பல அரக்கர்கள் சங்கித்துப் பேசினார்கள் என்று கருத்துவிவரங் காண்க.

முன்புநிகழ்ந்தபோரில் இராவணனாற்கொல்லப்படாது தப்பியுய்ந்தன னென்ற இயல்பை யெடுத்துக்காட்டுவார், 'தண்டலில் தன்னுரு' என்றார். அந்தகன் என்ற வடமொழிப்பெயர் - (பிராணிகட்கு) அந்தத்தைச் செய்பவ னென்று காரணப்பொருள்பெறும்; அந்தம் - முடிவு; அழிவு. கொல் என்ற இடைச்சொல் - ஐயவினாவகையால், ஊகித்தற்பொருளில் வந்தது. (கங)

[அரக்கர்களும் அரக்கியர்களும் தம்தம் மாளிகையினின்று வேடிக்கைபார்த்தல்.]

கச. அரமியந்தலந்தொறும்பொன்மாளிகைத்
தரமுறுநிலைதொறுஞ்சாளரந்தொறு
முரசெறிகடைதொறுநிரைத்துமொய்த்தனர்
நிரைவளைமகளிருநிரைந்தமைந்தரும்.

(இ - ள்.) நிரை வளை மகளிரும் - வரிசையான [பல] வளையல்களை யணிந்த பல இராக்கதஸ்திரீகளும், நிரைந்த மைந்தரும் - வரிசை வரிசை யாக வந்துதிரண்ட இராக்கதர்களும்,—அரமியம் தலம் தொறும் - மாளிகை யின்மேலுள்ள நிலாமுற்றங்களிலும், அம் பொன் மாளிகை தரம் உறு நிலை தொறும் - அழகிய பொன்மயமான வீடுகளின் மேல்நிலைகளிலும், சாளரம் தொறும் - பலகணிகளிலும், முரசு எறி கடை தொறும் - முரசவாத்தியங்கள் அடித்து முழங்கப்பெறுகிற வாயில்களிலும், இரைத்து மொய்த்தனர் - (அசோகவனத்தையும் இராக்கதவீரர்களையும் அழித்திட்ட குரங்கைக் கட்டி யிழுத்துக்கொண்டுபோகும் விநோதத்தைப் பார்த்தற்கு) ஆரவாரஞ்செய்து கொண்டு கூடிநெருங்கினார்கள்; (எ - று.)

அரமியம் - ஹர்ம்யம் என்ற வடசொல்லின் விகாரம்; இச்சொல் - தன வான்களுடைய வீட்டுக்குப் பெயராகவும் வழங்கும். தரம் உறு நிலை - மேன் மைபொருந்திய நிலை. (கச)

[மற்றும் பல அரக்கர்கள் கருதியது.]

கரு. கயிலையிலொருதனிக்கணிச்சிவானவன்
மயிலியற்சீதைதன்கற்பின்மாட்சியா
லெயிலுடைத்திருநகர்சிதைப்பவெய்தின
னயில்லெயிற்றொருகுரங்காயென்பார்பலர்.

(இ - ள்.) கயிலையின் - கைலாஸகிரியில் வீற்றிருக்கிற, ஒரு தனி கணிச்சி வானவன் - ஒப்பற்றதொரு மழுவென்னுமாயுதத்தை யேந்திய மகா தேவனான சிவபிரான், மயில் இயல் சீதைதன் கற்பின் மாட்சியால் - மயில் போலுஞ் சாயலுள்ள சீதாதேவியினது பதிவிரதாதருமத்தின் மகிமையினால் தூண்டப்பட்டு, அயில் எயிறு ஒரு குரங்கு ஆய் - கூரியபற்களையுடைய ஒரு

குரங்கின் வடிவமாகி, எயிலுடை திருநகர் சிதைப்ப எய்தினன் - மதில்களை யுடைய அழகிய இந்த லங்காபுரியை அழிக்க வந்தான்போலும், என்பார் பலர் - என்று எண்ணுபவரும் சொல்லுபவரு மானோர்கள் பல இராக்கதர்கள்.

கணிச்சி - சூலாயுதமுமாம். ஸீதா என்ற வடசொல், சீதை யென்று விகாரப்பட்டது; இதற்கு - கலப்பையுழுபடைச்சாலென்று முதலிற்பொருள்: ஜநகமகாராஜா யாகஞ்செய்தற்குச் சாலையமைத்தற்பொருட்டு நிலத்தையுழுத பொழுது அப்படைச்சாலினின்று தோன்றியவ ளாதலால், ஜாநகிக்குச் சீதையென்று பெயராயிற்று; இடவாகுபெயராகிய காரணக்குறி. சாதாரண மான குரங்குக்கு இவ்வகை வலிமையும் திறமையும் இயல்பல்லவாதலால், இதனை இங்ஙனம் தெய்வக்குரங்கென்று சங்கித்தனர். "தெய்வந்தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யும் மழை" என்றபடி கற்புடையமகளிர்க்குத் தெய்வமும் ஏவல்செய்யுமாதலால், சீதையினது கற் பின் ஆற்றலாற் சிவபிரான் குரங்குவடிவமாய் இந்நகரை யழிக்க வந்தன னென்று சொண்டன ரென்க. பகையழிக்கவல்ல சிறந்த படைக்கலமுடை யவனென்பார், 'ஒருதனிக்கணிச்சிவானவன்' என்றார். (௧௫)

[இலங்கையிலுள்ள தேவஸ்திரீகள் பலரும் அக்காட்சியைக் காண வந்து கூடுதல்.]

௧௬. அரம்பையர் விஞ்சைநாட் டளகவல்லியர்
நரம்பினு மினியசொ னாகநாடியர்
கரும்பியல் சித்தியரியக்கர் கன்னியர்
வரம்பறு சும்மையர் தலைமயங்கினார்.

(இ - ள்.) அரம்பையர் - தேவஸ்திரீகளும், விஞ்சை நாடு அளக வல்லி யர் - வித்தியாதர லோகத்திலுள்ள கூந்தலையுடைய கொடிபோன்றவர்க ளான வித்தியாதரஸ்திரீகளும், நரம்பினும் இனிய சொல் நாக நாடியர் - யாழ்நரம்பி னிசையைக்காட்டிலும் இனிமையான சொற்களையுடைய நாக லோகத்துக்கன்னிகைகளும், கரும்பு இயல் சித்தியர் - (தம்மைநுகர்வார்க்கு மிக்க இன்பரசத்தைக் கொடுத்தலிற்) கரும்புபோன்றவர்களான சித்தகன் னிகைகளும், இயக்கர்கன்னியர் - யக்ஷகன்னிகைகளும்,—வரம்பு அறு சும் மையர் - அளவற்ற இரைச்சலுடையவர்களாய், தலைமயங்கினார் - எவ்விடங் களிலும் வந்து கூடினார்கள்; (எ - று.)

இவர்கள், இராவணனால் ஆங்காங்கிருந்து பலாத்காரமாகக் கவர்ந்து கொண்டு வரப்பட்டவர்; "அந்தணர்தங்கன்னியரும் சுராசுரர்தங் கன்னிய ரும் அளவிலாத, கந்தருவர்கன்னியரும் முதலாய கன்னியரைக் கண்ணிற் கண்டான்," "ஆங்கவர்கள் பூனைவாயகப்பட்ட கிளியென்ன வளவிலாற்ற, லோங்குபுலிவாய்ப்பட்டவுழையென்ன உண்ணடுக்குமுற்றோர் கொன்றைத் தேங்கமழ்பூங்குழலியரைத் தெய்வத்தேர்மிசை யேற்றிச் சேனைசூழத், தாங் கரியபேராற்றற்றசக்கிரிவன் தன்நகரி வந்து சார்ந்தான்" என்னும் உத்தர ராமாயணங் காண்க. நரம்பு - அதன் ஒலிக்கு ஆகுபெயர். நாடியர் - பெண்

பன்மைகுறிக்குஞ் சொல்; நாடு - பகுதி, இ - பெண்பால்விகுதி, அதன்மேல் அர் - பலர்பால்விகுதி. இயல் - உவமவுருபு. சித்தியர் - சித்தர் என்பதன் பெண்பால். சித்தர் - அணிமா முதலிய யோகசித்தி பெற்றவர். வித்தியா தரர், நாகர், சித்தர், யக்ஷர் என இவர்கள் - பதினெட்டுத் தேவகணங்களின் பாற்பட்டவர். தலை - இடம். தலைமயங்கினர் - தம்மிற்கலந்து திரண்டார்க ளென்றபடி. (கசு)

[மற்றும் பலர் கருதியது.]

கஎ. நீரிடைக்கண்டுயினெடியநேமியுந்
தாருடைத்தனிமலருலகின் றாதையு
மோருடற்கொண்டுதம் முருவமாற்றினர்
பாரிடைப்புகுந்தனர்பகைத்தென் பார்பலர்.

(இ - ள்.) நீரிடை கண்துயில் நெடிய நேமியும் - கடலிலே பள்ளி கொண்டு யோகநித்திரைசெய்பவனும் பெரிய சக்கராயுதத்தை யுடையவனு மான திருமாலும், தாருடை தனி மலர் உலகின் தாதையும் - தாமரைமலர் மாலையைத் தரித்துள்ளவனும் ஒப்பற்ற (திருமாலின் நாபித்) தாமரைமலரில் தோன்றியவனும் உலகங்களைப் படைத்தவனுமான பிரமனும், பகைத்து - (அரக்கர்களோடு) பகைமைகொண்டு (அவர்களை யழித்தற்பொருட்டு), தம் உருவம் மாற்றினர் ஓர் உடல் கொண்டு - தங்கள் வடிவத்தை யொழித்தவர்க ளாய் வேறுஒரேவடிவமாகி, பாரிடை புகுந்தனர் - (இங்ஙனம்) இவ்வுலகத் திலே பிரவேசித்தார்கள்போலும், என்பார் பலர் —; (எ - று.)

அக்குரங்கை, பிரமன் விஷ்ணுஎன்னும் இருவருங் கொண்ட ஒருவடிவ மென்று கருதின ரென்க. 'நீர்' என்றது, பிரளயப்பெருவெள்ளத்தை: பாற் கடலென்று கொண்டால், இலக்கணையாம். ஒவ்வொருகடலிலும் ஒவ்வொரு வடிவங்கொண்டு திருமால் கண்வளர்ந்தருளுகின்றன னென்ற பிரமாணசித் தியும் உண்டு. நெடியநேமி என்பதை - அடையடுத்த ஆகுபெயரெனக் கொள்க; அன்மொழித்தொகை யென்னலாகாது: "ஐந்தொகைமொழிமேற் பிறதொக லன்மொழி" என்றபடி யாதாயினும் ஒருதொகையின்மேற் பிறத் தல் அன்மொழித்தொகைக்கு இலக்கணமாதலும். 'நெடியநேமி' என்பது பெயரெச்சத்தொகாநிலைத் தொடராதலுங் காண்க. 'நெடிய' என்பதை நேமியுடையானுக்கு அடைமொழியாகவுங் கொள்ளலாம்; திரிவிக்கிரமாவ தாரகாலத்திலும் விசுவரூபத்திலும் விராட்ஸ்வரூபத்திலும் பெருவடிவு கொண்ட என்பது பொருள். எல்லாமலர்களிலும் தாமரை சிறத்தலால், அடைமொழிகொடாது வாளா 'மலர்' எனப்பட்டது; "பூவெனப்படுவது பொறிவாழ் பூவே" என்றார் பிறரும்; (பொறி - இலக்குமி.) தாத, ரூபம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. "அத்திசைமுகனோடு, உந்திக்கமலம் விரிந்தால் விரியும் உகக்கடையில், முந்திக்குவியி லுடனேகுவியும் இம்மூ தண்டமே" என்றபடி பிரபஞ்சோற்பத்திக்குக் காரணமான மூலத்தாமரை மலராதலால், அச்சிறப்புத்தோன்ற 'தனிமலர்' எனப்பட்டது. அன்றியும்,

தனி மலர் - தனித்தமலர் எனினுமாம்: பிரளயவெள்ளத்திற் பள்ளிகொண் டருளிய ஸ்ரீமந்நாராயணனது திருவுந்தித்தாமரை பூத்தபோது வேறு ஒரு மலரும் உடன் இல்லாமை கருதுக. பிரமவிஷ்ணுக்கள் தாமானநிலையில் அரக்கர்களையழிக்குந் திறமிலரென்பது தோன்ற 'பகைத்துத் தம்முருவம் மாற்றினர் ஓர்உடற்கொண்டு பாரிடைப்புகுந்தனர்' என்றன ரென்க. (கஎ)

[இராக்கதர்களொழிந்த பிறரனைவருங் கண்ணீர் பெருக்குதல்.]

கஅ. அரக்கருமரக்கியர்குழாமுமல்லவர்
கரக்கிலர்நெடுமழைக்கண்ணினீரது
விரைக்குழற்சீதைதன்மெலிவு நோக்கியோ
விரக்கமோவறத்தினதெண்மையேகொலோ.

(இ - ள்.) அரக்கரும் அரக்கியர் குழாமும் அல்லவர் - இராக்கதர்களும் ராக்ஷஸஸ்திரீகளுடைய கூட்டமு மல்லாத அரம்பையர் முதலியோரனைவரும், நெடு மழை கண்ணின் நீர் கரக்கிலர் - நீண்ட மழைத்தாரைபோன்ற கண்ணீர்ப்பெருக்கை உள்ளடக்க மாட்டாதவரானார்கள்; அது - அங்ஙனம் அடக்கமுடியாதபடி கண்ணீர் பெருக்கியது,— விரை குழல் சீதைதன் மெலிவு நோக்கியோ - நறுமணமுள்ள கூந்தலையுடைய சீதாதேவியின் துன் பத்தைப் பார்த்ததனால் நேர்ந்ததோ? இரக்கமோ - (அன்றி அநுமான் பாச பந்தப்பட்ட விஷயத்திற்கொண்ட) இரக்கத்தால் நேர்ந்ததோ? அறத்தினது எண்மையே கொலோ - தருமத்தினது எளிமையைக் கருதியதனாலேயே நேர்ந்ததோ? (எ - று.)

எனவே. இம்மூன்றும் அரம்பைமுதலியோர் கண்ணீர் சொரிதற்குத் தனித்தனி காரணமாகத்தக்கனவென்பது விளங்கும்; "அன்பிற்குமுண்டோ வடைக்குந்தாழ் ஆர்வலர், புன்கணீர் பூசல்தரும்" என்றபடி தம்மால் அன்பு செய்யப்பட்டவரது துன்பங் கண்டவிடத்து அன்புடையார் கண் பொழி கின்ற நீர் அடக்குதற் கரிதாதலால், தம்கண்ணில் ததும்பிய நீரை இராவண பயத்தால் உள்ளடக்கமாட்டாது வெளியிட்டன ரென்க. இங்கு 'விரை' என்றது - வாசனைச்சாந்து, நறுமணப்புகை. நறுமலர் முதலியவற்றின் சம் பந்தத்தாலான செயற்கை நறுமணத்தையேயன்றி, உத்தமஜாதி ஸ்திரீகளது கூந்தலுக்கு இயல்பாகவுள்ள இயற்கை நறுமணத்தையுங் குறிக்கும். "தாவ ருந்திருநகர்த்தையலார்முத, லேவருமிடைவிழுந் திரங்கி யேங்கினர், காவ லன்கீன்மிசை விழுந்து காவன்மாத், தேவரு மழுதனர் களிக்குஞ்சிந்தை யார்" என்று கீழ் அட்சகுமாரன் வதைப்படலத்தி னீற்றிற் கூறியபடி பல அரக்கர்களின் மரணத்துக்காக மற்றையரக்கர்களும் அரக்கியர்களும் அழுத போது அரம்பையர் முதலிய தேவமாதர்கள் மனத்துக் களிப்புற்றனராயி னும் இராவணபயத்தால் அக்களிப்பு வெளித்தோன்றாதபடி அதனை உள் ளடக்கிவிட்டு அவ்வரக்கர்கள்பக்கல் அன்புள்ளவர்களாகத் தம்மைக்காட்டி அவர்களை மகிழ்வித்துத் தாம்உய்யுமாறு அவர்களுடன் அழுதுநின்ற சமயத் தில், அரக்கர்களையழித்த குரங்கு கட்டுப்பட்டதென்ற செய்தியைக் கேட்ட

வுடன் அரக்கர்களும் அரக்கிமாரும் களிப்புற்று முந்தியசோகத்தைக் கைவிட்டு அழுகையொழிந்து கண்ணீர்ப்பெருக்கை அடக்கினராக, அரம்பையர் முதலியோர் அங்ஙனங் களிப்புறாமையாற் கண்ணீரையடக்காது பெருக்கிய படியே நின்றனரென்று விவரங் காணலாம். (௧௮)

[அநுமானுடைய கருத்தை இதுமுதல் ஆறுகவிகளிற் கூறுகிறார்.]

௧௯. ஆண்டொழிலநுமனுமவரொடேகினான்
மீண்டிலன்வேறிலன்விரும்பலுற்றில
னீண்டிதுவேதொடர்ந்திலங்கைவேந்தனைக்
காண்டலேநலனெனக்கருத்தினெண்ணினான்.

(இ - ள்.) ஆண் தொழில் அநுமனும் - ஆண்மைத்தொழிலாகிய பராக்கிரமத்திற் சிறந்த அநுமானும்,—'ஈண்டு இதுவே தொடர்ந்து - இப்போது செல்லுகிற இச்செல்லுகையே காரணமாக இவர்களுடனே சென்று, இலங்கைவேந்தனை காண்டலே - இலங்கையரசனான இராவணனைக் கண்டுபேசுவதே, நலன் - நல்லது', என - என்று, கருத்தின் எண்ணினான் - தன்மனத்தில் நினைத்தவனாய், மீண்டிலன் - (நாகபாசபந்தத்தினின்று திமிறிக்கொண்டு) திரும்பிப்போய்விடாமலும், வேறு இலன் - (அவ்வரக்கர்கள் கருத்துக்கு) மாறுபடாமலும், விரும்பல் உற்றிலன் - வேறொன்றையும் மனத்தில் விரும்பாமலும், அவரொடு ஏகினான் - அவ்வரக்கர்களுடனே சென்றான்; (எ-று.)

இது - தொகுத்துச்சுட்டல்; அடுத்த ஐந்துகவிகளும் - வகுத்துக்காட்டல். ஈண்டு - இகரச்சுட்டு நீண்டது. கருதுவது கருத்து என மனத்துக்குக் காரணக்குறி. (௧௯)

௨௦. எந்தையதருளினுமிராமன்சேவடிச்
சிந்தைசெய்நலத்தினுஞ்சீதைவானவர்
தந்துளவரத்தினுந்தறுகட்பாசமுஞ்
சிந்துவெனயர்வுறுசிந்தைசீரிதால்.

(இ - ள்.) எந்தையது அருளினும் - என் தந்தையான வாயுதேவனுடைய கருணையினாலும், இராமன் சே அடி சிந்தை செய் நலத்தினும் - ஸ்ரீராமபிரானுடைய சிவந்ததிருவடிகளை (யான் எப்பொழுதும் இடைவிடாது) தியானஞ்செய்கின்ற நன்மையினாலும், சீதை வானவர் தந்துள வரத்தினும் - சீதாபிராட்டியும் தேவர்களும் கொடுத்துள்ள வரங்களினாலும், தறுகண் பாசமும் சிந்துவென் - கொடிய இப்பிரமபாசத்தையும் அற்றுச்சிதறிவிடச் செய்யவல்லேன் யான்; (ஆயினும்), அயர்வு உறு சிந்தை சீரிது - (அப்படியொன்றுஞ் செய்யாமல் இப்பாசத்துக்கு) இளைப்புற்றிருக்கிற கருத்தே (இச்சந்தர்ப்பத்திற்குச்) சிறப்புடையது; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

'அயர்வுறுசிந்தைசீரிது' என்றதன் காரணம், அடுத்த நான்குகவிகளில் விளங்கும். அநுமான் தான் பிறந்தவுடனே சூரியனைக் கவரச்சென்றபோது

தேவேந்திரனது வச்சிராயுதத்தினாற் கன்னத்தில் அறையப்பட்டுக் கீழ்விழுந்து மூர்ச்சையடைந்துவிட்ட துன்பத்தைத் தன்தந்தையான வாயுதேவன் உணர்ந்து அன்புடன்வந்து தன்னைஎடுத்து மடியில்வைத்துக்கொண்டுசெய்த முயற்சியால் தீர்ந்தமைபற்றி, அத்தந்தையினருளினால் இப்பாசபந்தத்தையுஞ் சிதறுவே னென்றான். அப்பொழுது வாயுதேவன் கோபங்கொண்டு சகலபிராணிகளின் மலமூத்திராசயங்களில் தம்பித்திருந்ததனால் அனைத்துயிரும் வயிறுவீங்கிச் சுவாசம்விடமாட்டாமல் தபிக்கவே, வேள்வி முதலிய வைதிகமொன்றும் நடவாமல் தேவதைகட்கு மகிமை குறையலானமைபற்றித் தேவர்யாவரும் பிரமதேவனையடுத்து உலகத்திற்கு நேர்ந்த துன்பத்தை விண்ணப்பஞ்செய்ய, அந்நான்முகக்கடவுள் தேவர்களுடனே அநுமான் விழுந்திருந்த மலையினிடம் வந்து தந்தைமடியில் மந்தசுவாசத்தோடு கிடந்த இக்குரங்குக்குட்டியைக் கையால் தடவினமாத்திரத்தில் இவன் வேதனை தீர்ந்து கண்திறந்துவிழிக்க, படைத்தற்கடவுள் அவ்வாயுவின் உகப்பிற்காகவும் இனிஆகவேண்டிய பெரியகாரியங்கட்காகவும் அவ்வாநரசிசுவுக்கு வரங்கொடுக்குமாறு தேவர்கட்குச் சொல்ல, இந்திரன் சூரியன் வருணன் குபேரன் சிவபிரான் முதலிய தலைமைத்தேவர்பலரும் பலவரங்களைவழங்க, பிரமனும் வரமருளி அநுக்கிரகித்துச் சென்றன னென்ற வரலாறு இங்கு உணரத்தக்கது. இவ்வளவுபெருமைக்கும் காரணம் வாயுதேவனுக்கு மைந்தனிடமுள்ள பிரியமே யாதலால், அத்தந்தையது அருள் முக்கியமாகப் பாராட்டி முதலி லெடுத்துக் கூறப்பட்டது.

ஸ்ரீராமபாதாம்புஜத்தில் நிரந்தரபக்தி செய்தவர் எவ்வகை யிடுக்கணையுங் கடக்கவல்லவ ரென்பது. பிரசித்தம். சீதை தந்தருளிய வரம்:—"பாழியபணைத்தோள்வீர துணையிலேன் பரிவுதீர்த்த, வாழிய வள்ளலே யான் மறுவிலாமனத்தே னென்னின், ஊழியோர்பகலாயோதும் யாண்டெலா முலகமேழும், ஏழும் வீவுற்றஞான்றும் இன்றெனவிருத்தியென்றாள்" எனக் கீழ் உருக்காட்டுபடலத்திற் காண்க. தேவர்கள் தந்துள்ள வரங்களில் "தாதாவுரைக்கு மிவன்பிரமதண்டாற்றானுஞ்சாவின்றி, மேதாவியுமாயொருநாளும் விளியாநாளுமுறுகவென" என்றது முக்கியமாக உணரத்தக்கது. (௨0)

௨௧. வளையெயிற்றரக்கனையுற்றுமந்திரத்
தளவுறுமுதியருமறியவாணையால்
விளைவினைவிளம்பினான்மிதிலைநாடுடை
யிளகினனென்வயினீதலையுமால்.

(இ - ள்.) வளை எயிறு அரக்கனை உற்று - வளைந்த கோரதந்தங்களையுடைய ராக்ஷஸராஜனான ராவணனைப் போய்ச்சந்தித்து,—மந்திரத்து அளவுறு முதியரும் அறிய-(அவனுடைய) ஆலோசனைச்சபையிலே சேர்ந்துள்ள பெரியோர்களான மந்திரிகளும் அறியும்படி, ஆணையால் விளைவினை விளம்பினால்-(அவ்விராமபிரானுடைய) கட்டளையினால் நேரக்கூடியசெயலை(யான்) சொன்னால், (அவ்விராவணன்), இளகினன் - மனவுறுதிகுலைந்துநெகிழ்ந்து,

மிதிலைநாடியை என்வயின் ஈதல் எயும் - சீதையை என்னிடம் கொடுத்து விடக்கூடும்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

முதியர் - அறிவிலும் அநுபவத்திலும் முதிர்ந்தவர்; ஞானவிருத்தரும் வயோவிருத்தருமாயுள்ளார். 'மந்திரத்து அளவுறு முதியர்' எனவே,மந்திரிக ளென்றதாயிற்று. ஆணையால் விளைவு - இனி இராமபிரான் செய்யக்கூடிய ராக்ஷசநாசம் ராவணவதம் முதலியன. விளை வினை - வாலிவதம் முதலாக நிகழ்ந்தசெயல்களை, விளம்பினால் என்றும் உரைக்கலாம்; விளைவினை - இனி நேர்வதை, ஆணையால் விளம்பினால் - உண்மையாக எடுத்துச்சொன்னால் என்றும்: ஆணையால் விளைவினை விளம்பினால் - சுக்கிரீவன் சொன்னதாக நடக்கப்போகிறதை நான்சொன்னால் என்றும் உரைப்பாரும் உளர். மிதிலை நாடி - விதேகதேசத்து மிதிலையென்னும் நகரத்திற் பிறந்துவளர்ந்தவள்; ஜநககுலத்து மிதியென்னும் அரசனால் ஆளப்பட்டமைபற்றி, 'மிதிலை' என்று பெயர். விளை வினை எனப் பிரித்து, வினைத்தொகைநிலைத் தொடராகக் கொண்டு, விளைந்தசெயல் அல்லது விளையுஞ்செயல் என்றலுமொன்று. 'விளைவன விளம்பினால்' என்றும் பாடமுண்டு. (உக)

உஉ. அல்லதூஉமவனுடைத் துணைவராயினார்க்
கெல்லையுந்தெரிவுறுமெண்ணுந் தேறலாம்
வல்லவனிலைமையுமனமுந் தேறலாஞ்
சொல்லுகமுகமெனுந் தூதுசொல்லவே.

(இ - ள்.) அல்லதூஉம் - அதுவல்லாமலும், அவனுடை துணைவர் ஆயினார்க்கு - அவ்விராவணனுக்குத் துணைசெய்பவராயுள்ள மந்திரிகள் சேநாபதிகள் முதலானவர்களுடைய, எல்லையும் - அளவும், தெரிவுறும் - தெரிவதாகும்; எண்ணும் தேறலாம் - (அவர்களுடைய) எண்ணத்தையும் தெரிந்துகொள்ளலாம்; வல்லவன் - வல்லவனான இராவணனுடைய, நிலைமையும் - நிலைமையையும், மனமும் - மனக்கருத்தையும். சொல் உக - (அவனது வாயினின்று) சொற்கள் வெளிப்பட அவைகொண்டும், முகம் எனும் தூது சொல்ல - (அவனுடைய) முகமாகிய தூதர் சொல்லவும், தேறலாம் - தெளிந்துகொள்ளலாம்; (எ - று.)

"அகத்திலழகு முகத்தில் தெரியும்," "முன்னம், முகம்போல முன்னுரைப்பதில்," "முகனுரைக்கு முண்ணின்ற வேட்கை" என்றபடி முகத்தின் குறிப்பிலே மனக்கருத்து வெளியாதலால், 'முகமெனுந் தூதுசொல்ல மனமுந் தேறலாம்' என்றார்; இதனை, 'எண்ணுந்தேறலாம்' என்றதனோடுங் கூட்டுக. தூதர் செய்தி கூறுதல்போல முகம் மனக்கருத்தைப் பிறர்க்கு உணர்த்திவிடுதலால், 'முகமெனுந் தூதுசொல்ல' எனப்பட்டது; உருவகம். செய்யுளோசை குன்றுமிடத்து, இனியவோசையைத் தருதற்பொருட்டு, 'அல்லதும்' என்பது 'அல்லதூஉம்' எனக் குறில்நெடிலாய் நீண்டு அளபெடுத்தது; இன்னிசையளபெடை. எண் - வலிமையுமாம். உக, சொல்ல என்ற செயவெனெச்சங்களில் உம்மை தொக்கது, வினைச்செவ்வெண். (உஉ)

உரு. வாலிதன்னிறுதியுமரத்துக்குற்றதுங்
கூலவெஞ்சேனையின்குணிப்பிலாமையு
மேலவன்காதலன்வலியுமெய்ம்மையா
னீனிறத்திராவணனெஞ்சினிற்குமால்.

(இ - ள்.) வாலிதன் இறுதியும் - வாலியின் மரணமும், மரத்துக்கு உற்றதும் - மராமரத்துக்கு நேர்ந்த அபாயமும், வெம் கூலம் சேனையின் குணிப்பு இலாமையும் - கொடிய குரங்குச்சேனையின் அளவில்லாமையும், மேலவன் காதலன் வலியும் - சூரியகுமாரனை சுக்கிரீவனுடைய வலிமையும்,--(யான் நேரிற்சென்று சொல்லுமிடத்து), நீல் நிறத்து இராவணன் நெஞ்சில் மெய்ம்மையால் நிற்கும் - நீலநிறத்தையுடைய இராவணனது மனத்தில் உள்ளபடி பதியும்; (எ - று.)—ஆல் - ஈற்றசை: தேற்றமுமாம்.

இவையனைத்தும் இராவணன்மனத்திற் பதியுமானால் அவன் அஞ்சிப் பிராட்டியை விட்டிடக்கூடு மென்பது உட்கோள்.

வாலீ என்ற வடமொழிப்பெயர்க்கு - வாலில் வலிமையுடையவனென்றும், வாலினின்று பிறந்தவ னென்றும் காரணப்பொருள் கூறுவர்; இவன் - இந்திரன்மகன்; சுக்கிரீவனது தமையன்; கிஷ்கிந்தாநகரத்தை யாண்ட வாநரராசன்; தன்னையெதிர்த்தாரது வலிமையிற் பாதி தன்னிடம் வந்து கூடும்படி வரம்பெற்றவன்; இராவணனை ஒருகால் வென்று பின்பு அவனது வேண்டுகோளின்படி அவனோடு அக்கினிசாட்சியாக நண்புகொண்டவன். இவனை இராமபிரான் கொன்ற செய்தி கதைத்தொடர்ச்சியிற் குறிக்கப்பட்டது. வாலி முன்னமே இராவணனுடன் அக்கினிசாட்சியாக நட்புக்கொண்டிருந்தமைபற்றி அவனைத் தான் உதவியாகக்கொண்டால் இராவணாதி துஷ்டர்களைத் தொலைக்க வகையில்லாமையால் இராமன் வாலியை நண்பாகக் கொள்ளாமல், சரணமடைந்த சுக்கிரீவனை நண்பாகக்கொண்டு அவனது வேண்டுகோளின்படி அவ்வாலியை வதைத்திட்டன னென்க,

மரத்துக்கு உற்றது:— இராவணனால் அபகரிக்கப்பட்ட சீதையைத் தேடிக்கொண்டு சென்ற இராமலக்ஷ்மணரை அநுமான் மூலமாகச் சுக்கிரீவன் சிநேகித்தபிறகு, தனதுபகைவனும் மகாபலசாலியுமான வாலியைக் கொல்லும் வல்லமை இராமபிரானுக்கு உண்டோ இல்லையோ வென்று ஐயமுற்றுத் தன்சந்தேகம் தீருமாறு 'எதிரிலுள்ள எழுமராமரங்களையும் ஏக காலத்தில் தொளைபடும்படி எய்யவேண்டும்' என்று சொல்ல, உடனே இராமபிரான், ஓரம்பு தொடுத்து அந்த ஸப்தஸாலவிருக்ஷங்களையும் ஒருங்கு தொளைபடுத்தின னென்பதாம்.

கூலம் - லாங்கூலம் என்ற வடசொல்லின் விகாரம்: வால் என்பது பொருள்; அது - சினையாகுபெயராய்,நீண்டவாலுள்ளகுரங்கைக் குறித்தது. மேலவன் - மேலேவிளங்குபவன்; அல்லது, தேவர்களில் மேன்மையுடையவன். காதல் - அன்பு; அதற்கு இடமானவன், காதலன்: இதன் பெண்பால், காதலி (மகள்); இச்சொற்கள், கணவன் மனைவியர்க்கும் வழங்கும். இதில்

கீராடியவரெவரும் பெண்வடிவமுறுக வென்று உமாதேவியின் கட்டளை பெற்றதொரு சரசில் கீராடியமைபற்றிப் பெண்வடிவங்கொண்ட ருக்ஷரஜஸ் என்ற வாநரராஜனது அழகைக்கண்டு காமுற்ற இந்திரனது அருளால் அப் பெண்குரங்கினிடம் தோன்றினவன் வாலியென்றும், அங்ஙனமே காமுற்ற சூரியனுக்கு அப்பெண்குரங்கினிடந் தோன்றியவன் சுக்கிரீவ னென்றும் அறிக. (உ௩)

உ௪. ஆதலானரக்கனையெய்தியாற்றலு
நீதியுமனக்கொளநிறுவிநின்றவும்
பாதியின்மேற்செலநூறிப்பைப்பையப்
போதலேகருமமென்றநுமன்போயினன்.

(இ - ள்.) ஆதலான் - ஆகையால்,—அரக்கனை எய்தி - இராவணனைச் சந்தித்து,—ஆற்றலும் - (இராமபிரானது) வல்லமையையும், நீதியும்-நியாய நெறியையும், மனம் கொள நிறுவி - அவன் மனத்திற் பதியும்படி (சொல்லி) நிலைநிறுத்தி,—(அவன் பிராட்டியை விட்டிடுதற்கு இசையானாயின்), நின்ற வும் - (இதுவரை என்னால் அழிக்கப்பட்டவைபோக) மிச்சமாயுள்ள ராக்ஷஸ சேனைகளையும், பைப்பைய - கொஞ்சங்கொஞ்சமாக, பாதியின்மேல் செல நூறி - பாதிக்குமேலாக அழித்துவிட்டு, போதலே - (அப்பால் மீண்டு கிஷ் கிந்தைக்குச்) செல்லுதலே, கருமம் - இப்பொழுது செய்யத்தக்க தொழில், என்று - என்று தீர்க்கமாக ஆலோசித்துக்கொண்டே, அநுமன் போயினன்- அநுமான் (தன்வல்லமையைக் காட்டாமல் அரக்கர்களுடனே அடங்கிச்) சென்றான்; (எ - று.)

பைப்பைய - பையப்பைய என்ற வினையெச்சவடுக்கின் விகாரம். பை யெனல் - மந்தக்குறிப்பு. ஏ - பிரிநிலை. (உ௪)

[இந்திரசித்து அநுமானை இராவணன் மாளிகைக்குக் கொண்டு செல்லுதல்.]

உ௫. கடவுளர்க்கரசனைக்கடந்தகோன்றனும்
புடைவரும்பெரும்படைப்புணரிபோர்த்தெழ
விடைபிணிப்புண்டதுபோலும்வீரனைக்
குடைகெழுமன்னனிற்கொண்டுபோயினன்.

(இ - ள்.) கடவுளர்க்கு அரசனை கடந்த தோன்றலும் - தேவராசனான இந்திரனை வென்ற வீரனான இந்திரசித்தும்,—புடை வரும் பெரும் படை புணரி போர்த்து எழ - பக்கங்களில் வருகிற பெரிய சேனையாகிய கடல் சூழ்ந்துவர,—விடை பிணிப்புண்டது போலும் வீரனை - ருஷபம் கட்டுப் பட்டதுபோலுள்ள வீரனான அநுமானை, குடை கெழு மன்னன் இல் கொண்டு போயினன் - ஒற்றைவெண்கொற்றக்குடையோடுகூடி விளங்குகிற ராக்ஷஸராஜனான ராவணனுடைய அரண்மனைக்குக் கொண்டு சென்றான்.

கடவுளர் - (இவ்வுலகசம்பந்தத்தைக்) கடத்தலையுடையவர்; உள் - தொ ழிற்பெயர்விகுதி. புணரி-(நதிகள் தன்னிடம்வந்து) புணரப்பெறுவது; புணர்

தல் - சேர்தல். விடை - வ்ருஷம் என்ற வடசொல்லின் விகாரம்; எருது என்று பொருள். மன்னனில் - அரசனிடத்து எனினுமாம்; இவ்வுரைக்கு, இல் - ஏழனுருபு. (உரு)

[தூதர்கள் ஓடி இராவணனுக்குச் செய்திகூறுதல்.]

உகூ. தூதுவரோடினர்தொழுதுதொல்லைநாள்
மாதிரங்கடந்தவற்குறுகிமன்னநின்
காதலன்மறைமலர்க்கடவுள்வாளியா
லேதில்வானரம்பிணிப்புண்டதாமென்றார்.

(இ - ள்.) தூதுவர் - (இந்திரசித்தினால் லேவப்பட்ட) தூதர்கள்,— ஓடினர் - ஓடிச்சென்று, தொல்லை நாள் மாதிரம் கடந்தவன் குறுகி - பூர்வகாலத்திலே திக்குவிசயஞ் செய்தவனான இராவணனைச் சமீபித்து. தொழுது - (அவனை) வணங்கி, 'மன்ன - அரசனே! நின் காதலன் - உனது புத்திரனான இந்திரசித்தினது, மறைமலர் கடவுள் வாளியால் - பிரமாஸ்திரத்தினால், ஏதில் வானரம் பிணிப்புண்டது - நம்மின்வேறான குரங்கு கட்டுப்பட்டது', என்றார் - என்று செய்திகூறினார்கள்; (எ - று.)—ஆம் - அசை; தேற்றமுமாம்.

மாதிரம் என்ற திசையின் பெயர் - இடவாகுபெயராய். அங்குள்ள தேவர்களைக் குறித்தது. கடந்தவற்குறுகி - உயர்திணையிடத்து இரண்டாம் வேற்றுமைத்தொகையில் உயர்திணைப்பெயரீற்றுமெய் வலிவர இயல்பாகாது திரிந்தது; "இயல்பின்விகாரம்." மன்ன - அண்மைவிளி. மறை - தாமரையென்பதன் முதற்குறைவிகாரம். ஏதில்வானரம் - பகைமையுடைய வானரம் எனினுமாம்; ஏதில் - அயல், பகைமை. (உசு)

[அந்த நற்செய்திகூறின தூதர்க்கு இராவணன் பரிசளித்தல்.]

உஎ. கேட்டலுங்கிளர்சுடர்கெட்டவானென
வீட்டிருள்விழுங்கியமார்பின்யானையின்
கோட்டெதிர்பொருதபேராரங்கொண்டெதிர்
நீட்டினனுவகையினிமிர்ந்தநெஞ்சினன்.

(இ - ள்.) கேட்டலும் - (அச்சொல்லைக்) கேட்டவுடனே,— உவகையின் நிமிர்ந்த நெஞ்சினன் - சந்தோஷத்தினாற் பொங்கிய மனத்தையுடையவனான இராவணன்,—கிளர் சுடர் கெட்ட வான் என - விளங்குகின்ற சூரியன் முதலிய ஒளிகள் ஒழியப்பெற்ற ஆகாயம் போல, ஈட்டு இருள் விழுங்கிய மார்பின் - செறிந்த இருளினால் விழுங்கப்பட்ட [மிகக்கறுத்த] தன்மார்பில் (அணியப்பட்டுள்ளதும்), யானையின் கோடு எதிர் பொருத - திக்கஜங்களின் தந்தங்களினால் எதிர்த்து மோதப்பட்டதுமான, பேர் ஆரம் - பெரிய முத்துமாலையை, கொண்டு - கழற்றிக்கையிற்கொண்டு, எதிர் நீட்டினன் - (அந்நற்செய்திசொன்ன தூதர்க்கு) எதிரே கைநீட்டி வெகுமானமாகக் கொடுத்தான்; (எ - று.)

இராவணன் திக்குவிசயஞ்செய்தகாலத்தில் ஐராவதம்முதலிய திக்கஜங்களை எதிர்த்தபொழுது அவை கோபங்கொண்டு இவன்மார்பில் தமது கூரிய

தந்தங்களால் தாக்குகையில் மிக்கவலிமையையுடைய அந்தமார்பு பெரிதும் ஊறுபடாதாக அத்தந்தங்கள் நுனிஒடிந்திட்டனவென்பது, இங்கு உணரத் தக்கது. 'விழுங்கிய' என்பதைப் பெயரெச்சமாகக் கொள்ளாது, செய்திய வென்னும் வாய்பாட்டு வினையெச்சமாகக்கொண்டு, அதனை 'விழுங்க' எனச் செயவெனெச்சமாகத் திரித்து, சூரியன் முதலிய சுடர்க ளில்லாத வானத்தைப்போலத் தன்மார்பைச் செறிந்த இருள் விழுங்க என்று உரைத்தலு மொன்று; வானத்திற் சூரியன்போல அவன்மார்பில் விளங்கிக்கொண்டிருந்த இரத்தினஹாரம் அம்மார்பைவிட்டு நீங்குதலால் அங்குப் பிரகாசம்மாற என்பது கருத்து. 'மார்பன்' என்பதும் பாடம். (உஎ)

[பெருமகிழ்ச்சிகொண்ட இராவணன் அத்தூதரங்கைக் கொல்லாது கொணரச்சொல்லுதல்.]

உஅ. எல்லையி லுவகையா லிவர்ந்த தோளினன்
புல்லுறமலர்ந்தகட் குமுதப் பூவின
னெல்லையி னோடிநீ ருரைத்தென் னாணையாற்
கொல்லலைதருகெனக் கூறுவீரென் றான்.

(இ - ள்.) எல்லை இல் உவகையால் இவர்ந்த தோளினன் - அளவிறந்த மகிழ்ச்சியாற் பூரித்த தோள்களையுடையவனும், புல்லுற மலர்ந்த கண் குமுதம் பூவினன் - (சுற்றிடத்தைத்) தழுவுமாறு நன்குமலர்ந்த கண்களாகிய செவ்வாம்பல் மலர்களை யுடையவனுமான இராவணன். (அத்தூதர்களை நோக்கி), 'நீர் ஒல்லையின் ஓடி என் ஆணையால் உரைத்து - நீங்கள் விரைவில் ஓடிச்சென்று என்கட்டளையால் (இந்திரசித்தினிடஞ்) செய்திகூறுபவராய், கொல்லலை தருக என கூறுவீர் - (அங்குரங்கைக்) கொல்லாமலே கொணர்வாயாகவென்று சொல்லுங்கள்.' என்றான் - என்று கட்டளையிட்டான்; (எ - று.)

இவர்தல் - உயர்தல், எழுச்சி. 'புல்லுறமலர்ந்தகண்' என்பதற்கு - புன்மையாக [பொலிவின்றி] மலர்ந்த கண்களென்றும், (அக்குரங்கைச்)சந்திக்குமாறு [காணும்பொருட்டு] மலர்ந்த கண்களென்றும் உரைப்பாருமுளர். கோபத்தாற் சிவந்த இராவணன் கண்களுக்குக் குமுதம் நிறத்தில் உவமம். உரைத்துக் கூறுவீர் என்று இயைத்து - உறுதிச்சொல்வீர் எனினும் அமையும்; "கோத்தின்னுகூறியுரைபாக்கால்"என்றவிடத்துப்போல ஒருபொருட் பன்மொழியுமாம். தோள்பூரித்தலும், கண்மலர்தலும் - மிக்க மகிழ்ச்சியின் குறி. என்ஆணையாற் கூறுவீர்-நான்சொன்னதாகச் சொல்லுங்கள் என்றபடி.

[அத்தூதர்கள் அச்செய்தியை இந்திரசித்துக்குக் கூறுதலும், இனிக் கவி சீதையின் செய்தியைச் சொல்லத் தொடங்குதலும்.]

உகூ. அவ்வுரைதூதருமாணையால்வருந்
தெவ்வுரைநீக்கினுக் கறியச்செப்பினா
ரிவ்வுரைநிகழ்வுழியிருந்தசீதையாம்
வெவ்வுரைநீக்கினாணிலைவிளம்புவாம்.

(இ - ள்.) அ உரை - அச்சொல்லை, தூதரும் - அந்தத்தூதர்களும், ஆணையால் - அவ்விராவணன் கட்டளைப்படியே, வரும் தெவ் உரை நீக்கினன் அறிய செப்பினர் - எதிர்த்துவருகிற பகைவனென்ற சொல்லையும் இல்லாமற்செய்பவனை இந்திரசித்து அறியும்படி சொன்னார்கள்; இ உரை நிகழ்வுழி - (அநுமான் கட்டுப்பட்டு அரக்கர்கையிற் சிக்குண்டானென்ற) இந்த வார்த்தை எங்கும்பரவியபோது, இருந்த சீதை ஆம் வெவ் உரை நீங்கினள் நிலை - (அசோகவனத்திற்) சிறையிருந்த சீதையாகிய கொடியபழிச்சொல்லை நீங்கியவளது நிலைமையை. விளம்புவாம் - இனிச் சொல்வோம்; (எ - று.)— அதனை, அடுத்த எழுகவிகளிற் காண்க.

இது - கவிக்கூற்று. விளம்புவாம் என்ற தனித்தன்மைப்பன்மை, கவிகளுக்கு உரிய இயல்புபற்றி வந்தது. ஆணையாற் செப்பினர் என்றும், வருந் தெவ் என்றும், சீதையாம் நீங்கினள் என்றும் இயையும். எதிர்த்துவந்த பகைவரைப் பற்றறஅழித்து அதனாலாகும் அச்சத்தாற் பகைவரொன்று எவரும் எதிர்த்துவாராதபடி செய்யும் பலபராக்கிரமங்களை யுடையவ னென்பது, 'வருந்தெவ்வுரைநீக்கினன்' என்பதன் கருத்து. தெவ்வுரை நீக்கினன் என்பதற்கு - பகைவர்களுடைய உயர்ச்சியை அல்லது ஆரவாரத்தை அன்றிப் புகழை யொழித்தவனென்றும் பொருள்கொள்ளலாம். 'வரும்'என்பதை 'நீக்கினன்' என்பதனோடு இயைப்பினுமாம்: அப்பொழுது, அநுமானைப் பிணித்து வருகிற என்று பொருள்காண்க. செப்பு - தெலுங்கில் வழங்குந் திசைச்சொல். வெவ்வுரைநீங்கினள் - சிறிதும் பழிப்புக்கு இடமில்லாதபடி கற்புநிலையைப் பாதுகாத்து வருபவள்; எப்பொழுதும் இன்சொற்களையே பேசுபவளாய்க் கடுஞ்சொற்களில்லாதவ ளென்றும் உரைக்கலாம்: கோபத்தோடு இராவணனைச் சபித்து அவனைக் கற்புநிலையால் அழிக்கவல்லளாயினும் பொறுமையினால் அங்ஙனஞ்செய்யாதவள் என்பது கருத்து. 'இவ்வுரை நிகழ்வுழி' என்பதற்கு - இச்செய்தி இப்படி நடந்துகொண்டிருக்கும்போது என்று உரைப்பாருமுளர். (உக)

[அநுமான் பிடிபட்டசெய்தியைத் திரிசடை சீதைக்குக் கூறுதல்.]

௫0. இறுத்தனன் கடிபொழி லெண்ணி லோர்பட
வொறுத்தன னென்றுகொண் டுவக்கின் றாளுயிர்
வெறுத்தனள் சோர்வுற வீரற் குற்றதைக்
கறுத்தலில் சிந்தையாள் கனன்று கூறினாள்.

(இ - ள்.) கடி பொழில் இறுத்தனன் - (அரக்கர்களுடைய) பாதுகாவலுள்ள சோலையை [அசோகவனத்தை] முறித்தழித்தான்; எண் இலோர் பட ஒறுத்தனன் - அளவிறந்த அரக்கர்கள் அழியுமாறு கொன்றிட்டான், என்று கொண்டு - என்று அப்பொழுதைக்கப்பொழுது சொல்லக் கேட்டுணர்ந்து, உவக்கின்றாள் - மகிழ்கின்றவளான சீதாபிராட்டி, உயிர் வெறுத்தனள் சோர்வுற - தன்உயிரையும் வேண்டாதவளாய்த் தளர்ச்சி யடையும்படி,— வீரற்கு உற்றதை - அநுமானுக்கு நேர்ந்த துன்பத்தை, கறுத்தல் இல்

சிந்தையாள் - (சீதையினிடத்துக்) கோபித்தலில்லாத மனத்தை யுடையவளான திரிஜடை யென்பவள், கவன்று கூறினாள் - கவலைகொண்டு சொல்லினாள்; (எ - று.)

திரிசடை-விபீஷணனது திருமகள். தந்தைபோலவே நற்குண நற்செய்கைகளிற் சிறந்தவள்: சீதை அரக்கியர்சூழ அசோகவனத்துச் சிறைக்காவலில் வைக்கப்பட் டிருந்தபோது இவளொருத்தியே சீதையினிடம் மிக்க அன்புகொண்டு அவட்கு அநுகூலையாய்ப் பலவாறு தேறுதல்கூறி வந்தாள். இவளை முன்பு "இன்சொலிற்றிருந்தினாள்" என்றும், "அன்பினால் தாயினுமினியவள்" என்றும் கூறியதற்கு ஏற்ப, இங்கு 'கறுத்தலில் சிந்தையாள்' என்றார். வீரற்கு உற்றது - மகாவீரனான அநுமான் இந்திரசித்தின் பிரமாஸ்திரத்தாற் கட்டுப்பட்டு அரக்கர்கையிற்சிக்கி இராவணனிடம் இழுத்துக்கொண்டு போகப்பெறுதல். இனி, இச்செய்யுட்கு - அநுமானுடைய வீரச்செயல்களைக் கேள்வியுற்று அவற்றை மனத்திற்கொண்டு மகிழ்கின்றவளும் இயல்பிலே கோபமில்லாத மனத்தையுடையவளுமான சீதை அநுமானுக்கு நேர்ந்த துயரத்தைக்குறித்து வெறுப்புக்கொண்டவளாய் உயிர்சோருமாறு கவலையுற்றுத் தன்னிலேதான் சிலசொல்லலானாளென்று உரைகொள்ளுதலும் ஒன்று. 'சோர்வுற' என்றதை 'உற்றதை' என்றதனோடு இயைத்தலுமாம். (௩௰)

வேறு.

[சீதை வருந்திச் சில கூறத்தொடங்குதல்.]

௩௧ ஓவி யப்புகை யுண்டது போலொளிர்
பூவின் மெல்லியல் மேனிபொ டியுறப்
பாவி வேடன்கைப் பார்ப்புறப் பேதுறுந்
தூவி யன்னமன் னாளிவை சொல்லினாள்.

(இ - ள்.) மேனி பொடி உற - (ஸ்ரீராமனைப்பிரிந்தநாள்முதல் பத்துமாதகாலமாக ஸ்நாநஞ்செய்தலும் அலங்காரஞ்செய்துகொள்ளுதலு மில்லாமையால்) உடம்பு புழுதிபடிந்திருக்க, (அதனால்). ஓவியம் புகை உண்டது போல் ஒளிர் - சித்திரப்பிரதிமை புகைபடியப் பெற்றது போன்று (ஒளி மழுங்கி) விளங்குகிற. பூவின் மெல்இயல் - மலர்போல் மென்மையான தன்மையுடையவளான சீதாபிராட்டி,—பாவி வேடன் கை பார்ப்பு உற பேதுறும் தூவி அன்னம் அன்னாள் - (பிராணிஹிம்ஸையாகிய) பாவத்தொழிலைச் செய்பவனான ஒருவேடனுடைய கையிலே தன்குஞ்சு அகப்பட்டுக்கொள்ள அதனால் வருத்தமடைகிற சிறகழகையுடைய அன்னப்பறவையைப் போன்றவளாய், இவை சொல்லினாள் - (அநுமானைக்குறித்து) இவ்வார்த்தைகளைச் சொல்லிப் புலம்பலானாள்; (எ - று.)— அவ்வார்த்தைகளை, அடுத்த நான்கு கவிகளிற் காண்க.

'ஆவியந்துகில் புனைவதொன்றன்றி வேறறியாள், தூவியன்ன மென் புனலிடைத்தோய்கிலாமெய்யாள், தேவுதெண்கட லமிழ்துகொண் டனங்க

வேள்செய்த, ஓவியம்புகையுண்டதேயொக்கின்றவுருவாள்" என்றார் காட்சிப்படலத்தும். மனத்திற்குத் திருப்தியுண்டாகுமளவும் கலைத்துக்கலைத்து எழுதப்படுதல்பற்றிச் சித்திரப்பாவை மிக அழகியதாக முடிதலால், அது, மிக்க அழகுடைய பெண்ணுக்கு உவமை கூறப்படுகின்றது. மெல்லியல்-பண்புத்தொகையன்மொழி. மேனிபொடியுற - உடம்பிலே புழுதிபடும்படி [தரையிலே விழுந்துபுரண்டு] என்றலுமொன்று. பாதகச்செயலுடையனுன இந்திரசித்துக்குப் பாவிவேடனும், அவன்கையில் அகப்பட்டுக்கொண்ட அநுமானுக்கு வேடன்கையிற்சிக்கிய அன்னப்பார்ப்பும், அநுமானைக்குறித்து மனங்கலங்குகிற பிராட்டிக்கு அக்குஞ்சைக்குறித்து மனமிரங்குகிற அதன் தாயான அன்னப்பறவையும் உவமையெனக் காண்க. தாய்க்குப் பிள்ளையினிடத்து உள்ளவவ்வளவு அன்பு லோகமாதாவான ஜாநகிப்பிராட்டிக்கு அநுமானிடம் உள்ளதென விளங்கும். பார்ப்பு - இளமைப்பெயர். இது பறவைக்கு உரியதாதலை "பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை" என்ற தொல்காப்பியங்கொண்டு உணர்க. பார்ப்பு - (தாயினால் அன்போடு) பார்க்கப்படுவதென்பதுபற்றி வந்த காரணப்பெயரென்னலாம்; தொழிலாகுபெயர்.

இதுமுதல் எழுகவிகள் - பெரும்பாலும் முதற்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களு மாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (௩௧)

[இதுமுதல் நான்குகவிகள் - அநுமானைக்குறித்துச் சீதை தன்னிலேதான் புலம்பல்.]

௩௨. உற்றுண்டாயவிசும்பையுருவினாய்
முற்றுண்டாய்கலையாவையுமுற்றுறக்
கற்றுண்டாயொருகள்ளவரக்கனாற்
பற்றுண்டாயிதுவோவறப்பான்மையே.

(இ - ள்.) உற்று உண்டாய - மிகப்பரந்துள்ளதான, விசும்பை - ஆகாயத்தை,உருவினாய் முற்றுண்டாய்-ஊடுருவிச்சென்று அளாவிவளர்ந்து நிறைந்தவனும், கலை யாவையும் முற்றுற கற்றுண்டாய் - சாஸ்திரங்களெல்லாவற்றையும் நிரம்பக் கற்று உணர்ந்து மனங்கொண்டவனுமான நீ, ஒரு கள்ளம் அரக்கனால் பற்றுண்டாய் - வஞ்சனையையுடைய ஓர் இராக்கதனாற் பிடிபடலானாய்; அறம் பான்மை இதுவோ - தருமமுறை இதுதானோ! (எ - று.)

மிகப்பெரிய உருவங்கொண்டுகாட்டியவனும் கல்விமுற்றக்கற்றுத்தேர்ந்தவனும் கள்ளங்கபடமற்றவனுமான நீ கள்ளத்தன்மையையுடைய ஓர் அரக்கனாற் பற்றுண்டது அறநெறிக்குத் தகுதியன்று என்றபடி. 'முற்றுண்டாய்' என்பதில், உண் - துணைவினை. அநுமான் இலங்கைக்குவந்து சிறியவடிவத்துடன் அசோகவனத்திற் சீதையைக் கண்டு பேசிக் கணையாழிகொடுத்துத் தேற்றியபோது, அப்பிராட்டி 'அளத்தற்கரிய பரப்பையுடைய கடலை நீ கடந்துவந்தது எவ்வாறு?' என்று வினவியதற்கு, அநுமான், 'இராமபிரானருளாற் காலினாலேயே கடந்துவந்தேன்' என்று கூற, மீண்டும் ஜாநகி 'இவ்

ளவு சிறுவடிவமுடைய நீ கடலைக் காலினாற் கடந்தது எங்ஙனம்?' என, அநுமான் உடனே பேருருவங்கொண்டு காட்ட, அதுகண்டு வியப்பும் மகிழ்ச்சியும் அச்சமுங் கொண்ட சீதை அதனையடக்குமாறு கூற, அநுமான் அப்பேருருவத்தை யடக்கிக்கொண்டு மீளவும் சிறியவடிவ மெடுத்தன னாதலால், 'உற்றுண்டாயவிசும்பையுருவினாய் முற்றுண்டாய்' என்றாள். கலை - ஆவீறு ஐயர்ன வடசொல். முற்றற - முழுவதும்அமைய. 'கற்றுண்டாய்' என்பதில், உண்ணுதல் - உட்கொள்ளுதல். சூரியன் வரமருளியபடி அநுமான் அவனிடத்துச் சகல சாஸ்திரங்களையும் கற்று ஒப்புயர்வற்ற ஞானமுடையனாயின னென்பது பிரசித்தம். (௩௨)

௩௩. கடர்கடந்துபுகுந்தனைகண்டக
ருடர்கடந்துநின் னூழிகடந்திலை
யடர்கடந்ததிரள்புயத்தையநீ
யிடர்கடந்தனைவந்திடர்மேலுமே.

(இ - ள்.) நீ—, கடர் கடந்து புகுந்தனை - கடலைக்கடந்து இங்கு வந்தாய்; கண்டகர் உடர் கடந்தும் - கொடியவர்களான அரக்கர்களுடைய உடம்பின் வலிமையை வென்று அழித்தும், நின் ஊழி கடந்திலை - உனது வாழ்நாள் ஒழியப்பெற்றிலை; (இவ்வாறு), அடர்கள் தந்த - வெற்றிகளையே பெற்றுவந்த. திரள் புயத்து ஐய - திரண்ட தோள்களையுடைய ஐயனே! (முடிவில் நீ அரக்கர்கையிற் சிக்கியதனால்), வந்து இடர் மேலும் இடர்கள் தந்தனை - (கிஷ்கிந்தையினின்று இங்கு) வந்து (எனக்குத்) துன்பத்தின்மேலும் துன்பங்களை உண்டாக்கியவனானாய்; (எ - று.)

கண்டகம் - முள்; அதுபோலப் பிறர்க்குத் தீங்கையே செய்பவர், கண்டகர். கண்டகருடர்கடந்தும் நின்னூழிகடந்திலை - கொடிய பல அரக்கரை யழித்தும் உனது உயிர்வாழ்வுக்கு ஒரு குறைவும் இல்லாதிருந்தாய் என்றபடி. 'அடர்கள்தந்த' என்பதற்கு - எனக்கு வலிமைகளைக் கொடுத்த என்றும் உரையிடலாம். இராமனைப்பிரிந்ததனாலான சோகத்தின்மேல் அவ்விராமதூதன் பகைவர்கையிற்கட்டுண்டதனாலான சோகமும் சேர்ந்து மேன்மேல் வருத்துதலால், 'வந்து இடர்மேலும் இடர்கள்தந்தனை' என்றாள். உன்வரவு எனக்கு முதலில் துன்பங்களையெல்லாம் போக்கியதாயினும் முடிவில் துன்பத்தின்மேல் துன்பமே யாயிற்று என்றபடி. அடர்கடந்ததிரள் புயம் - பகைவர்வலிமைக்கு அப்பாற்பட்ட திரண்டதோள் என்றலும் ஒன்று.

௩௪. ஆழிகாட்டியென்னாருயிர்காட்டினாய்க்
கூழிகாட்டுவெனென்றுரைத்தேனது
வாழிகாட்டுமென்றுண்டுன்வரைப்புயப்
பாழிகாட்டியரும்பழிகாட்டினாய்.

(இ - ள்.) ஆழி காட்டி - (இராமபிரானது) மோதிரத்தை யான்காணுமாறு கொண்டுவந்து எனக்குக் கொடுத்து (அதனால்), என் ஆர் உயிர் காட்

டினாய்க்கு - எனது அருமையான உயிரை ஒழியாதபடி என்உடலிலேயே நிலைபெறச்செய்தவனான உனக்கு, ஊழி காட்டுவென் என்று - (அவ்வுபகாரத்துக்குஈடாகக்) கற்பாந்தகாலத்தைக் காணுமாறு நீண்ட ஆயுளைக் கொடுக்கக்கடவே னென்று, உரைத்தேன் - அங்ஙனம் வாழ்த்துக்கூறினேன்; அது வாழி காட்டும் என்று உண்டு - அங்ஙனம் நான்வாழ்த்தின சொல் (உனக்குச்) சாவாதநிலையைத் தருமென்பது உள்ளது [அது தவறாது என்றபடி]; (ஆனால்), உன் வரை புயம் பாழி காட்டி அரும் பழி காட்டினாய் - (நீ)உனது மலைபோன்ற தோள்களின் வலிமையை அரக்கர்க்கெல்லாங் காட்டத்தொடங்கி முடிவிலே நீக்குதற்குஅரிய பழிப்பைப் பெறலானாய்; (எ - று.)

இதற்கு யான் என்செய்வேன்! என்று இரங்கியவாறும். "யான்மறுவிலாமனத்தே னென்னின், ஊழியோர்பகலாயோதும் யாண்டெலா மூலகமேழு, மேழும்வீவுற்றஞான்று மின்றென விருத்தி" என்று வாழ்த்தியபடி நீடூழி வாழ்வையாயினும், அரக்கர்கையிலகப்பட்டுக்கொண்டதனால் அவ்வாழ்வு பழுதுபட்டதே என்று பரிதபித்துச்கூறினாள். இனி, கணையாழிகாட்டி எனக்கு நீ உயிருதவி செய்ததற்கு ஈடாக யான் உனக்கு நெடுங்காலம் அழியாத உயிர்வாழ்க்கை உண்டாகுமாறு வாழ்த்துக்கூறினேன்: அவ்வார்த்தை வாழ்வைத்தரு மென்பதை உட்கொண்டு உன்தோள்வலியைக்காட்டத்தொடங்கிவிட்டுப் பெரும்பழிப்புற்றாய் என்று பொருள்கொள்ளினுமாம்; இவ்வுரைக்கு, உண்டு - உட்கொண்டு என்றபடி: வினையெச்சம்; முந்தினவுரைக்கு, உண்டு என்பது - குறிப்புமுற்று. அரும்பழி - ராமதூதன் பகைவர்கையிற் பட்டா னென்பது. (ருசு)

ருரு. கண்டு போயினை நீணெறி காட்டிட
மண்டு போரி னரக்கனை மாய்த்தெனைக்
கொண்டு மன்னவன் போமெனுங் கொள்கையைத்
தண்டினையெனக் காருயிர் தந்தநீ.

(இ - ள்.) எனக்கு ஆர் உயிர் தந்த நீ - (என்கணவனிடத்தினின்று என்னிடம் தூதுவந்து செய்திகூறித்தேற்றி) எனக்கு அருமையான உயிரை (உடம்பினின்றுஒழியாதபடிநிலைநிறுத்தி) உதவியவனான நீ, கண்டுபோயினை - (இவ்விடங்களைக்) கண்டு சென்று, நீள் நெறி காட்டிட - நீண்டவழியைக் காட்டிக்கொண்டு முன்வர, மன்னவன் - தலைவனான இராமபிரான், (இங்கு வந்து), மண்டு போரின் அரக்கனை மாய்த்து - நெருங்கிச்செய்யும்போரில் இராவணனைக் கொன்று, எனை கொண்டு போம் - என்னைச் சிறைமீட்டுக் கொண்டுசெல்வன், எனும் கொள்கையை - என்று (நான்) எண்ணிக்கொண்டிருந்த கொள்கையை, தண்டினாய் - (இப்போது நீ உன்வலிமைகாட்டத் தொடங்கிப் பகைவர்கையிற்பிடிபட்டதனால்) போக்கிவிட்டாய்; (எ - று.)

வளர்த்தவனே அழித்தாற்போல, எனக்கு ஆருயிர்தந்த நீயே இனி எனக்கு உன்மூலமாக க்ஷேமமுண்டாகுமென்று நான் கொண்டிருந்த மூழுநம்பிக்கையை அறக்கெடுத்துவிட்டாய் என்றபடி. எனக்கு நீ ஆருயிர்தந்த உதவி

பழுதுபட்ட தென்றாள். மன்னவன் போம் - செய்யுமென்முற்று, ஆண்பாலுக்கு வந்தது. (௫௫)

[இங்ஙனம் பலகூறிப்புலம்பிச் சீதை மூர்ச்சித்தல்.]

௫௬. ஏயப்பன்னினளின்னன தன்னுயிர்
தேயக்கன்றுபிடியுறத்தீங்குறு
தாயைப்போலத்தளர்ந்துமயர்ந்தன
டீயைச்சுட்டதொர்கற்பெனுந்தீயினாள்.

(இ - ள்.) இன்னன - இத்தன்மையனவான வார்த்தைகளை, ஏய பன்னினள் - தகுதியாகச் சொன்னவளாய், தன் உயிர் தேய - தனது உயிர் வலிமைகுறைய, கன்று பிடியுற தீங்கு உறு தாயை போல தளர்ந்து - தன் கன்று பிறர்கையிலகப்பட்டுக்கொள்ள அதனால் துன்பம் மிகுகிற தாய்ப்பசுவைப்போலத் தளர்ச்சியுற்று, மயர்ந்தனள் - மயக்கமடைந்தாள்; (யாவளெனில்),-தீயை சுட்டது ஓர் கற்பு எனும் தீயினாள் - நெருப்பையுஞ் சுடவல்லதான பதிவிரதாதரும மென்னும் ஒரு பெருநெருப்பை யுடையவளாகிய சீதை; (எ - று.)

கன்று - இளமைப்பெயர். இராவணவதத்தின்பின்னர் இராமபிரான் சீதாதேவியின் கற்புநிலைமையைக்குறித்துச் சங்கித்ததாகக் காட்டும்போது பிராட்டி இலக்குமணனைத் தீமூட்டச்சொல்லி 'யான் திரிகரணத்தாலும் தூய்மையுடையவளல்லேனாயின் என்னைத் தீச் சுடுக' என்று ஆணைகூறி அக்கினிப்பிரவேசஞ் செய்ய, அத்தீ அவள்கற்பின்தீயால் தீந்து அவளைத் தன் மீதுகொண்டு வெளிப்பட்டு "அங்கியான் என்னை இவ்வன்னைகற்பெனும், பொங்குவெந்தீச்சுடப் பொறுக்கிலாமையால், இங்கணைந்தேன்" என்றுதொடங்கி அவளது கற்புநிலைமையின் சிறப்பை வெளியிடுமாறு காண்க; மேல்மீட்சிப்படலத்தில், "பாலின்பஞ்செனத் தீந்ததவ்வெரி அவள்கற்பின்தீயினால்" என்பது நோக்கத்தக்கது. 'சுட்டது' என்றது - காலங்கருதாது தன்மைகருதியது. பிற்காலத்து நூலியற்றிய கவி யுத்தகாண்டத்துவரலாற்றை அநுவதித்து 'தீயைச்சுட்டது' என இறந்தகாலத்தாற் கூறினாரெனினுமாம். (௫௬)

[இதுநிற்க: இந்திரசித்து அநுமானைப் பிணித்தபடியே இராவணனரண்மனையுட் சென்றுசேர்தல்.]

௫௭. பெருந்தகைப்பெரியோனைப்பிணித்தபோர்
முருந்தன் மற்றையுலகொரு மூன்றையு
மருந்தவப்பயனாலரசாள்கின்றா
னிருந்தவப்பெருங்கோயில்சென் றெய்தினான்.

(இ - ள்.) பெருந் தகை - பெருமைக்குணத்தையுடைய, பெரியோனை - உருவத்தினாலும் பெரியவனான அநுமானை, பிணித்த - கட்டிய, போர் முருந்தன் - யுத்தத்திற் புகழ்பெற்றவனான இந்திரசித்து,—உலகு ஒரு மூன்றையும் அருந் தவம் பயனால் அரசு ஆள்கின்றான் இருந்த அ பெருங் கோயில்

சென்று எய்தினன் - மூன்று உலகங்களையும் தான்செய்த அருமையான தவத்தின்பயனால் அரசாள்கின்றவனான இராவணன் வீற்றிருக்கின்ற அந்தப்பெரிய அரண்மனையை [சபாமண்டபத்தை]ப் போய்ச் சேர்ந்தான்; (எ - று.)— மற்றை - அசை; பின்பு எனினுமாம்: மற்றுஎன்பதன்மேல், ஐ - சாரியை; வினைமாற்றுமாம்.

உலகு ஒருமூன்று - மேல் கீழ் நடு என்பன; அவை சுவர்க்கம், பாதாளம், பூமி. 'அருந்தவப்பயனா லரசாள்கின்றான்' என்றது - தனது நயனுடைமையால் அரசாள்கின்றவ னல்ல னென்ற குறிப்பு. (கஎ)

வே று.

[இதுமுதற் பதினேழுகவிகள் - இராவணன் அப்பொழுது அங்கு அரசுவீற்றிருக்கின்ற நிலைமையின் சிறப்பைக் கூறும்.]

கஅ. தலங்கண் மூன்றிற்கும் பிறிதொரு மதிதழைத் தென்ன
வலங்கல் வெண்குடைத் தண்ணிழ லவிரொளி பரப்ப
வலங்கொ டோளினன் மண்ணின்று வானுற வெடுத்த
பொலங்கொண் மாமணி வெள்ளியங் குன்றெனப் பொலிய.

இதுமுதற் பதினெட்டுக் கவிகள் - குளகம்.

(இ - ள்.) அலங்கல் - முத்துச்சரங்கள் சுற்றிலும் தொங்கியசையப் பெற்றதான, வெள் குடை - ஒற்றைவெண்கொற்றக்குடையானது, தலங்கள் மூன்றிற்கும் பிறிது ஒரு மதி தழைத்து என்ன - (இந்த நிலவுலகத்திற்கு மாத்திரம் ஒளிசெய்கிற இச்சந்திரனன்றி) மூன்று உலகங்களுக்கும் (விளக்கந்தருமாறு) வேறொரு சந்திரமண்டலம் தோன்றி வளர்ந்து விளங்கினாற் போல, தண் நிழல் அவிர் ஒளி பரப்ப - குளிர்ச்சியான நிழலையும் விளங்குகிற ஒளியையும் பரவச்செய்யவும்,— (அக்குடைதான்), வலம் கொள் தோளினால் மண் நின்று வான் உற எடுத்த பொலம் கொள் மா மணி வெள்ளி அம் குன்று என பொலிய - வலிமைகொண்ட (இருபது) கைகளைக்கொண்டு (அவ்விராவணன்) நிலவுலகத்திலிருந்து ஆகாயத்தை அளாவுமாறு மேலே தூக்கிய அழகுகொண்ட பெரிய சிறந்த வெள்ளிமலையாகிய கைலாசம்போல விளங்கவும்,—(எ - று.)—இச்செய்யுளிலுள்ள 'பரப்ப', 'பொலிய' என்ற செயவெனெச்சங்களும், அடுத்த பதினாறுகவிகளில் வரும் வினையெச்சங்களும், அடுக்கி மேல்வருகிற - ஆங் கவியில் வரும் 'இருந்த' என்னும் பெயரெச்சத்தைக் கொள்ளும்.

இவ்வுலகத்துக்குமாத்திரம் அரசனாகிற ஒருவனது ஒற்றைவெண்கொற்றக்குடைக்காயின், இவ்வுலகத்துக்குமாத்திரம் விளக்கந்தருகிற சந்திரனை உவமைகூறலாம்; அங்ஙனமன்றி, இராவணன் திரிலோகாதிபதியாதலால், அவனது மூவுலகத்தாட்சிக்கும் அறிகுறியாய்ச் சிறந்தோங்குகிற பெரிய குடைக்கு, மூவுலகத்துக்கும் விளக்கந்தருமாறு வேறொரு சந்திரன்

தோன்றிக் கலைநிறைந்து எப்பொழுதும் பூர்ணமாய் விளங்குதல்போல வென இல்பொருளுவமை கூறவேண்டிற்று; (இது, "முச்சகநிழற்று முழுமதி முக்குடை" என்பதனினும் வேறுபாடுடையது.) இராவணன் கைலாசகிரி யைப் பெயர்த்தெடுத்த வரலாறு கூறுமிடத்து, அவன் அம்மலையைத் தலைக்கு மேலே தூக்கியதாகக் கூறுதலு முளதாதலின், அங்ஙனம் உயர எடுக்கப் பட்ட வெள்ளிமலையோடு அவ்வெண் கொற்றக்குடை உவமிக்கப்பட்டது; அவன் மேற்கொண்ட குடை அவனது வெற்றிக்கு அறிகுறியாதல்போல, அவனெடுத்த கைலாசகிரியும் அவனது வலிமைச்சிறப்புக்கு அறிகுறியாதல் காண்க. இரண்டாமடியிற் கூறிய 'அலங்கல்வெண்குடை' என்பதே பின் னிரண்டடியிற் கூறிய உபமானத்துக்கும் உபமேயமாய் நின்றது. வட்டவடி வும், வெண்ணிறமும், ஒளியும், தனது ஆட்சியின்கீழ் அடங்கி வாழ்வார்க்குக் குளிர்ச்சியை விளைத்தலும், வானத்தி லோங்கி விளங்குதலும் பற்றி, வெண் கொற்றக்குடைக்குச் சந்திரமண்டலம் உவமை கூறப்பட்டது; அதற்குக் கைலாசகிரி உவமை - வெண்ணிறத்திலும், ஒளியிலும், வானுறவோங்கிவிளங்கு தலிலும், நெடுந்தூரம்நிழல்செய்தலிலு மென்க. அலங்கல் - தொங்கியசை வது; மாலைக்கு வழங்குகிற இது, குடையின்சுற்றிலுந்தொங்குகிற ஸரங்களை இங்குக் குறித்தது; "பொற்குடைக்குச், சூழ்தர நிரைத்துத்தூக்கிய முத்தின் சுடர்மணித் தொடையல்" என்னுமிடத்து 'தொடையல்' என்பது போல: (இச்சரங்கள், உலகவழக்கில் 'ஜாலர்' எனப்படும்.) அலங்கல் என்பதைத் தொழிலாகுபெய ரென்றுவது, 'அல்' என்னுங் கருத்தாப்பொருள் விகுதி பெற்ற பெயரென்றுவது இலக்கணங் காண்க. 'புலங்கொள்' என்ற பாடத் துக்கு - (மிக்க ஒளியினாலும் அழகினாலும் காண்பவருடைய) கட்புலத்தைக் கவர்ந்துகொள்கிற வென்று பொருள் கூறலாம். வெள்ளி - வெண்மையை யுடையதெனக் காரணக்குறி. 'வெண்குடை கண்குடை யவிரொளிபரப்ப' என்றும் பாட முண்டு.

இதுமுதல் இருபத்துமூன்று கவிகள் - கீழ்ப்படலத்தின் ௩௦ - ஆங் கவி போன்ற கலிநிலைத்துறைகள். (௩அ)

௩௯. புள்ளுயர்த்தவன்றிகிரியும்புரந்தரனயிலுந்
தள்ளின்முக்கணான்கணிச்சியுந்தாக்கியதழும்புங்
கள்ளுயிர்க்குமென்குழலியர்முகிழ்விரற்கதிர்வாள்
வள்ளுகிர்ப்பெருங்குறிகளும்புயங்களின்வயங்க.

(இ - ள்.) புள் உயர்த்தவன் திகிரியும் - சிறந்த பறவையான கருடனது வடிவமெழுதிய கொடியை உயரநாட்டியவனான திருமாலினது சக்கராயுதமும், புரந்தரன் அயிலும் - இந்திரனது வச்சிராயுதமும், தள் இல் முக்கணான் கணிச் சியும்-(பகையழித்தலில்) தவறுத திரிநேத்திரனான சிவபிரானுடைய சூலாயுத மும், தாக்கிய - தம்மீதுபட்டதனாலான, தழும்பும்-வடுக்களும், கள் உயிர்க்கும் மெல் குழலியர் - (சூடிய மலர்களின்) தேனைச் சொரிகிற மென்மையான

கூந்தலையுடைய மகளிருடைய, முகிழ் விரல் - செந்தாமரையரும்புபோன்ற விரல்களிலுள்ள, கதிர் வாள் வள் உகிர் - ஒளியையுடைய வாளாயுதம்போற் கூரிய நகங்கள் படுவதனாலான, பெருங் குறிகளும் - பெரிய வடுக்களும், புயங்களின் வயங்க - தனதுதோள்களில் விளங்கவும்,—(எ - று.)

சிறப்புப்பற்றி 'புள்' என்ற பறவையின்பெயர்- பக்ஷிராஜனை கருடனையும், 'முகிழ்' என்ற அரும்பின்பெயர் - செந்தாமரையரும்பையும் குறித்தன. புள் - பறவையின் வடிவ மெழுதப்பட்ட துவசத்துக்குத் தானியாகுபெயர். 'கள்ளுயிர்க்கு மென்குழலியர்' என்றது, மந்தோதரி தானியமாலினி முதலாக இராவணனுக்கு உரிய பலமகளிரை. இராக்கத மாதர்களுடைய கைவிரல்களின் கூரியநகங்கள், அவர்கள் ஆலிங்கனம்முதலிய சிருங்காரசேஷ்டைகள் செய்யும்போது இராவணன் தோள்களிற் பதிந்தன என்க. உகிர்க்குறி, நகக்ஷதம் எனப்படும். கைவிரலுக்குச் செந்தாமரையரும்பு - வடிவிலும், நிறத்திலும், அழகிலும் உவமம். மிக்ககாதலையுடைய மகளிரது விலாசவகையால் நேர்ந்த நகக்குறிகள்போலவே பகைவர்கள் எறிந்த ஆயுதங்களும் இவன்தோள்களில் வடுமாத்திரத்தைச் செய்தனவே யன்றி ஒன்றும் ஊறுபடுத்தாவாயின வென இராவணன்தோள்களின் பெருவலிமை விளங்கும்.　　(௯௧)

௪0. துன்றுசெம்மயிர்ச்சுடர்நெடுங்கற்றைகள்சுற்றி
நின்றுதிக்குறநிரல்படக்கதிர்க்குழாநிமிர
வொன்றுசீற்றத்தினுயிர்ப்பெனும்பெரும்புகையுயிர்ப்பத்
தென்றிசைக்குமோர்வடவனறிருத்தியதென்ன.

(இ - ள்.) துன்று - (பத்துத்தலைகளிலும்) அடர்ந்துள்ள, செம் மயிர் - செந்நிறமான மயிர்களின், சுடர் நெடுங் கற்றைகள் - பிரகாசமுள்ள நீண்ட தொகுதிகள், சுற்றி நின்று - சுற்றிலும் பரந்து நின்று, திக்கு உற - எல்லாத் திசைகளிலும் அளாவ, நிரல் பட கதிர் குழாம் நிமிர - (அவற்றினின்று) வரிசைவரிசையாக (ச் சிவந்த) ஒளிப்பிழம்புகள் (அவனது கரியமேனியின்மேல்) உயர்ந்தெழுந்து விளங்குதலாலும், ஒன்று சீற்றத்தின் உயிர்ப்பு எனும் பெரும் புகை உயிர்ப்ப - பொருந்திய கோபத்தோடு விடப்படுகிற பெருமூச்சாகிய பெரியபுகை வெளிப்படுதலாலும், தென் திசைக்கும் ஓர் வட அனல் திருத்தியது என்ன - தெற்குத்திக்கிலும் (கடலினிடையே) ஒரு படபாமுகாக்கினி அமைக்கப்பட்டதென்று சொல்லும்படியும்,—(எ - று.)

கரியபெரியவடிவமுடைய இராவணனது பத்துத்தலைகளின்மீது நெடுந்தூரம் உயர்ந்துவிளங்குகிற செம்பட்டமயிர்கள் சிவந்த அக்கினிச்சுவாலைகள் போலவும், இராவணன் பத்துமுகங்களிலு முள்ள மூக்கின் துளைகளின்வழியாகக் கோபத்தோடுவிடுகிற பெருமூச்சினின்று எழுகிற பெரும்புகை நெருப்பின் புகைபோலவும் விளங்குதலால், தென்கடலிடையிலுள்ள இலங்காபுரியில் தோன்றுகிற அக்காட்சி, தென்கடலிலே ஒருபடபாமுகாக்கினி அமைக்கப்பட்டதுபோலப் பிரகாசிக்கு மென்க ; தற்குறிப்பேற்றவணி. கடலிலே ஒருபெண்குதிரையின் முகத்தினின்று ஒரு பெருந்தீ எழுந்து எப்பொழுதும்

பற்றியெரிந்து கொண்டிருக்கிறதென்றும், அது மழைப்பெருக்கு முதலியவற்றால் கடல்பொங்காதபடி அதிகப்படும் நீரை உறிஞ்சி வற்றச்செய்து வருகிறதென்றுங் கூறுதல் நூற்கொள்கை; அந்தப்படபாமுகாக்கினி வடகடலிலேயுள்ள தென்று குறிக்கப்பட்டு, 'வடவனல்' என்று வழங்கப்படுதலால், இங்கு 'தென்திசைக்கும்' என்ற உம்மை இறந்தது தழுவிய எச்சப்பொருளது.

சக. மரகதக்கொழுங்கதிரொடுமாணிக்கநெடுவா
ணரகதேயத்துணடுக்குறுமிருளையுநக்கச்
சிரமனைத்தையுந்திசைதொறுந்திசைதொறுஞ்செலுத்தி
யுரகர்கோனினிதரசுவீற்றிருந்தனனொப்ப.

(இ - ள்.) மரகதம் கொழுங் கதிரொடு மாணிக்கம் நெடு வாள் - (பத்துத் தலைகளிலும் அணியப்பட்டுள்ள பத்துக்கிரீடங்களிலும் பதிக்கப்பட்டிருக்கிற) மரகதரத்தினத்தின் செழுமையான ஒளியுடனே (அவற்றிற்பதிக்கப்பட்டுள்ள) மாணிக்கங்களின் நீண்டஒளியும், நரக தேயத்துள் நடுக்கு உறு இருளையும் நக்க - நரகலோகத்தினுள்ளே (எச்சுடர்க்கும்) அஞ்சாது நிறைந்திருக்கிற இருளையும் தாவிவிழுங்க, (அதனுல்தான்), உரகர் கோன் சிரம் அனைத்தையும் திசை தொறும் திசைதொறும் செலுத்தி இனிது அரசு வீற்றிருந்தனன் ஒப்ப - சர்ப்பராசனுன ஆதிசேஷன் தனது தலைகளையெல்லாம் எல்லாத்திசைகளிலுஞ் செல்லுமாறு பரப்பிக்கொண்டு இனிமையாக அரசுவீற்றிருக்கின்றனன் போன்று விளங்கவும்,—(எ - று.)

கொடிய அரக்கர்தலைவனுன இராவணனுடைய உயர்ந்த பத்துத்தலைகளின் கிரீடங்களிலிருந்து எழுகிற மரகதரத்தினத்தினொளியோடு கூடிய மாணிக்கத்தின் காந்தி, கொடியபாம்புகளின் தலைவனுன ஆதிசேஷனுடைய பலதலைகளின் பசியபடங்களிலுள்ள மாணிக்கத்தினொளிபோன்று விளங்குதலால், இராவணன் ஆதிசேஷன்போல்வ னென்க. ராக்ஷசராசனது ஒவ்வொருதலைக்கும் நாகராசனது நூறுநூறுதலை ஈடாம்; இராவணன் பத்துத்தலைகளையும் ஆதிசேஷன் ஆயிரந்தலைகளையு முடையனுதலின். மரகதம் - பச்சையிரத்தினம். மாணிக்கம் - செந்நிறமுடையது. நெடு வாள் - நெடுந்தூரஞ்சென்றுவிளங்கும் ஒளி. "இருள்சேர்ந்த இன்னுவுலகம்," "ஆரிருளுய்த்துவிடும்" என்றபடி தாமிஸ்ரம் அந்ததாமிஸ்ரம் என்ற சில நரகவகைகள் திணிந்த இருளையுடைமையாலும், நரகம் கீழுலகத்து உள்ளதாதலாலும், 'நரகதேயத்துள் நடுக்குறு இருள்' எனப்பட்டது; 'அதனையும் நக்க' என, கிரீடகாந்தி மிகுதியை விளக்கியவாறு. அரசுவீற்றிருத்தல் - சிறப்பாய் அரசாட்சிசெலுத்திக்கொண்டு சபையிற் கொலுவீற்றிருத்தல்; வீறு - வேறொன்றற்கில்லாத சிறப்பு; மிக்கசிறப்பு. (சக)

சஉ. குளித்தபன்மணிக்குப்பைகள்கலையொடுங்கொழிப்பச்
சவிச்சுடர்க்கலனணிந்தபொற்றேளொடுதயங்கப்
புவித்தடம்படர்மேருவைப்பொன்முடியென்னக்
கவித்துமாலிருங்கருங்கடலிருந்ததுகடுப்ப.

(இ - ள்.) குயிற்ற - தேர்ந்தெடுத்து ஒருங்குசேர்த்துப் பதிக்கப்பட்ட, பல் மணி குப்பைகள் - பலவகை யிரத்தினங்களின் கூட்டங்கள், கலையொடும் கொழிப்ப - அரைப்பட்டிகையினின்று ஒளி வீசி விளங்கவும்,—சுவி சுடர் கலன் அணிந்த பொன் தோளொடு தயங்க - சூரியகாந்திபோன்ற ஒளியையுடைய ஆபரணங்கள் தம்மை அணிந்துள்ள அழகிய தோள்களோடு அமைந்து விளங்கவும்,—மால் இருங் கருங் கடல் - மிகப்பெரிய கருநிறமான கடலானது, புவி தடம் படர் மேருவை - பூமியினிடத்தில் நெடுந்தூரம் பரவியுள்ள மேரு மலையை, பொன் முடி என்ன கவித்து - சுவர்ண கிரீடமாகச் சூட்டிக்கொண்டு, இருந்தது - வீற்றிருப்பதை, கடுப்ப - ஒப்பவும்,—(எ - று.)

கருநிறமுள்ள பெருவடிவுடைய இராவணன் சுவர்ணகிரீடத்தைத் தரித்துக்கொண்டு அரசுவீற்றிருத்தல், கரிய பெரிய கடல் பொன்மயமான மேருமலையை முடிமீதுகொண்டு வீற்றிருந்தாற்போலுமென வருணித்தார்; தற்குறிப்பேற்ற உவமையணி. கலையொடுங்கொழிப்ப என்பதற்கு - காந்தியோடு தொகுக்கப்பட்டு விளங்க எனினும் அமையும்; உத்தரீயத்தொடும் ஒளிவீச வென்று உரைப்பாருமுளர். 'புவித்தடம்படர்' என்பது - பூமியிலே விசாலமாகப்பரவிய வென்றும் பொருள்படும். 'தோளொடுதயங்க' என்றவிடத்து, 'ஒடு' என்பதை இசைநிறையெனக் கொண்டு விலக்கி, தோள்கள் விளங்க வென்றலுமொன்று. (சஉ)

சங. சிந்துராகத்தின்செறிதுகிற்கச்சொடுசெறியப்
பந்திவெண்முத்தினணிகலன்முழுநிலாப்பரப்ப
விந்துவெண்குடைநீழலிற்றாரகையினம்பூண்
டந்திவானுடுத்தல்லுவீற்றிருந்ததாமென்ன.

(இ - ள்.) சிந்துராகத்தின் செறி துகில் - சிந்தூரம் போன்ற செந்நிறத்தோடுபொருந்திய அரையிலுடுத்த ஆடையானது, கச்சொடு செறிய - அரைக்கச்சுடனே கூடி விளங்க, பந்தி வெள் முத்தின் அணி கலன் முழு நிலா பரப்ப - வரிசைவரிசையாக வெண்ணிறமான முத்துக்களைக்கொண்டு அமைக்கப்பட்ட ஆபரணங்கள் பூர்ணசந்திரகாந்திபோன்ற ஒளியைப் பரவச்செய்ய, (அதனால்), அல்லு - இருளானது, அந்தி வான் உடுத்து - செவ்வானத்தை இடையிலே ஆடையாகத்தரித்துக்கொண்டு, தாரகை இனம் பூண்டு - நக்ஷத்திரங்களின் கூட்டத்தை ஆபரணமாகத்தரித்து, இந்து வெள் குடை நீழலில் - சந்திரனாகிய வெண்கொற்றக்குடையின் நிழலிலே, வீற்றிருந்தது - கொலுவீற்றிருந்த காட்சியை, ஆம் - போலும், என்ன - என்று (தன்னைக்கண்டவர்) சொல்லும்படியும்,—(எ - று.)

இருள் அரசுவீற்றிருத்தல் - கருநிறமுள்ள இராவணன் கொலுவிருத்தற்கும், செவ்வானம் - செந்நிறமுள்ள அவனது ஆடைக்கும், வெண்ணிறமான நக்ஷத்திரக்கூட்டம் - அவனது முத்தாபரணங்களுக்கும், சந்திரமண்டலம் - வெண்கொற்றக்குடைக்கும் உவமை யெனக் காண்க. (சங)

சச. வண்மைக்குந்திருமறைகட்கும்வானினும்பெரிய
திண்மைக்குந்தனியுறையுளாமுழுமுகந்திசையிற்
கண்வைக்குந்தொறுங்களிற்றொடுமாதிரங்காக்கு
மெண்மர்க்கும்மற்றையிருவர்க்கும்பெரும்பயமியற்ற.

(இ - ள்.) வண்மைக்கும் - அழகுக்கும், திரு மறைகட்கும் - சிறந்த வேதங்கட்கும், வானினும் பெரிய திண்மைக்கும் - ஆகாயத்தினும் பெரியதான பலத்துக்கும், தனி உறையுள் ஆம் - ஒப்பற்ற இருப்பிடமாகிய, முழு முகம் - (தனது) பெரியமுகங்கள் பத்தும், திசையில் கண் வைக்கும் தொறும் - பத்துத்திக்குக்களிலும் கண்பார்வையைச் செலுத்தும்போதெல்லாம், களிற்றொடு மாதிரம் காக்கும் எண்மர்க்கும் மற்றை இருவர்க்கும் பெரும் பயம் இயற்ற - (ஐராவதம்முதலிய) திக்கஜங்களோடுகூடிய திக்குக்களெட்டையும் பாதுகாக்கிற அஷ்டதிக்பாலகர்களுக்கும் மேலும் கீழு மிருந்து பரிபாலிக்கிற (துருவன் ஆதிசேஷன் என்னும்) இருவர்க்கும் மிக்க அச்சத்தைச் செய்யவும்,—(எ - று.)

"வேதமவையொராயிரமும் விளங்குங்கலையுந் தசக்கிரிவ, னோதவோத", "வீணையினிசைபட வேதம்பாடுவான்," "பன்னருஞ்சாமகீதம் பரிவுடன் பாடலுற்றான்" என்றபடி இராவணன் வேதமோதியவ னாதலால், அவனது முகம் 'திருமறைகட்குத் தனியுறையுளாம் முகம்' எனப்பட்டது. 'வானினும் பெரிய திண்மை' என்றல், ஒருவகைக்கவிமரபு. உறையுள்- உறை உள் எனப் பிரித்து, வசிக்குமிடம் என்க. காக்கும் எண்மர் - இந்திரன், அக்கினி, யமன், நிருருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என இவர்; இவர்களைக் கிழக்கு முதலாக முறையே கொள்க. 'எண்மர்' என்ற பெயரில், ம்-பெயரிடைநிலை. மூன்று உலகங்கட்கும் மேலிடத்தி லிருந்து ஆட்சிசெலுத்துதலால் துருவனும், பாதாளலோகத்துக்குங் கீழிருந்து ஆட்சிசெய்தலால் ஆதிசேஷனும் முறையே மேலிடத்துக்கும் கீழிடத்துக்கும் பாலக னெனப்பட்டனர். மற்றையிருவர் - பத்துத்திசைகளிற் கீழ்க்கூறிய எட்டொழிந்த மேலிடத்தையும் கீழிடத்தையும் பரிபாலிப்பவ ரென்றபடி. (சச)

சரு. ஏகநாயகன்றேவியையெதிர்ந்ததற்பின்னை
நாகர்வாழ்விடமுதலெனநான்முகன்வைகு
மாகமால்விசும்பீறெனநடுவணவரைப்பிற்
றோகைமாதர்கண்மைந்தரிற்றோன்றினர்சுற்ற.

(இ - ள்.) ஏக நாயகன் தேவியை எதிர்ந்ததன் பின்னை - (எல்லாவுயிர்கட்கும்) தனித்தலைவனான இராமபிரானுடைய மனைவியாகிய சீதாபிராட்டியைச் சந்தித்து நோக்கின பின்பு, நாகர் வாழ்வு இடம் முதல் என நான்முகன் வைகும் மா கம் மால் விசும்பு ஈறு என நடுவண வரைப்பில் தோகை மாதர்கள் மைந்தரின் தோன்றினர் - சர்ப்பசாதியார்வாழுமிடமான பாதாளலோகம் முதலாகப் பிரமதேவன்வாழ்கிற பெரியவானத்தின்மீதுள்ள சிறந்த

சத்தியலோகம் ஈறாக நடுவிலுள்ள உலகங்களனைத்திலும் உள்ளவர்களான மயில்போலுஞ் சாயலுள்ள அழகிய மகளிர்கள் (இராவணன் கண்பார்வைக்கு) ஆடவர்போலத் தோன்றியவராய் [அவனுக்குச் சிறிதுங் காதல்விளைக்க மாட்டாதவர்களாய்], சுற்ற - சூழ்ந்துநிற்கவும்,—(எ - று.)

பாதாளம் முதலாகக் கூறப்படுகிற கீழேழுலகங்களும் சத்தியலோக மீறாகக் கூறப்படுகிற மேலேழுலகங்களு மாகிய பதினான்கு உலகங்களிலும் வசிப்பவரான பலமகளிரை முன்பு இராவணன் கண்டு காதலித்து வலியக் கவர்ந்துவந்தன னாயினும், அவன் சூர்ப்பணகையினால் தூண்டப்பட்டுப் பஞ்சவடிக்குவந்து சீதையைக் கண்டு அவளழகில் ஈடுபட்டு அவள்பக்கல் பெருங்காதல்கொண்டதுமுதல் அவனுக்கு அம்மகளிரிடத்தும் கிஞ்சித்தும் வேட்கைவிளைந்ததில்லை யென்க. அதற்கு, ஆடவர்பக்கல் ஆடவர்க்குக் காமக்குறிப்புஉண்டாகாத இயல்பை உவமைகூறுவார், 'ஏகநாயகன் தேவியை யெதிர்ந்ததற்பின்னை மாதர்கள் மைந்தரிற்றோன்றினர் சுற்ற' என்றார். பற்பல வுலகத்துமகளிரும், முன்பெல்லாம் தாம்அவனெதிரிற்காணப்பட்டால் அவன் தம்மை வலியக்கற்பழித்துவிடுவானென்னும் அச்சத்தால் அவன்முன்னே வருதற்குக் கூசுவராயினும், அவன் சீதையைக் கண்டு காதல்கொண்டது முதல் பிறமகளிரைச் சிறிதும் பொருள்செய்யாமையால், அம்மாதர்கள் ஆடவர் போலவே [அவன்காதற்குஇடமாகாதவராய்] துணிவுடன் வெளிப்பட்டு அவனைச் சூழ்ந்துநிற்ப ரென்றுங் கொள்க. ஏகநாயகன், தேவீ - வடசொற்கள். விசும்பு - எல்லாவுலகங்கட்கும்மேலுள்ளதான சத்தியலோகத்துக்கு இடவாகு பெயர். நடுவண - குறிப்புப்பெயரெச்சம். வரைப்பு - இடம்; எல்லை. (௪௫)

௪௬. வானரங்களும்வானவரிருவரு மனித
ரானபுன்றொழிலோரெனவிகழ்கின்றவவரு
மேனைநின்றவரிருடியர்சிலரொழிந்தியாருந்
தூநவின்றவேலரக்கர்தங்குழுவொடுசுற்ற.

(இ - ள்.) வானரங்களும் - குரங்குகளும், வானவர் இருவரும் - தலைமைத்தேவர்களான ஹரிஹரர்களும், புல் தொழிலோர் என இகழ்கின்ற மனிதர் ஆன அவரும் - எளிய செயல்களையுடையவர்களென்று (இராவணனால்) இகழப்படுகின்றவர்களான மனிதர்களும், ஏனை நின்றவர் இருடியர் சிலர் - மற்றும் விலகிநின்றவர்களான சில முனிவர்களும், ஒழிந்து - (ஆகிய இவர்கள்) நீங்கலாக, யாரும் - மற்றையெல்லோரும், தூ நவின்ற வேல் அரக்கர்தம் குழுவொடு சுற்ற - (முன்சொல்லப்பட்டவர்களாது) தசைதோய்ந்த வேலாயுதத்தையுடைய இராக்கதர்களின் கூட்டத்தோடொப்பச் சூழ்ந்துநிற்கவும்,—(எ - று.)

அரக்கர்போலவே மற்றைத் தேவகணத்தாரும் ராக்ஷஸராஜனான ராவணனுக்கு அடிமைப்பட்டுப் பரிசனங்களாக அமைந்து அவன் கட்டளையை எதிர்நோக்கிக்கொண்டு குற்றேவலாளர்போன்று சூழ்ந்துநிற்கின்றன ரென்க.

ஆதியில் இராவணன் கடுந்தவஞ்செய்து அரியபெரியவேள்வியையும் முடிக்கும் போது பிரமதேவன் அவனுக்குப் பிரதியக்ஷமாகி 'நீ வேண்டும் வரம் வேண்டுக' என்றதற்கு, அத்தசமுகன், 'எனக்குத் தேவகணங்களாலும் சிங்கம் முதலிய கொடியபிராணிகளாலும் சாவில்லாதிருக்க வரமளிக்கவேண்டும்; மனிதரையும் மற்றுமுள்ள அற்பஜந்துக்களையும் யான் இலக்கில் வைத்தேனில்லை' என்று வரம்வேண்டிப் பெற்றனனாதலால், அவன் மனிதர்களிடத்துக் கொண்டிருந்த அலக்ஷ்யதாபுத்தி விளங்கும்; "தொல்லுலகில், மன்னுமனிதர்தமைப் பொருளாய் மனத்தில் நினையான் வாளரக்கன்" என்னும் உத்தரகாண்டமுங் காண்க: "விஞ்சையயாவுணர்சித்தருரகர்விண்ணவர்கடம்மாற், றஞ்சுதலின்றி யெல்லாவுலகமுந் துனைவில்வெல்ல, வெஞ்சமத்தற்ற சென்னிதோளவைமீளவெய்தக், கஞ்சநாண்மலரோய் நல்கென்றிரத்தலுங் கடவுணீந்தான்" என்பர் கூர்மபுராணத்தும். (இதுபற்றியே, திருமால் இராவணனைக்கொல்லுதற்கு 'மனிதனாக அவதரித்தது.) இங்ஙனம் மனிதர்களைக்குறித்து இகழ்ச்சிக்கருத்துடையனாதலால் அவன் அவர்களைப் பரிசனமாகக்கொண்டில னென்பதுபற்றி,'மனிதரான புன்தொழிலோரென இகழ்கின்ற அவரும்' என்று மனிதர்களை விலக்கினர். வாநரங்கள் அஃறிணையென்னுங் கருத்தால் அவனாற் பரிசனமாகக்கொள்ளப் பட்டில வென்னலாம்; மற்றும், வாநரராசனாகவிருந்த வாலி இராவணனை வென்றவனாதலால் வாநரங்கள் இராவணனுக்குக் கீழ்ப்படிந்தில வென்க. வானவரிருவர் - பிரம விஷ்ணுக்க ளெனினுமாம். தலைமைத்தேவர்களும், யோக பலத்தால் இராவணனுக்கு உட்படாதுநின்ற சில சிறந்த இருடிகளுமே, அவனுக்குக் குற்றேவலரா யொழுகாதார். 'இங்கு வானவரிருவர்' என்றது, தொகைக்குறிப்பு. 'தூநவின்ற' என்பதற்கு - புலால்நாற்றம் வீசுகிற என்று உரைப்பாருமுளர். (சகூ)

சஎ. நரம்புகண்ணகத்துள்ளுறைநறைநிறைபாண்டி
னிரம்புசில்லரிபாணியுங்குறடுநின்றிசைப்ப
வரம்பைமங்கையரமிழ்துகுத்தாலன்னபாடல்
வரம்பிலின்னிசைசெவிதொறுஞ்செவிதொறும்வழங்க.

(இ - ள்.) நரம்பு - யாழ்முதலிய கருவிகளின் நரம்பாகிய, கண் அகத்துள் - கரும்புக்கணுவினிடத்தே, உறை - பொருந்திய, நறை - இனிய ரசமாகிற இன்னிசையும், நிறை பாண்டில்-இலக்கணம்நிறைந்த பாண்டிலென்னும் வாத்தியமும், நிரம்பு சில்லரி - இலக்கணம்நிறைந்த சில்லரியென்னும் வாத்தியமும், பாணியும்-கைத்தாளமும், குறடும்-குறடென்னும் வாத்தியமும், நின்று இசைப்ப - இடையறாது நிலைநின்று ஒலிக்கவும்,—அரம்பை மங்கையர் - தேவமாதர்கள், அமிழ்து உகுத்தால் அன்ன - அமிருதத்தைச் சொரிந்தாற்போன்ற [மிகஇனிய], பாடல் வரம்பு இல் இன் இசை - வாய்ப்பாட்டினது அளவிறந்த இனிமையையுடைய கீதத்தை, செவி தொறும் செவி தொறும் வழங்க - தனது இருபதுகாதுகளிலும் சொரியவும்,—(எ - று.)

பாண்டிலும் சில்லரியுங் குறடும் வாத்திய விசேஷங்களாதலே, "இளையுறுபாடல் சில்லரிப்பாண்டில் தழுவிய முழவொடு செழுமி," "முந்துறு குணிலோடியைவுறு குறட்டிற் சில்லரிப்பாண்டிலின்" எனக் கீழ் கிந்தனைப் படலத்தும் காண்க. பாணி - கை: வடசொல்; அதனால் வரையறுத்து இடப்படுகிற தாளத்திற்கு இலக்கணை. கரும்பின்கணுவைச் சிதைத்தலால் வெளியெழும் இனியசாறுபோல, யாழ் முதலிய கருவிகளின் நரம்பிற் கை வைத்தலால் எழும் இன்னிசை என்ற கருத்து அமைய 'நரம்பு கண்ணகத் துள்ளுறை நறை' எனப்பட்டது; உருவகவிசேடம். செய்யுளோசையினி மை நோக்கி, நரம்புக்கண்ணக மென வலி மிகவில்லை. பாண்டில் - பிரம தாள மெனப்படும் பெரிய வட்டமான தாளமென்றும், சில்லரி - காகசுர மென்றும் கூறுவர். குறடு - குறுந்தடிகொண்டு அடிக்கப்படுவதொரு வாத்தியம். இன்னிசைப்பாடல் என மொழிமாறினுமாம். செவிதோறும் செவி தொறும் வழங்குதல் - ஒவ்வொருமுகத்தின் இருபுறத்துக்காதுகளிலுங் கேட்குமாறு பாடுதல். 'வாம்பிலின்சுவை' என்றும் பாட முண்டு. அமிழ்துஉருத் தால்அன்ன பாடல் - அமிருதம் நாவுக்கினிமைதருதல்போலச் செவிக்குஇனிமைதருகிற சங்கீதமென்க. 'நரம்பு கண் அகத்துள் உறை நறை' என்பதற்கு - தந்தியைக் கருதியமுத்துகிற இடத்திலே இருப்பதான இசைத்தேனென்று உரைப்பாருமுளர். சில்லரியென்பதைச் சில் அரி எனப்பிரித்து, சில அரிகளை யுடையதென்று காரணப்பொருள் கூறலாம்; அரி - துளை. (சஎ)

சஅ. கூடுபாணியினிசையொடுமுழவொடுங்கூடத்
தோடுசீறடிவிழிமனங்கையொடுதொடரு
மாடனோக்குறினருந்தவமுனிவர்க்குமமைந்த
வீடுமீட்குறுமேனகைமேனகைவிளங்க.

(இ - ள்.) கூடு பாணியின் இசையொடும் - தகுதியுள்ளதா யமைந்த பாட்டின் இசையோடும், முழவொடும் - மத்தளத்வனியோடும், கூட - (மாறுபடாது) ஒத்துவருமாறு, தோடு சீறு அடி விழி மனம் கையொடு தொடரும் - செந்தாமரைமலரி னிதழைத் தமக்கு ஒப்பாகாதென்று வெறுக்கிற கால்களும் கண்களும் மனமும் கைகளும் ஆகிய இவ்வுறுப்புக்களின் ஒற்றுமையுடன் செய்கிற, ஆடல் -, நாட்டியத்தை, நோக்குறின் - பார்ப்பரானால், அருந் தவம் முனிவர்க்கும் அமைந்த வீடு மீட்குறும் - அருமையான தவத்தைச் செய்கிற முனிவர்களும் தமக்கு உளதாகும் முத்தியின்பத்தைக் கைவிட்டுத் தன்மேல் மனந்திரும்பும்படிசெய்கிற, மேனகைமேல் - மேனகையென்னுந் தேவமாதின்மேல் [தேவமாதைக்குறித்து என்றபடி], நகை விளங்க - மகிழ்ச்சியாற் சிரிப்புத் தோன்றவும், —(எ - று.)

இசைநாடகநூல்களின் முறைமை வழுவாது பாட்டிசைக்கும் தாளவடைவுக்கும் பொருந்த மனக்கருத்தைக் கண்கைகளின் அபிநயத்தால் வெளியிட்டுக் கால்களை அடைவுபடவைத்துப் பரதநாட்டியஞ்செய்பவளும், எல்லாப்

பற்றுக்களையும் முற்றத்துறந்து வீடுபெறத் தவஞ்செய்து சித்திபெறுகிற முனிவர்களும் அந்நாட்டியத்தைக் காண்பாராயின் தம்வைராக்கியத்தையிழந்து தன்னைக்காதலிக்கப்பெறுபவளுமான மேனகை கூத்தாடுதலைக் கண்டு அவன் பக்க லுண்டான மகிழ்ச்சியால் இராவணன் புன்னகைகொண்டன னென்க. "நெய்திரள் நரம்பிற்றந்த மழலையினியன்றபாடல், தைவருமகரவீணை தண்ணுமைதழுவித்தாங்கக், கைவழிநயனஞ்செல்லக்கண்வழிமனமுஞ்செல்ல, ஐய நுண்ணிடையாராமொடேகவரங்குகண்டார்" என்ற பாலகாண்டச் செய்யுளும், "செய்வகையறியார்கண்டனர்திகைப்பத் திருந்தியதாளவாத்தியங்கள், தைவரும்வண்ணமூவகைச்சதியுந் தப்பறத்தனித்தனிகாட்டிக், கைவழி கண்ணும் கண்வழிமனமுங் கலந்திடக் கற்பகநாட்டுத், தெய்வமங்கையர்கள் நாணினர்சிற்பச் சேயிழையார் நடமாட" என்ற உத்தரகாண்டச்செய்யுளும் ஒப்புநோக்கத்தக்கவை. மேனகை அருந்தவமுனிவர்மனத்தையும் தன்பக்கல் மீட்கவல்லவளாதலை, அவள் விசுவாமித்திரமாமுனிவரைத் தவநிலைகெடுத்ததனாலும் அறிக. தோடு என்ற இதழின்பெயர், இங்குச் சிறப்பாய், செந்தாமரைமலரினிதழைக் குறித்தது. 'பாணியினிசையொடும்' என்பதற்கு - தாளவோசையோடும் என்று உரைப்பாரு முளர். (சஅ)

சகூ. ஊடினார்முகத்துறுநறையொருமுகமுண்ணக்
கூடினார்முகக்களிநறையொருமுகங்குடிப்பப்
பாடினார்முகத்தாரமுதொருமுகம்பருக
வாடினார்முகத்தணியமுதொருமுகமருந்த.

(இ - ள்.) ஊடினார் முகத்து உறு நறை-தன்னோடுபிணங்கிய மகளிரின் முகத்திலே தோன்றுகிற இன்பச்சுவையாகிய தேனை, ஒரு முகம் உண்ண - (தனதுபத்துமுகங்களில்) ஒருமுகமானது நுகரவும்,—கூடினார் முகம் களி நறை - தன்னோடுகூடினமகளிரது முகத்திலே தோன்றுகிற களிப்பாகிய களிப்பைத்தரும் மதுவை, ஒரு முகம் குடிப்ப - ஒருமுகமானது பானஞ்செய்யவும், பாடினார் முகத்து ஆர் அமுது - (தன்னிடத்துவேட்கையுடன்) இசைபாடின மகளிரது முகத்தில் தோன்றுகிற காதற்குறிப்பாகிய அருமையான அமிருதத்தை, ஒரு முகம் பருக - ஒருமுகமானது குடிக்கவும்,—ஆடினார் முகத்து அணி அமுது - நர்த்தனஞ்செய்த மகளிரது முகத்திலே தோன்றுகிற அபிநயரசமாகிற அழகிய இனிய உணவை, ஒரு முகம் அருந்த - ஒரு முகமானது உண்ணவும்,—(எ - று.)

ஊடலாவது - இன்பநிலையில் அவ்வின்பத்தை மிகுவிக்கும் பொருட்டு கூடவரோடு மகளிர் பிணங்குதல்; இது - புலவி யெனவும், பிரணயகலக மெனவும் படும். ஊடுதல், கூடுதல், பாடுதல், ஆடுதல் செய்யும் மகளிரது உள்ளக்கருத்து அவரவரது முகக்குறிப்பிலே வெளியாக, அதனை இராவணன் தனது பத்துமுகங்களுள் ஒவ்வொன்றின் கண்பார்வையைச் செலுத்தும்போது நோக்கியுணர்வ னென்க. "புணர்தலி னூட லினிது," "ஊடுதல்

காமத்திற்கின்பம்" என்றபடி ஊடலின்பம் சிறத்தலால், அவர் முகத்தில் தோன்றுகிற இன்பச்சுவை 'தேன்' எனப்பட்டது; அதனை முதலிற் கூறிய தும் அதன்சிறப்புப்பற்றியே போலும். இங்கு 'ஊடினார்', 'கூடினார்' என்றது உரிமை பூண்ட மகளிரை யாதலின், உரிமைபூணாத மகளிரின் நிலைமை யைக் கூறிய நாற்பத்தைந்தாஞ் செய்யுளோடு மாறுகொளக்கூறலாகா தென்க. 'பாடினார்முகத்து ஆரமுது' என்பதற்கு - பாடுகிற மகளிரின் வாயி னின்று வெளிப்பட்ட இன்னிசையாகிய அரிய அமிருதமென்று உரைப்பாரு முளர்; ஒருபொருளைத்தருவனவான உண்ண, குடிப்ப, பருக, அருந்த என்ற பலசொற்கள் இச்செய்யுளில் வந்தது, பொருட்பின்வருநிலையணியாம். இராவணன் இராக்கதனாதலால் மதுபானஞ்செய்தற்கும் தேவர்களைவென்ற வனாதலால் அமிருதமுண்ணுதற்கும் உரியவனாதல்பற்றி, இவனாலுண்ணப் படுபவற்றை நறையும் அமுதமுமாகக் கூறினார்.　　　(௫௯)

௬0. தேவரோடிருந்தரசியலொருமுகஞ்செலுத்த
மூவரோடுமாமந்திரமொருமுகமுயலப்
பாவகாரிதன்பாவகமொருமுகம்பயிலப்
பூவைசானகியுருவொடுமொருமுகம்பொருந்த.

(இ - ள்.) ஒரு முகம்—, தேவரோடு இருந்து அரசு இயல் செலுத்த - (தன் கீழ்க்குடிகளாகிய) தேவர்களுடனே கலந்து அளவளாவி அரசாட்சி நடத் தவும்,—ஒரு முகம்—, மூவரோடு மா மந்திரம் முயல - (மந்திரிகள் பிரதானி கள் சேனாபதிகள் என்னும்) முத்திறத்தாரோடு கலந்து பெரிய ஆலோசனை செய்யவும்,—ஒருமுகம்—, பாவகாரிதன் பாவகம் பயில - தீவினை செய்பவ னென தனக்கு உரிய (தீய) சிந்தனையைப் பொருந்தி அக்குறிப்பை வெளியிட வும்,—ஒரு முகம்—, பூவை சானகி உருவொடும் பொருந்த - கிளி போன்றவ ளான சீதையினது உருவெளியுடனே பொருந்தவும்,—(எ - று.)

"அமைச்சர் புரோகிதர் சேனாபதியர், தவாத்தொழிற்றூதுவர் சாரணரென் றிவர், பார்த்திவர்க் கைம்பெருங்குழு வெனப்படுப" என்றபடி அரசர்க்குரிய ஐம்பெருங்குழு வெனப்படுகிற ஐந்து திறத்தாரில் முந்திய மூவரும் மந்திரா லோசனைக்குச் சிறத்தலால் 'மூவரோடு மாமந்திரம் ஒரு முகம் முயல' எனப் பட்டது. மூவரோடு - திரிமூர்த்திகளோடொப்ப எனினுமாம். பூவை - கிளி அல்லது நாகணவாய்ப் பறவை; இவ்விரண்டும் - மகளிர்க்குக் கொஞ்சிப் பேசும் இன்சொல்லில் உவமை கூறப்படும். இங்கு, பூவை - உவமையாகு பெயர். 'பூவை' என்பது சொல்லால் அஃறிணையாயினும் பொருளால் உயர் திணையாதலால், அதன்முன் வருமொழி முதல்வலி மிகவில்லை. மனத்தில் இடைவிடாது நினைக்கப்படுகிற பொருள் அந்தப்பாவனையின் மிகுதியாற் கண் ணுக்கு எதிரிற் காணப்பட்டாற்போலத் தோன்றுதல் வியல்பு; அது உரு வெளித்தோற்றமெனப்படும். அங்ஙனம் தனக்கு அருகிலே புலனாகிற சீதை யின் உருவெளியை ஒருமுகம் தன்கண்களால் நோக்கிற்றென்க.　　　(௬0)

௫௧. காந்தண்மெல்விரற்சனகிதன்கற்பெனுங்கடலை
நீந்தியேறுவதெங்ஙனென்றொருமுகநினையச்
சாந்தளாவியகொங்கைநன்மகளிர்தற்சூழ்ந்தா
ரேந்துமாடியினொருமுகமியல்புடனிலங்க.

(இ - ள்.) ஒரு முகம்—, காந்தள் - செங்காந்தள்மலரி னிதழ்போன்ற, மெல் விரல் - மெல்லிய விரல்களையுடைய, சனகிதன் - சீதையினது, கற்பு எனும் - பதிவிரதா தரும மாகிய, கடலை - சமுத்திரத்தை, நீந்தி ஏறுவது - கடந்து கரையேறுவது [சீதையின் கற்பை யழிப்பது], எங்ஙன் - எவ்வாறு? என்று—, நினைய - நினைக்கவும்,—ஒரு முகம்—, சாந்து அளாவிய கொங்கை நல் மகளிர் - சந்தனம் பூசிய தனங்களையுடைய அழகிய மாதர்பலர், தன் சூழ்ந்தார் - தன்னைச் சூழ்ந்துநின்று, ஏந்தும் - கையிற்கொண்டு காட்டுகிற, ஆடியின் - கண்ணாடியிலே, இயல்புடன் இலங்க - இயற்கையான அழகைக் காணுதலுடனே விளங்கவும்,—(எ - று.)

'காந்தள்' என்ற மரத்தின் பெயர் - இங்கு அம்மலரின் இதழுக்கு இருமடியாகுபெயர்; இது - சீதையின் கைவிரலுக்கு வடிவிலும், நிறத்திலும், மென்மையிலும், அழகிலும் உவமம். 'கற்பெனுங் கடலை நீந்தி யேறுவது' என்றது, உருவகம். 'சனகிதன் கற்பெனுங் கடலை நீந்தியேறுவ தெங்ஙன் என்று நினைய' என்றது, அதன் கடத்தற்கு அருமை கருதியவாறும். 'ஒரு முகம் இயல்புட னிலங்க' என்றதனால், மற்றை ஒன்பது முகங்களும் அதனதன் காட்சிக்கு ஏற்ற இங்கிதக் குறிப்பு விளங்கப்பெற்றிருந்தன வென்பது தோன்றும்.

திருமுருகாற்றுப்படையில், "மாயிருண்ஞால மறுவின்றி விளங்கப், பல்கதிர் விரிந்தன் றொருமுக மொருமுகம், ஆர்வலரேத்த வமர்ந்தினிதொழுகிக், காதலினுவந்து வரங் கொடுத்தன்றே யொருமுகம், மந்திரவிதியின் மரபுளி வழாஅ, வந்தணர் வேள்வி யோர்க்கும்மே யொருமுகம், எஞ்சிய பொருள்களை யேமுறநாடித், திங்கள்போலத் திசைவிளக்கும்மே யொருமுகம், செறுநர்த் தேய்த்துச் செல்சமமுருக்கிக், கறுவுகொள்நெஞ்சமொடு களம்வேட்டன்றே யொருமுகம், குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின், மடவால்வள்ளியொடு நகையமர்ந்தன்றே" என்று பன்னிரண்டடிகளால், தேவசேனாபதியான முருகக்கடவுளினுடைய ஆறு திருமுகங்களின் தனித்தனிச் செயலை எடுத்துக் கூறியதைத் தழுவி இங்கு மூன்று கவிகளின் பன்னிரண்டடிகளால் ராக்ஷஸராஜனான ராவணனுடைய பத்து முகங்களின் தனித்தனிச் செயல்களை எடுத்துக் கூறினரென்னலாம். (௫௧

௫௨. பொதும்பர்வைகுதேன்புக்கருந்துதற்ககம்புலரு
மதம்பெய்வண்டெனச்சனகிமேன்மனஞ்செலமறுகி
வெதும்புவாரகம்வெந்தழிவார்நகில்விழிநீர்
ததும்புவார்விழித்தாரைமேலொருமுகந்தாக்க.

(இ - ள்.) பொதும்பர் வைகு - மரச் செறிவினுள்ளே பொருந்திய, தேன் - தேனை, புக்கு அருந்துதற்கு - (அங்குப்) பிரவேசித்துக் குடிப்பதற்கு, அகம் புலரும் - (ஆசையினால்) மனம் வாடுகிற, மதம் பெய் வண்டு என - களிப்பு மிக்கதொரு வண்டுபோல, சனகிமேல் மனம் செல - சீதையினிடத்தே (தன்) மனஞ் செல்ல, (அதனையுணர்ந்து), அகம் மறுகி வெதும்புவார் - மனங் கலங்கித் தவிப்பவர்களும், வெந்து அழிவார் - உடல்புழுங்கி மிகவருந்துபவர்களும், விழி நீர் நகில் ததும்புவார் - (தங்கள்) கண்களினின்று நீர் ததும்பி (த் தங்கள்) கொங்கைகளின்மீது வழியப் பெறுபவர்களும் ஆகிய பல மகளிருடைய, விழி - கண்களின் பார்வையாகிய, தாரை வேல் - கூர்நுனியையுடைய வேலாயுதங்கள், தோள்தொறும் தாக்க - (தனது) இருபது தோள்களின் மேலும் படவும்,—(எ - று.)

தன்னாலணுக முடியாததொரு புதரினுள்ளே யிருக்கின்ற தேனை அதனருமையறியாது ஒரு வண்டு தான் அங்குப் புகுந்து குடிக்க அவாக்கொண்டு முயன்று தாவித்தாவிச் சுழன்று திரிந்து அலைந்து வருந்தினாற்போலத் தன்னாற் கடத்தற்கரிய தலைமைக்காப்பாகிய சிறைக்காவலிலே நிலைநிற்கின்ற சீதாபிராட்டியைச் சேரமுடியாதென்று உணராமல் அவள் கற்புநிலையைக் குலைத்து அவளையடைதற்கு மேன்மேல் விருப்பங்கொண்டு அதற்காகப் பல வாறு முயன்று சிறிதும் பயன்பெறாது வருந்துகின்றது கொழுத்தவனான இராவணனுடைய செருக்குக்கொண்ட மனமென்பது தோன்ற, 'பொதும்பர் வைகுதேன்புக் கருந்துதற் ககம்புலரும் மதம்பெய் வண்டெனச் சனகிமேன் மனஞ்செல' எனப்பட்டது. அன்றியும், உபமானமாகிய தேனுக்குக் கொடுத்த 'பொதும்பர் வைகு' என்ற அடைமொழி, உபமேயமாகிய சீதைக்கும் ஏற்கும்; அவள் அசோகவனத்திற் சிம்சுபாமரத்தின்கீழ்ச் சிறைக்காவலில் வைக்கப்பட்டுள்ளதனால். பொதும்பர் - மரச்செறிவு; புதரும், சோலையுமாம்: பொதும்பு என்ற மென்றொடர்க்குற்றியலுகரத்துக்கு, அர் - போலி.

தான் வேண்டியபடியெல்லாம் பலமலர்களின் தேனை நிரம்பப்பருகிக் களித்திருக்கின்றதொரு வண்டு அங்ஙன மிருக்கவும் பொதும்பர் வைகுதேனைப் புக்கு அருந்துதற்கு அகம்புலர்ந்தாற்போல, தான் வேண்டியபடியெல்லாம் இன்பநுகர்தற்கு உரிமைமகளிர்பலரிருக்க அவர்களோடு கூடிக் களித்து வாழ்கிற நிலையிலும் இராவணன்மனம் பிறன்மனைவியான சீதையின் மேற் சென்ற பேதைமையை விளக்குவார், உபமானமாகிய வண்டுக்கு 'மதம் பெய்' என்ற அடைமொழி கொடுத்தனரென்னலாம்; இவ்விசேஷணத்தால், உபமேயமாகிய இராவணனது மனம் தனமதம், வித்தியாமதம், குலமதம் முதலிய பலவகைமதம் மிக்கதென்பதும் விளங்கும்.

இங்ஙனம் தங்கள்காதலனான இராவணன் பரஸ்த்ரீயை விரும்பி அவள் பக்கல் மோகங்கொண்டு அதனால் தம்மை உபேக்ஷித்துத் தம்முடன் சரசவிளையாடல்கள் நிகழ்த்தாதிருத்தலை யுட்கொண்டு அவனது உரிமை மகளிரெல்லாம் மனஸ்தாபமுற்று மனம்வருந்துதலையும், அதனால் அவர்களுடல்

தவித்தலையும், அங்ஙனம் அவர்கள் துக்கித்துக் கண்ணீர் பெருக்குதலையும், 'மறுகி வெதும்புவா ரகம்வெந்தழிவார் நகில்விழி நீர்ததும்புவார்' என்று வெளியிட்டார். தம்கணவன் அயல்மாதரை விரும்பினாலும் அதுபற்றி அவன்மேற் கோபமும் வெறுப்புங் கொள்ளாது அவன்பக்கல் தாம் மிக்க அன்பையே செலுத்தி அவன்மனத்தைத் தம்பக்கல் மீட்க முயலுதல் அறிவுள்ளகற்புடைமாதரி னியல்பாதலால், இராவணனது உரிமைமகளிர் தம்மை அவன் புறக்கணிக்கையிலும் தாம் அவன்மீதே பார்வைசெலுத்தித் தமது கண்பார்வையினழகுகொண்டு அவனை வசீகரிக்கப் பார்க்கின்றன ரென்பது, 'விழித்தாரைவேல் தோள்தொறுந் தாக்க' என்பதனாற் போதரும். "நோக்கிய நோக்கெனும் நுதிகொள்வேலிணை, ஆக்கியமதுகையான் தோளி னாழ்ந்தன" என்றபடி மகளிர் கண்டு ஈடுபடுவது ஆடவர்தோளழகி லாதலால், 'விழி தோள்தொறுந் தாக்க' எனப்பட்டது. கூரியவடிவும் ஆடவரை வருத்துந்திறமும்பற்றி, மகளிர்விழியை 'தாரைவேல்' என்றார். 'தோள்தொறுந் தாக்க' என்றதனால், இருபதுதோள்களிலு மென்றபடி; ஆகவே, விழிவேல் செலுத்திய உரிமைமகளிர் பலரென்பது அமையும். 'தோள்தொறும் பாய' என்னாது 'தோள்தொறுந்தாக்க' என்றவளவே கூறியதனால், எத்துணை வலிமையுடையோர் செலுத்திய எவ்வகைப்படைக்கலங்களும் சிறிதும் ஊறுபடுத்தமாட்டாத இராவணன்தோள்களில் மெல்லியலாரான மகளிர் செலுத்திய அவ்விழிவேல்கள் பாய்ந்து அவனைச் சிறிதும் வருத்தமாட்டாவாயின வென்க; எனவே, அவன் இவர்கள் கண்பார்வையினழகி லீடுபட்டுச் சீதையினிடமிருந்து மனத்தை மீட்டு இம்மகளிர் வசமாயினனில்லை யென்பதாம். இம்மகளிர் விழிவேல் அவன்தோள்களில் தாக்கிற்றே யன்றி அவனது நெஞ்சில் தாக்கவில்லை; ஆகவே, இவர்கள் புறக்கணிப்புக்கே இலக்காயினர். மனம் மறுகிச் செல எனமொழிமாற்றி - சீதையினிடத்தே மனங் கவன்று செல்ல என உரைத்தலும் ஒன்று; மறுகி = சுழன்று. 'நகில்விழி நீர்ததும்புவார் விழித்தாரைவேல் தோடொறுந்தாக்க' என்றவிடத்து, 'எழையமுதகண்ணீர் கூரியவாளொக்கும்' என்ற கருத்துச் சொற்போக்கில் ஒருவாறு தொனித்தலுங் கருதத்தக்கது. (ருஉ)

ருந. மாறளாவியமகரந்தநறவுண்டுமகளிர்
வீறளாவியமுகிழ்முலைமெழுகியசாந்தின்
சேறளாவியசிறுநறுஞ்சீகரத்தென்ற
லூறளாவியகடுவெனவுடலிடைநுழைய.

(இ - ள்.) மகரந்தம் நறவு உண்டு - (மலர்களிலுள்ள) மகரந்தப்பொடிகளில் அளைந்து அவற்றை உடம்புமுழுவதும் பூசிக்கொண்டு (மலர்களின்) தேனைப் பருகி, மகளிர் வீறு அளாவிய முகிழ் முலை மெழுகிய சாந்தின் சேறு அளாவிய - மாதர்களுடைய மிக்கசிறப்புப்பொருந்திய அரும்புபோன்ற தனங்களில் நிரம்பப்பூசப்பட்டுள்ள சந்தனச்சேற்றிலே கூடிக்கலந்த, சிறு நறுஞ்சீகரம் தென்றல் - மந்தமாய்வீசுவதும் பரிமளமுள்ளதும் குளிர்ச்சியமைந்தது

மான தென்றற்காற்றனது, மாறு அளாவிய - (இராவணனுக்குத் தான்) எதிர் செய்யுமாறு, உடலிடை ஊறு - அவனுடம்பிலே (மன்மத பாணங்களினு லாகிய) புண்களிலே, அளாவிய கடு என நுழைய - பொருந்திய விஷம்போல உட்புகவும்,—(எ - று.)

எல்லாவுயிர்கட்குங் குளிர்ச்சியைவிளைத்து இனிமையைச் செய்கின்ற இளந்தென்றற்காற்றனது, காமதாபங்கொண்ட இராவணன்மேற் படும்போது அவனுக்கு அத்தாபத்தைமிகுவித்து மிக்கவருத்தந் தருதலால், 'கடுவென நுழைய' என்றார். 'மகரந்தம் நறவு உண்டு' என்பதற்கு - மகரந்தப் பொடியை யும் தேனையும் உண்டு என்றலும் அமையும். வாசனைப்பொடிகளை உடம்பு முழுவதும் நிரம்பப்பூசிக்கொண்டு அல்லது இனிய உணவையுண்டு மதுபானஞ் செய்து மிகச்சிறந்த மகளிர்பாற் சேர்ந்து அவர்கள் மார்பிற்பூசிய சந்தனக் கலவையில் அளாவி நறுமணம்வீச மெதுவானநடையோடு தாபமின்றிக் குளிர்ந்துவருகிற ஒருசிருங்காரபுருஷ னென்பது தோன்ற, 'மகரந்தநறவுண்டு மகளிர் வீறளாவிய முகிழ்முலைமெழுகிய சாந்தின் சேறளாவிய சிறு நறுஞ் சீகரத் தென்றல்' என்றார். தாம் பலநாளாகவிரும்பிய மாதரைக் கூடப்பெறுது காமதாபம்மிக்க ஆடவர்க்கு, அங்ஙனங் கண்டமாதரிடத்தெல்லாந் தட்டுத் தடையின்றிக் கலந்து இனியராய்வருகிற ஆடவரைக் காணும்போது அசூயை முதலியவற்று லுண்டாகும் வருத்தம், இப்பொழுது இராவணனுக்குத் தென்றலைக்கண்டவுடனே யுண்டாகின்ற தென்க. ஓரிடத்திலே சிறப்புப் பெற்றுவிளங்குகிற ஒருவீரர் அவ்விடத்திலேயே தலைமை பெறும் மற்றொருவர் பக்கல் மாறுகொண்டு சமயம்பார்த்து அவர்மேற்சென்று தாக்கி அவரை அழிக்கத் தொடங்கும் இயல்பின்படி, தெற்கிலிருந்து வருவதனால் தென்ற லென்று பெயர்பெற்று அத்திசைக்கு உரிமைபூண்டு விளங்குகிற இளங்காற்று அத்திசையிலே இலங்கைநகரில் நிலைத்து அத்திசைக்குத்தலைமைபூணும் இராவ ணன்பக்கல் மாறுபாடுகொண்டு சமயம்பார்த்து அவன்மீது தாக்கி அவனை அழிக்கத்தொடங்கிய தென்னுங் கருத்து, 'மாறளாவிய' என்றதனுற் போதரும்; நெடுங்காலமாக இராவணனுக்கு அஞ்சி அடங்கிக்கிடந்த வாயுதேவன் இப் பொழுது சமயம்பார்த்து மெல்லப்புறப்பட்டு ராக்ஷஸராஜனை அவனுக்கு எதிர்செய்பத்தொடங்கின னென்பதும் இதில் அமையும். மாறு - பிரதி.

முதலடியில், 'அளாவிப' என்ற சொல் - செய்பிய என்னும் வாய்பாட்டு எதிர்காலவினையெச்சம்; இதில், 'இய' என்ற விகுதியே காலங்காட்டும்: மற்றையடிகளில், 'அளாவிய' - இறந்தகாலப்பெயரெச்சம். மாறு அளாவிய நுழைய என்று இயையும். மகரந்தம் - பூந்துகள். சீகரம் - சீதகரம்: குளிர்ச் சியைச்செய்வது. முகிழ்முலை - உவமைத்தொகை; கோங்கரும்பும், தாமரை யரும்பும் - உவமைகூறப்படும். 'முகிண்முலை' என்ற பாடத்துக்கு - வீரசோ ழியவிதிப்படி, நிலைமொழியீற்றுழகாரம் வருமொழி முதலில் மகாம்வர ணகர மாத்.திரிந்ததென்க; அவ்விதி வருமாறு:—"ஐம்மூன்றதாமுடல் வன்மைபின் வந்திடில் ஆறொடைந்தா, மெய்ம்மாணபதாம் நவ்வரின் முன்பழிந்து பின்

மிக்கணவ்வாம், மம்மேல்வரின் இருமூன்றுடல்" எனக் காண்க. இனி, 'மாறனாவியமகாந்தநறவுண்டு' என்பதற்கு - இராவணனுக்கு எதிர்செய்யுமாறு மிக்கமதுபானஞ்செய்து என்று பதவுரை கூறி, மதுபானத்தை மிகுதியாகச் செய்ததனால் மயங்கி இராவணனுக்கு எதிர்செய்வதாயிற் றென்று கருத்து உரைப்பாரு முளர்; அவ்வுரைக்கு, மகராந்தம் நறவு - ஒருபொருட்பன்மொழி யென்க. வடறு அளாவிய கடு என என்று எடுத்து, கொல்லுதல்பொருந்திய விஷம்போல என்று உரைப்பர் ஒருசாரார். (ருக)

ருச. திங்கள்வாணுதன்மடந்தையர்சேயரிக்கிடந்த
வங்கயற்றடந்தாமரைக்கலரியோனாகி
வெங்கண்வானவர்தானவரென்றிவர்விரியாப்
பொங்குகைகளாந்தாமரைக்கிந்துவேபோன்று.

(இ - ள்.) திங்கள் வாள் நுதல் மடந்தையர் - (பாதிச்) சந்திரன்போன்ற ஒளியுள்ள நெற்றியையுடைய மகளிரது, சேய் அரி கிடந்த அம் கயல் தட தாமரைக்கு - சிவந்த இரேகைகள் பொருந்திய அழகிய கயல்மீன் போன்ற கண்களையுடைய முகங்களாகிய பெரிய தாமரை மலர்களுக்கு, அலரியோன் ஆகி - சூரியன்போன்றவனாகியும்,— வானவர் - தேவர்களும், வெம் கண் தானவர் - கொடுந்தன்மையுள்ள அசுரர்களும், என்ற இவர் - என்கிற இவர்களுடைய, விரியா பொங்கு கைகள் ஆம் - குவிந்திருக்கின்ற விளங்குகிற கைகளாகிய, தாமரைக்கு - செந்தாமரை மலர்களுக்கு, இந்து போன்று - சந்திரன்போன்றவனாகியும்,—(எ - று.)—இந்துவே, ஏ - அசை; பிரிநிலையுமாம்.

'அழகிய மகளிரது முகங்களாகிய தாமரை மலர்கட்குச் சூரியன்போன்றவனாய்' என்றது - தனக்கு உரிமைபூண்டுநிற்கும் பலமகளிர்கள் தனது கம்பீரமான காட்சியைக் கண்டு மகிழ்ந்து முகம்மலருமாறு பெருமிதத்தோற்றத்தோடு வெகுசிறப்பாக வீற்றிருந்தனன் இராவணன் என்றவாறாம்; சூரியனைக்கண்ட தாமரைமலர்கள்போலத் தன்னைக்கண்ட மகளிர்முகங்கள் மலர்ந்தபடியிருக்க வென்க. 'திங்கள்' என்றது, இங்கே பிறைச்சந்திரனை; அதுவே, வடிவில் நெற்றிக்கு உவமையாவது. கண்களிற் சில செவ்வரிக ளிருத்தல், உத்தம விலக்கணம். கயல் - கண்களுக்கு, உவமையாகுபெயர்; பிறழ்ச்சியில் உவமம். 'சேயரிக்கிடந்த அங்கயல் தாமரை' எனவே, முகமென்ற தாயிற்று. அலரியோன் - ஆயிரம் இதழ்கள் மலரப்பெற்றதொரு தாமரைமலர்போன்று ஆயிரங் கிரணங்கள் பரவி விளங்கப்பெற்றவன்.

'தேவாசுரர்களுடைய குவிந்தகைகளாகிய தாமரைமலர்கட்குச் சந்திரன் போன்று' என்றது - தேவர்களும் அசுரர்களும் அச்சத்தாற் கூப்பியகை நெகிழாதபடி அஞ்சலிசெய்து தொழுதுநிற்குமாறு காண்பவர் அஞ்சத்தக்க தோற்றமுடையனாய் வீற்றிருந்தனன் இராவணன் என்றவாறும்; சந்திரனைக் கண்ட தாமரைகள்போலத் தேவதாகவர்களுடைய கைகள் தன்முன் குவிந்த படியிருக்க வென்க. தேவகணங்களிற் சேர்ந்தவரான அசுரர் யக்ஷர் கந்தருவர்

வித்தியாதரர் கின்னரர்முதலிய பிறரையும் தேவர்களைப்போலவே இராவணன் எதிர்த்துப் பொருது வென்று வருத்திவந்தனனென்க.

இனி, முன்னிரண்டடிக்கு - மகளிரது செவ்வரிபரந்த அழகிய கயல் மீன்போலுங் கண்களாகிய பெரிய தாமரைமலர்கட்குச் சூரியன்போன்று என்று உரைப்பாருமுளர்; சூரியனைக்கண்ட தாமரைமலர்கள்போலத் தன்னைக்கண்டு மகளிர்கண்கள் மலர்ந்தபடியிருக்க என்று கருத்து. 'அங்கயத் தடந்தாமரை' என்ற பாடம் - அழகிய தடாகத்திலுள்ள [வாடாத] பெரிய தாமரை யென்று பொருள்படும்; கயம் - நீர்நிலை: அப்பாடத்தில், 'சேயரிக் கிடந்த' என்பது - தாமரைக்கு அடைமொழி; சேயரிக்கிடந்த தாமரை யெனவே, கண் என்றதாம். 'வெங்கண் வானவர் தானவர்' என்பதற்கு - (தன்பக்கல்) கொடுமையுள்ள தேவர்களும் அசுரர்களும் என்று உரைப்பர் ஒருசாரார். (ருச)

[அநுமான் இராவணனைக்கண்டவளவிலே கோபங்கொள்ளுதல்.]

ருரு. இருந்தவெண்டிசைக்கிழவனைமாருதியெதிர்ந்தான்
கருந்திணாகத்தைநோக்கியகலுழனிற்கனன்றான்
றிருந்துதோளிடைவீக்கியபாசத்தைச்சிந்தி
யுருந்துநஞ்சுபோல்பவன்வயிற்பாய்வெனென்றுடன்றான்.

(இ - ள்.) இருந்த - (இவ்வாறு) வீற்றிருந்த, எண் திசை கிழவனை - எட்டுத்திக்குக்களுக்கும் உரியவனான இராவணனை, மாருதி - அநுமான், எதிர்ந்தான் - (தூரத்திலிருந்து) கண்டான்; (அங்ஙனங்கண்டமாத்திரத்திலே), கருந் திண் நாகத்தை நோக்கிய கலுழனின் கனன்றான் - கரிய வலிய சர்ப்பத்தைக் கண்ட கருடன்போல மனங்கொதித்தவனாய்,—திருந்து தோளிடை வீக்கிய பாசத்தை சிந்தி உருந்து நஞ்சு போல்பவன்வயின் பாய்வென் என்று உடன்றான் - 'சிறந்த (எனது) தோள்களிற் கட்டியிருக்கிற நாகபாசத்தைச் சிதறடித்துக் கோபித்து விஷம்போற்கொடியவனான இவ்விராவணன்மேல் (இப்பொழுது) பாய்கிறேன் யான்' என்று உக்கிரங்கொண்டான்; (எ - று.)

இராவணன், திக்குவிசயயாத்திரை புறப்பட்டு எட்டுத்திசைகளிலுஞ் சென்று ஆங்காங்கு உள்ள அரசர்களையும் இந்திரன்முதலிய அஷ்டதிக்பாலகர்களையும் வென்று அத்திசைகட்கெல்லாம் உரிமைபூண்டவனாதலால், 'எண்டிசைக்கிழவன்' எனப்பட்டான். கரு நாகம் - கிருஷ்ணசர்ப்பம். கருநிறமுடையனாய்ப் பயங்கரனாகி மகாபலசாலியாயுள்ள கொடிய இராவணனை எளிதில் அழிக்கவல்ல திறமையுடையவன் அநுமான் என்பது தோன்ற, 'கருந்திண்நாகத்தைநோக்கிய கலுழனின் கனன்றான்' என உவமைகூறினார். 'உருத்து' என்பது - 'உருந்து' என மெலித்தல்விகாரம் பெற்றது, எதுகை நோக்கி. நஞ்சுபோல்பவன் - நிறமும் கொடுமையும் பற்றிய உவமை. 'நஞ்சு போலிவன்வயிற்பாய்வென்' என்ற பாடத்துக்கு, விஷம்போல [அழிவுசெய்யுமாறு] இவன்மேற் பாய்வேன் என்பது பொருள்.

(கூஅ) பரப்ப, பொலிய, (கூக) வயங்க, (சo) என்ன, (சக) ஒப்ப, (சஉ) கொழிப்ப, தயங்க, கடுப்ப, (சங) என்ன, (சச) இயற்ற, (சரு) சுற்ற, (சசு) சுற்ற, (சஎ) இசைப்ப, வழங்க, (சஅ) விளங்க, (சக) உண்ண, குடிப்ப, பருக, அருந்த, (ருo) செலுத்த, முயல, பயில, பொருந்த, (ருக) நினைய, இலங்க, (ருஉ) தாக்க, (ருங) நுழைய, (ருச) ஆகி, போன்று, (ருரு) இருந்த எனக் குளகச்செய்யுள் பதினெட்டுக்கும் முடிபு காண்க. (ருரு)

[இதுமுதல் நான்குகவிகள் - இராவணன்மேல் தான் பாய்ந்து அவனைக் கொல்வதாக அநுமான் செய்யும் ஆலோசனை.]

ருசு. உறங்குகின்றபோ தயிருண்டல்குற்றமென்றொழிந்தேன்
பிறங்குபொன்மணியாசனத்திருக்கவும்பெற்றேன்
றிறங்களென்பலசிந்திப்ப திவன்றலைசிதறி
யறங்கொள்கொம்பினைமீட்டேகல்வெனென்றமைந்தான்.

(இ - ள்.) உறங்குகின்ற போது - (இவ்விராவணன்) தூங்குகின்றபொழுது, உயிர் உண்டல் குற்றம் என்று - (இவனைக்) கொல்வது தோஷமென்று எண்ணி, ஒழிந்தேன் - (முன்பு இவனைக்) கொல்லாது விட்டிட்டேன்; (அங்ஙனமன்றி இப்பொழுதோ), பிறங்கு பொன் மணி ஆசனத்து இருக்கவும் பெற்றேன் - விளங்குகிற பொன்னாலும் இரத்தினங்களாலும் அமைந்த சிங்காசனத்தில் (இவன் விழித்து) வீற்றிருக்கவும் பெற்றேன்; (இப்படி நேரே சமயம்வாய்க்கப்பெற்றபின்பும்), பல திறங்கள் சிந்திப்பது என் - பலவகையாக ஆலோசிக்க வேண்டுவது என்ன? (இப்பொழுதே), இவன் தலை சிதறி - இவனுடைய தலைகளைச் சிதறடித்து, அறம் கொள் கொம்பினை மீட்டு - (மகளிர்க்குஉரிய சிறந்த) தருமமாகிய பதிவிரதாதருமத்தை (த் தவறாது உறுதியாக)க் கொண்டிருக்கிற பூங்கொம்புபோல மெல்லிய அழகிய வடிவமுடையவளான சீதாபிராட்டியைச் சிறைமீட்டுக்கொண்டு, உடன் அகல்வென் - விரைவில் மீண்டுசெல்வேன், என்று அமைந்தான் - என்றுஎண்ணினான், (அநுமான்); (எ - று.)

மாலைப்பொழுதில் இலங்கைநகரிற்புக்கு இரவிலே அந்நகர்முழுவதினுஞ் சீதையைத்தேடிக்கொண்டு சென்ற அநுமான் அரண்மனையினுள்ளே இராவணன் தூங்கிக்கொண்டிருக்கக் கண்டு கோபங்கொண்டு அவனை அப்பொழுதே கொல்வதாகக் கருதிச் சற்றுஆலோசிக்கும்போது, இராமபிரான் கட்டளையில்லையாதலாலும், ஒன்றைமுயன்று மற்றொன்றைச் செய்வது அறிவுடைமையன்றாதலாலும், தூங்குகிறவனைக்கொல்வது மகாதோஷமாதலாலும், பிராட்டியைச் சிறைவைத்தவனை ஒரு குரங்கு கொன்றிட்டதென்றால் அது இராமபிரானது வில்திறத்துக்கு ஒரு குறைவாகுமாதலாலும், இவனை இப்பொழுது யான் கொல்வது தகுதியன்று என்று எண்ணி, அப்பொழுது அவனைக் கொல்லாதுவிட்டு அப்பாற்சென்றனனென்ற செய்தியை, கீழ் ஊர்தேடுபடலத்தில் "தோளாற்றலென்னுகு மேனிற்குஞ்சொல்லென்னும்,

வாளாற்றகண்ணனை வஞ்சித்தான்மணிமுடியென், தாளாற்றலா லிடித்துத் தலைபத்துந் தகர்த் தென்றன், ஆளாற்றல்காட்டேனு லடியேனுய் முடியேனே'', ''நடித்துவாழ் தகைமையதோ வடிமைதா னன்னுதலைப், பிடித்தவாளரக்கனுர் யான்கண்டும் பிழைப்பரோ, ஒடித்துவான்றோளனைத்துந் தலைபத்து முதைத்துருட்டி, முடித்திவ்வூர் முடித்தால் மேன்முடிவதெலா முடிந்தொழிக'', ''என்றாக்கியெயிறுகடித் திருகாலும்பிசைந்தெழுந்து, நின்றாக்கி யுணர்ந்துரைப்பா னேமியோன்பணியன்றால், ஒன்றாக்கி யொன்றிழைத்த லுணர்வுடைமைக்குரித்தன்றால், பின்றாக் கினிது சாலப்பிழையாகு மெனப் பெயர்ந்தான்'', ''ஆலம்பார்த்துண்டவன்போ லாற்றலமைந்துள ரெனினுஞ், சீலம்பார்க்குரியோர்க ளெண்ணுதுசெய்பவோ, மூலம்பார்க்குறி னுலகைமுற்றுவிக்குமுறைதெறினுங், காலம்பார்த்திறைவேலை கடவாதகடலொத்தான்'', ''இற்றைப்போர்ப் பெருஞ்சீற்றமென்னேடு முடிந்திடுக, கற்றைப்பூங்குழலாளைச் சிறைவைத்த கண்டகனை, முற்றப்போர்முடித்தொரு குரங்கென்றால் முனைவீரன், கொற்றப்போர்ச்சிலைத்தொழிற்குக் குறைவுண்டா மெனக் குறைந்தான்'' என்ற செய்யுள்களால் உணர்க.

கொம்பு - சீதைக்கு, உவமையாகுபெயர்; மெல்லியதாய் ஒல்கிஒசியும் வடிவில் உவமம். ''குலமகட்குஅழகு கொழுநனைப்பேணுதல்,'' ''தெய்வந்தொழாஅள் கொழுநற்றொழுதெழுவாள்'' என்றபடி மகளிர்க்குக் கற்பு நிலைமை பரமதரும மாதலால், இங்கு அது 'அறம்' என்று சிறப்பித்துக் கூறப்பட்டது. இனி, 'அறம் கொள் கொம்பு' என்பதற்கு - தருமமாகிய கொடி பற்றிக் கொள்ளுங் கொழுகொம்பு போன்றவளென்று பொருள் கொள்ளுதலும் அமையும்; இராவணனல் அழிக்கப்பட்ட தருமம் இவள் நிமித்தமாக அவன் கொல்லப்பட மீளவுஞ் செழித்துவளரவிருப்பதுபற்றி, இவள் தருமத்துக்கு ஆதாரமாவள். அமைதல் - கருத்துஅமைதல், உத்தேசித்தல். உயிருண்டல் - உண்ணுதது உண்பதுபோலச் சொல்லப்பட்டது, மரபுவழுவமைதி: உயிரை யொழித்த லென்றபடி. (௫௬)

௫௭. தேவர்தானவர்முதலினர்சேவகன்றேவி
காவல்கண்டிவணிருந்தவர்கட்புலன்கதுவப்
பாவகாரிதன்முடித்தலைபறித்திலெனென்று
லேவதியானினிமேற்செயுமாளுவினையென்றான்.

(இ - ள்.) சேவகன் தேவி காவல் கண்டு இவண் இருந்தவர் - மகாவீரனை இராமபிரானுடைய மனைவியாகிய சீதாபிராட்டியை (இராவணன்) சிறைவைத்திருப்பதைப் பார்த்துக்கொண்டே (அதற்கு ஒன்றும் பரிகாரஞ் செய்யமாட்டாமல்) இவ்விடத்தில் இருக்கின்றவர்களான, தேவர் தானவர் முதலினர் - தேவர்களும் அசுரர்களும் முதலானவர்களுடைய, கண் புலன் - கண்களாகிய உறுப்பு, கதுவ - பற்றும்படி [இங்குள்ளாரனைவருங் கண்களாற் காணுமாறு என்றபடி], பாவகாரிதன் முடி தலை பறித்திலென் என்றால் -

(பிறன்மனைவியை விரும்புதல்முதலிய) தீவினைகளைச் செய்பவனான இவ்விராவணனுடைய கிரீடமணிந்ததலைகளை (இப்பொழுதே) வலியக் கொய்திலேனாயின், யான் இனி மேல் செயும் ஆள் வினை ஏவது - நான் இனிமேற்செய்யும் அடிமைத்தொழில் யாது உளது? [எதுவுமில்லை யென்றபடி], என்றான் - என்றும் எண்ணினன், (அநுமான்); (எ - று.)

யசமானனதுமனைவியை வஞ்சனையாற் கவர்ந்து சென்று சிறைக்காவலில் வைத்தானுடைய தலைகளைப் பறித்தெறிவதனினும் மேலாக மெய்யடியவன் செய்யத்தக்க உறுதொழிலும் உளதோ? என்பதாம். கீழ்ச்செய்யுளினுரையிற் காட்டிய "தோளாற்றல்," "கடித்துவாழ்" என்ற தொடக்கத்துச் செய்யுள்கள் இங்கு ஒப்புநோக்கத்தக்கன. ஏவது - ஏகாரவிறுவடியாய் பிறந்த ஏது என்பதன் விரித்தல்விகாரம். ஆள்வினை - ஸ்ரீராமனுக்கு அடியவனாயிருந்து செய்யுந்தொழில்; இனி, இதற்கு - ஆண்மைத்தொழி லென்றும், முயற்சி யென்றும் பொருள்கொள்ளலாம். ஆள்வினை - ஆளின்வினை; ஆண்மைவினை; ஆளும் வினை: அல்லது, வினையையாளுந் திறம்; அதாவது - முயற்சி: (வினை - தொழில்.) (கூஎ)

௬௪. மாடிருந்தமற்றிவன்புணர்மங்கையர்மயங்கி
யூடிரிந்திடமுடித்தலைதிசைதொறுமுருட்டி
யாடல்கொண்டுநின்றார்க்கின்றதுகொடிதம்மா
தேடிவந்ததோர்குரங்கெனும்வாசகஞ்சிறிதோ.

(இ - ள்.) 'தேடி வந்தது ஓர் குரங்கு - (சீதையைத்) தேடிக்கொண்டு வந்ததாகிய ஒருகுரங்கானது,— மாடு இருந்த இவன் புணர் மங்கையர் மயங்கி ஊடு இரிந்திட - இவ்விராவணனருகிலே யிருப்பவர்களான இவன் சேரத்தக்க மகளிர்கள் திகைத்து உள்ளேஓடிப்போம்படி, முடி தலை திசை தொறும் உருட்டி - (இவனது) கிரீடமணிந்ததலைகளைப் பலதிக்குக்களிலும் உருளச்செய்து [பறித்துச்சிதறி யென்றபடி], ஆடல் கொண்டு - வெற்றி கொண்டு, நின்று - (தான் சிறிதும் அழிவுறாது) நிலைபெற்றுநின்று, ஆர்க்கின்றது - ஆரவாரஞ்செய்கின்றது: அது அம்மா கொடிது - அக்குரங்கு அந்தோ! மிகக்கொடியது,' எனும் வாசகம் - என்கிற புகழ்வார்த்தை(யைப் பெறுதல்), சிறிதோ - சிறியதாகுமோ? [அன்று: மிகப்பெரிது என்றபடி]; (எ - று.)—மற்று - அசை.

நான் இப்பொழுது நினைக்கிறபடி செய்துமுடிப்பேனானால், 'சீதையைத் தேடிக்காணவந்ததொரு குரங்கு, இராவணனது பக்கங்களி லுள்ளவர்களான அவன்போகத்துக்குரியமாதர்களனைவரும் இது என்னென்று திகைத்து உள்ளே ஓடியொளிக்கும்படி அவன்தலைகளைத் திருகி எல்லாத்திசைகளிலும் உருட்டிச் சயம்பெற்றுநின்று ஆரவாரிக்கின்றது: அம்மம்மா! அது கொடிது கொடிது!!' என்று உலகத்தார் சொல்வார்கள்; அப்படிசொல்லுஞ் சொல்

'எளிதிற்கிடைக்கத்தக்கதோ? மிக அரியதன்றோ; ஆதலால், அப்புகழ் மொழியைப் பெறமுயல்வேன் என்று எண்ணினன் அநுமான் என்க. 'அதுநெடிதம்மா' என்றும் பாடமுண்டு. (௩அ)

௩௯. நீண்டவாளெயிற் றரக்கனைக்கண்களினேரே
காண்டல்வேண்டியிவ்வுயிர்சுமந்தெதிர்சிலகழறி
மீண்டபோதுண்டுவசைப்பொருள்வென்றிலேனெனினு
மாண்டபோதினும்புகழன்றிமற்றுமொன்றுண்டோ.

(இ - ள்.) நீண்ட வாள் எயிறு அரக்கனை - நீண்ட வாளாயுதம்போற் கூரிய பற்களையுடைய ராக்ஷசனை [இராவணனை], கண்களின் நேரே காண்டல் வேண்டி - கண்களுக்கு எதிராகப் பார்க்க விரும்பி, (அதற்காக), இ உயிர் சுமந்து - இந்த என்உயிரை உடம்பில் வைத்துக்கொண்டிருந்து, எதிர் சில கழறி - (இவனைக்கண்டு) இவனெதிரிலே சிலவார்த்தைகளைச் சொல்லி, மீண்ட போது - (நான் இங்குநின்று) திரும்பிச்செல்வேனால் அப்பொழுது, வசை பொருள் உண்டு - பழியாகிய பயனே (எனக்கு) வாய்க்கும்; (அங்ஙனமன்றி இவனை எதிர்த்துப் போர்செய்வேனாயின்), வென்றிலேன் எனினும் - (ஒருகால் யான்) சயித்திலேனாலும், மாண்ட போதினும் - (இவன்கையால் யான்) இறந்தாலும், புகழ் அன்றி மற்றும் ஒன்று உண்டோ - (எனக்குக்) கீர்த்தியுண்டாகுமேயல்லது (அதற்கு) மாறான அபகீர்த்தி உண்டாகுமோ? [உண்டாகவேமாட்டாது என்றபடி]; (எ - று.)

இவன்மகனாற் கட்டுப்பட்டதில் மானம்போனதுபற்றி யான் உயிர் போக்கிக்கொள்ளத்தக்கவனா யிருந்தும், அங்ஙனஞ்செய்யாது கட்டுக்கு உட்பட்டு அரிதின்உயிர்வைத்துக்கொண்டிருந்தது, இவனை நேரிற்கண்டு சந்தித்துச் சிலபேசிப் பின்பு மீளவேண்டுமென்னும் எண்ணங்கொண்டன்றோ; அங்ஙனங் கண்டு சிலபேசிச் செல்லுதல்மாத்திரஞ் செய்வேனாயின், அது, பகைவனாற் கட்டுண்டா னென்று உலகத்தார் என்னை நிந்தித்தற்குக் காரணமாகுமேயன்றி, அந்த உலகநிந்தனைக்கு ஒருபரிகார மாகாது; மற்று இவனைத் தலைதடியுமாறு துணிந்து எதிர்த்துப்பொருவேனாயின், பெரும்பாலும் வெல்வேன்: அன்றி, ஒருகால் தோற்றாலும் இறந்தாலும், வீரர்க்குப் போரில் அவை இயல்பே யாதலால், புகழ்விளையுமேயன்றிப் பழி விளையாது என்று எண்ணினன் அநுமான் என்க. ஆதலால், இவன்மேற் பாயக்கடவேன் என்பது உத்தேசம். உயிர் சுமந்து - உயிரை அரிதில் உடலிற்கொண்டு பொறுத்து; உயிரைப் பாரமாகக்கருதியவாறு. எதிர்சிலகழறி இவ்வுயிர்சுமந்து மீண்ட போது என்று மொழிமாற்றி, இவனைக்காணுதலையும் இவனெதிரிற் சிலபேசுதலையுமே பயனாகக்கொண்டு அவற்றைச்செய்துமுடித்து இந்த உயிரைச்சுமந்து கொண்டு திரும்பிப்போவேனால் என்று உரைத்தலும் அமையும்; போரில் மாளுதற்கு அஞ்சி உயிர்வைத்துக்கொண்டிருத்தல் பூமிபார மென்க. (௩௯)

[இங்ஙனந்துணிந்த அநுமான், உடனே அத்துணிவு தகுதியன்றென்று கருதுதல்.]

௬௦. என்று தோளிடை யிறுக்கிய பாசமிற் றேகக்
குன்றின் மேலெழு கோளரி யேறெனக் குதியிற்
சென்று கூடுவ லென்பது சிந்தனை செய்யா
நின்று காரிய மன்றென நீதியி னினைந்தான்.

(இ - ள்.) என்று - என்று (அநுமான்) ஆலோசித்து, தோளிடை இறுக்கிய பாசம் இற்று ஏக - தன்தோள்களிற் கட்டியிருக்கிற நாகபாசம் அறுபட்டுப்போய்விடும்படி, குன்றின்மேல் எழு கோள் அரி ஏறு என - மலையின் மேற்பாய்கின்ற வலிய ஆண்சிங்கம்போல, குதியின் சென்று கூடுவல் - ஒரு பாய்ச்சலிற் சென்று (அவனிடஞ்) சேர்வேன், என்பது சிந்தனை செய்யா நின்று - என்பதாக எண்ணிக்கொண்டிருக்கும்போது,—காரியம் அன்று என நீதியின் நினைந்தான் - '(இது) தகுதியன்று' என்று நியாயமாக ஆலோசிக்கலானான்; (எ - று.)—அதனை, அடுத்த நான்குகவிகளிற் காண்க.

குன்று - வலியபெரிய இராவணனுக்கும், வலிய ஆண்சிங்கம் - பலபராக்கிரமங்களிற்சிறந்த அநுமானுக்கும் உவமை. செய்யாநின்று - நிகழ்கால வினையெச்சம். (௬௦)

வேறு.

[இதுமுதல் நான்குகவிகள் - மற்றும் அநுமானுடைய ஆலோசனை.]

௬௧. கொல்லலாம் வலத்தனு மல்லன் கொற்றமும்
வெல்லலாந் தரத்தனு மல்லன் மேலைநா
ளல்லெலாந் திரண்டன நிறத்த னாற்றலை
வெல்லலா மிராமனாற் பிறரும் வெல்வரோ.

(இ - ள்.) (இவ்விராவணன்), கொல்லல் ஆம் வலத்தனும் அல்லன்-(யாராலும்) கொல்லக்கூடிய வலிமையுடையவனு மல்லன்; கொற்றமும் - (இவனது) அரசியலை நோக்குமிடத்து, வெல்லல் ஆம் தரத்தனும் அல்லன் - (யாராகிலுஞ்) சயிக்கத்தக்க நிலைமையுடையவனு மல்லன்; (ஆகவே), அல் எலாம் திரண்டு அன்ன நிறத்தன் ஆற்றலை - இருள்முழுவதும் ஒருங்குகூடினாற்போன்ற மிக்ககருநிறமுடையவனான இவனது வலிமையை, மேலைநாள் - இனிவருங்காலத்தில், இராமனால் வெல்லல் ஆம் - ஸ்ரீராமபிரானொருவனாலேயே வெல்லுதல்கூடும்; பிறரும் வெல்வரோ - (அப்பெருமானல்லாத) மற்றையோரும் (இவனை) வெல்லமாட்டுவரோ? [மாட்டார் என்றபடி] (எ - று.)

இவனது தேகபலம் முதலியவற்றை நோக்குமிடத்து இவனைக்கொல்லுதலும் இவனது துணைவலிமை முதலியவற்றை நோக்குமிடத்து இவனை வெல்லுதலும் மகாவீரனான இராமனொருவனுக்கு எளியதேயன்றிப் பிறர்க்கு அரியது

என்பதாம். கொற்றம் - அரசியல். இங்கு, இலக்கணையாய், சேநாபலம் முதலிய துணைவலிமையின்மேல் நின்றது. 'மேலைநாள்' என்பதற்கு - சென்ற காலத்தில் என்று பொருள்கொண்டு, அதனை 'அல்லன்' என்றதனோடு கூட்டி, 'தொன்றுதொட்டு இதுவரையிலும் இவன் எவராலும் கொல்லவும் வெல்லவுங் கூடியவனுயிலன் என்று உரைத்தலும் ஒன்று. 'முன்', 'பின்' என்பனபோல, மேல் கீழ் - என்பனவும், சமயோசிதமாக, கழிவையும் எதிர்வையுங் காட்டும். 'கொற்றமும்' என்ற உம்மை - இவன் தனியே எதிர்த்துப்போர்செய்தற்குக் கிடைத்திடாமற் பலரோடுகூடியுள்ளானே யென்று அநுமான் கருதுதலைக் காட்டும். இனி, 'கொல்லலாம் வலத்தனும் அல்லன்' என்பதற்கு - கொல்லக் கூடிய இடத்தில் [தனித்து] உள்ளானு மல்லன் என்று உரைப்பாரு முளர்; தனித்துள்ளவனுன யான் இவனைத் தனித்திருக்கிற நிலையிற் கொல்லவும் வெல்லவுங் கூடுமாயினும் துணைவலியோடுகூடியிருக்கிற நிலையில் இவனைக் கொல்லுதலும் வெல்லுதலுங் கூடியவையல்ல என்பது கருத்து.

இதுமுதற் பதினைந்து கவிகள் - கீழ்ப்படலத்தின் முதற்கவிபோன்ற கலிவிருத்தங்கள். (சுக)

சுஉ. என்னையும்வெலற்கரிதிவனுக்கீண்டிவன்
றன்னையும்வெலற்கரிதெனக்குத்தாக்கினு
லன்னவேகாலங்கள்கழியுமாதலாற்
றுன்னருஞ்செருத்தொழிறெடங்கறூயதோ.

(இ - ள்.) என்னையும் இவனுக்கு வெலற்கு அரிது - என்னைவெல்லுத லும் இவ்விராவணனுக்கு முடியாது; ஈண்டு இவன்தன்னையும் வெலற்கு எனக்கு அரிது - இவ்வளவுதுணைவலிமையோடுகூடியுள்ள இவனை வெல்லு தல் எனக்கும் முடியாது; (ஆகவே), தாக்கினுல்-(இவனோடு யான் எதிர்த்துப்) போர்தொடங்கினுல், அன்னவே காலங்கள் கழியும் - அத்தன்மையனவாகவே [போரிலேயே] பலநாள்கள் கழிந்துவிடும்; ஆதலால்—, துன் அருஞ் செரு தொழில் தொடங்கல் தூயதோ-(பிறர்) நெருங்குதற்கு அரிய போர்த்தொழிலைத் தொடங்குவது நல்லதோ? [அன்று என்றபடி]; (எ - று.)

'வெலற்கு' என்றதில், நான்கனுருபு -கருத்தாப்பொருளில் வந்தது. (சுஉ)

சுரு. ஏழுயருலகங்கள்யாவுமின்புறப்
பாழிவன்புயங்களோடரக்கன்பல்தலைப்
பூழியிற்புரட்டலென்பூணிப்பாமென
வூழியானிளம்பியவுரையுமொன்றுண்டால்.

(இ - ள்.) (அன்றியும்),—'ஏழ் உயர் உலகங்கள் யாவும் இன்பு உற - ஏழு வகைப்பட்ட சிறந்தஉலகங்களிலுள்ள ஜனங்களெல்லாம் இன்பமடையும்படி, அரக்கன்-இராவணனுடைய, பாழி வல் புயங்களோடு-பெரியவலிய தோள்களை யும், பல் தலை - பலதலைகளையும், பூழியில் புரட்டல் - (துணித்துக்கீழேதள்ளிப்)

புழுதியிற் புரளும்படி செய்தல், என் பூணிப்பு ஆம் - யான் மேற்கொண்ட விரதமாகும்,' என - என்று, ஊழியான் விளம்பிய-ஸ்ரீராமபிரான் சொல்லியுள்ள, உரையும் - வார்த்தையும், ஒன்று—, உண்டு ஆல் - உள்ளதன்றோ ; (எ - று.)—ஆல் - தேற்றம்.

'எல்லாவுலகத்தாரும் துன்பம்நீங்கி இன்பமடையும்படி, லோககண்டகனுன இராவணனது தோள்களையும் தலைகளையும் துணித்துத்தள்ளுவேன் யான்' என்று முன்பு இராமபிரான் தண்டகாரணியவாசிகளான முனிவர்கட்கு அபயமளித்து வாக்குத்தத்தஞ்செய்துள்ளா னன்றோ;இப்பொழுதுயான்இராவணனை யெதிர்த்துப்பொருது கொல்வேனாயின், அந்தப்பிரதிஜ்ஞை நிறைவேறாமற் போமே; ஆதலாலும், யான் இப்பொழுது போர்தொடங்குதல் தகுதியன்று என்று அநுமான் கருதின னென்க.

இங்கு 'உலகங்கள்' என்றது, அவற்றில்வாழும் உயிர்களின்மேல் நின்றது. பாழி வன் புயங்கள் - வலிய கொடிய தோள்க ளெனினுமாம்; 'வன்புயம்' என்றது, கொடுந்தொழில்செய்வன வென்றவாறும். பூணிப்பு - சங்கற்பம்; முடிவாக நிச்சயித்த செயல். ஊழி - உலகம்: அதற்குத்தலைவன், ஊழியான்; இதற்கு - காலத்துக்குத்தலைவன், அழிவின்றி நித்தியனுய்வாழ்பவன் என்ற பொருளும் உண்டு. இன்புறப் புரட்டல் என இயையும். (சுஙு)

சுசு. இங்கொருதிங்களேயிருப்பல்யானென
வங்கணுயகன்றனதாணை கூறிய
மங்கையுமின்னுயிர்துறத்தல்வாய்மையாற்
பொங்குவெஞ்செருவிடைப்பொழுதுபோக்கினுல்.

(இ - ள்.) (மற்றும்),—பொங்கு வெம் செருவிடை - மிக்ககொடிய போரிலே, பொழுது போக்கினுல் - (யான் தலையிட்டு இங்குக்) காலத்தைக் கழித்துக்கொண்டிருந்தால்,—இங்கு ஒரு திங்களே இருப்பல் யான் என - 'இவ்விடத்திலே [இலங்கையிலே] இன்னும் ஒருமாதகாலமளவுமே உயிர் வைத்துக்கொண்டிருப்பேன் யான்' என்று, அம் கண் நாயகன்தனது ஆணை கூறிய - அழகிய திருக்கண்களையுடைய தனதுகணவனுன இராமபிரான்மீது ஆணைவைத்துச் சொன்ன, மங்கையும் - சீதாபிராட்டியும், இன் உயிர் துறத்தல்- (அதற்குட்செய்தியறிந்து இராமன் வரக் காணுத) தனது இனிமையான உயிரை (அவ்வொருமாதங்கழிந்தவளவிலே) விட்டிடுதல், வாய்மை - நிச்சயம் ; (எ - று.)—ஆல் - தேற்றம்.

பொழுதுபோக்கினுல் துறத்தல் வாய்மை என இயையும். கீழ்ச் சூளாமணிப்படலத்தில் "இன்னுமீண்டொருதிங்களிருப்பல் யா, னின்னை நோக்கிப்பகர்ந்தது நீதியோய், பின்னையாவிபிடிக்கின்றிலே னந்த, மன்னனுணையிதனை மனக்கொணீ" என்று அநுமானை நோக்கிச் சீதைசொன்னது, உணரத்தக்கது ; மற்றும் அங்கு "திங்களொன்றி னென்செய்தவந் தீர்ந்ததா, லிங்கு

வந்திலனேயெனின் யாணர்நீர்க், கங்கையாற்றங்கரை யடியேற்குத் தன், செங்கையாற்கடன்செய்கென்று செப்புவாய்" என்றதையுங் காண்க. தான் கொண்டகருத்தின் உறுதியை வற்புறுத்துதற்கு, கணவன்மேல் ஆணையிட்டுக் கூறினா ளென்க. (௬௪)

[அநுமான் இங்ஙனம் ஆலோசித்து அடங்கி இராவணனருகிற் சேர்தல்.]

௬௫. ஆதலானமர்த்தொழிலழகிற்றன்றருந்
தூதனுந்தன்மையேதூய்தென்றுன்னினான்
வேதநாயகன்றனித்துணைவன்வென்றிசா
லேதில்வாளரக்கனதிருக்கையெய்தினான்.

(இ - ள்.) ஆதலான் - ஆகையால், அமர் தொழில் அழகிற்று அன்று - (இப்பொழுது) போர்செய்தல் அழகுடைய தன்று: அருந் தூதன் ஆம் தன்மையே தூய்து - அருமையாகவந்த தூதனுமாத்திரம் (என்னைக்காட்டி) நிற்கிற இயல்பே நன்மையுடையது, என்று உன்னினான் - என்று எண்ணினவனாய், வேதம் நாயகன் தனி துணைவன் - வேதங்கட்குத்தலைவனான இராமபிரானுக்கு ஒப்பற்ற உதவிசெய்பவனாகிய அநுமான், வென்றி சால் ஏதில் வாள் அரக்கனது இருக்கை எய்தினான் - வெற்றிமிக்கவனும் பகைமை யுள்ளவனுமாகிய கொடிய இராவணனது கொலுவீற்றிருக்குமிடத்தைச் சேர்ந்தான்; (எ - று.)

அருந்தூதன் - சிறந்த தூதனென்றபடி. வாள்அரக்கன் - வாள்போலக் கொடிய இராக்கத னென்க; இனி, சிவபிரானளித்த சிறந்த வாளாயுதத்தை யேந்திய இராவண னெனினுமாம். வாள் - ஒளியுமாம். (௬௫)

[இந்திரசித்து அநுமானை இராவணனுக்குக் காட்டுதல்.]

௬௬. தீட்டியவாளெனத்தெறுகட்டேவிய
ரீட்டியகுழுவிடையிருந்தவேந்தற்குக்
காட்டினனனுமனைக்கடலினாரமு
தூட்டியவும்பரையுலையவோட்டினான்.

(இ - ள்.) தீட்டிய வாள் என - (மிக்ககூர்மையுடையதாம்படி) தீட்டப்பட்ட வாளாயுதம்போல, தெறு - (ஆடவரது நெஞ்சுறுதியை) அழிக்கின்ற, கண் - கண்களையுடைய, தேவியர் - (தனக்குஉரிய) மனைவிமார் (பலர்), ஈட்டிய - ஒருங்குகூடி நின்ற, குழுஇடை - கூட்டத்தின் நடுவிலே, இருந்த - வீற்றிருந்த, வேந்தற்கு - (ராக்ஷச) ராசனான இராவணனுக்கு,—கடலின் ஆர் அமுது ஊட்டிய உம்பரை உலைய ஓட்டினான் - திருப்பாற்கடலினின்றுதோன்றிய அருமையான அமிருதத்தைத் தம்மையுண்பித்தவர்களாகிய தேவர்களை வருந்துமாறு போரிற் புறங்கொடுத்தோடச்செய்து வென்றவனான இந்திரஜித்து, அனுமனை காட்டினன் - அநுமானைக் காண்பித்தான்; (எ - று.)

கடலினாமுதூட்டியஉம்பர் - வெகுசிரமப்பட்டுப் பாற்கடல் கடைந்து அதனினின்று அருமையாக அமிருதத்தைப்பெற்று உண்டதனால் இறவாதிருக்கிற தேவர்கள் என்றபடி. இந்திரன்முதலியதேவர்களோடு இராவணன் முதலிய இராக்கதர்கள் முன்பு செய்த போரிலே தேவர்கள் வருந்தியோடு மாறு இந்திரனை வென்று இந்திரஜித்துஎனப் பேர் பெற்றவனென்க. (௬௬)

[அநுமானைக்குறித்து இந்திரசித்து இராவணனிடஞ் சொல்லுதல்.]

௬௭. புவனமெத்தனையவையனைத்தும்போர்கடந்
தவனையுற்றரியுருவானவாண்டகை
சிவனெனச்செங்கணனென்னச்சேவக
னிவனெனக்கூறிநின்றிருகைகூப்பினான்.

(இ - ள்.) புவனம் எத்தனை அவை அனைத்தும் போர் கடந்தவனை உற்று - உலகங்களெத்தனையுண்டோ அவையெல்லாவற்றையும் போரில் வென்றவனான இராவணனை நோக்கி,—(இந்திரசித்து),— 'அரி உரு ஆன ஆண்தகை இவன் - குரங்குவடிவமாக இருக்கிற ஆண்மைக்குணமுடையவனான இவன், சிவன் என செம் கணன் என்ன சேவகன் - சிவபிரான் போலவும் திருமால்போலவும் வீரத்தன்மையுள்ளவன்', என கூறி - என்று சொல்லி, நின்று இரு கை கூப்பினான் - தனது இரண்டு கைகளையுங் குவித்து (அத்தந்தையைத்) தொழுதுநின்றான்; (எ - று.)—இந்திரசித்து இராவணனுக்கு அநுமானைக் காட்டிய வகை இது.

புவனமெத்தனை யவையனைத்தும் போர்கடந்தவனை யுற்று - திக்குவிசயஞ்செய்தவனான இராவணனைக் கண்ணுற்று என்றபடி. ஹரி என்ற வடசொல் - குரங்கைக்குறிக்கிறபோது, (பிறர்கைப்பொருளை) வலியக்கவர்ந்து கொள்வது என்று காரணப்பொருள்பெறும். ஆண்தகைமை - பௌருஷம். 'அரியுருவான ஆண்தகை' என்ற தொடரில், பௌருஷமே ஒருகுரங்குவடிவங்கொண்டாற் போன்றவனென்ற பொருளும் தோன்றும். அடிமை செய்பவனையுணர்த்துகிற 'ஸேவகன்' என்ற வடசொல்லின் விகாரமாகிற 'சேவகன்' என்பது, ஜாக்கிரதையோடு காவல்செய்கிற வீரனென்னும் பொருளில் வருதலை, "சார்ங்கவிற் சேவகன்" எனப் பெரியார் திருமொழியிலுங் காண்க. இனி, முன்னிரண்டடிகளைச் செங்கணனுக்கு அடைமொழியாக்கி, உலகங்களெத்தனையுண்டோ அத்தனையையும் போரில் வென்றவனான இரணியனையுத்தேசித்து [இரணியனைக் கொல்லக்கருதி யென்றபடி] சிங்கவடிவங்கொண்ட ஆண்மைக்குணமுடையவனான திருமால் போலவும் (அழித்தற்றொழிற்கடவுளான) சிவபிரான் போலவும் வீரனிவனென்று சொல்லி யென உரைப்பாருமுளர். அரியும் அரனும் மிக்கதிறமுடையாராயிருந்தும் நமக்கு எளியராதல் போல, மிக்கதிறமுடையவனான இவன் எமக்கு எளியனாயினனென்னுங் கருத்து மூன்றாமடியில் தொனித்தல் காண்க. (௬௭)

[இராவணன் மிக்ககோபத்துடன் அநுமானைப் பார்த்தல்.]

கூஅ. நோக்கியகட்பொறி நுவன்றவாய்களிற்
றூக்கியபொறியொடுமயிர்சுறுக்கொளத்
தாக்கியவுயிர்ப்பொடுந்தவழுவெம்புகை
வீக்கினனவ்வுடல்விசித்தபாம்பினே.

(இ - ள்.) நோக்கிய கண் பொறி - (கோபத்தோடு அநுமானைப்) பார்த்த (இராவணனது இருபது) கண்களினின்றும் உண்டான அனற்பொறிகளும், நுவன்ற வாய்களில் தூக்கிய பொறியொடு - பேசத்தொடங்கிய (அவனது பத்து) வாய்களினின்றும் வெளியெழுந்த அனற்பொறிகளும், மயிர் சுறுக்கொள தாக்கிய - (அநுமானுடைய உடம்பிலுள்ள) மயிர்கள் சுறுசுறு வென்று தீயும்படி (அவன்மேல்) வீசின; (அதுமாத்திர மன்றி), உயிர்ப்பொடும் வெம்புகை தவழ - (இராவணனது மூக்கின்துளையிருபதினின்றும் வெளிப்பட்ட) பெருமூச்சுடனே வெவ்விய அனற்புகை கிளம்ப, (அப்புகையைக் கொண்டு இராவணன்), அ உடல் - அந்த அநுமானுடைய உடம்பை, விசித்த பாம்பின் வீக்கினன் - இறுக்கிக்கட்டியிருக்கிற நாகபாசம் போலக் கட்டினான்; (எ - று.)

இராவணன் தனது இருபதுகண்களினின்றுந் தீப்பொறி யெழுந்து அநுமான் மேல் வீசுமாறு அவனைத் தனது கண்களெல்லாவற்றாலும் மிக்க கோபத்தோடு பார்த்தான்; அங்ஙனம் பார்த்த அவன் கோபத்தோடு பேசத் தொடங்கி வாய்திறந்தவளவிலே அவ்வாய்களினின்றுந் தீப்பொறிகள் எழுந்து அருகிலுள்ள அவ்வநுமானுடைய உடம்பின்மீது வீசலாயின; மற்றும் இராவணன் பெருங்கோபத்தால் நெடுமூச்செறிந்தவளவிலே, அம்மூச்சுக் காற்றுக் களுடன் அனற்புகை கிளம்பி அருகிலுள்ள அநுமானை எப்புறமுஞ் சூழ்ந்து கொண்டது என்பதாம். கருநிறமாய்த் திணிந்து அநுமானைச் சூழ்ந்து கொண்ட அப்புகைச் செறிவுக்கு, அநுமானைச் சுற்றிப்பிணித்த கருநிறமான இந்திரசித்தின் நாகபாசத்தையே உவமைகூறினர். நாகபாசம் அநுமானுக்குப் பெருந்துயர் விளைத்திடமாட்டாமை இங்குத் தொனிக்கும். இச்செய்யுளில் உள்ள இரண்டுவாக்கியங்களுள், முன்னது - உயர்வுநவிற்சியணி; பின்னது - உவமையை அங்கமாகக் கொண்டு வந்த தற்குறிப்பேற்றம்; மைந்தன் அநுமானை நாகபாசங்கொண்டு கட்டியது போலத் தந்தை அவனைத் தனது உயிர்ப்புப்புகைகொண்டு கட்டினனென உத்பிரேக்ஷித்தவாறும்.

இனி, நோக்கிய - (அநுமானைப்) பார்த்த, கண்பொறி - கண்களாகிய பொறிகள் [இந்திரியங்கள்], நுவன்ற வாய்களில் தூக்கிய பொறியொடு-(கட் பொறியென்று) சொல்லப்பட்ட தம்மிடங்களினின்று வெளியெழுந்த நெருப்புப் பொறிகளுடனே (சென்று), மயிர் சுறுக்கொள தாக்கிய - (அநுமானது) மயிர்கள் சுறுசுறுவென்று தீயும்படி (அவனுடம்பின் மேற்) பாய்ந்தன என்று உரைப்பினும் அமையும். நோக்கிய கட்பொறிகள் [கண்களாகிய இந்திரியங்கள்] அநுமான்மேற் சென்றவளவிலே அவற்றினின்று எழுந்த தீப்பொறிக

ளும் மயிர்சுறுக்கொள்ளும்படி அவனுடம்பின்மீது பட்டன என்பது கருத்து: உடனிகழ்ச்சியணி. இங்ஙனமே இராவணனது பெருமூச்சும் அதனுட னெழுந்த புகையும் அநுமான்மீது பட்டன என்பது, பிந்தினவாக்கியத்தாற் போதரும். பெரியோர்மேல் தனது மூச்சுக்காற்றுப் படும்படி செய்தல், ஓர் அபசாரம். புகைதோன்ற நெடுமூச் செறிந்து அனற்பொறிவீச அநுமானைப் பார்த்தன னென்பது, தேர்ந்த கருத்து. 'பொறி' என்றது, உணரும் இந்திரி யத்தை. 'வாய்' என்றது, அதற்கு இடமான உடலுறுப்பை.

இவ்வளவும் இராவணனது கோபாக்கினியை வருணித்ததாதலால், உருத்திர மென்னுஞ் சுவையின்பாற் படும்; உருத்திரம் - வெகுளி. 'தாக்கிய' என்பதைத் தாக்கியனவாக என்றுகொண்டு முற்றெச்சமாக்கின், ஒரே வாக்கியமாம். (௬௮)

[இராவணன் அநுமானை வினவத்தொடங்குதல்.]

௬௯. அன்னவோர்வெகுளியனமரராதியர்
துன்னியதுன்னலர்த்துணுக்கஞ்சுற்றுற
வென்னிவண்வரவுநீயாரையென்றவன்
றன்மையைவினவினன்கூற்றின்றன்மையான்.

(இ - ள்.) கூற்றின் தன்மையான் - யமனது தன்மை போன்ற தன்மை யையுடையவனான இராவணன்,—அன்ன ஓர் வெகுளியன் - அத்தன்மைத் தான ஒருபெருங்கோபமுடையவனாய்,—அமரர் ஆதியர் துன்னிய துன்னலர் துணுக்கம் சுற்றுற - தேவர்கள் முதலினோராக (எப்புறத்தும்) நெருங்கியிருக் கின்ற பகைவர்களை அச்சம் சூழும்படி,—'இவண் வரவு என் - இங்கு (நீ) வந்த காரண மென்ன? நீ யாரை - நீ யார்?' என்று - என்பதாக, அவன் தன் மையை வினவினன் - அவ்வநுமானது இயல்பை வினவலானான்; (எ - று.)— 'என்னிவண்வரவு நீயாரை' என்றது, "தொகுத்துச்சுட்டல்." இதன் விவரத் தை, அடுத்த நான்கு கவிகளிற் கூறுகின்றார்; ஆகவே, அவை - "வகுத்துக் காட்டல்."

ஓர்வெகுளி - ஒப்பற்ற கோபமுமாம். 'ஆதியர்' என்றது, இயக்கர் கரு டர் கந்தர்வர் கின்னரர் கிம்புருடர் வித்தியாதரர் சித்தர் அசுரர் முதலிய தேவகணத்தவர்களை. அவர்களனைவரும் இராவணனோடுபகைத்து எதிர்த்துப் பொருது வென்று அடக்கப்பட்டு ஒன்றுஞ்செய்யமாட்டாது உட்பகைமை கொண்டு அவனது பரிவாரமாய் நிற்றலின், 'துன்னிய துன்னலர்' எனப் பட்டனர். 'துன்னலர்' என்றது, சேராதவர் என்று பொருள்படுதலால், பகைவர்க்குக் காரணக்குறியாம். 'துன்னியதுன்னலர்' என்ற சொற்போக்கில், தொடைமுரண் தோன்றும். அவனது பெருங்கோபத்தைக் கண்டு யார்க்கு என் னாகுமோ வென்று அமரராதியர் மிகத்திடுக்கிட்டன ரென்பார், 'துணுக்கஞ் சுற்றுற' என்றார். 'நீ' என்றதை, மத்திமதீபமாக, 'வரவு' என்றதனோடுங்

௬௨௰௯. பயங்கரமான தோற்றமுடையனாய்த் தயைதாக்ஷிணியமின்றி அனைவரையுங் கொல்பவனும் தென்திசையில் தலைமைபூண்டவனுமாய் நிற்பவனென்பது, 'கூற்றின் தன்மையான்' என்றதன் தாற்பரியம். (௬௯)

[இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்: இராவணன் அநுமானை வினவுதல்.]

௭௦. நேமியோகுலிசியோநெடுங்கணிச்சியோ
தாமரைக்கிழவனோதறுகட்பல்தலைப்
பூமிதாங்கொருவனோபொருதுமுற்றுற
நாமமுமுருவமுங்கரந்துநண்ணினாய்.

(இ - ள்.) நேமியோ - சக்கராயுதபாணியான விஷ்ணுவோ? குலிசியோ - வச்சிராயுதபாணியான இந்திரனோ? நெடுங் கணிச்சியோ - நீண்ட சூலாயுத பாணியான சிவபிரானோ? தாமரைக் கிழவனோ - தாமரைமலரில் தோன்றிய வனான பிரமனோ? தறுகண் - அஞ்சாமையையும், பல் தலை - பலதலைகளையு முடைய, பூமி தாங்கு ஒருவனோ - பூமியைக் (க் கீழேயிருந்து) தாங்குகின்ற ஒருவனான ஆதிசேஷனோ? பொருது முற்றுற - போர்செய்து அழியுமாறு, நாமமும் உருவமும் கரந்து நண்ணினாய் - பெயரையும் இயற்கைவடிவத்தை யும் மறைத்துக்கொண்டு இங்கு வந்துசேர்ந்தாய்; (எ - று.)

திருமால்முதலியோருள் எவனோவொருவன் தன்பெயரையும் இயற்கை வடிவத்தையும் மறைத்துக்கொண்டு இங்ஙனங் குரங்குவடிவமாய் வந்து போர் செய்யலாயினனென்று உட்கொண்டு, 'அங்ஙனம்வந்த யாவன் நீ?' என அநு மானை வினவினன் இராவணனென்க. 'நண்ணினாய்' என்பதை முன்னிலை யொருமைவினையாலணையும்பெயரெனக்கொண்டு, வந்தவனாகிய நீ யெனினும் அமையும். திருமால்முதலிய இவர்களே மற்றையோரினும் ஆற்றல்மிக்கவர்க ளாதலின் ஒருகால் தன்னோடு போர்க்குவரக்கூடுமென்பது, உட்கோள். அங்ங னம்வரினும் முடிவில் அவர்க்கு அழிவேநேர்வது எனத் தனதுசெருக்கிறைக் கூறுவான், 'பொருதமுற்றுற' என்றான். குலிசம் - வச்சிராயுதம்: அதனையு டையவன், குலிசீ என இந்திரனுக்குக் காரணக்குறி. நெடுங் கணிச்சி-நீண்ட சூலத்தை யுடையவன் எனப் பண்புத்தொகையன்மொழி. கணிச்சி - மழு வென்னும் படைக்கலமுமாம். தாமரைக்கிழவன் - திருமாலின் நாபித்தா மரைமலரினின்று தோன்றி அதற்கு உரிமைபூண்டவன். தறுகண் - அச்சந் தரும் கொடியகண்களும, கொடுமையுமாம். சர்ப்பராஜனான ஆதிசேஷன் ஆயிரந்தலைகளையுடையா னாதலின், 'பல்தலை' என்ற அடைமொழி கொடுக் கப்பட்டது. (௭௦)

௭௧. நின்றிசைத்துயிர்கவர்நீலக்காலனோ
குன்றிசைத்தயிலுறவெறிந்தகொற்றனோ
தென்றிசைக்கிழவனோதிசைநின்றோட்டிய
ரென்றிசைக்கின்றவர்யாருள்யாவனீ.

(இ - ள்.) நீ—, நின்று இசைத்து உயிர் கவர் நீலக் காலனோ - (எதற்குஞ் சலியாது) நிலைநின்று (தனதுபாசாயுதத்தைக்கொண்டு) கட்டி (எந்தப்பிராணி களின்) உயிரையுங் கவர்ந்துகொண்டுபோகிற கருநிறமுடைய யமனோ? குன்று இசைத்து அயில் உற எறிந்த கொற்றனோ - மலையிற்பட்டு (த்தனது) வேலா யுதம் உட்புகுதும்படி (அதனை) எறிந்த வெற்றியையுடையவனான முருகனோ? தென்திசைக் கிழவனோ - தெற்குத்திக்குக்கு உரிமைபூண்டவனான அகத்திய முனிவனோ? திசை நின்று ஆட்சியர் என்று இசைக்கின்றவர் யாருள் யாவன் - (மற்றும்) திக்குக்களில் நின்று (அவற்றை) ஆளுதலுடையவர் [திக் பாலகர்] என்று சொல்லப்படுகின்றவ ரனைவருள்ளும் யாவனோ ? (எ - று.)

இனி, நின்று-(பிராணிகளினெதிரிற் சென்று) தோன்றிநின்று, இசைத்து - (அவர்களுடைய வாழ்நாளின்முடிவை அவர்கட்குச்) சொல்லி என்றும் பொருள் கொள்ளலாம். இசைத்தல் - ஆரவாரஞ்செய்தலுமாம். (பிராணிகளின் ஆயுள் நாளைக்) கணக்கிடுதல்பற்றி, யமனுக்குக் கால னென்று பெயர்; வடசொல். குன்று - இங்குக் கிரௌஞ்சகிரி. அதன்மீது முருகக்கடவுள் வேலெறிந்து அதனைப்பிளந்த வரலாற்றைக் கந்தபுராணத்திற் காண்க. அன்றியும், சிவபி ரான் பரசுராமனுக்கும் சுப்பிரமணியனுக்கும் ஒருங்கு படைக்கலவித்தை பயிற்றுவித்தபின்பு அவர்கள் திறத்தைப் பரீக்ஷிக்கையில், குமார மூர்த்தி தனது வேற்படையைக் கிரௌஞ்சகிரியின் மீது எறிந்து அதனைப் பிளந்து தனது வேலின்திறத்தைக் காட்டின னென்ற வரலாறும் உண்டு. உற - ஊடுருவிப் பாய்ந்துசெல்ல. கொற்றமுடையவன், கொற்றன்.

அகத்தியமகாமுனிவன் பொதியமலையின்கண் இருந்து இராவணனைக் கந்தருவத்தாற்பிணித்து இராக்கதரை ஆண்டு இயங்காமை விலக்கிய திற முடையா னாதலின், அவனே இவ னெனவும் இராவணன் ஐயமுற லாயிற்று. முன்னொருகாலத்திற் சகலதேவர்களும் முனிவர்களும் மேருகிரியிலே ஒருங்கு கூடியதனால் அவ்வடபுறம் தாழ்ந்து தென்புறம் உயரவே, அதனைக்கண்டு கலங்கிய அனைவரும் மிக்கமகிமையுடையவனான அகத்திய மாமுனிவனைத் தென்திசைக்குச் செல்லும்படி வேண்ட, அவ்வாறே அம்முனிவன் தென் திசைக்கண் வந்து சேர்ந்து பொதியமலையில் தங்கின னென்ற வரலாறுபற் றியும், அகஸ்தியநக்ஷத்திரம் தென் திசையில் விளங்குதலாலும், அகஸ்திய முனிவன் 'தென்திசைக்கிழவன்' எனப்பட்டனன்: ("தேவரெல்லாருங் கூடி, 'யாம் சேர இருத்தலின் மேருத் தாழ்ந்து தென்திசை உயர்ந்தது: இதற்கு அகஸ்தியனாரே ஆண்டு இருத்தற்கு உரியர்' என்று அவரை வேண்டிக்கொள்ள, அவரும் தென்திசைக்கண் போதுகின்றவர்.................................. காடுகெடுத்து நாடாக்கிப் பொதியிலின்கண் இருந்து, இராவணனைக் கந்தருவ த்தாற்பிணித்து இராக்கதரை ஆண்டுஇயங்காமை விலக்கி" என்பது, தொல் காப்பியப்பாயிரத்து நச்சினார்க்கினியருரை. பத்துப் பாட்டின் மதுரைக்காஞ்சி யில் "தென்னவற்பெயரிய துன்னருந்துப்பிற், றொன்முதுகடவுள்" என்ப தற்கு - 'இராவணனைத் தமிழ்நாட்டையாளாதபடி போக்கின கிட்டுதற்குஅரிய

வலியினையுடைய பழமைமுதிர்ந்த அகத்தியன்' என்ற நச்சினார்க்கினிய ருரையும் நோக்கத்தக்கது.) அகத்தியனை 'தென்திசைக் கிழவன்' என்றது, பாண்டியனை 'தென்னவன்' என்றல் போலும். இனி, 'தென்திசைக்கிழவன்' என்பதற்கு - தெற்குத்திக்குப்பாலகனான யமன் என்று கொண்டு, முத லடியில் 'காலன்' என்றது - அந்த யமனது மந்திரியும் சேனைத்தலைவனும் அவனைப்போன்ற திறலுடையவனுமான பிறனொருவனை யெனக் கொள்ளு தலு மொன்று; 'காலன்' என்பது - யமனுக்குப் பரியாயநாமமாக வழங்கு தலோடு, இங்ஙனம் வேறொருவன் பெயராகவும் நிற்கும்: இதனை, இராமா யணத்து உத்தரகாண்டத்தில் இராவணன் திக்குவிசயப் படலத்தில் யமனை வெல்லுமிடத்து "பொருவழியரக்கன்சீறிப் பொருந்து தேர்ப்பாகன்றன் மேல், தருமன்மேற் காலன்றன்மேற் சரங்களாயிரந் தைப்பித்தான்" என்றது முதலிய இடங்களிற் காணலாம். அஷ்டதிக்பாலகர்களுள் இந்திர னும் யமனும் கீழ்க் கூறப்பட்டதனால் - 'திசைநின்றுகாக்கிய ரென் றிசைக்கின் றவர்' என்றது, அவரொழிந்த மற்றையோரை. (எக)

எஉ. அந்தணர்வேள்வியினாக்கியாணையின்
வந்துறவிடுத்ததோர்வயவெம்பூதமோ
முந்தொருமலருளோனிலங்கைமுற்றுறச்
சிந்தெனத்திருத்தியதறுகட்டெய்வமோ.

(இ - ள்.) அந்தணர் - முனிவர்கள், வேள்வியின் - யாகத்திலிருந்து, ஆக்கி - தோன்றுவித்து, ஆணையின் - (தமது) கட்டளையினால், வந்து உற விடுத்தது - (இங்கு) வந்து சேரும்படி அனுப்பப்பெற்றதான, ஓர் வய வெம் பூத மோ - வலிய கொடிய ஒருபூதந்தானோ? முந்து ஒரு மலர் உளோன் - பழமை யானதொரு தாமரைப்பூவின்மே லிருப்பவனான பிரமன், இலங்கை முற்றுற சிந்து என திருத்திய - 'இலங்காபுரி முழுவதையும் அழித்துவிடு' என்று ஏவிப் புதிதாகச்செய்தனுப்பிய, தறுகண் தெய்வமோ - அஞ்சாத ஒரு தேவன் தானோ? (எ - று.)

முன்னொருகாலத்திற் சிவபிரான் மீது பகைமைகொண்ட தாருகவனத்து முனிவர்கள் அப்பிரானைக் கொல்லக் கருதி அபிசாரயாகமொன்று செய்து அவ்வோமத்தீயினின்றும் எழுந்த பூதங்கள் முதலியவற்றை அப்பெருமான் மீது ஏவியனுப்பினாற்போல, இப்பொழுது தண்டகாரணியவாசிகளான முனி வர்கள் தன்னைக்கொல்லக்கருதி அபிசாரயாகமொன்றுசெய்து அதனினின்று எழுப்பிக் கட்டளையிட்டு இலங்கையைநோக்கி யனுப்பிய ஒருமகாபூதமோ என்றும் சங்கித்து வினவினன் இராவணன் என்க. அம்முனிவரேவிய அந் தப்பூதகணங்கள் சிவபிரானை யொன்றுஞ் செய்யமாட்டாது அவனது பேராற் றலுக்கு அடங்கி அவனுக்கு அடிமைப்பட்டாற்போலவேயாகும், இம்முனிவர்

பூதமொன்றையெழுப்பித் தன்மேலேவினும் என்பது இராவணனுட்கோள் என விளங்கும். 'அந்தண' ரென்பது முனிவர்மேல தாதலே, திருக்குறளில் நீத்தார்பெருமையில் "அந்தணரென்போ ரறவோர் மற்றெவ்வுயிர்க்குஞ், செந் தண்மைபூண்டொழுகலான்" என்றது கொண்டும் உணர்க. ஆணையின் ஆக்கி என்று இயைத்து, தமது ஆணையாகச்சொல்லிய மந்திரங்களின் சக்தியினால் உண்டாக்கி என உரைப்பினும் அமையும்; "நிறைமொழிமாந்தராணையிற் கிளந்த, மறைமொழிதானே மந்திரமென்ப" என்ற தொல்காப்பியமுங் காண்க. 'முந்தொருமலர்' என்றது, திருமாலின் நாபிக்கமலத்தை. (எ௨)

எ௩. ஆரைநீயென்னையிங்கெய்துகாரணை
மாருனைவிடுத்தவரறியவாணையாற்
சோர்விலைசொல்லுதியென்னச்சொல்லினான்
வேரொடுமமரர்தம்புகழ்விழுங்கினான்.

(இ-ள்.) 'ஆரை நீ - (இவர்களில்) யாவன் நீ? இங்கு எய்து காரணம் என்னை - (நீ) இங்கு வந்ததன்காரணம் யாது? உனை விடுத்தவர் ஆர் - உன்னை யனுப்பியவர் யாவர்? அறிய - (யான்) அறிந்து கொள்ளுமாறு, ஆணையால் - (எனது) கட்டளையின்படி, சோர்வு இலை சொல்லுதி - தவறுதலில்லாமற் சொல்வாய்' என்ன சொல்லினான் - என்று (அநுமானை நோக்கிக்) கூறினான்: (யாவனெனில்),—அமரர்தம் புகழ் வேரொடும் விழுங்கினான் - தேவர்களு டைய கீர்த்தியை அடியோடு விழுங்கியவனான இராவணன்; (எ-று.)

கீழ்வந்த மூன்று செய்யுள்களும், இச்செய்யுளில் 'ஆரை நீ' என்றதும் - கீழ் சுக - ஆஞ் செய்யுளில் 'நீ யாரை' என்றதன் விவரமும், இச்செய்யு ளில் 'என்னையிங் கெய்து காரணம் ஆருனைவிடுத்தவர்' என்றது - அங்கு 'என்னிவண்வரவு' என்றதன் விவரமு மாம். வேரொடு மமரர்தம் புகழ்விழுங்கி னான் - உண்ணப்படாதது உண்ணப்பட்டது போலச் சொல்லப்பட்ட மரபுவழு வமைதி; தேவர்களை வென்று அவர்களுடைய கீர்த்திமுழுவதையுந் தனதாக் கிக்கொண்டவ னென்பது கருத்து. (எ௩)

[இதுமுதல் ஒன்பது கவிகள் - அநுமான் சொல்லும் உத்தரம்.]

எ௪. சொல்லியவனைவருமல்லென்சொன்னவப்
புல்லியவலியினோரேவல்பூண்டிலே
னல்லியங்கமலமேயனையசெங்கணோர்
வில்லிதன்றூதன்யானிலங்கைமேயினேன்.

(இ-ள்.) சொல்லிய அனைவரும் அல்லென் - (நீ) சொன்ன யாவரு மல்லேன் (யான்); சொன்ன அ புல்லிய வலியினோர் ஏவல் பூண்டிலேன் - (உன்னாற்) சொல்லப்பட்டவர்களான அந்த அற்பபலமுள்ளவர்களுடைய கட்டளையை மேற்கொண்டு வந்தேனு மல்லேன்; அல்லி அம் கமலமே அனைய செம்கண் - அகவிதழ்கள் நிறைந்த அழகிய செந்தாமரைமலரையே போன்ற

சிவந்த திருக்கண்களையுடைய, ஓர் வில்லிதன் - ஒப்பற்ற ஒருவில்வீரனது, தூதன் - தூதனாக, யான்—, இலங்கை மேயினேன் - இந்த இலங்காபுரிக்கு வந்தேன்; (எ - று.)

அநுமான் தனது தலைவனான இராமபிரானது வலிமையை மிகச்சிறப்பிக்கவேண்டி, திரிமூர்த்திகளையுமுட்பட 'புல்லியவலியினோர்' என்று இழித்துக்கூறினான்; 'நனிநிந்தாஸ்துதி' த்தால், இது குற்றமாகாது. "என்றலோடு மிலங்கைநக ரெரித்த கவி யாண்டுளதென்ன, வன்றன்சிறுவன் வீக்க வகப் பட்ட விழிவி னுளங்கொதித்துக், கன்றி யுயர்வானரத்தலைவர் கடியக் கானத் திடை யொளித்துப், பொன்றியதுவோ வுய்ந்ததோ வறியே னந்தப் புன் குரங்கே" என்ற கூர்மபுராணத்தில், இராவணன் முன்னிலையில் அங்கதன் அநுமானை இழித்துரைத்ததாகக்கூறியதும் இத்தன்மைத்தே. அன்றியும், திரிமூர்த்திகள் முதலியோர் கொல்லாது விட்ட இராவணனை இராமன் கொல்வ னென்பது பற்றி, அவர்களை 'புல்லியவலியினோர்' என்றானுமாம். இனி, இத்தொடர்க்கு - பொருந்திய வலிமையையுடைவர்களென்றும் பொருள்கொள்ளலாம். அல்லியென்பதன் எதிர்மொழி - 'புல்லி'; அது, புறவிதழையுணர்த்தும். திரிமூர்த்திகள் முதலியோரது கட்டளையையும் பொருள் செய்யேன் யான் இராமதூதனாய் இங்குவந்தேன் என்று, தனது திறத்தையும் இராமபக்தியையும் வெளியிட்டான். மிக்க ஆற்றலையுடையவ ரென்று உன்னாற் கருதப்பட்ட அனைவரினும் மேம்பட்டவன் எனது தலைவ னெனக் குறிப்பித்தானும். (எச)

எரு. அனையவன் யாரென வறிதி யாதியேல்
முனைவரு மமரரு மூவர் தேவரு
மெனையவ ரெனையவர் யாவர் யாவையு
நினைவரு மிருவினை முடிக்க நின்றுளோன்.

(இ - ள்.) அனையவன் யார் என அறிதி ஆதி எல் - அந்தவில்வீரன் யாவனென்று (விவரம்) அறியவேண்டுவையானால், (விரிவாகச் சொல்லுகின்றேன்:—) முனைவரும் - முனிவர்களும், அமரரும் - தேவர்களும், மூவர் தேவரும் - திரிமூர்த்திகளும், எனையவர் எனையவர் யாவர் - மற்றும் எவ்வளவு மேம்பட்டவர்களாய் எத்தனை வருப்பினருண்டோ அவர்களனைவரும், யாவையும் - மற்றை எல்லாப்பிராணிகளும், நினைவு அரும் - நினைத்தற்கும் அரியதான, இரு வினை - பெரிய காரியத்தை, முடிக்க - நிறைவேற்றுதற்கு, நின்று உளோன் - அவதரித்து நிலைபெற்றுள்ளவன்; (எ - று.)

'இருவினை' என்றது, இராவணவதத்தை. முனிவர் தேவர் முதலிய அனைவராலும் மற்றும் அஃறிணையுயிர்களாலும் தான் கொல்லப்படாதபடி இராவணன் பிரமனிடம் வரம்வேண்டிப்பெற்றுள்ளா னாதலால், அவனைக் கொல்லுதல் அவர்கள் யாவரும் யாவையும் நினைத்தற்கும் அரிதாயிற்று;

அவன் வரம்பெற்ற வகையை, மேல் உத்தரகாண்டத்தில், "பின்னுஞ் சொல் லும் பிரமகன்றான் பெருகுதவத்து நீ யிங்குச், சொன்னசொன்ன வரந்தரு வேன் சொல்லென்றுரைக்கத் தொல்லுலகில், மன்னுமனிதர்தமைப் பொரு ளாய் மனத்தினினையான் வாளரக்கன், உன்னுபொருளொன்றொழியாமல்வே ண்ட விரிஞ்சனுவந்தளித்தான்" எனக் காண்க. 'முனைவரும்' என்றது முதல் 'யாவர்' என்றதுவரை - உயர்திணையுயிர்களுள் தேவகணத்தவர்களை யும், 'யாவை' என்றது - அஃறிணையில் உயிருள்ளவற்றையுங் குறிக்கும். முனைவர் - பழமையானவர்; 'முன்றேனை முனைவனென்பது ஓர்சொல்விழுக் காடாம்; முன்னென்பதனை முனையென்பவாகலின்' என்பது, தொல்காப்பிய வுரை. (எ௫)

வேறு.

எசு. ஈட்டிய வலியு மேனா ளியற்றிய தவமும் யாணர்
கூட்டிய படையுந் தேவர் கொடுத்தநல் வரமுங் கொட்புந்
தீட்டிய பிறவு மெய்தித் திருத்திய வாழ்வு மெல்லா
நீட்டிய பகழி யொன்றான் முதலொடு நீக்க நின்றான்.

(இ - ள்.) ஈட்டிய வலியும் - (நீங்கள்) மிகுதியாகக்கொண்டுள்ள தேக பலத்தையும், மேல்நாள் இயற்றிய தவமும் - முன்னாளில் (நீங்கள்) செய்து வைத்துள்ள தவத்தின் வலிமையையும், யாணர் கூட்டிய படையும் - புதிது புதிதாக (நீங்கள்) சேர்த்துவைத்திருக்கிற ஆயுதங்களையும் சேனைகளையும், தேவர் கொடுத்த நல் வரமும் - தேவர்கள் (உங்கட்குக்) கொடுத்திருக்கிற சிறந்தவரங்களையும், கொட்பும் - (மற்றும் நீங்கள்கொண்டுள்ள) சிறப்புக்களை யும், தீட்டிய பிறவும் - (நீங்கள் ஆங்காங்கு ஜயஸ்தம்பம்நாட்டி அவற்றில்) எழுதிவைத்துள்ள (பெயர் பிரதாபம் கீர்த்தி முதலிய) பிறவற்றையும், எய்தி திருத்திய வாழ்வும் - (நீங்கள்) அடைந்து பின்பு சீர்திருத்திக்கொண்ட அர சாட்சிச்செல்வங்களையும், எல்லாம் - மற்றும் உங்கள் சம்பந்தமுடையவை யனைத்தையும், நீட்டிய பகழி ஒன்றால் முதலொடு நீக்க - நீண்ட (தனது) அம்பொன்றினால் அடியோடு அழிக்குமாறு, நின்றான் - நிச்சயித்துநின்றவன் (அவன்); (எ - று.)

மேல்நாள் - ஆதிகாலத்தில்; இளமையில் என்க. யாணர்—புதுமை யுணர்த்தும் உரிச்சொல். 'இரட்டுறமொழித' லென்னும் உத்தியால், 'படை' என்பதற்கு - ஆயுதமுஞ் சேனையு மாகிய இருபொருள் ஒருங்கு கொள்ளப் பட்டது. கொட்பு - மனத்தின்கொள்கை யென்று கொண்டால், எண்ண மென்று பொருளாம். 'கோட்பும்' என்ற பாடத்துக்கு, பகுதி முதல் நீண்ட தெனவேண்டும். 'தீட்டிய' என்ற பிறவினைச்சொற்குத் தன்வினையாகப் பொருள்கொள்ளப்பட்டது; நெடுந்தூரஞ் செல்லவிட்ட வென்று உரைத்தலு மொன்று. முதல் - வேர். நின்றான் - உத்தேசித்துநின்றவன்.

இதுமுதற் பதினைந்து கவிகள் - கீழ்ப்படலத்தின் ச - ஆங் கவிபோன்ற அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (எசு)

எஎ. தேவரும்பிறருமல்லன்றிசைக்களிறல்லன்றிக்கிற்
காவலரல்லனீசன்கயிலையங்கிரியுமல்லன்
மூவருமல்லன்மற்றைமுனிவருமல்லனெல்லைப்
பூவலயத்தையாண்டபுரவலன்புதல்வன்போலாம்.

(இ - ள்.) (அந்தவில்வீரன்), தேவரும் பிறரும் அல்லன் - தேவர்களும் மற்றை அசுரர்கள் முதலியோரு மல்லன்; திசைக்களிறு அல்லன் - (அஷ்ட) திக்கஜங்களு மல்லன்; திக்கில் காவலர் அல்லன் - (அஷ்ட) திக்பாலகர்களுமல்லன்; ஈசன் கயிலை அம் கிரியும் அல்லன் - சிவபிரானது அழகிய கைலாசகிரியு மல்லன்; மூவரும் அல்லன் - திரிமூர்த்திகளு மல்லன்; மற்றை - மற்றும், முனிவரும் அல்லன் - இருடிகளுமல்லன்; எல்லை பூவலயத்தை ஆண்ட புரவலன் புதல்வன் போல் ஆம் - பூமண்டலத்தின் எல்லை எவ்வளவு உண்டோ அவ்வளவையும் அரசாண்ட (தசரத) சக்கரவர்த்தியின் குமாரனவன்; (எ - று.)

திக்கிற்காவலர் - திசைகளிற் காவல்செய்துநிற்பவர். 'திக்கின்காவலர்' என்பதும் பாடம். 'புரவலன் புதல்வன்போலாம்' என்றவிடத்தில், 'போல்' என்றது - உவமைப்பொருள்தாராமையால், ஒப்பில்போலியாய், அவன் உன்னால் வெல்லப்பட்ட தேவர்முதலியோரல்லன், வெல்லப்படாத ஒரு சக்கரவர்த்தியின் புதல்வன் என்றவாறு. (எஎ)

எஅ. போதமும்பொருந்துகேள்விப்புரையறுபயனும்பொய்தீர்
மாதவஞ்சார்ந்ததீராவரங்களுமற்றுமுற்றும்
யாதவனினைந்தானன்னபயத்தனவேதுவேண்டின்
வேதமுமறனுஞ்சொல்லுமெய்யறமூர்த்திவில்லோன்.

(இ - ள்.) போதமும் - ஞானமும், பொருந்து கேள்வி புரை அறு பயனும் - பொருந்திய நூற்கேள்விகளினாற் பெறுங் குற்றமற்ற பயனும், பொய் தீர் மா தவம் சார்ந்த தீரா வரங்களும் - பொய்ம்மையில்லாத பெரியதவத்தைச் செய்துபெறுகின்ற நீங்காதவரங்களும், மற்றும் முற்றும் - மற்றும் எல்லாம், அவன் யாது நினைந்தான் அன்ன பயத்தன - அவன் என்னநினைத்தானே அந்தப்பயனை விளைப்பனவாம்; ஏது வேண்டின் - (இங்ஙன மாதற்குக்) காரணத்தை (அறிய) விரும்பினால்,—வில்லோன் - அந்தவில்வீரன், வேதமும் அறனும் சொல்லும் மெய் அறம் மூர்த்தி - வேதங்களும் தர்மதேவதையும் துதித்துக்கூறும் சத்தியமான தர்மஸ்வரூபி; (எ - று.)

இயற்கைநுண்ணறிவு, செயற்கைநூலறிவு முதலிய அறிவுவகையெல்லாம், 'போதம்' என்றதில் அடங்கும். கேள்வியாவது - கேட்கப்படும் நூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக் கேட்டல்; இது, கற்றவழி அதனின்

ஆப அறிவை வலியுறுத்துவதும் கல்லாதவழியும் அதனை யுண்டாக்குவது மாய் "கற்றலிற் கேட்டலே நன்று" என்னும்படி சிறப்புறுதலால், 'பொருந்து கேள்வி' என விசேடித்துக்கூறப்பட்டது. அக்கேள்வியின் குற்றமற்ற நற்பயன் - வறுமைமுதலியவற்றால் மனந்தளர்ந்தவிடத்து அத்தளர்ச்சியை நீக்குதல், ஆன்றபெருமைதருதல், பேதைமைசொல்லாமை முதலியன. உபதேச மொழிகளை அநுபவமுடைய நல்லாசிரியர்பக்கல் கேட்டலாகிய சிரவணம் இங்கு 'கேள்வி' எனப்பட்ட தென்று கொண்டால், அதன்பயன் - அம்மொழிப் பொருளைத் தெளிய ஆராய்தலாகிய மநநமும், அப்பொருளைத் தெளிந்து இடைவிடாது பாவித்தலாகிய நிதித்யாஸநமுமாம். பொய்தீர்மாதவம் - கூடாவொழுக்கம் முதலிய குற்றமின்றித் திரிகரண சுத்தியுடன் செய்யுந் தவம்; பழுதுபடுதலின்றிப் பயன்தருந் தவ மெனினுமாம். தவஞ்செய்வார்க்கு உரிய விரதங்களுள் வாய்மை ஒன்றாதல்பற்றி, 'பொய்தீர்தவம்' எனப்பட்டது என்றுங் கொள்ளலாம். தலைமைத்தேவர்களை உகப்பித்து அவர்களிடத்தினின்று தாம்தாம் வேண்டும் வரங்களைப் பெறுதற்குத் தவம் கருவி யாதலால், 'தவஞ்சார்ந்தவரங்கள்' எனப்பட்டன. அத்தவத்தின் சிறப்புக்கு ஏற்றபடி பெருவரங் கிடைத்தல்பற்றி, 'பொய்தீர்மாதவஞ்சார்ந்த தீராவரங்கள்' என்றார். அவ்வரபலம் எவர்க்கும் ஒழிக்க அரிதென்பது தோன்ற, அதற்கு 'தீரா' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. வரம் - வேண்டுவனபெறுதல். 'அவனன்றி அணுவும் அசையாது' என்றபடி யாவும் ஸர்வசக்தனான அவனது சங்கற்பத்துக்கு உட்பட்டே நடக்கின்றன என்ற உண்மை மகிமையை உணர்த்துவார், 'யாது அவன் நினைந்தான் அன்னப்பயத்தன' என்றார். நினைது புத்திபலம் முதலிய சிறப்புக்களெல்லாம் அழியுமாறு அவன்நினைப்பின் அங்ஙனமே தவறாமல் எளிதில் அழியுமென்று உணர்த்தியவாறும். அங்ஙனமாதற்குக் காரணம் - அவன் வேதப்பிரதிபாத்தியனும் அறக்கடவுளும் தர்மஸ்வரூபியும் ஸத்தியஸங்கல்பனுமான முழுமுதற்கடவு ளென்பது, 'எதுவேண்டின், வேதமும் அறனுஞ் சொல்லும் மெய்யறமூர்த்தி வில்லோன்' என விளக்கப்பட்டது. (எஅ)

எகூ. காரணங்கேட்டியாயிற்கடையிலாமறையின்கண்ணு
மாரணங்காட்டமாட்டாவறிவினுக்கறிவுமன்னோன்
போரணங்கிடங்கர்கவ்வப்பொதுநின்றுமுதலேயென்ற
வாரணங்காக்கவந்தானமரரைக்காக்கவந்தான்.

(இ - ள்.) காரணம் கேட்டி ஆயின் - (அந்த முதற்கடவுள் இங்ஙனம் தசரதன் மகனாத் தோன்றுதற்குக்) காரணம் (என்னவென்று) கேட்பையானால்,—கடை இலா மறையின் கண்ணும் - முடிவில்லாத [அநந்தமான] வேதங்களிலும், ஆரணம் - (அவ்வேதத்தின் ஞான காண்டமாகிய) உபநிஷத்துக்களிலும், காட்டமாட்டா - (இன்ன தன்மையனென்று) முழுவதுங் காட்டமுடியாத, அறிவினுக்கு அறிவும் அன்னோன் - (எல்லாப் பொருள்களையும்) அறிகின்ற

அறிவுக்கும் ஓர் அறிவை யொத்தவனும்,—போர் அணங்கு இடங்கர் கவ்வ - போரிலே வருத்தத்தைச் செய்கின்ற முதலையானது கவ்விக்கொள்ள, (அதனால் வாருந்தி), பொது நின்று முதலே என்ற - (இன்ன கடவுளென்று பெயர் குறித்துக் கூப்பிடாமற்) பொதுப்பட ஆதிமூலமே! என்று கூவியழைத்து நின்ற, வாரணம் - யானையை [கஜேந்திராழ்வானை], காக்க - பாதுகாத்தற்கு, வந்தான் - (முன்பு ஓடி) வந்தவனுமான அந்த ஸ்ரீமந் நாராயணனே, அமரரை காக்க வந்தான் - (அரக்கர்களால் வருந்திய) தேவர்களைப் பாதுகாத்தற் பொருட்டு (இங்ஙனம்) அவதாரஞ் செய்தருளினான்; (எ - று.)

மறை ஆரணம் என்பன வேதத்தின் பரியாய நாமமாக வழங்கினும், இங்கு இரண்டுங் கூறியதனால், 'மறை' என்றது - வேதத்தின் பூர்வபாகமாகிய கர்மகாண்ட மென்றும், 'ஆரணம்' என்றது - வேதத்தின் அந்தமாகிய உபநிஷத்து என்றும் பகுத்துக்கொள்ளப்பட்டன. வேதந்தான் பரம்பொருளின் சொரூபத்தை முழுவதும் சொல்லமாட்டாது மீண்டமையை, அவ்வேதங் கூறுதல்கொண்டே யுணரலாம். 'கண்ணும்' என்ற ஏழனுருபையும், உம்மையையும், 'ஆரணம்' என்பதனோடுங் கூட்டுக. அறிவுக்கு அறிகிற சக்தியை யளித்தவனும், அறிவுக்கு எற்ற விஷயமாகுபவனும் அவனே யென்பது, 'அறிவினுக்கறிவுமன்னோன்' என்றதன் கருத்து.

கஜேந்திராழ்வான் இன்ன தெய்வமென்று பெயர்குறியாது 'ஆதிமூலமே!' என்று பொதுப்படக் கூப்பிட்டபொழுது திருமாலல்லாத பிறதேவரெல்லாரும் தாம்தாம் அச்சொல்லுக்குப் பொருளல்லரென்று கருதியொழிய, அதற்குஉரிய அத்திருமால்தானே வந்து அருள்செய்தமை, கருதத்தக்கது; "அழைத்தது செவியிற்கேட்டும் அயனரனுதியாயோர், புழைக்கை வெங்கரிமுன் காப்பப் புகுந்தில ராகியாகித், தழைத்தகாரணனே யென்ற தனிப்பெயர்ப் பொருள் யாமல்லோம், இழைத்தகாரியம் யாமாவோ மென்செய்து மா லின்றென்றார்" என்ற ஸ்ரீ பாகவதத்தையுங் காண்க. திருமாலே பரம்பொருளென்ற உண்மையை இங்ஙனங் காரணங்காட்டி வெளியிட்டார்.

ஒரு விலங்கினால் மற்றொரு விலங்கிற்கு நேர்ந்த துன்பத்தைத் தான் இருந்த இடத்தி லிருந்துகொண்டே தீர்ப்பது ஸர்வசக்தனான எம்பெருமானுக்கு மிகவும் எளிதேயாயினும், அப்பெருமான் அங்ஙனஞ் செய்யாது தனது பேரருளினால் அரைகுலையத் தலைதுலைய மடிக்கரைக்கே வந்து உதவின மகா குணத்தில் ஈடுபட்டு, 'வாரணங் காக்க வந்தான்' என்றார். (எசு)

ஃ௦. மூலமுநடுவுமீறுமில்லதோர்மும்மைத்தாய
காலமுங்கணக்குநீத்தகாரணன்கைவிலேந்திச்
சூலமுந்திகிரிசங்குங்கரகமுந்துறந்துதொல்லை
யாலமுமலரும்வெள்ளிப்பொருப்பும்விட்டயோத்திவந்தான்.

(இ - ள்.) மூலமும் நடுவும் ஈறும் இல்லது - ஆதி மத்திய அந்தங்களில்லாததான, ஓர் மும்மைத்து ஆய காலமும் - மூன்று வகைப்பட்ட காலத்தின்

எல்லையையும், கணக்கும் - (மற்றும் இடம் குணம் செயல் முதலியவற்றின்) எல்லைகளையும், நீத்த - கடந்துநின்ற, காரணன் - (எல்லாப்பொருள்களுக் கும்) காரணபூதனான அந்த முழுமுதற்கடவுள்தானே, சூலமும் திகிரி சங் கும் கரகமும் துறந்து கை வில் ஏந்தி - சூலாயுதத்தையும் சங்கசக்கரங்களையும் கமண்டலத்தையும் (தன்கைகளிற்கொள்ளாது) விட்டுக் கையில் வில்லை யேந்திக்கொண்டு; தொல்லை ஆலமும் அலரும் வெள்ளிப்பொருப்பும் விட்டு அயோத்தி வந்தான் - பழமையாகத் தனக்கு உரிய இடங்களாகின்ற ஆலிலை யையும் தாமரைமலரையும் கைலாசகிரியையும் இடமாகக்கொள்ளாது விட்டு அயோத்தியாபுரியை இடமாகக்கொண்டு அங்குவந்து திருவவதரித்தான்.

"ஆக்குமாறயனு முதலாக்கிய வுலகங், காக்குமாறு செங்கண்ணிறை கருணையங்கடலாம், வீக்குமாறரனு மவைவீந்தநாண் மீளப், பூக்குமாமுத லெவ னவன்பொன்னடிபோற்றி" என்றபடி திரிமூர்த்திஸ்வரூபியாய்ப் படைத்தல் காத்தல் அழித்தல் தொழில்களை நடத்துகின்ற ஜகத்காரண பூதனான ஸர்வேசுவரனே அத்திரிமூர்த்திஸ்வரூபங்களிற் கைக்கொள்ளு கின்ற சூலம்முதலியவற்றை விட்டுக் கையில்வில்லேந்தி அம்மும்மூர்த்தி கட்கு உரிய இடமாகின்ற ஆலிலைமுதலியவற்றை விட்டு அயோத்தியில்வந்து தோன்றின னென்பதாம். சூலம் - அரன் கையிலேந்துவது. திகிரியும், சங் கும் - அரி கைகளி லேந்துவன. திகிரி - சக்கராயுதம். கரகம் - ஜலபாத்திரம், குண்டிகை: இது, அயன் கையிலேந்துவது. படைத்தல் காத்தல் அழித்தல் என்ற தொழில்களின் முறைமையை எதிராகக்கொண்டு, 'சூலமும் திகிரிசங் குங் கரகமும்' என முறைப்படுத்தப்பட்டது. இம்முறைக்கு ஏற்ப ஈற்றடி யில் 'வெள்ளிப்பொருப்பும் ஆலமும் அலரும்' என முறைகொள்ளாது பிறழ வைத்தது, செய்யுள்நோக்கி யென்க; காரணகாரியமுறைமை அங்குக் கொள் ளப்பட்ட தெனினுமாம். ஆலிலை - திருமால் பிரளயகாலத்திற் பள்ளிகொள்ளு மிடம். அது அநாதியான ஆதிசேஷனது அம்சமாதலால், அதற்கு 'தொல்லை' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது என்னலாம். ஆல் என்ற மரத்தின் பெயர் - முதலாகுபெயராய், இலையைக் குறித்தது; அம்-சாரியை. இனி, விஷத்தையுணர்த்துகிற ஹாலமென்ற வடசொல் ஆலமென விகாரப்பட்ட தென்றுகொண்டு, அது இங்கு இலக்கணையாகப் பாம்பையுணர்த்திய தென் றால், 'தொல்லைஆலம்' என்றது - ஆதிசேஷனையாம். அவன் பிரளயத்திலும் அழிவின்றிவருதலால், அவனுக்கு 'தொல்லை' என்ற அடைமொழி ஏற்கும். அவன் திருமாலுக்குச் சயனம் ஆசநம் முதலிய இடங்களாக இருத்தல், பிரசித்தம். திருமாலின் நாபித்தாமரைமலர் - பிரமன் தோன்றிவாழுமிடம். வெள்ளிமலையாகிய கைலாசம்-சிவபிரான் வாழு மிடம். அயோத்யா என்ற வடசொல், அயோத்தியென விகாரப்பட்டது; அது - போர்செய்யக் கூடாத தென்று காரணப்பொருள்பெறும்; பிறரெவரும் பொருதுவெல்ல முடியாதபடி மதில் அகழி ஆயுதம் சேனை முதலியவற்றால் மிக்ககாவலுடைய தென்பது, கருத்து. இது - முத்திதரும் நகரமேழனுள் முதலது; (மற்றவை - மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை என்பன.)

காலம் நித்திய மாதலால், அதற்கு 'மூலமும் நடுவும் ஈறும் இல்லது' என்ற அடைமொழி கொடுத்தார். 'ஓர் மும்மைத்தாய காலம்' என்றது, இறப்பு நிகழ்வு எதிர்வு எனக் காலம் மூன்று வகைப்படுதலால். அக்காலத்தின் கழிவினாலுண்டாகிற பரிணாமங்களையுடையனாகாதவ னென்பது, 'காலம் நீத்தகாரணன்' என்பதன் கருத்து. அநந்தமான [வரம்பில்லாத] ஞானம் காட்சி இன்பம் ஆற்றல் குணம் செயல் முதலியவற்றை யுடையா னென்பது, 'கணக்குநீத்த' என்றதனாற் போதரும். ஆதிபகவனை 'காரணம்' என்ற சொல்லினால் வேதம்குறித்தல், இங்குக் கருதத்தக்கது. மும்மையென்பது மூன்றின் தன்மையென்ற பொருளை யுணர்த்தாமல், மூன்று என்னும் பொருளையே யுணர்த்தியதனால், இதில் 'மை' - பகுதிப்பொருள்விகுதி. (அ௦)

அக. அறந்தலைநிறுத்திவேதமருள்சுரந்தறைந்தநீதித்
திறந்தெரிந்துலகம்பூணச்செந்நெறிசெலுத்தித்தீயோ
ரிறந்துகநூறித்தக்கோரிடர்துடைத்தேகவிண்டு
பிறந்தனன்றன்பொற்பாதமேத்துவார்பிறப்பறுப்பான்.

(இ - ள்.) தன் பொன் பாதம் ஏத்துவார் பிறப்பு அறுப்பான் - தனது அழகிய திருவடிகளைத் துதிப்பவர்களுடைய பிறப்பைப் போக்கியருள்பவனான, விண்டு - அந்த ஸ்ரீமகாவிஷ்ணு,—அறம் தலை நிறுத்தி - தருமத்தை எங்கும் நிலைநிற்கச்செய்து, வேதம் அருள் சுரந்து அறைந்த நீதி திறம் உலகம் தெரிந்து பூண செம் நெறி செலுத்தி - வேதங்கள் (ஜனங்களிடத்திற்) கருணைகூர்ந்துசொல்லிய நீதிவகைகளை உலகத்தார் அறிந்து மேற்கொண்டொழுகும்படி (அவர்களைச்) செவ்வையான வழியிலே செலுத்தி, தீயோர் இறந்து உக நூறி - கொடியவர்கள் இறந்தொழியும்படி அழித்து, தக்கோர் இடர் துடைத்து - நல்லவர்களுடைய துன்பங்களைப் போக்கி, ஏக - (பின்பு தன்னுடைச்சோதிக்கு) எழுந்தருளுமாறு, பிறந்தனன் - (அயோத்தியில்) திருவவதரித்தான்; (எ - று.)

உலகமெங்கும் தருமத்தை நிலைநிறுத்துதலும், உயிர்கள் நல்வழிதீவழிகளை நன்றாகப்பகுத்துணர்ந்து நடந்து நற்கதிபெறவேண்டு மென்று இயல்பாக எழுந்த பரமகிருபையால் தன்கட்டளைரூபமான வேதங்களில் வெளியிட்ட முறைமைகளை உலகத்தார் உணர்ந்து ஒழுகுமாறு அவர்களைச் சந்மார்க்கத்திற் செலுத்துதலும், துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ்செய்தலு மாகிய அவதாரத்தின் பயன்கள், இங்கு எடுத்துக்காட்டப்பட்டன. தனது திருவடிகளைத் துதிப்பவர் மீளவும் ஒரு பிறப்பெடுக்கவேண்டாதபடி அவரதுகருமமனைத்தையும் போக்கி அவர்க்கு முத்தியருள்பவ னென்பார், 'தன்பொற்பாதமேத்துவார் பிறப்பறுப்பான்' என்றார். இதனால் எம்பெருமானது பரத்வத்தை வெளியிட்டு, அங்ஙனமுள்ளவன் உயிர்களைக்காத்தற்கு அருளினால் இங்ஙனம் மனிதனாய்ப்பிறந்தன னென அவனதுசௌலப்பியத்தையுங் குறித்தார்; (பரத்வம் - எல்லாவற்றினும்மேம்பட்டிருக்கும் நிலை.) சௌலப்யம் -

அடியவர்க்கு எளிமை. தன்பாதமேத்துவார் பிறப்பறுப்பான். தான் பிறந்தனன் என ஈற்றடியில் நேரடையாகத் தோன்றுதல் காண்க. விண்டு - விஷ்ணு என்ற வடசொல்லின்சிதைவு; அத்திருநாமம் - எங்கும் வியாபித்துள்ளவன் என்று பொருள்பெறும் 'துடைத்தேக வீண்டுப் பிறந்தனன்' என்ற பாடத்துக்கு, ஈண்டு - இவ்வுலகத்தில் என்க.

தலை - இடம். தலைநிறுத்துதல் - எவ்விடத்தும் தாபித்தல். இனி, தலைமையாகநிறுத்துதலென்றும், தலைசாயாது தலைநிமிர்ந்து நிற்கச்செய்த லென்றுங் கொள்ளலாம். தலை - தமிழுபசர்க்கமுமாம். தக்கோர் - அறிவொழுக்கங்களினுல் தகுதியுடையார். (அக)

அஉ. அன்னவற்கடிமைசெய்வேனுமநாமமனுமனென்பே
னன்னுதறன்னைத்தேடிநாற்பெருந்திசையும்போந்த
மன்னரிற்றென்பால்வந்தசேனைக்குமன்னனவாலி
தன்மகனவனதன்றாதன்வந்தனெனன்றனியேனென்றான்.

(இ - ள்.) அன்னவற்கு அடிமை செய்வேன் - அத்தன்மையனுன சக்கரவர்த்தித்திருமகனுக்கு அடிமைத்தொழில்செய்பவன் யான்; நாமமும் அனுமன் என்பேன் - பெயர் அநுமானென்று சொல்லப்படுவேன்; நல்நுதல் தன்னை தேடி - அழகிய நெற்றியையுடையவளான சீதாபிராட்டியைத் தேடிக்கொண்டு, நால் பெருந் திசையும் போந்த - பெரியதிக்குகள் நான்கிற்குஞ் சென்ற, மன்னரில் - தலைவர்களுள், தென் பால் வந்த தானைக்கு மன்னன் - தென்திசையில் வந்த சேனைக்குத் தலைவன், வாலிதன் மகன் - வாலியின் குமாரனுன அங்கதனுவன்: அவனதன் தூதன் - அவனது தூதனுய், தனியேன் வந்தனென் - நானொருவன் இங்கு வந்தேன், என்றான் - என்று (இராவணனைநோக்கி அநுமான்) கூறினுன்; (எ - று.)

தானையின் அளவு, இரண்டுவெள்ளம். "குடதிசைக்கட் சுடேணன் குபேரன்வாழ், வடதிசைக்கட் சதவலி வாசவ, னிடதிசைக்கண் வினதன் விறற்றரு, படையொடேற்றப் படர்கெனப் பன்னினுன்" என்று கிட்கிந்தா காண்டத்து நாடவிட்டபடலத்திற் கூறியதுகொண்டு, பிறதிசைகளிற் சீதையைத் தேடிச்சென்ற வானரத்தலைவர்களின்பெயரை யுணர்க. (அஉ)

[வாலியின்யோகக்ஷேமங்களை இராவணன் விசாரித்தல்.]

அங. என்றலுமிலங்கைவேந்தனெயிற்றினமெழிலிநாப்பண்
மின்றிரிந்தென்னநக்குவாலிசேய்விடுத்ததூத
வன்றிறலாயவாலிவலியன்கொலரசின்வாழ்க்கை
நன்றுகொலென்னலோடுநாயகன்றூதனக்கான்

(இ - ள்.) என்றலும் - என்று (அநுமான்) சொன்னவுடனே,— இலங்கை வேந்தன் - இராவணன்,—எயிறு இனம் - (தனது) பல்வரிசைகள், எழிலி

நாப்பண் மின் திரிந்து என்ன - மேகத்தின் நடுவிலே மின்னல் உலாவினாற் போன்றனவாகும்படி, நக்கு - சிரித்து, 'வாலி சேய்விடுத்த தூத - வாலியின் மகனால் அனுப்பப்பட்ட தூதனே!—வல் திறல் ஆய வாலி வலியன் கொல் - மிக்கபலமுடையவனான வாலி சௌக்கியமாயிருக்கின்றனனா? அரசின் வாழ்க்கை நன்று கொல் - (அவனது) அரசாட்சி நன்றாக நடந்துவருகின்றதா?' என்னலோடும் - என்று வினவியவளவிலே, நாயகன் தூதன் நக்கான் - அனைத்துக்குந் தலைவனான ஸ்ரீராமபிரானது தூதனாகிய அநுமான் சிரித்தான்; (எ - று.)

யாரோ ஒருபெரியபகைவன் அல்லது ஒரு பெரும்பகைவனது ஏவலாளன் என்று கருதப்பட்ட இவ்வானரன் தனது நண்பனான வாலியின் மகனது தூத னெனத் தெரிந்தமை பற்றியும், எனது நண்பனுடைய மகனது தூதனாய் வந்த நீயோ இவ்வளவு தீங்கு செய்தாய் என்பதாகவும், இராவணன் சிரித்தான். 'வன்திறலாய வாலி' என்று இவனால் நன்குமதித்து உயர்த்திக் கூறப்பட்டவன் தனது தலைவனான இராமபிரானால் அன்றைக்கே எளிதில் அழிக்கப்பட்டதைக் கருதி, அநுமான் நகைத்தான். "எள்ள லிளமை பேதைமை மடனென், றுள்ளப்பட்ட நகைநான் கென்ப" எனத் தொல்காப்பியத்திற் கூறிய நகைவகைகளுள் இவை எள்ளலின்பாற்படும்; எள்ளல் - இகழ்ச்சி: அலக்ஷ்யம். கருநிறத்தவனான இராவணன் தனதுபத்துமுகங்களிலும் சிரிக்கிறபோது அவனது வாய்களினின்று வெளிவிளங்கிய பற்களின் ஒளிக்கு, 'எழிலிநாப்பண் மினதிரிந்து' என உவமை கூறினார். 'வன்திறலாய' என்றது, வாலிக்கேயன்றி வாலுக்கும் அடைமொழியாகத்தகும். 'கொல்' இரண்டும் - வினா. (அ௩)

[வாலியிறந்தசெய்தியை அநுமான் கூறுதல்.]

அச. அஞ்சலையரக்கபார்விட்டந்தரமடைந்தானன்றே
வெஞ்சினவாலிமீளான்வாலும்போய்விளிந்ததன்றே
யஞ்சனமேனியான்றனடிகணையொன்றான்மாழ்கித்
துஞ்சினனெங்கள்வேந்தன்சூரியன்சிறுவன்றலைவனானான்.

(இ - ள்.) அரக்க - ராக்ஷஸனே! அஞ்சலை - பயப்படாதே: வெம் சினம் வாலி - கொடியகோபத்தையுடைய வாலியானவன், அன்றே - அப்பொழுதே [சிலமாதங்களுக்குமுன்னமே யென்றபடி], பார் விட்டு அந்தரம் அடைந்தான் - இந்நிலவுலகத்தைவிட்டு வானுலகம் போய்ச்சேர்ந்தான்; மீளான் - இனித் திரும்பிவரமாட்டான்; அன்றே - அவனிறந்துபோன அப்பொழுதே, வாலும் போய் விளிந்தது - (அவனது) வாலும்(அவனோடுகூடவே)அழிந்து போயிற்று; அஞ்சனம் மேனியான்தன் அடு கணை ஒன்றால் மாழ்கி துஞ்சினன் - மை போன்ற கரிய திருநிறமுடையவனான இராமபிரானது பகையழிக்கவல்ல

அம்பொன்றினாலே வருந்தியிறந்தனன் (அவ்வாலி); எங்கள் வேந்தன் சூரியன் தோன்றல் - (இப்பொழுது) எங்கட்கு அரசன் சூரிய குமாரனான சுக்கிரீவன், என்றான் - என்று (இராவணனைநோக்கிக்) கூறினன், (அநுமான்); (எ - று.)

திக்குவிசயஞ்செய்யப்புறப்பட்டு யாவரையும்வென்ற இராவணன், ஒரு காலத்தில் வாலியோடு போர்செய்யக்கருதிக் கிஷ்கிந்தாபட்டணஞ் சேர்ந்து, அப்பொழுது அவன் அங்கு இல்லை யென்றும், வழக்கப்படி நாற்கடலிலும் நீராடி நித்தியகருமம்முடிக்கச் சென்றுள்ளானென்றும் அறிந்து, தென்கடற் கரைக்குச்சென்று, அங்கு மந்திரஜபஞ்செய்துகொண்டிருக்கிற வாலியைப் பார்த்து, அவனைத் தந்திரமாக எளிதிற்பிடித்துக்கொள்ளுதற்பொருட்டு அநுஓசைப்படாமல் மெதுவாய்நடந்து அவன் பின்னே சேர, அதனைக் கீழ்க்கண்ணாற்கண்ட வாலி, முன்ஜாக்கிரதைப்பட்டு, கிட்டவந்து தன்னைக் கட்டத்தொடங்கியவுடனே இராவணனைக் கக்கத்தில் இடுக்கி வாலினாற் சுற்றிக்கொண்டபடியே ஆகாயமார்க்கமாய்ச்சென்று மற்றைக் கடல்களினுஞ் சேர்ந்து நியமங்களை நிறைவேற்றிக்கொண்டு தனது நகரமடைந்து இராவணனைக் கீழேவிட, அவன் தன்வரலாறுகூறித் தன்குற்றம் பொறுக்கவும் தன்னை நட்பாகக்கொள்ளவும் வேண்டி அவனது நட்பைப் பெற்றனனென்ற வரலாற்றை உத்தரகாண்டத்தில் வாலிவாலாற்கட்டுண்டபடலத்திற் பரக்கக் காணலாம். "புலைவாளரக்க னிருநாலிரட்டி யொருநாலு பெற்ற புயமுந், தலையானபத்துமுற வால்விசித்த சயவாலி கொற்றமுழுதும்" என்பதையும் உணர்க. அங்ஙனம் உன்னைக்கட்டிவருத்திய மகாபலசாலியான வாலியைக் குறித்தும் அவனது மிக்கவலிமையுள்ள வாலைக்குறித்தும் இனி நீ சிறிதும் அஞ்சவேண்டா, அவனும் தொலைந்தான், அவனதுவாலும் போயிற்று என்றனன் அநுமான். வாலியிடத்தும் அவன்வாலினிடத்தும் இராவணனுக்கு உள்ள மிக்கஅச்சத்தை எடுத்துக்காட்டி அவனைப்பரிகசிக்குங் கருத்தினாலே யே 'அஞ்சலை' என்றும், 'பார்விட்டுந்தரமடைந்தானன்றே வெஞ்சினவாலி' என்றதன்பின் 'மீளான்' என்றும், அதன்பின்னும் 'வாலும் போய் விளிந்த தன்றே' என்றுங் கூறினான். அன்றி, இறந்துபோனவன்மீளான் என்றும், அவனதுவாலும்போய்விளிந்தது என்றுங் கூறவேண்டிய அவசியமின்மை காண்க. தன்னை வாலினாற்கட்டிக்கொண்டு நாற்கடலுக்கும் விசையுடன் சென்று விரைவில்மீண்ட வாலியின் பேராற்றலைக் கண்கூடாகஅறிந்த இராவணன், 'பார்விட்டுந்தரமடைந்தான்' என்று அநுமான் கூறியதைக் கேட்டவளவிலே அவன் இறந்தனனென்று எண்ணாது அவன் இந்தவுலகத் தினின்று எழும்பித் தேவலோகத்துக்குப் போயிருப்பனென்று பொருள் கொண்டு, இனி அவன் இங்குவரவுங்கூடு மென்று கருதுவனென்னுங் கருத்தி னால், பின்பு அநுமான் 'மீளான்' என்று கூறி ஐயமகற்றின னென்றுங் கொள்ளலாம். 'அரக்க' என விளித்தது, அலக்ஷ்யத்தைக் காட்டும். 'அன்றே' என்றது - எங்கள் அரசனான சுக்கிரீவனும் இராமபிரானும் நண்புகொண்ட அந்நாளிலேயே யென்றபடி.

"கன்னெடுந்தோளாய் கலங்கினென் வாலாற்கட்டுண்டு பட்டதுகிடக்க, இன்னமும்பொரவோ இனிச்செரு அமையும் இன்று நின்தோழன் நான்" என்று நீ அஞ்சிப் பணிவு கூறும்படி உன்னைவென்றவனான வாலியை ஓர் அம்புகொண்டு எளிதிற்கொன்றிட்டவன் இராமபிரான் என, அப்பெருமானது பேராற்றலை இராவணனுக்கு எடுத்துக்கூறினன் அநுமான். மேருமலையின் வடபுறச்சிகரத்திலுள்ளதொரு சரசில் மூழ்கியெழுந்தமாத்திரத்தாற் பெண் வடிவமடைந்த ருக்ஷராஜஸ் என்ற வாநரராஜனது அழகைக் கண்டு காதல் கொண்ட இந்திரனுக்கு அம்மாதினிடம் முதலிற்பிறந்தவன் வாலியென்றும், அங்ஙனமே காமுற்ற சூரியனுக்கு அம்மங்கையினிடமாகப் பின்புதோன்றியவன் சுக்கிரீவனென்றும் வரலாறு உணர்க. தோன்றல் - தோன்றியவன் : மகன் ; இதில், அல் - கருத்தாப்பொருள்விகுதி. (அ௪)

[மற்றும் இராவணன் சிலவினவுதல்.]

அ௫. என்னுடையீட்டினலவ்வாலியையெறுழ்வாயம்பா
லின்னுயிருண்டதிப்போதியாண்டையானிராமனென்பா
னன்னவன்றேவிதன்னையங்கதனுடலுற்ற
தன்மையையுரைசெய்கென்னச்சமீரணன்றனயன்சொல்வான்.

(இ - ள்.) 'அ வாலியை - அந்தவாலியை, எறுழ் வாய் அம்பால் - வலிய நுனியையுடைய அம்பினால், இன் உயிர் உண்டது - (இராமன்) இனிய உயிரைக் கவர்ந்தது [கொன்றது], என் உடை ஈட்டினால் - எதனுடைய நிமித்தத்தால்? இராமன் என்பான் - அந்த இராமனெனப்படுபவன், இப்போது யாண்டையான் - இப்பொழுது எவ்விடத்தி லிருக்கின்றான்? அன்னவன் தேவிதன்னை அங்கதன் நாடல்உற்ற தன்மையை - அவ்விராமனதுமனைவியான சீதையை (அவனாற்கொல்லப்பட்ட வாலியின்மகனான) அங்கதன் தேடத் தொடங்கியவகையை, உரை செய்க - சொல்வாயாக', என்ன - என்று (இராவணன்) வினவ,-சமீரணன் தனயன் சொல்வான் - வாயுகுமாரனான அநுமான் சொல்பவனானான்; (எ - று.)—அதனை, அடுத்தஇரண்டுகவிகளிற் காண்க.

எறுழ் - வலிமையுணர்த்தும் உரிச்சொல். எறுழ்வாய்அம்பு - வலிமை வாய்ந்த அம்பு எனினுமாம். யாண்டையான் என்றதில், யாண்டு என்ற மென்றொடர்க்குற்றியலுகரம் ஐகாரச்சாரியைபெற்றது ; "ஐயீற்றுடைக்குற்றுகரம்." யாண்டென்பது - யாஎன்னும்வினாவடியாகப்பிறந்து இடப்பொருளுணர்த்தும் இடைச்சொல். ஸமீரணன் என்ற வடமொழிப்பெயர் - நன்றாகச் சஞ்சரிக்கும் இயல்புடையவனென்று காரணப்பொருள்பெறும். (அ௫)

[இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர் : அநுமான்சொல்லும் உத்தரம்.]

அ௬. தேவியைநாடிவந்தசெங்கணற்கெங்கள்கோமா
னாவியொன்றாகநட்டானருந்துயர்துடைத்தியென்ன
வோவியர்க்கெழுதவொண்ணாவுருவத்தனுருமையோடுங்
கோவியற்செல்வமுன்னேகொடுத்துவாலியையுங்கொன்றான்.

(இ - ள்.) தேவியை நாடி வந்த-(தன்)மனைவியான சீதையைத் தேடிக் கொண்டுவந்த, செம் கணற்கு - சிவந்த கண்களையுடையவனான இராமபிரானுடனே, எங்கள்கோமான் - எங்கள்தலைவனான சுக்கிரீவன், ஆவி ஒன்று ஆக நட்டான் - (இருவர்க்கும்) உயிரொன்றேயென்னும்படி சிநேகங்கொண்டு, அருந் துயர் துடைத்தி என்ன- '(எனக்கு வாலியினால்நேர்ந்துள்ள) போக்குதற்குஅரிய துன்பத்தைப் போக்குவாய்' என்று வேண்ட,—ஓவியர்க்கு எழுத வொண்ணா உருவத்தன் - சித்திரமெழுதவல்லார்க்கும் எழுதமுடியாத வடிவழகையுடையவனான ஸ்ரீராமன், உருமையோடும் கோ இயல் செல்வம் முன்னே கொடுத்து - (சுக்கிரீவன்மனைவியான) ருமையென்பவளையும் (வாலியினது) அரசியற்செல்வத்தையும் முன்னே (சுக்கிரீவனுக்கு வாக்தாநமாகக்) கொடுத்து, வாலியையும் கொன்றான் - (அதற்குஏற்ப உடனே) வாலியையுங் கொன்றிட்டான்; (எ - று.)

ருக்ஷரஜஸ் என்னும் வாநரராஜன் இறந்தபின் அவனது மூத்தமகனான வாலி பட்டாபிஷேகஞ்செய்யப்பெற்றுச் சுக்கிரீவனை இளவரசனாகக்கொண்டு கிஷ்கிந்தையை ஆளுங் காலத்தில், மாயாவியென்னும் அசுரவீரன் வந்து வலியப் போர்க்கு அழைக்க, வாலி தம்பியுடன்சென்று அவனை எதிர்த்துப் பொருகையில், அவன் அஞ்சியோடி ஒருபிலத்தினுள்ளே செல்ல, வாலி சுக்கிரீவனைப் பிலவாயிலிற் காவல்வைத்துவிட்டு உள்ளேசென்று அவனைத்தொடர்ந்து போர்செய்துகொண்டிருக்கையில், பலமாதங்கள் கழிந்தபின், இரத்தவெள்ளம் வெளிப்பட்டது கண்டு, சுக்கிரீவன் அவ்வசுரனால் வாலி கொல்லப்பட்டனனென்று மாறாகக்கருதி, அவ்வசுரன் வெளிவராதபடி அப்பிலவாயிலைப் பெருங்கல்லால் மூடிவிட்டு, வருத்தத்தோடு நகரஞ்சேர்ந்து, அமைச்சர்கள் வேண்டுகோளின்படி தான் அரசுபெற்று வாழ, அந்த அசுரனைக் கொன்ற வாலி, மீண்டுவந்து, பிலவழியையடைத்திருந்த கல்லைக் காலாலுதைத்துத் தள்ளிவிட்டுப் பட்டணஞ்சேர்ந்து செய்தியறிந்து, அரசாட்சி விருப்பத்தாலும் தன்மனைவியான தாரையைக் கவர்ந்துகொள்ளவேண்டு மென்னுங் கருத்தினாலும் சுக்கிரீவன் இவ்வாறுசெய்தா னென்று மாறாக எண்ணி அவன்மேல் மிகவுங்கோபங்கொண்டு, அவன் வந்து தன்காலில் விழுந்து எவ்வளவுவேண்டவுங் கேளாமல் இராச்சியத்தையும் அவன் மனைவியான ருமையையுங் கவர்ந்துகொண்டு அவனை யடித்துத்துரத்தித் தொடர்ந்துசென்று பலவிடங்களிலும் பொருது தாக்க, அவன் தோற்று ஓடிச்சென்று ரிசியமூகபருவதத்தில் மதங்க முனிவர் ஆச்சிரமங்கொண்டு வீற்றிருக்கிற வனத்தைச் சேர்ந்தான்; மதங்க முனிவரதுசாபத்தால் வாலிவரத்தகாத அவ்வாச்சிரமத்திலே அநுமான் நீலன் முதலிய சிலருடனே சுக்கிரீவன் பதுங்கிவசிக்கிறபோது ஒருநாள் சீதையைத் தேடிக்கொண்டு இலக்குமணனுடன்வந்த இராமபிரானோடு அநுமான்மூலமாகச் சுக்கிரீவன் சிநேகஞ் செய்துகொள்ள, அச்சுக்கிரீவன்வேண்டுகோளின்படி ஸ்ரீராமன் வாலியைக்கொன்று ருமையையும் அரசாட்சியையும் சுக்கிரீவனுக்கு அளிப்பதாக முதலில் வாக்குதத்தஞ்செய்து பின்பு அங்ஙனமே வாலியைத்

தந்திரமாகக்கொன்று சுக்கிரீவனுக்குக் கிஷ்கிந்தைநகரத்தில் முடிசூட்டிவைத்தனன் என்ற விவரம், கிஷ்கிந்தாகாண்டத்திற் பரக்கக்கூறப்பட்டது. வாலி முன்னமே இராவணனுடன் அக்கினிசாக்ஷியாக நட்புக்கொண்டிருந்ததுபற்றி, அவனைத் தான் உதவியாகக்கொண்டால் இராவணாதிதுஷ்டர்களைத் தொலைக்க வகையில்லாமையால், இராமன் வாலியை நண்பாகக்கொள்ளாமல், சரணமடைந்த சுக்கிரீவனது வேண்டுகோளின்படி அவ்வாலியை வதைத்திட்டனனென்க. பகைவன் எவ்வளவுவலியனாயிருப்பினும் அவனைத் தவறாமல் வெல்லுதல்கூடு மென்ற துணிவினால், முன்னமே கொடுத்தனன்; இங்ஙனமே, பின்பும், இராவணனைத் தவறாது கொல்லலாகு மென்னுந் துணிவினால் முன்னமே விபீஷணனுக்கு இலங்கையரசு முடிசூட்டுதல் காண்க.

செம்கணான் - உத்தமவிலக்கணமாகிய செவ்வரிபரந்த கண்களையுடையவன். 'செங்கணாற்கு' என்றது - உருபுமயக்கம். ஓவியர் - சித்திரகாரர். "ஓவியர்க்கு எழுதவொண்ணா உருவத்தன்' என்றது, இராமபிரானது திவ்விய சௌந்தரியாதிசயத்தைக் காட்டும். ரூமா என்ற வடசொல், 'உருமை' என விகாரப்பட்டது. கோவியல் - இராஜாங்கம். (அசு)

அஎ. ஆயவன்றன்னோடாண்டோர் திங்களோர்நான்கும்வைகி
மேயவெஞ்சேனைசூழவீற்றினிதிருந்தவீரன்
போயினிநாடுமென்னப்போந்தனம்புகுந்ததீதென்
றேயவன்றூதன்சொன்னானிராவணனிதனைச்சொன்னான்.

(இ - ள்.) ஆயவன்தன்னோடு - அந்தச்சுக்கிரீவனுடனே, ஆண்டு - அவ்விடத்திலே,—ஓர் திங்கள் ஓர் நான்கும் வைகி - நான்குமாதகாலமளவுந்தங்கி, மேய வெம் சேனை சூழ இனிது வீற்றிருந்த - வந்துகூடிய பயங்கரமான வானரசேனைகள் தனது சுற்றிலும் நிற்க (அவற்றின் நடுவிலே) இனிமையாக வீற்றிருந்த, வீரன் - வீரனான ஸ்ரீராமன், இனி போய் நாடும் என்ன - 'இனி (நீங்கள்) சென்று (சீதையைத்) தேடுங்கள்' என்று கட்டளையிட, போந்தனம் - (நாங்கள்) தேடிவந்தோம்; புகுந்தது ஈது - நடந்தசெய்தி இது, என்று—,ஏயவன் தூதன் சொன்னான் - (தன்னை) ஏவியனுப்பிய தலைவனான இராமபிரானது தூதனாகிய அநுமான் கூறினான்; (அதுகேட்டவளவில்), இராவணன் இதனை சொன்னான் - இராவணன் இந்தவார்த்தையைச் சொல்லலானான்; (எ - று.)— அதனை, அடுத்த இரண்டு கவிகளிற் காண்க.

•சிநேகித்த சுக்கிரீவனது காரியமாகிய வாலிவதத்தை இராமன் செய்த பின்னர் மழைக்காலம் நேர்ந்ததனால், அக்காலம் கழியுமளவும் இராமபிரான் கிஷ்கிந்தாபுரியைச்சார்ந்த ரிசியமூககிரியில் தங்கியிருந்து, அதன் பின்னர், சுக்கிரீவனால்வருவிக்கப்பட்ட வாநரசேனைகளைக் கண்டு அவர்களில் அங்கதன் முதலிய தலைவர்களைச் சேனையுடன்சென்று சீதையைத் தேடிவருமாறு அனுப்பினனென்க. 'ஓர்திங்கள் ஓர்நான்கும் வைகி' என்ற தொடரிலுள்ள 'ஓர்' என்றசொல் இரண்டனுள், முந்தியதை அசையாகக்கொள்க. இனி, இத்

தொடர்க்கு - ஒருமாதம்போலவே நாலுமாதம் தங்கி யென்று உரைப்பாரு முளர். திங்கள்-சந்திரன்; அமாவாசைக்கு அமாவாசை ஒரு மாச மெனக் கொண்டு சந்திரசம்பந்தத்தாற் காலத்தை வரையறைசெய்யும வழக்குப்பற்றி, சந்திரன்பெயரால் மாதம் வழங்கப்பட்ட தென்க. 'ஏயவன்தூதன்' என்றது, தன்னையேவிய தலைவனது காரியமே கருத்தாயுள்ள தூத னென்றபடி. ஏயவன்' என்றது அங்கதனை யென்பர் ஒருசாரார். (அஎ)

[இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்: இராவணன் பரிகசித்துச் சில கூறுதல்.]

அஅ. உங்குலத்தலைவன்றன்னோடொப்பிலாவுயர்ச்சியோனை
வெங்கொலையம்பிற்கொன்றாற்காட்டொழின்மேற்கொண்டீரே
லெங்குலப்புறுநுஞ்சீர்த்திநும்மொடுமியைந்ததென்றான்
மங்குலிற்பொலிந்தஞாலமாதுமையுடைத்துமாதோ.

(இ - ள்.) உம் குலம் தலைவன் தன்னோடு ஒப்பு இலா உயர்ச்சியோனை - உங்கள்குலத்துக்குத்தலைவனாக இருந்தவனோடு ஒப்பற்றமேன்மையையுடைய வனுமான வாலியை, வெம் கொலை அம்பின் கொன்றாற்கு-கொடியகொலையைச் செய்கின்ற அம்பினாற் கொன்றிட்டவனான இராமனுக்கு, ஆள்தொழில் மேற் கொண்டீரேல் - அடிமைசெய்யுந்தொழிலை (நீங்கள்) ஏற்றுக்கொண்டீர்களென் றால், நும் சீர்த்தி எங்கு உலப்பு உறும் - உங்கள்கீர்த்தி எப்படி அழிவுபெறும்! நும்மொடும் இயைந்தது என்றால் - (இங்ஙனம் குலத்தலைவனை பெரியோனைக் கொன்றவனுக்கு அடிமைத்தொழில்செய்யத் தலைப்பட்டபின்னும் உங்கள்புகழ் அழிவடையாமல்) உங்களோடு கூடியிருந்த தென்றால், மங்குலின் பொலிந்த ஞாலம் மாதுமை உடைத்து - மேகத்தினால் வளம்பெற்றுவிளங்குகின்ற இந் நிலவுலகமானது பெண்களின் தன்மையான பேதைமையை யுடையது; (எ - று.)—மாது ஓ - ஈற்றசை.

எங்கு உலப்பு உறும் - எவ்வாறுஅழிவடையும்? வினாவகையால், அழிவு றாது என்று பொருள்படும்; என்றது, தவறாது அழிந்திடு மென்ற கருத்தை யே பரிகாசத்தாற் கூறியதாம். இனி, எங்குஉலப்புஉறும் என்பதற்கு - எங்கு முடிவுபெறும் [எங்கும்முடிவுபெறாது வரம்பின்றிப்பெருகும்] என்று, பரிகசித் ததாக உரைப்பாரு முளர். கீர்த்தியாவது உலகம்உயர்த்துக்கூற நிலைபெறுஞ் சொல்லே யாதலால், இனிமேலும் உங்கள்கீர்த்தி அழியாதிருப்பின் அது உலகத்தாரது பேதைமையின் காரியமன்றோ? என்பது, 'நும்மொடுமியை ந்ததென்றால் ஞாலம் மாதுமையுடைத்து' என்றதன் கருத்து. மாதுமை - மாதின்தன்மை. "நுண்ணறி வுடையோர் நூலொடு பழகினும், பெண்ணறி வென்பது பெரும்பேதைமைத்தே" என்பவாதலால், பேதைமை, 'மாதுமை' எனப்பட்டது. முன்னிரண்டடிக்கு - ஒப்பிலாவுயர்ச்சியோனை வெங்கொலையம் பிற்கொன்றாற்கு உங்குலத்தலைவன் தன்னோடு ஆட்டொழில் மேற்கொண்டீ

ரேல் என்று இயைத்து, ஒப்பற்ற பெரியோனான வாலியைக் கொடிய அம்பி னாற் கொன்றவனுக்கு உங்கள் குலத்தலைவனான சுக்கிரீவனோடு நீங்கள் அடிமைத் தொழில்செய்ய உடன்பட்டீரானால் என்று உரைப்பாரு முளர். நும்மொடு மியைந்ததென்றால் மங்குலிற்பொலிந்தஞாலம் மாதுமையுடைத்து என்பதற்கு- (இத்தன்மைத்தான ராஜத்துரோகம்) உங்களிடம் அமைந்ததென்றால் அதன் பின்பும் மழைவளத்தால் நிறைவுறுகிற இந்தப்பூலோகமானது தனக்கு உரிய பெண்தன்மையான பேதைமையை யுடையதாம் என்று உரைப்பர் ஒருசாரார்; இத்தன்மைய ராஜத்துரோகிக ளிருக்கிற உலகத்தில் அக்கொடும்பாவத்தால் வானும் நிலனுஞ் சேரத் தொழிற்பட்டு வளஞ்சுரக்கத்தக்கனவல்ல வென்பது கருத்து. 'எங்குலப்பறும்' என்ற பாடத்திற்கு - எங்ஙனம் அழிவடை யாதிருக்கு மென்று பொருளாம். 'ஒப்பற்ற' எனவே, 'உயர்வற்ற' என்பது தானே போதரும். சீர்த்தி-பெரும்புகழ். ஆசிரியர் தொல்காப்பியனார் உரிச் சொல்லியலில் "சீர்த்தி மிகுபுகழ்" என்று சூத்திரஞ்செய்திருத்தல் கொண்டு சீர்த்தியென்பது புகழ்மாத்திரத்தையுணர்த்துகின்ற கீர்த்தி யென்ற வட சொல்லின் விகாரமன் றென்றும், மிக்கபுகழையுணர்த்துவதொரு தமிழ்ச்சொல் லென்றும் உணர்க. (அஅ)

. அகூ. தம்முனைக் கொல்வித் தன்னாற் கொன்றவற் கன்பு சான்ற
வும்மினத் தலைவ னேவ யாதெனக் குணர்த்த லுற்ற
தெம்முனைத் தூது வந்தா யிகல்புரி தன்மை யென்னை
நும்மினைக் கொல்லா நெஞ்ச மஞ்சலை நுவறி யென்றான்.

(இ - ள்.) தம்முனை கொல்வித்து-தனது தமையனை (இராமனைக்கொண்டு) கொல்வித்து, அன்னான் கொன்றவற்கு அன்பு சான்ற - அந்தத்தமையனைக் கொன்றவனான இராமன்பக்கல் அன்புமிகுந்த, உம் இனம் தலைவன் - உங்கள் கூட்டத்துக்கு அரசனான சுக்கிரீவன், ஏவ - அனுப்ப, எனக்கு உணர்த்தல் உற்றது - எனக்கு (நீ) சொல்லவந்தது, யாது - என்ன? எம்முனைதூது வந்தாய்- எங்கள் முன்னிலையில் தூதுவந்தவனான நீ, இகல் புரி தன்மை - போர்செய்த காரணம், என்னை - யாது? நும்மினை கொல்லாம் - (தூதனாய்வந்த) உன்னைக் கொல்லமாட்டோம்: நெஞ்சம் அஞ்சலை - மனத்தில் அச்சங்கொள்ளாமல், நுவறி - சொல்வாய், என்றான் - என்று (இராவணன் அநுமானைநோக்கிச்) சொன்னான்; (எ - று.)

தம்முன் - தமக்குமுன்னே பிறந்தவன்; முன் - காலவாகுபெயர். 'நும் மினைக்கொல்லாம் நெஞ்சமஞ்சலை நுவறி' - ஒருமைப்பன்மைமயக்கம். இனி, 'நும்மினை' என்ற பன்மைக்கு - உங்களை [உன்னைப்போன்ற எளியவர்களை] எனி னுமாம். 'நும்முனைக்கொல்லாம்' என்று பாடம் ஓதி, நும் உனை என்று பிரித்து, உங்களிலே (பிறரைக்கொன்றாலும் தூதனாய்வந்த) உன்னைக் கொல் லோம் என்று உரைப்பாரு முளர். இனி, முன்னிரண்டடிக்கு - தமையனைக் கொல்வித்து அவனைக்கொன்றவன்பக்கல் அன்புமிக்க [அயோக்கியனாகிய]

உங்கள்கூட்டத்தரசன் உன்னை (என்னிடம்) அனுப்புமாறு எனக்கு என்னநீதி அறிவிக்கவேண்டுவ தாயிற்று? என்று உரைப்பர் ஒருசாரார். (அக)

வேறு.

[அநுமான் ஆலோசித்துச் சில கூறத்தொடங்குதல்.]

கூ௦. துணர்த்த தாரவன் சொல்லிய சொற்களைப்
புணர்த்து நோக்கிப்பொ துநின்ற நீதியை
யுணர்த்தி னுலது றுமென வுன்னருங்
குணத்தி னுனுமி னையன கூறினன்.

(இ - ள்.) உன் அருங் குணத்தினனும் - (இத்தன்மையனவென்று) நினைத்தற்கும் அருமையான நற்குணங்களையுடையவனாகிய அநுமானும்,— துணர்த்த தாரவன் சொல்லிய சொற்களை புணர்த்து நோக்கி - பூங்கொத்துக்களினாலாகிய மாலையை யணிந்துள்ளவனான இராவணன் (இவ்வாறு) சொன்ன சொற்களை (யெல்லாம்) ஒன்றுசேர்த்துப்பார்த்து, பொது நின்ற நீதியை உணர்த்தினால் அது உறும் என - (யாவர்க்கும்) பொதுவாகநின்ற நீதியை (இப்பொழுது நாம்) எடுத்துச்சொன்னால் அது தக்கதாம் என்றுகருதி, இனையன கூறினன் - இந்தவார்த்தைகளைச் சொல்லலானான் ; (எ - று.)—அவற்றை, அடுத்த பதினாறுகவிகளிற் காண்க.

நோக்குதல் - இங்கே, கருத்தின்நோக்கம். உணர்த்துதல் - போதித்தல். உறும் - ஏற்கும்.

இதுமுதல் இருபத்திரண்டுகவிகள் - இப்படலத்தின் ௬க - ஆங் கவி போன்ற கலிவிருத்தங்கள். (கூ௦)

[இதுமுதற் பதினாறுகவிகள் - அநுமான்வார்த்தை.]

கூக. தூதுவந்ததுசூரியன்கான்முளை
யேதுவொன்றியநீதியியைந்தன
சாதுவென்றுணர்கிற்றியேற்றக்கன
கோதிறந்தனநின்வயிற்கூறுவாம்.

(இ - ள்.) தூது வந்தது - (நான் உன்னிடம்) தூதனாய்வந்தது, சூரியன் கான்முளை ஏது - சூரியனதுகுமாரனான சுக்கிரீவன் (சொன்ன சொற்களை உன்னிடஞ் சொல்வது) காரணமாகவேயாம் ; (ஆகவே),—ஒன்றிய - (இச்சமயத்துக்கு) ஏற்றவையும், நீதி இயைந்தன - நீதிபொருந்தியவையும், தக்கன - தகுதியானவையும், கோது இறந்தன - குற்றமற்றவையுமாகிய அச்சொற்களை, சாது என்று உணர்கிற்றி ஏல் - (நீ செவிகொடுத்துக்கேட்டு) நல்லவையென்று உணர்வாயானால், நின்வயின் கூறுவாம் - (அவற்றை) உன்னிடத்திற் சொல்வோம் ; (எ - று.)—அடுத்த கவிமுதலாக அவை கூறப்படுகின்றன.

கான்முளை - சந்ததியில்தோன்றியவன் என மகனுக்குக் காரணக்குறி. ஸாது - வடசொல். 'கூறுவாம்'என்ற தன்மைப்பன்மை, உயர்வை விளக்கும்.

௬௨. வறிதுவீழ்த்தனைவாழ்க்கையைமன்னறஞ்
சிறிதுநோக்கலைதீமைதிருத்தினை
யிறுதியுற்றுளதாயினுமின்னுமோ
ருறுதிகேட்டியுயிர்நெடிதோம்புவாய்.

(இ - ள்.) வாழ்க்கையை - (உனது) செல்வவாழ்வை, வறிது வீழ்த்தனை - வீணே போக்கிக்கொண்டாய்; மன் அறம் சிறிதும் நோக்கலை-ராஜதருமத்தைச் சிறிதும் நோக்கினாயில்லை; தீமை திருத்தினை - கொடியகாரியத்தைச் செய்து விட்டாய்; (அதனால்), இறுதி உற்றுஉளது ஆயினும்-(உனக்கு) அழிவு நெருங்கி யுள்ளதானாலும், இன்னும் - இனிமேலாயினும், ஓர் உறுதி கேட்டி - (நான் சொல்லும்) ஓர்உறுதிச்சொல்லைக் கேட்டு அதன்படி நடக்கக்கடவாய்; (அங் ஙனம்நடப்பாயானால்), உயிர் நெடிது ஓம்புவாய் - (உனது) உயிரை நெடுங் காலம் பாதுகாத்துக்கொள்வாய்; (எ - று.)

இங்கே 'தீமை' என்றது, பிறன் மனைவியை விரும்பிக் கவர்ந்ததை. உறுதி-நன்மை; அதனைவிளைக்குஞ்சொல்லுக்குக் காரியவாகுபெயர். (௬௨)

௬௩. போயிற்றீர்நும்புலன்வென்றுபோற்றிய
வாயிற்றீர்வரிதாகியமாதவங்
காயிற்றீர்வருங்கேடருங்கற்பினாள்
டீயிற்றூயவளைத்துயர்செய்ததால்.

(இ - ள்.) ஆயின்- ஆராய்ந்துகூறுமிடத்து,—காயின் தீர்வு அருங் கேடு அருங் கற்பினாள் - (பிறர்) மிகவருத்தினாலும் நீங்குதலில்லாததும் குற்றமற்றது மான பதிவிரதாதருமத்தை யுடையவளும், தீயின் தூயவளை - நெருப் பினும்பரிசுத்தியுடையவளுமான சீதாபிராட்டியை, துயர் செய்ததால் - (நீ) துன்பப்படுத்திய பாவத்தால்,— நும் புலன் வென்று போற்றிய தீர்வு அரிது ஆகிய மா தவம் போய் இற்றீர் - (நீங்கள்) உங்களுடைய ஐம்புலவாசை களைச்சயித்துச்செய்ததும் நீங்குதற்கு அரியதுமான பெரியதவத்தின் பயன் உங்களைவிட்டு நீங்கியொழியப் பெற்றீர்கள் ; (எ - று.)

போற்றிய, ஆகிய என்ற இரண்டும் - தவத்துக்கும்; தீர்வரு, கேடரு என்ற இரண்டும் - கற்புக்கும் அடைமொழி. 'கற்பினாற்றீயிற்றூயவளை' என் றும் பாடமுண்டு. போற்றுதல் - பாதுகாத்தல். (௬௩)

* ௬௪. இன்றுவீந்ததுநாளைச்சிறிதிறை
நின்றுவீந்ததலானிறைநிற்குமோ
வொன்றுவீந்ததுநல்லுணரும்பரை
வென்றுவீங்கியசீர்க்கமிகுத்ததால்.

(இ - ள்.) இறை - (உங்கள்) பெருமை, இன்று வீந்தது - இன்றைத் தினமே (பெரும்பான்மையும்) அழிந்துவிட்டது; சிறிது - மற்றைச்சிறுபான்

மை பாயுள்ளதும், நின்று நாளை வீந்தது அலால் - (இன்றைக்கு) நின்று நாளைக்கு அழிந்ததாகுமே யல்லாமல், நிறை நிற்குமோ - அழிவின்றி நிலைத்து நிற்குமோ? [நில்லாது என்றபடி]; நல் உணர் உம்பரை வென்று வீங்கிய வீக்கம் மிகுத்ததால் - நல்ல அறிவையுடைய தேவர்களைச் சயித்து அதனலெழுந்த பூரிப்பு[செருக்கு] (உங்களிடத்தில்) வரம்புகடந்ததனல், ஒன்று வீந்தது - ஒப்பற்றதாகிய பெருமை (உங்களைவிட்டு) நீங்கிப்போயிற்று; (எ - று.)

நற்குணநற்செயல்கட்குக் காரணமாகிற நல்லறிவுடையரா யொழுகுகிற தேவர்களை நீங்கள் அக்கிரமமாகவென்று அதனலாகியபெருமதம் உங்களிடத்து விஞ்சியதனல் உங்கள்பெருமை அழிந்துவிட்டதென்பதாம். இராமதூதனகிய எனதுவருகையினலேயே அப்பெருந்தகைமை பெரும்பாலுந்தொலைந்ததென்பார் 'இன்றுவீந்தது' என்றும், இன்றைக்குத்தொலைந்ததுபோக இன்னும் ஏதேனும் ஒருபகுதி உளதாயின் அதுவும் நாளைக்கு இராமனது வரவினல் அறத்தொலையு மென்பார் 'நாளைச்சிறிதுநின்று வீந்ததலால் நிறைநிற்குமோ' என்றுங் கூறினர். இரண்டாவதுவாக்கியத்தில் 'சிறிது' என வருவதனல், முதல்வாக்கியத்தில் 'பெரும்பான்மையும்' என்பது வருவிக்கப்பட்டது. 'வீக்கம்' என்ற சொல்லின் ஆற்றலால், வரம்புகடந்து பெருகி வெறுக்கத்தக்கதாய் வருத்தத்துக்கு இடமாகிற பெருக்க மென்றவாறும். (கஎ)

கஅ. தீமைநன்மையைத்தீர்த்தலொல்லாதெனும்
வாய்மைநீக்கினைமாதவத்தால்வந்த
தூய்மைதூயவடன்மையிற்றோன்றிய
நோய்மையாற்றுடைக்கின்றனைநோக்கலாய்.

(இ - ள்.) 'தீமை நன்மையை தீர்த்தல் ஒல்லாது - பாவமானது புண்ணியத்தை வெல்லமாட்டாது,' எனும் - என்கிற, வாய்மை - உண்மையான மூத்தோர்மொழியை, நீக்கினை - மனங்கொள்ளாது விட்டாய்; நோக்கலாய் - ஒன்றும் ஆலோசியாதவனுய்,—மா தவத்தால் வந்த தூய்மை - பெரியதவத்தைச்செய்ததனல் (உனக்கு) வந்த பரிசுத்தியை, தூயவள் தன்மையின் தோன்றிய நோய்மையால் துடைக்கின்றனை - பரிசுத்தியுடையவளான சீதாபிராட்டியின் விஷயமாக உண்டான ஆசைநோயினுற் போக்கிக்கொள்ளுகின்ருய்; (எ - று.)

தீமை நன்மையைத் தீர்த்தலொல்லாது - 'அறமேவெல்லும் பாவம் தோற்கும்' என்பது; "மீளருந்தருமந்தன்னை வெல்லுமோ பாவம்" என்று (ஆரணியகாண்டத்திற்) சீதை இராவணனுக்கு அறிவுகூறியதுங் காண்க. தூயவள்தன்மையின் தோன்றிய நோய்மையால்-சீதாபிராட்டியின் விஷயமாகச் செய்கின்ற வருத்தச்செயல்களால் எனினுமாம். நோய்மைஎன்பதில், மை - பகுதிப்பொருள்விகுதி. (கஅ)

௬௬. திறந்திறம்பியகாமச்செருக்கினன்
மறந்துதத்தமதியின்மயங்கின
ரிறந்திறந்திழிந்தேறுவதேயலா
லறந்திறம்பினராருளராயினர்.

(இ - ள்.) திறம் திறம்பிய - முறைமைதவறிய [நியாயவிரோதமான], காமம் செருக்கினல் - சிற்றின்பவாசையின் மோகத்தால், மறந்து - (சன்மார்க்கத்தை) மறந்துவிட்டு, தத்தம் மதியின் மயங்கினர் - தங்கள்தங்களுடைய அறிவிலே மயக்கங்கொண்டவர்கள்,—(அக்கொடுவினைப்பயனல்), இறந்து இறந்து இழிந்து ஏறுவதே அலால் - செத்துச்செத்துக் கீழ்மையுற்று அத்தாழ்வில் மேம்படுவதேயல்லாமல், அறம் திறம்பினர் ஆர் உளர் ஆயினர் - (அங்ஙனந்) தருமந்தவறி நடந்தவர்களுள் அழியாவாழ்வுடைய ரானவர் எவர் தாம்? [எவரு மில்லை யென்றபடி]; (எ - று.)

மதியின் மயங்கினர் என்பதில், இன் - சாரியை யெனினுமாம்; மதி மயங்குதல் - அறிவுகெடுதல். செல்வவாழ்க்கையோடு உயிர்வாழ்வும் ஒழியப் புகழ்கெட்டுப் பழிநிற்கத் தீவினைப்பயனாற் கொடுநரகும் இழிபிறப்பும் உற்றுச் சிறுமைப்பட்டு அத்தாழ்வு மேன்மேல் மிகப்பெறுவதேயல்லாமல் என்பது, மூன்றுமடியின்கருத்து; கொடியமரணத்தையடைந்து தீவினையால் நெடுநாள் நரகவேதனையுற்று அதினின்றும் மீளும்போதும் இழிந்தபிறப்பையே யடைவரென்க. உளராதல் - செல்வவாழ்வும் உயிர்வாழ்வும் புகழுடம்பும் அழிவின்றி நிற்கப் பெறுதல்: அறந்திறம்பாதவர்களே இங்ஙனம் நிற்பர் என்பது கருத்து; "தூமகேது புவிக்கெனத் தோன்றிய, வாமமேகலை மங்கையரால் வருங், காமமில்லையெனிற் கடுங்கேடெனு, நாமமில்லை நரகமு மில்லையே" என்று (அயோத்தியாகாண்டத்தில்)வசிஷ்டர் இராமனுக்குக் கூறியது காண்க. மறந்து- (தம்மைத் தாம்) மறந்து எனினுமாம்; காமமோகத்தின் வசப்பட்டுத் தம் வசந்தப்பியதனல் தமது டலுக்கும் உயிர்க்குஞ் செய்துகொள்ளவேண்டிய நன்மைகளையுமுட்பட மறந்து என்றபடி. (௬௬)

௬௭. நாமத்தாழ்கடன்ஞாலத்தவிந்தவ
ரீமத்தான்மறைந்தாரிளமாதர்பாற்
காமத்தாலிறந்தார்களிவண்டுறை
தாமத்தாரினரெண்ணினுஞ்சால்வரோ.

(இ - ள்.) நாமத்து ஆழ் கடல் ஞாலத்து - அச்சந்தருகிற ஆழ்ந்த கடல் சூழ்ந்த இந்நிலவுலகத்திலே, இளமாதர்பால் காமத்தால் இறந்தார் - இளமைப்பருவமுடைய மகளிரிடத்து மோகத்தால் வரம்புகடந்தொழுகி, அவிந்தவர் - மரணமடைந்தவர்களாய், ஈமத்தால் மறைந்தார் - சுடுகாட்டின் விறகடுக்கினல் உடலெரிக்கப்பட்டவர்களான, களி வண்டு உறை தாமம் தாரினர் - (தேனைப்பருகுதலாற்) களிப்புக்கொண்ட வண்டுகள் (நீங்காது) மொய்க்கப்

பெற்ற ஒளியுள்ள மலர்மாலையை யணிந்த ஆடவர்கள், எண்ணினும் சால்வரோ - கணக்கிடத்தொடங்கினால் ஏதாவதொரு பெருந்தொகையிலேனும் அடங்குவார்களோ? [அடங்கார் என்றபடி]; (எ - று.)

காமத்தாற்கெட்டொழிந்தவர் அளவிறந்தமிகப்பல ரென்பதாம். 'நாம்' என்பது - இங்கு, அச்சத்தையுணர்த்துவதோ ருரிச்சொல். "பேஎ நாம் உரு மென வரூஉங் கிளவி, யாமுறை மூன்று மச்சப்பொருள" என்றார் தொல்காப்பியனார்; அத்து - சாரியை. இனி, 'நாமத்து' என்பதற்கு - பிரசித்தி பெற்ற என்று பொருள்கொண்டு, அதனைக் கடலுக்கும் ஞாலத்துக்கும் அடைமொழி யாக்கலாம்; நாமம் - பெயர், புகழ்: வடசொல். மறைதல் - மாய்தல். 'வண்டறை' என்ற பாடத்திற்கு - வண்டுகளொலிக்கின்ற வென்க. தாமத் தாரினர் - தம்மை மிகுதியாக அலங்கரித்துக்கொள்ளுஞ் சிருங்கார புருஷரென்றபடி. ஈமம் - பிணஞ்சுடுதற்கு அடுக்கும் விறகடுக்கு.

இனி, இச்செய்யுளுக்கு - இஞ்ஞாலத்திலே காமத்தாலிறந்தவர்கள் அவிந்தவராகி ஈமத்தால் மறைந்தார்கள்; அங்ஙனமானவர்கள் வண்டுகள் மொய்க்கப்பெற்ற போர்மாலை வெற்றிமாலைகளை யுடைய வீரர்களது தொகையிற் சேர்வார்களோ? [சேரார்] என்றும் உரைக்கலாம்; ஐம்பொறிகளையடக்குந்திறமில்லாமல் அழிந்தொழிந்தவர்கள் மற்றைவகையில் எவ்வளவுபேராற்ற லுடையராயினும் வீரரென்று எண்ணப்படுதற்கு உரியரல்ல ரென்பதாம். (கஎ)

கஅ. பொருளுங்காமமுமென்றிவைபோக்கிவே
றிருளுண்டாமெனவெண்ணலரீதலு
மருளுங்காதலிற்றீர்தலுமல்லதோர்
தெருளுண்டாமெனவெண்ணலர்சீரியோர்.

(இ - ள்.) சீரியோர் - (அறிவொழுக்கங்களிற்) சிறந்தவர்கள், பொருளும் காமமும் என்ற இவை போக்கி வேறு இருள் உண்டு ஆம் என எண்ணலர் - பொருளாசையும் சிற்றின்பவாசையும் என்ற இவற்றைத் தவிர்த்து வேறே இருளொன்று (உலகத்தில்) உள்ளது என்று நினையார்; ஈதலும் அருளும் காதலில் தீர்தலும் அல்லது ஓர் தெருள் உண்டு ஆம் என எண்ணலர் - (வறியோர்க்குக்) கொடுத்தலும் (எல்லாவுயிர்களிடத்துங்கொள்ளுங்) கருணையும் அப்பொருளாசைசிற்றின்பவாசைகளினின்று நீங்குதலும் ஆகிய இவையேயல்லாமல் வேறேயொருதெளிவு இருக்கிற தென்றும் நினையார்.

இருளென்பது, பொருள்கள்புலனாகாதபடி கண்ணை மறைப்பது. அங்ஙனம், நீதிநெறி முதலிய எவையும் புலனாகாதபடி பொருளும காமமும் ஞானக்கண்ணைக் குருடாக்குதலால், அவையே பேரிருளாகு மென்க. அப்புறவிருள், ஐம்பொறிகளிலொன்றான கண்ணின் புலனையே மறைக்கும்: இவ்வாசையோ அகவிருளாகி அந்தக்கரணமாகிய மனத்தின் உணர்வையும் மறைப்பது எனக் காண்க. இனி, "இருணீங்கியின்பமயக்கும" என்றவிடத்துப்போல, இருளென்பதற்கு - நரகம் [திணிந்தஇருளை யுடைத்தாய்த்

தன்கட்புக்கார்க்குத் துன்பஞ்செய்யுமிடம்] என்று கொண்டு, பொருளுங் காமமு மென்ற இவையல்லது வேறே நரகமுண்டென்று எண்ணார் எனவும் உரைக் கலாம்; இவற்றை 'இருள்' என்றது, காரணத்தைக் காரியமாக உபசரித்துக் கூறியவாறும்: இவையே நரகத்துன்பத்துக்குக் காரணமாமெனக. ஈகை அருள் அவாவின்மை என்ற மூன்றுமே நல்லுணர்வினாலாகிய தெளிவின் பய னென் பது, பிந்தினவாக்கியத்தின் கருத்து. இரண்டு வாக்கியங்களிலும் 'ஆம்' என்பது - அசைநிலை. தெருள் என்பதற்கு - சுவர்க்க சுகமென்றும், முத்தி யின்ப மென்றும் உரைப்பாரு முளர். (கூஅ)

கூகூ. இச்சைத்தன்மையினிற்பிறரில்லினை
நச்சிநாளுநகையுறநாணிலன்
பச்சைமேனிபுலர்ந்து பழிபடூஉங்
கொச்சையாண்மையுஞ்சீர்மையிற்கூடுமோ.

(இ - ள்.) இச்சை தன்மையினில் - ஆசையினியல்பினால், பிறர் இல்லினை நச்சி - அயலார்மனைவியை விரும்பி, நாளும் நகை உற - (அதனால்) எந்நாளும் (பிறர் தன்னையிகழ்ந்துசிரிக்குஞ்) சிரிப்புத்தோன்ற, நாண் இலன் - வெட்கமில் லாதவனாய், பச்சை மேனி புலர்ந்து - பசுமையான உடம்பு (காமதாபத்தால்) உலரப்பெற்று, பழி படூஉம் - பழிப்பையடைகிற, கொச்சை ஆண்மையும் - இழிவான இவ்வகை ஆண்தன்மையும், சீர்மையில் கூடுமோ - சிறந்தகுணங்க ளுள் (ஒன்றாகச்) சேருமோ? [சேராது என்றபடி]; (எ - று.)

இச்சைத்தன்மையினில் - ஆசையை அடக்குதலின்றி அது போகிறவழி யிலே அறிவைச் செல்லவிட்டு என்றபடி. இல் - வீடு: அதிலே இருந்து சம் சாரகாரியங்களை நடத்தும் மனைவிக்கு இடவாகுபெயர். நாளும் நகை உற - எந்நாளும் பிறர் பரிகசிக்க; பழிநிற்க என்றபடி. நாணுவது - செயத்தகாதன வற்றின்கண் உள்ளமொடுங்குதல். 'கொச்சையாண்மையும்' என்ற உம்மை - இழிவுசிறப்பு. (கூகூ)

க00. ஓதநீருலகாண்டவருன்றுணைப்
போதநீதியராருளர்போயினார்
வேதநீதிவிதிவழிச்செல்வருங்
காதனீயறத்தெல்லைகடத்தியோ.

(இ - ள்.) ஓதம் நீர் உலகு ஆண்டவர் போயினார் - அலைகளையுடைய கடலின் நீரினாற் சூழப்பட்ட இந்நிலவுலகத்தை யரசாண்டு காலஞ்சென்ற அரசர்களுள், உன் துணை போதம் நீதியர் ஆர் உளர் - உன்னவ்வளவு நீதி யறியுந் திறமுடையவர் யாவரிருந்தனர்? [எவருமில்லை யென்றபடி]; வேதம் நீதி விதி வழி செல்வரும் காதல் நீ - வேதங்களிற்கூறப்பட்ட நியாயமான முறைமைவழியிலே செல்கிற விருப்பத்தையுடையனாயிருந்த நீ, அறத்து எல்லை கடத்தியோ - தருமத்தின்வரம்புகடந்து ஒழுகக்கடவையோ! [அல்லை யென்றபடி]; (எ - று.)

ஆதியில் இராவணன் வேதசாஸ்திரங்களனைத்தையும் நன்றாகவுணர்ந்து யாகம் தவம் முதலிய வைதிகச்செயல்களில் மிக்கவிருப்பங்கொண்டு அவற்றை அனுட்டித்துவந்தமைபற்றி, இங்ஙனங் கூறப்பட்டான்; இதுபற்றியே, இராவணன், படித்துக்கெட்டவனெனவும் தெரிந்துகெட்டவனெனவுங் கூறப்படுவன். போதநீதி யென்பது, நீதிபோத மென மாற்றப்பட்டது. செல்வரும்=செல்லும்: இதில், வா - துணைவினை. இனி, வேதநீதி விதிவழிச் செல்வரும் காதல் நீ என்பதற்கு - வைதிக நீதிமார்க்கங்களிற் செல்பவர்களும் விரும்பத்தக்கவனுன நீ யென்று உரைப்பாருமுளர்; இவ்வுரைக்கு, 'செல்வர்' என்பது - பெயர்: உம்மை - உயர்வுசிறப்பு. முன்னிரண்டடிக்கு - உன் துணை போயினுரென இயைத்து, உலகாண்டவராகிய போதநீதியரில் உன்னவ்வளவு (அந்நீதிநெறியில்) மிகுதியாகச் சென்றவர் யாவருளரென்றும் உரைக்கலாம். (௧௦௦)

௧௦௧. வெறுப்புண்டாயவொருத்தியைவேண்டினுன்
மறுப்புண்டாயபின்வாழ்கின்றவாழ்வினி
னுறுப்புண்டாய்நடுவோங்கியநாசியை
யறுப்புண்டாலதழகெனலாகுமே.

(இ - ள்.) (ஒருவன்), வெறுப்பு உண்டு ஆய ஒருத்தியை வேண்டினுல் - (தன்மேற்) பிரியமில்லாத ஒரு மாதை விரும்பி நெருங்கியவிடத்து, மறுப்பு உண்டாய பின் - (வேண்டாவென்று அவளால்) மறுக்கப்படுதல் உண்டான பின்பு, வாழ்கின்ற - (அந்த இழிவினுல் உடனே இறந்துபோகாமல்) உயிரோடு கூடி வாழ்கிற, வாழ்வினின் - வாழ்வைக்காட்டிலும், உறுப்பு உண்டு ஆய் நடு ஓங்கிய நாசியை அறுப்புண்டால் அது அழகு எனல் ஆகுமே - ஓர் அவயவமாக வுள்ளதாய்(முகத்தின்) நடுவிலே உயர்ந்திருக்கிற மூக்கை(ஒருவரால்) அறுக்கப்பெற்றுல் அந்நிலை அழகுடையதென்று சொல்லத்தக்கதாகும்; (எ - று.)— ஈற்று ஏகாரம் - தேற்றம்.

மூக்கறுபடுதல் அழகுடையதன்றென்பது, வெளிப்படை: அதனினும் அழகற்றது, தன்மேற் பிரியங்கொள்ளாத ஒருத்தியைத் தான் காதலித்து அணுகித் தன்கருத்தை அவள்பக்கல் கூறி அவளால் சீசீ போ என்று மறுக்கப்பட்டபின்பு உயிர்வாழ்தல் என்பதாம். இராமனைக் காதலித்து நணுகி நலிந்து அதனுல் மூக்கறுக்கப்பட்ட நினது தங்கையின் இழிதகைமையினுங் கீழ்ப்பட்டது, நீ சீதையைவிரும்பி வேண்டி அவளால் மறுக்கப்பட்ட பின்பு உயிர் வைத்துக்கொண்டிருக்கிற வாழ்க்கை யென்றவாறுமாம். வெறுப்பு உண்டாய ஒருத்தியை - (தன்கணவனொருவனிடத்து விருப்பமுடையளாயிருத்தலேயன்றிப் பரபுருஷர்களிடமெல்லாம்) வெறுப்புள்ள ஒருகற்புடையாளை யெனினும் அமையும். வாழ்வினின் அழகெனலாகுமேயென்று இயைக்க. (௧௦௧)

௬0௨. பாரைஞ்ஞூறவபற்பலபொற்புய
மீரைஞ்ஞூறுதலையுளவென்னினு
மூரைஞ்ஞூறுங்கடுங்கனலுட்பொதி
சீரைஞ்ஞூறவைசேமஞ்செலுத்துமோ.

(இ - ள்.) பாரை ஞூறுவ பல் பல பொன் புயம் - உலகங்களையழிக்க வல்லனவான மிகப்பல அழகிய கைகளும், ஈர் ஐஞ்ஞூறு தலை - ஆயிரந்தலைகளும், உள என்னினும் - உள்ளனவானாலும், அவை சேமம் செலுத்துமோ - அவை (உயிரைப்) பாதுகாவலில் வைக்கமாட்டுமோ? (அவைதாம்), ஊரை ஞூறும் கடுங் கனலுள் பொதி சீரை ஞூறு - ஊர்முழுவதையும் அழிப்பதாய் வளர்ந்த கொடியநெருப்பிலே யகப்பட்ட நூறுவஸ்திரங்களே போலும்.

திக்குவிசயயாத்திரையில் உலகங்கள்பலவற்றையழித்த மிக்கவலிமையுடையனவான இருபதுகைகளும் பத்துத்தலைகளும் உனக்கு உள்ளன வென்றும், அதனால் ஒருதலையையும் இரண்டுகைகளையுமேயுடைய இராமனுக்கு அஞ்சவேண்டுவதில்லை யென்றுங் கருதிச் செருக்குறவேண்டா: ஆயிரந்தலைகளும் இரண்டாயிரங்கைகளும் உண்டானாலும் அவை உன்னைப் பாதுகாக்கமாட்டா; அவை யாவும் பெருநெருப்பிற்பட்ட ஆடைப்பொதிபோல இராமனது பராக்கிரமாக்கினியில் எளிதில் அழிபட்டொழியும் என்பதாம். 'சீரைபோலும்' என்னாது 'சீரை' என உபமேயத்தை உபமான மாகவே கூறியது, காட்சியணி. சீரை - சீலை. நூறுவ, நூறு, நூறும் என்பவற்றின் நகரத்துக்கு ஞகரம் போலியால் வந்தது. இரண்டாமடியொழிந்த மூன்றடிகளிலும், ஞகரமெய் - விரித்தல் விகாரத்தால் வந்தது. நெருப்பு உவமை, சிறிதாயிருந்தும் அழிக்கும்வல்லமையைக் காட்டும். நூறுதல் - பொடியாக்குதல்.

௬0௩. புரம்பிழைப்பருந்தீப்புகப்பொங்கியோ
னரம்பிழைத்தனபாடலினல்கிய
வரம்பிழைக்குமறைபிழையாதவன்
சரம்பிழைக்குமெனவெண்ணுதல்சாலுமோ.

(இ - ள்.) புரம் - திரிபுரத்திலும், பிழைப்பு அருந் தீ புக - (எவரும்) தப்ப வொண்ணாத பெருந்தீப் புகுந்து எரிக்குமாறு, பொங்கியோன் - கோபங்கொண்டவனான சிவபெருமான், நரம்பு இழைத்தன பாடலின் நல்கிய - நரம்புகளைக்கொண்டு (நீ) பாடிய பாடல்களுக்காக (மனமுவந்து உனக்கு)க்கொடுத்தருளிய, வரம்-வரமானது, பிழைக்கும் - (நீ மறைநெறிதவறியதனால்) தவறிப்போனாலும் போகும்; மறை பிழையாதவன் சரம் பிழைக்கும் என்று எண்ணுதல் சாலுமோ - வைதிகமார்க்கந்தவறாதவனான ஸ்ரீராமபிரானது அம்பு தவறிப்போமென்று (நீ) நினைத்தல் தகுமோ? [தகாது என்றபடி]; (எ - று.)

இராவணன் கைலாசகிரியைப் பெயர்த்தெடுத்தபொழுது சிவபிரான் சினந்து தன்கால்விரலாற் சிறிது அழுத்தவே, அரக்கன் மலையின்கீழ் அகப்பட்டு நசுங்கி மிகவருந்தி வெகுகாலம்புலம்பி, பின்னர் மந்திரிகள் சொன்ன தந்திரத்தின்படி, தனது தலைகளிலொன்றைத் துணித்துத் தனதுகைகளிலொன்றனுடன் சேர்த்துக் கைந்நரம்புகளே வீணைநரம்புகளாக அமைய வீணைபோலமைத்து அந்தக் கைவீணையைக்கொண்டு சாமவேதகானஞ்செய்ய, அப்பெருமான் திருவுள்ளமுகந்து அருள்செய்து, ராவணனென்ற பெயருடனும் சிறந்ததொருவாளாயுதத்துடனும் மிகநீண்டஆயுளை யளிக்க, அரக்கன் பெற்று அப்பாற் சென்றனனென்ற விவரம், இங்கு அறியத்தக்கது. ("வான்றிகழ்வெள்ளிவெற்பின்கீழுற்றுவருந்துகின்ற, ஊன்றிகழ்வேலினானையமைச்சர் தாமுற்றுநோக்கித், தேன்றிகழிதழியான்றன் திருச்செவிசார நின்கை, தான்றிகழ் வீணையாகப் பாடுதி சாம மென்றார்", "அன்னதேகருமமென்று வரக்கனு மறிவுட்கொண்டு, தன்னது தலையிலொன்றைத் தடிந்து தன்கையிற்சேர்த்தி, இன்னவினரம்பிற் றுத்தங்கிளைமுத லிசைகளேழாற், பன்னருஞ்சாம கீதம் பரிவுடன் பாடலுற்றான்;" "அவ்வழியவனும்பாட வரன் மகிழ்ந்தழைத்துக் கொண்டு, முவ்வகையுலகுமாள மூன்றரைக்கோடி யாண்டும், எவ்வகைப் படையும் வெல்லுஞ் சந்திரவாளு மீந்தான், பொய்வகை நிருதன் பெற்று விடைகொண்டு போக லுற்றான்" என வரும் உத்தரகாண்டச் செய்யுள்களையுங் காண்க.) 'மறைபிழையாதவன் சரம்பிழைக்கு மென்று எண்ணுதல் சாலுமோ' என்பதில் 'மறைபிழையாதவன்' என்பதனை நோக்கி, 'வரம்பிழைக்கும்' என்றவிடத்து 'நீ மறைநெறிபிழைத்ததனால்' என்பது வருவிக்கப்பட்டது. 'வரம்பிழைக்கும்' என்றது வரையில், தன்கருத்தை வெளியிட்டது. 'சரம்பிழைக்கும்' என்றது, இராவணனது எண்ணத்தை எடுத்துக் கூறியது. இனி, எல்லாம் அவனது கருத்தையே கூறியதாகக் கொண்டு, வரம் பிழைக்கும் [அழிவின்றிநிற்கும்] என்றும், மறைபிழையாதவனது சரம் பிழைக்கும் [தவறிப்போம்] என்றும் நீ நினைத்தல் தகுமோ வென்று உரைக்கவும் இடமுண்டு. இராமபாணம் எவ்வாற்றாலுந் தப்பமுடியாதபடி நின்னைத் தவறாது கொல்லு மென்பது, தேர்ந்த கருத்து. நினது வரபலத்தினால் இராமசரபலத்தைத் தவறச்செய்யலா மென்று நீ எண்ணுகின்றாய்; அங்ஙனமாகாது: வரபலந்தவறும்; சரபலந் தவறாதென உணரக்கடவை யென்றவாறு. நரம்பு இழைத்து அன என்று பிரித்து - வீணைகானம்போன்ற என்றும் உரைக்கலாம். (௪௦௩)

௧௦௪. ஈறிலாணுகவெஞ்சலினற்றிரு
நூறிநொய்தினையாகிநுழைதியோ
வேறுமின்னுநகையாம்வினைத்தொழி
றேறினார்பலர்காமிக்குஞ்செவ்வியோய்.

(இ - ள்.) ஈறு இல் நாண் உக - (எவர்க்கும்) அழிவின்றியிருக்கவேண்டியதான நாணம் கெட, எஞ்சல் இல் நல் திரு நூறி - குறைதலில்லாத நல்ல

(நினது) அரசாட்சிச்செல்வத்தையும் அழித்துக்கொண்டு, நொய்தினை ஆகி சிறுமைக்குணமுள்ளவனாய், வேறும் நுழைதியோ - (நியாயமார்க்கத்துக்கு) வேறான பிறன்மனைவிழைதலாகிய சிறுநெறியிலுஞ் *செல்லவையோ! இன்னும் நகை ஆம் வினை தொழில் தேறினார் பலர் காமிக்கும் செவ்வியோய் - மற்றும் (பிறர்) பரிகசித்தற்கு இடமான பலதொழில்களைச் செய்தலில் தேறியுள்ளவர் களாகிய பலராலும் விரும்பப்படுகிற சமயத்தை யுடையவனே! (எ - று.)

தீநெறிவிலக்கி நன்னெறிச்செலுத்தும் பேரறிவுடையாரைத் துணையா கக்கொள்ளுதலின்றிச் சிற்றினஞ்சேர்ந்து கெடுபவனே யென்பார், 'இன் னும் நகையாம்வினைத்தொழில்தேறினார்பலர் காமிக்குஞ் செவ்வியோய்' என விளித்தார். சிறியஇனமாவது - நல்லதன் நலனும் தீயதன் தீமையும் இல்லென் போரும் விடரும் தூர்த்தரும் நடரும் உள்ளிட்ட குழு. அறிவைத்திரித்து இருமையுங்கெடுக்கு மியல்பினரான அவர்களே நின்சமயம்பார்த்து நிற்பவ ரென்க. நகை ஆம் - மகிழ்ந்து சிரித்தற்கு இடமான எனினுமாம்; "நகை வகையராகிய நட்பிற் பகைவராற், பத்தடுத்தகோடியுறும்" என்ற திருக்குற ளின் உரையிற் பரிமேலழகர் 'அந்நட்பாவது - விடரும் தூர்த்தரும் வேழம் பரும் போன்று பலவகையால்நகுவித்துத் தாம் பயன்கொண்டொழிவாரோடு உளதாயது' என உரைத்ததுங் காண்க. 'நுழைதியோ' என்பதற்கு - (இராம பாணம் உனது உடலிலே) நுழையப்பெறுவாயோ வென்று உரைப்பாருமுளர்.

கா0ரு. பிறந்துளார்பிறவாதபெரும்பதந்
சிறந்துளார்மற்றுந்தேவர்க்குந்தேவரா
யிறந்துளார்பிறர்யாருமிராமனை
மறந்துளாருளராகிலர்வாய்மையால்.

(இ - ள்.) பிறந்துளார் - (உலகங்களிற்) பிறந்துள்ளவர்களும், பிறவாத பெரும் பதம் சிறந்துளார் - இனிப்பிறத்தல்வேண்டாத பெரிய முத்தியுலகத் திலே மேம்பட்டுள்ளவர்களான நித்தியமுக்தர்களும், மற்றும் தேவர்க்கும் தேவர் ஆய் இறந்து உளார் - மற்றும் தேவர்கட்குஞ் சிறந்த தலைமைத் தேவர் களாகி மேம்பட்டுள்ளவர்களும் ஆகிய, பிறர் யாரும் - (உன்னையொழிந்த) மற்றையோரனைவரும், இராமனை மறந்துளார் உளர் ஆகிலர் - ஸ்ரீராமனை மறந்தவர்களாய் இருக்கின்றிலர்; வாய்மை - (இது) உண்மை; (எ - று.) —ஆல் - ஈற்றசை; தேற்றமுமாம்.

பெரும்பதம் - பரமபதம். அது, "மற்று ஈண்டுவாராநெறி" என்றபடி, புக்கவர் மீளப்பிறத்தலில்லையான உயர்கதி யாதலால், அதற்கு 'பிறவாத' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. இறத்தல் - வரம்புகடத்தல். இற ந்துளார் - கடவுளர் என்றபடி. 'தேவர்க்குந்தேவராய் இறந்துளார்' என் றது, பிரம ருத்திர இந்திரர்களை. (கா0ரு)

*கஅ

௧௦௬. ஆதலாற்றனரும்பெறற்செல்வமு
மோதுபல்கிளையும்முயிரும்பெறச்
சீதையைத்தருகென்றெனச்செப்பினன்
சோதியான்மகனிற்கெனச்சொல்லினன்.

(இ - ள்.) **ஆதலால் - ஆகையால், தன் - தனது, அரும் பெறல் செல்வமும் -** (பிறர்) பெறுதற்கு அருமையான செல்வங்களையும், ஓது பல் கிளையும் - சொல்லப்படுகிற பலவகைச் சுற்றத்தவரையும், உயிரும் - உயிரையும், பெற - (இழவாதிருக்கப்) பெறுமாறு, சீதையை தருக - சீதையை (இராவணன் இராமனுக்குக்) கொடுத்துவிடுவானாக, என்று என - என்பதாக, சோதியான் மகன் நிற்கு செப்பினன் - ஒளிவடிவமான சூரியனது குமாரனாகிய சுக்கிரீவன் உனக்குச் சொல்லியனுப்பினான், என சொல்லினன் - என்று (இராவணனைநோக்கிக்) கூறினன், (அநுமான்) ; (எ - று.)

மூன்றாமடியிலுள்ள 'என' என்பதை அசையாகவேனும், அவ்வடியிலுள்ள 'என்று, என' என்பவற்றை ஒருபொருட்பன்மொழி யென்றேனுங் கொள்க. இனி, என்று என - என்று (உன்னிடம் நான்) சொல்லும்படி, சோதியான் மகன் நிற்கு செப்பினன் - சுக்கிரீவன் நினக்குச் செய்திகூறியனுப்பினன், என சொல்லினன் - என்று (இராவணனைநோக்கி அநுமான்) கூறினன் எனப் பதவுரைகூறுவாருமுளர். அரும்பெறற்செல்வம் என்பதை, பெறலருஞ்செல்வ மென மாறுக ; (மீ வருந்தித்தவஞ்செய்து) அருமையாகப் பெற்ற செல்வ மெனினுமாம். சீதையைத்தராவிடின் நினது செல்வம் முதலியன தொலையு மென்றவாறு. தான் வகுத்துக்கூறுவான், கூறியது கூறுவான், ஓலைகொடுத்துநிற்பான் என மூன்றுவகைப்பட்ட தூதர்களில் முதல்வனாகிய உத்தமதூதன் அநுமா னென்பது உணர்க. (௧௦௬)

[அதுகேட்ட இராவணன் இகழ்ச்சிதோன்றச் சிரித்தல்.]

௧௦௭. என்றலும்மிவைசொல்லியதெற்கொரு
குன்றில்வாழுங்குரங்குகொலாமிது
நன்றுநன்றெனமாநகைசெய்தனன்
வென்றியென்றொன்றுதானன்றிவேறிலான்.

(இ - ள்.) என்றலும் - என்று (அநுமான்) சொன்னவுடனே,—வென்றி என்ற ஒன்று தான் அன்றி வேறு இலான் - ஜயமென்ற ஒன்றையேயன்றி அதற்குமாறான அபஜயத்தை (எவ்விடத்தும்) பெறாதவனான இராவணன்,—'எற்கு இவை சொல்லியது - (எல்லாமறிந்த) எனக்கு இந்த வார்த்தைகளைச் சொன்னது, ஒரு குன்றில் வாழும் குரங்கு கொல் ஆம் - மலையில்வாழ்வதொரு குரங்காகும்! இது நன்று நன்று-இச்செயல் நன்றாயிருக்கின்றது ! நன்றாயிருக்கின்றது!!' என - என்று எண்ணி, மா நகை செய்தனன் - பெருஞ் சிரிப்புச் சிரித்தான்; (எ - று.)

கொல் ஆம் என்பனவும், நன்று நன்று என்றதும் - இகழ்ச்சிதோன்ற நின்றன. 'குன்றில்வாழுங் குரங்கு' என்றது, அதன் அநாகரிகத்தைக் காட்டும். வேறு - தோல்வி. ஈற்றடிக்கு - (தனக்கு) வெற்றியையேயன்றித் தோல்வியை யெண்ணுதவனென்றும் பொருள் கொள்ளலாம். குரங்குகொல் - குரங்கோ! எனினுமாம். (க0எ)

['தூதனுய்வந்த நீ அரக்கரைக் கொன்றது என்?' என்று இராவணன் அநுமானை வினவுதல்.]

க0அ. குரக்குவார்த்தையுமானிடர்கொற்றமு
மிருக்கநிற்கநீயென்கொலடாவிரும்
புரத்தினுட்டருந்தூதுபுகுந்தபி
னரக்கரைக்கொன்றதஃதுரையாயென்றான்.

(இ - ள்.) 'குரக்கு வார்த்தையும் - குரங்காகிய சுக்கிரீவனது வார்த்தையும், மானிடர் கொற்றமும் - மனிதராகிய இராமலக்ஷ்மணரது ஜயமும், இருக்க - இருக்கட்டும் ; நிற்க - (அவற்றை நீ சொல்வது) நிற்கட்டும் ; அடா—! நீ—, இரும் புரத்தினுள் - பெரிய இந்த நகரத்தினுள்ளே, தரும் தூது புகுந்த பின்- ஒருவரனுப்பிய தூதனாய் வந்து பிரவேசித்தபின்பு, அரக்கரை கொன்றது - இராக்கதர்களைக் கொன்றது, என்கொல் - என்ன காரணத்தால்? அஃது உரையாய் - அக்காரணத்தைச் சொல்வாய்,' என்றான் - என்று (அநுமானை) வினவினான், (இராவணன்); (எ - று.)

குரக்குவார்த்தையும் இருக்க, மானிடர்கொற்றமும் நிற்க என்று முறை நிரனிறைப்பொருள்கோள் பட இயைப்பாரு முளர். (க0அ)

[அதற்கு அநுமான்கூறிய விடை.]

க0௯. காட்டுவாரின்மையாற்கடி காவினை
வாட்டினேனென்னைக்கொல்லவந்தார்களை
வீட்டினேன்பின்னுமென்மையினாலுன்றன்
மாட்டுவந்ததுகாணுமதியினால்.

(இ - ள்.) காட்டுவார் இன்மையால் - (உன்னை எனக்குக்) காட்டுபவரெவரும் நேரிடாமையால், கடி காவினை வாட்டினேன் - நறுமணமுள்ள அசோகவனத்தை அழித்தேன் ; என்னை கொல்ல வந்தார்களை வீட்டினேன் - (என்கருத்தை யுணராமற் கோபங்கொண்டு) என்னைக் கொல்ல வந்த இராக்கதர்களை (அங்ஙனஞ்செய்யாதிருத்தற்பொருட்டு நான்) கொன்றிட்டேன் ; பின்னும் - அதன்பின்பும், மென்மையினால் உன்தன்மாட்டு வந்தது - அடக்கத்தை மேற்கொண்டு உன்னிடத்து (நான்) வந்தது, காணும் மதியினால்- (உன்னைக்) கண்டு செய்திகூறவேண்டு மென்னுங் கருத்தினாலேயே; (எ - று).

'காட்டுவாரின்மையால்' என்பதற்கு - (என்வரவையுணர்ந்து என்னை உனக்குக்) காட்டுபவரெவரும் (இந்நகரில்) இல்லாமையால் என்றுங் கொள்ளலாம். 'கடி' என்ற பலபொருளுரிச்சொல், இங்குப் பரிமளத்தை யுணர்த்திற்று. மென்மையினால் - எளிமையினால் [சாந்தகுணத்தை மேற்கொண்டு] என்றபடி. வேண்டுமென்று நானாக அடங்கியிருக்கின்றேனேயன்றி என்னைக் கட்டுந்திறம் இந்திரசித்தினது நாகபாசத்திற்கு இல்லையென்பதை ஈற்று வாக்கியத்தாற் குறிப்பித்தார். (க0க)

[இராவணன் கோபித்து அநுமானைக் கொல்லச் சொல்ல, விபீஷணன் தடுத்தல்.]

கக0. என்னுமாத்திரத் தீண்டெரிநீண்டுக
மின்னும்வாளெயிற் றன்சினம்வீங்கினான்
கொன்மினென் றனன்கொல்லியர்சேர்தலு
நின்மினென் றனன்வீடணனீதியான்.

(இ - ள்.) என்னும் மாத்திரத்து - என்று (அநுமான்) சொன்னவளவிலே, மின்னும் வாள் எயிற்றன் - மின்னல்போல்விளங்குகிற வாளாயுதம்போற் கூரிய பற்களையுடையவனான இராவணன், ஈண்டு எரி நீண்டு உக சினம் வீங்கினான் - மிக்கநெருப்பு நெடுந்தூரமளவுஞ் சிந்தும்படி கோபம் மிக்கவனாய், கொன்மின் என்றனன் - ('இக்குரங்கைக்) கொல்லுங்கள்' என்று கட்டளையிட்டான்; (அவ்வளவிலே), கொல்லியர் சேர்தலும் - கொலைத்தொழிலாளிகள் (அநுமானருகிற் சென்று) சேர்ந்துவிட, நீதியான் வீடணன் - (அச்சபையிலிருந்த) நியாயமுணர்ந்தவனாகிய விபீஷணன், நின்மின் என்றனன் - 'நில்லுங்கள்' என்றுசொல்லி (அக்கொலைஞரை)த் தடுத்திட்டான்.

அநுமான் பயபக்தியும் அடக்கமு மன்றித் தொழில்செய்தலுமன்றிச் செருக்கியும் பேசுகின்றனனென்று இராவணனுக்குக் கோபம் மிக்கது. ஈண்டு எரி - வினைத்தொகை. 'கொல்லி' என்பதில், இ - பெயர்விகுதி; அதன் பன்மை - கொல்லியர். "பொய்யுங் களவும் பாதகமும் பொல்லாவொழுக்கு மவைகடிந்து, மெய்யுந் தயாவுந் தருமமுடன் விளங்கும்பொறையு மிவையூண்டு, செய்யுஞ் செயல்களவையெல்லாஞ் சிட்டர்செய்யுஞ் செயலாகி, ஐயன் புகழ்வீடணன் மறைகளறைந்த வறத்தின் வழிநின்றான்" என்றபடி விபீஷணன் இயல்பிலேயே நற்குண நற்செய்கை மிக்கிருந்தது மன்றி, பின்பு அரும்பெருந்தவஞ்செய்து பிரமனைப் பிரத்யக்ஷமாகப்பெற்றபோதும் "நல்லாயறத்தைக்கைவிட்டு நடுங்குமிடும்பைவரினும் நான், பொல்லாதன செய்யாதொழிக போரிற்பிரமாஸ்திரமென்னை, வெல்லாதொழிகவிவ்வரங்கள்வேண்டும்" என்று வரம்வேண்டியும் பெற்றவனாதலால், 'வீடணன் நீதியான்' என்றார். ()

[விபீஷணன் இராவணனுக்கு நீதிகூறத்தொடங்குதல்.]

கக்க. ஆண்டெ ழுந்துநின் றண்ணல ரக்கனை
நீண்ட கையன்வ ணங்கின னீதியான்
மூண்ட கோபமு றையதன் றூமென
வேண்டு மெய்யுரை பையவி ளம்பினான்.

(இ - ள்.) நீதியான் - நியாயமுணர்ந்தவனான விபீஷணன், ஆண்டு - அப்பொழுது [அச்சபையிலே], எழுந்து நின்று—, அண்ணல் அரக்கனை - பெருமையுடைய ராக்ஷஸராஜனான இராவணனை, நீண்ட கையன் வணங்கினன் - நீட்டியகைகளையுடையவனாய் நமஸ்கரித்து, மூண்ட கோபம் முறையது அன்று என - '(உனக்கு இப்பொழுது) மிகுதியாகவுண்டான கோபம் நீதியுடையதன்று' என்பதாக, வேண்டும் மெய் உரை பைய விளம்பினன் - (அனைவரும்) விரும்பத்தக்க உண்மையானவார்த்தைகளை (அவன்கோபம் அடங்கும்படி) மெல்லக் கூறலானான்; (எ - று.)—அதனை, அடுத்த ஐந்துகவிகளிற் காண்க. ஆம் - அசை.

இச்செய்யுளில் 'மூண்டகோபம் முறையதன்று' என்றது - தொகுத்துச் சுட்டல்; அடுத்த ஐந்துகவிகளும் - வகுத்துக்காட்டல். சேரன் சேரல் என்றாற்போல அண்ணன் என்பது அண்ணல் என விகாரப்பட்டதென்று கொண்டால், தமையனென்று பொருள்படும். பிரியமாகவும் பத்தியமாகவுமுள்ள சத்தியமான வசனங்களை இனிது கூறினனென்பார், 'வேண்டுமெய்யுரை பையவிளம்பினன்' என்றார். திருக்குறளில் சொல்வன்மையென்ற அதிகாரத்தில் "கேட்டார்ப்பிணிக்குந் தகையவாய்க் கேளாரும், வேட்ப மொழிவதாஞ் சொல்", "வேட்பத் தாஞ் சொல்லி" என்றாற்போல, 'வேண்டும் உரை' எனப்பட்டது. பைய - வினையெச்சம். (கககக)

வேறு.

[இதுமுதல் ஐந்துகவிகள் - 'தூதனைக் கொல்லலாகாது' என்று இராவணனுக்கு விபீஷணன் நீதிகூறுதல்.]

ககஉ. அந்தண னுலக மூன்று மாதியி னறத்தி னாற்ற
றந்தவ னன்புக் கான்ற தவநெறி யுணர்ந்து தக்கோ
யிந்திரன் கரும மாற்று மிறைவனீ யியம்பு தூது
வந்தனெ னென்ற பின்புங் கொல்லியோ மறைகள் வல்லோய்.

(இ - ள்.) தக்கோய் - (அறிவுஆற்றல்களில்) தகுதியுடையவனே! மறைகள் வல்லோய் - வேதங்களில் வல்லவனே! உலகம் மூன்றும் - மூவகையுலகங்களையும், ஆதியின் - ஆதிகாலத்திலே, அறத்தின் ஆற்றல் - (தனது) தருமபலத்தினால், தந்தவன் - படைத்தவனான, அந்தணன் - பிரமதேவனது, அன்புக்கு - அன்பைப்பெறுமாறு, ஆன்ற - சிறந்துள்ள, தவம் நெறி - தவவழியை. உணர்ந்து - அறிந்து (செய்துமுடித்து வரம்பெற்று), இந்திரன் கருமம் ஆற்றும் - இந்திரனது தொழிலாகிய திரிலோகாதிபத்தியத்தையும் நடத்துகிற, இறைவன் - தலைவனாகிய,நீ—,இயம்பு தூது வந்தனென் என்ற பின்பும் கொல்லியோ - '(ஒருவர்சொல்லியனுப்பியசெய்தியைச்) சொல்லுந்

தூதனாக வந்தேன் யான்' என்று (ஒருவன்) சொன்னபின்பும் (அவனைக்) கொல்பவனுளையோ! [கொல்லற்பாலையல்லை யென்றபடி]; (எ - று.)

உலகம் பதினான்காயிருக்கவும் 'மூன்று' என்றது, மேல் கீழ் நடு என்ற நோக்கத்தால். 'ஆதி' என்றது, சிருஷ்டியின் தொடக்கத்தை. அறத்தின் ஆற்றல் - நல்வினைப்பயன் 'உலகம் மூன்றும் ஆதியின் அறத்தின் ஆற்றல் தந்தவன்' என்றதற்கு - எல்லாவுலகத்து உயிர்களும் ஆதிகாலத்திலே தருமமார்க்கமாய் அனுட்டிக்குமாறு அவற்றிற்கு அறநெறியையளித்தவ னென்றலுமாம். 'தக்கோய்' என்பதை விளியாகக் கொள்ளாமல் முன்னிலையொருமைமுற்றெச்சமாக்கொண்டு, உணர்ந்து தகுதியையுடையையாய் ஆற்றும் என இயைப்பினுமாம். 'இந்திரன்கருமம் ஆற்றும் இறைவன் நீ' என்பதற்கு - இந்திரன் குற்றேவல் செய்யப்பெற்ற தலைவனாகிய நீயென்று உரைப்பாருமுளர். கருமம் மாற்றும் என்று எடுத்தால், இந்திரனது அதிகாரமாகிய மூவுலகாட்சியை அவனுக்கு இல்லாதபடி செய்த என்று பொருள்படும். அந்தணன் அன்புக்கு - அந்தணன் உன்னிடம் அன்புவைக்குமாறு என்றபடி.

இதுமுதல் ஐந்துகவிகள் - கீழ்ப்படலத்தின் நான்காங்கவிபோன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (ககஉ)

ககங. பூதலப்பரப்பினண்டப்பொகுட்டினுட்புறத்துட்பொய்தீர்
வேதமுற்றியங்குவைப்பின்வேறுவேறிடத்துவேந்தர்
மாதரைக்கொலைசெய்தார்களுளரெனவரினும்வந்த
தூதரைக்கொன்றுளார்கள்யாவரேதொல்லைநல்லோர்.

(இ - ள்.) பூதலம் பரப்பின் - பரந்த இந்தப் பூலோகத்தின் எல்லை முழுவதிலும், அண்டம் பொகுட்டின் உள் புறத்துள் - இந்த அண்ட கோளத்தின் உள்ளாகவும் புறம்பாகவுமுள்ள, பொய் தீர் வேதம் உற்று இயங்கு வைப்பின் வேறு வேறு இடத்து - பொய்ம்மையில்லாத [சத்தியமான] வேதங்கள் பொருந்தி வழங்கப்பெற்ற உலகங்களாகிய வெவ்வேறு இடங்களிலும், தொல்லை நல்லோர் - பழமையாகவுள்ள நீதிமான்களில், மாதரை கொலை செய்தார்கள் உளர் என வரினும் - மகளிரைக் கொலைசெய்தவர்களுண்டென்று சொல்லவருவதானாலும், வந்த தூதரை கொன்றுளார்கள் வேந்தர் யாவரே - (ஒருவரனுப்ப) வந்த தூதர்களைக் கொன்றவர்களான அரசர்கள் யாவருளர்? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)

பூர்வத்தில் தேவர்கட்கும் அசுரர்கட்கும் பெரும்போர் நடந்தபோது ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் அசுரர்களைத் துரத்த அவர்கள் ஓடிப் பிருகுமுனிவரது ஆச்சிரமத்திலே நுழைந்து அவருடைய பத்தினியாகிய கியாதியென்பவளை அடைக்கலம் புகுதலும், அவள் அபயங்கொடுத்து அசுரர்களை ஒளித்து வைத்துக் காத்துவர, அதனை யறிந்த திருமாலின் அம்சமும் இந்திரன் தம்பியு

மாகிய உபேந்திரமூர்த்தி அவளை யடுத்துப் பகைவரைக் காட்டும்படி வெகுவாய்க் கேட்டும் அவள் இசையாமையால், உபேந்திரர் சக்கராயுதத்தினால் முற்பட அவள்சிரத்தைத்துணித்துப் பிற்பட அசுரர்களை வதைத்தன ரென்பதும்; விரோசனனென்னும் அசுரராசனது மகளும் தூர்ப்புத்தி யுடையளாதலாற் குமதியென்று வழங்கப்படுபவளுமாகிய மந்தரையென்பாள் உலகத்து உயிர்கட்கு மிக்கதீங்கு புரிந்துவர, அவளைத் தேவேந்திரன் வச்சிராயுதத்தாற் கொன்றிட்டன னென்பதும் முதலிய வரலாறுகள்பற்றி, 'மாதரைக் கொலை செய்தார்க ளுளரென வரினும்' எனப்பட்டது. (பெண் கொலை பெரும்பாவமென்பதுபற்றித் தாடகையைக் கொல்லுதற்குக் கூசிய இராமபிரானுக்கு விசுவாமித்திரமுனிவர் இவ்வரலாறுகளை எடுத்துக் கூறியதுங் காண்க. ("மன்னர்மன்னவன் காதல மற்றுமொன், றின்னம்யானுரைக்கின்றதி யாதெனின், முன்னோர் கால நிகழ்ந்த முறைமையீ, தென்ன வோதலுற்றான் றவத்தீறிலான்", "பிருகுவென்னும் பெருந்தவன்றன்மனை, வருகயற்கட்கியாதிவல்லாசுரர்க், குருகுகாதலுற வுறவாதலே, கருதி யாவி கவர்ந்தனனேமியான்", "வானகத்தினின் மண்ணினின் மன்னுயிர், போனகந்தனக் கென்றெணும் புந்திய, தானவள் குமதிப்பெயராடனை, யூனொழித்தனன் வச்சிரத்தும்பர்கோன்", "ஆதலா லரிக்காகண்டலன்றனக்,கோதுகீர்த்தியுடைய வல்லாதிடை, யேதமென்பன வெய்தியவோ சொலாய், தாதடர்ந்து தயங்கிய தாரினாய்" என்றவை, பாலகாண்டத்துத் தாடகைவதைப்படலத்தில் வந்த செய்யுள்கள்.)

ஸ்த்ரீஹத்திதோஷத்தினும் கொடியபாவத்தை விளைப்பது தூதரைக் கொல்லுத லென்பது, 'மாதரைக் கொலைசெய்தார்களுளரெனவரினும் வந்த தூதரைக் கொன்றுளார்கள் யாவரே' என்றதனாற் போதரும். ("இரவலரினை யவரேத்துநாவலர், விரவியநூதுவர்விருத்தர்வேதிய, ரரிவையர் வெஞ்சமரஞ் சுவோர் பெருங், குரவ ரென்றிவர்களைக் கோறல் பாவமே", "மூத்தவ ரிளையோர் வேத முனிவரர் பிணியின் மிக்கோர், தோத்திர மொழிவோர் மாதர் தூதர்... றிவரைக் கொல்லிற், பார்த்திவர்தமக்கு வேறுபாவ மற்றிதனினிலை, பூத்தெரிதொடையாய் பின்னுநரகினும்புகுவ ரென்றான்" என்ற வில்லிபுத்தூரார் பாரதச்செய்யுள்களும், இங்கு நோக்கத்தக்கவை.)

பொகுட்டு - தாமரைமலரினிடையே யிருக்கின்ற கொட்டை; ("உந்திக் கமலம் விரிந்தால் விரியும் உகக்கடையில், முந்திக்குவியி லுடனேகுவியும் இம்மூதண்டமே," "அண்டப்பெருங் கோயிற்கெல்லாம்..............புண்டரிகமொட்டின்பொகுட்டே புரையம்மா," "புறக்குன்றுபுல்லிதழ் முந்நீர்பிரசம் பொருவில் செம்பொன், னிறக்குன்று கன்னிகை யெண்கிரிதாது நிலமதனுட், பிறக்குந்துகண் முதுமாசுணநாளம் பிரமன்வண்டு, சிறக்குந்திகிரியரங்கேசருந்திச் செழுமலர்க்கே" என்றபடி) திருமாலின் உந்தித்தாமரை மலரினிடையே தோன்றியதனால், 'அண்டப்பொகுட்டு' எனப்பட்டது. 'அதன்புறம்' என்றது, பகிரண்டங்களை. (கக௩)

கககச. பகைப்புலனணுகியுய்த்தார்பகர்ந்ததுபகர்ந்துபற்றார்
மிகைப்புலனடக்கிமெய்ம்மைவிளம்புதல்விரதம்பூண்ட
தகைப்புலக்கருமத்தோரைக்கோறலிற்றக்கார்யார்க்கு
நகைப்புலன்பிறிதுண்டாமேநங்குலநவையுண்டாமே.

(இ - ள்.) பகை புலன் அணுகி - பகைவர்களுடையஇடத்தை (த் துணிவுடன்) சேர்ந்து, உய்த்தார் பகர்ந்தது பகர்ந்து—(தம்மை) ஏவியனுப்பியவர்கள் சொன்ன செய்தியை (ப் பகைவரிடத்தில் அஞ்சாது) சொல்லி, பற்றார் மிகை புலன் அடக்கி - (தாம்சொல்லுஞ் செய்தியினால்) அப்பகைவர்கட்கு உண்டாகுங் கோபமாகிய உணர்ச்சியை (த் தாம் மீளவுஞ் சொல்லுஞ் சொற்களால்) அடக்கி, மெய்ம்மை விளம்புதல் விரதம் பூண்ட - உண்மையான சொல்லைச் சொல்லுதலையே (தமக்குஉரிய) விரதமாகக்கொண்டு அங்ஙனம் நடத்துகிற, தகை புலம் கருமத்தோரை - தகுதியான அறிவையும் தொழிலையுமுடைய தூதுவர்களை, கோறலின் - (நீ) கொல்லுதலினால், தக்கார் யார்க்கும் நகை புலன் உண்டாமே - (அறிவொழுக்கங்களினால்) தகுதியுடையவர்களெல்லார்க்கும் இகழ்ந்துசிரித்தற்குஇட முண்டாகுமே; பிறிது - மற்றும், நம் குலம் நவை உண்டாமே - நமதுகுலத்துக்குக் குற்றமுண்டாகுமே; (எ - று.)—ஏகாரமிரண்டும் - தேற்றம்.

துணிவுடைமை, பகைவர்க்கு அஞ்சாமை, சமயோசிதமாகப்பேசுந்திறமுடைமை, வாய்மை, அறிவு, திறமை முதலிய முக்கியமான தூதலக்ஷணங்களைக் கருதி, 'பகைப்புலனணுகி யுய்த்தார் பகர்ந்தது பகர்ந்து பற்றார்மிகைப் புலனடக்கி மெய்ம்மைவிளம்புதல் விரதம்பூண்ட தகைப்புலக்கருமத்தோர்' என்றார். முதலடியில், புலன் - இடம் : நாடுநகரம். பகை - பகைவர்க்குப் பண்பாகுபெயர். பகைவரதுகுணத்தை அவரது இடத்தின்மே லேற்றி 'பகைப்புலன்' என்றதாகவுங் கொள்ளலாம்; உபசாரவழக்கு. மிகை - வரம்பு கடத்தல் ; இங்குக் கோபத்தின்மேல் நின்றது. ("மிகுதியான் மிக்கவை செய்தாரை" என்ற விடத்து, மிகுதியென்பது மனச்செருக்கும், மிக்கவையென்பது தீயவையு மாதல் காண்க. புலன் - உணர்ச்சி. இனி, பற்ற ஆர் மிகை புலன் அடக்கி என்று எடுத்து - (பிரபஞ்சவிஷயங்களில்) ஆசை பொருந்திய வலிய ஐம்பொறிகளை யடக்கி யென்றும் பொருள்கொள்ளலாம் ; பொருளின்பங்கள்காரணமாக வேறுபடாத தூய்மை தூதலக்ஷணமாத லுணர்க : ("தூய்மை துணைமை துணிவுடைமை யிம்மூன்றின், வாய்மை வழியுரைப்பான்பண்பு," "கற்றுக்கண்ணஞ்சான் செலச்சொல்லிக் காலத்தால், தக்கதறிவதாந் தூது" என்ற திருக்குறள்கள் இங்கு நோக்கற்பாலன.) விரதமாவது - இன்ன அறஞ் செய்வே னெனவும் இன்ன பாவம் ஒழிவே னெனவும் தம் ஆற்றலுக்கு ஏற்ப வரைந்து கொள்ளப்படுவது. வேறாக [இகழ்ச்சியாக]ச் சிரித்தற்கு இடமுண்டா மென்ற பொருளில் 'நகைப்புலன் பிறிதுண்டாம்' என்றதாகவுங் கொள்ளலாம். (ககச).

கககு. முத்தலையெஃகன்மற்றைமுராந்தகன்முனிவன்முன்னா
வத்தலைநம்மைநோனாவமரர்க்குநகையிற்றாமா
லெத்தலையுலகங்காக்கும்வேந்தநீவேற்றோரேவ
லித்தலையெய்தினானைக்கொல்லுதலிழுக்கமின்னும்.

(இ - ள்.) எத்தலை உலகம் காக்கும் வேந்த - எவ்விடத்துமுள்ள உலகங்களை [எல்லாவுலகங்களையும்] ஆளுகின்ற அரசனே! நீ—, வேற்றோர் ஏவ இ தலை எய்தினானை கொல்லுதல் - அயலார் ஏவியனுப்ப (அதன்படி) இங்கு வந்து சேர்ந்தவனான இவனைக் கொல்லுதல், இழுக்கம் - குற்றமாகும்; (ஆதலால் அச்செயல்),—முத்தலை எஃகன் - மூன்றுதலைகளையுடைய சூலாயுதத்தையுடையவனான சிவபிரானும், மற்றை முராந்தகன் முனிவன் - மற்றைப் பிரமவிஷ்ணுக்களும் [ஆகிய திரிமூர்த்திகளும்], முன் ஆ - முதலாக, அ தலை - (நமக்கு) எதிர்த்தலையாயுள்ள, நம்மை நோனா அமரர்க்கும் - நமது ஆக்கத்தைக் கண்டுபொறாத தேவர்கட்கும், நகையிற்று ஆம் - இகழ்ந்து சிரித்தற்கு இடமுடையதுமாம்; இன்னும் - இன்னமும், (யான் சொல்வது கேள்); (எ - று.)— ஆல் - ஈற்றசை.

முத்தலை யெஃகு - முத்தலைவேல்: எனவே, சூலமாயிற்று. முராந்தகன் - முரன் என்ற அசுரனுக்கு அழிவைச் செய்தவன்; தீர்க்கசந்திபெற்ற வடமொழித்தொடர். (முரன் - நரகாசுரனது மந்திரி.) பிரமன் எப்பொழுதும் திருமாலை மனனஞ்செய்துகொண்டிருத்தலால், 'முனிவன்' எனப்பட்டான்; முநி - மநநசீலன்: மநநம் - சிந்தித்தல், தியானித்தல். படைத்தல் காத்தல் அழித்தல் என்ற தொழில்முறைமைபற்றிப் பிரமவிஷ்ணுருத்திரரென்னுங் கிரமம், இங்கு எதிராகக்கூறப்பட்டது; கீழ் வந்த ௪0 - ஆஞ் செய்யுளிலும் இங்ஙனங் கூறினர். இரண்டாமடியில், தலை - பக்கம். 'எத்தலையுலகுங்காக்கும்' என்ற பாடம், முற்றும்மைகொண்டதாம். வேற்றோர் - பகைவர். (கககு)

ககசு. இளையவ டன்னைக் கொல்லா திருசெவி மூக்கொ டீர்ந்து
விளைவுரை யென்று விட்டார் வீரராய் மெய்ம்மை யோர்வார்
களைதியே லாவி நம்பா லிவன்வந்து கண்ணிற் கண்ட
வளவுரை யாமற் செய்தி யாதியுன் றமைபச் சொன்னான்.

(இ - ள்.) வீரர் ஆய் மெய்ம்மை ஓர்வார் - சுத்தவீரர்களாய் உண்மையானநீதிகளை யுணர்ந்தவர்களான அந்த இராமலக்ஷ்மணர்கள், இளையவள் தன்னை கொல்லாது - (நினது) தங்கையான சூர்ப்பணகையைக் கொல்லாமல், இரு செவி மூக்கொடு ஈர்ந்து - இரண்டுகாதுகளையும் மூக்கையும் அறுத்து, விளைவு உரை என்று விட்டார் - (இவ்விடத்துச்) செய்தியை (உனது தமையனுக்குச்) சொல் என்பதாக (அவளை உயிருடன்) அனுப்பிவிட்டார்கள்; (அங்ஙனமிருக்க), ஆவி களைதியேல் - (நின்னிடம் தூதனாய்வந்த இவனது) உயிரை (நீ) போக்கிவிடுவையானால், நம்பால் இவன் வந்து கண்ணில் கண்ட

அளவு உரையாமல் செய்தி ஆதி - நம்மிடத்தில் இவன் வந்து கண்களாற் கண்ட அளவை (இவன்சென்று அவர்கட்கு)ச் சொல்லாதபடி செய்துவிட்டவனாகிறாய், என்று—, அமைய சொன்னான் - தகுதியாக நீதிகூறினான், (விபீஷணன்); (எ - று.)

நமது சூர்ப்பணகை இராமலக்ஷ்மணர்களிடத்திற்சென்று அவர்கட்குத் தீங்குசெய்யத்தொடங்கியபொழுது அவர்கள் அவளைக்கொல்லாமல் மூக்கு முதலிய சிலவுறுப்புக்களை யறுத்தவளவோடு நின்று அவ்விடத்துச்செய்தியை நமக்கு வந்துகூறுமாறு அவளை உயிருடன் ஓட்டிவிட்டனர்; அங்ஙனமிருக்க, நம்மிடம்வந்த அவர்கள் தூதனை மீளவும் அங்குச் சென்று இவ்விடத்துச் செய்தியை அவர்கட்குக்கூறலாகாதபடி நீ கொல்லுதல் தகுதியன்று என்றனனென்க. இங்கிருந்து போனவளை அவர்கள் கொல்லாது நமக்குச்செய்தி கூறுமாறு விட்டிருக்க, அங்கிருந்து வந்தவனை நாம் அங்ஙனம் விடாமற் கொல்வது, நமது பராக்கிரமத்துக்குக் குறைவாகும்; எங்ஙனமெனின், நமது நிலைமைகளை அவர்களறிந்துகொள்ளுமாறு இவன் சென்று சொல்லலாகாது என்று பகைக்கு அஞ்சிச் செய்ததாகு மாதலால் என்பது கருத்து. அமையச்சொன்னான் - (அவ்விராவணனது கோபம்) அடங்குமாறு சொன்னானெனினுமாம். (கசசு)

வேறு.

[அதுகேட்ட இராவணன் அநுமானை வால்கொளுத்திவிடச் சொல்லுதல்.]

கசஎ. நல்லதுரைத்தாய் நம்பியிவ னவைசெய் தானே யானாலுங்
கொல்லல் பழுதே போயிடைநீ கூறிக் கொணர்தி கடிதென்
றொல்லை வாலை மூலமறச் சுட்டு நகரைச் சூழ்போக்கி [னாத்
யெல்லை கடக்க விடுமின்க ளென்றா னின்றா ரிரைத்தெழுந்தார்.

(இ - ள்.) நம்பி - உத்தமகுணமுள்ளவனே! நல்லது உரைத்தாய் - நல்ல நீதியையே கூறினாய்; இவன் நவை செய்தானே ஆனாலும் - இந்த வானரன் (நமக்குப்) பொல்லாங்குகளைச் செய்தனனே யாயினும், கொல்லல் பழுதே - (அவனை நாம) கொல்வது குற்றமே; 'நீ—, இடை போய் - இவ்விடத்தினின்று சென்று, கூறி - (இவ்விடத்துச்செய்திகளையெல்லாஞ்) சொல்லி, கடிது கொணர்தி - விரைவில் (அவ்விராமலக்குமணர்களை) அழைத்துக்கொண்டு வருவாயாக', என்னா - என்றுசொல்லி, தொல்லை வாலை - பழமையான [பெரிய] (இவ்வானரத்தின்) வாலை, மூலம் அற சுட்டு - அடியோடு அழியும்படி (நெருப்பைக்கொண்டு) எரித்து, நகரை சூழ்போக்கி - (நமது இவ்விலங்கை) நகரத்தைச் சுற்றிவர (இக்குரங்கை)க்கொண்டுபோய், (பின்பு) எல்லைகடக்க விடுமின்கள் - இந்நகரினெல்லையைக் கடந்துபோம்படி துரத்திவிடுங்கள், என்றான் - என்று (விபீஷணன் முதலிய அரக்கர்களை நோக்கிச்) சொன்னான்; நின்றார் இரைத்து எழுந்தார் - (உடனே) அங்கு நின்ற

அரக்கர்கள் (அக்கட்டளையை மேற்கொண்டு) ஆரவாரஞ்செய்து எழுந்தார்கள்; (எ - று.)

போ யிடை நீ கூறிக்கொணர்தி கடிது' என்றது, அரக்கர்கள் அநுமானுக்குச் சொல்லவேண்டிய வார்த்தை. நம்பி - ஆடவரிற்சிறந்தவன்; ஆண்பாற்சிறப்புப்பெயர்: இங்கு, அண்மைவிளி. தொல்லை வால் - நெடுநாளாக வளர்ந்து நீண்ட வால் என்றபடி. எமக்குச் சிறிதும் அச்சமில்லை, நமது நகரமுழுவதையும் இவன் நன்றாகப்பார்த்துக்கொண்டுபோகுக என்பது 'நகரைச்சூழ்போக்கி' என்பதனா லுட்கோள். பிந்தினவாக்கியத்தில் 'விடுமின்கள்' என்ற பன்மை வந்தது, சபையிலுள்ள அரக்கர்கள் பலரையும் நோக்குதலால்.

இதுமுதற் பதினொருகவிகள் - பெரும்பாலும் மூன்றாஞ்சீரும் ஆறாஞ்சீரும் காய்ச்சீர்களும், மற்றை நான்கும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்குகொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (கசஎ)

[அநுமானது பாசபந்தத்தை இந்திரசித்து விடுவிக்க, அரக்கர்கள் கயிறு கொண்டு கட்டியிழுக்கத்தொடங்குதல்.]

சகஅ. ஆயகாலத்தயன்படையோடிருப்பவாகாதனலிடுத
றாயபாசமெனப்பலவுங்கொணர்ந்துபிணிமின்றோளென்று
மேயதெய்வப்படைக்கலத்தைவிட்டானமரர்போர்வென்றா
னேயெனுமுன்னிடைபுக்குத்தொடைவன்கயிற்றாற்பிணித்தீர்த்தார்.

(இ - ள்.) ஆய காலத்து - இங்ஙனமாகிய அப்பொழுது,—அமரர் போர் வென்றான் - (முன்பு) தேவர்கள் எதிர்த்துச்செய்த போரில் வெற்றிகொண்டவனான இந்திரசித்து,—'அயன் படையோடு இருப்ப அனல் இடுதல் ஆகாது - பிரமாஸ்திரத்தினது பிணிப்புடனிருக்கையில் நெருப்பையிட்டெரித்தல் தகுதியன்று; தூய பாசம் என பலவும் கொணர்ந்து தோள் பிணிமின் - சிறந்த [வலிய] கயிறென்று உள்ளவைபலவற்றையுங் கொண்டுவந்து (அவற்றைக்கொண்டு இவனது) தோள்களைக் கட்டுங்கள்,' என்று - என்று (அரக்கர்களைநோக்கிச்) சொல்லி, மேய தெய்வம் படைக்கலத்தை விட்டான் - (அவ்வநுமானதுஉடம்பிற் பாம்புவடிவமாய்ப்) பொருந்தியிருந்த தெய்வத்தன்மையுள்ள பிரமாஸ்திரத்தை விடுவித்தான்; (அவ்விந்திரசித்தின் கட்டளைப்படியே இராக்கதர்கள்), ஏ எனு முன் இடை புக்கு - ஏயென்று ஒருமுறைசொல்லுதற்குமுன்னமே [மிகவிரைவிலே என்றபடி] அவ்விடத்திற்கு வந்து, தொடை வல் கயிற்றால் பிணித்து ஈர்த்தார் - ஒன்றோடொன்று தொடர்ச்சிப்படுத்திய வலிய பலகயிறுகளைக் கொண்டு (அநுமானைக்) கட்டியிழுக்கலானார்கள்; (எ - று.)

இந்தப்பிணிவீட்டுபடலத்திற்கு உயிர்நிலைச்செய்யுள், இது; நாகபாசத்தின்பிணிப்பை இந்திரசித்து விடுவித்தமை கூறுதலின். இச்செய்யுளின் ஈற்றடி, தொகுத்துச்சுட்டல்; அடுத்த நான்குசெய்யுள்களும், இதன் வகுத்துக்காட்டலாகும்.

'பாசமென' என்றதன்பின், 'உள்ளவை' என்பது வருவிக்க. இனி, இரண்டாமடிக்கு - பரிசுத்தமான பிரமபாசத்தால் (இதுவரை கட்டியிருந்தது) போல (உறுதியாக இனிக் கயிறுகள்) பலவற்றையுங் கொண்டு தோள்கட்டுங்களென்றுசொல்லி யென வுரைப்பினு மமையும். படைக்கலம் என்பது, போர்க்குஉரிய கருவி யென்று காரணப்பொருள்பெறும். படைக்கலத்தை விடுதல் - மந்திரபலத்தோடு ஸந்தாநஞ்செய்த அஸ்திரத்தை உபசங்காரஞ் செய்தல்; வாங்கிவிடுதே லென்க: அப்பாசத்தின்கட்டை அவிழ்த்துவிட்டன னென்றவாறு. 'எயெனுமுன்' என்றது, விரைவுக்குறிப்பு. ஒன்றோடொன்று முடிந்தும் பலசேர்த்துத்திரித்தும் பெரிதாக்கப்பட்ட வலிய கயிறுகளினு லென்பது, 'தொடைவன்கயிற்றால்' என்பதன் பொருள்: தொடை - தொடுத்தல், தொடர்ச்சிப்படுத்தல். 'இடைபுக்கு' என்பதற்கு - பலஇடங்கட்குப் போய் (க் கயிறுகள்கொணர்ந்து) என்றலு மொன்று. (ககஅ)

[அரக்கர்கள் கண்டகயிறுகளையெல்லாங் கொண்டுவருதல்.]

கககூ. நாட்டினகரினடுவுள்ளகயிறுநவிலுந்தகைமையவே
வீட்டினூசனெடும்பாசமற்றதேரும்விசிதுறந்த
மாட்டும்புரவியாயமெலாமருவிவாங்குந்தொடையழிந்த
பூட்டும்வல்லின்மூட்டோடும்புரசையிழந்தபோர்யானை.

(இ - ள்.) வீட்டின் ஊசல் நெடும் பாசம் - வீடுகளில் ஊஞ்சல்கட்டியிருந்த நீண்டகயிறுகளும், அற்ற - (அரக்கர்கள் அவிழ்த்துக்கொண்டுபோனதனால் அங்கங்கு) இல்லையாயின; தேரும் - தேர்களும், விசி துறந்த - கட்டுக் கயிறுகளை இழந்தன; மாட்டும் புரவி ஆயம் எலாம் - (பந்திகளிற்) கட்டப்பட்டிருந்த குதிரைக்கூட்டங்களெல்லாம், மருவி வாங்கும் தொடை அழிந்த - தம்மைக்கட்டியவிழ்க்குங் கயிறுகளொழியப்பெற்றன; போர் யானை - போர்த்திறமமைந்த யானைகள், பூட்டும் வல்லி மூட்டோடும் புரசை இழந்த - (தமதுகால்களிற்) பூட்டுங் கயிறுகளின் சேர்க்கையையும் கழுத்திடுகயிற்றையும் இழந்தன: (என்றால்),—நாட்டில் நகரில் நடு உள்ள கயிறு நவிலும் தகைமையவே - அந்தநாட்டிலும் நகரத்திலும் (ஆங்காங்கு) உள்ள வெறுங்கயிறுகளெல்லாம் (கொணர்ந்தாயினவென்று) சொல்லவேண்டுந் தன்மையுடையனவோ? [அல்ல வென்றபடி]; (எ - று.)

ஊசல் தேர் குதிரை யானை இவைகளில் மிகவும் உபயோகமாயிருந்த கயிறுகளெல்லாவற்றையுமே இதற்காக அரக்கர்கள் அவிழ்த்துக்கொண்டு போய்விட்டார்களென்றால், நாடுநகரங்களிலுள்ள வெறுங்கயிறுகளையெல்லாம் அவர்கள் எடுத்துக்கொண்டுபோனார்க ளென்பது கூறவேண்டுவதொன்றோ? என்பதாம்; தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி. ஏகாரம் - எதிர்மறை. வல்லீ - வடசொல்; இது - உவமையாகுபெயராய், கால்விலங்கையும், அவ்விலங்குபோலக் கால்களைக்கட்டுங் கயிற்றையுங் குறிக்கும். மூட்டு-பொருத்து, இசைப்பு. மதங்கொள்ளுங்காலத்தில் யானைகளை வசப்படுத்துதற்கு உபயோக

மாகவும், ஏறுபவர் கால்களை மாட்டிக்கொள்ளுதற்கு ஆதாரமாகவும், யானைகளின் கழுத்தில் எப்பொழுதுங் கயிறு கட்டிவைத்தல், இயல்பு; அதற்கு 'புரசை' என்று ஒருபெயர். தேர்விசி - தேரிற்கட்டியிழுக்கும் வடம். (கககூ)

[கண்ட கயிறுகளையெல்லாங் கொண்டு கட்டுதல்.]

க௨0. மண்ணிற்கண்டவானவரைவலியிற்கவர்ந்தவரம்பெற்ற
வெண்ணற்கரியவேனையரையிகலிற்பறித்ததமக்கியைந்த
பெண்ணிற்கியையுமங்கலத்திற்பிணித்தகயிறேயிடைபிழைத்த
கண்ணிற்கண்டவன்பாசமெல்லாமிட்டுக்கட்டினார்.

(இ - ள்.) மண்ணில் கண்ட - (இராவணனது திக்குவிஜயயாத்திரைக் காலத்தில்) நிலவுலகத்திற் (பலவேறுதேசங்களிற்) காணப்பட்டுக் கவர்ந்து கொண்டுவந்த (பலவகைக்) கயிறுகளும், வானவரை வலியின் கவர்ந்த - தேவர்களிடத்தினின்று வலியக்கவர்ந்துகொண்டுவந்த பாசங்களும், வரம் பெற்ற - (தேவர்களைக்குறித்துத் தாம்தாம் தவஞ்செய்து) வரமாகப்பெற்ற பாசங்களும், எண்ணற்கு அரிய ஏனையரை இகலின் பறித்த - எண்ணியளவிட முடியாத [மிகப்பல] (அசுரர்முதலிய) மற்றையோரிடத்தினின்று வலியப்பறித்துக் கொண்டுவந்த பாசங்களும், (ஆக), கண்ணில் கண்ட வல் பாசம் எல்லாம் - தங்கள்கண்களிலேகண்ட வலிய கயிறுகளையெல்லாம், இட்டு - கொணர்ந்து சேர்த்து, கட்டினார் - (அரக்கர்கள் அநுமானைக்) கட்டினார்கள்; தமக்கு இயைந்த பெண்ணிற்கு இசையும் மங்கலத்தில் பிணித்த கயிறே - (அவ்வரக்கர்கள்) தம்தமக்கு ஏற்ற மங்கையர்க்கு அமைந்த விவாககாலத்திலே (கழுத்திற்) கட்டிய தாலிக்கயிறுகள் மாத்திரமே, இடை பிழைத்த - அச்சமயத்திலே அறுத்துக்கொண்டுபோகப்படாமல் தப்பின; (எ - று.)

அரக்கியர்களின் தாலிக்கயிறுதவிர மற்றைக்கயிறுகளையெல்லாங்கொண்டு அரக்கர்கள் அநுமானைக்கட்டினாரென்பதாம். 'வானவரைவலியிற் கவர்ந்த', 'வரம்பெற்ற', 'இகலிற்பறித்த' என்றது, காலபாசம் வருணபாசம் போன்றவை முதலியன. பாசம் - கயிற்றுவடிவமான ஓர் ஆயுதம். 'மண்ணிற்கொண்ட' என்ற பாடமும் பொருந்தும். 'வானவரை' 'ஏனையரை' என்றவை - உருபுமயக்கம். எண்ணற்கு அரிய - நினைத்தற்குங்கூடாத [மிகக்கொடிய பராக்கிரமமுடையவரான] என்றும் உரைக்கலாம். 'பெண்' என்றது, சாதியொருமை. இசையும் மங்கலத்தின் - உரியமங்கலத்திற்காக என்றுமாம். ஏ - பிரிநிலை. 'இடைபிழைத்த' என்றதில், மற்றும் பல ஆபரணங்களினிடையிலே யிருந்ததனால் அவர்கள் கண்ணுக்கு அகப்படாமல் அரிதில் தப்பின வென்பதும் தோன்றும்; இனி விரைவில் அரக்கர்களனைவரும் அழிவதனால் அறுபடப்போகிற அரக்கியரின் மங்கலநாண்கள் இடையிலே சிறிதுகாலம் வலியுற்றுநின்றன வென்ற கருத்துந் தொனித்தல் காண்க. மூன்றுமடி, நகைச்சுவை [ஹாஸ்யரஸம்] தோன்ற நின்றது. இட்டென்றது, 'கொண்டு' என்றதுபோல மூன்றும்வேற்றுமைச் சொல்லுருபெனத்தக்கதுமாம். (க௨0)

[அப்பொழுது அநுமான் அகமகிழ்ச்சிகொள்ளுதல்.]

கஉக. கடவுட்படையைக்கடந்தறத்தினாணைகடந்தேனாமே
விடுவித்தளித்தார்தெவ்வரேவென்றேனன்றேயிவர்வென்றி
சுடுவிக்கின்றதிவ்வூரைச்சுடுகென்றுரைத்ததுணிவென்று
நடுவுற்றமையமுறநோக்கிமுற்றுமுவந்தானவையற்றான்.

(இ - ள்.) கடவுள் படையை கடந்து அறத்தின் ஆணை கடந்தேன் ஆகாமே - (யான்) பிரமாஸ்திரத்தைமீறித் தருமநிலையைத்தவறினேனாகாத படி, தெவ்வரே - பகைவர்களாகிய இராக்கதர்களே, விடுவித்து அளித்தார் - (என்னை அந்தஅஸ்திரத்தினின்று) விடுவித்து நன்மைசெய்தார்கள்; இவர் வென்றி வென்றேன் அன்றே - (இனி) இவ்வரக்கர்களின் வெற்றியைத் தவறாமல் விரைவிலே வென்றுவிடுவேனன்றே; சுடுவிக்கின்றது - (இராவணன் அரக்கர்களைக்கொண்டு என்னை வால்) கொளுத்துகின்ற முயற்சி, இவ்வூரை சுடுக என்று உரைத்த துணிவு - 'இந்தஊரை நீ எரிப்பாயாக' என்று (எனக்குச்) சொன்ன தெளிபொருளாகும், என்று - என்று எண்ணி, நடு உற்ற - (அவ்வரக்கர்களின்) நடுவிலே பொருந்தி, அமையம் உற நோக்கி - (அவர்களிடத்தினின்று தான் நீங்குதற்குஉரிய) சமயத்தை நன்றாக ஆலோசித்துக்கொண்டு, முற்றும் உவந்தான் - நிறைந்தமகிழ்ச்சி கொண்டிருந்தான்; (யாவனெனில்),—நவை அற்றான் - யாதொருகுற்றமுமில்லாதவனான அநுமான்; (எ - று.)

பிரமாஸ்திரத்தைக் கடக்கும் வல்லமை தனக்கு இருக்கவும் அநுமான் அங்ஙனஞ் செய்யாது அந்தஅஸ்திரத்தின்கட்டுக்கு உட்பட்டிருந்தது, தேவர்களைப்பெருமைப்படுத்தவேண்டுமென்னுந் தருமசிந்தையினாலென்பது, கீழ்ப் படலத்தின் ருகூ-ஆஞ் செய்யுளில் விளங்கிற்று. அங்ஙனம் யான் பிரமாஸ்திரத்தைக்கடந்து தருமத்தின்வரம்பை அலக்ஷ்யமாய் அவமதித்து மீறினேனென்ற பழிப்புக்கு இடமில்லாதபடி இப்பொழுது அரக்கர்கள் என்னை விடுவித்தது மிகநல்லதாயிற் றென்று பாராட்டினர். அளித்தார் - (என்னைப் பழிப்புக்குஉள்ளாகாதபடி) பாதுகாத்தன ரென்க. அவ்வகையான தருமசங்கடம் தீர்ந்ததனால், இனி இவர்களைத் தடையின்றி வெல்வே னென்றவாறு. அவன் என்னைச் சுடுவிப்பதை இவ்வூரைச்சுட்டெரிக்குமாறு தூண்டியதாகக் கொள்வேன் யான் என்பது, மூன்றுமடியின்கருத்து. மேல் கஙஙூ-ஆஞ்செய்யுளில் "வழுவுறுகாலமீதென்றெண்ணினன்" என வருவதை நோக்குமிடத்து, இங்கு 'அமையமுற நோக்கி' என்ற பாடமே இனிது பொருந்துகின்றது; இவர்களினின்று தான்தப்பிப்போதற்குஉரிய சமயத்தை நன்குஎதிர்நோக்கி யென்க. 'அமையவுறநோக்கி' என்ற பாடத்துக்கு, அமைய - பொருந்த [சமயோசிதமாக] என்று பொருள் காண்க. இங்ஙனம் அநுமான் தானாகவே வேண்டுமென்று கட்டுப்பட்டிருத்தலால், பகைவர்கையிற் கட்டுப்பட்டானென்ற பழிப்புக்கு இடமில்லை யென்பதுந் தோன்ற 'நவையற்றான்'

என்றதாகவுங் கொள்ளலாம்; நவை - இகழ்ச்சி. அழிவற்றவன் [சிரஞ்சீவி] என்ற பொருளில் 'நவையற்றான்' என்றதுமாம்.

'வென்றேன்' என்ற இறந்தகாலம், நிச்சயமும் விரைவும் பற்றியது; காலவழுவமைதி: 'இவர்வென்றி சுவிக்கின்றது' என்பதற்கு-இவர்கள் தாங்கள் என்னை வென்றிட்டதாகக் கருதி எரிக்கின்ற முயற்சி யென உரைப்பாருமுளர். (கஉக)

[அநுமான் அடங்கிச்செல்லுதல்.]

ககஉ. நொய்யபாசம்புறம்பிணிப்பநோன்மையிலன்போலுடனுணங்கி, வெய்யவரக்கர்புறத்தலைப்பவீடுமுணர்ந்தேவிரைவில்லா, வையன்விஞ்ஞைதனையறிந்துமறியாதான்போலவிஞ்ஞையெனும், பொய்யைமெய்போனடிக்கின்றயோகிபோன்றான்போகின்றான்.

(இ - ள்.) நொய்ய பாசம் புறம் பிணிப்ப - (தனது போராற்றலுக்கு முன்) எளியனவாகின்ற கயிறுகள் (தனது) உடம்பைக் கட்ட, நோன்மை இலன் போல் உடல் நுணங்கி - (அவற்றைப்பொறுக்கும்) வலிமையில்லாதவன்போல உடம்பு துவண்டு, வெய்ய அரக்கர் புறத்து அலைப்ப - கொடிய இராக்கதர்கள் எப்புறத்துஞ்சூழ்ந்துநின்று இழுத்துவருத்த, வீடும் உணர்ந்தே - (அந்தச்சங்கடத்தினின்று தன்னை) விடுவித்துக்கொள்ளும் வகையைத் தான் அறிந்திருந்தே, விரைவு இலா - (அதற்கு ஏற்ற சமயத்தை ஆலோசித்துக்கொண்டு) விரைவு கொள்ளாத, ஐயன் - சிறந்தவனான அநுமான்,— விஞ்ஞைதனை அறிந்தும் - பிரஹ்மவித்தையைத் தான் அறிந்திருந்தும், அறியாதான் போல் - (அதனை) அறியாதவன்போலிருந்து, அவிஞ்ஞை எனும் பொய்யை மெய்போல் நடிக்கின்ற - அவித்தையென்கிற பொய்ப்பொருளை மெய்ப்பொருள் போலக் கொண்டு வெளிக்குக்காட்டியொழுகுகிற, யோகி - யோகியை, போன்றான் - ஒத்தவனாய், போகின்றான் - (தன்னை யிழுக்கின்ற அவர்களின்பின்னே) செல்லலானான்; (எ - று.)

மிசவலிமையையுடைய தனதுஉடலை வருத்துந் திறம் அக்கயிறுகட்கு இல்லாதிருக்கவும் அந்தப் பாசபந்தத்தைப் பொறுக்கும் வலிமையில்லாதவன் போல அதற்கு உட்பட்டு, உடம்புதுவளுதல்கொண்டு, கொடிய அரக்கர்களின் சூழ்ச்சியினின்று தன்னைவிடுவித்துக்கொள்ளும் வகையை யறிந்திருந்தும் அதற்கு ஏற்ற சமயத்தை எதிர்பார்ப்பதனால் விரைவுபடாமல் அவ்வரக்கர்க்கு உட்பட்டு அவர்களிழுக்கிறவழியெல்லாம் அநுமான் சென்றுகொண்டிருந்தனன்; அதற்கு, யோகமுதிர்ச்சியினால் தத்துவப்பொருள்களை யுணர்ந்த ஒருயோகி, தன்னை மெய்யுணர்வில்லாதவன் போலக் காட்டிப் பொய்யுணர்வாகிய அவித்யையை மெய்யுணர்வாக மேற்கொண்டு பிரபஞ்சத்தவரோடொத்து நடித்தாற்போலு மென உவமை கூறினர். யோகிகள்சிலர் ப்ரஹ்மவித்தைதேர்ந்து அவித்தியாசம்பந்த மில்லாதிருந்து உலகத்தவரை

நல்வழிப்படுத்துதற்பொருட்டுத் தாமும் அவரோடொத்துப்பயிலுமாறு பிர கிருதிவசப்பட்டவர்போன்று நடித்ததனை இதிஹாஸபுராணங்களிற் காண லாம். சுகர் ஜடபரதர் நம்மாழ்வார் முதலிய ஆழ்வார்கள் இவர்களை இத் திறத்தவரென்னலாம். பிரஹ்மகாண்டம் கர்மகாண்டம் என்ற இரண்டனுள் ப்ரஹ்மகாண்டம் வித்தை யெனப்படுதலால், மற்றொன்றான கர்மகாண் டம் அவித்தை யெனப்படுதலு முண்டு; அங்ஙனம் பிரஹ்மவித்தை தேர்ந்தவ னுக்கு யாகாதிகிரியைகள் வேண்டுவதில்லையாயினும் அவன் சிற்சிலசமயங் களில் உலகத்தவரை நல்வழிப்படுத்துதற்பொருட்டு அந்தக் கருமாநுஷ்டானஞ் செய்தலு முண்டு: அதுவும் இங்குப் பொருந்தும். திருவிருத்தத்தில் நம்மாழ் வார் "பொய்ந்நின்றஞானம்" என்றாற்போல, இவர் 'அவிஞ்சையெனும் பொய்' என்றார். எனவே, அங்கு வியாக்கியானங்களிலும் அரும்பதவுரை களிலும் - ஆன்றோர் கூறிய அர்த்தவிசேஷங்களில் ஏற்றவற்றை இங்குங் கொள்ளலாம். பிரஹ்மஜ்ஞாநமுடையார் பாரமார்த்திகதசையில் மற்றை யாவும் பொய்யென்று உணர்ந்திருந்தும் வியவகாரதசையில் தாம் அந்தஞான மில்லாதவர்போலவே அனைத்தையும் மெய்யாகக்கொண்டு ஒழுகி நடிக்கிற சம்பிரதாயமும் இங்குக் கருதத்தக்கது. பரமுத்தி நேர்கிற வரையில் ஜீவந் முக்தரிருக்கிறநிலை இத்தன்மைத்தென்ப. சத்தியஞானத்துக்குமாறாகிய திரி புணர்வு ஆதலால், 'அவிஞ்சையெனும் பொய்' எனப்பட்டது. அற்பமான ஆசாபாசம் புறத்தே பிடித்திழுக்க அதனையகற்றும் வல்லமை யில்லாதவன் போல அதற்குஉட்பட்டு மெலிந்துகாட்டுதலும், கொடிய இந்திரியங்களும் பிரஹ்மஜ்ஞாநமில்லாதவர்களும் புறத்தேயிழுக்கத் தான் வீடுபெறும்வகையை யறிந்திருந்தும் விரைவுகொள்ளாமற் சமயத்தை யெதிர்பார்த்துக்கொண்டு உலகத்தோடொப்ப நடந்துகாட்டுதலும், உபமானப்பொருளாகிய அந்தயோகி யின் நிலையிலும் அமையு மெனக் காண்க. (கஉஉ)

[அரக்கர்கள் அநுமான்வாலில் தீக்கோளுவுதல்.]

கஉங. வேந்தன்கோயில்வாயிலொடுவிரைவிற்கடந்துவெள்ளிடையின்
போந்துபுறநின்றிரைக்கின்றபொறைதீர்மறவர்புறஞ்சுற்ற
வேந்துநெடுவால்கிழிசுற்றிமுற்றநதோய்த்தாரிழுதெண்ணெய்
காந்துகடுந்தீக்கொளுத்தினார்தாரண்டங்கடிகலங்க.

(இ - ள்.) வேந்தன் கோயில் வாயிலொடு விரைவில் கடந்து - (இங் ஙனம் அநுமானைக் கயிறுகள்கொண்டு கட்டியிழுத்துக்கொண்டே) இரா வணனது அரண்மனை வாயிலை விரைவிற்கடந்து, வெள்ளிடையின் போந்து- வெறுவெளியிடத்திலே சென்று, புறம் நின்று - (அநுமானைச்சுற்றி) எப்புற த்தும் நின்று, இரைக்கின்ற-ஆரவாரஞ்செய்கிற, பொறை தீர் மறவர் - பொ றுமையில்லாத அந்த இராக்கதவீரர்கள்,—ஏந்து நெடு வால் புறம் சுற்ற கிழி சுற்றி - உயர எடுக்கப்படுகிற நீண்ட (அந்த அநுமானுடைய) வாலில் எப்புற முஞ்சூழும்படி (பலவகைச்) சீலைகளைக்கொண்டு சுற்றி, முற்றும் இழுது

எண்ணெய் தோய்த்தார் - அவ்வால் முழுவதையும் நெய்யிலும் எண்ணெயிலும் தோய்த்தெடுத்து, காந்து கடுந் தீ கொளுத்தினர் - உக்கிரமான கொடிய நெருப்பைப் பற்றவைத்து, அண்டம் கடி கலங்க ஆர்த்தார் - அண்டகோளம்முழுவதும் (அதிர்ச்சிபெற்றுத் தனது) நிலைகுலையும்படி ஆரவாரஞ் செய்தார்கள் ; (எ - று.)

மறம் - பலம், பராக்கிரமம், கோபம், கொலை ; அதனையுடையவர், மறவர். ஏந்து நெடு வால் - நீண்டுஉயர்ந்த வால். 'புறம்சுற்ற ஏந்து நெடுவால்' என்பதற்கு - பக்கங்களிலெல்லாஞ் சூழ நின்று (தாம் கயிறுகட்டித்) தூக்கிக்கொண்டுவந்த நீண்டவாலெனினு மமையும். கிழி - கிழிக்கப்பட்ட ஆடை. எண்ணெய் - எள்நெய். காந்துதல் - ஒளிவீசுதல், எரிதல்.　　　　(கஉரு)

[மிகப்பல அரக்கர்கள் அநுமனைத் திரளுதல்.]

கஉச. ஒக்கவொக்கவுடன்விசித்தவுலப்பிலாதவுரப்பாசம்
பக்கம்பக்கமிருகூறாய்நூறாயிரவர்பற்றினார்
புக்கபடைஞர்புடைகாப்போர்புணரிக்கணக்கர்புறஞ்செல்வோர்
திக்கினளவாலயனின்றுகாண்போர்க்கெல்லைதெரிவரிதால்.

(இ - ள்.) ஒக்க ஒக்க உடன் விசித்த - பலஒன்றுசேரும்படி ஒருங்கு சேர்த்துக்கட்டின, உலப்பு இலாத உரம் பாசம் - அழியாத வலிமையையுடைய கயிற்றை, பக்கம் பக்கம் - இரண்டுபக்கங்களிலும், இரு கூறு ஆய் - இரண்டுபிரிவாய், நூறு ஆயிரவர் பற்றினர் - லக்ஷம்பேர் பிடித்துக்கொண்டார்கள் ; புக்க - (அவர்களுடன்)வந்த, புடை காப்போர் படைஞர் - பக்கங்களில் நின்று காவல்செய்பவர்களான ஆயுதபாணிகளாகிய வீரர்கள், புணரிக் கணக்கர் - சமுத்திரமென்னுந் தொகையுள்ளவர் ; புறம் செல்வோர் - அவர்கள் பக்கங்களிற் சூழ்ந்து வருபவர்கள், திக்கின் அளவு - (அவ்விடத்தின் நாற்புறத்) திசையெல்லை எவ்வளவு உண்டோ அவ்வளவினர் ; அயல் நின்று காண்போர்க்கு - அதற்கும் அப்பால் நின்று வேடிக்கைபார்க்கவருபவர்கட்கு, எல்லை தெரிவு அரிது - அளவு அறியவொண்ணாதது; (எ - று.)—'ஆல்' இரண்டும் - அசை.

ஒன்று பத்து நூறு ஆயிரம் பதினாயிரம் லக்ஷம் பத்துலக்ஷம் கோடி முதலாக எண்ணப்படுகிற ஒன்றினுமொன்று பதின்மடங்கான எண்வகுப்புக்களுள் இருபத்தாறுதானமாகிய எண், சமுத்திர மெனப்படும். கடல் சாகரம் என வழங்குவதும் அது. அதுவே, இங்கு 'புணரி' என்ற பரியாயநாமத்தாற் குறிக்கப்பட்டது. அதன்தொகை, பதினாயிரங்கோடி கோடாகோடி. உலப்பு இலாத - அறுபடாத என்றபடி ; முடிவற்ற எனினுமாம். இனி, முதலடிக்கு (கை கால் தோள் தொடை கழுத்து இடுப்பு என்ற உறுப்புக்களிலெல்லாம்) ஒன்றிற்போலவே அனைத்திலும் ஒருங்குகட்டப்பட்ட அளவற்ற வலிய கயிறுக ளென்றுங் கொள்ளலாம். லக்ஷம்பேர் இரண்டுகூறாய்ப்பிரிந்து இரண்டு பக்கங்களிலும் (ஒவ்வொருபக்கத்துக்கு ஐம்பதினாயிரவராகப்) பிடித்துக்

கொண்டார்க ளென்பது, இரண்டாமடியின் பொருள் ; மேல் கஈச - ஆஞ் செய்யுளில் "இற்றவராக்கர் நூறாயிரவரும்" என வருதல் காண்க. பின்னி ரண்டடிகட்கு - அவர்களுடன் வந்த சமுத்திரமென்னுந் தொகையினரான ஆயுதபாணிகளாகிய வீரர்கள் அருகில்நின்று காவல்செய்பவர்களாய் எப் புறத்துஞ் சூழ்ந்து செல்லலானார்கள், திசையெல்லையளவாகப் புறத்துநின்று வேடிக்கை பார்ப்பவர்கட்கு அளவு அறியவொண்ணாதது என்று பதவுரை கூறவும் படும். 'திக்கினளவார்' என்றும் பாடமுண்டு. (கஉச)

[அரக்கர்கள் எங்கும் பறையறைந்து செய்திதெரிவித்து அனைவரையும் வேடிக்கைபார்த்தற்கு அழைத்தல்.]

கஉரு. அந்தநகருங்கடிகாவுமழிவித்தக்கன்முதலாயோர்
சிந்தநூறிச்சீதையொடும்பேசிமனிதர்திறஞ்செப்ப
வந்தகுரங்கிற்குற்றதனைவம்மின்காணவம்மென்று
தந்தந்தெருவும்வாயிறொறும்யாருமறியச்சாற்றினார்.

(இ - ள்.) 'அந்த நகரும் கடி காவும் அழிவித்து - அப்படிப்பட்ட இலங் காபுரியையும் (அதனைச்சார்ந்த) பாதுகாவலுள்ள சோலையையும் அழியச் செய்து, அக்கன் முதல் ஆயோர் சிந்த நூறி - அக்ஷகுமாரன் முதலான இராக் கதவீரர்கள் அழியும்படி சிதைத்து, சீதையொடும் பேசி - சீதையுடன் பேசு வதுஞ்செய்து, மனிதர் திறம் செப்ப வந்த - சிலமனுஷ்யர்களுடையதிறமை யை (இராவணனிடத்தே) சொல்லுதற்கு வந்த, குரங்கிற்கு - ஒருகுரங்குக்கு, உற்றதனை - நேர்ந்த துன்பநிலையை, காண-வேடிக்கைபார்த்தற்கு, வம்மின் வம்- வாருங்கள் வாருங்கள்!' என்று—, தம் தம் தெருவும் வாயில்தொறும் யாரும் அறிய சாற்றினர் - (இராக்கதர்கள் அவ்விலங்காபுரி முழுவதிலுமுள்ள) தங்கள் தங்கள் வீதிகளிலும் (அவற்றிலுள்ள) வீட்டுவாசல்களெல்லாவற்றிலும் (போய்) அனைவரும் அறியும்படி பறையறைந்து செய்திகூறினார்கள்; (எ - று.)

செயல்நிகழ்ந்தமுறையை நோக்குமிடத்து 'சீதையொடும் பேசிக் கடிகா வும் அந்தநகரும் அழிவித்து அக்கன்முதலாயோர் சிந்த நூறி மனிதர்திறஞ் செப்ப வந்த குரங்கு' எனக் கூறவேண்டுவதாயினும், தாம் அறிந்த முறை மைப்படி இங்ஙனங் கூறின ரென்க.

'அந்நகர்' என்பதில், அகரச்சுட்டு - பிரசித்தியைக் காட்டும் ; அந்தம் நகர் என்று பிரித்து, அழகியநகர மெனினுமாம். கடி - நறுமணமுமாம்.

[அச்செய்தியைச் சீதை அறிந்து வருந்துதல்.]

கஉசு. ஆர்த்தாரண்டத்தப்புறத்துமறிவிப்பார்போலங்கோடிங்
கீர்த்தார்முரசமெற்றினாரிடித்தாரெழித்தாரெம்மருங்கும்
பார்த்தாரோடிச்சானகிக்கும்பகர்ந்தாரவளுமுயிர்பதைத்தாள்
வேர்த்தாளுலந்தாள்விம்மினாள்விழுந்தாளழுதாள்வெய்துயிர்த்தாள்.

(இ - ள்.) (இராக்கதர்கள்),—அண்டத்து அப்புறத்தும் அறிவிப்பார் போல் - இந்த அண்டகோளத்துக்கு வெளியிலும் [பகிரண்டங்களிலுள்ளார்க்கும்] (இச்செய்தியைத்) தெரிவிப்பவர்கள்போல, ஆர்த்தார் - (மிக்க பேரொலியெழும்படி) ஆரவாரித்தார்கள்; அங்கோடு இங்கு முரசம் ஈர்த்தார் எற்றினர் - அங்கும் இங்குமாக(ப் பலவிடங்களிலும்) பேரிகைவாத்தியங்களை இழுத்துவந்து அடித்தார்கள்; இடித்தார் - இடிமுழக்கம்போலக் கர்ச்சித்தார்கள்; தெழித்தார் - (அநுமானை) அதட்டினார்கள்; எ மருங்கும் பார்த்தார் - (அநுமானை) எல்லாப்பக்கங்களிலும் பார்த்தார்கள்; ஓடி - ஓடிப்போய், சானகிக்கும் பகர்ந்தார் - சீதைக்கும் (இச்செய்தியைக்) கூறினார்கள்; (அதுகேட்டவுடனே), அவளும் - அந்தச்சீதையும், உயிர் பதைத்தாள் - உயிர்துடித்தாள்; வேர்த்தாள் - உடல்வியர்த்தாள்; உலந்தாள் - தவித்தாள்; விம்மினள் - ஏக்கமுற்றாள்; விழுந்தாள் - கீழேவிழுந்தாள்; அழுதாள்—; வெய்து உயிர்த்தாள் - உஷ்ணமாகப் பெருமூச்சுவிட்டாள்; (எ - று.)

'அண்டத்தப்புறத்தும் அறிவிப்பார்போல்' என்றதை, மத்திமதீபமாக, 'முரசமெற்றினர்' என்பதனோடும் கூட்டுக. ஜாநகீ - ஜநகராஜனதுமகளென்று பொருள்படும் தத்திதாந்தநாமம். 'அங்கோடு இங்கு ஈர்த்தார்' என்பதற்கு - (அநுமானை) அங்கும் இங்குமாகப் பலவிடங்களில் இழுத்துச் சென்றார்களென்றும், 'முரசம் எற்றினர் இடித்தார்' என்பதற்கு - பேரிகைகளை அடித்து இடிமுழக்கஞ்செய்தார்களென்றும் பொருள்கொள்ளலாம். 'உலந்தார்' என்ற பாடத்துக்கு, நாவுலர்ந்தனளென்க. (கஉசு)

[சீதை அக்கினிபகவானைப் பிரார்த்தித்தல்.]

கஉஎ. தாயே யனைய கருணையான் றுணையை யேதுந் தகவில்லா, நாயே யனைய வல்லரக்கர் நலியக் கண்டா னல்காயோ, நீயே யுலகுக் கொருசான்று நிற்கே தெரியுங் கற்பதனிற், றாயே னென்னிற் றொழுகின்றே னெரியே யவனைச் சுடலென்றாள்.

(இ - ள்.) 'எரியே - அக்கினிதேவனே! தாயே அனைய கருணையான் துணையை - (எல்லாவுயிர்களிடத்தும்) தாய்போன்ற அருளுடையவனான ஸ்ரீராமபிரானது துணைவனாகிய அநுமானை, ஏதும் தகவு இல்லா நாயே அனைய வல் அரக்கர் - சிறிதும் பெருமைக்குணமில்லாத நாய்போலக்கடைப்பட்ட கொடிய இராக்கதர்கள், நலிய - வருத்த, கண்டால்-(நீ) பார்த்தால், நல்காயோ - (அவன்பக்கல்) அருள்செய்யமாட்டாயோ? உலகுக்கு ஒரு சான்று நீயே - இந்த உலகத்துக்கு ஒப்பற்றசாக்ஷியாவான் நீயே; (ஆதலால்), நிற்கே தெரியும் - உனக்கே (எல்லாந்) தெரியும்; கற்புஅதனில் தூயேன் என்னில் - பதிவிரதா தருமத்தில் யான் பரிசுத்தியுடையவளே யானால், அவனை சுடல் - அந்த அநுமானைச் சுடாதே; தொழுகின்றேன் - (உன்னை நான்) வணங்குகின்றேன்,' என்றாள் - என்று (அக்கினியைக்குறித்துச் சீதை) ஆணையிட்டுக்கூறினாள்.

தாயே என்ற ஏகாரம் - தேற்றத்தோடு, உயர்வுசிறப்பு; மக்களிடத்து அன்பிற்சிறத்தலால், தாயை எடுத்துக்கூறினர். அவள் தன்மக்களிடத்து அன்புடையவளாயிருத்தல்போல எல்லாவுயிர்களிடத்தும் அருளுடையவனென்பார், 'தாயேயனைய கருணையான்' என்றார்; "தாயொக்கு மன்பின்" என்று பாலகாண்டத்தில் வந்ததுங் காண்க. துணை - துணைவன்: பண்பாகுபெயர். 'துணையே' என்று பாடமோதி 'தாயேயனைய கருணையானான அநுமானுக்குத் துணைவனே' என்று விளித்ததாகப் பொருள்கூறி, நினக்குந் துணைவனான வாயுவினது புதல்வ னிவனாதலால், இவனுக்கு நீ துணையாக வேண்டுமென்று குறித்து இங்ஙனங்கூறின ளென்று கருத்துக்கூறுவாரு முளர்; தாயேயனைய கருணையானான அநுமான் நினக்குத் துணைவனாயிற்றேயென்று கூறவும்படும்: தன்பக்கல் தாய்போல அன்புசெய்தவ னென்பாள் அநுமானை 'தாயேயனைய கருணையான்' என்றன ளென்க; "மும்மையாமுலகந்தந்த முதல்வற்கு முதல்வன் றாதாய்ச், செம்மையாலுயிர்தந்தாய்க்குச் செயலென்னுலெளியதுண்டே, அம்மையாயத்தனையவப்பனே யருளின்வாழ்வே" என்று முன்பு (உருக்காட்டு படலத்திற்) சீதை அநுமானை நோக்கிக் கூறியதுங் காண்க. இனி, 'தாயேயனையகருணையானான வாயுதேவனது துணைவனே' என விளித்ததாக் கொள்ளுதலு மொன்று; ஜகத்பிராணனாதலால், வாயுதேவன் 'தாயேயனைய கருணையான்' எனத்தக்கான்; "மாத்திரைப்போழ்து மேனிநிற்குமோ வாயுவின்றி" என மேல் உத்தரகாண்டத்தில் வருவதனை நோக்குக.

தகவு - தகுதி, யோக்யதை. நாயே என்ற ஏகாரம் - தேற்றத்தோடு, இழிவுசிறப்பு. நீயே உலகுக்கு ஒருசான்று—மேல் யுத்தகாண்டத்தில் "அழிப்பிலசான்று நீ யுலகுக்காதலால், இழிப்பிலசொல்லி நீ யிவளை யாதுமோர், பழிப்பில ளென்றனை பழியு மின்றினிக், கழிப்பிலள்" என்று இராமபிரான் அக்கினிதேவனைநோக்கிக் கூறுவது முணர்க. சுடல் - எதிர்மறைமொருமை யேவல். 'நவிய' என்பது, இங்கே பிறவினை. (௧௨௭)

வேறு.

[அனல் குளிர்தல்.]

௧௨௮. வெளுத்தமென் னகையவள் விளம்பு மெல்லையி
னொளித்தவெங் கனலவ னுள்ள முட்கினன்
றளிர்த்தன மயிர்புறஞ் சிலிர்ப்பத் தண்மையாற்
குளிர்ந்ததக் குரிசில்வா லென்பு கூரவே,

(இ - ள்.) வெளுத்த மெல் நகையவள் - வெண்ணிறமான மெல்லிய பற்களையுடையவளான சீதாபிராட்டி, விளம்பும் எல்லையின் - (இவ்வாறு) சொன்னபொழுது, ஒளித்த வெம் கனலவன் உள்ளம் உட்கினன் - ஒளி பெற்ற வெவ்விய அக்கினிதேவன் (அவளது கற்பின்தூய்மையைக் கருதி அநுமானைச்சுடுவதில்) மனத்து அச்சங்கொண்டான்; (அவ்வளவிலே), மயிர் தளிர்த்தன புறம் சிலிர்ப்ப - மயிர்கள் தளிர்த்தவையாய் உடம்புமுழுவதுஞ்

சிலிர்த்தலுண்டாம்படி, அ குரிசில் வால் - பெருமையிற்சிறந்தவனான அந்த அநுமானது வாலானது, என்பு கூர - எலும்பினளவாக [எலும்புவரையிலும்], தண்மையால் குளிர்த்தது - (உண்டான) சீதளத்தினாற் குளிர்ச்சியடைந்தது. மெல் நகை - புன்சிரிப்புமாம். 'விளம்புமெல்லேயின்' என்றும் பாடமுண்டு. ஒளித்த என்பது - ஒளியென்னும் பெயரினடியாகப்பிறந்த பெயரெச்சம்; இது, அச்சத்தினால் தன் வெப்பத்தை ஒளித்துக்கொள்ள முயல்கிற என்ற பொருளும் தோன்ற நின்றது. மயிர்தளிர்த்தல் - மயிர்ச்கூச்செறிதல். இது - இங்கே, மிக்ககுளிர்ச்சியினாலாகியது.

இக்கவி - கீழ்ப்படலத்தின் முதற்கவிபோன்ற கலிவிருத்தம். (கஉஅ)

## வேறு.

[இதுவும், அடுத்த கவியும் - அதுபற்றிய விவரம்.]

கஉகூ. மற்றினிப் பலவென் வேலை வடவனல் புவிய ளாய
கற்றையங் கனலி மற்றைக் காயத்தீ முனிவர் காக்கு
முற்றுறு மும்மைச் செந்தீ முப்புர முருங்கச் சுட்ட
கொற்றவ னெற்றிக் கண்ணின் வன்னியுங் குளிர்ந்த வன்றே.

(இ - ள்.) மற்று இனி பல என் - (பிராட்டியின் ஆணைப்படி அனல் முற்றுங் குளிர்ந்ததென்பதைப்பற்றி) இனி மற்றும் பல கூறவேண்டுவது என்ன இருக்கிறது! வேலை வட வனல் - கடலிலுள்ள படபாமுகாக்கினியும், புவி அளாய கற்றை அம் கனலி - பூமியிலேபொருந்திய சுவாலைத்தொகுதியையுடைய அக்கினியும், மற்றை காயம் தீ - அதுவல்லாத வானத்திலுள்ள அக்கினியும், முனிவர் காக்கும் முற்றுறு மும்மை செம் தீ - (அவிந்திடாதபடி) முனிவர்கள் பரிபாலித்துவருகிற (வைதிகநியமம்) பூர்ணமாகப்பெற்ற செந்நிறமான மூன்றுவகை அக்கினிகளும், முப்புரம் முருங்க சுட்ட கொற்றவன் நெற்றி கண்ணின் வன்னியும் - மூன்றுநகரங்களும் அழியும்படி எரித்த வெற்றியையுடையவனான சிவபிரானது நெற்றிக்கண்ணிலுள்ள அக்கினியும், குளிர்ந்த - குளிர்ச்சியடைந்தன; (எ - று.)—அன்றே - ஈற்றசை; தேற்றமுமாம்; அன்று - அப்பொழுது எனினுமாம்.

அனல் முற்றுங் குளிர்ந்த தென்ற கருத்தை இங்ஙனம் அதிசயோக்தி வகையாற் கூறினார்; அடுத்த செய்யுளும் இவ்வாறே. படபாநல மென்ற வடமொழித்தொடர், வடவனலென விகாரப்பட்டது; இது, கடலினிடையே ஒரு பெண்குதிரையின் முகத்தினின்று மூண்டெரியுந் தீ; கடல்நீரை மழைப் பெருக்கு முதலியவற்றால் மிகாதபடி உறிஞ்சிநிற்பது. படபா - பெண்குதிரை. அநலன் - அக்கினி. காயம் - ஆகாய மென்பதன் முதற்குறை விகாரம். இனி, 'காயத்தீ' என்பதற்கு - உடம்பிலுள்ள அக்கினி [உதராக்கினியெனப்படும் பசித்தீ] யென்று உரைப்பாரு முளர். வைதிக அக்கினி என்பார் 'முற்றுறுதீ' என்றார். மும்மைத்தீ - காருகபத்தியம், ஆகவநீயம்,

தட்சிணுக்கினி. நெருப்பென்னும் ஒருபொருளைக்குறிக்கிற அனல், கனலி, தீ, வன்னி என்ற பலசொற்கள் அடுத்துவந்தது, பொருட்பின்வருநிலையணி. வஹ்நி என்ற வடசொல் வன்னியென விகாரப்பட்டது.

இது முதல் இப்படலம் முடியுமளவுமுள்ள பன்னிரண்டுகவிகள்—கீழ்ப் படலத்தின் நான்காங்கவிபோன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (கஉக)

கநo. அண்டமுங்கடந்தானங்கையனலியுங்குளிர்ந்ததங்கிக்
குண்டமுங்குளிர்ந்தமேகத்துருமெலாங்குளிர்ந்தகொற்றச்
சண்டவெங்கதிரவாகித்தழங்கிருள்விழுங்குந்தாவின்
மண்டலங்குளிர்ந்தமீளாநரகமுங்குளிர்ந்தமாதோ.

(இ-ள்.) அண்டமும் கடந்தான் - அண்டகோளத்தின் ஏழுலகங்களைக்கடந்து மேலுள்ளவனை பிரமனது, அம் கை - அகங்கையிலுள்ள, அனலியும் - அக்கினியும், குளிர்ந்தது - குளிர்ச்சியடைந்தது; அங்கி குண்டமும் குளிர்ந்த - (அப்பிரமன் வேள்விசெய்யும்) அக்கினிகுண்டங்களும் குளிர்ச்சியடைந்தன; மேகத்து உரும் எலாம் குளிர்ந்த - மேகங்களிலுள்ள (தீவடிவமான) இடிகளெல்லாங் குளிர்ச்சியடைந்தன; கொற்றம் சண்டம் வெம் கதிர ஆகி - வெற்றியையுடைய உக்கிரமான உஷ்ண கிரணங்களையுடையவையாய், தழங்கு இருள் விழுங்கும் - மிக்கஇருளை விழுங்குகிற, தா இல் மண்டலம் - அழிவற்ற சூரியமண்டலம் முதலிய ஜ்யோதிர்மண்டலங்களும், குளிர்ந்த - குளிர்ச்சியடைந்தன; மீளா நரகமும் - (தீவினைசெய்தவர்) மீளவொண்ணுத (அக்கினிமயமான சில கொடிய) நரகங்களும், குளிர்ந்த - குளிர்ச்சியடைந்தன; (எ - று.)—மாது, ஓ - ஈற்றசை.

அண்டத்திற்கு உட்பட்ட பதினன்கு உலகங்களுள்ளும் மேலதாகிய சத்தியலோகத்தி லிருப்பவனுதலின், பிரமன் 'அண்டமுங்கடந்தான்' எனப்பட்டான். அந்தணரது அகங்கையில் அக்கினியிருக்கிற தென்ற நூற்கொள்கைபற்றி, அந்தணசிரேஷ்டனுன பிரமனது அகங்கையில் அனலி கூறினர். திரிவிக்கிரமனுய் வளர்ந்து அண்டமுழுவதையும் அளந்தவனுன வாமநமூர்த்தியினது அகங்கைநெருப்பென்று உரைப்பாருமுளர்; அவன் அந்தணனுதலின். இனி, விசுவரூபங்கொண்டு நடனஞ்செய்கையில் அண்டமுழுதையுங் கடந்துநிற்பவனுன சிவபிரானது அழகிய கையிலுள்ள நெருப்பாகிய அக்கினியென்று உரைப்பர் ஒருசாரார்: தாருகவனமுனிவரேவிய வேள்வித்தீயைச் சிவபிரான் இடக்கையிற்கொண்டு அடக்கின னென்பது வரலாறு. சூரியனுக்கும் அக்கினிக்கும் ஒருவர்க்கொருவர் ஒளிகொடுத்து வாங்குகிற சம்பந்தமும் வெப்பமும் இருத்தலால், அதுபற்றி ஒற்றுமைநயம்படச் சிற்சிலவிடத்து இருவரும் அபேதமாகக் கூறப்படுவர். தா - உரிச்சொல். வெங்கதிர்க்கு வெற்றி - எவ்வளவு தொகுதியான இருள் இருந்தாலும் அவ்வளவையும் எளிதிலழித்தல். இருள்விழுங்கும் - இருளையொழிக்குமென்றபடி; உண்ணுதது உண்பதுபோலச் சொல்லப்பட்ட மரபுவழுவமைதி. இங்கு

'மீளாநரகம்' என்றது, மகாஜ்வாலம் அக்கினிஜ்வாலம் அக்கினிப்பிரபை முதலியவற்றை.

இவ்விரண்டுசெய்யுள்களும், "அண்டமூலத்துக்கப்பா லாழியுங் கொதித்த தேழு, தெண்டிரைக் கடலின் செய்கை செப்பி யென் தேவன் சென்னி, பண்டைநாளிருந்த கங்கைநங்கையும் பதைத்தாள் பார்ப்பான், குண்டிகையிருந்தநீருங் குளுகுளு கொதித்ததன்றே" என மேல் யுத்தகாண்டத்தில் வருஞ் செய்யுளும் ஒத்த வாய்பாடுடையனவாதல் காண்க. (கரு௦)

[அனல்தளிர்ந்தகாரணத்தைக் கருதி அநுமான் களித்தல்.]

-கருக. வெற்பினைவியன்றதன்னமேனியைவிழுங்கிவெந்தீ
நிற்பினுஞ்சுடாதுநின்றநீர்மையைநினைவினோக்கி
யற்பினாரறுதசிந்தையனுமனுஞ்சனகன்பாவை
கற்பினைவியன்றதென்பான்பெரியதோர்களிப்பனானான்.

(இ - ள்.) அற்பின் நார் அறாத சிந்தை அநுமனும் - (சீதாராமர்கள்பக்கல்) அன்பாகிய பாசபந்தம் நீங்காத மனத்தையுடைய அநுமானும், வெம் தீ - (இயற்கையில்) வெப்பமுடையதான அக்கினி, வெற்பினை இயன்றது அன்ன மேனியை விழுங்கி நிற்பினும் - மலையினாலமைந்தது போன்ற [பெரிய வலிய] தனது உடம்புமுழுவதும் மறைய மூடிக்கொண்டு நின்றாலும், சுடாது நின்ற - தன்னைச்சுடாமல் (குளிர்ச்சிகொண்டு) நின்ற, நீர்மையை - ஆச்சரியத்தன்மையை, நினைவின் நோக்கி - தனது மனத்தினால் ஆராய்ந்து, சனகன் பாவை கற்பினை இயன்றது என்பான் - ஜநகமஹாராஜனுடைய சித்திரப்பதுமைபோ லழகிய பெண்ணான சீதையினது கற்புநிலைமையினால் இங்ஙனமாயிற் றென்று ஊகித்து உணர்ந்தவனாகி, பெரியது ஓர் களிப்பன் ஆனான் - ஒப்பற்ற பெருங்களிப்பை யுடையவனாயினான்; (எ - று.)

நினைவின்நோக்குதல் - நுண்ணுணர்வுகொண்டு உண்மையை ஊகித்து அறிதல்; ஞானதிருஷ்டிகொண்டு உணர்தல். மகாபுத்திமானாதலால், உள்ளபடி ஊகித்தனன். அன்புஎன்ற மென்றொடர்க்குற்றுகரம், அற்பு என வன்றொடராயிற்று. அநுமானது உடலில் நாகபாச பந்தம் அற்றதேயன்றி அவனது சிந்தையிலே ராமபக்தியாகிய பாசபந்தம் அற்றில தென்பார், 'அற்பினாரறுதசிந்தை யனுமன்' என்றார். (கருக)

[இலங்காபுரிமுழுவதையும் அரக்கர்கள் காட்ட, அநுமான் காணுதல்.]

கருஉ. அற்றையவ்விரவிற்றன்றனறிவினான்முழுதுமுன்னப்
பெற்றிலெனினுமாண்டொன்றுள்ளதுபிழையுறாமே
மற்றுறுபொறிமுன்செல்லமறைந்துசெல்லறிவுமானக்
கற்றிலாவரக்கர்தாமேகாட்டவிற்றெரியக்கண்டான்.

(இ - ள்.) தான் - அவ்வநுமான்தான், அற்றை அ இரவில் - அன்றைத் தினத்து முன்னிரவிலே, தன் அறிவினால் முழுதும் உன்ன பெற்றிலன் எனினும் - தனது அறிவினால் (அவ்வூரிலுள்ள) இடங்களெல்லாவற்றையும் ஊன்றியுணரப்பெற்றானில்லை யென்றாலும், ஆண்டு உள்ளது ஒன்று பிழை உறுமே - அந்நகரத்திலுள்ளவிடம் ஒன்றேனுந் தவறுமலே,—கற்றிலா அரக்கர் தாமே காட்டலின் - மூடர்களான அவ்விராக்கதர்கள் தாங்களே காட்டியதனால்,—மற்று உறு பொறி முன் செல்ல மறைந்து செல் அறிவு மான - புறத்துறுப்பாய்ப்பொருந்திய இந்திரியங்கள் (பொருள்களினிடத்து) முன்னே செல்ல (அவற்றின்பின்னே) மறைந்துசெல்லுகின்ற அறிவையொப்ப, தெரியகண்டான் - நன்றாகப்பார்த்தான் ; (எ - று.)

உவமையணி. மான - உவமவுருபு. அன்றை மாலைப்பொழுதிற் கடல் கடந்து இலங்கைபுக்க அநுமான் அவ்விரவின் முற்பகுதியிற் சீதையைத் தேடிக்கொண்டே அந்நகரமுழுவதுஞ் சென்று பலவிடங்களையும் பார்த்தமை, கீழ் ஊர்தேடுபடலத்திற் பரக்கக் கூறப்பட்டது. அங்ஙனம் விரைவுடன் தேடியபொழுது சில இடங்கள் ஊன்றிப்பார்க்கப்படாது விட்டிருந்தாலும், அக்குறையும் தீருமாறு, இப்பொழுது அரக்கர்கள் தாமே அநுமானைச் சூழ்ந்து நின்று வலிய அழைத்துச்சென்று காட்ட, அவர்களிடையே பதுங்கிச்சென்ற அநுமான் கண்டனன். அதற்கு, கண் செவி மூக்கு முதலிய பொறிகளின்வழியே அறிவு புலன்களிற் சென்று பற்றுதலை உவமைகூறினர். பகைவரது தூதனாய் வந்தவன் புலனறிந்து கொண்டுபோகுமாறு அவனுக்குத் தமது நகரமுழுவதையும் வலியக்கொண்டு காட்டுதல் பேதைமை யாதலால், 'கற்றிலா வரக்கர்' எனப்பட்டார். தெரிய - விளங்க. அறிவு உருவமில்லாததாதலால், அதற்கு 'மறைந்துசெல்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. (கரு உ)

[அநுமான் வானத்திலெழும்ப, அரக்கர்கள் தோளற்றுக் கீழேவிழுதல்.]

கரு௩. முழுவதுந்தெரியநோக்கிமுற்றுமூர்முடிவிற்சென்றான்
வழுவுறுகாலமீதென்றெண்ணினன்வலிதிற்பற்றித்
தழுவினனிரண்டுநூறாயிரம்புயந்தடக்கைதாம்போ
டெழுவெனநாலவிண்மேலெழுந்தனன்விழுந்தவெல்லாம்.

(இ - ள்.) முழுவதும் தெரிய நோக்கி - (அங்ஙனம்) அவ்விலங்காபுரி முழுவதையும் நன்றாகப்பார்த்துக்கொண்டே, முற்றும் ஊர் முடிவில் சென்றான் - சூழ்ந்துவரப்பெற்ற அந்த ஊரினது கடையெல்லையில் வந்து சேர்ந்தவனான அநுமான், வழுவுறு காலம் ஈது என்று எண்ணினன் - (இவ்வரக்கர்கள் கட்டுக்காவலினின்று தான்) தப்பி நீங்கிப்போதற்கு ஏற்ற சமயம் இதுவென்று எண்ணி, வலிதின் பற்றி தழுவினன் - (இருபுறத்துக்கயிற்றையும்) வலியப் பிடித்து (இருபுறத்து விலாவிலுஞ் சேர) இடுக்கிக்கொண்டு,—இரண்டு நூறாயிரம் புயம் தடக்கை தாம்போடு எழு என நால - (அரக்கர்களுடைய) இரண்டிலக்ஷம்தோள்களும் பெரியகைகளும் (இருபுறத்துக்) கயிற்றுடனே

தூண்போலத் தொங்கும்படி, விண்மேல் எழுந்தனன் - வானத்திலே உயர எழும்பினன்; (அங்ஙனம் எழுந்த மாத்திரத்திலே), எல்லாம் விழுந்த - (கயிற்றைப்பிடித்து இழுத்துவந்த)அரக்கர்கள்கூட்டமெல்லாம் கீழேவிழுந்தன.

அநுமான் திடீரென்று விசையாகத் திமிறிக்கொண்டு மேல் எழுந்த பொழுது, அரக்கர்களுடைய தோளளவான கைகள் தனிப்பட்டுக் கயிற்றுடனே தொங்க, அவர்கள் தோளற்றவர்களாய்க் கீழ்விழுந்தன ரென்க. முற்றுதல் - வளைதல், சூழ்தல். கீழ் க உ ௯ - ஆஞ் செய்யுளிற் கூறியபடி பக்கம் பக்கம் இருகூறாய் உரப்பாசம்பற்றின அரக்கர் நூறாயிரவ ராதலால், அவர்களுடைய தோள்களோடுகூடிய கைகள் இரண்டு நூறாயிரமாம். 'புயந் தடக்கைத் தாம்போடு' என்ற பாடத்துக்கு - தோள்கள் பெரிய கைகளிற் பிடித்த கயிற்றுடன் எழுப்போல நால வென்க. 'புயத்தடக்கை' என்ற பாடம் - புயமளவாகவுள்ள பெரியகைகள் [அதாவது - நீண்ட கைகள் முழுவதும்] என்று பொருள்படும். (௧௩௩)

[அநுமானது அப்பொழுதைய தோற்றம்.]

௧௩௪. இற்றவாளரக்கர்நூறாயிரவருமிழந்ததோளார்
முற்றினருலந்தாரையன்மொய்ம்பினோடுடலைமுழ்கச்
சுற்றியகயிற்றினோடுந்தோன்றுவானரவின்சுற்றம்
பற்றியகலுழனென்னப்பொலிந்தனன்விசும்பின்பாலான்.

(இ - ள்.) இற்ற - தனிப்பட்டுவிழுந்த, வாள் அரக்கர் நூறாயிரவரும் - கொடிய அந்த இராக்கதர்கள் நூறாயிரம்பேரும், இழந்த தோளார் - தோளிழந்தவர்களாய், முற்றினர் உலந்தார் - இறந்தொழிந்தார்கள்; மொய்ம்பினோடு உடலை மூழ்க சுற்றிய கயிற்றினோடும் - தனதுதோள்களோடு உடம்பையும் அழுந்தக்கட்டிய கயிற்றினுடனே, விசும்பின் பாலான் தோன்றுவான் - வானத்தினிடத்தவனாய்க் காணப்படுகின்ற, ஐயன் - சிறந்தவனான அநுமான், அரவின் சுற்றம் பற்றிய கலுழன் என்ன பொலிந்தனன் - சர்ப்பவர்க்கங்களாற் பிடித்துச் சூழப்பட்ட கருடன்போல விளங்கினான்; (எ - று.)

சிறியதிருவடியாகிய ஆஞ்சநேயமூர்த்திக்குப் பெரியதிருவடியாகிய கருடாழ்வான் ஒள்ளியபெரியவடிவிலும், அவ்வநுமானது உடம்புமுழுவதுஞ் சுற்றிய கயிற்றுக்கு அக்கருடனது உடம்பிற் சுற்றிய நாகங்கள் வடிவிலும் உவமையெனக் காண்க. கருடனுக்கு நாகம்போல, அநுமானுக்கு அக்கயிறு எளிதில்விடுவிக்கத்தக்க தென்பது போதரும்; சுற்றப்பட்டவர்களை ஒன்றுஞ் செய்யமாட்டாமை இரண்டுக்கும் ஒக்கும். பாம்பைக் கருடன் பிடித்துக் கொள்ளும்போது அதனுடம்பிற்சுற்றிக்கொள்ளுதல் பாம்பின் இயல்பாகும்; அன்றியும், அடியில்வருகிற வரலாறும் இங்கு அறியத்தக்கது:—படைத்தல் தொழிலில் தனக்கு உதவியாகும்படி பிரமனாற்படைக்கப்பட்ட உபப்பிரமர் ஒன்பதின்மரில் ஒருவனான காசியபமுனிவனது மனைவியர்பலருட் கத்துருவென்பவள் ஒருநாள் ஆகாயமார்க்கமாய்ச்சென்ற உச்சைச்சிரவமென்னும்

வெள்ளைக்குதிரையைக் கருநிறமுடையதென்று மாறாகக்கூற, அதனைமறுத்து விநதை வெண்ணிறமுடையதென்று உள்ளபடி கூறவே, இதுகாரணமாக இருவர்க்கும் மாறுபாடுஉண்டாகி, 'யாருரை பொய்யாகிறதோ அவளும் அவள்மக்களும் மற்றவட்கும் அவள்மக்கட்கும் அடிமையாகக்கடவர்' என்று தம்மிற் சபதம் நியமித்துக்கொண்டபின்பு, கத்துரு தனதுமக்களாகிய கருநாகங்களால் அவ்வெண்பரியை மறைப்பித்துக் காட்டி வஞ்சனைவழியால் விநதையைத் தனக்கு அடிமையாக்கிவிட, விநதையும் பின்புபிறந்த அவள் மகனை கருடனும் கத்துருவுக்கும் அவள்மக்களான நாகங்கட்கும் குற்றேவல் செய்கையில், நாகங்கள் கருடனை வாகனமாகக்கொண்டு அவனுடம்பு முழுவதிலும் ஏறிக்கொண்டு சிற்சிலதீவுகட்குப் போகும்படி சொல்ல, கருடன் அவற்றைச்சுமந்துகொண்டு சிலகாலம் ஆகாயமார்க்கமாய்த் திரிந்தனனென்பதாம். (கசுச)

[அநுமான் தனதுவாலை இலங்கையின்மீது செலுத்துதல்.]

கசுரு. துன்னலர்புரத்தைமுற்றுஞ்சுடுதொழிற்றொல்லையோனும்
பன்னினபொருளுநாணப்பாதகரிருக்கைபற்ற
மன்னனைவாழ்த்திப்பின்னைவயங்கெரிமடுப்பெனென்றுப்
பொன்னகர்மீதேதன்போர்வாலினைப்போகவிட்டான்.

(இ - ள்.) பின்னை - பின்பு,—(அநுமான்),—'துன்னலர் புரத்தை முற்றும் சுடு தொழில் தொல்லையோனும் - பகைவர்களுடைய திரிபுரத்தை முழுவதுமெரித்தலாகிய தொழிலைச்செய்த பழமையான பரமசிவனும், பன்னின பொருளும் - (அவனுக்கு அப்பொழுது உதவியா யிருந்தன வெனக்) கூறப்படுகின்ற (பல) பொருள்களும், நாண - வெட்கமடையும்படி, பாதகர் இருக்கை பற்ற மன்னனை வாழ்த்தி வயங்கு எரி மடுப்பென் - பாவிகளான இவ்வரக்கர்களுடைய இருப்பிடமாகிய இவ்விலங்கை பற்றியெரியுமாறு இராமபிரானைத் துதித்துப் பிரகாசிக்கிற நெருப்பைப் பற்றவைப்பேன்,' என்று - என்று எண்ணி, தன் போர் வாலினை பொன் நகர்மீதே போக விட்டான் - தனது போர்த்திறமமைந்த வாலைப் பொன்மயமான அவ்விலங்காபுரியின்மேலே செல்லவிட்டான்; (எ - று.)

இங்கே 'துன்னலர்' என்றது, வித்யுந்மாலி முதலிய திரிபுரத்து அசுரர்களை. 'பன்னினபொருள்' என்றது - மேருகிரியாகிய வில், ஆதிசேஷனாகிய நாணி, திருமாலாகிய அம்பு, பூமியாகிய தேர் முதலியவற்றை. உபலங்கள் பலவற்றை உடன்கொண்டுசென்ற சிவபிரான் திரிபுரமெரித்ததனினும், யாதொரு துணையுமில்லாத தான் இவ்விலங்கையை யெரித்தல் சிறக்குமென்னுங் கருத்தால், 'துன்னலர்புரத்தை முற்றுஞ் சுடுதொழிற் றொல்லையோனும் பன்னினபொருளும் நாண' எனப்பட்டது. இனி, 'பன்னின பொருள்' என்பதற்கு - (அப்பெருமானெரித்ததாகக் கூறப்படுகிற திரிபுரமென்று உரைப்பாரு முளர்.) ஸ்ரீராமனருள்கொண்டு இந்த அரியசெயலைச்

செய்வே னென்பார், 'மன்னனைவாழ்த்தி வயங்கெரிமடுப்பென்' என்றார். 'மன்னனைவாழ்த்தி' என்பதை 'போகவிட்டான்' என்பதனோடு இயைப்பினு மாம். மன்னன் - எல்லாவற்றுக்குந் தலைவன்; சருவேசுவரன். பகைவர்களை வளைத்தற்கும் எடுத்து வீசுதற்கும் அடித்தற்குமாகப் பலவாறு போரில் அநுமானது வால் உதவுதலால், 'போர்வால்' எனப்பட்டது.

இனி, இச்செய்யுளுக்கு வேறொருவகையாற் பொருள் கூறவும் படும்; அது வருமாறு.—பன்னின பொருளும் நாண - (எமது துணைவலிமை கொண்டே சிவபிரான் திரிபுரமெரிக்கப் போகின்றனனென்று செருக்கித் தற்புகழ்ந்து) கூறிய (உபபலமாய்நின்ற) பொருள்கள் பலவும் நாணமடையும்படி, துன்னலர் புரத்தை முற்றும் சுடு தொழில் தொல்லையோனும் - பகைவர்களான அசுரர்களுடைய திரிபுரமுழுவதையும் முன்பு (தனது சிரிப்பைக்கொண்டு) எரித்தல் செய்தவனான சிவபிரானது அம்சமாகிய அநுமானும், (இப்பொழுது) பாவிகளாகிய இவ்வரக்கர்களது இருப்பிடமான இவ்விலங்கை பற்றியெரியும்படி எனது தலைவனான இராமனை வாழ்த்தி இந்நகரத்தில் நெருப்பைப் பற்றவைப்பே னென்று அப்பொன்னகரின்மீதே தனதுவாலினைப் போகவிட்டன னென்பது. (வாயுகுமாரனான அநுமான் 'ருத்திராம்சமு முடையனாதல் முன்பு விளக்கப்பட்டது.) மேல் ௩௩௭ - ஆங் கவியை நோக்குமிடத்து இவ்வுரை சிறவாதாம். (௧௩௫)

[இதுமுதல் மூன்றுகவிகள் - அந்தவாலின் வருணனை.]

௧௩௬. தன்னிறைக்குறுகண்வெய்யோர்தாமியற்றலுங்கேட்டின்னே
யன்னவர்க்கிறுதியாகவணிநகரழிப்பலென்னாச்
செந்நிறச்சிகையவெம்போர்மழுப்பின்னர்ச்சேறலொக்கு
மன்னிறத்தண்ணறூதனனல்கெழுகொற்றநீள்வால்.

(இ - ள்.) அல் நிறத்து அண்ணல் - இராத்திரிபோன்ற கருநிறத்தையுடைய புருஷோத்தமனான ஸ்ரீராமனது, தூதன் - தூதனாகிய அநுமானுடைய, அனல் கெழு கொற்றம் நீள் வால் - தீப்பற்றியெரிவதும் வெற்றியை விளைப்பதுமான நீண்ட வாலானது,—தன் இறைக்கு உறுகண் வெய்யோர் தாம் இயற்றலும் - தனது தலைவனான சிவபிரானுக்கு [மழுவைத் தனது படைக்கலமாகக்கொண்டு ஆளுகிற சிவபிரானது அம்சமாகிய அநுமானுக்கு]த் துன்பத்தைக் கொடிய அரக்கர்கள் செய்தவளவிலே, கேட்டு - (அச்செய்தியைக்) கேள்வியுற்று உணர்ந்து, இன்னே அன்னவர்க்கு இறுதி ஆக அணி நகர் அழிப்பல் என்னா - 'இப்பொழுதே அவ்வரக்கர்கட்கு அழிவு உண்டாகும்படி (அவர்களுடைய) அழகிய இலங்காநகரத்தை அழித்துவிடுவேன்' என்று சங்கற்பங்கொண்டு, செம் நிறம் சிகைய வெம் போர் மழு பின்னர் சேறல் - செந்நிறமான ஜ்வாலைகளையுடையதும் கொடிய போர்த்திறமமைந்ததுமான (சிவபிரானது) மழுவென்கிற ஆயுதம் (தனது இறைவனான அவ்வநுமானைத்) தொடர்ந்துசெல்லுதலை, ஒக்கும் - போலும்; (எ - று.)

எரியிரும்புப்படையாகிய மழுவை வலக்கையிற் கொண்டவன், சிவ பிரான். அங்ஙனஞ் சிவபிரானுக்கு ஆயுதமாகிய மழுவானது, தனது இறைவ னான அவனது அம்சமாகிய அநுமானுக்குத் துஷ்டராக்ஷசர்கள் கட்டுதல் இழுத்தல் தீக்கொளுவுதல் முதலிய துன்பங்களைச் செய்ததனைச் சொன்ற செய் தியைக் கேள்வியுற்று 'இப்பொழுதே யான் அவர்கட்கு அழிவுண்டாம்படி அவர்கள் நகரத்தை அழித்துவிடுவேன்' என்று சென்றாற் போன்றது, அநு மானால் இலங்கையின்மீது செலுத்தப்பட்ட தீக்கொளுவிய வால் என்க; தற் குறிப்பேற்றவணி. பின்னர்ச்சேறல் - பின்பு (அவ்விலங்கையைக்குறித்துச்) செல்லுதல் எனினுமாம். 'தன் இறைக்கு உறுகண் வெய்யோர் தாம் இயற்ற லும் கேட்டு' என்பதற்கு - தனது தலைவனான சிவபிரானுக்கு வாசஸ்தானமாகிய கைலாசகிரியைப் பேர்த்தெடுத்தல் முதலிய துன்பங்களைக் கொடிய ராவ ணாதிராக்ஷசர்கள் முன்பு செய்ததைக் கேள்வியுற்று என்று உரைத்தல் அத் துணையாச் சிறவாமை காண்க. அல் நிறத்து அண்ணல்—"ராத்திரிமேனியம் மான்" என்பர் பிள்ளைப்பெருமாளையங்காரும். அல் - இருளுமாம்; "இரு ளன்ன மாமேனி" என்றார் ஆன்றோரும். அனலினாற்சுடப்படாமையும், இல ங்கையையெரித்தலும் பற்றி, 'சொற்றவால்' எனப்பட்டது. (சகூசு)

கக.எ. அப்புறழ்வேலைகாறுமலங்குபேரிலங்கைதன்னை
யெப்புறத்தளவுந்தீயவொருகணத்தெரித்தகோட்பாற்
றுப்புறழ்மேனியண்ணன்மேருவிற்குழையத்தோளான்
முப்புரத்தெய்தகோலேயொத்ததம்முரிப்போர்வால்.

(இ - ள்.) அப்பு உறழ் வேலை காறும் அலங்கு பேர் இலங்கைதன்னை- நீர்மயமாய் மிக்க கடல் எல்லையாக விளங்குகின்ற பெரிய அந்த இலங்கா புரியை, எப்புறத்து அளவும் தீய ஒரு கணத்து எரித்த கோட்பால் - எல்லாப் பக்கங்களும் தீந்துபோம்படி ஒரு கணப்பொழுதிலே யெரித்த திறத்தி னால்,—அ முரி போர் வால் - வலிய போர்த்திறமுள்ள அந்த வாலானது,— துப்பு உறழ் மேனி அண்ணல் மேரு வில் குழைய தோளால் முப்புரத்து எய்த கோலே ஒத்தது - பவழம்போன்ற [சிவப்பான] திருமேனிநிறத்தை யுடைய பெருமையிற்சிறந்தவனான சிவபிரான் மகாமேருகிரியாகிய வில் வளையத் தனது தோள்வலிமைகொண்டு திரிபுரத்தின்மேற் பிரயோகித்த அம்பையே போன்றது; (எ - று.)

உவமையணி. இரண்டாமடியிற் பொதுத்தன்மை விளங்கும். திரிபுர சங்காரகாலத்தில் திருமால் சிவபிரானுக்கு அம்பாயிருந்து தொழில் செய் தமை, பிரசித்தம். அப், க்ஷணம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. 'வேலைகாறும்' என்பதை 'தீய' என்பதனோடுங் கூட்டலாம். (ககூஎ)

கக.அ. உகக்கடையுலகம்யாவுமுணங்குறவொருதனொட்டஞ்
சிகைக்கொழுங்கனலைவீசுஞ்செயன்முனம்பயில்வான்போல
மிகைத்தெழுதீயராயோர்விரிநகர்வீயப்போர்வா
றகைத்தனிநேன்மைசாலுந்தனிவீரன்சேணிலுய்த்தான்.

(இ - ள்.) உகம் கடை - யுகாந்தகாலத்திலே, உலகம் யாவும் உணங்குற - உலகங்களெல்லாம் அழியும்படி, ஒரு தன் நாட்டம் சிகை கொழுங்கனலை வீசும் - ஒப்பற்ற (காலாக்கினி ருத்திரமூர்த்தியாகிய) தனது ஒரு கண்ணினின்று [நெற்றிக்கண்ணிலிருந்து] ஜ்வாலைகளையுடைய மிக்கநெருப்பை வெளிவீசுவதாகிய, செயல் - செய்கையை, முனம் பயில்வான் போல - அதற்கு முன்னமே (ஒருதரஞ்) செய்து பழகுபவன்போல,—தகைத்தல் இல் நோன்மை சாலும் தனி வீரன் - (எவராலுந்) தடுக்கமுடியாத வலிமைமிக்க ஒப்பற்ற வீரனான அநுமான்,—மிகைத்து எழு தீயர் ஆயோர் விரி நகர் வீய - செருக்குக்கொண்டு தலைப்பட்ட கொடியவர்களான இராக்கதர்களது பரந்த அவ்விலங்காபுரி அழியும்படி, போர் வால் சேணில் உய்த்தான் - போர்த்திறமமைந்த தனது வாலை நெடுந்தூரமளவுஞ் செலுத்தினான் ; (எ - று.)

கற்பாந்தகாலத்திலே தனது நெற்றிக்கண்ணைத் திறந்து அதனினின்று பெருநெருப்பை நெடுந்தூரம்வீசி உலகங்களையெல்லாமெரிக்கின்ற காலாக்கினி ருத்திரமூர்த்தியும் அநுமானும் ஆகிய இருவரும் சிவபிரானது சொரூபமேயாதலால், அவ்வொற்றுமைநயம்பற்றி இங்ஙனம் உத்பிரேக்ஷித்தார் ; ஏதுத்தற்குறிப்பேற்றவணி. ஊழிக்காலத்தில் உலகங்களையெரிக்க வேண்டியதற்காக முன்னமே இலங்கையையெரித்துப் பயில்வான்போன்றன னென்க. அக்கண்ணின்கனல், இவ்வாலின்கனலுக்கு ஒப்புமை. உணங்குதல் - எரிதல். மிகைத்து எழு - மிகுதியாய்த்திரண்ட எனினுமாம். (கூஅ)

[அநுமான் வீடுகள்தோறும் தாவிச்செல்லுதல்.]

கூகூ. வெள்ளியிற்பொன்னினானவிளங்குபொன்மணியின்விஞ்சை
தெள்ளியகடவுட்டச்சன்கைமுயன்றறிந்திற்செய்த
தள்ளறுமனைகடோறுமுறைமுறைதாவிச்சென்றா
னொள்ளெரியோடுங்குன்றத்தூழிவீழுருமொடொப்பான்.

(இ - ள்.) வெள்ளியின் - வெள்ளியினாலும், பொன்னின் - பொன்னினாலும், நாநா விளங்கு பொன் மணியின் - பலவகைப்பட்ட பிரகாசிக்கின்ற அழகிய இரத்தினங்களினாலும், விஞ்சை தெள்ளிய கடவுள் தச்சன் கை முயன்று அறிதின் செய்த - (சிற்ப) சாஸ்திரங்களில் தேர்ந்த தெய்வத்தச்சனான விச்சுவகர்மன் கைகளால் வருந்தி அருமையாகச் செய்த, தள்ளருமனைகள் தோறும் - அழித்தற்கு அருமையான வலிய (அவ்விலங்கை நகரத்து) வீடுகளிலெல்லாம், (அநுமான்), ஒள் அரியோடும் குன்றத்து ஊழி வீழ் உருமொடு ஒப்பான் - ஒள்ளியநெருப்புடனே மலையின்மீது கற்பாந்த காலத்தில் விழுகின்ற பேரிடியைப் போன்றவனாய், முறை முறை தாவி சென்றான் - ஒவ்வொன்றிலாகக் குதித்துக்கொண்டே சென்றான் ; (எ - று.)

உயர்ந்தோங்கிய மாடத்துக்கு - மலையும், அதில் தாவிப்பாய்கிற வாலின் நெருப்போடுகூடிய வலிய அநுமானுக்கு - நெருப்புடன் வீழ்கிற பேரிடியும் உவமை யெனக் காண்க. தன்மைத்தற்குறிப்பேற்றவணி. நாநா, ஹரி - வடசொற்கள். கைமுயன்று - கைதேர்ந்து என்றுமாம். தெய்வத்தச்சனான

விசுவகர்மா பூர்வத்தில் இந்திரனுக்காக நிருமித்த இலங்காபுரியிலே மாலியவான் முதலிய பூர்விகராக்ஷசர்கள் குடியேற, அவர்களைத் திருமால் வென்று துரத்தியபின்பு அந்நகரத்திலே குபேரன் வசிக்க, பிறகு அவனை அகற்றிவிட்டு இராவணன் அரக்கர்களுடன் அதிற் குடியேறின னென அறிக. (கஙக)

[அவ்வாலின் தீ இலங்கையை யெரித்தல்.]

கசாO. நீனிற நிருத ரீண்டு நெய்பொழி வேள்வி நீங்கிப்
பால்வரு பசிய னென்பான் மாருதி வாலைப் பற்றி
யாலமுண் டவனன் றாட்ட வுலகெலா மழிவி னுண்ணுங்
காலமே யென்ன மன்னோ கனலியுங் கடிதி னுண்டான்.

(இ - ள்.) நீல் நிறம் நிருதர் - கறுத்த நிறமுள்ள அரக்கர்களால் [இராக்கதர்கள் செய்யும் உபத்திரவங்களினு லென்றபடி], ஈண்டு - இவ்வுலகத்திலே, நெய் பொழி வேள்வி நீங்கி - நெய்யைச்சொரிந்துசெய்யும் யாகங்களை (அனைவரும்) விட்டிட்டதனால், பால் வரு பசியன் என்பான் - தன்னிடத்தே மிக்க பசியையுடையவ னென்று சொல்லப்படுபவனான, கனலியும் - அக்கினி தேவனும்,—மாருதி வாலை பற்றி - (தனக்குத்துணைவனான) வாயுவினது குமாரனாகிய அநுமானது வாலைத் தனக்கு ஆதாரமாகக்கொண்டு,—ஆலம் உண்டவன் நன்று ஊட்ட உலகு எலாம் அழிவின் உண்ணும் காலமே என்ன - விஷத்தை அமுதுசெய்தவனான சிவபிரான் நன்றாக உண்பிக்கத் தான் உலகங்களெல்லாவற்றையும் அழியும்படி உண்ணும் [எரிக்கும்] காலத்திலே போல, கடிதின் உண்டான் - விரைவில் (அவ்விராக்கதநகரமுழுவதையும்) உண்ணலானான் [எரிக்கலானான் என்றபடி]; (எ - று.)—மன், ஓ - அசை.

தற்குறிப்பேற்றமும் உவமையுஞ் சேர்ந்துவந்த சேர்வையணி. வாலிற் பற்றிய தீ இலங்கையை யெரித்தற்கு, அரக்கர்களுபத்திரவத்தால் உலகமெங்கும் யாகங்களில்லாமற்போயினமைபற்றி நெய்ம்முதலிய அவியுணவு கிடைத்திடாமையாற் பசிமிக்கவனான அக்கினிதேவன் அரக்கர்களிடத்து அச்சத்தால் நேரில் ஒன்றுஞ் செய்யமாட்டாது ருத்திராம்சமான அநுமானது வாலைப் பற்றுக்கோடாகக்கொண்டு அவ்வரக்கரது ஊர்முழுவதையும் விரைவில் உண்ணுபவனாயின னென உத்பிரேக்ஷை கூறியவாறும். பேராற்றலுடையவனும் சங்கார கர்த்தாவுமான சிவபிரானது நெற்றிக்கண்ணினின்று அச்சங்காரகாலத்தில் வெளிப்பட்டு அப்பெருமானது அநுமதிப்படி உலகங்களையெல்லாம் எரித்தழித்தல், இங்கு ஒப்புமைகூறப்பட்டது. 'நீங்கி' என்பதை 'நீங்க' எனக் காரணப்பொருட் செயவெனெச்சமாகத் திரித்துப் பொருள் காண்க. காலமேயென்ன - அக்காலமே இதுவென்று சொல்லும்படியென்றலுமாம். அன்று என்று எடுத்துக் காலமென்பதனோடு இயைத்து, அந்தக்கால மென்னலாம். (கசாO)

பிணிவீட்டுபடலம் முற்றிற்று.

---

பதின்மூன்காவது

# இலங்கையெரியூட்டு படலம்.

அநுமான் இலங்கையைக் கொளுத்திய செய்தியைக் கூறும் பாகம். இலங்கையெரியூட்டுதல் - இலங்காபுரியை அக்கினிதேவனுக்கு உணவாக்குதல்: ஊட்டுதல் - உண்பித்தல். 'ஊர்சுடுபடலம்' என்றும் பிரதிபேத முண்டு.

## வேறு.

[அனுமானதுவாலின் தீ அந்நகரத்து மாளிகைகளைப் பலபடியாலெரித்தல்.]

க. கொடியைப் பற்றிவி தானங்கொ ளுத்தித்தா
நெடிய தூணைத்த ழுவிநெ டுஞ்சுவர்
முடியச் சுற்றிமு ழுதுமு ருக்கிற்றால்
கடிய மாமனை தோறுங்க டுங்கனல்.

(இ - ள்.) கடுங் கனல் - (அனுமனதுவாலிற்பற்றிய) கொடிய நெருப்பானது,—கடிய மா மனை தோறும் - சிறப்புள்ள பெரிய வீடுகள்தோறும்,—கொடியை பற்றி - துவசங்களிற் பற்றிக்கொண்டும், விதானம் கொளுத்தி - மேற்கட்டிகளை யெரித்தும், நெடிய தூணை தழுவி - உயர்ந்த தூண்களைச் சுற்றிலும்பிடித்துக்கொண்டும், நெடுஞ் சுவர் முடிய சுற்றி - நீண்ட சுவர்கள் முழுவதுஞ் சுற்றிக்கொண்டும், முழுதும் முருக்கிற்று - அவ்வீடுகள் முழுவதையும் எரித்தழித்தது; (எ - று.)—தான், ஆல் - அசைகள்.

'கடிய' என்பதற்கு - பாதுகாவலையுடைய என்றும், விளக்கமுள்ள என்றும், எப்பொழுதும் புதுமையாகத் தோன்றுகின்ற என்றும், மங்களகரமான என்றும் பொருள் கொள்ளலாம்; பலபொருள்குறிக்கும் உரிச் சொல்லாகிய 'கடி' என்பத னடியாப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம்.

இதுமுதல் இருபத்தைந்து கவிகள் - கீழ்ப்படலத்தின் ருக - ஆங் கவி போன்ற கலிவிருத்தங்கள். (க)

[அதனால் அந்நகரத்துச்சனங்கள் கூக்குரலிடுதல்.]

உ. வாசலிட்டவெரிமணிமாளிகை
மூசமுட்டிமுழுதுமுருக்கலா
லூசலிட்டனவோடியுலைந்துளைப்
பூசலிட்டவிரியற்புரமெலாம்.

(இ - ள்.) வாசல் இட்ட - (சிறந்த) வாயில்களைக்கொண்ட, எரி மணி மாளிகை - பிரகாசிக்கின்ற இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற வீடுகளில், மூச முட்டி - நெருங்க(த்தீப்) பிடித்துக்கொண்டு, முழுதும் முருக்கலால் - எல்லாப்பொருள்களையும் எரித்தழித்தலினால்,—இரியல் புரம் எலாம் - அஞ்சி நிலைகெடுதலையுடைய அந்நகரத்துச்சனங்களெல்லாம், ஊசல் இட்டன - ஊஞ்சலாடுதல்போல அங்குமிங்குமாக அலைபவையாய், ஓடி—, உலைந்து -

வருந்தி, உளை பூசல் இட்ட - வருத்தத்தினாலாகும் பேரொலியைச் செய்தன [கதறிக் கூக்குரலிட்டன என்றபடி]; (எ - று.)

புரம் - இடவாகுபெயர்; இது, ஆகுபெயர்ப்பொருளினால் உயர்திணையாயினும், இயற்கைச்சொல்நிலையால் அஃறிணையாதலால், அஃறிணைமுற்றைக் கொண்டது. அச்சத்தினால் விரைந்து வெளியிலோடிப்போவதும், அகத்தே யுள்ள அருமைப்பொருள்களை நினைந்து மீளவருவதுமாய் அலைந்தன ரென்பது தோன்ற, 'ஊசலிட்டன' என்றார். இனி, வாசல் இட்ட எரி - மாளிகை வாயில்களில் (அநுமானால் வால் கொண்டு) பற்றவைக்கப்பட்ட தீயானது, மணி மாளிகை மூச முட்டி முழுதும் முருக்கலால் - அழகிய மாளிகை முழுவதும் நெருங்கப்பிடித்துக்கொண்டு அழித்ததனால் என்றும் பதவுரை கூறலாம். (உ)

[இரத்தினமாளிகைகளில் தீப்பற்ற மாதர்கள் வருந்திய வகை.]

ங. மணியினாயவயங்கொளிமாளிகை
பிணியிற்செஞ்சுடர்க்கற்றைபெருக்கலாற்
றிணிகொடீயுற்றதுற்றிலதேர்கிலா
ரணிவளைக்கைநல்லாரலமந்துளார்.

(இ - ள்.) மணியின் ஆய - இரத்தினங்களினாலாகிய [இரத்தினங்களைக் கொண்டு அமைக்கப்பட்ட], வயங்கு ஒளி மாளிகை - விளங்குகிற ஒளியையுடைய வீடுகள்,—பிணியின் செம் சுடர் கற்றை பெருக்கலால்-தொகுதியாகச் செந்நிறமான ஒளியின்திரளை வீசுதலால், திணி கொள் தீ உற்றது உற்றில தேர்கிலார் - மிகுதிகொண்ட தீப்பிடித்த இடத்தையும் பிடியாத இடத்தையும் பகுத்தறியாதவர்களாய், அணி வளை கை நல்லார் அலமந்து உளார் - அழகிய வளையல்களை யணிந்த கைகளையுடைய மாதர்கள் வருத்த முற்றார்கள்; (எ - று.)

இரத்தினமயமான மாளிகைகளினுள்ளே மாதர்களிருக்கிறபோது அவ்வீடுகளில் தீப்பற்றிக்கொண்டது; அவ்வில்லங்களிலமைந்த இரத்தினங்கள் இயல்பாகவே அக்கினிச்சுவாலைபோன்ற சிவந்த ஒளித்தொகுதியை வீசிக்கொண்டிருந்ததனால், அம்மாதர்கள், தீப்பற்றிய இட மின்னதென்றும், தீப்பற்றாத இட மின்ன தென்றும் வேறுபா டறிந்திலர்: ஆகவே, தீப்பற்றாத இடங்களினின்று தீப்பற்றின இடங்கட்குச் சென்றும், தீப்பற்றின இடங்களைத் தீப்பற்றாத இடங்க ளென்று கொண்டு அவற்றிலே யிருந்தும் இவ்வாறு தற் காக்குமாறின்றித் தடுமாறி வருந்துவாராயின ரென்பதாம். இங்ஙனம் இரத்தினவொளிக்கும் அக்கினிச்சுவாலைக்கும் வேறுபாடு தோன்றாமை கூறியது - மறைவணி: அதன் இலக்கணம் - பொதுக்குணத்தால் இரண்டு பொருள்கட்கு வேற்றுமைதோன்றாமை. உண்மைநிலையை நுட்பமாயுணரமாட்டாத பேதைமையை இயல்பாகவுடைமையும், மாளிகையகத்தே யுறைதலும் பற்றி, மாதர்களை யெடுத்துக்கூறினார். இதனால், அந்நகரத்துமாளிகைகளிலமைந்த இரத்தினங்களின் ஒளித்தொகுதி விளங்கிற்று. உற்றில - உற்றிலது என்பதன் விகாரம். (ங)

[புகைசூழ மாதர்கள் வருந்துதல்.]

௪. வானகத்தைநெடும்புகைமாய்த்தலாற்
போனதிக்கறியாதுபுலம்பினார்
தேனகத்தமலர்பலசிந்திய
கானகத்துமயிலன்னகாட்சியார்.

(இ - ள்.) தேன் அகத்த - தேனை உள்ளேயுடைய, மலர் பல - பலவகை மலர்கள், சிந்திய - சிந்தப்பெற்ற, கானகத்து - காட்டிலே, (தன்னிச்சையாய்வளர்ந்து விளையாடுகின்ற), மயில் - மயில்களை, அன்ன - ஒத்த, காட்சியார் - அழகிய சாயலையுடையவர்களான மாதர்கள்,—நெடும் புகை வான் அகத்தை மாய்த்தலால் - நெடுந்தூரம் உயரவெழுந்த மிக்கபுகையானது (எங்கும் சம்மிக்கொண்டு) ஆகாயத்தை மறைத்ததனால், போன திக்கு அறியாது புலம்பினார் - (ஆகாயமார்க்கமாய்) எழுந்துபோய்த் தப்பியுய்தற்கு ஏற்ற திசை இன்னதென்றுஉணராமற் பிரலாபித்தார்கள்; (எ - று.)

இனி, இரண்டாமடிக்கு - (தப்பியுய்யுமாறு தம்கணவர் உயரஎழுந்து) போனதிசையைத் தாம் உணராமல் அழுதார்கள் என்றுமாம். பின்னிரண்டடி - அசோகவனத்திற் சீதைக்குக்காவலாகவுள்ள அரக்கியரை நோக்கிய தென்று கொள்ளலாகாது. மாய்த்தல்-மறைத்தல்; "களிறுமாய்க்கும் கதிர்க்கழனி" என்றவிடத்துப் போல. காட்சி - அழகிய தோற்றம். (௪)

[அரக்கரும் அரக்கியரும் தலைமயிர் எரியப்பெறுதல்.]

௫. கூய்க்கொழுங்கனல்குஞ்சியிற்கூந்தலின்
மீச்சொரிந்தனமாதரும்வீரரு
மேய்த்ததன்மையினெரியின்மையுந்
தீக்கொளுந்தினவுந்தெரிகின்றிலார்.

(இ - ள்.) குஞ்சியில் கூந்தலில் - (அரக்கர்களில் ஆடவரது) தலைமயிரிலும் (மகளிரது) தலைமயிரிலும், கொழுங் கனல் - மிக்கநெருப்புக்கள், கூய் - சப்தலவோசைசெய்துகொண்டு, மீ சொரிந்து அன - மேலேசொரிந்தாற் போன்றன [மிகப்பற்றிக்கொண்டன என்றபடி]; (அங்ஙனமாகியும்), ஏய்த்த தன்மையினால் - (அந்தத் ..ங்கள் செம்பட்டமயிரும் நெருப்பும் நிறத்தில்) ஒத்திருக்கின்ற இயல்பினால்,—மாதரும் வீரரும் - இராக்கதமாதர்களும் இராக்கதவீரர்களும், எரி இன்மையும் தீ கொளுந்தினவும் தெரிகின்றிலார் - (தங்கள் தலைமயிர்கள்) நெருப்புப்பற்றாதன வென்றும் நெருப்புப் பற்றின வென்றும் வேறுபாடறியப்படாதவரா யிருந்தார்கள்; (எ - று.)—இதுவும், மறைவணி.

இராக்கதர்களது முடியிலுள்ள செம்பட்டமயிர்கள் இயல்பிலே நிறத்தினால் அக்கினிச்சுவாலைபோ லிருக்கின்ற ஒப்புமைபற்றி, இங்ஙனங் கூறினார். (வில்லிபுத்தூரார்பாரதத்துக் காண்டவதகனச்சருக்கத்தில் "செஞ்சி

வீரமு நீதியுங் குடிபுகா விருதர்சென்னியில் வன்னி, குஞ்சிநீடுற வளர்வபோ லசைந்து செங்கொழுந்துவிட்டன மேனமேல்" என்றது, இங்கு ஒப்புநோக்கத் தக்கது.) குஞ்சி - ஆண்மயிர் ; சிகை, பங்கி, குடுமி என்பனவும் இது. கூந்தல் - பெண்மயிர் ; ஐம்பால், ஓதி, கோதை என்பனவும் இது. கேசம், சிரோருகம், குழல் என்பன - மயிர்ப்பொதுவாய் வழங்கும். ஆகவே, முதலடியில் 'குஞ் சியிற் கூந்தலில்' என்ற முறைமைக்கு. ஏற்ப, இரண்டாமடியில் 'வீரரும் மாதரும்' என்னது, மாறுபடக்கூறியது, எதிர்நிரனிறைப்பொருள்கோள்.(௫)

[தீப்பற்றியதைப் பற்றியதொரு வருணனை.]

கு. இல்லிற்றங்குவயங்கெரியாவையுஞ்
சொல்லிற்றீர்ந்தனபோல்வனதொல்லுருப்
புல்லுக்கொண்டனமாயைப்புணர்ப்பறக்
கல்வித்தம்மியல்பெய்துங்கருத்தர்போல்..

(இ - ள்.) மாயை புணர்ப்பு அற - பிரகிருதிசம்பந்தம் நீங்க, கல்வி தம் இயல்பு எய்தும் - பிரஹ்மவித்தையின் உணர்ச்சியினால் தமது இயல்பான பரிசுத்தசுவரூபத்தை யடைந்த, கருத்தர் போல் - மனோபாவனையுடையவர் கள்போல,—இல்லில் தங்கு வயங்கு எரி யாவையும் - (அவ்வரக்கர்களுடைய) வீடுகளில் தங்கியிருந்த எரிகிற நெருப்புக்களெல்லாம், சொல்லின் தீர்ந்தன போல்வன - (இராவணனது) கட்டளைச்சொல்லின் நிர்ப்பந்தத்தினின்று கடந்தவைபோல்பவையாய், தொல் உரு புல்லுக்கொண்டன - பழமையான தமதுநிஜரூபத்தைப் பொருந்தின ; (எ - று.)

இராவணன் தனதுபேராற்றலினால் தேவர்களையெல்லாம் வலியடக்கி வென்று தன்வசப்படுத்தி அடிமையாக்கி அரசாண்டன னாதலால், அக்கினி தேவன் அவனது ஆட்சிக்கு உட்பட்டு அச்சத்துடன் ஒடுங்கி அவ்விலங்கை நகரத்துமாளிகைகளிலெல்லாம் அரக்கர்கட்குச் சமையல்முதலிய அக்கினி காரியங்கள் ஆகவேண்டியதற்கு எவ்வளவுவேண்டுமோ அவ்வளவாக அடங்கி உதவிநின்று அதற்குமேலாகத் தனது உக்கிரசொரூபத்தை வெளிக்காட்டா திருந்தனன் ; இதுவரை அங்ஙனமிருந்த தீ இப்பொழுது அநுமானது வாலின் தீயோடு சேர்ந்துகொண்டு அந்த ஆக்கிரயபலத்தால் இராவணனது கட்டளையைக் கடந்தாற்போலத் தனது நிஜரூபத்துடன் வெளிப்பட்டோங்கி யெரியலாயிற்று; அதற்கு, பிரஹ்மவித்யாஜ்ஞானத்தால்அவித்யையின்சம்பந்தம் நீங்கவே முன்புமறைந்துநின்ற ஆன்மசொரூபம் விளங்கப்பெற்ற ஞானிகளை உவமைகூறினர். புல்லுக்கொள்ளுதல் - புல்லுதலைக் கொள்ளுதல். (சு)

[புகை யெழுந்து பரவுதல்.]

எ. ஆயதங்கொர்குறளுருவாயடித்
தாயளந்துலகங்கடரக்கொள்வான்
மீயெழுந்தகரியவன்மேனியிற்
போயெழுந்துபரந்ததுவெம்புகை.

(இ - ள்.) வெம் புகை ஆயது - வெவ்வியபுகையானது,— அங்கு - அ காலத்தில், ஓர் குறள் உரு ஆய் - (முதலில்) ஒரு வாமனவடிவமாகி நின்று, தா உலகங்கள் அடி தாய் அளந்து கொள்வான் - (மகாபலிசக்கரவர்த்தி) கொடுக்க உலகங்களைப் பாதங்களினால் தாவியளந்துகொள்ளுதற்பொருட்டு, மீ எழுந்த - மேலோங்கிவளர்ந்த, கரியவன் மேனியின் - கரு நிறமுடைய வனான திருமாலின் திருமேனிபோல, எழுந்து போய் பரந்தது - மேலெழுந்து சென்று பரவியது; (எ - று.)

கருநிறமுள்ள வாமனமூர்த்தியின் வடிவத்தை, நிறத்திலும், எழுந்தோங்கி வளர்ந்துபரவுதலிலும் புகைக்கு உவமைகூறினார். அங்கு - முன்னொரு காலத்தில்: மாவலி செருக்குற்றுத் திரிலோகாதிபத்தியத்தைத் தன்வசப் படுத்திக்கொண்ட அப்பொழு தென்க. (எ)

[யானைகள் எரிபடுதல்.]

அ. நீலநின்றநிறத்தனகீழ்நிலை
மாலின்வெஞ்சினயானையைமானுவ
மேல்விழுந்தெரிமுற்றும்விழுங்கலாற்
றோலுரிந்துகழன்றனதோலெலாம்.

(இ - ள்.) நீலம் நின்ற நிறத்தன - நீல நிறமுள்ளனவாகிய, தோல் எலாம்-யானைகளெல்லாம், மேல் எரி விழுந்து முற்றும் விழுங்கலால் தோல் உரிந்து கழன்றன - தம்மீது நெருப்பு விழுந்து (உடம்பு) முழுவதும் பற்றிக் கொண்டதனால் தோலுரிந்து கழலப்பெற்றவையாய், மாலின் வெம் சினம் கீழ் நிலை யானையை மானுவ - மத மயக்கத்தையும் கடுங்கோபத்தையுமுடைய கீழ்த் திசையானையாகிய ஐராவதத்தைப் போல்வனவாயின; (எ - று.)

தீப்பற்றியதனால் தோலுரிந்து வெள்ளெலும்பு தோன்றநின்ற யானை கட்கு, வெள்ளையானையாகிய ஐராவதம் ஒப்புமை கூறப்பட்டது. கீழ்நிலை - கிழக்குத் திக்குக்கு உரிய, மாலின் வெஞ்சின யானை - இந்திரனது வெவ்விய சினமுள்ள ஐராவதயானை யென்றும் பதவுரை கூறலாம்; மால் - இந்திரன். (அ)

[எருமைகளும் மாதர்களும் இரிதல்.]

கூ. மீதிமங்கலந்தாலன்னவெம்புகை
சோதிமங்கலத்தீயொடுசுற்றலான்
மேதிமங்குலின்வீழ்புனல்வீழ்பட
வோதிமங்களின்மாதரோதுங்கினார்.

(இ - ள்.) மீது இமம் கலந்தால் அன்ன வெம் புகை - மேலே பனி யடர்ந்தாற்போன்ற வெவ்வியபுகை, சோதி மங்கலம் தீயொடு சுற்றலால் - பிரகாசமுள்ள மங்களகரமான நெருப்பினுடன் சூழ்ந்துகொண்டதனால்,—

(அஞ்சி), மேதி - எருமைகள், மங்குலின் - மேகங்கள்போல, வீழ் புனல் வீழ் - ஆழ்ந்த கடல்நீரிலே போய்விழ,—மட ஓதிமங்களின் மாதர் ஒதுங்கினர் - (நீர்நிலையிலேயிறங்குகின்ற) இளமையான அன்னப்பறவைகள்போல (அந்நகரத்து) மகளிர்கள் (அவ்வூரெல்லையினின்று) விலகி(க் கடலில்)விழுந்தார்கள்; (எ - று.)

எங்கும் மிக்கபுகை கம்ம நெருப்புப்பற்றியதனால் ("ஊருளெழுந்த வுருகெழுசெந்தீக்கு, நீருட்குளித்தும் உயலாகும்" என்றபடி) ஓடிச்சென்று நீரில் மூழ்கித் தப்பியுய்யுமாறு கடலில்விழுந்த எருமைகட்கு - அக்கடலில் இறங்கும் மேகங்களும், அங்ஙனமே கடலிலிறங்கிய மாதர்கட்கு - நீர்நிலையிலிறங்கும் அன்னப்பறவைகளும் உவமை யெனக் காண்க. மங்கலச்சடங்குபலவும் அங்கியங்கடவுளறிகரியாகச் செய்யப்படுதல்பற்றியும், அஷ்டமங்கலப்பொருள்களுள் தீப மொன்றாதல்பற்றியும், இன்றியமையாச்சிறப்புடைமைபற்றியும், தீக்கு 'மங்கலம்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. மூன்றாமடியிலுள்ள 'வீழ்' என்ற சொல் இரண்டனுள், பிந்தியது வீழ எனபதன் விகாரம். இனி, இச்செய்யுட்கு - புகையும் தீயும் சூழ்ந்துகொண்டதனால் அஞ்சி எருமைகள் மேகங்கள்போன்று விரும்பத்தக்க நீர்நிலையில் விழ, (அங்கு நீர் விளையாடிக்கொண்டிருந்த) மாதர்கள் (எருமைகள் விழுதலால) அன்னப்பறவைகள் (அஞ்சியொதுங்கினாற்) போல அங்குநின்று விலகினர்களென்று உரைகூறவும்படும். மேதி மங்குலின் வீழ்புன லென்பதற்கு - எருமைகள்போன்ற மேகங்களினால் விரும்பபபடுகிற நீரென்றாவது, மங்குல்-மேகங்கள், மேதியின் - எருமைகள்போல, வீழ் - விழப்பெற்ற, புனல் என்றாவது பதவுரைகூறி, கடலென்றுகொண்டு, நீர்நிலைகளில் விழும் இளவன்னங்கள்போல அக்கடலில் மகளிர் பதுங்கினர் எனினும் இழுக்காது.

[அவ்வனப்பொறிகளாற் கடல்வெதும்ப மீனினங்கள் தவித்தல.]

௪௦. பொடித்தெழுந்துபெரும்பொறிபோவன
விடிக்குலங்களினெங்கணும்வீழ்தலும்
வெடித்தவேலைவெதும்பிடமீன்குலந்
துடித்துவெந்துபுலர்ந்துயிர்சோர்ந்தவால்.

(இ - ள்.) பொடித்து எழுந்து போவன - அவ்வனலினின்று சிதறியெழுந்துபோவனவாகிய, பெரும் பொறி - பெரிய நெருப்புப்பொறிகள், இடிகுலங்களின் எங்கணும் வீழ்தலும் - இடிக்கூட்டம்போல எல்லாவிடத்திலும் விழுந்தவளவிலே,—வெடித்த - வெடியோசைபோன்ற ஓசைபெற்ற, வேலை - கடல், வெதும்பிட - கொதிப்படைய,—மீன் குலம் - (அக்கடலிலுள்ள) மீன்களும் அவற்றினினமான நீர்வாழுயிர்களும், வெந்து புலர்ந்து துடித்து உயிர் சோர்ந்த - தாபமடைந்து வாடித்துடித்து உயிரொடுங்கின; (எ - று.)—ஆல் - ஈற்றசை. (௪௦)

[அந்நெருப்பினால் அந்நகரத்துமாளிகைகளின் பொன் உருகுதல்.]

கக. பருகுதீமடுத்துள்ளுறப்பற்றலா
லுருகுநீடியவாடகத்தாரைக
ளுருகிவேலையினூடுபுக்குற்றன
திருகுபொன்னெடுந்தண்டிற்றிரண்டவால்.

(இ - ள்.) பருகு - நீரைஉறிஞ்சுமியல்புள்ள, தீ - நெருப்பு, மடுத்து - நிறைந்து, உள் உற பற்றலால் - உள்ளளவாகப பற்றியெரிதலினால், உருகி அருகு நீடிய - உருகிப் பக்கங்களிற் பெருகிய, ஆடகம் தாரைகள் - (ஸ்வர்ணமயமான அந்நகரத்துமாளிகைகளி லுண்டான) பொன்னின் தாரைகள், வேலையின் ஊடு புக்கு உற்றன - கடலினகத்தே போய்ச் சேர்ந்தவையாய், திருகு பொன் நெடுந் தண்டின் திரண்ட - (அந்நீர்பட்டமாத்திரத்தில்) முன்னை நிலைமாறி நீண்ட பெரியபொற்காறுகளாய்த் திரண்டன; (எ - று.)

அனலினாற் பொன்உருகுதலும், அவ்வுருகியபொன் நீரினா லிறுகிநிற்றலும் இயல்பு. ஆடகம் - வடசொல். ஆல் - ஈற்றசை. (கக)

[தரையுமுட்பட அந்நகரம் வேகுதல்.]

கஉ. உரையின்முந்துலகுண்ணுமெரியதால்
வரைநிவந்தனபன்மணிமாளிகை
நிரையினீணெடுஞ்சோலையினிற்குமோ
தரையும்வெந்ததுபொன்னெனுந்தன்மையால்.

(இ - ள்.) உரையின் முந்து உலகு உண்ணும் எரி அதால் - ஒரு சொற் சொல்லுமுன்னே உலகங்களை விழுங்கவல்ல அப்பெருநெருப்பினால்,— வரை நிவந்தன பல் மணி மாளிகை - மலைபோலுயர்ந்துள்ளனவும் பல இரத்தினங் களழுத்தினவு மான மாளிகைகள், நிரையின் நீள் நெடுஞ் சோலையின் நிற்குமோ - வரிசையாகவளர்ந்த உயர்ந்தசோலைகள் (தீப்பட்டால்) நிற்கு மாறு போலக் கரியனவாகவேனும் நிற்கமாட்டுமோ? [மாட்டிற்றில;] (என்னெனின்),—பொன் எனும் தன்மையால் தரையும் வெந்தது - பொன்மயமாக விருத்தலினால் (அவ்விலங்கையின்) தரையும் வெந்துருகியோடிவிட்டது.

மரச்செறிவாகிய சோலைகள் தீப்பட்டெரிந்தால் அம்மரங்கள் கருகி நிற்க, அவைவளர்ந்தோங்கிய தரை எரிபடாதுநிற்கும்; அங்ஙனமன்றி, அவ் விலங்காபுரியிலுள்ள வீடுகள் தளவரிசையுட்படப் பொன்மயமானதனால் அத்தரையுமுட்பட எரிந்துருகியழிந்தன வென்பதாம். உரையின்முந்து என்றதை, "இம்மென்னுமுன்னே," "அம்மென்றால்", "என்னுமுன்" என்றாற்போல மிக்கவிரைவைவிளக்குவதாகக் கொள்க. சோலையின் என்பது, நிற்குமோ என்பதிலுள்ள நிற்றல் வினையைக் கொண்டது. இனி, இச் செய்யுட்கு வேறொரு வகையாகவும் பொருள்கூறலாம்; அது வருமாறு:—

எரி - அந்நெருப்பானது, உரையின் முந்து உலகு உண்ணும் அதால் - 'ஒரு சொற்சொல்லுமுன்னே உலகங்களை விழுங்குந் திறத்த தாதலால், வரையின் நிவந்தன பன்மணிமாளிகை நிரையில் நீள் நெடுஞ் சோலையில் நிற்கு மோ - மலைபோலுயர்ந்தனவான பலஇரத்தின மாளிகைகளின் வரிசையிலும் மிகவுயர்ந்த (அந்தகாரத்துச்) சோலைகளிலும் அடங்கிநிற்பதாமோ? பொன் எனும் தன்மையால் தரையும் வெந்தது - பொன்மயமாயிருத்தலால அவ் விலங்காபுரியின் நிலமுமுட்பட வேவதாயிற்று என்பதாம். 'சோலைகணிற்கு மோ' என்ற பாடத்திற்கு - அவ்வெரியினால் மாளிகைகளும் சோலைகளும் எரியாது நிற்குமோ? எனக் காண்க. (கஉ)

[புகைமிகுதியும், தேர்களினழிவும்.]

கங. கல்லினும்வலிதாம்புகைக்கற்றையா
லெல்லிபெற்றதிமையவர்நாடியல்
வல்லிகோலிநிவந்தனமாமணிச்
சில்லியோடுந்திரண்டனதேரெலாம்.

(இ - ள்.) கல்லினும் - கல்லைக்காட்டிலும், வலிது ஆம் - செறிவுள்ள தான, புகை கற்றையால் - புகையின் தொகுதி எழுந்துபரவிச்சூழ்தலினால், இமையவர் நாடு - பொன்மயமாய்விளங்குகின்ற தேவலோகமும், எல்லி பெற்றது - இருளைப்பெற்றது; இயல் வல்லி கோலி நிவந்தன தேர் எலாம் - எற்ற கொடிகள் கட்டப்பெற்று உயர்ந்தனவான தேர்களெல்லாம், மா மணி சில்லியோடும் - பெரிய இரத்தினகசிதமான சக்கரங்களுடனே, திரண்டன - (முழுவதும் பற்றியெரிந்து உறுப்புகளின் பாகுபாடின்றி) ஒரேதொகுதியாய் விட்டன; (எ - று.)

எல்லி - இராத்திரி: இருளுக்கு இலக்கணை. வல்லீ என்ற வடசொல், படர்கொடியை யுணர்த்தும்: அது, கொடியென்றமாத்திரமாகி, அந்தக்கொடி யென்னுஞ் சொல்லினது மற்றொருபொருளாகிய துவசத்தை யுணர்த்திற்று; இது, லக்ஷிதலக்ஷணை. அவரவர் தகுதிக்கும் விருப்பத்திற்கும் எற்ற வடிவம் வரைந்த கொடியைத் தேரின்மீது நாட்டுமியல்புபற்றி, வல்லி யென்பதற்கு 'இயல்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. (கங)

[பானசாலையைத் தீமடுத்தல்.]

கச. பேயமன்றினினின்றுபிறங்கெரி
மாயருண்டநறவுமடுத்ததா
றாயரென்றவர்வைகிடந்தன்னிறைற்
றீயரன்றியுந்தீமையுஞ்செய்வரால்.

(இ - ள்.) பேயம் மன்றினில் - மதுவாகிய குடிக்கத்தக்கபொருள் பொருந்திய (பான) சாலையில், நின்று - பற்றிநின்று, பிறங்கு-எரிந்துவிளங்கு

கிற, எரி - தீயானது, மாயர் உண்ட நறவும் மடுத்தது - வஞ்சகர்களான இராக்கதர்கள் பருகும்படியான மதுவையும் (தான்) உண்டது; தூயரென்ற வர் - பரிசுத்தியுடையவரென்று சிறப்பித்துச்சொல்லப்படுபவர்களும், வைகு இடம் தன்னினால் - (தீயவர்க ளிருக்கின்ற) இடத்திற் சேர்ந்தால், தீயர் அன்றியும் தீமையும் செய்வர் - தாம் இயல்பிற் கொடியவரல்லாமலிருந்தே தீச்செயல்களைச் செய்வார்கள்; (எ - று.)—'ஆல்' இரண்டும் - ஈற்றசை.

பரிசுத்தனான அக்கினிதேவன் அபரிசுத்தர்களான அரக்கர்களுடைய பானசாலையிற் புகுந்ததனால் அங்குள்ள மதுவைத் தானும் பருகலானானென்ற சிறப்புப்பொருளை, தூயராயுள்ளவரும் தீயவர்வைகு மிடத்தைச் சேர்ந்தால் தாம் இயல்பில் தீயவரல்லாதிருந்தே தீயசெயல்களைச் செய்வார்களென்ற பொதுப்பொருள்கொண்டு சாதித்தது வேற்றுப்பொருள்வைப்பணி. பேயம் - வடசொல்; பானஞ்செய்தற்கு உரியபொருள். மன்று-பொதுவிடம். உண்ட நறவு - உண்ணுதற்கேற்ற நறவு; இங்கு இறந்தகாலவிடைநிலை காலமுணர்த்தாது தன்மையையுணர்த்திற்று. இனி, வஞ்சகராகிய அரக்கர்கள் உண்ட மிச்சிலாகிய மது வென்றும் பொருள்படும். (கச)

[அக்கினிச்சுவாலை சுற்றிலும் மேலும் பரவுதல்.]

கரு. தழுவிலங்கைதழுங்கெரிதாய்ச்செலீஇ
வழுவில்வேலையுலையின்மறுகின
வெழுமெழுஞ்சுடர்க்கற்றைசென்றெய்தலாற்
குழுவுதண்புனன்மேகங்கொதித்தவே.

(இ - ள்.) இலங்கை தழுவு - அந்த இலங்காநகரத்திற் பற்றிய, தழங்கு எரி-முழங்கிக்கொண்டு [சடலவோசைசெய்துகொண்டு] எரிகின்ற நெருப்பு, தாய் செலீஇ - தாவிச்சென்று ஜ்வாலை வீசுதலால், வழுவு இல் வேலை உலையின் மறுகின - அந்நகரத்தை நாற்புறத்துஞ்சூழ்ந்துள்ள கடல்கள் உலைநீர்போல மிகக்கொதித்தன; எழும் எழும் சுடர் கற்றை சென்று எய்தலால் - மேன்மேலெழுகிற சுவாலைத்தொகுதிகள் போய் வீசுதலினால், குழுவு தண் புனல் மேகம் கொதித்த - வானத்திலே திரண்டுள்ள குளிர்ச்சியான நீரையுடைய மேகங்களும் கொதிப்படைந்தன; (எ - று.)

வழுவில்வேலை - குற்றமற்ற கடல் எனினுமாம். நாற்புறத்துமுள்ள கடலைக் கருதி, 'வேலைமறுகின' எனப் பன்மையாற் கூறினார். (கரு)

[எரியினால் தவித்த அரக்கியர் கானலில்விழுதல்.]

கசு. ஊனிலோடுமெரியொடுயங்குவார்
கானிலோடுநெடும்புனல்காணொ
வானிலோடுமகளிர்மயங்கினர்
வேனிலோடருந்தேரிடைவீழ்ந்தனர்.

(இ - ள்.) ஊனில் ஓம் எரியொடு உயங்குவார் - தங்களுடம்பிலே' தாவிப்பாய்கிற நெருப்பினால் வருந்துபவர்களாய், வானில் ஓடும் - (தப்பியுய்தற் பொருட்டு) வானத்தில் எழுந்து ஓடுகிற, மகளிர் - இராக்கதமாதர்கள், கானில் ஓடும் நெடும்புனல் காண் எனா மயங்கினார் - காட்டிலே ஓடுகிற நீண்டயாற்று வெள்ளமே யென்று மாறுகக்கருதினவர்களாய், வேனில் ஓடு அருந் தேரிடை வீழ்ந்தனர் - வெப்பத்துடன் ஓடுவதுபோலக் காணப்படுகின்ற அருமையான பேய்த் தேரெனப்படும் கானலிலே விழுந்தார்கள்; (எ - று.)

வேகமாகவந்து தமதுஉடம்பில் அனல் பற்றுகையினால் வருந்திய இராக்கதமாதர்கள் தப்பியுய்யுமாறு வானத்தில் எழுந்து ஓடும்போது, தரையிற் காணப்பட்ட கானலை ஓடுகிறநீரென்றுகருதித் தமதுவெப்பந்தணிந்து உய்யுமாறு அக்கானல்நீரிலே விழுந்து அழிந்தார்களென்பதாம். கானலை நீரென மாறுகக் கருதின ரென்றதனால், மயக்கவணி. கானலின்தோற்றம் ஓடுகின்ற நீர்போலக்காணப்படுதல் இயல்பு; "கானகத்தியங்கிய கழுதின் தேர்க்குலந், தானகத்தெழுதலால் தலைக்கொண்டோடிப்போய், மேனியிற்றெழுந்திடன் விசும்பும் வேமெனா, வானவர்க்கிரங்கி நீர்வளைந்ததொத்ததே" என்றார் பாலகாண்டத்தும். வானிலோடும் மகளிர் - வானத்திற் சஞ்சரிக்குந்தன்மையுள்ள தேவமாதர்களெனினுமாம். எரியொடு என்பதில், 'ஒடு' என்னும் மூன்றனுருபு ஆனுருபின் தன்மையதாய்க் கருத்தாப்பொருளில் வந்தது. அருந் தேர் - நீரன்றென்று அறிதற்கு அருமையதான பேய்த்தே ரென்றபடி. (கசு)

[வண்டுகள் தீச்சுடரில் விழுந்து அழிதல்.]

கஎ. தேனவாம்பொழிறீப்படச்சிந்திய
சோனைமாமலர்த்தும்பிதொடர்ந்தயற்
போனதீச்சுடர்புண்டரிகத்தடங்
கானமாமெனவீழ்ந்துகரிந்தவே.

(இ - ள்.) தேன் அவாம் பொழில் - தேன்மிக்க (அந்தகாரத்துச்) சோலைகளில், தீ பட - நெருப்புப்பற்ற அதனால், சிந்திய - சிதறிய, சோனை மாமலர் - இடைவிடாத தேன்மழையைச் சொரியுஞ் சிறந்தமலர்களில் மொய்த்துக்கிடக்கிற, தும்பி - வண்டுகள்,—அயல் தொடர்ந்து போன தீ சுடர் - அருகிலே தொடர்ச்சியாகச்செல்லுகிற அக்கினிச் சுவாலையை (க் கண்டு), தடம் புண்டரிகம் கானம் ஆம் என - பெரியதாமரைக்காடா மென்று மாறுகக்கருதி, வீழ்ந்து - (அத்தீச்சுடரில்) விழுந்து, கரிந்த - கருகிப்போயின; (எ - று.)

அக்கினிச்சுவாலையை வண்டுகள் செந்தாமரைமலர்த் தொகுதியென மாறுபடக்கருதின வென்றதனால், இதுவும் - மயக்கவணி. தேன் அவாம் பொழில் - தேனினால் விரும்பத்தக்க சோலை யெனினுமாம். தாமரைத்தொகுதியை 'தாமரைக்காடு' என்றல், மரபு. (கஎ)

[மானினிகளான சிலஅரக்கியர் அகத்திலேயே அழிதல்.]

கசு. நற்சடன்னிதுநம்முயிர்நாயகன்
மற்சடந்தெறமாண்டனன்வாழ்விலெ
மிற்கடந்தினியேகலம்யாமெனு
விற்கடந்தநுதற்சிலர்வீடினார்.

(இ - ள்.) 'நம் உயிர் நாயகன் - நமது உயிரோடொத்த கணவன் [பிராணநாயகன்], மற்கடம் தெற மாண்டனன் - ஒருகுரங்கு [அநுமான்] கொல்லுதலால் (போரில்) இறந்துபோனான்; (அதனால்), வாழ்வு இலம் - மங்கல வாழ்க்கையில்லாதவர்களாய்விட்ட, யாம் - நாம், இனி - இனிமேல், இல் கடந்து ஏகலம் - வீட்டைவிட்டு வெளியே செல்லக்கடவோமல்லோம்; இது நல் கடன் - இங்ஙனம் இறத்தலே (நமக்கு) நல்ல கடமையாம்', எனா - என்றுநினைத்து, வில் கடந்த நுதல் சிலர் வீடினார் - வில்வடிவத்தைவென்ற புருவத்தையுடைய சில இராக்கதமாதர்கள் (வாயிற்படிகடந்து வெளியேயோடித்தப்பியுய்தலின்றி அகத்திலிருந்தபடியே எரியின்வாய்ப்பட்டு) இறந்தார்கள்; (எ - று.)

கணவனிறந்தபின்பு விதவையாய் வெளியே திரிதல் மானக்கேடாதலால் எரியின்வாய்ப்பட்டு இறத்தலே பதிவிரதாதருமந்தவறாத நமக்குக் கடமையென்று கருதி அங்ஙனம் இறந்தனர் சில அரக்கியரென்க. அழகிதாய் வளைந்தவடிவத்தில், புருவத்துக்கு வில் உவமை கூறப்படும்; அதனினுஞ் சிறப்பாகவுள்ள புருவமென்பது, 'விற்கடந்த நுதல்' என்பதன் கருத்து. நுதல் - நெற்றியுமாம். (கசு)

[அந்தநகரத்துச் சோலைகள் கரிந்துபோதல்.]

கஎ. பூக்கரிந்துமுறிபொறியாயடை
நாக்கரிந்துசினைநறுஞ்சாம்பராய்
மீக்கரிந்துநெடும்பணைவேருறக்
காக்கரிந்துகருங்கரியானவே.

(இ - ள்.) பூ கரிந்து - மலர்கள் தீந்து, முறி பொறி ஆய் - தளிர்கள் பொறிபடச்சிதறி, அடை நா கரிந்து - இலைகளும் அவற்றின்நடுவேயுள்ள அரும்புமுதலியனவும் தீந்து, சினை நறுஞ் சாம்பர் ஆய் - கிளைகள் நல்லசாம்பலாய் வெந்து, மீ கரிந்து - (இங்ஙனம்) மேலுள்ள பொருள்களெல்லாம் தீந்து, நெடும் பணை வேர் உற கரிந்து - நீண்ட பருத்த வேருமுட்படத் தீந்து, கா - சோலைகள், கருங் கரி ஆன - கரியகரிகளாய்விட்டன; (எ - று.)

கரிந்து, பொறியாய், கரிந்து, சாம்பராய், கரிந்து, கரிந்து என்ற சினைவினைகள் - 'கரியான' என்ற முதல்வினையைக் கொண்டன. கருமையென்ற அடைமொழியடுத்ததனால், கரியென்பது - வாளா பெயராய் நின்றது; இனி, கருங்கரி - பெருங்கரியுமாம். (கஎ)

[பொன்னகரத்தின் பொன் உருகியொழுகுதல்.)

௨௦. கார்முழுக்கவெழுங்கனற்கற்றைபோ
யூர்முழுக்கவெதுப்பவுருகின
சோரொழுக்கமறுமையிற்றுன்றுபொன்
வேர்விடுப்பதுபோன்றனவிண்ணெலாம்.

(இ - ள்.) கார் முழுக்க - மேகங்களைத் தமதகத்தே முழுகடிக்கும்படி, எழும் - மேலே கிளர்ந்தெரிகிற, கனல் கற்றை - அக்கினிச்சுவாலைகள், போய்—, ஊர் முழுக்க வெதுப்ப - (பொன்மயமான) அமராவதிநகரம் முழுவதையுஞ் சுட்டெரிக்க அதனால், உருகின சோர் - உருகியொழுகுகின்ற, பொன் ஒழுக்கம் - பொன்னின்தாரைகள்,—அறுமையின் - இடைவிடாது பெருகுதலால்,—விண் எலாம் துன்று வேர் விடுப்பது போன்றன - அப்பொன்னகரமாகிய மரம்முழுவதும் நெருங்கிய வேரை இறங்கவிடுவதுபோன்றன; (எ - று.)

மேகங்கள்முழுகும்படி ஓங்கியெழுந்த அக்கினிச்சுவாலைகள் போய் மேலுள்ள பொன்னகரத்தைச் சுட்டெரிக்க, அது வெந்து உருகுதலால் இடைவிடாதுபெருகுகிற சுவர்ணதாரைகள், அப்பொன்னகரமாகிய மரம் தனது இடையறுதுநீண்டவேர்களைக் கீழே இறங்கவிட்டாற்போலு மென்பதாம்; உருவகவணியை அங்கமாகக்கொண்டு வந்த தற்குறிப்பேற்றவணி. விண்எலாம் துன்றுபொன்வேர்விடுப்பது போன்றன எனபதற்கு - பொன்னகரமாகிய அவ்வமராவதியிலுள்ள பொன்மயமான கற்பகவிருட்சங்களெல்லாம் தமது வலிய பொன்மயமான வேரை யிறங்கவிடுவதுபோன்றன என்றும் பொருள்கொள்ளலாம். இனி, ஊர் - இலங்கை யென்றே கொண்டு, பொன்மயமாயுயர்ந்துள்ள இலங்கைமுழுவதையும் மிகஓங்கியெழுந்த அக்கினிச்சுவாலையெரிக்க அதனு லுருகியோடுகிற பொன்னின்தாரைகளை இங்ஙனம் வருணித்ததாகக் கொள்ளலு மமையும். முதலடியிலுள்ள 'முழுக்க' என்பது - முழுக என்பதன் பிறவினை. இரண்டாமடியிலுள்ள 'முழுக்க' என்பது - முழுதும் என எஞ்சாமைப்பொருள் குறித்தது. (௨௦)

[அவ்வனல்வீசுதலாற் சந்திரமண்டலமும் உருகுதல்.]

௨௧. நெருக்கமீமிசையொக்கநெருப்பெழச்
செருக்கும்வெண்கதிர்த்திங்களைச்சென்றுற
வுருக்குமெய்யினமுதமுகுத்தலா
லரக்கருஞ்சிலராவிபெற்றாரரோ.

(இ - ள்.) நெருக்கம் - அடர்த்தியாக, மீமிசை - மேன்மேல், ஒக்க - ஒருசேர, நெருப்பு எழ - நெருப்பு ஓங்கியெரிய, (அந்த அக்கினிச்சுவாலை), செருக்கும் வெள் கதிர் திங்களை சென்று உற - களிப்பைவிளைக்கின்ற வெண்ணிறமான கிரணங்களையுடைய சந்திரமண்டலத்தைப் போய்ச் சேர, (அச்சந்திரமண்டலம்), உருக்கும் மெய்யின் அமுதம் உகுத்தலால் - உருக்கப்

பெற்ற தனதுவடிவத்தினின்று அமிருதத்தைச் சிந்துதலால், அரக்கரும் சிலர் ஆவி பெற்றார் - (இலங்கையில் தீயின்வாய்ப்பட்டு இறக்கிற நிலைமையை யடைந்த) சிலஅரக்கர்கள் (அந்தஅமிருதம் தம்மீதுசிந்துதலால்) உயிர்பெற்றார்கள்; (எ-று.)—அரோ-ஈற்றசை; வியப்பிடைச்சொல்லுமாம்.

இலங்கையில் எழுந்தோங்கியெரிகிற அக்கினியின் சுவாலை சந்திரமண்டலத்தின்மீது வீசுதலால் அம்மண்டலம் உருக, அதனினின்று பெருகிய அமிருதம் தம்மீதுதுளித்தலால், எரிந்துஇறக்கிறஅரக்கரிற்சிலர் இறவாது உயிர் பெற்றன ரென்பதாம். அக்கினிச்சுவாலைகள் மிகவோங்கி வளர்ந்தன வென்பது, இதனாற் போதரும். செருக்கும் கதிர் - பிறர்மகிழ்ச்சியடைதற்குக் காரணமான கிரணம்; பெயரெச்சம், காரியப்பொருளது; இனி, வளர்ந்து மிக்க கிரணங்க ளென்றலுமாம். சந்திரமண்டலம் அமிருதமயமான தென்பதனை "மண்டலந்தனை நிழலெனுமரபினாற் றனது, மண்டலம் பொழியமிழ்தின் மெய்குளிரவே வைத்தோன்" என்ற வில்லிபுத்தூரார்பாரதத்தாலும் அறிக. (உக)

[அவ்வனல் மேகமண்டலத்திலும் சூரியமண்டலத்திலும் வீசுதல்.]

உஉ. பரிதிபற்றிநிமிர்ந்தெழுபைங்கனல்
கருகிமுற்றுமெரிந்தெழுகார்மழை
யருகுசுற்றுமிருந்தையதாயதி
னுருகுபொற்றிரளொத்தனனொண்கதிர்..

(இ - ள்.) பரிதி பற்றி நிமிர்ந்து எழு பைங் கனல் - சூரியமண்டலத்தை யளாவி யுயர்ந்தெழுந்த புதுமையான அந்த அக்கினியினால், எழு கார் மழை முற்றும் எரிந்து கருகி அருகு சுற்றும் இருந்தைஅது ஆய் - வானத்திற் செல்லுகிற காளமேகங்கள் முழுவதும் வெந்து கருகிப் பக்கங்களிலெங்கும் கரிபோலிருக்க, ஒள் கதிர் அதின் உருகு பொன் திரள் ஒத்தனன் - (அம்மேகமண்டலத்தின்மீது விளங்குகின்ற) பிரகாசமான கிரணங்களை யுடைய சூரியன் அக்கரித்தொகுதியினிடையே உருகுகிற பொன்னின் திரளையைப் போன்றான்; (எ - று.)

தற்குறிப்பேற்றவணி., இருந்தை - கரி; அதன்மேல் 'அது' என்பது - பகுதிப்பொருள்விகுதி. ஒண்கதிர் - பண்புத்தொகையன்மொழி யென்றாவது, அடையடுத்த சினையாகுபெய ரென்றாவது கொள்ளத்தக்கது. (உஉ)

[குதிரைகள் எரிபடுதல்.]

உங. தளைகொளுத்தியதாவெரிதாமணி
முளைகொளுத்திமுகத்திடைமொய்த்தபே
ருளைகொளுத்தவுலந்துலைவுற்றன
வளைகுளப்பின்மணிநிறவாசியே.

(இ - ள்.) தளை கொளுத்திய - பின்காற்கயிற்றைப் பற்றி வேகச்செய்த, தாவு எரி - (சுவாலை) தாவுகிற நெருப்பானது, தாமணி முளை கொளுத்தி - தாமணியென்னுங் கட்டுக்கயிற்றுடனே (அக்கயிறுகட்டுமிடமான) முளைகளை யும் எரியப்பண்ணி, முகத்திடை மொய்த்த பேர் உளை கொளுத்த - முகத்திலே நெருங்கியுள்ள மிகுதியான பெரியமயிர்களையும் எரிக்க,—வளை குளப் பின் மணி நிறம் வாசி - வளைந்தகாற்குளம்புகளையும் அழகியநிறத்தையுமுடைய குதிரைகள், உலந்து உலைவுற்றன - தவித்து அழிவடைந்தன; (எ - று.)

குளம்பு குளப்பு என மென்றொடர் வன்றொடராயிற்று. (௨௩)

[அரக்கர்கள் தப்பியுய்யமாட்டாது தொலைதல்.]

௨௪. எழுந்துபொற்றலத்தேறலினீள்புகைக்
கொழுந்துசுற்றவுயிர்ப்பிலர்கோளுமுற்
றழுந்துபட்டுளரொத்தயர்ந்தாரழல்
விழுந்துமுற்றினர்கூற்றைவிழுங்குவார்.

(இ - ள்.) கூற்றை விழுங்குவார் - யமனையும் விழுங்கவல்லவர்களான [பேராற்றலுடைய] அரக்கர்கள்,—எழுந்து பொன்தலத்து ஏறலின் - (தப்பியுய்யுமாறு) மேலெழுந்து பொன்மயமான மேலுலகத்தை நோக்கிச் செல்லும்போது, நீள் புகை கொழுந்து சுற்ற - மேலோங்கிய புகைத்திரள் தம்மைச்சூழ்ந்துகொள்ள அதனால், உயிர்ப்பு இலர் - மூச்சுவிடமாட்டாதவர் களாய், கோளும் உற்று - (அப்புகையை) உட்கொள்ளுதலுஞ்செய்து, அழுந்து பட்டுளர் ஒத்து அயர்ந்தார் - (நீர்நிலையில்) அழுந்தியவர்களைப் போன்று தவித்த வர்களாய், அழல் விழுந்து முற்றினர் - நெருப்பில் விழுந்து முடிந்தார்கள் [இறந்தார்கள்]; (எ - று.)

'அழுந்துபட்டுளர்' என்ற வினையினால், 'ஆழமான நீர்நிலையில்' என்பது வருவிக்க. (௨௪)

[ஆடையிலுங் கூந்தலிலுந் தீப்பற்ற அரக்கியர் திகைத்தல்.]

௨௫. கோசி கத்துகி லுற்றகொ ழுங்கன
லாசி லுத்தரி கத்தொடு சுற்றுறு
வாச மைக்குழல் பற்றம யங்கினார்
பாசி ழைப்பர வைப்பட ரல்குலார்.

(இ - ள்.) பாசு இழை பரவை படர் அல்குலார் - பசும்பொன்னாபரணங் களையும் கடல்போலப் பரந்த அல்குலையு முடையவர்களான இராக்கதமாதர் கள்,—கோசிகம் துகில் உற்ற கொழுங் கனல் - (அரையிலுடுத்த) பட்டாடை யிற் பற்றிய மிக்கநெருப்பு, ஆசின் உத்தரிகத்தொடு சுற்றுறு - மேலாடை யாகத்தரித்த வஸ்திரத்திற் பற்றி அதனுடன் சூழ்ந்து, வாசம் மைக் குழல் பற்ற - நறுமணமுள்ள கரிய கூந்தலிலும் பற்றிக்கொள்ள, மயங்கினார் - (இன்னதுசெய்வதென்று அறியாது) திகைத்து அழிந்தார்கள்; (எ - று.)

கோசிகம் - பட்டு. துகில் - ஆடை. கோசிகத்துகில் - கோசிகமாகிய துகி லென இருபெயரொட்டு. இடையிலுடுக்கும் ஆடை [உள்ளாடை] - அந்தரீய மெனவும், மேலேதரிக்கும் ஆடை - உத்தரீய மெனவும் படும். தூசின் உத்த ரிகத்தொடு - உத்தரிகத்தூசினொடு என மாறுக; தூசு - வஸ்திரம். (உரு)

வேறு.

[ஆடை எரியுண்ண, அரக்கரும் அரக்கியரும் போய்க் கடலில்விழுதல்.]

உசு. நிலவி லங்கிய துகிலினை நெருப்புண நிருத
ரிலவி னுஞ்சில முத்துள வெனுநகை யனையார்
புலவி யின்கரை கண்டவ ரமுதுகப் புணரும்
கலவி யின்கரை கண்டிலர் மண்டினர் கடன்மேல்.

(இ - ள்.) புலவியின் கரை கண்டவர்-ஊடலின் முடிவெல்லையைக் கண்ட வர்களாகிய [ஒருவரோடொருவர்கொண்ட ஊடல் தணியப்பெற்றவர்களாகிய], நிருதர் - அரக்கர்களும், இலவினும் சில முத்து உள எனும் நகை அனையார் - இலவம்பூவினிதழிலும் சிலமுத்துக்களுள்ளன வென்று வருணிக்கத்தக்க பற்களையுடையவர்களான அவ்விராக்கதமாதர்களும்,— நில இலங்கிய துகி லினை நெருப்பு உண - நிலாப்போல வெண்ணிறமாய் விளங்குகிற தங்க ளாடைகளை நெருப்பு எரிக்க, அமுது உக புணரும் கலவியின் கரை கண் டிலர் - இன்பம்சுரக்கத் தம்மிற்கூடுங் கலவியின்பமாகிய கடலின் முடிவைக் காணாமலே, கடல்மேல் மண்டினர் - கடலிற் போய் விழுந்தார்கள்; (எ - று.)

நிலவிலங்கிய துகில் - வெண்பட்டாடை. 'நிலவிளங்கியதுகில்' என்ற பாடத்துக்கு - நில விளங்கிய என்று பிரிக்க. நிலாஎன்பது நிலஎனக் குறி யதன்கீழ் ஆக் குறுகிநின்றது. செந்நிறமான வாயிதழ்களி னகத்தே வெள்ளிய அழகிய பற்களின் வரிசை யிருத்தல் இலவிதழிலே முத்துக்களிருக்கின்றன போலு மென வருணிக்கத்தக்க அந்தச் சாதிமாதர்க ளென்பது, இரண்டாமடி யின் கருத்து. முத்துப்பிறக்குமிடம் இருபதென்பது, பிரசித்தம்; அதற்கு மேலாக இலவமலரினிதழகத்தும் முத்துக்க ளுள்ளன வென்று கற்பனை கூறத்தக்க பற்களினழகையுடையா ரென்று பொருள்படுதலால், 'இலவினும்' என்ற உம்மை - இறந்ததுதழுவிய எச்சம். ஊடிய ஆடவரும் மாதரும் ஊடல்தீர்ந்து கூடு நிலையிலே தமது ஆடையைத் தீயுண்ணக் கூடுதலின்பங் கூடாதமுன்னமே கடலிற் போய்விழுந்தார்க ளென்க.

இதுமுதல் இருபத்தொரு கவிகள் - கீழ்வந்த பாசப்படலத்தின் ரு௦ - ஆங் கவி போன்ற கலிநிலைத்துறைகள். (உசு)

[சிலஅரக்கியர் கிளியையிழந்து புகையில்மறைதல்.]

உஎ. பஞ்சரத்தொடுபசுநிறக்கிளிவெந்துபதைப்ப
வஞ்சனக்கணினருவிநீர்முலைமுன்றிலலைப்பக்
குஞ்சரத்தனகொழுநரைத்தழுவுறுங்கொதிப்பான்
மஞ்சுறப்புகுமின்னெனப்புகையிடைமறைந்தார்.

(இ - ள்.) பசு நிறம் கிளி - (தாங்கள்வளர்க்கிற) பசுமைநிறமுள்ள கிளிகள், பஞ்சரத்தொடு வெந்து பதைப்ப - (தாமிருக்கின்ற) கூட்டுடனே நெருப்பில் வெந்து துடிக்க, (அதுகண்ட சோகத்தால்), அஞ்சனம் கணின் அருவி நீர் - மையிட்ட தங்கள் கண்களினின்று மலையருவிபோலிடையறாத மிக்க நீர், முலை முன்றில் அலைப்ப - (தங்கள்) தனங்களின் முகட்டிலே அலைவீசிக் கொண்டு பெருக, குஞ்சரத்து அன கொழுநரை தழுவுறும் கொதிப்பால் - யானைகளைப்போன்ற [வலிய பெரிய கறுத்த] தங்கள்கணவர்களைத் தழுவிக் கொள்ளக்கருதிய பதைப்பினால், மஞ்சு உற புகும் மின் என புகையிடை மறைந்தார் - மேகத்தினுள்ளே பொருந்த மறைகிற மின்னல்போலப் புகைக்குள்ளே மறைந்தார்கள் ; (எ - று.)

தாம்வளர்த்த கிளிகள் கூட்டுடன் அவ்வனலபட்டு வெந்து துடிப்பதைக் கண்டு சோகித்துக் கண்ணுங்கண்ணீருமாய் அச்சத்தால் தம்கணவரைத் தழுவிக்கொள்ளக் கருதி யோடுகிற இராக்கதமாதர்கள், அருகிலே திரண்டெழுகிற புகைத்தொகுதியைக் கண்டு அதனைத் தம்கணவராது கரியபெரிய வடிவமென்றுகருதி அதனிடை மறைந்தார்கள் ; அக்காட்சி, மேகத்தினிடையே காணப்பட்டு மறைகின்ற மின்னல்போலு மென்பதாம். புகைத்திரளைத் தம்கணவனென மாறுகக்கருதி அதனைத் தழுவுபவராய் அதனிடையே மறைந்தன ரென்றது, மயக்கவணி ; கருநிறமாய் ஓங்கியெழுந்த தோற்றத்தில், அரக்கருடம்பும் புகையும் ஒக்கும். மேகத்தினிடையே மறைகிற மின்னல்போல என ஒப்புமைகூறியது, உவமையணி; கரியபெரியவடிவத்தில் புகைத்தொகுதிக்கு மேகமும், மெல்லிதாய்ஒல்கிஒசிந்துவிளங்கும் வடிவத்தில் அரக்கியர்க்கு மின்னலும் உவமை யெனக் காண்க. இரண்டு அணிகள் சேர்ந்துவந்ததனால், சேர்வையணி. பருத்தோங்கியவடிவமும் வலிமையும் கருநிறமும் பற்றி, 'குஞ்சரத்து அன கொழுநர்' எனப்பட்டார். கொதிப்பு - துடிப்பு, விரைவு. அச்சம் நேர்ந்தபோது கணவரைத் தழுவுதல், மாத ரியல்பு ; ("அஞ்சினளஞ்சியன்னமின்னிடையலசவோடிப், பஞ்சின்மெல்லடிகணேவப்பதைத்தனள் பருவக்கால, மஞ்சிடைவயங்கித்தோன்றும் பவளத்தின்வல்லியென்னக், குஞ்சரமனைய வீரன் குவவுத்தோள்தழுவிக்கொண்டாள்" என்று ஆரணியகாண்டத்துச் சூர்ப்பணகைபடலத்தில் வந்ததும், "ஊடலைமறந்து உமைமடந்தை யானைத் தனமுறத்தழுவினள்" என்று உத்தரகாண்டத்து வரையெடுத்தபடலத்தில் வருவதுங் காண்க.) இனி, பின்னிரண்டடிக்கு - மயக்கவணிகொள்ளாமல், கணவரைத் தழுவவேண்டுமென்னும் விரைவினால் அவரைநாடிச்செல்லும்போது இடையிலே சூழ்ந்த புகையில் அகப்பட்டு அழிந்தார்க ளென்று உரைத்தலு மொன்று. (உஎ)

[அரக்கியர் புகையில் அகப்பட்டுக் கரிதல்.]

உஅ. வரையினைப்புரைமாடங்களெரிபுகமகளிர்
புரையில்பொற்கலன்விசும்பிடைவில்லிடப்போவார்
கரையிலுண்புகைப்படலையிற்கரிந்தனர்கலங்கித்
திரையினுட்பொலிசித்திரப்பாவையின்செயலார்.

(இ - ள்.) வரையினை புரை மாடங்கள் எரி புக - மலையையொத்த [மிகப்பெரிய] மாளிகைகளில் தீப்பற்றிக்கொள்ள, (அதனினின்று தப்பி யுய்யுமாறு), புரை இல் பொன் கலன் வில் இட விசும்பிடை போவார் - குற்றமற்ற பொன்மயமான (நாமணிந்துள்ள) ஆபரணங்கள் ஒளிவீச வான த்தி லெழுந்து செல்பவர்களாகிய, மகளிர் - மாதர்கள்,—கரை இல் நுண் புகை படலையில் கலங்கி - அளவிறந்த நுண்ணிய புகையின்திரளிலே அகப் பட்டு, திரையினுள் பொலி சித்திரம் பாவையின் செயலார் - (அதனால்) திரைமறைவினுள்ளே தோன்றுகின்ற சித்திரப்பிரதிமையின் தன்மையை யுடையவர்களாகி,—கரிந்தனர் - கருகினார்கள் ; (எ - று.)

பின்னிரண்டடியில் உபமான உபமேயங்களுக்கு ஐக்கியத்தைச் சொன்னது, காட்சியாணி. நுண்புகைத்தொகுதிக்குத் திரையும், அழகியமகளிர்க்குச் சித்திரப்பதுமையும் உவமை. 'கரையினுட்புகைப்படலை' என்ற பாடத்திக்கு—கரையினுள் - அருகிலே (எழுந்த), புகைப்படலையி லென்க. (உ௮)

[நந்தனவனங்கள் வேதுதல்.]

உகூ. அகருமஞ்ஞறுஞ்சாந்தமுமுதலியவனேகம்
புகரினன்மரத்துறுவெறியுலகெலாம்போர்ப்பப்
பகருமூழியிற்காலவெங்கடுங்கனல்பருகு
மகரவேலையின்வெந்தனநந்தனவனங்கள்.

(இ - ள்.) அகரும் - அகில்மரங்களும், அம் நறுஞ் சாந்தமும் - அழகிய நறுமணமுள்ள சந்தன மரங்களும், முதலிய - முதலான, அனேகம் புகர் இல் நல் மரத்து - குற்றமற்ற சிறந்த பலமரங்களில், உறு - பொருந்திய, வெறி - வாசனை, உலகு எலாம் போர்ப்ப - உலகமுழுவதும் வீசிக்கவிந்து கொள்ளுமாறு,—நந்தனவனங்கள்-சிங்காரப்பூந்தோட்டங்கள்,—பகரும் ஊழியில் - (நூல்களிற்) சொல்லப்படுகிற யுகாந்தகாலத்திலே, கால வெம் கடுங் கனல் பருகும் - மிகக்கொடிய காலாக்கினியினால் உறிஞ்சப்படுகிற, மகரம் வேலையின் - மீன்களையுடைய கடல்போல, வெந்தன—; (எ - று.)

அகநறுஞ்சாந்த மென்பது, அஞ்ஞறுஞ்சாந்த மெனப் போலி பெற்றது. 'நன்மரத்து உறு வெறி உலகெலாம்போர்ப்ப' என்றதனால், அம்மரங்களின் நறுமணமிகுதி தோன்றும். கடலுவமையினால், நந்தனவனங்களின் பரப்பை பெறவைத்தார். (உகூ)

[இவ்வனல் எழுந்து தாவுதலாற் கற்பகதருக்கள் எரிதல்.]

௩0. மினைப்பரந்தெழுகொழுஞ்சுடருலகெலாம்விழுங்க
நினைப்பரும்பெருந்திசையுறவிரிகின்றநிலையாற்
சினைப்பரந்தெரிசேர்ந்திலநின்றவுஞ்சிலவுங்
கனற்பரந்தவுந்தெரிகிலகற்பகக்கானம்.

(இ - ள்.) மினை பரந்து எழு - மின்னலைப்போல விளங்குகிற, கொழுஞ் சுடர் - செழுமையான (பொன்னின்) சோதி, உலகு எலாம் விழுங்க - உலகமுழுவதையுங் கவிந்துகொள்ளுமாறு, நினைப்பு அரும பெருந் திசை உற விரிகின்ற நிலையால் - (இவ்வளவினதென்று) நினைத்தற்கும் அருமையான பெரிய திக்குக்களை யளாவ ஒளிவீசுகின்ற தன்மையினால்,—கற்பகம் கானம் - கற்பகவிருட்சங்கள், கனல் பரந்தவும் சினை பரந்த எரி சேர்ந்தில நின்றவும் சிலவும் தெரிகில - நெருப்புப்பற்றி யெரிகின்றவை இவைசில வென்றும் கிளைகளில் தாவி நெருப்புப்பற்றாது நின்றவை இவைசில வென்றும் வேறுபாடு அறியவொண்ணாதனவா யிருந்தன; (எ - று.)

இவ்வனலினால், கற்பகதருக்களைந்தனுட் சில தீப்பற்றியன; அக்கற்பக தருக்களெல்லாம் பொன்மயமாய் மின்னல்போன்ற பேரொளியை உலகமுழுவதும் வீசிக்கொண்டு நின்றதனால், அவற்றுள் தீப்பற்றியவை இவைசில வென்றும், தீப்பற்றாதவை இவைசில வென்றும் பகுத்துணரவொண்ணாதவை யாயின என்பதாம்; மறைவணி. கீழ்வந்த ௯, ௫ - ஆஞ் செய்யுள்களோடு இச் செய்யுளை ஒப்பிடுக. முதலடியில், பரந்து என்பது - உவமவாசகமாய் நின்றது; இதனைப் பிறவினைப்பொருளில்வந்த தன்வினை யெனக் கொண்டு, மின்னல்போன்ற ஒளியைப் பரப்பி யெனினும் அமையும். அன்றி, ஐ - அசை யென்று கொண்டால், மினை பரந்து - மின் பரந்து என்றாகும். கானம் - மரங்களின் தொகுதி. கல்பக மென்ற வடசொல் - (வேண்டுவார்க்கு வேண்டுபவற்றைக்) கல்பிப்பது [உண்டாக்குவது] என்று காரணப்பொருள்பெறும். (௯0)

[புகை கடலைக் கவிந்துகொள்ளுதல்.]

௯க. மூளும்வெம்புகைவிழுங்கலிற்சுற்றுறமுழுநீர்
மாளும்வண்ணமாமலைநெடுந்தலைதொறுமயங்கிப்
பூளைவீயன்னபோவனபுணரியிற்புனன்மீன்
மீளயாவையுந்தெரிந்திலமுகிற்கணமிசைய.

(இ - ள்.) மூளும் வெம் புகை - மூண்டெழுந்த வெவ்விய [நெருப்போடு கூடிய] புகையானது, சுற்றுற முழுநீர் மாளும் வண்ணம் விழுங்கலின் - சுற்றிலுமுள்ள (கடலின்) நீர்முழுவதும் வற்றும்படி (கடலைக்) கவிந்துகொண்டதனால்,—மீன் மீள - (அங்குஇருந்த) மீன்கள் அப்பாற் செல்வனவாக,—முகில் கணம் - மேகக்கூட்டங்கள், புணரியில் புனல் மிசைய - கடலிலுள்ள நீரை யுண்ணுதற்கு (வந்து), யாவையும் தெரிந்தில-(புகைகவிந்துள்ளதனால்) கடலின்செய்திக ளெவற்றையுந் தெரிந்துகொள்ளாதனவாகி, மா மலை நெடுந் தலைதொறும் மயங்கி - (விரைந்து கீழிறங்கும்போது) பெரிய மலைகளின் உயர்ந்த சிகரங்களிற் பட்டு, பூளை வீ அன்ன போவன - (பெருங்காற்றிற் பட்ட) பூளைமலர்கள் போன்றவையாய்ச் சிதறிப்போவனவாயின; (எ - று.)

வெவ்விய அவ்வனற்புகை கவிந்துகொண்டதனால், மீன்கள் அலையுமாறு இலங்கையைச்சுற்றிலும் கடல்நீர் வற்றுவதாயிற்று; இஃது இங்ஙனமாக,

கடல்நீரைப்பருகவருகிற மேகங்கள் புகைசுவிதலினால் அக்கடலில் நீரிருப்பதையும் இல்லாததையும் பகுத்துஉணராமற் கடலைக் குறித்து விரைந்து கீழிறங்கும்போது அக்கடலினுள்ளேயிருந்த மைநாகம் போன்ற உயர்ந்தமலைகளின் சிகரங்களில் தாக்கிச் சிதறுவனவாயின வென்பதாம். 'மயங்கி' என்பதற்கு - புகைத்தொகுதியைக் கடலென மாறாகக் கருதி யென்றும் கொள்ளலாம். பூளை - ஓர்செடி; அதன்மலர், மிகமெல்லியது. (௯௧)

[உலகமுழுவதும் புகைசூழ்தல்.]

௯௨. மிக்கவெம்புகைவிழுங்கலின்வெள்ளியங்கிரியு
மொக்கவெற்பினோடன்னமுங்காக்கையினுருவ
பக்கவேலையின்படியதுபாற்கடன்முடிவி
றிக்கயங்களுங்கயங்களும்வேற்றுமைதெரியா.

(இ - ள்.) மிக்க வெம் புகை விழுங்கலின் - மிகுதியான வெவ்வியபுகை (சென்று உலகமுழுவதும்) கவிந்துகொண்டதனால்,--வெள்ளி அம் கிரியும் வெற்பினோடு ஒக்க - அழகிய வெள்ளிமலையான கைலாசமும் (கருநிறமாகக் காணப்படுகிற) மற்றமலைகளோடு ஒப்பாக,—அன்னமும் காக்கையின் உருவ - (வெண்ணிறமான) அன்னப்பறவைகளும் (கருநிறமான) காக்கைகளின் வடிவமாய்த் தோன்ற,—பால்கடல் பக்கவேலையின் படியது-(வெண்மையான) திருப்பாற்கடலானது அருகிலுள்ள, (கரிய)உவர்க்கடலின் தன்மையதாயிற்று; (மற்றும் அப்புகையின் சூழ்ச்சியால்), முடிவு இல் திக்கயங்களும் கயங்களும் வேற்றுமைதெரியா - அழிவில்லாத (ஐராவதம்முதலிய வெண்ணிறமான) திக்கஜங்களும் (கருநிறமான) சாதாரணயானைகளும் வேறுபாடறிய வொண்ணாதனவாயின; (எ - று.)

வெள்ளியபொருள்களெல்லாம் கருநிறமாய்க் காணப்படும்படி எங்கும் புகைகம்மியது என்பதாம். இது, பிறிதின்குணம்பெறலணி; அஃதாவது - ஒருபொருள் தன்குணத்தையிழந்து பிறிதொன்றின் குணத்தைக் கவர்தல்: இதனை வடநூலார் தத்குணாலங்கார மென்பர். முடிவில் - திக்குகளினெல்லைகளிலுள்ள எனினுமாம். கைலாசகிரி திரிமூர்த்திகளுட் சிவபிரானுக்கு உறைவிடமும், அன்னப்பறவை பிரமனுக்கு வாகனமும், திருப்பாற்கடல் திருமாலுக்குப் பள்ளிகொள்ளுமிடமுமாய்ச் சிறத்தல்பற்றி, அவை இங்கு எடுத்துக் கூறப்பட்டன. திக்கஜங்களை எடுத்துக்கூறியது, உலகந்தாங்குஞ் சிறப்புடைமைபற்றி. (௯௨)

[அரக்கரும் அரக்கியரும் கடலில் முழ்குதல்.]

௯௩. கரிந்துசிந்திடக்குங்கனெருடர்ந்துடல்கதுவ
வுரிந்தமெய்யினரோடினர்நீரிடையொளிப்பார்
விரிந்தகூந்தலுங்குஞ்சியுமிடைதலிற்றுறு
மெரிந்துவேகின்றவொத்தனவெறிதிரைப்பரவை.

(இ - ள்.) கரிந்து சிந்திட - (அகப்பட்ட பொருளெதுவும்) கருகிச்சிந்திடுமாறு, கடுங் கனல் தொடர்ந்து - கடுமையான நெருப்புத் தாவி, உடல் கதுவ - தமது உடம்பில் மிகுதியாகப்பற்றுதலால், உரிந்த மெய்யினர் - தோலுரிந்த உடம்பையுடையவர்களாய், ஓடினர் - ஓடிப்போய், நீரிடை ஒளிப்பார் - (தாபந்தணிதற்காகவும் தப்பியுய்தற்காகவும்) கடல்நீரில் மூழ்கி மறைபவர்களான இராக்கதர்களுடைய, விரிந்த கூந்தலும் குஞ்சியும் - விரிந்த கூந்தலும் குடுமியும், மிடைதலின் - நீரின்மீது பரவித்தோன்றுதலினால், எறி திரை பரவை தாமும் எரிந்து வேகின்ற ஒத்தன - வீசுகின்ற அலைகளையுடைய கடல்கள்தாமும் எரிந்துவேகின்றவை போன்றன ; (எ - று.)

கூந்தல் - பெண்மயிர் ; அரக்கியருடையது. குஞ்சி - ஆண்மயிர் ; அரக்கருடையது. இவை செம்பட்டமயிர்களாதலின், இவை பரவுதலாற் கடல்கள் எரிகின்றனபோன்றன வென்றார் ; தற்குறிப்பேற்றவணி. கீழ்வந்த ௫ - ஆஞ் செய்யுள், இங்கு நோக்கத்தக்கது. நாற்றிசைக் கடல்களாதலின், பன்மை கூறப்பட்டது. 'கரிந்துசிந்திட' என்றதை 'உரிந்த' என்றதனோடு கூட்டியுரைத்தலுமாம். வேகின்ற - பெயர். (௩௩)

[சிலஅரக்கியர் தம்மக்களுடனும் சுற்றத்தாருடனும் கடலில் விழுதல்.]

௩௪. மருங்கின்மேலொருமகவுகொண்டொருதனிமகவை
யருங்கையாற்பற்றிமற்றொருமகவுபின்னரற்ற
நெருங்கினோரொடுநெறிகுழல்சுறுக்கொளநீக்கிக்
கருங்கடற்றலைவீழ்ந்தனரரக்கியர்கதறி.

(இ - ள்.) மருங்கின்மேல் ஒரு மகவு கொண்டு - இடையிலே ஒருகுழந்தையை யெடுத்துக்கொண்டு, ஒரு தனி மகவை அருங் கையால் பற்றி - மற்றொருகுழந்தையை அருமையாகக் கையாற்பிடித்துக்கொண்டு, மற்று ஒரு மகவு பின் அரற்ற - வேறொருகுழந்தை பின்னே அழுதுகொண்டுவர, நெருங்கினோரொடு - மற்றும்நெருங்கிய சுற்றத்தாருடனே, அரக்கியர் - இராக்கதமாதர்கள், நெறி குழல் சுறுக்கொள நீக்கி - நெறித்தகூந்தலிலே சுறுசுறுவென்று நெருப்புப்பற்ற (அதனை)த் துடைத்து அவித்துக்கொண்டே, கருங் கடல்தலை கதறி வீழ்ந்தனர் - கரியகடலிலே கதறிக்கொண்டு விழுந்தார்கள்; (எ - று.)

தனி - ஒப்பற்ற எனினுமாம் ; தனிக்கையால் என இயைப்பினும் அமையும். (௩௪)

[ஆயுதசாலைகளில் ஆயுதங்கள் உருகி ஒன்றுதல்.]

௩௫. வில்லும்வேலும்வெங்குந்தமுமுதலியவிறகா
வெல்லுடைச்சுடரெனப்புகரெஃகெலாமுருகித்
தொல்லைநன்னிலைதொடர்ந்துபேருணர்வன்னதொழிலாற்
சல்லியுண்டையிற்றிரண்டனபடைக்கலச்சாலை.

(இ - ள்.) படைக்கலம் சாலை - ஆயுதசாலைகளில்,—வில்லும் வேலும் வெம் குந்தமும் முதலிய விறகு ஆய் - விற்களும் வேல்களும் வெவ்விய ஈட்டிகளும் முதலிய ஆயுதங்கள் விறகாக [தீக்கு இரையும் ஆதாரமுமாக என்றபடி], எல் உடை சுடர் என புகர் எஃகு எலாம் உருகி - ஒளியையுடைய சூரியனென்னும்படி காந்தியுள்ள ஆயுதவடிவமாக இருக்கிற எஃகுகளெல்லாம் உருகி, தொல்லை நல் நிலை தொடர்ந்து - பழமையான தமது நிஜஸ்வரூபத்தையடைந்து, பேர் உணர்வு அன்ன தொழிலால் சல்லி உண்டையின் திரண்டன - பேரறிவுக்கு ஏற்றசெயல்பெற்று எஃகுருண்டைகளாய்த் திரண்டன; (எ - று.)

திரளுதல் - உருட்சியாதல், கூடுதல். ஆதியிற் கட்டிகட்டியாகத்திரண்டிருந்த எஃகை யழித்தே கம்மியர் பலஆயுதங்களாகச் செய்துள்ளார்: அப்படைக்கலவடிவமாகவுள்ள எஃகுகளெல்லாம் இவ்வனலினால் உருகி மீண்டும் பழைய தமது உருவத்தை யடைந்து உண்டைகளாய்த் திரண்டன; ஒரு திரளிலிருந்து பலவேறுவகையாய்ப்பிரிந்து தனித்து நின்ற பிராணிகள் மீளவும் ஒற்றுமைகொண்டு ஒருங்குசேர்தல் பேரறிவின் செய லாதலால், அச்சைதந்யகாரியத்தை அசேதநமாகிய எஃகின்மீது கற்பனைவகையால் ஏற்றி, 'பேருணர்வன்ன தொழிலால் உண்டையின் திரண்டன' என்றார். ஆயுதங்களிற்சம்பந்தமுள்ள மரப்பகுதிகள் விறகாக என்பது, முதலடியின் கருத்து. எல் - பகல், வெயில்; அதனை யுடைய சுட ரெனவே, சூரிய னென்றதாயிற்று. சுடர் - சோதி. எஃகு - உருக்கு; லோஹவகைகளி லொன்று. உண்டை - உருண்டை யென்பதன் மரூஉ. பின்னிரண்டடிக்குப் பிறவாற்றான் உரைப்பினும் பொருந்துமாயிற் கொள்க. (கூரு)

[யானைகள் எரிபட்டு ஓடுதல்.]

கூசு. செய்தொடர்க்கழல்வல்லியும்புரசையுஞ்சிந்தி
நொய்தினிட்டவன்றறிபறித்துடலெரிநுழைய
மொய்தடச்செவிநிறுத்திவான்முதுகினின்முறுக்கிக்
கையெடுத்தழைத்தோடினவோடைவெங்களிமா.

(இ - ள்.) ஓடை வெம் களி மா - நெற்றிப்பட்டமணிந்த வெவ்விய மதக்களிப்புடைய யானைகள்,—உடல் எரி நுழைய - (தமது) உடம்பிலே நெருப்புப் பிடிக்கவே,—கழல் தொடர் செய் வல்லியும் - தமது கால்களிற் பூட்டுதல் செய்த விலங்குகளையும், புரசையும் - கட்டுக்கயிற்றையும், சிந்தி - அறுத்துச் சிதறிவிட்டு,—இட்ட வல் தறி நொய்தின் பறித்து - (தம்மைக் கட்டுதற்கு ஆதாரமாக நாட்டிய) வலியதூண்களை எளிதிற் பெயர்த்துக்கொண்டு,—மொய் தட செவி நிறுத்தி - வலிய பெரிய காதுகளை அசையாமற் கொண்டு, வால் முதுகினில் முறுக்கி - வாலை முதுகின்மேலே முறுக்கிநீட்டி, கை எடுத்து அழைத்து - துதிக்கையைத் தூக்கிக் கதறிக்கொண்டு, ஓடின—.

தன்மைநவிற்சியணி. நொய்தின் - சிறிதுஞ் சிரமமின்றி, அலட்சியமாக என்றபடி. தறி - கட்டுத்தறி. அழைத்தல் - கூவிவீரிடுதல். (கூசு)

[பறவைகள் கடலில் விழுந்து அழிதல்.]

௧எ. வெருளும்வெம்புகைப்படலையின்மேற்செலவெருவி
யிருளும்வெங்கடல்விழுந்தனவெழுந்திலபறவை
மருளின்மீன்கணம்விழுங்கிடவுலந்தனமனத்தோ
ரருளில்வஞ்சரைத்தஞ்சமென்றடைந்தவரனைய.

(இ - ள்.) வெருளும் வெம் புகை படலையின் - (காண்பவர்) அச்சங் கொள்ளத்தக்க வெவ்வியபுகைக்கூட்டம் பரவியதனால், மேல் செல வெருவி - வானத்திற் பறந்து செல்லுதற்கு அஞ்சி, இருளும் வெம் கடல் விழுந்தன - கருநிறங்கொண்ட கொடியகடலிலே விழுந்தனவாகிய, பறவை - பறவைகள், எழுந்தில - (பின்பு) வெளியெழாமல், மருளின் மீன் கணம் விழுங்கிட உலந்தன - மாறுபாட்டையுடைய மீன்கூட்டங்கள் (தம்மை) உண்ணுதலால் ஒழிந்துபோயின; (அவை), மனத்து ஓர் அருள் இல் வஞ்சரை தஞ்சம் என்று அடைந்தவர் அனைய - மனத்திலே அருளென்பது சிறிதுமில்லாத வஞ்சகர்களைத் தமக்கு அடைக்கலமாகக்கருதிச் சரணமடைந்தவர்களைப் போன்றன.

மனத்திற் சிறிதும்அருளில்லாத வஞ்சகர்களைப் பிறரிடத்து அச்சத்தாற் கதியாக அடைந்தவர்கள் அவராற்பாதுகாக்கப்படாது அழிக்கப்பட்டுத் தொலைவர்; அவர்களை, புகைத்திரளுக்கு அஞ்சிக் கடலைப் புகலிடமாகக்கொண்டு அங்கு மீனினம் விழுங்குதலால் அழிந்துபோன பறவைகட்கு உவமை கூறினர். பறவைகள் மீன்களைப்பிடித்துத்தின்னும் இயல்பின வாதலால் அப்பகையுயிர்கள்பக்கல் மாறுபாடுகொண்ட மீன்க ளென்பார், 'மருளின் மீன்கணம்' என்றார். தம்மைவிழுங்கும் உயிர்கள் அவற்றிற்கு உரிய இடத்தை விட்டுத் தாம்வாழுமிடமான நீர்நிலையில் வந்து அகப்பட்டுக்கொள்ளவே, அவற்றை மீன்கள் வைரந்தீர விழுங்கின வென்க; ("நெடும்புனலுள் வெல்லு முதலை யடும்புனலி, னீங்கி னதனைப் பிற" என இடனறிதலிற் கூறியது உணரத்தக்கது.) மருள் இல் என்று பிரித்து, (அஞ்சவேண்டிய அப் பறவைகட்கு) அஞ்சுதலில்லாத எனினுமாம். படலை - படலமென்ற வட சொல்லின் விகாரம். அனைய - பலவின்பாற்குறிப்புமுற்று. புகைப்படலையின்மேல் செல - புகைக்கூட்டத்தைக் கடந்து அப்பாற்செல்ல எனினுமாம். (௧எ)

[இராவணன்மாளிகையில் தீப்பற்றுதல்.]

௧அ. நீரைவற்றிடப்பருகிமாநெடுநிலந்தடவித்
தாருவைச்சுட்டுமலைகளைத்தழற்செய்துதனிமா
மேருவைப்பற்றியெரிகின்றகாலவெங்கனல்போ
லூரைமுற்றுவித்திராவணன்மனைபுக்கதுயர்தீ.

(இ - ள்.) நீரை வற்றிட பருகி - நீரை வற்றும்படி உறிஞ்சி, மா நெடு நிலம் தடவி - மிகப்பெரிய பூமியிற் பரவி, தாருவை சுட்டு - மரங்களை

யெரித்து, மலைகளை தழல் செய்து - மலைகளை வேகப்பண்ணி, தனி மா மேருவை பற்றி எரிகின்ற - ஒப்பற்ற பெரிய மேருமலையைப் பற்றி யெரிகிற, கால வெம் கனல் போல் - வெவ்விய கற்பாந்தகாலாக்கினிபோல,—உயர் தீ - உயர்ந்து தாவுகிற அந் நெருப்பானது, ஊரை முற்றுவித்து - அவ்விலங்கா நகரம் முழுவதையும் எரித்து அழித்து, இராவணன் மனை புக்கது - (அந்நகரினிடையே யுள்ள) இராவணனது மாளிகையிற் பிரவேசித்தது; (எ-று.)

பூமியினிடையே பொன்மயமாய் உயர்ந்துள்ள மகாமேருகிரி - அந்நகரினிடையே உயர்ந்துவிளங்குகிற பொன்மயமான இராவணன் மாளிகைக்கு உவமை. சுற்றிலும் எரித்துப் பின்பு இடையிலுள்ள மேருவிற் புகுங் காலாக்கினிபோல, இவ்வக்கினி அவ்வூரைச் சுற்றிலும் எரித்துப் பின்பு இடையிலுள்ள இராவணனரண்மனையிற் புக்கதென்க. 'எரிக்கின்ற' என்பதும் பாடம். (கஅ)

[அங்குஉள்ள தேவசாதியாரனைவரும் கலங்கி நிலைதலைந்து ஓடுதல்.]

கக. வானமாதருமற்றுளமகளிருமறுகிப்
போனபோனதிக்கறிகிலரனைவரும்போனா
ரேனைநின்றவரெங்கணுமிரிந்தனரிலங்கைக்
கோனவானவர்பதிகொண்டநாளெனக்குலைந்தார்.

(இ - ள்.) வானம் மாதரும் - (அவ்விராவணன்மாளிகையிலுள்ள) தேவஸ்திரீகளும், மற்று உள மகளிரும் - மற்றுமுள்ள (யக்ஷ கந்தர்வ கிந்நராதி தேவகண) ஸ்திரீகளும, அனைவரும் - ஆகிய எல்லாரும், மறுகி - கலங்கி, போன போன திக்கு அறிகிலர் போனார்-தாம்தாம்செல்லுகின்றதிசை (இன்னதென்று தாம்) அறியாதவர்களாய்க் கண்டபடி சிதறி ஓடிப்போனார்கள்; ஏனை நின்றவர் - மற்றும் (அங்குக் குற்றேவல் செய்து) நின்றவர்களான தேவசாதியார், எங்கணும் இரிந்தனர் - எல்லாவிடங்களிலும் சிதறியோடினார்கள்;(இங்ஙனம் தேவசாதி ஸ்திரீகளும் ஆடவர்களும்), இலங்கை கோன் அவானவர் பதி கொண்ட நாள் என குலைந்தார் - இலங்கையரசனான இராவணன் அந்தத் தேவலோகத்தை வென்று தனதாக்கிக் கொண்ட அக்காலத்தில் (நிலைகுலைந்தமை) போல நிலைகுலைந்தார்கள்; (எ -று.)

அவ்வானவ என்பது, அவானவ எனத் தொக்கது. போன=போகின்ற: இயல்புபற்றி வந்த காலவழுவமைதி; கீழ்வந்த நான்காஞ் செய்யுளிலும் இது. 'போனபோனதிக்கு அறிகிலர்' என்பதற்கு - ஒருவர்போன திசையை மற்றொருவர் அறியாதவராய் என்று உரைப்பாருமுளர். (கக)

[அங்குஉள்ள கஸ்தூரி முதலியன புகைய, நெடுந்தூரம் மணம்வீசுதல்.]

உ0. நாவியுநறுங்கலவையுங்கற்பகநக்க
பூவுமாரமுமகிலுமென்றினையனபுகையத்
தேவுதேன்மழைசெறிபெருங்குலமெனத்திசையின்
பாவைமார்நறுங்குழல்களும்பரிமளங்கமழ்ந்த.

(இ - ள்.) (அவ்விராவணன்மாளிகையிலே யிருக்கிற), நாவியும் - கஸ்தூரியும், நறுங் கலவையும் - வாசனையையுடைய (குங்குமப்பூ முதலிய) கலப்புக்கு உரிய பொருள்களும், கற்பகம் நக்க பூவும் - கற்பகவிருக்ஷங்களினின்றுகொணரப்பட்ட மலர்ந்த பூக்களும், ஆரமும் - சந்தனமும், அகிலும் - அகிற்கட்டைகளும், என்று இனையன - என்று இத்தன்மையனவான பொருள்கள், புகைய - தீப்பற்றி வெந்துபுகைதலினால்,—தேன் மழை செறி தேவு பெருங் குலம் என - தேன்மழைபொழிகின்ற தெய்வத்தன்மையை யுடைய பெரிய மேகக்கூட்டம்போல வுள்ள, திசையின் பாவைமார் நறுங் குழல்களும் - திக்தேவிகளுடைய இயற்கைநறுமணமமைந்த கூந்தல்களும், பரிமளம் கமழ்ந்த - (இப்புகைவாசம்வீச) நறுமணங்கமழ்வனவாயின; (எ - று.)

எண்திசையெல்லையளவும் அப்புகை பரவி நறுமணம்வீசிய தென்க. திக்தேவதைகள் பெண்பாலா ராதலால், 'திசையின்பாவைமார்' எனப்பட்டனர்; இன் - சாரியை- பாவைமார் - சித்திரப்பதுமைபோ லழகிய மகளிர். தேவஸ்திரீகளுடைய கூந்தலில் இயற்கை நறுமண முண்டென்பது கொள்கையாதலால், 'திசையின்பாவைமார் நறுங்குழல்கள்' என்றார். 'அவைகளும் பரிமளங்கமழ்ந்த' என, இயற்கை நறுமணமுள்ளவற்றிற்குச் செயற்கைநறுமணங் கற்பித்தவாறு. அவர்கள் கூந்தல்கள் இங்ஙனம் இயற்கைத் தெய்வமணம் வீசுவனவும், சூடியமலர்களினின்று தேன்பெருக்கைச் சொரிவனவுமாய், கரிய பெரிய வடிவத்திற் காளமேகம்போலிருத்தல்பற்றி, 'தேவு தேன்மழை செறிபெருங்குலமென' எனப்பட்டது. நிலவுலகத்தைப் பாதுகாத்தலும், இந்திரனும் வருணனுமாகிய தலைமைத்தேவர்களின் கட்டளைப்படி நடத்தலும், வானத்திற் சஞ்சரித்தலும், நல்லவருள்ளவிடத்தே மழைபொழிதலும் முதலிய சிறப்புக்கள் பற்றி, மேகத்துக்கு 'தேவு' என்ற அடைமொழி கொடுக்கப்பட்ட தெனினுமாம். 'மழைசெறிகுலம்' எனவே, மேகக்கூட்டமென்றதாயிற்று. நாவி - மிருகநாபி; கஸ்தூரிமா னென்னும் ஒருவகைச் சாதி மானினது நாபியினின்று எடுக்கப்படுவது. கலப்பது கலவையெனக் காரணப்பெயர். நறுங்கலவை - வாசனைக்கலப்புப்பண்டங்கள். நகுதல் - சிரித்தல்; இங்கு, மலர்தல். (௪0)

[இராவணன்மாளிகையின் ஏழுநிலையுபரிகைகளும் எரிதல்.]

௪௧. சூழும்வெஞ்சுடர்தொடர்ந்திடயாவருந்தொடரா
வாழிவெஞ்சினத்தாண்டொழிலிராவணன்மனையி
னூழிவெங்கனலுண்டிடவுலகமென்றுயர்ந்த
வேழும்வெந்தனவெரிந்தனநெடுநிலையேழும்.

(இ - ள்.) சூழும் வெம் சுடர் தொடர்ந்திட - எங்குஞ்சூழ்ந்தெரிகின்ற வெவ்விய நெருப்புப் போய்த் தாவியதனால்,—யாவரும் தொடரா - எவருங் கிட்டவொண்ணாத, ஆழி வெம் சினத்து ஆண் தொழில் இராவணன் மனையின் - (உலகத்தையழிக்கும்) கடல்போன்ற கடுங்கோபத்தையும் பராக்கிர

மச்செய்கையையு முடைய இராவணனது மாளிகையின், நெடு நிலை எழும்- உயர்ந்த உபரிகையடுக்குக்கள் எழும்,—உலகம் என்று உயர்ந்த எழும் ஊழி வெம் கனல் உண்டிட வெந்து அன - உலகங்களென்று சொல்லப்பட்டு (ஒன்றன்மேலொன்றாக) உயர்ந்துள்ள எழு இடங்களும் வெவ்விய கற்பாந்த காலாக்கினி உண்ணுதலா லெரிந்தாற்போன்றனவாய், எரிந்தன—; (எ - று.)

ஒன்றன்மேலொன்றாக வுயர்ந்த எழுநிலைகட்கு அங்ஙனமுள்ள எழுஉல கங்களும், இப்பெருந்தீக்கு ஊழித்தீயும் உவமை யெனக் காண்க. தொடர்ந் திட எரிந்தன வென்று இயையும். யாவருந்தொடரா என்பது - சினத்துக் கும், இராவணனுக்கும், மனைக்கும் அடைமொழியாகத்தக்கது. இரண்டா மடியின் முதலில் 'வாழி' என்று எடுத்து, அசையெனக் கொள்ளுதலு மொன்று: இ - சாரியை யென்று கொண்டு, வாழ் - வாழ்கின்ற எனினுமாம். ஆண் தொழில் - பௌருஷம். 'வெந்தென' என்ற பாடத்துக்கு, வெந்து என - வெந்தாற்போல வென்க. முதலடியில் 'தொடர்ந்திட,' 'தொடரா' என மாறுபட்ட சொற்கள் வந்தது, தொடைமுரண். (சக)

[இராவணனரண்மனை எரிதல்.]

சஉ. பொன்றிருத்தியதாயதாலிராவணன்புரைதீர்
குன்றமொத்துயர்தடநெடுமாநிலைக்கோயி
லின்றதுற்றெரிபருகிடநெரிவுறவுருகித்
தென்றிசைக்குமோர்மேருவுண்டாமெனத்தெரிந்த.

(இ - ள்.) 'இராவணன் - இராவணனுடைய, புரை தீர் - குற்றமற்ற தும், குன்றம் ஒத்து உயர் - மலைபோ லுயர்ந்ததும், தட நெடு மா நிலை - அகன்ற நீண்ட பெரிய (எழு) நிலைகளையுடையதுமான, கோயில் - அரண் மனையானது,—பொன் திருத்தியது ஆயதால் - பொன்னினாற் செய்யப்பட் டுள்ளதானது பற்றி,—எரி நின்றது உற்று பருகிட நெரிவுஉற உருகி-நெருப்பு (இருத்தலும் பத்தலு மின்றி) எழுந்துநின்றுற்போலோங்கி யுண்ணுதலால் [எரித்தலால்] (அந்தஅடுக்குக்கள்) நெரிந்து ஒருபிண்டமாம்படி வெந்து இளகி, தென்திசைக்கும் ஓர் மேரு உண்டு ஆம் என தெரிந்த - தெற்குத் திக்கி லும் ஒரு மேருமலை யுள்ளதென்று சொல்லும்படி தோன்றிற்று; (எ - று.)— ஆம் - அசை.

தற்குறிப்பேற்றவணி. இந்தப் பரதகண்டத்துக்கு நெடுந்தூரம் வடக் கே ஜம்பூத்வீபத்தின் நடுவில் பொன்மயமாய் ஓங்கிய மகாமேருகிரி இருக் கின்ற தென்பது, புராணப்பிரசித்தம். தென்கடலிடையேயுள்ள தீவாகிய இலங்காபுரியிலிருக்கிற இராவணனது பொன்மயமாயோங்கிய அரண்மனை, தீப்பற்றுதலா லிளகி விளங்கி, தென்திசையிலுள்ளதொரு மேருகிரியைப் போலு மென்க. பிரசித்தமான மேருமலை வடதிசையி லுள்ளதாதலால், 'தென்திசைக்கும்' என்ற உம்மை - இறந்ததுதழுவியஎச்சப்பொருளது. (கீழ்ப் பாசப்படலத்தில் "தென்திசைக்கு மோர் வடவனல் திருத்தியதென்ன"

என வந்ததும், வில்லிபுத்தூரார்பாரதத்தில் "திரைகள்வாரி யம், மேற்றி சைக்கு மொரு மேரு வுண்டென வுயர்த்திரு னிகரில்வீரனே" என்றதும் - இங்கு ஒப்புநோக்கத்தக்கன.) தெரிந்த - தெரிந்தது என்பதன் விகாரம். தீர், உயர் என்றவை - கோயிலுக்கு அடைமொழி. புரைதீர் - ஒப்பற்ற எனி னுமாம். உற்று - உவமவாசகம். 'நின்றது உற்று எரி பருகிட' என்பதற்கு - தீ நிலைபெற்றுப் பொருந்திப்பருகிட என்றலும் அமையும். நீர்க்கு உரியதான பருகுதலென்ற சிறப்புவினையை இங்கு நெருப்புக்குக் கூறியது, ஒன்றன் வினையை மற்றொன்றன்மே லேற்றிக் கூறும் உபசாரவழக்கு. திசைக்கு - உருபுமயக்கம். 'நின்றுதற்றெரி' என்பதும் பாடம்; அது நின்று விழுங்கு கிற என்று பொருள்படும். (௪௨)

[இராவணன் முதலிய அரக்கர்கள் தப்பியுய்ய, இலங்கை வெந்தழிதல்.]

௪௩. அனையகாலையினரக்கனுமரிவையர்குழுவும்
புனைமணிப்பொலிபுட்பகவிமானத்துப்போனார்
நினையுமாத்திரையாவருநீங்கினர்நினையும்
வினையிலாமையின் வெந்ததவ்விலங்கன்மேலிலங்கை.

(இ - ள்.) அனைய காலையின் - (அவ்வாறு இராவணனரண்மனைவேகின்ற) அப்பொழுது,—அரக்கனும் - தலைமையரக்கனான இராவணனும், அரிவையர் குழுவும்-(அவனுக்கு உரிமைபூண்ட) மகளிரது கூட்டமும், புனை மணி பொலி புட்பகவிமானத்து போனார் - அழகிய இரத்தினங்களினால் விளங்குகின்ற புஷ்பகவிமானத்தின்மே லேறி (வானத்திற்சென்று) தப்பிப்பிழைத்தார்கள்; யாவரும் - (எரிந்திறந்தவர்கள்போக மற்றையரக்கர்கள்) அனைவரும், நினையும் மாத்திரை நீங்கினர் - நினைத்தமாத்திரத்தினால் எழுந்து (வானத்திற் சென்று) தப்பியுய்ந்தார்கள்; நினையும் வினை இலாமையின் - அங்ஙனம் நினைக்குந்தன்மை யில்லாமையால், அ விலங்கல்மேல் இலங்கை வெந்தது - அந்தத் திரிகூடமலையின்மேலுள்ள இலங்காபுரியானது வெந்துபோயிற்று.

புஷ்பகமென்ற விமானம், தன்மேலேறியவர் நினைத்தவிடத்தில் அவர் நினைத்தபடி செல்ல வல்லது; எத்தனைபேர் ஒருங்கேறினாலும் அத்தனை பேர்க்கும் தான் வளர்ந்து இடங்கொடுப்பது; ஆதியிற் குபேரனுக்குப் பிரம னிடத்திலிருந்து வரமாகக் கிடைத்தது. பின்பு இராவணன் தேவர்களை யும் முனிவர்களையும் மிகுதியாகவருத்துதலை யறிந்த குபேரன் தம்பியென் னும் அன்பினால் ஒருதூதன்மூலமாக 'இங்ஙனஞ்செய்வது தகுதியன்று' என்று தெரிவிக்கவே, அதுகேட்டவளவில் இராவணன் பெருங்கோபங் கொண்டு சேனையோடுசென்று அவனை யெதிர்த்துப் பொருதுவென்று அவ னது புஷ்பகவிமானத்தைக் கவர்ந்துகொண்டு அதன்மேலேறி இலங்கைக்கு மீண்டனன்; அதுமுதல் அவ்விமானம் இராவணன் வசமாய் இலங்கையில் இருந் தது. இப்பொழுது இராவணன் தனக்குஉரியமகளிர்களுடன் அவ்விமானத் திலேறி விசும்பிற்சென்று இவ்வெரிக்குத்தப்பியுய்ந்தன னென்பது, முன்னி

ரண்டடியிற் கூறப்பட்டது. அரக்கர்கள் முதலியோர் இயல்பிற் காமசாரிக ளாதலால் [நினைத்தபடி சஞ்சரிக்கவல்லர்க ளாதலால்] புஷ்பகத்திற் சென்ற வர்போக மற்றையோர் நினைத்தமாத்திரத்தில் வானத்திலெழுந்து சென்று தப்பிப்பிழைத்தன ரென்பார், 'நினையுமாத்திரை யாவரும் நீங்கினர்' என்றார். அங்ஙனம் நினைத்து அப்பாற் செல்லுந் திறம் உயர்திணையாகிய அரக்கர்கட்கு இருப்பதுபோல, அவர்களிருப்பிடமாகிய அசேதநமான இலங்காபுரிக்கு இல்லாமையால், அதுமாத்திரம் தப்பியுய்தலின்றி இருந்தவிடத்தி லிருந்தபடி எரிந்தழிந்த தென்பது, 'நினையும்வினை யிலாமையின் வெந்தது அவ்விலங்கன்மே லிலங்கை' என்பதன் கருத்து. இது, கவிசமத்காரம்.

'அரிவையர்குழு' என்ற தொடர் - ஒன்றன்கூட்டத் தற்கிழமைப்பொருளதாகிய ஆறாம்வேற்றுமைத்தொகை; இது, பிண்டித்தபொருளாகிய குழுவை நோக்குமிடத்து அஃறிணையாயினும், பிண்டிக்கப்பட்ட பொருளாகிய அரக்கரை நோக்குமிடத்து உயர்திணையாதலால், அவ்வொற்றுமைநயம் பற்றி, 'போனார்' என்ற உயர்திணைமுடிபைக் கொண்டது; இனி, 'பொன்னனும் குதிரையும் வந்தார்கள்' என்றாற்போல, 'அரக்கனும் அரிவையர்குழுவும் போனார்' என உயர்திணையும் அஃறிணையும் விரவிச் சிறப்பினால் உயர்திணை முடிபைப் பெற்ற திணைவழுவமைதி யெனினும் அமையும்.

இனி, அனையபொழுதின் அரக்கனும் அரிவையர் குழுவும் (மற்றும்) யாவரும் நினையும்மாத்திரை [நினைக்குமளவினுள்ளே மிகவிரைவிலே யென்றபடி] புட்பகவிமானத்துப் போனார் நீங்கினர்; (அங்ஙனம் அனைவரும் தப்பியோடித் தம்மைத் தாம் பாதுகாத்துக்கொள்வதற்கு உரிய முயற்சி செய்தற்கு மாத்திரமே அவகாசமிருந்ததனாலும், தீயினளவு மிகப்பெரிதாயிருந்ததனாலும், அதனை அவிக்குமாறு) நினைக்குந்தன்மை (எவரிடத்தும்) இல்லையானதனால், அவ்விலங்கன்மேலிலங்கை வெந்தது என்ற உரை கூறலு மொன்று. நினையும் வினையிலாமையின் - நினைத்தற்குமுடியாதபடி யென்றுமாம். (சரு)

[இராவணன் அரக்கரைநோக்கி 'இலங்கையெரியக் காரணமேன்?' எனல்.]

சச. ஆழித்தேரவ னரக்கரை யழலெழ நோக்கி
யேழுக்கேழென வடுக்கிய வுலகங்க ளெரியு
மூழிக்காலம்வந் துற்றதோ பிறிதுவே றுண்டோ
பாழித்தீச்சுட வந்ததென் னகொலெனப் பகர்ந்தான்.

(இ - ள்.) ஆழி தேரவன் - ஒற்றைச்சக்கரம்பூண்ட தேரையுடையவனை சூரியன்போல (வானத்தும் புஷ்பகவிமானத்தின் மீது) விளங்குபவனாகிய இராவணன், அழல் எழ - கோபத்தால் (தன்கண்களினின்று) நெருப்பு எழ, அரக்கரை நோக்கி - இராக்கதர்களைப் பார்த்து, 'ஏழுக்கு ஏழ் என அடுக்கிய உலகங்கள் எரியும் ஊழிக்காலம் வந்து உற்றதோ - ஏழுடன் ஏழாக

* உரு

[பதினொன்காக] ஒன்றன்மீதொன்று அடுக்காய் அமைக்கப்பெற்ற உலகங்களெல்லாம் எரியும்படியான கற்பாந்தகாலம் வந்துசேர்ந்ததோ? பிறிது வேறு உண்டோ - மற்றும் வேறு யாதேனும் உண்டாயிற்றோ? பாழி தீ சுட நகர் வெந்தது என் - (இங்ஙனம்) பெருநெருப்பு எரித்தலால் இவ்விலங்காபுரி வெந்த காரண மென்ன?' என பகர்ந்தான் - என்று வினவினான்; (எ - று.)

பாழி - பெருமை; வலிமையுமாம். பகர்தல் - சொல்லுதல். 'சுடவந்தது' என்ற பாடத்துக்கு - பெருந்தீ எனது நகரத்தைச் சுடும்படியான காரண மென்க. (சச)

[நிகழ்ந்தசெய்தியை அரக்கர்கள்கூற, இராவணன் கோபித்தல்.]

சரு. கரங்கள் கூப்பினர் தங்கிளை திருவொடுங்காணு
ரிரங்குகின்றவல்லரக்கரீ தியம்பினரிறையோய்
தரங்கவேலையினெடியதன்வாலிட்ட தழலாற்
குரங்குசுட்டதீதென்றலுமிராவணன்கொதித்தான்.

(இ - ள்.) (அங்ஙனம் இராவணன் வினவியவளவிலே),—தம் கிளை திருவொடும் காணார் இரங்குகின்ற வல் அரக்கர் - தமது சுற்றத்தாரையும் செல்வத்தையும் காணாதவர்களாய் [இழந்தவர்களாய்]ச் சோகித்துக்கொண்டிருக்கிற வலிய இராக்கதர்கள், கரங்கள் கூப்பினர் ஈது இயம்பினர் - தங்கள் கைகளைக் கூப்பிக்கொண்டு [அஞ்சலிசெய்துகொண்டு] இங்ஙனஞ்சொல்லலானார்கள்:—(என்னவென்றெனில்,—) 'இறையோய் - தலைவனே! தரங்கம் வேலையின் நெடிய தன் வால் இட்ட தழலால் - அலைகளையுடைய கடலினும் நீண்ட தனதுவாலிலே (நாம்) கொளுத்திய நெருப்பைக் கொண்டு, குரங்கு சுட்டது ஈது - குரங்கு இவ்வாறு சுடலாயிற்று,' என்றலும் - என்று சொன்னவுடனே,—இராவணன் கொதித்தான் - இராவணன் கோபதாபங் கொண்டான்; (எ - று.)

கிளை - உவமையாகுபெயர். சுட்ட தீது என்றுபிரித்து, குரங்கு எரித்த தீமை (இது) என்று பொருள் கொள்ளலுமாம். (சரு)

[இராவணன் சிலகூறிச் சிரித்தல்.]

சகூ. என்று கொல்குரங் கன்னதிவ் வலியுள திலங்கை
நின்று வெந்துமா நீறெழு கின்றது நெருப்புத்
தின்று தேக்கிடு கின்றது தேவர்கள் சிரிப்பார்
நன்று நன்றுபோர் வலியென விராவண னக்கான்.

(இ - ள்.) குரங்கு அன்னது - குரங்கு போன்ற எளியபிராணி, என்று கொல் - எப்பொழுதுதான், இ வலி உளது - (கடல்கடந்துவந்து இலங்கையையெரிக்கும்படியான) இவ்வகைவலிமை யுள்ளது! இலங்கை - இலங்காபுரியானது, நின்று வெந்து மா நீறு எழுகின்றது - முழுவதும் எரிந்து பெருஞ்

சாம்பல் பறக்கின்ற தாயிற்று! நெருப்பு தின்று தேக்கிடுகின்றது - நெருப்பு (இந்நகரத்தை) உண்டு ஏப்பமிடுகின்றதாயிற்று!! (இதனைக்கண்டால்), தேவர்கள் சிரிப்பார் - (நம்மால் வென்று வலிதொலைக்கப்பட்டவர்களான) தேவர்கள் நகைப்பார்களே!! போர் வலி நன்று நன்று - (நமது) போர்த்திறம் மிக நன்றாயிருக்கின்றது!!!' என - என்று சொல்லி, இராவணன்—, நக்கான் - சிரித்தான்; (எ - று.)

'குரங்கன்னது' என்றதில், 'அன்னது' என்றது - ஒப்பில்போலியாய் நின்றது. 'தின்று' என்பதை அசையென்றுங் கொள்ளலாம். தேக்கிடுதல் - நிறைந்து தெவிட்டுதலுமாம். 'நன்றுநன்று' என்றது, இகழ்ச்சிக்குறிப்பு. ()

## வேறு.

['அக்கினிதேவனைப் பிடித்துவாருங்கள்' என்று இராவணன் கோபத்தால் அரக்கரைநோக்கிச் சொல்லுதல்.]

சஎ. உண்டநெருப்பைக், கண்டனர் பற்றிக்,
கொண்டணை கென்றா, னண்டரை வென்றான்.

(இ - ள்.) 'உண்ட நெருப்பை - (இங்ஙனம் இலங்கையை) எரித்த அக்கினியை, கண்டனர் பற்றிகொண்டு அணைக - நாடிப்பிடித்துக்கொண்டு வருவீர்களாக', என்றான் - (இன்று அரக்கர்களைநோக்கிக் கோபத்தோடு) கூறினான்: (யாவனெனில்,—) அண்டரை வென்றான் - முன்பு தேவர்களைச் சயித்தவனான இராவணன்; (எ - று.)

முன்பு எல்லாத்தேவர்களையும் வென்று அடக்கியவனாதலின், அச்செருக்கினால், இப்பொழுது 'தலையெடுத்துத் தீங்குசெய்யலான அக்கினியைப் பிடித்துக் கொண்டு வாருங்கள்' என்றான், கோபத்தோடு தண்டிக்குங் கருத்துடையனாயென்க. ஆகவே, 'அண்டரை வென்றான்' என்ற பெயர் - ஸாபிப்ராயவிசேஷ்ய மாதலால், கருத்துடையடைகொளியணி. கண்டனர் - முற்றெச்சம்.

இதுமுதல் நான்கு கவிகள் - பெரும்பாலும் முதற்சீர் விளச்சீரும், இரண்டாவது தேமாச்சீரு மாகிய குறளடி [இருசீரடி] நான்கு கொண்டு வந்த வஞ்சித்துறைகள். (சஎ)

[அநுமானைப்பிடித்துவரும்படி இராவணன் அரக்கர்க்குக் கட்டளையிடுதல்.]

சஅ. உற்றகலாமுன், கற்றகுரங்கைப்,
பற்றுமினென்றான், முற்றுமுனிந்தான்.

(இ - ள்.) (மற்றும் இராவணன்), முற்றும் முனிந்தான் - பெருங்கோபங் கொண்டவனாய், (அரக்கர்களை நோக்கி), 'கற்ற குரங்கை - (நமக்கு இவ்வளவு எதிர்செய்யத்) தேர்ந்த குரங்கை, உற்று அகலாமுன் பற்றுமின் - விரைந்து

ஓடிப்போகாதமுன்னே பிடித்துவாருங்கள்', என்றான் - என்று கட்டளையிட்டான்; (எ - று.)

உற்று - (நீங்கள்) போய், பற்றுமின் என்று இயைத்தும் பொருள் கொள்ளலாம். இனி, உற்ற கலாம் முன் கற்ற என்று பிரித்து, பரிய கலகத்தை [போரை] முன்னமே தேர்ந்துள்ள என்று உரைப்பாரு முளர். கலாம் - வடசொற்சிதைவு. முற்றும் முனிந்தான் - கோபமயமானவனும் என்றபடி. (௪௮)

[உடனே பல வீரர்கள் செல்லுதல்.]

௪௯. சாரயனின்றார், வீரர்விரைந்தார்,
நேருதுமென்றார், தேரினர்சென்றார்.

(இ - ள்.) சார் அயல் நின்றார் - அவ்விராவணனைச்சார்ந்த பக்கத்திலே நின்றவர்களாகிய, தேரினர் வீரர் - இரதாதிபதிகளான வீரர்கள், நேருதும் என்றார் - 'அங்ஙனமே செய்வோம்' என்றுசொல்லி, விரைந்தார் சென்றார் - விரைந்து சென்றார்கள்; (எ - று.)

சார் அயல் - அடுத்த அருகில். நேருதல் - உடன்படுதல், எதிர்த்தல், பொருதல். (௪௯)

[மற்றும் பலவீரர்கள் அவர்களுடன் செல்லுதல்.]

௫௦. எல்லையி கந்தார், வில்லர்வெ குண்டார்,
பல்லதி காரத், தொல்லர்தொ டர்ந்தார்.

(இ - ள்.) எல்லை இகந்தார் - அளவற்றவர்களான, வில்லர் - வில்வீரர்களும், பல் அதிகாரம் தொல்லர் - (அமைச்சு படைத்தலைமை முதலிய) பலவகை அதிகார ஸ்தானங்களில் தொன்று தொட்டு [நெடுநாளாய்] உள்ளவர்களும், வெகுண்டார் - கோபங்கொண்டு, தொடர்ந்தார் - அந்தத்தேர் வீரர்களுடன் சென்றார்கள்; (எ - று.) (௫௦)

வேறு

[தலைமைவீரர்களெழுவர் போர்க்கு எழுதல்.]

௫௧. நீர்கெழு வேலைதி ரிந்தார், தார்கெழு தானைச மைந்தார்,
போர்கெழு மாலைபு னைந்தா, ரோரெழு வீரரு யர்ந்தார்.

(இ - ள்.) போர் கெழு மாலை புனைந்தார் - போர்க்குஉரிய (தும்பைப்பூ) மாலையை (எப்பொழுதும்) தரித்துள்ளவர்களான [எப்பொழுதுமே யுத்தசந்நத்தரா யுள்ளவர்களான என்றபடி], ஓர் எழு வீரர் - எழுவீரர்கள்,— நீர் கெழு வேலை திரிந்தார் - நீர்மயமாய் நிறைந்துள்ள கடல்போலப் பொங்கினவர்களாய், தார் கெழு தானை சமைந்தார் - படைவகுப்பமைந்த சேனைகளைச் சித்தஞ் செய்தவர்களாய், உயர்ந்தார் - (போர்க்கு) எழுந்தார்கள்; (எ - று.)

இனி, உயர்ந்தார் - தலைமைபெற்றவர்களான, ஓர் எழு வீரர் - எழுவீரர்கள், தானை சமைந்தார் - சேனைகளைச் சித்தஞ்செய்தார்கள் எனினுமாம்.

இதுமுதல் இப்படலம் முடியுமளவுமுள்ள பதினொன்கு கவிகள் - பெரும்பாலும் மூன்றுஞ்சீரொன்று தேமாச்சீரும், மற்றையிரண்டும் கூவிளச்சீர்களு மாகிய சிந்தடி [முச்சீரடி] நான்கு கொண்ட வஞ்சிவிருத்தங்கள். (ருக)

[அவர்கள் இலங்கையைச் சூழ்ந்து நாடி அநுமானைக்காணுதல்.]

ருஉ. விண்ணினைவேலைவிளிம்பார், மண்ணினையோடிவளைந்தார்,
அண்ணலைநாடியணைந்தார், கண்ணினின்வேறயல்கண்டார்.

(இ - ள்.) விண்ணினை - வானத்தையும், விளிம்பு வேலை ஆர் மண்ணினை - சுற்றிலுங் கடல் சூழப்பெற்ற பூமியையும் [இலங்கைத் தீவையும்], ஓடி வளைந்தார் - ஓடிவந்து சூழ்ந்தவர்களாய், அண்ணலை நாடி அணைந்தார் - பெருமையிற் சிறந்தவனான அநுமானைத் தேடி நெருங்கி, அயல் வேறு கண்ணினின் கண்டார் - ஒருபக்கத்தில் (அவ்வநுமானைத்) தனியே தமது கண்களாற் பார்த்தார்கள்; (எ - று.)

விளிம்பு - ஓரம், கரை, எல்லை. கண்ணினின் என்பதி லுள்ள 'இன்' இரண்டனுள், முன்னது - சாரியை; பின்னது - ஐந்தனுருபு. (ருஉ)

[இவர்கள் வீரவாதஞ்செயது சூழ, அநுமான் காணுதல்.]

ருங. பற்றுதிர்பற்றுதிரென்பார், எற்றுதிரெற்றுதிரென்பார்,
முற்றினர்முற்றும்முனிந்தார், கற்றுணர்மாருதிகண்டான்.

(இ - ள்.) முற்றும் முனிந்தார் - பெருங்கோபங்கொண்டவர்களான அவ் வரக்கர்கள்,—(அநுமானைக் கண்டவுடனே), பற்றுதிர் பற்றுதிர் என்பார் - '(இவனைப்) பிடித்துக்கொள்ளுங்கள் பிடித்துக்கொள்ளுங்கள்' என்று சொல்பவர்களும், எற்றுதிர் எற்றுதிர் என்பார் - '(இவனைத்) தாக்குங்கள் தாக்குங்கள்' என்றுசொல்பவர்களுமாய், முற்றினர் - (அநுமானை) வளைந்து கொண்டார்கள்; (அதனை), கற்று உணர் மாருதி கண்டான் - (சகலகலைகளையும் சூரியபகவானிடத்தில்) ஓதியுணர்ந்த வாயுகுமாரனான அநுமான் பார்த்தான்;( எ - று.)

பற்றுதிர், எற்றுதிர் என்ற ஏவற்பன்மை முற்றுக்களில், த் - எழுத்துப்பேறு. (ருங)

[அநுமான் தன்னைவளைந்துகொண்ட அரக்கர்களைத் தான் வாலினால வளைந்துகொள்ளுதல்.]

ருச. எல்கொடுவஞ்சரெதிர்ந்தார், கால்கொடுகைகொடுகார்போல்,
வேல்கொடுகோலினர்வெந்தீ, வால்கொடுதானும்வளைந்தான்.

(இ -ள்.) எல் கொடு வஞ்சர் - (அநுமானையெதிர்ப்பதாக இராவணன் முன்னிலையில்) ஏற்றுக்கொண்டுவந்த கொடியவஞ்சகர்களான அவ்வரக்கர்கள், எதிர்ந்தார் - (அங்ஙனம் அவனை) எதிர்த்து, கால் கொடு கை கொடு வேல் கொடு - (தங்கள்) கால்களைக் கொண்டும் கைகளைக் கொண்டும் வேலாயுதத்

தைக் கொண்டும் (தாக்குபவர்களாய்), கார்போல் கோலினர் - மேகம்போல (த்திரண்டு அநுமானை) வளைந்து கொண்டார்கள்; (அங்ஙனம்வளைந்த அவர்களை), தானும் - அவ்வனுமான்தானும், வெம் தீ வால் கொடு வளைந்தான் - வெவ்விய நெருப்பு மூண்டு எரியப்பெற்ற வாலைக்கொண்டு வளைத்தான்; (எ - று.)

'வல் கொடு வஞ்சர்' என்ற தொடரில்—முன்னது-வினைத்தொகையும், பின்னது - பண்புத்தொகையுமாம். கீழ் சக - ஆஞ் செய்யுளில் "நேருது மென்றார்" என்றதனைக் கருதி, இங்கு அரக்கர்க்கு 'வல்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. அரக்கர்க்குக் கார் உவமை, கருநிறமாய்த் திரளுதலில். இரண்டாமடியில் 'வந்த'என ஒருசொல் வருவித்து, கால்களையும் கைகளையும் பெற்றுவந்த மேகங்கள்போல என்று அரக்கர்க்கு இல்பொருளுவமை கூறியதாகவுங் கொள்ளலாம். (௫௪)

[அநுமான் ஒருமரத்தைக்கொண்டு அரக்கர்களை அடித்துக் கொல்லுதல்.]

௫௫. பாதவமொன்றுபகுத்தான், மாதிரம்வாலின்வளைத்தான்,
மோதினன்மோதமுனிந்தார், ரேதியுநாளுமிழந்தார்.

(இ - ள்.) மாதிரம் வாலின் வளைத்தான் - (எல்லாத்) திசைகளிலும் [சுற்றிலும்] (அரக்கர்களைத் தனது) வாலினால் வளைத்துக்கொண்டவனான அநுமான், பாதவம் ஒன்று பகுத்தான் - ஒருமரத்தைப் பெயர்த்து எடுத்து, மோதினன் - (அந்தமரத்தினால்) அடித்தான்; மோத - (அங்ஙனம்) அடித்ததனால், முனிந்தார் எதியும் நாளும் இழந்தார் - கோபங்கொண்டு வந்தவர்களான அரக்கர்கள் (தம்தமது) ஆயுதங்களையும் ஆயுளையும் இழந்தார்கள்.

படைக்கலங்களழியத் தாம் இறந்தனரென்றபடி. பாதபம் என்ற வடசொல் - அடியினால் நீரையுட்கொள்வது என்று காரணப்பொருள் பெறும். வளைத்தான், முனிந்தார் - பெயர்கள். நாள் - வாழ்நாள். ஈற்றடி - உடனிகழ்ச்சியணி; வடநூலார், ஸஹோக்த்யலங்கார மென்பர்: அஃதாவது - கற்றோரை மகிழ்விக்கும் உடனிகழ்தலைச் சொல்லுதல். (௫௫)

[அவருடம்பினின்று பெருகிய இரத்தம் வெள்ளமாயோடுதல்.]

௫௬. நூறிடமாருதிநொந்தா, ரூறிடவுனிடுபுண்ணீர்,
சேறிடவூரடுசெந்தீ, யாறிடவோடினதாறாய்.

(இ - ள்.) மாருதி நூறிட - (அங்ஙனம்) அநுமான் அடிக்க, நொந்தார் - வருந்தினவர்களாகிய அரக்கர்கள், ஊறு இட - காயமடைய, ஊன் இடு புண் நீர் - அவருடம்பினின்று பெருகிய இரத்தமானது, சேறு இட - (தரையெங்கும்) சேறும்படியும், ஊர் அடு செம் தீ ஆறிட - அவ்வூரையெரித்த சிவந்த நெருப்புந் தணியும்படியும், ஆறு ஆய் ஓடினது - ஆறாய்ப்பெருகிற்று; (எ - று.)

[இறவாத சிலர் மீண்டும் எதிர்க்க, அநுமான் அவர்களையுங் கொல்லுதல்.]

௫௭. தோற்றினர்துஞ்சினரல்லா, ரேற்றிகல்வீரரெதிர்ந்தார்,
காற்றின்மகன்கலைகற்றான், கூற்றினுமும்மடிகொன்றான்.

(இ - ள்.) தோற்றினர் - கண்ணெதிரிலே காணப்பட்டவர்களுள், துஞ்சினர் அல்லார் - இறந்தவர்கள் போக மிச்சப்பட்டவர்களான, ஏறு இகல் வீரர் - ஆண்சிங்கம்போன்ற பல பராக்கிரமங்களையுடைய வீரர்கள், எதிர்ந்தார் - (மீளவும் அநுமானை) எதிர்த்தார்கள்; கலை கற்றான் காற்றின் மகன் - சகல சாஸ்திரங்களையும் (சூரியபகவானிடத்து) ஓதியுணர்ந்தவனும் வாயு குமாரனுமான அநுமான், கூற்றினும் மும்மடி கொன்றான் - யமனிலும் மூன்றுமடங்கு அதிகமாக (அவர்களனைவரையும்) கொன்றிட்டான்; (எ - று.)

தோற்றினர் துஞ்சினர் - முன்னின்றவர்கள் (இங்ஙனம் அனுமானாற் கொல்லப்பட்டு) இறந்தார்கள்; அல்லார் - அவர்களல்லாத மற்றவர்களான [பின்னின்றவர்களாகிய], இகல் வீரர் - வலிமையையுடைய வீரர்கள், ஏற்று எதிர்ந்தார் - எதிர்த்துப் போர்செய்தார்கள் என்றும் உரைகொள்ளலாம். (ருஎ)

[ஐம்பதினாயிரம்பேர் இறக்க, மற்றையோர் கடலில்மூழ்குதல்.]

ருஅ. மஞ்சுறழ்மேனியர்வன்றாண், மொய்ம்பினர்வீரர்முடிந்தா,
ரைம்பதினாயிரரல்லார், பைம்புனல்வேலைபடிந்தார்.

(இ - ள்.) மஞ்சு உறழ் மேனியர் - மேகம்போன்ற உடம்பு நிறத்தையுடையவர்களும், வல் தாள் மொய்ம்பினர் - வலியகால்களையும் தோள்களையுமுடையவர்களுமான, வீரர் - வீரர்களில், ஐம்பதினாயிரர் - ஐம்பதினாயிரம் பேர், முடிந்தார் - இறந்தார்கள்; அல்லார் - அவர்களல்லாதவர்களெல்லாம், பைம் புனல் வேலை படிந்தார் - (தப்பியோடிப்) பசுமையாகக் காணப்படுகிற நீரையுடைய கடலில் முழுகினார்கள்; (எ - று.)—முதலடி - இணைவேதுகை.

'மேனிய', 'மொய்ம்பின' என்றும் பாடமுண்டு.　　　　(ருஅ)

[அனுமான் தனது தீக்கொளுந்திய வாலைக் கடலில் தோய்க்க, அதனால் அவர்களும் இறக்கவே, தலைமைவீரரெழுவரும் எதிர்த்தல்.]

ருகூ. தோய்ச்சனன்வாலதிதோயாக், காய்ச்சினவேலைகலந்தார்,
போய்ச்சிலர்பொன்றினர்போனா, ரேச்செனமைந்தரெதிர்ந்தார்.

(இ - ள்.) (அப்பொழுது அநுமான்), வாலதி தோய்ச்சனன் - (தனது) வாலை (கடலில்) தோய்த்தான்; தோயா - (அங்ஙனம்) தோய்த்ததனால்,— காய்ச்சின - கொதிப்படைந்த, வேலை - கடலிலே, போய் கலந்தார் சிலர் - (முன்பு) சென்று முழுகியவர்களான சில அரக்கர்கள், பொன்றினர் போனார் - இறந்தொழிந்தார்கள்; (இவற்றைக் கண்டு), மைந்தர் - தலைமைவீரர்கள், ஏச்சு என - (இங்ஙனமானது தமக்கு மிகவும்) இழிவு என்று கருதி, எதிர்ந்தார் - (தாங்களும் அநுமானை) எதிர்ந்தார்கள்; (எ - று.)

தோய்ச்சனன் - தோய்த்தனன் என்பதன் போலி. 'தோய' என்னுங் காரணப்பொருட்செயவெனெச்சம் திரிந்ததெனக் கொள்ளலாம். ஏச்சு - ஏசப்படுவது.　　　　(ருகூ)

[அவ்வெழுவரையும் அநுமான் கொல்லுதல்.]

சுO. சுற்றினதேரினர்தோலா, விற்றொழில்வீரம்விளைத்தா,
ரெற்றினன்மாருதியெற்ற, வுற்றெழுவோருமுலந்தார்.

(இ-ள்.) சுற்றின தேரினர் - (அநுமானைச்) சூழ்ந்துகொண்ட ரதாதிபதிகளான வீரர்கள், தோலா வில் தொழில் வீரம் விளைத்தார் - தோல்வியடையாத விற்போர்த்தொழில் திறத்தைச் செய்தார்கள்; மாருதி எற்றினன் - (அவர்களையும்) அநுமான் அடித்தான்; எற்ற - அடித்ததனால், உற்று - அடிபட்டு, எழுவோரும் - அந்த எழுவீரர்களும், உலந்தார் - அழிந்தார்கள்.

இவ்வெழுவரும், இராவணனது மந்திரிகளின் புதல்வர். (சுO)

['அசோகவனத்திற் சிறிதும்தீப்படவில்லை' என்று வானத்திற் செல்லும் வித்தியாதரர் சொல்லுதல்.]

சுக. விட்டுயர்விஞ்சையர்வெந்தீ, வட்டமுலைத்திருவைகும்,
புட்டிரள்சோலைபுறத்துஞ், சுட்டிலதென்பதுசொன்னார்.

(இ-ள்.) விட்டு உயர் விஞ்சையர் - வானத்திலே உயரத்திற்செல்லுகின்ற வித்தியாதரர்கள்,—'வெம் தீ - (அனைத்தையுமெரித்த இக்குரங்கினது வாலின்) வெவ்விய நெருப்பானது, வட்டம் முலை திரு வைகும் புள் திரள் சோலை - வட்டமான தனங்களையுடைய திருமகள் [சீதை] இருக்கிற பறவைகளடர்ந்த சோலையை, புறத்தும் சுட்டிலது - வெளிப்பக்கத்திலும் முட்படச் சுட்டதில்லை', என்பது சொன்னார் - என்ற அதிசயத்தை (ப்பாராட்டித் தமக்குட்) சொல்லிக்கொண்டார்கள், (எ - று.)—முதலடி - முற்றுமோனை.

விண்டு என்ற மென்றொடர்க்குற்றுகரம் வன்றொடராயிற்று. 'புட்டிரள்' என்ற அடைமொழி, சோலையின் செழுமையைக் காட்டும். (சுக)

[அதுகேட்டு மகிழ்ந்த அநுமான் சீதையருகிற் சென்று வணங்குதல்.]

சுஉ. வந்தவர்சொல்லமகிழ்ந்தான், வெந்திறல்வீரன்வியந்தா, [தான்.
னுய்ந்தனெனென்னவுயர்ந்தான், பைந்தொடி தாள்கள் பணிந்

(இ-ள்.) வந்தவர் சொல்ல - (வானத்தில்) வந்தவர்களான வித்தியாதரர்கள் (இவ்வாறு) சொல்ல, (அதுகேட்டு), வெம் திறல் வீரன் - வெவ்விய பல பராக்கிரமங்களையுடைய வீரனான அநுமான், மகிழ்ந்தான் - மகிழ்ச்சிகொண்டு, வியந்தான் - அதிசயித்து, உய்ந்தனென் என்ன - '(தீவினையினின்று) தப்பினேன் (யான்)' என்று எண்ணி, உயர்ந்தான் - எழும்பி (அசோகவனத்திற்குதித்து), பைந் தொடி தாள்கள் பணிந்தான் - பசுமையான தொடியென்னும்வளையலையுடையவளாகிய சீதையினது திருவடிகளில் நமஸ்கரித்தான்; (எ - று.)

இராமபிரானுக்கு அநுகூலமாக அரக்கர்க்கு எதிராய்த் தான்செய்த இவ்வளவுகாரியமும், தனதுவாலின்தீக்குச் சீதை இலக்காகியிருந்தால் வீ

ணுகி, தானும் தீவினைக்கு உள்ளாம்படியாயிருக்கு மாதலால், அங்ஙனம் அப் பிராட்டிக்குத் தீங்குநேராததை யுணர்ந்தவளவிலே அநுமான் வியந்து 'உய்ந்தனென்' என மகிழ்ந்தன னென்க. மற்றவையனைத்தும் தீப்பட்டெரிய அசோகவனம்மாத்திரம் தீப்படாதிருந்தமை, வியப்புக்குக் காரணம். (௯௨)

[சீதை அநுமானைக்கண்டு மகிழ, அநுமான் விடைபெற்றுச்செல்லுதல்.]

௯௩. பார்த்தனள்சானகிபாரா, வேர்த்தெரிமேனிகுளிர்ந்தாள், [ஞன்.
வார்த்தையென்வந்தனையென்றுப், போர்த்தொழின்மாருதிபோ

(இ - ள்.) சானகி - ஜநகராஜகுமாரியான சீதாபிராட்டி, பார்த்தனள் - (அநுமானைப்) பார்த்தாள் ; பாரா - பார்த்து [பார்த்தமாத்திரத்தி லென்றபடி], வேர்த்து எரி மேனி குளிர்ந்தாள் - (அநுமான்வாலில் அரக்கர்கள் தீவைத்தசெய்தியைக் கேட்டதுமுதல் 'அவனுக்கு என்னாயிற்றோ?' என்று கொண்ட தாபத்தால்) வியர்த்துக்கொதிக்கின்ற தன்னுடம்பு குளிரப்பெற்றாள் ; வார்த்தை என் - (சொல்லவேண்டிய) வார்த்தை என்ன இருக்கிறது? போர் தொழில் மாருதி - போர்த்தொழிலிற் கைதேர்ந்தவனான அநுமான், வந்தனை என்று - 'நமஸ்காரம்' என்று (சீதையைநோக்கிச்) சொல்லிவிட்டு, போனான் - மீண்டுசெல்லலானான் ; (எ - று.)

ஜாநகீ என்ற பெயர், குலப்பெருமையைக் காட்டும். முன்னமே எல்லா வார்த்தைகளுஞ் சொல்லிமுடிந்துவிட்டதனால், இப்பொழுது 'வார்த்தை யென்' என்றார். இங்கு 'வந்தனை' என்றது - விடைபெறுதற்பொருட்டு. போர்த் தொழின் மாருதி - போரில்வெற்றிகொண்ட அநுமான் என்றபடி. (௯௩)

[இலங்கையிற்பற்றிய தீ, பின்பு தணிதல்.]

௯௪. தெள்ளியமாருதிசென்றான், கள்ளவரக்கர்கள்கண்டா,
லெள்ளுவர்பற்றுவரென்று, வொள்ளெரியோனுமொளித்தான்.

(இ - ள்.) 'தெள்ளிய மாருதி சென்றான் - தெளிந்த ஞானமுடைய அநுமானோ போய்விட்டான் ; (இனி), கள்ளம் அரக்கர்கள் கண்டால் - வஞ்சனையையுடைய இராக்கதர்கள் (என்னைப்) பார்த்தால், எள்ளுவர் பற்றுவர் - அலட்சியமாய்ப்பிடித்துக்கொள்வார்கள்,' என்று - என்று எண்ணி, ஒள் எரியோனும் ஒளித்தான் - ஒளிபொருந்திய அக்கினிதேவனும் மறைந்தான் ; (எ - று.)

அநுமான் தனது தீக்கொளுந்தியவாலைக் கடலில்தோய்த்துத் தீயை யவித்துவிட்டு மீண்டுசெல்ல, அநுமானால் இலங்கையிற்பற்றவைக்கப்பட்ட தீ அந்நகரத்தையெரித்துவிட்டுத் தன்னடைவிலே தணிந்தது. இதனை, இவ் வளவுகாலமாய் இராவணனுக்கு அடங்கியிருந்து இப்பொழுது அநுமானது துணைமையைக்கொண்டு இலங்கையையெரித்தழிக்கத் தலைப்பட்ட அக்கினி தேவன் அத்துணைவனான அநுமான் சென்றுவிட்டவுடன் அரக்கர்க்கு அஞ்சி யொளித்தன னென்றது - ஏதுத்தற்குறிப்பேற்றவணி. (௯௪)

இலங்கையெரியூட்டுபடலம் முற்றிற்று.

பதினைந்தாவது

# திருவடிதொழுதபடலம்.

(அநுமான் இலங்கையினின்று மீண்டுவந்து இராமபிரானது) சீர்பாதங்களை வணங்கிய வரலாற்றைக் கூறும் பாகம். திரு - மேன்மை; அழகுமாம். அடி - பாதம். தொழுதவென்னும் வினைக்கு 'அநுமான்' என்னும் எழுவாய் வருவிக்க. இனி, 'இராமபிரானை' என்னுஞ்செயப்படுபொருள் வருவித்து, (ஸ்ரீராமனை) அநுமான் தொழுத படல மென்றுங் கூறலாம்; இப்பொருளில், 'திருவடி' என்பது - அநுமானுக்குப் பெயர்: இத்திருநாமம், வைஷ்ணவசம்பிரதாயத்தில் வழங்குவது; "பொருவருவேலைதாவும்புந்தியான் புவனத்தாய, பெருவடிவுயர்ந்த மாயோன் மேக்குறப்பெயர்ந்ததாள்போ, லுருவறிவடிவனும்பரோங்கின னுவமையாலுந், திருவடியென்னுந் தன்மை யாவர்க்குந்தெரியநின்றான்" என்றார் கிஷ்கிந்தாகாண்டத்திலும், "திருவடி தன்னிரு சேவடியிற் போய்" என வில்லிபுத்தூரார்பாரதத்துங் காண்க.

## வேறு.

[அநுமான் ஒருமலைமீதுநின்று எழும்பி ஆகாயமார்க்கமாய்ச் செல்லுதல்.]

க. நீங்குவென் விரைவி னென்னு நினைவினன் மருங்கு நின்ற
தாங்கொரு குடுமிக் குன்றை யருக்கனி னணைந்த வையன்
வீங்கின னுலகை யெல்லாம் விழுங்கின னென்ன வீரன்
பூங்கழ றொழுது வாழ்த்தி விசும்பிடைக் கடிது போனான்.

(இ - ள்.) 'விரைவின் - சீக்கிரத்தில், நீங்குவென் - இவ்விலங்கையினின்று போவேன்', என்னும் - என்கிற, நினைவினன் - எண்ணத்தையுடையவனாய்,—ஆங்கு - அவ்விலங்கையில், மருங்கு நின்றது - அருகிற் பொருந்தியதாகிய, ஒரு—, குடுமி குன்றை - சிகரத்தையுடைய மலையை, அருக்கனின் - சூரியன்போல, அணைந்த - சேர்ந்த, ஐயன் - அநுமான்,—உலகை எல்லாம் விழுங்கினன் என்ன - எல்லாவுலகங்களையும் உட்கொண்டவனான திருமால் போல, வீங்கினன் - (தனதுவடிவம்) பூரித்து நின்று,—வீரன் - ஸ்ரீராமனது, பூ கழல் - தாமரைமலர்போன்ற திருவடிகளைக்குறித்து, தொழுது - அஞ்சலிசெய்து, வாழ்த்தி - துதித்து, விசும்பிடை - ஆகாசமார்க்கத்திலே, கடிது போனான் - விரைந்து சென்றான்; (எ - று.)

மூன்றாமடிக்கு - எல்லாவுலகங்களையும் பிரளயகாலத்திலே திருவயிற்றினுட்கொள்ளுகிற திருமால் திரிவிக்கிரமனாய் நீண்டு வளர்ந்ததுபோல வளர்ந்தவனாய் என்று கருத்து; ஸ்ரீமகாவிஷ்ணுவின் விசுவரூபத்தை இங்கு ஒப்புமை குறித்ததாகவுங் கொள்ளலாம். இனி, உலகங்களையெல்லாம் மறைத்தவனென்னும்படி வளர்ந்தவனாய் என்றும், எல்லாவுலகங்களையும் வென்றே

னென்று மனம்பூரித்தவனாய் என்றும் பொருள் காணலாம். இந்தமலையின் பெயர் அரிஷ்டமென முதனூலால் விளங்குகின்றது. அம்மலையின்மீது நின்று விளங்குகிற அநுமானுக்கு, உதயகிரியின்மீது விளங்குகிற சூரியன் உவமை. பூங்கழல் - உவமத்தொகை; இரண்டனுருபும் பயனுந் தொக்க தொகையாகக் கொண்டால், அழகையுடைய கழல் எனக. தொழுதல் - திக்குநோக்கித் தண்டன்சமர்ப்பித்தல்.

இதுமுதல் இருபத்தேழுகவிகள் - பாசப்படலத்தின் ௬ - ஆங் கவிபோன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (௧)

[அநுமான் மைநாககிரிக்குச் செய்திசொல்லிவிட்டு மகேந்திரகிரியிற் குதித்தல்.]

உ. மைந்நாகமென்னநின்றகுன்றையுமரபினெய்திக்
கைந்நாகமனையோனுற்றதுணர்த்தினன்கணத்தின்காலைப்
பைந்நாகநிற்கும்வீரர்தன்னெடுவரவுபார்க்குங்
கொய்ந்நாகநறுந்தேன்சிந்துங்குன்றிடைக்குதியுங்கொண்டான்.

(இ - ள்.) கை நாகம் அனையோன் - துதிக்கையையுடைய யானையைப் போன்றவனான அநுமான்,—மைந்நாகம் என்ன நின்ற குன்றையும் - மைநாகம் என்று பெயர் சொல்லப்பட்டு நின்ற மலையையும், மரபின் எய்தி - முறைப்படி அடைந்து, உற்றது உணர்த்தினன் - (இலங்கையில்) நிகழ்ந்த செய்தியை (அதற்குச்) சொல்லி,—கணத்தின் காலை - ஒருகணப்பொழுதிலே,—பை நாகம் நிற்கும் வீரர் - படமெடுத்துநிற்கிற பாம்புகள்போலத் தலையெடுத்து நோக்கி நிற்கிற (அங்கதன்முதலிய) வானரவீரர்கள், தன் நெடு வரவு பார்க்கும் - தனது சிறந்த வருகையை எதிர்பார்த்து நிற்கப்பெற்ற, கொய் நாகம் நறுந் தேன் சிந்தும் குன்றிடை - மலர்பறித்தற்கு உரிய சுரபுன்னைமரங்கள் நல்ல தேனைச் சொரிகின்ற மகேந்திரமலையிலே, குதியும் கொண்டான் - குதித்தலையுஞ்செய்தான்; (எ - று.)

முற்காலத்தில் மலைகளெல்லாம் பறவைகள்போல [illegible] இறகுகளுடையனவாயிருந்து அவற்றாற் பூமியினின்று ஆகாயத்திலெழுந்து பறந்து திரிந்து தாம் நினைத்தவிடங்களில் உட்கார்ந்து பலவிடங்களையும் பாழாக்கி வருகையில் அதனை முனிவர்களாலறிந்த திரிலோகாதிபதியான தேவேந்திரன் சினந்து தன் வச்சிராயுதத்தினால் அவற்றின் இறகுகளை அறுத்துத் தள்ளலானான்; அப்பொழுது மைநாகமென்னும்மலை மிக அஞ்சி வாயுபகவானது உதவிகொண்டு ஓடிச்சென்று கடலினுள் ஒளித்தது: அந்தப்பருவதம், அநுமான் இலங்கைக்குச் செல்லக் கடலைத்தாவி யெழுந்தபொழுது, சமுத்திரராஜனது ஏவலினாலும், தன்னை முன்பு காத்த வாயுவின் குமாரனாகிய அவனுக்குத் தன்னாலியன்றவளவு உதவிசெய்ய வேண்டுமென்று எண்ணியும், கடலினின்று எழுந்துவந்து அவனைத் தன்மேற் சிறிதிருந்து இளைப்பாறுமாறு

வேண்ட, அவன் காரியவிரைவினால் அவ்வேண்டுகோளை மறுத்து, மீண்டு வரும்பொழுது அதன்விருப்பத்தை நிறைவேற்றுவதாக வாக்குதத்தஞ் செய்து போயினன்; அந்தச்சொல் தவறாமல் இப்பொழுது வந்ததைப்பற்றி, 'மாயி னெய்தி' எனப்பட்டது.

மைந்நாகம் - எதுகைநோக்கிய விரித்தல் விகாரம். கைந்நாகம் முதலிய மூன்றும், குறிப்பாற் பொருளை யுணர்த்தின. "பைந்நாகப்பள்ளிமணிவண் ணனிற் பாயல்கொண்டு, கைந்நாகந்துஞ்சுங் கமழ்காந்தளஞ்சாரல் போகி, மைந்நாக வேலிமலி பல்லவதேய நண்ணிக், கொய்ந்நாகச்சோலைக் கொடியந் நகர்புக்கவாறும்" என்ற சீவகசிந்தாமணிச் செய்யுளின் நான்கடிகளிலு முள்ள எதுகைச் சொற்களே இச்செய்யுளின் நான்கடிகளிலும் எதுகைச் சொல்லாக நிற்றல் காண்க. அநுமானுக்கு யானை யுவமை, நடை வலிமை காம்பீரியங்கட்கும், பெருவடிவத்திற்கும், மறைத்தற்குரிய காலத்தே மறைத்து வெளிப்படுத்தற்குரிய காலத்தே வெளிப்படுத்துகிற சீற்றத்துக்கும் எனக் காண்க. அநுமானது கை யானைத்துதிக்கைபோலு மென்ற கருத்தும், 'கைந் நாக மனையோன்' என்ற தொடரினாற் பெறப்படும். உற்றது - தான் பிராட்டி யைக் கண்டது முதலியன. நாகம் என்னுஞ் சொல் - யானையைக் குறிக்கும் போது மலைகளில் வாழ்வது என்றும், பாம்பைக்குறிக்கும்போது மரங்களில் அல்லது மலைகளில் வாழ்வது என்றும் காரணப்பொருள்பெறும்; நகம்-மலையும், மரமும். பாம்பு படமெடுத்து ஒரு பொருளின் வரவைப் பார்த்தல்போல, இவர்கள் தலையைத்தூக்கி அனுமன்வரவைப் பார்த்து நிற்றலால், 'பைந்நாக நிற்கும் வீரா தன்னெடுவரவுபார்க்கும்' எனப்பட்டது. நெடுவரவு - வெகு தூரத்திலிருந்து வருகை என்றுமாம்; அன்றியும், 'நெடுவரவுபார்க்கும்' என்ற தனால், அநுமான் இலங்கைக்குச்செல்லப் புறப்பட்டதுமுதல் அவனது வரு கையை வாநரவீரர் எதிர்பார்த்திருக்கின்றன ரென்றுங் கொள்க. நறுந் தேன் - நன்மணம்வீசுந் தேனுமாம். கணத்தின்காலைக் குதியுங்கொண்டான் என இயையும். (உ)

[அங்கிருந்த வாநரவீரர்கள் அநுமானைக்கண்டு மகிழ்தல்.]

௩. போய்வருங்கருமமுற்றிற்றென்பதோர்பொம்மல்பொங்க
வாய்வெரீஇநின்றவென்றிவானரவீரர்மன்னோ
பாய்வருநீளத்தாங்கணிருந்தனபறவைப்பார்ப்புத்
தாய்வரக்கண்டதன்னவுவகையிற்றளிர்த்தாரம்மா.

(இ - ள்.) வாய் வெரீஇ நின்ற - (அநுமான் கடல்கடந்து சென்றதுமுதல் அவன் இனிது வந்து சேரவேண்டுமே யென்ற கவலையினாலும் அவனுக்கு என்னாகுமோ வென்ற அச்சத்தாலும்) வாய்குளறி நின்ற, வென்றி - வெற்றி யடையவல்ல, வானர வீரர் - (அங்கதன் முதலிய) வாநர வீரர்கள்,—போய் வரும் கருமம் - (அநுமான் இலங்கைக்குச்) சென்று மீண்டுவருந் தொழில், முற்றிற்று - முடிந்தது, என்பது-என்பதனாலாகிய, ஓர்-ஒப்பற்ற, பொம்மல் - மகிழ்ச்சி, பொங்க - அதிகப்பட,—பாய்வரு நீளத்து ஆங்கண் இருந்தன .

பாய்ந்துஉட்புகுதற்கு உரிய கூண்டினிடத்திலே யிருந்தனவாகிய, பறவை பார்ப்பு - பறவைக்குஞ்சுகள், தாய் - தமது தாய்ப்பறவை, வர - (வெளியிற் சென்றது) மீண்டுவர, கண்டது - (அதனைப்) பார்த்ததை, அன்ன - போன்ற, உவகையின் - மகிழ்ச்சியினால், தளிர்த்தார் - செழித்தார்கள்; (எ - று.)-மன், ஓ, அம்மா - ஈற்றசைகள்.

வானரவீரர், பொம்மல்பொங்க, உவகையின் தளிர்த்தார் என்க. கூண்டிலிருந்த பறவைக்குஞ்சுகள் - மகேந்திரகிரியி லிருந்த வாநரவீரர்கட்கும், அக்குஞ்சுகள் தமது தாய்ப்பறவையின் வருகையைக் கண்டு மகிழ்தல் - அவ்வீரர்கள் அநுமானது வரவைக் கண்டு மகிழ்தற்கும் உவமை. நீடம் என்ற வடமொழி, நீளமென விகாரப்பட்டது; டகரளகரப்போலி வடமொழியிலே யுண்டு: 'டளயோரபேதம்' என்பர். இதன்பொருள் - பறவைக்கூடு. ஆரணிய காண்டத்தில் "நீளநீங்கியபறவையின் விண்ணுறநிமிர்ந்தான்" என்ற விடத்திலும் இச்சொல் இப்பொருளில் வந்தமை காண்க. இனி, இதனைத் தமிழ்ச்சொல்லாகக் கொண்டு சேய்மையென்று பொருளுரைத்து அதற்கு ஏற்ப உரைகூறுதல் சிறவாமை யுணர்க. காரியப்பொருளைக் காரணச் சொல்லாற் கூறும் உபசாரவழக்குப்பற்றி, 'வாய்வெரீஇ' எனப்பட்டது. பார்ப்பு - பறவையின் இளமைப்பெயர்: "பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற்றிளமை" என்றார் தொல்காப்பியனார். (௩)

[அவ்வாநரர்கள் பலவாறு மகிழ்ச்சிபாராட்டுதல்.]

௪. அழுதனர்சிலவர்முன்னின்றார்த்தனர்சிலவரண்மித்
தொழுதனர்சிலவராடித்துள்ளினர்சிலவரள்ளி
முழுதுறவிழுங்குவார்போன்மொய்த்தனர்சிலவர்சுற்றுந்
தழுவினர்சிலவர்கொண்டுசுமந்தனர்சிலவர்தாங்கி.

(இ - ள்.) (மகிழ்ச்சியினால்), சிலவர் - சில வாநரர்கள், அழுதனர் - அழுதார்கள்; சிலவர்—, முன் நின்று - அநுமானெதிரில் நின்று, ஆர்த்தனர் - ஆரவாரித்தார்கள்; சிலவர்—, அண்மி - அவனைச்சமீபித்து, தொழுதனர் - வணங்கினார்கள்; சிலவர்—, ஆடி துள்ளினர் - குதித்துக் கூத்தாடினார்கள்; சிலவர்—, அள்ளி முழுது உற விழுங்குவார் போல்-(அநுமானை) எடுத்து முழுதும் விழுங்குபவர் போல, மொய்த்தனர் - சூழ்ந்துகொண்டார்கள்; சிலவர்—, சுற்றும் தழுவினர் - சுற்றிலும் (அநுமானை) ஆலிங்கனஞ் செய்தார்கள்; சிலவர்—, தாங்கி கொண்டு சுமந்தனர் - (அவனைத்) தூக்கிக்கொண்டு சுமந்தார்கள்; (எ - று.)

அவன்சென்றிருந்தபோது தாம்கொண்டிருந்த சோகத்தைக் கருதி அழுதன ரென்க. 'அள்ளி முழுதுறவிழுங்குவார்போல் மொய்த்தனர்' என்றதை "பருகுவனன்ன ஆர்வத்தனாகி", "பருகுவாரிற் புல்லி" என்பனபோலக் கொள்க. (௪)

[அவ்வாநரர்கள் அநுமானை உபசரித்தல்.]

௫. தேனொடுகிழங்குங்காயுநறியனவரிதிற்றேடி
மேன்முறைவைத்தேமண்ணனுகர்ந்தனைமெலிவுதீர்தி
மானவாண்முகமேநங்கட்குரைத்ததுமாற்றமென்று
தானுயர்சாகமெல்லாமுறைமுறைசிலவர்தந்தார்.

(இ - ள்.) சிலவர் - சிலவாநரர்கள்,—(அநுமானை நோக்கி), 'அண்ணல் - பெருந்தன்மையையுடையவனே ! மானம் வாள் முகமே - பெருமையையும் ஒளியையுங் கொண்ட (உனது) திருமுகந்தானே, மாற்றம் - (நீ பிராட்டியைக் கண்ட உவகைச்) செய்தியை, நங்கட்கு - எங்களுக்கு, உரைத்தது - (உன் வாயாற்சொல்லுமுன்) சொல்லிவிட்டது ; தேனொடு - தேனையும், கிழங்கும் - கிழங்குகளையும், காயும் - காய்களையும், நறியன - நல்லனவாக, அரிதின் தேடி - அருமையாய்த் தேடிக்கொண்டுவந்து, மேல் - முன்னமே, முறை - ஒழுங்காக, வைத்தேம் - வைத்திருக்கிறோம் ; (அவற்றை), நுகர்ந்தனை - (நீ) உண்டு, மெலிவு தீர்தி - இளைப்பாறுவாயாக,' என்று - என்று சொல்லி, உயர் சாகம் எல்லாம் - சிறந்த இலையுணவு முதலிய எல்லாவற்றையும், முறை முறை - வரிசைவரிசையாக, தந்தார் - கொணர்ந்துகொடுத்தார்கள் ; (எ - று.)— தான் - அசை.

மேன்முறை - மேன்மையாக எனினுமாம். அண்ணல் - அண்மைவிளி. நீ சீதையைத்தேடிக் கண்டுவந்தனையென்கிற சந்தோஷசமாசாரத்தை நினது முகமலர்ச்சியே எங்கட்குத்தெரிவித்த தென்பது, மூன்றாமடியின் கருத்து. முகம் மாற்றம் உரைத்தது - பேசாதது பேசுவதுபோலச் சொல்லபபட்ட மரபுவழுவமைதி. (௫)

[அநுமானது உடம்பின் விரணங்களை நோக்கி வாநரர்கள் வருந்துதல்.]

௬. தாள்களின்மார்பிற்றோளிற்றலையினிற்றடக்கைதம்மில்
வாள்களின்வேலிற்கோலின்மழையினின்வகுத்தபுண்க
ளாள்கண்மேலுலகிற்சென்றவெண்ணனநம்பிகண்ண
வூழ்கொளநோக்கிநோக்கியுயிருகவுளைந்துயிர்த்தார்.

(இ - ள்.) தாள்களில் - கால்களிலும், மார்பில் - மார்பிலும், தோளில் - தோள்களிலும், தலையினில் - தலையிலும், தடக் கைதம்மில் - பெரிய கைகளிலும், வாள்களின் - வாள்களாலும், வேலின் - வேல்களாலும், கோலின் மழையினின் - அம்புகளினாலாகிய மழையினாலும், வகுத்த - உண்டாக்கப் பட்ட, புண்கள் - விரணங்கள், மேலுலகின் சென்ற நாள்கள் எண்ணன - ஆகாயமார்க்கத்திற்செல்லுகிற நக்ஷத்திரங்களின் தொகையை யுடையவையாய், நம்பிகண்ண - அநுமானிடத்து உள்ளவற்றை, ஊழ் கொள - முறைமைபொருந்த [ஒவ்வொன்றாக], நோக்கி நோக்கி - பார்த்துப் பார்த்து, உயி உக - (தமது) உயிர் வெளியிற்செல்லும்படி, உளைந்து - வருந்தி, உயிர்த்தார் - (வாநரவீரர்கள்) பெருமூச்சுவிட்டார்கள்; (எ - று.)

இதனால், அநுமான்பக்கல் வாநரர்கட்கு உள்ள அன்பு விளங்கிற்று. 'எண்ணனவுங் கண்ணவுமாகிய புண்களை யென்க. வாள்கள் முதலியன, இராக்கதருடையவை. கோலின்மழை-பாணவர்ஷம். அளவிறந்த மிகப்பல வென்றற்கு, 'மேலுலகத்திலேசெல்லுகின்ற நக்ஷத்திரங்களின் தொகையுடையன' எனப்பட்டது. நக்ஷத்திரமண்டலம் இருக்கிற இடம் மேலுலகமேழனுள் ஸுவர்லோக மாதலால், 'மேலுலகு' என்றார். நாள் - நாண்மீன். இனி, 'உலகில் மேற்சென்ற நாள்கள் எண்ணம' என்று மொழிமாற்றி, உலகத்தில் இதுவரையிலுங்கழிந்த நாள்களின் தொகையுடையனவாய் என்று பொருள் கொள்ளினுமாம்; அதுவும் அளவிறந்ததற்கு உவமை. (சு)

[அங்கதன்முதலியோரை வணங்கி அநுமான் செய்திகூறுதல்.]

௭. வாலிகாதலனைமுந்தைவணங்கினனெண்கின்வேந்தைக்
காலுறப்பணிந்துபின்னைக்கடன்முறைகடவோர்க்கெல்லா
மேலுறவியற்றியாங்கணிருந்திவணிருந்தோர்க்கெல்லா
ஞாலநாயகன்றன்றேவிசொல்லினணன்மையென்றான்.

(இ - ள்.) (அநுமான்),— வாலி காதலனை - வாலியின்புத்திரனாகிய அங்கதனை, முந்தை - முதலில், வணங்கினன் - வணங்கி, பின்னை - பின்பு, எண்கின் வேந்தை - கரடிகட்குத்தலைவனாகிய ஜாம்பவானை, கால் உற பணிந்து - கால்களிலே பொருந்த விழுந்து (ஸாஷ்டாங்கமாக) நமஸ்கரித்து, கடவோர்க்கு எல்லாம் - மற்றும் உரியவர்கட்கெல்லாம், கடன் முறை - செய்யத்தக்க உபசாரமுறைமைகளை, ஏலுற - ஏற்றபடி, இயற்றி - செய்து, ஆங்கண் இருந்து - அவ்விடத்திலே இருந்து, 'இவண் இருந்தோர்க்கு எல்லாம் - இங்கேயிருந்த வாநரவீரர்க்கெல்லாம், ஞாலநாயகன் தன் தேவி - உலகங்கட்குத் தலைவனான ஸ்ரீராமபிரானது பத்நினியாகிய சீதாபிராட்டி, நன்மை - மங்களத்தை, சொல்லினள் - சொன்னாள்,' என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

அங்கதன் இளவரசனாதலால், முதலில் வணங்கப்பட்டான். ஜாம்பவானைக் காலுற வணங்கியது, பிரமபுத்திரனாதலாலும், பிராயத்தில் மூத்தவனாதலாலு மென்க. காதலன் - அன்புடையவன். பிரமன் ஒருகாலத்திற் கொட்டாவிவிட்டபொழுது அதனினின்று தோன்றியவன் ஜாம்பவா னென்று அறிக. இவன் பிரமனது அம்சமாதலை "பிதாமகன்பேசுகின்றான், முன்னரே யெண்கின்வேந்தன் யானென மொழிகின்றான்" எனப் பாலகாண்டத்துட் கூறியதனு லுணர்க. மேலுற எனப் பதம்பிரித்தல் மோனைக்குப் பொருந்தாதென மறுக்க. (௭)

[நடந்தசெய்திகளை ஆதியோடந்தமாய் விவரமாகச்சொல்லும்படி ஆவலோடு வினவிய வாநரர்க்கு அநுமான் அங்ஙனங்கூறுதல்.]

௮. என்றலுங்கரங்கள்கூப்பியெழுந்தனரிறைஞ்சித்தாழா
நின்றனருவகைபொங்கவிம்மலானிமிர்ந்தநெஞ்சர்
சென்றதுமுதலாவந்ததிறுதியாச்செப்பற்பாலை
வன்றிறலுரவோயென்னச்சொல்லினன்மருத்தின்மைந்தன்

(இ - ள்.) என்றலும் - என்று (அநுமான்) சொன்னவுடனே, (வானரவீரர்கள்), எழுந்தனர் - எழுந்து, கரங்கள் கூப்பி இறைஞ்சி தாழா நின்றனர் - கைகளைக்கூப்பி வணங்கித் தாழ்ந்து நின்று, உவகை பொங்க - மகிழ்ச்சி மிக, விம்மலால் நிமிர்ந்த நெஞ்சர் - களிப்பினால் நிறைந்த மனத்தை யுடையவர்களாய்,—'வல் திறல் உரவோய் - கொடிய பலபராக்கிரமங்களை யுடையவனே! சென்றது முதல் ஆ - (நீ இங்கிருந்து) போனது முதலாக, வந்தது இறுதி ஆ - (இங்கு) மீண்டுவந்தது ஈறாக, (நடந்ததை), செப்பல்பாலை - சொல்லக்கடவாய்,' என்ன - என்றுசொல்ல,—மருத்தின் மைந்தன் - வாயு குமாரனான அநுமான், சொல்லினன் - சொன்னான்; (எ - று.)

செப்பற்பாலை - சொல்லுந்தன்மையுடையாய். தேகபலம் மனோபலம் புத்திபலம் என்ற மூன்றையுங் குறித்தற்கு, 'வன் திற லுரம்' என மூன்று சொல்தொடர வைத்தன ரென்றலு மொன்று. (அ)

[அநுமான் பெரும்பாலுஞ்சொல்லிச் சிலவற்றைச் சொல்லாது விடுதல்.]

௯. ஆண்டகைதேவியுள்ளத்தருந்தவமமையச்சொல்லிப்
பூண்டபேரடையாளங்கைக்கொண்டதும்புகன்றுபோரி
னீண்டவாளரக்கரோடுநிகழ்ந்ததுநெருப்புச்சிந்தி
மீண்டதும்விளம்பான்றன்றன்வென்றியையுரைப்பவெள்கி.

(இ - ள்.) ஆண்தகை - (அறிவு நிறை ஓர்ப்புக் கடைப்பிடி யென்னும்) ஆண்மைக்குணங்களையுடையவனான அநுமான்,—தேவி உள்ளத்து அருந்தவம் - பிராட்டியின் மனத்திலுள்ள அரிய தவமாகிய கற்பொழுக்கத்தை, அமைய சொல்லி - செவ்வையாகச் சொல்லி, பூண்ட பேர் அடையாளம் கை கொண்டதும் புகன்று - (அப்பிராட்டி) அணிந்திருந்த (சூளாமணியாகிய) பெரிய அடையாளத்தைக் கையிற்பெற்றுவந்ததையுஞ் சொல்லி,—போரில் - யுத்தத்தில், நீண்ட வாள் அரக்கரோடு - பெரிய ஆயுதங்களையுடைய அரக்கர்களுடன், நிகழ்ந்ததும் - நடந்தசெய்தியையும், நெருப்பு சிந்தி மீண்டதும் - (தான் இலங்கைமுழுவதிலும்) நெருப்பை வைத்துவிட்டுத் திரும்பிவந்ததையும், தான் தன் வென்றியை உரைப்ப வெள்கி விளம்பான் - தானே தனது ஜயத்தைச் சொல்லுதற்கு நாணிச் சொல்லாதாயினான்; (எ - று.)

இதனால், அநுமானது தற்புகழ்ச்சியில்லாத்தன்மை விளங்குகின்றது. ஆண்டகைதேவி - இராமன் மனைவி என உரைத்து, 'அநுமான்' என்னும் எழுவாய் வருவித்தலுமாம். (௯)

['கூறாத சிலவற்றைக் குறிப்பாலுணர்ந்தோம்' என்று வானரர் கூறல்.]

௧௦. பொருதமைபுண்ணேசொல்லவென்றமைபோந்ததன்மை
யுரைசெயவூர்தீயிட்டதோங்கிரும்புகையேயோதக்
கருதலர்பெருமைதேவிமீண்டிலாச்செயலேகாட்டத்
தெரிதரவுணர்ந்தேம்பின்னரென்னினிச்செய்துமென்றார்.

(இ - ள்.) (அவ்வாநரர்கள் அநுமானை நோக்கி),—'பொருதமை - (நீ அங்கு அரக்கரோடு) போர்செய்ததை, புண்ணே - (உனது உடம்பிலுள்ள) விரணங்களே, சொல்ல - தெரிவிக்கவும்,—வென்றமை - (நீ அங்குச்) சயித்ததை, போந்த தன்மை - (அங்குநின்று) மீண்டுவந்தவகைதானே, உரைசெய - தெரிவிக்கவும்,—ஊர் தீ இட்டது - அவ்வூரில் (நீ) நெருப்புவைத்து எரித்ததை, ஓங்கு இரும் புகையே - உயர்ந்தெழுந்த மிக்க புகைதானே, ஓத - தெரிவிக்கவும்,—கருதலர் பெருமை - அப்பகைவர்களது பெருமையை, தேவி மீண்டிலா செயலே - பிராட்டி மீண்டு (உன்னுடன்) வராத செய்கையே, காட்ட - தெரிவிக்கவும், தெரிதர உணர்ந்தேம் - தெரிய அறிந்தோம்; பின்னர் இனி - இனிமேல், என் செய்தும் - (நாம்) என்ன செய்யக்கடவோம்,' என்றார்- என்று சொன்னார்கள்; (எ - று.)

ஏகாரங்கள் - பிரிநிலே; நீ சொல்லாமலே என்பது கருத்து. கருதலர் - (நன்மையை) எண்ணாதவர்; தீமையெண்ணுபவர். தெரிதரஉணர்ந்தோம் - ஐயமற அறிந்தோம் என்றபடி. (௧0)

[இராமனுக்குச் செய்திகூறுதற்பொருட்டு அனைவரும் புறப்படுதல்.]

௧௧. யாவையுமினிவேறெண்ணல்வேண்டுவதிறையுமில்லை
சேவகன்றேவிதன்னைக்கண்டமைவிரைவிற்செப்பி
யாவதவ்வண்ணலுள்ளத்தருந்துயராற்றலேயாம்
போவதுபுலமையென்னப்பொருக்கெனவெழுந்துபோனார்.

(இ - ள்.) இனி—, யாவையும் - எந்த விஷயங்களைப் பற்றியும், வேறு எண்ணல் வேண்டுவது - வேறே ஆலோசிக்கவேண்டுவது, இறையும் இல்லை- சிறிதும் இல்லை; ஆவது - (நாம்) இனிச் செய்யவேண்டியது, சேவகன் தேவிதன்னை - மகாவீரனான ஸ்ரீராமனது மனைவியாகிய சீதையை, கண்டமை - பார்த்த செய்தியை, விரைவின் செப்பி - விரைவிற் கூறி, அ அண்ணல் உள்ளத்து அருந் துயர் ஆற்றலே ஆம் - அந்த ஸ்ரீராமபிரானது மனத்திலுள்ள அரிய துன்பத்தைத் தணியச்செய்வதுவேயாகும்; போவது - (அதற்காக இனி யாம் இராமனிடம்) போவதுவே, புலமை - அறிவு, என்ன - என்று (திருவடி) சொல்ல,—பொருக்கென எழுந்து போனார் - விரைவாக அவ்விடம் விட்டுப் புறப்பட்டுப்போனார்கள்; (எ - று.)

யாம்போவது என்றும் எடுக்கலாம். பொருக்கென - விரைவுக்குறிப்பு. ()

[அவ்வாநரவீரர்கள் மதுவனஞ்சேர்தல்.]

௧௨. போயினர்களிப்பினோடும்புங்கவன்சிலையினின்று
மேயினபகழியென்னவெழுந்துவிண்படர்ந்துதாவிக்
காய்கதிர்க்கடவுள்வானத்துச்சிசென்றிறுக்குங்காலத்
தாய்வருவீரரும்போய்மதுவனமதிலிறுத்தார்.

*உஎ

(இ - ள்.) ஆய்வரும் வீரரும்-(எவற்றையும்) ஆராய்ந்தறியும் இயல்புள்ள அவ்வானரவீரர்களும்,—களிப்பினோடும் - மகிழ்ச்சியுடனே, போயினர் - புறப்பட்டுச் சென்று, புங்கவன் சிலையினின்றும் எயின பகழி என்ன - சிறந்தவனான ஸ்ரீராமனது வில்லினின்று தொடுக்கப்பட்ட அம்புபோல(க் குறித்த இலக்குத் தப்பாமல் விரைந்து), எழுந்து விண் படர்ந்து தாவி-ஆகாயத்திலே பொருந்தி எழும்பிப் பாய்ந்து, காய் கதிர் கடவுள் வானத்து உச்சி சென்று இறுக்கும் காலத்து - சுடுகிற கிரணங்களையுடைய சூரியன் ஆகாயத்திலே உச்சியிற் போய்த் தங்குஞ்சமயத்தில், மதுவனம் அதில்-மதுவனத்தில், போய் இறுத்தார் - போய்த் தங்கினார்கள் ; (எ - று.)

புங்கவன் - காளைபோன்றவன். எயின - எவின வென்பதன் விகாரம். உச்சி - மேல்நடுவிடம். மதுவனம் - மதுவையுடைய சோலை ; இது, முன்பு வாலியினுடையதாயிருந்து பின்பு சுக்கிரீவனது ஆணைக்கு உட்பட்டது. 'அது' என்பது - பகுதிப்பொருள்விகுதி. காப்பியத்தலைவனது சம்பந்தமுள்ள பொருளையே உபமானமாகக்கூறிச் சிறப்பிப்பதொரு கவிமரபு பற்றி, வானரவீரர் விரைந்துசெல்லுதற்கு இராமபாணம் விரைந்துசெல்லுதலை உவமை கூறினார். ஆய்வரும் என்பதில், வா - துணைவினை. இச்சொல்லுக்கு - (பரிதாகங்களினால்) மெலிவடைந்த என்றும் பொருள்கூறலாம். (கஉ)

[பசிதீரக்கருதி வானரவீரர்கள் அங்கதனை யடுத்தல்.]

கங. ஏதுநாளிறந்தசாலவென்பதோர்வருத்தநெஞ்சத்
தாதலா லுணவுதீர்ந்துவருந்தினமளியமெம்மைச்
சாதறீர்த்தளித்தவீரதந்தருளுணவுமென்னப்
போதுநாம்வாலிசெய்பாலென்றுடனெழுந்துபோனார்.

(இ - ள்) 'எம்மை சாதல் தீர்த்து அளித்த வீர - (சீதையைக் காணாமையால்) யாங்களெல்லாம் இறந்துபோதலை (நீ போய்க்கண்டுவந்ததனால்) ஒழித்து (எங்களை)க்காத்தருளின வீரனான அநுமனே !—நாள் சால இறந்த - (சுக்கிரீவன் தவணைவைத்த) நாள்கள் மிகவும் கடந்துபோயின: ஏது - (இனி யாம் உய்யு மாறு) யாது? என்பது - என்பதனாலாகிய, ஓர் வருத்தம் - ஒரு துன்பம், நெஞ்சத்து - (எங்கள்) மனத்தில், ஆதலால் - உண்டானதனால், உணவு தீர்ந்து - உணவுகொள்ளாமல், வருந்தினம் - (இதுவரையில்) வருத்தமுற்றோம் ; அளியம் - (உன்னால்) அருள்செய்யத்தக்கவர் யாம் ; உணவும் தந்தருள் - (எங்கட்கு) உணவையுந் தந்தருள்வாயாக,' என்ன - என்று (வானரர்கள் அநுமானை) வேண்ட,—நாம் வாலிசேய்பால் போதும் என்ற உடன - 'நாமெல்லாம் (இதைக்குறித்து) வாலியின் புத்திரனாகிய அங்கதனிடத்திற் செல்வோம்' என்று (அவ்வநுமான்) சொன்னவுடன், எழுந்து போனார் - (எல்லாரும்) எழுந்திருந்து போனார்கள் ; (எ - று.)

'நாள்' என்பதை மத்தமதீபமாக முன்னும் பின்னும் கூட்டி, நாள் ஏது - (இனி நமக்கு) வாழ்நாள் ஏது? நாள் சால இறந்த - (சுக்கிரீவன் தவணைகுறித்த)

நாள்கள் மிகவுங் கடந்துபோயின என்று பதவுரை கூறலுமாம். 'ஒருமாத காலத்திற்குட் சீதையைத்தேடிமீள்வீராக' என்று சுக்கிரீவன் சொன்ன தவணை முன்னமே கடந்து போனதனால், அங்ஙனந் தவணை கடந்த எமக்கு இனிச் சுக்கிரீவாஜ்ஞையால் மரணமே நேரு மென்பதுபற்றிய வருத்தமென்க. ஏது என்பதை ஹேது என்னும் வடமொழியின் திரிபாகக் கொண்டால், நாள் சால இறந்தன என்னும் ஏதுவினாலாகிய வருத்த மென்க. 'உணர்வுதீர்ந்து' என்ற பாடத்திற்கு - அறிவழிந்து என்று பொருள். உணவும், உம்மை-இசை நிறை; இனி, முன் உயிரைத்தந்ததேயன்றி இப்பொழுது உணவையுந் தருவா யென்று இறந்ததுதழுவிய எச்சவும்மையாகவுங் கொள்ளலாம். என்றுடன் - தொகுத்தல். (கரு)

[வாநரசேனைக்கு மதுவளிக்குமாறு வாநரவீரர்கள் அங்கதனை வேண்டுதல்.]

கச. அங்கதன்றன்னையண்மியனைவருமிருகைகூப்பிக்
கொங்குதங்கலங்கன்மார்பநின்னுடைக்குரக்குச்சேனை
வெங்கதமொழிந்துசாலவருந்தினவேவையோடி
யிங்கிதற்களித்தல்வேண்டுமிறலுமிழ்பிரசமென்றார்.

(இ - ள்.) அனைவரும் - வாநரவீரர்களெல்லாரும், அங்கதன்தன்னை - அங்கதனை, அண்மி - சமீபித்து, இரு கை கூப்பி - இரண்டுகைகளையுங்கூப்பிக்கொண்டு, 'கொங்கு தங்கு அலங்கல் மார்ப - வாசனைபொருந்திய மாலையைத் தரித்த மார்பையுடையவனே! நின்னுடை குரங்கு சேனை - உனது வாநரசேனைகள், வேவை ஓடி - தாகமமிகுந்து (அதனால்), வெம் கதம் ஒழிந்து - வெவ்விய வலிமை ஓய்ந்து, சால வருந்தின - மிகவும் வருத்தப்பட்டன; (ஆதலால்), இங்கு - இப்பொழுது [இவ்விடத்தில்], இதற்கு - இவ்வாநரசேனைக்கு, இறல் உமிழ் பிரசம் - கூட்டினின்று பெருகுகிற தேனை, அளித்தல் வேண்டும் - கொடுத்தருளவேண்டும்,' என்றார் - என்று வேண்டினார்கள்; (எ - று.)

கொங்கு - தேனுமாம். 'இதற்கு' என்றது, சாதியொருமை. வேண்டும் - ஒருவகைவியங்கோள்வினைமுற்று. (கச)

[அங்கதன் அநுமதிசெய்ய, வாநரர் மதுவனத்தை யழித்தல்.]

கரு. நன்றெனவவனுநேர்ந்தானரலையுநடுங்கவார்த்துச்
சென்றுறுபிரசந்தூங்குஞ்செழுவனமதனினூடே
யொன்றின்முன்னொன்றுபாயுமொடிக்குமென்பிரசமெல்லாந்
தின்றுதின்றுவகைகூருந்தேனுகாரியின்மொய்த்தே.

(இ - ள்.) அவனும் - அவ்வங்கதனும், நன்று என - 'நல்லது' என்று, நேர்ந்தான் - உடன்பட்டான்; (உடனே வாநரசேனை),—நரலையும் நடுங்க

ஆர்த்து - கடலும் அஞ்சும்படி ஆரவாரித்து, உறு பிரசம் தூங்கும் செழு வனம் அதனின் ஊடே - மிக்க தேனிறால் தொங்கியசையப்பெற்ற செழுமையான அந்த மதுவனத்தினுள்ளே, சென்று-போய், ஒன்றின்முன் ஒன்று - ஒருவாநரத்துக்குமுன்னே மற்றொருவாநரமாக, பாயும் - தாவும் ; ஒடிக்கும் - (கிளைகளை) முறிக்கும் ; தேன் நுகர் அளியின் மொய்த்து - தேனைக் குடிக்கிற வண்டுகள்போல நெருங்கி, மெல் பிரசம் எல்லாம் - இனிமையான தேன்முழுவதையும், தின்று தின்று - மிகுதியாகக்குடித்து, உவகை கூரும் - களிப்பு மிகும் ; (எ - று.)

உறு - உரிச்சொல். தின்று = பருகி ; உபசாரவழக்கு. (கரு)

[வாநரர் மதுபானஞ்செய்து களித்தல்.]

கசு. ஒருவர்வாய்க்கொள்ளுந்தேனையொருவருண்டெளிதிற்போவா
ரொருவர்கைக்கொள்ளுந்தேனையொருவர்கொண்டோடிப்போவா
ரொருவரோடொருவரொன்றத்தழுவுவர்விழுவரோடி
யொருவர்மேலொருவரேறிப்போகையென்றுவகைகூர்வார்,

(இ - ள்.) ஒருவர் வாய் கொள்ளும் தேனை - ஒருவாநரவீரர் (சிரமப்பட்டுக் கொணர்ந்து) வாயிற் கொண்டு உண்ணவிருக்கிற தேனை, ஒருவர் - மற்றொரு வாநரவீரர், எளிதில் உண்டு போவார் - (தாம் அதுகொணர்தற்கு ஒருசிரமமுங் கொள்ளாமலே) எளிதில்வாங்கிக் குடித்துப் போய்விடுவார் ; ஒருவர்—, கை கொள்ளும் - கையில் வைத்துக்கொண்டிருக்கிற, தேனை—, ஒருவர் - வேறொருவர், கொண்டு - பறித்துக்கொண்டு, ஓடி போவார்—; (மதுமயக்கத்தால்), ஒருவரோடு ஒருவர்—, ஒன்ற தழுவுவர் - இறுகஅணைத்துக்கொள்வார்; ஓடி விழுவர்—; ஒருவர்மேல் ஒருவர் ஏறி—, ஓகை என்று உவகை கூர்வார் - 'ஆனந்தம்!' என்று சொல்லி மகிழ்ச்சிமிகுவார் ; (எ - று.)

ஓகை - உவகை என்றதன் மரூஉ. 'ஓகையென்று' என்பதற்கு - நமக்கு மகிழ்ச்சிவருங்காலமிதுவென்று என உரைபபாருமுளர். (கசு)

[அச்சோலைக்காவலாளர் தமதுதலைவனான ததிமுகனென்னும் வாநரவீரனுக்குச் செய்திகூறல்.]

கஎ. இன்னணநிகழுங்காலையரிவிழித்தெழுந்துசீறி
யந்நெடுஞ்சோலைகாக்கும்வானரரவரைநோக்கி
மன்னெடுங்கதிரோன்மைந்தனாணையைமறுத்துநீயி
ரென்னினைந்தென்செய்தீர்மன்னும்முயிர்க்கிறுதியென்ன,

(இ - ள்.) இன்னணம் நிகழும் காலை - இவ்வாறு நடக்கும்பொழுது, அ நெடுஞ் சோலை காக்கும் வானரர் - அந்தப் பெரிய மதுவனத்தைக் காவல் செய்கின்ற வாநரர்கள், எரி விழித்து - நெருப்புப்பொறிபறக்கக் கண்களை விழித்து, சீறி - கோபித்து, எழுந்து—, அவரை நோக்கி - அவ்வாநரர்களைப்

பார்த்து, 'மன் நெடுங் கதிரோன் மைந்தன் ஆணையை மறுத்து - மிகுதியான நீண்டகிரணங்களையுடையவனாகிய சூரியனது குமாரனான சுக்கிரீவனது கட்டளையைக் கடந்து, நீயிர் - நீங்கள், என் நினைந்து என் செய்தீர் - என்ன நினைத்து என்னகாரியஞ்செய்தீர்கள்? உம் உயிர்க்கு இறுதி - உங்களுயிர்களுக்கு முடிவு (நேரும்),' என்ன - என்றும்,—(எ - று.)

இன்னணம் - இன்னவண்ணம் என்பதன் மரூஉ. ஆயிரங்கிரணமுடைமைபற்றி, 'மன்கதிரோன்' என்றார். 'நெடுங்கதிர்' என்றது - மிக்கதூரத்திலுஞ் சென்றுவிளங்குங் கிரணம் என்றபடி. மன்னும் உயிர்க்கு இறுதி என்றும் பிரித்து உரைக்கலாம்; நும்என்றும் பிரிக்கலாம். (கஎ)

கஅ. முனியுமாலெம்மையெங்கோனென்றவர்மொழிந்துபோந்து
கனியுமாமதுவனத்தைக்கட்டழித்திட்டதின்று
நனிதருகவியின்றானைநண்ணலார்செய்கைநாண
வினியெம்மாற்செயலின்றென்றாத்ததிமுகற்கியம்பினாரே.

(இ - ள்) 'எம் கோன் - எமது தலைவனாகிய ததிமுகன், எம்மை—,முனியும் - கோபிப்பான்,' என்று - என்றும், மொழிந்து - சொல்லி, அவர் - அவ்வனங்காப்பாளர், போந்து - போய், 'நனி தரு கவியின் தானை - மிகுதி பொருந்திய வானரசேனை, இன்று - இப்பொழுது. கனியும் மா மதுவனத்தை - செழிப்பான பெரிய மதுவனத்தை, கட்டு அழித்திட்டது - முழுவதும் அழித்துவிட்டது; இனி - இப்பொழுது, நண்ணலார் செய்கை நாண - அப்பகைவரது செய்கை ஒடுங்கும்படி, எம்மால் செயல் இன்று - எங்களாற் செய்யலாவதொன்றுமில்லை,' என்றே - என்று, ததிமுகற்கு - ததிமுகனுக்கு, இயம்பினார் - சொன்னார்கள்; (எ - று.)

இரண்டு மூன்றாமடிகளுக்கு - மிகுந்த குரங்குக்கூட்டம் பகைவர்களது செய்கையும் வெள்கும்படி [அதனினும் அதிகமாக] மதுவனத்தை நிலைகுலைத்தது என்றும் பொருள்கொள்ளலாம். நண்ணலார் - சேராதவர். ததிமுகன்- மதுவனத்துக்குக் காவற்காரர்களாகிய வானரர்கட்குத் தலைவன். (கஅ)

[மதுவனத்தை யழித்தவர் யாவர்? என்று ததிமுகனுக்குக் காவலாளர் கூறுதல்.]

ககூ. கேட்டவன்யாவரேயம்மதுவனங்கெடுசூழ்ந்தார்
காட்டிரென்றெழுந்தானன்னார்வாலிசேய்முதலகற்றோ
ரீட்டம்வந்திறுத்ததாகவங்கதனேவறன்னான்
மாட்டினகவியின்றானைமதுவளருலவையீட்டம்.

இதுமுதல் மூன்றுகவிகள் - குளகம்.

(இ - ள்.) அவன் - அத்ததிமுகன், கேட்டு - (அக்காவலாளர்வார்த்தையைக்) கேட்டு, 'அ மது வனம் கெடு சூழ்ந்தார் - அந்த மதுவனத்துக்கு

அழிவு செய்தவர்கள், யாவரோ - எவர்தாம்? காட்டிர் - காட்டுங்கள்,' என்று - என்றுசொல்லி, எழுந்தான்—; அன்னோர் - அக்காவல்வாநரர்,—'வாலி சேய் முதல - வாலிகுமாரனை அங்கதன் முதலிய, கற்றோர் - படித்த வாநரர்களது, ஈட்டம் - கூட்டம், வந்து இறுத்தது ஆக - அங்கு வந்து தங்கியதாக, (பின்பு), அங்கதன் ஏவல்தன்னால் - அங்கதனது கட்டளையினால், கவியின் தானை - குரங்குச்சேனைகள், மது வளர் உலவை ஈட்டம் - தேன்கூடுகள் மிக்க மரக்கிளைகளின் கூட்டத்தை, மாட்டின - ஒடித்தன'; (எ - று.)

அன்னோர் என்னலோடும் என மேற்கவியோடு இயையும். கேட்டவன் என்றுஎடுத்து, அதுகேட்டவனை ததிமுகனெனினுமாம். 'கற்றோர்' என்றது, அனுமன் முதலியோரை. மாட்டல் - மாளவித்தல். (கக)

[காவலாளர்சொற்கேட்ட ததிமுகன் சினந்துகூறுதல்.]

உ0. உரங்கிளர்மதுகையான்றனாணையாலுறுதிகொண்டே
குரங்கினந்தம்மையெல்லாம்விலக்கினங்கொடுமைகூறிக்
கரங்களாலெற்றநொந்தேங்காவலோவென்னலோடுந்
தரங்கிளர்தாதைபட்டதறிந்திலன்றனயன்போலும்.

(இ - ள்.) 'காவலோய் - காத்தற்றொழிலில் வல்லவனே! உரம் கிளர் மதுகையான்தன் ஆணையால் - வலிமை மிக்க வெற்றியையுடையவனான சுக்கிரீவனது கட்டளைப்படியே, உறுதி கொண்டு - உறுதியை மேற்கொண்டு, குரங்கு இனம்தம்மை எல்லாம் - அந்தக் குரங்குக்கூட்டங்களை யெல்லாம், விலக்கினம் - தடுத்தோம்; (அக்குரங்குகள்), கொடுமை கூறி - கொடிய வார்த்தைகளைச் சொல்லி, கரங்களால் எற்ற - (தமது) கைகளால் அடிக்க, நொந்தேம் - வருந்தினோம்,' என்னலோடும் - என்று சொன்ன வளவில்,— (ததிமுகன்),—'தரம் கிளர் தாதை பட்டது - வலிமை மிக்க தன் தந்தையாகிய வாலி இறந்ததை, தனயன் - அவனது மகனான அங்கதன், அறிந்திலன் போலும் - அறிந்தானில்லை போலும்', (எ - று.)—'என உரைத்து' என வருங்கவியோடு தொடரும்.

கொடுமை - கொடுஞ்சொல்லுக்குப் பண்பாகுபெயர். தரம் கிளர் - மலைபோல விளங்கிய என்றுமாம். மகாபலசாலியாகிய வாலி சுக்கிரீவனால் எளிதிலிறந்ததை அறிந்தும் இவ்வங்கதனது செருக்கு அடங்கவில்லையோ? என்றது, நான்காமடியின் கருத்து; வாலிக்கு உரியதாயிருந்த இம்மதுவனம் அவனிறந்தபின்பு சுக்கிரீவனதாய்விட்டதை அங்கதன் அறியான்போலும் என்றுங் கொள்க. (உ0)

[இரண்டுகோடிவாநரங்களுடன் ததிமுகன் மதுவனத்துக்கு வர, வாநரர்கள் அங்கதனடியில் விழுதல்.]

உக. எனவுரைத்தனலிற்பொங்கியெழுந்திரைததிரண்டுகோடி
கனைகழற்கவியின்சேனைகல்லெனக்கலந்துபுல்லப்
புனைமதுச்சோலைபுக்கான்மதுநகர்புனிதச்சேனை
யனகனைவாழ்த்தியோடியங்கதனடியின்வீழ்ந்த.

(இ - ள்.) என உரைத்து - என்றுசொல்லி, (ததிமுகன்), அனலின் பொங்கி எழுந்து - நெருப்புப்போலக் கொதித்தெழுந்து, இரைத்து - ஆரவாரித்து,—இரண்டு கோடி - இரண்டுகோடி யென்னுந் தொகையுள்ள, கனை கழல் கவியின் சேனை - ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த குரங்குகளின் கூட்டம், கல்லென கலந்து புல்ல - கல்லென்று ஒலித்துத் தன்னோடுகூடிவர, புனை மது சோலை புக்கான் - அழகிய மதுவனத்திற் பிரவேசித்தான்; (அவ்வளவில்),—மது நுகர் புனிதம் சேனை - தேனைப்பருகுகிற பரிசுத்தமான வானரசேனைகள், அனகனை வாழ்த்தி - குற்றமற்றவனான ஸ்ரீராமனை வாழ்த்திக்கொண்டு, ஓடி - விரைந்துசென்று, அங்கதன் அடியின் வீழ்ந்த - (இளவரசனான) அங்கதனது பாதங்களில் விழுந்தன; (எ - று.)

கோடி - நூறுலக்ஷம். கல்லெனல் - ஒலிக்குறிப்பு; சப்தாநுகரணம். அகம்- தோஷம்; அஃது இல்லாதவன் - அநகன்; வடசொல். (உக)

[ததிமுகன் அங்கதனைநோக்கிக் கூறுதல்.]

உஉ. இந்திரன்வாலிக்கீந்தவின்சுவைமதுவின்கான
மந்தரத்தவர்க்குநோக்கற்கரியவென்னாணைதன்னைச்
சிந்தினைகதிரோன்மைந்தன்றிறலினையறிதியன்றே
மந்தரமனையதோளாயிற்றதுன்வாழ்க்கையின்றே.

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

(இ - ள்.) 'மந்தரம் அனைய தோளாய் - மந்தரமலையையொத்த தோள்களையுடையவனான அங்கதனே! இந்திரன் வாலிக்கு ஈந்த - தேவேந்திரன் (தன் மகனான) வாலிக்குக் கொடுத்த, இன் சுவை மதுவின் கானம் - இனிய உருசியுள்ள மதுவை யுடைய இவ்வனம், அந்தரத்தவர்க்கும் நோக்கற்கு அரிய - ஆகாயத்திற் சஞ்சரிக்கின்றவர்களான தேவர்கட்கும் பார்ப்பதற்கும் அரியதாம்படி செய்துவந்த, என் ஆணைதன்னை - எனதுகட்டளையை, சிந்தினை - அழித்தாய்; கதிரோன் மைந்தன் திறலினை அறிதி அன்றே - சூரிய குமாரனான சுக்கிரீவனது வலிமையை அறிவையன்றோ? உன் வாழ்க்கை - உனது உயிர்வாழ்வு, இன்றே - இன்றைக்கே, இற்றது - முடிந்ததாகும்;' (எ - று.)

மந்தரம் பாற்கடலைக் கலக்குதல் போலத் தோள் போர்க்கடலைக் கலக்குதலால் உவமை. இற்றது - துணிவுபற்றிய காலவழுவமைதி. 'நோக்கற்கரியதென்' என்ற பாடத்துக்கு—'அரியது' - முற்று. (உஉ)

[ததிமுகனும் அங்கதனும் போருதல்.]

உங. மதுவனந்தன்னையின்னேமாட்டுவித்தனைநீயென்னாக்
கதுமெனவாலிசேய்மேலெறிந்தனன்கருங்கற்பாறை
யதுதனைப்புறங்கையாலேயகற்றியங்கதனுஞ்சீறித்
ததிமுகன்றன்னைப்பற்றிக்குத்தினன்றடக்கைதன்னால்.

(இ - ள்.) நீ—, மது வனந்தன்னை - மதுவனத்தை, இன்னே - 'இவ்வாறாக, மாட்டுவித்தனை - அழிப்பித்தாய்', என்று-என்றுசொல்லி, (ததிமுகன்), வாலி சேய்மேல் - அங்கதன்மேலே, கருங்கல் பாறை - கருங்கற்பாறையொன்றை, கதும் என - விரைவாக, எறிந்தனன் - எடுத்துவீசினான்; அங்கதனும்—, அதுதனை - அப்பாறையை, புறங்கையாலே அகற்றி - (தனது) பின்னங்கையால் தள்ளிவிட்டு, சீறி - கோபித்து, ததிமுகன்தன்னை பற்றி - ததிமுகனைப் பிடித்து, தட கைதன்னால் குத்தினன் - பெரிய கையினாற் குத்தினான்; (எ - று.)

கதுமென - விரைவுக்குறிப்பு. கைப்புறம் - புறங்கை என இலக்கணப் போலி. 'அங்கவன்' என்றும் பாடம். இன்னே - இன்றே யெனினுமாம். ()

[அங்கதன் ததிமுகனை அடித்துத்துரத்தி மற்றையோரைக் குத்தச் சொல்லுதல்.]

உ௪. வாய்வழிகுருதிசோரமணிக்கையான்மலங்கமோதிப்
போய்மொழிகதிரோன்மைந்தற்கென்றவன்றன்னைப்போக்கித்
தீயெழும்வெகுளிபொங்கமற்றவன்சேனைதன்னைக்
காய்கனல்பொழியுங்கையாற்குத்துதிர்கட்டியென்றான்.

(இ - ள்.) (மற்றும் அங்கதன்),—வாய் வழி குருதி சோர - (ததிமுகனது) வாயின் வழியாக இரத்தம் வழிய, மலங்க - (அவன்) வருந்துமாறு, மணி கையால் மோதி - (தனது) அழகிய கையினால் தாக்கி, 'கதிரோன் மைந்தற்கு - சூரியன்மகனான சுக்கிரீவனுக்கு, போய் மொழி - (நீ) போய்ச் சொல்லு,' என்று - என்றுசொல்லி, அவன்தன்னை போக்கி - அத்ததிமுகனைத் துரத்திவிட்டு,—தீ எழும் வெகுளி பொங்க - நெருப்புப் பறக்கும்படியான [உக்கிரமான] கோபம் மிக, அவன் சேனைதன்னை - அத்ததிமுகனது வாநர சேனையை, காய் கனல் பொழியும் கையால் - சுடுகின்றநெருப்புச் சொரிகிற [உக்கிரமான] கைகளினால், கட்டி - பிணித்து, குத்துதிர் - குத்துங்கள், என்றான் - என்று (தனது சேனைவாநரர்களைநோக்கிச்) சொன்னான்; (எ - று.)

மற்று - அசை; பின்பு எனினுமாம். 'போய்மொழி கதிரோன்மைந்தற்கு' என்றது, களிப்புத் தலைக்கேறியதனால். (உ௪)

[மற்றவாநரர்களையும் அடித்துத்துரத்துதல்.]

உ௫. பிடித்தனர்கொடிகடம்மாற்பிணித்தனர்பின்னுமுன்னு
மிடித்தனரசனியஞ்சவெறுழ்வலிக்கரங்களோச்சித்
துடித்தனருடலஞ்சோர்ந்தார்சொல்லும்போய்நீருமென்னாப்
படித்தனன்வாலிமைந்தன்பயத்துடனவரும்போனார்.

(இ - ள்.) (அங்கதன்சேனைவாநரர் ததிமுகன்சேனைவாநரரை), பிடித்தனர் - பிடித்து, கொடிகள் தம்மால் பிணித்தனர் - கொடிகளாற் கட்டி,

'ஏறழ் வலி கரங்கள் ஓச்சி - மிகவலியகைகளை உயரவெடுத்து, அசனி அஞ்ச - இடியும் அஞ்சும்படி, பின்னும் முன்னும் - பின்பக்கத்திலும் முன்பக்கத்திலும், இடித்தனர் - இடித்தார்கள்; (அவ்விடிபொறுக்கமாட்டாமல் அவர்கள்), உடலம் துடித்தனர் சோர்ந்தார் - உடம்பு துடித்துக் களைத்தார்கள்; (அப்பொழுது), வாலி மைந்தன் - அங்கதன், நீரும் போய் சொல்லும் என்ற - நீங்களும் போய்ச் (சுக்கிரீவனிடஞ்) சொல்லுங்கள்' என்று, படித்தனன் - சொன்னான்; அவரும் - அவ்வாநரர்களும், பயத்துடன் - அச்சத்தோடு, போனார் - (சுக்கிரீவனிடஞ்) சென்றார்கள்; (எ - று.)

ஏறழ் வலி - ஒருபொருட்பன்மொழி. ஏறழ் - வலிமையுணர்த்தும் உரிச்சொல்; "எறழ் வலியாகும்" என்பது, தொல்காப்பியம். இனி, ஏறழ் - தூண்போன்ற, கரங்களென்றுமாம். உடலம், அம் - சாரியை. (உரு)

[வாநரர்கள் மதுவனத்தில் இனிதிருத்தல்.]

உசா. அலைபுனல்குடையுமாபோன்மதுக்குடைந்தாடித்தத்தந்
தலைவர்கட்கினியதேனுங்கனிகளும்பிறவுந்தந்தே
யுலைவுறுவருத்தந்தீர்ந்திட்டுபவனத்திருந்தாரப்பால்
சிலைவளைத்துலவுந்தேரோன்றெறும்வெயிறணிவுபார்த்தே.

(இ - ள்.) (அங்கதன்சேனைவாநரர்), அலை புனல் குடையும் ஆ போல் - அலைகின்ற நீரில் முழுகி விளையாடும் விதம்போல, மது குடைந்து ஆடி - மதுபானத்திலே முழுகி விளையாடி, தத்தம் தலைவர்கட்கு - தங்கள் தங்கள் தலைவர்களாகிய வாநரர்களுக்கு, இனிய - இனிமையான, தேனும் - தேனையும், கனிகளும் - பழங்களையும், பிறவும் - மற்றவற்றையும், தந்து - கொணர்ந்து கொடுத்து, உலைவுறு வருத்தம் தீர்ந்திட்டு - இளைப்பையடைந்த துன்பம் நீங்கி,—அப்பால் - பின்பு,—சிலை வளைத்து உலவும் தேரோன் - மகாமேருகிரியைச் சூழ்ந்து சஞ்சரிக்கிற தேரையுடையவனான சூரியனது, தெறும் வெயில் - சுடுகின்ற வெயில், தணிவு - குறையுஞ்சமயத்தை, பார்த்து - எதிர்பார்த்துக்கொண்டு, உபவனத்து இருந்தார் - அப்பூஞ்சோலையிலே இருந்தார்கள்; (எ - று.)

அலை புனல் - வினைத்தொகை; அலைகளையுடைய புனல் என்னும் பொருளில் 'அலைப்புனல்' என வலிமிகும். ஆ - ஆறு என்பதன் விகாரம். பிற - காய் கிழங்கு முதலியன. வெயில் - வெம்மையுடையது. தணிவு - தாழ்தல்.

[கவிக்கூற்று: 'இனி இராமன்செய்தி சொல்வோம்' என்றல்.]

உஎ. முத்தலை யெஃகி னாற்கு முடிப்பருங் கரும முற்றி
வித்தகன் றாது மீண்ட திறுதியாய் விளைந்த தன்மை
யத்தலை யறிந்த வெல்லா மறைந்தன மாழி யான்மாட்
டித்தலை நிகழ்ந்த வெல்லா மியம்புவா னெடுத்துக் கொண்டாம்.

*உஅ

(இ - ள்.) வித்தகன்-ஞானஸ்வரூபியாகிய ஸ்ரீராமனது, தூது - தூதனாகிய அனுமான், மு தலை எஃகினுற்கும் முடிப்பு அருங் கருமம் முற்றி-மூன்று தலைகளையுடைய சூலாயுதத்தை யுடையவனான உருத்திரனுக்குஞ் செய்து நிறைவேற்றுதற்கு அருமையான தொழிலைச் செய்து முடித்து, மீண்டது இறுதிஆய் - திரும்பிவந்தது முடிவாக, அ தலை - அவ்விடத்தில் [தெற்குத் திக்கில்], விளைந்த தன்மை - நடந்தசெய்தியை, அறிந்த எல்லாம் - தெரிந்த வரையிலும், அறைந்தனம் - (கீழ்ச்) சொன்னோம்; (இனி), இ தலை - இவ்விடத்தில் [கிஷ்கிந்தையருகில்], ஆழியான்மாட்டு - ஸ்ரீராமனிடத்தில், நிகழ்ந்த எல்லாம் - நடந்தவற்றையெல்லாம், இயம்புவான் - சொல்வதற்கு, எடுத்து கொண்டாம் - தொடங்கினோம்; (எ - று.)

'முத்தலை யெஃகினுற்கும் முடிப்பருங்கருமம்' - இலங்கையை எரியூட்டுதல். ஆழியான் - சக்கராயுதமுடையவன்; கடலிற் பள்ளிகொள்பவன்; கடல் போலுங் கரியதிருநிறமுடையவன்; ஆஜ்ஞாசக்கரமுடையான். (உஎ)

வேறு.

[சீதையைத்தேடுமாறு வானரர்களை யனுப்பிய சுக்கிரீவன் இராமனுக்குத் தேறுதல் கூறிக்கொண்டிருந்தல்]

உஅ. சேற்றிள மரைமலர்த் திருவைத் தேர்கெனக்
காற்றின்மா மகன்முதற் கவியின் சேனையை
நாற்றிசை மருங்கினு மேவி நாயகற்
றேற்றின னிருந்தனன் கதிரின் செம்மலே.

(இ - ள்.) கதிரின் செம்மல் - சூரியனது குமாரனாகிய சுக்கிரீவன்,— 'சேறு இள மரை மலர் திருவை - சேற்றில்தோன்றிய இளமையான செந்தாமரைமலரில் வீற்றிருக்கிற திருமகளை [சீதையை], தேர்க - தேடுவீராக', என - என்று, காற்றின் மா மகன் முதல் கவியின் சேனையை - வாயுவினது சிறந்த குமாரனான அநுமான் முதலிய குரங்குச் சேனையை, நால்திசை மருங்கினும் - நான்கு திக்குக்களினிடங்களிலும், ஏவி - அனுப்பிவிட்டு,— நாயகன் - (யாவர்க்குந்) தலைவனான ஸ்ரீராமனை, தேற்றினன் இருந்தனன் - தேற்றிக்கொண்டிருந்தான்; (எ - று.)

கிட்கிந்தாகாண்டத்து நாடவிட்டபடலத்தின் தொடர்ச்சியாக, இராமபிரான்பக்கல் நிகழ்ந்த செய்தியைக் கூறுகின்றார். அதற்கு அடுத்ததான பிலநீங்குபடலம் முதலாக இதுவரையிலும், சீதையைநாடித் தென்திசைப்பக்கஞ் சென்ற அநுமான் முதலியோரது செய்தியைக் கூறிப்போந்தார். தாமரை பங்கஜமாதலால், 'சேற்றிளமரை' எனப்பட்டது. திருமால் இராமனாகத் திருவவதரித்தபோது திருமகள் சீதையாகத் திருவவதரித்தன ளென்று இதிகாசபுராணங்கள் கூறுதலால், சீதையை 'மரைமலர்த்திரு' என்றார். மரை

மலர் - முதற்குறை விகாரம். தேற்றுதல் - துயரந்தீர்ந்து தெளியச்செய்தல். செம்மல்-ஆண்பாற்சிறப்புப்பெயர். 'கவியின்செம்மல்' என்னும்பாடத்துக்கு-குரங்குகளுக்கு அரசனென்று பொருள்.

இதுமுதல் முப்பத்தொரு கவிகள் - பாசப்படலத்தின் முதற்கவி போன்ற கலிவிருத்தங்கள். (உஅ)

[இராமன் சீதையைப்பிரிந்த சோகத்தால் மூர்ச்சித்துந்தோறும் சுக்கிரீவன் வார்த்தையால் தேறுதல்.]

உகூ. கார்வரையிருந்தனன்கதிரின்காதலன்
சீரியசொற்களிற்றெருட்டச்செங்கணு
னாருயிராயிரமுடையனுமெனச்
சோர்தொறுஞ்சோர்தொறுமுயிர்த்துத்தோன்றினான்.

(இ - ள்.) கதிரின் காதலன் - சூரியகுமாரனான சுக்கிரீவன், கார் வரை இருந்தனன் - கரிய பிரஸ்ரவணமலையிலே யிருந்துகொண்டு, சீரிய சொற்களின் - நல்வார்த்தைகளினால், தெருட்ட-தேற்ற, (அதனால்),—செங்கணான்-சிவந்த திருக்கண்களை யுடையவனான ஸ்ரீராமன், ஆர் உயிர் ஆயிரம் உடையன் ஆம் என - அருமையான உயிர்கள் பலவற்றை யுடையவனென்னும்படி, சோர்தொறும் சோர்தொறும் உயிர்த்து தோன்றினான் - மயங்கிமூர்ச்சிக்கும் பொழுதெல்லாம் மீண்டும்உயிர்பெற்று எழுந்தான்; (எ - று.)

கார் வரை - பெரிய மலை யென்றுமாம்; (உயர்ச்சியால்) மேகந்தங்கும் மலை யெனினுமாம். சீரிய - நன்மையையுடைய. தெருட்ட உயிர்த்துத்தோன்றினானென இயையும். செங்கணான் - புண்டரீகாக்ஷன். பலமுறை மூர்ச்சித்து உயிர்சோர்ந்து சுக்கிரீவனது இன்சொல்லால் உயிர்த்து எழுதல்பற்றி, 'ஆருயிராயிரமுடையனுமென உயிர்த்துத்தோன்றினான்' என்றார். தன்மைத் தற்குறிப்பேற்றவணி. இங்கு 'ஆயிரம்' என்றது, பல வென்றபடி. (உகூ)

[மற்றைத்திசைகளிற் சென்றவர்கள் சீதையைக்காணாது மீண்டபின்பும் அநுமானிடத்து நம்பிக்கையால் இராமன் ஜீவித்திருத்தல்.]

௩0. தண்டலின்னெடுந்திசைமூன்றுந்தாயினர்
கண்டிலர்மடந்தையையென்னுங்கட்டுரை
யுண்டுயிரகத்தெனவொறுக்கவும்முளன்
றிண்டிறலனுமனைநினையுஞ்சிந்தையான்.

(இ - ள்.) தண்டல் இல் - தடையில்லாமல், நெடுந் திசை மூன்றும் - பெரிய (வடக்கு கிழக்கு மேற்கு என்னும்) மூன்றுதிக்குக்களிலும், தாயினர்- (சீதையைத்தேடுதற்குத்) தாவிச்சென்ற வாநரர்கள், மடந்தையை - அப்பிராட்டியை, கண்டிலர் - கண்டாரில்லை, என்னும் - என்கிற, கட்டு உரை- உறுதியானவார்த்தை, ஒறுக்கவும் - (தன்னை) வருத்தவும்,—(ஸ்ரீராமன்),—

'திண் திறல் அனுமனை நினையும் சிந்தையான் - மிக்க வலிமையையுடைய அநுமானை எண்ணுகிற மனத்தையுடையனாய் [அநுமான் பிராட்டியைக் கண்டு வருதல்கூடு மென்று எண்ணி], அகத்து உயிர் உண்டு என உளன் - உயிர் உடம்பினுள் உள்ளதென்னும்படி உள்ளவனானான் [பிழைத்திருந்தான் என்றபடி]; (எ - று.)

வினைப்பகுதிகள் சிலவிடங்களில் வினையெச்சப்பொருள்பட்டு நிற்றல்போல, 'இல்' என்ற பண்புப்பகுதி இந்த வினையெச்சப்பொருள் பட்டு நின்றது. இனி, 'இல்' என்பதைத் திசைக்கு அடைமொழியாக்கி, முட்டுப்படாமல் நீண்டுசெல்கிற திக்குக்க ளென்றுங் கொள்ளலாம். 'உண்டுயிரகத்தென ஒறுக்கவும்' என்பதற்கு - உயிர் உள்ளே உண்டோ என்று ஐயப்படும்படி வருத்தவும் என்றும், உடம்பினுள்ளேயுள்ள உயிரை உண்டாற்போல வருத்தவும் என்றும் பொருளுரைக்கலாம். (௬0)

[ஞாநாள் இராமன் சுக்கிரீவனை நோக்கிச் சிலகூறுதல்.]

௬௧. ஆரியனருந்துயர்க்கடலினாழ்பவன்
சீரியதன்றுநஞ்செய்கைதீர்வரும்
பூரியவெம்பழிபொடித்ததாமெனாச்
சூரியன்சிறுவனைநோக்கிச்சொல்லினான்.

(இ - ள்.) ஆரியன் - ஸ்ரீராமன்,—அருந் துயர் கடலின் ஆழ்பவன் - (பொறுப்பதற்கு) அரிய துன்பமாகிய கடலில் முழுகுபவனாய்,—சூரியன் சிறுவனை நோக்கி - சுக்கிரீவனைப்பார்த்து,—'நம் செய்கை - நமது முயற்சி, சீரியது அன்று - பயன்பட்டதன்று; தீர்வு அரு - நீங்குதலில்லாத, பூரிய-இழிவையுடைய, வெம் - கொடிய, பழி-(சீதையைத்தேடிக் கண்டாரில்லை யென்னும்) நிந்தனை, பொடித்தது ஆம் - உண்டானதாகும்,' எனா-என்றுசொல்லி, சொல்லினான் - மற்றும் சொல்பவனானான்; (எ - று.)—அவற்றை, அடுத்த நான்குகவிகளிற் காண்க.

இச்செய்யுளின் இடையிரண்டடி-தொகுத்துச்சுட்டல்; அடுத்த நான்கு கவிகள் - வகுத்துக்காட்டல். சீரியது அன்று நம் செய்கை - நாம் இங்ஙனம் வாளாவிருப்பது தகுதியுடையதன்று என்றுமாம். இனி, 'நம்' என்பதைத் தனித்தன்மைப்பன்மை யெனக் கொண்டு, இராமன் அருந்துயர்க் கடலின்ஆழ்பவனாய் 'எனதுசெய்கை [இனி யான் இங்ஙனம் வாளாவிருப்பது] தக்கதன்று, நீங்குதற்கு அரிய இழிவான கொடிய பழிப்பு அமைந்ததாம்' என்று எண்ணிச் சுக்கிரீவனைநோக்கிச் சொல்லலானான் எனப் பொருள் கூறலுமாம். ஆர்யன் - வடசொல்; நல்ல அறிவொழுக்கங்களையுடையான். பூரிய - பூரிஎன்ற பகுதியின்மேற்பிறந்த குறிப்புப்பெயரெச்சம்; பூரி - குற்றம், கீழ்மை. இனி, பூரிய - மிகுதியான எனினுமாம்; இப்பொருளில், பூரி - மிகுதி: வடசொல். (௬௧)

[இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்; இராமன்வார்த்தை.]

௩உ. குறித்தநாளிகந்தனகுன்றத்தென்றிசை
வெறிக்கருங்குழலியைநாடன்மேயினார்
மறித்திவண்வந்திலர்மாண்டுளார்கொலோ
பிறித்தவர்க்குற்றுளதென்னைபெற்றியோ.

(இ - ள்.) குறித்த நாள் - (நாம் முன்னே) தவணையிட்டு அனுப்பிய நாள்களெல்லாம், இகந்தன - கழிந்துபோயின ; குன்றம் தென் திசை-இம்மலையின் தென்திசையைநோக்கி, வெறி கருங் குழலியை நாடல் மேயினார் - நறுமணமுள்ள கருநிறமான கூந்தலையுடையவளாகிய சீதையைத் தேடச் சென்றவர்கள், மறித்து இவண் வந்திலர் - மீளவும் இவ்விடத்து வந்தார்களில்லை ; மாண்டு உளார்கொலோ - இறந்துபோயினார்களோ ? அவர்க்கு - அவர்கட்கு, பிறிது உற்றுளது - வேறே நேர்ந்துள்ளது, என்னை பெற்றியோ - என்ன தன்மையோ ? (எ - று.)

பிறிது அவர்க்கு - பிறித்தவர்க்கு. இனி, குன்ற என வினையெச்சமாக எடுத்து - குறித்தநாள்கள் கழிந்தனவாய்க் குறைய என்றும், 'பிறித்தவர்' என்றதை 'பிறிந்தவர்' என்பதன் வலித்தலெனக் கொண்டு- நம்மினின்று பிரிந்துசென்ற அவர்கட்கு உற்றது என்றும் உரைகூறலாம். 'பெற்றியோய்' என்ற பாடத்துக்கு - பெருமையையுடையவனே யென விளியாம். (௩உ)

௩௩. மாண்டனளவளிவண்மாண்டவார்த்தையை
மீண்டவர்க்குரைத்தலின்விளிதனன்றெனப்
பூண்டதோர்துயர்கொடுபொன்றினார்கொலோ
தேண்டினரின்னமுந்திரிகின்றார்கொலோ.

(இ - ள்.) அவள் - சீதை, மாண்டனள் - இறந்தாள் ; மாண்ட வார்த்தையை - (இவள்) இறந்தசெய்தியை, இவண் மீண்டு அவர்க்கு உரைத்தலின் - இங்குமீண்டுவந்து அவர்கட்கு [ராம லக்ஷ்மண சுக்கிரீவர்களுக்கு]ச் சொல்லுதலினும், விளிதல் - (நாம்) இறந்துபோதலே, நன்று-நல்லது, என - என்று எண்ணி, பூண்டது ஓர் துயர்கொடு பொன்றினார்கொலோ - மேற்கொண்டதொரு துன்பத்தினால் (அநுமன் முதலானவர்கள்) இறந்துபோனார்களோ ? (அன்றி), இன்னமும்—, தேண்டினர் திரிகின்றார்கொலோ - தேடியலைகின்றார்களோ ? (எ - று.)

வார்த்தா என்ற வடசொல்லுக்கு - செய்தியென்ற பொருளும் உண்டு. கொடு - கொண்டு : தொகுத்தல். தேண்டினர் - எதுகைநோக்கிய விரித்தல் விகாரம். (௩௩)

௩௪. கண்டனரரக்கரைக்கறுவுகைம்மிக
மண்டமர்தொடங்கினார்வஞ்சர்மாயையால்
விண்டலமதனின்மேயினர்கொல்வேறிலாத்
தண்டலினெடுஞ்சிறைத்தளைப்பட்டார்கொலோ.

(இ - ள்.) அரக்கரை - இராக்கதர்களை, கண்டனர் - பார்த்து, கறுவு கைம்மிக - கோபம் அதிகரித்தலால், மண்டு அமர் தொடங்கினர் - மிகுதியான போரைச் செய்யத்தொடங்கி, வஞ்சர் மாயையால் - வஞ்சகர்களான அவ்விராக்கதர்கள்செய்த மாயையினால், விண்தலம் அதனில் மேயினர்கொல் - (இறந்து) வீரசுவர்க்கத்திற் சேர்ந்தார்களோ? வேறு இலா - வேறேதப்பும் வழி யொன்றுமில்லாமல், தண்டல் இல் நெடுஞ் சிறை - (எக்காலத்திலும்) நீங்குதலில்லாத பெரிய சிறையில், தளைப்பட்டார்கொலோ - கட்டுப்பட்டார்களோ? (எ - று.)

கறுவு - முதனிலைத்தொழிற்பெயர். கைம்மிக என்பதில், கை - தமிழுபசர்க்கம். வேறுஇலா என்பதற்கு - தம்முள்வேறுபடாமல் [ஒருங்கே] என்று உரைப்பாரு முளர். (௱௪)

௱௫. கூறினநாளவரிருக்கைகூடல
மேறலஞ்சுதுமெனவின்பதுன்பங்க
ளாறினரருந்தவமயர்கின்றார்கொலோ
வேறவர்க்குற்றதென்விளம்புவாயென்றான்.

(இ - ள்.) 'கூறின நாள் - தவணைசொன்ன நாள்கட்குள்ளே, அவர் இருக்கை - இராமன்முதலியோரிருப்பிடத்தை, கூடலம் - சேர்ந்தோமில்லை: ஏறல் அஞ்சுதும் - (இனி அங்குப்) போவதற்குப் பயப்படுவோம்,' என - என்று எண்ணி, இன்ப துன்பங்கள் ஆறினர் - இன்பமுந் துன்பமுந் தணிந்தவர்களாய், அருந் தவம் அயர்கின்றார்கொலோ - அருமையான தவத்தைச் செய்கின்றார்களோ? அவர்க்கு - அவர்கட்கு, வேறு உற்றது என் - வேறே நேர்ந்தது யாதோ? விளம்புவாய் - சொல்வாய், என்றான் - என்று (ஸ்ரீராமன் சுக்கிரீவனைநோக்கிச்) சொன்னான்; (எ - று.)

கூடலம் - தன்மைப்பன்மை யெதிர்மறைத் தெரிநிலை முற்று. 'இன்ப துன்பங்கள் ஆறினர்' என்பதற்கு - இன்பத்தையுந் துன்பத்தையுஞ் சமமாகப்பாவித்து என்று கருத்து. இருக்கை - தொழிலாகுபெயர். (௱௫)

[இங்ஙனம் பேசிக்கொண்டிருக்குஞ் சமயத்தில் ததிமுகன் வருதல்.]

௱௬. என்றுரைத்திடருழந்திருக்குமெல்லையில்
வன்றிறற்றதிமுகன்வானரேசன்முன்
றன்றலைப்பொழிதருகுருதிதன்னொடுங்
குன்றெனப்பணிந்தனனிருகைகூப்பியே.

(இ - ள்.) என்று உரைத்து - என்று சொல்லி, இடர் உழந்து இருக்கும் எல்லையில் - (ஸ்ரீராமன்) வருத்தப்பட்டுக்கொண்டிருக்குஞ் சமயத்தில்,— வல் திறல் ததிமுகன் - கொடிய வலிமையையுடைய ததிமுகன், வானரேசன் முன் - குரங்குகட்குத் தலைவனான சுக்கிரீவனது எதிரில், தன் தலை பொழி

வரு குருதிதன்னொடும் - தனது தலையினின்று சொரிகிற இரத்தத்துடனே, (சென்று), இரு கை கூப்பி - இரண்டுகைகளையுங் கூப்பிக்கொண்டு, குன்று என பணிந்தனன் - மலைபோல விழுந்து நமஸ்கரித்தான் ; (எ - று.)

'வானரேசர்முன்' என்ற பாடத்துக்கு - தன்னுடன் வருகிற இரண்டு கோடி வானரவீரர்களின் முன் (சென்று) என்று பொருளுரைத்து, 'சுக்கிரீவனை' என்னுஞ் செயப்படுபொருள் வருவிக்க. முதலடி - முற்றுமோனை.

['மதுவனம் அழிந்தது' என்று ததிமுகன் கூற, சுக்கிரீவன் 'அதனையழித்தவர் யார்' என்றல்.]

௩எ. எழுந்துநின்றையகேளின்றுநாளையோ
டழிந்ததுமதுவனமடையவென்றலும்
வழிந்திடுகுருதியின்வதனநோக்கியே
மொழிந்திடங்கியாரதுமுடித்துளோரென.

இதுமுதல் நான்குகவிகள் - குளகம்.

(இ - ள்.) எழுந்து நின்று—, (சுக்கிரீவனைநோக்கி), 'ஐய - தலைவனே! கேள்—: இன்று நாளையோடு - இன்றைத்தினத்துடனே, மதுவனம் அடைய - மதுவனம் முழுவதும், அழிந்தது - அழிந்துபோயிற்று,' என்றலும் - என்று (ததிமுகன்) சொன்னவளவில்,—(சுக்கிரீவன்), வழிந்திடு குருதியின் வதனம் நோக்கி - வழிகின்ற இரத்தத்தையுடைய (ததிமுகனது) முகத்தைப் பார்த்து, 'அங்கு - அவ்விடத்தில், அது - (மதுவனத்தையழித்தலாகிய) அச்செயலை, முடித்துளோர் - செய்துமுடித்தவர், யார் - யாவர்? மொழிந்திடு - சொல்வாயாக?' என - என்று வினவ,—(எ - று.)

இன்றுநாள் - இன்றாகியநாள்என இருபெயரொட்டுப்பண் புத்தொகை. வதநம் - வடசொல். (௩எ)

[இதுமுதல் மூன்றுகவிகள் - ததிமுகன்வார்த்தை.]

௩அ. நீலனுங்குமுதனுநெடியகுன்றமே
போலுயர்சாம்பனும்புணரிபோர்த்தென
மேலெழுசேனையும்விரைவின்வந்துறாச்
சால்புடைமதுவனந்தனையழிப்பவே.

(இ - ள்.) நீலனும்—, குமுதனும்—, நெடிய குன்றமே போல் உயர் - பெரிய மலைபோல உயர்ந்த, சாம்பனும் - ஜாம்பவானும், புணரி போர்த்தென மேல் எழு சேனையும் - (கடல் பொங்கியெழுந்து உலகத்தை) மூடினாற் போல மேலெழுந்துவருகிற வாநரசேனையும், விரைவின் வந்து உறா - விரைந்து வந்துசேர்ந்து, சால்பு உடை மதுவனந்தனை அழிப்ப - சிறப்பையுடைய மதுவனத்தை அழிக்க,—(எ - று.)

வந்துறா - இறந்தகாலவினையெச்சம். நீலன் - வாநரப்படைத்தலைவரில் ஒருவன்; நீலநிறமுடையான்: அக்கினியம்சமானவன். குமுதன் - ஆம்பல்

போன்ற நிறமுடையவன்; இவனும், வாநரப்படைத்தலைவரில் ஒருவன். சாம்பன் - வடசொல்திரிபு. சால் புடை என்று பிரித்தால், பெரிய இடத்தையுடைய என்று பொருளாம். (௩௮)

௩௯. தகைந்தவச்சேனையைத்தள்ளிநின்னையு
இகழ்ந்துரைத்திசைந்தனன்வாலிசேயெமக்
குகந்தனபுகன்றவவ்வுரைபொறாமையே
புகைந்தொருபாறையின்புணர்ப்புநீக்கியே.

(இ - ள்.) தகைந்த - (அழிக்கவேண்டாவென்று) தடுத்த, அ சேனையை - அம்மதுவனத்துக்குக் காவலான (நமது) சேனையை, வாலி சேய் - அங்கதன், தள்ளி - அடித்துத் துரத்தி, நின்னையும் இகழ்ந்து உரைத்து-உன்னையும் இகழ்ச்சியாகப் பேசி, இயைந்தனன் - (அவ்வனத்தை நீலன் முதலியோர் அழித்தற்கு) உடன்பட்டிருந்தான்; எமக்கு உகந்தன புகன்ற - (அவன் அங்ஙனம்) எங்களைநோக்கித் தன்மனம் விரும்பியபடி பேசிய, அ உரை - அந்தவார்த்தைகளை, பொறாமையே - (யான்) பொறுக்காமல், புகைந்து - கோபித்து, ஒரு பாறையின் புணர்ப்பு நீக்கி - ஒரு கருங்கற்பாறையின் தொடர்ச்சியை நீங்கச் செய்து [ஒரு பெரும்பாறையை அது இருந்த இடத்தினின்று பெயர்த்து எடுத்து],—(எ - று.)—'இமைத்தன்முன் எறிதர' என அடுத்தகவியோடு தொடரும்.

பொறாமை-'மை'விகுதிபெற்றுவந்த எதிர்மறை வினையெச்சம். புணர்ப்பு-நிலத்தின் கூட்டுறவு. 'உரைத்தியைந்தனன்' என்றவிடத்து 'உரைத்திருந்தனன்' என்றும் பாடமுண்டு. 'உகந்தில புகன்ற' என்ற பாடம், வெறுக்கத்தக்கவையாய்ச் சொன்ன என்று பொருள்படும். (௩௯)

௪௦. இமைத்தன்முன்வாலிசேயெழில்கொள்யாக்கையைச்
சமைத்தியென்றெறிதரப்புறங்கையாற்றகைத்
தமைதருகனலெனவழன்றெற்பற்றியே
குமைத்துயிர்பதைப்பநீகூறுபோயென்றான்.

(இ - ள்.) 'இமைத்தல் முன் - ஒருமாத்திரைப்பொழுதினுள்ளே, வாலி சேய் - அங்கதனது, எழில் கொள் யாக்கையை - வளர்ச்சிகொண்ட உடம்பை, சமைத்தி - அழிப்பாயாக,' என்று - என்று சொல்லி, எறிதர - (அப்பாறையை அவன்மேலே) எறிய, (அவ்வங்கதன்), புறங்கையால் தகைத்து - புறங்கையாலே (அதனைத்) தள்ளிவிட்டு, அமைதரு கனல் என - மூங்கிலில் தோன்றிய நெருப்புப் போல, அழன்று - கொதிப்புக்கொண்டு, என் பற்றி - என்னைப் பிடித்து, உயிர் பதைப்ப - உயிர் துடிக்கும்படி, குமைத்து - குத்திக் குமைத்து, நீ போய் கூறு என்றான்-'நீ (சுக்கிரீவனிடம்) போய்ச்சொல்' என்றுசொன்னான்; (எ - று).
—என்று ததிமுகன் சுக்கிரீவனிடஞ்சொன்னான் என வருவித்து முடிக்க.

இமைத்தல்முன் - கண்மூடித்திறப்பதற்குள். எழில் - எழுச்சி; இல் - தொழிற்பெயர்விகுதி. (௪௦)

['இச்செய்தி உவகைக்குஅறிகுறி'என்று சுக்கிரீவன் இராமனுக்குக் கூறுதல்.]

சக. ஏம்பலொடெழுந்துநின்றிரவிகான்முளை
பாம்பணையமலனைவணங்கிப்பைந்தொடி
மேம்படுகற்பினளென்னுமெய்ம்மையைத்
தாம்புகன்றிட்டதிச்சலமென்றோதினான்.

(இ - ள்.) (அவ்வளவிலே),—இரவி கான்முளை - சூரிய குமாரனான சுக்கிரீவன், ஏம்பலொடு - மகிழ்ச்சியுடனே, எழுந்து நின்று—, பாம்பு அணை அமலனை வணங்கி - ஆதிசேஷனைச் சயனமாகவுடைய குற்றமற்ற திருமாலின் திருவவதாரமாகிய ஸ்ரீராமனை நமஸ்கரித்து,—'பைந்தொடி - பசுமையாகிய தொடியென்னுங் கைவளையை யுடையவளான பிராட்டி, மேம்படு கற்பினள் - சிறந்த கற்பையுடையவளா யிருக்கிறாள், என்னும் மெய்ம்மையை - என்கிற உண்மையை, இ சலம் - இந்த (அங்கதனது) கடுந்தொழில், புகன்றிட்டது - தெரிவித்தது,' என்று ஓதினான் - என்று சொன்னான்; (எ - று.)

தாம்-அசை. நீலன் முதலிய மற்றவானரர்களோடு கூடி இவ்வாறு செருக்குக்கொண்டு அங்கதன் மதுவனத்தை அழித்ததுகொண்டே, பிராட்டி கற்பு நிலை சிறிதுந்தவறாமல் உயிர்வாழ்ந்திருக்கின்றா ளென்கிற செய்தியை அவர்கள் கண்டுணர்ந்ததாக அனுமானித்து அறியலாம் என்று மகாராஜர் பெருமாள்பக்கல் விண்ணப்பஞ்செய்தன ரென்க. கான் முளை-சந்ததியில் தோன்றியவன் என்று புத்திரனுக்குக் காரணக்குறி. ரவி - வடசொல். 'அமலனைப் பணிந்து' என்பதும் பாடம். (சக)

[இராமனுக்குச் சுக்கிரீவன் தேறுதல் கூறுதல்.]

சஉ. பண்டருகிளவியாடன்னைப்பாங்குறக்
கண்டனரன்னதோர்களிப்பினாலவர்
வண்டுறைமதுவனமழித்துமாந்திய
தண்டநாயகவினியவலந்தீர்கெனா.

இதுமுதல் ஏழுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) 'அண்டம் நாயக - உலகங்கட்குத் தலைவனே!—பண் தரு கிளவியாள் தன்னை - இராகத்தை யொத்த [மிகவினிய] சொற்களையுடையவளான பிராட்டியை, பாங்கு உற - நன்மைபொருந்த, கண்டனர் - பார்த்தார்கள்; அவர் - அவ்வங்கதன்முதலியோர், வண்டு உறை மது வனம் அழித்து மாந்தியது - வண்டுகள் தங்கப்பெற்ற மதுவனத்தை அழித்துத் தேனைக்குடித்தது, அன்னது ஓர் களிப்பினால் - அங்ஙனங்கண்டதனாலுண்டாகிய ஒப்பற்ற களிப்பினாலேயாம்; இனி - இனிமேல், அவலம் தீர்க - துன்பம் நீங்குவாயாக,' எனா - என்று (சுக்கிரீவன் இராமனைநோக்கிச்) சொல்லி, (எ - று.)—'எனா' என்பது, வருங்கவியில் 'என' என்பதனோடு முடியும். (சஉ)

['வந்தவர்யாதுசொல்வரோ' என்று இராமன் சிந்தித்திருத்தல்.]

சரு. வந்தனர்தென்றிசைவாவினரெனப்
புந்திநொந்தென்னைகொல்புகலற்பாலரென்
றெந்தையுமிருந்தனனிரவிகான்முனை
நொந்தவத்ததிமுகன்றன்னைநோக்கியே.

(இ - ள்.) 'தென்திசை வாவினர்-தெற்குத்திக்குக்குப்போனவர்கள், வந்தனர் - திரும்பிவந்தவர்களாவர்,' என-என்று(சுக்கிரீவன்) சொல்ல,—எந்தையும்-எமதுதலைவனான இராமபிரானும், 'என்னை புகலற்பாலர்கொல் - (அவர்கள்) என்னசொல்லுந்தன்மையையுடையவர்களாவரோ?' என்று - என்று எண்ணி, புந்தி நொந்து - மனம்வருந்தி, இருந்தனன் - (அவர்கள் வருகையை) எதிர்பார்த்திருந்தான்; இரவி கான்முளை - சுக்கிரீவன், நொந்த அ ததிமுகன் தன்னை நோக்கி - வருந்திவந்த அந்தத்ததிமுகனைப் பார்த்து, (எ - று.)—'என' என்று அடுத்தகவியோடு தொடரும். (சரு)

[மற்றும் விவரம்வினவிய சுக்கிரீவனுக்குத் ததிமுகன் கூறுதல்.]

சசு. யாரவணிறுத்தவரியம்புவாயென
மாருதிவாலிசேய்மயிந்தன்சாம்பவன்
சோர்வறுபதினெழுவோர்கடுன்னினா
ரார்கலிநாணவந்தார்க்குஞ்சேனையார்.

(இ - ள்.) 'அவண் - அம்மதுவனத்தில், இறுத்தவர்- வந்து தங்கியவர்கள், யார் - எவரெவர்? இயம்புவாய் - சொல்லுவாய்,' என - என்று (சுக்கிரீவன் ததிமுகனை மீண்டும்) வினவ,—(அவன்), 'மாருதி - வாயுபுத்திரனான அநுமானும், வாலி சேய் - வாலிகுமாரனான அங்கதனும், மயிந்தன் - மைந்தனும், சாம்பவன் - ஜாம்பவானும், (முதலிய), சோர்வு அறு - தளர்ச்சியில்லாத, பதின் எழுவோர்கள் - பதினேழு படைத்தலைவர்கள், ஆர்கலி நாண வந்து ஆர்க்கும் சேனையார் - கடலும் வெள்கும்படி ஆரவாரித்துவருகிற சேனையையுடையவர்களாய், துன்னினர் - (அங்கு) வந்து சேர்ந்தார்கள்; (எ - று.)—'என்று' என மேற்கவியோடு தொடரும்.

மயிந்தன்=மைந்தன்; வடமொழித்திரிபு: போலி. இவனும், த்விவிதனும்-இரட்டையராகிய அசுவினிதேவர்களின் புதல்வரான வாநரவீரர். இங்குக்குறித்த பதினெழுவர் - அநுமான், நீலன், ஜாம்பவான், ஸுஷேணன், சரபன், சதுல்மன், கஜன், கவாக்ஷன், கவயன், ஸுஷேணன், ருஷபன், மைந்தன், த்விவிதன், விஜயன், கந்தமாதநன், உல்காமுகன், அஸங்கன் என முதனூல்கொண்டு உணரலாம். பதினெழுவர், பதினெழுவோர் எனச் சிறுபான்மை ரகாவீற்றயலகரம் ஓகாரமாயிற்று; கள் - விகுதிமேல்விகுதி. ஆர் கலி - நிறைந்த ஓசையையுடையது; வினைத்தொகையன்மொழி. (சசு)

[இது முதல் மூன்றுகவிகள் - ததிமுகனுக்குச் சுக்கிரீவன் கூறுஞ் சமாதானம்.]

சரு. என்றவனுரைத்தபோதிரவிகாதலன்
வன்றிறற்றதிமுகன்வதனநோக்கியே
யொன்றுனக்குணர்த்துவதுளதுவாலிசேய்
புன்றொழிற்செய்கைசேர்புணர்ப்பனல்லனால்.

(இ - ள்.) என்று—, அவன் - அந்தத்ததிமுகன், உரைத்த போது - சொன்னபொழுது,—இரவி காதலன் - சுக்கிரீவன்,—வல் திறல் ததிமுகன் வதனம் நோக்கி - கொடிய வலிமையையுடைய ததிமுகனது முகத்தைப் பார்த்து,—ஒன்று உனக்கு உணர்த்துவது உளது - உனக்கு (நான்) தெரிவிப்பதொன்று உள்ளது: (அது என்னவென்றால்),—வாலி சேய் - அங்கதன், புல் தொழில் செய்கை சேர் புணர்ப்பன் அல்லன் - இழிவான தொழில்களைச் செய்தல்பொருந்திய தன்மையையுடையவனல்லன்; (எ - று.)

உரைத்தபோது, இரவிகாதலன், வதனநோக்கி என்றவை, மேல் சஎ - ஆங்கவியில் வரும் 'என' என்பதனோடு இயையும். புணர்ப்பு - ஆலோசனையுமாம். ஆல் - ஈற்றசை. (சரு)

சசு. கொற்றவன்பணிதலைக்கொண்டுதெண்டிரை
சுற்றியதிசையெலாந்துருவித்தோகையைப்
பற்றியபகைஞரைக்கடிந்துபாங்கர்வந்
துற்றனரவரையாமுரைப்பதென்னையே.

(இ - ள்.) (அநுமான் முதலியோர்), கொற்றவன் பணி தலை கொண்டு - வெற்றியையுடையவனான ஸ்ரீராமனது கட்டளையைத் தலைமேற்கொண்டு, தெள் திரை சுற்றிய திசை எலாம் - தெளிவான அலைகளையுடைய கடலினாற் சூழப்பட்ட இடம் முழுவதும், தோகையை - சீதாபிராட்டியை, துருவி - தேடி, பற்றிய பகைஞரை - (அப்பிராட்டியைக்) கவர்ந்துபோன பகைவரை, கடிந்து - அழித்து, பாங்கர் வந்து உற்றனர் - அருகில் வந்து சேர்ந்தார்கள்; அவரை - (இங்ஙனம் அருந்தொழில் செய்துவந்த) அவர்களை, யாம் - நாம், உரைப்பது - (கோபித்துப்) பேசுவது, என்னை - எவ்வாறு? (எ - று.)

தலைக்கொள்ளுதல் - சிரஸாவகித்தல். தெண் திரை - பண்புத்தொகையன்மொழி. இனி, திரை என்பது - சினையாகுபெயராகவுமாம். தோகை - மயில்போன்ற சாயலுடையாளுக்கு இருமடியாகுபெயர். பாங்கர் - பாங்கு என்பதன் ஈற்றுப்போலி. (சசு)

சஎ. அன்றியும்வாலிசேயரசதாதலிற்
பின்றுதற்கேதரோபிணங்குஞ்சிந்தையா
யொன்றுநீயுணரலையுறுதிவேண்டுமேற்
சென்றவன்றனைச்சரண்சேர்தியீண்டென.

(இ - ள்.) அன்றியும் - அதுவல்லாமலும், வாலிசேய் - அங்கதன், அரசு அது ஆதலின் - இளவரசனுதலால், பின்றுதல் - (அவனோடு நீ) மாறுபட்டமை, தீது - கொடியது; பிணங்கும் சிந்தையாய் - மாறுபட்ட மனமுடையவனே! ஒன்றும் நீ உணரலை - நீ ஒன்றையும் அறிந்தாயில்லை: உறுதி வேண்டும் எல் - (உனக்கு) நன்மை வேண்டுமாயின், சென்று - போய், ஈண்டு - இப்பொழுதே, அவன்தனை சரண் சேர்தி - அவ்வங்கதனைச் சரணமடைவாய், என - என்றுசொல்ல,—(எ - று.)—அரோ - அசை.

இனி, 'வாலிசேயரசதாதலின்' என்பதற்கு - (முன்பு வாலியினதாகிய அம்மதுவனம் இப்பொழுது) அவ்வாலியின்மகனுன அங்கதனது ஆட்சிக்கு உரியதாதலால் என்றும் பொருள்கூறுவர். (சஎ)

[ததிமுகன் தாழ்ந்து மதுவனத்துக்குச் செல்லுதல்.]

சஅ. வணங்கியசென்னியன்மறைத்தவாயின
னுணங்கியசிந்தையனொடுங்குமேனியன்
கணங்களொடேகியக்கானநண்ணினன
மணங்கிளர்தாரினன்மறித்தும்வந்தரோ.

(இ - ள்.) மணம் கிளர் தாரினன் - வாசனைவீசுகின்ற பூமாலையையுடையவனான ததிமுகன்,—வணங்கிய சென்னியன் - (சுக்கிரீவனை) நமஸ்கரித்த தலையையுடையவனும், மறைத்த வாயினன் - மூடிய வாயையுடையவனும், உணங்கிய சிந்தையன் - மெலிந்த மனமுடையவனும், ஒடுங்கும் மேனியன் - ஒடுங்கிய உடம்பையுடையவனுமாய், கணங்களொடு ஏகி - (தன்) பரிவாரங்களுடனே புறப்பட்டு, மறித்தும் வந்து - மீண்டும் வந்து, அ கானம் - அந்த மதுவனத்தை, நண்ணினன் - அடைந்தான்; (எ - று.)

அரோ - ஈற்றசை. கையினால் வாய்புதைத்து நிற்றல், வணக்கக்குறி.

[ததிமுகனைக்கண்டு கோபங்கொண்ட அங்கதனை அவன் சரணமடைதல்.]

சகூ. கண்டனன்வாலிசேய்கறுவுகைம்மிக
விண்டவனம்மெதிர்மீண்டுளானெனி
னுண்டிடுகுதுமுயிரெனவுன்னினன்
றொண்டெனத்ததிமுகன்றொழுதுந்தான்றினன்.

(இ - ள்.) (ததிமுகன் பரிவாரத்தோடு மீண்டுவருவதை), வாலிசேய் - அங்கதன், கண்டனன் - பார்த்து, கறுவு கைம்மிக - கோபம் அதிகப்பட, 'விண்டவன் - (மதுவனத்தைவிட்டு) நீங்கிப்போனவனான ததிமுகன், நம் எதிர் மீண்டுளான் எனின் - மறுபடியும் நமக்கு எதிராக (ப் போர்க்கு) வருவானானால், உயிர் உண்டிடுகுதும் - அவனுயிரை யுண்டுவிடுவோம் [கொல்வோம்],' என்ன - என்று, உன்னினன் - எண்ணினன்; (அப்பொழுது), ததிமுகன்—, தொண்டு என - 'நான் உனக்கு அடிமை' என்று சொல்லிக்

கொண்டே, தொழுது - கைகூப்பியவண்ணமாய், தோன்றினன் - எதிரில் வந்தான்; (எ - று.)

விண்டவன் - பகைத்தவன் என்றவாம். உண்டிடுகுதும், இடு - துணிவுப்பொருளுணர்த்தும்; கு - சாரியை. (௪௯)

[ததிமுகனும் அங்கதனும் அளவளாவுதல்.]

௫௦. போழ்ந்தனயான்செய்தகுறைபொறுக்கென
வீழ்ந்தனனடியிசைவீழவாலிசேய்
தாழ்ந்துகைபற்றிமெய்தழீஇக்கொண்டும்மையான்
சூழ்ந்ததும்பொறுக்கெனுமுதன்மைசொல்லினன்.

(இ - ள்.) 'போழ்ந்து அன - (வாள்கொண்டு) வெட்டினாற் போன்ற, யான் செய்த குறை - நான்செய்த குற்றத்தை, பொறுக்க - பொறுத்தருள்வாயாக,' என - என்றுசொல்லி, அடியிசை - (அங்கதனது) பாதங்களில், வீழ்ந்தனன் - விழுந்து (ததிமுகன்) நமஸ்கரித்தான்; வீழ - (அங்ஙனம் அவன்) விழுந்தவளவில், வாலி சேய் - அங்கதன், தாழ்ந்து - குனிந்து, கை பற்றி - அவன்கையைப்பிடித்து எடுத்து, மெய் தழீஇக்கொண்டு - அவனுடம்பை அணைத்துக்கொண்டு, உம்மை யான் சூழ்ந்ததும் பொறுக்க எனு - உங்கட்கு நான்செய்த குற்றத்தை நீங்களும் பொறுப்பீர்களாக' என்று, முதன்மை சொல்லினன் - முக்கியமான உபசாரவார்த்தையைச் சொன்னான்; (எ - று.)

போழ்ந்து என்னும் உவமை, வருத்தமிகுதியைச் செய்தற்கு. போழ்ந்தால் என்னும் வினையெச்சம், போழ்ந்து எனத் திரிந்தது. முதன்மை - பண்பாகுபெயர். 'முகமன்சொல்லினன்' என்பதும் பாடம். (௫௦)

[அனைவரும் அநுமானை முந்துற இராமன்பக்கல் அனுப்புதல்.]

௫௧. யாமுதற்குறித்தநாளிறத்தலெண்ணியே
யேமுறுதுயர்துடைத்தளித்தவேற்றம்போற்
றாமரைக்கண்ணவன்றுயரந்தள்ளநீர்
போமெனதொழுதுமுன்னனுமன்போயினன்.

(இ - ள்.) 'யாம் - நாமெல்லாரும், முதல் குறித்த நாள் இறத்தல் எண்ணி - முன்னே (சுக்கிரீவன்) தவணையிட்டு அனுப்பிய நாள்களெல்லாங் கழிந்துபோதலை நினைத்து, ஏம் உற - (இனி நமக்கு மரணம்நேருமேயென்று) வருத்தமடைய, துயர் - அவ்வருத்தத்தை, துடைத்து - (இலங்கைக்குப் போய்ச் சீதையைக் கண்டு வந்ததனாற்) போக்கி, அளித்த - (எங்களைக்) காத்த, ஏற்றம் போல் - சிறப்புப் போலவே,—தாமரை கண்ணவன் துயரம் தள்ள - செந்தாமரைமலர்போலுந் திருக்கண்களையுடையவனான ஸ்ரீராமனது துன்பத்தைப் போக்கும்பொருட்டு, நீர்—, போம் - (முன்னே) செல்லும்', என - என்று (அங்கதன் அநுமானைநோக்கிச்) சொல்ல,—அனுமன் - அநுமான், தொழுது - (அவனை) வணங்கி, முன் போயினன் - முன்னே சென்றான்; (எ - று.)

ஏம் - ஏமம் என்பதன் விகாரம். நீர் போம் - உயர்வுப்பன்மை. (ருக)

[வேயிலிற்றணியுமளவிலே வாநரரனைவரும் சுக்கிரீவனிருக்கிறவிடத்தை நோக்கிச் செல்லுதல்.]

ருஉ. வன்றிறற்குரிசிலுமுனிவுமாறினன்
வென்றிகொள்கதிருந்தன்வெம்மையாறினா
னென்றுகொண்டியாவருமெழுந்துபோதலே
நன்றெனவேகினார்நவைக்கணீங்கினார்.

(இ - ள்.) 'வல் திறல் குரிசிலும் - மிக்கவலிமையையுடைய சுக்கிரீவமகாராஜனும், முனிவு மாறினன் - (தான்குறித்ததவணை கடந்தோமென்பது பற்றியும் மதுவனமழித்தோ மென்பதுபற்றியும் நம்மீது கொள்ளக்கடவதான) கோபம் இலனாயினன்; வென்றி கொள் கதிரும் தன் வெம்மை ஆறினான் - வெற்றியைக்கொண்ட கிரணங்களையுடைய சூரியனும் தனது வெப்பந் தணிந்தான்', என்று கொண்டு - என்பதை அறிந்து, எழுந்து போதலே நன்று என - '(இனி நாம் இராமனுள்ளவிடத்துக்குப்) புறப்பட்டுச் செல்வதே நல்லது' என்று எண்ணி, நவைக்கண் நீங்கினார் யாவரும் - குற்றத்தினின்று நீங்கியவர்களான [குற்றமற்றவர்களான] வாநரர்களெல்லாரும், ஏகினார் - சென்றார்கள்; (எ - று.)

தம்பக்கல் சுக்கிரீவன் கோபங்கொண்டில னென்பதைத் ததிமுகன் வந்த வாறுகொண்டு அறிந்தன ரென்க. மகனான சுக்கிரீவன் கோபந்தணிதலும், தந்தையான சூரியன் வெப்பந்தணிதலும் ஒன்றுக்கொன்று நிகரென்னுங் கருத்துப்பட நிற்றலால், முதலிரண்டடியில் எடுத்துக்காட்டுவமையணி தொனிக்கின்ற தென்னலாம். சுக்கிரீவன் கோபந்தணிந்ததனாலும், சூரியன் வெப்பந்தணிந்ததனாலும், இனி நாம் இனிதுபோய்ச் சுக்கிரீவனிடஞ் சேரலா மென்று துணிந்து அனைவரும் சென்றன ரென்க. முதலிரண்டடியிலுள்ள உம்மைகள் - ஒன்றையொன்றுநோக்கி எதிரதும் இறந்ததுந் தழுவிய எச்சமாம். நவைக்கண் என்பதில், கண் என்ற ஏழனுருபு - ஐந்தனுருபின் நீக்கப்பொருளில் வந்தது, உருபுமயக்கம். சூரியகிரணத்துக்கு வெற்றி - மற்றை யிருசுடர்களாகிய சந்திரஅக்கினியாது ஒளியினும் மேம்பட்டிருத்தலும், இருட்டிரளை எளிதில் அழித்தலும். (ருஉ)

[இப்பால் இராமன் சுக்கிரீவனை வினவுதல்.]

ருரு. இப்புறத்திராமனுமிரவிசேயினை
யொப்புறநோக்கிவந்துற்றதானையர்
தப்பறக்கண்டனமென்பரோதகா
தப்புறத்தென்பரோவறைதியாலென்றான்.

(இ - ள்.) இ புறத்து - இவ்விடத்தில், இராமனும்—, இரவி சேயினை - சூரியகுமாரனான சுக்ரீவனை, ஒப்பு உற நோக்கி - தகுதிபொருந்தப் பார்த்து,

வந்து உற்ற தானையர் - (மதுவனத்தில்) வந்து கூடியுள்ள சேனைவீரர்கள், தப்பு அற கண்டனம் என்பரோ - தவறாமற் (சீதையைப்) பார்த்தோமென்று சொல்வர்களோ? தகாது - அங்ஙனந் தகுதியாகக் கூறாமல், அ புறத்து என்பரோ - (இவ்வுலகத்திலில்லை) இதற்கு அப்பாலுள்ள உலகத்தில் இருத்தல் கூடுமென்று சொல்வர்களோ? அறைதி - சொல்வாய்', என்றான் - என்று வினவினான்; (எ - று.)—ஆல் - அசை. இப்புறம் - ப்ரஸ்ரவணகிரி. (௫௩)

[அனுமன்வரவை இராமன் நோக்குதல்.]

௫௪. என்புழியனுமனுமிரவியென்பவன்
றென்புறத்துளனெனத்தெரிவதாயினன்
பொன்பொழிதடக்கையப்பொருவில்வீரனு
மன்புறுசிந்தையனமையநோக்கினான்.

(இ - ள்.) என்புழி - என்று வினவும் பொழுதில்,—அனுமனும்—, இரவி என்பவன் தென் புறத்து உளன் என - சூரியனானவன் தெற்குப் பக்கத்தில் விளங்கினனென்னும்படி, தெரிவது ஆயினன் - (தென்புறத்திற்) காணப்படுவனானான்; பொன் பொழி தட கை - (இரப்பவர்க்குப்) பொன்னை மிகுதியாகச் சொரிகிற பெரிய திருக்கைகளை யுடைய, அ பொருவு இல் வீரனும் - ஒப்பற்ற வீரனான அந்த ஸ்ரீராமனும், அன்பு உறு சிந்தையன் - அன்புமிக்க மனத்தையுடையவனாய், அமைய நோக்கினான் - (அனுமானைச்) செவ்வையாகப் பார்த்தான்; (எ - று.)

பொன் பொழி தடக் கை - அழகுவழிகின்ற பெரிய கை யென்றுமாம். பொரு வில் வீரன் - போர்செய்தற்கு உரிய வில்லையுடைய வீரன் என்றுங் கொள்ளலாம். சூரியன் - ஒளிக்கு உவமை. முன்பு அநுமான் கடல்தாவிச் சென்றபொழுது "வடக்கெழுந்திலங்கைசெல்லும்பரிதிவானவனு மொத்தான்" என்றும், இலங்கையினின்று மீளும்பொழுது "ஆங்கொருகுடிக்குன்றை யருக்கனி னணைந்த வையன்" என்றும் உவமைகூறிப்போந்தவர், இங்கு 'இரவியென்பவன் தென்புறத்துளனெனத் தெரிவதாயினன' என்று ஒப்புமை கூறினர். (௫௪)

[அனுமான் பிராட்டியின்நிலைமையைக் குறிப்பாலுணர்த்துதல்.]

௫௫. எய்தினனனுமனுமெய்தியேந்தறன்
மொய்கழற்றொழுகிலன்முளரிநீங்கிய
தையலைநோக்கியதலையன்கையினன்
வையகந்தழீஇநெடிதிறைஞ்சிவாழ்த்தினான்.

(இ - ள்.) அனுமனும்—, எய்தினன் - வந்துசேர்ந்தான்; எய்தி - வந்து சேர்ந்து, ஏந்தல்தன் - பெருமையிற்சிறந்தவனான ஸ்ரீராமனது, மொய் கழல் - வலிய வீரக்கழலை யணிந்த திருவடியை, தொழுகிலன் - வணங்காதவனாய்,

முளரி நீங்கிய தையலை நோக்கிய தலையன் - தாமரைமலரினின்று நீங்கிய [பூமியில் அவதரித்த] இலக்குமியாகிய சீதாபிராட்டி யிருக்கின்ற தெந் திசையை நோக்கிய தலையையுடையவனும், கையினன்-(தலைமேற்கூப்பிய) கைகளையுடையவனுமாய், வையகம் தழீஇ - பூமியில் விழுந்து, நெடிது இறைஞ்சி - நீட்சியாக [ஸாஷ்டாங்கமாக] நமஸ்கரித்து, வாழ்த்தினான் - வாழ்த்துக்கூறினான்; (எ - று.)—இங்ஙனஞ்செய்தது, ஆநந்தாதிசயத்தாலும், வெளிப் படையாக வாயினாற்சொல்லித் தெரிவித்தற்கு முன்னமே குறிப்பினாலுணர்த் துதல் சிறப்பெனக் கருதியு மென்க.

மொய் கழல் - (தன்னைச்சரணமடைந்தவர்களது அருவினையனைத்தையு மழிக்கும்) வலிமையுடைய திருவடி யெனினுமாம்: (தாமரைமலரோவென்று வண்டுகள்) மொய்க்கப்பெற்ற திருவடி யென்றுங் கொள்ளலாம்; மொய் - பெருமையுமாம். இனி, 'ஏந்தல்தன் மொய்கழல் தொழுகிலன்' என்பதற்கு- தங்களரசனான சுக்கிரீவனது பாதங்களை வணங்காதவனா யென்றும் உரைப் பர். ஏந்தல் - ஆண்பாற்சிறப்புப்பெயர். முளரிநீங்கிய தையல் - தனக்கு உறைவிடமான செந்தாமரைமலரை விட்டு மிதிலாநகரத்தில் திருவவதரித்த திருமகள்; திருமகளின் திருவவதாரமான ஜாநகிப்பிராட்டி யென்க: ("மையறு மலரினீங்கி யான்செய்மாதவத்தின்வந்து, செய்யவளிருந்தா ளென்று செழு மணிக்கொடிகளென்னுங், கைகளை நீட்டி யந்தக்கடிநகர் கமலச்செங்க, ணையனை யொல்லைவாவென் றழைப்பது போன்ற தம்மா" என்று பாலகாண் டத்திலவந்ததுங் காண்க.) முளரிநீங்கிய தையலை நோக்கிய தலையன் கையி னன் வையகந்தழீஇ நெடிதிறைஞ்சி - பிராட்டியிருக்கிற தென்திசையை நோக்கித் தண்டன்சமர்ப்பித்து என்றபடி. (௫௫)

[நிகழ்ந்தசெய்தியை இராமபிரான் குறிப்பாலுணர்தல்.]

௫௬. திண்டிறலவன்செயறெரியநோக்கினான்
வண்டியலோதியும்வலியண்மற்றிவன்
கண்டதுமுண்டவள்கற்புநன்றெனக்
கொண்டனன்குறிப்பினாலுணருங்கொள்கையான்.

(இ - ள்.) குறிப்பினால் உணரும் கொள்கையான் - (முகம்முதலிய அவய வங்களின்) குறிப்பைக்கொண்டு (நடந்ததை) அறியுந்திறத்தை யுடையவனான ஸ்ரீராமன், திண் திறல் அவன் செயல் - மிக்கவலிமையையுடைய அவ்வனு மானது செய்கையை, தெரிய நோக்கினான் - நன்றாகப்பார்த்து, 'வண்டு இயல் ஓதியும் - வண்டுகள்மொய்க்கிற கூந்தலையுடையவளான ஜாநகியும், வலியள்- க்ஷேமமாயிருக்கிறாள்; இவன் கண்டதும் உண்டு - இவ்வனுமான் (அவளைப்) பார்த்ததும் உண்டு; அவள் கற்பும் நன்று - அவளது கற்புநிலைமையும் கலங்கா நிலைமையுடையது', என - என்று, கொண்டனன் - தெரிந்துகொண்டான்; (எ - று.)—மற்று - அசை.

*"இங்கிதஜ்ஞாஸ்துகோஸலாஃ [குறிப்பறிதலிற் சிறந்தவர் கோஸலதேசத்தார்]" என்றபடி இராமபிரான் நுண்ணிதிற் குறிப்புணர்பவ னென்க. 'வண்டறலோதி' என்னும் பாடத்துக்கு - கருவண்டையும் கருமணலையும் போன்ற கூந்தலை யுடையவ ளென்று பொருள்; இருபொருள்களிலும் இத்தொடர்மொழி அன்மொழித்தொகையாம். (௫௬

[அப்பொழுது இராமபிரான் கொண்ட உவகை.]

௫எ. ஆங்கவன்செய்கையையளவையாமென
வோங்கியவுணர்விஞல்விளைந்ததுன்னிஞன்
வீங்கினன்றோள்புனல்கண்கள்விம்மினை
னீங்கியதருந்துயர்காதனீண்டதே.

(இ - ள்.) (ஸ்ரீராமன்), ஆங்கு அவன் செய்கையை - அப்பொழுதுநிகழ்ந்த அவ்வநுமானது செய்கையையே, அளவை ஆம் என - அளவுகருவியாமென்றுகொண்டு, ஓங்கிய உணர்வினால் - சிறந்த [குறிப்பறியவல்ல] (தனது) அறிவினால், விளைந்தது உன்னினான் - நடந்த செய்தியை அறிந்தவனாய், தோள் வீங்கினன் - (மகிழ்ச்சியால்) தோள்கள் பூரித்தான்; கண்கள் புனல் விம்மினன் - கண்கள் நீர்பெருகப் பெற்றான்; அருந் துயர் - (அவனது) நீங்குதற்கருமையான துன்பம், நீங்கியது - நீங்கிப்போய்விட்டது; காதல் - (சீதையினிடத்து) விருப்பம், நீண்டது - அதிகப்பட்டது; (எ - று)

அளவை - ஒருபொருளின் *உண்மையை அளவிட்டுஅறியக் கருவியாவது; அள - பகுதி, ஐ - கருவிப்பொருள்விகுதி: பிரத்தியக்ஷம், அநுமானம் முதலிய பிரமாணங்களை யுணர்த்தும்: இங்கு, அநுமானம். விளைந்ததை உன்னுதற்கு அவன்செய்கையே கருவியாயிற்று. உன்னுதல் - நுட்பமாக ஊகித்தறிதல், உய்த்துணர்தல். இராமன் தோள் வீங்கினன், கண்கள் புனல் விம்மினன் என்ற முடிபுகள் - திணைவழுவமைதி. (௫எ)

[அநுமான் தான் சீதையைக்கண்ட செய்தியைத் தொகுத்துக்கூறுதல்.]

௫அ. கண்டனென் கற்பினுக் கணியைக் கண்களாற்
றெண்டிரை யலைகட லிலங்கைத் தென்னக
ரண்டர்நா யகவினித் துறத்தி யையமும்
பண்டுள துயருமென் றனுமன் பன்னுவான்.

(இ - ள்.) அநுமன்—, (இராமனைநோக்கி), 'அண்டர் நாயக - தேவர்கட்குத் தலைவனே! கற்பினுக்கு அணியை - பதிவிரதாதருமத்துக்கு ஆபரணம்போல அழகுசெய்பவளான பிராட்டியை, தெள் திரை அலை கடல் இலங்கை தென் நகர் - தெளிவான அலைகளை யலைக்கின்ற கடலாற் சூழப்பட்ட இலங்கை யென்கிற தெற்கிலுள்ள நகரத்தில், கண்களால்—, கண்டனென் - பார்த்தேன்; இனி - இனிமேல, ஐயமும் - (பிராட்டி உளளோ இல

*௯0

ளோ என்னுஞ்) சந்தேகத்தையும், பண்டு உள துயரும் - (அதுபற்றி) முன் னேதொடங்கி யுள்ள துன்பத்தையும், துறத்தி - நீங்குவையாக,' என்று : என்று சொல்லி,—பன்னுவான் - (மற்றுஞ்) சொல்பவனானான்; (எ - று.)— அதனை, அடுத்த இருபத்துமூன்றுகவிகளிற் காண்க.

'பிராட்டியை' என்று முதலிற்கூறினால் அவளது நிலைமை என்னையிற் றென்றுகூறுவனோ வென்னுஞ் சங்கையினால் இராமனுக்கு மிக்கதுன்பமுள தாகக் கூடு மெனக் கருதி, 'கண்டனென்' என முதலிற் கூறினன் அநுமான்; ஸ்ரீவால்மீகிராமாயணத்தில் "த்ருஷ்டாஸீதா" என வருதலுங் காண்க. 'கண் டனென்' என்றதை யடுத்து 'கற்பினுக்கணி' என்றுகூறியதன் காரணம் தானே விளங்கும்; அவள் கற்பிற்சிறவாதிருப்பின், அவளைக்கண்டது பயன் படாமை யுணர்க. 'கற்பினுக்குஅணி' என்பதற்குக் கருத்து - பிராட்டி ஒரு த்தி உளளானதனாலேயே பாதிவிரத்தியம் உலகத்திற் சிறந்துவிளங்கிற்று என்பது. 'கண்களால்' என வேண்டாதுகூறியது, கண்டமையின் துணி வை விளக்குதற்கு. தென் நகர் - அழகிய நகரமென்றுமாம். ஐயம் - பல தலையாய அறிவு. (௰அ)

## வேறு.

[இதுமுதல் இருபத்துமூன்றுகவிகள் - அதனை வகுத்துக்கூறல்.]

௫௯. உன்பெருந் தேவி யென்னு முரிமைக்கு முன்னைப் பெற்ற
மன்பெரு மருகி யென்னும் வாய்மைக்கு மிதிலை மன்னன்
றன்பெருந் தனைய யென்னுந் தகைமைக்குந் தலைமை சான்றா
ளென்பெருந் தெய்வ மையா வின்னமுங் கேட்டி யென்பான்.

(இ - ள்.) ஐயா - ஸ்வாமி!—என் பெருந் தெய்வம் - எனது சிறந்ததெய்வ மாகிய பிராட்டி,—உன் பெருந் தேவி என்னும் உரிமைக்கும் - உனது சிறந்த மனைவி யென்கிற தகுதிக்கும், உன்னை பெற்ற மன் பெரு மருகி என்னும் வாய்மைக்கும் - உன்னைப்பெற்ற தசரதசக்கரவர்த்தியினது சிறந்த மரு மகள் என்கிற வார்த்தைக்கும், மிதிலை மன்னன் தன் பெருந் தனயை என் னும் தகைமைக்கும் - மிதிலாநகரத்தரசனாகிய ஜநகமகாராஜனது சிறந்த பெண் என்னுந் தன்மைக்கும், தலைமை சான்றாள் - ஏற்ற சிறப்பு அமைந் துள்ளாள்; இன்னமும் கேட்டி - 'இன்னமும் (நான் சொல்வதைக்) கேட் பாயாக, என்பான் - என்று (பின்னும் அநுமான்) கூறுவான்; (எ - று.)

ஜாநகி தான் பிறந்தகுலத்துக்கும், புக்ககுலத்துக்கும், கணவனது தகு திக்கும் ஏற்பச் சிறந்தவொழுக்கமுடையளா யிருக்கின்றன ளென்பதாம். தசரதர் சக்கரவர்த்தியாய் அறந்திறம்பாதவ ரென்பதும், ஜநகமகாராஜர் வைதிகாசாரமுறைமை சிறந்த பரம்பரையின ரென்பதும், ஸ்ரீராமபிரான் புருஷோத்தம னென்பதும் - பிரசித்தம். மிதியென்ற அரசனால் அமைக்கப் பட்ட நகரமாதலின், 'மிதிலா' என்று பெயர்: அது, ஆவீறு ஐயாயிற்று. 'என்

பெருந்தெய்வம்' என்பதை இராமனைநோக்கிய விளியெனக் கொண்டால், 'பிராட்டி' என்ற எழுவாய் வருவிக்கவேண்டும்.

இதுமுதல் இப்படலம்முடியுமளவு முள்ள முப்பத்தைந்து கவிகள் - பாசப்படலத்தின் ச - ஆங்கவிபோன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (ருக)

சுo. பொன்னலதில்லைப்பொன்னையொப்பெனப்பொறையினின்றா
டன்னலதில்லைதன்னையொப்பெனத்தனக்குவந்த
நின்னலதில்லைநின்னையொப்பெனநினக்குநேர்ந்தா
ளென்னலதில்லையென்னையொப்பெனவெனக்குமீந்தாள்.

(இ - ள்.) பொன்னை ஒப்பு - பொன்னையொத்திருக்கும்பொருள், பொன் அலது இல்லை - பொன்னையல்லது வேறில்லை: என - அதுபோல, தன்னை ஒப்பு - தன்னை ஒத்திருப்பவள், தன் அலது இல்லை - தன்னையேயல்லது வேறொருத்தியில்லை, என - என்று (யாவருஞ்) சொல்லும்படி, (பிராட்டி), பொறையில் நின்றாள் - பொறுமைக்குணத்தில் நிலைநின்றாள்; தனக்கு வந்த நின் அலது - தனக்கு(க் கொழுநனாக) வாய்த்த உன்னையே யல்லாமல், நின்னை ஒப்பு - உன்னை ஒத்திருப்பவர், இல்லை - வேறெவருமில்லை, என - என்கிற கீர்த்தியை, நினைக்கு நேர்ந்தாள் - உனக்குக் கொடுத்தாள்; என்னை ஒப்பு - என்னையொப்பவன், என் அலது இல்லை - என்னையேயல்லது வேறெவனுமில்லை, என - என்கிற பெருமையை, எனக்கும் ஈந்தாள் - எனக்கும் அனுக்கிரகித்தாள்; (எ - று.)

உபமேயத்தையே உபமானமாகவுங் கூறுகிற இயைபின்மையணி யென்னும் அநந்வயாலங்காரம் இச்செய்யுளின் நான்கு அடியிலும் உள்ளது. பிராட்டி தனது பொறுமைக்குணத்தால் தன்னை யொப்பாரும் மிக்காரு மிலராம்படி சிறப்புற்று நின்றன ளென்பது, முதலிரண்டடியின் கருத்து. "புகழ்புரிந் தில்லிலோர்க்கில்லை யிகழ்வார்மு, னேறுபோற்பீடுநடை" என்பவாதலால், மனைவியின் கற்பொழுக்கம் கணவனது மிக்க சிறப்புக்குக் காரணமென்பது விளங்குதலின், 'தனக்குவந்தநின்னலதில்லை நின்னையொப்பென நினக்கு நேர்ந்தாள்' என்றார். தான் தூதுபோய்வந்த செயல் பயன்பட்டுத் தனக்குப் பெருமையை யளித்தற்குக் காரணமாகுமாறு அவள் நிறைகாத்து நின்றன ளென்பதை, ஈற்றடியில் விளக்கினார். தனக்கு உவந்த என்று எடுத்து, தனக்குப் பிரியமான என்று பொருள்கொள்ளலுமாம். (சுo)

சுக. உன்குலமுன்னதாக்கியுயர்புகழ்க்கொருத்தியாய
தன்குலந்தன்னதாக்கித்தன்னையித்தனிமைசெய்தான்
வன்குலங்கூற்றுக்கீந்தவ்வானவர்குலத்தைவாழ்வித்
தென்குலமெனக்குத்தந்தாளென்னினிச்செய்வதெம்மோய்.

(இ - ள்.) எம் மோய் - எமதுதாயாகிய பிராட்டி, உன் குலம் உன்னது ஆக்கி - உனது குலத்தை உனக்கு உரியதாகச்செய்து, உயர் புகழ்க்கு ஒரு

த்தி ஆய தன் குலம் தன்னது ஆக்கி - சிறந்தகீர்த்தியில் (தன்னையொப்பவரில்லாமல்) ஒருத்தியேயாய்நின்ற தான் பிறந்த குலத்தைத் தனக்கு உரியதாக்கிக்கொண்டு, தன்னை இ தனிமை செய்தான் வல் குலம் கூற்றுக்கு ஈந்து - தன்னை உன்னைவிட்டுப் பிரிந்து தனித்திருக்கும்படி செய்தவனான இராவணனது வலிய குலத்தை யமனுக்குக் கொடுத்து, அ வானவர் குலத்தை வாழ்வித்து - அத்தேவர்களது குலத்தை வாழச்செய்து, என் குலம் எனக்கு தந்தாள் - எனதுகுலப்பெருமையை எனக்குக் கொடுத்தாள்; இனி என் செய்வது - இன்னும் அவள் யாது செய்யத்தக்கதுளது? [ஒன்றுமில்லையென்றபடி]; (எ - று.)

பிராட்டி தனது கற்புநிலை கலங்காத தன்மையினால் தன்குலத்துக்கும் உன்குலத்துக்கும் ஒப்புயர்வில்லாத சிறப்பை யுண்டாக்கி, ராவணாதிராக்ஷசர்களை யழிப்பவளாய்த் தேவர்கூட்டத்துக்கு வாழ்வளித்து, தன்னைத்தேடி வந்த எனக்கும் பெருமையைக் கொடுத்தனளென்பதாம். உன்குலம் உன்னதாக்கி - உனது குடிப்பிறப்புக்கு ஏற்ற சிறப்பை உன்னையடையச்செய்து என்றபடி. தன்குலந் தன்னதாக்கி - தனது குடிப்பிறப்புக்கு ஏற்ற சிறப்பைத் தானே பெற்று என்றவாறு. தன்னை இத்தனிமைசெய்தான் - தன்னை இராமனைவிட்டுப்பிரித்து எடுத்துவந்து தனியே நெடுநாள் சிறைவைத்தவன். வன்குலம் - அரக்கர்குலம். கூற்றுக்கு ஈதல் - அழித்தல். அவ்வானவர் - இராவணனால் வெல்லப்பட்டு ஒடுங்கிக்கிடந்த தேவர்களென்க. குலம் - கூட்டம். 'இவ்வானவர்குலத்தை வாழ்வித்து' என்றும் பாடம். 'என்குலம் எனக்குத் தந்தாள்' என்றது - வாயுகுமாரனான யான் எனது தந்தைபோலவே பெருமையடைதற்கு ஏதுவாய்நின்றனளவ ளென்றபடி. குலம் - இனம் என்றுகொண்டு, பிராட்டியை நாடித்தருவோமென்ற வார்த்தை பொய்க்காமை யால் எனது இனத்தவரான வாநரரனைவரும் உயிர்பெற்றுவாழுமாறு செய்தன ளெனினுமாம். உலகத்துக்குத் தன்குடிப்பிறப்பொன்றை மேம்படுத்துவதே ஒருவர்க்கு அரிது: இவளோ தான்பிறந்த இடத்தின் குடிப்பிறப்பையும் புகுந்த இடத்தின் குடிப்பிறப்பையும் தேவர்கள் பிறப்பையும் எனகுடிப்பிறப்பையும் ஓங்கச்செய்தன ளென்பார், இவ்வாறு கூறினார். 'உன்குலம்' என்றது - ரகுகுலத்தை. தன் குலம் - ஜநககுலம். (௬௧)

௬௨. விற்பெருந்தடந்தோள்வீரவீங்குநீரிலங்கைவெற்பி
னற்பெருந்தவத்தளாயநங்கையைக்கண்டேனல்லே
னிற்பிறப்பென்பதொன்றுமிரும்பொறைமென்பதொன்றுங்
கற்பெனும்பெயரதொன்றுங்களிநடம்புரியக்கண்டேன்.

(இ - ள்.) வில் பெருந் தட தோள் வீர - வில்லையேந்திய பெரிய நீண்ட கையையுடைய வீரனே!—வெற்பு - திரிகூடமலையின்மேலுள்ள, வீங்கு நீர் இலங்கையில் - மிக்கநீரினால் [கடலினால்] சூழப்பட்டுள்ள லங்காபுரியில், நல் பெருந்தவத்தள் ஆய - நல்ல பெரிய கற்பொழுக்கமாகிய தவத்தை யுடையவ

ளானை, நங்கையை - பிராட்டியை, கண்டேன் அல்லேன்-பார்த்திலேன் (யான்); (பின்னை எதனைக் கண்டேன் என்றால்),—இல்பிறப்பு என்பது ஒன்றும் - உயர்குடியிற்பிறத்த லென்பதொரு குணமும், இரும் பொறை என்பது ஒன்றும் - சிறந்த பொறுமை யென்பதொரு குணமும், கற்பு எனும் பெயரது ஒன்றும் - பதிவிரதாதருமமென்னும் பெயரையுடையதொரு குணமும், (ஒருங்குகூடி), களி நடம் புரிய - களிப்போடு கூத்தாடுதலைச்செய்ய, கண்டேன் - பார்த்தேன்; (எ - று.)

நங்கை - மகளிரிற்சிறந்தவள்: பெண்பாற்சிறப்புப்பெயர்; நம்பியென்பதன்பெண்பால். சீதை ஒருபெண்ணாகியாகவுள்ளா ளென்பதுமாத்திரமன்று: உயர்குடிப்பிறப்பு பொறுமை கற்புநிலை என்றவற்றின் சொரூபமாயுமுள்ளா ளென்பது கருத்து. பண்பாகிய இற்பிறப்பு முதலியவற்றை விலக்காது உடன்பட்டு அவற்றிற்கு இடமான பண்பியாகிய பிராட்டியை விலக்கியதனால், வெளிப்படையாக மறுத்த பொருள்விலக்கணி: இது, வடமொழியில், தர்மயாக்ஷேபாலங்கார மெனப்படும். பிராட்டியினிடமுள்ள இற்பிறப்பு முதலிய குணங்களின் சிறப்பைத் தெரிவித்தல், இவ்வாறு கூறியதன்பயனும். இற்பிறப்புமுதலியன பிறவிடங்களினும் இங்குச் சிறந்திருத்தல் தோன்ற, 'களிநடம்புரிய' எனப்பட்டது. 'தடந்தோள்' என்றவிடத்து 'திண்டோள்' என்றும் பாடமுண்டு. (௬௨)

௬௩. கண்ணினுமுளை நீ தையல்கருத்தினுமுளை நீ வாயின்
எண்ணினுமுளை நீ கொங்கையிணைக்குவைதன்னி னொவ்வா
தண்ணல்வெங்காமனெய்தவலரம்புதொளைத்தவாறாப்
புண்ணினுமுளை நீ நின்னைப்பிரிந்தமைபொருந்திற்றாமோ.

(இ - ள்.) நீ—, தையல் - பிராட்டியினது, கண்ணினும் - கண்களிலும், உளை - (எப்பொழுதும்) இருக்கின்றாய்; கருத்தினும் - மனத்திலும், நீ உளை—; வாயின் எண்ணினும் - வாயினாலெண்ணுதலிலும், நீ உளை—; கொங்கை இணை குவைதன்னின் - இரண்டு தனங்களின் முகட்டிலும், ஒவ்வாது - (அவளது திருமேனியின் மென்மைக்குச் சிறிதும்) ஒத்திராதபடி, அண்ணல் வெம் காமன் எய்த - பெருமையையுங் கொடுமையையுமுடைய மன்மதன் பிரயோகித்த, அலர் அம்பு - புஷ்பபாணங்கள், தொளைத்த - தைத்து ஊடுருவியதனாலுண்டான, ஆறா - ஆறாத, புண்ணினும் - புண்களிலும், நீ உளை—; (இங்ஙனமிருக்க), நின்னை பிரிந்தமை - உன்னைப் (பிராட்டி) பிரிந்தனளென்பது, பொருந்திற்று ஆமோ - பொருந்தியவார்த்தையாகுமோ? [ஆகாது என்றபடி]; (எ - று.)

பிராட்டி எப்பொழுதும் மனம் மொழி மெய் என்னும் மூன்றுகாணங்களாலும் உன்னைச் சிறிதும் பிரியாதிருக்கின்றாள் என்பது கருத்து. அவள் கண்களில் இராமபிரா னுளனாதல், உருவெளித்தோற்றத்தால். அவள் எப்பொழுதும் இராமநாமோச்சாரணஞ் செய்துகொண்டிருத்தலால், 'வா

யினுமுளே' என்றார். 'கொங்கையிணைக்குவைதன்னின் புண்ணின் உளே' என்றது - அவள் பாவனையினால் இராமனைத் தழுவுதலுடையா ளென்பதுபற்றி. இராமனாகிய ஒருபொருளைப் பலவிடங்களிலிருப்பதாகச் சொன்னது, சிறப்புநிலையணி: இதனை, வடநூலார் விசேஷாலங்கார மென்பர். இக்காரணத்தைக்கொண்டு ராமவிரஹத்தை விலக்கியது, காரணவிலக்கணி. எண் - எல்லை. கருத்தின் எண்ணினும் எனப் பிரித்துக்கூட்டுதலுமாம். அலரம்பு - தாமரைமலர், அசோகமலர், மாமலர், மல்லிகைமலர், நீலோற்பலமலர் என்னும் ஐந்தும். தொளைத்த புண் - பெயரெச்சம் காரணப்பொருளது. உளே - உண்மையென்னும்பண்பினடியாப்பிறந்த முன்னிலை யொருமைக் குறிப்புமுற்று. (௬௩)

௬௪. வேலையுளிலங்கையென்னும்விரிநகரொருசார்விண்டோய்
காலையுமாலைதானுமில்லதோர்கனகக்கற்பச்
சோலையங்கதனினும்பிபுல்லினாற்றொடுத்ததூய
சாலையினிருந்தாளையதவஞ்செய்ததவமாந்தையல்.

(இ - ள்.) ஐய - ஸ்வாமி! தவம் செய்த தவம் ஆம் தையல் - தவந்தான் செய்ததொரு தவத்தின் வடிவமாகிய பிராட்டி,—வேலையுள்-கடலினிடையில், இலங்கை என்னும் விரி நகர் - லங்கையென்னும் பெரியபட்டணத்தின், ஒரு சார் - ஒருபுறத்திலே,—விண் தோய் - ஆகாயத்தை யளாவிவளர்ந்த, காலையும் மாலை தானும் இல்லது - (சூரியகிரணங்கள் நுழைதல்செய்தறியாமையால்) உதயகாலமும் அஸ்தமனகாலமுந் தெரியாதிருப்பதாகிய, ஓர் - ஒரு, கனகம் கற்பம் - பொன்மயமான கல்பகவிருக்ஷங்களையுடைய, சோலை அங்கு அதனின் - பூஞ்சோலையினிடத்தில்,—நம்பி புல்லினால் தொடுத்த தூய சாலையின் இருந்தாள் - உமது தம்பியாகிய லக்ஷ்மணன் புற்களினால் அமைத்த பரிசுத்தமான பர்ணசாலையிலே இருந்தாள்; (எ - று.)

விண்டோய் சோலை என இயையும். கற்பம் = கல்பம் என்ற வடசொல்லின் விகாரம். கனகக் கற்பச்சோலை - பொன்னுலகமாகிய தேவலோகத்திலுள்ள பொன்மயமான கற்பகவிருட்சங்கள் பொருந்திய இந்திரனதுநந்தனவன மென்னும் பூஞ்சோலைக்குச் சமமான அசோகவன மென்க: ஆகவே, 'கற்பச்சோலை' என்பது - இங்கு, உவமவாகுபெயராம். இராவணன் திக்விஜயஞ்செய்த காலத்தில் தேவலோகத்திலிருந்து கற்பகவிருட்சங்களைப் பெயர்த்துக்கொணர்ந்து இச்சோலையில் வைத்தன னென்பதுபற்றி 'கனகக் கற்பச்சோலை' என்றதாகவுங் கொள்ளலாம். முந்தினவகையில் 'காலையும் மாலைதானுமில்லது' என்பதற்குக் கருத்து - மரங்களி னடர்த்தியாற் சோலை எப்பொழுதும் இருண்டுள்ள தென்பது. பிந்தினவகையில் இந்த அடைமொழி - பொன்மயமான கற்பகவிருட்சங்களி னொளிச்சிறப்பை விளக்குவதாம். அதனின் உம்பி என்றும் பிரிக்கலாம். கோதாவரிநதிதீரத்திற் பஞ்சவடியென்னுஞ் சோலையில் இலக்குமணனா லமைக்கப்பட்ட பர்ணசாலையி

விருந்த சீதையை இராவணன் அச்சாலையுடனே பெயர்த்தெடுத்துக் கொண்டு போய் அசோகவனத்திற் சிறைவைத்தன னென்பதை யுணர்க: இதன் விவரத்தை, அடுத்த கவியிலுங் காண்க. பதிவிரதாதருமமென்னுந் தவம் தான் செய்ததொரு தவத்தின் பயனாக வுள்ளவ ளென்பார், 'தவஞ்செய்த தவமாந் தையல்' என்றார்: கற்புநிலையை யாதரித்தலிற் சிறந்தவ ளென்பது, தேர்ந்த கருத்து. (௬௪)

௬௫. மண்ணொடுங்கொண்டுபோனான்வானுயர்கற்பினாடன்
புண்ணியமேனிதீண்டவஞ்சுவானுலகம்பூத்த
கண்ணகன்கமலத்தண்ணல்கருத்திலாட்டொடுதல்கண்ணி
னெண்ணருங்கூறாய்மாய்தியென்றதோர்மொழியுண்டென்பான்.

(இ - ள்.) உலகம் பூத்த - உலகங்களைப் படைத்த, கண் அகல் கமலத்து அண்ணல் - இடமகன்ற (திருமாலின் திருநாபித்) தாமரைமலரில் தோன்றிய பிரமன், (இராவணனைநோக்கி), 'கருத்து இலாள் தொடுதல் கண்ணின்- (உன்னிடம்) விருப்பமில்லாத பெண்ணை (வலியத்) தொடுதல் செய்வையானால், எண் அருங் கூறு ஆய் - எண்ணுதற்கு அரிய பிளப்புக்களாய் (த்தலைகள்) வெடித்து, மாய்தி - இறப்பாய்,' என்றது - என்று இட்டதாகிய, ஓர் மொழி- ஒரு சாபவார்த்தை, உண்டு - உளது; (ஆதலால், இராவணன்), வான் உயர் கற்பினாள் தன் - மிகச்சிறந்த கற்புநிலையையுடையவளான பிராட்டியினது, புண்ணியம் மேனி - பரிசுத்தமான திருமேனியை, தீண்ட - தொடுதற்கு, அஞ்சுவான் - அஞ்சுபவனாய், மண்ணொடும் கொண்டுபோனான் - (அவளிருந்த) நிலத்தோடு பெயர்த்து எடுத்துக்கொண்டுபோனான், என்பான்-என்று (அனுமான் பின்னுஞ்) சொல்வான்; (எ - று.)

"ஆண்டாயிடை தீயவ னாயிழையைத், தீண்டானெனுமேலுரை சிந்தை செயாத், தூண்டானெனலாமுயர்தோளவலியாற், கீண்டானிலம் யோசனை கீழொடுமேல்," "கொண்டா னுயர்தேர்மிசை," "வாங்கினன்றேரிடை வைத்தமண்ணொடும், வீங்குதோள்மீக்கொடு விண்ணினேகினன்," "தீண்டவஞ்சுமா, லாரியன்றேவியையரக்க னன்மலர்ப், பேருலகளித்தவன் பிழைப்பில்சாபத்தால" என்று ஆரணியகாண்டத்திலும்; "தீண்டுவானெனி னித்தனை சேண்பக, லீண்டுமோவுயிர்மெய்யி னிமைப்பின்முன், மாண்டுதீர்வனென்றே நிலம் வன்மையாற், கீண்டுகொண்டெழுந் தேகினன் கீழ்மையான்," "மேவு சிந்தையின் மாதரை மெய்தொடிற், றேவுவன்றலைசிந்துகதீதெனப், பூவின் வந்த புராதனனேபுகல், சாவமுண் டெனதாருயிர்தந்ததால்" என்று இக்காண்டத்துச் சூளாமணிப்படலத்திலும்; "தருபதஞ்சமைந்த முக்கோற் றுபதவடி வங்கொள்ளாத், திருவினைநிலத்தொடேந்தித் தென்றிசையிலங்கைபுக்கான்" என்று யுத்தகாண்டத்திலும் வருதல் காண்க. இங்ஙனஞ் சீதையைத் தரையோடுபெயர்த்து எடுத்துக்கொண்டு போனதாக முதனூலாகிய ஸ்ரீவால்மீகத்துக் கூறப்பட்டதில்லையாகிலும், பிறநூன்மேற்கோள்கொண்டு இங்ஙனங் கூறினர்போலும். இப்படி முதனூலுக்குச் சிறிதுவேறுபடக் கூறுவதும் வழிநூலிலக்கணமாம்.

முன்னொருகாலத்திலே பிரமனை வந்தனஞ்செய்தற் பொருட்டு அவன்து இருப்பிடத்தைக் குறித்துச் சென்றுகொண்டிருந்த புஞ்சிகஸ்தலை யென்னும் அப்ஸரஸ்ஸ்த்ரீயை ஆகாசமார்க்கத்திலே கண்ணுற்ற இராவணன் அவளைக் காதலித்து வலியக்கற்பழிக்க, அங்ஙனங் கலங்கின நிலையோடு பிரமனிருக்கையைச் சார்ந்த அவளை நோக்கிய நான்முகக்கடவுள் நிகழ்ந்ததையுணர்ந்து கடுங்கோபங்கொண்டு இராவணனைக்குறித்து 'இனி நீ அயல்மாதை வலியக் கற்பழிப்பையாயின், அப்பொழுதே உன்தலை நூறுகப்பிளந்து அழிக' எனச் சபித்திட்டனன் என்ற வரலாறு, இங்கு உணரத்தக்கது. வானுயர் - ஒரு பொருட்பன்மொழி. (௬௫)

௬௬. நீண்டிலஅன்னனும்வாய்மைதிசைமுகன்செய்தமுட்டை
கீண்டிலதனந்தனுச்சிகிழிந்திலஎழுந்துவேலை
மீண்டிலசுடர்கள்யாவும்விழுந்திலவேதஞ்செய்கை
மாண்டிலஎன்னுந்தன்மைவாய்மையாலுணர்திமன்னோ.

(இ - ள்.) தீண்டிலன் என்னும் வாய்மை - (பிராட்டியை இராவணன்) தொட்டானில்லை யென்னும் வார்த்தையை,—'திசைமுகன் செய்த முட்டை - நான்குமுகங்களையுடையவனான பிரமன் படைத்த அண்டகோளம், கீண்டிலது - பிளந்ததில்லை: அனந்தன் உச்சி - (உலகத்தைத் தாங்குகின்ற) ஆதிசேஷனது தலை, கிழிந்திலது - வெடித்ததில்லை: வேலை - கடல்கள், எழுந்து மீண்டில - பொங்கி மேல்வந்தன வில்லை: சுடர்கள் யாவும் - (சூரியன் சந்திரன் நக்ஷத்திரங்கள் முதலிய) ஒளிகளெல்லாம், விழுந்தில - கீழே விழுந்தனவில்லை: வேதம் செய்கை மாண்டிலது - வேதமும் (அவ்வேதவிதிப்படி) செய்யுங் கருமமும் அழிந்ததில்லை', என்னும் தன்மை - என்கிற இத்தன்மைகள், வாய்மையான் - மெய்யாயிருத்தலை நோக்கி அதனால், உணர்தி - அறிவாயாக; (எ - று.)—மன், ஓ - ஈற்றசை.

இராவணன் பிராட்டியைக் கையால் தொட்டிருப்பானானால் அண்டங் கீண்டதாம், அனந்தனுச்சி கிழிந்ததாம், வேலைகள்யாவும் எழுந்து மீண்டனவாம், சுடர்கள்யாவும் விழுந்தனவாம், வேதமும் வைதிக கிரியையும் மாண்டனவாம் என்பதற்கு ஐயமில்லை: இவையெல்லாம் அங்ஙனம் ஆகாததனாலேயே பிராட்டியை இராவணன் தொட்டானில்லை யென்பதை ஐயந்திரிபற அறியலாம் என்று கருத்து. அநந்தன் - பிரளயகாலத்திலும் அழிவில்லாமல் எப்பொழுதும் நித்தியனாயிருப்பவனென்று பொருள்படும் வடசொல்; ந அந்த என்று பிரியும். வேதம் மாண்டிலது, செய்கை மாண்டிலது எனத் தனித்தனி இயைக்க. (௬௬)

௬௭. சோகத்தாளாயநங்கைகற்பினாற்றொழுதற்கொத்த
மாகத்தார்தேவிமாரும்வான்சிறப்புற்றார்மற்றைப்
பாகத்தாளிப்போதீசன்மகுடத்தாள்பதுமத்தாளு
மாகத்தாளல்லண்மாயனாயிரமெளலிமேலாள்.

(இ - ள்.) சோகத்தாள் ஆய - (உன்னைப்பிரிந்ததனாலாகிய) துக்கத்தை யுடையவளான, நங்கை - பிராட்டியொருத்தி, கற்பினால் - கற்புநிலைமை குன்றாதிருத்தலால்,—மாகத்தார் தேவிமாரும் - பெரிய வானத்தில் வசிப்பவர்களாகிய (இந்திரன் பிரமன் முதலிய) தேவர்களது மனைவிகளான இந்திராணி சரசுவதி முதலியோரும், இப்போது—, தொழுதற்கு ஒத்த வான் சிறப்பு உற்றார் - (அவரவர்) வணங்குதற்கு ஏற்ற மிக்க பெருமையை அடைந்தார்கள்; ஈசன் - பரமசிவனது, மற்றை பாகத்தாள் - மற்றொருபாகமாகிய இடப்புறத்தி லுள்ளவளான உமாதேவி, மகுடத்தாள் - (இப்பொழுது அப்பெருமானது) தலைமே லிருக்கத்தக்க சிறப்பை யடைந்தாள்; பதுமத்தாளும் - செந்தாமரைமலரில் வசிப்பவளான திருமகளும், மாயன் ஆகத்தாள் அல்லள் - இனித் திருமாலின் திருமார்பில் வீற்றிருக்கத் தக்கவளல்லள், ஆயிரம் மௌலி மேலாள் - (அப்பெருமானது) ஆயிரந்திருமுடிகளின்மேலும் இருக்கத்தக்கவளானாள்; (எ - று.)

ஓரினத்தாரில் ஒருவரது நன்மைதீமைகளினால் அவ்வினத்தவர்க்கெல்லாம் பெருமைசிறுமைகளுண்டாதல், இயல்பு; அங்ஙனம், மகளிருட் சீதாபிராட்டியின் கற்புநிலையினால் இந்திராணி முதலிய மாதர்களனைவரும் சிறப்படைந்தன ரென்பார், 'நங்கைகற்பினால் தேவிமாரும் வான்சிறப்புற்றார், பாகத்தாள் மகுடத்தாள், பதுமத்தாள் மௌலிமேலாள்' என்றார். 'ஈசன் மகுடத்தாள்', 'மாயனுபிரமௌலிமேலாள்' என்பவற்றின் கருத்து - அவரவர் தலைமேற்கொண்டு கொண்டாடத்தக்க சிறப்பையுற்றன ரென்பது. 'நங்கைகற்பினால்' என்றதை எல்லாவாக்கியங்களிலுங் கூட்டுக; முதனிலைத்தீவகம். இங்த 'மகுடம்' என்பது - தனிபாகுபெயராய், சிரசையுணர்த்திற்று. மாகம் - மஹாகம் என்னும் வடமொழியின் விகாரம்; பெருவானம் என்று பொருள். அர்த்தநாரீசுவரமூர்த்தத்திலே சிவபிரானது பாகம் வலப்புற மாதலால், இடப்புறம் 'மற்றைப்பாகம்' எனப்பட்டது. 'ஆயிரமௌலி' என்றது - விராட்ஸ்வரூபத்தின் நிலைமையைக் கருதி. (சு௭)

சு௮. இலங்கையைமுழுதுநாடியிராவணனிருக்கையெய்திப்
பொலங்குழையவரையெல்லாம்பொதுவுறநோக்கிப்போந்தே
னலங்குதண்சோலைபுக்கேனவ்வழியணங்கனாளைக்
கலங்குமெண்டிரையிற்றாயகண்ணினீர்க்கடலிற்கண்டேன்.

(இ - ள்.) (யான்), இலங்கையை முழுதும் நாடி - இலங்காபுரி முழுவதுந் தேடிப் பார்த்து, இராவணன் இருக்கை எய்தி - இராவணனது இருப்பிடத்தை அடைந்து, பொலம் குழையவரை எல்லாம் - (அங்குஉள்ள) பொன்னாலாகிய குழை யென்னுங் காதணியை யுடையவர்களான மகளிரையெல்லாம், பொதுஉற நோக்கி போந்தேன் - பொதுவாகப் பார்த்துக்கொண்டே சென்று, அலங்கு தண் சோலை புக்கேன் - அசைகின்ற குளிர்ந்த அசோக வனத்திற் பிரவேசித்தேன்; அவ்வழி - அவ்விடத்தில், அணங்கு அனாளை -

திருமகள்போன்றவளான சீதாதேவியை, கலங்கு தெள் திரையிற்று ஆய - அலைகின்ற தெளிந்த அலைகளையுடையதாகிய, கண்ணின் நீர் கடலின் - கண்ணீராகிற கடலின் நடுவிலே, கண்டேன்—; (எ - று.)

சீதை இராவணன் மாளிகையினுள்ளே யிருந்தில ளென்பது, முன்னிரண்டடியினுற் போதரும்; அதனால், அவள் அவனுக்குச் சிறிதும் வசப்பட்டில ளென்பதைப் பெறவைத்தார். 'அவளைக் கண்ணீர்க்கடலிற் கண்டேன்' என்றதனால், அவள் இராமவிரகத்தாற் சோகக்கடலில் ஆழ்ந்திருக்குந் துன்ப நிலையை விளக்கியபடியாம். இருக்கை - அரண்மனை. அணங்கு அனாள் - (எமது) குலதெய்வம் போன்றவள் என்றுமாம். திரையிற்று - இன்சாரியையும் 'று' விகுதியும் பெற்றுவந்த ஒன்றன்பாற்குறிப்பு வினையாலணையும்பெயர். திரையின் தாய எனப் பதம்பிரித்து - அலைகளோடு பரவிய என்றுமாம்; தாய = தாவிய. (சுஅ)

சுகூ. அரக்கியரளவற்றுருமலகையின்குழுவுமஞ்சச்
செருக்கினல்கண்டுசெய்யமெய்க்கனறீக்கச்சீர்த்த
விரக்கமென்றொன்றுதானேயேந்திழைவடிவமெய்தித்
தருக்கியசிறையுற்றன்னதகையளந்தமியளம்மா.

(இ - ள்.) அ தமியள் - தனியளாகிய அப்பிராட்டி,— அரக்கியர் அளவு அற்றுஉரும் - அளவில்லாத [மிகப் பல] ராக்ஷசிகள், அலகையின் குழுவும் அஞ்ச - பேய்களின் கூட்டமும் அஞ்சும்படி, செருக்கு - கர்வித்துச் செய்கிற, இனல் - துன்பங்களை, கண்டு - அனுபவித்துக்கொண்டு,—செய்ய மெய் - (தனது) சிவந்த உடம்பை, கனல் தீக்க - (உன்னைப் பிரிந்த துன்பமாகிய) நெருப்பு எரிக்க,—சீர்த்த இரக்கம் என்ற ஒன்று தானே - சிறந்த கருணை ரஸமென்கிற ஒரு குணமே, ஏந்து இழை வடிவம் எய்தி - தரித்த ஆபரணங்களையுடையாளொரு பெண்ணின் உருவத்தை யடைந்து, தருக்கிய சிறை உற்று அன்ன - கொடுமைமிக்கதோர் ருஞ்சிறைக்காவலில் அகப்பட்டிருந்தாற் போன்ற, தகையள் - தன்மையுடையவளாயிருக்கின்றாள்; (எ - று.)— அம்மா - ஈற்றசை; இரக்கக்குறிப்புமாம்.

குழுவும்-உம்மை, அப்பேய்களின் எதற்குமஞ்சாநெஞ்சுபடைத்ததன்மையை அறிவித்தது. செருக்கு இனல் - வினைத்தொகை. இனல் - இன்னல் என்பதன் தொகுத்தல். அலகையின் குழுவுமஞ்ச அளவற்றுஉர் அரக்கியர் செருக்கு இன்னல் என்க. கண்டு, தீக்க என்னும் எச்சங்கள், தகையள் என்பதனோடு முடியும். பிராட்டியினது திருமேனியின்நிறம் பொன்னுருக்கன்னதாதலால், 'செய்ய மெய்' எனப்பட்டது; இனி, இன்னல்செய்யக்கண்டு என மொழி மாறியும் பொருள்கொள்ளலாம்; முந்தினபொருளில்,'செய்ய' என்பது-செம்மை யென்னும் பண்பினடியாப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம்; இப்பொருளில், செய் என்ற வினைப்பகுதியின்மேற் பிறந்த தெரிநிலைவினையெச்சம். ஏந்திழை - வினைத்தொகையன்மொழி. (சுகூ)

௭0. மாண்பிறந்தமைந்தகற்பின்வாணுதனின்பால்வைத்த
சேண்பிறந்தமைந்தகாதல்கண்களிற்றெவிட்டித்தீராக்
காண்பிறந்தமையானீயேகண்ணகன்ஞாலந்தன்னு
ளாண்பிறந்தமைந்தசெல்வமுண்டனையாதியன்றே.

(இ - ள்.) மாண் பிறந்து அமைந்த - (நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு முதலிய) பெருங்குணங்கள் இயல்பிலே உண்டாகிப் பொருந்தப்பெற்ற, கற்பின் - கற்புநிலைமையையுடைய, வாள் நுதல் - ஒளியுள்ள நெற்றியையுடையவளான பிராட்டி, நின்பால் வைத்த - உன்னிடம்வைத்துள்ள, சேண் பிறந்து அமைந்த காதல் - உயர்வுள்ளதாய்ப்பொருந்திய விருப்பத்தை, கண்களின் - கண்களினால், தெவிட்டி தீரா - தெவிட்டிவிடாமல், காண் - பார்த்தற்கு, பிறந்தமையான் - (நீ) அவதரித்ததனால்,—நீயே - நீ ஒருவனே, கண் அகல் ஞாலந்தன்னுள் - இடமகன்ற நிலவுலகத்தில், ஆண்பிறந்து அமைந்த செல்வம் உண்டனை ஆதி - ஆண்மகனாய்ப்பிறந்து பொருந்தியதன் பயனாகிய பாக்கியத்தை அடைந்தவனாகின்றாய்; (எ - று.)—அன்றே - ஈற்றசை; தேற்றமுமாம்.

சற்புநிலைமையிற்கலங்குதலில்லாத பிராட்டியினது பெருங்காதலைக் காணப்பெற்றதனால், நீயே புருஷோத்தமனானாவை யென்பதாம். மாண் - மாண்பு என்பதன் விகாரம். வாணுதல் - அன்மொழித்தொகை. காதல் காண் என இயையும். காண் - காண என்பதன் விகாரம்; முதனிலைத்தொழிற் பெயராகக்கொண்டு, நான்காம்வேற்றுமைத்தொகை யென்னவுமாம். தெவிட்டித் தீர்தல் - இவ்வளவுகண்டது போதுமென்று வெறுத்துவிடுதல். நீயே, ஏ - பிரிநிலை. ஆதி - முன்னிலையொருமைமுற்று. மாண்பு இறந்து அமைந்த எனப்பிரித்து, மாட்சிமைக்குணங்கள் மிக்குஅமைந்த என்னவுமாம். இனி, இச்செய்யுளுக்கு - சிறப்பாக உடன்பிறந்தமைந்த கற்பையுடைய பிராட்டி தான் உன்பக்கல்வைத்துள்ள மேன்மைபொருந்திய காதல் தெவிட்டுதலால் [மிகநிறைதலால்] இடைவிடாது (பாவனையால்) நின்னைக் கண்களாற்காணுமாறு பிறந்துள்ளதனால், நீயே உலகத்தில் ஆண்பாலாகப்பிறந்து அடையவேண்டிய செல்வத்தை யடைந்தனையாகின்றாய் என்று உரைகூறவும்படும். (௭0)

௭௧. அயிர்ப்பிலர்காண்பார்முன்னுமறிந்திலரெனினுமைய
வெயிற்புனையிலங்கைமூதூரிந்திரன்யாக்கைக்கேற்ற
மயிர்ப்புரையயலினுருமைந்தருநாளுமாங்கே
யுயிர்ப்பொடுமுயிரினோடுமூசனின்றுடுவாரும்.

(இ - ள்.) ஐய - சுவாமி!—எயில் புனை - மதில் சூழ்ந்த, இலங்கை - லங்கையென்கிற, மூது ஊர் - பழையவூராகிய, ஆங்கே - அவ்விடத்தில்,—நாளும் - நாள்தோறும், உயிர்ப்பொடும் - பெருமூச்சுடனேயும், உயிரினோடும் - குற்றுயிருடனேயும், ஊசல் நின்று ஆடுவாரும் - (வருவதும் போவதுமான) ஊஞ்சல்போல அலைந்துநிற்பவர்களாகிய, இந்திரன் யாக்கைக்கு ஏற்ற

மயில் புரை இயலினாரும் - இந்திரனது உடம்பிற்குப் பொருந்திய மயிலை யொத்த சாயலை யுடையவர்களான தெய்வமகளிரும், மைந்தரும் - தேவர் களும், முன்னும் அறிந்திலர் எனினும் - முன்னே (பிராட்டியை) அறியாதவர் களாயினும், அயிர்ப்பு இலர் காண்பார்-(அவளது கற்பின் நிலைமையைச்) சந் தேகமில்லாமற் கண்டறிவார்; (எ - று.)

அயிர்ப்பு - ஐயப்படுதல்; தொழிற்பெயர். இலர்-முற்றெச்சம். வெயில் புரை எனப்பிரித்தல், மோனைத்தொடைக்குப் பொருந்தாது. 'இந்திரன்யாக் கைக்கு ஏற்ற மயிற்புரையியலினார்' என்றது - இந்திரனது போகத்துக்குப் பொருந்திய மகளிர் என்றபடி; இனி, இதற்கு - இந்திரனது ஆயிரங்கண் களினாலும் பார்த்தற்குத் தக்க கட்டழகுடையவர் என்றுங் கருத்துக்கொள்ள லாம். உயிர்ப்பொடும் உயிரினோடும் ஊசலின்றுடுதல் - இராவணன் முத லிய இராக்கதர்க ளிழைக்கும் இடையூற்றின் மிகுதியா லென அறிக. இனி, இக்கவிக்கு - இலங்கைக்கு இந்திரனாகிய இராவணனது உடம்பைத் தழுவு தற்கு ஏற்ற அவன்மனைவிமாராகிய மகளிரும் மற்றைஇராக்கதரும் ஜாநகியை முன்னே அறியாதவர்களாயினும் (அவள்படும் விரகவேதனையை) ஐயமின்றிக் கண்கூடாகக்கண்டு (தாம்இரங்கி) நாடோறும் அவ்வூரிற் பெருமூச்சோடுங் குற்றுயிரோடும் மனமலைந்து பரிதவிப்பா ரென்று பொருள்கூறுவாரு முளர். 'இந்திராணியற்கைக்கு' என்று பாடமானால் - இந்திரனது பெருந்தன்மைக்கு ஏற்ற மகளி ரென்று பொருள். இனி, முதலடிக்கு, எனினும் - என்னைக் காட்டிலும், அயிர்ப்பிலர் காண்பார்-சந்தேகமின்றி அறிவார்; முன்னும் அறிந் திலர் - முற்காலத்திலும் இவளைப்போன்றவளைக் கண்டாரில்லை என்றும் உரைக்கலாம். (எக)

எஉ. தையலைவணங்கற்கொத்தவிடைபெறுந்தன்மைநோக்கி
ஐயநானிருந்தகாலையலங்கல்வேலிலங்கைவேந்த
னெய்தினனிரந்துகூறியிறைஞ்சினனிருந்துநங்கை
வெய்துரைசொல்லச்சீறிக்கோறன்மேற்கொண்டுவிட்டான்.

(இ - ள்.)ஐய - சுவாமி!—நான்—, தையலை - பிராட்டியை, வணங்கற்கு (எதிர்சென்று) வணங்குதற்கு, ஒத்த - தகுதியான, இடை - சமையத்தை, பெறும் தன்மை - பெறும்படியான தன்மையை, நோக்கி - எதிர்பார்த்து, இருந்த காலை - (அவ்வசோகவனத்தில்) இருந்தபொழுது,— அலங்கல் - வெற்றிமாலையைச் சூடிய, வேல் - வேலாயுதத்தையுடைய, இலங்கை வேந் தன் - லங்காராஜனான ராவணன், எய்தினன் - அங்குவந்து, இரந்து கூறி- (பிராட்டி தன்னைக்காமிக்கும்படி) பிரார்த்தித்து (பலவார்த்தைகள் சொல்லி,) இறைஞ்சினன் இருந்து - (அவளை) வணங்கி நின்று, நங்கை வெய்து உரை சொல்ல - பிராட்டி கடுஞ்சொற்களைச் சொல்ல (க்கேட்டு), சீறி-கோபித்து, கோறல் மேற்கொண்டுவிட்டான் - (அவளைக்) கொல்லத் தலைப்பட் டான்; (எ - று.) (எஉ)

எங. ஆயிடையணங்கின்கற்புமைபநின்னருளுஞ்செய்ய
தூயநல்லறனுமென்றிங்கிளையனதொடர்ந்துகாப்பப்
போயினனரக்கிமாரைச்சொல்லுமின்பொதுவினென்றாங்
கேயினனவரெலாமென்மந்திரத்துறங்கியிற்றார்.

(இ - ள்.) ஐய—! அ இடை - அப்பொழுது, அணங்கின் - பிராட்டியினது, கற்பும் - கற்புநிலையும், நின் அருளும் - உனது கருணையும், செய்ய தூய நல் அறனும் - செவ்வையாகிய பரிசுத்தமான நல்ல தருமமும், என்ற இங்கு இனையன - என்கிற இவைகளெல்லாம், தொடர்ந்து காப்ப - (பிராட்டியினுயிரை) விடாமற்பாதுகாக்க, (அவளைக் கொல்லாதுவிட்டு), ஆங்கு - அப்பொழுது, (இராவணன்), அரக்கிமாரை - (அருகிற் காவல்செய்துநின்ற) ராக்ஷசிகளைநோக்கி, சொல்லுமின் என்று-'(நீங்கள் சீதைக்குப்) புத்திசொல்லி என்கருத்துக்கிணங்கச்செய்யுங்கள்' என்று, பொதுவின் ஏயினன் - பொதுவாகக் கட்டளையிட்டுவிட்டு, போயினன் - (தன்னிடத்திற்குச்) சென்றான்; அவர் எலாம் - அவ்வரக்கியரெல்லாம், என் மந்திரத்து - யான் உச்சரித்த மந்திரத்தின் வலிமையால், உறங்கி இற்றார் - தூங்கிவிட்டார்கள் ; (எ - று.)

இங்கு - அசை. பொதுவின் சொல்லுமின் என்று இயைத்து, மனிதாது இழிவையும் எனது பெருமையையும் பொதுப்பட இவட்கு எடுத்துக் கூறி இவளை இசைவியுங்க ளென்றும் பொருள்கொள்ளலாம். அரக்கியர் கண்விழித்திருக்கையில் தான்சென்று பிராட்டியுடன் பேசவிடா ராதலாலும், இரகசியம் வெளிப்பட்டுவிடு மாதலாலும், அநுமான் மந்திரபலத்தால் அவர்களை உறங்கும்படிசெய்தன னென்க; "காண்டற் கொத்த காலமுமீதே தெறு காவல், தூண்டற்கொத்த சிந்தைபிறருந் துயில்கில்லார், வேண்டத் துஞ்சா ரென்றொருவிஞ்சைவினைசெய்தான், மாண்டற்குற்றாரென வெல்லாமயர் வுற்றார்" என்று உருக்காட்டுபடலத்தில் வந்தமை யுணர்க. (எங)

எச. அன்னதோர்பொழுதினங்கையாருயிர்துறப்பதாக
வுன்னினள்கொடியொன்றேந்திக்கொம்பொடுமுறைப்பச்சுற்றித்
தன்மணிக்கழுத்திற்சார்த்துமளவையிற்றடுத்துநாயேன்
பொன்னடிவணங்கிநின்றுநின்பெயர்புகன்றபோழ்தில்.

இதுவும், மேற்கவியும் - குளகம்.

(இ - ள்.) அன்னது ஓர் பொழுதில் - அத்தன்மையதான சமயத்தில், நங்கை - பிராட்டி, ஆர் உயிர் துறப்பது ஆக - அருமையான (தனது) உயிரை விட்டிடுவதாக, உன்னினள் - நினைத்தவளாய், கொடி ஒன்று ஏந்தி - ஒரு கொடியை யெடுத்து, கொம்பொடும் உறைப்ப சுற்றி - ஒருமரத்தின் கிளையிலே உறுதியாகக் கட்டி, தன் மணி கழுத்தில் - தனது அழகிய கழுத்திலே, சார்த்தும் அளவையின் - சேர்த்துச் சுருக்கிட்டுக்கொள்ளுஞ் சமயத்தில், நாயேன் - நாய்போற் கடைப்பட்டவனாகிய அடியேன், தடுத்து - (அதனைத்) தடைசெய்து, பொன் அடி வணங்கி நின்று - அழகிய (அப்பிராட்டியின்)

திருவடிகளை நமஸ்கரித்து நின்று, நின் பெயர் புகன்ற பொழ்தில் - உனது திருநாமத்தைச் சொன்ன பொழுதில்,—(எ - று.)

மணிக்கழுத்து - இரத்தினாபரணங்களை யணிந்த கழுத்தென்றும், பொன்னடி - பொன்னாபரணங்களை யணிந்த பாதமென்று மாம். 'நாயேன்' என்றது, பணிவினால் தன்னைத் தாழ்த்திக்கூறியது; [நைச்யாநுஸந்தாநம்.] (௭௪)

௭௫. வஞ்சனையரக்கர்செய்கையிதுவெனமனக்கொண்டேயு
மஞ்சனவண்ணத்தான்றன்பெயருரைத்தளியையென்பாற்
றுஞ்சுறுபொழுதிறந்தாய்துறக்கமென்றுவந்துசொன்னாண்
மஞ்செனவனமென்கொங்கைவழிகின்றமழைக்கணீராள்.

(இ - ள்.) மஞ்சு என - (மலைமேற்பெய்கிற) மழைபோல, வனம் மென் கொங்கை வழிகின்ற - அழகிய மென்மையான (தனது) தனங்களின் மேற் பெருகுகின்ற, மழை கண் நீராள் - குளிர்ந்த கண்களின் நீரையுடையவளாகிய பிராட்டி,—இது வஞ்சனை அரக்கர் செய்கை என மனம் கொண்டேயும் - யான் இவ்வாறு செய்ததை வஞ்சனையையுடைய இராக்கதரது மாயச் செய்கையா மென்று மனத்தில் நினைத்துச் சந்தேகித்தும், (என்னைநோக்கி), 'என்பால் அளியை - என்பக்கல் அருளுடையவன் நீ; துஞ்சுறு பொழுதில் - (யான்) இறக்கும்பொழுதில், அஞ்சனம் வண்ணத்தான் தன் பெயர் உரைத்து - மைபோலுங் கரிய திருநிறமுடைய ஸ்ரீராமனது திருநாமத்தைச் சொல்லி, துறக்கல் தந்தாய் - (யான் மரணத்தை) ஒழிதலைச் செய்தாய்', என்று உவந்து சொன்னாள் - என்று மகிழ்ச்சியோடு சொன்னாள்; (எ - று.)

'துறக்கமென்றும்' எனப் பாடமோதி, 'துஞ்சுறுபொழுதில் - நான் இறக்குஞ்சமயத்தில், அஞ்சனவண்ணத்தான்தன் பெயர் உரைத்து - இராமபிரானது திருநாமத்தைச் சொல்லி, என்பால் அளியை தந்தாய் - என்பக்கல் கருணையைச் செய்தாய்; துறக்கம் - (அக்கருணை) பரலோக இன்பத்துக்குச் சமமானது, என்று உவந்து சொன்னாள்' என வுரைப்பாருமுளர். "அரக்கனேயாக வேறோரமரனேயாக வன்றிக் குரக்கினத்தலைவனேதா னுருக கொடுமையாக, விரக்கமேயாக வந்திங் கெம்பிரானுமஞ்சொல்லி, யுருக்கினனுணர் வைத்தந்தா னுயிரிதினுதவியுண்டோ" என்று உருக்காட்டுபடலத்தில் வந்த செய்யுள் இங்குக் காணத்தக்கது. மஞ்செனவனமென்கொங்கை வழிகின்ற மழைக்கணீராள் — "தழைத்தபொன்முலைத்தடங்கடந். தருவிபோய்த்தாழப், புழைத்தபோல நீர் நிரந்தரம் பொழிகின்ற பொலிவா, லிழைக்கு நுண்ணிய மருங்குலா ளிணைநெடுங்கண்கள், மழைக்கணென்பது காரணக்குறியென வகுத்தாள்" என்றார் காட்சிப்படலத்தும். (௭௫)

௭௬. அறிவினிற்றேறிச்சொன்னபேரடையாளம்யாவுஞ்
செறிவுறநோக்கிநாயேன்சிந்தையிற்றிருக்கமின்மை
முறிவுறவெண்ணிவண்ணமோதிரங்காட்டக்கண்டா
ளிறுதியினுயிர்தந்தீயுமருந்தொத்ததனையதெந்தாய்.

(இ - ள்.) எந்தாய் - எமது தலைவனே!—சொன்ன - (அடியேன்) சொன்ன, பேர் அடையாளம் யாவும் - பெரிய அடையாளங்களை யெல்லாம், (பிராட்டி), அறிவினின் தேறி - (தனது) அறிவினால் தெரிய அறிந்து, செறிவுஉற நோக்கி - (அவ்வடையாளங்களைப்) பொருத்தமாகப் பார்த்து, நாயேன் சிந்தையில் திருக்கம் இன்மை முறிவு அற எண்ணி - அடியேனது மனத்தில் மாறுபாடில்லாமையை வேறுபாடில்லாமல் அறிந்து, வண்ணம் மோதிரம் காட்ட கண்டாள் - அழகிய (நினது) மோதிரத்தை (யான் எடுத்து)க் காட்டப் பார்த்தாள்; அனையது - அந்த மோதிரமானது,—(அப்பிராட்டிக்கு), இறுதியின் உயிர் தந்து ஈயும் மருந்து ஒத்தது - மரணகாலத்தில் உயிரை இறவாதபடி நிலைநிறுத்திக் காக்கிற (மிருதசஞ்சீவியென்னும்) மருந்தைப் போன்றது; (எ - று.)

திருக்கம் - தொழிற்பெயர்; திருகு - பகுதி. அம்மோதிரத்தைக்கண்ட வுடனே பிராட்டியின் உயிர் நிலைநின்றது என்பது, நான்காமடிக்குக் கருத்து. "வீயுமுயிர்மீளும், மருந்துமெனலாகியது வாழிமணியாழி" என உருக்காட்டு படலத்தில் வந்தது முணர்க. தருமென்பது 'தந்தீயும்' என விகாரப்பட்டு வந்த தென்றுங் கொள்ளலாம்; அது, வினைத்திரிசொலெனப்படும்: பழமொழி யில் காயார் என்ற பொருளில் "காய்ந்தீயார்" என்றும், கலித்தொகையில் மதி யென்ற பொருளில் "மதித்தீத்தை" என்றும், மருளென்ற பொருளில் "மருடீவாள்" என்றும், வாராவென்ற பொருளில் "வந்தீயான்" என்றும், உறுமென்ற பொருளில் "'உற்றீயா' என்றும், நிற்றலென்ற பொருளில் "நின்றீயல்" என்றும் வந்தன காண்க. (எசு)

எஎ. ஒருகணத்திரண்டுகண்டேனொளிமணியாழியான்ற
திருமுலைத்தடத்துவைத்தாள்வைத்தலுஞ்செல்வநின்பால்
விரசமென்பதனின்வந்தவெங்கொழுந்தீயினால்வெந்
துருகியதுடனேயாறிவலித்ததுகுளிர்ப்புள்ளூற.

(இ - ள்.) செல்வ - எல்லாச்செல்வமு முடையவனே!—ஒரு கணத்து - ஒருகணப்பொழுதிலே, இரண்டு கண்டேன் - இரண்டுதன்மையை (யான்) பார்த்தேன்; (அவை என்னவெனில்,)—ஒளி மணி ஆழி - விளங்குகின்ற *இரத்தினம்பதித்த மோதிரத்தை(ப் பிராட்டி என்கையினின்றும் வாங்கி), ஆன்ற திரு முலைத் தடத்து - சிறந்த (தனது) கொங்கைகளில், வைத்தாள் - வைத்துக்கொண்டாள்; வைத்தலும் - வைத்தவுடனே, (அப்பொன்மோதிரம்),—நின்பால் விரகம் என்பதனின் வந்த வெம் கொழுந் தீயினால் - உன்னிடத்தினின்றும்பிரிந்ததென்பதனாலுண்டான வெப்பமாகிய செழித்தநெருப்பினால், வெந்து உருகியது - காய்ந்து இளகிவிட்டது; குளிர்ப்பு உள் ஊற - (மோதிரம் உடம்பிற் பட்ட மகிழ்ச்சியினா லாகிய) குளிர்ச்சி உடம்பில் மிகுத லால், உடனே ஆறி வலித்தது - அப்பொழுதே (அவ்வெப்பந்) தணிந்து இறுகி முன்போலாய்விட்டது; (எ - று.)

* மோதிரம் பிராட்டியின் விரகாக்கினியால் உருகுதலும், உடனே மகி ழ்ச்சியாலாகிய குளிர்ச்சியால் ஆறி இறுகுதலும் ஆகிய இரண்டுதன்மையை

யும் ஒருகணத்திற் கண்டே னென்றதாம். உயர்வுநவிற்சியணி. ஆன்ற,-அகன்ற வென்பதன் மரூஉ. (எஎ)

எஅ. வாங்கியவாழி தன்னைவஞ்சரூர்வந்ததாமென்
றோங்குயர்மழைக்கணீராலாயிரங்கலசமாட்டி
யேங்கினளிருந்ததல்லாவியம்பலளெய்த்தமேனி
வீங்கினள்வியந்ததல்லாலிமைத்திலளுயிர்ப்புவிண்டாள்.

(இ - ள்.) (பிராட்டி),—வாங்கிய ஆழிதன்னை - (என்கையினின்று தன் கையில்) வாங்கிக்கொண்ட மோதிரத்தை, வஞ்சர் ஊர் வந்தது ஆம் என்று - வஞ்சனையுடையவர்களான அரக்கர்களது நகரத்தில் வந்ததனால் அபரிசுத்தியடைந்ததென்று,—ஆங்கு - அப்பொழுது, உயர் மழை கண் நீரால் - மிக்க மழைபோன்ற ஆனந்தக்கண்ணீரினால், ஆயிரம் கலசம் ஆட்டி - ஆயிரங் குடம் அபிஷேகஞ்செய்து, ஏங்கினள் இருந்தது அல்லால் - இரங்கிக் கொண்டிருந்ததல்லாமல், இயம்பலள் - (ஒன்றுஞ்) சொல்லமாட்டாதவளாயினள் ; எய்த்த மேனி வீங்கினள் - இளைத்திருந்த உடம்பு பூரித்து, வியந்தது அல்லால் - அதிசயப்பட்டதல்லாமல், இமைத்திலள் - (நோக்கின கண்களை) மூடினளில்லை ; உயிர்ப்பு விண்டாள் - பெருமூச்செறிந்தாள் ; (எ - று.)

மோதிரத்தைக் கண்டு கையில் வாங்கி நோக்கியவுடனே பிராட்டியின் கண்களினின்று தாரைதாரையாகப் பெருகுகின்ற கண்ணீர்வெள்ளத்தில் அம்மோதிரம் நனைந்ததனை, வஞ்சகராகிய ராக்ஷசரது ஊரில் வந்ததனால் அதற்கு உண்டான அசுசியைப் போக்கக் கருதி அவள் பலகுடம்நீரைக்கொண்டு நீராட்டுவித்ததாக உத்பிரேக்ஷித்ததனால், தற்குறிப்பேற்றவணி. இங்கு 'ஆயிரம்' என்றது, பலவென்னும் மாத்திரையாய் நின்றது. (எஅ)

எகூ. அன்னவர்க்கடியனேனிற்பிரிந்தபினடுத்தவெல்லாஞ்
சொன்முறையறியச்சொல்லித்தோகைநீயிருந்தசூழ
லின்னதென்றறிகிலாமேயித்தனைதாழ்த்ததென்றே
மன்னநின்வருத்தப்பாடுமுணர்த்தினேனுயிர்ப்புவந்தாள்.

(இ - ள்.) மன்ன - தலைவனே !—அடியனேன் - யான், அன்னவர்க்கு - அப்பிராட்டியார்க்கு, நின் பிரிந்த பின் அடுத்த எல்லாம் - உன்னைப்பிரிந்த பின்பு நேர்ந்த செய்திகளையெல்லாம், சொல் முறை அறிய சொல்லி - யான் சொல்லும் முறையால் அறியும்படி சொல்லி,—'தோகை - மயில்போன்றவளே ! நீ இருந்த சூழல் - நீ இருந்த இடம், இன்னது என்று அறிகிலாமே - இன்னவிடத்ததென்று தெரியாமையினாலேயே, இத்தனை தாழ்த்தது - இவ்வளவுகாலம் நீட்டித்தது', என்று - என்றுஞ் சொல்லி, நின் வருத்தப்பாடும் உணர்த்தினேன் - (அவளைப்பிரிந்ததனால்) நீ வருத்தப்படுந்தன்மையையும் தெரியச்சொன்னேன் ; (அதன்பின்பு), உயிர்ப்பு வந்தாள் - உயிர்நீங்காதிருக்கப்பெற்றாள் ; (எ - று.)

அறிகிலாமே - மேயீற்று எதிர்மறைத் தெரிநிலைவினையெச்சம். வருத்தப்பாடு - முதனிலைதிரிந்த தொழிற்பெயர். 'அன்னவர்க்கு' என்றது, உயர்வுப்பன்மை. (எ௧)

௭௦. இங்குளதன்மையெல்லாமியைபுளியியையக்கேட்டா
ளங்குளதன்மையெல்லாமடியனுக்கறியச்சொன்னு
டிங்களொன்றிருப்பெனின்னேதிருவுளந்தீர்ந்தபின்னை
மங்குவெனுயிரொடென்றுன்குரைகழற்றலைக்கண்வைத்தாள்.

(இ - ள்.) இங்கு உள தன்மை எல்லாம் - இவ்விடத்திலுள்ள தன்மைகளையெல்லாம், இயைபுஉளி இயைய கேட்டாள் - முறையாற் பொருந்தக் கேட்டு, அங்கு உள தன்மை எல்லாம் - அவ்விடத்திலுள்ள தன்மைகளையெல்லாம், அடியனுக்கு-அடியேனுக்கு, அறிய சொன்னாள் - தெரியச்சொல்லி,— 'இன்னே - இனி, திங்கள் ஒன்று இருப்பென் - ஒருமாதகாலம் (இங்கே) உயிர்வைத்திருப்பேன் ; திருஉளம் தீர்ந்த பின்னை-(அதற்குள் என்னை வந்து அழைத்துப்போகச் சக்கரவர்த்தித்திருமகனுக்கு) மனமில்லையாகுமானால் அதன்பின்பு, உயிரொடு மங்குவென் - உயிரிழப்பேன்,' என்று - என்றுசொல்லி, உன் குரை கழல் தலைக்கண் வைத்தாள் - உனது ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த திருவடியைத் (தனது) தலையின்மேல் வைத்துத் (திக்குநோக்கித்) தண்டன்சமர்ப்பித்தாள் ; (எ - று.)

உயிரொடு மங்குவென் - வலிய உயிர்விடுவேனென்றபடி. குரைகழல்-வினைத்தொகையன்மொழி. கழல் - தானியாகுபெயராகவுமாம். 'இயைபுளி' என்பதில், உளி என்பது - மூன்றாம்வேற்றுமையின் பொருள் படுவதோர் இடைச்சொல். "இன்னு மீண்டொருதிங்க ளிருப்பல்யான், நின்னைநோக்கிப்பகர்ந்ததுநீதியோய், பின்னையாவிபிடிக்கின்றிலே னந்த, மன்னனாணையிதனைமனக்கொள்நீ," "திங்களொன்றினென்செய்தவந்தீர்ந்ததால், இங்கு வந்திலனேயெனின் யாணர்நீர்க், கங்கையாற்றங்கரை யடியேற்குத் தன், செங்கையாற்கடன்செய்கென்று செப்புவாய்" எனச் சூளாமணிப்படலத்தில் வந்த செய்யுள்கள் இங்கு நோக்கத்தக்கன. உன்குரைகழல் தலைக்கண் வைத்தாள் - பாவனையினால் நினதுதிருவடியைத் தலைமேற்கொண்டு வணங்கினளென்றபடி. (௭௦)

[சீதை தந்த சூளாமணியை அநுமான் இராமனிடங் கொடுத்தல்.]

௭௧. வைத்தபின்றுகிலின்வைத்தமாமணிக்கரசைவாங்கிக்
கைத்தலத்தினிதினீந்தாடாமரைக்கண்களார
வித்தககாண்டியென்றுகொடுத்தனன்வேதநன்னூ
லுய்த்துளகாலமெல்லாம்புகழொடுமொக்கநிற்பான்.

(இ - ள்.) வைத்த பின் - (அவ்வாறு உனதுதிருவடியைத் தலைமேல்) வைத்துக்கொண்டபின்பு,—துகிலின் வைத்த மா மணிக்கு அரசை வாங்கி-

தனது ஆடையில் முடிந்துவைத்திருந்த சிறந்த இரத்தினங்களுக்கெல்லாந் தலைமையாகிய சூளாமணியை எடுத்து, கை தலத்து - (எனது)கையில், இனி தின் ஈந்தாள் - இனிமையாகக் கொடுத்தாள்; (அதனை), வித்தக - ஞான சொரூபியாயுள்ளவனே! தாமரை கண்கள் ஆர காண்டி - செந்தாமரை மலர்போன்ற திருக்கண்கள் மகிழக் காண்பாயாக, என்று - என்றுசொல்லி, வேதம் நல் நூல் உய்த்து உள காலம் எல்லாம் புகழொடும் ஒக்க நிற்பான் கொடுத்தனன் - சிறந்த வேதங்களுஞ் சாஸ்திரங்களும் வழங்குவதான கால தத்துவ முள்ள அளவும் கீர்த்தியுடனே தானும் (சிரஞ்சீவியாய்) நிற்பவ னாகிய அநுமான் (சூளாமணியை ஸ்ரீராமனிடங்) கொடுத்தான்; (எ - று.)

"சூடையின்மணி கண்மணியொப்பது தொன்னு, ளாடையின்கணிருந் தது பேரடையாளம், நாடிவந்தெனை தின்னுயிர்நல்கியநம்பா, கோடியென்று கொடுத்தனள் மெய்ப்புகழ்கொண்டாள்" என்று சூளாமணிப்படலத்துவந்தது, இங்கு நோக்கத்தக்கது. 'புகழொடுமொக்கநிற்பான்' என்றது, உடனவிழ்ச்சி யணி. வேதநன்னூல் - வேதங்களாகிய நல்லநூல்களென்றுமாம். (அக)

[அதுபெற்றவளவில் இராமன் தாபந்தணிந்து மகிழ்தல்.]

அஉ. பைப்பயப்பயந்தகாமம்பரிணமித்துயர்ந்துபொங்கி
மெய்யுறவெதும்பியுள்ளமெலிவுறுநிலையைவிட்டா
னையனுக்கங்கிமுன்னரங்கையாற்பற்றுநங்கை
கையெனலாயிற்றன்றேகைபுக்கமணியின்காட்சி.

(இ - ள்.) பயந்த - உண்டான, காமம்—, பை பய - மெல்லமெல்ல, பரிணமித்து - வளர்ந்து, உயர்ந்து பொங்கி - மேல்மேல் அதிகப்படுதலால், மெய் உற வெதும்பி - உடம்பு மிகவுங்கொதித்து, உள்ளம் மெலிவுறும் - மனந் தளர்ச்சியடைகின்ற, நிலையை - தன்மையை, விட்டான் - (ஸ்ரீராமன் அச்சூளாமணியைப் பார்த்தவுடனே) நீங்கினான்; கை புக்க மணியின் காட்சி- (ஸ்ரீராமனது) திருக்கையை யடைந்த சூளாமணியினது தோற்றம், ஐயனுக்கு- அந்த இராமபிரானுக்கு, அங்கி முன்னர் அம் கையால் பற்றும் நங்கை கை எனல் ஆயிற்று - (விவாககாலத்தில்) அக்கினியின் முன்னிலையில் அழகிய கையினாற் பிடிக்கப்பட்ட பிராட்டியின்கை யென்னலாம்படியாயிற்று; (எ - று.)

இராமபிரான் சீதையைப் பாணிக்கிரகணஞ் செய்தகாலத்திற்போலச் சூளாமணியைப் பெற்ற பொழுதில் மிகமகிழ்ந்தன னென்பதாம். காட்சி யணி. பைப்பய - பையப்பைய என்னுங் குறிப்புவினையெச்ச வடுக்கின் தொகுத்தல். (அஉ)

[அப்பொழுது இராமனிடம் உண்டான பலவகைமெய்ப்பாடுகள்.]

அங. பொடித்தனவுரோமம்போந்துபொழிந்தனகண்ணீர்பொங்கித்
துடித்தனமார்புந்தோளுந்தோன்றினவியர்வின்றுள்ளி
மடித்ததுமணிவாயாவிவருவதுபோவதாகித்
தடித்ததுமேனியென்னேயாருளர்தன்மைதேர்வார்.

(இ - ள்.) உரோமம் - மயிர்கள், பொடித்தன - சிலிர்த்தன; கண் நீர்—, போந்து - வழிந்து, பொழிந்தன - பெருகின: மார்பும் தோளும்—, பொங்கி - பூரித்து, துடித்தன—; வியர்வின் துள்ளி - வேர்வைநீர்த் துளிகள், தோன்றின - உண்டாயின; மணி வாய் - அழகிய வாயானது, மடித்தது - மடிப்பை யடைந்தது; ஆவி வருவது போவது ஆகி - உயிர் வருவதும் போவதுமாகப் பெற்று, மேனி தடித்தது - உடம்பு பூரித்தது; என்னே - (இது) என்ன ஆச்சரியம்! தன்மை தேர்வார் - அத்தன்மைகளை ஆராய்ந்து அறிய வல்லவர், யார் உளர் - எவ ரிருக்கின்றனர்! [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)

'ஆவிவருவதுபோவதாகி' என்றது, நெட்டுயிர்ப்பெறிதலை. ரோமம் என்னும் வடமொழி, உகரம்மொழி முதலாகி முன்வரப்பெற்றது. (அ௩)

[அங்கதன் முதலானவர்கள் வந்துசேர்தல்-]

அ௪. ஆயிடைக்கவிகளோடுமங்கதன்முதலினோயோர்
மேயினர்வணங்கிப்புக்கார்வீரனைக்கவியின்வேந்தைப்
போயினகருமமுற்றிப்புகுந்ததோர்பொம்மறன்னாற்
சேயிருமதியமென்னத்திகழ்தருமுகத்தரானார்.

(இ - ள்.) அ இடை - அப்பொழுது [அவ்விடத்தில்], கவிகளோடும் - மற்றை வானரர்களுடனே, அங்கதன் முதலின் ஆயோர் - அங்கதன் முதலான படைத்தலைவர்கள், மேயினர் - வந்து, வீரனை - ஸ்ரீராமனையும், கவியின் வேந்தை - வாநர ராஜனான சுக்கிரீவனையும், வணங்கி - நமஸ்கரித்து, புக்கார் - அங்குச்சேர்ந்து, போயின கருமம் முற்றி புகுந்தது ஓர் பொம்மல் தன்னால் - (தாங்கள்) போன காரியம் முடிந்து வந்ததனாலாகிய தொரு மகிழ்ச்சியினால், சேய் இரு மதியம் என்ன திகழ்தரு முகத்தர் ஆனார் - உயர்ந்த [ஆகாயத்திலுள்ள] பெரிய [பூர்ண] சந்திரன்போல விளங்குகின்ற முகத்தையுடையவரானார்கள்; (எ . று.)

மதியம், அம் - சாரியை. கவி-கபி யென்ற வடசொல்லின் விகாரம். ()

[மேல் நடக்கவேண்டிய காரியத்தைக் குறித்து
இராமன் விரைவுகொள்ளுதல்.]

அ௫. ஆண்டையினருக்கன்மைந்தனையகேளரிவைநம்பாற்
காண்டலுக்கெளியளானாளென்றலுங்காலந்தாழ
வீண்டினிருத்திபோலாமென்றனனென்றலோடுந்
தூண்டிரண்டனையதோளான்பொருக்கெனவெழுந்துசொன்னான்.

(இ - ள்.) ஆண்டையின் - அப்பொழுது, அருக்கன் மைந்தன் - சூரிய குமாரனான சுக்கிரீவன், (ஸ்ரீராமனை நோக்கி), 'ஐய—! கேள்—; அரிவை - பிராட்டி, நம்பால் காண்டலுக்கு எளியள் ஆனாள் - நம்மாற் பார்ப்பதற்கு எளியவளாயினாள்', என்றலும் - என்றுசொன்னவளவில்,— (ஸ்ரீராமபிரான்),

'காலம் தாழ - காலம் விளம்பிக்க, இனும் - இன்னமும் [சீதையிருக்குமிடந் தெரிந்தபின்பும்], ஈண்டு - இங்கேயே, இருத்தி போலும் - இருக்கின்றாய் போலும்', என்றனன் - என்றுசொன்னான்; என்றலோடும் - என்றுசொன்ன வுடனே, தூண் திரண்டு அனைய தோளான் - தூண் திரண்டிருப்பது போன்ற தோள்களையுடையவனான சுக்கிரீவன், பொருக்கென - விரைவில், எழுந்து - எழுந்திருந்து, சொன்னான் - கட்டளையிடுபவனானான்; (எ - று.)

'அரிவை' என்னுஞ் சொல் - இங்கே, பருவப்பெயராகாமல், பெண் என்ற மாத்திரமாய் நின்றது. நம்பால் - உருபுமயக்கம். இனும் - இன்னும்:தொகுத்தல். 'இருத்திபோலாம்' என்றது - இருத்தல் தகுதியன் றென்றபடி. (அரு)

[சுக்கிரீவன்கட்டளைப்படி வாநரசேனை புறப்படுதல்.]

அசு. எழுகவெம்படைகளென்றானேயெனுமளவினெங்கு
முழுமுரசெற்றிக்கொற்றவள்ளுவர்முடுக்கமுந்திப்
பொழிதிரையன்னவேலைபுடைபரந்தென்னப்பொங்கி
வழுவில்வெள்ளத்தானைதென்றிசைவளர்ந்ததன்றே.

(இ - ள்.) 'ஏ எனும் அளவின் - ஏயென்னுமொலி உண்டாகுமளவினுள் [மிகவிரைவில் என்றபடி], வெம் படைகள் - கொடிய சேனைகளெல்லாம், எழுக - புறப்படுவனவாக,' என்றான் - என்று (சுக்கிரீவன்) கட்டளையிட்டான்; (உடனே), கொற்றம் வள்ளுவர் - வெற்றியையுடைய பறையறைவோர், எங்கும் - (சேனைகளுள்ள) எல்லாவிடத்தும், முழு முரசு எற்றி - பெரிய பறைகளை யறைந்து, முடுக்க - துரிதப்படுத்த,—வழுவல் இல் - (அச்சுக்கிரீவாஜ்ஞையைத்) தவறுதலில்லாத, வெள்ளம் தானை - (எழுபது) வெள்ளம் வாநரசேனை, முந்தி - விரைந்து, பொழி திரை அன்ன வேலை புடை பரந்து என்ன பொங்கி - பாய்கின்ற அலைகளையுடைய அந்தக்கடல் தானிருக்கும் நிலையைவிட்டு வெளியிலே பரவினாற்போல எழுந்து, தென்திசை வளர்ந்தது - தெற்குத்திக்கைநோக்கிப் பரவலாயிற்று; (எ - று.)—அன்றே - ஈற்றசை; அப்பொழுதே யெனினுமாம்.

வெள்ளம் - ஓர் பெருந்தொகை. மிகப்பல அக்ஷௌஹிணி கொண்டது; (யானை ஒன்றும், தேர் ஒன்றும், குதிரை மூன்றும், காலாள் ஐந்தும் கொண்டது - பத்தியெனப்படும்; அப்பத்தி மூன்றுபங்குகொண்டது - சேனாமுகம்; சேனாமுகம் மூன்று - குல்மம்; குல்மம் மூன்று - கணம்; கணம் மூன்று - வாகினி; வாகினி மூன்று - பிரதனை; பிரதனை மூன்று - சமூ; சமூ மூன்று - அநீகினி; அநீகினி பத்து - அக்ஷௌஹிணி; (ஆகையினால், அக்ஷௌஹிணி யென்பது—தேர் - உ௧அஎ0; யானை-உ௧அஎ0; குதிரை-௬ருசு௧0; காலாள்-௧0௯௩௫0: ஆக, உ௧அஎ00 கொண்டதாம்.) அக்ஷௌஹிணி எட்டுப்பங்கு கொண்டது - ஏகம்; ஏகம் எட்டு - கோடி; கோடி எட்டு - சங்கம்; சங்கம் எட்டு - விந்தம்; விந்தம் எட்டு - குமுதம்; குமுதம் எட்டு - பதுமம்; பதுமம்

எட்டு - நாடு; நாடு எட்டு-சமுத்திரம்; அந்தச்சமுத்திரம் எட்டுப்பங்குகொண்டது - வெள்ளம் எனக் காண்க.)

எம் படைகள் என்று பிரித்தும் உரைக்கலாம். ஏ எனுமளவின் - விரைவுக்குறிப்பு; இரண்டுமாத்திரைப்பொழுதினுள்ளே என்பது கருத்து. முழுமுரசு - உத்தமவிலக்கணமமைந்த பேரிகை யெனினுமாம். அன்ன - பிரசித்திபற்றியது. (அசு)

[முன்சென்று சரியானவழியை நாடிப்போமாறு இராமன் நீலனைப் பணித்தல்.]

அஎ. நீலனைநெடிதுநோக்கிநேமியோன்பணிப்பானந்தம்
பால்வருஞ்சேனைதன்னைப்பகைஞர்வந்தடராவண்ணஞ்
சால்புறமுன்னர்ச்சென்றுசரிநெறிதுருவிப்போதி
மால்தருகளிறுபோலும்படைஞர்பின்மருங்குசூழ.

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

(இ - ள்.) நேமியோன் - ஸ்ரீராமன், நீலனை - (வாநரசேனாதிபதியான) நீலனை, நெடிது நோக்கி - செவ்வையாகப் பார்த்து, பணிப்பான் - கட்டளையிடுவான்:—நம்தம் பால் வரும் சேனைதன்னை - நமது பக்கத்தில் வருகிற சேனையை, பகைஞர் வந்து அடராவண்ணம் - சத்துருக்கள் வந்து அழிக்காதபடி, (நீ), மால் தரு களிறு போலும் படைஞர் பின்மருங்கு சூழ - மதமயக்கங்கொண்ட ஆண்யானைபோன்ற வீரர்கள் பின்பக்கத்தில் தொடர்ந்துவருமாறு, சால்புஉற - தகுதிபொருந்த, முன்னர் சென்று-முன்னே சென்று, சரி நெறி துருவி போதி - தகுதியானவழியைத் தேடிப்போவாயாக.

"ஆறுபத்தெழுகோடியகீசருக், கேறுகொற்றத்தலைவரிவர்க்குமுன், கூறுசேனைபதிகொடுங்கூற்றையு, நீறுசெய்திடுநீலனென் றோதினன்" என்றபடி நீலன் வாநரப்படைத்தலைவர்க்கெல்லாந் தலைவனாதலால், அவனை முக்கியமாக விளித்து இதுகூறினன் இராமபிரான். நேமியோன் - சக்கராயுதபாணியான திருமாலின் அம்சமானவன். சரி - ஸத்ருஶ: என்ற வடமொழியின் சிதைவு; அது, பிராகிருதபாஷையில் ஸரிஸோ என நிற்கும். மால்தரு - பெருமைபொருந்திய என்றுமாம்; எதுகைநோக்கி, சந்திபெறுது நின்றது. துருவி, துருவு - பகுதி. (அஎ)

[அநுமான் பிரார்த்தித்தபடி அவன்தோள்மேல் இராமனேறுதல்.]

அஅ. என்றுரைத்தெழுந்தவேலைமாருதியிருகைகூப்பிப்
புன்றொழிற்குரங்கெனுந்தன்றோளிடைப்புகுதியென்னத்
தன்றலைபடியிற்றாழ்ந்தானண்ணலுஞ்சரணம்வைத்தான்
வன்றிறல்வாலிசேயுமிளவலைவணங்கிச்சொன்னான்.

---

* இதுமுதல் நான்கு கவிகள், சில பிரதிகளில்மாத்திரங் காணப்படுகின்றன; இவற்றை வெள்ளிப்பாட்டென்பர். [வெள்ளிப்பாட்டு-வெள்ளியம்பலவாணத்தம்பிரானென்பவர் புதிதாகப்பாடி இடையிற்சொருகிய பாட்டு.]

(இ - ள்.) என்று உரைத்து - என்று (நீலனுக்குக்) கட்டளையிட்டு, எழுந்த வேலை - (ஸ்ரீராமன்) புறப்பட்டபொழுது, மாருதி - அநுமான், இரு கை கூப்பி - அஞ்சலிசெய்து, 'புல் தொழில் குரங்கு எனாது - இழிவானதொழிலையுடையதொரு குரங்கு என்று எண்ணி (என்னை) இகழாமல், என் தோளிடை புகுதி - எனதுதோளில் ஏறுவாயாக,' என்னா - என்று விண்ணப்பஞ்செய்து, தன் தலை படியில் தாழ்ந்தான் - தனதுதலை பூமியிற் படுமாறு வணங்கினான்; அண்ணலும் - ஸ்ரீராமனும், சரணம் வைத்தான் - (அங்ஙனமே அவ்வநுமான்தோள்களில்) திருவடியை வைத்து ஏறியருளினான்; வல் திறல் வாலிசேயும் - மிக்கவலிமையையுடைய அங்கதனும், இளவலை வணங்கி - லக்ஷ்மணனை நமஸ்கரித்து, சொன்னான் - சொல்பவனானான்; (எ - று.)— அது மேற்கவியிற் கூறுகின்றார். சரணம் - வடசொல். (அஅ)

[அங்கதன்பிரார்த்தித்தபடி அவன்தோள்மேல் இலக்குமணன் ஏறுதல்.]

அகூ. நீயினியென்றன்றோண்மேலேறுதிநிமலவென்னா
வாய்புதைத்திறைஞ்சிநின்றவாலிகாதலனைநோக்கி
நாயகற்கிளையகோவுநன்றெனவவன்றன்றோண்மேற
பாய்தலுந்தகைப்பிறானைபடர்நெறிபடர்ந்ததன்றே.

(இ - ள்.) 'நிமல - குற்றமற்றவனே!—நீ—, இனி - இப்பொழுது, என் தன் தோள்மேல் ஏறுதி - எனது தோளின்மேலேறியருள்வாய்', என்ன - என்று விண்ணப்பஞ்செய்து, வாய் புதைத்து - (கைகளால்) வாயை மறைத்துக்கொண்டு, இறைஞ்சி நின்ற - வணங்கி நின்ற, வாலி காதலனை - வாலி புத்திரனை அங்கதனை, நோக்கி - பார்த்து, நாயகற்கு இளைய கோவும் - ஸ்ரீராமனுக்கு இளைய தம்பியாகிய லக்ஷ்மணனும், நன்று என - நல்லதென்று உடன்பட்டு, அவன்தன் தோள்மேல் - அவ்வங்கதனது தோளின்மேல், பாய்தலும் - ஏறினவளவில்,—தகைப்பு இல் தானை - தடையில்லாத வாநரசேனை, படர் நெறி படர்ந்தது - செல்லவேண்டும் வழியிற் சென்றது; (எ - று.)

வாய்புதைத்தல் - அடக்கமென்னும் மெய்ப்பாடு. படர் நெறி - பரந்த வழியுமாம். அன்று, ஏ - ஈற்றசை. (அகூ)

[அவ்வளவில் தேவர்கள் பூமாரி பொழிதல்.]

கூ0. கருடனில்விடையிற்றோன்றுமிருவருங்கடுப்பக்காலி
னருடருகுமரன்றோண்மேலங்கதனலங்கற்றோண்மேற்
பொருடரும்வீரர்போகப்பொங்கொளிவிசும்பிற்றங்குந்
தெருடரும்புலவர்வாழ்த்திச்சிந்தினர்தெய்வப்போது.

(இ - ள்.) கருடனில் - கருடன்மேலும், விடையில் - விருஷபத்தின் மேலும், தோன்றும் - எழுந்தருள்கிற, இருவரும் - (அரி அரன் என்னும்) இருவரையும், கடுப்ப - ஒக்க, காலின் அருள்தரு குமரன் தோள்மேல் - வாயுவினாற் பெறப்பட்ட குமாரனாகிய அநுமானது தோளின்மேலும், அங்க

தன் அலங்கல் தோள்மேல் - அங்கதனது போர்மாலையணிந்த தோளின்மேலும் (ஏறிக்கொண்டு), பொருள் தரு வீரர் - (வேண்டுவோர்வேண்டும்) பொருள்களையெல்லாம் கொடுக்கவல்ல ஸ்ரீராமலக்ஷ்மணர், போக - செல்ல, (அப்பொழுது),—பொங்கு ஒளி விசும்பில் தங்கும தெருள் தரும் புலவர் - மிக்க ஒளியையுடைய சுவர்க்கலோகத்தில் தங்குகின்றவர்களும் தெளிவைத்தருகிற அறிவையுடையவர்களுமாகிய தேவர்கள், வாழ்த்தி-('பகைவர்களைவெல்லுக' என்று) வாழ்த்துக்கூறி, தெய்வம் பொன் பூ - தெய்வத்தன்மையுடைய பொன்மயமான கற்பகவிருக்ஷத்தின்மலர்களை, சிந்தினர் - (மேலே) சொரிந்தார்கள்.

விடை - வ்ருஷம் என்ற வடமொழியின் சிதைவு. கடுப்ப-உவமவுருபு. பொன்னுலகமாதலால், 'பொங்கொளிவிசும்பு' எனப்பட்டது. விசும்பு - இடவாகுபெயர். புலவர் - விபுதர் என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு. கற்பகப்பூவுக்குத் தெய்வத்தன்மை - வாடாமைமுதலியன. பொருள் - அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய உறுதிப்பொருள்கள். முதல்மூன்றடிகளில், முறைநிரனிறைப்பொருள்கோள் காண்க. (கo)

[வாநரசேனை மலைகளின்வழியாகச் செல்லுதல்.]

கக. வையகமதனின்மாக்கண்மயங்குவர்வயவெஞ்சேனை
எய்திடினென்பதுன்னியிராகவனினிதினேவப்
பெய்கனிகிழங்குதேனென்றனையனபெறுதற்கொத்த
செய்யமால்வரையேயாறாச்சென்றனதகைப்பில்சேனை.

(இ - ள்.) 'வய வெம் சேனை - வலிய கொடிய வாநரசேனை, எய்திடின்-(நாட்டுவழியே) சென்றால், வையகமதனில் மாக்கள் - பூமியிலுள்ள மனிதர்கள், மயங்குவர் - கலங்குவார்கள்,' என்பது - என்பதை, உன்னி - எண்ணி, இராகவன் - இராமபிரான், இனிதின் ஏவ - இனிமையாகக் கட்டளையிட,—தகைப்பு இல் சேனை - (பிறர்) தடுக்கமுடியாத அச்சேனைகள்,—பெய் கனி-சொரிகின்ற பழங்களும், கிழங்கு - கிழங்குகளும், தேன் - தேனும், என்ற—, இனையன - இப்படிப்பட்டவைகளை, பெறுதற்கு - அடைவதற்கு, ஒத்த-தகுதியான, செய்ய மால் வரையே - அழகிய பெரிய மலைகளே, ஆறு ஆ - வழியாக, சென்றன - போயின; (எ - று.)

என்றனையன - தொகுத்தல். ராகவன் - ரகுகுலத்தில் அவதரித்தவன்: வடமொழித்தத்திதாந்தநாமம். (கக)

[அநுமான் கதைகள்சொல்லிவர அனைவரும் எளிதில் வழிகடத்தல்.]

கஉ. வீரரும்விரைவிற்போனார்விலங்கன்மேலிலங்கைவெய்யோர்
சேர்விலாக்காவற்பாடும்பெருமையுமரணுங்கொற்றக்
கார்நிறத்தரக்கரெண்போர்முதலியகணிப்பிலாத
வார்கழலனுமன்சொல்லவழிநெடிதெளிதிற்போனார்.

(இ - ள்.) விரைவில் போனார்-விரைவிற்புறப்பட்டவர்களாகிய, வீரரும்-வாநரவீரர்களெல்லாரும்,— விலங்கல்மேல் - திரிகூடமலையின்மேலுள்ள,

இலங்கை - லங்கையில் வாசஞ்செய்கிற, [illegible]ாறமை - வெற்றியையும், கார் நிறத்து - கரியநிறத்தையுமுடைய, அரக்கர் என்போர் - ராக்ஷசரென்று சொல்லப்படுபவர்களாகிய, வெய்யோர் - கொடியவர்களுடைய, சோர்வு இலா - தளர்ச்சியில்லாத, காவல் பாடும் - காவல்செய்யுந் திறமும், பெருமையும்—, அரணும்—, முதலிய - முதலான, கணிப்பு இலாத - அளவில்லாத சிறப்புக்களையெல்லாம், வார் கழல் அனுமன் - நீண்ட வீரக்கழலையுடைய அநுமான், சொல்ல - சொல்லிவர, (கேட்பதனால் இளைப்புத்தோன்றாமலே), நெடிது வழி - நீண்ட வழியை, எளிதில் போனார் - எளிதாகக் கடந்து போனார்கள்; (எ - று.)

இதனை, வேள்விகாத்தற்பொருட்டு விசுவாமித்திரமுனிவர்பின்னே நடந்துசென்ற ஸ்ரீராமலக்ஷ்மணர் அம்முனிவர் பற்பலகதைகளைச்சொல்லிவர இனிதுகேட்டுக்கொண்டு சிரமந்தோன்றாமல் நெடுவழியை எளிதிற்கடந்தாற் போலக் கொள்க. 'வீரரும் விரைவிற்போனார்' என்பதைத் தனிவாக்கியமாக எடுத்து, வாநரவீரர்களான சுக்கிரீவன் முதலியோரும் விரைவிற்சென்றார்களென்று உரைத்தலுமாம். பெருமை - தொகையிலும் வலிமையிலும் பெரிதாயிருக்குந் தன்மை. அரண் - மதில் அகழி முதலியன. (கூஉ)

[அனைவரும் பன்னிரண்டாம்தினத்தில் தென்கடல்சேர்தல்.]

கூங. அந்நெறிநெடிதுசெல்லவரிக்குலத்தரசனோடு
நன்னெறிக்குமரர்போகநயந்துடன்புணர்ந்தசேனை
யின்னெடும்பழுவக்குன்றிற்பகலெலாமிறுத்தபின்னர்ப்
பன்னிருபகலிற்சென்றுதென்றிசைப்பரவைகண்டார்.

(இ - ள்.) அ நெறி நெடிது - அந்த நீண்டவழியில், செல்ல - (வாநரவீரர்களெல்லாம்) போக, அரி குலத்து அரசனோடு - குரங்குக்கூட்டத்துக்கு அரசனான சுக்கிரீவனுடன், நல் நெறி குமரர் - சந்மார்க்கத்திற்செல்லுகிற ராமலக்ஷ்மணர்களும், போக - செல்ல, நயந்து உடன் புணர்ந்த சேனை - விரும்பிக் கூடவந்த வாநரசேனைகளெல்லாம்,—இன் நெடும் பழுவம் குன்றில் - இனிய நீண்ட சோலைகளையுடைய மலைவழியிலே, பகல் எலாம் இறுத்த பின்னர் - பதினொருநாளையுங் கழித்த பின்பு, பன்னிருபகலில் - பன்னிரண்டாம்நாளில், சென்று - போய், தென் திசை பரவை கண்டார் - தெற்குத்திக்கிலுள்ள கடலைக் கண்டார்கள்; (எ - று.)

'இன்னெடும்பவழக்குன்றின்' என்னும் பாடத்துக்கு - இனிய நெடிய பவழமலையிலே அன்றை நண்பகற்பொழுதுமுழுவதிலும் இளைப்பாறத் தங்கியபின்பு பன்னிரண்டுநாள்களிற் சென்று தென்கடல்கண்டார்கள் என்று பொருள் காண்க. பவழமலை - தொண்டைநாட்டின் மேற்கெல்லைமலை. (கூங)

திருவடிதொழுதபடலம் முற்றிற்று.

சுந்தரகாண்டம்

முற்றுப்பெற்றது.